***Agngnaadi...***

*A novel in Tamil by Poomani*



*First Edition: January 2012*

*Reprint: January 2013*

*Published by:*

*Cre-A:*

*New No. 2 (Old No. 25), 17th East Street*

*Kamarajar Nagar, Thiruvanmiyur*

*Chennai 600 041*

*creapublishers@gmail.com*

*www.crea.in*

*Printed at:*

*Sudarsan Graphics*

*Chennai 600 017*

*ISBN: 978-81-921302-1-7*

*Price: Rs.925*

மழைக்கஞ்சியாகக் கதைகளைக் கரைத்து ஊட்டிய
அம்மாவுக்கு

# படலம் 1

## 1. கண்ணுக்குட்டியும் கழுதக்குட்டியும்

பூசரமரத் தோட்டத்தில் அஞ்ஞைக்கு மதியக் கஞ்சி கொடுத்துவிட்டுத் திரும்பிய ஆண்டியைக் கலிங்கலோடைக் கரையிலிருந்து நாணல் கருதுகள் கூப்பிட்டன. அவனுக்கு வெயிலிலும் குளிர்ச்சி. ஆவலாக ஓடினான்.

கம்மங்காடாகக் கரை நெடுக நாணல். செல்லமாக ஊதி நீவும் காற்றுக்குப் பூங்கொம்மை பொதிந்த இளங்கருதுகள் நெளிந்தும் ஒளிந்தும் விளையாட்டுக் காட்டின. ராவிப் பிடித்து மடக்கி மல்லுக்கட்டி ரெண்டைப் பிடுங்கினான். அணில் வாலாக மெதுமெதுவென்றிருந்தது. முகத்தில் தடவினான். சொகமான கூச்சம். ஆதாளியில் ஆடியசையும் தோகைவழியே வீடும் மரமுமாக ஊர் விட்டு விட்டுத் தெரிந்தது. கம்மா நீரின் ஈரத் தெளிப்புக்கும் அதுக்கும் சொக்கிக் கொண்டுவந்தது. விட்டுப் பிரிய மனசே இல்லை.

நாணல் கூத்தைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடந்த கிறக்கத்தில் பாதை மறந்து குறுக்காக ஓடைச் சேற்றுக்குள் இறங்கிவிட்டான். போகப்போகத் தொடை நழுவி இடுப்புவரை சகதி கவ்விக்கொண்டது. முன்னும் பின்னும் நகர முடியவில்லை. ஒரெட்டுப் பேர்ந்தால் அடுத்த கால் இன்னும் அமுங்கியது. கையூன்றி உன்னினான். முழங்கை முழுக்க முங்கியதுதான் மிச்சம். திணறி மல்லாடியதில் நாணல் கருது புதைந்துபோயிற்று.

அந்த நேரம் பார்த்துக் குடுமி வேறு அவுந்து தொங்கியது. சேற்றுக் கையால் என்ன செய்ய. அங்கிட்டும் இங்கிட்டும் ஆள் பார்த்ததில் முடி கலைந்து கண்ணை மறைத்தது. உச்சிவேளையில் யார் வரப்போகிறார்கள்.

உடம்பு சன்னஞ்சன்னமாக முங்குகிறதோ. பெரிய நண்டு கடுவாயால் காலைக் கவ்வி இழுக்கிறதோ. இப்படியே அமுங்கித் தலையும் மூடிவிட்டால் என்னாகும். எவ்வளவுதான் கூப்பாடு போட்டாலும் வெளியே கேட்காது. நண்டு நமட்டிநமட்டி விழுங்கிவிடும். போச்சு. கதை முடிந்துவிட்டது. அழுகை யழுகையாக வந்தது.

கம்மாத் தரிசில் மேயும் கழுதைகளைப் பத்துவதற்காக அந்தப் பக்கம் வந்த மாரி ஆண்டியைக் கவனித்துவிட்டான். ஆண்டியும் பார்த்துவிட்டான். பயம் கொஞ்சம் குறைந்தது. அவசரமாகக் கையலைத்துக் கூப்பிட்டான். ஓடி வந்த மாரிக்கு நிலைமையைக் கண்டு யோசனை.

‘இவுகள எப்படியும் வெளிய கொண்டுவரணுமே.’

சுற்றுமுற்றும் பார்த்தான். ஓடையின் உள்சரிவில் மொச்சி மூடு உயரமாகத் தளிர்த்திருந்தது. தண்டியான விளாரை இழுத்துப் பேயாடி இணுங்கினான். இலைகளை அருவிப் போட்டுவிட்டுக் கிட்ட வந்தான்.

''இதப் புடிச்சுக்கிட்டே வந்துறீகளா.''

விளாரை நீட்டியபடி ஓடைக்குள் இறங்கப்போனான்.

''வேணாம். ரெம்ப ஆழமாருக்கு. நீயும் மாட்டிக்கிருவ.''

மாரிக்கு இன்னொரு யோசனை தட்டுப்பட்டது.

''இதுக்கு ஒரு வழிபண்றென் பாருங்க. அசையாம அப்படியே நில்லுங்க.''

ஓடிஓடிப் பெரியபெரிய கல்லாகப் புரட்டி வந்து வரிசையாகச் சகதிக்குள் போட்டு அடுக்கினான். ஒரு கல்லுக்கடியில் தவிப்பாறிக்கொண்டிருந்த பொந்தடி தவளை தொண்டைத் துருத்தியை ஊதிஊதி முறைத்துப் பார்த்தது.

''நான் உள்ளருக்கிறது கண்ணு தெரியலயா.''

நாக்கைத் துருத்தினான்.

''மூஞ்சியப் பாரு. ஒனக்கு இப்ப நல்ல நேரம். இல்லன்னா...''

''வேற வேலையே இல்லையா.''

அது நீர்க்குட வயிறு சளியக் குதித்தோடியது. பின்னால் விரட்டிக் கதையை முடிக்கச் சந்தர்ப்பம் சரியில்லை. ஒரே எறி. குடல் குந்தாணியெல்லாம் வெளியே வந்துவிடும். கோவத்தை அடக்கிக்கொண்டு மும்முரமாக வேலையைக் கவனித்தான். ஒவ்வொரு எட்டுக்கும் கல்லை அடுக்கிக்கொண்டே போய் ஆண்டியை நெருங்கிவிட்டான். மூச்சுவாங்கியது.

''கல்லுமேலயே மிதிச்சு வந்துருங்க.''

ஆண்டிக்கு இப்போது தெம்பு வந்தது.

''தலமுடி கண்ண மறச்சுக்கிட்டுச் சிய்யின்னுருக்குது.''

''நான் முடிஞ்சுவுடட்டுமா.''

''அவுரப்புடாது.''

மாரி இன்னுங்கொஞ்சம் நெருங்கி ஆண்டியின் தலையை எட்டிப் பிடித்து வசமாகக் கொண்டைபோட்டான்.

''இனி வந்துருவீகளா.''

''கையக் கொஞ்சம் புடிச்சுக்கோ.''

கை பின்னிக்கொண்டு தட்டுத்தடுமாறிக் கரையேறினார்கள். ஆண்டி மாரியை அப்பிராணியாகப் பார்த்தான்.

''நீயில்லன்னா அம்புட்டுத்தான். முங்கிச் செத்துருப்பென்.''

''இதுல முடியலன்னா வேற ஒரு வழியும் மனசுக்குள்ள வச்சிருந்தென்.''

''அதென்ன.''

''கழுதையில கவுத்தக் கெட்டீற வேண்டியது. அந்தப் பக்கம் நீங்க புடிச்சுக்கிடு வேண்டியது. கழுதைய லேசாப் பத்துனா சங்கடமில்லாம வெளிய வந்துருவீங்கல்ல.''

''அந்தக் கூத்து நல்லாத்தான் இருக்கும்.''

ஓடையோரக் கிணற்றில் குதித்துத் தொட்டுப் பிடித்து விளையாடினார்கள். அடிக்குக்குப் போய் அடுக்குக் குமிழ் விட்டு வேகமாக வெளியே வந்து வேடிக்கை பார்த்தார்கள். மாரி ஒரு தடவை குசுவைத் தொடுத்து வந்து குமிழைக் கண்டு

பிடித்தான். கண் சிவக்கக் குளித்துவிட்டுக் கழுதைகளுக்குப் பின்னால் பேச்சுப் பழக்கம் போட்டுக்கொண்டே நடந்தார்கள்.

''நெதமும் இந்தப் பக்கந்தான் கழுத மேப்பயா.''

''அப்படியில்ல. ஊரச் சுத்தி மந்தையிலயும் மேப்பென்.''

''மந்தையில வெளையாட முடியாதே.''

''ஒத்தியில கெடந்துக்கிட்டு எங்கதான் வெளையாட முடியிது.''

''தொணைக்கு ஆருமில்லையா.''

''கழுதைதான் தொண. நல்லதுபெல்லதுக்கு அசலூரு வண்ணாரு குடும்பத் தோட வந்தா உண்டு. இல்ல நாங்க போகணும். ரெண்டு நாளைக்குச் சொவட்டுப் பெயகளோட வெளையாடலாம். அதுக்குப் பெறகு எல்லாரும் கலஞ்சு போயிரு வாக. நோஞ்சாணியும் பீஞ்சாணியுமா ரெண்டு தங்கச்சி. அதுக நடந்து திரியறதே பெரும்பாடு. அதுகளோட உக்காந்துகூட வெளையாட முடியாது. எனக்குக் கழுதைதான் தொண. வெளையாட்டு எச்சுக்கெடக்கும்.''

''என்னமோ மாதிரிதான் இருக்கும்.''

''நானா ஒத்தியில வெளையாடுவென். சப்புன்னுருக்கும். கழுதக்குட்டிய வெரட்டிப் புடிச்சுக் கொஞ்ச நேரம் அதுகூட வெளையாடுவென். அதும் இடிச்சுத் தள்ளீட்டு மேயப் போயிரும்.''

''அதுக்கும் வகுறு இருக்குதுல்ல.''

''வெளுப்புத்தொறைக்குப் போனாத் தோணாது. ஏண்ட வேல எடுத்த வேல செய்வென். விடிஞ்சு போனா அடஞ்சுதான் வருவொம்.''

''அங்கயும் கழுதையப் பாத்துக்கிறணுமில்ல.''

''ஆமாமா. மேச்சலுருந்தா ஒரு எடத்துல நின்னு மேயும். இல்லன்னா வெள்ளாமக் காட்டுக்கு நோங்கீரும். எச்சரிக்கையாப் பாத்துக்கிறணும்.''

ஒத்தையடிப் பாதையில் கழுதைக் குளம்புகளின் மிதி மழையிரைச்சலாகக் கேட்டது. புஞ்சை வரப்புச் செடிக்குள்ளிருந்து கழுத்து விடைப்பில் எட்டிப் பார்த்த சில்லானை ஆண்டி கல்லெடுத்து உச்சினான். குறி தப்பிவிட்டது.

''அப்ப ஒரு எடத்துல உக்கார முடியாது.''

''உக்காருறதெங்க. வேல சரியாருக்கும். அப்பப்ப கம்மாக் கரையேறி எட்டிப் பாத்துக்கிருவென். கழுத பிஞ்சப் பக்கம் நிக்கிறதப் பாத்தாலே எங்க ஆத்தெ அப்பனுக்கு வசவு பொறுக்கக் கெடைக்கும். என்னய ஆத்தெ அடிச்சுத் தொவச்சிருவா.''

''ஆடுமாடு மேய்க்கிறதவிடக் கழுத மேய்க்கிறதுதான் கஸ்டம் போலருக்கு.''

''ஆனா ஒண்ணு. எங்க மேச்சாலும் பொழுதடையிறதுக்குள்ள கெட்டுத் தொறைக்குப் போயிறணும்.''

''ஏன் இருட்ல கழுதைக்குக் கண்ணு தெரியாதா.''

''இருட்டீருச்சுன்னா எங்க முனியசாமி கோவிச்சுக்கிரும். அரட்டி வெரட் டீரும்.''

''எதுக்கு.''

''பொழுதடையிற நேரந்தான் சாமி வேட்டைக்குக் கெளம்பும். அப்பப் பாக்கணுமே.''

''எப்படியிருக்கும்.''

''ஒரு நாயி தகத்தகன்னு நாக்க நீட்டிக்கிட்டுப் பறந்து வரும். நாக்குமேல தோரணையா சாமி நிக்கும். கையில பெரிய கம்பு. முள்ளுமுள்ளா இருக்கும். சாமிக்கு ஒரே கண்ணு. அதுல பளிச்பளிச்னு வெளிச்சம் மின்னும். தலைய அங்கிட்டும்இங்கிட்டும் திருப்பயில வெளிச்சம் நம்மமேல படாம ஒளிஞ்சுக் கிறணும்.''

''ஏன் அப்படி.''

''பட்டுச்சுன்னா எரிஞ்சு சாம்பலாயிருவொம். கோவத்துல கால ஓதறுச் சுன்னா தண்ட ரெண்டும் இடி வுழுந்த மாதிரி குலுங்கும். அடே அறிவிருக்கா ஒனக்கு. எரையெடுக்கிற நேரத்துல எதுக்க வரலாமா. ஓடுஓடுன்னு ஒரு அரட்டு. அம்புட்டுத்தான். ஒரே ஓட்டம். வீட்டுக்கு வந்து முத்தத்துல நின்னு அருவங் கேட்டா நாயி மூச்சு லேசா எரஞ்சுக்கிட்டே இருக்கும். சலுக்சலுக்னு சலங்கச் சத்தம் கேக்கும். அத நெனச்சா பகல்லகூடப் பெயந்துகெடக்கும்.''

''தனியா வெருக்வெருக்னு எப்படித்தான் காட்ல திரியிறயோ.''

''திரிஞ்சுதான ஆகணும்.''

''நாளைக்கிலருந்து ரெண்டு பேரும் சேந்து வெளையாடுவமா.''

''ஒங்க வீட்ல வைவாகல்ல.''

''அவுக கண்ணுல தட்டுப்படாம வெளையாடுவொம். தெரிஞ்சுபோச் சுன்னா அப்பப் பாத்துக்கிறலாம்.''

''அப்பச் சரி.''

''ஓடையில நடந்தத ஆருட்டயும் சொல்லுவயா.''

''கண்ணாணச் சொல்ல மாட்டென்.''

''ஒங்க சாமிய ஒருநாளைக்குப் பாக்கலாமா.''

''கேட்டுத்தான் சொல்லணும்.''

''கேட்டுவையி.''

மந்தையோரம் பிரிந்துகொண்டார்கள். மாரி கழுதைகளைச் சந்தோசமாகத் தட்டிக்கொடுத்துக்கொண்டே கட்டுத்துறையில் தளைந்தான். ரெம்பப் பசித்தது.

அன்றைக்கு முழுக்க ஆண்டிக்குக் கொண்டை அவுரவில்லை. மறுநாள் வெள்ளங் காட்டி மாரியைத் தேடி வண்ணாக்குடிக்குப் போனான். மாரிக்குச் சுதாரிப்பு.

''வருவீகளோ வர மாட்டீகளோன்னு ரோசனையாருந்துச்சு.''

''ஒன்னய மாதிரி கொண்டைய முடிஞ்சுபாத்தென். சரிப்பட்டு வரல.''

மாரி சிக்கில்லாமல் குடுமியைக் கோதி பூசியதுபோல் முடிந்துவிடும் சொகத்துக்காகவே நிதமும் கால் கிழக்கே நோங்கியது. மாரியின் கண்ணும் ஆவலாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்.

இப்படித்தான் அவர்களுக்குள் சேகாரம் ஆரம்பித்து வளர்ந்தது. அதென்ன லேசுப்பட்ட சேகாரமா. விடிந்ததிலிருந்து அடையும்வரை விட்டுப் பிரிய மாட்டார்கள். எந்நேரமும் விளையாட்டு. இன்னதுதான் என்றில்லை.

விடியக்காலம் வெள்ளாவியோரம் உட்கார்ந்து விவகாரங்களைப் பேசு வார்கள். மேல வீட்டிலிருந்து கீழக் கடைசிவரை பயல்களைப் பற்றிப் பேசி

முடிப்பதற்குள் வாய் வலித்துவிடும். அவர்களுக்குத் தெரியாமல் என்னமும் புதுசாக நடந்துவிடக் கூடாது. மாரிதான் பேச்சை ஆரம்பிப்பான்.

''மாடு மேச்சிட்டுத் திரியிறாகளே வடக்கு வீட்டுப் புள்ளாண்டன் அவுக பேரென்ன.''

''மாலக்கண்ணுக் கட்டையனா.''

''அவுகளேதான்.''

''அவனுக்கென்ன.''

''ஒரு கண்ண மறச்சுத் தலப்பாக் கெட்டியிருக்காகளே ஏன் தெரியுமா.''

''கண்ணுவலின்னு சொன்னான்.''

''கண்ணுவலியுமில்ல புண்ணுவலியுமில்ல. காக்காக் குஞ்சிக் கறி தின்னா மாலக்கண்ணு போயிரும்னு ஆரோ சொன்னாகளாம். சரி அதவுந்தான் பாப்ப மேன்னு ரெண்டு பேரக் கூட்டீட்டுப் போயி கீகாட்டு வேப்பமரத்துல தொத்தி காக்காக் கூட்டுக்குள்ள கெடந்த குஞ்சிய எடுக்க அண்டம் போட்ருக்காக. அதத் தாய்க் காக்கா பாத்துக்கிருச்சு.''

''சும்மாவா வுட்டது.''

''அமயம் போட்டு அனயங்காக்காயக் கூட்டீருச்சு. எல்லாஞ்சேந்து வெரட்ன வெரட்ல கீழருந்தவுக ஓடிப்புட்டாக.''

''மேலருந்தவுக மாட்டிக்கிட்டாக.''

''கூட்டமா மொச்சுப் பிச்சுப் புடுங்கீருச்சு. ஒரு காக்கா ஓரமாக் கொத் துனதுல கண்ணு கலங்கிப்போச்சு.''

''அப்படிப் போடு.''

''வுட்டாப் போதும்னு உசிரக் கையில ஏந்தீட்டு எறங்கித் தப்பிச்சிட்டாக.''

''அப்படியா சங்கதி. மாலக்கண்ணன் காக்காக் கண்ணனாயிட்டானா. இருக்கட்டும் வச்சுக்கிறென்.''

''என்னய மாட்டிவுட்றாதிங்க.''

அடுத்து என்ன செய்யலாம் என்று யோசனை ஓடும். அதுக்குள் மாரி ஓடிப் போய் மந்தைச் செடியில் சடபுட காய் பிடுங்கிவருவான். உள்ளங்கையில் எச்சுத் துப்பி அதில் காயைப் போட்டு வெடிக்க வைப்பார்கள். கைக்குள்ளிருந்து வெடிப் பதுபோல் கூச்சமாக இருக்கும். பிறகு ஆதாளம் பாலை இலைக் கிண்ணத்தில் வடித்து ஒல்லியான ஆதாளங்குழலால் உறிஞ்சி முட்டை விடுவார்கள். ஒவ் வொரு சமயம் வெங்காயத்தாள் குழலாகும்.

பொழுது கிளம்பும்போது அவர்களைக் கட்டைப் புளியமரத்தடியில் பார்க்கலாம். தவளைக் குதிப்பில் கோலி உருட்டுவார்கள். ஒரு மூச்சு விளையாடி முடித்ததும் மூணு கோலிக் குழியிலும் முக்காமுக்கா மூணு தரம் மோண்டு வைப்பார்கள். மாரி சொல்வான்.

''நம்மளப் போல அதுக்கும் தண்ணி தவிக்குமில்ல.''

''மப்பு ரெம்பத்தான். ஒனக்குத் தவிச்சா வாயில மோளட்டுமா.''

மதியம் மணலோடை வேலமரம். தெல்லுத் தெறிப்பு நடக்கும். அடித் திரும்பினால் பொந்துக் கிணறு. சுவரைச் சுற்றி அணிலோட்டம். சாயங்காலம் கம்மாக் கரை. குண்டி தேயச் சறுக்கணும். கழுதைகளை மேய விட்டுக்கொண்டே

இவ்வளவும் நடக்கும். வண்டி வீட்டுக்கு வரும்போது பொழுதடைந்துவிடும். மாரி அக்கறையாகக் கழுதைகளைப் பத்திக்கொண்டு வருவான். ஆண்டி எப்போதோ வேறு பாதையில் நழுவியிருப்பான்.

மாரிக்கு வெளுப்புத் துறையில் வேலையிருந்தால் விளையாட்டை மாற்றிக் கொள்வார்கள். அவன் காசலையாக வேலைசெய்வதுபோல் போக்குக்காட்டி விட்டுக் கழுதைச் சாக்கில் கம்மாக் கரைச் சரிவில் இறங்கிவிடுவான். வரிசைப் பனைகளோரம் விளையாட்டு நடக்கும். வெயில் உறைத்தால் காக்காக் குளிப்பில் ஆற்றிக்கொள்வார்கள்.

விளையாட்டு மும்முரத்தில் அவர்கள் துருட்துருட்டென்று ஊளை மூக்கை உறிஞ்சும் சத்தம் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருக்கும். மூக்கின் இருபுறமும் தடம்போட்ட கிடாய்க் கொம்பை நக்கிக்கொண்டால்தான் ஆண்டிக்கு விளையாட்டு ருசிக்கும். மாரிக்கு அப்படியில்லை. சீம்பால் சளியை நாக்குவரை தொங்க விட்டு லேசாகப் புளிப்புத்தட்டியதும் புறங்கையால் இளுகிக் குண்டியில் தேய்க்கணும். சில சமயம் அருவமில்லாமல் மூக்குப் பிய்யைத் திரட்டி வாயில் நமட்டணும்.

## 2. தண்ணிப் பேயி

மாரி அப்பப்பக் கதைகளை எடுத்துவிடுவான். புதுசுபுதுசான கதை. இன்னுங் கொஞ்சம் கேட்கணும் போலிருக்கும். ரெம்ப மாராயம்பண்ணுவான். பின்னாலேயே போய்த் தாங்கணும். அடித்து நொறுக்கலாமா என்று கோவங்கோவமாக வரும்.

ஒரு நாள் ஊர் பிழைத்த கதை சொன்னான்.

''நேத்து ராத்திரி...''

''ராத்திரி இருட்டாருக்கும்.''

''ஊருணிக்கரையில கொல்லைக்கிருக்கப் போனென்.''

''ஒத்தியிலயா.''

''ஒங்களக் கூட்டீட்டுப் போகலாம்னுதான் நெனச்சென். அதுக்குள்ள வகுத்தப் பெரட்டி வெரட்டீருச்சு.''

''ஊருச் சோறு ஒரு பானைக்கு உள்ள எறங்கீருக்கும்.''

''ஆராச்சும் மொனங்கீட்டே கஞ்சி போட்ருப்பாக. இல்ல நான் குடிக்கயில நீங்க ஒளிஞ்சு பாத்துருப்பீக.''

''என்னய வம்புக்கிழுக்காத.''

''கொல்லைக்கிருந்தனா.''

''சரி.''

''நல்ல இருட்டு. ஊருணித் தண்ணி ஒறங்கீருச்சு. தண்ணி வாகரையில தவளைக வரிசையாப் படுத்துக்கெடக்குது. அப்பப்ப அதுகளோட கொறட்டைச் சத்தமும் செருமலும் கேக்குது. கரையில நிக்கிற ரெண்டு இச்சிமரமும் கண்ணசந்துருச்சு. அதுல அ[illegible]ருக்கிற பச்சிக மூச்சுப்பேச்சக் காணும்.''

''அதுகளும் ஒறங்கீருக்கும்.''

''அப்ப என்ன நடந்துச்சு தெரியுமா.''

''என்னது.''

மாரி ரெண்டு மூணு தடவை இடுப்புத் துணியை அவுத்துக் கட்டினான் வயிற்றைத் தடவிப்பார்த்து முக்கிமுனங்கினான்.

''வகுத்துப் பாரத்த எறக்குனாத்தான் லேசாருக்கும்.''

பொறுமையாக இருந்து அவனை வழிக்குக் கொண்டுவரணும்.

''என்ன நடந்துச்சு.''

''திடீர்னு மரத்துல பச்சிக படபடன்னு பறக்கிற சத்தம் கேக்குது. கொஞ்ச நேரத்துல காச்சாம்பூச்சாம்னு கத்த ஆரம்பிச்சிருச்சு. தவளைகளும் முழிச்சு பதட்டத்துல குசுகுசுன்னு பேசிக்கிருதுக. அலறியடிச்சு குறுக்கமறுக்கத் தண்ணி யில தடத்தடன்னு ஓடுதுக. எனக்கு ஒண்ணும் புடிபடல.''

''ஒரே ஓட்டமா வீட்டுக்குக் கிண்ணீற வேண்டியதுதான.''

''காரணத்தத் தெரிஞ்சுக்கிறணுமில்ல.''

''பூளக்கொழுப்பு.''

''உள்ளுக்குள்ள ஒரு பக்கம் பெயந்தான். மனச அடக்கிக்கிட்டென். சுத்தி ஒரு அருவத்தவும் காணும். அப்படி என்னதான் ஆச்சுன்னு மேக்க சும்மா திரும்பிப் பாத்தென். பாத்தா...''

''என்னத்தப் பாத்த.''

''தூரத்துல மலையெல்லாம் தீப்புடிச்சு எரியிது. மாம்புளி கொளுத்துன மாதிரி. கோயிலுக்கு முன்னால கெடா வெட்டி ரத்தமாச் சிந்திக்கெடக்குமே அப்படி இருக்குது மேகம். மலையில எரியிறது நம்ம தீயப்போல இல்ல.''

''வேற எப்படியாம்.''

''தரத்தரன்னு கொதிச்சுக் கொழம்பாப் பொங்கி வெள்ளந்தெரண்டு வருது. கொப்புளிச்சுத் துப்புன மாதிரி மலையில ஊத்து பீச்சியடிக்குது.''

''ஊத்தா.''

''தீவெள்ளம் நம்ம ஊருணிக்குள்ள வந்து வுழுந்தா என்னாகும்.''

''அம்புட்டுத்தான்.''

''ஊருணி நெறஞ்சு ஊருக்குள்ள மொழஞ்சா...''

''எல்லாரும் வெந்து அவிஞ்சிருவொம்.''

''எனக்குன்னா படபடன்னு வருது. தீய எப்படியும் அமத்தி வெள்ளத்தத் தாக்காட்டணுமே.''

''ஊருக்குள்ள வந்து சொல்ல வேண்டியதுதான.''

''நம்புனாத்தான் போச்சு. இல்லன்னா நோணியப் பிதுக்கீருவாக.''

''பெறகு என்ன செஞ்ச.''

''எல்லாரும் கூடிப் பேசுறொம்.''

''எல்லாரும்னா...''

''தவளைக பச்சிக...''

''அதுக என்ன சொல்லுச்சு.''

''வாங்க ஒடனே பெறப்புடுவம்னு தவளைக சொல்லுது. ஒரு கூடை யில நான் உக்காந்துக்கிட்டா கவுத்தக் கெட்டி இழுத்துட்டுப் போறம்னு துடிக்குது.

அதெல்லாம் வேணாம் எம் முதுகுல ஏறிக்கிட்டா ஒரு வீச்சுல கொண்டுபோயி வுட்றன்னு காக்கா தயாரா நிக்கிது. கால்ல இடுக்கிச் செந்தூக்காத் தூக்கீட்டுப் போயிருவன்னு பெராந்து காக்காய மொறைக்குது. எங் கழுத்தப் புடிச்சுக் கிட்டாப் போதும் கொண்டுபோயிச் சேக்கிறதுக்கு நானாச்சுங்குது கொக்கு.''

''அம்புட்டு ஆத்தரம்.''

''அதுகளுக்கு அதுகளோட கவல. இச்சிமரம் செத்துப்போனா பச்சிக பாடு என்னாகும். ஊருணியில தண்ணியில்லன்னா தவளைக எங்க போகும்.''

''திண்டாட்டந்தான்.''

''ஒருத்தரும் வர வேணாம். பெயப்படாம இங்கயே இருங்க. எல்லாம் நான் பாத்துக்கிறன்னு தைரியஞ்சொல்றென். ஒடனே சத்தமெல்லாம் அடங் கீருச்சு. தவளைககிட்ட மட்டும் ஒருவார்த்த சொல்லிவச்சென்.''

''என்னன்னு.'';

''ஏதொண்ணுக்கும் அருவமில்லாமப் போயி வீடுகளோரம் இருக்கிற கலயங்கள எடுத்துட்டுவந்து தயாரா நில்லுங்க. ஊருணியிலருந்து மலவரைக்கும் வரிசபுடிச்சுக் காத்துருங்க. தீய அமத்துறதுக்குத் தண்ணி வேணும்னா ஒரு சத்தங் குடுக்கென். ஊருணித் தண்ணி அம்புட்டவும் கலயத்துல மோந்துமோந்து கைமாத்தீருங்க அப்படின்னு வெவரமாச் சொன்னென்.''

''சொல்லியாச்சு.''

''கண்ண மூடிக்கிட்டு எங்க முனியசாமிய மனசில நெனச்சுக் கும்புட்டென். ஒடனே கழுத கனைக்கிற சத்தம் கேட்டுச்சு. பெறகு என்ன நடந்துச்சுன்னு தெரி யாது. முழிச்சுப் பாத்தா மலையோரம் நிக்கென்.''

''நெசந்தானால.''

''சாமி சத்தியமா.''

''அம்புட்டுத் தூரம் பறந்தா போயிட்ட.''

''முனியசாமி குடுமியப் புடிச்சுத் தூக்கீட்டுப் போனாலும் போயிருக்கும். இல்ல அதோட நாயி கவ்வீட்டுப் போயிருக்கும். ஒருவேள கழுத கொண்டு போச்சோ என்னமோ.''

''மாயமாத்தான் இருக்கு.''

''தீ கொதிக்கிற எடத்துக்கே போயிட்டென். எனக்கு வெக்கையே தெரியல. குளுருக்குக் கூதக்காஞ்ச மாதிரி கதகதன்னு இருக்குது. அங்கங்க கெணறுகெண றாத் தெரியிது. அதுக்குள்ளருந்து தீ கூழாக் கொதிச்சுப் பொங்கி வெளியேறிப் பெருக்கெடுத்து ஓடுது. ஊருச் சோத்தக் கரச்சு ஊத்துன மாதிரி.''

''அந்த வெள்ளந்தான் ஊருக்கு வருதோ.''

''மலைக்குக் கீழ கம்மாயாப் பெருகிக் கசிய ஆரம்பிக்குது.''

''எவ்வளவுதான் தாங்கும்.''

''மலையில நடக்கிற கூத்தப் பாத்தா கொலநடுங்குது.''

''எதுக்கு.''

''கூட்டங்கூட்டமாப் பேயிக ஆட்டம்போடுது.''

''அய்யய்யோ என்னல சொல்ற.''

''பொய்யா சொல்றென். அங்கவங்கமில்லாற பேயிக. ஒவ்வொண்ணுக்கும் தலமுடி தரையில இழுபடுது. கலப்ப மாதிரி பல்லு எத்துங்குத்துமா நீட்டிக் கிட்ருக்கு. நாக்கு முட்டிவரைக்கும் தீயாத் தொங்குது. காலுகையி அத்தன வெரல்லயும் ஒருமொழ நீளத்துக்கு ரெட்டரெட்டையா நகம்.''

''நீ செத்த.''

''ஒரு பக்கம் ஆய்பூய்னு சண்ட நடக்குது. ஒண்ணுக்கொண்ணு நகத்த வச்சுக் கண்ணுல குத்தவும் ரத்தம் பீச்சுது. அத வாயில வாங்கிக் குடிக்குது. தலையச் சிலுப்புற சிலுப்புல முடி மரங்களச் சுத்திவளச்சு வேரோட புடுங்குது. அதுகள நாக்கால தாங்கவும் கபகபன்னு தீப்புடிச்சு எரியிது.''

''கேக்கவே பெயமாருக்கு.''

''அஞ்சாறு பேயி கெணத்துக்குள்ள வித்தையடிச்சுக் குளிச்சுக் கும்மாளம் போடுது. தீ பொங்கி வரயில அதுல மெதந்துக்கிட்டே வெளிய வந்து மறுபடியும் ஆட்டம். நீளக் கங்கு நட்டமா ஆடுனா எப்படியிருக்கும் அப்படி...''

''ஒனக்கு வேணும்.''

''இனியொரு பக்கம் தட்டாங்கல்லு வெளையாட்டு நடக்குது.''

''அது வேறயா.''

''எக்கச்சக்கமான பேயிக வட்டமா உக்காந்துக்கிட்டு மலையிலருந்து பெரிய பெரிய பாறைகள அலக்காத் தூக்கிப்போட இனியொண்ணு புடிக்குது. என்னமோ பாட்டுப் படிக்குதுக. ஆருக்குத் தெரியிது. பாறைகளக் கிட்டப் போயிக் கையிட்டுத் தூக்குதுன்னு நெனச்சீகளா.''

''பெறகெப்படியாம்.''

''இருந்த எடத்துலருந்தே நாக்க நீட்டி பாறையத் தெண்டி ஏந்தீட்டு வருது. தட்டாங்கல்லுன்னா கையிட்டுல்ல ஓசரப் போட்டுப் புடிக்கணும்.''

''ஆமா.''

''இது அப்படியில்ல. ஒண்ணு நாக்கால பாறையத் தூக்கிப்போட அடுத்தது நாக்காலயே ஏந்திப் புடிக்கக் கல்லு அப்படியே தீயில பொரிஞ்சிருது.''

''சோளமா பொரியிறதுக்கு.''

''பொரிஞ்சதும் லவக்னு விழுங்கி ஏப்பம்போடுது. அதென்ன ஏப்பமா... கொஞ்சம் இருங்க. மோண்டுட்டு வந்துறென். அடிவகுறு தாழியாக் கனக்குது.''

ஆண்டிக்கும் மூத்திரம் நெருக்கின மாதிரி இருந்தது. துணைக்குத் துணை யாக நின்று சொகமாக மோண்டுவிட்டுத் திரும்பினார்கள். ஆண்டி ஆவலாகக் கேட்டான்.

''கல்லுப்பொரியத் தின்னு ஏப்பம்போடும். அதுக்குப் பெறகு...''

''பெறகென்ன ஒரே சண்டதான். பாறையத் தூக்கி மண்டையில போட்டு ஒடச்சு ஆன்னு அலறிக்கிட்டு தங்குதங்குன்னு ஆடுது. ஆட்டந்தாங்காம மலைக நடுங்குது.''

''அந்த ஆட்டம் போட்டா நடுங்காம என்ன செய்யும்.''

''அத்தன பேயும் கரண்டக்கால்ல சலங்க கெட்டியிருக்கு.''

''நல்லாத்தான் இருக்கும்.''

''என்ன சலங்கன்னு நெனச்சீக. எல்லாம் மனுசத் தலைக. காதுவழியாக் கோத்துத் தொங்குது. ஒண்ணொண்ணும் நாக்க நீட்டிக்கிட்டு. கண்ணு கோவம் பழமாத் துருத்திக்கிட்டு.''

''எப்படித்தான் பாத்துட்ருந்தயோ.''

''பேயிக ஆடஆட வலி தாங்காம சலங்க கூப்பாடு போடுது. வாயிலருந்து ரத்தம் கொமக்கொமக்னு ஊத்துது. ஆட்டத்துக்குத் தாளம் வேணுமில்ல.''

''தாளமா.''

''ஒரு பேயி மலைய அப்படியே பேத்தெடுத்துக் கழுத்துல தொங்கப் போட்டுக்கிட்டுத் தோதாத் தாளமடிக்குது. இனியொண்ணு பனையப் புடுங்கிக் கொழலு ஊதுது.''

''இத்தனைக்கும் நீ எங்கருந்த.''

''அத ஏன் கேக்கீக. மல உச்சியில ஒரு மொங்காம்பாறைக்குப் பின்னால ஒளிஞ்சு பாத்துக்கிட்ருக்கென். அதுக கண்ணுல பட்ருவனோன்னு மனசு கெடந்து அடிச்சுக்கிருது.''

''தெரிஞ்சா அம்புட்டுத்தான்.''

''கொசுவப் போல வாயில புடிச்சுப் போட்டுக்கிரும். இருந்தாலும் அம்புட்டு உச்சிக்கு எந்தப் பேயிக்கு நாக்கு எட்டப்போகுதுன்னு சின்னத் தைரியம்.''

''ஆப்புட்ருக்கணும்.''

''மலங்காட்டு மொசலு மானு நரி கரடி புலி ஆன சிங்கம்னு ஏராளமா உசுப்பிராணிக இருக்குமில்ல அதுக தீயப் பாத்து மெரண்டு கந்துகந்தாக் கலஞ்சு ஓடுதுக.''

''நானும் அதக் கேக்கணும்னுருந்தென்.''

''பாம்புகூட வடம்போல நெளிஞ்சு போகுது. எலிக என்னமா உருண்டு ஓடுது. பலமாதிரியான பச்சிக தப்பிச்சொம் பெழச்சம்னு போறதப் பாத்தாப் பாவமாருக்கு.''

''ராத்திரி நேரம் அதுக எங்க போயித் தங்கும்.''

''அந்த நேரத்துலயும் ஒரு நரி என்னயப் பாத்து பம்மிப்பம்மி வருது. எம் முதுகுல ஏறிக்கோ ஓடிப்புருவம்னு சொல்லுது. நான் போவனாக்கும். அத நம்ப முடியாது.''

''தந்தரகாரக் கழுத. ஏமாத்திப்புரும்.''

''எனக்கு நம்மூரு நெனப்புத்தான் மனசில ஓடுது. இந்நேரம் வெள்ளம் எங்க போயிருக்குமோன்னு பதட்டமாருக்கு. முனியசாமியப்பா என்னயக் கொண்டு வந்து இங்க ஏன் தவிக்கவுடுற. எங்க ஊரக் காப்பாத்துன்னு கும்புட்டுக்கிட்டே இருக்கென். கொஞ்ச நேரத்துல ஆரோ தக்னு குதிக்கிற சத்தம் கேக்குது.''

''ஆரது.''

''தண்ணிப்பேயி. எங்க முனியசாமி அனுப்பிவச்சது. குதிச்சதும் கும்மாளம் போட்ட பேயிகளப் பாத்து மொறச்சது. வாய அகலமாத் தொறந்து மூச்சு இழுத் துச்சு. வாயிக்குள்ள பாத்தா பெரிய கம்மாயே தண்ணி நெறஞ்சு கெடக்குது. ஏய்னு ஒரு அரட்டு. அம்புட்டுத்தான். ஆட்டம் அடங்கீருச்சு. பேயிக பரிஞ்சு போன எடந்தெரியல.''

''எல்லாத்துக்கும் பெரிய பேயி போலருக்கு.''

''சாமி அனுப்புனதாச்சே.''

''நல்லதாப்போச்சு.''

''பெறகு மலைகமேல தூதூன்னு துப்புச்சு. ஒடனே தீ எரிஞ்ச எடம் அம்புட்டும் அமந்துபோச்சு. நின்ன எடத்துலருந்தே நாக்க நீளமா நீட்டி நம்ம ஊருணியப் பாத்துப் போற வெள்ளத்த மறிச்சு ஒரே மூச்சில அவ்வளவையும் குடிச்சிட்டு வகுத்தத் தடவிக்கிட்டே மாயமா மறஞ்சுபோயிருச்சு.''

''நீ தப்பிச்ச.''

''எங்க முனியசாமி தொணையிருக்கயில எங்கிட்ட ஆரும் அண்ட முடியாது.''

''நல்ல சாமிதான்.''

''துடியான சாமியாக்கும்.''

''நடுக்காட்ல கெடந்துக்கிட்டு நீ எப்படி வந்து சேந்த.''

''சந்தோசத்துல அதப் பத்தி நெனப்பே இல்ல. சாமிகிட்டயும் கேக்கல. முழிச்சுக்கிட்டு நிக்கென்.''

''மாட்டிக்கிட்டயா.''

''ஒரு மொசலு ஓடிவந்து எங்கிட்ட வெவரம் கேட்டுத் தெரிஞ்சிட்டுப் போயி மத்ததுகளுக்குத் தகவலு சொல்லீருச்சு. அதுக போடுற ஆட்டம் சொல்ல முடியாது. எல்லாஞ்சேந்து என்னய ஆனமேல ஏத்தி கூத்துக் கும்மாளத்தோட கூட்டி வருதுக.''

''பெரிய ராசாதான்.''

''ரெண்டு மலவவ்வா எனக்கு மேல செறகால கொடபுடிக்குது. மானு என்ன சொகமாப் பாடுது தெரியுமா. சிங்கமும் கரடியும் அதுக்கு ஈடுகுடுக்க முடியல. ஒரே கரகரப்பு. நரியப் போல மனுசங்கூட ஆட முடியாது. ஆனைக கொப்புக் கொழைய ஒடிச்சு வழி உண்டாக்கீட்டுப் போகுது. மலம்பண்ணி இருக்கே அது மொரட்டுக் கழுத. ஒரு சிலுப்புத்தான். கோடாலி மாதிரி இருக்கிற சிங்கப் பல்லு எதுப்பட்ட மரங்கள வேரோட தெண்டிச் சாச்சிரும்.''

''நல்லாத்தான் இருக்கும்.''

''ஊருணிவரைக்கும் கொண்டுவந்து வுட்டுட்டுத்தான் போனதுக. அதுக்கு முந்தியே எடவழியில நின்ன ஒரு தவளையிட்டச் சங்கதியச் சொல்லியனுப்பீட்டென். நாங்க போறதுக்குள்ள அது போயிச் சேந்துருச்சு. அங்க கொண்டாட்டத்துக்குக் கேக்கணுமா. ஊருணியே கலங்கிப்போச்சு. இச்சிமரம் பட்ட பாடு சொல்ல முடியாது.''

''பேயிககிட்ட மாட்டாமப் பெழச்சு வந்தயே.''

''ஆனா எங்க ஆத்தெகிட்ட மாட்டிக்கிட்டனே. சனியனே நேரங்கெட்ட நேரத்துல எங்க போயித்தொலஞ்ச. தேடித் தவிச்சிட்டனேன்னு குடுத்தாளே ஒரு குடுப்பு. முதுகு பழுத்துருச்சு. நடந்த கதையச் சொல்லீருந்தா அம்புட்டுத்தான். வெள்ளாவியில முள்ளோட முள்ளா ஒடிச்சுத் திணிச்சிருப்பா.''

''இனிமே ஊருணிப் பக்கம் போனா என்னயவும் கூட்டீட்டுப் போ.''

''பட்டது போதாதா. இனியொரு தேரம் போகணுமா. முனியசாமி சொன்னா போயித்தான் ஆகணும்.''

இந்தக் கதை கொஞ்ச நாள் மண்டைக்குள் ஓடி மறைவதற்குள் அடுத்த கதை வந்துவிடும்.

## 3. ருசியாருக்குதா

ஆண்டியைக் காணவில்லையென்றால் அஞ்ஞை வேறெங்கேயும் தேட மாட்டாள். நேரே வண்ணாக்குடிக்குத்தான் போவாள். இது வழக்கமாகி விட்டது. ஒரு பயலும் இப்படிக் கூத்துக்கட்டிவிட்டானே என்று அவள் விசாரப் பட்ட காலமெல்லாம் போயிற்று. தானாக அழுது புலம்பியதுதான் மிச்சம்.

''ஒடந்தனக்காரப் புள்ளீக இப்படியா இருக்குதுக. அததுபாட்டுக்குச் சேந்து வீட்டச் சுத்தி வெளையாடுதுக. எனக்கும் ஒண்ணு வாச்சிருக்கே...''

மகனும் மாரியும் வண்ணாக்குடி உவர்மண்ணைச் சுற்றி உருண்டு புரண்டு விளையாடும் சித்திரத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருப்பாள். கோவங்கொப்புளிக்கும். விழுங்கிக்கொண்டு நல்ல வார்த்தை சொல்லிக் கைவசப் படுத்துவாள்.

''என் அப்பன் இங்கயா இருக்க. நான் எங்கயெல்லாம் தேடித் தவிக்கிறது. அஞ்ஞையிட்ட ஒருவார்த்த சொல்லீட்டு வந்துருந்தா அலஞ்சிருக்க மாட்டனே. வகுறு பசிக்குமில்ல. ஒரு வாயி கஞ்சி குடிச்சிட்டு வந்து தெம்பா வெளை யாடுய்யா.''

ரெம்ப வாந்தக்கமாகக் கூட்டிக்கொண்டு போவாள். கீழத் தெருவைத் தாண்டியதும் பிடி இறுகி அவன் முதுகில் பூசை கிடைக்கும்.

''காலசனியனே நீ உழுகிறதுக்குப் பெறந்தயா வெளுக்கிறதுக்குப் பெறந்தயா. ஒங்கப்பன் வரட்டும். மேய்க்கிறதுக்கு நாலு கழுத வாங்கித்தரச் சொல்றென்.''

குடுமிப் பிடியில் அவன் தரதரவென்று இழுபடுவான். தெருவில் பார்த்த வர்கள் எளக்காரமாகச் சிரிப்பார்கள்.

''சண்டிவீரி நீ அடிச்சாப்புல வீடுதங்கப்போறானா. கெட்டிப்போட்டாலும் நிக்க மாட்டான். அவனுக்குத் தோதா வண்ணாப் பெய வாச்சிருக்கான். ரெண்டு பேரும் ஒரு குண்டியிட்டுப் பேலுறவுகளாச்சே.''

பிறகும் அவனுக்கு அத்தாளங்கிடைக்கும். அவன் கிறுங்க மாட்டான்.

''இப்படியெல்லாம் கேக்கணும்னு எந் தலையெழுத்தா. எனக்கு வாற வெளத்துல மொகட்ல கெட்டித் தூக்கீருவமான்னு இருக்குது. ஒருநா அழுகை யோட போயிரும். வீட்ல புள்ளையில்லன்னாக் கெடக்குது.''

அவன் அஞ்ஞைக்குப் பின்னால் அப்பிராணியாகப் போவான். அவளும் பயல் திருந்திவிட்டானென்று நினைத்து கொமட்டைத் திருகுவதையும் குடுமியைப் பிடிப்பதையும் நிறுத்திக்கொள்வாள்.

''சேந்து வெளையாடுறதுக்கு ஊருக்குள்ள புள்ளீகளா இல்ல. இனிமே அவங்கூடச் சேருவயா.''

''சேர மாட்டென்.''

அஞ்ஞை அவன் முதுகில் தடிப்பைத் தடவிக்கொடுத்துத் தூசி துடைப்பாள். சொகமாக இருக்கும்.

இத்தனை கூத்துக்கும் மாரி கள்ளப் பார்வையில் எங்கேயாவது ஒளிந்து கொள்வான். கண்ணில் பட்டால் நாற வசவு கிடைக்குமே. ஆத்தா வேறு அடிக்க

வருவாள். கவைக்கம்பு அடி விழுந்தால் தடிப்பு ரெட்டைரெட்டையாக எழும்பி விடும்.

ஆண்டி வீட்டுக்குப் போனதே சரியென்று பானை சட்டியை உருட்டி வயிறு முட்டக் கஞ்சி குடிப்பான். வாங்கின அடி மறந்துவிடும். அஞ்ஞையிடம் செல்லமாகச் சொறிந்து சிணுங்குவான்.

''ஏஞ்ஞு வெளையாடப் போறென்.''

அவளுக்குக் குளிர்ந்துபோகும்.

''போயி நம்ம கொட்டாரத்துல வெளையாடு. என் ராசால்ல.''

அவ்வளவுதான். அவன் வீட்டுக்குப் பின்புறமாகக் கெலித்துவிடுவான். மேலக் களத்து வழியாகப் போனால் பயல்கள் கிண்டல்பண்ணுவார்கள்.

''ஆண்டிவண்ணான் தோண்டிவண்ணான்
அடுத்தவீட்ல பேண்டவண்ணான்.''

தெருவழியென்றால் எளவட்டங்கள் பிடித்துக்கொள்வார்கள்.

''என்னப்பா அழுக்கெடுக்கலயா.''

''வெள்ள குடுத்து எம்புட்டு நாளாச்சுப்பா.''

''ஒந் தம்பி மாரியக் காணுமே.''

அவனுக்கென்றால் கல்லெடுத்து உச்சலாமா என்றிருக்கும். மனசுக்குள் வைதுதீர்ப்பான்.

''ஒம் மொகறக்கட்டைக்கு வெளுத்த துணி கேக்குதோ. நாறப்பொணம். போவயா வாய மூடிக்கிட்டு.''

கேலிக்காரனை மனசுக்குள்ளேயே பிடரியில் எட்டி ஒரு அடி கொடுத்து வலிக்கும் கையைத் தடவிக்கொள்வான்.

இதுக்குள் மாரி உவர்க் காட்டுக்குத் தப்பித்தோடிப் பூனைபோல் காத் திருப்பான். மறுபடியும் விளையாட்டு மும்முரமாக நடக்கும். நேரம் போவது தெரியாது. தவிப்பாக இருந்தால் தும்பைப்பூப் பறித்துத் தேன் உறிஞ்சிக் குடிப் பார்கள். அவர்களுக்கு முந்தி தவ்வித்தவ்வித் தேனை உறிஞ்சும் வண்ணாத்திப் பூச்சிமேல் எரிச்சலாக இருக்கும். அதைச் செடியால் பொத்திப் பிடித்துக் கண்ட படி வைது எச்சரித்து விட்டுவிடுவார்கள்.

ஒருநாள் அப்படி அகப்பட்ட வண்ணாத்திப்பூச்சியை வைத்துக்கொண்டு மாரி சந்தேகத்தில் கேட்டான்.

''எப்பா இப்ப இது குடிச்ச தேனு உள்ளதான கெடக்கும்.''

''இல்லாம எங்கல போகும். மோத்தரமா மோண்டுருக்கும்.''

''இருக்கான்னு பாப்பொம்.''

மாரி வண்ணாத்திப்பூச்சியின் குண்டிப் பக்கம் பிய்த்தான். அம்புட்டும் தேன் குடம். சந்தோசம் தாங்க முடியவில்லை. குடத்தை உரித்தெடுத்து முள்ளால் குத்தி சொட்டுச்சொட்டாக உள்ளங்கையில் வடித்து நக்கினார்கள். அன்றைக்கு முழுக்க விளையாட்டு இனித்தது.

மாரி வகைவகையான துணிகள் கொண்டுவருவான். கோவணங்கட்டி அழகுபார்ப்பார்கள். சோமாறிக்கொண்டு பெரியமனுசத் தோரணையில் நடப் பார்கள்.

''துணி ரெம்பப் பழசோ. புதுசுன்னாத் தோதாருக்கும்.''

''புதுசுதான வேணும். நாளைக்கே சம்பாரிச்சிட்டு வாறென்.''

வீட்டில் ஆளில்லாத நேரம் பார்த்து மாரி கைவரிசையைக் காட்டினான். முற்றத்தில் கிடந்த அழுக்குப் பொதிக்குள் முண்டித் துளைத்து நல்லநல்ல சீலையாகத் தேடிப் பிடித்துக் கரையைக் கிழித்துக் கொண்டுவந்துவிட்டான். ஆண்டி ஒருமாதிரியாகப் பார்த்தான்.

''எப்படில கெடச்சது.''

''எம்புட்டுக் கஸ்டப்பட்டுச் சம்பாரிச்சிட்டு வந்துருக்கென் தெரியுமா.''

''உள்ளதச் சொல்லு. எங்கருந்து கொண்டுவந்த.''

''நீங்க ஒண்ணு. இப்படி எத்தன வேணும். பேசாமப் புடிங்க.''

கரைத் துணிகளைக் கோவணங்கட்டிக்கொண்டு ஆசைதீர ஆடினார்கள். மாரி கூடவே பாடினான்.

''அருப்புக்கோட்டக் கருப்புச்சீல
அழகுக்கில்ல எடுத்துவந்தென்
நடக்கத் தெரியாம
நாருநாராக் கிழிச்சிட்டாளே
ஆருஅந்த ஆளு - இந்த
அய்யாவத்தான் கேளு.''

இப்படி அப்பப்ப பாட்டை எடுத்துவிடுவான். குரல் சொகமாக இருக்கும். பாட்டு ராகத்துக்குத் தக்க ஆட்டத்தை மாற்றிக்கொள்வான். சில சமயம் ஒட்டைப் பானையைத் தேடிக் கொண்டுவந்து தாளமடிக்கணும்.

வெள்ளை கொடுக்கும்போது அவன் ஆத்தாளுக்குக் கிடைத்த பாட்டு தலைமுறைக்கு இருக்கும். பெண்கள் முறைபோட்டு வைதார்கள்.

''புதுச் சீலையில கரையக் கிழிச்சுக் கந்தலாக்கீட்டயே. ஒங் கைய வெள்ளாவியில வச்சு அவிச்சாத்தான் என்ன.''

''கிழிஞ்சா இப்படியா ரெண்டு பக்கமும் கத்தரிச்ச மாதிரி இருக்கும். கழுதையத் திங்கவுட்டுட்டுக் கம்மாக் கரையில மலந்துகெடந்துருப்ப வண்ணாச் சிறுக்கி.''

''எஞ் சிறுவாட்டுச் சீல கருவாட்டுப் பானைக்குள்ள போயிருச்சே.''

மொன்னச்சி ஒண்ணும் பிடிபடாமல் ஒப்பாரிவைத்தாள்.

''ஒழக்கு நெல்லுக்கு ஒழைக்கப் போனென். பதக்கு நெல்லப் பண்ணி தின்னுருச்சே. நான் என்ன செய்யட்டும் பாதகத்தி.''

''கைகண்ட சிறுக்கிக்குக் கண்ணீரு ஒண்ணுதான் கொறச்சலாக்கும்.''

''என்ன நடந்துச்சுன்னு தெரியலயே. மாயமாருக்குதே. இப்படியா எங்க பெழப்புல மண்ணள்ளிப் போடணும். ஆரச் சொல்லட்டும்.''

ஆத்தா அழுவதைப் பார்த்து மாரிக்கு வருத்தம். செய்தது தப்புத்தான். இந்தக் கோவத்தில் அதைச் சொன்னால் அவ்வளவுதான். ரெண்டு கையையும் உவர்முறுக்கிவிடுவாள். கண்டுங்காணாமல் கழண்டுவிட்டான்.

சேலைக் கரையைப் பறிகொடுத்தவர்கள் பல மாதிரி பேசி முடிவுக்கு வந்தார்கள்.

''ஊருக் கூட்டம் போட்டுக் கேட்டாகணும்.''

''பத்து நாளைக்குக் கஞ்சி போடாமப் பட்னிபோட்டாத்தான் கறி வத்தும்.''

''வேற வண்ணானக் கொண்டுவந்து வப்பொம்.''

''பரம்பரையா இருக்கிறஙக. அதுகள வெளியேத்துறது பாவம்.''

''இந்தத் தடவ பெழச்சுப்போகட்டும்.''

''அப்படின்னா சும்மா வுட்றதா.''

''சேதாரத்துக்குத் தக்க கொத்துக்கூலியப் புடிச்சுக்கிருவொம்.''

''அதான் சரி. அப்பயாச்சும் அறிவு வருதான்னு பாப்பொம்.''

நல்லவேளை விவகாரம் அதோடு முடிந்தது. ஆனாலும் மொன்னச்சியின் புலப்பம் நிற்க நாளானது.

''இப்படியும் கொடும நடக்கிறதுண்டுமா.''

அஞ்ஞை ஆண்டியை அரட்டாத நாளில்லை. அடிக்காத இடமில்லை. என் னென்னமோ செய்துபார்த்துவிட்டாள். கொட்டாரத்தில் விறகு தறிக்கச் சொன் னாள். சில்லந்தி வேலை கொடுத்தாள். தோட்டத்துக்குக் கூட்டிக்கொண்டு போய்க் களையெடுப்பு அதுஇது என்று வசக்கிப்பார்த்தாள். எதுக்கும் அடங்க வில்லை. கொஞ்ச நேரம் பம்மாத்துக்காட்டுவான். அதுக்குமேல் முடியாது. எழுந்து நெளிர்விட்டு வயிற்றைத் தடவுவான்.

''ஏஞ்ஞ வகுறு வலிக்குது. ஓடைக்குப் போயிட்டு வாறென்.''

''அப்படி என்னத்தத் தின்னுட்ட. போயிப் பொறுமையா இருந்துட்டு வாய்யா.''

நாலு நிரை களையெடுத்து முடிந்த பிறகும் அவன் திரும்பியிருக்க மாட் டான். ஓடைக்குள் இருந்தால்தானே.

அஞ்ஞை வண்ணாக்குடிக்கு நடந்து தவித்தாள். மொன்னச்சியுடன் சண்டையான சண்டைபோட்டாள்.

''புழுக்கமுண்ட ஒனக்கு ஒண்ணுந்தெரியாதோ. பெத்துவச்சிருக்கயே அதென்ன புள்ளையா. ஊருச் சோத்தத் தின்னுட்டுக் கள்ளக் கறி வளத்துட்டுத் திரியிற வண்ணாக் கழுதைக்கும் எம் புள்ளைக்கும் ஏணி வச்சாலும் எட்டுமா. பேதியில போறவன் எங் கையில மட்டும் சிக்கட்டும். கிண்ணிய நகட்டிக் கெடங்குல தூக்கிப்போடுறனா இல்லையான்னு பாரு. நாறத் தண்ணிய மிதிச்சா நல்ல தண்ணிக்குத்தான் கேடு. இந்த நாயிட்டப் பேச்சென்ன வேண்டிக்கெடக்கு.''

மொன்னச்சி ஆத்திரத்தில் புலம்பினாள்.

''அஞ்ஞாவுக என்ன இப்படிப் பேசுறீக. நான் எதுக்குன்னுதான் ஆவென். எல்லாரும் பாடுபடுத்துனா எங்க போகட்டும். ஒங்க புள்ளாண்டன வாங்க வாங்கன்னு கூப்புட்டு வெளையாடச் சொல்றனாக்கும். சிறிசுக சேந்து வெளை யாடுனா நான் என்ன செய்யட்டும். அவன அடிச்சு எங் கையே காச்சுப்போச்சு. இனிமே கழுதையோட கழுதையாக் கெட்டிப்போட வேண்டியதுதான்.''

''ஏன் பேசமாட்ட. ஒன்னய ஒருநாளைக்கு வெளக்கமாத்துட்டுச் சாத்து னாத்தான் வசத்துக்கு வருவ.''

''ஊருக்குள்ள அழுக்கெடுக்க முடியாம ஒரேயடியா அடிச்சுச் சாச்சிருங்க.''

கதையை வேடிக்கைபார்த்த ஒருத்தி கேட்டாள்.

''அஞ்ஞாடி இந்தச் சக்களத்திச் சண்ட ஓயாதா.''

சண்டிவீரிக்கு வந்ததே ரோசம். அவளைப் பிடித்துக்கொண்டாள்.

''வாடி என் வறகோட்டு மூஞ்சி. ஒனக்கு நான் அம்புட்டு எளக்காரமாப் போயிட்டனா. ஒம் பெழப்ப ஊரே சிரிக்குது. ஊராரு பெழப்பப் பத்திப் பேச வந்துட்டயாக்கும். பொத்தீட்டுப் போ. இல்ல முந்தியில இருக்கிற வண்ட வாளத்தச் சந்தியில அவுத்து வுட்ருவென்.''

''வண்ணாக்குடிக்கு வந்து வம்புழுக்கிற உசிருக சொன்னாக் கேக்கவா போகுது. இதுக எக்கேடு கெட்டா எனக்கென்ன. நான் போறன் தாயி. குறுணி வேல கெடக்குது.''

''வீட்ல கட்ட வெளக்கமாரு ரெண்டு சாத்திவச்சிருக்கென். ஒனக்காகத் தான். திங்கிறதுக்குத் தவிடில்லையாம் தங்கச் சரப்புளி தொங்குதொங்குன்னு ஆடுதாம். வக்கத்த சக்களத்தி வம்புக்கு வந்த வாயக் கிழிச்சிருவென்.''

அவளை அடிக்காத குறையாக விரட்டிவிட்டு சண்டிவீரி ஒரு முடிவுக்கு வந்தாள்.

''இது என் வகுத்துல புள்ளையாப் பெறக்கல. எங்கயும் தொலஞ்சுபோகட் டும். வீட்டுக்கு வந்து கஞ்சின்னு கேட்டால்ல இருக்கு சங்கதி.''

அதிலிருந்து அவள் வண்ணாக்குடியை எட்டிப் பார்ப்பதில்லை. புருசனிடம் தொணதொணப்பதுடன் சரி.

''சில்லானா அலையிற நல்லான் குடும்பனுக்குப் புள்ளையப் பத்தி என்ன கவல. ஈரனேருச் சம்சாரி. ஊருச் சனம் அசேசம் இவுக காடுகரையில வேல செஞ்சு கூலி வாங்குது. இவுக புள்ள வண்ணாக்குடியச் சுத்தீட்டுத் திரியிது. ஊராளுற ராசாவுக்குப் பேலுறதுக்கு எடமில்லையாம். கொடும. நான் சொல்லிச்சொல்லித் தொண்டத் தண்ணி வத்திப்போச்சு.''

நல்லான் அவளுக்குத் தோதாக ரெண்டு வார்த்தையைக் கடிப்பான்.

''அவன் வரட்டும். முதுகுத் தொலிய உரிச்சு உப்புக்கண்டம் போடுறென்.''

அவளுக்குக் கோவந்தணிந்துவிடும்.

ஆண்டிக்கு ஒரு பக்கம் கொண்டாட்டம். இன்னொரு விதத்தில் திண்டாட் டம். அஞ்ஞையிடம் போய் மதியக் கஞ்சிக்குச் சிணுங்க முடியாது. கண்டபடி அடிவிழும். மாரியிடம் விசாரப்பட்டான்.

''மதியத்துக்குத்தான் சங்கடம். கஞ்சி கெடைக்காது. மத்த ரெண்டு வேளை யும் வசவு அவ்வளவு இருக்காது.''

மாரி யோசித்துவிட்டுச் சொன்னான்.

''பேசாம இருங்க. ஆருக்குந்தெரியாமக் கரச்சுக் கொண்டுவந்துறென்.''

ஆண்டிக்குத் தயக்கம். இருந்தாலும் அஞ்ஞையின் வாய்க்கு இது தாவலை.

''சரி வேற வழியில்ல. மழக் கஞ்சி குடிக்கலயா என்ன.''

''எங்க பானையில ஒங்க கஞ்சி.''

மாரி வீட்டுக்கு ஓடிக் கலயம் நிறையக் கஞ்சியும் கடித்துக்கொள்ள வெங்காய மும் கொண்டுவந்தான். ஆண்டி வளைத்துத்தீட்டினான். வாய்க்குள் மிச்சப் பருக்கைகள் பல ருசி காட்டின. மாரி கண்ணைச் சிமிட்டினான்.

''ருசியாருக்கா.''

ஆண்டியின் சிரிப்பு ஏப்பத்தில் கரைந்தது.

அதுக்குப் பிறகு அவர்கள் ஊருக்கு வெளியே மறைவான இடத்தில் மதியக் கஞ்சி குடிப்பது வழக்கமாகிவிட்டது. அப்படித் தோதுப்படாத நாளில் மாரி ஆண்டியை வீட்டுக்குள் குடிக்கச் சொல்லிவிட்டு வாசலில் காவலிருப்பான். வீட்டில் ஆளிருந்தால் ரெம்பச் சங்கடமாகிவிடும். காட்டில் கண்டதைத் தின்று வயிறு நிரப்பணும்.

சண்டிவீரிக்கு மனசுகேட்காது. வீட்டில் ஆளிருந்தால் பயல் வரக் கூச்சப் படுவான். தானே சட்டி பானையை உருட்டிவிட்டுப் போகட்டும். மதியம் கொஞ்ச நேரம் வெளியே போய்விடுவாள். சில நாள் அப்படியும் சங்கதி நடந்திருக்கிறது.

ஆண்டிக்கு வேறு பயல்களுடன் விளையாடப் பிடிக்காது. சொன்னபடி கேட்காமல் தோரிணிபண்ணுவார்கள். நடுவில் பிய்த்துக்கொண்டு ஓடிவிடு வார்கள். விளையாட்டில் மாரியையும் சேர்த்துக்கொள்ளணும். பாவம் அவன் எங்கே போவான். அடித்தாலும் பிடித்தாலும் கூடவே கிடக்கிறவன். வண்ணாப் பயல்களுடன் விளையாடணுமென்றால் நாலு ஊர் தேடிப் போகணும். அப்படி யும் நாலு பேர் கிடைப்பது சந்தேகம்.

பச்சைக்குதிரை விளையாடினால் குதித்துக்குதித்து அவன் முதுகில் ஏறிச் சவாரிவைப்பது. வயிற்றில் எத்துவது. அவனைச் சுமக்க வேண்டிய முறை வந்தால் அழிச்சாட்டியம்பண்ணுவது. ஏதாச்சும் காரணம் சொல்லி அவனை நிறுத்தி விடுவது. இல்லை விளையாட்டை அரைகுறையில் உலைக்கிறது. அதென்ன மயிர்விளையாட்டு. அவன் சுமக்கும்போது இனிக்குது. அவனைச் சுமக்கக் கசக்குது.

ஆண்டி சத்தம் போடுவான்.

''அவன ஆரும் சொமக்க வேணாம்ல. நான் சொமக்கென்.''

மாரி அவனிடம் தயங்கித்தயங்கி வருவான்.

''ஏறட்டுமாப்பா.''

''சும்மா ஏறுல.''

கூச்சத்துடன் சவாரிவைப்பான்.

''எப்பா ஒண்ணு கேக்கட்டுமா.''

''என்னல. ஊருச் சோறெல்லாம் ஒன் வகுத்துக்குள்ளதான் கெடக்கும் போலருக்கு. அதான் ஒருபெயலும் சொமக்க மாட்டங்கான்.''

''இப்படி இருந்துக்கிட்டே கிச்சலங்காட்ணா நல்லாருக்குமில்ல.''

''அம்புட்டுத்தான். மல்லாக்கப் போட்டுத் தாழி வகுத்துல ஒரே மிதி. உள்ளருக்கிறதெல்லாம் செதறிப்போகும்.''

இப்படிச் சள்ளைக்காகத்தான் அவர்கள் மற்ற பயல்களுடன் அவ்வளவாகச் சேருவதில்லை. தனியாகவே விளையாடுவார்கள். சில சமயம் கழுதைக்கு நல்ல மேய்ச்சல் தேடித் தொலவட்டுக்குப் போய்விடுவார்கள்.

## 4. அவுத்துக்கிருச்சாம் கழுத

மாரியும் ஆண்டியும் அன்றைக்குப் பெரியோடைத் தரிசில் உப்புச் சுமந்து விளையாடினார்கள். மேய்ச்சலுக்கும் விளையாட்டுக்கும் தோதான இடம். கழுதைகள் குனிந்த தலை நிமிராமல் காசலையாக மேய்ந்துகொண்டிருந்தன. விளையாட்டுக்கிடையில் ஆண்டிக்குப் புது ஆசை வந்தது.

''கழுதமேல சவாரிவப்பமா.''

''நல்லாத்தான் இருக்கும். ஆனா அதுக்குப் பொதி சொமந்துதான் பழக்கம்.''

''புதுசாப் பழக்கப்படுத்திப்பாப்பமே.''

''கொஞ்சம் இருங்க. தோதான கழுதைய அணச்சுக் கொண்டுவாறென்.''

மாரி தயாரானான். சேக்காளிக்காக இதைக்கூடச் செய்யாமலா. பக்குவ மாகப் போய் ஒரு ஆண் கழுதையை மடக்கிக் கழுத்தை வளைத்துப் பிடித்து முதுகில் சொகமாகத் தட்டிக்கொண்டே நடத்தி வந்து நிறுத்தினான்.

''குருத வந்தாச்சு. ஏறிக் கடிவாளத்தப் புடிச்சுக்கங்க.''

ஆண்டி சவாரிவைத்துக் குனிந்து கழுதையின் காதுகளை வசமாகப் பிடித்துக் கொண்டான். தலைகுப்புற தோதில்லாமல் இருந்தது. நிமிர்ந்து உட்கார்ந்தால் தோரணையாக இருக்கும். பிடிமானம் இல்லாமல் என்ன செய்ய. மாரி அதைக் கவனித்துவிட்டான்.

''இருங்க வாறென்.''

இடுப்புத் துணியில் ஓரத்தைக் கிழித்து ரெண்டு கயிறாக்கி கழுதைக் காது களைக் கட்டி மறு நுனியை ஆண்டியின் கையில் கொடுத்தான்.

''இப்ப எப்படியிருக்கு.''

ஆண்டி நிமிர்ந்துகொண்டான்.

''வசமாருக்கு.''

கழுதை தலையை உதறித் தப்பிக்க முடியாமல் காலைத் தரையில் உதைத்து முதுகை நெளித்தது. ஆண்டி உன்னி நகர்த்திப்பார்த்தான். அது கிளம்புவதாக இல்லை.''என்னல குருத சண்டித்தனம் பண்ணுது.''

''கால்ல தளைய அவுக்கணுமில்ல.''

''அதான பாத்தென்.''

மாரி மெல்லக் கழுதைக் காலோரம் உட்கார்ந்தான்.

''நான் ஒரு கூறுகெட்டவன். காலக் கெட்டிப்போட்டுட்டு ஓடுன்னா எப்படி முடியும். நீ சும்மாருடா.''

கழுதையிடம் செல்லமாகப் பேச்சுக்கொடுத்துக்கொண்டே முன்னத்தியங் கால் தளையை அவுத்துவிட்டான். அதுக்குத் தலை குனிய முடியாமல் காது விறு விறுத்தது. இதென்ன வம்பாப்போச்சு. தப்பிக்கவில்லையென்றால் தொந்தரவு தாங்காது.

கழுதை ஒருச்சாய்த்துத் திரும்பியது. பின்னத்தியங்காலில் குறுகுறுப்பு. கண்ணில் கள்ளப் பார்வை.

''ம் குருத கௌம்பட்டும்.''

மாரி உட்கார்ந்தவாக்கில் வாலை நோண்டினான். கழுதை சரியாக வசம் பார்த்துக் கண்ணைக் கீழ்வாக்கில் உருட்டியது. எல்லாம் சரி. காரியத்தை முடிக்க வேண்டியதுதான்.

அவன் மூஞ்சியில் பட்டென்று ஒரு உதை. ஒரு செண்டிப்பு. கால்கட்டு அவுந்த சுதாரிப்பில் கண்ணுமூக்கு தெரியாமல் ஓட்டம்பிடித்தது.

மாரி மட்டமல்லாக்க விழுந்தான். கழுதை கொடுத்த உதையில் மேல் தாடை முன்னத்தம் பல் கழண்டுவிட்டது. கையில் துப்பிப் பார்த்தான். வேரோடு பிடுங்கிக்கொண்டு ரத்தத்துக்குள் முங்கிக்கிடந்தது. மேவாயில் ஒட்ட வைத்தான். விழுந்துவிட்டது. கொருவாயை நாக்கால் தடவிவிட்டுப் பல்லைப் பார்த்து அழுதான்.

''ஆத்தெ எம் பல்லு... பல்லு...''

கழுதை குளம்பில் தீப்பிடித்ததுபோல் புழுதி கிளப்பிக்கொண்டு ஓடியது. குதிக்கக்குதிக்க ஆண்டிக்கு வயிறு குலுங்கியது. கடிவாளக் கயிறு உருவிக் கையோடு வந்துவிட்டது. கீழே விழாமலிருக்கக் கால்களை இடுக்கிப் பின்னினான். முழுசாக எட்டவில்லை. தாமரிக்க முடியாமல் சாமியாடிய மாதிரி உடம்பு துள்ளியது. குனிந்து கழுத்து மயிரைக் கொத்தாகப் பிடித்தான். ஒரு சிலுப்பில் மயிரும் நழுவி விட்டது.

''ஏலே ஏலே புடிலேய்...''

அவன் அலறுவது தெளிவில்லாமல் கேட்டது.

கழுதை அவனை ஒரு குத்துக்கல்லில் உதறியெறிந்துவிட்டு ஓடித் தளை யில்லாத சந்தோசத்தில் ஊரைச் சுற்றிக் குதியாளம் போட்டது. அதைக் கண்டு ஒரு நாய்க்குப் பொறுக்கவில்லை. சன்னமாகக் குரைத்துத் துணைக்கு இன்னொரு நாயைக் கூட்டிக்கொண்டது. ரெண்டும் பின்னால் விரட்ட கழுதை மறுக்கி ஓடியும் முடியவில்லை. கட்டாப்பில் மாட்டிக்கொண்டது. அவை கடிக்க இது உதைக்க கிறுவாணத்தில் நல்ல மல்லுக்கட்டு. கடைசியில் ஒரு நாயிடம் பின் சப்பை அகப்பட்டுக்கொண்டது. வசமான கடி. கர்புர்ரென்று சதையைக் குதறி விட்டது. கழுதை அதுக்குமேல் தாக்குப்பிடிக்க முடியாமல் கடியை வாங்கிக் கொண்டு வலிக் கனைப்பில் வண்ணாக்குடிக்கு ஓடிக் கட்டுத்துறையில் நின்று மூச்சுவாங்கியது.

பல்லு போன மாரி இன்னும் எழுந்திருக்கவில்லை. உதடு கொடிக்காப் பழமாக வீங்கிவிட்டது. வீக்கம் மேலும் ஒரேவாக்கில் கனத்துக்கொண்டே போனது. ஊமையழுகையில் தக்கிமுக்கி எழுந்து நடந்தான். வலிகூடப் பெரி சில்லை. ஆத்தாளுக்கு என்ன சொல்வது.

கையை விரித்து மறுபடியும் பல்லைப் பார்த்துக்கொண்டான். இதுக்கு ஈடாகக் கழுதையின் காலை ஒடித்தால்கூட ஆறாது. இருக்கட்டும்இருக்கட்டும்.

மிச்சக் கழுதைகள் சாவகாசமாக மேய்ந்துகொண்டிருந்தன. திரட்டிப் பத்திக்கொண்டு வந்தான். வழியில் ஒரு புஞ்சை வரப்போரம் ஆண்டி முனங்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். மூலைக் குத்துக்கல்லில் வசமாக விழுந்து கிண்ணி கழண்டு தொடையெலும்பு நெரிந்துவிட்டது. மாரியைப் பாவமாகப் பார்த்தான். மாரி கையிலிருந்த பல்லைக் காட்டினான். அவன் பதிலுக்குத் தொடையைக் காட்டினான்.

மாரிக்கு ஆண்டியை விட்டுப் போக மனசில்லை. கூட இருந்தாலும் வம்பு. வீட்டுக்குப் போய்த் தகவல் சொல்லவும் முடியாது. யாரிடம் சொல்வது. ஆத்தாளிடம் சொன்னால் எப்படி அடி விழுமோ. சங்கடத்தில் முழித்தான்.

''கழுதைகள வீட்ல வுட்டுட்டுத் திரும்பி வரட்டுமா.''

ஆண்டி தைரியம் சொன்னான்.

''அருவமில்லாமப் போயிரு. நான் எப்படியும் சமாளிச்சுக்கிருவென்.''

''ஒத்தியில இருக்கீகளே. தூக்கிவுடட்டுமா. பையாப்பையாப் போயிற லாம்.''

''காலு கல்லுத் தூணாக் கனக்குது. நீ போ. நான் வந்துருவென்.''

மாரி திரும்பித்திரும்பிப் பார்த்தபடி வீட்டுக்கு வந்தான். நல்லவேளை ஆத்தா தட்டுப்படவில்லை. கழண்ட பல்லைக் கடைசியாக ஒரு தடவை பார்த்து விட்டுத் தலையைச் சுற்றிக் கூரைமேல் எறிந்தான். பிறகு வெள்ளாவியோரம் அப்பிராணியாக உட்கார்ந்துகொண்டான். மனசு முழுக்க ஆண்டியைப் பற்றிய நினைப்பு.

ஆத்தா எவ்வளவோ அரட்டிக் கேட்டுப்பார்த்தாள்.

''என்ன செஞ்சல. உள்ளதச் சொல்லு.''

''கல்லுத் தடுக்கி வுழுந்துட்டென்.''

''அப்படியென்ன வெளையாட்டு வேண்டிக்கெடக்கு. வண்ணாக்குடியில பெறந்துக்கிட்டு வெளையாட்டக் கொண்டாடலாமா. கல்லுத்தான் தடுக்குச்சா இல்ல அத எடுத்துப் பல்லுல தட்னயா. நான் காகமாக் கத்துனாலும் கேக்க மாட்டங்கயே.''

ஆத்தா அடிக்க வந்தாள். அவன் விலகிக்கொண்டான்.

''இல்லத்தெ கல்லுத் தடுக்கித்தான் வுழுந்தென்.''

''கழுத ஏன் வெரண்டு வந்துருக்கு.''

''திடீர்னு ஓட்டம் புடிச்சிருச்சு. அதத் திருப்புறதுக்கு ஓடுனென். அதான்...''

''கால்ல தளையெப்படி அவுந்துச்சு.''

''அதச் சுத்திச் செங்கொளவியா ஆஞ்சது. நான் வெரட்டிப் பத்தியும் போகல. கொளவி கொட்டிக் கால ஓதஞ்சிருக்கும். அதனால தள அவுந்துருக்கும்.''

''கழுதக் கால்லதான கொளவி கூடுகெட்டிக் குடியிருக்கும். ஒன்னோட பெரிய தும்பமாப்போச்சு. நீ பண்ற தோரிணிக்கு ஒன்னய வெள்ளாவியில வச்சு அவிக்கவா தொறையில வச்சுத் தொவைக்கவா.''

ஆத்தா கழுதைக்குக் காயத்தில் பச்சிலை அரைத்துப் போட்ட கையோடு அவனுக்கும் உதட்டில் ஒத்தணம் கொடுத்தாள்.

அவன் கழுதைமேல் ஒரு கண்ணாகவே இருந்தான். ஆளில்லாத நேரம் பார்த்துக் கம்பெடுத்து அதுக்கு ரெண்டு அடி கொடுத்துக் கோவந்தீர்த்துக் கொண்டான்.

''ஒனக்கு இதோடயா போச்சு. காட்டுக்கு வா கால ஒடிக்கென். ஒன்னால தான எனக்குப் பல்லுப் போச்சு. அவுகளுக்குக் கிண்ணி போச்சு. இப்ப அவுக என்ன செய்றாகளோ.''

அது அங்கிட்டும் இங்கிட்டுமாகத் திரும்பி அடி வாங்கிவிட்டுக் காதால் முறைத்தது.

''இதெல்லாம் வம்புதான. காட்ல நடந்தது காட்டோட போச்சு.''

''மொறைக்கவா செய்ற.''

அது மறுபடியும் காதாட்டியது.

''சூசுவான்னு மேஞ்சுக்கிட்ருந்தென். வம்புக்குப் புடிச்சு இழுத்து வந்து கூத்துப் பண்ணுனதுமில்லாம வலியோட நிக்கயில அடிச்சா எப்படி.''

அவன் நெருங்கிப் போனான்.

''இப்ப நேரஞ்சரியில்ல.''

மட்டியைக் கடித்து அடிவயிற்றில் எத்திவிட்டுப் போனான்.

ஆண்டி கதை மோசமாகிவிட்டது. இடைவழியில் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டான். கால் ரெம்பக் கடுத்தது. பல்லைக் கடித்து அழுகையை அடக்கிக் கொண்டான். வலது காலை அசைக்க முடியவில்லை. வலி மண்டைக்கேறிக் கிறக்கமாக இருந்தது. முனக்கத்தில் படுத்துவிட்டான்.

அந்தச் சமயம் பார்த்து ஒரு சுடுகுஞ்சிகூடத் தட்டுப்படவில்லை. பொழுது சாயச்சாய வலி கூடிக் கடுத்துக் குடைந்தது. பயத்தில் அஞ்ஞை நினைப்பு வந்தது.

பிள்ளையைக் காணாமல் சண்டிவீரி தவித்துப்போனாள்.

''எம் புள்ள வந்துசேரலன்னா உசிரு வச்சு இருக்க மாட்டென்.''

நாலு திக்கமும் ஆள் விட்டுத் தேடினார்கள். காடுகரையெல்லாம் சலித் தார்கள். கடைசிக்கு அப்பன் கண்ணிலேயே தட்டுப்பட்டுவிட்டான். கஷ்டப் பட்டு அவனைத் தூக்கிக்கொண்டு வந்தான். நிலைமையைப் பார்த்ததும் அஞ்ஞை நாழிக் கண்ணீருக்கு அழுதாள்.

''அஞ்ஞாடி நான் என்னத்தச் சொல்லட்டும். முத்துப்போல ஒத்தப்புள்ளப் பெத்துப் பொத்திப்பொத்தி வளக்கனே. அதும் ஒச்சமாயிருச்சே.''

நல்லான் சலித்துக்கொண்டான்.

''எவ்வளவோ கேட்டுப்பாத்தென். என்ன நடந்துச்சுன்னு சொல்ல மாட் டங்கானே.''

''இப்ப அதத் தெரிஞ்சு என்ன செய்ய. ஒடிஞ்ச காலு கூடிக்கிருமா. ஓடிப் போயி செட்டியாரக் கையோட கூட்டீட்டு வா.''

''அவரு ஊருல இருக்காரோ என்னமோ. பல சோலிக்கார மனுசன்.''

''எங்க சுத்தியும் கொண்டுவரலன்னா ஒனக்கு வீட்ல கஞ்சியில்ல. புள்ள கெறங்கிப்போனானே.''

''இருந்தாலும் ஓம் புள்ளைக்கு நெஞ்சழுத்தம் ரெம்பத்தான்.''

நல்லான் சடையப்பன் செட்டியாரைக் கூட்டிவரச் சத்திரப்பட்டிக்கு ஓடினான். நல்ல வேளைக்கு இருந்தார். சுத்துவட்டாரத்தில் பேர்போன வைத் தியர். சகலத்துக்கும் பக்குவம் பார்ப்பார். முக்கியமாக எலும்பு வைத்தியத்தில் கைராசிக்காரர். எல்லாரும் மட்டைச் செட்டியார் என்றுதான் சொல்வார்கள்.

அவர் ஆட்டுக் காலொடிவுக்கு மட்டை வைத்துக் கட்டும்போது ஆண்டி பல தடவை பார்த்திருக்கிறான். அந்தச் சமயம் ஆடு அலறித் துடிக்கும் கருமாயம் சொல்ல முடியாது. அது திணறி எழுந்து மூணு காலால் கொஞ்ச தூரம் நொண்டி

நடந்து நின்று திரும்பிப் பார்க்கும். கட்டுப்போட்ட காலில் புளிய முத்துப் பசையை முகந்துபார்த்துவிட்டு அடிவயிற்றிலிருந்து அழுகிற மாதிரி சிணுங்கும். செட்டியார் கையை ஒடித்துவிடலாமா என்றிருக்கும். பிறகு கொஞ்ச நாள் கழித்து ஆட்டுக்குக் கால்கூடி ஓடித் திரிவதைப் பார்க்கும்போது அவர் மேலிருந்த கோவம் தீர்ந்துவிடும்.

ஆடு பாவப்பட்ட உசுப்பிராணி. எந்த நேரம் என்ன சங்கடம் வந்து சேரு மென்று சொல்ல முடியாது. நல்ல பசியில் ஆமணக்கங்குழையை அவக்அவக் கென்று தின்னும்போது நடுத்தொண்டையில் சொருகிக்கொள்ளும். விழுங்க முடியாமல் கண்ணு முழி ரெண்டும் நிலைகுத்தி அப்படியே சுருண்டு சாய்ந்து விடும். சரியான நேரத்தில் செட்டியார் வந்தால்தான் உண்டு. என்னென்னமோ பச்சிலைச் சாறைக் கொட்டாம்பட்டி வைத்து வாயில் ஊற்றி மூக்கில் ஊதிப் பல உயிரைக் காப்பாற்றிவிடுவார். நேரந்தப்பிவிட்டால் அவ்வளவுதான். அன்றைக்கு ஊர் முழுக்கக் கறி நடமாடும்.

சுணைப் பயிரை மேய்ந்த மாட்டுக்குக்கூட இந்த நிலைமை வருவதுண்டு. சம்சாரிகளுக்குக் கொடுத்துவைத்திருக்கணும். செட்டியார் மாட்டுக் கழுத்துப் புண்ணுக்குப் பன்றி எண்ணெய் தடவுவார். சதைப்பிடிப்பு கால் சுளுக்கு எடுத்து விடுவார். கழிச்சலைப் பார்த்துச் சரியான காரணத்தைக் கண்டுபிடித்து மருந்து கொடுப்பார்.

ஊறத்தாழியில் பிரியமாகத் தண்ணீர் குடிக்காத மாட்டுக்கு நாக்கில் உப்புத் தேய்த்து முள்ளுரிப்பார். கடைவாயில் கொட்டாம்பட்டி திணித்து உப்புக் கருப் பட்டி கலந்த நீரை உள்ளேற்றுவார். பிறகு அது தாழியை ஒருகை பார்த்துவிடும்.

மாடுகளின் உயரத்துக்குத் தக்க கூர் மழுக்கிக் குருத்து பாதிக்காமல் கொம்பு சீவுவார். விரிகொம்பு கட்டைக்கொம்பு கூட்டுக்கொம்பு கவுந்தகொம்பு இப்படி தினுசுப்படி சீவினால்தான் லட்சணமாக இருக்கும்.

காளங்கண்ணு நீர் குடித்தால் கோசத்துப் பக்கம் திரும்ப முடியாமல் கழுத்தில் மரவேலி போடுவார். ரெம்பச் சேட்டைபண்ணினால் இழுத்துக் கிடத்திக் காயடித்துவிடுவார். இடுக்கிக்குள் சிக்கி நசுங்கிக் கூழாகி வீங்கித் தொங்கும் விதைகளைப் பார்க்க மனசுக்கு என்னமோ போலிருக்கும். காணாக் குறைக்கு மூக்கணாங்கயிறு பீறிவிடுவார்.

எருமை பசு எதானாலும் சினையானதும் அவர் காதில் போட்டுவிடணும். அப்பப்ப வந்து பார்த்துப் பக்குவஞ்சொல்லிவிட்டுப் போவார். ஈத்தலையும் சமயம் மாட்டுடன் அன்னியோன்னியமாகப் பேச்சுப்பழக்கம் போட்டுத் தடவித் தட்டிக்கொடுத்து வலியில்லாமல் கன்னுக்குட்டியை வெளியிலெடுப்பார். சின்ன உருப்படிமேல் படர்ந்திருக்கும் அய்யை எடுத்துத் தாய் நக்கக் கொடுப்பார். பிறகு தாய் பிள்ளையை நக்கும். அந்தச் சொகத்தில் பிள்ளை தட்டுத்தடுமாறி எழுந்து நின்று நடமாடும். அவர் தாயின் மடுக்காம்பைத் தடவிப் பாசமூட்டிச் சீம் பாலைக் கொஞ்சம் பீச்சிவிட்டுக் காம்பைப் பிள்ளையின் வாயில் வைத்து வளையவைப்பார். பிறகு சின்னது மடுவில் முட்ட பெரிசு நக்க பால்குடி சொக மாக நடக்கும். அவர் சொன்னபடி தாய்க்கு வெந்நீர் ஊற்றிக் குளிப்பாட்டித் தொட்டுக்குழியில் சுண்ணாம்பு வளையம் போடணும். சுடுசோறு கொடுக்கணும்.

அன்றைக்குப் பொடிப்பயல்களுக்கு ஏகக் கொண்டாட்டம். சீம்பால் காய்ச்சிய கடும்பைத் திகட்டத்திகட்டத் தின்று முடியாது.

கோழிக்குக்கூட அவரைத்தான் தேடுவார்கள். எலும்பொடிவுக்கு ஈரத் துணியைக் கட்டியே சரிப்படுத்திவிடுவார். கொக்கரைக் கிழிசலென்றால் நூல் தையல். பூனை நாய்க் கொணக்கத்துக்கும் சொன்னங்கமான மருந்து வைத் திருப்பார்.

மனுசமக்களைப் பற்றிச் சொல்லவே வேணாம். அவர் வைத்தியத்துக்குக் கட்டுப்படாத சீக்கு கம்மி. ரெம்ப முற்றிவிட்டால் தலையைச் சொறிந்து விடுவார்.

"மருந்துக்கு மடங்காற கழுதையோட மல்லுக்கெட்ட முடியாது. லவிச்ச படி நடக்கும்."

செட்டியார் வீட்டுக்குள் நுழையவுமே ஆண்டிக்குக் குடலைக் கலக்கியது. சரி நமக்கும் ஆட்டுக் கதைதான். நினைத்துநினைத்து அழுதான். அவனது தொடைக்கு அளவாக அவர் மட்டை சீவும்போது அழுகை இன்னும் வலுத்தது. அவர் மெல்லப் பேச்சுக்கொடுத்தார்.

"இந்தளவுக்கு என்ன நடந்துச்சு."

அவன் அழுதுகொண்டே குழறினான்.

"கருவமரத்துல பொன்னுவண்டு புடிக்கப்போனென். அது பறந்துருச்சு. அண்ணாந்து பாத்துக்கிட்டு கூடயே ஓடுனென். குத்துக்கல்லுமேல வுழுந்துட் டென்."

"புள்ளீக ஓடுற வழியில குத்துக்கல்லு நிக்கிறது தப்பாச்சே."

"அதத் தோண்டியெடுத்துக் கெணத்துக்குள்ள போட்ருவென்."

"ஆமாமா இனிமே அது அங்க இருக்கப்புடாது. அப்படின்னா காலு கொண மாகணுமில்ல."

"ம்."

"மருந்து போட்டாத்தான சொகமாகும்."

"ம்."

"போடுவமா."

"ம்."

அவர் பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்துக் கண்ணடித்தார். நாலு பேர் சேர்ந்து அவனை மல்லாக்கச் சாய்த்து அமுக்கிப் பிடித்துக்கொண்டார்கள். அவர் அவனது இடுப்பில் மிதித்துக் காலை அங்கிட்டும் இங்கிட்டுமாகத் திருப்பி நெருக்கென்று இழுத்துத் தன்வசத்துக்குக் கொண்டுவந்து பொருத்தினார். ரெண்டு மூணு மட்டை வைத்து முட்டைப் பசை தடவி மாவுக்கட்டுப் போட் டார். அவன் வலி தாங்காமல் அழுதுகொண்டே வாய்க்கு வந்தபடி வைதான். அப்பன் அரட்டினான்.

"ஏல அது ஆருன்னு நெனச்ச. சும்மாருக்கப்போறயா வாய்க்கும் சேத்துக் கெட்டுப்போடச் சொல்லவா."

அப்படியும் அவன் நிறுத்தவில்லை. செட்டியார் முகத்தில் சிரிப்பு மாறாமல் தங்கியிருந்தது.

''காலுங்கையும் வச்சுக்கிட்டு ஒரு தரையில இருக்கணும்.''

அவன் அழுகையில் முனங்கினான்.

''மூஞ்சியப் பாரு சிரிக்கிறத.''

பிறகு அஞ்ஞை மடியில் படுத்து விக்கிவிக்கிக் கிறங்கிப்போனான்.

### 5. கட்டுத்துறை விட்டு வெளியேறி...

ரெம்ப நாள் வீட்டுக்குள்ளேயே கிடந்தான் ஆண்டி. காலில் பெரிய கல்லைப் பாரமேற்றிய கனம். சில சமயம் கிழவன் மாதிரி கம்பூன்றியும் சுவரைப் பிடித்தும் நடந்தான். அஞ்ஞை அடிக்கடி புலம்பினாள்.

''தட்டானாத் திரியிற எம் புள்ள இப்படி மொடங்கிக்கெடக்கானே. இதும் தலவிதியா.''

மாரிக்கு ஆண்டியைப் பார்க்காமல் மனசே சரியில்லை. பார்க்கிறதுக்கு ஒரு வழி தேடினான். ஆத்தா வெள்ளங்காட்டிக் கஞ்சிக்குப் போகும்போது பின்னால் போனான். அவள் அரட்டினாள்.

''இப்ப ஏன் தொயங்கெட்டீட்டு வாற. நான் கஞ்சியச் சொமந்துக்கிருவென்.''

''இண்ணைக்கு மட்டும் வாறந்த்தெ.''

அவள் ஆண்டியின் வீட்டுக்கு முன்னால் நிற்கும்போது மாரி உள்ளே கண் களால் ஆவலாகத் துழாவினான். உட்கார்ந்திருந்த ஆண்டி கண்டுகொண்டான். ரெண்டு பேரும் முழித்துமுழித்துப் பார்த்துக்கொண்டார்கள். மாரிக்குப் பேச ஆசைதான். குட்டு உடைந்து குண்டிப்பூசை கிடைக்குமோ என்று பயம். அதுக்குள் ஆத்தா கஞ்சி வாங்கிக்கொண்டு நடந்துவிட்டாள். அவன் சண்டிவீரி கண்ணுக்குத் தப்பி நழுவினான்.

அடுத்த நாள் திட்டம் போட்டான். ஆத்தாளிடம் தந்திரமாகப் பேச்சுக் கொடுத்தான்.

''ஆத்தெ அப்பன் வெள்ள பிரிச்சு வைக்கவைக்க நான் கொண்டுபோயிக் குடுத்துட்டு வாறென்.''

''வேணாம். நீ மாத்திக் குடுத்துருவ.''

அல்லாத்தன் அவளைச் சத்தம் போட்டான்.

''வேல செய்ற புள்ளைய வேணாமிங்கிறது. பெறகு அவன் வெளையாடப் போயிட்டா வாயிலவகுத்துல அடிச்சுக்கிறது.''

''எப்படியும் தொலஞ்சுபோங்க.''

மாரி ஆண்டி வீட்டு வெள்ளையை முதலில் அள்ளிக்கொண்டு ஓடினான். போய் வாசலோரம் நின்று சத்தம் கொடுத்தான்.

''எப்போவ்.... வெள்ள கொண்டுவந்துருக்கென்.''

சத்தம் கேட்டு ஆண்டி தட்டுத்தடுமாறி வாசலுக்கு வந்துவிட்டான். கிட்ட நின்று குசுகுசுத்தார்கள்.

''தாவலையாயிருச்சா ஒங்களுக்கு.''

''ஒனக்கு வாயி வத்தியிருச்சா.''

''சரியாப்போச்சு. எப்ப வெளிய நடமாடுவீக.''

''கெட்டு அவுக்கட்டும்.''

''எப்ப அவுப்பாக.''

''செட்டியாரு எங்கயோ தொலஞ்சுபோயிட்டாரு.''

அதுக்குமேல் பேச முடியவில்லை.

''அஞ்ஞாவுக வாறாக. நான் போறென்.''

மாரி ஆண்டியிடம் வெள்ளை கொடுத்துவிட்டு ஓடிவிட்டான்.

அஞ்ஞை ஆண்டியை விரசினாள்.

''இந்தக் காலோட நொண்டிநொண்டி வந்து வெள்ள வாங்கணுமோ. பெரியாளுட்டக் குடுக்கிறதுக்குத் தீரலயோ. வண்ணா முண்டைய வச்சுக் கிறென். ஒனக்குப் புண்ணியமாப்போகுது சாமி. காலு கூடுறவரைக்கும் சும்மா இரு.''

மாரிக்கு வருத்தம். ஆண்டி வெளியே வந்துக்கிறட்டும். அதுக்குப் பிறகு தான் பல் ஓட்டைக்கு வழி கேட்கணும்.

ஆண்டிக்கு இப்போது கால் கட்டு ரெம்பக் கனத்தது. சொகமாகப் புரண்டு படுக்க முடியவில்லை. வலி மறந்து பிரயாசைப்பட்டு உறக்கத்தைக் கொண்டு வந்தாலும் சில சமயம் கனாவில் கழுதை வந்து கூத்து நடத்தியது. எக்காளக் கனைப்பு. வக்கணைத் துள்ளல். காதோரம் வந்து கேட்டது.

''என்ன கழுதமேல ஏறியும் சொகமில்ல எறங்கியும் சொகமில்லையா.''

''எல்லாம் ஒன்னாலதான.''

அவனது இடுப்பில் ஏறிக் கிண்ணியிலிருந்து கரண்டைக்கால்வரை பொடி நடையாக எட்டு வைத்தது.

''எம் முதுகுமேல ஏறயில எப்படி இருந்துருக்கும்.''

அவனுக்கு உயிர்போகிற வலி.

''இப்ப எறங்கப்போறயா இல்லையா.''

''கீழருந்து மேல போகட்டுமா.''

''தைரியமிருந்தா நான் சும்மா திரியயில வரணும்.''

''அண்ணைக்கு மட்டும் என்ன நடந்துச்சு. காலு தளஞ்சிருக்கயிலதான புடிச் சான். தளைய அவுத்ததும் நடந்த கத நல்லா யாவுகமிருக்குதுல்ல.''

''இப்ப சாட்டக் கம்பு மட்டும் எங் கையில கெடைக்கணும்.''

''சாட்டதான. இந்தா எடுத்துட்டு வாறென்.''

அது இறங்கிப்போய் தண்டையக் குச்சில் தொங்கிய சாட்டைக் கம்பை எடுத்து வந்து முறைத்தது. டுர்டுர் என்று மூச்சால் வம்மமுறுத்திவிட்டுச் சாட்டை யைச் சுழட்டிக் கிண்ணியில் விளாசியது. அவன் வலியில் துடித்தான்.

''வேணாம்.''

''இந்தா இனியொண்ணு வாங்கிக்கோ.''

''போதும் வலிக்குது.''

அது சாட்டையைப் பழைய இடத்தில் வைத்தது.

''இங்கயே இருக்கட்டும். நாளைக்கு வந்து வச்சுக்கிறென்.''

''அதுவரைக்கு அங்க இருந்தாத்தான.''

"இல்லன்னா வண்டிக் குச்சு கெடைக்குமில்ல."

"நான் பெரிய கம்பு எடுத்துவச்சிருப்பென்."

அது மறுபடியும் அவன்மேல் ஏறி மண்ணுமிதியாக நடந்து இறங்கித் தெந்தனம் பாடிக்கொண்டே ஓடியது.

"அவுத்துக்கிருச்சாம் கழுத எடுத்துக்கிருச்சாம் ஓட்டம்..."

அவன் வெள்ளங்காட்டி முழித்ததும் முதல் வேலையாகக் காலைத் தடவிப் பார்த்துக்கொண்டான்.

மட்டைச் செட்டியார் இன்னும் வந்த பாடில்லை. நிதமும் எதிர்பார்த்து ஏமாந்து அஞ்ஞையிடம் கேட்டான்.

"செட்டியாரு ஏன் வரலஞ்ஞ. அவருக்கும் காலொடிஞ்சுபோச்சா."

"என்னல வாயி ரெம்ப நீளுது. பன்னருவாளக் காயவச்சு நாக்குல இழுத் துருவென். எப்ப வரணும்னு அவருக்குத் தெரியும். பேசாம மொடக்கிக்கெட. ஆடுன ஆட்டத்துக்குப் பட்டது போதும்."

அவன் வீட்டுக்குள்ளிருந்தபடியே செட்டியாரை விதவிதமாக அடித்து நொறுக்கினான். ஒரு நாள் ஊணிக்கம்பால் முதுகில் வசமாக மொத்தினான். இன்னொரு நாள் ரெண்டு கையையும் அம்மியில் வைத்துக் குழவியால் நச்நச் சென்று தட்டிக் கரும்புச் சக்கையாகச் சதப்பினான்.

"இந்தக் கையிதான எங்காலப் புடிச்சு முறுக்கினது."

அப்படியும் ஆத்திரம் தீரவில்லை. பெரிய சம்மட்டியால் மண்டையில் ஓங்கி ஒரு போடு போட்டான். விளாம்பழமாகப் பிளந்தது. தாடை தனித்தனி யாகக் கிழிந்து பல்லை இளித்துக்கொண்டு கிடந்தார்.

"இதும் வேணும் இனியும் வேணும்."

மண்டைக்குள் கேப்பைக் கூழாகக் கிடந்த மூளையை அள்ளி நாய்க்குப் போட்டுவிட்டான். அது வாய் குதம்பக் கவ்விக்கொண்டு சந்தோசமாக ஓடியது. அவனுக்கு ராத்திரி நல்ல உறக்கம்.

செட்டியார் சாவகாசமாக ஒரு நாள் வந்தார். கால் கட்டைச் சுண்டிப் பார்த்தார்.

"வெரல ஆட்டு பாப்பொம்."

எல்லா விரலும் ஆடியது. அவர் முகத்தில் களை வந்தது.

"அம்புட்டுத்தான். நல்லாக் கூடிக்கிருச்சு."

பசைத் துணியைக் கத்தரித்து மட்டையைப் பிரித்தெறிந்தார். அப்போதும் அவர் முகத்தில் சிரிப்புத்தான்.

"தடி மம்பட்டிய எடுத்துட்டுப் போயி அந்தக் குத்துக்கல்லப் புடுங்கிப் போட்டாத்தான் மனசாறும் இல்லையா."

அவன் அப்பிராணியாகச் சொன்னான்.

"அதக் கண்டா வெலகிப் போயிருவென்."

"அப்படின்னா காலு நாளைக்கே சரியாப்போகும். நல்லா ஓடலாம்."

அவன் தெம்பாக நடப்பதைப் பார்த்து அஞ்ஞைக்குச் சந்தோசம். முந்திச் சீலையால் கண்ணீரைத் துடைத்து முடியவில்லை.

"எம் புள்ளைய நடமாடவச்ச புண்ணியவாளன். ஒங்களுக்குக் கோயிலு கொட்டிக் கும்புடணும்."

‘‘வைத்தியம் பாதி வைராக்கியம் பாதி. ஒம் மகன் பொறுமையா இருக்க லன்னா கொஞ்ச நாளைக்குள்ள கொணமாயிருக்குமா.’’

ஆண்டி அவரை வாஞ்சையுடன் பார்த்தான். வெட்கமாக இருந்தது. சே இப்பேர்ப்பட்ட மனுசனைப்போய் வாய்க்கு வந்தபடி வைதுவிட்டோமே.

செட்டியார் தானியந் தவசம் பயறு பச்சை என்று பெரிய பொட்டணமாகச் சுமந்துகொண்டு போனார்.

ஆண்டி கால் திடப்பட்டு வெளியே நடமாடக் கொஞ்ச நாளானது. பழையபடி கிண்ணி முழுசாகப் பொருந்தவில்லை. ஒரு நூல் இறங்கி லேசாகத் தாங்கி நடந்தான். கிட்டத்தில் கவனித்தால்தான் தெரியும்.

அவனுக்கு வீட்டில் இருப்புக்கொள்ளவில்லை. பறவை காட்டிய குஞ்சாக மனசு மாரியைத் தேடியது. அவனைப் பார்த்ததும் கால் கூச்சம் போன இடம் தெரியவில்லை. மாரி காலைத் தடவித்தடவிப் பார்த்தான்.

‘‘எனக்கு இண்ணைக்குவரைக்கும் மனசுக்குள்ள வாதிப்புத்தான்.’’

‘‘எதுக்குல.’’

‘‘கழுதையால இப்படிப் படுத்துட்டீகளே. எப்ப எந்திரிச்சு வருவீகளோன்னு கெதக்கெதக்னு அடிச்சுக்கிருச்சு.’’

‘‘ஒன்னய எப்பப் பாக்கப்போறமோன்னு எனக்கும் சங்கடந்தான்.’’

‘‘எங்க முனியசாமி சொன்னபடி நல்லாயிருச்சு... கொஞ்சம் இருங்க வந்துறென். நாக்கு நமநமங்குது.’’

மாரி சுதாரிப்பாக ஓடி பக்கத்துத் தோட்டத்தில் பூசணிக் கொழுந்தும் பிஞ்சும் பறித்து வந்தான். மந்தைக் காட்டில் அடுப்புக் கூட்டி மசால் சம்பாரித்துக் கல்லில் அரைத்து உடைந்த கலயத்தில் பக்குவமாக வதக்கிச் சுடச்சுடத் தின்று கொண்டே ஆசைதீரப் பேசினார்கள்.

மாரிக்குப் பழைய விசாரம் போகவில்லை. பல்லுக்கு வழி வேணுமே.

‘‘எப்பா இந்த எடத்துல பல்லு மொளச்சுக்கிறாதோ.’’

‘‘மொளைக்க வச்சிருவொம்.’’

ஆண்டி வைக்கப் படப்புக்குப் போய் நெல் தேடிப் பிடித்துக் கொண்டு வந்தான். மாரியை அண்ணாரச் சொல்லிக் கொருவாய் அரணையில் நெல் மூக்கால் ரத்தம் வரக் கீறிவைத்தான். மாரிக்கு வலியிலும் சந்தோசம். பல் முண்டி வருகிற மாதிரி குறுகுறுப்பு.

ரெண்டுமூணு முறை கீறியும் பல் எட்டிப் பார்த்த பாடில்லை. கீறலில் வெஞ் சனம் பட்டு அப்படி வலித்தது. நிதமும் நாக்கால் தேடித் தவித்து ஏமாந்ததுதான் மிச்சம். ஆண்டி உதட்டைப் பிதுக்கினான்.

‘‘இனிமே மொளச்சுக்கிறாது. நீ கெழட்டு மாடுதான்.’’

மாரி இய்யென்று வாயிளித்தான். அன்றைக்கிலிருந்து அவனுக்கு ஓட்டப் பல்லன் என்ற பட்டப்பேர் கிடைத்தது.

வீட்டுப் பண்டத்தைவிடக் காட்டுப் பண்டத்தில்தான் அவர்களுக்குப் பிரியம் ரெம்ப. காய்கறி கீரை கிழங்கு என்று சம்பாரித்து அவித்தோ வதக்கியோ

தின்றால் அந்த ருசியே தனி. மாரி இந்த விவகாரத்தில் கைகாரன். மூடி முழிக்கு முன் காரியத்தை முடித்துவிடுவான்.

ஒரு நாள் எங்கெல்லாமோ தேடியலைந்தும் ருசியான பண்டம் கிடைக்க வில்லை. நேரம் வேறு ஆகிவிட்டது.

''பசி வகுத்தப் பெரட்டுது. வீட்டுக்குப் போனா கண்டிப்பா அடி கெடைக்கும். என்ன செய்றதுல.''

''ஒரு வழி பெறக்காமயா போயிரும்.''

திடீரென்று வெயிலைப் பொத்துக்கொண்டு சின்ன மழை பெய்தது. ஓடிப் போய்ப் பனை மறைவில் ஒண்டிக்கொண்டார்கள். மழைச் சுழிப்புக்குத் தக்க மறைந்துமறைந்து தப்பித்தார்கள்.

''இண்ணைக்கு அம்புட்டுத்தான். நீ வசமா வாங்கிக்கெட்டத்தான் போற.''

''குளுருக்குச் சுடச்சுட என்னமாச்சும் வகுத்துக்குள்ள போட்டா நல்லாத் தான் இருக்கும்.''

அந்த மழைக்குங்கூட கம்மா ஓடையில் வெள்ளம் புரண்டது. பொட்டைக் காட்டில் விழுந்த தண்ணீர் அம்புட்டும் தலைகீழாக ஓடிவந்தது. வற்றுப் பாட்டுக் கம்மாயில் புதுத் தண்ணீர் விழவும் மீன்களுக்கு ஏகக் கொண்டாட்டம். மண்டி யும் மகுடியுமாகப் பாயும் தண்ணீரில் குஞ்சுகுறுமான்களெல்லாம் முண்டி யடித்துக்கொண்டு பொட்டல் காடுவரை ஏறி விளையாடின. கெண்டையும் அயிரையுந்தான் ரெம்ப. குரவையும் கெளிரும் கொஞ்சம்.

இதுக்குள் ஊரிலிருந்து தலையில் கொங்காணியுடன் சிறிசும்பெரிசுமாக ஓடையை மொய்த்துவிட்டார்கள். பல விதமான கொங்காணிகளும் குடைகளும் ஓடைக்கு மேலே லாந்தின. சாக்கு ஓலைப்பாய் வட்டச்சுளகு சிறகோலை... மீன்கள் ஏறி விளையாடி முடித்து இறங்கும் நேரத்தில் தூரி போட்டு மறித்தார் கள். மண்டியிட்டு அணைகட்டித் தடவித்தடவி மீன்பிடித்தார்கள்.

கரையிலிருந்து வேடிக்கைபார்த்துக்கொண்டிருந்த ஆண்டி மாரியைக் கூப்பிட்டான்.

''வால. நம்மளும் போயிப் புடிப்பொம்.''

''அவுக புடிச்சிட்டுப் போகட்டும். அதுக்குப் பெறகு எறங்குவொம்.''

''அதுக்குப் பெறகு மயிரா இருக்கும்.''

''என்னருக்கும்னு பொறுத்துப் பாருங்க.''

வெள்ளம் சொடிந்து எல்லாரும் வீட்டுக்குக் கிளம்பினார்கள். ஆண்டியும் மாரியும் ஓடைக்குள் இறங்கினார்கள். நீர் பூசிய செம்மண் பரப்பில் தப்பித்தோம் பிழைத்தோம் என்று கெளிர் மீன்கள் உருண்டு புரண்டு வந்தன. ஆண்டி ஓடி ஓடிப் பிடித்து மடியில் போட்டுக்கொண்டான். மாரியை அவசரப்படுத்தினான்.

''எதுக்குச் சும்மா நிக்க. புடில.''

மாரி அதைக் கண்டுகொள்ளவில்லை. அவன் மனசு கோயிலுக்குப் போகும் கூடார வண்டியாக நகரும் ஊத்திக் கூடுகளுக்குப் பின்னால் நடந்துகொண் டிருந்தது. பொறுக்கிப்பொறுக்கிச் சப்பைமடியில் நிரப்பிக்கொண்டான்.

''ஊத்திய என்னல செய்யப்போற.''

''வாங்க சொல்றென்.''

வேலையை முடித்துவிட்டு வெளுப்புத்துறைக்கு வந்தார்கள். கவுத்திக் கிடந்த தாழியை எடுத்துத் தண்ணீர் கோலிக் கலிங்கல் மறைவில் அடுப்பேற்றி னான் மாரி.

''வெறகு வேணுமே.''

''எதுக்கு இம்புட்டுப் பெரிய அடுப்பு.''

''போயி வெறகு சம்பாரிச்சிட்டு வாங்களேன். நான் போயி தீப்பத்த வைக்கிறதுக்குக் கங்கெடுத்துட்டு வாறென்.''

ஆண்டி பூசரமரத் தோட்டத்துக்குப் போய் சோளத் தட்டைப் படப்பில் நனையாத கட்டை உருவிவந்தான். அதுக்குள் யார் வீட்டிலிருந்தோ சிரட்டை யில் கங்கு வாங்கிக்கொண்டு வந்திருந்த மாரி ஊதிஊதித் தீப்பற்றவைத்தான். அடுப்பிலிருந்த தாழியில் ஊத்திகளைப் போட்டான். சன்னமான கூதலுக்கு அடுப்போரம் கதகதப்பாக இருந்தது. ஊத்தி சுடுதண்ணீரில் சலசலவென்று வெந்து குதிப்பதைப் பார்த்து அவனுக்கு எச்சூறியது.

''ரெண்டு மீனு குடுங்க.''

ஆண்டி ஊத்தியை எட்டிப் பார்த்தான்.

''என்னல செய்ற.''

''மொதல்ல கெளுரக் குடுங்க.''

ஆண்டி பெரிசாக ரெண்டு மஞ்சக்கெளிரைப் பொறுக்கிக் கொடுத்தான். மாரி அதைப் பக்குவமாக வாட்டினான். குளிருக்கு மீன் மணம் சொக்கியது. மாவாகப் பிட்டுத் தின்றார்கள்.

ஊத்தி நிறம் மாறிப் பக்குவமாக வெந்ததும் நீரை இறுத்துவிட்டுக் கலிங் கலில் கொட்டினான் மாரி. பிறகு கல்லால் தட்டித்தட்டி ஒவ்வொண்ணாகத் தயார்படுத்தினான். உள்ளே இருக்கும் நத்தையை எடுத்துச் சுடச்சுட வாயில் போட்டான். மெல்லுவதற்குப் பஞ்சாக இருந்தது. சூட்டில் உதடு ஒட்டாமல் ஆவிபறக்க அசைபோட்டு விழுங்கும் சொகத்தில் கண்கள் மூடிக்கொண்டன.

''அதென்ன ஓலக்கொழக்கட்டையா. ஒம் பாட்டுக்கு உள்ள தள்றயே.''

''இந்த ருசிக்குக் கிட்டத்துல வேற எதும் நெருங்க முடியாது. கொஞ்சம் தின்னுபாருங்களேன்.''

ஆவலாப் பார்த்துக்கொண்டிருந்த ஆண்டிக்குக் கூச்சம்.

''சே எனக்கு வேணாம். நீயே தின்னு.''

இருந்தாலும் அடிமனசுக்குள் ஆசை. ருசியாக இருக்குமோ. இல்லையென் றால் பயல் இப்படிச் சப்புக்கொட்ட மாட்டானே. இதும் மீன் மாதிரிதானே.

ஆண்டியை நோட்டம்விட்டுக்கொண்டே மாரி அசைபோட்டான்.

''ஒண்ணே ஒண்ணு....''

''வேணாம்ல.''

''ஒண்ணுதான்.''

''ஒண்ணு மட்டும்...''

ஆண்டி வாங்கி முகந்துபார்த்தான். புதுசான மணம். ருசியாகத்தான் இருக் கும் போலிருக்கிறது. மென்று தின்றான். பயல் சொன்னது சரிதான். விழுங்கியதும் நாக்கு அடங்கவில்லை.

பிறகு அவன் கேட்டு வாங்கவில்லை. எடுத்தெடுத்து உள்ளே தள்ளினான். அத்தனையும் மாயமாக மறைந்துவிட்டது. அவனுக்குத் தொடையில் கெளிர் முள் குத்திய கடுப்பு இப்போது மறந்துபோயிற்று.

மாரி வயிற்றைத் தடவிக்கொண்டு தாழியைக் கழுவிக் கவுத்தினான். பச்சை மீனைப் பங்குபோட்டுக்கொண்டு கிளம்பினார்கள். ஆண்டி கிட்டப் போனான்.

''இத ஆருட்டயும் சொல்லீறாத.''

''சொன்னா என்ன.''

மாரி குறும்பில் சிரித்தான்.

''எல்லாப் பல்லவும் தட்டிக் கையில குடுத்துருவென்.''

''அய்யய்யோ பல்லுப் போச்சு.''

மாரி வாயைப் பொத்திக்கொண்டு ஓடினான்.

அவர்கள் வீட்டுக்குப் போனதே சரியென்று மீனைக் காட்டினார்கள். வசவு கூடக் கிடைக்கவில்லை. கொஞ்ச நேரத்தில் சண்டிவீரி அழுத்தமாக மசாலறைக்கும் சத்தம் கேட்கத் தொடங்கியது.

அதுக்குப் பிறகு ஆண்டி மாரியை நல்ல முறையில் கவனித்துக்கொண்டான். தின்பண்டம் கொடுத்தான். வாந்தக்கமாகப் பேசினான். மாரி இழுத்த இழுப்புக் கெல்லாம் வளைந்துகொடுத்தான். இல்லையென்றால் ஊத்திக் கதை வெளியே தெரிந்துவிடும்.

மாரிக்குச் சொல்லணுமா. இதுதான் சாக்கென்று ஆண்டியை ஆட்டிப் படைத்தான். சீண்டிவிட்டு வேடிக்கைபார்த்தான்.

''மழ பேஞ்சண்ணைக்குக் கலுங்கல்ல உக்காந்துக்கிட்டு நம்ம ரெண்டு பேரும் சுடச்சுட ...''

ஆண்டி சுற்றிலும் ஆள்பார்த்துவிட்டு ஓடிப்போய்க் கெஞ்சினான்.

''சும்மாருல. பெறகு ஒங்கூடப் பேசமாட்டென்.''

மாரி நாக்கைச் சுழட்டிக் கிறங்கினான்.

''கல்லுவச்சுத் தட்டித்தட்டி...''

''ஏல அதுக்குமேல வேணாம்.''

''தட்டித்தட்டி தட்டித்தட்டி...''

''நிறுத்து.''

> ''தெனமாவத் தட்டித்தட்டி
> தேளுவந்து கொட்டிக்கொட்டி
> பனங்காய வெட்டிவெட்டி
> பண்ணிவந்து முட்டிமுட்டி...''

மாரி கிறுவாணம் சுற்றி ஆடினான். ஆட்டம் விளையாட்டாக மாறியது.

> ''மூஞ்சியில குத்திக்குத்தி
> முதுகுலதான் மொத்திமொத்தி...''

ஆண்டி விரட்டிக்கொண்டு ஓடினான். குட்டப்புழுதி கிளப்பிக்கொண்டு மூச்சுவாங்கும்வரை ஓடினார்கள். மந்தைப் புஞ்சை ஈர வாய்க்காலோரம் நமர்ந்து பொருமிய மண்ணில் முகம் வைத்துப் படுத்துத் தவிப்பாறினார்கள். மாரி ஓடிப் போய் நாற்றங்காலில் கோரங்கிழங்கு பிடுங்கிக் கொண்டுவந்தான். உரித்துக்

கொறித்தார்கள். கிழங்குப் பால் துளித்துளியாகத் தொண்டைக்குள் இறங்கும் இனிப்பில் தவிப்படங்கிச் சுதாரிப்புக் கிளம்பியது. மறுபடியும் விளையாட்டு.

### 6. கூனையில பதினியாம்

மாரி அழகான குல்லா ரெண்டு கொண்டுவந்தான். குல்லா முழுக்கக் குஞ்சம். விதவிதமான நிறம். கிட்டப் பார்த்தால் ஓலைக் கொட்டானில் நிரக்கக் கோழித் தூவி சொருவியிருந்தது. லேசில் கண்டுபிடிக்க முடியவில்லை.

''இம்புட்டுத் தூவி எங்கல சம்பாரிச்ச கொருவாயா.''

''எனக்குத் தெரியாற கோழியும் இந்த ஊருக்குள்ள உண்டுமா.''

''அத்தனையவும் வெரட்டிப் புடிச்சுத் தூவி புடுங்குனா வெளக்க மாத் துட்டுச் சாத்துவாகளே. எத்தன பேருட்ட அடிவாங்குனயோ.''

''ஒங்கள மாதிரின்னா அடிவாங்குவாக. நம்ம கதயே வேற.''

''அதுக்கென்ன கத வச்சிருக்க.''

''ராத்திரி ஊரடங்குன பெறகு கருப்புத் துணிய முக்காடு போட்டுக்கிட்டு ஒவ்வொரு கோழி மடத்துக்கும் போயி வாசல்ல எட்டிப் பாத்து எங்க ஆத்தெ கஞ்சி கேப்பாளே அப்படித் தூவி போடுங்கம்மான்னு கமுக்கமாச் சொல்லுவென். உள்ள சாவலும் கோழியும் முழிச்சு கணுக்கணுக்னு பேசுவாக. கொஞ்ச நேரத்துல சாவலோட கழுத்து மட்டும் எட்டிப் பாக்கும். அதோட வாயில ஒரு கொத்துத் தூவியிருக்கும். அருவமில்லாம வாங்கி மடியில கெட்டிக்கிட்டு அடுத்த மடத் துக்குப் போக வேண்டியதுதான்.''

''கோழியப் புடிச்சாலும் புடிப்ப. ஆரு கண்டது.''

''அதுக்கு ராத்திரி வேளையில மடம் தேடிப் போகணுமாக்கும். பகல்ல மந்தக் காட்ல எத்தன மேயிது. ஒங்களுக்கு வேணுமா.''

''களவாணிப் பெயலே அதும் நடக்குதா.''

''இதக் கேளுங்க. ஒருநா தெக்குத் தெருவில ஒரு மடத்துக்குப் போயி வழக்கம்போலத் தூவி கேட்டென். மடம் துக்கிரியடஞ்சுகெடந்தது. உள்ள குஞ்சுப்புள்ளீக கூப்பாடு போடுதுக.''

''கூப்பாடா.''

''எங்க தாயப் புடிச்சிட்டுப் போயிட்டாகளேன்னு அழுகச் சத்தம் கேக்குது. சாவலுத் தகப்பன் ஆறுதலு சொல்லித் தேத்தியும் அழுக அடங்கல.''

''என்னாச்சு.''

''அதுகளுக்குச் சரியாச் சொல்லத் தெரியல. என்னமோ நடந்துருக்கு. சரி பகல்ல வந்து பாத்தாத்தான் கண்டுபுடிக்க முடியும்னு போயிட்டென்.''

''மறுநா போனயா.''

''வெள்ளங்காட்டி போற போக்குல கவனிச்சென். கோழி மடத்து வாசல்ல ரத்தம் சிந்திக்கெடந்தது. சின்னச்சின்னத் தூவியாச் செதறிக்கெடந்தது. உள்ளருந்து வாசலுவரைக்கும் நெளிஞ்சுநெளிஞ்சு தடம் தட்டுப்பட்டது. சரி ஏதோ களவு சோலிதான் நடந்துருக்குன்னு தெரிஞ்சுக்கிட்டென்.''

''ஆராருக்கும். நாயி தூக்கீட்டுப் போயிருக்குமோ.''

''அதால மடத்துக்குள்ள மொழஞ்சு இழுக்க முடியாது.''

''பாம்பாருக்குமோ.''

''கோழிய விழுங்குற அளவுக்குப் பெரிய பாம்பு நம்ம காட்ல இல்லையே.''

''கள்ளன் வந்துருப்பானோ.''

''இருக்காது. ரத்தம் எப்படிச் சிந்தும்.''

''பெறகெப்படியாம்.''

''தடத்து மண்ண அள்ளி மொகந்துபாத்தென். மீன்கவுச்சியடிச்சது.''

''மீனா...''

''தெக்க மந்தக் கெடங்கிலகூட ரத்தக் கறையும் ஒழம்பலாடிய தடமும் தெரிஞ்சது.''

''கெடங்கிலயா.''

''அதுக்குத் தெக்க கெணத்துக்குத் தற்செயலாப் போனெ்ன். சொவரோரம் கோழித் தூவி கெடந்துச்சு. எட்டிப் பாத்தென். தண்ணிக்குள்ளயும் தூவி மெதந்தது.''

''என்னல புதுசுபுதுசாச் சொல்ற.''

''தெரிஞ்சுபோச்சு.''

''தெரிஞ்சிருச்சா.''

''பொறுங்க... அண்ணைக்கே திட்டம்போட்டென். சாமமிருக்கும். வெள் ளாவியில ஒரு கொட்டான் சாம்பலு அள்ளீட்டுப் போயி அந்த வீட்டு முத்தத் துலருந்து கோழி மடத்துவரைக்கும் தூவிவச்சிட்டு வந்துட்டென்.''

''எதுக்காம்.''

''மறுபடியும் விடியக்காலம் போயிப் பாக்கென். மச்சான் சாம்பலுக்குள்ள மாட்டிக்கிட்டு நெளிஞ்சிட்டுக் கெடக்காக.''

''என்னதுல.''

''கொழுத்த வெலாங்கு.''

''அதுக்கு அம்புட்டுத் தைரியமா. கெணத்துக்கு வெளிய ஏறி வந்துருக்குதே.''

''வெறகு தறிக்கிற அருவா கொண்டுபோயிருந்தென். கழுத்துல ஒரே வெட்டு. கொட்டானுக்குள்ள அள்ளிப் போட்டுட்டு வந்துட்டென்.''

''நல்ல வேட்டதாம்ல. கோழிக் குஞ்சிக நிம்மதியாப் படுத்து ஒறங்கும்.''

''அதுக தாயில்லாம சாவலுக்குப் பின்னால திரியிறதப் பாத்தாப் பாவமா ருக்கு. என்னருந்தாலும் தாய்க்காகுமா. சாவலு இனியொரு கோழி கெடச்சாப் பின்னால போயிரும்.''

''வளந்து பெரிசாகிறவரைக்கும் கஸ்டந்தான்.''

''அதுலருந்து எனக்கு வெலாங்குமேல கோவம். எந்தக் கெணத்துல தட்டுப் பட்டாலும் புடிச்சுக் கறிவச்சுத் தின்னாத்தான் கண்ணடைக்கும்.''

''எப்படிப் புடிப்ப.''

''பொழுதடைய கெணத்துல எட்டிப் பாப்பென். அப்பத்தான் தண்ணிக்கு மேல வந்து நடமாடுவாக. பெரிய தூண்டிமுள்ளுல கோழிக் கொடலக் குத்திக் கெணத்துக்குள்ள வுட்டு நீளமான கவுத்த கமல ஊசிக்கால்ல கெட்டிவச்சிட்டுப் போயிருவென். அவுக கொடலு வெறியில தூண்டிமுள்ள விழுங்கித் தொண்டை யில மாட்டிக்கிரும். ராத்திரி முழுக்க கிறுவாணஞ்சுத்தீட்டுக் கெடப்பாக. விடிஞ் சதும் போயித் தூக்கீட்டு வர வேண்டியதுதான்.''

''கோழிக் கொடலு கெடைக்கலன்னா...''

''கெடைக்கிறண்ணைக்குத்தான் தூண்டிபோடுவென். அதில்லன்னா பல்லியப் புடிச்சுத் தலையவும் காலவும் தறிச்சுத் தூண்டியில கோர்த்திருவென்.''

''அசிங்கம்புடிச்சவனே. எனக்குத் தெரியாம இம்புட்டும் நடந்ததா.''

''ஒங்ககிட்டச் சொன்னா ஒங்க கெணறுகள்ல புடிக்க முடியுமா. பூசரமரக் கெணத்து உருப்படி திங்கிறதுக்கு மாவாருந்துச்சு.''

''தின்னிப் பெய... எங்க கோழி மடத்துக்கு வா. கொதவளையப் புடிச்சுக் கெட்டிவைக்கனா இல்லையான்னு பாரு.''

''ஆராலயும் என்னயப் பாக்க முடியாதே. மந்தரம்போட்டுக் கண்ணக் கெட்டீருவனே. எங் காரியம் முடியிறவரைக்கும் முழிகண்ணு குருடாத் தொழாவீட்ருக்கணும்.''

''ஒன் ஒட்டவாயக் கெட்றதுக்கு எங்கிட்ட மந்தரம் இருக்கு. இந்தா வாறென்.''

இருவரும் தூவிக் குல்லாவைத் தலையில் வைத்துக்கொண்டு கும்மாளம் போட்டார்கள். கிறுகிறுத்துக் கீழே சாயும்வரை ஓயவில்லை.

''ஆடியாடிப் பசிக்குதுல.''

''கொஞ்சம் பொறுங்க.''

மாரி பக்கத்துப் படப்புக்கு ஓடினான். நாலு இடத்தில் கைவிட்டுத் துழாவி நாலு மாம்பழம் எடுத்துக்கொண்டு வந்தான்.

''எனக்குத் தெரியாம எங்கல ஒளிச்சுவச்சிருந்த.''

''மொதல்ல தின்னுங்க. பெறகு சொல்றென்.''

''என்ன நடந்துச்சுன்னு எனக்குத் தெரிஞ்சாகணும்.''

''எப்பயும் நடக்கிறதுதான. புதுசாவா நடக்குது. ஒங்களுக்குத் தெரியாம வச்சிருந்து ஆருக்குக் குடுக்கப்போறென்.''

''அப்பச் சொல்லு.''

''எங்க வீட்ல ஒரு கழுதக் குட்டி இருக்குது. வெளையாட்ல நம்ம தோத்துருவொம். பகலு முழுக்கப் பெரிய கழுதைகளோட வெளையாடும். ராத்திரியாச்சுன்னா என்னய ஒறங்க வுடாது. மூடி மொடக்கிப் படுத்துக்கெடந்தா முண்டிப் பெரட்டி எழுப்பீரும்.''

''கூட ரெண்டுமூணு குட்டிக இருந்தா வெளையாட்டுக்குத் தோதாருக்கும். எவ்வளவு நேரந்தான் பெரிசுகளோடயே வெளையாடுறது.''

''அதச் சொல்லுங்க. சரி வா போவம்னு காலாற வெளிய கூட்டீட்டுப் போயிருவென்.''

''வெளியன்னா எங்க.''

''காயி காச்சிருக்கிற மாமரத்தத் தேடிப் போவொம். கொஞ்ச நேரம் மரத்தச் சுத்தி வெளையாடுவொம்.''

''என்ன வெளையாட்டு.''

''அதோட வால நான் புடிச்சுக்கிருவென். பெறகு அது எனக்குப் பின்னால கோவணத்தக் கடிச்சுக்கிரும். இப்படியே கொடுக்குப் புடிச்சு வெளையாடுவொம்.''

''சரி.''

''அத அலுப்புத் தீரக் கீழ பெரள வுடுவென். பெரண்டு எந்திரிச்சு மரத்துல முதுக வச்சு அங்கிட்டும் இங்கிட்டுமா இழுத்துச் சொறியும். ஒடனே மரம் சலசலன்னு அசஞ்சு முத்துன மாங்காயெல்லாம் கீழ உதுந்துரும். ஏற்கெனவே கைவசமிருக்கிற வேட்டியில காயப் பெறக்கிப் போட்டு கழுதக் குட்டியோட கழுத்துல தொட்லுக்கெட்டிப் போட்ருவென். தொட்லு ஆடஆட குட்டி சொகமா நடக்கும். லாத்தலா வந்து ஊர ஒரு வளையம் சுத்துவொம்.''

''வீட்டுக்குப் போகாமயா.''

''ஊரச் சுத்தி ஒவ்வொரு படப்புலயும் அஞ்சாறு மாங்காய அங்கங்க திணிச்சுப் பழுக்கவச்சிருவொம்.''

''வச்ச எடங்க நெனவிருக்குமா.''

''அத்தனையும் குட்டிக்குத் தெரியும்.''

''அதெப்படி.''

''மொகந்துபாத்து இது பழுத்துருச்சு இது பழுக்கலன்னு அடையாளஞ் சொல்லீரும். அந்த எடத்துல குச்சச் சொருவிவச்சுப் பகல்ல கணக்காப் பழத்தக் கண்டுபுடிச்சு எடுத்துருவென்.''

''அப்படியா சங்கதி. மரத்துக்காரனுக்குத் தெரிஞ்சா முதுகு பழுத்துரும்.''

''ஆருக்குந்தெரியாதே... ஒருநா பெரிய கண்டத்துல மாட்டிக்கிட்டொம். தப்பிச்சது பெரும் பாடு. அத இப்ப நெனச்சாலும் பெயமாருக்கு.''

''அது எங்க நடந்துச்சு.''

''கீழக் கம்மாய்க்குக் கெழக்க வேப்பங்காட்டு மொதலாளி மரம் இருக்கு துல்ல.''

''ஆமா விரிகொம்புக் கெடாரி மாதிரி நிக்கும்.''

''பெரயாசப்பட்டு அத உலுக்கிப்பாத்தொம். மேலு வலிச்சதுதான் மிச்சம்.''

''அம்புட்டுப் பெரிய மரத்த ஒங்கப்பனாலகூட அசைக்க முடியாது.''

''சரி வெறுங்கையோட எப்படிப் போறதுன்னு கழுதக் குட்டிய மரத்தோரம் நிக்கவச்சு அதுமேல ஏறி ஒரு கொப்புல தொத்தி உலுக்கிவுட்டென். அனயங்காயி வுழுந்துச்சு. ஒண்ணு மட்டும் கைக்கு ஆப்புட்டது. மொகந்துபாத்தென். முத்துன காயி. நல்லாப் பழுத்துரும்.''

''நல்ல ஏணி கெடச்சது.''

''வுழுந்த மாங்கா போதும்னு எறங்கி வரயில ஒரு பொந்துக்குள்ள ஸ்ஸ்னு எரஞ்சது.''

''காத்துக்கு எரஞ்சிருக்கும்.''

''அதக் கண்டுக்கிறாம கீழ எறங்குனென். அப்பப் பாத்தா கூடயே கவுறு மாதிரி தொளதொளன்னு ஒண்ணு தொங்கிக்கிட்டே நீளுது. அவசரமா கழுதக் குட்டிமேல கால வைக்கிறதுக்குள்ள எங் கழுத்தச் சுத்தி வளச்சுப் புடிச்சுக்கிருச்சு. தூக்குப்போட்டதுபோல அந்தரத்துல தொங்குறென்.''

''பாம்பாருக்குமோ.''

''பாம்பேதான். நல்லபாம்பு. ரெட்ட நாக்க நீட்டிநீட்டி எம் மூக்குக்குள்ள [illegible]. எனக்குன்னா தும்மலு வருது. அடக்கிக்கிட்டென்.''

''தும்முனாக் கொத்தீருக்கும். மாங்கா மாதிரி வுழுந்துருப்ப.''

''எம் புள்ளீக வெளையாடுற எடத்துல ஒனக்கென்னடா வேலன்னு வாயத் தொறந்துக்கிட்டுக் கடிக்க வருது. நான் ஒரு கையிட்டு மரத்தப் புடிச்சுக்கிட்டு அடுத்த கையால மாங்காய வாய்க்கு நேர நீட்னென். மாங்காயில ஒரே கொத்து. புளிப்புத் தாங்காம சீசீன்னு ஓதறுச்சு. அதுக்குப் பெறகு வாயத் தொறக்கல.''

''புளிப்புல பல்லுக் கூசியிருக்கும்.''

''வாலு வச்சு முதுகுல ரெண்டு சாட்டையடி வசமாக் குடுத்துச்சு. இனிமே வரமாட்டென்வரமாட்டன்னு கெஞ்சினென். திரும்பிப் பாக்காம ஓடுன்னு கழுத்தக் கழட்டிவுட்ருச்சு. பொத்னு கீழ வுழுந்தென். கைக்குக் கெடச்ச மாங் காயப் பெறக்கீட்டு ரெண்டு பேரும் அங்க புடிச்ச ஓட்டந்தான். வீட்டுக்கு வந்த பெறகுதான் உசிரு வந்துச்சு.''

''அப்பயும் மாங்கா களவாங்கிற புத்தி போகல பாரு.''

''அந்தப் பாடு பட்டுச் சம்பாரிச்சிட்டு வந்து பழுக்கவச்ச மாங்காயாக்கும். தின்னுங்க. ருசியாருக்கும்.''

மாம்பழத்தை அப்படியே கடித்துத் தின்றார்கள். கொட்டை கிழட்டுக் குடுமியாகும்வரை சூம்பிச் சப்பினார்கள். இளம்புளிப்பில் கண் சொக்கியது.

''இப்பத் தண்ணிதவிக்குதுல.''

''தண்ணி குடிக்கிறதுக்கு முன்னால ஒரு சங்கதியிருக்கு. கொஞ்சம் பொறுங்க.''

மாரி ரெண்டு கல்லெடுத்து மாங்கொட்டைகளை உடைத்து உள்ளே இருக்கும் பருப்பை நீட்டினான்.

''வாயில போட்டு நறுக்னு மென்னு விழுங்கீருங்க.''

பருப்பைத் தின்று விழுங்கவிழுங்க நாவும் தொண்டையும் உலர்ந்து தாகம் அதிகமாகியது. கமலை இறைவையாடும் கிணற்றுக்கு ஓடினார்கள்.

வாய்க்காலில் மண்டிபோட்டுத் தாகந்தீரத் தண்ணீர் குடித்தார்கள். மாங் கொட்டைத் துவர்ப்பில் தேனாக இனித்தது.

''ஏல பதினி தோத்துரும்.''

வயிறு நிறைந்த தெளுச்சியில் மாரி கண்ணுமூக்குத் தெரியாமல் குதியாளம் போட்டான்.

''கூனையில பதினியாம். பானையில பதினியாம்.''

வயிற்றைத் தட்டித்தட்டி ஆடினான். கமலை இறைக்கிறவன் அவனை ஒருமாதிரியாகப் பார்த்துவிட்டு ஆண்டியிடம் கேட்டான்.

''வண்ணாப் பெயலுக்குத் தேளு கொட்டியிருச்சா.''

ஆண்டி முழித்தான். மாரி சொல்லிக்கொண்டே ஓட்டம்பிடித்தான்.

''இல்ல பாம்பு கொத்தீருச்சு. நல்லபாம்பு.''

ஆண்டி முனங்கிக்கொண்டு பின்னால் ஓடினான்.

''தேளுமில்ல பாம்புமில்ல. கோட்டிதான் புடிச்சிருச்சு.''

## 7. அடித்தட்டு விளையாட்டு

ராத்திரி வடக்கு மந்தைப் புழுதியில் கிளித்தட்டு நடந்தது. ஆண்டிக்கும் மாரிக்கும் பிடித்தமான விளையாட்டு. நிலா வெளிச்சத்தில் உறக்கமே வராது. விடியவிடிய விளையாடலாம்.

ரெண்டு பேரும் ஒரே திக்கம் சேர மாட்டார்கள். அது தோதுப்படாது. உத்தி பிரிக்கும்போது வெவ்வேறு பக்கம் போனால்தான் சந்தித்துப் பேசிக்கொள்ள முடியும்.

முதல் ஆட்டைக்கு ஆண்டித் திக்கத்துக்காரர்கள் தட்டுக் கட்டினார்கள். மாரி சுதாரிப்பாக இறங்கினான். அவனைக் கொஞ்ச நேரம் தாக்காட்டுவதே பெரிய காரியம். எப்படியும் ஏமக்காட்டி ஆண்டியின் தட்டுக்குப் போய்விடுவான். ஆண்டி முதலிலேயே சொல்லிவிட்டான்.

''ஏல எங்கிட்ட மட்டும் ஒன் ஏமாத்து வேலைய வச்சுக்கிறாத. கொஞ்ச நேரம் ஒழுங்கா இருந்துட்டு மேத்தட்டுக்குப் போகணும்.''

''ஒழுங்கா இல்லாம ஒங்களத் தள்ளீட்டா போவாக. என்னய மறிக்க முடியாதுன்னு சொல்லுங்களேன்.''

''அப்படியா நெனச்சுக்கிட்ட. எங்க தப்பிச்சிரு பாப்பொம்.''

மாரிக்கு ரோசம் வந்துவிட்டது. கிக்கிரிபுக்கிரி என்று சத்தம் போட்டுக் கொண்டு மறுக்கி ஓடினான். தப்பிக்க முடியவில்லை. நின்று தவிப்பாறினான்.

''நாளைக்கு நம்ம எங்க போகலாம்.''

''இந்தப் பாச்சா பலிக்காது மச்சான். நான் இளிச்சவாயன்னு நெனச்சயா.''

முத்தட்டுக்காரனிடமிருந்து வசவு வந்தது.

''அங்க ஒட்டப்பல்லனும் சாத்துக்காலனும் கூட்டாங்கஞ்சி குடிக்கீகளால. வண்ணாப் பெய வந்தா இந்தக் கூத்துத்தான்.''

மாரி ஆண்டியைப் பார்த்தான்.

''கேட்டீகளா அவுக பேசுறத. நான் தட்டு மாறப்போறென்.''

''முடிஞ்சா மாறிக்கோ.''

''கொஞ்சம் வெலகுங்க எச்சுத் துப்பிக்கிறென். மாசிப் படப்பு வந்தா கறி கெடைக்குமேன்னு நெனச்சுப்பாத்தென். எச்சூறியிருச்சு.''

ஆண்டியின் காலில் துப்புவதுபோல் குனிந்தான்.

''கால்ல எச்சுப் பட்டா வாயக் கிழிச்சுப்புருவென்.''

ஆண்டி அசிங்கப்பட்டு விலகினான். அவ்வளவுதான். மாரி அடுத்த தட்டில் நின்றான். ஆண்டிக்குக் கோவங்கோவமாக வந்தது.

''அறுதப்பெய ஏமாத்திப்புட்டானே. அடுத்தாட்டைக்குச் சப்பத்தட்டுல்ல கெட்டச் சொல்லுவாங்க.''

மாரி மேல்தட்டில் வேலையைக் காட்டினான்.

''எப்பா ஒங்க வீட்டுக் கஞ்சி குடிச்சுக் கெறக்கமா வருது. என்னயக் கொஞ்சம் புடிங்க.''

தட்டுக் கட்டுகிறவன்மேல் விழுகிற மாதிரி குனிந்தான்.

''கிட்ட வராதல.''

தட்டுக்காரன் தள்ளிப் போனான். மாரி அடுத்த தட்டுக்குப் பாய்ந்தான்.

''போயிட்டு இங்கதான வரணும். நோணியப் பிதுக்குறென் பாரு.''

மாரி அப்படியே தட்டுத்தட்டாக ஏமாற்றி முத்தட்டுக்குப் போய்விட்டான். முத்தட்டுக்காரனுக்குக் கொக்குக் கால். அதனால்தான் பேரே கொக்கன். நாலெட்டில் கிளியைப் பிடித்துவிடுவான். அதுக்காகவே அவனை முத்தட்டில் நிறுத்துவார்கள். அவன் மாரியை அரட்டினான்.

''ஏல எங்கிட்ட எதும் சேட்ட பண்ணுன எத்துற எத்துல கொடலுத் தெறிச்சிரும்.''

மாரி வயிற்றைப் பிடித்துக்கொண்டான்.

''கொடலுப் போச்சுன்னா ஊருச் சோறு திங்கிறது எப்படி.''

மரக் கட்டையாக நின்றான். உற்றுப் பார்த்தான்.

''என்னல சும்மா நிக்க.''

''வேற ஒண்ணுமில்ல. ஒங்களுக்குக் காலு இடுப்புல இருக்குதா கழுத்துல இருக்குதான்னு பாத்தென்.''

''இப்பப் பாரு ஓம் முதுகுல இருக்கும்.''

கொக்கனின் எத்துக்கு விலகிக்கொண்ட மாரி ரெம்ப யோசனையில் அண்ணாந்து பார்த்தான்.

''மேல என்னருக்குல.''

''ஒங்களுக்குத் தெரியலயா. சரியாப்போச்சு.''

''மேல நெலா இருக்குது.''

''அதுல ஒரு ஆளு பாலு பீச்சுதே அது எங்கப்பன் மாதிரி இருக்குதேன்னு பாத்தென்.''

''ஒங்கப்பன் கழுதையிலதான் பீச்சுவான்.''

''அந்தக் கத ஒங்களுக்குத் தெரியாதா.''

''எந்தக் கதல.''

''நான் கழுத மேக்கயில வாட்டசாட்டமா பொட்டக் கழுத ஒண்ணு திரியுமே பாத்துருக்கீகளா.''

''அதான எனக்கு வேல. அதுக்கு என்ன வந்துச்சு.''

''போன மாசந்தான் அழகான குட்டிபோட்ருக்குது. அதுக்கு நம்ம பூமியில மொளச்சிருக்கிற பில்லு புடிக்காது. கஞ்சிகூட எறங்காது.''

''பெறகு மண்ணவா திங்கும்.''

''குட்டிய ஒறங்கப்போட்டுட்டு நடுச் சாமத்துல வந்து என்னய உசுப்பும். நான் எந்திரிச்சுத் தாழிய எடுத்துத் தலையில கவுத்திக்கிருவென். அதுக்குப் பின்னாலயே நடப்பென். ஊரத் தாண்டிப் போனதும் முதுகுல ஏறிக்கிருவென். அது பெரிய மூச்சு வுடும். ஒருமாதிரி கனைக்கும். அவ்வளவுதான். அப்படியே மேல எழும்பிப் பறக்க ஆரம்பிக்கும். கமலச் சட்டத்து மேலருந்து கெணத்துக்குள்ள குதிக்கயில எப்படியிருக்கும். அந்த மாதிரி அடிவகுறு எக்கிக் கொடலேறிக் கெறக்கமா வரும்.''

''புளூகிணித் தாயிளி கழுத எப்படில பறக்கும்.''

''நாலு கால விரிச்சதும் துணியக் கெட்டிக் காயப்போட்டதுபோலச் செறகு மொளச்சிரும்.''

''அளந்து வுடு.''

''ஒங்ககிட்டப் பொய் சொல்லி என்ன கெடைக்கப்போகுது... பறந்து போகயில கொஞ்ச தூரம் தாண்டியாச்சுன்னா சொதாரிப்பாயிரும். தலையில ருக்கிற தாழிய எடுத்துத் தாளமடிச்சுக்கிட்டே பாட்டுப்படிப்பென். கழுத சொகமாத் தலையாட்டும்.''

''ஓம் மொகறக்கட்டைக்குப் பாட்டு வேற கேக்குதாக்கும்.''

''அந்தமானக்கி மேல போனா ஒரு பெரிய சமுத்தரம் வரும்.''

''வக்காளி ஆகாசத்துல சமுத்தரம் கெடக்குதாம். இவன் அத அளந்து பாத் தானாம். அதுக்குள்ள முங்கிச் சாக வேண்டியதுதான. ஒரு உசிரு கொறஞ்சி ருக்குமில்ல.''

''நான் சொன்னா நம்ப மாட்டீக. சமுத்தரமில்லாம மழ எங்கருந்து வரும். ஒருநாளைக்கு வந்து பாருங்க... சமுத்தரம் வந்துருச்சா. அதக் கடக்கணுமே. தாழியத் தண்ணியில மல்லாக்க மெதக்கவுட்டு அதுக்குள்ள பத்தரமா உக்காந்துக் கிருவென். கழுத என்னய முட்டித் தள்ளீட்டே நீஞ்சு வரும். செத்த நேரத்துல அக்கரைக்குப் போயிச் சேந்துருவொம். அங்கருந்து மேல போனா ஏகட்டுக்கு மேகமா அடஞ்சுகெடக்கும். வெளுத்த துணியக் குமிச்ச மாதிரி. அதுகள வெலக்கி வழி உண்டாக்கி எப்பப் போயிச் சேருறது. கழுத சீத்னு ஒரு மூச்சு வுடும். அவ் வளவுதான். மேகம் கந்துகந்தாக் கலஞ்சு ஓடீரும். சரி மேகத்தக் கடந்தாச்சு. அதுக்கடுத்து என்னருக்குது தெரியுமா.''

''என்னதாம்.''

''அடேயப்பா அதப் பாக்க ஆயிரம் கண்ணு வேணும். தரிசுக் காட்ல ஆடு மாடு மேயிமே அப்படி. கட்டாணியுங்களுக்காணியுமா கணக்கில்லாம நடமா டும். வந்துக்கிட்டும் போயிக்கிட்டும் உருண்டுக்கிட்டும் சுத்திக்கிட்டும். சிறிசுக கிறுவாணஞ்சுத்திக்கிட்டே பெரிசுகளவும் சுத்தி வெளையாடுது. நவ்வாப்பழம் போல ஒரு கூட்டம். தேங்காதேங்காயா ஒரு கூட்டம். பூசணிப் பழமா ஒரு மந்த அலையும். சில்லுன்னு பருத்தி வெடிச்ச மாதிரி கண்டபடி வெள்ளி மொளச்சுக் கெடக்கும். நாங்க போற வழியில எதும் குறுக்க வந்துச்சுன்னு வையிங்க கழுத ஒரு ஒத குடுக்கும். அதோட கத முடிஞ்சது. சுக்குச்சுக்கா ஓடஞ்சு செதறிப் போகும். எல்லாம் தாண்டி நெலாவுக்குப் போயி எறங்கித் தவிப்பாறுவொம்.''

''நெலாவிலயா.''

''அதப் பாத்தா ஒரு சாயலுக்குப் பணியாரம்போல இருக்கும். இனியொரு சாயலுக்குத் தென மாவுருண்ட மாதிரி தெரியும். அங்க பில்லு பசப் பசன்னு வனமா வளந்துகெடக்கும். எங்க பாத்தாலும் பனி கல்லா இறுகிப் பூசுன மாதிரி இருக்கும். அதுமேலதான் நடக்கணும். குளுரு தாங்க முடியாது. தலையில கவுத்துன தாழிய எடுக்க மாட்டென். கழுத ஆசதீரப் பில்ல மேஞ்சு தண்ணி குடிக்கும்.''

கொக்கன் பார்வை பறவையாடக் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தான். ரெண்டுமூணு பேர் முத்தட்டுக்கு வந்துவிட்டால் திண்டாட்டம். கிளியைத் தாக்காட்ட முடியாது. அதனால் கீழ்த்தட்டுக்காரர்களுக்குச் சத்தங்கொடுத்தான்.

''ஏலே ஒறங்காமத் தட்டுக்கெட்டுங்க. இங்க வண்ணாத் தாயிளிய வச்சுக் கிட்டு வம்பாடு படுறென். மேல எவனவாச்சும் ஏறவுட்டீக அம்புட்டுத்தான்.''

மாரி எளக்காரம் பேசினான்.

''நான் ஒங்கள ஒண்ணுஞ்செய்யலயே. என்னயக் கண்டு பெயமா.''

''ஏல பொடிமசுரு. என்னயத் தாண்டிப் போயிருவயோ... கழுதக் கத அம்புட்டுத்தானா. தண்ணிதான் பனியா ஒறஞ்சுகெடக்குதுன்னயே. கழுதைக்கு மட்டும் எங்கருந்து ஊத்து வந்துச்சு.''

''அதச் சொல்ல மறந்துட்டனே. கழுத பனிக்கட்டியிட்டப் போயி ரெண்டு தேரம் மூச்சுவுடும். அந்தச் சூட்ல பனி உருகித் தண்ணியாயிரும். வெதுவெதுன்னு தண்ணி குடிச்சதும் அதுக்குக் குட்டி நெனப்பு வந்துரும். ஒடனே அளவில்லாமப் பாலு சொரக்கும். நான் ஓடிப் போயித் தாழிய ஏந்துவென். பாலு சொர்ருன்னு எறங்கி நெறஞ்சிரும். அதத் தலையில சொமந்துக்கிட்டு மறுபடியும் கழுதமேல ஏறிக்கிருவென். ஒரு வீச்சுல குறுக்கு வழியா வீடு வந்து சேந்துருவொம்.''

''குறுக்கு வழியா.''

''அங்க எப்படின்னா போற வழியில வர முடியாது. நல்லா அடச்சுக்கிரும். எறங்கி வந்து கழுத கெட்டுத்தொறைக்குப் போயிக் குட்டியோரம் படுத்துக் கிரும். நான் புளிச்சதண்ணிப் பானையில பால ஊத்தித் தாழியக் கவுத்தீட்டு அருவமில்லாம முத்தத்துல மொடக்கீருவென். மறுநா கழுத மோருல கஞ்சி கரச்சுக் குடிச்சாத் தேனாருக்கும். ஒங்க பசுவமாட்டு மோரெல்லாம் எம்மாத் தரம். ஒருநாளைக்குக் கொஞ்சம் குடுக்கென் குடிச்சுப்பாக்கீகளா.''

''ஏல இதுக்குமேல அவுத்துவுட்ட அம்புட்டுத்தான். வாயக் கிழிச்சிருவென்.''

''எனக்கென்ன கேட்டாக் கேளுங்க கேக்கலன்னா போங்க.''

மாரி தப்பித்துக் கெலிப்பதுபோல் பம்மாத்துக் காட்டிவிட்டு மூச்சுவாங்கி னான். கொக்கனுக்கு ஆவல் அடங்கவில்லை.

''இனியென்னல வச்சிருக்க.''

''கரையான் அரிச்ச மாதிரி நெலா கொஞ்ச நாளைக்குத் தேஞ்சுக்கிட்டே போகுதே அது ஏன் தெரியுமா.''

''எதுக்கு.''

''பில்லு பூண்டு வளந்து மூடிக்கிட்டே வரும். மொத்தமா மூடீருச்சுன்னா நெலா வெள்ளியிட்டத் தகவலு சொல்லியனுப்பும். ஒடனே பெறப்புட்டுப் போயிருவொம். கழுத மேயமேய நெலா சுத்தமாகி முழுசாத் தெரியும். இதெல் லாம் ஆருட்டயும் சொல்லப்புடாதுன்னு நெலா எங்கிட்டக் கழுதப் பாலுமேல சத்தியம் வாங்கியிருக்கு. சங்கதி தெரிஞ்சுபோச்சுன்னா அங்க கண்டமானக்கிக் கூட்டம் கூடிச் சாணிசகதின்னு அசிங்கமாயிருமில்ல. ஆனா ஒண்ணு. அந்தப் பில்லக் கழுதையாலதான் கடிக்க முடியும். ஆடுமாடுகளால ஒரு துரும்பக்கூடக் கடிக்க முடியாது. பல்லு அம்புட்டும் ஒடஞ்சுபோகும்.''

''ஒங் கழுத சாணி போடாதோ. மோத்தரம் மோளாதோ.''

‘‘நெலாவில எறங்குனதுலருந்து சின்ன விட்டகூடப் போடாது. ஒரு சொட்டு மோத்தரம் மோளாது. எல்லாம் அடக்கி வச்சிருந்து கீழ வந்ததும் சதசதன்னு ஒரு கூடைக்குத் தள்ளீரும்.’’

‘‘இவருதான் ஏந்துவாரு.’’

‘‘வாயி தவறி ஓங்ககிட்டச் சொல்லீட்டென். ஒங்களுக்குத் தெரிஞ்சா என்ன. கழுதையா வளக்கீக. எங் கழுதைக்குத் தவர வேற ஆருக்கும் வழி தெரியாது... இண்ணைக்குப் பாத்துக் கழுதையிட்டச் சொல்லாம வெளையாட வந்துட்டென். அதனால எங்கப்பனக் கூட்டீட்டுப் போயிருச்சோன்னு வாதிப்பாருக்கு. நெலா மூஞ்சியில எப்படி முழிப்பென்.’’

‘‘நாளைக்குப் போயி நல்ல வார்த்த சொல்லிக்கோ. இப்ப ஒழுங்கா வெளையாட்டப் பாரு.’’

இருந்தாலும் கொக்கனுக்கு உள்மனசு குறுகுறுத்தது. நிலாவில் கருப்பாக ஒண்ணு வளைந்து தெரிகிறதே அது என்ன. கழுதைதானோ. விளிம்பில் மடு மாதிரி அதில் காம்பு மாதிரி அதுக்குக் கீழே ஒருவன் உட்கார்ந்து பால் பீச்சுகிற மாதிரி... வண்ணாப் பயல் சொல்வது சரியாகத்தான் இருக்குமோ... சே நிலாவிலாவது கழுதையாவது... கண்ணுக்கு முன்னால் நடக்கிற மாதிரி சொல்கிறானே. ஏதொண்ணுக்கும் ஒரு பார்வை பார்த்துவிட்டால் தெரிந்துவிடும். ஆவலில் அண்ணாந்து பார்த்தான். மாரிக்கு அது போதும்.

‘‘கிளி போகுது. புடிக்க வாங்க.’’

ஒரே ஓட்டத்தில் பறந்துவிட்டான். கொக்கன் தலையிலடித்துக்கொண்டான்.

‘‘வண்ணாப் பெய கதையக் கேட்டென். வாயில மோண்டுட்டுப் போயிட்டான். எல்லாருட்டயும் வசவு வாங்கிக்கெட்டணுமே.’’

மாரி எல்லையைத் தாண்டிப் போய்த் திரும்ப நேரமானது. தேட ஆரம்பித்து விட்டார்கள்.

‘‘எங்க போயித்தொலஞ்சாண்டா.’’

‘‘ஆரு கண்டது. அப்படியே வீட்டுக்குப் போயி ஊருச்சோத்த உண்டுல்லன்னு பாத்துட்டு வருவான்.’’

செடி மறைவில் படுத்துக்கிடந்த மாரியின் சத்தம் வந்தது.

‘‘கொஞ்சம் பொறுங்க. இந்தா வந்துட்டென்.’’

எழுந்து சாவகாசமாகப் போனான். கொக்கனுக்கு வந்ததே கோவம்.

‘‘பில்ல மேஞ்சா பல்லா ஒடையும். இப்ப ஓம் பல்ல ஒடைக்கென் பாரு.’’

ஆளுக்கொரு தரும அடி கொடுத்தார்கள். அத்தனையையும் துடைத்துக் கொண்டு மாரி கேட்டான்.

‘‘கிளித்தட்டு வெளையாடுறீகளா அடித்தட்டு வெளையாடுறீகளா.’’

மந்தைப் புஞ்சையெங்கும் சிரிப்பு சிந்திக்கிடந்தது.

எளவட்டமான பிறகும் ஆண்டியும் மாரியும் கொடுக்குப்பிடித்துக்கொண்டு தான் திரிந்தார்கள். விளையாட்டை விடவில்லை. காடுகரையில் அலைவதை நிறுத்தவில்லை. முன்னைப்போல் காடாசெதறியாக அலைய மாட்டார்கள்.

வீட்டில் வேலையிருக்கிற சமயம் அப்பிராணியாக இருந்து முடித்துவிட்டு ஏதாவது ஒரு சாக்கில் கூடுவார்கள்.

ஆண்டி முந்திக்கு இப்போது உடம்பை வளைத்துச் சின்னச்சின்ன வேலைகளைச் செய்வதில் சண்டிவீரிக்குச் சந்தோசம். மகன் வண்ணாக்குடிக்குப் போவதை நிறுத்திவிட்டானே அது போதும். நேரம் தவறாமல் அவனைக் கூப்பிட்டுக் கஞ்சி போட்டுக் கொடுத்தாள். அவனுக்காகத் தின்பண்டம் செய்து வைத்திருந்தாள். அவள் மொன்னச்சியுடன் சண்டைபோட்டு ரெம்ப நாளாயிற்று. அதில் நல்லானுக்கு நிம்மதி.

சில நாள் ஆண்டி தோட்டத்தில் நிலக்கடலை முற்றிய செடிகளைப் பிடுங்கி நன்றாகக் கழுவிப் பருப்பு உரித்து வைத்திருப்பான். மாரி பலகஞ்சிக் கரைசலை ஒளித்துக் கொண்டுவருவான். ரெண்டுக்கும் ஏகப் பொருத்தம். வயிறு இன்னும் கொண்டுவாகொண்டுவா என்று கேட்கும். எதுக்களிக்குமளவுக்குப் பாரமேற்றி விட்டு மாமரத்தில் ஏறி வசமாகப் படுத்துக்கொண்டு துவர்ப்பும் புளிப்புமாக மாம்பிஞ்சை நமட்டியபடி பேசுவார்கள்.

ஆண்டிக்குப் பலகஞ்சிக் கிறுக்கு இன்னும் போகவில்லை. கம்மங்கஞ்சி சோளக்கஞ்சி கேப்பைக்கூழ் மூணும் பருக்கையில்லாமல் கரைத்துத் திட்டமாக உப்புப் போட்டுக் கலக்கணும். கடித்துக்கொள்ள முறுகச் சுட்ட கருவாடு இருந்தால் ரெம்ப நல்லது. கலயத்தைக் காலியாக்கிவிட்டுக் கம்மாய்க்குப் போய் நீர் வாகரையில் மண்டிபோட்டுத் தண்ணீர் குடிக்கணும். வண்டல் மணத்துக்கும் அதுக்கும் சொகமான கிறக்கம் வரும். ஆண்டி சொல்வான்.

‘‘இந்தச் சொகத்துக்காகவே ஒங்க வீட்ல பெறந்துருக்கணுண்டா. நீ குடுத்து வச்சவன்.’’

‘‘அப்படிப் பெறந்திருந்தா ஒளிஞ்சுஒளிஞ்சு கஞ்சி குடிக்க வேணாமே.’’

‘‘அதச் சொல்லு.’’

அவர்கள் இன்னும் கூடித் திரிவதைப் பார்த்துச் சிலர் மாரியை அரட்டினார்கள்.

‘‘அவந்தான் செல்லப்புள்ள சும்மா திரியிறான்னா ஒனக்கென்னல வந்துருச்சு.’’

‘‘ஒங்கப்பனுக்குத் தொணையா நாலு வீட்டுத் துணிய அடிக்கலாமில்ல.’’

‘‘நண்டுக்கொழுப்பு நடுநெஞ்சில அடச்சிருக்கு.’’

அவன் தப்பிக்க வழிபார்த்துவிட்டுச் சொன்னான்.

‘‘அவுக ஒரு வீட்டுக்குத்தான் செல்லப்புள்ள. நான் ஊருக்கே செல்லப் புள்ள.’’

ஆண்டி மாரியிடம் கேட்டான்.

‘‘குடட்டி வெளையாடி ரெம்ப நாளாச்சு. சொங்கிப் பெயக என்னதான் செய்றாங்க.’’

‘‘எனக்கும் ஆசையாத்தான் இருக்கு. கோலியா ரெண்டு பேரு வெளையாடுறதுக்கு. இதுக்கு ஆளு சேரணுமில்ல. நீங்களே வேலசெய்யும்போது அவுக சும்மாருப்பாகளா.’’

‘‘அதானடா முந்தியப் போல இப்ப பெயக சேந்து வெளையாடுறதே இல்ல. என்னமோ மாதிரி இருக்கு.’’

''இண்ணைக்கு வச்சுக்கிருவொம். இப்பருந்தே ஆளுகளச் சேருங்க. நானும் சொல்லிவைக்கென்.''

ஒருவழியாக ஆள் சேர்த்துவிட்டார்கள். ராத்திரி குடட்டி விளையாட்டு ஆரம்பமானது. மாரி ஆய் என்று துள்ளிக் குதித்து இறங்கினான். அவன் பாட்டு கணீரென்று கேட்டது.

''ஈக்கீக்கிக் கம்மந்தட்ட
இத்ரவாளிச் சோளத்தட்ட
பணத்துக்குப் பத்துக்கெட்டு
மொகட்ட வளச்சுக்கெட்டு.''

கொம்புசுற்றிப் பாடிவிட்டுக் கெம்பீரமாகத் திரும்பினான். எதிராளிகளுக்குக் காட்டம் கூடியது. இனிமேல் வரட்டும். பிடித்துக் களத்தில் கருதடிக்க வேண்டியதுதான்.

அவன் அடுத்த தடவை எளக்காரமாக வந்தான்.

''பலிஞ் சடுகுடு சடுகுடு... குடுகுடு...
வெள்ளிப் பெரம்பெடுத்து
வெளையாட வாறண்டா
தங்கப் பெரம்பெடுத்து
தாலிகெட்ட வாறண்டா.''

அவன் பாடும்போதே முணுமுணுத்தார்கள்.

''வண்ணாத் தாயிளி என்ன துமுறாப் பாடுறான் பாரு.''

''இவன் தங்கச்சிமாருக்குத் தாலிகெட்டீற வேண்டியதுதான்.''

''ஏல மூத்தது முனியம்மா எனக்கு.''

''எளையவ முத்துக்காளி எனக்குத்தான்.''

''வளச்சுப் புடிங்கடா முதுகுல வெளையாடுவொம்.''

ஆண்டிக்குப் புரிந்துவிட்டது. அகப்பட்டால் சும்மா விட மாட்டார்கள். அவனைப் பிடிக்கிற சாக்கில் தள்ளிவிடப் போனான். அதுக்குள் ஒருவன் வந்து வளைத்துக்கொண்டான். எல்லாரும் குப்புற அமுக்கினார்கள். ஆண்டி உள்ளே புகுந்து மாரிமேல் படுத்துக்கொண்டான். அவன் மூச்சு விடாமல் ''வாறண்டா வாறண்டா'' என்று கத்தக்கத்த ஆளாளுக்கு அடிகொடுத்தார்கள். பாதி அடி ஆண்டிமேல் விழுந்தது.

மாரி மூச்சு முடிந்து வாயில் கவ்வியிருந்த மண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்தபோது அழுகிற மாதிரி இருந்தான். ஆண்டி கோவத் துடிப்பில் மற்றவர்களை விரட்டினான்.

''ஏல ஒஞ்ஞ வெளையாட்டா வெனையால. தெரியாமத்தான் கேக்கென். நெசத்துக்கின்னா எங்கிட்ட வாங்க. உத்திக்குத்தி போட்டுப்பாப்பொம். எவனாச்சும் அவனத் தொட்டீகன்னா ஒங்கஞ்ஞ குடுத்த சேனப் பாலு கலங்கிப் போகும். எங்க தொடுங்க ஆம்பளன்னா.''

மாரியை இழுத்து வந்து நடுவில் நிறுத்தினான். எல்லாரும் நயந்துகொண்டார்கள்.

''இனிமே அவனத் தொடவே மாட்டொம். போதுமா.''

''வெளையாட்டுன்னு ஏன் பேரு வச்சிருக்கு.''

மாரிக்கு முதலில் வருத்தந்தான். அடி வாங்கிய சூட்டோடு ரெண்டு வார்த்தை காட்டமாகப் பேசிவிடலாமா என்றுகூட நினைத்தான். பிறகென்ன இவர்கள் மட்டும் அந்தப் பயலே இந்தப் பயலே என்று வையலாம். தண்ணீர்பட்ட பாடாக ஆத்தாளை அசிங்கமாகப் பேசலாம். தங்கச்சிமாரைப் பார்த்தால் கிண்டலாகப் பாட்டுப்படிக்கலாம். இவர்களை விளையாட்டுக்குக்கூடச் சொல்லக் கூடாது. ஆசையிருக்காதா. எத்தனை நாளைக்குக் கழுதையை வைது அடிப்பது. இவர்களுக்கு ஆண்டிதான் சரி. போட்ட போட்டில் அடங்கிப்போய் நல்லபிள்ளையாகிறார்கள்.

அவன் பழைய கலகலப்புக்கு வந்தான்.

''எல்லாரும் அமுக்குனதுல ஊருச் சோறு கலங்கி வகுறு கொறஞ்சுபோச்சு. இனிமே சொதாரிப்பா வெளையாடலாம்.''

ஆண்டிக்குக் கோவம் பறந்துவிட்டது.

''சவங்கப் பெய. எத்தன அடி வாங்குனாலும் தொடச்சிருவான்.''

புழுதியில் மறுபடியும் குடட்டி சூடுபிடித்தது.

## 8. அடிவானம் வெளுத்துருச்சு

''ஏல எனக்குப் பொண்ணுபாத்துருக்காக.''

ஆண்டியின் முகத்தில் புதுக் களையைக் கவனித்த மாரி மனசுநிறையச் சிரித்தான்.

''அப்படியா. பொண்ணு உள்ளூரா அசலூரா.''

''ஒண்ணும் தெரியாற மாதிரி பேசுறதப் பாரு கழுத களவாணிப் பெய. கொட்டாரம் கொல்லப்பறம்னு ஒளிஞ்சுஒளிஞ்சு பாத்துப் பேசி முடிச்சதே நீதானல.''

''ஆமா இவுக மனுசன ஒரு தரையில உக்கார வுடாம அரிச்செடுத்தது மில்லாம மேப்பேச்சு வேறயா.''

''நீ சொல்லப்போயித்தானல ஒத்துக்கிட்டென்.''

''நான் வேணாம்னுட்டு இந்த ஊருல குடியிருக்க முடியுமா. இல்லன் னாலும் இவுகளுக்குக் கழுத்தநீட்றதுக்கு நான்நீன்னு காத்துக்கிட்டுத்தான இருக்காக.''

''இப்ப எதுக்கு அந்தக் கத. எங்க வீட்லருந்து மொறையோட போயிப் பாத்துப் பேசீட்டு வந்துட்டாக.''

''அப்படிச் சொல்லுங்களேன்... ம் ஒங்க கொண்டைய முடிஞ்சுவுடுறதுக்கு வேறாளு வரப்போகுது.''

''எனக்குக் கையில்லையா.''

''இருந்தாலும் அந்தக் கைக்காகுமா. அப்படியே இந்தக் கைய மறந்து றாதங்க.''

''மறக்கச் சொன்னாலும் மறக்குமாடா. அத நெனச்சா கலியாணங்கூட வேணாம்னு தோணுது.''

''அதுக்காக என்னாளும் காளங்கண்ணு மாதிரி திரிய முடியுமா. காலா காலத்துல செய்ய வேண்டியதச் செஞ்சுதான ஆகணும். பெத்தவுகளுக்கும் ஆசை யிருக்குமில்ல. எங்கப்பன் ஆத்தாளுக்கே இருக்கு.''

ஆண்டிக்கும் கருப்பிக்கும் ஆவணியில் கலியாணம் நடந்தது. பெண் ணுக்குப் பேர்தான் கருப்பி. நல்ல சிவப்பு. முகக் களையானவள். தளுக்கு நடை போட்டால் காது தோளைத் தொட்டுத் துள்ளும். நல்லானும் சண்டிவீரியும் நம்பிக்கையில் பெருமூச்சு விட்டார்கள். கால்கட்டுப் போட்ட பிறகு பயல் கூறாகக் குடும்பம் நடத்துவான்.

நல்ல பெண்டாட்டி கிடைத்ததில் ஆண்டிக்குச் சந்தோசம். பெரிய மனுச னாகிவிட்டான். கருப்பிக்குப் பின்னாலேயே திரிந்தான். அடிக்கடி வேட்டியைச் சரிசெய்து துண்டை ஏத்தாப்புப் போட்டு அழகுபார்த்தான். காதில் கனத்த தரிப்பும் முருகும் ஏறியிருந்தன.

கருப்பி வந்த புண்ணியத்தில் அவனுக்குச் சம்சாரித்தனத்தின் மேல் அக்றை வந்தது. படப்பைச் சுற்றித் தூர்த்துத் துப்புரவாக வைத்துக்கொண்டான். மாட்டுக் குத் தண்ணீர்காட்டினான். பருத்தி விதை ஆட்டினான். நேரத்துக்குக் கூளம் போட்டான். குப்பைகூட கூட்டிக் குமித்துப் பார்க்க லட்சணமாக இருந்தது.

சம்பளகாரன் சகல வேலைகளையும் கற்றுக்கொடுத்தான். அவன் சின்ன வயசிலேயே வேலைக்குச் சேர்ந்தவன். சாப்பாடு துணிமணி போக வருசத்துக்குக் கொத்தோ பணமோ கொடுக்கணும். நல்ல உழைப்பாளி. அலுத்துச்சலித்து உட்கார மாட்டான். மாடுகளைச் செல்லமாக வைத்துக்கொள்வான். கலியாண வயசு தாண்டியும் தேட்டமில்லாமல் இருந்தான். சண்டிவீரி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். தலையைக் குலுக்கிவிட்டான்.

''அது தோதுப்படாது சினிஞ்ஞ. பெரிய தொறட்டு.''

அவன் குடும்பத்தில் மூத்த மகன். ஆண்டிக்கு முத்தண்ணன். சண்டிவீரி உரிமையாகக் கடிந்துகொள்வாள்.

''ஏல கப்பக்காலா பசியோட படுத்துக்கிட்டா எப்படி. ஒரு வாயி சாப்புட் டுட்டுப் போயி எங்கன்னாலும் மொடக்கு. இதுக்குத்தான் ஒரு மகராசியத் தேடிக்கோதேடிக்கோன்னு அடிச்சுக்கிறது. கேக்க மாட்டங்கயே.''

ஆண்டி வேலைகளைக் கற்றாலும் பூசரமரத் தோட்டந்தவிர வேறு நிலங் களுக்குப் போக மாட்டான். அதுக்குக் காரணம் அவனுக்குத்தான் தெரியும். கருப்பிகூட கேட்டுப்பார்த்தாள்.

''ஊரச் சுத்திக் காடுகள வச்சுக்கிட்டு ஒரு எடத்துக்குத்தான் போவன்னா வம்புதான.''

அவன் மழுப்பினான்.

''மத்தத முத்தண்ணன் பாத்துக்கிருவான்.''

நல்லானும் சண்டிவீரியும் கண்டுகொள்வதில்லை. மகன் வேலைக்குப் போவதே பெரிசு. கருப்பி சும்மா இருக்க மாட்டாள். புருசனுக்கு முந்தி கஞ்சிக் கலயம் தூக்கிக் கிளம்பிவிடுவாள். வேலையிருக்கிறதோ இல்லையோ சும்மா புல்பூண்டையாவது நொரண்டணும்.

மாரிக்குச் சங்கடம். ஆண்டியை அடிக்கடி பார்க்க முடிவதில்லை. கலியாணம் முடித்தால் இப்படித்தான் ஆகிவிடுமோ. கட்டிப்போட்ட மாதிரி இருந்தது.

கையும் காலும் குறுகுறுத்தன. வெளுப்புத்துறைக்குப் போய் அப்பனுடன் துணி பிடித்தான். கொஞ்ச நாளிலேயே துவைக்கும் வாகு வந்துவிட்டது. வாய் சும்மா இருக்கவில்லை. சொகமாகப் பாடினான்.

''அடிவானம் வெளுத்துருச்சு
அடஞ்சபொழுது மொளச்சிருச்சு
வெயிலேறிக் காயுமுன்னே
வெள்ளாவித் துணியெடுத்து
கழுதையில பொதியேத்தி
கம்மாய்க்குப் போகவேணும்.''

மொன்னச்சி ஆச்சரியத்தில் கரையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தாள்.

'ஆத்தாடி எம் புள்ளதானா இது.'

அல்லாத்தன் அவளை நோக்கி அழுக்குத் துணியை ஓங்கிச் சுழற்றினான்.

'எம் பெயலாக்கும்.'

அல்லாத்தனும் நன்றாகப் பாடுவான். வெள்ளாவியும் வெளுப்புத்துறையும் போல் பாட்டும் ராகமும் பரம்பரையாகக் கைமாறிவந்தன. அதென்னமோ கையில் துணிபிடித்தாலே மூச்சும் பாட்டும் குழைந்து பெருக்கெடுத்துத் தவிப்பை மறக்க வைக்கும்.

பூசரமரக் கிணற்றில் கமலை இறைத்துக்கொண்டிருந்த ஆண்டிக்கு மனசு துள்ளியது.

''வக்காளி இந்தப் பாட்டெல்லாம் எங்க வச்சிருந்தான்.''

கம்மாக்கரைக்கு ஓடிப்போய் நிறையப் பேசணும் போலிருந்தது. தண்ணீர் இடைவற்றிவிட்டால் கருப்பியிடம் வசவு வாங்கிக்கட்டணுமே. கமலைக் குழியோரம் ஓடும் தண்ணீரை அள்ளி முகம் கழுவிக்கொண்டு வேலையில் கவனப் பட்டான்.

சில சமயம் ஆத்தாளுக்கு வெள்ளை பிரிக்கும் வேலையிருந்தால் மாரி ஊருக்குள் கஞ்சிக்குப் போவான். ஒரு தடவை கொட்டாரத்தில் காடியோரம் கஞ்சிப் பானையை வைத்துவிட்டு ஆண்டியுடன் அக்கறையாகப் பேச்சுப்பழக்கம் போட்டுக்கொண்டிருந்தான்.

''வீட்டுக்குச் சின்னஞ்ஞாவுக வந்த புண்ணியத்துல வேலவெட்டி மும்மரமா நடக்குது போலருக்கு. ஒரு புள்ளைக்குத் தகப்பனாகப்போறீக.''

''விடிஞ்சா ஆளுக்கு முந்திக் காட்டுக்குக் கெளம்பீறா. வகுத்துப்புள்ளக்காரி போகயில நம்மளும் பின்னாலயே மாட்டப் பத்தீட்டு நடக்க வேண்டியிருக்கு. கைகாலெல்லாம் ஓளையிது.''

''எனக்கும் அப்படித்தான். இத்தன நாளும் கறி ஒழத்தீட்டுத் திரிஞ்ச ஒடம்பு வளைய மாட்டங்குது.''

''போகப்போகச் சரியாயிரும்.''

''இதச் சொல்ல மறந்துட்டனே. நேத்து மதியம் வெளுப்புத்தொறையில பசி கொடலப் புடுங்கீருச்சு.''

''இது பெரிய வெசயம்னு சொல்ல வந்துட்டயாக்கும்.''

''ஒரு பொதிக்குத் துணி வெளுத்துக் குமிச்சென்.''

''ரெம்ப அக்கறதான்.''

''பெரிசுக ரெண்டும் கஞ்சியக் குடிச்சிட்டுக் கருவ மரத்தடியில போயி மொடக்கீருச்சு. தங்கச்சிமாரு கரையில தட்டாங்கல்லு வெளையாடுனாக. நான் கலிங்கலுக்கு இந்தப் பக்கம் உக்காந்து பானையில கஞ்சியக் கரச்சென்.''

''தாழியில கரச்சாக் குடிக்கத் தோதாருக்கும்.''

''அப்பப் பாருங்க தலைக்கு மேல படபடன்னு சத்தங்கேட்டுச்சு. அண்ணாந்து பாக்கிறதுக்குள்ள பெரிய கழுகு செறகடிச்சுக்கிட்டு எறங்கிக் கஞ்சிப் பான மேலயே உக்காந்துருச்சு.''

''கழுகு எங்கருந்து வந்தது.''

''கழுகுன்னா குலுக்க மாதிரி. வங்கெழடு. கழுத்து மயிரெல்லாம் கழிஞ்சு ஒலக்க மாதிரி வழுவழுன்னு. கோடாலி வாயி. கரும்புக் காலு. கண்ண உருட்டி உருட்டி முழிக்கிறதப் பாத்துப் பெயந்துபோனெ்ன்.''

''கஞ்சிக்காக வந்துருக்குமோ.''

''பயப்படாத ஒண்ணும் செய்ய மாட்டன்னு சொல்லிக் கீழ எறங்கிக் கிருச்சு. கஞ்சி வேணுமான்னு கேட்டென். வேணாம்னு தலையைக் குலுக் கீருச்சு.''

''பெறகெதுக்கு வந்துச்சாம்.''

''அமள எலையப் போல நாக்கு அடிக்கடி வந்துபோறதப் பாத்தா ஏதோ சொல்லத் துடிக்குதுன்னு தெரிஞ்சுக்கிட்டென்.''

''ஒங்கிட்டச் சொல்றதுக்கு என்னருக்கு.''

''இருந்துருக்கே.''

''வக்காளி நீ கழுதையிட்டப் பழக்கம்போடுறவனாச்சே. கழுகு என்ன சொல்லுச்சாம்.''

''மேற்க கெழவங்கோட்டன்னு ஒரு ஊரு. ஊருக்கு நடுவுல பெரிய மல. மேல்பக்கம் அடிவாரத்துல அரமன கோட்ட கொத்தளம்னு கெட்டி சுத்தியுள்ள சீமையெல்லாம் வன்னிய ராசா ஆண்டுவந்துருக்காரு. அவருக்கு ஒரே ஆம்பளப் புள்ள. எளவட்டப் பெராயம். கலியாணமாகல. ஆளுக்காளு ஆசப்படுற அழகேந்திரன். அவருக்கு வேட்டப் பிரியம் ரெம்ப. ஆளுகளத் தெரட்டீட்டு வெள்ளங்காட்டி குருதமேல கெளம்புறவரு பொழுதே அடஞ்சுதான் திரும்பு வாரு. செரக்காடு மலங்காடுன்னு திரிஞ்சு வேட்டையாடுறது. மொசலு கெலா மெளா வரையாடுன்னு ஆளுக சொமந்து முடியாது.''

''சின்ன ராசாவா வேட்ட ராசாவா.''

''ஒருநா சொந்த ஊரு மலையில வேட்டையாடுற சமயம் கீழ்ப்பக்கம் அடிவாரத்துல சக்கிலியக்குடியோரம் ஒரு பொண்ணு வெறகு பெறக்கீட்ருந் துருக்கா. அழகுன்னா அழகு அள்ளிக் குடிக்கிற அழகு. ராசா அவளப் பாத்துக் கெறங்கிப்போயிட்டாரு. வேட்டையில கவனஞ்செல்லல.''

''இந்த வேட்டையில கூடீட்டாரு.''

''அவகிட்டப் பேச்சுக்குடுத்துருக்காரு. சக்கிலியப் புள்ள. பேரு வீரி. குடும் பத்துல ஒரே பொட்டச்சி. அவளுக்கு நாலு அண்ணன்மாரு. அரமனையில வேல. தாயி தகப்பன் கெடையாது. தங்கச்சியச் செல்லமா வளத்துருக்காக.''

''பேச்சுப்பழக்கம் எப்படிப் போகுது.''

''அவகிட்டத் தாகத்துக்குத் தண்ணி கேட்ருக்காரு. அவ வெலவெலத்துப் போயிட்டா. கேக்கிறது ராசாவாச்சே குடுக்காமருக்க முடியுமா.''

''குடுக்கலன்னா அங்க குடியிருப்பில்ல.''

''அவ பதட்டத்துல ஓடிப் போயி ஏனத்தக் கழுவித் தண்ணி கோலியிருக்கா. திரும்புறதுக்குள்ள ராசா வீடு தேடிப் போயிட்டாரு. தண்ணிய வாங்கிக் குடிச்சிட்டு வீட்டுக்குள்ள மொழஞ்சு உக்காந்துட்டாரு. வெளிய நின்னுக்கிட்டுருந்த அவள உள்ள கூப்புட்டுப் பக்கத்துல உக்காரவச்சுக்கிட்டாரு. சக்கிலியக் குடிச் சனங்க நடுங்கிப்போயி ஓரஞ்சாரமா ஒளிஞ்சு நின்னதுக.''

''வந்துருக்கிறது அரமனக் கண்ணுக்குட்டியாச்சே.''

''ராசா அவளோட பேச்சுப்போடுறாரு போடுறாரு போட்டுக்கிட்டே இருக்காரு. கூட வந்த ஆளுக சக்கிலியக்குடியச் சுத்தித் தெகச்சுப்போயி நிக்காக. குருத கனைக்கிற சத்தம் கேட்டுத்தான் ராசா கெறக்கந்தெளிஞ்சு முழிச்சுப் பாத்தாரு. வேண்டா வெறுப்பா வெளிய வந்தாரு.''

''அங்கயே குடியிருக்க வேண்டியதுதான.''

''பெறகென்ன ராசா அரமனையில தங்குறதே இல்ல. நெனச்ச நேரம் வேட்டைக்குக் கௌம்பீறது. ஆளுககிட்டச் சொல்லாமயே போறதும் உண்டு. எங்க சுத்தியும் சக்கிலியக்குடிக்கு வெலகாமப் போறதில்ல. வேட்டையாடுற உருப்படிக் கறியக் கொண்டுவந்து அந்தப் புள்ளையிட்டக் குடுக்கிறது. அவளும் சோறு பொங்கி வாய்க்கு ருசியாக் கறியாக்கிப் போடுறது.''

''ருசி கண்டாச்சு.''

''அந்தப் புள்ள மனசிலயும் தன்னறியாம ஒரு ஆச வளந்துருச்சு.''

''இருக்காதா பின்ன.''

''சங்கதி அவளோட அண்ணன்மாருக்குத் தெரிஞ்சுபோச்சு. பேமுழி முழிக்காக. வெசயம் பெரிய ராசா காதுக்கு எட்னா அவ்வளவுதான். சக்கிலியக்குடியத் தட்டிநெரத்தீருவாக. தங்கச்சிய உசிரோட பாக்க முடியாது. நம்ம தலையும் தப்பிக்காது. சின்ன ராசாட்டயும் நெலமையச் சொல்லித் தடுக்க முடியாது. பல மாதிரி ரோசனபண்ணுனதுல இப்படிச் செய்யலாம்னு தோணுச்சு.''

''எப்படி.''

''ஒரு மாட்ட அடிச்சு நீளநீளமாக் கறிய அறுத்து காயவைக்கிற சாக்குல வீட்டு முத்தத்துல கொடி கெட்டித் தோரணமாத் தொங்கவுட்டாக. அதத் தள்ளி வெலக்காம ஆளு வீட்டுக்குள்ள போக முடியாது.''

''அப்படியாச்சும் அசிங்கப்பட்டு ராசா வராம இருக்கட்டுமிங்கிற நெனப்பு.''

''அவரு என்ன செஞ்சாராம்.''

''கூச்சப்படாம மாட்டுக் கறிய வெலக்கீட்டு வீட்டுக்குள்ள போயிட்டாரு.''

''சரியாப்போச்சு.''

''அண்ணன்மாருக்கு வேற ஒரு வழி தோணுச்சு. தங்கச்சி வீட்ல இருந்தாத் தான ராசா வருவாரு.''

''அவள அடுத்தவனுக்குக் கெட்டிக்குடுத்துட்டாகளா. இல்ல கூட்டிக் கிட்டுக் குடிகௌம்பிப் போயிட்டாகளா.''

''அப்படிச் செய்யலயே.''

''பெறகென்ன செஞ்சாங்களாம்.''

''நாலு பேரும் சேந்து ஆருக்குந்தெரியாம அவளக் கொன்னு சொமந்து போயி உச்சிமலையோரம் கல்லுப் பொடவுக்குள்ள போட்டுட்டு ராவோட ராவா தொலவட்டு ஊருக்குப் பொண்டாட்டி புள்ளீகளோட ஓடிப்புட்டாக.''

''அறிவுகெட்ட பெயக. ஆசையா வளத்த தங்கச்சிய அனியாயமாக் கொன்னுட்டாங்களே.''

''சின்ன ராசா வந்து பாத்தா வீரியக் காங்கல. சக்கிலியக்குடிச் சனங்க ஆரும் வாயி தொறக்கல. தவிச்சுப்போயிட்டாரு. நாலு நாளாத் தேடியும் கெடைக்கல. அஞ்சாம் நாளு மலமேல கழுகுக வட்டம் போடுறதப் பாத்து அங்க போயி கல்லுப் பொந்துக்குள்ள எட்டிப் பாத்துருக்காரு. பாத்தா வீரி உருக் கொலஞ்சு நாறிப்போயிக் கெடக்கா. ராசா அவமேல வுழுந்து கதறிக்கதறி அழுதாரு. கொஞ்ச நேரம் அழுகைய நிறுத்தி சுத்துமுத்தும் பாத்தாரு. ஆளுக கண்ணுகலங்கிப்போயி நின்னாக. அவரு இடுப்புலருந்த வாள உருவுனாரு. என்ன நடக்கப்போகுதோன்னு சனங்களுக்குப் பதட்டம். ஒரே வீச்சில தன்னோட தலையத் துண்டா வெட்டிப் போட்டுட்டு வீரிமேல சாஞ்சிட்டாரு.''

''அடடா ரெண்டு உசிரு போச்சே.''

''ஆளுக அலறியடிச்சு ஓடிப் போயி பெரிய ராசாட்டச் சொன்னாக. அரமனையே அழுதுச்சு.''

''ஒத்தப் புள்ளையில்லையா.''

''சங்கதி முந்தியே தெரிஞ்சிருந்தா ரெண்டு பேரவும் சேத்துவச்சிருப்பனேன்னு பெரிய ராசா அழுது பொலம்புனாரு.''

''எல்லாம் முடிஞ்ச பெறகு சொல்லி என்ன செய்ய. ஆராச்சும் அவரு காதுல போட்டுருக்கணும்.''

''பெயந்துபோயிச் சொல்லல. அவரும் புள்ளையோட வேட்டப் பிரியத்த மான் கெடுக்கணும்னு வெள்ளந்தியா இருந்துட்டாரு.''

''எல்லாம் கெட்ட நேரம்.''

''ராசா வீரியோட அண்ணன்மாரத் தேடிக் கண்டுபுடிச்சுக் கூட்டிவந்து முறையபடி சக்கிலியக்குடியில குடியமத்திவச்சாரு.''

''நல்ல காரியம்.''

''அரமனைக்கு வாரிசு வேணுமே.''

''வேணுமில்ல.''

''வீரியோட மூத்தண்ணன் மகன் ஒருத்தன் மூக்கும்முழியும் லச்சணமாருந் தான். அவனத் தத்தெடுத்துச் சின்ன ராசாவாக்கீட்டாரு.''

''பெரிய ராசாவுக்கு மனசும் பெரிசு.''

''சக்கிலியக்குடிச் சனங்க வீரி நெனவா அகலக் கல்லுல அவளோட உரு மாதிரி செதுக்கி நட்டிவச்சாக. மறுநா அந்தக் கல்லு ரெண்டா ஒடஞ்சுபோச்சு.''

''நல்ல கல்லு கெடைக்கலயா.''

''பெறகு ஒரே கல்லுல அவ உருவத்தவும் சின்ன ராசா உருவத்தவும் சேந்தாப்புல செதுக்கி நட்னாக. ஒடையல.''

''செத்த பெறகும் வுட்டுப் பிரிய மனசில்ல.''

''அதுலருந்து எல்லாரும் அவுகளத் தெய்வமாக் கும்புட்டுவாறாக. சின்ன ராசாவுக்கு அவுக வச்சுக்கிட்ட பேரு வீரன்.''

''நம்மளும் ஒருநாளைக்கு அங்க போயிக் கும்புட்டுட்டு வருவமே.''

''கண்டிப்பாப் போகணும்.''

''அது சரியே இதெல்லாம் அந்தக் கழுகுக்கு எப்படித் தெரியுமாம்.''

''கேட்டனே. நாந்தான் வீரின்னு சொல்லுச்சு.''

''வீரியா.''

''கஞ்சிப் பான ஒடஞ்சதுபோல எம் மனசு ஒடஞ்சுபோச்சு. அது அழுக நான் அழுக என்னத்தச் சொல்றது.''

''கேக்கவே கஸ்டமாருக்கு.''

''ரெண்டு பேரும் கழுகா மாறிக் கொஞ்சக் காலம் சந்தோசமா இருந்துருக்காக. ஒருநா தனியா எர தேடப் போயிருந்த ராசா திரும்பி வரவேயில்ல.''

''அந்தப் பெழப்பும் போச்சா. எவனும் வேட்டையாடிக் கொன்னுட்டானோ.''

''அவ மலங்காடு செடிங்காடெல்லாம் பறந்து திரிஞ்சு ராசாவத் தேடுறது. சாய்ந்தரம் கண்ணு வெளிச்சத்துலயே கோயிலுக்கு வந்து ராசாவோட உருவத்த ஆசதீரப் பாத்துட்டுப் பக்கத்துப் புளியமரத்துல அடஞ்சுக்கிறது. அப்படியே காலம் போகுது. வெயசாயிப்போச்சு. ராசா நெனப்புலயே போயிச்சேர வேண்டியதுதான்னு சொல்லி தலையக் குலுக்கிக் கடசிச் சொட்டுக் கண்ணீரவும் உகுத்துட்டுக் கஸ்டப்பட்டுப் பறந்து போயிருச்சு.''

''பொம்பளைக்கு இப்படிச் சோதன வரப்புடாது.''

''நான் கஞ்சியக் கரச்சுத் தாழியில ஊத்திக் கழுதைக்கு வச்சிட்டுப் பட்னியாப் படுத்துட்டென். அண்ணைக்கு வெளுப்பு அம்புட்டுத்தான்.''

கதை மும்முரத்தில் ரெண்டு பேருமே காடியோரம் இருந்த கஞ்சிப் பானையைக் கவனிக்கவில்லை. மாடு அதை நாக்கால் வளைத்து உடைத்துக் கஞ்சியைக் காலிபண்ணும்வரை கதை ஓடியது. சங்கடத்தில் முழித்தார்கள்.

''என்னல இப்படியாகிப்போச்சு.''

''ஒங்க மாட்டுக்குக்கூடப் பலகஞ்சிக் கிறுக்கு போலருக்கு.''

ஆண்டி கருப்பியிடம் ஓடினான்.

''ஏய்.''

''ஓய்.''

''நம்ம மாடு செஞ்சிருக்கிற கூத்தக் கேட்டயா. மாரிப் பெய வச்சிருந்த கஞ்சிப் பானைய முட்டித்தள்ளிச் சில்லுச்சில்லா ஒடஞ்சுபோச்சு.''

''தெருவுல சோறெடுக்கிறவன் கொட்டாரத்துக்கெங்க போனான். கூறு கெட்டவந்தானோ.''

''அந்தப் பக்கம் ஒரு வீடு தனியாக் கெடக்குதுல்ல. அங்க போயிருப்பான் போலருக்கு.''

''கஞ்சி அம்புட்டும் கீழ செதறியிருக்குமே.''

''அத ஏன் கேக்க. கஞ்சிய எடுத்து அந்த மாட்டுக்கே குடுத்துட்டென்.''

''ராத்திரி வகுத்துப் பாட்டுக்கு என்ன செய்வாக. குடும்பமே பட்னி கெடக்குமே.''

''அத நெனச்சாத்தான் பாவமாருக்கு.''

அவள் காய்ச்சிக் கவுத்தியிருந்த சோற்றுப் பானையை அப்படியே தூக்கிக் கொடுத்துவிட்டாள். ஆண்டி அதை மாரியிடம் ஒப்படைத்தான்.

''ஒங்காத்தா வைவால்ல.''

''நான் சமாளிச்சுக்கிறென்.''

மாரி வீட்டுக்குப் போனதே சரியென்று முந்திக்கொண்டான்.

''ஆத்தெ நீ ஏன் செந்திரிபோன பானையக் குடுத்த. ஒடஞ்சு கஞ்சியெல்லாம் செதறி மண்ணாப்போச்சு. அள்ளி ஊறத்தாழியில போட்டுட்டென். புண்ணியத் துக்கு ஆண்டிக் குடும்பாவுக வீட்ல வேற பானையும் கஞ்சியும் குடுத்துவுட்டாக.''

மொன்னச்சி அங்கலாய்த்தாள்.

''என்ன செஞ்சயோ என்ன நடந்துச்சோ. ஆருக்குத் தெரியும். அந்த மகராசி நல்லாருக்கணும்.''

அன்றைக்கிலிருந்து தலைபோகிற வேலையாயிருந்தாலும் ஆத்தா அவனைக் கஞ்சிக்கு அனுப்புவதில்லை. அவன் பேச்சு வாக்கில் கேட்பான்.

''வெள்ள பிரிக்கலயாத்தெ.''

அவள் மசிய மாட்டாள்.

''கஞ்சிக்குப் போயிட்டு வந்து பிரிச்சுக்கிருவென். நீ போயிக் கழுதையப் பத்தீட்டு வா.''

அவன் முனங்கிக்கொண்டே மந்தைக்குப் போவான்.

''மொதல்ல கழுதைகள ஒழிச்சுக்கெட்டணும்.''

## 9. கஞ்சி போடுங்கஞ்ஞா

ஒரு சமயம் ஆண்டி மாரியிடம் கேட்டான்.

''ஏல ஒன்னயத்தான். கலியாணம் முடிச்சுக்கிறப்புடாதா. அவுத்து வுட்ட கழுதையா எத்தன நாளைக்கு அலையிறது.''

''கலியாணம் முடிச்சா வெளையாட முடியாதே.''

''எல்லாம் ஆடி அடங்கியாச்சு. இனிமே வெளையாட்டென்ன வேண்டிக் கெடக்கு.''

''ஒங்களச் சொல்றீகளா. அது நெசந்தான். சின்னஞ்ஞாவுக வந்த பெறகு பொட்டிப்பாம்பா அடங்கீட்டீகளா சும்மாவா.''

''ஒத வாங்கப்போற. நல்லதுக்குச் சொன்னா கேலிமயிரா பண்ற.''

''ஏன் சுத்திவளைக்கீக. இனிமே எங்கிட்ட வராதடான்னு சொல் லுங்களேன்.''

''ஆக்கங்கெட்ட முண்ட. அப்படின்னா ஆயுசு முழுக்கக் கலியாணம் முடிக்க வேணாம்ல.''

''அப்படி வாறீகளா. நாளைக்கே பொண்ணு சம்பாரிச்சு முடிக்கனா இல்லையான்னு பாருங்க.''

''கிறுக்குத் தாயிளி ஒனக்கும் மெனக்கிட்டுக் கஞ்சி ஊத்திவைக்காளே ஓங்காத்தா அவளச் சொல்லணும்.''

''அவளா ஊத்திவைக்கா. எல்லாம் நானாத்தான்.''

எண்ணி மூணு மாசம் ஆகவில்லை. மாரிக்குத் துணையாக வடகாட்டிலிருந்து அனந்தி வந்துவிட்டாள். நல்ல முகவாகு. கருமொழுகு மாதிரி தோதானவள்.

அவள் கலியாணத்தன்றுதான் கருப்பிக்கு ராக்கன் பிறந்தான். ரெம்ப முட்டிப்பான நேரம். ஒரு பக்கம் இவள் வயிறு வலித்துத் திரிந்தாள். அந்தப் பக்கம் வண்ணாக்குடியில் கலியாண மும்முரம். சண்டிவீரி ஒரு இடத்தில் தருகாமல் அலைந்தாள். நல்லானை உட்கார விடவில்லை.

வண்ணாக்குடியில் நாலா ஊர் வண்ணார்களும் கூடியிருந்தார்கள். ஆண்டி அங்கிட்டும் இங்கிட்டுமாக அல்லாடினான். அவனுக்குக் கவலையெல்லாம் கலியாணம் நல்லபடியாக முடிந்து அயலூர்க்காரர்களை அல்லுச்சில்லில்லாமல் அனுப்பிவைக்கணும். மற்ற சனங்களைப் போலில்லை. எடுத்ததுக்கெல்லாம் கோவித்துக்கொண்டு போய்விடுவார்கள். தயனாத்துப் பண்ணிக் கையைக் காலைப் பிடித்துக் கூட்டி வரணும். நடந்தது சரியோ தப்போ நியாயம்பேசக் கூடாது. தப்பென்று ஒத்துக்கொண்டு மாப்புக் கேட்கணும். மாராயம் பண்ணி வருவார்கள். ஒவ்வொருவனும் ஒரு பொதிக்கு வழக்குக் கொண்டுவந்திருப்பான். சண்டி வழக்குத்தான் நிறைய இருக்கும். தன்னை மதிக்கவில்லை. கறியில் நிறைய எலும்பு போட்டுவிட்டார்கள். மறுசோறு வைக்கவில்லை... இப்படி.

சவங்கச் சோறு பொங்கிப்போட்டு மாளாது. ஊருக்குப் புறப்படவில்லையா என்று ஒருவனைக் கேட்டுவிடக் கூடாது. சுருத்து வந்து கிளம்பிவிடுவான். அவனுக்குப் பின்னால் நாலு பேர் போவார்கள். கட்டைப் புளிய மரத்தடியில் காத்திருப்பார்கள். வீட்டுக்காரன் குடும்பத்துடன் கூப்பிடப் போகணும். வழக்குப் பேசி ஒய்ந்து ராசியாகி சவங்கத்தனமாகத் திரும்புவார்கள். இந்த வேடிக்கை மூணு நாளாவது நடக்கும். அத்தனை நாளும் சோறுதான் கறிதான்... ஒரு கூட்டம் பன்றி வாங்கி வரும். இன்னொரு கூட்டம் கள்ளும் சாராயமும் கொண்டுவரும். வீட்டுக்காரன் அரிசிக்கு நிற்கணும். ஆண்டி கிட்ட இருந்தால் அரட்டிஉருட்டி இல்லை அனுசரித்து கசபுசல் வராமல் பார்த்துக்கொள்வான். அல்லாத்தனுக்கு வாய்த் தாட்டிக்கம் கிடையாது.

மாரியின் கலியாணத்தைக் கிட்ட இருந்து பார்க்கக் கருப்பிக்கு ஆசை. அதென்னமோ அவன்மேல் அப்படியொரு வாந்தக்கம். அவன் வெள்ளந்தியாகப் பேசுவது ரெம்பப் பிடிக்கும். எல்லாவற்றையும்விட முக்கியமான காரணம் ஒண்ணு உண்டு. அவள் ஆண்டி வீட்டில் காலெடுத்து வைக்கும்வரை அவன் உறங்கியிருப்பானா.

அவள் வேதனை முனக்கத்தில் விசாரித்தாள்.

''கலியாணம் முடிஞ்சிருச்சா. இந்த நேரத்துலயா இப்படியாகணும். எங்களுக்கு அவன் போயிருக்கானோ என்னமோ.''

பக்கத்திலிருந்த ஒருத்தி கிண்டலடித்தாள்.

''அடியஞ்ஞாடி. இவுக வீட்டுக் கலியாணம் மாதிரில்ல கவலப்படுறா. இந்த வலியோட வகுத்த இழுத்துட்டுப் போறயா.''

குழந்தை பிறக்கும்போது ஆண்டி வண்ணாக்குடியில் இருந்தான். சேனைக்குக் கருப்பட்டி வாங்கிவர அவனுக்கு ஆளனுப்பினார்கள்.

''பொந்தடி தவள மாதிரி புள்ள பெத்துப்போட்ருக்கா. ரெண்டு வட்டு வாங்கீட்டு வா.''

சண்டிவீரி முந்திக்கொண்டாள்.

''எம் பேரனுக்கு எத்தன வட்டு வேணும். அங்க ஏன் போறீக.''

அடுக்குப்பானையிலிருந்து வட்டுவட்டாக எடுத்துக் கொடுத்தாள்.

அனந்தி கருப்பிக்கு ஒண்ணரை வாடம் முட்டுச்சீலை துவைத்துக் கொடுத்தாள். மாத்துச்சீலை தந்தாள். பெரிய மனுசி மாதிரி பக்குவம் சொன்னாள். ரெம்ப அனுசரணையாக இருந்தாள்.

அவள் குணம் அப்படி. எல்லாரிடமும் உள்ளூர்க்காரிபோல் அன்னியோன்னியமாகப் பழகினாள். மாமியாளுக்குப் பதிலாக அவளே கஞ்சிக்குப் போனாள். அவள் கஞ்சி கேட்கும் ராகத்தை இன்னொரு தடவை கேட்கணும் போலிருக்கும்.

''கஞ்சி போடுங்கஞ்ஞா...''

மலங்காட்டிலிருந்து புதுசாக இறங்கி வந்த குருவிபோல் அவளைப் பார்த்தார்கள். ஆண்டி முற்றத்துக்கு வந்து அவளிடம் கேட்டான்.

''புதுப் பொண்ணு எப்படியிருக்க. புருசன் நல்லா கவனிச்சுக்கிறானா இல்ல நீதான் அவனக் கவனிச்சுக்கிறயா.''

அவள் பானைக் கஞ்சியிலிருந்த கருக்குப் பருக்கையை எடுத்து வெளியே சுண்டினாள். முகம் நிறைய வெட்கம்.

''ரெண்டு பேரும் கவனிச்சுக்கிருவொம்.''

அவள் அடுத்த வீட்டுக்கு நடப்பதையே பார்த்தபடி நின்றான் ஆண்டி. ஓட்டைப் பல் கொதக்குப் பயலுக்குக் கூறான பெண்டாட்டி கிடைத்திருக்கிறாள். பிழைத்துக்கொள்வான்.

அனந்தி அத்தனை வீட்டு நிலவரங்களையும் விரைவிலேயே தெரிந்து கொண்டாள். எந்த வீட்டுக்குக் கஞ்சிக்குப் போகணும் போகக் கூடாது என்பதெல்லாம் அத்துபடி. உலை வைக்கும் நேரத்தைக்கூட அறிந்திருந்தாள். அதை அனுசரித்து முன்னப்பின்ன போனால் கஞ்சி கிடைக்கும்.

இப்போதெல்லாம் வண்ணாக்குடி முற்றத்தில் அனந்தி அடையாளம் சொல்லச்சொல்ல மாரி மும்முரமாக வெள்ளை பிரிப்பதைப் பார்க்கலாம். யாரும் நேரில் வெள்ளை கேட்டு வந்தால் எடுத்துக் கொடுக்க நேரமிருக்காது.

''வீட்டுக்குப் போங்க பின்னாலயே வரும்.''

கிழடுகள் வெளுத்த வேட்டி நினைப்பில் முனங்கிக்கொண்டு போகும்.

''புண்ணியவாட்டி வடக்கத்திக்காரி வந்தா ஊருக்குள்ள அழுக்கத்துப் போச்சு.''

ராத்திரிக்கு வேட்டியை மூடிப் படுத்தால் உவர்மண் மணத்தில் உறக்கம் சொக்கும்.

ஆண்டிக்கு மாரியைப் பார்த்துப் பேசுவது குதிரைக்கொம்பாக இருந்தது. சவரம் செய்யும் சந்தர்ப்பத்தில் பார்த்தால் உண்டு. அப்போதும் சாவகாசமாகப் பேச முடியாது. அப்பப்ப அனந்தியிடம் கேட்டுக்கொள்வான்.

''அந்தப் பெய தட்டுப்பட மாட்டங்கானே. வேல தீரலயோ.''

மாரியும் அவளிடம் அவனைப் பற்றி விசாரிப்பான்.

''அவுகளப் பாத்தயா. என்னமும் சொல்லி வுட்டாகளா.''

சில சமயம் அவளுக்கு மண்டை குடையும். தானாகப் புலம்புவாள்.

''இவுக ரெண்டு பேருக்கும் அப்படி என்னதான் பழக்கமோ. காணாற தேசத்துல இருக்கிற மாதிரில்ல வெசாரிச்சுக்கிறாக.''

ஆனாலும் நேரில் கேட்க மாட்டாள்.

ஆண்டி பூசரமரத் தோட்டத்தில் உழவடிப்பான். மாடுகளுடன் தனியாக தைதை என்று மல்லாடுவது சலிப்பாக இருக்கும். கலப்பையைப் படுக்கப் போட்டுக் கொமட்டில் குத்துவதுபோல் மெனக்கிட்டு மண்ணைக் கிள்ளுவான். நிமிர்ந்து பார்த்தால் கம்மாப் பாதையில் மாரி போவது தெரியும். தோளில் அழுக்குப் பொதி தொங்கும். அவனுக்கு முன்னால் அனந்தி பெரிய கலயத்துடன் போவாள். அவளுக்கு முன்னால் கழுதைகள்.

மாரி ஆண்டியைப் பார்த்துக் கையலைப்பான்.

''என்னாச்சு மாட்டுக்கு ஏலலயா மனுசருக்கா.''

ஆண்டியின் சாட்டைக் கம்பு உயரும்.

''தாங்கிவுட வாறயா.''

''எனக்கு வேல கெடக்கு ஏராளம்.''

''போ மச்சான் போ. எண்ணைக்காச்சும் மாட்டுவ.''

''ஓங்களாலதான இம்புட்டும். கலியாணம் முடிக்கலன்னா இக்கதியா யிருக்குமா. எவ்வளவு பேச வேண்டியது கெடக்கு.''

''எனக்குந்தாண்டா ஓட்டப்பல்லா.''

''ஒருநாளைக்கு வசமா வச்சுக்கிருவொம்.''

கையாலேயே பேசிக்கொள்வார்கள். புருசனின் நடையருவம் பிந்துவதைக் கவனிக்கும் அனந்தி முனங்குவாள்.

''இப்பிடிச் செல்ல நட நடந்து தொறைக்குப் போயிச் சேரவா. பெறகு வெளுக்கிறதெங்க வீடுபோயிச் சேருறதெங்க. கம்மாயிலயே குடியிருக்க வேண்டியதுதான்.''

அவள் திரும்பித் தேடுமுன் மாரி குதித்தோடி அப்பிராணியாகிவிடுவான்.

''கால்ல முள்ளுத் தச்சிருச்சு அனந்தி.''

ஆண்டிக்குக் குதுகலமாக இருக்கும். பயல் இன்னும் குடட்டி விளையாட்டை மறக்கவில்லை. அவனுக்கும் விளையாட்டு நினைப்பு வரும். தோரணையாகக் கை ஓங்கிச் சத்தம் போட்டு மாட்டைப் பத்துவான். கொஞ்ச நேரத்தில் சுதா ரிப்புப் போய்விடும். ஏன்தான் கலியாணம்முடித்தோம் என்று மதியம்வரை மனசு உளையும். புலம்பிக்கொண்டே உழுவான். கருப்பி கஞ்சி கொண்டுவந்த பிறகு தான் ஒரு நிலைக்கு வருவான்.

வேகாரியாகத் திரிந்த மாரிக்கு எப்படித்தான் இவ்வளவு கருக்கடை வந்ததோ. முதலில் அவனே நினைத்திருப்பானா. ஆள் அடியோடு மாறிவிட்டான். அததுக்குப் பெண்டாட்டி குடும்பம் என்று ஆகும்வரைதான் ஆட்டம் பாட்டம் எல்லாம்.

அப்பன் கைவசம் வைத்திருந்த சகல தொழிலையும் தெரிந்துகொண்டான். மறந்துபோனதை நினைவுபடுத்தி எப்போதோ நிறுத்திவிட்டதைச் செய்து காட்டச் சொல்லி வசப்படுத்தினான். அப்பனுக்கு ஒரு விதத்தில் அச்சலத்தியாக இருந்தாலும் தொழில் தன்னோடு தூர்ந்துபோகாமல் மகனுக்குக் கைமாறுவதை நினைத்துச் சந்தோசப்பட்டுக்கொண்டான்.

மாரி மீன் வலை பின்னுவான். அதிலும் அயிரைக்குச் சிறு கண்ணும் கெண்டை கெளிருக்குப் பெருங்கண்ணும் வைத்து வெவ்வேறு வலை. தென்னை ஈக்கு கொடுத்தால் நாலாம் பக்கம் தூரி கிடைக்கும். அழகழகான தெல்லி செய்து கொடுப்பான். அதைப் பார்த்தாலே தூண்டி எடுத்துக்கொண்டு மீன் பிடிக்கப் போகணும்போல் கை குறுகுறுக்கும். ஏகதேசம் காடைத் தட்டு பின்னுவான். காடை கதுவாலியை அடைத்துவைக்கக் கைக்கடக்கமாகக் கூடு செய்வான்.

ஒருத்தலை மண்டையடிக்குக் கைகண்ட மருந்து கொடுப்பான். இந்தப் பக்குவத்தை அப்பன் மறந்து நாளாகிவிட்டாலும் அவனிடம் துளைத்துத் துளைத்துக் கேட்டு ஒரு நாள் முழுக்கக் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு நாக்குத் தள்ளக் காட்டில் இழுத்தடித்தான். அப்பன் உதட்டைப் பிதுக்கும்போதெல்லாம் நடுக்காட்டில் அடித்துப்போட்டுவிடலாமா என்றிருந்தது. கடைசிக்கு ஒருவழி யாகப் பெரியோடைக் கரையில் அந்த வேர் அகப்பட்டது. மாரிக்குச் சந்தோசம் சொல்ல முடியாது. மறுநாள் அப்பனுக்குக் கதுவாலிக் கறி கொடுத்துத் திண றடித்துவிட்டான்.

மண்டையடிக்காரர்கள் வந்தால் உட்கார வைத்துத் தோதாகப் பேச்சுக் கொடுப்பான். பேச்சோடுபேச்சாக நெற்றியில் துடிக்கும் நரம்பைக் கண்டுபிடித்து கண்ணாடிச் சில்லால் சுண்டி ரத்தத்தை வெளியேற்றிக் காதில் வேர் கட்டி விடு வான். பிறகு மண்டையடி எட்டிப் பார்க்காது.

அப்படி வேர் கட்டிக்கொண்டவர்களில் சண்டிவீரியும் ஒருத்தி. அவளுக்கு மாரியைத் தேடிவரக் கூச்சமாகத்தான் இருந்தது. ஆண்டிதான் சரிப்படுத்திக் கூட்டிக் கொண்டு வந்தான். பெண்கள் அவளைக் கிண்டல் பண்ணினார்கள்.

''இது மாரி செஞ்சுபோட்ட பாம்படமா.''

அவள் கோவப்படவில்லை.

''அவன் குடுத்த சீதனத்தால வேலவெட்டி செய்ய முடியிது. இல்லன்னா சொவத்துலயும் கல்லுலயும் முட்டீட்டு அலைய வேண்டியதுதான்.''

போகப்போக அவன் முக்கியப் புள்ளியாகிவிட்டான். அவனுக்கிருந்த ''ஏலே வாலே'' பட்டம் போய் ''வாப்பா போப்பா'' மரியாதை வந்தது. ஆண்டிக்கு மட்டும் என்றைக்கும்போல் ''ஒட்டப் பல்லுப் பெயலே''தான்.

அனந்தி வந்த வேகத்தில் ரெண்டு பிள்ளைகளைப் பிதுக்கினாள். மூத்த பயல் மருதன். இளையவள் அல்லாத்தி. ஆண்டிக்கு நாக்கை அடக்க முடியவில்லை.

''போற போக்கப் பாத்தா வெள்ளைக்கொரு புள்ளப் பெறுவ போலருக்கே.''

அவள் வெட்கத்தைக் கடித்துக்கொண்டு சொன்னாள்.

''அவங்கிட்டச் சொல்லுங்க.''

''ஒனக்கு ஒண்ணும் தெரியாதாக்கும். அவனப் பாத்துப் பேசிக்கிறென்.''

அவள் முழியைத் திரட்டி உருட்டினாள்.

''அப்பச்சி சும்மாருக்க மாட்டாக.''

''ஏ புள்ள அதென்ன அப்படி முழிக்க. கண்ணுமுழி செதறி வுழுந்துட்டாக் கோழி கொத்தீட்டுப் போயிரும்.''

அவனது கடபுடாச் சிரிப்பு அவளை விரட்டிவிட்டது.

மாரியின் தங்கச்சிமார் ரெண்டு பேரும் வயசுக்குவந்துவிட்டார்கள். யார் மூப்பு என்று கண்டுபிடிக்க முடியாது. பெரியவள் முனியம்மாளைவிடச் சின்னவள் முத்துக்காளி முகக்களையானவள். சிறுவயதிலிருந்தே அவளை ஆண்டிக்கு ரெம்பப் பிடிக்கும். துடுக்குப் பேச்சும் தளுக்கு நடையுமாக அவள் கழுதைக் குட்டிபோல் துருதுருவென்று திரிவாள். ஆண்டி வண்ணாக்குடிப் பக்கம் வந்தால் அவளிடம் வாய்கொடுக்காமல் போக மாட்டான். அவளும் 'தொட்டிவீட் டப்பச்சி'யுடன் சரிபேச்சுப் போடுவாள். மாரி வேடிக்கை பார்ப்பான். ஆண்டி சொல்வான், ''ஒனக்குத் தம்பியாய் பொறந்திருக்க வேண்டியவடா இவ.''

ரெண்டு குமருகளுக்கும் கிட்டத்தில் மாப்பிள்ளை கிடைக்கவில்லை. அனந்தி வடகாட்டில் தன் சொந்தத்திலேயே ரெண்டு பேருக்கும் மாப்பிள்ளை பார்த்து நல்ல முறையில் பிடித்துக்கொடுத்தாள். வீட்டில் யாரும் ஒருவார்த்தை தடுத்துப் பேசவில்லை. ரெண்டு பேர் பிழைப்பும் நன்றாகவே ஓடியது.

ஆண்டி மாரியிடம் சொன்னான்.

''ஒனக்கென்னடா தங்கச்சிமார அனுப்பீட்டுக் கவலையில்லாம இருக்க. அக்குத்தொக்கில்லாறவனுக்குத் துக்கமில்ல. புள்ளீகளப் பெத்துக் குமிக்க வேண்டியதுதான். வயசுக்கு நரச்சதா மயிருக்கு நரச்சதா.''

மாரிக்குப் பெரிய தெம்பு.

''எத்தன புள்ளப் பெத்தாலும் ஊரு இருக்குது தாங்குறதுக்கு. வருசம் பூரா கஞ்சி கெடைக்குது. மேச்செலவுக்குக் கொத்து வருது.''

நேற்றுவரை சும்மாத் திரிந்தவன் பிள்ளைக்காரனாகிவிட்டான். இன்னும் கொஞ்ச நாள்தான். மகன் வேலையைக் கைமாற்றிவிடுவான்.

ஆண்டிக்கு மனசு நிறைந்திருந்தது. மாரி சொன்னான்.

''எப்பா எனக்கொரு ஆச.''

''என்னல ஆச புதுசா.''

''புதுப்புது ஆச எவ்வளவோ இருக்கு.''

''வக்காளி வாய வச்சிட்டுச் சும்மாருக்க மாட்ட.''

''என் ஆசைய வேற ஆருட்டச் சொல்றது. நீங்களே வாயடச்சிட்டீக.''

அப்படி என்னதான் புது ஆசை. அதையுந்தான் தெரிந்துகொள்ளலாமே.

''சொல்லித்தொல.''

''கொஞ்ச நாளைக்கு முந்தி தங்கச்சிமாரப் பாக்கணும்னு வடகாட்டுப் பக்கம் போயிருந்தென். போற வழியில நல்ல மதியம். பசிக்கெறக்கமா இருந்துச்சு.''

''தொறந்த வீட்ல மொழஞ்சிட்டயா.''

''சரி ரெண்டு வீட்ல கஞ்சி வாங்கிப் பசியாறிக்கிறலாம்னு ஒரு ஊருப் பக்கம் ஒதுங்குனென். அதுக்குள்ள கண்ணக்கெட்டி வந்துருச்சு. மரத்து எணல்ல சாஞ்

சிட்டென். ஒரு ஒறக்கத்துக்குப் பெறகு கெறக்கம் தெளிஞ்சு முழிச்சுப் பாத்தென். ஊரோரம் பொண்ணுக வயக்காட்ல கொழ மிதிக்கிற மாதிரி களத்துல மிதிச்சிட்டுத் திரியிறது மங்கலாத் தெரிஞ்சது.''

''களத்துல தொளி போட்ருக்காகளா.''

''என்னமோ கருப்பாக் காயிது.''

''உளுந்துகிளுந்தா இருக்கும்.''

''உளுந்துன்னா அப்படியா மிதிப்பாக. கிண்டித்தான வுடுவாக.''

''வேறென்னமாருக்கும்.''

''சரி அதவுந்தான் பாப்பமேன்னு சங்கடப்பட்டு எந்திரிச்சுக் கிட்டப் போனென். காயிறது என்னதுன்னு நெனச்சீக.''

''இப்ப சொல்லப்போறயா ஒன்னய மிதிக்கணுமா.''

''அத்தனையும் தவளைக. கால நீட்டிக்கிட்டு வெயிலுகாயிறாக. பொண்ணுக மிதிக்கமிதிக்க கொடக்கொடக்னு கொடலு வெளிய தள்ளுது.''

''ஏல ஒன் வாயில நல்ல வார்த்தையே வராதா.''

''இதுல என்னருக்குது. நம்ம கொளத்து மீனப் புடிச்சுக் காயப்போட்டுக் கொடல மிதிச்சுக் கொளக் கருவாடாக்கி வச்சுக்கிறமில்ல அந்த மாதிரி தவளக் கருவாடு தயார் பண்றாக.''

''அத்தனையும் எங்க புடிப்பாகளாம்.''

''அதுக்குன்னு தனியா வல வச்சிருக்காகளாம். மழ நேரத்துல ரெம்ப மாட்டிக்கிருமாம்.''

''அதுகளத் திங்கத்தானா.''

''அதென்ன லேசாச் சொல்லிப்புட்டீக. சலசலன்னு மிதுக்க வத்தலாக் காய வச்சுச் சின்னக் குலுக்கையில பத்தரப்படுத்தி வச்சுக்கிருவாகளாம். மழக் காலத்துல வெஞ்சனப் பாட்டுக்குக் கவலையே இல்லையாம்.''

''எப்படிச் செய்வாகளாம்.''

''மசாலரச்சுக் கொழம்பு வச்சா மூணு சட்டிக் கஞ்சி கேக்குமாம். ஏழு வீட்டுக்கு மணம் சொக்குமாம். வெங்காயம் மொளகா கீறிப் போட்டு உப்புச் சாறு வச்சா வீட்ல ஒனக்கு எனக்குன்னு அடிபுடிதானாம். வத்தலு வறுத்துக் கடிச்சுக்கிட்டா மொருமொருன்னு அந்த ருசிக்கு எதும் கிட்ட அண்ட முடியாதாம். சொல்லச்சொல்ல எனக்குன்னா நாக்கு சப்புக்கொட்டுது. வாயி வுட்டுக் கேட்றலாமான்னு இருந்துச்சு. அடக்கிக்கிட்டென்.''

''நீ பச்ச வத்தல எடுத்துக் கடிச்சாலும் கடிச்சிருப்ப. ஆரு கண்டது.''

''அப்படிக்கூட ஆசதான். அவுக தப்பா நெனச்சுக்கிறப்புடாதே.''

''கடசிக்குக் கஞ்சி கெடச்சதா இல்லையா.''

''எதுக்கு வம்புன்னு அடுத்த ஊருக்குப் போயிப் பசியாறுனென்.''

''அங்க களத்துல கழுத விட்ட காயலயே.''

''என்னருந்தாலும் எனக்குத் தவள வத்தலுமேல இனியும் கிறுக்குத்தான். அந்த ருசி எப்படி இருக்கும்னுதான் தெரிஞ்சுக்கிருவமே. நல்லால்லன்னா அம்புட்டு அக்கறையாப் பத்தரப்படுத்துவாகளா.''

''ஒன் நாக்க அருவாமனையில வச்சுத்தான் அறுக்கணும்.''

''எப்பா எப்பா நம்மளும் வத்தலு போட்டுப்பாப்பமா.''

''தாயோளி இண்ணைக்கு எங்கிட்ட எப்படி வாங்கிக்கெட்டப்போறன்னு தெரியல.''

ஆண்டியின் கைக்குப் பயந்து ஓடி பம்மாத்துக்காட்டிவிட்டுத் திரும்பிய மாரி பெருமூச்சு விட்டான்.

''...ம் என் ஆசையே வேற. அத வுட்டுட்டு தவளைக்குப் பின்னால புத்தி போயிருச்சு.''

''அதென்ன.''

''இங்க தனிச்சுக் கெடக்கிற எங் குடும்பம் சுத்துப்பட்டியெல்லாம் படந்து ஆலமரம்போல விழுது வுட்டுத் தழைக்கணும். அங்கங்க வெளுப்புச் சத்தம் தொடுத்துத்தொடுத்துக் கேக்கணும். நல்ல நாளைக்கு வகவகையாப் பலகாரம் கறிபுளி வந்து குமியணும். தின்னுதின்னு பல்லுத் தேயணும். வீட்டுக்கு முன்னால சிறிசுக செலுச்செலுன்னு வெளையாடணும். நானும் அனந்தியும் அதப் பாத்து மகுந்துபோகணும்...''

''ஏல கழுதஓதஞ்சான் இப்படியும் ஒனக்கு ஆச உண்டுமா.''

அனந்தியின் வயிறு அந்த ஆசையைப் படர விடவில்லை. ரெண்டுடன் கணக்கை முடித்துக்கொண்டது.

## 10. ஏம்பிளி கருப்பி...

''மூத்தண்ணேன் சம்சாரித்தனத்துல எல்லா வேலையும் கத்துக்கிட்டாச்சு. வெதப்பு மட்டும் புடிபடமாட்டங்குதே. அதச் சொல்லிக்குடுக்காம தட்டிக் கழிச்சா எப்படி. ஒனக்கே ஞாயமாருக்கா.''

ஆண்டி சம்பளகாரனைக் கோவித்துக்கொண்டான். அவனுக்குச் சங்கடம்.

''கைவசம் வச்சுக்கிட்டு வஞ்சகமா பண்றென். இத்தன வருசமா மாட்டுக்குப் பின்னால திரியிறென். எனக்கே அடபடலயே. இனிமே அம்புட்டுத்தான்.''

''மாட்டுக்குப் பின்னால சாணிய ஏந்தீட்டுத் திரிஞ்சயாக்கும். வெதப்பு நேரம் அவசரத்துல ஊரே சாமியாடுது. தானியம் தவசம் வெதைக்கவும் பயறுபச்ச பட்டம்போடவும் லேசுக்குள்ள ஆளுக் கெடைக்குதா. ஊருஊரா அலைய வேண்டியிருக்கு. அதுவரைக்கு ஒழவு சொணங்குதுல்ல.''

''பட்டம் பிந்தீறப்புடாதே.''

''உள்ளூருலருக்கிற ரெண்டுமூணு பேருக்கும் வந்த கொராக்கியப் பாக்கணுமே. விடிஞ்சா மூஞ்சியப் பாக்க முடியிதா. காத்துக்கெடந்து கூட்டீட்டுப் போயிறாக. அப்பனத்தான் கஸ்டப்படுத்த வேண்டியிருக்கு.''

''அவனும் எம்புட்டுக் காடு ஏங்கி மிதிப்பான் பாவம்.''

''மதியவரைக்குத் தாங்கும். பெறகு தவங்கீருவான்.''

''எப்படியும் கொத்தாளு வேணுமில்ல.''

''பட்டம்போடுறதுக்குப் பொம்பளையாளும் வேணும்.''

''அது வேற.''

''பட்டம்போடுறயான்னு அஞ்ஞையிட்டக் கேட்டா அத மெனக்கிட்டு எண்ணியெண்ணி ஆரு போடக்கெடக்குது. என்னால முடியாது சாமின்னு ஒரேயடியாத் தலையக் குலுக்கீறா.''

''வெதச்சுக் கரையேறுறதுக்குள்ள சாணிதள்ளிப்போகுதே.''

''அதும் பொய்யா.''

ஒரு வருசம் கருப்பி ஆண்டியை உசுப்பிவிட்டாள்.

''ஏ இவனே ஒனக்கு வெக்கமால்லையா. ஊரச் சுத்திக் காடுகள வச்சுக்கிட்டு வெதைக்கிறதுக்கு அடுத்தவுகளத் தொண்ணாந்துட்ருக்கயே. அதென்ன சீம வித்தையா. கண்ணால பாக்கிறதக் கையால செய்ய வேண்டியதுதான். இந்த வருசம் என்ன ஆனாலும் சரி. நீதான் வெதைக்கணும். நான் பட்டம்போடுறென். தாராம்பூரான்னு மொளைக்கட்டுமே. நெலத்துக்குள்ளதான மொளைக்கும். வெளையாமயாபோயிரும்.''

''அதத்தான் நானும் நெனச்சுக்கிட்ருக்கென்.''

''நெனச்சுக்கிட்டே மல்லாக்கப் படுத்துக்கெட.''

''ஒரு கையி பாத்துற வேண்டியதுதான்.''

ரெண்டு பருவத்துக்கு விதைப் பெட்டி தூக்கினார்கள். ஆண்டிக்குக் கை வீசக் கூசியது. காலெட்டு தயங்கித்தயங்கி இடறியது. ஆரம்பத்தில் பயறை அள்ளிப் பிதுக்கிய கருப்பி ஒவ்வொண்ணாக எண்ணியதுபோல் விரலிடுக்கில் நழுவ விட்டாள். போகப்போக வாகு பிடிபட்டுச் சொகமாக இருந்தது.

அவர்கள் நிலத்தில் போட்டது சீராக முளைத்தது. தோகையாடும் பயிர் களையும் கொழுந்துக் குஞ்சம் வீசும் செடிகளையும் பார்த்துப் பூரித்துப்போனார் கள். ஆண்டி நிதமும் காடுகளைச் சுற்றிப் பார்த்தான். தரிசுகளில்கூட அவன் மனசு விதவிதமாக முளைத்துக் குதியாளம் போட்டது. களையெடுப்பு பயிருழவு கரு தறுப்பு என்று சகல வேலைகளையும் ஒருமூச்சில் செய்துமுடித்தது.

மூணே பருவத்தில் எல்லாம் பிடிபட்டு அவர்கள் கைதேர்ந்துவிட்டார்கள். மற்றவர்கள் விதைப்பைக் குறைசொல்லுமளவுக்கு ஆண்டிக்குத் தைரியம் வந்தது.

''ஆமணக்கும் பருத்தியும் அடர வெதப்பாகளாடா ஆக்கங்கெட்ட பெயலே.''

கருப்பி சிரிப்பாள்.

''அய்யா வாத்தியாராயிட்டாரோ. கொழுப்பு ரெம்பத்தான்.''

ஆண்டிக்குப் புதுப்புது ஆசை வந்தது. சொந்த நிலத்தையும் தாண்டிக் கலிங் கல் காடுகளையெல்லாம் காலால் அளந்து விதைக்கணும். பிறகு சுத்துப்பட்டி நிலங்களில் எட்டு வைக்கணும். எங்கே பார்த்தாலும் தான் விதைத்த வெள்ளா மைகள் வனமாக வளர்ந்து விளையணும்.

முத்து இருந்தால் அவனுக்குச் சொல்லித்தரலாம். பாவி யாரிடமும் சொல் லாமல்கொள்ளாமல் ஓடிவிட்டானே. எங்கே போனானோ தெரியாது. ஆள் விட்டு ஊர்ஊராகத் தேடியாயிற்று. கிடைக்கவில்லை. ரெம்ப நாளுக்குப் பிறகு தான் காரணம் தெரிந்தது. எட்டுக் கூட்டுக்கு இளையவனெல்லாம் கலியாணம் முடித்துக் குடும்பம் நடத்துகிறான். இவனுக்கு அந்த நினைப்பே இல்லை. காயடித்த காளை காட்டு வேலைக்குத்தான் லாயக்கு என்று பெண்கள் கிண்ட லடித்தார்களாம். அவன் என்ன நினைத்தானோ என்னமோ கிளம்பிவிட்டான்.

போன இடத்திலாவது கலியாணம்முடித்து நல்லாருக்கணும். அவனுக்குப் பிறகு சம்பளத்துக்கு யாரையும் வைத்துக்கொள்ளவில்லை.

வெள்ளாமைக் காலங்களில் கலிங்கல் ஊரையே தொலைவிலிருந்து கண்டு பிடிக்க முடியாது. காடுகரையெல்லாம் சோலையாக அடர்ந்து மூடிவிடும். அறு வடை முடியும்வரை ஒருபுறங்கூட வழி திறக்காது. பச்சைக் கோட்டையைத் துளைத்துத் தப்பிக்கும் ஒத்தையடிப் பாதை வழியாகத்தான் நடமாட முடியும்.

ஊர் அமைப்பே தனி. நடுச் சந்தியிலிருந்து நாலு திக்கமும் பிரியும் தெருக்கள். இடையில் குறுக்குச் சாலடித்த சின்னத் தெருக்கள் ஆறு. இருநூறு வீடுகள் தேறும். பெரும்பாலும் இடித்து நெரித்துக்கொண்டு கூரை வீடுகள். நாலு முகட்டுத் தொட்டி வீடுகள் கணிசமாக இருக்கும். வடக்குத் தெருவில் அஞ்சு கார வீடு. மேலத் தெரு வில் ரெண்டு. கீழத் தெரு முடிவில் ஒண்ணு. அவ்வளவும் தனிப் பள்ளக்குடி.

கீழக் கடைசியில் ஒத்தை முகட்டு வீடும் வட்டமான முற்றமுமாக வண் ணாக்குடி. எதிரில் கழுதை கட்டும் துறை. முற்றத்தையொட்டிக் கிழக்கே வெள் ளாவி. ஊர் முளைத்த நாளிலிருந்து வண்ணானைத் தவிர வேறு சாதிக்காரர்கள் ஊரில் குடியிருக்கவில்லை. சகல ஊழியத்துக்கும் மேலூர்ப் பகடைகள் இருந் தார்கள். தச்சு கொல் வேலைகளுக்கு வேப்பங்காட்டில் ஆசாரி உண்டு.

ஊரில் கையகல நிலமில்லாதவர்கள் கிடையாது. அரைவாசிக்கு ஓரனேர் ஈரனேர்ச் சம்சாரிகள். விவசாயம் கதிக்க நடந்தது. சொற்ப நிலம் உள்ளவர்கள் வெளியூருக்குக் கூலி வேலைக்கும் போவார்கள். நாற்றறுப்பில் அவர்களை யாரும் மிஞ்ச முடியாது. எவ்வளவு நிலமானாலும் மலைக்க மாட்டார்கள். விடியக் காலம் கிளம்பினால் ஒருமூச்சு அறுப்பு. காடு நிறைய நாத்துக் கட்டு உருண்டு விடும். அதில் கிடைக்கும் கூலியே ஒரு வெள்ளாமையளவுக்கு இருக்கும்.

சோளக் கருதறுப்பு மட்டும் அவர்களுக்குத் தோதுப்படாது. சூட்டிக் கையாக வேலை ஓடாது. அதனால் கொத்து குறைந்துவிடும். கருதறுப்புக்காகவே மேலூரிலிருந்து மேல்சாதிக்காரர்கள் வருவார்கள். கோனார் செட்டியார் கவுண் டர் நாய்க்கர் தேவர் என்று பல சாதியும் உண்டு. வாட்டசாட்டமான பெண்கள் தான் அதிகம். படைகுருவிகளாகத் திரண்டு வருவார்கள். வாகான பெரிய பன்னரிவாளால் கொஞ்ச நேரத்தில் தட்டைகளை அறுத்துச் சாய்த்துவிடுவார் கள். பிறகு யார் வேண்டுமானாலும் கருதறுத்துக்கொள்ளலாம். கருது பொறுக்கித் தட்டை கட்டிச் சூந்துவைத்த கையோடு கட்டை வெட்டு நடக்கும். ரெம்பக் குனியாமல் நெடுங்கணை மம்பட்டியால் சோளக் கட்டை வெட்டுவதற்கு அவர்கள்தான் லாயக்கு. சும்மா சொல்லக் கூடாது. அவர்களுக்குக் கொடுக்கும் தசகூலி செமிக்கும்.

ஆண்டியின் காடுகளில் தொடர்ந்து அஞ்சாறு நாள் வேலை நடக்கும். ''கலிங்கலாண்டி.... ஏத்தா கருப்பி...'' என்று கூப்பிடும் குரல் கேட்டவண்ண மிருக்கும். ரெண்டு பேரும் சளைக்க மாட்டார்கள். ''தாயி... ஆத்தா... நாச்சி யாரு... பூச்சம்மா...'' என்று மாற்றுக் கதை போடுவார்கள். பொழுதடையச் சம்பளகாரன் கொத்தளக்கும்போது தொட்டி வீடு பிடிக்காமல் சனங்கள் கூடி யிருப்பார்கள்.

ஊரைச் சுற்றிக் குப்பைக் குமிகளும் கிடங்குகளுமாக ஒரு சுற்று மந்தை. அடுத்த வட்டம் தோட்டக்கால். ஆரம்பத்தில் கிணறுகள் அவ்வளவாக இல்லை.

பிறகுபிறகுதான் நிறைய வெட்டி மானம்பாரியைத் தோட்டமாக்கினார்கள். ஏர்கள் பெருகின. ரெம்பப் பேர் ஆடுமாடு வளர்த்தார்கள். சிலர் கிடையாடுகள் கூட வைத்திருந்தார்கள். பருத்தி மாரில் கூடை வண்டிக் காடி பின்னுவது போன்ற சின்னத் தொழில்களும் தேவைக்குத் தக்க முளைத்தன.

தோட்டக்காலும் மானம்பாரியுமாகப் பல வகை நிலங்கள் நிரந்திருந்தன. வடபுறம் பெரும்பாலும் செவல் தரை. அங்கங்கே கொஞ்சம் பொட்டல். தென் புறம் வெள்ளாமைக்குத் தோதான உவர் நிலம். கிழக்கும் மேற்கும் நவதானியம் விளையும் நயம் கரிசல். தெற்கு வாங்கலில் கருவ மரங்கள் கைகோர்த்த கம்மா. குண்டாழக் கும்பா மாதிரி அடக்கமாக இருக்கும். தோண்டி குளம் என்று பேர். மண்ணைத் தோண்டித்தோண்டி ஆழப்படுத்தியதால் அந்தப் பேர் வந்ததோ என்னமோ. இல்லை தோண்டி மாதிரி வயிறு புடைத்திருப்பதால்கூட இருக்கும். நீர் நிறைந்தால் ரெண்டு போகத்துக்குத் தாங்கும். மழைதான் பெய்யணும்.

அதை நம்பிக் கிழ மேலாக விரிந்துகிடக்கும் வயக்காடு. நூறு கோட்டை விதைப்பாடு தேறும். ரெண்டு கன்னாரிலும் மடை திறந்தால் வட கடைசிக் குண்டு வரை தண்ணீர் ஏறிப் பாயும். பாதி வயல் மேலூர்க்காரர்களுக்குச் சொந்தம். மீதி கலிங்கல்காரர்கள் வசமிருந்தது.மேலூர் வயல்கள் சிலவற்றைக் கலிங்கல்காரர்கள் பொறுப்புக்கும் வாரத்துக்கும் பார்த்தார்கள்.

ஊரோரம் தென்கிழக்கே கோணிகுளம் கம்மா. அரைவட்டத்துக்கு வாலோடிக் கிடக்கும். மூணு கன்னார்ப் பாசனம். வயக்காடு ரெம்ப. தோண்டி குளம் மறுகால் பாய்ந்தால் கலிங்கலூருணிச் சுடுகாட்டு ஓடைவழியாக வந்து கோணிகுளத்தில் விழும். அது தவிர மேற்கிலிருந்து காளியம்மா கோயில் ஓடை வருத்தும் உண்டு. அதன் முடிவில்தான் கலிங்கல். அதைக் கலிங்கலோடை யென்றும் நாணலோடையென்றும் சொல்வார்கள். தென்கரையில் காளியம்மா சின்ன மண்கோட்டைக்குள் குடியிருப்பு.

கோணிகுளம் நிரம்பினால் வடக்கு முகமாகப் பாயும் கலிங்கல் தண்ணீர் சுருண்டு கிழக்காமல் உருண்டோடி வேப்பங்காட்டையொட்டி நெளியும் பெரியோடையில் கலந்துவிடும். பெரியோடைக்கும் இருக்கங்குடி ஆற்றுக்கும் தொடுப்பு. நாலே நாளில் ஆற்று மீன் வகைவகையாக ஏறிவந்து கோணிகுளத்தில் குமிந்துவிடும்.

கலிங்கலையொட்டித்தான் வெளுப்புத்துறை. பரம்பரையாகக் கலிங்க லூருணி வண்ணார்கள்தான் அதில் வெளுத்துவந்தார்கள். கோணிகுளத்துக்கும் கலிங்கலூருணிக்கும் அவ்வளவுதான் தொந்தம். மற்றப்படி நீர்ப்பாசனம் முழுக்க வேப்பங்காட்டுக்காரர்களுக்குச் சொந்தம். வேப்பங்காடு பெரிய ஊர். பல சாதிக்காரர்கள் உண்டு.

கலிங்கலூருணியைச் சுற்றி நாலு எல்லையிலும் தெய்வங்கள் காவலிருக்கும். தெற்கே காளியம்மா. வடக்கே வடக்கத்தியம்மா. கிழக்கே பதினெட்டாம்படிக் கருப்பசாமி. மேல்புறம் ஊருணியோரம் மாரியம்மா. ஊருக்கு நடுவில் சந்தி யம்மா. சித்திரையில் ரெண்டு கோயிலுக்கும் ஆடியில் மூணுக்கும் பொங்கல் தூ படலாக நடக்கும். ஆட்டம்பாட்டம் என்று நாலு நாள் வேலைக்குப் போக மாட்டார்கள். ஆடு கோழி பன்றி ஏராளம் உருப்படிகள் காலியாகும். காலாறப் படுத்திருக்கும் மாடுகள் அசைபோட்டு அலுத்துவிடும்.

ஆண்டியின் குடும்பத்தில் காடுகரை வாங்குவதிலேயே குறியாக இருந்த தால் காரவீடு கட்டுவதில் அக்கறை கொள்ளவில்லை. தொட்டிவீடே போது மென்று இருந்துவிட்டார்கள். வீட்டுக்குள் வடக்குக் காடியிலும் கிழக்கே திருணைப் பக்கக் காடியிலும் ரெண்டு சோடிக் காளைகள் கிடக்கும். தென்பகுதி யில் சமையல் தட்டுமுட்டுச் சாமான்கள் தானியம் தவசம் எல்லாம் அடக்கம். மேல்பகுதியில் குறுக்குச் சுவர் வைத்து ரெண்டு பக்கம் குடியிருப்பு. ஊறத்தாழி தண்ணீர்ப் பானைகள் அத்தனையும் கூரைத் தொட்டியைச் சுற்றித்தான்.

தெற்கே கொட்டாரத்தில் வாகை மரத்தடியில் வெளிக்காடி. பகல் நேரம் மாடுகள் கிடக்கும். பக்கத்தில் இடுப்பளவு உரல் நிற்கும். மாட்டுக்குப் பருத்தி விதை அதில்தான் ஆட்டுவார்கள். இன்னும் தெற்கே தள்ளி தொழுவுக்குள் பசுக் களும் எருமைகளும் கட்டிக்கிடக்கும். அதுகளை இடம்மாற்றிக் கட்டுவதற்கு பக்கத்தில் தாவாரம். வாகைக்கு மேற்கே பெரிய குப்பைமேடு. வடக்கே சின்னச் சின்ன வீடு மாதிரி ரெண்டு கூளப் படப்பு.

படப்புக்கும் மேற்கே விரிந்த களம். எல்லா வெள்ளாமையும் அங்கே வந்து இறங்கியாகணும். அடித்துத் தூற்றிக் கைபார்க்காமல் வீட்டுக்குப் போக முடி யாது. கொல்லுப் பட்டறைபோல் வருசம் முழுக்க ஏதாவது வேலை நடந்து கொண்டேயிருக்கும். தொழுவுக்கும் கிழக்கே ஊர்க் கிணற்றுக்குத் தண்ணீ ரெடுக்க வரும் பெண்கள் கிண்டல் பேசுவார்கள்.

''அஞ்ஞாடி ஆண்டி வீட்டுக் களத்துக்கு வாயிருந்தா அழுதுரும். அப்படி என்னதான் வெளையிதோ.''

''அதானம்மா. வெள்ளாமையப் போடுறதுக்கு வீட்ல எங்கதான் எடம் இருக்குதோ.''

தப்பித்தவறி கருப்பியின் காதில் விழுந்துவிட்டால் போச்சு. வசவு நாறிப் போகும்.

''ஆமடி ஆண்டிக் குடும்பன் வீட்டுப் பொறணியப் பேசலன்னா ஒங்களுக்கு ஒறக்கம் வராதே. தண்ணியெடுக்க வாற கழுதைகளுக்குக் களத்துமேல என்ன கண்ணு. தோண்டிப்புருவென் தோண்டி. ஒங்க வீட்ல நீட்டிப்படுக்க நீதமில்ல. ஊராரு வீட்டப் பத்திப் பேசவந்துட்டீக. நீங்களும் தனிக்களம் வச்சுப் பண்ண போட வேண்டியதுதான. நாங்களா புடிச்சுக்கிட்ருக்கொம். கொதிபொறுக்காற குருணகூட குதியாளம்போடுற காலமாப் போச்சு... வறகோட்ட நக்குனா வாயெல்லாம் கரியாகும். இதுகளோட பேசத் தரமா.''

ஆண்டிக்கு ஊரைச் சுற்றிக் காடுகள். கோணிகுளத்தோரம் பூசரமரத் தோட்டம் அஞ்சு குருக்கம். வற்றாத கிணறு. குளம் நிறைந்தால் தண்ணீர் மிதி கல்லைத் தொட்டுவிடும். கையால் அள்ளி ஊற்றலாம். கலிங்கலோரம் உவர்க் காடு வடக்கே மாமரத்துச் செவக்காடு விருசமரத்து மேலக்காடு நிறைய உண்டு. இது போக மானம்பாரி நிலங்கள். தோண்டிகுளம் பாசனத்தில் ஒரு கோட்டை விதைப்பாடு வயக்காடு. கமலை உழவு வண்டியடிப்பு இப்படிக் காளைகளுக்குச் சதா வேலையிருக்கும். வேலையாட்களுக்குத் தசகூலி அளந்து முடியாது.

விதைப்புக் காலத்தில் கலிங்கலூருணி களைகட்டிவிடும். சனங்கள் ராவெல் லாம் உறங்க மாட்டார்கள். வேலை மும்முரத்தில் நிதமும் திருவிழாதான்.

ராத்திரி தவளைகளின் 'வித்தெடு விதையெடு' தொணதொணப்பு உறங்கத் தானா விடும். இருட்டிலேயே உழவு வடம் தேடி மேழி பொருத்திக் கொழுவை இறுக்கிக் கலப்பை கட்டி விதைப்பண்டம் கைபார்த்துச் சகலமும் தயாராகிவிடும். வெள்ளங்காட்டிக்கு வேலையிருக்காது. ஒருவாயிக் கஞ்சி குடித்துவிட்டுக் கோட்டேர்ப் போட்டு விதைக்கக் கிளம்ப வேண்டியதுதான்.

ஆண்டியின் வீட்டுக்கு ஆள் வந்தவண்ணமிருக்கும். அயலூரிலிருந்து பெரிய பெரிய சம்சாரிகள் தேடிவருவார்கள். எல்லாருக்கும் கருப்பிதான் விதை வித்து கொடுத்தனுப்புவாள். சகல விதைப்பண்டமும் வீட்டிலிருக்கும். அவள் அதில் மன்னச்சி. சித்தெறும்பு மாதிரி சேர்த்துவைத்திருப்பாள். ஆள் வரவரத் திருணையிலிருந்து ஆண்டியின் சத்தம் கேட்டுக்கொண்டேயிருக்கும்.

''ஏம்பிளி கருப்பி...''

ஆரம்பத்தில் அவளுக்குக் கடுப்புத்தான்.

''இதென்ன புதுசா ஓம்பிளிப் பட்டம். அசலூரு ஆளுகளக் கண்டா அதிகாரம் கூடுதோ. இருக்கட்டும் வச்சுக்கிறென்.''

ஆனாலும் அந்த 'ஏம்பிளி'யில் ஒரு சொகம் இருக்கத்தான் செய்தது. முணுமுணுப்பை நிறுத்திவிட்டாள். கூப்பிட மாட்டானா என்று மனசு சில சமயம் ஏங்கியது. விதைகளைச் சளைக்காமல் அளந்து போடுவாள். சிலர் அருந்தலான பண்டம் கேட்பார்கள்.

''சொர வெதையிருக்கா. கொட்டாரத்துல ரெண்டு குட்டம் போடணும்.''

ஆண்டி தயங்க மாட்டான்.

''கருப்பி முடிஞ்சுவச்சிருப்பாளே. கேட்டு வாங்கீட்டுப் போங்க.''

அவள் விதை கொடுத்த கையோடு சுரைக் குட்டம் போட்டுக் கொடி வளர்க்கும் பக்குவத்தையும் சொல்லியனுப்புவாள்.

''சமஞ்ச பொண்ணக் குச்சிலுக்குள்ள குடியமத்துற மாதிரிதான் குட்டம் போடுறதும். ஒரு மொழத்துக்குக் குழி தோண்டிக் கல்லெச் சலிச்செடுத்துட்டு சாணியப் போட்டு அதுக்கு மேல எள்ளு மாவாக் கரம்பையச் செதறி மூடணும். அதுக்கும் மேல சாம்பலத் தூவி வெதையப் பூப்போல நட்டணும். சன்னமாத் தண்ணி வுட்டு நனைக்கணும். கொடி எழும்பிக் கொழுந்து நரம்புவீசிப் புடிமானம் கெடைக்கிறதுக்குத் தோதா நடுவுல குச்சு நட்டூறணும். கோழி கெளராம ஆடு குட்டி கடிச்சிறாமக் கொஞ்ச நாளைக்குக் குட்டத்தச் சுத்திக் குச்சிலுப்போலச் சின்ன வேலி போட்டுக்கிறது நல்லது.''

காடுகரையில் மாடும் மனுசருமாகக் கூட்டம் தாங்காது. கோயில்பூசையாக மாட்டுமணிச் சத்தம் கேட்டுக்கொண்டேயிருக்கும். ஆண்டி பெருமையாகச் சொல்வான்.

''பூமாதேவிக்குப் பூச நடக்குது.''

முன்னால் விதை வீசி நடக்கும் கை கூப்பிடக்கூப்பிடப் பின்னால் மாடுகள் கழுத்துப் பாரம் தோணாமல் அசைந்து நடக்கும். கலப்பைச் சீண்டலுக்குப் பூரித்து விரியும் மண்மீது பூமிதியில் நடக்கும் பெண்கள் பயறுகளால் கோலம் போடுவார்கள். ''வேலைய வெருசனா முடிச்சுக்கங்க. மழையக் கூப்புடப் போறேன்'' என்று கள்ள வெயில் அடிக்கடி கண்சிமிட்டும்.

ஆண்டியின் விதைப்பில் பழுதிருக்காது. ஒருகை அள்ளினால் அஞ்சு எட்டு அஞ்சு வீச்சு. கையில் ஒரு தானியமணி தங்காது. மண்ணில் நிரக்க உருளும். குதிங்கால் மறக்காமல் சாலுக்கு அடையாளம் வைக்கும். ஏர்களின் எண்ணிக் கைக்குத் தக்கபடி ஒரு சால் இல்லை இரு சால் மடக்கு. முன்னத்தி ஏர்க்காரன் கண்ணை மூடிக்கொண்டு திரும்பலாம். நெட்டைகட்டை விழாது. பயிருக்குச் சொல்லணுமா. சலிக்கவே வேணாம்.

கருப்பி கையிலும் பழுதிருக்காது. சாலில் பயறு போட்டால் கயிறு பிடித்து நட்டிய மாதிரி முளைக்கும். ரெண்டு பேரும் போட்டிபோட்டுக்கொண்டு வேலையை முடிப்பார்கள்.

சொந்த விதைப்பு முடிந்தால் அடுத்த நிலங்களுக்கு மனசு நோங்கும். ரெண்டு பேருக்குமேதான். ஆண்டி மெல்லப் பேச்செடுப்பான்.

''அந்த மூக்காண்டிப் பெய ரெண்டுமூணு நாளா கூப்புட்டுக்கிட்ருக்கான். கொஞ்ச நெலந்தான். ஒரெட்டுப் போயி வெதச்சுக்குடுத்துட்டு வந்துறென்.''

''மூக்காண்டிப் பெய கூப்புடுறானோ என்னமோ இந்தப் புளுகாண்டிக்குக் குளுராட்டுது. காலு ஒருதரையில நிக்காதே... ஆமா பெயறு போடுறது ஆராம்.''

''அவன் பொண்டாட்டி போடுவாளோ என்னமோ.''

''அவதான. அதுக்கு மேல போடுவா. ஒழுங்காச் சொளகு புடிக்கத் தெரியாற கோட்டிக்கழுதைக்கு வெதப் பொட்டி எப்படிப் புடிக்கணும்னுகூடத் தெரியாது. வெள்ளாம வீணாப்போயிருமே.''

''அசலூருலருந்துதான் ஆளு புடிச்சிட்டு வரணும்.''

''பாவமாத்தான் இருக்கு. நீ போகயில நான் மட்டும் சும்மாருந்து என்ன செய்யப்போறென். பெறப்புடு போவொம்.''

சாலடிப்பவனுக்கு ஆண்டியைக் கண்டு பயமில்லை. அப்பப்பக் கோளாறு சொல்வதுடன் சரி. கருப்பி அப்படியில்லை. அவளைச் சமாளிப்பது பெரும் பாடு. சால் கொஞ்சம் கோணலாக இருந்தால் வசவு கிடைக்கும். மாட்டைச் சுண்டிப் பிடித்து ஏர்க்காலில் பார்வை பதித்து நடக்கணும். அக்கம்பக்கம் திரும்பினால் பின்னாலிருந்து சத்தம் வரும்.

''என்ன சங்கதிலே. ஒம் பொண்டாட்டி எங்கயும் ஓடிப்போகல. இங்கதான் இருக்கா.''

அவளுக்கு யாரும் கோளாறு சொல்லிவிடக் கூடாது. அவ்வளவுதான் நடுக்காட்டில் பெட்டியை வைத்துவிட்டு வீட்டுக்குக் கிளம்பிவிடுவாள். ஓடி மறித்து நல்ல வார்த்தை சொல்லிக் கெஞ்சணும்.

''ஒனக்குப் புண்ணியமாப்போகுது தாயி. மாடும் மனுசரும் காத்துக்கெடக் கிறதப் பாரு. இனிமே ஆரும் வாயே தொறக்க மாட்டாக. ஒம் மனசுக்குத் தெகஞ்சபடி போட்டுக்குடுத்துட்டுப் போயிரு.''

ரெம்பக் கிராக்கிபண்ணிப் போவாள்.

அவள் கேட்டகேட்டபடி பயறு வகைகளைக் கொடுத்துக்கொண்டிருந்தால் போதும். நிலப்பாங்குக்கேற்ப என்னென்ன பயறு போடணுமென்று அவளுக்குத் தெரியும். அதுக்கு மாறாக ஒருத்தி இந்தப் பயறைப் போட்டால் நன்றாக விளை யுமே என்று சொல்லிவிட்டால் வேறு வினையே வேணாம்.

‘‘நேத்துப் பெறந்த நாயி பெயறப் பத்திச் சொல்லித்தர வந்துட்டயாக்கும். புருசன் குண்டிக்குப் பின்னால பொட்டியப் புடிச்சுப் போடுறதுதான. என்னய ஏன் கூப்புடணும். இல்ல தெரியாமத்தான் கேக்கென்.’’

காணாக்குறைக்குப் புருசன் பெண்டாட்டியை முறைப்பான்.

‘‘வாய வச்சிட்டுச் சும்மா கெடயேன். பெரிஞ்ஞைக்குத் தெரியாறதச் சொல்லப்போறயாக்கும்.’’

கருப்பி விட்டுக்கொடுக்க மாட்டாள். அவனைப் பிடித்துக்கொள்வாள்.

‘‘இதான் சாக்குன்னு நீ வந்துட்டயா. ஒன் வேலையப் பாரு. மாமியா மருமகளுக்குள்ள ஆயிரம் இருக்கும்.’’

அவன் முனங்கிக்கொண்டே மாட்டைப் பத்துவான்.

‘‘பாத்ததுலயும் பாத்தென் இவள மாதிரி கிறுக்குப் பொம்பளையப் பாத்ததே இல்ல.’’

அவள் செய்த வேலைக்குக் கொத்துக் கொடுத்தால் கெட்டகோவம் வரும். ஒரு நாள் ஒருத்தி வகையாக மாட்டிக்கொண்டாள். பெட்டியில் கொத்தளந்து கொண்டுவந்து பயந்தபடி வைத்தாள். கருப்பிக்குப் புரிந்துவிட்டது. ஒண்ணும் தெரியாத மாதிரி கேட்டாள்.

‘‘அடியே ஊருக் காடெல்லாம் வெதச்சு முடிச்சாச்சு. பெறகெதுக்குப் பொட்டியத் தூக்கீட்டு வாற. ஒறங்கி முழிச்சயாடி கூறுகெட்டவளே. இங்க வெதையில்லையே.’’

வந்தவள் வார்த்தையை மென்று விழுங்கினாள்.

‘‘வெத கேட்டு வரலத்த. நேத்து பட்டம் போட்டதுக்குக் கொத்துக் கொண்டு வந்துருக்கென்.’’

‘‘அப்படியா சங்கதி. தவசம் வெதச்சது ஆரு.’’

‘‘மாமன்.’’

‘‘கொத்து எனக்கு மட்டுமா ரெண்டு பேருக்கா.’’

‘‘ஒனக்குத்தான்.’’

‘‘அவனுக்கு இல்லையா. வம்பாடு பட்டு வெதச்சவன் தெருவுலயா போவான்.’’

‘‘மாமன் கொத்து வாங்குறதில்லன்னு...’’

‘‘நாங்க மட்டும் கூலிக்கு வாயப் பொளந்துட்டுத் திரியிறமாக்கும். ஒனக்குப் புதுசாப் பெருமையும் பகுத்தும் வந்துருச்சோ. நீ குடுத்துத்தான் என் வீட்ல ஒலையேறணுமாக்கும். ஏண்டி நாதாங்கி ஓதடி ஒங் கொத்துக்காகவா வேலைக்கு வந்தென். என் வீட்ல பூசிவச்ச தானியக் குலுக்க இனியும் பிரிக்காம எத்தன நிக்கிது தெரியுமா... ம்க்கும் வந்துட்டாளாம் பண்ணக்காரி. உள்ளங்கையில போட்டுப் பெறங்கைய நக்குற உசிரு.’’

எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்த ஆண்டி நல்ல வார்த்தை சொன்னான்.

‘‘வுடுத்தா அவள. தெரியாமக் கொண்டுவந்துட்டா. ஒனக்கு வேலைக்கு வாறவுகள வெறுங்கையோடயா அனுப்புற. அதப் போலதான். இம்புட்டு ரோசமிருக்கிறவ போயிருக்கப்புடாது.’’

‘‘நீ ஊருப்பட்ட காடெல்லாம் ஓடிஓடி வெதச்சுக் கொத்து எம்புட்டுக் கொண்டுவந்தயாம். இல்ல தெரியாமத்தான் கேக்கென். ஒனக்கு ரோசமிருக்கா இல்லையா.’’

‘‘எல்லாம் ஒரு பிரியந்தான்.’’

‘‘பிரியமில்ல. கிறுக்கு. அட அறிவுகெட்டவனே ஒன்னயப் புடிச்சு ஆட்ற கிறுக்குத்தான என்னயவும் தொத்திக்கிருச்சு.’’

ரெண்டு பேரும் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

‘‘அஞ்ஞாடி இதுகென்ன இப்படிச் சிரிக்குதுக.’’

கொத்து கொண்டுவந்தவள் பெட்டியுடன் தப்பித்துவிட்டாள்.

விதைப்புக்காக அயலூர்களிலிருந்தும் ஆண்டியைத் தேடி வருவார்கள். இன்ன சாதிக்காரர்கள் என்றில்லை. அவனும் சுணங்காமல் போவான். எங்கே போனாலும் கருப்பியிடம் சொல்லியாகணுமே.

‘‘சத்தரப்பட்டிக்கு வாறயாம்பிளி. தொணைக்குத் தொணையாப் போயிட்டு வரலாம்.’’

‘‘நீ முன்னாலயே போ. நான் கஞ்சி சொமந்துட்டு வாறென். உதுத்த கழுத ஊருக்குப் பெரிய கழுதையாம். இதுகளுக்குத் தொணையாளு வேணுமாம்.’’

‘‘இது நிக்காற காலு. நெடுந்தூரம் போகும்.’’

‘‘போனா அப்படியே பரதேசம் போயிறணும்.’’

அவளுக்கு ஊரைத் தாண்டிய ஆசை கிடையாது. அதுக்காக அவனைத் தடுப்பதுமில்லை.

அவன் எந்த ஊருக்குப் போனாலும் வாய்நிறைய மரியாதை கிடைக்கும்.

‘‘வாப்பா வா கலிங்கலாண்டி.’’

அவன் அக்கறையாக விசாரிப்பான்.

‘‘வெள்ளாமையெல்லாம் எப்படியிருக்கு.’’

‘‘ஒம் புண்ணியத்துல நல்லாருக்கு.’’

‘‘பூமாதேவி புண்ணியம்னு சொல்லுங்க.’’

மேல்சாதிக்காரர்கள்கூட அவன் விதைப்பைப் பற்றிப் பெருமையாகப் பேசுவார்கள்.

‘‘புள்ளீகளப் பத்தி வெசாரிக்கிற மாதிரி வெள்ளாமையப் பத்தி வெசாரிக் கான். அவன் என்ன கஞ்சிக்கில்லாற வெங்கம் பயலா. ஈரனேருச் சம்சாரி. ஏகப்பட்ட நெலம். வாழப்பழம்போல மாடு. கெதியான வெவசாயம். சொந்த வேலையப் போட்டுட்டு வந்து ஊரானுக்கு வெதச்சுக் குடுக்கணும்னு வேதாவதியா.’’

‘‘அதுல அப்படியொரு பிரியம்.’’

‘‘நமக்குச் சோத்துல பிரியம்.’’

‘‘அதுக்காகத்தான இந்த ஆட்டமும் ஓட்டமும்.’’

‘‘வெள்ளாமைய அடிச்சுக் குலுக்க நெறையாப் போட்டுக்கிட்டுத் தின்னுட் டுத்தின்னுட்டு ஓடையில ஒரு கூடைக்குச் சாணிபோடுறதுதான் பெழப்புன்னா பண்ணிக்கும் நமக்கும் வித்தியாசமில்லாமப் போயிரும்.’’

‘‘அது அவனுக்குத் தெரியிது.’’

‘‘நமக்கெப்பத் தெரியப்போகுது.’’

## 11. போயிட்டயேடா கழுத ஒதஞ்சான்

மருதன் கொஞ்ச நாள்தான் கழுதைக்குப் பின்னால் திரிந்தான். விரைவிலேயே வெளுப்புத்துறையில் அப்பனுடன் நின்று துணிபிடிக்க ஆரம்பித்துவிட்டான். அனந்திக்குப் பெருமையாக இருந்தது. இனிமேல் குடும்பத்தில் கவலையில்லை.

அப்பனும் மகனும் அப்படி வேலைசெய்தார்கள். வெள்ளாவியை மச்சு வீடு போல் பூசி மொழுகினார்கள். கட்டுத்துறையைச் செதுக்கித் துப்புரவுசெய்து கருங்களமாக்கினார்கள். வீட்டுக்கூரையை அப்பப்பப் பழுதுபார்த்தார்கள். அப்பனுக்கு முந்தி மகன் உவர்மண்ணுக்காகக் கிளம்பிவிடுவான். ஊர்வாயில் கிண்டல் அடிபடும்.

''அப்பன் நின்னுக்கிட்டு மோளுவான். மகன் ஓடிக்கிட்டே மோளுவான். வேல அவ்வளவு மும்மரமா நடக்குது.''

''ஊரவே ஒவரு முறுக்கிக் காயப்போட்ருவாங்க போலருக்கு.''

எல்லாம் கொஞ்ச நாள்தான். மகன் வளரவளர மாரி தவங்க ஆரம்பித்தான். முன்னைப் போல் வேலைக்கு ஏலவில்லை. துணியை நாலடி அடித்துவிட்டு மூச்சு வாங்கினான். உடம்பு புரியவுந்து தளர்ந்துவிட்டது. பொதிசுமக்க முடியவில்லை. ஒரு வைராக்கியத்தில் சுமந்தாலும் வழியில் அனந்தி கைமாற்ற வேண்டியிருந்தது.

எப்படியோ சமாளித்துப்பார்த்தும் அவனால் முடியவில்லை. கொஞ்ச நாளில் மகனிடம் தொழிலை ஒப்படைத்துவிட்டு உட்கார்ந்துகொண்டான். ஆளோடு ஆளாகத் துறைக்குப் போக வேண்டியது. கரையோரம் மரத்தடியில் படுத்துக்கொள்ள வேண்டியது. வீட்டிலிருந்தால் கேட்கிறவர்களுக்குப் பதில் சொல்லி முடியாது.

ஆண்டிக்குக்கூடச் சந்தேகம். என்ன இது கொஞ்ச நாளாக இந்தப் பயல் பாட்டுச் சத்தத்தைக் காணுமே. ஊருக்குப் போய்விட்டானா. சொல்லாமல் போக மாட்டானே. போனாலும் இவ்வளவு நாள் தங்க மாட்டானே. வண்ணாக்குடி தேடி வந்து விசாரித்தான்.

''என்னடா வெளுப்புத்தொற எழவுவுழுந்த வீடு மாதிரி இருக்கு. ஒனக்கு எல்லாப் பல்லும் போச்சா.''

மாரி சிரித்து மழுப்பினான்.

''மகன் இருக்கிற தெம்புதான். இனிமே நமக்கென்ன பாட்டு வேண்டிக் கெடக்கு.''

அனந்தி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அவன் தலையசைத்துத் தடுத்து விட்டான். ஆண்டி முனங்கிக்கொண்டு போனான்.

''இந்தப் பெய என்ன இப்படிச் சொல்றான். இவனுக்கு என்னாச்சு.''

அனந்தி புருசனை வருத்தத்துடன் பார்த்தாள். அவன் மனசு உடைந்து போயிருந்தான்.

''முன்னப்போல ஏங்கித் துணியடிக்க முடியல. கையோஞ்சு காலோஞ்சு வருது.''

''இனிமே தண்ணிக்குள்ள எறங்க வேணாம். நாங்க பாத்துக்கிருவொம்.''

‘‘பிஞ்சுப் பெயலக் கசங்கவைக்க மனசுகேக்கலயே. இப்பயே ஒவரு முறுக்குனா அவன் கையி என்னத்துக்காகும்.’’

‘‘நீ பேசாம உக்காந்துருந்தாப் போதும். நான் முறுக்கிப்போடுவென்.’’

‘‘பெரிய குடும்பாவுக வீட்ல ஆருட்டயும் சொல்லிக்கிற வேணாம். நம்ம கஸ்டம் நம்மளோட இருக்கட்டும். தெரிஞ்சா வருத்தப்படுவாக. முடிஞ்சவரைக்கும் ஒதஞ்சுகுடுப்பொம். முடியலன்னா உள்ளதுபோல ஆகட்டும்.’’

மாரிக்கு அடிக்கடி நெஞ்சு புகைந்தது. செல்ல இருமலை நிறுத்த முடியவில்லை. சாப்பாட்டுமேல் அவ்வளவாகத் தேட்டமில்லை. கழுதையளவுக்குப் பொதி சுமக்கிறவன் கம்மாய்க்கு நடக்கத் தவங்கினான். அந்திக் கருக்கலில் அவன் பொதி சுமந்துவந்தால் மேகம் நடந்துவருவது போலிருக்கும். அப்பேர்ப்பட்ட உடம்பும் இற்றுப்போனது.

அனந்தி சொல்லிப்பார்த்தாள்.

‘‘நீ தொணைக்கு வர வேணாம். வீட்லயே இரு.’’

அவனுக்குப் பேச்சை முந்திக்கொண்டு புகைச்சல் வந்தது.

‘‘நான் எங்கருந்து என்ன செய்யப்போறென். கழுதைக்குக் கால்ல தளஞ்சிருக்கு. எனக்கு நெஞ்சில தளஞ்சிருக்கு.’’

துறைக்குப் போக முடியாத வருத்தம் அவனுக்கு. பெண்டாட்டி பிள்ளைகள் கழுதையில் பொதியேற்ற அல்லாடி அலையும்போது எப்படிச் சும்மா உட்கார்ந்திருப்பது. வீட்டிலாச்சும் ஒத்தாசனை செய்ய முடிகிறதா. ஆத்தாளும் அப்பனும் எவ்வளவு தெம்பாக இருக்கிறார்கள். மொன்னச்சிக்கு அடிக்கடி கண்ணீர் கசியும்.

‘‘எம் புள்ள பெறந்ததுலருந்து ஒருதரையில இருந்துருப்பானா. முனியசாமி சொடலமாடா அவன இப்படி மொடக்கீட்டயே. ஒனக்கு நான் என்ன கொற வச்செனு.’’

மாரி ஒரு நாள் மனசுகேட்காமல் தவங்கித்தவங்கிக் கம்மாய்க்குப் போனான். கரையேறிய தவிப்பில் துறைக்கு இறங்க முடியவில்லை. வெயிலான வெயில். மர நிழலில் சுருண்டுவிட்டான். வெளுப்புச் சத்தம் ஆறுதலாக இருந்தது. அப்படியே உறங்கிப்போனான்.

வெளுப்புத்துறையில் வேலைகள் மும்முரமாக நடக்கின்றன. கைகால்களில் நரம்பு விறைப்பேறி அவன் முறுக்காக இருக்கிறான். தூரத்தில் கம்மா நீருக்குள் தண்டுப்பூக் கொத்தாகப் பட்சித் தலைகள் அசைகின்றன. சில பட்சிகள் மரங்களில் உட்கார்ந்து சிறகுத் தூவிகளை அலகால் எண்ணிக் கணக்குப்பார்க்கின்றன. கணக்கு அடைபடாத குழப்பத்தில் குலுக்கிக்கொண்டு மறுபடியும் எண்ணத் தொடங்குகின்றன.

நெளிந்துவரும் சிற்றலைகளின் குளிர்ந்த காற்றும் துணியடிப்புத் தூறலும் சொகமேற்றுகின்றன. அவனுக்குச் சுதாரிப்புக் கிளம்புகிறது. அம்பாரமாகக் கிடக்கும் துணிகளை அசராமல் அடிக்கிறான். துவைக்கத்துவைக்க அழுக்கு விரண்டோடுகிறது. வெளுக்க வேண்டியதை அப்பனுக்கும் வெளுத்ததை ஆத்தாளுக்கும் மருதனால் எடுத்துப்போட்டு முடியவில்லை. ஆத்தா உதறிப் போடும் துணிகளை அல்லாத்தி ஓடிஓடிக் காய வைக்கிறாள். கண்ணுக்கெட்டிய மட்டும் வெள்ளை விரிப்பு. இன்னொரு கம்மாயாக.

ஆத்தா மகளுக்கு யோசனை சொல்கிறாள்.

''முள்ளுமொடலுக் கெடந்தா துணிய எதம்பத்தரமாக் காயவைக்கணும்.''

வெயில் தணிந்து காய்ந்த துணிகளைச் சுருட்டி மடிப்பதற்குள் பாழாய்ப் போன தொறத்தல் எழுப்பிவிட்டது. அவன் கண்ணைக் கசக்கிக்கொண்டு தட்டுத் தடுமாறி எழுந்தான். அனந்தி மனசிலும் தலையிலும் சுமையுடன் அவனை வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போனாள்.

ராத்திரி அவள் ஊருக்குள் போகும்போது ஆண்டியைப் பார்த்ததும் கொட்டி விட்டாள்.

''அப்பச்சி அவனுக்கு நீங்க வந்து சொன்னாத்தான் கேப்பான். நான் எம் புட்டுப் பொலம்புனாலும் சட்டசெய்றதில்ல.''

ஆண்டிக்குப் புரியவில்லை.

''என்னாச்சு அவனுக்கு.''

''மேலுக்குச் சொகமில்லன்னா பேசாம வீட்ல கெடக்க வேண்டியதுதான. நாங்க இருக்கொம் வேலையப் பாத்துட்டுப்போறொம். வேலசெய்யலன்னு ஆரும் சொன்னாகளா.''

''நல்லாத்தான இருந்தான்.''

''நெஞ்சுப்பொகச்சலக் கௌப்பீருச்சு. ஒருநாளும் படுக்காற மனுசன் படுத் ததும் மலைக்கான். அப்பச்சி அவன் ஒண்ணும் செய்ய வேணாம். அத்த குத்தம் பாத்துக்கிட்டு ரோசன சொல்லிக்கிட்டு வீட்லருந்தாப் போதும்.''

''இத ஏன் முந்தியே எங்கிட்டச் சொல்லல.''

''அவந்தான் வேணாம்னுட்டான் நீங்க வருத்தப்படுவீகன்னு. அஞ்ஞாவுக கிட்டக்கூடச் சொல்லல.''

அவள் கண்ணீர் பொருமிக்கொண்டு போனாள். ஆண்டி விடிந்தும்விடியா மல் வண்ணாக்குடிக்கு ஓடினான்.

''என்னடா இது மாயமாருக்குது. கெழங்கு மாதிரி திரிஞ்ச மனுசன் ஒடல் சதுரம் கொறஞ்சு இப்படித் தட்டக் குச்சாயிட்டயே. இதும் சோதனையா. இந்த ஒடம்ப எப்பத் தேத்தி எண்ணைக்குத் தொறைக்குப் போக.''

மாரி மூச்சுவாங்கினான்.

''கம்மாயே மறந்துரும் போலருக்கு.''

''எனக்கு அண்ணைக்கே சந்தேகந்தான். எப்படிக் கேக்கிறதுன்னு ரோசன. அதுக்குள்ள கத இவ்வளவுக்காயிருச்சு.''

''எந்திரிக்க முடியல. கையி பாரமாத் தெரியிது.''

''உஸ்ஸுன்னு உக்காராம நீ அலஞ்ச அலச்சலுக்கு இப்படிக் கெடந்தாத் தான் தெரியும்.''

''எனக்கு எப்படியானாலும் ஒண்ணுதான். பெய வேலைக்கு வந்துட்டான். குடும்பத்தக் காப்பாத்தீருவான்.''

''அறிவில்லாமப் பேசாத. இப்ப என்ன வந்துருச்சு ஒனக்கு. வாய்க்கு ருசியாக் கஞ்சியத் தண்ணியக் குடிச்சுத் தாவலையாகிறதுக்கு வழியப் பாரு.''

''அவளும் என்ன செய்வா. புதுசா ஒலவச்சுக் காச்சித்தான் குடுக்கா. ஒடம் புல ஒட்ட மாட்டங்குது.''

''எல்லாம் சரியாப்போகும். தைரியமா இரு.''

ஆண்டி வீட்டுக்கு வந்து கருப்பியிடம் வெதும்பினான்.

''மனுசக் கழுத பெழப்பப் பாத்தயாம்பிளி. சும்மா திரிஞ்ச மாரிப் பெய சுருண்டுக்கிட்டான். அவன் கெடக்கிற கெடையப் பாத்து எனக்கே சகிக்கல. பொண்டாட்டிக்கு எப்படியிருக்கும். தொள்ளாளிக்குச் சீக்கு வாறது கொடும தான்.''

''அடப் பாவமே அவனுக்கென்ன வந்துருச்சு. அனந்திக் கழுத அரண்டு போவாளே. நெதமும் கஞ்சிக்கு வாறவ ஒருவார்த்த சொல்லலயே.''

கருப்பி வாரிச்சுருட்டிக்கொண்டு வண்ணாக்குடிக்குப் போனாள். அவளது ஆறுதல் வார்த்தையில் அனந்திக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

ஆண்டிக்கு என்னேரமும் மாரி நினைப்பு. சே இப்படிச் சாய்ந்துவிட்டானே. என்ன பாடு பட்டும் எழுப்பியாகணுமே. விடியக்காலம் மகனைக் கூப்பிட்டான்.

''அடே ராக்கா ஊருணியில இச்சிமரம் ரெண்டும் சரங்கோர்த்த மாதிரி பழுத்துச் சொரிஞ்சிருக்கு பாத்தயா. இன்னேரம் பழத்துக்காக எப்படியும் மல வவ்வா வரும். வில்லெடுத்துட்டுப் போ. அது அசையாமத் தொங்குற நேரம் பாத்துக் குறிவச்சு அடிச்சாத் தப்பிச்சுக்கிறாது. நானும் கூட வரட்டுமா.''

''நானே போறென்.'

கருப்பி ஆத்திரப்பட்டாள்.

''இச்சி பழுத்தா பச்சிக்குச் சீட்டெழுதி வுடணுமாக்கும். எல்லாம் வந்துருக் கும். அடே அய்யா எப்படியாச்சும் அடிச்சுக் கொண்டுவந்துரு.''

ராக்கன் ரெண்டு பழந்தின்னி வவ்வால்களை அடித்து விழுத்தாட்டிச் சுமந்து வந்தான். உடனே கருப்பி எடுத்துக்கொண்டு வண்ணாக்குடிக்கு ஓடினாள். அனந்தி ருசியாக வறட்டி மாரிக்குக் கொடுத்தாள்.

ஆண்டி ரெம்பப் பிரயாசைப்பட்டான்.

''ராக்கா எங்க சுத்தியாச்சும் ரெண்டு பெறாக் குஞ்சி கொண்டுவந்து சேரு.''

ராக்கன் இடிகிணறு தேடியலைந்து கயிறுகட்டி இறங்கிச் சுவர்ப் பொந்து களில் புறாக் குஞ்சுகள் எடுத்து வந்தான். ஆண்டி அதை அனந்தியிடம் கொண்டு போய்ச் சேர்த்தான்.

''இதத் தட்டிப்போட்டுப் பக்குவமாச் சாறுவச்சுக் குடு. நெஞ்சுப்பொகச் சலுக்கு நல்லது.''

அவன் அதோடு நிறுத்தவில்லை. வருசநாட்டு மலைப்பக்கம் போய் காத்துக் கிடந்து மந்தி கொண்டுவந்தான். அங்கங்கே சொல்லிவைத்து உடும்பு சம்பாரித்துத் தந்தான். கோயிலாங்குளம் சுப்பன் பகடையுடன் மூணு மலைப்பரும்பை அலசி னான். நாய் மோப்பத்தில் ரெண்டு முள்ளெலி அகப்பட்டது. இப்படி கிடைக் காத சரக்கெல்லாம் கொடுத்தும் மாரிக்கு உடம்பில் ஒட்டவில்லை.

கருப்பி நல்ல சோறு வெஞ்சனம் வைத்து அனந்தியிடம் கொடுத்தனுப் பினாள். மாரியைப் பற்றி அவள் விசாரிக்காத நாளில்லை.

மாரிக்குச் சீக்கு எதிலும் அடிபடவில்லை. முற்றிவிட்டது. வீட்டைச் சுற்றி உட்கார்ந்து அலுத்தவன் படுத்துவிட்டான். முகம் வீங்கி மினுங்க ஆரம்பித்தது. அனந்தியும் அல்லாத்தியும் கூடவே இருந்து ஒவணியம்பார்த்தார்கள்.

அல்லாத்தனும் மொன்னச்சியும் குக்கிப்போய் முனங்கினார்கள்.

''முனியசாமியப்பா எங்க உசிர எடுத்துக்கயேன். எங்க புள்ளையக் காப்பாத்து.''

ஆண்டிக்கு வேலைத்தனத்திலும் மாரியைப் பற்றிய உளைச்சல்தான்.

''பெய எந்திரிச்சுக்கிற மாட்டான் போலருக்கே. இரும்புத் தூண எறும் பரிச்ச மாதிரி இத்துப்போயிட்டானே.''

மாரிக்கு ஆண்டியிடம் ரெம்பப் பேசணும் போலிருந்தது. அனந்தியிடம் சொல்லியனுப்பியிருந்தான். சாய்ந்தரம் கொஞ்சம் தெம்பு வந்தது. தக்கிமுக்கி எழுந்து நகன்றுகொண்டே வெள்ளாவியோரம் காத்திருந்தான். அப்போதுகூட அவன் கை சும்மா இருக்கவில்லை. வெள்ளாவியைச் சுற்றி வளர்ந்துகிடந்த செடி செத்தைகளைப் பிடுங்கிச் சுத்தப்படுத்தினான்.

ஆண்டி நேரமிருக்கவே வேலை முடித்து மாடுகளுக்குக் கூளம்போட்டு விட்டு அவனைப் பார்க்க வந்தான். அவன் வெளியே உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் சந்தோசமாக இருந்தது.

''அம்புட்டுத்தாண்டா. இனிமே ஒண்ணும் செய்யாது. சீக்காவது மயிராவது.''

பழையபடி ஓடியாடித் திரிவதுபோல் மாரியின் மனசு சிறகடித்தது. எங்கெல் லாமோ போய் வந்தான். கண்களில் மின்னும் சிரிப்பு.

''நேத்து ராத்திரி கெழக்க வாகமரக் கெணத்துல என்ன நடந்துச்சு தெரியுமா.''

''இந்த நெலமையில எந்திரிச்சுப் போயி அங்க என்னத்தப் பாத்த. அதும் ராத்திரி வேளையில.''

மாரி கொஞ்ச நேரம் இளைத்துத் தவிப்பாறினான். அவன் முகத்தில் பழைய தோரணை குடியேறியது. ஆண்டிக்கும் வயசு ரெம்பக் குறைந்துவிட்டது.

''சாமத்துக்கு மேலருக்கும். காடேமேடேன்னு நெனச்சுக்கிட்டுப் படுத்துக் கெடந்தென். சரியா ஒறக்கம் குடுக்கல. செத்த நேரத்துல சலசலன்னு சத்தம் கேக்குது. சருவச்சட்டிக்குள்ள மீனுக துள்ளுமே அப்படி.''

''காத்துக்குக் கூர மொகடு எரஞ்சிருக்கும்.''

''அதான் எனக்குத் தெரியுமே.''

''பெறகென்ன சத்தம்.''

''இதென்னடா புதுசாருக்குதேன்னு ரோசன ஓடுது. பழையபடி அதே சத்தம். பெலமாக் கேக்குது. இருக்கஇருக்கக் கூடிக்கிட்டே போகுது.''

''மனுசன் நிம்மதியாப் படுத்திருக்க முடியாதே.''

''அருவமில்லாம எந்திரிச்சு வெளிய வந்து முத்தத்துல நின்னு காதுகுடுத்துக் கேக்கென். சலங்க செதறுன மாதிரி அதே சத்தம். சரி வாகமரத்துக் கெணத்துல தான் ஏதோ சங்கதி நடக்குதுன்னு தெரிஞ்சுபோச்சு. கைகாவலுக்கு வெட்டருவாள எடுத்துக்கிட்டு கவக்கம்ப ஊண்டி பையாப்பையாக் கட்டப் புளியமரத்துக்குப் போறென். போயி மரத்துல ஒண்டிக்கிட்டு எட்டிப்பாக்கென்.''

''அங்க என்ன நடக்குது.''

''வாகமரக் கொப்பெல்லாம் அசையஅசைய நெத்து குலுங்கி உதிருது.''

‘‘அவ்வளவுதானா. காத்தடிச்சா வாக நெத்து அப்படித்தான் சரசரக்கும்.’’

‘‘அப்படியுமில்லையே. புளியமரத்துல எலகூடக் குலுங்கல.’’

‘‘பெறகெப்படியாம்.’’

‘‘நெத்து எரச்சலுக்கு எடையில தெலா எறைக்கிற சத்தம் கேக்குது. கூடவே ஒண்ணு... ஒண்ணாம் தம்பின்னு எண்ணிக்கிட்டே ஆரோ எறைக்காக. ஆனா ஆளு கண்ணுக்குத் தட்டுப்படல.’’

‘‘ஒனக்குப் பார்வ பத்தலன்னு சொல்லு. ராத்திரியில தெலா எறைக்கிறதப் பத்திப் பெரிசாச் சொல்லவந்துட்டான்.’’

‘‘நீங்க ஒண்ணு. உத்துஉத்துப் பாக்கென். ஒண்ணும் காணும். கையில இரும்பு இருக்கிற தைரியத்துல வேலியத் தாண்டிக் கெணத்தோரம் போறென்.’’

‘‘ஒனக்கு வேண்டாற வேலதான.’’

‘‘ஒரு பாத்தியில உக்காந்து கெணத்தப் பாத்தா தெலா எறவ மும்மரமா நடக்குது.’’

‘‘ஆராம்.’’

‘‘வேற ஆரு. முனிதான்.’’

‘‘அடத் தாயிளி.’’

‘‘அது எம் பக்கம் திரும்பிப் பாக்கயில அப்படியே பம்மிப் படுத்துக் கிட்டென். பொழுதப் போல ஒரே கண்ணுதான். எங்க முனியசாமி மாதிரி. பம்மிக்கிட்டே வெட்டருவாள இறுக்கிப் புடிச்சுக்கிட்டென்.’’

‘‘பெறகென்னாச்சு.’’

‘‘நெலத்துக்குள்ள திரும்பிப் பாத்தா இனியொரு கண்ணு அந்தரத்துல மினுங்குது.’’

‘‘அது வேறயா.’’

‘‘ஆம்பள முனி தெலா எறைக்க பொம்பள முனி தண்ணி பாச்சுது. அதுக ளோட புள்ளீக வாகமரத்துல வெளையாடுதுக.’’

‘‘குடும்பத்தோட வந்துருக்காக.’’

‘‘என்ன மாதிரி வெளையாட்டு தெரியுமா.’’

‘‘வாகமரத்துல போயி காக்காக் குஞ்சியா வெளையாட முடியும். கொப்பு தாங்காதே.’’

‘‘தகப்பனோட தலமுடிய கொப்புக்குக் கொப்பு தோரணம் கெட்டி அதுல நடந்து வெளையாடுதுக. ஒண்ணு தெலா மரத்துல கெட்டி ஏலட்டம் போடுது. சந்தோசத்துல தங்குதங்குன்னு குதிக்குதுக. மரமே ஒடிஞ்சுபோற மாதிரி. காச்சாம்பூச்சாம்னு பாட்டுப்படிக்குதுக. அது நமக்கெங்க புரியிது. மரத்துக்குள்ள அதுக கண்ணு மின்னுறதப் பாக்கணுமே.’’

‘‘வசமா மாட்டிக்கிட்ட.’’

‘‘என்ன வந்தாலும் சரின்னு அருவாள ஓங்கித் தரையில ஒரு கொத்துக் கொத்துனென். அந்தச் சத்தம் கேட்டுச்சோ இல்லையோ சின்ன முனி பெரிய முனி எல்லாம் பெயந்துபோயி கெணத்துக்குள்ள குதிச்சிருச்சு. நான் தைரியமாப் போயி எட்டிப்பாக்கென். குமுழுக்குமுழா ஒடையிற சத்தம் கேக்குது.’’

“எல்லாம் முங்கியிருக்கும். எம்புட்டு நேரம் மூச்சடக்கிக்கிட்டே கெடக்கிறது.”

“என்னதான் செய்யிதுன்னு நானும் எட்டிப் பாத்துட்டே நிக்கென்.”

“மறுபடியும் ஏறிவந்தா என்னாகும்.”

“ஆழத்துல கெணத்துச் சொவரத் தொளச்சுக்கிட்டே போயி முண்டி வெளிய வந்து ஓட்டம்புடிக்குதுக. எலி பெண்டான் பெடச்ச மாதிரி. ஒரே சிரிப்புக் கெக்கரிப்பு. ரெம்பத் தூரத்துக்கு வெளிச்சம் மினுங்குது.”

“தப்பிச்சிட்ட.”

“ராத்திரி ஒறங்கல. என்னதான் நடந்ததுன்னு பாப்பமேன்னு வெள்ளங்காட்டி அந்தத் தோட்டத்துப் பக்கம் போனென். ஒரு பாத்திகூடப் பாக்கியில்லாமத் தண்ணி பாஞ்சு காடக்கண்ணிப் பயிரு தெளுச்சியா ஆட்டம் போடுது. நான் அருவாளக் கொத்துனென் பாருங்க அந்த எடத்துல ஒரு கரட்டான் ரெண்டு துண்டா வெட்டிக்கெடக்குது.”

“அந்த உசிரு மட்டும் போகலன்னா ஒன்னய ஒரேயடியா அடிச்சுச் சாச்சிருக்கும்.”

“கைவசம் இரும்பு இருக்கயில கிட்ட வராது. இது நல்ல முனியாக்கும். இல்லன்னா காஞ்சுகெடக்கிற வெள்ளாமையக் காப்பாத்துறதுக்காகத் தெலா எறச்சிருக்குமா. தோட்டக்காரக் குடும்பாவுக வீட்ல எல்லாருக்கும் சொகமில்லையாம். அதத் தெரிஞ்சுக்கிட்டு வந்துருக்குது பாருங்க.”

“அப்படியா.”

“கண்டிப்பா எங்க முனியசாமிதான் அனுப்பீருக்கணும். கஸ்டப்படுறவுகளக் காப்பாத்துற தெய்வமாச்சே.”

“ஒரு தடவையாச்சும் முனியசாமிய எனக்குக் காட்டியிருக்கயாடா. நீ ரெம்ப மோசம்.”

“நான் என்ன செய்யட்டும். அது வரம் குடுக்கலயே. வரம் குடுத்துருச்சுன்னு வச்சுக்கங்க. சாமி மட்டுமில்ல முனி பேயி எல்லாத்தவும் காட்டீருவென்.”

“எண்ணைக்குக் காட்டப்போறயோ.”

மாரி வெள்ளாவியைப் பார்த்தான். அது கிடந்த நிலைமை மனசுக்கு ஒப்பவில்லை.

“வெள்ளாவியில மண்ணு கரஞ்சுக்கிட்டே போகுது. சரியான மண்ணுப் புடிப்பில்லன்னா பானைக நிக்குமா. அதுக வேற செந்திரிபோச்சு. தண்ணிய ஊத்திச் சுடவச்சா பொத்துக்கிருமில்ல. இதெல்லாம் செமாரு பண்றதுக்கு ஆளில்ல. பொண்டாட்டிக்காரி எதுக்குன்னுதான் ஆவா. மகன் செய்வான். அவனுக்கெங்க நேரமிருக்கு. தொறைக்குப் போயிவரவே சரியாருக்கு.”

“ஒனக்குச் சொகமாயிட்டா எல்லாம் சரியாப்போகும். ஏன் கண்டத நெனச்சுப் பொலம்புற.”

மாரி வாட்டத்துடன் பார்த்தான்.

“நான் எந்திரிச்சுக்கிற மாட்டென் போலருக்கு.”

“இவ்வளவுக்கு நடமாடுன பெறகு என்னடா கவல. நீ நெதமும் தொறைக்குப் போகத்தான் போற. நான் ஒம்பாட்டக் கேக்கத்தான் போறென்.”

“எங் கண்ணுக்குப் பின்னால குடும்பத்த நீங்கதான் ஆதரிக்கணும்.”

''சும்மா அனத்தாத. எதப் பத்தியும் கவலப்படாம இரு.''

ஆண்டி வேண்டாவெறுப்பாக எழுந்து நடந்தான். இப்படிக் கதை கேட்டு எவ்வளவு நாளாயிற்று. ஆள் தெம்பாகத்தான் இருக்கிறான். தேறிவிடுவான்.

மருதனுக்கு இளங்கூனல் விழுந்து முடியில் செம்பட்டை ஏற ஆரம்பித்தது. அனந்தி கவைக்கம்பு தூக்கி வெள்ளாவிக்கு முள் சுமந்தாள். அல்லாத்தனும் மொன்னச்சியும் முடங்கிவிட்டார்கள்.

மாரி பாடு மேலும் மோசமாகிக்கொண்டுவந்தது. புரண்டு படுக்கக்கூட உடம்பில் வலுவில்லை. முறுக்கியெறிந்த துணியாகத் துவண்டு கிடந்தான். புகைச்சல் அடிக்கடி பேச்சை மறித்தது. அனந்தி துறைக்குப் போகாமல் கூடவே இருந்தாள். அல்லாத்தி மிரண்ட முழியுடன் ஊருக்குள் அழுக்கெடுக்கப் போனாள். மருதன் ஊருக்கு வெளுத்துக் கொடுப்பதில் குறைவைக்கவில்லை. தாயும் மகளும் மாறிமாறி மாரிக்குப் பீமூத்திரம் சுமந்தார்கள்.

மாரி ரெம்ப அழுந்தவில்லை. ஒரு சின்ன இருமலுடன் உயிர் வெளியேறி விட்டது. சுத்துப்பட்டி வண்ணார்கள் வந்து ஒரு நடை அவனைச் சுமந்து கலிங் கலுக்குக் கிழக்கே கம்மாக் கரை இறக்கத்தில் அடக்கம் செய்துவிட்டுப் போனார் கள். ஆண்டி அழுத அழுகையை வண்ணார்கள்கூட ஆச்சரியமாகப் பார்த்தார்கள். என்னென்னமோ வாய்விட்டுச் சொல்லியழுது ஆற்றிக்கொள்ளத் துடித்தான். எதுவுமே வெளியே வரவில்லை. கருப்பி அனந்தியைக் கட்டிப்பிடித்து அழுகாதது தான் குறை. அன்றைக்கு ஊர்ச்சனம் யாருமே வேலைக்குப் போகவில்லை. கிட்ட இருந்து அவனை வழியனுப்பினார்கள்.

ஆண்டி நிகாரில்லாமல் நடமாடினான். வேலைச் சாமான்களை மாற்றி எடுத்துக்கொண்டு போனான். ராக்கன் போய்ச் சரிசெய்தான். கருப்பி காட்டுக்குக் கொண்டுபோன கஞ்சிப் பானை அப்படியே உட்கார்ந்திருந்தது. அவன் போக்குக்கு விட்டுவிட்டாள். சண்டிவீரிக்குக்கூட ஒரு நாள் முழுக்கக் கண்ணில் ஈரம் கசிந்தது.

''ஒருத்தல மண்டையடியிலருந்து காப்பாத்துன மகராசன் போயிட்டானே.''

மாரி கொஞ்ச நாள் ஊர்வாயில் நடமாடினான்.

''நேத்துப் பெய போயிட்டானே.''

''அப்பனும் ஆத்தாளும் மகன விழுங்கீட்டுக் கல்லுக்குத்தி மாதிரி இருக்காக.''

''பொண்டாட்டி பாடுதான் கஸ்டம்.''

''ஒடையவன் இல்லாற சீல ஒரு மொழம் கட்டதான்.''

''ஊருக்கு வெளுத்துருவாளா.''

''அவளால முடியலன்னாத்தான் வேற ஒருத்தனக் கொண்டுவந்து வைக் கணும். நம்ம தஞ்சம்னு இருக்கிறவள அனுப்புறது பைத்தியாரத்தனம்.''

''புருசன் படுத்ததுலருந்து வெளுத்துக் குடுத்துட்டுத்தான வாறா.''

''அவ பிரியம் எப்படியோ அப்படிச் செய்யட்டும். பொங்கலுபூசைக்கு வெள்ள குடுத்தாப் போதும். நம்ம என்னாளும் வெள்ளவேட்டி உடுத்தியா லாத்தப்போறொம்.''

''ஒரு சாவெழவுக்குத்தான் சங்கடம். மாரின்னா எல்லாச் சாத்தரமும் செய்வான். சின்னப் பெய கொஞ்சம் தெணறுவான்.''

''எல்லாம் கத்துக்கிற வேண்டியதுதான். அதுவரைக்கு ஒப்பேத்தத்தான் செய்யணும்.''

# 12. புது மூச்சு

அனந்தி ஆண்டியிடம் முடிவைச் சொன்னாள்.

''புள்ளீகளக் கூட்டீட்டு எங்க சனங்களோட போயிச் சேந்துக்கிறலாம்னு நெனைக்கென் அப்பச்சி.''

''பெரிசுக ரெண்டு கெடக்குதே என்ன செய்றது. ஓடியாடி அலையிறதுகளா ருந்தா சரி.''

''அதுகளவும் கூட்டீட்டுத்தான் போகணும். எங்க போவாக. நாத்துனா மாரும் அந்தப் பக்கந்தான இருக்காக.''

''தலமொறதலமொறையா இருந்துவாற குடும்பம். அத நெனச்சாத்தான் வருத்தமாருக்கு.''

''நான் ஒருத்தியாக் கெடந்துக்கிட்டு என்ன செய்யட்டும் அப்பச்சி.''

அவள் முடிவு ஆண்டிக்கு ஒப்பவில்லை. தன் கண்ணுக்குப் பின்னால் குடும் பத்தை ஆதரிக்கச் சொன்னானே மாரி அந்த வார்த்தையைக் காப்பாற்றணும்.

'' நீ வடக்க போனாலும் ரெண்டு புள்ளீகள வச்சுக்கிட்டுச் சும்மாருக்க முடியுமா. தொழிலுப் பாத்துத்தான் ஆகணும். அங்க பாக்கிற தொழில இங்கருந்து செய்யலாமில்ல. மகன் இருக்கான் வேலையக் கவனிச்சுக்கிருவான்.''

''அந்த மனுசன் இல்லாம எப்படிப்பச்சி இருக்கட்டும். மொழங்கைப் புண்ணா மொனகொலஞ்சு நிக்கனே.''

அவளால் அழுகையைத் தாமரிக்க முடியவில்லை. ஆண்டிக்கு வார்த்தை தடுமாறியது.

''குடுத்துவைக்கல.''

''வெள்ளாவிப் பக்கம் போனா அவன் நெனப்பு. கம்மாயில நின்னா அவன் சத்தங்கேக்குது. உக்காந்து ஒரு வாயி கஞ்சி குடிக்க முடியல. நண்டுக்கூடா ஒடஞ்சுபோச்சே எம் பெழப்பு அப்பச்சி.''

''நீங்க எங்கயும் போக வேணாம். இங்கயே இருங்க. என்ன வந்தாலும் நான் பாத்துக்கிறெென்.''

வீட்டிலும் காட்டிலும் ஆண்டியின் மனசில் மாரி நினைப்பு குடைந்தது. எம்புட்டு நாளைக்கு இருக்க வேண்டியவன். பொடுக்கென்று மண்டையைப் போட்டுவிட்டானே. இனிமேல் வெளுப்புத்துறையில் சொகமான பாட்டு கேட்காது. மனசுவிட்டுப் பேச யாருமில்லை.

ஊருக்குள் கஞ்சிகேட்கும்போது அனந்தியின் குரலில் பழைய ராகமில்லை. சில வீடுகளுக்கு முன்னால் சத்தங்கொடுக்காமலேயே நின்றாள். உறங்கி முழித்த மாதிரி நடமாடினாள். அவள் வெறுங்கழுத்துடன் வருவதைப் பார்க்கும் கருப்பிக்கு எல்லாம் கனா போலிருந்தது. ஆண்டியிடம் புலம்பினாள்.

''எப்படியிருந்த பொம்பள சொடிஞ்சுபோயிட்டாளே.''

முந்தியெல்லாம் ரெண்டு பேரும் பாடுபழமை பேச ஆரம்பித்தால் லேசுக்குள் ஓய மாட்டார்கள். கருப்பி வாசப்படியிலும் அவள் முற்றத்திலும் வாகாக நின்று கொண்டு பேச்சுநடக்கும். கருப்பிக்குக் கஞ்சிக் கை காய்ந்து விருவிருக்கும். அவசர மாக உ ள்ளே போய்க் கிண்ணத்தில் வெஞ்சனம் கொண்டுவந்து கொடுப்பாள்.

''எங்கிட்டயே இம்புட்டு நேரம் வாயக்குடுத்துட்டுப் போயிக் கடிச்சுக் கிறதுக்கு என்னத்தப் பாப்ப. இத வச்சுப் புள்ளீகளுக்குப் பசியமத்து.''

சில சமயம் அவர்களுக்குள் சின்னப் புழுக்கம் வந்து ரெண்டுமூணு நாள் பேசாமல்கூட இருப்பார்கள். புழுக்கமென்ன பெரிய புழுக்கம். எல்லாருக்கும் முந்தி அவளிடம் அழுக்கெடுக்கணும் வெள்ளை கொடுக்கணும். மிஞ்சிப் போனால் மூணு நாள்தான். அதுக்கு மேல் தாங்காது. கருப்பி வாய்வலிக்க வைது தீர்த்ததும் கோவம் ஆறிவிடும். பழையபடி மந்தையில்கூடப் பேச்சு ஓடும்.

ஒரு தடவைதான் ரெம்ப நாள் சடவாக இருந்தார்கள். அது பெரிய கூத்து. கருப்பி வாசப்படியில் நின்றுகொண்டு சோறு போடுவதுதான் வழக்கம். அன்றைக் கென்னமோ அனந்தி கொஞ்சம் எட்டத்தில் நின்று பானையேந்த கருப்பி படியிறங்கி வந்து கைநீட்டியிருக்கிறாள். மழைநேரத்துக்குச் சுவரோரம் கல்லிடுக் கில் ஒளிந்திருந்த தேள் காலில் வசமாகக் கொட்டிவிட்டது.

''என்னப் பெத்த அஞ்ஞு வண்ணாச் சிறுக்கியால மோசம்போயிட்டனே.''

கூப்பாடு போட்டுக்கொண்டு முற்றத்தில் குதித்தாள். அனந்தி அங்கே பிடித்த ஓட்டம் வண்ணாக்குடியில்தான் போய் நின்றாள். கஞ்சியாவது ஒண்ணாவது. பானை தப்பித்ததே பெரிய காரியம். அன்றைக்கு ராத்திரி முழுக்க ''நாயே பேயே புழுக்கமுண்ட....'' என்று கருப்பியின் வசவு கேட்டு முடியவில்லை. ஆண்டி என் னென்னமோ சொல்லிச் சமாதானப்படுத்தினான்.

''தேளக் கொட்டுகொட்டுன்னு தூண்டிவுட்டாளா இல்ல பானைக்குள்ள ருந்து புடிச்சுவுட்டாளா. அவளப்போயி இந்த வசவு வையிறயே. ஒனக்கே நல்லா ருக்கா. பல்லக் கடிச்சுக்கோ. சரியாப்போயிரும்.''

அவள் வலி தீரும்வரை விளக்கமாற்றை மாறிப் பிடித்துக்கொண்டு அனந்தியை எதிர்பார்த்தாள். இதையறிந்த அனந்தி அவள் கண்ணில் தட்டுப் படாமலேயே ஊருக்குள் வந்துபோனாள். கடவுவழியாகத் தப்பித்து அடுத்த வீட்டுக்குப் போனாள். சன்னமான குரலில் கஞ்சி கேட்டாள். எந்த வீட்டிலும் நின்று பேசுவதில்லை.

கருப்பிக்குச் சொகமாகிவிட்டது. அதோடு சரி. கோவமெல்லாம் மலையேறி மனசில் அனந்தியின் நினைப்பு ஓட ஆரம்பித்தது. கொல்லைப்புறமாக ஒதுங்கிப் போனவளை மடக்கிப் பிடித்துக் கஞ்சி கொண்டுபோய்ப் போட்டாள்.

''நனஞ்ச கெழடி வந்தா காஞ்ச வெறகுக்குத்தான் சேதம். கண்டகண்ட நாயிகளோட பேச்சென்ன வேண்டிக்கெடக்கு. அலப்பாட்டிக்கழுத. எங் கையால கஞ்சி வாங்காம எப்படித் தொண்டைக்குள்ள எறங்குது. நாங்க பங்குனின்னு பருக்கிறதுமல்ல சித்திரன்னு சிறுக்கிறதுமில்ல. எண்ணைக்கும்போலத்தான் இருக்கொம்.''

அனந்தி மென்றுமென்று விழுங்கினாள்.

''நான் வகுறாரச் சாப்புட்டு நாளாச்சு.''

''செத்தாளா பெழச்சாளான்னு வந்து ஒருவார்த்த கேட்டுருக்கயா.''

''அஞ்ஞாவுக கோவமாருக்கீகன்னு அப்பச்சி சொன்னாக.''

''எல்லாம் அவன் வேலையா.''

அன்றைக்கு வட்டிவாசியெல்லாம் சேர்த்து கொல்லைப்புறத்தில் நின்றே பேசித்தீர்த்தார்கள்.

இப்படி ஒவ்வொண்ணாக நினைக்கநினைக்கக் கருப்பிக்கு அழுகை வரும். அனந்தியைப் பார்க்கும்வரை மனசில் பாரம் இறங்காது.

ஆண்டி தோட்டத்தைச் சுற்றிப்பார்க்கும்போது தெற்கு மூலையில் புங்கஞ் செடி முளைத்திருப்பதைக் கவனித்தான். பிடுங்கியெறிய மனசுவரவில்லை. வேர்மண்ணுடன் எடுத்துக் கொண்டுபோய் மாரியின் குழியோரம் நட்டி வைத்தான்.

தோட்டத்துக்குத் திரும்பிவந்து கிணற்றோரம் நீர்வாய்க்காலில் புல்செதுக் கியவன் குறுக்குவலிக்கு நிமிர்ந்தான். கம்மாப் பாதையில் கழுதை முதுகுகளில் பொதிகள் அசைவது தெரிந்தது. மருதனையும் அல்லாத்தியையும் முன்னால் விட்டு அனந்தி நிதானமாக நடந்துபோனாள். முந்தி புருசனுக்கு முன்னால் நடந்தவள் இப்போது பிள்ளைகளுக்குப் பின்னால் போகிறாள். குடும்பம் தழைத்துவிடும்.

கொஞ்ச நேரத்தில் கம்மாயிலிருந்து வெளுப்பு மூச்சு கேட்டது. மூச்சு வார்த்தைகளாகத் திரண்டு பாட்டாகியது.

''ஒசரத்துல ஒருவெளக்கு
ஊருக்கெல்லாம் பொதுவெளக்கு
பொதுவெளக்கு வெளிச்சத்துல
பொதிசொமப்பென் சாமத்துல.''

''அடத் தாயிளி இந்த வயசிலயே என்னமாப் பாடுறான். அப்பனுக்குப் புள்ள தப்பாமப் பெறந்துருக்கான்.''

கலிங்கல் தத்தியதுபோல் கம்மாயிலிருந்து மருதனின் பாட்டு கேட்டுக் கொண்டேயிருந்தது.

''சாமத்துல பொதிசொமந்து
சடுதியில எனம்பிரிச்சு
விடியாமத் துணிகுடுத்து
வெதவெதமாச் சோறெடுப்பென்.''

ஆண்டி வேலையை அப்படியப்படியே போட்டுவிட்டு மாமரத் தூரில் மயங்கிப்போனான்.

வாய்க்காலில் ஆண்டி அருவிப் போட்ட புல்லை மாரி அள்ளியள்ளிக் குமிக் கிறான். குமிகளைக் கூடையில் நிரப்பி ஓடையில் எறிந்துவிட்டுச் சுதாரிப்பாக வருகிறான்.

''ஒம் மகன் பாட்டக் கேட்டயாடா ஒட்டப் பல்லா. ஒன்னய மிஞ்சீருவான் போலருக்கு.''

''அது தெரியாதா ஒங்களுக்கு. இப்ப கம்மாய்க்குள்ளதான் எனக்குக் குடி யிருப்பு.''

''அதும் அப்படியா.''

''கம்மாக் கரையில என்னயப் பெதச்ச மறுநாளே கரையத் தொளச்சு முண்டிக் கம்மாய்க்குள்ள போயிட்டென்.''

''சரி.''

''மீனு ஆமயெல்லாம் என்னய நல்லாக் கவனிச்சுக்கிரும்.''

''அதெப்படிடா.''

''தண்ணிக்குள்ள ஆளுக்கொரு வீடு கெட்டியிருக்கொம். சொவரு கூரை யெல்லாம் மண்ணாலதான். பான ஓடுதான் கதவு.''

''தண்ணியில கனிமண்ணு கரஞ்சிருமில்லடா தாழி வகுறா.''

''ஆம எச்சத் துப்பி நல்லாப் பூசீருச்சு. உள்ள படுத்துக்கிட்டாக் கதகதன்னு ருக்கும்.''

''அந்த அளவுக்கு நல்ல வீடா.''

''ஆமயோட முதுகுல ஏறிக்கிட்டாப் போதும். கம்மா முழுக்கச் சுத்திக் காட்டீரும்.''

''ஒங் கழுத மாதிரியில்லையே.''

''ஆம முதுகுல லேசாத் தட்டுவென். ஒடனே தண்ணிக்கு மேல வந்து மெதக்கும். நான் சவாரிவச்சபடியே அண்ணாந்து பாப்பென். ஏயப்பா கருவ மரத்துல எத்தன பச்சிக இருக்கும் தெரியுமா. இத்தன வகதான்னு கணக்கில்ல. கலப்பக்குத்தி பன்னருவா கம்பரகத்தி செரப்பி களக்குச்சு மாதிரி அலகு தாறு மாறாக் கோணிக்கெடக்கும். ஒவ்வொண்ணும் வாயில பழங்கள வச்சுக்கிட்டு எனக்காகக் காத்துருக்கும். நான் மனசுக்குப் புடிச்ச பழத்துக்காகக் கைய நீட்டு வென். மேலருந்து பழம் வுழுகும். நாலு பழம் தின்னாப் போதும். வகுறு நெறஞ் சிரும். ஆமெக்கும் குடுப்பென். கெழடி வெத்தல இடிச்ச மாதிரி அது நமட்டி நமட்டி விழுங்குறதுக்குள்ள விடிஞ்சுபோயிரும். அதக் கவனிச்சுக்கிட்டாத்தான தெம்பாச் சொமக்கும்.''

''குடுத்துவச்சவன்.''

''பொண்டாட்டி புள்ளீக நெனப்பு வந்துருச்சுன்னா மனசுக்கு ஒருமாதிரியா ருக்கும். ஆமெ அதக் கவனிச்சிரும். மாரியண்ணேன் மாரியண்ணேன் மனசில என்ன வருத்தமோன்னு கேக்கும்.''

''கூரான ஆமெதான்.''

''நானும் பதிலுக்கு ஆமெயண்ணேன் ஆமெயண்ணேன் வண்டி அக்கம் பக்கம் திரும்பாம நேர வெளுப்புத்தொறைக்குப் போகட்டும்னு சொல்லுவென். ஒருவீச்சுல தொறைக்கு வந்துருவொம். ஒரு ஓரத்துல தலைய நீட்டி எல்லாரவும் ஆசதீரப் பாத்துக்கிருவென். மகன் துணியடிக்கத் தொவளுறான்னா நீளமான சம்புக்கோரையப் புடுங்கிக் கொழலாக்கி அதுவழியா அவன் காதுல பாட்டு சொல்லிக்குடுப்பென். ஒடனே அவனுக்குச் சொதாரிப்பு வந்துரும். புதுப் பாட்ட எடுத்துவுடுவான்.''

''அதான பாத்தென்.''

''ஒருநாளைக்கு ஒங்களவும் கம்மாய்க்குள்ள கூட்டீட்டுப் போறென்.''

''முனியசாமியக் காட்றென்காட்றன்னு ஏமாத்திப்புட்ட. இப்ப கம்மாயக் காட்டப்போறயாக்கும்.''

''கண்ணாணக் காட்றென்.''

''ஒரேயடியாக் கூட்டீட்டுப் போயிறேண்டா. நீயில்லாம எல்லாமே வெறுத்துக்கெடக்கு.''

''அதெப்படி. எங் குடும்பத்தக் கவனிக்கிறதுக்கு ஆளு வேணுமே. தப்பிச் சிறலாம்னு பாக்கீகளா.''

கொருவாயில் சிரிப்பு சிந்த மாரி பெருவாய்க்கால்வழியே ஓடிப்போகிறான்.

ஆண்டிக்கு முழிப்புத் தட்டியது. வாய்க்காலையே பார்த்தான்.

''போயிட்டயேடா பாவி.''

கண்ணில் நீர் கோர்த்து வாய்க்காலும் மறைந்துவிட்டது.

கம்மாக் கரைக்குக் கீழே கழுதை பத்த வந்த அல்லாத்திக்கு அப்பன் குழியில் புங்கஞ்செடியைப் பார்த்ததும் சந்தோசம் பொங்கியது. மண்டியிட்டு அதைத் தடவினாள். கொழுந்து வாடலைக் கண்டு அவள் முகம் வாடிவிட்டது. ஓடிப் போய்க் கலயத்தில் தண்ணீர் கோலிவந்து ஊற்றி மேலேயும் தெளித்துவிட்டு ஆத்தாளிடம் அவசரமாகப் போனாள்.

''ஆத்தெஆத்தெ அப்பன் குழியில புங்கங்கண்ணு மொளச்சிருக்கு. நான் அதுக்குத் தண்ணி ஊத்தி பெரிய மரமா வளத்துருவென்.''

மகளை வெறித்த அனந்திக்கு அழுகை முட்டியது. கம்மா நீரள்ளி முகத்தில் தெளித்துக்கொண்டாள்.

மருதன் கெட்டிக்காரன். சின்ன வயசிலிருந்தே அவனுக்கு விளையாட்டு லவிக்கவில்லை. வெளுப்புத்தான் விளையாட்டு தொழில் எல்லாம். சின்னத் துணிகளை வேகமாக அடிக்கும்போது அதுக்கேற்றபடி பாட்டுக் கட்டுவான். பெரிய துணிக்கு விரட்டலில்லாமல் ராகம் வரும். சிலநாள் அவனது ரெண்டு அடிக்கொருக்க நிதானமாகத் துணையடியும் கேட்கும்.

அனந்திக்கு நிறைய பொறுப்பு இருந்தது. விடியக் கருக்கலில் மாட்டு வேலை செய்யும் ஆண்களைப் போல் வெள்ளாவி வேலைகளைக் கவனிப்பாள். ஏற்றி மடித்துக் கட்டிய சீலை. மேல்வசத்தில் முடியை எறிந்து சொருவிய கொண்டை. முரட்டுவாக்கில் வெள்ளாவிக்குள் முள்ளைத் திணிப்பாள். தாழித் தண்ணீரில் சன்னமாக உவர்மண்ணைக் கரைத்துக் கலக்கி அழுக்குத்துணிகளைச் சோமாறி நனைத்து முறுக்கி லேசாகப் பிழிந்து அவள் போடப்போட மகன் வாங்கி வெள் ளாவிமேல் பொதிவாக வைப்பான். அல்லாத்தி தண்ணீரெடுத்து ஊற்றுவாள். வெள்ளாவியில் துணிகள் அவியும்போது உவர்மண் கலந்த அழுக்கு வாடை மெல்லப் பரவும்.

அனந்தி அழுக்குப் பொதியை அலக்காகத் தூக்கி கழுதைமேல் ஏற்றி வாலுக் குக் கீழே சீலைப்புரி சுற்றி வரிந்து கட்டுவாள். கழுதை அசைந்து உழத்தும்போது அரட்டுவாள். கரகரத்த அரட்டலைக் கேட்டு அது அவளை வெறித்துப் பார்க்கும்.

மாரி கழுதைகளை என்னமாகத் தடவிக்கொடுப்பான். பேசிக்கொண்டே பொதியேற்றுவான்.

''இரும்மா தாயி இனியும் கொஞ்ச நேரந்தான். தொறைக்குப் போயிச் சொகமா மேயலாம். மதியம் கஞ்சி ரெம்பக் கெடைக்கும்... நீயென்னடா முழிக்க. கால ஒதஞ்சு சிணுங்கினாக் கஞ்சி கெடையாது.''

''சிணுங்க மாட்டென்.''

சின்னக் கழுதையின் காதுகள் பதில் சொல்லும். அனந்தி கிண்டலடித்துக் கொண்டே வேலைகளைப் பார்ப்பாள்.

"வண்ணாக்குடியில எத்தன சின்னப்புள்ளீகன்னு தெரியலயே."

அந்தக் காலமெல்லாம் போய்விட்டது. வெள்ளம் போன ஓடை மணலாகத் தலைமுடி காதுகளை மேதிப் புரளச் சிணுக்கு நடை நடந்து கொஞ்சும் குரலில் கஞ்சி கேட்கும் அனந்தி தொலைந்துபோனாள். பாதி ஆம்பளையாக மாறிவிட்டாள்.

மருதன் அப்பனைப் போலவே ஆண்டியிடம் நெருக்கமாகப் பழகினான். கஷ்டங்களைச் சொன்னான். சந்தோசத்தைப் பகிர்ந்துகொண்டான். ஆண்டிக்கு அவன்மேல் பிரியம். அவனைப் பார்க்கும்போதெல்லாம் மாரியைப் பார்க்கிற ஆறுதல். ஒரு பல் மட்டும் இல்லையென்றால் மாரியேதான். அந்தக் குறும்புச் சிரிப்பும் பேச்சுத் தோரணையும்... அப்பனுக்கு உள்வளைசல் இல்லை. ஆண்டி வயசை மறந்து பேசிக்கொண்டிருப்பான்.

ராக்கன் குணம் ஒருதினுசு. யாரிடமும் அதிகமாகப் பேச மாட்டான். சின்ன வயசிலிருந்தே மதக்கமாக இருப்பான். காட்டுக் கம்மங்கஞ்சியும் மோரும் அப்படி வளர்த்துவிட்டன. யாரும் வலியச் சண்டையிழுத்து மல்லுக்கட்டினாலுங் கூடக் கம்பாக நிற்பான். கீழே விழுந்து வலித்த பிறகுதான் லேசாக உறைக்கும். பதிலுக்கு மல்லுக்கட்டத் தோன்றாது. உடனே வீட்டு நினைவுதான் வரும்.

"இரு வீட்ல போயி மோரு குடிச்சிட்டு வாறென்."

பெரிசாகக் கறுவிக்கொண்டு போவான். பிறகென்ன கலயங்கலயமாக மோரை மண்டி முடித்தால் மல்லுக்கட்டாவது புல்லுக்கட்டாவது. மனசு முழுக்க மரநிழல்தான் படர்ந்திருக்கும்.

விளையாட்டுக்கும் அவனுக்கும் காத தூரம். பனையோலையில் கருவ முள் குத்திக் காத்தாடிகூடச் சுற்றியிருக்க மாட்டான். எளவட்டமாகும்வரை அப்படித் தான் வளர்ந்தான். அவன் மந்தம் ஆண்டிக்கு அறவே பிடிக்காது. அடிக்கடி சத்தம் போடுவான்.

"எருமமாடுகூட எப்பயாச்சும் துள்ளி ஓடி வெளையாட்டுக்காட்டும். நீ அதக்காட்டி மோசமாருக்கயே. சரி அதுதான் இல்லன்னு போச்சு. வாயில என்ன கொழக்கட்டையா இருக்குது. நாலு பேரோட பேசிப் பழகினா ஒண்ணும் கொறஞ்சு போயிறாது. மருதன் பெய வாற நேரமெல்லாம் ஒன்னயப் பத்திக் கேக்காம இருக்கானா. நீ என்னடான்னா அவன் வலியப் பேச்சுக்குடுத்தாக்கூடச் செனாச்சிட்டுப் போறயே. ஒன் வீட்ல குமிச்சுக்கெடக்கிறத அள்ளியா குடுக்கச் சொல்றான்."

அவன் வார்த்தைகளை விழுங்குவான்.

"அவங்கிட்ட என்னத்தப் பேசச் சொல்ற."

ராக்கன் நிற்க மாட்டான். ஆண்டி புழுங்குவான்.

"கள்ளி பெருத்தென்ன சிறுத்தென்ன காயுண்டா எணலுண்டா. நமக்கு அப்பேர்ப்பட்ட புள்ள வாச்சிருக்கே. இவனுக்கு எந்த மகராசிதான் வந்து எறங்கப் போறாளோ. இந்த மொரசக் கொணத்துக்குத்தான தம்பிதங்கச்சியில்லாம ஒத்தக்காவத்தியாக் கெடக்கான்."

நிலைமையும் அப்படித்தான் இருந்தது. ராக்கனுக்குப் பிறகு கருப்பி ரெம்ப வருசமாகக் குழந்தையில்லாமல் இருந்தாள். அதில் அவளுக்கு வருத்தம். நஞ் சாணியும் குஞ்சாணியுமாகப் பிள்ளைகள் திரிந்தால்தானே வீடு நிறைந்திருக்கும்.

அவள் குலதெய்வத்தை வேண்டாத நாளில்லை. ராத்திரி தலைசாயும்போது ஆயிரம் சாமிகளைக் கும்பிடுவாள்.

“இருளப்பா பதினெட்டாம்படிக் கருப்பையா புள்ளையாரப்பா மாயாவு தாரா கழுகுமலச் சுப்பையா கந்தா கடம்பா கோயிந்தா சங்கிலிக்கருப்பா வைரவா சொடலமாடா தூண்டிமாடா நொண்டிமாடா அய்யனாரப்பா மொட்டையசாமி முனியாண்டி முருகாண்டி குருவையா வாழவந்தான்... காளியாத்தா ஆயிரங்கண்ணுடையா ராக்காச்சி செல்லியாரம்மா மகமாயி சந்தியம்மா சடச்சித்தாயே வடக்கத்தியம்மா கோமதியம்மா வீரம்மா...”

உறக்கம் வரும்வரை அடுக்கிக்கொண்டேபோவாள்.

சண்டிவீரியும் நல்லானும் வருசம் ஒரு நேர்த்திக்கடனை நேர்ந்துவிட்டார்கள். வீட்டில் என்னாளும் கோயில் கிடாயும் சாவலும் தயாராக நிற்கும். அந்தக் கறி தின்றே அவர்களுக்குப் பல் தேய்ந்துவிட்டது. அப்படியும் அவர்கள் ஆசை நிறைவேறவில்லை. ஏக்கத்திலேயே ரெண்டு பேரும் அடுத்தடுத்துப் போய்ச் சேர்ந்துவிட்டார்கள்.

“எனக்கு நெய்ப்பந்தம் புடிக்க ஒரு பொண்ணடியா இல்லையே.”

நல்லானை முந்திக்கொண்ட சண்டிவீரிக்குக் கட்டையிலிருந்து உயிர் பிரியும்வரை இந்தப் புலப்பந்தான்.

ஆண்டிக்கும் கவலையிருந்தது. மகன் தன்னைப் போலவே தனியாளாக இருந்துவிடக் கூடாது. என்னதான் சொத்துசொகம் இருந்தாலும் சனச் செருக்குக் காகுமா. கருப்பிக்கொரு துணையில்லை. சகல வேலையும் அவளைச் சவட்டியெடுக்கிறது. இதுக்காகவாவது ராக்கனுக்கு ஒருத்தியைக் கொண்டு வரணும். அவனும் தயாராகத்தான் இருக்கிறான். பேச்சுத் தினுசும் முனக்கமும் வேறு மாதிரி இருக்கிறது.

## 13. இப்படியும் உண்டுமா

சடையப்பன் செட்டியார் தவறிப் போனார். சத்திரப்பட்டியிலிருந்து தகவல் வந்தது. தள்ளாத வயசுவரை எல்லாருக்கும் வைத்தியம்பார்த்த நல்ல மனுசன் போய்விட்டார். ஆண்டியைப் போல் எத்தனை பேரை நடக்க வைத்திருப்பார். ஒடிந்த கையைக் கூட வைத்துப் பல பேரை உழைக்க வைத்த மகராசன். அவரால் உயிர்பிழைத்த ஆடுமாடுகள் கொஞ்சமாநஞ்சமா. அவருக்குப் பதிலாக இனி மேல் ஒருவர் பிறந்துதான் வரணும்.

கலிங்கலூருணியில் கண்கலங்காதவர்களே கிடையாது. அவர் முகத்தைப் பார்த்துவிடணுமென்று ஆண்டி அவசரமாக ஓடினான். சத்திரப்பட்டிச் சனங்களைவிடச் சுத்துப்பட்டிக் கூட்டந்தான் அதிகம். அவரவர் கதையைச் சொல்லி அழுது ஆற்றிக்கொண்டார்கள். மலையாண்டி மட்டும் ரெம்ப நேரம் மாக்மாக்கென்று அழுதுகொண்டிருந்தான். இவன் ஏன் இப்படிக் கதறுகிறான். ஆண்டிக்குப் பிடிபடவில்லை. தகப்பன் செத்தன்றைக்குக்கூட இப்படி அழுததில்லையே. கிட்டப் போய்த் தேற்றினான்.

"என்ன சித்தப்பா இது. பழுத்த பழத்த காம்புல நிப்பாட்டிவைக்க முடியுமா. காலம் கனிஞ்சிருச்சு. கதையும் முடிஞ்சிருச்சு."

மலையாண்டி பதிலுக்கு ஏதாவது சொல்வான் என்று எதிர்பார்த்தான். அவனோ ஒண்ணும் பேசாமல் தலையிலடித்து அழுகையைக் கூட்டினான்.

செட்டியார் அவ்வளவு சனக்கூட்டத்தின் மேல் அமைதியாக மிதந்து போவதைப் பார்த்து ஆண்டி கடைசியாக ஒரு தடவை கண்கலங்கினான். மனுசனென்று பிறந்தால் இப்படி மரியாதையோடு போகணும். ஒருத்தன் சலித்துக்கொண்டான்.

"அத்தோட நின்னது அலச்சலு. கொட்டோட நின்னது கொலச்சலு."

வீடு வந்து சேர்ந்த பிறகும் கலிங்கலூருணிக்காரர்களுக்கு அவரைப் பற்றிய பேச்சு மிச்சமிருந்தது. மலையாண்டியிடம் கேட்டுவிடணுமென்று வழிநெடுக ஆண்டிக்கு உறுத்தல். மனசுக்குள் கேட்டுப்பார்த்துக்கொண்டான்.

"நான் அழுக வேண்டிய அழுகைய நீ அழுதுத்தீத்துட்டயே சித்தப்பா. அந்த மனுசன் ஒனக்கு அப்படி என்னதான் செஞ்சாரு."

கடைசிவரை அவனும் கேட்கவில்லை. மலையாண்டியும் சொல்லவில்லை.

அந்தக் கதை அவனுக்கும் செட்டியாருக்குந்தான் தெரியும்.

ஒருநாள் செட்டியார் பச்சிலை மருந்து தேடியபடி ஓடைப் பாதையில் லாத்தலாகப் போய்க்கொண்டிருந்தார். உச்சி மதியம். மருந்து தேடும் கவனத்தில் வெயில் உறைக்கவில்லை. கரைச் சரிவில் எலந்தைச் செடி மறைவிலிருந்து முக்கலும் கணறலுமாக அழுகை கேட்டது. நின்று காதுகொடுத்தார். என்னென்னமோ புலப்பம். ஒப்பாரி வைக்காததுதான் குறை.

'ஒரு ஆம்பள இப்படி அழுகிற அளவுக்கு என்ன நடந்துச்சுன்னு தெரியலயே. ஒருவேள ஆரும் அடிச்சுப்போட்டுட்டுப் போயிருப்பாகளோ.'

கிட்ட நகர்ந்து ஓரமாக எட்டிப் பார்த்தார். ஒருவன் முக்காடு போட்டு வெளிக்கிருந்தபடி குலுங்கிக்குலுங்கி அழுதுகொண்டிருந்தான். குண்டிக்கடியில் ரத்தம் களமாக உறைந்துகிடந்தது. அவருக்கு விளங்கிவிட்டது.

'அடடா இவ்வளவுக்கு முத்திப்போன மூலத்த வச்சுக்கிட்டு எப்படித்தான் நடமாட முடியிதோ.'

அவர் லேசாகச் செருமினார். அவன் அவக்தொவக்கென்று எழுந்து சமாளித்தான்.

"செட்டியாரய்யா என்ன இந்த நேரத்துல."

அவருக்கு அடையாளந்தெரிந்தது.

"எதுக்கும் கலங்காற மலையாண்டியா இப்படி வாய்வுட்டு அழுகிறது."

அவன் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

"அத ஏன் கேக்கீக. நான் படுற வேதன கடவுளுக்குத்தான் தெரியும். நெத மும் அழுத பெழப்புத்தான். ஒவ்வொரு சமயம் வலி தாங்காம உசிர மாச்சுக்கிற லாமான்னு தோணும்."

"கோட்டிக்காரா இது ஒரு வேதனையா. எத மறச்சாலும் நோய மறைக்க லாமா. நான் ஒருத்தன் இருக்கிறது மறந்துருச்சா"

அவன் தலைகுனிந்தான்.

''இதப்போயி எப்படிச் சொல்றதுன்னு ராஞ்சன.''

''அதுக்காக இப்படி நெதமும் ரத்தம் ஊத்துனா ஒடம்பு என்னாகிறது.''

''பண்ணிக் கறி ஆமெ ரத்தம்னு எல்லாப் பக்குவமும் பாத்துட்டென். கேக்கல.''

''பேசாம நாளைக்கே என் வீட்டுக்கு வந்து சேரு.''

அவனுக்கு வெளிமூலம் சாணைக்கிழங்காகப் பண்ணைவைத்து முளைத் திருந்தது. அவர் கொஞ்ச நாள் மருந்து கொடுத்தார். முளை மடங்கிக் கரைவதாக இல்லை. அவருக்கு எரிச்சல். யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்.

''எங்கூட வா. இண்ணைக்கு ரெண்டுல ஒண்ணு பாத்துறணும்.''

அவனைக் கம்மம் புஞ்சைக்குள் கூட்டிக்கொண்டுபோய்க் குப்புறப் படுக்க வைத்தார். மனசை அடக்கிக்கொண்டு ரெண்டு கையால் குண்டியை அகலித்துப் பிடித்துக்கொண்டு முகத்தை ஆழத்துக்கு அமுக்கி மூலமுளையைக் கவ்வி வேரொடு பிடுங்கித் துப்பிவிட்டுப் பெருமிதமாகச் சொன்னார்.

''எம் மருந்துக்குச் சொன்னபடி கேக்கலன்னா இதுதான் கெதி.''

மலையாண்டி எழுந்து ரத்தச் சுளையாகக் கிடந்த மூலமுளையைப் பார்த் தான். கண்ணீர் பொங்கியது. நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்தான்.

''நீங்க நல்லாருக்கணும் சாமி. ஒங்க புள்ளகுட்டிக பெழச்சுக்கெடக்கணும்.''

அதுக்குப் பிறகு அவன் ஊருக்குள் நாலு பேரைப் போல் நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தான். அதே சூட்டிக்கையில் அவருக்கு வேட்டி துண்டு எடுத்துக்கொடுத் தான். நடந்த சங்கதி வேறு யாருக்குமே தெரியாது. அவன் ஒவ்வொரு தைப் பொங்கலுக்கும் வாழைப்பழத் தாருடன் சத்திரப்பட்டிக்குப் போய் அவரைச் சந்திப்பதை வழக்கமாக்கிக்கொண்டான். அன்னியோன்னியமாகப் பழகி னார்கள்.

கருப்பியிடம் ஆண்டி மாய்ந்துமாய்ந்து சொல்லிப் பெருமைப்பட்டான்.

''அதென்ன சாவா கோயிலுத் திருழாவா. நிக்கிறதுக்கு எடமில்ல.''

கருப்பி அவன் பேச்சைக் கேட்கிற நிலையில் இல்லை. முகம் வாடிப் போயிருந்தாள்.

''ஏம்பிளி எதுக்கு ஒருமாதிரியா இருக்க.''

அவள் மழுப்பினாள்.

''ஒண்ணுமில்ல.''

''ஒருநாளும் இப்படி இருக்க மாட்டயே. பெயலுக்குப் பொண்ணுபாத்துக் காலுகூட்டிவுடணுமேன்னு கவலையா. எல்லாம் தன்னால நடக்கும்.''

''அதொண்ணும் பெரிய காரியமில்ல.''

''பெறகெதுக்கு என்னத்தவோ பறிகுடுத்த மாதிரி பரக்கப்பரக்க முழிக்க.''

''கொமட்டிக்கிட்டுப் படபடன்னு வருது.''

''புடிக்காறதத் தின்னுட்டயா.''

''எதுமே புடிக்க மாட்டங்குது.''

''பித்தம் மேலாடியிருச்சு.''

''அதெல்லாமில்ல.''

''பெறகு என்னதான் நோக்காடு.''

அவளுக்கு யோசனையான யோசனை. சொல்லாமலும் இருக்க முடியாது.

''எனக்கு வெக்கமாருக்கு இவனே...''

''குஞ்சிக் கொமரிக்கு அப்படியென்ன வெக்கம் புடுங்கித்திங்கிது.''

''முழுகி மூணு மாசமாச்சு.''

அவன் திகைத்துப்போனான்.

''ஏம்பிளி நெசந்தானா. ஒருவேள ஒரேயடியா நின்னுபோச்சோ என்னமோ.''

''எனக்கொண்ணும் அவ்வளவுக்கு வயசாகல. பெரிய எளவட்டம் காரணம் கண்டுபுடிச்சிட்டாரு. இது வேற காரணம்.''

''அப்படின்னா சொல்ற.''

''அப்படியேதான் ஆக்கங்கெட்டவனே.''

''அதுக்குப்போயி ஏன் வருத்தப்படணும் அறிவுகெட்டவளே.''

''பேரன்பேத்தி எடுக்கப்போற காலத்துல புள்ளையப் பெத்துச் சீராட்டி யிட்ருந்தா நல்லா மெச்சிக்கிருவாக. அருவமில்லாமக் கழிச்சிருவமா.''

சந்தோசத்தில் பேச்சடைத்திருந்த ஆண்டிக்குக் கோவம் வந்துவிட்டது.

''கூறுகெட்ட கழுத பேசுறதப் பாரு. இம்புட்டு நாளைக்குப் பெறகாச்சும் நமக்குப் புள்ளையக் குடுத்துருக்கே தெய்வம். அதச் சொல்லு. ஊருல இல்லாற வெக்கத்துக்குப் போயிட்டா.''

அவளுக்கு வயசு திரும்பியது.

''அதான. அடுத்த கழுதைகளுக்குப் பெயந்துக்கிட்டு அலையணுமாக்கும். எனக்கென்ன நாச்சியாளுக்கு. எத்தன புள்ளன்னாலும் பெறுவென்.''

''இப்பப் பேசுறயே இது பேச்சு.''

''அதது மூணு வருசத்துல நாலு பெத்துப் போடுதுக பள்ளையாடு மாதிரி. ஒண்ண வச்சுக்கிட்டு நான் ஏன் கழிக்கணும். அஞ்ஞாடி அது பாவமாக்கும்.''

''ஏண்டமட்டும் வேலையப் பாரு. கனத்த பண்டம் தூக்காத. எல்லாம் ராக்கன் பாத்துக்கிருவான். வீட்டு வேலைக்கு ஒரு புள்ளையப் பாத்துருவொம். அந்த வேல கெடக்குது இந்த வேல கெடக்குதுன்னு பொலம்பீட்டுத் திரிஞ்ச அடிதான் வுழுகும்.''

''அடிச்சிருவயோ.''

''வேணாம் தாயி. சும்மாருந்தாப் போதும்.''

அன்றைக்கிலிருந்து அவள் வயிற்றைத் தடவிப்பார்க்க ஆரம்பித்தாள். வீட்டில் பால்நெத்திலியும் நல்லெண்ணெயும் வந்து இறங்கின. அவள் மஞ்சள் குளித்து முழுகித் தளதளப்பானாள். ஆண்டி அவள் கேட்ட பண்டமெல்லாம் கொண்டுவந்து கொடுத்தான். திடீரென்று அருந்தலான பண்டம் வேணுமென்பாள்.

''எனக்கு மலெ எலந்தப்பழம் வேணும் இவனே.''

அவனும் சளைக்காமல் தேடிப்பிடித்துக் கொண்டுவருவான். அவள் வயிற்றுக்குள் குழந்தை வளரும் சித்திரத்தை நிதமும் அவனிடம் காட்டிப் பூரித்துப் போவாள்.

''நம்ம பிஞ்ச வரிசப் பனையோரம் இறுகிப்போன தரையில காளான் முண்டி வரவர மண்ணு விரியும் பாரு அப்படி வகுறு எளக்கங்குடுத்துட்டே

வருது. வகுறு பெரிசாருக்கிறதப் பாத்தா பொம்பளப் புள்ளதான் பெறக்கும் போலருக்கு.''

''ஆம்பள பெறந்தா வேணாம்னு சொல்லீருவயா.''

''நமக்கு எப்படிக் குடுத்துவச்சிருக்குதோ.''

ராத்திரி ஆண்டியால் உறங்க முடியாது. ''ஏ இவனே அங்க முண்டுது இங்க முண்டுது. அஞ்ஞாடி என்னமா ஒதைக்குது'' கதைதான். அவள் உறங்கணுமென்றால் வயிற்றை இதமாகத் தடவிக்கொடுக்கணும்.

அனந்தி அப்பப்ப வந்து பேசி தைரியம் சொல்லிவிட்டுப் போனாள். கட்டைப் புளியமரத்திலிருந்து மருதன் பறித்துக் கொடுத்த பூவையும் பிஞ்சையும் பத்திரப் படுத்தி வைத்திருந்து கொண்டுவந்து கொடுத்தாள். இப்படியொரு பொம்பளை வீட்டில் துணைக்கிருந்தால் ஏந்தலாக இருக்கும். என்ன செய்வது அவளை நம்பி ஊரும் அவள் குடும்பமும் இருக்கிறதே. ஆசை அடங்கிவிட்டது.

ஏற்கெனவே கலியாணத்துக்கு நோங்கிக்கொண்டிருந்த ராக்கன் அஞ்ஞை உண்டாகியிருப்பதால் நெருக்கவில்லை. குழந்தை பிறக்கட்டுமென்று இருந்து விட்டான். அவனுக்குங்கூடத் தம்பியையோ தங்கச்சியையோ அள்ளிச் சீராட்டப் போகும் சந்தோசம் அடிமனசில் குமிழடித்தது. அதனால் எளவட்டங்களின் நக்கலைச் சட்டைசெய்யவில்லை.

கருப்பியைப் பெண்கள் கேலிசெய்தார்கள்.

''ஆண்டிக் குடும்பன் வீட்ல ரெண்டு தொட்லு ஆடும்.''

''மாமியா ஒரு பக்கமும் மருமக ஒரு பக்கமும் உக்காந்து ஓறக்காட்டுவாக.''

அவள் விட்டுக்கொடுக்கவில்லை.

''ஆறுமடி அஞ்சு தொட்லுகூட ஆடும். பீத்துணி கழுவுறதுக்கு வாறயா குறுணி கொத்துத் தாறென். இல்ல பதக்கு வேணுமா.''

''ஒங் கொத்து ஆருக்கு வேணும். அளந்துபோயா கெடக்காக.''

''அடியே சிலுப்பட்டக் கழுத நீ இடுப்புல ஒண்ணும் வகுத்துல ஒண்ணும் சொமந்துக்கிட்டு லோல்பட்டது தெரியாதா. ஒதட்டுக்கு மிஞ்சின பல்லு ஆகாதுடி. என்னமும் பேசுன இழுத்துப் புடிச்சு அத்தன பல்லவும் தட்டி நொறுக்கீருவென்... சோத்துப் பான ஒட்ஞ்சா மாத்துப் பான இல்லாற உசிருகெல்லாம் பேச வந்துருச்சுக.''

இனிமேல் எவளாச்சும் வாயெடுப்பாளா.

''அஞ்ஞாடி கருப்பிக் குடும்பச்சி வாற வருத்தப் பாரு. பெயமால்ல இருக்கு.''

முணுமுணுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அப்படியும் கருப்பி விட வில்லை. பின்னாலேயே வசவை அனுப்பினாள்.

''அன்னு கண்டத அடுப்புல போடு ஆக்கின பானைய தோளுல போடுன்னு நக்கீட்டுத் திரியிற நாயிக முக்கி மொனங்கீட்டுப் போறதப் பாரு. அடியே குருத வாலுவீச்சு குருதமட்டுந்தான். கிட்ட வந்தா ஒட்ட நறுக்கீருவென். நல்லாத் தெரிஞ்சுக்கோ.''

அனந்தியிடம் பேசித்தீராமல் கருப்பிக்கு உறக்கம் வராது. ரெண்டு நாள் அவளைக் காணவில்லையென்றால் ஆண்டிக்கும் சேர்த்து வசவு கிடைக்கும்.

''அந்தக் கழுத எட்டிப் பாத்து எத்தன நாளாச்சு. ஒரு ஆத்தரம் அவசரத்துக்கு நமக்கு ஆரு இருக்காக. ஆம்பளைக்குத் தெரிய வேணாமா.''

அவன் வண்ணாக்குடிக்குப் போய் அனந்தியைக் கையோடு கூட்டி வருவான்.

''நல்லாருப்ப தாயி. ஒரெட்டு வந்து என்னன்னு கேட்டுட்டுப் போயிரு. இல்லன்னா எனக்கு வீட்ல குடியிருப்பில்ல. இத்தன கோடி பொம்பளைக இருக்கயில நீதான் வேணுமாம்.''

அனந்தி வேலைகளை அப்படியப்படியே போட்டுவிட்டு ஓடிவருவாள். அவளை வைதுதீர்க்காமல் கருப்பிக்கு மனசு ஆறாது.

''தமத்துக்கா சொன்னான் கழுத மோத்தரத்த நம்பிக் கெட்டுச்சோத்த அவுக்கப்புடாதுன்னு. பண்ணக்காரிக்கு வேல தீரலயாக்கும். இந்தப் பக்கம் எட்டிப் பாக்காமக்கூட அப்படியென்னடி வேல.''

''அஞ்ஞாவுகளக்காட்டி முக்கியமான வேல வேறென்னருக்கு. ஓங்க சீலையத் தொவச்சுக் காயப் போட்ருக்கென். அதக் கொண்டுட்டு வரலாம்னு தாயமாட்டுப் பண்ணீட்டென்.''

கருப்பிக்குக் குளிர்ந்துபோகும்.

''அடியே வகுத்துக்குள்ள புள்ள திரும்புன மாதிரி தெரியிது. கொஞ்ச நாளைக்குள்ள பெறந்துருமோ.''

''அஞ்ஞாவுகளுக்கு நாளைக்கே பெறந்தாலும் சந்தோசந்தான்.''

அனந்தி அடிக்கடி விளக்கெண்ணெய் தடவி வயிற்றை இளக்கி கூடிக் குமிய வைத்தாள். கால் வீக்கத்தைக் குறைத்தாள். செய்யாத பக்குவமில்லை. அதனால் தான் கருப்பியால் அழுந்தாமல் கொள்ளாமல் பெண் குழந்தை பெற்றெடுக்க முடிந்தது.

சொகமாகப் பிறந்ததில் ஆண்டிக்கு நிம்மதி. பயந்துகொண்டிருந்தான். பெரிய உயிருக்கு என்னமும் ஏதும் ஆகிவிடக் கூடாதே. அந்தச் சந்தோசத்தில் மற்றவர்களின் கிண்டல் காதில் விழவில்லை.

பதினாறு வருசம் கழித்துக் குழந்தை பிறந்ததைப் பற்றி ஆச்சரியமாகப் பேசிக்கொண்டார்கள்.

''இப்படியும் நடக்கிறதுண்டுமா.''

''எப்படித்தான் புள்ளைய வளக்கப்போறாகளோ.''

கருப்பிக்கு மார்புக் காம்புகளில் தூர்ந்து கிடந்த பால் கண்கள் குறுகுறுத்து விறுவிறுத்துத் திறக்கக் கொஞ்ச நாளானது. பிறகு என்னேரமும் மடைதிறந்து குழந்தையைத் திணறடித்துக்கொண்டிருந்தது.

ஆண்டியின் குடும்பத்துக்கு இருளப்பசாமிதான் குலதெய்வம். சங்கரன் கோயிலுக்கு மேற்கே சில்லாங்குளத்தில் குடியிருப்பு. பூர்வீகமாக அதைத்தான் கும்பிட்டுவந்தார்கள். தூரமானதால் மூணு வருசத்துக்கொரு முறை போவார்கள். அந்த வழக்கத்தை மாற்றியாகணுமென்று கருப்பி கட்டாயப்படுத்தினாள்.

''வருசாவருசம் கும்புடாறது குத்தம். அதனாலதான் சாமி இம்புட்டு நாளா சோதனையக் குடுத்துருச்சு. இனிமே ஒவ்வொரு வருசமும் இருளப்பன் சன்னதிக் குப் போயாகணும்.''

கலிங்கலூருணியில் இருளப்பசாமிக்குப் படிமாத்துக்காரர்கள் பத்துக் குடும்பம் உண்டு. ஆண்டி அவர்களைக் கலந்துபேசினான். கொக்கன் யோசனை சொன்னான்.

“நம்ம அம்புட்டுத் தொலவட்டு போறதக் காட்டி அங்கருந்து புடி மண்ணு எடுத்துட்டு வந்து இங்கயே கோயிலு உண்டாக்கிக் கும்புடுவமே.”

எல்லாரும் அதுக்கு ஒத்துக்கொண்டார்கள். ஆண்டி வீட்டிலிருந்து ரெண்டு கூடார வண்டி கிளம்பியது. வண்டி நிறைய பெண்கள். அரிவாள் கம்புடன் காவலுக்கு ஆண்கள். கூடாரத்தில் கட்டிய தொட்டிலை இறுகப் பிடித்திருந்த கருப்பி கலியாணப் பெண்ணாக உட்கார்ந்திருந்தாள். காதும் கழுத்தும் பிடிக் காமல் நகைகள். பாம்படம் தண்டட்டி முடிச்சு கொப்பு முருகு கொன்னப் புத்தட்டு பச்சைக்கல் பேசிறி பதக்கம் சங்கிலி காசுமாலை கடலைக்காய்மணி காப்பு தண்டை மிஞ்சி... அடேயப்பா சாமியலங்காரம் தோற்றுப்போகும்.

அந்த காலத்தில் கள்ளர் பயம் ரெம்ப. வழிப்பறிக் கொள்ளைக்குப் பஞ்ச மில்ல. எந்த ரூபத்திலும் வருவான். நல்லவன் மாதிரி பேச்சுப் போட்டுக்கொண்டு வழித்துணைக்கு வருவான். ஆழம்பார்த்துவிட்டு இடைவழியில் கத்தியை உருவி கொதவளைக்கு நேரே காட்டி காரியத்தை முடித்துக்கொண்டு போய்விடுவான். ஒளிந்திருந்து அலறி அதட்டி மிரள வைத்து அகப்பட்டதைப் பறித்துக்கொள் வான். கூட்டமாக வந்து கொள்ளையடிப்பதும் உண்டு. சும்மா ஒரு பாதுகாப்புக் காகத்தான் ஆயுதங்களை வைத்துக்கொள்வது கள்ளர்களிடம் பாச்சா பலிக்காது. அடி வாங்கி ஆயுதங்களையும் பறிகொடுத்த சம்பவம் நிறைய உண்டு. சொந்த ஊரில் நடக்கும் தீவட்டிக் கொள்ளையையே தடுக்க முடியாது. வந்த இடத்தில் வழிப்பறிக் கொள்ளையை என்ன செய்வது. ஜனங்கள் பிழைப்பு அப்படித்தான் இருந்தது. இருளப்பசாமி புண்ணியத்தில் அன்றைக்கு எதும் நடக்கவில்லை. உயிரைக் கையிலேந்திக்கொண்டுதான் கோயில் போய்ச் சேர்ந்தார்கள்.

சில்லாங்குளத்துக்குப் போய்ச் சாவல் கிடா வெட்டிப் பொங்கல்வைத் தார்கள். இருளப்பசாமியைக் கும்பிட்டுக் குழந்தைக்கு மொட்டையெடுத்து பூப்போட்டுப் பார்த்து வீரம்மா என்று பேர் விட்டார்கள். நல்லானும் சண்டி வீரியும் பாக்கிவைத்திருந்த நேமிக்கம் அத்தனையும் செல்லக்கட்டியாயிற்று. இதையெல்லாம் கண்குளிரப் பார்க்க அவர்களுக்குக் கொடுத்துவைக்கவில்லை.

திரும்பும்போது இருளப்பசாமி சன்னதியிலிருந்து பிடிமண் எடுத்துவந் தார்கள். கோணிகுளத்துக்குக் கிழக்கே கரைச் சரிவில் விளாமரத்துக் கிணற்றுக்குத் தென்புறம் பீடம் கட்டி உருவம்செய்து தனிக்கோயில் உண்டாக்கினார்கள். வடகாட்டு ஏகாளியை வரவழைத்து உருப்போட்டுப் பூசைசெய்து நல்ல நாட் களில் விளக்கேற்றினார்கள்.

வீரம்மா பிறந்த புண்ணியத்தில் ராக்கனுக்குக் கலியாணங்கூடியது. சித்திரையில் பருசம்போட்டு வைகாசியில் நடந்தது. பெண் சொக்கம்மா. உள்ளூர்க்காரி. கருப்பிக்குக் கொடிவழிச் சொந்தம். வசதியில்லாத குடும்பம். ராக்கன் அவளைத்தான் கட்டுவேன் என்று முரண்டுபிடித்தான். ஆண்டி எவ் வளவோ சொல்லியும் கேட்கவில்லை. கடைசியில் அவன் பிரியம் என்று விட்டு விட்டான். இருந்தாலும் ஒரு விதத்தில் சந்தோசம். மகனை இவ்வளவுக்குப் பேச வைத்திருக்கிறாளே ஒரு மகராசி. அது பெரிய காரியந்தான்.

‘‘ இவனுக்குக் கழுத்த நீட்டிக் காலந்தள்றதுக்குத் தயாராருக்காளே ஒருத்தி அதச் சொல்லணும்.’’

சொக்கம்மா ரெம்ப நாள் வெற்று மனுசியாக இருக்கவில்லை. தலைப் பிள்ளை ஆண். பேர் பொய்யாளி. பிறந்ததிலிருந்து சஞ்சலப்பட்டவன். கருப்பி மட்டும் கண்ணும் கருத்துமாகப் பக்குவம் பார்க்கவில்லையென்றால் அவனை மண்கரையான் தின்று குழியில் கரடு முளைத்திருக்கும். அவனைப் பற்றிக் கிண்டலாக விசாரிப்பார்கள்.

‘‘என்ன கருப்பிக்குக் கடக்குட்டிப் பெய எப்படியிருக்கான்.’’

அவள் பெருமை பீத்துவாள்.

‘‘எம் பேரனுக்கென்ன ராசாவுக்கு. முத்துப்போல திரியிறான். ஒங்க பொண்ணுகள வலியக் கொண்டுவந்து தள்ளுனாலும் சீந்த மாட்டான்.’’

அவள்தான் பேரனை என்னமாக வளர்த்திருக்கிறாள். கோழிக்குஞ்சுபோல் அணைத்தணைத்து உறங்க வைத்த நாட்கள் கொஞ்சமா. அவன் பண்ணாத சேட்டையில்லை. ஒருதடவை அவனைத் தலைக்கு மேலே தூக்கி அண்ணாந்து கொஞ்சும்போது சரியாக அவள் வாயில் மோண்டுவிட்டான். அவள் பதட்டப் படவில்லை. மோண்டு முடிக்கும்வரை வாயைத் திறந்துகாட்டிவிட்டுக் கொப் புளித்துத் துப்பினாள். ஆண்டிக்கு அவளை நொறுக்கிக் குமிக்கணும் போலிருந்தது.

‘‘நீயென்ன எரும மாட்டுப் பெறவியா.’’

‘‘ஒனக்கு ஒண்ணும் தெரியாது. புள்ளையப் படக்னு எடுத்துட்டா மோத் தரத்த அடக்கீரும். சூசுவான்னு கெடக்கயில அது வேற தும்பமா.’’

‘‘கிறுக்குச் சிறுக்கிமககிட்டப் போயி எவன் பேசுவான்.’’

அவன் கொட்டாரத்துக்குப் போய் தன்னால் சிரித்துக்கொள்வான்.

‘‘இந்தக் கோட்டிக் கழுத இல்லன்னா சொக்கம்மா கத ஒரு நாளைக்கு ஓடியடையுமா.’’

இது எவ்வளவோ மேல். பொய்யாளி இதைவிட மோசமான கூத்தெல்லாம் நடத்தியிருக்கிறான். ஒரு நல்லநாளன்று கருப்பி கும்பா நிறைய நெல்லுச் சோற்றில் பருப்பாணம் ஊற்றி ஆசையாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். அவன் கிட்ட வந்து நின்றமானக்கிக் கும்பாவில் மோண்டுவிட்டான். சொக் கம்மா ஓடிவந்து அவனை அடித்தாள்.

‘‘சனியனே ஒனக்கு மோத்தரக் குடுக்க அந்துபோச்சா.’’

அவன் வண்டு மாதிரி இரைய ஆரம்பித்தான்.

‘‘பேத்தி அஞ்ஞு அடிக்கா.’’

கருப்பி அவனை மடியில் வைத்து அமர்த்தியபடி அதே சோற்றைப் பிசைய ஆரம்பித்தாள்.

‘‘சின்னப் புள்ளைக்கென்ன தெரியும். அதப் போட்டு அடிக்கலாமா.’’

‘‘மாமி மாமி அதச் சாப்பிட வேணாம். வேற சோறு போட்டுட்டு வாறென்.’’

‘‘சோறு வேணும்னா நான் போட்டுக்கிருவென். நீ போயி உண்டான வேலையப் பாரு.’’

அவள் சாப்பிட்டு முடித்த பிறகு உம்மென்றிருந்த பேரனைப் பார்த்தாள்.

‘‘பருப்புக்கு உப்புக் கொஞ்சம் கூடிப்போச்சுடா.’’

பிறகெல்லாம் வீட்டில் பருப்பாணம் வைக்கும் நாளில் ஆண்டி கிண்டலடிப்பது வழக்கமாகிவிட்டது.

கருப்பி இருக்கும் தெம்பில் சொக்கம்மா குடும்பத்தைப் பெருக்கினாள். ரெண்டாவது வீரமுத்து பிறந்தான். தம்பி பிறக்கவும் பொய்யாளி சவலையாகி விட்டான். வயிறுவைத்து முகம் வீங்கிப்போனான். என்னேரமும் நைநை என்று அழுகைதான். கூப்பிட்டால் தேய்ந்த குண்டியுடன் நடந்து வருவதற்குள் விடிந்து விடும்.

பெருந்தீனி தின்றுவிட்டு வீட்டைச் சுற்றிக் குப்பையடித்ததுபோல் வரிசை பிடித்துப் பேண்டுவைப்பதுதான் அவனுக்கு வேலை. அக்கம்பக்கம் பார்த்துக் கொண்டு வீட்டுக்கு ஆள் வர முடியாது. ஆண்டி நின்று முறைப்பான்.

''ஒங்கப்பன் காட்ல குப்பையடிக்கான். நீ வீட்ல அடிக்கயாக்கும்.''

அவன் அப்பச்சியைச் சட்டைசெய்யாமல் பேத்தியிடம் போவான். அவள் குண்டிகழுவித் துடைத்துவிடுவாள். நாள் முழுக்க முந்திச்சீலை ஈரமாகவே இருக்கும். ராத்திரி ஊர் உறங்கும்போதுகூட அவள் ''தோ தோ'' என்று நாயைக் கூப்பிடும் சத்தம் கேட்கும்.

அவனைத் தேற வைக்க அவள் ஒரு பாடா பட்டிருக்கிறாள். கக்கிக்கொடுத்து வளர்க்கும் காக்கா தோற்றுப்போகும். நாலு மின்னிக்காய் கிடைத்தால்கூட மெனக்கிட்டு முந்தியில் முடிந்து கொண்டுவருவாள்.

சொக்கம்மா வீரமுத்துக்குப் பிறகு மூணாவது பெண் குழந்தை பெற்றாள். அப்பிராணிப்பிள்ளை. கருப்பி அவளைப் பற்றி அடிக்கடி சொல்வாள்.

''எங்க வடிவு தெப்பப் பசுவாக்கும்.''

மேலும் வதவதவென்று குழந்தைகள் இருந்தால்கூட நல்லதென்று ஆண்டிக்கு நினைப்பு. வளர்த்துவிடக் கருப்பி இருக்கிறாளே.

## 14. மஞ்சணத்திப் பூக்கள்

வீரம்மா கருப்பிக்கு முதல் பேத்தி. சொக்கம்மாளுக்கு மூத்த மகள். பிள்ளைகளை ஊட்டி வளர்த்தார்கள். தொட்டிவீட்டுக் கண்ணுக்குட்டிகள் துள்ளி விளையாடுவதைப் பார்த்து ஆண்டியின் மனசு துள்ளியது.

வீரம்மா புதுசாக ''அண்ணஞ்ஞு'' என்று பாசமாகக் கூப்பிடும்போதெல்லாம் சொக்கம்மாளுக்குச் சந்தோசம் தாங்காது. இதைக் கவனித்த ராக்கன் கேட்டான்.

''இதென்ன புது ஒறவாருக்கு. அப்ப நீ எனக்கு என்ன வேணும்.''

''வெளக்கமாரு வேணும். பெரிசாக் கண்டுபுடிச்சிட்டாக. புள்ள பிரியமாக் கூப்புட்டுட்டுப் போகட்டுமே.''

''சின்னப் புள்ள கூப்புடுறதுல பெரிய புள்ளைக்கு ஒரு சொகம்.''

''அப்படியே வச்சுக்கயேன்.''

பிறகு அவனே சித்தப்பனாக மாறிவிட்டான்.

வீரம்மாளும் சரி வெள்ளாடும் சரி. எந்த நேரமும் அசைபோடணும். எதையும் கழிப்பில்லாமல் தின்பாள். சின்ன மடியில் பண்டம் தொங்கிக்கொண்டேயிருக்கணும். ராத்திரி உறக்கத்தில்தான் வாய் சும்மா கிடக்கும். விடிந்தும் விடியாமல்

முட்டைப் பணியாரத்தைக் கவ்விக்கொண்டு ஓடுவாள். எருமைப் பாலைக் கொப்புளித்துக்கொப்புளித்துக் குடிப்பாள். வயசுக்கு மீறின வளர்ச்சி.

அவளுக்கும் பொய்யாளிக்கும் ஏழாம் பொருத்தம். சதா சண்டைதான். அவன் ஒருவார்த்தை சொல்வான்.

''வழிய வுடு கடகாப்பொட்டி.''

அவள் பத்து வார்த்தை அடுக்குவாள்.

''வெலகிப் போடா நோஞ்சான் தேஞ்சான் சிவிஞ்சான் தேவாங்கு...''

''நீதான் அம்மி ஒரலு குலுக்க அண்டா குண்டா மரக்கா...''

சண்டை விளைந்து வழக்கு கருப்பியிடம் போகும். அவள் தீர்த்துவைக்காத வழக்கா. ரெண்டு பக்கமும் பலமான விசாரணை நடக்கும். பொறுமையாகக் கேட்டுவிட்டுப் பொய்யாளியைக் கூப்பிடுவாள்.

''கிட்ட வா நீ. ஒன்னயத் தேஞ்சான்னா சொன்னா.''

''நோஞ்சான்னும் சொன்னா.''

''நல்லாச் சாப்பிட்டுத் தாட்டிக்கமாருந்தாச் சொல்லுவாளா.''

''சொல்ல மாட்டா.''

''அப்ப என்ன செய்யணும்.''

''நல்லாச் சாப்பிடணும்.''

''இப்பயே போயிக் கஞ்சிப் பானைய உண்டுல்லன்னு பாரு.''

அதுக்குமேல் நிற்பானா. பிறகு வீரம்மா வருவாள்.

''ஒன்னய என்ன சொன்னான்.''

''ஒரலு குலுக்கன்னு.''

''ஒரலும் குலுக்கையும் ஓடுமா.''

''நிக்கும்.''

''நீ ஓடுவயா.''

''நல்லா ஓடுவென்.''

''அப்ப நீ குலுக்கயில்ல. நம்ம வீட்டு வீரம்மா... எங்க ஓடு பாப்பொம்.''

அவள் தெரு நிறையத் திங்குதிங்கென்று ஓட்டம்பிடிப்பாள். அந்த அசைவு கருப்பிக்குள் விதவிதமாக ஆட்டம்போடும்.

இனிமேல் வீரம்மாளைப் பிடிக்க முடியாது. வாயாடி முடித்து எப்போது வீடு திரும்புவாளோ. ஓயாத விளையாட்டு. தட்டாங்கல் பண்ணாங்குழி குந்தி என்று காலும் கையும் சும்மா இருக்காது. சொவட்டுப் பிள்ளைகளுடன் கும்மரிச்சம் போடுவாள்.

ஆண்டி மகளுக்குச் செய்துகொடுக்காத விளையாட்டுச் சாமான் கிடையாது. ஆசாரியிடம் சொல்லி மரத்தில் உரல் உலக்கை சுளகு பானை சட்டி அம்மி திருகை எல்லாமே வந்து இறங்கியது. விளைந்த மஞ்சணத்தி மரத்துக்காக அவன் அலைந்த அலைச்சல்தான் கொஞ்சமா. கலப்பைக்குத்திக்கு நாட்டுக்கருவலைச் சம்பாரிக்கக்கூட அப்படிக் கஷ்டப்பட்டிருக்க மாட்டான். அதுக்காகக் கருப்பியிடம் மருந்து கேட்டான்.

''நடந்துநடந்து நாக்குத்தள்ளிப்போச்சு. கோழிச்சாறு குடிச்சாத்தான் மேலு வலி தீரும். நாளைக்கே ஒரு வெடையத் தட்டிக்குடுத்துரு.''

கருப்பி முறைத்தாள்.

‘‘ஊருப்பட்ட காடெல்லாம் ஓடிஓடி வெதைக்கத் தெரியிது. புள்ளைக்காக அலஞ்சா வலிக்குதோ. கருவாட்டுச் சாறுகூடத் தர மாட்டென்.’’

‘‘இருஇரு பெறகு பேசிக்கிறென்.’’

‘‘நல்ல தட்டாங்கல்லு வேணும்னு புள்ள கேட்டு எம்புட்டு நாளாச்சு. அதப் பெறக்கீட்டுவரத் துப்பில்ல. நமக்கு வாயி மட்டும் இல்லன்னா நாயிகூடச் சீந்தாது. இண்ணைக்குக் கொண்டுவந்து குடுத்தாத்தான் வீட்ல கஞ்சி. இல்ல வண்ணாக்குடிக்குப் போயிக் கையேந்த வேண்டியதுதான்.’’

‘‘ஒனக்கு வண்ணாக்குடிக் கஞ்சின்னா அம்புட்டு எளக்காரமாப் போச்சா. அதுக்குக் குடுத்துவச்சிருக்கணும்.’’

‘‘ஆரு கண்டது. அனந்தியிட்ட வாங்கிக் குடிச்சாலும் குடிச்சிருப்ப. அவ வரட்டும் வெசாரிச்சுக்கிறென்.’’

ஆண்டியின் நினைவெல்லாம் மாரி நிறைந்திருந்தான். முனங்கிக்கொண்டே நடந்தான்.

‘‘அந்தக் கத அவளுக்கும் தெரியாது இவளுக்கும் தெரியாது.’’

அவர்கள் பேச்சைக் கவனித்துக்கொண்டிருந்த ராக்கனுக்குச் சுதாரிப்பு வந்தது. உடனே ஓடைப்பக்கம் போய் வழுவழுத்த கல்லாகப் பொறுக்கி வந்தான். வீரம்மா மடிகூட்டி வாங்கிக்கொண்டாள். ஆண்டிக்கு உள்ளூரச் சந்தோசம்.

‘‘அடபுலே தங்கச்சிமேல பாசத்தப் பாரு.’’

கருப்பி பெருமையாகச் சொன்னாள்.

‘‘அது மட்டுமா. மகளுக்கு லச்சணமான மரப்பாச்சியும் செஞ்சு கொண்டு வந்துருக்கான்.’’

வடிவுக்கு மரப்பாச்சியைக் கொஞ்சி விளையாடவே சரியாக இருந்தது. அதுக்கு மஞ்சள் தேய்த்துக் குளிப்பாட்டித் துணிமணியுடுத்திப் பொட்டு வைத்துச் சீராட்டிக் குழறிக்குழறி உறக்காட்டுவாள்.

‘‘கண்ணே ஒறங்கு
காலுமேல படுத்தொறங்கு
பொன்னே ஒறங்கு
பூப்போல படுத்தொறங்கு.’’

குழந்தை விரைவிலேயே கண்ணயர்ந்துவிடும். மெல்லத் தூக்கித் துணிப் பாயில் கிடத்தி அருகில் படுத்து அணைத்தபடி அவளும் உறங்கிவிடுவாள்.

வீரம்மா தட்டாங்கல் விளையாடும் சொகமே தனி. ராகம்போட்டுக் கல் பரத்தி விளையாட்டை ஆரம்பிப்பாள்.

‘‘கட்டுமுட்டாங் காலெடு
கணங்காலப் பேத்தெடு
தொட்டகல்ல எடுக்காத
தொடையப் புடுங்கீருவென்
வச்சகல்ல எடுக்காத
வாரீட்டுப் போயிருவென்.’’

கல்லைச் சிலுப்பும்போதும் ஏந்தும்போதும் கையசைவில் ஒரு தளுக்கு. குரங்குக்கல் விளையாட்டில் உயரப் பறக்கும் கல்லைக் கொத்திப் பிடிக்கையில் கண்கள் உருளும் அழகைப் பார்க்கப்பார்க்க மனசு கிறங்கும்.

நிலாக் காலத்தில் பூசணிப் பழம் தூக்கி விளையாடினால் அவள் கொஞ்சிக் கொஞ்சிப் பாடுவதுதான் தனித்துக் கேட்கும்.

''சித்தகத்திப் பூவே மெல்லவந்து மெல்லப்போ
செவ்வரளிப் பூவே மெல்லவந்து மெல்லப்போ
துத்திப் பூவே மெல்லவந்து மெல்லப்போ
தும்பப் பூவே மெல்லவந்து மெல்லப்போ
மஞ்சணத்திப் பூவே மெல்லவந்து மெல்லப்போ
மாதுளம் பூவே மெல்லவந்து மெல்லப்போ...''

அடுக்கடுக்காகப் பூக்களைத் தொடுத்துக்கொண்டே போவாள். ஆரவாரமில்லாத ராகம் மனசைச் சுண்டியிழுக்கும்.

வீட்டுக்குள் பூரித்துக்கிடக்கும் ஆண்டியின் குரல் கருப்பியைத் தேடும்.

''ஏம்பிளி ஏம்பிளி இந்தப் புள்ள இம்புட்டுப் பூவும் எங்கருந்துதான் சம்பாரிச்சதோ.''

''அஞ்ஞாடி இப்படி மூச்சடக்கிப் படிக்காளே. ஒருநேரம்போல ஒருநேரம் இருக்குமா.''

கருப்பி விளையாட்டு நடக்கும் இடத்துக்கே போய்விடுவாள். எல்லாம் முடியும்வரை காத்திருந்து மகளைக் கூட்டிவருவாள். அதுக்குப் பிறகுதான் வீட்டில் எல்லாருக்கும் சாப்பாடு.

விடிந்தால் வீட்டில் வீரம்மாளைப் பிடிக்க முடியாது. காளான் எடுக்கக் காடுகரைக்குக் கிளம்பிவிடுவாள். வாய்க்கால் வரப்பு ஓடைக் கரை எதையும் விட்டுவைக்காமல் அலசுவாள். எந்த இடத்தில் குடைக்காளான் கிடைக்கும் எங்கே முண்டுகாளான் கிடைக்குமென்று கணக்கு வைத்திருப்பாள். சின்ன முண்டாக இருந்தால் மறுநாள்வரை விட்டுவிடுவாள். அடுத்த நாள் மண்ணுதறி வெளியே முகங்காட்டி வெளேரென்று பூத்திருக்கும். அவளுக்குத் தவிட்டுக் காளான் பூக்கும் இடங்கூடத் தெரியும். ராத்திரி அவள் தொணதொணப்பு தாங்காது. கருப்பி பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருப்பாள்.

''ஏஞ்ஞ நாளைக்கு ரெம்பக் காளான் எடுத்துட்டு வருவென்.''

''ஒரு மடி கொண்டுவா தாயி.''

''நல்லா வெஞ்சனம் வச்சுக் குடுக்கணும்.''

''எஞ் செல்ல மகளுக்கு இல்லாற வெஞ்சனமா.''

''விடியக்காலம் என்னய உசுப்பிவுட்ரு.''

''அதக்காட்டி எனக்கு என்ன வேல. முத்தம் தொளிக்கயிலயே உசுப்பீறென்.''

''எல்லாருக்கும் முந்திப் போயி தூ காளான் தொணக் காளான்னு புடுங்கிப் புடுங்கி மடியில கெட்டிக்கிருவென். நீ உசுப்பிவுடலன்னா அழுவென். ஒங்கூடப் பேச மாட்டென்.''

''இண்ணைக்கு நல்லா ஒறங்குனாத்தான நாளைக்கு வெருசனா எந்திரிக்கலாம்.''

''ஆமா.''

''அப்ப ஒறங்கு.''

அவளை உறங்க வைப்பதற்குள் கருப்பி திணறிப்போவாள். தலையில் ஈர் தடவிச் சொகமேற்றிக்கொண்டே சரிப்படுத்தணும்.

''ஏஞ்ஞு காளான வேற ஆரும் எனக்கு முந்தி எடுத்துருவாகளா.''

''அது எங்கயும் ஓடிப்போகாது. அப்பனப் போயி ராத்திரி முழுக்கக் காவ லுருக்கச் சொல்றென்.''

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டே படுத்திருக்கும் ஆண்டி தைரியம் சொல்வான்.

''நம்ம புள்ள பாத்துவச்சிருக்கிறத எவனும் எடுத்துட்டுப் போயிருவான் பாரு. கையி ஒடிஞ்சுபோகும். ஏம்பிளி அருவா கம்ப எடுத்துவையி. ஒரு நட சுத்திப் பாத்துட்டு வந்துறென்... நீ கவலப்படாம ஒறங்கு தாயி.''

வீரம்மாளுக்குக் காளானென்றால் உயிர். முண்டுகளைக் குச்சால் தெண்டி யெடுத்து இடுப்புத் துணியில் மண் துடைத்துக் கடலைப்பருப்பு மாதிரி மொரு மொருவென்று தின்பாள். காளான் வெஞ்சனம் வைத்தால் ருசிபார்க்கும்வரை அஞ்ஞையின் காலைச் சுற்றிச்சுற்றி வருவாள். அடுப்பில் சட்டியை எட்டிஎட்டிப் பார்ப்பாள். அஞ்ஞை குறும்பாகச் சிரிப்பாள்.

''உறியில நெய்யிருந்தா ஒறங்காதாம் பூனக்குட்டி.''

உப்புச் சாறு என்றால் சொல்லவே வேணாம். நெத்திலியும் காளானும் போட்டு பச்சைமிளகாய் வெங்காயத்துடன் வதக்கிச் சுண்டினாற்போல் சாறு வைத்துக் கொடுக்கணும். சோளக் கஞ்சியில் குழிபறித்து ஊற்றிக்கொண்டு சுடச்சுடத் தொட்டுத் தின்பாள். மசால் கூட்டிய காளான் வெஞ்சனமென்றால் அவளுக்குக் கோழிக்கறி.

ஒவ்வொரு நாள் பெரிய காளான் கிடைக்கவில்லையென்றால் மெனக் கிட்டு அலைந்து பூப்பறித்ததுபோல் தவிட்டுக் காளானைப் பொறுக்கி வருவாள். அஞ்ஞை அதையும் கைபார்த்து வதக்கிக்கொடுத்து மகள் சாப்பிடும் அழகைப் பார்த்துக்கொண்டேயிருப்பாள்.

முந்தியெல்லாம் அடிவயிற்றில் பிள்ளைத்துத்தி பூத்திருப்பதைப் பார்த்து அவள் ஆண்டியிடம் ஆசையாகச் சொல்வதுண்டு.

''ஏ இவனே நான் இனியும் புள்ளபெறுவென்.''

அவனும் அதுக்கேற்றபடி பேசுவான்.

''அதுக்கென்ன வதவதன்னு பெத்துப்போடு. அதுகளுக்கின்னு ஆட்டுக் கூடு ஒண்ணு செஞ்சு கவுத்திப்போட்ருவொம்.''

அந்த ஆசையெல்லாம் இப்போது பறந்துவிட்டது. வீரம்மா ஒருத்தியே போதும். அவள் படுத்தும் பாடு பத்துப் பிள்ளைக்குச் சமானம். அவளை மேய்த்து மேய்த்து உடம்பே இற்றுப்போனது. முன்னைப் போல் ஓடியாடித் திரிய முடிய வில்லை. கனத்த வேலை செய்ய முடியவில்லை. என்ன வேலை செய்தாலும் உடம்பில் ஒரு கோட்டை அலுப்பைச் சுமந்த மாதிரி திணறுவாள்.

''ஸ்...அஞ்ஞாடி...''

பானைசட்டி கழுவினாலும் ஏன் காதில் தூவி குடைந்தால்கூட இதே அலுப்புத்தான். பிள்ளைகளுக்குச் சோறு ஊட்டும்போது ஒரு கவளத்துக் கொருக்க ''ஸ்...அஞ்ஞாடி...'' கேட்கும். வீரம்மா சோற்றை விழுங்கிவிட்டு அஞ்ஞையைப் போலவே வக்கணைகாட்டுவாள். அப்போது வீடு முழுக்கச் சிரிப்பு கலகலக்கும்.

## 15. கத கதயாம்...

கருப்பி சிறிசுகளுக்குச் சொல்லாத கதையில்லை. ஆறு குளம் அத்துவானக் காடு ஆகாயம் மேகக் கூட்டம் வற்றாத சமுத்திரம் எல்லா இடத்துக்கும் கூட்டிப் போவாள். எத்தனையோ உசுப்பிராணிகளுடன் விளையாட வைப்பாள். சிங்கம் கரடி புலி செந்நாய் குள்ளநரி குரங்கு இப்படி ஏராளம். சில சமயம் ஒரே கதை ரெண்டுமூணு நாள் ஓடும்.

ராத்திரியானால் பொடிசுகளின் நச்சரிப்பு தாங்காது. கதை சொல்லவில்லையென்றால் உறங்க விடாது. வடிவுகூடக் கொஞ்சிக் குழறுவாள்.

''பேத்தி இண்ணைக்கு நல்ல கத சொல்லணும்.''

அவள் அட்ணக்கால் நீட்டி இருட்டுக்குள் முகட்டை அண்ணாந்து பார்ப்பாள். களத்தில் தானியம் கூட்டுவதுபோல் மனசுக்குள் கதையைக் கூட்டிக் குமித்து அம்பாரமாக்கிக்கொண்டு சொகமாக அளந்துபோட ஆரம்பிப்பாள்.

''எங்கெங்கயோ எரையெடுக்கிற பச்சிக பழங்களத் தின்னு அங்கங்க பேண்டுவச்சிரும். அதுலருந்து வெத மொளச்சு நாலா பக்கமும் மரம் செடி கொடின்னு உண்டாகித் தோப்பாயிரும். அதப் போலதான் நம்ம சாதிச் சனங்களும். அவுக குடியிருக்காற எடமில்ல. கெளகெளயாப் படந்துகெடப்பாக. ஒவ்வொரு கெளைக்கும் தனித்தனிப் பேரு. அதனாலதான் இண்ணைக்கும் அந்தச் சொலவட மங்காம இருக்குது. நெல்லு வகைய எண்ணுனாலும் பள்ளு வகைய எண்ண முடியாது.''

''அத்தன வகையிருக்குதா. நம்ம ஆரு பேத்தி.''

''பெத்த தாய நம்ம அஞ்ஞன்னு கூப்புடுறதால அஞ்ஞாப் பள்ளரு. ஆத்தான்னு கூப்புடுறவுக ஆத்தாப் பள்ளரு. அம்மாங்கிறவுக அம்மாப் பள்ளரு.''

''அவ்வளவுதானா.''

''பெறகு நண்டுதின்னி நத்ததின்னி ஈசலுதின்னி மொறம்பொத்தி...''

''மொறம்பொத்தின்னா...''

''பொட்டி சொளகப் பொல்லம்பொத்துறவுக.''

''அப்படியா.''

''இனியும் எத்தனையோ இருக்கு...ஸ்...அஞ்ஞாடி...''

கொஞ்ச நேரம் தவிப்பாறுவாள். அதுவரைக்கும் குறுக்கே பேசக் கூடாது. பிறகு அவளே விட்ட இடத்தைப் பிடித்துக்கொள்வாள்.

''பூமியில மனுசமக்க குடியிருக்காகல்ல இதுக்குப் பூலோகம்னு பேரு. இதப் போல மேலயும் அஞ்சாறு லோகம் இருக்கு. அது மேலோகம். எல்லாத் தெய்வங்களும் அங்கதான் இருப்பு. இன்னாருக்கு இன்ன எடம்னு பிரிச்சுக்கிட்டு மேல் பாத்து வாறாக.

மேலோகத்துலருக்கிற ஈ எறும்புலருந்து அத்தன சீவனுக்கும் அன்னாடம் படியளக்கிறது ஆரு தெரியுமா. பாருவதியும் பரமசெவமுந்தான். இதுதுக்கு இவ்வளவுதான்னு ஒரு கணக்கு உண்டு. அதுக்குத்தக்க இம்மிகூடக் கொறையாம அளந்து குடுத்துறணும். வந்தது போனதக் கணக்குப்பாக்கிறதுக்குன்னு தனியா

ஒரு ஆளு போட்ருந்தாக. ஒரு சின்ன உசிருகூடப் பட்னியா கெடந்துறப்புடாது. எந்த மூலையிலருந்து ஆவலாதி கேட்டாலும் கடவுளுக்குக் கெட்ட கோவம் வரும். அதப் பசியமத்துறவரைக்கும் ஒறங்க மாட்டாரு. அதுக்குள்ள கணக்குப் புள்ள படுற பாட்டப் பாக்கணுமே.

பூலோகத்துக்கும் படியளந்தா புண்ணியமாருக்குமேன்னு பாருவதிக்கு நெனப்பு ஓடுச்சு. பரமசெவம் காதுல பக்குவமா ஓதுனா. அவரும் ஒத்துக்கிட்டு மத்த தெய்வங்களக் கூப்புட்டு ரோசன கேட்டாரு. கணக்குப்புள்ளைக்குன்னா வகுத்தப் பெரட்டுது. இருக்கிற அலப்பறையச் சமாளிக்கிறதுக்கே கண்ணுமுழி பிதுங்குது. இது வேறயான்னு சொல்லவும் முடியாம மெல்லவும் முடியாமத் தவிக்காரு. அதுக்கென்ன செய்ய வேண்டியதுதான். அது ஏன் ஒரு கொறையா இருக்கணும்னு தெய்வங்க சொல்லீட்டாக. ஒரே சமயத்துல மேலயும் கீழயும் பாத்துக்கிறணும்னா அலச்சலாருக்குமில்ல. அதனால அலச்சலக் கொறைக்கிற துக்கு ஒரு வழியும் சொன்னாக. ஒரு ஆம்பளப் புள்ளைய உண்டாக்கி பூலோகத் துக்கு அனுப்பீற வேண்டியது. அவன் போயிச் சகல வகையான நெல்லு வெள் ளாமையும் செஞ்சுகுடுத்துருவான்.

பரமசெவம் சிரிச்சுக்கிட்டே பாருவதியப் பாக்க அவளும் சரின்னுட்டா. ஒடனே அவருக்கு மொகமெல்லாம் அரும்பரும்பா வேத்துருச்சு. அத ஒத்த வெரலால வழிச்சுக் கீழ ஒதறுனாரு. வேர்வத் தண்ணி வாய்க்காத் தண்ணியோட கலந்து மாடக்கொளத்துல வுழுந்து ஒரு வள்ளிக்கொடி எலையில தங்கியிருச்சு. அதுலயே கெர்ப்பம் உண்டாகி கொஞ்ச நாளையில கொழந்தையும் பெறந் துருச்சு. பரமசெவத்தப் போல மூக்கும்முழியுமா லச்சணமான ஆம்பளக் கொழந்த. அதோட அழுகச் சத்தம் பாருவதி காதுக்கு எட்டுச்சு. இதென்ன அத்துவானக் காட்டுக்குள்ள கொளத்துலருந்து சத்தங்கேக்குதேன்னு தெகச்சுப்போயிட்டா. நீ கேட்டபடிக்குக் கொழந்தையக் குடுத்துட்டன்னு பரமசெவம் சொன்னாரு. அப்பயும் அவரு மொகத்துல குறுஞ்சிரிப்புத்தான்.

பாருவதிக்கின்னா சந்தோசம் தாங்கமுடியல. ஓடிப்போயிக் கொழந்தைய அள்ளியெடுத்து பாசமாப் பாலூட்னா. பெறகு தேவேந்திரனக் கூப்புட்டுக் கையில ஒரு காராம்பசுவப் புடிச்சுக்குடுத்துக் கொழந்தையவும் ஒப்படச்சிட்டா. பசும் பாலக் குடிச்சு வளந்து பெழச்சுக் கெடக்கட்டும்னு கொழந்தைக்கு வரங்குடுத்தா.

தேவேந்திரனும் அவரு சம்சாரமும் கொழந்தையக் கண்ணும் கருத்துமா வளத்தாக. புள்ள எளவட்டமாயிட்டான். காராம்பசுவோட மூணு காம்புல பாலு கறந்து பரமசெவம் பாருவதி தேவேந்திரன் மூணு பேருக்கும் குடுப்பான். ஒரு காம்புப் பாலு அவன் குடிக்கிறதுக்கு.

ஆறு கொளம் நெலங்களப் பாத்து அவனால சும்மாருக்க முடியல. வெளை யாட்டுப்போல வயலு வரப்புன்னு உண்டுபண்ணுனான். ஆத்துத் தண்ணியத் திருப்பிக் கொளத்துல பாயவுட்டான். கொளம் நெறஞ்சதும் ஆறு தம் போக்குல போகட்டும்னு வுட்டுட்டான். கொளத்துலருந்து தண்ணியச் சன்னமாக் கொண்டு வந்து நெரப்புனான். கைக்குக் கெடச்ச செடிகொடியப் புடுங்கி அதுல தாராம் பூரான்னு நட்டிவச்சான். தண்ணியப் பாத்ததும் அதுகளுக்கு மொகத் தெளுச்சி யாயிருச்சு. பெறகு அப்பப்ப அதுகளுக்குத் தண்ணி பாச்சினான். அது பாரு

கொஞ்ச நாளையில பெரியபெரிய மரமா வளந்துருச்சு. வகவகயான மரம். நல்ல தோப்பாகிப்போச்சு. நெலத்துல எதவாச்சும் வெதைக்கணும்னு அவனுக்குத் தோணுச்சு.

தோப்புல எல்லாப் பச்சிகளும் வந்து எரையெடுத்து வெளையாடும். அப்ப அன்னப்பச்சிக மூக்குல ஒட்டியிருக்கிற வெத வுழுந்து வெள்ளிக் குருத்தா மொளச்சிருச்சு. எல்லாம் நஞ்சுச்செடி. அடடா இப்படியாகிப்போச்சேன்னு அவனுக்கு வருத்தம். ஒரு கொடியில எலையப் புடுங்கிக் கசக்கி நஞ்சுச்செடியில சாறுபுழிஞ்சுவுட்டான். நஞ்சு முறிஞ்சு செடியெல்லாம் நெல்லுப்பயிரா மாறி யிருச்சு. அவன் சந்தோசத்துல ஆடிப்பாடிக் குதியாளம்போட்டான்.

நெல்லுப் பயிரு வளந்து நல்ல வெளச்சலு. அறுத்து நெல்லடிச்சான். களத்துல அம்பாரமாக் குமிஞ்சிருச்சு. கொஞ்சத்த அரிசியாக்கிப் பால் கலயத்துல போட்டுக் கொண்டுபோயி பரமசெவத்துட்டக் குடுத்தான். என்னடா மகனே சேறுஞ் செகதியுமா வந்து நிக்கயேன்னு அவரு கேக்க அவனுக்கு வெக்கமாப்போச்சு. கொஞ்ச நேரத்துல பால் கலயத்துல நெல்லுச் சோறு பொங்கி வடிஞ்சது. பரம செவம் அத எல்லாத் தெய்வங்களுக்கும் குடுத்துட்டு மிச்சத்த அவரும் பாருவதியும் சாப்புட்டு அந்த ருசியில மகன மெச்சிக்கிட்டாக.

இங்கருக்கிற மேடுபள்ளத்த எல்லாம் ஒண்ணுபோல நெரவி நெல்லு வெள்ளாம செய்யின்னு பரமசெவம் மகங்கிட்டச் சொல்ல பொன்னப் போட்டுத் தான் பள்ளத்த நெரப்பணும். அப்படின்னா மேலோகம் தாங்காதுன்னு அவன் ஒரு கதையக் கொண்டுவந்தான். அப்ப இவன பூலோகத்துக்கு அனுப்பீற வேண் டியதுதான்னு அவரு முடிவு செஞ்சிட்டாரு.

பூலோகத்துலருந்து மூணு ராசாக்களவும் வரச் சொல்லி சாப்பாடு வெத்தல பாக்குக் குடுத்து பரமசெவத்துட்டக் கூட்டீட்டுப் போனாக. சாமீ எங்க பூலோகத்துல வேற தானியந்தான் வெளையிது. நெல்லு வெள்ளாம வள்ளிசாக் கெடையாது. அதனால புள்ளைய எங்களோட அனுப்பணும்னு ராசாக்க கேட்டுக் கிட்டாக.

ஒடனே பரமசெவம் தெய்வங்களக் கூப்புட்டுக் கலந்து மகங்கிட்ட நெல்லு வெதையும் பெரிய மம்பட்டியும் குடுத்துப் பூலோகத்துக்கு அனுப்புனாரு. ஆனா நெல்லுகளுக்குப் பூலோகம் போக மனசில்ல. எல்லாத்துக்கும் செறகு மொளச்சுப் பறந்து போயிருச்சு. அதுகளத் தேடிப் புடிச்சுப் பொதியில போட்டு பொன்னூசி யால தச்சு தேவேந்திரனோட வெள்ளானமேல ஏத்தி அனுப்புனாக.

...ஸ்...அஞ்ஞாடி....

சாமி மகனப் பூலோகத்துக்கு அனுப்புனாகளா. அவன் கீழ வந்து பாத்தா நாலு திக்கமும் ஓடையில தண்ணி சிலுசிலுன்னு ஓடுது. அங்கங்க நெலம் பள்ள மாக் கெடக்குது. அவன் எசக்கியம்மா கோயிலுப் பூசாரியிட்டயும் ஒரு ஆசாரி யிட்டயும் போனான். நெலங்கள வயலாக்கி உழுது தொளிப்போடணும்னு சொன்னான். அப்படியா சங்கதி நல்லதாப் போச்சுன்னு அவுகளும் சந்தோசப் பட்டு ஒரு ஏரு செஞ்சுகுடுத்தாக. அவன் அதத் தோளுமேல போட்டுக்கிட்டு காட்டுக்குள்ள போனான். அங்கங்க திரிஞ்ச சிங்கம் புலி கரடியப் புடிச்சு வந்து ஏருல பூட்டி வயக்காட்ட உழுதான். சும்மா திரிஞ்சதுகளப் புடிச்சுத் திடுதும்னு

வசக்குனா எப்படி இருக்கும். வேல செய்யக் கறிவலிச்சு ஒழத்தி எங்களப் பாடாப் படுத்துறானே சாமீ நீங்கதான் காப்பாத்தணும்னு பரமசெவத்துட்ட ஆவலாதி சொல்லுச்சு.

மேலோகத்துல மாடுகளுக்கெல்லாம் தெய்வம் ஒண்ணு உண்டு. பேரு நந்தி. பரமசெவம் அவரக் கூப்புட்டு வெவகாரத்தச் சொன்னாரு. அவரு செத்த நேரத்துல வெள்ள செவல மயில புல்லன்னு பல நெறத்துல பசுக்கள உண்டு பண்ணுனாரு. அதுகளுக்கு ரெண்டு காளைக பெறந்துச்சு. ரெண்டவும் நல்லாச் சோடிச்சுப் பூலோகத்துக்கு அனுப்புனாரு. சாமி மகன் அதுகளுக்குத் தீவனம் போட்டுத் தீவங்காட்டி நல்ல நாளு பாத்து ஏருல பூட்டி வயல உழுதான். நெல்லு வெதையப் போட்டு நாத்து பாவித் தண்ணி பாச்சிக் கவனிச்சுக்கிட்டான். கொஞ்ச நாளையில நாத்து குருத்துப்போட்டு வளந்து நடவுப் பருவத்துக்கு வந்துருச்சு.

எல்லாம் சரி. நாத்து களப் புடுங்கி நடவுநட்றதுக்குப் பொண்ணுக வேணுமே. சாமி மகன் போயி ராசாக்ககிட்ட நெலமையச் சொன்னான். மேலோகத்து நெல்லாச்சே. இருக்கிற பொம்பளைகளுக்குப் பக்குவந்தெரியாதே. ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆயிட்டா வம்பாச்சேன்னு அவுக சங்கதிய பரமசெவம் காதுல போட்டாக. அவரு மேலோகத்துப் பொண்ணுகள அனுப்பிவச்சாரு. எல்லாம் அழகழகான பொண்ணுக. நீங்க நாத்து நட்னா முத்தளந்து கூலி குடுப்பம்னு ராசாக்க ஆசகாட்டி அவுகளக் கூட்டிவந்தாக.

சாமி மகன் சொதாரிப்பா முடியெடுத்துப் போட பொண்ணுக நாத்துநட்ட வயலுல வேல மும்மரமா நடக்குது. அவன் ஒரு வம்புக்காரன். வரிசையா எல்லா ருக்கும் ஒண்ணுபோல போட்டுவந்தவன் ரெண்டு பொண்ணுகளுக்கு மட்டும் கூட ரெண்டு முடி போட்டுட்டான். நடவு முடிஞ்சு மத்தப் பொண்ணுக எல்லாம் குளிச்சு முழுகி ராசாக்ககிட்ட முத்துக் கூலி வாங்கீட்டு மேலோகத்துக்குப் போயிட்டாக. அந்த ரெண்டு பேரு மட்டும் பிந்திக்கிட்டாக. அதியமாப் போட்ட நாத்த நட்டி முடிக்க நேரமாயிருச்சு.

...ஸ்...அஞ்ஞாடி...

ரெண்டு பொண்ணுக பிந்திக்கிட்டாகளா. அதுல ராசாக்களுக்குச் சந்தேகம் வந்துருச்சு. நேர பரமசெவத்துட்டப் போயி புள்ளாண்டனுக்கு அந்தப் பொண்ணுக மேல ஒரு கண்ணு இருக்கும் போலருக்கு. அதனாலதான் அவுகளப் பிந்த வச்சிட்டான்னு சொன்னாக. அவரு சிரிச்சுக்கிட்டாரு. கத அப்படிப் போகுதோ. இதுக்கு ஒரு வழி பண்ணீற வேண்டியதுதான்னு முடிவு செஞ்சிட்டாரு. அப் படின்னா அந்தப் பொண்ணுகள அவனுக்குக் கலியாணம் முடிச்சு வச்சிருங்கன்னு ஒரு போடு போட்டாரு.

பெறகென்ன கலியாண ஏற்பாடுக மளமளன்னு நடக்குது. பந்தலு போட்டு வாழமரம் பாக்குமரம் நட்டி பூவலங்காரம் செஞ்சு மணவறையச் சோடிக்காக. மாப்பிளைக்கு வாசனாதி பூசி தேவந்திரனோட வெள்ளானமேல ஏத்தி பட்ணப் பருசம் வாறாக. அவன் பாக்க அழகேந்திரனா இருப்பான். பாக்கு நெறம். வில்வக் காயப் போல ஒடம்பு.

அப்ப மாப்பிள ராசாக்ககிட்டச் சொல்லுவான். பொண்ணுகளோ மேலோகத் துக்காரிக. அதனால எனக்கு அவுகமேல சந்தேகமாருக்கு. மணவறையில

அக்கினிய வையிங்க. அவுக அதச் சுத்திவந்து நெல்லு வெதையக் கையில தேச்சு அரிசியாக்கிப் பச்சக் கலயத்துல பொங்கலு வச்சு மணவறையில படைக்கட்டும். அப்பத்தான் எஞ் சந்தேகம் தெளிஞ்சு அவுகளுக்குத் தாலிகெட்டுவென். இல்லன்னா மணவறையில காலுவைக்கப்புடாது. அப்படின்னு திருகு தாளம் போட்டான். இதென்னடா வம்பாப்போச்சேன்னு ராசாக்களுக்கு ரோசன. ஆனா பொண்ணுக அதுக்கு ஒத்துக்கிட்டு அந்தப்படியே செஞ்சு முடிச்சுத் தைரியமா மணவறையில உக்காந்தாக.

ராசாக்களுக்கு நிம்மதி. ரெண்டு பொண்ணுகளவும் ரெண்டு ராசாக்க சொந்தமாத் தத்தெடுத்துக்கிட்டாக. ராசாக்க மக்கன்னா கலியாணத்துக்குச் சொல்லணுமா. ரெம்பப் பெரிசா நடந்துச்சு. பொண்ணுகள அலங்கரிச்சு மாப்பிளைக்குப் பொன்னாலயும் பூவாலயும் முடிசூட்டி ராசாக்களோட குருதமேல சுத்திவந்தாக. கலியாணத்துக்கு வந்தவுகளுக்கெல்லாம் வெத்தலபாக்குப் பலு மாறுனாக.

அதுக்குப் பெறகு சாமி மகன் வெள்ளாமையக் கருக்கடையாக் கவனிச்சுக் கிட்டான். அவன் வெதச்சதெல்லாம் பெருமணி சிறுமணியா வெளஞ்சது. தண்ணி வத்திப்போன காலத்துல மேலோகத்துலருந்து ஆயிரக்கணக்குல ஆளுகளக் கூட்டி வந்து கெணறு வெட்டித் தண்ணியப் பாத்து அதுல வேற வெள்ளாமையும் செஞ்சான். வெளஞ்ச நெல்லு வகைக்குக் கணக்கே கெடையாது. சம்பாவுல எத்தன சாதாவுல எத்தன. சீரகச்சம்பா மொளகுச் சம்பான்னு ஆயிரம் ரகத்துல வெளஞ்சது.

வெளஞ்ச நெல்ல நல்லபடியா அறுத்து அடின்னு ராசாக்க சாமி மகங்கிட்டச் சொன்னாக. அவன் பட்ணத்துலருந்து ஆளுகளக் கொண்டுவந்து அறுவட செஞ்சு நெல்ல அளந்து பொதிபோட்டு ஆனமேல ஏத்தி ராசாக்ககிட்டச் சேத்தான். ராசாக்க அவன நல்லா வச்சுக்கிட்டாக.

இப்படி இருக்கிற நாளையில மேலோகத்துப் பொண்ணுக ரெண்டு பேரும் புள்ளக்காரிகளாயிட்டாக. அவுகளுக்கென்னமோ பூலோகத்துல இருக்கப் புடிக்கல. புருசன எப்படியாச்சும் மேலோகத்துக்குக் கொண்டுபோயிறணும்னு திட்டம் போட்டாக. என்ன சூது செஞ்சாக தெரியுமா. கள்ளு சாராயம் கறிய வரவழச்சு வீட்டுக்குள்ள ஒளிச்சுவச்சிட்டாக. இத எங்க புருசன்தான் செஞ்சான்னு பழியப் போட்டு ராசாக்ககிட்டப் போயிப் பெராதுசொன்னாக. இனிமே இங்க இருக்க மாட்டொம். மேலோகத்துக்குப் போறம்னு ஒத்தக்கால்ல நின்னாக. ராசாக்க சாமி மகனக் கூட்டீட்டுப் போயி வீட்ல சோதனபோட்டாக. அங்க கள்ளவும் காணும் கறியவும் காணும். அரளி செவந்தி மல்லின்னு வகவகயா பூவுதான் கெடக்குது.

சாமி மகனுக்கு மூக்கு முட்டக் கோவம். மம்பட்டியத் தோளுல போட்டுக் கிட்டு மேலோகத்துக்குக் கெளம்பீட்டான். பொண்டாட்டிமாரும் புள்ளகுட்டி களோட அவனத் தொயங்கெட்னாக. அவன் அவுகளப் பாத்துச் சொல்லுவான். நானூறு ஐநூறு பொன்னு போட்டா ஒங்களக் கலியாணம்முடிச்சென். நீங்க எடையில வந்தவுகதான. எடையிலயே போயிருங்க. அப்படின்னு முந்தியக் கிழிச்சான். துரும்பக் கிள்ளுனான். அவுக கையில குடுத்தான். அவுக கொண்டு

வந்த சீதனத்தப் புள்ளீககிட்ட ஒப்படச்சான். பெறகு தம் போக்குல மேலோகத்துக்குப் பறந்துட்டான். போற வழியில பெரியபெரிய மலையா குறுக்க வந்துச்சு. அதுகள மம்பட்டியால பெளந்துக்கிட்டு பரமசெவத்துட்டப் போயிச் சேந்தான்.

அவன் மேல போயிட்ட சங்கதி ராசாக்களுக்குத் தெரிஞ்சது. என்னத்துக்கு என்ன வந்துருமோன்னு மனசு கெடந்து ஒளையிது. மேலோகத்துப் பொண்ணுகளவும் புள்ளீகளவும் கூட்டிவரச் சொல்லி சமாதானப்படுத்துனாக. நீங்க ஒண்ணும் கவலப்பட வேணாம். நாங்கதான் ஒங்கள ஆதியிலயே தத்தெடுத்துக்கிட்டமில்ல. அதனால ஒங்க வகுத்துப் புள்ளீகளுக்கும் நாங்களே பொறுப்பு. அவுகளுக்கு எங்க எடத்துல காணி பூமி குடுத்து கொளம் வெட்டிக் கோயிலு கெட்டிக்குடுக்கம்னு வாக்குக் குடுத்தாக. சொன்னபடிக்கே எல்லாருக்கும் சொத்துக்களத் தானம் பண்ணுனாக.

நம்ம புள்ளீக அலஞ்சுபோயிருமேன்னு மேலோகத்துப் பொண்ணுகளுக்குக் கவலையா இருந்துச்சு. இப்ப அந்தக் கவல தீந்துருச்சு. சரி இனிமே மேலோகத்துக்குப் போயி என்ன செய்யப்போறெோம். புள்ளீகளோட இருந்து காலந்தள்ளீருவம்னு கீழயே தங்கிக்கிட்டாக.

பரமசெவம் மகனோட கோவத்த ஆத்தி குடும்பம்னா சண்ட சச்சரவு இருக்கத்தான் செய்யும். அதுக்காக அத்துப்பறிச்சுக்கிறது நல்லதில்ல. போயி பொண்டாட்டி புள்ளீகளோட சந்தோசமா வாழுறதுக்குண்டான வழியப் பாருடா மகனேன்னு புத்திமதி சொல்லி அனுப்பிவச்சாரு.

அவனும் நடந்ததெல்லாம் மறந்துட்டுக் குடும்பத்த நல்லபடியாக் கொண்டு செலுத்துனான். பெறகென்ன அவனோட தலமொறைக ஊரு நாடெல்லாம் வெதச்ச மாதிரி செதறி மொளச்சு வேருப்புடிச்சுக்கிருச்சு. எங்க பாத்தாலும் அவுக கூட்டந்தான். அவுக செய்யாற வேலையில்ல வெள்ளாமையில்ல. சொல்லப் போனா அவுகதான் பயிருசெஞ்சு எல்லாருக்கும் படியளந்தாக. இப்பயும் அதான் நடக்குது. அதனால இண்ணைக்கும் பெருமையாச் சொல்லுவாக தெருவெல்லாம் படியளக்கிற தேவந்திரக் குடும்பன்னு...

...ஸ்...அஞ்ஞாடி...''

கருப்பி கதையை முடித்துவிட்டுச் சிறிசுகளைப் பார்ப்பாள். கதை குடித்த கிறக்கத்தில் அவர்கள் கண் சொருகிப் படுத்துவிடுவார்கள். அவர்களை உறங்கப் போட்டுவிட்டு அவளும் ஒரு ஓரத்தில் முடக்கிக்கொள்வாள்.

## 16. போடி அனந்தி

வண்ணாக்குடியில் அனந்தி வைராக்கியம் குறையாமல் குடும்பம் நடத்தினாள். வெள்ளை கொடுப்பதில் யாருக்கும் குறைவைப்பதில்லை. ஒரு ஆத்திரம் அவசரத்துக்கு ரெண்டு துணியாக இருந்தாலும் மெனக்கிட்டுத் துறைக்குப் போய்த் துவைத்துக்கொடுப்பாள். மருதன் தொழிலைப் பொறுப்பாகக் கவனித்துக் கொண்டான். ஊர்க் காரியங்களைத் திருத்தமாகச் செய்தான். ஊரே மெச்சுகிற

மாதிரி சாவுக்கு அவ்வளவு அழகாகத் தேர் கட்டினான். சிறிசுமுதல் பெரிசுவரை எல்லாருக்கும் அவன் பாட்டு ரெம்பப் பிடிக்கும்.

அல்லாத்தி பெரியமனுசியாகி அடுத்த வீடு போகக் காத்திருந்தாள். அனந்திக்கு அவளைப் பற்றியே நினைப்பு ஓடியது. அவளுக்கொரு நல்ல இடம் கிடைத்துவிட்டால் கவலையில்லை. கிட்டத்தில் கொடுக்கலாமா தூரத்துக்கு அனுப்பலாமா என்று பல யோசனை. வடக்கே அண்ணன்மாரிடம் மாப்பிள்ளை கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனாலும் எப்படி வலியச் சொல்வது. தங்கச்சி இப்படி இருக்கிறாளே என்று அவர்களாக ஆதரிக்கணும். மாரி கண்ணை மூடிய பிறகு ரெண்டு பக்கமிருந்தும் போக்குவருத்து அதிகமில்லை. மருதனுக்குத் தெற்கே வடக்கே போய்ப் பழக்கமில்லை.

கடைசியில் மூத்தண்ணன் வந்துவிட்டான். அனந்தி ஆண்டியிடம் கலந்து பேச ஓடினாள்.

''வடக்கருந்து மகளக் கேட்டு வந்துருக்காக அப்பச்சி.''

ஆண்டிக்குச் சந்தோசம்.

''ஆரு.''

''அண்ணந்தான். மூத்தவன்.''

''அவன் மகனுக்குன்னாச் சந்தோசமாச் செஞ்சுவையி. ஒம் மக குடுத்து வச்சவ. இருந்திருந்து சொந்தத்துல ஒட்டப்போறா.''

அடுத்த மாசம் அல்லாத்தி வடக்கே போய்விட்டாள். ஆண்டியும் கருப்பியும் கூட இருந்து நல்ல முறையில் நடத்திச் சீர்கூடக் கொடுத்தனுப்பினார்கள். அல்லாத்தி எதை மறந்தாலும் அப்பன் குழியில் வளரும் புங்கஞ்செடியை ஆத்தா ளிடம் ஒப்படைக்க மறக்கவில்லை.

அனந்திக்குச் சந்தோசம் ஒரு பக்கம். இருந்தாலும் மகள் இல்லாமல் கையொடிந்த மாதிரி இருந்தது. வீடு வெறிச்சோடிவிட்டது. கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர அம்மியரைக்க கழுதைக்குக் கஞ்சி கரைத்து வைக்க இப்படிச் சில்லந்தி வேலைகளுக்கு ஆளில்லை. சாதிக் கோழி மாதிரி முழியை உருட்டிச் சிலுப்பிக் கொண்டு திரிவாள். அதே கெக்கரிப்புச் சிரிப்பு.

மகள் போன பிறகு அனந்தி மருதனைப் பற்றி நினைக்க ஆரம்பித்தாள். விரைவில் அவனுக்கொரு துணையைத் தேடிவைக்கணும். வெளுப்புத்துறையில் வேலையைப் பகிர்ந்துகொள்ள ஒருத்தி வேணும். அவளுடைய வாதிப்பைப் புரிந்துகொண்ட ஆண்டி கேட்டான்.

''ஒங்க பக்கம் பொண்ணு இருக்குதா.''

அவள் அதுக்குத் தயாராக இல்லை.

''இருக்குது அப்பச்சி. ஆனாலும் வேணாம். நான் வந்து புருசனத் தூக்கீட் டென். எம் புள்ளையாச்சும் மண்டையில பத்தரச்சுப் போடாமச் சொகமா ருக்கட்டும்.''

''கோட்டிக்காரி போற உசிரு ஒங் கையிலயும் எங் கையிலயுமா இருக்கு. இப்ப அத நெனச்சு என்ன செய்ய. மகனப் பாத்துச் சந்தோசப்பட்டுக்கிறணும்.''

''அப்படித்தான் மனச ஆத்திக்கிறென்.''

''பக்கத்துல ஆரும் பொண்ணு வச்சிருக்காகளா.''

''இருந்தாலும் நான் அறுதக்கழுத எப்படிக் கேட்டுப் போறது.''

''நீ ஒருத்தி. பெத்த புள்ளைக்குப் போயி இதெல்லாம் பாக்கலாமா. நீ போக வேணாம். எல்லாம் நான் பாத்துப் பேசி முடிச்சுக்கிறென்.''

ஆண்டி சுத்துப்பட்டிகளை அலசினான். அனந்திக்குத் தோதான மருமகள் கிடைக்கவில்லை. கடைசிக்கு ஊத்துப்பட்டியில் மாடத்தி தட்டுப்பட்டாள். செவ்வாளைப் பெண். வெகுளிக் குணம். அவனுக்குப் பிடித்திருந்தது. அனந்தியை அனுப்பிப் பார்த்துவரச் சொன்னான். அவளுக்கும் சம்மதம்.

''பெய பாக்க வேணாமா.''

''நீங்க பாத்த பொண்ண வேணாம்னு சொல்ல ஆருக்கு வாயிருக்கு அப்பச்சி.''

''நாளைக்கு நீங்க எல்லாரும் ஒத்துப்போகணும் பாரு. வாறவ சிடுசிடுத் தவளா இருந்தாச் சங்கடமில்லையா.''

''அப்படியே இருந்தாலும் நம்மதான் அனுசரிச்சுப்போகணும்.''

மாடத்தி வரும்போது பொறுமையையும் கொண்டுவந்தாள். அவள் வீட்டில் காலெடுத்து வைத்த பிறகு அனந்திக்கு உட்கார நேரம் கிடைத்தது.

மண்டையடிக்காரர்கள் மருதனை நச்சரித்தார்கள்.

''ஒங்கப்பன் கெட்டுவானே அந்த வேரு ஒனக்குத் தெரியுமா.''

அவன் தலை மடக்கினான்.

''அப்பன் என்னதான் சொல்லிக்குடுத்துட்டுப் போனான்.''

''அதத் தெரிஞ்சுக்கிறாம என்ன செஞ்சுகிழிச்சயாம்.''

அவர்கள் வலியில் முனங்கிக்கொண்டு போனார்கள். அவன் ஆண்டியிடம் போனான்.

''மண்டையடி வேரு தெரியுமான்னு கேக்காக. எனக்குக் கருவ வேருதான் தெரியும். அப்பன் சொல்லலயே.''

''அவனால காட்டுக்கு நடக்க முடிஞ்சிருந்தா கண்டிப்பாச் சொல்லீருப்பான்.''

''முடியாமத்தான போயிட்டான்.''

''அவன் மட்டும் தெடமா இருந்தான்னா என்னென்னமோ சொல்லிக்குடுத் துருப்பான்.''

ஆண்டிக்கு மாரியைப் பற்றி ஒவ்வொரு நினைவாக வந்தது. அவன் போன பிறகு அன்னியோன்னியமாகப் பேசிக்கொள்ள யாருமில்லை. சில சமயம் கட்டிப்போட்ட நாயாகக் கிடக்க வேண்டியிருந்தது. அவன் சொன்ன கதையெல் லாம் மண்ணோடு மண்ணாக மக்கிப்போனது.

அவர்களுக்குள் கமுக்கமான காரியங்கள் எத்தனையோ உண்டு. மாரி யாரிட மாச்சும் ஒருவார்த்தை சொல்லியிருப்பானா. அவன்தான் மனுசன்.

ஆண்டிக்குச் சின்ன வயசு திரும்பியது. மனசுக்குள் கழுதையோட்டம். பூஞ்சிரிப்பில் மருதனைப் பார்த்தான்.

''ஒங்கப்பனுக்குப் பல்லு போன காரணம் தெரியுமாடா.''

''கல்லுத் தடுக்கி வுழுந்து ஒடஞ்சதுன்னு அப்பத்தா சொன்னா.''

''கல்லுத் தடுக்கல.''

''பெறகு.''

ஆண்டி பழைய கதையைச் சொல்லி முடித்துவிட்டுப் பெருமூச்சு விட்டான்.

''கடைசிவரைக்கும் இத ஒன் ஆத்தாட்டக்கூடச் சொல்லியிருப்பானா...ம் இதுமட்டுமில்ல எங்களுக்குள்ள எவ்வளவோ இருக்கு.''

ஆண்டிக்கு மேற்கொண்டு பேச்செழும்பவில்லை.

மருதன் ஆத்தாளிடம் சொல்லித் தீரவில்லை. அவள் கண்களைத் துடைத்த படி கேட்டுக்கொண்டிருந்தாள்.

மருதன் பிள்ளைக்காரனாகிவிட்டான். சின்னமாரி சாலமுத்து என்று ரெண்டு பயல்கள். மூணாவது பெண். அப்பத்தா பேரையே வைத்தார்கள். மூத்தவனுக்கு அப்பச்சி பேர் உள்ளதால் பெரியவன் என்று சொல்வார்கள். கடைக்குட்டி சின்னவள்.

வண்ணாக்குடி முற்றத்தில் வெள்ளங்காட்டியும் சாயங்காலமும் பிள்ளை களின் விளையாட்டு சொல்ல முடியாது. மாடத்தி அதுகளை விரட்டிக்கொண்டே வேலைகளைக் கவனிப்பாள்.

''ஏலே என்னேரமும் வெளையாட்டுத்தானா. வெள்ளாவிக்கு ரெண்டு முள்ளு வெட்டீட்டு வரலாமில்ல.''

மருதன் எதையும் கண்டுகொள்வதில்லை. அவன் மனசு முழுக்க பிள்ளை களின் கும்மாளத்தில் பதிந்திருக்கும். மாடத்தியின் பாட்டு அவனுக்குத் திரும்பும்.

''ஆம்பளையே வெளையாடுறதுக்குத் தட்டுக்கொட்டயில புள்ளீகளச் சொல்லிக் குத்தமில்ல.''

அனந்தி கழுதைகளுக்குக் கஞ்சி கரைத்துக்கொண்டே சிறிசுகளின் விளை யாட்டில் கரைந்துபோயிருப்பாள். மருமகளிடம் சொல்லணும்போல் மனசு துடிக்கும்.

'இந்த மாதிரியெல்லாம் வெளையாட்டு அவனுக்குத் தெரியாதும்மா. தெரிஞ்சதெல்லாம் வெள்ளாவியும் வெளுப்புத்தொறையுந்தான்.'

தற்செயலாக அந்தப் பக்கம் வரும் ஆண்டி அவளைக் கவனிப்பான்.

''அனந்தியென்ன கழுதைகளுக்கு வைக்கிற கஞ்சி கொறஞ்சுபோச்சுன்னு பாக்கயா.''

''வீட்ல கழுதக்குட்டிக பெருகீருச்சில்ல அப்பச்சி.''

''அப்பன் வெளையாடாற வெளையாட்ட மக்க வெளையாடுறாக ளாக்கும்.''

''அப்பச்சி சொல்றது சரிதான்.''

அழுக்குப் பொதியில் முண்டியாளமடித்து விளையாடும் சிறிசுகளைப் பார்த்து அனந்தி கவலையை மறந்தாள். அவர்கள் கண்டபடி உட்கார்ந்து கஞ்சி குடிக்கும் சித்திரத்தைக் கவனித்தால் புருசன் நினைவு வரும்.

'இதப் பாக்கிறதுக்கு அவன் இருக்கணும்.'

பொடிசுகளிடம் உதை வாங்கவில்லையென்றால் அவளுக்கு உடம்பு வலிக்கும். ராத்திரி அலுப்பாக இருக்கும். வலியச் சிலுவாங்குவாள்.

பேரன்களாவது ஒவ்வொரு சமயம் அடங்குவார்கள். பேத்தியிருக்கிறாளே வெடுவாச்சுட்டி. அந்தக் குணசாலிக்குப்போய் அனந்தி என்று பேர்வைத்தார்களே.

ரெண்டு பேருக்கும் ஒருமூச்சு சண்டை மூண்டுதான் அடங்கும். அப்பத்தா ஆரம்பித்துவைப்பாள்.

''போடி அனந்தி.''

உடனே பதில் வசவு வரும்.

''நீ போடி அனந்தி.''

''வெக்கங்கெட்டவளே நானா ஒரு நாளைக்கு அஞ்சு தேரம் கஞ்சி குடிக்கென். நீயெல்லாம் வாயி பேசலாமா.''

''அப்படித்தான் குடிப்பென்.''

''குடிச்சா வெளக்கமாத்துட்டு அடிப்பென்.''

''அடிப்பயோ.''

''அடிப்பண்டீ.''

''அடி பாப்பொம்.''

மல்லுக்கட்டு மும்முரமாக நடக்கும். மயிர்ப்பிடி அடி எல்லாம் உண்டு. சண்டையில் அப்பத்தா தோற்றுப்போவாள். கீழே விழுந்து தலைவிரி கோலத்தில் ஒப்பாரிவைப்பாள்.

''நாதியத்த கழுதையாக - நான் பாதகத்தி
வீதியில நிக்கிறனே - எஞ்சாமி எந்தொரையே நீ
பாதியில போயிட்டயே - நீ இல்லாற நாளையில நான்
பரிதவிச்சு வாடுறனே.''

பேத்தியாள் இடுப்புத் துணியால் முகம் துடைத்துத் தாறுமாறாகத் தலை முடிந்துவிடும்வரை அழுகையடங்காது.

''அப்பத்தா இனிமே அடிக்க மாட்டென்.''

''அப்படின்னா கூட ஒரு தேரம் கஞ்சி குடிச்சுக்கோ.''

கட்டுத்துறையிலிருந்து காது விடைப்பில் சங்கதிகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் கழுதைக் குட்டி 'நல்ல சண்டதான்' என்று துள்ளிக் குதித்து வளையமடித்துவிட்டுத் தாய்க்குப் பின்புறம் மடுவை நோண்டும்.

சிலநாள் அனந்திக்கு உண்மையிலேயே அழுகை வந்துவிடும். பழைய பழைய நினைவுகள் அழுத்தும். எழுந்து கட்டுத்துறைக்குப் போய் கண்ணீர் வற்றும்வரை கழுதையை நீவிக்கொண்டிருப்பாள்.

பட்டத்தில் மழை பெய்து பயிரெல்லாம் சூல்கொண்டு பூமி செழித்திருக்கும் காலத்தில் அவர்கள் நடத்தும் கூத்தைப் பார்க்கணும். முற்றத்தில் அழுக்குப் பொதிச் சார்மானத்தில் அப்பத்தா அண்ணாந்திருப்பாள். அவள் மடியில் தலையும் இன்னொரு பொதியில் காலுமாகப் பேத்தி கிடப்பாள்.

இரை தேடிவிட்டுக் கூடுகளுக்குப் பறந்துபோகும் பட்சிப் பட்டாளங்களை எண்ணி முடியாது. என் பாடு இப்படி ஒன் பாடு அப்படி என்று தொணதொணத்துக் கொண்டு போகும். ஒரு கூட்டத்தை அடையாளம் கண்டுபிடிப்பதற்குள் அடுத்து ஒண்ணு வந்துவிடும். வகைவகையான பட்சிகள். முன்னால் பிய்த்துக்கொண்டு போகும் தலையைப் பிடிக்க ''இந்தா வாறென் இந்தா வாறென்'' என்று சிறகால் விரட்டும் கூழைக்கடாக்கள். பூத்தொடுப்பில் வளைந்து நெளியும் படைகுருவி கள். பாடிக் கொண்டே வித்தையடிக்கும் கிளிகள். கிழிந்த துணிகளாக மிதந்து

போகும் தைலான்கள். காற்றில் பறக்கும் கஞ்சிக் கலயங்களாகக் காக்காய்கள். விறைத்து நீந்தும் கொக்குகள்.

கொக்குகளுக்காகவே காத்திருக்கும் பேத்தி கைகளைச் சுழட்டிச்சுழட்டிப் பாடுவாள்.

''கொக்கு வா கொக்கு வா
வெள்ள கொண்டு வா
மானத்துல பூப்பறிச்சு
மச்சங் கொண்டு வா.''

ஆவலுடன் ஆள்காட்டி விரல் நகத்தில் வெள்ளையைத் தேடிக் கண்டு பிடித்து வீட்டுக்குள் ஓடுவாள்.

''ஆத்தெஆத்தெ கொக்கு எனக்கு வெள்ள குடுத்துருச்சு.''

மாடத்தி தோதாகச் சொல்வாள்.

''பத்தரமா வச்சுக்கோ.''

அவளுக்குப் பெருமை தாங்காது. அப்பத்தாளிடம் வருவாள்.

''கொக்கு குடுத்த வெள்ளையக் காட்ட மாட்டனே.''

அப்பத்தா கெஞ்சுவாள்.

''தாயில்ல. காட்டும்மா. கொஞ்சம் பாத்துக்கிறென்.''

''ம்க்கும். நீ எடுத்துக்கிருவ.''

''சத்தியமா எடுக்க மாட்டென்.''

ரெம்ப மாராயம்பண்ணிக் காட்டுவாள். அப்பத்தா மயங்கிப்போவாள்.

''என்னப் பெத்த ஆத்தாளுக்கு வெள்ள நல்லாருக்கு. நாளைக்குக் கொக்கு கிட்டச் சொல்லி எனக்கும் கொஞ்சம் வாங்கிக் குடு.''

மறுநாள் சாய்ந்தரம் ரெண்டு பேரும் சேர்ந்து கொக்கிடம் வெள்ளை கேட்பார்கள். அப்பத்தாளுக்குக் கிடைக்காது. பேத்திக்கு மட்டும் அதே நகத்தில் வெள்ளையைக் கொடுத்துவிட்டுப் போகும். அப்பத்தாளின் தலை ஏமாற்றத்தில் பேயாடும். அதுக்கென்று ஒரு ஒப்பாரி தொடுத்துவரும்.

''நாசமத்த கொக்கால - நான்
மோசம்போயி நிக்கிறனே - எனக்கு
வெள்ள ஒண்ணு குடுக்கலயே - நீ
வெளங்கமாட்ட தொலங்கமாட்ட
கொள்ளையில போயிருவ.''

விரலை நொடித்து கொக்குமேல் இருக்கும் கோவத்தைத் தீர்த்துக்கொள் வாள். பேத்திக்குச் சந்தோசம் பிடிபடாது. அப்பத்தாளின் கழுத்தில் கைகளால் மாலையிட்டுக்கொண்டு முதுகில் சாய்ந்து ஏலட்டம்போடுவாள்.

அல்லாத்தனும் மொன்னச்சியும் மருதனுடனேயே காலந்தள்ளினார்கள். அனந்தி அவர்களுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. கிட்ட இருந்து கவனித்துக் கொண்டாள். மாடத்தியும் சந்தோசமாகச் செய்தாள். குடும்பம் நிறையப் பிள்ளைகளைப் பார்த்த சந்தோசத்தில் அவர்கள் அடுத்தடுத்து ஒரு வருசத்துக்குள் கண்ணைமூடிவிட்டார்கள். மொன்னச்சிதான் முந்திக்கொண்டாள்.

மாடத்தி வந்த பிறகு அனந்திக்கு மகனைப் பற்றிய கவலையே அற்றுப் போய்விட்டது. ரெண்டு பேரும் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து

ஒற்றுமையாகக் குடும்பம் நடத்தினார்கள். அனந்தியைப் போலவே மாடத்தியும் ஊருக்குள் அன்னியோன்னியமாகப் பழகினாள். ஆண்டிக்கு அவள்மேல் தனிப் பிரியம். அவன் பார்த்துவைத்த பெண்ணாயிற்றே. பார்க்கும்போதெல்லாம் தெம்புசொல்வான்.

''மருதன் பெயல மலைக்க வுட்றப்புடாது. அனந்தியப் போல பொறுமையா ருக்கணும்.''

மருதனும் மாடத்தியும் நேரங்காலம் பாராமல் வேலைகளை முடித்தார்கள். அனந்தி ஒத்தாசனையாக இருந்தாள். குடும்பமே வெளுப்புத்துறைக்குப் போகும் போது அவளால் கொஞ்ச நேரம் வீட்டில் தங்க முடியாது. ஆளுக்கு முந்திக் கிளம்பிவிடுவாள். வேலைசெய்ய ஏண்டாலும் ஏலாவிட்டாலும் சும்மாவாச்சும் கம்மாக் கரையில் உட்கார்ந்திருக்கணும். அந்தச் சொகமே தனி. வெளுப்புத்துறை அவளுக்குக் கோயில் மாதிரி.

மழைக் காலங்களில் எல்லா வேலைகளும் சுணங்கும். வெயில் திறந்து காய் வதைப் பொறுத்து விரைவாக வேலைகளை முடிக்கணும். சேற்றுப் பிடிப்பில் கழுதைகள் பொதி சுமக்கத் திணறும். அனந்திக்கு அனுபவத்தில் எல்லாம் அத்து படி. அடிக்கடி மேகத்தைப் பார்த்தபடி கோளாறு சொல்லிக்கொண்டிருப்பாள். அதுக்குத் தக்க நடந்துகொள்ளணும். ஊருக்குள் மருதனை மெச்சிக்கொள் வார்கள்.

''அடமழையிலகூட வெள்ள குடுத்துருவான். வெயிலு வந்து போற நேரம் நமக்குப் புடிபட மாட்டங்குதே.''

''எருமக் கொம்பு நனையிறதுக்குள்ள எழுவது தேரம் சொருக்கு மோத்தரமா மழ பேஞ்சு வேலைய மெனக்கிட வச்சிருதே. நம்ம பெழப்பு அப்படியிருக்கு.''

அந்த வருசம் கம்மாக் கரை ததும்ப நிரம்பிக் கலிங்கல் தத்தி ஓடியது. நீர் சுருண்டு விழும் ஓயாத இரைச்சல். நாக்குநீட்டிச் சிரிக்கும் கலிங்கலில் துள்ளிக் குதித்தேறும் மீன்களைப் பார்த்துக் குழந்தைகள் ஆதாளிபோட்டன. கம்மாய்க்குள் பெருகிக்கிடக்கும் தண்ணீர் வந்துவந்து கரைவிளிம்பைத் தொட்டு விளையாடியது.

மந்தார நேரம். சாரலுக்குத் துவளும் மையாங்கோரை ஊரைச் சுற்றிப் பச்சைமாத்து விரித்திருந்தது. அதைக் கிழிக்க எருமை வாய்கள் பிரயாசைப் பட்டன. சில சமயம் பல்வலிப்பதுபோல் ஓர உதட்டைச் சுளித்துக்கொண்டன.

வெளுப்புத்துறையிலிருந்து மருதனின் பாட்டு ஈரக் காற்றில் விரவி வந்தது.

''கம்மங்கஞ்சி குடிச்சுக்கோ
காரமொளகா கடிச்சுக்கோ
கொமரிப்பொண்ணப் புடிச்சுக்கோ
குளூரக்கொஞ்சம் கொறச்சுக்கோ.''

கம்மாய்க்குள் முங்கிமுங்கித் தொட்டுப் பிடித்து விளையாடும் முக்குளிப் பான்கள் மேலே வந்து தலையுதறி மிதப்பில் ஆடின. அந்த ஆட்டத்துக்குத் தோதாகத் துணியடிப்புத் தாளம்.

மேற்கே கரையோரப் புஞ்சையில் சீனிக்கொடி அடர்த்திக்குள் வெள்ளைக் குழல் பூக்களை மிதித்துத் திரியும் குச்சுக்கால் கொக்குகள் தலைநிமிர்ந்தன. இருட்டு நமர்ந்த ஈர வெயிலுக்கு கொக்குத் தலைகள் அந்தரத்தில் லாந்துவதை அவன் உள்புறமிருந்து கரைவழியாகப் பார்த்தான்.

அவன் நிதமும் பாட மாட்டான். அதுக்கென்று மனசு குறுகுறுக்கணும். முட்டி மோதி உடைத்துக்கொண்டால் பிறகு தாமரிக்க முடியாது. பாட்டு வந்து கொண்டேயிருக்கும். புதுப்புதுப் பாட்டு. துணி அம்புட்டும் காலியானதுகூடத் தெரியாது. சொக்க வைக்கும் சத்தம் விக்கல் முக்கலில்லாமல் வாமடை விலகிய வாய்க்காலாக ஊருக்குள் ஓடிவரும்.

பாட்டு வரணுமென்றால் தனியாக இருக்கணும். பக்கத்தில் ஆளிருந்தால் தொண்டைக்குள் வந்த முனக்கமும் அமுங்கிவிடும். இந்தச் சங்கதி மாடத்திக்கும் அனந்திக்கும் தெரியும். வேலைசெய்யும் சாக்கில் கரையடிக்குப் போய்விடு வார்கள். புருசனின் பாட்டில் மாடத்திக்கு எப்போதுமே ஒரு சொகம் உண்டு. அனந்திக்கு வேறு மாதிரி. மனசு மாரியை நினைத்து மறுகும்.

பாட்டுச் சத்தம் கேட்டால் ஊருக்குள் பல பேருக்கு வேலை ஓடாது. எல்லாம் அப்படியப்படியே போட்டுவிட்டுக் கம்மாய்க்குத் திரண்டு வருவார் கள். கரைக்கு இந்தப் புறம் ஒளிந்துகொண்டு கேட்பார்கள். நடக்கிற கதையை மாடத்தியும் அனந்தியும் வேடிக்கைபார்ப்பார்கள்.

வந்தவர்களுக்குக் கொஞ்ச நேரச் சொகம். அதுக்குள் மருதன் ஆளருவம் கண்டுபிடித்துவிடுவான். அவ்வளவுதான். பாட்டு அடங்கிவிடும். இன்னொரு பாட்டுக்கு அடியெடுக்கத் தயாராகிறான் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக் கையில் திடூரென்று கழுதைக் கனைப்பும் முரட்டு வெளுப்புமே கேட்கத் தொடங்கும்.

''வம்புக்காரத் தாயிளி. அவன் கனைக்கிற கனப்பப் பாரு. காது கிழிஞ்சு போகும் போலருக்கு.''

அவர்கள் வீடு போய்ச் சேரும்வரை வசவுதான். மாடத்தியும் அனந்தியும் ஒண்ணுமே நடக்காததுபோல் வேலைகளைக் கவனிப்பார்கள்.

ஆண்டிக்கு மருதனின் பாட்டில் கிறுக்கு. மாரி பாடுவதுபோல் மனசுக்குள் ஆறுதல். பூசரமரக் கிணற்றில் நிற்பான். கம்மாய்க்கு நடப்பான். கடுப்பாக இருக்கும்.

''இந்தப் புழுக்கப் பெய பாட்டக் கேக்கிறதுக்குக் கம்மா' தேடிப் போக வேண்டியிருக்கு.''

பாட்டைக் கேட்க ஆரம்பித்தால் மனசு மாறிவிடும். அசந்துபோய் அப்படியே நிற்பான்.

''கரையோரம் தொறையிருக்கு
தொறையோரம் தொணையிருக்கு
இருபேரும் துணிவெளுத்து
எதமாகக் காயவச்சு
மரந்தேடிப் பசியாறி
மனம்போலக் கதபேசி
தரமேல தலசாயும்
தலகாணி கையாகும்.''

கம்மா நீரில் மல்லாக்கப் படுத்து மிதக்கிற சொகம். பாட்டு ராகத்தில் அப்படியே முங்கிப் பட்டு விரித்த வண்டலில் மெதுமெதுவென்று படுத்ததுகூடத்

தெரியாது. உறங்கியெழுந்து வெளியே வரும்போது பாட்டு முடிந்து முனக்கம் தேய்ந்துகொண்டிருக்கும்.

''சோவீவீ... சோவீவீ...''

தோட்டத்துக்குத் திரும்பிய பிறகும் மனசு வெளுப்புத்துறையைச் சுற்றிச் சுற்றி வரும்.

''இதக் காட்டி வேற என்ன வேல வேண்டிக்கெடக்கு மயிரப்புடுங்குற வேல.''

மறுநாள் மருதன் அகப்பட்டுக்கொள்வான்.

''ஒனக்கு வாயி பெரிசாருக்கிறதுக்குக் காரணம் இப்பத்தாண்டா தெரியிது.''

அவன் அப்பிராணியாக முழிப்பான்.

''அஞ்ஞாக்கமாரு போடுற சோளப்பருக்கைய விழுங்குறதுக்குச் சின்ன வாயிருந்தாக் கிழிஞ்சுபோகுமே.''

''அந்தக் கஞ்சியக் குடிச்சுக்கிட்டே இந்தக் கொளுத்துக் கொளுத்துறயே நல்ல சோறு கெடச்சா நாக்கு சும்மா கெடக்குமா. அடுத்தவன வேலசெய்ய வுட மாட்ட.''

''அவுகள வேலசெய்ய வுடாமப் புடிச்சுக்கிட்டா இருக்கென்.''

ஆண்டி அங்கிருந்தபடியே கம்மாய்க்குப் போவான்.

''கையிட்டுப் புடிக்கணுமாக்கும்...அடே ஒருநாளைக்கு மாமரத்துக்குப் போவொம்.''

''போயி மாங்கா புடுங்கவா.''

''எணல்ல உக்காந்துக்கிருவொம்.''

''படுத்து ஒறங்கவா.''

ஆண்டிக்கு ஆத்திரம்ஆத்திரமாக வரும். அடக்கிக்கொள்வான்.

''ஒங்கிட்ட இருக்கிற சரக்கெல்லாம் அவுத்துவுடு. அம்புட்டும் கேட்டா கணும். படிக்லன்னா வகுறு கலங்கிப்போகும்.''

''வேலத்தனத்துல படிக்கிறதப்போயி மொடக்கி உக்காந்துக்கிட்டுப் படிக்கச்சொல்றீகளா.''

''பெறகென்ன செய்யணும்.''

''ஆடாம அசையாம வெளுப்புத் தாளமில்லாம பாட்டு எப்படி வரும்.''

''ஒம் முதுகுலதான் வெளுக்கணும்.''

''அப்படின்னா ஒங்களுக்கு எங் கழுததான் தோது.''

அதுக்கு மேலும் அந்த இடத்தில் இருக்க மருதனுக்குக் கோட்டியா என்ன.

## 17. அது போதும் அப்பச்சி

மழை வெறித்திருந்தது. வெளுப்புத்துறைக்கு மேல்புறம் தோட்டத்துக்குள் சீனிக் கொடி இலைகளும் பூக்களும் வெயில் காய்ந்துகொண்டிருந்தன. கொர்டிக்குள் திரியும் புழுப்பூச்சிகளைப் பொறுக்குவதற்காகக் கொக்குகள் நிறைய இறங்கி

நிரைபிடித்துத் தேடும். அதை எதிர்பார்த்து மருதன் வரப்பு நெடுகக் கண்ணி ஊன்றிப் பதித்திருந்தான்.

எதிர்பார்த்தபடியே கொஞ்ச நேரத்தில் அஞ்சு கொக்குகள் கண்ணியில் மாட்டிக்கொண்டு காலை உதறிப் பிடுங்க முடியாமல் கார்கார் என்று கத்தின. இதைக் கண்டு பயந்து மற்றவை காற்றில் விரிந்த வேட்டியாகப் பறந்து மறைந்து விட்டன. அவன் மெதுவாக வந்து அகப்பட்டதைப் பிடித்து கழுத்தைத் திருகி னான். கண்ணியைச் சுருட்டிக்கொண்டு நடந்தான். கொக்கு வேட்டையைப் பார்த்துக்கொண்டிருந்த மாடத்தி கேப்பை திரிப்பதற்காக நேரமிருக்கவே வீட்டுக்குக் கிளம்பிவிட்டாள்.

கொக்குக் கறிக்கும் கேப்பைக் களிக்கும் ஏகப் பொருத்தம். இளங்களியைக் கறிச்சாறில் புரட்டிச் சுடச்சுடப் பிட்டுப் போட்டால் நாலஞ்சு உருண்டை மாய மாக மறைந்துவிடும். அனந்தி பிரியமாகச் சாப்பிடுவாள். இதுக்காகவே மாடத்தி கேப்பையைப் பத்திரப்படுத்தி வைத்திருப்பாள்.

கொக்குக் கறி சலித்துவிட்டால் காடை கதுவாலி வரும். அதுக்குக் காடா செதறியாக அலைந்து ஓரஞ்சாரமாகக் கண்ணிபதித்துக் காத்திருக்கணும். அதுக் காகவே கைக்காடையும் சன்னைக் கதுவாலியும் கைவசம் வைத்திருப்பான். கண்ணிக்கு இந்தப் பக்கம் கூட்டுக்குள்ளிருந்து கெக்கேர்கெக்கேர் என்று கது வாலிச் சத்தம் கேட்டதும் அந்தப் பக்கமிருந்து மொலுமொலுவென்று சண்டைக் கோப்பில் ஓடிவரும். அவ்வளவுதான். கண்ணியில் அத்தனையும் மாட்டிக் கொள்ளும். காடையென்றால் கொஞ்சம் காத்திருக்கணும். அப்படியும் அவ்வளவு எண்ணிக்கை தேறுவது சந்தேகம்.

வேட்டையில் பாதி ஆண்டி வீட்டுக்குப் போயாகணும். சொக்கம்மா மசா லறைத்து மாளாது. கருப்பி பொய்யாகச் சலித்துக்கொள்வாள்.

''அரச்சரச்சு அம்மி தேஞ்சுபோகும்.''

அவன் பதில் கதை சொல்வான்.

''தின்னுதின்னு பல்லுத் தேஞ்சிரும்.''

''ஏன் பேச மாட்ட. சும்மா கெடைக்குதுல்ல. ஒனக்குக் கொஞ்சங்கூட வெக்கமில்ல.''

ஆண்டி மருதனைச் சத்தம் போடுவான்.

''எங்க வீட்ல மசாலரைக்கிறதுக்கு மலைக்காகடா. வக்காளி ஒனக்கு மட்டும் எங்கருந்துதான் இம்புட்டு உருப்படிக அம்புடுதோ.''

''எல்லாம் ஒங்க பிஞ்சக் காட்லதான். அதுல ஒங்களுக்குப் பங்கு குடுத் தாகணுமில்ல.''

''நல்ல வேளைக்கு கொக்குக் குடுத்துவுடலயே.''

''அப்படியும் நெனப்புத்தான். ஆனா எங்க வீட்டுக்கே காணல. அடிச்சுக்கோ புடிச்சுக்கோன்னு போச்சு.''

''கருப்பி வையிற வசவச் சொமக்க முடியும்னா சந்தோசமாக் குடுத்தனுப்பு.''

''அஞ்ஞாவுககிட்ட மாட்னா அம்புட்டுத்தான்.''

''நாங்க வேட்டையாடி என்னென்னமோ கொண்டுவந்து குடுத்தும் ஒன் அப்பனக் காப்பாத்த முடியல. பாவிப் பெய எல்லாரு வாயிலயும் மண்ணள்ளிப்

போட்டுட்டுப் போயிட்டான். அந்தக் கடன வட்டிவாசியெல்லாம் சேத்து இப்பத் திருப்பிக் குடுக்கயாக்கும்.''

ஆண்டிக்கு மன்னைகட்டி முகமே மாறிவிடும். அமைதியாகப் போய் விடுவான். மருதனுக்குக் கொஞ்ச நேரம் ஒண்ணுமே ஓடாது.

அனந்தி மருமகள் கையால் நல்லதுபெல்லது அனுபவித்தாள். வேட்டை யாடினாலும் சரி ஊருக்குள் கிடைத்தாலும் சரி வீட்டில் கறிபுளி நடமாடினால் அவள் சாப்பிட்டது போகத்தான் மற்றவர்களுக்கு. மாடத்தி ஒளித்துவைத் திருந்து ரெண்டாவது தடவை கொடுப்பாள். மருதன் கோவித்துக்கொள்வான்.

''அதென்ன ஒனக்கு ஓரவஞ்சகம். புள்ளீக இருக்கிறது கண்ணு தெரியலயா.''

''சின்னதுக இண்ணைக்கில்லன்னா நாளைக்குத் தின்னுக்கிரும். பெரிய மனுசிக்கு முடியுமா. நாளைக்குப் பொழுது எப்படியெப்படியோ.''

''அப்ப புருசக்காரனுக்கு எலும்புத் துண்டுகூடப் போட மாட்ட.''

''எலும்பு கடிக்கிற பல்லத் தட்டி நொறுக்குனாச் சரியாப்போகும்.''

''இரு ஒன்னய வசமா வச்சுக்கிறென் ஒருநாளைக்கு.''

அவன் சிரிப்பை அடக்கிக்கொண்டு விறைப்பாகப் போவான்.

ஒரு நாள் கொக்கு வேட்டையில் வீம்புக்குப்போல் ஒண்ணும் அகப்பட வில்லை. அவன் ஏமாற்றத்துடன் சீனிக் கொடிக்குள் முனங்கிக்கொண்டே கண்ணியைப் பிடுங்கி மடித்தான். கும்மலான இடத்தில் ஆமெ ஒண்ணு தட்டுப் பட்டது. அதுக்கடியில் நிறைய முட்டைகள். அவன் எல்லாவற்றையும் அள்ளிக் கொண்டு கம்மாக் கரைக்கு வந்தான்.

ரெண்டு பயல்களும் சுதாரிப்பானார்கள். பெரியவன் வீட்டுக்கு ஓடிக் கங்கு கொண்டுவந்தான். சாலமுத்து விறகு சம்பாரித்தான். அதே கையோடு மாட்டுச் சாணி தேடி ஆமெமுட்டைகளில் தடவினான். தீக்கொளுத்தி ஆமெயைக் குடைசாய்த்து வாட்டினார்கள். முட்டைகளையும் வேகப்போட்டார்கள்.

சின்னனந்தி காய்ந்த துணிகளை எடுத்துக்கொடுக்க வகைபிரித்து மடித்துக் கொண்டே பெரியனந்தியும் மாடத்தியும் வேடிக்கைபார்த்துக்கொண்டிருந் தார்கள். முட்டைகள் பக்குவமாக வேகும்வரைதான் பயல்களின் சூட்டிக்கை. தீமூட்டத்துக்குள்ளிருந்து புரட்டிப்புரட்டி வெளியே எடுத்துக்கொண்டு அப்பனை விட்டுவிட்டுக் கிண்ணிவிட்டார்கள். மாடத்தி புருசனிடம் போனாள்.

''அடியாத்தெ இதென்ன கூத்து. ஒரு நாளைக்குக் கறியில்லாம வாயி சும்மாருக்காதோ.''

மருதனுக்கு வயசு குறைந்துவிட்டது.

''நம்ம சும்மாருந்தாலும் பல்லு சும்மாருக்காது. கறியவும் கடிக்கும் சமயத் துக்கு ஒன்னயவும் கடிக்கும். உக்காந்து இதப் புடி சரக்காக்குவொம்.''

''பல்லு கொடுகொடுத்தா வெளுப்புக் கல்லு பங்கரபங்கரயா இருக்குது. சுத்திக் கொறிச்சுச் சரிப்படுத்து. எனக்குக் கெடக்குது ஒரு பொதிக்கு வேல. வீட்டுக்குப் போறென்.''

''சிலுப்பீட்டா போற. கறி திங்கயிலயில்ல இருக்கு சங்கதி.''

ஒருவழியாக ஆமெயை அறுத்து ஓட்டிலேயே கறியைப் போட்டுக் கொண்டு கிளம்பினான் மருதன். அன்றைக்கு ராத்திரி ஆசை தீர ஆமெக் கறி தின்ற அனந்தி சொன்னாள்.

''ஆமெக் கறி நல்லாருக்குதுப்பா. ஒங்கப்பன் இருக்கயில சாப்பிட்டது. ரெம்ப நாளாச்சு.''

மருதனும் மாடத்தியும் சாமம்வரை தெம்பாகப் பேசிக்கொண்டிருந் தார்கள்.

தனக்கு வயசாகிக்கொண்டிருப்பதை அனந்தி அடிக்கடி மகனுக்கு நினைவு படுத்தினாள்.

''ஒரு பேரனுக்காச்சும் கலியாணம் முடிக்கிறவரைக்கு இருப்பனா.''

''ஏன் ஆத்தெ அப்படிச் சொல்ற. ஒனக்கு ஒண்ணும் ஆகாது.''

''அடே பேத்தியாளத் தூரத்துல குடுத்துறாத.''

அவளுக்கு அல்லாத்தியைப் பார்க்கணும் போலிருக்கும்.

''அந்தப் புள்ள கண்ணுக்குள்ளயே இருக்குதுப்பா. இந்த வெள்ளையக் குடுத்துட்டு வடக்க போயி அவளக் கூட்டீட்டு வாறயா. துணி ஒரு வெள்ளைக்கு பொண்ணு ஒரு புள்ளைக்கு. புள்ளக்காரியானதும் உருக்கொலஞ்சுபோயிட்டாளே.''

''நானும் அப்படித்தான் நெனச்சென். போன வெள்ளைக்கே போகச் சொன்னா மாடத்தி.''

அல்லாத்திக்கு மூணு பயல்கள். புருசன் குணமானவன். தொழில் கஷ்டமில் லாமல் நடந்தது. அவள் பாடு கவலையில்லை.

அவள் வரும்போதெல்லாம் ஆத்தாளை ஊருக்குக் கூப்பிடுவாள். ஆத்தா மழுப்பிவிடுவாள்.

''ஒங்களத்தான் பாத்துக்கிட்டன்ல. எதுக்கு அம்புட்டுத் தொலவட்டு. எனக்கு இந்த மண்ணுதான் குடுத்துவச்சது.''

அல்லாத்தி வந்துவிட்டால் ஆண்டி வீட்டுக்குத் தகவல் போயாகணும். இல்லையென்றால் கருப்பி கோவித்துக்கொள்வாள். அவளும் ஆண்டியும் மெனக்கிட்டு வண்ணாக்குடிக்கு வந்து பார்த்துப் பேசிவிட்டுப் போவார்கள். அல்லாத்திக்குப் பயறு பச்சை தானியம் கிடைக்கும். அனந்தியின் கண்ணில் அழுகையும் சிரிப்பும் குழைந்து திரளும்.

அவளுக்கு எப்போதும் குடும்பத்தைப் பற்றிய நினைப்புத்தான். தன் கண்ணுக்குப் பின்னால் மகன் துவளாமல் இருக்கணும். பிழைப்பு குறையில் லாமல் நடக்கணும். துணைக்கு மருமகள் இருக்கிறாள். பிள்ளைகள் வளர்ந்து விட்டார்கள். இருந்தாலும் மனசுக்குள் ஒரு வாதிப்பு. கஞ்சித் தாழியில் கீறல் விழுந்துவிடுமோ என்று தன்னையறியாமல் பயம். மகனைப் பக்கத்தில் இருத்தி அப்பப்ப புத்திசொல்வாள். கொத்துக்கூலி வாங்குவதிலிருந்து கோழி வளர்ப்பது வரை நிறையப் பேசுவாள். மேலக்கடைசி வீட்டிலிருந்து ஊர் முழுக்கத் தலைக் கட்டுகளை எண்ணிக்காட்டுவாள். அவள் கணக்குப்படி ஒரு கலியாணம் முடிந்து மறுவருசம் திரும்பினால்தான் தலைக்கட்டுக் கணக்கில் வரும்.

''கலியாணம் முடிஞ்சதும் போயிக் கொத்துக்கு நிக்கப்புடாது. அது மொறையில்ல.''

''எத்தன கலியாணத்தக் கணக்குவச்சுக்கிறது.''

''துணிகளப் போலத்தான். ஒரு வீட்ல புதுத் துணி போட்டா கணக்கு வச்சுக்கிறமில்ல. மாத்தியா குடுக்கொம்.''

''முக்கியமானதுக்குக் குறி போட்டுக்கிறமே.''

''அதப் போல மனசுக்குள்ள குறி போட்டுக்கிறணும்... இனியொண்ணு தெரிஞ்சுக்கோ. நாலு பேரு நாலு வெதமாப் பேசத்தான் செய்வாக. அவுகள அண்டிப் பெழைக்கிற நம்மதான் அனுசரிச்சுப்போகணும்.''

''அவுககூடச் சண்டையா போடப்போறொம். அவுக ஆத்தரம் அவசரம் அவுகளுக்கு.''

''ஒரு வீட்ல கொத்து வரலன்னா மெனக்கிட்டுப் போயிக் கேக்கப்புடாது. கஞ்சிக்குப் போற சாக்குல யாவுகப்படுத்தணும். அப்படியும் காரியம் ஆகலன்னா கடந்து கேட்றப்புடாது.''

''ஒழச்ச கூலியக் கேக்கிறதுல என்ன தப்பு.''

''ஒழச்ச கூலிதான். ஆரு இல்லன்னது. ஒரு நாளோட முடிஞ்சுபோற காரியமில்லையே. காலங்காலமா அவுகள நம்பிப் பெழைக்கிற காரியம்.''

அனந்தி காலமும் அப்படித்தான் ஓடியடைந்தது. சில வீடுகளில் ரெம்ப நாளாகக் கொத்து பாக்கி நின்றால்கூட அவசரப்பட மாட்டாள். ஊர்க் கூட்டம் போடும் சமயத்துக்காகக் காத்திருப்பாள். ''தெருக்காரங்க வாங்கப்பா'' என்று ஊர்க் குடும்பன் சத்தங்காட்டும்போது அவனிடம் பேச்சு வாக்கில் கேட்பாள்.

''எப்போவ் இப்பத்தான் கூட்டம் நடந்த மாதிரி இருக்கு.''

''ஆமா அதுக்கென்ன இப்ப.''

''இல்ல அதுக்குள்ள என்ன அவசரம்னு தெரியல.''

''ஒனக்கு அது ரெம்ப அவசியமோ. ஊருன்னா ஆயிரம் வெவகாரம் இருக்கும். அது நாளும் பொழுதும் சொல்லிக்கிட்டா வருது.''

''அப்பாவுகளுக்குத் தெரியாற வெவகாரமா.''

அவன் சந்தேகத்தில் பார்ப்பான்.

''நீ என்னமும் வெவகாரம் வச்சிருக்கயா.''

''இல்ல சும்மாதான் கேட்டென்.''

''காரணமில்லாமக் கேக்க மாட்டயே.''

''கூட்டத்துல என்ன பேசப்போறாகளாம்.''

''வுட மாட்டயே. நெறைய வெவகாரம் இருக்கு. பேசி முடிக்கிறதுக்குள்ள விடிஞ்சுபோயிரும்.''

ஊர்க் குடும்பன் மறுபடியும் சத்தங்காட்டிக்கொண்டு போவான். அனந்தி தன் விவகாரத்தை அடுத்த கூட்டத்துக்குத் தள்ளிப்போடுவாள். அந்தக் கூட்டமும் சாதாரணமாக இருக்கணும். இல்லையென்றால் காரியம் கெட்டுப்போகுமே.

கூட்டத்தில் ஆளாளுக்கு வழக்குப் பேசி முடித்து ஓயும் சமயம் பார்த்து அஞ்சிஒஞ்சிப் போய்க் காலில் விழுந்து ஊரை வணங்குவாள். ஊர்ப் பேச்சு அவள் பக்கம் திரும்பும்.

''அனந்தி என்ன வழக்குக் கொண்டுவந்துருக்க.''

அவள் எழுந்து ஒரு ஓரமாக ஒதுங்குவாள்.

''அப்பச்சிமாரோட எனக்கென்ன பெரிசா வழக்கு இருக்கப்போகுது.''

‘‘எதாச்சும் இல்லாம வர மாட்டயே. எவனும் தப்பாப் பேசுனானா. இல்ல பொம்பளைக சண்டபோட்டாகளா.’’

வீட்டு முற்றங்களில் உட்கார்ந்து கூட்டத்தைக் கவனித்துக்கொண்டிருக்கும் பொம்பளைகளுக்கு என்ன சொல்லப்போகிறாளோ ஏது சொல்லப்போகிறாளோ என்று உதறலெடுக்கும். அவள் பக்குவமாகச் சொல்வாள்.

‘‘அதெல்லாமில்ல அப்பச்சி. கொத்து கொஞ்சம் வர வேண்டியிருக்கு. அதக் கேட்டுக் குடுக்கணும்.’’

‘‘ஆராரு வீடு பாக்கி.’’

‘‘இன்னாரு வீடுன்னு எப்படிக் குறிச்சுச் சொல்லட்டும்.’’

‘‘ஒன்னோட இதான் பெரிய தும்பம். ஆருன்னு தெரிஞ்சாத்தான கழுத்துல துண்டப் போட்டுக் கேக்கலாம்.’’

பல மாதிரியாக வசவு கிளம்பும்.

‘‘அது எவம்ல கொத்துக் குடுக்காம வெள்ள வேட்டி கெட்டி லாத்துறவன்.’’

‘‘வருசம் திரும்பப்போகுது. அதுவரைக்கும் குடுக்கலன்னா எப்படி.’’

‘‘நாளையிலருந்து அங்க அழுக்கெடுக்காத.’’

‘‘குடும்பத்தோட நாறிக்கெடக்கட்டும்.’’

‘‘குடும்பன எங்கப்பா. குக்குமுக்காடு போட்டு ஒறங்குறானா.’’

கூட்டத்துக்குள்ளிருந்து ஊர்க் குடும்பனின் குரல் வரும்.

‘‘கேட்டுக்கிட்டுத்தான் இருக்கென்.’’

‘‘தலையில துண்டப் போட்ருக்கிற லச்சணத்தப் பாத்தா ஒன் வீட்லயும் கொத்து பாக்கி நிக்கும்போலருக்கு.’’

‘‘நம்மளப் பத்தி அவகிட்டயே கேளுங்க.’’

‘‘மூணு நாளைக்குள்ள அத்தன வீட்டுக் கொத்துப் பாக்கியும் போயிச் சேரணும். இல்லன்னா நாலாம் பக்கமே ஊரக் கூட்டீரு. அண்ணைக்கு என்ன நடக்குதுன்னு பாரு.’’

‘‘நீ வீட்டுக்குப் போ அனந்தி... ஊருக்கு ஊழியம் செய்ற தொள்ளாளிய அதும் புருசன் இல்லாற பொம்பளைய கூட்டத்துல நிக்க வைக்கிறது பாவம். அது ஊருக்குத்தான் கேவலம்.’’

வசவு வாங்கியவர்களுக்குக் கடுப்பேறும். பொம்பளைகள் வேறு பொரிந்து கொண்டிருப்பார்கள்.

‘‘வண்ணாக் கழுத சந்தியில வெவகாரம் வச்சுக் கொத்து வாங்கவா. இரு ஒன்னயச் சொல்றென். விடிஞ்சுக்கிறட்டும்.’’

‘‘இவ வெளுத்துக் குடுக்கிற லச்சணத்துக்குக் கொத்து ஒரு கேடா.’’

‘‘இவ கொத்து ஆருக்கு வேணும். அதத் தின்னாச் செமிக்குமா பசிக்குமா.’’

‘‘நாளைக்குக் கஞ்சி கேட்டு வரணுமில்ல. அப்ப வச்சுக்கிறென்.’’

ஒண்ணுமே நடக்காததுபோல் அனந்தி அமைதியாக வீடு திரும்புவாள். ஒருவார்த்தைகூடச் சிந்தாமல் எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருக்கும் ஆண்டி அவள் சாமர்த்தியத்தை மெச்சிக்கொள்வான்.

‘‘வெறுஞ்சட்டியத் தாளிக்கிற மகராசிகளுக்கு அந்த மனுசியோட அரும எங்க தெரியும். கைய மூடுனா கமுக்கம் விரிச்சா வெட்டவெளி. இன்னாரு இன்னாருன்னு பட்னு போட்டு ஒடைக்கிறதுக்கு எம்புட்டு நேரமாகும்.’’

விடிந்ததும் வண்ணாக்குடி தேடி வரிசையாக ஆள் வரும். என்ன நடக்கப் போகிறதோ என்று அனந்திக்குப் பயம் ஒருபுறமிருந்தாலும் சமாளிப்பாள்.

''அப்பாவுக விடியக்கருக்கல்ல வந்துருக்கீகளே. அவசரச் சோலியா. மருதன வரச் சொல்லட்டுமா.''

வந்தவர்கள் முகத்தைத் திருப்பிக்கொள்வார்கள்.

''ஒங்கிட்ட என்ன சங்காத்தம் வேண்டிக்கெடக்கு. வந்து எட்டத்துல நின்னு ஒங் கொத்த வாங்கீட்டுப் போ. பெரிய கொத்து.''

அதோடு சரி. அவர்களுக்குக் கூடுதலாத ஒரு வெள்ளை கொடுத்துவிட்டால் போதும். கோவம் ஆறிப்போகும். அனந்தி நல்ல மனுசியாகிவிடுவாள்.

''நடுக்கூட்டத்துல நிக்கவைக்கலயே அவதான் மனுசி.''

அவள் மருமகளுக்கு மறக்காமல் ஒரு சங்கதியைச் சொன்னாள்.

''ஆராருக்கு எப்படிப்பட்ட மாத்துச் சீல குடுக்கணும்னு தெரிஞ்சுக்கோ. ஆரு சீலைய ஆருக்குக் குடுத்தா சச்சரவு வருமிங்கிறத அறிஞ்சு நெளிவுசுளிவோட நடந்துக்கிறணும். அவுகளுக்குள்ள சண்டையிழுத்துவச்சிட்டு நம்ம தெருவுல நின்னு காகமாக் கத்துனாலும் கஞ்சி பான தூர வுட்டு எட்டிப் பாக்காது.''

''அது சரிதான்.''

''இனியொண்ணு கேட்டுக்கோ. ஊரு எளக்காரம் வண்ணாத்திக்குத் தெரியும்னு சொலவடையே உண்டு. ஊருக்குள்ள என்னென்னமோ நடக்கும். அதுல நாலு நல்லதும் இருக்கும் கெட்டதும் இருக்கும். அதெல்லாம் நம்ம கண்டுக்கிறப்புடாது. அது அவுக பாடு. இண்ணைக்கு அடிச்சுக்கிருவாக. நாளைக்குக் கூடிக்கிருவாக. சும்மாருக்க மாட்டாம ஆராச்சும் நம்ம வாயக் கிண்டுனா எனக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு ஒரேயடியாத் தலையக் குலுக்கீறணும்.''

மாடத்திக்கு இது எப்போதும் மனசில் பதிந்திருந்தது. அந்தப்படியே நடந்து கொண்டாள்.

அனந்திக்குக் கம்மாக் கரைப் புங்கமரம் நினைவுக்கு வரும்போதெல்லாம் மகனைப் பற்றியும் நினைத்தாள். ஆண்டியிடம் அவளுக்கு ரெண்டொரு வார்த்தை பாக்கியிருந்தது.

''மருதன் ஒங்க காலுக்குள்ளயே கெடக்கிற நாக்குட்டி அப்பச்சி.''

''அதுக்கென்ன இப்ப.''

''மிதிச்சிறப்புடாது.''

அவன் கிட்ட வந்து பயமுறுத்தினான்.

''அவன மிதிப்பென் அடிப்பென். அது எங்க பாடு. நீ தயனாத்துக்கு வர வேணாம்.''

''அது போதும் அப்பச்சி.''

அவள் நம்பிக்கையைப் பொத்திக்கொண்டு போனாள்.

# படலம் 2

## 1. வாங்க மக்கா

வாங்க மக்கா வாங்க. கிட்ட வந்து உக்காருங்க. நான் ஆருன்னு தெரியிதா.

''நொண்டியப்பன்.''

''சின்ன வாத்தியாரு.''

அப்படின்னாப் பெரிய வாத்தியாரு ஆரு.

''கருத்தையன்.''

அவனப் பாத்துருக்கீகளா.

''இல்ல.''

பாக்கணுமா.

''ஆமா.''

ஒருநாளைக்குக் கூட்டீட்டுப் போறென்... கம்மாக் கர மரத்து எணலுன்னா அதொரு சொகந்தான். ஆடுக படுத்துக் கண்ணச் சொருகி அசபோடுற லச்சணத்தப் பாரு. எனக்கில்லாம மதியக் கஞ்சி குடிச்சிட்டீகளாக்கும். அடேயப்பா இத்தன புள்ளீக ஆடு மேய்க்கீகளா. சந்தோசமா மேயிங்க. எவனாச்சும் சத்தம்போட்டா எங்கிட்டச் சொல்லுங்க.

நம்மள அரட்டி மெரட்ன காலமெல்லாம் மலையேறியிருச்சு மக்கா. இப்ப எவனாச்சும் வாயத் தொறப்பானா. ஒருகாலத்துல கலிங்கலுன்னா சுத்துப்பட்டிச் சனங்களுக்குத் தொக்கு. கண்டகண்ட பெயகளும் வருவான். வல்ரூட்டியா கொள்ளையடிச்சிட்டுப் போவான். அடிக்கடி தீவட்டிக்கொள்ள நடக்கும். ராத்திரி ஆருக்கும் ஒறக்கம்புடிக்காது. எலையுங்கொலையுமா இருப்பாக. பொருளு போயிட்டாச் சரி. உசிரு சிந்தீறப்புடாதே.

''அனயம் பேரு வருவாங்களோ.''

அஞ்சு பேருக்குக் கொறையாது. வந்ததே சரின்னு வீடுகளுக்கும் படப்பு களுக்கும் தீ வப்பான். பெறகுதான் மத்த வேல. எடுத்த எடுப்பிலயே சனங்களக் கெதிகலங்க வச்சிட்டுக் காரியத்த முடிக்கிறது. கையில ஆளு சிக்குனா கெட்டி வச்சு அடிப்பான். கேட்டதக் குடுக்கணும். இல்லன்னா உசிருத்தலத்துல சூடு வப்பான். பொண்டு புள்ளீக காத அறுத்து ரத்தம் சொட்டச்சொட்ட நகநட்டு பொட்டுப்பொடிசுகளப் பறிச்சுக்கிருவான். சனங்க கூப்பாடு போடுறதும் அழு கிறதும் பெரிய கருமாயம்.

வீட்ட வேகக்குடுத்தவுக படுற பாடு சொல்ல முடியாது. வரிச்சிக்கம்பு ஓல கம்மந்தட்டன்னு சம்பாரிச்சுக் கூர மேயணும். சொவருல செம்மண்ணு பூசித் தீக்காயத்த ஆத்தணும். ஊரு முழுக்கக் கரிபூசின கோலம் மறைய நாளாகும். அதுவரைக்கும் மொட்ட வீட்லயும் கொட்டாரத்துலயும் கஞ்சி காச்சிக் குடிச்சுக் கட்டையக் கெடத்தணும்.

வீடுகளாச்சும் ஒப்பேறிக்கிரும். சாம்பலாப்போன படப்புக்கெங்க போறது. ஆடுமாடுகளுக்கு ஆடையும் கோடையும் அதவச்ச பெழப்பு. அடுத்த வெள்ளாம வாறவரைக்கும் அந்தப் பாவத்தச் சொமந்தாகணும்.

செல சமயம் பகல் களவும் நடக்கும். வெளிக்காடியில கெட்டிக்கெடக்கிற காளமாடு திடீர்னு காணாமப்போயிரும். காட்ல மேயிற ஆடு மாயமா மறஞ்சிரும். குறிகேக்கவும் மையோட்டம்பாக்கவும் அலையா அலைவாக. எதுலயும் அட படாது. வேத்தாளு வச்சுத் துப்புவெட்னா பொருளு இன்ன தெசையில இருக்கு துன்னு பருவெட்டாச் சொல்லுவான். அய்யா சாமின்னு அவன் காலப் புடிச்சுக் கெஞ்சணும். மாராயம் பண்ணி வழிக்கு வருவான். அவனுக்குத் துப்புக்கூலி குடுத்தா ரெண்டே நாள்ல மாடு வந்து சேந்துரும். துப்புச் சொல்றதுக்குக் கூலி. எப்படியிருக்கு சங்கதி. துப்பனும் களவாணியும் ஒத்துக்கையி... கூலியப் பங்கு போட்டுக்கிருவாங்க. குடுக்கிற கூலியில ஒரு சோடி மாடு புடிச்சிறலாம்.

ஆடு களவுபோச்சுன்னா அம்புட்டுத்தான். கைசேராது. வறட்டுக் கறியாகிச் சாராயத்தோட கலந்துரும். அதோட தோலு எங்கயாச்சும் மேளக் கச்சேரியில உறுமி வாசிச்சுக்கிட்ருக்கும். இதுக்குப் பயந்துபோயி கெடையாடு வச்சிருந்தவங் கெல்லாம் ஒண்ணுக்கு ரெண்டா வித்துக் காசாக்கீட்டு மம்பட்டி தூக்க ஆரம்பிச் சிட்டான்.

''ஊருக்குள்ள ஒரு ஆடுகூட இல்லையா.''

குட்டிகூட இல்ல... நானும் ஒங்களப் போல சின்ன வயசிலருந்து ஆடு மேச்சவந்தான். வருசக்கணக்கா மேச்சென். ஆட்டுக்கார நொண்டியன்னே எனக்குப் பட்டப் பேரு உண்டு. தொறட்டிக் கம்பக் காவடியேந்திக்கிட்டு சவக் சவக்னு காடுகரையெல்லாம் திரிவென். நெறையா ஆடு வச்சிருந்தென். என் வாய்க்குக் கட்டுப்படாற உருப்படி கெடையாது. ஆட்டுக்கொரு சன்ன வச்சிருப் பென். சன்னையிலேயே பேச்சு நடக்கும். மேச்சலுக்குப் போக தண்ணிகாட்ட வீடு திரும்ப... இப்படி வெதவெதமான சன்ன. ஒரு ஆடு குட்டிக்குப் பாலு குடுக்க ஒழத்துதுன்னு வச்சுக்கோ. சொகமான சன்னையிலயே அத வசப்படுத்தி வளைய வச்சிருவென். கண்ணு வலிக்கு ஆட்டுப் பாலு வுட்டுக்கிறதுக்காக வெள்ளங்காட்டி நேரம் சனங்க எங்க வீட்டுக் கொட்டாரத்துல காத்துக்கெடப்பாக.

அதெல்லாம் பழைய கத. மனசுக்குள்ள மேஞ்சுக்கிட்டுத் திரிஞ்ச ஆடு குட்டிகள லேசுக்குள்ள மறக்க முடியல. ராத்திரியெல்லாம் அதுகளோட கூப்பாடு கேட்டு முடியாது. குட்டிக குதியாளம்போடும். அதுகளச் சன்னஞ்சன்னமாப் பத்தி வெரட்டி மனசத் தரிசாக்கிக்கிட்டென்.

''பெறகு.''

எனக்கு மம்பட்டி வேல சரிப்பட்டு வரல. மத்தவங்களப் போல மாங்கு மாங்குன்னு பாடுபடணுமே. என்னருந்தாலும் ஆடுமேய்க்கிறதுக்காகுமா. அந்த நெதானமும் சொகமும் பாட்டும் படுக்கையும்... வெயிலு ஒறச்சா எணலுக்கு ஒதுங்கலாம். எணலு குளுந்தா வெயிலுக் காயலாம். தண்ணி கண்ட எடத்துல கண்ணு செவக்கக் குளிச்சு தலையில ஈரத்துண்ட மூடிக்கிறலாம். நெனச்ச நேரம் கஞ்சி குடிக்கலாம். மிச்சம் வச்சுவச்சுக் குடிக்கலாம். காட்டுப் பழங்கள நமட்டி ருசிக்கலாம்.

பாத்திகெட்டு மாதிரி நுணுக்கமான வேலையில எனக்குக் காலு எடறுச்சு. மம்பட்டி பட்டுக் காயமாயிரும். அப்படியொண்ணும் ஒச்சமான காலில்ல. எடது பெருவெரலு தொறட்டி மாதிரி கோணியிருக்கும். இந்தா பாருங்க. இதான். கோண வெரலு தரையில அழுந்தப் பாவாது. பொத்திப்பொத்தி நடப்பென். அந்த நடையே பழகிப்போச்சு. தொலவட்லருந்து பாத்தா நொண்டி மாதிரி தெரியும்.

''அதான் அந்தப் பேரு வச்சிட்டாகளா.''

''நொண்டியப்பன்.''

ஆமா நொண்டியன். பெத்தவுக வச்ச பேரு சின்ன வயசிலயே மங்கிப் போச்சு. எம் பேரு வெள்ளையன். அது அவுகளுக்கே மறந்துருச்சு.

ரெண்டுங்கெட்டான் நெலமையில என்ன செய்றது. பெழப்புக்கு வழி வேணுமே.

''வேற வேல கெடைக்கலயா.''

''கெடச்சது. பருத்திமாரு ஒடமார எழச்சுக் கூடையும் வண்டிக் காடியும் பின்னுவென். மாட்டுக்கு வாக்கூடு செய்வென். புளிச்சி நாருல கவுறு திரிப்பென். கூர மேயிவென். படப்பு அடுக்கிச் சட பின்னுவென். இப்படித்தான் பெழப்பு ஓடுச்சு.

எம் பொண்டாட்டி சிலுப்பி பாட்டாளி. அருவேல செஞ்சுக் குடும்பத்துக்குப் போடுவா. களவாணிப் பெயகளால இக்கதியா ஆகணும். மொறபோட்டு வந்து ஊர மொட்டையடிச்சிட்டுப் போறானே. தட்டிக்கேக்கிறதுக்கு நாதியில்லாமப் போச்சே. எத்தன நாளைக்குத்தான் அடி வாங்கிச் சாகிறதுன்னு அவ நொந்து புழுங்காற நாளில்ல.

ஊருக்குள்ளயும் ரெம்ப முணுமுணுப்பு இருக்கத்தான் செஞ்சது. பயத்துல எல்லாமே அமுங்கிக்கெடந்துச்சு.

இந்த அக்கிரமத்துக்கு ஒரு முடிவுகெட்டியாகணும்னு நெனப்பு ஓடிக் கிட்டே இருந்துச்சு. எளவட்டங்ககிட்ட பொலம்பித் தவிச்சிட்டென். ஒருநா பத்துப் பேருக்கு மேல கூடியிருந்த எடத்துல நறுக்குன்னு தைக்கும்படியா நாலு வார்த்த பேசிப்புட்டென். நம்ம உசிரு வச்சிருந்து எதுக்குடா மக்கா. தின்னு கறி வளத்து என்ன செஞ்சு கிழிக்கப்போறொம். கண்ணுக்கு முன்னாலயே பெத்த தாய இழுத்துப் பறிச்சுச் சீரழிக்கான். அதப் பாத்துக்கிட்டுச் சும்மா நிக்கொம். ஆளு எளப்பமாருந்தா ஆடுமாடுகூட மச்சான் மொற கொண்டாடும். எனக்குப் பின்னால நாலு பேரு நின்னாப் போதும். ஒருத்தனவாச்சும் போட்டுத்தள்ளீ ருவென். அந்தக் கெத்தோட செத்தாலும் சரி. ஊருக்குள்ள அழிமாண்டம் கொஞ்சமாச்சும் கொறையுமில்ல. நாளைக்கு இந்தப் பக்கம் எட்டு வைக்க யோசிப்பான். அப்படின்னு போட்டனோ இல்லையோ எல்லாரும் குமுறிப் போயிட்டான்.

நாலு பேர வெட்டிப்போட்டுட்டு எங்கயாச்சும் ஓடீறணும்போல இருக்கு துன்னு ஒருத்தன் சொல்ல எதுக்கு ஓடணும் எதுத்து நிப்பம்னு ஒருத்தன் எதுத்துச் சொன்னான். எத்தன நாளைக்குத்தான் செத்துச்செத்து மடியிறது ஒரு கையி பாத்துற வேண்டியதுதான்னு ரெண்டு பேரு அருமுறுக்கினான். சரி நம்ம ஊதுனது பத்திக்கிருச்சுன்னு எனக்குச் சந்தோசம்.

ஒருநாளைக்குக் கண்டிப்பா நடக்கத்தான் போகுதுன்னு கருத்தையன் திட்டவட்டமாச் சொன்னான். அவன் கொஞ்சம் மொனப்பானவன். கோவம் கொண்டாடுவான். அவன் குடும்பத்தப் போல கொடுமைய அனுபவிச்சது ஆருமில்ல.

''என்ன கொ்டும.''

அவனோட அப்பன் தூங்கனுக்கு ஒடம்பெல்லாம் நெருப்புத் தழும்பு முறுக்கிக்கெடக்கும். அப்பிராணி மனுசன். ஒருவார்த்த தடிக்கப் பேச மாட்டான். அஞ்ஞு கத ரெம்பக் கொடும. அவளத் தீயில தள்ளிவுட்டதுல ஒரு மாருல காம்பு வள்ளிசாக் கருகித் தூந்துபோச்சு. ஒத்த மாருலேயே புள்ளீகளுக்குப் பாலு குடுத்து வளத்தா. மூக்கம்மா சிந்தின கண்ணீருதான் கொஞ்சமா.

இந்த அநியாயத்தெல்லாம் கருத்தையன் கண்ணால பாத்தவன். அவனே ரெண்டு மூணு கண்டம் தப்பிப் பெழச்சிருக்கான். நெறைய உசிருகளக் காப்பாத்தி யிருக்கான். தோளு வலிக்கத் தண்ணி சொமந்து நெருப்ப அமத்தியிருக்கான்.

ஏல்க்கையான குடும்பம்னா கொள்ளையில ஏதாச்சும் சிக்கும். ஏதுமத்தவு கள ஏன் இம்சப்படுத்தணும். ஈவெரக்கம் வேணாமா. படுபாவிகமேல கோவங் கோவமா வரும். கோவம் வந்து என்ன செய்ய. ஓடித் தப்பிக்கிறதே பெரும் பாடு.

சின்ன வயசிலருந்தே கொள்ளக்காரங்களோட அட்டூழியங்களப் பாத்துக் கருத்தையனுக்கு மனசு இறுகிப்போச்சு. ஆரவாச்சும் அடிக்கணும் புடிக்கணும் போல ஒரு வெறி. கண்ணுல பட்ட உசுப்பிராணிகமேல கல்லெறிவான். குறி தப்பாது. சொவருல அணிலக் குறிவச்சா நசுங்கி அப்படியே அப்பிக்கிரும். மாங்கா கொடிக்காப்பழம் எதுமே அவன் எறிக்குத் தப்பாது. தண்ணிக்கு மேல மெதக்கிற மீனக் கல்லெ எறிஞ்சே கறிக்குப் புடிச்சிருவான்.

''நாங்களும் நல்லா எறிவொம்.''

அப்படித்தான். இப்பயே பழகணும் மக்கா... அவன் அப்பனுக்குப் பின்னால மம்பட்டி தூக்கி வேலைக்குப் போனதில்ல. அது புடிக்கவுமில்ல. அப்பனும் கேட்டுக்கிற மாட்டான். கேட்டா வம்பு. ஒனக்கு ஒரு புள்ள இல்லன்னு நெனச் சுக்கோன்னு ஒரே பேச்சில வாயடச்சிருவான். தூங்கனுக்கு இப்படியொரு கிருசுகெட்ட புள்ளையான்னு எல்லாரும் பேசிக்கிருவாக.

மூக்கம்மா மனசுவுட மாட்டா. நாளைக்கு அவன் கலியாணம்முடிச்சுப் போயிட்டா என்ன செய்வொம். அப்படி நெனச்சுக்கிற வேண்டியதுதான். ரெண்டு பேரும் ஏண்ட மட்டும் ஒதஞ்சு குடுப்பொம். முடியலன்னா உள்ளது போல இருக்கட்டும். புள்ளீக உருண்டு பெரண்டு பெழச்சுக்கிரும். அப்படின்னு புருசனுக்குத் தைரியம் சொல்லுவா. அது சரி தம் போக்குல போறவன வுட்டுப் புடிக்க வேண்டியதுதான். பெழப்பு நல்லாருந்தாப் போதும்னு அவனும் மனசத் தேத்திக்கிருவான்.

அப்பனுக்கும் மகனுக்கும் நேருக்கு நேர பேச்சுவார்த்த நின்னு நாளாச்சு. எதும் சொல்லணும்னா அஞ்ஞு மூலந்தான். அவ பக்குவம் ஆருக்கும் வராது.

தானும் சண்டீராயிட்டமிங்கிற நெனப்பு கருத்தையனுக்கு எப்பயோ வந் தாச்சு. வெதவெதமா ஆயுதம் வச்சிருக்கணும். சகல வித்தையும் கத்துக்கிறணும். கெட்டிக்காரத்தனம் பண்ணணும். ஒருநா ஒரு பொழுதாச்சும் பெரிய சண்டீ

ரோட ஊருல கொள்ளையடிக்கணும். இப்படியெல்லாம் எங்கிட்டச் சொல்லிக் கோவத்த ஆத்திக்கிருவான். அதுக்கு நேரங்காலம் வரணும் கருத்தப் பாண்டி. நம்ம கொஞ்சம் தெடப்பட்டுக்கிருவொம். சித்தப்பன் நல்லதுக்குத்தான் சொல்லுவன்னு தட்டிக்குடுப்பென். எங்கிட்டத்தான் அவன் நல்லாப் பழகுவான். அவன மரியாதையா வச்சுக்கிருவென். ஊருக்குள்ள ஒருத்தனாச்சும் தலையெடுத் துருக்கானேங்கிற சந்தோசம். எப்பயும் அவனக் கருத்தப்பாண்டின்னுதான் கூப் புடுவென். அவனுக்கு நான் சித்தப்பன். ரெண்டு பேரும் ஒதுக்கமாப் போயி அனய நேரம் பேசிக்கிட்ருப்பொம். அதப் பத்தி ஆரும் எங்ககிட்ட ஒரு வார்த்த கேக்க மாட்டாக.

அவன் திடீர்னு காணாமப்போயிருவான். வடக்கத்தி ஏகாளிகிட்டப் போற சங்கதி எனக்கு மட்டுந்தான் தெரியும். நாந்தான் கைச்செலவுக்குக் குடுத்தனுப்பு வென். ஏகாளி பெரிய கைகாரன். சொந்த ஊரு செவகாசிக்கு வடக்க புதுப்பட்டி. சித்திர வண்ணான்னாத் தெரியாது. புதுப்பட்டி வாத்தியாருன்னு கேட்டா சின்னப் புள்ளகூடச் சொல்லும். அவனுக்குத் தெரியாற வித்த கெடையாது. கம்பு வெளை யாட்டு வர்மப்புடி மல்லுக்கெட்டு இப்படி எல்லாத்துலயும் கர கண்டவன். ஊருகளுக்குப் போயித் தங்கியிருந்து கத்துக்குடுப்பான். எளவட்டங்க வரி வச்சு அவனுக்குச் சம்பளம் மாதிரி குடுப்பாங்க. இல்ல ஊருப் பொதுவுலருந்து கெடைக்கும்.

அவனோட கம்பு வெளையாட்ட ஒரு எடத்துல வச்சுப் பாத்தென். அப் படியே அசந்துபோயிட்டென். வக்காளி அழுக்குத் துணி புடிச்சு வெளுக்கிற கையா அது. அவன் கம்பு புடிச்கிற தோரணையப் பாத்தே எதிராளி கழிஞ் சிருவான். எங்களுக்குந்தான் எளவட்டங்க இருக்காங்களே. அவங்களுக்குக் கம்பு வெளையாட்டு சொல்லிக்குடுத்தாப் போதுமே. வேற ஆயுதம் எதுக்கு. தெம் பாயிருவானே. இந்த மாதிரி மனசுக்குள்ள ஓடுது. அய்யா வாத்தியாரே எங்க ஊருக்கும் வந்து கொஞ்சம் சொல்லிக்குடுத்துட்டுப் போயேன். நெறைய எள வட்டங்க கெடக்கான். ஓம் புண்ணியத்துல கம்ப எப்படிப் புடிக்கிறதுன்னு தெரிஞ்சிக்கிறட்டும்னு அவனக் கெஞ்சிக் கேட்டுக்கிட்டென். ஏற்கெனவே ரெண்டு ஊருக்கு வார்த்த குடுத்துட்டென். அதுக்கே சரியாருக்கும். பெறகு வெதப்புக் காலம் வந்துரும். அது தோதுப்படாது. அடுத்த வருசம் வச்சுக்கிற லாம்னு அவன் நெலமையச் சொன்னான்.

அடடா ஒன்னயப் பத்தி முந்தியே தெரிஞ்சிருந்தா எப்பயோ வந்து கணக்குப்பண்ணீருப்பனே... சரி இப்படிச் செய்வொம். ஒனக்குத் தோதா ஒரு ஆளனுப்புறென். ஒங்கிட்ட இருக்கிற சரக்கெல்லாம் குடுத்து வுடு. நீ வந்தாலும் வரலன்னாலும் ஒண்ணுதான்னு சொன்னென். அவன் அதுக்கு ஒத்துக்கிட்டான். சந்தோசமாச் செய்றென். வாறவுக சங்கடப்படாம எங்கூடத் தங்கிக்கிறணும்னு இழுத்தான். அந்தக் கவலைய வுடுன்னு நான் சொல்லிப்புட்டென்.

அங்க பாரு ஒரு ஆடு எந்திரிச்சு எங்க போகலாம்னு பரக்கப்பரக்க முழிக் கிறத. அரட்டிப் படுக்கவையி. இந்த வெயிலுக்குள்ள என்ன மேச்சலு வேண்டிக் கெடக்கு.

ஆச்சா. நான் ஊருக்கு வந்ததும் கருத்தையங்கிட்ட சங்கதியச் சொன்னென். அவன் தாட்டோட்டம் சொல்லல. ஒடனே புதுப்பட்டிக்குக் கெளம்பீட்ட ான்.

அய்யா கருத்தப்பாண்டி வாத்தியாரு குடுக்கிறதச் சிந்தாமச் செதறாம வாங்கீட்டு வரணும்யான்னு சொதாரிப்பா வழியனுப்பிவச்சென்.

அவன் கத்துக்கிற ஆர்வத்தவும் வேகத்தவும் பாத்து வாத்தியாருக்குச் சந்தோசம். ஆகிற காயி பிஞ்சில தெரிஞ்சிருச்சு. வேல ராப்பகலா நடந்துச்சு. ரெண்டு பேருக்கும் நல்ல பழக்கமாயிப்போச்சு. அவன் ஊருக்குத் திரும்பயில வாத்தி யாருக்கு வேட்டி துண்டு எடுத்துக்குடுத்தான்.

அதுக்குப் பெறகு தெம்பு கொஞ்சம் கொறையிற சமயமெல்லாம் அவன் புதுப்பட்டிக்குப் போயிருவான். மாமியாரு வீட்டுக்குக் கௌம்பியாச்சா. போயி நல்லா விருந்து சாப்பிட்டுட்டு வாய்யான்னு கிண்டலடிப்பென்.

போனா ஒரு மாசத்துக்குக் கொறையாமத் தங்கீட்டுத்தான் வருவான். அரிசி பருப்பு உப்பு புளி எல்லாப் பண்டமும் கூடயே கொண்டுபோயிருவான். பல வித்தையும் கத்துக்கிட்ட தைரியத்துல அவனுக்குப் புதுத் தோரணையே வந்துருச்சு.

''புது வாத்தியாரு.''

சனங்க அவன புது மனுசன் மாதிரி பாத்தாக. தன்னறியாம அவன்மேல ஒரு பயம். அவனோட நடவடிக்கையும் அப்படித்தான் இருந்துச்சு. ஆரும் தப்பு செஞ்சா சும்மா வுட மாட்டான். படக்னு கைநீட்ருவான். தெரியாமப் பண்ணீட்டான் சாமி இந்த ஒரு தடவ வுட்ருன்னு நான் வந்து நாலு வார்த்த சொல்லிச் சரிப்படுத்தணும்.

கொள்ளக்காரங்க ராத்திரி ஆட்டம்போட்டுட்டு ஒண்ணும் தெரியாறவன் மாதிரி பகல்ல வழக்குப்பேச வந்துருவான். ஊருணி இச்சி மரத்தடியில உக்காந்துக்கிட்டு தும்மா வா பொம்மா வான்னு கூப்புட்டு மொரட்டு வெவகாரம் பேசுவான். ஆரும் முண்டிப் பேசப்புடாது. அடி வுழுகும். அரட்டிமெரட்டி அவ தாரம் வாங்கீட்டுப் போயிருவான்.

அவங்க வாற நோக்கமே வேற. கொள்ளைக்குப் பெறகு ஊரு நெலவரம் எப்படி இருக்குது. சனங்க முணுமுணுக்காகளா. எவனாச்சும் எதுத்துத் தலையெடுக்கானா. அப்படின்னா ஆரம்பத்துலயே தட்டிவுடணும். இப்படி நோட்டம் பாக்கத்தான்.

''வம்புதான.''

ஒரு நா சங்கிலிமடம் பொன்னையாத் தேவரு வந்துருந்தாரு. அவரு சுத்துப் பட்டியில பேருபோன சண்டீரு. கொல கொள்ளையெல்லாம் அவருக்குத் தண்ணிகுடிச்ச மாதிரி. ஒத்தைக்கொத்த எதுத்து நிக்க முடியாது. கருப்பு உத்தரம் போல ஒடம்பு. வேல்கம்ப வெறப்பாப் புடிச்சுக்கிட்டுக் கதிக்க நடந்து வாற தோரணையே தனி. சம்மணம் போட்டு உக்காந்து கொத்துமீசையக் கோதிக் கிட்டே குத்துப்பார்வைய லாந்தவுட்டா சனங்க நடுங்கிப்போவாக. அவரு வந்திருக்கிற தகவலு தெரிஞ்சு ஊரே ஓடிவந்து அவர வணங்கி நிக்கணும்.

''கும்புடுறென் சாமி.''

''எசமான் கும்புடுறென்.''

''கும்புடுறென் பாண்டியன்.''

''கும்புடுறென் ராசா.''

இப்படி கும்புடு வந்துக்கிட்டேயிருக்கும். அவரும் தலையாட்டிக்கிட்டே ஒவ்வொருத்தரா அடையாளம் பாப்பாரு. அதியமாப் பேச மாட்டாரு. என்னடா ஒழுங்கா இருக்கயான்னு ரெண்டொரு வார்த்தையோட சரி.

இந்தத் தடவ கதையே மாறிக்கிருச்சு. எளவட்டங்க முண்டிப் பேச ஆரம்பச் சிட்டாங்க. கொஞ்ச நாளைக்கு முந்தி வந்து கொள்ளையடிச்சதெல்லாம் மறந் துருச்சா. பெரிய யோக்கியன்போல வெவகாரம் பேச வந்துட்டான். மரத்துக்குப் பின்னால நின்னு பெரிய கல்லத் தூக்கி மண்டையில போட்டற வேண்டியது தான்னு ஆளாளுக்குத் துள்ளுனான்.

''பெறகு.''

இது சந்தர்ப்பமில்லடா மக்கா. ராத்திரி வேளையில வராமயா போயிரு வான். அப்ப வச்சுக்கிறலாம். வாங்க எல்லாரும் போயி மூஞ்சிகள நல்லா அடை யாளம் பாத்துக்கிருவொம். எண்ணைக்கும்போல மருவாதியா நடந்துக்கிறணும். நம்மமேல இம்மிகூடச் சந்தேகம் வரப்புடாது. கள்ளப்பட்டுப் போயிருவான்னு நான் சத்தம்போட்டென்.

கருத்தையன் மனசுக்கு இதெல்லாம் ஒப்பல. நீ போயி அவன மண்டி போட்டுக் கும்புடு. நாங்க பின்னாலயே வாறம்னு எரிஞ்சு வுழுந்தான். நீங்க நல்லாருப்பீக மக்கா. நான் சொல்றதக் கொஞ்சம் கேளுங்கன்னு எல்லாரவும் கையெடுத்துக் கும்புட்டென். மடங்கீட்டாங்க.

நான் ஊருணிக்கு வேகமா நடைய வுட்டென். அங்க தேவருக்கு முன்னால ரெம்பப் பேரு கூனிக் குறுகி உக்காந்துருந்தாங்க. அவரச் சுத்தி அஞ்சு கையாளுக. நான் போனதே சரின்னு தோளுத்துண்டக் கொடுங்கையில தொங்கவுட்டு அப்பச்சி வாங்க அப்பச்சி வாங்கன்னு பெரிய கும்புடு போட்டென். அவருக்குக் குளுந் துருச்சு. என்னடா நொண்டியா எப்படி இருக்க. ஆடுமேப்பெல்லாம் வுட்டாச் சான்னு எளக்காரமாக் கேட்டாரு.

ஒன்னாலதாண்டா பாவி ஆடுகள வித்தென். வம்பாடு பட்டு வளத்த ஆடு எத்தனதான் ஒன் வகுத்துக்குள்ள கெடக்குதோ. இப்படி என் மனசு சொல்லுது. ஆட்டுக்குப் பின்னால அலைய முடியலப்பச்சி. கெடச்ச வேலையப் பாக்க வேண் டியது ஒரு வாயி கஞ்சித் தண்ணியக் குடிச்சிட்டு மொடக்க வேண்டியது. அப்பச்சி புண்ணியத்துல பெழப்பு ஓடுது. வாயி இப்படிச் சொல்லுது.

அவரு கனைக்கிற மாதிரி சிரிச்சுக்கிட்டே அப்ப ஒரு ஆடுகூட ஒங்கிட்ட இல்லையாக்கும். வீட்ல வளக்கலயான்னு கேட்டாரு. இருந்தா வுட்டுவப் பயாக்கும்னு நெனச்சுக்கிட்டென். மருந்துக்குக்கூடக் கெடையாதுப்பச்சின்னு தலையாட்னென்.

அந்தச் சமயத்துல ஏழெட்டு எளவட்டங்க வந்தாங்க. கடைசியில கருத் தையன். அவனத் தவர மத்தவங்க வேண்டாவெறுப்பா மொனங்கிக்கிட்டே கும்புடு போட்டுட்டு உக்காந்தாங்க. அவன் கும்புடாம நின்னான். எனக்குன்னா நெஞ்சு படபடன்னு அடிச்சுக்கிருச்சு. சே காரியம் கெட்டுப்போச்சே. என்னதுக்கு என்னாகப்போகுதோன்னு அவனப் பாத்துப் பல்லக்கடிச்சென். தேவரு லேசா ஏறிட்டுப் பாத்தாரு. அவன் எக்கண்டமா ரெண்டு வார்த்த சொல்லீட்டு அவரோட மொகத்தப் பாக்காமயே உக்காந்தான்.

என்ன சொன்னான் தெரியுமா. ''வாங்க பிச்சி.'' எப்படி.

''வாங்க பிச்சி.''

எப்படி எப்படி.

''வாங்க பிச்சி.''

ஒங்களப் போலதான் எங்களுக்கும் சிரிப்பு வந்துச்சு. அடக்கிக்கிட்டொம்.

தேவரு வெலவெலத்துப்போயிட்டாரு. மீச மயிரப் புடிச்சு இழுத்ததுபோல மூஞ்சியச் சுளிச்சாரு. கொஞ்ச நேரந்தான். சமாளிச்சுக்கிட்டு ஆமப்பான்னு தலையாட்னாரு.

கையாளுக கருத்தையனப் பாத்துக் கொடுகொடுத்தாங்க. அவரு கண்ணா லயே தடுத்துட்டாரு. எனக்குன்னா பதட்டம் கூடிக்கிட்டே போச்சு. என்னடா இது. ஒடையவன் பொறுத்தாலும் அவன் வீட்டு நாயி பொறுக்காது போலருக் கேன்னு நெனச்சுக்கிட்டென். அடுத்து தேவரு என்ன செய்வாருன்னு தெரியாது. என்னமும் நடக்கலாம். எல்லாரும் அவரவும் கருத்தையனவும் மாறிமாறிப் பாத்தாக. கருத்தையன் எதவும் சட்டசெய்யாம மண்ணக் கிண்டிக்கிட்டுருந்தான்.

''அவரு என்ன செஞ்சாரு.''

வெவகாரத்த இனியொரு நாளைக்கு வச்சுக்கிருவம்னு சொல்லீட்டு அவக்னு எந்திரிச்சு நடையக்கெட்டீட்டாரு. கையாளுக கருத்தையன மொறச்சுப் பாத் துட்டுப் பின்னால நடந்தாக. அவன் பயப்படல. அவுகள பதிலுக்கு மொறச்சுப் பாத்தான். சனங்க அவனப் புதுசாப் பாத்தாக.

''என்னருந்தாலும் அவருட்ட மருவாதிக் கொறச்சலா நடந்துக்கிட்டது தப்பு.''

''இனியொரு நாளைக்கு ஊருக்குக் கனமா வெவகாரம் இருக்கு.''

''புண்ணியவாளன் என்ன கொடுமப்படுத்தப்போறாரோ.''

''நாளைக்கே ஊருக்காரங்க போயி நல்ல வார்த்த சொல்லி அவரு போடுற அவதாரத்தக் கெட்டீற வேண்டியதுதான்.''

''இப்ப என்ன நடந்துருச்சு அவதாரம் கெட்றதுக்கு.''

''இதுக்கு மேல நடக்கணுமாக்கும்.''

''ஒண்ணும் ஆகாது. பொச்ச மூடிக்கிட்டுப் போங்க.''

''புதுசாத் தலையெடுத்துருக்கிற எளவட்டங்க எதுல கொண்டுபோயி வுடப்போறாங்களோ.''

''கவலையே வேணாம். பத்தரமா சுடுகாட்ல கொண்டுபோயி வுட்ருவொம்.''

ஆளாளுக்குத் தோணுனபடி பேசிக்கிட்டாக. எளவட்டங்க தாந்து போற மாதிரி தெரியல. நான் கருத்தையங்கிட்டப் போயி எங்க ஒம்மேல கையவைச் சிருவானோன்னு பயந்துக்கிட்ருந்தன்னு வெசாரமாச் சொன்னென். மேல வச்ச கையக் கொண்டுட்டுப் போயிருவான் பாரு. இனிமே நோண்டுனா நானாச்சு அவனாச்சு. ஊருக்காரங்க ஆரும் வர வேணாம்னு தைரியமாப் பேசினான். அப்படிச் சொல்லாத கருத்தப்பாண்டி. சித்தப்பன் கூடயே இருப்பன்னு நானும் வுட்டுக்குடுக்காமப் பேசினென். சுத்தி நின்ன எளவட்டங்க அருமுறுக்குனாங்க.

''நாங்க செத்தாபோயிட்டொம்.''

''வாறது வரட்டும்.''

''மயிரு ஒண்ணே போச்சு.''

அதப் பாத்து எனக்குச் சந்தோசம். நம்ம ஒத்துமையாருந்தாப் போதும் மக்கா. எவனும் நெருங்க மாட்டான்னு தட்டிக் குடுத்தென். தூங்கன் வாயே தொறக்கல. ஆளு மெரண்டுபோயிட்டான். மகனவும் சனங்களவும் மலங்க மலங்கப் பாத்துக்கிட்டே போனான். மகன் ரெம்பத் தொலவட்டுக்கு வெலகிப் போயிட்ட மாதிரி அவனுக்கு நெனப்பு.

மக்கா ஆராச்சும் ஓடிப் போயி தூக்குவாளியில தண்ணி கோலீட்டு வாய்யா. நா வறளுது... கத்திக் கம்பு புடிக்கிற ஆச இப்பயே வந்துருச்சா. அதுக்கு இனியும் காலமிருக்கு. நல்லாத் தொட்டுப்பாத்துக்கோ... முள்ளுப் பாத்து நடந்து வாய்யா. கம்மாத் தண்ணி ருசியே தனிதான். நல்லாருப்பய்யா.

''பெறகு என்ன நடந்துச்சு.''

அண்ணைக்கு வெரண்டுபோன தேவரு ஊருப் பக்கம் எட்டிப் பாக்கல. கோவத்துல பொருமிக்கிட்ருந்தாரு. போயும்போயும் ஒரு சாதிகெட்ட சின்னப் பெய ஊரே கூடியிருக்கயில ஓதாரமாப் பேசிப்புட்டானே. கேவலமாப்போச்சே. ஊருக்காரன் தைரியமில்லன்னா இவன் துள்ளுவானா. அவங்க மென்னியப் புடிச்சா இவன் தானா வழிக்கு வருவான். ஒருநாளைக்கு வசமாக் கட்டாப்பு வச்சுக்கிற வேண்டியதுதான்னு குட்டி போட்ட பூன மாதிரி மொனங்கீட்டுத் திரிஞ்சாரு.

அவரு சும்மாருக்க மாட்டாருன்னு எனக்கு நல்லாவே தெரியும். இம்புட்டுக் காலத்துக்குப் பெறகாச்சும் அவர எதுக்குறதுக்கு ஒருத்தன் பெறந்துருக்கானே. அதச் சொல்லு. அவன் இருக்கிற கோப்புல வாலுருவி வுட்டா ஆளவே தீத்துக் கெட்டீருவான். அது தப்பு. பெறகு ஊரே அலக்கழிஞ்சுபோகும். ஆரு சண்டீருத் தனம் பண்ணுனா நமக்கென்ன. ஊர நோண்டாமருந்தாச் சரி. மொதல்ல அதத் தடுத்து நிறுத்துனாப் போதும்னு காரியத்துல எறங்குனென்.

கருத்தையனுக்குத் தொணையாருந்தென். வெட்டு வெலக்குத் தெரிஞ்சு நடந்துக்கிறணும் கருத்தப்பாண்டி. நெருஞ்சி முள்ளுத் தச்சாலும் குனிஞ்சுதான் புடுங்கணும்யா. எக்குத்தப்பா மாட்டிக்கிட்டா காலுக்கடியில போட்டு நசுக் கீருவான். தேவரு எண்ணைக்கு வரப்போறாருன்னு கெதக்கலாருக்கு. அவரச் சமாளிச்சிட்டா கெலிச்சுருவம்னு அப்பப்ப ரோசன சொன்னென். அவனும் தயாராத்தான் இருந்தான்.

இந்தத் தடவ நம்ம சும்மாருக்கப்புடாது சித்தப்பா. எண்ணைக்கு வரப் போறான்னு மட்டும் துப்புச்சொல்லீரு. மத்தத நான் பாத்துக்கிறன்னு சொல் லீட்டான். அதுக்கு நானாச்சுன்னு பொறுப்பேத்துக்கிட்டென்.

அதுலருந்து துப்புவெட்றதுலயே குறியா இருந்தென். ஊருஊருக்கு ஆளு வச்சுக் கமுக்கமா வெசாரிச்சென். சொல்லப் பயந்தவங்களுக்கு என்னென்னமோ குடுத்துச் சரிக்கெட்டினென். வழிக்கு வராறவன மெரட்டவும் செஞ்சென். ஒரு வழியா வேப்பங்காட்டு மங்கிணிச் சாம்பான் மூலமா தகவலு வந்தது. அவன் அந்த ஊருல சின்னச் சண்டீரு. மாடு களவுல கைகாரன். அங்க அவனுக்குத் தெரியாம எந்தக் களவும் நடக்க முடியாது. கொள்ளக்காரங்களோட பழக்கம் உண்டு.

ஒரு நா குட்டு வெளிய வந்துருச்சு. ஓடிப் போயி கருத்தையங்கிட்டக் கக்கீட்டென்.

''மோசம்போச்சே கருத்தப்பாண்டி. தேவரு அடுத்த செவ்வாக்கெழம நம்மூருக்குக் கெடு வச்சிட்டாரே. என்ன செய்றது.''

''ஆரு சொன்னது.''

''வேப்பங்காட்டு மங்கிணிச் சாம்பான்''

''நெசந்தானா.''

''எங்கிட்டப் பொய் சொல்ல மாட்டான்.''

''அவனுக்கெப்படித் தெரியும்.''

''எவனயோ புடிச்சுக் கெளஞ்சிருக்கான்''

''எப்படின்னு சொல்லலயா.''

''அவனப் பெரட்டிப்பெரட்டிப் போட்டு அடிச்சாலும் சொல்ல மாட்டான். மங்கிணியாச்சே.''

''அந்தச் சண்டூர நான் பாத்ததில்லையே.''

''ஒரு நாளைக்குக் கூட்டீட்டு வாறென். கழுதப் பெய எங்க போகப் போறான். இப்ப தேவருக்கு வழியென்னய்யா.''

''நீ கெடந்து பொலம்பாமருந்தாப் போதும். ஊருக்குள்ள வாயிவுட்றப் புடாது. காரியம் கெட்டுப்போகும்.''

''குண்டிக்குள்ள வெள்ளம் வாறதுக்கு முந்தி ஒருவார்த்த சொன்னா...''

''குண்டிக்குள்ளயும் வராது. கோவணத்துக்குள்ளயும் வராது.''

கருத்தையன் கிண்டிக் கெளஞ்சு கேட்டுத் தெரிஞ்சுதான் வெசயத்த நம்பு னான். பெறகு சும்மாருப்பானா. சொதாரிச்சுக்கிட்டான். எளவட்டங்களோட கலந்து பேசினான்.

''சரி.''

எனக்கு ரெம்ப வேலையிருந்தது. வெளியூருக்குப் போயி அருவா கத்தி வேல்கம்புன்னு சகல ஆயுதங்களும் செஞ்சு கொண்டுவந்தென். கருத்தையன் வேண்டியமட்டும் கல்லுப் பெறக்கி வச்சுக்கிட்டான். கரம்ப மண்ணவும் உருட்டி கல்லாக் காயவச்சான். மத்தவங்களும் சும்மாருக்கல. பழைய துணி கம்பு சம்பாரிச்சு தீவட்டி தயார்பண்ணுனாங்க. எல்லாம் கமுக்கமாவே நடந்தது.

செவ்வாக்கெழம நெருங்கநெருங்க எனக்குன்னா தவிப்பாருந்துச்சு. ஊரு மொளச்ச நாளுலருந்து கொள்ளக்காரங்கள ஆரும் எதுத்து நின்னதாக் கேள்விப்பட்டதில்ல. அதுலயும் பொன்னையாத் தேவரோட முட்டுப்போடுறது சாமனியமான காரியமா. எளவட்டங்க எடுத்திருக்கிற காரியத்துல கரையேறீட்டா கெலிச்சிருவான். இல்லன்னா எந்தக் காலத்துலயும் தலதூக்க முடியாது. ஊரத் தட்டி நொறுக்கி அள்ளீட்டுப் போயிருவான். எல்லாருக்கும் ரெம்ப எளப்பமாப் போயிரும். என்னத்தச் சொல்லட்டும். மத்து கடஞ்ச மோருபோல புத்தி கெடந்து பொலம்புச்சு.

தேவரு வாறத மங்கிணிச் சாம்பான் மறுபடியும் உறுதிப்படுத்தியிருந்தான். கண்டிப்பா முட்டு வரப்போகுது. இனிமே தாயமாட்டுப் பண்ணப்புடாது. ஆன படி ஆகட்டும். கிச்சுக்குடுக்கைக்காகப் பீக்கங்குடுக்கையத் தட்டித்தட்டித்

தயார்பண்ணுனென். கருத்தப்பாண்டி நம்ம பெரிய கொம்பனோட மோதப் போறொம். அதுக்கு என்ன திட்டம் வச்சிருக்கம்னு கேட்டுப்பாத்தென். எல்லாத் திட்டமும் இருக்கு. அப்பச் சொல்றென். அந்தப்படி நடந்துக்கிட்டாப் போதும்னு என் வாய அடச்சிட்டான். சரி நல்ல திட்டத்தோடதான் இருக்கான்னு தெரிஞ்சு போச்சு. இனிமே கவலையில்ல.

''என்ன நடந்துச்சு.''

செவ்வாக்கெழம ராத்திரி இருட்றதுக்கு முந்தியே எல்லா ஏற்பாடும் முடிஞ்சிருச்சு. கருத்தையன் நேரமிருக்கவே காட்டுப் பக்கம் கெளம்பீட்டான். கூட்டாளிக தற்செயலா வாறதப்போல ஒவ்வொருத்தனா காளியம்மா கோயி லோரம் வந்து கூடுனாக. எல்லாரவும் அனுப்பிவச்சிட்டு நான் கடைசியாப் போனென். ரெம்பப் பேரு கூடியிருக்கிறதப் பாத்துச் சந்தோசமாருந்துச்சு. மக்கா ஆரும் மெரண்டு பின்வாங்கீறப்புடாது. கலகம் வந்தாலும் வரும். அதுக்கும் தயாரா இருக்கணும். கலகத்துல கால்மாடு தலமாடு பாக்க முடியாதுன்னு அவங்க கிட்டச் சொன்னென்.

எல்லாரும் ஆயுதங்கள சாமிக்கு முன்னால வச்சுக் கும்புட்டு சகுனம்பாத்து வரங்கேட்டொம். அம்மா காளித் தாயி ஒம் புள்ளீகள நீதான் காப்பாத்தணும். ஒம் மேல பாரத்தப் போட்டுத்தான் இந்தக் காரியத்துல எறங்குறொம். காப் பாத்திக் குடுத்தீன்னா மின்னுக்கு ஒனக்கு ரெட்டக் கெடா வெட்டிப் பொங்கலு வைக்கன்னு நான் தெய்வத்த வேண்டிக்கிட்டென். மக்கா கைகலப்புன்னு வந்தா லாவமும் வரும் நட்டமும் வரும். நம்ம தொவண்டுறப்புடாது. பேறுகாலம் பாக்கப்போனா புள்ள வந்தாலும் ஏந்தணும் பீ வந்தாலும் ஏந்தணும்னு எல்லா ருக்கும் தைரியம்சொன்னென். சன்னிதி மண்ணெடுத்து நெத்தியில பூசிக் கிட்டொம். ஒசர முட்டைய எறிஞ்சு காவுகுடுத்தென்.

எல்லாரும் தயாராகிறதுக்குள்ள ஊரடங்கீருச்சு. நாயெல்லாம் கொலச்சு முடிஞ்சாச்சு. எதிரிக எந்த நேரமும் வரலாம். சின்னச் செருமலக்கூட அடக்கிக் கிட்டொம். கருத்தையன் மனசிலருக்கிற திட்டத்த வெவரமாச் சொன்னான்.

அந்தப்படி ஊருணிக்கு மேக்க வண்டிப் பாதையோரம் வெள்ளாமைக் குள்ள நாலு பேரு ஒளிஞ்சுக்கிறணும். வடக்க குறுஞ்செவலு மேட்ல பாறக் கெடங்குக்குள்ள நாலு பேரு. தெக்க கோயிலோரம் நாலு பேரு பம்மிக்கிறணும். கெழக்க வரிசப் பன மறவுல நானும் கருத்தையனும் கட்டாப்புக்கெட்டணும். மிச்சப் பேரு ஊரச் சுத்தி மந்தையில ஆருக்கும் தெரியாம நிக்கணும்.

நான் ஒவ்வொரு கையாப் பிரிச்சு அனுப்புனென். ஆயுதங்களப் பத்தரமாப் புடிச்சுக்கிட்டுக் கெளம்புனாங்க. ஆளுக்கொரு தீவட்டி. நாலு பேருக்கு ஒரு கிச்சுக்குடுக்க.

நடுச்சாமம் தாண்டி ஊரு அசந்து கெடந்தது. ஒசர ஒரு வெள்ளிகூட மின்னல. நல்ல இருட்டு. ஒரு அருவமும் இல்ல. எல்லாரும் என்னோட சன்னைக் காகக் காத்திருந்தாக.

கீழப் பாதையோரம் கொலவ மாதிரி ஒரு சத்தம் ஏறி எறங்குச்சு. வந்துட் டானே பாவி. இப்ப என்ன செய்றதுன்னு நான் கருத்தையனச் சொரண்டுனென். ஒடனே அவன் என்னய ஒரு தட்டுத் தட்னான். நான் ஆந்த மாதிரி மூணு தடவ

அலறுனென். அது நாலா பக்கமும் தெளிவாக் கேட்டுச்சு. அவ்வளவுதான். அங் கங்க ஒளிஞ்சிருந்த நம்ம எளவட்டங்க தேவரோட ஆளுகளுக்கு முந்தி தீவட்டியக் கொளுத்திப் புடிச்சுக்கிட்டு பாஞ்சு ஓடுனாங்க. அவங்க போட்ட கூச்சலு இப்படித்தான்னு இல்ல. சகட்டுமேனிக்குக் கல்லெறிஞ்சாங்க. கருத்தையன் கையில ருந்து கல்லு ஆதாளிபோட்டுப் பறந்தது. மந்தையில காவலிருந்தவங்க போட்ட சத்தத்துல ஊரே முழிச்சுக்கிருச்சு.

''அடி சக்க.''

சாவாசமா கொள்ளைக்குத் தயாராயிட்ருந்த தேவரோட ஆளுகளால தாக்குப்புடிக்க முடியல. தீவட்டியக் கொளுத்தாமயே ஓட்டம்புடிச்சிட்டாங்க. நடக்கிற கதையப் பாத்து தேவரு பேயறஞ்ச மாதிரி தெகச்சு நின்னுட்டாரு. நமக்கு முந்தி எவனோ கொள்ளையடிக்க வந்துருக்கானே. அதப் பத்தித் துப்புத் தெரியாம என்ன மயித்துக்கு எறங்குனீகடா. ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆயிட்டா என்ன செய்றது. ஓடுங்கடா வெளக்கங்கெட்ட பெயகளான்னு அவரு அரட்றது தெளிவாக் கேட்டுச்சு.

இந்தப் பக்கமிருந்து போங்க பிச்சி போங்க பிச்சின்னு சத்தம் போட்டாங்க. அது கண்டிப்பா அவரு காதுல வுழுந்துருக்கும்.

''வாங்க பிச்சி வாங்க பிச்சி.''

''போங்க பிச்சி போங்க பிச்சி.''

''பொறுங்க பிச்சி பொறுங்க பிச்சி.''

நான் கருத்தையன் கையப் பத்திப் புடிச்சுக்கிட்டென். கருத்தப்பாண்டி இனிமே நம்மள எந்தப் பெயலாலயும் அசைக்க முடியாது. ஊருக்கு நல்ல காலம் பெறந்துருச்சுன்னு குதியாளம்போட்டென்.

எல்லாரும் சந்தோசத்துல ஊருக்குள்ள ஓடிப் போயி மெரண்டுகெடந்த சனங்களத் தைரியப்படுத்துனோம். தேவர வெரட்டியடிச்ச கதைய நான் சொல்லித் தீரல.

என்ன நடந்துச்சுன்னு தேவருக்கு நல்லாத் தெரிஞ்சுபோச்சு. இந்தப் பெயக சத்தம் போட்டதுக்கும் அண்ணைக்கு ஊருணிக் கரையில வச்சு கருத்தையன் பிச்சிப் பட்டம் போட்டுப் பேசுனதுக்கும் முடிச்சுப்போட்டுப் பாத்தாரு. அடடா இது கலிங்கலுக்காரனே செஞ்ச வேலன்னு கண்டுபுடிச்சிட்டாரு. கையாளுகளக் கண்டமானக்கி அடிச்சிருக்காரு. அப்பயும் காட்டம் அடங்கல. கொப்புள அறுக்கப் போயி மானிய அறுத்துக்கிட்ட கதையாப் போச்சு. ஒங்களுக்கெல்லாம் அருவா கம்பு எதுக்குடா. புடிச்சு மோளத் தெரியாற பெய வாயில கொதம்ப வச்சுத் தேச் சிட்டான். இப்ப என்ன செய்யப்போறீக. நம்மளும் வேட்டி கெட்ன ஆம்பளன்னு சொல்லிக்கிறணுமாக்கும். அவன ஒழிச்சுக்கெட்டாம கண்ணுல ஒறக்கம்புடிக் காதுன்னு வாய்க்கு வந்தபடி வசவு வுட்ருக்காரு.

இப்ப அவருக்குக் கருத்தையந்தான் மொத எதிரி. எப்பக் கையில சிக்கு வான்னு எதிர்பாத்துக்கிட்டே இருந்தாரு. கலிங்கலுக்கு ராத்திரியோ பகலோ போற நெனப்பே அத்துப்போச்சு.

''தப்பிச்சிட்டாரு.''

இதுக்குள்ள இனியொரு சங்கதி நடந்துபோச்சு. கருத்தையன் தற்செயலா வேப்பங்காட்டுப் பக்கம் போயிருந்தப்ப ஒருத்தன வேப்ப மரத்துல கெட்டிவச்சு ஆளாளுக்கு அடிச்சுக்கிட்ருந்ததப் பாத்தான். மனசுகேக்கல. அப்படியென்ன பெரிய குத்தம் செஞ்சிட்டான் இந்த அடி அடிக்காகளேன்னு கிட்டத்துல போயி ஏன் அந்த மனுசனப் போட்டு மாட்ட அடிச்ச மாதிரி அடிக்கீகன்னு மருவாதியா வெசாரிச்சான்.

ஒருத்தரு அவன மொறச்சுப் பாத்துக்கிட்டே ஒனக்கென்ன அம்புட்டும் தெரியணுமோ. பேசாம சோலியப் பாத்துட்டுப் போவயான்னு மப்பாச் சொன்னாரு. தப்புசெஞ்சா அடிங்க வேணாமிங்கலன்னு அவன் தன்மையோடயே சொன்னான். அவரு வெறப்பா நெருங்கி வந்தாரு.

‘‘தப்புசெய்யாமயா அடிக்கொம். பெரிசா ஞாயம் கேக்க வந்துட்டாக.’’

‘‘அப்படி என்ன தப்புசெஞ்சானாம்.’’

‘‘தோட்டத்துல ஆமணக்கங்கொழைய ஒடிச்சிருக்கான். போதுமா.’’

‘‘இதுக்குத்தானா எல்லாரும் தார்ப்பாச்சீட்டு அடிக்கீக. கொழைய ஒடிச்சா ரெண்டு நாளுல தளுத்துட்டுப்போகுது. அதக் கொண்டுபோயி சாப்பாட்டுக்கா வச்சுக்கிறப்போறான். ஆடு குட்டிக்குப் போடுவான். இல்ல நீங்கதான் கீர கடஞ்சு திங்கப்போறீகளா.’’

‘‘ஏல ஒனக்கு எம்புட்டுக் கொழுப்பிருந்தா இப்படிப் பேசுவ. மொதல்ல ஒனக்குக் குடுக்கணும்.’’

பேச்சு முத்திக்கிருச்சு. கருத்தையனுக்கு இப்பத்தான் கோவம் வந்தது. தோட்டத்துக்கு ஓடி புளிச்சி வெளாரப் புடுங்கீட்டு வந்தான்.

‘‘வாளு ஒருரா.’’

‘‘கலிங்கலுப் பள்ளாண்டு.’’

‘‘பேரு கருத்தையன்.’’

‘‘பெத்த சண்டீரோ ஒக எத்து எத்துனா மனம் கெத்துக்கெத்துங்கும்.’’

ஆளுக கூடாப் பேசிக்கிட்டது அவனுக்கு நல்லாவே கேட்டது. கிட்ட வந்து நின்னுக்கிட்டான்.

‘‘ஒங்கப்பனுக்குப் பெறந்திருந்தா தொடு பாப்பொம்’’

‘‘தொட்டா என்னடா செய்வ.’’

‘‘என்ன செய்றன்னு பாக்கயா.’’

எல்லாரவும் வெளாச ஆரம்பிச்சிட்டான். அவுக அரண்டுபோனாக. ரெண்டாம் தடவ அடி திரும்புறதுக்குள்ள ஓட்டம்புடிச்சிட்டாக. ஊரு போயிச் சேந்த பெறகுதான் உசிரே வந்தது.

மரத்துல கெட்டிக் கெடந்தவனுக்கும் பூச கெடச்சது. அவன அவுத்து வுட்டதும் கையெடுத்துக் கும்புட்டான்.

‘‘நீ நல்லாருப்பண்ணன்.’’

‘‘நான் நல்லாருக்கிறது கெடக்கட்டும். நீ ஆரு.’’

‘‘மங்கிணிச் சாம்பான்.’’

‘‘நீதான் வேப்பங்காட்டுச் சண்டீரா. கொழ ஒடிக்கிறதுக்கு வேற எடம் கெடைக்கலயாக்கும். காசுபெறாற காரியத்துக்குப் போயி அடிவாங்குறயே. வெக்கமால்ல.’’

''அண்ணாந்து கொழ ஒடிக்கையில வளைச்சுப் புடிச்சுக்கிட்டாக. எக்குத் தப்பா மாட்டிக்கிட்டென்.''

''இல்லன்னாலும் பாஞ்சுதள்ளீருப்ப. அவுக மொத்துன எடத்துல மொச்சி எலைய வச்சு சுடச்சுட ஒத்தணம் குடு.''

கருத்தையன் துப்பிக்கழிச்சிட்டுப் போயிட்டான். மங்கிணிச் சாம்பானுக்கு வெக்கமாருந்துச்சு. செதறிக் கெடந்த ஆமணக்கங்கொழைய வெறிச்சுப் பாத்துட்டு தலையத் தொங்கப்போட்டுட்டுப் போனான்.

இந்த வெவகாரம் சுத்துப்பட்டியெல்லாம் பரவீருச்சு. ஆச்சரியமாப் பேசிக் கிட்டாக.

''கருத்தையக் குடும்பன் வேப்பங்காட்டு நாய்க்கமார ஓடஓட வெரட்டீட் டானாம்.''

''அவன் குடுத்த குண்டிப் பூசையில படுத்தவுக இனியும் எந்திரிக்கலயாம்.''

''ஊரே கெதிகலங்கிப்போயிக் கெடக்கு.''

''அதெப்படி. அணிலு ஏறி பனமரம் அசஞ்சிருச்சாக்கும்.''

''அசையல. ஒரேடியாச் சாஞ்சிருச்சு.''

இது நடுவப்பட்டி சித்தா நாய்க்கரு வாழவந்தாவரம் வேலுக் கோனாருன்னு பெரியபெரிய சண்டீருக்கெல்லாம் தெரிஞ்சுபோச்சு. அடடா நமக்குப் போட்டியா ஒரு சண்டீரு மொளச்சிருக்கானே. அவனத் தட்டிவைக்கணுமேன்னு திட்டம் போட்டு ஆளனுப்புனாக. நாலஞ்சு தடவ அனுப்பியும் அவன் அசையல. அப்படி அவசரம்னா அவுக ஒரெட்டு வந்து பாத்துட்டுப் போகட்டுமேன்னு மூஞ்சியில அறஞ்ச மாதிரி சொல்லியனுப்பீட்டான். பெரிய சண்டீருக கோவத்துக்குச் சொல் லணுமா கொதிச்சுப்போயிட்டாக. அவுகளுக்குள்ளருந்த பகைய மறந்து அவனக் குறிவைக்க ஆரம்பிச்சிட்டாக. ஏற்கெனவே கறுவிக்கிட்டுருந்த தேவரும் அவுகளோட சேந்துக்கிட்டாரு.

இது எனக்குத் தெரியவந்துச்சு. மூணு பேரும் சேந்து கண்ணுவச்சிட்டான் கருத்தப்பாண்டி. நம்ம முன்னெச்சரிக்கையா இருந்துக்கிறணும்னு அவன் காதுல போட்டுவச்செென். அவன் கொஞ்சங்கூட அச்சப்படல. எப்பன்னாலும் வரட்டும். போற உசிரப் புடிச்சா வச்சுக்கிற முடியும். ஆருக்கு முந்திப் போகப்போகுதோ. அது அப்பத்தான தெரியும்னு சிரிச்சுக்கிட்டான்.

''சண்டீருக வந்தாகளா.''

வரிசவரிசயா வந்தாக.

''என்னாச்சு.''

அது பெரிய கதையாகிப்போச்சு.

''என்ன கத.''

இனியும் கொஞ்சம் தண்ணி வேணும் ராசா.

## 2. கேளுங்க மக்கா

கருத்தையன் கதையக் காலம் பூராச் சொல்லிக்கிட்ருக்கலாம். எனக்கு நேர மாச்சு. போயிட்டு இனியொரு நாளைக்கு வாறென். அப்ப வச்சுக்கிருவொம்.

''இருங்க பிச்சி இருங்க பிச்சி.''

''கதையச் சொல்லுங்க பிச்சி சொல்லுங்க பிச்சி.''

சரிங்க பிச்சி சரிங்க பிச்சி.

கருத்தையனுக்கும் சண்டீருகளுக்கும் ஆகாமப்போச்சு. அப்படி இருக் கையில ஒரு தடவ அவன் வடக்கத்தி ஏகாளியிட்டப் போயிட்டு ஒத்தியில திரும்பி வந்துக்கிட்ருந்தான். அப்ப கோயிலாங்கொளம் காட்டுச் சத்தரத்து மறவுல கூட்டத்தோட ஒளிஞ்சிருந்த பொன்னையாத் தேவரு வசமா வளச்சுக் கிட்டாரு. நல்ல இருட்டு. மொகம் சரியாப் புடிபடல. அருவா கம்போட உருட் டுக்கட்ட மாதிரி ஆளுக சுத்தி நின்னுக்கிட்ருந்தாக. அவனுக்கு ஒண்ணும் ஓடல. ராத்திரி வேள. கையில கல்லுகூட இல்லாம மெத்தனமா வந்துட்டமேன்னு நெனச்சுக்கிட்ருக்கையில தேவரு இருட்டுக்குள்ளருந்து தலையக் காட்னாரு. வாப்பா கலிங்கலுச் சண்டீரு எங்களப் பாக்க வர மாட்டன்னு சொல்லீட்ட யாமே. அதனாலதான் ஒன்னயத் தேடி வந்துருக்கம்னு நக்கலாச் சொன்னாரு.

அப்பயும் அவன் பதறல. இவுகள எப்படிச் சமாளிக்கிறதுன்னு மனசு கணக்குப் போட்டுக்கிட்ருந்துச்சு.

''ஒங்களுக்கும் எனக்கும் என்ன வழக்கு இருக்குது.''

''இல்லையாக்கும்.''

''இருந்தாச் சொல்லுங்க.''

''இருந்தா என்ன செய்யலாம்.''

''அத ஒத்தைக்கொத்த தீத்துக்கிறதுதான் கெட்டிக்காரத்தனம்.''

''எப்ப வச்சுக்கிறலாம்.''

''பொட்டத்தனமா ராத்திரியில வந்து கேட்டா எப்படி. இப்பயேகூட வச்சுக்கிறலாம்.''

கத்திய உருவி அவரு மேல சொருவீறலாமான்னுகூட அவனுக்கு நெனப்பு ஓடுச்சு. முட்டிப்பான எடத்துல சந்தர்ப்பஞ்சரியில்ல. ஓடித் தப்பிக்க முடியாது. நின்னு சமாளிக்கிறதுக்குக் கைவசம் தோதான ஆயுதமில்ல. எப்படியும் சமாளிச் சாகணும். ஆனபடி ஆகட்டும்.

தேவரு பலமாச் செருமிக்கிட்டாரு.

''அப்படியா... அடே வழக்கக் கொஞ்சம் வெசாரிங்கடா.''

எல்லாரும் சூந்துக்கிட்டாக. மொத அடி தேவரு கம்புதான். அத அவன் தோளுல வாங்கிக்கிட்டுக் கீழ பம்மித் தப்பியோடுறதுபோல போக்குக் காட் னான். அனயம் பேரு வெரட்டி வந்தாக. தேவரு சத்தம் எகத்தாளமாக் கேட்டுச்சு.

''ஓடுறான் பாருடா. கருத்தையக் குடும்பன் ஆம்பளையா பொம்பளை யான்னு தெரியலயே.''

ஓடுனவன் படக்னு வெலகி செடி மறவுல ஒளிஞ்சு பின்னால வெரட்டீட்டு வந்தவுகள முன்னால ஓட வுட்டான். இருட்ல தொழாவிக் கல்லு பெறக்கி ஓடுற

உருவங்களக் கணக்குவச்சு எறிஞ்சான். குறி தப்பல. ரெண்டுமூணு அலறலு கேட்டுச்சு.

அவசரமா தலத்துண்ட எடது கையில சுத்துனான். தொடுத்து நாலஞ்சு கம்படி வந்துச்சு. அத்தனையவும் எடது கையில வாங்கிக்கிட்டுத் தந்தரமா ஒரு கம்பப் பறிச்சான். கம்பு கைவசம் வந்ததும் துண்டு தலைக்கு ஏறுச்சு. ஒடம்பெல் லாம் தெம்பேறித் துடிச்சது. அவ்வளவுதான். பம்பரமாச் சொழண்டு சமாளிச் சான். அவன் வுடுற கம்பு வீச்சுக்கும் குத்துக்கும் அவங்களால ஈடுகுடுக்க முடியல. தேவரே திக்குமுக்காடிப்போனாரு. அவருக்குப் பெடதியில வசமான எறி. சும்மா சொல்லப் புடாது. கம்பு வெளையாட்ல அவரு மன்னந்தான். சரியான எதிரி. அவன் எல்லாரவும் தெரட்டிச் சத்தரத்தத் தாண்டி வெரட்டியடிச்சிட்டு ஓங்கிச் சத்தம் குடுத்தான்.

‘‘வழக்குத் தீந்துருச்சா இனியும் பாக்கியிருக்கா. கவுட்டுக்குள்ள குனிஞ்சு பாருங்க. ஆரு ஆம்பளன்னு விடிஞ்சாத் தெரியும்.’’

அவனுக்கு ஒரு சந்தேகம் உறுத்திக்கிட்டே இருந்துச்சு. வந்ததும் எங்கிட்டக் கேட்டான்.

‘‘நான் வடக்க போன சங்கதி ஆருக்கும் தெரியாதே. பெறகெப்படி சித்தப்பா சொல்லிவச்ச மாதிரி தேவரு வந்து வழிமறிச்சாரு.’’

‘‘அதான் எனக்கும் ரோசனையாருக்கு கருத்தப்பாண்டி. எனக்கென்னமோ அந்த வடக்குத் தெருப் பெய மேலதான் சந்தேகமாருக்கு.’’

‘‘அதாரு.’’

‘‘ஒங்கிட்ட அடிவாங்கினான்ல சல்லிமாடன் அவந்தான்.’’

‘‘அவன் நெய்யிலயும் ஒட்டுவான் பிய்யிலயும் ஒட்டுவான். பெறக்கித் தின்னிப் பெயலாச்சே.’’

‘‘துள்ளீட்டுத் திரியிறான். மொகங்குடுத்துப் பேசுறதில்ல. அவனுக்கும் தேவரு ஆளுகளுக்கும் பேச்சுவார்த்த உண்டுன்னு காத்துவாக்குல சேதி வந்துச்சு. நல்லா உறுதிப்படுத்திக்கிருவொம்.’’

‘‘அவன் வேலதான்னு தெரிஞ்சாச் சும்மா வுடப்புடாது. பல்லெல்லாம் தட்டி நொறுக்கீறணும். ’’

‘‘பொறுத்துப் பாப்பொம்.’’

நான் அவனோட கோவத்த ஆத்திச் சரிப்படுத்துனென்.

தேவரு அதுக்குப் பெறகு எங்ககிட்ட வம்பு வச்சுக்கிறல. வல்லவனுக்கு வல்லவன் வையகத்துல இருப்பான்னு நெனச்சு ஒதுங்கிக்கிட்டாரு. இருந்தாலும் ஒதடு பழஞ்சொரிய உள்ள வகுறெரிய கோவம் பொகஞ்சுக்கிட்டுத்தான் இருந்தது.

‘‘திரும்பவும் வந்தாரா.’’

வந்து வாங்கிக்கெட்டவா... கொஞ்ச நாளாச்சு. மேலூருக் கொளத்து ஓடக் கரையில வச்சு வேலுக் கோனாரு மறிச்சுக்கிட்டாரு. கொளத்த ஒட்டி வடக்காம வாலோடியா ஓட. அது நெறையாத் தண்ணி கெடந்தது. மேலக் கர நெடுக கம்பும் கையுமா ஆளுக. தண்ணிக்குள்ள நீஞ்சுதான் அக்கரைக்குப் போயித் தப்பிக் கணும். அதுவரைக்கும் வுட்டுவைக்கணுமே. கோனாரு அவன வெட்ற மாதிரி பாத்தாரு.

''நான் ஆரு தெரியுமா.''

அவன் மொகத்துல கொஞ்சங்கூடப் பயமில்ல.

''சொன்னாத்தான தெரியும்.''

''வாழவந்தாவரம் வேலுக் கோனாரு பேரச் சொன்னாலே நடுங்காற ஆளு கெடையாது. நீ தவளக்குட்டி மாதிரி வெடலப் பெய. ரெம்பத் துள்ளுறயாமே. தன்னூருக்கு வேணும்னா நீ ஆனையாருக்கலாம். அசலூருக்குப் பூனதாண்டா.''

''நான் ஆருக்குப் பயப்படணும். ஆனைக்கா பூனைக்கா.''

''எங்களப் பயமுறுத்தீறலாம்னு பாக்கயா. நரி குசுவிக் கடலு கலங்கிப் போகாது.''

''ஒங்கள நான் ஏன் பயமுறுத்தணும். சும்மா வாற மனுசன வம்புக்கிழுக் கிறது நல்லால்ல.''

''ஒழுங்கா இருந்துக்கோ. இல்லன்னா கால வெட்டி மரத்துல தொங்கப் போட்ருவென். ஓங்கியடிச்சா ஏங்கியழுகிறதுக்குச் சீவனில்லாற பொடிப்பெய. தேவரோட மோதுறயா.''

''என் வழியில எவன் குறுக்க வந்தாலும் சும்மா வுட மாட்டென். கால வெட்றவரைக்கும் குடுத்துக்கிட்ருப்பாகன்னு நெனப்பா. மரத்துல தொங்கப் போறது ஆரு காலுன்னு தெரியல.''

''என்னல சொன்ன....''

மூணு பேரு அவனப் புடிக்க ஓடுனாங்க. அத்தன பேரவும் தண்ணிக்குள்ள தள்ளுனான். மத்தவங்க நெருங்குறதுக்குள்ள ஓடைக்கு நடுவுலருந்த மரத்துமேல தவ்விக் குதிச்சு வளஞ்சிருந்த கொப்பப் புடிச்சுக்கிட்டே அக்கரைக்குப் போயிட் டான். கோனாரு வாயப் பௌந்துக்கிட்டு அவனவே பாத்துக்கிட்ருந்தாரு. அந்தச் சமயத்துல அவரு நெஞ்சில கனமா ஒரு கல்லெறி வுழுந்தது. மனுசன் நெல தடுமாறீட்டாரு. ஓடைக்குள்ள வுழுந்தவங்க முங்கிமுங்கி எறிக்குத் தப்பிச்சாங்க. உசிரு பெழச்சது பெரும்பாடு. நின்னு நெலச்சுக் குறிவச்சிருந்தான்னா மண்ட பௌந்துருக்கும்.

அவன் கீழக் கரையிலருந்து கோனாருக்குச் சொன்னான்.

''இது அச்சாரந்தான். சொச்சத்தப் பெறகு வச்சுக்கிருவொம். ஆனையா பூனையான்னு அப்பத் தெரியும்.''

அவரு ஒண்ணும் பேசல. அவசரமாத் திரும்பிப் போயிட்டாரு.

''அந்தச் சண்டீரும் போயாச்சு.''

நடுவப்பட்டி சித்தா நாய்க்கரும் அவன வுட்டுவைக்கல. சிக்கலான எடத்துல மோதுனாரு. கைகலக்க முடியாற அளவுக்கு கருவமரக் கும்மலு. ஆளுக கட் டாப்புக்கட்டாப்பா நின்னாங்க. அவன் கல்ல வச்சே சமாளிச்சான். நாய்க்கரு ஒரு நூல்ல பெழச்சாரு. இல்லன்னா மண்ட ஒடஞ்சு மல்லாக்கக் கெடப்பாரு. மத்தவங்களுக்குச் சேதாரம் ரெம்ப.

அதுலருந்து அவன ஆரும் நெருங்கிறதில்ல. ஆனானப்பட்ட சண்டீருகளவே மடக்கீட்டான்னு அவனுக்குப் பெரிய பேரு. கரிசக்காடு செவக்காடெல்லாம் அவனப் பத்தித்தான் பேச்சு. சின்னச்சின்னச் சண்டீருகளுக்கு ஒதறலெடுத்தது. தெக்கத்திப் பணிக்கரு செவக்கொளம் சின்னமுத்துப் பண்டாரம் மலப்பட்டி

சோலையப்ப மூப்பன் கொங்கங்கொளம் கிட்ணக் குடும்பன் வெள்ளையாவரம் கோடாலிக் கோப்பன் கில்லாடிப் பூச்சன் காலாங்கரப்பட்டி சின்னக்குருவன் பகடன்னு வந்து அவனப் பாத்து நயந்துக்கிட்டாக.

''நமக்குள்ள பகையா என்ன தாயாப் புள்ளையா இருந்துட்டுப்போவொம்.''

''எம் மேல குத்தமிருந்தாச் சொல்லுங்க. ஆரோடயும் வம்புச்சண்டைக்குப் போறனா. அவுக பொருளுக்கு ஆசப்பட்டனா. வலிய வந்து சிலுவயிழுத்தா எப்படிச் சும்மாருக்கிறது. இவுக பண்ற அநியாயத்தப் பாத்துட்டு எம்புட்டு நாளைக்குத்தான் அடங்கி ஊமையாருக்கிறது.''

''அது சரி. அவுகளும் கண்டறிஞ்சு நடந்துக்கிறணும்.''

அவுக வெத்தல பாக்குப் பலுமாறி கோழி சாராயம் குடுத்துட்டுப் போனாக. எனக்குக் கறி தின்னு பல்லம்புட்டும் தேஞ்சுபோச்சு.

பெறகு கலிங்கல்ல தீவட்டிக்கொள்ள வள்ளிசாக் கெடையாது. சனங்க நிம்மதியா ஒறங்குனாக. மறுபடியும் ஆடுமாடுக பெருகீருச்சு. எனக்கென்னமோ ஆடு மேய்க்கிற நெனப்பே அத்துப்போச்சு. கலிங்கலுன்னு பேரக் கேட்டாலே. சுத்துப்பட்டிகள்ல ஒரு பயம். சண்டீருகளுக்கு அது கிருசுகெட்ட பெய ஊரு.

இம்புட்டும் நடந்து முடிஞ்ச பெறகுதான் கருத்தையனுக்கு ரோசன தட்டுப்பட்டுச்சு. சே இப்படி ஒத்தையா இருக்கிறது நல்லதில்ல. நமக்கும் நாலு பேரு தொணையிருந்தா அதொரு மாதிரிதான். எவனும் கிட்ட அண்ட மாட்டான். அதுக்குத் தோதான ஆளுக வேணுமே. மொதல்ல உள்ளூருல தேடிப் புடிக்கணும். பெறகு வேத்தாளச் சேத்துக்கிறலாம்னு தோணுச்சு. நாங்க ரெண்டு பேரும் திட்டம் போட்டொம்.

''சித்தப்பா நம்ம கத இம்புட்டுக்காயிட்டப் பெறகு இனிமே ஊருக்குள்ள தங்குறது நல்லதில்ல.''

''எனக்கும் மனசுக்குள்ள அப்படித்தான் ஓடுது. ஒருநேரம்போல ஒருநேரம் இருக்காது. எதிரிக்கு எடங்குடுத்துறப்புடாது.''

''நம்மளும் நம்பிக்கையான ஆளுகளச் சேத்துக்கிட்டு மலங்காடு செடிங் காடுன்னு கெளம்பீற வேண்டியதுதான். அப்பப்ப வந்து தலையக் காட்டிக்கிறலாம். அதுக்கு வழியச் சொல்லு.''

''வழியென்ன அங்கங்க நெளிவுசுளிவான ஆளு இல்லாமயா போயிருவான். சித்தப்பன் இருக்கையில அந்தக் கவலைய வுடு. தட்டிப்பாத்துக் கொட்டிப் பாத்துப் பெறக்கியெடுத்துருவென். ஆராரு தோதுப்படுவான்னு கணக்குப் போட்டுப் பாத்துக்கிட்ருக்கென்.''

''உள்ளூருல நீயிருக்க. கூட ரெண்டுபேரச் சேத்துக்கிருவொம்.''

''நானா... எனக்குத் தொறட்டிக்கம்பு புடிச்சுத்தான் பழக்கம். ஆளுக் கணக்குக்கா.''

''நீயில்லாம எப்படி சித்தப்பா. கூடயே இருந்து நல்லது கெட்டது சொல் லணுமில்ல. கம்பு வெளையாட்டு கை வெளையாட்டப் பத்திக் கவலப்படாத. கொஞ்ச நாள்ல ஒன்னய வாத்தியாராக்கிப்புறென்.''

''கருத்தப்பாண்டி சித்தப்பன் சொல்றன்னு தப்பா நெனச்சுக்கிறப்புடாது. ஊருக்குள்ள இப்பத்தான் பெயக தலையெடுத்துக்கிட்டு வாறான். ஒரு குருட்டுத்

தைரியத்துல அருவா கம்பத் தூக்குறான். ஒருத்தனுக்காச்சும் ஒழுங்காக் கம்பு புடிக்கத் தெரியுமா. மொரட்டடி எத்தன நாளைக்கு ஓடும். கைகாரங்கிட்ட மாட்டிக்கிட்டாத் தப்பிக்க முடியுமா. நம்ம நாலு பேரக் குறிச்செடுத்துட்டுப் போயிட்டம்னா நாயில்லாற ஊருல நரி அம்பலம்பண்ணுன கதையாயிரும். வாறவனுக்குப் பயமத்துப்போகும். அதனால என்ன சொல்ல வாறன்னா நமக்குத் தொணைய வெளிய தேடிக்கிருவொம். பெயக இங்கயே நிக்கட்டும்.''

''அப்படிச் சொல்றயா. அதும் சரிதான்... அப்ப பெயகளுக்கு வெளை யாட்டுச் சொல்லிக்குடுக்கணும்.''

''ஆமய்யா. சொணங்கவுடாம அவுகளத் தயார்ப்படுத்தணும்.''

''மொதல்ல ஒனக்குச் சொல்லிக்குடுத்துறென். பெறகு நீ அவங்களக் கவனிச்சுக்கோ.''

''தண்ணிக்குள்ள எறங்கும்போதே நீயச் சொன்னா கரையேறிக்கிற மாட் டென். சித்தப்பன் சித்தெறும்புய்யா. செரட்டத் தண்ணியும் அதுக்குச் சமுத்தரந் தான். படிப்படியாச் சொல்லிக்குடுக்கணும்.''

''கூசாம எறங்கு. நீயணுமா நடக்கணுமான்னு அப்பத் தெரியும்.''

''எல்லாம் நல்லபடியா முடியட்டும். அதுக்குப் பெறகு வெளியூருக்குக் கெளம்புறென்.''

ரெண்டு பேரும் பேச்சுப்பழக்கம் போட்டுக்கிட்டே கம்மாப் பக்கம் போயி செலம்பு பழகுவொம். கையில கம்பு புடிச்சதும் நான் எளவட்டமா மாறீரு வென். காலு வரிசையும் கம்பு வீச்சும் மூணே நாள்ல வசத்துக்கு வந்துருச்சு. கம்பச் சொழட்டி துள்ளிக் குதிச்சு மண்ணத் தொட்டுக் கும்புடயில இனியும் சின்ன வனாயிருவென்.

''கம்பு வெளையாட்டு மும்மரமா நடக்குது.''

ஒவ்வொரு அடியா தேறி எதுக்கம்பு கெட்ற அளவுக்குத் தெம்பாயிட் டென். கருத்தையன் ஒரு செண்டிப்பெடுத்துக் கம்புபோடுவான்.

''இந்தா நெத்தியடி புடி.''

''சித்தப்பனுக்குப் பேருதான் நொண்டியன். வெளையாட்ல புலியாக்கும்.''

''இது நெஞ்சடி.''

''பஞ்சா ஊதீருவென்.''

''வெலா வீச்சப் புடி.''

''கெலா மாதிரி கெலிச்சிருவென்.''

நான் கல்லுப் பெறக்கிக் குமிச்சுக்கிட்டு கண்டமானக்கி எறிவென்.

''ஆலங்கா மழ பேயிது. அத்திக்கா மழ பேயிது. ஓடிப்போயிரு.''

அவன் அத்தன கல்லவும் கம்பு சுத்தித் தடுப்பான்.

''இப்ப நான் எறியட்டுமா.''

''அதுக்கு முந்தி சித்தப்பனுக்குக் குழி வெட்டி ஆறப்போடு.''

அடுத்து வர்மப்புடி நடக்கும். அவன் வெதவெதமான புடிய எம் மேல சோதிச்சுப்பாப்பான். வுழுத்தாட்டிவுழுத்தாட்டி எழுப்புவான். போகப்போக அதவும் கத்துக்கிட்டென். அவனச் சோதிக்கிற அளவுக்குப் பெரியாளாயிட் டென். சொல்லப்போனா சின்னச் சண்டூராவே மாறீட்டென். எப்பயும் கம்பு

கைவசமிருக்கும். கருகருன்னு எண்ண மினுங்கும். கம்பு வீசி தோரணையா நடப்பென். அதட்டிப் பேசுவென். என்னயப் பாத்தும் சனங்க பயந்தாக. காதோட காதாப் பேசிக்கிட்டாக.

''எல்லாம் கருத்தையன வச்ச ஆட்டமாக்கும்.''

''அதான் அவன் மோத்தரம் வெளக்கா எரியிது.''

கருத்தையன் ஒரு சங்கதிய மட்டும் எங்கிட்டக் கண்டிச்சுச் சொல்லி யிருந்தான்.

''சத்தியம் செஞ்சு குடுத்துருக்கிறது யாவுகமிருக்குதுல்ல. சொல்லிக்குடுத்த வித்தைய அனாவசியமா ஆருட்டயும் சோதிச்சுப்பாத்தன்னு தெரிஞ்சது அம் புட்டுத்தான். பொய்யாக் கால ஒடிச்சுக் கையில குடுத்துருவென்.''

நானும் கெத்து வுடாமச் சொன்னெஎன்.

''கருத்தப்பாண்டி சித்தப்பனப் பத்தி என்ன நெனச்சுக்கிட்ட. இதெல்லாம் சொல்லணுமா.''

''சித்தப்பனுக்கு அறிவு ரெம்பத்தான். வழியில போற எருமமாடு என்ன செஞ்சது. செலம்பு வரிச போட்டு அடிவகுத்துல அடிக்கயே அது பாவந்தான. செனையாருந்தா என்னாகும்.''

''அது என்ன செஞ்சது தெரியுமா.''

''கம்பு வெளையாட்டுக்குக் கூப்புட்டுச்சாக்கும்.''

''வாலு மயித்த மோத்தரத்துல நனச்சு வீசிக்கிட்டே போச்சு. மனுசனுக்குக் கோவம் வருமா இல்லையா.''

''பாதைய வுட்டுக் கொஞ்சம் வெலகிப் போனா என்ன. காலு தரையில நடக்காதோ. நீ மோத்தரத்த மொகந்துபாத்துட்டே போனா அது சும்மாவா இருக்கும்.''

''அப்ப எம் மேலதான் குத்தமிங்கயா.''

''கரட்டான் அடிக்கிறதுக்கா கையில கம்பு வச்சிருக்கொம். அப்படின்னா கருவக் குச்சப் புடிச்சுக்கிறணும். கத்திக்கம்பும் சரி சொடலமாடன் கையிலிருக்கிற வல்லயக்கம்பும் சரி. பயம்பத்தரமா வச்சுக்கிறணும்.''

எனக்குன்னா அந்த எருமமேல கோவங்கோவமா வந்துச்சு.

''இனிமே சித்தப்பனுக்குப் புத்தி இப்படிப் போகாது கருத்தப்பாண்டி.''

இப்ப நான் எளவட்டங்களுக்கு வாத்தியாராயிட்டென்.

''சின்ன வாத்தியாரு.''

காட்டு வேல முடிஞ்சு எல்லாரும் ராத்திரிக்கு மந்தப் பிஞ்சையில கூடு வொம். சாமம் வரைக்கும் செலம்பு வெளையாட்டு நடக்கும். கருத்தையன் செலாவரிச போட்டு வடக்குத் தெசைய நோக்கி புதுப்பட்டி வாத்தியார வணங் கீட்டு அருவமில்லாம உக்காந்துருவான். பெறகு நான் பெரிய பாவலாப் போட்டு பிஞ்சையச் சுத்தி வந்து கருத்தையன வணங்குவென். மத்தவங்க ஆளாளுக்குக் கெண்டமீனாத் துள்ளி வந்து இந்தச் சின்ன வாத்தியார வணங்குவாங்க. கருத் தையன் பெருமையாப் பாத்துக்கிட்ருப்பான்.

வெளையாட்டு ஆரம்பமாகும். ஒவ்வொருத்தன் ஒழப்புவான். கெதிக்கக் கம்பு புடிச்சு அரட்டிமெரட்டி ஒவ்வொரு அடியா சொல்லிக்குடுப்பென். அப்படியும் வழிக்கு வரலன்னு வைவி. வசவு நாறிப்போகும்.

‘‘அஞ்சினவன குஞ்சியும் வெரட்டுண்டா காலுவழியே கழிஞ்ச பெயலே. தைரியமாக் கம்பப் புடிடா... ஏலே ஒனக்கென்ன வந்துருச்சு. எடுத்த எடுப்பிலயே சண்டீருன்னு நெனப்பா. காலு வரிசைய மறந்துட்டு மொரட்டடியா ஏறி வாறயே. உக்காந்துதான் படுக்கணும். அதத் தெரிஞ்சுக்கோ... அய்யா பெரிய மனுசா இதுதான் கம்பு கெட்ற லச்சண மயிரா. கெழக்க பாத்த நாய்க்கு வடக்க பாத்த பொச்சு மாதிரி நீ ஒரு தெசைக்கும் கம்பு ஒரு தெசைக்கும் இருந்தா எப்படி. எதிரி ஒஞ் சூத்துல குத்தித் தூக்கியெறிஞ்சிருவான். இப்ப இந்த அடிய ஒழுங்காக் கெட்டலன்னா முதுகுல எத்தன அடி வுழுகும்னு சொல்ல முடியாது.’’

அப்பப்பக் கருத்தையன் நெளிவுசுளிவுகளச் சொல்லித்தருவான். நேர மானதுகூடத் தெரியாது. அவன் சொல்லுவான்.

‘‘இண்ணைக்கு இவ்வளவு போதும் சித்தப்பா. ஒரேயடியா மலைக்க வச்சிறாத.’’

‘‘போற போக்கப் பாத்தா நம்மள மலைக்கவச்சிருவாங்க போலருக்கு.’’

எளவட்டங்க அடுத்த வித்தையப் பத்திக் கேக்க ஆரம்பிச்சிட்டான்.

‘‘எங்களுக்கும் செலம்பு கத்துக்கிறணும்னு ஆசையாருக்கு.’’

கண்டிப்பாக் கத்துக்கிறணும் மக்கா. அதுக்குக் காலமிருக்கு.

‘‘ரெண்டு வாத்தியாருட்டயும் கத்துக்கிருவொம்.’’

நல்லாச் சொல்லித்தருவொம்.

‘‘பெரிய வாத்தியாரப் பாக்கணும் போலருக்கு.’’

பாப்பொம்.

‘‘வெளையாட்டு முடிஞ்சப் பெறகு என்ன நடந்தது.’’

நாங்க காட்டுக்குப் போயிட்டொம்.

‘‘ஆராரு.’’

சொல்ல மாட்டென் மக்கா.

‘‘சொல்லணும் பிச்சி.’’

மாட்டென் மக்கா.

‘‘வுட மாட்டொம் பிச்சி. வுட மாட்டொம்.’’

போறென் மக்கா போறென்.

போயிட்டு வாறென் மக்கா வாறென்...

## 3. வனவாசம்

ராத்திரிப் பாடம் நல்லபடியாக முடிந்தது. ஒருவன்கூடச் சோடைபோகாமல் ஒப்பேற வைத்துவிட்டான் நொண்டியன். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு கம்புக் காரன் இருக்கிற தெம்பு ஊருக்குள் வேர்விட்டிருந்தது. வடக்குத் தெருவில் சல்லிமாடனும் ரெண்டுமூணு எளவட்டங்களும் வராததுதான் குறை. கருத்தையன் சொல்லிவிட்டான்.

‘‘ஆத்தரமிருந்தா வாறான். இல்லன்னா கெடக்கான். அதுக்காக அவங்க கையப் புடிச்சா இழுத்துட்டு வர முடியும்.’’

நொண்டியனுக்கு வருத்தந்தான்.

''அதச் சொல்லு. கருப்பட்டியிலயும் கல்லிருக்கத்தான் செய்யும். ஆதியி லிருந்தே அவங்க போக்கக் கவனிச்சிட்டுத்தான் வாறென். ஒண்ணும் சரிப்படல. நாளப் பின்ன ஒரு தொறட்டு வந்தா அனுபவிக்கப்போறது ஆரு. நம்ம அவங்க கிட்ட எச்சரிக்கையா இருந்துக்கிற வேண்டியதுதான்.''

''அவன் கெடக்கான் வுடு சித்தப்பா. இனிமே நம்ம வேலையப் பாப்பொம். சொணங்கீறப்புடாது. நான் சொன்னதெல்லாம் யாவுகமிருக்கா இல்ல வாத்தியா ராயிட்ட முறுக்குல அயத்துப்போச்சா.''

''சித்தப்பனப் பத்தி அப்படியா நெனச்சுக்கிட்ட கருத்தப்பாண்டி. நான் போயி காரியத்த முடிச்சிட்டு வந்த பெறகு சொல்லுவ.''

நொண்டியன் ஆள் தேடி அயலூர் கிளம்பினான். ஆட்களை எப்படியெப்படிச் சோதிக்கணும் என்ன பேசணும் என்று கருத்தையன் விவரமாகச் சொல்லியிருந் தான். அவன் மனசிலும் ஒரு திட்டமிருந்தது.

முதல் ஊர் வேப்பங்காடு. அப்பிராணிபோல் பேச்சுக்கொடுத்து மங்கிணிச் சாம்பானைப் பிடித்தான். குணத்துக்கேற்ற பேர். அடிக்கடி சந்தித்துக்கிட்டதில்லை.

''ஒனக்குக் கருத்தையனத் தெரியுமா.''

''என்னண்ணன் அப்படிக் கேட்டுப்புட்ட. அந்தண்ணனத் தெரியாற ஆளுண்டுமா. எனக்கு நல்லாவே தெரியும்.''

''நான் ஒரு கோட்டி. ஒங்கிட்டப்போயிக் கேக்கென் பாரு. நாய்க்கரு தோட் டத்து ஆமணக்கங் கொழையால ஒனக்கு ரெம்ப நல்லாத் தெரியுமே.''

''அண்ணைக்குச் சமயத்துல வந்து அவன் காப்பாத்தலன்னா என்னயத் தொலிச்செடுத்துருப்பாக. அந்தச் சங்கதிக்குப் பெறகு ஆரும் தள்ளி நில்லுன்னு சொன்னதில்ல.''

''அப்ப ஊருக்குள்ள நல்ல மருவாதின்னு சொல்லு.''

''அது நெசந்தாண்ணன்.''

''பெரிய சண்டீருகளோட பழக்கம் எந்த அளவுக்கு இருக்கு.''

''நெருங்கின பழக்கமெல்லாம் கெடையாது.''

''சும்மா சொல்லு.''

''உள்ளதச் சொல்லீறண்ணன். எப்பயாச்சும் அவுக கொள்ளைக்குக் கூப்புடு றதுதான் நானும் போறதுதான். குடுக்கிறத வாங்கிக்கிருவென்.''

''ஏன் கூடயே போயிற வேண்டியதுதான.''

''அது சரிப்பட்டு வராதுண்ணன்.''

''எதுக்கு அப்படிச் சொல்ற.''

''என்னதான் உசிரக் குடுத்துக் காரியத்த முடிச்சாலும் நம்மளக் குண்டி தொடச்ச கல்லாத்தான் மதிப்பாக. அதனால மனுசனுக்கு வெறுத்துப்போச்சு. இவுகளோட சங்காத்தம் வேணாம்னு நிறுத்திக்கிட்டென். அதுல அவுகளுக்குக் கடுப்பு.''

''சும்மா வுட மாட்டாகளே.''

''எம் மேல கைவச்சா கருத்தையண்ணன் தலப்போடுவானோன்னு தன்னப் பயம். இல்லன்னா இதுக்குள்ள என்னயக் காணாப் பொணமாக்கியிருப்பாக.''

‘‘ஆமணக்கங் கொழ அவ்வளவுக்கு வேல செய்யிதா.’’

‘‘அந்தக் கெத்துலதான் வண்டி ஓடுது.’’

‘‘கருத்தையன் ஒன்னயப் பாத்துட்டு வரச் சொன்னான்.’’

‘‘நீ பேசுறது ஒனக்கே நல்லாருக்காண்ணன். ஒரு வார்த்த சொல்லிவுட்டா நாக்குட்டியா ஓடி வந்துருப்பனே.’’

‘‘என்னருந்தாலும் இந்த ஊருக்கு நீ சண்டீராச்சே.’’

‘‘நான் என்னண்ணன் செய்யணும்.’’

‘‘ஒரு காலத்துல எவன்எவனோ ஊருக்குள்ள வந்து குடுத்துவச்ச மாதிரி பொருளக் கொள்ளையடிச்சிட்டுப் போவான். அழிமாண்டமும் அக்கிரமும் தாங்காது. ஒருநா நாங்க எதுத்துக் குடுத்த குடுப்புல மச்சான் கோவணம் அவுந்தது கூடத் தெரியாம ஓடிப்புட்டான். பெறகு எங்க கருத்தையனக் குறிவச்சு கட்டாப்புக் கெட்னாக. மயிராண்டிக அவங்கிட்ட கனமா வாங்கிக்கெட்னதுதான் மிச்சம். அத்தோட சரி. கலிங்கலுக்கு எந்தப் பெயலும் எட்டிப் பாக்கறதில்ல.’’

‘‘ஆமாமா பயந்துபோயித்தான் கெடக்காக.’’

‘‘வக்காளி அவங்க ஊருல நம்ம போயிக் கொள்ளையடிக்கணும்னு கருத்தையனுக்கு மனசில ஒரு வைராக்கியம். அதுக்குத்தான் திட்டம் போட்டுக்கிட்ருக்கொம். ஒருத்தராச் செஞ்சு முடிக்கிற காரியமில்லையே. தொணைக்கு ஆளுக வேணுமே.’’

‘‘கண்டிப்பா வேணும். அதுலயும் அவுக எடத்துக்கே போறதுன்னா ஏப்புச்சாப்பான ஆளுகளோட போகப்புடாது. ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆயிட்டா வம்பு.’’

‘‘எதுக்கும் பின்வாங்காற ஆளுக வேணும்னுதான் ஒன்னயத் தேடி வந்துருக்கென். ஆன வாலப் புடிச்சுக் கரையேறலாம். ஆட்டு வாலப் புடிச்சுக் கரையேற முடியுமா. என்ன சொல்ற.’’

‘‘இதுக்கு எங்கிட்டக் கேக்கணுமாக்கும். வாடான்னா வந்துட்டுப்போறென்.’’

‘‘ஆனா ஒண்ணுப்பா. எங்களோட வந்தா பொண்டாட்டி புள்ளைய மறந்துறணும். கொள்ளையில அள்ளீட்டு வந்து சொத்துசொகம் சேக்கணுமிங்கிற ஆசைய வுட்றணும். இப்படி எத்தனையோ உண்டு. எல்லாம் கருத்தையனோட கட்டுத்திட்டம்.’’

‘‘எண்ணேன் ஆட்டுக்கொத்தது குட்டிக்கு. மூக்குமுட்ட ஆசைய வச்சுக்கிட்டு முக்கியமான காரியத்துல எறங்க முடியுமா. என்னயப் பத்திக் கவலையே வேணாம். இப்பக்கூட பின்னால வாறென்.’’

‘‘அது போதும்ப்பா... இனியும் கொஞ்சம் எடம் அலைய வேண்டியிருக்கு. போயிட்டு வந்து கூப்புட்டுக்கிறென்.’’

நொண்டியன் தெம்பாகத் தெற்குச் சீமைக்குப் புறப்பட்டான். அங்கே பாஞ்சாலங்குறிச்சிப் பக்கம் துக்குமுத்துப் பகடை தட்டுப்பட்டான். தட்டைக் குச்சுப் போல் ஒல்லியான திரேகம். அவன் பூட்டனும் பாட்டனும் கட்டபொம்மு ஊமத்துரையிடம் இருந்தவர்கள். அப்பன் எட்டயாபுரம் அரண்மனையில் ஊழியம் செய்தான். குதிரைகளை மேய்ப்பதும் புல் பிடுங்கிப்போடுவதும் அதுகளை வசக்கிப் பராமரிப்பதும் அவன் வேலை. அவனிடமிருந்து மகனுக்கு நிறையப் பாடம் பழக்கம்.

பகடை கம்பு பிடிக்கும் தோரணையே நொண்டியனுக்குப் பிடித்துப் போயிற்று. வெட்டு விலக்குத் தெரிந்து சாதுரியமாகத் தப்பித்தான். எடுத்தவுடன் ஏறி விளையாடாமல் இறங்கிக் கம்படியைக் கட்டிச் சமயம் பார்த்து அயிரை மீனாக ஏறினான். நொண்டியன் அவனைக் கட்டிப்பிடித்துக்கொண்டான்.

''இப்படியாளுத்தான் வேணுண்டா மகனே.''

அடுத்த ஊரில் இனியொரு பகடை தட்டுப்பட்டான். அவன் அல்லக்கா புல்லக்கா என்று சகடாலடிப்பதைப் பார்த்தால் பெரிய கைகாரன்போல் தோன்றியது. சோதனை நடந்தது.

''காக்காய்க்குப் புடுக்கிருந்தா பறக்கும்போது தெரிஞ்சிட்டுப்போகுது. பூட்ரா கம்ப. பாத்துருவொம்.''

எல்லாம் வெத்துவேட்டு. அவன் நெற்றிப்பொட்டில் உள்ளங்கையால் ஒரே தட்டுத்தான். கீழே விழுந்து விலுக்விலுக்கென்று உதைய ஆரம்பித்துவிட்டான். எழுப்புவதற்குள் பெரும் பாடாகப்போயிற்று. மூஞ்சியைத் தொங்கப்போட்டுக் கொண்டு நின்றான். நொண்டியனுக்கென்றால் கடுங்கோவம்.

''குனிஞ்சு துரும்பு புடுங்கச் சீவனில்ல துணிஞ்சு பனையப் புடுங்குவன்னு பீத்துறயே. வேற எவங்கிட்டயாச்சும் வச்சுக்கோ. ஒத்தைக்கொத்த கம்பு போட்டுப் பாப்பமா. சரியான ஆம்பளன்னா எதுத்து நின்னுட்டு எம் பின்னால வா. என்ன சொல்ற.''

பகடை பரிந்துபோன இடம் தெரியவில்லை. நொண்டியன் இன்னும் பொரிந்துகொண்டிருந்தான்.

''இப்படியும் நாலு உசிருக இருக்கத்தான் செய்யிது. எனக்கு வந்த கோவத் துக்கு நாலு மிதி மிதிச்சுக் காலக்கைய ஒடிச்சுப் போட்ருவமான்னு இருந்துச்சு. கெழடிய அடிச்சா வழியில பேலுவா. அந்தத் தொறட்டெதுக்கு.''

மேகாட்டில் முத்துக்குறி மூக்க வண்ணான் கிடைத்தான். முத்துப் போட்டுப் பார்த்துக் குறிசொல்வதில் கைகாரன். சொன்ன குறி தப்பாது. அதோடு நாலு வித்தையும் கைவசம் வைத்திருப்பவன். இப்படியொருவன் தேவைதான் என்று தோன்றியது. சேர்த்துக்கொண்டான்.

அப்படியே பார்வையால் மேய்ந்துகொண்டே வடக்கே வரும்போது வெள்ளையாபுரம் பள்ளக்குடியில் கோடாலிக் கோப்பனையும் கில்லாடிப் பூச்சனையும் பார்த்தான். அவர்கள் அந்தப் பக்கத்துச் சண்டீர்கள். தீவட்டிக் கொள்ளைக்குப் பேர்போனவர்கள். ரெண்டு பேரும் கூட்டு. எந்தக் காரியத் திலும் சேர்ந்தே இறங்குவார்கள். பொன்னையாத் தேவர் சித்தா நாய்க்கர் வேலுக் கோனார் மூணு பேருமே அவர்களுக்கு ஆகாது. சொத்துத் தகராறா என்ன. கூடிக் கொள்ளையடித்ததைப் பங்குபோட்டுக்கொள்வதில் கசப்பு. சேக்காளிகள் எதிரிகளாகிவிட்டார்கள். இப்போதுங்கூட அப்பப்ப மோதிக்கொள்வார்கள். குட்டுவதும் உண்டு குட்டுப்படுவதும் உண்டு. இது தெரிந்துதான் நொண்டியன் வெள்ளையாபுரத்துக்குப் போனான். திட்டத்தைச் சொன்னதுமே சந்தோசமாக ஒத்துக்கொண்டார்கள்.

நொண்டியனின் சாமர்த்தியத்தை கருத்தையன் மெச்சிக்கொண்டான்.

"எல்லாம் பெறக்கிப்பெறக்கி எடுத்துருக்க போலருக்கு. எல்லாரும் நெலச்சு நின்னுட்டாகன்னா நம்மள எவனும் மிஞ்ச முடியாது."

"நிக்கவச்சிருவொம். அப்படியே ஆரும் ஒழத்துனா கழட்டிவுட்டுட்டு வேறாளப் பாத்துக்கிற வேண்டியதுதான். ஆளுக்கா பஞ்சம்."

"பண்டாரம் மூப்பன்னு ரெண்டுமூணு சண்டீரு உண்டுமே. அவுகளவும் சேத்துருக்கலாமில்ல."

"எனக்கும் நெனப்புத்தான். சொன்னபடி கேக்காமப் போயிருவாங்களோன்னு சந்தேகம் வந்துருச்சு. எல்லாம் தம் போக்குல திரிஞ்சு ஆண்டனுபவிச்சவங்க. நம்ம கைக்குள்ள கெடப்பான்னு சொல்ல முடியாது. பெறகு அவங்களக் கெட்டிமேய்க்கிறதுக்கே சரியாருக்கும். எண்ணைக்குமே மண்டைக்கு மிஞ்சின கொண்ட ஆகாது... இவங்களுங்கூட எப்படியெப்படின்னு போகப்போகத்தான் தெரியும்."

"வசத்துக்குக் கொண்டுவந்துறலாம்."

"அடுத்து சித்தப்பன் என்ன செய்யணும்."

"வாற வெள்ளிக்கெழம பொழுதடைய தெக்குப் பரும்போரம் செரக்காட்டுக்கு வரச்சொல்லித் தகவலு குடுத்துரு."

"தகவலு குடுக்கிறதென்ன நானே போயித் திரும்பீறென்."

எல்லாரும் சிரைக்காட்டுக்குள் மறைவான இடத்தில் கூடிப் பேசினார்கள். கருத்தையனுக்கு அவர்கள்மேல் நம்பிக்கை வந்தது. பிறகு மளமளவென்று வேலை நடந்தது. காடுமலையென்று அலைந்து தங்குவதற்குப் பாதுகாப்பான இடங்களைத் தேடிக் கண்டுபிடித்தார்கள். ஒவ்வொரு இடத்துக்கும் அம்மி உரல் என்று சகல சாமானும் போய்ச்சேர்ந்தது. களப்பாகுளம் மருகால்குறிச்சி மணியாச்சி என்று முக்கியமான ஊர்களிலிருந்து ஆயுதம் வந்தது. அங்கங்கே தங்கி பொங்கிச் சாப்பிட்டுச் சுத்துப்பட்டிகளில் ஆட்டநோட்டம் பார்க்க ஆரம்பித்தார்கள்.

கருத்தையனும் நொண்டியனும் எங்கே திரிந்தாலும் கலிங்கல்மேல் ஒரு கண்ணாகவே இருந்தார்கள். அப்பப்ப ஊருக்கு வந்து போனார்கள். அவர்கள் திடீர்திடீரென்று காணாமல்போய்விடுவதைப் பார்த்து ஊருக்குள் பயம். என்னமோ ஏதோ நடக்கிறதென்று காதுங்காதுமாகப் பேசிக்கொண்டார்கள். நொண்டியனிடம்கூடக் கேட்கத் தைரியமில்லை. பிறகுபிறகு அந்தக் குசுகுசுப்பும் அடங்கிவிட்டது. காரணம் ரெண்டு பேரும் ரெம்ப நாளாக ஊருக்கு வருவதை நிறுத்திவிட்டார்கள்.

எடுத்த எடுப்பிலேயே தீவட்டிக்கொள்ளைக்குப் போகணுமென்று கோடாலிக் கோப்பனும் கில்லாடிப் பூச்சனும் துடித்தார்கள். கருத்தையன் அதுக்கு ஒத்துக் கொள்ளவில்லை.

"திடுதும்னு எறங்குறது நல்லதில்லண்ணன். போகப்போக நெலமையத் தெரிஞ்சுக்கிருவொம். நெளிவுசுளிவு புடிபடட்டும். பெறகு தைரியமா எறங்கலாம்."

கோடாலி பீத்திக்கொண்டான்.

"நெலவரமென்ன நெலவரம். எந்த ஊருல எத்தன வீடிருக்கு. எந்தப் பக்கம் வாசலிருக்குன்னு எங்ககிட்டக் கேளு. நீ ஆளா கூட வந்து நின்னாப் போதும். எங்க நெளிவுசுளிவப் பத்தி அப்பத் தெரிஞ்சுக்கிருவ."

நொண்டியனுக்கு இந்தப் பேச்சு பிடிக்கவில்லை.

'வக்காளி ஆண்டி கெடக்கான் மடத்துக்குள்ள அவன் கோவணம் கெடக்குது கொளத்துக்குள்ளன்னு இப்பயே இந்தப் பீத்துப் பீத்துறவன் பின்னால என்ன கூத்துக் கெட்டப்போறானோ. இத வளரவுட்டா வம்பு. தப்புப் பண்ணீட்டமோ.'

''ஒங் கெட்டிக்காரத்தனத்த ஆரும் கொறச்சுச் சொன்னாகளாப்பா. ஒங்களப் போல மத்தவுகளும் தேறிக்கிறட்டும்னுதான் கருத்தப்பாண்டி சொல்றான். கொஞ்சம் பொறுத்துப் பாப்பொம்.''

கில்லாடி சிலுப்பினான்.

''அடிபட்டுத்தான் தெரிஞ்சுக்கிறணும்.''

நொண்டியனுக்குக் கடுப்பு.

'ஆமா இவன் எத்தன பேருட்ட அடிவாங்கினான்னு எனக்கில்ல தெரியும். சகடாலுக்கொண்ணும் கொறச்சலில்ல.'

''அதுக்காக எடுத்த எடுப்பிலயே அடிவாங்கிச் சாஞ்சிறப்புடாதுல்ல. கொஞ்ச நாளைக்குப் பெறகு ஒங்க கைவரிசையக் காட்டுங்கப்பா.''

''ஏறுறவன் குண்டிய எத்தன நாளைக்குத் தாங்குறது.''

''எட்டுமட்டும் தாங்குவமே. அதுக்கு மேல ஏறுனா ஏறுறான் முடியலன்னா வுழுகிறான். என்ன சொல்ற.''

கோடாலியும் கில்லாடியும் முணுமுணுத்து அடங்கிவிட்டார்கள். கருத்தையன் நொண்டியனை ஒருமாதிரி பார்த்தான்.

''இது சரிப்பட்டு வரும்னு நெனைக்கயா.''

நொண்டியன் தலையால் சொன்னான்.

''இவங்கள நான் பாத்துக்கிறென். நீ கவலப்படாத.''

## 4. வயித்துப்பாடு

கருத்தையன் சுத்துப்பட்டிகளில் வழக்கு நடத்த ஆரம்பித்தான். விசாரணைக்கு முந்தி கூட்டாளிகளை அனுப்பி விவரங்களைத் தெரிந்துகொண்ட பிறகுதான் வழக்குகளுக்குப் போவான். யாராவது பொய் சொன்னால் பூசை பொறுக்கக் கிடைக்கும். சில சமயம் எதிராளிகள் புகுந்து கலகங்கூட மூண்டுவிடும். அதுக்கும் தயாராகவே இருப்பார்கள். துக்குமுத்துப் பகடை அதில் கவனம் சிதற மாட்டான். நிலைமை முற்றி எதிரி முந்திக்கொள்வான் என்று தெரிந்தால் ஒரே பாய்ச்சல். மூணு பேருக்காவது மண்டை உடைந்துவிடும். தூக்கிக்கொண்டுதான் போகணும்.

வடக்குத் தெரு சல்லிமாடன் சுழிச்சேட்டை பிடித்தவன். அவனுக்கும் கருத்தையனுக்கும் எப்போதுமே ஆகாது. ஒரு தடவை கருத்தையனிடம் அடி வாங்கியதிலிருந்து பெரிய எதிரி மாதிரியே நடந்துகொண்டான். நேருக்கு நேர் மோதுவதில்லை. ஊமைக் குசும்பு பண்ணி மூட்டிவிட்டு வேடிக்கைபார்ப்பான். ரெண்டுமூணு பயல்களைச் சேர்த்துக்கொண்டு சில்லறைச் சோலிகளுக்குப் போவான். அயலூர்ச் சண்டீர்களுடன் சேர்க்கை உண்டு.

அவன் எதிராளிகளுக்கு ஒத்துக்கையாக இருப்பது நொண்டியனுக்குத் தெரியவந்தது. ரெண்டுமூணு தடவை எச்சரித்தான்.

''நமக்குள்ள அடிச்சிட்டுக் கெடந்தா பெறத்தியானுக்கு எளக்காரமாப் போயிரும்ப்பா. அத மனசில வச்சுக்கிட்டாப் போதும். பெறகு எம் மேல தப்புச் சொல்லப்புடாது.''

அவன் கேட்பதாக இல்லை.

''ஓங்களுக்கும் எனக்கும் என்ன பகையிருக்குது. மல்லுக்கெட்டிக்கிட்டா கெடக்கொம்.''

''ஒஞ் சேர்க்கையும் நடவடிக்கையும் சரியில்ல. அம்புட்டுத்தான் சொல்லு வென்.''

''ஓங்களுக்குப் புடிக்கலங்கிறதுக்காக நாலு மனுசரோட பழகாம இருக்க முடியுமா.''

அவன் ரெம்ப இடைஞ்சல் பண்ணினான். நொண்டியனுக்குப் பொறுமை உடைந்துவிட்டது. அவனை ஊமையடியாக அடித்துப்போட்டுவிட்டான். அதுக்குப் பிறகு அவன் கொஞ்சம் அடங்கிய மாதிரி பம்மியிருந்தான்.

கலிங்கலிலும் அப்பப்பத் தகராறுகள் முளைப்பதுண்டு. கருத்தையன்தான் தீர்த்துவைக்கணும்.

கூட்டாளிகளுடன் தோரணையாக வருவான். வண்ணாக்குடி புளியமரத் தடிதான் இருப்பு. மருதனை அனுப்பிச் சம்பந்தப்பட்டவர்களை வரவழைப் பான். அவனைப் பார்க்க ஊரே திரண்டுவிடும். வழக்குகளை விசாரிப்பது நொண்டியன் வேலை. ரெண்டு பக்கமும் பொறுமையாகக் கேட்ட பிறகு அவன் வாயிலிருந்தே தீர்ப்பு வரும். எல்லாரும் அதுக்குக் கட்டுப்படணும். இல்லை யென்றால் நடக்கிற கதையே வேறு.

கருத்தையனின் கெட்டிக்காரத்தனத்தைப் பற்றி எல்லாரும் அச்சத்துடன் பேசிக்கொண்டார்கள். ஊர்ச் சந்தியில் யாராலும் தூக்க முடியாமல் கெம்பீரியமாக படுத்திருந்த எளவட்டக் கல் மந்தையில் சவமாகக் கிடந்தால் அது அவன் வேலை யாகத்தான் இருக்கும். அதை ஊர் முழுக்க வேடிக்கைபார்க்கும். ஊருக்கு அவமான மென்று கல்லை அந்த இடத்திலேயே குழி தோண்டிப் புதைத்துவிடுவார்கள்.

களத்தில் நின்ற மாட்டு வண்டி நிறைபாரத்துடன் குடைசாய்ந்து கிடந்தால் அது கருத்தையன் வந்ததுக்கு அடையாளம். பத்துப் பேர் சேர்ந்துதான் அதைத் தூக்கி நிப்பாட்டணும்.

சின்னச்சின்ன வழிப்பறிக் கொள்ளை நடத்தினார்கள். மற்ற கொள்ளைக் காரர்களை மடக்கிக் களவுப் பொருட்களைப் பிடுங்கினார்கள். பொதிமாடு களையும் வண்டிகளையும் நிறுத்திக் கஞ்சிப்பாட்டுக்குத் தேவையான தானியம் தவசங்களைப் பறித்துக்கொண்டார்கள். ஒருவேளைச் சாப்பாடு இல்லை யென்றால் நொண்டியன் துடித்துப்போவான். சோற்றுமாடன்.

பிறகு பெரிய வீடுகளில் ராத்திரி நேரம் கொள்ளையடிக்கத் தயாரானார்கள். கருத்தையன் ஒவ்வொருவனுக்கும் தனித்தனியாக வேலை கொடுத்திருந்தான். வேலைக்குத் தக்க அவர்களுக்குப் பட்டப் பேர் உண்டு. நொண்டியன் துப்பன். துக்குமுத்துப் பகடை கைக்காடையாக மாறிவிட்டான். முத்துக்குறி மூக்கு

வண்ணானுக்குப் பேர் கத்தி. மங்கிணிச் சாம்பான் மம்பட்டி. கோடாலிக் கோப்பன் கோடாலியாகச் சுருங்கிவிட்டான். கில்லாடிப் பூச்சன் ஆந்தை.

ராவேட்டைக்குக் கிளம்பும்போது நிறையச் சாத்திரம் பார்ப்பார்கள். முதலில் துப்பன் போய் நோட்டம்பார்த்து நிலவரங்களை அறிந்து வருவான். அதில் கைகாரன். விதவிதமான நடை நடப்பான். நாளுக்கொரு வேசம் போடு வான். அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. ஒரு நாள் ஆட்டு வியாபாரியாக இருப்பான். மறுநாள் மாட்டு வியாபாரம்.

சரியாகத் துப்புச் சொல்லணும். இல்லையென்றால் கருத்தையனிடம் வாங்கிக் கட்டி முடியாது. தாட்சணியம் பார்க்காமல் கைநீட்டிவிடுவான்.

''நீ சொல்றத வச்சுத்தான் காரியத்துல எறங்கணும். எதிராளியிட்ட எக்குத் தப்பா மாட்டிக்கிட்டாக் கேவலம். பெறகு நானும் ஆம்பளன்னு அலைய முடியாது.''

துப்புக் கிடைத்ததும் கத்தி முத்துக்குறி பார்த்து நேரம் குறிப்பான். பிறகு ராவேட்டைத் தெய்வங்களான சுடலைமாடனுக்காவது கருப்பசாமிக்காவது படைத்துக் கும்பிடுவார்கள். கெவுளி ஆந்தை பூனை எதாச்சும் சகுனம் பார்த்துக் கிளம்புவார்கள். நல்ல சகுனம் கிடைக்கணும். அப்போதுதான் வேட்டை சாயும். கெட்ட சகுனமென்றால் ஒரெட்டு நகர மாட்டார்கள். துப்பன் கண்டிப்பாகச் சொல்லிவிடுவான்.

''கருத்தப்பாண்டி வேட்டைய இன்னியொரு நாளைக்கு வச்சுக்கிருவொம். வாங்க போயி மொடக்கிப் படுப்பொம்.''

நல்ல சகுனம் கிடைத்துவிட்டால் சகல ஏற்பாடுகளுடன் சுதாரிப்பாகப் புறப்படுவார்கள். ஊரோரம் போய் நின்று அருவம் கேட்பார்கள். கைக்காடை ஊருக்குள் நழுவி எங்கேயாவது ஒளிந்துகொள்வான். உற்றுக் கவனித்து நிலை மைக்குத் தக்க கிட்ட வந்து லேசான சன்னை கொடுப்பான். அவ்வளவுதான். வேலைகள் சூட்டிக்கையாக நடக்கும்.

வீட்டு அமைப்புக்குத் தக்கபடி சுவரேறிக் குதித்தோ கூரையைப் பிரித்தோ உள்ளே போய்விடுவார்கள். ரெண்டுக்கும் தோதில்லையென்றால் கன்னமிடு வார்கள். கன்னக்கோல் வைத்து சுவரைத் துளைப்பதற்கு மம்பட்டி பொருத்த மானவன். ஆந்தை ஆள் பார்ப்பான். துளைபோட்டு முடிந்ததும் கத்தி உள்ளே இறங்கிக் கச்சிதமாகக் காரியத்தை முடிப்பான். மற்றவர்கள் காவலுக்கு நிற்பார்கள்.

என்ன பொருள் கைக்குக் கிடைக்கிறதோ இல்லையோ துப்பனுக்குச் சோற்றுப் பானையும் வெஞ்சனச் சட்டியும் வந்தாகணும். அருசுகமான பண்டம் போல் ஆவலாக வாங்கிக்கொள்வான். எந்த வீட்டில் என்ன கிடைக்கும் என்று அவனுக்கு அத்துபடி. துப்புவெட்டப் போகும் சமயம் வீடுகளில் விதவிதமான தாளிப்பு மணத்தைத் தெரிந்துவைத்திருப்பான். ஆசை வந்துவிட்டால் இன்ன வீட்டுச் சாப்பாடு வேணுமென்று சின்னப் பிள்ளைபோல் கருத்தையனிடம் சிணுங்குவான். ஆசைப்படி நடக்கும். சில சமயம் சோற்று வேட்டைக்காகவே போவார்கள். அடேயப்பா பானை சட்டிக்கு முன்னால் சம்மணம் போட்டு அவன் சாப்பிடும் அழகைப் பார்க்கணும். சப்புக்கொட்டிக்கொண்டு பெருமையடிப்பான்.

''அம்மாசி இருட்டு சோத்துப் பானையை உருட்டு. மேகலக்குடிச் சாப்பா டாக்கும். பானையத் தொடக்கூட முடியுமா.''

கருத்தையன் கிண்டலடிப்பான்.

''பானைக்குள்ள மண்டைய வுட்டுக்கிட்டு ஆச தீர நக்கு. எண்ணைக்கு மனுசர மாட்டிவுடப்போறயோ. அண்ணைக்குக் கொதவளையப் புடிச்சுக் கொன்னே போட்ருவென்.''

திடீரென்று அவன் மனசு கம்மங்கஞ்சிக்கு நோங்கும். போகிற போக்கில் பருத்திக் காடுகளில் விலகுவான். ஆளைக் காணுமே என்று தேடினால் தலைச் சும்மாட்டில் கஞ்சிக் கலயத்துடன் வந்துகொண்டிருப்பான். கம்மங்கஞ்சிக் கரைசல் பத்து நாளைக்கு நாக்கில் தங்கியிருக்கும்.

ஒவ்வொரு சோத்துக்கும் வெஞ்சன ருசிப் பொருத்தம் கண்டுபிடித்து வைத் திருப்பான். அந்தி வேளையில் மல்லாந்தபடி ஆகாயத்தில் மிதக்கும் கஞ்சிப் பானைகளுடன் அன்னியோன்னியமாகப் பேச்சுப்பழக்கம் போடுவான். கண்ணில் குறும்பு துள்ளும். அதுகளுக்கேற்ற வெஞ்சனம் கைவசம் இருக்கும் தெம்பில் பாட்டு தானாக வரும்.

''கேப்பக் களியே நீ
கிருத்திருவம் பண்ணாத
கெண்டமீனத் துள்ளவுட்டுக்
கேட்ருவென் நாலுருண்ட.''

களி உருண்டை வயிற்றுக்குள் கனமாக இறங்கிய தெகரத்தில் புரண்டு படுப்பான். கொஞ்ச நேரத்தில் பசித்துவிடும்.

''கம்மஞ் சோறே நீ
கள்ளத்தனம் பண்ணாத
கருவாட்டுக் கொழம்புவச்சுக்
கடத்திருவென் வகுத்துக்குள்ள.

சோளச் சோறே நீ
தோரணையாச் சிரிக்காத
வாளக் கருவாட்ட
வதக்கிஒன்னத் தீட்டீருவென்.''

வெள்ளைச் சோற்று நினைப்பு வரும்.

''பச்சநெல்லுச் சோறே நீ
பாசாங்கு பண்ணாத
பருப்புக் கொழம்புவச்சுப்
பாத்துருவென் மூக்குமுட்ட.

புழுங்கரிச் சோறே நீ
பூப்போல சிரிக்காத
எளங்கோழிக் கொழம்பு வச்சு
எரையெடுப்பென் கொதவளைக்கு.

குருதவாலிச் சோறே நீ
குறுகுறுன்னு பாக்காத
கூட்டுக் கத்திரிக்கா
கொழச்சுவச்சு அடஞ்சிருவென்.''

ஓடி ஒளிந்துகொள்ளும் வேறு பானைகளைத் தேடிக் கண்டுபிடித்து வம்புக் கிழுப்பான்.

''காடக்கண்ணிச் சோறே நீ
கண்ணக்கண்ண உருட்டாத
வெண்டக் கொழம்புவச்சு
மேஞ்சிருவென் வகுறுமுட்ட.

தெனையரிசிச் சோறே நீ
தெந்தனந்தான் பேசாத
கதுவாலி சாறுவச்சுப்
பதமாகச் சாப்பிடுவென்.

சாமச் சோறே நீ
தந்தரந்தான் பண்ணாத
மொளகு ரசம்ஊத்திக்
கழுகுபோல விழுங்கீருவென்.

வரகஞ் சோறே நீ
வக்கணையாப் பாக்காத
புளியங் கொழம்புவச்சுப்
புடிச்சிருவென் மூணுசட்டி.''

எல்லாரும் மூச்சுக்காட்டாமல் ஒளிந்து கேட்டுக்கொண்டிருப்பார்கள். கேட்கக்கேட்க எச்சூறும். எப்படியும் இவன் புண்ணியத்தில் எல்லாம் கிடைக்கப் போகிற நினைப்பில் ஆசையை அடக்கிக்கொள்வார்கள்.

ஒருநாள் துப்பன் கருத்தையனிடம் விசாரப்பட்டான்.

''கருத்தப்பாண்டி ஒனக்குத் தெரியாறதில்ல. எவ்வளவோ கண்டமான வேலைகளச் செஞ்சுமுடிக்கொம்.''

என்னமோ காரியத்துக்கு அடிப்போடுகிறான் என்று கருத்தையனுக்குத் தெரியும்.

''ஆரு இல்லன்னது. உசிரக் கையில ஏந்திக்கிட்டுச் செய்றொம்.''

''எல்லாத்தவும்விடக் கஸ்டமான காரியம் ஒண்ணு உண்டு.''

''புதுசா என்னது.''

''பழசுதான். தவசத்த இடிச்சு ஒலையில போட்டுக் கஞ்சி காச்சிக் கவுத் துறதுருக்கே அதப் போல தொறட்டுப்புடிச்ச வேல எதுமில்ல.''

''அதனால பட்னி கெடக்கலாமிங்கயா நெதமும் சோத்துப் பானையக் கள வாங்கலாமிங்கயா.''

''சித்தப்பன் அப்படிச் சொல்லுவனா. தானியத்துக்குப் பதிலா நெல்லரிசி இருந்ததுன்னு வச்சுக்கோ. ஒரு கொதியில பொங்கி முடிச்சிறலாம்.''

''அய்யாவுக்கு நெல்லுப் பருக்க யாவுகம் வந்துருச்சுப்பா. நாளைக்கே அரிசி கொண்டுவந்து போட்ருங்க. ஆச தீரத் தின்னுட்டுக் கெடக்கட்டும்.''

கத்தியும் மம்பட்டியும் அலைந்து திரிந்து ஒரு பொதி அரிசி கொண்டுவந்து விட்டார்கள். மட்ட நெல்லரிசியின் மணத்தில் துப்பன் சொக்கிப்போனான். எல்லாருக்கும் நிதமும் நெல்லுச் சோறு கிடைத்தது.

துப்பன் கதை இப்படியென்றால் கைக்காடைக்கு வேறு ருசி. கொழுத்த ஆடு கண்ணில் தட்டுப்படக் கூடாது. குறுக்கைப் பிடித்துப் பார்த்துச் சப்புக்கொட்டு வான். வாய்க்குப் பிடித்ததை அருவமில்லாமல் ஒதுக்கிக்கொண்டு போய்விடுவான்.

அதை வசப்படுத்தும் விதமே தனி. முதலில் கிட்டப் போய் ''ட்ரிக்கி ட்ரிக்கி'' என்று நாக்கைச் சுழட்டிச் சன்னை கொடுப்பான். அது அண்ணாந்து பார்க்கும். அவ்வளவு போதும். அன்னியோன்னியமாக ''அய்யா அய்யா'' என்று சன்னையி லேயே பேசிக் கிறங்கவைப்பான். அவன் குண்டிக்குப் பின்னால் பாலாட்டங் குழை ஆமணக்கு இலை அகத்திக் கொப்பு எதாச்சும் வாலாகத் தொங்கும். குண்டியை அசைத்து இரையை லேசாக ஆட்டுவான். ஆசை காட்டக்காட்ட ஆடு ஆவலுடன் கிட்ட வரும்.

''அய்யா... அய்யா...''

அவன் நடப்பான். அது பின்னால் நடக்கும். விரைவாக எட்டு வைப்பான். அது ஓடிவரும். அவ்வளவுதான். காரியம் முடிந்தது.

ஆட்டை அறுத்துச் சரக்காக்கி வேண்டிய மட்டும் வறட்டித் தின்பார்கள். கள்ளும் சாராயமும் உள்ளே ஏறஏறக் கறி காலியாகும். மிச்சக் கறியை கைக்காடை கூறு போட்டு வாழையிலையிலோ ஓலைப்பட்டையிலோ சுருட்டிக் கட்டுவான். மறுநாள் விடியக்காலம் பக்கத்து ஊர் வாசல்களில் கறி உட்கார்ந்திருக்கும். முற்றம் தெளிக்க வரும் பெண்களுக்குச் சந்தோசம் தாங்காது.

''வீடு தேடி வந்து கறி குடுத்துட்டுப் போறானே. புண்ணியவாளன் நல்லா ருக்கணும்.''

கைக்காடைக்குக் கோழிக் கறி நினைப்பு வந்துவிட்டால் அதுக்கொரு வழி வைத்திருப்பான். வெங்காயத்தை உரித்து குறுக்கு வசத்தில் முள் குத்தி நீளமான நூலில் கட்டி பின்புறம் அரணாக்கயிற்றில் முடிந்துகொள்வான். வெங்காயத்தைக் கோழிக்கு முன்னால் விட்டெறிந்து ஆசைகாட்டுவான். அவனுடைய உள்ளண் ணத்தில் சின்ன விக்கல் முனக்கம் கேட்கும். அது கோழிச் சன்னை. கோழி ஓடி வந்து வெங்காயத்தை அவக்கென்று விழுங்கும். வெங்காயம் கொக்கரைக்குப் போனதும் நூலைச் சுண்டியிழுப்பான். முள் தொண்டையில் வசமாக மாட்டிக்கொள்ளும். அவன் பாட்டுக்கு நடப்பான். கோழி கொதக்கொதக்கென்று குழறிக்கொண்டு பின்னாலேயே வரும். ஊரைத் தாண்டியதும் இழுத்துப் பிடித்து ஈரத் துணியால் மூடி கக்கத்தில் இடுக்கிக்கொண்டு போய்விடுவான்.

கோழி எலும்பைக் கடித்துக்கொண்டே துப்பன் சொல்வான்.

''மீனத்தான் தூண்டிபோட்டுப் புடிப்பாங்க. வக்காளி இவன் கோழிக்கில்ல தூண்டி கண்டுபுடிச்சிருக்கான்.''

கத்திக்கும் மம்பட்டிக்கும் ஆடு கோழி எம்மாத்திரம். கனமாகப் பன்றி வேணும். அதுக்காக ரெண்டு பேரும் ராவேட்டைக்குக் கிளம்புவார்கள். குளுவன் கூடு மந்தைக் கிடங்கு ஊர்க் கிணற்றடி என்று பன்றி உறுமலை அருவம் கேட்டுக் கொண்டே மெனக்கிட்டு அலையணும். சொகமாகப் படுத்துக்கிடக்கும் கூட்டத் தில் ஒரு உருப்படியை அமைப்பது பெரும்பாடு. எடுத்த எடுப்பிலேயே வாயைப் பொத்திச் சத்தம் போட விடாமல் அமுக்கணும். கழுத்தில் அழுத்தி மிதித்து கால் களையும் பிடித்துக்கொண்டால் துள்ள முடியாது. பிறகு வாயையும் காலையும்

கயிறு வைத்துக் கட்டணும். காலுக்குள் கம்பை விட்டுத் தொங்கப்போட்டு மாங்கு மாங்கென்று தோள் வலிக்கச் சுமந்து வந்து சேர்ப்பார்கள்.

பன்றி கட்டுக்கு மாட்டவில்லையென்றால் சங்கடம். அமயம் போட்டு ஊரைக் கூட்டிவிடும். ரெண்டு பேரும் தப்பிக்கிற சாக்கில் ஒரு பன்றியை மட்டும் ஒதுக்கி ஓட விட்டு ரெம்பத் தூரம் விரட்டுவார்கள். மம்பட்டி ஒரு வெறியில் வேல்கம்பை ஏந்திப் பிடித்துக் குறிவைப்பான். கொஞ்ச நேரத்தில் பன்றியின் விலாவில் வேல்கத்தி பாய்ந்து தடுமாறிச் சாய்ந்துவிடும். குத்துவாயில் மண்ணள்ளிப்போட்டு ரத்தத்தை அமுக்கிக் கோளாறாகச் சுமக்கணும்.

பன்றியை வாட்டி அறுத்துப் பக்குவமாகக் குழம்பு வைத்துச் சோற்றைக் குழைத்து வயிற்றில் கிட்டிக்கும்வரை ஓய மாட்டார்கள். மிச்சக் குழம்பைச் சுண்ட வைத்து மூணு நாளுக்குக்கூட அசைபோடுவார்கள். கறியில் ஊறும் எண்ணெயைக் கலயத்தில் இறுத்துத் துணியில் வண்டுகட்டிப் பத்திரமாக வைத்துக் கொள்வார்கள். புண்ணுக்கு நல்ல மருந்து. நொண்டியன் சொல்வான்.

''இந்தப் பெயகளுக்குக் கழுத விட்டன்னாலும் கை நெறையா வேணும். அப்படி உசிரக் குடுத்துச் சொமந்துட்டு வந்து திங்கணுமாக்கும். எட வழியில மாட்டிக்கிட்டா பண்ணியவிடக் கேவலமால்ல அடிவாங்கணும்.''

கருத்தையன் இதையெல்லாம் கண்டுகொள்வதில்லை. அவரவர் ஆசை நிறைவேறினால் சரி. அவனுக்கு ஒரு பயம். கைக்காடையை மட்டும் அப்பப்பக் கூப்பிட்டு எச்சரிப்பான்.

''கறிக்கு ஆசப்பட்டு மாட்டக்கீட்ட இழுத்துட்டு வந்துறாத. மப்பக் கழட்டீருவென்.''

கள் சாராயம் குடித்தால் அருவமில்லாமல் மொடக்கிப் படுக்கணும். கண்ணுமூக்குத் தெரியாமல் போட்டுவிட்டுச் சளம்பக் கூடாது. கடையில் சகடாலடித்துச் சிலுவையிழுக்கக் கூடாது. துப்பனுக்கு மப்பு ஏறிவிட்டால் வறகோட்டுப் பொரி மாதிரி நாக்கு வாய்க்குள் கிடக்காது. யாரையும் குறிச்சகுத்தியாகப் பேசுவான். கை நீளும். அணைத்துப் பேசிக் கூட்டிவந்தால் ''நீ முன்னால போ. நான் பின்னால வாறென்'' என்று சொல்லி தள்ளாடிக் கால்வரிசை வைத்துக் கைவீசிப் பாடுவான்.

''கலயம்மேல கலயம்வச்சு
கஞ்சிகொண்டு போறபுள்ள
கெழடுஒண்ணு ஏங்கிஇங்க
கெறங்குறது தெரியலயா
செத்தநில்லு பொண்ணு - நம்ம
சேந்துபோவொம் கண்ணு.''

கருத்தையனின் அரட்டு கேட்கும்.

''ரெம்ப ஏக்கமாருக்குதோ. வீட்டுக்கு வா. சினிஞ்ஞைய வெளக்கமாத் துட்டுக் கெறங்கக்கெறங்க அடிக்கச் சொல்றென்.''

''அய்யா கருத்தப்பாண்டி சித்தப்பன் கஞ்சிக்கு ஏங்குறனாக்கும். கொஞ்ச நேரத்துல எந்தக் கொடலு எந்தக் கொடலத் திங்கப்போகுதோ.''

''அப்ப வாயப் பொத்தீட்டு வா. இல்ல வசமா நொங்கீருவென்.''

இருப்பிடம் வந்து சேரும்வரை நாய் முனகக்கந்தான் கேட்கும்.

கருத்தையன் அடிக்கடி குடிப்பதில்லை. அலுப்பாக இருந்தால் மூக்குமுட்டச் சரக்கை ஏற்றிக்கொண்டு சத்தம் காட்டாமல் கட்டையைக் கிடத்திவிடுவான். துப்பன் கிட்ட இருக்கணும். இல்லையென்றால் உறக்கம் வராது. அதும் கொஞ்ச நேரந்தான். கண்டகண்ட இடத்தில் குடிக்க மாட்டான். நம்பிக்கையான ஆள் கொடுக்கணும்.

அஞ்சாறு மாசம் கழித்துத்தான் தீவட்டிக்கொள்ளைக்குத் தயாரானார்கள். கருத்தையன் சில விசயங்களில் பிடிவாதமாக இருந்தான். எல்லாரிடமும் தெளிவாகச் சொல்லிவிட்டான்.

''நமக்கு என்ன வந்தாலும் சரி ஆரவும் கொலசெஞ்சிறப்புடாது. வெட்டிக் குத்திக் காயப்படுத்தீறப்புடாது.''

மற்றவர்களுக்குத் தெரியணும் என்கிற மாதிரி துப்பன் சந்தேகம் கேட்டான்.

''எதிராளி அருவா கம்போட வந்தா என்ன செய்றது கருத்தப்பாண்டி.''

''அடிச்சுப் புடுங்கணும். இல்ல தப்பி ஓடீறணும்.''

''ரெண்டு பக்கமும் உசிரு சிந்தப்புடாது. அப்படித்தான.''

''அப்படித்தான்.''

''சரி ஓம் பேச்சுப்படியே வச்சுக்கிருவொம். முட்டுவெட்ல நம்ம மாட்டிக் கிட்டம்னா...''

''கொள்ளைக்கு நம்ம லாயக்கில்லன்னு அர்த்தம். அப்படிப்பட்ட உசிரு இருந்து எதுக்கு. பூமிக்குப் பாரமா.''

''அவ்வளவுக்கு வுட்ருவமா என்ன.''

''ஒருத்தன் எச்செளந்தவன்னு தெரிஞ்சும் அவங்கிட்டக் கொள்ளையடிக்கப் புடாது.''

''தெரியாம நடந்துட்டா....''

''பின்னால தெரியாமயா போயிரும்.''

''தெரிஞ்சா....''

''அவனுக்குப் பொருளுக்குப் பொருளு திருப்பிக் குடுத்துறணும். இல்ல பணம் குடுத்துறணும்.''

''எப்படியோ அவன் நட்டப்படப்புடாதுன்னு சொல்ற.''

''கொள்ளையடிச்ச பொருளக் கூறுபோடணுமிங்கிற நெனப்பே வரப்புடாது. இதுவரைக்கும் எப்படிப் பொதுவில வச்சுச் செலவழிக்கமோ அதப் போலத்தான் இதுக்கும்.''

''ரெம்ப மிஞ்சீட்டா...''

''இல்லாறவனுக்குக் குடுப்பொம்.''

''கருத்தப்பாண்டி நாங்க எல்லாருமே ஈரனேருச் சம்சாரிகளா என்ன. இல் லாறவுகதான். குடும்பத்த வுட்டுட்டு நடுக்காட்ல வந்து கெடக்கொம். அதவும் கொஞ்சம் யாவுகத்துல வச்சுக்கோ.''

''எல்லாம் ரோசனபண்ணித்தான வந்தொம்.''

''ஒரு வைராக்கியந்தான்.''

''அப்ப அதக் கொண்டு செலுத்தணும்.''

''கொண்டு செலுத்தீட்டுத்தான் வாறொம். இருந்தாலும் ஒரு ஆத்தரம் அவசரத்துக்கு....''

''அப்பப் பாத்துக்கிறலாம்.''

''அது போதும்.''

கோடாலிக்கும் ஆந்தைக்கும் இதெல்லாம் வள்ளிசாகப் பிடிக்கவில்லை. துப்பனிடம் புலம்பித்தீர்த்தார்கள்.

''இதென்ன வைத்தியன் பத்தியம் போட்ட மாதிரி. நமக்கு ஒத்துவராது சாமி.''

''இந்தா பாருங்கப்பா உடும்புக்கு இரு நாக்கு. ஒனக்கு ஒரு நாக்குத்தான். அண்ணைக்குச் சொன்னதெல்லாம் கிளுகிளுன்னு கேட்டுக்கிட்டுத்தான வந்த. இப்ப மொனங்குனா என்ன அர்த்தம். நமக்குள்ள கட்டுப்பாடா இருக்கணும்னு சொல்றான். அது தப்பா. மொரண்டு புடிக்காம இருங்க. அவன் நம்மள வெறுங் கையோட வுட்ற மாட்டான்.''

''அதவுந்தான் பாப்பமே.''

தீவட்டிக்கொள்ளையில் முழுமூச்சாக இறங்கினார்கள். சிறுசிறு ஊராக அடித்து முடித்து வாழவந்தாபுரத்தையும் நடுவப்பட்டியையும் கைவைத்து விட்டார்கள். வேலுக் கோனாரும் சித்தா நாய்க்கரும் என்ன வழிக்கு வரு கிறார்கள் என்று பார்த்துவிட்டு சங்கிலிமடத்துக்கும் போகலாம் என்பது கருத் தையன் திட்டம். பொன்னையாத் தேவர் மேலுள்ள காட்டத்தால் கோடாலியும் ஆந்தையும் நச்சரித்தும் அவன் மசியவில்லை.

வேலுக் கோனார் வெளிப்படையாகவே சொல்லிவிட்டார்.

''இவ்வளவுக்காயிட்டப் பெறகு அவங்கூட நேருக்குநேரா மோதுறது பைத் தியாரத்தனம். ஒரு தடவ பட்டதே போதும். அவன் வழியில குறுக்கிடாம வெலகிக்கிற வேண்டியதுதான். இண்ணைக்குத்தனத்துல அவனும் நம்மளப் போல சண்டீருதான. எல்லாப் பெயலும் அவன் சொல்லுக்குத்தான் கட்டுப் படுறான்.''

சித்தா நாய்க்கர் ஒரு நியாயம் சொன்னார்

''நம்ம எத்தன தேரம் அவன் ஊருல கொள்ளையடிச்சிருக்கொம். அவன் நம்மூருல ஒரு தடவ அடிச்சா அடிச்சிட்டுப் போகட்டுமே. வேற வழியிலதான் அவன வச்சுக்கிறணும்.''

கருத்தையன் பொன்னையாத் தேவரின் வாயலுக்கத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

## 5. மதியக் குளிப்பு

**வீ**ரம்மாளுக்கு மதியக் குளிப்பில் பிரியம் ரெம்ப. சமைந்த பிறகும் அந்தக் கிறுக்கு போகவில்லை. குமருகளுடன் கிணற்றில் கும்மரிச்சம்போடுவாள். கொஞ்ச நேரம் வெளியே வந்து காக்கா வெயில் காயணும். சுள்ளாப்பு உறைத்தால் மறு படியும் நீருக்குள் முங்கணும். கண் கரகரக்கும்வரை கால் வீடு திரும்பாது.

ஊரைச் சுற்றியுள்ள கிணறுகள் அத்தனையும் அளந்தாயிற்று. அப்பப்ப இடம் மாற்றிக்கொள்வார்கள். எல்லாவற்றிலும் பூசரமரக் கிணறுதான் பிடித்தமானது. நினைத்த இடத்தில் பிடித்துக்கொண்டு தவிப்பாறலாம். எந்தப் பக்கமிருந்தும் குதிக்கலாம். மிதிகல் அதுக்குத் தோதானது. அவர்கள் குளிக்கும்போது பயல்கள் கிட்ட வரக் கூடாது. வாலைச் சுருட்டிக்கொண்டு வேறு கிணற்றுக்குப் போய் விடணும். எவனாவது கேலி கிண்டல் பேசியது தெரியவந்தால் கருப்பி வசவு உரித்துவிடுவாள்.

''கெடக்கிறது குட்டிச் சொவரு கெனாக் காங்கிறது மச்சு வீடாம். எவம்லே அது இங்க வந்து சேட்டபண்றது. அதெல்லாம் அங்கிட்டுக் கெட்டிவச்சுக்கோ. எம் புள்ள காலுத் தூசிக்குக் காணுமா நீ. கூலிக்கறுத்தாலும் குறுணிக்கறுக்கலாம். வீணுக்கறுத்து வீதியில நிக்கிற வெங்கம் பெய. பேதியில போக. வேலையில்லன்னா நாலு கழுதைய மேய்க்க வேண்டியதுதான. ஊருச் சோறாச்சும் கெடைக்கும். ஒதட்ட நறுக்கி ஊறுகா போட்ருவென்.''

ஒரு தடவை வீரம்மா கிணற்றுச் சுவரில் கல் திட்டைப் பிடித்துக்கொண்டு மூச்சு வாங்கும்போது பக்கத்துப் பொந்துக்குள் கிடந்த பாம்பு முழித்துப்பார்த் திருக்கிறது. அவள் ஈரத்துணியுடன் அலறியடித்து வீட்டுக்கு ஓடி வந்து அழுதாள். ஆண்டிக்குப் பொறுக்கவில்லை. தரத்துக் கம்பை ராக்கனிடம் கொடுத் தனுப்பினான்.

''நம்ம புள்ள குளிக்கிற எடத்துல பாம்புக்கென்ன வேல. அத என்னன்னு பாத்துட்டு வாடா.''

ராக்கன் கிணற்றுக்குள் நீஞ்சு போய் பாம்பைக் குத்தியெடுத்துக் கொன்று விட்டான். வாட்டசாட்டமான சாரைப்பாம்பு. வீரம்மா அஞ்ஞையிடம் பேசி மாளவில்லை.

''அண்ணன் பாம்பக் கொல்லலன்னா புள்ளீகள விழுங்கீரும் என்னஞ்ஞ.''

கருப்பி பீத்தினாள்.

''அண்ணன் இருக்கயில ஆரும் அட்டஞ்சுழிக்க முடியுமா.''

ஆண்டி கடக்கென்று சிரிப்பை விழுங்கிக்கொண்டான்.

''மகன் வீரத்த இவதான் மெச்சிக்கிறணும்.''

இன்னொரு நாள் நல்ல மதியம். வீரம்மா நேரமிருக்கவே கஞ்சி குடித்து விட்டு கண்ணுக்குட்டியுடன் விளையாடிக்கொண்டிருந்தாள். வழக்கம்போல் குமருகள் குளிக்கக் கூப்பிட வந்தார்கள். அவள் விளையாட்டுப் பிரியத்தில் சுணங்கினாள்.

''நீங்க போங்க. பின்னாலயே வாறென்.''

எந்தக் கிணறு என்று அவர்களும் சொல்லவில்லை. அவளும் கேட்கவில்லை. கண்ணுக்குட்டியை மடியில் போட்டுச் சீராட்டி முடித்துக் கிளம்ப நேரமாகி விட்டது. குமருகள் முந்திவிட்டார்கள்.

பூசரமரக் கிணற்றில் இறைவையாடவில்லை. அப்படியென்றால் தண்ணீர் மேலே கிடக்கும். அங்கேதான் போயிருக்கணும். நேரே நடையை விட்டாள். கிணற்றை நெருங்கநெருங்கச் சந்தேகமாக இருந்தது. பூசரங்கொப்பில் துணிகள் தொங்கவில்லை. வெளியே ஆள் நடமாட்டத்தையும் காணும். ஒருவேளை கூடிப்

பேசி உள்ளேயே சத்தம் காட்டாமல் இருக்கிறார்களோ. அதையுந்தான் பார்த்து விடுவோமே.

கமலைக் குழியில் காலெடுத்து வைத்துவிட்டாள். பிள்ளைகள் குளிக்கிற அருவமே இல்லை. அவர்களை வைதுகொண்டே திரும்பத் தயாரானாள். அப்போது கிணற்றுக்குள்ளிருந்து சீங்குழல் ஊதுகிற மாதிரி சத்தம் வந்தது. நின்று காதுகொடுத்தாள். ஏதோ சொகமான பாட்டு. கேட்கக்கேட்க மலங்காடு செடிங் காடெல்லாம் ஓடித் திரியும் கிறக்கம். இப்போது பயம் வள்ளிசாகப் போய்விட்டது. கிட்டப்போய்க் கேட்கணும்போல் ஆசை குளிராட்டியது.

மெல்ல நடந்து மிதிகல்லுக்கு வந்தாள். சீங்குழல் கிறக்கிக்கொண்டேயிருந்தது. என்னதான் நடக்கிறதென்று பார்த்தாகணும். ஊசிக்கால் மறைவில் ஒளிந்து கொண்டு சன்னமாக எட்டிப் பார்த்தாள். ஒரு ஆள் படியில் உட்கார்ந்து சீட்டி யடித்தபடி குளித்துக்கொண்டிருந்தது. கால் ரெண்டும் நீருக்குள் தாளம் போட அதுக்குத் தோதாகக் கை உடம்பைத் தேய்த்தது. கருப்புமில்லாமல் சிவப்பு மில்லாமல் இடித்துச் சேர்த்த பச்சரிசி மாவுபோல் வழுவழுத்த மேனி வெயிலுக்கு மினுங்கியது. தோள்வழியே மார்பில் தொங்கும் முடிக் கொத்து ஒரு பக்கம் முகத்தை மறைத்திருந்தது. நீருக்குள் ஆடும் கால் பெரிய மீனாக மேலே வந்துவந்து முங்கியது. லேசாகக் குனிந்து ஒருச்சாய்த்து முகத்தை அடையாளம் பார்த்தாள். அய்யோ கருத்தையன். அவனேதான்.

மனசுக்குள் சலோரென்று பயம் தெளித்தது. கிணற்றுக்குள் விழுந்துவிடாமல் ஊசிக்காலைப் பிடித்துக்கொண்டாள். அப்போதும் கருத்தையன்மேல் வைத்த கண்ணை வாங்கவில்லை.

திடூரென்று சீங்குழல் நின்று கிணற்றுக்குள் நீர் அலம்பியது. கருத்தையன் படியிலிருந்து நழுவிக் கொப்புளித்துக்கொண்டே புரண்டுபுரண்டு நீய ஆரம் பித்தான். கடைசியாக அவனது படர்ந்த முதுகையும் மார்பையும் ஒருமுறை பார்த்துவிட்டு ஓட்டம்பிடித்தாள். கிணற்றில் பிடித்த ஓட்டம் வீடு வந்துதான் நின்றது. பயத்திலும் சின்ன நிம்மதி. நல்ல வேளை அவன் பார்க்கவில்லை.

**வீ**ரம்மா அஞ்சாறு நாள் குளிக்கப் போகவில்லை. அஞ்ஞை இழுத்துப் பிடித்து ஊற்றிவிட்டாள். குமருகள் வேறு மாதிரி நினைத்துக்கொண்டார்கள்.

''அண்ணைக்கு நம்ம காத்திருந்து கூட்டூட்டுப் போகல பாரு. அந்தக் கோவந் தான் தீரல போலருக்கு.''

''கோவம் ஆறட்டும்.''

''வேணாண்டி. அவ இல்லாம என்னமோ மாதிரியிருக்கு.''

''அவகிட்டப் பண்டம் வாங்கித் தின்ன வாயி நமநமங்குதுன்னு சொல்லு.''

''ஒம் பெழப்புத் தெரியாதாக்கும்.''

''எல்லாரு பெழப்பும் தெரியும். வாய மூடிக்கிட்டு வாங்க. அவளப் போயிக் கூப்புட்டுப்பாப்பொம்.''

வீரம்மாளைத் தேடிப் போனார்கள்.

''ஏண்டி சீந்தாற கழுத. செல்லச் சிறுக்கி. எத்தன நாளைக்குத்தான் நாறப்

அவள் பதில் கதை போட்டாள்.

"போடி போக்கத்தவளே. ஒன் நாத்தம் சகிக்காமத்தான ஆரும் திரும்பிக் கூடப் பாக்க மாட்டாங்காக. இரு வந்து வச்சுக்கிறென்."

"மொதல்ல வெளிய வாடி லொங்காறவளே."

ஒருத்தி கருப்பியிடம் குறைபட்டுக்கொண்டாள்.

"எத்தே எல்லாம் நீ குடுக்கிற எளக்காராமாக்கும். அவள வெளக்கமாத் துட்டு அடிச்சுப் பத்து."

"அதானம்மா. திடுதும்னு போக மாட்டன்னு சண்டித்தனம் பண்றாளே. பச்சப் புள்ளையப்போல நம்மதான் குளுப்பாட்டி வுட வேண்டியிருக்கு. அப்பக் கூட அடங்குறாளா. இவளோட பெரிய தும்பமாப் போச்சு."

கருப்பி புலம்பித் தீர்த்தாள். அப்படியும் வீரம்மா கிளம்புவதாக இல்லை. குமருகள் ஆளாளுக்கு முணுமுணுத்துக்கொண்டு போனார்கள்.

"இவளுக்கு என்னதான் ஆச்சுடி."

"நம்மமேல வருத்தமில்ல."

"பெறகென்ன கேடு."

"வந்தால்ல வாயக் கிண்டித் தெரிஞ்சுக்கிறலாம்."

கருப்பி மகளின் நடவடிக்கைகளைப் பார்த்து விசாரப்பட்டாள்.

"இந்தப் புள்ள ஏன் இப்படியிருக்கு. என்னத்த வச்சொம் என்னத்த எடுத்தம்னு சொகாயமில்லாமத் திரியிறாளே. சொதுக்சொதுக்னு மொடக்கிப் படுத்துக்கிருது. நேரத்துக்குக் கஞ்சி குடிக்கிறதில்ல."

அவளிடம் கேட்டாள்.

"ஏந்தாயி ஒருமாதிரியாருக்க. எங்கயும் பதறீட்டயா."

அவள் வீராப்பாகச் சொன்னாள்.

"நான் ஆரக் கண்டு பெயப்புடணும்."

"சும்மா சொல்லும்மா. அப்பன திருநீறு மந்திரிச்சிட்டு வரச் சொல்றென்."

"எனக்கு ஒண்ணும் வேணாம்."

அஞ்ஞையின் நச்சரிப்புத் தாங்காமல் அடுத்த நாளே குளிக்கக் கிளம்பி விட்டாள். பிள்ளைகளுடன் பீத்திக்கொள்ள நிறையவே இருந்தது. முக்கியமாக அவளைக் கிறங்கடித்த சீட்டியைப் பற்றிச் சொல்லணும். போகும்போதே ஒருத்தியின் காதைக் கடித்தாள்.

"பூசரமரக் கெணத்துக்கு வேணாம். வேற எங்கயாச்சும் போவொம்."

"ஏன் ஒங்க கெணறுதான."

"வேணாம்னா வேணாம்."

"என்னடி இது புதுசாருக்கு. காரணத்தச் சொல்லுடி கள்ளச் சிறுக்கி... அடியே கொமரிகளா கேட்டீகளா சங்கதிய. இந்தப் பெரிய மனுசிக்கு பூசரமரக் கெணறு புளிச்சுப்போச்சாம்."

இன்னொருத்தி வினயமாகக் கேட்டாள்

"என்னது என்னது. புளிப்பு புடிச்சுப்போச்சா."

"ஆரு கண்டது. இருந்தாலும் இருக்கும்."

"நமக்குத் தெரியாமக் கலியாணம் எப்படித்தான் நடந்துச்சுடி."

வீரம்மா விடவில்லை.

''பேரன் பேத்தி எடுத்ததுகெல்லாம் பேசலாமா வாயி.''

அப்போது ஒருத்தி பூச்சாண்டி காட்டிக்கொண்டே ஓடினாள்.

''கருத்தையன் வாறான். கருத்தையன் வாறான்.''

சிலர் அவளை விரட்டினார்கள். ஓடியடங்கியதும் வீரம்மா தெம்பாகச் சொன்னாள்.

''நாந்தான் அவனப் பாத்துட்டனே.''

எல்லாரும் அவளைச் சூழ்ந்துகொண்டு துளைத்தெடுத்தார்கள்.

''ஏக்கி நெசந்தானா.''

''அடி சக்களத்தி பாத்துட்டயா.''

''பாத்துப் பேசுனயா.''

''என்ன பேசிக்கிட்டீக.''

அவள் மாராயம் பண்ணி நடந்த கதையைச் சொல்லி முடித்துப் பெருமூச்சு விட்டாள்.

''அட இவ கெடுத்தாளே. ரெண்டு வார்த்த பேசீருக்க வேணாமா.''

''எங்க கெணத்துல குளிக்கிறது ஆருன்னு ஒரு அரட்டுப் போட்ருக்கணும்.''

''அவன் பேரக் கேட்டாலே சளசளன்னு மோளுற கழுத நீ அரட்டுப் போடச் சொல்றயாக்கும்.''

''நீ பெரிய தைரியசாலிதான்.''

கொஞ்ச தூரம் அமைதியாக நடந்தார்கள். வீரம்மா வாய் திறந்தாள்.

''அதுலருந்து எந்த ஆம்பள சீட்டியடிச்சாலும் பழைய நெனப்புத்தான் வருது. எப்ப அந்தச் சீட்டியக் கேப்பம்னுருக்கு.''

''அதுல மசங்கித்தான் இம்புட்டு நாளா படுத்துக்கெடந்தயாக்கும். அவங் கிட்டப் பேசாமயே இப்படின்னா பேச்சுப்பழக்கம் போட்ருந்தா என்ன கூத்துக் கெட்டியிருப்பயோ.''

பிறகெல்லாம் வீரம்மாளை அங்கிட்டும் இங்கிட்டும் தள்ளி ''இந்தா கருத்தையன் வந்துட்டான்.'' என்று கிண்டல்பண்ண ஆரம்பித்தார்கள். அவளுக்கு அதில் வெட்கத்துடன் ஒரு சொகமுமிருந்தது. விளையாட்டுக்கிடையில் ஒருத்தி அவளைத் தனியே ஒதுக்கிக்கொண்டுபோய் ஓதினாள்.

''வீட்ல இதப்பத்திச் சொன்னயா.''

''இல்ல.''

''வெளையாட்டுப்போல ஒளறித்தொலச்சிறாத.''

''சொல்லித்தான் ஆகணும்.''

''நல்லா ரோசன பண்ணிக்கோ தாயி. வீட்ல பெரிய நெனப்புலருக்காக. நீ இப்படி நெனைக்க. பெரிய தும்பமாப் போயிரும்.''

''அஞ்ஞையிட்டச் சொல்லீறப்போறென்.''

''அவ பாவம் என்ன செய்வா.''

அதுக்குள் மற்றவர்கள் வந்து மொய்த்துவிட்டார்கள்.

''எங்களுக்குத் தெரியாம என்னடி திட்டம் போடுறீக.''

"அதக் கேக்கயா. சங்குபட்டிக் கெழடன் ஒன்னயப் பொண்ணுகேட்டு வந்தப்ப நீ சிங்குசிங்குன்னு சாமியாடுன கதையப் பேசீட்ருந்தொம். போதுமா."

ஒருத்தி பாட்டுப் படிக்க ஆரம்பித்தாள்.

"அய்யோ கூத்து அதக்கொஞ்சம் பீத்து."

எல்லாரும் பின்பாட்டுப் படித்துக்கொண்டே வீரம்மாளைச் சுற்றி ஆடினார்கள். பூசரமரக் கிணறுவரை ஆட்டம்பாட்டந்தான். குளிக்கும்போது கும்மாளத்துக்குச் சொல்லணுமா.வீரம்மா மட்டும் படியில் உட்கார்ந்து சாவகாசமாகக் காலாட்டிக்கொண்டிருந்தாள்.

## 6. நல்லாருப்ப தாயி

வீரம்மாளை நாலா பக்கமிருந்தும் கேட்டு வரத்தான் செய்தார்கள். எல்லாம் ஏல்க்கையான குடும்பங்கள். நார்த்தம்பட்டி பெருமாள் குடும்பன் வீடென்ன சாமானியமானதா. மொதலாளிமார் சம்சாரித்தனத்துக்குச் சமானம். கொத்து வேலைக்காரர்களுக்காகக் கொட்டாரத்தில் நிதமும் ஒரு மெடா கம்மங்கஞ்சி வேகும். வேலைத்தனத்தில் கருவ மரத்தடியில் பானை நிறைய பசுவ மோர் உட்கார்ந்திருக்கும். காட்டுக் கம்மங்கஞ்சியை மோரில் கரைத்து மசிய ஊறிய நார்த்தை ஊறுகாயைத் தொட்டுக்கொண்டு குடித்தால் சொக்கும். இதுக்காகவே முன்னக்கூட்டி ஊறுகாயைப் பக்குவப்படுத்தி வைத்திருப்பார்கள். அந்தப் பக்குவமே தனி. ஊறுகாய்க் கலயத்தை வண்டுகட்டி பரவசட்டியால் மூடிக் குப்பைக்குள் வெட்டிப் புதைத்துவிடுவார்கள். கொஞ்ச நாள் கழித்துத் தோண்டியெடுத்து மசாலும் எண்ணெயும் சேர்க்கணும். அடடா தேனாக இருக்கும்.

விடியக்காலம் வீட்டில் சிலுக்சிலுக்கென்று மத்து கடைவதிலிருந்து பருத்தி விதை ஆட்டுவது பால் கறப்பதுவரை சதா வேலை நடந்துகொண்டிருக்கும். ரெண்டுபேர் புளியம்பழம் உரித்தால் மறு பக்கம் பயறு புடைப்பார்கள். நிலக்கடலைப் பருப்பு உரிப்பு நடக்கும். தாவாரத் திருணையில் கேப்பை திரிக்கும் கடகடப்பும் வரகு திரிக்கும் சரசரப்பும் முற்றத்தில் தினையரிசி குத்தும் மூச்சும் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருக்கும். தாவாரத்தில் சுரைக் குடுக்கையும் பீர்க்கங் குடுக்கையும் விதையெடுக்காமல் தொங்கும். அந்த வீட்டுக்குப் போனால் மகராசியாக இருக்கலாம்.

அது போகட்டும். புளியங்குளம் பெரியவீரன் குடும்பத்துக்கென்ன குறைச்சல். கருதடிப்புக்குத் தனிக் களமே உண்டு. காணப்பயறே கோட்டைக் கணக்கில் விளையும். மற்ற வெள்ளாமைக்குச் சொல்லணுமா. களத்தில் கட்டுக் கட்டாக உளுந்தஞ்செடி அடிக்கும் சித்திரத்தைப் பார்க்கணும். பரத்திப் போட்டுச் சருகாகக் காய்ந்த செடிகளைக் காலால் எடுத்துக் கொடுத்து கைக் கம்புகளால் அடிக்கஅடிக்கப் பயறு சலங்கையாகச் சிதறும். ஒரு செண்டிப்பில் அடுத்த நிரைக்குத் திரும்புவார்கள். எட்டத்திலிருந்து பார்த்தால் ஒயிலாட்டம் நடப்பது போலிருக்கும்.

துவரையடிக்கும் தோரணையே தனி. வாசல் கதவைத் தோதாகச் சாத்தி வைத்து துவரஞ்செடியைக் கொத்தாகப் பிடித்து அடித்தால் அயிரைக்கண்ணாகப் பயறு உருண்டோடும். மீனுக்கு வலை விரித்த மாதிரி பயறுக்குக் களத்தைச் சுற்றித் தடுப்புப் போட்டிருப்பார்கள். வேலை மும்முரத்தைப் பார்த்துக் கிண்டலடித்துக்கொண்டு போவார்கள்.

''நம்மூருக் கொளத்துல துணி வெளுப்பு நடக்குது. பெரியவீரன் களத்துல தொவர வெளுப்பு நடக்குது.''

அம்புட்டுத் தூரம் போக வேணாம். சக்கணாபுரம் கந்தனுக்கு வசதி கொஞ்சமா. ஊர்ச்சனமே அவன் காட்டில் நிற்கும். கரிசலில் ஒரு முழத்துக்குக் கம்மங்கருது விளையும். கோட்டைக் கணக்கில் தசகூலி அளப்பான். நாழி மரக்கால் எல்லாமே வெங்கலந்தான். புரட்டாசி மாசம் மூணாம் சனிக்கு குடும்பமே திருவண்ணாமலைக் கோயிலுக்குப் போகும். குடும்பம் ரெண்டு வண்டியில் உட்கார்ந்திருந்தால் பெருமாளுக்குக் காணிக்கை போட வேண்டிய தானியம் தவசம் பயறு பச்சை என்று விளைந்த வெள்ளாமை மூணாவது வண்டி பிடிக்காமல் அடுக்கியிருக்கும். அவன் வீட்டு நாய்க்கும் கண்ணுக்குட்டிக்கும் வித்தியாசம் தெரியாது.

எல்லாரும் பிரியப்பட்டுக் கேட்டார்கள். ஆண்டிக்கு ஆள்மேல் ஆள் விட்டுத் தவித்தார்கள். காணாக்குறைக்கு அவன் வெளியே போகும் இடங்களிலும் பேச்சைத் தூண்டினார்கள்.

''கலிங்கலாண்டி குடும்பத்துல சம்பந்தம் வச்சுக்கிறதுக்கு நாங்க தரமில்லையோ என்னமோ.''

அவன் யாருக்கும் தலைக்கொடுக்கவில்லை. என்னென்னமோ சொல்லிச் சமாளித்தான்.

''அதென்ன வெதப்பா அறுப்பா கூப்புட்ட ஒடன வாறதுக்கு. நான் வச்சிருக்கிறது ஒரு பொட்டப் புள்ள. அதோட சம்மதமில்லாம ஒண்ணும் சொல்ல முடியாது.''

மகள் பூத்துப் பூரித்துப் பெரியமனுசியானதையே கருப்பியால் நம்ப முடியவில்லை. கலியாணப் பேச்சை எப்படி நம்ப முடியும். அதுக்குள் என்ன அவசரம். பிள்ளைக்கு வயசா போச்சு. மாராப்பை இறுகச் சொருகவே நேரம் சரியாக இருக்கிறது. இந்த லட்சணத்தில் அடுத்த வீட்டுக்குப் போய்ப் பண்ணை போடவா. கொஞ்ச நாள் பொறுத்துப் பார்க்கலாமில்லையா. இருப்பிலிருந்து சாப்பிட்டால் இடுப்பு திடப்பட்டுக்கொள்ளும். பூவிலிருக்கும் பிஞ்சைத் திருகி வெயிலில் எறிந்தால் வெம்பிப்போகுமே. அப்படி ஆசைப்படுகிறவர்கள் காத்திருந்து செய்யட்டுமே. கிழடனுக்குத் தெரிய வேணாமா.

வீரம்மா எல்லாருக்கும் ஒரேயடியாகத் தலையைக் குலுக்கிவிட்டாள். அதுக்கு மேல் கட்டாயப்படுத்தினால் கொதுகொதுவென்று அழுதாள். என்ன கேட்டாலும் ஒரே பதிலைச் சொன்னாள்.

''நான் அசலூருக்குப் போக மாட்டென்.''

கருப்பிக்கு ஒரு விதத்தில் சந்தோசம். முரண்டுபண்ணியாவது பிள்ளை கொஞ்ச நாள் வீட்டில் இருக்கட்டும்.

ஆண்டிக்கு எரிச்சலாக இருந்தது. அவளிடம் படபடத்தான்.

''ஒம் புள்ளைக்கு இந்த லோகத்துல மாப்பிள கெடச்சுக்கிறாது. தேடி வாறவனெல்லாம் கழிச்சுக்கெட்னா எப்படி. பொட்டப் புள்ளன்னு இருந்தா பெறந்த வீட்லயே குடியிருக்க முடியுமா. அசலூரோ உள்ளூரோ எண்ணைக்கிருந்தாலும் அடுத்த வீட்டுக்குப் போயித்தான ஆகணும்... அவ மனசில என்னதான் நெனச்சிட்ருக்காளாம்.''

அவள் பட்டும்படாமல் சொன்னாள்.

''எனக்கென்ன தெரியும். ஒம் மககிட்டத்தான் கேக்கணும்.''

''நீதான் கேட்டுத் தொலையேன்.''

''ஏன் நீ கேக்க வேண்டியதுதான. பொண்ணப் புடிச்சுக் குடுப்பயோ பூட்டி வச்சுக்கிருவயோ. அவ பாடு ஒம்பாடு...ஸ் ...அஞ்ஞாடி....''

அவளுக்கு அழுகை வருமுன் அவன் முனங்கிக்கொண்டே போய்விட்டான்.

''காலாகாலத்துல நல்ல எடமாப் பாத்துப் புடிச்சுக் குடுத்துட்டம்னா நிம்மதியாப்போகும். காணாற தேசத்துக்கா போகப்போறா. அத வுட்டுட்டு...''

சொக்கம்மாகூடத் தன் பங்குக்கு வீரம்மாளைக் கேட்டுப்பார்த்தாள்.

''என்னடி நல்லநல்ல எடத்தெல்லாம் தட்டிக்கழிச்சா எப்படி. பெரியாளு மனசு சங்கடப்படுமில்ல.''

அவள் கிறுங்கவில்லை.

''அண்ணஞ்ஞைய வுட்டுட்டு அசலூருக்குப் போக மாட்டெடன்.''

''அறிவுகெட்டவளே அண்ணஞ்ஞு எட்டாக்கையிலயா இருக்கென். நெனச்சா ஒரெட்டு வந்து பாத்துட்டுப் போறென். இல்ல மாப்பிளைய வீட்டோட வச்சுக்கிருவமா.''

''அதெல்லாம் வேணாம்.''

''பெறகு எதுதான் வேணுமாம். நீயாச்சு ஒங்கப்பனாச்சு தாயே.''

ராக்கன் வாயே திறக்கவில்லை. எப்படியோ நல்லது நடந்தால் சரி. குணமான மச்சினன் கிடைக்கணும். தங்கச்சி கையால் நாலு கலயம் மோர் வாங்கி மண்டுவதுடன் சரி.

கருப்பிக்கு மகளின் முகவாட்டத்தைப் பார்த்து வேறு மாதிரி யோசனை ஓடியது. கிட்ட இருத்தி வாந்தக்கமாகப் பேச்சுக்கொடுத்தாள்.

''அசலூருக்குப் போக மாட்டன்னு அடம்புடிச்சா என்ன அர்த்தம் தாயி. இப்பக் கலியாணம் வேணாம்னு சொல்றயா.''

வீரம்மா ஒருமாதிரி சிணுங்கினாள்.

''அப்படி எப்பச் சொன்னென்.''

''பெறகு எப்படித்தான் சொல்றயாம்... உள்ளூருக்குள்ளன்னாச் சம்மதமா.''

வீரம்மா பலமாகத் தலையாட்டினாள். அஞ்ஞை அவள் முதுகைத் தடவினாள்.

''எங்களுக்குப் பக்கத்துலயே இருக்கலாம்னு பாக்கயா. அதும் நல்லதுதான். உள்ளூருல ஒனக்கேத்த மாப்பிள இல்லையே தாயி.''

''ஏன் இல்ல.''

''இந்தக் கோட்டிக் கழுத கண்ணுக்குத் தட்டுப்படல. எப்படியும் ஒங்கப்பனுக்குத் தப்ப முடியாதே... ஆரவும் மனசில நெனச்சிருக்கயா.''

வீரம்மா அதுக்கும் தலையாட்டினாள். அஞ்ஞை மனசுக்குள் கணக்குப் போட்டுப் பார்த்தாள். ஒண்ணும் அடைபடவில்லை.

''ஆரு தாயி. அஞ்ஞையிட்டச் சொல்றதுக்கென்ன.''

வீரம்மா தரையைப் பார்த்தாள்.

''கருத்தையன்.''

அஞ்ஞைக்கு மண்டை கிறுகிறுத்தது. மகளை இறுகப் பற்றிக்கொண்டாள்.

''பாவி மகளே இப்படி ஒரு கல்லத் தூக்கிப்போடுறயே. ஊருச் சனங்களே அவனச் சரியாப் பாத்துருக்க மாட்டாக. நீ எங்க பாத்த. அவன் என்ன வசியம் வச்சானோ. நீ எப்படி மசங்குனயோ... ஸ்... அஞ்ஞாடி...''

''நான் அவங்கிட்ட ஒரு வார்த்தக்கூடப் பேசினதில்ல.''

''ஆரு மூலமும் சொல்லிவுட்டானா.''

''இல்ல.''

''என்னதான் நடந்தது.''

''ஒருநா அவன் நம்ம பூசரமரக் கெணத்துல குளிக்கையில தெரியாம எட்டிப் பாத்துட்டென்.''

''ஒத்தியில அங்க எதுக்குப் போனயாம்.''

''புள்ளீக குளிப்பாகன்னு போனென்.''

''புள்ளாண்டந்தான் இருந்தானாக்கும். வெளிய பொட்டச்சிக துணியக் காணும்னா பேசாமத் திரும்பி வந்துற வேண்டியதுதான. எட்டிப் பாத்துத்தான் தெரிஞ்சுக்கிறணுமாக்கும்.''

''உள்ளருந்து சீட்டியடிக்கிற சத்தம் கேட்டுச்சு. அந்த நெனப்பிலயே போயி எட்டிப் பாத்துட்டென்.''

''ஆம்பளதான சீட்டியடிப்பான். இது தெரியதாக்கும்.''

''இவ்வளவு நல்லா அடிக்கிறது ஆருன்னு பாத்தென்.''

''பாத்ததும் மசங்கீட்டயாக்கும்.''

''ஆமா அப்படித்தான்.''

''அவன் கிருசுகெட்ட மனுசனாச்சே. ஆரு போயிப் பேசக் கெடக்குது. ஊருக்குள்ள வேற எளவட்டமே கெடைக்கலயாக்கும்.''

''அவனுக்குத்தான் வாக்கப்படுவென்.''

''அவன் ஒத்துக்கிறலன்னா...''

''கலியாணம் முடிக்காமயே இருந்துருவென்.''

''அஞ்ஞாடி இவளச் சீட்டிக் கோட்டி புடிச்சு ஆட்டுதே. இதும் தலவிதியா கடவுளே... ஒங்கப்பனுக்கு என்ன சொல்லட்டும். அந்த மனுசன் ஒன்னயச் சுத்தி மனசுக்குள்ள கோட்ட கெட்டிக் குடியிருக்கான். சங்கதி தெரிஞ்சா இடிஞ்சு போயிருவானே. இதுக்குத்தானா ஒன்னயத் தவமிருந்து பெத்தென்.''

அஞ்ஞை புலம்பிக்கொண்டே போனாள். வீரம்மாளின் மனசு மறுபடியும் பூசரமரக் கிணற்றுக்குப் போய்விட்டது.

அன்றைக்கு ராத்திரியே கருப்பி ஆண்டியிடம் குட்டை உடைத்துவிட்டாள். அவனால் நம்ப முடியவில்லை.

''ஏம்பிளி இப்படி...''

''அது அப்படித்தான். செல்ல மகளுக்குச் சீமையில இல்லாற பண்டமெல் லாம் சம்பாரிச்சுக் குடுப்ப. இப்ப இந்தப் பண்டத்தக் கேக்கா. தேடிக் குடுப்பயோ கைய விரிப்பயோ...''

''இது நல்லாருக்கே.''

''நீதான ஓடிஓடி மாப்பிள சம்பாரிச்சிட்டுத் திரிஞ்ச. அப்பனுக்கு அந்தக் கஸ்டம் வேணாம்னு அவளாத் தேடிக்கிட்டா.''

அவனுக்குப் பேச்சுத் திக்கியது.

''ஒரு மம்பட்டிக்காரனா இருந்தாக்கூட ஒத்தாசன செஞ்சு காலுகூட்டி வுட்றலாம். இல்ல கூடயே வச்சுக்கிறலாம். இவன் கம்புக்காரனாச்சே. நிச்சய மில்லாற பெழப்பு.''

''அத ஊரே அறியும் நாடே அறியும்.''

''நம்மளோட வச்சுக்கிறது இருக்கட்டும். பொண்டாட்டியோட ஒழுங்காக் குடும்பம் நடத்துவானா.''

''மொதல்ல ஓம் பொண்ணக் கெட்டிக்கிறச் சம்மதிக்கானான்னு பாரு. அதுக்குள்ள குடும்பம் நடத்துறதப் பத்திப் பேச வந்துட்டான்.''

''அது வேற இருக்குது. வேணாம்னு சொல்லீட்டா அவன் கால்ல வுழுந்து கும்புடவா முடியும்.''

''செல்லப் புள்ளைக்காக அதவும் செய்ய வேண்டியதுதான்.''

''இப்படிச் செஞ்சிட்டாளேம்பிளி. இத முந்தியே சொல்லித் தொலச் சிருந்தா ஏழு சீமையிலருந்து ஆளு வந்துருக்குமா. அவுக மூஞ்சியில எப்படி முழிப்பென். நீ எடுத்துச்சொல்லப்புடாதா.''

''ஒரே புடிவாதமா இருக்கிறவகிட்ட என்ன சொன்னாலும் ஏறவா போகுது.''

''அது சரிதான். அவ தலையில எழுதுனத மாத்தவா முடியும். நமக்குக் குடுத்துவச்சது அம்புட்டுத்தான்.''

''வீட்ல இருக்கிற ஆம்பளையே சொன்னபடி கேக்கல. வெளிய போற பொட்டச்சியச் சொல்லிக் குத்தமில்ல.''

''அதப்பத்தி என்ன. எங்க போனாலும் நிம்மதியாருந்தாப் போதும்.''

''பிரியமில்லாற எடத்துல வம்படியாப் புடிச்சுக் குடுத்துட்டு பெறகு அவ இருந்து வாழலன்னாக் கேவலந்தான. நடக்கிறதுதான் நடக்கும். நம்ம இருக் கையில அவளத் தெருவுலயா வுட்றப்போறொம்.''

''நம்மளத் தேடிப் பொண்ணு கேட்டு வந்தது போக நம்ம மாப்பிள தேடிப் போக வேண்டிய நெலமையாயிக்கிருச்சு. காலக்கொடும... அவனப் புடிக்க முடியாது. அவுக அப்பங்கிட்டத்தான் பேசணும்.''

அவனுக்கு மன்னைகட்டியது. அவளுக்கு மனசு ஆறவில்லை.

''நீ புள்ளையிட்ட ஒருவார்த்த சொல்லிப் பாரேன்.''

''இம்புட்டுத் தூரத்துக்கு ஆன பெறகு ஆரு சொன்னாலும் கேக்க மாட்டா. நமக்குத்தான் மருவாதிக் கொறச்சலு.''

அவன் தூரங்கனிடம் கமுக்கமாப் பேசி முடிவாகச் சொன்னான்.

''ஏங்ஙேன் ஒறங்கி எந்திரிச்ச மாதிரி முழிக்க. நம்ம ரெண்டு பேரு குடும்பமும் நெரப்புக்கலப்பா இருக்கணும்னு ஆயிக்கிட்ட பெறகு நம்ம கோவணத்த இறுக்கிக் கெட்டி ஒண்ணும் ஆகாது.''

''அவன் சல்லித்தனத்த வுடுறதுக்கு என்னடா வழின்னு மனசில ஒடிக்கிட்டே இருந்துச்சு. நீயும் வந்துட்ட.''

''எங்க நெலமையத்தான் சொல்லீட்டனே. ஒங்க சண்டீருக்குத்தான் எங்க புள்ளையப் புடிக்கணும்.''

''அதென்ன அப்படிப் பேசுற. ஒங்க வீட்ல சம்பந்தம் பண்ணக் குடுத்து வச்சிருக்கணும்.''

''அதுல ஒண்ணும் கொறச்சலில்ல.''

''செஞ்சுக்கிட்டா ஒழுங்காக் குடும்பம் நடத்தணுமேன்னுதான் கவலை யாருக்கு. அவங்கிட்டச் சொன்னா ஒனக்கு நான் புள்ளையில்லன்னு கைய வீசீட்டுப் போயிருவான். பெத்தவுக அப்படி இருக்க முடியுமா... நீ ஒருமனசாப் போங்ஙென். நான் கலந்துட்டு வாறென்.''

தூரங்கன் மூக்கம்மாளைக் கலந்தான். அவள் தெளிவாகச் சொல்லிவிட்டாள்.

''அப்படியாச்சும் நல்ல காலம் பெறக்கட்டும். அவன் கையக் காலப் புடிச் சாவது வழிக்குக் கொண்டுவர வேண்டியது ஒம் பொறுப்பு.''

''நம்ம பேச்ச எந்தக் காலத்துல கேட்டான்.''

அவன் நொண்டியனைத் தேடிப் பிடித்தான். நொண்டியனுக்கென்றால் உளைச்சல் சொல்ல முடியாது. இதென்ன புதுக் கதையைக் கொண்டுவந்து விடுகிறானே. நாம் எடுத்துக்கிட்ட எடுப்பென்ன கோப்பென்ன. எல்லாம் வீணாகி விடும். கருத்தையனிடம் சொன்னால் அவ்வளவுதான். வசவு தாங்காது. அடிகூட விழும். அதுக்கு முன்னால் ஆண்டியின் மகளைப் பார்த்துப் பேசி மனசை அறியணும். பிறகு எப்படியெப்படியோ பார்த்துக்கொள்ளலாம்.

அவன் பிரயாசைப்பட்டு வீரம்மாளை மடக்கினான்.

''எல்லாம் கேள்விப்பட்டென். இது வெளையாட்டுக் காரியமில்ல தாயி. ஆயிரங்காலத்துப் பயிரு. கருத்தையனப் பத்தி நல்லாத் தெரிஞ்சும் அவனத்தான் கெட்டிக்கிருவன்னு ஒத்தக்கால்ல நின்னா எப்படித்தா. நாளைக்கு நீ கண்ணக் கசக்கீட்டு வந்தா பெத்தவுகளுக்கு எப்படியிருக்கும்.''

அவள் பதறாமல் கேட்டாள்.

''நான் எதுக்குக் கண்ணக் கசக்கணும்.''

''எங்க பெழப்பு நாடோடிப் பெழப்பு தாயி.''

''அதுக்கென்ன.''

''வீட்ல தங்கிக் குடும்பம் நடத்தணுமே.''

''எப்பயாச்சும் ஒரு நாளைக்கு வீட்டுக்கு வராமயா போயிருவீக.''

''அப்பப்ப ராவோட ராவா வருவொம்.''

''அது போதும்.''

''அம்மான் சொல்றதக் கேளு தாயி. இது சரிப்படாது.''

''நான் ஆருக்கும் எடஞ்சலா இருக்க மாட்டென்.''

''அப்ப கருத்தையனுக்குத்தான் கழுத்த நீட்டுவ.''

''ஆமா.''

''நீ நல்லாருக்கணும். வீட்டுக்குப் போ தாயி.''

## 7. கருத்தையன் பொண்டாட்டி

பிறகு நடந்ததெல்லாம் கருப்பிக்குக் கனா மாதிரி. அழுதும் சிரித்தும் மனசைத் தேற்றிக்கொண்டாள். ஆண்டி கல்லாகிவிட்டான்.

நொண்டியன் புண்ணியத்தில் கருத்தையனுக்கும் வீரம்மாளுக்கும் சிறுத்த அளவில் கலியாணம் நடந்தது. கருத்தையனை வழிக்குக் கொண்டுவர அவன் பட்ட பாடு கொஞ்சநஞ்சமில்லை. விசயத்தைச் சொன்னதும் அப்படிச் சீறினான்.

''ஒனக்கு வயசுதான் ஆச்சே ஒழிய அறிவு கொஞ்சங்கூட இல்ல. அருவா கம்பெடு அத்தன பேரவும் தீத்துக்கெட்டுன்னு என்ன மயித்துக்கு உசிப்பிவுட்ட யாம். இப்ப நடுக் காட்ல ஒளிஞ்சுக்கிட்டுக் கலியாணங்கிலியாணம்னு பேசுறயே புத்திகெட்டுப்போயி. ஒனக்கே நல்லாருக்கா சித்தப்பா.''

''ஆயுதம் தூக்குனவன் கலியாணம் முடிக்கப்புடாதா என்ன. நாங்க பொண்டாட்டி புள்ள வச்சுப் பெழைக்கலயா.''

''நீ சொன்னதவே சொல்லீட்ருப்ப. ரெண்டு சாத்துச் சாத்துனாத்தான் வாயி சும்மா கெடக்கும்.''

நொண்டியனுக்குப் பிடரியில் வசமான அடி கிடைத்தது.

''என்னயக் கொன்னாக்கூடச் சந்தோசந்தான். அந்தப் புள்ள பெழப்பக் கெடுத்துறாத. நாளைக்கு ஒண்ணு கெடக்க ஒண்ணு செஞ்சுக்கிட்டா அந்தப் பாவம் நம்மளச் சும்மா வுடாது.''

''அவ பெரிய சம்சாரி வீட்டுப் பொண்ணு. அதுக்கேத்த எடம் பாக்க வேண்டியதுதான.''

''பாத்துப்பாத்து நொந்துபோயிட்டாக. அவ தலக்குடுக்கணுமே.''

''அதுக்கு நாந்தானா கெடச்சென்.''

''அவளுக்கு நீதான் பெரிய எடம்.''

''சின்னப் புள்ளையில மூக்க வடிச்சிக்கிட்டுத் திரியிறப்பப் பாத்தது. அதுக்குப் பெறகு மூஞ்சியக் கண்டதாரு. மொகறையக் கண்டதாரு.''

நொண்டியனுக்கு நம்பிக்கை வந்தது. பிடித்துக்கொண்டான்.

''இப்பப் பாக்கணுமே. அவ்வளவு லச்சணம். குடுத்துவச்சிருக்கணும்.''

''என்னயப் பாத்துருக்காளா.''

''அதனால வந்த வெனதானய்யா இம்புட்டும். இந்தா பாத்துக்கோன்னு அவுக கெணத்துல போயிக் குளிச்சிருக்கயே. ஒனக்கு வேற கெணறு கெடைக் கலயோ.''

''ஆமா வந்து பாருன்னு நாந்தான் கூப்புட்டனாக்கும். மேலு கசகசன்னு இருந்துச்சு குளிச்சென். அது தப்பா.''

''ஒஞ் சீட்டி அவளக் கூப்புட்ருக்கு. கிட்ட வந்து பாத்துட்டா. போதுமா. அதுலருந்து சீட்டியச் சொமந்துக்கிட்டுத் திரியிறா.''

கருத்தையன் சிரித்துக்கொண்டான்.

''அதுக்கு நான் என்ன செய்யட்டும்.''

''ஒண்ணும் செய்ய வேணாம். அவ கழுத்துல மூணு மூடிச்சுப் போடு.''

''அவுக வீட்ல என்ன சொல்றாக. பெரிய நெனப்புல இருப்பாகளே.''

''மக நல்லாருக்கணும். அதக்காட்டி பெரிய நெனப்பு என்னருக்க முடியும். ஆண்டி நம்ம வார்த்தைக்காகக் காத்துக்கெடக்கான்.''

''எங்க வீட்ல ஒண்ணும் சொல்லலயா.''

''இதென்ன கேள்வி. பெத்தவுகளுக்கு ஆசையிருக்காதா பின்ன.''

''ஒங்க பிரியப்படி செய்யிங்க.''

நொண்டியனுக்கு மூக்குமுட்ட நெல்லுச் சோறு சாப்பிட்ட சந்தோசம். முதல் வேலையாக ஆண்டியிடம் ஓடினான். வீரம்மா மதியக் குளிப்புக்காக நிதமும் பிள்ளைகளைத் தேடிப்போனாள்.

கருப்பிக்கும் ஆண்டிக்கும் மகள் கலியாணத்தைப் பெரிசாக நடத்த ஆசை. கருத்தையன் அதுக்கு ஒத்துவரவில்லை. நொண்டியனிடம் கண்டிப்பாகச் சொல்லி விட்டான்.

''மாப்பிளக்காரன் மஞ்சணத்தி மரத்தடியில வச்சுத் தாலிகெட்னாலும் பொண்ணு வீட்டுக்காரங்க ஒத்துவரணும். அதான் மருவாதி.''

அவன் விருப்பப்படியே மாப்பிள்ளை வீட்டில் தாலிகட்டு நடந்தது. கருப்பி மனசுக்குள் பெரிய பந்தல் போட்டுத் தோரணம் கட்டியதுடன் சரி. பந்தலை மருதன் பிரித்துப்போடக் கொஞ்ச நாளாயிற்று.

கருத்தையன் வீரம்மாளை மரியாதையுடன் வைத்துக்கொண்டான். தன் குடும்ப நிலைமை தெரிஞ்சும் இண்டஞ்செடிக்குள் தலையைக் கொடுத்த அவள் மேல் பிரியமாக இருந்தான்.

அவன் உள்ளூரில் பெண்ணெடுத்தவனென்றுதான் பேர். பெண் வீட்டில் மாப்பிள்ளைச் சோற்றுக்காக ஒரு தடவை மிதித்ததுடன் சரி. அதுக்குப் பிறகு எட்டிப்பார்க்கவில்லை. அதை வீரம்மாளும் பெரிசுபடுத்தவில்லை.

கருப்பிபோல் கலிங்கலில் யாரும் மாப்பிள்ளைச் சோறு போட்டிருக்க மாட்டார்கள். சோறு கறியில் எத்தனை வகை. பண்டம் பலகாரத்துக்குக் கணக்கு உண்டுமா. நாங்கல் நெரித்து கோழியடித்துக் குரங்கு நட்டி... வாய்க்கு ருசியாகச் செய்து கொடுத்தாள். பிடிக் கொழுக்கட்டை ஓலைக் கொழுக்கட்டை பால்கொழுக் கட்டை பச்சரிசிப் பணியாரம் தினை மாவு என்று தினமும் செலுத்திக்கொண் டிருந்தாள். மாப்பிள்ளையை அனுப்பும்வரை சரியான உறக்கமில்லை. அப் போதும் ஏதோ குறைவைத்ததுபோல் முனங்கிக்கொண்டே திரிந்தாள்.

கருத்தையன் மனசு கிணறு மாதிரி. வருத்தமோ சந்தோசமோ அதுக்குள் எதைப் போட்டாலும் முங்கிவிடும். தளும்ப மாட்டான். முந்திக்கு இப்போது கலிங்கல்மேல் அவனுக்குப் பிடிமானம் கூடியிருந்தது. நொண்டியன் அப்பப்ப வந்து போனான்.

கருப்பி மகளிடம் ஒவ்வொரு மாசமும் மறக்காமல் கேட்டாள்.

''கஞ்சி கழிக்கயா தாயி.''

அவளும் சிரிப்புக் குறையாமல் சொன்னாள்.

''நல்லாச் சேந்துக்கிருது.''

இந்தக் கதை ரெம்ப நாளாக நடந்தது. கருப்பிக்கு வேதனை.

''கடவுளே நான் பெத்த பொண்ணடியா வாடுறது தெரியலயா. அவ வகுத்துல ஒரு புள்ளையக் குடுக்கப்புடாதா.''

வீரம்மா அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. குடும்பத்தை முன்னிட்டு வெற்று மனுசியாகவே இருப்பதுதான் நல்லதென்று நினைத்தாள்.

அவள் எப்போதாவது பிறந்த வீட்டுக்கு வருவாள். அதைக் கொடு இதைக் கொடு என்று கேட்பதில்லை. கொடுத்தாலும் வாங்குவதில்லை. வந்தால் அண்ணஞ்ஞையிடம் ஒருமூச்சு பேச்சுப்பழக்கம் போடுவாள். குழந்தையைக் கொஞ்சுவாள். வடிவைச் சீண்டுவாள். பொய்யாளியைக் கிண்டுவாள். வீர முத்திடம் வேடிக்கையாகப் பேசுவாள்.

''மருமகன் என்ன சவலபாஞ்சுக்கிட்டே போறீக. கவலப்படாதங்க. ஓங்களுக்கு லச்சணமான பொண்ணப் பெத்துக்குடுக்கென். தேஞ்ச குண்டி நோஞ்ச குண்டிக்கே பொண்ணு கெடைக்கயில ஓங்களுக்கென்ன கொறச்சலு.''

பொய்யாளியை வக்கணையாகப் பார்ப்பாள். அவனுக்குக் கோவம் பொத்துக் கொண்டு வரும். முடியைப் பிடித்துப் பேயாட்டலாமா என்றிருக்கும். ''குலுக்க குந்தாணி'' என்று வசவு முனக்கத்தில் முறைப்பான். அவள் கடைசியாக அப்பனைத் தேடிப் போய்விடுவாள். மகளிடம் எல்லாம் விசாரித்து முடித்து அப்பன் மனக் குறையைத் தெரிவிப்பான்.

''ஓம் புருசன் நம்ம வீட்டுக்கு வர மாட்டானா தாயி.''

அவள் எதிர்க் கேள்வி கேட்பாள்.

''நீங்க எங்க வீட்டுக்கு வர மாட்டீகளா.''

அவன் நெஞ்சில் விழும் அடியை வாங்கிக்கொண்டு மகளையே பார்ப்பான். அவள் நிதானமாக நடந்துபோவாள். உறங்கி முழித்த பார்வையில் கருப்பி வெறிப்பாள்.

''மக என்ன சொல்லீட்டுப் போறாளாம்.''

''நான் கருத்தையக் குடும்பன் பொண்டாட்டின்னு சொல்லீட்டுப் போறா.''

# படலம் 3

## 1. பாளையரிவாள்

''அய்யய்யோ குடியக் கெடுத்துட்டாவளே.''

உச்சிப் பனையில் பாளை சீவிக்கொண்டிருந்த சண்முகத்துக்கு மாலையம்மாளின் கூக்குரல் தெளிவாகக் கேட்டது. அரிவாளை மட்டையில் பாய்ச்சி விட்டு நிமிர்ந்தான்.

கூக்குரலைத் தொடர்ந்து பல மாதிரி அழுகை. மாலையம்மா ஒருநாளும் இப்படி அலறியதில்லையே. ஏதோ நடந்துவிட்டது.

யோசிக்க நேரமில்லை. பதினிமுட்டிக்குள் பாளையைத் திணித்தான். அரிவாளையும் கடிப்பையும் பெட்டிக்குள் சொருவினான். ஒரே தவ்வில் பனைக் கழுத்துக்கு வந்து காலில் தடையை மாட்டாமல் படபடப்பில் கீழே சறுக்கினான். நெஞ்சில் சிராய்கள் குத்தி ஒடிந்தன. அந்த வலியோடு தூருக்கு வந்தான். மேற்கொண்டு கால் மிதித்து இறங்கப் பொறுமையில்லை. முறுக்குத் தடியிலிருந்து மணலில் குதித்து பனையைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டு ஓடினான்.

போய்ச் சேருமுன் எல்லாம் முடிந்துவிட்டது. ஓடிய தவிப்பு குறைந்து பார்வை தெளிந்தபோது பனையடியில் ரெண்டு அண்ணன்மாரும் ஒந்தானாக விழுந்து கிடந்தார்கள். விலாவில் வேல்கம்பு குத்தி உருவிய சதைத் துருத்துலுடன் மண்ணைக் கவ்விக்கொண்டு மூத்தவன். அரிவாள் வெட்டில் வலது தோள் தணிந்து நாக்கைக் கடித்தவாக்கில் இளையவன். ரெண்டு பேருக்கும் உயிர் இருப்பதற்கான அறிகுறியில்லை. கடைசித் துடிப்பும் அடங்கியிருந்தது.

அவனுக்குள் பதட்டம் கபகபத்து அதிகம் வேர்த்தது. கிறக்கம் கண்ணைக் கட்டியது. பனையில் முட்டிச் சாய்ந்துவிட்டான்.

மதினிமார் ஆளுக்கொரு புறம் குக்கிப்போய் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களின் பீதியழுகை ஓயவில்லை. குழந்தைகள் மிரண்டு முழித்தன. மாலையம்மா அழத் திராணியற்றுப் புலம்பிக்கொண்டிருந்தாள். அவளுடைய நிறைமாச வயிறு அடிக்கடி குலுங்கியது.

அவனுக்குக் கோவம் தலைக்கேறியது. மட்டியைக் கடித்து அடக்கிப் பார்த்தான். முடியவில்லை. அரிவாளை உருவிக்கொண்டு இளைய மதினியை நோக்கி ஓடினான். அவள் அசையவில்லை. குழந்தைகள் அலறின. மாலையம்மா அவனைப் பிடித்துக்கொண்டாள்.

''என்னக் கொல்லுங்க மொதல்ல.''

''பொட்டச்சிய சண்டையால ரெண்டு பேரும் போயிட்டாவளே.''

அவனுக்கு இப்போதுதான் அழுகை வந்தது. கதறிக்கதறி அழுதான். கோவம் வடியும்வரை தலையிலடித்து அழுதான். மாலையம்மா இன்னும் அவனைப் பிடித்திருந்தாள்.

அவன் புறங்கையால் கண்ணைத் துடைத்துக்கொண்டான். பயத்தில் நிற்கும் குழந்தைகள். உரசிக்கொண்டு மாலையம்மாளின் வயிறு. அரிவாளை எறிந்துவிட்டு இடிந்துபோய் உட்கார்ந்துவிட்டான்.

எதுக்கு இப்படி அநியாயமாகச் செத்தார்கள். வெட்டிக் குத்திக்கொண்டு சாகிற அளவுக்கு அப்படியென்ன பகை. பெண்டாட்டி பிள்ளைகள் இருக்கும் அறிவு வேணாமா. பொட்டச்சிகள் தொணதொணத்தால் உடனே அரிவாள் கம்பைத் தூக்கிவிடுவதா. அன்றைக்கே தட்டிச்சொல்லியிருந்தால் இந்த நிலைமை எதுக்கு.

அடுத்து என்ன செய்வது. நடுக்காட்டில் பிணங்களைக் கிடத்திக்கொண்டு எப்படிச் சமாளிப்பது. சங்கதி வெளியே தெரிந்தால் சங்கடம். யாருக்கும் தெரியாமல் கமுக்கமாக முடிக்கணும். அதுதான் எல்லாருக்கும் நல்லது. அதுக்குப் பொம்பளைகள் இங்கே இருக்கக் கூடாது. அவன் மதினிமாரை விரட்டினான்.

''இனிமே நீங்க இந்த எடத்துல இரிக்கப்புடாது. போவலன்னா அவிய கதிதான் ஒங்களுக்கும்.''

மாலையம்மா கிறக்கக் குரலில் கேட்டாள்.

''இந்த நெலமையில தனியா எங்க போவச் சொல்லுதிய.''

''புள்ளியளக் கூட்டீட்டு அப்பன்மாருக்க ஊருக்குப் போவணும். இப்பவே கெளம்பியாவணும்.''

மாலையம்மாளுக்கு இது சரியென்று பட்டது. ரெண்டு பேருக்கும் பிறந்த ஊர் கிட்டத்தில்தான் இருந்தது. ஆத்தியம்மாளுக்கு அருங்குளம். கிழக்கே தேரிக் காட்டைத் தாண்டினால் ஊர் தெரியும். பார்வதிக்கு நம்பியாபுரம். கொஞ்சம் தள்ளிப் போகணும். ஆனாலும் ஆம்பளைத் துணையில்லாமல் எப்படி அனுப்பு வது. மாலையம்மாளைத் தனியாக விட்டுவிட்டு அவனும் போக முடியாது. அவனுக்கிருக்கிற கோவத்தில் இதைக் கேட்டால் அவ்வளவுதான். மாலையம்மா மூத்தவளிடம் போனாள்.

''பொறப்புடுங்க. நேரத்தோட போயிடலாம். சிறிசுகளுக்கு வழி வேணுமே.''

இளையவள் தயங்கி நின்று புருசனைப் பார்த்தாள். ரத்த உறைவில் மணல் கோர்த்த கோலத்தில் அவன் அமைதியாகப் படுத்திருந்தான். அவள் வாயில் சேலையைப் பொத்திக்கொண்டு குலுங்கினாள். மாலையம்மா சொன்னாள்.

''அழுது என்னாவப்போவுது. எல்லாம் முந்தியே தெரிஞ்சிரிக்கணும்.''

ரெண்டு பேரும் அவசரமாக முக்கியச் சாமான்களை மட்டும் எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள். குழந்தைகள் மாலையம்மாளைப் பற்றியிருந்தன. மூத்தவள் கேட்டாள்.

''நீ போவலயா.''

''அவிய என்ன சொல்லுதாவளோ.''

மாலையம்மா குழந்தைகளைப் பிய்த்து அனுப்பினாள். அவள் கண்களில் மிஞ்சியிருந்த கண்ணீரும் கசிந்தது. சண்முகம் மதினிமாரை எச்சரித்தான்.

''எடையில அழுவாமப் போங்க. ஊருக்குப் போயி மெனக்கிட்டு அழு வலாம்.''

அவர்கள் தொலைவுக்குப் போகப்போக மாலையம்மாளின் முகத்தில் பயம் படர்ந்தது. அவன் அவசரப்படுத்தினான்.

''நீயும் கெளம்பு. நான் பொறத்தால வாறென்.''

''நீங்களும் வாங்க.''

''கொஞ்சம் தள்ளிப் போயி மறவுல நில்லு. வந்துடுதென்.''

அவள் துணிமணிகளைச் சுருட்டிக்கொண்டு மேற்கே நடந்தாள்.

சண்முகம் சுற்றுமுற்றும் கவனித்தான். கீழே பதிந்துகிடந்த வேல்கம்பையும் அரிவாளையும் தேடியெடுத்தான். அண்ணன்மாரை இழுத்துவந்து அவரவர் விடிலிக்குள் போட்டான். மணலில் இழுத்த தடங்களையும் ரத்தம் உறைந்த இடங்களையும் அழித்தான். பதினி காய்ச்சும் விறகை அள்ளி அவர்களை மூடி னான். சீமெண்ணெய்ச் சீசாக்களை விறகில் கொட்டித் தெளித்தான். தண்ணீர்ப் பானைகளை உடைத்தான்.

ரெண்டு விடிலிக்குள்ளும் விறகில் தீக்கொளுத்தினான். எரியும் ஒரு விறகுத் துண்டை எடுத்துக்கொண்டு வெளியேறி படல்கதவைச் சாத்தினான். விறகுத்

துண்டால் முன்புறமாக மூணு கூரைகளிலும் தீமூட்டினான். மனசில் பதட்டம். ஓலையில் வேகமாக வளரும் தீக்கொழுந்துகளைத் திரும்பிப் பார்க்கும்போது அழுகை வந்தது. அடக்கிக்கொண்டு மாலையம்மாளிடம் ஓடினான்.

எங்கும் மணல்மேதிய பனங்காடு. சில இடங்களில் காற்றுச்சுழிப்புக்குத் திரண்ட குறுமேடுகள். பனைமரங்கள் உயரத்தில் தலையாட்டின. அவற்றை அண்ணாந்து நிற்கும் வடலிகள். அங்கங்கே மணலைத் திமிறி முளைத்த பனங் குட்டிகள்.

சாயங்கால வெயில் பாயும் பனை இடைவெளிகளில் பறந்து மறையும் கிளிகளின் கூச்சல் ஓலை இரைச்சலுக்கிடையிலும் தொடர்ந்து கேட்டுக்கொண் டிருந்தது. அடிவயிற்றை உள்ளங்கையால் தாங்கியபடி நடந்த மாலையம்மா உயரே அவர்களைத் தாண்டிப் போகும் புகைமூட்டத்தை வெறித்தாள்.

''பொகையா வருதே என்ன செஞ்சிய.''

''விடிலிக்குள்ள போட்டுப் பொசுக்கீட்டென்.''

அவன் குரலில் கரகரப்பு.

''எரிஞ்சுபோறதுக்கா இங்க வந்தொம்.''

நோவழுகையில் அவள் மணலில் கால்புதைத்துத் திணறும்போது புருசனைப் பிடித்துக்கொண்டாள்.

சுற்றிலும் ஊர்களில்லை. அவளுக்கு மலைப்பு மேலும் பாரங்கூட்டியது. கலியாணமாகி சரியாக ஒரு வருசம் ஆகவில்லை. ஒரு குழந்தையைப் பார்ப் பதற்குள் இப்படியாகிவிட்டது.

நடந்ததையெல்லாம் நினைக்கநினைக்க அவளால் நடக்க முடியவில்லை. உட்கார்ந்து குமுறினாள்.

''அனியாயமாப் போயிட்டாவளே. குடும்பம் இக்கதியா ஆவணும். புள்ளிய என்ன செய்யப்போவுதோ.''

குழந்தைகள் அவளுடன் எவ்வளவு பிரியமாக இருப்பார்கள். அவளுக்குப் பிறக்கப்போவது தம்பியா தங்கச்சியா என்பதில் அவர்களுக்குள் ஒரே சண்டை. நான்தான் தூக்குவேன் நீ தூக்கக் கூடாது என்று போட்டி. அதுக்குள் ஓலைக் கிலுக்கு கொட்டான் என்று ஏகப்பட்ட விளையாட்டுச் சாமான் தயாராகி விட்டது.

சண்முகம் அவளை மெல்ல எழுப்பினான். அவள் நடக்கத் திணறினாள். லேசாக இடுப்பு வலிக்க ஆரம்பித்தது. வலியைக் கடித்துக்கொண்டு அண்ணாந்தாள்.

''கழுகுமலைக்கா நடக்கணும்.''

''ஆவரம்பட்டிக்குப் போவொம்.''

ஆவரம்பட்டியில் அவளுடைய சின்னாத்தா இருந்தாள். ஆத்தாளுடன் பிறந்தவள். அங்கே போய் ரெண்டுமூணு நாள் தங்கிவிட்டுக் கழுகுமலைக்குப் போகலாம் என்பது அவன் திட்டம்.

''அந்த ஊரும் தூரமா.''

அவள் புருசன் கையை இறுகப்பற்றினாள்.

''கிட்டத்தான்.''

''வவுறு வலிக்குது.''

''பையா நடக்கலாம்.''

நிதானமாக எட்டுவைத்து சில ஊர்களைக் கடந்திருந்தார்கள். வானத்தில் அறுத்தெறிந்த பூசணித் துண்டாக குறைநிலா கோணிக்கிடந்தது. இருட்டின் தெளிவில் காலடிப் பார்த்து நடந்தார்கள். அவள் கேட்டாள்.

''புள்ளிய ஊரு போயிச் சேந்திரிப்பாவளா.''

''எப்பயோ போயிரிப்பாவ.''

''அவியளத் தனியா அனுப்புனது தப்பு.''

''நான் நெனச்சென். பொட்டச்சிய மேலரிக்கிற கோவத்துல நடுவழியில என்னமும் செஞ்சிடுவனோன்னு பயம். அதான் போவல.''

அவன் நடையிலும் தொய்விருந்தது.

சுற்றிலும் என்னென்னமோ இரைச்சல் காதை மொய்த்தது. கிட்டத்திலேயே காட்டுப் பூனைகளின் சண்டை நடந்துகொண்டிருந்தது. அவன் தைரியப் படுத்தினான்.

''எதுக்கும் பயப்படாம வரணும்.''

ஓடையிறக்கம் மேடு தாவுகளைக் கவனித்து நடந்தார்கள். பாதை தவறும் இடங்களில் செடிகொடிகளைப் பாளையரிவாளால் சீவி வழியுண்டாக்கினான் அவன்.

அவர்கள் ஆவரம்பட்டியை நெருங்கும்போது நடுச்சாமம் ஆகிவிட்டது. அவளுக்கு இடுப்பு வலி அதிகமானது. வயிற்றுப் பாரம் தலைகீழாகப் புரளப் புரளத் தாங்க முடியாத வேதனை. வலி கால்களிலும் இறங்கிக் கடுத்தது. முனங்க ஆரம்பித்தாள்.

கொஞ்ச நேரத்தில் கன்னிக்குடம் உடைந்துவிட்டது. அவன் தலைத்துண்டை எடுத்து அவள் வயிற்றை ஏறக்கட்டி வலியைக் குறைக்க முயற்சித்தான். அவளுக்கு உள்பிசைவும் முனக்கமும் நிற்கவில்லை. வழிநெடுக புருசனின் கைத்துணை வேண்டியிருந்தது.

''நா வறளுது. தண்ணி வேணும்.''

''கொஞ்சம் பொறுத்துக்கோ. ஊருக்கு வந்துட்டொம்.''

''பேச முடியலயே.''

இருட்டு வேளையில் தண்ணீருக்கெங்கே போவது. கிணறுதான் தேடணும். தேடிக் கண்டுபிடித்தாலும் அவளைத் தனியாக விட்டுப் போகணும். தண்ணீர் கோலுவதற்கு ஒரு ஏனங்கூட இல்லை. கைகாவலுக்குப் பாளையரிவாளும் கொஞ்சம் துணியுந்தான் கொண்டுவந்தது. அவள் நடக்க முடியாமல் படுத்து விட்டால் தோளில் தூக்கித்தான் சுமக்கணும். நிறைமாசச் சூலியை எப்படித் தோளில் போடுவது. சின்ன உயிருக்கு என்னமும் ஏதும் ஆகிவிடக் கூடாதே.

அவன் தவித்துத் தத்தளித்தான். எங்கேயாவது தோட்ட வெள்ளாமையோ கிணற்று ஊசிக்காலோ தட்டுப்படுகிறதா என்று உட்கார்ந்து கவனித்தான். தூரத்தில் அரிச்சலாக ஒரு வெள்ளாமைச் சதுரம் தெரிந்தது. அவன் அவளைத் தடவினான்.

''அன்னா அங்க கெணறுபோலத் தெரியிது. போயிப் பாத்துட்டு வாறென். நீ தனியா இரிந்துக்கிடுவயா.''

அவள் மனசு தளரவில்லை.

''ம்.''

அவன் துணிப் பொட்டணத்தை அவுத்து ஒரு வேட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

''தைரியமா இரிக்கணும். நான் போனதும் வந்துடுதென்.''

அவளைப் பாதையில் உட்காரவைத்துவிட்டு வேகமாக நடந்தான். ஈரக் காற்று வெள்ளாமையை அடையாளங்காட்டியது. தோட்டத்தில் அடர்த்தியான கம்மம் பயிர். பூட்டை தள்ளும் பருவம். பெருவாய்க்காலைக் காலால் கண்டு பிடித்து கிணற்றுக்குப் போனான். கமலைக் குழியில் தண்ணீர் இல்லை. பிர யாசைப்பட்டுக் கிணற்றுக்குள் இறங்கி வேட்டியை நனைத்து தோளில் போட்டுக்கொண்டு ஏறி ஓடிவந்தான்.

மாலையம்மா துணிப் பொட்டணத்தின்மேல் துவண்டு கிடந்தாள். அவள் முனங்குவது லேசாகக் கேட்டது. அவன் குனிந்தான்.

''மால கொஞ்சம் தண்ணி குடிச்சுக்கிடுதயா.''

அவன் வேட்டித் தண்ணீரைப் பிழியப்பிழிய அவள் கையேந்திக் குடித்து முகங்கழுவினாள். கொஞ்சம் தெம்பு வந்தது. நடையைத் தொடர்ந்தார்கள்.

ஆவரம்பட்டிக்கு வரும்போது தலைக்கோழிச் சத்தம் கேட்டது. அவனுக்கு ஆறுதல். நடுக்காட்டில் குழந்தை பிறந்திருந்தால் ரெம்பச் சங்கடப்பட்டிருக் கணும். ஆம்பளைத் துணையிருந்து என்ன செய்ய. வழிநெடுக அந்தப் பயம்தான்.

அவன் மெதுவாகக் கதவைத் தட்டி உசுப்பினான். மாலையம்மா அவன் தோளில் சாய்ந்திருந்தாள். உறக்கச்சடவை முறித்துக்கொண்டு வந்த சின்னாத்தா பதறிப்போனாள்.

''அடி பாவி மவளே. நேரங்கெட்ட நேரத்துல வந்து நிக்கியே. நான் என்னத்தச் சொல்லட்டும்.''

மாலையம்மாளைக் கைத்தாங்கலாகக் கூட்டிப்போனாள்.

வீடுமுழுக்க முழித்துக்கொண்டது. விடியுமுன் ஆண்குழந்தை பிறந்தது. உள்ளேயிருந்து தொடுத்த பிஞ்சு அழுகை சண்முகத்தின் அசதியைப் போக்கி விட்டது. தன்னையறியாமல் கசிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டான்.

பொழுது விடிந்ததும் முதல்வேலையாக அவன் கழுகுமலைக்கு ஓடினான். சேதியறிந்த அம்மமுத்து வருத்தப்பட்டான்.

''எங்களக் கேவலப்படுத்திட்டயே மச்சான். தங்கச்சிய இங்கயும் அனுப்பாம அங்கயும் வச்சுப் பாக்காம எடையில ஆவரம்பட்டிக்கு ஏன் அனுப்பணும்.''

அவன் பெண்டாட்டி சுப்பம்மாளும் முனங்கினாள்.

''அவளுக்க ஆத்தா இரிந்தா இங்க வருவாவ. நம்ம ஆரு. ஏன் அண்ணனுக்குத் தெரியாதா.''

சண்முகத்துக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அண்ணன்மார் அழிந்துபோன கதையை இந்தச் சமயத்தில் சொல்லி இவர்கள் மனசை ஏன் நோக வைக்கணும். மனக் கஷ்டத்தை மறைத்துச் சமாளித்தான்.

''நல்லபடியாக் கொழந்த பொறந்ததே சந்தோசம். மத்த வெசயங்களப் பொறவு சொல்லுதென்.''

சுப்பம்மா அவசரப்படுத்தினாள்.

''ஓடனே பொறப்புடுங்க. அவ அங்க என்ன கஸ்டப்படுதாளோ. போய்க் கூட்டீட்டு வாங்க. நான் எல்லாம் பாத்துக்கிடுவென்.''

அம்மமுத்தும் சண்முகமும் கிளம்பினார்கள். வெளியே போயிருந்த பெரிய நாடார் அவர்களை வழியில் பார்த்தார். அவர்களுடைய நடைவேகத்தைக் கவனித்ததும் எதும் பேசவில்லை. வீட்டுக்கு வந்து மருமகளிடம் கேட்டார்.

''மவனும் மருமவனும் அவசரமாப் போறாவளே என்ன சங்கதி.''

''மயினிக்கு ஆம்பளக்கொழந்த பொறந்திரிக்குதாம். கூட்டிவரப் போறாவ.''

''அப்படியா. போவட்டும் போவட்டும்.''

''ஆவரம்பட்டியில இரிக்காளாம்.''

''அங்க ஏன் போனாவ.''

''அண்ணன் ஒண்ணும் சொல்லல.''

பெரிய நாடாருக்குள் குழந்தைச் சந்தோசம் குறைந்து சம்சாரத்தின் நினைவு அழுத்தியது. அந்த மனுசி இருந்திருந்தால் இவ்வளவு சங்கடம் எதுக்கு. ஒரு பெண்ணும் அலைய வேண்டியிருக்கிறது. பேச்சற்று உட்கார்ந்துவிட்டார்.

மாலையம்மா ஆவரம்பட்டியில் நாலுநாள் இருந்தாள். அஞ்சாம் நாள் கழுகுமலைக்குப் புறப்பட்டாள். அவளைப் பச்சை உடம்புடன் அனுப்ப யாருக்கும் மனசில்லை. ஆனாலும் சண்முகத்தின் வார்த்தையைத் தட்ட முடியவில்லை. சம்சாரியிடம் வண்டி மாடு கேட்டு அனுப்பிவைத்தார்கள். புறப்படும் போது சண்முகம் தன் அண்ணன்மாருக்கு வந்த கதியைச் சொன்னான்.

''பொட்டச்சிய சண்டையால ரெண்டு பேரும் வெட்டீட்டுக் குத்தீட்டுச் செத்துட்டாவ.''

அம்மமுத்து பதறினான்.

''என்ன சொல்லுத.''

''குடும்பமே கொலஞ்சுபோச்சு. மயினியள ஊருக்கு அனுப்பீட்டு அண்ணன் மாருக்கு நானே கொள்ளிவச்சுக் கொளுத்துனென். அந்த வெறுப்புல நாங்க பொறப்புட்டு வந்தொம். வாற வழியில இவளுக்கு வவுறு வலிக்க ஆரம்பிச்சிடுச்சு. எனக்கு ஒண்ணும் ஓடல. இவளுக்கிரிந்த தைரியம் எனக்கில்ல. அதனாலதான் இங்கயாச்சும் வர முடிஞ்சது.''

எல்லாரும் அதிர்ந்துபோய் மாலையம்மாளையே பார்த்தார்கள். இதுவரை அதைப் பற்றி ஒருவார்த்தைகூடச் சொல்லாமல் இருக்கிறாளே.

மாலையம்மாளின் முகத்தில் கவலை நிரம்பியிருந்தது. குழந்தையை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

தங்கச்சியின் மனத்தைரியம்பற்றி அம்மமுத்துக்குப் பெருமை. எவ்வளவு வேதனையுடன் ராத்திரி வேளையில் நடந்து வந்திருக்கிறாள். இது தெரியாமல் என்னென்னமோ பேசிவிட்டோமே. சண்முகத்திடம் நல்ல வார்த்தை சொன்னான்.

''தப்பா நெனச்சுக்காத மச்சான். அண்ணைக்கு வெசயந்தெரியாமப் பேசீட்டென்.''

சண்முகத்துக்கு நிம்மதி.

''எல்லா நெலமையும் அப்படியாயிக்கிடுச்சு. இல்லன்னா என்ன கஸ்டப் பட்டும் கழுகுமலையில வந்து வுழுந்திரிப்பொம்.''

குடும்பம் படிப்படியாகக் குலைந்த கதையைச் சொன்னான். அப்போதும் மாலையம்மா அமைதியாக இருந்தாள். அம்மமுத்து தைரியம் சொன்னான்.

''நீங்க இனிமே தெக்காட்டுக்குப் போக வேணாம். கஸ்டமோ நட்டமோ எங்களோடயே இரிங்க. நாலு பனையப் பாத்துக்கிடலாம்.''

மாலையம்மாளுக்கு ஒரு கவலையிருந்தது. ஆத்தா இருந்தால் தெம்பாகப் போகலாம். சுப்பம்மா முகஞ்சுளிக்காமல் கவனிக்கணுமே. ஆனால் அவள் கழுகுமலை போய்ச் சேர்ந்ததும் அந்தக் கவலை தீர்ந்துவிட்டது. சுப்பம்மா அவ்வளவு அக்கறையாகக் கவனித்துக்கொண்டாள். அடிக்கடி தண்ணீர் சுட வைத்து ஊற்றினாள். சோறு பொங்கிக் கொடுத்தாள். அவள் செய்யும் பக்குவங் களைப் பார்த்துப் பெரிய நாடார் பூரித்துப்போனார். சம்சாரம் இருந்தால்கூட இவ்வளவு காரியம் செய்ய மாட்டாள். பத்துப் பிள்ளை பெற்ற பெரிய மனுசி தோற்றுவிடுவாள்.

மாலையம்மா விரைவிலேயே எழுந்துகொண்டாள். பச்சை உடம்பிலும் தெம்பு வந்தது. ஏண்ட வேலைகளைச் செய்தாள். அவள் முகத்தில் பழைய களை யில்லை. குழந்தைக்குப் பால்கொடுக்கும்போது கவனம் எங்கேயோ இருந்தது. இதை சுப்பம்மா அடிக்கடி கவனித்தாள். இருந்தாலும் நேரில் சங்கதிகளைக் கிளற வில்லை.

சண்முகம் அம்மமுத்துக்குத் துணையாகத் தொழில்செய்தான். ஊரிலிருந்து கொண்டுவந்த பாளையரிவாளைத் தவிர வேறு சாமான்கள் இல்லை. மாலை யம்மாளும் சுப்பம்மாளும் பதினிக் குடுவையிலிருந்து சகல சாமான்களையும் செய்துகொடுத்தார்கள். சந்தை நாட்களில் அவர்கள் பதினியும் நுங்கும் விற் றார்கள். பெரிய நாடார் கைவலிக்க நுங்கு உடைத்துக் கொடுத்தார். மாட்டுத் தாவணியில் நல்ல விற்பனை இருக்கும். சரக்கைச் சுமக்கத்தான் வேணும்.

சண்முகத்துக்கு அடிக்கடி பழைய சம்பவம் நினைவுக்கு வந்தது. குழந்தை களை நினைத்தால் ஒண்ணும் ஓடாது. சாப்பாடு செல்லாது. பனையில் பாளை சீவும்போது கண்ணீர் வரும். குழந்தைகளை வைத்துக்கொண்டு மதினிமார் எப்படிக் காலந்தள்ளப்போகிறார்களோ. மாலையம்மாளிடம் பொருமினான்.

''வாய்த்துடுக்கால ரெண்டு உசிரு போச்சு.''

அவள் சொன்னாள்.

''கருப்பட்டித் துட்டு கசப்பக் கொண்டுவந்துடுச்சு.''

''அவளுவதான் அறிவில்லாமச் சண்டபோடுதாவன்னா இவனுவ யோசிக் கணுமில்ல.''

''நான் எவ்வளவோ சொல்லியும் கேக்கலயே.''

''நடுக்காட்ல பனையத் தொத்திக் காலந்தள்ளியும் புத்தி வரலயா. இவனு வளுக்குப் பொண்டாட்டி புள்ளையெதுக்கு. நெனச்சாக் கோவந்தான் வருது.''

அவன் ஆறியிருக்கும் சமயத்தில் மாலையம்மா கேட்டாள்.

''புள்ளியளப் பாத்துட்டு வரப்புடாதா.''

''இனிமே பொட்டச்சிய மூஞ்சியில முழிக்கச் சொல்லுதயா.''

''சின்னதுவ கண்ணுக்குள்ளயே இரிக்கு.''

''நான் போவல.''

அவள் வற்புறுத்தவில்லை. வெறுப்பில் இருக்கிற மனுசனைக் கிளறி ஏன் நிம்மதியைக் கெடுக்கணும்.

சண்முகத்துக்கு ஒரு நினைப்பு ஓடியது. பனந்தோப்புக்குள் இவ்வளவு நடந்ததுக்கு எப்படியும் ஆள் தேடிவரும். இதுக்குள் வந்திருக்கணும். நடந்தது சின்னக் காரியமா. ரெண்டு கொலை. அதையும் காணாப் பிணமாக்கியாச்சு. எவ்வளவுதான் காடாக இருந்தாலும் மற்றவர்களுக்குத் தெரியாமலா இருக்கும். தோப்புக்காரன் காதுக்கு எட்டியிருக்கும். தீவைப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. எத்தனை பனை கருகிப்போச்சோ. புதுசாக வளர்த்துப் பலன் கிடைக்க ஒரு தலைமுறையாகிவிடும்.

பனையடியில் அம்மமுத்திடம் சொன்னான்.

''இம்புட்டு நாளாச்சு என்னய ஆரும் தேடி வரலயே.''

''கொலையா செஞ்ச தேடி வர.''

''அப்படித்தான தோணும். ஒருவேள பொட்டச்சியள இம்சப்படுத்தியிரிப்பானோ.''

''ஏன் அனத்துத மச்சான். ஒண்ணும் வராது. பேசாம வேலையப் பாரு.''

''விடிலி தற்செயலாத் தீப்புடிச்சு உள்ள மாட்டியிருப்பாவன்னு நெனச்சுக்கிட்டானோ.''

''அப்படியும் இரிக்கும். இல்ல தோப்புக்காரன் நமக்கேன் வம்புன்னு மூடி மறச்சிருப்பான்.''

சண்முகத்துக்குள் ஒரு உறுத்தல் இருந்தது.

''எப்படியானா என்ன. ஒந் தங்கச்சிய ஒப்படைக்க வேண்டிய எடத்துல ஒப்படச்சிட்டென். பேரு சொல்ல ஒரு பயலும் பொறந்தாச்சு. குடும்பத்துல நான் ஒருத்தன் மட்டும் இரிந்து என்ன செய்யப்போறென்.''

''அவிய புத்தியக் கடங்குடுத்துட்டுச் செத்தாவன்னா நம்மளும் சாவணுமா. பொண்டாட்டி புள்ளையப் பத்திக் கவலயில்லாமப் பேசுதயே.''

''ஒந் தங்கச்சி பொழப்பு போயிடும்னு சொல்லுத. அங்க ரெண்டு கழுத தாலியறுத்துட்டு நிக்கிதே அவியள என்ன செய்ய.''

''பண்ணுன பாவத்தப் பட்டுத்தான் தீக்கணும்.''

சண்முகம் நெஞ்சுக் காய்ப்பில் குத்திப் பழுத்திருந்த பனஞ்சிராய்களைப் பிதுக்கி எடுத்துக்கொண்டிருந்தான்.

''எவ்வளவு காலத்துக்கு அனுபவிக்கிறது.''

''பேசாம இரியேன். தங்கச்சிக்குத்தான் அந்தக் கவலன்னா நீயும் பொலம்புதயே.''

''பனையத் தொத்திக்கிட்டுத் திரியிறவரைக்கும் அது மறக்காது. பாள சீவுத புத்தியும் போவாது.''

''தொழில வுட்டுட்டுப் பரதேசம் போவச் சொல்லுதயா.''

''நம்ம ரண்டு பேரும் சண்டபோட்டுக்கிடுவமோன்னு பயமாரிக்கு. அருவாளக் கீழ போட்டுட்டுக் கூலி வேல செஞ்சு பொழைக்கலாம்னு மனசில ஓடுது.''

சண்முகம் பதினியை வடிகட்டிவிட்டுப் பனஞ்சில்லாடையில் தங்கியிருக்கும் தேன்குளவிகளையும் கட்டெறும்புகளையும் கீழே தட்டினான். செத்ததுகளுக்கு நடுவில் நுரைச் சுமையுடன் எழுந்து நடக்கப் பிரயாசைப்படும் ஓரிரு தேன் குளவிகளைப் பார்த்துக்கொண்டிருந்தான் அம்மமுத்து.

## 2. கும்பிய கருப்பட்டி

மாலையம்மாளுக்குத் தன் பிள்ளை அழும்போதெல்லாம் பனந்தோப்பில் சிறிசுகள் கூக்குரலிடும் நினைவுதட்டும். தொட்டிலை ஆட்டிக்கொண்டே அழுவாள். எல்லாரும் சிதறிப்போன துயரம் மனசைப் பிழியப்பிழிய கண்ணீர் பதினியாக ஊறிச் சொட்டும்.

மூணு குடும்பங்களும் எவ்வளவு ஒற்றுமையாக இருந்தன. வாசல்தான் மூணு. மற்ற அத்தனையும் நிரப்புக்கலப்பாக ஒரே குடும்பம்போல் நடந்தது. சண்டை சச்சரவு உண்டுமா. மனச்சடவுதான் உண்டுமா.

மூத்தவன் சிவசங்கு. நடுவுளவன் சின்னக்கருப்பன். மூணாவது சண்முகம். அக்கா தங்கச்சி கிடையாது. சின்ன வயசிலேயே தாயும் தகப்பனும் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். குடும்பத்தில் சிவசங்குதான் தகப்பன். சகலமும் அவன் பொறுப்பு. எதானாலும் அவன் சொன்னால் சரி.

பூர்வீக ஊர் அய்யாபுரம். ஊரைச் சுற்றி நிற்கும் பனைகளைப் பொதுவில் கவனித்துப் பனை வாரம் கொடுத்துவந்தார்கள். மூணு பேரும் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து எந்தக் கசப்புமில்லாமல் தொழில் நடந்தது. ராவும் பகலும் அயராமல் பாடுபட்டார்கள்.

மூத்தவன் அருங்குளத்தில் ஆத்தியம்மாளைக் கலியாணம் முடித்தான். ரெண்டு பெண் குழந்தை பிறந்தது. நடுவுளவனுக்கு நம்பியாபுரத்தில் பார்வதியைச் சம்பந்தம் பண்ணினார்கள். அவனுக்கு ஒரு ஆண் ஒரு பெண் பிறந்ததும் சண்முகத்துக்குத் துணை தேடினார்கள். தெக்காட்டில் கிடைக்கவில்லை. மூத்தவன் அலையாய் அலைந்து கடைசிக்கு கழுகுமலை பெரிய நாடாரிடம் போய் மாலையம்மாளைப் பேசி முடித்தான். தாலிகட்டும் பொறுப்புத்தான் சண்முகத்துக்கு. மற்ற எல்லாக் காரியங்களையும் மூத்தவன் கவனித்துக்கொண்டான்.

ஒரு மாசம் ஆகியிருக்காது. மூத்தவன் தம்பிமாரைக் கூப்பிட்டுச் சொன்னான்.

''குடும்பம் மூணாகிப்போச்சுலே. நிக்கித பனையில தொழிலு செஞ்சு கட்டுப்படியாவாது. வேற வேலையும் செய்ய வழியில்ல. இத நம்பிப் பொழைக்க முடியாது.''

அவர்கள் பதில் பேசவில்லை. மூத்தவன் மனசில் திட்டமில்லாமல் வார்த்தையை விட மாட்டான். அவனுக்கு எது நல்லதென்று தோன்றுகிறதோ அப்படியே செய்யட்டும்.

மூத்தவன் நடுக்காட்டிலிருந்த பனந்தோப்பை வாரத்துக்குப் பிடித்தான். தோப்பு ஊரிலிருந்து தூரம். ஊரில் குடியிருந்துகொண்டு அங்கே போய்த்

தொழில்பார்க்கத் தோதுப்படாது. தோப்பிலேயே மூணு விடிலி போட்டுக் குடியேறினார்கள். அவன் தம்பிமாரிடம் சொன்னான்.

''நீ மேக்க நிக்கித பனையக் கவனிச்சுக்கோ... நீ கெழக்க பாத்துக்கோ... மிச்சம் எனக்கு.''

சண்முகம் கேட்டான்.

''எல்லாம் பொதுவாச் செய்வமா.''

''வேணாம்லே. இன்னிமே தனியா இரிந்துக்கிடதுதான் நல்லது. சின்னக் கருப்பன் என்ன சொல்லுதான்.''

நடுவுளவன் சம்மதித்தான்.

''அதும் சரிதான்.''

சண்முகத்துக்கு மூத்தவனின் முடிவு புரிந்துவிட்டது.

''அப்படின்னா பனைய நீயே பிரிச்சுக் குடுத்துடு.''

மூத்தவன் பனைகளை எண்ணி மூணாகப் பகிர்ந்துகொடுத்தான். தனித் தனியாகச் சாமான்கள் சம்பாரித்துத் தொழிலைத் தொடங்கினார்கள். பெரும் பாலும் மூத்தவன்தான் எல்லாருடைய பதினியையும் கொண்டுபோவான். கிடைக்கிற துட்டைப் பகிர்ந்துகொள்வார்கள். பதினி அளவுப்படி சல்லி மாறிக் கொடுத்துவிடுவான்.

சீமெண்ணெய் முதல்கொண்டு குடும்பத்துக்குத் தேவையான சாமான்களை அவனே வாங்கிவருவான். விற்பனைக்குப் புறப்படுமுன் மெனக்கிட்டு நின்று கேட்பான்.

''ஒனக்கென்ன வேணும். அவளுக்கென்ன வேணும். வந்து சொல்லுங்க.''

குழந்தைகளும் தங்கள் பங்குக்கு ஒவ்வொண்ணாகச் சொல்வார்கள். அவன் மாலையம்மாளைக் குறும்புடன் பார்ப்பான்.

''அடுத்த வருசம் ஒம் புள்ளைக்கும் வாங்கி வரணும்.''

மாலையம்மாளுக்குப் பதினிமுட்டியாகத் திரண்டிருக்கும் வயிறு பெரி சானது போலிருக்கும். கண்ணை மூடிச் சிரிப்பாள்.

பனங்காட்டில் தனித்துக் குடியிருப்பதே தெரியவில்லை. அவ்வளவு சந் தோசமாக இருந்தார்கள்.

பார்வதி என்ன நினைத்தாளோ ஒருநாள் படக்கென்று சொல்லிவிட்டாள்.

''பயினியே வித்துப் பொழைக்க முடியுமா. கருப்பட்டியும் காச்சி வித்தா நல்ல துட்டுக் கெடைக்கும்.''

இது மூத்தவன் காதுக்கு எட்டியது. அவன் மறுப்புச் சொல்லவில்லை.

''துட்டுவச்சுப் பொழைக்கணும்னு ஆச வந்துடுச்சா. எவ்வளவுன்னாலும் காச்சுங்க. எனக்குச் சொம கொறவுதான்.''

அக்கறையாகக் கருப்பட்டி காய்ச்சினார்கள். என்னேரமும் அடுப்பு எரிந்தது. விறகு தேடிப் பத்திரப்படுத்தினார்கள். தாழியில் பொங்கும் பதினியில் கப்பி முத்து போட்டு நுரையை அடக்கிக்கொண்டே ஏனோதானோவென்று பேசி னார்கள். அதும் கருப்பட்டியைப் பற்றியே இருந்தது.

கூப்பனிப் பக்குவத்தில் நல்ல மணம் கிளம்பியது. அவர்களுக்குச் சந்தோசம் பெருகியது. பாகு சடைப்பிடித்ததும் நன்றாகக் கிண்டி உறைய வைத்துக் கண்

சிரட்டையில் ஊற்றிக் காவலிருந்தார்கள். குழந்தைகளுக்குக்கூடக் கருப்பட்டி கொடுக்க மனசில்லை.

மாலையம்மாளுக்கு இதில் அவ்வளவாகப் பிரியமில்லை. ஒருத்திக்கொருத்தி உட்கார்ந்து பேசக்கூட நேரமில்லாமல் அப்படியென்ன வேலை வேண்டிக் கிடக்கிறது. குழந்தைகளுக்குக் கொடுக்காமல் விற்றுத் துட்டுச் சேர்க்கணுமாக்கும்.

மூத்தவன் கருப்பட்டியும் விற்று வந்தான். வழக்கம்போல் துட்டைப் பகிர்ந்து கொடுத்தான்.

விறகுக்காகப் பார்வதிக்கும் ஆத்தியம்மாளுக்கும் லேசான சடவு வந்தது. சல்லிக்காசு பெறாத விறகு. சின்னவள் பெரியவளைக் களவுசாட்டினாள். அதனால் ரெண்டு பேருக்கும் பேச்சுவார்த்தை நின்றுவிட்டது. விடிலிக்குள்ளேயே இருந்து கொண்டு முணுமுணுத்தார்கள். சண்டை அப்படியே ஓய்ந்துவிடும் என்று மாலை யம்மா நினைத்தாள். ஓய்வதாக இல்லை. ஊதிஊதிப் புகைய வைத்தார்கள்.

ஒருநாள் பார்வதியின் குரல் வித்தியாசமாகக் கேட்டது.

''நல்ல கருப்பட்டிக்கும் கும்பிப்போனதுக்கும் ஒரே வெலதானா.''

ஆத்தியம்மாளுக்கு இது பிடிக்கவில்லை. எதிர்த்துக்கொண்டாள்.

''நாங்க அலஞ்சு திரிஞ்சு வித்துட்டு வந்து எண்ணிக்குடுக்கிறதுமில்லாம இந்தப் பேச்சு வேற கேக்கணுமா.''

''ஆதாயமில்லாமயா அலைவாவ. பொருளுக்குண்டான துட்டக் குடுத் துட்டா ஏன் பேசுதொம்.''

மாலையம்மாளும் சண்முகமும் தவித்துக்கொண்டிருந்தார்கள். விவகாரம் போகிற போக்கைக் கவனித்துவிட்டு மூத்தவன் வெளியே வந்து தம்பிமாரைக் கூப்பிட்டான்.

''இனிமே ஒங்க வரவுசெலவு ஒங்களோட. எனக்கிட்ட வச்சுக்கிட வேணாம்லே.''

சின்னக்கருப்பன் விசனப்பட்டான்.

''இப்ப என்ன சொல்லீட்டாவளாம்.''

''இனியும் என்னல சொல்லணும். அவ பேசுதது ஒனக்கும் சந்தோசந்தானா.''

''அவ ஒண்ணும் தப்பாப் பேசலயே.''

''அப்படியா. எனக்கு வேணும். ஒங் கணக்க நீயே பாத்துக்கோ.''

''ஒருத்தன் கணக்க இனியொருத்தன் பாக்க வேணாமே.''

''நான் ஒனக்கு இனியொருத்தனாயிட்டனா. ஏன் பேச மாட்ட.''

மூத்தவன் நடந்துவிட்டான். சண்முகத்துக்கு மனசு ரெம்பச் சங்கடப் பட்டது. அண்ணன் தம்பிக்குள் பேச்சு ஒருநாளும் இப்படித் தடித்ததில்லை. நடுவுளவனைப் பார்த்தான்.

''சின்ன வெசயத்துக்குப் போயி இப்படிப் பேசிக்கிடணுமா.''

''அப்படித்தாம்ல பேசுவென். ஒந் துட்டுன்னா வலிக்கும்.''

சண்முகம் ஊமையாகிவிட்டான். அதிலிருந்து மூணு பேரும் அவரவர் கருப்பட்டியைச் சுமந்துகொண்டு விற்கப் போனார்கள். தனித்தனித் தோப்பில் இருப்பதுபோல் பனை வேலைகளைக் கவனித்தார்கள்.

குடும்பங்களுக்குள் பேச்சுவார்த்தையும் அன்னியோன்னியமும் குறைந்தன. ஆத்தியம்மாளும் பார்வதியும் புழுக்கத்தை மறக்கவில்லை. நிதமும் ஒருவர் சொத்தை ஒருவர் அமுக்கிவிட்டதுபோல் பேசிக்கொண்டார்கள்.

முந்தியெல்லாம் சாப்பாட்டு வேளையில் குழந்தைகள் விடிலிக்கு விடிலி சோறு வெஞ்சனத்தைப் பரிமாறிக்கொண்டு திரிவார்கள். அதுக்குப் பதிலாக இப்போது பெண்கள் வசவைப் பரிமாறினார்கள். அடுத்த விடிலிக்குப் போக வேணாமென்று குழந்தைகளை அரட்டி அடித்தார்கள். மாலையம்மாளுக்கு வேதனையாக இருந்தது. பாவம் சிறிசுகள் என்ன செய்யும். அதுகளுக்குள் ஏன் கசப்பை உண்டாக்கணும். கெஞ்சிப்பார்த்தாள்.

''இவ்வளவு காலமா ஒத்துமையாரிந்துட்டு இப்பச் சண்டையெதுக்கு. நம்ம சண்ட போட்டுக்கிட்டா வெலக்கிவுட ஆருமில்ல.''

அவர்கள் நிறுத்துவதாக இல்லை. புருசன்மாரிடம் தொணதொணத்தார்கள். ராத்திரி படுக்கும்போது ஆண்கள் சத்தங்கூட விறைப்பாகக் கேட்டது. ரெண்டு பெண்களும் மாலையம்மாளை நீ எந்தப் பக்கம் என்பதுபோல் ஊடுருவிப் பார்த்தார்கள். அவளிடம் ஒருத்தியின் குழந்தை இருந்தால் மற்றவள் முறைத்துக்கொண்டு போனாள்.

நிலைமையைக் கண்டு பொறுக்காமல் மூத்தவன் நடுவுளவனைக் கண்டித்தான்.

''என்னல ஒம்பொண்டாட்டி வாயி அதியமாப் பேசுதா. அடக்கிவையி.''

நடுவுளவன் தாழ்ந்துபோகவில்லை.

''நம்ம பொண்டாட்டிய அடக்க முடியாம அடுத்தவனக் கேக்க வந்துட்டாவ.''

மாலையம்மா சண்முகத்திடம் பதறினாள்.

''பாத்தியளா அவிய பேசிக்கிடத. இது நல்லதுக்கில்ல. நீங்க சொல்லுங்களேன்.''

''தம்பி சொல்லியா அண்ணனுக்கு அறிவு வரணும்.''

அவன் எரிச்சலில் பனைக்குப் போய்விட்டான். ராத்திரி மாலையம்மாளுக்குப் பயம் அதிகமானது.

''இவியள நம்பி நான் இங்கரிந்து கொழந்த பெறவா. நாளைக்கே கழுகு மலைக்குக் கூட்டீட்டுப் போங்க.''

சண்முகம் அவளை அமைதியாகத் தட்டிக்கொடுத்தான். அவனுக்குப் பெரிய யோசனை. கழுகுமலைக்குப் போய்த் திரும்பணுமென்றால் நாலஞ்சு நாளாகிவிடும். அதுவரை பனைகளைச் சும்மா போட முடியாது. காலாகாலத்தில் பாளை சீவிப் பக்குவம்பார்த்துப் பதினி இறக்கவில்லையென்றால் தொழில் கெட்டுவிடும். இருக்கிற நிலைமையில் அண்ணன்மாரிடம் சொல்ல முடியாது. அவர்களுக்குள் பேச்சுவார்த்தை கிடையாது. எதுக்கு இப்படி. நினைத்தால் வெறுப்பாக இருக்கிறது. பொம்பளைதான் அறிவில்லாமல் பேசுகிறாள். ஆம்பளைக்கு எங்கே போச்சு. யோசித்துப் பார்க்க வேணாமா. நடுக்காட்டில் அடித்துக்கொண்டால் கேவலந்தானே. இருந்தாலும் சின்னவனுக்கு இது ஆகாது. மூத்தவன் தகப்பனைப் போல் வளர்த்து ஆளாக்கியவன். அவனை மரியாதைக் குறைச்சலாகப் பேச

எப்படி மனசுவந்தது. சொன்னால் விடைத்துக்கொண்டு போவான். இது எதில் கொண்டுபோய் முடியப்போகிறதோ.

கழுகுமலையில் மாலையம்மாளின் ஆத்தா தவறிப்போய் நாளாச்சு. அப்பன் அண்ணன் மதினி மூணு பேர்தான். அங்கே போனால் பேறுகாலத்தை மதினிதான் கவனிக்கணும். அவளுக்குக் கலியாணமாகிக் கொஞ்ச நாள்தான் ஆகிறது. குழந்தையில்லை. போனால் வீண் தொந்தரவு. அப்படியே அனுப்பினாலும் உறுத்தாகக் கவனிக்கணுமே.

சொந்தத்தில் பார்த்தாலும் யாருமில்லாத பிழைப்பு. ஆவரங்காட்டில் சின்னாத்தா வீடு உண்டு. இங்கே மதினிமாருக்குப் புறணி பேச நேரமில்லை. மாலையம்மாளா முக்கியம்.

மாலையம்மாளின் அண்ணன் அம்மமுத்து கூப்பிடாமலில்லை.

''கஸ்டத்தப் பாராம தங்கச்சிய அனுப்பலாமில்ல.''

சண்முகம் மழுப்பிவிட்டான்.

''அந்த நேரத்துல சவுரியம் எப்படியோ அப்படிச் செஞ்சுக்கிடுவொம்.''

குடும்ப நிலைமை மோசமாவதைப் பார்த்து அவனுக்குக் கவலை கூடியது. அம்மமுத்துடன் அனுப்பியிருக்கலாம். சொகமாகப் பெற்றெடுத்துக்கொள்வாள். ரெண்டுங்கெட்ட நேரத்தில் என்ன செய்வது. இப்படியே உளைச்சலில் காலம் போனது.

அதுக்குள் ஒரு நாள் கருப்பட்டிச் சண்டை வந்துவிட்டது. காய வைத்த கருப்பட்டியில் நிறைய வட்டுக்களைக் காணவில்லையென்று பார்வதி சாமியாடினாள். ஆத்தியம்மாளை வலியச் சண்டைக்கிழுத்தாள். பெரியவள் நேரடியாக எதிர்த்துக்கொண்டாள். இது என்றைக்கோ வெடித்திருக்க வேண்டியது.

ரெண்டு பேரும் கண்டபடி பேசினார்கள். மாலையம்மாளால் தீர்த்து வைக்க முடியவில்லை. ஒதுங்கி உட்கார்ந்துவிட்டாள். சண்முகம் இதைப் பெரிசு படுத்தவில்லை. வழக்கமான சண்டையென்று நினைத்து வேலைக்குப் போய் விட்டான்.

தூரத்தில் வேலைகளை முடித்துக்கொண்டு விடிலிப் பக்கம் பனைக்கு வந்த மூத்தவனுக்குச் சண்டையைப் பார்த்ததும் கோவம் வந்துவிட்டது. சின்னவள் பெரியவளைத் தாறுமாறாகப் பேசி அடிக்கப்போவது பிடிக்கவில்லை.

''அதோட பேச்சு நிறுத்துளா. இல்ல தலையச் சீவிப்புடுவென். வாயி தடிச்சிட்டதோ.''

சண்டை முணுமுணுப்புக்கு வந்தது. மூத்தவன் பனையில் ஏறி வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தான். கொஞ்சநேரத்தில் நடுவுளவன் வந்தான். வந்ததே சரியென்று பெண்டாட்டி பலமாக அழுதாள். அவனுக்குத் தாங்கவில்லை.

''என்னளா நடந்தது.''

''நம்ம தலையச் சீவுவாவளாம்.''

அவள் அழுகையை உயர்த்தினாள்.

''ஆரு சொன்னது.''

''அன்னா ஒங்கண்ணன்.''

''எம் மசுரக்கூட அசைக்க முடியாது. ஆரு தலைய ஆரு சீவுதாவன்னு பாப்பொம்.''

அவன் விடிலிக்குள் பாய்ந்து வேல்கம்பை எடுத்துவந்தான். மூத்தவன் இருந்த பனையையொட்டி நின்ற இன்னொரு பனையில் ஏறினான். பெண்டாட்டி பிடிக்கப் பிடிக்க உதைத்துத் தள்ளிவிட்டுத் தொற்றினான்.

ஆத்தியம்மா திட்டினாள்.

''கொலகாரப் பாதவத்தி மூட்டிவுட்டுட்டாளே.''

மூத்தவன் இதை எதிர்பார்க்கவில்லை. காரியம் கெட்டுப்போச்சு. இனிமேல் இறங்கவும் முடியாது. அடுத்த பனைக்குத் தாவவும் தோதில்லை.

''ஏல கீழ எறங்கு. வீணால சாவாத.''

''ஒன்னக் கொல்லாம எறங்கப்போறதில்ல.''

தம்பி கத்திக்கம்பை ஏந்தியபடி ஏறிக்கொண்டிருந்தான்.

''நல்ல ஆம்பளன்னா கீழவச்சுப் போட்டுப் பாக்கணும்.''

''மேலயே வச்சுக்கிடுவொம். இரு வாறென்.''

''பொட்டச்சி பேச்சக் கேட்டு அழிஞ்சுபோவாத. நான் சொல்லுதக் கேளு.''

''தலையச் சீவுதவனா நீ.''

வேறு வழியில்லை. அண்ணன் தயாரானான். மனசில் வருத்தந்தான். என்ன செய்வது வளர்த்த கிடாயே நெஞ்சில் பாய வரும்போது தடுத்தாகணுமே.

கருக்கு மட்டைகளை வெட்டி வேல்கம்பு பிடித்திருந்த தம்பியின் கையைக் குறிவைத்து எறிந்தான். அவற்றைக் கம்பு தட்டிவிட்டது. கடிப்பை எறிந்தான். குறி தப்பிவிட்டது. பதினி முட்டிகளை அறுத்து ஓங்கிப் போட்டான். அவை பனையிலும் தலையிலும் உடைந்து சிதறின. அதனாலும் தடுக்க முடியவில்லை.

கீழே எல்லாரும் அண்ணாந்தபடி அழுது கூச்சலிட்டார்கள். மாலையம் மாளுக்குத் தலைசுற்றியது. திண்ணறலில் கெஞ்சினாள்.

''எறங்கி வாங்களேன். கையெடுத்துக் கும்புடுதென்.''

ஆத்தியம்மா மாலையம்மாளிடம் வந்து தலையிலடித்துக்கொண்டு புலம் பினாள்.

''ஒம் புருசனக் கூப்புடேன்.''

வயிற்றிலிருந்த குழந்தை நெஞ்சுக்கு ஏற மாலையம்மா சத்தம்போட்டுப் புருசனைக் கூப்பிட்டாள்.

இதுக்குள் நடுவுளவன் வேல்கம்புடன் பனைக் கழுத்துக்குப் போய் விட்டான். சொதி மட்டைக்கடியில் ஒளிந்துகொண்டு கம்பை உயர்த்திப் பிடித்து அண்ண னைக் குத்தினான். அண்ணன் குருத்து மறைவில் பதுங்கிக் கம்பைக் கக்கத்தில் இடுக்கிப் பிடித்தான். தாமரிக்க முடியவில்லை. கத்தி உருவி பின்விலாவில் கிழித்துவிட்டது. அப்படியும் அவன் வேல்கம்பைப் பிடுங்குவதிலேயே குறியாக இருந்தான்.

''வேணாம்ல.''

தம்பி கேட்பதாக இல்லை. மூர்க்கமாகக் கம்பைப் பின்னுக்கிழுத்தான். அவன் கண்களில் வெறி ஏறிக்கொண்டிருந்தது.

ஆத்தியம்மாளின் குரல் மெலிந்து கேட்டது.

''புள்ளியளக் கொஞ்சம் பாருங்க. எறங்க மாட்டியளா.''

அண்ணன் முடிவுக்கு வந்தான். சாகப்போவது உறுதி. இனிமேல் இவனை விட்டுவைக்கக் கூடாது. வேல்கம்பை அரிவாளால் வெட்டலாமென்றால்

அதுக்கும் வசமில்லை. இவன் இறங்கவும் மாட்டான். ரெண்டிலொண்ணு பார்க்காமல் முடியாது.

எறிவதற்கு வசமாக அரிவாளைப் பிடித்துக்கொண்டு பின்னால் உடம்பைச் சாய்த்தான். இந்தத் தடவை வந்த கத்திக்குத்தை நடுவிலாவில் வாங்கிக்கொண்டு கம்பைப் பலமாகப் பிடித்து உயிர்போகும் வெறியில் தம்பியைக் குறிவைத்து அரிவாளை எறிந்தான். அது தம்பியின் தோளில் பாய்ந்து கழுத்தை வளைத்துக் கொண்டது. அவ்வளவுதான். ரெண்டு பேரும் கீழே விழுந்தார்கள். சாவுத் துடிப்பில் மணல் சிதறி ஓய்ந்தது.

எல்லாம் கொஞ்ச நேரத்தில் முடிந்துவிட்டது. தறித்துப்போட்ட பனை களாகச் சாய்ந்துவிட்டார்கள்.

## 3. பனையும் துணையும்

சண்முகம் மாலையம்மாளிடம் வேறு மாதிரியாகப் பேச்சுக்கொடுத்தான்.

''மால எத்தன நாளைக்கு இப்படியே காலந்தள்ளப்போறொம்.''

அவள் பேச்சுத் தினுசைப் புரிந்துகொண்டாள்.

''இங்க வந்து எத்தனையோ வருசமாயிட்டதுபோலப் பேசுதியளே.''

''ஏழெட்டு மாசமாச்சில்ல.''

''அதுக்கென்ன இப்ப.''

''அவியள அண்டிப் பொழைக்கிதது நல்லால்ல. ஒன் அண்ணங்கிட்டச் சொல்லப்புடாதா.''

''நான் சொன்னா மயினி சடச்சுக்கிடுவா. நீங்க சொல்லுங்க.''

அவன் அம்மமுத்திடம் வார்த்தையைப் போட்டான்.

''ஒங்கள இனியும் கஸ்டப்படுத்துதது சரியில்ல. நாங்களும் தனியாத் தொழிலு செய்யணுமில்ல.''

இதைப் புரியாதவனா அம்மமுத்து.

''எங்களுக்கொண்ணும் கஸ்டமில்ல. மருமவனுக்காகச் சம்பாதிக்கணும்னு நெனப்பு வந்துடுச்சு ஒனக்கும் தங்கச்சிக்கும்.''

''அப்படியே வச்சுக்கிடுவொம்.''

''தனியாத்தான தொழிலு செய்யணும். நான் கொஞ்சம் பன வுடுதென் பாக்கியளா.''

''ஒந்தொழில்ல பங்குபோடவா. வேணாம்.''

அம்மமுத்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். இருந்தாலும் பெரிய நாடாரிடமும் சொல்லத் தயக்கம். இந்தப் பேச்சை அவனே தூண்டியதாக நினைத்துவிட்டால் தப்பு. மற்றவர்கள் யாரும் அவரிடம் நேரில் கேட்கவும் மாட் டார்கள். வேறு வழியில்லை. போய்த்தான் ஆகணும். சங்கடப்பட்டுக் கொண்டு போனான்.

''அவிய நம்மளோட இரிக்கக் கூச்சப்படுதாவ.''

பெரிய நாடார் ஒருச்சாய்த்துப் பார்த்தார்.

‘‘என்ன கூச்சம்.‘‘

‘‘தனியாத் தொழிலு செய்யணும்னு நெனப்பு.’’

‘‘அது தப்பில்ல.’’

அம்மமுத்துக்கு இப்போதுதான் நிம்மதி வந்தது.

‘‘நான் எவ்வளவோ சொல்லிப்பாத்தென். கேக்கல.’’

‘‘தொழிலுன்னு வந்தா தனியாப் பாக்கிததுதான் சரி.’’

‘‘ஏதாவது ஏற்பாடு செய்யணும்’’

“நீ பன வுடுதயா. அவியளுக்கு விடிலியொண்ணு போட்டுக் குடுத்துடலாம்.’’

‘‘அதுக்கும் ஒத்துக்கிடல.’’

‘‘வேற எங்க அனுப்பலாம்.’’

அம்மமுத்துக்கு மறுபடியும் தயக்கம்.

‘‘கிட்டத்து ஊருன்னா நல்லது.’’

‘‘அப்படி எந்த ஊரு இரிக்கு.’’

‘‘கலிங்கலூருணிக்கு அனுப்பலாமா.’’

‘‘நல்ல ஊருதான். அங்க ஆரும் தொழிலுப் பாக்கலயா.’’

‘‘இல்ல. அண்ணைக்குப் பாத்தென். பனைக சும்மாதான் நிக்கிது.’’

‘‘அங்க போனாச் சச்சரவில்ல. கலிங்கலாண்டி கவனிச்சுக்கிடுவான். இந்தச் சந்தைக்கு அவன் வரட்டும்.’’

அம்மமுத்து பெருமூச்சு விட்டான். கலிங்கலூருணி கழுகுமலையிலிருந்து நடைத்தூரந்தான். நினைத்தால் ஒரெட்டு போய்ப் பார்த்துவிட்டு வரலாம்.

ஆண்டிக்கும் பெரிய நாடாருக்கும் நல்ல பழக்கம். செய்முறை உறவுகூட உண்டு. அவன் வீட்டுச் சோலிக்கு ஓலை தேவைப்பட்டால் கலிங்கலிலிருந்து வண்டி வரும். எந்த வார்த்தையுமில்லாமல் ஓலைக்கட்டை ஏற்றிவிடுவார் பெரிய நாடார். மறுசந்தைக்கு ஒருமூடை தவசம் வந்து இறங்கும். அவர் கோவித்துக்கொள்வார்.

‘‘ஓலக்கெட்டுக்குப் போயி ஒருமூட தவசம் குடுத்தா எப்படி. வம்பு ரெம்பத்தான்.’’

அவனும் சளைக்க மாட்டான்.

‘‘உசிரக்குடுத்து ஒதஞ்சு பனையேறி வெட்ன ஓலைய ஒரு கணக்குவழக்கில்லாம ஏத்திவுடுறது வம்பா பூளக்கொழுப்பா. தெரியாமத்தான் கேக்கென். குலுக்கையில கெடக்கிற தவசத்தச் சின்னதுக அள்ளிப் பண்டம் வாங்கித் திங்கிதுக. அதுல கொஞ்சம் அள்ளுனாக் கொறஞ்சா போகுது.’’

அவன் சந்தைக்கு வந்துவிட்டால் ரெண்டுபேரும் உட்கார்ந்து பேசுவார்கள் பேசுவார்கள் அப்படிப் பேசுவார்கள். மிச்சத்தை அடுத்த சந்தைக்கு வைத்துக் கொள்வார்கள். இல்லை அவர் கலிங்கலுக்குப் போவார்.

நாடாரை வைத்து அம்மமுத்துக்கும் ஆண்டியிடம் பழக்கம் உண்டு. ஒரு இட்டடிமுட்டடி வந்தால் உடனே அவன்தான் போவான். எல்லா ஒத்தாசனையும் கிடைக்கும். அவன் கலியாணத்துக்கு ஆண்டி ரெண்டு கூடார வண்டி அனுப்பினான். அவனை ஆண்டி பேர் சொல்லிக் கூப்பிட மாட்டான். எப்போதும் ‘சின்னவரு’தான்.

ஆண்டி சந்தைக்கு வந்தபோது அம்மமுத்து சங்கதியைச் சொன்னான்.

''பெரியாளு நம்ம தங்கச்சியும் மச்சானும் எங்களோட இரிக்காவல்ல...''

''பாவம் இப்பத்தான் அதுக மொகத்தப் பாத்த மாதிரி இருக்குது. தாயில்லாப் பொண்ணுக்கு இம்புட்டுச் சோதன வரப்புடாது.''

''அவிய எங்களோட குடியிரிக்கக் கூசுதாவ.''

''பெரிய நாடாரு மகளாச்சே.''

''கலிங்கல்ல தொழிலுப் பாக்க அனுப்பலாம்னு அப்பன் சொல்லுதாரு.''

ஆண்டியின் கலப்பைப் புருவம் உயர்ந்தது.

''நல்லதாப் போச்சு. நமக்கு நிக்கிற பனையப் பழுதுபாத்தாப் போதுமே. காய்க்கிற காயெல்லாம் அடுத்த பெய வெட்டித் திங்கான். நம்ம வீட்டுச் சண்டீரு போயிக் கூந்தத்தான் நக்கீட்டு வாறான். ஆமா இம்புட்டு நேரமும் பெரிய வருட்டப் பேசீட்ருந்தனே. இதச் சொல்லலயே.''

''எப்படிச் சொல்லுததுன்னு...''

''பெறகு எதச் சொல்றதாம். அதுகளே லொம்பலப்பட்டு வந்து சேந்துருக்குதுக. காலாகாலத்துல பெழப்புநாயத்தத் தேடிவைக்க வேணாமா. நாளைக்கே அனுப்பிவையிங்க.''

''பெரியாள நம்பித்தான் அனுப்பணும்...''

ஆண்டி மேல்காதில் முருகை மேதியிருந்த முடியைக் கோதி மீசைக் கற்றையைத் தடவினான்.

''அதென்ன புதுசா நம்பிக்க. நம்மூருல எவனும் அட்டஞ்சுழிக்க முடியுமா. சொந்தப் புள்ள மாதிரி காப்பாத்துவமா சும்மாவா. தனிப்பள்ளக்குடியில வந்து அவுக காலந்தள்ளணும். அது ஒண்ணுதான் சங்கடம்.''

''அதப் பத்தி ஒண்ணுமில்ல. தொழில்ல அப்படிப் பாத்தா முடியுமா.''

அம்மமுத்து அப்பனிடம் போனான்.

மாலையம்மாளின் குழந்தைக்கு ஒன்பது மாதம் ஆகியிருந்தது. முருகன் கோயிலிருக்கும் திசையை நோக்கிப் பொங்கல் பூசைவைத்துத் தங்கையா என்று பேர்விட்டார்கள். குழந்தையின் சந்தனத் தலையைத் தடவிக்கொண்டே அம்மமுத்து சொன்னான்.

''எடையில தங்கிப் பொறந்ததால பேரு தங்கையா. நல்ல பொருத்தம்.''

அன்றைக்குக் குடும்பத்தில் எல்லாரும் சந்தோசமாக இருந்தார்கள்.

நாலு நாளில் அம்மமுத்து சண்முகத்தையும் மாலையம்மாளையும் கலிங்கலுக்குக் கூட்டிப் போனான். பெரிய நாடார் போகவில்லை. மனசுக்குள் தயக்கம். பெரிய மனுசி இருந்திருந்தால் அவளுக்கு முந்திக் கிளம்பியிருப்பார்.

அம்மமுத்துடன் வந்தவர்களைப் பார்த்த ஆண்டி கருப்பியை அவசரமாகக் கூப்பிட்டான்.

''ஏம்பிளி ஒன்னயத்தான். வந்துருக்கிறது ஆரு தெரியுமா. நம்ம பெரிய நாடாரு மகளும் மருமகனும். இங்கதான் குடியிருக்கப்போறாக. தொழுவு வீட்டத் தொறந்துவுடுங்க.''

கருப்பிக்குச் சந்தோசம். கூடவே ஒரு சந்தேகம்.

''அஞ்ஞாடி நேத்துப்புள்ள கொழந்த பெத்துருச்சு... தெக்கருந்து ஏன் வந்துட்டாக.''

''ஏ கழுத அந்தக் கதையெல்லாம் ஒனக்கெதுக்கு. சொன்னத வுட்டுட்டுச் சொரையப் புடுங்காத. ஒண்ணுட்டா ஒண்ணு குறுக்கமுறிச்சுப் பேசாம இதுகளக் குடியமத்துறதுக்குண்டான வழியப் பாரு.''

அவள் முனங்கி முடித்து மருமகளைக் கூப்பிட்டாள்.

''அடியே சொக்கம்மா மச்சுவீட்டுக்குள்ள கவுத்தியிருக்கிற புதுப்பான சட்டியப் பெறக்கீட்டு வா.''

சொக்கம்மா மகளை ஏவினாள்.

''ஏக்கி வடிவு ஏன் சும்மா நிக்க. ஓடிப்போயி வீட்டத் தொறந்து நல்லாத் தூத்துப் போடு.''

ராக்கன் உள்ளே நுழைந்தான். எல்லாரையும் நோட்டம் விட்டு அப்பனைப் பார்த்தான்.

''விருந்தாளுக எப்ப வந்தாக.''

''விருந்தாளுக இல்ல. இனிமே நம்மூருக்காருக.''

''அப்படியா. நல்லது.''

''ஓம் மக்க ரெண்டு எளவட்டமும் வந்தாச் சொல்லீரு. தொழுவுவீட்டுப் பக்கம் மாடுகண்ணு எட்டிப்பாத்துறப்புடாது. எல்லாம் வெளித் தாவாரத்துல தான் கெட்டணும். மூத்தவன் இருக்கானே பொய்யாளிக் குடும்பன் அவங் கிட்டத்தான் முக்கியமாச் சொல்லணும்.''

''நான் சொல்லிக்கிறென்.''

''அவனுக்கு ஒரு கட்டையப் போட்டாத்தான் சொன்னபடி கேப்பான். அவன் கலியாணத்துக்குத் தொழுவுவீட்டப் புதுசாக்கீறணும்.''

சங்கதிகளைக் கவனித்துக்கொண்டிருந்த அம்மமுத்து நிம்மதியுடன் கழுகு மலைக்குப் புறப்பட்டான்.

ஆண்டி காலாடியையும் ஊர்க் குடும்பனையும் பார்த்துப் பேசினான்.

''நம்மூருக்கு நாடாரு வந்துருக்காரு. அவரு இருந்து பெழைக்கிறதுக்கு நீங்கதான் வழிபண்ணணும்.''

காலாடி சொன்னான்.

''ஊரு மொளச்ச நாளையிலருந்து வண்ணானத் தவர வேற சாதிக்காரங்க இருந்தது கெடையாது. இப்ப ஒருத்தரு வந்து எறங்கியிருக்காரு நல்ல காலத்துக்கு.''

ஆண்டி கேட்டான்.

''என்ன செய்யலாம்னு நெனைக்கீக.''

ஊர்க் குடும்பன் உத்தண்டு சொன்னான்.

''ஒனக்குத் தெரியாறதவா சொல்லீறப்போறொம்.''

''நான் சொல்றதாருந்தா ஒன்னய எதுக்கு ஊருக் குடும்பன்னு வச்சிருக்கு. எவன் பேச்சுக்கும் சரிசரின்னா தலையில ஏறி மேஞ்சிருவாண்டா கோட்டித் தாயிளி.''

''மேயிவானோ. நான் சொல்றென் பனைய நாடாருக்கு வுடுறானா இல்லை யான்னு பாப்பொம்.''

''இப்பத்தாண்டா நீ ஊருக் குடும்பன்.''

ஆண்டி அவனைத் தட்டிக்கொடுத்தான். காலாடிக்கு ஒரு பயமிருந்தது.

''அவர நம்ம மரியாதையா வச்சுக்கிறணும். பெயகளுக்கு லேசுக்குள்ள நாக்குத் திரும்பாது.''

ஆண்டி அதைப் பெரிசுபடுத்தவில்லை.

''எல்லாம் போகப்போகச் சரியாயிரும். ஒண்ணுக்கொண்ணு சகிச்சுக்கிற வேண்டியதுதான்.''

ஊரில் எல்லாரும் பனைகளைச் சும்மா விடுவதாக இருந்தாலும் சண்முகம் ஓசியில் தொழில்செய்ய விரும்பவில்லை. ஆண்டியிடம் சொன்னான்.

''பெரியாளு நான் பன வாரம் குடுத்துடுதென். தொழில்ல அதான் ஞாயம்.''

''களவாணிப் பெயக கேக்காமச் செய்யாம முழு வாரமும் எடுத்துட்டுப் போறானே அத எந்த ஞாயத்துல சேத்துக்கிறது.''

அவனுக்குள் நம்பிக்கை பெருகிக்கொண்டிருந்தது.

**ஊ**ரைச் சுற்றி அங்கங்கே பரட்டையாக நின்ற பனைகள் மட்டை சீவிப் புதுசாக மாறின. சண்முகத்தின் வீட்டுக்கு முன்னால் களம்நிறையக் கிழித்துப் போட்ட நார்கள். வகுத்து நார் முதுகு நார் அகணி என்று தனித்தனியாகக் காய்ந்தன. பனையடியில் வரிசையாகச் சிறகு மிதித்த ஓலைகள்.

வெளுப்புத்துறையிலிருந்து வரும்போது பனைகளைக் கவனித்த மருதனுக்கு ஆச்சரியம். ஆண்டியிடம் விசாரித்தான்.

''பனைக்குச் சோக்காச் சவரம் செஞ்சுவுட்ருக்காகளே. எந்தக் குடும்பாவுக வேலையோ.''

''கோட்டிக்காரப் பெயலே நம்மூருக்கு நாடாரு வந்துருக்கிறது தெரியாதா. நம்ம வீட்லதான் குடியிருக்காக.''

''சரியாப்போச்சு.''

''எல்லாம் அததுக்கு ஆளு வேணுண்டா. நான் போயிக் கழுதமேல பொதி யேத்த முடியுமா.''

''இங்கயும் இம்புட்டுப் பன இருந்துருக்கே.''

''அதானடா. இத்தன மரமும் கண்ணுக்குத் தெரியாம எங்கிட்டுக் கரண்டு போயி ஒளிஞ்சு கெடந்துச்சு. அவரு வந்த பெறகுதான் மூலைக்கு மூல தலைய நீட்டி முழிச்சுப் பாக்குது.''

''தொழில்ல துப்பரவு வேணும்.''

''வக்காளி துப்பரவப்பத்தி நீ பேசுறயா. இங்க பாருடா இதென்ன வெள்ள வேட்டி மாதிரியா இருக்கு நீ வெளுத்துக் குடுக்கிற லச்சண மயிரு. கழுதச் சாணியப் பொட்டணங் கெட்டி வச்சிருந்தயோ என்னமோ. சும்மா சொல்லப் புடாது. கொக்குக்கறியும் கேப்பக்களியும்னா மூடி முழிக்கிறதுக்குள்ள ஒரு பானையும் உள்ள போயிரும். தண்ணிக்குள்ள நின்னு துணிபுடிச்சா மட்டும் புண்டாணி வலிக்குது.''

''எப்போவ் வெள்ளைக்கொண்ணும் கொறச்சலில்ல. வேட்டிய உடுத்தீட்டு வீட்டுக்குள்ள கெடக்கணும். எளவட்டம்போல ஊரெல்லாம் சுத்துறது. கண்ட கண்ட எடத்துல உக்காருறது. இந்த வெயசுல சேகாரம் கேக்குதாக்கும். ஒங்களுக்

கேத்த அஞ்ஞாவுகளுங்காட்டிச் சரியாப்போச்சு. வேற ஒருத்தருன்னா ஒருதேரக் கஞ்சி குடுப்பாகளா.''

''ஏலே எனக்கென்ன மகராசனுக்கு. இனியும் நாலு கலியாணம்முடிப்பென்.''

''முடிப்பீகமுடிப்பீக. பேரங்கிட்டச் சொல்லி ஒதைக்க வுட்டாத்தான் வசத்துக்கு வருவீக.''

''என்னத்தக் கண்டுடா முறுக்கீட்டு வாற கூனப்பெயலே.''

''அசலூருலருந்து அஞ்ஞாக்கமாரு வந்தா அப்படியென்ன அக்கறையாம். பேச்சுப்பழக்கம் பெலமாருக்குதே.''

''அட செம்பட்டையா அவுக இந்த ஊருல பெறந்தவுகடா. வான்னு கேக் கணுமில்ல.''

''இந்த ஊருக்காருக எல்லாருட்டயும் அப்படிப் பேசுற மாதிரி தெரியலயே.''

''சின்ன வெயசுல சேந்து வெளையாடுன யாவுகம் வாறதுதான் பேசுறது தான். அதுக்கென்ன இப்ப.''

''அப்படியென்ன பேச்சு சோறு தண்ணிய மறந்து.''

''ஆயிரம் இருக்கும். அது ஒனக்குத் தெரிஞ்சாகணுமோ... தாயிளி இவன் ஒருத்தன். இருந்துருந்து நம்மமேல திரும்பீட்டான். இப்ப எந்திரிச்சுப் போறயா குண்டியில பூச குடுக்கணுமா.''

மருதன் நமட்டுச் சிரிப்பில் நழுவினான்.

''அஞ்ஞாவுககிட்டத் தனியாப் பேசிக்கிறென்.''

''வகுத்துப்பெயலுக்கு அப்பன் கொணம் அப்படியே இருக்கு.''

ஆண்டிக்குப் பல மாதிரி நினைவுகள். மனசுக்குள் இளம்பிராயத்து அனு பவங்கள் உழவாடின. மாரி நினைவு வந்துவிட்டால் ஒரு வேலையும் ஓடாது. சில சமயம் ராத்திரி உறக்கம்பிடிக்காது.

மாலையம்மாளுக்குக் கலிங்கலூருணி பிடித்துப்போயிற்று. கருப்பி முதல் கொண்டு சிறு பெண்கள்வரை எல்லாரும் வாந்தக்கமாக இருந்தார்கள். தங்கையா என்னேரமும் அவர்கள் மடியில் இருந்தான். மாலையம்மாளுக்குக் கழுகுமலை போகும் நினைப்புக்கூட மங்கிவிட்டது.

சண்முகம் அப்பப்பப் போய்க்கொள்வான். அம்மமுத்து வருவான். ஒரு தடவை பெரிய நாடாரே வந்துவிட்டார். ஆண்டி அவரைப் பார்க்காததுபோல் இருந்தான்.

''கலிங்கலுக்கு வழி இப்ப நல்லாத் தெரியுமே.''

அவர் விடவில்லை.

''கழுகுமலைக்குப் பாத தூந்துபோச்சா இல்ல மறந்துபோச்சா.''

ரெண்டுபேரும் வினயமாகப் பார்த்தார்கள்.

''இந்தப் பெயல நம்பிப் புள்ளைய அனுப்பிவச்சமே. என்னாச்சோ ஏதாச் சோன்னு மனசு கெடந்து அடிச்சிருக்கும். மகளப் பாத்தாச்சுன்னா அப்படியே திரும்ப வேண்டியதுதான.''

''மவ இந்த வீட்லதான் இரிக்கான்னு சொன்னாவ. பாத்துட்டுப் போவ லாம்னு வந்தென். இல்லையா.''

''தெரியல.''

''அப்பன்னா வேற எங்கயும் அனாதையாரிப்பா. பாத்துட்டுப் போறென்.''

''ரெண்டுபேரும் தேடிப் போவொம்.''

அவர்களுக்குக் கிண்டல் அத்துபடி. சண்டைக்காரர்களைப் போல் அப்படிச் சாடை பேசுவார்கள்.

அவனுக்குத் தெரியும். அவர் அவனைப் பார்க்காமல் மகளிடம் போக மாட்டார். ரெண்டு பேரும் களத்துக்குப் புறப்பட்டார்கள். வாசலைத் தாண்டப் போன அவன் உள்ளே திரும்பிப் பேத்தியாளைக் கூப்பிட்டான்.

''வீட்டுக்குள்ள சின்னப்புள்ள சத்தங்கேட்டுச்சே. அது நம்ம தங்கையா மொதலாளிதான. அவுகளக் கொண்டுவா. மூஞ்சியக் கொஞ்சம் பாத்துக் கிருவொம்.''

வடிவு தங்கையாவைக் கொண்டுவந்தாள். அவன் கையை ஆட்டிச் சிணுங்கி ''ய்யா...ய்யா..'' என்று குழறிக்கொண்டு ஆண்டியிடம் பாய்ந்தான். கையைத் துடைத்து வாங்கிக்கொண்ட ஆண்டி சொன்னான்.

''எங்கிட்ட வந்தா எப்படி. ஒங்க பாட்டையா கோவிச்சுக்கிருவாருல்ல.''

அவனது நெஞ்சு மயிரடர்த்திக்குள் விரல்களால் விளையாடிக்கொண் டிருந்த தங்கையாவைப் பார்த்தபடி வாயடைத்து நின்றார் பெரிய நாடார். அதுக்குப் பிறகு அவர் கலிங்கலுக்கு எட்டிப்பார்க்கவில்லை. மாலையம்மா கழுகு மலைக்குப் போனால் உண்டு.

சண்முகத்தின் குடும்பம் தொழுவு வீட்டில் குடியேறிய பிறகு ஆண்டி வீட்டு மாடுகள் நாலும் வெளித் தாவாரத்திலேயே கட்டிக்கிடந்தன. ராவும் பகலும் ஒரே காடிதான். வெயிலில்லாத நேரங்களில் வெளிக்காடியில் நிற்கும். ராத்திரிக் குளிரிலும் ஓலுங்குக் கடியிலும் அவை திணறி உழத்துவதைப் பார்த்துச் சண்முகம் சங்கடப்பட்டான். மழை பெய்துவிட்டால் கால்வரை புல்லரித்துக் காதாட்டக் கூடத் தெம்பில்லாமல் குக்கி நிற்கும். பொய்யாளியும் வீரமுத்தும் பச்சைச் செடி களைக் கொளுத்திப் புகைமூட்டம் கிளப்பி ஓலுங்கை விரட்டுவார்கள். ஈரத்தில் மண்ணள்ளிப் போட்டுக் கூளத்தைப் பரப்பிவைப்பார்கள்.

தொழுவு வீடென்றால் செலாவத்தாகப் படுத்து எழுந்திருக்கலாம். காட்டிலும் வீட்டிலும் சண்முகத்துக்கு இதே உறுத்தல். ஆண்டியிடம் சொல்லி விட்டான்.

''பெரியாளு எங்களால மாடு திண்டாட்டப்படுது. காட்ல ஒழச்சிட்டு வாறதுக ராத்திரிக்குக் காலாறப் படுத்து எந்திரிச்சாத்தான் நல்லது.''

ஆண்டியின் மீசை சிரித்தது.

''தொழுவு வீட்ல நம்ம ராக்கன் குடியிருந்தா என்ன நடக்கும். மாடுக தாவாரத்துலதான நிக்கும். அது தெரியுமில்ல.''

''அது வேற கத.''

''அப்ப இது வேற கதையாக்கும். நீங்க இன்னிமே அங்க குடியிருக்க வேணாம். எங்களோட வந்து ஒரு மூலையில காச்சிக் குடிங்க. நாளையிலருந்து ராக்கன் அங்க இருக்கட்டும்.''

சண்முகம் எச்சரிக்கையானான். வித்தியாசப்படுத்திப் பேசினால் ஆண்டிக்குக் கெட்ட கோவம் வரும்.

''எப்படின்னாலும் மாடுக வெளியதான கெடக்கும்.''

''வெளிய கெடக்குதேன்னு அவங்களுக்கு அறிவு வரணும். சுத்திச்சுத்திக் காவலிருக்க மட்டும் தெரியிது. வேற தொழுவொண்ணு எடுக்கணும்னு நெனப்பு வரல. மாடு படுற கஸ்டம் எங்களுக்குத் தெரியாமயா இருக்கு. மாட்டுக்குப் பின்னால திரியிற பெயகளுக்கு உறுத்தட்டும்னு வாயக் கெட்டிக்கிட்டென்.''

''ஏற்கெனவே ஒண்ணு இரிக்கையில ரெண்டாவது எதுக்குன்னு நெனச் சிரிக்கலாம்.''

''நம்ம புள்ளீக அறிவ நீங்கதான் மெச்சிக்கிறணும்.''

''பெரியாளு...''

''என்ன சொல்லப்போறீக.''

''கொஞ்ச எடங்கெடச்சா எங்களுக்குத் தக்க சின்ன வீடொண்ணு போட்டுக் கிடுதொம்.''

''அப்படியா. வண்ணாக்குடியோரம் அனய எடங் கெடக்குது. வேணும்னா பெரிய வீடாப் போட்டுக்கிறலாமே.''

சண்முகம் விக்கிப்போய் ஆண்டியை ஏறிட்டுப் பார்க்காமல் நடையைக் கட்டிவிட்டான்.

அன்றைக்கு ராத்திரி ஆண்டி குடும்பத்தில் எல்லாரையும் விரட்டினான்.

''இனிமே மாடு வெளிய கெடக்கப்புடாது. பழையபடி வீட்டுக்குள்ள கெட்டுங்க. நீங்க குடியிருப்பீகளோ தெருவுல நிப்பீகளோ எனக்குத் தெரியாது. மாட்டுக்குத் தொழுவு எடுக்கிறவரைக்கும் கஸ்டப்படுங்க.''

கருப்பி காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டிருந்தாள். ராக்கன் முனங்கினான்.

''இனியொரு வீடு எடுக்கத்தான் செய்யணும்.''

ஆண்டி அவன்மேல் பாய்ந்தான்.

''மூணு புள்ளைக்குத் தகப்பனாகியாச்சு. வீடுவாசலெடுக்கணும்னு அக்கறை யில்ல. எடுக்கணும்னு தாளக்கம்போடுறாக. ரெண்டு பெயக எளவட்டமாயிட் டான். நாளைக்குக் கலியாணம்முடிச்சா எங்க போயி மொடக்குவான். பொட்டப் புள்ள திடுதும்னு சமஞ்சுக்கிட்டா உக்கார வைக்க நல்ல எடம் உண்டுமா.''

ராக்கன் வாயைப் பொத்திக்கொண்டான். ஆண்டி சொக்கம்மாளையும் விட்டுவைக்கவில்லை.

''ஆம்பளதான் புத்தியில்லாம அலையிறான். பெத்துப்போட்ட பொம் பளைக்குத் தெரிய வேணாமா.''

சொக்கம்மா வார்த்தை விக்கலில் சொன்னாள்.

''நான் சொல்லத்தான் செஞ்சென்...''

''நல்லாச் சொன்ன. சொல்லி அவன் ஒடனே செஞ்சு கிழிச்சிட்டானோ. தானா அறிவு வரட்டும்னு இருந்தா ஆகமான மாடுக மெலிஞ்சதுதான் மிச்சம். எல்லாரும் காட்ல பண்ணபோட்டது போதும். நாளையிலருந்து ஆளுந்தேளுமாக் கல்லு மண்ணடிச்சுக் களத்துல ஒரு வீடு தாவாரத்துல ஒண்ணு எடுத்து முடிச்சிட்டு மறு சோலியப் பாருங்க.''

கருப்பி முனங்கிக்கொண்டாள்.

''அதும் சரிதான்.''

ராக்கனுக்கு இந்த நினைப்பு முந்தியே உண்டு. இருந்தாலும் அப்பனிடம் எப்படிச் சொல்வது. சொன்னால் எனக்கு ரோசன சொல்ல வந்துட்டயாக்கும் என்று திரும்பினாலும் திரும்பிவிடுவான். அஞ்ஞைமூலமாக வழிபண்ணலா மென்றால் அவளுக்கு நாயே பேயே வசவு ஏராளம் கிடைக்கும். இப்போது சரி. அவன் வாயிலிருந்தே வந்துவிட்டது.

ராக்கன் மும்முரமாக வேலைகளில் இறங்கினான். வண்டி பூட்டிக்கொடுக் கும்போது பொய்யாளியிடம் கேட்டான்.

''அப்பச்சி சொன்னதெல்லாம் யாவுகமிருக்கா.''

பொய்யாளி பலமாகத் தலையாட்டினான்.

''இருக்கு.''

''என்ன சொன்னான்.''

''கலியாணம்முடிச்சா வீடு வேணும்னு.''

''அது ஒண்ணுதான யாவுகத்துல இருக்கும்.''

பொய்யாளி வண்டியை விரட்டிக்கொண்டு போய்விட்டான். ராக்கனுக்குச் சிரிப்பு.

''வீட்டக் கெட்டி முடிக்காம இவன் வேற வேலைக்குப் போக மாட்டான்.''

## 4. வெள்ளப் பேத்தி

பொய்யாளி கலியாண எளவட்டமாகிவிட்டான். கூடிய விரைவில் பெண்ணைப் பார்த்து முடிக்கணும். இல்லையென்றால் விவசாயம் ஒழுங்காக நடக்காது. கமலை இறைவையை நிறுத்திவிட்டு ஊசிக்கால்மேல் ஏறி நின்று வேடிக்கைபார்ப்பான்.

ராக்கன் சொக்கம்மாளிடம் சொன்னான்.

''ஏய் கேட்டயா சங்கதிய. ஓம் மகன் ஊசிக்காலுமேல ஏறிக் கமல எறைக்கான்.''

அவள் அவன்மேல் திரும்பினாள்.

''நம்ம அந்தக் காலத்துல பூசரமரத்துமேல தொத்திக்கிட்ருந்தது மறந் துருச்சா.''

''ஒன்னயச் செறையெடுக்கிறதுக்குத்தான.''

''வந்து கழுத்தக் குடுத்துட்டன்ல. இப்ப ஏன் பேச மாட்ட.''

அந்தக் கதை அவளுக்குத்தான் தெரியும். அவன் அவளைத் தொயங்கட்டிக் கொண்டு திரிந்த பிராயம். ஒரு நாள் கமலை இறைக்கும்போது கம்மாக்கரை வழியே அவள் போவதைக் கவனித்துவிட்டான். அவள் பொசுக்கென்று கம் மாய்க்குள் இறங்கி விறகு வெட்ட ஆரம்பித்தாள். அவனுக்கு வேலை ஓட வில்லை. கமலையை நிறுத்திவிட்டுப் பூசரமரத்தில் ஏறி நின்றுக் கரையைத் தாண்டி அவளைத் தேடிக்கொண்டிருந்தான். தொற்றி ஏறும்போது தாடுகொப்பில் குடியிருந்த கம்பளிப்பூச்சிக் கூட்டம் கொத்தாக முதுகில் விழுந்து அப்பியிருந்தது கீழே இறங்கியபோதுதான் தெரிந்தது.

பூச்சிப் பொசுபொசுப்பில் உடம்பெல்லாம் பேம்புச்சட்டை மாதிரி தடிப்புத் தடிப்பாகத் திரண்டுவிட்டது. தண்ணீரில் கழுவப்போய் அரிப்பு அதிகமானது. அன்றைக்கு வேலை அவ்வளவுதான். தண்ணீர் பாய்ச்சிய வேலையாள் மாட்டைப் பத்திக்கொண்டு போனான்.

மகன் வந்த நிலைமையைப் பார்த்துக் கருப்பி பதறிப்போனாள். கமலை இறைக்கும்போது மரத்திலிருந்து பூச்சி விழுந்ததாகச் சொல்லிச் சமாளித்தான் அவன். உடனே அவள் அதுக்கு மருந்து தயார்பண்ணினாள். சின்ன வயசுப் பொட்டைப் பிள்ளையைக் கூப்பிட்டுத் தின்பண்டம் கொடுத்து வசப்படுத்திச் சிரட்டையில் மோளச் சொல்லி அதில் சாம்பலைக் குழைத்து உடம்பெல்லாம் பூசிவிட்டாள். தரையில் உருண்டுபுரண்டு சாமிகொண்டாடி மாதிரி அவன் அரிப்புத் தீரும் வரை வயணம் காத்தான். அது ஆண்டி கண்ணில் பட்டுவிட்டது. கருப்பியிடம் கேட்டான்.

''நேமிக்கம் எந்தக் கோயிலுக்கு.''

அவளுக்கு ஆத்திரம்.

''புள்ள சூசுவான்னு கமல எறைக்கையில பூசரமரத்துலருந்து கம்பளிப்பூச்சி வுழுந்து அரிப்புத் தாங்காமத் துடிச்சுக்கிட்ருக்கான். அது தெரியாம ஏடாசி யென்ன வேண்டிக்கெடக்கு.''

''அப்படியா சங்கதி. நல்ல மருந்துதான். மோத்தரம் குடிச்ச கழுதைக்கு வேறென்ன மருந்து தெரியும். நடக்கட்டும் நடக்கட்டும்.''

இந்தப் பேச்சு வரும்போதெல்லாம் ராக்கனும் சொக்கம்மாளும் பிள்ளை களை மறந்துவிடுவார்கள்.

பொய்யாளியும் வீரமுத்தும் ஆளுக்கொரு வண்டியில் கூட்டிக்கையாகக் கல்லும் மண்ணும் அடித்தார்கள். ராக்கனும் வேலையாளும் அள்ளிவிட்டார்கள். வெயிலேறவும் பொய்யாளி வண்டியை இடையில் நிறுத்திவிட்டு வீட்டுக்கு வந்தான். எதிரில் நின்றிருந்த சொக்கம்மா கேட்டாள்.

''அதுக்குள்ள வண்டியடிப்பு முடிஞ்சதா.''

''தண்ணிகுடிக்க வந்தென்... பேத்தியெங்க.''

அவளுக்குக் கடுப்பு. குத்துக்கல் மாதிரி கண்ணுக்கு முன்னால் ஒருத்தி நிற்பது தெரியவில்லை. பேத்தி வேணுமாம் பேத்தி.

''பேத்திய மடியிலயா கெட்டிவச்சிருக்கென். அங்கிட்டு எங்கயாச்சும் உக்காந்துருக்கும். போயிப் பாத்துக்கோ.''

அவன் உள்ளே போனான். தூணில் சாய்ந்து அட்ணக்கால் போட்டு உட் கார்ந்திருந்தாள் கருப்பி.

''பேத்தியோவ் ஓடிப்போயி ஒரு போணி தண்ணி கொண்டுவந்துரு. கலியாண வீட்ல மாதிரி கால நீட்டி உக்காந்துட்டா வேல எப்படி நடக்கும்.''

அவள் ஆவலுடன் அண்ணாந்து பார்த்தாள்.

''என்னப் பெத்த அப்பன் வேல செய்றயாய்யா. உக்காருய்யா தண்ணி கொண்டுவாறென். இனியேரவரைக்குப் புள்ளைக்குத் தண்ணி குடுத்துவுடாம சொக்கம்மாக் குடும்பச்சி என்ன செஞ்சா.''

பொய்யாளி அஞ்ஞையை எட்டிப்பார்த்துவிட்டுப் பேத்தியிடம் கேட்டான்.

''நீ உக்காந்துருக்குற எடத்த அஞ்ஞைக்குச் சொல்லிவைக்கப்புடாதா.''

''ஏன்யா நான் இங்கதான இருக்கென். கருமலைக்கா போயிட்டென்.''

சொக்கம்மா நொடித்துக்கொண்டு அடுப்புக்கூடத்துக்குப் போனாள்.

''கருமலையில இருந்தாலும் பேத்தியத் தேடிப் போற பெய எம் பேச்ச ஏன் எடுக்கான்.''

பொய்யாளி அப்பிராணியாகப் பேத்தியைப் பார்த்தான்.

''இண்ணைக்குள்ள தண்ணி கொண்டுவந்துருவயா.''

அப்படியும் அவள் எழுந்திருக்கவில்லை. அவ்வளவு சடுதியில் எழுந்திருக்க மாட்டாளென்று அவனுக்கும் தெரியும். பக்கத்தில் நகர்ந்து உட்கார்ந்துகொண்டான். அவள் அவனது முண்டாசுக்கட்டில் தங்கியிருந்த மண்ணைத் தட்டிவிட்டாள். காதில் தரிப்பைப் பிடித்துப்பார்த்தாள். கையை உருவிவிட்டாள். முந்தானையால் முதுகு வேர்வையை ஒத்தி எடுத்தாள்.

''எம் புள்ளைக்கு இம்புட்டு வேத்துருச்சே. தடுமம் புடிச்சுக்கிருமே.''

அவனுக்கு எப்போதுமே பேத்தியிடம் குறும்பு. அவள் வாயைக் கிண்டவில்லையென்றால் உறக்கம் வராது. எங்கே சுற்றியலைந்தாலும் அவளைப் பார்த்து ரெண்டு வார்த்தை பேசியாகணும். ரெம்பக் காசலையாகக் கேட்பான்.

''பேத்திக்கு எப்படியிருந்த தலமுடி. அம்புட்டும் நரச்சிருச்சே. எங்கிட்டச் சொல்லியிருந்தா நரைக்க வுட்ருப்பனா. இதுக்குத் தைலம் எங்கயாச்சும் கெடச்சா வாங்கி வரணும். நீ கவலப்படாத. கருப்பிப் பேத்தியக் கருப்புப் பேத்தியாக்கிப்புறென்.''

அவன் பேசுவதைக் கேட்டால் அவளுக்குச் சந்தோசம் தாங்காது. சிரித்துக் குணுகுவாள். கிறக்கத்தில் எல்லாம் மறந்துவிடும்.

அவன் சோற்றுக்கு முன்னால் உட்கார்ந்ததும் முதலில் பேத்தியைப் பற்றித்தான் விசாரிப்பான்.

''பேத்தி கஞ்சி குடிச்சிட்டாளா.''

சொக்கம்மாளுக்குப் பொத்துக்கொண்டு வரும். இன்னேரவரைக்குக் கிழவிக்குச் சாப்பாடு கொடுக்கவில்லையென்றால் எளவட்டத்துக்குச் சொல்ல முடியுமா.

''நீ ஊட்டிவுட்டாத்தான் சாப்புடுவன்னு கோவிச்சுக்கிட்ருக்கா.''

அவன் சாப்பிட்டு முடித்து வேணுமென்றே அஞ்ஞையின் ஆத்திரத்தைக் கிளறுவதற்காகப் பேத்தியிடம் போவான்.

''ஒனக்கு ஆரும் சோறு போட்டுக் குடுக்கலயா பேத்தி. நான் கொண்டு வரட்டுமா.''

அவள் குளிர்ந்துபோவாள்.

''நான் குடிச்சிட்டன்யா. எம் பேரன் எம்புட்டு அக்கறையாக் கேக்கான். நீ குடிச்சிட்டயாய்யா.''

பேரனின் வயிற்றைத் தடவிப்பார்ப்பாள். ஆண்டி அவளைச் சீண்டுவான்.

''ரோசங்கெட்ட கழுத. அவன் பேசுற பேச்சுக்குச் சந்தோசம் தாங்க முடியல.''

அவள் தலையக் கொணட்டுவாள்.

''ஏ போ இவனே. எம் பேரன் எங்கிட்டத்தான் பேசுவான். அதுக்குக் குடுத்து வச்சிருக்கணும்.''

''மோத்தரம் குடிக்கிறதுக்குத்தான.''

அவள் பழைய நினைவுகளில் முங்கினால் லேசுக்குள் திரும்ப மாட்டாள். பேரனைச் சின்னவனாக்கிக் கையைப் பிடித்துக்கொண்டே திரிவாள்... எப்படி யெல்லாம் அழுந்திப் பிழைத்தவன் இன்றைக்கு எளவட்டமாகி இந்தப் பேச்சுப் பேசுகிறான். ஓடிஓடி வேலைசெய்கிறான்.

அலுங்காமல் உட்கார்ந்திருந்த பேத்தியைப் பொய்யாளி தொட்டு உசுப்பினான்.

''என்ன பேத்தி கந்தூரங்கீட்டயா. நான் தண்ணி கேட்டது நெனவிருக்கா.''

கவுந்துகிடந்த அவளது கண்ணாம்பட்டைகளைச் சந்தோசம் உடைத்தது.

''நான் ஒரு கோட்டி. புள்ளைக்குத் தண்ணி குடுக்காம உக்காந்துருக்கென் பாரு.''

அவள் எழுந்து போய்த் தண்ணீர் கொண்டுவந்தாள். அவன் தாகம்தீரக் குடித்துவிட்டுக் கிளம்பினான்.

''எய்யா எதம்பத்தரமா வண்டியடிக்கணும்.''

அவனையே பார்த்துவிட்டு மருமகளைத் தேடினாள் அவள்.

''சொக்கம்மா எளவட்டம் போறதப் பாத்தயா. அவனும் அவன் நடையும்...''

எல்லாவற்றையும் ஓரக்கண்ணால் கவனித்துக்கொண்டிருந்த சொக்கம்மா சொன்னாள்.

''அதெல்லாம் பேத்தியிட்டத்தான் வச்சுக்கிறணும். மொதலாளிக்குப் பேத்தி கையால தண்ணி வாங்கிக் குடிக்கலன்னா எறங்காதோ.''

கருப்பி மறுபடியும் தன்னை மறந்துகொண்டிருந்தாள்.

கல்லடிப்பு முடிந்து வீட்டு வேலை தொடங்கியது. ஆளாளுக்கு ஒரு பக்க மிருந்து வேலைகளைக் கவனித்தார்கள். களத்தில் ரெண்டு வீட்டுக்கு அடிப் போட்டார்கள். மாலையம்மாளுக்கு ஒண்ணும் பிடிபடவில்லை. மேற்கொண்டு ரெண்டு வீடெதுக்கு. புருசனைக் கேட்டாள். அவன் உதட்டைப் பிதுக்கினான்.

சாயங்காலம் அவள் தங்கையாவை முற்றத்தில் விளையாட விட்டுக்கொண் டிருந்தபோது ஆண்டி அந்தப் பக்கம் வந்தான்.

''தங்கையா மொதலாளி என்ன சொல்றாக. பழைய வீட்ல இவுகளுக்கு ஒறக்கம் வர மாட்டங்குதுன்னு சொன்னாக. அதனால இனிமே பழைய வீடு வேணாம். பக்கத்துலயே புது வீடு கெட்டிக்கங்க. நாங்க கிட்ட வர மாட்டொம். எல்லாச் சாமானும் குடுக்கிறதோட சரி. நீங்களாக் கெட்டிக் குடியேறிக்கிறணும். நாங்க தொட்டாச்சுன்னா எங்க வீடாகிப்போகும். ஊரான் வீட்ல குடியிருக்க வான்னு நெனப்பீக. அந்த வம்பெதுக்கு.''

அவள் ஒண்ணும் புரியாமல் முழித்தாள்.

''அவிய என்னமும் தப்பாப் பேசிட்டாவளா.''

''அவரா தப்பாப் பேசுவாரு. கூட இருந்து நமக்குப் புத்திமதி சொன்னாப் போதாதா.''

அவன் தங்கையாவைத் தூக்கிக்கொண்டு போய்விட்டான்.

பனைக்குப் போயிருந்த சண்முகம் வந்து வீட்டுக்குள் நுழைந்தும் நுழையா ததுமாக மாலையம்மா கேட்டாள்.

‘‘பெரியாளுட்ட வீட்டப் பத்தி என்னமும் சொன்னியளா.’’

‘‘தப்பா ஒண்ணும் சொல்லலயே. ஏன்.’’

‘‘எனக்கிட்ட மறைக்க வேணாம்.’’

‘‘மாடு கெட்டுததுக்குக் கஸ்டப்படுவதாவளேன்னு சொல்லி நாங்க தனியா சின்ன வீடொண்ணு போட்டுக்கிடவான்னு கேட்டென். வண்ணாக்குடியோரம் அனய எடமிரிக்கு அங்க போங்கன்னு சொல்லீடுச்சு. நான் வாய மூடிக்கிட்டு வந்துட்டென்.’’

‘‘இங்க கெட்டப் போற வீடு நமக்காம். அவிய ஒதவிக்கு வர மாட்டா வளாம். நம்மளே கெட்டிக்கிடணுமாம்.’’

அவனுக்குக் குழப்பம். இந்த ஆண்டி ஏறுக்குமாறான மனுசன்தானோ. எந்த விதத்திலும் எடைபோட முடியவில்லையே. இதைப் போய்க் கேட்டால் மறுபடியும் வாங்கிக்கட்ட வேண்டிதுதான்.

‘‘நம்ம என்ன செய்ய.’’

‘‘ரெண்டு வீட்டுக்கும் சேத்து ஓல வெட்டிப்போடுங்க. அதுக்காவ ஊருக்குப் போவ வச்சிடாதிய. அப்பன் வருத்தப்படுவாரு.’’

அவன் ஓலைக்காக எல்லாப் பனையிலும் ஏறி இறங்கினான். ஒரு மாதத்தில் ரெண்டு வீடுகளும் எழும்பின. மண் குழைக்க மாலையம்மா தண்ணீரெடுத்து ஊற்றினாள். தங்கையா தன் பங்குக்குச் சிரட்டையில் சுமந்தான்.

களத்தில் வீடு முடிந்து அவர்கள் குடியேறும்வரை ஆண்டி அந்தப் பக்கம் எட்டிப்பார்க்கவில்லை. விடியக்காலம் மாட்டுக்குக் கூளம் பிடுங்கும் சாக்கில் நோட்டம்விடுவதுடன் சரி.

சண்முகத்துக்கு இப்போது மனசில் சஞ்சலமில்லை. தன்னால் மற்றவர்களுக்குத் தொந்தரவு இருக்கக் கூடாது. அந்த விதத்தில் நிம்மதி. முந்திக்கு இப்போது தொழிலைச் சுதாரிப்பாகக் கவனித்தான். கலிங்கலில் பிறந்து வளர்ந்ததுபோல் ஒரு பிடிப்பு. கஷ்டம் தெரியாமல் பிழைப்பு ஓடியது.

அடுத்த வருசம் வடிவு பூத்துக் களத்து வீட்டில் உட்கார்ந்தாள். அவள் வீடு கூடும்வரை மாலையம்மா பொறுப்புத்தான். உளுந்துக் களி கிண்டிக்கொடுத்துச் சோறு பொங்கிப்போட்டுப் பதினாறு நாளும் பக்குவம்பார்த்தாள். முகக்களையுடன் புதுசாகத் தெரிந்த பேத்தியாளைப் பார்த்துக் கருப்பிக்குப் பெருமை.

‘‘கழுவித் தொடச்ச சிந்தாமணிக் கெழங்கா இருக்காளே எம் பேத்தியா. நான் நீன்னு அடிச்சுக்கிட்டு வருவான் மாப்பிள. கொஞ்ச நாளையில பூட்டியாகப்போறென்.’’

ஆண்டி அவளைக் கிண்டினான்.

‘‘அதுவரைக்கு உசிரோட இருப்பயா.’’

‘‘நீ மட்டுந்தான் இருக்கணுமா. அவ புள்ளைய எடுக்காமச் சாக மாட்டென்.’’

அவள் முகத்தைப் பார்க்கணுமே.

கழுகுமலையில் சுப்பம்மா வயிற்றைத் தள்ளிக்கொண்டு திரிந்தாள். குழந்தை பிறக்கிற நேரம். தலைப்பிரசவமானதால் அம்மமுத்துக்குப் பயம். முன்கூட்டியே மாலையம்மாளிடம் சொல்லிவிட்டுப் போனான்.

அந்தச் சமயம் மாலையம்மாளும் உண்டாகியிருந்தாள். அதுக்காகக் கழுகு மலைக்குப் போகாமலிருக்க முடியாது. ரெம்ப நாளுக்குப் பிறகு மதினிக்குக் குழந்தை தங்கியிருக்கிறது. தனக்குத்தான் தலைப்பிள்ளை இடைவழியில் பிறந்த தென்றால் அவளுக்காவது சொகமாகப் பிறக்கட்டும்.

கருப்பி தனக்குத் தெரிந்த யோசனையைச் சொன்னாள்.

''ஏந் தாயி அவுகள இங்க கூட்டீட்டு வந்து நல்லாப் பாத்து அனுப்புவமே. நீங்க வகுத்த இழுத்துக்கிட்டு அலையணுமாக்கும்.''

ஆண்டி அரட்டினான்.

''மொகறையப் பாரு. அது இங்க வந்துட்டா ஆம்பளைக மண்ணவா திம்பாக. என்ன கஸ்டப்பட்டாலும் தாய அனுப்பிவைக்கிறதுதான் மொற. வீட்ல கஞ்சி காச்ச ஆளுல்லன்னு நெனச்சு பெறந்த வீட்டுக்குக்கூடப் போக மாட்டன்னு இருக்கிறதத் தனியா வுடுறது தப்பு.''

சுப்பம்மாளுக்குச் சிவகாசிக்கு வடக்கே திப்பனம்பட்டி. குடும்பத்தில் ஒரே பெண். அப்பனுக்குப் பனைதான் துணை. இடுப்பில் பதினிக்குடுவை லாந்த பல்லு போன மாடு மாதிரி சவக்சவக்கென்று வெற்றிலையை மென்றுகொண்டே கரிசக் காடுகளில் நிதானமாகத் திரிவார். ஆத்தி நாடாரென்றால் அந்தப் பக்கம் அனேகம் பேருக்குத் தெரியும். அவர் பின்னிக் கொடுத்த ஓலைப் பாயில்லாமல் நல்ல காரியம் நடக்காது. சிவகாசியில் சந்தை தவறாமல் சேவுக்கொட்டான் சுமையுடன் அவரைப் பார்க்கலாம். ஆத்தா உடையம்மைக்கு வீடே தஞ்சம். அக்கம்பக்கம் போக மாட்டாள். நினைத்தால் கழுகுமலைக்கு வந்து மகளைப் பார்த்துவிட்டுப் போவாள்.

ஆத்தா கூப்பிட்டும் சுப்பம்மா போகவில்லை. ரெண்டு ஆம்பளையைக் கையால் காய்ச்சிக் குடிக்க விட்டுவிட்டு எப்படிப் போவது.

நிலைமையறிந்த சண்முகம் மாலையம்மாளைக் கழுகுமலைக்கு அனுப்பி வைத்தான். கொஞ்ச நாளில் சுப்பம்மாளுக்குப் பெண் குழந்தை பிறந்தது. மாலை யம்மா ஒரு மாசம் துணைக்கு இருந்துவிட்டுக் கலிங்கலுக்கு வந்தாள். சண்முகம் அங்கிட்டும் இங்கிட்டுமாக அலைந்து சமாளித்துக்கொண்டான்.

ஆண்டி மாலையம்மாளிடம் கவலையாகச் சொன்னான்.

''ஒரு மாசமாச் சின்னவுகளப் பாக்காம என்னமோபோல இருந்துச்சு.''

''இவனும் அங்க பாட்டையாவத் தேடாத நாளில்ல. பாக்கணும்னா பொடி நடையாக் கலிங்கலுக்குப் போயேம்லன்னு அந்தப் பாட்டையா வெரட்டுவாரு. தெனமும் சண்டதான்.''

ஆண்டியின் கரம்பைக்குமி நெஞ்சு விரிந்தது.

மூணே மாசம். மாலையம்மாளுக்கு ஆணும் பெண்ணுமாக ரெட்டைக் குழந்தைகள் பிறந்தன. தங்கையா ஏங்கி மெலிந்துவிடாமல் ஆண்டியின் வீட்டி லேயே வைத்துக்கொண்டார்கள். அப்படியும் அவன் உம்மென்றிருந்தான். ஆண்டி சொன்னான்.

''எதிரியும் சம்பந்தியும் வந்துட்டாகளேன்னு இவுகளுக்கு வருத்தம் ரெம்ப.''

சண்முகத்துக்கு வாதிப்பு. இதும் ஒரு சோதனையா. மூணு குழந்தைகளை வைத்துக்கொண்டு மாலையம்மா பாடு திண்டாட்டம். இந்த வயசில் இவ்வளவு சங்கடம் வரக் கூடாது. அவன் தொய்வை ஆண்டி கவனித்துவிட்டான்.

''ஆளு வாட்டமாருக்கே என்ன சங்கதி. ராமரும் லச்சிமியும் வீட்ல எறங் குறதுக்குக் குடுத்துவச்சிருக்கணும்.''

''அதுக்கில்ல பெரியாளு. மூத்தவனப் பெத்தெடுக்கிறதுக்குள்ள போதும் போதும்னு ஆயிப்போச்சு. இப்ப ரெண்டு பொறந்தாச்சு. அவ என்ன செய்வா. சரி உள்ளதுபோல நடக்கட்டும். பயினியக் குடுத்தாச்சும் காப்பாத்துவென்.''

''நீங்க ஆரும் காப்பாத்த வேணாம். புள்ளீகள எங்க பக்கம் தள்ளீருங்க. நம்ம ராக்கனுக்கு மூணு புள்ளையவும் காப்பாத்தி ஆளாக்குனது ஆருன்னு நெனச்சீக. மருமக பெத்துப் போடுறதோட சரி. நாலாம் பக்கம் எந்திரிச்சு அருவமில்லாமக் காட்டுக்குப் போயிருவா. எல்லாப் பொறுப்பும் பெரிய மனுசிதான். அவ இருக் காளே பொறுமசாலி. தாயோளி தலைக்குமேல குமிச்சாலும் அவளுக்கு ஈடாகாது.''

சண்முகம் அவனை ஆச்சரியமாகப் பார்த்தான். கருப்பியைப் பற்றியா இப்படிச் சொல்கிறான். மூச்சுக்கு மூணு வசவு வையும் ஆண்டியா பேசுவது. இந்த மனுசன் மனசை யாராலும் அளக்க முடியாது.

உண்மையில் கருப்பி பொறுமைசாலிதான். அவள் துணையில்லையென்றால் மாலையம்மா சொடிந்துபோயிருப்பாள். அவள் எந்தக் குறைக்கும் இடம் வைக்க வில்லை. எந்நேரமும் உடனிருந்து குழந்தைகளை வளர்த்து ஆறு மாசத்தில் உட்கார வைத்துவிட்டாள்.

அப்பப்ப வீரம்மா வந்து குழந்தைகளைக் கொஞ்சிவிட்டுப் போவாள். வரும்போதெல்லாம் மறக்காமல் கேட்பாள்.

''ஒரு புள்ளைய எனக்குக் குடுத்துருங்களேன்.''

கருப்பி வருத்தத்தை மறைத்து ஆறுதலாக ரெண்டு வார்த்தை சொல்வாள்.

''ஒனக்கென்ன தாயி வெயசா போச்சு. வதவதன்னு பெத்துப்போடுவ. அஞ்ஞு இருக்கையில கவலையெதுக்கு.''

சண்முகம் கருப்பியைப் பற்றி மாலையம்மாளிடம் சொல்லிப் பெருமைப் பட்டான்.

''பெரிய மனுசி பெரிய மனுசிதான்.''

மாலையம்மாளுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

## 5. நல்ல பொண்ணுதான்

ஆண்டி பொய்யாளியின் நடவடிக்கைகளைக் கவனிக்க ஆரம்பித்தான். மனசுக்குள் ஒண்ணும் சரிப்பட்டுவரவில்லை. போகிற போக்கைப் பார்த்தால் எங்கே போய் நிற்குமோ தெரியாது. நிலையில் முட்டிக்கொண்டு நெற்றியைத் தடவும் கதையாகிவிடக் கூடாது. ஒரு முடிவுக்கு வந்து ராக்கனை வளைத்தான்.

''அடே பொய்யாளிக் குடும்பனுக்கு கலியாணத்த முடிச்சுக் காலுங் கையோட பத்தியாகணும்.''

ராக்கன் இதில் விருப்பமில்லாதது போலிருந்தான்.

''அதுக்குள்ள கலியாணம் கேக்குதாக்கும். பொட்டப்புள்ளையக் கரையேத்தீட்டுப் பாக்கலாம்.''

‘‘புத்தியில்லாமப் பேசுறயே. காளங்கண்ணு அவுத்துட்டுப் போயி அடுத்தவன் வெள்ளாமையில மேஞ்ச பெறகு நாலு பேருக்கு முன்னால தலைய ஓட்டட்டு நிக்கப்போறது நீயும் நானுந்தான். அது தெரியுமில்ல.’’

‘‘அதுக்காக ஆடு நெனைக்கிற எடத்துல கூடு கவுத்த முடியுமா. பொண்ணுகிண்ணு பாக்க வேணாமா.’’

‘‘அந்தக் கவல ஒனக்கெதுக்கு. புதுசாவா பொண்ணப் பாக்கப்போற. எல்லாம் எளவட்டம் பேசிமுடிச்சிருப்பான்.’’

‘‘அப்ப நம்மகிட்ட ஏன் கேக்கணும்.’’

‘‘அந்த அளவுக்காச்சும் மருவாதி இருக்குதே அதச் சொல்லு.’’

‘‘அப்படிப் புள்ளைய வீட்ல வச்சுப் பாக்கணுமாக்கும்.’’

‘‘ஏதேது வீட்டவுட்டுப் போடான்னு நீயே வெரட்டீருவ போலருக்கே. எல்லாம் தனக்கு வந்தாத்தான் தெரியும். நம்ம பழைய வண்டவாளம் இப்ப எப்படி யாவுகமிருக்கும். அண்ணைக்கு ஒன்னய வெளிய பத்தியிருந்தா இப்படிப் பேசுவயா.’’

‘‘நீயாச்சு ஓம் பேரனாச்சு. என்னமும் செய்யிங்க.’’

ராக்கன் கழண்டுகொண்டான். இனிமேலும் இருந்தால் சொந்தக் கதை வெளியே வரும். அது பெரிய வம்பு. இந்தக் கிழவன் வாயைக் கிண்டி ஆழம் பார்க்கிறான். கலியாணத்தைப் பற்றி ஒருவார்த்தை சொன்னால் போதும். அது தான் சாக்கென்று பிடித்துக்கொள்வான். ஆண்டி ராக்கனுக்கு மகனா அப்பனா என்று குத்தலாகக் கேட்பான். வசவு அடங்க நாளாகும். இந்தத் தொறட்டு வேணுமா. ஒண்ணும் தெரியாத மாதிரி யோசனை கேட்கிறான் பார் யோசனை. அகப்படுவதற்கு வேறு ஆளைப் பார்க்கணும்.

ஆண்டி அவனைக் குறும்புடன் பார்த்துக்கொண்டிருந்தான்.

‘‘மகன வெரட்டீறப்போறாகளாம். அவன வுட்டுட்டு இவுக ஒருநாளைக்கு இருந்துருவாகளா. சொக்கம்மாக் குடும்பச்சிகிட்ட வெளக்கமாத்தடி வாங்குறது ஆரு. ஒருவாயி கஞ்சி ஊத்த மாட்டா. கருப்பி பொலப்பத்தத் தாங்க முடியுமா. களவாணிப் பெய. ஒதடு ஒட்டாமப் பேசீட்டுப் போறதப் பாரு.’’

ஆண்டிக்குப் பொய்யாளியின் விவகாரம் அம்புட்டும் தெரியும். ஊர்க் குடும்பன் மகள் வேலாயிக்குப் பின்னால் சுற்றுவதைப் பல தடவை பார்த்திருக் கிறான். ஓகோ பாதை இப்படிப் போகிறதோ என்று கணக்குப்போட்டுப் பார்த்தான். நல்ல பாதையாகத்தான் தெரிந்தது. பேரனை இறுக்கினான்.

‘‘என்னல நாறக்கருவாட்டப் பூன மொறச்ச மாதிரி வட்டம்போடுற. காலு ஒரு எடத்துல நிக்காதா.’’

பொய்யாளி தலைகவுந்தான்.

‘‘நான் எங்க போனென். மாட்டுக்குத் தண்ணிகாட்டீட்டு வாறென்.’’

‘‘நீ மாட்டுக்குத்தானா தண்ணிகாட்டுவ. மனுசருக்கே காட்டுவடா. கூளம் புடுங்குற நாயிக்கு ஊருக்கெணத்துமேல என்ன கண்ணு. கெணத்துக்குள்ள வுழு கிறதுக்கா. அதுக்கு இடிகெணறு பாத்துப் போகணும்.’’

பொய்யாளி முனங்கிக்கொண்டே போய்விட்டான். மனசு கிடந்து உளைந் தது. இனிமேல் அப்பச்சியிடம் பருப்பு வேகாது. வசவுதான் கிடைக்கும். எங்கே

நின்றாலும் பிராந்துப் பார்வையில் கண்டுபிடித்துவிடுகிறான். ஒரே வழி பேத்தி தான். அவள் காதைக் கடித்தான்.

''அப்பச்சி ஓயாம வையிறான் பேத்தி.''

''வையிறானா... எம் புள்ளைய எதுக்கு வையணும். சும்மா திரியிற கெழ டனுக்கு வம்புதான. இருக்கட்டும் நான் பேசிக்கிறென்.''

''அந்த வேலாயி இருக்கால்ல...''

''எந்த வேலாயி... மேலக் கடசி வீட்டுக் கூனக்கெழடியா.''

''வடக்குத் தெருப் புள்ள.''

''உத்தண்டுப் பெய மகளா. வெடுக்வெடுக்னு திரியிதே ஒரு முழிமுழிச்ச கழுத.''

''அவதான்.''

''அவளுக்கென்ன.''

''கெணத்துல தண்ணிப் பானையத் தூக்கிவுடச் சொன்னா. தூக்கிவுட்டென். அப்பச்சிக்கு அது குத்தமாப்போச்சாம்.''

''பானையத் தூக்கிவுடுறதுக்கு ஒரு பொட்டச்சி கெடைக்கலயா.''

''ஆரும் இல்ல.''

''ஆருமில்லாற நேரத்துலயா தண்ணிக்கு வந்தா.''

பேத்தியின் பார்வைச் சிரிப்பில் அவன் வெட்கிப்போனான். அவளது காதுத் தண்டில் விரலை ஓட்டி ஊஞ்சலாட்டியபடி கெஞ்சினான்.

''அப்பச்சியிட்டச் சொல்லு பேத்தி.''

''சொல்றன்யா... ஓயாம நடந்து தண்ணியெடுக்க வேணாம்னு நீ அவளச் சத்தம்போடு. கெணத்துல தண்ணி வத்திப்போகுமில்ல.''

பொய்யாளி பேத்தியிடம் அடிக்கடி குசுகுசுப்பதை ஆண்டி கவனிக்காம லில்லை. வண்டி அந்தப் பக்கம் திரும்பியிருக்கிறதோ. எப்படிச் சுற்றியும் இங்கே தானே வரணும். சங்கதியை ஆறப்போட்டால் தெரியும். மூச்சுக்காட்டாமல் இருந்தான்.

கருப்பி அவனைச் சத்தம்போட்டாள்.

''ஒனக்கு வேலையே இல்லையா. மாட்டுக்குப் பின்னால திரியிற புள்ளையப் போயி அது இதுன்னு முறுக்குனயாமே.''

''குருட்டு நாயி பேரனுக்கு ஏண்டுக்கிட்டு வந்துட்டயாக்கும். அவன் காள மாட்டுக்குப் பின்னால போனா ஏன் பேசுறென். பசுமாட்டுக்குப் பின்னாலயில்ல போறான். அதும் ரெண்டு காலுப்பட்டது.''

''அவனுக்கு நீ ஒண்ணும் புத்திசொல்ல வேணாம். ஒனக்கு அவன் சொன் னாப் போதும்.''

''அவ்வளவுக்கு ஆயிக்கிருச்சா. இருங்கஇருங்க ஒருநாளைக்கு வச்சுக்கிறென்.''

''ஆமாமா இவன் பேச்சுக்கெல்லாம் எம் பேரன் பெயந்து நடுங்கீறத்தான் போறான்.''

''ஓம்பேரன் ஆனமேல போறவங்கிட்டச் சுண்ணாம்பு கேக்கிறவனாச்சே.''

''சுண்ணாம்பும் கேப்பான் ஆனையவும் கேப்பான்.''

அவள் கையை லாத்திக்கொண்டு போய்விட்டாள்.

அடுத்த நாள் பொய்யாளி பேத்தியுடன் தோதாகப் பேச்சுப்போட்டான்.

''பேத்திக்கு ஒடம்பெல்லாம் அழுக்காருக்கு. குளிச்சுக்கிறப்புடாதா.''

அவள் மனசு குளிர்ந்தது.

''இனிமே நான் குளிச்சுப் பொண்ணுக்கா இருக்கப்போறென். கெணத்துக்குப் போயி அழுக்குத்தீரக் குளிக்க முடியல.''

''பேசாம எங்கூட வா. ஊருக்கெணத்துல எத்தன வாளின்னாலும் எறச்சு ஊத்தி வெள்ளப் பேத்தியா ஆக்கிப்புறென்.''

''வெள்ளப் பேத்தியா...''

அவள் ஏதேதோ நினைவில் நடந்தாள். அவளை ஊர்க்கிணற்றுக்குக் கூட்டிப் போனான். அங்கே வேலாயி காத்திருந்தாள். அதுக்குள் குடத்தை மூணு முறை விளக்கி மினுக்கியிருந்தாள். பொய்யாளி பேத்தியை அவளிடம் ஒப்படைத்து விட்டுக் காட்டுப் பக்கம் போய்விட்டான்.

கருப்பிக்குப் பேரனின் சாமர்த்தியத்தைப் பார்த்துச் சந்தோசம். ஊமைச் சிரிப்பில் கிணற்றோரம் உட்கார்ந்தாள். வேலாயி வாளியில் தண்ணீர் இறைத்து இறைத்து ஊற்றிக் குளிக்க வைத்தாள். தலையைத் தேய்த்தாள். கரிசனையாகப் பேச்சுக்கொடுத்துக்கொண்டே முதுகு சொறிந்தாள்.

''அத்தைக்கு வேல தீராது. இல்லன்னா தண்ணியெடுத்து ஊத்திவுட்டுருப்பா.''

கருப்பி லேசாக நடுங்கினாள்.

''ஒங்கத்தைக்கு எண்ணைக்குத்தான் வேல தீரப்போகுது.''

''இனிமே நான் ஊத்திவுடுறென். ஓம் பேரங்கிட்டச் சொல்லு.''

''பேரன் சொன்னாத்தான் செய்வயாக்கும்.''

வேலாயி வாளித் தண்ணீரை வேகமாகக் கொட்டினாள். கருப்பிக்கு அலுப்புத் தீர்ந்து புடைத்தெடுத்த மாதிரி இருந்தது.

''நல்லாருப்ப தாயி. ஒங் கையால குளிக்கிறதுக்குக் குடுத்துவைக்கணும்... ஸ்... அஞ்ஞாடி...''

அவள் குளிர்ச்சியாக வீடு திரும்பினாள்.

இதுகூட ஆண்டியின் பார்வைக்குத் தப்பவில்லை. அவள் வாசப்படி ஏறு முன் வசவு வந்தது.

''மதியக் குளிப்பு கேக்குதோ மொகறைக்கு. முதுகுல அரிப்பெடுத்தா கல் லெடுத்துச் சொறியணும்.''

''நான் எதுக்குச் சொறியணும். நாதியத்த கழுத நீ சொறிஞ்சுக்கிற வேண் டியதுதான்.''

அவள் சட்டைசெய்யாமல் உள்ளே போனாள்.

வேலாயி பொய்யாளியைச் சந்திக்கும்போதெல்லாம் கேட்டாள்.

''பேத்தியிட்டச் சொன்னயா.''

அவன் உடனே பேத்தியிடம் வந்து விழுந்தான்.

''அப்பச்சியிட்டச் சொன்னயா.''

அவள் ஆண்டியிடம் தொணதொணத்தாள்.

''நமக்கு ஈவெரக்கமே கெடையாதா. சின்னதுக அலமோதுறது கண்ணு தெரியலயா. அசையாமருந்தா எப்படி.''

''நல்லாக் கண்ணு தெரியிதே.''

அவளுக்கு ஆத்திரமாக இருந்தது.

''அதுகள அலக்கழிக்கிறது பாவம். அது ஒன்னயச் சும்மா வுடாது. அவ இந்த வீட்டுக்கு வந்துக்கிறட்டும். ஒனக்குப் பச்சத் தண்ணிகூடக் குடுக்காமப் பட்னி போடப்போறா.''

''நீயே சொல்லிக்குடுத்துரு.''

''அப்படித்தான்.''

''அண்ணைக்குத்தான் ஒனக்கு இருக்கு.''

அவன் வாய்விட்டுச் சிரித்தான்.

ஒருநாள் அடுப்புத் தீ பற்றவைக்கக் கொட்டாரத்தில் சண்டள்ளிக் கொண்டு போன வேலாயைப் பார்த்துவிட்டான் ஆண்டி.

''ஏவ்ளே சண்டள்ளுறதுக்கு எங்க குப்பதானா கெடச்சது.''

''ம்க்கும். ஒங்க குப்பக் கூளம் ஆருக்கு வேணும்.''

அவள் கழுத்தைக் கொணட்டிவிட்டுப் போனாள்.

''யாத்தாடி நீ சிலுப்புற சிலுப்புக்குக் கழுத்து என்னாகும். சுளுக்கிக்கிருச் சுன்னா எம் பேரன் வந்துதான் எடுத்துவுடணும்.''

''நடக்க மாட்டாற கெழடுகளுக்குத்தான் சுளுக்கும். அப்பச்சியும் பேரனும் மெனக்கிட்டுச் சுளுக்கெடுத்துக்கிட்ருங்க.''

அவள் ஒரே ஓட்டமாக ஓடிவிட்டாள். அவன் தன்னை மறந்து சொல்லிக் கொண்டான்.

''பெய நல்ல கழுதையிட்டத்தான் மாட்டியிருக்கான்.''

அன்றைக்கு ராத்திரி ஆண்டி சாப்பிட்டுக் கைகழுவித் துடைத்துக்கொண்டே திருணையில் உட்கார்ந்தான். கருப்பி வெற்றிலை கொண்டுவந்தாள்.

''பெரிய மனுசன் இருக்கானா.''

அவள் முழித்தாள்.

''ஆரு.''

''ஒம் பேரனத்தான் சொல்றென்.''

''சொன்னாலும் சொல்லலன்னாலும் பெரிய மனுசந்தான்.''

''ஆமாமா ஊர ஒழக்கால அளப்பான். நாட்ட நாழியால அளப்பான்.''

''உக்காந்து கஞ்சி குடிக்கிறது கண்ணு தெரியலயா.''

''அப்படியா. அவுகளக் கொஞ்சம் வரச் சொல்லு.''

சாப்பிட்டு முடித்திருந்த பொய்யாளி மெதுவாகத் திருணைப் பக்கம் வந்தான். வீட்டில் எல்லாரும் திருணைக்குக் காதுகொடுத்தார்கள். ஆண்டி வெற்றிலைச் சுருளைக் கடித்து உள்ளே தள்ளியபடி பேரனைப் பார்த்தான்.

''நல்லாச் சாப்பிட்டயா.''

கல் தூணில் சாய்ந்திருந்த பொய்யாளி தலையாட்டினான்.

''ம்.''

''சாப்பிட்ட மூஞ்சி மாதிரி தெரியலயே. அஞ்ஞுக்காரி போடுற சோறு புடிக்கலயா.''

பொய்யாளி பேசாமலிருந்தான். சொக்கம்மாளும் ராக்கனும் மாறிமாறிப் பார்த்தார்கள். பேச்சு போகிற தினுசைக் கண்டு கருப்பி திருணையோரம் உட்கார்ந்துகொண்டாள். ஆண்டி அவளைக் கண்டும் காணாதது போலிருந்தான். அவளுக்கு வாய் துடித்தும் அடக்கிக்கொண்டாள். கிழவன் என்ன வழிக்கு வருகிறான் என்றுதான் பார்ப்போமே. அவன் பேரனைப் பார்வையால் அளந்தான்.

''இந்த வருசம் கலியாணம் முடிக்கணும்னு ஆசையிருக்கா இல்ல ஒங் கப்பன் சொன்ன மாதிரி ரெண்டு வருசம் போகட்டுமா.''

பொய்யாளி அரண்டுபோனான். ஒண்ணும் ஓடாமல் கையைப் பிசைந்தான். தூணில் காலைத் தேய்த்தான். ராக்கன் சொக்கம்மாளைப் பார்த்தான். கிழவன் நம்மை வம்பில் மாட்டிவிடுவான் போலிருக்கிறதே.

''இதுல எனக்கொண்ணும் பேச்சுக் கெடையாது. நாந்தான் அண்ணைக்கே சொல்லீட்டனே ஒம்பாடு ஒம் பேரன் பாடுன்னு.''

''அப்படிச் சொல்லி வெலகிக்கிறயாக்கும்... அடே ஒங்கப்பன் பேசுறதப் பாத்தயா. நீ கலியாணம் முடிச்சாத் தாவலையா தெருவில நின்னாத் தாவலை யான்னு தலைய முழுகுறான். இனிமே நம்ம ரெண்டு பேருக்குள்ளதான் பேச்சு.''

ராக்கன் அடங்கிவிட்டான். ஏதோ சொல்ல வாயெடுத்தவனைச் சொக் கம்மா தடுத்துவிட்டாள். ஆண்டி பேரனைக் கேட்டான்.

''கலியாணத்த இந்த வருசமே வச்சுக்கிறணும்னா நாங்க பாக்கிற பொண்ணத் தான் முடிக்கணும். நாங்க பாக்கிறது நல்லாருக்காதுன்னா இப்பயே சொல்லீரு... உள்ளூருல பொண்ணெடுத்தாத் தொறட்டு. எடுத்ததுக்கெல்லாம் முணுக்னு கோவிச்சிட்டுப் போயிருவா. அவளத் தாங்கித் தடுக்கிக் கூட்டி வரணும். அதனால அசலூருலயே பாத்துருவமா. இல்ல கொஞ்சம் பொறுத்திருந்து உள்ளூருல வெசாரிப்பமா.''

பொய்யாளி பேத்தியைப் பார்த்து மிரண்டுமிரண்டு முழித்தான். கருப்பி ஆண்டியின் போக்கிலேயே ஒரு முடிவைச் சொன்னாள்.

''ஏதொண்ணுக்கும் உள்ளூருலயும் ரெண்டு பொண்ணப் பாப்பொம். புடிக்கலன்னா அசலூருக்குப் போவொம்.''

''நீ பேரனுக்குப் பரிஞ்சுபேச வந்துட்டயாக்கும். அவன் வாயில கொழக் கட்டையா வச்சிருக்கு. கடலு வத்திக் கருவாடு திங்கவான்னு ஒடலு வத்திச் செத்ததாம் கொக்கு. நிக்கிறதப் பாரு கல்லுளிமங்கான் மாதிரி.''

''அப்பச்சிக்கு அம்புட்டு மருவாதி குடுக்கான் தெரிஞ்சுக்கோ.''

''நல்லாத் தெரிஞ்சுக்கிட்டென்... நம்ம பாக்கிற பொண்ணு புடிக்கிறதும் புடிக்காறதும் ஒரு பக்கம் இருக்கட்டும். பொண்ணுக்காரன் குடுக்கலன்னா அந்தக் கேவலம் ஆருக்கு.''

''குடுக்காமப் போவான் பாரு. நம்ம புள்ள நொண்டி மொடமாவா கெடக்குது.''

''அந்தப் பெருமைய அங்கிட்டுக் கெட்டி வச்சிரு. ரெம்ப அழகேந்திரந்தான் ஒம் பேரன்.''

''நீ போயி பொண்ணுக்காரன் வீட்ல நின்னதுல குடுக்க மாட்டன்னு சொல்லீட்டானாக்கும்.''

''எவன் வீட்ல நிக்கச் சொல்ற.''

''பொண்ணு வச்சிருக்கிறவன் வீட்ல.''

''எல்லாருந்தான் பொண்ணு வச்சிருக்கான்.''

''அட இவனே ஒங்கிட்ட ஆரு மாத்துக்கத போட்டுத் தொண்டத் தண்ணியக் குடுக்கக் கெடக்கு. பேசாம நாலு பேரக் கூட்டீட்டு உத்தண்டுப் பெய வீட்டுக்குப் போயி வெத்தலபாக்குப் பலுமாறீட்டு வா.''

''இதச் சொல்றதுக்கு ஒம் பேரனுக்கு வாயி செத்துப்போச்சாக்கும். களவாணிக் கழுதைக.''

பொய்யாளிக்குப் போன உயிர் இப்போதுதான் திருப்பிவந்தது. எப்படியும் நாளைக்கு வேலாயைப் பார்த்தாகணும். ஆவல் குளிராட்டியது.

சொக்கம்மாளுக்குப் புதுசாகப் பயம் வந்தது. இங்கேயே இம்புட்டு வக்கணை பேசும் கிழவன் போகிற இடத்தில் என்ன கூத்துக்கட்டப் போகிறானோ.

ஆண்டி ராக்கனைக் கூப்பிட்டான்.

''அப்ப ஊருக்குடும்பன் வீட்டுக்குச் சொல்லிவுட்ருவொம். வாற பொதங் கெழம போயிறலாம். நல்லநாளுதான்.''

''அங்க எப்பயோ தகவலு போயிச் சேந்துருக்கும்.''

''இருந்தாலும் மொறைக்குச் சொல்லியாகணுமில்ல.''

சங்கதி வீரம்மாமூலம் வேலாயிக்குப் போய் அவள் அஞ்ஞைக்குச் சொல்லி அஞ்ஞை அப்பன் காதில் போட்டு அந்த வழியே சம்மதமும் வந்துவிட்டது. பொய்யாளியும் வேலாயும் தீராத பேச்சில் கலியாணமே நடத்தி முடித்து விட்டது வேறு கதை.

## 6. பருசம் வெளம்புங்க

ஆண்டி வீட்டில் கலியாணக் களை கட்டிவிட்டது. கருப்பிகூடக் காலில் வெந்நீர் ஊற்றிக்கொண்டு திரிந்தாள். அஞ்சு பெண்கள் உரலைச் சுற்றி நின்று மஞ்சள் குத்தக் குலவைச் சத்தம் கலகலத்தது.

மஞ்சணத்தி விறகு வெட்டி கொட்டாரத்தில் காயப்போட்டார்கள். பொய்யாளி கோடாலி பிடித்து மும்முரமாக விறகு உடைப்பதைப் பார்த்துக் கருப்பிக்குப் பொறுக்கவில்லை.

''எய்யா நீயெதுக்குக் கஸ்டப்பட்டுக்கிட்டு. சும்மாருய்யா.''

மாலையம்மா விறகுகளைப் புரட்டிப் போட்டு அலறக் காய வைத்தாள். தங்கையா குழறிக்கொண்டே ஒத்தாசனை செய்தான்.

அடுத்தபடியாக ஊரறியப் பெண் கேட்டுப் போகணும். ஆண்டி ராக்கனைக் கலந்தான்.

‘‘வேற வீட்டுக்குன்னா ஊருக்குடும்பனக் கூட்டீட்டுப் போகலாம். அவன் வீட்டுக்கே போறொம். நாலாளு சம்பாரிக்கணும்.’’

ராக்கன் சொன்னான்.

‘‘ஆளுக்கு அலையணுமாக்கும். போற வழியில கூட்டிக்கிறலாம்.’’

‘‘ஆருட்டச் சொன்னாலும் சொல்லலன்னாலும் ஒந் தங்கச்சி புருசன் இருக்கானே கருத்தையக் குடும்பன் அவங்கிட்டச் சொல்லியாகணும். இல்லன்னா மூக்குக்குமேல சுருத்து வரும். தங்கச்சிக்காரியே கோவிச்சுக்கிருவா.’’

‘‘அவனக் கண்டுபுடிக்கணுமே.’’

‘‘நம்ம தேடிப் போயிப் பாக்கிறதாவது சொல்றதாவது. வீரம்மாட்ட வார்த்தையப் போட்ரு. அது போதும்’’

‘‘நம்ம மொறையக் கழிச்சிருவொம். வந்தா வாறான் வரலன்னாப் போறான்.’’

‘‘ஒரு பொட்டச்சியவும் நல்ல எடத்துல குடுத்தம்ப்பா.’’

‘‘அத இப்பப் பேசி என்ன செய்ய.’’

‘‘அவளுக்கு லவிச்சது அம்புட்டுத்தான்.’’

‘‘முக்கியமா வேற ஆரக் கூப்புடணும்.’’

‘‘ஊருக்குடும்பன் இல்லாறதுனால காலாடி வரணும். பெறகு மண்டையனக் கூட்டிக்கோ. அவன் வந்தாத்தான் மொங்கானும் வருவான். நொண்டியன் எங்க கெடைக்கப்போறான்... தூங்கன மறந்துறாத.’’

ராக்கன் எல்லா ஏற்பாடுகளையும் செய்தான். வீரம்மா கருத்தையனுக்குத் தகவல் அனுப்பியிருந்தாள். அவன் நொண்டியனை அனுப்பிவைத்தான். கூடவே வீரம்மாளையும் போகச் சொல்லியிருந்தான்.

அவள் எதிர்பார்த்ததுதான். ஆனாலும் புருசனைக் கேட்காமல் எந்தக் காரியத்துக்கும் போனதில்லை. தூங்கன் பெரும்பாலும் பொதுக் காரியங்களிலிருந்து ஒதுங்கியே இருப்பான். மகன் எடுத்துக்கிட்ட எடுப்புக்கு என்ன சந்தோசத்துடன் போவது. இருந்தாலும் இந்தக் காரியத்துக்கு மருமகளைத் தனியாக அனுப்ப மனசில்லை. ஆண்டிக்கு என்ன சொல்வது. அவனும் புறப்பட்டான்.

மண்டையன் மொங்கானுடன் வந்தான். அவர்கள் கலியாணத்துக்கும் காடேத்துக்கும் சோடியாகத்தான் போவார்கள். விவகாரங்கூடப் பேசி முடித்து வைப்பார்கள். சக்கிலியக்குடி விவகாரந்தான் அதிகம் வரும்.

ஊருக்குள் கொண்டையங்கோட்டைச் சம்பந்தம் செய்துகொண்டவர்கள் அவர்கள் மட்டுந்தான். மொங்கான் பெண்டாட்டி பூச்சி மண்டையனுக்கு அக்கா. மண்டையன் வீட்டுக்காரி காக்காச்சி மொங்கானுக்குத் தங்கச்சி. ரெண்டு பேரும் நடந்துவரும் தோரணையைப் பார்த்து ‘‘வழிவுடுங்கப்பா கொண்டையங்கோட்டச் சண்டீருக வாறாக’’ என்று நக்கலாகச் சொல்வார்கள்.

ஆண்டிக்குப் பின்னால் ஆட்களைத் தள்ளிவிட்டு ராக்கன் கருப்பி சொக்கம்மா எல்லாரும் வீட்டில் இருந்துகொண்டார்கள். காலாடி வீரன் கேட்டான்.

‘‘வீரம்மாளுக்குப் பொம்பளத் தொணையில்லாமப் போச்சா.’’

மண்டையன் சொன்னான்.

‘‘நீங்க போயிட்ருங்க. நான் ஓடிப்போயி எங்க பூச்சியச்சியக் கூட்டீட்டு வந்துறென்.’’

"நல்ல தொணதாம்ப்பா."

இப்படிக் காரியங்களுக்கு மண்டையனும் பூச்சியும் தோதான கைதான். அக்காளும் தம்பியும் சாவகாசமாக உட்கார்ந்து பேச்சுப்பழக்கம்போடுவதைக் கவனிக்கணும். ஊர் உலகத்தையெல்லாம் துவைத்துக் காயப்போட்டுவிடுவார்கள். அவன் பேச்சில் மூச்சுக்கொருக்க "ஏச்சி பூச்சிதான்." அவளும் "ஏல ஒடப்பெறந்தான்" என்று அசராமல் தாளம்போடுவாள்.

அவளைக் கண்டாலே சிறுபயல்களுக்கு வாய் கொடுகொடுக்கும். ஒருவன் ராகமெடுப்பான்.

"ஏச்சி பூச்சி."

இன்னொருவன் குதிப்பான்.

"தீச்சி தீச்சி."

மற்றவர்கள் ஆதாளியிட்டு ஓடுவார்கள்.

"வாச்சி வாச்சி."

அவள் விளக்கமாற்றுக் கொண்டையைக் காட்டிக்காட்டி வைவாள்.

"வெருவாக்கலங்கெட்ட நாயிகளா. ஒங்களுக்கு அம்புட்டு எளக்காரமாப் போச்சோ. தூமையக் குடிக்கி. சாண்டக் குடிக்கி. ஒங்க அஞ்ஞையக் கூப்புடணும். அக்கா தங்கச்சியக் கூப்புடணும். என் ஒடப்பெறந்தான் வந்துக்கிறட்டும். ஒரு சனியனவாச்சும் புடிச்சுத் தரச்சொல்லி சாணிச்சட்டியில வெளக்கமாத்த நனச்சு சணநீரச் சாத்துனாத்தான் மனசாறும்."

இந்தச் சண்டை ஒருநாளைக்கு அஞ்சாறு தடவையாவது நடக்கும். இதுக்கெல்லாம் மண்டையன்தான் காரணம்.

அது ஒரு பகல்கூத்து. ஒருநாள் மதியம் பூச்சியின் வீட்டில் தீப்பிடித்துவிட்டது. அடுப்பில் எரிந்த விறகுக்கட்டையைத் தண்ணீர் தெளித்து அமர்த்தியும் அமர்த்தாமல் சிக்கனப்படுத்தி மச்சில் எறிந்துவிட்டுக் காட்டு வேலைக்குப் போய்விட்டாள். கொள்ளிக்கட்டையில் உள்கங்கு இருந்திருக்கிறது. அது புகைந்து கூரைக்குப் பரவி காற்று ஊதஊத தீ வளர்ந்து முகட்டுக்குப் போய்க் கும்மாளமிட்டது. உச்சிவேளையில் தீயை அமர்த்த ஆளில்லை. தற்செயலாக அந்தப் பக்கம் வந்த மண்டையனுக்கு ஒண்ணும் ஓடவில்லை. பூச்சியைத் தேடிக் காட்டுக்கு ஓடினான். தவிப்பில் அலறும்போது வார்த்தை பிடிபடாமல் விக்கினான்.

"ஏச்சி பூச்சி"

தீச்சி தீச்சி

வாச்சி வாச்சி".

அந்த நிலைமையிலும் களையெடுப்புப் பெண்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை. அவளை அவசரப்படுத்திக்கொண்டே பின்னால் ஓடினார்கள்.

"போச்சி போச்சி".

வீடுவரை அவள் ஒப்பாரிதான் கேட்டது.

"ஏல ஒடப்பெறந்தான் அச்சி மோசம்போயிட்டனே."

வந்துசேருமுன் வீடு கட்டைமண்ணாகிவிட்டது. இன்னும் தீ எரிந்துகொண்டிருந்தால் அவள் அழுத கண்ணீரைக்கொண்டே அமர்த்தியிருக்கலாம்.

தீயமர்த்தச் சனங்கள் பெரும்பாடு பட்டார்கள். பக்கத்து வீட்டுக் கூரைகளில் ஏறி பறந்து வரும் கங்குகளை ஈரச் சாக்கால் பிடித்துப்பிடித்துக் கசக்கினார்கள். எரவாரக் கூரைத் தட்டைகளைப் பிடுங்கிப் போட்டார்கள். ஈரக் கொங்காணியுடன் வீடு தொழுவுக்குள் நுழைந்து ஆடுமாடு கோழி குஞ்சுகளைக் காப்பாற்றினார்கள். ஊர்க் கிணற்றில் நீரிறைத்து வரிசைபிடித்துக் கைமாற்றினார்கள். அந்தக் கூச்சலிலும் ரெண்டு பேர் கூரைத்தட்டைக்காகச் சண்டை போடுவது தெளிவாகக் கேட்டது.

எண்ணி மூணே நாளில் புதுக் கூரை முளைத்தது. மண்டையனும் மொங்கானும் அதுக்காகப் பட்ட பாடு கொஞ்சமா. அதுதான் பூச்சியின் சாமர்த்தியம்.

அப்பேர்ப்பட்ட பூச்சியில்லாமல் பெண் கேட்டுப் போனால் எப்படி. மண்டையன் அவளைக் கையோடு கூட்டிவந்தான். வீரம்மாளுக்கு இப்போதுதான் தெம்பு வந்தது.

அப்பச்சி துண்டை ஏத்தாப்புப் போட்டு மீசையை ஒதுக்கிக்கொண்டு புறப்படும்வரை பொய்யாளி கவனித்துக்கொண்டிருந்தான். பிறகு ஆள் தட்டுப்படவில்லை.

ஊர்க்குடும்பன் வீட்டில் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவன் பெண்டாட்டி வெண்ணிமாலை சோறு கறியாக்கி முற்றம் தூர்த்துத் தெளித்துத் தயாராக இருந்தாள்.

வீட்டுக்கு முன்னால் ஆண்டியின் மீசையைப் பார்த்ததும் வேலாயி அடுத்த வீட்டுக்கு ஓடிவிட்டாள். வெண்ணிமாலை வந்தவர்களுக்குப் பாயெடுத்துப் போட்டாள். ஊர்க் குடும்பன் யாரையும் கண்டுகொள்ளாததுபோல் மூலையில் உட்கார்ந்திருந்தான். நாலாம் பேர் வீட்டுக்கு வருகிற மாதிரி வந்து இறங்குகிறார்களே. அவ்வளவுக்கு மதிப்பில்லாமலா போய்விட்டோம். அன்னியோன்னியமாகப் பழகும் ஆண்டி ஒருவார்த்தைகூடச் சொல்லவில்லையே. என்னதான் பெரிய சம்சாரியாக இருக்கட்டுமே. ஆள்முகம் பார்க்க வேணாமா.

அவன் வருத்தம் நியாயமானதுதான்.

நொண்டியன் பேச்சை ஆரம்பித்தான்.

''ஒன்னயத் தேடி நாங்க வந்துருக்கொம். நீ மூலையில உக்காந்துக்கிட்டா எப்படிப்பா.''

ஆண்டிக்கு ஊர்க் குடும்பனின் கோவம் புரிந்துவிட்டது. நேரில் ஒரு வார்த்தை சொல்லாமல் வந்தது தப்புத்தான். பதறாத காரியம் சிதறாது. சின்னப் பயல்தான் கொடுகொடுக்கிறானென்றால் நமக்கு அறிவு எங்கே போயிற்று. போடா பொடிப்பயலே என்று மூஞ்சியைத் திருப்பிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறானே இவனுக்கு என்ன பதில் சொல்வது. பழகினவனுங்காட்டிச் சரி. வேறு வீடென்றால் என்னாகியிருக்கும். நாக்கைப் பிடுங்குகிற மாதிரி கேட்டிருப்பான். மூக்கறுந்து திரும்பணும். நாளைக்கு நாலு பேர் மதிக்க மாட்டான். இருந்தாலும் அவன் சமாளித்தான்.

''நாங்க ஒன்னயப் பொண்ணுபாக்க வரலப்பா. நீயெதுக்குச் சமஞ்ச புள்ள மாதிரி உக்காந்துட்ருக்க. ஒனக்கு வேலாயின்னு ஒரு புள்ள இருக்காளாமில்ல.

இம்புட்டு நாளாத் தெரியாமப் போச்சே. எம் பேரன் சொல்லித்தான் தெரியும். போயிப் பாத்துட்டு வாடான்னு மனுசர அரிச்செடுக்கான்.''

பேச்சு போகிற தினுசைப் பார்த்து வெண்ணிமாலை பூச்சி வீரம்மா எல்லாரும் முற்றத்துக்கு வந்துவிட்டார்கள்.

ஊர்க் குடும்பனுக்குச் சூடு கிளம்பியது.

''எம் புள்ள அரமனையிலயா பெறந்துருக்கு வெயிலு மொகத்துல படாம இருக்கிறதுக்கு. ஓம் மூஞ்சியில முழிக்கப்புடாதுன்னு அடுத்த வீட்டுக்குப் போயிட்டா.''

நொண்டியன் இடையில் நுழைந்தான்.

''அவளத்தாம்ப்பா பாக்க வந்துருக்கொம்.''

''பொண்ணு ஆருக்கு.''

''ஆண்டி பேரனுக்கு.''

''எந்தப் பேரன்.''

''ஒண்ணும் தெரியாற மாதிரி கேக்கயே. மூத்தவன் பொய்யாளி தெரியாதா.''

''குண்டியத் தரையில தேச்சிட்டு அலஞ்சாகளே அவுகளா. அந்த அழகேந்திரனுக்குப் போயி மெனக்கிட்டுப் பொண்ணு கேட்டு வந்துட்டீகளாக்கும். எம் மக மொகக்களையென்ன கட்டென்ன.''

ஆண்டிக்கு வாய் சும்மா இருக்கவில்லை.

''எம் பேரன் என்ன சொல்றான் தெரியுமா. ஓம் மக மூஞ்சியப் பாக்கக் சகிக்கலயாம். நாந்தான் அவங்கிட்ட நல்லவார்த்த சொல்லீட்டு வந்தென். ஆரு மூஞ்சி நல்லாருக்குதுன்னு அவுக ரெண்டு பேரக் கேட்டாத் தெரியும்.''

கூடியிருந்தவர்களின் கலகலப்பு ஊர்க்குடும்பனை உசுப்பியது. பெண் கொடுக்கிறது கொடுக்கப்போகிறோம். அதுக்காக வலியப் போய்த் தள்ளின கதையாகிவிடக் கூடாது. கெத்துவிடாமல் பேசினால்தான் கிழவன் சும்மா கிடப்பான். கொஞ்சம் இடங்கொடுத்தால் கிண்டி மேய்ந்துவிடுவான்.

''பொட்டப்புள்ள பில்லறுக்கிற எடத்துல ஓம் பேரனுக்கு என்ன வேலையாம். அறுத்த வரப்புல அனயம் பில்லு இருக்கும் பாரு. அங்கதான் காளமாடு மேயணுமிங்குதோ.''

ஆண்டி மாட்டிக்கொண்டதுபோல் அமைதிப்பட்டுச் சுதாரித்தான்.

''அவன் ஒரு கூறுகெட்ட பெய. வெத்து வரப்புலயா மேய்க்கிறது. அறுத்துவச்ச பில்லுலயில்ல மேச்சிருக்கணும். ஒருவேள மாட்டுக்குப் புடிக்கலயோ என்னமோ.''

''மாட்ட அடிச்சு வெரட்டாம வந்துருக்காளே.''

''ஓம் பேச்சு அப்படியே இருக்கட்டும். இதக் கேளு. காட்ல வெறகு பெறக்கிற பொம்பளைக்குத் தண்ணி தவிச்சா கொளங்குட்டைக்குப் போக வேண்டியதுதான. எம் பேரன் கமல எறைக்கிற கெணத்துலதான் ருசியாருக்குதாம். இதுக்கு என்ன சொல்ற.''

காலாடி ஆண்டியை மடக்கினான்.

''தண்ணித் தாகத்துக்கு எங்கன்னு கெடக்குது. அதெல்லாம் ஒரு கதையாப் பேசப்புடாது.''

ஆண்டி அடங்கிய மாதிரி முனங்கினான்.

''கரும்பு கெட்டோட இருந்தா எறும்பு தானே வரும். அதத் தெரிஞ்சுக் கிறணும். பெரிசாப் பேச வந்துட்டாக.''

ஊர்க் குடும்பன் விட்டுக் கொடுக்கவில்லை.

''கட்டெறும்பு வீடு தேடி வந்துருக்கிறத மறந்துட்டுப் பேசப்புடாது.''

மொங்கன் சமாதானப்படுத்தினான்.

''நாங்களும் வீடுதேடி வந்துட்டோம். மொழஞ்ச மருவாதிக்குப் பொண்ணு குடுக்கத்தான் செய்யணும்.''

ஆண்டி அப்பிராணியாக ஒத்துப்பாடினான்.

''பெரிய மனசு வச்சுக் குடுக்கணும்.''

மண்டையன் வாய்க்குள்ளேயே முணுமுணுத்தான்.

''குடுக்கலன்னா எடுத்துக்கிருவொம்.''

ஆண்டி அவன் தொடையை நிமிண்டினான்.

''சும்மாருல கோவிச்சுக்கிறப்போறான்.''

எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்த தூங்கன் ஒரு வார்த்தை பேச வில்லை. அவன் கண்ணில் மட்டும் சதா சிரிப்பு மின்னிக்கொண்டிருந்தது.

ஊர்க் குடும்பன் இறங்கிவந்தான்.

''மீசக்காரக் கெழட்டுப் பெய பேச்சுக்கு மிஞ்சிப் பேச முடியுமா. தங் குடும்பத்துல ஆர மொழைய வுடணும்னு அவனுக்குத் தெரியும்.''

ஆண்டி முக்கிமுக்கிச் சிரித்தான். ஊர்க் குடும்பன் நடந்துகொண்ட விதத்தை நினைக்கப் பெருமையாக இருந்தது. தாயோளி இவன் குணம் எவனுக்கு வரும்.

ஆண்டியின் சிரிப்பைக் கேட்டு முற்றத்திலிருந்த பூச்சி சொன்னாள்.

''ஒருவழியாப் பேசி முடிச்சிட்டாக போலருக்கு. நல்லதாப் போச்சு... ஒண்ணு மட்டும் தெரிஞ்சுக்கோ. வெளக்கெண்ணெயத் தேச்சுக்கிட்டு ஆத்து மணல்ல பெரண்டாலும் ஒட்றதுதான் ஒட்டும்.''

பெண்கள் மூணு பேரும் உள்ளே போனார்கள். பூச்சி மண்டையனிடம் சொன்னாள்.

''ஏல ஒடப்பெறந்தான் பருசம் பேசி முடிச்சிட்டீகளா. எவ்வளவு பருசம். எண்ணைக்குப் போடப்போறீக. அத வெளம்பிக்கிறது நல்லதில்லையா.''

''ஏச்சி எனக்கொரு சந்தேகம். ஊருக்குடும்பந்தான பருசம் வெளம்பணும்.''

''அட ஆக்கங்கெட்டவனே. பெத்த தகப்பனப் போயி வெளம்பச் சொல்ல முடியுமா. அந்தா காலாடியிருக்கானே தூக்கிவச்ச துருத்தியா. அவன் வாயில என்னருக்குது.''

காலாடி முழித்துக்கொண்டான். ஆண்டியைக் கலந்துகொண்டு இருபத் தொண்ணு பருசம் விளம்பினான். அவன் சத்தம் வேலாயி காதில் தெளிவாக விழுந்தது. வெண்ணிமாலை சந்தோசத்தில் சொன்னாள்.

''எல்லாரும் கைநனச்சிட்டுத்தான் போகணும்.''

ஊர்க் குடும்பன் ஆண்டியை வம்புக்கிழுத்தான்.

''மொதல்ல கெழடனுக்குப் போடு. இல்லன்னா நம்மளக் கடிச்சிருவான்.''

வீரம்மா அந்த வீட்டில் ஒருத்தியாக மாறி ஆட்களைக் கவனித்துக்கொண் டாள். ஆண்டி சிரிப்பையும் அசைபோட்டபடி சாப்பிட்டான்.

## 7. என்னப் பெத்த அப்பன்

பொய்யாளிக்குக் கலியாண வேலைகள் தடபுடலாக நடந்தன. கருப்பி மட்டும் முகம் வாடிப்போயிருந்தாள். பேரனை அடிக்கடி ஏக்கத்துடன் பார்த்தாள். கிட்டத்தில் இருத்தித் தடவிக்கொடுத்தாள்.

''எய்யா கலியாணம் முடிச்ச பெறகு வேற வீட்டுக்குப் போயிருவயா.''

அவன் பேத்தியின் கழுத்தை வளைத்துப் பிடித்து மண்டையில் முட்டினான்.

''எங்கயும் போக மாட்டென்.''

சொக்கம்மாளுக்கு மூஞ்சி கோணியது. இந்தக் கிழவிக்கு வேறு வேலை யில்லை. விடிந்ததிலிருந்து அடையும்வரை பேரன் பேச்சுத்தானா. சீமையில் இல்லாத பேரன்.

''அவன் காணாற தேசத்துக்கா போகப்போறான். தெக்க களத்து வீட்டுக்குத் தான போறான். எங்க சுத்தியும் கஞ்சிக்கு எங்கிட்டத்தான வரணும்.''

கருப்பி சமாதானப்படுத்திக்கொண்டாள்.

''ஆமாமா.''

கலியாணம் நெருங்கநெருங்கப் பொய்யாளிக்கு உறக்கம் பிடிக்கவில்லை. படப்பில் கூளம் பிடுங்கி உதறும்போதும் கஞ்சி குடிக்க உட்காரும்போதும் சீட்டிதான். ராக்கன் கேட்டேவிட்டான்.

''குடும்பருக்கு வாயுங்கையும் சும்மாருக்காதோ.''

பொய்யாளி அப்பனுக்கு முன்னால் மட்டும் சீட்டியைக் குறைத்துக் கொண்டான்.

ஆண்டி ஒவ்வொரு வேலையாக முடித்தான். பருசம்போட்டு நாள் குறித்ததும் மேலூர்ப் பகடைகளை வரச் சொல்லி ஊர்களுக்கு அனுப்பிச் சின்னக் கொட் டான்களில் பாக்கு வைத்தான். பிறகு கொட்டுக்கும் குதிரைக்கும் அச்சாரம் கொடுத்தான். பந்தலுக்கு ஓலையைப் பற்றிக் கவலையில்லை. நாடார் பார்த்துக் கொள்வார். பந்தலுக்கு உள்புறம் வேட்டி சீலை கட்டணும். சங்கதியைச் சொல்ல மருதனுக்கு ஆளனுப்பியிருந்தான். அவன் வந்துசேர நேரமாகிவிட்டது.

''ஏல சின்னத்தாயிளி தாழிவகுத்த இழுத்துக்கிட்டு வெருசனா வர முடியலயோ.''

மருதன் அலுத்துக்கொண்டான்.

''அத ஏன் கேக்கீக. இன்னேரவரைக்கு கழுதைக்குப் பேறுகாலம் பாத்துட்டு வாறென்.''

''அதுக்குன்னாக் கெட்டியான ஆளுடா நீ. வீட்ல கலியாணம் நடக்கப் போறது தெரியுமில்ல.''

''ஆருக்கு ஒங்களுக்கா.''

‘‘எண்ணைக்கிருந்தாலும் எங்கிட்ட வசமா வாங்கிக் கெட்டத்தான் போற. பேரன் கலியாணத்துக்குத் தெருவ மறச்சுப் பந்தலு போட்டு ரெண்டு பக்கமும் கொடவர வாசலு வைக்கணும். பந்தலுக்குள்ள சோடிக்கிறது ஒம் பொறுப்புத் தான்.’’

‘‘அந்தக் கவலைய வுடுங்க. ஊருத்துணி அத்தனையும் கொண்டுவந்து கெட்டிறென். எங்களுக்குச் சாப்பாடு கீப்பாடு உண்டுமா.’’

‘‘ஒனக்கில்லாற சாப்பாடா.’’

‘‘அப்ப ரெண்டு நாளைக்கு நெல்லுப்பருக்க கெடைக்கும்.’’

‘‘அதுக்குள்ளயாச்சும் சவரஞ்செஞ்சு வுட்ருவயா இல்ல இந்தக் கோலத்துல தான் இருக்கணுமா. ஒனக்குப் புண்ணியமாப்போகுது. மைக்கத்திய அம்மியில வச்சாவது ரெண்டு தீட்டுத் தீட்டிவையிப்பா. அதென்ன கத்தியா பன்னருவாளா. சவரமா செய்ற. வக்காளி கரிசக் காட்ல நாத்தறுத்த மாதிரி.’’

‘‘அந்தச் சொகத்துக்காக எத்தன பேரு காத்துக்கெடக்காக தெரியுமா. மந்தப் புளியமரத்துக்கு வந்து பாருங்க.’’

‘‘வேற பொகலு வேணுமே. ஒன்னய வுட்டாலும் கெதியில்ல. வுட்டுப் போனாலும் விதியில்ல.’’

‘‘நீங்க பெயப்படாம வாங்க. மாப்பிள ஆருன்னு அடையாளம் தெரியாம எளவட்டமாக்கிப்புறென்.’’

அவர்கள் சகடாலடிப்பதைக் கருப்பி ஒரு மாதிரியாகப் பார்த்தாள்.

‘அட கொடுமையே மாமன் மச்சான் மாதிரில்ல பேசிக்கிறாக.’

மருதனைப் பிடித்துக்கொண்டாள்.

‘‘வந்தா வந்த வேலையப் பாத்துட்டுப் போகணும். இல்ல வம்பாச் சீரழிஞ்சு போவ. என்ன சொன்ன. எளவட்டமாக்கப்போறயா. ஆமா இவுகதான மாப்பிளைக்கு இருக்கப் போறாக. மூஞ்சியும் மொகறையும். இனியொரு தேரம் அந்தப் பேச்சுப் பேசுன கெடைக்கிறதே வேற.’’

‘‘எஞ்ஞோவ் அவுகளுக்கு வயசு போச்சுன்னு நெனச்சீகளா. இண்ணைக்கும் அவுக எளவட்டந்தான். அது தெரியாதா ஒங்களுக்கு.’’

மருதன் கொஞ்ச நேரம் நின்றிருந்தால் ஆண்டியின் பார்வையில் பொசுங்கி யிருப்பான்.

கலியாணத்துக்கு முதல் நாள் பந்தல் வேலை முடிந்தது. பாதித் தெருவுக்கு நீளமான பந்தல். கோயில் குடவரை வாசல் தோற்றுப்போகும். மருதன் பல நிறத்தில் மாத்துக்கட்டி அலங்கரித்திருந்த லட்சணத்தைப் பார்த்து ஆண்டி அசந்துபோனான்.

‘‘ஏலே கூனப்பெயலே ஒங்கப்பன் பேரக் காப்பாத்தீட்டடா... அய்யா சாமி இண்ணைக்காச்சும் செரச்சுவுட்ருவயா.’’

‘‘இண்ணைக்கு அத முடிச்சிட்டுத்தான் வேற வேல. சாய்ந்தரமாச் செஞ்சுக் கிட்டாத்தான் நாளைக்குக் கட்ட தட்டாமப் புதுசாருக்கும்.’’

‘‘கொஞ்சம் கண்ணு வெளிச்சத்துல செஞ்சு முடிச்சிருப்பா. பெறகு மதிப் புக்குக் களவெட்ன கதையாயிறப்புடாது.’’

பந்தல் வேலை செய்த எல்லாருக்கும் ருசியாகப் பந்தலடிச் சோறு கிடைத்தது. பொய்யாளி ஓடிஓடிப் பந்திவைத்தான். கருப்பிகூட அவனுக்கு ஒத்தாசனை செய்தாள். மருதனுக்கு வயிற்றையும் மிச்சம் கிடைத்த சோற்றையும் சுமக்க முடியவில்லை.

மறுநாள் காலையில் மாப்பிள்ளைக்குக் காப்புக்கட்டு நடந்தது. பந்தல் வாசல்களில் அரசனக்கால் நட்டினார்கள். மணவறைப் பானையில் மாக்கோலம் குத்தினார்கள். குலவைச் சத்தம் அடிக்கடி வீட்டைச் சுற்றிக் கும்மியடித்தது.

அன்றைக்கு ராத்திரி கலிங்கலில் சுண்டங்குளத்து மேளம் தடபுடலாகப் பேசியது. விலுக்கனின் குழல் இருட்டில் வீடுவீடாக நுழைந்து கலியாணத்துக்கு அழைத்தது. குழலுக்கேற்றவாறு சுப்பையன் உறுமியில் கலியாணத் தாளத்தை நூலாக இழைத்துக்கொண்டிருந்தான். அவன் இழுத்த இழுவைக்கெல்லாம் உறுமி சொன்னபடி கேட்டது. கணபதியின் தவில் தளுக்கும் கதுவாலியின் முரசுக் குதிப்பும் சேர்ந்து ஒவ்வொருவரையும் அந்தக் கால நினைவுக்குக் கொண்டு போனது. முற்றத்தில் கிழடுகள் சொக்கிக்கிடந்தன.

''இதுல்லப்பா கொழலு வாசிப்பு. ராத்திரி முழுக்க ஒறக்கம் கிட்ட அண்டுமா.''

''இந்தப் பெய பெறந்த ஒடன சீவாளியச் சூம்பக் குடுத்துருப்பாகளோ.''

''அதுக்கேத்தபடி அவன் உறுமுறதப் பாரு. கையில கொட்டுக் குச்சக் கெட்டி வச்சுக்கிருவான் போலருக்கு.''

''ஆரு கண்டது கொட்டுக்குச் சிட்டுச் சேன போட்டாலும் போட்ருப்பாக.''

''கலியாணத் தாளத்தக் கேட்டுக்கிட்டே இருக்கலாம்.''

''இது குடும்பமாருக்கே உண்டான தாளம்.''

''வேற எந்தச் சாதிக்கும் இப்படிச் சொகமான தாளம் கெடையாது.''

''அதும் பொய்யா.''

சுண்டங்குளத்து மேளமென்றால் சுத்துப்பட்டிகளில் தனி மரியாதை. இம்மிகூடப் பிசகாத தாளத்தைக் கண்டுபிடித்துச் சனங்கள் திரண்டுவந்து விடியவிடிய வேடிக்கைபார்ப்பார்கள். கணபதியின் வாய்ப்பாட்டும் கதுவாலியின் ஆட்டமுமாக விடிந்ததுகூடத் தெரியாது.

சாவு எழவுக்கு வர மாட்டார்கள். பொங்கல் பூசை கலியாணம் என்று நல்ல காரியத்துக்குத்தான் கூப்பிடணும். கலிங்கலுக்கும் அவர்களுக்கும் ராசி. அவர்கள் இல்லையென்றால் பொங்கல் பொங்கலாக இருக்காது. சாமியழைத்துப் போகுமுன் திண்டாட்டமாகிவிடும். கொட்டுக்காரர்கள் சாமியிடம் சாட்டையடி வாங்கி முடியாது.

விலுக்கன் குழலைப் பிடித்து முக்கால் கிறுவாணம் சுற்ற மற்றவர்கள் தாளம் பிடித்தால் ஆடாத சாமியும் ஆடும். வைரவ சாமியின் குதிப்புக்கும் கொட்டுத் தாளத்துக்கும் ஒரு நூல் விலகாது. சுப்பையனின் கையும் சாமியின் காலும் அன்னியோன்னியமாகப் பேசும். தாளம் பிரிக்கப்பிரிக்க ''அப்படி அடி அப்படி அடி. அப்படித்தான்'' என்று சாமியின் சாட்டை துள்ளும். கால்வரிசை மாறினால் இன்னொரு தாளம்.

திருவண்ணாமலை கோயிந்தனுக்குத் திரி கழுகுமலை திருச்செந்தூர் முருகனுக்குக் காவடி இருக்கங்குடி மாரியம்மனுக்கு அக்கினிச்சட்டி எடுத்தால் அவர்கள் வந்தாகணும். ஒவ்வொரு சாமியாட்டத்துக்கும் தனித்தனித் தாள முண்டு. ராத்திரி முழுக்க அவர்களின் ஆட்டமும் பாட்டும் சனங்களை உறங்க விடாது.

அவர்கள் கலிங்கலுக்குச் சொந்தக்காரர்களாகவே மாறிவிட்டார்கள். அண்ணன் தம்பி முறைவைத்துக் கூப்பிடுவார்கள். மேளம் வாசித்த கையோடு செய்முறை செய்துவிட்டுப் போவார்கள். கதுவாலியால் விருந்து சாப்பிட்டு முடியாது. தினைமாவும் தேங்காயும் தின்று வயிறு பொருமிவிடும். நாலு நாள் ராத்திரி தொடர்ந்து ஆட்டம்போட்டு முரசடித்தால் சரியாகிவிடும்.

சுண்டங்குளத்து மேளம் கிடைக்கவில்லையென்றால் ஆண்டி பேரனின் கலியாணத்தைத் தள்ளிக்கூட வைத்திருப்பான். அச்சாரம் கொடுக்கும்வரை நிம்மதியில்லை. மருதனுக்குச் சொல்லி முடியுமா. ஏற்கெனவே எளக்காரமாக் கேட்டான்.

''எப்போவ் உப்பில்லாக் கஞ்சியா குடிக்கப்போறீக.''

நல்ல காலத்துக்கு எல்லாம் நினைத்தபடி நடந்துவிட்டது. நடையைப் பார்க்காமல் அவனே நேரில் போகவில்லையென்றால் முடிந்திருக்காது.

கருப்பிக்கு இதெல்லாம் பெரிசில்லை. மூக்குமுட்ட ஒரு ஆசை உண்டு. பேரன் குதிரைமேல் பட்டணப் பிரவேசம் வருவதைக் கண்குளிரப் பார்க்கணும். ஆண்டியை அரிக்காத நாளில்லை.

''குருதைக்கு அச்சாரம் குடுத்தாச்சா.''

''ஆமா குடுத்துருக்கென் மருதங்கிட்ட.''

''ஒனக்கு வண்ணாக்குடிப் புத்திதான இருக்கும். குருத மட்டும் வராம இருக்கட்டும். வீட்ல குடியிருப்பில்ல.''

அவன் குதிரைக்கு அச்சாரம் கொடுத்ததும் முதல் வேலையாக அவளிடந் தான் சொன்னான்.

''குருத வந்துக்கிட்ருக்குது. ஒரு கடகம் பில்லறுத்து வச்சுக்கோ.''

அப்போதும் அவளுக்கொரு சந்தேகமிருந்தது.

''நல்ல குருதையா கெழட்டுக் குருதையா.''

''பல்லுப் புடிச்சுப் பாக்கிறதுக்கு ஒன்னயத்தான் வரச்சொல்லீருக்கான்.''

**அ**ன்றைக்கிலிருந்து கருப்பி வேண்டியமட்டும் உறங்கிவைத்துக்கொண்டாள். நிதமும் கனாதான். விதவிதமான கனா.

வனாந்தரமான வனாந்தரம். மரம் செடி கொடி புல் பூண்டு என்று ஏகட்டுக்கு அடர்ந்துகிடக்கிறது. நட்டநடுவில் பச்சைப்பசேலென்று பெரிய மணல்மேடு. காட்டுக்குள் ஊடாடும் காற்று மேட்டின் மேல் சொகமாக உருண்டு புரண்டு விட்டுப் போகிறது.

மேற்கே அடிவானத்தோரம் கூட்டங்கூட்டமாகக் குடியிருக்கும் மலைகள் மேகத்துணிகளை அவுத்துப் போட்டுவிட்டு மழையில் குளிக்கின்றன. அவற்றின்

கூந்தலிலிருந்து வடியும் தண்ணீர் ஆறாகப் பெருகித் தங்க இடங்கொள்ளாமல் தவித்து முட்டி மோதி வழியுண்டாக்கிக்கொண்டு கிழக்காமல் ஓடுகிறது. வரவரப் பரந்து விரிந்து இருபுறமும் கரைகட்டிக்கொள்கிறது.

பீங்கானாகத் தெளிந்துவரும் தண்ணீர் மணல்மேட்டை எட்டியதும் கொஞ்சம் யோசித்துவிட்டுத் தெற்கேயும் வடக்கேயும் கயிற்றுப் புரியாக வளைந்து பிரிகிறது. மேட்டைத் தாண்டியதும் ஒண்ணாகக் கலந்து பொங்கிப் புரள்கிறது. மேடு இப்போது பச்சைக்கண்ணாக மாறிவிட்டது. அதைப் பார்க்க ஆசையாக இருக்கிறது.

மேட்டுக்குத் தெற்கே ஆற்றைத் தாண்டி மாடு மேய்க்கும் சிறிசுகளின் கும்மரிச்சம் வாடைக்காற்றில் மெல்ல மிதந்து வருகிறது. இடையிடையே அரிச்சலாகப் பாட்டும் கேட்கிறது.

கொஞ்ச நேரத்தில் மேகங்கள் கூடிப் பேசித் தயாராகின்றன. பொழுது இருட்டி மழை ஊற்றுகிறது. அப்போதும் மாட்டுக்காரப் பிள்ளைகளின் ஆட்டமும் பாட்டமும் ஓயவில்லை. நனைவில் சுதாரிப்புக் கூடிப் புல்தரையைக் களமடித்துக் கூத்தாடுகிறார்கள். சிறு பெண்கள் வட்டப் பிணையலாகக் கை கோர்த்து மொத்தமாகப் பாடிக்கொண்டே வளையமடிக்கிறார்கள்.

''வெட்டிப்போட்ட வேப்பமரம்
வேத்துப்பூத்துச் சொரிய - எம்மா
வேத்துப்பூத்துச் சொரிய
வேப்பம்பூவக் கொய்யவந்த
கிளியரெண்டும் எங்க - தாயே
கிளியரெண்டும் எங்க.''

ஒரு பெண் மட்டும் எதிலும் கவனப்படாமல் தன் சாணிக் கூடையையே வெறித்தபடி உட்கார்ந்திருக்கிறாள். அவள் வம்பாடுபட்டுக் கூடை நிறையப் பொறுக்கிய சாணி மழையில் கரைந்து தரையில் பெருகுகிறது. கனத்து விழும் மழைத்துளிகள் சாணிக் களத்தைக் கண்டமானக்கிக் காயப்படுத்துகின்றன. ஆனாலும் குழிப் புண்கள் உடனுக்குடன் ஆறி மேதிவிடுகின்றன. அவள் எரிச்சலில் எழுந்து போய் வெறுங்கூடையை ஏந்திக் கழுவிக் கவுத்திவிட்டு வந்து மறுபடியும் உட்கார்ந்துகொள்கிறாள். மற்ற பெண்களின் கோர்வை களத்துக்கு நகர்ந்து கூடையைச் சுற்றி ஆடுகிறது. பிஞ்சுக் கால்களின் குதிப்பில் சாணிக் கரைசல் பூத்துச் சிதறுகிறது.

திடீரென ஒரு இடி. நெருப்பு நூலாக மின்னல் குப்புறக் கிடக்கும் கூடைக்குள் பாய்கிறது. அது இறங்கிய வேகத்தில் வீசிய அனல் தாங்காமல் மாடுகள் கலைந்தோடுகின்றன. திகைத்து நிற்கும் பெண்கள் கூச்சத்தில் கண்ணைக் கசக்கிக் கொள்கிறார்கள். மழை வலுத்து சோவென்று சொரிகிறது.

உட்கார்ந்திருக்கும் பெண்ணின் முகத்தில் இப்போது ஈரமான சந்தோசக் களை. கண்கள் அகல விரிகின்றன. கூடை பெரிய விளக்காக மாறுகிறது. அதன் இடுக்கிலிருந்து நாலாபுறமும் வெளிச்சம் பீச்சுகிறது. அவள் உடம்பெல்லாம் சிவந்து அருள் குடியேறிக் குலுங்குகிறது. எழுந்து ஆட ஆரம்பிக்கிறாள். ஆடிக் கொண்டே போய்க் கூடையை எடுக்கிறாள். உள்ளே ஒரு தங்கக் கொழு

நிலத்தில் குத்தி நிற்கிறது. கொஞ்ச நேரத்தில் அது நிமிர்ந்து வளர்ந்து அழகான பெண்ணுருவமாகிறது. தலை முழுக்க ஏராளமான கண்கள். அவற்றின் தகதகப்புச் சூட்டில் சாணிக் களம் இறுகிக் காய்ந்து வழுவழுப்பாகிறது. மழை மெல்லமெல்ல ஒதுங்கி களத்தைச் சுற்றி வேலியிட்டுப் பெய்கிறது.

முழுசாக வளர்ந்து தரையில் கால் பாவி நிற்கும் தங்கச் சிலையைப் பார்த்து எல்லாரும் தன்னையறியாத பயத்தில் கையெடுத்துக் கும்பிடுகிறார்கள். சிலை யின் கண்கள் படிப்படியாகக் குறைந்து ரெண்டாகின்றன. கூடைக்காரப் பெண் தலைவிரி கோலத்தில் ஆடி முடித்து மற்றவர்களைப் பார்த்து மிரட்டுகிறாள்.

''ஏய்... நான் ஆரு தெரியுமா. ஆயிரங்கண்ணுடையா. என்னயக் கொண்டு போயி மணலுமேட்டு உச்சியில குடியமத்திக் கும்புடுங்க.''

அதுக்குக் கட்டுப்படுகிறார்கள். மழை வெறித்து நேரம் இருட்டுகிறது. கூடைக்காரப் பெண் சிலையைக் கூடையில் வைத்து மாவிளக்காக ஏந்திக் கொண்டு முன்னால் போக அந்த வெளிச்சத் துணையில் மற்றவர்கள் மாடுக ளுடன் பின்னால் நடக்கிறார்கள்.

ஆற்றில் புது வெள்ளம் கரைபுரண்டோடுகிறது. இறங்கினால் அவ்வளவு தான். அடித்து இழுத்துக்கொண்டு போய்விடும். மாவிளக்குப் பெண் கொஞ்சமும் பயமில்லாமல் இறங்குகிறாள். கூடையைத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்தபடி கழுத்துவரை தண்ணீரில் நின்றுகொண்டு கரையில் நிற்பவர்களைக் கூப்பிடுகிறாள்.

''எல்லாரும் எனக்குப் பின்னால வாங்க. நான் எண்ணைக்கும் ஒங்களுக்குத் தொணையாருப்பென்.''

அந்த வார்த்தைக்குக் கட்டுப்பட்டு மாடுகள் வரிசையாக இறங்குகின்றன. மாட்டுக்காரர்கள் அவற்றின் வாலைப் பிடித்துக்கொண்டு நடக்கிறார்கள். தண்ணீர் எய்க்காத பொடிசுகள் மாடுகளுடனேயே நீய்கிறார்கள். சுளுவாக ஆற்றைக் கடந்துவிடுகிறார்கள்.

அக்கரையில் ஊரே திரண்டு அவர்களுக்காகக் காத்திருக்கிறது. பிள்ளைகளும் மாடுகளும் சிந்தாமல் சிதறாமல் கரையேறி வந்த ஆச்சரியம் அவர்களைக் குடைந் தெடுக்கிறது. மாவிளக்கைப் பார்த்து எல்லாரும் பயத்துடன் கும்பிடுகிறார்கள்.

கூட்டம் மணல்மேடேறி உச்சிக்குப் போகிறது. அங்கே படர்ந்து நிற்கும் ஒற்றை வேம்படியில் மாவிளக்கை இறக்கி வைத்துவிட்டுச் சிறு பெண்கள் சுற்றிச்சுற்றிக் கும்மியடிக்கிறார்கள்.

''வேப்பமரத்தவும் தூருங்கம்மா
வெத்தலப்பந்தலப் போடுங்கம்மா
வேத்துவாற நம்மதாயிக்கு
வெள்ளிக்குஞ்சங்கொண்டு வீசுங்கம்மா.''

கொஞ்ச நேரத்தில் கல் வருகிறது. சுண்ணாம்புக் காரை வருகிறது. மா விளக்கை மையமாக வைத்துக் கோயில் எழும்புகிறது. சிறிசுமுதல் பெரிசுவரை ஓடிஓடி வேலைசெய்கிறார்கள். கோயிலைச் சுற்றி வகைவகையான மரங்கள் முளைக்கின்றன. மா பலா வாழை கொய்யா எலுமிச்சை மாதுளை தென்னை பனை... இன்னதுதான் என்றில்லை. மரங்களில் பழங்கள் சரஞ்சரமாகத் தொங்கு கின்றன. தென்னையும் பனையும் காய்க் குலைகளைச் சுமக்க முடியாமல்

திணறுகின்றன. கீழே விழுந்து கிடக்கும் பழங்களை மிதித்துக்கொண்டுதான் நடக்கணும். உள்வரிசையில் ஏராளமான பூச்செடிகள் போட்டிபோட்டுப் பூத்திருக்கின்றன.

ராத்திரி நேரம். கோயிலுக்கு முன்னால் ஒரே திருவிழாக் கூட்டம். ஊர் களிலிருந்து சனங்கள் சாரைசாரையாக வருகிறார்கள். வானம் மிளகாய்ப்பழம் பறித்த தோட்டமாக வெறிச்சோடிக் கிடக்கிறது. மேலோகத்துக் கன்னிப் பெண்கள் நிலாவையும் வெள்ளிக் கூட்டங்களையும் மாவிளக்காக ஏந்திக் கொண்டு திருவிழாவுக்கு வந்துவிட்டார்கள். நிலா வெள்ளிகளைக் கூட்டிக் கொண்டு போக வரிசையாக நடக்கும் கன்னிகளின் முகம் விளக்கு வெளிச்சத்தில் தங்கமாக மின்னுகிறது. வெள்ளெலிபோல் மூக்கும் முழியும். அவ்வளவு லட் சணம். ஒவ்வொருத்தியையும் தொட்டுப் பொட்டுவைத்துக்கொள்ளலாம்.

நாலாபுறமும் ஆற்றோரம் மேளச் சத்தம் கேட்டுக்கொண்டேயிருக்கிறது. வேப்பிலைப் பொதிவில் அக்கினிச்சட்டி ஏந்திப் பலர் தாளத்துக்கேற்ப ஆடிக் கொண்டே கோயிலுக்கு வருகிறார்கள். மேலும் பலர் ஆயிரங்கண் பானைகளைச் சுமந்து வருகிறார்கள். கோயிலுக்கு முன்னால் மூடிய கண்களில் மாவிளக்கு ஏந்தியபடி பெண்கள் வரிசையாகப் படுத்திருக்கிறார்கள். கும்பிட்ட கை பிரிக்காமல் ஈர உடம்புடன் தரையில் கோயிலுக்கு உருண்டு வருபவர்கள் எத்தனையோ பேர்.

கருப்பி கோயில் வாசலில் கண்ணைமூடிக் கும்பிட்டபடி நிற்கிறாள்.

“தாயி மகமாயி எம் பேரன் கலியாணம் நல்லபடியா முடியணும். மின்னுக்கு அவன் கொழந்தையோட ஒஞ் சன்னதிக்கு வரணும்.”

கூட்டம் அவளை நெரித்துத் தள்ளுகிறது. பல கைகள் மூஞ்சியில் இடிக்கின்றன. சந்தனம் பூசிய மொட்டைத் தலைகளுக்கிடையே தள்ளாடு கிறாள். ஆனாலும் கண்ணைத் திறக்கவில்லை. மேளதாளத்தை அமுக்கிக் கொண்டு குதிரை ஓடிவரும் சத்தம் தெளிவாகக் கேட்கிறது. கூடவே சனங்கள் குதிரைக்கு வழிவிட்டுச் சிதறியோடும் கூச்சல். குதிரை கிட்டத்தில் வருகிறது. கரகரத்த கனைப்பு. பேரன் குதிரை மேலிருந்துகொண்டு தேடுகிறான்.

“பேத்தி... பேத்தி...”

அவள் கண்முழித்துப்பார்த்துக் குழறுகிறாள்.

“பேத்தி இங்க இருக்கன்யா.”

அவன் கீழே குதித்து ஓடிவந்து பேத்தியைக் கைத்துணையாகக் கூட்டிப் போகிறான்.

மாவிளக்கு ஏந்தியிருக்கும் கன்னிப்பெண்கள் குலவையிட்டுக்கொண்டே மேலோகத்துக்குப் பறந்துபோகிறார்கள். கொஞ்சநேரத்தில் வானமெங்கும் சரவிளக்குகள் கோர்த்துத் தொங்குகின்றன.

விடிந்ததும் கருப்பி கனாவை முந்தியில் முடிந்துகொண்டாள்.

## 8. பட்டணப் பிரவேசம்

கருப்பி ஏங்கிக் கிடந்த கலியாண நாளும் வந்துவிட்டது. இருப்புக்கொள்ளாமல் தவித்தாள். முண்டியடித்துக்கொண்டு பேரனை அழகுபார்த்தாள். பெண்ணைத் தாய்மாமன் தூக்கி வந்து மணவறையில் வைக்கக் காலாடி விளம்பித் திருப்பூட்டி முடிய மணவறை சுற்றி உப்புப் பானையில் மோதிரம் தேடியெடுத்து வாழ்த்து மானம் பாடி குலவைச் சத்தம் தேய்ந்து உருமாக்கட்டு தொடங்கும்வரை ஒவ்வொரு காரியத்துக்கும் அவள் கண்ணில் நீர் திரண்டு உருண்டுகொண்டேயிருந்தது.

பிறகு பட்டணப் பிரவேசம். மேளதாளத்துடன் பேரன் மாப்பிள்ளைத் தோரணையில் குதிரைமேல் இருப்பதைப் பார்த்து அவள் மயங்கிப்போனாள். தெருவில் கூடியிருக்கும் சனங்களுக்கெல்லாம் உயரத்தில் வேட்டைக்குப் போகும் ராசா மாதிரி... ஆண்டியைத் தேடிக் கண்டுபிடித்தாள்.

''ஏய்.''

''ஓய்.''

''ஒசக்க இருக்கிறது எம் பேரந்தானா.''

''அவனேதான். குருதமேல கழிஞ்சு வைக்கப்போறான். நீதான் குளுப் பாட்டிவுடணும்.''

அவளுக்குத் திடீரென்று ஒரு கவலை வந்துவிட்டது. சொக்கம்மாளிடம் போனாள்.

''குருத ராத்திரி முழுக்கப் புள்ளையச் சொமக்கணுமே. வகுத்துக்கு என்ன குடுத்தானோ.''

''அதப் பட்டினியாவா போடுவாக.''

''புள்ள ஒறங்காம இருந்துக்கிருவானா.''

''ஒனக்கே ஒறக்கம் வரல. புது மாப்பிள ஒறங்குவானா.''

''கழுத்துல இம்புட்டு மால போட்ருக்காகளே. மொகத்த நல்லாக்கூடப் பாக்க முடியல.''

''அவன் கீழ எறங்குனதும் கிட்டருந்து நல்லாப் பாத்துக்கோ.''

அவர்களுடன் கலந்திருந்த மாலையம்மாளின் முகம் பூத்திருந்தது. அவர்களைப் போலவே அவளும் புதுச் சீலை உடுத்தியிருந்தாள். அவளது ரெட்டைக் குழந்தைகள் சொக்கம்மாளிடமும் வீரம்மாளிடமும் இருந்தார்கள்.

ஆண்டி வித்தியாசம் பார்க்கவில்லை. தங்கையா உள்பட எல்லாருக்கும் கோடி எடுத்துவந்து கொடுத்தான். மாலையம்மா புருசனைப் பார்த்தாள். அவன் ஆண்டியைப் பார்த்தான்.

''இதெல்லாம் எதுக்கு பெரியாளு. வீணால செலவுதான.''

ஆண்டி அதட்டிப் பேசினான்.

''துணிமணி எதுக்காக எடுப்பாக. அப்படிப் பாத்தா கலியாணம் பெரிசா முடிக்கிறதே செலவுதான்.''

சண்முகம் மறுத்துப் பேசவில்லை. சந்தோசமாகக் கோடியுடுத்திக் கொண்டார்கள்.

கலியாணத்துக்குக் கழுகுமலையிலிருந்து பெரிய நாடாரும் அம்மமுத்தும் வந்து சாய்ந்தரம் திரும்பிவிட்டார்கள். ரெண்டு பேரும் வந்ததில் ஆண்டிக்குச் சந்தோசம். கருப்பி நார்ப்பெட்டி பிடிக்காமல் அரிசி பருப்பு காய் கறி கொடுத் தனுப்பினாள்.

கருத்தையனைக் காணவில்லை. வர மாட்டானென்று தெரிந்தும் ஆண்டிக்குச் சின்ன வருத்தம். அவனுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. எல்லாருக்கும்போல் அவனுக்கும் வேட்டி துண்டு எடுத்துக்கொடுத்தபோது வீரம்மா அமைதியாக வாங்கிக்கொண்டாள். அப்பனும் மகளும் யாரோபோல் பேசிக்கொண்டார்கள். அதுக்குப் பிறகு அவன் கருத்தையனைப் பற்றி விசாரிக்கவில்லை.

வேலாயி கலியாணப் பெண்ணாகக் குதிரையோரம் நடந்து வந்தாள். பெரிய சீலையைச் சுமந்துகொண்டு நடக்க அச்சலத்தியாக இருந்தது. கருப்பி தனது நகைநட்டு அத்தனையையும் பெண்ணுக்குப் பாரமேற்றியிந்தாள். அந்தக் கனம் வேறு. இதென்ன காலைக் கட்டிப் போட்ட மாதிரி. எல்லாரும் வேடிக்கை பார்த்துக்கொண்டு. எவ்வளவு நேரம் தலைகுனிந்தபடியே நடப்பது.

துண்டுத்துணியை மாராப்புப் போட்டுக்கொண்டு அவுத்துவிட்ட கண்ணுக் குட்டியாகக் காடுகரையில் திரிவாள். காதில் குணுக்கு குதியாளம் போடும். பொய்யாளியைப் பார்க்கணுமென்று தோன்றினால் அதுக்கொரு வேலை வைத் திருப்பாள். அவனும் அப்படித்தான். படப்படியில் பார்த்த மாதிரி இருக்கும். கொஞ்ச நேரத்தில் ஆளை ஓடைக்காட்டில் பார்க்கலாம். நேரங்காலம் தெரியா மல் பேசுவார்கள். வீடு திரும்பும்போது நீ யாரோ நான் யாரோ என்று ஆளுக் கொரு திசையாகப் பிரிந்து அப்பிராணியாக வருவார்கள்.

ஒளிந்து மறைந்து பேசிப் பழகும் உறவிலிருக்கும் சொகமே தனி. வீட்டில் வசவு வாங்கிக்கட்டும்போது மனசுக்குள் புதுசுபுதுசாகப் பொய் முளைக்கும். தப்பித்த பிறகு எவ்வளவோ சந்தோசமாக இருக்கும். அப்பேர்ப்பட்ட பழக் கத்தை நடுத் தெருவில் நாலு பேருக்கு முன்னால் தமுக்கடிப்பதில் பிரியமில்லை. சே இந்தக் கூத்து எதுக்கு.

கலியாணக் கூட்டத்தில் ஆண்டிக்குப் பின்னாலிருந்து ஒருவன் வேடிக்கை யாகக் கேட்டான்.

''மாப்பிள மட்டும் குருதமேல வரணும். எங்க பொண்ணு கீழ நடக்கணு மாக்கும்.''

இன்னொருவன் எளக்காரமாகச் சொன்னான்.

''சோதா மாப்பிள கீழ வுழுந்தா தாங்குறதுக்கு ஆளு வேணுமில்ல.''

ஆண்டி ஊர்க் குடும்பனைத் திரும்பிப் பார்த்துக்கொண்டான்.

''ஒங்களுக்குச் சங்கதி தெரியாதா. ஊருக்குடும்பன் சொல்லியிருப்பான்னு நெனச்சென். குருத சாணி போட்டா ஏந்தணும் பாரு. அதுக்காகத்தான் பொண்ணு கீழ நடந்து வருது.''

இனிமேல் கிட்டத்திலிருந்தால் ஆண்டியின் ஏடாசி தாங்காதென்று ஊர்க் குடும்பன் பின்னடித்தான். அப்படியும் ஆண்டி விடவில்லை.

''எங்கடா ஊருக்குடும்பனக் காங்கல. சாணிக்கூடைய எடுத்துவரப் போயி ருக்கானா.''

ஒருவன் ஒத்துப்பாடினான்.

''அப்படித்தான் இருக்கும். பொண்ணு சாணிய முந்திச்சீலையிலயா ஏந்த முடியும்.''

வேலாயிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. இந்தக் கிழவனுக்குச் சாகும்வரை ஏடாசியும் எக்கண்டமும் போகாது. நம்மால் அப்பன் அனுபவிக்கவேண்டி யிருக்கிறது. ஏன்தான் கலியாணம்முடித்தோம் என்றிருக்கிறது. பொய்யாளி இறங்கி வரட்டும். அதுக்குப் பிறகு இருக்கிறது கதை.

இந்தச் சமயம் பார்த்து முரசுச் சத்தத்துக்கிடையில் கதுவாலி கெக்கரிப்பை உருட்டிவிட்டான். சனங்களுக்கிடையே கதுவாலிக்குஞ்சு தப்பியோடிய பர பரப்பு. வண்டிச் சரள் கொட்டியதுபோல் சிரித்தார்கள். அவனுக்குப் பொருத்த மான பேர்தான்.

தெருநெடுக மாமன் மச்சான் முறைகாரர்கள் பருத்தி விதையும் பொரி கடலையும் கலந்து வைத்துக்கொண்டு மாப்பிள்ளைமேல் எறிய அண்ணன் தம்பி சித்தப்பன் பெரியப்பன்மார்கள் துப்பட்டியால் தடுத்து மூடினார்கள். கருப்பி புலம்பிக்கொண்டே வந்தாள்.

''புள்ளையப் பாடாப் படுத்துறாகளே. ஆராச்சும் தட்டிச்சொல்லப்புடாதா.''

எறிந்து சிதறும் பருத்தி விதை தன்மேல் விழும்போதெல்லாம் வடிவு கல் விழுந்த வலியில் சிணுங்கினாள். அவளது பொய்க் கோவத்தைப் பார்த்துச் சந்தோசப்படவே சரியாக இருந்தது வேலாயி அண்ணன் முத்துவேலுக்கு. அவன் ஒரு தடவைகூட மச்சினனைக் குறிவைத்து எறியவில்லை.

கூட்டம் வண்ணாக்குடிக்கு வந்துவிட்டது. ஆண்டி சொன்னான்.

''மேளகாரங்க இங்க ஒரு சமாப்பு வச்சுத்தான் கெளம்பணும்.''

மருதனுக்குச் சந்தோசம் பிடிபடவில்லை. ஆண்டி எடுத்துக்கொடுத்திருந்த கோடி வேட்டியுடுத்திச் சுதாரிப்பாக இருந்தான்.

விலுக்கன் குழலின் பக்கவாட்டுத் துளையில் சீவாளியைச் சொருவி பாம் பாட்டத்துக்குத் தோதாக மகுடி வாசித்தான். கணபதி கொட்டுக்குச்சைப் பாம்பு போல் ஆட வைத்தான். தவிலைத் தலைக்கு மேலே தூக்கிப்போட்டுப் பிடித்து மறுபடியும் தாளம் தப்பாமல் அடித்தான்.

கருப்பி பதறிப்போனாள்.

''இதென்ன கூத்தும்மா. மேளம் ஒடஞ்சுபோனா எத வச்சுக் கொட்டுவானாம்.''

சுப்பையன் பெருவிரல் நகத்தால் உறுமியில் சொகமாக இழுத்தான். அசந்து போன பலர் சன்மானமாகத் துட்டுக்கொடுத்தார்கள். அவன் துட்டை வைத்துத் தாளம் பிரித்தான்.

பாம்பாட்டம் முடிந்ததும் கதுவாலி தனிவாசிப்புக்குப் பிடித்துக்கொண் டான். உறுமிக்கும் முரசுக்கும் பெரிய போட்டி. அது கேள்வி கேட்க இது பதில் சொல்ல மாறி இது கேட்க அது சொல்ல ரெண்டும் சளைக்கவில்லை. கதுவாலி கிட்டப் போய் முடுக்கினான்.

''ரங்கர ரங்கர... போதுமா வேணுமா.''

சுப்பையன் நின்ற இடத்திலிருந்தே சொன்னான்.

''ம்க்கும் ம்க்கும்... ஓடாத ஓடாத.''

''ரங்கர ரங்கர... வாறென் வாறென்.''

''ம்க்கும் வந்துபாரு... ம்க்கும் வந்துபாரு.''

சுப்பையன் முடிவுக்கு வந்தான். இரு பக்கமும் பேசிய உறுமி இப்போது ஒரு பக்கம் மட்டும் நின்று விளாசியது. அந்த விரட்டலுக்கு ஈடுகொடுக்க முடியாத கதுவாலி கொட்டுக்குச்சைக் கவுட்டுக்குள் திணித்தபடி அயலூர் நாய்போல் 'காள் காள் ' என்று கத்திக்கொண்டு ஓடினான்.

கூட்டத்தில் ஒருவன் அடித்துச் சொன்னான்.

''தாயோளி ஆனானப்பட்ட சுப்பையன எதுத்துட்டுத் தப்பிச்சுப் போயிறவா.''

சிரிப்புக்கிடையில் சீவாளியைச் சுவைத்த விலுக்கன் புதுத் தெம்மாங்கை எடுத்துவிட்டான்.

பட்டணப் பிரவேசம் வண்ணாக்குடியைச் சுற்றி வீடுவந்து சேர பொல பொலவென்று விடிந்துவிட்டது. வெள்ளங்காட்டி தாய்மாமன் பிடித்திருக்கும் மாமக்கிடா பின்தொடர பெண்ணும் மாப்பிள்ளையும் தண்ணீரெடுக்கப் போனார்கள். கிணற்றுக்குள் வெற்றிலை போடும்போது பல தலைகள் எட்டிப் பார்த்தன. வெற்றிலைகள் குப்புறவும் மல்லாக்கவும் கலந்து மிதந்தன. அப்போது கூட பூச்சி மண்டையனைத் தேடினாள்.

''ஏல ஒடப்பெறந்தான் கருப்பி பேரன் குடுத்துவச்சவன். ஆணும் பொண் ணுமா வதவதன்னு புள்ள பெறக்கும்.''

''ஏச்சி பூச்சி...'' என்று ஆரம்பித்த பயலை ஒருவன் அதட்டினான்.

''ஏல வாயக் கிழிக்கணுமா.''

எல்லாரும் வீடு திரும்ப நேரமாகிவிட்டது. ஆரத்தியுடன் முணுமுணுப்பில் காத்திருந்த சின்னப் பெண்களுக்கு இப்போதுதான் முகத்தில் களை வந்தது.

இன்னும் செய்ய வேண்டிய சாத்திரங்களைப் பற்றி கருப்பி சொக்கமா ளிடம் ஓதிக்கொண்டேயிருந்தாள்.

''அடியே நல்லாக் கேட்டுக்கோ. சாய்ந்தரம் தலைக்கு ஊத்தணும். பெறகு மறுவீடு போகணும். அதுக்குண்டான சாமாங்களத் தயார்படுத்தணும்.''

''மறுவீடென்ன மறுவீடு. ஒரு தெருவிலருந்து மறுதெரு.''

''ஆனாலும் அது ஒரு சாத்தரமாச்சே.''

''பெறகென்ன செய்யணும்.''

''மறுவீடு போயித் திரும்புனதும் எளவட்டப் பாக்கு வெத்தல வைக்கணும். ஊரு வெத்தல வேற வைக்கணும். வெத்தல போடுதுகளோ என்னமோ கை நெறைய வேணும்.''

''ஊருக்கு வேறென்ன குடுக்கணும்.''

''ஊரரிசி தரணும். இல்லன்னா பொம்பளைக பேச்சு கேட்டு முடியாது. கம்மம்புல்லு பெடச்சுக் கல்பாத்துத் தொவச்சுத் தயாராத்தான் இருக்கு. அதப் பக்குவமா மொளையரிசியாக்கணும். சரியா மொளைக்கல மொளச்சுப் பயிரா யிருச்சுன்னு பொட்டச்சிக ஆயிரம் கொருப்படிப்பா. வாய் நெறையாக் கொதப்பி வக்கணையாத் திங்கணும்.''

''வாயடச்சிருவொம்.''

''இனியொரு முக்கியமான சாத்தரத்த மறந்துட்டனே. பொண்ணெடுத் ததுக்காக ஊருப்பணம் குடுக்கணும். வீட்டுக்கு வந்து கேக்கிற அளவுக்கு வச்சுக் கிறப்புடாது.''

இடையில் பெண் மாப்பிள்ளையை கருப்பி எத்தனை தடவை அழகு பார்த்தாள் என்று கணக்குக் கிடையாது.

சாய்ந்தரம் தலைக்கு ஊற்றுவதற்காகப் பெண்ணையும் மாப்பிள்ளையையும் சோடியாக உட்கார வைத்துப் பெரியவர்கள் அவர்கள் தலையில் எண்ணெய் வைத்தார்கள். ஆண்டி ஒவ்வொருவராகக் கூப்பிட்டு வைக்கச் சொன்னான். கருப்பிகூடத் தட்டுத்தடுமாறி வந்து வைத்துவிட்டுப் போனாள். அந்த நேரம் சிறிசுகளின் முகங்களைச் சரியாகப் பார்க்க முடியாமல் கண்ணீர் மறைத்து விட்டது. மாமன் மச்சான் முறைகாரர்கள் அப்போதும் விடவில்லை. தலையில் நெல்லுமியைக் கொட்டினார்கள்.

ஆண்டிக்குக் கருத்தையன் நினைவு தட்டியது. அவனைப் பற்றி ஊருக்குத் தெரிந்ததுதான். இருந்தாலும் அவன் வராதது மரியாதைக் குறைச்சல். வாய் திறந்து சொல்லாவிட்டாலும் மனசுக்குள் நினைத்துக்கொள்வார்கள். அவன் வீரம்மாளைப் பார்த்தான். அவள் எப்போதும்போல் அமைதியாக இருந்தாள். ஆனாலும் நொண்டியனை அப்பப்பப் பார்வையால் கேட்டாள். அவனும் அப்படியே பதில் சொன்னான்.

''இப்ப ஆளு வந்துரும் தாயி. கவலைய வுடு.''

ஆண்டி சண்முகத்தைத் தேடினான்.

''வந்து எண்ணெ வையிங்க. நீங்க வைக்காம எப்படி.''

தானும் பெரிய மனுசனாகிவிட்ட நினைப்பில் சண்முகம் பொய்யாளியின் தலையில் கை வைக்கும்போது கண்ணீர் முட்டியது.

அந்தச் சமயம் திடீரென்று நொண்டியனின் அரட்டல் பலமாகக் கேட்டது.

''வழிய வுடு... வெலகு வெலகு...''

கருத்தையன் புது வேட்டியுடுத்தி துண்டை ஏத்தாப்புப் போட்டு மாலையும் கையுமாக வந்துகொண்டிருந்தான். கூட்டத்தில் மூச்சுப்பேச்சில்லை. மூஞ்சிக்கு மூஞ்சி பார்த்துக்கொண்டார்கள். ஆண்டி அமைதியாகக் கவனித்துக்கொண் டிருந்தான். வீரம்மாளின் முகத்தில் சிரிப்பு தளிர்த்திருந்தது. புதுக்கோலத்தில் இருந்த புருசனைப் பார்த்த சந்தோசத்தில் கொஞ்ச நேரம் பெண் மாப்பிள்ளையை மறந்துவிட்டாள்.

பெண்ணும் மாப்பிள்ளையும் கருத்தையனை மரியாதையுடன் பார்த்துச் சிரித்தார்கள். அவன் இருவருக்கும் எண்ணெய் வைத்தான். பொய்யாளியிடம் பக்குவமாகச் சொன்னான்.

''புள்ளைய மனசு நோகாம வச்சுக் காப்பாத்தணும் தெரிஞ்சதா.''

பொய்யாளி அப்பிராணியாகத் தலையாட்டினான். கருத்தையன் மடியி லிருந்து பணமெடுத்து இருவருக்கும் கொடுத்துவிட்டு ஓரக்கண்ணால் வீரம் மாளைத் தேடினான். அவள் பூஞ்சிரிப்பால் சொன்னாள்.

''இங்கதான் இருக்கென்.''

அவன் தோள் சந்தோசத்தில் விம்மியது.

''வரும்போதே பாத்துட்டென்.''

அவள் பார்வை கொஞ்ச நேரம் அவன் மார்பில் விளையாடியது. அதே சிரிப்பு.

''போதும்.''

அவன் அருவமில்லாமல் நடந்தான். இறுக முடிந்த கருங்கொண்டை நிமிர்ந்த நடையசைவில் மறுகிமறுகிச் சொல்லிக்கொண்டு போனது.

''போயிட்டு வாறேன். .. போயிட்டு வாறேன்...''

தருகாமல் தவித்த அவள் மனசு உருகிஉருகி வழியனுப்பியது.

''பத்தரமாப் போகணும்.''

முண்டியடித்துக்கொண்டு பார்த்த சனங்கள் அசந்துபோய் நின்றிருந்தார்கள். எல்லாம் கனாபோல் நடந்து முடிந்துவிட்டது. மூச்சுப்பேச்சு அடங்கியிருந்த நிலையில் நொண்டியனின் ''வெலகு வெலகு...'' மட்டும் தெருநெடுகக் கேட்டுக் கொண்டேயிருந்தது.

வீரம்மா கண்ணைத் துடைத்துக்கொண்டு தண்ணீர்க் குடத்தைத் தூக்கிப் பெண்ணின் தலையில் மளமளவென்று ஊற்ற ஆரம்பித்தாள். தன்மேனியில் தண்ணீர் தெறிக்கவும் ஆண்டி சந்தோசத்தில் முணுமுணுத்தான்.

''நம்மள நனச்சிருவாக போலருக்கே.''

## படலம் 4

### 1. தாது வந்தது

மருதன் வெளுப்புத்துறைக்குப் போய் நாளாயிற்று. கைகளைக் கட்டிப்போட்ட முடக்கம். சதா ஈரத்தில் ஊறும் பாதமும் உள்ளங்கையும் விறைப்பேறித் தடித்துப் போயிற்று. ஊமை வெயிலுக்கு உடம்பு காந்தியது.

விடியக்காலம் முழித்தால் வெள்ளாவி நினைவு. நீராவிக் கதகதப்பு ஏக்கம். மூணு பிள்ளைகளும் அதையண்டி உட்கார்ந்து குளிர்காய்வார்கள். அவர்களின் விளையாட்டும் ஈரத்தை உதறிச் சூடேறும்.

வெள்ளாவி வாசலில் எட்டிப்பார்க்கும் தீக்கொழுந்தின் உரசலில் கால்கள் முறுக்கேறிச் சோம்பலை முறிக்கும். வேலைகள் மும்முரப்படும்... இனிமேல் என்றைக்கு ஊருக்குள் அழுக்கெடுத்து உவர் முறுக்கி...

வீட்டு மூலையில் கோழி கிளற முடியாமல் இறுகிப்போன உவர்மண். வேலையற்ற கவைக்கம்பு சுவரில் சாத்தியிருந்தது. அவன் கவையில் கொத்தாக முள் கோர்த்துச் சுமந்துவந்தால் ஓட மரம் குதித்துக்குதித்து ஓடிவருவது போலிருக்கும்.

முற்றத்தில் உட்காரக்கூட அழுக்குப் பொதியில்லை. கழுதைகளற்ற கட்டுத் துறை. புதுச் சாணி தட்டுப்படவில்லை. கூடை நிறைய அள்ளிக் குப்பையில் கொட்டும் மாடத்தி இப்போது தேடிப்பிடித்துக் கையில் பொறுக்கினாள்.

செல்லமாகச் சிணுங்கியபடி வீட்டையண்டிச் சுணங்கும் கழுதைகளைக் காணவில்லை. மந்தையில்தான் திரியும். வெள்ளை வெயிலுக்குப் பசிக்கிறக்கம் தாங்காமல் கந்தல் நிழலில் படுத்திருக்கும். இல்லை புல் கருகலைப் பிறாண்டிப் பார்த்துவிட்டுப் பெருமூச்சில் புழுதி கிளப்பிக்கொண்டு நிற்கும்.

அதுகளும் என்ன செய்யும். ஆடுமாடா காலாறக் காடுகரையில் சுற்றித்திரிய. எந்நேரமும் காலைத் தளைந்துகொண்டு தவ்வித்தவ்வி நொண்டும் பிழைப்பு. பொதி சுமக்கும்போது மட்டுந்தான் தளையில்லாமல் சாதாரணமாக நடக்க முடியும்.

வெள்ளங்காட்டி வெள்ளாவியைச் சுற்றி வந்து சுணங்கும்போது பாவமாக இருந்தது. வெறும் கஞ்சித் தாழியை முகந்துபார்த்துவிட்டு மூக்கால் கேட்டன.

''இண்ணைக்கும் பொதியேத்தலயா.''

அவன் கை ஒரு கழுதையின் கழுத்தைத் தடவிக்கொண்டே சொன்னது.

''பொதியேத்துனாக் கஞ்சி கெடைக்கும் இல்லையா.''

பிறகும் கரகரத்த மூச்சு.

''அழுக்கெடுக்கலயா.''

''துணியடிக்கக் கெதியில்ல.''

அவன் சிறு கலயத்தில் தண்ணீர் கொண்டுவந்து தாழியில் ஊற்றினான். அதன் தூர்கூட மறையவில்லை. குருவி குடிக்கும் தண்ணீரைக் கழுதை குடித்துத் தாகம் தீரவா. தண்ணீருக்கும் பஞ்சமாகிவிட்டது.

கழுதைகள் முண்டியடித்துக்கொண்டு உறிஞ்சி முடித்தன. வயிறு நிறைய வில்லை. ஊர்க் கிணற்றில் சிந்திக் கிடக்கும் மண்டித் தண்ணீரைத் தேடிப் புறப் பட்டன.

கழுதையான கழுதையா. சங்குகோர்த்த கம்பளிக் கயிறு கழுத்தில் விம்ம சதைப் பிடிப்பில் குதிரைக்குட்டியாகத் திரியும். ஊரைச் சுற்றிப் புல் மேய்ந்து தீராது. மேய வாய் கடுத்தால் மந்தையிலேயே படுத்து உருண்டு அரிப்புத் தீர்க்கும். முதுகு சொறியும். கடித்து விளையாடும்.

கழுத்துக்குக் கழுத்து மோதி ஒருமூச்சு நீயா நானா மல்லுக்கட்டு நடக்கும். அப்படியே கிறுவாணம் சுற்றும்.

''சரி நாளைக்கு வச்சுக்கிறலாம்.''

''இல்ல இண்ணைக்கே ஒருகை பாத்தாகணும்.''

''அப்படியா. வா வேற எடத்துக்குப் போவொம்.''

செல்லக் கனைப்பு. சீண்டும் கடிப்பு. பொய் உதை. வால் கிளப்பிய குட் டோட்டம். நின்று மூச்சுவாங்கிச் சொகமாக மோண்டு சாணிபோட்டால் வயிறு குறையும். பிறகும் மேய்ச்சல். நினைத்த நேரம் கஞ்சித் தாழிக்கு வரும். வாயில் அள்ளிய சோற்றுப் பருக்கை நழுவும்போது கீழுதட்டால் உருட்டும் அழகே அழகு.

அதுகளுக்கு ஒருவேளைக் கஞ்சி ஊற்ற முடியவில்லை. கொணங்கித் திரிவதைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது. மனுசருக்கே கஞ்சியைக் காணும். ஏன்தான் பிள்ளைகளைப் பெற்றோம் என்றிருக்கிறது.

சிலநாள் பொறுமையிழந்து மாடத்தியிடம் கேட்டான்.

''கஞ்சிக்குப் போகலயா.''

''வெள்ள குடுக்காம எந்த மொகத்தோட பான தூக்கிப் போறது.''

''போனா இல்லன்னா சொல்லீருவாக.''

வயிற்றுக் குடைச்சல் தாங்காமல் கஞ்சிப் பானையை இடுக்கிக்கொண்டு போகவும் செய்தாள். முற்றத்தில் தயங்கி நின்றாள். சத்தம்போட்டுக் கஞ்சி கேட்க முடியவில்லை.

''கஞ்சி போடுங்கஞ்ஞா...''

பெண்கள் கிட்டவந்து சொன்னார்கள்.

''ஒனக்கு எங்க நெலம தெரியாதா மாடத்தி.''

''அஞ்ஞாக்கமாரு ஓலவச்சாத்தான் எங்க வகுத்துமொற கழியும்.''

''ஓலவைக்கிறதுக்குத் தவசமுமில்ல தண்ணியுமில்ல.''

''புள்ளீக படுற பாதரவப் பாக்கச் சகிக்காமத்தான் வந்தென் தாயி.''

''எங்க புள்ளீகளப் பாத்தா ஈரக்கொலையப் புடுங்குது.''

அவள் பானை நழுவிவிடாத பிரயாசையில் திரும்பினாள். வீட்டில் பிள்ளைகள் புளிச்ச தண்ணீர்ப் பானையைத் துழாவிக்கொண்டிருந்தார்கள்.

மருதன் கூரை எரவாரத்தில் துருத்தியிருந்த தட்டைகளைச் சரிப்படுத்திய படி கிழக்கே வெள்ளாவியையே பார்த்துக்கொண்டிருந்தான். முள்மேல் நிற்கும் வேதனை. முதலில் இந்த இடத்தை விட்டுப் போகணும். கம்மாப் பக்கம் போனா லாவது மனசாறும். மெல்ல நடந்தான்.

கம்மாய்க்குள் எல்லா இடமும் முறுகிக் கிடந்தது. தண்ணீர்த் தடமில்லை. அங்கங்கே பாளம்பாளமாக விருவோடியிருந்தது. கரைச் சரிவில் செடிகள் வெயில் குடித்துக் கிறங்கி மடிந்துகிடந்தன. முகம் வாடிக் களையிழந்துபோன புங்க மரம். ஒரேயடியாகப் பட்டுப்போய்விடுமோ. மேட்டுப்பரப்பில் கருவ மரங்கள் கருகி நின்றன.

கலிங்கலோரம் நாதியற்றுக் கிடக்கும் வெளுப்புக் கல். மண்ணில் பதிந்து மக்கிப்போன பழைய துணிகள். கலிங்கலில் நடக்கும்போது நெருப்பாகப் பொசுக்கியது.

கரையைப் பிளந்து குறுக்குப்பாதையில் ரெண்டு வண்டிகள் கரம்பை யடித்தன. அவன் மெலிந்த வார்த்தையில் கேட்டான்.

''கரையப் பௌந்துட்டீகளே. திடுதும்னு மழபேஞ்சு கம்மா நெறஞ்சாச் சங்கடமாச்சே.''

''ஆமா மழ பேயும்னு மல்லாக்கப் படுத்துக் கெனாக்கண்டுக்கிட்ரு.''

வண்டிக்காரன் எரிச்சலில் மாட்டு வாலை முறுக்கினான். நோஞ்ச மாடுகளை வைத்துக்கொண்டு பாரமென்ன வேண்டிக்கிடக்கிறது. மருதனுக்கு மனசாற வில்லை.

''காட்ல போட்ட வெள்ளாமையவே எடுக்க முடியாமக் கருகிப்போச்சு. புதுசா எந்த வெள்ளாமைக்குக் கரம்பையடிக்காகளாம்.''

வாய்ச்சூடு விருவிருத்தது. உதடு காய்ந்து தொண்டை வற்றிவிட்டது. சுருண்டு நின்ற ஆதாளைக்கொப்பை இணுங்கிப் பாலை உறிஞ்சினான்.

அதுகூடச் சூடேறியிருந்தது. கொப்புளித்துத் துப்பினான். துவர்ப்பை நமட்டிக் கொண்டு மொட்டைக் கருவ மரத்தின் நோய் நிழலில் சாய்ந்தான். அவனுக்குள் செழிப்புக் கால நினைவு சாரலாகத் தூறியது. அந்தச் சிலிர்ப்புச் சொகத்தில் மெல்லமெல்ல மயங்கிப்போனான்.

கம்மாயில் கலிங்கல் தத்தி முடிந்து கசிந்துகொண்டிருக்கிறது. அவன் கலிங் கலில் நீட்டிப் படுத்துக் கசிவு நீரை அணைகட்டித் தரைநீச்சலடிக்கிறான். கரை யிலிருந்து பார்த்தால் குரவை மீன் துள்ளுவது போலிருக்கிறது.

தண்ணீர் மேதிவிட்ட வெளுப்புக் கல்லை மேட்டுக்குக் கொண்டுவர அப்பனும் ஆத்தாளும் பிரயாசைப்படுகிறார்கள். அப்பன் குனிந்து கல்லைத் தூக்கும்போது பிடி நழுவிக் குப்புறப் பாய்கிறான். ஆத்தா அவன் இடுப்பைப் பிடித்துத் தூக்கிவிடுகிறாள். நனைந்த உடம்புடன் ரெண்டு பேரும் வம்பாடு பட்டுக் கல்லைப் புரட்டி வந்து தோதுப்படுத்துகிறார்கள்.

எங்கிருந்தோ வேகமாகப் பறந்து வரும் பட்சி கலிங்கலுக்கு மேலே வட்ட மிடுகிறது. ரெம்பப் பெரிசு. ரெக்கை முளைத்த தாழி மிதப்பது போலிருக்கிறது. துடுப்பு மாதிரி சப்பட்டை அலகு. நுனியில் கொத்தத் தோதாகக் கொக்கி வளைவு. கால்களில் பன்னரிவாள் நகம். சுளகுச் சிறகடிப்பு வீச்வீச்சென்று இரைகிறது. அவனை மீனென்று நினைத்து அது மெல்ல இறங்குகிறது. விளையாட்டு மும் முரத்தில் அவன் கவனிக்கவில்லை. அது கர்கர் என்று முனங்கிக்கொண்டு அவன் கோவணத்தைக் கொத்தித் தூக்குகிறது. அரணாக்கயிறு அறுந்துவிடவே அவன் பொத்தென்று குப்புற விழுகிறான். அப்படியும் விடவில்லை. நகத்தால் கோர்த்துத் தூக்கத் தோதுபார்க்கிறது. அவன் பயத்தில் அலறுகிறான்.

''அய்யோ ஆத்தா ஆத்தா...''

ஆத்தா பதறியடித்து கவைக்கம்பைத் தூக்கிக்கொண்டு ஓடிவருகிறாள்.

''குடிகெட்டுப்போச்சே. எம் புள்ள எம் புள்ள...''

அப்பனும் பின்னால் வருகிறான். பட்சி அவர்களைக் கண்டு பயப்படுவதாக இல்லை. அப்பன் கல்லெடுத்து எறிகிறான். அது சிறகினால் தட்டிவிடுகிறது. அடுத்த கல்லை வாயால் பிடித்து நொறுக்கித் துப்புகிறது. ஆத்தா வசம்பார்த்துக் காத்திருந்து கவைக்கம்பால் ஓங்கி அடிக்கிறாள். மண்டையில் சரியான அடி. கிறுவாணம் சுற்றிக் கீழே விழுந்து சாகிறது. அதுக்குப் பிறகும் அவள் ரெண்டு அடி கொடுக்கிறாள்.

அதைச் சுமக்க மாட்டாமல் தூக்கிவந்து கரையோரம் போட்டுத் தூவி பிடுங்கித் துப்புரவாக்கித் தீமூட்டிச் சூட்டாங்கறி போட்டுத் தின்கிறார்கள். கறியைக் கடிக்கும்போது எண்ணெய் வடிகிறது. அவ்வளவு கொழுத்த உருப்படி.

கொஞ்ச நேரத்தில் அதைப் போலவே ரெண்டு பட்சிகள் வேகமாக வரு கின்றன. சூட்டாங்கறி போட்ட இடத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு மாறிமாறி அவர்கள்மேல் பாய்ந்து சிறகினால் அடிக்கின்றன. அவர்கள் பம்மித் தப்பிக் கிறார்கள். பட்சிகள் ஓயவில்லை. அப்பனையும் ஆத்தாளையும் அமுக்கிப் பிடித்து நகத்தால் தலையைப் பற்றித் தூக்கிக்கொண்டு பறந்துபோகின்றன. அவன் கதறிக் கொண்டே பின்னால் ஓடுகிறான்.

''அய்யோ ஆத்தா...''

பட்சிகள் புங்க மர அடர்த்திக்குள் நுழைந்துவிடுகின்றன. கடைசியாகத் தெரிந்த ஆத்தாளின் காலும் உள்வாங்கிக்கொள்கிறது. அவன் விருமுத்தி பிடித்து நிற்கிறான். திக்கித்திணறும் வாய் திறந்து அழுகிறது.

''ஆத்தா ஆத்தா...''

மரத்தடியில் கிறங்கிக் கிடந்த மருதன் துள்ளத் துடிக்க எழுந்து உட்கார்ந்தான். கம்மாயில் தண்ணீரைக் காணும். நிலப் பச்சை விரிப்பில்லை. கண்ணில் கசிந்திருந்த ஈரத்தைத் துடைத்துக்கொண்டான். அப்படியும் ஏக மஞ்சளாகத் தெரிந்தது.

அவனுக்குள் ஆத்தாளின் நினைவு முளைவிட்டது. அவள் இருந்தால் எவ்வளவு ஆறுதலாக இருக்கும். எந்தக் கஷ்டத்திலும் தெம்பூட்டுவாள். அவள் வைராக்கியம் யாருக்கு வரும். அதுக்குக் கொடுத்துவைக்கவில்லை. போன வருசந்தான் அப்பனுக்குத் துணையாகப் புங்க மர நிழலுக்குப் போய்விட்டாள். படுக்கவில்லை அழுந்தவில்லை. முற்றத்தில் அழுக்குப் பொதிமேல் சாய்ந்த வாக்கில் மயங்கிக் கிடந்தாள்.

''எங்களத் தவிக்க வுட்டுட்டுப் போயிட்டயே.''

கருவ மரத்தைக் கட்டிப்பிடித்துக்கொண்டு முட்டிமுட்டி அழுதான். தட்டுத்தடுமாறி வீடு திரும்பும்போது இருட்டிவிட்டது.

இந்த வருசம் ஆடிப்பட்டம் ஓடிவிட்டது. நிலம் பாறையாக இறுகிக் கிடந்தது. ஆவணி மாசமும் அவ்வளவு சொகமில்லை. அச்சலத்திப்படுத்தும் அழுகுணித் தூறல் தொலைந்துபோனது. புண்ணியத்துக்கு ஒரு மழை பெய்து கரிசக்காடு விருவடங்கிப் பதம் கொடுத்தது. உழுது விதைத்தார்கள். நாலாம் பக்கம் அத்தனையும் முளைத்துவிட்டன. ஈரிலை முளைகள் காற்றிலாடும் அழகைப் பார்த்து நம்பிக்கை வலுத்தது. அந்த நம்பிக்கை நிலைக்கவில்லை. காலம் கை விரித்துவிட்டது. எந்தப் பயிருமே வளரவில்லை. வெயில் அகோரத்தில் காய்ந்து சுருண்டு கருகித் தீய்ந்துவிட்டது. ஒருவன் கவலையில் கைவிரித்தான்.

''ஆன குட்டிபோடும்னு பெரிசா நம்பியிருந்தென். லத்திதான் போட்டது.''

புரட்டாசிக் கட்டமும் தாண்டியாயிற்று. புரட்டாசியில் மழை பெய்தால் காடு கரையைப் புரட்டியெடுத்துவிடும். பட்டம் கொஞ்சம் பிந்தினாலும் பயிர்ப் பச்சை ஈரத்தில் எக்குப்போட்டு வளரும். மழை ஏன்தான் இப்படிக் கொடுமைப் படுத்துகிறது. வானத்தில் மேகத்துக்குக்கூடப் பஞ்சமா.

சரி புரட்டாசிதான் மலடாகிவிட்டது. ஐப்பசி அடைமழையுமா ஏமாற்றணும். அடைமழை பிடித்தால் மணலாகச் சொரியும். ஒரு வேலையை முழுசாக முடித்தோம் என்றிருக்காது. களையெடுக்க நிரைபிடித்தால் மறுநிரை திரும்பு முன் தூறல் முணுமுணுக்கும். கமலை பூட்டி மாட்டைப் பிடிக்கையில் ஒரு பாட்டம் விழுந்து கமலைக் குழி வழுக்கும்.

கார்த்திகைச் சாரலுக்கு என்ன வந்துவிட்டது. கார்த்திகைக்கு மிஞ்சின மழையுமில்லை கர்ணனுக்கு மிஞ்சின கொடையுமில்லை என்று மனசு குளிரச் சொல்வார்கள். அது மழைக்குப் பதிலாக வெயிலைத்தான் கொடையாகக் கொடுத்துவிட்டுப் போனது.

மார்கழியிலும் ஒரு சொட்டு விழவில்லை. மழை மந்தாரத்தின் அறிகுறிகூட இல்லாமல் காற்று காய்ந்து வெக்கையாக வீசியது. மார்கழிப் பனிதான் எவ்வளவு சொகமானது. முக்காடு போட்டுக்கொண்டு வேலைகளை முடிக்கும்வரை குளிரே தெரியாது. இப்போது வெயிலில் முக்காடு போட்டு அண்ணாந்து பார்க்க வேண்டிய நிலைமை.

பருவ மழையில்லாமல் கம்மாயில் தண்ணீரில்லை. அதனால் நீர்ப்பிடிப் பற்று இறக்கத்துக் கிணறுகள் வள்ளிசாக வற்றிவிட்டன. ஊருக்குள் பல மாதிரி புலம்பினார்கள்.

''இந்த வருசம் தோட்ட வெள்ளாம எடுத்தாப்புலதான்.''

''வேப்பங்காட்டு மொதலாளிமாரு கொறிக்கிறதுக்குக்கூட நெல்லு கொண்டுபோக முடியாது.''

''நம்ம வகுத்துக்கே வழியக் காணும். மொதலாளிமாரப் பத்திப் பேச வந்துட்டான்.''

''கெணத்துல நாலு கூன எறைக்கிறதுக்குள்ள தரதட்டுது. ஊறஊற எறச்சுப் பாத்தென். வத்துனதும் மாடுகள அவுத்து மேய்க்க வேண்டியது. ஊறுனதும் எறைக்க வேண்டியது. வாய்க்கா நமந்து பாத்தியில தலவைக்கிறதுக்குள்ள வத்திப் போகும். தண்ணி பயிர மொகந்துபாத்துக்கிட்ருக்கும். அத ஆவலோட பாத்துட் ருக்கிற பயிரு தவிக்கிற தவிப்பப் பாக்கணுமே.''

''எங் கெணத்துக்குள்ள தவசம் காயப்போடலாம்.''

வாளியிலும் குடத்திலும் தண்ணீர் சுமந்து ஒவ்வொரு பயிராக ஊற்றிப் பார்த்தார்கள். ஒப்பேறவில்லை. கேப்பைப் பயிர் நரைத்துவிட்டது. மேலே எழும்ப வில்லை. கேப்பைதான் என்னமாக விளையும். முறுக்கி மடக்கிய கைபோல் இறுகி நிற்கும் கருதுகளை லேசில் பிரிக்க முடியுமா. பயிர்த் தோகைகளை இணைத்துப் பின்னிய குருவிக் கூடுகள் காற்றுக்குத் தொட்டிலாடும்.

அப்பேர்ப்பட்ட தோட்டம் ஈரமற்று மூளியாகிப் போனது. இந்த வருசப் பெழப்பு இம்புட்டுத்தான் என்று அங்கங்கே சில கருதுகள் தள்ளி இணுக்கு கிழிந்து தொங்கிக்கொண்டிருந்தன. காதறுந்த பெண்ணாக நிற்கும் கேப்பைத் தட்டையை ஏக்கத்துடன் பார்த்து எச்சை விழுங்கி என்ன செய்ய.

சில கிணறுகளில் தரையைப் பூசிக் கிடக்கும் தண்ணீரில் தொட்டுப் பிடித்து விளையாடும் கூனிகள் சுவர்க் கசிவுவாயில் தவங்கிடந்து பிறகு வெயில் விரட் டலில் கூனை கோலும் ஆழமான இடத்துக்குச் சுருங்கிக் குமிந்துவிட்டன. சூடேறும் நீரில் அவை படும் பாடு சொல்ல முடியாது. கமலைச் சட்டத்தில் நிற்கும் மீன் கொத்தி கையளவு நீருக்குள் வாடும் கூனிகளுக்காக இறங்கினால் உயரே வந்து விடுவோமா என்ற மலைப்பில் முழித்தது.

கரிசக் காடுகளில் கம்மம்பயிர் ஏற்கெனவே ஒற்றை வேரில் சவண்டு சுருண்டுவிட்டது. முளைக்கும்போது முகக்களையாக இருந்த பருத்திச் செடி மண்ணைக் கவ்வியது. உளுந்து நிறம் மாறி இலையுதிர்ந்து மொட்டைக் காம்பு களாக அலங்கோலத்தில் நின்றது. கலகலப்பாக இருக்க வேண்டிய காடு அருள் கெட்டுப்போனது.

''வெள்ளாமையெல்லாம் அழிஞ்சு ஆடுமாடு மேயிது.''

''அழிஞ்ச பிஞ்சையில குருத மேஞ்சா என்ன கழுத மேஞ்சா என்ன.''

ஆண்டிக்கெல்லாம் எவ்வளவு காடுகள். எல்லாம் தீய்ந்துபோயிற்று. கம்புக்குப் பயிருழவு அவன் நிலத்தில்தான் முதலாவதாக நடக்கும். ராக்கனிடம் அடிக்கடி சொல்வான்.

''சோளம் நட்டாப்புல கம்பு கெட்டாப்புல இருக்கணும். அப்பத்தான் நல்லா வெளையும்.''

அதுக்குச் சந்தர்ப்பமில்லாமல் போயிற்று. ராக்கன் சொக்கம்மாளிடம் அழுகாத குறையாகச் சொன்னான்.

''பெரிய மனுசன் வாயி நெறையாச் சொல்லுவான். இந்த வருசம் கம்பு ஒரேடியாக் கெட்டுப்போச்சே.''

அவளுக்கு மனசு ரெம்பக் கனத்தது.

''அருங்கோடையில துரும்பத்துப்போச்சே.''

ஆண்டி காடியில் கிடக்கும் மாடுகளையும் பழைய கூளப் படப்பையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு ராக்கனிடம் வந்தான்.

''மாடுகளுக்காச்சும் கூளம் வரும்னு நெனைச்சென். அதுமில்லாமப் போச்சு.''

ராக்கன் காடியோரம் வாடி நின்ற வாதையை அண்ணாந்து பார்த்தான்.

''வெதச்ச காணமே வெளையல பெறகு எது வெளஞ்சு கூளம் வரப்போகுது.''

''எள்ளுக்கு ஏழு ஒழவு. கொள்ளுக்கு ஒரு ஒழவு அடிச்சுப் பக்குவம் பாப்பென். இப்ப அள்ளிப்பாக்க நீதமில்லையே. காட்ல கெடைக்கிறத அறுத்துக் கொண்டுவந்து சேருங்க. மாட்டுப் பாவத்த நெனைச்சா ஒறக்கம் புடிக்க மாட்டங்குது.''

ராக்கன் நிதமும் படப்பைச் சுற்றிப்பார்த்து அடையாளம் வைத்துவிட்டுப் போனான். ஆண்டி கூளத்துக்காக அயலூருக்கு அலைந்தான். அங்கேயும் இதே கதைதான்.

**ஊ**ர் முழுக்கக் கிறங்கியது. வாடிய முகங்கள். வெம்பிச் சூம்பிய பிஞ்சுகள். ஏனோதானோவென்று திரிந்தார்கள். கஞ்சிக்குத் தவசத் தட்டுப்பாடு. கொத்துக் கூலி கிடைக்கவில்லை. களையெடுப்பு நாத்து கருது தட்டையறுப்பு எந்த வேலையும் இல்லை.

தை மாசம்கூடத் தட்டுத்தடுமாறி வந்துபோனது. தையில் வெள்ளாமை விளைச்சலை வீடு சேர்த்து மாளாது. சூல்கொண்ட பருத்திச் செடிகள் சோலையாக வளர்ந்து கிடக்கும். தை மாசம் தடவு பருத்தி மாசி மாசம் மடிப் பருத்தி. ஆடி மாசம் அழிவு பருத்தி. பெண்கள் சீண்டாத செடியிருக்காது. கலியாண வீடாக இருக்கும் காடு இழவு வீடாகிவிட்டது. தைப் பொங்கல் கொண்டாட்டம் கும்மாளமில்லாமல் கரைந்துபோனது அதைவிட வேதனை.

கொட்டாரத்தில் வெற்றுக் களங்கள் வேகாரியாகக் கிடந்தன. கருங்கள மடித்துச் சாணி தெளித்துப் பக்குவப்படுத்த வேண்டிய இடங்கள் மொட்டைச் செடிகளுடன் துப்புரவற்றிருந்தன. களங்கள் இப்படியா இருக்கும். கருதுச் சாணைகள் வரிசையாக மூடிப் படுத்திருக்கும். மாட்டு வண்டிக்கடியில் குடி

யிருந்து மாறிமாறிக் காவலிருப்பார்கள். கம்மங்கருதுப் பிணையலடிப்பு நடந்தால் சிறிசுகளின் மொய்ப்பு சொல்ல முடியாது. முற்றிய கருதுகளை எடுத்துக் கசக்கி காய்ந்தும் காயாத கம்மம்புல்லை வாயில் போட்டு எச்சுப்பாலொழுக அசை போட்டுக்கொண்டு திரிவார்கள். களத்தில் பொலியளப்பதும் அளந்ததை வீட்டுக்குச் சுமப்பதுமாகச் சனங்கள் அவசரக்கோலத்தில் நடமாடுவார்கள்... என்ன செய்வது இந்த வருசம் ஒரு வெள்ளாமைகூடக் களத்துக்கு வரவில்லை.

விடியக்காலம் கோழிச் சத்தம் குறைந்துவிட்டது. அதுகள் பாடு பெரிய பாவம். ஊரைச் சுற்றிக் குப்பையைக் கிளறியும் கொக்கரை நிறையாத பிழைப்பு. ஊரோர மரங்களில் குருவிக் கெச்சட்டமில்லை. ராத்திரி தங்குமிடத்துக்காக ஏசலும் வசவுமாக நிறைய சங்கதி நடக்கும். அத்தனையும் எங்கே போய்விட்டன. வெள்ளாமையே இல்லாத ஊரில் என்ன சீவனம் வேண்டிக்கிடக்கிறது. குழந்தை களைப் பறிகொடுத்த குடும்பங்களாக மரங்கள் நின்றன.

சனங்களிடம் சன்னஞ்சன்னமாகப் பயம் குடியேறியது. ஒருவர் மூஞ்சியை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

''பஞ்சம் வருமோ.''

''இனியொரு தேரம் வரணுமாக்கும்.''

''தாதுவருசப் பஞ்சம் வந்தா தரமட்டமாக்கீட்டுத்தான் போகும்.''

''புள்ள குட்டிக இப்பயே கெறங்குது.''

''என்ன செய்றதுன்னு தெரியல. கோட்டி புடிச்சாப்புல இருக்குது.''

''இப்பக்கூட ஒரு மழ பேஞ்சாலும் கரையேறிக்கிறலாம்.''

''பொன்னுருகக் காஞ்சு மண்ணுருகப் பேஞ்சாக் காலம் செழிச்சிரும். கஞ்சி கெடச்சிரும்.''

ஊர்க் குடும்பன் வந்து தகவல் சொன்னான்.

''மேக்க அச்சம்பட்டியோரம் நீளமா சாலப் பாத போடப்போறாகளாம். வேலைக்கு ஆளு வேணுமாம்.''

தூங்கன் கையெடுத்துக் கும்பிட்டான்.

''வெள்ளக்காரத் தொர புண்ணியவாளன்.''

மண்டையன் கேட்டான்.

''சம்பளம் எம்புட்டுத் தருவாக.''

தூங்கனுக்கு இது சரியாகப் படவில்லை.

''இந்தச் சமயத்துல வேல குடுக்கிறதே பெரிசு. எம்புட்டுக் குடுத்தா என்னப்பா. வகுத்து மொற கழிஞ்சாப் போதும்.''

வீடு தவறாமல் சாலை வேலைக்குப் போனார்கள். கூடை மம்பட்டி தூக்கச் சத்தில்லாத நிலைமையிலும் கொணங்கிக்கொணங்கி நடந்தார்கள். அங்கே போய்ப் பார்த்தால் ஏற்கெனவே பெருங்கூட்டம் நின்றது. சுத்துப்பட்டிகளி லிருந்து எல்லாச் சாதிக்காரர்களும் வந்திருந்தார்கள். அழுக்கடைந்து எக்கிய வயிறுகளுடன் கண்கள் குழி விழுந்து ஒருவர்கூடத் தெளுச்சியாக இல்லை.

ஆண்டி வீட்டிலிருந்து யாரும் போகவில்லை. குலுக்கையில் பழைய தவசம் இருந்தது. மாலையம்மாளுக்குக் கொஞ்சம் கொடுத்தார்கள். சண்முகத்துக்கு வாங்க மனசில்லை. ஆண்டியிடம் சொல்லிப்பார்த்தான்.

''எங்களுக்குச் சின்னக் குடும்பம். எப்படியும் சமாளிச்சுக்கிடுவொம். ஒங்களுக்குத்தான கஸ்டம்.''

ஆண்டி சொன்னான்.

''இருக்கப்போய்த்தான குடுக்கொம். நீங்க கஸ்டப்பட்டா எங்களுக்குச் சந்தோசமாக்கும்.''

மாலையம்மா தவசத்தை வாங்கிக்கொண்டாள்.

ஆண்டி வீரம்மாளை வரச் சொல்லியிருந்தான். அவளிடம் பேச்சை எப்படி ஆரம்பிப்பதென்று தெரியவில்லை.

''நாங்க மட்டும் கஞ்சி குடிச்சு ஏப்பம் போட்டா எப்படி. ஒன் அஞ்ஞு பொலம்பிச் சாகிறா. ஒடப்பெறந்தான் சடச்சுப் புளிச்சுப்போறான். சொக்கம் மாளும் வேலாயும் கேக்காற நாளில்ல... கொஞ்சம் தவசம் கொண்டுபோம்மா.

''எங்க வீட்ல மாமனும் கொழுந்தனும் வேலைக்குப் போயிருக்காக. கொத்து கொண்டுவருவாக.''

''வீட்ல கொஞ்சமாச்சும் தானியம் இருக்கா.''

''இருந்தே முடியுமா. ஊரே கசங்குது. உருண்டு பெரண்டு எந்திரிச்சுக்கிற வேண்டியதுதான்.''

கருப்பி அவளைப் புதுசாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். பேச வாய் எழும்பவில்லை. ஆண்டி கெஞ்சினான்.

''எடுத்துட்டுப் போ தாயி.''

''அடுத்த வீட்டுக்குப் போன பெறகு பெறந்த வீட்ல எத்தன நாளைக்குக் கையேந்துறது. இல்லன்னா என்ன செய்வீக.''

''உள்ளதுபோல...''

''அப்படி நெனச்சுக்கங்க.''

அவள் அமைதியாகப் புறப்பட்டாள். கருப்பி அழுவதற்காக மச்சு வீட்டுக் குள் போய்விட்டாள். ஆண்டி மகளையே பார்த்துக்கொண்டிருந்தான். எவ்வளவு தெம்பாகப் பேசிவிட்டுப் போகிறாள். இவ்வளவு வைராக்கியம் எங்கேயிருந்து வந்தது. ஆம்பளை தோற்றுப்போவான்.

'ஆண்டி வகுத்துல பெறந்தவதானா நீ. நான் ஒன் அப்பன். நாலாம் பேரப் போல நெனைக்க வேணாம். ஒன்னயத் தவமிருந்து பெத்தவ கலங்கிறது தெரியலயா. ஒனக்கு என்ன கொற வச்சொம். ஒம் பேச்சுக்கு மறுபேச்சு ஆராச்சும் பேசினதுண்டா. நீ விரும்புனவனக் கைப்புடிச்ச. தடுத்து ஒரு வார்த்த சொன்னமா தாயி. புருசனுக்குத்தான் ஊருல இல்லாற வைராக்கியம்னா ஒனக்குமா அந்தக் கொணம். இது ஆரு வீடு. நீ பெறந்து உருண்ட எடம். ஒன் வீட்டுத் தானியம். நீ தின்னு மிச்சம் வச்ச பண்டத்தத்தான் நாங்க தின்னொம். ஏந்தான் இப்படி நடந்துக்கிறம்மா. அப்பன் மனசு படுற பாடு ஒனக்கேன் தெரியல. நீ கஸ்டப் படயில நாங்க எந்த வாயால சாப்பிடுறது. நீ என்ன கொண்டு போனாலும் ஏன்

எதுக்குன்னு கேப்பாருண்டுமா... ம் கடசிக் காலத்துல நீ எனக்குக் கொடம் ஒடைக்கிற மாதிரி தெரியல.'

அவன் மழைக்கு நனைந்த மண்கட்டியாக வேதனையில் கரைந்து கொண்டிருந்தான்.

சாலை வேலை விட்டுப் பொழுதடைய ரெண்டணா சம்பளம் கிடைத்தது. தூங்கன் கம்பும் கேப்பையும் வாங்கி வந்தான். ராத்திரி அடுப்புத் தீயோரம் உட்கார்ந்துகொண்டு பெண்டாட்டியிடம் மனசை ஆற்றினான்.

''பெரிய மனுசரெல்லாம் மம்பட்டி புடிச்சு வேலசெய்றதப் பாத்தாப் பாவமாருக்கு. அவுகளுக்கு இப்படியா லவிக்கணும் கடவுளே. ஆனைக்கு வடிக்கிற வீட்ல பூனைக்குச் சோறில்லாற கதையாப் போச்சு.''

மூக்கம்மா முனங்கினாள்.

''நமக்கு லவிச்சதுதான் அவுகளுக்கும். உசிரக்குடுத்து ஒதைய வேண்டி யிருக்கு ஒருவாயி கஞ்சிக்கு. பாவமாவது புண்ணியமாவது. பேசாம மொடக்கிப் படு.''

அவன் ஒரு போகணி தெளுவைக் குடித்துவிட்டுப் படுத்துக்கொண்டான்.

தானிய விலை கண்ணுமூக்குத் தெரியாமல் ஏறிவிட்டது. கிட்ட நெருங்க முடியவில்லை. ரெண்டணா சம்பளத்தில் என்ன செய்ய. இருந்தாலும் போயா கணும். அரைவயிறாவது நிறையும்.

ரெண்டணா சம்பளமும் விரைவில் ஒண்ணரையணாவாகக் குறைந்து விட்டது. மொங்கான் நொந்துபோனான்.

''தவசம் விக்கிற வெலையில சம்பளத்தக் கொறச்சிட்டாகளே.''

பின்னால் வந்த மண்டையன் சொன்னான்.

''தொரைக்கு என்ன கஸ்டமோ.''

பல மாதிரியாகப் பேசிக்கொண்டே நடந்தார்கள்.

''அதனாலதான் வேலைக்கு ஆளுக் கொறஞ்சுபோச்சோ. முன்னப் போல வருத்தில்ல பாத்தயா.''

''அங்கங்க கம்மா வெட்டு மராமத்து நடக்குதாம். அதுக்குப் போயிருப்பாக.''

''இருக்கும். நம்ம கம்மாய்க்கும் வேல குடுத்தாத் தெம்பாருக்கும். எல்லாச் சனங்களும் செய்யலாமில்ல.''

''அனயம் பேரு கொழும்பு ரெங்கூனுக்குக் கெளம்பீட்டாகளாம். குடும்பம் குடும்பமாப் போகுதாம். ''

''அங்க போயி வேலவெட்டி செஞ்சு பெழைக்கவா.''

''சிங்கப்பூரு பெனாங்குக்குக்கூட பல சில்லறையாப் போயிருக்காக. பத்துப் பதினஞ்சு நாளைக்கு மேல ராப்பகலா கப்பல்ல போகணுமாம்.''

''அடேயப்பா அத்தன நாளைக்குத் தண்ணிக்குள்ளயே இருக்கணுமா. அப்ப நல்லாக் குளிச்சுக்கிறலாம். சம்பளமும் அனயம் கெடைக்கும். மலங்காட்ல வெயிலுப் படாமத் திரியலாம்.''

''பெனாங்குல வெஞ்சனப்பாட்டுக்குப் பஞ்சமே இல்லையாம். ஆத்தோரம் சின்னத் துணியத் தண்ணியில விரிச்சு ஏந்துனா நெறைய மீனு கெடைக்குமாம்.''

''பெறகென்ன மசாலரச்சு வேக வைக்க வேண்டியதுதான்.''

''அப்படியே சுட்டுத் தின்னா வேணாம்னா கெடக்கு.''

''அதச் சொல்லு.''

''கூடுன சம்பளம்னு சொல்லித்தான் கங்காணிமாரு கூட்டீட்டுப் போயிருக்காக.''

''இங்கயும் நெருலுப் பெருத்துப்போச்சில்ல. எத்தன சனங்களுக்குத்தான் வேல குடுத்து ஆதரிக்க முடியும். அப்படிக் கொஞ்சம் கெலச்சுவுட்டா லேசாருக்குமில்லையா.''

''தொரைக்குத் தெரியாற ரோசனையா. ரயிலு வுட்ருக்கான் பாத்தயா. அதெல்லாம் லேசுப்பட்ட காரியமா. ஆயிரங்காலுப் பூச்சி மாதிரி என்னமாப் போகுது.''

''சனங்கள அள்ளீட்டுப் போறதுக்குத்தான் கொண்டுவந்துருப்பானோ.''

''வடத்துல கெட்னதுபோல பாரவண்டிதானப்பா அனயம் போகுது.''

''அரிசி பருப்புன்னு அத்தனையும் கொண்டுபோயிச் சேத்துருக்க மாட்டானோ.''

''உப்புக்கூட வதவதன்னு போகுதாம்.''

''நம்மளும் வெளிய கௌம்பீற வேண்டியதுதான். இங்க கெடந்து அர வகுறும் கொறவகுறுமாக் கஞ்சி குடிச்சு வம்பாச் சாக வேணாம்.''

''லேசாச் சொல்லிப்புட்ட. அத்தன புள்ளகுட்டியவும் காணாற தேசத்துக்கு இழுத்துட்டுப் போறதுன்னா சும்மாவா. அங்க போயி அதுகளுக்கு என்னமும் ஏதும் ஆச்சுன்னா ஆரு இருக்காக... முடிஞ்சவரைக்கும் இங்க கெடந்து ஒதைய வேண்டியது. முடியலன்னா மொடக்கிப் படுத்துற வேண்டியது. நம்ம பேரச் சொல்றதுக்கு ஒண்ணுகூடத் தங்காமயா போயிரும்.''

இருட்டுக்குள் ஊர் வந்து சேரும்வரை அவர்கள் பேசிக்கொள்ளவில்லை.

## 2. தண்ணீரும் கண்ணீரும்

மச்சு குளிர வேண்டிய மாசியில் சூடுதான் இறங்கியது. செழித்த காலத்தில் சனிக்குச் சனி சனங்களுக்குத் திருவிழாதான். மாசிப் படப்பன்று ஊர் முழுக்க உறங்காது. சம்சாரி வீடுகளில் சோளமும் பயறும் அவித்துச் சூறைபோடுவார்கள். ஆண்டி வீட்டில் ரெண்டு மெடா காலியாகும். பெரிசிலிருந்து சிறிசுவரை அசைபோடாத வாயிருக்காது. ஒருவேளைக்குக் கஞ்சிப்பாடு ஓடியடையும்.

முந்தியெல்லாம் எளவட்டங்கள் வேப்பங்காட்டுக்குச் சோளம் வாங்க வரிசை பிடித்துப் போவார்கள். ஒரு பொட்டணத்துக்குக் கிடைக்கும். இப்போது அவ்வளவாகப் போக்கில்லை.

அப்பேர்ப்பட்ட மாசமும் அறுதலிக் கோலத்தில் போய்விட்டது.

பங்குனியில் வேக்காடு ரெம்ப. அண்டாவில் எண்ணெய் கொதித்த மாதிரி. காடுகளில் கால் வைக்க முடியவில்லை. மண் முழுக்கக் கங்குக் கணகணப்பு. உச்சி வேளையில் வெயில் தகதகத்து எரிந்தது. ஒரு தடவை லேசான மழை விழுந்தும் புண்ணியமில்லை. தண்ணீர் பூமியில் தெளித்ததும் சூடு அகோரமாகிவிட்டது.

பூமிச் சூடு ஆடுமாடுகளைப் பாதித்தது. ஏற்கெனவே நோஞ்சுபோயிருந்த உடம்பில் நோய் லேசில் பற்றிக்கொண்டது. காணமும் இடுக்குவானும் பாடாகப் படுத்தியது. ஆண்டி மாடுகளைப் பார்த்துப் புலம்பினான்.

''மாடான மாடா. சாணிபோடக்கூடத் தெம்பில்லாமப் போச்சே. தம் போக்குல கழிஞ்சு கெறங்கிக் கெடக்குதே.''

மாடுகளின் தானவாயிலிருந்து சாணிக் கழிச்சில் கீழ்வாக்கில் ஊற்றுத் தடமிட்டிருந்தது.

ஆடுகளின் நிலைமை இன்னும் மோசம். செம்மறிக் கூட்டம் சுடுமண்ணைச் சுரண்டிசுரண்டிப் புல் கருகலைச் சலித்தெடுத்து மென்று விழுங்குவதற்குள் குழண்டு படுத்தன. வெள்ளாடுகள் குளவி கொட்டிய மாதிரி விரண்டு ஓடின. அவை இரைக்காக அலைமோதும் கருமாயத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. வாலுக்கடியில் வறட்டுப் புழுக்கை கோர்த்திருக்க குளம்புக்கிடையில் துருத்தி யிருக்கும் கொப்புள வேதனையைப் பெருமூச்சால் தணிக்க முயன்றன. குதி யாளம் போட்ட குட்டிகள் நடக்கக் கதியில்லாமல் லம்பித் திரிந்தன.

சிலர் குடிகிளம்பி ஆடுகளைப் பத்திக்கொண்டு தண்ணீர் கிடக்கும் இடங் களைத் தேடிப் போனார்கள். நடக்கச் சீவனில்லாத உருப்படிகளையே சுமக்கத் திணறும்போது ஆட்டுக் கூடுகளை என்னசெய்வது. அப்படியப்படியே தலை கவுந்து கிடந்தன. அதுக்குள்ளே குட்டிகள் களமடித்த தடம் மறைய நாளாயிற்று.

மிஞ்சியிருந்த ஆடுகளால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. விரைவிலேயே சுருண்டுவிட்டன. காட்டில் மேய்ந்த வாக்கில் பட்டுப்போன செடிகளை முகந்த படி வற்றுக் காம்பில் குட்டிக்குப் பால்கொடுக்க முடியாமல் செத்து விழுந்தன. காய்ந்து கிடந்த கம்மாய்க்குள் இறங்கி அப்படியே படுத்துக் காலுதைத்தன.

கோழிக்குக் குக்குநோய் வந்தது. மந்தையில் கழுத்தைச் சுருக்கியபடி நின்று கண்சொருகி அடைகாத்ததுபோல் உட்கார்ந்து பிறகு எழுந்திருக்கவில்லை. ராத்திரி மடத்துக்குள் அடையப்போனவை விடிந்த பிறகும் வெளியே வரவில்லை.

செத்த கோழிகளைத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

''இதுகள என்ன செய்றது.''

''தூரவா போடுறது இம்புட்டு நாளா வளத்துட்டு.''

சீவன் போனதையும் அத்தாகுத்தியாகக் கிடப்பதையும் சுட்டுத் தின்றார்கள். மந்தையில் சிறு பயல்கள் கூடிக்கூடிப் புகை கிளப்பினார்கள். அங்கங்கே தொடர்ந்து ஆடறுப்பு நடந்தது. ஊரைச் சுற்றி எருமைகள் கால்விரித்துக் கிடந் தன. வயிறு ஊதி அழுகிய உடம்பில் கொத்துக்கொத்தாகப் புழுக்கள் நெளிந்து வெயிலுக்கு வெந்து சுருண்டன.

''மாடுகளச் சும்மா போடப்புடாது. பெதச்சிருவொம்.''

புதைத்துப்பார்த்தார்கள். முடியவில்லை.

''எத்தனையத்தான் பெதைக்கிறது.''

''கவுறு கெட்டி இழுத்துட்டுப் போயிக் கெடங்குக்குள்ள போட்ருவொம். கண்ணுக்கு மறவிலயாச்சும் கெடக்குமில்ல.''

மேலே புதுசாக வட்டமிட்ட கழுகுகள் எருமைகள்மேல் இறங்கின. அவற்றுக் கிடையில் காக்காய்கள் புகுந்து கறியை ஆவலுடன் கொத்தி விழுங்கி விக்கித் தவித்துப் பயத்தில் திசை தெரியாமல் பறந்தன.

மரத்தடியில் அண்ணாந்தபடி அணிலை முறைத்துக் காத்துக்கிடக்கும் நாய்கள் நாறிப்போன கோழிகளைக் குதறித் தின்று வெறிபிடித்து வாயில் நூரவி ஒட்டிய கோலத்தில் தலைதெறிக்க ஓடின.

''மனுசரக் கடிச்சிருமே.''

''அதுக்குள்ள கொன்னுபோட்றணும்.''

''புடிச்சு வண்டியில தூக்கீற வேண்டியதுதான்.''

மனசைக் கல்லாக்கிக்கொண்டு நாய்களைக் கூப்பிட்டார்கள். வயிற்றுக்கு ஏதோ கொடுக்கத்தான் கூப்பிடுகிறார்களாக்கும் என்று ஆவலாக அவை ஓடி வந்தன. ஒளித்து வைத்திருந்த கயிற்றைக் கழுத்தில் சுருக்கு மாட்டி வம்பாடு பட்டு இழுத்துக்கொண்டு போனார்கள். மாட்டு வண்டியின் முன்பக்கம் கயிற்றைக் கட்டி வாரி விடவும் தூக்கில் தொங்கும் நாய்கள் கழுத்து இறுகஇறுகக் கிறு வாணம் சுற்றிக் குழறி அடங்கும்போது முகத்தைத் திருப்பிக்கொண்டு கண்ணீர் விட்டார்கள். கதை முடிந்ததும் இழுத்துக்கொண்டு போய் மந்தைக் கிடங்குகளில் போட்டார்கள். வறண்டு தொங்கிய நாக்கு தரையில் உரசி அரித்துப் புண்ணாகி யிருந்தது.

கருப்பி பாசமாக வளர்த்த நாயைப் பறிகொடுத்துவிட்டு நாலுநாளாக அழுது தீர்த்தாள். அடடா எவ்வளவு அறிவான நாய். சொன்னா சொன்னபடி கேட்கும். நடுவீட்டில் சோற்றுக் கும்பாவை வைத்துவிட்டு என்ன வேலையும் செய்யலாம். முகந்துகூடப் பார்க்காமல் குத்துக்கல்லாக உட்கார்ந்திருக்கும். களத்தில் தானியம் தவசம் காயப்போட்டால் காவலுக்கு ஆள் தேவையில்லை. அது கவனித்துக்கொள்ளும். களவாணிக் கோழிகளை ஓடிஓடி விரட்டும். ''நாசமாப்போக பேதியிலபோக'' என்று கோழிகள் திட்டித் தீர்த்துவிட்டுக் குப்பையைக் கிளறப் போய்விடும்.

பூனையுடன் அதுக்குச் சேகாரத்தைப் பார்க்கணுமே. ரெண்டும் அண்ணன் தம்பியாக விளையாடும். முதலில் காலால் சீண்டிப் பிறகு சண்டை வலுக்கும். பொய்க் கடியும் வசவுமாக அப்படி உருண்டு புரளும்.

தப்பித்தவறி நாயை விளக்கமாற்றால் அடித்து வைது விரட்டிவிட்டால் ரோசத்தில் கோவித்துக்கொண்டுபோய் முடக்கிவிடும். கஞ்சி நினைப்பே இருக்காது. தட்டிக்கொடுத்து நல்லவார்த்தை சொல்லிக் கூட்டிவரணும்.

கருப்பிக்கு மனசு ஆறவில்லை.

''கழுத்த நெறிச்சுக் கொல்றதுக்கா புள்ளையப் போல வளத்தென். ரோசக் காரத் தங்கத்தப் பறிகுடுத்துட்டனே.''

கழுகுகள் ஊரை நெருங்கியிருந்தன. அவற்றின் நிழல் மனுசர்மேல் விழுந்து விழுந்து விலகியது. பயத்தில் அண்ணாந்துபார்த்துக்கொண்டார்கள். எங்கும்

நாற்றம் மண்டியது. வீட்டுக்குள்ளும் வெளியிலும் மூக்கழுகிப்போகும் நாற்றம். காணாக்குறைக்கு சாய்ந்தர வேளையில் அயலூர் நாற்றமும் சேர்ந்துகொண்டது.

காளை மாடுகள் காடியில் கூளம் கடிப்பதை நிறுத்திவிட்டன. ஊறத் தாழிக்குள் குனியும்போது குமட்டி மூச்சுவிட்டன. பச்சைத் தண்ணீர்கூட உள்ளே இறங்கவில்லை. அதுகளைப் பார்க்கும்போது ஆண்டிக்குக் குடலைப் பிடுங்கியது.

''இந்தக் கொடுமையப் பாக்கிறதுக்கா இதுகள வச்சிருந்தென். முந்தியே புடிச்சுக் குடுத்துருக்கணும்.''

ராக்கன் வெறுப்பில் சொன்னான்.

''அங்க போனாலும் இந்தக் கதிதான ஆயிருக்கும்.''

''இதுக படுற பாதரவக் கண்ணால பாக்காமயாச்சும் இருந்துருக்கலாமே.''

சம்சாரி வீடுகளில் அழுகை கேட்கத் தொடங்கியது. ஒவ்வொரு காடியாகக் காலியாகிக்கொண்டு வந்தது. ஆண்டி வீட்டில் ஏழு நாள் அழுதார்கள். காடிப் பலகையில் கொம்புக் கீச்சையும் சுவரில் குளம்பு மிதியையும் பதித்துவிட்டு நாலு காளைகளும் போய்விட்டன. குப்பையில் வரிசையாகக் குழிவெட்டிப் புதைத்தார்கள்.

ஆட்டுரலில் முட்டிப் புலம்பிய பொய்யாளி படப்பில் மிச்சமிருந்த கூளத்தில் தீவைக்கப் போனான். ராக்கன் பிடித்துக்கொண்டான். அப்பச்சி சொல்லியும் அவன் புலப்பம் அடங்கவில்லை.

''அய்யோ எம் மாட்டக் காணுமே. ஆரோ அவுத்துட்டுப் போயிட்டாகளே.''

அழுது ஒயட்டுமென்று விட்டுவிட்டார்கள்.

அவன் காளைகள்மேல் வைத்திருந்த பிரியம் ஆண்டிக்குத் தெரியும். எள வட்டங்கள் சந்தியில் நின்று கேலிபேசி விளையாடும்போது அவன் காடியில் உட்கார்ந்து நாத்துக்கூளத் தூரில் ஒட்டியிருக்கும் மண்ணைத் தட்டிக்கொண் டிருப்பான். மாட்டுத் தாடியில் உண்ணி பிடுங்குவான். முடியுதிர்ந்த இடத்தில் கற்றாழையைத் தேய்ப்பான்.

அவன் தாழியில் தண்ணீர்காட்டுவதைப் பார்க்கணும். சீட்டியடித்துச் சொக்க வைப்பான். தாழிக்குள்ளிருந்து புதுசுபுதுசாகத் தோண்டிக் கொண்டுவரு வதைப்போல் கலக்கிக் கொடுப்பான். மாடு ஊறலைக் கொப்புளித்துத் துப்பும் வரை விட மாட்டான்.

வேலைக்கு எப்போதும் தார்க்கம்பு வைத்துக்கொள்வதில்லை. எல்லாம் கைப்பழக்கந்தான். எந்த இடத்தில் எப்படிக் கைபோட்டால் எப்படிப் போகணு மென்று மாடுகளுக்குத் தெரியும். புல்லையைத் தொடவே வேணாம். லேசான சத்தம் கொடுத்து அலுக்கினால் போதும். அவ்வளவு சூட்டிக்கை. கருமயிலைக்கு வாலில் ஈகூட ஒட்டக் கூடாது. சொணப்பென்றால் அதுதான் சொணப்பு. வல வனுக்கும் போகும் இடவனுக்கும் போகும். ஆள் காடிப் பக்கம் போனால் நக்கிநக்கிச் சொகமேற்றும்.

அவன் அழுது புலம்பாமல் என்ன செய்வான். கருப்பி வந்து கெஞ்சினாள்.

''வாய்யா. நீ வரலன்னா பேத்தி உசிருவச்சு இருக்க மாட்டென்.''

அவன் பேத்திக்குப் பின்னால் நடந்தான்.

மாலையம்மாளுக்கு மாடுகள் போய்விட்ட மாதிரியே தெரியவில்லை. எந்நேரமும் வெளிக் காடியில் கழுத்து மணி முணுமுணுத்துக்கொண்டிருக்கும்.

அதுகளுடன் பயமில்லாமல் பழகுவாள். முற்றந் தெளிக்கச் சாணியெடுப்பாள். அவளைக் கண்டுவிட்டால் அடிவயிற்றுச் சிணுங்கல் கேட்கும். கழிவு தண்ணீர் கொண்டுவந்து வைப்பாள். பிரியமாகக் குடிக்கும். நாக்கைச் சுழட்டிக்கொண்டு அவள் போவதையே பார்த்துக்கொண்டிருக்கும். தங்கையா துள்ளும் வாலைப் பிடித்து விளையாடுவான். வால் திமிரும்.

''வுடுன்னா. முதுகுல ஈ ஒட்டுதுல்ல.''

அவன் ஓடிவந்து முற்றத்திலிருந்து பயமுறுத்துவான்.

''இரு வாறென்.''

''கிட்ட வாயேன் பாப்பொம்.''

அது கொம்பலைத்து மணியால் கூப்பிடும். அவனும் பதிலுக்குத் தலை யலைப்பான்.

இப்போது அந்த மாடில்லை. அவன் வெறுங்காடியைப் பார்த்து ஆத்தா காலைக் கட்டிக்கொண்டு அழுதான். மாலையம்மா விடியக்காலம் எழுந்து பார்க்கையில் பொய்யாளி குப்பைமேல் உட்கார்ந்திருப்பான். அவன் கை கூளக் கட்டைகளை முறித்துக்கொண்டிருக்கும். அவளுக்கு அழுகை முட்டும். மாடுகள் சுமந்த கல்லும் மண்ணும் கொஞ்சமா. அவள் புருசனிடம் தாவங்கப்படாத நாளில்லை.

**ஊ**ரில் கழுதைகளைத் தவிர வேறு உசுப்பிராணிகள் எல்லாம் கருவறுந்து விட்டன. கழுதைகளுங்கூட எலும்பும் தோலுமாக இப்பயோ பிறகோ என்று நடமாடிக்கொண்டிருந்தன. நடக்கும்போது ரெம்ப முட்டி தட்டியது. கட்டுத் துறையில் பழைய சாணிச் சிதறலை முகந்துபார்த்தபடி சோர்ந்து படுத்து உடம்பில் தலைசாய்த்தன. இப்போதெல்லாம் கால்களைத் தளைவதில்லை. கட்டிப்போடுவதுமில்லை. மாடத்திதான் வேணாமென்று சொன்னாள்.

''அதுகளே சீவனத்துக் கெடக்குது. எந்த வெள்ளாமையில மேயப்போகுது.''

மருதன் விடியக்காலம் அதுகளிடம் போவான். குனிந்து அருவம் கேட்பான். மூச்சு நடமாட்டமிருக்கும். எப்படியோ குற்றுயிரும் குலையுயிருமாகத் தப்பித்துக் கொண்டுவந்தன.

அவன் ஆண்டி வீட்டில் கூடை மம்பட்டி வாங்கிக்கொண்டு சனங்களுடன் வேலைக்குப் போனான். ஆண்டிக்கு வேதனை.

''அடே வீட்ல தவசமிருந்தா வாங்கீட்டுப் போ.''

''புள்ளீகளுக்குக் கஞ்சி குடுக்கீகளே அது போதும்.''

கூப்பங்கடையில் கிடைத்த செஞ்சோளமும் குருணையும் வயிற்றுக்கு ஏந்தலாக இருந்தன.

ஊரிலிருந்து கைவிளக்கு முதல்கொண்டு பாத்திரம் பண்டம் அத்தனையும் அயலூருக்குக் கிளம்பின. சிறு பண்டங்களைத் துணிக்குள் மறைத்துக்கொண்டு போனார்கள். பெரிசுகளை ஒளிக்க முடியவில்லை. அவர்கள் முகத்தில் கூச்சம். திரும்பும்போது தவசம் கொண்டுவந்தார்கள். அமைதியாகக் கவனித்துக்கொண் டிருந்த மாடத்தி குமைந்தாள்.

''நமக்கு மம்பானையும் தாழியுந்தான் இருக்குது.''

ஊரே அழுக்கடைந்துவிட்டது. ஆணும் பெண்ணும் அழுக்குச் சீண்றத்துடன் மங்கித் திரிந்தார்கள். ஒதுங்கலாக உட்கார்ந்து இடுப்பில் கடிக்கும் சீலைப்பேன் களைப் பிடுங்கிக் குத்தினார்கள். பேன்கள் ரத்தமில்லாமல் வெளிறிப்போயிருந்தன.

ஊர்ச் சனங்கள் முகத்தில் முழிக்க மாடத்திக்குச் சங்கடமாக இருந்தது. வெள்ளை கொடுத்து மாசக் கணக்காயிற்று. வருகிறவர்கள் போகிறவர்களிட மெல்லாம் விசாரித்துப் பார்த்தாள்.

''சாமி எங்கயாச்சும் வெளுக்கிறதுக்குத் தண்ணி கெடக்கா.''

அவர்கள் ஒருமாதிரியாகப் பார்த்தார்கள்.

''இவ ஒருத்தி. குடிக்கிறதுக்கே தண்ணியக் காணும். வெளுக்கிறதுக்குப் போயிட்டா. நார பறக்காற நாப்பத்தெட்டு மடக் கொளமெல்லாம் கோரகூட மொளைக்காமக் சருகாக் காஞ்சு கெடக்குது. வேணும்னா பொதியச் சொமந் துட்டுப் போயிப் பாரு. வெள்ள குடுக்கலன்னா சனங்க ஒறங்க மாட்டாகளோ.''

எங்கேயாவது ஆறு தேடிப் போய்த் திரும்பலாமென்றால் ஏழெட்டு நாளாகும். போனாலும் அங்கே தண்ணீர் இருக்கணும். கூட்டமிருந்தால் என்ன செய்வது. அத்தனை நாள் வயிற்றுப்பாட்டுக்கு வழியில்லை. பிள்ளைகள் அலை மோதும். பொதியேற்றி நடக்க மனுசருக்கும் கழுதைக்கும் தெம்பில்லை. அவளுக்கு அழுவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை.

மருதன் பசியை மறக்க முற்றத்தில் வானம்பார்த்தபடி ரெம்ப நேரம் படுத்துக் கிடந்தான். சாயங்கால வெயிலை அந்தியிருட்டு நெருக்கிக்கொண் டிருந்தது. மேலே சுண்ணாம்புப் பொட்டாகப் பறந்துபோகும் ஒத்தைக் கொக்கைக் கண்டுகொண்டான். கண்களில் தெளுச்சி. காய்ந்த பார்வை கொக் குக்குப் பின்னாலேயே பறந்து மலைகளைக் கடக்கும்போது மங்கிவிட்டது.

பெருமூச்சில் புரண்டு படுத்தான். பசி ரெம்பக் கிறக்கியது. ராத்திரி உறக்கம் வராது. பிள்ளைகளுக்குக் கொடுத்தது போக ஏதாவது மிஞ்சினால் கிடைக்கும். மாடத்தி எப்படியும் வைத்திருப்பாள்.

கட்டுத்துறையில் முடக்கிக் கிடக்கும் கழுதைகள் இருட்டில் மங்கலாகத் தெரிந்தன. இந்தப் பாவத்தை என்ன செய்ய. மனுசருக்கே வழியில்லை. உடம்பு முழுக்கப் பசி. அகோரப் பசி. பசியைத் தவிர வேறு நினைப்பில்லை. நினைத் தாலும் பசி எரித்தது.

'ஆடு வளத்தவுக அறுத்துத் தின்னாக. இத வளத்து என்ன செய்ய.'

அவனுக்குள் கழுதை பெரிசாகிக்கொண்டு வந்தது.

'ஆடு வளத்தவுக...'

தலையை உதறினான்.

'சே புள்ளையப்போல வளத்துட்டு...'

வானத்துக்கும் பூமிக்குமாகப் பசி குதித்தாடியது. அங்கவங்கமில்லாத உருவம். பாதிவரை படர்ந்து விரிந்த வாய். மீதி உடம்பு. கம்மாக் கரை உதடு கண்ணையும் மூக்கையும் மறைத்துவிட்டது. காதுத் தொள்ளையில் முடிப்புரி கோர்த்து மேல் வாக்கில் இறுக்கி முடிந்த உச்சிக் கொண்டை. மூணு கால். அஞ்சு கை. உதட்டில் விரலைக் கோர்த்து இழுக்கஇழுக்க வாய் விரிந்துகொண்டே

போனது. கல் தூண்களாகப் பல் வரிசை. நாக்கு வார்வாராகக் கிழிந்து தொங்கியது. ஆடி முடித்து அவன்மேல் சவாரிவைத்து கழுத்தைப் பிடித்து அமுக்கி விழுங்கத் தோதுபார்த்தது.

'ரெண்டு மூணு நாளைக்கு...'

அவன் திமிறி எழுந்து உட்கார்ந்து தலையை உதறினான். அப்படியென்ன பிழைப்பு. அதைவிட செத்துப்போகலாம். போயும்போயும்...

அவசரமாகப் போய் கழுதைகளை உசுப்பி எழுப்பினான். தே தே என்று மந்தைக்குக் கிழக்கே ரெம்பத் தூரம் பத்திக்கொண்டுபோய் விரட்டினான்.

''எங்கயாச்சும் போயித்தொலங்க.''

அதுகள் ஓட முடியாமல் திகைப்பில் திரும்பிப்பார்த்தன. அவன் பார்க்கவில்லை. இருட்டில் வீட்டுக்கு வரும்போது மனசு லேசாக இருந்தது.

எல்லாவற்றையும் ஊமையாகப் பார்த்துக்கொண்டிருந்த மாடத்தி தளுதளுத்தாள்.

''அதுக நம்ம தல மேலயா இருந்துச்சு.''

''அந்தப் பாவத்தக் கண்ணால பாக்க முடியல.''

''காலுக்குள்ளயே திரிஞ்சதுக எங்க போகும்.''

''நமக்கு வேணாம்.''

அவள் அழுகிற இரைச்சல் கேட்டது. அவன் இருட்டைப் பார்த்தபடி கிடந்தான். பலப்பல யோசனைகள்.

நடுச் சாமமிருக்கும். வீட்டுக்குப் பின்னால் 'ட்ர்ர்' சத்தம் மெதுவாகக் கேட்டது. அவள் ஆவலாக அவனை உசுப்பினாள்.

''ஏய் எந்திரி. நம்ம கழுதைக வந்துருச்சு.''

அவளும் உறங்கவில்லை. அவன் சொன்னான்.

''வரும்னு எனக்குத் தெரியும்.''

கழுதைகள் வாசலோரம் சாத்தியிருந்த படல் கதவை நொரண்டிக்கொண்டு நின்றன. அவள் பானை சட்டியைத் துழாவித் தண்ணீர் தேடினாள்.

மூணாம் நாள் மருதன் முடிவுக்கு வந்தான்.

''கழுதைய வித்துருவமா.''

மாடத்தி இன்னொரு யோசனை சொன்னாள்.

''ஆராச்சும் சொந்தக்காருக வீட்ல நிக்கட்டும். காலம் செழிச்சதும் பத்தீட்டு வந்துறலாம்.''

''அவனும் நம்மளப் போலதான் இருப்பான்.''

''அதுக்கு வழியில்லன்னா வித்துட்டு வந்துரு.''

அவன் ஊர்ஊராக வண்ணாக்குடி தேடிப் போனான். எல்லா இடத்திலும் நிலைமை இதுக்கும் மோசமாக இருந்தது. அவர்கள் ஏற்கெனவே கழுதையை விற்றுவிட்டிருந்தார்கள். பலர் குடிகிளம்பியிருந்தார்கள்.

வேறு வழியில்லாமல் திருச்சுழிக்கு நடந்தான். சந்தையில் கழுதைக் கூட்டம் அவ்வளவாக இல்லை. வடகாட்டிலிருந்து வந்தவர்கள் விலைபேசிக்கொண்டிருந்தார்கள். கழுதைகளைப் போலவே வண்ணார்களும் மெலிந்திருந்தார்கள். பஞ்சத்தைப் பற்றியே அதிகம் பேசினார்கள். அவன் கழுதைகளுக்கு விலை

சொல்லவில்லை. கேட்ட விலைக்கு வேண்டாவெறுப்பாகப் பிடித்துக்கொடுத்து விட்டு வந்தான்.

**ஊ**ரில் தண்ணீர்ப் பஞ்சம் கடுமையாகியது. பெண்கள் காடுகரையில் அலைந்து ஒரு பானை கொண்டுவந்தார்கள். அதையும் இடைவழியில் இறக்கித் தவிப் பாறாமல் சுமக்க முடியவில்லை. தண்ணீர் குடித்து வயிற்றைக் கவ்வும் கிறக்கம் வேறு.

வேப்பங்காடு மேகலக்குடிக் கிணறுகளில்கூடக் கள்ளத்தனமாகத் தண்ணீ ரெடுத்து வர வேண்டிய நிலைமை. பகலில் முடியாததால் ராத்திரியில் ஆண்கள் போனார்கள்.

ஊர்க் குடும்பனுக்கு வெறுப்பு.

''கஞ்சிக்குத்தான் கஸ்டம்னா தண்ணிக்குமா அலஞ்சு சாகணும். கெணத்துல ஊத்தெல்லாம் அநியாயத்துக்குக் கீழ வாங்கிக்கிருச்சு. எப்பாடு பட்டும் தளத்தத் தணிச்சுத் தண்ணியப் பாக்கணும். பொம்பளைக பாவத்தத் தீக்கணும்.''

வெண்ணிமாலை சொன்னாள்.

''இப்ப அதுக்கென்ன அவசரம். எல்லாப் பொம்பளையுந்தான் தண்ணிக்கு அலையிறா. கெணறு வெட்டி வெள்ளாமையா செய்யப்போறொம் மாடு கண்ணு இல்லாம.''

''மொதல்ல மனுசரு குடிக்கிறதுக்கு வழியப் பாப்பொம். பெழச்சுக்கெடந்தா வெள்ளாமையப் பத்தி நெனைக்கலாம்.''

அவன் கிணறு வெட்டுவதில் குறியாக இருந்தான். அதுக்காக அலைந்து திரிந்து கரிமருந்து சம்பாரித்து வந்தான். சம்மட்டி உளியென்று சாமான்கள் தேடிப்பிடித்து ரெண்டு பயல்களையும் தயார்ப்படுத்தினான். மூணு பேரும் வைராக்கியத்தில் புறப்பட்டார்கள். வெண்ணிமாலை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கிணறு வள்ளிசாகக் காய்ந்து கிடந்தது. வீட்டிலிருந்து கொண்டுவந்திருந்த தண்ணீரைத் தெளித்து இளக்கமான இடங்களில் ஆழக் குழியடித்தார்கள். புதுத்தண்ணீரைப் பார்க்கப்போகும் ஆவலில் பசிக் களைப்பு தெரியவில்லை. குழியில் கரண்டி போட்டுக் கசடெடுத்து மருந்து கிட்டித்துத் திரிவைத்துவிட்டு வெளியே வந்தார்கள். மூத்தவன் முத்துவேலு உயரே இருந்து தீக்கொளுத்தி கயிறுவழியாகக் குழிக்கு இறக்கிவிட்டான். அது குழியைத் தொடுமுன் தூரத்துக்கு ஓடினார்கள்.

ஊர்க் குடும்பனுக்கு மனசு துடித்தது. வேட்டு வெடித்து நாலாபக்கமும் கல் சிதறப்போகிறது. ஆசைதீரத் தண்ணீர் குடித்து அப்படியே குளிக்கணும். பெண் டாட்டியை வரச் சொல்லிக் காட்டணும். பானைபானையாகத் தண்ணீ ரெடுத்துப் போகச் சொல்லணும்.

ரெம்ப நேரம் காத்திருந்தும் வேட்டு கிளம்பிய பாடில்லை. பொறுமை யிழந்து கிட்டப் போய் எட்டிப்பார்த்தார்கள். வேட்டுக் குழியில் திரி கருகி யிருந்தது. தீ புகையும் அறிகுறியில்லை. உள்ளே இறங்கினார்கள். ஊர்க் குடும்பன் அலுத்துக்கொண்டான்.

''இதென்னடா வம்பாடு பட்டுக் குழியடிச்சு பிசுக்னு போச்சே.''

இளையவன் பண்டாரம் சொன்னான்.

''மருந்து நல்ல கிட்டிப்புத்தான். தட்டுப்பாறையில வேட்டு வாங்கிக் கிருச்சோ என்னமோ.''

''அப்படியும் இருக்குமோ.''

ஊர்க் குடும்பன் தடியை எடுத்து வேட்டு எந்தப் பக்கமாவது உள்வாங்கிக் கொண்டதா என்று குத்திப்பார்த்தான். மூத்தவன் மருந்தையொட்டிக் கத்தரித் திருந்த திரியைக் குனிந்து கவனித்தான்.

''திரி கத்தரிச்சுக்கிருச்சு போலருக்கு.''

பண்டாரம் எதிர்ப் பக்கமிருந்து பார்த்துக்கொண்டிருந்தான். தடி குத்திய அதிர்வில் குழியிலிருந்து சீத்தென்று ஒரு சத்தம் கிளம்பியது. ஊர்க் குடும்பன் அவசரமாகக் கத்தினான்.

''வேட்டு வெடிக்கப்போகுது. மூலைக்கு ஓடீருங்கலே.''

அவ்வளவுக்கு விட்டுவைக்கவில்லை. குழியின் சீறலைத் தொடர்ந்து உடனே பாறையைப் பிளந்துகொண்டு வேட்டு டமாரென்று வெடித்தது. கிணற்றுக்கு மேலே பனை உயரத்துக்குப் பாறைகள் எவ்வி வெளியே சிதறின. ஒரே புகை மூட்டம்.

புகையடங்கித் தெளிந்தபோது மூணுபேரும் கிணற்றுக்குள் இல்லை. பாறை களுடன் அவர்களையும் வேட்டு வெளியே தூக்கியெறிந்திருந்தது. சிலுவாய் பிய்ந்தும் கைகால் கழண்டும் தலை வேறு முண்டம் வேறாக விதைத்துக் கிடந் தார்கள். ஒரு குடல் கிணற்று ஊசிக்காலில் மாலையிட்டிருந்தது.

கிணற்றுக்குள் பாறைப் பிளவில் அங்கங்கே நீர்க்கசிவின் ஓட்டம் மங்கலாகத் தெரிந்தது.

வெண்ணிமாலை புருசனையும் பிள்ளைகளையும் தேடித்தேடி உட்கார்ந்து அழுதாள். புஞ்சையில் புரண்டு நீச்சலடித்தாள். அழத் திராணியற்று வெயிலில் சுருண்டுவிட்டாள். கைத்தாங்கலாக வீட்டுக்குக் கூட்டிப் போனார்கள்.

வேலாயி மூணுநாள் கஞ்சி தண்ணியில்லாமல் சட்டடியாகப் படுத்துக் கிடந்தாள். அப்பன் போய்விட்டான். அண்ணனும் தம்பியும் செத்துப்போனார்கள். மிஞ்சியிருப்பது சின்னத் தம்பி ஒருவன்தான். அவனை வைத்துக்கொண்டு அஞ்ஞை என்ன செய்வாள். அவன் வளர்ந்து குடும்பத்தைக் கரையேற்றும்வரை அல்லாடணுமே. இந்த வயசிலேயே அறுதலியாகிவிட்டாளே.

அண்ணன்மேல் அவளுக்கு அலாதிப் பிரியம். அவளை வாந்தக்கமாக வைத்துக்கொள்வான். கேட்ட பொருளை வாங்கித் தருவான். வீட்டில் கவனித்துக் கொள்வார்கள் என்று நினைத்து ஒதுங்க மாட்டான்.

பொய்யாளியின் தங்கச்சி வடிவை முத்துவேலுக்குத்தான் முடிக்கணுமென்று அவளுக்கு மூக்குமுட்ட ஆசை. வடிவிடம் அடிக்கடி அண்ணன் பேச்சைப் பேசு வாள். தண்ணீர் சுமந்து போகும் சாக்கில் ரெண்டு வார்த்தை போடுவாள்.

''நீ இடுப்புல வச்சிருக்கிற கொடம் எங்கண்ணன் எடுத்துக்குடுத்தது.''

உலக்கை பிடித்துத் தவசம் குத்தும்போதும் மறக்க மாட்டாள்.

''அந்த ஒலக்கைய எங்கண்ணன் தாவணியிலருந்து வாங்கீட்டு வந்தான்.''

வடிவு ஆவலாகக் கேட்டுக்கொண்டிருப்பாள்.

நல்ல நாளன்று வேலாயி அண்ணனைக் கூட்டிவருவாள். பொய்யாளிக்கும் அவனுக்கும் சாப்பாடு போடப் பானை சட்டியை எடுத்துவைப்பாள். அதோடு சரி. பிள்ளையைத் தூக்கிக்கொண்டே வடிவைக் கூப்பிடுவாள்.

''ஏ வடிவு இங்க வந்து எங்கண்ணனுக்குச் சோறு போடு. இது நம்மளப் பாடாப் படுத்துது.''

அதுக்காகக் காத்திருந்த மாதிரி வடிவு ஓடிவருவாள்.

''இந்தா வந்துட்டென் மதினி.''

ஆண்டி எல்லாவற்றையும் கவனித்துவிட்டு வேலாயைக் கிட்டத்தில் கூப்பிட்டு மெதுவாகக் கேட்பான்.

''இந்த நேரத்துலதான் ஒம்புள்ள அழுதுருச்சோ. தாயக் காணும்னு தவியாத் தவிச்சிட்டானோ.''

அவள் வெட்கிப்போவாள்.

''இல்லப்பச்சி...''

''சரிப்பச்சி. நடக்கட்டும்நடக்கட்டும்.''

அவன் ஆச்சரியமாகப் பார்ப்பான். சின்னக் கழுதையாக இருந்தாலும் காரியக்காரி. இப்படித்தான் கூறாகப் பிழைக்கணும்.

முத்துவேலு முழிமுழிச்சவன். தோரணையாக இருப்பான். ரெம்பப் பேச மாட்டான். இவன் ஊர்க் குடும்பன் வயிற்றில் பிறந்திருக்கக் கூடாது என்று சொல்வார்கள். அவனுக்கு வடிவைக் கொடுக்கலாம் என்ற நினைப்பு எல்லாருக்கும் இருந்தது. வடிவுக்கும் அந்த ஆசை நிறைய உண்டு. அவனும் ஏதாவது சாக்கில் அவளைப் பார்த்துப் பேசிவிடுவான். எல்லாம் கூடிவரும்போது இப்படி அங்கம் அங்கமாகச் சிதறிப்போனான்.

வேலாயி உடைந்துஉடைந்து அழுதாள். வடிவுக்குக் கண்கள் வீங்கிப்போய் விட்டன. அப்போதும் அவள் வாய்விட்டு அழவில்லை.

பொய்யாளி வேலாயியை எழுப்பவில்லை. பச்சைப்பிள்ளையை மாலையம் மாளிடம் கொடுத்துவிட்டான். மாலையம்மா கிட்ட இருந்து ஆறுதல் சொன்னாள்.

ஆண்டிக்கு ஒண்ணும் ஓடவில்லை. பொதுக் காரியங்களில் ஊர்க் குடும்பனின் ஓங்கிய சத்தத்தை இனிமேல் கேட்க முடியாது. பொய்யாளியின் கலியாணத் தன்று அவனை ஏடாசி எக்கண்டம் பேசாத வாயுண்டுமா. பாடாகப் படுத்தி னார்கள்.

''நீதாம்ப்பா கலியாணத்த நடத்திவைக்கணும்.''

அதுக்கும் சிரிப்புத்தான்.

''அதெப்படிப்பா எம் மக கலியாணத்துக்கு நானே ஊருக் குடும்பனா இருக்கிறது.''

''இதுக்குன்னு புதுசா ஆளப் புடிச்சு வரச் சொல்றயா. நாங்க சொல்றதக் கேக்கத்தான் நீ இருக்க.''

அவன் தலையைக் குலுக்கிக்கொண்டு ஓடிவிட்டான். அதே கையோடு காலாடியைக் கிளப்பி அனுப்பிவைத்தான்.

அவனுக்குச் சண்டைக்காரன் சொந்தக்காரன் என்று வித்தியாசம் கிடையாது. எல்லாருடனும் வெள்ளந்தியாகப் பேசுவான். சிறுசிலிருந்து பெரிசுவரை என்ன பேசினாலும் முகம் சுளிக்க மாட்டான். வேறொருவன் என்றால் அடித்துக்கொண்டு சாகணும். சண்டையான சண்டை போட்டாலும் அந்த வீட்டில்கூடச் சந்தோச மாக வேலைகளைக் கவனிப்பான். வயிற்றுக்குத் துரோகம் பண்ணாமல் சாப்பிடு வான். சிலர் கேட்பார்கள்:

''அத்தன வசவு வசவன் வீட்ல கைநனைக்க எப்படிப்பா மனசுவந்தது.''

அவன் சாவதானமாகச் சொல்வான்.

''சண்டக்காரன்னு நெனச்சாத்தான சண்டக்காரன். நீ வையாற வசவா. ஒன் வீட்லயே எத்தன தேரம் கைநனச்சிருக்கென்.''

அவனைப்போல் பொதுமனுசன் இனிமேல் பிறந்துதான் வரணும்.

## 3. சின்னஞ்சிறிசுகள்

வேகுவேகு என்று வெயிலோடு வந்த மொங்கான் மண்டையனிடம் சொன்னான்.

''மச்சான்மச்சான் மேலூருல கஞ்சித்தொட்டி வச்சிருக்காக.''

அவன் முகத்தில் கஞ்சி குடித்த தெளுச்சி. மண்டையன் கேட்டான்.

''அப்படியா மச்சான். வகுறு நெறையாக் குடிச்சயோ.''

''வகுறு நெறையணும்னா ஒருத்தனுக்கு மட்டுந்தான் ஊத்தீட்ருக்கணும்.''

''அதான பாத்தென். கரச்ச கஞ்சியா கட்டியாவா.''

''கரச்சதுதான்.''

''தண்ணிபோலக் கரச்சதா.''

''தருமத்துக்கு ஊத்துறவுக புளியமுத்துப் பதியாமயா ஊத்துவாக.''

''பசியடங்காதே. ஒரு தேரம் மோண்டுட்டாச் சரியாப்போச்சு. சின்னப் புள்ளீகளுக்குக் காணிக்கிரும். கடிச்சுக்கிற என்னமும் குடுக்காகளா.''

''இத்தினிக்காணும் காணத்தொவையலு. நக்கிக்கிற வேண்டியதுதான்.''

''என்ன கஞ்சி.''

''சோளக் கஞ்சிதான் கெடச்சது. செங்கலிச்சுக்கிட்ருக்கு. நம்ம காட்டுச் சோளம்போல இல்ல. மேகாட்லருந்து வந்துருக்கும் போலருக்கு.''

''கூப்பங்கடச் சோளமாருக்கும்.''

''அந்தப் பக்கம் கம்மங்கஞ்சி கொஞ்சமா வச்சிருந்தாக. போனா கெடைக் காதுன்னு தெரியும். போகல.''

''கம்மம்புல்லுக்கு எங்க போனாக.''

''மொதலாளிமாரு பழைய தவசம் வச்சிருந்து குடுத்தாகளாம். அங்ஙன பெரிசாப் பேசிக்கிட்டாக. நமக்கு நிக்கிறதுக்கே சீத்துவமில்ல. பெறகெங்க அதப் பத்திக் கேக்கிறது. ரெண்டுமூணு கையி ஏந்திக் குடிச்சென். அப்படியே புழுதியில கையத் தொடச்சிட்டு வந்துட்டென். அதக் குடிக்கவுந்தான் ஈரக்கொலையக் கவ்வீட்ருந்த படபடப்பு வுட்டுச்சு.''

''ஏனம் கொண்டுபோகலயா.''

''எனக்கு இப்படின்னு தெரியாதே. நாளையிலருந்து சும்மா போவனா.''

''நெதமும் ஊத்துவாகளா.''

''அப்படித்தான் சொல்லிக்கிட்டாக.''

''வெள்ளக்காரனுக்காகுமா. சனங்க படுற கஸ்டத்தப் பாத்து மனசு கேக்கா மத்தான பெரிய ஊருகள்ல கெணறு வெட்டித் தண்ணி குடுக்கான். கஞ்சி ஊத்துறான்... மொதலாளிமாரவும் சும்மா சொல்லப்புடாது. இண்ணைக்குத் தனத்துல தவசம் விக்கிற வெலைக்கு ஆரு மச்சான் அளந்து குடுப்பாக.''

''அதச் சொல்லு.''

மண்டையனுக்குள் பிள்ளைகளின் நினைப்பு உறுத்தியது. அதுகளை மேலூருக்குக் கூட்டிப் போய் கஞ்சி வாங்கிக் கொடுத்துவிட்டுத் திரும்ப நடை ஏலுமா. தட்டுத் தடுமாறிப் போனாலும் எல்லாருக்கும் கஞ்சி கிடைக்குமா.

''சின்னப் புள்ளீகளுக்கும் ஊத்துறாகளா.''

''நிக்கிதுக.''

''நீ கூட்டீட்டுப் போகலயா.''

''ஒன் அச்சியிட்டச் சொல்லணும். நான் போனா மறுபடியும் வாறான்னு நெனச்சுப் புள்ளீகளுக்கும் குடுக்காமப் போயிட்டா என்ன செய்றது.''

''அதும் சரிதான்.''

கஞ்சித்தொட்டிச் சங்கதியைக் கேள்விப்பட்டதும் சட்டி போகணியென்று சகல ஏனங்களுடன் கலிங்கலூருணி ஊரே மேலூருக்குத் திரண்டது. நல்லவேளை சிறிசுகளுக்குக் கஞ்சி கிடைத்தது. மிச்சசொச்சத்தை வறண்டி ஊற்றினார்கள். சிறிசுகள் ஏனங்களில் வைத்த வாய் எடுக்காமல் குடித்து முடித்து ஒட்டியிருந்த கஞ்சியை நக்கினார்கள். சின்ன வாய்களில் ஏப்பத்தைக் கேட்டு பெரியவர் களுக்குப் பசியடங்கிவிட்டது.

''புள்ளீகளுக்குக் கெடச்சதே போதும். இப்பத்தான் அதுக மொகத்தப் பாத்த மாதிரி இருக்கு.''

''நாளைக்கு நேரத்தோட வந்துறணும்.''

''எம்புட்டு நேரமானாலும் காத்துக்கெடந்து ரெண்டு போணி குடிச் சிறணும். கொடலு அம்புட்டும் செத்துப்போயிக் கெடக்குது.''

அடுத்த நாளிலிருந்து பிள்ளைகள் பெரியவர்களை எதிர்பார்க்கவில்லை. வரிசையாக மேலூருக்குக் கிளம்பினார்கள்.

மண்டையனுக்கு எட்டுப் பிள்ளைகள். அஞ்சு ஆண் மூணு பெண். காக்காச்சி நஞ்சாணியும் குஞ்சாணியுமாகப் பெற்றுப்போட்டுவிட்டாள். அலைவதற்கு உடம்பில் வலுவில்லை. ஆனாலும் அலைந்தாகணும்.

மூத்தவன் வேலைக்குத் தலையெடுக்கும் சமயத்தில் பஞ்சம் வந்துவிட்டது. காக்காச்சி பொம்பளைகளுடன் காடுகளில் சாணைக் கிழங்கு தோண்டப் போனாள். விடியக்காலம் எழுந்து நிலம் சூடேறுமுன் போனால்தான் முளைத்த இடத்தைக் கண்டுபிடித்துத் தோண்டியெடுக்க முடியும். வெயிலேறிவிட்டால் கண்ணெரிச்சலில் கண்டுபிடிப்பது கஷ்டம். கால் பொசுக்கும்.

அப்படியலைந்து எடுத்துவந்த கிழங்கைக் கழுவத் தண்ணீரில்லை. சாக்கில் துடைத்துப் புருசனும் பெண்டாட்டியும் ஆட்டினார்கள். காக்காச்சி அகப்பையால் மாவைத் தள்ளினாள். ஆட்டி நீரை இறுத்துஇறுத்து மூணு நாள் ஆட்டினால்தான் அரிப்பு போகும். கொழுக்கட்டைப் பருவத்துக்குப் பொங்கி மாவாகும்.

முதல் நாள் சின்னப் பயல் ஆவலில் கிழங்கெடுத்து மென்றுவிட்டான். வாய்முழுக்கச் செந்தட்டி அரிப்பு. அலறினான். உதடு வீங்கிவிட்டது. அரிப்புக்குத் தடவ எண்ணெயில்லை. ஏங்கியழுது உறங்கிவிட்டான்.

காக்காச்சிக்கு ராத்திரி உறக்கமில்லை. பிள்ளைகளைப் பற்றிய கவலை குடைந்தெடுத்தது. கால் வேதனையைவிட மன வேதனைதான் அதிகம். வறட்டழுகையாக அழுதாள்.

''பத்துப் புள்ளப் பெத்தா பல்லுக் குத்த நீதமுண்டுமா.''

வெள்ளங்காட்டி சாணைக் கொழுக்கட்டை அவித்து முதலில் சின்னவனை எழுப்பினாள்.

மண்டையன் சத்திரப்பட்டி அரண்மனைத் தோட்டத்துக்கு ஆட்களுடன் வேலைக்குப் போனான். மாடுகள் இல்லாத நிலைமையிலும் வாழை வெள்ளாமை வைத்திருந்தார்கள். கெசமுட்டும் ஆழக் கிணறு. எட்டிப்பார்த்தால் முழி பிதுங்கி விடும். அவ்வளவு ஆழத்திலிருந்தும் நீரிறைத்து வாழைக்குப் பாய்ச்சினார்கள். மாட்டுக்குப் பதிலாக மனுசர்களைக் கமலை பூட்டியிருந்தார்கள். இரு பக்கமும் கொடுங்கையில் மோக்காலை ஏந்திக்கொண்டு மார்பை அழுத்திக் கூனையை இழுக்கும் அவர்களைப் பார்க்கப் பாவமாக இருந்தது. வயிற்றுப்பாட்டுக்காக இப்படியெல்லாம் அழுந்தணுமா.

பக்க வாழைக் கண்ணுகளை வெட்டிக்கொண்டிருந்த மண்டையனுக்குத் தாகமெடுத்தபோது வாழைத்தண்டைக் கடித்து மென்றான். மற்றவர்கள் ஏற்கெனவே அசைபோட்டுக்கொண்டிருந்தார்கள்.

சாயங்காலம் எல்லாரும் வாழை முண்டுகளைச் சுமந்துவந்தார்கள். அதை அறுத்து அவித்து ராத்திரிக்கு வயிற்றுமுறை கழிந்தது. சிறிசுகள் நாலஞ்சு நாள் முண்டுகளை எதிர்பார்த்திருந்தார்கள்.

வாழைக்கு உரம் வைக்கப் புண்ணாக்கு கொடுத்தார்கள். அதை யாரும் தின்றுவிடாமல் பார்த்துக்கொள்ளக் காவலுக்கு ஒரு ஆள். பசிக்காற்றாமல் தின்பதைப் பார்த்துவிட்டால் உடனே வீட்டுக்கு அனுப்பிவிடுவார்கள். அன்றைக்கு வேலை செய்த கூலியும் கிடையாது. அப்படியே கொடுத்தாலும் பெரிய மனசு பண்ணி பாதிக் கூலி கொடுப்பார்கள். வசவு தாங்காது. சில சமயம் அரண்மனைக்கு முன்னால் நிறுத்திவைத்துச் சாட்டையடி கிடைக்கும்.

இத்தனையையும் மீறி சிலர் ஓடைப்பக்கம் புண்ணாக்குக் கட்டிகளை எறிந்து அடையாளம் வைத்திருப்பார்கள். வேலை விட்டுப் போகும்போது பொறுக்கி பிள்ளைகளுக்காகப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்வார்கள். பிள்ளைகள் அதை நமட்டிக் கரைத்து விழுங்கவே சரியாக இருக்கும்.

தோட்டவேலைக்கு வேப்பங்காட்டிலிருந்து பறைக்குடி ஆட்களும் வந்திருந்தார்கள். பல பேர் கொழும்புக்குப் போய்த் திரும்பியவர்கள். மண்டையன் பொய்லானிடம் கேட்டான்.

‘‘ஏம்ப்பா அம்புட்டுத் தொலவட்டு குடும்பத்தோட போயிட்டு வந்துட்டீக.’’

பொய்லான் மனசு உடைந்துபோயிருந்தான்.

‘‘எந்தப் புள்ளீகளக் காப்பாத்தணும்னு போனனோ அதுகளத் தாக்காட்ட முடியல. மூணவும் பறிகுடுத்துட்டென். பெறந்த ஊருச் சுடுகாடு குடுத்து வைக்கல. நான் என்னத்தச் சொல்லட்டுண்ணன்.’’

அவன் வாழைமேல் சாய்ந்துவிட்டான்.

‘‘அடப் பாவமே.’’

‘‘போனதுலருந்து நாயலச்சலு பேயலச்சலு. மலையேறி முடியல. சந்து சதையெல்லாம் ஓடஞ்சு ஒரே வலி. குளுரு வேற. அட்டக் கடி தாங்கல. எந்நேரமும் ரத்தத்த வடிச்சிட்டு எப்படித் திரியிறது.’’

‘‘லொம்பலப்பட்ட பெழப்புத்தானோ.’’

‘‘நம்மளாச்சும் கஸ்டத்தத் தாங்கீறலாம். சின்னதுக என்ன செய்யும். வாயாலயும் வகுத்தாலயும் பீச்சித் தள்ளீருச்சு. படுத்த புள்ளீக எந்திரிக்கல. அந்தக் கொடுமைய நெனச்சா கொலையப் புடுங்குது. பறிகுடுக்கிறதுக்கா அங்க போனென்.’’

பொய்லானின் காய்ந்த கண்களிலும் நீர்ப்பிடிப்பிருந்தது. மண்டையனுக்குள் பதட்டம்.

‘‘நமக்கு நேரம் சரியில்ல.’’

‘‘கொழும்பு பூரா அதே நோய்தான். பெரிசும் சிறிசுமா சாவு கணக்குல அடங்கல. ஊரு வந்து வுழுந்தாப் போதும்னு பதறியடிச்சு ஓடிவந்துட்டொம்.’’

காவக்காரன் வருவதற்குள் பொய்லான் எழுந்து புண்ணாக்குப் பெட்டியைப் பிடித்தான். மண்டையனுக்கு வேலை ஓடவில்லை.

பிள்ளைகளைக் காப்பாற்றுவதுதான் பெரும்பாடாக இருக்கிறது. எல்லாம் முகத்தைமுகத்தைப் பார்க்கிறது. காக்காச்சி என்ன செய்வாள். அவளிருக்கும் நிலையில் படுத்தால் எழுந்திருக்க மாட்டாள்.

அவள் தாய்க் குருவியாக அலைந்தாள். வரப்புகளிலும் தரிசுகளிலும் புல்லரிசி புடைத்துக்கொண்டு வந்தாள். அதைத் தெளுக் காய்ச்சிக் குடித்தார்கள். கண் பூத்துப்போக எறும்பு நடமாட்டத்தைக் கவனித்துக் குழிப்பயறு வெட்டினாள். கொஞ்சங்கொஞ்சம் மின்னிப்பயறும் கல்பத்தாம் பயறும் கிடைத்தது. எல்லாம் போன வருச வெள்ளாமையில் எறும்பு சேர்த்துவைத்தது.

வயிறு கடிக்கும்போது பயறைக் கொறித்தாள். தொண்டைக் குழியில் ஈரமில்லாமல் விக்கலெடுத்தது. தேடிக் கண்டுபிடித்து வெறிபிடித்த மாதிரி கற்றாழைச் சோற்றை உரித்து விழுங்கினாள். உள்ளே குளிர்ச்சியாக இருந்தது. கசப்புக் குமட்டலை அடக்க முடியவில்லை. வாந்தியெடுத்தாள். நூலாம்படையாக வாணீர் வடிந்தது. வெறும் வாந்தி கிறக்கியது. அப்படியே படுத்துவிட்டாள்.

தன்னுசார் வந்து எழுந்தபோது மதியத்துக்கு மேலாகிவிட்டது. வீட்டுக்கு நடந்தாள்.

''எம் புள்ளீக என்ன செய்துகளோ.''

வீட்டில் சின்னப் பயலைச் சுற்றி அழுதுகொண்டிருந்தார்கள். அவன் கிழித்துப் போட்ட நாராகத் துவண்டு கிடந்தான்.

''நேத்து கஞ்சி வாங்கிக் குடிக்கணும்னு புள்ளீகளோட மேலூருக்குப் போயிருக்கான். வழியில இச்சி மரத்தடியில காயா உதுந்து கெடந்துருக்கு. புள்ள பசிதாங்காம பெறக்கிப்பெறக்கித் தின்னுருக்கான். அதென்ன வறட்டுப் புழுக்க மாதிரி இருக்கும்.''

''அதான் வகுத்துக்குள்ள கிட்டிச்சு வெளியேறமுடியாம விட்ட கெட்டிக் கிருச்சு.''

''முக்குறதுக்குச் சத்தில்ல. ரெண்டு தேரம் மொனங்குனான். பெறகு மூச்சுப் பேச்சக் காணும். சீத்தக்குஞ்சியா மொடக்கீட்டான்.''

''சின்ன உசிருக்கு எம்புட்டு வேணும்.''

காக்காச்சியால் சத்தம்போட்டு அழமுடியவில்லை. மண்டையன் வந்து மிச்சப் பிள்ளைகளைப் பார்த்துப் பதறினான்.

சில வீடுகளில் புதுசாக வாந்திச் சத்தம் கேட்க ஆரம்பித்தது. சனங்களின் முகத்தில் முந்தியில்லாத பயம்.

''ஊரு முழுக்கத் தொடுத்துக்கிட்டா என்ன செய்றது.''

''அம்மங்கோளாறுக்கு ஒண்ணும் செய்ய முடியாது. வெளையாடி முடிச் சிட்டுத்தான் போகும்.''

''வாயால மட்டுமில்லாம வகுத்தாலயுமில்ல பீச்சியெடுக்குது.''

பலர் அடிக்கடி மந்தையில் நடமாடினார்கள். நேரம் ஆகஆக மந்தைக்கு நடக்க முடியாமல் வீட்டுக் கொல்லைப்புறத்தில் உட்கார்ந்தார்கள். அதுக்கும் ஏலாமல் வீட்டுக்குள் கிடந்தார்கள். அங்கங்கே இடைஞ்சலாக இருந்ததால் பெரிசுகளை மரத்தடியில் தூக்கிப்போட்டார்கள். அவர்களால் தலைதூக்க முடியவில்லை. படுத்தபடியே வாயாலும் வயிற்றாலும் தன் போக்கில் போனது. கண் உள்வாங்கி பஞ்சடைந்து பேச்சு குழறியது.

இது ஊர் முழுக்கத் தொற்றிக்கொண்டது. ஆண்டி வீட்டில் வடிவு கொணங் கினாள். ஒரே நாள்தான். பேதி சுருட்டிவிட்டது. ஆண்டிக்கு வீட்டு மூலையில் சுவர் இடிந்து விழுந்த வேதனை. வேலாயி பதட்டத்தில் கைக்குழந்தையைப் பொத்திப்பொத்தி வைத்துக்கொண்டாள்.

வடிவு பொறுமைக்காரி. அவளை எல்லாருக்கும் பிடிக்கும். முகஞ்சுளித்துப் பேச மாட்டாள். வீட்டு வேலை அத்தனையும் அவளே எடுத்துப்போட்டுச் செய் வாள். வேலாயி கைமாற்றப் போனால் விட மாட்டாள். கருப்பிக்கும் ஆண்டிக்கும் நேரம்பார்த்துச் சோறுதண்ணீர் கொடுப்பது அவள்தான்.

சொக்கம்மா சொல்லிச்சொல்லி அழுதாள்.

''எந் தேட்டாளி மகளே. எனக்கு வாச்ச பாட்டாளி மகளே. ஓம் பெழப்பு இப்படியா முடியணும்.''

அவளைக் கொண்டுபோய் இழுத்து மூடுவதற்குள் ஒருவன் சுடுகாட்டுக்கு ஓடிவந்தான்.

''மண்டையன் வீட்ல சின்னதுக நாலு போச்சு. என்னத்தச் சொல்லட்டும்.''

''பச்ச மண்ணுகள இதுக்கா வம்பாடு பட்டு வளத்தொம்.''

''நாலு பேரு இருந்து குழிவெட்டுங்கப்பா. நாங்க போயி அதுகளத் தூக்கீட்டு வாறொம்.''

சாவு நாளுக்குநாள் கூடியது. வரிசையாகச் செத்துக்கொண்டிருந்தார்கள். பிணங்களைச் சுடுகாடு சேர்க்கவே சரியாக இருந்தது. வேறு வேலைக்கெங்கே போவது.

பத்துப் பேர் தொடர்ந்து குழிவெட்டினார்கள். மீதிப் பேர் ஊருக்கும் சுடுகாட்டுக்குமாக அலைந்தார்கள்.

''நடந்துநடந்து காலு வலிக்குது.''

''எனக்குப் பெயமாருக்கு. ராத்திரி பொட்னு கண்ணடைக்க முடியல.''

''நம்மளும் போயிச்சேந்துருவொம் போலருக்கு.''

செத்தவர்களைச் சாகப்போகிறவர்கள் வெறித்தார்கள். அவர்களை மற்ற வர்கள் பயத்துடன் பார்த்தார்கள்.

பெண்கள் பலமாக அழவில்லை. அழுகிற சிறு பிள்ளைகளை வாயைப் பொத்தி அடக்கினார்கள். தலையிலும் மார்பிலும் அடித்துக்கொண்டார்கள்.

''காளித் தாயே எதுக்கு இந்தச் சோதன. எங்கள ஒரேயடியா அள்ளீட்டுப் போயிறேன்.''

காலாடி பெண்டாட்டி தலைவிரி கோலத்தில் சாமியாடினாள். நாக்கைத் துருத்தி அரட்டினாள்.

''ஏய்... நான் மனம்போல வெளையாடீட்டுத்தான் போவண்டீ... எம் பசி தீரல... பசி தீரல... ஆய்...''

சனங்கள் பயத்துடன் கும்பிட்டபடி நின்றிருந்தார்கள். சாமியின் காலில் விழுந்து விழுந்து எழுந்தார்கள். யாரும் மூச்சு விடவில்லை.

நாலாவது நாள் சாமியின் ஏப்பமும் உறுமலும் கேட்கவில்லை. காலாடி பெண்டாட்டியும் மயானத்துக்குப் போய்விட்டாள். சாமியாட வேறு ஆளில்லை.

ஓயாத புலம்பலுக்கிடையில் தொடர்ந்து சுடுகாட்டுக்குப் பிணம் போய்க் கொண்டிருந்தது. குழியோரம் இறக்கிவைத்துவிட்டுக் கட்டணத்தை அவுக்கப் போனவனிடம் மொங்கான் சொன்னான்.

''இத அவுத்துட்டுப் போயி அங்க மறுபடியும் கெட்டத்தான போறொம். அவுக்காமக் கொண்டுபோவமே.''

''அதெப்படிப்பா சுடுகாட்டுக்கு வந்தத அவுக்காமக் கொண்டுபோறது.''

''வேற வழியில்ல. ஒவ்வொரு தேரமும் கெட்டீட்ருக்க முடியாது.''

''அப்படிச் செய்றது கெராக்கெட்டதனம். ஊருக்கு ஆகாது. மிச்சமிருக்கிற உசிருக பெழைக்கணுமா வேணாமா. அதக்காட்டித் தோள்லயாச்சும் சொமந் துட்டு வந்துருவொம்.''

''எத்தனையச் சொமக்கிறது. நம்மளும் நடுவழியில வுழுந்து சாகவா.''

ஒருவன் யோசனை சொன்னான்.

''அங்க ஒண்ணு இங்க ஒண்ணு தயாரா வச்சுக்கிருவொம். அப்பத்தான் தோதுப்படும். மாறிமாறிச் சொமக்கலாம்.''

எல்லாரும் இதுக்கு ஒத்துக்கொண்டார்கள். வீட்டிலிருந்து சுமந்துபோனதை இறக்கிவிட்டுச் சுடுகாட்டில் காலியாக இருந்ததை எடுத்துவந்தார்கள்.

## 4. மாண்டதும் மீண்டதும்

மருதனின் கை அழுதது. சாவுக்கு என்னமாகத் தேர்கட்டுவான். அஞ்சு முகம் வைத்துக் கட்டினால் அரண்மனை போலிருக்கும். அதில் உட்கார்த்தி வைத்ததுமே பிணத்தின் முகத்தில் தனிக்களை வந்துவிடும். கோபுரக் கலசம்போல் அஞ்சு முகச் செம்பும் மஞ்சளாக மினுங்கும். பூமாலைத் தோரணம் குலுங்க அலங்காரத் தேர் தோள்களில் அசையும் அழகைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். அதைப் பார்ப்பதற்கென்றே அயலூர்ச் சனங்கள் வருவார்கள்.

சாவுகளைப் பார்க்கப்பார்க்க அவனுக்குள் தேர் நினைவு அமுங்கிக் குடும்பம் வந்து முன்னால் நின்றது. கலிங்கலிலேயே இருந்து மடிவதா இல்லை வெளியேறிப் பிழைக்க வழிதேடுவதா. தலைமுறைதலைமுறையாகக் குடியிருக்கும் ஊர். கழுதைக்குட்டிபோல் ஓடித் திரிந்து வளர்ந்த மண். அன்னியோன்னியமான கம்மா. மலையிலிருந்து அப்பன் தவணைதவணையாகச் சுமந்துவந்து போட்ட வெளுப்புக்கல். சின்ன வயசிலிருந்து ஒரே மாதிரியாகப் பழகும் ஆண்டி. எந்த மனசுடன் வெளியேறுவது.

அவனுக்கு உறக்கமில்லை. கண்ணை மூடினால் சுடுகாட்டு நினைப்பு. ராத்திரி இருட்டு கழுத்தை நெரிக்கும் பயத்தில் கையால் துழாவிப் பெண்டாட்டி பிள்ளைகளைச் சரிபார்த்துக்கொண்டான். கம்மாக் கரையில் காற்றுக்கு அசையும் புங்க மர இலைகள் காதோரம் சலசலத்தன. மர நிழல் கரைச் சரிவிலிருந்து படர்ந்து வந்து வண்ணாக்குடியை மூடிவிட்டது.

இருட்டு மூக்குக்குள் நுழைந்து அடைத்துக்கொள்கிறது. மூச்சுத்திணறி வாயைத் திறந்தால் தொண்டைக்குழிவரை களிமண்ணாகக் கிட்டித்துவிடுகிறது. திக்குமுக்காடி உழத்தி ஓய்கிறான். பெண்டாட்டி பிள்ளைகள் அழுகிறார்கள். அவனை வெளியே தூக்கி வந்து வெள்ளாவிக்குப் பின்னால் சாத்திவைக்கிறார்கள். தலை குழண்டுகுழண்டு தொங்குகிறது. நிமிர்த்த முடியாமல் நெடுகக் கிடத்துகிறார்கள்.

ரெண்டு பயல்களும் சுத்துப்பட்டிகளுக்கு ஓடுகிறார்கள். எல்லா இடத்திலும் வண்ணாக்குடி ஆளருவமில்லாமல் பாழடைந்து கிடக்கிறது. அவர்கள் அழுது கொண்டே வீடு திரும்புகிறார்கள். அவன் அப்படியே கிடக்கிறான். மாடத்தியும் சின்னனந்தியும் திகைப்பில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

மந்தைக் கிடங்கைத் தாண்டி ஒத்தையடிப் பாதையில் நாலு கழுதைகள் வெருச்சியில் நடந்து வருவது தெரிகிறது. நேரே வண்ணாக்குடி முற்றத்துக்கு வந்து அவனைப் பார்த்துப் பெருமூச்சு விடுகின்றன. மூஞ்சியிலும் காலிலும் மண் படிந்திருக்கிறது. பிறகு கட்டுத்துறைக்குப் போய்க் கொஞ்ச நேரம் நின்றுவிட்டு

மளமளவென்று வேலைகளில் இறங்குகின்றன. கம்பு கயிறு சம்பாரித்துச் சடுதியில் பாடை கட்டி முடிக்கின்றன. கட்டுத்துறையில் கொட்டமடித்துப் பஞ்சத்துக்கு விலைபோய்விட்ட அதே கழுதைகள்.

மாடத்தியும் பிள்ளைகளும் அவனைப் பாடையில் தூக்கிவைக்கிறார்கள். கழுதைகள் நாலு புறமும் நின்று கழுத்தைக் கொடுத்துத் தூக்கி விருவிருவென்று கம்மாய்க்கு நடக்கின்றன. மாடத்தியும் சின்னனந்தியும் மந்தைக் கிடங்குவரை கதறிக்கொண்டு பின்னால் போகிறார்கள். பயல்கள் கழுதைகளுக்கு ஈடுகொடுக்க முடியாமல் ஓடுகிறார்கள்.

புங்க மரத்தடியில் மூணாவது குழி புதுசாகத் தோண்டி ஆறிக்கிடக்கிறது. கழுதைகள்தான் தோண்டியிருக்கணும். ஒரு கழுதை குழிக்குள் குதிக்கிறது. மற்றவை அவனைத் தூக்கிக் கொடுக்க அது முதுகில் ஏந்திக் கீழே கிடத்துகிறது. பிறகு ஒரு தவ்வில் வெளியே வருகிறது. அது அவனைக் குழியைச் சுற்றி வழி நடத்தப் பயல்கள் ஈமச்சடங்குகளைச் செய்கிறார்கள். ஒரு கழுதை கலயத்தில் தண்ணீர் கொண்டுவர இண்ணொண்ணு வாயில் மைக்கத்தி பிடித்து பயல் களுக்கு மொட்டையடிக்கிறது. எல்லாரும் அவனுக்கு வாய்க்கரிசி போடு கிறார்கள். பிறகு மண்ணை இழுத்துக் குழியை மூடுகிறார்கள். கழுதைகள் குழி மண்ணை இறுக மிதித்துச் சரிப்படுத்துகின்றன. கொஞ்ச நேரம் நிலைகொள் ளாமல் காதாட்டி காலுதைத்துத் தலையாட்டிக் கண்ணீரைக் குழியில் தெளித்து மெழுகிவிட்டு கம்மாய்க்குள் வேகமாக நடந்து மறைந்துவிடுகின்றன.

மருதன் இருட்டுக்குள் மூச்சுமுட்டி எழுந்து உட்கார்ந்து மாடத்தியிடம் கேட்டான்.

''என்னென்னமோ கெனா வருது. நமக்குக் கலிங்கலு மண்ணுதான் குடுத்து வச்சது போலருக்கு. என்ன வந்தாலும் சரின்னு இங்கயே இருந்துருவமா.''

அவள் வெதும்பினாள்.

''குடும்பம் அடியோட அழிஞ்சுபோகுமே. துணிபுடிக்கக் கையிருக்காது.''

''மூணு புள்ளீகள இழுத்துட்டு எங்க போறது. போற எடத்துலயும் இப்படித் தான இருக்கும். அங்க போயி அனாதையாச் சாகிறதுக்கு இங்க கெடந்து மடிஞ்சிறலாம்.''

''அங்க ஒருவேளக் கஞ்சியாச்சும் கெடைக்காமயா போகும்.''

''எங்க.''

''மேற்க மலங்காட்ல வேல கெடைக்குதாம். புள்ளீகளுக்கு அர வகுறு கஞ்சி கெடச்சாப் போதும். அதுகளப் பாத்தா வேதன தாங்க முடியல.''

ஊரை விட்டு வெளியேற முடிவுசெய்தார்கள். போகும்போது ஆண்டியிட மாச்சும் சொல்லணும் என்று அவனுக்கு எண்ணம். மாடத்தியைக் கேட்டான்.

''பெரியகுடும்பாவுகட்ட ஒருவார்த்த சொல்லாம எப்படிப் போறது.''

''அவுக கண்டிப்பாப் போக வுட மாட்டாக.''

''ஆமாமா பெறகு அவுக வார்த்தையத் தட்ட முடியாது.''

''ஆரு கண்ணுலயும் படாமக் கௌம்பீருவொம்.''

''அதான் சரி.''

ராவோடு ராவாகப் புறப்பட்டார்கள். மருதனுக்கு ரெம்ப வேதனை. ஊரைக் கடக்கும்போது திரும்பிப் பார்த்து வாய்விட்டு அழுதான். வண்ணாக் குடியும் காலியாகிவிட்டது.

**ஊ**ருக்குள் சனங்கள் பிணமாக நடமாடினார்கள். சுடுகாட்டுக்குச் சுமை போகும்போது நடுவில் நடந்த மொங்கான் தடுமாறினான்.

''எனக்கு ஒருவடியா வருதுப்பா. கொஞ்சம் நிறுத்துங்க.''

''ஒருத்தன் வெலகி அவன ஓரத்துல படுக்கவையிங்கப்பா. போற பொணத்த எடையில நிறுத்தப்புடாது.''

மயானத்துக்குப் போனால் குழிவெட்டியவர்களில் ஒருகை குறைந் திருந்தது. காலாடி விழுந்துவிட்டான். மண்டையன் கேட்டான்.

''மொங்கானக் காணுமே.''

''எடவழியில சாஞ்சிட்டான்.''

சாயங்காலம் மொங்கானையும் ஒரு நடை சுமக்க வேண்டியிருந்தது. ஒருவன் மனசு உடைந்து சொன்னான்.

''இவன் சொமந்த பாடையிலயே இவனவும் சொமக்க வேண்டியிருக்கு. மனுசக் கழுத பெழப்பப் பாரு.''

''இண்ணைக்கு நம்ம சொமக்கொம். நாளைக்கு நம்மள ஆரு சொமக்கப் போறாகளோ.''

அன்றைக்குக் கடைசிக் கணக்காக காலாடியை எடுத்து மூடினார்கள். அவன் வெட்டிய குழியிலேயே படுத்துக்கொண்டான்.

ராத்திரி காக்காச்சி சாய்ந்துவிட்டாள். வெள்ளங்காட்டி மண்டையன் குழி வெட்டக் கிளம்பும்போது நாவெழாமல் கிடந்தாள். வீட்டில் இருந்து தவிப் பதைவிட மயானத்துக்குப் போனாலாவது கொஞ்ச நேரம் கவலை மறக்கும். சுற்றி உட்கார்ந்திருந்த மிச்சப் பிள்ளைகளை ஒரு தடவை பார்த்துவிட்டு நடந்தான்.

மதியமிருக்கும். ஒருவன் மயானத்துக்கு வந்து சொன்னான்.

''ஒம் பொண்டாட்டி பெழச்சுக்கிற மாட்டா. நீ வீட்டுக்குப் போ. நான் வேலையப் பாக்கென்.''

''போயி என்ன செய்யச் சொல்ற.''

அவனுக்குப் போக மனசில்லை. எப்படியும் சாய்ந்தரத்துக்குள் அவள் இங்கே வரப்போகிறாள். அப்போது முகத்தைப் பார்த்துக்கொள்ளலாம். பேசவா போகிறாள். பிள்ளைகளை விட்டுவிட்டுப் போகாதே என்று தடுக்க முடியுமா. அதுகளை வளர்க்க அவள்தான் என்ன பாடு பட்டிருக்கிறாள். அவளில்லாமல் அதுகள் பிழைத்துத்தான் என்ன செய்ய.

அவன் காக்காச்சியை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

அடுத்த நாள் கொக்கன் சுருண்டுவிட்டான். அவனுடைய ஏடாசியும் எக்கண்டமும் செத்துப்போனது. அவன் பேச்சு பெண்களுக்கு ரெம்பப் பிடிக்கும். ஊருக்கே உயரமான மனுசன். அதனால் பிணம் சுமக்கத் தோதுப்படவில்லை.

பாடைக்குத் தோள் கொடுத்தால் மற்றவர்களுக்கு எட்டாது. மற்றவர்கள் சுமந்தால் அவன் தணிந்து குனிந்து நடக்கணும். அது கஷ்டம். இதுக்காகவே மயானத்தில் நிறுத்தி குழிவெட்டச் சொன்னார்கள். அங்கேயே தங்கிவிட்டான்.

சாவு கூடக்கூட மயானத்தில் நிதமும் குழி வெட்டினார்கள். பிணங்களுக்குத் தக்க தோண்ட முடியவில்லை. தோண்டுகிறவர்கள் கைகால் உளைச்சலில் சோர்ந்துபோனார்கள்.

''மூட்டுக்கு மூட்டு பிச்சுக்கிரும் போலருக்கு. வலி தாங்க முடியல.''

''எத்தன குழிதான் தோண்டுறது.''

''ஒரு குடும்பத்துக்கு ஒரு குழின்னு வச்சுக்கிருவமே.''

''அப்படித்தான் செய்யணும். இல்லன்னா தப்பிச்சுக்கிற மாட்டொம்.''

குடும்பத்துக்கொரு குழியாகப் புதைத்தும் முடியவில்லை. சொந்தக்காரர் களையும் சேர்த்துக்கொண்டார்கள்.

''ஒரு வழியில பாத்தா எல்லாரும் ஒண்ணுக்குள்ள ஒண்ணு சொந்தந்தான்.''

''ஒருநாளைக்கு ஒரு குழி பெரிசா வெட்டுவொம். அதுலயே அண்ணைக்கு வாறதப் போட்டு மூடியிறலாம்.''

அந்தப்படியே செய்தார்கள். உடம்பு வலி தாங்காமல் மண்டையன் சொன்னான்.

''சொமந்துசொமந்து தோள்பொசம் வலிக்குது. கொஞ்சம் பொறுத்திருந்து தூக்குவொம்.''

''வீட்ல வச்சுப் பாத்தா அந்தப் பெயத்துல மிஞ்சியிருக்கிற உசிரும் போயிரும்.''

''நாளைக்கு நான் ஒந் தோளுலயோ நீ எந் தோளுலயோ. இப்ப என்னால ஒரு எட்டு வைக்க முடியாது. தூக்குறதுக்குச் சீவனில்லாம நம்மளும் படுத்துக் கிட்டா ஊரே அழுகி நாறிப்போகும்.''

உடனுக்குடன் தூக்காமல் பகலில் படுத்துக் காலாறினார்கள். சாய்ந்தரம் வரை சேரும் சடலங்களை ராத்திரி கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். மயானத்தில் பனையோரம் ஒத்தைத் தீவட்டி காற்றுக்குப் பயந்து நிதானமில்லாமல் எரிந்து கொண்டிருந்தது.

ராத்திரிக்கு விழுவதை மறுநாளுக்கு வைத்துக்கொண்டார்கள். ரெண்டு நாளுக்கொருக்க வேலையைக் கைமாற்றினார்கள். அப்போது அயலூர்க்காரர் களைப் போல் வீட்டு நிலவரங்களை விசாரித்தார்கள்.

மயானத்தில் நரித் தொந்தரவு ரெம்ப. சாய்ந்தரம் ஆளிருக்கும்போதே ஊளையும் முனக்கமும் கிட்டத்தில் கேட்கும். ராத்திரி ஆளில்லாத நேரத்தில் சொல்லவே வேணாம். நிதமும் குழியிலிருந்து பிணங்களைத் தோண்டியெடுத்து சுற்றிலும் குதறிப் போட்டிருந்தன.

''நாசமாப் போற நரி செஞ்சிருக்கிற அநியாயத்தப் பாரு.''

''இதுகள வேற பெறக்கி மறுபடியும் மூடணுமே.''

''இதுக்காகவாச்சும் ராத்திரியில சொமக்கிறது நல்லது.''

யாரும் குளிக்கவில்லை. எத்தனை தடவை குளிப்பது. குடிக்கவே தண்ணீரைக் காணும். எங்கே போய்க் குளிப்பது. அவர்கள்மேல் பிணவாடையடித்தது. மூஞ்சி யில் சவக்களை படிந்து கண் சாம்பல்பூத்திருந்தது.

செத்தவர்களுக்கு எழவெடுப்பதுபற்றிப் பேச்சுவந்தது.

''இப்ப இல்லன்னாலும் பின்னாலயாச்சும் சாத்தரம் செய்யணும்.''

''அதுவரைக்கு நீயும் நானும் இருந்தாச் செய்யலாம். அது ஒண்ணுதான இப்பக் கொறையாருக்கு.''

''பெழச்சுக் கெடந்தா ஊரோட சேந்து ஒரே எழவா எடுத்துற வேண்டியது தான்.''

ஆண்டிக்கு அடிமேல் அடி விழுந்தது. செத்துப்போன வடிவு அண்ணன் வீர முத்தைக் கூட்டிக்கொண்டாள். குடும்பம் உடைந்துபோயிற்று.

பொய்யாளியும் வீரமுத்தும் ஒரு காடிக் காளைகளாகத் திரிவார்கள். அண்ணன் யார் தம்பி யார் என்று அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. அண்ணன் கமலை இறைத்தால் தம்பி தண்ணீர் பாய்ச்சுவான். தம்பி வண்டி யடித்தால் அண்ணன் மண்ணள்ளி விடுவான். ராக்கனுக்கு வேலையிருக்காது. அவர்கள் தலையெடுத்த பிறகு தசகூலி குறைந்துவிட்டது.

வீரமுத்துக்குக் கலியாணம் செய்து வைக்கணுமென்று ஆண்டி மனசில் ஓடிக்கொண்டிருந்தது. கருப்பியும் அதைத்தான் சொன்னாள். அதைப் பார்க்க லவிக்கவில்லை. ஆசையில் மண்ணள்ளிப் போட்டுவிட்டுப் போய்விட்டான்.

பொய்யாளி ஒத்தைக் காளையாகிவிட்டான். சொக்கம்மாளுக்கு நிகார் தப்பியது. வாய்க்கு வந்ததைப் பேசிக்கொண்டு திரிந்தாள். ராக்கன் தாமரிக்க முடியாமல் கொட்டினான்.

''நான் என்ன கருமம் செஞ்சனோ. என்னயச் சொமக்க வேண்டிய மகன நான் சொமக்கணுமா.''

அழுகை வற்றிய கருப்பிக்குத் தொண்டைகட்டிக்கொண்டது. அடிவயிற்றி லிருந்து இரைந்தாள்.

''தெய்வமே ஒனக்கு நல்லாருக்கா இது. ஒங்கண்ணவிஞ்சா போச்சு. என் உசிர எடுத்துக்கிட்டுச் சிறிசுகள வுட்ருக்கப்புடாதா.''

ஆண்டிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. உட்கார்ந்தால் உட்கார்ந்த இடம். நின்றால் நின்ற இடம். சில சமயம் அழுகை வந்தது.

சண்முகம் பனைக்குப் போவதை முந்தியே நிறுத்திவிட்டான். போய் என்ன செய்ய. வீசி வளராமல் வெளிறியிருக்கும் ஓலைகளைக் கழுத்து வலிக்க அண் ணாந்து பார்த்துவிட்டு வரவா. ஒண்ணு ரெண்டு பாளைகள் பிரயாசைப்பட்டு வெளியே தள்ளியிருந்தன. அவற்றைச் சீவி இடுக்கிப் பக்குவப்படுத்தினான். கலயத்தில் ஒரு சொட்டு இறங்கவில்லை.

வெறும் வயிற்றுடன் பனையேறத் தவிப்பாக இருந்தது. பாதியில் ஏறி காலைப் பின்னிக்கொண்டு தவிப்பாறினான். பசிநேரம் வடலியில் குருத்தைக் குடைந்து தின்றான். வீட்டுக்கும் கொண்டுவந்தான்.

மாலையம்மா மூணு பிள்ளைகளை வைத்துக்கொண்டு திணறினாள். கழுகு மலைக்குப் போகலாமென்றால் அங்கேயும் நிலைமை இப்படித்தான். சண்முகத் துக்குப் போக விருப்பமில்லை. பாளையரிவாளை மூலையில் எறிந்துவிட்டு ஆட் களுடன் வேலைக்குப் போனான். ஆண்டி எவ்வளவோ தடுத்தும் கேட்கவில்லை.

எத்தனை நாளைக்கு ஆண்டியின் குடும்பத்தை நம்பியிருப்பது. ஒரு நாள் பாடா ரெண்டு நாள் பாடா. இருக்கிற தவசத்தைப் பங்கு போட்டுவிட்டு எங்கே போவார்கள். அது நல்லதில்லை.

ஆனாலும் ஆண்டி வீட்டிலிருந்து மாலையம்மாளுக்குத் தவசம் வந்து கொண்டுதானிருந்தது. முந்தியெல்லாம் வடிவு கொண்டுவருவாள். முணுக் முணுக்கென்று பொடிநடையில் வந்து வாய்நிறையக் கூப்பிடுவாள்.

''ஆத்தா.''

அவளும் செத்துப்போனாள். பிடுங்கியெறிந்த செடியாகச் சுருண்டுவிட் டாள். தங்கையா சதா சவாரிவைத்த இடுப்பு போய்விட்டது... அவள் சாகவே யில்லை. வாசலில் நின்று கூப்பிடுகிறாள்.

''ஆத்தா...''

''ஆரு சொக்கம்மாளா. ரெண்டு பிள்ளையளப் பறிகுடுத்துட்டு எப்படிம்மா ஒன்னால வீடு தேடி வரமுடியிது. உக்காரும்மா. நெறயத் தவசம் கொண்டு வந் திருக்கியே. அங்க உருப்படிய கொறஞ்சிட்டதாலயா. எங்க பிள்ளையளக் காப் பாத்துனா மட்டும் ஒம் பிள்ளைய வந்துடப்போறாவளா என்ன. நம்ம பேசாம இருக்கிததுதான் நல்லது.''

''ஆத்தா.''

''என்னம்மா போறியா. போம்மா போ. இருந்தா வடிவப் பத்திக் கேப்பென். பனங்குரும்பையப் போல அவ காதுல தொங்கிய குணுக்க மனசவிட்டுப் போவலயே. அந்த வேதனையக் கெளறுவென். போயிரும்மா. நமக்கு ஒரு நேர அழுகை மிச்சம்.''

சொக்கம்மா போய்விட்டாள். மாலையம்மாளின் கண்ணீருக்குள் அவள் குழந்தைகள் மூணு பேரும் முங்கிப்போனார்கள்.

வெள்ளங்காட்டி உவர்காட்டு ஓடைப் பக்கம் போன சண்முகத்துக்கு வயிற்றுப்போக்கு நிற்கவில்லை. கொஞ்ச நேரத்தில் நாலஞ்சு தடவை பீச்சி விட்டது. வீட்டுக்கு நடக்கப் பிரயாசைப்பட்டான். முடியவில்லை. இடுப்பில் பலம் கிடையாது. தட்டுத்தடுமாறி மஞ்சணத்தி நிழலில் படுத்துவிட்டான். அடுத்த தடவை எழுந்து ஓடைக்குப் போக ஏலவில்லை.

தேடிவந்த மாலையம்மாளுக்கு அவனை இந்த நிலையில் பார்த்ததும் உடம்பு நடுங்கியது.

''இப்படிக் கெடக்கியளே...''

எழுப்பிப்பார்த்தாள். கைகால் குழண்டு கிடந்தது. சுற்றிலும் பல இடங் களில் ஈரம் நமர்ந்த மண்.

''வாங்களேன் வீட்டுக்கு.''

அவன் உதடுகளில் லேசான அசைவிருந்தது. ஒரு வார்த்தைகூட வெளியே வரவில்லை. அவள் ஆண்டியிடம் ஓடிவந்தாள். எல்லாருமாக அவனைத் தூக்கி வந்து வீட்டுக்குள் போட்டார்கள்.

ஆண்டி கிட்ட இருந்து சண்முகத்தையே பார்ததுக்கொண்டிருந்தான். மேல் வாக்கில் முழி சொருக நிலைகுத்தி அசைவில்லை.. வயிற்றுக்குள்ளும் ஈரம் வற்றிப்போனது. சாயங்காலத்துக்கெல்லாம் கதை முடிந்துவிட்டது.

தோளில் தடைநார் தொங்க சிரித்த முகம் மாறாமல் திரிவான். ஊருக்குள் அவனை யாரும் தள்ளி நில் என்று சொன்னதில்லை. எல்லாருடனும் பிரியமாகப் பழகுவான். ஊரில் என்ன காரியம் நடந்தாலும் முதல் ஆளாக நிற்பான்.

மண்டையன் கேட்டான்.

''கழுகுமலைக்கு ஆளு வுடணுமா.''

தூங்கன் வைதான்.

''இதென்ன எழவு சொல்லிவுட்டு எடுக்கிற காரியம்னு நெனச்சயா.''

''அப்படியே அனுப்புனாலும் கழுகுமலைக்குப் போயிவர எவனுக்குப்பா கால்ல உசிரு இருக்குது.''

''போறவன் உருப்படியாத் திரும்பணுமே.''

''பெரிய நாடாருக்குத் தெரிஞ்சு அவுக வந்து அதுவரைக்கும் வச்சிருக்க முடியுமா.''

''அம்புட்டுத்தான்... நம்ம என்ன செய்ய முடியும்.''

''எங்க அடக்கம் செய்றது.''

''ஆண்டியத்தான் கேக்கணும்.''

ஆண்டி ஒரு நிதானமில்லாமல் உட்கார்ந்திருந்தான். எல்லாரும் அவன் வார்த்தையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

''குடும்பம் தழச்சுப் பெருகட்டும்னு பெத்த புள்ளையப்போல நெனச்சுக் குடியமத்திவச்சென். அது பெருகாமக் கருகிப்போச்சே. தட்டிப்போட்ட எருவ பெரட்டிப் போட நாதியில்லையே. அவரே போனப் பெறகு எங்க அடக்கம் பண்ணுனா என்ன. நம்ம சுடுகாட்டுக்கே கொண்டுபோங்க.''

அவன் மீசைப்புரி பிளக்கப்பிளக்கக் கதறினான். பேரன் பேத்தி போன போதுகூட இப்படி அழவில்லை.

சண்முகத்துக்குத் தனிப்பாடை கட்டினார்கள். சுடுகாட்டில் தனி இடத்தில் அடக்கம் செய்தார்கள்.

அஞ்சு நாளாயிற்று. மாலையம்மாளின் ரெட்டைக் குழந்தைகளில் இளையது கைநழுவித் தகப்பனைத் தேடிப் போய்விட்டது. அடுத்த மூணு நாளில் மூத்ததும் பறிபோனது. மாலையம்மா தங்கையாவை வைத்துக்கொண்டு பிதற்றினாள்.

''எங்களத் தவிக்கவுட்டுட்டுப் போயிட்டியளே.''

பறிகொடுத்த ஏக்கம் அவளையும் முடக்கிவிட்டது. சாப்பாட்டை மறந்தாள். சொக்கம்மாளும் கருப்பியும் மாறிமாறிக் காவலிருந்தார்கள். அப்படியும் அவள் உயிரைத் தாக்காட்ட முடியவில்லை. புருசனுக்குப் பக்கத்தில் போய் விழுந்து விட்டாள்.

தங்கையா மட்டும் தங்கியிருந்தான். அவன் மிரட்சியிலிருந்து மீள முடியா மல் நினைத்துநினைத்து அழுதான். கருப்பி மடியில் வைத்துச் சோறூட்டினாள். மறுநாள் பொய்யாளி தங்கையாவைக் கூட்டிக்கொண்டு கழுகுமலைக்குப் புறப் பட்டான்.

**ஊ**ர் நிலைமையை நினைக்கையில் ஆண்டிக்குச் சொல்ல முடியாத பதட்டம். என்னேரமும் சுடுகாட்டில் குடியிருக்கும் பயம்.

மரங்கள் மூளிப்பங்கரையாக நிற்கின்றன. ஆடுமாடு கோழி குஞ்சு என்று அத்தனை உசுப்பிராணியும் கருவறுந்துபோயிற்று. ஊர்க் குடும்பன் தானும் போனதில்லாமல் ரெண்டு பயல்களையும் கூட்டிக்கொண்டான். காலாடியும் பெண்டாட்டியும் நாலு பிள்ளைகளைத் தவிக்கவிட்டுப் போய்விட்டார்கள். இடுப்பை நெளித்துக்கொண்டு திரிந்த மொங்கானைக் காணும். காக்காச்சியும் சிறிசுகள் எட்டும் காலி. பூச்சியின் புலம்பலைக் கேட்கத் திராணியில்லாத மண்டையன் கோட்டி பிடிக்காத குறையாக அலைகிறான்.

ராக்கனுக்கு ரெண்டு உயிர் நட்டம். ஊருக்குள் மடிந்துபோன உயிர்களை எண்ணி முடியாது. ஆகமான சீவன்கள். சாகிற வயசா. நொடித்துக் கெட்ட குடும்பங்கள் தேறிக் கால்கூட எத்தனை நாளாகுமோ. ஊரை இனிமேல் கூட்டிச் சேர்த்து எப்படி உண்டாக்குவது. இப்படியொரு பஞ்சத்தைத் தலைமுறையில் பார்த்ததுண்டா. அப்பனும் அப்பச்சியும் சொல்லக் கேட்டதில்லை.

மருதன் பயலும் குடிகிளம்பிவிட்டான்...

''சொல்லாமக் கொள்ளாமப் போக எப்படிடா மனசு வந்துச்சு ஒனக்கு. நான் ஒருத்தன் கெடக்கிறது நெனவில்லையா. மத்தவுகளப் போல என்னவும் நெனச்சுக்கிட்டயா. அப்படித்தானா. சொன்னா போக வுட மாட்டான்னு எண்ணமா. கோட்டிப் பெயலே நான் எதுக்குடா தடுக்கப்போறென். நீ இங்கருந்து வம்சமே தரையோட தரையாப் போறதுல எனக்கென்ன சந்தோசம். இது ஒனக்கே தெரியும். பெறகேன் சொல்லலயாம். புள்ளீகள இழுத்துக்கிட்டு எங்க போனயோ. சோறு தண்ணிக்கு என்ன செய்றீகளோ. ஒன்னய நெனச்சா மனுசனுக்கு நிம்மதி உண்டுமா. ஒன் அப்பன் இருந்திருந்தா இவ்வளவுக்காகுமா. இல்ல ஒன் ஆத்தா இருந்தா எங்கிட்டச் சொல்லாமருப்பாளா. அவ புண்ணிய வாட்டி. ஆம்பளையப் போல அரும்பாடு பட்ட மனுசி. அண்ணைக்கு நான் சொன்ன வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்த ஊருல இருந்து சாதிச்சா. அண்ணைக்கே ஒன்னயக் கூட்டிக்கிட்டு வடக்க போயிருந்தா எல்லாத் தொந்தமும் மாரியோட முடிஞ்சிருக்கும். நீ ஆரோ எவரோன்னு ஆயிருப்ப. ஒன் நெனப்பே அத்துப்போயிருக்கும்... நீ எங்கருந்தாலும் நல்லாருக்கணும். பொண்டாட்டி புள்ளீக சொகமாருக்கணும். காலம் செழிச்சதும் கலிங்கலுக்கு வரணும்... காலம் எப்பச் செழிக்கப்போகுது. நெலம இப்படியே போனா மிச்சமிருக்கிற உசிருகளவும் பட்னி சுருட்டித் தொடச்சிரும்...''

## 5. மேகாட்டு நெல்

மேலச்சீமையில் பரவலாகப் பெய்த மழையில் ஆற்றுப் பக்கம் நெல் வெள்ளாமை தப்பித்து விளைந்து கருதறுப்பு நடப்பதாகப் பேச்சு வந்தது. தூங்கன் நிலைகொள்ளாமல் மூக்கம்மாளிடம் போனான்.

''இங்க கெடந்து அழுந்துறதுக்கு மேகாட்டுக்குப் போயி வேல செஞ்சாத் தவசம் கெடைக்கும்.''

''தொணைக்கு ஆரும் வராம எப்படிப் போறது.''

''அதான் ரோசனையாருக்கு.''

குடும்பத்தில் கஞ்சிக்கில்லையென்றாலும் பிள்ளைகளுக்குக் குறைச்சலில்லை. மூக்கம்மா என்னாளும் வயிற்றைத் தள்ளிக்கொண்டு சுமந்த கடமைக்கு நாலு தான் மிஞ்சியது.

எல்லாருக்கும் மூத்தவன் கருத்தையன். அடுத்து ஆம்பளை பிறந்து தங்க வில்லை. மூணாவது மொட்டையன். தப்பிப் பிழைத்தான். நாலாவது சங்கன். ஒப்பேறிவிட்டான். அஞ்சாவது பொம்பளை. எழுந்து எட்டுவைக்குமுன் மண் வாங்கிக்கொண்டது. செவனம்மா கடைக்குட்டி. தனக்குத் துணையாக ஒரு பொம்பளை தங்கியதில் மூக்கமாளுக்கு ஆறுதல்.

குடும்பத்துக்குத் தலைப்பன் ஆளோடு கூட்டில்லாமல் நாடோடியாகி விட்டான். கலியாணமாகிப் பத்து வருசத்துக்கு மேலாகியும் குழந்தையில்லை. அது பெரிய கருமாயம்.

மொட்டையன் ராமாத்தாளைக் கலியாணம்முடித்து ரெண்டு வருசம் முடியவில்லை. சங்கன் எளவட்டமாகி வேலைவெட்டி செய்யத் தலையெடுத் திருந்தான். மூணு பேரும் பஞ்சத்துக்குத் துவண்டுபோனார்கள். கூப்பன்கடைச் சோளந்தான் குடும்பத்தைக் காப்பாற்றியது. ஊரையே உலுக்கிய பஞ்சம் அந்தக் குடும்பத்தை விட்டு வைத்தது பெரிய ஆச்சரியம்.

வீரம்மா சின்ன வயசிலும் பெரிய மனுசியாக நடந்துகொண்டாள். செவனம்மா பிறந்தபோது அவள்தான் கூட இருந்து எல்லா வேலைகளையும் கவனித்துக்கொண்டாள். மாமியாளுக்கு மருமகள் பேறுகாலம் பார்த்த கதையைச் சொல்லிச்சொல்லிச் சிரித்தார்கள்.

''பலபுள்ளத்தாச்சிக்குத் தலப்புள்ளக்காரி பேறுகாலம் பாத்தாளாம். புள்ள ஆணா பொண்ணான்னு ஆருக்கும் தெரியலயாம்.''

''காலம் பெரண்டுக்கிருச்சு. அடுத்த பேறுகாலம் அவ அஞ்ஞைக்குத்தான்.''

வீரம்மாளுக்குக் கோவமோ வருத்தமோ இல்லை.

''ஒங்கஞ்ஞுமாரு மாசமாருந்தாச் சொல்லியனுப்புங்க. வலிக்காமப் பாத்து வுடுறென்.''

மூக்கம்மா செவனம்மாளைப் பெற்றுப்போட்டதுடன் சரி. அதுக்கு மேல் தெம்பில்லை. ஆறு பிள்ளைகளைச் சுமந்து உடம்பு இற்றுப்போய்விட்டது. ஒத்தைக் காம்பிலும் பிள்ளைக்கு வேண்டிய பால் சுரக்கவில்லை.

வீரம்மா செவனம்மாளைச் சொந்தமாக்கிக்கொண்டாள். சேனை தொட்டு வைத்துச் சீராட்டிக் குளிப்பாட்டி பசும்பாலூட்டி வளர்த்தாள். அவளுக்குப் பக்கத்தில் தொட்டிலாடும். படுத்திருந்தால் தொட்டில் கயிற்றின் மிச்சம் கையி லிருக்கும். பிள்ளைத்தாச்சிபோல் உறக்காட்டுவாள்.

''வாருமய்யா வளவிச் செட்டி - என் கண்ணே
வந்தெறங்கும் பந்தலிலே
நீல வளவிதொடும் - எஞ் செல்ல மகளுக்கு
நெறத்துக்கொரு பச்ச தொடும்
கோல வளவிதொடும் - நான் பெத்த மகளுக்கு
கொணத்துக்கொரு பச்சதொடும்.''

பீஞ்சாணியாகப் படுத்திருக்கும் மூக்கம்மாளுக்கு மனசு குளிரும். அந்தச் சந்தோசத்திலேயே உறங்கிவிடுவாள்.

கருத்தையன் தங்கச்சிமேல் ரெம்பப் பிரியமாக இருப்பான். அவள் சிணுங்கிய படி அவனிடம் பாயும்போது எப்பேர்ப்பட்ட கோவமும் பறந்துவிடும். காடு மலையென்று அவன் காணாத தேசத்தில் திரிந்தாலும் செவனம்மா ஞாபகம் வந்துவிட்டால் எதிலும் மனசு ஒட்டாது. நொண்டியன் இதைக் கவனித்து விடுவான்.

''என்ன கருத்தப்பாண்டி கலிங்கலுக்கு மனசு நோங்கீருச்சா.''

''அந்தப் புள்ள கண்ணுக்குள்ளயே இருக்கு சித்தப்பா.''

ரெண்டு பேரும் ராவோடு ராவாகக் கலிங்கலுக்குக் கிளம்புவார்கள்.

கருத்தையன் செவனம்மாளைப் பக்கத்தில் படுக்க வைத்துக்கொண்டு காடே மேடே என்று பேசுவான். வீரம்மா அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்து விட்டுச் சொல்வாள்.

''ஒனக்கென்ன ராப்பாடி. பச்சப்புள்ளைக்கு ஒறக்கங் கெட்டுட்டா குல்லம் பாஞ்சிருமில்ல. பெறகு அதுக்கு ஓவணியம் பாக்கிறது ஆரு.''

அவன் வருத்தப்படுகிற மாதிரி கேட்பான்.

''அப்ப புருசனுக்கு வகுறு கெட்டுப்போறதப்பத்திக் கவலையில்ல.''

''எடுக்காற எடுப்பு எடுத்துக்கிட்டா எல்லாம் அனுபவிச்சுத்தான் ஆகணும். நான் வந்து சோறு பொங்கிப் போடட்டா.''

''வேணாம் தாயி. வந்தாலும் வந்துருவ.''

''நீ மெலிஞ்சிட்டுப்போறதப் பாத்தா நாந்தான் வரணும் போலருக்கு. அப்படியென்ன தீராத கவல ஒனக்கு.''

அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டே சமாளிப்பான்.

''நீ இருக்கயில எனக்கென்ன கவல.''

விடியக்காலம் நொண்டியன் வந்து கதவைத் தட்டும்வரை அவர்கள் பேச்சுப் பழக்கம் ஓயாது. அவள் நொண்டியனைப் பிடித்துக்கொள்வாள்.

''தெரியாமத்தான் கேக்கென். கஞ்சி குடிக்கீகளா இல்ல காட்ல பட்னி கெடக்கீகளா.''

அவன் உழத்துவான்.

''கஞ்சிக்கொண்ணும் கொறையில்ல தாயி. காடாசெதறியா அலையிறொம் பாரு. அதான்...''

அவன் பேச்சை முடிக்குமுன் கருத்தையன் இழுத்துக்கொண்டு போய் விடுவான்.

''நேரமாகுதுல்ல சித்தப்பா.''

வீரம்மா அந்த ஒருநாள் சந்தோசத்தை மனசுக்குள் பத்திரமாகப் பூட்டி வைத்துக்கொள்வாள். அது ரெம்ப நாளைக்கு இனித்துக்கொண்டிருக்கும்.

பஞ்ச நேரத்தில் எல்லாரையும்போல் கருத்தையனும் கூட்டாளிகளும் அல்லாடிப் போனார்கள். சிலநாள் வயிற்றுப்பாட்டுக்காகக் காட்டுப் பண்டங்களைத் தின்று ஒப்பேற்றினார்கள். ஒண்ணுக்கும் வழியில்லாமல் கொஞ்சக் காலம் பசப்பான இடங்களுக்குப் போய்த் தங்கியிருந்தார்கள்.

ஒரு சமயம் தானியத்துக்காக எங்கெல்லாமோ முட்டி மோதியும் கிடைக்க வில்லை. தவித்துத் கிறங்கிப்போனார்கள். என்ன செய்வதென்று முழித்துக் கொண்டிருக்கையில் துப்பன் ஒரு தகவல் கொண்டுவந்தான்.

''கருத்தப்பாண்டி ஒரு வழி கெடச்சிருச்சுய்யா.''

''போற வழியா போகாற வழியா.''

''சொல்றதக் கொஞ்சம் கேளுய்யா. நேத்து ரயில் பாதையோரமா வந் துட்ருந்தென். சாமத்துக்கு மேல இருக்கும். நல்ல இருட்டு. அப்பப் பாரு எரை யெடுத்த பாம்பு மாதிரி சரக்கு ரயிலு நகந்துநகந்து போய்க்கிட்டே இருந்துச்சு. ஒரெட்ல ஓடிப் புடிச்சிறலாம். ஒரு டக்குல மூடாமக் கொள்ளாம மூடைமூடை யாக் கெட்டிக் கெடந்துச்சு. அது என்னதுதான்னு பாத்துருவமேன்னு எனக்கு ஆச. கூடயே ஓடி மூடையத் தொட்டுப் பாத்தென். என்னதுன்னு புடிபடல. சூரிக்கத்தியால லேசாக் குத்திவுட்டென். உள்ளருந்து மணலா ஒழுகுச்சு. அம்புட்டும் அரிசி.''

''அப்படியே ஒரு மூடைய உருட்டிவுடவேண்டியதுதான.''

''கவுத்த அறுத்து மூடையப் பெரட்டணும். அதனால வேற மூடைகளும் கீழ வுழுந்துட்டாக் கண்டுபுடிச்சிருவான். மூடைய எடுத்தாலும் முழுசா நம்ம எடத்துக்குச் சொமக்க முடியாது.''

''அதனால என்ன செய்யலாமிங்கிற. அவங்கிட்ட மாட்டிக்கிட்டா தண்ட வாளத்துல வச்சு ரயில வுட்டே தொவையலு அரச்சிருவான்.''

''நான் சொல்றபடி செஞ்சா ஆப்புடாமக் கெலிச்சிறலாம்.''

துப்பன் சொன்ன யோசனை நன்றாகவே இருந்தது. கருத்தையன் முடிவு செய்தான்.

''அதவுந்தான் பாத்துருவமே.''

நீராவிப்பட்டிக்குக் கிழக்கே ராக்காச்சியம்மா கோயிலைத் தாண்டி கொஞ்சத் தூரத்துக்கு மேட்டுத்தரை. ரயில் வேகமாகப் போக முடியாது. முக்கி முனங்கித்தான் கடக்கணும். பாதைக்கு இருபுறமும் கற்றாழை கும்மல்கும்ம லாக வளர்ந்துகிடந்தது. அதுதான் தோதான இடமென்று உறுதிப்படுத்திக் கொண்டார்கள்.

சின்னச்சின்னக் கடகாப் பெட்டியாக அஞ்சு சம்பாரித்துக் கைவசம் வைத் திருந்தார்கள். ஊரடங்கும் வேளையில் ராக்காச்சியம்மா கோயிலுக்குள் உட் கார்ந்து அருவம் கேட்டார்கள். ஒருவன் மட்டும் வெளியே லாந்திக்கொண் டிருந்தான். சாமமாகிவிட்டது. துப்பன் அவசரமாக ஓடிப்போய்ப் பெரிசு பெரிசாக ரெண்டு சப்பட்டைக் கல்லெடுத்து வந்து தண்டவாளத்தின் மேல் வைத்தான்.

ரயில் கூவும் சத்தம் கேட்டது. கருத்தையனும் துப்பனும் கோயிலோரம் ஒளிந்துகொண்டார்கள். மற்றவர்கள் கொஞ்சம் தள்ளித்தள்ளிக் கற்றாழை மூட்டுக்குள் பதுங்கினார்கள். கோயிலைக் கடக்கும்போது சரக்கு ரயிலின் வேகம் மட்டுப்பட்டது. தண்டவாளத்தின் மேலிருந்த கல்லை ரயில்காரன் கவனிக்க வில்லை. ரயில் அதை முட்டித் தள்ளிக்கொண்டே போனது.

மூடை அடுக்கிய டக்கைக் கண்டுபிடித்து கருத்தையன் ஒரு தவ்வில் ஏறி விட்டான். கற்றாழை மூட்டுக்குள் ஒளிந்திருந்தவர்கள் ஆளுக்கொடு கடகாப் பெட்டி வைத்திருந்தார்கள். ஒவ்வொருவனாக ஓடிக்கொண்டே பெட்டியைக் கொடுக்க அதைத் துப்பன் வாங்கி ஏந்திப் பிடித்தான். கருத்தையன் கத்தியால் குத்திவிட்ட மூடையிலிருந்து அரிசி கொட்டியது. பெட்டி நிறையநிறைய ஒவ்வொருவனாக வாங்கி ஒளித்து வைத்தார்கள். உடனே கருத்தையன் கீழே குதித்தான்.

ராவோடு ராவாகத் தவிப்பாறித்தவிப்பாறி அரிசியைச் சுமந்து இருப்பிடத் துக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். ரெம்ப நாள் கவலையில்லாமல் கஞ்சிப் பாடு ஓடியடைந்தது.

அப்பேர்ப்பட்ட கஷ்டமான நேரங்களிலும் கருத்தையன் மனசு செவனம் மாளைத் தேடும்.

''சித்தப்பா நடையப் பாக்காமக் கலிங்கலுக்குப் போயிட்டு வந்துருவமே.''

''காலு தேய நடந்து ஆடுவளத்துக் களவாணிப் பெயகளுக்குக் குடுத்தனே அதக்காட்டியா நடக்கப்போறொம்.''

நொண்டியன் சுதாரிப்பாக எட்டுவைப்பான்.

தூங்கனைக் குடும்பக் கவலை குடைந்தெடுத்தது. மூத்தவன் வனவாசம் போய்விட்டான். நம் வயிற்றில் பிறந்தவனுக்கு இம்புட்டு முன்கோவமும் கெட்டி காரத்தனமும் ஆகாது. முதலாளிமார்கூட அவனுக்குப் பயப்படுகிறார்கள். அவனிடம் யார் சொல்லக்கிடக்கிறது... வீட்டில் பொம்பளைகள் என்ன செய்வார்கள். பாவம் வீரம்மா வந்ததிலிருந்து அலுத்து உட்கார்ந்திருப்பாளா. சம்சாரி வீட்டுப் பிள்ளை அருவேலை செய்வதைப் பார்த்து வேதனையாக இருக் கிறது. அந்த மனுசன் ஆண்டி மூஞ்சியில் முழிக்கவே வெட்கமாக இருக்கிறது.

மேலச்சீமையில் கருதறுக்கப் போனால் கொஞ்சம் தவசம் கிடைக்கும். அதை வைத்துக் குடும்பம் கொஞ்சநாள் தாக்குப்பிடிக்கும். போனால் அடுத்த ஊர்ச் சனங்களுக்கு முந்தணும். அவன் மூக்கம்மாளிடம் முணுமுணுத்து முடித்து மண்டையனிடம் போனான்.

''ஒரு தொணையாளுருந்தா பெறப்புட்ருவென். நீ வரலாமில்ல.''

மண்டையன் சலிப்பை விழுங்கினான்.

''நான் எந்தப் பொண்டாட்டி புள்ளையக் காப்பாத்தப்போறென். இனிமே இருந்தா என்ன போனா என்ன.''

அதும் சரிதான். நம் ஆத்திரத்துக்கு இவன் என்ன செய்வான். பஞ்சம் வந்து குடும்பத்தையே துடைத்துவிட்டது. இனிமேல் எப்படி வந்தாலும் ஒண்ணு தான்... சரி யாரையும் எதிர்பார்க்கக் கூடாது. வருகிறவன் வரட்டும். இல்லை கிடந்து அனுபவிக்கட்டும். குடும்பத்துக்கு ஒரு வழியில்லாமல் எந்தத் தெம்பில் சும்மா இருக்கிறார்கள். நடைக்குப் பயந்தால் முடியுமா. ஏலும்வரை நடக்க வேண்டியது. முடியாமல் போனால் ரெண்டு வீட்டில் வாங்கிக் குடித்துப் பசி யாறியாவது போகணும். அது ஒண்ணும் கேவலமில்லை.

அவன் மூக்கம்மாளிடம் முடிவாகச் சொன்னான்.

''என்ன ஆனாலும் சரி நான் கெளம்பப்போறென். நீங்க சமாளிச்சுக்கங்க. மேலூருக்குப் போயி மொதலாளியிட்ட இனியும் கொஞ்சம் தவசம் கேட்டுப் பாத்துட்டு வாறென். அது கொஞ்ச நாளைக்கு வரும். அதுக்குள்ள திரும்பீருவென்.''

மறுநாள் அவன் புறப்பட்டான். அவனுக்குப் பின்னால் மொட்டையனும் சங்கனும் நடந்தார்கள். அவர்கள் போவதைப் பார்த்துப் பெண்கள் தொண தொணக்கவும் மற்றவர்கள் கொடுக்குப்பிடித்தார்கள். ஊரே திரண்டுபோவதை மூக்கம்மாளும் வீரம்மாளும் வருத்தத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

கிளம்பியவர்கள் பக்கத்து ஊர் பெரிய வீடுகளில் நிலைமையைச் சொல்லி கடனுக்குத் தானியம் வாங்கிக் குடும்பத்துக்குக் கொடுத்துவிட்டுக் கைவசம் கொஞ்சம் கொண்டுபோனார்கள். நடக்கத் தெம்பாக இருந்தது.

வழியில் பகல் முழுக்க பசிக்குத் தண்ணீர்தான். ராத்திரிக்கு மட்டும் கஞ்சி காய்ச்சிக் குடித்துக்கொண்டு நடந்தார்கள். ஒருவன் சொன்னான்.

''எந்த ஊருக்குள்ளயும் போகாம வெலகி நடங்கப்பா. பெறகு எல்லாரும் சங்கதி தெரிஞ்சு ஆளாளுக்கு நம்மளோட தொயங்கெட்டீருவாக.''

''ஆமாமா. அப்படின்னா நம்ம பாடு திண்டாட்டப்படும்.''

பெரும்பாலும் ராத்திரி நேரத்தில்தான் ரெம்ப நடக்க முடிந்தது. பகலில் கிடைக்கிற நிழலில் படுத்துக் கண்ணயர்ந்து காலாறினார்கள். எப்படியோ படுத்தும் எழுந்தும் குடித்தும் குடிக்காமலும் நாலாம் நாள் பாவநாசத்துப் பக்கம் எட்டிவிட்டார்கள். சிலருக்குக் கால் வீங்கியிருந்தது. நாலஞ்சு பேருக்கு முழிக்க முடியாத கண்வலி. இத்தனை நாளும் வெக்கரிப்பான இடத்தையே பார்த்துச் சலித்த கண்களுக்கு அடுக்கடுக்காக மலைகளைக் கண்டதும் குளிர்ச்சியாக இருந்தது. அசதியும் வலியும் மறந்துவிட்டது.

''அடேஙப்பா இத்தன மலையா.''

''பச்சப் புல்ல வச்சு வரிசையா கூரமேஞ்ச மாதிரில்ல மொகடுமொகடா இருக்குது.''

அடிவாரங்களில் நெல் விளைந்து தலைசாய்ந்து கிடந்தது. அவர்களுக்குக் கிறக்கம் தெளிந்தது.

''நல்ல வேள கருதறுப்பு முடியல.''

''தானியக்கடன அடச்சிறலாம்.''

''கரிசக்காட்லயும் நாலு தூத்தலு வுழுந்திருந்தா இந்த அலச்சலெதுக்கு. மழைக்குக்கூட ஓரவஞ்சகமா.''

''நம்ம கெரகமயிரு அப்படியிருக்கு.''

''போனதப்பத்திப் பேசி என்ன செய்ய. ஆகவேண்டியதப் பாருங்கப்பா. நீங்க பேசி முடிக்கிறதுக்குள்ள அடுத்தவன் வந்து வேலைய முடிக்கப்போறான்.''

''அவன் சொல்றதும் சரிதான். கருதறுப்ப மதிப்புக்குப் புடிப்பமா அத்தக் கொத்துக்குப் பாப்பமா.''

''இவன் ஆருப்பா. அத்தக் கொத்துக்கு வேலசெஞ்சா நம்ம தின்னு கழி யிறதுக்கே சரியாருக்கும். மொத்தமா மதிப்புக்குப் புடிச்சு ரெண்டு மூணு கையா நின்னு வேலைய முடிப்பொம். அப்பத்தான் நல்ல கொத்துக் கெடைக்கும்.''

''அப்படின்னா வாற கொத்தப் பொதுவுலதான் வைக்கணும்.''

''பொதுவுல வச்சுக் கடைசியில பகுந்துக்கிருவொம்.''

''எல்லாரும் வேலைக்குப் போயிட்டா வகுத்துப்பாட்டுக்கு என்ன செய்றது.''

மண்டையன் முந்திக்கொண்டான்.

''அத நான் பாத்துக்கிறென். நீங்க வெருசனாப் போங்க.''

ஒவ்வொரு வயலாக மதிப்புக்குப் பிடித்தார்கள். கொத்து வெறியில் உட்காரக்கூட நேரமில்லாமல் கருதறுத்தார்கள். மண்டையன் முழுமூச்சாகச் சமையலைக் கவனித்துக்கொண்டான்.

தினமும் ஆசைதீரக் குளித்தார்கள். துணி துவைத்தார்கள். ராத்திரி வீட்டு நினைப்பு வந்தது. பிள்ளைகளுக்கு இனிமேல் ஒரு வேளைக் கஞ்சியாவது தட்டாமல் கிடைக்கும். பெண்டாட்டிமாரின் அழுகை குறையும். அந்த நிம்மதியிலேயே உறக்கம் வந்தது.

அறுப்பு பதினஞ்சு நாளில் முடிந்துவிட்டது. கிடைத்த நெல்லைப் பகிர்ந்துகொண்டார்கள். வயிற்றுக்குள் பருக்கை இறங்கிய செழிம்பில் நெல் சுமந்து வந்தார்கள். தூங்கனுடன் மொட்டையனும் சங்கனும் ஏண்ட அளவுக்குச் சுமை வைத்திருந்தார்கள்.

கலிங்கலுக்கு வந்து சேர்ந்ததும் தூங்கன் சுமையை இறக்கவில்லை. நேரே மேலூர் பெரிய நாய்க்கர் வீட்டுக்கு நடையை விட்டான்.

மூக்கம்மா பொருமினாள்.

''அம்புட்டுத் தவசத்தவும் அங்க கொண்டுபோயிக் குடுத்துட்டா புள்ளீக என்ன செய்யும்.''

தூங்கனுக்குத் தலை நடுங்கியது.

''குடுத்துக் கழிக்கலன்னா மொறையில்ல. நாளப்பின்ன கேக்க முடியுமா.''

''என்ன மொறையக் கண்டுட்ட. இண்ணைக்கில்லன்னா நாளைக்கு வாங்கப் போறாக வட்டி வாசியெல்லாம் சேத்து.''

''நாம கஸ்டம் நம்மளோட. கையில இருக்கயிலயே குடுத்துட்டாத்தான் மருவாதி.''

மூக்கம்மா பேசாமல் போய்விட்டாள்.

தூங்கன் பெரிய நாய்க்கர் வீட்டுத் தாவாரத்தில் சுமையை இறக்கும்போது உள்ளேயிருந்து வந்த நாய்க்கர் முகத்தில் சந்தோசம்.

''என்னடா மேகாட்லருந்து அதுக்குள்ள திரும்பியாச்சா.''

''வேல முடிஞ்சது சாமி.''

''கொத்து ரெம்பக் கெடச்சிருக்கே.''

''வாயக் கெட்டி வகுத்தக் கெட்டி வேல செஞ்சொம்.''

அவன் சுமையை அவுத்து நெல்லைக் கொட்டினான்.

''எண்ணைக்கு வந்தீகடா.''

''இண்ணைக்குத்தான். வீட்டுக்கு வெலகாம நேர இங்கதான் வாறென்.''

''ஒடனே கொண்டுவரணுமாக்கும்.''

''குடும்பத்துக்குள்ள போட்டா எல்லாம் இழுத்துக்கிரும் சாமி. ஒங்களுக்குக் குடுக்க முடியாது. பெறகு ஒங்க மொகத்துல முழிக்கிறது எப்படி.''

‘‘போனவுக அல்லாரும் வந்தாச்சா.’’

‘‘ஒருத்தங்கூட நிக்கல.’’

‘‘ஒங்கூட ஆரும் வரலயே.’’

‘‘நாளைக்கு வருவாக சாமி.’’

‘‘நம்ம வீட்ல எவ்வளவு தானியம் வாங்கியிருக்க.’’

‘‘மொதல்ல ஒரு குறுணி. பெறகு ஒரு பதக்கு. கடைசியில குறுணி.’’

அவர் வேலைக்காரக் கோனாரைக் கூப்பிட்டார்.

‘‘இதுல நாலு மரக்கா அளந்து போடுப்பா.’’

கோனார் அந்தப்படி அளந்து போட்டுவிட்டு நாய்க்கரைப் பார்த்தார். அவர் தூங்கனைப் பார்த்தார்.

‘‘மேகாட்டு நெல்லு சாப்பாட்டுக்கு நல்லாருக்குமே. குறுணிக்கு நாழி சேத்துக்குடேன்.’’

‘‘சமயத்துல நீங்க குடுத்து ஒதவலன்னா எங்க பெழப்பு என்னாகியிருக்கும். எம்புட்டு வேணும்னாலும் எடுத்துக்கங்க.’’

கோனார் கூடுதலாக நாலு படி அளந்து போட்டார். நாய்க்கர் மிச்ச நெல்லை நோட்டம் விட்டார்.

‘‘இவ்வளவு மிஞ்சுதா ஒனக்கு... ஆமா இதக் கொண்டுபோயி மெனக்கிட்டு அரிசி குத்திக் காச்சவா.’’

‘‘இத வச்சுத்தான் ஒப்பேத்தணும் சாமி. நெல்லுக் கஞ்சி எம்புட்டுக் குடிச் சாலும் பசி பொறுக்க மாட்டங்குது. என்னருந்தாலும் கரிசக்காட்டுத் தவசமாகாது. வெள்ளங்காட்டி கம்மங்கஞ்சி குடிச்சா பொழுதடையிறவரைக்கும் பசிக்காது. அதுலயும் நம்ம வீட்டுத் தவசமிருக்கே கஞ்சி பிசினாருக்கும். வேலவெட்டி செய்றவனுக்கு நெல்லுச் சோறு தாங்குமா. வீட்லருந்து சாப்பிடுறவுகளுக்குத் தான் தோதுப்படும்.’’

‘‘அப்படின்னா ஒண்ணு செய்யி. இருக்கிற நெல்லுக்குக் கம்மம்புல்லு வாங்கீட்டுப் போ.’’

‘‘நல்லதாப்போச்சு சாமி. அது கட்டித் தவசமாச்சே.’’

கோனார் மிச்ச நெல்லை அளந்தார். நாய்க்கர் சொன்னார்.

‘‘வீட்லயும் புல்லு கொஞ்சந்தான் இருக்கும். ஒனக்காகத்தான் குடுக்க வேண்டியிருக்கு.’’

‘‘எல்லாம் சாமிவுகதான் தாங்கணும். எங்களுக்கு ஆரு இருக்காக.’’

அவர் கோனாரைப் பார்த்தார்.

‘‘இப்படிச் சொல்லயில என்ன செய்றது. குடுத்தனுப்புப்பா.’’

கோனார் ரெண்டு படி குறைத்து கம்மம்புல் அளந்து வந்து கொடுத்தார். தூங்கன் சந்தோசமாக வாங்கிக்கொண்டு நடந்தான். நாய்க்கர் நினைவு படுத்தினார்.

‘‘அடே நம்ம வீட்டுக்கு வரவேண்டியவங்களத் தாயமாட்டுப் பண்ணாம வரச்சொல்லீரு.’’

‘‘போனதும் சொல்லீறென் சாமி.’’

அவன் வேகமாக எட்டுவைத்தான்.

## 6. காலமழ பொழிஞ்சது

புரட்டாசிவரை வேனலும் வேக்காடும் குறைந்த பாடில்லை. தக்கிமுக்கிப் பிழைப்பு ஓடியது. மாசம் பிறந்ததும் மாரி மூலை திறந்துகொண்டது. முண்டி யடித்துக்கொண்டு வந்த காற்று அக்கினி வேக்காட்டை விசிறிவிட்டது. காற்றோடு குழைந்திருந்த மண் மணம் சுற்றிலும் மண்டியிருந்த நாற்றத்தை விரட்டியது.

கண்சுருங்கிய எரிச்சலும் உடம்புக் காந்தலும் தணிந்து ஈரத்துணி மூடிய குளிர்ச்சி. மயிர்க்கால்கள் வேர்விட்டன. பட்டுப்போன மரங்கள் அசைந்து மழை யைக் கூப்பிட்டன. கருமேகம் கவிந்து நிலமெங்கும் விதைத்துக்கொண்டு மழை நெருங்கிவிட்டது.

எங்கோ ஒண்ணுரெண்டு சிறிசுகளின் சத்தம் கேட்டது. இந்தக் கும்மாளம் கேட்டு நெடுநாளாயிற்று.

சனங்களிடம் அவசரமில்லை. எந்த ஆடுமாடு வெளியே கட்டிக்கிடக்கிறது. களம் பிடிக்காமல் கருதும் தானியமுமா காய்கிறது. விறகைப் பத்திரப்படுத்தி என்ன செய்ய. கஞ்சிக்கு வழியில்லை. ஆணும் பெண்ணும் மந்தைக்கு ஓடி வந்து மழையை ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

வெறிச்சோடிக்கிடந்த வெளிக் காடியில் பல யோசனையில் உட்கார்ந்திருந் தான் ஆண்டி. நிலம் நனைந்தால் பட்டம் பிந்தினாலும் விதைத்துப்போடலாம். அதுக்கு மாடு வேணும். கடனுக்குப் பிடித்து வரலாம். தீவனத்துக்கு என்ன செய்வது. எத்தனை நாளைக்கு மேய்த்து ஒப்பேற்ற முடியும்.

மாட்டு மூத்திரமாக மழை ஊற்றியது. அவன் எழுந்து போக மனசில்லாமல் தலையில் தெறிக்கும் துளிச் சத்தத்தைக் கேட்டபடி சொகமாக நனைந்துகொண் டிருந்தான். ஊர் குளித்துத் தெருவில் புரளும் தண்ணீரை ஒரு பயல் மந்தைக்குக் கூட்டிக்கொண்டு ஓடினான். சனங்கள் சாவகாசமாக நடமாடினார்கள்.

இந்த மழைக்குக் கண்டிப்பாகக் கம்மா பெருகும். தண்ணீர்க் கஷ்டம் நீங்கும். மருதனை எப்படியும் தேடிப்பிடிக்கணும். பஞ்சம் ஊரையே சிதறடித்து விட்டது. சின்னஞ்சிறுசுகளைக் கூட்டி அள்ளிக்கொண்டு போய்க் குழியில் கொட்டிய கொடுமை. காடி நிறைய நின்ற காளைகள் குப்பைக்குள் மக்கிப் போன கருமாயம்...

அவனுக்கு நனைவிலும் அழுகை வந்தது.

ராத்திரி தவளைச் சத்தமில்லை. சில வண்டுகள் மட்டுமே வாய் வலிக்க இரைந்துகொண்டிருந்தன. விடிந்தால் என்ன செய்வது. இனிமேல் நிலத்தைச் சும்மா போடவும் முடியாது. உழுகாமல் விதைக்கலாமென்றால் கைவசம் விதைப்பண்டமில்லை. யாரிடம் போவது. உன்னிடம் இல்லையென்றால் ஊரி லேயே இருக்காதென்று சொல்வார்கள். விதைக்காக எவ்வளவோ பிரயாசைப் பட்டுக் கொஞ்சம் பத்திரப்படுத்தியும் முடியவில்லை. கடைசி நேரத்தில் வயிற்றுப் பாட்டுக்குப் பட்டுக்கொண்டது. அதிலும் கைவைக்க வேண்டிய நிலைமை.

விடிந்தும் விடியாததுமாக அவன் கருப்பியைக் கூப்பிட்டான்.

''வெதைக்கிறதுக்கு என்னமாச்சும் இருக்குதாம்பிளி.''

அவள் நைந்துபோயிருந்தாள்.

''நான் வெதைக்கு எங்க போகட்டும். அத நெனச்சா ஈரக்கொலையப் புடுங்குது. ராத்திரி கண்ணுல பொட்டுனு ஒறக்கம் உண்டுமா. இந்தக் கையால எத்தன பேருக்கு அளந்து குடுத்துருப்பென். இதும் சோதனையா.''

அவள் மச்சுவீட்டுக்குள் இடுப்பு வலிக்க அடுக்குப் பானைகளை இறக்கி ஏற்றினாள். அடிமெடாவில் துழாவினாள். சில முடிச்சுகள் தட்டுப்பட்டன. ஒரே துணியில் சிறுசிறு பொட்டணங்கள். ஆவலாக எடுத்துவந்து அவுத்தாள். ஒரு முடிச்சில் தினை. வெள்ளைத் தினையும் செந்தினையும் கலந்திருந்தன. அடுத்து பாசிப் பயறு. இன்னொண்ணு காணப் பயறு. வறுத்துத் தின்னதுபோக கொஞ்சம் முடிந்து வைத்திருந்தாள். எப்படியும் மழை வராமலா போகும் என்று சின்ன நம்பிக்கை. பாசிப் பயறுக்குள்ளிருந்து தப்பியோடும் வண்டுகளை வைதபடி ஆண்டியிடம் போனாள்.

''இருக்கிறது இம்புட்டுத்தான். இதப் போடுறதுக்கு மாடு வேணுமே.''

அவன் பெருமூச்சு விட்டான்.

''மனுசந்தான் மாடு.''

பொய்யாளி புஞ்சைக்கு வர மறுத்துவிட்டான். கருப்பிகூட ஒருவார்த்தை சொல்லவில்லை. ஆண்டி புரிந்துகொண்டான்.

''சரி அவன் பிரியம். ஆகமான மாட்டப் பறிகுடுத்துட்டு நொந்துபோயிருக் கிறவங்கிட்ட என்னத்தச் சொல்றது. ராக்கன வச்சு வேலைய முடிக்க வேண் டியதுதான்.''

கட்டியமுங்கி அடிமண்வரை ஊறிப்போயிருந்த நிலங்களில் ஆள் இறங்க மூணு நாளாயிற்று. தாவுக்காலில் சேறு வெயில்வாங்கிப் பதங்கொடுக்க இன்னும் பிந்தியது. சம்சாரிகள் ஓடியலைந்து நாத்துச் சோளமும் காடைக் கண்ணியும் சம் பாரித்தார்கள். கரிசல் மேடுகளைக் கொத்தியிழுத்து நாத்துச் சோளத்தை எறிந்து வைத்தார்கள். கூளத்துக்காகுமே.

பங்கரைக் கோலத்தில் கிடந்த நிலத்தில் இறங்கும்போது ஆண்டிக்குக் கால் நடுங்கியது. ராக்கன் கோட்டிக்காரனைப் போல் மண்ணைக் கொத்த ஆரம்பித் தான். ஆண்டி விதைப்பெட்டிக்குள் துழாவி அள்ளும்போது நிதானம் தவறியது. என்ன விதைப்பு மனசுக்குப் பிடிக்காத விதைப்பு. இந்நேரம் கரிசக் காடு இப்படியா வெறிச்சோடிக் கிடக்கும். கலியாண வீடு தோற்றுப்போகும்.

விதையை எறிந்து முடித்த ஆண்டி புஞ்சை மூலைக்கு வந்தான். ராக்கன் வரப்போரத்தில் மம்பட்டியால் மண்ணைத் தொய்வாக அருவிக்கொண்டிருந் தான். சொக்கம்மா முந்தியே பயறைப் போட்டுவிட்டுக் கருப்பியுடன் புஞ்சைக்கு வெளியே உட்கார்ந்திருந்தாள். கருப்பி மண்ணெடுத்துப் பயறுகளாக உருட்டிக் கொண்டிருந்தாள். புஞ்சைக்குள் இறங்கவில்லை. ஆண்டி விதைப்பெட்டியைக் குப்புறத் தட்டிவிட்டு வெளியேறினான். அவன் பார்வை நிலையற்றுக் காடுகளில் அலைமோதியது. நிலமெல்லாம் மலடாகக் கிடக்கிறதே. ராக்கனைக் கூப்பிட்டான்.

''வா வா வரப்பு வெட்டி எந்த வெள்ளாமைய வெளைய வைக்கப்போற.''

ராக்கன் பொழிக்கல்லில் மம்பட்டியை வேண்டாவெறுப்பாகத் தட்டி விட்டு வந்தான். எல்லாரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமல் வீட்டுக்கு நடந்தார்கள்.

கம்மா பெருகிக் கிணறுகளில் நீர்ப்பிடிப்பு பதினியாக இறங்கியிருந்தது. கிணற்றடி நிலங்களில் பெரியபெரிய பாத்தியாகக் கட்டினார்கள். பட்டுப்போன பனைகளை வெட்டித் தெலா நட்டினார்கள். துண்டாக்கிப் பிளந்து பனஞ் சோற்றை எடுத்துவிட்டு ஓடையை மறித்துப் பத்தல்போட்டுத் தண்ணீர்கொண்டு போனார்கள். காடைக் கண்ணி விதைத்து முளைகட்டினார்கள். இது சொற்ப நாள் வெள்ளாமை.

மண்ணிலிருந்து மனுசன்வரை சகலத்துக்கும் முகக்களை வந்திருந்தது. எங்கும் பசப்பு. மரக் கொப்புகளில் கொழுந்துக் குஞ்சம். மந்தையிலும் காட்டிலும் செடிகளுக்கிடையில் பூச்சிகளின் நடமாட்டம். எல்லாம் அழிச்சுக்கிழிச்சு ஆக்கிய நிலைமை.

எறும்புக் குழிகளைச் சுற்றிக் குருதவாலியரிசி மாதிரி முட்டைகள் தூவிக் கிடந்தன. அவற்றைச் சுமந்துகொண்டு சாரைபோட்ட சித்தெறும்புகளும் சூகை யெறும்புகளும் ஒண்ணுக்கொண்ணு அலுத்துக்கொண்டன.

''மழ கொளுத்திருச்சா சும்மாவா.''

''குடியக் கெளப்பீருச்சே.''

''மனுசருக்கு அப்படி நமக்கு இப்படி.''

''தண்ணி கெட்டாற எடம் பாத்துக் குழிபறிச்சுக் குடும்பம் நடத்தணும். பெரிய தொறட்டு.''

''மனுசரு நடமாட்டமிருந்தா காலடிப்பட்டு நசுங்க வேண்டியதுதான்.''

''சாப்பாட்டுக்குச் சேத்துவச்ச தானியம் தவசமெல்லாம் போச்சு. இனிமே வெள்ளாம வெளஞ்சு ஒண்ணொண்ணா நம்ம கொண்டுவந்து சேத்து...ம்... என்னாளும் அலஞ்ச பெழப்புத்தான். அலுத்தொம் சலிச்சம்னு ஒரு எடத்துல உக்காந்த பாடில்ல.''

''வெள்ளாம வெளையிறவரைக்கும் வகுத்துப்பாட்டுக்கு என்ன செய்யப் போறமோ.''

''அதச் சொல்லு.''

''மொதல்ல முட்டைகளக் கொண்டுபோயிச் சேப்பொம். அந்த ஈசன் நமக்கு அண்ணண்ணைக்குப் படியளக்காமயா போயிருவான்.''

''எங்கயாச்சும் எர கெடச்சாச் சொல்லு.''

''நமக்குள்ள சொல்லாம நானா அனுபவிச்சிருக்கனா.''

''அதில்ல. ஒரு பேச்சுக்குச் சொன்னெென்.''

''கெடச்சா எல்லாரும் சேந்து சாப்புடுவொம். கெடைக்கலன்னாப் பட்னி கெடப்பொம்.''

புல்பூண்டு தளிர்த்ததும் சம்சாரிகளால் சும்மா இருக்க முடியவில்லை. கலப் பையும் கமலையும் பிடித்த கைகள் துருதுருத்தன. அயலூர் முதலாளிமார்களிடம் ஓடினார்கள். ஒண்ணுக்கு அஞ்சு தடவை இழுத்தடித்தாலும் சளைக்காமல் காத்துக் கிடந்தார்கள். ஒரு வழியாக நிலத்தை அடமானம் வைத்துப் பணம் வாங்கி மாடு பிடித்தார்கள். கொஞ்ச நாளில் ஆடுகள் தலைகாட்டின. குப்பையில் கோழி மேய நாளாயிற்று.

விவசாய வேலைகள் தொடங்கின. மாட்டு வண்டி உருண்டு உதறித் துருவை உதிர்த்தது. கிணறுகளில் கமலைச் சத்தம் கேட்டது. கூலிக்காரர்களுக்கு அயலூரில் தொடர்ந்து வேலை கிடைத்தது.

''புள்ளீகளுக்கு வகுத்துல கட்டிக்கஞ்சி எறங்கவுந்தான் அதுக மொகத்தப் பாத்த மாதிரி இருக்கு.''

''மொதலாளிமாருக்கு ஈவெரக்கமே கெடையாது. பஞ்ச நேரத்துல வாங்கின தானியத்தக் குடுக்காம ஓடியா போயிருவாக.''

''ஏன் அத இப்பயே கேக்காகளா.''

''கேக்காகளாவா. வேலசெஞ்ச கொத்துல பாதி புடிச்சிட்டுத்தான் மீதியத் தாறாக.''

''கொஞ்சங்கொஞ்சமாக் குடுத்துக் கழிச்சுக்கிட்டா நமக்குத்தான் நல்லது. சொம கொறையுமே.''

''அவுக கண்ணுக்கு முன்னால மனுசன் வகுறாரக் கஞ்சி குடிக்கப்புடாது.''

''ஒன்னய வெறுங்கையோட அனுப்பலயே. அது பெரிய காரியம்.''

''அப்படி அனுப்புனா நாளப்பின்ன அவுகளுக்கு ஆளு வேணுமே.''

சன்னஞ்சன்னமாக அடகுப் பண்டங்களைத் திருப்பினார்கள். சில பண்டங்கள் கடனுக்கு முங்கிவிட்டதாகச் சொல்லவும் வருத்தப்பட்டார்கள்.

''ஆகமான வெங்கல வெளக்க ஒரேயடியா அமுக்கீட்டாகளே.''

''அவுகளுக்குப் புடிச்ச சாமான் திரும்பி வருமா.''

''அது சரி. வெளக்கு எங்க எரிஞ்சா என்ன.''

வேலைக்கிடையில் பொரிந்த முணுமுணுப்பு அடங்கி பிறகு மறந்து விட்டார்கள்.

கலிங்கலை விட்டுக் கால்கிளம்பிப் போனதிலிருந்து மருதன் குடும்பம் ரெம்ப லொம்பலப்பட்டது. அவன் மலங்காட்டுப் பக்கம் இலஞ்சி வலசை என்று குடும்பத்தை இழுத்துக்கொண்டு அலைந்தான். பார்க்காத வேலையில்லை. காட்டு வேலையில் பிள்ளைகள் கசங்குவதைப் பார்த்து அவன் ஒரு யோசனை சொன்னான்.

''புள்ளீகள ரெண்டு வீட்ல வேலைக்கு நிறுத்தீருவமா..''

மாடத்தி அரைமனசாக் கேட்டாள்.

''என்ன வேல செய்ய முடியும்.''

''சாணிசகதி அள்ளலாம். மாடுகண்ணு மேய்க்கலாம். வகுத்துமொறையும் கழியும்.''

''வேணாம். பெறகு அதுக படுற பாதரவப் பாத்து நமக்கு மனசுகேக்காது. குடிச்சாலும் குடிக்கலன்னாலும் அதுக நம்மகூடயே இருக்கட்டும்.''

மாடத்தி கைகாய்க்க வேலை செய்தாள். கிடைத்த தவசத்தைக் காய்ச்சிக் குடித்தார்கள். சோற்றுக்கு வழியில்லாத நாளில் அவள் நாலு வீட்டுக்குப் போனாள். ஒரு மாட்டுத் தாவாரத்தில் தங்கியிருந்தார்கள்.

பயல்கள் ரெண்டு பேரும் முகத்தெளுச்சியாக இருந்தார்கள். அந்தத் தெம்பில் கனத்த வேலைகளைக்கூடச் செய்ய முடிந்தது. மகளைப் பார்க்கும் போதெல்லாம் மருதனுக்கு ஆத்தா நினைவு வரும். அவள் இருந்திருந்தால் இவ்வளவு தூரத்துக்கு விட்டிருக்க மாட்டாள். செத்தாலும் பிழைத்தாலும் கலிங்கலிலேயே கிடந்து உதையச் சொல்லியிருப்பாள்.

கீகாட்டிலிருந்து அனேகச் சனங்கள் பஞ்சம்பிழைக்க வந்திருந்தார்கள். இன்ன சாதி என்றில்லை. யாரும் காலூன்றி நிற்கவில்லை. அடிக்கடி சொந்த மண்ணைப் பற்றியே பேசினார்கள். மழை தண்ணீர்பற்றி யாரிடமெல்லாமோ விசாரித்தார்கள். ஒருவர் மருதனிடம் தகவல் சொன்னார்.

''கலிங்கலூருணிக்கு நல்ல மழையாம். கம்மா பெருகி வெள்ளாம மும்மரமா நடக்குதாம்.''

''ஓங்களுக்கு ஆரு சொன்னது சாமி. மழபேஞ்சிருக்கிறது நெசந்தானா.''

''நேத்து எங்கூருலருந்து ஆளு வந்துச்சு. பொதுவா எல்லா எடத்துலயும் பேஞ்சிருக்காம். நான் இங்க சம்பளக் கணக்க முடிச்சிட்டு ரெண்டு நாளையில கெளம்பீருவென்.''

மருதன் தவித்தான். ஊர் நினைவு கம்மாயாகப் பெருகியது. பாட்டுப் பாடி வெளுக்கணும்போல் குறுகுறுப்பு. மாடத்தியிடம் போனான்.

''நம்மூருல கம்மா நெறஞ்சு வெள்ளாம செய்றாகளாம்.''

அவளுக்குள் ஆவல் தளிர்த்தது.

''அப்படின்னா நம்ம ஏன் இங்க கெடக்கணும்.''

உடனே புறப்பட்டார்கள். இடையில் நடை துவளும்போது எதிர்ப்பட்ட ஊருக்குள் சோறெடுத்து வயிறு நிரப்பினார்கள். விரைவிலேயே கலிங்கலூருணிக்கு வந்து சேர்ந்துவிட்டார்கள்.

மருதன் முதல் காரியமாக ஆண்டியிடம் போனான். அவனைக் கூர்ந்து பார்த்த ஆண்டிக்குச் சந்தோசமும் வருத்தமும்.

''எங்கள யாவுகமிருக்கா.''

மருதன் தலைதூக்கவில்லை.

''அப்பாவுகளா இப்படிக் கேக்கிறது.''

''நாந்தான் கலிங்கலாண்டி.''

''ஒரு வெருச்சியில கெளம்பிப் போயிட்டென். அப்பாவுககிட்ட ஒரு வார்த்த சொல்லாமப் போனது தப்புத்தான்.''

''நான் ஆருப்பா எங்கிட்டச் சொல்றதுக்கு.''

''நீங்க என்ன சொன்னாலும் கட்டுப்படுறென்.''

''போறதப் பத்தி ஒண்ணுமில்ல. போனவன் இங்க இருக்கன்னு தகவலு குடுத்திருக்கலாமில்ல. புள்ளீகள வச்சுக்கிட்டு என்ன செய்றானோ ஏது செய்றானோன்னு மனசு கெடந்து ஒளஞ்சது ஒனக்கெங்க தெரியும். பஞ்சத்துல நானும் போயிச்சேந்திருந்தா எம் மூஞ்சியில முழிச்சிருக்க மாட்ட. சின்னஞ் சிறிசுகளப் பறிகுடுத்துட்டு கல்லுக்குத்தி மாதிரி இருக்கென். ஒங் கையால தேருகெட்டி சுடுகாட்டுக்குப் போகணும்னு இருக்கயில சாவெங்க வரும்...''

ஆண்டிக்குப் பேச முடியவில்லை. மருதன் குழறினான்.

''அப்படிச் சொல்லாதங்கப்பா.''

''புள்ளீக நல்லாருக்குதா.''

''அரவகுறும் கொறவகுறுமா உருண்டு பெரண்டு எந்திரிச்சிட்டாக.''

''வீட்டுக்குப் போயி ஆகவேண்டியதப் பாரு. நான் பெறகு வாறென். மறந்துறாம மாடத்திய அனுப்பு.''

மருதன் போய்விட்டான். ஆண்டி கருப்பியைக் கூப்பிட்டுச் சொன்னான்.

''ஏம்பிளி மருதன்பெய திரும்பி வந்துட்டான். மாடத்தி வருவா கஞ்சியும் தவசமும் குடுத்தனுப்பு.''

''அஞ்ஞாடி மாடத்திக்கழுத வந்துட்டாளா. வேத்தாளுச் சத்தம் கேட்டுச்சே அது மருதந்தானா. புள்ளீகளுக்கு ஒண்ணுமில்லையே.''

''நல்லாருக்குதுகளாம்.''

''இருக்கட்டும்இருக்கட்டும். சின்னப் புள்ளையப் பாக்கணும்போலருக்கு. ஆளோட கூட்டா வீடு கூடிக்கிறட்டும். பெறகு சாவாசமாப் போகணும்.''

வண்ணாக்குடி அலங்கோலமாகக் கிடந்தது. வெள்ளாவியைச் சுற்றி வகை வகையான செடிகள். தாழி உடைந்துவிட்டது. சுவரோரம் வரிசையாகப் பேய்க் காளான் முளைத்திருந்தது. வீட்டுக்குள் கவுத்தியிருந்த பானைச் சட்டிகள் நொறுங்கிக் கிடந்தன. மூலைக்கு மூலை எலிச் செலவுகள்.

கூரையில் ரெண்டுமூணு கம்மம் பயிர் தோகையாட்டியது. மருதன் காடைக் கண்ணி வைக்கோல் வாங்கிவந்து முகட்டை மறைத்துச் சடைபின்னினான். பயல்கள் வெள்ளாவியைக் கைபார்த்து மண்பூசி வேறு தாழி பதித்தார்கள். ஒட மரம் தேடி கவைக்கம்பு வெட்டி வந்தார்கள். மாடத்தியும் மகளும் வீட்டுக்குள் சாணி மெழுகினார்கள்.

அந்தப் பக்கம் வந்த ஆண்டி கேட்டான்.

''வேல மும்மரமா நடக்குது போலருக்கு. எல்லாம் சரியே கைவசம் ஒரு கழுதகூட இல்லாம எப்படித் தொழிலு பாக்கப்போறயாம்.''

மருதன் கிட்ட வந்தான்.

''அப்பாவுகளுக்குத் தெரியாறதா. இந்தத் தொள்ளாளி குடும்பத்த ஊரு தான் தாங்கணும். கொட்டாரம் பழசானாலும் குருவிக்குப் பஞ்சமா.''

''பஞ்சத்தாலதானடா குருவி பறந்துபோயிருச்சு.''

''ஒரு குருவியா ரெண்டா...''

ரெண்டு கழுதை வாங்க ஊர்ப் பொதுவிலிருந்து பணம் கிடைத்தது. மருதன் சுதாரிப்பாக உவர்மண்ணுக்குக் கிளம்பினான்.

ஊருக்குள் ஆணும் பெண்ணும் விசாரித்து முடியவில்லை.

''மாடத்தி வந்துட்டயா. இனிமே வெளுத்த துணி உடுத்தலாம்.''

''சீலப்பேனு ஒழியும்.''

மாடத்தி கனமான கஞ்சிப்பானையைச் சுமந்துகொண்டு வீடுவீடாகப் பேசித்தீர்த்தாள். பெண்கள் மறக்காமல் கேட்டார்கள்.

''எப்ப அழுக்கெடுக்கப்போற.''

''நாளையிலருந்து அதான் வேல தாயி.''

ரெம்ப நாளாக ஆறிக் கிடந்த வெள்ளாவி புது உவர்மண் மணத்தை ஊருக்குள் அனுப்பியது. பொதியேற்றி வெளுப்புத்துறைக்குப் போனார்கள். கழுதைகளின் அழுத்தமான நடையைப் பூசரமரக் கிணற்றிலிருந்து கவனித்த ஆண்டி மருதனின் பாட்டைக் கேட்கப்போகிற நினைப்பில் லாந்தினான்.

புங்கமரக் கொழுந்துகளிலிருந்து மாரியும் அனந்தியும் சிரித்தார்கள்.

''வந்துட்டீகளா மக்கா.''

கம்மாயில் பட்சிகள் பழையபடி கூடிக் கும்மாளமடித்தன. குளித்துச் சிறகுலர்த்தின. விசாரத்தில் விசாரித்துக்கொண்டன.

''ஆத்தாடி பாத்து எம்புட்டு நாளாச்சு. இந்தன நாளா எங்கருந்த.''

''அத ஏன் கேக்க. தண்ணி தேடி அலையாற எடமில்ல. செறகு வலி இனியும் கொறையல. ஒரு எடத்துல தங்குனோம் குடும்பம் நடத்துனம்னு கெடையாது.''

''இண்ணைக்குத்தான் ஆசதீரக் குளிச்சிருக்கென்.''

''எர கெடைக்காமக் குஞ்சியெல்லாம் செத்துப்போச்சு.''

''பெரிசுக்கே கெடைக்கல. சிறிசுகள எங்க காப்பாத்துறது. நீயாச்சும் முட்டை யிட்டுக் குஞ்சி பொரிச்சிருக்க. எனக்கு முட்டையிடக்கூடத் தெம்பில்ல. எத்தன நாளைக்குப் பட்னி கெடந்துருக்கென் தெரியுமா.''

''அந்தக் கொடுமைய என்ன சொல்றது.''

கம்மா நீருக்கு மேல் கருவ மரங்கள் தலை நீட்டி வெயில்காய்ந்துகொண் டிருந்தன. கரையின் இருபுறமும் கொத்துப்பூச் சிரிப்பில் காவலிருக்கும் குளுமை யான செடிகள். பசுந்தரிசில் நிற்கும் கழுதைகளுக்கு ஒரு கவலை. எந்த இடத்தி லிருந்து மேய்ச்சலை ஆரம்பிப்பது. புங்க மரத்தை அண்ணாந்து யோசனை கேட்டன.

''காலமழ பொழிஞ்சது
காடுகர நனஞ்சது
கோணிகொளம் நெறஞ்சது
கோடவெயிலு மறஞ்சது
நஞ்சபிஞ்ச வெளையுமாம்
நம்மபஞ்சம் தொலையுமாம்
நெறையவேல இருக்குமாம்
நெதமுங்கூலி கெடைக்குமாம்
சோ... சோ... சோ...

காலச்சுத்தி மீனுதான்
கதகதயாப் பேசுதாம்
கொக்குமீனப் புடிக்குதாம்
விக்கிவிக்கி விழுங்குதாம்
கழுதஒண்ணு கனைக்குதாம்
கணக்குப்பண்ண நெனைக்குதாம்
பொழுதுகீழ எறங்குதாம்
பொண்ணுமனசு கெறங்குதாம்
ஆ சோ... ஆ சோ... ஆ சோ...''

வெளுப்புத்துறையில் மருதனின் பாட்டு ஊற்றெடுக்கத் தொடங்கியது.

# படலம் 5

## 1. கோயிலும் குளமும்

பேரனை நினைக்கையில் பெரிய நாடாருக்குப் புத்தி சிதறியது. இக்கதியா ஆகணும். நேற்றுப் போலிருக்கிறது. மாலையம்மாளின் இடுப்பு நிறைய கலிங் கலுக்குப் போனான். தப்பிவிட்ட ஆட்டுக்குட்டியாகத் தனியே வந்துவிட்டான்.

மகளே உன்னை இதுக்குத்தானா அனுப்பிவைத்தேன். குடும்பம் கால்கூடிப் பெருகுமென்று பெருமையாயிருந்தேன். என் ஆசையில் மண்ணள்ளிப் போட்டு விட்டாயே. கலிங்கலுக்குப் போகிறேன் என்று சொல்லிப் போனவள் சுடு காட்டுக்குப் போய்விட்டாயே. உன் முகத்தைப் பார்க்கக் கொடுத்துவைக்க வில்லை. தாயில்லாப் பிள்ளையாக உன்னை வளர்த்து ஆளாக்கியது இதுக்குத் தானா. அந்தக் கடமைக்கு ஒரு பயலையாவது விட்டுவிட்டுப் போனாயே. நான் கண்ணை மூடும்வரை அவனை ஒரு குறையில்லாமல் வளர்ப்பேன். பிறகு உன் அண்ணன் பார்த்துக்கொள்வான்.

தங்கையா விதறுபட்டிருந்தான். யாரிடமும் ஒட்டவில்லை. தம்பி தங்கச்சி யைத் தேடினான். பாட்டையாவைக் கூப்பிட்டான். நாடார் கிட்டப் போனார். அவன் கண்ணைக் கசக்கினான். சுப்பம்மா அவனுடனேயே இருந்தாள். தெய் வானையுடன் விளையாட வைத்தாள். அவனும் தெய்வானையும் சேர்ந்து விளையாட நாள் பிடித்தது.

ஆண்டி முன்னைப் போல் கழுகுமலைக்கு வருத்தில்லை. எப்போதாவது சுதாரிப்பில்லாமல் வருவான். பெரிய நாடாரைக் கூச்சத்துடன் பார்ப்பான். அவரது நொந்த முகம் பேசுவது போலிருக்கும்.

''ஒரு உசிரவாச்சும் திருப்பிக் குடுத்தயே.''

அவன் மனசு அலறும்.

''சின்னஞ் சிறிசுகள விழுங்கீட்டு நான் கட்டையா இருக்கென்.''

''என்னய வுட்டுத்தள்ளு. பயலவாச்சும் பாக்க வரலாமில்ல.''

அவன் பார்வை தாழும்.

''பாக்க ஆசதான்...''

அவர்களுக்கிடையில் பேச்சுவார்த்தை தூர்ந்துபோயிற்று. பழைய கிண்டலும் கேலியும் மனசுக்குள் வண்டலாகப் படிந்துவிட்டது. பிழைப்பே நொறுங்கிக் கிடக்கும்போது கிண்டலென்ன வேண்டிக்கிடக்கிறது.

அவன் தங்கையாவுடன் பேசுவதில்லை. பேசினால் பழைய நினைவு வரும். கண்ணீரை அடக்கணும். கூட வருகிறேன் என்று காலைக் கட்டினால் சரிப்படுத்தி வலுக்கட்டாயமாகப் பிரிக்கணும். நடந்து மறையும்வரை ''பாட்டையா நானும் வாறென்'' அழுகை கேட்கும். நாடாருக்கு வீண் சங்கடம். எப்படி அடிக்கடி வருவது.

கழுகுமலையையும் பஞ்சம் உலுக்கியிருந்தது. கலிங்கலைப் போல் உயிர்ச் சேதம் அவ்வளவில்லை. சனங்கள் நைந்து நசுங்கிக் கரையேறிவிட்டார்கள். விரைவி

லேயே சந்தையில் கூட்டம் பெருகியது. வியாபாரம் சூட்டிக்கையாக நடந்தது. அப்படியும் கடைகளில் எள்ளுப்புண்ணாக்கு பயறுகளை வெளியே வைப்பதில்லை.

ஒரு நாள் எவனோ ஒருவன் பசிக்காற்றாமல் ரெண்டு பயறை எடுத்து வாயில் போட்டுவிட தெருவில் அடிதடியே ஆரம்பித்துவிட்டது. இந்தப் பக்கம் நாலு பேர் அந்தப் பக்கம் நாலு பேர் நின்று நியாயம் பேசித் தகராறு அடங்க ரெம்ப நேரமானது. அதிலிருந்து கடைக்காரர்கள் எச்சரிக்கையாக இருந்தார்கள்.

பெரிய நாடார் குடும்பம் துவண்டு நிமிர்ந்துவிட்டது. அம்மமுத்து முழி பிதுங்க அலைக்கழிந்து குடும்பத்தைக் காப்பாற்றினான். இந்த லொம்பலப்பட்ட பிழைப்பிலும் சுப்பம்மா பெண் குழந்தை பெற்றாள். அதுக்குத் தொண்டையை நமர்த்தத் தாய்ப்பாலில்லை. தண்ணீரில் துணியை நனைத்து வாயில் பிழிந் தார்கள். அதைக் குடித்துக்கொண்டு முட்டுக்குச்சிலுக்குள் கொணங்கிக் கிடந்தது. யாருக்கும் நம்பிக்கையில்லை. தூக்கிப்போய் அடக்கம்செய்யக் காத்திருந்தான் அம்மமுத்து. அவனையும் ஏமாற்றிவிட்டு முத்துப்போல் முழித்துப் பார்த்துச் சிரித் தது. அவன் காய்ந்த சிரிப்பில் பஞ்சவர்ணம் என்று பேர் சொல்லிக் கூப்பிட்டான்.

பிறகு சுப்பம்மாளுக்கு வயிறு நிறைந்து பாலூறியபோது சிணுங்கும் குழந்தை யின் கொமட்டில் செல்லமாக இடித்துக்கொண்டு ஏந்தி எடுத்தாள்.

''ஓம் மூஞ்சிக்குப் பாலு கேக்குதாக்கும்.''

அவளுக்கு ஆண் குழந்தை இல்லாத குறையைத் தீர்க்கத் தங்கையா வந்து விட்டான். அந்தப் பொறுப்பை அவள் சந்தோசமாக ஏற்றுக்கொண்டாள்.

தரை குளிர்ந்து முகம்தெளிந்த பனைகள் பருவத்துக்கு வந்தன. பெண் பனை களில் ஆவரமொட்டுப்போல் குரும்பை முண்டியிருந்தது. ஆண் பனைகள் அலகு தள்ளி லட்சணமாக இருந்தன.

அம்மமுத்து தொழிலுக்குப் போனான். பனையிலிருந்து இறங்கும்போது சண்முகத்தின் நினைவு. இடுப்பில் தொங்கிய பதினிக் குடுவைக்குள் மாலையம்மா கனத்தாள். அவள் பின்னிக் கொடுத்த அந்தக் குடுவையை மூலையில் வைத்துவிட்டு சுப்பம்மாளிடம் வேறு குடுவை பின்னச் சொன்னான். பெரிய நாடார் மூலையைப் பார்த்தார்.

''அன்னாரிக்குதே அதுக்கென்ன.''

''அதுல பயினி கசியிது.''

சுப்பம்மா நெருக்கமான குடுவை பின்னிக் கொடுத்தாள்.

தங்கையாவும் தெய்வானயும் வீட்டைச் சுற்றி விளையாடுவார்கள். அது அலுத்துவிட்டால் பனையடிக்குப் போவார்கள். அம்மமுத்து வேலைகளை முடித்து வரும்வரை மஞ்சணத்தி நிழலில் விளையாட்டு நடக்கும். ரெண்டு பேரும் குடும்பமாகி வீட்டு விவகாரங்களைப் பற்றிக் காசலையாகப் பேசு வார்கள். சமையல் ஞாபகம் வந்தவனாக தங்கையா அவசரமாகக் கிளம்புவான்.

''துட்டுக் குடு தேவான. சந்தைக்குப் போயி சாமான் வாங்கீட்டு வாறென்.''

தெய்வானை முந்தி முடிச்சை அவுத்துத் துட்டை எண்ணிக் கொடுப்பாள். அவளிடம் புளியமுத்துச் சிறுவாடு ரெம்பவே இருக்கும்.

''மழ வாறதுக்குள்ள திரும்பீறணும்.''

அவன் மேகத்தைப் பார்த்துக்கொண்டு ஓடைக்கு அந்தப் புறம் சந்தைக்குப் போய் காய்ந்த பனங் கூந்துப் பானையும் சமையல் சாமான்களும் வாங்கி

வருவான். தெய்வானை செடியால் வீட்டைத் தூர்த்துத் துப்புரவாக்கிக் காத் திருப்பாள். அவன் வந்ததும் உலையேறும்.

கூந்துப் பானையில் மணலரிசியும் இன்னொரு குழியில் மண்பருப்பும் வேகும். மூணாவதில் ஆவரம்பூப் பொரியல். அவன் சமையல் மணத்தில் சொக்கிப்போய்ப் படுத்திருப்பான். தெய்வானை ஓலை அகப்பையால் சோற்றைக் கிண்டிக்கொண்டே அவனிடம் பேச்சுக்கொடுப்பாள். பருப்பாணத்தைக் கடைந்து ருசிபார்த்து நாக்கைச் சொட்டுவாள். கொஞ்சம் உப்புப் போட்டுக் கலக்குவாள். அவள் காதுகளில் நித்தம் ஒரு பூப்பாம்படம் குலுங்கும். அதை வேடிக்கைபார்ப்பதில் அவனுக்குப் பசி தெரியாது.

சமையல் முடியும். அவன் நிறைசல் மறைவில் குளித்துவிட்டு வந்து சாப் பாட்டுக்கு உட்காருவான். அவள் துத்தி இலை விரித்து சோறு பரிமாறுவாள். அவன் கேட்பான்.

''நீ சாப்பிடலயா.''

''நீ சாப்பிட்டப் பொறவுதான்.''

அம்மமுத்து அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து வருவான். நடக்கும் சங்கதி களைக் கவனித்தபடி கிட்டத்தில் உட்கார்ந்து தெய்வானையைப் பார்ப்பான்.

''எனக்குச் சோறு கெடைக்குமா.''

தெய்வானை வெட்கத்தில் தங்கையாவுக்குப் பின்னால் ஒளிந்துகொள்வாள். அம்மமுத்து நுங்கு சீவிக் கொடுப்பான். தங்கையா ரெண்டு குழி உறிஞ்சுவான். மிச்சம் தெய்வானை கைக்கு மாறும். அதையே இருவரும் மாறிமாறி உறிஞ்சித் தீர்ப்பார்கள். அம்மமுத்து அடுத்த காயைச் சீவுவான்.

வீட்டில் பனங்கிழங்கு அவித்தால் சுப்பம்மா ரெண்டு பேருக்கும் சேர்த்துத் தெய்வானையின் மடியில் கட்டிவிடுவாள். அவர்கள் ஒதுக்கமாகக் கால் நீட்டி உட்கார்ந்து தின்பார்கள். தெய்வானை கிழங்கில் நார் உரித்துக் கொடுப்பாள். தங்கையா வாங்கிக் கடிப்பான். அவளுக்கும் கொடுப்பான். அசைக்கொருக்க 'தேவானை'யையும் சேர்த்து மெல்லுவான். பல்லிடுக்கில் நார் சிக்கிக்கொண் டால் வாயைத் திறந்து காட்டுவான்.

''நீதான நாரு உரிச்ச.''

பிறகென்ன செய்வது. அவள் பிரயாசைப்பட்டுப் பிடுங்குவாள்.

ஒரு சமயம் அவன் வேறு விளையாட்டு விளையாட நினைத்து தெய் வானைக்குத் தெரியாமல் கிளம்பிவிட்டான். என்ன விளையாடலாம் என்று திட்டம் போடுவதற்குள் ஊருக்குக் கிழக்கே பெரும்பாதைக்கு வந்துவிட்டான்.

பாதையேறி நின்றால் எண்ணெய் தடவிய மொட்டைத் தலையாகக் கீழப் பரும்பு மினுங்கியது. இந்தப் பரும்புக்கென்று ஒரு உருவம் கிடையாதோ. ஒவ் வொரு நேரமும் புதுசுபுதுசாகத் தெரிகிறது. அதன் உச்சியில் பொழுது காயும் போது பெரிய மாவிளக்கு எரிவது போலிருக்கும். இருட்டு வேளையில் பார்த்தால் கிழட்டு எருமை கால் விரித்துப் படுத்துக்கிடந்த மாதிரி.

பரும்படிவாரத்தில் கீழக் குளம் நீளவசத்துக்கு நெளிந்துகிடந்தது. நீர்த் தெளிவில் பார்வையை மிதக்க விட்டான். போகப்போகத் தூரத்தில் குச்சு நீட்டிய சாயலுக்குப் பாம்புத் தலை. கை குறுகுறுத்தது. கல்லெடுத்துக் குறிவைத்தான்.

ஒவ்வொரு எறிக்கும் தலை தள்ளித்தள்ளிப் போனது. இன்னும் வேகமாக எறிந் தான். கை வலித்தது. கோவத்தில் கல் பொறுக்கிக்கொண்டு நீருக்குள் இறங்கினான். இடுப்பளவில் நின்றுகொண்டு ஒரு எறி விட்டான். பாம்பு உள்ளே நழுவி முங்கியது. குதியாளம்போட்டு முங்கிமுங்கிக் குளித்தான்.

குளிக்கும்போதே நினைப்பு. தண்ணீருக்குள்ளேயே பாம்பு தேடி வருமோ. அதெப்படி முடியும். கண் பார்வை தெரியணுமே. பார்வை தெரியாமல் தண்ணீரில் திரிய முடியுமா. எறி வாங்கிய கோவத்தில் வந்தாலும் வரும்.

பயம் தொற்றியது. வேகமாகக் கரைக்குத் திரும்பினான். பாம்பு தலை நீட்டி யிருக்கிறதா என்று பார்த்தான். தட்டுப்படவில்லை. ஒருவேளை செத்துப் போயி ருக்குமோ.

கெலிப்பில் வீட்டுக்கு வந்தான். தெய்வானை அவனைத் தேடி அழுது ஓய்ந் திருந்தாள். மதியம் சாப்பிடவில்லை. உம்மென்று உட்கார்ந்திருந்தாள். ஆத்தா சொல்லியும் கேட்கவில்லை. அவனைப் பார்த்ததும் அழுகையை அவுத்து விட்டாள்.

''என்னய வுட்டுட்டு எங்க போன. ஒங்கூடப் பேசமாட்டென்.''

அவன் சரிப்படுத்தினான்.

''தேவான நான் ஊருணிக்குப் போனனா. அங்க பெரிய பாம்பு தலைய நீட்டிக்கிட்ருந்துச்சு.''

தெய்வானையின் கண்ணீரை ஆச்சரியம் உலுக்கியது.

''பெரிய பாம்பா.''

''பனங்கா மாதிரி தல. நான் கைய ஒங்குனென். என்னயப் பாத்து முழிச்சுக் கிட்டு வருது.''

''கடிக்கவா.''

''கடிச்சு தண்ணிக்குள்ள இழுத்துட்டுப் போயிரும்.''

''அய்யோ.''

அவள் கண் இன்னும் விரிந்தது.

''கல்லெடுத்து ஒரு எறி வுட்டென். மண்ட ஓடஞ்சு அப்படியே முங்கீருச்சு.''

''செத்துருக்குமா.''

''நாளைக்கு தண்ணிக்கு மேல மெதக்கும். நம்ம போயிப் பாப்பொம்.''

சுப்பம்மா வந்தாள்.

''பேசி முடிச்சிட்டியளா பாக்கியிரிக்கா. சாப்பிட்டப் பொறவு பேசலாம்.''

அவர்களைக் கூட்டிக்கொண்டு போனாள்.

தங்கையாவைத் தேடிப் போயிருந்த பெரிய நாடார் வந்து சேர்ந்தார். அவனும் தெய்வானையும் மண்டியிட்டுச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். அவர் சுப்பம்மாளிடம் கேட்டார்.

''எங்க போயிரிந்தானாம்.''

''கீழ ஊருணியில பாம்பெறிஞ்சு வெளையாண்டானாம்.''

அவருக்கு நிம்மதி வந்தது. கோயில் பக்கம் போய்விட்டானோ என்று பயந்துகொண்டிருந்தார். நல்ல வேளை. அன்றைக்குப் போல் கதையாகிவிட் டால் என்ன செய்ய முடியும். அவனிடம் குனிந்தார்.

''வெளிய போவப்புடாது. வீட்ல தேவானையோட வெளையாடணும்.'' அவன் விரலைச் சூம்பிக்கொண்டே தலையாட்டினான்.

அன்றைக்கு நடந்தது பெரிய சங்கதி. ரெண்டு மாசமிருக்கும். வெள்ளிக்கிழமை. சாயங்காலம் தங்கையா முற்றத்தில் உட்கார்ந்திருந்தான். கட்டிப்போட்ட மாதிரி இருந்தது. மலைக் கோணலில் ஒளிந்திருக்கும் மரங்களைத் தேடிக் கண்டு பிடித்தும் மனசு நிலைகொள்ளவில்லை. உச்சிக்கும் அடிவாரத்துக்கும் ஏறி இறங்கினான். ஒரு தடவை உயரப் போனவன் இறங்கவில்லை. உச்சியில் நின்று மேகத்தில் தொற்றிச் சவாரி வைத்தான். மேகம் அவனைச் சுமந்துகொண்டு சுற்றி வந்தது.

மனசு மிதக்கமிதக்க முற்றத்தில் இருப்புக்கொள்ளவில்லை. எழுந்து அரண் மனை வீதிக்கு நடந்தான். நடக்கும்போதே மலையை அண்ணாந்து பார்க்கக் கஷ்டமாக இருந்தது. கோயிலின் தெற்கு வாசலுக்கு வந்துவிட்டான்.

வாசலில் சனங்கள் கூட்டங்கூட்டமாக நடமாடிக்கொண்டிருந்தார்கள். ஆணும் பெண்ணும் கோயிலுக்குள் போவதும் வருவதுமாக இருந்தார்கள். பதினிக் கலயத்துக்குள் தேன்குளவிகள் திரியுமே அப்படி. வெளியே வருகிறவர்கள் அத்தனை பேர் நெற்றியிலும் திருநீறு பூசியிருந்தது. வாசல் முகப்பில் ஒருவன் சனங்களைக் கவனித்தபடி நின்றிருந்தான். பெண்களைப் பார்த்துச் சிரித்தான்.

கோயில் தூண்களில் அழகழகான உருவம். பார்வை உள்ளே போகப் போகக் கண்ணிலிருந்து உருவம் மறைந்து மனசுக்குள் விதவிதமாகத் தோன்றியது. கடைசியில் சாமி இருக்கும். அதைப் பார்த்ததில்லை. ஆசையாக இருக்கிறது. சிறுபிள்ளைகள்கூட உள்ளே போகிறார்கள். தூணைச் சுற்றி விளையாடுகிறார்கள். ஓடிப் போய் அத்தையையும் தெய்வானையையும் கூட்டி வந்தால் என்ன. அத்தை இதுவரை ஏன் இந்தக் கோயிலுக்குக் கூட்டி வரவில்லை. நல்ல அத்தை. போனதும் கேட்கணும்.

பாட்டையாவாச்சும் கூட்டி வந்திருக்கலாம். பார்க்கப்பார்க்க ஆசை பொங் கியது. கிட்டத்தில் போனான். பிள்ளைகள் துள்ளிக்கொண்டு வந்தார்கள். வீட்டுக்குப் போய்த் திரும்பினால் நேரமாகிவிடும். அது வேணாம். இன்றைக்கு எப்படியும் உள்ளே போய்விட வேண்டியதுதான். மலையைக் குடைந்து போன மாதிரி இருக்கும். வாசலில் ஒரு தடியன் நிற்கிறானே. அவன் பாட்டுக்கு நிற்கட்டும்.

தயங்கித்தயங்கி வாசலுக்கு நடந்தான். உள்ளே ரெண்டெட்டு வைக்குமுன் தடியன் பார்த்துவிட்டான். ஆந்தைக் கண்.

''ஆருல அது. நில்லு.''

அவனுக்கு உதறலெடுத்தது. நின்றான். தடியன் நெருங்கி வந்தான்.

''ஆரு மகன் நீ.''

அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை.

''என்னல தகப்பன் பேருகூடத் தெரியாம முழிக்க.''

தடியன் இன்னும் கிட்ட வந்தான்.

''வாயில என்னருக்குது. வர்ணமென்ன.''

அவன் பேசவில்லை.

''எந்தத் தெருவு...''

''கீழத் தெருவுல...''

''அங்க ஆரு வீடு.''

''மாமா... பாட்டையா... பயினி...''

''பனையேறியா. ஒனக்கு எம்புட்டுக் கொழுப்பிருந்தா கோயிலுக்குள்ள வருவ. திரும்பிப் பாக்காம ஓடுல நாயி.''

செவியிலும் பிடரியிலும் அடிகொடுத்து விரட்டினான். தங்கையா குண்டி குப்புற விழுந்து எழுந்து ஓடினான். வாயில் ஒட்டியிருந்த மண்ணை ஓடும்போதே துப்பிவிட்டுத் தூரத்துக்கு வந்து திரும்பிப் பார்த்தான். அகலமான கோயில் வாசல் முழுக்க அடைத்த மாதிரி இருந்தது. பலமாக அழ ஆரம்பித்தான்.

அவன் அழுதுகொண்டு வருவதைப் பார்த்த சுப்பம்மா பதறிப்போனாள். ஓடி வந்து முகம் துடைத்து அமர்த்தினாள். பெரிய நாடாருக்குக் கோவம்.

''ஏம்ல அழுவுற.''

அவன் விக்கி முடித்தான்.

''கோயிலுக்குப் போனெ்ன்.''

அவர் பதட்டப்பட்டார்.

''அங்க எதுக்குப் போன.''

''எல்லாரும் போனாவ.''

''அதுக்காவ நீயும் போவணுமா.''

''வாசல்ல நின்ன ஆளு என்னய மட்டும் அடிச்சு வெரட்டீட்டான்.''

சுப்பம்மா துடித்தாள்.

''பாவி மவன் புள்ளைய அடிச்சிரிக்கானே. அவன் வெளங்க மாட்டான்.''

அவனது செவியில் கன்றிப்போயிருந்த மூணு விரல் தடிப்பைத் தடவி விட்டாள். அம்மமுத்துக்குப் பொறுக்கவில்லை.

''சின்னப் பய தெரியாம வந்துட்டா அடிக்கணுமாக்கும். அறிவு வேணாமா.''

தெய்வானை ஒண்ணும் புரியாமல் முகங்களைப் பார்த்தாள். இடிந்துபோய் உட்கார்ந்திருந்த பெரிய நாடார் சொன்னார்.

''அவனுக்கு அறிவு இரிக்குது இல்லாமப் போவுது. இவன் போவலன்னா அவன் அடிப்பானா.''

''அவிய அப்பன் கெட்டிவச்ச கோயிலா.''

''இதவே அவனும் கேப்பான்.''

''அவனுக்குப் பட்டயமா எழுதிக்குடுத்தாவ.''

''அப்படி நெனச்சுத்தான பரம்பரையாக் கும்புடுதான். இண்ணைக்கு நீ புதுசாப் பொழங்கணும்னா வுடுவானா.''

''ஏன் வுட மாட்டான்.''

''அவிய பனையேறிப் பொழைக்கலயே. நீ போட்டிபோட்டாச் சண்ட தான் வரும்.''

''வரட்டும்.''

‘‘நாலு பேரு நின்னு நூறு பேர எதுக்க முடியுமா. இவியளுக்கு நாதியில்லையே. மெம்மேலும் பொல்லாப்புத்தான் வரும்.’’

‘‘அதுக்காவ எத்தன நாளைக்கு மடங்கிப்போறது.’’

‘‘என்ன செய்றது. நெலமையறிஞ்சு நடந்துக்கிட வேண்டியதுதான். நம்மள வுடு. யேவாரம் செஞ்சு நாலு துட்டுச் சம்பாரிச்சுச் செருக்காரிக்காவளே அவியளப் பாத்தயா. என்னென்னமோ செஞ்சுதான் பாக்காவ. என்னாச்சு. கலியாணங் காச்சிக்குத் தெருவில பல்லாக்குல போவ முடியிதா. கோயிலப் பத்திப் பேச வந்துட்டான்... உள்ள போயிக் கும்புட்டாத்தான் சாமியா. கோயில் பக்கமே எட்டிப் பாக்காம எத்தன சனம் கெடக்குது. உள்ள போறதுக்கு உசிரக் குடுக்கணுமா.’’

பெரிய நாடார் சலிப்பில் எழுந்தார். அம்மமுத்து முனங்கிக்கொண்டு நடந்தான்.

‘‘அப்படியொரு உசிரு வேணுமாக்கும்.’’

சுப்பம்மா தங்கையாவையும் தெய்வானையையும் இறுக அணைத்துப் பிடித்திருந்தாள். அவளுக்குள் இனம்புரியாத பயம் படர்ந்தது.

ராத்திரி தங்கையாவின் தலைமுடியைக் கிளறியபடி பல யோசனையில் படுத்திருந்தார் பெரிய நாடார். இப்படி எதும் ஆகிவிடக் கூடாதென்றுதான் இவனைக் கோயில் பக்கமே விடாமல் கண்ணுங்கருத்துமாக வளர்ப்பது. அப்படியும் போயிருக்கிறான். சின்னஞ்சிறிசு தெரியாமல் வந்துவிட்டால் அரட்டி விரட்டியிருக்கலாம். அடித்திருக்கிறானே கொஞ்சங்கூட நெஞ்சில் ஈரமில்லாமல்.

சாமி கும்பிடுவதில் எல்லாருக்கும் ஏன் தகராறு வரணும். சாமி பொதுவானது. நீதான் வரணும் நீ வரக் கூடாது என்று சொல்கிறதா என்ன. எல்லாம் இவர்கள் வைத்துக்கொண்ட சட்டம். எங்கே பார்த்தாலும் வீண் சச்சரவு. ஒருவரையொருவர் காலுக்குள் போட்டு மிதிக்க நினைப்பதால்தான் வருசக் கணக்காகச் சண்டை நடக்கிறது.

அவருக்குக்கூடத் தீராத ஆசை உண்டு. கோயில் கர்ப்பக்கிரகத்தில் நின்று முருகனை கண் குளிரப் பார்க்கணும். கையெடுத்துக் கும்பிடணும். வீட்டுக்குள்ளிருந்துகொண்டு கோயிலிருக்கும் திசைக்குத் திரும்பிக் கைகூப்பும்போது முருகனுக்குப் பக்கத்தில் இருப்பதாகவே தோன்றும். அழகான உருவம் மனசுக்குள் வளர்ந்து படரும்வரை கைவலிக்கக் கும்பிடுவார்.

சின்னப் பையனைச் சொல்லிக் குற்றமில்லை. பெரிய மனுசனுக்கே ஆசையிருக்கும்போது இவனுக்கு இருக்காதா. என்ன இருந்தாலும் கைதொட்டு அடிக்கக் கூடாது. அவ்வளவுக்கா கண்ணை மறைத்துவிட்டது. இப்படிப்பட்டவர்கள் என்னமும் செய்வார்கள். நாம்தான் தெரிந்து நடந்துக்கிறணும்.

தங்கையா இன்னும் முழித்துக்கொண்டு கிடந்தான்.

‘‘பாட்டையா.’’

‘‘நீ இனியும் ஒறங்கலயா.’’

‘‘ஒறக்கம் வரல. ஏன் பாட்டையா கோயிலுக்குள்ள போவப்புடாதா.’’

அவர் தயார்படுத்திக்கொண்டார்.

‘‘போனா சாமி கண்ணக் கெடுத்துடும்.’’

‘‘அவிய மட்டும் போறாவ.’’

''அது அவிய சாமி. ஒண்ணும் செய்யாது.''

''நமக்குச் சாமியில்லையா.''

''நம்ம தெருவில ரெண்டு மூணு சாமி உண்டு. அதுககிட்டப் போயி நம்ம கும்புடுதமில்ல. நம்மள ஒண்ணும் செய்யாது. இதுபோக நமக்குன்னு கொல தெய்வம் உண்டு.''

''அதுக்குப் பேரென்ன.''

''சொள்ளமாடன்.''

''எங்கரிக்குது.''

''ஊருல.''

''எந்தூருல.''

''தெக்க தூரத்துல.''

''என்னயவும் தேவானையவும் கூட்டீட்டுப் போவயா.''

''எல்லாரும் போவொம்.''

''எப்ப.''

''அடுத்த வருசம்.''

அவன் ஆவலுடன் தெய்வானையைக் கூப்பிட்டான்.

''தேவான அடுத்த வருசம் நம்ம சாமியப் பாக்கப் போவொம்.''

தெய்வானை உறங்கிவிட்டாள். அவருக்குச் சாக்குக் கிடைத்தது.

''தேவான ஒறங்கீட்டா பாரு. நீயும் ஒறங்கு.''

சில சமயம் அவர்களை உறங்க வைப்பதற்குள் பெரும்பாடாகிவிடும். நிறையக் கதை சொல்லணும். ஆதிகாலத்துக் கதையிலிருந்து சண்முகம் குடி கிளம்பி வந்ததுவரை சொகமாகச் சொல்வார். தெய்வானையின் விதவிதமான முனக்கம் பதிலுக்குக் கேட்கும். அவள் ஓய்ந்தால்தான் கதையை நிறுத்தணும்.

மச்சுவீட்டுக்குள் சுப்பம்மாளின் செருமல் கேட்டது. அவளிடம் சொல்லி வைக்கணும். அம்மமுத்து போக்கு சரியில்லை. பேச்சு ஒருமாதிரி இருக்கிறது. இது நல்லதுக்கில்லை. நமக்கு நாலு சனமும் வேணும். வீணாக அவர்களைப் பகைத்து என்னாகப் போகிறது. அந்தப் பக்கம் சொன்னாலும் இந்தப் பக்கம் சொன்னாலும் கேட்டுக்கொள்ள வேண்டியதுதான். அதில்லாமல் நியாய அநியாயம் பேசினால் பிழைப்புத்தான் கெடும். அவர்களுக்குச் சரி. கையில் துட்டு ஏறியிருக்கிறது. நான் பெரிசா நீ பெரிசா என்று கதி பார்ப்பார்கள். காலில் தடைநாரைப் போட்டுக் கொண்டு கதியெங்கே பார்ப்பது. அன்றாடம் சோற்றுக்கே வழியைக் காணும். இந்த லட்சணத்தில் பல்லாக்கில் ஏறிப் பட்டணப் பிரவேசம் போவது ஒண்ணு தானா குறைச்சல்.

நமக்குப் பனைதான் பசு. காலாகாலத்தில் அதைக் கவனிக்கணும். கலயத்தில் பாலிறங்கினால்தான் வயிற்றுக்குள் சோறிறங்கும். வீம்பும் வீராப்பும் யாருக்கு வேணும். குடும்பத்தில் குழந்தைகளைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு தலைக்கு மேல் இருக்கையில் நமக்கெதுக்கு வேண்டாத விவகாரம். சுப்பம்மாளை விட்டுக் கண்டிக்கச் சொன்னால்தான் அம்மமுத்து வழிக்கு வருவான்.

அவர் கண்ணயர ரெம்ப நேரமானது.

ரெண்டு நாள் கழித்துப் பெரிய நாடாரும் கருப்பட்டி மண்டி பலவேச நாடாரும் கீழக் குளத்தில் சந்தித்துக்கொண்டார்கள். பலவேச நாடார் பல்தீத்தக் கல்பொடி தட்டிக்கொண்டிருந்தார். பெரிய நாடார் கையேந்தினார்.

''பங்குக்கு வந்துட்டீரா.''

''ஆமா சொத்துச் சொவத்துலதான பங்கு குடுக்கப்போறாவ.''

''சொத்துத்தான. ஓலப்பொட்டி அனயம் கெடக்கு. வந்து சொமந்துட்டுப் போரும். உள்ள ஒட்டியிருக்கித கருப்பட்டிய நக்கலாம்.''

''ஏற்கெனவே நக்கித் தொடச்சு வச்சிரிப்பீரு. அதுல மிச்சம் வேற இரிக்குமா. நாய்க்குப் போட்டாக்கூடச் சீந்தாது.''

இருவரும் பல் தீத்தினார்கள். பலவேச நாடார் எச்சைத் துப்பிவிட்டுப் பார்த்தார்.

''ரெண்டு மூணு நாளா ஆளக் காணுமே எங்க போயிரிந்தீரு.''

பெரிய நாடார் குளத்துக்குள் இறங்கி முதுகில் நீரள்ளி ஊற்றினார்.

''குளிச்சு எந்தக் கோயில்ல நின்னு கும்புடப் போறொம்.''

கோயிலைப் பற்றி ஏன் பேச்செடுத்தோம் என்றிருந்தது. எவ்வளவு எச்சரிக்கை யாக இருந்தாலும் வார்த்தை வந்து விழுந்துவிடுகிறது. இதை இவரிடம் சொல்லி யிருக்கக் கூடாது.

பலவேச நாடாரும் இறங்கி வந்து நீந்தினார்.

''அதுக்காவக் குளிக்காம இருந்துக்கிடுதீரா. கோயிலுக்குள்ள போற காலமும் வராமயா போயிடும்.''

''நல்லா வந்தது. அதுவரைக்கும் நம்ம உசிரோடரிந்தாச் சரி.''

''என்னாச்சு ஒமக்கு.''

''அண்ணைக்கு எம் பேரன் கோயிலுப் பக்கம் போனானாம். எவனோ அடிச்சு வெரட்டியிரிக்கான். ஆர நொந்துக்கிடது.''

பலவேச நாடார் அவசரமாகப் படிக்கல்லுக்கு வந்தார்.

''அவனச் சும்மாவா வுட்டீரு. அது எந்தப் பய.''

''என்ன செய்யச் சொல்லுதீரு. அவனோட மல்லுக்கெட்டவா. அடி வாங்கப் பொறந்துட்டொம். வாங்கித்தான ஆவணும்.''

''எத்தன நாளைக்கு இப்படி.''

''காலமெல்லாம்.''

பெரிய நாடார் துண்டைப் பிழிந்து உடம்பைத் துடைத்தார். பலவேச நாடார் வேட்டியை ஓங்கியடித்தார். ஈரத்திலும் உடம்பு சூடேற ஆரம்பித்தது. பலப்பல நினைவுகள். வேட்டியைக் கும்மினார்.

''என்ன பொழப்பு சவத்துக்கெட்ட பொழப்பு. ஒரு நாளாச்சும் நிம்மதியாப் படுத்து ஒறங்குனம்னு கெடையாது.''

''சிப்பத்துக்குள்ள கருப்பட்டிய அடச்ச மாதிரி மனசுக்குள்ள எல்லாத்தவும் போட்டுத் திணிச்சா நிம்மதியெங்க வரும்.''

''கருப்பட்டி மண்டியில உக்காந்தாலும் கசப்புத்தான் கொமட்டுது. சின்ன வயசிலரிருந்து போராடிப்போராடியே காலம் போகுது.''

''நமக்கு விதிச்சது அப்படி.''

“பொறந்து வளந்த எடத்துலதான் பொல்லாப்புன்னா பொழைக்க வந்த எடத்துலயாச்சும் சந்தோசம் உண்டுமா.”

“எல்லாரு கதையும் அப்படித்தான்.”

“கோயிலுக்குள்ள எட்டிப் பாக்காத. தெருவுக்குள்ள வராதன்னு இனியும் சண்ட ஓஞ்ச பாடில்ல.”

“எல்லாரும் சேந்துக்கிட்டுல்ல வெரட்டுதான்.”

“இதுக்காவ எல்லாரும் தார்ப்பாச்சீட்டு அலஞ்சா எண்ணைக்கு நாலு பேரப் போல புள்ளீகளக் கரையேத்தப்போறெம்.”

“அதுகளா அடிச்சுப்புடிச்சுக் கரையேறிக்கிட வேண்டியதுதான்.”

பலவேச நாடார் கழுகுமலைக்கு வந்து இருபது வருசம் ஆகிவிட்டது. ஆனாலும் பழைய நினைவுகள் மறக்கவில்லை. அதெப்படி மறக்கும். லேசுப்பட்ட கதையா. அந்த நினைவு வந்தால் சோற்றில் தேட்டமிருக்காது. பெரிய நாடாரைத் தேடிப் போவார். எந்நேரமானாலும் தனியாக ரெண்டு பேரும் உட்காரு வார்கள். பலவேச நாடார் ஒவ்வொரு சம்பவமாகச் சொல்வார். சொல்லி முடித் ததும் கண்ணில் நீர் கட்டும். பெரிய நாடார் தேற்றுவதற்குப் பிரயாசைப் படுவார்.

“என்ன இது. பேரன்பேத்தியெடுத்தப் பொறவும் பழசக் கிண்டிக்கிட்டு.”

“கட்டையில உசிருள்ளவரைக்கும் மனசு ஆறாது.”

அவர்கள் குளித்து முடித்து வெளியேறிய பிறகும் பேசிக்கொள்ளவில்லை. தலைக்கு மேலே வேட்டி காயும் படபடப்பு மட்டுமே கேட்டது.

வேட்டி காய்ந்ததும் சுருக்கித் தோளில் போட்டுக்கொண்டார்கள். துண்டு உடுத்திய கோலத்தில் நின்று ஒருவரையொருவர் பார்த்துவிட்டு நடந்தார்கள். வீட்டுக்குப் பிரியும்போது பலவேச நாடார் சொன்னார்.

“என்னோட பாட்டையா வாங்காத அடியா. அப்பனும் அம்மையும் வாங்காத ஒதையா. நானும் புள்ளீகளும் வாங்காத மிதியா.”

பெரிய நாடாருக்கு வெயில் உறைத்தது. தலையைச் சாய்த்துக்கொண்டு போய்விட்டார்.

## 2. பொலையாடி மவனே

பலவேச நாடாருக்குப் பூர்வீகம் மலையாள தேசம். நாகர்கோயிலுக்கு மேற்கே கல்விளை சொந்த ஊர். கிழக்குப் பிரதேசங்களில் வெள்ளாளர்கள் வசதியாக இருந்தார்கள். மேற்குப் பகுதிகளில் நாயர்களின் ஆதிக்கம்.

ஏழை நாடார்கள் எல்லா இடங்களிலும் பரவியிருந்தார்கள். பணக்காரர் களின் நிலங்களில் பனையேறிகளாகப் பாடுபட்டுவந்த அவர்கள் தாழ்ந்த சாதிக் காரர்களாக நடத்தப்பட்டார்கள். பணக்காரர்களுக்கு அடிமைகளாயிருந்து ஊழியம் செய்யணும். கடவுளுக்குச் சமானமாக மரியாதை கொடுக்கணும். தவறி னால் அனுபவிக்கும் கொடுமை சொல்ல முடியாது.

பலவேசத்துக்கு அப்போது சிறு பிராயம். கல்விளையில் மாதவன் நாயரின் தோப்பிலிருந்த தென்னைகளையும் பனைகளையும் நம்பி அவன் குடும்பம் இருந்தது. குடும்பத்தில் பாட்டையா அப்பன் அம்மை ரெண்டு அக்கா. அப்பம்மை போய்ச் சேர்ந்து நாளாயிற்று.

கொஞ்ச நாளில் தோப்பைக் குத்தகைக்குப் பிடித்து உழைத்தார்கள். தோட்டத்தில் பப்பாளி நேந்தரம் என்று பலவகை மரங்களுண்டு. பருவத்தில் வள்ளிக் கிழங்கு நட்டினால் வருமானம் கிடைக்கும். பண்டங்கள் வாங்கவோ விற்கவோ நாகர்கோயிலுக்குத்தான் போகணும். சகலத்துக்கும் அது பொதுவான இடம்.

பலவேசம் பாட்டையாவுக்குப் பின்னாலேயே தோப்பில் திரிவான். பசித்தால் மட்டும் வீட்டுக்குப் போவான். திரும்பும்போது பாட்டையாவுக்குச் சோறு கொண்டுவருவான்.

பாட்டையாவுக்குத் தோப்புதான் குடியிருப்பு. ராப்பகலாகக் கிடப்பார். சதா வேலைசெய்வார். தோப்பை அவர் கவனித்துக்கொண்டதால் அப்பன் கூலி வேலைக்குப் போவார். வீட்டிலிருப்பது அம்மையும் அக்காமாரும். வேலையிருந்தால் அவர்களும் போவார்கள்.

தோப்பு நாயருடையது என்று பாட்டையா நினைக்க மாட்டார். சொந்த நிலம்போல் சுற்றிச்சுற்றி அழகுபார்ப்பார். களையெடுப்பார். புல்பூண்டுகளைப் பிடுங்கிப் போடுவார். செடி கொடி ஒண்ணுகூட வாடியிருக்க மனசுகேட்காது. வேலை செய்துகொண்டிருக்கும்போது தூரத்தில் செருப்புச் சத்தம் கேட்கும். அவர் வேலைகளைப் போட்டுவிட்டுப் பரக்கப்பரக்க முழிப்பார். கைகால் உதறலெடுக்கும்.

வழியில் மாதவன் நாயர் வந்துகொண்டிருப்பார். அவரைப் பார்த்ததும் பாட்டையாவின் கை தானாக உயர்ந்து கும்பிடும். பலவேசம் ஓடித் தென்னை மறைவில் ஒளிந்துகொள்வான். நாயர் மிடுக்காக வந்து நிற்பார். அவர் கையில் நல்ல பிரம்பு இருக்கும். முகம் கடுகடுப்பில் கோணியிருக்கும். உடம்பு கசகசப்பானதுபோல் விசிறிக்கொள்வார்.

''எந்தா பொலையாடி மவனே தள்ளி நில்லுடே.''

''உத்தரவு ஏமானே.''

பாட்டையா குடுமியவுந்ததுகூடத் தெரியாமல் கைகட்டிப் பவ்வியமாக நகன்றுகொள்வார். இது ரெண்டு பேருக்கும் வழக்கம். அப்புறம் நாயர் வாயிலிருந்து தொடர்ந்து உத்தரவு வரும். பாட்டையாவும் கேட்டுக்கொள்வார்.

சில சமயம் எட்டி நிற்கவில்லையென்றால் பாட்டையாவுக்குப் பிரம்படி கிடைக்கும். அவர் உடம்பைச் சுளிக்காமல் வாங்கிக்கொள்வார். பலவேசம் பயத்தில் பதுங்கிவிடுவான்.

பாட்டையாவின் உடம்பில் புளியம் பிஞ்சுபோல் கோணல்மாணலாகத் தழும்புகள் கிடக்கும். பலவேசம் தடவிப்பார்ப்பான். அவர் அதைப் பற்றிக் கவலைப்படாமல் ஈ ஒட்டிய எருமையாகச் சுளித்துக்கொண்டு வேலையில் இறங்கிவிடுவார். அடி வாங்கியே முதுகு வளைந்துவிட்டதாகத் தோன்றும்.

பொதுவாகவே ஓட்டு வீட்டாரைக் கண்டால் பயம்தான். எந்த நேரத்தில் என்ன செய்வார்கள் என்று தெரியாது. மேல்சாதிக்காரரான ஒரு அவர்னர்

வருகிறாரென்றால் கீழ்ச்சாதிககாரர்களான சுவர்னர்கள் பன்னிரெண்டு எட்டு விலகணும். அதிலும் நம்பூதிரி வந்தால் முப்பத்தாறு எட்டு தள்ளி நிற்கணும். அவர்கள் பாதையில் போகும்போது சுவர்னர்கள் குறுக்கே கடந்துவிடக் கூடாது. ஒருநாள் நடந்த கொடுமையைப் பார்த்துவிட்டு பலவேசம் விறைத்துப்போனான். அதை நினைத்தாலே குலை நடுங்கும்.

இத்தனைக்கும் அந்த ஈழவன் தப்பொண்ணும் பண்ணவில்லை. நம்பூதிரி வருவதைக் கவனிக்காமல் பாதையைக் கடந்துவிட்டான். தோப்பில் விளை யாடிக்கொண்டிருந்த பலவேசத்துக்கென்றால் பதட்டம். கூப்பிட்டுச் சொல்ல லாமா என்று வாய் துடித்தது. அதுக்குள் நம்பூதிரி பார்த்துவிட்டார். அவருக்கு வந்ததே கோவம். ஈழவனைத் திட்டாத வார்த்தையில்லை.

பிறகு ரெண்டுமூணு பேரைக் கூப்பிட்டு அவனை இழுத்துவரச் சொல்லி மரத்தில் கட்டிவைத்து அடியான அடி அடித்து தலையை வெட்டிப்போடச் சொல்லிவிட்டுச் சாதாரணமாக நடந்துபோனார். தலை தேங்காய்போல் கீழே விழுந்துகிடந்தது. முண்டம் மரத்தில் சிவப்பாகச் சாய்ந்து நின்றது.

பலவேசம் பதறியடித்துப்போய் பாட்டையாவிடம் சொன்னான். அவர் இதைவிட மோசமான கதையைச் சொல்லி வாயடைத்தார்.

பாட்டையாவுக்கு இந்த விசயத்தில் எச்சரிக்கை ரெம்ப. பாதையைக் கடக்கும் போது சுற்றுமுற்றும் பார்ப்பார். யாரும் வரவில்லை என்பதை ஒரு தடவைக்கு ரெண்டு தடவை உறுதிசெய்த பிறகு அவசரமாக அவனைக் கூட்டிக்கொண்டு ஓடுவார்.

சுவர்னர்களுக்கு நிச்சயமில்லாத பிழைப்பு. பாலம் வழியாகப் போகக் கூடாது. கிணற்றுப் பக்கம் தலைகாட்டக் கூடாது. பால் தரும் பசுவிடம் போனால் தீட்டு. சாலையோரம் வீடு கட்டக் கூடாது. ஓட்டுக் கூரை போடக் கூடாது. மாடி கட்டக் கூடாது.

பெண்கள் பொன்னிலும் வெள்ளியிலும் நகைபோட்டுக்கொள்ளக் கூடாது. இடுப்பில் தண்ணீர்க்குடம் கொண்டுபோனால் தப்பு. தோளில் சீலை போடாமல் மூடாத மார்புடன்தான் நடக்கணும்.

ஒரு நாள் பலவேசத்தின் அம்மை ஒரு அவர்னர் வரும்போது மார்பை மறைக்க முயற்சிசெய்தாளாம். அவருக்குப் பொறுக்கவில்லை. கண்டபடி திட்டினார்.

''மரியாதையில்லாத பனையேறி நாயி.''

அவளுக்கு நிறைய அடி கிடைத்தது. கண்ணீர் சிந்தியபடி தலைகுனிந்திருந் தாள். பாட்டையாவும் அப்பனும் மூச்சுவிடாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அவர்னர் போனபின் அப்பன் வாயிலிருந்து வார்த்தை வந்தது.

''பயமில்லாம வெளிய நடமாட முடியல. இண்ணைக்கோ நாளைக்கோன்னு உசிரக் கையில புடிச்சுக்கிட்டு எத்தன காலத்துக்கு.''

அம்மைக்கு இன்னும் கண்ணீர் குறையவில்லை.

சாதாரண விசயங்களுக்கே இப்படியென்றால் கோயிலைப் பற்றிக் கேட் கணுமா. கோயில் பக்கம் கீழ்சாதிக்காரர்களின் வாடையே அடிக்கக் கூடாது. கும்பிடணுமென்று ஆசையிருந்தால் ரெம்பத் தூரத்தில் நின்று கும்பிட்டு விட்டுப் போகணும்.

அவர்களால் வரி கொடுத்து மாளவில்லை. எதுக்கெடுத்தாலும் வரி. அப்பன் அடிக்கடி சலித்துக்கொள்வார்.

''பெருமூச்சு வுட்டாக்கூட வரிப் போடுதான்.''

தென்னை பனை அத்தனைக்கும் சர்க்கார் பாட்ட வரி கட்டியாகணும்.

பாட்டையாவுக்கு இது பெரிய கவலை. மரத்துக்குக் குத்தகை கொடுப்பது மில்லாமல் இது வேறா. நாயர்தான் வரி கொடுக்கணும். அவர் பாட்டையாவின் தலையிலடித்தார்.

குடியிருக்க வீடிருந்தால் அதுக்குக் குப்பக் கச்சை கட்டணும். கலியாணத் துக்கு வரி. தீபாவளி வருசப் பிறப்பு என்று ஒவ்வொரு திருவிழாவுக்கும் வரி. கொஞ்சம் சொத்து இருந்தால் அதுக்குப் புருசாந்தரம். செத்துப்போனவர் களுக்கும் சேர்த்து ஒரு காலத்தில் வரி வசூலித்தார்கள். அம்மை முனங்குவாள்.

''பாவிப் பயலுவ. உடுத்துத துணிக்குக்கூட வரி போடுவான்.''

வரிக் கொடுமை தாங்காமல் பல குடும்பங்கள் திருநெல்வேலிச் சீமைக்குக் குடிபெயர்ந்தன. பலவேசம் பாட்டையாவிடம் கேட்டான்.

''எல்லாரும் ஏன் கெளம்பிப் போறாவ.''

''எத்தன நாளைக்கு வரி குடுத்துச் சாவுதது.''

''ஏன் வரிக் குடுக்கணும்.''

அவருக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. வேண்டாவெறுப்பாகச் சொன்னார்.

''அவிய வாங்கப் பொறந்தவிய. நம்ம குடுக்கப் பொறந்துரிக்கொம். அவிய குடுக்கிதது அடியும் ஒதையுந்தான்.''

அனேகம் பேர் குடிகிளம்பிப் போயும் பிரச்சினை தீரவில்லை. தங்கியிருந்த சொந்தக்காரர்கள் மாட்டிக்கொண்டார்கள். போனவர்களுக்கான வரியும் அவர்கள் தலையில் விழுந்தது.

இதைவிட அநியாயமெல்லாம் நடந்திருக்கிறது. ஒருகாலத்தில் பெண்களின் மார்புக்குக்கூட வரி வசூலித்திருக்கிறார்கள். ஒரு ஈழவப் பெண்ணால் வரி கொடுக்க முடியவில்லை. சோற்றுக்கு வழியில்லாதபோது வரிக்கெங்கே போவாள். தினமும் கொடுமை தாங்கவில்லை. யோசித்துயோசித்துப் பார்த்தாள். முடிவு தெரியவில்லை. எரிச்சலும் கோவமும் வந்தது. ஊமையழுகை அழுதாள்.

''இவனுவ தாயி வவுத்துல பொறக்கலயா. தாய்ப் பாலு குடிக்கலயா.''

கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தாள். கத்தியால் ஒரு மார்பை அறுத்தாள். ரத்தம் சொட்டச்சொட்ட நடந்தாள். கண்ணில் கோவம் கொப்புளித்தது. போய் அலட்சியமாக நின்றாள்.

''இதுதான் என்னோட வரி.''

அறுத்த மார்பை மூஞ்சியில் எறிந்துவிட்டுப் போய்விட்டாள்.

பிறகு நடந்ததைச் சொல்லணுமா. அவளைப் பிடித்து வந்து உதைத்துச் சீரழித்தார்கள். கொன்று உடம்பை வீசியெறிந்தார்கள்.

அப்படியும் அவர்களுக்கு இரக்கம் வரவில்லை. சனங்களை இன்னும் அதிக மாகக் கொடுமைப்படுத்தினார்கள். வரி கொடுக்காதவர்கள் முதுகில் கல்லேற்றிச் சுமக்க வைத்தார்கள். தலையில் சுடுமணலை ஏற்றினார்கள். மணல் சூடு தாங்காமல்

ஒரு பிள்ளைத்தாச்சி அந்த இடத்திலேயே சுருண்டு விழுந்துவிட்டாள். அதைப் பற்றிக் கவலைப்படாமல் அவள் தாயிடம் வரி வசூலித்தார்கள்.

தோவாளை தாழாக்குடியில் ஒரு பெண். பேர் மாடத்தி. குழந்தைகளுண்டு. அப்போது கர்ப்பிணியாக இருந்தாள். அவளை ஒரு மாட்டுடன் ஏர்ப்பூட்டி உழ வைத்தார்கள். அவளுக்கு எட்டு வைக்கத் திராணியில்லை. எசமான் அடிக்கச் சொன்னார். கண்டபடி அடித்தார்கள். அவள் முனங்கிக்கொண்டே விழுந்தாள். கொஞ்ச நேரத்தில் உயிர் போய்விட்டது.

வரிக் கொடுமை ஒருபுறமிருக்க மேல்சாதிக்காரர்களுக்கு ஊழியம் செய் தாகணும். ஏட்டோலை நீட்டோலை ஊழியம். ஒரு குறை வைக்கக் கூடாது. பாட்டையா அடிக்கடி கைக்கூலி கொண்டுபோவதை பலவேசம் பார்த்திருக் கிறான். நாயர் அடித்து விரட்டுவார்.

''பயினி கொண்டு வாடே பனையேறிப் பய மவனே.''

பாட்டையா ஓடிவந்து பதினி கொண்டுபோனால் இன்னொரு உத்தரவு வரும்.

''சில்லுக்கருப்பட்டி கொண்டுவாடே சாணாப் பயலே.''

ஒவ்வொண்ணுக்கும் அடி கிடைக்கும். எவ்வளவு கப்பம் கட்டினாலும் நாயருக்குத் திருப்தியிருக்காது.

மேல்சாதிக்காரர்கள்தான் அப்படியென்றால் சில பணக்கார நாடார்களும் அவர்களைப் போலவே நடந்துகொண்டார்கள். தங்களை நாடான்கள் என்று உயர்வாகச் சொல்லிக்கொண்டார்கள். ஏழை நாடார்கள் எல்லா விதத்திலும் தாழ்ந்தவர்களே என்று சொன்னார்கள். இழிவாக நடத்தினார்கள். இது எல்லா ருக்கும் உறுத்தியது.

''அவனும் இவனும் ஒண்ணுதான். அவனுக்கு ஊழியஞ்செய்ய நம்ம இரிக் கொம். இவனுக்குப் பறையன் இரிக்கான். வெலைக்கு வாங்கீட்டுக் கொடுமப் படுத்துறானுவ.''

நாளாவட்டத்தில் புழுக்கம் அதிகமானது. கொடுமைகளைத் தாங்க முடி யாமல் கூடிக்கூடிப் பேசினார்கள்.

''புல்லுத் திங்கிற மாட்டுக்கும் கேவலமாப் போயிட்டு நம்ம நெலம.''

''அவியளுக்குப் பயந்து கொஞ்சங்கொஞ்சமாச் சாவுததவிட ஒரே நாளுல சாவலாம்.''

பலவேசம் ஓடிஓடி அவர்கள் பேசுவதைக் கவனித்தான். அவனுக்கும் சூடு கிளம்பியது. ஒரு நாளாவது அவர்னர் வரும்போது முன்னால் ஓடிப் பாதையைக் கடக்கணும். அப்படிச் செய்தால் பாட்டையாவுக்கும் அப்பனுக்கும் அடி கிடைக் கும். அவனையே கொன்றாலும் கொன்றுவிடுவார்கள். வளர்ந்து பெரியவனான பிறகு செய்யலாமென்று திட்டத்தைத் தள்ளிப்போட்டான்.

**அ**ன்றைக்கு வேதச் சாமியார்கள் ரெண்டு பேர் வந்திருந்தார்கள். இதுக்கு முந்தி யாரும் வந்ததில்லை. அவர்களைச் சுற்றிப் பெரிசும் சிறிசுமாகக் கூட்டம் திரண்டு விட்டது. பலவேசம் கூட்டத்துக்குள் முண்டியடித்து நுழைந்து வேடிக்கை பார்த்தான். அவர்கள் வீடுவீடாகப் போய் பிரசங்கம் பண்ணினார்கள்.

''பாவப்பட்ட ஜீவன்களே கர்த்தரிடம் வாருங்கள். அவர் உங்களை ரட்சிக்கக் காத்திருக்கிறார். அவரிடம் வந்து உங்கள் கவலையைச் சொல்லுங்கள்.''

ஒரு பெண் அலுத்துக்கொண்டாள்.

''ஆரிட்டச் சொல்லி என்ன செய்ய.''

ஒரு சாமியார் ஆதரவான வார்த்தைகளைச் சொன்னார்.

''கர்த்தருக்கு முன்னால் எல்லா ஜீவன்களும் ஒன்றுதான். ஒருவருக்கொரு வர் ஏன் பயப்பட வேண்டும். நமக்குச் சாதி கிடையாது. பெண்கள் தோள் சீலை போட்டுக்கொள்ளலாம். நாம் மட்டும் சபிக்கப்பட்டவர்களா என்ன. கர்த்தர் உங்கள் குறைகளைத் தீர்ப்பார். பாவங்களை மன்னித்து மோட்சத்துக்கு வழிகாட்டுவார்.''

மற்றவர் குரலுயர்த்தி அழைத்தார்.

''வருத்தப்பட்டு பாரஞ் சுமக்கிறவர்களே நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள். நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன் என்று கர்த்தர் உங்களை அழைக்கிறார். எல்லாரும் கர்த்தரிடம் வாருங்கள்.''

அவர்கள் ரெம்ப நேரம் பிரியமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனார்கள். கிட்ட இருந்து கஷ்டங்களைக் கேட்டதில் சனங்களுக்கு ஆறுதல்.

''சாமி கும்புடப்போனா ஓட்டு வீட்டான் கோயிலுக்குள்ள வுடாம வெரட்டுதான். இவியளப் பாரு தேடி வந்து பேசுதாவ.''

''சாமி கும்புட்டுக்கும்புட்டுக் கஸ்டம் தீரல.''

''அநியாயத்தப் பாத்துக்கிட்டுச் சும்மாரிக்கித சாமிய ஏன் கும்புடணும்.''

''இவனுவ பண்ணுத அநியாயத்துக்குச் சாமி என்ன செய்யும்.''

''நம்ம கஸ்டம் தீரும்னா வேதச் சாமியக் கும்புடுததுல தப்பில்ல.''

சில குடும்பங்களில் வேதத்துக்கு மாறும் எண்ணம் வந்தது. அதுக்குத் தோதாகச் சாமியாரும் அடிக்கடி வந்து போனார். ஊர்ஊராக வேதப் பிரசங்கம் நடப்பதாகப் பேச்சு வந்தது.

கொஞ்சங்கொஞ்சமாக வேதத்துக்கு மாறினார்கள். சாமியார்கள் அவர் களுக்கு ஞானஸ்நானம் செய்துவைத்தார்கள். வேதப் பேர் சொல்லிக் கூப்பிட் டார்கள். அதைக் கேட்கச் சந்தோசமாக இருந்தது. கை கால்களில் கட்டவுத்து விட்ட மாதிரி லேசாகத் தோன்றியது.

ஊர்களில் சின்னச்சின்ன வேதக் கோயில்கள் முளைத்தன. நாடார் வீட்டுப் பிள்ளைகள் பள்ளிக்கூடம் போக ஆரம்பித்தார்கள். கோயில்களிலேயே பெரும் பாலும் பள்ளிக்கூடம் நடந்தது. இதுவரை தோள் சீலை போடாத பெண்கள் வேதக் கோயிலுக்குள் முக்காடிட்டு செபித்தார்கள். கர்த்தருக்குத் தோத்திரம் சொல்லி மனம்விட்டுப் பாடும்போது ஆனந்தமாக இருந்தது. சந்தோசத்தைக் கொடுத்த ஆண்டவருக்கு நன்றி சொன்னார்கள்.

''பிதாவே இந்தச் சந்தோசத்தை எங்களுக்கு எந்நாளும் தந்தருளும்.''

வெளியே போனால் தோள் சீலை போட முடியாதே என்ற கவலை வந்தது அவர்களுக்கு. சீலை மூடி முழுக் கோலத்தில் இருப்பதைப் பார்த்துப் பிரியப்பட்ட ஆண்களும் கவலைப்பட்டார்கள்.

''என்ன ஆனாலும் சரி இனிமே ஆருக்கு முன்னாலயும் இப்படித்தான் இரிக்கணும்.''

இதையே சாமியாரும் உபதேசித்தார்.

''கர்த்தருக்கு இதுதான் இஷ்டம்.''

ராசமங்கலத்தில் ஒரு சாமியாரின் சம்சாரம் பெண்கள் மேல் பகுதியில் அணியும் குப்பாயம் தைக்கச் சொல்லிக்கொடுத்தாள். அவர்களும் ஆர்வத்துடன் கற்றுக்கொண்டு தைத்து அணிந்தார்கள். அந்தச் சந்தோசத்தில் கர்த்தரைத் துதித்தார்கள்.

''குப்பாயம் தந்த ஆண்டவருக்கு நன்றி.''

வேதம் இவ்வளவு மாற்றங்களை உண்டாக்குமென்று மேல்சாதிக்காரர்கள் எதிர்பார்க்கவில்லை. நிலைமை இப்படியே போனால் முதலுக்கே மோசமாகி விடும். வளர விட்டால் ஆபத்து. அப்புறம் ஊழியம் செய்ய ஆளிருக்காது. கோவம் அதிகமானது.

வேறு கீழ்சாதிக்காரர்களும் வேதத்துக்கு மாறினார்கள். மேல்சாதிக்காரர்களை அது அவ்வளவாகப் பாதிக்கவில்லை. இருந்தாலும் பொருமினார்கள்.

''எல்லாப் பயலுவளுக்கும் திமிரு வந்துடுச்சு.''

''திமிர அடக்கி ஒடுக்கணும்.''

''எல்லாத்துக்கும் காரணம் சாமியாருதான்.''

''அவியள ஒண்ணும் பண்ண முடியாது. வெள்ளக்காரனாக்கும் அனுப்பி வச்சிரிக்கான்.''

''இல்லன்னா இவ்வளவு தைரியமாக் காரியம் பண்ணுவானா.''

பலவேசத்தின் வீட்டில் பாட்டையா திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்.

''ஆரும் எங்கயும் போவட்டும். பரம்பரையாக் கும்புடுத சாமிய நம்மால மறக்க முடியாது. அது பெரிய பாவம்.''

நாடார்களிடம் இருந்த புகைச்சல் மெல்ல வெளியேற ஆரம்பித்தது. கல்குளம் பக்கத்தில் பெண்கள் தோள் சீலை போட்டுக்கொண்டு பொது இடங்களுக்குப் போனார்கள். இதைக் கண்ட மேல்சாதியாருக்கு ரெம்பக் கோவம். தோள் சீலை போட்ட பெண்களுக்கு அபராதம் விதித்தார்கள். வேதச் சாமியார் இதைக் கண்டித்து சர்க்காருக்கு முறையிட்டார். அபராதம் விதித்ததைத் தட்டிக் கேட்பதுபோல் சர்க்காரும் உத்தரவு போட்டது.

வேதப் பெண்களைப் பார்த்து இந்துப் பெண்களுக்கும் தோள்சீலை போட்டுக்கொள்ளும் ஆசை வந்தது. போட்டுக்கொண்டு வெளியே நடமாடினார்கள். மேல்சாதிக்காரர்கள் கறுவினார்கள்.

''இந்தப் பயலுவளுக்கு என்ன வந்துட்டு.''

''எப்படியும் இத நிறுத்தியாவணும். இல்லன்னா நம்ம பொண்ணுவளுக்கும் இவியளுக்கும் வித்தியாசமில்லாமப் போயிடுமே.''

வேதத்துக்கு மாறிய ஆண்கள் நீளமாக வளர்ந்திருந்த தலைமுடியை வெட்டி கிராப் வைத்தார்கள். நல்ல துணிமணி உடுத்தினார்கள். பெண்கள் காது வளர்க்கும் வழக்கம் குறைந்தது. வேதக்காரர்கள் மேல்சாதிக்காரர்களுக்குச் செய்துவந்த ஊழியத்தைப் படிப்படியாக நிறுத்திக்கொண்டார்கள். அவர்களது பழக்கவழக்கங்களைப் பார்த்த இந்துக்காரர்களுக்கு முகச் சுளிப்பு.

''முடிய வெட்டி வெள்ளக்காரனப்போல ஆவப்போறானுவளா.''

இன்னும் சிலர் சொன்னார்கள்.

''குடுமியிரிந்தாக் கஸ்டந்தான.''

''கோயில்ல பாட்டுப் படிச்சு ஓட்டு வீட்டுக்காரன வெரட்டப் போறானுவ ளாக்கும்.''

''ஆராலயும் அவியள ஒண்ணும் செய்ய முடியாது.''

''அவனுவ நம்மள ஒதைக்காம இரிக்க வழி சொல்லு.''

முணுமுணுப்பிலேயே காலம் போனது.

ஒருசமயம் தோள் சீலை போட்டுக்கொண்டு போன பெண்களைத் துலுக்கர் களும் வேறு சாதிக்காரர்களும் அவமானப்படுத்திவிட்டார்கள். அது பெரிய பிரச் சனையாகி விட்டது.

''துலுக்கனுக்கு ஏன் இந்த வம்பு.''

''மத்தவன் தூண்டிவுட்டானோ என்னமோ.''

''இனி கையக் கட்டிக்கிட்டுச் சும்மாரிக்க முடியாது. வாழணும் இல்ல சாவணும்.''

விசயம் அரண்மனைவரை எட்டிவிட்டது. விசாரிக்கத் திவான் வந்தார். அவமானப்படுத்தியவர்களை அவர் கண்டிக்கவில்லை. பெண்களுக்குப் புத்திமதி சொன்னார்.

''சாதி வழக்கப்படி நடந்துக்கிடணும். ஒங்க சாதியில தோள் சீல போடுற தில்லையே. நீங்க மட்டும் ஏன் போடணும். அதனாலதான் சச்சரவு.''

சனங்கள் கொதித்துப்போனார்கள்

''இதச் சொல்லத்தான் இவ்வளவு தூரம் வந்தானாக்கும்.''

''அவன் ஒன் அப்பனா என்ன. மேச்சாதிக்காரன் மேச்சாதிக்காரனுக்குத்தான் தொணையாரிப்பான்.''

அதுக்கேற்றபடி அடுத்த வருசம் சர்க்கார் உத்தரவு வந்தது. அதாவது நாடார் பெண்கள் தோள் சீலை போடுவது நியாயமில்லை. ஏனென்றால் அது தடை செய்யப்பட்ட வழக்கம். இனிமேல் அந்த வழக்கத்தை விட்டுவிடணும். வேதக் காரர்கள் மேல்சாதிக்காரர்களிடம் முன்னைப் போலவே மரியாதையாக நடந்து கொள்ளணும். சர்க்கார் அனுமதியில்லாமல் வேதக் கோயில்கள் கட்டக் கூடாது. தங்கள் குறைகளைத் தீர்க்க உள்ளூர்ச் சபைக்குப் போகக் கூடாது.

இதனால் தகராறு முற்றியதேயொழிய தீர்ந்தபாடில்லை. எல்லா இடங் களிலும் கலவரம் பரவியது. எங்கே பார்த்தாலும் அடிதடி கல்லெறி தீவைப்பு.

கல்விளையில் வேதம் இந்து என்ற வித்தியாசமில்லாமல் எல்லா நாடார் வீடுகளிலும் கல்லெறி விழுந்தது. பலவேசத்தின் அம்மையும் ரெண்டு அக்காளும் தோள் சீலை போட்டதால் அவர்களுக்கும் எறி. பாட்டையாவும் அப்பனும் சும்மா இருக்கவில்லை. பதிலுக்கு எறிந்தார்கள். பாட்டையாவுக்கு மண்டையில் காயம். ராத்திரி யாரும் உறங்கவில்லை. வீட்டுக்குத் தீ வைத்துவிடுவார்கள் என்ற பயத்தில் விடியவிடிய ஆயுதங்களுடன் காவலிருந்தார்கள். பலவேசம் சின்ன அரிவாளை வைத்துக்கொண்டு திரிந்தான்.

பாட்டையா ஆரம்பத்தில் அமைதியாகத்தான் இருந்தார். நடக்கிற கொடுமைகளைக் கண்டு மனசு பொறுக்கவில்லை. பெண்களை மானபங்கப்

படுத்துவதை எப்படிச் சகித்துக்கொள்ள முடியும். சொந்த உயிர்களையாவது காப்பாற்றணுமே.

அவர் அமைதியாக இருந்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு. மாதவன் நாயரிடமிருந்து எப்படியாவது தோப்பை விலைக்கு வாங்கிவிடணும். அதுக்காகவே சிறுகச்சிறுகப் பணம் சேர்த்துப் பத்திரப்படுத்தியிருந்தார். ஓயாமல் உழைத்தார். நாயரிடம் அடி வாங்கிக்கொண்டே தோப்பையும் வாங்கிவிட்டார்.

கலவரம் அந்தத் தோப்பையும் விட்டுவைக்கவில்லை. மரங்களை வெட்டிச் சாய்த்துவிட்டார்கள். தென்னை நீளநீளமாகப் படுத்துக் கிடந்தது. பாட்டையா வெறிபிடித்தவர்போல் அலைந்தார். அம்மை சமாதானப்படுத்தினாள்.

''பாவிப் பயலுவ மனுசர வெட்டாம வுட்டானே.''

மறுநாள் சர்க்கார் ஆட்கள் வந்தார்கள். பலவேசம் ஓடிவிட்டான். வந்தவர்கள் வீட்டுக்குள் நுழைந்து அம்மையையும் அக்காமாரையும் கம்பால் அடித்துக் கண்டபடி திட்டினார்கள்.

''ஒங்களுக்கெல்லாம் தோள் சீல வேணுமோடி.''

பாட்டையாவையும் அப்பனையும் மிதித்து உதைத்து இழுத்துக்கொண்டு போனார்கள். அவர்கள் வீடு திரும்ப மூணு நாளாயிற்று. பாட்டையா அரண்டு போயிருந்தார். போன இடத்திலும் அடித்துக் கொடுமைப்படுத்தியிருக்கிறார்கள். அவர் கஷ்டப்பட்டு இருமும்போது ரத்தம் வந்தது. நெஞ்சுவலியில் படுத்து விட்டார்.

மூணு மாசம் படுக்கையில் கிடந்தார். எழுந்திருக்க முடியவில்லை. உயிர்த் தலம் வீங்கி மூத்திரம் பிரியாமல் வேதனைப்பட்டார். உடம்பு வலி தாங்காமல் உழத்தினார். தன்னையறியாமல் முனங்கினார். அந்த வேதனையிலும் மகனைக் கூப்பிட்டுச் சொன்னார்.

''பொன்னப்பா... உசிரு போனாலும் சரி பொண்ணுகள மட்டும் காப்பாத்தீடணும்.''

கொஞ்ச நாள் தோப்பைப் பற்றியே பேசினார். பலவேசத்தை அருகில் இருத்திக்கொண்டார். அவனைப் பிடித்தபடியே உயிர்பிரிந்தது.

பாட்டையா இல்லாமல் பலவேசத்துக்கு என்னமோ போலிருந்தது. யாரைக் கண்டாலும் வெறுப்பு கோவம். எவனையாவது கொன்றுவிட்டுக் கண்காணாத இடத்துக்கு ஓடிவிடலாமா என்று நினைத்தான். குடும்ப நினைவு வந்தால் அந்த வெறி அடங்கிவிடும். அப்பன் தனிமனுசனாக இருந்துகொண்டு என்ன செய்ய முடியும். துணைக்கு ஆளிருந்தால் விழுகிற அடியையாவது பகிர்ந்துகொள்ள லாம். அப்பனுடன் குடும்ப வேலைகளைக் கவனித்தான்.

ஊர்களில் கொந்தளிப்பு அடங்கிய பாடில்லை. எங்கேயும் இந்துக்கார நாடார்களின் எரிச்சலான வார்த்தை கேட்டது.

''நொழைய முடியாத கோயிலுக்கு ஏன் வரி குடுக்கணும்.''

''வரி குடுத்தா கோயிலுக்குள்ள போயிச் சாமி கும்புடணும்.''

''அவியளுக்கு மட்டுந்தானா சாமி. வேதத்துக்குப் போவாமரிந்து என்னத்தக் கண்டொம்.''

''கோயிலுக்குள்ள நொழைய வேண்டியதுதான்.''

பல ஊர்களில் கோயிலுக்குள் நுழைய முயற்சிசெய்தார்கள். மேல்சாதிக் காரர்கள் தடுத்தார்கள். கைகலப்பு ஏற்பட்டது சாதாரண நேரத்திலுங்கூட மோதிக் கொள்ளுமளவுக்குப் பகை வளர்ந்தது.

பலவேசத்தின் அக்காமார் ரெண்டு பேரும் கலியாணமாகி வெளியூருக்குப் போய்விட்டார்கள். அம்மைக்குத் துணை வேண்டியிருந்ததால் அவன் விரைவில் கலியாணம்முடித்தான். அருமனையிலிருந்து பகவதி துணைக்கு வந்தாள். கஷ்டங்களுக்கிடையிலும் அவர்களுக்கு மூணு குழந்தை பிறந்தது. ரெண்டு ஆண் ஒரு பெண். பொன்னுமாடன் செல்லப்பன் தங்கம்.

அப்பனுக்கு வயசாகிவிட்டது. தோப்பு வேலைகளைப் பலவேசம் கவனித் தான். வெட்டிச் சாய்த்த மரங்களில் சில வகை தளிர்த்துப் புதுசாகக் கிளை விட்டிருந்தன. தென்னங்கண்ணுகளை நட்டினான். குடும்பப் பொறுப்பு முழுக்க அவன் கைக்கு மாறியது.

அங்கங்கே பெண்கள் தோள் சீலை போடுவது நிற்கவில்லை. இவர்கள் போட அவர்கள் அடக்க தகராறு நாளுக்கு நாள் வலுத்துக்கொண்டுவந்தது. நாடார்கள் ரெம்பப் பேர் சர்க்காருக்கு முறையிட்டார்கள். வேதச் சாமியார்கள் தான் இதுக்கெல்லாம் காரணம் என்று அரண்மனையில் அதிகாரியாயிருந்த வெள்ளைக்காரத் துரை சந்தேகப்பட்டார். சாமியார்களுக்கோ துரைமேல் சந்தேகம். மகாராசா மேலும் கோவமிருந்தது. சர்க்காருக்கு எழுதிப்பார்த்தார்கள். இதெல்லாம் உள்ளூர் விவகாரம் என்று சர்க்கார் சும்மா இருந்துவிட்டது.

## 3. தீமிதி

இந்தச் சமயத்தில் பூவண்டந்தோப்பு முத்துக்குட்டிசாமி சனங்களுக்குத் தைரியமூட்டினார். அவர் நாடார் சாதியில் பிறந்தவர். மேல்சாதிக்காரர்களின் கொடுமைகளை வெறுத்துச் சாமியாரானவர். சனங்களிடம் தைரியமாகப் பிரசங்கம் செய்தார்.

''எல்லாரும் ஒண்ணா ஒரு மனசா இரிங்கோ. பயப்படாதீங்கோ. ஓட்டு வீட்டான் பிடியிலரிந்து நம்ம விடுபட்டாவணும். பொண்ணுக தோள் சீல போடுங்கோ. நம்ம ராச பரம்பரையச் சேந்தவங்க. சும்மாடு வைக்கவா நம்ம தலையிரிக்கு. அந்தக் காலத்துல பதினாறு வயசானதும் உருமாக்கட்டுத பழக்கம் நமக்குண்டு.''

அவர் பிரசங்கத்தைக் கேட்கச் சனங்கள் கூட்டங்கூட்டமாகப் போனார்கள். சாமியாராக இருந்துகொண்டு வீரமாகப் பேசுவதைக் கண்டு ஆச்சரியம். எல்லாரும் அவரை மரியாதையுடன் ''அய்யா'' என்று சொன்னார்கள். பிரசங்கம் முடிந்து திரும்பும்போது தலையில் உருமால் கட்டிக்கொண்டு வந்தார்கள். மனசில் புதுத் தெம்பு.

மேல்சாதிக்காரர்களுக்கு அவர்மேல் வெறுப்பு. நமக்கு ஊழியம் செய்கிற வர்களை இந்த மனுசன் கெடுத்துவிடுவான் போலிருக்கிறதே. இவனைத் தீர்த்துக் கட்டியாகணும்.

வேதக்காரர்களுக்கோ வேறு மாதிரிக் கவலை. வேதத்துக்கு ஆள் குறைந்து விடுமே. போகிற போக்கைப் பார்த்தால் வேதமே வேரற்றுப்போகுமோ.

மகாராசா அவரைப் பற்றிக் கேள்விப்பட்டார். ஏதேது அந்தச் சாதியில் பிறந்தவனுக்கு இவ்வளவு தைரியம் எங்கிருந்து வந்தது. இவன் பேச்சைக் கேட்டு நாடார்கள் வரி கொடுக்க மறுத்தாலும் மறுப்பார்கள். அப்புறம் கஜானா காலி. மேல்சாதிக்காரர்களிடம் நல்ல அபிப்பிராயம் இருக்காது. வேதத்துக்கு இடைஞ்சல் வந்தால் வெள்ளைக்காரர்கள் ஒருமாதிரியாகப் பார்ப்பார்கள்.

அரண்மனையில் உள்ளவர்கள் தூபம்போட்டார்கள். மகாராசா ஒரு முடிவுக்கு வந்தார். முத்துக்குட்டிசாமியைக் கைதுசெய்ய உத்தரவுபோட்டார். கைது செய்யப் போனவர்கள் அவரை அடித்து உதைத்து மேல்சாதித் தெருக்களில் இழுத்துவந்தார்கள். வேடிக்கைபார்த்த மேல்சாதிக்காரர்கள் அவர்மேல் கல் லெறிந்தார்கள்.

''சாணாப்பயலக் கொல்லு.''

''பயமவனுக்கு உருமா வேணுமோ.''

''தோள் சீலையா போடச் சொல்லுத.''

அவர் எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டு அமைதியாக நடந்தார்.

அவரை செயிலுக்குள் தள்ளினார்கள். மூணு மாசத்துக்குமேல் இருந்தார். மகாராசா அவரைக் கொடுமைப்படுத்தினார். கடுவாயை ஏவிவிட்டுக் கொல்லப் பார்த்தார்கள். அது ஒரு நம்பூதிரியைக் கொன்றுவிட்டது. அடடா கதை இப்படி யாகிவிட்டதே என்று எல்லாருக்கும் கடுப்பு.

கடைசிக்கு பூவண்டர் என்ற பெரிய மனுசன் மகாராசாவிடம் பேசி முத்துக் குட்டிசாமியின் விடுதலைக்கு ஏற்பாடுசெய்தார். வேண்டாவெறுப்பாக அவரை விடுதலை செய்தார்கள்.

முத்துக்குட்டிசாமி விடுதலையான பிறகும் சும்மா இருக்கவில்லை. தொடர்ந்து பல காரியங்களைச் செய்தார். சனங்கள் ஒண்ணுசேரும் வழிகளைச் சொன்னார். சில பழக்கவழக்கங்களை மாற்றச் சொன்னார்.

''சாமிக்குப் பலியிடாதீங்கோ. பேயக் கும்புடாதீங்கோ.''

முத்திரிக் கிணறு வெட்டிப் பந்தி நடத்தினார். சாதி வித்தியாசமில்லாமல் பலரும் அதில் கலந்துகொண்டார்கள். குடிமகன் வீட்டில் சாப்பிடச் சனங்களை அனுப்பினார். அவரைக் கெடுக்க என்னென்னமோ முயற்சி நடந்தது. பலிக்க வில்லை.

கொஞ்ச நாளில் அவர் நோயில் விழுந்து இறந்துவிட்டார். நாடார்களுக்கு இது பெரிய நட்டம். இருந்தாலும் அவர்கள் துவண்டுவிடவில்லை. தோள் சீலை போட்டுக்கொள்வதில் வேதம் இந்து என்ற வித்தியாசமில்லாமல் ஒண்ணுசேர்ந்து காரியத்தில் இறங்கினார்கள். பொது இடங்களில் பெண்கள் தோள் சீலையுடன் நடமாடினார்கள். இதனால் நேரடியான கலவரம் வெடித்தது.

களியக்காவிளைச் சந்தைக்குப் போன பெண்களின் தோள்சீலை ரவிக்கையை சர்க்கார் சிப்பந்திகள் கிழித்துவிட்டார்கள். பெண்கள் அலறிக்கொண்டு ஓடி வந்தார்கள். ஆண்களுக்குப் பொறுக்கவில்லை.

''சர்க்காரு வேல செய்ற பயலுவளுக்குத் திமிரப் பாரு.''

''அவனும் ஓட்டு வீட்டானும் கூட்டாளியாச்சே.''

''ரண்டு பேரவும் கொல்ல வேண்டியதுதான்.''

சண்டை மூண்டது. வீடுகள் நொறுங்கின. மூணு பள்ளிக்கூடமும் வேதக் கோயிலும் கொளுத்தப்பட்டன. நாகர்கோயில் வேதக் கோயிலிலும் தீவைக்கும் முயற்சி நடந்தது. தடுத்துவிட்டார்கள். கோட்டாறில் பல கடைகள் சூறையாடப் பட்டன. கலவரத்தை அடக்க மகாராசாவின் அரண்மனையிலிருந்து நாயர் படை வந்தது.

நாடார்களும் பின்வாங்கவில்லை. அகஸ்தீஸ்வரத்தில் கலகக்காரர்களை எதிர்த்துத் தாக்கினார்கள். அவர்களுக்கு உதவியாக திருநெல்வேலிச் சீமையி லிருந்தும் நாடார்கள் வந்தார்கள்.

கொட்டாரம் வழியாகப் புத்தன் சந்தைக்குப் போன பெண்ணை ஒரு மேல் சாதிக்காரன் வழிமறித்துத் தோள் சீலையைக் கிழித்திருக்கிறான். அப்போது அவள் தாலி அறுந்துவிட்டது. அவள் பதறியடித்து இலந்தையடிக்கு ஓடிப்போய் முறையிட்டாள். உடனே ஊர் முழுக்கத் திரண்டுவிட்டது.

''எவன் கட்ன தாலிய எவன் தொடுதது.''

''தாலியத் தொட்டவன் கைய வெட்டணும்.''

எல்லாரும் கொட்டாரத்துக்குப் போய் மேல்சாதிக்காரர்களையும் சிப்பந்தி களையும் அடித்தார்கள். ரெண்டு பக்கமும் சேதம். சண்டைக்குப் பிறகு நாடார்கள் கூடிப் பேசினார்கள்.

''இவனுவ போற சந்தைக்கு நம்ம பொண்ணுவள அனுப்புதது தப்பு.''

''சந்தைக்குப் போயிப் பண்டம் வாங்கணுமே.''

''அப்ப தாலியவும் அறுப்பான் தலமுடியவும் அறுப்பான்.''

''என்னதான் செய்யச் சொல்லுதிய.''

ஒருவன் சொன்னான்.

''நமக்குன்னு ஒரு சந்தையிரிந்தா இந்தக் கஸ்டம் எதுக்கு.''

''அப்படித்தான் செய்யணும்.''

தனியாக ஒரு சந்தையை உண்டுபண்ணினார்கள். ஊர்களுக்குச் சொல்லி யனுப்பினார்கள். எல்லாரும் அங்கேயே வரணுமென்று முடிவானது.

பிறகும் சண்டை நின்ற பாடில்லை. இந்துக்காரர்களும் வேதக்காரர்களும் சேர்ந்துகொண்டு மேல்சாதிக்காரர்களை எதிர்த்துத் தாக்கினார்கள். தொட்டுத் தொட்டுப் பகை விளைந்துகொண்டிருந்தது.

கிட்டத்தட்ட பத்து வேதக் கோயில்கள் தீயில் பொசுங்கிவிட்டன. நிறைய வீடுகள் சாம்பலாயின. நாகர்கோயிலில் வெள்ளைக்காரத்துரை தங்கும் பங்களா வும் எரிந்துபோயிற்று. நல்ல வேளை இருபுறமும் உயிர்ச்சேதமில்லை.

ஏராளமான சனங்கள் தாக்குப்பிடிக்க முடியாமல் குடிகிளம்பித் திருநெல் வேலிச் சீமைக்குப் போய்விட்டார்கள். இடையன்குடியில் கூட்டம் நிரம்பி வழிந்தது. அதைப் பார்த்து வருத்தப்பட்ட சாமியார் சர்க்காருக்கு எழுதினார். பலர் வெள்ளைக்கார மகாராணிக்கு முறையிட்டார்கள்.

கலவரச் சேதி சென்னபட்டணத்துக்கு எட்டிவிட்டது. கவர்னர் யோசித்தார். இந்த நிலைமை நல்லதுக்கில்லை. மகாராணிக்குத் தெரிந்தால் என்ன செய்வது.

நாடார்கள் கொஞ்சங்கொஞ்சமாக வேதத்துக்கு மாறிவரும் சமயத்தில் அவர் களை இம்சைப்படுத்தினால் எப்படி. வந்தவர்களும் ஓடிவிடுவார்கள். இதை மலையாள மகாராசாவுக்கு வெளிப்படையாகவும் எழுத முடியாது. அவர் கப்பம்கட்டுகிறவர். தர்மசங்கடமான நிலைமை.

மகாராசவுக்கோ கவலை வேறு மாதிரி. சனங்களிடமிருந்து வரிப் பணம் வரணும். அதே சமயம் மேல்சாதிக்காரர்களையும் திருப்திப்படுத்தணும்.

சர்க்காரிடமிருந்து அரண்மனைக்கு ஒரு கடிதம் வந்தது. தோள் சீலை போடு வதைத் தடுப்பது காலத்துக்கு ஒவ்வாத காரியம். படித்த ராசாவுக்கு இது அழ கில்லை என்று பக்குவமாகச் சொல்லியிருந்தது.

மூணு மாசத்துக்கு மேலாகியும் ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. கவர்னருக்கு ரெம்ப வருத்தம். மூளையைக் குடைந்து ஒரு பொருத்தமான காரணத்தைக் கண்டுபிடித்தார். மகாராணியோ பெண். அவர் ஆட்சியில் பெண் களுக்குப் பாதுகாப்பு வேணுமில்லையா. பிறகு மகாராணி கோவித்துக்கொள் வார். கவர்னர் சுதாரித்துக்கொண்டார். இதில் ஒரு திடமான முடிவு எடுக்கப்பட வில்லையென்றால் உலகமே வெட்கப்படும். மகாராணியின் இனத்தைச் சேர்ந்த பெண்களுக்கே இக்கதியா. அது மரியாதையில்லை என்று எச்சரிக்கும் விதத்தில் மலையாள மகாராசாவுக்கே ஓலையெழுதிவிட்டார்.

அரண்மனையில் இப்போதுதான் முழித்துப்பார்த்தார்கள். மகாராசாவுக்கு உள்ளுக்குள் பயம். ஏதுடா நமக்கே சங்கடம் வந்துவிடும் போலிருக்கிறதே. இனி மேலும் சும்மா இருக்கக் கூடாது. திவானைக் கூப்பிட்டார்.

''என்ன செய்யலாம். நீரே வழி சொல்லும்.''

திவான் நெளிந்தார்.

''மகாராசாவுக்குத் தெரியாததா.''

''அந்தப் பெண்கள் தோள் சீலை போட்டா ஆரு குடியும் முழுகிப்போயி டாது இல்லையா.''

''இருந்தாலும் மகாராசா...''

''அவனுவ நாயர் வீட்லயும் நம்பூதிரி வீட்லயும் நொழஞ்சிடுவானோ.''

''அதில்ல மகாராசா. ரண்டு பெண்களுக்கும் வித்தியாசம் வேணுமில்லையா.''

''அவ்வளவுதான. அப்படியே செஞ்சாப்போச்சு.''

''அப்பத்தான் நம்ம ரண்டு பக்கமும் நல்ல பிள்ளையாவலாம்.''

அரண்மனையிலிருந்து உடனே உத்தரவு வந்தது. அதாவது நாடார் பெண்கள் எல்லாரும் தோள் சீலை போட்டுக்கொள்ளலாம். ஆனால் மேல்சாதிப் பெண் கள் அணியும் சாயலில், அதாவது, அவர்கள் என்னென்ன துணிமணிகள் உடுத்து கிறார்களோ அந்த மாதிரி உடுத்தக் கூடாது. நாடார்களுக்குக் கொண்டாட்டம். பெண்கள் தோள் சீலை போட்டுக்கொண்டு குதூகலமாக நடந்தார்கள். வேதக் கோயில்களில் செபம் நடந்தது.

''பாவிகளை ரட்சித்த கர்த்தரே உமக்குத் தோத்திரம்.''

குரலுயர்த்தி மனமுருகிப் பாடினார்கள். இதையெல்லாம் பார்த்துச் சந் தோசப்பட முத்துக்குட்டிசாமி இல்லை.

என்ன இருந்தாலும் நாடார்கள் இந்துக் கோயிலுக்குள் நுழைய முடியாதது பெரிய குறையாகவே இருந்தது. சுசீந்திரம் தாணுமலையான் கோயிலுக்குப் பக்கத்தில்கூட நிற்க முடியாது. திருவிழா நடக்கும் தெருக்களில் நுழைய முடியாதபடி தெருமறைச்சான் போட்டுத் தடுத்துவிடுவார்கள். இதனால் நாடார் களுக்கு வைராக்கியம் கிளம்பியது. எப்படியும் கோயிலுக்குள் நுழையணும். அதுக்காகச் சண்டை வந்தாலும் துணிந்து எதிர்க்கணும். தொடர்ந்து திட்ட மிட்டார்கள்.

குமரகோயில் திருவிழா ரெம்பப் பிரசித்தமானது. சனங்கள் ஏராளம் கூடிக் கொண்டாடுவார்கள். தீமிதியாட்டம் பார்க்கவென்றே கூட்டம் வரும். தீமிதி யில் மேல்சாதிக்காரர்கள் மட்டுமே கலந்துகொள்வது வழக்கம். விரதமிருந்து பயபக்தியுடன் சாமியாடுவார்கள்.

அந்த வருசம் திருவிழா நெருங்கிக்கொண்டிருந்தது. நாடார்கள் மத்தியில் இதே பேச்சு.

''திருவிழாவுக்கு நம்ம வரி குடுக்க வேணாம்.''

''பக்கத்துலரிந்து திருவிழாவப் பாக்க முடியல. அதுக்கு ஏன் வரி குடுக்கணும்.''

''இந்த அநியாயத்துக்கு ஒரு முடிவு கண்டாவணும்.''

''எல்லாரும் வரி குடுப்பொம். திருவிழா நடக்கட்டும். அவனுவளப் போல நம்மளும் கோயிலுக்குப் போவொம்.''

''அவனுவளோட தீமிதிப்பொம்.''

''தீமிதிக்கிததுக்கு பெரிய சத்தி வேணுமாம். நமக்கும் சாமி குடுக்காதா என்ன. பீத்திக்கிறானுவ.''

''தீமிதிக்கணும் இல்ல அந்த எடத்துலயே சாவணும்.''

''கோயிலுக்குள்ள நொழஞ்சு சாமி கும்புடணும்.''

''இதுதான் முடிவு.''

''எல்லாரும் தீமிதிக்கக் கூடாது. கொஞ்சப் பேரு எறங்குனா மத்தவங்க பாதுகாப்பா நிக்கணும்.''

வெள்ளைய நாடார் சொன்னார்.

''ஆரும் எறங்க வேணாம். நான் மட்டும் எறங்குதென். நீங்க எதுக்குந் தயாரா நில்லுங்க. முன்யோசனையில்லாமப் போயி அவனுட்டத் தோத்துட்டு வரப்புடாது.''

எல்லாருக்கும் இது சரியென்று பட்டது. அப்படியே முடிவெடுத்தார்கள்.

வெள்ளைய நாடார் தீமிதிக்கப் போகும் சேதி ஊர்களுக்கு எட்டியது. சனங்களுக்கு உளைச்சல்.

''என்னாவப்போவுதோ.''

''ஆனது ஆவட்டும். நம்மாளு தீமிதிக்கப்போறான். அதப் பாக்காம இரிக்க முடியுமா.''

திருவிழா நெருங்கநெருங்க எல்லாருக்கும் இருப்புக்கொள்ளவில்லை. மேல்சாதிக்காரர்களுக்கும் சூடு கிளம்பியது.

''திமிராக்கும்.''

''கோயில்ல வச்சு ரண்டுல ஒண்ணு பாத்துடணும்.''

பெரியவர்கள் வேறு மாதிரி சொன்னார்கள்.

''வந்தா நெருப்புல விழுந்து சாவட்டும். அவன ஏன் தொடணும்.''

மற்றவர்கள் கேட்பதாக இல்லை.

''தீயில விழுந்து சாவறவரைக்கு விட்டுவைக்கணுமோ. எறங்குததுக்கு முன்னாலயே தீத்துக்கட்டியிடணும்.''

இருபுறமும் மோதித்தான் நிற்குமென்ற நிலைமை. வரிந்துகட்டிக்கொண்டு திருவிழாவை எதிர்பார்த்தார்கள்.

பலவேசம் திருவிழாவுக்குப் போகணுமென்று எப்போதோ முடிவுசெய்து விட்டான். அப்பனின் முணுமுணுப்பு கேட்டது.

''கோயிலுக்குப் போய்த்தான் ஆவணுமா.''

பலவேசம் கோவமாகச் சொன்னான்.

''இங்க ஒளிஞ்சுக்கிட்டு இரிக்கவா.''

''போயி என்ன செய்ய.''

''நான் மட்டும் போயிட்டு வாறென்.''

''நீங்க எல்லாரும் இரிங்க நான் போறென்.''

பலவேசத்தின் மகன் பொன்னுமாடன் சொன்னான்.

''ஆரு வந்தாலும் வரலன்னாலும் நான் போவென்.''

அவனுக்குக் கலியாணமாகி ஒரு வருசம் ஆகியிருக்காது. பிள்ளைகளைப் பார்க்க வேண்டியவன். அவனை அனுப்பிவிட்டு பெரிவர்கள் எப்படி வீட்டி லிருப்பது. அவனுக்கடுத்து தம்பியும் தங்கச்சியும் இருக்கிறார்கள். அவர்களுக்குக் காலாகாலத்தில் வழிதேடிக் கொடுக்கணும். இந்த நிலைமையில் கோயிலுக்குப் போய் யாருக்காவது ஏதும் ஆகிவிட்டால் பெண்களைக் காப்பாற்றுவது எப்படி.

பெண்களை மட்டும் வீட்டில் விட்டுவிட்டுப் போகவும் முடியாது. அது பாதுகாப்பில்லை. பெண்களுக்கும் அதில் சம்மதமில்லை. பல யோசனைக்குப் பிறகு எல்லாரும் கோயிலுக்குப் போவதென்று முடிவுசெய்தார்கள்.

இருபக்கமும் வரிந்துகட்டிக்கொண்டு கோதாவில் இறங்கினார்கள். ஊர்களுக்குத் தகவலனுப்பி ஒருவர் பாக்கியில்லாமல் கோயிலுக்கு வரணு மென்று உத்தரவு போட்டார்கள். ஆயுதமில்லாத ஆள் கிடையாது.

நாடார்கள் திட்டமிட்டுக் காரியங்களைச் செய்தார்கள். ஆண்கள் எல்லாரும் வெள்ளைய நாடாருக்குப் பாதுகாப்பாகப் போகணும். பெண்கள் பத்திரமான இடங்களில் இருக்கணும்.

திருவிழா அல்லோலகல்லோலப்பட்டது. தாங்காத கூட்டம். நாடார்கள் வெறியைக் கட்டுப்படுத்த முடியாமல் கோயிலுக்கு நடந்தார்கள். நடுவில் கம்பீரமாக வெள்ளைய நாடார். கூட்டம் கோயிலோரம் நின்றது. வெள்ளைய நாடார் பூசை முடித்துச் சாமியை வணங்கிவிட்டு நெருப்புக்குள் துள்ளிக் குதித்தார். கூட்டம் பரவசத்தில் கூச்சலிட்டது. வெள்ளைய நாடார் அங்குமிங்கும் ஓடி ஆடினார். அவரது துடியான ஆட்டத்தைப் பார்த்து மேல்சாதிக்காரர்களுக்கு ஒண்ணும் ஓடவில்லை. திகைத்து நின்றிருந்தார்கள்.

வெள்ளைய நாடார் ரெம்ப நேரம் ஆடி முடித்துக் கோயில் வாசலுக்கு ஓடினார். அவரைத் தொடர்ந்து கூட்டமும் ஓடியது. பலவேசமும் மக்களும்

கத்திக்கொண்டு கூட்ட நெரிசலுக்குள் பாய்ந்து முன்னேறினார்கள். ஆயிரக் கணக்கில் கூடியிருந்த நாடார்களை யாராலும் தடுத்து நிறுத்த முடியவில்லை.

வெள்ளைய நாடார் கோயிலுக்குள் நுழையப் போனார்.

''சாணான விடாத.''

நாயர்கள் குறுக்கிட்டார்கள். நாடார்கள் திமிறினார்கள்.

''எவண்டா தடுக்கிதது.''

அதுக்குமேல் குரல்கள் தெளிவாகக் கேட்கவில்லை. கைகலப்பில் ஏகமாகக் கூச்சல் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது.

கோயிலைச் சுற்றிக் கூடியிருந்த சனங்கள் மிரண்டு ஓடினார்கள். வெட்டுக் குத்தில் அடிக்கடி அலறல் கேட்டது. கொஞ்ச நேரத்தில் நூறு இருநூறுக்கு மேல் பிணங்கள் சாய்ந்துவிட்டன. ஆடுகோழிகளைப் போல் பலியாகிக் கிடந்தார்கள். பல சாதிப் பிணங்கள். சாவு முனங்கல் தெளிவில்லாமல் கேட்டது.

பலவேசத்துக்கு இடது மணிக்கட்டில் சரியான வெட்டு. பொன்னுமாடனும் செல்லப்பனும் புகுந்து விளாசித் தப்பித்துவிட்டார்கள். அவர்களுக்குக் கல்லெறி பட்டுச் சிறுசிறு காயங்கள். பெண்கள் பொன்னப்பனுக்குப் பின்னால் காட்டுப் பாதை வழியாகக் கல்விளைக்கு வந்துவிட்டார்கள். கொஞ்ச நேரத்தில் மற்றவர் களும் வந்து சேர்ந்தார்கள்.

''இனி இங்க இரிக்கக் கூடாது. ஓட்டு வீட்டான் சும்மா விட மாட்டான். சர்க்காருக்குச் சொல்லி நசுக்கீடுவான்.''

அப்பனுடைய அவசரம் பலவேசத்துக்குப் பிடிக்கவில்லை.

''அப்படிப்பட்ட உசிரு நமக்கு வேணாமே. எவனும் வரட்டும்.''

''நீயென்ன அறிவில்லாமப் பேசுத. வீட்ல பொண்ணுவளும் பயலுவளும் இருக்கிதத மறந்துட்டயா.''

பலவேசத்தின் பெண்டாட்டியும் அப்படித்தான் நினைத்தாள்.

''எங்கயாவது போயாவணும்.''

கைக்கு அகப்பட்ட சாமான்களைப் பொறுக்கிக்கொண்டு ராவோடு ராவாகக் கிளம்பினார்கள். பலவேசம் இருட்டிலும் தோப்பைத் திரும்பிப் பார்த்தான்.

மூணு நாள் நடை. வழி நெடுகப் பயம். ஒரு வீட்டில்கூடத் தண்ணீர் கேட்டுக் குடிக்கவில்லை. வர்ணம் என்னவென்று விசாரித்தால் எப்படிச் சமாளிப்பது. ராத்திரி வேளையில் ஒதுங்கலான இடங்களில் தங்கினார்கள். பெண்கள் உறங்க ஆண்கள் காவலிருந்தார்கள்.

ஓட்டமும் நடையுமாக நாலாம் நாள் கழுகுமலைக்கு வந்து சேர்ந்தார்கள். நடந்த அலுப்பில் பெண்களைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஊருக்குள் யாரிடமும் விவரம் கேட்காமல் கீழக் கடைசிப் பள்ளக்குடிக்குப் போய் நாடார் தெருவை விசாரித்தார்கள். ஒருவன் கூட்டிக்கொண்டு போனான்.

## 4. வந்த இடமே சொந்தம்

பலவேசத்துக்கு நாடார் தெருவில் வீடு கொடுத்து ஆதரித்தார்கள். அடுப்பில் உலையேறியது. வயிறாரக் கஞ்சி குடித்துக் குடும்பம் செழிப்பானது. அவனும் மக்களும் கூலி வேலைக்குப் போனார்கள்.

அவனுக்குப் பெரிய நாடார் துணை கிடைத்தது. நடந்த கதையைச் சொல்லிப் பாரத்தை இறக்கினான். நிரந்தரமான பிழைப்புக்கு வழி கேட்டான். பெரிய நாடார் நிலைமையை எடுத்துச்சொன்னார்.

''இனி அங்க போவப்புடாது. போனாச் சள்ளதான். இங்க ஏதாச்சும் தொழிலப் பாரும்.''

''வேற தொழிலு தெரியாதே.''

''பனையேறப் போட்டியா வாரும்.''

பெரிய நாடார் களங்கமில்லாமல் சிரித்தார். அவனுக்கு ஆறுதலாக இருந்தது.

''வேற தொழிலு பாக்கணும்னாக் கைவசம் பணம் வேணும்.''

''ஊருல நெலம் உண்டா.''

''தோப்பு உண்டு. வீடும் வீட்டச் சுத்திக் கொஞ்சம் நெலமும் உண்டு.''

''அத வித்துடதுதான் நல்லது.''

''வாங்க ஆளு வேணுமே.''

''இப்பப் போவ வேணாம். சமயம் பாத்துப் போயிப் பேசி முடிச்சிட்டு வாரும்.''

ஊர்ப் பக்கம் கலவரம் எப்போது மட்டுப்படும் என்று அவன் காத்திருந் தான். தகவல் கிடைத்ததும் கிளம்பிப் போனான். அங்கே பதட்டம் குறைந்திருந் தாலும் பயமாக இருந்தது. யாரிடமாவது அகப்பட்டுக்கொண்டு ஏதும் நடந்து விட்டால் குடும்பம் நடுத் தெருவில் நிற்குமே.

எப்படியோ ஒரு பணக்கார நாடாரைப் பார்த்துச் சங்கதியைச் சொன்னான். அவர் ரெம்பக் குறைந்த விலைக்குக் கேட்டார். அவன் கெஞ்சிக் கூத்தாடினான். இழுபறியாகி ஒருவழியாக விலை திகைந்தது. கைக்குப் பணம் வந்த பிறகுதான் நிம்மதி. அதைப் பத்திரமாகக் கொண்டுவந்து சேர்ப்பதற்குள் பெரும்பாடாகி விட்டது.

அவன் மனசு வியாபாரத்தில் நோங்கியது. பெரிய நாடாரிடம் யோசனை கேட்டான்.

''கருப்பட்டி யேவாரம் செய்யலாம்னு தோணுது.''

''நல்ல தொழிலு.''

அவன் தலைச் சுமையில் வியாபாரத்தை ஆரம்பித்தான். கருப்பட்டி வைக்கத் தோதாக பெரிய நாடார் கடகாப் பெட்டி ஒண்ணு முடைந்து கொடுத்தார். கை பிடிக்காமலேயே சும்மாட்டில் சுமக்க வாகாக இருந்தது. அவன் கேட்டான்.

''ரண்டு பேரும் தொணைக்குத் தொணையா யேவாரத்துக்குப் போவமே.''

பெரிய நாடார் சொல்லிவிட்டார்.

''அதெல்லாம் நமக்கு ஒத்துவராது. பயினி அனயம் வந்தா கருப்பட்டி காச்சித் தாறென். கொண்டுபோயி வித்துட்டு வாரும்.''

அவர் அவ்வளவாகப் பனை வேலைக்குப் போவதில்லை. எல்லாம் அம்ம முத்து பார்த்துக்கொள்வான். அவனுக்குங்கூட வியாபாரத்தில் விருப்பமில்லை. பனை வேலை இல்லாத சமயத்தில் கிடைக்கிற வேலைக்குப் போவான்.

மிச்சப் பதினி இருந்தால் பெரிய நாடார் உள்ளூரில் விற்கப் போவார். ஓலைக் கட்டு வாங்கக் கலிங்கலூருணி முதல்கொண்டு சுத்துப்பட்டிகளிலிருந்து வருவார்கள். உள்ளூரில் நடக்கும் வாரச் சந்தையிலும் திருவிழாக்களிலும் சாதாரண ஓலைக் கொட்டான் வெற்றிலைக் கொட்டான் திருநீற்றுக் கொட்டான் கிலுக்கு பெட்டி பாய் குருத்தோலை நார் என்று பலவகையான பண்டங்கள் விற்கும். வைகாசி விசாகம் தைப்பூசம் பங்குனி உத்திரம் இந்த மூணுந்தான் முருகனுக்குப் பெரிசாக நடக்கும் திருவிழாக்கள். தைப்பூசத்துக்கும் பங்குனி உத்திரத்துக்கும் தேரோடும். நாலா ஊர்களிலிருந்தும் தேரோட்டம் பார்க்க ஏராளமான சனங்கள் வருவார்கள்.

ரெண்டு திருவிழாச் சமயத்திலும் பதினஞ்சு நாள் மாட்டுத் தாவணி நடக்கும். அந்தப் பக்கத்திலேயே அதுதான் பெரிய தாவணி. ரெம்பத் தொலவட்டிலிருந் தெல்லாம் நூற்றுக் கணக்கில் மாடுகள் வரும். சம்சாரிகள் வியாபாரிகள் தரகர்கள் என்று குமிந்துவிடுவார்கள். அடேயப்பா தாவணி வீதியை உச்சி மலையிலிருந்து பார்க்கணும். ஊருக்குத் தென்புறம் மாடுகள் சமுத்திரமாக விரிந்து கிடக்கும். எலி களைப் போல் நடமாடும் சனங்கள். மலைமலையாக மாட்டுச் சாணிக் குமிகள்.

பலவேசம் சளைக்காமல் நடந்து கருப்பட்டி விற்றான். தனியாகப் போவ தில்லை. வழியில் கள்ளர் பயம் ரெம்ப உண்டு. எந்த நேரத்தில் வழிப்பறி நடக்கு மென்று தெரியாது. மதிய நேரம் மரத்தடியில் ஆந்தனேசோந்தனே என்று உட் கார முடியாது. உச்சிக் கொப்பில் நாலு பேர் அருவமில்லாமல் தொற்றியிருப் பார்கள். மலங்காட்டுப் பாதையென்றால் சொல்லவே வேணாம். மூடி முழிக்கு முன் வழியை மறித்துக்கொண்டு நிற்பான். அவன் மீசையும் முரட்டுத் தோரணை யும். விதவிதமாக ஆளுக்கொரு ஆயுதம் வைத்திருப்பான். தனியாக எதிர்த்து நின்று சமாளிக்கவும் முடியாது. கால் கடுக்க அலைந்து கூவிக்கூவி விற்றுக் கை சேர்ந்ததைக் கொடுத்துவிட்டு முக்காடு போட்டுக்கொண்டு வரணும். அதோடு விட்டாலே பெரிய காரியம்.

இதுக்காகத்தான் நாலஞ்சு பேராகச் சேர்ந்து போவது. கைவசம் ஆயுதம் கொண்டுபோவார்கள். இடுப்பில் சூரி இருக்கும். பெட்டிக்கடியில் கையரிவாள் கிடக்கும். கருப்பட்டி கருவாடு உப்பு புளி என்று பலவிதமான வியாபாரிகள் இருப்பதால் ஒரே ஊருக்குச் சேர்ந்து போவதில் கஷ்டமில்லை. ஒருவருக்கொருவர் போட்டி இருக்காது.

ஊர்களில் சுற்றித் திரிந்துவிட்டுப் பொழுதடைய பத்திரமான இடத்துக்குத் திரும்பிவிடணும். அங்கேதான் ராத்தங்கல். வீட்டிலிருந்து கொண்டுவந்த கட்டுச் சோறு காலியாவதற்குள் விற்றுத் தீர்ந்துவிட்டால் தங்கல் குறையும். இல்லை யென்றால் மேற்கொண்டு தங்கி விற்று முடிந்த பிறகுதான் வீட்டு நினைப்பு வரும். அப்படிச் சமயங்களில் ஆளுக்கு இவ்வளவென்று வரி வசூலித்து அந்தப் பணத்தில் பண்டங்கள் வாங்கிச் சமைத்துச் சாப்பிடுவார்கள். உப்பு புளி கருவாடு பற்றிக் கவலையில்லை. ராத்திரிக்கு ரெண்டு மூணு பேராக முறைபோட்டுக் காவலிருக்க மற்றவர்கள் உறங்குவார்கள்.

ஒவ்வொருவரும் அன்றைக்கு நடந்த அனுபவங்களைக் கதையாகச் சொல்லி முடிக்கவே சரியாக இருக்கும். திடீரென்று ஒருவர் பாட்டு எடுத்துவிடுவார்.

''கழுகுமலைச் சந்தையிலே
கண்டெடுத்த மாம்பழமாம்
கண்டெடுத்த மாம்பழமும்
கடைசிவரை இனிக்குதய்யா
இனிப்புத் தந்ததாரு — அத
எடுத்துத் தின்னதாரு.''

கொட்டாவி நெரிப்பில் உறக்கம் சுருட்டியதே தெரியாது.

கூட்டமாகத் திரிந்தும் கள்ளர்கள் கைவரிசையைக் காட்டிவிடுவதுண்டு. தனியாகப் பிரியும் சமயம் பார்த்துத் தட்டிப் பறித்துவிடுவார்கள். இதனால் பலருக்குக் கைகால் ஒச்சமாகியிருக்கிறது. பலவேசத்துக்கு விழுந்த அடியில் வலது தோள்பட்டை இறங்கிவிட்டது. சில சமயம் உயிர்ச் சேதமும் ஏற்படும். பாவிகள் ஆலங்குளம் கருப்பையா நாடாரை அடித்தே கொன்றுவிட்டார்கள். அவரும் லேசுக்குள் சிக்க மாட்டார். ஒத்தைக்கொத்தை வந்திருந்தால் உண்டு இல்லை யென்று போட்டுப்பார்த்திருப்பார். அவருக்குப் போதாத காலம் வகையாக மாட்டிக்கொண்டார்.

ராத்திரி முழுக்கத் தேடினார்கள். வெள்ளங்காட்டி வெயில் காட்டிக் கொடுத்தது. கொக்குளத்துக்குக் கிழக்கே சுமைதாங்கிக் கல்லில் குப்புறப் படுத்திருந்தார். மண்டை நொறுங்கி முகம் அழிந்துவிட்டது. ஊமையடியாக அடித்திருக்கிறார்கள். தரையில் கவுந்திருந்த ஓலைப் பெட்டியைச் சுற்றிக் கருவாடு சிதறிக் கிடந்தது. நடுவில் ரத்தக் கறையுடன் அரிவாள். நிச்சயம் அவர் ஒருவனையாவது வெட்டியிருக்கணும். கறையாழத்தைப் பார்த்தால் சரியான வெட்டுத்தான். உயிர்பிழைப்பது கஷ்டம்.

சுமைதாங்கிக்கு வடக்கே கரிசக் காட்டு மூலையில் அவரை அடக்கம் செய் தார்கள். கொஞ்ச நாள் கழித்து அந்த இடத்தில் இடுப்பளவுக்குச் சமாதி எழுப்பி னார்கள். அந்த வழியாக வியாபாரத்துக்குப் போகிறவர்கள் அவரைக் காவல் தெய்வமாக நினைத்துக் கும்பிட்டார்கள். வெள்ளி செவ்வாய் ராத்திரியில் சமாதி யின் மாடாக் குழியில் அகல் விளக்கு முணுக்முணுக்கென்று ரெம்ப நேரம் எரிந்து கொண்டிருக்கும். அவர் முகத்தைப் பார்க்காதவர்கள்கூட அந்தக் கடமையைச் செய்வது வழக்கமாகிவிட்டது.

பலவேசம் பொதிமாடு ஒண்ணு வாங்கி தலைச் சுமையை மாற்றினான். தெற்குச் சீமைக்குப் போய்க் கணிசமாகக் கருப்பட்டி வாங்கி வந்து விற்றான். கையில் கொஞ்சம் துட்டுப் புழங்கியது. வீட்டுப்பாட்டுக்குத் தானியமும் கிடைத்தது.

அப்போதும் அவன் தனியாகப் போவதில்லை. உள்ளூரிலேயே நாலு வியா பாரிகள் துணை சேர்ந்தார்கள். ஒருவர் கருப்பட்டி ரெண்டு பேர் கருவாடு ஒருவர் புளி. இப்போது மனுசரோடு மாட்டையும் கள்ளர்களிடமிருந்து காப்பாற்றியாக வேண்டிய நிலைமை. அசந்தால் மாட்டை ஒதுக்கிக்கொண்டுபோய் விற்றுவிடு வார்கள் இல்லை தின்றுவிடுவார்கள். அதுக்கென்றே களவாணிகள் உண்டு.

குளிக்கவும் குடிக்கவும் ஊருணிகள் தோதாக இருந்தன. அங்கங்கே வேறு நீர்நிலைகளையும் கண்டுபிடித்து வைத்திருந்தார்கள். வெயிலுக்குத் தவிப்பாற ஒதுக்குப்புறமான மரங்களைத் தேடிப் போனார்கள். நிழல் ரெம்ப வேணுமென்று அங்கே மரக் கண்ணுகளை நட்டிவைத்தார்கள். விரைவிலேயே அந்த இடம் சிறு தோப்பாக மாறிவிட்டது. அதனால் அங்கே வந்து தங்குகிறவர்கள் எண்ணிக்கை கூடியது.

பெரிய நாடார் பலவேசத்திடம் சொன்னார்.

''எத்தன நாளைக்குப் பொதிமாட்டோட மல்லுக்கெட்டப் போறீரு. வண் டின்னா அனயம் கருப்பட்டி கொண்டுவரலாமில்ல.''

அந்தப்படியே அவன் பொதிமாட்டை விற்று ஒத்தைக் காளையும் வண்டியும் வாங்கினான். மற்றவர்களும் வியாபாரத்தை வண்டிக்கு மாற்றிக் கொண்டார்கள். அதனால் நிறைய ஊர்களுக்குச் சுற்ற முடிந்தது. வண்டிகள் பெருகப்பெருகத் தங்குவதற்கு விசாலமான இடம் தேவைப்பட்டது.

''வெட்ட வெளியில கெடக்கிறதக் காட்டி நமக்குன்னு ஒரு எடம் வாங்கிச் சுத்திச் சொவரு கெட்டிக்கிருவமே.''

''அப்பத்தான் பயமில்லாம ஒறங்கி எந்திரிக்கலாம்.''

''மழ பேஞ்சா நம்ம பாடு திண்டாட்டமாப் போகுது. மாடும் மனுசரும் ஒதுங்குறதுக்கு எடமில்ல. சாமாங்களப் பத்தரமா வைக்க முடியல.''

''அதுக நனஞ்சிட்டா அம்புட்டுத்தான். யேவாரம் படுத்துரும்.''

''நமக்குப் பாதுகாப்பான எடம் கண்டிப்பா வேணும்.''

அது நல்ல யோசனையாகப் பட்டது. வரி வசூலித்தார்கள். கணிசமாகப் பணம் கைசேர்ந்தது. பழைய தோப்பை விலைக்கு வாங்கி வளைத்துச் சுவரெழுப்பித் தாவாரம் போட்டு வண்டிப்பேட்டையாக்கினார்கள். தண்ணீர் வசதிக்காகக் கிணற்றில் தெலா போட்டார்கள். பொதுவில் சின்னக் கட்டிடமும் கட்டிக் கொண்டார்கள்.

ராத்திரி வேளையில் பேட்டை நிறைந்து சின்ன ஊர் போலிருக்கும். ஒரு பக்கம் வண்டிகள். இன்னொரு பக்கம் பொதிமாடுகள் தலைச் சுமைக்காரர்கள். கோயிலில் பொங்கல் வைத்த மாதிரி சமையல் வேலைகள் மும்முரமாக நடக்கும். கூதல் காய்ந்துகொண்டே பாடுபழமை பேசுவார்கள். விலைவாசியை அலசு வார்கள்.

வியாபாரத்துக்குப் போதுமான சாமான்களை ஏற்றிக்கொண்டு மீதியைப் பேட்டையிலேயே பத்திரமாக வைத்துவிட்டுப் போனார்கள். பேட்டைக்குத் திரும்பும்போது வெற்று வண்டியுடன் வர மனசில்லை. கைவசமிருக்கும் பணத் தைச் சும்மா சுருக்குப் பையில் பொட்டணம் கட்டி வைத்திருப்பது உறுத்தலாக இருந்தது. அதை வேறு வியாபாரத்தில் போட்டுப் புரட்டினார்கள். லாவம் கிடைக்குமே. மேலும் உப்புக் கருவாட்டில் அப்படியொண்ணும் கை நிறைய வரு மானம் கிடைக்கவில்லை. அடித்த ஏருக்கும் குடித்த கூழுக்கும் சரி என்று கால மெல்லாம் வரவுக்கும் செலவுக்கும் தன்னக்கட்டிப் போய்க்கொண்டிருந்தால் என்றைக்குப் பெரிய வியாபாரியாவது. கையில் துட்டுச் சேர்த்துக் காடுகரை வீடு என்று சம்பாரிப்பது.

காலத்துக்குத் தக்க அந்தந்த ஊர்களில் விளையும் தானியம் தவசம் பயறு பச்சைகளை விலைக்கு வாங்கிப் பேட்டையில் இருப்பு வைத்தார்கள். நல்ல விலை வரும்போது விற்றுக் காசாக்கினார்கள். மாடுகளுக்கு வேண்டிய கூளத்தை வாங்கி வந்து பேட்டைக்குள் அடுக்கிக்கொண்டார்கள். ஆடையும் கோடையும் அதுகளுக்குத் தீவனப் பஞ்சம் தீர்ந்தது. கூளம் தீர்ந்துபோனால் இருக்கிறவரிடம் விலைக்கு வாங்கிக்கொண்டார்கள்.

பலவேசத்துக்கு இதில் அவ்வளவாக நாட்டமில்லை. கருப்பட்டி வியாபாரத்தில் கிடைக்கும் வரவாசியே போதுமென்று நினைத்தான். அகலக் கால் வைக்க வேணாமென்று பெரிய நாடாரும் சொல்லிவிட்டார்.

வண்டிப்பேட்டைகளைச் சுற்றிப் பருத்திக்கொட்டை புண்ணாக்கு தானியம் என்று கடைகள் முளைத்தன. ஒத்தைமாட்டு வண்டிகள் குறைந்து ரெட்டை மாட்டு வண்டிகள் பெருகிவிட்டதால் கடைகளும் பெருகின. ஊர்களில் நடக்கும் சந்தைகளிலும் மாட்டுத் தாவணிகளிலும் திருவிழாக்களிலும் கடை போட்டார்கள். தொடர்ந்து வியாபாரம் நடந்ததால் பாதிக் காலம் பேட்டையில் தங்க வேண்டியிருந்தது. அதுக்காகப் பேட்டைக்கருகில் வீடு கட்டிக்கொண்டார்கள். எப்போதாவது தெற்குச் சீமைக்குப் போய்க் குடும்பத்தைப் பார்த்துவிட்டு வந்தார்கள்.

சில ஊர்களில் வருசம் முழுக்க வியாபாரம் ஓடுமளவுக்குப் பெருகிவிட்டது. குறிப்பாக சிவகாசி விருதுபட்டி திருமங்கலம் அருப்புக்கோட்டை பாளையம் பட்டி சாத்தங்குடி ஆகிய ஆறு ஊர்களிலும் வியாபாரம் மும்முரமாக நடந்தது. அவர்களுக்கு வேறு மாதிரி நினைப்பு ஓடியது.

''குடும்பத்தப் பாக்கிறதுக்காகத் தெக்கயும் வடக்கயும் அலையிறதவிட யேவாரஞ்செய்ற எடத்துலயே குடியேறீட்டா என்ன. சொந்த ஊருல சொமக்க மாட்டாற சொத்துசொகமா கெடக்குது.''

''அதான. அப்படிச் செஞ்சாப் பெழப்பு நல்லாருக்கும். அலச்சலும் மிச்சம்.''

''நமக்கு யேவாரம் செய்ற எடந்தான் சொந்த ஊரு.''

ஆறு ஊர்களிலும் நிரந்தரமாகக் கடைகளை உண்டுபண்ணிக் கூட்டங் கூட்டமாகக் குடும்பத்துடன் குடியேறினார்கள். பிறகு மதுரை கமுதி திருத்தங்கல் கோயில்பட்டி போன்ற இடங்களிலும் நிரவினார்கள். இதைக் கண்டு உள்ளூரில் மற்ற சாதி வியாபாரிகளுக்குப் பொறாமையாகவும் எரிச்சலாகவும் இருந்தது.

''புத்துக்குள்ளருந்து எறும்பு பெறப்புட்ட மாதிரில்ல தெரண்டு வாறாக. இங்க ஆணியடிச்சு உக்காந்துட்டாகன்னா நம்ம பெழப்பு அம்புட்டுத்தான்.''

''நம்மளக் கௌப்பீருவாக போலருக்கு.''

''காலமெல்லாம் மூக்குச்சளிதானோ.''

''இவங்களோட போட்டி போட்டு எப்படித்தான் ஈடேறப்போறமோ.''

அப்பப்பக் கடுமையான பஞ்சம் வந்து சனங்களைக் கசக்கியெறிந்துவிட்டுப் போனது. சேதாரத்துக்குக் கணக்கில்லை. அதுக்குத் தக்க வியாபாரிகளுக்கு ஆதாயம் கிடைத்தது. விலைவாசி உச்சிக்குப் போய் தானியம் ரெம்ப அருந்தலாகிவிட்டது.

சனங்களிடம் வள்ளிசாகப் பணப் புழக்கம் இல்லை. நவதானியங்களையே நம்பியிருக்காமல் பருத்தி புகையிலை போன்ற பணப்பயிர்களைச் சாகுபடி செய்யச் சொல்லி சர்க்கார் அதை விற்கவும் வழி செய்துகொடுத்தது. அந்தந்த நில வாகுக்குத் தக்க பருத்தி வகைகளைக் கொண்டுவந்து இறக்கியது.

பனையேறிப் பிழைப்பு நடத்திக்கொண்டிருந்த நாடார்கள் அந்தத் தொழிலை உதறிவிட்டு நம்பிக்கையுடன் விவசாயத்தில் இறங்கினார்கள். முக்கியமாக பணப் பயிர்கள்மேல் கண்ணாக இருந்தார்கள். ஏற்கெனவே விவசாயம் செய்துகொண் டிருந்தவர்களும் பணப்பயிர்களில் நோங்கினார்கள். வியாபாரிகள் ஒரே சமயத்தில் ரெண்டு தொழிலையும் செய்தார்கள். எல்லாருக்கும் நல்ல வருமானம் கிடைத்தது.

ஊரெல்லாம் அவர்களைப் பற்றிய பேச்சுத்தான்.

''என்னப்பா இது அநியாயமாருக்கு. வெள்ளத்து மீனு மாதிரி விர்ருன்னு ஏறீட்டு வாறானே.''

''எல்லாம் அவனுக்கு அனுசரணையாருக்கு. ஆரச் சொல்றது.''

''இனியொரு சங்கதி தெரியுமா. வெள்ளக்காரன் சீமையில துணி நெய்ற துக்குப் பருத்தி கெடைக்கலயாம். ரெம்பத் தட்டுப்பாடா இருக்காம்.''

''அவனுக்குப் பருத்திப் பஞ்சமா.''

''இது சாணாங்களுக்குத் தோதாப்போச்சு. பருத்தியக் கணக்கில்லாம வாங்கி ஒண்ணுக்கு ரெண்டா வித்துப் பணத்த அள்ளிக்கெட்றான். அதுலயும் வேதக்கார நாடாங்களுக்குச் சாமியாருமாரு நல்ல ஒத்தாசன. வெளிய விக்கிறதுக்கு வசதியாப் போச்சு. பருத்திய வாங்குறதுக்குன்னு தொரமாரே அங்கங்க கடைகளத் தொறந்து வச்சிருக்காகன்னாப் பாருங்களேன்.''

''ரயிலு வந்தாலும் வந்துச்சு பருத்திய அள்ளிக்கிட்டுப் போயிக் கப்பல்ல கொட்றதுக்குத் தோதாப்போச்சு.''

''செவகாசியிலருந்து போயலயும் பருத்தியும் வண்டிவண்டியா மலையாள தேசத்துக்குப் போகுதாம். ஆயிரக் கணக்குல பொதிமாடுகள்லயும் கொண்டுபோறா களாம். கிட்டங்கியில இருப்பு வைக்க வேண்டியது நல்ல வெல வரவும் சுளிவா வித்துற வேண்டியது. உள்ளூருல வெள்ளக்காரனே கிட்டங்கி வச்சிருக்கானாம்.''

''என்ன செய்றது நாடானுக்கு ஒடம்பெல்லாம் மச்சம்.''

''ரயிலு வந்ததால விருதுபட்டி திருனவேலி தூத்துக்குடியில யேவாரம் ரெம்பப் பெருகிப்போச்சாம். செவகாசியில கொஞ்சம் படுத்துருச்சாம். அதனால அங்கருந்து இந்த ஊருகளுக்கு வந்து குடியேறுறாகளாம்.''

''அவனுக்கு எங்கருந்தா என்ன. நாலு காசு சம்பாரிக்கணும்.''

வியாபாரம் வேகமாக நடக்கணுமென்று முக்கியமான ஊர்களுக்குச் சாலை களைப் போட்டது சர்க்கார். இதனால் போக்குவருத்து சுளுவாகி வியாபாரம் பெருகியது. நாடார்கள் விரைவிலேயே செழிப்பாகிவிட்டார்கள். பல ஊர்களில் வியாபாரம் முழுக்க அவர்கள் கைக்கு மாறியது.

மேல்சாதிக்காரர்கள் பாடு திண்டாட்டமாக இருந்தது. பஞ்சத்தில் படுத் தவர்கள் எழுந்து நிமிர முடியாமல் கிடந்தார்கள். விவசாயம் செய்ய வழியில் லாமல் திணறினார்கள். சிவகாசியிலும் கமுதியிலும் துலுக்கர்கள் வசமிருந்த வியாபாரம் நாடார்களிடம் போகவே துலுக்கர்கள் நாடார்களை எதிரிகளாகவே நினைத்துப் புழுங்கினார்கள். நாளுக்கு நாள் உள்பகை வளர்ந்தது.

கடைகளில் கணக்கெழுதிக்கொண்டும் கோர்ட் விவகாரங்களைக் கவனித்துக்கொண்டும் விவசாயம் செய்துகொண்டும் பிழைப்பு நடத்திய வெள்ளாளர்களுக்கும் பாதிப்பு ரெம்ப. கணிசமானவர்கள் ஊர்களில் கிராம முன்சீப் கணக்குப்பிள்ளை என்று வேலைபார்த்தார்கள். ஊர்க் கணக்குகள் அவர்கள் வசமிருந்தது. நாடார்கள் தலையெடுத்துவிட்டதால் அதில் சிக்கல் வந்தது.

நாய்க்கமாரில் பலர் விவசாயம் செய்தார்கள். சிலர் வியாபாரிகளாக இருந்தார்கள். அவர்களுக்குப் பெரிய பாதிப்பு இல்லை. ஆனாலும் நாடார்களின் ஏல்க்கையைப் பார்த்து பொறாமையாக இருந்தது.

''ரெம்பத்தான் துள்ளுறான். பணக் கொழுப்புல ஆரவும் மதிக்கிறதில்ல. திமிர அடக்கணும்.''

மறவர்கள் பிழைப்புத்தான் மோசம். ஒரு காலத்தில் செல்வாக்காக இருந்தவர்கள். பாளையக்காரர்களிடம் படைத் தளபதிகளாகவும் வீரர்களாகவும் தாட்டிக்கமாக வாழ்ந்தவர்கள். நல்ல நிலங்களை மானியமாகப் பெற்றுச் சலுகைகளை அனுபவித்தார்கள். பள்ளுபறைச் சனங்களைக் கூலிவேலைக்கு வைத்துக் கொண்டு நிலங்களில் பயிர்செய்து மேனத்தாக இருந்தார்கள்.

பரம்பரைபரம்பரையாக அவர்கள்தான் திசைகாவல் குடிகாவல் தொழில் பார்த்துவந்தார்கள். தங்களுக்குக் கீழே ஊர்க் காவக்காரர்களை அமர்த்திக் கொண்டு வேலைவாங்கினார்கள். சனங்கள் எல்லாரும் அவர்கள் வார்த்தைக்குக் கட்டுப்பட்டிருந்தார்கள். அவர்கள் தீர்த்துவைக்காத வழக்கில்லை.

பாளையங்கள் தகர்ந்து சமீன்கள் உண்டானபோது அவர்களுக்குப் பல வேலைகள் பறிபோயிற்று. முன்னைப் போல் செல்வாக்கில்லை. இருந்தாலும் காவக்காரர்கள் அரட்டி மிரட்டி காவக்கூலி வாங்கிக்கொண்டுதான் இருந்தார்கள். இதனால் பல இடங்களில் தகராறு வந்தது. சில ஊர்களில் நாடார்கள் காவக்காரர்களாக நியமிக்கப்பட்டதால் தகராறு இன்னும் வலுத்தது. அப்படியும் மறவர்கள் காவலை விட்டுக்கொடுப்பதாக இல்லை. வருமானத்துக்கு வழி வேணுமே. அரிவாளும் கம்பும் தூக்கிப் பழக்கப்பட்ட கை கூடை மம்பட்டி தூக்கியது கிடையாது.

சிலர் வழிப்பறி கொள்ளை என்று இறங்கிவிட்டார்கள். வியாபாரிகளை வழிமறித்துப் பிடுங்கினார்கள். கூட்டாளிகளைச் சேர்த்துக்கொண்டு கொள்ளையடித்தார்கள். சர்க்கார் அவர்களை அடக்கி ஒடுக்குவதற்கு என்னென்னமோ செய்துபார்த்தது. முழுசாக அடக்க முடியவில்லை. போலீஸ்காரர்கள் கண்டுங் காணாததுபோல் நடந்துகொண்டதுதான் முக்கியக் காரணம். என்ன செய்வது அவர்கள் நிலைமையும் அப்படித்தான் இருந்தது. அவர்களும் ஏதோ ஒரு ஊரில் மறவர்களுக்குக் குடிகாவக்கூலி கொடுத்துக்கொண்டிருந்தார்கள். மேலும் நிறைய மறவர்கள் போலீஸ்காரர்களாக இருந்தார்கள். ஊர்களில் தலையாரிகளாக இருந்தார்கள்.

இன்னும் சிலர் நிரந்தரமான பிழைப்புக்கு வழிதேடி சமீன் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் பார்த்தார்கள். அதிலும் சொகமில்லை. பஞ்சத்தில் மழை தண்ணீரில்லாமல் வெள்ளாமை தீய்வும் கரிவுமாகத் தேய்ந்துபோனது.

பல சமீன்கள் செலவுக்குத் தக்க வரவில்லாமல் நொடித்துப்போய்விட்டன. நிலங்களை விற்றுக் காலந்தள்ள வேண்டிய நிலைமை. சில சமீன்தாரர்கள்

சமீனையே அடமானம் வைத்துக் காலந்தள்ளினார்கள். மறவர் சமீன்களாகட்டும் கம்பளத்துச் சமீன்களாகட்டும் எல்லாருக்குமே இந்தக் கதிதான்.

மறவர்களுக்கு அடிமேல் அடி விழுந்தது. கிணற்றுக்குள் விழுந்து தத்தளிப்பது போலிருந்தது. கசப்பை அசைபோட்டுக் குமட்டிக்கொண்டார்கள்.

''கைகெட்டிச் சேவகம் செஞ்சுக்கிட்ருந்த நாடான் இண்ணைக்கு அண்ணாந்து பாக்கிற அளவுக்கு முன்னேறீட்டான். அவன் சகல வசதியோட முத்துச்செல்லம் கொழிக்கிறதப் பாக்கப்பாக்கக் கோவமா வருது.''

''ஒந்தானப்போல பனையத் தொத்திக்கிட்டுத் திரிஞ்ச பயகளுக்கு வந்த வாழுவையப் பாரு. நம்ம அவங்கிட்டக் கையேந்தி நிக்க வேண்டியதாப் போச்சு. அவனப் புடிச்சு நசுக்கலன்னா நம்மளப் போட்டு மிதிச்சிருவான்.''

ஒரு ஆத்திரம் அவசரத்துக்குப் பணம் வாங்கிக்கொள்ள நாடார்களை விட்டால் வேறு ஆளில்லை. அநியாய வட்டி வாங்கிய செட்டிமார்களே பஞ்ச நேரத்தில் தொழில் நடத்த முடியாமல் சிங்கப்பூர் பினாங்கு ரங்கூன் கொழும்பு என்று சிதறி ஓடிவிட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் நாடார்கள் தங்கள் கைவச மிருந்த பணத்தை வட்டிக்கு விட்டார்கள். பல சாதிக்காரர்களும் அவர்களிடம் கடன்பட்டார்கள். ஒரு சமயத்தில் வட்டிகூடக் கொடுக்க முடியாமல் கடன் காரர்கள் அல்லாடினார்கள். சம்சாரிகள் வட்டியும் கொடுத்து வாங்கிய கடனுக்கு வெள்ளாமை விளைச்சலை கேட்ட விலைக்கு அடிதண்டமாக விற்றார்கள். கடைசியில் நிலத்தையே கைகாட்ட வேண்டிய நிலைமை. வயிறெரிந்து புலம்பி னார்கள்.

''இப்படி அநியாயமா வட்டி வாங்கிக் கொள்ளையடிக்காகளே. அது கையிலதான் தங்குமா.''

வசதி கூடக்கூட நாடார்கள் வண்டிப் பேட்டைகளை வலுப்படுத்திக் கொண்டார்கள். தங்களுக்குள் மகமை வசூலித்துப் பணம் சேர்த்தார்கள். பேட்டைக்கு வந்து போகிற வியாபாரிகள் எல்லாரும் அவரவர் வாங்கி விற்ற பொருளுக்கு வரி கொடுத்தாகணும். நாளாவட்டத்தில் ஊர்கள் பெருகப்பெருக உள்ளூர் வியாபாரிகளிடமும் மகமை வசூலித்தார்கள்.

சிவகாசியில் இன்னொரு வழக்கம் இருந்தது. அந்த ஊர் வழியாகப் போகும் மற்றச் சாதி வியாபாரிகளின் வண்டிகளுக்கும் மகமை வாங்கினார்கள். கை சேர்ந்த பணத்தைக் கொண்டு பல இடங்களில் கிட்டத்தட்ட நூறு பேட்டை களைக் கட்டினார்கள்.

மகமைக் கணக்கு உறவின்முறையின் பொறுப்பில் இருந்தது. பல தலைக் கட்டுக்கள் சேர்ந்ததுதான் உறவின்முறை. ஊருக்குத் தக்க உறவின்முறைக்குப் பேர் வைத்துக்கொண்டார்கள். சில இடங்களில் உறவின்முறைத் தலைவராக அம்பலக்காரர் நியமிக்கப்பட்டார். வேறு சில இடங்களில் உறவின்முறைக் குள்ளேயே முறைகாரர்களை நியமித்து நிருவாகம் செய்தார்கள். எல்லா வழக்கு களையும் உறவின்முறையில் வைத்தே தீர்த்துக்கொண்டார்கள்.

மகமைக் கணக்குவழக்கைப் பார்த்துக்கொள்ளக் கணக்குப்பிள்ளை இருந் தார். பேட்டைக்குக் காவலிருக்கப் பதிவாக நாடாரை நிறுத்தினார்கள். இதனால் பேட்டைக் காவக்காரர்களுக்கும் மற்ற சாதிக் காவக்காரர்களுக்கும் அடிக்கடி

தகராறு வந்தது. பேட்டையைக் கொள்ளையடிக்கக்கூடத் திட்டம் போட்டதுண்டு. நாடார்கள் ஒண்ணுசேர்ந்து முறியடித்துவிட்டார்கள்.

இந்தத் தொறட்டுகளையும் மீறி அங்கங்கே வண்டிகளில் வியாபாரிகளின் பாட்டு கேட்டுக்கொண்டுதானிருந்தது.

''கரிசக்காட்டுச் சீமையிலே
கருவாடு விக்கயிலே
கருவாடு சுட்டுத்தாறென் தங்கமே கட்டழகி
கம்மங்கஞ்சி கொண்டுவாடி குங்குமப் பொட்டழகி.''

பலவேசம் எந்த ஊரிலும் குடியேறவில்லை. கழுகுமலையில் இருந்து கொண்டே வியாபாரம் செய்துவந்தான். ரெட்டை மாட்டு வண்டியில் அலைய முடியவில்லை. பொன்னுமாடனை வண்டிக்கு அனுப்பிவிட்டுத் தெருவில் சின்னக் கடை ஆரம்பித்தான். முதல் தராசு நிறுவைக் கருப்பட்டியைப் பெரிய நாடார் வாங்கிக்கொண்டார்.

''யேவாரம் நல்லாப் பெருகும்.''

அவர் சொன்னது பலித்தது. சில்லறை விற்பனை குறைந்து மொத்த விற்பனை கூடியது. சிப்பஞ்சிப்பமாக வாங்கிக்கொண்டு போனார்கள். கார வீடு கட்டுவதற்கு நாடார்களுக்கே தேவையாக இருந்தது. நாளாவட்டத்தில் பலவேசம் பலவேச நாடாரானான்.

கடையில் ஒரு ஆளிருந்து கவனிக்க முடியவில்லை. செல்லப்பனையும் சம்பளத்துக்கு ஒருவனையும் இருத்தினார். பல இடங்களிலிருந்து கருப்பட்டியை வரவழைத்து இருப்புக்கட்டினார். கருப்பட்டி காய்ச்சும் காலங்களில் அவரே போய் சரக்கைப் பேசி முடித்துவிட்டு வந்தார். சரக்கு அட்டியில்லாமல் வந்து சேர்ந்தது. பெரிய நாடார் பேச்சுவாக்கில் சொன்னார்.

''பெரிய யேவாரியான பொறவு கடைக்குச் சொந்த எடமில்லன்னா மரியாதையில்ல.''

''வாங்கீட்டாப் போச்சு.''

பலவேச நாடார் பிராகார வீதியில் ஒரு பழைய வீட்டை விலைக்கு வாங்கிச் சுவரைப் பலப்படுத்தினார். பெரிய கடையாகிவிட்டது. குடியிருந்த வீட்டையும் வாங்கி இடித்துப்போட்டுக் கார வீடு கட்டினார். மகள் தங்கத்துக்கு மாப்பிள்ளை தேடியலைய வேண்டிய அவசியமில்லை. கடையில் வேலை செய்த பையனையே மருமகனாக்கித் தனியாகக் குடிவைத்தார். செல்லப்பனுக்கும் உள்ளூரில் பெண் கிடைத்தது. அக்காமார் வழியில் பெண்ணெடுக்க எண்ணந் தான். பெரிய நாடார் சொல்லிவிட்டார்.

''வந்த எடத்துலதான் சொந்தம் சேக்கணும்.''

பொன்னுமாடனுக்கு ரெண்டு குழந்தைகள். ஆணும் பெண்ணும். அப்பனுக்கு ஓடியாடித் திரிய முடியவில்லை. குடும்பத்தில் சகல பொறுப்புக்களையும் பலவேச நாடாரிடம் ஒப்படைத்துவிட்டு ஒதுங்கிக்கொண்டார். மகன் நல்ல நிலைமைக்கு வந்ததில் அவருக்கு நிம்மதி. பார்வதியிடம் சொல்லிச்சொல்லிப் பூரித்துப்போனார். பேரன் பேத்தி எல்லாருடைய வயிற்றிலும் பிள்ளைகளைப் பார்த்துவிட்டுச் சந்தோசமாக் கண்ணை மூடிவிட்டார்.

அதுக்குப் பிறகு பார்வதி ரெண்டு வருசம் திடமாக இருந்தாள். கடைசி வரை அவள் கல்விளையை மறக்கவில்லை. வீட்டைச் சுற்றியிருந்த மரங்களும் தோப்பும் மனசில் பசுமையாகக் குடியிருந்தன. அவற்றைக் கருக விடாமலேயே போய்ச் சேர்ந்தாள்.

## 5. கோயிலைத் தேடி...

நாடார்களுக்கு அந்தக் குறை மட்டும் தீராமலேயே இருந்தது. பொருமிக் கொண்டிருந்தார்கள்.

''எல்லா வசதியும் இருந்து என்ன செய்ய. நம்மகிட்டக் கெஞ்சிக் கதறிக் கடன் வாங்குறான். பண்டம் வாங்குறான். ஆனா அவன் கும்புடுற கோயிலுக் குள்ள மட்டும் மொழைய வுட மாட்டங்கான். அவன் தெருவில பல்லாக்கு கொண்டுட்டுப் போகாதங்கான். இது ஏழக்கிரும்புதான. சோத்துக்கில்லன்னாலும் சாதிப் புத்தி போகல பாரு.''

''எத்தன காலத்துக்குத்தான் அடங்கி ஒடுங்கிக் கெடக்கிறது. நம்மளும் மனு சங்கதான்னு மதிக்க மாட்டங்கானே. மிதிக்கணும்னுதான நெனைக்கான்.''

''எண்ணைக்கும் போல பனையேறித் திரியிறவன் சுத்தமில்லாற மொரட்டுச் சாணான்னு நெனச்சுக்கிட்ருக்கான்.''

''நம்மளும் அவங்களப் போல மாறிக்கிறணும். அப்பத்தான் மதிப்பான்.''

''அப்படித்தான் செய்யணும்.''

எல்லா விதத்திலும் மேல்சாதிக்காரர்களைப்போல் நடந்துகொள்ளணுமென்று முடிவுசெய்தார்கள். முதல் காரியமாகப் பல ஊர்களில் கறி தின்பதை நிறுத்திச் சைவச் சாப்பாடு சாப்பிட ஆரம்பித்தார்கள். பிராமணர்களைப் போல் குடுமி வைத்து முழுத் தார்ப்பாய்ச்சி வேட்டி கட்டிப் பூணூல் போட்டுக்கொண்டார்கள்.

புருசன் இல்லாத பெண்களுக்கு மறுகலியாணம் செய்துவைக்கும் வழக் கத்தை நிறுத்திவிட்டார்கள். கலியாணப் பெண்ணுக்கு மரியாதையாகப் பருசம் போடுவது சாதி வழக்கமாக இருந்தது. அதுக்குப் பதிலாக மாப்பிள்ளைக்கு வரதட்சணை கொடுக்கணுமென்று சொன்னார்கள். பட்டணப் பிரவேசத்துக்குப் பல்லாக்குடன் குதிரையும் கொண்டுவந்தார்கள். மாடி வைத்து வீடு கட்டி னார்கள். நல்ல காரியங்களுக்குச் சாதி வழக்கப்படி செய்யும் சடங்குகளை ஒதுக்கிவிட்டுப் பிராமணர்களைக் கூப்பிட்டு மந்திரம் சொல்லி நடத்தினார்கள்.

முந்தியெல்லாம் பெண்கள் காது வளர்த்து ஈயத்தில் குணுக்குப் போட்டிருப் பார்கள். காதுத் தண்டு கொஞ்சங்கொஞ்சமாக வளரும். எவ்வளவுக்கெவ்வளவு வளர்கிறதோ அவ்வளவுக்குக் குடும்பம் விருத்தியடையும் என்பது ஐதீகம். இப் போது குணுக்குக்குப் பதிலாக தங்கத்தில் பாம்படம் முடிச்சு தண்டட்டி என்று கொத்தாக மூணு நகை போட்டுக்கொண்டார்கள்.

சாவுச் சடங்குகளும் மாறிவிட்டன. பிணத்தைப் புதைக்காமல் எரித்தார் கள். ஊர் ஊருக்குக் கிணறு வெட்டி நந்தவனம் உண்டுபண்ணி சனங்கள் நிதமும்

குளிக்க ஏற்பாடு செய்தார்கள். குளிப்பதை மேல்பார்க்கத் தனியாக ஆள் போட்டார்கள். எல்லாரும் குளித்து நெற்றி நிறையத் திருநீறு பூசணும். பார்த்தால் நாடார் என்று அடையாளம் தெரியக் கூடாது. வெள்ளாளர் பிராமணர் மாதிரி இருக்கணும்.

இந்தக் கட்டுத்திட்டங்கள் பற்றிப் பல மாதிரி பேச்சு அடிபட்டது.

''இவுக வேகம் எதுல கொண்டுபோயி வுடுமோ தெரியல.''

''அதானப்பா. தம்பி கால் நட பேச்சு பல்லாக்குலங்கிற கதையால்லருக்கு.''

''சின்ன வயசுல தாலியறுத்த பொண்ணுகளுக்கு மறு வழியில்லாம அடச்சுப்புட்டாகளே. அதுக பாவத்துக்குப்போல காலமெல்லாம் லொம்பலப்படணும்னு தலையெழுத்தா.''

''பொண்ணு வச்சிருக்கிறவன் பாடு திண்டாட்டந்தான். அவளுக்கு ஊரறிய வெளம்பிப் பருசம் போட்டு மரியாதையாக் கூட்டீட்டுப் போவாக. இப்ப மாப்பிள்ளைக்குப் பருசம் போடுற நெலமைக்கு ஆயிக்கிருச்சு. கொடுமையால்லருக்கு. பின்னால வாறத நெனச்சுப்பாக்காம வெளையாட்டுத்தனமாச் செய்றாகளே.''

''அரக்கப்பரக்கப் பாடுபட்டாலும் படுத்து மொடக்கப் பாயில்ல. இந்தப் பெழப்புல பொண்ண எங்க கரையேத்துறது.''

''பனையேறுறவன் நெதமும் விடியக்காலம் குளிச்சுத் திருநீறு பூசி வேலைக்குப் போக முடியுமா. வேர்க்கவேர்க்க வேலைய முடிச்சிட்டு ஒரேயடியாக் குளிக்கிறதுதான் வழக்கம்.''

''வெவசாயம் செய்றவன் விடிஞ்சும் விடியாம வெள்ளாமைக்குத் தண்ணி பாச்சப் போவானா குளிக்கிறதுக்குக் கெணறு தேடிப் போவானா. குளிக்க எடந்தேடுறதே பெரிய கஸ்டம்.''

''குளிச்சதும் சாப்பிட்டு முடிச்சுக் கடையில உக்கார்றவுகளுக்குச் சரி.''

''கையில துட்டு வச்சிருக்கிற மகராசங்க என்ன வேணும்னாலும் செய்வாக.''

''அதுக்காகச் சந்தனம் இருந்தா பொச்சுலயா பூசிக்கிட்டுத் தங்குதங்குன்னு ஆடுறது. காலங்காலமா இருந்துவாற வழக்கத்தெல்லாம் அடியோட மாத்தணும்னு காவடியெடுக்காகளே. ஒரு நாளையில முடியிற காரியமா.''

''நீ பேசுறது நல்லாருக்கே. காலத்துக்குத் தக்க நம்மளும் மாறாமருந்தா எண்ணெண்ணைக்கும் அட்டுப் புடிச்சுப்போயிக் கரிமுண்டமாக் கெடக்க வேண்டியதுதான். அவங்களவிட நம்ம எதுல கொறஞ்சிட்டொம்.''

''அதான. நம்ம உண்டாக்கிக்கிட்டதுதான வழக்கம். இண்ணைக்குப் புதுசு நாளைக்குப் பழசு. பொச்சப் பொத்திக்கிட்டுக் கெடந்தாப் போதும். எல்லாம் நல்லபடியா நடக்கும்.''

என்னென்னமோ செய்துபார்த்துவிட்டார்கள். மேல்சாதிக்காரர்கள் கொஞ்சங்கூட அசையவில்லை. கோயிலுக்குள் விட மாட்டேன் என்று மல்லுக்கு நின்றார்கள். அவர்களது தெருக்களில் பல்லாக்குக் கொண்டுபோக முடியவில்லை. இவர்கள் முண்ட அவர்கள் தள்ள ஒரே இழுபறிதான். திடீரென்று தகராறு வரும். பிறகு கொஞ்சநாள் அமுங்கியிருக்கும். அடுத்து இன்னொரு ஊரில் கிளம்பும். கங்கு புகைந்துகொண்டேயிருந்தது.

பகைச்சலென்ன இன்றைக்கு நேற்று விவகாரமா. வருசக் கணக்காகத் தீர்க்கப் படாமல் உள்ளதுதான். ரெம்ப நாளுக்கு முந்தி அருப்புக்கோட்டையில் ஒரு சங்கதி நடந்தது. அந்த ஊர் ராமநாதபுரம் சமீனைச் சேர்ந்தது. அங்கே குடியிருக்கும் நாடார்கள் மதுரைக்குப் போய் கலெக்டரைப் பார்த்துப் பேசினார்கள்.

''அய்யா தொரமாரே மேகலக்குடிச் சனங்க எங்களக் கண்ணுல காங்க வுட மாட்டங்காக. அவுக தெருவுப் பக்கம் எட்டிப்பாத்தா வெரட்டியடிக்காக. நாங்களும் மனுசங்கதான. எங்களுக்கும் ஆசையிருக்காதா.''

''நாங்க பெரிசா ஒண்ணும் கேக்கல. எங்க வீட்டுக் கலியாணத்துக்கு ஊருத் தெருக்களச் சுத்திப் பல்லாக்குல பட்ணப்பருசம் போகணும்.''

''திருழாச் சமயத்துல ஊரச் சுத்தி வரணும்.''

''தொர அதுக்கு உத்தரவு குடுத்தாப் போதும்.''

மனுவை வாங்கிக்கொண்ட கலெக்டர் சரி அப்படியே போங்கள் என்று உத்தரவு போட்டுவிட்டார். இது மேல்சாதிக்காரர்களை உசுப்பிவிட்டது. எப்படியும் முறியடித்தாகணுமென்று திட்டம் போட்டார்கள். சுத்துப்பட்டிகளில் ஆள் திரட்டினார்கள்.

இந்தத் திட்டம் நாடார்களுக்குத் தெரிந்துவிட்டது. ஒரு கலியாணத்துக்கு மூணு நாள் முந்தியே கலெக்டரிடம் ஓடினார்கள். இப்படியிப்படி நிலவரம் இருக்கிறது. கலியாணத்தன்றைக்குப் பெரிய சண்டை வரும்போலிருக்கிறது என்று முறையிட்டார்கள். அப்படியா சங்கதி அதுக்கு ஒரு வழிபண்ணுகிறேன் என்று அவர் சமீன்தாருக்குத் தாக்கீது அனுப்பினார். தகராறு செய்யப்போகிறவர்களைப் பிடித்து உள்ளே போடணுமென்று உத்தரவு. உடனே அருப்புக் கோட்டைக்குப் போய்ச் சண்டை சச்சரவில்லாமல் பார்த்துக்கொள்ளணுமென்று போலீசுக்கும் உத்தரவு. போலீஸ்காரர்கள் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. இப்படியொரு திட்டம் இருப்பது அவர்களுக்கு முந்தியே தெரியும். அவர்களது உடந்தையுடன்தான் கலவரம் நடக்கப்போவதாகப் பேச்சு உண்டு.

நாடார்களை விரட்டியடிப்பது மேல்சாதிக்காரர்களின் முக்கிய நோக்கமில்லை. கலவரத்தை உண்டுபண்ணிச் சர்க்காரைப் பயமுறுத்திக் கதிகலங்கச் செய்யணும். நாடார்கள் பல்லாக்கில் போவதைத் தடுத்து மறு உத்தரவு போடவைக்கணும்.

கலியாண நாள் நெருங்கநெருங்க அருப்புக்கோட்டையே கொதித்துக் கொண்டிருந்தது. எந்த நேரமும் கலவரம் மூளும் நிலைமை. ஒரு கூட்டம் அடாவடியாகப் போய் நாடார்களின் தோட்டங்களை அழித்தது. கத்தரிக்காய் வெள்ளாமை கந்தரிகோலத்தில் கிடந்தது. தெலா மரங்கள் நொறுங்கி விறகுத் துண்டுகளாகிவிட்டன. கிணற்றில் மிதிகல்லைக் காணவில்லை.

கொஞ்ச நாளாகவே சனங்கள் கூட்டங்கூட்டமாக வெறிபிடித்துத் திரிவதாகவும் உடனே வந்து நடவடிக்கை எடுக்கும்படியும் சேவகரும் கிராம முன்சீப்பும் போலீஸ் அமீனாவுக்கு எழுதினார்கள். அமீனா சீனிவாசய்யர் ஒருமாதிரியான மனுசன். அப்படிச் செய் இப்படிச் செய் என்று அவர்களுக்குத் தாக்கீது அனுப்பிவிட்டு மூச்சுக்காட்டாமல் இருந்துகொண்டார். ஒப்புக்குக்கூட நேரில் வந்து விசாரிக்கவில்லை.

நாடார்கள் திரண்டு போய் அவர் காலில் விழுந்து மன்றாடினார்கள். போங்கள் இந்தா வருகிறேன் என்று சொல்லி நழுவிவிட்டார். அவர் கலெக்டருக் காவது நிலவரத்தைத் தெரிவித்திருக்கணும். அதுமில்லை. சமீன்தார் பக்க மிருந்தும் அலுக்கமில்லை.

கலியாண நாளும் வந்தது. அருப்புக்கோட்டை பிடிக்காமல் கூட்டம். மறவர் குடும்பமார் பறையர் கக்களையர் அம்பட்டையர் என்று ஒரு சாதிகூடப் பாக்கியில்லாமல் சுத்துப்பட்டிகளிலிருந்து பத்தாயிரம் பேருக்குத் திரண்டுவிட் டார்கள். வியாபாரப் பகைக்குப் பழிதீர்த்துக்கொள்ளச் சமயம் பார்த்திருந்த துலுக்கர்கள் காரியங்களை முன்னின்று நடத்தினார்கள்.

எல்லாம் திட்டமிட்டபடி நடந்தது. துலுக்கர்கள் நவாப் கொடியை ஏற்றி னார்கள். உடனே தண்டோராச் சத்தம் பலமாகக் கேட்டது. அவ்வளவுதான். கொள்ளை ஆரம்பமாகிவிட்டது. ஆணும் பெண்ணும் ஓடிஓடி நாடார் கடை களை நொறுக்கிச் சூறையாடினார்கள். கையில் அகப்பட்டதைத் தலையில் சுமந்துகொண்டு ஓடினார்கள். ரெண்டாவது தடவை தண்டோரா அடிக்கவும் சூறை நின்றுவிட்டது. எல்லாம் சுழிக்காற்றைப்போல் மதியத்துக்குள் முடிந்து விட்டது. கொள்ளையடித்துக்கொண்டு ஓடுகிறவர்களை கிராம முன்சீப்பும் சேவகரும் வேடிக்கைபார்த்துக்கொண்டு நின்றார்கள். நூற்றுப்பத்துக் கடைகள் நாசமாகிவிட்டன. ஆயிரக் கணக்கில் சொத்து பறிபோனது. கொள்ளையில் பெரும்புள்ளிகள் யாரும் ஈடுபடவில்லை. மற்றவர்களைத் தூண்டிவிட்டு அப் பிராணியாக இருந்துகொண்டார்கள்.

நல்ல வேளை நாடார்கள் எதிர்த்துச் சண்டைபோடவில்லை. அவ்வளவு கூட்டத்துடன் மோதி மீள முடியுமென்ற நம்பிக்கையில்லை. நடக்கிற கதையைத் திகைப்பில் பார்த்துக்கொண்டிருந்தார்கள். யாருக்கும் சின்னக் காயங்கூட இல்லை.

சொல்லிவைத்த மாதிரி மதியத்துக்கு மேல் ரெண்டு போலீஸ்காரர்கள் கமுதியிலிருந்து வந்தார்கள். பேருக்கு விசாரித்துவிட்டு கிராம முன்சீப்பும் சேவகரும் நடந்த கதையை வேடிக்கைபார்த்ததாகப் பழிபோட்டார்கள். கலெக்டர் வந்து விசாரிக்கும்வரை கமுதி போலீஸ் அமீனா வரவில்லை. அவர் வரும் சாவகாசத்தைப் பார்த்துச் சனங்களுக்குக் கடுப்பு. முணுமுணுப்பில் திட்டித் தீர்த்தார்கள்.

''இப்பத்தான் இவனுக்குக் கண்ணு தெரிஞ்சதோ. மாமியா வீட்டுக்கு வாற மாதிரில்ல வாறாக.''

''எல்லாம் களவாணிப்பயக.''

''வராம இருக்கிறதுக்காக இவனுக்குப் பணம் குடுத்துருக்காகளாம்.''

''அப்படிச் சொல்லு.''

''இனியும் இவங்கள நம்பிப் புண்ணியமில்ல.''

''நம்மள நம்மதான் காப்பாத்திக்கிறணும்.''

''செஞ்சதெல்லாம் அந்த ஆண்டியப்ப புள்ளதான்.''

''பின்னாலருந்து மூட்டிவுட்டுட்டு நாலஞ்சு நாளைக்கு முந்தியே கம்பி நீட்டீட்டான்.''

''அவனப் புடிச்சு ஒதைக்கணும்.''

அமீனாவைக் கலெக்டர் கேள்விமேல் கேள்வி கேட்டார். அவர் மென்று மென்று விழுங்கினார். கலெக்டருக்குக் கடுப்பு. தேடிக் கண்டுபிடித்த பொருட்களை நாடார்களிடம் ஒப்படைத்தார். நிறைய பண்டங்களை எரித்துவிட்டார்கள். கிணற்றில் போட்டுவிட்டார்கள். முன்னூறுக்கும் மேற்பட்டவர்களைக் கைதுசெய்தார். சிலர் தப்பிவிட்டார்கள். கைதுசெய்தவர்களை விசாரித்துக் குற்றத்துக்குத் தக்க தண்டனை கொடுத்தார்.

அவர் போலீஸ் அமீனாவையும் விட்டுவைக்கவில்லை. வழக்குப் போட்டுக் கோர்ட்டுக்கு அனுப்பிவிட்டார். கோர்ட்டார் விசாரித்து ஆறு மாசம் செயிலும் இருநூறு ரூபாய் அபராதமும் சொல்லிவிட்டார்.

நாடார்கள் ஈடேறிப் பழைய நிலைக்கு வரக் கொஞ்ச நாளானது. எதுக்கும் மனம் தளரவில்லை. அருப்புக்கோட்டைச் சந்தை பழையபடி தேன்கூடானது.

இதே மாதிரி கொந்தளிப்பான நிலைமை ராமநாதபுரம் மதுரை திருநெல்வேலிச் சீமைகளில் தொடர்ந்தது. ஒவ்வொரு மேல்சாதியும் கீழ்ச்சாதியை அடக்கி ஒடுக்கவே நினைத்தது. நாடார்கள் கேட்பதை மறவர்களும் வெள்ளாளர்களும் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை. ஆனால் வெள்ளாளர்கள் அக்கிரகாரத்தில் பட்டணப் பிரவேசம் போகணுமென்று அடம்பிடித்தார்கள். அதே சமயம் நாடார்களோ பறையர்களோ தங்கள் தெருவில் வருவதை அடியோடு எதிர்த்தார்கள்.

**ப**லவேச நாடார் கருப்பட்டி வாங்கத் தெற்கே எட்டு மட்டும் போவார். வடக்கே சாத்தூர் சிவகாசி அருப்புக்கோட்டை மதுரை என்று சுற்றுவார். திரும்பி வந்ததும் பெரிய நாடாரிடம் ஒருமூச்சு பேசித் தீர்க்கணும். அங்கங்கே நடந்த சங்கதிகளைச் சொல்லியாகணும்.

''கேட்டீரா சங்கதிய. ரெம்ப நாளாத் தலையெடுக்காமரிந்த கோயிலு வெவகாரம் திடீர்னு திருச்செந்தூர்ல மொளச்சிருச்சு. கோயிலுக்குள்ள போன நாடாக்கமார அய்யமாரும் புள்ளமாரும் தடுத்து நிறுத்தி ஏழு பேருமேல பெராது குடுத்துரிக்காவளாம்.''

பெரிய நாடார் சலித்துக்கொண்டார்.

''இவியள அடக்க வழியா இல்ல.''

இது படிப்படியாகச் சூடேறி மதுரைக்குப் பரவியது. மூக்க நாடார் மீனாட்சி கோயிலுக்குள் அருவமில்லாமல் நுழைந்து கிளிக்கூண்டுவரை போய்ச் சாமி கும்பிட்டுக்கொண்டிருந்தார். கோயில் சேவகர்கள் அவரை இன்னாரென்று அடையாளம் கண்டுபிடித்துவிட்டார்கள். ஒருவர் கிட்டப் போய் விசாரித்தார்.

''வர்ணமென்ன.''

மூக்க நாடார் முழித்துப் பார்த்தார். சுற்றி நின்றிருந்தவர்களை நோட்டம் விட்டார். எல்லாம் புரிந்துவிட்டது. இவர்களிடம் தாழ்ந்துபோகக் கூடாது. என்ன ஆனாலும் சரி.

''அதத் தெரிஞ்சு என்ன செய்யப்போற.''

''நீ சாணாந்தான.''

''ஆமா. நாடாருதான்.''

''கோயிலுக்குள்ள எதுக்கு வந்த.''

''இதென்ன வம்பாருக்கு. கோயிலுக்குள்ள ஓடி வெளையாடவா வருவாக. சாமி கும்புடத்தான்.''

''சாணான் உள்ள வரப்புடாதுன்னு தெரியுமில்ல.''

''சாமி கும்புட வாறதுக்கு ஒங்கிட்டக் கேக்கணுமோ.''

''சாணாப் பய உள்ள வந்தாத் தீட்டு.''

''சாமி அப்படிச் சொல்லுச்சா. நாங்க வாறதத் தடுக்கிறதுக்கு ஒன் அப்பன் வீட்டுக் கோயிலா இது. அப்படித்தான் வருவொம்.''

சேவர்களுக்குப் பொறுக்கவில்லை. மூக்க நாடாரின் கழுத்தைப் பிடித்து ஒரு அடிகொடுத்து இழுத்துக்கொண்டு போய்க் கோயிலுக்குக் கிழக்கே துணிக்கடையோரம் விட்டுவிட்டார்கள்.

''இனியொரு தேரம் கோயிலுக்குள்ள வந்த கும்புடுறதுக்குக் கையிருக்காது.''

மூக்க நாடார் மதுரைக் கோர்ட்டில் கோயில் சேவகர்கள்மேல் வழக்குப் போட்டுவிட்டார். இதில் எப்படியும் நல்ல முடிவு கிடைக்குமென்ற நம்பிக்கையில் நாடார்கள் சுணங்காமல் வாய்தாவுக்கு அலைந்தார்கள். பலவேச நாடார் மதுரைப் பக்கம் போகும்போதெல்லாம் இதைப்பற்றி விசாரித்து வந்து பெரிய நாடாரிடம் சொல்வார்.

''இதுல முடிவாயிடும்.''

''எப்படி.''

''இவிய கோயிலுக்குள்ள போவலாம்னு. ஏன் வுட மாட்டங்கான் தெரியுமா.''

''எதுக்கு.''

''கோயிலுக் கெட்டுதததுக்குக் கருப்பட்டி வேணும்னு நாடாருககிட்ட வடுக ராசா கேட்டாராம். தர மாட்டன்னுட்டாவளாம். அந்தக் கடுப்புலதான் நாடான் ஆரும் உள்ள வரப்புடாதுன்னு ராசா உத்தரவு போட்டுட்டாராம்.''

''இப்பத்தான் ராசா இல்லையே.''

''கோர்ட்டுதான் ராசா.''

''கோர்ட்டாரு வாயிலரிந்து என்ன வரப்போவுதோ.''

கோர்ட்டார் முழித்துக்கொண்டார். அடடா இது வெறும் அடிதடி வழக்கில்லை. நாடார்கள் கோயிலுக்குள் நுழைய வழி கிடைக்குமென்று கொண்டு வரப்பட்ட வழக்காக்கும். சிக்கலில் மாட்டிக்கொள்ளக் கூடாது. ஏறச் சொன்னால் எருமைக்குக் கோவம் இறங்கச் சொன்னால் நொண்டிக்குக் கோவம். நமக்கெதுக்கு வம்பு. மூக்க நாடார் கோயிலுக்குள் நுழைந்தது தப்பு என்று மட்டும் தீர்ப்புச் சொல்லிவிட்டு நழுவிவிட்டார். இனிமேல் நாடார்கள் கோயிலுக்குள் போகலாமா கூடாதா என்பதைப் பற்றி மூச்சுக்காட்டவில்லை.

நாடார்களுக்கென்றால் கடுப்பு.

''இப்படி மொட்டையாத் தீர்ப்புச் சொன்னா எப்படி.''

''கண்டந்துண்டமாச் சொல்லீட்டா அவன் பெழப்பு ஓடாதே. நாலு பேரு அடிச்சுக்கிட்டாத்தான அவங்கிட்ட வருவாக.''

''அதுக்காக மத்தவுக பேரு சாகிறது. அண்ணைக்கு மூக்க நாடானக் கோயிலுக்குள்ள வச்சுக் கொன்னுபோட்ருந்தா அம்புட்டுத்தான. இவன் அப்பன் வந்து காப்பாத்துவானா.''

''அதப் பத்தி அவனுக்கென்ன கவல.''

''இந்த அநியாயத்த ஆருட்டச் சொல்றது. மனுசங்க கோயிலுக்குள்ள போயிச் சாமியக் கும்புடுறதுக்கு இம்புட்டுக் கஸ்டமா.''

''நம்ம மனுசராத் தெரியலயே.''

''எண்ணைக்கு நல்ல காலம் பெறக்கப்போகுதோ.''

மதுரையைப் போல் திருத்தங்கல்லிலும் கோயில் விவகாரமாக ஒரு வழக்கு நடந்தது. மலைப்பாறை உச்சியில் அமைதியாகக் குடியிருக்கும் கருநெல்லி நாதரையும் முருகனையும் பார்க்க அந்த ஊர் நாடார்கள் எவ்வளவோ பிர யாசைப்பட்டார்கள். முடியவில்லை. மேல்சாதிக்காரர்கள் அண்ட விடாமல் விரட்டினார்கள். தகராறு கோர்ட்டுக்குப் போனது. அங்கேயும் நல்ல முடிவு கிடைக்கவில்லை.

கொஞ்சக் காலத்துக்குப் பிறகு ஸ்ரீவில்லிப்புத்தூர் கோர்ட்டார் ஒரு தடை யுத்தரவு போட்டார். அதாவது நாடார்கள் கோயிலுக்குள் நுழையக் கூடாது. தேங்காய் உடைக்கக் கூடாது. ஆனாலும் தெருக்களில் பட்டணப் பிரவேசம் போகலாம். அதென்ன புதுப் பழக்கம் என்று மேல்சாதிக்காரர்கள் எதிர்த்தார்கள். நாடார்கள் கோர்ட் தீர்ப்பு சரியில்லையென்று சொன்னார்கள்.

''கோர்ட்டானெல்லாம் ஒருத்தனுக்கொருத்தன் அண்ணன் தம்பி மாதிரில்ல தீர்ப்புச் சொல்றான்.''

''கோயிலுக்குள்ள போகாதன்னு சொல்றதுக்கு இவன் ஆரு.''

''அவனோட சாதிக்காரனுக்குத்தான் ஒத்தாசன பண்ணுவான். ஒனக்குச் செய்யணும்னு என்னருக்கு.''

''ஞாயத்தச் சொல்லலன்னா மயிரப் புடுங்குறதுக்கா கோர்ட் வச்சிருக்கான்.''

''இவங்கள நம்பிக் கெட்டுச்சோறு கெட்டீட்டு அலஞ்சொம் பாரு.''

கொஞ்சம் தணிந்திருந்த சூடு ஒருநாள் சாத்தூர்ப் பக்கம் கொல்லபட்டியில் பற்றிக்கொண்டது. தெருக்களில் பட்டணப் பிரவேசம் போக அனுமதிக்கும்படி நாடார்கள் மனுப்போட்டார்கள். அந்த ஊர்ச் சமீன்தாருக்கு இது பிடிக்கவில்லை. மேல்சாதிக்காரர்களின் எதிர்ப்பு வேறு. அப்படியெல்லாம் போக வேணாம் சொந்தத் தெருவிலேயே போய்க்கொள்ளுங்கள் என்று உத்தரவு போட்டார். நாடார்களுக்கு ஏமாற்றம். ரெண்டு பக்கமும் மோதிச் சண்டையே வந்துவிட்டது.

அடுத்து கமுதியில் பெரிய சலசலப்பு. அங்கே மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் பிரசித்தமானது. கோலாகலமாகத் திருவிழா நடக்கும். நாடார்களும் துலுக்கர் களும் அதிகமாகக் குடியிருந்தார்கள். சுத்துப்பட்டிகளில் மறவர்கள் நிறைய உண்டு.

கோயில் கோலாட்டத் திருவிழாவையொட்டி விருந்து நடத்தணுமென்று நாடார்கள் விரும்பினார்கள். அந்தச் சாக்கிலாவது கோயிலுக்குள் போக

முடியாதா என்ற ஆசை. ராமநாதபுரம் சமீன்தாருக்கு எழுதினார்கள். விருந்து என்றால் திருவிழாக் காலம் ஒரு நாள் அதிகமாகும். இது தொறட்டுப்பிடித்த காரியமாயிற்றே. கோயில் அதிகாரியே முடிவுசெய்துகொள்ளட்டுமென்று மனுவை அவரிடம் தள்ளிவிட்டார். அவரென்ன லேசுப்பட்டவரா. நிலைமையை அனுசரித்து ரெண்டு பக்கமும் நல்ல பிள்ளையாக நடந்துகொண்டார். விருந்து நடத்திக்கொள்ளலாம். ஆனால் ஏற்கெனவே உள்ள வழக்கப்படி கோயிலுக்குள் நுழையக் கூடாது. இதுதான் அவர் உத்தரவு. இதுக்கு அர்த்தம் என்னவென்றால் எப்போதும்போல் நாடார்கள் மேல்சாதிக்காரர்கள் மூலமாகத் தேங்காய் பழம் கொடுத்து அர்ச்சனை செய்துகொள்ளணும்.

நாடார்கள் கோயில் அதிகாரியை வாய்க்கு வந்தபடி பேசினார்கள்.

''கோயிலுக்குள்ள போகாம எப்படி விருந்து நடத்துறதாம். காடுகரையில வச்சு சோத்தப் பொங்கித் திங்கச் சொல்றானா. கொஞ்சமாச்சும் அறிவிருக்கா.''

''சாமிக்குத் தேங்கா ஒடைக்கத் தரகன் வேணுமாக்கும். பெரிசா உத்தரவு போடுறானாம் உத்தரவு.''

''எல்லாம் அந்த வெள்ளச்சாமித் தேவன் செய்ற வேல. நம்மளக் கோயிலுக் குள்ள போக வுடாமத் தடுக்கிறதுக்கு ஆளுத் தெரட்டிட்டுத் திரியிறானே அது இவுகளுக்குத் தெரியாதாக்கும்.''

''நேருல தேங்கா ஒடைக்கிற காலத்துல ஒடச்சுக்கிருவொம்.''

வெள்ளைச்சாமித் தேவருக்குப் பசும்பொன் சொந்த ஊர். கமுதியிலிருந்து ரெண்டு கல் தொலைவு. தகப்பனார் முத்துராமலிங்கத் தேவரைப்போல் ராம நாதபுரம் சமீன்தாருக்குக் கீழே நிறைய சீமையைப் பரம்பரையாக ஆண் டனுபவித்து வந்தார். சுத்துப்பட்டி மறவரெல்லாம் அவர் சொல்லுக்குக் கட்டுப் பட்டவர்கள். சனங்கள் அவருக்கு முன்னால் தோளில் துண்டு போடக் கூடாது. வெற்றிலை பாக்கு வைத்து மரியாதை செய்யணும். வசதியாக இருந்த நாடார்கள் அவருக்குப் பணிந்துபோக மறுத்தார்கள். அவர்களை ஒரு வழிக்குக் கொண்டு வரணுமென்று காரியத்தில் இறங்கினார். சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்தி அடக்க நினைத்தார்.

வண்ணார்கள் நாடார்களுக்கு வெளுக்கக் கூடாது. சுத்துப்பட்டி மறவர்களும் மேல்சாதிக்காரர்களும் நாடார்களுக்கு எந்தப் பொருளும் விற்கக் கூடாது. அவர்களிடம் வாங்கவும் கூடாது. சாமி ஊர்சுற்றி வரும்போது நாடார்களின் தெரு வழியாக வரக் கூடாது. எல்லாம் அவர் சொல்படி நடந்தது.

மறவர்கள் நாடார்களை வழிமறித்து அவர்கள் போட்டிருக்கும் பூணூலை அறுத்தார்கள். அந்த நூலால் கை கால் பெருவிரல்களைக் கட்டி விரட்டினார்கள்.

''சாணாப்பயலுக்குப் பூணூலு கேக்குதோ. பெராமணருன்னு நெனப்பு. திரும்பிப் பாக்காம ஓடுறா சாதிகெட்ட நாயே.''

செத்தவர்களுக்குப் பெருவிரல்களைக் கட்டி வழியனுப்புவது வழக்கம்.

இந்த அடாவடி ஒரு வருசத்துக்கும் மேலாக நடந்தது. அடிதடி கோர்ட் வழக்கு என்று போய் வெள்ளைச்சாமித் தேவரை அஞ்சு வருசம் தண்டித்து உள்ளே தள்ளிய பிறகுதான் நிலைமை சரியானது.

பலவேச நாடார் பெரிய நாடாரிடம் பெருமையாகச் சொன்னார்.

''ஞாயம்னு ஒண்ணு இரிக்கத்தான் செய்யிது. என்ன சொல்லுதீரு. பெரிய மனுசனுக்கு வந்த கதியப் பாரும்.''

பெரிய நாடார் உதட்டைப் பிதுக்கினார்.

''அதனால என்ன. நம்ம நாளைக்கே கோயிலுக்குள்ள எட்டுவைக்கப் போறமா.''

''என்ன பேசுதீரு. அதுக்காவ அநியாயம் செஞ்சவனச் சும்மா வுட முடியுமா.''

''அவியளுக்கு இவிய செய்றது அநியாயமாத் தெரியிது. இதுக்கு முடிவே இல்ல.''

''முடிவு கண்டாவணும். இல்லன்னா அவனுவட்ட ஒத வாங்க வேண்டியதுதான்.''

''இப்ப அதுதான நடக்குது.''

''ஒம்மப்போல நாலு பேரு இரிந்தாப் போதும். அவனுவ கால்ல வுழுந்து கும்புடதுக்கு.''

''கால்ல ஏன் வுழுவணும். எல்லாம் அததுக்குக் காலம் வரும். அதுவரைக்கு அனுபவிச்சுத்தான் ஆவணும். ஆனானப்பட்ட செவகாசியிலயே ஒண்ணும் செய்ய முடியல. அவிய சப்பரத்துல சாமியத் தூக்கி ஊரச் சுத்தி வந்தா இவிய போட்டிக்குப் போவாவ. வீணால சண்டதான். கோயிலுக்குள்ள போவ முடியிதா. இத்தனைக்கும் அங்க இவிய கூட்டந்தான் ரெம்ப.''

பெரிய நாடார் பலவேச நாடாரைப் பார்க்கவில்லை. இருவருக்கும் இப்படித்தான் பேச்சு முட்டும். எழுந்து போய்விடுவார்கள்.

கொல்லபட்டியில் நடந்த தகராறு சுத்துவட்டாரமெல்லாம் பரவிவிட்டது. நாடார்களுக்கும் மேல்சாதிக்காரர்களுக்குமிடையே பகை தீர்ந்த பாடில்லை. நாடார்களை அடக்கி ஒடுக்கணுமென்று மறவர்கள்தான் மும்முரமாக இருந்தார்கள். ரெண்டு பக்கமும் அங்கங்கே மோதிக்கொண்டார்கள். பொறுமையிழந்த நாடார்கள் திரண்டு நாலு மறவர்களைக் கொன்றுவிட்டார்கள். ஏராளமான நாடார்கள் கைதுசெய்யப்பட்டு விசாரணை நடந்தது.

கீழ்க்கோர்ட்டில் முடிவாகாமல் வழக்கு திருநெல்வேலிக்குப் போனது. எவ்வளவோ சாட்சி சொல்லியும் எடுபடவில்லை. எல்லாரும் விடுதலையாகிவிட்டார்கள். இதனால் ஆத்திரமடைந்த மறவர்கள் மூணு நாடார்களைக் கொலைசெய்து பழி தீர்த்துக்கொண்டார்கள். ஆக ஏழு கொலைகளைச் செய்தவர்கள் யாரென்று கடைசிவரை தெரியாமலேயே போயிற்று.

பிறகும் கோயில் தகராறு பல இடங்களில் விளைந்துகொண்டுதானிருந்தது. ஒருவருக்கொருவர் மடங்கிப் போவதாக இல்லை. மதுரையிலும் திருச்சுழியிலும் நாடார்கள் கோயிலுக்குள் போனதாக வழக்குப் போட்டு கோர்ட்டில் அபராதம் கட்டவேண்டியிருந்தது.

கொந்தளிப்பு குளிர்ந்த பாடில்லை.

## 6. வடலி வளர்ந்து...

அம்மமுத்துக்கு எல்லாம் உறுத்தலாகவே இருந்தது. பனையேறும்போதுகூட வைதுகொண்டே ஏறுவான். அவன் நடவடிக்கைகளைக் கவனிக்கும் பெரிய நாடார் சொல்வார்.

''பேச நேரமில்லப்பா. பொறுப்பு கெடக்குது தலைக்கு மேல.''

தெய்வானை சமைந்து உட்கார்ந்துவிட்டாள். சுப்பம்மாளுக்கு வீட்டு வேலை கூடியது. மகளைக் கவனித்து வீடு கூட்டிவிடும்வரை சரியாக உறங்கவில்லை.

தங்கையாவுக்கு ஒண்ணுமே புரியவில்லை. தெய்வானை முன்னைப் போல் அவனுடன் கிட்ட இருந்து பேசுவதில்லையே ஏன். எந்நேரமும் ஆத்தாளுடனேயே திரிகிறாளே. பெரிய மனுசியாகிவிட்டால் இப்படித்தானோ. வலியப் பேசினால்கூட சிரித்துக்கொண்டு ஓடிவிடுகிறாள்.

அவனுக்குச் சிய்யென்றிருந்தது. மாமாவுடன் தொடர்ந்து பனைக்குப் போனான். அம்மமுத்துக்குச் சந்தோசம். நார் முடிச்சுப் போடச் சொல்லிக் கொடுத்தான். பாளையரிவாள் பிடித்து நார் கிழிக்கச் சொன்னான். வயிற்று நாரென்றால் அரிவாளை அகலமாகப் பிடித்து மட்டையில் தெண்டித்தெண்டிக் கிழிக்கணும். முதுகு நாருக்கு நடு அரிவாள் போதும். அகணிக்கு வேறு மாதிரி. இருபுறமும் கருக்கை அருவிவிட்டுப் பக்குவமாகச் செதுக்கி உரிக்கணும். தங்கையா நாரை மெல்லிசாக இழைக்கக்கூடத் தெரிந்துகொண்டான். பிறகு ஓலையைச் சிறகு மிதிக்கவும் கற்றுக்கொண்டான். பெரிய நாடார் கேட்டார்.

''தங்கையா தொழில்ல பங்குக்கு வந்துடுவானோ.''

அம்மமுத்து சிரித்தான்.

''அவனுக்குச் சொந்தமா அருவா வேணுமாம்.''

''அதுக்கென்ன ஒடனே செஞ்சாப் போச்சு.''

பெரிய நாடார் கைக்கடக்கமான அரிவாள் சம்பாரித்துப் பேரனிடம் கொடுத்தார்.

''அருவா புடிச்சு வெட்டயில காலுக்கு வராமப் பாத்துக்கிடணும்.''

தங்கையா காலில் தடை நாரில்லாமல் வடலிப் பனையில் ஏறிப் பழகினான். பிறகு தடை மாட்டி ஏறினான். கழுத்தில் மட்டைகளை அழகாக அருவினான். அரிவாளை ரெம்பவும் ஓங்காமல் மட்டை வெட்டினான். அம்மமுத்து சொல்லிக் கொடுத்த மாதிரி பாளை சீவி இடுக்கிக் கலயம் கட்டினான். ரெண்டு பனையில் தனியாகப் பதினி இறக்கினான். முதல் காரியமாகப் பதினியை அத்தை மூலமாக தெய்வானைக்குக் கொடுத்தனுப்பினான்.

பெரிய நாடார் ஒரு பட்டை குடித்துவிட்டுச் சப்புக்கொட்டினார்.

''அடேயப்பா தங்கையா எறக்கின பயினியா. நாக்குல பிசுபிசுன்னு ஒட்டுதே.''

தெய்வானைக்குச் சந்தோசமில்லை. காய்ப்பேறிக்கொண்டிருந்த தங்கையாவின் மார்பை வருத்தத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள்.

தங்கையா தொழிலில் கைதேர்ந்துவிட்டான். பனங்காயைத் தூக்கிப் போட்டு நுங்கு உடைக்கும் தோரணையும் பனையில் மட்டையைச் சவட்டி உட்காரும் லாவகமும் அம்மமுத்தையே மலைக்க வைத்தது. அவன் தார்ப்பாய்ச்சி யிருக்கும் விதம் தரையழுந்த நடக்கும் நடை எல்லாமே சண்முகத்தை ஞாபகப் படுத்தியது. அவன் மாமா என்று கூப்பிடும்போது சண்முகம் கூப்பிடுவது போலிருந்தது.

பெரிய நாடாருக்குக் கொஞ்ச நாளாகத் தங்கையாவைப் பற்றியே யோசனை ஓடியது. ஆள் திடப்பட்டு எளவட்டமாகிவிட்டான். ஊர் இருக்கும் நிலவரத்தில் இவனைத் தனியாக விடக் கூடாது. ஒரு நேரம்போல ஒரு நேரம் இருக்காது. நாலு பேருடன் சேர்ந்து வம்பை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்தால் என்ன செய்வது. காலாகாலத்தில் கலியாணம் முடித்துவைத்தால் இவன் பாட்டுக்குத் தொழிலைக் கவனிப்பான். வீட்டிலேயே பெண் இருக்கிறது. நல்ல நாள் பார்த்துச் சேர்த்துவைக்க வேண்டியதுதான்.

இருந்தாலும் சின்னத் தயக்கம். இப்படிச் செய்யலாமென்று நாம் நினைக் கிறோம். பெண்ணைப் பெற்றவர்கள் மனசில் என்ன வைத்திருக்கிறார்களோ. உடையவர்களிடம் ஒரு வார்த்தை கேட்காமல் எப்படி. நம் சொல்லைத் தட்ட மாட்டார்கள் என்றாலும் அவர்கள் மனசுப்படி போவதுதான் நல்லது. சுப்பம்மாளை ஆழம் பார்த்தார்.

''நம்ம தேவான உக்காந்து எவ்வளவு நாளாச்சு.''

''மூணு ஆடி முடிஞ்சது.''

''என்ன நெனச்சிரிக்கிய. இனியும் வச்சுப் பாக்கப்போறியளா.''

அவளுக்குப் புரிந்துவிட்டது.

''என்ன அப்படிக் கேக்கிய. ஒங்களுக்குத் தெரியாம என்ன நெனைக்கப் போறொம்.''

''அதுக்கில்ல... ஒங்களுக்கொரு எண்ணமிரிந்தாத் தெரிஞ்சுக்கிடணு மில்லையா.''

''அவியளுக்கோ எனக்கோ புதுசா எண்ணமிரிந்தாத்தான சொல்ல முடியும்.''

''அப்ப என்ன செய்யலாம்.''

''நீங்கதான் சொல்லணும்.''

அவர் அவளைப் பெருமையுடன் பார்த்தார். இது யார். பெரிய நாடாருக்கு மருமகளாக்கும். இவள் வாயிலிருந்து வார்த்தையைப் பிடுங்கவா. என்றைக்குத் தான் மிஞ்சிப் பேசியிருக்கிறாள்.

''தங்கையா காத்துக்கிட்ரிக்கானே அதுக்குத்தான் கேட்டென்.''

அவள் முகத்தில் புதுக் களை வந்தது.

''அவனோட பொண்ணுக்காகக் காத்திரிக்கான். இதுல நம்ம என்ன சொல்ல. இத்தன நாளா அவன வளத்து ஆளாக்கினதுக்கு நம்ம பொண்ணக் குடுக்கலன்னா நாலு பேரு மதிப்பாவளா.''

அவர் நெகிழ்ந்துபோனார். மறுநாளே ஆண்டியைத் தேடிக் கலிங்கலுக்கு ஓடினார்.

''நல்ல நாளு பாத்துத் தங்கையாவுக்குத் தேவானைய முடிச்சுவச்சிடுவமா.''

அவனுக்குத் திகைப்பு. இன்னும் என்னைத் தேடி எப்படி வர முடிகிறது. நான் என்ன யோசனை சொல்லட்டும்.

''சந்தோசமாச் செய்யிங்க.''

''எப்ப நாளு வச்சுக்கிடலாம்.''

''என்னிடம் கேட்க வேணாம். நீங்களே முடிவுசெய்துவிட்டு எனக்குச் சொல்லியனுப்புங்கள். அது போதும்.''

''ஒங்களுக்குத் தெரியாற நாளா.''

''அதெப்படி.''

''அப்படித்தான். நீங்கள்தான் முடிவுசெய்யணும்.''

''இதுல என்னருக்கு.''

''தையில வச்சுக்கிடுவமா.''

''அப்படியே செய்யிங்க.''

தை மாசம் தங்கையாவுக்கும் தெய்வானைக்கும் கலியாணம் நடந்தது. போவதா வேண்டாமா என்று ஆண்டிக்கு ரெட்டிப்பு மனசு. ராக்கனையாவது பொய்யாளியையாவது அனுப்பலாமா. நாடார் வருத்தப்படுவார். சிறிசுகளின் மனசு நோகும். தவங்கித்தவங்கிப் போய்ச் சேர்ந்தான்.

தன் கைக்குள் வளர்த்த தங்கையாவை மாப்பிள்ளைக் கோலத்தில் பார்க்க ஆசையாக இருந்தது. சண்முகமும் மாலையம்மாளும் நினைவுக்கு வந்தார்கள். கூடவே வேதனையும் வந்தது.

கலியாணத்துக்கு வரணுமென்று கருப்பிக்கு ஆசையைப் பார்க்கணுமே. ஆசையிருந்து என்ன செய்ய. கண் பார்வை பத்தவில்லை. இடுப்பு விளங்க வில்லை. நாலெட்டு வைப்பதே பெரிய காரியம். அவனிடம் கெஞ்சாத குறை யாகச் சொன்னாள்.

''ஏ இவனே நீ பாத்தாச்சுன்னு சும்மா வந்துறாத. அதுகள இங்க கூட்டீட்டு வந்து காட்டு. பெறகு எப்பப் பாக்கப்போறென். நமக்குக் காலு வெளங்குதா கையி வெளங்குதா. நல்லாருந்தா ஒங்கூட வந்து திரும்பீருவென். மகராசி பெத்த புள்ள நல்லாருக்கணும்... ஸ்... அஞ்ஞாடி...''

தங்கையா ஆண்டியைக் கலிங்கல் பாட்டையா என்று கூப்பிட்டான். வழியனுப்பும்போது தெய்வானையும் வந்தாள். ஆண்டிக்கு உதட்டில் வார்த்தை முட்டியது.

''கலிங்கலுக்கு வாறீகளா.''

விழுங்கிக்கொண்டான். பெரிய நாடாரைப் பார்க்கும்போது மனசின் கட வோடியில் ஒரு நினைப்பு கிடந்து படுத்தியது.

'இதுகள இங்கதான் வச்சுக்கிறப்போறீகளா.'

எப்படிக் கேட்பது. இதுகளாச்சும் தழைக்கட்டும். எங் கண்ணுக்கு முன்னால் அந்தக் குடும்பத்தைப் பெருக வைக்கணுமென்று ஆசைப்பட்டேன். அதுக்கு லவிக்கவில்லை. தெய்வானையிடம் சொன்னான்.

''அத்தையப் போல பொறுமையாருந்து தங்கையாவப் பாத்துக்கிறணும் தாயி.''

தெய்வானை சுப்பம்மாளைப் பின்னியிருந்தாள். ஆண்டி கலிங்கலுக்கு நடந்தான். கருப்பி சொல்லியனுப்பியது நினைவுக்கு வந்தது. கூட்டிவரச் சொன்னாளே. என்ன சொல்லிச் சமாளிப்பது. திரும்பிப் போய்க் கூப்பிடலாமா. கருப்பியிடம் வசவு வாங்கிக்கட்டிக்கொள்ளலாம். நடந்துவிட்டான். அம்மமுத்தும் பெரிய நாடாரும் ரெம்ப நேரம் அவனைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

கலியாணத்துக்குப் பிறகு தங்கையாவுக்குத் தொழிலில் அதிகக் கவனம் வந்தது. மாமாவை எதிர்பாராமல் வேலை செய்தான். தெய்வானை ஆத்தாளுக்கு அனுசரணையாக இருந்தாள். அவளுக்குப் பாட்டையா மேல்தான் ரெம்ப அக்கறை. வீட்டில் சமையல் முடிந்ததும் அவள் சத்தம் கேட்கும்.

''பாட்டையா சாப்பிட வா.''

அவர் சோற்றை விழுங்கிக்கொண்டே சொல்வார்.

''இண்ணைக்குத் தேவான சமையலா. நல்லாரிக்கு. இனியுங் கொஞ்சம் போடு.''

அதுக்காகவே காத்திருக்கும் தெய்வானை மும்முரமாகப் பரிமாறுவாள். அடுப்படியிலிருந்து சுப்பம்மா அசையாமல் பார்த்துக்கொண்டிருப்பாள்.

சித்திரை மாசம் திப்பனம்பட்டியிலிருந்து உடையம்மை வந்திருந்தாள். வந்ததும் தெய்வானையைப் பக்கத்தில் இருத்திக்கொண்டு மகளிடம் பேச்சை ஆரம்பித்தாள்.

''வயசாவுதுல்ல. அவிய உக்காந்துட்டாத் தொழிலக் கவனிக்க ஆளில்ல. நான் தவங்குற காலத்துல கிட்டரிந்து கவனிக்க ஒருத்தி வேணும்.''

ஆத்தாளின் கணக்கு சுப்பம்மாளுக்கு ஏற்கெனவே தெரியும். வயசான காலத்தில் அவர்களுக்குத் துணை வேணுந்தான். கலியாணச் சமயத்திலேயே ஆத்தா சொன்னாள். கொஞ்ச நாளாகட்டும் என்று சுப்பம்மா மழுப்பிவிட்டாள்.

பெரிய நாடாரிடம் இதை எப்படித் தெரிவிப்பது. என்ன திட்டத்தில் இருக் கிறாரோ. ஆத்தாளும் நேரில் கேட்க முடியாது. சுப்பம்மா தெய்வானையைப் பார்த்தாள்.

''அம்மத்தாளோட ஊருக்குப் போறயா.''

தெய்வானை ஊமைச் சிரிப்பில் தலைகுனிந்தாள். அந்தச் சிரிப்பு எங்கிட்டக் கேட்டா எப்படி. தங்கையாவக் கேள் என்று சொல்வது போலிருந்தது. சுப்பம்மா அம்மமுத்திடம் போனாள்.

''ஆத்தா வந்திரிக்கா.''

''அப்பன் என்ன சொல்லுதாரு.''

''நீங்கதான் கேக்கணும்.''

''தங்கையாவுக்கு மனசு எப்படி.''

''நீங்கதான் தெரிஞ்சுக்கிடணும்.''

''எல்லாம் நாந்தானா. ஒனக்கு ஒண்ணும் தெரியாதாக்கும்.''

அதுக்கு மேல் அவள் அங்கே இருக்க மாட்டாளென்று அவனுக்குத் தெரியும். பல யோசனையில் பெரிய நாடாரைக் கலந்தான்.

‘‘திப்பனம்பட்டியில அவியளுக்குத் தொணையாளு வேணுமாம்.’’

பெரிய நாடார் எதிர்பார்த்ததுதான்.

‘‘ஆமா வேணும். பனையக் கவனிக்கணுமே. என்னால இப்ப ஓடியாடி அலைய முடியிதா. அதப் போலத்தான்.’’

‘‘கலியாணம் முடிச்சுச் சரியா மூணு மாசங்கூட ஆவல. அதுக்குள்ள கூப்புடுதாவ.’’

‘‘அவிய கஸ்டம் அவியளுக்கு.’’

‘‘அப்ப அனுப்பச் சொல்லுதியளா.’’

‘‘ஊரு நெலவரமும் சரியில்ல. கொஞ்ச நாளைக்கு அங்க போயி இரிந்தா நல்லதுதான்.’’

‘‘அங்க நெலம இதவிட மோசம். அப்படிப் பாத்தா எங்கயும் குடியிரிக்க முடியாது. வந்தது வரட்டும்னு நெனைக்கணும். மூலையிலயா மொடங்கிக் கெடக்க முடியும்.’’

பேச்சு இந்தத் தினுசில் வளர்ந்தால் எதில் கொண்டுபோய் முடியுமென்று பெரிய நாடாருக்குத் தெரியும். உடனே சண்டைக்குப் போகணும்போல் அம்ம முத்து கொதிப்பான். கோவத்தை மடக்கிப் பிடித்து வழிக்குக் கொண்டுவரக் கஷ்டப்படணும்.

‘‘இப்ப ஒண்ணும் ஆவலயே. நீ போப்பா.’’

மறுநாள் பெரிய நாடார் தங்கையாவுடன் கலிங்கலுக்குப் போனார். சங்கதியறிந்த ஆண்டிக்கு மனசில் பல கேள்விகள் தொங்கின. சிரிப்பால் மறைத்துக்கொண்டான்.

‘‘அந்தப் பாட்டையா கூப்புடுறாராக்கும்.’’

தங்கையா மாறிமாறித் திரும்பி முழித்தான். அவனுக்கென்னமோ கலிங் கலுக்கே வந்துவிடலாமென்ற நினைப்பு. சொல்ல வாய் வரவில்லை. பெரிய நாடார் முனங்கினார்.

‘‘இவனுக்க அம்மத்தா வந்து காத்துக்கெடக்கா.’’

‘‘அவுகளுக்கு ஒத்தாசன வேணுமில்ல. இதுக்காக நீங்க மெனக்கிட்டு வரணுமாக்கும்.’’

பெரிய நாடார் மனசு சொன்னது.

‘‘நீ காப்பாத்திக்குடுத்த புள்ள.’’

அவன் அவரைப் பார்த்தான்.

‘‘இதுல என்ன ரோசன. ஒருமனசா அனுப்பி வையிங்க.’’

பேச்சுச் சத்தம் கேட்டுக் கருப்பி தட்டுத்தடுமாறிக் கிட்ட வந்தாள். தங்கையாவைக் கூர்ந்து பார்த்தாள்.

‘‘புள்ளாண்டன் ஆரு.’’

ஆண்டி கேட்டான்.

‘‘ஆருன்னு சொல்லு பாப்பொம்.’’

அவள் இன்னும் நெருங்கி வந்து உற்றுப் பார்த்தாள்.

‘‘தெரியலயே.’’

‘‘இதான் நம்ம தங்கையா.’’

அவள் முகம் பூரித்தது.

"அப்படியா. என் ராசாவுக்கு இங்க ஒரு கெழடி கெடக்கிறது மறந்துருச்சா. நான் நெனைக்காற நாளுண்டுமா. கலியாணத்துக்கு வரணும்னு மூக்குமுட்ட ஆச. நடக்க முடியலயே. ரெண்டு பேரவும் வரச் சொல்லிவுட்டென். வராம இருந்துக்கிட்டீக."

ஆண்டி சரிக்கட்டினான்.

"இப்ப வந்தாச்சில்ல. நல்லாப் பாத்துக்கோ."

"நான் வளத்த புள்ள. ஆத்தா மகராசி. பூத்த மரம் காத்துக்குச் சாஞ்சதுபோல போயிருச்சு. புள்ளைய மடியில வச்சுக்கிட்டு இந்தக் கையால சோறு ஊட்டுவென். ...ஸ்... அஞ்ஞாடி..."

பழைய நினைவில் அவளுக்கு அழுகை முட்டியது. கஷ்டப்பட்டு எழுந்து போய்விட்டாள்.

தங்கையாவைச் சுற்றி ஆண்டியின் குடும்பமே கூடியிருந்தது. ராக்கன் சொக்கம்மா பொய்யாளி வேலாயி அவளுடைய மக்கள் நல்லப்பன் ராமன் வள்ளி எல்லாரும் ஆவலாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ஒரு காலத்தில் வெளிக் காடியோரம் மாடுகளைச் சீண்டிக்கொண்டு திரிந்த தங்கையாவா இது. வீடு கட்டும்போது சிரட்டையில் தண்ணீரெடுத்து ஊற்றிய தங்கையாதானா. சொக்கம்மாளுக்குப் பேச்செழும்பவில்லை.

தங்கையா இனம்புரியாத தவிப்பில் பாட்டையாவுக்குப் பின்னால் கழுகு மலைக்கு நடந்தான். கருக்கலைந்த முட்டையைப்போல் அவன் மனசில் பழைய நினைவுகள் தெளிவில்லாமல் மண்டின.

ஒருவழியாகத் தங்கையாவையும் தெய்வானையையும் திப்பனம்பட்டிக்கு அனுப்ப முடிவுசெய்தார்கள். பெரிய நாடார் அம்மமுத்திடம் கேட்டார்.

"இவியளோட நீ போயிட்டு வாறயா."

அவனுக்கு மனசில்லை. முந்தி தங்கச்சியைக் கலிங்கலில் குடியமர்த்தப் போனபோது சிரிப்பு மங்காத முகத்துடன் இருந்தாள். கொஞ்ச நாளாகவில்லை. குடும்பம் மண்ணாகிவிட்டது. இன்னொரு தடவை போகவா. சுப்பம்மாளைப் பார்த்தான்.

"நீதான் போவணும்."

அவள் போவதே சரியென்று பெரிய நாடாரும் நினைத்தார். அவளால் தட்ட முடியவில்லை.

## படலம் 6

### 1. செல்லக்கொடி

இருட்டு வற்றிய விடியக்கருக்கல். கிழக்கே அடைச்சூடு முற்றிப் பொழுது இன்னும் முண்டிக் கீறவில்லை. காடுகரையெங்கும் பஞ்சுத் தூவலாக வெம்பா பெய்துகொண்டிருந்தது.

பூசரமரத் தோட்டத்தின் கீழத் தாரில் கருகருவென்று குருதவாலி வெள் ளாமை. ஏக வனச்சுரப்பு. தோகையில் இறங்கும் மாப்பனிச் சுமையில் பயிர்கள் கொணங்கி நின்றன. சுண்டிவிட்ட வெங்காயம்போல் தெறித்து விழும் பூஞ் சிட்டுக்களை ஏந்தும் கருதுகளின் அசைவைத் தவிர சுற்றிலும் காற்றலுக்கமில்லை.

தென்கரையில் குக்கி நிற்கும் பனை வரிசை. கழுத்து பெருத்த மொந்தப் பனையில் ஒரு கரும்பிராந்து இறுக மூடிய சிறகைப் பிரிக்க மனசில்லாமல் உறக்கச் சடைவில் உட்கார்ந்திருந்தது.

தோட்டத்தின் சுத்துக்காலில் கருதுவாங்காத பயிர்களைப் பிடுங்கிக்கொண் டிருந்தான் ஆண்டி. வெற்றுப் பயிர்கள் நிலத்தில் சும்மா நிற்பதைவிட மாட்டுக்குப் போட்டால் பிரியமாகத் தின்று தண்ணீர் குடிக்கும்.

மேலத் தாரில் வெண்டைப் பிஞ்சைக் கொறித்துக்கொண்டு பொய்யாளியின் மூத்த பயல் நல்லப்பனும் நடுவுளவன் ராமனும் மங்கலாகத் திரிந்தார்கள். வெஞ்சனப்பாட்டுக்கு ஏதாச்சும் காய்கறி கொண்டுபோகணும். இல்லையென் றால் வேலாயி தொணதொணப்புத் தாங்காது. சாப்பிட்டு முடிக்கும்வரை பொரிந்துகொண்டிருப்பாள்.

''நாக்க நீட்டிநீட்டித் திங்க மட்டும் தெரியிது. பிஞ்சையிலருக்கிற காயப் புடுங்கீட்டு வாறதுக்கு வலிக்குது. வெரலக் கடிச்சுக்கிட்டுக் கஞ்சியக் குடிங்க.''

பயல்களுக்கு அந்தப் பயம்தான். பூவோ பிஞ்சோ வீடுபோய்ச் சேர்ந்தால் சரி.

ஒவ்வொரு பனைத் தூராகச் சுற்றிவருகிறதே யார் அந்தப் பொடிசு. கடைக்குட்டி வள்ளியா. காளான் தேடுகிறாள் போலிருக்கிறது. காளானென்றால் அவளுக்கு ஒரே கிறுக்கு. எந்நேரந்தான் முழித்து வந்தாளோ. பனையச் சுற்றி முடித்துத் தோட்டத்து வரப்பையெல்லாம் அளக்காமல் ஓய மாட்டாள்.

பொய்யாளி நேற்று மனுசன். அதுக்குள் மூணு பிள்ளைக்காரனாகி விட்டான். நாலஞ்சு வருசம் போனால் நல்லப்பனுக்குக் கலியாணம் முடிக்கணும். காலம் நாலுகால் பாய்ச்சலில் ஓடுகிறதா சும்மாவா. கொஞ்ச நாளில் பொய் யாளியும் பேரன் பேத்தி எடுத்துவிடுவான். வீட்டில் மூணு அப்பச்சி. ஆண்டி பெரியப்பச்சி. ராக்கன் சின்னப்பச்சி. பொய்யாளி என்னப்பச்சியோ.

கருப்பிக்கு மட்டும் அவன் என்றைக்கும் சவலைப் பேரன்தான். அவனைக் கொஞ்ச நேரம் பார்க்காமல் இருக்க முடியாது. ''ஏ இவனே ஏக்கி சொக்கம்மா.'' என்று விசாரித்துத் தவித்துவிடுவாள். கட்டையில் போகும்வரை அந்தக் கோட்டி தெளியாது.

சீலைக்குக் கொசுவம் வைக்கத் தெரியாத வேலாயி சம்பந்தவாட்டியாகப் போகிறாள். பெரிய மனுசி மாதிரி அவள் பேச்சென்ன தோரணையென்ன. குடும் பத்தில் பொறுப்பென்ன கருக்கடையென்ன. ஒரு காக்கா குருவி கிட்ட அண்ட முடியுமா.

பிழைப்பில் பூளாப்புக்காரி. வழியில் இத்தினி சாணி கிடக்கக் கூடாது. நக்கித் துடைத்த மாதிரி அள்ளிக் குப்பையில் போடுவாள். அடுத்தவன் நிலத்தில் வெள் ளாமை கொஞ்சம் தூக்கலாக விளைந்துவிட்டால் பொய்யாளியை வறுத்துக் கொட்டிவிடுவாள்.

''அதெப்படி அவுகளுக்கு மட்டும் அதியமா வெளையப்போச்சு. நமக்கும் அம்புட்டு நெலந்தான.''

பொய்யாளி நெளிந்து உழத்துவான்.

''ஆரு போயி அளந்து பாத்துட்ருக்காக. அவுகளுக்கு அனயம் வெளஞ்சா என்ன இப்ப.''

''நம்ம பாடுபட்ட லச்சணம் அப்படி. அவுகன்னா பிஞ்சையிலயே குடியிருந்தாகளா சும்மாவா.''

''இவ ஒருத்தி. பாடுபடாமச் சும்மாவா திரியிறாக. மனுசன் தன்னால மாட்டுக்குப் பின்னால அலஞ்சு ஒஞ்சுபோயிக்கெடக்கான். வெள்ளாம வெளையலயாம். பெரிய கெடாரம் வேணும்னா மண்ணுல போயி முட்டு.''

அவன் தப்பிக்கப்பார்ப்பான். அவள் விட மாட்டாள்.

''இப்படிப் பெழச்சு நம்ம கரையேறவா. போயிட்டு எங்க சுத்தியும் இங்கதான வரணும். கஞ்சிபோடுன்னு கேட்டால்ல இருக்கு சங்கதி.''

''இவ கஞ்சி ஊத்துவான்னு வாயப் பெளந்துக்கிட்டுத்தான அலையிறாக. பொகலத்தவன்னு நெனச்சுக்கிட்டயா. ஒருவார்த்த சொன்னாப் போதும். கவனிக்கிறதுக்கு எத்தன ஆளுருக்கு தெரியுமா.''

''நம்ம மொகறக்கட்டைக்கு அதுவேற கேக்குதா. ஒரு காடிச் சாணியக் கரச்சு புது வெளக்கமாத்த நனச்சுத் தயாரா வச்சிருப்பென். ஆருக்கு வுழுகுதுன்னு தெரியாது.''

வீட்டில் எல்லாரும் பெருமையாக வேடிக்கைபார்த்துக்கொண்டிருப்பார்கள். ஆண்டி ரெண்டொரு வார்த்தை சொல்லிச் சண்டையை விலகிவிடுவான்.

''அத்தோட வுடு தாயி. அவன் அப்படியொண்ணும் தப்பாப் பேசலயே. கஞ்சி ஊத்துறதுக்கு அஞ்ஞையும் பேத்தியும் இருக்கிற தெம்புதான். மூணு புள்ளக்காரனாகியும் போக்கத்த பெயலுக்குப் பேசத் தெரியிதா.''

அப்போதும் வேலாயி முணுமுணுப்பாள்.

''பேரன் செய்றதப் பூசி மொழுகிறதுக்கு வீட்ல ஆளுதானா இல்ல.''

ஆண்டி பேரனைப் பார்த்து மட்டியைக் கடிப்பான். ஆள் போன இடம் தெரியாது.

சொல்லப்போனால் குடும்பத்தில் வேலாயிதான் தாப்பான மனுசி. கதை அப்படியாகிவிட்டது. புஞ்சைக்கு ஆள் கூட்டிப்போய் வேலை வாங்குவது முதல் கொத்தளந்து கொடுக்கிறதுவரை எல்லாம் அவள் பொறுப்பு. சொக்கம்மாளுக்கு அவ்வளவு காராதூரம் கிடையாது. கணக்குவழக்குப் பார்க்க மாட்டாள். எதிலும் ஆழாக்கு உழக்கு மினுங்கவே கொடுப்பாள். வேலாயிக்கு இது பிடிக்காது. ஒரு நாள் சுண்டைக்காயை ரெண்டாகக் கடித்ததுபோல் சொல்லிவிட்டாள்.

''நீ கொஞ்சம் வெலகிக்கத்த. ஒனக்கு ஓட்டக் கையி. குறுணி அளந்து போட்டுட்டுப் பதக்குன்னு சொல்ற காலத்துல நம்ம இப்படியிருந்தாத் தெருவுல நிக்க வேண்டியதுதான்.''

சொக்கம்மா மூச்சுக்காட்டாமல் ஒதுங்கிக்கொண்டாள். அவளுக்கு உள்ளூரச் சந்தோசம். மருமகளின் சாமர்த்தியத்தைக் கவனித்த ராக்கன் சொக்கமாளைக் கிளறினான்.

“நீயுந்தான் இருக்கயே வாயிசெத்த கழுத. அவ கடுகாப் பொரியிறதப் பாரு.”

அவள் வெள்ளந்தியாகவே சொன்னாள்.

“அப்படி மருமகதான் வேணும்.”

“வெரட்டியடிக்கிற மருமகதான.”

“எனக்கென்ன மகராசிக்கு. வீட்ல இருந்துக்கிட்டே திம்பென். குடும்பத்த நில்லுன்னு நிறுத்துறதுக்கு ஒருத்தி வந்துட்டா.”

அவன் கிட்ட வந்து முழித்தான்.

“நல்லா நிறுத்துங்க.”

ஆச்சரியந்தான். சொக்கம்மா முன்னுக்குப்பின் தெரியாத வெகுளி. அவளுக்கு எப்படி இவ்வளவு கூறுகணக்கு வந்தது. ஒரு பண்டம் கொடுத்து வாங்கத் தெரியாது. குண்டிச்சீலை மறந்தவள். யாராவது என் பாடு இப்படியென்று சொல்லியழுதால் இளகிப் போய்விடுவாள்.

“அரிசின்னு அள்ளிப் பாப்பாருமில்ல. உமின்னு ஊதிப் பாப்பாருமில்ல. நாதியத்துக் கெடக்கிற மனுசி எங்க போவா. நம்ம குடுத்து ஒதவுனாக் கொறஞ்சா போகுது.”

கையில் கிடைத்ததைக் கொடுத்தனுப்புவாள். அப்பேர்ப்பட்ட மனுசி இன்றைக்கு மருமகளின் சிக்கனத்தையும் கண்டிப்பையும் மெச்சுகிறாள். வீட்டுக்கு வருகிறவர்களை மருமகளிடம் கைகாட்டுகிறாள். எல்லாம் வேலாயி சாமர்த்தியம்.

ஆண்டி குருதவாலிப் பயிர்களின் தூர்மண்ணைத் தட்டிவிட்டு நிமிர்ந்தான். பனித்தூளுக்கிடையே வரப்புநெடுகக் காளான் கவனத்தில் வள்ளி செல்ல நடையில் வந்துகொண்டிருந்தாள். அவள் கையில் ஒத்தை முகட்டு வீடுகளாகச் சிறுசிறு காளான்கள்.

அவள் அப்பச்சியிடம் வந்து ஒட்டிக்கொண்டாள். அப்பச்சி அவள் தலையை வாஞ்சையாகக் கோதி ஈர வெம்பாவை விரட்டினான்.

“இந்தக் கூதலுக்குள்ள வீட்ல கெடக்காம ஏந்தாயி இப்படி அலையிற. காளான் வேணும்னா அண்ணங்கிட்டச் சொல்ல வேண்டியதுதான. இல்ல அப்பச்சியிட்டச் சொன்னாக் கொண்டுவர மாட்டனா.”

அவள் அதைச் சட்டைசெய்யவில்லை. மடியில் பத்திரப்படுத்தியிருந்த முண்டு காளானை எடுத்து நீட்டினாள்.

“நம்ம பிஞ்சையில எடுத்துட்டு வந்தென். நல்லாருக்கும் தின்னுப்பச்சி.”

“வேணாம் தாயி. எனக்குக் குடுத்துட்டாப் பேத்திக்கு வேணுமில்ல.”

“அவளுக்கும் வச்சிருக்கென்.”

அவள் அடுத்ததைக் காட்டினாள்.

“இது எந்தப் பேத்திக்கு.”

“கருப்பிப் பேத்திக்குத்தான்.”

“சொக்கம்மாப் பேத்தி கோவிச்சுக்கிருவால்ல.”

“அவளுக்குப் பூத்த காளான் குடுப்பென்.”

“அஞ்ஞைக்கு இல்லையா.”

“பெரியண்ணன் குடுப்பான்.”

“ஆமாமா அவங்கிட்டச் சொல்றென்.”

வேலாயி சொல்லுக்குக் கட்டுப்பட்டவன் நல்லப்பன் ஒருவன்தான். எத்தனை வசவு வைதாலும் எதிர்த்துப் பேச மாட்டான். வயிறு நிறைந்தால் போதும். வீட்டில் அவனுக்கு மங்கிணிப்பாம்பு என்று பேர் உண்டு.

ராமன் அப்படியில்லை. ஒரு சொல் கேட்க மாட்டான். மூக்குக்கு மேல் கோவம் வரும். செனாய்த்துக்கொண்டு நடப்பான். பதிலுக்குப் பதில் பேசுவான். அடிக்க வந்தால் விறைப்பாகத் தடுப்பான். கடைசியில் அவனுக்கும் சேர்த்து வாங்கிக் கட்டிக்கொள்வது பொய்யாளிதான்.

வள்ளி இருக்கிறாளே எல்லாருக்கும் மேல். லேசுக்குள் அகப்பட மாட்டாள். மூஞ்சீறு மாதிரி காலுக்குள்ளும் கைக்குள்ளுமாக ஓடித் தப்பித்துவிடுவாள். சொக்கம்மாளின் முந்தியில் முடிந்துகொண்டு அழுத்தியங்காட்டுவாள். இல்லை கருப்பியின் மடியிலிருந்துகொண்டு கள்ளச் சிரிப்பு கேட்கும். வேலாயிக்கு ஆத்திரம்ஆத்திரமாக வரும்.

''எல்லாம் பேத்திமாரு குடுக்கிற செல்லம்.''

கருப்பி வள்ளியின் தலையைப் பிடித்து ஆட்டித் தானும் பேயாடிக் கொண்டே பாடுவாள்.

''ஒத்தக்கொடி பிச்சிக்கொடி
முத்தத்துல வச்சகொடி
ஆசக்கொடி வள்ளிக்கொடி
ஆண்டிவீட்டுச் செல்லக்கொடி.''

அந்த ஆட்டத்துக்கே மூச்சுவாங்கிவிடும். '' ...ஸ்... அஞ்ஞாடி...'' என்று தவிப்பாறுவாள். வள்ளி பேத்தியைக் கிறுவாணம் சுற்றிப் பாடுவாள்.

''அஞ்ஞாடி ஆத்தாடி
ஆத்தாடி அஞ்ஞாடி
அம்மாடி சும்மாடி
சும்மாடி அம்மாடி.''

''எம்மா எம் புள்ள... என் அஞ்ஞையில்ல. சும்மாரும்மா. கீழ வுழுந் துருவயில்ல.''

பேத்தி பிடித்து நிறுத்தும்வரை பாட்டு ஓயாது.

ஆண்டி தலைத்துண்டை அவுத்து வள்ளியின் உடம்பை மூடினான்.

''எல்லாக் காளானவும் கொண்டுட்டு வீட்டுக்குப் போ தாயி. அப்பச்சி பயித்தக் கெட்டித் தூக்கீட்டு வாறென்.''

வள்ளி கடைசி வரப்பை நிரைபிடித்தாள். ஆண்டி அவளை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்குள் மகளின் நினைவு திரண்டது.

**வீ**ரம்மா அளக்காத காடுகரையா. எடுக்காத காளானா. வீடெல்லாம் அவள் விளையாட்டு பூத்துக்கிடக்கும். அவளை யாராவது கண்டிக்க முடியுமா. கெஞ்சிக் கூத்தாடித்தான் வழிக்குக் கொண்டுவரணும்.

சிணுங்கக்கூட விடாமல் செல்லமாக வளர்த்த மகளுக்கு நல்ல பிழைப்பு வாய்க்கவில்லை. கருத்தையனுக்குக் கழுத்தை நீட்டிய நாளிலிருந்து அவள் பாடு

சங்கடந்தான். பிறந்த வீட்டு வசதியை அடியோடு மறந்துவிட்டாள். புகுந்த இடமே தஞ்சமாகிவிட்டாள்.

ஊர் முழுக்க அரட்டிஉருட்டி வேலைக்கு ஆள் கூப்பிடும் வேலாயி அந்தப் பக்கம் வந்ததும் அடங்கிவிடுவாள். வீரம்மாளைப் பார்த்தும் பார்க்காத மாதிரி தலைகுனிந்துகொள்வாள். கூப்பிட மனசு வராது. ஒரு வார்த்தை பேசாமலும் போக முடியாது. நிலைமையைப் பார்த்து வீரம்மாளே பிடித்துக்கொள்வாள்.

''எம்மா தாயி பெரிய வீட்டுக்காரி நாங்க இருக்கிறது கண்ணு தெரியலயா. ஒங்க எடத்துல வலிய வந்து மொழையிவம்னு பாத்தயா. அதுக்கு ஆத்த மாட்டாற கழுதைக ஆரவாச்சும் பாரு. நீங்கதான் அருசுகமா வெள்ளாம செய்றீகளாக்கும்.''

வேலாயி லேசுப்பட்டவளா. தோரணையாகச் சிமிட்டிக்கொள்வாள்.

''சினிஞ்ஞு என்ன கண்டந்துண்டமாப் பேசுற. ஓம் பிஞ்சையில நீ வந்து நிக்கிறதுக்கு நான் வந்து கூப்புடணுமாக்கும்.''

''ஊரச் சுத்தி அத்தன காடுகளும் எங்க காடுதானக்கி. பெறகெதுக்கு ஓம் பின்னால வரணும். நீ பரம்பரப் பணக்காரி. ஒங்களுக்கும் எங்களுக்கும் ஒட்டுமா எட்டுமா.''

''அது சரிதான். ஒங்களோட ஒட்றதுக்கு நாங்க தரமா.''

''அடி எஞ் சிறுக்கி கிள்ளுவச்சுப் பேசுறயே என்ன சங்கதி.''

''நானா பேசுறென்.''

''பின்ன நானா.''

''நல்லா ரோசனபண்ணிப் பாரு.''

''அப்படித்தான் பேசுவென்.''

''சித்தப்பங்கிட்டச் சொல்லுவென்.''

''சும்மா சொல்லு. எனக்கென்ன பெயமா. அவன் ஒருத்தன் இருக்கான்ல ஓம் பேச்சக் கேக்கிறதுக்கு.''

அவள் நெருங்கிவந்து கோழிக் குஞ்சுபோல் வேலாயைக் கைக்குள் வளைத்துக்கொள்வாள். வேலாயிக்கு உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை குளிர்ந்து போகும். அண்ணாந்துஅண்ணாந்து பார்ப்பாள். சங்கதியைச் சொல்ல முடியாமல் மனசு கிடந்து உழத்தும்.

''என்னடி தவுடு தின்ன கோழிமாதிரி மென்னுமென்னு விழுங்குற.''

''பேத்தி...''

''பேத்திக்கென்ன. கல்லுக்குத்தி மாதிரி நல்லாத்தான இருக்கா.''

''ஒரெட்டு வந்துட்டுப் போகச் சொன்னா.''

''எதுக்காம்.''

''எனக்கென்ன தெரியும்.''

''ஒனக்குத் தெரியாற சங்கதியும் இருக்குமோ கள்ளச்சிறுக்கி.''

வேலாயிக்குத் தலையில் ஒரு இடி கிடைக்கும்.

''வீட்டுக்குப் போகலாமா.''

''நாங்க வேலவெட்டிக்குப் போகவேணாமா. நாளைக்கு வாறன்னு சொல்லு.''

''நாங்க கூப்புட்டா வருவீகளா.''

''ஒரு நாயி பேயிக்குப் பின்னாலயெல்லாம் வர மாட்டொம்... ஆமா தலைய எதுக்கு இப்படி ஓடமரமா விரிச்சுப்போட்ருக்க. அள்ளி முடியிறதுக்குத் தீரலயாக்கும். மக்களுக்கு அப்படித் தேடித் தெரட்றீகளோ.''

அவள் எண்ணெய் எடுத்து வந்து வேலாயைக் காலுக்குள் உட்கார வைத்து முடி சுவரத் தேய்த்து வளித்துக் கோடாலிக் கொண்டை போட்டனுப்புவாள். வேலாயி இடுப்பில் முந்தியைச் சொருவி நடந்து போகும் லட்சணம் அவள் மனசுக்குள் என்னென்னமோ கதை சொல்லும். வயிறு கனத்துக்கொண்டே போகும். அந்தக் கனத்தின் சொகத்திலேயே கஞ்சிக் கலயம் தூக்கி வேலைக்குக் கிளம்புவாள்.

கருப்பிக்கு ராவும் பகலும் மகளைப்பற்றிய உளைச்சல்தான். சோற்றுக்கு முன்னால் உட்காரும்போதெல்லாம் புழுங்குவாள்.

''கருவேப்பலக் கண்ணுபோல ஒத்தப் புள்ளையப் பெத்தென். இண்ணைக்கு அது வேனாவெயில்ல வாடி வதங்குதே.''

ஆண்டியின் விரல்கள் வட்டிலில் கீச்சிடும். எழுந்து திருணை மூலைக்குப் போய்விடுவான்.

நல்ல நாள் வந்தால் கருப்பிக்கு மனசு கேட்காது. அருவமில்லாமல் போய் மகளைக் கூப்பிட்டுப் பார்ப்பாள்.

''வீட்டுக்கு வந்து கை நனச்சிட்டுப் போம்மா.''

வீரம்மா சாதாரணமாகச் சொல்வாள்.

''எங்களுக்குத் தக்க இங்கயும் வெள்ளச் சோறு பொங்கியிருக்கொம். நீ ஒரு வாயி சாப்பிடுறயாஞ்ஞ.''

கருப்பிக்கு உள்ளுக்குள் காந்தும். நான் அதுக்காகவா கூப்பிட வந்தேன். நீ வந்து நின்றால் வீடு நிறைந்திருக்கும். அங்கே ஒரு மனுசன் தவியாகத் தவிப்பது தெரியவில்லையா. நான் என்ன சொல்லட்டும். உன் பிரியம்.

''அப்ப வரலயாக்கும். நான் போறென்.''

கருப்பி ஆண்டியிடம் வந்து மோதுவாள்.

''நானில்ல அவ வீட்ல சாப்பிடணுமாம். கேட்டயா சங்கதிய.''

ஆண்டிக்குள் ஏக்கம் எழும்பி அமுங்கும்.

''அதுக்கென்ன பெத்த புள்ள கையால சாப்பிடக் குடுத்துவச்சிருக்கணும்.''

''குடுத்துவைக்கணுமா. ஏன் பொடிநடையாப் போறதுதான நாக்கத் தொங்கப் போட்டுக்கிட்டு.''

''அவ என்னயக் கூப்பிடலயே.''

''அப்படியென்ன ரோசங்கெட்ட பெழப்பு வேண்டிக்கெடக்கு.''

''நீ ரெம்ப ரோசக்காரியாக்கும்.''

''சொன்னாலும் சொல்லலன்னாலும் ரோசக்காரிதான்.''

''அவ வர மாட்டான்னு தெரியுமில்ல. தெரிஞ்சும் ஏன் போகணும் அழுதுட்டு வரணும்.''

''பெத்த மனசு கேக்க மாட்டங்குதே.''

''அதெல்லாம் நீயும் நானும் இருக்கிறவரைக்குத்தான். அதுக்குப் பெறகு என்னாகும். அப்படி நெனச்சுக்கிறணும். என்னருந்தாலும் இண்ணைக்குத் தனத்துல தங்குடும்பத்துக்கு அவ பெரியமனுசிதான.''

''ஆமா மூட்டுப்பெருத்த மனுசி. பல்லுப்போன கெழடியாயிட்டா. வெத்தல இடிச்சுக் குடுக்கப் போ.''

அவள் வேதனையில் வெந்து தணிவாள். அவர்களுக்கிடையில் பேச்சு புரிமுறுக்கி அறுந்துபோகும். உள்சுமையைப் பெருமூச்சால் குறைத்துக்கொண்டு எழுந்துபோவார்கள்.

## 2. நித்திரையும் ஆனதென்ன

ரொம்ப வருசமாச்சு. வீரம்மா செத்துப்போனதை நம்ப முடிகிறதா. அந்த நிதான நடையும் பக்குவமான பேச்சும் நெற்றிச் சிரிப்பும்... பாதகத்தி கடைசி நேரத்தில் நாலு வார்த்தை பேசியிருந்தால்கூட பெற்ற வயிறு ஆறியிருக்கும். பூவாக மயங்கிவிட்டாளே.

வேலைக்குப் போன இடத்தில் துள்ளத்துடிக்க விழுந்து மூச்சுப் பேச்சில் லாமல் கிடப்பதாக ஆள் வந்து சொன்னது. வண்டிபோட்டுக் கிளம்பும்வரை கருப்பி பொறுக்கவில்லை. கதறிக்கொண்டு காட்டுக்கு ஓடினாள்.

வீரம்மாளைத் தூக்கிவந்து வண்டியில் போட்டார்கள். பொய்யாளி வாங்கிக்கொண்டான். அவள் தலை அப்பன் மடியிலும் கால் அஞ்ஞை மடியிலும் இருந்தது. வண்டி காளியம்மா கோயிலோரம் நாணலோடையைத் தாண்டியதும் அப்பனைத் துழாவிப் பிடித்து உழத்தினாள். என்னென்னமோ சொல்ல வாயெழும்பியது. ஆண்டி பரிதவித்தான்.

''சொல்லு தாயி.''

அதுக்குள் உயிர் போய்விட்டது. குருவிக் குஞ்சாக விலுக்விலுக்கென்று உதைத்து ஓய்ந்துவிட்டாள். பொய்யாளி தலையில் அடித்துக்கொண்டே மாட்டை விரட்டினான்.

உச்சிவேளையில் பேயடித்திருக்கும் என்று பேசிக்கொண்டார்கள். ஒரு வேளை முனிப்பார்வை பட்டிருக்குமோ என்றும் சந்தேகம். காரணம் யாருக்கும் துல்லியப்படவில்லை. ஊர்க்காரர்கள் ஆண்டியைக் கேட்டார்கள்.

''இவ பெறந்த வீட்லயே சாத்தி வப்பமா.''

அவன் ஒத்துக்கொள்ளவில்லை.

''கொண்டவன் எடத்துல வைக்கிறதுதான் மருவாதி.''

கருத்தையன் எங்கே இருக்கிறானென்று தெரியவில்லை. வீரம்மாளுக்குத் தான் தெரியும். அவன் இல்லாமல் சடலத்தை எடுக்க முடியாது. வரும்வரை தாங்கணுமே. முதலில் தகவல் போய்ச் சேரணும். அவன் நாள்கணக்கில் இருந்து விட்டால் என்ன செய்வது. எல்லாருக்கும் ஒரே தவிப்பு.

மங்கிணிச் சாம்பான் சொந்த வேலையாக வேப்பங்காட்டுக்கு வந்திருப்பது தெரியவந்தது. அவனைப் பிடித்து பக்குவமாகச் சொல்லிக் கருத்தையனுக்குத் தகவல் போய்ச் சேர்ந்தது.

பொழுதடைய நொண்டியன் கதறிக்கொண்டு ஓடிவந்தான்.

''நான் என்னத்தச் சொல்லட்டும். கருத்தப்பாண்டிக்கு ஒரு கையி போச்சே.''

''போன உசிரு போனதுதான். இப்ப கருத்தையன் வாறதுக்கு வழியச் சொல்லு. பொணத்த ரெம்ப நேரம் வச்சிருந்தா பொம்பள புள்ளீக அழுது கெறங்கிப் போகும்.''

''அவன் எப்படியும் வந்துசேந்துருவான்.''

நல்ல வேளை கருத்தையன் ராத்திரிக்கு வந்துவிட்டான். எல்லாரும் பெரு மூச்சு விட்டார்கள். அவன் வந்ததே சரியென்று ஒரு கேள்வி கேட்டான்.

''எவண்டா எம் பொண்டாட்டியக் கொன்னது.''

இடுப்பிலிருந்து கத்தியை உருவினான். கூடியிருந்தவர்கள் கந்துகந்தாகக் கலைந்து ஓடினார்கள். சிலர் அவனைப் பிடித்துக் கத்தியைப் பிடுங்கிச் சமாதானப் படுத்தினார்கள்.

''கொலசெஞ்ச மாதிரியே நடந்துபோச்சு. மனசு ஆற மாட்டங்குதே.''

''எப்பேர்ப்பட்ட மனுசி. தாக்கெழடியா இருந்தாளா சும்மாவா.''

அவன் பொம்பளைகளை விரசினான்.

''இங்க எழவா வுழுந்துருச்சு ஒப்பாரிவைக்கீக.''

பொம்பளைகளுக்கு நடுக்கம். அவசரமாகக் கண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்தார்கள். கருப்பி மட்டும் மகளுக்கு முன்னால் பேச்சற்று மண்டியிட்டுக் கிடந்தாள்.

எல்லாரும் போன பிறகும் செவனம்மாளின் ஏக்க அழுகை தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தது.

''வளத்தஞ்ஞு... கருத்தண்ணேன்... வளத்தஞ்ஞு...''

அவளது விக்கலைக் கேட்கக்கேட்கக் கருத்தையனின் கோவம் அடங்கியது. கொஞ்ச நேரம் வீரம்மாளை அலகுசாய்த்துப் பார்த்துவிட்டு வெளியேறினான். கல்லாக உட்கார்ந்திருந்த ஆண்டியும் தூரங்கனும் அடிக்கடி ஏறிட்டுப்பார்த்து மனசை ஆற்றிக்கொண்டார்கள்.

செவனம்மா வீரம்மாளின் கைக்குள்ளேயே இருந்தவள். தொட்டிலில் கிடந்த காலத்திலிருந்து அவளது மூச்சையும் பேச்சையும் குடித்து வளர்ந்தவள். சொந்த அஞ்ஞை அயல் மனுசி. வீரம்மாளை ''வளத்தஞ்ஞு'' என்றுதான் கூப்பிடு வாள். மூக்கம்மா ''பெத்தஞ்ஞு.'' அதைப் பற்றி மூக்கம்மா பெருமையாகச் சொல்வாள்.

''பத்து மாசம் வகுத்துக்குள்ள அடச்சுவச்சிருந்து பிதுக்கித் தள்ளீட்டா மட்டும் தாயாயிருவமா. சூடக்கருவாட்டக்கூடச் சுட்டுக்குடுத்து கூடயே இருந்து வாடாம வளத்துவாறாளே அவதான் சொந்தஞ்ஞு.''

செவனம்மாளின் சேட்டையை வளத்தஞ்ஞைதான் தாங்கணும். வசவு உரித்து வசக்குவாள். கொஞ்ச நேரந்தான். கோவம் பறந்துவிடும். மூக்கைத் தடவி முகந்துடைத்துச் செவிமயிர் கோதிக் கொண்டை முடிந்து நல்ல சீலையைக்கூடக் கிழித்துக் கொசுவம் வைத்துக் கட்டிவிட்டு அழகு பார்ப்பாள். செவனம்மா வெட் கத்தில் வளத்தஞ்ஞையின் இடுப்பைச் சுற்றி வளைத்து முகம் புதைத்துக்கொள்வாள்.

செவனம்மா எப்போதாவதுதான் சொந்தத் துணியை உடுத்துவாள். இழுத்துப் பிடித்து வரிந்து கட்டிவிட்டாலும் கொஞ்ச நேரத்தில் எங்கேயாவது அவுந்துகிடக்கும். பெரும்பாலும் அண்ணன்மார் வேட்டியும் துண்டுந்தான்

அவள் உடம்பில் ஏறியிருக்கும். கண்டமானக்கிச் சுற்றிச் சொருவியிருப்பாள். மனசுக்குப் பிடித்ததை மாராப்புப் போட்டு லாத்துவாள். வீரம்மாளுக்குக் கோவமும் சிரிப்பும் கலந்து வரும்.

''ஆம்பளையாப் பெறக்க வேண்டிய கழுத. ஒம் மொகறக்கட்டைக்கு வெதவெதமா வேட்டி துண்டு கேக்குதோ. ஊர்ப்பட்ட வாயி பேசத் தெரியிது. ஒழுங்கா மாராப்பு போடத் தெரியல. இங்க வாக்கி அறிவுகெட்டவளே. அசிங்கமாருக்கு.''

செவனம்மாளைக் கொமட்டில் குத்தி மாராப்பை வாகாகச் சோமாறிச் சொருவிவிடுவாள்.

''எங்க இப்ப நட பாப்பொம்.''

செவனம்மாளின் சிணுக்கு நடையில் மயங்கிப்போவாள். மனசு எங்கெல் லாமோ முட்டி அலைமோதும். ஆசை மகளுக்குச் சடங்கு நடத்தி கலியாணம் முடித்து பேறுகாலம் பார்த்து பிள்ளையைக் குளிப்பாட்டி.... அந்தச் சொகமே தனிதான்.

ஒரு சமயம் சொவட்டுப் பிள்ளைகள் களையெடுக்கப் போவதைப் பார்த்து செவனம்மாளுக்குக் குளிராட்டியது. அடம்பிடித்தாள்.

''வளத்தஞ்ஞு வளத்தஞ்ஞு நானும் களைக்குப் போறென்.''

வீரம்மாளுக்கு ஒண்ணும் புரியவில்லை.

''என்னவளே இது புதுசாருக்கு. ஆரும் கூட வராம ஒத்தியில போவன்னு குதிக்கயே. ஒனக்கு என்னாச்சு. நான் போகயில கூட்டீட்டுப் போறென்.''

''நீ வர வேணாம். நான் மட்டும் போவென்.''

''அவ்வளவுக்குப் பெரிய மனுசியாயிட்டயா. சரி போ தாயி. நான் வேணா மாக்கும்... மொதல்ல அந்த வேட்டி துண்ட அவுத்துப் போட்டுட்டு ஒந் துணிகள உடுத்துக்கி.''

களைக்குச்சு சொரண்டி சம்பாரித்துக் கொடுத்து கஞ்சிக் கலயத்தைப் பத்தர மாகத் தலையில் சும்மாடு கூட்டிவைத்து அரைமனசாக அனுப்பினாள். மற்ற பிள்ளைகளிடம் கெஞ்சாத குறையாகச் சொன்னாள்.

''எதம்பத்தரமாக் கூட்டீட்டுப் போங்கம்மா. நெர பிந்துனா கூட இருந்து ஒப்பேத்துங்க. இல்லன்னா புள்ள மலச்சுப்போகும்.''

செவனம்மா பெரிய மனுசித் தோரணையில் நடந்துபோனாள். அப்போதும் வீரம்மாளுக்கு மனசு கிடந்து உளைந்துகொண்டிருந்தது.

''வெயிலுக்குள்ள கெடந்து வாடிப்போயிருவாளே.''

அயலூர்க் காட்டுக்குப் போகிற வழியில் ஒரு கொடிக்கால் தோட்டம் கண்ணில் பட்டது. வேலியால் முக்காடு போட்டுக்கொண்டு பெரிய தோட்டம். வேலி இடைவெளிகளில் இளம் வெற்றிலைகள் எட்டிப்பார்த்துக் கையலைத்துக் கூப்பிட்டன. செவனம்மாளுக்கு எச்சூறியது. பிள்ளைகளிடம் சொன்னாள்.

''இங்கயே நில்லுங்க. நான் போயிப் பாத்துட்டு வாறென்.''

''வேலைக்கு நேரமாகுது இவளே. வெத்தலையப் பாத்ததே இல்லையா.''

''இப்படி எங்க பாத்தென். இருங்க ஒரு வீச்சில ஓடீட்டு வந்துறென்.''

அருவமில்லாமல் கொடிக்காலுக்குக் கிட்டத்தில் போனாள். அப்போது விசிறிய காற்றில் கொழுந்து வெற்றிலைகள் குதியாளம்போட்டன. அடுக்கி

வைத்த வெற்றிலைகள் அப்பிராணியாகக் கட்டுக்குள் அடங்கிக் கிடப்பதைப் பார்த்தது. இப்படிக் கும்மாளம்போட்டுப் பார்த்தில்லை. அவள் சப்புக் கொட்டினாள்.

''அஞ்ஞக்கோ வெத்தலையப் பாரு.''

தோட்டக்காரன் உள்ளே வெற்றிலை கிள்ளிக்கொண்டிருந்தான். வேலி அடர்த்தியானதால் அவன் இருந்தது தெரியவில்லை. வேற்றாள் சத்தம் கேட்டதும் சுதாரித்துக்கொண்டு உற்றுப்பார்த்தான். ஆளருவம் பிடிபடவில்லை. சின்னக் கைமட்டும் வெற்றிலைகளை நீவிக்கொண்டிருந்தது.

''வெத்தலையப் பாரு அஞ்ஞக்கோ.''

யாரோ வெற்றிலை ஒடிக்கிறார்களாக்கும் என்று நினைத்து அவன் கத்தியால் எட்டி ராவினான்.

''ஆரு கழுத வெத்தல ஒடிக்கிறது.''

பதமான கத்தி செவனம்மாளின் ஒரு விரலை லேசாகச் சீவி ரத்தம் வந்து விட்டது. அவள் பதறிப்போனாள். ரத்தத்தைப் பார்த்து அலறினாள்.

''அய்யோ வளத்தஞ்ஞ எங் கையி போச்சே.''

அழுதுகொண்டே ஓட்டம்பிடித்தாள். களையெடுப்பாவது ஒண்ணாவது. மற்ற பிள்ளைகளிடம் எதுமே சொல்லிக்கொள்ளவில்லை. ரெண்டு பேர் அவளுக்குப் பின்னால் ஓடினார்கள்.

வளத்தஞ்ஞை பக்குவம்பார்த்துத் தேற்றும்வரை அழுகையடங்கவில்லை.

''அஞ்ஞாடி எம்புள்ள என்ன தப்புச் செஞ்சது. வெத்தலைய வேடிக்க பாத்ததுக்கு வெரலச் சீவியிருக்கானே. அவன் நாசாமப் போக.''

''இப்பயே கருத்தண்ணன வரச் சொல்லு. வெரல வெட்னது ஆருன்னு கேக்கணும்.''

''அப்பதயே சொல்லியனுப்பியாச்சு. பேசாம இரு. ஓங்கண்ணன் வந்ததும் போகச் சொல்லுவொம். சூசுவான்னு வீட்ல கெடக்கிறதுக்கில்லாம வெனைய வெலைக்கு வாங்கீட்டு வந்துருக்கயே. அவன் வந்தா நான் என்ன சொல்லட்டும்.''

வளத்தஞ்ஞையாச்சு மகளாச்சு என்று மூக்கம்மா பேசாமாலிருந்து விட்டாள். மகளும் அவளிடம் ஒரு வார்த்தை சொல்லிக்கொள்ளவில்லை.

தற்செயலாக நொண்டியன் வந்திருந்தான். அவனிடம் செவனம்மா பிராது சொல்லி மாளவில்லை. சங்கதியைக் கேள்விப்பட்ட கருத்தையனுக்கு வந்ததே கோவம்.

''குண்டியில எம்புட்டுக் கொழுப்பிருந்தா நம்ம புள்ளமேல கையி வச்சிருப்பான். அந்தப் பெயலுக்கு ரெண்டு கையும் இருக்கப்புடாது.''

நொண்டியனுக்கு உள்ளுக்குள் உதறலெடுத்தது. ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆகிவிடக் கூடாதே. பக்குவமாகச் சொன்னான்.

''இதெல்லாம் நீ வெசாரிக்கிறது மருவாதியில்ல கருத்தப்பாண்டி. சித்தப்பன் எதுக்கு இருக்கென். பாத்துக்கிறென். தாயிளி என்னய மீறி என்னமும் பேசீரு வானோ. கொளக்கருவாட்ட மிதிச்ச மாதிரி கொடலு குந்தாணி வெளிய தள்ள மிதிச்சுப்புருவென்.''

நொண்டியன் அருவமில்லாமல் போய் கொடிக்காக்காரனிடம் பேச்சுக் கொடுத்தான்.

''வெத்தல யேவாரம் எப்படிப் போகுது.''

அவன் சுரைக்காய் வயிற்றை விசாரமாகத் தடவினான்.

''அத ஏன் கேக்கீக. எலையக் கிள்ளிக்கிள்ளி வெரலு தேஞ்சுபோச்சு. பத்து மரக்கா நெல்லு பயிரிட்டொம் பத்துக் கோட்ட வீட்டுக்குக் கொண்டுபோனம்னு கெடையாது. அரச்சு மிஞ்சினது அம்மி செரச்சு மிஞ்சினது குடுமி. என்னமோ பெழப்பு ஓடுது''

''அப்ப பெழப்பு நல்லால்லயாக்கும் செரச்சுச்செரச்சுக் குடுமிதான் மிச்ச மாக்கும். அதுக்கு என்ன செய்யலாம்.''

''தலையில எழுதுனத அழிச்சா எழுத முடியும்.''

''அப்படின்னா கொடிக்காலக் கொளுத்தி அழிச்சிறலாமா. வேற வெள்ளாம செய்யலாமே.''

கொடிக்காக்காரனுக்குப் பச்சைமிளகாயைக் கடித்த மாதிரி இருந்தது.

''கொஞ்சமாச்சும் அறிவிருக்கா. இது பேசுற பேச்சா. இல்ல பேசுற பேச் சான்னு கேக்கென். பச்சப்புள்ளையப்போல வளக்கிற கொடிக்கால அழிக்கலா மிங்கிறயே. சும்மாருக்கிற மனுசங்கிட்ட வந்து சிலுவ இழுத்துக்கிட்டு. ஒனக்கு என்ன வேணும்.''

நொண்டியனுக்குக் கை குறுகுறுத்தது. அடித்து நொறுக்கிவிடலாமா என் றிருந்தது. வக்காளி கேட்கிற தோரணையைப் பார். அவனும் அவன் துருத்தி வயிறும். கோவத்தை அடக்கிக்கொண்டான்.

''இனியும் கிருத்திரியம் போகலயே. எனக்கு ஒண்ணும் வேணாம். ஒம் பெருவெரலக் குடுத்தாப் போதும். ஒங் கத்தியிட்டே வெட்டிக் குடுக்கயா இல்ல நான் தறிச்சுக்கிறட்டுமா.''

நொண்டியன் இடுப்பிலிருந்து சூரியை உருவினான். கொடிக்காக்காரன் அரண்டுபோனான்.

''என்னய்யா சொல்றீக.''

''வேற ஒண்ணுமில்ல. நேத்து ஒரு பொட்டப்புள்ள வெத்தலைய வேடிக்க பாத்துருக்கு. அதுக்குப் போயி வெரலச் சீவுனயாமில்ல. அதுக்குப் பதிலா ஒன் வெரல வாங்கீட்டுப் போகலாம்னு வந்தென்.''

''வெளையாட்டுப்போல கத்திய நீட்னென். அது தெரியாமப் பட்ருச்சுய்யா.''

''நானும் வெளையாட்டுக்குச் சீவட்டுமா. என்னாகுதுன்னு பாப்பொம்.''

நொண்டியன் கத்தியை லேசாக வீசிப் பாவலாக் காட்டினான். வெற்றிலைக் காரனுக்கு உடம்பு நடுங்கியது.

''நான் வேணும்னு செய்யலய்யா.''

''அந்தப் பொண்ணு வேற ஆருமில்ல. கருத்தையன் தங்கச்சிதான். என்ன நடந்துச்சுன்னு வெசாரிச்சிட்டு வரச் சொன்னான்.''

வெற்றிலைக்காரன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான்.

''என்னயக் காப்பாத்துங்கய்யா. இன்னாருன்னு சொல்லீருந்தா எத்தன கெட்டு வெத்தலன்னாலும் குடுத்துருப்பனே. சாமி நீங்க என்ன சொல்றீகளோ அதுக்குக் கட்டுப்படுறென்.''

''எந்திரிய்யா. மூளகெட்ட மனுசன். வெத்தலையத் தொட்டுட்டாக் குடி முழுகியா போகுது... அவன் என்ன சொல்றான்னு தெரியலயே. கேட்டுத்தான் சொல்லணும்.''

''நீங்கதான் பேசி முடிக்கணும். இல்லன்னாக் குடியிருக்க முடியாதே.''

நொண்டியன் யோசித்துவிட்டுச் சொன்னான்.

''ஏதொண்ணுக்கும் ரெண்டு குத்துச் சாராயம் ஒரு கோழி மூணு கெட்டு வெத்தலையோட நாளைக்கு ராத்திரி கம்மாக் கரையில வந்து நில்லு. அவனச் சரிக்கெட்டிப் பாப்பொம்.''

வெற்றிலைக்காரன் அந்தப்படியே பண்டங்கள் கொண்டுவந்து காத் திருந்தான்.

''இங்கயே இரு கேட்டுட்டு வாறென்.''

நொண்டியன் கருத்தையனிடம் பேசப்போகிற மாதிரி போக்குக்காட்டிக் கொஞ்சத்தூரம் நடந்து செடி மறைவில் உட்கார்ந்து மெனக்கிட்டு மோண்டு விட்டு வந்தான்.

''ஒனக்காக எம்புட்டுக் கஸ்டப்பட்டு அவனச் சரிக்கெட்டீருக்கு தெரியுமா. அதுக்கே ஒரு கோழி வேணும். பெழச்சுப் போ. கவுந்த தல நிமிராம ஓடு.''

''நீங்க நல்லாருப்பீகய்யா.''

வெற்றிலைக்காரன் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓட்டம்பிடித்தான். நொண்டியன் அகப்பட்டதை அள்ளிக்கொண்டு நடந்தான். அவனுக்குள் கோழிக் கறி மணம் கமகமக்க ஆரம்பித்தது. அவன் கருத்தையனிடம் சகடாலடித்துச் சமாளித்துக் காரியத்தை அதோடு முடித்தது வேறு கதை.

செவனம்மா வளத்தஞ்ஞையை நச்சரித்துச் சுண்ணாம்பும் பாக்கும் சம்பா ரித்து ரெண்டு நாளாக வாய்வலிக்க வெற்றிலை மென்று துப்பி நாக்குச் சிவப்பை அழகுபார்த்துக்கொண்டு திரிந்தாள்.

''அஞ்ஞக்கோ என் நாக்கப் பாரு.''

அவள் கையெல்லாம் சுண்ணாம்பு. கருத்தண்ணன் வேட்டியெல்லாம் வெற்றிலைக் கறை. வீரம்மா அவளை விரட்டினாள்.

''பாங்கி வெத்தல போட்டாளாம் பத்து வெரலும் சுண்ணாம்பாம். இண்ணைக்குக் கையில அம்புட்டால்ல இருக்கு கத.''

பொம்பளைகள் செவனம்மாளை மறித்துக் கிண்டலாகக் கேட்டார்கள்.

''இப்பக் கோவம் தீந்துருச்சா.''

பிள்ளைகள் அவளைப் பரிகாசம் பண்ணினார்கள்.

''அஞ்ஞக்கோ என் வெரலப் பாரு.''

''அஞ்ஞக்கோ என் நாக்கப் பாரு.''

அவள் வளத்தஞ்ஞையிடம் சொல்ல நிறையச் சங்கதிகள் வைத்திருந்தாள். வளத்தஞ்ஞை கருத்தையனிடம் சொல்ல இன்னும் அதிகமிருந்தது.

அப்படி வளர்த்தவள் போய்விட்டாள். வாய் நிறைய ''வளத்தஞ்ஞ'' என்று யாரைக் கூப்பிடுவது. செவனம்மா நினைத்துநினைத்துக் குமுறினாள். மூக்கம் மாளின் அரவணைப்பை உதறிவிட்டு அழுதாள்.

''வளத்தஞ்ஞ நானும் வாறென்...''

தூங்கனுக்கு மூத்த மகளைப் பறிகொடுத்த வேதனை. கூட இருந்து யோசனை சொல்ல ஆளில்லை. ஒரு நோய்நொடியென்றால் பக்குவம் பார்க்க நாதியுண்டுமா. பயல்கள் மதினிமதினி என்று வளைய வருவார்கள். மூக்கம்மாளிடம் ஒரு வார்த்தை மனசு நோகப் பேசியிருப்பாளா. அக்கா தங்கச்சி மாதிரி அவ்வளவு ஒற்றுமையாக இருப்பார்கள். குடும்பத்தில் அவள் சொன்னால் சரி. கருத்தையன்கூட மறுத்துப் பேசியதில்லை.

ரெம்ப நாளாகவே தூங்கல் தொத்தலாக இழுபட்டுக்கொண்டிருந்த குடும்பத்தை அவள்தான் கால்கூட்டிவிட்டாள். பெரிய மனுசியாக இருந்து எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டாள். உள்ளூரில் ராமாத்தாளைப் பேசி மொட்டையனுக்கு முடித்துவைத்தாள். ராமாத்தா குணமானவள். குடும்பத்துக் கேற்றவள். விரைவில் ரெண்டு குழந்தைக்குத் தாயானாள். வீரம்மாளுக்குப் பேரன் பேத்தியைப் பார்த்த கிழவியின் சந்தோசம்.

அடுத்து சங்கன்கூட எளவட்டமாகிக் காத்திருந்தான். அவனுக்கும் ஒரு கட்டையைப் போட்டுவிடணுமென்று வீரம்மாளுக்கு எண்ணம். அதுக்குக் கொடுத்துவைக்கவில்லை.

செவனம்மாளைக் கரையேற்றுவதில் அவளுக்கு ரெம்ப அக்கறை. எப்படியும் தான் பிறந்த வீட்டில் ஒப்படைக்க ஆசைப்பட்டாள். அப்பப்ப வேலாயி காதில் போட்டுவைத்தாள். அஞ்ஞையிடமும் பேச்சுவாக்கில் சொன்னாள். எல்லாருக்கும் அந்த நினைப்பு இருந்தது. செவனம்மா பூப்பெய்தி மாலை பூக்கும்வரை அவளுக்கு உயிர் கூட்டில் தங்கவில்லையே. குடும்பத்தையே தவிக்கவிட்டுப் போய்விட்டாளே.

மறுநாள் வீரம்மாளை எடுத்துப் போவதற்குள் பெரும்பாடாகப்போயிற்று. ராத்திரியெல்லாம் காட்டில் அழுது கண்கள் வீங்கிப்போய் வந்திருந்த கருத்தையன் தூக்க விட மாட்டேன் என்று தடுத்தான். ஆட்களை அடித்தான். அப்படியும் அடியை வாங்கிக்கொண்டு தூக்கிப் போனார்கள். செவனம்மா குடம் உடைத்தாள். கருத்தையனும் மொட்டையன் மகனும் கொள்ளிவைத்தார்கள்.

மயானத்தில் கருத்தையனுக்கு மொட்டையடிக்கும்போது மருதன் வாங்கிய அடிதான் கொஞ்சமா. அரட்டிக்கொண்டு திமிறினான்.

''எதுக்குடா எனக்கு மொட்டையடிக்க. எம் பொண்டாட்டி சாகல. மண்ணுக்குள்ள ஒறங்குறா.''

நொண்டியன் வந்து பக்குவமாகக் கோவத்தை ஆற்றினான்.

''கருத்தப்பாண்டி என்னய்யா இது. மனச அடக்கணும்னு சித்தப்பனுக்குச் சொல்லிக்குடுத்ததெல்லாம் சும்மாவா.''

மருதன் எடுத்த மைக்கத்தியைக் கீழே வைக்கவில்லை.

''சும்மா அடிங்க. தகப்பன்மாரு அடிச்சா புள்ளீக வாங்கிக்கிறத்தான் செய்யணும். கொடலறிஞ்சு செஞ்ச மகராசிக்காக எத்தன அடின்னாலும் தாங்கிக்கிருவென்.''

புறங்கையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே மழித்து முடித்தான். அதுக்கு மேல் கருத்தையன் இருக்கவில்லை. நொண்டியன் பின்தொடரக் கால் போன போக்கில் போய்விட்டான். யாரும் ஒரு வார்த்தை கேட்கவில்லை.

கருப்பிக்கு வள்ளிசாகத் தெம்பு போய்விட்டது. மனசு உடைந்து சட்டடி யாகப் படுத்துவிட்டாள். அழுதழுது சொடிந்துபோனாள். மகளைப் பற்றியே புலம்பினாள்.

''குத்துவெளக்கு சாஞ்சிருச்சே.''

நடுச்சாமத்திலும் அவளது ஒத்தையழுகை கேட்டது.

''நெய்யூத்திப் பாத்தி கெட்டி
நெல்லிமரம் நட்டிவச்சென்
நெல்லிமரம் காய்க்குமுன்னே-நான் பெத்த மகளே நீ
நித்திரையும் ஆனதென்ன.''

சொக்கம்மாளால் அவளை எழுப்ப முடியவில்லை. வேலாயிதான் கிட்ட இருந்து துணியுடுத்திவிட்டுக் கஞ்சி தண்ணீர் கொடுத்தாள். ஆண்டி மனசு கேட் காமல் ரெண்டு வார்த்தை சொல்வான்.

''இந்தாம்பிளி படுத்தே கெடந்தா எப்படி. எந்திரிச்சு நடமாட வேணாமா.''

அவள் பதில் பேச மாட்டாள். அவனையே பார்த்தபடி சார்ச்சாராகக் கண்ணீர் வடிப்பாள். அதுக்கு மேல் பேச்சு வராது. சுவர்த் துணையில் நடப்ப தற்காக மெல்ல எழுந்திருப்பாள்.

எப்படி இருந்த மனுசி. முடிச்சாகச் சுருண்டுவிட்டாளே. உலக்கை தேய்ந்து உளிப்பிடியாகிவிட்டது. தாராக்கோழியாகத் தொணதொணத்துக்கொண்டு திரிவாள். அவள் வசவும் வக்கணையும் கேட்காமல் வீடு அருள்கெட்டுப் போயிற்று. அவள் பேச்சே அழுகையாகிவிட்டது.

தோட்டத்தில் பிடுங்கிய குருதவாலிப் பயிர்களை இறுக்கிக் கட்டிய ஆண்டிக்குக் கண்கள் பஞ்சடைத்துக் கிறக்கமாக வந்தது. நிமிர முடியவில்லை. கட்டின் மேல் உட்கார்ந்துவிட்டான்.

வெண்டைச் செடிக்குள் பொய்யாளியின் பயல்கள் வேலையை முடித் திருந்தார்கள். காய்ப் பொட்டணத்தைத் தோளில் போட்டிருந்த ராமன் சத்தம் போட்டுச் சொன்னான்.

''அப்பச்சியோவ் நாங்க வீட்டுக்குப் போறொம். நீ வரலயா.''

அவன் பார்வை பிடிபடாமல் அந்தத் திசையில் கையலைத்து அவர்களைப் போகச் சொன்னான். குதியாளம்போட்டு ஓடினார்கள்.

அவனுக்கு மெல்லமெல்லப் பார்வை தெளிந்தது. கஷ்டப்பட்டு எழுந்தான். பயிர்க்கட்டை உன்னித் தூக்கித் தலையில் வைத்தான். உடம்பு லேசாகத் தடுமாறியது. சமாளித்துக்கொண்டு வரப்பைக் கடந்து ஓடைப்பாதையில் நடந்தான். ஊர் தொலைவில் இருப்பதாகத் தோன்றியது.

## 3. கட்டுச்சோறும் எலியும்

வீரம்மா போன பிறகு கருத்தையன் போக்கே மாறிவிட்டது. பழைய கெத்தும் சுதாரிப்பும் இல்லை. கோவம் குறைந்துவிட்டது. அவள் நினைவு வந்துவிட்டால் அப்படியே படுத்துவிடுவான். எந்த இடமென்றில்லை. கண்கள் குடமாகக் கனக்கும் வரை கட்டையாகக் கிடப்பான். காவலிருக்கும் துப்பன் தைரியம் சொல்வான்.

''நீயே இப்படித் தொவண்டு போனா எப்படிய்யா. என்ன செய்றது. நமக்குக் குடுத்து வைக்கல. ஆயிரத்துல ஒரு மனுசி அநியாயமாப் போயிட்டா. புள்ள குட்டியப் பெத்துக் குடுத்துருந்தாக்கூட மனசாறிப்போகும். அதுக்கும் லவிக்கல. விதிய நொந்துக்கிட்டு மனசத் தேத்திக்கிற வேண்டியதுதான். அய்யா கருத்தப் பாண்டி அங்க கொஞ்சம் பாரு. எல்லாரும் பசியோட இருக்காக. நீ வந்தாத்தான் சாப்பிடுவாக.''

''ஒன்னாலதான இம்புட்டும். சும்மா கெடந்த மனுசன இழுத்துப் புடிச்சுத் தாலிகெட்டச் சொல்லி என்னாச்சு பாத்தயா. எனக்குக் கழுத்த நீட்டி அந்த மனுசி என்ன சொகத்தக் கண்டா. அவ நெனச்சிருந்தா எவ்வளவோ வசதியான குடும்பத் துக்குப் போயிச் சந்தோசமா இருந்துருக்கலாம்.''

''பாவி மக அப்படி நெனைக்கலயே. ஒனக்குத்தான் வாக்கப்படுவன்னு ஒத்தக் கால்ல நின்னு சாதிச்சிட்டாளே. பொட்டப்புள்ள பெழப்பு பாழாப் போயிருமேங்கிற நல்லெண்ணத்துலதான ஒன்னயக் கட்டாயப்படுத்துனென். எல்லாரு வாயிலயும் மண்ணள்ளிப் போட்டுட்டுப் போயிட்டாளே.''

''ஆசையா அவள ஒரு கோயிலு கொளத்துக்குக் கூட்டீட்டுப் போயிருப்பனா. ஒரு நல்லது பெல்லதுக்குப் போயிருப்பமா.''

கருத்தையன் குலுங்கிகுலுங்கி அழுவான். துப்பன் கைத்தாங்கலாகக் கூட்டிப் போவான்.

வீரம்மா ஆசையெல்லாம் அவித்துவிட்ட மனுசி. ஆந்து சோர்ந்து உட்கார்ந் திருப்பாளா. அருவேலை செய்தாள். கஞ்சியுடன் கஷ்டத்தையும் கரைத்துக் குடித் தாள். ஒருநாளாவது பிறந்தவீட்டுப் பெருமை பேசியிருப்பாளா. வந்த இடத்து வறுமைபற்றி மூச்சு விட்டிருப்பாளா. புருசன் எடுக்காத எடுப்பு எடுத்துக்கொண்டு அலைகிறானே என்று யாராவது பேச்செடுத்தால் விட்டுக்கொடுக்க மாட்டாள்.

''அவன் வேல செஞ்சு குடுத்துத்தான் எங்க குடும்பம் நடக்கணுமிங்கிற தில்ல. ஆண்டவன் எங்களுக்குத் தெடமான காலுங்கையும் குடுத்துருக்கான்.''

தப்பித்தவறி ஒருத்தி கருத்தையன் எங்கே என்று கேட்டுவிட்டால் வெடுக் கென்று சொல்லி வாயடைத்துவிடுவாள்.

''மொதல்ல ஒம் புருசன் எங்க போயிருக்கான்னு தெரிஞ்சுக்கிட்டு வா. பெறகு நான் சொல்றென். இல்ல எங்களுக்கு அவன் வந்ததும் ஆளனுப்புறென். ஒரெட்டு வந்து கேட்டுட்டுப் போயிறேன்.''

பேச்சுக்கொடுத்தவளுக்கு வயிறு பயறவிக்கும்.

''ஒனக்குப் புண்ணியமாப் போகுது தாயி. இனிமே நான் பேச்செடுத்தாச் செருப்புட்டுப் போடு.''

ஓட்டமும் நடையுமாக மறைந்துவிடுவாள்.

வீரம்மாளுடன் குடும்பம் நடத்திய அனுபவங்கள் மனசில் கல்லெறியும் போதெல்லாம் கருத்தையன் பேச்சு ஒருமாதிரி இருக்கும்.

‘‘சித்தப்பா எதுக்காக இந்த அலஞ்ச பெழப்பு. இதும் ஒரு வெதத்துல பயந்துக்கிட்டு ஒளிஞ்சு திரியிற மாதிரிதான். நானும் ஒரு சண்டீருதான்னு நாலு பேருக்கு முன்னால சொல்லிக்கிறதுக்கு அருவா கம்பத் தூக்கீட்டு அலையணு மாக்கும். இது சண்டீருத்தனமில்ல. களவாணித்தனம்.’’

துப்பன் சமாளிப்பான்.

‘‘கருத்தப்பாண்டி அண்ணைக்கு நம்ம கையில கம்பெடுக்கலன்னா கலிங் கலே காணாமப்போயிருக்கும். அத இண்ணைக்குவரைக்குக் கீழ எறக்காம இருக் கிறதாலதான் ஊருக்குள்ள எவனும் எட்டிப்பாக்கிறதில்ல. அத மறந்துறாத.’’

‘‘அடிச்சுப் புடுங்கிக் கொள்ளையடிச்சுத்தான் ஊரக் காப்பாத்தணுமாக்கும். நம்ம உசிரக் காப்பாத்திக்கிறதுக்குத்தான் இம்புட்டுக் கோப்பும்.’’

‘‘அப்படின்னே வச்சுக்கயேன். நம்ம உசிரோட இருந்தாத்தான ஊரக் கவனிச்சுக்கிற முடியும்.’’

‘‘எங்கருந்தாலும் போற உசிரு போகத்தான் போகுது.’’

‘‘சாமி கையிலருக்கிற வல்லயக் கம்பப்போல நம்ம கம்ப வச்சுக்கிறணும்னு சொன்ன கருத்தப்பாண்டியா இப்படிப் பேசுறது. மனசு வுடாதய்யா. சித்தப்பன் கூட இருக்கென்.’’

கொஞ்சநாள் கழித்து கருத்தையன் திடீரென்று ஒரு கேள்வி கேட்டான்.

‘‘எங் கூடயே கெடந்து இழுபடுறயே ஒங்க வீட்ல மண்ணவா திம்பாக. ஒனக்கு அதப் பத்தியெல்லாம் கவலையே கெடையாதா.’’

‘‘பாடு இப்படின்னு ஒஞ் சினிஞ்ஞு சிலுப்பிக்கிட்டுப் பொலம்புன கால மெல்லாம் போச்சு. பெய தலையெடுத்தானோ இல்லையோ என்னயத் தல முழுகீட்டாக.’’

‘‘அதனால நம்மளும் குடும்பத்த மறந்துறதா.’’

‘‘அதெப்படி முடியும்... ஆமா தெரியாமத்தான் கேக்கென். நீ மட்டும் பாடுபட்டு குடும்பத்துக்குக் குடுத்துத் தவிச்சிட்டயோ.’’

‘‘நீயும் நானும் ஒண்ணா. நான் பொண்டாட்டி புள்ளயில்லாறவன்.’’

‘‘அந்த மகராசி இருக்கயில மட்டும் என்னத்த அள்ளிக் குடுத்துட்ட. அதப் போலத்தான் நானும்.’’

‘‘நம்ம வெவகாரத்தப் பெறகு வச்சுக்கிருவொம். மொதல்ல எல்லாரவும் கூட்டீட்டு வா. இண்ணைக்குப் பேசியாகணும்.’’

அன்றைக்கு ராத்திரி கருத்தையன் கூட்டாளிகளுடன் வெளிப்படையாகப் பேசினான். ஒவ்வொருவராகக் குடும்ப நிலைமையைச் சொன்னார்கள். அவரவ ருக்குத் தேவையான ஏற்பாடுகளை உடனடியாகச் செய்ய முடிவாயிற்று. துப்பன் பொறுப்பிலிருந்த பொதுப் பணத்திலிருந்து செலவு செய்தார்கள்.

துப்பன் கோடாலி ஆந்தை மூணுபேருக்கும் வண்டி மாடு கமலைச் சாமான்கள் என்று விவசாயத்துக்கு வேண்டிய அத்தனையும் கிடைத்தன. கத்தி நாலு கழுதையும் வெளுப்புச் சாமான்களும் வாங்கிக்கொண்டான். மம்பட்டி சொன்னான்.

‘‘எனக்கு மூணு எரும போதும். குடும்பம் அத வளத்துப் பெழச்சுக்கிரும்.’’

கைக்காடை வாய்திறந்து எதையும் கேட்கவில்லை. துப்பன் வைதான்.

‘‘ஒன் வாயில என்னடா இருக்குது. வேணுமிங்கிறதக் கேக்க வேண்டியதுதான.’’

அவன் துப்பன் காதோரம் வந்து சொன்னான்.

‘‘ஒரு ஆன வேணும். அது மேல தோரணையா அம்பாரி போகணும்னு ஆசையாருக்கு.’’

‘‘ஏலே ஒனக்கு மப்புத்தான. கருத்தையங்கிட்டச் சொன்னா ஒரு பூனகூட வாங்கித்தர மாட்டான். முதுகு பழுத்துரும்.’’

கருத்தையன் கேட்டான்.

‘‘பெரிய மனுசன் என்ன சொல்றாக சித்தப்பா.’’

‘‘அவனுக்குத் திகிடுமுகிடான சொத்துக் கெடக்குதாம். அதனால ஒண்ணும் தேவையில்லையாம்.’’

காடை துப்பனிடம் முணுமுணுத்தான்.

‘‘ஒங்களுக்குப் புண்ணியமாப் போகுது சாமி. என் வீட்ல என்னருக்குதுன்னு ஒங்களுக்கு நல்லாத் தெரியும். காரியத்தக் கெடுத்துறாதங்க.’’

துப்பன் கருத்தையனைப் பார்த்தான்.

‘‘அவன் மகன் ஒருத்தன் ஊரிக்காலி மாடு மேச்சிட்டுத் திரியிறான். அவனுக்குன்னு ரெண்டு மாடுருந்தா ஊரு மாடுகள ஒழுங்கா மேப்பான்.’’

‘‘சண்டூருமகன் ஊரிக்காலி மாடா மேய்க்கான். கேவலமில்லையா.’’

காடைக்கு நாலு எருமை கிடைத்தது. அவனுக்குச் சந்தோசம் சொல்ல முடியாது. துப்பனைப் பார்த்துக் கண்சிமிட்டினான்.

‘‘ஒரு ஆனதான் கேட்டென். நாலு கெடச்சிருச்சு. இனிமே எங் குடும்பம் தரையில நடக்காது.’’

கருத்தையன் அதோடு நிறுத்தவில்லை. கூட்டாளிகளின் வயசு பெண்களுக்கும் பயல்களுக்கும் கலியாணம் கூடினால் உதவி செய்தான். துப்பன் கேட்டான்.

‘‘ஒங் குடும்பத்துக்கு என்னமும் செய்யவேணாமா.’’

‘‘எனக்குப் புள்ளீக இருந்தாச் செய்யத்தான் வேணும்.’’

‘‘ஒங்கிட்ட ஆரு பேசக் கெடக்குது.’’

துப்பன் பெண்டாட்டி சிலுப்பி தெம்பாகிவிட்டாள். குடும்பத்தில் விவசாயம் கதிக்க நடந்தது. மூத்த பயல் மாரிமுத்து உள்ளூரிலேயே கலியாணம்முடித்துக் குடும்பத்தைக் கவனித்துக்கொண்டான். இளையவள் இருளியை அயலூருக்குக் கொடுத்தார்கள். எல்லாம் கருத்தையன் ஏற்பாடுதான். கழுத்துமோக்கால் இறங்கிய மாட்டைப் போல் துப்பனுக்கு லேசாக இருந்தது.

துப்பனுக்குக் கொஞ்ச நாளாகவே மனசு குமைந்துகொண்டிருந்தது. கருத்தையனிடம் எப்படிச் சொல்வது. கோவம் வந்தால் கிட்ட நிற்க முடியாது. சமயம் பார்த்துப் பேச்சுவாக்கில் வார்த்தையை விட்டான்.

‘‘கருத்தப்பாண்டி சித்தப்பன் சொல்றன்னு தப்பா நெனச்சுக்கிறப்புடாது...’’

“நீ தப்பாச் சொல்ல மாட்ட. சும்மா சொல்லு.”

“எனக்கு மனசில ஒரு நெனப்பு ஓடுது...”

“எப்படி.”

“சொன்னாக் கோவப்பட மாட்டயே...”

“இப்பச் சொல்லப்போறயா இல்லையா.”

“எத்தன நாளைக்கு ஒண்டிக்கட்டையா இருப்ப...”

“இதென்ன பேச்சு. காலம் பூரா இருக்க வேண்டியதுதான்.”

“அலுத்தொம் சலிச்சம்னு வீட்டுக்குப் போனா தண்ணி வென்னி வச்சுக் குடுக்கிறதுக்காச்சும் ஒரு தொண வேணுமில்ல.”

கருத்தையனுக்கு வந்ததே கோவம். அடக்கிக்கொண்டான்.

“ஒம் பேச்சக் கேட்டு ஏற்கெனவே ஒருத்தியச் சாகடிச்சிட்டென். இனியொருத்தியவும் காவுகுடுக்கச் சொல்றயா. அவளத் தொட்ட கையால அடுத்தவளத் தொட மாட்டென். அந்த நாயிச் சொகம் ஆருக்கு வேணும். கொலையே செய்யப் புடாதுன்னு இம்புட்டு நாளாக் கட்டுப்படுத்திக்கிட்ருக்கென். மூச்சுக் காட்டாமப் போயிரு. இல்லன்னா...”

துப்பன் நடுங்கிப்போனான். இனிமேலும் இருந்தால் வம்பு. அவசரமாக நழுவிவிட்டான். ஆனாலும் அவனுக்குப் பெருமையாக இருந்தது. என்ன வந்தாலும் சரி இந்த மனுசனுடன் கடைசிவரை துணையாக இருக்கணும். மனசில் வைராக்கியம் இறுகியது.

ரெண்டு நாளாகத் துப்பன் தட்டுப்படவேயில்லை. கருத்தையனுக்கு யோசனை. எங்கே போனான். சொல்லாமல் கொள்ளாமல் போக மாட்டானே. அன்றைக்குப் போட்ட சத்தத்தில் அரண்டுபோனானோ. அதுக்கெல்லாம் பயந்தவனா என்ன. ஏதாச்சும் காரணம் இருக்கும்.

துப்பன் வந்ததே சரியென்று முந்திக்கொண்டான்.

“நான் என்னத்தச் சொல்லட்டும் கருத்தப்பாண்டி. புதுப்பட்டி வாத்தியாரு போயிச்சேந்து ஒரு மாசமாச்சாம். நமக்குத் தகவலு குடுக்கச் சொல்லிக் கடசி நேரத்துல தவியாத் தவிச்சிருக்காரு. நம்மளக் கண்டுபுடிக்க முடியாம வந்த ஆளும் திரும்பிப் போயிருச்சாம்.”

“அடடா எப்பேர்ப்பட்ட மனுசன். போயிப் பாத்துட்டு வரணும்னு நெனச்சென். அதுக்குள்ள இப்படியாகிப் போச்சு. தஞ்சாவுதானா.”

“அந்த மனுசனுக்கு எதிரி ஆரு இருக்கப்போறாக. தீராத வகுத்துவலியாம். சுருட்டீருச்சு. கேள்விப்பட்டதும் போயித் துட்டிகேட்டுட்டு வாறென்.”

“மக்கமாரு ஆருக்காச்சும் குருவுங்கொழையும் குடுத்துருக்காரா இல்ல கம்பு வெளையாட்டு அவரோடயே மங்கிப்போயிருமா. எங்கிட்டக் குடுக்கிறதாச் சொல்லிக்கிட்ருந்தாரு. அது நல்லாருக்காதுன்னு நெனச்சுத் தள்ளிப்போட்டுக்கிட்டே வந்தென்.”

“ஆருட்டயும் குடுத்த மாதிரி தெரியல.”

“அதுக்குத்தான் நம்மளத் தேடீருப்பாரு.”

கருத்தையன் கலங்கிப்போயிருந்தான். கொஞ்ச நேரம் கழித்துத் துப்பன் பேச்சை இழுத்தான்.

''வாற வழியில இனியொரு சங்கதியும் கேள்விப்பட்டென். எங்க பாத்தாலும் அதே பேச்சாத்தான் கெடக்கு.''

''அதென்ன.''

''போன வெள்ளிக்கெழம மாரியம்மா கோயில்ல வச்சு பொன்னையாத் தேவரக் குத்தி மலத்தீட்டாங்களாம்.''

''ஆட்டம் முடிஞ்சதா. சன்னச் சேட்டையா பண்ணுனாரு. நம்மதான் செஞ்சம்னு பேசலயே.''

''எவனாச்சும் பல்லுல நாக்குப் போட்டுப் பேசுவானா. உள்ளூருப் பகையாம். ஒண்ணுக்குள்ள ஒண்ணு நெடுநாளா இதே கோப்பா அலஞ்சிருக்கான். அவரும் எச்சரிக்கையாத்தான் இருந்துருக்காரு. போதாற காலத்துக்குக் கோயிலு ஆத்துக் குள்ள சிக்கிக்கிட்டாரு.''

''லேசுக்குள்ள சிக்க மாட்டாரே.''

மகபுள்ள பேத்தியாளுக்கு மொட்டபோட்டுக் காதுகுத்திக் கெடா வெட்டிப் பொங்கலு வைக்கணும்னு வண்டிபோட்டுப் போயிருக்காக. அவரு கையில வேல்கம்போட வண்டிக்குப் பின்னாலயே நடந்துருக்காரு. எதிரியும் கூட்டத்தோட கூட்டமா அருவாளோட கவனிச்சுக்கிட்டே வந்துருக்கான்.''

''அருவாளுக்கெல்லாம் அமைய மாட்டாரு. கிட்டப் போயி வெட்னா கத்திக்கம்புட்டுக் குத்தி ஏந்தீருவாரு.''

''ஆத்துக்குள்ள கெண்டக்காலளவுக்குத் தண்ணி போயிருக்கு. வண்டியக் கடத்தணுமே. ஆளுந்தேளுமாச் சேந்து பைதாவப் புடிச்சுத் தள்ள வேண்டியதாப் போச்சு. அவரும் ஒரு ஆத்தரத்துல கத்திக்கம்ப வண்டிச் சட்டத்தோரம் சொருவி வச்சிட்டு ஆரக்காலப் புடிச்சு உன்னித் தள்ளீருக்காரு. எதிரி பாத்தான். இதாண்டா நல்ல சந்தர்ப்பம்னு கூட்டத்துக்குள்ளருந்து வந்து அந்த வேல் கம்பவே உருவி அவரு வெலாவுல சொருவீட்டு ஓடீட்டான். சோலி முடிஞ்சது.''

''பெரிய கெடாய மாரியாத்தாளுக்குப் பலிகுடுத்துட்டான்... நமக்கும் அந்தக் கததான் நடக்கப்போகுது. எண்ணைக்குப் பலியாகப்போறமோ.''

''அப்படிச் சொல்லாதய்யா. நம்மமேல கண்ணு வச்சவனெல்லாம் அடங்கி ஒடுங்கீட்டான். கிட்ட நெருங்க முடியுமா.''

''தேவரும் அப்படித்தான் நெனச்சுக்கிட்டுத் திரிஞ்சிருப்பாரு. என்னாச்சு பாத்தயா.''

''ஒண்ணும் நடக்காது. சும்மாருய்யா.''

கூட்டாளிகள் எவ்வளவுதான் அன்னியோன்னியமாக இருந்தாலும் கருத்தையன் மனசில் ஏதோ ஒண்ணு உறுத்திக்கொண்டேயிருந்தது. வெளியே சொல்ல முடி யாத குமைச்சல்.

கொஞ்ச நாளாகவே கோடாலி ஆந்தை ரெண்டு பேர் போக்கும் ஒருமாதிரி யாக இருந்தது. அவர்கள் அப்பப்ப சின்னச்சின்னத் தப்புச் செய்து கண்டித் திருக்கிறான். அதோடு மடங்கிவிடுவார்கள். இப்போதென்னமோ நடவடிக்கை மனசுக்கு ஒப்பவில்லை. தனியாகப் போய்க் குசுகுசுப்பதும் ஆளைக் கண்டால்

அடங்கிவிடுவதும் எல்லாமே சந்தேகத்தைக் கிளப்பியது. ரெம்ப யோசனைக்குப் பிறகு துப்பனிடம் சொன்னான்.

''ரெண்டு பேரும் களங்கமறப் பேசுறதில்ல. அடிக்கடி காணாமப்போயிறாங்க. என்னமோ கமுக்கமா நடக்குது.''

''நானும் கவனிச்சிட்டுத்தான் வாறென். கையும்களவுமாப் புடிச்ச பெறகு ஒங்கிட்டச் சொல்லலாம்னுருந்தென்.''

''கெட்டுச்சோத்துக்குள்ள எலியக் கெட்டி வச்சிருந்த கதையாயிறப்புடாது சித்தப்பா.''

''திடீர்னு ஒரு முடிவுக்கு வந்துற வேணாம். ஆட்ட நோட்டம் பாத்துச் செய்வொம்.''

''இண்ணைக்கு எலையறுக்கிறவன் நாளைக்குக் கொலையறுக்க மாட்டாங்கிறது என்ன நிச்சயம்.''

''அப்படிப்பட்டவங்கதான். ஒருத்தன் சுப்பா சுப்பா சூத்தக் கடிம்பான். இன்னியொருத்தன் அப்பா அப்பா நான் மாட்டன்னு மாராயம் பண்ணுவான். கூட்டுக் களவாணிப் பெயக. கால்ல பட்ட பீ கையிலயும் படும் மூக்குலயும் படும். நம்ம எச்சரிக்கையா இருந்துக்கிறணும்.''

துப்பன் அவர்களுடைய நடவடிக்கைகளை இன்னும் உன்னிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தான். கொஞ்ச நாளில் குட்டு உடைந்துவிட்டது. இப்படி நம்பிக்கை மோசம் செய்துவிட்டார்களே என்று ரெம்ப வேதனை. கருத்தையனிடம் வருத்தப்பட்டான்.

''நீ சந்தேகப்பட்டது சரியாப் போச்சுய்யா. ரெண்டு பெயகளும் தனியாவே காரியம் நடத்திக்கிட்ருக்கான்.''

''எப்படிக் கண்டுபுடிச்ச.''

''நேத்து பக்கத்தூருல ஒருத்தனப் பாத்தென். இவுக ரெண்டு பேரப் பத்தி அக்கறையா வெசாரிச்சான். என்னடா இது புதுசாருக்கேன்னு நெனச்சென். நெருக்கிப் புடிச்சு இறுக்குனதுல கதையெல்லாம் கக்கீட்டான்.''

''அந்தப் பெய ஆரு.''

''நமக்குத் தெரிஞ்சவந்தான். நம்ம பேரச் சொல்லி அவன நம்பவச்சிருக்காங்க. அவனும் துப்புச் சொல்றதுக்கு ஒத்துக்கிட்டான். அந்த ஒத்தாசனையில தான் சங்கதி நடந்துருக்கு.''

''எப்படி.''

''அப்பப்ப இங்கருந்து நழுவிப் போயிக் கொள்ளையடிக்கிறது. கெடைக்கிறத அவங்கிட்டயே ஒப்படச்சிட்டு வந்துறது. பெறகு சமயம் பாத்து ராவோட ராவா வீட்டுக்குக் கடத்தீட்டு இங்க வந்து அப்பிராணியா இருந்துக்கிறது. இது நெடுநாளாவே நடந்துட்டுவருது.''

கருத்தையனுக்குக் கோவம் தாங்கவில்லை. முடிவாகச் சொல்லிவிட்டான்.

''அந்த நாயிக எம் மூஞ்சியில முழிக்கப்புடாது. கிட்ட வந்தா என்ன நடக்கும்னே தெரியாது.''

''அண்ணன் தம்பியா இருந்துட்டு இன்னிமே அடிச்சிட்டுக் கெடந்தா நல்லால்லய்யா. அடுத்தவனுக்கு எளக்காரமாப் போயிரும்.''

''அப்படின்னா அவங்க ஒரு நாளைக்குக்கூட இங்க இருக்கப்புடாது.''

''கள்ளப்பட்ட மொசலப் போல அவங்களும் கலஞ்சுதான் நிக்கான். புடிச்சு நிறுத்திவச்சாக்கூட ஒட்ட மாட்டான். பிச்சுக்கிட்டு ஓடிப்புருவான்.''

''அவங்களுக்கு என்ன கொற வச்சென். இப்படிச் செஞ்சிட்டாங்களே.''

''இப்ப ஆரு சொன்னாலும் காதுல ஏறாது. அடிபட்டாத்தான் தெரியும்.''

துப்பன் அவர்களைப் பார்த்து நல்ல வார்த்தை சொன்னான்.

''இவ்வளவுக்காயிட்டப் பெறகு நமக்குள்ள ஒத்துப்போகும்னு தோணல. வீணாச் சடவும் பகையுந்தான் வந்து சேரும்.''

கோடாலி வெறுப்பைக் கொட்டினான்.

''ஞாயமாப் பெழைக்கணும்னா நமக்கெதுக்கு இந்தத் தொழிலுன்னு கேக்கென். பேசாமக் காவி உடுத்திக்கிட்டுத் திருவோடு ஏந்தித் தெருத்தெருவாத் திரியலாமே.''

''நீ பேசுறது நல்லால்லப்பா. மொதல்ல மீசைய முறுக்கீட்டு வரயிலயில்ல இது தெரிஞ்சிருக்கணும்.''

ஆந்தையும் ஒரு முடிவுடனேயே இருந்தான்.

''ஆம்பளன்னா மீசைய முறுக்கத்தான் செய்வான். இனிமேப் பேச்செதுக்கு. அவுகவுக மனசுக்குத் தெகஞ்சபடி பாத்துக்கிற வேண்டியதுதான்.''

''ஆம்பளையாருந்தா ஒழுங்கா நடந்துக்கிறணும். பெரிய யோக்கியன் மாதிரி பேசுறயே.''

துப்பனுக்கு உடம்பு துடித்தது. நிலைமை மோசமாவதைப் பார்த்த மம்பட்டி கோவத்தை ஆற்றிச் சரிப்படுத்தினான்.

''இதுல சடச்சுக்கிறதுக்கு என்னண்ணன் இருக்கு. நாலூரு ஆடுமாடு மலங் காட்ல மேயிது. சாய்ந்தரம் அதது பாட்டுக்குப் பிரிஞ்சு போறதில்லையா. அந்த மாதிரி நெனச்சுக்கிற வேண்டியதுதான். வீணால ஏன் கசப்ப மென்னு கொமட்டிக் கிறணும்.''

கத்தியும் காடையும் இதையேதான் சொன்னார்கள். ஆந்தையும் கோடாலி யும் அதுக்கு மேல் நிற்கவில்லை. கருத்தையனிடம் சொல்லாமலேயே கிளம்பி விட்டார்கள். துப்பன் வேதனைப்பட்டான்.

''அடுக்கிற அரும ஒடைக்கிற நாயிக்குத் தெரியலயே.''

பிறகெல்லாம் கருத்தையன் அவர்களைப் பற்றி ரெம்பக் கவலைப்படவில்லை. சில சமயம் அவர்கள் இல்லாத குறை உறுத்தும். துப்பனிடம் வருத்தப்படுவான்.

''அந்தப் பெயக இல்லாம ஒருமாதிரியா இருக்கு சித்தப்பா.''

''கவலப்படாத கருத்தப்பாண்டி. அவங்களுக்குப் பதிலா நல்ல ஆளுகளத் தெறிச்செடுத்துக் கொண்டுவந்துறென்.''

''ஆளும் வேணாம் ஒண்ணும் வேணாம். வேலையப் பாத்துட்டுப் போ.''

''ஏன்யா அப்படிச் சொல்ற. நமக்குத் தொணைக்கு வேணுமில்ல.''

''தொணையும் வேணாம் மயிரும் வேணாம். பட்டது போதும்.''

துப்பன் அந்தப் பேச்சை மறுபடி தூண்டவேயில்லை.

## 4. எலிக் கூத்து

கில்லாடிப் பூச்சனும் கோடாலிக் கோப்பனும் யார் யாருடனெல்லாமோ சேர்ந்துகொண்டு தலைகால் தெரியாமல் ஆட்டம்போட ஆரம்பித்துவிட்டார்கள். ஒரு வரைமுறையில்லாமல் வழிப்பறி கொள்ளையடிப்பதாகத் தகவல் வந்தது. சண்டி வழக்குப் பேசி வீணாகச் சண்டையிழுத்து ரெண்டு பக்கமும் அபராதம் போட்டுச் சுருட்டுவதை நிறுத்தியதாகத் தெரியவில்லை. அதோடு நிற்காமல் சில எதிரிகளின் தூண்டுதலில் கருத்தையனைப் பற்றி எளக்காரமாகப் பேசியிருக் கிறார்கள்.

''கருத்தையன் என்ன பெரிய கொம்பனா. அவன் பெறந்த ஊருலயே கொள்ளையடிச்சுக் காட்றோம் பாரு. சரியான ஆம்பளன்னா அங்க வரச் சொல்லு.''

இப்படியெல்லாம் அவர்கள் வன்மம் கூறியது துப்பன் காதுக்கு எட்டியது. கருத்தையனுக்குத் தெரிந்தால் நடக்கிற கதையே வேறு. இருந்தாலும் இந்தப் பயல்களுக்கு இவ்வளவு கொழுப்பு ஆகாது. பிய்த்துக்கொண்டு போனால் அதோடு போய்த் தொலைய வேண்டியதுதானே. அன்றைக்குப் பீ திங்கப் பல்லில்லாமல் நொறுக்கியனுப்பியிருந்தால் இப்படிப் பேசுவானா. பிழைத்துப் போகட்டு மென்று பெருந்தன்மையாக இருந்த மனுசனை வம்புக்கிழுத்தால் எப்படி. இவர்கள் வழிக்குப் போகிறோமா இல்லை இவர்கள் பண்ணும் அடாவடியைத் தட்டிக்கேட்கிறோமா. பொன்னையாத் தேவருக்குப் பயந்துகொண்டு இங்கே அண்டிப் பிழைத்ததெல்லாம் மறந்துவிட்டதா. அவர் போனதும் மடங்கிக் கிடந்த வால் நிமிர்ந்துகொண்டதாக்கும். அதை ஒட்ட நறுக்க எவ்வளவு நேர மாகும். சங்கதி கருத்தையனுக்குத் தெரிய வேணாம். கொஞ்சநாள் ஆறப் போட்டுப்பார்க்கலாம்.

துள்ளிக்கொண்டு திரிந்த கோப்பனும் பூச்சனும் சொன்னது போலவே கைவரிசையைக் காட்டிவிட்டார்கள். அன்றைக்குப் பார்த்து கருத்தையனும் துப்பனும் கட்டயம்பட்டிக்கு ஒரு விவகாரத்துக்காகப் போயிருந்தார்கள். ரெம்ப நாளாக இழுபறியில் கிடந்த விவகாரம். அவர்கள் போனால்தான் முடியுமென்ற நிலைமை. இதை எப்படியோ துப்புவெட்டி கோப்பனும் பூச்சனும் கூட நாலு பேரைச் சேர்த்துக்கொண்டு காரியத்தில் இறங்கிவிட்டார்கள்.

துப்பன் இதைப் பற்றி ஏற்கெனவே மம்பட்டியிடம் முன்னெச்சரிக்கையாக ஒரு வார்த்தை போட்டிருந்தான். அதனால் மம்பட்டி முழிப்பாகவே இருந்தான். ராத்திரி கூட்டாளிகளுடன் வேப்பங்காட்டோரம் தங்கியிருந்தான். கோப்பனும் பூச்சனும் கோப்போடு வருவதை முன்கூட்டியே தெரிந்துகொள்ள முடியவில்லை. இடைவழியில்தான் அருவங்கேட்டுக் கண்டுபிடித்தான். அவர்கள் மும்முரமாக வந்துகொண்டிருந்தார்கள். கட்டாப்புக் கட்டி விரட்டலாமென்றால் தோதுக்கு ஆளில்லை. இருப்பது மூணு பேர். எதிராளிகளோ ஆறுபேர். மம்பட்டி மற்றவர் களைக் கலந்தான்.

''சே காரியம் கெட்டுப்போச்சே. இப்ப என்ன செய்றதுன்னு தெரியலயே. வந்தது வரட்டும்னு எறங்கி வெரட்டியடிச்சிறலாமா.''

கைக்காடை சொன்னான்.

"பெரியவுகளுக்குத் தெரியாம எறங்கி நமக்கு ஏதொண்ணும் ஆயிருச் சுன்னாக் கேவலமாச்சே."

"முட்டிப்பான நேரத்துல துப்பனும் இல்லையே. அதான பெரிய வருத்தமா ருக்குது."

கத்தி ஒரு யோசனை சொன்னான்.

"வேற வழி ஒண்ணும் தோணல. கைக்காடையக் கட்டயம்பட்டிக்கு அனுப்பித் தகவலு சொல்லீற வேண்டியதுதான். அவுக வாறவரைக்கும் நம்ம ரெண்டு பேரும் தாக்காட்டிப் பாப்பொம்."

காடை கட்டயம்பட்டிக்கு ஓடினான். அந்த ஊர் வேப்பங்காட்டுக்குத் தெற்கே கிட்டத்தில்தான்.

கோப்பன் கூட்டம் வேப்பங்காட்டைத் தாண்டியிருந்தது. இடையில் கொஞ்ச நேரம் உட்கார்ந்து கலிங்கலை எப்படிக் கொள்ளையடிப்பதென்று திட்டம் போட்டார்கள். பூச்சன் வீராப்பாகப் பேசினான்.

"கருத்தையன் இல்லாறப்ப நமக்கென்ன கவல. பூந்து வெளையாட வேண் டியதுதான். கட்டயம்பட்டி வெவகாரம் முடியிறதுக்குள்ள கலிங்கலு வெவ காரத்த முடிச்சிருவொம்."

தீவட்டிகளைத் தயார்பண்ணினார்கள். சாராயம் ஊற்றிக்கொண்டார்கள். கூடவே பின்தொடர்ந்து வந்த மம்பட்டியும் கத்தியும் ஒளிந்திருந்து அருவங்கேட் டார்கள். பேச்சு பிடிபடவில்லை. இப்படித் தாயமாட்டுப் பண்ணுவது ஒரு வழியில் நல்லதுதான். கருத்தையனுக்குத் தகவல் போய்ச் சேரணுமே.

எதிராளிகள் கலிங்கலை நெருங்கிக்கொண்டிருந்தார்கள். அவர்களைத் தாக் காட்டி நிறுத்த முடியவில்லை. மம்பட்டி கேட்டான்.

"ஊரோரம் போயிக் கல்லெறிஞ்சு சனங்கள உசுப்பி எச்சரிக்கப்படுத்துவமா. இல்ல தெருவழியாச் சத்தம் போட்டுக்கிட்டே ஓடீருவொம்."

"நம்மதான் களவாங்க வந்தம்னு நெனச்சுச் சனங்க நம்மளப் புடிச்சுக்கிட்டா வம்பு. அசிங்கமாப் போயிருமே.

"எப்படியும் கட்டயம்பட்டியிலருந்து ஆளு வந்துரும் பாரு."

நிலைகொள்ளாத பதட்டத்தில் கட்டயம்பட்டிப் பாதையில் கருத்தையனுக் காகக் காத்திருந்தார்கள். என்னாகுமோ ஏதாகுமோ என்று மனசு கிடந்து அடித்துக் கொண்டது.

கருத்தையன் கலிங்கலுக்குத் திரும்புமுன் காரியம் முடிந்துவிட்டது. ஊருக்குள் கூச்சல் அமுங்கித் தீமூட்டம் தணிந்திருந்தது. படப்புக்கள் வெந்து நீந்துவிட்டன. தீக்காயம்பட்ட காளைகளின் அடிவயிற்றுக் கனைப்பு அப்பப்பக் கேட்டது. மம் பட்டியும் கத்தியும் விருமுத்தி பிடித்து விறைத்துப்போய் நின்றிருந்தார்கள்.

துப்பன் காதுகொடுத்துக் கேட்டுவிட்டுச் சொன்னான்.

"சனங்க சத்தம் இனியும் கேக்குது. அதனால அந்தப் பெயக ஊரவுட்டுப் போகலன்னு தெரியிது."

"சுத்தி வளச்சுக்கிட்டா வசமா மாட்டிக்கிருவான்."

கருத்தையன் புளியமரத்தடியில் ஒளிந்துகொண்டு மற்றவர்களை விரட் டினான்.

''நானும் சித்தப்பனும் இங்க நின்னுக்கிறொம். மத்தவங்க ஒவ்வொரு தெசைக்குப் போயி நில்லுங்க. அந்தப் பக்கம் வந்தாச் சன்ன குடுங்க.''

துப்பனுக்கென்றால் கோவம் கொப்புளித்தது.

''போன சனியன் போயிருச்சுன்னுருந்தென். அது பொச்சுக்குள்ளருந்து கீச்சுக்கீச்சுங்குது. மச்சான் எப்படியும் வண்ணாக்குடியத் தாண்டிப் புளியமரத்து வழியாத்தான தப்பிக்கணும். வா வச்சுக்கிறென்.''

கொள்ளையடித்த சாமான்களைச் சுமந்துகொண்டு கோப்பனும் பூச்சனும் சகடாலடித்தபடி வந்தார்கள்.

''கருத்தையக் குடும்பன் பெறந்த ஊருலயே கொள்ளையடிச்சுக் காட்டீட்டொம். இனிமே எவனும் நம்மகிட்ட வாலாட்ட மாட்டான்.''

''சொந்த ஊரென்ன எந்த ஊருலயுமே அவனால மோத முடியாது. சண் டீருத்தனமெல்லாம் பொட்டணங்கெட்டி வச்சிற வேண்டியதுதான்.''

''ஆளரவம் கேக்குதே. வாங்க தெக்கமாப் போயிருவொம்.''

புளியமரத்தைத் தாண்டித் தெற்கு மூலைக்குப் போனார்கள். அப்போதும் கருத்தையன் கவனித்துக்கொண்டுதானிருந்தான். தெற்குப் பக்கமிருந்தும் மம் பட்டியின் சன்னை வந்தது. கோப்பன் திகைத்துப்போனான்.

''இந்தப் பக்கமும் ஆளுக நடமாடுறாப்புலருக்கு. கெழக்கமாத் தப்பிச்சு ஓடீற வேண்டியதுதான்.''

புதுப்பாதையைப் பிடிப்பதற்காகப் புளியமரத்தோரம் வந்தார்கள். உரு வங்கள் தெளிவாகத் தெரியவே கருத்தையன் தயாரானான். கையிலிருந்த ரெண்டு கல்லே போதுமானதாக இருந்தது. வசமாக நின்று குறிவைத்து எறிந் தான். பூச்சனுக்கு வலது கை ஒடிந்து தொங்கிவிட்டது. கோப்பனுக்கு இடுப்பு கழண்டுபோனது. பூச்சன் வலியில் கத்தினான்.

''நாக்குட்டி இங்கல்லடா கெடந்துருக்கு. தப்பிச்சாப் போதும். ஓடுங்க.''

ஆறு பேரும் உயிரைக் கையிலேந்திக்கொண்டு ஓட ஆரம்பித்தார்கள். பின்னால் துரத்தப் போன துப்பனையும் காடையையும் கருத்தையன் தடுத்து விட்டான்.

''பெழச்சுப் போகட்டும்.''

கொள்ளையடித்த பொருள் அத்தனையும் பொட்டணம் பொட்டண மாகச் சிதறிக்கிடந்தது. விட்டுப்போன தீவட்டி வெளிச்சத்தில் தேடியெடுத்துப் பணம் நகையை அப்போதே உடையவர்களிடம் ஒப்படைத்தார்கள். இத் தனைக்கும் கருத்தையன் கலிங்கலுக்குள் நுழையவே இல்லை. சொந்த ஊரில் இப்படி நடந்துவிட்டதே என்று வெட்கமும் வேதனையும் அவனைப் பிடுங்கித் தின்றன. ஆண்டி அவனை நினைத்துப் பெருமைப்பட்டான்.

பத்து நாளாயிற்று. கருத்தையனுக்கு மனசு என்னமோ போலிருந்தது. துப்பனிடம் வருத்தப்பட்டான்.

''அந்தப் பெயக அண்ணைக்கு அலறியடிச்சு ஓடுனதோட சரி. அதுக்குப் பெறகு என்னானாங்க ஏதானாங்கன்னு தெரியுமா.''

''அந்த ஈனப் பெயகளப் பத்தி நான் ஏன் வெசாரிக்கணும். செத்தாத் தாவலையா பெழச்சாத் தாவலையா. அண்ணைக்கு என்னய வுட்டுப் புடிச் சிருந்தாத் தெரியும் சங்கதி. ஊரு போய்ச் சேந்துருப்பானா.''

''அப்படிச் சொல்லாத சித்தப்பா. அந்தப் பெயக நல்லவங்கதான். நம்ம ளோட எத்தன வருசமா இருந்தான். நம்பிக்கையாத்தான நடந்துக்கிட்டான்.''

''பெறகேன் எடவழியில பேதி வந்துருச்சாம்.''

''தூண்டி வுடுறவன் பேச்சக் கேட்டுத் துள்ள ஆரம்பிச்சான். வசமா வாங்கிக் கெட்டிக்கிட்டான். அவங்களக் கெடுத்தது ஆருன்னு நல்லாத் தெரிஞ்சுக்கிரு வொம். அவனும் ஒருநாளைக்கு மாட்டத்தான் போறான்.''

''அடுத்தவந் தூண்டிவுட்டா இவனுக்கு அறிவெங்க போச்சு.''

''உள்ளுருக்குள்ளயே ரெண்டு பேரு முள்ளிவுட்ருப்பான். சொல்ல முடியாது. கௌஞ்சு பாத்தா எல்லாம் வெளிய வரும்.''

''ஊருக்கே வஞ்சகம் பண்ணுன பெயகள வுட்டுவச்சுப் பாக்கலாமா.''

''சித்தப்பா அவங்கதான் புத்தியில்லாமச் செஞ்சிட்டாங்கன்னா நம்மளும் அப்படி நடந்துக்கிறதா. என்னருந்தாலும் குடும்பத்த மறந்து ராவும் பகலும் நம்ம ளோடயே ஒழண்டவங்களாச்சே.''

''நான் என்ன சொல்ல வாறன்னா கருத்தப்பாண்டி....''

''ஒண்ணுஞ்சொல்ல வேணாம். நாளைக்கே அவங்களப் போயிப் பாத்துட்டு வந்துரு. தொணைக்கு ஆரவும் கூட்டீட்டுப் போக வேணாம். ஊருக்கே அடிக்க வந்துட்டாகன்னு வெரண்டு ஓடூருவான்.''

''மனசில பகைய வச்சுக்கிட்டு ஒண்ணுருக்க ஒண்ணு செஞ்சிட்டான்னா வம்பாச்சே.''

''அதுவரைக்கு ஒங் கையி புளியங்காயா புடுங்கப் போகுது. அப்படியெல் லாம் ஒண்ணும் நடக்காது. அவங்களப் பத்தி எனக்கு நல்லாத் தெரியும்.''

துப்பன் உடனே வெள்ளையாபுரத்துக்குக் கிளம்பிப் போனான். கோப் பனையும் பூச்சனையும் வம்பாடு பட்டுத் தேடிப்பிடிக்க வேண்டியிருந்தது. கையிலும் இடுப்பிலும் மாக்கட்டுப் போட்டிருந்தார்கள். பார்க்கப் பாவமாக இருந்தது. கோப்பன் மிரண்ட பார்வையில் கேட்டான்.

''தனியாத்தான் வந்துருக்கயா இல்ல...''

''ஒத்தியிலதான் வந்துருக்கென். அடிச்சுப் போட்றாதங்கப்பா.''

பூச்சன் தலைகுனிந்தபடி சொன்னான்.

''அப்படிச் சொல்லாதண்ணன். அடிக்கிற நெலமையிலயா இருக்கொம். அண்ணைக்கு எங்கள உசிரோட வுட்டதே பெரிசு.''

''நீங்க நடந்துக்கிட்டது தப்புத்தான.''

''கேப்பாரு பேச்சக் கேட்டுப் புத்தியக் கடங்குடுத்துட்டொம். இனிமே அதப் பத்திப் பேசி என்ன செய்ய.''

''நடந்தது நடந்துபோச்சு. கண்டறிஞ்சு பெழச்சுக்கங்க.''

கோப்பனுக்கும் பூச்சனுக்கும் கோழி சாராயத்துடன் மருந்துச் செலவுக்குத் துட்டும் கிடைத்தது. துப்பன் நிறைந்த மனசுடன் திரும்பினான்.

அதுக்குப் பிறகு கோப்பனும் பூச்சனும் களவுத் தொழிலை வள்ளிசாக மறந்துவிட்டு விவசாயத்தில் இறங்கிவிட்டார்கள். கருத்தையன் வாங்கிக் கொடுத்த சாமான்களின் அருமை இப்போதுதான் தெரிந்தது. இதைக் கேள்விப் பட்ட கருத்தையனுக்குச் சந்தோசம். துப்பனிடம் சொன்னான்.

''சித்தப்பா ரெண்டு சம்சாரியவும் ஒருநாளைக்குப் பாக்கணுமே.''

''மெனக்கிட்டு நம்ம போகணுமாக்கும். ஒரு வார்த்த சொல்லிவுட்டா ஓடி வந்துற மாட்டாங்களோ.''

''அது நல்லால்ல. நம்மதான் போயிப் பாக்கணும்.''

அந்தப்படியே ரெண்டு பேரும் ஒரு பவுர்ணமியன்று புறப்பட்டுப் போய் காட்டுக் குச்சிலுக்குள் உட்கார்ந்து விடியவிடியப் பேசிவிட்டு வந்தார்கள். துப்பன் கருத்தையனைப் பார்த்து மாய்ந்துமாய்ந்து முனங்கிக்கொண்டான்.

''இவ்வளவு காலமாக் கூடவே இருந்தும் இந்த மனுசனப் புரிஞ்சுக்கிற முடியலயே.''

## 5. வெளையாடி முடிச்சாச்சு

''என்ன சித்தப்பா தன்னால சிரிச்சுக்கிற. கோட்டிகீட்டி புடிச்சிருச்சா.''

துப்பன் மறுபடியும் சிரித்தான்.

''கோட்டிக்காரன நெனச்சென் சிரிப்பாணி வந்துருச்சு.''

''அவன எங்க சேகாரம் புடிச்ச. அப்படியாளுத்தான ஒனக்குக் கெடைக்கும்.''

''அய்யா கருத்தப்பாண்டி காலாறக் கொஞ்சம் உக்காந்து கதையக் கேளு.''

''அப்படியென்ன புதுசாக் கத வச்சிருக்க. அவங்கள எங்க.''

''சமையலு மும்மரமா நடக்குது. ஒரு நாளைக்கு அவங்களுந்தான் செஞ்சு பாக்கட்டுமே.''

''பட்னி போடாமருந்தாச் சரி.''

மொட்டைப் பரும்பு உச்சிப்பாறை நிழலில் கருத்தையனும் சாவகாசமாக உட்கார்ந்துகொண்டான். ரெண்டு பேர் சேர்ந்து பருத்தி மருகையைச் சுமந்து நிற்கிற மாதிரி மூணு பாறை. அது பருத்தி சுமந்தான் பாறை. நாள் முழுக்க உள்ளே வெயிலே படாது. எவ்வளவு நேரமானாலும் தவிப்பாறலாம் உறங்கலாம். சுற்றிலும் கண்ணுக்கெட்டிய மட்டும் ஆள் நடமாட்டம் தெரியும்.

''காலாங்கரப்பட்டியில சண்டூரு ஒருத்தன் உண்டே...''

''ஆரு சின்னக்குருவன் பகடையா.''

''அவனேதான்.''

''நம்மாளாச்சே.''

''நம்மாளுத்தான். சொல்லிக்கிறதுக்கே வெக்கமாருக்கு.''

''அவனுக்கென்ன.''

''கொஞ்ச நாளா ஆளு தட்டுப்படக் காணுமே என்னாச்சுன்னு வெசாரிச்சென். அவன் இந்தச் சீமைய வுட்டே போயி ரெம்ப நாளாச்சாம்.''

''ஆரவாச்சும் கைவச்சிட்டு ஓடிப்புட்டானா.''

''கையும் வைக்கல காலும் வைக்கல.''

''காரணம் வேணுமில்ல.''

''ஆமா பெரிய காரணம். பொண்டாட்டிக்காரியோட தகராறு.''

''அதுக்காகவா ஓடுனான்.''

‘‘கொழுப்பெடுத்துப் போயி ஊரூருக்கு வங்கணம் வச்சுக்கிட்டுத் திரிஞ்சா ஆருதான் சகிச்சுக்கிட்ருப்பா. சரியா வீட்டுக்குப் போறதில்ல. கையில கெடச்சத கள்ளப் பொண்டாட்டிக்குக் குடுக்கிறது.’’

‘‘அறுப்புக் காலத்துல எலிக்கு அஞ்சு பொண்டாட்டியாம். அந்தக் கதை யால்லருக்கு.’’

‘‘அஞ்சும் மூணும் உண்டுன்னா அறியாச் சிறுக்கியும் கறியாக்கிப் போடுவா.’’

‘‘அதச் சொல்லு. கூறுகெட்ட தாயிளி கெடுத்தானே.’’

‘‘பொண்டாட்டிக்காரி தனக்குத் தோணுனபடி ஒரு முடிவெடுத்துக்கிட்டா. ஒனக்கு ஒரு தொடுப்புக் கெடச்சா எனக்கு ஒரு வப்புக் கெடைக்காமயா போயி ரும்னு உள்ளூருலயே குடும்பன் ஒருத்தனக் கையில புடிச்சுக்கிட்டா. பேரு முத்திருளன். ஆளு நல்லாருப்பான். அவனுக்குப் பொண்டாட்டி புள்ளையெல் லாம் உண்டு. நல்ல வெவசாயம்.’’

‘‘பெறகென்ன கொள்ள வந்துருச்சு.’’

‘‘அதென்ன கிறுக்கோ. பகட அந்த வப்பாட்டியே தஞ்சம்னு கெடக்க இங்க குடும்பன் இந்த அலப்பாட்டிக் காலடியில காத்துக்கெடக்க ஒரே கூத்துத்தான்.’’

‘‘மானங்கெட்ட உசிருக.’’

‘‘குடும்பன் பொண்டாட்டி பொறுத்துப்பொறுத்துப் பாத்தா. கடசிக்குக் கஞ்சி ஊத்தாம வெளக்கமாத்துட்டுச் சாத்தி சக்கிலியக்குடிக்கே வெரட்டியடிச் சிட்டா. திரும்பி வந்தா வெட்டியெடுத்துக் கொல்லப்பறத்துல நாயப்போல ஒரமாப் பெதச்சிருவம்னு ரெண்டு பெயகளும் சொல்லீட்டான். நல்லதாப் போச்சுன்னு அவன் சக்கிலியக்குடியிலயே இருப்புப் போட்டுட்டான். கெடைக்கிற வேலைக்குப் போறது கூலியக் கொண்டுவந்து குடுக்கிறது. பகடைக்குப் பெறந்த பொட்டப்புள்ளையத் தம் புள்ளையப் போலக் கவனிச்சுக்கிட்டான்.’’

‘‘குடும்பன் பகடையாயிட்டான்.’’

‘‘சின்னக்குருவனுக்குச் சுருத்து வந்துருச்சு. முத்திருளன் இல்லாற சமயம் பாத்து ராவோட ராவா வீட்டுக்கு வந்து பொண்டாட்டிய இழுத்துட்டுப் போயி நடுக்காட்ல வச்சு ஒரு காதச் சீவிப்போட்டுட்டு ஓடீட்டான்.’’

‘‘இது எனக்குத் தெரிஞ்சிருக்கணும். அவனுக்கு மூக்கு போயிருக்கும்.’’

‘‘பொண்டாட்டி எதுக்கும் அஞ்சல. ரெண்டு காது போனாலும் முத்திருளன வுட்டுப் பிரியிறதில்லன்னு வைராக்கியமா இருந்துட்டா. மொட்டக் காத மறச்சுத் தொங்குகொண்ட போட்டுக்கிட்டுத் தைரியமா நடமாடுனா. அந்த அழகிலயே முத்திருளன் இன்னியும் கொஞ்சம் சொக்கிப்போனான். அவளுக்கு மொட்டக் காதின்னே பேராகிப்போச்சு.’’

‘‘அப்படி ஒரு பெழப்பா. ’’

‘‘அவுக பெழப்புக்கென்ன. சந்தோசம்னா ஒரு வெதத்துலயா. முத்திருளன் மொட்டக்காதிக்குத் தாலிகெட்டி சக்கிலியக்குடியில ஒருத்தனாகி சகல வேலையும் செய்ய ஆரம்பிச்சிட்டான். ரெண்டு பேரும் களத்து வேலைக்குப் போறது. களத் துலயே ஒண்ணாக் கஞ்சி குடிக்கிறது. எல்லாம் நடக்கும். சாவெழவு கலியாணங் காச்சிக்குப் போவான். சக்கிலியக்குடியில ஒரு காரியம்னா அவந்தான் மொத ஆளா நிப்பான். எல்லாரும் அவன மொறவச்சுக் கூப்புட ஆரம்பிச்சிட்டாங் கன்னாப் பாத்துக்கயேன்.’’

''மொட்டக்காதி போட்ட சொக்குப்பொடி அந்த வேல செய்யிது.''

''மொட்டக்காதி அவனுக்கு ரெண்டு புள்ளீகளும் பெத்துக்கிட்டா. ஒரு ஆம்பள ஒரு பொட்டச்சி.''

''ஒரு சக்கிலியக் குடும்பன் ஒரு சக்கிலியக் குடும்பச்சி.''

''பகடைக்கு ஒரு பொட்டப்புள்ளையோட சரி.''

''அக்கான்னு சொல்லு.''

''அப்படித்தான்... குடும்பன் ஆளோட ஆளா மாடறுக்கப் போறதும் உண்டு. அந்தக் கறியில ஒரு ருசி கண்டுட்டான். கமல வாலு தைக்கிறதுக்குக்கூடப் பழகீட்டான். செருப்பு ஒண்ணு மட்டும் தைக்கிறதில்ல. நல்ல நாளைக்குச் சட்டிபொட்டி தூக்கிச் சோத்துக்குப் போறதில்ல. மேகலக்குடிக்குக்கூடப் போயிறலாம். பள்ளக் குடியில நிக்க முடியாதே.''

''எல்லாம் உதுத்தாச்சு. அதுல மட்டும் என்ன மானம் மருவாதி வேண்டிக் கெடக்கு... சித்தப்பா சொந்த வீட்டுக்காணிய இந்த வீட்டுக்காரன் பாத்தா எப்படியிருக்கும்.''

''சொந்த வீட்லதான் ஒரேயடியாத் தலமுழுகீட்டாகளே. பெறகென்ன காணிபாத்துக் கொத்து வாங்குறது.''

''சின்னக்குருவன் பாடு என்னாச்சு.''

''அத ஏன் கேக்க. எழுத வெளங்காற பெழப்பு கழுத பெரண்ட களந்தான். வப்பாட்டிக்காரி தேங்கொளவி மாதிரி இனியொருத்தனத் தேடிக்கிட்டா.''

''கொளவி தேனுருக்கிற எடத்துக்குப் போயிருச்சு.''

''மொட்டக்காதியிட்டயும் போக முடியாம வட்டக்காதியிட்டயும் தங்க முடியாம அய்யா தவிச்சுப் போயிச் சந்திக்கு வந்துட்டாக. அது பாரு அவன ரெம்பப் பாதிச்சிருச்சு. என்னத்தவோ பறிகுடுத்த மாதிரி அலஞ்சான். சுத்தித் திரிஞ்சு தேசாந்தரம் போயிட்டான். எங்க போனான் எங்க இருக்கான்னு தெரியலயாம். சண்டூரு பெழப்பு சட்டியெடுக்கிற அளவுக்கு ஆயிப்போச்சு.''

''ஓடம்பெடுத்தவனெல்லாம் ஓடெடுத்துத்தான ஆகணும்.''

''பகட பெழப்பு அப்படி. குடும்பன் சக்கிலியக்குடியிலயே இருந்து காலந் தள்ளீட்டான். அவன் காலமும் ஓடியடஞ்சிருச்சு. அஞ்சாறு மாசத்துக்கு முந்தித் தான் மண்டையப் போட்டான்.''

''கத முடிஞ்சுபோச்சா.''

''செத்தண்ணைக்குப் பகடைக பள்ளக்குடிக்குப் போயி அப்பாவுகள எடுத்து அடக்கம் செஞ்சிருங்கன்னு சொல்லீருக்காக. நாங்க வர மாட்டொம். நீங்களே எடுத்து மூடீருங்கன்னு மக்கமாரு வெரட்டியடிச்சிட்டாக. பெறகென்ன சக்கிலியக்குடி மொறப்படி அவுக சுடுகாட்லயே அடக்கம் செஞ்சிட்டாக.''

''அந்த மண்ணுதான் லவிச்சது.''

''மொட்டக்காதி பெத்த புள்ள கொடம் ஒடைக்க மகன் கொள்ளிவைக்க மருவாதியாப் போயிச்சேந்தான். சக்கிலியக்குடியிலயே எழவும் எடுத்தாக. மொட்டக்காதி மூளியாயிட்டா.''

''பள்ளக்குடியில கருமத்தத் தீத்துக்கிட்டாகளா.''

''இவுக தனியாக் கொள்ளிவச்சு எழவெடுத்தாக. தாலியறுப்பும் நடந்தது.''

‘‘ஆக ஒரு மனுசனுக்கு ரெண்டு எழவு. குடுத்துவச்சவன். பொட்டச்சி கவுட்டுக்குள்ள மொழஞ்சவன் கதையெல்லாம் இப்படித்தான் முடியும்.’’

‘‘எப்படியெப்படி... கவுட்டுக்குள்ள மொழையிறதா.’’

துப்பன் தொந்தி குலுங்கச் சிரித்தான். கருத்தையன் அரட்டினான்.

‘‘சந்தேகமே இல்ல. ஒன்னயக் கோட்டி புடிச்சு நல்லா ஆட்டுது. காலக் கெட்டிப்போட்டாத்தான் வசத்துக்கு வருவ.’’

துப்பன் வள்ளிசாகச் சிரிப்பை உதிர்த்துவிட்டுச் சொன்னான்.

‘‘ஒனக்குக் கோயிலு வச்சுக் கும்புடணும்யா.’’

‘‘இருக்கிற கோயிலக் கும்புட்டாப் போதும். எந்திரி பசிக்குது.’’

இருவரும் இரைதேடி நடந்தார்கள்.

பத்து நாளாகியிருக்காது. துப்பன் இன்னொரு சேதியுடன் ஓடிவந்தான்.

‘‘கொங்கங்கொளம் கிட்ணக் குடும்பன் கதைய முடிச்சிட்டாக கருத்தப் பாண்டி.’’

‘‘அவனும் போயிட்டானா. தாட்டிக்கமாருந்த மனுசன். நம்ம சொன்ன சொல்லத் தட்ட மாட்டான்.’’

‘‘எதுல தாட்டிக்கமாருந்து என்ன செய்ய. பொட்டச்சி சேர்க்கையால பொசுக்னு வுழுந்துட்டானே.’’

‘‘இவனும் எச்சுக்காலப் பெயதானா. எங்க போயி மாட்னானாம்.’’

‘‘நடுவப்பட்டிக் காட்ல ஒளிஞ்சு திரியும்போது கம்மம் பிஞ்சக் குச்சிலுக்குள்ள ஒரு வெள்ளச்சீலக்காரம்மாளப் பாத்துருக்கான். அது பாட்ல முக்காடு போட்டுக்கிட்டு விதியேன்னு வெள்ளாமைக்குக் காவலு காத்துக்கிட்ருந்துருக்கு.’’

‘‘எந்த நடுவப்பட்டி. சித்தா நாய்க்கரு ஊரா.’’

‘‘அதேதான்.’’

‘‘சரி.’’

‘‘போகயில வரயில அந்தம்மாட்டப் பேச்சுக்குடுத்துருக்கான். தாகத்துக்குத் தண்ணி கேட்ருக்கான். அதும் எரக்கப்பட்டுத் தனக்குக் கொண்டுவந்த தண்ணியோட கஞ்சியும் குடுத்துருக்கு.’’

‘‘வெள்ளந்திப் பொம்பள.’’

‘‘குச்சிலுக்கு வெளிய இருந்தவன் உள்ள போயி உக்காந்து சாவாசமாப் பழக்கம்போட ஆரம்பிச்சிட்டான். அந்தம்மாளுக்கு வாழ வேண்டிய வயசு. வாளிப்பான ஒடம்பு. ரெம்பக் கிட்டத்துல ஒரு ஆம்பளையப் பாத்ததும் தீயிற பயிருக்குப் பேயிற மழையப் போல மனசுக்குள்ள ஒரு குளுச்சி. அதும் பொம்பள தான. பேச்சில மசக்குனானோ மெரட்டி வசக்குனானோ. எப்படியோ அமஞ்சுக்கிருச்சு.’’

‘‘கொழுப்பு கும்மாளம் போடுது.’’

‘‘பீ திங்கணும்னு தின்னா வாய நல்லாக் கழுவிக்கிட்டு வழியப் பாத்துப் போயிறணும். இந்தப் பண்ணிப் பெய அதே சோலியாச் சுத்திச்சுத்தி வந்துருக்கான். எங்க திரிஞ்சாலும் மதியம் குச்சிலுக்கு வந்துறது. அந்தம்மாளும் ஒரு கையி கஞ்சி அதியமாக் கொண்டுவாறது. இப்படியே கத நடந்துருக்கு.’’

''சனியன் தலைக்கேறியிருச்சு.''

''கொஞ்ச நாளா அம்மாளக் காங்கல. இவன் குட்டிபோட்ட பூன மாதிரி குச்சிலச் சுத்துனதுதான் மிச்சம். எப்படியும் பாத்தாகணும்னு மனசு பாடாப் படுத்துது.''

''குட்டு அந்தம்மா வீட்டுக்குத் தெரிஞ்சுபோச்சோ என்னமோ.''

''காமக்கோட்டி புடிச்ச நாயி தண்ணியப் போட்டுட்டு ஒருநா ராத்திரி ஒத்தியில வீடு தேடிக் கௌம்பீட்டான்.''

''காலச் சனியன் புடிச்சு இழுத்துட்டுப் போகுது.''

''நடுச்சாமத்துல அந்தம்மாளோட வீட்டுச் சொவரேறிக் குதிச்சு ஓட்டப் பிரிச்சு உள்ள எறங்கித் தொழாவீருக்கான். ஒரு ஆம்பளையத் தடவி பூச்சம்மா பூச்சம்மான்னு எழுப்ப அவரு எந்திரிச்சுக் கூப்பாடு போட வீடே முழிச்சுக்கிருச்சு.''

''வக்காளி வசமா மாட்டிக்கிட்டான்.''

''எல்லாரும் சேந்து வளச்சுப் புடிச்சுக்கிட்டாக. வெளக்கக் கொண்டுவந்து வெளிச்சங்காட்ன வெள்ளச்சீலக்காரம்மாளுக்கு விருலியத்துப்போச்சு. மூஞ்சியத் தொங்கப்போட்டுட்டு உள்ள போயிருச்சு.''

''சண்டீரு முழிச்சுக்கிட்டுருப்பாரு.''

''இதுக்குள்ள ஊரு முழுக்க உசும்பீருச்சு. இவன அடையாளம் கண்டுக் கிட்டாக. களவாங்கத்தான் வந்துருக்கான்னு சொல்லி இழுத்துட்டுப் போயிச் சாவடி வேப்பமரத்துல கெட்டிவச்சிட்டாக.''

''என்னத்தக் களவாங்க வந்தான்னு அவுகளுக்கெங்க தெரியும்.''

''தலக்கெட்டு வரி மாதிரி ஆளாளுக்குத் தரும அடி குடுத்தாக. சங்கதி எப்படியோ சித்தா நாய்க்கருக்குத் தெரிஞ்சுபோச்சு. விடியக்காலம் ஆளுகளோட வந்துட்டாரு.''

''நம்மூருல களவு நடந்துருச்சான்னு ரோசம் பொத்துக்கிருச்சாக்கும்.''

''வந்தவரு இவன அடிக்கல புடிக்கல. ரெண்டு கால்லயும் பொதும்பச் சாக்கச் சுத்துனாக. பெரிய ஒரலப் பெரட்டி வந்து காலுமேல ஏத்தி நெடுக உருட் னாக. ஒரு காயங்கூடப் படாம எலும்பெல்லாம் நஞ்சு நசுங்கிக் கூழாகிக் காலு கொழண்டுபோயித் தொங்குச்சு. இவன் சத்தம் போடுறதுக்குக்கூடச் சீவனில் லாமத் தண்ணிதண்ணின்னு மொனங்கியிருக்கான். மந்தையிலருந்து அன்னச் சாணியக் கொண்டுவந்து செரட்டையில கரச்சு மூங்கிலுக் கொட்டாம்பட்டி வச்சு வாயிலயே ஊத்தியிருக்காக.''

''இவனுக்கும் சித்தா நாய்க்கருக்கும் முன்பக உண்டு. இந்தச் சாக்கில பழிதீத்துக்கிட்டாரு.''

''இவனத் தூக்கீட்டுப் போயி ஊருக்குக் கெழக்க சொடலமாடன் கோயிலுக்கு முன்னால கெடத்தீட்டு வந்துட்டாக.''

''சாகலயே.''

''அர உசிரு. இவனோட ஆளுக தேடி அலஞ்சிருக்காக. அதுல ஒருத்தனுக்கு இவனோட குட்டுநெட்டெல்லாம் தெரியும். அந்தச் சந்தேகத்துல நடுவப்பட்டிப் பக்கம் வந்து தேடீருக்கான். இருட்டீருச்சு. கோயிலோரம் மொனக்கத்த அருவங் கேட்டுப் போயிப் பாத்தா இவன் மல்லாக்கக் கெடக்கான். இந்தக் கோலத்துல

ஆரு மூஞ்சியிலயும் முழிக்க மாட்டென். எந் தலைய வெட்டித் தூக்கீட்டுப் போன்னு அந்த நெலமையிலயும் அடம்புடிச்சிருக்கான்.''

''வீரத்துக்கொண்ணும் கொறச்சலில்ல.''

''ஒருவழியா அவனச் சரிப்படுத்தித் தவிப்பாறித்தவிப்பாறித் தூக்கீட்டுப் போயி வீட்ல போட்ருக்காக. இவனுக்கு மகன் ஒருத்தன் உண்டு. வெடிப்பான எளவட்டம். வெக்கத்த வுட்டு நடந்த கதையெல்லாம் மகங்கிட்ட ஒப்பிச்சிட்டான். பெறகென்ன கூழாப்போன கால வச்சுக்கிட்டு எந்திரிச்சு நடமாடுற தெங்க. மூணு நாளைக்கு அழுகிப்போயிக் கெடந்தான். நாலாம் நாளு உசிரு போயிருச்சு.''

''இம்புட்டு அநியாயம் நடந்துருக்கா. இவன் என்னதான் தப்புச் செஞ்சிருக் கட்டுமே. சித்தா நாய்க்கரு பண்ணுனத நெனச்சாக் கோவங்கோவமா வருது. சும்மா வுடப்புடாது சித்தப்பா. ஒத்தக் கால மட்டும் ஒடிக்கணும்.''

''சிக்காமயா போயிருவாக. அண்ணைக்கு வச்சுக்கிருவொம்.''

ஆளாளுக்குச் சித்தா நாய்க்கரைத் தேட ஆரம்பித்தார்கள். துப்பு வைத்துப் பார்த்தார்கள். எதிலும் அகப்படவில்லை. பிறகும் சளைக்காமல் தேடினார்கள்.

அன்றைக்குப் பொழுதடையத் திரும்பிவந்த மம்பட்டி பதட்டத்தில் பட படத்தான்.

''நடுவப்பட்டி சொடலமாடன் கோயிலுக்கு முன்னால சித்தா நாய்க்கரு முண்டமாக் கெடக்காரு. தலையக் காணுமேன்னு தேடிப்பாத்தென். வடக்க தூண்டி மாடசாமி பலிபீடத்துத் தூண்டியில பனங்காயாத் தொங்குது. எனக் குன்னாச் சதுரமெல்லாம் ஆடிப்போச்சு.''

கருத்தையனால் நம்ப முடியவில்லை. நாய்க்கர் எப்பேர்ப்பட்ட கெட்டிக் காரர். அவரைச் சாய்க்க ரெம்பச் சுளிவும் துணிவும் வேணும்.

''தொங்கு வுழுகாமத் தீட்டீட்டானா. அவ்வளவு பெரிய கைகாரன் ஆருன்னு தெரியலயே.''

துப்பனால் திகைப்பை விழுங்க முடியவில்லை.

''ஒண்ணும் புடிபடலயே. ஆச்சரியமாருக்கு.''

தீர விசாரித்ததில் விசயம் வெளியே வந்துவிட்டது. துப்பனுக்குத் தெரியாத சங்கதியா. அப்பன் கிடந்த கோலம் மகன் மனசில் அடங்காத வெறியைக் கிளப்பி விட்டிருக்கிறது. அப்படியென்ன பிழைப்பு என்று அரிவாளைத் தூக்கிவிட்டான். அப்பனுக்குச் சேக்காளிகளைப் பிடித்து சித்தா நாய்க்கரை எப்படியோ அடை யாளம் கண்டுகொண்டான். அதிலிருந்து சோறுதண்ணீரை மறந்து அவரைக் குறி வைத்து அலைந்திருக்கிறான். அலைச்சல் வீண்போகவில்லை. நாய்க்கர் தனியாக நடுவப்பட்டிக்குப் போவதைக் கவனித்துவிட்டான். முந்திப் போய் சுடலைமாடன் கோயிலுக்குள் ஒளிந்திருந்து வெட்டிச் சாய்த்துத் தலையைத் தூண்டியில் குத்தித் தொங்க வைத்துவிட்டுக் கெலித்துவிட்டான்.

கருத்தையன் பெருமையாகச் சொன்னான்.

''அப்பன் கெடந்த எடத்துலயே அமச்சிருக்கான் பாரு அவன் கெட்டிக்காரன்.''

''கெட்டிக்காரன்னா ஒருவெதத்துலயா.''

''அப்பனக் கொன்னவனப் புள்ள வந்து அழிச்சிட்டான்... நாளைக்கு நமக்கு என்னமும் ஆச்சுன்னா நாதியில்லாம நாறிக் கெடக்க வேண்டியதுதான்.''

''வரவர ஓம் பேச்சே ஒருமாதிரியா இருக்குது கருத்தப்பாண்டி. என்னாச் சுய்யா. எதுக்குய்யா இப்படியெல்லாம் நெனப்பு ஓடுது.''

''நெனைக்காம இருக்க முடியலயே.''

''நமக்கில்லாற நாதியா.''

கருத்தையன் கொஞ்ச நேரம் யோசனையில் இருந்தான். ஏதோ மனசுக்குள் சொல்லித் தலையாட்டிக்கொண்டான். துப்பன் பேச்சை மாற்றினான்.

''கருத்தப்பாண்டி கம்பு வெளையாட்டே மறந்துரும் போலருக்கு. அப்பப்ப நெனவுபடுத்துய்யா.''

''எல்லாம் வெளையாடி முடிச்சாச்சு. இனியென்ன வேண்டிக் கெடக்குது.''

''செலா வரிசையும் செண்டிப்பும் இல்லாம சித்தப்பனுக்குக் காலு ரெம்ப நொண்டுது.''

''நொண்டுனா நொண்டட்டும். இனிமே மாப்பிளைக்கா இருக்கப் போற... சித்தப்பா செவனம்மாளப் பாக்கணும் போலருக்கு. கலிங்கலுக்குக் கெளம்புவமா. வீரம்மாளும் போனா அந்தப் புள்ள மொகத்துல களையும் போச்சு.''

''இண்ணைக்கு வேணாம்யா. மனசே சரியில்ல. இப்பக் கெளம்புனாலும் விடிஞ்சுதான் போயிச்சேருவொம். நாளைக்கும் வுட்ருவொம். நான் ஒரு நட கரடிமலைக்குப் போயி இல்லாற சாமாங்கள வாங்கீட்டு வந்துறென். நாளக் கழிச்சுக் கண்டிப்பாப் போவொம். நேரமிருக்கவே போயிறலாம். நானும் அந்தப் புள்ளையப் பாக்கணும். போன தடவையே மூக்கம்மா மேலுக்குச் சொகமில்லாம ருந்தா. அவளவும் பாத்துப் பேசணும். தூங்கன் ரெம்பத் தவங்கீட்டான். படுத்தா எந்திரிச்சுக்கிற மாட்டான்... தடுதல சொல்றனேன்னு சித்தப்பன்மேல கோவமா.''

''நீ சொன்னபடிதான கேக்க வேண்டியிருக்கு.''

''சித்தப்பன் நல்லதுக்குத்தான் சொல்லுவன்யா.''

மறுநாள் துப்பன் கரடிமலைக்குப் போய்த் திரும்ப ராத்திரியாகிவிட்டது. வந்து பார்த்தால் கருத்தையனைக் காணவில்லை. அவனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. மம்பட்டியைப் பிடித்துக் குதறினான்.

''கருத்தப்பாண்டிய எங்கடா.''

மம்பட்டி விழுங்கிவிழுங்கிச் சொன்னான்.

''தங்கச்சியப் பாத்துட்டு வாறன்னு கலிங்கலுக்குப் போயாச்சு.''

''ஒத்தியிலயா.''

''கூட வாறன்னு எவ்வளவோ சொல்லிப்பாத்தென் கேக்கல.''

''அவன் இருக்கிற எடத்துலதானடா நம்ம இருக்கணும். அவனத் தனியா வுட்டுட்டு இங்க என்ன மயித்தப் புடுங்குறீக.''

''அந்தண்ணன் கோணம் ஒனக்குத் தெரியாறதில்ல. அதுக்கு மேல பேசுனாக் கோவம் வந்துரும். அடிதான் வாங்கிக் கெட்டணும்.''

''எப்பப் போனான்.'

''மதியத்துக்கு மேல.''

''எப்ப வாறன்னு சொன்னான்.''

''ராத்திரிக்கு.''

''ஆளக் காணுமே.''

''எப்படியும் ஆளு வந்துரும். பொறுத்துப் பாப்பொம்.''

''நம்ம கலிங்கலுக்குப் போறதுக்கும் நேரமில்ல. நம்ம அங்க போக அதுக்குள்ள அவன் இங்க வர அலஞ்ச பெழப்பாப் போயிரும். இப்ப என்ன செய்றதுன்னு தெரியலயே... என்னய்யா கருத்தப்பாண்டி இப்படிப் பண்ணீட்ட. நாளைக்குப் போவம்னு படிச்சுப்படிச்சுச் சொன்னனே. கேக்காமப் போயிட்டயே.''

கத்தியும் காடையும் வாயே திறக்கவில்லை. துப்பன் தலையில் கைவைத்து உட்கார்ந்துவிட்டான். மம்பட்டி தைரியம் சொன்னான்.

''நீயே பதறுனா எப்படிண்ணன்.''

''ஒருநாளும் தனியாப் போனதில்லயே. அதனாலதான் கெதக்கலாருக்கு.''

ராத்திரி முழுக்க கொட்டக்கொட்ட முழித்துக்கொண்டு உட்கார்ந்திருந் தார்கள். யாரும் சாப்பிடவில்லை. துப்பன் விடியும்வரை புலம்பிக்கொண்டிருந் தான். கருத்தையன் வரவில்லை.

வெள்ளங்காட்டி துப்பன் விழுந்தடித்துக் கலிங்கலுக்கு ஓடினான். ராத்திரியே புறப்பட்டுப் போய்விட்டதாகச் சொன்னார்கள். ஏதேதோ சொல்லிச் சமாளித்து விட்டு வந்தான்.

ஒரு நாளாயிற்று. ரெண்டு நாளாயிற்று. பத்து நாளும் தாண்டிவிட்டது. எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. திசை தப்பிய மாடுகளைப் போல் துப்பனும் கூட்டாளிகளும் தவித்துத் திரிந்தார்கள். தேடாத இடமில்லை. பார்க்காத குறி யில்லை. கருத்தையன் இல்லாமல் ஒண்ணுகூடி என்ன செய்ய.

## 6. கருப்புக் கனா

''வுட மாட்டென் வுட மாட்டென்.''

வடக்குத் தெருச் செவனாண்டி மகள் சின்னக்குருவு நடுச்சாமத்தில் எழுந்து ஊரெழும்ப அலறினாள். மூணு ராத்திரி இந்தக் கதை நடந்தது. அவள் மிரண்டு மிரண்டு முழிப்பதைப் பார்த்து முடிவுக்கு வந்தார்கள்.

''இது கருப்புக் கோளாறுதான்.''

''சந்தேகமே இல்ல. நாந்தான் நேத்தே சொன்னனே.''

''எந்தக் கழுத எறங்கீருக்கோ. எங்க போனாளோ.''

''அடுத்த வீட்டுக்குப் போயி இருந்து வாழ வேண்டிய பொண்ணாச்சே.''

''சொணங்காம நாளைக்கே போயிக் கோடாங்கியக் கூட்டீட்டு வந்துருங்க.''

''உடுக்குக்குத்தான் சொன்னபடி கேக்கும். திருநீத்துக்கெல்லாம் கட்டுப் படாது.''

செவனாண்டி விடியாமல் கிளம்பிப் போய் பழையாவரம் ஏகாளியைக் கூட்டிவந்தான். சாலக்கரையான் கோடாங்கியில் கைகண்டவன். எப்பேர்ப் பட்ட பேயையும் விரட்டிவிடுவான். ஏழு நாளானாலும் சளைக்க மாட்டான்.

அவன் சின்ன வயசிலிருந்தே வெளுப்பு வேலையைச் சுத்தமாக மறந்து விட்டான். முழுக்கமுழுக்கக் குறி கோடாங்கிதான் தொழில். செய்வினைக்

கோளாறுகளுக்குப் பரிகாரம் செய்வான். மையோட்டம் பார்ப்பான். பேய் விரட்டுவான். அவன் உடுக்கடிப்பதைப் பார்த்துக்கொண்டேயிருக்கலாம். தாளம் கேட்கச் சொகுசாக இருக்கும். கிண்கிண்ணென்று நரம்பு முறுக்கேறும். காதோரம் உடுக்கை வைத்து அதனுடன் பேசுவதுபோல் தட்டுவான். சங்கதிகளைச் சொல்லி வரும் போது இடையில் நிறுத்தி உடுக்கடிப்பான். தாளம் பறந்துபோய்த் தகவல்களைக் கொண்டுவந்து கொடுக்கும். அது கிடைத்த சந்தோசத்தில் தலை மெல்ல ஆடும்.

அவன் சாந்தமும் உடுக்கடிக்கும் குழைவும் சனங்களை மெய்மறக்கச் செய்யும். எல்லாரும் சாலக்கரையானாகிவிடுவார்கள். தன்னையறியாமல் அவன்மேல் பயமுண்டாகும். ராத்திரிக்கு அவன்தான் ராசா.

அவன் வெளியூருக்குச் சாந்திகழிக்கவும் வேறு காரியங்களுக்கும் போவான். உள்ளூர்க் களவு சோலிக்குக் குறி சொல்ல மாட்டான். வீணாகப் பகை வந்து சேரும். எவ்வளவு பணங்கொடுத்தாலும் அடுத்தவரைக் கெடுப்பதற்குச் செய்வினை செய்ய மாட்டான்.

செவனாண்டி வீட்டில் சனங்கள் பிதுங்கிக்கொண்டிருந்தார்கள். சாலக்கரை யான் உடுக்கில் நீர் தெளித்துச் சுதியேற்றிக் கணீரென்று தாளமடித்து மலையாள பகவதியிலிருந்து பழையாவரம் நொண்டி மாடன்வரை வருத்திக் கேட்டதில் பேய்க்கோளாறு உறுதியாயிற்று. சனங்களுக்கு முன்னால் மண்டியிட்டுக் கையூன்றி மிடுக்காக உட்கார்ந்திருந்த குருவு நறநறவென்று பல்லைக் கடித்து முழிபிதுங்கும் பார்வையில் கோடாங்கியை முறைத்துக்கொண்டிருந்தாள். உடுக்கடிக்குத் தோதாகக் கழுத்தில் முடி துவள கோடாங்கி அவ்வளவு கோவத்தையும் முழியில் இறக்கி நாக்கு நீட்டி ஒரு அரட்டுப் போட்டான். சனங்கள் வெலவெலத்துச் சுவரில் ஒண்டினார்கள். பிறகும் கை வலிக்க உடுக்கடித்து அவள் தலைமுடியைப் பிடித்து முட்டுப்போட்டான்.

அவள் வாய் திறக்கவில்லை. ஒருவரையொருவர் அரட்டியும் மிரட்டியும் ராத்திரி கழிந்தது.

மறுநாள் பகல் முழுக்க கோடாங்கி மட உறக்கம் போட்டுத் தயார்படுத்திக் கொண்டான். நானாச்சு நீயாச்சு என்ற வைராக்கியத்தில் உடுக்கு அரட்டியது. ஓயாத அடியில் குருவுக்குத் தலை லேசாக ஆட்டங்கொடுத்தது. விளக்கு வெளிச் சத்தில் கோடாங்கியின் முகம் சுதாரிப்பில் மின்னியது. திமிறும் காளையின் திமிலைப் பிடித்துச் சவாரி வைத்துவிட்ட சந்தோசம். மூக்கணாங்கயிறு கைக்கு வந்துவிட்டால் போதும். வசக்கி அடக்கிவிடலாம். விரட்டியடித்த உடுக்கு தளுக் கான தாளத்துக்கு வந்தது. அதுக்கேற்றபடி குருவு தலையாட கொண்டை பிரிந்து விழுதாக விரிந்து அசைந்தாடியது. சனங்கள் பெருமூச்சு விட்டார்கள்.

கோடாங்கியும் லேசாக ஆடிக்கொண்டே பாட ஆரம்பித்தான்.

''ஒனக்கு
என்னஎன்ன வேணுஞ்சாமி - நீ
எறங்கிவந்து சொல்லுசாமி - எஞ் சாமி
சொல்லுசாமி.
ஏழுகடல் தாண்டிநானும் - ஒனக்கு
எடுத்துவந்து குடுத்துருவென் - எஞ் சாமி
குடுத்துருவென்.''

குருவு எதுப்பாட்டுப் பாடினாள்.

''எனக்கு
வேலுக்கம்பு ஒண்ணுவேணும் - நல்ல
வீச்சருவா கூடவேணும் - கோடாங்கி
கூடவேணும்.
சூரிக்கத்தி ஒண்ணுவேணும் - வளஞ்சு
சுருண்டுருக்கும் வங்கிவேணும் - கோடாங்கி
வங்கிவேணும்.''

''வேறஎன்ன வேணுஞ்சாமி - அத
வெவரமாகச் சொல்லவேணும் - நீ
சொல்லவேணும்.
தலவாழ எலவிரிச்சு - ஒனக்குத்
தனித்தனியாப் படச்சிருவென் - எஞ் சாமி
படச்சிருவென்.''

''நயமான சாராயமும் - அதுக்கு
நாட்டுக்கோழிக் கறியும்வேணும் - கோடாங்கி
கறியும்வேணும்.''

''அப்படியா.''

''பதமாகத் தொட்டுக்கிற - எனக்கு
பண்ணிக்கறித் துண்டுவேணும் - கோடாங்கி
துண்டுவேணும்.''

''குடுத்துருவொம்.''

பாட்டு நின்று வேகமாகத் தொடுத்த தாளத்துக்குத் தலை வட்டம்போட்டுச் சுழன்றது. பாட்டும் ஆட்டமும் சனங்களைப் பயத்திலும் கிறங்க வைத்தது. வாசலுக்கு வெளியே இருந்தவர்கள் குசுகுசுத்தார்கள்.

''அஞ்ஞாடி ஆம்பளப் பேயில்ல புடிச்சிருக்கு.''

''லேசுக்குள்ள போகாதே.''

''ஆருன்னு தெரியலயே.''

''ஆம்பள மொகத்தப் பாக்கக்கூடக் கூச்சப்படுற புள்ள இந்த ஆட்டம் போடுறாளே. என்னமாப் பாட்டுப் படிக்கா.''

''உள்ளருக்கிற பேயாக்கும் ஆட்டிப்படைக்குது.''

கோடாங்கி தாளத்தை நிறுத்தாமல் தந்திரமாகக் கேட்டான்.

''இந்தக்
கன்னிமேல எறங்கிவந்த
கதையக்கொஞ்சம் - சொல்லவேணும் - எஞ் சாமி
சொல்லவேணும்.''

குருவு தலையை நாலு சுற்று ஆட விட்டுச் சொகமாகப் பாடினாள்.

''நடந்தகத சொல்லிவாறென் - நீங்க
நல்லவங்க கேக்கவேணும் - கோடாங்கி
கேக்கவேணும்.''

கோடாங்கிக்குச் சுதாரிப்புக் கூடியது.

''என்னகத நடந்ததுன்னு - இங்க
எல்லாருக்கும் சொல்லவேணும் - எஞ் சாமி
சொல்லவேணும்.''

சனங்கள் மூச்சுக்காட்டாமல் கவனித்துக்கொண்டிருந்தார்கள். குருவு ஆட்டத்தை நிறுத்தி ஏறிட்டுப் பார்த்தாள். முகத்தில் தனிக் களை. மறுபடியும் தலைமுடி ஊஞ்சலாட கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

''பச்சிகளும் பறக்காற - நல்ல
உச்சிவெயில் மத்தியானம் - கோடாங்கி
மத்தியானம்.
பாம்புகளும் சொகமாக - சுருண்டு
படுத்திருக்கும் வேளையில - கோடாங்கி
வேளையில''

''ஆமா
படுத்திருக்கும் வேளையில.''

''கன்னிகூடக் கழியாற - அழகா
சின்னஞ்சிறு பொண்ணுஒண்ணு - கோடாங்கி
பொண்ணுஒண்ணு
கம்மாக்கர ஓரத்துல - ரெம்பக்
கணக்காக நடந்துவாறா - தளுக்கா
நடந்துவாறா.''

''தளுக்காக நடந்துவாறா.''

''சிலுசிலுன்னு சிரிச்சுக்கிட்டு - அவ
சிணுக்குநட நடந்துக்கிட்டு - கோடாங்கி
நடந்துக்கிட்டு
வெளாமரக் கெணத்தோரம் - அவ
வெறகுகளும் தேடிவாறா - கோடாங்கி
தேடிவாறா.''

''வெறகுகளும் தேடிவாறா.''

''கள்ளிமுள்ளுக் காட்டுக்குள்ள - காஞ்ச
சுள்ளிகள ஒடிச்சுவச்சு - கோடாங்கி
ஒடிச்சுவச்சு
அள்ளியள்ளி அடுக்கயில - நான்
அவமேல கண்ணுவச்சென் - கோடாங்கி
கண்ணுவச்சென்.''

''ஆகா.''

''உச்சாணிக் கொப்புலதான் - நான்
உக்காந்து ஒளிஞ்சிருந்தென் - கோடாங்கி
ஒளிஞ்சிருந்தென்.
ஒசரத்துல வட்டமிட்டு - அவள
ஓடிவந்து புடிச்சுக்கிட்டென் - கோடாங்கி
புடிச்சுக்கிட்டென்.''

''நீயும்
ஓடிவந்து புடிச்சுக்கிட்ட.''

குருவு மட்டியைக் கடித்து ஒரு அரட்டுப்போட்டாள்.

''அடேய் கோடாங்கி நான் கேட்டது என்னாச்சுடா. குடுக்கப்போறயா ஒங் கொடல உருவி மாலபோடவா.''

''சாமி நீ வெளாமரத்துல குடியேறுனது எப்படின்னு சொல்லு. கேட்ட தெல்லாங்குடுப்பென்.''

''சொன்னாக் குடுப்பயா.''

''சத்தியமாக் குடுப்பென்.''

பெண்கள் உதட்டைப் பிதுக்கினார்கள்.

''ஆருன்னு தெரியலயே.''

கோடாங்கியின் உடுக்குத் துணையில் குருவு கொஞ்சங்கொஞ்சமாக முடிச்சை அவுத்தாள்.

''நட்டநடுச் சாமத்துல - சுத்தி
நாலுபக்கம் கும்மிருட்டு - கோடாங்கி
கும்மிருட்டு
கோணிகொளம் கரையேறி - தனியா
நான்நடந்து போகயில - கோடாங்கி
போகயில.''

''ஆமா
நீநடந்து போகயில.''

''கீழமட ஓரத்துல - ஒளிஞ்சு
கெடந்தவங்க ரெண்டுபேரு - கோடாங்கி
ரெண்டுபேரு
மேலஏறிக் கிட்டவந்து - நின்னு
மெல்லமெல்ல வழிமறிச்சான் - கோடாங்கி
வழிமறிச்சான்.''

''வழிமறிச்ச காரணத்த - நீயும்
தெளிவாகச் சொல்லவேணும் - எஞ் சாமி
சொல்லவேணும்.''

''வம்புபண்ண வாறயான்னு - நான்
கம்பெடுத்து ஓங்குனண்டா - கோடாங்கி
ஓங்குனண்டா.
காப்பாத்தச் சொல்லியவன் - என்
காலவந்து புடிச்சுக்கிட்டான் - கோடாங்கி
புடிச்சுக்கிட்டான்.''

''ஆபத்துக்குப் பாவமில்ல - எஞ் சாமி
பாவமில்ல.''

''அண்ணனுக்குத் தம்பிகளா - நாங்க
ஆதரவா இருந்துருவொம் - கோடாங்கி
இருந்துருவொம்.
முன்பகைய மறந்துருவொம் - நம்ம
மூணுபேரும் சேந்துருவொம் - கோடாங்கி
சேந்துருவொம்.''

''அப்படியா.''

''ஊருக்காக ஒழச்சிருவொம் - நம்ம
ஒத்துமையாப் பெழச்சிருவொம் - கோடாங்கி
பெழச்சிருவொம்.
ராசியாக வாறமின்னு - நயந்து
பேசிஎன்ன மசங்கவச்சான் - கோடாங்கி
மசங்கவச்சான்.''

''போடய்யா போடு.''

''உத்துஉத்துப் பாக்கிறண்டா - அவங்க
உள்ளூரு மூஞ்சியடா - கோடாங்கி
மூஞ்சியடா
புத்திகொஞ்சம் தெளிஞ்சிருச்சு - புதுசா
பொறுப்புகூட வந்துருச்சு - கோடாங்கி
வந்துருச்சு.''

''வந்துருச்சா.''

''ஒத்துமையா இருந்துக்கிட்டா - சொந்த
ஊருக்குத்தான் நல்லதுன்னு - கோடாங்கி
நல்லதுன்னு
சந்தேகம் தீந்துருச்சு - எனக்கு
சந்தோசம் சேந்துருச்சு - கோடாங்கி
சேந்துருச்சு.''

''மேலஎன்ன நடந்ததுன்னு - நீ
வெவரமாகச் சொல்லவேணும் - எஞ் சாமி
சொல்லவேணும்.''

வீட்டுக்குள் பேச்சருவமில்லை. குருவு கொஞ்சநேரம் சுற்றிலும் நோட்டம் விட்டாள். அவள் கண்களைச் சந்திக்க முடியாமல் எல்லாரும் தலைகவுந்தார்கள். கதை தொடர்ந்தது.

''அடேய் கேக்கயாடா.''

''கேட்டுக்கிட்டுத்தான் இருக்கென் சாமி.''

''கம்மாய்க்கு உள்ள போயி - நாங்க
காலாற உக்காந்து - கோடாங்கி
உக்காந்து
கருவேல மரத்தோரம் - ஊருக்
கதபேசி முடிக்கயில - கோடாங்கி
முடிக்கயில.''

''பேசி முடிக்கயில.''

''பழஞ்சேத்து ஊறவச்சு - நல்ல
பக்குவமாவடிச்சதுன்னு - கோடாங்கி
வடிச்சதுன்னு
மாராயம் பேசிக்கிட்டு - ஒருத்தன்
சாராயம் ஊத்திவச்சான் - கோடாங்கி
ஊத்திவச்சான்.''

''அடடா.''

''வக்கணையாக் கோழிக்கறி - ஒருத்தன்
வறட்டிவந்து கூடவச்சான் - கோடாங்கி
கூடவச்சான்.
நாக்குருசி கேக்கயில - நானும்
மூக்குமுட்டப் போட்டுக்கிட்டென் - கோடாங்கி
போட்டுக்கிட்டென்.''

''ஆகா.''

''நெலமையுந்தான் தடுமாறி - எனக்கு
நெனவுதப்பிப் போயிருச்சு - கோடாங்கி
போயிருச்சு.
கண்ணுரெண்டும் போதையில - கீழ
கவுந்துக்கிட்டுப் போகுதடா - கோடாங்கி
போகுதடா.''

''போகுதா.''

''எப்படியோ முழிதொறந்து - நானும்
ஏறிட்டுத்தான் பாக்கயில - கோடாங்கி
பாக்கயில
தந்தரமா ரெண்டுபேரும் - சுளிவா
தப்பிச்சுத்தான் ஓடிப்புட்டான் - கோடாங்கி
ஓடிப்புட்டான்.''

''வஞ்சகமா ஓடிப்போன - ரெண்டு
மகராசன் ஆருசாமி - எஞ் சாமி
ஆருசாமி.''

''பேரு சொல்ல மாட்டனடா - சொன்னா
ஊரு ரெண்டாப் போயிருண்டா - கோடாங்கி
போயிருண்டா.
ஊருகெட்டுப் போனதுன்னா - நல்ல
ஒறவுகெட்டுப் போயிருண்டா - கோடாங்கி
போயிருண்டா.''

''அப்படின்னாச் சொல்லவேணாம் - எஞ்சாமி
சொல்லவேணாம்.''

''ஏய் கோடாங்கி நான் கேட்டது வரலன்னா ஒன்னயச் சூட்டாங்கறி போட்ருவென்.''

''எல்லாம் வந்துக்கிட்டே இருக்கு சாமி. அதுக்குப் பெறகு நடந்ததச் சொல்லலயே.''

குருவு தலை பம்பரமாகச் சுற்றியது.

''அடையாளம் தெரியாற - மொரட்டு
ஆளுகதான் நாலுபேரு - கோடாங்கி
நாலுபேரு
அருவாளும் கம்புமாக - பெரிசா
அருமுறுக்கி நிக்கிறானே - புதுசா
நிக்கிறானே.''

''அய்யோ.''

''ஆருநீங்க சொல்லுடான்னு - அவன
அரட்டிநானும் கேட்டதுக்கு - கோடாங்கி
கேட்டதுக்கு
ஒன்னோட அப்பங்கன்னு - சொல்லி
ஒருத்தன்வந்து கொக்கரிச்சான் - கோடாங்கி
கொக்கரிச்சான்.''

''வென வந்துருச்சே.''

''எனக்குவந்த கோவத்துல - ஒடனே
எந்திரிச்சென் கம்பெடுத்து - கோடாங்கி
கம்பெடுத்து
தோளவந்து புடிச்சுக்கிட்டான் - ஒருத்தன்
கீழஎன்ன அமுக்கிக்கிட்டான் - கோடாங்கி
அமுக்கிக்கிட்டான்.''

''குடிமுழுகிப் போயிருச்சே - பெரிய
கொடுமவந்து சேந்துருச்சே - எஞ் சாமி
சேந்துருச்சே.''

குருவு அலறிக்கொண்டு எழும்பி மண்டியிட்டுக் கோடாங்கியின் உடுக்கைப் பிடித்துத் தள்ளினாள். அவன் அவளைப் பிடித்து அமுக்கிப் பழையபடி உட்கார வைத்தான். ரெண்டு பேர் முடியும் ஓய்ந்து தவிப்பாறியது. அவள் மூசுமூசென்று இரைந்துவிட்டுக் கோவத்தில் மிச்சக் கதையைச் சொன்னாள்.

''எல்லாரும் கூடிக்கிட்டு - என்ன
ஏகமாக வெட்டுனாங்க - கோடாங்கி
வெட்டுனாங்க.
கழுத்தரெண்டாத் தறிச்சாங்க - பாவி
காலுகைய முறிச்சாங்க - கோடாங்கி
முறிச்சாங்க.''

''அடப்பாவிகளா.''

''வெலாவுல எலும்புகள - வெட்டி
வெறகுபோல ஒடிச்சாங்க -கோடாங்கி
ஒடிச்சாங்க
தறிச்சதெல்லாம் கூட்டியள்ளி - பெரிய
சாக்குலதான் அடச்சாங்க - கோடாங்கி
அடச்சாங்க.''

''தாயே மகமாயி.''

''மூடையாகக் கெட்டிவச்சு - என்ன
மொறபோட்டுச் சொமந்துபோயி - கோடாங்கி
சொமந்துபோயி
வெளாமரக் கெணத்துக்குள்ள - தூக்கி
வீசிஅத எறிஞ்சாங்க - கோடாங்கி
எறிஞ்சாங்க.''

உடுக்கு தடுமாறியது.

''மோசம் போச்சே.''

''கல்லெடுத்து ரெண்டுபேரு - முங்கி
உள்ளபோயித் தரையிலதான் - கோடாங்கி
தரையிலதான்
பாரமேத்தி எழும்பாம - அமுக்கி
பத்தரமா வச்சாங்க - கோடாங்கி
வச்சாங்க.''

''என்னத்தச் சொல்லுவென்.''

''சொகமாகக் குளிச்சாங்க - ஈரத்
துணிகளத்தான் தொவச்சாங்க - கோடாங்கி
தொவச்சாங்க
வேலைகள முடிச்சுக்கிட்டு - அவங்க
விருவிருன்னு போனாங்க - கோடாங்கி
போனாங்க.''

உள்ளேயிருந்த பெண்களால் அழுகையை அடக்க முடியவில்லை. உடைந்து புலம்புவதற்காக வெளியே வந்துவிட்டார்கள். ஆண்கள் மட்டும் மனசைத் திடப் படுத்திக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். எப்படியும் பேயை விரட்டியாகணும். இன்னும் பேர் சொல்லவில்லையே.

குருவு ஓடித் தவித்த மாதிரி இளைத்துக்கொண்டிருந்தாள். கோடாங்கி உடுக்கடியை நிறுத்தவில்லை. தயங்கித்தயங்கிக் கேட்டான்.

''ஒன்னோட
பூரிவமும் தெரியவேணும் - எஞ் சாமி
தெரியவேணும்.''

குருவு தலையில் சூறாவாளி சுழித்தது. குரலெடுத்துப் பாடினாள்.

''காடுகர மேடுகள - நான்
காலால அளந்தவண்டா - கோடாங்கி
அளந்தவண்டா
வீடுகள மறந்துவந்து - வெட்ட
வீதியில இருந்தவண்டா - கோடாங்கி
இருந்தவண்டா.''

''ஊரு பேரு சொல்லவேணும் - எஞ்சாமி
சொல்லவேணும்.''

சனங்களின் முகம் இறுகிச் சிறுத்துக்கொண்டே வந்தது. குருவு பெருமை யாகப் பேரைச் சொல்லிக் கதையை முடித்தாள்.

''சனங்களுக்குத் தெரிஞ்சவண்டா - பெரிய
சண்டைகள அறிஞ்சவண்டா - கோடாங்கி
அறிஞ்சவண்டா.
கலிங்கலிலே பெறந்தவண்டா - எதுக்கும்
கலங்காற கருத்தையண்டா - கோடாங்கி
கருத்தையண்டா.''

அவள் முகத்தில் அப்படியொரு வீரம். அத்தனை பேர் கண்களிலும் மாலை மாலையாகக் கண்ணீர் வடிந்தது. கெம்பிரியமாகத் தலைநிமிர்ந்திருந்த சின்னக் குருவை இல்லை கருத்தையனைக் கோடாங்கி கையெடுத்துக் கும்பிட்டான்.

''நீங்களா சாமி.''

அவனுக்குச் சுதி குறைந்து பாடும் சுதாரிப்பு போய்விட்டது. விக்கலும் முக்கலுமாக அந்த இடம் இழவு வீடாகிப்போனது.

ஆட்டம் அடங்கச் சாமத்துக்கு மேலாகிவிட்டது. கருத்தையன் கேட்ட பண்டமெல்லாம் சம்பாரித்துக் கொடுத்துச் சரிக்கட்டுவதற்குள் பெரும்பாடாகப் போயிற்று. கன்னியை விட்டு விலகிப் போவதாகக் கோடாங்கி சத்தியம் வாங்கினான். குருவுக்குத் தலைமுடியில் முடிச்சுப் போட்டுத் தடை கட்டினான். அவள் தலையில் கல்லைச் சுமந்து அலறிக்கொண்டு ஓடிச் சந்தியில் போடும்போது தலைக்கோழி கூவிவிட்டது. கோடாங்கி உருப்போட்டுப் பச்சைப் பானையில் கருத்தையனைப் பிடித்துக்கொண்டு போய்விட்டான்.

மறுநாள் வெள்ளங்காட்டி கிணற்றைச் சுற்றி அழுகையும் கண்ணீருமாக ஊரே கூடியிருந்தது. அதுக்கு முந்தியே துப்பனும் கூட்டாளிகளும் வந்துவிட்டார்கள். ராத்திரி கட்டைப் புளியமரத்தோரம் தங்கியிருந்தார்கள். சின்னக் குருவுக்குப் பேய்பிடித்ததிலிருந்து கோடாங்கி வந்து விரட்டியதுவரை அவர்களுக்கு மருதன் தான் அப்பப்பத் தகவல் சொன்னான்.

கிணற்றுக்குள் தண்ணீர் அலுங்காமல் கிடந்தது. ஆளாளுக்குச் சந்தேகத்தைக் கிளப்பினார்கள்.

''அந்தப் புள்ள ராத்திரிச் சொன்னது நெசமாருக்குமா.''

''அதானப்பா. அப்படியெல்லாமா நடந்துருக்கும்.''

''பெரியபெரிய சண்டீருகளெல்லாம் அடக்கிவெச்சவன் எப்படிச் சிக்குவான்.''

''சாராயத்தக் குடுத்துக் கவுத்தீட்டான்.''

''எறங்கிப் பாத்துட்டாச் சந்தேகந்தீந்துரும்.''

''உள்ள எறங்குங்கப்பா ரெண்டு பேரு.''

கைக்காடையும் மம்பட்டியும் கிணற்றுக்குள் குதித்து முங்கினார்கள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நடுத்தண்ணீரில் ஒராள் உயரத்துக்குச் சாக்கு மூடை எவ்விக் குதித்தது. சனங்கள் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டார்கள்.

''பாவி மக சொன்னது போலயே இருக்கே.''

''நாசமாப் போக. இப்படிப் பொட்டணம் கெட்டீட்டானே.''

கண்ணுக்கு முன்னால நடந்ததுபோல ஒண்ணொண்ணா புட்டுப்புட்டு வச்சிட்டாளே. அதெப்படின்னு நெனச்சா ஆச்சரியமாருக்கு.

அலையடிக்கும் நீரில் அலைமோதி மிதக்கும் மூடையை எடுத்துப் பிரித்து அங்கம்அங்கமாக ஒட்டவைத்துப் பார்த்தார்கள். கருத்தையன் கிடைக்கவில்லை. தலை மட்டும் அடையாளம் சொன்னது. துப்பன் மூஞ்சியில் அறைந்துகொண்டான்.

''கொல்லப்புடாது கோரப்படுத்தப்புடாதுன்னு எங்க கையக் கெட்டிப் போட்டுருந்த ஒன்னயக் கொன்னுபோட்டுட்டாகளே. கடசி நேரத்துல ஒம் மொகத்தப் பாக்கக் குடுத்துவைக்கலயே கருத்தப்பாண்டி.''

வீட்டில் ''கருத்தண்ணேன் கருத்தண்ணேன்'' என்று கதறிக்கொண்டிருந்த செவனம்மாளை மூக்கம்மா பிடித்துவைத்திருந்தாள். அவளாலும் மகனைப்

பார்க்க முடியவில்லை. கஸ்டப்பட்டு வந்திருந்த ஆண்டியும் தூங்கனும் என்னென்னமோ அழுகையால் பேசிக்கொண்டார்கள்.

கருப்பி வம்பாடுபட்டுக் கம்மாக் கரையேறும்போது கருத்தையன் மயானத்தில் எரிந்துகொண்டிருந்தான். கரையில் உட்கார்ந்து கண்டபடி புலம்பினாள்.

''பாவி மனுசா. பொண்ணக் குடுத்தம்னுதான் பேரு. ஓம் மொகத்தச் சரியாப் பாத்துருப்பனா. ஆகமா நாலு வார்த்த பேசியிருப்பனா. ஒனக்கேத்த மகராசி ஒன்னயத் தவிக்க வுட்டுட்டுப் போனா. நீ ஊரையே தவிக்க வுட்டுட்டுப் போறயே. பேரு சொல்றதுக்கு ஒரு புள்ளையில்லையே...''

கருத்தையன் தெய்வமாகிவிட்டான். விளாமரக் கிணறு கருத்தையன் கிணறாகிவிட்டது. மரத்தடியில் கல்நட்டி விளக்கேற்றிக் கும்பிட்டார்கள். எண்ணெய்க் காப்பு மினுக்கத்தில் இப்போதுகூட அவனைப் பார்க்கப் பயமாக இருந்தது. நல்ல நாளன்று இருளப்பசாமி கோயிலில் விளக்கெரியும்போது அவன் கல்லிலும் வெளிச்சம் தெரியும். கிணற்றோரம் திடுக்கிட்டுப் பதறியவர்கள் எந்தச் சாதிக்காரராக இருந்தாலும் செவனம்மாளிடம் வருவார்கள். அவள் தலைக்குக் குளித்து அண்ணன் குடியிருக்கும் கிணற்றுத் திசையை நோக்கிக் கும்பிட்டு திருநீறு கொடுப்பாள். பயம்பத்திரமாக வாங்கிக்கொண்டு போவார்கள். சரியாகிவிடும்.

கருத்தையன் இல்லாமல் துப்பனும் கூட்டாளிகளும் அலைமோதினார்கள். காட்டில் தங்க முடியவில்லை. கொலை செய்தவர்களையும் காட்டிக்கொடுத்தவர்களையும் எவ்வளவோ பிரயாசைப்பட்டும் கண்டுபிடிக்க முடியவில்லை. சல்லிமாடனுக்குத் தெரியாமல் நடந்திருக்காது. வெறும் சந்தேகத்தில் அவனைத் தொட முடியாது. தீர விசாரிக்கணும். துப்பனுக்கு வெறியடங்கவில்லை.

''ஒருநா ஒருபொழுதாச்சும் தெரியத்தான் போகுது. தாயோளி அண்ணைக்கு ஒருத்தனவாச்சும் போட்டுத் தள்ளீட்டுத்தான் இந்தக் கட்டையிலருந்து உசிரு பிரியும்.''

கைக்காடை குழறினான்.

''கையில கம்பு புடிக்க முடியல. நடுங்குது.''

''தலையப் பறிகுடுத்துட்டு நம்ம முண்டமாக் காட்ல திரிஞ்சு என்ன மயித்தப் புடுங்கப்போறொம்.''

மம்பட்டி சொன்னான்.

''அந்த நெனப்புத்தான் எனக்கும் ஓடுது.''

''அச்சாணியில்லாற வண்டி முச்சாணும் ஓடாது. சண்டீர்த்தனத்தக் கெட்டி வச்சிட்டு ஊருக்குப் போயி உண்டான தொழிலப் பாப்பொம்.''

ஒரு நல்ல நாளில் கருத்தையன் கிணற்றுக்குப் போய் தலைவாழை இலையில் கறிசோறு படைத்துக் கும்பிட்டுக் கனத்த மனசுடன் பிரிந்தார்கள். கைவசமிருந்த பணத்தை துப்பன் பிரித்துக் கொடுத்தான். கூடுவிட்டுக் கூடுபாய்ந்து மம்பட்டி மங்கிணிச் சாம்பானாகவும் கைக்காடை துக்குமுத்துப் பகடையாகவும் கத்தி முத்துக்குறி மூக்க வண்ணானாகவும் ஊர்போய்ச் சேர்ந்தார்கள். துப்பன் பழைய நொண்டியனாக நடமாடினான்.

## 7. ஊர்க் குடும்பு

கம்மாக் கரை விளிம்பில் பொழுது எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது. சோம்பிக் கிடந்த வெள்ளாமைகள் சுதாரித்து நிமிர்ந்தன. வெயில் முகம் கண்ட சொகத்தில் ஒரு பயல் கரைவழியே பாடிக்கொண்டு போனான்.

''கோழிகூவ எந்திரிச்சு நடக்கணும் - நடந்து
கூப்பங்கடச் சோளம் வாங்கி இடிக்கணும்
குடும்பத்துக்குக் குறுணிபோட்டு வடிக்கணும் - அத
கூழாக்கி மத்தியானம் குடிக்கணும்.''

பஞ்ச நேரத்தில் செஞ்சோளக் கஞ்சி குடித்து உயிர் பிழைத்த நினைவு போக வில்லை இன்னும். அதெப்படிப் போகும். தெளுவுகுக்கூட வழியில்லாமல் முழுப் பட்டினி கிடந்து மடிந்த உருப்படிகளுக்குக் கணக்கு உண்டுமா. அள்ளியெறிந்த அரைத் தவளைகளாகத் துள்ளித்துள்ளிச் செத்த சிறிசுகளின் பாதரவு சொல்ல முடியாது.

சனங்கள் பசி தாங்காமல் ஆடுமாடுபோல் செடிகொடிகளை மேய்ந்தார்கள். கிடைத்ததெல்லாம் கீரைதான் கிழங்குதான். உயிரைத் தாக்காட்டக் குப்பை மேனி நாயுருவி இலைகூடக் கீரையானது. புல்லரிசி கூழானது. அருகம்புல்லும் பசியை அமுக்கியது. மஞ்சணத்திக் காயையும் விட்டுவைக்கவில்லை. புளிய இலையையும் கருகிய பூவையும் உருவித் தின்றார்கள். அன்றாடம் வயிற்றுமுறை கழிந்தால் போதும்.

பஞ்சத்துக்குப் பிறகு ஊர் ஊராகவா இருந்தது. கண்டமானக்கிக் குதறிக் கிடந்தது. சவக்களை மாற ரெம்ப நாளானது. நல்லதுபெல்லதுக்குச் சந்தங்காட்ட ஊர்க் குடும்பன் இல்லை. உத்தண்டு போன பிறகு சகலத்துக்கும் தோதான மனுசன் கிடைக்கவில்லை. கிடைத்தாலும் ஊருக்கு ஒப்பணுமே. எல்லாரும் தவிப்பதைப் பார்த்து ஆண்டி சொன்னான்.

''அடே ஏண்டா காடேமேடேன்னு தேடுறீக. உத்தண்டு மகன் குட்டையன் பெய இருக்கானே. அவன நேமிக்கலாமில்ல.''

அதுஞ்சரிதான் என்று பட்டது. சிலருக்குத் தயக்கம்.

''அவன் சின்னப் பெயலாச்சே.''

''நீ பெரிய மனுசனாக்கும். அவனுக்கென்னடா கலியாணம்முடிக்கிற எள வட்டத்துக்கு. பெரியமனுசனும் சின்னமனுசனும் நம்ம வச்சுக்கிட்டதுதான்.''

''குட்டையனக் கூட்டீட்டு வாடா ஒருத்தன்.''

குட்டையன் வந்தான். மண்டையன் அவனைப் பார்த்து அரட்டுகிற மாதிரி சொன்னான்.

''ஆண்டிப் பெரிப்பன் சொல்லீட்டான். இனிமே நீதாண்டா ஊர்க் குடும்பன்.''

குட்டையனுக்குக் கூச்சம். தலையைக் குலுக்கினான்.

''நான் மாட்டேன்.''

''அட என்னப்பா ஒன்னயப் பொண்ணுக்கா இருக்கச் சொல்றாக.''

“எல்லாருக்கும் முன்னால சத்தம்போட்டுப் பேசணும். ஆளாளுக்கு வைவாக.”

“வீட்ல கஞ்சி கொஞ்சம் கொறச்சு வச்சிட்டா பீ வரக் கத்துறமில்ல. அதப் போலத்தான். எல்லாரும் வையவைய வைரக்கட்ட திட்டத்திட்டத் தேக்கங் கட்ட.”

“எதுக்கும் அஞ்ஞையிட்ட ஒருவார்த்த கேட்டுக்கிறென்.”

ஆண்டி அதுக்குப் பொறுப்பேற்றான்.

“அஞ்ஞையிட்ட நான் சொல்லிக்கிறென்.”

மண்டையன் தைரியம் சொன்னான்.

“நீ கவலப்படாத. நான் கூடமாட இருந்து எல்லாக் காரியத்தவும் கவனிச் சுக்கிறென்.”

அப்போதே குட்டையனுக்குப் பெரிய மனுசத் தோரணை வந்துவிட்டது. அப்பன் ஊர்க் குடும்பனாக இருந்த காலத்தில் நடந்துகொண்ட விதத்தை நினைக்க நினைக்க அவனுக்குள் புதுத் தெம்பு. ஒரு பிடி வளர்ந்துவிட்டான்.

ஆண்டி மண்டையனைப் பார்த்தான்.

“சரி ஊர்க் குடும்பனுக்கு ஆளுக் கெடச்சாச்சு. காலாடிக்கு ஒருத்தன் வேணுமே.”

“கண்டிப்பா வேணும். அதான் ஊருக்கு மருவாதி. நல்ல காரியங்களுக்குக் காலாடிதான முன்னால நிக்கணும்.”

“வேணும்வேணும்னு தலையாட்னாப் போதுமா.”

“பெறகென்ன செய்யச் சொல்ற.”

“ஒண்ணுஞ்செய்ய வேணாம். காலாடியா இருந்தாப் போதும்.”

“நானா... நான் எப்படி...”

“அது அப்படித்தான்.”

“பொண்டாட்டி புள்ளையப் பறிகுடுத்துட்டு வீடோ காடோன்னு அலை யிறவனுக்கெதுக்கு அதெல்லாம். காலாடி வீடுன்னா அசலூருலருந்து வாற சாமி கொண்டாடிக்குப் பாதங்கழுவி மஞ்சத் தண்ணி ஊத்துறதுக்கு ஒரு மனுசி வேணும். படி போடுறதுக்கு வீட்ல நாழித் தவசமாச்சும் இருக்கணும். ஏதுமத்த வெங்கம் பெயலப் போயி இருக்கச் சொல்றயே ஒனக்குக் கேலிதான.”

“பயித்தியாரத் தாயிளி. இதெல்லாம் எனக்குச் சொல்லித்தான் தெரியணு மாக்கும். காலாடியா இருன்னா இருக்க வேண்டியதுதான. அதில்லாம என்னென் னமோ பேசிக்கிட்டு. எல்லாம் நல்லபடியா நடக்கும். ஒன் வேலையப் பாத் துட்டுப் போ.”

மண்டையன் வாயை மூடிக்கொண்டு போய்விட்டான். இனியும் பேசினால் வசவைச் சுமக்க முடியாது. ஆண்டி மனசில் என்ன நினைத்திருக்கிறானோ. அவனிடம் யார் கேட்பது. நடக்கிறபடி நடக்கட்டும்.

ஆண்டிக்கு யோசனை. மண்டையனிடம் பெரிசாகச் சொல்லியாயிற்று. அவனுக்கு ஒரு மகராசியைத் தேடிப்பிடித்து வீட்டில் விளக்கேற்ற வைக்கணுமே. அது தொறட்டுப் பிடித்த விவகாரம்.

உத்தண்டு பெண்டாட்டி வெண்ணிமாலை துணையில்லாமல்தான் இருக் கிறாள். புருசனையும் பிள்ளைகளையும் வங்கொலையாகக் கொடுத்துவிட்டு

நிற்கிற மனுசியிடம் இந்தப் பேச்சை எப்படித் தூண்டுவது. அதிலும் சம்பந்த காரியாயிற்றே.

அவள் சொல்வது ஒருபுறமிருக்கட்டும். சின்னப் புண்ணியவாட்டி வேலாயிக் குடும்பச்சி என்ன பேசுவாளோ. பேரன் பேத்தி எடுத்துவிட்ட பிறகு கலியாணம் வேண்டிக்கிடக்கிறதாக்கும் என்று மூஞ்சியிலறைந்த மாதிரி கேட்டுவிட்டால் சங்கடம். பேசக்கூடிய பொம்பளைதான். அது மரியாதைக் குறைச்சல்.

குட்டையன் வேறு தலையெடுத்து கலியாணத்துக்குக் காத்திருக்கிறான். சும்மா திரிந்த பயலைப் பிடித்து ஊர்க் குடும்பனாக்கிப் பொறுப்பைச் சுமக்க வைத்தாயிற்று. அவனுக்கொரு வழிதேடிக் குடும்பமாக்கி விடணும். இந்த நிலைமையில் அஞ்ஞைக்காரி மகனுக்குப் பெண் தேடுவாளா தான் பெண்ணுக் கிருப்பாளா. சே சே அந்தப் பேச்செடுப்பது கோட்டித்தனம்.

வேறு யார் இருக்கிறார்கள். ஒண்ணு ரெண்டு நினைவுக்கு வரத்தான் செய் கிறது. இன்னாருக்குக் கழுத்தை நீட்டச் சம்மதமா என்று அவர்களிடம் போய்க் கேட்கணுமே. வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்தால் உண்டு. இல்லையென்றால் தலையில் துண்டைப் போட்டுக்கொண்டுதானே வரணும்.

இதென்ன நாலு பேருடன் போய் வெற்றிலை பாக்குப் பரிமாறுகிற காரியமா. கமுக்கமாக முடிக்க வேண்டியது. அதுக்குத் தோதான ஆள் வேணும். வேறு வழியில்லை. கருப்பியிடந்தான் யோசனை கேட்கணும். வையத்தான் செய்வாள். வைதாலும் இதுக்கொரு வழி சொன்னால் போதும்.

கருப்பி வெற்றிலை மெல்லும் நேரம் பார்த்துப் பக்குவமாகப் பேச்சுக் கொடுத்தான்.

''ஏம்பிளி...''

''ஓம்பிளிக்கு என்ன வச்சிருக்க.''

''ஒனக்குத் தெரியாதா. குட்டையனக் குடும்பனாக்கியாச்சு.''

''அப்படியா. அப்பனப்போல வெள்ளந்திப் பெயதான். அவனுக்குத் தொணையா காலாடி ஆரு.''

''மண்டையன இழுத்துப் புடிச்சு வச்சிருக்கு.''

''பாவம் அவன் ஒண்டிக்கட்டையாச்சே.''

''நீதான் குடும்பமாக்கி வுடணும்.''

''ஒனக்கென்ன கொழுப்பா.''

''ஒந் தைரியத்துலதான் பெரிசாச் சொல்லீட்டு வந்துட்டென். கைய விரிச் சிறாத தாயி.''

அவள் வெற்றிலைச் சக்கிலேயே அண்ணாந்து ஒவ்வொரு வீடாக அலசிக் கணக்குப் போட்டாள். அவன் ஆவலாகப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''ஏ இவனே கீழத் தெருவுல அந்த மொட்டச்சிப்புள்ள சும்மாதான இருக்கா.''

''அசலூருக்குப் போயித் தாலி தீந்துட்டு வந்தாளே...''

''அவளேதான்.''

''தோதான புள்ள. கொழந்தகிழந்த உண்டுமா.''

''ஒரு ஆம்பளையப் பெத்து அதும் தவறிப்போச்சு.''

''அப்ப அக்குத்தொக்கில்ல.''

''பேசிப் பாக்கென்.''

''பாக்கிறதென்ன முடிச்சிரு.''

மொங்கான் பஞ்சத்துக்குப் பலியான பிறகு பூச்சி ரெண்டு பெண்களை வளர்க்க ரெம்பக் கஷ்டப்பட்டாள். மண்டையன்தான் ஆதரவாக இருந்தான். அவனுக்கும் தனித்துக்கிடக்கிற வருத்தம் உண்டு. காக்காச்சி அடிக்கடி நினைவில் வந்துபோனாள். அநியாயமாகப் பறிகொடுத்த குழந்தைகளை நினைத்து அவன் ஏங்கினான். அச்சியும் அவள் பிள்ளைகளும் ஆறுதலாக இருந்தார்கள்.

பூச்சி அவனிடம் புலம்பித் தீரவில்லை.

''ஏல ஒடப்பெறந்தான் நாந்தான் இக்கெதியாயிட்டன்னா நீயுமா தனி மரமா நிக்கணும்.''

தன் மூத்த மகள் கொசுவக்காளைக் கொடுத்துக் குடும்பமாக்கிவிடலாமா என்று தாவங்கப்பட்டாள். அவன் மனசிலுள்ளதைச் சொல்லிவிட்டான்.

''கையில தூக்கி வளத்த புள்ளைக்குக் கழுத்துல தாலிகெட்டச் சொல்றயே. ஒனக்கே நல்லாருக்குதாச்சி. அவளுக்கு மாப்பிள பாத்து வைக்க வேண்டியது எம்பொறுப்பு.''

''அஞ்ஞாடி இப்படியொரு கத கொண்டுவாறானே. நான் என்னத்தச் சொல்லட்டும்.''

நல்ல வேளைக்கு கருப்பி புண்ணியத்தில் மொட்டச்சி மண்டையன் வீட்டுக்கு வந்துவிட்டாள். பட்டுப்போன பனைமரமாகத் திரிந்த மண்டையன் தெளுச்சியானதைப் பார்த்து ஆண்டிக்கு நிம்மதி.

மொட்டச்சி பூச்சியிடம் வாந்தக்கமாக இருந்தாள். பூச்சியின் பிள்ளைகளை நல்ல முறையில் கவனித்துக்கொண்டாள். காக்காச்சியைப் போலவே தனக்கேற்ற நாத்தனாள் வந்ததில் பூச்சிக்குச் சந்தோசம்.

மண்டையனும் மொட்டச்சியும் ஆண்டியின் காடுகளில் அயராமல் உழைத்தார்கள். வேலாயி அவர்களுடன் பாசமாகப் பழகினாள். மொட்டச்சி கொஞ்ச நாளில் தாயாகிவிட்டாள். கருப்பிதான் சோறூட்டி பயலுக்கு இருளப்பன் என்று குலதெய்வத்தின் பேரை வைத்தாள். பயல் பூச்சியின் கைக்குள்ளேயே வளர்ந்தான். தம்பி பேரைச் சொல்ல ஒரு பிள்ளை வந்த ஆனந்தம் அவளுக்கு.

ஊருக்குள் அங்கொண்ணும் இங்கொண்ணுமாகப் பச்சைக் குழந்தைகளின் அழுகை கேட்டபோது மயானத்தின் நரிக்கூச்சல் நினைவுக்கு வந்தது. சனங்களின் முகத்தில் பயம் கலந்த சிரிப்பு. குழந்தைகள் சிந்தாமல் சிதறாமல் தவழ்ந்து நடந்து விளையாட நாள் பிடித்தது. என்னதான் விளையாடினாலும் ஊர் முகத்தில் பழைய களையில்லை.

''தெருக்காரங்க வாங்கப்பா'' என்று ஊர்க்கூட்டத்துக்குக் கூப்பிடும் குட்டையனின் குரல் தெருக்களில் ஒச்சமிடும்போதெல்லாம் ஆண்டிக்கு உத்தண்டு கூப்பிடுவது போலிருக்கும். பல மாதிரி நினைவுகளில் மனசு பொருமும். சில சமயம் கண்கள்கூட ஈரமாகிவிடும்.

அவசர நேரங்களில் குடும்பனுக்குத் துணையாகக் காலாடியும் சத்தங் காட்டுவான். அவர்கள் பொதுக் காரியங்களில் ஒருவக்கொருவர் அனுசரித்துப்

போனார்கள். குடும்பன் ஏவும் வேலைகளையெல்லாம் காலாடி தட்டாமல் செய்வதைப் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். தகப்பன் மகனைப் போல் அவர்களுக்கிடையில் அப்படியொரு அன்னியோன்னியம்.

ஊர்க் கூட்டம் போட்டு பருசப் பணம் தலைக்கட்டு வரி வேலைகளுக்கான கொத்து கூலி எல்லாவற்றையும் உயர்த்தினார்கள். அயலூருக்குப் பெண் கொடுத்தால் செலுத்த வேண்டிய ஊர்ப் பணங்கூட அதிகமாகிவிட்டது.

மருதன் வந்து தலையைச் சொறிந்தான். கூட்டமே அவனைப் பார்த்தது.

''ஒருநாளும் கூட்டத்துக்கு வராற மனுசன் வந்துருக்கான். அவன் பெராது என்னன்னு கேளுங்கப்பா.''

''வழக்குக் கொண்டுவந்து சரிக்குச் சரி பேசித் தீத்துட்டுப் போற வழக்கம் இவன் ஆத்தாளோட சரி. அடடா எப்பேர்ப்பட்ட மனுசி. ஒரு சொட்டச் சொல் லுக்கு எடங் குடுக்காமத் தொழிலுப் பாத்தாளா சும்மாவா. இவன் அப்பிராணி.''

''மருதனுக்கு என்ன கொற.''

அவன் மறுபடியும் தலையைச் சொறிந்தான்.

''ஒருகாலத்துல ஒம் பாட்டக் கேக்கிறதுக்குக் கம்மாய்க்கு வந்து வயணங் காத்துக்கெடப்பொம். இப்ப என்னடான்னா வாயத் தொறக்கவே மாட்டங்க.''

அவன் விழுங்கிவிழுங்கிச் சொன்னான்.

''புள்ளகுட்டியாகிப்போச்சு.''

''அதுக்காக பாட்டுப் படிக்கப்புடாதா.''

''கொத்து கட்டுப்படியாக மாட்டங்குது. கொஞ்சம் கூட்டிக்குடுத்தா ஏந்த லாருக்கும். அப்பச்சிமாருக்குத் தெரியாறதில்ல...''

''அடே வாயி செத்த பெயலே இதுக்குத்தானா இப்படிச் சொணங்குன. நெலமையச் சொல்ல வேண்டியதுதான. ராவும் பகலும் அழுக்குக்குள்ள பொழங் குற குடும்பம். ஒங்க அடிவகுத்துல அடிச்சு என்னத்த அள்ளிக்கெட்டப் போறொம்... இவனுக்கு ஆடி தையிலதானப்பா வெளுப்புக்கூலி செரப்புக்கூலி. அதுல ரெண்டு படி போட்டுக் குடுத்துருவொம்.''

''ரெண்டு படியென்ன ஒருபடி கூடவே குடுப்பொம். தண்ணிக்குள்ளயே குடியிருக்கிற மனுசரு.''

''இப்ப மருதனுக்குச் சந்தோசந்தானா.''

அவன் பேசவில்லை. பெரிய கும்பிடு போட்டுவிட்டு வீடு திரும்பினான்.

கலிங்கலுக்கென்று ஆசாரி பகடை கிடையாது. எதுக்கெடுத்தாலும் வேப்பங் காட்டுக்கும் மேலூருக்குந்தான் ஓடணும். ரெண்டு பேரைக் கொண்டுவந்து குடி வைக்கணுமென்று பேச்சு வந்தது. முக்கால்வாசிப் பேர் அதுக்குச் சம்மதிக்கவில்லை.

''ஊரு நல்லாருந்த காலத்துலயே அவுக இல்லாமச் சமாளிச்சொம். இப்ப எதுக்கு. அவுகளக் கொண்டு வந்து வச்சு வருசம் முழுக்கத் தாங்க முடியுமா. பேசாமக் கெடங்க. எப்பயும் போலயே இருக்கட்டும்.''

ஒருவன் வேறொரு காரணம்சொன்னான்.

''நாடாரக் குடியமத்தி விருத்தியாகல. வேற சாதிக்கும் நமக்கும் ஒத்து வராதுப்பா.''

‘‘அதச் சொல்லு. நாடாரும் போனாரு ரெம்பப் பனையும் போச்சு. இப்பத் தான் அங்கங்க பனங்கொட்ட போட்டுக் குட்டி மொளச்சுக் கெடக்குது... ம் வடலி எப்ப வளந்து பதினி எப்பக் குடிக்கிறது. அதுவரைக்கு நம்ம இருக்கணும்.’’

‘‘எத்தன பெயகளுக்கு அந்த மனுசன் பனையேறச் சொல்லிக்குடுத்தாரு தெரியுமா. அத்தன பேரவும் பஞ்சம் அடிச்சிட்டுப் பேயிருச்சே.’’

‘‘மிஞ்சியிருக்கிறவங்க ஏதோ ஏண்டமட்டும் பனையத் தொத்திக்கிட்டுத் திரியிறான்.’’

‘‘அதப் பாக்கயில நாடாரு நெனப்புத்தான் வருது.’’

‘‘கட வைக்கிறதுக்கு ஒரு செட்டியாரு வந்து அண்ணைக்குக் கேட்டுட்டுப் போனாரு.’’

‘‘ஒரு நாடாருகூடக் கேட்டாரு.’’

‘‘அந்தச் சங்காத்தமெல்லாம் வேணாம். வழக்கம்போல நம்மளுக்குள்ளயே ஒருத்தன் நடத்தட்டும். அவனுக்கு ஏலலன்னா இன்னியொருத்தன் விக்கட்டும்.’’

‘‘ஒரு கடைக்கு மேல இருக்கப்புடாது.’’

‘‘நம்மூருக்கு வேற சாதிச் சனங்களே வேணாம்ப்பா.’’

‘‘சரிப்பா.’’

## 8. வீடாள வந்தவளே

மண்டையன் மனசுக்குள் ஒரு திட்டமிருந்தது. அச்சி மகள் கொசுவக்காளை எப்படியும் குட்டையனுடன் கொழுவிவிடணும். அச்சிக்குப் பாரம் குறையும் குட்டையனுடன் தோதாகப் பேச்சுக்கொடுத்து வழிக்குக் கொண்டுவந்தான். சங்கதி மொட்டச்சியிடமிருந்து வேலாயிக்குப் போய் அங்கேயிருந்து ஆண்டிக் குங் கருப்பிக்கும் போனது. பூச்சியும் வெண்ணிமாலையும் நல்லது நடந்தால் சரியென்று பேசாமல் இருந்துவிட்டார்கள்.

குட்டையன் கொசுவக்காளை முடித்துக் குடும்பமாகிவிட்டான். கொசு வாக்கா ரெண்டு பிள்ளைக்குத் தாயாகிவிட்டாள். மூத்த பயலுக்கு வீரையா என்று பேர்வைத்தார்கள். அது துலங்கவில்லை. மண்டை பெரிசானதால் கலுங்கு மண் டையன் என்று கூப்பிட்டார்கள். கடைசிக்கு அது கலுங்கனாகச் சுருங்கிவிட்டது. சின்னவன் உத்தண்டன். சேட்டைக்காரப் பயல்.

வெண்ணிமாலை என்றைக்கோ மகன் வயிற்றுப் பிள்ளைகளைப் பார்த் திருக்க வேண்டியது. முத்துவேலும் பண்டாரமும் பிழைத்துக்கிடந்திருந்தால் வீடு நிறைய ஓடித் திரியும். இப்போதாவது லவித்ததே. அஞ்ஞையின் முகத்தில் புதுக் களையைப் பார்த்த வேலாயிக்குப் படுத்ததும் உறக்கம் வந்தது.

என்ன இருந்தாலும் வீரம்மா போய்விட்ட வேதனையை அவளால் மறக்க முடியவில்லை. சொந்த அஞ்ஞைக்கு மேலாகப் பாசம் வைத்திருந்தாள். அந்த வைராக்கியமும் பெருந்தன்மையும் யாருக்கு வரும். என்னாளும் எப்படித்தான் சிரித்த முகத்தோடு இருக்க முடிந்ததோ. கொஞ்ச வயசிலேயே கொண்டுபோகத் தானா.

வேலாயி அந்தப் பக்கம் ஆள் கூப்பிடப் போவதில்லை. போனால் அழுகை வரும். கண்ணைத் துடைத்துக்கொண்டே கூப்பிட்டால் நன்றாயிருக்காது. ஆனாலும் செவனம்மாளைப் பார்க்கப் போவாள். வீரம்மா ஒருநாள் பேச்சு வாக்கில் சொன்னது அப்படியே மனசில் பதிந்திருந்தது.

''இந்தாம்மா சம்சாரி வீட்டுக்காரி நாங்க வெறுங் கழுததான். அதுக்காக எங்க புள்ளீகள மறந்துறாதுங்க.''

''உத்தண்டுக் குடும்பன் வீட்ல எத்தன ஏரு ஓடுதுன்னு பாத்தா அண்ணைக்குப் பொண்ணு கேட்டு வந்தீக.''

''கனம் எனம் பாத்துருந்தா இந்தக் கள்ளச்சிறுக்கியக் கொண்டுவந்துருக்க முடியுமா.''

''அந்தக் கொணத்துல கொஞ்சமாச்சும் எங்களுக்கும் இருக்கும்னு நெனச்சுக்கங்க.''

''என்னமோ தாயி நாங்க திடுதும்னு போய்ச் சேந்துட்டா எம் புள்ளைய நீங்கதான் ஆதரிக்கணும்.''

வேலாயி காடுகரையில் அழுது புலம்பினாள்.

''பாதகத்தி சொன்னது போலயே போயிச் சேந்துட்டயே.''

கருப்பி நிலைமை ரெம்ப மோசம். நடமாட்டமும் பேச்சும் குறைந்து விட்டது. எழுந்திருக்கத் திராணியில்லாமல் எப்போதும் முடக்கியே கிடந்தாள். அவள் நினைவெல்லாம் மகள்தான் நிறைந்திருந்தாள். வேலாயைக் கூர்ந்து பார்ப்பாள். உடனே கண்ணீர் கொப்புளித்துவிடும். காரணம் வேலாயிக்கும் தெரியும். ஒண்ணும் கேட்டுக்கொள்ள மாட்டாள்.

ஒருநாள் ரெம்ப முடியாமல் சுருண்டுவிட்டாள். சாப்பாடு செல்லவில்லை. ஆண்டிக்கு மனசு பதறியது.

''கெடக்கிற கெடையப் பாத்தா நமக்கு முந்தீருவா போலருக்கே. நான் ஏன் பாவத்துக்குப் போல இழுபட்டுட்டுக் கெடக்கணும். எல்லாம் ஆண்டனுபவிச் சாச்சு. பேரன் வகுத்துப் புள்ளீகளக்கூடப் பாத்தாச்சு. தெய்வமே என்னயக் கூட்டிக் கிறப்புடாதா.''

**அ**ன்றைக்கு ராத்திரி வீரம்மா குடும்பத்துடன் கருப்பியைத் தேடி வருகிறாள். நண்டும் சிண்டுமாக அஞ்சு பிள்ளைகள். அஞ்ஞையை உரித்துக் கொண்டு மூணு பொட்டச்சி. பயல்கள் ரெண்டு பேரும் அப்பன் சாயல். அஞ்ஞை ஒருத்தியை இடுப்பில் அப்பியிருக்கிறாள். அப்பன் தோளில் ஒண்ணு கைவிரலில் முடிந்து கொண்டு ஒண்ணு. நடுவில் பயல்கள் அப்பன் தோரணையிலேயே நடந்து வருகிறார்கள். இன்னும் கொஞ்ச நாள்தான். அப்பனுக்குத் தோள்கொடுத்து விடுவார்கள்.

பிள்ளைகள் விளையாடி முற்றத்தைக் கருங்களமடிக்கிறார்கள். வள்ளியும் சேர்ந்துகொள்கிறாள். ஆசைதீர விளையாடட்டும் என்று கருப்பி முற்றத்தில் தண்ணீர் தெளித்து எத்தியிருக்கும் கல்லைத் தட்டித் தோதுப்படுத்திக் கொடுக் கிறாள். ஆண்டியும் கருத்தையனும் அக்கறையாகப் பேச்சுப்பழக்கம் போடு

கிறார்கள். உழவடிப்பு விதைப்பு வெள்ளாமை விளைச்சல் பருவ மழை இப்படி ஒண்ணுகூட விட்வில்லை. அவர்கள் உட்கார்ந்திருக்கும் இடத்துக்கே வீரம்மா சோறு கொண்டுவந்து கொடுக்கிறாள். கருப்பி சிரிக்கிறாள்.

''மாமனும் மருமகனும் நேருக்கு நேரப் பேசிப் பாத்ததில்ல. இண்ணைக் கென்னமோ மும்மரமா நடக்குது. வகுறாரச் சாப்பிட்டுட்டுப் பேசட்டும்.''

ராக்கன் பொய்யாளியுடன் கருத்தையனும் காட்டு வேலைக்குப் போகி றான். பூமி பிளந்ததுபோல் அழுத்திப் பிடித்து ஆழமாக உழுகிறான். மாடு களுக்குக் கூளம் பிடுங்கிப் போட்டுத் தண்ணீர் காட்டி அக்கறையாகக் கவனித்துக் கொள்கிறான். ஆண்டிக்குப் பெருமை. வேலாயும் வீரம்மாளும் போட்டி போட்டுக்கொண்டு வீட்டு வேலைகளை முடிக்கிறார்கள். சொக்கம்மா மேல் பார்க்கிறாள்.

கருப்பி நிதமும் பானைபானையாக நெல்லுச் சோறு வடித்துத் தட்டு கிறாள். சுடச்சுட வடிதண்ணீர் குடித்துப் பிள்ளைகளுக்கு விளையாட்டில் சுதா ரிப்புக் கூடுகிறது. மணக்கமணக்க அவித்துக் குமித்த ஓலைக் கொழுக்கட்டையும் பந்துபந்தாகச் சுட்ட பச்சரிசிப் பணியாரமும் போன இடந்தெரியவில்லை. சுளகு பிடிக்காமல் மொச்சைப்பயறு ஆவி பறக்கிறது. கருப்பி சூடு தணியக் கிளறி விட்டுப் புடைக்கிறாள். கொஞ்ச நேரத்தில் வெறுஞ்சுளகு குப்புறக் கிடக்கிறது. அடுத்த நாள் சோளமும் தட்டப்பயறும் கலந்தவித்த பண்டம். நாலு கோழி காலி. அடைக்கு வைத்திருந்த முட்டை அத்தனையும் அவியல் பொரியலாகிறது.

திகட்டத் திகட்ட அஞ்சு நாள் விருந்து கொண்டாடிவிட்டு வீடு திரும்பும் போது வீரம்மா கருப்பியை வற்புறுத்திக் கூப்பிடுகிறாள்.

''எங்ககூட வந்துறயாஞ்ஞ.''

''நாலஞ்சு நாளையில வாறென் தாயி. ஒங் கையால சாப்பிடணும்னு ஆசை யாருக்கு.''

கருப்பி ஆண்டியைக் கேட்கிறாள்.

''புள்ள ஆசையாக் கூப்புடுது. போயிட்டு வருவமே.''

''நீ வேணாப் போயிட்டு வா.''

''நீ இங்கருந்து என்ன வேல வெட்டி முறிக்கப்போறயாம்''

''ஒன்னயத்தான கூப்புட்டா.''

''பெத்த புள்ளையிட்ட வீராப்புக் கொண்டாடுறதே பெழப்பாப் போச்சு ஒனக்கு. ஒருநாளைக்கு ஒன்னய வுட்டுட்டு நான் தனியாப் போனாத்தான் புத்திவரும். பேத்தியா எப்படா சோறு குடுப்பான்னு தொண்ணாந்துட்டுக் கெடப்ப.''

விடிந்த பிறகும் அவள் புலம்பிக்கொண்டு கிடந்தாள்.

''எம் புள்ள கூப்புடுது... எம் புள்ள கூப்புடுது...''

காய்ச்சல் கொதித்து தலைதூக்க முடியவில்லை. உடம்பை அமுக்கிப் பிடித்து நடுக்கத்தைக் கட்டுப்படுத்தப் பிரயாசைப்பட்டான் ஆண்டி. அவளுக்குப் பேச்சு விழுந்துவிட்டது. நாக்கு குழறிக்குழறி வார்த்தைகளைக் கொண்டுவந்தது.

''ஏ இவனே இண்ணைக்கு நம்ம வீட்ல ஆரும் வேலைக்குப் போக வேணாம் எல்லாரவும் பாத்துப் பேசணும் போலருக்கு.''

ஆண்டி பதறினாலும் காட்டிக்கொள்ளவில்லை.

''ஒனக்கு ஒண்ணுஞ்செய்யாதும்பிளி. மேலு லேசாச் சுடுது. அவ்வளவு தான்.''

குடும்பமே அவளைச் சூழ்ந்திருந்தது. வள்ளி முதல்கொண்டு எல்லா ரிடமும் ஆசைதீரப் பேசினாள். பொய்யாளிக்குப் புத்திமதி சொன்னாள்.

''நம்ம வீட்ல எத்தன குடும்பம் கொடிவீசிப் படந்தாலும் ஒரே ஒலதான் வேகணும். அதும் இந்தத் தொட்டி வீட்லதான். எய்யா பேத்தி சொல்லக் கேப்பயா.''

பொய்யாளி அழுதுகொண்டே தலையாட்டினான். அவள் தூங்கன் வீட்டி லிருந்து செவனம்மாளை வரச்சொல்லி பக்கத்தில் இருத்திக்கொண்டு ஆண்டியை நம்பிக்கையுடன் பார்த்தாள்.

''செவனம்மா நம்ம புள்ள பெத்த மக. இவள நல்லப்பனுக்கு முடிச்சு வச்சிறணும்.''

வேலாயி கலங்கியபடி சொன்னாள்.

''நீ எந்திரிச்சு நடமாடுனப் பெறகு ஒங் கண்ணுக்கு முன்னாலயே நடக்கும்.''

செவனம்மா வேலாயைப் பாசத்துடன் பார்த்தாள். அவள் கண்களும் குளங்கட்டியிருந்தன.

கருப்பி பகலெல்லாம் படுக்கையில் உழத்திய பாதரவு சொல்ல முடியாது. அப்படி முனங்கினாள்.

''பின்னத்தியந் தேரேறிச் செண்டா வீசப் பொண்ணு வகுத்துப் புள்ளை யில்லையே. கொடம் ஒடைக்கப் பொண்ணடியா உண்டுமா...ஸ்... அஞ்ஞாடி...''

வள்ளியின் பிடியையும் மீறிக் கிறுவாணம் சுற்றினாள். பிதுங்குகிற மாதிரி கண்ணை உருட்டிச் சொருகினாள். உதைந்து முடித்து கொஞ்ச நேரத்தில் ஆட்டம் அடங்கிவிட்டது. வள்ளியின் மடிதான் அவளுக்குக் கொடுத்து வைத்தது.

வீட்டில் எல்லாரும் மூணு நாளாகச் சாப்பிடவில்லை. செவனம்மா வள்ளி யைக் கூட்டிப்போய்ப் பசியமர்த்தினாள். பொய்யாளிக்குப் பேத்தி போய் விட்டதாகவே தெரியவில்லை. அவன் தூணில் சாய்ந்துகொண்டு சொக்கிச் சொக்கிப் பேசுவது போலவே இருந்தது.

''எய்யா பேத்தியிட்டச் சொல்லாம எங்கய்யா போயிருந்த. ஒன்னயக் காணாமத் தவியாத் தவிச்சிட்டனே.''

நெல்லுச் சோறும் பருப்பாணமும் சாப்பிடும் நாளில் கும்பாவில் அவன் கண்ணீரும் கலந்து உப்புக் கரிக்கும்.

வள்ளி ரெம்ப வாடிப்போனாள். செழிப்பில்லாமல் முகம் கொராவிச் சிறகொடிந்த வண்ணாத்திப்பூச்சியாகிவிட்டாள். மடியிலிருத்தி மல்லுக்கட்டிப் பேயாட்டக் கருப்பிப் பேத்தியில்லை. காதுத் தண்டில் பூநகை பூட்டி அலைத்து அழகுபார்க்கும்போது பாட்டுப் படித்துக் குணுகுவாள்.

''பாம்படமாம் பாம்படம்
மாம்பழத்துப் பாம்படம் - எங்க
வள்ளி போட்ட பாம்படம்
துள்ளித் துள்ளி ஆடுது.''

இனிமேல் அந்தச் சிரிப்பாணியைக் கேட்க முடியாது. ராத்திரி வேளை கால் விரிப்பில் கிடத்தி நெற்றியை வருடிக்கொண்டே ஊஞ்சலாட்டிக் கதைசொல்லி உறங்க வைப்பாள். அந்த மடிச் சொகத்தின் ஏக்கத்தில் அழுகை வந்தது. ஆளாளுக்குச் சமாதானப்படுத்தினார்கள்.

''பெரிய பேத்தியச் சாமி கூட்டிக்கிருச்சு. அவ இல்லன்னா என்ன. சொக்கம்மாப் பேத்தி இருக்கா. நல்லாக் கவனிச்சுக்கிருவா.''

இப்போது கருப்பிப் பேத்தி அடிக்கடி வந்து கதை சொன்னாள். இப்படிக் கனாவுக்காகவே நேரத்தோடு படுக்கத் தோன்றும். பேத்தியுடன் பேசலாமே. கதை சொல்லி முடித்து அவள் அலுத்துக்கொண்டே போவாள்.

''...ஸ்... அஞ்ஞாடி...''

திடுக்கென்று முழிப்புத் தட்டும். பேத்தியைக் காணாமல் அழுகை பொங்கும்.

''இதென்ன புள்ள நடுச்சாமத்துல எந்திரிச்சு அழுதுகிட்டுருக்கு. ஏன் தாயி...''

சொக்கம்மாப் பேத்தி மடியில் போட்டுத் தட்டிக்கொடுத்து உறங்க வைப்பாள். வள்ளியின் விக்கல் அடங்க ரெம்ப நேரமாகும்.

கருப்பியில்லாமல் ஆண்டிக்கு எல்லாமே கசந்துகிடந்தது. முகட்டுவளை போல் குடும்பத்தில் தாப்பான மனுசியாக இருந்தவள். என்னேரமும் ''ஏம்பிளி ஏம்பிளி'' என்று கொராவி யோசனை கேட்க ஆளில்லை. குழந்தையாக நினைத்துக் குடுமியைக் கோதி முடிந்துவிடக் கையில்லை.

ஒரு வருசம் நல்ல வெள்ளாமை விளைச்சல். தானியம் தவசம் பயறுபச்சை எல்லாம் சக்கைப்போடுபோட்டிருந்தது. களத்தில் இடமில்லை. அப்போது வீரம்மா பிறக்கவில்லை.

பொலிப்பாட்டுக்காரன் களத்துக்கு வந்து வாழ்த்துப் பாடிக் களத்துப் பிச்சை வாங்கிக்கொண்டு போனான். தம்பட்டக் காளைக்காரன் வந்தான். தப்புக்காரன் வந்து மாயகிட்ணனைப் பற்றிச் சொகமாகப் பாடினான். தப்பும் சேகண்டியும் அவன் குரலுடன் சேர்ந்து வெயிலை மறக்கடித்தது. பீதாம்பர வித்தைக்காரன் வாளை முழுவதும் வாய் வழியே தொண்டைக்குள் சொருவி வேடிக்கை காட்டினான். தண்ணீரைப் பன்னீராக்கித் தெளித்தான். சாம வேளையில் காலவைரவனின் சின்ன மணிச் சத்தம் தெருக்களில் கேட்டது. அவன் குறி சொல்லிவிட்டுத் தடத்தடவென்று ஓடும்போது பெண்கள் ஒளிந்துகொண்டார்கள். கூட வந்த பெண் வீடுவீடாகத் தவசம் வாங்கிச் சுளகில் திருநீறு வைத்துக் கொடுத்தாள்.

நாழிமணிக்காரர்கள் ரெண்டு பேர் வந்தார்கள் மூட்டுப்பருத்த உடம்பு. சோளத்தட்டை வளர்த்தி. பெரிய தலைப்பா. அதில் மஞ்சள் பிறை மின்னியது. கைகால்வரை அங்கி. தோளில் பை தொட்டிலாகத் தொங்கியது. கையில் வழுவழுத்த கம்பு. வளைந்த கைப்பிடி.

மரக்காலளவுக்கு வெங்கல மணி வைத்திருந்தார்கள். ஒருவனிடம் தாளக் கட்டையும் இருந்தது. நடுச் சந்தி வேம்படியில் நின்றுகொண்டு கம்பின் கைப் பிடியில் முழங்கையைத் தோதாக வைத்து மணியாட்டத் தொடங்கினார்கள்.

லயம் பிசகாத மணியொலி தெருவெல்லாம் பரவி அதிர்ந்தது. கூடவே தாளக் கட்டையும் சேர்ந்துகொண்டது. கண் மூடிய சொகத்தில் சுதி சேர்த்தார்கள். ஆணும் பெண்ணும் சன்னஞ்சன்னமாக அவர்களைச் சுற்றிக் கூடினார்கள். கருப்பி கிட்டத் தில் நின்றுகொண்டாள்.

மணிக்காரர்களின் கண்கள் மெல்லமெல்லத் திறந்தன. பெண்களைப் பார்த் ததும் அவர்களுக்குச் சந்தோசம் பெருகியது. ஒருவன் கணீரென்று குரலெடுத்துப் பாட ஆரம்பித்தான். இன்னொருவன் அதைக் கட்டையால் வாங்கித் தாளமாகக் கொடுத்தான்.

''காடாளும் குடும்பனுக்கு
வீடாள வந்தவளே
சிந்தாமப் புள்ளைகள
சீதனமாத் தந்தவளே
மகராசி புண்ணியத்தில்
வரவாசி வந்தெறங்கும்
மழபேஞ்ச கொளமாக
மனசெல்லாம் நெறஞ்சிருக்கும்.''

தாளக்கட்டையில் பாட்டு மடை திறந்தது.

''கம்மாயில் மடதொறந்து
கலகலன்னு தண்ணிவரும்
சொல்லாத சேதிகள
சொகமாகச் சொல்லிவரும்
கரையோரம் கருவமரம்
கைகோர்த்து வெளையாடும்
தரையெங்கும் செடி மொளச்சு
சரஞ்சரமாப் பூத்திருக்கும்
தூக்கணத்தான் குருவியங்க
துருதுருன்னு கூடுகட்டும்
பூக்களுக்கு வண்டுவந்து
போதையில தேனெடுக்கும்.''

வெங்கல மணி வயல்வெளிக்கு அழைத்துச்சென்றது.

''வயலுக்குள்ள ஏருழுது
வரப்புகள எடுத்துக்கட்டி
கொழப்புடுங்கித் தொளிமிதிச்சு
கொலவையுடன் நாத்துநட்டி
ஒழச்சதுக்குப் பலனாக
தழச்சுவரும் நெல்பயிரும்.''

தாளக்கட்டை அறுவடைக்குத் தயாரானது.

''நீர்விட்டுக் கருதாக்கி
நெல்மணிய வெளையவச்சு
கருதறுத்துக் களஞ்சேத்து
கழிவுகளக் கைபாத்து
அம்பாரம் மலையாகும்

அளந்தளந்து மாளாது
தெம்பாக வீடுவரும்
சீதேவி கூடவரும்.''

மணியும் கட்டையும் மயங்கி நிற்கும் பெண்களைத் தேடின.

''எம்மா
மயங்காத தயங்காத
மனவருத்தம் கொள்ளாத
அங்கஇங்க பாக்காத
அசல்வீடு போகாத
உள்ளருந்து கதவடச்சு
ஒளிஞ்சுக்கிட்டு நிக்காத.''

''முக்காம மொனங்காம
முந்திச்சீலையச் சொருவிக்கிட்டு
தண்டைகளும் கலகலங்க
தளதளன்னு நடந்துவந்து
அழகான சொளகெடுத்து
அதுமேல அளந்துவச்சு.''

''கொண்டுவாம்மா நெல்நாழி
கோலமிட்ட பொன்னாழி.''

''மூணுபூணு வச்ச நாழி.''

''மூதாதையர் ஆண்ட நாழி.''

''நாலுபூணு வச்ச நாழி.''

''நால்வர்ராமர் ஆண்ட நாழி.''

''அஞ்சுபூணு வச்ச நாழி.''

''ஐவர்பஞ்சவர் ஆண்ட நாழி.''

நெல்வகைகளை அடுக்கிக்கொண்டே போனார்கள்.

''எலவாழ நெல்லுல நாழி.''

''கொலவாழ நெல்லுல நாழி.''

''புழுதிவெரட்டி நெல்லுல நாழி.''

''கிளிமூக்கு நெல்லுல நாழி.''

''அரியமிளகு சிறியமிளகு
ஆனைக்கொம்பன் நெல்லுல நாழி.''

''சடைமிளகு செம்மிளகு
சந்தனமிளகு நெல்லுல நாழி.''

''மட்டநெல்லு மணல்வாரி
வட்டக்கன்னி மாதுளக்கன்னி
குங்குமக்கன்னி கோமளக்கன்னி
மங்களசுந்தரி நெல்லுல நாழி.''

''சிறுவைமணி குறுவைமணி
சீரகச்சம்பா நெல்லுல நாழி.''

''அரசிச்சம்பா அழகுச்சம்பா
அன்னச்சம்பா நெல்லுல நாழி.''

''கடுகுச்சம்பா நெல்லுல நாழி.''

''கற்பூரச்சம்பா நெல்லுல நாழி.''

''சூரியச்சம்பா ஈக்கிச்சம்பா
தும்பைச்சம்பா நெல்லுல நாழி.''

''அமராவதி நெல்லுல நாழி.''

''எலிவாலு நெல்லுல நாழி.''

''நீர்ச்சாரை நெடுஞ்சாரை
காடைக்கழுத்து சிட்டுக்குருவி
கந்தூரவாசகன் பூவரசு
வெள்ளக்காக்கா நெல்லுல நாழி.''

தாளக்கட்டை உச்சத்தை எட்டியது.

''தாயே
கொண்டுவாம்மா நெல்நாழி
கோலமிட்ட பொன்னாழி
ஒன்னோட கருணையிலே
என்னோட பசியாறும்
அன்னமிட்ட கைகளுக்கு
ஆயுசுக்கும் புண்ணியந்தான்.''

மணியின் நாவில் மங்கல வாழ்த்து ஒலித்தது.

''தெருவெல்லாம் படியளக்கும்
தேவேந்திரக் குடும்பனுக்கு
ஈரேரு நாலாகி
எல்லாமே கைகூடி
பதினாறு செல்வங்களும்
செதறாமச் சேரவேணும்.''

கட்டையும் சேர்ந்துகொண்டது.

''வேலாண்டி தொணையிருக்க
பாலாகப் பெருகவேணும்
கொழுந்தாடும் கொடியாக
குடும்பம் தழைக்கவேணும்.''

பாட்டு முடிந்த பிறகும் மணியின் சோகமான நாதம் கேட்டுக்கொண்டே யிருந்தது.

கருப்பி கூட்டத்தில் ஆண்டியைத் தேடிக் கண்டுபிடித்தாள்.

''ஏ இவனே நம்ம குடும்பத்தப் பத்தித்தான் பாட்டுப் படிக்கான்.''

''ஒங்கிட்டத்தான தவசம் கேக்கான்.''

''இந்தா கொண்டுவாறென்.''

அவள் வீட்டுக்கு விரைந்து வெங்கல நாழி பிடிக்காமல் சுளகில் நெல் கொண்டுவந்தாள். அவளைத் தொடர்ந்து நிறையச் சுளகுகள் வந்தன. பலவகைத் தானியம். நாழி மணிக்காரர்கள் வாங்கிப் போட்டு முடியவில்லை. ஊருக்குப்

பெரிய கும்பிடு போட்டுவிட்டுத் தோள்வலிக்கச் சுமந்து போனார்கள். அவர் களையே பார்த்துக்கொண்டிருந்தவர்களில் ஒருவனுக்கு ஆச்சரியத்தை அடக்க முடியவில்லை.

''தாயோளி தொண்டைக்குள்ளயுமில்ல மணியக் கெட்டிவச்சிருக்கான். நமக்கு மாடு பத்துறதுக்கே முக்கி மொனங்குது. காக்காக் குஞ்சி மாதிரி தொண்ட கரகரங்குது. மயிரா பாட்டு வரும்''

கருப்பி சிரித்துக் குணுகினாள்.

''அவன் சொல்றதக் கேட்டயா இவனே. தொண்டைக்குள்ள எப்படி மணியக் கெட்றதாம்.''

''கெட்டியிருக்கானே.''

''அட போ இவனே. நீயும் ஒண்ணு கெட்டிக்கோ.''

அவள் சிலுப்பிக்கொண்டு போனாள்.

அரணாக்கயிற்றில் கோர்த்த தாயத்து மாதிரி அன்னியோன்னியமாக இருந்த மனுசி போய்விட்டாளே. எவ்வளவு குமித்தாலும் அவளுக்கீடாகாது.

குடும்பத்தில் எல்லாருக்குமே அவள்மேல் பிரியம் ரெம்ப. அவளுடன் கொஞ்ச நேரமாச்சும் பேசியாகணும். அவளும் அப்படித்தான். சொக்கம்மாளும் அவளும் சில சமயம் பேசிக்கொள்வதைப் பார்த்தால் மாமியாளுக்கும் மரு மகளுக்கும் நாறச் சண்டை நடப்பது போலிருக்கும். அவள் வசவை அவுத்து விட்டால் லேசுக்குள் ஓய மாட்டாள்.

''வக்கத்த கழுத. போக்கத்த நாயி. வலிய வந்து மொழஞ்சுக்கிட்டு அதிகாரம் பண்றதப் பாரு. அதெல்லாம் எங்கிட்ட நடக்காது. கிட்ட வா நாயேன்னா முட்டிமுட்டி மூஞ்சிய நக்குறது. எட்டத்துல போனதும் வள்ளுவள்ளுன்னு கொலைக்கிறது. இதுகள வைக்கிற எடத்துலதான் வச்சுப் பாக்கணும்.''

சொக்கம்மாளும் விட மாட்டாள்.

''நாங்க ஒண்ணும் வலிய வந்து எறங்கல. பொட்டச்சி மோளுற எட மெல்லாம் மோப்பம் புடிச்சிட்டுத் திரிஞ்சது ஆருன்னு ஒம் மகங்கிட்டக் கேளு. மகனுக்கு மோத்தரத்தக் கொழச்சுத் திருநீறு பூசினதெல்லாம் மறந்துருச்சா. பேச வந்துட்டா பெரிசா. பூசர மரத்துல ஏறிப் பொம்பள மோளுறத வேடிக்க பாத்தா எப்படி. மரத்துல ஒட்டியிருக்கிற கம்பளிப் பூச்சி ஓடிவந்து கடிக்குதாக்கும்.''

''ஆமா இவ சீமையில இல்லாற அழகேந்திரி. எம்புள்ளைக்கு என்ன மாயமந்தரம் வச்சயோ சொக்குப்பொடி போட்டயோ. வசமா மாட்டிக்கிட் டான். ஒரு நொண்டி மொடங்கூட ஒன்னய அண்டுவானா. நான் மட்டும் இல் லன்னா இந்த வீட்டு வாசப்படியக்கூட எட்டிப்பாக்க முடியுமா. தறிச்சுப் போட்ட மஞ்சணத்திமரம் மாதிரி இருந்துக்கிட்டு பீத்துறதப் பாரு. ஆத்தாடி அழகு ஒழுகுது மடியில கெட்டிக்கோ கலயத்த.''

ஆண்டிக்கு யோசனை ஓடும். மூத்திரத் திருநீறுக்கு இதுதான் காரணமா. கருப்பியிடம் கேட்பான்.

''அந்தத் திருநீறு எங்க கெடைக்கும்பிளி.''

அவள் பொரிவாள்.

''செரட்டையில கரச்சுப் பக்குவமா வச்சிருக்கென். மேலெல்லாம் பூசிக்கோ வேலையத்தவனே.''

கொஞ்ச நேரந்தான். கருப்பிக்குக் கோவம் போன இடந் தெரியாது. மூலையிலிருந்து அவள் குரல் கேட்கும்.

''ஏக்கி சொக்கம்மா எங்க போயிட்ட.''

''இந்தா வாறென் மாமி.''

மருமகள் வேலையைப் போட்டுவிட்டு வந்து குழைவாள்.

''மினுக்கீட்டுத் திரிவாளே மேலத்தெருச் சுப்பு அவ கதையக் கேட்டயா... இச்சிப் பழத்தப் பிச்சுப் பாத்தால்ல தெரியிது எத்தன புழுவு இருக்குதுன்னு.''

''அதப் பத்தித்தான் தண்ணிக் கெணத்துல தமுக்கடிக்காகளே.''

ஆண்டி முணுமுணுப்பான்.

''பொகலத்த கழுதைகளுக்குச் சண்ட கேக்குதாம் சண்ட.''

எல்லாம் நினைத்துப்பார்க்கையில் அவனுக்கு நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. எத்தனையோ சங்கடம் வந்தும் அவன் இப்படித் துவண்டதில்லை. பெரிய நாடார் சில சமயம் வந்து ஆறுதல் சொல்லிவிட்டுப் போனார். அவன் அடிக்கடி மருதனின் துணையைத் தேடினான். மனசு தளர்ந்து பேசினான்.

''அடே நான் படுற வேதன இன்னதுதான்னு சொல்ல முடியல. ஒரு முடிவத் தேடிக்கிட்டு அவகிட்டயே போயிறலாமான்னு நெனப்பு ஓடுது.''

மருதன் துடித்துப்போனான்.

''எப்பா ஆலமரம்போல அசையாமருக்கிற நீங்களா இப்படி. ஈரங்காயிற வரைக்கும் குண்டியில மண்ணு ஒட்டத்தான் செய்யும். பெரிய குடும்பச்சி பேத்தி யாளாப் பெறந்துருக்காகன்னு நெனச்சு மனச ஆத்திக்கங்க.''

''அப்படி ஆத்திக்கிற முடியலயேடா.''

''நீங்களே இப்படி மலச்சீகன்னா நாங்க எங்க போயி ஒண்டுறது.''

''எல்லாம் இடிஞ்சுபோயிக் கெடக்குதேடா. என்ன செய்யட்டும்.''

## 9. அந்தா போறாண்டா

கலிங்கல் மயானம். ஒழுங்கில்லாமல் மூடிப் படுத்திருக்கும் குழிமேடுகள். நடுவில் ரெட்டைப் பனைகள். குறுக்கு வளைந்த கூனப்பனை. கதிக்க நிற்கும் நேரப்பனை. மயானம் முழுக்க மதிய வெயிலிலும் வாடாத பசுமை. சோகமாக மேயும் வெள்ளாடுகள். பனை நிழலில் படுத்திருக்கும் பயல்கள்.

பனைக்குக் கிழக்கே வண்டிப் பைதா அளவுக்கு ரெண்டு பச்சை வட்டம். கண்ணுக்குக் குளிர்ந்த புல்லடார்த்தி. நல்ல இரை தேடி நாலஞ்சு ஆடுகள் வட்டத் துக்கு ஓடின. ஒருவாய் புல் மேய்ந்ததும் துள்ளித்துடித்துத் தலையுதறிக் கிறு வாணம் சுற்றின. உதட்டில் ஒட்டியிருக்கும் புல்லிணுக்குகளைத் துப்பித் தீர்த்தும் வாதையடங்கவில்லை. கம்மாய்க்கு விரண்டோடித் தண்ணீர் குடித்தன. வலி கூடியது. உதடு வீங்கி வாணீர் வடிந்தது. மேய்ச்சலில் கவனமில்லாமல் மெய் மறந்து நின்றன.

பயல்கள் பதறிப்போனார்கள். ஆடுகளைப் பாம்பு கொத்தியிருக்குமோ. தேள் கொட்டியிருக்குமோ. இல்லை குளவியா. ஒரே சமயத்தில் அத்தனை ஆடுகளுக்குமா. அதும் வாயில்தானா. மற்ற இடங்களில் மேயும்போது சும்மாதானே இருந்தன. புல்வட்டத்தில் வாய்வைத்ததுந்தானே இப்படி. வேறென்னமோ நடந்திருக்கிறது.

வட்டத்தில் எட்டு வைக்காமல் சுற்றிவந்து தேடினார்கள். ஒண்ணும் தட்டுப்படவில்லை. புல்தரையின் மெதுமெதுப்பு உள்ளே கூப்பிட்டது. உட்கார்ந்து பார்க்கக் குண்டிக்கு ஆசை. ரெண்டு வட்டத்திலும் உட்கார்ந்தார்கள். கொஞ்ச நேரத்தில் கூப்பாடு கேட்டது.

''அய்யய்யோ வேகுதே. காந்துதே. ஓடுங்கலே. ஓடுங்கலே.''

சாமியாடியபடி தலைதெறிக்க ஓடினார்கள். எல்லாருடைய குண்டியிலும் தீப்பற்றி எரிந்தது. கம்மா நீரில் விழுந்து தீயை அமர்த்தினார்கள். அதுக்குள் குண்டியும் கோவணமும் வெந்துவிட்டன. தாங்காத வலி. துண்டுத் துணியைக் கிழித்துப் புதுக் கோவணம் கட்டிக்கொண்டார்கள்.

''வாங்கலே தப்பிச்சுப் போயிருவொம்.''

ஆடுகளைத் திரட்டி விரட்டினார்கள். ஓடைக்குள் இறங்கும்போது கூனப்பனைப் பொந்திலிருந்து நீண்ட ஊளைச்சத்தங் கேட்டது.

''மக்கோவ்...''

உடனே ஆடுகளும் பயல்களும் போன வேகத்தில் மயானத்துக்குப் பின்னடித்துவிட்டார்கள். ஆடுகள் அங்கங்கே படுத்துக்கொண்டன. பயல்கள் உட்கார முடியாமல் பனை நிழலில் ஒருச்சாய்த்துக் கிடந்தார்கள்.

கூனப்பனைப் பொந்து இரைந்தது.

''பாண்டியோவ்...''

நேரப்பனை உச்சியில் ஒரு ஓலை மேலுங்கீழுமாக அசைந்தாடியது. அங்கிருந்து ஒரு குரல் கூப்பிட்டது.

''சித்தப்போவ்...''

பயல்கள் அண்ணாந்து பார்த்தபடி பயந்துபோய்ப் படுத்திருந்தார்கள். வலி முனக்கத்தை பயம் அமுக்கிவிட்டது. நேரப்பனையிலிருந்து அதே இரைச்சல்.

''சித்தப்போவ்...''

கூனப்பனைப் பொந்தில் எரியும் கொள்ளியாக ஒரு உருவம் எட்டிப் பார்த்தது.

''பாண்டியோவ்...''

''போறேன்...''

''பெறகு வாறேன்...''

நேரப்பனை ஓலையிலிருந்து ஒரு கால் மின்னல்கொடிபோல் நீண்டுநீண்டு போய்க் கம்மாக் கரையோரம் விளாமரத்தின் மேல் இறங்கியது. அவ்வளவுதான். ஒரே எட்டில் தாண்டி அந்த மரத்துக்குப் போய்விட்டது. ஆகாயத்தை முட்டும் உருவம். கண்ணுக்குள் அடங்காத தீப்பிழம்பாக எரிந்தது.

கூனப்பனை உருவம் பிதுங்கி வெளியேறிக் கீழே உற்றுப் பார்த்தது. நாலு பெரிய கங்குக் கண்கள். ஒரு சாயலுக்கு வாட்டசாட்டமான காட்டுப்பூனை

போல் தெரிந்தது. வைரவசாமியின் சாட்டை வால். இச்சியிலைக் காது. சதுர வாய். ஒரே அளவில் நாலு கால். விரல்களில்லாமல் சின்ன வட்டச் சுளகுப் பாதம். உடம்பெங்கும் நெருப்பு தகதகத்து எரிந்தது.

பனையில் சறுக்கடித்துத் தரைக்கு வந்து நிமிர்ந்து நின்றது. இப்போது முன் கால் கையாகி மனுச உருவமாகிவிட்டது. பயல்களைச் சுற்றி ஓடி வாலால் அடித்து விளையாடியது.

''கொலகொலயா நொங்குதான். குண்டியில கங்குதான்.''

காலுங்கையும் தூக்கி வால் தாங்கியில் தவிப்பாறியது. பிறகு பாதிப் பனை வரை ஏறி வாலால் சுற்றி வளைத்துச் சொகமாகச் சாய்ந்துகொண்டு கீழே பார்த்தது. ஆட்டுக் கயிற்று முக்குணிபோல் தலை எந்த வசத்துக்கும் திருகியது.

''பயந்துட்டீகளா மக்கா.''

பயல்கள் மிரண்டு முழித்தார்கள். பூனை உருவம் உட்கார்ந்த வாக்கில் சறுக்கி கால் பனைக்கு இறங்கியது.

''பயப்பட வேணாம். ஒண்ணும் செய்ய மாட்டென்.''

அவர்களுக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

''நீ ஆரு.''

''நொண்டி முனி.''

''அந்தப் பனையிலருந்து போனதாரு.''

''கருத்த முனி... நீங்கெல்லாம் பஞ்சத்துக்குப் பெறகு பெறந்த புள்ளீக போலருக்கு. அதான் அடையாளந் தெரியல. குண்டியும் கோவணமும் வெந்துருச்சோ. வலிக்குதோ.''

''ரெம்ப வலிக்குது. உக்கார முடியல. அதான் சாஞ்சு கெடக்கொம். ஆடுகளுக்கு வாயி வெந்துருச்சு.''

''என்ன நடந்தது.''

''அந்தா பச்சையாத் தெரியிதே ரெண்டு மேடு. அதுல ஆடு மேஞ்சது. நாங்க ஆசையா உக்காந்தொம்.''

''அப்படிச் சொல்லு. அங்க ஆரும் போகப்புடாது. ஊருச் சனங்க கிட்ட வர மாட்டாக.''

''எங்களுக்குத் தெரியாதே.''

''ஒண்ணு கருத்தையன் கரடு. இனியொண்ணு நொண்டியன் தெரடு.''

''அதுமட்டும் ஏன் ரெம்பக் குளுமையாருக்கு.''

''அப்படித்தான். எந்தக் காலத்துலயும் ஒரு துரும்புகூட வாடாது. அதப் போல மேற்க ஒரு மேடு தெரியிது பாரு.''

''ஆமா.''

''அது வீரம்மா வீடு.''

''அப்படியா.''

''ஒங்களுக்குக் கருத்தையனத் தெரியுமா.''

''தெரியாது.''

''கருத்தையன் கெணறு தெரியுமா.''

''தெரியும். அதச் சுத்தி ஆடுமேப்பொம். வெளாம்பழம் புடுங்கிச் சுட்டுத் திம்பொம்.''

''நொண்டியனத் தெரியுமா.''

''தெரியாது.''

''நொண்டியன் கெணறு.''

''நல்லாத் தெரியும். அது பொம்பளப்புள்ளீக குளிக்கிற கெணறு. எப்பயாச்சும் நாங்க வுழுந்துவுழுந்து குளிப்பொம்.''

''அந்த நொண்டியன் நாந்தான் மக்கா. ஒங்களுக்கு அப்பச்சி.''

''நொண்டியப்பச்சி... நொண்டியப்பச்சி...''

''கருத்தமுனி பேரு கருத்தையன். ஒங்க பெரிப்பன்.''

''கருத்தையப்பன்... கருத்தையப்பன்...''

''கருத்தையன் எப்பேர்ப்பட்ட ஆளு தெரியுமா. பெரிய சண்டூராக்கும். பேரக் கேட்டாலே சுத்துப்பட்டியெல்லாம் நடுங்கும். நம்மூரக் கொள்ளையடிச்சுக் கொடுமப்படுத்துன பெயகள ஓடஓட வெரட்டியடிச்சவன். அவங்க ஊருக்கே போயித் தைரியமாக் கொள்ளையடிச்சான். நொண்டியப்பச்சிதான் அவனுக்குக் கூட்டாளி. கூட நாலஞ்சு பேரச் சேத்துக்கிட்டு காட்டுக்குள்ள ஒரு குடும்பமாக் குடியிருந்தொம்.''

''எதுக்கு.''

''எதிரிகளச் சமாளிக்கணுமில்ல.. கருத்தையன் பொண்டாட்டி பேரு வீரம்மா. தங்கமான மனுசி. ஆண்டியப்பச்சி மகதான். அவ சின்ன வயசிலயே தவறிப்போயிட்டா. அந்த வேதனையக் கருத்தையனால தாங்க முடியல. இடிஞ்சுபோயிட்டான். அந்தச் சமயத்துல எதிரிககிட்ட எக்குத்தப்பா ஒத்தியில சிக்கிக்கிட்டான். சாரயத்தக் குடுத்துச் சாச்சு கண்டங்கண்டமா வெட்டிப் பொட்டணங்கெட்டி வெளா மரத்துக் கெணத்துக்குள்ள போட்டுட்டாங்க. சடலத்த அள்ளீட்டு வந்து இந்த மயானத்துல வச்சு எரிச்சொம். அதோட எங்க சண்டூருத் தனமெல்லாம் போச்சு. அவரவரு ஊரப் பாத்துப் போயிட்டொம்.''

''பெறகு.''

''கருத்தையன் இல்லாம எனக்கு எல்லாமே வெறுத்துப்போச்சு. ஏருக்காலு மாதிரி அவனுக்கு வெறச்ச ஒடம்பு. அளவாத்தான் பேசுவான். எல்லாம் காத்தோட போச்சு. காட்டுக் குடும்பம் கலஞ்சு வீட்டுக்குள்ள மொடங்கி நொண்டியாகிப்போன வேதன. எனக்கு மகனப் பறிகுடுத்த மாதிரியே இருந்தது. சித்தப்பா சித்தப்பான்னு எம்மேல அப்படிப் பாசமாருப்பான். அவனுக்கு என்னமும் ஆயிட்டா பதிலுக்கு எடுத்துச்செய்ய நாதியில்லையேன்னு ஒருநா எங்கிட்டத் தற்செயலாச் சொன்னது நெஞ்ச அறுத்துக்கிட்டே இருந்தது. அவனுக்குப் புள்ளையில்ல. சித்தப்பன் இருக்கன்யா. சும்மா வுட மாட்டன்னு நானும் ஒரே வெறியில இருந்தென். அப்பப்ப அருவாளத் தீட்டிப் பதம் பாத்துக்கிருவென். வேல்கத்தி கம்புல ஏறாம ஒறைக்குள்ளயே காத்துக்கெடந்தது.

கொஞ்சக் காலத்துலயே கொதிப்புக் கொறஞ்சிருச்சு. ஊரடைக்க பெரியம்ம வெளையாடி அனயம் உசிரக் கூட்டிக்கிருச்சு. தாயி என்னயவும் வுட்டுவைக்கல. மொகம் முழுக்க முத்த வாரிப்போட்டு ரெண்டு முழியவும் வாங்கிக்கிருச்சு. குருடனாயிட்டென். இருட்டும் பகலும் ஒண்ணாயிருச்சு. முந்தியெல்லாம் ராத்திரி நேரம் மலங்காட்ல மல்லாக்கப் படுத்துக்கிட்டு ஆகாசத்துல பண்ணபண்ணையா

மொளச்சுக்கெடக்கிற வெள்ளிக் கூட்டங்கள வேடிக்க பாப்பென். பகல்ல காட்டுக்குள்ள நடக்கிற வேடிக்கையும் வெளையாட்டும் கொஞ்சமா. அத்தனையும் மூடிக்கிருச்சு. அருவாளத் தீட்ட முடியல. கத்திக்கம்பு கால்நடைக்குத் தொணையாயிருச்சு. எல்லாமே இருண்டுபோன பெழப்பு.

பெழப்பு சுருண்டுக்கிட்டாலும் நான் அரண்டுபோகல. காடெல்லாம் திரிஞ்ச கோணக்காலு நமஞ்சு மரத்துப்போச்சு. அப்பயும் தைரியமாத்தான் இருந்தென். கொஞ்ச நாள்ல மனசுக்குப் பார்வ கெடச்ச மாதிரி உள்ளுக்குள்ள ஒரு வெளிச்சம். தெம்பு வந்துருச்சு. சரி இதவுந்தான் பாப்பமேன்னு வைராக்கியமா இருந்தென். வீட்லயும் வெளியிலயும் நடக்கிற சங்கதிக புடிபட்டுப் புது மனுசனாயிட்டென்.''

''புது அப்பச்சி.''

''கண்ணு உறுத்தாம தூந்துபோன கெணறு மாதிரி எப்பயும் சொகமா மூடிக் கெடந்தது. திருணையில உக்காந்துக்கிட்டு எதவும் தெளிவாப் பாக்க முடிஞ்சது. கொட்டாரம் கொல்லப்பறத்துக்குப் போகணுமா ஊருக்கெணத்துல குளிக்கணுமா எல்லா எடத்துக்கும் இத்தன எட்டுன்னு கணக்கு வச்சுக்கிருவென். காதுல வுழுகிற சத்தத்த வச்சு எடத்த அடையாளம் கண்டுபுடுச்சிருவென். மக்கிப்போன சாணி வாடையடிச்சா அது குப்பமேடு. கைவெரலுக்கு எல்லாப் பொருளும் அடையாளம் தெரியும்.

பொழுது இருட்டீருச்சுன்னா வீட்டுக்குள்ள திருணையில மொடக்கீருவென். மேல்பக்கம் காடியில கெடக்கிற ரெண்டு மாடுதான் ராத்திரிக்குத் தொண. அதுகள நெனச்சா கூடவே கருத்தையன் நெனப்பும் வரும். அவன் வாங்கிக் குடுத்த தாச்சே. அதுகளக் கவனிச்சுக்கிட்டுருந்தாலே ஒறக்கம் தானா வரும். காடி காலியா யிட்டா கூளங்கடிக்கிறது நின்னு காடிப் பலகைய நொரண்டும். எந்நேரமானாலும் படப்புல கூளம்புடிங்கீட்டு வந்து போடச் சொல்லுவென். கூளத்துல மண்ணு ருந்தா மாடு செருமும். வாயத் தொறக்காமக் கனச்சா தண்ணிகாட்டணும். மோத்தரமும் சாணியும் கலந்த வாடையடிச்சா சாணியள்ளிக் கோமியச் சட்டியக் காலிபண்ணணும். மாடு சாணிபோடுறத வச்சே நல்ல சாணியா கழிச்சலான்னு தெரிஞ்சுக்கிறலாம். அது தூணுலயோ சொவருலயோ முட்டி கொம்ப ஒரசப் புடாது. ஒடனே கொம்பு சீவிக் குளுப்பாட்டணும். சாணித்தரையில வழுக்குனா லாடங்கெட்டணும்.

ஒவ்வொரு சமயம் மருமகக்காரி மறந்துபோயி ஊறத்தாழியில எச்சுத் தண்ணிய ஊத்திருவா. எனக்குத் தெரிஞ்சுபோகும். என்ன காரியம் பண்றத்தா. மாடு லச்சிமியாக்கும். எச்சுத் தண்ணிய ஊத்துறது பாவந்தாயின்னு சத்தம்போடுவென்.''

''மாட்டுக்கார அப்பச்சி.''

''கோழி முட்டையிடுறதுக்குக் கேருனா குஞ்சுக எரைக்கும் தண்ணிக்கும் கரஞ்சா வெளிய பெராந்தப் பாத்துக் கோழி கெக்கரிச்சா குஞ்சுக கடவுப் பக்கம் போயிட்டா கூப்புட்டுச் சொல்லுவென். களத்துல தவசம் காயப்போட்டா வண்டிக்கடியில உக்காந்து காவலுருப்பென். பக்கத்துல கல்லுப் பெறக்கிப் போட்டாப் போதும். அருவங்கேட்டு இன்ன உருப்படின்னு தெரிஞ்சு குறிவச்சு எறிவென்.

அடுத்த வீட்டு நாயோ ஆடோ வீட்டுக்குள்ள மொழைய முடியாது. வேத்தாளு அலுக்கங்கூடத் தெரிஞ்சிரும். பொம்பளைக இடுப்புல கொடம் கொண்டு

போகயில தண்ணி தளும்புனா மனசுக்கு ஒருமாதிரியிருக்கும். நெறகொடம் தளும்பப்புடாது தாயி. நெதானமாப் போன்னு புத்தி சொல்லுவென். வீட்டுக்கு முன்னால கோட்டேரு கீச்சிக்கிட்டுப் போனா மகன அவசரப்படுத்துவென். வெதப்பு நேரத்துல ஒறங்கப்புடாது. நெலத்தக் கிண்டணும்னு சொல்லி வெத வித்துக்களப் பக்குவஞ்செஞ்சு குடுத்தனுப்புவென். இப்பச் சொல்லுங்க நான் கண்ணு தெரியாற அப்பச்சியா.''

''நல்ல அப்பச்சி.''

''பொங்கலு பூச நேரம் மாவுப்பண்டம் குடுத்தாத் திங்க மாட்டென். கொல்லைக்கு எளக்கமாயிரும். அடிக்கடி ஆளத் தேடணும். நெல்லுச் சோறு வெறுத்துப்போச்சு. கேப்பக்களி மட்டும் பிரியமாச் சாப்புட்டுக்கிருவென். கருத் தையங்கூட இருக்கையில ஆசப்பட்ட பண்டமெல்லாம் கெடைக்கும். அது ஒரு காலம்.

எம் பேரன் பெரியவனாகி எங்கூட சரிபேச்சுப் போடுவான். பேரு கருத்த முத்து. அவனத் தெரியுமா.''

''தெரியும். எண்ணைக்காச்சும் எங்ககூட ஆடுமேய்க்க வருவான்.''

''அவன அய்யா கருத்தப்பாண்டின்னு கூப்பிடுவென். அதுல ஒரு சந்தோசம். கம்பப் புடிச்சுக் கொல்லைக்குக் கூட்டீட்டுப் போவான். கிட்டருந்து கோழி வெரட்டுவான். குண்டி தொடைக்கிறதுக்கு வழுக்கக் கல்லாப் பெறக்கிக் குடுப் பான். சொறட்டக் கல்லுட்டுத் தொடச்சா வலிக்கும். மழ நேரத்துல ஒலப்பாயிக் கொங்காணி போட்டுக்கிட்டு பழைய வட்டச் சொளகுக்கு நடுவுல கம்பு குத்திக் கைப்புடியாக்கி அப்பச்சிக்குக் கொடப்புடிப்பான். அதனால மழைக்கு அஞ்சி தொக்கம்வைக்காமச் செலாக்கியமாப் பாரம் எறக்கலாம்.

பேரன் இருக்கயில குளிப்புக்குக் கவலையில்ல. அவன் முதுகு தேச்சுவுட்டா சொங்குவங்கெல்லாம் போயிப் பெடச்செடுத்த மாதிரி இருக்கும். ஒறக்கம் சொக்கும். ரெண்டு பேரும் அன்னியோன்னியமாப் பேச்சுப்பழக்கம் போடு வொம். நான் பழைய வீரதீரத்த எடுத்து வுடுவென். அப்பெல்லாம் எளவட்ட மாயிருவென்.

பேரனுக்கு அப்பப்பக் கத சொல்லணும். கொல்லைக்கிருக்கயில குளிக்கயில எந்த எடத்துலயும் கத ஓடும். வேல அது பாட்டுக்கு நடக்கும்.''

நொண்டி முனி வால்சுற்றை அவுத்துக்கொண்டு பனைமரத்தின் கழுத்துவரை ஏறிப் பின்கால்களால் மட்டையைப் பிடித்துக்கொண்டு தலைகீழாகத் தொங்கியது. மரத்தூர்வரை வால் ஊஞ்சலாடி விளையாட்டுக் காட்டியது. பயல்கள் கைய சைத்துக் கூப்பிட்டார்கள்.

''குண்டிவலி வேகுதே
நொண்டிமுனி கீழவா.''

நொண்டிமுனி பழையபடி தூருக்கு வந்து சார்மானத்தில் இருந்துகொண்டது.

''வந்துட்டென் வந்துட்டென்.''

''கத வேணும் கத வேணும்.''

''சொல்லட்டுமா.''

பயல்கள் மறுபக்கம் சாய்ந்துகொண்டார்கள்.

''எங்க அப்பச்சின்னா அப்பச்சிதான்.''

''ஒரு நா உச்சி மதியம். வெயிலு தீயாக் கொளுத்துது. நாவறண்டு பேச் செழும்பல. மலங்காட்ல தண்ணிக்கெங்க போறது. கொளங்குட்டையெல்லாம் வத்தி வறண்டு கெடக்குது. கெணறு தேடி அடிவாரத்துக்கு எறங்குறென்.

காட்டு ஓடக் கரையில பெரிய நவாமரம். தவிப்பாறுறதுக்கு மரத்து எணல்ல ஒதுங்குறென். கொப்புக் கொழையெல்லாம் பச்சிக உக்காந்துக்கிட்டு காச்சாம் பூச்சான்னு கூப்பாடு போடுது. நவாப்பழத்துக்குத்தான் அந்தச் சண்ட. அதுக தின்னது பாதி கீழ வுழுந்தது பாதி. நான் ஆவலா கீழ கெடக்கிற பழத்தப் பெறக்கி மண்ண ஊதிஊதி வாயில போட்டு நமட்றென். தாகம் தணிஞ்ச மாதிரி இருக்குது. தொவப்பு ருசி சொக்கவும் மரத்தடியில உக்காருறென். கம்பு மரத்துமேல சாத்தி யிருக்கு.

ஏறிட்டுப் பாத்தா வடக்க கொஞ்சத் தூரத்துல ஒரு உருவம் வாறது மங் கலாத் தெரியிது. அது பொம்பள. முழுசா முக்காடு போட்டுக்கிட்டு நடந்து வருது. இந்த வேனாவெயில்ல ஒத்தியில வருதே அதும் மலங்காட்டுக்குள்ள பயமில் லாமன்னு எனக்கு வாதிப்பு. அது பாரு வழியில போகாம நேரா என்னயப் பாத்து வருது. எனக்குக் கெதக்கலு சொல்ல முடியாது.

அவ மரத்தடிக்கு வந்ததே சரின்னு எங்கிட்டக் கேப்பா.

ஆட்டுக்காரா மாட்டுக்காரா என் வீட்டுக்காரனப் பாத்தயா.

எனக்கு ஒண்ணும் ஓடல. முன்னப்பின்ன தெரியாறவ இப்படிக் கேக்காளே. இவ புருசன ஆருக்குத் தெரியும். பேந்தப்பேந்த முழிக்கென். எங் கம்பப் பாத்து நான் ஆடுமாடு மேய்க்கிறவன்னு நெனச்சிட்டா போலருக்கு.''

''அப்படித்தான் இருக்கும்.''

''இடுப்புலருக்கிற கஞ்சிக் கலயத்த எறக்கி வச்சிட்டு எம் பக்கத்துல ஆந்தனே சோந்தனேன்னு உக்காந்து முக்காட்ட வெலக்கி மொகத்தத் தொடச்சுக்கிறா. பணியாரக் கண்ணு. ஓலக் கொழக்கட்ட மூக்கு. பனங்காக் கொண்ட. காது புடிக் காமப் பாம்படம். கொஞ்ச வயசு. செதுக்கி வச்ச செலையா இருக்கா. அப்பேருப் பட்ட பொம்பளைய நான் பாத்ததே இல்ல.

கொஞ்ச நேரத்துக்குப் பெறகுதான் பேச்சே எழும்புது. நீ ஆரு தாயின்னு திக்கித்திக்கிக் கேக்கென். நெறகம்மா ஒடஞ்ச மாதிரி அவ அழுதுகிட்டே தன்னோட கதையச் சொல்றா...''

''அந்தப் பொம்பள ஆராம்.''

''அத ஏன் கேக்கீக. பெழப்பப் பறிகுடுத்துட்டுப் பேகொண்டலையிற மனுசி.''

''எதுக்கு அலையணும்.''

''பெத்தவுக பெறந்தவுகன்னு எந்த நாதியும் இல்லாற பொண்ணு. கலியாணப் பருவம். ஆரும் விரும்பிக் கேட்டு வாற மாதிரி தெரியல. அது பெரிய ஔச்சலு. கரிசக்காட்ல ஒழவடிச்சுக்கிட்டுருந்த ஒரு எளவட்டத்த தற்செயலாப் பாத்துருக்கா. அவங்கிட்டப் பேசணும்னு தோணியிருக்கு. கூச்சமில்லாமப் போயிப் பேச்சுக் குடுத்துருக்கா. அவனுக்கு இவளப் புடிச்சுப்போச்சு. ஒழவ நிறுத்திப் போட்டுட்டு ஓடமரத்து எணல்ல உக்காந்து பேசி ஒரு முடிவுக்கு வந்துட்டாக.''

''எப்படி.''

''ரெண்டு பேரும் கலியாணம் முடிச்சிக்கிறதுன்னு.''

''அந்தப் பொம்பள பாவம். எத்தன நாளைக்குத்தான் தனியா இருப்பா.''

''அவனும் ஒரே மனசா இருந்தான். வீட்ல ஆரு சொல்லியும் கேக்கல. இவளவே முடிச்சுக்கிட்டான். அவுக பாட்டுக்குச் சந்தோசமா இருந்தாக. அவன் காட்டு வேலைக்குப் போனா இவ மதியக் கஞ்சி கொண்டுபோயிக் குடுப்பா. ஒரொரு நாளைக்கு ரெண்டு பேரும் சேந்து சாப்பிடுவாக. அதுக்குள்ள பொழுது சாஞ்சிரும்.

ஒரு நா கஞ்சி கொண்டுவந்து குடுத்த ஒடனயே கால்ல வென்னிய ஊத்துன மாதிரி வீட்ல வேல கெடக்குதுன்னு அவசர அவசரமாத் திரும்பீட்டா. அவனுக்கு ஆச்சரியம். இதென்ன புதுசாருக்கு. ஒருநாளும் இப்படிப் போனதில்லையே. எணல்ல ஒரு ஒறக்கம் போட்டுட்டுப் போறதுதான வழக்கம். ஒருவேள அவசர வேல இருக்கும்னு நெனச்சுக்கிட்டான். எதும் தடுத்துச் சொல்லல.

இந்தக் கத நாலஞ்சு நாளா தொடந்து நடந்தது. அவனுக்கு மனசில லேசாச் சந்தேகந்தட்ட ஆரம்பிச்சிருச்சு. அப்படி என்னதான் வேல வச்சிருக்கா அதவுந் தான் பாத்துருவமேன்னு முடிவு செஞ்சிட்டான். இவ போனப் பெறகு அவக்அவக்னு கஞ்சி குடிச்சிட்டு அவனும் வீட்டுக்குப் போனான்.

வீட்டுக் கதவு சன்னமாச் சாத்தியிருக்குது. அதத் தள்ளிக்கிட்டு உள்ள அருவ மில்லாம எட்டிப் பாக்கான். பொண்டாட்டியக் காணும். வேற ஒரு பொம்பள நடுவீட்ல காலகட்டி தலவிரிகோலமா உக்காந்துக்கிட்ருக்கு. தலமுடி மூஞ்சி முது கெல்லாம் மறச்சுக்கிட்டு சீனிக் கொடி மாதிரி தரையில படந்து கெடக்குது. கால் லயும் கையிலயும் வண்டிக் குச்சளவுக்கு நீளநீளமா வெரலு. அதுல பாதி நகம். நகத்த வச்சுத் தலைய வறட்வறட்னு சொறிஞ்சு முடிய உலுக்குறா. கருவண்டு கருவண்டா பேனு உதுந்து ஓடுது. அதப் பெறக்கிப் பெறக்கித் திங்கா. பெறக்க முடியாம ஒரு செரங்கைக்குக் கூட்டியள்ளி வாயில போட்டு மொக்குறா. அப் பயும் அவ மொகத்தப் பாக்க முடியல. தலையில கூடாரம் போட்ட முடி வெலகல.

ஆரும் வாறாகளான்னு அண்ணாந்து பாக்கா. எதுக்க அவன் கல்லுக்குத்தியா நிக்கான். அவ கொஞ்ச நேரம் தடுமாறி பெறகு சமாளிச்சுக்கிட்டே அதுக்குள்ள வேல முடிஞ்சிருச்சான்னு கேக்கா. கொண்டைய முடிஞ்சுக்கிட்டு அச்சலத்தியா இருந்துச்சு. அதான் பேனு பாத்துக்கிட்ருக்கன்னு ஒருமாதிரியாச் சிரிக்கா. அந்தச் சிரிப்பப் பாக்கணுமே. சோளத்தட்டப் பருப்ப எத்துங்குத்துமா நட்டிவச்ச மாதிரி நீட்டநீட்டமாப் பல்லு. நல்லா அரபடாற பேனு அரஉசிரும் கொறஉசிருமா அடி ஒதட்ல ஒட்டிக்கிட்ருக்குது.

அவன் விருலியத்துப் போயி அலறியடிச்சு ஓட்டம்புடிச்சிட்டான். ஓடி மலமேலருந்த ஒரு சாமியாரு கால்ல போயி வுழுந்தான். என்ன சங்கதின்னு அவரு கண்ணாலயே கேட்டாரு. இப்படியிப்படின்னு நடந்த கதையச் சொன்னான். அவரு சிரிச்சுக்கிட்டாரு. அட மனுசா அதான் ஓம் பொண்டாட்டியோட நெச உருவம். இத்தன நாளா பேயோட எப்படித்தான் குடும்பம் நடத்துனயோன்னு ஆச்சரியமாக் கேட்டாரு.''

''அய்யோ அது பேயா.''

''பேயேதான். என்ன நடந்துச்சு தெரியுமா.''

''என்ன.''

''அவ கலியாணம் முடிக்கிற வயசுலயே செத்துப்போயி பேயாத் திரிஞ்சவ. சாதாரணப் பொண்ணப்போல குடும்பம் நடத்தணும்னு திடுதும்னு ஆச வந்துருச்சு. அவுக சாமியிட்டப் போயிக் கண்ணக் கசக்கியிருக்கா. சாமி எரக்கப்பட்டு வரங்குடுத்துச்சு.''

''எப்படி.''

''சாதாரணப் பொம்பளயா மாறிக் கலியாணங்காச்சி முடிச்சுக் குடும்பம் நடத்தலாம். பேயிப் பெழப்ப மறந்துறணும். அங்கிட்டும் இங்கிட்டுமாத் தாவீட்டுத் திரிஞ்சா அம்புட்டுத்தான். உண்டான பெழப்பும் போயிரும்னு எச்சரிக்கயாச் சொல்லியனுப்புச்சு.

அவ ஆசப்படியே லச்சணமான பொம்பளயா மாறி அவனக் கைப்புடிச்சுக் குடும்பம் நடத்திவந்தா. ஆனாலும் பழைய நெனப்புப் போகல. பேயாருந்தா எங்கயும் பறந்துபோகலாம். ஆடலாம் பாடலாம். கண்டது கழியதத் திங்கலாம். கட்டுப்பாடே கெடையாது. இது அப்படியில்லையே. வீட்டுக்குள்ளயே கெட்டிக் கெடந்த மாதிரி இருந்துச்சு. தலய வம்பாடுபட்டு அள்ளி முடிஞ்சுக்கிட்டு சீலைய வரிஞ்சு கெட்டிக்கிட்டு ஒரே அச்சலத்தி. என்னருந்தாலும் பேய்ப் பெழப்புக் காகுமான்னு அப்பப்ப ஆச தலதூக்குச்சு. அத அடக்கியே வச்சிருந்தா. ஒடம்பு அரிப்புத் தாங்காம ஒரு நா வீட்டுக்கு ஓடிவந்து பேயா மாறீட்டா. கொஞ்ச நேரம் சொகமா இருந்துட்டுப் பெறகு பொண்ணா மாறிக்கிறது. இப்படியிருக்கையில தான் புருசக்காரன் பாத்துக்கிட்டான்.''

''புருசன் எங்க போனான்.''

''மலையேறிப் போனவந்தான். மறுபடி வீட்டுப் பக்கம் தலவச்சுப் படுக்கல. பொண்டாட்டி அவங்கிட்ட அண்ட முடியாறபடி சாமியாரு மந்தரம் போட்டுக் கட்டுப்படுத்தீட்டாரு. அந்தத் தைரியத்துல எங்கயோ பெறப்புட்டுப் போயிட் டான். செத்தானா பெழச்சானா. ஆருக்குத் தெரியும்.''

''பொண்டாட்டி என்ன செஞ்சா.''

''அது பெரிய பாதரவு. பேயிகளோட போயிறலாம்னா சேத்துக்கிறாதுக. பொம்பளையாருந்து ஊருச்சனங்களோட வாழவும் முடியாது. அவளக் கண் டாலே ஒதுங்கி ஓடுவாக. என்ன செய்றது. செஞ்சுக்கிட்ட பாவத்துக்கு அனுபவிச் சுத்தான் ஆகணும். எப்படியும் புருசன் வந்துருவாங்கிற நம்பிக்கையில தேடிக் கிட்டே அலஞ்சா. கஞ்சிக் கலயத்தச் சொமந்துக்கிட்டு காடுகரையெல்லாம் திரியிறது. ஆடுமாடு மேய்க்கிறவன் ஆரு கண்ணுல தட்டுப்பட்டாலும் ஆட்டுக் காரா மாட்டுக்காரா என் வீட்டுக்காரனப் பாத்தயான்னு ஆவலாக் கேக்கிறது. அவங்களும் பொண்ணு மனச ஏன் நோகடிக்கணும்னு நெனச்சு அந்தா இருக்கான் இந்தா இருக்கான்னு ஆறுதலாச் சொல்லியனுப்புறது. அவளும் அத நம்பி தேடித் தேடிப் போறது. அதுக்குள்ள பொழுது சாஞ்சிரும். ஆந்துபோயி வீடு வந்து சேருவா. வீட்டுக்குள்ள விடியவிடிய ஒப்பாரி கேக்கும். பாவப்பட்ட பெழப்பு.''

''சாப்பாட்டுக்கு என்ன செஞ்சா.''

''மாசமெல்லாம் வெறகு பெறக்கி வித்துத்தான் சீவனம் நடந்துச்சு.''

''ரெம்பப் பாவம்.''

''அவ தன்னோட கதையச் சொல்லி முடிச்சிட்டுக் கடைசியில மறக்காம எங்கிட்டக் கேக்கா.

ஆட்டுக்காரா மாட்டுக்காரா என் வீட்டுக்காரனப் பாத்தயா.

ஒன்னயவும் தெரியாது ஒம் புருசனவும் தெரியாதுன்னு சொன்னா அவ மனசு என்ன பாடுபடும். அந்தாருக்கான்னு தெக்காமக் கைகாட்டீட்டு வடக்காம நடைய வுட்டுட்டென்.''

''ஏமாந்துபோவா.''

''கொஞ்சத் தூரமாச்சும் நம்பிக்கையோட போவாளே... அதுக்குப் பெறகு அவளப் பாக்கணும்னு தவுதாயப்பட்டென். தட்டுப்படவேயில்ல. தெம்பாருக் காளோ இல்ல உசிர மாச்சுக்கிட்டாளோ.''

நொண்டி முனி மறுபடியும் உச்சிப்பனைக்கு ஏறி கருக்கு மட்டையில் சவாரி வைத்து ஆட்டம் போட்டது. பயல்கள் கெஞ்சினார்கள்.

''எறங்கிவா. எறங்கிவா.''

அது தரையில் குதித்து அட்ணக்கால் போட்டு உட்கார்ந்து பனையில் சாய்ந்துகொண்டது.

''கததான் சொல்லி முடிச்சிட்டனே.''

''நீ இங்க வந்த கதையச் சொல்லலயே.''

''அதக் கேக்கீகளா. எனக்குக் கண்ணுபோச்சா. பேரன் தொணையிலதான் பெழப்பு நடந்தது. மனசிலருந்த தெம்பு ஒடம்புல இல்ல. காலு தவங்கீருச்சு. நட மாட்டம் கொறஞ்சு மொடமாயிட்டென். மூணு வேளச் சாப்பாடு ஒரு வேளைக் குச் சுருங்கீருச்சு. பேச்சு அடங்கீருச்சு. கண்ணுக்குள்ள என்னேரமும் கருத்தையன் குடியிருந்தான். அவனோட பேசி மனச ஆத்திக்கிருவென். வீட்டுக்குள்ள தேடித் தொழாவி நீளமா ஒரு கவுறு சம்பாரிச்சுப் பத்தரமா வச்சுக்கிட்டென்.''

''கவுறு எதுக்கு.''

''சும்மாதான்... ஒரு நா ராத்திரி பேரனக் கூப்புட்டு கிட்ட இருத்திக் கருத்தப் பாண்டி கருத்தப்பாண்டின்னு ஆச தீரத் தடவி ஒறங்க வச்சென். எனக்கு ஒறக்கம் புடிக்கல. ஊரடங்குனப் பெறகு கவுற எடுத்து மடியில சொருவிக்கிட்டென்.''

''கவுறு எதுக்கு.''

''சும்மாதான்... வீட்டுக்குள்ள ஆளருவமில்ல. எந்திரிச்சு நடமாடி தட புடன்னு வுழுந்துக்கிட்டா வம்புன்னு தவந்துதவந்து வீட்டுக்கு வெளிய வந்தென். வெளிச் சொவரு ஓரமாவே தவந்து வீட்டுக்குப் பின்னால போயிட்டென்.''

''அங்க என்ன வேல.''

''சும்மாதான்... அங்கருந்து தெக்கமாப் போகயில ஒரு கெணறு தட்டுப்பட் டுச்சு. அது ஊருக்கெணறு. அதவும் தாண்டி தெக்க தவந்தென். ஓடக்கர வந்தது. அதுலருந்து மேற்காம கரத் தொணயிலயே போனெனென். வாக மரத்து நெத்து காத்துக்குச் சலசலக்கிற சத்தங்கேட்டது. அத அடையாளம் வச்சுப் போனா ஒவருக்காட்டுக் கெணறு வந்துச்சு.''

‘‘அதுல அந்நேரம் குளிக்கிறதுக்கா.’’

‘‘சும்மாதான்... கமலக்கல்லக் கண்டுபுடிச்சு கெணத்து மொகப்புல உக்காந்துக்கிட்டென். சின்னக் கல்லெடுத்து எறிஞ்செசன். தண்ணி நெறையாக் கெடந்தது. கவுற மடியிலருந்து எடுத்து ரெண்டு கரண்டக் கால்லயும் கெட்டி மிச்சத்தக் கழுத்துல சுத்தி முடிச்சுப்போட்டு அப்படியே கெணத்துக்குள்ள குப்பற வுழுந்துட்டென். நீச்சடிக்க முடியாம மூச்சுத் தெணறி கத முடிஞ்சுபோச்சு.’’

‘‘சும்மாதான்னு சொன்னது இதுக்குத்தானா.’’

‘‘பேரன் அழுதழுது கண்ணு வீங்கிப்போச்சு. நான் கட்டையில வெந்து கருத்தையங்கிட்டப் போயிட்டென். அவன எரிச்ச எடம் கருத்தையன் கரடா யிருச்சு. நான் எரிஞ்ச எடம் நொண்டியன் கரடு.’’

‘‘அதனாலதான் அந்தப் பேரா.’’

‘‘ஓவருக்காட்டுக் கெணத்துக்கு நொண்டியன் கெணறுன்னு பேராயிப் போச்சு. அது நல்ல கெணறு. கொமருக குளிச்சுக் கும்மாளம் போடுவாக. நான் அதுகளப் பதற வைக்க மாட்டென். அதுகளுக்கு நான் சேக்காளியாக்கும். எந் தோளுமேல படுத்துக்கிட்டு எத்தனயோ புள்ளீக நீச்சுப் பழகியிருக்காக.’’

‘‘நாங்க குளிக்கையில மட்டும் ஏன் வரல.’’

‘‘நீங்க ஆம்பளப் புள்ளீக. பொட்டப் புள்ளீக பாவமில்லையா.’’

‘‘ஆமாமா.’’

‘‘கெணறு முழுக்க எம் பேருதான் ஓச்சமிடும். ஒரு பொண்ணு தண்ணியக் கொப்புளிச்சுக்கிட்டே பாட்டுப் படிச்சு மத்ததுகளப் பயமுறுத்துவா.

அந்தா வாறாண்டி - நொண்டியன்
இந்தா வாறாண்டி
ஆழத்துல காலப்புடிச்சு
அமுக்கப் போறாண்டி

மத்தப் புள்ளீக எளக்காரமாப் படிப்பாக.

எந்தா வாறாண்டி- நொண்டியன்
எந்தா வாறாண்டி
எங்களோட வெளையாட
வந்தா வாறாண்டி

முங்கிமுங்கி என்னயத் தேடுவாக. கெடைக்க மாட்டென். கொஞ்சம் தவிப் பாறுனதும் பாட்டுக் கேக்கும்.

போனாப் போறாண்டி - நொண்டியன்
போனாப் போறாண்டி
பொழுதிருக்க நாளஇங்க
தானா வாறாண்டி

அடடா நொண்டியன் கெணறும்சரி கலியாண வீடும்சரி. அவன் சாகல. கருத்தையனும் சாக மாட்டான்.’’

‘‘முனியா இருக்கீக.’’

‘‘குண்டி இனியும் வலிக்குதா.’’

‘‘வலி தாங்க முடியல.’’

''அப்படின்னா வீரம்மா வீட்டுக்கு ஓடி புல்லுமேல உக்காந்து பெரளுங்க. கொஞ்சம் புல்லுப் புடுங்கி ஆட்டுக்குக் குடுங்க. புண்ணு ஆறிப்போகும்.''

அப்படியே செய்தார்கள். புண்ணெல்லாம் மறைந்து வலி போன இடம் தெரியவில்லை. ஆடுகள் பழையபடி சுதாரிப்பில் மேய்ந்தன. அவர்கள் சந்தோசத்தில் கிறுவாணம் சுற்றி விளையாடினார்கள்.

''வீரம்மா வீடு.''

''தாயம்மா வீடு.''

உயரே வட்டமிட்டுப் பறந்த நொண்டிமுனியின் பெரிய ஊளை அதிர்ந்தது. உடனே கருத்தையன் கிணற்றிலிருந்து குரல் வந்தது.

''சித்தப்போவ்...''

நொண்டி முனியும் கூப்பிட்டது.

''பாண்டியோவ்... ''

'' வா வா...''

''வாறேன்...''

நொண்டி முனி கம்மாக்கரை தாண்டி மறையும்வரை பார்த்துக்கொண்டிருந்த பயல்கள் ஆடிப்பாடியபடி ஆடுகளை வீட்டுக்கு விரட்டினார்கள்.

''அந்தா போறாண்டா - நொண்டியன்
இந்தா போறாண்டா
பளபளன்னு எரிஞ்சுக்கிட்டு
பறந்து போறாண்டா...''

## 10. சிறகு முற்றி...

''கஞ்சி போடுங்கஞ்ஞா...''

முற்றத்திலிருந்து வீட்டுக்குள் வந்த குரல் தூணில் சாய்ந்திருந்த ஆண்டியின் காதில் அரிச்சலாக விழுந்தது. கந்தூக்கத்தை உதறிக்கொண்டு வாசலைப் பார்த்தான். யாரது மாரி பெண்டாட்டி அனந்திமாதிரி தெரிகிறதே. முகத்தில் சந்தோசம் பொங்க தட்டுத்தடுமாறி வாசலுக்கு வந்தான். அனந்தியைக் காணுமே. அதுக்குள் எங்கே போய்விட்டாள்.

மூணாவது வீட்டிலிருந்து இளங்குரல் கேட்டது.

''கஞ்சி போடுங்கஞ்ஞா...''

அவன் ஏமாற்றத்தில் முனங்கினான்.

''அடடா போயிட்டாளே.''

மனசு எங்கேயோ லாந்திக்கொண்டிருந்தது. வாசல் நிலையில் சாய்ந்துவிட்டான். எதிர்வீட்டுக்காரியுடன் செத்த நேரம் பாடுபழமை பேசிவிட்டு வந்த வேலாயி அவனை உசுப்பினாள்.

''என்னப்பச்சி இங்க வந்து நின்னுக்கிட்டு. என்னமும் வேணுமா.''

'அதான பாத்தென். அனந்தி கண்ணமூடி எம்புட்டு நாளாச்சு. நான் ஒரு கோட்டி.'

அவன் மட்டியைக் கடித்து மழுப்பினான்.

''ஒண்ணுமில்லத்தா. வகுறு கடிச்ச மாதிரி இருந்துச்சு. ஒன்னயத் தேடிப்பாத்தென். பசியாறிக்கிட்டா எஞ் செவனேன்னு படுத்து மொடக்கலாமில்லையா. கொட்டாரத்துக்குப் போயிருந்தயா.''

''இல்லையே. வண்ணாத்திக்குச் சோறு போட்டுட்டு வாறென்.''

''அப்படியா... ஒரு சத்தங் கேட்ட மாதிரி இருந்துச்சே. ஆராம்.''

''மருதன் மக சின்னனந்தி.''

''அட பெயமகளே. அம்புட்டுப் பொம்பளையாயிட்டாளா.''

அவன் தலையாட்டியபடி வீட்டுக்குள் போய் மறுபடியும் தூணில் சாய்ந்து கொண்டான். வேலாயி கேட்டாள்.

''சோறு வச்சுத் தரட்டுமாப்பச்சி.''

''வேணாந்த்தா. நல்லாப் பசிக்கட்டும். பெறகு சாப்பிட்டுக்கிறென்.''

அவன் கண்கள் கந்தூக்கத்துக்குத் தயாராயின. மனசுக்குள் வெள்ளாவி புகைய ஆரம்பித்தது.

மருதனுக்குக் கவலையில்லை. குடும்பம் கம்மாக் கரைப் புங்கமரமாகப் படர்ந்துவிட்டது. கழுதை மேய்த்துக்கொண்டும் எதெதுக்கோ கண்ணிவைத்துக் கொண்டும் திரிந்த சின்னமாரியும் சாலமுத்தும் பார்த்திருக்க எளவட்டமாகிவிட்டார்கள். வெளுப்புத்துறையில் எவ்வளவு அழுக்குத் துணி கிடந்தாலும் கொஞ்ச நேரத்தில் கரைச் சரிவில் காய்ந்துகொண்டிருக்கும். காயவைப்பதற்குள் மாடத்திக்குக் குறுக்கு ஒடிந்துவிடும்.

மருதனின் நிதானமும் துணி சுழட்டும் லாவகமும் பயல்களுக்கு இல்லை. சொகமாகப் பாடும் பழக்கம் கிடையாது. ஒரே கழுதைக் கனைப்புத்தான். மாடத்தி மருதனையே பார்ப்பாள். ஈரத்துணியை உதறிக்கொண்டே அவன் கேட்பான்.

''என்ன அப்படிப் பாக்க.''

''ஒண்ணுமில்ல.''

''வேலையப் பாரு.''

பார்வை பத்தாத நிலையிலும் ஒருநாள் பூசரமரத் தோட்டத்துக்கு வந்து காதுகொடுத்துக் காத்திருந்த ஆண்டிக்குச் சப்பென்று போய்விட்டது. வைது கொண்டே வீட்டுக்கு வந்தான்.

சாய்ந்தரம் மருதன் மாட்டினான்.

''வக்காளி கம்மாயில வெளுக்கிறது நீயா இல்ல கழுதையா.''

''ரெண்டுமே இல்ல. எம் பெயக.''

''கிழிஞ்சது போ. நீ கழுதைக்குச் செரச்சுக்கிட்டுருந்தயாக்கும்... ஏல செம் பட்டத் தாயிளி ஒம் பாட்டெல்லாம் எங்கடா போச்சு.''

''கம்மாக் கரம்பைக்குள்ள பெதஞ்சுபோச்சு.''

''வெளுப்புத்தொற அருளுக்கெட்டுப் போயிருமேடா.''

''போயிருச்சே.''

''பூசரமரத் தோட்டத்த மறந்துற வேண்டியதுதான்.''

''எனக்குப் பாட்டே மறந்துருச்சு.''

''அப்படிச் சொல்லாதடா கூனப்பெயலே. எத மறந்தாலும் அத மட்டும் மறக்காத.''

''வயசாயிப்போச்சு. பெயகளுக்கு அதுமேல பிரியமில்ல.''

''ஆந்துபோன கெழடன் மாதிரி சலிச்சுக்கிறயே.''

ரெண்டு பேருக்கும் வருத்தம். எதையெதையோ தேடிக்கொண்டிருந்தார்கள்.

சின்னனந்தி விடியக்காலக் காளானாகப் பூத்து பெரியமனுசியாகிவிட்டாள். இடுப்புத்துணியை ஏற்றிப் பிடித்துக்கொண்டு வெள்ளாவியோரம் தனியாகக் குந்தி விளையாடிய சின்னவள்தானா. முற்றத்தில் அப்பத்தாளுடன் சரிசண்டை போட்டவளா. மாடத்தியால் நம்ப முடியவில்லை.

சின்னனந்தி சில சமயம் ஊருக்குள் சோறெடுக்கப் போவாள். பெரிய மனுசி மாதிரி இடுப்பில் பானையை இடுக்கிக்கொண்டு தோரணையாக நடந்து போவதை மெனக்கிட்டு வேடிக்கை பார்ப்பார்கள். வேலாயிக்கு அவளை ரெம்பப் பிடிக்கும். கேட்கும்போது சோறு போட மாட்டாள்.

''ஏக்கி சோத்துப் பான அடுப்புல கெடக்குது. கடைசியில வந்துட்டுப் போ.''

இந்த நொண்டிச்சாக்கு எதுக்கென்று ரெண்டு பேருக்குமே தெரியும். அப்படியென்றால் பேச வேண்டியது ரெம்ப இருக்கிறதென்று அர்த்தம்.

''சரி தாயி.''

''ஏவ்ளே மறக்காம வரணும்.''

வேலை முடிந்து ரெண்டு பேரும் பேச்சுப்போட்டால் லேசுக்குள் தீராது. அவர்களைத் தாண்டிப் போகும் பெண்கள் சாடை பேசுவார்கள்.

''சித்துக்கருப்பியும் சின்னனந்தியும் நாத்துனாமாரு மாதிரியில்ல பேச்சுப் போடுறாக.''

''அதானம்மா. பழைய ஒறவு வுடுமா.''

வேலாயி தின்பண்டங்கூடக் கொடுத்தனுப்புவாள். சின்னனந்திக்கு மடியும் கனத்துவிடும்.

மாடத்திக்குப் பிள்ளைகளைப் பார்க்கும்போதெல்லாம் தலையில் சும்மாடில்லாமல் முள்கவையைச் சுமக்கும் வலி. மருதனை நச்சரிப்பாள்.

''ஊருச் சோத்தத் தின்னுட்டு கம்மாக் கரையில உருண்டா மட்டும் போதாது. புள்ளீகளுக்கு ஒரு வழியத் தேடிவுடணுமிங்கிற நெனப்பிருக்கா இல்லையா.''

முட்டியில் முகம் பதித்து உட்கார்ந்திருக்கும் மருதன் மலைப்பில் முழித்துப் பார்ப்பான்.

''நானும் அதப் பத்தித்தான் நெனச்சுக்கிட்ருக்கென்.''

''அக்கறையிருந்தாச் சரி.''

அவள் கழுதைக்குப் பக்குவம்பார்க்கப் போய்விடுவாள்.

ராக்கன் ஒரு உருப்படியான காரியஞ்செய்தான். தை மாசம் கடைசி வெள்ளிக்கு இருக்கங்குடி மாரியம்மா கோயிலுக்குப் போகிற வழியில் கரிசப் பட்டியோரம் தங்கித் தவிப்பாறும்போது கம்மாய்க்குக் குளிக்கப் போயிருக்கிறான். அங்கே வெளுப்புத்துறையில் ஓடியாடி வேலைசெய்துகொண்டிருந்த

ஒரு பெண்ணைப் பார்த்திருக்கிறான். மனசில் ஒரு கணக்கு ஓடியிருக்கிறது. லட்சணமான பிள்ளையாயிருக்கிறதே. பேச்சுக்கொடுத்திருக்கிறான். அவள் பேர் மருதி. கரிசப்பட்டிக்காரி. ஒரே பெண். மூணு அண்ணன்.

ராக்கன் கோயிலிலிருந்து திரும்பியதும் அஞ்ஞை காதில் போட்டுவிட்டான்.

''ஏஞ்ஞஏஞ்ஞ கரிசப்பட்டியில ஒரு வண்ணாப்புள்ளையப் பாத்தென். மருதன் குடும்பத்துக்குத் தோதாருப்பான்னு தோணுச்சு.''

அப்போது கருப்பி இருந்தாள். மகன் சொன்னதை ஆண்டியிடம் தெரிவித்தாள்.

''ஏ இவனே எம்புள்ள மருதன் மகனுக்குப் பொண்ணு பாத்துட்டு வந்துருக்கான்.''

ஆண்டி மனசுக்குள் மெச்சிக்கொண்டான். ஏதேது பயலுக்குக் கூறுகணக்கு வந்துவிட்டதே.

''அப்படியா. நல்லதாப்போச்சு. நாளைக்கே மருதன வெரட்றென்.''

உடனே மருதன் கரிசப்பட்டிக்கு ஓடினான். அந்த மாசமே சின்னமாரிக்குத் துணையாக மருதி வந்துவிட்டாள். வெளுப்புக்கு ரெண்டு கை கூடியது.

வேப்பங்காட்டில் பறைக்குடிக்கென்று தனியாக வண்ணான் கிடையாது. மருதன் குடும்பந்தான் கலிங்கலில் இருந்துகொண்டே அவர்களுக்கும் தொழில் செய்துவந்தது. ஒவ்வொரு காரியத்துக்கும் எடுத்தேறிப் போகணும். பிள்ளைகள் தலையெடுக்கும்வரை அது பெரிய சங்கடமாக இருந்தது. மருதன் போய்விட்டால் கலிங்கலில் மாடத்தி கிடந்து உருண்டுகொடுப்பாள். அழுக்கெடுத்து வெள்ளை கொடுக்கும்வரை சணக்கெடுபட்டுவிடும்.

வேப்பங்காட்டுக்குத் தனியாளாகவோ கழுதை பத்திக்கொண்டோ போனால் மேகலக்குடி வழியாக நடக்க முடியாது. ஓடைக் கரையில் போனாலே நாய்க்கமாருக்கு மூக்குக்கு மேல் கோவம் வரும். வயசு வித்தியாசம் பாராமல் சிறுபுள்ளாண்டன்மார்கூட வாய் கூசாமல் பேசுவார்கள்.

''ஏலே வண்ணாச் சிறுக்கிபுள்ள ஓம் மப்பெடுக்கணுமா. பறக்குடிக்குப் போக வழி தெரியாதோ.''

கிடைத்ததை எடுத்துக்கொண்டு கைநீட்டிவிடுவார்கள். கழுதைக்கு வசமான எறி கிடைக்கும். இதுக்குப் பயந்து அவர்கள் கண்ணில் படாமல் தெற்கே ஓடை வழியாகச் சுற்றிப் பறைக்குடிக்குப் போகணும். மழை நேரம் ரெம்பத் திண்டாட்டம்.

ஒருதடவை ஓடையில் எக்கச்சக்கமாக மாட்டிக்கொண்டான். பறைக்குடியில் நல்ல நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. அதுக்கு முந்தி வெள்ளை கொடுத்தாகணும். மழை வெறித்துச் சுள்ளாப்பாக இருக்கும்போதே கொடுத்துவிட்டு வந்துவிடலாம் என்று கழுதைமேல் பொதியேற்றிக்கொண்டு கிளம்பினான். வெளுத்த துணி ஈரமாகிவிட்டால் ஒருமாதிரி புழுங்கி வாடையடிக்கும்.

தென்கரையில் நின்று பார்த்தால் ஓடையில் பரவலாக வெள்ளம் போய்க்கொண்டிருந்தது. இவ்வளவு வெள்ளத்துக்கு அப்படியென்ன மழை பெய்து

தவித்துவிட்டது. தண்ணீர் சொடியும்வரை காத்திருக்கவும் முடியாது. பொதியை இறக்கிவைத்துவிட்டுக் கழுதையை மேய விட்டுக் கொஞ்ச நேரம் மரத்தடியில் தலைசாய்ந்தால் வெள்ளம் கொஞ்சமாச்சும் குறையும். அதுக்குத் தோதில்லை. மழைக்கோப்பு அருமுறுக்கிக்கொண்டிருந்தது. துணி நனைந்துவிட்டால் காரியம் கெட்டுப்போகும்.

கழுதையை இக்கரையில் தனியாக விட்டுவிட்டுத் தலைச்சுமையாகப் பொதியைக் கொண்டுபோகலாமென்றால் அதுக்கும் பயம். ஆளைக் காணாமல் அது ஓடைக்குள் இறங்கிவிட்டால் என்னசெய்வது. பணம்பெற்ற கழுதை யாயிற்றே. தப்பித்தவறி வெள்ளாமையில் வாய்வைத்துவிட்டாலும் ஆவலாதி யாகிவிடும். மண்டைக்குடைச்சலாக இருந்தது.

வேறு வழியில்லை. கழுதையைச் சுமையுடன் நகர்த்திநகர்த்தி ஓடையைக் கடக்க வேண்டியதுதான். உள்ளே இறங்கிப் பார்த்தான். கெண்டைக்காலளவு தான் வெள்ளம் போனது. கடந்துவிடலாம். கடந்து வழக்கமான பெரும்பாதை யில் போனாலும் கரையோரமாக மறைந்துமறைந்துதான் பறைக்குடிக்குப் போகணும். ஓடை அகலமுங்கூட. மேகலக்குடிக்குக் கிழக்கே தள்ளி ஒடுக்கமான இடத்தில் இறங்கினால் லேசாகக் கடந்து நேரே பறைக்குடிக்குப் போய்விடலாம்.

நீர்ச்சுழிப்பில்லாத இடத்துக்குக் கழுதையைக் கூட்டிப்போய் பின்புற மிருந்து சன்னஞ்சன்னமாகத் தள்ளி ஓடைக்குள் இறக்கினான். அது காலை உதறி வாலாட்டி முரண்டுபிடித்தது.

''என்னம்மா இதுக்குப்போயித் தெகச்சு நிக்கயே. நான் இருக்கென். கவலைய வுடு.''

வலுக்கட்டாயமாகத் தள்ளி அவனும் வெள்ளத்துக்குள் இறங்கினான். துணைக்குத் துணையாக நகர்ந்தார்கள். துணிப்பொதி நனைந்துவிடாத எச்சரிக் கையில் மேட்டான இடம் பார்த்துக் கழுதையை வெள்ளத்தின் போக்கில் கொண்டுபோக வேண்டியிருந்தது. அப்படியும் அது நடு ஓடைக்குள் நின்று கொண்டு சண்டித்தனம் பண்ணியது. அவன் தட்டிக்கொடுத்தான்.

''வா தாயி. இன்னிக் கொஞ்ச தூரந்தான். போயிச் சேந்துறலாம்.''

அது நடக்கத் தயாராகும்போது அடுத்த எட்டு பாறைக் கிடங்குக்குள் சணக் கென்று இறங்கிவிட்டது. தடுமாற்றத்தில் தாமரிக்க முடியவில்லை. சாய்ப்பாக விழுந்துவிட்டது. எழுந்திருக்கப் பிரயாசைப்பட்டுக் கால் சோர்ந்துபோனது. வெள்ளம் உருட்டிக்கொண்டு போக ஆரம்பித்தது.

அவன் ஓடிப்போய்ப் பொதியைப் பிடித்து மல்லுக்கட்டித் தாக்காட்டிப் பார்த்தான். முடியவில்லை. சுருட்டும் வெள்ளத்தில் கழுதை கால்களையும் பொதியையும் காட்டிக்காட்டி உருண்டுகொண்டேயிருந்தது. அவன் பிடி நழுவி விட்டது. மஞ்சணத்திச் செடியை ராவிப் பிடித்துத் தாமரித்துக்கொண்டு கிழக்கே பார்த்தான். கொஞ்ச தூரத்தில் கழுதை கடைசியாக ஒரு தடவை நீருக்குமேல் தலையைத் தூக்கி அடையாளம் காட்டிவிட்டு முங்கிக்கொண்டது.

அவன் அவசரமாக ஓடையைக் கடந்தான். முழுக்க நனைந்த கோலத்தில் வெறி பிடித்ததுபோல் கத்திக்கொண்டே கழுதையைத் தேடிக் கரையோரமாக ஓடினான்.

''அய்யோ எங் கழுத போச்சே. எஞ் செல்லத்தக் காணுமே.''

ஊரைத் தாண்டித் தொலைவில் ரெண்டு பனைகளுக்கிடையில் துணிப் பொதி சிக்கி கழுதை குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்தது. வம்பாடுபட்டு இழுத்து வந்து கரைசேர்த்தான். ஒப்பேறவில்லை. துணிப்பாரத்தைப் பத்திரமாக ஒப்படைத்துவிட்டு உயிரை மாய்த்துக்கொண்டது. தலையிலடித்துக்கொண்டு அழுதான். இன்னொரு பொதியாக ஊதிப் பொருமியிருந்த அதன் வயிற்றில் முட்டிமுட்டி அழுதான். பறைக்குடிக்கு ஓடித் தடியும் மம்பட்டியும் வாங்கி வந்தான். ரெட்டைப் பனையைச் சாட்சிவைத்து ஓடைக்கரைச் சரிவில் குழி வெட்டி அடக்கம்செய்தான்.

கட்டுத்துறையில் தாயைக் காணாமல் கழுதைக்குட்டி பட்ட பாட்டை கடவுள்தான் பார்க்கணும். தேள் கொட்டிய மாதிரி நிலைகொள்ளாமல் துடித்துப் போனது. மற்ற கழுதைகளிடம் முறையிட்டது.

''எந் தாயெங்க தாயெங்க.''

சேக்காளிக்குட்டி தன் தாயிடம் சுணங்கி விளையாடுவதை ஏக்கத்துடன் பார்த்தது. இன்னொரு கழுதையைத் தாயாக்கிக்கொண்டு அந்த அரவணைப்பில் சொந்தத் தாயை மறக்க நாளானது. அதுவரை மாடத்தி குழந்தையைப் போல் கழுதைக் குட்டியைக் கவனித்துக்கொண்டாள்.

மருதனுக்கு வேப்பங்காடு என்றாலே வெறுத்துக் கிடந்தது. ஆண்டியிடம் வேதனையை ஆற்றினான்.

''இம்புட்டுக் கஸ்டப்பட்டு அந்தச் சனங்களுக்குத் தொழிலுச் செய்யணு மான்னு மனசில ஓடுது.''

''ஏண்டா இதுக்குப்போயா வருத்தப்படுற. இனியொரு கழுத வாங்கீட்டாப் போச்சு. செத்தது நோயில போச்சுன்னு நெனச்சுக்கிற வேண்டியதுதான்.''

''அப்படிப் போயிருந்தாத்தான் மனசு ஆறிப்போகுமே.''

''நான் பறிகுடுக்காற உருப்படியாடா. ஆகமான காளமாடு நாலு. எருமை யெத்தன பசுவெத்தன. வெவசாயம் நின்னாபோச்சு. நீ வெள்ளத்துல போகாமப் பெழச்சு வந்தயே அதச் சொல்லு... வேப்பங்காட்டுக்கு வெள்ள குடுக்கிற எண்ண மிருக்கா இல்லையா.''

''இரு மனசாருக்குது. நம்ம பாக்கலன்னா சுத்துப்பட்டியில வேற ஆளு இல்ல. அவரவரு தொழிலப் பாக்கவே சரியாருக்கு.''

''பறக்குடிச் சனங்க பாவம்டா. ஒரு பொங்கலு பூசைக்குக்கூட வெளுத்த துணி உடுத்த முடியாது. அடே ஒங்கப்பன் இருந்தா இந்தத் தாளக்கமே வராது. ஆலமரத்தப் போல குடும்பத்தச் சுத்துப்பட்டியெல்லாம் படர வுடணும்னு ஆசை யாச் சொல்லுவாண்டா. புள்ளீக தலையெடுத்தப் பெறகு வெசாரம் எதுக்கு. ஒருத்தன் அங்கயும் இன்னொருத்தன் இங்கயும் நின்னுக்கிற வேண்டியதுதான.''

''அப்பாவுக சொல்றதும் சரிதான். எல்லாரும் கலிங்கல்ல கூடிக்கெடந்தாக் கட்டுபடியாகணுமே.''

''சாலமுத்துப் பெயலப் பதிவா வேப்பங்காட்ல நிறுத்துடா.''

''மொதல்ல அவன அங்க அனுப்பி வெள்ள குடுக்கிறது அழுக்கெடுக்கிறது சவரஞ்செய்றதுன்னு வேல செய்யச் சொல்லி அந்தச் சனங்களோட பழக வப்பொம். அதுக்குப் பெறகு காலுக்கெட்டுப் போட்டு அங்கயே குடியமத்தீருவொம்.''

''அப்படிச் செய்யிடா.''

மாடத்தியும் அதுக்கு ஒத்துக்கொண்டாள்.

சாலமுத்து தொழிலில் கருக்கடையானவன். விரைவிலேயே வேப்பங்காட்டுக்காரனாக மாறிவிட்டான். கொஞ்ச நாள் அவனைக் காணவில்லையென்றால் கலிங்கலுக்கு ஆள் தேடிவந்துவிடும்.

''சாலமுத்து இல்லாம சனங்க மொகமெல்லாம் மயிரு காடா வளந்துருச்சு. காலாகாலத்துல அவன அனுப்பிவையி சாமி.''

மருதனுக்குச் சந்தோசம். சாலமுத்துக்கு உள்ளூர் வேலை கொடுப்பதை அறவே நிறுத்திவிட்டான்.

கலியாணச் சங்கல்பத்தில் கனிந்திருந்த சின்னனந்தியைத் தொலவட்டுக்குக் கொடுக்க அப்பனுக்கு மனசில்லை. அப்பத்தா சொன்னது அப்படியே மனசில் பதிந்திருந்தது.

''அடே பேத்தியாளத் தூரத்துல குடுத்துறாத.''

அல்லாத்திக்குக்கூட தன் பயலுக்குக் கட்டிப்போட ஆசைதான். மருதன் பக்குவமாக மறுத்துவிட்டான்.

''வேணாந்த்தா. அவ அப்பத்தா பேரச் சொல்லிக்கிறதுக்கு கிட்டத்துலயே இருக்கட்டும்.''

''அதப்பத்தியென்ன. அவ எங்க போனாலும் மகராசியா இருக்கணும்.''

அல்லாத்தி மனசாரச் சொல்லிவிட்டுப் போனாள். மருதனுக்கும் மாடத்திக்கும் அந்தக் கவலை விட்டது.

சத்திரப்பட்டி பொத்தையன் ஒரு சந்தர்ப்பத்தில் சின்னனந்தியைப் பார்த்திருக்கிறான். அதிலிருந்து அவள்மேல் ஒரே கிறுக்கு. வேலையில் பிரியமில்லாமல் ஏதாவது சாக்கில் கோணிகுளம் வெளுப்புத்துறைக்கு வந்துவிடுவான். மருதனிடமும் மாடத்தியிடமும் ரெம்ப நேரம் பேச்சுப்பழக்கம் போடுவான். மூச்சுக்கொருக்க மாமன்தான் அத்தைதான். சின்னமாரியிடம் நன்றாகப் பழகுவான். சாலமுத்தைக் கிண்டலடிப்பான். சின்னச்சின்ன வேலைகள் செய்வான். அங்கே சின்னனந்தி இருக்கும்போது சுதாரிப்புக்குச் சொல்லணுமா.

சின்னனந்திக்கும் அவன்மேல் பிரியம் வளர்ந்திருந்தது. அவன் புறப்படும் சமயம் பார்த்துக் கழுதையைத் தேடுவதுபோல் போக்குக் காட்டி ஒதுங்குவாள். அவனுக்கு அது போதும். நெருங்கிவந்து பேச்சுக்கொடுப்பான்.

''போயிட்டு இனியொரு நாளைக்கு வாறென்.''

''போறவுகள ஆரும் புடிச்சுக்கிட்டா இருக்காக.''

''புடிச்சுக்கிட்டா வேணாம்னா சொல்றாக.''

''புடிச்சு கெட்டுத்தொறையில தளஞ்சுபோட வேண்டியதுதான்.''

''தளையவே வேணாம். சும்மாவே சுத்திச்சுத்தி வருவொம்.''

''ஆசையப் பாரு.''

''அது கொஞ்சமா நஞ்சமா.''

‘‘ஆமா தெரியாமத்தான் கேக்கென். ஊருல வேலையே கெடையாதா. நொணக்நொணக்னு இங்கயே ஏன் ஓடிவரணும்.’’

‘‘இங்க பருவமா ஒரு பொட்டக்கழுத இருக்குதுன்னு சொன்னாக. வெலைக்குக் கேக்க ஆசதான். ஒங்கப்பங்கிட்டருந்து ஒருவார்த்த பிதுங்க மாட்டங்குதே.’’

‘‘வாங்குறதுக்கு வக்கிருக்குதா.’’

‘‘எங்களால ஏண்டதக் குடுப்பொம்.’’

‘‘வாங்கீட்டுப் போயி வச்சுக் காப்பாத்துவீகளா நடுக்காட்ல வுட்ருவீகளா.’’

‘‘எங்கள வுட்டுட்டு வராமருந்தாச் சரி.’’

அவள் கொஞ்சம் கோவித்துக்கொள்வாள்.

‘‘வந்தா வந்த வேலையப் பாத்துட்டுப் போகணும். அத வுட்டுட்டுக் காடே மேடேன்னு பேசிக்கிட்டு. இந்த லச்சணத்துலதான் நம்ம பெழப்பு இருக்கும்.’’

‘‘வந்த வேல முடிஞ்சிட்டா மூச்சுக்காட்டாமப் போயிருவென். தெகைய மாட்டங்குதே.’’

‘‘ஒருவேள குடுக்க மனசில்லையோ என்னமோ.’’

‘‘பொறுத்துப்பொறுத்துப் பாப்பென். குடுக்கலன்னா ராவோட ராவா வந்து அவுத்துட்டுப் போயிருவென்.’’

‘‘அண்ணன்மாரு அதுவரைக்கும் சும்மாவா இருப்பாக.’’

அவள் வெட்கத்தில் சிரிப்பை அள்ளித் தருவாள். அதை அவன் பெரிய பொதியாகச் சுமந்துகொண்டு போவான்.

ஒரு நாள் அவன் உவர்மண்ணுக்காகக் கழுதையுடன் வீட்டுக்கு வந்து விட்டான். வந்ததே சரியென்று சின்னனந்தியின் காதோரஞ்சொன்னான்.

‘‘ஒங்கப்பன் ஒவருமண்ணு குடுக்கலன்னா ஒன்னயக் கழுதமேல ஏத்தீட்டுப் போயிருவென்.’’

‘‘இங்கென்ன அளந்துபோயா கெடக்காக.’’

அவள் தலையைக் கொணட்டிக்கொண்டு வீட்டுக்குள் ஓடிவிட்டாள். போனவள் சும்மா இருக்கவில்லை. கஞ்சிப் பானையில் ஒரே சோறாகப் பிரித் தெடுத்துப் பக்குவமாகக் கருவாடு மிளகாய் வதக்கி அவனுக்குப் பசியமர்த்தினாள். அவன் உவர்மண்ணள்ளிப் பொதியேற்றிச் சந்தோசமாகக் கிளம்பினான்.

அவன் லட்சணமானவன். அருவிவிட்ட விளார் மாதிரி வாட்டசாட்டமாக இருப்பான். செவ்வாளை. நல்ல குணம். எந்நேரமும் சிரிப்புத்தான். அவனை எல் லாருக்கும் பிடித்துப்போயிற்று. மாடத்தி மகளின் மனசைப் புரிந்துகொண்டாள்.

மருதன் ஆண்டியிடம் இதைப் பற்றிப் பேசினான். அவன் தாட்டோட்டம் சொல்லவில்லை.

‘‘அவுக ரெண்டு பேரும் நேந்துக்கிட்ட பெறகு நம்ம குறுக்க நிக்கப்புடாது. சந்தோசமாச் செஞ்சுவையிங்க. நல்ல பெயலாத்தான் இருக்கான். அண்ணைக்குப் பாத்தென்.’’

கொஞ்ச நாள்தான். பொத்தையன் ஒத்தைக் காலில் நின்று சின்னனந்தியைக் கொத்திக்கொண்டு போய்விட்டான். மாடத்திக்கு இத்தனை நாளும் பெரிய னந்தி துணைக்கிருந்ததுபோல் மனசு நிறைந்திருந்தது. மகள் போனதும் எதையோ பறிகொடுத்த வருத்தம். மருமகளைப் பார்த்து ஆறுதலடைந்தாள்.

கலிங்கலில் சின்னமாரியும் மருதியும் பெரிய வண்ணார்களாகிவிட்டார்கள். மருதனுக்கும் மாடத்திக்கும் வேலை குறைந்தது. வீட்டையும் வெள்ளாவியையும் பழுதுபார்த்தார்கள். வேப்பங்காட்டு வேலைகளைச் சாலமுத்து கவனித்துக் கொண்டான்.

மருதி பெண் குழந்தை பெற்றாள். பேர் அய்யம்மா. மாடத்திக்கு அப்பத்தாளாகிவிட்ட சந்தோசம். குழந்தையை உறிஞ்சிக் குடித்தாள். நிறைய வயசாகி விட்ட நினைப்பு மருதனுக்கு. அந்தக் கிழட்டுச் சொகத்தைத் தந்த பேத்தியாளை அசராமல் தூக்கிச் சுமந்தான். அவளைக் கீழே இறக்கி விளையாட விடுவதற்குள் மருதி ரெண்டாவதாக மாடனைப் பெற்றுக்கொடுத்துவிட்டாள்.

சாலமுத்துக்குத் தெற்கே கப்பிகுளத்தில் சக்கம்மாளைப் பெண்ணெடுத்தார்கள். கலியாணம் முடித்த கையோடு அவர்களை மருதன் வேப்பங்காட்டில் குடியமர்த்தி ரெண்டு கழுதைகளைக் கொடுத்தனுப்பினான். பறைக்குடிக்குத் தனி வண்ணான் வந்த சந்தோசத்தில் சனங்கள் முழிப்பாகத் திரிந்தார்கள்.

சத்திரப்பட்டியில் சின்னனந்தி பொத்தையனுக்கு ரெண்டு பிள்ளை பெற்றாள். மூத்தவன் மருதப்பன். மருதன் ஞாபகமாக அப்பத்தா வைத்த பேர். அடுத்தது அழகி. அப்பனைப் போல் மூக்கும் முழியுமானவள். பொத்தையன் ஊர் வேலையை ஒத்தையாளாக நின்று சமாளித்தான். வீட்டுக்கு ஒரே பிள்ளை. அப்பன் தவறிப் போய் நாளாயிற்று. ஆத்தா மட்டும் அத்தகுத்தம் பார்த்துக்கொண்டு நடமாடினாள்.

சாலமுத்தும் சக்கம்மாளும் வேப்பங்காட்டில் வேர்பிடித்துவிட்டார்கள். எப்போதாவது கலிங்கலுக்கு வந்து போனால் உண்டு. அவர்களுக்கு ஒரே பெண் பூவாயி. அவளைப் பார்ப்பதற்காகவே மாடத்தி கலிங்கலுக்கு வரச் சொல்வாள்.

ஆண்டி மருதனிடம் நிறைந்த மனசுடன் சொன்னான்.

''அடே கம்மாயில மீனுகுஞ்சி பொரிச்சுப் பெருகீருச்சு போலருக்கு. இனிமே ஓம்பாடு கவலையில்ல.''

கம்மாயில் கலிங்கலோரம் சின்னமாரியின் வெளுப்புச் சத்தம் கேட்கும். கீழமடையில் சாலமுத்து தாளம்போடுவான். ரெண்டு பேர் கழுதைகளும் சேர்ந்து மேயும். சாய்ந்தரம் பொதியேற்றும்போது பிரிந்துபோகும். துணி காயப் போடும்போது பெண்கள் பேசிக்கொள்வார்கள். புங்க மரத்தடியில் சிறிசுகளின் விளையாட்டு புழுதி கிளப்பும். மதியம் எல்லாரும் கூடி உட்கார்ந்து சாப்பிடுவார்கள். அப்போதுதான் ஊர்ப்பட்ட பேச்சு நடக்கும்.

கோடை நேரம் பொத்தையன் குடும்பத்தைத் தெற்கு மடையடியில் பார்க்கலாம். சத்திரப்பட்டிக் குளம் சடுதியில் வற்றிவிடும். கோணிகுளத்தை விட்டால் வேறு வழியில்லை. வேப்பங்காட்டு ஊருணியில் தண்ணீர் வற்றிவிட்டால் மேகல வண்ணார்களும் கோணிகுளத்துக்கு வந்துவிடுவார்கள். அவர்களுக்குக் கீழ மடையைக் கொடுத்துவிட்டு அண்ணனுக்குப் பக்கமாகச் சாலமுத்து கலிங் கலுக்கு வந்துவிடுவான்.

கம்மா முழுக்கத் தன் குடும்பத்தின் வெளுப்புத் தாளம் நிறைந்திருப்பதை நினைத்தால் மருதனுக்குப் பெருமையாக இருக்கும். புங்க மர நிழலில் சொகமாகச் சாய்ந்துவிடுவான். ஆனாலும் மனசோரம் வருத்தம் உறுத்தும்.

''பெயக வெளுப்புப் பாட்ட மறந்துட்டாங்களே.''

பொங்கல் பூசைக்கு மூணு குடும்பங்களும் கலிங்கலூருணியில் ஒண்ணு கூடும். மாடத்திக்குச் சிறிசுகளை மேய்க்கவே சரியாக இருக்கும். இந்த நேரம் பெரியனந்தி இருந்தால் எப்படியிருக்குமென்று நினைத்துப் பார்ப்பாள். அழுகை வந்துவிடும். மருதன் கேட்பான்.

''என்ன புள்ளீகள வச்சுக்கிட்டுக் கண்ணக் கசக்கீட்ருக்க.''

''ஒண்ணுமில்ல. கெட்டுத்தொறையில உக்காந்து சாணியள்ளும்போது கழுத வாலு மயிரு ராவீருச்சு.''

''இல்லையே...''

''நான் பொய்யா சொல்றென். வேலையப் பாத்துட்டுப் போ.''

அவள் கழுதைப்பக்கம் திரும்பிக்கொள்வாள்.

## படலம் 7

### 1. பிஞ்சுப் பழம்

எங்கும் நிரக்கச் சிதறிய கரம்பையிருட்டு. ஊரோய்ந்து உறங்குகிறது. ராக் குருவிகளின் கூக்குரலில்லை. ஊதக்காற்றின் உரசலுக்கு உறக்கம் கலையும் மரங் களின் ஏச்சும்பேச்சும் ஓங்கி இரைந்து தேய்கிறது.

வானத்தில் கொத்துக்கொத்தாக வெள்ளிப் பழக் குலைகள் தொங்குகின்றன. மேகத்துக்குள் ஒளிந்திருக்கும் குறும்பு நிலா போகிற போக்கில் ஒரு குலையை உலுக்கவும் நோன்பிருந்து காம்பு கனிந்த ஒரு பழம் உதிர்ந்து பூமிக்கு உருண்டு வருகிறது. கீழ்த்திசைக் கோயிலுக்கு நேரே இறங்கிக் கோபுரத்தைச் சுற்றிவிட்டுப் பிராமணக்குடியில் விழுகிறது. இருட்டு போன இடம் தெரியவில்லை. பிராமணக் குடியே விளக்காகி வெளிச்சத்தில் கண் கூசுகிறது.

கொஞ்ச நேர நிசப்தம். குழலூதும் குழந்தையழுகை தாயின் தாலாட்டில் குழறியடங்குகிறது. வெளிச்சக் குளத்தில் குளித்துக் கரையேறிப் பளிச்சென்று முகங்காட்டும் பாலகன் தளிராக வருகிறான். கோவணக் குதிரைமேல் ஏறிவரும் கோலம். திருநீற்று நெற்றி சிரிக்கிறது.

முன்னால் தாமதித்துக் காத்திருக்கும் தகப்பனின் கை பிந்திவிட்ட பிள்ளை யின் விரல்களைப் பிணைத்துக்கொள்கிறது. மரமும் செடியுமாகக் கோயிலுக்கு நடக்கிறார்கள்.

கோயில் வாசலில் குதூகலிக்கும் மணிக்கதவு தாழ் திறந்து தலைவணங்கி அவர்களை வாங்கிக்கொள்கிறது. உள்ளே பிராகாரத்தைக் கடந்தால் விரிந்து கிடக்கும் தீர்த்தக் குளம். ததும்பி நிற்கும் தண்ணீர் சந்தன வெயிலுக்கு வெதும்பி நெளிகிறது.

தகப்பன் குளக்கரையில் பிள்ளையை நிறுத்திவிட்டுப் படிகளில் மெல்ல இறங்குகிறார். இடுப்பளவு நீரில் நின்றுகொண்டு திரும்பிப்பார்க்கிறார். பிள்ளை

கோபுரச் சிலைகளுடன் கூடிக் கும்மாளமடித்துக்கொண்டிருக்கிறான். தகப்பன் ஈசனின் நாமத்தை உச்சரித்தபடி ஆழத்தில் முங்குகிறார். கனத்த அமைதி. நீருக்குள் மனசு மந்திரத்தை ஓதுகிறது.

சிலைகளுடன் விளையாடித் தீர்க்கும் பிள்ளையின் பார்வை அலையாடும் குளத்தை வட்டமிடுகிறது. தகப்பனைக் காணவில்லை. தனிமையச்சத்தில் தவிக்கிறான். தன்னையறியாமல் அழுகை பொங்கி அலறுகிறது.

அழுகுரல் உயரஉயரப் போய் மேலோகத்தை அசைக்கிறது. கைலாயத்தில் தவம் கலையும் சிவன் ஓரக்கண்ணால் பார்வதியைப் பார்க்கிறார். அவள் பூலோகத்தைக் காட்டுகிறாள். இருவரும் தீர்த்தக் குளத்துக்கு இறங்குகிறார்கள்.

அவர்களைப் பார்த்தும் பிள்ளையின் அழுகை ஓயவில்லை. சிவன் சிறுவனைச் சாந்தப்படுத்த பார்வதி கொஞ்சம் தள்ளிப் போய் பொன் கிண்ணத்தில் தாய்ப்பால் பீச்சுகிறாள். ஆற்றிரைச்சல் அடங்கிக் கிண்ணக்கரை பொங்குகிறது. கொண்டு வந்து பிள்ளைக்கு ஊட்டுகிறாள். அவன் பசி தீர்ந்த மயக்கத்தில் சிரிக்கிறான். பார்வதியும் சிவனும் பறந்து மறைகிறார்கள். பிள்ளை பேதலித்து நிற்கிறான்.

சடங்கு சாத்திரம் முடிந்து தகப்பன் படியேறுகிறார். கரையில் நடந்த கதை பக்திப் பரவசத்தில் அவரை எட்டவில்லை. சமர்த்துப் பிள்ளையைக் கனிவுடன் பார்க்கிறார். அவன் கடைவாயில் பால் வடிகிறது. அதிர்ந்துபோகிறார். பிள்ளைக்கு என்ன ஆயிற்று. பால் எப்படி வந்தது. பசியில் கையேந்தியிருப்பானோ. இல்லை பசுமடியில் குடித்திருப்பானோ. பசுவைக் காணவில்லையே. ஐயம் வலுக்கிறது.

''பாலெங்கு உண்டாய் பாலகனே.''

அவன் திருநீறாகச் சிரிக்கிறான்.

''கூறு மகனே கூறு.''

சின்னவன் சிரிப்பு சிந்திக்கொண்டேயிருக்கிறது.

''சினத்தைக் கிளராதே. செய்ததென்ன செப்பிவிடு.''

சிறுவன் இன்னும் சிரிக்கிறான். பெரியவர் கண்கள் சிவக்கின்றன. கோலெடுத்து அடிக்கிறார்.

''சிரித்து மறைக்காதே. உண்மையை உரைத்துவிடு.''

அவன் அழவில்லை. சிரித்த முகம் தணலாகத் தகிக்கிறது. கணீரென்று குரலெடுத்துப் பாட ஆரம்பிக்கிறான்.

''தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளங் கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்து ஏத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே.''

ஓங்கிய கை நடுங்க தகப்பன் மெல்லமெல்ல மெய்மறக்கிறார். பிள்ளையின் மென்குரல் அவர் மனசில் சிவன் கோலத்தைச் சித்திரமாக வரைகிறது. அங்கமெங்கும் சுடுகாட்டுச் சுடலைச் சாம்பல் பூசிய அழகுத் திருமேனி. தலைமுடியில் சூடிய பிறைநிலா காய்கிறது. காதில் தோடு குலுங்க இடப்புறம் பாதி உடம்பைப் பங்குபோட்டுக்கொண்டு பார்வதி நிற்கிறாள். மனசைக் கொள்ளையிட்டு மயக்கும் அழகு.

சிவனையே நேரில் காணும் பரவசம். பிள்ளைமேல் பாசம் மறைந்து பக்தி அரும்புகிறது. அச்சத்துடன் அரவணைத்துக்கொள்கிறார். கண்கள் பனிக்கின்றன. வார்த்தை பிடிபடாமல் நாவு துடிக்கிறது. பாலகனைத் தோளில் தூக்கிச் சுமந்த படி நடக்கிறார். கால்களில் பக்தி வேர் முழுசாக முறுக்கேறியிருக்கிறது.

தகப்பன் பிள்ளையை ஊர்ஊராகச் சுமந்து போகிறார். அவன் கோயில் களில் கைத்தாளம் போட்டுச் சொகமாகப் பாடுகிறான். என்னென்னமோ ராகம்.

ஒரு ஊரில் ஆண்டவனைப் போற்றி அவன் ஆனந்தக் கூத்தாடும்போது அஞ் செழுத்து மந்திரம் எழுதிய பொன் தாளம் அந்தரத்தில் ஆடி வருகிறது. ஏந்தி யணைத்துக்கொள்கிறான். கைத்தாளம் மாறி பொன் தாளம் சேரும்போது புதுப் பாடல் பொங்கிப் பிரவகிக்கிறது. தகப்பனின் தோளில் அமர்ந்துகொண்டு தாயின் ஊரிலும் தாளம் ரீங்கரிக்கிறது.

யாழிசை கலந்து ஈசனின் பெருமைகளை எந்நாளும் பாடும் ஒரு பழுத்த அடியார். ஈடில்லா இசையை யாழில் மீட்டும் இணையற்ற கலைஞர். அந்த யாழிசை குடிக்க பிள்ளைக்குப் பெருந்தாகம். தன் பாடலுடன் யாழும் சேர்ந்தால் எவ்வளவு இனிமையாக இருக்கும். மனசு ஏங்குகிறது. பாலகனின் பாடலுக்கு யாழிசைக்கப் பெரியவருக்கும் பேராவல். இருவரது விருப்பமும் நிறைவேறு கிறது. பிள்ளை பாட பெரியவர் யாழ்மீட்ட அந்த இசைச் சங்கமத்தில் அடி யவர்கள் கரைந்து கிறங்குகிறார்கள். அடி தொடரும் கூட்டம் அதிகரித்துக் கொண்டே போகிறது.

அடுத்த ஊர் வாசல். மகரத் தோரணங்கள் குலுங்குகின்றன. மங்கல வாத் தியங்கள் முழங்குகின்றன. அடியவரின் ஆரவாரம் பிள்ளையை வரவேற்கிறது.

''அரகர... அரகர...''

கண்ணீர் மல்கக் கூட்டம் தலைக்கு மேல் கைகூப்பிப் பின்தொடர பிள்ளை கோயிலுக்குள் பிரவேசித்து யாழின் துணையுடன் கோலாகலமாகப் பாடுகிறான். மறுபடியும் ஆயிரமாயிரம் 'அரகர' வானில் எதிரொலிக்கிறது.

தகப்பனின் தோளில் வலம்வரும் பிள்ளையின் நிலைகண்டு அடியவர் களுக்குத் தாங்கொணா வருத்தம். ஈசன் மனசு இரங்குகிறது. அந்தணர்களின் கனாவில் வந்து மாற்று ஏற்பாட்டைச் சொல்கிறார்.

''எல்லாம் ஈந்தோம். எமது கோயிலில் காண்க.''

அவர்கள் கோயிலுக்குப் போய்ப் பார்த்தால் ஆனந்த ஆச்சரியம். முத்துப் பல்லாக்கு முத்துக் குடை முத்துச் சின்னம் அத்தனையும் பிள்ளைக்காகக் காத்திருக்கின்றன. இப்போது தோள்கள் பல்லாக்கைச் சுமக்க பிள்ளையின் யாத்திரை பதிகம் பாடியபடி பல பதிகளுக்குத் தொடர்கிறது.

ஞானக் குழந்தைக்கு ஏழு வயசாகிறது. மந்திர முழக்கத்தில் அந்தணர் வாழ்த்த சுந்தரப் பிள்ளையின் மார்பில் மங்கலப் பூணூல் மாலையாகிறது. அடியவர் அடிதொட்டு வணங்கும் சின்னப் பெரியவராகிறார். அனுபவம் கனிந்த பக்திப் பிழம்பு. பிஞ்சுப் பழம். எல்லாருக்கும் செல்லமான பிள்ளை யாண்டர். தோள் வலிக்கச் சுமந்த தகப்பனாரும் கால் கடுக்க எட்ட நின்று தரிசிக்கும் ஈசனின் பிள்ளை. பெற்ற தாயின் வற்றாத ஏக்கம் ஆனந்தக் கண்ணீராக அணையுடைக்கிறது.

பிள்ளையாண்டரின் எல்லை தாண்டிய பெருமையைக் கேள்விப்பட்டு ஒரு திருநீற்றடியார் தொலைவிலிருந்து காண வருகிறார். மயிரெல்லாம் திருநீறாக நரைத்துவிட்ட பெரியவர். அவர் கடந்து வந்த இளமைக் காலம் கொடுமை யானது. சிறு வயசிலேயே தாய் தந்தையை இழந்தவர். அக்காளின் அரவணைப்பில் வளர்ந்தவர்.

அக்காளுக்கோ ஆறாத் துயரம் சுமந்த பிழைப்பு. போர்வீரனைக் கைப் பிடிக்கும் நிச்சயத்தில் பூரித்திருந்தவருக்குப் போதாத காலம். வீரன் போரில் மாண்டுவிடுகிறான். அக்கா துவண்டுபோகிறார். மாண்டவன் குடியிருந்த மனசு ஆண்டவனைத் தஞ்சமடைகிறது. நெற்றியெங்கும் சில்லென்று திருநீறு பூத் திருக்க நஞ்சுண்ட கண்டனை நெஞ்சில் நிறைத்து பிஞ்சில் வெம்பும் தம்பியைத் தனயனாக்கிக்கொள்கிறார்.

வேத மந்திரங்களைக் கற்றுக் கரையேறத் தம்பிக்குத் தணியாத ஆசை. பிராமணக் குடியில் பிறக்காததால் ஆண்டவன் அருள் கிட்டவில்லை. ஆசை வழிதேடித் தவிக்கிறது. அருகனை வணங்கும் அமணராகிவிட்டால் சாதி ஒருபோதும் தடையாக இருக்காது. வறண்டிருக்கும் மனசு தாகம் தீர மந்திரத்தை மாந்தலாம்.

ஆவல் மேலோங்குகிறது. ஆடையுரித்து அம்மணக் கோலம் தரிக்கிறார். கையைத் திருவோடாக்கி அமுது வேண்டித் தெருவோடு போகிறார்.

அமணர் ஓதும் அத்தனை வேதமும் படிப்படியாக வசப்படுகிறது. மனக் குடத்திலிருந்து மற்றவர்களுக்கு அள்ளிக் கொடுத்துத் தாகம் தணித்துக்கொண்டே நடக்கிறார். அம்மணக் கோலம் கண்டு அஞ்சியோடிப் பெண்கள் கதவடைத் தாலும் அவர் கொஞ்சமும் தளரவில்லை. இரக்கமுள்ள கைகள் திருவோட்டை நிரப்புகின்றன. மாற்றார் பலர் அவரது மதி நிறைந்த வாதில் தோற்கிறார்கள். தோற்றாரை ஏற்று மாற்று வழி காட்டி ஆற்றுப்படுத்துகிறார். காலம் அவரை அமணக் குருவின் ஆசனத்தில் அமர்த்துகிறது.

தடம் மாறிவிட்ட தம்பி தன் இடம் தேடி வர மாட்டானா என்று அக்கா ஏங்குகிறார். வழிகாட்ட வேண்டி ஈசனை மன்றாடுகிறார். நம்பிக்கை அறுந்து விடவில்லை.

தம்பிக்குச் சூலைநோய் வந்து தணலாக வாட்டுகிறது. அமண மருந்தும் மந்திரமும் தணலைப் போக்கவில்லை. குண்டிகை நீரை மந்திரித்துக் குடிக்க வைக் கிறார்கள். மயில் தோகையால் உச்சிமுதல் உள்ளங்கால்வரை வருடுகிறார்கள். நோய் மடிந்த பாடில்லை. செய்வதறியாது திகைக்கிறார்கள்.

இக்கட்டான நிலை. அக்காளைப் பார்த்து ஆறுதலடைய தம்பியின் மனசு தவிக்கிறது. சொல்லியனுப்புகிறார். அமணப் பள்ளி தேடிப் போக அக்கா விரும்ப வில்லை. தம்பியை வரவழைக்கிறார்.

காலைப் பொழுதில் கவலையும் விடிகிறது. தம்பியின் உடலில் அனலாகத் தகித்த நோயின் அறிகுறியே இல்லை. மெல்லமெல்ல வருடும் காற்றுக்கு உள்ளும் புறமும் குளிர்ந்து புல்லரிக்கிறது. புதிய மனுசராகிவிட்ட புளகாங்கிதத்தில் ஈசனைப் போற்றி ஏகாந்தமாகப் பாடுகிறார்.

அடியவருக்கு அச்சாணியாக இருந்த அமண குருவே அணிமாறிவிட்டார். அமணர்கள் ஆத்திரத்தில் புழுங்குகிறார்கள். சிறுகச்சிறுகச் சேர்த்த அடியவர் கூட்டத்தைத் தக்கவைத்தாகணுமே. சேதி ராசாவுக்குத் தெரிந்தால் நிலைமை மோசமாகிவிடும். அமணரணியைக் குடையாகக் காக்கும் அவரும் சிவன ரணிக்குப் போய்விட்டால் அவ்வளவுதான். சனங்கள் மொத்தமாக அந்தப் பக்கம் சாய்ந்துவிடுவார்கள். அமணர் பாடு திண்டாட்டம். கட்டிக்காத்த அத்தனையும் தகர்ந்து நொறுங்கிவிடும்.

அமணர்கள் அச்சக் கலக்கத்தில் ராசாவிடம் முறையிடுகிறார்கள்.

''அமணக் குரு சூலை நோயைச் சாக்காக வைத்து அக்காளைத் தேடிச் சிவன ரணிக்குப் போய்விட்டார்.''

ராசா கொதித்துப்போகிறார்.

''இது அநியாயம். என்ன செய்யலாம்.''

''துரோகமிழைத்த பாவியைத் துன்புறுத்த வேண்டும்.''

''யாரங்கே. நடித்துப் போனவனைப் பிடித்து வாருங்கள்.''

திருநீற்றடியாரைத் தேடிப் போகிறார்கள். அவர் தீர்க்கமாக இருக்கிறார்.

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்.''

வற்புறுத்தி அழைத்து வருகிறார்கள். கடுந்தண்டனை காத்திருக்கிறது. ராசா ஆணையிடுகிறார்.

''தீப்பிழம்பு கக்கும் நீற்றறைக்குள் பூட்டி வையுங்கள்.''

அவரை நெருப்பு தீண்டவில்லை. தளிராகக் குளிர்கிறது. அப்பழுக்கற்ற வீணை நாதமாகக் காயும் நிலாவாக வீசும் தென்றலாக இதமான இளவேனிலாக வண்டுகள் மொய்த்து ரீங்கரிக்கும் மலர்க்குளமாக நெஞ்சுக்குள் படரும் ஈசனின் பாத நிழலை நினைத்துப் பரவசத்தில் பாடுகிறார்.

''மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையைப் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.''

ஏழு நாளாகியும் ஈசனடியார் நீற்றறைக்குள் நித்திரைக் கோலம் மாறாமல் அமர்ந்திருக்கிறார். திறந்து பார்த்துத் திகைப்புற்றவர்கள் அவருக்கு வஞ்சகமாக நஞ்சூட்டுகிறார்கள். அவர் அதை அமுதமாக அருந்துகிறார். அப்படியும் அழிக்க முடியவில்லை. அவர் பிழைத்திருந்தால் அனைவரும் அழிவது உறுதி. ஆகவே அவரை எப்படியும் அழித்தாகணும்.

கழுத்துவரை அவரைக் குழிக்குள் புதைத்துத் தலையைத் துண்டிக்க ராசா வின் யானையை ஏவுகிறார்கள். அவர் அதுக்கும் அஞ்சாமல் அம்பலக் கூத்தனை நினைத்து யானையை எதிர்கொள்கிறார். கோவத்தில் பிளிறி வரும் களிறு அவரை வலம்வந்து வணங்கிவிட்டுத் திரும்புகிறது. அவர் அரவ மாலை அணிந்த பரமனின் துணையை எண்ணிப் பெருமையுடன் பாடுகிறார்.

அமணர்கள் விடவில்லை. அவரைக் கல்லுடன் கட்டிக் கடலில் எறியச் செய் கிறார்கள். அவரது கனிவான இசை கேட்டுக் கல்லும் தெப்பமாகி மிதக்கிறது. அலைகள் தாலாட்ட ஆழத்தைக் கடந்துவந்து அமைதியாகக் கரையேறுகிறார்.

அற்புதத்தைக் காணக் கரையில் காத்திருக்கும் அடியவர் கூட்டம் ஆரவாரிக்கிறது. அலையோசையை மிஞ்சி அதிரும் 'அரகர' ஒலிக்கிடையே அவர் நாயகனாகக் கோயிலுக்கு நடக்கிறார்.

ராசா மதி தெளிந்து மனம் மாறுகிறார். ஈசனடியார் இருக்கும் ஊர் தேடி வந்து எல்லாம் பேசி முடித்து சிவனரணியில் சேருகிறார். தலைநகரமே திருநீறு பூசிக்கொள்கிறது. அமணர்கள் அரண்டு விரண்டோடுகிறார்கள். அமணப் பள்ளி களும் பாழிகளும் அடியோடு தகர்ந்து அழிகின்றன. இடிபாட்டுக் கல்லும் தூணும் ஈசனடியார் ஊரில் வழிபாட்டுக் கோயிலாகின்றன. அமணராக இருந்த ராசா திருநீறணிந்து இரு கரங்கூப்பி ஈசனை வணங்குகிறார்.

சொல்லொணாத சோதனைகளைக் கடந்து பிள்ளையாண்டரைக் காண வரும் பெரியவருக்குப் பின்னால் பெருங்கூட்டமே திரண்டு வருகிறது. சின்னப் பெரியவரும் எண்ணற்ற அடியவருடன் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். இரு அற்புதங்களின் சந்திப்பு இன்னொரு அற்புதமாகிறது. பேரற்புதம். பெரியவர் கண்ணீர் மல்க சின்னவரின் அடி தொட்டு வணங்குகிறார்.

''அடியேனை ஆட்கொள்க.''

பிள்ளையாண்டரின் நாவு குழறுகிறது.

''ஆகாதுஆகாது அப்பனைப் போன்ற அப்பரே.''

குனிந்திருக்கும் பெரியவரைக் கனிவுடன் நிமிர்த்தி ஆரத் தழுவுகிறார். அடியவர் கூட்டம் இரு கடலாகக் கலந்து கூட்டணி சேர்ந்து ஆர்ப்பரிக்கிறது.

''அரகர... அரகர...''

பல பதிகளைப் பார்த்துப் பதிகங்கள் பாடி உலகநாதனுக்குப் பணிசெய்ய விரும்புகிறார் பிள்ளையாண்டர். யாழடியார் துணையுடன் யாத்திரை போகிறார். வழியில் திருநீலகண்டனின் சன்னதியில் தன் அருமை மகளைக் கிடத்தி அழுது மன்றாடிக்கொண்டிருக்கும் ராசாவைச் சந்திக்க நேரிடுகிறது. இத்துயரங்காணப் பொறுக்காத பிள்ளையாண்டரின் நெஞ்சு துடிக்கிறது.

''ஈதென்ன கோலம்.''

ராசா வணங்கிப் புலம்புகிறார்.

''இவள் என் செல்ல மகள். தீராத வெந்நோயில் வாடுகிறாள். புண்ணாகி விட்டது என் நெஞ்சு. ஈசன் சன்னதிக்கு எடுத்து வந்து துயர்நீக்க வேண்டுகிறேன்.''

இன்னாரென்றில்லாமல் எவரிடமும் பிச்சை கேட்கும் சங்கரனை நோக்கிப் பிள்ளையாண்டர் கேள்விக்கணை தொடுக்கிறார்.

> '' மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பு...''

உடனே கன்னிக்குப் பிணி நீங்குகிறது. களிப்பில் திளைக்கும் ராசா பிள்ளை யாண்டருக்கு இனிக்கும் விருந்தளித்துத் திணறச் செய்கிறார்.

மழைக் காலம் மறைந்து பனிக் காலம் பாய் விரிக்கிறது. கொடிய குளிர் அடியவரை வாட்டி வதைக்கிறது. பிள்ளையாண்டர் பதிகம் பாடிப் பனிச் சுரத்தை நாட்டை விட்டே விரட்டுகிறார். அனைவரும் அல்லல் அகன்ற ஆனந்தத்தில் குளிக்கிறார்கள்.

காலமாற்றத்தில் எங்கும் கதிரவனின் ஆட்சி. பிள்ளையாண்டரின் பிஞ்சுப் பாதமும் தலையும் வெம்மையில் நோகுமே என்று ஈசனுக்குக் கவலை. ஏற்பாடு செய்கிறார். பொன்னடி நோக மண்ணில் தடமிட்டு நடக்கும் பிள்ளையாண் டரின் தலைக்கு மேலே தண்ணிழல் பரவுகிறது. ஆச்சரியத்தில் அண்ணாந்து பார்க்கிறார். அந்தரத்தில் முத்துப் பந்தல் பறக்கிறது. அதைப் பற்றிப் பிடித் திருக்கும் பூத கணங்கள் ''இது ஈசன் அருள்'' என்று எதிரொலித்து மறைகின்றன. பரமனின் கருணையில் நனையும் பிள்ளையாண்டார் நிலத்தில் விழுந்து வணங்கு கிறார். உறைந்து நிற்கும் அடியவர் கைகள் பறந்து வரும் பந்தல் கால்களை விரைந்து போய்ப் பிடித்துக்கொள்கின்றன.

ஒரு நாள் பிள்ளையாண்டரின் தகப்பனார் வந்து தேவையைச் சொல்கிறார்.

''வேள்விக் காலம் நெருங்குகிறது. பொருள் வேண்டுமே.''

''அப்படியா.''

பிள்ளை சிவனைப் பாடிச் சேவிக்கிறார். சிவபூதம் ஆயிரம் பொன்கொண்ட பொன்னுலவாக் கிழியைத் தந்துவிட்டுப் போகிறது. தகப்பனார் அதைப் பெரு மகிழ்ச்சியில் பெற்றுச் செல்கிறார்.

இன்னொரு நாள். யாழடியார் பிறந்த ஊரில் பிள்ளையார் காலடி வைக் கிறார். யாழடியாருக்கு எல்லையில்லா ஆனந்தம். சுற்றத்தாரிடம் பெருமை யாகக் கூறுகிறார்.

''பிள்ளையின் பாடலுக்கு யாழிசைக்கும் பெரும்பேறு பெற்றேன்.''

சுற்றத்தார் சுருக்கென்று சொல்கிறார்கள்.

''தங்கள் யாழிசையால்தான் பிள்ளையின் பாடல்கள் சிறப்புற்றுப் பரவு கின்றன.''

யாழடியார் அதிர்ந்துபோகிறார். பிள்ளையைத் தொழுகிறார்.

''பெருமானே இவர்களைப் பொறுத்தருள்க. உலகம் உண்மையை உணர வேண்டி யாழிசைக்குள் அடங்காத இனிய பதிகம் இயற்றித் தாருங்கள்.''

பிள்ளையும் அவ்வாறே பதிகம் கொடுத்தருள்கிறார். அது யாழிசைக்குள் அடங்க மறுக்கிறது. யாழடியார் மனம் வருந்தி யாழை உடைக்க ஓங்குகிறார்.

''இதை நான் தீண்டலாகாது.''

தடுத்து நிறுத்தும் பிள்ளை ஆறுதல் கூறுகிறார்.

''சிவனளித்த திருவருளின் பெருமை இந்த யாழில் அடங்குமோ. சிந்தை யிலும் அளவுபடாதது செய்கையில் அளவுபடுமோ. இருப்பதைக் கொண்டு இயன்றளவு வாசியுங்கள்.''

மற்றொரு ஊரில் பிள்ளையார் தங்கி மகிழ்ந்திருக்கிறார். அவ்வூர்க் கோயிலுக்கு வெளியே ஒரு மடம் உண்டு. வணிகப் பெண்ணொருத்தி மாமனுடன் அவ்வழியே வருகிறாள். பொழுது இருட்டவே இருவரும் மடத்தில் தங்கு கிறார்கள். இருட்டில் மாமன் அரவந்தீண்டி மடிகிறான். இழப்பைத் தாங்காத வணிகப் பெண் தன் பிழைப்பை எண்ணி விடியவிடிய அழுது பிதற்றுகிறாள். காலையில் கோயிலைத் தொழ வரும் பிள்ளையார் அவலக் குரல் கேட்டு அருகில் சென்று அன்புடன் விசாரிக்கிறார்.

''அஞ்சாதே அபலைப் பெண்ணே. நடந்ததென்ன.''

அவள் தன் துயரக் கதையைச் சொல்லத் தொடங்குகிறாள்.

“என் அப்பனுக்கு ஏழு பெண்கள். இறந்து கிடக்கும் இவன் எங்கள் முறை மாமன். மருமகனுக்குப் பெண் கொடுப்பதாக உறுதியளித்து ஒவ்வொரு முறையும் ஏமாற்றி பெரும்பொருள் கொடுக்கும் அயலாருக்கு ஆறு பெண்களைத் திரு மணம் செய்துகொடுத்துவிட்டான் எங்கள் அப்பன். ஏழாவதாக எஞ்சியிருக்கும் எனக்கு மாமன் நிலை கண்டு மனசு பொறுக்கவில்லை. பெற்றவர்களுக்குத் தெரி யாமல் உடன்போக்காக வந்துவிட்டேன். வந்த இடத்தில் இப்படியாகிவிட்டதே.”

வாழ வழியின்றித் தவிக்கும் வணிகப் பெண்ணுக்கு இரங்கும் பிள்ளையார் இடப வாகனத்துச் சடைமுடி நாதனைத் தொழுது இடர்தீர்க்க வேண்டுகிறார். மாண்டு கிடக்கும் வணிகன் மீண்டு உயிர்பெற்று எழுகிறான். இளம்பெண் தளிர்க் கிறாள். இருவருக்கும் மணமுடித்து இனிதே அனுப்பி வைக்கிறார் பிள்ளையார்.

இடையிடையே பெரிய அடியவர் சிலர் சின்னப் பெரியவரைச் சந்தித்து உரையாடிவிட்டுப் போகிறார்கள். ஒருமுறை அப்பர் வந்து தங்குகிறார். இரு வரும் இணைந்து ஈசன் பதிகளுக்குச் செல்ல எண்ணுகிறார்கள். பெரியவர் முன்னால் நடந்தும் சின்னவர் பின்னால் சிவிகையிலுமாகப் பயணம் தொடங்கு கிறது. பதிகளில் பதிகம் பாடி வெவ்வேறு மடங்களில் தங்குகிறார்கள்.

அது மழை பொய்த்து வளங்குன்றி வறண்டுவிட்ட காலம். பஞ்சத்தில் உயிர்கள் பசியால் வாடுகின்றன. அடியவருக்கும் அல்லல் வருமோ என்று அப்பரும் பிள்ளையும் அஞ்சுகிறார்கள். அவர்கள் கனாவில் ஈசன் தோன்றி கவலையைப் போக்குகிறார். காலையில் கோயிலை அடைகிறார்கள். அங்கே கீழ்ப்பீடத்திலும் மேல்பீடத்திலும் ஈசன் அருளிய இரு பொன் காசுகள் மின்னுகின்றன. படிக்காசு அடியவர் கூட்டத்தின் பசியைத் தீர்க்கிறது.

இருவரும் ஒரு கோயிலுக்குச் செல்லும்போது நேர்வாசலில் நெடு நாளாகப் பூட்டியிருக்கும் பெருங்கதவு கண்டு தயங்குகிறார்கள். அப்பர் ஒப்பற்ற பதிகம் பாடுகிறார். கதவு திறக்கிறது. முக்கண்ணனைத் தொழுதுவிட்டுத் திரும்பு கிறார்கள். பிள்ளையின் மதுரப் பதிகம் கதவை மூடச் செய்கிறது. அன்றுமுதல் அடைப்பதும் திறப்பதும் கதவுக்கு வழக்கமாகிறது.

## 2. அரகர அரகர

பழம்பெரும் நாடு பாண்டிய நாடு. அங்கே அமணரணியின் ஆதிக்கம் மேலோங்கி யிருந்தது. நாட்டை ஆளும் ராசாவே அமணர். முதுகில் கூன்விழுந்ததால் அவர் கூன்பாண்டியன். மக்களும் அவர் வழிக்கு மாறிவிட்டார்கள். ஈசன் கோயில்கள் அமணப் பாழிகளாகவும் பள்ளிகளாகவும் மாற்றப்பட்டிருந்தன. பல கோயில்கள் தொழுவாரின்றித் தூர்ந்து கிடந்தன. அமணக் குரவர்கள் ஆனைமலை நாகமலை என எண்பெரும் குன்றங்களில் வாழ்ந்துவந்தார்கள். பெருமூச்சில் அஞ்சி ஒடுங்கி யிருக்கும் திருநீற்றணி ஈடேற முடியாமல் திணறியது.

விந்தை என்னவென்றால் அரசியார் பாண்டிமா தேவியும் அமைச்சரும் திரு நீற்றடியவர். மதுரை ஆலவாயனின் கருணையால் அமணரிடமிருந்து நாட்டை

மீட்டு இருண்டு கிடக்கும் ஈசன் கோயில்களில் ஒளியேற்றத் துடிப்பவர்கள். இருவரும் கலங்கிப் புழுங்காத நாளில்லை.

அற்புதங்கள் நிகழ்த்தும் பிள்ளையாண்டரின் பேரும் புகழும் தேவியின் நினைவில் மின்னலிடுகிறது.

''அந்த வேதவித்தை மதுரைக்கு அழைத்து வந்தால் என்ன அமைச்சரே.''

''நிச்சயம் விடிவு பிறக்கும்.''

''எனக்கு நம்பிக்கையிருக்கிறது.''

''பிள்ளையார் சோழ நாட்டில்தான் தங்கியுள்ளார். ஒற்றரை அனுப்பி நம் ஊருக்கு அழைப்போம்.''

''நாட்டுக்கு நற்பயன் விளையட்டும்.''

பறந்து சென்ற ஒற்றன் பிள்ளையைப் பரவசத்தில் வணங்குகிறான்.

''தேவியும் அமைச்சரும் ஏவிய ஒற்றன் நான்.''

பிள்ளை புன்னகைக்கிறார்.

''இருவரும் நலமா.''

''தங்கள் திருவருளால் நலமே... பாண்டிய நாடு பரசமய இருளில் மூழ்கிப் பரிதவிக்கிறது. பெருமான் அங்கே எழுந்தருளி திருநீற்றுக்காரர்களின் வாழ்வில் ஒளியேற்ற வேண்டும். இது அரசியாரின் விருப்பம்.''

அமணருடன் வாதிடும் முனைப்பில் பிள்ளையார் சொல்கிறார்.

''யாம் ஆலவாய்க்கு வருவோம். அமணரை வெல்வோம்.''

அடியவர் கூட்டமும் இதை ஆதரிக்கிறது. உடனிருக்கும் அப்பருக்கோ உடன்பாடில்லை.

''அமணருடன் வாதிட நாளும் கோளும் நன்றாக இல்லை. பொறுத்திருந்து போகலாமே.''

''வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் துணையிருக்க நாளும் கோளும் நம்மை என்செய்யும். ஆலவாய் போயாக வேண்டும்.''

இளங்கன்றை அப்பரால் தடுக்க முடியவில்லை. அடியவர் புடைசூழ பிள்ளை ஆலவாய்ப் பகுதியை நோக்கித் தனியே புறப்படுகிறார்.

காடு மலை தாண்டி ஆறு பல கடந்து நீர்கொண்ட மேகம் குளிர் சாரல் தூவும் கொடும் குன்றம் அடைந்து அப்பால் நெடுவழி நடந்து ஆலவாய் எல்லையைத் தொடுகிறது கூட்டம். பாண்டிமா தேவியின் ஆணைப்படி அங்கே காத்திருக்கும் அமைச்சர் சிவிகைமீது சிவக்கன்று வரும் கோலங்கண்டு ஆனந்தத்தில் நிலைமயங்கி அடியற்ற பனையாக மண்ணில் நெடிதே வீழ்ந்து கிடக்கிறார். தரையிறங்கும் பிள்ளையார் அவரை எழுப்பி நலங் கேட்கிறார். அமைச்சர் வணங்கிப் பணிந்து ஆலவாயன் கோயிலுக்கு அழைத்துச் செல்கிறார்.

நெக்குருகிக் கண்ணீர் மல்கி நீலகண்டனைப் போற்றிப் பாடித் தொழுதுவிட்டு வலம் வரும்போது முற்றத்தில் பாண்டிமா தேவி சந்தித்து பாலறாவாயனின் பாதங்களில் விழுந்து வணங்குகிறார்.

''யானும் என் பதியும் செய்த தவமிது.''

''இக்கட்டான நிலையிலும் ஈசனுக்குத் தொண்டு செய்யும் உம்மைக் காணவே இங்கு வந்தோம்.''

தேவியார் பூரித்துப்போகிறார். பின்னர் அமைச்சர் அடியவருடன் பிள்ளை யாரைத் தவமடத்தில் தங்க வைத்து விருந்தளிக்கிறார்.

பிள்ளையார் வந்திருக்கும் சேதி மதுரையெங்கும் பரவுகிறது. அமணர்களை அச்சம் பற்றி அலைக்கழிக்கிறது. மனவாட்டத்தில் மன்னரிடம் ஓடுகிறார்கள்.

''வேற்று நாட்டு வேதியச் சிறுவன் முத்துச் சிவிகையேறிப் பெருங்கூட் டத்துடன் மதுரை வந்திருக்கிறான். நாங்கள் கண்டுமுட்டு.''

மன்னர் தலை அசைகிறது.

''யான் கேட்டுமுட்டு. ஏனிங்கு வந்தான்.''

''சூலபாணியிடம் ஞானம் பெற்றவனாம். எங்களை வாதில் வெல்லப் போகிறானாம்.''

''இனி என்ன செய்வது.''

''சிறுவனை வலிந்து துரத்த வேண்டாம். அவனிருக்கும் மடத்தில் மந்திரத் தால் தீயிட்டால் அஞ்சி ஓடிவிடுவான்.''

''அவ்வாறே செய்க.''

அமணர்கள் மந்திரத்தால் மடத்துக்கு நெருப்பை ஏவுகிறார்கள். அது திரு நீற்றடியவரின் அஞ்செழுத்து மந்திரத்துக்கு முன்னால் தோற்றுப்போகிறது. அமணர்களுக்குக் கலக்கம். மன்னருக்கு என்ன சொல்வது. மதிப்பு போய்விடுமே. விருத்தி வீழ்ந்துவிடுமே. வேறு வழியின்றிக் கோல்கொண்டு மடத்தில் தீயிடு கிறார்கள். இருட்டில் எரியும் நெருப்பைக் காணும் பிள்ளையார் இரங்கி வருந்துகிறார்.

''அடியவர் துயிலும் மடத்துக்கா கொடுந்தீ. அடுக்காதுஅடுக்காது. என்மீது வஞ்சனையென்றால் அப்பாவிகள் என்செய்வர். அமண மன்னரின் ஆட்சி வழுவல்லவா இது.''

அடியவருக்கோர் ஐயம்.

''அவரறியாமல் இது நடந்திருக்குமோ.''

பிள்ளையார் வெம்மையாகப் பாடுகிறார்.

''பொய்யராம் அமணர் கொளுவுஞ் சுடர் பையவே சென்று பாண்டிய னுக்கு ஆகுக.''

மடத்தில் நெருப்பு மடிகிறது. அடியவர் மகிழ்கிறார்கள். மடிந்த நெருப்பு வெப்பு நோயாக மாறி மன்னரைப் பற்றிக்கொள்கிறது. உடலெங்கும் எரியும் வெம்மை தாங்காமல் துடிக்கிறார். பாண்டிமா தேவியும் அமைச்சரும் நெஞ்சம் படபடக்க நிலைகொள்ளாமல் தவிக்கிறார்கள்.

மன்னர் உடம்பில் அமணர் நீவும் மயிலிறகு எரிந்து கரிந்துபோகிறது. குளிர் விக்கத் தெளிக்கும் குண்டிகை நீர் நெருப்பிலிட்ட நெய்யாக உருகுகிறது. மன்னர் சோர்ந்து மயங்குகிறார்.

தருணம் பார்த்திருக்கும் பாண்டிமா தேவியும் அமைச்சரும் மன்னரை அணுகுகிறார்கள். அமைச்சர் பக்குவமாக எடுத்துரைக்கிறார்.

''திருமடத்தில் அமணர் தீயிட்டனர். அத்தீயே வெப்பு நோயாகித் தங்களைப் பீடித்துள்ளது. இப்பதியில் எழுந்தருளியுள்ள பிள்ளையார் பெருமானை வருவித் தால் பிணி நீங்கும்.''

''என் நோய் தீர்க்க வல்லார் எவராயினும் அழைத்து வருக.''

இருவரும் திருமடம் தேடிச் சென்று பிள்ளையிடம் முறையிடுகிறார்கள்.

''மன்னவர் பிணிக்குத் தாங்களே மருந்து. வந்தருளவேண்டும்.''

சின்னவர் வீறுகொண்டெழுகிறார்.

''தீது செய்யும் அமணரை வாதில் வெல்வோம். தென்னவர் கோனுக்குத் திருநீறு அணிவிப்போம்''

ஆலவாயனின் அனுமதி பெற்று மன்னரின் மாளிகையை அடைகிறார்.

விண்ணிலிருந்து இறங்கி வந்த வெண்மதியாக எதிரே பொன்பீடத்தில் வீற்றிருக்கும் பிள்ளையின் தண்ணொளி வீசும் முகத்தை ஏறிட்டுப் பார்க்கிறார் மன்னர்.

''சின்னவரே உமது ஊர் எது.''

பெரிய பதில் வருகிறது.

''பிரமனூர்.''

அமணருக்கு அச்சம் அதிகரிக்கிறது. பிள்ளையைக் கேட்கிறார்கள்.

''உமது சமயக் கொள்கையைக் கூறும்.''

பாலகனை அழைத்து வந்தது தவறோ. பாண்டிமா தேவி பதறுகிறார்.

தேவியின் முகக் குறிப்பறியும் பிள்ளை சூளுரைக்கிறார்.

''யாம் பால்மணம் மாறாப் பாலகன் என்றெண்ணிக் கலங்க வேண்டாம். மலைகளில் மந்திபோல் திரியும் ஈனர்களுக்கு மதுவிலக்கிக் கடுந்தவம் புரியும் பொய்யர்களுக்கு யாம் எளியவன் அல்லன். வாதில் வென்று வாகை சூடுவோம்.''

அமணரும் பிள்ளையும் மன்னருக்கு இருபுறமும் இருந்துகொண்டு பிணி தீர்க்க முனைகிறார்கள். அமணர் அருக நாமத்தை முழக்கி இடப்பக்கம் பீலியைத் தடவுகிறார்கள். நோய் மேலும் முற்றிப் பரவுகிறது. பிள்ளை பாடிக்கொண்டே வலப்பக்கம் திருநீற்றைத் தடவுகிறார்.

''மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமைபங்கன் திரு ஆலவாயன் திருநீறே.''

பிணி தணிந்து பொய்கையாகக் குளிர்கிறது. மன்னர் முகம் மலர்கிறது.

''இடப்பக்கமும் அருள் செய்க ஐயனே.''

பிள்ளையாரின் திருநீறு அப்பக்கத்தையுங் குணப்படுத்துகிறது. மன்னர் புத்துயிர் பெறுகிறார்.

''யான் உய்ந்தேன்''

சிவக்கொழுந்தைத் தருக்க வாதத்தில் வெல்ல முடியாது. அமணர் அனல் வாதத்திலும் புனல் வாதத்திலும் வெல்லத் திட்டமிடுகிறார்கள். அவர்களை நோட்டமிடும் பிள்ளை கேட்கிறார்.

''சிந்தனை என்ன. உமது தத்துவத்தைக் கூறுங்கள்.''

''நாமிருவரும் நமது சமய மேன்மைகளை ஏட்டில் எழுதி நெருப்பி லிடுவோம். எரியாத ஏட்டுக்குரியவர் வெற்றிபெற்றவராவார்.''

''வேந்தன் முன்னிலையில் நடத்தலாமே.''

நெருப்புக் குண்டம் உருவாகிறது. பிள்ளையார் ஒரு பதிகச் சுவடியை எடுத்து நெருப்பிலிடுகிறார். அது வேகாமல் பசுமையாக இருக்கிறது. அமணரும் தமது சமய உண்மையை ஏட்டில் எழுதித் தீயிலிடுகிறார்கள். அது எரிந்து சாம்ப லாகிறது. பாண்டிமா தேவியின் முகத்திலும் அமைச்சரின் முகத்திலும் வெற்றிக் களை மின்னுகிறது.

அமணர் புனல் வாதத்துக்கு அழைக்கிறார்கள்.

''நமது சமய உண்மைகளை எழுதி ஏட்டை ஆற்றிலிடுவோம். எவரேடு எதிரேறிச் செல்கிறதோ அவரே வென்றவர்.''

அமைச்சர் தன் ஐயத்தைத் தெளிந்துகொள்கிறார்.

''இதிலும் தோற்றாரை என்ன செய்யலாம்... கழுவேற்றி முறை செய்ய லாமா...''

அனைவரும் உடன்படுகிறார்கள்.

வைகைக் கரையில் மக்கள் கூட்டம் அணிவகுக்கிறது. அமணர் தங்கள் சமயச் சூத்திரத்தை ஏட்டில் எழுதி ஆற்றிலிடுகிறார்கள். அது நீருடன் அடித்துக் கொண்டு கடல் நோக்கிச் செல்கிறது. பிள்ளையார் முகத்தில் பெருமிதம் குறைய வில்லை. ஏடெடுத்துப் பீடுடன் பாடலெழுதுகிறார்.

''வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அர நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.''

அதை நீரிலிடுகிறார். அது எதிரேறி நீரைக் கிழித்துக்கொண்டு செல்கிறது. கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருக்கும் மன்னருக்கு மெல்லமெல்லக் கூன் நிமிர்கிறது. கூன்பாண்டியன் நின்றசீர் நெடுமாறனாகிறார். அங்கமெல்லாம் ஆனந்தம். நன்றியும் பக்தியும் அவருக்குள் வைகையாகப் பெருக்கெடுக்கிறது.

எதிரேறி ஏகும் ஏட்டைப் பின்தொடர்ந்து குதிரையில் பாய்கிறார் அமைச்சர். அது கைக்குக் கிட்டாமல் நீரில் காற்றாகக் கடிகிறது. இதையறியும் பிள்ளையார் ஏடு நிற்கப் பாடுகிறார். நிலைகொண்ட ஏட்டை அமைச்சர் எடுத்து வந்து அனை வருக்கும் காட்டுகிறார். அவர் கண்களில் சாதனைக் களிப்பு தாண்டவமாடு கிறது. அற்புதம் கண்டு ஆயிரமாயிரம் கண்கள் அதிசயிக்கின்றன. மன்னர் ஆலவாயனின் அருளைப் போற்றிக் கைகூப்புகிறார்.

ஓடும் மேகங்களிலிருந்து நாடு நகரெங்கும் திருநீறு தூவுகிறது. ஓங்கி யொலிக்கும் அஞ்செழுத்து மந்திரம் காடுகரையெல்லாம் அதிர்கிறது. குகை களைக் குடைந்து எதிரொலிக்கிறது. மெல்லிய வெள்ளுடையாகப் படர்ந் திருக்கும் திருநீற்றுப் படலம் தெளிந்து பரந்த களம் விரிகிறது. களத்தில் கண் கொள்ளாக் காட்சியாக எண்ணற்ற கழுமரங்கள் முளைத்திருக்கின்றன. அடி வயிற்றிலிருந்து பிறக்கும் ஆணைகள் கழுமுனையை வட்டமிடுகின்றன.

''மொட்டைத்தலைக் கழுகுகளைக் கட்டியிழுத்து வாருங்கள்.''

''குளித்தறியாக் குண்டிகைக்காரர்களைக் கொண்டுவாருங்கள்.''

''ஆடைதரிக்காத அம்மணக்காரர்களை ஓடி ஒளிய விடாதீர்கள்.''

"கண்ணழத் தலை பறிக்கும் கயவர்களைப் பிடியுங்கள்."

எண்பெரும் குன்றங்களிலும் இதர இடங்களிலும் வாழும் அமணர்களை இழுத்து வருகிறார்கள். சித்தாந்தம் உரைக்கும் பட்டாரகர் சேவைக்கு அர்ப் பணித்துக்கொண்ட துறவியர் குரவர் குரத்தியர் வைராக்கியர் சிராவகர் என எண்ணாயிரம் பேர். அமைச்சர் முன்னிலையில் அமணக் கூட்டம் கழுமரக் களம் தேடிச் செல்கிறது. வானோக்கி நிற்கும் கூர்மரங்கள் வரவேற்கின்றன. அமைச்சர் உரக்க ஆணையிடுகிறார்.

"நிறைவேற்றுங்கள்."

அமணர் முகத்தில் சலனமில்லை. அதே அமைதி. சிவனர் கூக்குரலிடு கிறார்கள்.

"கொசு மொய்க்கும் பீளைக்கண் பித்தர்கள் வீழ்க."

"நாற்றமெடுத்த ஊத்தை வாயர்கள் ஒழிக."

அமைச்சர் முன்னிலையில் அமணர்கள் அணியணியாகக் கழுவேறு கிறார்கள். எண்ணாயிரம் உயிர்கள் துடிதுடித்து அடங்குகின்றன.

கழுமுனை குதத்தில் குத்திக் கழுத்தில் முளைத்தபடி அமணப் பிணங்கள் அந்தரத்தில் கடுந்தவம் புரியும் அதிசயக் கோலம். காணக் கிடைக்காத அற்புதம். பிணங்களில் கொப்புளிக்கும் குருதி மலம் கலந்து கழுமரங்களில் வடிந்து தரை யில் குளமாகிறது. கொலைக் களத்தில் நிறைந்திருக்குங் கூட்டம் குருதி தோய்ந்த பாதங்களுடன் நிலைமறந்து கூத்தாடுகிறது. செங்கறை சிதறிச் சிவந்த உடல்களில் அமணச் சுடலைச் சாம்பலை அழகாகப் பூசி அறவே மறைக்கத் துடிக்கும் ஆங்காரம் அங்கே ஓங்காரமிடுகிறது.

"அரகர... அரகர..."

கூட்டத்தின் ஆவேசத்தில் அசைந்து தள்ளாடும் கழுமரங்கள் ஏற்றத்தில் பிணங்களைத் தாலாட்டிக் களத்தில் சாய்கின்றன. வீழ்ந்த பிணங்களுடன் வேலும் வாளும் வெறியுடன் போர் தொடுக்கின்றன. கழுமரக்களம் கண்ட கடும் போர். பிணங்களை அரிந்து வாள் வாகை சூடுகிறது. பிண்டங்களை மிதித்தும் உதைத்தும் குதிக்கும் கால்கள் பேரானந்தத்தின் உச்சத்தை எட்டுகின்றன.

தாண்டவக் கூத்துக்கிடையே பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தகர்க்கும் உடைப்போசை மதகிரைச்சலாகக் கேட்டுக்கொண்டேயிருக்கிறது. இடிப்பின் வலியில் சில சமயம் நிலமே அதிர்கிறது.

அருஞ்செல்வமாகப் பேணிய நூலகங்கள் நொறுங்குகின்றன. ஏடுகள் எரிகின்றன. எழுத்தாணிகள் கருகுகின்றன. தொடர்ந்து துரத்தும் ஆவேசமும் கொலைக் கூக்குரலும் காதையறுக்கிறது.

"அருகா அருகா..."

அலறல் அருகியடங்குகிறது.

அடைக்கலம் தேடி ஆலவாயன் கோயிலுக்குள் நுழையும் அபலைகள் கரகரத்தவாறு திரும்புகிறார்கள்.

"அரகர... அரகர..."

அவர்கள் நெற்றியைத் திருநீறு அலங்கரிக்கிறது.

ஒரு பிரளயமே நடந்து முடிகிறது. சற்று நேரம் இடுகாட்டமைதி. ஈனக் குரல் அழுகையில்லை. ஊன வலி முனங்கலில்லை. இறுதிச் சடங்கு முடித் தவர்கள் இளைப்பாறுகிறார்கள். இப்போது தொலைவிலிருந்து ஈசன் நாமம் ஏந்திக் காற்றில் அலையாடி மிதந்துவரும் கோயில் மணியொலி இதமாக இருக்கிறது.

அற்புதம் நிகழ்த்திவிட்டு ஆலவாயன் கோயிலுக்கு அடியெடுத்து வைக்கும் சின்னப் பெரியவரின் கோலமுகம் குளிர்ந்திருக்கிறது. பார்வதித் தாய் ஊட்டிய பால்வடியும் அதே வெள்ளைச் சிரிப்பு. பின்னால் அடியவர் கூட்டம் ஆகாயம் பிளக்க புதிய முழக்கமிடுகிறது.

''பாலறாவாயன் வந்தான்.''

''பரசமயக் கோளரி வந்தான்.''

கோயிலை அடையும்வரை கூட்டத்தின் முழக்கம் குறையவில்லை.

### 3. அருகா முருகா

வெட்டுண்ட தலைகள் நிலமெங்கும் விரவிக் கிடக்கின்றன. மூக்கறுந்து நாக் கறுந்து முற்றிலும் முகமழிந்த கோரம். கண்ணிழந்து காதறுந்து மண்ணைக் கவ்விய கொடூரம். காலிழந்து கையிழந்து கடைவயிற்றில் குடல் சரிந்து பிணங்கள் குதறிக் கிடக்கும் அலங்கோலம்.

நாய்களும் நரிகளும் உறுமி ஊளையிட்டுத் திரிகின்றன. பிணம் தின்னும் சண்டை உக்கிரமடைகிறது. முட்டி மோதி முண்டியடித்துப் பிய்த்துப் பிடுங்கி விழுங்கும் சதை வெறி. கவ்வித் தூக்க முடியாத தலைகளை உருட்டிச் செல் கின்றன. குடலைக் கடித்து இழுக்கும்போது உடலும் கூடவே போகிறது.

கூட்டங்கூட்டமாக இறங்கும் கழுகுகள் ஓட்டமும் பெருநடையுமாகப் பிணங்களையடைந்து கொத்திக் குதறிக் கொட்டமடிக்கின்றன. விக்குஞ் சதையை முக்கி விழுங்கி கொக்கரைக்குள் தள்ளும்போது கண் சொருகித் திறக் கிறது. பசியடங்கவில்லை. வேட்டை தொடர்கிறது.

பல நாள் பசியில் பரிதவிக்கும் பேய்களுக்கு நற்சகுனங்கள் தெரிகின்றன. மூக்கருகே சுரக்கும் நீர் முடைநாற்றமடிக்கிறது. உதடு துடிக்கிறது. வாயில் ஈக்கள் மொய்க்கின்றன. அடடா பிணவாசம் வீசுகிறதே.

''இரை நம்மை அழைக்கிறது. விழிமின் எழுமின்.''

படுத்திருக்கும் பேய்கள் திடுக்கென விழித்தெழுந்து பரவசத்தில் கூத்தாடு கின்றன. பட்டினியில் அவை பட்ட பாடு கொஞ்சமா நஞ்சமா. குடல் வறண்டு உடல் மெலிந்து பனைமரம்போல் குச்சுக்களாகிவிட்ட கைகால்கள். பாழி வாய்கள். குகைகளெனக் குழிவிழுந்த கன்னங்கள். கலப்பைப் பற்கள். மார்பு வரை தொங்கும் உதடுகள். பசியில் அவற்றைக் கடித்துத் தின்றுவிட்டன. வயிறு சுருங்கி ஆழத் தொப்புளில் பாம்புகளும் பல்லிகளும் குடியேறிவிட்டன. தலை முடி பாம்புகளாகத் தொங்குகிறது. பொந்துக் காதுகளில் குடியிருக்கும் ஆந்தைகள் குஞ்சுகளுக்குப் பறக்கக் கற்றுக்கொடுக்கின்றன.

பெண் பேய்கள் பாம்புக் கயிற்றில் ஓணான் தாலி அணிந்திருக்கின்றன. குழந்தைகளை இழந்த பேய்கள் ஒட்டகங்களை இடுப்பில் வைத்துக் கொஞ்சு கின்றன. ஆண் பேய்கள் பெண் பூதங்களைக் களவுமணம் புரிந்து பிறந்த கூளிகள் ஆர்ப்பரிக்கின்றன.

''வாசம் வரும் திசை நோக்கி வேகமாக ஓடுங்கள்.''

பேய்க் கூட்டம் காற்றாக ஓடி கழுமரக் களத்தையடைகிறது. அது களமா இல்லை பிணக் கடலா. ஆகா அற்புதமான விருந்து. கூட்டம் களமிறங்குகிறது.

இடையூறாக இருக்கும் எதிரிகளை விரட்டியாகணும். வட்டமிடும் கழுகு களை வாரிப்பிடித்துக் கடித்துச் சுவைக்கின்றன. அது கண்டு அஞ்சும் நாய்களும் நரிகளும் விரண்டோடுகின்றன. இனி கவலையில்லை.

''வேலைகளைத் தொடங்குங்கள்.''

பேய்கள் பிணங்களைப் பிளந்து எலும்புகளையும் குடலையும் உருவிச் சுமந்து வருகின்றன. பேரெலும்புகள் கட்டில் கால்களாக சிற்றெலும்புகள் சட்டங் களாகக் குடல் கயிற்றைக் குறுக்கும் நெடுக்குமாகப் பின்னிக் கட்டுகின்றன. ஒரு புறம் அடுக்கிய பிணங்கள் மெத்தையாகின்றன. சில பேய்கள் அளவாக மடிந்து தலையணையாகின்றன. வெண் கொழுப்பு மெத்தை விரிப்பு. அழகான தீபக்கால் கட்டில் தயார். கட்டிலை அச்சத்துடன் தொட்டு வணங்கும் பேய்கள் கண்மூடிக் கைகூப்பி விண்ணை நோக்கித் தவமிருக்கின்றன. சற்று நேரத்தில் பிணக் கள மெங்கும் திருநீறு மாவு மழையாகத் தூவுகிறது. எங்கும் வெண்படலம்.

படலம் மெல்லமெல்ல விலகிப் பொன்னொளி பரவுகிறது. இப்போது கட்டிலில் கண்கொள்ளாக் காட்சி. பணிப்பெண்கள் சாமரம் வீசச் சில பெண்கள் வலது கையில் வாளும் இடது கையில் தலைவிளக்கும் ஏந்திக் காவலிருக்க காளிதேவி களிப்பில் கொலுவிருக்கிறாள். அழகு பொழியும் முகம். சிலையுருவம். பொன் கிண்ணத்தில் பால் வைத்ததுபோல் திருநீறு பூசிய தனங்கள். தவம் கலையும் பேய்களின் முகம் மலர்கிறது.

''ஆணையிடுங்கள் தாயே.''

தேவி ஆணையிடுகிறாள்.

''குருதிக் குளத்தில் குளித்துக் கூழ் சமையுங்கள்.''

''ஆகட்டும் தாயே.''

பேய்கள் குதூகலத்தில் பாடியழைக்கின்றன. முது பேய்கள் பாட இளம் பேய்கள் கூடிக் கொண்டாடுகின்றன.

''மோடியே மாலையே''
''ஓடிவா ஓடிவா''
''கூளியே நீலியே''
''கூழ்சமைக்க ஓடிவா.''

எலும்புக் குச்சால் பல்விளக்கித் தகட்டெலும்பால் நாக்கு வழித்து உடல் நனைய நிண எண்ணெய் தேய்த்துத் தலையில் களிமண் பூசிக் குளத்தில் குதித்துக் குளிக்கின்றன. கொழுப்பு உடையணிந்து வளையல் பாடகம் காதணி காப்பு தோள்வளை முத்துமாலை வன்னசரம் தண்டை என வகைவகையாக அணி கலன்கள் பூண்டு அலங்கரித்துக்கொள்கின்றன.

நிணத்தால் நிலத்தை மெழுகி மயில்பீலிக் கொத்தினால் பெருக்கிக் கோல மிட்டுக் கழுகிறகால் பந்தலிட்டுக் குடல் தோரணமிட்டுத் தலைகளை அடுப் பாக்கிப் பானையேற்றுகின்றன. பானையில் உலைநீர் ஊற்றி மூளையும் இறைச் சியும் போட்டு பூண்டு உப்புச் சேர்த்து விறகு வைத்து நெருப்பு மூட்டுகின்றன.

பல்லரிசியை உரலில் போட்டுப் பூண்கொண்ட எலும்புலக்கை பிடித்துப் பாடிக்கொண்டே குத்துகின்றன.

''கள்ளியே செல்லியே''
''நெல்லரிசி குத்துவோம்''
''அள்ளியே போடடி''
''அசைந்தசைந்து குத்துவோம்.''

உயரப் போய் வரும் உலக்கை பாட்டுக்குத் தாளமிடுகிறது. சலுக்முலுக் சலுக்முலுக்...

குத்திய அரிசியை விலா முறத்தால் புடைக்கின்றன. தவிடு நீங்குகிறது. அரிசி மாவை நாழியால் அளந்து நுரையடங்கிக் கொதிக்கும் உலையில் போடுகின்றன. குலவையொலி கலகலக்கிறது. விரல்களில் நரம்பு கோர்த்துப் பின்னிய கையகப் பைகளால் அரிசி அடிபிடித்துவிடாமல் சுற்றிக் கிண்டுகின்றன.

ஓடி வந்த அவசரத்தில் சில பேய்கள் மூளைச் சேற்றில் வழுக்கி விழுந்து கால் சுளுக்கிக்கொள்கிறது. நொண்டி நடக்கின்றன. சில மல்லாக்க விழுந்து முதுகு வளைந்துவிடுகிறது. ஆக்கப் பொறுக்காத இன்னும் சில பேய்கள் பானையை எட்டிப்பார்த்ததில் கொதிக்கும் கூழ் தெறித்து ஒரு கண் குருடாகிறது. சூடான கூழை நாக்கில் ஊற்றி உப்புப் பார்த்ததில் வெந்து ஊமையாகின்றன.

கூழ் பக்குவப்படுகிறது. பெரும் பேய்கள் பானையைச் சுற்றி நின்று தோல் துணியால் பற்றிப் பிடித்து இறக்கி வைக்கின்றன. கிண்டிக் கலக்கும்போது மணம் சொக்குகிறது.

''கூழ் அதிகமோ.''

''அதெல்லாமில்லை. நாவில் வைத்தாலே ஊறிவிடும். அதுக்கே போதாது.''

''உண்போமா.''

''அதுக்காகத்தானே காத்திருக்கிறோம்.''

சாப்பிடுமிடத்தைப் பெருக்கிப் பந்தலடியில் கொழுப்பு விரித்து அமர்கின்றன. ஒவ்வொரு கையிலும் நரம்பினால் தைத்த தோல் தொன்னை. கூளிகள் பொறுக்கி வந்த குண்டிகைகளில் கூழை மொண்டுமொண்டு பரிமாறுகின்றன பெரும் பேய்கள். எலும்புத் தண்டில் எரியும் விளக்கும் கொழுப்புத் தீவட்டிகளும் ஒளி கொடுக்கின்றன. ஒருமித்த குரல் ஒலிக்கிறது.

''பகுத்துண்போம்''.

''பசி தணிப்போம்.''

தொன்னையிலிருக்கும் கூழை உறிஞ்சிக் குடிக்கின்றன. ஒரு முதுபேய் அவ் வப்போது அறிவுரை வழங்குகிறது.

''வெள்ளிய மென்குடல்களை மென்று தின்க.''

''இஞ்சி விரல்களை மென்று தின்க.''

''மூளையை அள்ளித் தின்க.''

''கண் வெங்காயத்தைக் கடித்துக்கொண்டு சூடான கூழை ஆடியசைந்து உலாவிக் குடியுங்கள்.''

''புரையேறினால் தலைமயிரை முகந்துபாருங்கள்.''

விருந்து முடிந்து குடத்து நீரில் வாய் கழுவுகின்றன. செவிச்சுருள் வெற்றிலையில் மென்கொழுப்புச் சுண்ணாம்பு தடவிப் பல் பாக்குச் சேர்த்து வாய் சிவக்க மென்று துப்புகின்றன. பந்தலடி சிவப்புக் களமாகிறது.

வானம் கனத்து மழை கொட்டுகிறது. பேய்கள் மேலாடைகளை உதறியெறிந்துவிட்டு கோலாகலத்தில் கூத்தாடிப் பாடுகின்றன.

''கூழ்கொடுத்த காளியே''
''வாழிய வாழிய''
''மால்கொடுத்த தங்கையே''
''வாழிய வாழிய''
''வேல்கொடுத்த தேவியே''
''வாழிய வாழிய''
''பால்கொடுத்த அன்னையே''
''வாழிய வாழிய.''

பெருவட்டமாகிக் கைத்தாளமிட்டு ஆடுகின்றன.

''ஆலவாயின் நாயகா''
''அரகரா அரகரா''
''நீலகண்ட நாதனே''
''அரகரா அரகரா''
''அம்பலத்துக் கூத்தனே''
''அரகரா அரகரா''
''ஆடிநின்ற பாதனே''
''அரகரா அரகரா''
''உடைதுறந்த பங்கனே''
''அரகரா அரகரா''
''பிறையணிந்த பித்தனே''
''அரகரா அரகரா''
''பிணங்களுண்ட சித்தனே''
''அரகரா அரகரா.''

பேய்க்கூத்தைக் கண்டுகளிக்கும் காளியின் முகத்தில் பூஞ்சிரிப்பு தவழ்கிறது. மழை நனைவிலும் அழகு குறையவில்லை. தனங்கள் விம்மத் தளிராக வீற்றிருக்கிறாள்.

கொலுமண்டபத்து விளக்குகள் அணைந்து இருள் சூழ்கிறது. மழையில் மண்டபம் மெல்லமெல்லக் கரைந்து தரையில் அமுங்குகிறது. கட்டிலில் கொலுவிருந்த காளியையும் காவலிருந்த பணிப்பெண்களையும் காணவில்லை. பேய்கள் அத்தனையும் போன இடம் தெரியவில்லை. தொலைவில் வெகு தொலைவில் காற்றுக்குத் தேயும் குரல் மட்டும் கேட்டுக்கொண்டேயிருக்கிறது.

''அரகரா அரகரா...''

மண்ணில் உறைந்த குருதிக் களம் மழையில் உருகிப் புதுவெள்ளம் வைகையில் கலக்கிறது. செந்நீர் சேர்ந்ததும் வைகை சிவப்பாகி நுங்கும்நுரையுமாகப்

பொங்கிக் கரைதாண்டிக் காடுகளில் புரண்டோடுகிறது. எங்கும் சிவப்புக் கம்பளம் விரித்துக்கொண்டே தெற்குச் சீமை தேடி ஓடி சிற்றாறு வைப்பாறு வற்றாத கயத்தாறு வளமான தாமிரவருணி உப்போடை சில்லோடை அத்தனையும் நிறைகின்றன. கிணறுகள் பெருகுகின்றன. மழையின் அதிசயம் கண்டு மருளும் மக்கள் பயபக்தியுடன் அளைந்தளைந்து நீராடி ஆண்டவனை வணங்குகிறார்கள்.

அங்கங்கே மக்கள் கூட்டத்துக்கு நடுவே புகை மண்டலம் மங்கலாகத் தெரிகிறது. புகையினூடே வீசி வளரும் நெருப்புக் கொழுந்து. அந்தணர்கள் மந்திரம் ஓதி யாகம் வளர்க்கிறார்கள். மாடுகளையும் குதிரைகளையும் பலியிட்டுக் கொண்டாடுகிறார்கள். எண்ணற்ற ஆடுகளை யாகக் குண்டத்தில் எறிகிறார்கள். அவற்றின் மரண ஓலம் மந்திரத்தில் கரைந்துபோகிறது. சோமபானமும் சூட்டாங் கறியும் கூட்டத்தைச் சொக்க வைக்கிறது. அந்தச் சொகத்தில் புதுப்புது ஆட்டமும் பாட்டும் பிறக்கின்றன.

ஈரம் சுவர்ந்த மண்ணில் என்னென்னமோ செடிகள் முளைக்கின்றன. எருக் கலை மஞ்சணத்தி இலந்தை மொச்சி நெருஞ்சி அரளி தும்பை துத்தி குறண்டி கொக்கரவாளி ஆதாளை ஆவரை குப்பைமேனி துளசி... எல்லாம் ஒரே சமயத்தில் சில்லென்று பூத்துச் சிரிக்கின்றன. புதிய கதம்ப மணத்தின் புல்லரிப்பு.

திரும்பிப் பார்த்தால் சிரிக்கும் செடிகளைக் காணவில்லை. என்ன மாயம். எல்லாம் கோயில்களாகிவிட்டன. அடுக்கடுக்காகச் சிலைகள் பதித்த அழகுக் கோபுரங்கள். எட்டாத உயரத்தில் கொத்துப் பூக்களாக. கிட்டத்தில் மொட்டு மொட்டாக. மணிகள் கிளைத்த கொடிக் கம்பங்கள் வானத்தை நோக்கி வளர்கின்றன. கோர்த்துத் தொடுத்த பொழுதுகளாகக் கும்பக் கலசங்கள் மின்னுகின்றன.

கோயில்களுக்குள் இப்போது பல வடிவ விளக்குகள் பூத்திருக்கின்றன. அங்கே ஆணும் பெண்ணுமாக அனேகத் தெய்வங்கள் குடியேறுகின்றன. பலப் பல பேர்கள் எதிரொலிக்கின்றன. தெய்வங்கள் வெவ்வேறு வாகனங்களில் அமர்ந்து காட்சி தருகின்றன. எருமை குதிரை சிங்கம் யாளி பசு எலி காகம் கருடன்...

குன்றக் குகைகளுக்குக் குமரன் குடிபோகிறான். அந்தச் சூழல் மீது அவனுக்குப் பிரியம். குன்றுதோறும் மயில் மீதமர்ந்த குமரனைக் கொண்டாடுகிறார்கள்...

''முருகா முருகா...''

''அருகா அருகா...'' என்று அபயக் குரல் ஒலிக்கும் பிரமை.

## 4. அரைமலை

தெய்வங்கள் காட்சிதரும் திருக்கோலம் சீராக இல்லை. சில முகங்கள் சிரிக்கின்றன. பலவற்றில் கோவம் தகிக்கிறது. கண்கள் கனன்று கோரைப்பல் நீண்டு குத்த வரும் கோரப் பசியில் நாக்கைத் துருத்தியவாறு அரிவாளை ஓங்கிய ஆவேசத்தில் எதிரிகளைச் சூலாயுதத்தால் வதைத்தபடி.... அண்ட முடியாத அச்சம்.

மேலமலை உச்சியில் ஒரு மொட்டைத் தலை எட்டிப்பார்க்கிறது. அப்பாலிருந்து ஏறிவரும் அடியார் மெல்லமெல்ல இப்பால் இறங்குகிறார். கால்கள் கோயில்கோயிலாக நடக்கின்றன. தெய்வங்களின் முகத்தில் அருளேற்றி அமைதி

பூசிச் சாந்தப்படுத்துகிறார். சனங்களுக்குச் சொந்தமான பூலோகத் தெய்வங்களுக்குள் குடும்ப உறவு உண்டாக்குகிறார். அவர்களை மேலோக இழையில் பின்னி ஊருக்கு ஊர் புதுக் கதை சொல்கிறார். அடியவர்களை ஆனந்தமாகப் பாட வைக்கிறார். விதவிதமான பாட்டு கேட்கிறது.

அவருடன் பல மொட்டைத் தலைகள் இணைகின்றன. ஈசனின் பேருக்கு வெவ்வேறு பொருள் கூறும் சடைமுடியினரை ஓரணியில் திரட்டி ஒரே குரலில் பேச வைக்கிறார். அவருக்குப் பின்னால் அடியவர் கூட்டம் பாடிக்கொண்டே கைத்தாளம் போட்டுக்கொண்டும் ஏதேதோ கருவிகளை இசைத்துக்கொண்டும் செல்கிறது. அவர் காலடி பதிக்கும் இடமெல்லாம் எதிரணியினரை வாதுக் கழைத்துப் பணிய வைத்து அணிமாறச் செய்கிறார்.

சுற்றிச் சுழலும் சூறாவளி புழுதியைச் சுருட்டித் திருநீறாகச் சிதறிக்கொண்டே அங்கங்கே அஞ்சி ஒளிந்திருக்கும் அமணரைத் தென்திசைக்கு அடித்துச் செல்கிறது. கலக்கத்தில் அலைக்கழியும் அமணர் பாதுகாப்பான இடங்களில் ஒதுங்கிக் காலூன்றுகிறார்கள். அழகான அரைமலை பலரை அரவணைத்துக்கொள்கிறது.

கரண்ட மகுடமணிந்து கனிந்த தவம்புரியும் திரண்ட மார்புத் தீர்த்தங்கரராக ஆழ்ந்த மௌனத்தில் அமர்ந்திருக்கும் அரைமலை பெரிய அமணத் தலம். இதமான அமைதி தவழும் சூழல். இயற்கை ஒளி. சொகமான காற்று. விரிந்த வானத்தில் காலையும் மாலையும் எழுந்து விழும் பொழுதைப் பார்க்கலாம். பள்ளத்தாக்குகளில் படர்ந்திருக்கும் பசுமையில் உள்ளம் பறிபோகும். பல தீர்த்தங்கரர்களின் கதை கூறும் பாறைகள் சூழ்ந்த திருமலை அது.

பாண்டிய நாட்டின் தென்பகுதியில் அரைமலையைச் சுற்றி அமைந்திருக்கும் குறு நாடுதான் வளமிக்க நேச்சுர நாடு. நேச்சுரத்தைத் தலைநகராகக் கொண்டதால் நேச்சுர நாடு. குறுநில மன்னன் கோலோச்சிய நாடு. பாண்டியப் பேரரசின் படைகள் நிலைகொண்டிருக்கும் தளம். கருஞ்செய் புஞ்செய் நஞ்செய் எனக் கலந்த நிலப் பரப்பு. அங்கங்கே முளைத்திருக்கும் மலைப்பரும்புகள். அரைமலைதான் அனைத்துக்கும் உயர்ந்தது. அதன் உச்சியில் நின்றுகொண்டு நேச்சுர நாட்டைக் கண்ணால் அளந்துவிடலாம்.

நெல் வயல்கள் நிறைந்த நேச்சுரம் திருநேச்சுரம் என்னும் சிற்றூராகத்தான் இருந்தது. விரைவிலேயே குடிகள் பல்கிப் பெருகிப் பெருநேச்சுரம் இளநேச்சுரம் எனக் கிளைத்துப் படர்ந்து அமணர் அதிகம் வாழும் பேரூராகிவிட்டது.

அரைமலையும் அடிவாரம்வரை அமைந்த குடியிருப்புப் பகுதிகளும் இணைந்த ஊர் திருநேச்சுரம். துறவியர் குழுமிய தூய தலம். துறவியரன்றி இடையர் கொல்லர் குயவர் தச்சர் என வெவ்வேறு குலத்தவரும் அமைதியாக வாழ்கிறார்கள்.

பேரூரின் பெரும் பகுதியை உள்ளடக்கியது பெருநேச்சுரம். பாண்டிய மன்னனின் படைத் தலைவனான எட்டி மன்னன் மங்கல ஏனாதி அங்கிருந்துகொண்டுதான் நேச்சுர நாட்டை ஆண்டுவருகிறான். அரைமலையருகே சிறு மலையோரம் அவனது கோட்டை கொத்தளங்கள் உண்டு.

நேச்சுரத்தின் மற்றொரு பகுதி இளநேச்சுரம். மேல்புறம் தோன்றிய குடியிருப்பு. செந்நெல் விளையும் செழிப்பான பூமி. அங்கே அமணர்களே அதிகம் வாழ்கிறார்கள். குரவரும் குரத்தியரும் அங்கிருந்துகொண்டு தொண்டுபுரிகிறார்கள்.

அரைமலையின் அடிவயிற்றில் வடக்கு நோக்கி வரிசையாக அமைந்திருக்கும் குகைகள் சகலரும் வந்து பயிலும் அமணப் பள்ளிகளாகத் திகழ்கின்றன. நடுவிலிருப்பது சற்றுப் பெரிய பள்ளி. துறவியர் வைராக்கியர் குரவர் குரத்தியர் மாணாக்கர் மாணாக்கியர் நிறைந்த கல்விக் கோயில். இல்லறத்தில் ஈடுபடும் சிராவகர்களும் வந்து பயில்கிறார்கள்.

நடுப்பள்ளிக்குக் கிழக்கே சிறுபள்ளி. அது பொதுமக்களுக்கு ஓதும் மண்டபம். அங்கே சித்தாந்தம் உரைக்கும் பட்டாரகர்கள் உறைகிறார்கள். மேற்கே இரு பள்ளிகள். அவற்றில் பெரும்பாலும் மருத்துவத் துறவியர் வசிக்கிறார்கள். அங்கே எப்போதும் மருந்து மணம் கமழ்கிறது.

தென்மேற்கு அடிவாரத்தில் பாறை கவிந்த பகுதியில் அனைத்துக்கும் பெரிய அகண்ட பள்ளி உண்டு. தரையுடன் இணைந்த பெரும் பள்ளி. பலர் கல்வியும் சித்தாந்தமும் பயிலும் கூடம். அங்கேதான் குழுவாணை நல்லூர் என்னும் கல்வி நிலையம் இயங்குகிறது. ஆன்றவிந்தடங்கிய சான்றோர் நிறைந்த குழுவாணையின் நிருவாகத்தில் அது தலைசிறந்து விளங்குகிறது. அங்கேயே தங்கிப் பயிலும் கல்விச்சாலையும் உண்டு. ஆசிரியர்களுக்கும் மாணாக்கர் மாணாக்கியர்களுக்கும் ஆகார தானமாக வழங்கப்பட்ட கிணறுகளும் அவை சார்ந்த நிலங்களும் பெரிதும் பயன்படுகின்றன.

குகைகளுக்குள் கொடையாளர்கள் செதுக்கச் செய்த கல் படுக்கைகளில் துறவியர் கண்ணயர்கிறார்கள். பசிக்கும்போது அடிவாரக் குடியிருப்புக்களில் கையேந்தி உணவிரந்து நின்றவாறு புசிக்கிறார்கள். பள்ளிகளையொட்டி நீர் நிறைந்திருக்கும் சுனைகளில் கையால் மொண்டு பருகுகிறார்கள். கள்ளை வெறுக்கிறார்கள். புலாலை மறுக்கிறார்கள். லோச்சன நோன்பிருந்து கண்ணீர் சிந்த மயிர்க்கால் பிடுங்கித் தலையை மழித்துக்கொள்கிறார்கள்.

சூத்திரச் சாதியினருக்குக் கல்வி உணவு மருந்து என அவர்கள் அளிக்கும் கொடைக்கு அளவில்லை. எங்கிருந்தெல்லாமோ அவர்களைத் தேடி வந்து சித்தாந்தம் கேட்பவர்கள் ஏராளம். இருட்டில் இருந்தவர்களுக்கு வெளிச்சம் கிடைத்த பேரானந்தம்.

மக்களுக்கும் மாக்களுக்கும் துறவியர் அளிக்கும் மருத்துவம் பல உயிர்களைக் காப்பாற்றுகிறது. மேலப்பள்ளிகளருகே அமைக்கப்பட்ட உரலிலும் குழியிலும் மூலிகை மருந்துகளை இடித்தும் அரைத்தும் எழுப்பும் தாளம் இரைந்துகொண்டேயிருக்கிறது. இயற்கை அவர்களுக்கு எண்ணற்ற மூலிகைகளை அள்ளித் தருகிறது. மங்கிய ஒளியிலும் அவர்கள் மருத்துவ நூல்களை எழுதிக்கொண்டிருப்பார்கள்.

நடுப்பள்ளியிலிருந்து வடக்கே நோக்கினால் தெளிவாகத் தெரியும் திருவிருப்பூர். ஊரைச் சுற்றித் தென்கிழக்காக ஓடும் வெள்ளாறு. மேற்கே வெள்ளென விரிந்து கிடக்கும் வீரநாராயணன் ஏரி. அதன் பரந்த முற்றத்தில் வடக்குப் பரும்புவரை பச்சைக் கோலமிட்ட நெல் வயல்கள்.

மலையின் வடமேற்குச் சரிவில் தெளிந்து கிடக்கும் ஆம்பலூருணி. மலையைக் கழுவி வடியும் மழைநீர்ப் பரப்பில் நெருக்க நட்டிய ஆம்பல் மலர்கள் காம்பு தாங்காமல் பூத்திருக்கும் அழகுத் தடாகம். ஆடு மாடுகளின் தாகம் தணிக்கும்

பெருஞ்சுனை. கரையோர மரங்களில் குடியிருக்கும் பறவைகளின் சரணாலயம். அங்கேதான் அமணர்கள் நீராடுவார்கள். காலைப் பொழுதில் ஈரக் கோலத்தில் மெய்மறந்து அருகனை வணங்குவார்கள்.

ஊருணி கொள்ளாத வடிநீர் வடவளைவில் திரும்பி மலை விளிம்பை வருடிக்கொண்டே போய் கீழமுனைக் குளத்தில் நிறைந்து ஆழநதியாகப் பிறந் தோடுகிறது. கோரை சூழச் சோலையாகக் குலுங்கும் குளத்தில் குருகுகளும் நாரை களும் நடனமாடிக்கொண்டேயிருக்கும். அர்த்தம் பொதிந்த அடவுகள் நிறைந்த குள நாட்டியம்.

சாதுர் மாத நோன்புக் காலத்தில் பார்க்கணும். அதிதொலைவிலிருந்தெல்லாம் அமணர் வந்து குமிந்துவிடுவார்கள். அரைமலை நிரம்பி வழியும். ஆம்பலூருணி கொள்ளாது. திருமலையில் அந்த ஒரு மாதத் தவக் காலமும் திருவிழாக் கோலந் தான்.

அரைமலையில் ஆடு மாடு மேய்க்கும் இடையரின் ஆனந்தப் பாட்டு அடிக்கடி எதிரொலிக்கும். சிற்பிகள் சிலைவடிக்கும் சிற்றுளித் தாளத்தில் பாறைகள் இளகி கற்பனைக்கேற்பப் பண்படும். கருஞ்செய் நிலத்தில் குடைந்த நெய்மண் கூழாகிக் குறுங்கல் களைந்து குழைந்து நெகிழ்ந்து குயவன் கையில் வளைந்தும் நெளிந்தும் குழிந்தும் குவிந்தும் வாயில் வளையமாகியும் கலங்கள் வடிவெடுக்கும்.

## 5. மோனத் திருமேனிகள்

அரைமலையின் அழகைக் காண வானத்திலிருந்து இறங்கி வந்த மேலோ கத்தார் குகைப் பள்ளிகளின் கூரைப் பாறையில் மோனத் திருமேனிகளாகக் குடியிருக்கிறார்கள். மும்மலம் துறந்த முக்காலம் கடந்த முக்குடை நாதர்கள். அருள் வழங்கும் யட்ச யட்சித் தெய்வங்கள். சாமரம் வீசுவோர் பணிப் பெண்டிர் அரம்பையர் மானிட வடிவில் சந்திரன் சூரியன் இன்னும் தேவர் கந்தர்வர் வித்தியாதரர் கமடர் யானை குதிரை யாளி சிங்கம்... ஒருசேரக் குழுமிய தரிசனப் பிம்பங்கள்.

மேற்குப் பகுதியில் பெரிய மாடம். அதனுள் சாமரம் வீசுவோர் புடைசூழ அமைதியின் அருளுருவாக உயர்ந்த பீடத்தில் அரைமலை ஆழ்வார் அமர்ந்திருக் கிறார். யட்ச யட்சியும் துறவியரும் குதிரை வீரரும் அவரது தவத்துக்கு அரணாகக் காவலிருக்கிறார்கள்.

ஆழ்வாருக்கு இடப்புறம் அமைந்த தனி மாடத்தில் பத்ம பீடத்தில் பத்மாவதி யட்சி வீற்றிருக்கிறாள். நாலு கரங்கள். மேல்கரங்களில் வஜ்ரம் பரசு. கீழே இடது கரத்தில் பழம். வலது கரம் அக்ஷய வரத முத்திரையைக் குறிக்கிறது. வலதுகால் பீடத்தில் மடங்கி இடது கால் தொங்கியவாறு மனசை மயக்கும் சுகாசன நிலை. தலையில் கரண்ட மகுடம். மகுடத்தின் பின்புறம் படம் விரித்திருக்கும் அஞ்சு தலை நாகம். காதில் பத்ர குண்டலங்கள். கழுத்தில் அட்டிகை. கையில் வளைகள். பருத்துத் திரண்ட மார்பு. அடிவயிற்றில் செல்லமான சதைப்பிடிப்பு. கருணை பொங்கும் முகம். இரு மருங்கிலும் பணிப் பெண்கள் திரிபங்க நிலையில்

ஒயிலாக நிற்கிறார்கள். ஒரு கை சாமரம் வீச மறுகை வாழ்த்தி வணங்குகிறது. பத்மாவதியின் அழகுக்கு எல்லையே இல்லை.

அருகே முத்தாகக் கோர்த்த மும்மாடங்கள். முதலாவதில் அறவாழி அண்ணல் ஆதிநாத தேவர் தவக்கோலம் பூண்டிருக்கிறார். மலர்ந்த முகப் பொலிவு. திரண்ட மார்பு. ஒடுங்கிய இடை. நீண்ட காது. தலைக்குமேல் முக்குடை. அதுக்கும் மேலாக வனப்புடன் கொடித் தோரணங்கள். தோரண வளைவுகளுக்குள் வித்தியா தரர்கள் தாளக் கருவிகள் இசைக்க அரம்பையர் ஆனந்த நடனமாடுகிறார்கள். சந்திரனும் சூரியனும் மானிட வடிவில் வந்து வாழ்த்துகிறார்கள். ஐராவதம் யானையுடன் இந்திரனும் வந்திருக்கிறான். யட்சனும் யட்சியும் வழிபடுகிறார்கள். மானிட முகத்துடன் கோமுக யட்சனும் குதிரை யானை மீதமர்ந்து தேவர்களும் தரிசிக்கிறார்கள்.

நடுமாடத்தில் சார்வான யட்சன் கந்தர்வர்கள் சாட்சியாக உயர்ந்த சிம்மா சனத்தில் பூமிக்கு அருள் பொழிந்தவாறு நேமிநாதர் அமர்ந்திருக்கிறார். சிங்கங் களும் யானைகளும் தவச்சீலரை வணங்குகின்றன.

கடைசியாக மகாவீரர். மெய்மறந்த நிலையில் பணிப் பெண்டிர் சாமரம் வீச யட்சனும் யட்சியும் வணங்கி வாழ்த்த தியானக் கோலத்தில் அமர்ந்திருக்கும் தீர்த்தங்கரர்.

மக்கள் மனசில் குடியமர்த்தி மகிழ்ந்து கொண்டாடும் கடைசித் தீர்த்தங்கரர் வர்த்தமான மகாவீரர். ஒரு சமயம் அவர் ராசாவின் மாளிகையில் தங்கி அங்கே கூடியிருந்த மக்களுக்கு அறிவுரை அருளினார். ராத்திரி முழுக்க உரை தொடர்ந்தது. வைகறை வேளை மக்களை மயக்கியது. இருந்தவாறே உறங்கிவிட்டார்கள். மகா வீரரும் அரியாசனத்தில் அயர்ந்துவிட்டார்.

பொழுது புலர்ந்தது. மக்கள் எழுந்தார்கள். மகாவீரரோ இன்னும் துயில் கொண்டிருந்தார். அருகே சென்றவர்களுக்கு அதிர்ச்சி. அவர் துயின்றவாறே வீடு பேறடைந்துவிட்டிருந்தார். ராசாவுக்கு வருத்தம். இப்படியாகிவிட்டதே. தனது மாளிகையில் நடந்ததை நினைத்தால் பெருமையாகவும் இருந்தது. கொடுத்து வைத்திருக்கணும். இந்தப் பெரும் பேற்றை என்றென்றும் கொண்டாடணும்.

மற்ற ராசாக்களை அழைத்து ஆலோசனை நடத்தினார்.

''வீடுதோறும் தீப ஒளியேற்றி மாகாவீரர் வீடுபேறடைந்ததைக் கொண் டாடுவோம்.''

''தீபாவளித் திருநாளாகட்டும்.''

ராசா அறிவித்தார். மக்கள் தீபாவளித் திருநாளைச் சீருஞ் சிறப்புடன் கொண்டாட ஆரம்பித்தார்கள்.

தீபாவளியன்று நேச்சுரம் திருவிழாக் கோலம் பூணும். மக்கள் வைகறை வேளையில் நீராடி பூச்சரமாகத் தீப வரிசைகளில் ஒளியேற்றுவார்கள். அரை மலை ஒளிப்பிழம்பாகக் காட்சிதரும்.

அதோ அகண்ட மாடத்தில் கருணையே வடிவாக துவிபங்க நிலையில் எழில் பொங்க நிற்கிறாளே அவள்தான் தருமதேவி அம்பிகா யட்சி. அணிகலன் களை மிஞ்சிய அழகு. பருத்த கொங்கையும் சிற்றிடையும் அகன்று திரண்ட புட்டமும் அல்லிக் கொடி உடம்பும் அழகைப் பறைசாற்றுகின்றன. வலப்புறம்

அவள் கணவன் சோமன் கைதூக்கி நிற்கிறான். அவன் முகத்தில் அப்படியொரு வியப்பு. மனைவியின் அழகில் மெய்மறந்த மயக்கமா இல்லை அந்த அழகு தேவதைக்குத் தான் ஏற்றவன்தானா என்ற தயக்கமா.

மானிடப் பிறவியில் அம்பிகாவும் சோமனும் தம்பதியர். அந்தணச் சோமனுக்கு வடநாட்டுக் கிரிநகரம் சொந்த ஊர். அவர்களுக்கு இரு ஆண் குழந்தைகள்.

சோமனுடைய தந்தையின் நினைவுநாள் வந்தது. மனைவியிடம் நல்ல உணவு சமைக்கச் சொல்லிவிட்டு உறவினரோடு ஆற்றங்கரைக்கு நீராடச் சென்றான். சடங்குகளை முடித்துவிட்டு வீட்டில் படையலிட உறவினரை அழைத்து வந்தான். பணிகளை முடித்துவிட்டு அம்பிகாவும் கணவனுக்காகக் காத்திருந்தாள்.

ஊரருகே மலைக்கடியில் ஒரு அமணரடியார் தவமிருந்தார். அவர் உணவுக் காக அம்பிகாவை நாடி வந்தார். படையலிட வைத்திருந்த உணவை அவருக்குக் கொடுத்துப் பசிதீர்த்தாள்.

சற்று நேரத்தில் சோமன் வந்தான். செய்தியறிந்து உறவினர் உணவருந்தாமல் சென்றுவிட்டார்கள். சோமன் சினமுற்று மனைவியை அடித்துத் துன்புறுத்தினான். கொடுமைக்கு அஞ்சி அவள் குழந்தைகளுடன் அமணரடியாரைச் சந்தித்து முறையிட்டாள். அடியாருக்கு உணவிட்ட புண்ணியத்தால் அங்கே கற்பக விருட்சம் தோன்றி அவள் வேண்டியதை அள்ளித் தந்தது.

சோமன் மனைவியைத் தேடிவிட்டு மலைக்கு வந்தான். அவனைக் கண்டு அஞ்சிய அம்பிகா மலையுச்சியிலிருந்து விழுந்து மாண்டுபோனாள். மாண்டவள் தேவலோகத்தில் தேவதையாக மாறிவிட்டாள்.

முற்பிறவியில் தனக்கிருந்த அன்புத் தோழியையும் குழந்தைகளையும் அவளால் மறக்க முடியவில்லை. மீண்டும் பூலோகம் வந்து மானிடப் பிறவி யெடுத்து வாழ்ந்துவந்தாள்.

சோமன் அவளது தெய்வீகத்தை அறிந்தான். மனசு ஏங்கியது. வானுலகத் தேவதை வடிவில் எப்படி இருந்திருப்பாள். அந்த வடிவில் காட்சி தருமாறு வேண்டினான். அவள் கற்பக விருட்சத்தினடியில் குழந்தையுடனும் தோழியுடனும் பொன்வண்ண யட்சியாகத் தோன்றினாள். அவன் வியந்துபோனான். இந்த அழகுத் தெய்வத்துடன் இணைந்து வாழ்வது முறையல்ல என அஞ்சிப் பிரிந்து சென்றுவிட்டான்.

அவன் அடுத்த பிறவியில் சிங்கமாகப் பிறந்து அம்பிகாவைத் தாங்கும் வாகனமாகும் பேறு பெற்றான்.

இதோ இன்னொரு மாடத்தில் நட்சத்திரங்களாக ஒளிரும் சிற்றுருவத் தீர்த்தங்கரர்கள் நடுவில் சந்திரனாக பார்சுவ தேவர். நின்று தவம்புரியும் காயத் சர்க நிலை. அசையாத மேனி. அணியாத அழகு. இயல்பாகத் தொங்கும் நீண்ட கைகள். பரந்து விரிந்த மார்பு. தவத்தில் மூடிய கண்கள். மூக்கு எடுப்பாக இல்லை. இதழ்களில் புன்னகை தவழ்கிறது. அமைதியின் எழிலுருவாகக் காட்சியளிக்கிறார்.

இடப்புறம் பத்மாவதி யட்சி ஒயிலாக நிற்கிறாள். வலப்புறம் தர்ணேந்திர யட்சன் மண்டியிட்டு வணங்குகிறான். அவனே தேவரின் தலைக்கு மேலாகவும் அஞ்சு தலை நாகப்படத்தால் குடைபிடித்து நிற்கிறான். இரு கைகளும் சாமரம்

வீசுகின்றன. ஆமாம் நாகதலைவன் தர்ணேந்திரனே அரவக் குடையாகவும் சாமரம் வீசுபவனாகவும் இருந்து தவத்தைக் காக்கிறான்.

வலது மூலையில் ஒரு கமடன் பாறையைத் தூக்கிப் பார்சுவர்மீது எறிய எத்தனிக்கிறான். மாடத்து மேலிருக்கும் மலைதான் பாறை. மலையையே தூக்கி அச்சுறுத்தினாலும் தேவரின் தவம் கலையவில்லை.

· தீர்த்தங்கரர்களுக்கும் யட்சிகளுக்கும் நித்திய வழிபாடு நடக்கிறது. வழிபாட்டுச் செலவுக்காக நிவந்தங்கள் வழங்கப்படுகின்றன. அரைமலை ஆழ்வாருக்கு வழிபாடு நடத்தத் தேவையான மண்கலன்களைச் செய்துகொடுக்க குயவன் பெருங்கோ வேளானுக்குத் தென்னவன் கருஞ்செய் நிலத்தைத் தானமளிக்கிறான். திருப்பணி செய்யும் சுந்தரப்பட்டனுக்குப் பெருங்கொல்லன் கருஞ்செய் கொடுக்கிறான். திருமலை மேல்பட்டாரர் திருமேனிக்குச் சரவிளக்கு நொந்தா விளக்கேற்ற களங்குடி மங்கலத்துச்சேரி சாத்தன்காளியும் அடியாரும் ஆடுகள் தருகிறார்கள். இவையன்றி திருமேனிகளுக்காக நெய்யும் பொன்னும் பொருளும் கிடைக்கின்றன.

அரைமலை அமணர்களின் தவத்தலமாக கொடைப்பண்டாரமாக அமைதியின் உறைவிடமாகத் திகழ்கிறது. மக்களின் ஆதரவும் அரவணைப்பும் பெருகுகிறது.

## 6. அமணச் சுவடுகள்

ஆண்டுகள் பல தாண்டுகின்றன. ஆளுவோர் அதிகாரத்துக்கேற்பக் காலமும் மாறுகிறது. மக்கள் தங்களை மாற்றிக்கொள்கிறார்கள். அல்லது மாற்றப்படுகிறார்கள். ஆறு போவதே கிழக்கு அரசன் சொல்வதே வழக்கு. அதிகாரத்தின் ஆதரவு குன்றவே அமணப் பள்ளிகள் வருவாய் குறைந்து நிருவாகம் நலிந்து வெகுவாகத் தளர்கின்றன. துறவிகளின் அறக்கொடைகள் வறள்கின்றன.

சிவனர்களின் நெருக்குதல் வேறு. அடிவாரத்தைச் சூழ்ந்து பின்னர் அரைமலை ஏறி குகைகளுக்கெதிரே வடபகுதியை முற்றுகையிடுகிறார்கள். பரந்த உச்சிப் பாறையில் விழும் உளி முரசு கொட்டுகிறது. துறவமைதி குலையும் அமணர் சஞ்சலத்தில் துவண்டுபோகிறார்கள்.

கலைவெறி கொண்ட சிற்பி வடபாறையில் நாலு புறமும் அறுத்து பெரும் பாளமாகப் பிளக்கிறான். தனித்துப் பிரிந்த கல்பாளம் கலைக்குத் தயாராகிறது. அதன் உச்சியிலிருந்து கைவண்ணத்தைக் காட்டத் தொடங்குகிறான்.

அவன் கைகள் அழகுச் சிலைகளை அயராது வடித்துக்கொண்டேயிருக்கின்றன. காலங்கள் கடந்தாலும் உளியின் தாளங்கள் தளரவில்லை. அவன் மனசுக்குள் உயர்ந்த கம்பீரமான ஒற்றைக்கல் கோயில் கருக்கொண்டிருக்கிறது. அது அலங்காரத் தேர். தரையிறங்கிய விமானம். ஆயுளையே அர்ப்பணித்த சிற்பச் சின்னம்.

கல்பாளக் கூரையில் குடையாக விரியும் முத்தள விமானம். அதன் உச்சியில் அரைவட்ட வடிவில் கலையழகு சிந்தும் எண்கோணச் சிகரம். சிகர மையத்தில்

இதழ்கள் மலர்ந்தும் எஞ்சிய மொட்டு குவிந்தும் எழிலாக அமர்ந்திருக்கும் தாமரைக் கலசம்.

எண்கோணச் சிகரத்தைச் சுற்றி மலையருவிக் கிளைகளாகக் காசு மாலை கழுத்து மாலை நெத்திச்சுட்டி கொலுசு மணி எனத் தோரணங்கள் தொங்கு கின்றன. நெத்திச்சுட்டிகளுக்கிடையே கர்ணக்கூட்டு மாடங்கள். கூடுகளுக்குள் சிவலிங்கச் சித்திரக் கோடுகள். மேல்பகுதியைச் சிங்க முகங்கள் அலங்கரிக்கின்றன: சுற்றிலும் மகரவாசித் தோரணங்கள். பொன் வேய்ந்த கூரையாக எண்கோணச் சிகரம் பொலிவுற்று நிற்கிறது.

எண்கோண மேடையில் ஆபரண அலங்காரத்துடன் முளைத்திருக்கும் எட்டுத் தூண்கள் சிகரத்தை ஏந்தி நிற்கின்றன. மேடையும் தூணும் சிகரமும் சேர்ந்த மாடம். யானைகள் சுமக்கும் சதுர வேதிகையில் சஞ்சரிக்கிறது. வேதிகை மூலைகளில் மும்மூர்த்திகள் அருளுருவில் அமர்ந்திருக்கிறார்கள். கிழக்கே உமா சகித சுகாசன மூர்த்தி. தெற்கே மிருதங்கத் தட்சிணாமூர்த்தி. மேற்கே நரசிங்கப் பெருமாள். வடக்கே நான்முகன். மூலைக்கொன்றாகக் கழுத்து மணி கலகலக்கும் நந்திகள் காது விடைப்பில் படுத்திருக்கின்றன. இடைவெளியில் உருவெடுத் துள்ள யானை முகங்களும் யாளி வரிசைகளும் வேதிகைக்கு அழகூட்டுகின்றன.

வேதிகைக்கும் கருவறைக்கும் இடையில் அடுக்குத் தாழ்வாரங்களாகக் கவிந்த மும்மாடங்கள். தீர்த்தங்கரரின் முக்குடையை விஞ்சும் முக்கவிகை. திசைக்கிருவராக ஊர்வசி மேனகை அரம்பை என எட்டுத் தேவ கன்னியர் எழுந்தருளியிருப்பது மேல்கவிகை மாடம். இடையிடையே கர்ணக்கூடுகள் தோரணங்கள். இள மங்கையர் தாங்கிநிற்கும் மையக் கவிகை மாடத்தைத் தேவகோட்டமும் மூவகைப் பஞ்சரங்களும் அலங்கரிக்கின்றன. இடைவெளி களில் கரண்ட மகுடமணிந்த சூரியன் சந்திரன் சுப்பிரமணியன் என மூர்த்தி களின் முழு உருவங்கள். கும்பப் பஞ்சரங்களில் திசைத் தேவியர் குடியிருக் கிறார்கள். உளி எழுதிய சிலைகளோ தோரணங்களோ இல்லாத கீழ்க்கவிகை மாடம் உழவற்ற கருஞ்செய் நிலமாகக் காட்சியளிக்கிறது.

மேல்கவிகை மாடத்துக்கும் கீழ்க்கவிகைக்கும் இடையே அனைத்துத் திசைகளிலும் பூத கணங்களின் நாத விழா. தாளக் கருவிகளின் சங்கமம். நீள வாத்தியங்களின் ஆலாபனை. கணங்கள் மோன நிலையில் சஞ்சரிக்கின்றன.

சிற்பியின் கற்பனை முழுமை பெறவில்லை. சிலைப் பணிகள் கலைந்து நின்றுவிடுகின்றன. சிற்ப எழுத்தாணி விமானத்திலிருந்து இறங்கிக் கருவறைக்குள் நுழையுமுன் அவன் காலம் முடிந்துவிடுகிறது. இருண்ட கருவறை வெற்றிட மாகவே கிடக்கிறது. கீழ்த்திசைக் காற்று அதன் வாசலில் ஓலமிடுகிறது. கருச் சிதைந்த கல் கோயில். ஒரு அற்புதத்தின் அகால இழப்பு. ஆற்றொணாத் துயரந்தான்.

நெருக்கடியில் நிலைகுலையும் அமணக் குடிகளும் துறவிகளும் நிரந்தரமாக வடதிசை நாடி வடிகிறார்கள். போக முடியாதவர்கள் சிவனர்களாக மாறு கிறார்கள். அரைமலை வேரறுந்த மரமாகச் சுழிக்காற்றுக்குச் சூகாடுகிறது. காலவோட்டத்தில் அமணம் கனவுச் சுவடுகளை விட்டுவிட்டுக் காணாமல் போய்விடுகிறது.

தூர்ந்துபோன பெரும் பள்ளிக்கு முன்னால் சிறு கோயில் எழுகிறது. அங்கே அகிலாண்டேஸ்வரி சகிதம் சம்புலிங்கேஸ்வரர் குடிவருகிறார். சிவனர்களின் முழக்கம் குகைக்குள் எதிரொலிக்கிறது.

''அரகர சிவசிவ.''

சம்புலிங்கருக்கு அடிக்கடி விழா எடுக்கிறார்கள். ஆரவாரம் கூடுகிறது.

பின்பொரு நாள் பள்ளிக் குடவரைக்குள் வள்ளி மணாளனைப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டாடுகிறார்கள். இரு வேறு குரல்கள் இணைந்து உச்சத்தை எட்டுகின்றன.

''அரகர சிவசிவ.''

''அரைமலை முருகா.''

காலம் மாறுகிறது. துலுக்க மேகங்கள் கவிந்து குமரனின் குடவரையை இருள் சூழ்கிறது. அடியவர் கல்லெடுத்து அடுக்கி முருகனை முழுக்க மூடி மறைக்கிறார்கள். அனைவரையும் அச்சம் அலைக்கழிக்கிறது.

துலுக்க மேகங்கள் கலைந்து வடுக வெயில் படர்கிறது. குளிர்ந்த வெளிச்சம் குடவரையைத் திறக்கிறது.

மேலச் சீமையிலிருந்து வரும் சின்ன ராசா குகையை எட்டிப் பார்க்கிறார். உள்ளிருந்து பாயும் ஒளிக் கீற்றில் கண் கூசுகிறது. அடுக்கியிருக்கும் கற்களை எடுத்துப் பார்த்தால் அழகு முருகனின் அருள் பொங்கும் முகம் தெரிகிறது. அனைத்துக் கற்களையும் அகற்றுகிறார். கருவறை திறக்கிறது.

மீண்டும் விழாக் கொண்டாட்டங்கள் களைகட்டுகின்றன. பல ஊர்களிலிருந்தும் காவடி சுமந்து வந்து ஆடிப்பாடிக் காணிக்கை செலுத்துகிறார்கள். கொண்டாட்டங்களில் கழுவேற்றலும் சேர்ந்துகொள்கிறது. ஆலவாயில் அமணரைக் கழுவேற்றிய அற்புதக் காட்சியை மீண்டும் நிகழ்த்திக் காட்டிக் கொக்கரிக்கிறார்கள். ஒட்டு நாக்கை மார்புவரை தொங்கவிட்டுச் சுற்றிலும் இரை தேடும் வெறி. ஆட்டுக் குடல் மாலையணிந்த ஆட்டம். ஈட்டியில் பொய்த் தலையைக் குத்தி ஏந்திய எக்காளம். நொண்டி முடங்களின் நொந்த நடை. தூக்கில் தொங்கும் பிணங்கள். படுத்திருப்போரை ஈட்டியால் குத்தும் பரிதாபம். குழிகளுக்குள் உடல் புதைந்து மேலே நாதியற்றுக் கிடக்கும் தலைகள். மேனியெங்கும் சாயம்பூசி ஊழிக் கூத்தாடுகிறார்கள்.

அடியவர் அனைவரது தலைகளும் அரைமலை உச்சியை நோக்கியே அண்ணாந்திருக்கின்றன. கண்ணிமைக்கு மேல் கைவிரித்து அமணக் கழுகு ஏதேனும் எஞ்சியிருக்கிறதா என்று ஆவலாகத் தேடுகிறார்கள். அருள் வந்து ஆவேசத்தில் ஆடுகிறார்கள்.

''கந்தா கடம்பா.''

''கழுகுமலை முருகா.''

அரைமலை கழுகுமலையாகிறது. கழுகுமலை முருகன் கழுகாசலமூர்த்தியாகிறார்.

**அ**ரைமலையின் நடுப்பள்ளிக்குள் ஆண்டாண்டு காலமாக அமுங்கிக்கிடந்த அருகன் இடிபாடுகளை விலக்கிக்கொண்டு எழுந்து வெளியே வந்து இளைப்

பாறினார். ஏன் எதுக்காக என்று பலப்பல கேள்விகள் மனசுக்குள் அனலடித்தன. வேதனைப் பெருமூச்சின் வெப்பத்தில் குகை விளிம்பு வெந்துவிட்டது.

நெஞ்சையறுக்கும் வெறுமை. பறவைகள் துறந்த கூடுகளாக அமணப் பள்ளிகள் அலங்கோலத்தில் வெறிச்சோடிக் கிடந்தன. ஓயாது சுழன்ற மூலிகை உரல் பாறைப்புண்ணாகிவிட்ட பரிதாபம். மனங்கிளரும் மருந்து மணமில்லை. புழுக்கை நெடி குமட்டியது. உள்ளே அரவங்களின் சரசரப்பும் இரைச்சலும் பிணைந்து கேட்டன. காதைச் சீண்டிச் செல்லும் கருத்த வெளவால்களின் சிறகடிப்பு. மலையெங்கும் விதைத்துக் கிடந்த ஆடு மாடுகளைக் காணவில்லை. நிர்க்கதியான நீர்ச் சுனைகள். களையிழந்துவிட்ட ஆம்பலூருணி. பாறை மாடங்களின் முன்பந்தல் ஒடிந்து மூளியாகிவிட்ட சிற்பத் திருமேனிகள். மழையிலும் வெயிலிலும் மாறிமாறி நனைந்தும் வாடியும் அங்கங்கள் தேய்ந்து மங்கிவிட்ட அவலம்.

பின்னால் திரும்பினார். மீண்டுவந்த வழியைப் பார்வை துழாவியது. விழியுமிழும் ஒளிக்கதிர்கள் நீண்டு கிடக்கும் இருளுக்குள் ஊடுருவி மலையைத் துளைத்து அடிவாரப் பெரும்பள்ளியை அடைந்து முருகனின் முதுகுப்புறமாகப் பாய்ந்து வெளியேறி வானத்தை நோக்கிப் பறந்து எட்டாத பேரண்டத்தில் கலந்துவிட்டன.

பேரண்டம் சிதறிய கோடானுகோடித் துண்டுகள் அதனதன் வழியில் அழகாக அமைதியாகச் சுற்றிக்கொண்டிருந்தன. தொலைவில் வெகு தொலைவில் எள்ளுருண்டையாகச் சுழலும் ஒரு கோளம். அது நெருப்புக் குழம்பைக் கருக்கொண்ட பூமி. மேல்பரப்பை நிலமும் நீரும் மூடியிருந்தன. அங்கே காற்று வீசியது. எதையோ தேடும் ஜீவராசிகள் ஒளியில் குளித்தும் இருளைப் போர்த்தி யும் சதா இயங்கிக்கொண்டிருந்தன. காடு மலை என எங்கும் தேடிக்கொண்டே திரிந்தன.

பாறைகளுக்கூடே ஒடுக்கமான பாதையில் நடுக்கத்தில் இறங்கிய அருகன் ஆம்பலூருணிக் கரையில் அமர்ந்து தவக்கோலம் பூண்டுவிட்டார்.

# படலம் 8

## 1. கழுகுமலை தேடி வாரும்

**ஊ**ருக்கு வடபுறம் தாய்க்கனிவில் கால் நீட்டி உட்கார்ந்திருக்கிறது கழுகுமலை. அடிவார மடியில் குடவரைக்குள் அழகு முருகன் கழுகாசலமூர்த்தியாகக் குடி கொண்டிருக்கிறார். அண்ணாந்து பார்க்க உயர்ந்த கோபுரமில்லை. தகதகக்கும் தங்கக் கலசமில்லை. மலையே விமானம்.

மேலவாசலுக்கப்பால் புல்முற்றம் விரிகிறது. நேர்வகிட்டுப் பாதை பிராகாரத் தில் முடிகிறது. பிராகாரத்தின் இருபுறமும் தூணையண்டிக் காவலிருக்கும் உரு வங்கள் குறுஞ்சிரிப்பில் யாளி மண்டபத்துக்கு வழிகாட்டுகின்றன.

கல் பந்தலிட்ட யாளி மண்டபம். அதைத் தாங்கி நிற்கும் தூண்களின் உச்சியில் அணிவகுத்து அமர்ந்திருக்கும் யாளிகள். கல்கோளங்கள் யாளி வாய்க்குள் எப்படி நுழைந்தன. கடைந்த சிற்பிக்குத்தான் தெரியும்.

அதையடுத்துப் பெருவாசல் திறந்திருக்கிறது. வாசலில் வரவேற்கும் பேருருத் துவாரபாலகர். வேலைப்பாடு நிறைந்த நெடுங்கதவு அர்த்த மண்டபத்துக்கு அனுப்புகிறது.

குடவரையில் தொடங்கும் அர்த்த மண்டபத்துக்குள் கொடிக்கம்பத்தையும் காப்புக் கருப்பேறிய கல் மயிலையும் தரிசித்துவிட்டுச் சற்று ஏறிட்டால் சிறு துவாரபாலகர் காவலிருக்கும் கருவறை தெரிகிறது. அறை முழுக்க சன்னமாகப் பரவிய வெளிச்சம். நடுவில் வேல்முருகன் தென்மேற்குப் பார்வையில் சாந்தமாக மயில்மீதமர்ந்து அருள்பாலிக்கிறார்.

ஒரு முகம் அறு கரம். தாரகாசுரனை வதைக்கத் தரித்த தனிக் கோலம். வலது தோளில் வேல் சாத்தியிருக்கிறது. அழகிய கரண்ட மகுடம் தலையை அலங்கரிக்கிறது. கழுத்து நிறைய அணிகலன்கள். கால்களில் சிலம்பு. இடப்புறமாகக் காட்சி தரும் மயில் கழுத்திலும் மாலை அசைகிறது. முருகனுக்கு வலமிடமாக வள்ளி தெய்வானை பரவசத்தில் நனைந்து நிற்கிறார்கள்.

தென்புறமும் கோயிலுக்கு வாசலுண்டு. படியேறிப் பிராகாரத்தின் இடப் பக்கம் சம்புலிங்கேஸ்வரரையும் அகிலாண்டேஸ்வரியையும் வணங்கி மேல் பிராகாரம் வந்து முருகனைத் தரிசிக்கலாம். தெற்குப் பிராகாரத்தில் ஒருவர் மண்டியிட்டு மனமுருகிப் பாடுகிறார்.

''கழுகுமலை தேடி வாரும்
கண்ட பிணிகளும் தீரும்
அழகு முருகனின்
ஆசை முகத்தினை
தெளிந்த மனசுடன் பாரும்
தேடிய செல்வங்கள் சேரும்.''

அடியார் குரல் சிலைகளைத் தீண்டி ஆலாபித்துப் பிராகாரமெங்கும் எதிரொலிக்கிறது.

கோயிலை ஒட்டி வடபுறம் பெரிய தெப்பக்குளம். குமார தெப்பம் என்று பேர். நாலு பக்கமும் கல் சுவர்கள். நீர்ச் சொகத்தில் படிகள் நீண்டு படுத்திருக்கின்றன. தென்புறமும் கீழ்ப்புறமும் நீராடும் படித்துறைகள். தெப்பத்தில் ததும்பும் நீலப் பச்சை நீருக்கு நடுவில் சின்னக் கோபுரம் பூத்திருக்கிறது. அதில் குடியிருக்கும் மாடப்புறாக்கள் கோவித்துக்கொண்டதுபோல் மொத்தமாக உயரப் பறக்கும் சிறகடிப்பு விட்டுவிட்டுக் கேட்கிறது. அவை கொஞ்ச நேரம் தெப்பத்தை அளந்துவிட்டு மறுபடியும் கோபுரத்தில் கொட்டிக் குமிந்துவிடுகின்றன.

தெப்பத்துக்குக் கிழக்கே மழை தேய்த்து மழுக்கிய மலைப் பாறை. மழை நேரங்களில் வெள்ளைத் துணி விரிப்பாக அதில் நீர்ப் படலம் மெல்ல இறங்கும். தெப்பத்தின் மேலச் சுவரில் எட்டிப்பார்க்கும் கல் மாட்டின் வாயிலிருந்து நீர் கொட்டும் இரைச்சலில் மனசு குளிரும். தெப்பக்குளம் நிறைந்தால் ஊரில் தண்ணீர்ப் பஞ்சந் தீர்ந்துவிடும்.

தெப்பத்தோரம் மேற்கே பெரிய கல் மண்டபம். அது முருகன் காற்று வாங்கும் வசந்த மண்டபம். வரிசைவரிசையாகத் தூண்கள். உள்ளே அமைதி யான அமைதி. தச்சன் கை விளையாடி லட்சணம் பெற்ற தூண்களில் சாய்ந்தபடி முருகனிடம் குறைகளைச் சொல்லி முறையிட்டால் மலையளவு கவலையும் தினையளவாகிப் பறந்துவிடும். திருவிழாக் காலங்களில் அங்கே முருகன் வள்ளி தெய்வானை சமேதராகத் தரிசனம் தருவார். மண்டபத்தைச் சுற்றிக் கல் பாவிய அகழியில் நீர் நிறைந்திருக்க கார்த்திகைப் பெண்களாக அகல் விளக்குகள் சுற்றிச் சூழ்ந்திருக்கும். நெருப்புப் பூக்கள் காற்றில் அசையும்போது நீருக்கு நடுவே கல் தேரில் முருகன் ஊஞ்சலாடும் அழகை விடியவிடியக் கண்டுகளிக்கலாம்.

மலையடிவாரத்திலிருந்து ஊர் பாய்விரித்திருக்கிறது. மலையின் பேரே ஊருக்கும் நிலைத்துவிட்டது. கண்ணுக்கடக்கமாக ஊரமைப்பு. கோயிலுக்கு அருகாமையிலேயே நெடுஞ் சதுரத்தில் நாலு ரதவீதிகள். சதுரத்தைத் தென்வட லாகத் தறித்துக்கொண்டு நடுத்தெரு. கோயிலை ஒட்டியுள்ள வடக்கு ரத வீதியில் எட்டப்ப ராசாவின் அரண்மனை இருப்பதால் அதை அரண்மனை வீதியென்றும் சொல்வார்கள். மற்ற வீதிகளைப் போல் அதில் சனங்கள் சாதாரணமாக நடமாட முடியாது. பெரிய கதவுகளால் எந்நேரமும் மூடியே இருக்கும். முக்கியமான திருவிழாக் காலங்களில் மட்டும் திறந்துவிடுவார்கள்.

கிரிப்பிராகாரப் பாதை பெரியது. மேலரத வீதியில் தொடங்கி வடக்கே வலப்புறமாக ஆம்பலூருணிக் கரையோரம் தினைப்புன மண்டபத்தைக் கடந்து மலையைச் சுற்றி பலாத் தோட்டத்தை வளையமிட்டுக் கீழ கிரிப்பிராகார வீதியில் முடிகிறது. அதிலிருந்து கீழரத வீதி தொடுத்துக்கொள்கிறது. மலையை வலம்வந்தால் கோயிலைச் சுற்றிய மாதிரி.

ஊரில் பல சாதிக்காரர்களும் உண்டு. நாடார் மறவர் வெள்ளாளர் கம்மாளர் கக்களையர் செட்டியார் வீடுகள் அதிகம். பிராமணர் நாய்க்கர் வீடுகள் சொற் பந்தான். நடுத் தெருவில் கோயில் அர்ச்சகர்கள் மற்ற பிராமணர்களின் குடி யிருப்பு. நாடார்களைத் தவிர மேல்சாதிக்காரர்களின் வீடுகள் ரத வீதிகளில் நிரவி யுள்ளன. ஈசான மூலையில் ஒதுங்கலாக ஆனால் கிரிப்பிராகார வீதியை விட்டுப் பிதுங்காமல் நாடார் தெருக்கள் நாலு. ஊரின் கீழோரத்தில் வெற்றிலை மென்று துப்பியதுபோல் பத்து வீட்டுக்கும் குறைவாகப் பள்ளக்குடி தனித்துக் கிடக்கிறது. குறவர் வீடுகளைவிடக் கம்மி.

ஊரும் கோயிலும் எட்டயாபுரம் சமீனுக்குச் சொந்தம். எட்டயாபுரம் பாளையமாக இருந்தபோதும் சரி சமீனாகிவிட்டபோதும் சரி எட்டப்ப ராசாக் களுக்கும் கழுகுமலைக்கும் அன்னியோன்னியமான தொந்தம் உண்டு. பரம்பரை யாகத் தொடர்ந்துவரும் ரத்த உறவு அது.

ராசாக்களால்தான் எல்லாம் இவ்வளவுக்கு விருத்தியடைந்திருக்கிறது. அவரவர் பங்குக்குப் புண்ணிய காரியங்கள் செய்தார்கள். சின்னஞ்சிறிசாக இருந்த கோயிலைச் சன்னஞ்சன்னமாகப் பெருக்கித் தெப்பக்குளம் வெட்டிக் கல் மண்டபம் கட்டிச் சாமிக்கு வாகனங்கள் செய்துகொடுத்து நிறைய நகைபூட்டி அழகுபார்த்து... அப்படியொரு ஈடுபாடு. எப்போதும் சக்கதேவியுடன் முருகனை யும் மனசில் குடியமர்த்தி வழிபட்டார்கள் கட்டபொம்முக்குத் திருச்செந்தூர் முருகன். எட்டப்ப ராசாக்களுக்குக் கழுகுமலைக் கந்தையா.

அவர்களின் வம்சாவளிக்குப் பெரிய பாரம்பரியம் உண்டு. சிறந்த மல்லர் களும் வில்லர்களும் நல்லவர்களும் வல்லவர்களுமாகக் கீர்த்தியுடன் ராச்சியம் ஆண்டார்கள். ஆன மட்டும் தான தருமம் செய்தார்கள். எலந்த முள் கோட்டைக் குள் குடியிருக்கும் சக்கதேவிதான் அவர்களுக்குக் குலதெய்வம். சக்கதேவிக்குப் பாத்தியப்பட்டது ஒன்பது கம்பளம். சில்லவார் கொல்லவார் தோக்கலவார் பாலவார் மேகலவார் பெல்லவார் குறிசில்லவார் எரசில்லவார் மல்லவார். இவற்றுடன் மாதாரிவார் வல்லத்தவார் பாலமவார் வெக்கிலியர் குஜ்ஜிலிகாரு குறிபாலமவார் எரகொல்லவார் என்று இன்னும் சில பிரிவுகளையும் சேர்த்துச் சொல்வார்கள். இவர்களில் எட்டப்ப ராசாக்கள் சில்லவார் பிரிவு. கட்ட பொம்மு வகையறாக்கள் தோக்கலவார் குலம்.

## 2. எட்டப்ப வம்சம்

எட்டப்ப ராசாக்கள் ஆதிகாலத்தில் ஆர்க்காட்டுச் சீமையிலுள்ள சந்திரகிரியில் இருந்துகொண்டு ராச்சிய பரிபாலனம் செய்துவந்தார்கள். பெரியஅப்பா நாய்க்கர் நல்லம நாய்க்கர் நல்லசில்லம நாய்க்கர் நல்லகெச்சிலப்ப நாய்க்கர் நல்ல சில்லம நாய்க்கர் நல்லம நாய்க்கர் கெச்சிலப்ப நாய்க்கர் சின்னஅப்பா நாய்க்கர் கெச்சிலப்ப நாய்க்கர் குமாரமுத்து நாய்க்கர் என்று பத்துப் பட்டம்வரை ஐநூறு வருசத்துக்கு மேலாக ஆண்டபோதெல்லாம் எட்டப்பன் என்ற பட்டப்பேர் கிடையாது. பிறகுதான் அந்தப் பேர் வந்தது. அது பெரிய கதை.

பத்தாம் பட்டம் குமாரமுத்து நாய்க்கருக்கு நல்லம நாய்க்கர் வடலிங்கவ நாய்க்கர் என்று ரெண்டு குமாரர்கள். மூத்தவர் பதினோராம் பட்டத்துக்கு வந்தார். திறமைசாலி. கெட்டிக்காரர். முப்பத்தேழு வருசம் சண்டை சச்சரவில்லாமல் பரி பாலனம் நடந்தது. முப்பத்தெட்டாம் வருசம் ஒரு சண்டை நடக்கும்படியாயிற்று. அதும் போயிருந்த இடத்தில்.

ராயவேலூர்ச் சீமையை சம்பு ராசா ஆண்டுவந்தார். அவருக்கு நாலு திசையும் நல்ல கியாதி. அவரைச் சந்திக்க நல்லம நாய்க்கருக்கு ரெம்ப நாளாக ஆசை. ஒரு நாள் பரிவாரங்களுடன் சந்திரகிரியிலிருந்து புறப்பட்டார். ரெம்பச் சங்கடப் பட்டு வேலூர் போய்ச் சேர்ந்தார்கள். சம்பு ராசா வசமான அரண்மனையில்தான் குடியிருந்தார். அதைச் சுற்றிப் பிரமாண்டமான கோட்டை. கோட்டைக்கு மேலே கொத்தளங்கள். அதுக்குள் ஆயுதமேந்திய வீரர்கள் கண்கொத்திப் பாம்பாகக் காவ லிருந்தார்கள்.

தெற்கு வாசல் முகப்பில் ஒரு மல்ல வீரன் பொலிகாளைபோல் செனாய்த்துக் கொண்டு நின்றிருந்தான். திகிடுமுகிடான உடம்பு. சதை திரளைதிரளையாகக் கட்டிதட்டி முண்டி முறைத்துக்கொண்டிருந்தது. வடலிப்பனை வளர்த்தி. அவனைச் சுற்றி எட்டு மல்லர்கள். அவன் கூடப்பிறந்தவர்கள். அவர்களுக்கடுத்து ஆயுதங்களுடன் வீரர் கூட்டம்.

சம்பு ராசாவைப் பார்க்கப் போகும் சந்தோசத்தை அசைபோட்டவாறு நல்லம நாய்க்கர் கோட்டையை நெருங்கிக்கொண்டிருந்தார்.

''ஏய் கிட்ட வராத. எட்டி நில்லு.''

கோட்டை வாசலிலிருந்து வந்த அரட்டலைக் கேட்டு அசந்துபோனார். சிறு திகைப்பு. ஒண்ணும் ஓடாமல் கொஞ்ச நேரம் நின்றுவிட்டார். இத்தனை காலமாக நம்மை ஒரு பயலும் இப்படிப் பேசியதில்லையே. போயும் போயும் ஒரு காவக்காரன் வாயால் கேட்க வேண்டியதாயிற்றே. நம்முடைய பேரென்ன பெருமையென்ன. கோவம் பொத்துக்கொண்டு வந்தது. ஓடிப்போய்க் கண்டந் துண்டமாக வெட்டிப் போடணும்போல் ஆத்திரம். பல்லை நறநறத்துக் கோவத்தை அடக்கிக்கொண்டார்.

பின்னால் வந்த பரிவாரங்களுக்குப் பெரிய வாதிப்பு. வந்த இடத்தில் என்னத்துக் கென்னாகுமோ. பதட்டத்தில் முகத்தை முகத்தைப் பார்த்துக் கொண்டார்கள்.

''சும்மா வாங்க.''

நல்லம நாய்க்கர் பின்னால் கைகாட்டியபடி கோட்டை வாசலுக்கருகில் போய்விட்டார். அவரும் ஏப்புச்சாப்பான ஆளில்லை. பெரிய பலசாலி. மார்பு முழுக்க மயிர் காடாக வளர்ந்திருக்கும். அவரது வாளைச் சுமக்க ரெண்டாள் வேணும். ஓடும் கண்ணுக்குட்டியைக் கழுத்தைப் பிடித்துச் செந்தூக்காக அந் தரத்தில் தூக்கிவிடுவார்.

காவக்காரனை வெட்டும் பார்வையில் அரட்டினார்.

''ஆர்ரா நீ. எவ்வளவு தைரியமிருந்தா சந்திரகிரி நல்லம நாய்க்கரத் தடுத்து நிறுத்துவ.''

அவன் சண்டைச் சாவலாகக் கொக்கரித்தான்.

''ஆராருந்தா எனக்கென்ன. இந்தச் சோமனப் பத்தித் தெரியாம எப்படி இந்த எடத்துல எட்டுவப்ப. ஒன்னப் போல எத்தன பேரப் பாத்துருப்பென். அவங்க கதி ஒனக்கும் ஆகணுமா. உள்ளங்கையில வச்சுக் கசக்கிச் சாறு புழிஞ்சிருவென்.''

''நீ சோமனா இரு இல்ல வீமனா இரு. அதப் பத்திக் கவலையில்ல. நம்ம கிட்ட மட்டும் சங்காத்தம் வச்சுக்கிறாத. இப்ப வழி வுடப் போறயா இல்லையா.''

சோமன் இடதுகாலை ஓங்கித் தரையில் மிதித்தான். அதில் கட்டியிருந்த பெரிய தங்கச் சங்கிலி சலசலத்தது. கையை உயர்த்தி அருமுறுக்கினான்.

''கீழ குனிஞ்சு போ. ஒன் ஆளுகளும் அப்படித்தான் போகணும். எங் காலத் தொட்டுக் கும்புட்டுட்டுப் போனவங்களுக்குக் கணக்கே இல்ல. அது தெரியுமா.''

நல்லம நாய்க்கர் துடித்துப்போனார். கேவலம் இவனுடன் மோதுவதா. அதுக்கொரு தராதரம் வேணாமா. இருந்தாலும் வலியச்சண்டைக்குக் கூப்பிட்டு விட்டானே.

''அப்படியா சங்கதி. ஒனக்கு அவ்வளவு எளக்காரமாப் போச்சா. வந்த எடத்துல ராசாவுக்கு அவக்காதி வந்துருமேன்னு பாக்கென். இல்லன்னா நடக்கிற கதையே வேற. ஏதொண்ணுக்கும் அவருட்ட ஒருவார்த்த கேட்டுக்கிருவொம்.''

''கவுட்டுக்குள்ள மொழஞ்சு போறதுக்கு ராசா உத்தரவு வேணுமாக்கும். ஒன் ஆசைய ஏன் கெடுக்கணும். ஒருத்தன் போயிட்டு வாடா.''

அரண்மனைக்கு ஓடியவனிடம் சேதி கேட்ட சம்பு ராசாவுக்குச் சந்தோசம். உடனே நல்லம நாய்க்கரைப் பார்க்கணும்போல் ஆவல் துள்ளியது. நிச்சயம் சோமனைக் கடந்து வந்துவிடுவார்.

''அப்படியே ஆகட்டும்.''

உத்தரவு வந்ததோ இல்லையோ நல்லம நாய்க்கர் வெகுண்டெழுந்தார்.

''இப்ப வாடா வச்சுக்கிருவொம்.''

பெரிய சண்டை மூண்டுவிட்டது. இரு பக்கமும் மூர்க்கமாக மோதிக்கொண் டார்கள். நல்லம நாய்க்கரின் வில்லிலிருந்து அடிதொடியாக ரெண்டு அம்புகள் பாய்ந்து போய் சோமனின் தொடைகளைத் துளைத்தன. அவன் எதிர்பார்க்க வில்லை. நிலைகுலைந்து நின்றுவிட்டான். அவ்வளவுதான். அவர் வாளை உருவிக் கொண்டு ஓடினார். அவனும் விடவில்லை. இருவருக்கும் கடுமையாக வாள் சண்டை நடந்தது. அவரது வேகமான வீச்சுக்கு அவனால் ஈடுகொடுக்க முடிய வில்லை. தடுமாறி மல்லாக்க விழுந்துவிட்டான். அவர் உடனே அவன் மார்பில் மிதித்து ஓங்கினார்.

''என்னவா போட்டிக்குக் கூப்பிட்ட காவக்கார நாயே. இப்படி எத்தன பேர அவமானப்படுத்தியிருப்ப. இண்ணைக்கோட ஒங் கொட்டம் அடங்கட்டும்.''

அவன் கழுத்தில் ஒரே தறிப்பு. தலை உருண்டது. உருமாலை எடுத்து முண்டத்திலிருந்து பீச்சிய ரத்தத்தில் நனைத்தார். துணிமுழுக்கச் சுவர்ந்து சொட்டியது.

இதுக்குள் பரிவாரங்களின் சண்டை ஓய்ந்திருந்தது. எதிரிகள் போன இடம் தெரியவில்லை. அங்கங்கே குற்றுயிரும் குலையுயிருமாகப் பல உடல்கள் சிதறிக் கிடந்தன. சோமனின் தம்பிமார் எட்டுப் பேரும் உயிர்தப்பி நிராயுதபாணி களாகக் கைகூப்பி நின்றார்கள்.

''எங்களக் காப்பாத்துங்க சாமி.''

அவர்களைக் கொல்ல மனசு வரவில்லை. சரணடைந்தவர்களைத் தண் டிப்பது தருமமாகாது.

''பொழச்சுப்போங்க.''

சோமனின் தலையை வல்லயத்தில் குத்தி ஏந்தினார். ரத்தம் நனைந்த உரு மாலை இன்னொரு வல்லயத்தில் கொடிகட்டிப் பறக்கவிட்டார். ரெண்டையும் கம்பீரமாகப் பிடித்துக்கொண்டு அரண்மனையை நோக்கி நடந்தார். ஒருவன் சோமனின் கால்சங்கிலியைப் பிடித்து உடலை இழுத்துக்கொண்டு போக பரிவாரங்கள் ஆதாளியில் பின்தொடர்ந்தார்கள். நடுவில் தலைகுனிந்து தள்ளாடி நடக்கும் சோமனின் தம்பிகள்.

சம்பு ராசா நல்லம நாய்க்கரை வரவேற்றார்.

''சோமனை வென்ற சூரரே வாருங்கள். தங்கள் வீரத்தை மெச்சுகிறேன்.''

''ஒங்களச் சந்தோசமாப் பாக்க வந்த எடத்துல இப்படியாச்சேன்னு எனக்கு வருத்தம்.''

''வீரவிளையாட்டுக்கு இடம் ஒரு தடையில்லை. சோமனின் தம்பிகளுக்கு அபயமளித்த பெருந்தன்மையை என்னவென்பது.''

''பாவம் செய்ய மாட்டென்.''

''இந்த வெற்றிக்கு அடையாளமாக சோமன் தலைபோல் தங்கத்தில் செய்து இடது காலில் அணிந்துகொள்ளுங்கள். அது சோமத்தலை விருதாகட்டும். ரத்தத் துணியை சந்திரகாவிக் கொடி விருதாக வைத்துக்கொள்ளுங்கள். எட்டு

மல்லருக்கு அப்பனைப் போல் அபயமளித்ததால் தங்களுக்கு எட்டப்பன் என்னும் பட்டப்பேர் விளங்கட்டும். இதோ உபய சாமரம் கட்டியம். இந்த விருதுகளையும் ஏற்றுக்கொள்ளுங்கள்.''

சம்பு ராசா நல்லம நாய்க்கரைச் சகல மரியாதைகளுடன் பட்டணப் பிரவேசம் வரச் செய்து சந்திரகிரிக்குச் சந்தோசமாக அனுப்பிவைத்தார்.

நல்லம நாய்க்கரின் கியாதி பட்டிதொட்டியெங்கும் பரவியது. சோமனைக் கொன்று பட்டம் சூடிவந்த பெருமையைக் கொண்டாட சந்திரகிரிப் பட்டணம் திருவிழாக் கோலம் பூண்டது. தாயாதிக்காரர்களும் சனங்களும் திரண்டார்கள். அரியாசனத்தில் அமைதியாக அமர்ந்திருந்த நல்லம நாய்க்கரின் இடது காலில் சோமத்தலை விருதைக் காமணன் தளவாய் அணிந்தான். இன்னொரு வீரன் கொடியைப் பிடித்து நின்றான்.

''நல்லம எட்டப்ப நாய்க்கர் வாழ்க''.

எல்லாரும் வாயார வாழ்த்தினார்கள். மனசும் வயிறும் நிறைந்த சந்தோசத்தில் அவர்கள் திக்குமுக்காடிப்போனார்கள். அவர் வீரர்களுக்குச் சன்மானம் வழங்கினார்.

அந்தப் பூரிப்பிலேயே மேலும் அஞ்சு வருசம் ஆண்டார்.

ராசாவின் குமாரர் பேரும் நல்லம எட்டப்ப நாய்க்கர்தான். அவர் பன்னிரெண்டாம் பட்டத்துக்கு வந்தபோது காமணன் தளவாய்தான் சோமத்தலை விருது கட்டினான். பெரியவருக்குச் சந்திரகாவிக் கொடி பிடித்தவனே சின்னவருக்கும் பிடித்தான். பிற்காலத்தில் அவரவர் வம்சத்தவர்கள் இந்த மரியாதைகளைச் செய்துவரணும் என்பது பெரியவர் உத்தரவு. சின்னவரின் காலத்தில் சண்டை சச்சரவு அதிகமில்லை. அமைதியாக முப்பத்தஞ்சு வருசம் ஆண்டார்.

அடுத்துப் பட்டமேறிய அவரது குமாரர் நல்ல சில்லம எட்டப்ப நாய்க்கர் காலமும் அக்குத்தொக்கில்லாமல் ஓடியடைந்தது. நாற்பத்தோரு வருசம் பரிபாலனம் செய்தார்.

பதினாலாம் பட்டம் சூடியவர் குமாரமுத்து எட்டப்ப நாய்க்கர். அவருக்குச் சோதனைமேல் சோதனையாக வந்தது. தொடர்ந்து சந்திரகிரியில் தங்கி ஆளக் கொடுத்துவைக்கவில்லை.

வடக்கே விசயநகரத்தை ஆண்ட வடுக ராசாவுக்குப் பெரிய நெருக்கடி வந்து சேர்ந்தது. துலுக்க ராசா படையெடுத்து வந்து ரெம்ப அழிமாண்டம் பண்ணிக் கொண்டிருந்தார். எதிர்த்துச் சண்டையிட்ட வடுக ராசாவால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. ஏகப்பட்ட உயிர்ச்சேதத்துக்குப் பின் விசயநகரம் துலுக்கர் கைக்கு வந்துவிட்டது.

வடுக ராசாவை ஆதரித்த சின்ன ராசாக்கள் பாடு திண்டாட்டம். துலுக்கர் எந்த நேரம் வந்து பிடித்து நசுக்குவார்களோ என்ற அச்சமான நிலைமை. பெரும்பாலானவர்கள் சிதறியோடித் தப்பிவிட்டார்கள். சிலர் சரணடைந்துவிட்டார்கள். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப்போயிருந்த எட்டப்ப ராசா முக்கியமானவர்களைக் கலந்தார். எல்லாரும் ஒரே மாதிரி சொன்னார்கள்.

''துலுக்கன் கையில சிக்கி மடியிறதக் காட்டி பாதுகாப்பான சீமைக்குப் போயிறதே நல்லதுன்னு தோணுது''.

ராசா சமாதானப்பட்டுக்கொண்டார்.

''நம்மள நம்பியிருக்கிற சனங்கள அநியாயமாப் பலிகுடுக்கிறது மகா பாவம். பணிஞ்சுபோனாத்தான் அவுகளக் காப்பாத்தலாம்''.

''அது ஆபத்து ராசா. எந்த நேரம் என்ன செய்வாகன்னு தெரியாது.''

''சரி உள்ளபடி நடக்கட்டும். பொறப்புடுங்க.''

தாயாதிக்காரர்கள் கம்பளத்துச் சேனைகள் பரிவாரங்கள் எல்லாரும் திரண்டு விட்டார்கள். சகல ஏற்பாடுகளுடன் எட்டப்ப ராசா சக்கதேவியை வணங்கி உத்தரவு வாங்கிக்கொண்டு புறப்பட்டார். பரம்பரையாக ஆண்ட சீமையை விட்டுப் பிரியும்போது ரெம்ப வருத்தமாக இருந்தது. கண்ணீர் பொருமக் குழறினார்.

''சக்கம்மா தாயே ஒன் விருப்பம் இதுதான்னா அத ஆராலதான் மாத்த முடியும். எங்க போனாலும் ஒங் காலடியில கெடக்கிற பிள்ளைகளக் காப் பாத்திக் குடுக்கணும்.''

அவர்கள் காடு மலைகளைக் கடந்து போகும் வழியில் பெரிய ஆறு குறுக் கிட்டது. அதைத் தாண்டித்தான் அப்பால் போகணும். வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. சேனைகள் தயங்கி நின்றுவிட்டன. ராசா மனசு தளரவில்லை. இவ்வளவு தூரம் வந்துவிட்டுப் பின்வாங்கக் கூடாது. எல்லாரும் அவர் உத்தரவுக்காகக் காத்திருந்தார்கள்.

''நமக்குச் சக்கதேவி தொணையிருக்கும்போது ஏன் கலங்கணும். தைரியமா எறங்குங்க.''

அவர் முதலில் காலெடுத்து வைத்தார். பின்னால் வரிசையாக இறங்கினார்கள். அவர்களின் ஒருமித்த அபயக் குரல் வெள்ளத்தின் இரைச்சலை மிஞ்சியது.

''ஓ சக்கம்மா... ஓ சக்கம்மா... ஓ தாயாரம்மா...''

ஒருவர் பின் ஒருவராக ஈட்டியையும் வாளையும் துணைக்குப் பிடித்துக் கொண்டு முன்னேறினார்கள். குதிரைகள் கெலித்துக்கெலித்து முந்தின. கொஞ்சங் கூடச் சேதமில்லாமல் குளித்துக் கரையேறியதுபோல் ஆற்றைக் கடந்துவிட் டார்கள். ராசா சக்கதேவிக்கு நன்றி சொன்னார்.

''கம்பளத்துப் பிள்ளைகளக் காப்பாத்துன தாயாரம்மா ஒங் கருணைய என்ன சொல்லட்டும்.''

புதுத் தெம்புடன் மதுரைப் பட்டணத்தை அடைந்தார்கள். மதுரையை அப் போது பாண்டிய ராசா ஆண்டுவந்தார். பாண்டிய நாட்டுத் தலைநகரத்துக்குள் நுழைந்த பிறகு அவரைப் பார்க்காமல் போவது மரியாதையில்லை. அனுமதி வாங்கிச் சந்தித்தார்.

பாண்டிய ராசா அவரது பூர்வீகத்தைப் பற்றி விசாரித்தார். கேட்கக்கேட்க நல்ல துணை கிடைத்த தெம்பு. கணக்குப்போட்டுப்பார்த்தார். இவர்களை நம் வசம் வைத்துக்கொண்டு காரியம் சாதிக்கலாம். பக்குவமாகக் கேட்டார்.

''இவ்வளவு பரிவாரங்களையும் அழைத்துக்கொண்டு எங்கே போகத் திட்ட மிட்டிருக்கிறீர்கள்.''

‘‘திட்டமென்ன. சொந்த எடத்தவுட்டுக் கௌம்பி வந்தாச்சு. எங்க தோதுப் படுதோ அங்க குடியிருக்க வேண்டியதுதான். வடக்க நெலம சரியாகிற வரைக்கும் அலஞ்ச பாடுதான்.’’

‘‘சரியாகிவிடுமா’’.

‘‘துலுக்கன் செய்ற கொடுமையைப் பாத்தா இப்பக்குள்ள சரியாகும்னு தோணல.’’

‘‘ஒரு இடத்தைப் பிடித்தால் விட மாட்டார்கள். சொத்தெல்லாம் சுருட்டிக் கொண்டுதான் போவார்கள்.’’

‘‘அவன் ஆட்டத்துக்குப் பலியான உசிரு கொஞ்ச நஞ்சமா.’’

பாண்டிய ராசா சற்று யோசித்தார்.

‘‘நமது நாட்டுக்குள்ளேயே இருங்கள். கவலை வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன்.’’

எட்டப்ப ராசா இதை எதிர்பார்க்கவில்லை. ஏதாவது பொருள்தான் கிடைக்கு மென்று எண்ணியிருந்தார். யோசித்துப்பார்த்தால் அதும் சரிதான். பெரிய ராசா சொல்லும்போது மறுக்க முடியாது. எல்லாரையும் கூப்பிட்டுப் பேசினார். சந்தோச மாக ஒத்துக்கொண்டார்கள். அவர் சம்மதித்தார்.

‘‘ஒங்க விருப்பப்படி செய்யிங்க.’’

பாண்டிய ராசாவுக்கு ஒரு கவலை விட்டது. கள்ளர் நாட்டின் சில பகுதி களில் எதிரிகள் கட்டுக்கடங்காமல் திமிறிக்கொண்டு திரிந்தார்கள். அவர்களை அடக்கப் பொருத்தமான ஆள் கிடைத்திருக்கிறது. உடனே கள்ளர் நாட்டுச் சேகரம் கருக்கொட்டான்பட்டியையும் ஆனையூரையும் புதூர் சேகரத்தில் அனேகக் கிராமங்களையும் எட்டப்ப ராசாவுக்கு விட்டுக்கொடுத்தார். அது போக மதுரை மேலவாசல்முதல் கரடிக்குளம்வரை திசைகாவல் பொறுப்பையும் ஒப்படைத்தார். நகரா நவபத்து உபய சாமரம் கட்டியம் பஞ்சவர்ணப் பாவாடை மீன்கொடி முதலான பல விருதுகளும் வழங்கினார்.

‘‘கருக்கொட்டான்பட்டியில் கோட்டை கட்டிக் குடியிருங்கள்.’’

இவ்வளவு மரியாதை கிடைத்ததில் எட்டப்ப ராசாவுக்குப் பெருமை. பரி வாரங்களுடன் கருக்கொட்டான்பட்டிக்குப் போய் வலுவான கோட்டை கட்டிக் கொண்டு கொஞ்ச நாளிலேயே எதிரிகளை அடக்கி நீதியுடன் பரிபாலனம் செய்துவந்தார்.

அவருக்குப் புத்திர பாக்கியமில்லை. அது பெருங்கவலை. பரிகாரமாக புதூரில் குமார கோயில் கட்டி வழிபட்டார். அழகான ஆண் குழந்தை பிறந்தது. குமாரமுத்து எட்டப்ப நாய்க்கர் என்று பேர்சூட்டி வளர்த்தார்.

அச்சமயம் சதுரகிரி மலையருகே மூவரையன் என்ற மறவன் இடையூறாக இருந்தான். பெரிய வீரன். அவனை நெருங்கவே அஞ்சினார்கள். எட்டப்ப ராசா அஞ்சவில்லை.

‘‘அப்படியென்ன உசிரு வேண்டிக்கெடக்கு. ஆரு கெட்டிக்காரன்னு பாத்துற வேண்டியதுதான். கண்ணுக்கு முன்னால அட்டூழியம் செய்றதப் பாத்துட்டுச் சும்மாவா இருக்க முடியும்.’’

துணிந்து அவனுடன் மோதிக் கோட்டையைக் கைப்பற்றினார். பாண்டிய ராசாவுக்குச் சந்தோசம். எட்டப்ப ராசாவுக்கு மூவரையகண்ட வெண்டயம் என்னும் விருது கொடுத்து சுந்தரபாண்டிய எட்டப்ப நாய்க்கர் என்று பட்டப் பேரும் சூட்டினார்.

தெற்குச் சீமையில் இளசை நாடு உண்டு. அதை முதுகுடி நாடு என்றும் சொல்வார்கள். அதுக்குத் தலைநகரம் இளம்புவனம். அதை அருச்சுனத்தலைவனும் அவன் தம்பி முத்திருளத்தலைவனும் ஆண்டுவந்தார்கள். அப்போது மதுரை பாண்டிய ராசாவின் உறவினர் செகவீர பாண்டியன் கங்கைகொண்டான் சீமையை ஆண்டார். அவருக்குக் கப்பங் கட்டாமல் அருச்சுனத்தலைவனும் முத்திருளத்தலைவனும் முரண்டுபிடித்தார்கள். அவர் மதுரை ராசாவிடம் உதவி கேட்டார். மதுரை ராசா எட்டப்ப ராசாவைப் படையுடன் அனுப்பிவைத்தார்.

எட்டப்ப ராசா ஊர்ஊராக நிலவரங்களை அறிந்துகொண்டே சாத்தூர்ப் பக்கமாக வந்துவிட்டார். அவசரப்பட்டு இளசை நாட்டுக்குள் நுழையக் கூடாது. நிதானித்து ஆட்டநோட்டம் பார்த்துப் போகலாம். அதுவரை பரிவாரங்கள் இளைப்பாறலாமே. அங்கே கோட்டை கட்டி தாயாதிக்காரரான நல்லம நாய்க்கரைக் குடியமர்த்தினார்.

ஏழாயிரம்பண்ணைக்கு அதிபதியான ஆண்டுகொண்ட வன்னியனார் அவரை எதிர்கொண்டு மரியாதை செய்தார். தண்டுச் செலவு வகைக்காக முன்னூறு கோட்டை சோளம் கொடுத்தார். அது பரிவாரங்களுக்கு ஏந்தலாக இருந்தது.

தக்க சமயம் பார்த்து எட்டப்ப ராசா இளசை நாட்டுப் படைகளுடன் மோதினார். அருச்சுனத்தலைவனும் முத்திருளத்தலைவனும் சரிசண்டையிட் டார்கள். சண்டை ரெம்ப நாளாக நடந்தது. இறுதியாக இளசைப் படைகள் தோற் றோடிவிட்டன. கோட்டை கைவசமானது. செகவீர பாண்டியனுக்குக் கப்பம் போய்ச் சேர்ந்தது.

மதுரை பாண்டிய ராசாவுக்கு நிம்மதி. எட்டப்ப ராசாவை இளசை நாட்டுக்கு ராசாவாக நியமித்துவிட்டார். எட்டப்ப ராசாவுக்கு இளம்புவனம் தலைநகரமாகிவிட்டது. ஏழாயிரம்பண்ணை வன்னியனார் சமயத்தில் செய்த உதவியை அவர் மறக்கவில்லை. விசுவாசத்துக்கு அடையாளமாக வருசத்துக்கு நாற்பத்தெட்டுக் கோட்டை நெல்லும் இருநூற்றைம்பது பணமும் கொடுத்துவர ஏற்பாடுசெய்தார்.

அவருக்கு ரெண்டு குமாரர்கள். குமாரமுத்து எட்டப்ப நாய்க்கர் வட லிங்கவ நாய்க்கர். மூத்தவர் பதினஞ்சாம் பட்டத்துக்கு வந்தார். அப்போது நத்தம் சீமையை தொந்தலிங்கவ நாய்க்கர் ஆண்டார். அவருக்குச் சந்ததியில்லை. வட லிங்கவ நாய்க்கரைத் தத்தெடுத்துக்கொண்டார்.

இளசை நாட்டில் மறவர் தொந்தரவு ஓய்ந்தபாடில்லை. ராசா அவர்களை விரட்டியடித்தார். அகப்பட்டவர்களிடம் சாசன உடன்படிக்கை எழுதி வாங்கிக் கொண்டார். அதன்படி அவர்களது சந்ததிகள் இருக்கிறவரை ராசாக்களுக்குப் பல்லாக்குச் சுமந்து ஊழியம் செய்யணும்.

பிறகும் மறவர்கள் கட்டுப்படாமல் துள்ளினார்கள். இந்த முறை ராசா அவர் களுடன் சண்டையிடவில்லை. கூப்பிட்டுப் பேசினார். அவர்களும் வழிக்கு

வந்தார்கள். நயந்துகொண்டு பைகளில் பணம் கொடுத்தார்கள். ராசா பைகளைப் பொதியேற்றிக் கங்கைகொண்டானுக்குக் கொண்டுபோனார். செகவீர பாண்டியன் சந்தோசப்பட்டு உபகாரமாகப் பல கிராமங்களை இனாமாகக் கொடுத்தார். அதோடு திருச்சுழிச் சீமையின் திசைகாவல் பொறுப்பும் செகவீரராம எட்டப்ப நாய்க்கர் என்ற பட்டப்பேரும் கிடைத்தது.

அவருக்குப் பிறகு செகவீரராம சுந்தரபாண்டிய எட்டப்ப நாய்க்கர் பதினாறாம் பட்டமும் செகவீர ராம கெச்சிலப்ப எட்டப்ப நாய்க்கர் பதினேழாம் பட்டமும் ஆண்டார்கள். செகவீரராம வெங்கடேச எட்டப்ப நாய்க்கர் பதினெட்டாம் பட்டம் எய்திய காலத்தில் அங்கங்கே எதிரிகளின் தொந்தரவு இருந்தது. அருங்குளம் சித்தயநாய்க்கன்பட்டி மாவிலோடை கிராமங்களில் கோட்டை அமைத்து அடாத செயல்களில் ஈடுபட்டவர்களை அவர் அடக்கி அந்தச் சீமைகளை வசப்படுத்தினார்.

அடுத்த பட்டத்துக்கு வந்தவர் செகவீரராம கெச்சில எட்டப்ப நாய்க்கர். அவர் காலத்திலும் தொந்தரவு இருந்தது. சாயமலைச் சீமையில் போக்கிரிகள் நடமாடினார்கள். அவர்களைக் கட்டுப்படுத்தி பதினஞ்சு கிராமங்களைத் தன் வசம் சேர்த்துக்கொண்டார்.

## 3. ரத்த மானியம்

அப்போது மதுரையில் நிலவரம் சரியில்லை. வலுவிழந்திருந்த பாண்டிய ராசாவைத் தூக்கியெறிந்துவிட்டு சோழ ராசா மதுரையைக் கைப்பற்றினார். தனக்கு உதவுமாறு பாண்டிய ராசா வடதேசம் ஆண்ட பெரிய வடுக ராசாவிடம் முறையிட்டார். பெரிய ராசா உடனே தளபதி நாகம நாய்க்கரை மதுரைக்கு அனுப்பினார். நாகம நாய்க்கர் சோழ ராசாவை எளிதில் விரட்டிவிட்டு மதுரையைப் பாண்டிய ராசாவிடம் ஒப்படைக்காமல் தன்னையே ராசாவாகப் பிரகடனப் படுத்திக் கொண்டார். இதனால் கோவமடைந்த பெரிய வடுக ராசா சபையைக் கூட்டி ஒரே கேள்வி கேட்டார்.

''உங்களில் நாகம நாய்க்கரின் தலையைக் கொண்டுவரப்போவது யார்.''

நாகம நாய்க்கரின் மகன் விசுவநாத நாய்க்கர் சபதமிட்டார்.

''நானிருக்கிறேன்.''

பெரும்படையுடன் மதுரைக்கு வந்த மகன் தகப்பனை வென்று மதுரைக்கு மன்னராகிவிட்டார். மதுரையில் பாண்டிய வம்சம் மறைந்தது.

பீஞ்சாணி பாண்டிய ராசாவின் வம்சத்தில் அஞ்சு குமாரர்கள். அவர்கள் வடுக ராசாவின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளாமல் கலகம் செய்து தெற்குச் சீமைக்கு வந்து கயத்தாறு கங்கைகொண்டான் சீவலப்பேரி ஆகிய இடங்களில் வாசம்செய்து அந்தச் சீமைகளை ஆண்டுவந்தார்கள்.

இது வடுக ராசாவுக்குச் சள்ளையாக இருந்தது. எப்படியாவது அவர்கள் கொட்டத்தை அடக்கியாகணும். இல்லையென்றால் வலுவடைந்து மதுரைக்கே

வந்துவிடுவார்கள். அவர்களை எட்டப்ப ராசாவின் உதவி கொண்டுதான் அடக்க முடியும். உடனே மந்திரியைச் சேனைகளுடன் அனுப்பினார்.

எட்டப்ப ராசா பஞ்ச பாண்டியர்களிடம் எவ்வளவோ பேசிப்பார்த்தார்.

''வீணால வம்புதும்பு எதுக்கு. வடுக ராசாவுக்குப் பணிஞ்சுபோயிருங்க. அது தான் எல்லாருக்கும் நல்லது.''

அவர்கள் கேட்பதாக இல்லை. வேறு வழியில்லாமல் சண்டை நடந்தது. உக்கிரமான சண்டை. அவர்கள் தோற்றுப்போனார்கள். வடுக ராசா எட்டப்ப ராசாவின் உதவியைப் பாராட்டிச் சன்மானங்கள் கொடுத்தார்.

''தங்களுக்கென்று தலைநகரத்தை உருவாக்கிக்கொள்ளுங்கள்.''

எட்டப்ப ராசா நடுவப்பட்டிக்குக் கிழக்கே இடம் குறித்து தலைநகர வேலை களை ஆரம்பித்தார். சகல வசதிகளுடன் அரண்மனையும் அதைச் சுற்றிக் கோட்டை யும் எழுந்தன. தெருக்கள் முளைத்தன. அக்கிரஹாரம் வந்தது. சிவன் கோயில் கட்டி கோலாகலமாகக் குடமுழுக்கு நடந்தது. கோயிலுக்குள் குடியிருக்கும் எட்டீஸ்வர மூர்த்திக்கு அலங்காரம் சொல்ல முடியாது.

அரண்மனையைச் சுற்றிச் சனங்கள் குடியேறினார்கள். பார்த்திருக்கப் பெரிய ஊராகிவிட்டது. தலைநகரத்துக்கு எட்டயாபுரம் என்று பேர் வைத்து எட்டப்ப வம்சத்துக்குப் பெருமை சேர்த்தார் ராசா.

செகவீரராம குமார எட்டப்ப நாய்க்கர் இருபதாம் பட்டம் சூடினார். அவருக்கும் மதுரை வடுக ராசாவுக்கும் நல்ல உறவு இருந்தது. மலையாள தேசத் தைப் பிடிக்கணுமென்று வடுக ராசா திட்டம் வைத்திருந்தார். அதுக்குச் சகாயம் செய்யும்படி எட்டப்ப ராசாவைக் கேட்டுக்கொண்டார். எட்டயாபுரத்தில் குடி யேறி கொஞ்ச காலந்தான் ஆயிற்று. அதுக்குள் இப்படியொரு சோதனையா. இருந் தாலும் பெரிய ராசா சொல்லிவிட்டார். தட்ட முடியாது.

சேனைகளுடன் மலையாள தேசத்துக்குப் புறப்பட்டுப் போனார் எட்டப்ப ராசா. அங்கே நடந்த கடுமையான சண்டையில் இரணியல் கோட்டை பிடி பட்டது. வெற்றிக் களிப்பில் ஊர் திரும்பினார்கள்.

வரும் வழியில் சேனைகள் துவளுவதைக் கவனித்த ராசா பெத்தணன் தள வாயிடம் கேட்டார்.

''எங்கயாவது தங்கிப் போவமே.''

''தவிப்பாறிக்கிட்டாத்தான் தெம்பாப் போகலாம்.''

பாதுகாப்பான இடம் தேடினார்கள். ஊத்துமலைக் காட்டுப் பகுதிதான் தோதாக இருந்தது. பரிவாரங்கள் பசியாறிக் கண்ணயர்ந்தார்கள். ராசாவும் படுத் திருந்தார்.

எதிரி ஒருவன் அருவமில்லாமல் அவர்களைப் பின்தொடர்ந்து வந்திருக் கிறான். யாரும் கவனிக்கவில்லை. ஊத்துமலைக் காடு வந்ததும் இதுதான் சந்தர்ப்பம் என்று ஒளிந்திருந்து வேலையைக் காட்டிவிட்டான். அவன் வைத்த அம்புக் குறி தப்பவில்லை. ராசாவின் முதுகில் ஆழமாகப் பாய்ந்துவிட்டது. நிலைகுலைந்து போன ராசா தளவாயைக் கூப்பிட்டார். எல்லாரும் ஓடிவந்தார்கள். அவர் தள வாயின் கையைப் பிடித்துக்கொண்டார்.

''என்னப் பத்திக் கவலப்பட வேணாம். எல்லாரவும் பத்தரமாக் கொண்டு போய்ச் சேக்க வேண்டியது ஒம் பொறுப்பு.''

பெத்தணனுக்குக் கண்ணீர் பொங்கியது.

''ஒங்களுக்கு ஒண்ணும் ஆகாது ராசா.''

இது எப்படி நடந்தது. நினைக்கநினைக்க அவனுக்கு வெட்கம். நாலா பக்கமும் தேடினார்கள். எதிரி அகப்படவில்லை.

ராசாவுக்கு எவ்வளவோ வைத்தியம் பார்த்தும் பயனில்லை. வைத்தியர் முழித்தார். ராசா அந்த இடத்திலேயே உயிரை விட்டார். சேனைகள் துயரத்தில் துடித்தன. கண்ணீரும் கம்பலையுமாகச் சடலத்தைச் சுமந்துகொண்டு எட்டயா புரம் வந்தார்கள்.

ஊருக்குள் இடி விழுந்த சோகம். சனங்களைத் தேற்ற முடியவில்லை. அழுது புலம்பினார்கள்.

''தலையில்லாற முண்டமாத் துடிக்கிறமே.''

அரண்மனைக்குள் அழுகை ஓய நாளானது.

சம்பவத்தை யறிந்த வடுக ராசா வேதனையில் உழன்றார். இழந்த உயிருக்கு எது கொடுத்தாலும் ஈடாகாது என்றாலும் கழுகுமலைச் சீமையை ரத்தமானி யமாகக் கொடுத்து அய்யன் என்ற பட்டப்பேரும் சூட்டினார்.

ரத்தம் சிந்திக் கிடைத்த கழுகுமலைமீது எட்டப்ப ராசாக்களுக்குத் தனிப் பிரியம் ஏற்பட்டது. எட்டயாபுரத்தைப் போலவே அந்த ஊரையும் விருத்தி பண்ணுவதில் அக்கறை காட்டினார்கள்.

## 4. வடுக பாண்டியர்

இருபத்தோராம் பட்டத்துக்கு வந்தவர் செகவீர கெச்சில எட்டப்ப நாய்க்கர். பதினோரு வருசம் பரிபாலனம் செய்தார். அவருக்கு ரெண்டு குமாரர்கள். செக வீரராம எட்டப்ப நாய்க்கர் அய்யன் செகவீரெட்டு நாய்க்கர்.

மூத்தவர் அடுத்த பட்டம் சூடி ஆண்டுவந்த காலத்தில் மதுரை வடுக ராசா வுடன் நல்ல உறவு இருந்தது. அப்பப்பச் சகாயம்பண்ணினார். மலையாளச் சீமைக்குப் போய்க் கப்பம் வசூலித்துக் கொடுத்தார். சன்மானம் கிடைத்தது.

இருபத்திமூணாம் பட்டத்து ராசா செகவீரராம கெச்சில எட்டப்ப நாய்க்கர் அய்யன் பெரிய வீரர். வேட்டையாடுவதில் அவருக்குத் தனிப் பிரியம். ஒரு சமயம் கோலார்பட்டியருகில் ருக்குமுஞ்சி கிராமத்து மேட்டில் புல்வாய் வேட்டைக்குப் போயிருந்தார். அப்போது கோலார்பட்டியாருடன் தகராறு. பெரிய சண்டையில் கொண்டுபோய்விட்டது. எட்டப்ப ராசா புகுந்து விளாசினார். குதிரை மேலிருந்த எதிரியை இடது கையாலேயே வெட்டிச் சாய்த்தார். அதே வெட்டில் குதிரையும் ரெண்டு துண்டாகிவிட்டது. அதிலிருந்து அவருக்கு இடவங்கை கெச்சிலப்ப நாய்க்கர் என்று பட்டப் பேரானது.

அவருக்கு ரெண்டு தாரம். மூத்த தாரத்து வழிக் குமாரர் செகவீரராம எட்டப்ப நாய்க்கர் அய்யன் பட்டமேறினார். அவர் காலத்தில் தொந்தரவு அவ் வளவாக இல்லை. எல்லாம் நல்ல முறையில் நடந்தது.

இளைய தாரத்தின் மூத்த குமாரர் ரணசூர கெச்சிலப்ப எட்டப்ப நாய்க்கர். அவருக்கும் மதுரை ராசா வழிச் சந்ததியில் முத்துவீரப்ப நாய்க்கர் அய்யனுக்கும் நல்ல பழக்கமுண்டு. அவரது சிபாரிசின் பேரில் எட்டப்ப ராசா தன் மகன் ரண சூர கெச்சில எட்டப்ப நாய்க்கருக்கு குருமலை அதைச் சுற்றியுள்ள சீமையைப் பிரித்துக் கொடுத்தார். குருமலை தனிப் பாளையமானது.

எட்டயாபுரம் வம்சாவளியில் செகவீர கெச்சில எட்டப்ப நாய்க்கர் அய்யன் இருபத்தஞ்சாம் பட்டத்துக்கு வந்தார். அவர் பல கிராமங்களைச் சேர்த்துக் கொண்டு பாளையத்தைப் பெரிசாக்கினார்.

மதுரையில் அழகப்பன் சேர்வை என்று பெரிய வீரன் இருந்தான். அவனுக்கு எட்டப்ப ராசாவைச் சந்திக்க விருப்பம். பந்துக்கள் பரிவாரங்களுடன் புறப்பட்டு செம்மப்புதூருக்கு வந்து சேர்ந்தான். அங்கே மாப்பிள்ளை வல்லேறு நாய்க்கரைப் பார்த்துப் பேசினான். அவர் எட்டப்ப ராசாவுக்குத் தாயாதிக்காரர். இருவரும் எட்டயாபுரத்துக்கு வந்தார்கள். ராசா நல்லமுறையில் உபசரித்தார். சேர்வை வந்த காரணத்தைக் கேட்டார். அவன் பவ்வியமாகச் சொன்னான்.

''மதுர ராசா அனுப்பிவச்சாரு. நான் தெங்காசி வடமலப்புள்ளையச் சந்திக் கணும். அதுக்கு நீங்க சகாயம் பண்ணணும்.''

''அதுக்கென்ன செஞ்சாப்போச்சு''.

ராசா அவனுடன் அபிசேகம் பிள்ளையை அனுப்பிவைத்தார். அவன் தெம் புடன் தென்காசிக்குப் போய் வடமலைப் பிள்ளையைச் சந்தித்தான். அவர் மதுரை ராசா நியமித்த அதிகாரி. தென்காசியில் இருந்துகொண்டு நிருவாகத்தைக் கவனித்து வந்தார். அவருக்கு அவனைப் பிடித்துப்போயிற்று. கட்டாலங்குளத்தைச் சேர்ந்த சில கிராமங்களை முன்னூறு பொன் பொறுப்புக்கு விட்டுக்கொடுத்தார். அக் கிராமங்களை எட்டயாபுரத்துடன் சேர்த்துத் தீர்வை செலுத்தி எட்டப்ப ராசா வுக்குச் சேவகம் செய்யும்படி சொல்லியனுப்பினார்.

அழகப்பன் சேர்வை கட்டாலங்குளத்தில் இருந்துகொண்டு தனக்குக் கொடுக்கப்பட்ட கிராமங்களைச் சிறு பாளையமாக்கி ஆண்டுவந்தான். அது எட்டயாபுரத்துக்குக் கட்டுப்பட்டது.

அவனது வீரதீரத்தைப் பார்த்த எட்டப்ப ராசா அவனைப் படைத் தளபதி யாக நியமித்தார். கோபாலபுரம் மார்த்தாண்டன்பட்டி ஆகிய ஐநூறு பொன் கிராமங்களை அவனுக்குக் கொடுத்தார். அவன் நம்பிக்கையான தளபதியாக நடந்துகொண்டான்.

செகவீரராம கெச்சில எட்டப்ப நாய்க்கர் அய்யன் இருபத்தாறாம் பட்டத் துக்கு வந்தார். அவர் ஆண்ட நேரம் சரியில்லை. பல நெருக்கடிகளைச் சந்திக்க வேண்டியிருந்தது. ராமநாதபுரம் சேகரம் சூரங்குடியில் சில எதிரிகள் அடங் காமல் திரிந்தார்கள். அவர்களை அடக்கியாள வேண்டிய கட்டாயம். அதுக்காக அதிகாரி குமாரெட்டு கட்டாலங்குளம் அழகப்பன் வகையறா கெச்சிலணன் சேர் வைக்காரன் ஆகியோரை அனேகப் படைகளுடன் ராசா அனுப்பிவைத்தார்.

சூரங்குடிக் கோட்டைக்கு முன்னால் பலத்த சண்டை நடந்தது. எட்டயா புரம் சேனைகள் வாசலில் நின்ற சிலரை வெட்டிச் சாய்த்துவிட்டு கோட்டைக்குள் நுழைந்தன. அந்தச் சமயம் ஓரத்தில் ஒளிந்திருந்த ஒரு எதிராளி கெச்சிலணனை வெடியால் சுட்டுவிட்டான்.

குமாரெட்டு இடிந்துபோனான். கெச்சிலணனை அள்ளிக்கொண்டு புலம் பினான்.

''மோசம் பண்ணீட்டயே பாவி. ராசாவுக்கு என்ன மொகாந்தரம் சொல்லு வென்.''

கெச்சிலணன் அந்த நிலைமையிலும் மனந்தளரவில்லை.

''என்ன மறந்துருங்க. இந்தச் சண்டையில நம்ம தோத்துறப்புடாது.''

''நான் இருக்கென். நீ கவலப்படாத.''

குமாரெட்டு அவனைத் தூக்கி எட்டயாபுரத்துக்கு அனுப்பிவிட்டுப் பாய்ந் தான். எதிரிகளை விரட்டிக் கோட்டையைக் கைப்பற்றினான். அங்கே தன் வீரர் களை நிறுத்திவிட்டு கெச்சிலணனைப் பற்றிய நினைவிலேயே எட்டயாபுரம் திரும்பினான்.

கெச்சிலணன் இறந்துவிட்டான். அவனது சந்ததியாருக்கு உபயம் செய்யணு மென்று ராசா நினைத்தார். ஆனால் அவனுக்குச் சந்ததி கிடையாது. அதனால் அவன் சகோதரி சின்னக்காள் மகன் அழகுமுத்துச் சேர்வைக்காரன் பேரில் குருவிநத்தம் தீத்தாம்பட்டி கிராமங்களை ரத்த மானியமாக வழங்கினார். பிறகு அழகுமுத்துச் சேர்வை எட்டயாபுரம் படைத் தளபதியானான்.

ஒரு வருசம் கடுமையான பஞ்சம் வந்துவிட்டது. மழை தண்ணீரில்லாமல் பயிர்கள் கருகிப்போயிற்று. வள்ளிசாக வெள்ளாமை விளைச்சலில்லை. சனங்கள் பசி பட்டினியால் துடித்தார்கள். இந்த நிலைமையில் அவர்களிடம் தீர்வை வசூ லிக்க முடியாது. ஆனால் கப்பம் கேட்டு மதுரையிலிருந்து மிரட்டினார்கள்.

அப்போது மதுரை வடுக ராசா வம்சத்தில் ராணி மங்கம்மா ஆண்டு வந்தாள். அவள் ஆட்சிக்கு வந்தது ஒரு கதை. அவளது குமாரர் பதினஞ்சு வயசில் ராசாவாகப் பட்டஞ் சூடி ஏழு வருசம் இருந்தார். இருபத்திரெண்டு வயசில் பெரியம்மை கூட்டிக்கொண்டது. அவர் சாகும்போது ராணி முத்தம்மா கர்ப்ப மாக இருந்தாள். சின்ன வயசிலேயே பிழைப்பைப் பறிகொடுத்துவிட்ட அவள் உடன்கட்டை ஏறி ராசாவுடனேயே உயிரை மாய்த்துக்கொள்ளத் துடித்தாள். மாமியார் மங்கம்மா ஆறுதல் சொல்லி அதுக்கு அணைப்போட்டாள்.

''கொழந்த பொறக்கிறவரைக்கும் காத்திரு மருமகளே. பெறகு நானே ஏற் பாடு செய்றென்.''

முத்தம்மா பொறுமையாக இருந்து ஆண் குழந்தை பெற்றுக்கொடுத்தாள். அதுக்குப் பிறகும் உடன்கட்டை ஏற விடாமல் மாமியார் சாக்குப்போக்குச் சொல்லிக் காலங்கடத்தி வந்தாள். நம்பிக்கையிழந்துவிட்ட முத்தம்மா ஒருநாள் தற்கொலை செய்துகொண்டாள்.

பேரன் பேரைச் சொல்லி மங்கம்மா ஆட்சிக்கு வந்தாள். நாட்டில் பூசல் குழப்பத்துக்குக் குறைவில்லை. ஆணுக்கு நிகராகச் சண்டையிட்டு அடக்கி வைத்தாள். கட்டாயக் கப்பம் வசூலித்து கஜானாவை நிரப்பினாள். குளங் குட்டை வெட்டினாள். கோயில் சத்திரம் கட்டினாள். மலம்பாம்புச் சாலைகள் போட்டு மரங்கள் நட்டினாள். இப்படிப் புண்ணிய காரியங்கள் செய்வதற்குக் காரணம் வைத்திருந்தார்கள்.

''தாம்பூலம் போடும்போது வெத்தல மடிச்சு எடது கையால வாயில திணிச்சிருச்சாம்.''

''அதனால என்ன.''

''அது பெரிய பாவமாம்.''

''போச்சுடா.''

''அதுக்குப் பரிகாரமா இப்படியெல்லாம் செய்யணும்னு சொன்னாகளாம்.''

''ஆரு சொன்னது.''

''வேற ஆரு பெராமணருதான்.''

''எப்படியோ சனங்களுக்கு நல்லது நடக்குது.''

''அதச் சொல்லு.''

மங்கம்மாளின் பேரன் வயசுக்கு வந்து அரியணை ஏறக் காத்திருந்தான். அவள் அவனுக்கு முடிசூட்டி அழகு பார்க்கவில்லை. அதுக்கும் காரணம் சொன்னார்கள்.

''பேரனுக்கு அவ்வா வுட்டுக்குடுக்கிறதாத் தெரியல.''

''அதிகாரச் சொகம் தடுக்குது.''

''இதுக்கு மந்திரி ஒத்துப்பாடுறாராம்.''

''மந்திரி பேச்சக் கேட்டுக்கிட்டுத்தான் மங்கம்மா ஆட்டம் போடுதா.''

''அதுக்குக் காரணம் இருக்குது.''

''என்ன புதுசாக் காரணம்.''

''ரெண்டு பேருக்கும் கள்ளத் தொடுப்பாம்.''

''அப்படிப் போடு.''

''அய்யா சின்ன வயசு. கட்டான ஒடம்பு. ஆசையிருக்காதா பின்ன.''

''அது புருசன் இல்லாற பொம்பள. ரெண்டும் ஒட்டிக்கிருச்சு.''

''மீனாச்சி கோயிலுக்குள்ள தாமரக்கொளத்துக்கு மேல்புறம் சின்னக் கோயில் கட்டி அதுக்குள்ள மந்திரியோட செலையச் செஞ்சுவச்சிருக்குதாம்.''

''அப்படியொரு மோகம்.''

''இனியொரு கதையக் கேளு. கோயிலுக் கூரையில ஒரு ரம்மியமான சித்திரம் இருக்குதாம். அதுல சகல அலங்காரத்தோட ராணி தழையத்தழையச் சுமங்கலியா நிக்கிதாம். அதுக்கு முன்னால ஒரு வாலிபன். அது மந்திரியாம். பாத்தவங்க சொன்னாங்க.''

''மனசுக்குள்ள மண்டிக்கெடக்கிற ஆசையச் சித்திரமாத் தீட்டச் சொல்லியிருக்குது மங்கம்மா. அத எப்படியும் பாத்தாகணுமே.''

''எத.''

''அட போப்பா. சித்திரத்தத்தான்.''

''அடடா கத இப்படிப் போகுதே. தொடர வுட்டா பெருத்த அவாமானமாயிருமே. இதுக்கு ஒரு வழிபண்ணியாகணுமேன்னு ஒரு கூட்டம் திட்டம் போட்ருக்கு.''

''என்ன திட்டம்.''

''மங்கம்மாளப் புடிச்சு அது கெட்ன அரமனையிலயே கூண்டுக்குள்ள போட்டு அடச்சிட்டாக.''

''அடப் பாவமே.''

''அது அனுபவிச்ச கொடும கொஞ்சநஞ்சமில்ல. சோறு தண்ணியில்லாம வாடியிருக்குது.''

''கம்பீரமாருந்த பொம்பளச் சிங்கம் நடமாட முடியாமப் படுத்துருச்சு.''

''கூண்டுக்கு வெளிய கமகமன்னு சாப்பாடு உக்காந்துருக்கும். அது பசியில ஆவலோட எடுக்கக் கை நீட்றது. வேடிக்க பாக்கிற ஆளுக அத எடுத்துறது.''

''ஆசகாட்டி மோசம் பண்றாக. பொம்பளப் பாவம் சும்மா வுடாது.''

''இந்த வெளையாட்டு பல நாளா நடந்துருக்கு. நஞ்சுபோன துணியாக் கெடந்த மனுசியக் கிழிச்சுக்கிட்டு ஒருநா உசிரு போயிருச்சு.''

''சாகடிச்சிட்டாங்க.''

''ஒருவழியா இந்தப் பொம்பளையோட கொட்டம் அடங்கி போயித் தொலஞ்சதுன்னு அதுமேல காட்டமாருந்த கூட்டம் பெருமூச்சு வுட்டுச்சு.''

''ராச வம்சத்துக்கு இதெல்லாம் சர்வசாதாரணம்ப்பா. திருமல நாய்க்கருக்கு எரநூறு தாரமாம். அப்படியும் ஆச அடங்கல. கோயில் பட்டரு சம்சாரத்துமேல மனசு நோங்கீருக்கு. இப்படி இனியொரு கூட்டம் சொல்லுச்சு.''

''ராசா மனசுக்குப் புடிச்சிட்டா ஆராருந்தென்ன.''

''பட்டரோட வீட்டுக்குப் போயி அந்தப் பொம்பளையத் தொட்டுத் திரும்பும்போது தட்டுத்தடுமாறி கெணத்துல வுழுந்து செத்துப்போனாராம். அவரவிட இந்தம்மா எவ்வளவோ மேல்.''

''பெராமணருக சேந்து அவரக் கெணத்துல தள்ளிவுட்டதாவும் சொல்லிக்கிறாக.''

''அப்படியும் இருக்கும்.''

''ஒரு மனுசனால பாவம் எரநூறு பொம்பளைகளும் தாலியறுத்திருப்பாக.''

''தாலி கெட்னது எத்தனையோ கெட்டாறது எத்தனையோ.''

''அவுகளால எப்படிச் சும்மாருக்க முடியும்.''

''அவரோட தீயில பாஞ்சது எத்தனையோ பாயாறது எத்தனையோ.''

''எல்லாம் அரமன வெவகாரம். நமக்கெதுக்கு வம்பு.''

''மங்கம்மாளச் சாகடிச்சுத்தான் பேரனுக்கு வழி கெடைக்கணும்னு ருந்திருக்கு.''

''எங்கயும் நடக்கிறதுதான.''

## 5. கைமாறும் அதிகாரம்

இருபத்தேழாம் பட்டத்துக்கு வந்த செகவீரராம வெங்கடேசுர எட்டப்ப நாய்க்கர் அய்யன் பிறந்ததிலிருந்தே பக்திமானாக விளங்கினார். சிவன் பேரிலும் பெருமாள் பேரிலும் அதிக ஈடுபாடு கொண்டிருந்தார். மந்திர சக்தியால் வாக்குப் பலிதமுடையவராகவும் இருந்தார்.

அனுமந்தக்குடிக் கோட்டையைப் பிடிப்பதில் ராமநாதபுரம் சேதுபதிக்குச் சிக்கல் இருந்தது. அதை முன்னிட்டு அவருக்கும் தஞ்சாவூர் ராசாவுக்கும் சரியான

சண்டை. சேதுபதி எட்டப்ப ராசாவின் உதவியை நாடினார். ராசா காரியஸ்தர் பெரியமுத்துப் பிள்ளையையும் கட்டாலங்குளம் அழகுமுத்துச் சேர்வையையும் உபய ராணுவத்தைச் சேர்ந்த ஐயாயிரம் ஆயுதபாணிகளுடன் அனுப்பி வைத்தார். அங்கே நடந்த சண்டையில் பெரியமுத்துப் பிள்ளையும் அழகு முத்தும் இறந்து போனார்கள். சேதுபதி செயித்துவிட்டார்.

பெரியமுத்துப் பிள்ளை பார்த்துவந்த வேலை அவர் மகன் குழந்தைவேலுப் பிள்ளைக்குக் கிடைத்தது. அழகுமுத்துச் சேர்வையின் மகன் அழகுமுத்து தளபதி யானான்.

ராசா எட்டயாபுரத்தில் வெங்கிடாசலபதி கோயில் கட்டி உற்சவம் நடத் தினார். அவரது சமஸ்தானத்தில் பெரும்புலவர்களும் பண்டிதர்களும் இருந் தார்கள். அவர்களில் கடிகைமுத்துப் புலவரும் அவருடைய மாணாக்கர் உமறுப் புலவரும் முக்கியமானவர்கள்.

எட்டப்ப ராசாக்களின் தயவில் தெற்குச் சீமைகளை ஆண்டுவந்த பஞ்ச பாண்டியர்கள் போகப்போக வலுவிழந்துவிட்டார்கள். மதுரையை ஆண்ட வடுக ராசாவும் தாட்டிக்கமாக இல்லை. பஞ்சபாண்டியர்களிடம் திசைகாவக்காரராக இருந்த வீரப்பாண்டிய நாய்க்கர் என்ற கட்டபொம்மு இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு தானே ராசாவாகிவிட்டார். பஞ்சபாண்டியர் நினை வாகத் தனது நாட்டுக்குப் பாஞ்சாலங்குறிச்சி என்றும் தலைநகரத்துக்கு செகவீர பாண்டியபுரம் என்றும் பேர் சூட்டிக்கொண்டார்.

எட்டயாபுரத்தில் செகவீரராம எட்டப்ப நாய்க்கர் அய்யன் இருபத் தெட்டாம் பட்டத்துக்கு வந்தார். எட்டயாபுரத்துக்கும் பாஞ்சாலங்குறிச்சிக்கும் அவ்வளவாக ஒத்துப்போகவில்லை. சிறுசிறு தகராறுகள்.

மதுரையில் வடுக ராசாக்களின் வம்சம் ராணி மீனாட்சியுடன் உளுத்து உடைந்துபோயிற்று. பிராமணர்கள் ஆட்டிப்படைத்த நோஞ்சாணி ராசா அதாவது மங்கம்மாளின் பேரன் இறந்ததும் அவர் சம்சாரம் மீனாட்சிக்கு ஆளும் ஆசை வந்தது. அவளுக்குப் புத்திர பாக்கியம் கிடையாது. ஒரு பையனை ராசா வின் வாரிசாகத் தத்தெடுத்துக்கொண்டு அவனுக்குப் பொறுப்பாக அரியாசனம் ஏறினாள்.

அவளுக்கும் தத்துப் புத்திரனின் தகப்பனாருக்கும் ஏற்பட்ட அதிகாரச் சண்டையில் துலுக்கர்கள் மூக்கை நுழைத்தார்கள். அவள் மனசில் வரித்துக் கொண்டு மலைபோல் நம்பியிருந்த துலுக்க வீரனின் நம்பிக்கைத் துரோகத்தால் மனசுடைந்து நஞ்சுண்டு உயிர்துறந்து வடுக வம்சக் கணக்கை முடித்துவைத்தாள். மதுரை துலுக்கர் கைக்கு மாறியது.

அதுக்குப் பிறகு அழிவு புஞ்சையில் ஆடுமாடு மேய்ந்ததுபோல் துலுக்கர்கள் தெற்குச் சீமைக்குப் படையுடன் வந்து பாளையங்களை அரட்டி மிரட்டிக் கப்பம் வசூலிக்கத் தொடங்கினார்கள். அவர்களில் முக்கியமானவன் மருதநாயகம் என்ற கான்சாகிப். கும்பினியாரைத் திருச்சி மண்ணில் காலூன்ற வைத்த மாவீரன். சின்ன வயசிலேயே தகப்பனைப் பாளையக்காரருக்குப் பலிகொடுத்துவிட்டு

அனாதையானவன். துலுக்கரின் அரவணைப்பில் வளர்ந்து துலுக்கனாக மாறியவன். கும்பினிப் படையில் சேர்ந்து படிப்படியாக உயர்ந்து கும்மாந்த னாகியவன். கும்பினிக்குக் கப்பம் வசூலிப்பதற்காகப் படையுடன் திருநெல் வேலிச் சீமையை வேட்டையாடிக்கொண்டு திரிந்தான். கப்பம் கொடுக்க மறுத்த எட்டயாபுரத்தின் மேல் அவனுக்குக் கடுங்கோவம். சமயம் பார்த்திருந்தான்.

எட்டப்ப ராசாவின் உறவினர் எட்டையா கிழக்கு எல்லையோரம் பூதலப் புரத்திலிருந்துகொண்டு எல்லைக் கிராமங்களையும் பண்ணையையும் கவனித்து வந்தார். அவருக்கு எட்டயாபுரத்தின்மேல் ஒரு கண் இருந்தது. கான்சாகிப்பிடம் தன் ஆசையைச் சொன்னார். இது நல்ல சந்தர்ப்பமென்று அவன் படைகளைக் கொடுத்து உதவினான்.

எட்டையா தைரியமாக எட்டயாபுரத்தைத் தாக்கி வசப்படுத்திக்கொண் டார். எதிர்பாராத விதத்தில் நிலைகுலைந்துபோன எட்டப்ப ராசா தளபதி அழகுமுத்துச் சேர்வையுடன் பெருநாழிக் காட்டுக்குப் போய் பாசறை அமைத்துத் தங்கியிருந்தார். எட்டையா மூலம் எட்டயாபுரத்திலிருந்து கப்பம் அட்டியில்லாமல் வருமென்று கும்பினி எதிர்பார்த்திருந்தது.

எட்டயாபுரத்துச் சனங்கள் எட்டையாவை வெறுத்தார்கள். எட்டப்ப ராசாவையே ஆதரித்தார்கள். வரி கொடுக்க மறுத்தார்கள். இதனால் எட்டையா கும்பினிக்குக் கப்பம் கட்டத் திணறினார். பாளையமே குழப்பத்தில் மூங்கி யிருந்தது.

அப்போது குருமலைப் பாளையத்தைக் குருமலைத்துரை ஆண்டுவந்தார். அவர் எட்டயாபுரத்திலிருந்து பிரிந்துபோன ரணசூர கெச்சிலப்ப எட்டப்ப நாய்க்கர் வம்சத்தில் வந்தவர். அவரது மந்திரி வேம்பத்தூர் சிவசங்கரன் பிள்ளை. கும்மாந்தன் கான்சாகிப்புக்கு நெருங்கிய சினேகிதர். அவர் மூலம் கான்சாகிப்பின் சகாயம் பெற்று எட்டயாபுரத்துக்குப் பாளையக்காரராகிவிடலாம் என்பது குருமலைத்துரையின் திட்டம்.

பெருநாழிக் காட்டில் மறைந்திருந்த எட்டப்ப ராசாவும் அழகுமுத்தும் எப்படியாவது எட்டயாபுரத்தை விடுதலை செய்யத் துடித்துக்கொண்டிருந் தார்கள். அழகுமுத்து அல்லும்பகலும் அலைந்து படை திரட்டினான். மாவி லோடை சித்தயநாய்க்கன்பட்டி என்று சுத்துப்பட்டிச் சனங்கள் வெறியுடன் படையில் சேர்ந்தார்கள். எட்டப்ப ராசாவுக்கு நம்பிக்கை வலுத்தது.

சிவசங்கரன் பிள்ளை குருமலையிலிருந்து மதுரைக்குப் போய் கும் மாந்தனைச் சந்தித்துப் பேச்சுப்போட்டார்.

''அய்யா மருதநாயகம் எட்டயாவரம் ஆட்டங்கண்டுபோச்சு. சனங்க கொதிச்சுக்கிட்ருக்காங்க. எட்டையா பத்தியத்துக்குள்ள பட்டுக்கிட்ட எலி மாதிரி முழிக்காரு. ஒடனே ஒரு வழி பண்ணலன்னா என்ன நடக்குமோ சொல்ல முடியாது.''

''எவன் ஆண்டா நமக்கென்ன. நம்ம பேச்சக் கேக்கணும். தவறாமக் கப்பம் வந்து சேரணும். அதுக்கு வழியச் சொல்லும்.''

''என்னருந்தாலும் எட்டையா தூரத்து ஒறவுதான. அதனாலதான் சனங் களுக்கு அவரப் புடிக்கல. ஓடிப்போன ராசா பக்கமே சாயிறாக. ராசா குடும் பத்தச் சேந்த ஒருத்தர உக்கார வச்சிட்டா எல்லாம் சரியாப்போகும்.''

''ராசா குடும்பந்தான் காட்டுக்குள்ள கெடக்குதே.''

''ஏன் குருமலத்தொர இருக்காரே. எட்டையாவத் தூக்கியெறிஞ்சிட்டு இவர உக்காத்தி வச்சிருவொம். அவுகளுக்குள்ள அடிச்சிட்டுக் கெடக்கட்டுமே. கும்பினிக்குக் கப்பம் ஒழுங்கா வரும்.''

''குருமலத்தொர இதுக்கு ஒத்துக்கிருவாரா.''

''அதுக்குத்தானய்யா தவங்கெடக்காரு. அவரு அனுப்பித்தான நான் வந் துருக்கென். கப்பத்துப் பாக்கி எவ்வளவு இருக்குதோ அதும் நிக்காது. போதுமா. தள்ளிப்போடுறது நல்லதில்ல. நெலம மோசமாகி பழைய ராசாவே வந்து உக்காந் துட்டா ஒண்ணும் செய்ய முடியாது. அதவும் தெளிவாச் சொல்லிப்புட்டென்.''

''எல்லாம் நீரு நெனச்சபடி நடக்கும்.''

கான்சாகிப் பெரிய படையுடன் போய் எட்டயாபுரத்தைத் தாக்கினான். சண்டையில் கோட்டை இடிந்தது. எட்டையா கைதானார். குருமலைத்துரை பாளையக்காரரானார். அவரது மாமா வல்லேறு நாய்க்கர் தளபதியானார். சிவ சங்கரன் பிள்ளை கான்சாகிப்பின் ஏஜெண்டானார். பாதுகாப்புக்காக எட்டயா புரத்தில் தன் படைகளை நிறுத்திவிட்டுப் போனான் கும்மாந்தன்.

மதுரையில் அடைத்து வைக்கப்பட்டிருந்த எட்டையா சும்மா இருக்க வில்லை. ஒரு பெண்ணிடம் வம்பு பண்ணி பலவந்தம் செய்துவிட்டார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த வீரன் அவரை வெட்டிக் கொன்றுவிட்டான். எதுக்கோ ஆசைப்பட்டவரின் கதை இப்படி முடிந்தது.

### 6. சிவசங்கரன் பிள்ளை ஓடை

மேலச்சீமையில் நெல்கட்டுஞ்செவல் என்று ஒரு பாளையம் உண்டு. அதை பூலித்தேவர் ஆண்டுவந்தார். கும்பினியை எதிர்த்த பாளையக்காரர்களில் முக்கிய மானவர். வீராதி வீரர்.

அவர் மற்ற பாளையங்களைக் கூட்டு சேர்த்துக்கொண்டு கும்பினிப் படை களையும் கும்பினிக்கு ஆதரவான படைகளையும் தாக்கி திருநெல்வேலிச் சீமையில் பல பகுதிகளைக் கைப்பற்றினார். வெண்ணிக்காலாடி ஒண்டிவீரன் போன்ற தளபதிகள் அவருக்கு உறுதுணையாக இருந்தார்கள். அவருடன் பெரு நாழிக் காட்டிலுள்ள எட்டப்ப ராசாவின் படைகளும் இருந்தன. சண்டைகளில் அழகுமுத்துச் சேர்வை முழுமூச்சுடன் ஈடுபட்டதையறிந்த கான்சாகிப்புக்குக் கோவம். சூளுரைத்துக்கொண்டு பெரும்படையுடன் திருநெல்வேலிச் சீமைக்கு வந்தான்.

''அவனாச்சு நானாச்சு. ஒருகை பாத்துறென்.''

பெருநாழிப் பாசறையில் எட்டப்ப ராசா பெருமூச்சு விட்டபடி காலத்தை முடித்துக்கொண்டார். அழகுமுத்துக்குப் பொறுப்பு கூடியது. மனந்தளராமல் ராசாவின் குமாரர் செகவீரராம வெங்கடேசுர எட்டப்ப அய்யனுக்கு முடி சூட்டிவைத்தான்.

படைகளுக்குத் தெம்பு வந்தது. எட்டயாபுரத்தைத் தாக்கத் தயாரானார்கள். மொத்தம் மூணு தளபதிகள். எட்டப்ப ராசா அழகுமுத்து வல்லயணன் சேர்வை. ராசா தலைமையிலிருந்த படை எட்டயாபுரத்தோரம் ராமனூத்தில் தங்கியது. அழகுமுத்து படையுடன் பெத்தாநாய்க்கனூரில் பதுங்கியிருந்தான். வல்லயணன் பெருநாழியில் நின்றுகொண்டான். பெருநாழிப் படையும் பெத்தாநாய்க்கனூர்ப் படையும் ராமனூத்துக்கு வந்து ராசாவுடன் சேர்ந்து மூணு பேரும் எட்டயா புரத்துக்குப் புறப்படணும். இதுதான் திட்டம்.

எட்டப்ப ராசா ராமனூத்தில் இருப்பது சிவசங்கரன் பிள்ளைக்கும் வல் லேறு நாய்க்கருக்கும் தெரிந்துவிட்டது. உடனே படைகளுடன் விரைந்து வந்து ராசாவைத் தாக்கினார்கள். ராசா சமாளித்துச் சண்டையிட முடியாமல் சித்தய நாய்க்கன்பட்டிக்குப் பின்வாங்கிவிட்டார். சிவசங்கரன் பிள்ளை மார்தட்டினார்.

''எட்டயாவரத்துல காலு வைக்க வுட மாட்டொம்.''

இருந்தாலும் உள்ளுக்குள் அச்சம். கங்கைகொண்டானுக்கு ஓடி கான்சாகிப் பிடம் புலம்பினார்.

''அய்யா மருதநாயகம் பெருநாழிக்காரரு வாற வருத்தப் பாத்தா எட்டயா வரம் கைமாறீரும் போலருக்கு. நாங்க வெரட்டியடிக்கலன்னா அம்புட்டுத்தான். நீ வந்து ஒரு முடிவு கெட்டீட்டுப் போயிரு. இல்லன்னா எங்க பாடு திண் டாட்டம்.''

''நானே வாறென்.''

படையுடன் கான்சாகிப் எட்டயாபுரத்துக்குப் புறப்பட்டான்.

அவன் எட்டயாபுரம் வந்திருக்கும் சேதி சித்தயநாய்க்கன்பட்டியிலிருந்த எட்டப்ப ராசாவுக்குத் தெரிந்தது. அது நல்ல சந்தர்ப்பம். எதிர்த்துத் தாக்க வேண் டியதுதான். சொந்தச் சனங்கள் ஐநூறு பேரைத் திரட்டினார். வீரர்களை பெத்தா நாய்க்கனூர் கோட்டைக்கு அனுப்பத் திட்டம்.

இதுக்குள் சிவசங்கரன் பிள்ளையும் வல்லேறு நாய்க்கரும் கான்சாகிப்பின் படைகளுடன் பெத்தாநாய்க்கனூரை வளைத்துக்கொண்டார்கள். யானை குழியில் சிக்கியதுபோல் அழகுமுத்துச் சேர்வை திக்குமுக்காடினான். தப்பிக்க முடியாது. சோறுதண்ணீர் கிடைக்கவில்லை. அப்போதும் வீரத்துடன் போரிட் டார்கள். பீரங்கியால் கோட்டையைத் துளைத்துக்கொண்டு நுழைந்த எதிரிகளை வெட்டித் தள்ளினார்கள். இருபக்கமும் சேதம் ஏராளம்.

அழகுமுத்துச் சேர்வையால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அவனது படைகள் துவண்டு தோற்றுவிட்டன. அவனுடன் இருநூறுக்கும் மேற்பட்ட வீரர்கள் கைதானார்கள். அவர்கள் அனுபவித்த சித்திரவதை சொல்ல முடியாது. கும்மாந்தன் கொக்கரித்தான்.

''எட்டப்பனுக்காக ஆயுதமேந்தக் கையிருக்கப்புடாது. வெட்டி வீசி யெறிங்கடா.''

செகவீரெட்டு மணியக்காரன் உட்பட இருநூற்று நாற்பத்தொன்பது பேரின் வலது கையைக் கண்டந்துண்டமாக வெட்டி அவர்களை வீதியில் எறிந்தார்கள். கோட்டைக்குள் ரத்த ஆறு ஓடியது.

மிஞ்சியது ஏழு பேர். அழகுமுத்து கெச்சிலணன் வெங்கடேசுரெட்டு முத்தழகு பரிவாரம் முத்திருளன் லட்சுமணன் தலைக்காட்டுபுரம் மயிலுப்பிள்ளை. அத்தனை பேரும் தளபதிகள். அவர்களை நடுக்காட்டுச் சீமை என்ற இடத்துக்குக் கொண்டுபோய் பீரங்கி வாயில் நிறுத்தினார்கள்.

''எட்டப்பன் எங்கருக்கான். சொல்லப்போறயா இல்ல கொல்லட்டுமா.''

ஒரு தளபதிகூட மாவிலோடையில் தங்கியிருந்த எட்டப்ப ராசாவைக் காட்டிக்கொடுக்கவில்லை. கோவமடைந்த எதிரிகள் அவர்களை மேட்டுப் பகுதிக்குக் கொண்டுபோய் கைகளை பின்னால் கட்டி நிறுத்திச் சுட்டுக் கொன்றுவிட்டார்கள்.

பெத்தாநாய்க்கனூர்க் கோட்டையில் சண்டை நடந்தபோது அருங்குளம் காமணன் சேர்வையும் குருமலை ராமநாத பிள்ளையும் குதிரை பார்க்கிறவர்களைப்போல் தந்திரம்பண்ணி கோட்டையின் சலதாரைக் குழிவழியாகத் தப்பி மாவிலோடைக்கு வந்து ராசாவிடம் தகவல் சொன்னார்கள். ராசா கைகால்களை இழந்துவிட்ட வேதனையில் துடித்துப்போனார். கண்ணீர் பொங்கியது. செய்வதறியாது பெருநாழிக்குத் திரும்பினார்.

இறந்துவிட்ட அழகுமுத்துச் சேர்வையின் மகன் அழகுமுத்து தளபதியானான். பெருநாழியில் பாசறை அமைத்து மறுபடியும் படை திரட்டினார்கள். அழகுமுத்து தகப்பனைவிடத் துடிப்பாக இருந்தான்.

எட்டப்ப ராசாவின் படைகளைக் கருவறுத்துவிட்ட மிதப்பில் கும்மாந்தன் படைகளுடன் மதுரைக்குப் போய்விட்டான். இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது என்று எட்டயாபுரத்திலிருந்து அபிசேகம் பிள்ளை எட்டப்ப ராசாவுக்கு எழுதினார். ராசா தெம்பானார். உடனே படைகளுடன் எட்டயாபுரத்துக்குப் புறப்பட்டார்.

படைகள் நாலு பிரிவுகளாக எட்டயாபுரம் கோட்டையை நாலுபுறமிருந்தும் தாக்கத் திட்டம் வகுக்கப்பட்டது. அழகுமுத்து தன் படையுடன் விளாத்திகுளம் பந்தப்புளி வழியாகக் கோட்டையின் கிழக்குப் பக்கம் வசமாக நின்றுகொண்டான். ராசா எப்போதும்வென்றான் ஈரால் பிதப்புரம் இளம்புவனம் வழியாக வந்து மேல்புறம் வளைத்துக்கொண்டார். செம்மப்புதூர் கோமுத் தளவாய் அதலக்காய் ஊருணி வழியாக வந்து தென்புறத்தை மறித்துக்கொண்டான். எட்டயாபுரம் சட்டாம்பிள்ளை முத்துக்கருப்பன் சிந்தலக்கரை வழியாக வந்து வடக்குப் புறத்தைக் கவனித்துக்கொண்டான். எல்லா ஏற்பாடும் ராவோடு ராவாக முடிந்தது. கோட்டைக்குள்ளிலிருந்து ஒருவர்கூடத் தப்பிக்கமுடியாது.

விடிந்து வெயில் படருமுன் சண்டை ஆரம்பித்துவிட்டது. கோட்டையின் கிழக்குப் பகுதிக்கு ராமனூத்துப் படை காவலிருந்தது. அதுக்குப் பொறுப்பு பெத்தணன் தளவாய். மேல்பகுதியில் தளவாய் இருளப்பத் தேவரின் தலைமையில் இளம்புவனம் படை நின்றது. தென்புறம் தளவாய் புலிக்கருப்பசாமித் தேவர் கட்டுப்பாட்டில் ஈராச்சிப் படைகள். தளவாய் பொன்னு நாய்க்கர் ஏழுபட்டிப் படையுடன் வடபுறத்தைக் காத்து நின்றார். கோடையிடியாக வெடித்த சண்டை அவர்களைக் கதிகலங்கச் செய்தது. முடிந்த மட்டும் எதிர்த்துப் போரிட்டார்கள். சிவசங்கரன் பிள்ளைக்கும் வல்லேறு நாய்க்கருக்கும் வயிற்றில் புளியைக் கரைத்தது.

சண்டை மட்டுப்படவில்லை. நிலைமை சிக்கலாகிவிட்டது. வல்லேறு நாய்க்கர் சிவசங்கரன் பிள்ளையிடம் யோசனை சொன்னார்.

“இனிமே ராசா இங்கருக்கிறது நல்லதில்ல. அவரக் கூட்டீட்டு ரகசியப் பாத வழியா கசவங்குண்டுக்குத் தப்பிச்சுப் போயிரும். நான் முடிஞ்ச மட்டும் நின்னு பாக்கென்.”

இருவரும் தப்பிவிட்டார்கள். சண்டை நடந்துகொண்டிருந்தது. எட்டப்ப ராசா களத்தில் நிற்பதைப் பார்த்து உள்ளூர்ப் படைகளுக்கு உற்சாகம்.

“அங்க பாரு நம்ம ராசா.”

“ஆமப்பா அவரேதான்.”

“அவருக்குத் தொரோகம் செய்றமேன்னு மனசு அடிச்சுக்கிருது.”

“எதுத்துச் சண்ட போடுற சாக்குல படிப்படியா அவுகளோட சேந்துக்கிருவொம்.”

வல்லேறு நாய்க்கர் ஒண்டியாகிப்போனார். அவரையும் மிஞ்சியிருந்த படைகளையும் எளிதாகக் கைதுசெய்தார்கள். எட்டயாபுரத்தில் கோலாகலம் குடியேறியது. எட்டப்ப ராசா அரியாசனம் ஏறினார். விடுதலைப் போரில் வீர மரணமடைந்த வீரர்களின் குடும்பங்களுக்கு ரத்த மானியம் வழங்கினார். கொஞ்ச காலம் அமைதியாக ஆட்சி நடந்தது.

ஒருநாள் ராசா நடுவப்பட்டிப் பிள்ளையாருக்கு சாயங்காலப் பூசை செய்து தரிசனம் பண்ணிவிட்டுத் திரும்பும்போது தீராத தண்ணீர்த் தாகங்கொண்டு தவித்தார். எவ்வளவோ பிரயாசைப்பட்டும் காப்பாற்ற முடியவில்லை. உயிர் பிரிந்துவிட்டது. அவரது விரோதிகள் கன்னிமார் கோயில் புதரனைக் கொண்டு மந்திரத்தால் கொன்றுவிட்டதாகச் சனங்கள் பேசிக்கொண்டார்கள்.

ராசாவுக்குச் சகோதரர் குமாரர் என்று எந்த வாரிசும் கிடையாது. எட்டயாபுரத்தைக் கைப்பற்றும் முயற்சியிலேயே காலங்கழித்துவிட்டதால் கடைசிவரை கலியாணம் செய்துகொள்ளவில்லை. வாரிசில்லாத கவலை சனங்களை வாட்டியது.

ஏற்கெனவே கசவன்குன்றுக்கு ஓடிப்போன குருமலைத்துரை இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு மறுபடியும் எட்டயாபுரம் வந்து ராசாவாகிவிட்டார். சேத்தூரில் தங்கியிருந்த சிவசங்கரன் பிள்ளைக்கு மூக்கு வேர்த்தது. அவருக்கு உதவிசெய்ய யாருமில்லை. கும்மாந்தன் இருந்தால் அவனிடம் போகலாம். அவன் கதை ஏற்கெனவே முடிந்துவிட்டது. ரெம்ப நாளாக பூலித்தேவர் மேல் ஒரு கண்ணாகத் திரிந்தான். கடைசியாக நடந்த சண்டையில் தேவர் தோற்றுப்போய்த் தலைமறைவாகிவிட்டார். அதுக்குப் பிறகு என்ன ஆனாரென்று தெரியவில்லை. தற்கொலை செய்துகொண்டதாகவும் மலைப்பக்கம் சமாதியாகிவிட்டதாகவும் பேச்சு வந்தது. அவரைத் தோற்கடித்துவிட்ட மமதையில் கும்மாந்தன் ஆட்டம் போட்டான். கும்பினியை மதிக்காமல் தானே கப்பம் வசூலித்து அனுபவித்தான். அவனது அடாவடி பொறுக்காமல் கும்பினி அவனைப் பிடித்து மதுரையருகே சம்மட்டிபுரத்தில் தூக்கிலிட்டுக் கொன்றுவிட்டது. அவன் போனது சிவசங்கரன் பிள்ளைக்குப் பெரிய இழப்புத்தான்.

பிள்ளையைப் பேராசை பிடித்தாட்டியது. குருமலைத்துரையைப் பார்த்துப் பேசினால் மந்திரி பதவி கிடைக்கும். பழக்கமானவராயிற்றே. பம்மிப்பம்மி வந்து நடுவப்பட்டியில் இருந்துகொண்டு ராசாவைச் சந்திக்க அண்டம்போட்டார்.

அவர் வந்திருக்கும் சேதி எட்டுப் பிள்ளைக்கும் சங்கரலிங்கம் பிள்ளைக்குந் தெரிந்துவிட்டது. அவர்கள் பெத்தாநாய்க்கனூர் போரில் பந்துக்களைப் பறிகொடுத்த வீரர்கள். பல உயிர்கள் துள்ளத் துடிக்க மடிந்ததுக்கு அவர்தானே காரணம். அந்தக் கோவம் இன்னும் நெஞ்சை அறுத்துக்கொண்டிருந்தது. பழிவாங்கத் துடித்தார்கள். ராசாவிடம் ஓடிப்போய் முறையிட்டார்கள்.

''வேம்பத்தூரு சிவசங்கரன் புள்ளையப் பத்தி ராசாவுக்கு நல்லாவே தெரியும். அவரு ராசாவோட சகாயத்துக்காக நடுவப்பட்டியில காத்துக்கெடக்கிறதாக் கேள்விப்பட்டொம். அவரால எத்தனையோ உசிரு போச்சு. அவரு காலுத் தூசி கூட எட்டயாவரத்து மண்ணுல படக் கூடாது. அதுக்கு முன்னாலயே அவர வெட்டிச்சாய்க்கிறதுக்கு உத்தரவு வேணும்.''

இருவரும் வாளை உருவியபடி நின்றிருந்தார்கள். ராசாவுக்குத் தர்மசங்கடமான நிலைமை. பிள்ளையுடன் உள்ள பழக்கத்தையும் அவர் செய்த உதவியையும் மறக்க முடியாது. ஆனால் புதுசாகக் கிடைத்திருக்கும் பொறுப்பிலிருந்துகொண்டு தட்டிக்கழிக்கவும் முடியாது. அதன் விளைவுகள் மோசமாக இருக்கும்.

வீரர்கள் ராசாவின் வார்த்தைக்குக் காத்திருக்கவில்லை. உருவிய வாளை அவர் கையில் ஒற்றியெடுத்துத் தெண்டனிட்டுவிட்டு வெளியேறினார்கள்.

''எங்கள மன்னிக்கணும் ராசா.''

பிள்ளையால் தப்பிக்க முடியவில்லை. அவரைப் பிடித்துக் கட்டி வடக்குக் கழுவன் திரட்டு ஓடைக்குக் கொண்டுபோனார்கள்.

''இத்தோட ஒன் ஆட்டம் அடங்கட்டும்.''

கண்டபடி தறித்துக் கழுகுக்குப் போட்டுவிட்டார்கள்.

அதிலிருந்து அந்த ஓடைக்கு சிவசங்கரன் பிள்ளை ஓடை என்று பேரானது.

## 7. எட்டனும் கட்டனும்

முப்பதாம் பட்டம் ஆண்ட குருமலைத்துரைக்கும் வாரிசுகள் இல்லை. ஆகவே அவரது மூணாம் தாயாதியில் பிரிந்த குருமலை குமாரமுத்து நாய்க்கரின் குமாரர் செகவீரராம குமார எட்டப்ப நாய்க்கர் அய்யன் அடுத்த பட்டம் சூடினார்.

எட்டயாபுரத்துக்கும் பாஞ்சாலங்குறிச்சிக்கும் இடையே கொஞ்ச காலமாகவே பகை புகைந்துகொண்டிருந்தது.

கட்டபொம்மு வம்சத்தில் வீரபாண்டிய நாய்க்கருக்குப் பின் பால்பாண்டிய நாய்க்கரும் செகவீர கட்டபொம்மு நாய்க்கரும் ஆண்டார்கள். அடுத்து வீரபாண்டிய கட்டபொம்மு அரியணை ஏறினார். அப்போது அவருக்கு வயசு முப்பது. அவருக்குத் தம்பிமார் இருவர். குமாரசாமி துரைச்சிங்கம். ஈஸ்வரவடிவு துரைக்கண்ணு என்று இரு தங்கச்சிமார். குமாரசாமி பிறவி ஊமை என்பதால் அவரை ஊமைத்துரை என்று சொல்வார்கள்.

நெல்லைச் சீமை கும்பினியாரின் நேரடி நிருவாகத்துக்கு வந்ததும் முதல் காரியமாகப் பாளையங்களின் எல்லைகளை வரையறுக்கத் திட்டமிட்டார்கள். அதுக்காக ஒரு அதிகாரியை நியமித்தார்கள். இந்தத் திட்டம் நல்லதுதான் என்றாலும் பாளையக்காரர்களுக்குப் பிடிக்கவில்லை.

அந்த அதிகாரி பாஞ்சாலங்குறிச்சியைச் சேர்ந்த இரு கிராமங்களை எட்டயாபுரத்துக்கு மாற்றிவிட்டார். கட்டபொம்மு அந்தக் கிராமங்களைக் கொடுக்க மறுத்தார். கும்பினியின் உத்தரவுக்குக் கீழ்ப்படிய மறுத்தால் சங்கடம் வந்து சேருமெனக் கலெக்டர் எச்சரித்தார். எல்லைகளை வரையறுக்கும் திட்டத்தில் பாளையக்காரர்கள் தலையிடாமல் பார்த்துக்கொள்ளுமாறு சர்க்கார் கலெக்டருக்குக் கறாராகச் சொல்லிவிட்டது.

கும்பினி கட்டபொம்மிடம் வரி பாக்கியைக் கேட்டு நச்சரித்தது. அவர் காலங் கடத்தினார். வேறு பாளையங்களைத் துணை சேர்த்துக்கொண்டு கும்பினியை எதிர்க்கத் திட்டமிட்டார். நாகலாபுரம் கோலார்பட்டி ஏழாயிரம்பண்ணை காடல்குடி குளத்தூர் ஆவுடையாபுரம் பாளையங்கள் திரண்டு அவருடன் சேர்ந்து கும்பினி ஆதிக்கத்தை எதிர்த்தன. அதுக்குக் காரணம் அவை சின்னப் பாளையங்கள். எட்டயாபுரம் போன்ற பெரிய பாளையங்கள் தம்மை விழுங்கிவிடுமென்ற பயம். எட்டயாபுரம் கும்பினியோடு கைகோர்த்துக்கொண்டதால் கும்பினியை எதிர்க்கும் பாஞ்சாலங்குறிச்சியோடு சேருவதுதான் பாதுகாப்பானது.

சாப்டூர் பாளையத்தை நிருவகிக்க கும்பினி ஒரு அதிகாரியை அனுப்பியது. அந்தப் பாளையத்தின் மேனேஜர் வந்தவரைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டார். வரி வசூலில் கலெக்டருக்கு உதவுவதற்காகக் கும்பினி அனுப்பிய சைனியத்தைக் கட்டபொம்மு எதிர்த்துத் தாக்கினார். இப்படிச் சட்ட விரோதமான செய்கைகளை வளர விடக் கூடாதென நினைத்த கும்பினி அந்த மேனேஜரைப் பிடிப்பதற்காக ஒரு கேப்டனை சைனியத்துடன் அனுப்பியது. அவர் கோட்டைக்கு முன்னால் வந்து நின்றபோது வாசல் கதவுகளைப் பூட்டிவிட்டார்கள். கோட்டைக் குள்ளிருந்த ஊத்துமலை ஆவுடையாபுரம் துருப்புக்கள் எச்சரித்தன.

''பேசாமத் திரும்பிப் போயிரு. இல்லன்னாச் சுட்டு மலத்தீருவொம்.''

அவர் படையுடன் பின்வாங்கிவிட்டார்.

பாளையக்காரர்களைத் தாக்கிக் கொடுமைப்படுத்தாமல் அரட்டிமிரட்டியே வரி வசூலிக்க நினைத்தது கும்பினி. பாளையக்காரர்கள் வரி கொடுக்க மறுத்தார்கள். பரவலாகக் கிளர்ச்சி நடந்தது. இதில் முக்கியமானவர் கட்டபொம்மு.

எட்டயாபுரம் பாளையக்காரர் கும்பினியாரிடம் விசுவாசமாக இருக்கவே விரும்பினார். அப்போதுதான் மற்ற பாளையங்களின் குறிப்பாக பாஞ்சாலங் குறிச்சியின் தொந்தரவுகளிலிருந்து காப்பாற்றிக்கொள்ள முடியும். இது கட்டபொம்முக்குப் பிடிக்கவில்லை. காட்டமாக இருந்தார்.

எட்டயாபுரத்தார் கும்பினியாரிடம் கட்டபொம்மைப் பற்றி அடிக்கடி பிராது சொன்னார். அருங்குளத்தில் ஐநூறு கோட்டை பெறும் கம்மஞ்சாணைக் கருதைக் கொள்ளையடித்துவிட்டார். தட்டைப் படப்பில் நெருப்பு வைத்தார். வீட்டில் கொள்ளையடித்தார். காட்டுநாய்க்கனூர் எல்லையில் மேய்ந்த முப்பது நாற்பது பால்மாடுகளையும் முன்னூறு எருமைகளையும் கவர்ந்து போய்விட்டார். இப்படிப் பல பிராதுகள். இந்தப் பகை கும்பினியாருக்குச் சாதகமாகப் போய்விட்டது. எட்டயாபுரத்தாரின் துணையுடன் கட்டபொம்மை அடக்கத் திட்டமிட்டார்கள்.

ராமநாதபுரத்தில் ஜாக்சனை கட்டபொம்மு படைகளுடன் பேட்டி காணச் சென்றபோது நடந்த சம்பவங்களால் கும்பினியார் கோவத்தில் கொதித்துப் போயிருந்தார்கள். அப்போதும் கட்டபொம்மை அடக்க கும்பினிக்குத் தயக்கம்.

கும்பினிப் படைகள் பெருமளவில் திப்பு சுல்தானை ஒழிக்க மைசூர்ப் போரில் ஈடுபட்டிருந்தன. காலங்கடத்தும் நோக்கில் சர்க்கார் கட்டபொம்மைப் பட்டணத்துக்கு அழைத்தது. ராமநாதபுரம் சம்பவத்தில் பிடிபட்டுத் திருச்சினாப் பள்ளிச் சிறையிலிருந்த தானாதிபதிப் பிள்ளையை நல்லெண்ணத்தின் அடையாளமாக விடுதலை செய்தது. அடாவடியாக நடந்துகொண்ட ஜாக்சனைப் பதவியிலிருந்து நீக்கியது. கட்டபொம்மு பட்டணம் சென்று உண்மையை எடுத்துச் சொல்லிவிட்டுத் திரும்பினார். கலெக்டரையே மாற்றச் செய்த கட்டபொம்மை மற்ற பாளையக்காரர்கள் புகழ்ந்து பாராட்டினார்கள்.

ஜாக்சனுக்குப் பதிலாக லூஷிங்டன் கலெக்டரானார். அந்தச் சமயம் பல இடங்களிலிருந்துகொண்டு கும்பினியை எதிர்த்துவந்த பல பாளையக்காரர்கள் ஓரணியில் திரண்டார்கள். திண்டுக்கல் சீமைக்குக் கோபால் நாய்க்கரும் சிவகங்கைச் சீமைக்கு மருது சகோதரர்களும் நெல்லைச் சீமைக்குக் கட்டபொம்மும் தலைமையேற்றார்கள். இது லூஷிங்டனுக்கு எரிச்சலூட்டியது. சிவகங்கையுடன் சங்காத்தம் வைத்துக்கொள்ளக் கூடாதென்று கட்டபொம்மை எச்சரித்தார். கட்டபொம்மு அதைக் கண்டுகொள்ளவில்லை. சிவகங்கைச் சீமைக்குச் சென்று மருது சகோதரர்களிடம் படையுதவி பெற்றுத் திரும்பினார்.

சிவகிரிப் பாளையத்தில் தகப்பனுக்கும் மகனுக்குமிடையே பூசல் இருந்தது. தகப்பன் கும்பினியை ஆதரித்தார். மகன் கட்டபொம்மு பக்கம். கட்டபொம்மு சின்னவரைப் பாளையக்காரராக்க முயற்சித்தார். கும்பினியின் படைகள் நடமாடுவதை ஒற்றறிய தானாதிபதியின் சகோதரரைப் பட்டணத்துக்கு அனுப்பினார்.

கட்டபொம்மின் நடவடிக்கைகளால் கும்பினியாருக்கு ஆத்திரம். லூஷிங்டன் பொறுமையிழந்துவிட்டார். இதுக்கிடையில் கும்பினிக்குச் சிம்மசொப்பனமாக இருந்த திப்பு சுல்தான் மைசூர் போரில் வீரமரணம் எய்தவே அவர்கள் கவனம் கட்டபொம்மை நோக்கித் திரும்பியது. படைகள் பாஞ்சாலங்குறிச்சிக்குப் பயணமாகின.

தன்னைச் சந்திக்குமாறு கட்டபொம்முக்கு லூஷிங்டன் கடிதம் எழுதினார். கட்டபொம்மு தட்டிக்கழித்தார். பாஞ்சாலங்குறிச்சிமீது படையெடுப்பதைத் தவிர வேறு வழியில்லை என்று கும்பினி அவசரக்கோலத்தில் முடிவெடுத்தது.

கும்பினிப் படைகளுக்கு மேஜர் பானர்மன் தலைமையேற்றார். ஆவணி மாசம் பெருமளவு வீரர்களும் ஊமைத்துரையும் தானாதிபதிப் பிள்ளையும் திருச்செந்தூர் முருகனுக்கு நடக்கும் ஆவணித் திருவிழாவுக்குப் போயிருந்த சமயம். இதுவே தக்க தருணமென்று எட்டயாபுரத்தார் தகவல் கொடுக்க கும்பினிப் படைகள் பாஞ்சாலங்குறிச்சிமீது படையெடுத்தன.

பாஞ்சாலங்குறிச்சியைப் போர்மேகம் சூழ்ந்தது. கோட்டையை வேட்டையாட கும்பினிப் படைகள் முற்றுகையிட்டன. வேட்டுவைத்துத் தகர்க்கும் பீரங்கிகள் குறிவைத்து அணிவகுத்து நின்றன. வெள்ளையரை விரட்டி வெற்றி வாகை சூடுவேன் என பாளையக்காரர் வீரபாண்டியக் கட்டபொம்மு முழங்கினார். கோட்டையைத் தகர்த்துக் கொடியவனை அழிப்பேன் என பானர்மன் துள்ளினார். போர் உக்கிரமடைந்தது.

முற்றுகைச் செய்தி ஊமைத்துரையை எட்டியது. தானாதிபதியும் வீரர்களும் பின்தொடரப் பாஞ்சைக்கு விறைந்து கும்பினிப் படையரணைத் துளைத்துக் கொண்டு கோட்டைக்குள் நுழைந்தார். போர் இன்னும் தீவிரமானது.

எண்ணற்ற வெள்ளையரைக் கொன்று குவித்த தளபதி பாதர்வெள்ளையைப் பறிகொடுத்தாயிற்று. வயிற்றில் வாள் பாய்ந்து குடல் சரிந்து கைமுறிந்த போதும் சரிந்த குடலைச் சல்லாச் சோமனால் வரிந்து மாராப்புக்கட்டி களத்தில் புகுந்து எதிரிகளின் தலைகளை அரிந்து விளையாடிய காலாடிக் கருப்பன் மாண்டு விட்டான். வெள்ளையரைக் கந்துகந்தாக வெட்டியெறிந்த கந்தன் பகடையின் கதையும் முடிந்துவிட்டது.

தந்திர வித்தைகள் காட்டி அந்தரமடித்து அனேக உயிர்கள் குடித்து சிதறிக் கிடக்கும் பிணங்களுக்கிடையே உருண்டு புரண்டு பத்திரமாகத் தப்பிய தளபதி சுந்தரலிங்கம் ஆடிய சித்து விளையாட்டுக்களாலும் பயனில்லை. சிவத்தையா முத்தையா வீரய்யா வெள்ளையா வீரணன் லக்கணன் போன்ற கம்பளத்து வீரர்களின் கடும் போரும் வெற்றிபெறவில்லை.

கையிழந்த முடவனாகக் கட்டபொம்மு செய்வதறியாது திகைத்தார். தானாதிபதி சுப்பிரமணிய பிள்ளையுடன் ஆலோசித்தார். கோட்டையை விட்டு வெளியேற முடிவாயிற்று. ராவோடு ராவாகப் படைகள் பின்தொடர தடைகளைத் தாண்டி கட்டபொம்மு தப்பிவிட்டார். பொட்டிப் பகடை இருளில் வழிகாட்ட விடியக்காலம் வெள்ளி முளைக்கும் நேரத்தில் நாகலாபுரம் அடைந்தார்கள். அங்கிருந்து புதுக்கோட்டை சென்று மன்னர் தொண்டைமானை அணுகி உதவி கேட்கத் திட்டம்.

பின்தொடர்ந்து துரத்தும் எட்டப்பரின் படைகள் விட்ட பாடில்லை. கோலார்பட்டியில் கட்டபொம்மை இடைமறித்து எதிர்த்தன. இருபுறமும் சேதம் ஏராளம். எட்டயாபுரத்தார் முப்பத்தினாலு பேரைப் பிடித்தார்கள். கட்டபொம்மு தம்பி ஊமைத்துரை உட்பட ஆறு பேருடன் தப்பிவிட்டார். தளபதி சுந்தரலிங்கம் வீரமல்லு சேர்வை முத்தன் பகடை பொட்டிப் பகடை ஆகியோர் வழிதப்பிவிட்டார்கள். கட்டபொம்மைப் பின்தொடர முடியவில்லை. ஊமைத்துரையைத் தனியாக விட்டுவிட்ட கவலை சுந்தரலிங்கத்துக்கு. எந்த நேரமும் உடனிருப்பான். ஊமைத்துரை எந்தக் காரியத்தில் இறங்கினாலும் அவனிடம் யோசனை கேட்கத் தவறுவதில்லை.

அண்ணனும் தம்பிமாரும் தப்பிவிட்டார்கள் என்ற ஆறுதலுடன் வழிதப்பிய வீரர்கள் பாஞ்சைச் சீமைக்குத் திரும்பினார்கள். துரைச்சிங்கம் பிடிபட்டது அவர்களுக்குத் தெரியாது.

அப்போது மேஜர் பானர்மன் நாகலாபுரத்திலிருந்தார். எட்டயாபுரத்தாரிடம் சிக்கியோரை அவர்முன் நிறுத்தினார்கள். அவர்களில் தானாதிபதி சுப்பிரமணிய பிள்ளையும் அவரது சகோதரர் வீரபத்திர பிள்ளையும் இருந்தார்கள். மேஜருக்கு ஒரு விதத்தில் சந்தோசம். தானாதிபதியின் தவறான போதனைகளால் தானே கட்டபொம்மு கேவல நிலைக்குள்ளானார். இனிமேலாவது பாஞ்சாலங்குறிச்சிக்கு நல்ல வழி பிறக்கட்டும். இப்படிப்பட்டவர்களுக்குக் கொடுந்தண்டனை அளிக்கணும். அப்போதுதான் கும்பினியை எதிர்ப்போர் அஞ்சியடங்குவார்கள்.

மேஜரின் உத்தரவுப்படி தானாதிபதிப் பிள்ளையை நாகலாபுரத்தில் ஒரு பகிரங்கமான இடத்தில் பிள்ளையார் கோயிலருகே வேப்பமரத்தில் தூக்கிலிட்டார்கள். அவரது தலையை மட்டும் துண்டித்துப் பாலாக்கழையில் குத்தி பாஞ்சாலங்குறிச்சிக்குக் கொண்டுபோய்க் காட்சியாக நட்டிவைத்தார்கள். மற்றவர்

களை அப்போதைக்கு ஒட்டப்பிடாரத்தில் அடைத்துவிட்டார்கள். பிறகு பாளையங்கோட்டைக்குக் கொண்டுபோனார்கள்.

நாகலாபுரம் பாளையக்காரர் இம்முடிப் பட்டம் எரபாபு நாய்க்கர் ஏற்கெனவே மேஜரிடம் சரணடைந்துவிட்டார். பின்னர் அவரது தம்பி சவுந்திர பாண்டிய நாய்க்கர் பிடிபட்டார். அண்ணன் பலத்தில் அப்பகுதியில் அடாத செயல்களைச் செய்து அல்லல்படுத்தியதாக அவர்மீது குற்றச்சாட்டு உண்டு. அவரைப் பள்ளிமடம் தாலுகாவிலுள்ள கோபாலபுரத்தில் தூக்கிலிட்டார்கள். அவர் செய்த கொலைகளாலும் கொள்ளைகளாலும் அச்சத்தில் உறைந்து கிடந்த மக்கள் இதைக் கண்டு மகிழ்வார்கள் என்று மேஜர் நினைத்தார்.

புதுக்கோட்டைத் தொண்டைமானிடமிருந்து நெல்லைக் கலெக்டர் லூஷிங்டனுக்கு அவசரக் கடிதம் வந்தது:

> ... வாழ்நாள் முழுக்க ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கும்பினிக்கு ஊழியம் செய்யக் காத்திருக்கிறேன். உயிர் வாழ்வதே கும்பினிக்கு ஊழியம் செய்யத்தான். எதிரி கட்டபொம்மு ஒளிந்திருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க மலைகளிலும் குன்றுகளிலுமாகப் பல திசையிலும் எனது ஆட்களை நிறுத்தியிருந்தேன். ஆண்டவன் புண்ணியத்திலும் கும்பினியின் நல்ல காலத்துக்கும் எனது அதிர்ஷ்டத்தாலும் கட்டபொம்மும் அவன் தம்பி ஊமைத்துரையும் ரெண்டு மாப்பிள்ளைகளும் மற்ற மூணு பேரும் ஆக மொத்தம் ஏழு பேர் சிவகங்கைத் தாலூகா காளாப்பூர் கிராமக் காட்டில் ஒளிந்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டது... நேற்றிரவு அங்கே எனது படைகளை அனுப்பினேன். மிகுந்த எச்சரிக்கையுடன் கஷ்டப்பட்டு அனைவரையும் பிடித்துவிட்டார்கள். பிடிபடும்போது கட்டபொம்மு தன்னையே மாய்த்துக்கொள்ள எத்தனித்தான். ஆனால் பலர் அவன் கைகளைப் பிடித்துக் கட்டிச் சிறையில் அடைத்துவிட்டார்கள். இந்தப் பாளையக்காரனைப் பற்றித் தங்களுக்கு நன்றாகவே தெரியும். அவனை ஒரு நாள் பாதுகாப்பில் வைத்திருப்பதே பெரும்பாடு. அவனுக்கு உயிர் பிழைக்கும் நம்பிக்கையில்லை. தாங்கள் தெரிவிக்கும் இடத்தில் அவனைத் தூக்கிலிடலாம். தங்கள் பதிலை எதிர்பார்த்திருக்கிறேன். நமது நட்பு வளரட்டும்.

பிடிபட்ட கட்டபொம்மு ஊமைத்துரை மாப்பிள்ளை முத்தையா மாப்பிள்ளை குமாரசாமி மாப்பிள்ளை முத்துக்குமாரசாமி அடப்பம் வீரண மணியம் அடப்பம் காளியண்ணன் ஆகிய ஏழு பேரையும் தொண்டைமான் மேஜரின் விருப்பப்படி மதுரைக்கு அனுப்பிவைத்தார். கட்டபொம்மை விசாரித்து ராணுவச் சட்டப்படி தமது உசிதம்போல் செய்துகொள்ளுமாறு சர்க்கார் மேஜருக்கு அதிகாரம் வழங்கிவிட்டது.

மேஜர் கயத்தாறில் சபையைக் கூட்டி கட்டபொம்மிடம் விசாரணை நடத்தினார். கட்டபொம்மை முன்வைத்து மற்ற பாளையக்காரர்களுக்குத் தக்கதொரு பாடம் புகட்டி எச்சரிக்கும் பொருட்டு திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள எல்லாப் பாளையக்காரர்களையும் சபைக்கு அழைத்திருந்தார். மேஜரின் துபாஷி ராமலிங்க முதலியார் ஆர்டர்லி ஹவில்தார் இபுராம்கான் ஹரிகார்சாமி அய்யர் கட்டபொம்மின் அத்தை மகன் கெட்டிபுட்டி நாய்க்கர் ஆகிய நாலு

பேரும் சாட்சிக் கூண்டிலேறி சாதிமதாசாரப்படி பிரமாணஞ்செய்து சாட்சி சொன்னார்கள்.

மேஜரின் உத்தரவுப்படி அவர் கொடுத்தனுப்பிய தபாலைப் பாஞ்சாலங் குறிச்சி சென்று கட்டபொம்மிடம் நேரில் ஒப்படைத்ததாக முதலியார் கூறினார். அவருடன் சென்றிருந்த இபுராம்கானும் ஹரிகார்சாமி அய்யரும் இதை உறுதிப் படுத்தினார்கள். மேஜர் கெட்டிபுட்டி நாய்க்கரிடம் கேட்டார்.

''... என்னுடைய துபாஷி ராமலிங்க முதலியார் பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து என்னுடைய அறிக்கையைத் தெரிவித்த சமயம் நீர் பாளையக்காரருடன் கூட இருந்ததுண்டா?''

''ஆம். நான் அதுசமயம் பாளையக்காரருடன் கூடவே இருந்தேன்.''

''அறிக்கையை ராமலிங்க முதலியார் பாளையக்காரர் கையில் ஒப்படைத்த பின்பு நான் அவருக்குச் சொல்லி விடுத்த விஷயங்களைச் சொல்லும் வேளையில் நீர் பாளையக்காரருடன் கூட இருந்தீரா?''

''ஆம். நான் அதுசமயம் பாளையக்காரருடன் கூடவே இருந்தேன்.''

''அறிக்கையை ராமலிங்க முதலியார் பாளையக்காரர் கையில் ஒப்படைத்த பின்பு நான் அவருக்குச் சொல்லி விடுத்த விஷயங்களைச் சொல்லும் வேளை யில் நீர் பாளையக்காரருடன் கூட இருந்தீரா?''

''ஆம். நான் அதுசமயம் பாளையக்காரருடன் கூடவேதானிருந்தேன். அறிக்கையைப் பாளையக்காரரிடங் கொடுத்ததுந் தெரியும். அதற்கப்பால் நடந்துள்ள விஷயங்களுந் தெரியும்.''

''அன்று பாளையக்காரரான கட்டபொம்மு நாயக்கரிடம் ஆலோசனையை முடித்துக்கொண்டு நீர் என்னிடம் வந்தபோது அவர் விருதாவாகக் கெட்டுவிட வேண்டாம். யாதொரு நிபந்தனையுமின்றிக் கும்பினியாரிடம் வந்து அடைக் கலம் புகுந்துகொள்ளட்டும். அப்படியாயின் அன்னாருக்கு விமோசனம் ஏற் படக் கூடுமென்று நான் சொல்லியனுப்பியதாக அவரிடம் நீர் மன்றாடி, அவரைக் கெட்டுப்போக வேண்டாமென்று புத்திமதிகளை எடுத்துச் சொல்லி அவரை நம் வழிக்குத் திருப்பும்படி பிரயாசை எடுத்துப்பாருமென்று உம்மிடம் நான் சொல்லி அனுப்பியதுண்டல்லவா? இவையனைத்தும் அவரது நலங் கருதிச் சொல்லிவிட்டிருப்பதாகச் சொல்லும் என்றும், இவைகளுக்கெல்லாம் அவர் இசையாவிட்டால் நான் என் செய்வது என்றும், இராஜாங்கத்தாரால் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகார தோரணையை வைத்து நான் யுத்தசன்னத் தனாகக் கிளம்பிவிட்டால் அவர் என்னிடம் நேருக்கு நேராக நின்று போர் செய் வதில் சிறிதளவேனும் எனக்கு ஆத்த மாட்டார் என்றும், வீணே கெட்டுவிடு வார் என்றும் இவைகளே முடிவான வார்த்தைகளாகுமென்றும் சொல்லி அவரை நல்ல வழியிலிருக்கும்படிக்குச் சொல்லுமென்றோதிய வசனங்களை நான் உமக்குச் சொல்லி அவரிடம் உம்மை அனுப்பிவைத்தேனல்லவா?''

''இவைகளனைத்தும் வாஸ்தவமே. தாங்களும் அவரது விஷயத்தில் அளவு கடந்த தயவுடனும் தாட்சணியத்துடனுமிருந்தீர்கள். தாங்கள் என்னிடம் அவருக்குச் சொல்ல வேண்டிய புத்திமதிகளைச் சொல்லியனுப்பியவாறே

அவருக்குச் சொன்னேன். அவையனைத்தும் பாழ் நிலத்துக்கு இறைத்த நீராகி விட்டன. என்ன செய்வேன்?''

''நான் கோட்டையைத் தாக்கும்போது கட்டபொம்மு நாயக்கர் கோட்டைக்குள் தானிருந்தாரா வேறு எங்கேனுமிருந்தாரா. அன்று பூராவும் அவர் எங்கிருந்தனர்.''

''கோட்டையைத் தாங்கள் தாக்கிய சமயம் அவர் அங்குதானிருந்தார். அன்று முழுதும் அங்குதானிருந்தனர். வேறு எங்குமே அவர் அன்று போகவில்லை.''

''நீர் பாளையக்காரர் கட்டபொம்மு நாயக்கருக்கு உறவினராயும் சதா அவருட னிருந்தவராயுமிருப்பதால் சிவகிரியாரின் குமாரருக்கு உதவியாக சைனியத்தை நடாத்திக்கொண்டு சென்றவர் யாவர் என்றது தெரியுமா?''

''பாளையக்காரரின் தகப்பனார் வழியைச் சேர்ந்த தாயாதியான தளவாய் குமாரசாமி நாயக்கர் என்றவர் சுமார் 700 முதல் 1000 பேர்கள்வரை அடங்கிய சைனியத்தை நடாத்திச் சென்றனர்.''

சாட்சிகளின் விசாரணை முடிந்தது. பதிவுசெய்யப்பட்ட வாக்குமூலங்கள் குற்றவாளிக் கூண்டில் நின்றிருந்த கட்டபொம்முக்கு வாசித்துக் காட்டப்பட்டு அவரது சமாதானம் கேட்கப்பட்டது. அவற்றில் எதையும் தனக்கு மறுக்கத் தோன்ற வில்லை என்றும் கும்பினித் துரைமார்களை கவுல் இல்லாமல் பார்ப்பதில்லை என்றும் சிவகிரிக்குச் சைனியங்களை அனுப்பியது ஒற்றுமையில் பிளவுபட்டுக் கிடந்த தந்தையாரையும் மகனாரையும் ஒற்றுமைப்படுத்துவதற்கேயன்றி வேறு நோக்கமில்லை என்றும் அவர் கூறினார். இறுதியாக மேஜர் கேட்டார்.

''இவையன்றி வேறு எதுவும் சொல்லிக்கொள்ள வேண்டியிருந்தால் சொல்லிக் கொள்ளலாம்.''

''என்ன ஐயா சொல்லக்கிடக்கிறது. சும்மா இருங்கள்.''

கட்டபொம்முமீது கும்பினியார் பல குற்றச்சாட்டுகளைச் சுமத்தியிருந் தார்கள். அதாவது அவர் கும்பினியாருக்குக் கிஸ்தி செலுத்தவில்லை. கலெக்டர் லூஷிங்டன் துரையின் சம்மன்சுக்கு ஆஜராகவில்லை. ஆஜராவதாக இருந்தால் ஆயுதபாணிகளான சைனியங்கள் சகிதமே வந்து பேட்டி காணக்கூடும் என்று சொல்லிவிட்டார். மேஜரைப் பாளையங்கோட்டையில் சந்திக்கும்படி சர்க்கார் உத்தரவிட்டதுக்கு சந்திக்க நல்ல நாள் வாய்க்கவில்லை என்று சாக்குப்போக்குச் சொன்னார். சிவகிரி பாளையக்காரரின் குமாரருடனும் மாப்பிள்ளை வன்னிய னாரிடமும் அவருக்குள்ள சினேகத்தை நீக்குமாறு கண்டித்த பின்னரும் சிவகிரி யாரின் குமாரருக்கு உதவியாகச் சைனியங்களை அனுப்பினார். மேஜர் பாஞ் சாலங்குறிச்சிக்குப் படையுடன் வந்து இருவரும் கலந்துபேசலாமே என்று சொல்லி யனுப்ப அதையும் கேட்கவில்லை. கோட்டைக்குள்ளேயே இருந்து கொண்டு சமாதானப் பேச்சு நடக்கும்போதே கும்பினிப் பட்டாளங்கள்மீது திடீரென்று வெடிகளைப் பிரயோகித்தார். இவையெல்லாமே ருசுவாகிவிட்டதாக மேஜர் முடிவுசெய்தார்.

அடாத காரியங்களைச் செய்ததால் கட்டபொம்மைக் கடுமையாகத் தண் டிக்கும் எண்ணத்தில் அவருக்கு மரண தண்டனை விதித்துக் கயத்தாறில் பழைய

கோட்டையிலிருக்கும் புளியமரத்தில் பகிரங்கமாகத் தூக்கிலிடுமாறு உத்தர விட்டார்.

கட்டபொம்மு புளியமரத்துக்கு அழைத்துவரப்பட்டார். அங்கே மற்ற பாளையக்காரர்களும் ஆயிரக் கணக்கான மக்களும் கூடியிருந்தார்கள். மேஜர் பாளையக்காரர்களுக்கு எச்சரிக்கை விடுத்தார்.

''கட்டபொம்முக்கு இக்கதி நேர்ந்ததுக்கு அவரது செய்கைகளே மூல காரணம். கவர்மெண்டார் அவரிடம் பல தடவை பச்சாதாபங்கொண்டு மன்னித்தும் அவர் தன்னைத் திருத்திக்கொள்ளவில்லை. அதுவே அவரது அழிவுக்கு அடிகோலியது. இவற்றையெல்லாம் தெரிந்துகொண்ட பிறகும் மற்ற பாளையக்காரர்கள் தவறாக நடந்துகொண்டால் அவர்களுக்கும் இதே கதிதான் நேரும்.''

பாளையக்காரர்கள் அனைவரும் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந் தார்கள். கட்டபொம்மு தன்னைக் காட்டிக்கொடுத்துத் துரோகமிழைத்த எட்டயா புரத்தாரை நோக்கி அனல் கக்கும் கீமுட்டிப் பார்வையை அடிக்கடி வீசினார். சிவ கிரியாரைச் சீறிய பார்வையில் முறைத்தார். வலமிடமாக நிற்கும் பாளையக் காரர்களைக் கிஞ்சித்தும் பொருட்படுத்தாமல் அலட்சியத்துடன் நோக்கியவாறு வீரம் முகத்தில் மின்ன சற்றும் குன்றாத கம்பீரத்துடன் தூக்குமரத்துக்கு நடந்தார்.

மரத்தருகே சென்றதும் தானாடாவிட்டாலும் தன் சதையாடியது. தம்பி ஊமைத்துரையின் நினைவு வாட்டியது. அவரைத் தவிக்கவிட்டுவிட்ட குற்ற உணர்வு அனுதாபம் வேதனை வெட்கம் அவமானம் எல்லாமேதான். இறுதியாக அவரது நாவில் வீராவேசம் சுரந்து பொழிந்தது.

''சாவு மட்டுமில்லை எதைக் கண்டும் எனக்கு அச்சம் கிடையாது. நான் என்னுடைய கோட்டையிலேயே இருந்தபடி கும்பினியாரை எதிர்கொண்டு வீரத்தையும் சாகசத்தையும் வெளிப்படுத்தி மடிந்திருக்கணும். அதில்லாமல் என் போதாத காலத்துக்கு நான் ஓட மற்றவர்கள் விரட்ட இன்னொருவர் பிடிக்கும் கதியாகிவிட்டதே. இந்த அவமானம் மட்டுமே என்னை அனலாக வாட்டுகிறது.''

தூக்குக் கயிற்றைத் தானே மாலையாக அணிந்துகொண்டு மரணத்தைத் தழுவினார். அனைவரும் அச்சத்தில் உறைந்துபோனார்கள்.

கட்டபொம்முடன் சேர்ந்துகொண்டு கொலை கொள்ளை போன்ற அழி மானங்களைச் செய்ததாகச் சொல்லி ஏழாயிரம்பண்ணை நாகலாபுரம் கோலார் பட்டி காடல்குடி குளத்தூர் ஆகிய பாளையங்களை மேஜர் பிடுங்கி கும்பினி யுடன் சேர்த்துவிட்டார். இது சகலருக்கும் பகிரங்கமாக அறிவிக்கப்பட்டது.

இந்தப் பாளையங்களின் கோட்டைகளை இடிக்கவும் அங்குள்ள பரிவாரங் களின் வசமுள்ள எல்லா ஆயுதங்களையும் சர்க்காரிடம் ஒப்படைக்கவும் அவர் உத்தரவிட்டார். ஆயுதங்களை எறிந்துவிட்டு மேழிகளைக் கைப்பிடித்து நிலங் களில் பயிர்செய்து சமாதானமாக வாழ்வதே உத்தமமென்று அவர்களுக்குப் போதித்தார். கோட்டையிடிப்பையும் ஆயுத ஒப்படைப்பையும் சர்க்கார் கண் காணித்தது. அவரது பிரகடனம் செப்புத்தகட்டு வடிவில் மற்ற பாளையங்களில் கல்தூண்களில் பொதிந்து காட்சிக்கு வைக்கப்பட்டது. பாஞ்சாலங்குறிச்சிச் சீமை பறிக்கப்பட்டு அமில்தார் லாலாசாகிப் பொறுப்பில் விடப்பட்டது. அங்கே மிஞ்சியிருந்த கோட்டை கொத்தளங்களும் மாடமாளிகைகளும் இடித்துத் தகர்க்கப்பட்டன.

எட்டயாபுரம் உட்பட மற்ற பாளையங்கள் தமது கோட்டைகளைத் தாமாகவே இடித்துவிடணுமென்றும் உத்தரவு. எல்லாரும் அந்தப்படியே செய் தார்கள்.

கோலார்பட்டிப் பாளையக்காரரர் பார்வையிழந்த உடல்நலம் குன்றிய வாலிபர். குளத்தூரரார் எழுபது வயசுக் கிழவர். அவர்களைச் சென்னபட்டணத் துக்கு அனுப்பிவைத்தார்கள். அங்கே இருவரும் இறந்துவிட்டார்கள். நாகலா புரம் பாளையக்காரரும் மேனேஜர் சடகோபப் பிள்ளையும் தண்ணீர் கடந்து தீவாந்தரத்துக்கு அனுப்பப்பட்டார்கள்.

புதுக்கோட்டைத் தொண்டைமானின் விசுவாசத்தை மெச்சி சென்ன பட்டணத்திலிருந்து கவர்னர் கௌரவ அங்கியும் சாதிக் குதிரையும் சன்மானமாக வழங்கினார். கூடவே ரெண்டாயிரம் கலிச்சக்கரம் பணமும் அனுப்பினார். தொண்டைமான் இந்த மரியாதையைப் பெரும் பேறாகக் கருதிப் பூரித்துப் போனார்.

கும்பினிச் சர்க்காருக்கும் கும்பினி விசுவாசமுள்ள பாளையக்காரர் களுக்கும் மக்களுக்கும் திருப்தியளிக்கும் வகையில் தனக்கிடப்பட்ட கடமையை நிறைவேற்றி முடித்துவிட்ட பெருமிதத்தில் திளைத்தார் மேஜர் பானர்மன். நாட்டில் கலகங்களை ஒழித்து சமாதானத்தை நிலைநாட்டி சகல சனங்க ளிடையே பெரும் புகழீட்டி ஒரு அற்புதம் நிகழ்த்திய பேரானந்தம். அந்த மயக்கத்திலேயே பிறந்த நாட்டுக்குப் பயணமானார்.

இப்படியாகப் பாளையக்காரர்களின் முதல் போர் முடிந்தது.

## 8. சும்மா கெடக்காது சிங்கம்

கலெக்டர் லூஷிங்டன் பாஞ்சாலங்குறிச்சிச் சீமை நிலவரங்களைப் பார்வை யிட்டார். பாளையத்தின் நிருவாக அமைப்பு வித்தியாசமாக இருந்தது. பாளையக் காரருக்கு அடுத்து தானாதிபதி இன்னும் பிரதானி அல்லது தளவாய் சேர்வைக் காரர் அமரம் சேவகர் கட்டுப்புடி சேவகர் கூலிச் சேவகர் என்று அடுக்கடுக்கான படையமைப்பு. வளமான நிலங்களைப் பாளையக்காரர் வைத்துக்கொண்டார். மற்ற விளைநிலங்கள் அமரம் சேவகர்களுக்கும் கட்டுப்புடி சேவகர்களுக்கும் பரம்பரை முறையில் வழங்கப்பட்டன. அவர்கள் கிராமங்களைப் பாதுகாத்துவந் தார்கள். முப்பது பேர் கொண்ட துண்டத்துக்கு ஒரு சர்தார் அல்லது அதிகாரி தலைவராக இருந்தார்.

கட்டுப்புடி சேவகர்களும் பரம்பரை முறையிலேயே நிலம் பெற்றாலும் அதை உரிமையாகக் கேட்க முடியாது. அப்பப்ப அனுமதி பெறணும். அவர்கள் பயனற்ற நிலங்களைப் பெற்ற குடியானவர்கள்.

கூலிச் சேவகர்கள் நெருக்கடியான நேரங்களில் அமர்த்தப்படுவார்கள். அவர் களுக்குப் பணமும் தானியமும் கூலியாகக் கொடுக்கப்படும். வரி செலுத்த முடி யாமல் கைவசமிருந்த கொஞ்சநஞ்ச நிலங்களையும் பறிகொடுத்துவிட்டுச் சீமையி

லிருந்து வெளியேற முடியாமல் பரிதவிக்கும் அடித்தட்டு மக்கள் கூலிச் சேவகர் களாகச் சேர்ந்து சீவனம் நடத்தினார்கள். கூலிப்படை கும்பினிப் பட்டாளத்திலும் உண்டு.

இது தவிர காவக்காரர்களும் இருந்தார்கள். திசைகாவலும் தலக்காவலும் அவர்கள் பொறுப்பு. அந்தந்தப் பகுதி அல்லது ஊர் மக்களிடம் காவக்கூலி வசூலித்துக்கொள்வார்கள்.

மிகச் சொற்பமான நஞ்சை நிலங்களே மேல்சாதிக் குடியானவர்களால் பயி ரிடப்பட்டன. செழிப்பான பகுதியைப் பாளையக்காரரே வைத்துக்கொண்டார். அதைப் பள்ளர்கள் பயிர்செய்துகொடுக்கணும். அதுக்காக விளைச்சலில் அவர் களுக்குப் பங்கு கிடையாது. அத்தக் கூலியாகக் கொஞ்சம் தானியம் கிடைக்கும்.

அடித்தட்டு மக்களில் பள்ளர்கள் நிலைமை ரெம்ப மோசமாக இருந்தது. படையில் சேர்ந்து சேவை செய்வதற்காக ஒரு சேர்வைக்காரருக்கு ஒரு ஏக்கரோ அதுக்கு அதிகமோ நிலம் கிடைக்கும். அதை அவரே பயிரிடுவார். உழைத்துக் கொடுப்பதற்கு கொள்ளையடிக்கப்பட்ட காளைமாடும் கொடுமைப்படுத்தி வசக்கப்பட்ட அல்லது கொத்தடிமையாக விலைக்கு வாங்கப்பட்ட பள்ளரும் இருந்தார்கள்.

பாளையக்காரருக்குச் சொந்தமான புஞ்சை நிலங்களைப் பள்ளர்கள் பயிர் செய்துவந்தார்கள். இப்படிச் சாகுபடி செய்பவர்களில் பெரும்பாலானவர்கள் அடிமைகள். மேல்சாதிக்காரர்களால் விற்கப்படுகிற வாங்கப்படுகிற அடிமைகள். ஒரு பள்ளரை விலைக்கு வாங்கும் குடியானவர் அந்த அடிமையை சர்வ அதிகாரத் துடன் வேலைவாங்க உரிமையுண்டு. அவர் வாங்கும் கடனுக்கீடாக அடிமையை அடமானம் வைக்கலாம். அத்தக் கூலிக்காகப் பிறருக்கு வாடகைக்கு விடலாம். பணத் தேவையிருந்தால் இன்னொருவருக்கு விற்றுவிடலாம். அங்கேயும் இதே கொத்தடிமைச் சீவனந்தான். வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி சிறுகச்சிறுகச் சேமிக்கும் பணத்தைக் கொண்டும் பண்டத்தைக் கொண்டும் கூடிய விரைவில் தங்களை அடிமைத் தளையிலிருந்து விடுவித்துக் கொள்ளமுடியும் என்ற நம்பிக்கை யுடன் அவர்கள் நடமாடினார்கள். அப்போதுகூட அதுக்கு எசமானர் சம்மதிக்கணும்.

பாளையக்காரரின் அடிமைகளாக இருந்த பள்ளர்களை உண்மையாகவே விடுவித்து அவர்களது வறுமையைப் போக்கத் தேவைப்படும் பண உதவியளிக்கத் தனக்கு அதிகாரம் கிடைக்குமென்ற நம்பிக்கையில் கலெக்டர் எல்லாவற்றையும் சர்க்காருக்கு விவரமாக எழுதினார். சர்க்கார் பரிவுடன் உத்தரவு வழங்குமென்ற எதிர்பார்ப்பில் அந்தத் துரதிருஷ்டசாலிகளுக்கு விடுதலை கிடைக்கும் என நம்பிக்கையூட்டியிருப்பதாகவும் தெரிவித்தார்.

போர் முடிந்து அப்போதைக்கு அமைதி திரும்பியதென்னமோ வாஸ்தவந் தான். இருந்தாலும் மக்கள் மனசில் சின்ன வருத்தம் உறுத்திக்கொண்டிருந்தது. கட்டபொம்மைக் கொடூரமாகத் தூக்கிலிட்டுக் கொன்றது அவர்களை ரெம்பப் பாதித்துவிட்டது. பல மாதிரியாகப் பேசிக்கொண்டார்கள்.

''ஒண்ணுக்குள்ள ஒண்ணு பகையிருந்தா நமக்குள்ள தீத்துக்கிறதுதான் நல்லது. பெறத்தியாருக்குக் காட்டிக்குடுக்கலாமா. நாயக் கெட்டித் தூக்கினதுபோல அநியாயமாக் கொன்னுட்டாகளே.''

''சண்டையில சன்ன உசிரா மாண்டுருக்கு.''

''ரெண்டு பேரும் ஒண்ணுக்குள்ள ஒண்ணுன்னு நெனைக்கலயே. தோக்கல வார் எண்ணைக்கும் தோத்ததில்லன்னு அவுக வீம்பு பேச சில்லவார் எண்ணைக்கும் தோத்ததில்லன்னு இவுக பதிலுக்குப் பேச இப்பபடித்தானப்பா பகைய வளத்துக் கிட்டாக.''

''அவுகளும் இவுகளப் படுத்துன பாடு கொஞ்சமா. அதனாலதான் நெளிவு சுளிவெல்லாம் சொல்லிக்குடுத்துட்டாக.''

''ஒருத்தர அழிச்சுத்தான் இனியொருத்தரு சந்தோசமா இருக்க வேண்டி யிருக்கு. பெழப்பப் பாரு பெழப்ப.''

''பெரிய எடத்து வெவகாரம் எப்படியும் நடக்கும்.''

''எனக்கொரு சந்தேகம். எட்டப்ப ராசா எட்டயாவரத்து வம்சாவளியாருந்தா இப்படி நடந்துருக்குமா. என்னருந்தாலும் குருமலையிலருந்து வந்தவருதான.''

''இவன் ஒருத்தன். மனசில ஆச வளந்துருச்சுன்னா எந்த வம்சம்னு கெடக்கு.''

''ஆனாலும் கட்டபொம்மு ரெம்பத்தான் சேட்ட பண்ணுனாரு.''

''வெள்ளக்காரன எதுத்து நிக்கிறதுக்கு ஒருத்தருக்கும் துப்புக் கெடையாது. எல்லாரவும் ஒண்டிச்சு முன்கையெடுத்துச் செய்றதுக்கு ஒரு ஆளு வேணுமில்ல.''

''ராசான்னு இருந்தா சனங்ககிட்ட நல்ல பேரெடுக்கணும். அதான் சாமர்த் தியம். அப்பத்தான் சனங்க எப்பயும் தொணையிருப்பாக. அவுக தொணையிருந் திருந்தா வெள்ளக்காரனச் சும்மா வுட்ருப்பாகளா. ஒரு கையி பாத்துருக்க மாட்டாகளோ. கூலிக்கு மாரடிக்கிறவங்கள வச்சுக்கிட்டுக் கரையேற முடியுமா.''

''ஆமாமா. சனங்ககிட்ட நல்ல பேரு இல்லதான்.''

''வரி குடுக்காறவுக மேல அட்டையக் கடிக்க வுடுறது முதுகுல கல்லேத்துறது பொம்பளைக வாயில மண்ணள்ளிப் போடுறது தறிக்காரங்க கண்ணுல கள்ளிப் பாலு ஊத்துறது இப்படியெல்லாம் செஞ்சா நல்ல பேரெங்க வரும். இப்பத்தான ஒவ்வொண்ணா வெளிய வருது.''

''அப்படித்தான் சொல்லிக்கிறாக.''

''திருச்செந்தூரு முருகன் கோயில்ல பூச வேளையில மணியடிக்கிறதப் பாஞ்சாலங்குறிச்சியில கேக்கணுமிங்கறதுக்காக அங்கருந்து பாஞ்சாலங்குறிச்சி வரைக்கும் மணிமண்டபங்களக் கெட்டியிருக்காரு. மகராசனாச் செய்யி. ஆரு வேணாமின்னது. அதுக்கு ஓலையும் விட்டமும் தேவன்னா பனையேறி நாடாருக கிட்டக் கேட்டு வாங்கியிருக்கலாமில்ல. சொல்லாமக்கொள்ளாம வெட்டீட்டு வந்தா என்ன நாயம். ஒருநா வெட்டீட்டு வாறப்ப குரும்பூரு நாடாருக பாத்துக்கிட் டாகளாம். சண்டையே நடந்திருக்கு. நாடாருக எப்படித் தொணைக்கு வருவாக.''

''கேக்காம வெட்னது தப்புத்தான்.''

''கோட்டையக் கெட்டும்போது பள்ளப் பொண்ணுகள கட்டாயப்படுத்தி வேல வாங்குனாராம். அழகுபோல முதுகிருக்க கரண்டக் கால்ல அடிச்சானே பாவின்னு அவுகதான் காடுகரையில ராகம்போட்டுப் பாடுறாகளே.''

''அப்படிப் பாத்தா எந்த ராசாதான் யோக்கியம். இல்ல வெள்ளக்காரந்தான் நாணயமா.''

''அதில்ல.''

''அந்நியனுக்கு அடங்கிப்போகாம எதுத்து நின்னு உசிர வுட்டாரே அதாக்கும் வீரம்.''

''அது நெசந்தான்.''

''அவரோட தம்பிமாரப் புடிச்சு அடச்சு வச்சிருக்கான். எத்தன நாளைக்குத் தான் நெருப்ப மடியில கெட்டிவச்சிருப்பான்னு பாப்பொம்.''

''அதுலயும் ஊமத்தொரைய வச்சிருந்தா அவனுக்குத்தான் விடியும். சிங்க மாச்சே. சும்மா கெடக்காது.''

## படலம் 9

### 1. ஊமைக் கனல்

பாளையங்கோட்டைச் சிறையில் ஊமைத்துரை பல மாசங்களாக ஊணுறக்கமின்றி உழன்றுகொண்டிருந்தார். பல உறவினர்கள் உடனிருந்தும் மனசில் அமைதியில்லை. அருமை அண்ணனும் அடலேறு பாதர்வெள்ளையும் பறிபோய்விட்ட வேதனை மிக வாட்டியது. அனலில் பட்ட புழுவாகத் துடித்தார்.

விலங்குகளை உடைத்தெறிந்துவிட்டுச் சிறையிலிருந்து தப்பிச் சென்று படைதிரட்டி வெள்ளையரைப் பழிக்குப் பழி வாங்கணும். தரைமட்டமாகி விட்ட பாஞ்சைக் கோட்டையை மீண்டும் உருவாக்கணும். உடனிருப்போருடன் ஆலோசித்துத் திட்டந்தீட்டினார். காலம் கனியட்டுமென்று மாமன் ஆற்றுப் படுத்தினார். காலத்தைக் கனிய வைப்பேன் என ஊமைத்துரை சூளுரைத்தார்.

கால்விலங்கு கைவிலங்கு இடைவிலங்கு தொடைவிலங்குகளைச் சுமந்து கொண்டு எவ்வளவு காலந்தான் அவதிப்படுவது. இன்று நாளையென விடுதலையை எதிர்பார்த்து மிஞ்சியது ஏமாற்றந்தான். நம்பிக்கை உடைந்துபோயிற்று. நிதமும் ஆளுக்கு ஒரு கலிப்பணம் படியாகக் கொடுத்தார்கள். ஊமைத்துரைக்குப் பொட்டிப் பகடை பணிவிடை செய்தான். அதனால் ஏதாவது சாக்கில் அவன் சிறைக்கு வெளியே போய்வர முடிந்தது.

ஊமைத்துரையை விடுதலை செய்யாததற்குக் கும்பினியார் காரணம் வைத்திருந்தார்கள். வெளியே அனுப்பினால் அவர் சும்மா இருக்க மாட்டார். நிச்சயம் பழிவாங்குவார். கும்பினியை எதிர்த்தவர்களுக்கு இக்கதிதான் நேரும் என ஏனையோர் குலைநடுங்கணும்.

வெளியே இருந்த வீரர்கள் நாதியற்ற நிலையில் வாடி நின்றார்கள். கட்ட பொம்மு காலத்தில் மிகுந்த செல்வாக்குடன் இருந்தவர்கள். மரியாதை இருந்தது. இப்போது எல்லாம் இழந்து இழிவடைந்து இன்னலுக்குள்ளாகிவிட்டார்கள். மற்றவர்கள் இகழ மனமுடைந்துபோனார்கள். ஏற்றத்தில் திளைத்த எட்டயா புரத்தாரின் ஏளனமும் எக்காளமும் நெஞ்சில் முள்ளாகக் குத்தின.

பல வழிகளிலும் அவமதிப்புக்குள்ளான பாஞ்சை வீரர்களுக்குக் கிளர்ச்சி செய்வதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. ஓரணியில் திரண்டார்கள். சிறையில்

வாடும் வீரர்களை விடுவித்துப் பாஞ்சைப் பதியைப் பாளையமாக்க உறுதி பூண்டார்கள். காரியங்கள் கமுக்கமாக நடந்தன.

கொம்பாடியில் சுப்பிரமணிய நாய்க்கர் தலைமையில் கூடிப் பேசினார்கள். அடுத்த கூட்டம் சில்லாங்குளத்தில் நடந்தது. தூத்துக்குடி சிவத்தையா தலைமை தாங்கினார். குறிகாரர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். தீர்க்கமான முடிவெடுத் தார்கள். இருபது நாளாயிற்று. தை மாசம் ஒட்டநத்தத்தில் கூடினார்கள். நவாபு நாய்க்கர் தலைமையில் கூட்டம் நடந்தது. தெளிவான திட்டம் வகுக்கப்பட்டது. ஒவ்வொருவரின் பங்கும் தீர்மானிக்கப்பட்டது. தக்க தருணத்தை எதிர்நோக்கி குறித்த நாளை மனசிலிருத்திக் காத்திருந்தார்கள்.

ஏற்கெனவே ஊமைத்துரையையும் துரைச்சிங்கத்தையும் மீட்க மருது சகோதரர்கள் மேற்கொண்ட முயற்சி தோல்வியைத் தழுவியது. மீட்க வந்த சிவகங்கை வீரர்கள் பிடிபட்டுத் தூக்கிலிடப்பட்டார்கள். அந்த நிலை தமக்கும் நேர்ந்துவிடக் கூடாதென்று பாஞ்சை வீரர்கள் எச்சரிக்கையுடனிருந்தார்கள்.

சிறையில் நடந்த ஆலோசனையின் முடிவாகப் பொட்டிப் பகடை மூலம் பாஞ்சை வீரர்களுக்குக் கடிதம் அனுப்பத் திட்டமிட்டிருந்தார்கள். பகடை வலுவம்பன். எவரையும் எளிதில் ஏமாற்றிவிடும் மாயக்காரன். ஊமைத்துரையின் கடிதத்தைச் செருப்புக்குள் ஒளித்து வைத்துக்கொண்டு வாசலில் காவலிருந்த பாராவிடம் கடைக்குப் போவதாகப் பம்மாத்துப் பண்ணி வெளியேறினான். கடிதத்தைப் புலிகுத்தி நாய்க்கரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கணும்.

பகடைக்குச் சந்தோசம் தலைக்கேறியது. சாராயம் குடித்ததும் தன்னை மறந்தான். பாடிக்கொண்டே நடந்தான்.

''ஊமத்தொரசாமி பேருசொன்னா
ஓடுறபாம்பும் ஒடுங்குமடா
சாமத்துலநம்ம சாமிவந்து
சங்கடம்எல்லாமே தீத்துவப்பார்.

காரியமாகவே வெள்ளக்கொக்கு
கம்மாயச்சுத்துது கள்ளக்கொக்கு
நீரிலெறங்குது வெள்ளக்கொக்கு
நெலையாகநிக்கிது கள்ளக்கொக்கு.

வேலமுடிஞ்சதும் வெள்ளக்கொக்கு
வெளியேறிப்போகுது கள்ளக்கொக்கு
ஆலமரந்தேடி வெள்ளக்கொக்கு
அடையத்தான்போகுது கள்ளக்கொக்கு.

மீனாசகொண்டது வெள்ளக்கொக்கு
வெளையாடிப்பாக்குது கள்ளக்கொக்கு
தனாகஓடாது வெள்ளக்கொக்கு
சாகத்தான்போகுது கள்ளக்கொக்கு.''

விரைவிலேயே பாஞ்சைப் பதியை அடைந்துவிட்டான்.

புலிகுத்திநாய்க்கரைச் சந்தித்துத் தெண்டனிட்டுக் கடிதத்தைக் கொடுத்தான். நூறு இருநூறு கம்பளத்தார் அங்கே நொடியில் கூடிவிட்டார்கள். பத்துப் பதி னஞ்சு நாளில் பாளையங்கோட்டைக்கு வந்து அத்தனை வீரர்களையும் மீட்டு

வெற்றியுடன் திரும்புவோம் எனச் சபதமேற்றுப் பதிலெழுதிப் பகடையிடம் கொடுத்தார்கள்.

பகடை பாளையங்கோட்டை வந்துசேரத் தாமதமாகிவிட்டது. அவனுக்கு உளைச்சல். பாராச் சிப்பாய் விசாரிப்பானே. எங்கே போனாயடா என்று கைப் பிரம்பால் அடிப்பானே. கவாத்துக் காலால் மிதிப்பானே. கடுகடுப்பில் நாய் போலக் குலைப்பானே. பகடைக்குத் தெரியாத தந்திரமா. வயிற்றைப் பிடித்துக் கொண்டு கிளிக்குஞ்சுபோல் கிறுவாணம் சுற்றினான்.

''அய்யோ அடிவகுறு வலிக்குதே.''

வழி நெடுக விழுந்துவிழுந்து எழுந்து நடந்தான். ஒரு சிப்பாய் கோவத்தில் கேட்டான்.

''நேற்றுப் போனவன் இன்றைக்கு வரும் காரணமென்னடா.''

பகடை பாசாங்கு செய்தான்.

''வெறகுக்குப் போயிருந்தென். மோசம் வந்து சேந்துருச்சே சாமி. அய்யய்யோ வலிக்குதே. ரெம்பரெம்ப வலிக்குதே.''

குப்புற விழுந்துவிழுந்து எழுந்தான். அழுது துடித்தான். சிப்பாய் நம்பி விட்டான்.

''வெள்ளப்பூண்டு தின்றால் சரியாகிவிடும். உள்ளே போ.''

பகடை சிரிப்பையடக்க வாயைப் பொத்திக்கொண்டே ஊமைத்துரையிடம் ஓடினான். புலிகுத்தி நாய்க்கரின் கடிதத்தை ஒப்படைத்தான். தெம்பான கடிதம் கண்டு ஊமைத்துரை ரெம்ப மகிழ்ந்தார். பாஞ்சைப் பாளையம் மனசுக்குள் படமாக விரிந்துகொண்டிருந்தது.

உடனே திட்டந்தீட்ட ஆரம்பித்தார். சிறையதிகாரியின் மனைவி நல்ல மனுசி. வெள்ளைக்காரி. அவரிடம் வாஞ்சையாக இருப்பாள். சைகைப் பேச்சு அவளுக்கு ரெம்பப் பிடிக்கும். அவளது உதவியை நாடினார்.

''எங்கண்ணனத் தூக்குல போட்டுட்டாங்க. அவருக்குக் கைங்கரியம் செய்ய ஊருல யாருமில்ல. நாந்தான் செய்யணும். அனுமதி கெடச்சா செயிலுக்குள்ளயே அந்தக் கடமையச் செஞ்சு முடிச்சிருவென். அதுக்கு பெரிய மனசு பண்ணி நீங்க தான் ஒதவணும்.''

அவளும் இரக்கப்பட்டு கணவரிடம் பேசி அனுமதி பெற்றுத்தந்தாள். ஊமைத் துரைக்குச் சந்தோசம். கைகூப்பி அவளுக்கு நன்றி சொன்னார்.

கைங்கரியத்துக்கான நாள் குறிக்கப்பட்டது. பொட்டிப் பகடை இந்தச் சேதி யுடன் பாஞ்சைக்கு ஓடித் திரும்பினான். அந்த நாளன்று சுமைசுமையாக வாழை யிலைக் கட்டுகளும் விறகுக் கட்டுக்களும் வாழைப்பழத் தார்களும் வீரர்கள் மூலம் சிறைக்குள் வந்து இறங்கணும். அத்தனை கட்டுக்களுக்குள்ளும் சகல ஆயுதங்களும் ஒளிந்திருக்கணும்.

ஏற்பாடுகளைப் பற்றி பொட்டிப் பகடை அப்பப்பத் தெரிந்து வந்து தகவல் சொன்னான். எல்லாம் திட்டமிட்டபடியே நடந்தது.

## 2. உடைந்தது சிறை எழுந்தது கோட்டை

வல்லநாட்டு மலைமீது அந்தியிருள் கவிந்துகொண்டிருந்தது. பாஞ்சை வீரர்கள் பல ஊர்களிலிருந்தும் வந்து அங்கே கூடினார்கள். தலைமைக் குறிகாரர்கள் அனைவரும் வந்துவிட்டார்கள். கூட்டம் முன்னூறைத் தாண்டிவிட்டது. ஆயுதங் களுக்குக் குறைவில்லை.

பசியாறி இளைப்பாறி விடுதலைப் படை சிவத்தையா தலைமையில் நள் ளிரவில் பாளையங்கோட்டை நோக்கிப் புறப்பட்டது. பொழுது விடியுமுன் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். விடிந்ததும் கூட்டங்கூட்டமாகப் பிரிந்து மாறு வேடமணிந்து ஊருக்குள் ஊடுருவ ஆரம்பித்தார்கள்.

தாதர்கள் பண்டாரங்கள் கூத்தாடிகள் திருநீறு பூசிய சடைமுடிச் சாமியார் களாக வீதிகளில் உலவித் திரிந்தார்கள். காவடியேந்திய பக்தர்களின் களியாட்டக் குரல் கேட்டது.

''வேலுமயிலுக் கரகரா - வடி
வேலுமயிலுக் கரகரா
சோலைமயிலுக் கரகரா - சிவ
சுப்பிரமணியருக் கரகரா.''

இன்னொரு புறம் மெஞ்ஞானி வேடத்திலிருந்த சடையன்குட்டிச் சேர்வை கூவிக்கொண்டிருந்தான்.

''வெட்டை அரையாப்பு கெட்ட கிரந்திக்கு நல்ல மருந்துண்டு. கிட்ட வாருங்கள். கேட்டு வாங்குங்கள். துட்ட நோய்களைத் துரத்தி விரட்டுங்கள்.''

சிலர் தப்பு சேகண்டியடித்து மேளதாளத்துடன் பாடிக்கொண்டே கடை களில் காசு வாங்கினார்கள்.

''திருப்பதிக்குப் போகவே
திருமாலைக் காணவே
விருப்பமுடன் வந்துள்ளோம்
விரும்பியருள் செய்யுங்கள்.''

எங்கிருந்தோ உடுக்கடித்துக் குறிசொல்லும் கோடாங்கியின் ராகம் வந்தது.

''நல்ல காலம் பொறக்குது. நல்ல காலம் பொறக்குது. தேடிவந்த பீடை யெல்லாம் தேவி சக்கம்மா புண்ணியத்தில் ஓடுது ஓடுது...''

சிறைக்கு வெளியே மறைந்துகொண்டு பம்மியிருந்த பொட்டிப் பகடையின் காதில் குடுகுடுப்பைச் சத்தம் விழவே சுதாரிப்படைந்தான். ஆகா நமது ஆட்கள் வந்துவிட்டார்கள். எத்தனை வெள்ளைக் கொக்குகள் சாகப்போகின்றனவோ. துள்ளிக்கொண்டு சிறைக்குள் ஓடினான்.

''சாமி நல்ல காலம் பொறந்துருச்சு.''

ஊமைத்துரையும் மற்ற வீரர்களும் கைகால்கள் குறுகுறுக்க நிலைகொள் ளாமல் தவித்துக்கொண்டிருந்தார்கள். கொஞ்ச நாளுக்கு முந்தி அவர்களுக்கு அம்மை கண்டிருந்தது. உடம்பு அழண்டுபோகும் என்பதால் விலங்குகளிலிருந்து விடுதலை கிடைத்திருந்தது. அந்தத் தெம்பில் எதுக்கும் தயாராக இருந்தார்கள்.

வேல் வாள் கண்டகோடாலி எனப் பல்வேறு ஆயுதங்களைக் கர்ப்பந்தரித் திருந்த விறகுக் கட்டுகளையும் வாழையிலைக் கட்டுகளையும் தெருக்களில் வேர்க்கவேர்க்கச் சுமந்துவரும் வீரர்களின் கூவல் தெளிவாகக் கேட்டது.

''வெறகு வேணுமா வெறகு.''

''வாழையெல வாழையெல.''

கூடவே பழக்கூடைகளும் கூவிக்கொண்டு சென்றன. அவற்றுக்குள் கல்லும் கவணும் கைவெடிகளும் நிறைந்திருந்தன. அவற்றை வாழையிலை மூடிமறைத் திருந்தது.

பண்டம் வாங்க வேண்டி இடைமறித்தவர்கள் விலையைக் கேட்டு ஒதுங்கிக் கொண்டார்கள். சுமைகள் சிறையை நோக்கி வருவதை பொட்டிப் பகடை கவனித்துவிட்டான். கோட்டையின் வடக்கு வாசலில் பாரா நின்ற இருவரிடமும் நயந்துபேசி ஊமைத்துரை செய்யவிருக்கும் கைங்கரியம்பற்றி எடுத்துச் சொன் னான். அவர்கள் தலையாட்டியபடி பொருட்களை உள்ளே அனுமதித்தார்கள்.

சிறைக்கு வெளியே ஆயுதங்களுடன் பதுங்கியிருந்த வீரர்களுக்கு இந்தச் சேதி எட்டவே பொழுது மங்கிய இருளுடன் சிறைக்கோட்டையைச் சூழ்ந்து கொண்டார்கள். பலர் எட்டத்தில் நின்றுகொள்ள சிலர் மட்டும் கோட்டையை நெருங்கினார்கள். வீரபொம்மு போய் வடக்கு வாசல் பாராக்களிடம் பவ்யமாக நின்றான்.

''யார் நீ.''

''நான் கெழக்குச் சீமையிலருந்து வாறென். உள்ள ஒருத்தரக் கண்டு பேச உத்தரவு வேணும்.''

வீரபொம்முமீது பாராக்களின் கவனம் குவிந்திருக்கும் வேளையில் சிறைக் குள்ளிருந்து கில்லிலி என்று ஊமைத்துரையின் குலவைச் சத்தம் ஓங்கி ஒலித்தது. சற்றுத் தள்ளியிருந்த வல்லய வீரர் சிலர் பாராக்கள் மீது தாவிப் பாய்ந்து இரு சுடுவெடிகளையும் பறித்து அவற்றைக் கொண்டே அவர்களை அடித்து வீழ்த்தி னார்கள். எட்டத்தில் நின்ற ஆயுதபாணிகள் அத்தனை பேரும் மூடிமுழிக்குமுன் அந்த இடத்தில் கூடிவிட்டார்கள். பதினாறு வீரர்கள் மட்டும் கோட்டைக்குள் புகுந் தார்கள். எதிரிகள் நுழைந்துவிடாதபடி சிவத்தையாவும் சில குறிகாரர்களும் வாசலைச் சுற்றிக் காவலிருந்தார்கள்.

உள்ளே இருந்த வீரர்களுக்கு ஏகக் கொண்டாட்டம். வந்திறங்கிய ஆயுதங் களையும் ஆயுதச்சாலையில் உள்ளவற்றையும் எடுத்துக்கொண்டு ஆர்ப்பரித் தார்கள். பாஞ்சைப் பதி அவர்களை அழைத்தது.

சிறையை மேல்பார்க்க நாற்பத்தெட்டு அதிகாரிகள் இருந்தார்கள். சீறிப் பாயும் வீரர்களை அவர்கள் கூக்குரலிட்டுத் தடுத்துப் பார்த்தார்கள். வீரர்கள் அவர் களை விரட்டிவிட்டார்கள். அதிகாரிகள் படுகாயத்தில் விழுந்துகிடந்தார்கள் பலர் விரண்டு வெளியே ஓடினார்கள் பாஞ்சை வீரர்கள் பாதுகாப்பாக வெளியேறி னார்கள். கோட்டைக்கு வெளியே காத்திருப்பவர்கள் அவர்களைக் குலவையிட்டு வரவேற்றார்கள்.

''வேலும் மயிலும் துணை வேலும் மயிலும் துணை.''

நெடுங்காலமாகக் கடுங்காவலில் உழன்ற ஊமைத்துரைக்கு விடுதலைக் காற்று வெண்சாமரம் வீசியது. அவருக்குள் வீரம் கிளர்ந்தது. ஆவேசத்தில் தலைக்கு

மேல் கைசுழற்றி கும்பினியாரின் தொப்பியை அடையாளங்காட்டி உள்ளங் கையில் சில துரும்பைக் கசக்கி 'பூ' என்று ஊதினார். வீரர்கள் குதூகலத்தில் குதித்தார்கள்.

படைகள் புடைசூழ ஊமைத்துரை வெற்றிக் களிப்பில் பாளையங் கோட்டைத் தெருக்களில் வலம்வந்தார். அந்தரத்தில் உயரும் குத்தீட்டிகள் அடிக்கடிக் குலவையிட்டன. அந்த இருளிலும் தெளிவாக வழிதேடிப் பாஞ்சையை நோக்கி அவர்களது பயணம் தொடர்ந்தது.

பாளையங்கோட்டைச் சிறையிலிருந்து ஒரு மைல் தொலைவில்தான் கும்பினியாரின் கோட்டை இருந்தது. அப்போது அங்கே சில படைகள் மட்டுமே நிலைகொண்டிருந்தன. படைத் தளபதி மேஜர் மெக்காலே அங்கே தங்கியிருந்தார். கட்டபொம்மைத் தூக்கிலிட்ட பானர்மன் போன பிறகு ராபர்ட் டூரிங் வந்தார். கொஞ்ச நாளில் அவரும் போய்விட்டார். அவருக்குப் பதிலாக மெக்காலே வந்தார்.

சீமையிலிருந்து வந்திருந்த ஒரு துரைக்கு அன்றுதான் மெக்காலே பண்ணை வீட்டில் விருந்து கொடுத்தார். ஆணும் பெண்ணுமாக இருபது பேர் உல்லாசமாக விருந்துண்ணும்போது சிறை உடைக்கப்பட்ட சேதியை அதிகாரியொருவர் ஓடி வந்து மேஜரிடம் சொன்னார். மேஜர் கதிகலங்கிப்போனார். தப்பியவர்களைப் பிடிப்பதற்காகச் சிறுசிறு பிரிவுகளாகக் கும்பினிச் சிப்பாய்களை அனுப்பிவைத் தார். நல்ல வேளை அவர்கள் அனைவரும் பத்திரமாகத் திரும்பிவிட்டார்கள். பாளையங்கோட்டையிலிருந்த எல்லாச் சிப்பாய்களையும் அனுப்பியிருந்தால் கூட பாஞ்சை வீரர்களைப் பிடித்திருக்க முடியாது.

பாஞ்சைப்பதியை அடையும்வரை ஊமைத்துரையின் விடுதலைப் பயணத்தை எவராலும் தடுக்க முடியவில்லை. இடைவழியில் வெவ்வேறு இடங் களில் நூறு சிப்பாய்கள் மடக்க முயன்றும் தோற்றுவிட்டார்கள். ஒரு இடத்தில் சுதேசி அதிகாரியின் தலைமையில் பெரிய படைப் பிரிவே வழிமறித்தது. பய னில்லை. அனைவருமே கைவசம் ஆயுதங்கள் இருந்தும் நிராயுதபாணிகளாக அதிர்ந்துபோய் முழித்துக்கொண்டிருந்தார்கள்.

கும்பினிப் படையை நொறுக்கிக் குமிப்பதற்குக் கிடைத்த ஒரு அருமையான சந்தர்ப்பதை ஊமைத்துரை நழுவ விட்டுவிட்டார். தப்பியோடுவதிலேயே குறியாக இருந்ததால் கும்பினியாரைக் கவனிக்கவில்லை. மேஜரின் வீட்டில் ஒரு நாயக் மட்டுமே காவலிருந்தான். முன்னூறு பேருக்கு மேலிருந்த பாஞ்சை வீரர்கள் கும்பினியாரைத் தாக்கியிருந்தால் எதிர்க்கத் திராணியற்று நசுங்கிப்போயிருப் பார்கள்.

நெல்லைச் சீமையில் பதட்டம் நீங்கி அமைதி நிலைநாட்டப்பட்டுவிட்டதால் அங்கிருந்த படைகள் அதிக அளவில் குறைக்கப்பட்டு அப்போது தொள்ளாயிரம் பேர் மட்டுமே எஞ்சியிருந்தார்கள். வங்காள பீரங்கிப் படைப் பிரிவைத் தவிர மற்றவர்கள் அனைவரும் சுதேசிகள். அதிலும் பெருமளவு சங்கரநயினார்கோயிலில் முகாமிட்டிருந்தார்கள். பாளையங்கோட்டையிலிருந்தவர்கள் சொற்பமே.

இந்த நேரத்தில் இப்படியொரு சம்பவம் நடந்துவிட்டதே என்று மேஜருக்கு வருத்தம். தப்பியவர்களை எப்படியும் பிடித்தாகணும். அதுக்குப் போதிய படைகள் இருக்கணும். எங்கே போய்த் தேடுவது. எங்கிருந்தாலும் தேடிப் பிடித்தாகணுமே. இந்த அவமானத்தைத் துடைத்தாகணுமே.

அடுத்த நாள் நடவடிக்கைகள் முடுக்கிவிடப்பட்டன. சங்கரநயினார் கோயிலில் முகாமிட்டிருந்த கும்பினிப் படைகள் கயத்தாறுக்குச் செல்ல உத்தர விடப்பட்டது. பாளையங்கோட்டையிலிருந்து புறப்பட்ட அதிகாரிகள் நாலாம் நாள் கயத்தாறில் சேர்ந்துகொண்டார்கள். அவர்களுடன் நவாப்பின் குதிரைப் படை வீரர்களும் இணைந்தார்கள். படையைச் சேராத சிலர் கொடுத்தனுப்பிய குதிரைகளில் வந்தார்கள்.

சொந்த மண்ணை அடைந்த ஊமைத்துரையைக் காண சுத்துப்பட்டிச் சனங்கள் மொத்தமாக ஓடி வந்து ஆதரவுக் கரம் நீட்டினார்கள். பாஞ்சைக் கோட்டையைக் கட்டுவது முதல் வேலை. அப்போதுதான் பாதுகாப்பாக இருந்து கொண்டு கும்பினியாரை எதிர்க்க முடியும். ஆணும் பெண்ணும் ஏழாயிரம் பேர் அந்த வேலையில் ஆர்வத்துடன் ஈடுபட்டார்கள். தெற்கே நட்டாத்தியிலிருந்தும் பிற ஊர்களிலிருந்தும் குடங்குடமாகக் கருப்பட்டித் தண்ணீரும் பதினியும் வந்தன. கைமாற்றிக் கொடுக்க அங்கிருந்து பாஞ்சைப்பதிவரை வரிசையாக ஆட்கள். ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் உடனிருந்து வேலைசெய்தார்கள்.

இன்னொரு புறம் நீண்ட வரிசை மண்ணுருண்டைகளை மளமளவென்று பந்து விளையாட்டாக எறிந்து பாஞ்சையில் அம்பாரமாகக் குமித்தது. மண் ணுருண்டைகளில் கருப்பட்டித் தண்ணீரும் பதினியும் ஊற்றி உதைத்து மிதித்து வரகு உமி வைக்கோல் கம்மஞ்சக்கை சேர்த்துக் குழைத்துப் பக்குவப்படுத்தி னார்கள். பழைய இடத்திலேயே பெரிய கோட்டை எழுந்தது.

அஞ்சே நாளில் அனைத்து வேலைகளும் முடிந்துவிட்டன. அல்லும்பகலும் அயராது உழைத்த மக்களின் பாசத்தை நினைத்து ஊமைத்துரை நெகிழ்ந்து போனார். கண்ணெதிரில் பிரம்மாண்டமான கோட்டை கும்பினிக்குச் சவாலாக நின்றது. ஆறடி அகலமும் பதினெட்டடி உயரமும் ரெண்டாயிரத்து எழுநூறு முழ நீளமும் கொண்ட மதில்கள். அவற்றின்மீது நாலு திசையிலும் அங்கங்கே கொத்தள நெட்டுக்கள். கொத்தளக் குறிகாரர்களைத் தாண்டி கும்பினியார் கோட்டைக்குள் நுழைய முடியாது.

கோட்டைக்குள்ளே நடன மண்டபம் கொலு மண்டபம் அந்தப்புரம் தர்பார் அவசரக் காலத்தில் பதுங்கிக்கொள்ள நிலவறைகள் ஆயுதச்சாலை போசனசாலை என்று அனைத்து வசதிகளும் உருவாகின. புதிய பாஞ்சை நகரமே பொலிவுடன் காட்சியளித்தது.

அரும்பாடு பட்டுக் கோட்டை கொத்தளங்களைக் கட்டி முடித்த அனை வருக்கும் ஊமைத்துரை நல்ல விருந்து கொடுத்தார். வாழையிலையில் தாதியர் பறிமாறினார்கள். சம்பாச் சாதத்துடன் சாதிக்கோழிக் கறி முயல் கறி உள்ளிட்ட பதினெட்டுக் கறி வகைகளை உண்டு முடியவில்லை. விருந்துபசாரங்களை ஊமைத் துரை நேரில் பார்வையிட்டார். சாப்பிட்டு முடித்துத் தாம்பூலந் தரித்த வாயால் சனங்கள் ஊமைத்துரையை வானளாவ வாழ்த்தினார்கள்.

அனைவரது வற்புறுத்தலாலும் ஊமைத்துரை அடுத்த பாளையக்காரராகப் பட்டஞ் சூடினார். எங்கும் குலவை முழங்க குதிரைமீது பவனிவந்து லட்சுமி விலாசத்தில் கொலுவிருந்தார். நெற்றியில் திருநீறு. நடுவில் சந்தனப் பொட்டு. கத்திப் புருவம். மையிட்ட கடைக்கண். வணங்காத மீசை. தலையில் சுங்கு

வைத்த உருமால்கட்டு. கைவிரல்களில் கல்கட்டு மோதிரம். கழுத்தில் கண்டி சரப்பளி மோகன மாலைகள். காதில் வண்டிக் கடுக்கன். புனுகு பன்னீர் சாந்து சவ்வாது மணங்கமழ அரியாசனத்தில் தெய்வமாகவே காட்சியளித்தார்.

சனங்களுக்கு அவர் தெய்வந்தான். அன்பான 'ஊமைச்சாமி'. கும்பினி யாருக்கு 'டம்பி'. துலுக்கர்களுக்கு 'மூகா'. ஒல்லியான ஆனால் உறுதியான உடல் கட்டு. கும்பினியார் நினைப்பு வந்தால் கோவத்தில் கையைக் கடித்து உதறுவார். கண்களில் பொறிபறக்கும். மீசையை முறுக்குவார். உன்னிஉன்னிக் குதிப்பார். கைச்சன்னை காட்டுவார். மற்றவர்களுடன் பேச அவருக்கு இருபத்திநாலு சன்னைகள் போதும். மனசில் நினைத்ததையெல்லாம் விளங்க வைத்துவிடுவார்.

## 3. முன்னேறிப் பின்வாங்கி...

கும்பினிப் படை கயத்தாறிலிருந்து ராப்பகலாகப் பத்தொன்பது மைல் நடந்து குலையநல்லூரை அடைந்தது. ஊரை விட்டு ஒரு மைல் தள்ளி குளத்தருகே கூடாரமடித்துத் தங்கியது. அனைவரும் காலாற ஒய்வெடுத்து காலை உணவுக் காகக் காத்திருந்தார்கள்.

கும்பினியார் இடைவழியில் தங்கியிருப்பது பாஞ்சைக்குத் தெரியவந்தது. வழியிலேயே அவர்களை வளைத்து விரட்டியடிக்கணுமென்று வீரர்கள் துடித் தார்கள். தயக்கத்துக்குப் பின் ஊமைத்துரை இணங்கினார். வீரர்கள் வெறி கொண்டு குலையநல்லூருக்கு விரைந்தார்கள். குளக்கரை மேட்டில் ஆயிரம் பேருக்கு மேல் அணிவகுத்து நிற்கும் ஆயுதபாணிகளை கும்பினியார் எதிர்பார்க்க வில்லை. நிலைகுலைந்தாலும் சமாளித்துக்கொண்டு எதிர்க்கத் தயாரானார்கள்.

பாஞ்சை வீரர்கள் வலமிடமாக இரு பிரிவும் நடுவில் ஒரு பிரிவுமாக வந்து மூர்க்கமாகத் தாக்கினார்கள். சுடுவெடி வாள் ஈட்டி எனப் பல ஆயுதங்கள் அவர் களிடம் இருந்தன. கும்பினிப் படையில் புதுச் சிப்பாய்கள் பலர் இருந்தார்கள். வெடிகள் சுடுவதைப் பார்த்திராதவர்கள். ஆனாலும் உறுதியுடன் போரிட்டுச் சமாளித்தார்கள். நவாப்பின் படைகள் திணறின. அவர்களது குதிரைகள் திரும்பி வந்தால் போதுமென்றாயிற்று.

சண்டை ஒரு மணிநேரம் நடந்தது. நாற்பது சடலங்களை விட்டுவிட்டு காயம்பட்டவர்களைச் சுமந்துகொண்டு பாளையப் படை பறந்துவிட்டது. கூடாரங்களில் அமைதி திரும்ப மதியமாகிவிட்டது. கும்பினித் தரப்பில் ஆறு பேர் மாண்டார்கள். பாளையப் படை வெடி சுடுவதில் தேர்ச்சி பெறவில்லை. அதனால்தான் உயிர்ச்சேதம் குறைவு.

சுற்றுக்காவல் வலுப்படுத்தப்பட்ட நிலையில் எங்கும் அமைதி நிலவியது. நடுச்சாமத்தில் திடீரென்று ஊர்த் திசையிலிருந்து வந்த வெடிச்சத்தம் அந்த அமைதியைக் குலைத்தது. வெடித்தவர்களைப் பிடிக்க முடியவில்லை. அன்று உறக்கங் கெட்டது.

கும்பினிப் படை மறுநாள் காலை பாஞ்சை நோக்கி நடந்து சாலிகுளம் பரும்பேறிப் பார்க்கும்போது கண்களை நம்ப முடியவில்லை. தரைமட்டமாக்கப்

பட்ட கோட்டை இப்போது மீண்டும் எழும்பி நின்றது. கோட்டையைச் சுற்றி ஆயிரத்து ஐநூறு வீரர்கள் ஆயுதங்களுடன் காவலிருந்தார்கள். என்ன ஆச்சரியம். இது மாயமா இல்லை மந்திரமா. மேஜர் மெக்காலே திகைத்து நின்றார். ஒரு பீரங்கிகூட இல்லாமல் அழிமானப் படைக்கு வெள்ளைக்காரத் தலைவர் இல்லாமல் பட்டப்பகலில் கோட்டையைத் தாக்குவது உசிதமல்ல.

ஓட்டப்பிடாரத்தருகே பாஞ்சைக் கோட்டைக்கு ஒரு மைல் தொலைவில் கூடாரமிட்டார்கள். வடக்கே உயர்ந்து வளர்ந்த வெள்ளாமைகள் அடர்ந்து தெரிந்தன. தெற்கே சாலிகுளம் கம்மாக்கரை. கிழக்கே ஒரு ஊர். மேற்கிலிருந்து பார்த்தால் கோட்டை பயமுறுத்திக்கொண்டிருந்தது.

சாப்பிட்டு ஓய்வெடுத்து பதட்டத்தைத் தணித்துக்கொண்டார்கள். கோட்டைக்குள் நிலைமையை ஒற்றறிந்து வர இரு சுதேசி வீரர்களையும் வீர ரல்லாத இருவரையும் அனுப்பியிருந்தார்கள். அவர்கள் உழவு மாடு வாங்க வருவோர்போல் நடித்து கோட்டைக்குள் நுழைந்துவிட்டார்கள். உள்ளே இருந்த நிலைமை கதிகலங்கச் செய்தது. கொஞ்ச நேரம் திகிலடித்து நின்றுவிட்டார்கள். லாயத்தில் ஏகப்பட்ட குதிரைகள். அங்கங்கே கூட்டங்கூட்டமாக வீரர்கள் தயாராக நின்றுகொண்டிருந்தார்கள். வேல் வாள் வில் வல்லயம் என எல்லாரும் ஆயுதம் வைத்திருந்தார்கள். கவண்களும் கற்களும் கண்டகோடாலிகளும் கம்பு களும் ஈட்டிகளும் அங்கங்கே மலையாகக் குமிந்து கிடந்தன. சிலர் சுடுவெடிகள் வைத்திருந்தார்கள்.

வீரர்கள் வீராப்பாகப் பேசிக்கொண்டார்கள்.

''பட்டாளங்களத் தெரட்டி பீரங்கி வெடிகளோட நம்மளப் புடிக்க வந்தவங்க ஏன் கிட்ட வராம எட்ட ஒதுங்கி நிக்கான்.''

''ஒருவேள நடந்துவந்த களப்பாருக்கும். இண்ணைக்குத் தவிப்பாறி நாளைக்குச் சண்டைய ஆரம்பிக்கலாம்னு நெனச்சிருக்கானோ என்னமோ.''

''அப்படின்னா இண்ணைக்கு ராத்திரியே அவங்களோட கூடாரங்களச் சுத்தி வளச்சு ஒருத்தன் பாக்கியில்லாம ஒழிச்சுக்கெட்டீறணும்.''

''அவங்க தளபதியப் புடிச்சு வந்து கோட்ட வாசல்ல நிறுத்தி வெட்டி வேட்டையாடி பழிக்குப்பழி தீக்கணும்.''

பொழுது இருட்டியபின் கோட்டைமீது கும்பினியார் இருமுனைத் தாக்குதல் நடத்தத் தீர்மானித்திருந்தார்கள். சற்று நேரத்தில் வந்த ஒற்றர்கள் கோட்டைக்குள் பார்த்ததையும் கேட்டதையும் அப்படியே சொன்னார்கள்.

மேஜர் ஆடிப்போனார். கும்பினிப் படைகள் இரு கண்டங்களைத் தாண்டி யாகணும். ஒண்ணு இவ்வளவு குறுகிய காலத்தில் மந்திரமாயமாக உயர்ந்து நிற்கும் பிரம்மாண்டமான கோட்டை. ரெண்டாவது நினைத்துக்கூடப் பார்க்க முடியாத வீரர் கூட்டம். கும்பினிச் சிப்பாய்களும் அதிகாரிகளும் பயணக் களைப் பிலும் தூக்கக் கலக்கத்திலும் துவண்டுபோயிருந்தார்கள். தாக்குதலுக்குத் தயாராக இருப்பார்களா என்பது சந்தேகமே.

படைகளோ தாக்குதலுக்கான ஆயத்தப் பணிகளில் ஈடுபட்டிருந்தன. நேரம் மதியத்தைத் தாண்டிவிட்டது. கண்ணெதிரே கோட்டை வேலியைத் தாண்டி நிற்கும் பாளைய வீரர் கூட்டம் பயமுறுத்தியது. ரெண்டாயிரம் பேர் இருக்கும்.

அவர்களது 'கையிலிருந்த நெடிய ஈட்டிகள் பொழுதின் ஒளியில் மின்னின. இந்தப் பக்கம் ஆயத்தப் பணிகள் முடிந்ததும் கும்பினிப் படைகள் புறப்படத் தயாராயின. பாஞ்சைக் கோட்டையை நோக்கியல்ல. பாளையங்கோட்டையை நோக்கி.

போக்குக் காட்டித் திரும்பி வந்து தாக்குவார்கள் என எதிர்பார்த்து ஏமாந்த பாளையப் படைகள் பின்தொடர்ந்து ஓரிடத்தில் வளைத்துத் தாக்கின. குழம்பிப் போன கும்பினிப் படை கொஞ்ச நேரத்தில் சுதாரித்து எதிர்கொண்டது. நல்ல வேளை எறிவெடிப் படை கைகொடுத்தது. வீரர்கள் வெடிகளை எறிந்து சமாளித் தார்கள். பாளையப் படைகள் பின்வாங்கிவிட்டன. கும்பினித் தரப்பில் ஒரு பெண்ணும் இரு ஆண்களும் பலியானார்கள். வழி நெடுக எந்தப் பக்கத்திலிருந்து எதிரிகள் கிளம்புவார்களோ என்ற எண்ணத்திலேயே கஷ்டப்பட்டு நடந்து மறுநாள் காலை பாளையங்கேட்டை போய்ச் சேர்ந்தார்கள்.

## 4. வெற்றிமேல் வெற்றி

கும்பினியார் பாஞ்சைக்குப் படையெடுத்துச் சென்ற வேகத்தில் பாளைக்குத் திரும்பிய பரிதாபத்தையறிந்த கலெக்டர் லூஷிங்டன் பதைத்துப்போனார். பாஞ்சை நிலைமைபற்றி விரிவான அறிக்கை தருமாறு எட்டயாபுரத்தாருக்கு உத்தரவிட்டார். அறிக்கையும் கிடைத்தது. அப்போது நாகலாபுரத்திலிருந்த அவர் உடனே பாஞ்சைக்குப் புறப்பட்டார். வழியில் எட்டயாபுரத்தாருடன் ஆலோசனை நடத்தினார். பாஞ்சாலங்குறிச்சியாரை அடக்க கும்பினிக்கு எல்லா உதவியும் செய்வதாக எட்டயாபுரத்தார் வாக்களித்தார். கடைசியில் ஒரு விண் ணப்பம் வைத்தார்.

''பாஞ்சாலங்குறிச்சிக்கும் எட்டயாபுரத்துக்கும் தீராத பகையுண்டு. கட்ட பொம்மு போனதோட கத முடிஞ்சுபோச்சுன்னு நெனச்சென். ஆனா நெலம வேற மாதிரியாயிருச்சு. ஊமத்தொர தப்பிவந்து தன்னிச்சையாப் பாளையக்காரனாப் பட்டஞ் சூடிக்கிட்டான். அண்ணனக் காட்டிக்குடுத்ததுக்காக எம் மேல கோவமாருக்கான். எங்களுக்கு எந்த நேரத்துல ஆபத்து வரும்னு சொல்ல முடியாது. தொரதான் பாதுகாப்பு குடுக்கணும். எப்போதும்போல கும்பினிக்கு விசுவாசமா இருப்பென்.''

''கவலை வேண்டாம். எல்லா உதவியும் செய்வோம்.''

கலெக்டர் பாளைக்கு வந்ததும் எட்டயாபுரத்துக்கு ஆயுதங்கள் அனுப்பு மாறு படைத் தளபதிக்கு உத்தரவிட்டார். மேஜர் மெக்காலே அப்படியே நிறைய ஆயுதங்களை அனுப்பிவைத்தார். எட்டயாபுரத்தார் தனது வீரர்களைக் கோயில் பட்டிக்கு அனுப்பி அவற்றைப் பெற்றுக்கொண்டார். கொஞ்ச நாளில் கூடுதலாக முன்னூறு சுடுவெடிகளும் அனுப்பிவைக்கப்பட்டன. மூணு லெப்டினெண்ட் களின் தலைமையில் படைப் பிரிவுகள் எட்டயாபுரத்துக்குச் சென்றன. கூப்பிட்ட குரலுக்குப் படைகளுடன் ஓடிவந்து நிற்கணுமென்ற தோரணையில் மேஜர் கடிதம் எழுதினார்.

எட்டயாபுரத்தார் தெம்பானார். பல ஊர்களிலும் படைகளைத் திரட்டினார். பெரிய தளபதி கட்டாலங்குளம் அழகுமுத்துச் சேர்வை ராமனூத்து வெள்ளைய மணியக்காரன் அருங்குளம் காமணன் சேர்வை செம்மப்புதூர் சின்னணன் சேர்வை இளம்புவனம் பெரிய தளவாய் ஆகிய குறிகாரர்கள் தமது படைகளுடன் எட்டயாபுரத்தில் கூடினார்கள். படைகள் எந்த நேரத்திலும் பாஞ்சைக்குப் புறப் படத் தயாராக இருந்தன.

ஆனால் கும்பினிப் படைகள் இன்னும் தயாராகவில்லை. வெளியூர்களி லிருந்து வர வேண்டிய படைகளை எதிர்பார்த்துப் பல நாட்கள் பாளையிலும் கயத்தாறிலும் நிலைகொண்டிருந்தன. உள்ள நிலைமையைத் தெரிவித்து மேஜர் பல இடங்களுக்குக் கடிதம் எழுதியிருந்தார். எல்லாப் படைகளையும் ஒருங் கிணைத்துத் தயாராவதற்கு அவகாசம் தேவைப்பட்டது.

இந்த அவகாசத்தில் மேஜருக்கு ஒரு நப்பாசை. காடல்குடி சின்னப் பாளையந் தானே. எட்டாக் கையில் கரிசல் சீமையில் தனித்துக் கிடக்கிறது. எளிதில் கைப்பற்றி விடலாம். கேப்டன் ஹசார்டு தலைமையில் சில படைப் பிரிவுகளை அனுப்பினார்.

இதை ஒற்றறிந்த ஊமைத்துரை உடனே ரெண்டாயிரம் பேரைக் காடல் குடிக்கு அனுப்பிவிட்டார். கும்பினிப் படைகளுக்குச் சரியான அடி. எவ்வளவோ எதிர்த்தும் தாக்குப்பிடிக்க முடியவில்லை. புறமுதுகு காட்டி ஓடுவதைத் தவிர வேறு வழியில்லை. மூணு சடலங்களையும் காயம்பட்டுக் கிடந்த பதினெட்டுப் பேரையும் போட்டுவிட்டு வந்துவிட்டார்கள். பாஞ்சையர் தரப்பில் சேதத்தைக் கணிக்க முடியவில்லை.

கும்பினியாருக்கு ஒரே பீதியாக இருந்தது. அவர்கள் எங்கே கூடாரமிட் டாலும் பாஞ்சை வீரர்கள் பக்கத்திலேயே இருந்தார்கள். பல இடங்களிலிருந்தும் தேன்குளவிகளாகக் கிளம்பி வந்தார்கள். அவர்களுக்குக் கோட்டை கொத்தளங்கள் ஆயுதங்கள் எனப் பல வசதிகள் இருந்தன. அவர்களது வேகம் திகைப்பூட்டியது. அவர்களை எங்கே கண்டுபிடிப்பது என்ற பிரமிப்பு.

கும்பினிப் படையில் ஜேம்ஸ் வெல்ஷ் என்ற அதிகாரி இருந்தார். ரெஜி மெண்டல் அதிகாரி. தினசரி நடவடிக்கைகளைக் குறிப்பெடுத்துவந்தார். சற்று வித்தியாசமாகச் சிந்திக்கிற மனுசன். நடவடிக்கைகளை நடுநிலையிலிருந்து பார்க் கிறவர். தெற்குச்சீமைப் பாளையக்காரர்கள்மீது அனுதாபமும் நல்லபிப்பிராயமும் கொண்டவர்.

அவர் மனசில் அடிக்கடி யோசனை ஓடும். தெற்குச்சீமைப் பாளையக் காரர்கள் முரட்டுத்தனமான வீரவம்சத்தவர்கள். ஆயுதமேந்திப் பழக்கப்பட்ட வர்கள். சுதந்திரமாக வாழ்கிறவர்கள். கொஞ்ச காலத்துக்கு முந்திதான் அவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டார்கள். அதிலும் பாஞ்சாலங்குறிச்சிக்காரர்கள் எல்லாரையும் விட வலுவானவர்கள். வீரமிக்கவர்கள். அவர்களது தலைவர் கட்டபொம்மு ஈராண்டுகளுக்கு முன்னர் மேஜர் பானர்மேன் தலைமையிலுள்ள படையால் தாக்கப்பட்டபோது கோட்டையைக் காக்க வெற்றிகரமாகப் போரிட்டு இறுதியில் தன் குடும்பத்தினருடன் கைதுசெய்யப்பட்டுச் சிறையிலடைக்கப் பட்டார். இந்த நடவடிக்கை நியாயமானதா சரியானதா என்பதைத் தீர்மானிப்பது தன் வேலையல்ல என்றாலும் அவர்கள்மீது அன்பும் பரிவும் காட்டுவதே இதுக்குச் சரியான தீர்வாக இருந்திருக்குமல்லவா.

அவர்களது தலைவர்கள் மோசமான அவமானகரமான முறையில் சிறையில் அடைக்கப்பட்டார்கள். பாஞ்சலங்குறிச்சிக் கோட்டை இடித்துத் தரைமட்ட மாக்கப்பட்டது. மேலும் பல கோட்டைகளும் அப்படியே தகர்க்கப்பட்டன. வீரமிக்க மக்களை இப்படிக் கேவலமாக நடத்தியது அவர்களது அன்பைச் சம்பாதிக்கும் நோக்கத்தில் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. கலெக்டரின் சுதேசி அதிகாரிகளால் நேர்ந்த அவமானங்கள் எரியும் நெருப்பில் எண்ணெய் வார்த்தது போலாகிவிட்டது. அனைவரும் காலங் கருதியிருந்து முடிவில் வெகுண் டெழுந்துவிட்டார்கள்.

அவர் வேதனையில் புழுங்குவார். என்ன செய்ய முடியும். கும்பினியின் முடிவுக்குக் கட்டுப்பட்டாகணுமே. ராணுவ உடையை அணிந்துகொண்டு மறுத்துப் பேச முடியாதே.

தனது சேவை பொதுமக்களுக்கானதாக இல்லையா என்ற குற்றவுணர்வு அவருக்குள் உறுத்திக்கொண்டேயிருந்தது. ரெஜிமெண்டல் அதிகாரி என்ற முறையில் அவருக்குச் சரியான தகவல் கிடைக்கப் பல வழிகள் இருந்தன. ஆனாலும் உண்மை நிலையை வெளியே சொல்ல முடியாதே. வீரமிக்க மனுசர்கள் காயம்பட்டு விழும்போது வழக்கம்போல் அவர்களது பத்திரிகைகளில் இப்படித் தான் எழுதுவதுண்டு.

> மரணம் தெற்குச் சீமையில் கேப்டன்... வீர மரணம்... லெப்டினெண்ட்....
> வீழ்ந்து படுக்கையில் மாண்டார்...

## 5. ஆயுத வேட்டை

கும்பினியாரைத் துரத்திவிட்ட மமதையில் ஊமைத்துரை மயங்கிவிடவில்லை. வலுவான கோட்டையைக் கட்டிக்கொண்டதுபோல் ஆயுத பலத்தையும் அதிகரிப் பதில் முனைப்பாக இருந்தார். கும்பினியார் பல வழிகளிலும் படை திரட்டும் சேதி வந்தவண்ணமிருந்தது. அவர்களை எதிர்கொள்ளுமளவுக்குப் பாஞ்சைப் படைகளும் பலங்கொண்டதாக இருக்கணும். ஊர்ஊராகச் சென்று ராத்திரி வேளைகளில் தீவட்டிக் கூட்டங்கள் நடத்திக் கும்பினியாரை ஒழித்துக்கட்ட வேண்டிய அவசியத்தைச் சைகையால் எடுத்துரைத்தார். தனக்கு ஆதரவாகத் திரளுமாறு வேண்டிக்கொண்டார்.

மக்கள் ஆர்த்தெழுந்தார்கள். அவருக்குத் துணைநிற்க உறுதிபூண்டார்கள். பலர் பாஞ்சைப் படையில் சேரத் தயாரானார்கள். அவர் மக்களின் ஆதரவு கண்டு மகிழ்ந்துபோனார். கும்பினியாரை விரட்டிவிட முடியுமென்ற நம்பிக்கை நாளுக்கு நாள் வலுவடைந்தது.

பாளையங்களின் எல்லைகளைத் தீர்மானிக்கும் சமயத்தில் பாஞ்சைக்குச் சொந்தமான தூத்துக்குடி ஸ்ரீவைகுண்டம் ஆகிய அதிக வருமானமுள்ள கிராமங் களைக் கும்பினியே எடுத்துக்கொண்டது. முந்தி மேஜர் பானர்மேன் பிறப்பித்த உத்தரவுப்படி பாளையங்களிடமிருந்து பறிக்கப்பட்ட ஆயுதங்களை கும்பினி

இந்த ஊர்களில்தான் இருப்பு வைத்திருந்தது. அவற்றை எப்படியாவது கைப் பற்றத் திட்டமிட்டார் ஊமைத்துரை.

நெல்லைச்சீமையில் தூத்துக்குடி முக்கியமான வணிகக் கேந்திரமான இடம். முத்துச் சிலாபத்துக்கும் உப்புக்கும் மீன்பிடிக்கும் பேர்பெற்ற ஊர். வணிகப் போட்டியின் காரணமாக வெளிநாட்டுக்காரர்கள் அதைக் கைப்பற்றுவதில் குறி யாக இருந்தார்கள். அதுக்காகச் சண்டையிட்டுக்கொண்டார்கள். வலியோர் எளியோரிடமிருந்து அந்த ஊரைப் பறித்துக்கொண்டார்கள். முதலில் போர்த்துக் கீசியர் வசமிருந்த ஊர் டச்சுக்காரருக்குக் கைமாறியது. அவர்களிடமிருந்து வெள்ளைக்காரர் அபகரித்தார்கள். மீண்டும் டச்சுக்காரரிடமே போய்விட்டது. பிறகு வெள்ளைக்காரரிடம் வந்துவிட்டது.

வணிகத்தை விருத்திசெய்ய கும்பினியார் அங்கே குடியேறினார்கள். பண்டகசாலைகள் மாடமாளிகைகள் அமைத்துப் பாதுகாப்புக்குக் கோட்டையும் கட்டிச் செழித்திருந்தார்கள். காவலுக்குச் சேனைகள் நிறுத்தப்பட்டன. இரு தளபதிகள் அமர்த்தப்பட்டார்கள்.

ஊமைத்துரை தூத்துக்குடியைக் குறிவைத்தார். அங்கிருக்கும் ஆயுதங்களைக் கைப்பற்றுவதுடன் ஊரையே கவர்ந்துவிடுவது முக்கிய நோக்கம். எண்ணூற் றெழுபது வீரர்கள் திரண்டார்கள். பத்துத் தளபதிகள் தலைமையேற்றார்கள். பராக்கிரமபாண்டியன் ராசபாண்டியன் பெருமாள்சாமி வீரசூடாமணி துரைமல்லு சிவத்தையா பொம்முதுரை வீரதளவாய் விசயராமுலு சூரசங்கு.

சாயங்காலம் பாஞ்சையிலிருந்து புறப்பட்ட படைகள் குறுக்குச்சாலையில் சற்றுத் தங்கி விடியுமுன் தூத்துக்குடி போய்ச் சேர்ந்தன. நாலு புறமும் பிரிந்து முன்னேறி கும்பினிக் கோட்டையை எளிதில் சூழ்ந்துகொண்டன. கும்பினித் தளபதி இயன்றவரை எதிர்த்துப் போர்புரிந்தார். முடியவில்லை. விரைவிலேயே பிடிபட்டார். சமேதார் சுபேதார் என வேறு சில அதிகாரிகளும் அகப்பட்டார்கள். அவர்கள் சுதேசி இந்துக்காரர்களாதலால் விடுவிக்கப்பட்டார்கள். வெள்ளைத்துரை மட்டுமே எஞ்சினார்.

பாஞ்சைப் படைகளுக்கு ஆயுதங்களைத் த்விர வேறு பொருட்கள்மீது நாட்டமில்லை. ஆயிரத்துக்கும் மேற்பட்ட வெடிகள் ஈட்டிகள் வாள்கள் எறி வெடிகளை எடுத்துக்கொண்டு வெளியேறின.

கையில் சிக்கிய கும்பினி அதிகாரி கதிகலங்கிப்போயிருந்தார். கலியாண மாகாத வாலிபர். புலிகளுக்கிடையில் அகப்பட்ட மானாக மருண்டு நின்றார். சொந்த மொழி தவிர வேறெந்த மொழியும் தெரியவில்லை. அவரைப் பார்த்த பராக்கிரமபாண்டியன் பரிவுகொண்டான். படைவீரர்களுக்குச் சொன்னான்.

''எல்லாரும் தள்ளிப் போங்க. இவர ஆரும் தொடக்கூடாது''.

அதிகாரியை அன்புடன் அருகில் அழைத்தான். அவருக்கு இப்போதுதான் உயிர் வந்தது. அருகில் வந்து அண்ணாந்துபார்த்தார். கலங்கும் கண்கள் நன்றி கூறின. அவன் சைகையால் கேட்டான்.

''ஒங்க சீமைக்கு ஓடிப்போயிறயா.''

அவர் சரியென்று தலையசைத்தார். பாண்டியன் அவரை அரவணைத்துக் கடலுக்கு அழைத்துப் போய் மீன்பிடிக்கக் காத்திருந்த ஒரு தோணியில் ஏற்றி யனுப்பிச் சைகைசெய்தான்.

''பெழச்சுப்போயிரு''.

அலைகள் அவரை அடையாளம் காட்டும்வரை பாண்டியன் கரையில் நின்று பார்த்துக்கொண்டிருந்தான்.

இதுக்குள் பாஞ்சைப் படைகள் கும்பினிக்குரிய இடங்களையெல்லாம் வசப் படுத்திக்கொண்டன. வெற்றி வலத்தின்போது ஒரு பெரிய மாளிகை தென்பட்டது. அது மதில்கள் சூழ்ந்த வெள்ளையர் மாளிகை. வணிகத்தைக் கவனித்து வந்த கும்பினி அதிகாரி அங்கே படைகளுடன் குடியிருந்தார். அவரை ரெஜிமண்டல் அதிகாரி என்று சொல்வார்கள். அவரது பேர் பேக்காட். முப்பத்தெட்டு வயசு. நல்ல உடல்கட்டு.

பாஞ்சை வீரர்கள் கோட்டைக்குள் புகுந்து அவரை வளைத்துப் பிடித்துக் கொண்டார்கள். அங்கேயிருந்த ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டார்கள். வேலும் வாளும் அவரைச் சுற்றி வேலியிட்டிருந்தன. நடுவில் அவர் வெருண்டுபோய் நின்றிருந்தார். குழறிக்குழறிக் கொஞ்சம் தமிழ் பேசினார். பிறகு அதையும் நிறுத்தி விட்டார். பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

பராக்கிரமபாண்டியனுக்கு ஏனோ அவரை விட்டுவிட மனசில்லை. கவர்ந்து கொண்ட ஆயுதங்களுடன் அவரையும் கொண்டுவந்தார்கள். சாமத்துக்கு மேல் படைகள் பாஞ்சைக்குப் புறப்பட்டன. இடையில் மீளவிட்டான் அருகே காலை உணவருந்திக் களிப்பில் பயணத்தைத் தொடர்ந்தன.

வழி நெடுக வெள்ளைக் கைதியை வேடிக்கை பார்த்து நின்ற கூட்டத்தில் ஒரு குரல் தனித்து ஒலித்தது.

''மீளவிட்டான் வாழ்க. வெள்ளையனை மீன்படகிலேற்றி மீளவிட்ட பராக் கிரமபாண்டியன் வாழ்க.''

பாண்டியன் முகத்தில் பெருமிதச் சிரிப்பு. வாளசைத்துக் கூட்டத்துக்கு நன்றி கூறினான்.

வெற்றி வாகை சூடி வீறுகொண்டு திரும்பும் வீரபாண்டியன் படைகள் வெள்ளையரைப் பிடித்துவரும் காட்சியைக் கண்குளிரக் காணும் ஆவலுடன் வழியெங்கும் கரைகட்டிக் காத்திருக்கும் சனக் கூட்டம் குலவையிட்டு வரவேற்றது. முருகனின் அருளைப் போற்றிப் புகழ்ந்தது.

''வேலும் மயிலும் துணை''.

வீரர்களும் அதையே முழங்கினார்கள். மீண்டும் குலவை மழை. சோர்ந்து வரும் வீரர்களுக்கு நீரும் மோரும் பானகமும் கொடுத்து உற்சாகப்படுத்தினார்கள்.

பராக்கிரமபாண்டியனின் வெற்றியை மெச்சிய ஊமைத்துரை ஒரு வெள்ளை யரைச் சொந்தச் சீமைக்கு அனுப்பிவிட்டு இன்னொருவரை இந்தச் சீமைக்கு இழுத்துவந்த விவரமென்னவென்று கேட்டார். முன்னவர் சின்னவர். முயலாக மிரண்டு முழித்தார். கலியாணமாகாத இளங்காளை. கடல்தாண்டிப் போய்ப் பிழைத்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிட்டதாகவும் இவரைப் போர்முறைப் படி பிடித்து வந்ததாகவும் பாண்டியன் சொன்னான். ஊமைத்துரைக்கு இது ஒப்பவில்லை.

அப்போது கூடியிருந்தவர்களிடையே சலசலப்பு எழுந்தது. ஒருவர் அருகில் வந்து தெண்டனிட்டுச் சொன்னார்.

“இவர செயில்ல அடச்சு வைக்கக் கூடாது. நம்ம மகராசாவக் கொன்னதுக்குப் பழிவாங்கியாகணும். எங்கிட்ட ஒப்படச்சிருங்க. பாத்துக்கிறென்.’’

ஊமைத்துரை எதுக்கும் செவிசாய்க்கவில்லை. வாய் பேசும் ஊமையாக வாடிநின்ற வெள்ளை அதிகாரியைச் சிறையிலடைக்க உத்தரவிட்டார்.

அதிகாரிமீது அந்தப்புரத்துப் பெண்கள் ஆதங்கம் கொண்டார்கள். ஊமைத்துரையின் மனைவி சவுந்தரவடிவு அவரை விடுதலை செய்துவிடுமாறு வேண்டினாள். விரைவில் விடுவித்துவிடுவதாக உறுதிமொழியும் பெற்றாள். அதிகாரிக்கு நல்ல உணவு கொடுக்குமாறு காவலருக்குக் கட்டளையிட்டாள்.

கணவரைப் பிரிந்த துயரத்தில் கலங்கித் துவண்டிருந்த அதிகாரியின் மனைவி மேரி வினோலா பாஞ்சைக்கு வந்து பாளையக்காரரிடம் முறையிட முடிவுசெய்தாள். அவளுடன் துணைக்கு வர எந்த வெள்ளையருக்கும் துணிவில்லை. தூத்துக்குடியிலிருந்து தன்னந்தனியாகத் துணிந்து புறப்பட்டாள். கணவரின் நினைப்பிலேயே காட்டுவழியில் நடந்தாள். துரைச்சிக்கு நேர்ந்த துயரங் கண்டு பெண்கள் மிக வருந்தினார்கள்.

அவள் பாஞ்சைக் கோட்டையை அடைந்து காவலாளியின் அனுமதியுடன் உள்ளே சென்றாள். கண்ணீரும் கம்பலையுமாக எதிரில் நிற்கும் அவளைக் கண்டதும் ஊமைத்துரை நெகிழ்ந்து நெக்குருகினார். கணவரைச் சேர்த்துவைத்து அகமகிழ்ந்தார். வீரர்கள் கவர்ந்து வந்த அவரது பொருட்களை மீள ஒப்படைத்து உவந்தார்.

நால்வர் காவலுடன் அவர்கள் வண்டியில் நலமுடன் தூத்துக்குடி செல்ல ஆவன செய்தார். விடைபெறும்போது வினோலாவின் கண்களிலிருந்து நன்றிப் பெருக்கில் துளிகள் உருண்டுகொண்டேயிருந்தன. ஆனந்தக் கண்ணீர்.

ஊமைத்துரையின் பெருந்தன்மையையும் இரக்கக் குணத்தையும் அறிந்த கும்பினியார் வியந்துபோனார்கள். அவர்களிடையே இதே பேச்சாக இருந்தது. வெல்ஷ் மாய்ந்துமாய்ந்து சொல்லிக்கொண்டார்.

“கரடுமுரடான மனுசனுக்குள் இவ்வளவு கனிவான மென்மையான குணமா.’’

கும்பினி வசமிருந்த பல சிறுசிறு பகுதிகளை ஊமைத்துரை கைப்பற்றிக்கொண்டார். ஆயிரம் வெடிகளும் ஆயுதங்களும் பாஞ்சைக் கோட்டைக்குள் தஞ்சமடைந்தன. அடுத்த குறி ஸ்ரீவைகுண்டம். கட்டபொம்மு காலத்தில் களஞ்சியத்திலிருந்து நெல்லை தானாதிபதிப் பிள்ளை கவர்ந்து சென்ற அதே ஊர்தான். அங்கே இப்போது ஆயுதங்கள் குமிந்துகிடந்தன.

ஆயுதங்களை அள்ளிச் செல்லும் நோக்கத்தில் படையெடுத்து வந்த பாஞ்சை வீரர்கள் அவ்வூரை எளிதில் பிடித்துக்கொண்டார்கள். இந்தச் சேதி பாளையங்கோட்டையிலிருக்கும் கும்பினித் தலைமையை எட்டியது. உடனே மேஜர் ஷெப்பர்டு தலைமையில் கும்பினிப் படை அங்கே விரைந்தது. தாமிரவருணியைத் தாண்டி அங்குள்ள படையுடன் சேர்ந்துகொண்டது.

மூணுநாள் விடாத சண்டை. கும்பினிப் படையால் பாஞ்சை வீரர்களின் முற்றுகையைத் தகர்க்க முடியவில்லை. பாளையை நோக்கிப் பின்வாங்கியது. பாஞ்சைப் படை துரத்தியது. வழி நெடுகிலும் இடைமறித்துத் தாக்கியது.

மழைப்பாட்டம்போல் மீண்டும்மீண்டும் சண்டை. இருதரப்பிலும் சேதம் அதிகமில்லை.

பாஞ்சையைச் சூழவிருக்கும் அடுத்த முற்றுகைக்குத் தேவையான பொருட் களையும் தளவாடங்களையும் சேகரிக்கும்வரை கும்பினிப் படைகள் பாளையில் தங்கி ஓய்வெடுத்தன.

## 6. போர் முழக்கம்

ஊமைத்துரை சீமைத்துரையை எதிர்கொள்ள உற்ற தருணம் பார்த்திருந்தார். போருக்கான அனைத்து ஏற்பாடுகளும் தயார். கும்பினியார் பாஞ்சைக் கோட்டையை மட்டும் குறிவைத்தாலும் சரி சீமைமுழுக்கப் பரவினாலும் சரி துணிந்து எதிர்க்கத் திட்டமிட்டிருந்தார். கவனம் சிதறிவிடாமல் கண்காணிக்க நிருவாக வசதி செய்துகொண்டார். பாஞ்சைச் சீமையை பசுவந்தனை பட்டண மருதூர் புதியம்புத்தூர் ஆதனூர் கெவுனகிரி வேடநத்தம் தூத்துக்குடி புதுக் கோட்டை பேரூரணி ஆத்தூர் என பத்து வணிதங்களாகப் பிரித்தார். ஒவ்வொரு வணிதத்தையும் தனித்தனி அதிகாரி கவனித்துக்கொள்ளணும். சின்னபொம்மையா முத்தையா முத்துக்குமாரசாமி பால்ராசா வீரதளவாய் ரணவீரமுத்து செகவீர ராமு பராக்கிரமபாண்டியன் பால்பாண்டியன் பூலோக பாண்டியன் ஆகியோரை அதிகாரிகளாக நியமித்தார். தலைமையிட அதிகாரிகள் கோட்டைக்குப் பொறுப்பு.

பல்வேறு இடங்களிலிருந்தும் ஆயுதங்கள் கோட்டைக்குள் வந்திறங்கின. சகல இனத்தாரும் சமருக்கு வரணுமென்று ஊமைத்துரை ஊர்களுக்கு ஓலை யனுப்பியிருந்தார். அதன்படி பன்னிரெண்டு வயசுக்குட்பட்டோரும் முதியோரும் தவிர்த்து அனைவரும் ஆயுதங்களுடன் திரண்டு வந்தார்கள். மொத்தம் நாலா யிரத்து எண்ணூறு பேர். இது தவிர பரிவாரத்தார் மறவர் கவுண்டர் கவரையர் வெள்ளாளர் முதலிய இனங்களிலிருந்து ஈராயிரம் பேர் வந்திருந்தார்கள். ஆக ஆறாயிரத்து எண்ணூறு பேர் குழுமினார்கள். அவர்களுக்குப் பயிற்சியளிக்க முன்னூறு குறிகாரர்கள் படைத் தலைவர்களாக நியமிக்கப்பட்டார்கள். சின்னப்ப ரெட்டியார் போன்ற பெருஞ் செல்வர்களின் உதவியால் வீரர்களுக்கு நிதமும் விருந்தளிக்கப்பட்டது.

தூத்துக்குடி ஸ்ரீவைகுண்டம் முதலான ஊர்களிலிருந்து கவர்ந்துவரப்பட்ட ஆயுதங்களில் ஆயிரத்தெண்ணூறு சுடுவெடிகளும் மூணு பீரங்கிகளும் தேறின. பீரங்கிகள் பழுதடைந்தவை. பழையன. பயன்படுத்த முடியாது. இருப்பினும் அவற்றை மதில்மீது கொத்தளங்களில் ஏற்றித் தெற்கு முகமாகவும் மேற்கு முகமாக வும் திருப்பிவைத்தார்கள். கும்பினியாரை அச்சுறுத்தும் நோக்கம். அவ்வளவுதான்.

ஆழ்ந்த திட்டமில்லாமல் கும்பினியார் நாற்பது நாளாக அமைதி காக்க மாட்டார்கள். அவர்களது நடவடிக்கைகளை அறிந்துவர ஊமைத்துரை ஒற்றர் களை ஏவியிருந்தார்.

கயத்தாறில் கும்பினிச் சேனைகள் நிறையவே பெருகியிருந்தன. பாளையி லிருந்து மேஜர் மெக்காலே அழைத்துவந்த படைகளும் சேர்ந்துகொண்டன.

இந்த முறை பாஞ்சைக் கோட்டையை எப்படியும் பிடித்துவிடலாம் என்று மேஜர் திடமாக இருந்தார். அந்த நம்பிக்கையில் முன்னெச்சரிக்கையுடன் திட்டங்களை வகுத்தார். வங்காளப் பீரங்கிப் படை சுதேசிக் குதிரைப் படை சுதேசிக் காலாட் படை இப்படி பதினோரு படைப் பிரிவுகள் இருந்தன. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு அதிகாரி தலைவர். ஒரு மேஜர் ஏழு கேப்டன் மூணு லெப்டினெண்ட். வெல்ஷ் முதலிய வேறு பல அதிகாரிகளும் உடனிருந்தார்கள்.

ஐயாயிரம் வீரர்கள். பெரியபெரிய பீரங்கிகள் சுடுவெடிகள் எறிவெடிகள். பீரங்கி மருந்துகளைச் சுமக்க மாட்டு வண்டிகள் பொதிமாடுகள். தினவெடுத்து நிற்கும் குதிரைகள். பெரிய அணிவகுப்பைப் பார்த்து மெக்காலே பெருமிதப் பட்டாலும் ஒருவிதத்தில் வெட்கமாகவும் இருந்தது. ஒரு பாளையக்காரரை அடக்குவதற்கு இவ்வளவு பெரிய படையா. என்ன செய்வது. முதல் முற்றுகையின் அனுபவத்தை மறக்க முடியாதே. இந்த முறை எப்படியும் வென்றாகணும். படைகள் கயத்தாறிலிருந்து பாஞ்சைக்குப் புறப்பட்டன. கிழக்கே பொழுதும் புறப்பட்டிருந்தது.

இந்தச் சேதி ஏற்கெனவே ஒற்றர்மூலம் பாஞ்சைக்குப் போய்ச் சேர்ந்திருந்தது. கும்பினிப் பட்டாள முகாமுக்குள் புல் விற்பவர்களாகப் பிரவேசித்த அரசமுத்தும் வீரமணியும் குதிரைகளுக்குப் பசும்புல் கொடுத்து கும்பினியாரின் நம்பிக்கையைப் பெற்று எல்லா நடவடிக்கைகளையும் தெளிவாக உளவறிந்து வந்து சொல்லிவிட்டார்கள். இச்சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்த ஊமைத்துரை இடைவழியிலேயே எதிரிகளைத் தாக்கிச் சிதறடிக்கத் திட்டமிட்டார்.

எழுநூறு வீரர்கள் ஆயுதமேந்தி நடுராத்திரியில் புறப்பட்டு இடைவழியில் எதிர்பார்த்திருந்தார்கள். இருளில் தாக்கச் சந்தர்ப்பம் கிட்டவில்லை. மறுநாள் மாலைவரை பொறுமையுடன் ஒளிந்து காத்திருந்தார்கள்.

கும்பினிப் படைகள் எட்டு மைல் நடந்து ஒட்டரம்பட்டியை அடைந்தன. காலையுணவு முடித்து பசுவந்தனைக்கு நடந்தன. குதிரைக்குளத்தருகே எதிர்பார்த்திருந்த பாஞ்சை வீரர்கள் பாய்ந்து தாக்க ஆரம்பித்தார்கள். சற்று நேரம் திகைத்து நின்ற மெக்காலே எதிர்த்துத் தாக்குமாறு கும்பினிப் படைகளுக்கு ஆணையிட்டார்.

''செயின்ட் ஜார்ஜ். சார்ஜ்.''

பாஞ்சைப் படைகள் பதிலுக்கு முழங்கின.

''வேலும் மயிலும் துணை.''

கடும்போர் மூண்டது. சுடுவெடிகள் ஒலித்தன. பீரங்கிகள் சீறின. முன்னேறித் தாக்கிய குதிரைப் படையின் தலைவர் லெப்டினெண்ட் ஜேம்ஸ் கிராண்ட் வீரர்களை வழிநடத்தியபடி தானும் வீராவேசமாகப் போரிட்டு நாலு பேரைக் கொன்றார். எதிர்பாராதபடி ஆர்த்து வந்த ஆதிராமு அவரை வேலால் குத்திவிட்டான். மார்பில் பாய்ந்த காயத்துடன் அவர் மேலும் ஒருவரைக் கொன்றுவிட்டு மயங்கி விழுந்து மாண்டார். உயிர்போகுமுன் அவரது வாயிலிருந்து மூணு வார்த்தைகள் மட்டுமே ஒலித்தன.

''செயின்ட் ஜார்ஜ். சார்ஜ்.''

தன் அதிகாரி மாண்டுவிட்டதைக் கண்ட சுபேதார் ஷேக் இப்ராகிம் வெகுண் டெழுந்தார். துணிந்து ஊடுருவி நாலு பேரை வெட்டிச்சாய்த்தார். அதுக்குள் பாஞ்சை ஈட்டிகள் அவர் மீதும் நாலு வீரர்கள் மீதும் பாய்ந்து வீழ்த்திவிட்டன. குதிரைகளையும் குத்திச் சாய்த்தன.

ஒரு அடர்ந்த காட்டை அடையும்வரை போர் நீடித்தது. புதரடர்ந்த கரிசல் பூமி கும்பினியாருக்குச் சாதகமாக இல்லை. பாஞ்சைப் படைகள் காட்டுக்குள் புகுந்து தப்பிவிட்டன.

கும்பினித் தரப்பில் ஆறு உயிர்கள் பலியாகின. ஜேம்ஸ் கிராண்ட் அருமை யான வீரர். அவர் போனது பெரிய இழப்பு. சுதேசிப் படையில் பலராலும் நேசிக்கப் பட்ட கண்ணியமான வீரர் ஷேக் இப்ராகிம். அவரது துணிச்சலுக்கு எதுமே ஈடாக முடியாது. இரு குதிரைகள் இறந்தன. பன்னிரெண்டு குதிரைகள் படுகாயத் தில் முனங்கின. பதினோரு வீரர்களுக்குக் காயம். பாஞ்சை வீரர்கள் தொண் ணூற்றாறு பேர் களத்தில் மாண்டு கிடந்தார்கள். காயம்பட்டவர்களைத் தூக்கிச் சென்றுவிட்டார்கள். அவர்களில் சிலருக்கு இடையில் உயிர் பிரிந்துவிட்டது.

கும்பினிப் படைகள் குதூகலமின்றி நடந்து மாலையில் பசுவந்தனையை அடைந்தன. வீரர்களுக்கு ஓய்வு தேவைப்பட்டது. அங்கே தங்கிக்கொண்டார்கள்.

மேஜர் மெக்காலேயின் கட்டளைப்படி எட்டயாபுரம் பாளையக்காரர் ரெண்டாயிரத்து முன்னூறு வீரர்களுடன் பசுவந்தனைக்கு வந்து மேஜரைச் சந்தித்தார். இப்படியாகிவிட்டதே என்று துக்கம் விசாரித்தார். எட்டயாபுரத்துப் படைகள் கேப்டன் சார்லஸ் ட்ராட்டரின் பொறுப்பில் விடப்பட்டன. இரவு மேஜருக்கு நல்ல உறக்கமில்லை. இன்னும் எத்தனை ஜேம்ஸ் கிராண்ட்களையும் ஷேக் இப்ராகிம்களையும் இழக்கப்போகிறோமோ என வெல்ஷ் உளைச்சலில் உழன்றுகொண்டிருந்தார்.

கும்பினிப் படைகள் மறுநாள் காலை பாஞ்சையை அடைந்தன. கம்பீரமாக நின்ற பாஞ்சைக் கோட்டையை வெறித்துப் பார்த்த தளபதிகள் இந்தக் கோட்டையைக் கைப்பற்றவா இவ்வளவு பட்டாளம் என்பதுபோல் மெக்கா லேயை நோக்கினார்கள். அதைப் புரிந்துகொண்ட அவர் பழைய சம்பவங்களை அவர்களுக்குப் பக்குவமாகச் சொன்னார். உண்மை நிலையைப் புரிந்துகொண் டார்கள்.

அவர்கள் கோட்டையை உடனே நெருங்கவில்லை. வடமேற்கே ஒரு மைல் தொலைவில் ஆத்தலோடை என்னுமிடத்தில் பாசறை அமைத்துக்கொண் டார்கள். கோட்டையைத் தகர்ப்பதே அவர்களது முதல் குறி. கோட்டைக்கு மேல்புறமும் வடபுறமும் சற்றுத் தொலைவில் நீளவாக்கில் மண்மேடுகளை எழுப்பிக் கோட்டையைக் குறிவைத்துத் தாக்கும் வசத்தில் அவற்றின்மீது பீரங்கி களை நிறுத்தினார்கள். போருக்கான ஆயத்தங்கள் அவசர கதியில் நடந்தன.

காலை எட்டரை மணிக்கெல்லாம் கோட்டையை நோக்கிக் கோடையிடி யாகப் பீரங்கிகள் முழங்கிப் போரைத் தொடங்கிவைத்தன. கோட்டைக்கு மேல் புறமும் தென்புறமும் கும்பினிப் படைகள் வளைந்து நின்றன. வடபுறம் எட்டயா

புரத்துப் படைகள். கட்டாலங்குளம் அழகுமுத்துச் சேர்வையும் நாலு கும்பினித் தளபதிகளும் அவற்றை வழிநடத்தினார்கள். மதியம்வரை ஓயாது பீரங்கிகள் சுட்டும் பயனில்லை. கோட்டையில் கையளவு மண்ணைக்கூடப் பேர்க்க முடிய வில்லை. பீரங்கிகளைக் கோட்டைக்கு அருகில் கொண்டுவந்து நிறுத்தித் தொடுத்து வெடித்தார்கள். கொத்தளங்களில் நின்ற பாஞ்சை வீரர்கள் எக்காளக் குரலில் நேரடிச் சண்டைக்கு அழைத்தார்கள்.

சாயங்காலம் மூணரை மணிவாக்கில் கோட்டையின் வடமேற்கு நெட்டு மதில் பாதிக்குமேல் உடைந்துவிட்டது. கும்பினிப் படைகள் கும்மாளமிட்டன. பீரங்கிகள் ஓய்ந்தன. நேரடிச் சண்டை தொடர்ந்தது. முப்புறமும் நின்றிருந்த வீரர் களும் ஒருங்கிணைந்து கோட்டைக்குள் புகுந்து போரிடுமாறு மெக்காலே உத்தரவிட்டார்.

கோட்டையைச் சுற்றிலும் முள்வேலி எல்லையிட்டிருந்தது. கருவேல முள்ளும் ஒடமுள்ளும் கலந்த கவைகள். அதைத் தகர்த்துக்கொண்டுதான் கோட்டையை எட்ட முடியும். கும்பினி வீரர்கள் வேலியைத் தகர்க்கும்போது கொத்தளங்களில் நின்றவர்களின் சுடுவெடிகள் சரமாரியாக வெடித்தன. அப்படி யும் வேலியைத் தாண்டிக் கோட்டையை நெருங்கிவிட்டார்கள். உயர்ந்த மதிலில் மீண்டும்மீண்டும் ஏற எடுத்த முயற்சியெல்லாம் வீணாயிற்று. மதில் உச்சியை அடைந்த கணத்தில் ஈட்டிகளும் சுடுவெடிக் கத்திகளும் அவர்களைக் குத்தி அந்தரத்தில் எறிந்தன. கோட்டைமீது கால் வைக்க முடியவில்லை.

பாஞ்சைப் படைகள் போரிட்ட விதமே வியப்பிலாழ்த்தியது. நெடிய ஈட்டி களையும் வல்லயங்களையும் வாள்களையும் ஏந்தியவர்கள் முன்னால் நிற்க அவர் களுக்குப் பின்னால் சற்று உயரத்தில் சுடுவெடிக்காரர்கள் அரணாக நின்றார்கள். கோட்டைக்குள் புகுந்த கும்பினி வீரர்களைக் குத்தியும் வெட்டியும் சாய்த்தார்கள். முதலில் புகுந்த கூட்டம் மாண்டு விழவே அடுத்து அரணாக நின்றவர்கள் சுடு வெடிகளால் வீழ்த்தினார்கள். குறிபிசகாத கவண் எறியால் எட்ட நின்றவர்கள் விழுந்து துடித்தார்கள்.

கேப்டன் கேம்பலை சூரன் மதாருமல்லு வெட்டிச்சாய்த்தான். கேப்டன் மத்தேயு ஸ்மித் வீரன் முத்தையாவின் வேலுக்கு இரையானார். துரைமல்லு வெட்டியதில் லெப்டினெண்ட் மேக்னல் மாண்டார். ரணவீரசின்னு லெப்டி னெண்ட் ஷங்கைக் கொன்றான். லெப்டினெண்ட் மைக்கேல் ஈகன் ஆதிராமு கையில் சிக்கினார். மேஜர் ஷெப்பர்டு கேப்டன் ஹசார்டு லெப்டினெண்ட் எலியட் போன்ற பல அதிகாரிகள் படுகாயமுற்றார்கள்.

நெடுநேரச் சண்டைக்குப்பின் கும்பினிப் படைகள் பின்வாங்கின. போர்க் களம் பிணக்களமாகக் காட்சியளித்தது. கொலையுண்டு மாண்டும் குற்றுயி ராகவும் இருநூறுக்கும் மேலான கும்பினி வீரர்கள் கோட்டையைச் சுற்றியும் வேலிக்கு வெளியிலும் சிதறிக்கிடந்தார்கள். ஏழு குதிரைகள் குடல் சரிந்தும் குத்து வெட்டில் குருதி பாய்ந்தும் இறந்துகிடந்தன.

கும்பினியார் பின்வாங்கிய பிறகும் பாஞ்சையர் விட்டுவைக்கவில்லை. கோட்டையிலிருந்து குதித்து வந்து விரட்டினார்கள். சிதறிக் கிடக்கும் பிணங் களையும் பிணமாகப்போகிறவர்களையும் ஈட்டியால் குத்திக் குதறினார்கள்.

போர்முழுக்க வான்முட்ட ஒலித்த அவர்களது வினோதக் குலவை இப்போது தான் அடங்கியது. முன்னூற்று முப்பதுக்கும் மேற்பட்ட உயிர்களைப் பலி கொடுத்துவிட்ட நிலையிலும் அவர்கள் கொஞ்சமும் கலங்கவில்லை.

கும்பினிப் படைகள் கோட்டைக்குச் சற்றுத் தொலைவில் பாதுகாப்பான இடத்தில் பாசறை அமைத்தன. பாஞ்சைக் கோட்டைக்கு இணையாக ஒரு தடுப்புச் சுவர் எழுப்பி அதன் மறைவில் ஆயுதங்களும் தளவாடங்களும் பத்திர மாக வைக்கப்பட்டன. கம்மாக் கரையில் காவலாட்கள் நிறுத்தப்பட்டார்கள். அனைவரும் பாதுகாப்பாகப் பதுங்குவதற்குள் இருட்டிவிட்டது.

கோட்டைக்குள் ஊமைத்துரைக்கு மெய்க்காவல் அரணாக நின்ற சுந்தர லிங்கம் வீரமல்லு பொட்டிப் பகடை முதலான வீரர்கள் களித்துக் கூத்தாடி னார்கள். வெற்றிச் சேதியறிந்த ஊமைத்துரை மெத்த மகிழ்ந்தார். இருந்தாலும் நூற்றுக் கணக்கான உயிர்களைப் பலிகொடுத்த துயரம் ஒருபுறம் வாட்டியது. அவரது உத்தரவுப்படி தீவட்டி வெளிச்சத்தில் பிணங்களைத் தேடியெடுத்துக் கோட்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

கும்பினிப் பாசறைமீது தாளாத சோகம் படர்ந்து சவ அமைதி நிலவியது. மேஜர் மெக்காலே கூடாரத்தில் சோர்ந்துகிடந்தார். எட்டயாபுரத்தார் வந்து ஆறுதல் கூறித் தேற்றினார். எட்டயாபுரத்துப் படைகளுக்கும் பலத்த சேதம். என்ன பாடு பட்டும் கோட்டையைத் தகர்த்தாகணுமென்று உறுதிபூண்டார்கள்.

நேற்றுவரை உடனிருந்த சகோதரர்களை இழந்துவிட்ட துயரத்தில் வெல்ஷ் நனைந்திருந்தார். மனசு சிந்திக்க ஆரம்பித்தது. இந்தப் படுதோல்வி எப்படி நேர்ந் தது. தெளிவான காரணம் கிடைக்கவில்லை. ஏதோ ஒரு மாயமல்லவா நிகழ்ந் திருக்கிறது. கோட்டை காப்பாற்றப்பட்ட விதத்தை ஒரு அதிசயம் என்றுதான் சொல்லணும். பாஞ்சை வீரர்கள் யாருமே உடைந்த சுவருக்கு மேலே எட்டிப் பார்க்கவில்லை. ஏற்கெனவே சேதமடைந்திருந்த கொத்தளக் கூரைகளின் வழி யாகக்கூட தலைகளின் நடமாட்டமில்லை. கொத்துக்கொத்தாக ஈட்டிகள் மட்டுமே நீட்டிக்கொண்டு தெரிந்தன. வீரர்கள் எல்லா இடங்களிலும் வியாபித் திருந்தார்கள். கொஞ்சமும் தயக்கமின்றி சுழன்று போர்புரிந்த அவர்களது வீரத்தையும் விவேகத்தையும் என்னவென்று சொல்வது. வெடிகள் சுட்டு வீழ்த் தியதால் உண்டாகும் வெற்றிடங்களில் செடிகளாக முளைத்தார்கள். அடடா மெய்சிலிர்க்க வைக்கும் அந்தக் கூட்டுக் குலவை. ஐயாயிரம் குரல்கள் ஒருசேர எழுப்பும் எக்காளம். அவர்களது நாக்கும் பெரிய ஆயுதந்தான்.

போர்க்களக் காட்சிகள் ஒவ்வொண்ணாக நினைவில் நிழலாடின. வெல்ஷும் சில அதிகாரிகளுடன் சேர்ந்து போரில் கலந்துகொண்டார். குதிரைப் படை யுடன் இணைந்து தாக்குவது அவருக்கு முதல் அனுபவம். அவரிடம் ஒரு வாள் இருந்தது. அது சிப்பாயின் வாளைவிட மோசம். மேஜர் மெக்காலே தனது ஹவில் தாருடன் அவர்களைப் பின்தொடர்ந்தார். அப்போது போர் உச்சக்கட்டத்தில் இருந்தது. அவர் உயிரிழக்க வேண்டிய தருணத்தில் ஹவில்தார் அவரைத் தாக்கிய வீரரைக் கொன்று காப்பாற்றிவிட்டார். மேஜர் அதிர்ஷ்டவசமாக உயிர் பிழைத்துத் திரும்பினார்.

போரில் ஒரு குழப்பமான சூழ்நிலை நிலவிய சமயம் கும்பினி வீரர்கள் ஒரு பீரங்கியைக் கோட்டைக்கருகில் விட்டுவிட்டு வந்துவிட்டார்கள். அதை மீட்டு வர ஆறு அதிகாரிகளும் சுமார் ஐம்பது வீரர்களும் சென்றார்கள். கடுமையான சுடுவெடிச் சண்டை நடந்தது. கேப்டன் மத்தேயு ஸ்மித் முதல் ஆளாக பீரங்கி யினருகே சென்று சாகசத்துடன் போரிட்டார். பாஞ்சை வீரனின் வேல் வடிவில் மரணம் அவரைத் தழுவிக்கொண்டது. ஒரு நேர்மையான அதிகாரி போய் விட்டார். அவரது துணிச்சலைப் பின்பற்றிச் சோர்வின்றிப் போரிட்ட வீரர்கள் பல உயிர்களை விலைகொடுத்துவிட்டு பீரங்கியை மீட்டு வந்தார்கள்.

அருமைத் தோழர் மைக்கேல் ஈகன் அநியாயமாக மாண்டார். கோட்டை மதில்மீது முதலில் ஏற முயன்றவர்களில் ஒருவர். ஈட்டிக்குத்தில் கீழே விழுந்தார். அப்போதே இறந்துவிட்டதாக நினைத்தார்கள். பாஞ்சையர் பின்வாங்கிச் சென்ற சமயம் காயம்பட்டுக் கிடக்கும் ஒரு வீரனை மீட்பதற்காக விரைந்த வெல்ஷ் திரும்பிப் பார்த்தபோது குற்றுயிராகக் கிடந்த ஈகன் சிரமப்பட்டு எழுந்து ஓட முற்பட்டார். அதைப் பார்த்துவிட்ட பாஞ்சை வீரர்கள் துரத்திச் சென்று ஈட்டி யினால் மாறிமாறிக் குத்தி வீழ்த்தினார்கள். வெல்ஷ் அந்த இடத்திற்குப் போய்ச் சேருமுன் எல்லாம் முடிந்துவிட்டது. எப்போதும் சிரித்த முகத்துடன் பழகும் அந்த இனிய மனுசன் இனிமேல் எழுந்திருக்கப்போவதில்லை.

பீரங்கிகளால் உடைபட்ட பாஞ்சைக் கோட்டை மதில்கள் உடனே கட்டி முடிக்கப்பட்டன. சிதைந்த கொத்தளங்கள் செப்பனிடப்பட்டன. வீரர்கள் சற்றும் சளைக்காமல் சண்டைக்குத் தயாரானார்கள்.

நடுநிசி கழிந்த பிறகும் வெல்ஷ் வேதனையிலிருந்து மீளவில்லை. சிந்தனை யெல்லாம் கோட்டையருகே சிந்திக் கிடக்கும் வீரர்களைச் சுற்றியே இருந்தது. வானம் குமுறி மழை தூற ஆரம்பித்தது. மழையீரத்துக்குச் சடலங்கள் ஊதிப் புடைத்துவிடும். அந்தக் கோரத்தை நினைத்தாலே மனங் கலங்கிக் கண்கள் கசிந்தன.

நரிகளின் ஓயாத ஓலம். உறக்கமற்ற இரவு. அவர்களின் துக்கத்தை மதித்து ஊமைத்துரை விடியும்வரை எள்ளளவும் இடையூறு செய்யவில்லை.

அடுத்த நாள் வெள்ளையரிடையே சண்டையிடும் வெறியில்லை. மெக்காலே அதிகாரிகளுடன் ஆலோசித்தார். சண்டையிட்டுப் பிணங்களை மீட்டு வரலா மென்றால் அந்தச் சண்டையிலும் பிணங்கள் விழுந்தால் என்ன செய்வது. சண்டையில் அந்த அளவுக்கு முன்னேற முடியுமா. நேற்று மாதிரி எதிர்ப்பு இருந்தால் நிச்சயமாக முடியாது. முடியாமல் பிணங்கள் நாறிக் கிடந்தால் கும் பினிக்குத்தான் கேவலம். ஒரு தூதுவரை அனுப்பி ஊமைத்துரையின் அனுமதி பெற்று பிணங்களை எடுத்துவருவதே உசிதமாகப் பட்டது.

தமிழ் தெரிந்த ஒரு சுபேதாரிடம் மேஜர் இப்படிக் கடிதம் எழுதிக் கொடுத்தார்:

> போரில் மாண்ட எங்கள் வீரர்களின் சடலங்களை ராணுவ மரியாதையுடன் புதைக்கணும். அதுக்கு அனுமதியளிக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

சுபேதார் பச்சை நிறத்தில் சமாதானக் கொடியுடன் நிராயுதபாணியாகக் கோட்டைக்குள் சென்று ஊமைத்துரையைத் தெண்டனிட்டுக் கடிதத்தைக்

கொடுத்தார். ஊமைத்துரை உடனே வாய்மொழியாக அனுமதியளித்தார். சுபேதார் ஆச்சரியத்திலிருந்து மீள முடியாமல் கும்பினிப் பாசறைக்குத் திரும்பினார்.

கோட்டைப்புறமிருந்து வரிசைவரிசையாகச் சுமந்து வந்த சடலங்களை வடமேற்கே ஒரு மைல் தொலைவிலுள்ள பொட்டலுக்குக் கொண்டு சென் றார்கள். சிப்பாய்களுக்குப் பெரியபெரிய குழிகளும் அதிகாரிகளுக்குத் தனித் தனிக் குழிகளும் வெட்டப்பட்டன. வேலைகள் முடிய மாலை நேரமாகிவிட்டது. பெரிய குழி கொள்ளுமளவுக்குச் சிப்பாய்களைப் போட்டுப் புதைத்தார்கள். அதிகாரிகளை ராணுவ மரியாதையுடன் தனிக் குழிகளில் புதைத்துக் கல்லறை எழுப்பி மரணக் குறிப்புக்கள் செதுக்கி வைத்தார்கள்.

மைக்கேல் ஈகனுக்காகக் கண்கலங்காதவர்கள் இல்லை. குத்திக் கிழிக்கப் பட்டு கோரமாகக் கிடக்கும் அவரது உடலைப் பார்த்து ஆறாத் துயரில் மூழ்கி அழுது தீர்த்தார்கள். அதிகாரிமுதல் சிப்பாய்வரை அனைவரது முகத்திலும் சோகம் ததும்பியது. மைக்கேல் ஈகன் மனுசத் தன்மை கொண்ட கண்ணியமான வீரர். இரும்பு உடல். இன்னுங் கொஞ்சம் படிப்பு இருந்திருந்தால் வேகமாக முன்னேறி யிருப்பார். எல்லாராலும் அன்புடன் நேசிக்கப்பட்டவர்.

ஆருயிர்த் தோழரை இழந்த சோகத்தில் வெல்ஷின் இதயம் வலியால் துடித்தது. சிந்தியது போக மிஞ்சியிருந்த உடலுக்குக் கண்ணீர் சிந்தியபடி இறுதி மரியாதை செலுத்தினார்.

அன்று முழுவதும் பாஞ்சையரிடமிருந்து எந்தத் தொந்தரவுமில்லை. கும்பினி யார் துயரம் வடிந்து அமைதியாக ஓய்வெடுத்தார்கள். ஊமைத்துரையின் பெருந் தன்மையை நினைத்துநினைத்து நெகிழ்ந்துபோன வெல்ஷ் விரைவிலேயே உறங்கிப்போனார்.

மெக்காலே படைநிலைகளை மாற்றியமைத்தார். மாற்றத்தால் நல்ல பலன் கிடைக்கும். கோட்டையைத் தகர்த்துவிடலாம் என்று நம்பினார். வீரர்களைத் தயார்படுத்தினார்.

அடுத்த நாள் பகல்பொழுது அமைதியாகக் கழிந்தது. பல சமயங்களில் பாஞ்சைக் கோட்டையிலிருந்து வீரர்கள் வெளியே தலைகாட்டுவார்கள். கும்பினி வீரர்கள் பலர் ஓடிப்போய்ச் சொல்வார்கள்.

''நமக்குள்ள சண்டையெதுக்கு. சமாதானமாப் போயிறலாம். கும்பினி சர்க்கா ருட்டச் சரணடையவும் கிஸ்தி கட்டவும் தயாராயிருக்கிறா அறிவிச்சிருங்க.''

பாஞ்சை வீரர்கள் பதிலுக்குக் கேட்பார்கள்.

''அப்படின்னா எங்க தலைவருகளக் கைதுசெய்யக் கூடாது.''

''அதெப்படி. கையில ஆயுதமேந்திக் கலகஞ் செஞ்சவங்களச் சும்மா வுட முடியுமா. நீங்க ஆயுதங்களக் கீழ போட்டுட்டுத்தான் சரணடையணும். கலகக் காரங்கள ஆயுதங்களோட சந்திக்க மாட்டொம்.''

''அது முடியாது.''

''அப்பச் சண்டைய நிறுத்த முடியாது.''

''போட்டுப் பாத்துருவொம்''.

பாஞ்சை வீரர்கள் போய்விடுவார்கள்.

அன்று இரவு கும்பினியார் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது வெடிமழை விடாது பொழிந்தது. இந்த வேளையில் யார் சண்டைக்கு அழைக்கிறார்கள்.

நோக்கம் தெரியாமல் குழம்பிப்போனார்கள். நிலா புறப்படும்போது பாஞ்சையரின் ஆட்டமெல்லாம் அடங்கிவிட்டது. கணிசமான அளவுக்குக் கும்பினியின் ஆயுதங் களை அள்ளிச் சென்றுவிட்டார்கள். அன்றைக்கு இழந்தது அதுமட்டுந்தான்.

## 7. பறந்துவிட்ட ராசாளி

ரெண்டு மாசம் கும்பினியார் கொட்டும் மழையிலும் கொதிக்கும் வெயி லிலும் பாஞ்சைக் கோட்டையை நோக்கித் தவங்கிடந்தார்கள். அவர்களது பிரயத்தனங்கள் ஊமைத்துரையிடம் பலிக்கவில்லை. நிதமும் சிறுசிறு சண்டைகள். உயிர்ச்சேதம். இப்படித்தான் காலம் கரைந்தது.

பாஞ்சைக் கோட்டைக்கு வெளியிலிருந்து வரும் உணவுப் பண்டங்களைத் தடுத்துப் பார்த்தார்கள். எல்லாரும் பட்டினி கிடந்து சாகட்டுமே. அந்தத் திட்டமும் தோற்றுவிட்டது. ஏற்கெனவே கோட்டைக்குள் போதிய அளவுக்குக் கையிருப்பு வைத்திருந்தார்கள். அது ரெம்ப நாள் தாக்குப்பிடிக்கும். மாடுகளுக்குக் கூளம் வருவதை நிறுத்தினார்கள். அதுகூட நிறையவே கைவசம் இருந்தது.

குதிரைகள் பாடுதான் திண்டாட்டம். நிதமும் பச்சைப்புல் கிடைப்பது கஷ்டம். சாலிகுளம் வயல்பக்கம் சென்றுதான் அறுத்து வரணும். கும்பினியார் வம்புக்கிழுப்பார்கள். அவர்களுடன் மல்லுக்கட்டிப் புல்லுக்கட்டு வந்துகொண்டு தானிருந்தது. அது போதவில்லை. குதிரைகள் மெலிந்துவிட்டன.

முந்தியெல்லாம் வயல்வெளியில் பெண்கள் பாடிக்கொண்டே புல்லறுப் பார்கள்.

''சாலிகொளம் பெருகவேணும்
சம்பாநெல்லு வெளையவேணும்
ஏத்துமீனு ஏறவேணும்
எங்கபஞ்சம் தீரவேணும்.''

கட்டுக்கட்டாகப் புல் கோட்டைக்கு வரும். குதிரைகள் உண்டு கொழுக்கும். பாஞ்சைச் சீமையில் கும்பினியார் கால்வைத்த பிறகு வயல்வெளி ஆள் நட மாட்டமற்று மூளியாகிப்போனது. பாட்டுச் சத்தம் கேட்ட பகுதியில் வேட்டுச் சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. மாடுகளும் குதிரைகளும் பகல் முழுக்க மேயும் புல்தரைகளில் கல்லறைகள் முளைத்திருந்தன.

ஒரு நாள் பகலில் இடியும் மின்னலுமாகப் பெய்து ஓய்ந்திருந்த மழை இருட் டிலும் கும்பினியாரை எழுப்பியது. சற்று நேரத்தில் இடியுடன் வெடியோசை யும் சேர்ந்து வருவதை அறிய முடிந்தது. ஒரு பீரங்கி நகர்ந்து வருவதாகவும் தகவல். ஈட்டிகள் சூழ்ந்து ஈவிரக்கமின்றிக் குத்தி விளையாடப்போகும் கொடூரத் தாக்குதலை எதிர்பார்த்திருந்தார்கள்.

இரு தரப்பிலும் என்ன நடக்கிறதென்று தெரியவில்லை. கும்பினியாரின் அக்கறையெல்லாம் ஆயுதங்களை நனைய விடாமல் பாதுகாக்கணும். கனத்த மழையில் அது முடியவில்லை. எல்லாரும் தொப்புத்தொப்பாக நனைந்துவிட் டார்கள். அந்த ஈரம் ஆனந்தமாக சொகமாக இருந்தது. கத்தியைவிடக் கூர்மையான

இருபதே அடி நீளமுள்ள பாஞ்சைக் குத்தீட்டிகள் உடம்பில் பாயும் தருணத்தைச் சந்தோசமாக எதிர்பார்த்திருந்தார்கள்.

இந்த இக்கட்டான சமயத்தில் முன்னூறு பேர் கொண்ட படை அவர்களை நோக்கி விரைந்து வந்தது. கொடூரமான ஓலத்துடன் கிட்ட நெருங்கிவிட்டது. பாஞ்சையர்தான் பாய்ந்து வருகிறார்கள் என்று தாக்கத் தயாரானார்கள். நல்ல வேளை தாக்குதல் நடக்கவில்லை.

வேகமாக வந்தது வேறு யாருமில்லை. கும்பினிப் படையைச் சேர்ந்தவர்கள் தான். கோட்டைக்குச் சற்று அருகில் நிறுத்திவைக்கப்பட்டிருந்தவர்கள். சே கேவலம். வெட்கக்கேடு. பேடித்தனமாக ஓடிவந்துவிட்டார்கள். மேஜர் உச்சக் கோவத்தில் இருந்தார். பீதியில் பயந்து வந்தவர்களை சிறைவைக்க உத்தரவிட்டார்.

கவர்னரின் உத்தரவுப்படி சென்னப்பட்டணம் ஆற்காடு திண்டுக்கல் திருச்சி னாப்பள்ளி ஆகிய தளங்களிலிருந்து புறப்பட்ட படைப்பிரிவுகள் தெற்குச் சீமை யில் குமிந்தன. கோயில்பட்டியில் இணைந்து பெரும் பட்டாளமாகப் பாஞ் சையை அடைந்தன. பாஞ்சைப் பாசறையில் கும்பினியார் குதூகலித்தார்கள்.

மேஜர் மெக்காலேவுக்குப் பதிலாக லெப்டினெண்ட் கர்னல் பீட்டர் அக்னியூ படைக்குத் தலைமை ஏற்றார். அவர் போர்த் தந்திரங்களில் வல்லவர். பல போர் களைக் கண்டவர். வென்றவர். தெற்குச் சீமைப் பற்றி நன்கறிந்தவர். சில அதிகாரிகள் வந்து சேர்ந்ததும் அவர் வேலைகளை ஆரம்பித்தார். கோட்டையைப் பீரங்கிகள் எந்தெந்த இடங்களிலிருந்து தாக்கணுமென்று முடிவு செய்தார். அவர் கோட்டையைச் சுற்றி நோட்டம் பார்க்கும்போது பறந்துவந்த கவண் கற்களும் வெடிகளும் அவரை எட்டவில்லை. இத்தனைக்கும் பாஞ்சை வீரர்கள் திரண்டு வெளியே வரவில்லை.

அக்னியூ மெக்காலேயுடன் ஆலோசனை செய்து நிலைமைகளை அறிந்து கொண்டார். எட்டயாபுரத்தாரின் ஒத்துழைப்பு நல்ல பலனைத் தரும் என்பதை உறுதிசெய்தார். பாஞ்சையரின் பராக்கிரமங்களைக் கேட்கக்கேட்க அவருக்குள் கோவமும் வன்மமும் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தன.

கூடுதலாக கும்பினிப் படைகளும் ஆயுதங்களும் வந்திருப்பதை அறிந்த பாஞ்சையர் அஞ்சவில்லை. நிலவறைகளையும் தடுப்புக்களையும் வலுப்படுத்திக் கொண்டு எதுக்கும் தயாராக இருந்தார்கள். நாலு மாசமாக நடந்த போரில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட வீரர்களைப் பலிகொடுத்தாயிற்று. பலர் ஊனமடைந்து முடங்கிவிட்டார்கள். ஐயாயிரத்துக்கும் குறைவாகவே எஞ்சியிருந்தார்கள்.

மறுநாள் பொழுது புலரும்போது கோட்டைக்குத் தென்கிழக்கே மணல் மேட்டில் மையம்கொண்டிருந்த பெரிய பீரங்கிகள் குமுறத் தொடங்கின. குதிரைப் படைகளும் காலாட் படைகளும் தயாராக நின்றன. தனியாக நின்ற மலாய்ப் படைக்கு கேப்டன் ஒயிட்லி தலைமையேற்றிருந்தார். கோட்டையை உடைத்துத் தகர்த்த பின்பே படைகள் உள்ளே புகணும் என்பது திட்டம்.

கும்பினியாரின் திட்டத்தை அறிந்துகொண்ட பாஞ்சையர் வாளாவிருந்தார் கள். கொத்தளங்களுக்குக்கூட ஏறிச் செல்லவில்லை. அவர்கள் செவியில் பீரங்கி களின் பிளிறல் அதிர்ந்துகொண்டேயிருந்தது. கொஞ்ச நேரத்தில் கோட்டை மதிலில் கீறல்விழ ஆரம்பித்தது.

மதியத்துக்குள் தென்புற மதில் முகப்புகளும் மதில் பகுதிகளும் இடிந்து விட்டன. தகர்ப்புப் படை முன்னேறத் தயாராக இருந்தது. மேஜர் மெக்காலே அக்னியூவை ஓரமாக அழைத்துச் சென்று தாக்குதலை நாளைவரை தள்ளிப் போடலாம் எனச் சொன்னார். இருக்கிற நிலைமையில் அதுதான் சரியென்று பட்டது. பாஞ்சையர் கோட்டையைப் பழுதுபார்த்து விடாதபடி ராத்திரி முழுக்க கும்பினிப் படைகள் கண்காணித்து நின்றன.

கோட்டைக்குள்ளிருந்த அந்தப்புரப் பெண்கள் ராவோடு ராவாக அகற்றப் பட்டார்கள். வெளியேற விரும்பாத பெண்கள் விதியை எதிர்கொண்டு தங்கி யிருந்தார்கள். உள்ளே வசித்த பொதுச்சனங்களும் வெளியேறிவிட்டார்கள். கோட்டைக்கும் முள்வேலிக்கும் இடையே உள்ள பகுதிகளில் தோண்டிய பதுங்குகுழிகள் கருவமரக் கிளைகளால் மூடி மறைக்கப்பட்டிருந்தன.

பாதுகாப்பற்ற நிலையில் போரின் விளைவுகளை உணர்ந்த ஊமைத் துரையின் மாமனார் பல உயிர்களைக் காப்பாற்றலாமே எனப் பரிதாபம் கொண்டார். கும்பினியுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு சரணடைந்து கப்பங் கட்டி அமைதியாக வாழலாமே என்று பக்குவமாக எடுத்துரைத்தார். ஊமைத் துரை உடன்படவில்லை. ஏற்கெனவே கும்பினியார் கொடுத்த மரியாதை மறந்துவிட்டதா. மானமிழந்து வாழும் ஈனப் பிழைப்பைவிட எதிர்த்து மாளும் மானப்பிழைப்பே மேல் என மறுத்துவிட்டார்.

உடையாமல் எஞ்சியிருந்த மதில்களுக்கு இப்பால் தன்மானம் கொழுந்து விட்டு எரிந்தது. ஊமைத்துரை வீரர்களை ஆற்றுப்படுத்தினார். பதுங்குகுழிகளில் ஒதுங்கியிருந்து பகைவரை எதிர்கொள்ள வேண்டிய பாங்கினை மனசில் பதிய வைத்தார். நிலவறையில் மறைந்து நிகழ்த்த வேண்டிய பணிகளை நினைவூட்டி னார். கொத்தள வீரர்களின் குத்தீட்டிகள் வித்தைகள் புரிந்து வீரத்தை நிலை நாட்டும் முறைகளைச் சத்தமில்லாமல் விளக்கினார். சன்னைகளால் இவ்வளவும் முடிந்தது.

எதுக்கும் கலங்காத அவர் மனசு இப்போது இடிந்த கோட்டையாக ஒரு ஓரம் தகர்ந்திருந்தது.

மறுநாள் மதியத்துக்கெல்லாம் கோட்டை மதில்கள் முழுவதும் இடிந்து விழுந்துவிட்டன. மாடமாளிகைகளும் வீடுகளும் நொறுங்கின. உள்ளே நுழைய கும்பினிப் படைகளுக்கு உத்தரவு கிடைத்தது. பெரும் படைகளைக் கண்டு பீதி யடையாமல் பாஞ்சை வீரர்கள் உறுதியுடன் எதிர்த்தார்கள்.

கொஞ்ச நேரத்தில் கும்பினியார் முள் வேலியைத் தாண்டி முன்னேறி னார்கள். கோட்டைமீது ஏறி நிற்கணுமென்றால் சற்று நேரமாகும். அதுக்குள் பாஞ்சையர் உடைந்த மதில்கள் மீதிருந்துகொண்டு இருபுறமும் வெடிகளால் சுட்டதோடல்லாமல் பதுங்குகுழிகளிலிருந்து வெளியேறி வேலி இடைவெளி யில் இருந்தவர்களை வேகமாகத் தாக்கினார்கள். ஆனாலும் கும்பினியாரின் எறிவெடிகளுக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. வீழ்ந்து மடிந்தார்கள். இப்போது வெள்ளை வீரர்கள் கோட்டை மீதேறிவிட்டார்கள். பாஞ்சை ஈட்டிகள் பரிதாப மாகத் தோற்றுப்போயின.

கிழக்குக் கோட்டை வழியாகத் தப்பிச் செல்வோரைக் கைது செய்ய குதிரைப் படை நிறுத்தப்பட்டிருந்தது. அதுக்கு கேப்டன் டவ்டன் தலைமை.

ஆக பாஞ்சை வீரர்கள் அப்படியும் தப்ப முடியாது. வேறு புறங்களிலும் வெள்ளையர் சூழ்ந்திருந்தார்கள். இக்கட்டான நிலை. பாஞ்சையரைப் பீதி கவ்விக்கொண்டது. அங்குமிங்கும் அலைந்து அல்லாடினார்கள். வெளியிலிருந்து போரிட்டவர்கள் கோட்டைக்குள் பின்வாங்கினார்கள்.

இரு பிரிவாகக் கீழ்ப்புறம் தப்பிச்செல்ல முயன்றவர்களை டவ்டனின் குதிரைப் படை வளைத்துக்கொண்டது. நேரடியாக எதிர்க்க முடியாமல் பின்புற மிருந்தும் பக்கவாட்டிலுமாகத் தாக்கி அறுநூறு பேரை வெட்டிவீழ்த்தியது. சுமார் ஈராயிரம் பேர் தப்பிவிட்டார்கள்.

கோட்டைக்குள் கீழ்ப்புறம் நானூறுக்கும் மேற்பட்ட பிணங்கள் குமிந்து கிடந்தன. முந்திய சண்டைகளில் மாண்டவர்கள். களத்திலிருந்து எடுத்துவந்து போட்டிருந்தார்கள்.

பாஞ்சையர் பதுங்குகுழியிலிருந்து தாக்கும் போர்த்தந்திரத்தைப் பார்த்து அக்னியூ தயங்கினார். கோட்டைக்குள் நிலைமை எப்படியோ. ஆழம் தெரியாமல் காலை விட்டு அகப்பட்டுக்கொள்ளக் கூடாது. எட்டயாபுரத்தாரிடம் யோசனை கேட்டார். அவர் பாஞ்சையரை அழிக்க இழிவான வழியைச் சொன்னார்.

''ஊரு முழுக்க நெலவறைகள உண்டாக்கி ஒளிஞ்சிருப்பதாக் கேள்வி. நம்ம உள்ள போனா எங்கருந்து எப்படி வந்து தாக்குவாகன்னு சொல்ல முடியாது. நம்ம அழிஞ்சுபோயிருவொம். அதனால கிச்சுக்குடுக்கையப் போட்டு உள்ள பொகையச் செலுத்துனா மூச்சு முட்டிச் செத்தது போக மீதி பேரு வெளியேறு வாக. அவுகள நம்ம வளச்சுக்கிறலாம்.''

அக்னியூவுக்கு அது சரியாகப் படவில்லை.

''அது முறையில்லையே.''

''அப்படிச் செய்தாலொழிய அவுகள அழிக்க முடியாது. நம்ம தோத்துறப் புடாது. தொரைக்குத் தெரியாறதில்ல.''

''அது முக்கியம்.''

அக்னியூ மிகுந்த தயக்கத்துக்குப் பின் ஒத்துக்கொண்டார்.

கும்பினிப் படைகள் முதல்முறையாக ஊமையன் கோட்டைக்குள் காலெடுத்து வைத்தன. அங்கே நிலவறைகளைப் பார்த்து ஆச்சரியம் சொல்ல முடியாது. எங்கும் ஆள் நடமாட்டமில்லை. மயான அமைதி. பீரங்கி வெடிகள் குதறியெறிந்த சிதறல்கள் குமிந்து கிடந்தன. உடைந்த கோலத்திலும் கம்பீரம் குறையாமல் நின்ற கொத்தளங்கள் அச்சுறுத்தின.

சுரைக்குடுக்கைகளில் நெருப்புக் கங்குகளை வைத்து அதில் மிளகாய் வத்தலைப் போட்டு நிலவறைகளுக்குள் எறிந்தார்கள். அறைகளைச் சுற்றித் தோண்டியிருந்த பள்ளங்களில் பதுக்கிய வத்தல் மருகைகளில் நெருப்பு மூட்டி னார்கள். அறைகளுக்குள் வெடிகளை எறிந்தார்கள். எங்கும் புகை மண்டியது. புளித்த தண்ணீரை முகத்தில் தெளித்துக்கொண்டு பாதுகாப்பாகப் புகையைக் கிளப்பினார்கள். யாரும் வெளியேறிவிடாமல் உள்ளேயே மாண்டு மடியட்டு மென்று சுற்றிலும் காவல் நின்றார்கள்.

நிலவறைகளுக்குள் மண்டும் புகையில் பாஞ்சை வீரர்கள் மூச்சு முட்டித் திக்குமுக்காடினார்கள். பலர் மடிந்துவிட்டார்கள். ஊமைத்துரை மிஞ்சியிருக்கும்

ஈராயிரம் வீரர்களுடன் வெளியேறிக் கிழக்கு வாசல் வழியாக ராசாளிபோல் மூடி முழிக்கும் நேரத்தில் பறந்து சென்றுவிட்டார். அவருக்குப் பாதுகாப்பு அரணாக இருந்த தளபதி சுந்தரலிங்கம் முத்தன் பகடை பொட்டிப் பகடை போன்ற வீரர்களின் முழக்கம் தெளிவாகக் கேட்டது.

''வேலும் மயிலும் துணை.''

மின்னலென மறைந்துவிட்ட வீரர் கூட்டத்தை நினைத்து கும்பினியார் என்ன செய்வதென்று தெரியாமல் விக்கித்துப்போய் முழித்துக்கொண்டிருந் தார்கள். அதே சமயத்தில் கோட்டைக்குள்ளே அந்தப்புரப் பெண்கள் கிணற்றில் குதித்தும் நெருப்பில் பாய்ந்தும் கத்தியால் குத்திக்கொண்டும் தற்கொலை செய்து கொண்ட கோரம் அரங்கேறியது. வீட்டுக்குள் ஒளிந்திருந்த வீரலட்சுமி ஒரு வெள்ளை அதிகாரியை ஈட்டியால் குத்திக் கொன்றுவிட்டுத் தன்னையும் மாய்த்துக் கொண்டாள். அவள் ஊமைத்துரையின் உறவினர். பெண்களின் வீரம் கண்டு வெள்ளையர் பிரமித்துப்போனார்கள்.

தப்பிச்சென்ற ஊமைத்துரையின் படையைத் துரத்திய வெள்ளையர் மூணு மைல் தொலைவிலுள்ள கக்கரம்பட்டியருகே வளைத்து மூர்க்கமாகத் தாக்கி னார்கள். இரு தரப்பிலும் பலர் மடிந்தார்கள். எப்படியாவது ஊமைத்துரையைக் காப்பாற்றிவிடணுமென்று சுந்தரலிங்கமும் பொட்டிப் பகடையும் பிரயாசைப் பட்டார்கள். தங்கள் உயிரைப் பணயம் வைத்துப் போராடினார்கள். கும்பினிப் படைகளை வெட்டி வீழ்த்தினார்கள். கூட்டத்துக்குள் ஊடுருவிச் செல்ல முடிய வில்லை. குத்துப்பட்டும் வெட்டுப்பட்டும் விழுந்துவிட்டார்கள். துரைச்சிங்கத் துக்குப் பாதுகாப்பாக வந்த முத்தன் பகடையும் சிவசங்கும் சாய்ந்துவிட்டார்கள். தனித்துப் போரிட்ட ஊமைத்துரைக்கு மார்பில் ஈட்டி பாயவே குதிரையி லிருந்து குப்புறப் பாய்ந்துவிட்டார். குதிரைக்கும் மார்பில் ஆழமான குத்து. சிவத்தையா பின்தொடர துரைச்சிங்கம் எஞ்சிய வீரர்களுடன் தப்பிவிட்டார்.

## 8. அஞ்ஞாடி வந்துட்டானே

கொடிய போர் ஓய்ந்து கொலைக்களத்தில் அமைதி நிலவியது. கரிசல் நிலங் களில் பிணங்கள் சிதறிக் கிடந்தன. அந்தியிருட்டு அவற்றைப் போர்த்தி மூடி யிருந்தது. கக்கரம்பட்டியிலிருந்து சில தாய்மார்கள் கையில் தீவட்டியுடன் பிணக் குமிகளுக்கிடையில் தங்கள் மகன்களைத் தேடிக்கொண்டு திரிந்தார்கள். உயி ருடன் கிடந்தால் எடுத்துச் சென்று காப்பாற்றிவிடலாமே.

முத்திருளி தன் மகன் சிவசங்கை அடையாளம் கண்டுகொண்டாள். குற்றுயி ராகக் கிடந்தான். மூடியிருந்த பிணங்களை அகற்றிவிட்டு மகனை எடுத்து மடியில் கிடத்தி அழுதாள்.

''நான் பெத்த மகனே ஒன்னய இந்தக் கோலத்துலயா பாக்கணும்.''

சிவசங்கு கைச் சைகையால் தாயின் அழுகையை நிறுத்தி ஈனக் குரலில் சொன்னான்.

''அஞ்ஞ என்னயப் பத்திக் கவலப்பட வேணாம். நான் பெழைக்க மாட்டென். அந்தா கெடக்காரு பாரு நம்ம சாமி அவரக் காப்பாத்து. வெருசனாப் போஞ்ஞ.''

சாமி என்ற வார்த்தையைக் கேட்டதும் அவள் மகனை மறந்துவிட்டாள். அவசரமாக எழுந்து போய்த் தேடினாள். மாண்டு கிடந்த சுந்தரலிங்கம் பொட்டிப் பகடை முத்தன் பகடைக்கு நடுவில் ஊமைத்துரை ரத்தக் கோலத்தில் கிடந்தார். உயிர் இருப்பதற்கு அறிகுறியாக கை கால்கள் துடித்தன. அவள் அவரை அள்ளி யெடுத்து முகத்தில் படிந்திருந்த ரத்தக் கறையை முந்தானையால் துடைத்தாள். சீலையைக் கிழித்து மார்புக் காயத்தை வரிந்து கட்டினாள்.

''எஞ் சாமி ஒங்களுக்கு இந்தக் கதியாயிருச்சே. எல்லாரவும் காப்பாத்துற மகராசன் இப்படி நாதியத்துக் கெடக்கீகளே.''

அவள் மற்ற பெண்களை அழைத்தாள்.

''இங்க வாங்கடி. நம்ம சாமி கெடக்கிற கெடையப் பாருங்களேன்.''

எல்லாருமாகச் சேர்ந்து அவரைத் தூக்கித் தோள் சுமையாக முத்திருளியின் வீட்டுக்கு நடந்தார்கள். எல்லாவற்றையும் ஒருச்சாய்ப்பில் பார்த்துக்கொண் டிருந்த சிவசங்குக்குச் சந்தோசத்தில் உயிர் பிரிந்தது. மகன் நினைவு வந்த முத்திருளி ஓடிப்போய் கடைசியாக ஒரு முறை அவன் முகத்தைப் பார்த்துவிட்டு வந்து மறு படியும் ஊமைத்துரைக்குத் தோள்கொடுத்தாள்.

ஊமைத்துரை அதிசயமாகத் தப்பிவிட்டதாகக் கும்பினியார் ஏமாற்றத்தில் புலம்பினார்கள். அக்னியூ அவரது தலைக்குப் பெரிய விலை விளம்பினார். எட்டயாபுரத்துப் படைகள் சன்மானத்துக்காகச் சப்புக்கொட்டின. கட்டாலங் குளம் அழகுமுத்துச் சேர்வை தலைமையில் பல இடங்களில் சலிக்க ஆரம் பித்தன. கும்பினிப் படைகளும் அவற்றுடன் சேர்ந்துகொண்டன.

முத்திருளியின் வீட்டில் கூடியிருந்த பெண்கள் ஊமைத்துரையின் காயங் களுக்கு ஒத்தணமிட்டுக்கொண்டிருந்தார்கள். அவரைக் காப்பாற்றிவிட்ட சந் தோசம் அவர்கள் முகத்தில் மின்னியது. அப்போது குதிரைகளின் குளம்புச் சத்தம் அவர்களை நெருங்கிவந்தது. ஒருத்தி மிரண்டாள்.

''அஞ்ஞாடி வந்துட்டானே பாவி. என்ன செய்றதும்மா''.

முத்திருளி அவசரப்படுத்தினாள்.

''வேட்டி எடுத்துட்டு வாங்க. நீ ஓடிப் போயி வேப்பங்கொழ ஒடிச்சிட்டு வா. ஒருத்தி மஞ்சளரச்சிட்டு வா. தாயமாட்டுப் பண்ண வேணாம்.''

ஊமைத்துரையை நீளக் கிடத்தி அரைத்த மஞ்சளை உடம்பெங்கும் பூசி வேட்டியால் முழுக்க மூடினார்கள். வேப்பிலையை வேட்டிமீது தூவினார்கள். வீட்டு முற்றத்து எரவாரத்தில் வேப்பங்குழையைச் சொருகினார்கள். வீட்டுக் குள்ளும் வெளியிலும் பெண்கள் கூடிவிட்டார்கள். வீடு இழவுக் கோலம் பூண்டது. உள்ளே முத்திருளியின் ஒப்பாரி தெளிவாகக் கேட்டது.

''மாரியம்மா கோயிலில
மண்டியிட்டுத் தவமிருந்தென்
தவமிருந்து பெத்த மகன்
சீமைக்கு ராசாவே
சின்னத் தொரச்சாமி
எங்கள நீ
தவிக்கவுட்டுப் போகலாமா.''

தொடர்ந்து மற்ற பெண்களின் அழுகை தொடுத்தது. முற்றத்தில் நின்ற பெண்கள் மூக்கொழுக அழுவதும் முந்தியில் சிந்துவதுமாகத் துக்கத்தில் ஆழ்ந் திருந்தார்கள்.

ஓடி வந்த குதிரைகள் கூடிநின்ற பெண்களைப் பார்த்து நின்றன. இப்போது வீட்டுக்குள் அழுகை ஓங்கி இரைந்தது. முற்றத்துப் பெண்கள் பயத்தில் கலைந்து ஒதுங்கினார்கள். குதிரை மீதிருந்த ஒரு கும்பினி வீரன் எட்டயாபுரத்து வீரனிடம் கேட்டான்.

''ஏன் அழுகிறார்கள். என்னாயிற்று.''

எட்டயாபுரத்து வீரன் பெண்களிடம் கேட்டான்.

''எதுக்கு அழுகிறாக.''

ஒருத்தி உரக்க அழுதுகொண்டே சொன்னாள்.

''முத்திருளி ஒத்தப் புள்ளையப் பெத்து பொத்திப்பொத்தி வளத்தா. அவனுக்குப் பெரியம்ம கண்டு மாரியாத்தா கூட்டிக்கிட்டா. பெத்தவளத் தவிக்க வுட்டுட்டுப் போயிட்டானே.''

கூடியிருந்தவர்களும் சேர்ந்து அழுதார்கள்.

பெரியம்மை என்ற வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் பீதியடைந்து வீரர்கள் பரிந்துபோன இடம் தெரியவில்லை. பெண்களின் அழுகை ஏளனச் சிரிப்பாக மாறியது. போர்க்களத்தில் மாண்டு கிடக்கும் மகனை நினைத்து முத்திருளியின் கண்கள் மறுபடியும் ஊற்றெடுத்தன.

இழவு வீடாகக் காட்சியளித்த பாஞ்சைக் கோட்டைக்குள் இடிபாடுகளுக் கிடையிலும் பிணங்களுக்கிடையிலும் கும்பினியார் தேடித் துழாவி கைக்குச் சிக்கிய ஆபரணங்களையும் விலையுயர்ந்த பொருட்களையும் கவர்ந்துகொண் டார்கள். ஏராளமான பாஞ்சையர் கைதுசெய்யப்பட்டிருந்தார்கள். அக்னியூவின் உத்தரவுப்படி அவர்கள் அனைவரையும் வரிசையாக நிறுத்திச் சிரச்சேதம் செய்தார்கள். பாஞ்சை வீரர்களுக்கு ஆயுதங்களும் தானியமும் கொடுத்துதவிய குற்றத்துக்காகப் பத்துப் பேர் தூக்கிலிடப்பட்டார்கள்.

இந்தத் துயரச் சம்பவங்கள் போரில் தப்பியோடித் தலைமறைவாகிவிட்ட விடுதலைப் படைகளின் வீரத்தை உலுக்கிவிட்டது. அவர்கள் எந்த நேரத்திலும் தாக்கப்படலாம் என்ற பதட்டம். இனம்புரியாத கலக்கம். வல்லநாட்டு மலையில் அரும்பாடு பட்டு அவர்கள் அமைத்திருந்த தடுப்பரண்கள் காலியாகின. கைப் பற்றியிருந்த தூத்துக்குடி காடல்குடி போன்ற பல தளங்கள் வெறிச்சோடின. பெரும்பாலான வீரர்கள் ராமநாதபுரம் சிவகங்கைச்சீமை தேடிச் சென்று கூட் டாளிகளுடன் சேர்ந்துகொண்டார்கள். எஞ்சியோர் மேற்கிலும் தெற்கிலுமாக மலைகளிலும் ஊர்களிலும் தஞ்சம்புகுந்தார்கள்.

ஊமைத்துரையைப் பிடிக்க முடியாத கவலை அக்னியூவுக்குள் பேரச்சமாக உருவெடுத்திருந்தது. கோட்டையை இடிக்கும் பொறுப்பை கேப்டன் ஹசார் டிடம் ஒப்படைத்தார். பாஞ்சையர் கைவிட்டுச் சென்ற தூத்துக்குடியைப் பாதுகாக்க கேப்டன் மக்டொனால்டை அனுப்பிவைத்தார்.

வெல்ஷ் நொறுங்கிச் சிதறிக்கிடந்த கோட்டையையும் வெளியே எங்கும் முளைத்திருந்த கல்லறைகளையும் வேதனையுடன் வெறித்துப்பார்த்தார்.

மனசுக்குள் சொல்ல முடியாத சுமைகள். நல்லநல்ல தோழர்களையெல்லாம் இழந்துவிட்ட சோகம். எல்லாரும் நேசித்த லெப்டினெண்ட் கில்கிரைஸ்ட் வீரமிக்க லெப்டினெண்ட் ஸ்பால்டிங் கேம்பல் பிரேசர். அபாய நேரங்களி லெல்லாம் முன்னால் நிற்கும் ஜேம்ஸ் கிராண்டை நினைக்கநினைக்க அழுகை வந்தது. மொத்தம் ஐம்பது பேர்வரை மாண்டுவிட்டார்கள். இருநூறு பேருக்கு மேல் காயப்பட்டு முடங்கிப்போனார்கள்.

வெறிச்சோடிய கொலைக்களத்தை ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு வெல்ஷ் கலங்கிய மனசுடன் புறப்பட்டார். பாஞ்சை வீரர்களைத் தேடிக் குதிரை அவரைச் சுமந்துகொண்டு வடதிசை நோக்கிப் பாய்ந்தது.

## 9. சிவகங்கை தேடி

முத்திருளி ஊமைத்துரையைப் பெற்ற மகனாகப் பேணி மருத்துவம் செய்தாள். சனங்கள் அல்லும் பகலும் கண்ணயராது பாதுகாத்தார்கள். நல்ல உணவு கொடுத் தார்கள். இருபது நாளில் அவருக்குக் காயங்கள் ஆறி உடல் தேறியது. அவருக்குள் எரிந்துகொண்டிருந்த விடுதலைக் கனல் மட்டும் ஆறவில்லை. கடமை அழைத்தது. மறுபிறவியளித்த சனங்களை நன்றிப் பெருக்குடன் நோக்கினார். கண்கள் பனித்தன. தாயே உனக்கு என்ன கைமாறு செய்யப்போகிறேன் என்று முத் திருளியைப் பார்த்துக் கைகூப்பினார். அவள் அமைதியாக அழுதாள்.

''சாமி இனியும் கொஞ்ச நாளைக்கு இருந்து ஒடம்பத் தேத்தீட்டுப் போங்களேன்.''

மற்றவர்களும் அதையேதான் சொன்னார்கள். அவர்களது அன்புக் கட்ட ளையை மீறி அவர் கருத்த இருளில் மருது சகோதரர்களைத் தேடிச் சிவகங்கைச் சீமைக்குப் புறப்பட்டார்.

இடையில் கல்மடவு கிராமத்தில் ஊர்க்கணக்கு சாம்பசிவம் பிள்ளையைச் சந்தித்து அவரது வீட்டில் சில நாள் தங்கியிருந்தார். சாம்பசிவம் பிள்ளை சம்பு லிங்கபுரத்தில் மறைந்திருக்கும் துரைச்சிங்கத்தை வரவழைத்து அண்ணனுடன் சேர்த்துவைத்தார். தம்பி முகம் கண்டதும் அண்ணனுக்குத் தெம்பு வந்தது. சிவத்தையாவும் மற்ற உறவினர்களும் சேர்ந்துகொண்டதில் இன்னும் சந் தோசம். அவர்களுடன் கமுதி சென்று கோட்டையில் தங்கிக் காரியங்களைக் கவனித்தார். ஏராளமானோர் கமுதிக்கு வந்து அவரைச் சந்தித்து ஆதரவு தெரிவித் தார்கள். வெள்ளையரை எதிர்க்க உதவிகளைச் செய்வதாக உறுதியளித்தார்கள்.

கும்பினியாரால் நசுக்கப்பட்ட குளத்தூர் நாகலாபுரம் காடல்குடி விருப் பாட்சிப் பாளையங்களின் படைகள் எழுச்சியுடன் திரண்டு கமுதி நோக்கிப் பறந்தன. போகப்போகப் படைபலம் அதிகரித்தது. இடையில் அவற்றைக் கும்பினிப் படைகளும் எட்டயாபுரத்துப் படைகளும் வழிமறித்துத் தாக்கின. அங்கங்கே சண்டைகள் தொடர்ந்தன. ஒரு இடத்தில் ஊமைத்துரைக்கு ஆதர வாகத் தன் படைகளுடன் இணைந்துகொண்ட மருதப்பச் சேர்வை எதிரிக ளுடன் சண்டையிடும்போது கும்பினியாரின் பீரங்கியை இழுத்துவந்துவிட்

டார். அதை மீட்க எட்டயாபுரத்துப் படைகள் தீவிரமாகப் போரிட வேண்டி யிருந்தது. ஒருவழியாக கட்டாலங்குளம் அழகுமுத்துச் சேர்வை அதைக் கைப் பற்றிக்கொண்டுவந்து ஒப்படைத்தான். இதையறிந்த கர்னல் அக்னியூ சந்தோசப் பட்டார். எட்டயாபுரத்தாருக்கு இங்கிலீஷ் கொடி சன்மானமாகக் கிடைத்தது.

கமுதியில் விடுதலைப் படைகள் நிறைந்தன. ஒரே மாசத்தில் இருபதாயிரம் பேருக்குமேல் கூடிவிட்டதை நினைத்து ஊமைத்துரை பெருமிதங் கொண்டார். வெள்ளையரை விரட்டிவிட முடியுமென்ற நம்பிக்கை வலுத்தது.

சிவகங்கைச் சீமையில் வெள்ளையரை மருது சகோதரர்கள் மட்டுமே எதிர்த்துவந்தார்கள். முறையாக வரிகொடுத்தாலும் தலைவணங்க மறுத்தார்கள். எங்கோ கடலுக்கப்பாலிருந்து வந்தவர்கள் எல்லாரையும் ஆட்டிப்படைப்பதை அவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் பரம்பரைப் பாளையக் காரர்கள்தானா. அதுக்கு ஆதாரமென்ன என்று அக்னியூ வேறு கிண்ட ஆரம்பித் தார். ஆதாரத்தைக் கேட்க இவன் யார் என்று கறுவினார்கள். பகை வளர ஆரம்பித்தது.

மருது சகோதரர்கள் பரம்பரைப் பாளையக்காரர்கள் இல்லைதான். மக்களின் அன்பிலும் ஆதரவிலும் உருவான தலைவர்கள். ஆரம்பத்தில் சிவகங்கை ராசா முத்துவடுகநாதரிடம் வேலைக்குச் சேர்ந்து அவரது குதிரைகளையும் வேட்டை நாய்களையும் பராமரித்துவந்தார்கள். வரிக்கொள்ளைச் சண்டையில் ராமநாதபுரமும் சிவகங்கையும் கும்பினியின் வசமாகின. வடுகநாதர் காளையார் கோயில் போரில் உயிர் துறந்தார். பட்டத்து ராணி வேலுநாச்சியார் மகள் வெள்ளச்சி மந்திரி தாண்டவராயன் பிள்ளை மருதிருவர் ஆகிய ஐவரும் விருப் பாட்சிக்குத் தப்பிச் சென்றார்கள்.

அங்கே மந்திரி இறந்துவிடவே சிவகங்கையை மீட்கும் பொறுப்பு மரு திருவருக்கு வந்தது. ஹைதர் அலியின் படைத் தளபதி அளித்த உதவியால் வெள்ளையருக்கு எதிராகப் போரிட்டுச் சிவகங்கையை மீட்டார்கள். வெள்ளச்சி ராணியானாள். பெரிய மருது தளபதியானார். சின்ன மருது மந்திரியானார்.

வெள்ளச்சி தந்தைவழி உறவினரான வெங்கம் பெரிய உடையத் தேவரை மணந்தாள். தேவர் ராசாவானார். பின்னர் வேலுநாச்சியார் பெரிய மருதைக் காதலித்துக் கைப்பிடித்தாள். அவள் எழுதிக்கொடுத்த சாசனத்தின்படி மருது ராசாவாகிவிட்டார். அமைதியாகப் பரிபாலனம் நடந்தது.

ஊமைத்துரையின் பராக்கிரமத்தைப் பற்றி அறிந்த மருது சகோதரர்களுக்கு வெள்ளையரை எதிர்க்க நல்ல துணை கிடைத்த சந்தோசம். சின்ன மருது பரி வாரங்களுடன் கமுதிக் கோட்டைக்கு வந்து ஊமைத்துரையைச் சந்தித்து ஆர்ப் பரிப்பில் தலைமையிடமான சிறுவயலுக்கு அழைத்துச் சென்றார். சிறுவயல் அரண்மனை விடுதலைப் போருக்குக் கேந்திரமாகியது. ஊமைத்துரையை ஒப் படைக்குமாறு மருது சகோதரர்களை அக்னியூ எச்சரித்தார். அவர்கள் மறுத்து விட்டார்கள். பகை வலுத்தது.

மோதலைத் தவிர்க்க முடியவில்லை. கும்பினியார் இருபதாயிரம் பேரை எதிர்க்க வேண்டிய நிலை. அவர்களுக்குப் பல பின்னடைவுகள். பெருத்த இழப்பை ஈடுசெய்ய மென்மேலும் படையைத் திரட்ட வேண்டிய நிர்ப்பந்தம்.

போர் தெற்குச் சீமையெங்கும் பரவியது. ஊமைத்துரையும் சிவத்தையா வும் தலைமையேற்று மதுரை திண்டுக்கல் பகுதியில் போர்புரிந்தார்கள். மரு திருவரும் மைலப்பனும் ராமநாதபுரம் சிவகங்கைப் பகுதியில் சண்டையிட் டார்கள். வெள்ளையர்களிடமிருந்த பல பகுதிகளும் கோட்டைகளும் விடுதலைப் படைகளின் வசமாயின. காடுகளில் ஒளிந்திருந்து மூடிமுழிக்குமுன் கண்ணெதிரே தோன்றித் தாக்கும் விடுதலைப் படைகளின் போர்த் தந்திரம் வெள்ளையர் களைத் திணற வைத்தது. சிதறுண்டு திண்டாடினார்கள். திப்புவையே கொன்று விட்ட ஆணவம் போன இடம் தெரியவில்லை. வெள்ளைத் தளபதிகள் பலரை இழந்துவிட்ட சோகம் மட்டுமே எஞ்சியிருந்தது.

போரில் ஆட்டங்கண்ட அக்னியூ சூழ்ச்சி என்ற ஆயுதத்தைக் கையிலெடுத்துக் கொண்டார். சிவகங்கை அரியணைக்கு ஆள்பிடிக்கும் பிரகடனத்தை இப்படி வெளியிட்டார் :

> சிவகங்கைப் பாளையத்தின் சேர்வைக்காரர் சின்ன மருது கும்பினி சர்க்காருக்கு விசுவாசமில்லாமல் அவர்களது உத்தரவுகளைச் சட்டைசெய் யாமல் பாஞ்சாலங்குறிச்சிக் கலகக்காரர்களுக்கு ஆயுதங்களும் ஆட்களும் கொடுத்துதவியும் விருப்பாட்சிக்காரர்களுக்குப் பாதுகாப்பு அளித்தது மல்லாமல் கும்பினிக் கோட்டைகளைத் தாக்கி ஊழியர்களைக் கொன்று கும்பினிப் பகுதிகளில் கொள்ளையடித்துள்ளான்.
>
> சிவகங்கைக்கு வாரிசான ராணியின் ஊழியன் என்ற முறையில் சின்ன மருதுக்கு கும்பினி அளித்துவந்த பாதுகாப்பையும் சலுகைகளையும் உலகமே அறியும். இந்தக் கலகக்காரன் சிவகங்கை ராசா முத்துவடுகநாதத் தேவரின் குடும்பத்தில் அடிமையாக வேலைக்குச் சேர்ந்தவன். ராணியின் மறைவுக்குப் பின் சிவகங்கையின் சட்டப்பூர்வ உரிமைகளைப் பறித்துக்கொள்ளும் பொருட்டு ஆயுதமேந்தியிருக்கிறான்.
>
> சட்டப்பூர்வ வாரிசு யாராக இருந்தாலும் அவரது நலனைப் பாதுகாக்க கும்பினி உறுதிபூண்டுள்ளது. சின்ன மருதையும் அவனது ஆதரவாளர்களையும் தண்டிப்பதற்காக கர்னல் அக்னியூ படையுடன் அனுப்பப்பட்டுள்ளார்.
>
> சிவகங்கைப் பட்டத்துக்கு உரிமைகொண்டாடும் எவரும் அக்னியூவைச் சந்திக்கலாம். அவரது விருப்பம் நியாயமானதென்றால் கலகக்காரர்கள் தண்டிக்கப் பட்ட பின்னர் அவருக்கு அரியணை தரப்படும்.
>
> சின்ன மருதின் சகோதரர் வெள்ளை மருதுக்குத் தன் தம்பியின் கெட்ட நடத்தை பிடிக்கவில்லை எனத் தெரியவருகிறது. குற்றவாளிகளைத் தண்டிப் பதில் தீர்மானமாக இருந்தாலும் அப்பாவிகளைக் காப்பாற்றவே கர்னல் அக்னியூ விரும்புகிறார். ஆகவே வெள்ளை மருது அக்னியூவை நேரில் சந்தித்தால் அவருக்கும் அவரது குடும்பத்துக்கும் பாதுகாப்பளிக்கப்படும். குடும்பம் பத்திரமாக மதுரைக்கு அனுப்பப்படும். அங்கே நிம்மதியாக வாழலாம்.
>
> எவரேனும் சின்ன மருதை ஆதரித்து அவருக்கு ஆதரவாகக் கும்பினியை எதிர்த்துச் சண்டையிட்டால் பாஞ்சாலங்குறிச்சியிலும் விருப்பாட்சியிலும் கலகக்காரர்களுக்கு நேர்ந்த கதிதான் அவர்களுக்கும் ஏற்படும்.

ஆசைகாட்டி மோசம் செய்யும் இந்தச் சூழ்ச்சிக்குச் சின்ன மருது சரியான பதிலடி கொடுத்தார். இந்துஸ்தானத்துக்கு ஒரு பிரகடனமும் தென்னிந்தியா வுக்கு ஒரு பிரகடனமுமாகச் செருப்பால் அடித்ததுபோல் வெளியிட்டார். முதலாவது பிரகடனம் ஸ்ரீரங்கம் கோயில் சுவரிலும் அடுத்தது திருச்சினாப் பள்ளிக் கோட்டையிலும் நவாப் அரண்மனை வாசலிலும் ஒட்டப்பட்டன. திருச்சினாப்பள்ளிப் பிரகடனம் இங்கிலீஷில் இந்த அர்த்தத்தில் இருந்தது:

இதைப் பார்ப்பவர்கள் எல்லாரும் கவனமாகப் படிக்கவும்.

ஜம்புத் தீபகற்பத்திலுள்ள ஜம்புத் தீவில் வாழும் பிராமணர் சத்திரியர் வைசியர் துலுக்கர் முதலிய எல்லாச் சாதிக்காரர்களுக்கும் தெரியப்படுத் துவது என்னவென்றால்:

'கனம் பொருந்திய நவாப் முகமது அலி அவர்கள் நம்மிடையே வெள்ளைக் காரர்களுக்கு முட்டாள்தனமாக இடங்கொடுத்துவிட்டதால் இப்போது அவர் ஒரு அறுதலிபோல் ஆகிவிட்டார். வெள்ளையரோ தமது வாக்குறுதிகளை மீறி அவரது சர்க்காரைத் தமதாக்கிக்கொண்டு நாட்டுக்குள் எல்லாரையும் நாய்களாக நினைத்து அதிகாரம் செய்துவருகிறார்கள். உங்களிடையே நட்பும் ஒற்றுமையும் இல்லாததால் வெள்ளையரின் சூழ்ச்சியைப் புரிந்துகொள்ள முடியாமல் உங்களுக்குள் ஒருவரையொருவர் பழிதூற்றிக்கொண்டதோ டல்லாமல் நாட்டையும் அன்னியரிடம் ஒப்படைத்துவிட்டீர்கள். இந்தக் கழிசடைகள் இப்போது ஆளும் சீமைகளெங்கும் மக்கள் மிகுந்த ஏழ்மையில் வாடுகிறார்கள். சோற்றுக்குப் பதிலாக நீராகாரந்தான் சாப்பாடு என்றாகி விட்டது. இப்படித் துன்பப்படுவது தெரிந்திருந்தபோதிலும் துன்பங்கள் எக்காரணங்களால் ஏற்பட்டன என்பதை ஆராய்ந்து பார்க்கவும் புரிந்து கொள்ளவும் முடியாத நிலையில் மக்கள் இருக்கிறார்கள்.

'ஆயிரம் வருசம் ஆயுளாக இருந்தாலும் மனுசன் கடைசியில் இறந்தே ஆகணும். ஆகவே பாளையங்களிலுள்ள ஒவ்வொருவரும் போருக்குத் தயாராகி ஒற்றுமையாகணும். இந்தக் கழிசடைகளின் பேர்கள்கூட நாட்டில் மிஞ்சாமல் செய்யணும். அப்போதுதான் ஏழைகளும் ஏதுமற்று வாடுபவர்களும் பிழைக்க முடியும்.

'அதே சமயம் இந்தக் கழிசடைகளுக்கு ஊழியம் செய்து நாயைப் போல் சொகமாக வாழ ஆசைப்படுகிறவன் எவனாவது இருந்தால் அப்பேர்ப்பட்ட பிறவிகளை ஒழித்துக்கட்டணும்.

'...மீசை வைத்திருக்கும் நீங்கள் எல்லாரும் மற்றும் கழிசடை அன்னியரின் கீழ் ஊழியம் செய்யும் சுபேதார் அவில்தார் நாயக் சிப்பாய் மற்றும் போர்க் கருவிகளைக் கையாளும் எல்லாரும் உங்களுக்கு வீரமிருந்தால் அதை கீழ்க்காணுமாறு வெளிக்காட்டணும்:

'வெள்ளையராகிய இந்தக் கழிசடைகளை எந்த இடத்தில் கண்டாலும் அங்கேயே அழித்துவிடணும். இந்தக் கழிசடைகளுக்கு எவனொருவன் ஊழியஞ் செய்கிறானோ அவனுக்கு இறந்தபின் மோட்சம் கிடையாது. இது உறுதி... இதை ஏற்றுக்கொள்ளாதவன் மீசையிலிருக்கும் பொடிமயிரும் சரி

என் அடிமயிரும் சரி... இதை ஏற்றுக்கொள்ளாதவனுடைய பிள்ளைகள் வெள்ளைக்காரக் கழிசடைகளுக்குத் தன் மனைவியைக் கூட்டிக்கொடுத்தவன் பெற்ற பிள்ளைகளாவார்கள். எனவே உடம்பில் வெள்ளையன் ரத்தம் ஓடாத எல்லாரும் ஒண்ணுசேருங்கள்.

'இதைப் படிப்பவர்களோ கேள்விப்படுபவர்களோ இதில் சொல்லியிருப்பதை சினேகிதர்களுக்கு எழுதிப் பரப்புங்கள். அவர்கள் வேறு சினேகிதர்களுக்கு எழுதட்டும். அவ்வாறு செய்யாதவன் கங்கைக்கரையில் காராம்பசுவைக் கொன்ற பெரும்பாவத்துக்குள்ளாகி நரகத்தில் தண்டனைகளை அனுபவிப்பான். துலுக்கனோ பன்றி ரத்தம் குடித்தவனாகக் கருதப்படுவான்.

'இந்தப் பிரகடனத்தை ஒட்டிய சுவரிலிருந்து கிழித்தெடுப்பவன் பஞ்சமா பாதகங்களைச் செய்தவனாவான். ஒவ்வொருவரும் இந்தப் பிரகடனத்தைப் படித்துப் பிரதியெடுத்துச் செல்லுங்கள். இப்படிக்கு மருதுபாண்டியன் - பெரிய ராசாக்களின் ஊழியன் ஆனால் வெள்ளைக் கழிசடைகளின் ஜென்ம விரோதி.

'ஸ்ரீரங்கத்தில் வாழும் மகானுபவர்களையும் துறவிகளையும் காலடி தொட்டு வணங்குகிறான் மருதுபாண்டியன். ராசாக்கள் கோட்டை கொத்தளங்களையும் வேதக் கோயில்களையும் கட்டிக்காத்தவர்கள். அந்த மகாராசாக்களும் மக்களும் கழிசடைகள் இழைத்த அநீதியால் ஏழ்மை நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டார்கள். உன்னத நிலையிலிருந்த உங்களுக்கு இக்கதி நேர்ந்துவிட்டதே. என்னை ஆசீர்வதியுங்கள்.'

பிரகடனத்தைக் கைப்பற்றிய கும்பினியார் பேதலித்துப்போனார்கள். பெரிய ஆபத்து வருமென அஞ்சினார்கள்.

அஞ்சியது போலவே நடந்தது. கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்களில் கும்பினிக் கப்பல்கள் சரக்குகளை இறக்க முடியாமல் இலங்கைக்குத் திரும்பிச் சென்றன. ஏராளமான விவசாயிகள் விடுதலைப் படைகளுடன் இணைந்து போரிட்டார்கள். பஞ்சத்தால் பாதிக்கப்பட்டவர்கள் நிவாரணம் கிடைக்காமல் ஆயுதமேந்தினார்கள். சுதேசிச் சிப்பாய்களும் நவாப்பின் சிப்பாய்களும் போரிட மறுத்ததால் மேலும் வெள்ளைப் படைகளைக் கொண்டுவர வேண்டிய கட்டாயம் கும்பினிக்கு.

விடுதலைப் படைகளின் வெற்றி கண்டு புதுக்கோட்டை தொண்டைமான் அச்சத்தில் அலறிக்கொண்டிருந்தார். இதுதான் தக்க தருணமென்று கும்பினியார் அவரை வளைத்துப்போடத் திட்டமிட்டார்கள். கேப்டன் பிளாக்பர்ன் புதுக்கோட்டை சென்று அவரிடம் பேசினார்.

''நீங்கள் எங்களுக்கு உதவிசெய்யணும். மருது பழிதீர்த்துவிடுவான் என்று பயப்படத் தேவையில்லை. அப்படி ஏதும் நடக்காமல் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்.''

''அது வந்து...''

''தயங்காதீர்கள். பின்னால் உங்களுக்குக் கிடைக்கப்போகும் மரியாதைகள் நிறைய உண்டு''.

தர்மசங்கடத்தில் முழித்த தொண்டைமானுக்கு ஒரு சாக்குக் கிடைத்தது.

''கொஞ்ச நாள்ல எனக்குக் கலியாணம் நடக்கப்போகுது. அதுக்குப் பெறகு உறுதி சொல்றனே.''

''கலியாணம் நல்லபடியாக நடக்கட்டும். அதுக்குப் பாதகமில்லாமல் எங் களுக்குப் படையனுப்பி உதவுங்கள்.''

தொண்டைமான் வேறு வழியில்லாமல் ஒத்துக்கொண்டார். முத்துக்குமார பிள்ளை தலைமையில் மூவாயிரத்து ஐநூறு பேருக்கு மேல் ஒரு படையை நத்தத்தில் முகாமிட்டிருந்த கர்னல் சார்ல்ஸ் இன்னசுக்குத் துணையாக அனுப்பி வைத்தார். ஈராயிரத்து ஐநூறு பேரை சிவகங்கைக்கு அனுப்பினார். திருமயம் கோட்டையை அக்னியூ ராணுவத் தளமாகப் பயன்படுத்திக்கொள்ள அனுமதித்தார்.

## 10. பேசிப் பிரிந்த கைகள்

சிவகங்கைப் பாளையத்துக்கு நேர்வாரிசாகப் படமாத்தூர் கௌரிவல்லப பெரிய உடையத் தேவரை அங்கீகரித்தது கும்பினி. பட்டாபிசேகத்துக்கு பிராமணர் நாள் குறித்தார்கள். தேவரின் பாதுகாப்புக்காகத் தொண்டைமான் ஐநூறு வீரர் களை அனுப்பியிருந்தார். பட்டாபிசேகத்தன்று தேவர் புத்தாடை அணிந்து மயில்போல் பொலிவுடன் காணப்பட்டார். படைகளுடன் சோழவரம் கோயி லுக்குச் சென்று மதச் சடங்குகளை முடித்தார். அவரது கூடாரம் விழாக்கோலம் பூண்டிருந்தது. முன்புறம் போடப்பட்டிருந்த பந்தலில் முழு உடையுடன் வந்த கர்னல் அக்னியூவையும் சார்லஸ் இன்னசையும் அவர் அன்புடன் வரவேற்றார். அக்னியூ அவருக்கு அருமையான உடையைப் பரிசளித்தார். அவரது சகோதர ருக்கும் ஒரு உடை கிடைத்தது. சற்று நேரம் கூடாரத்துக்குள் அமர்ந்து அளவளா வினார்கள்.

அம்பாரி யானை முன்னால் நின்றது. அதுக்குப் பின்னால் வாத்தியக் குழு. அடுத்து குதிரைப் படை அணிவகுத்து நின்றது. தேவரும் சகோதரரும் அக்னியூ கொடுத்த அலங்கார உடையணிந்து வெளியே வந்தார்கள். வாழ்த்தொலி விண்ணை முட்டியது. ராணுவ வாத்தியங்களும் உள்ளூர் வாத்தியங்களும் சேர்ந்து புதிய இசையை இசைத்தன. நாகசுரமும் மேளமும் மற்ற வாத்தியங்களை அமுக்கி வாசித்தன.

வலப்புறமாக அக்னியூவும் இடப்புறமாக இன்னசும் சிவகங்கை ராசாவைக் கைப்பிடித்து அழைத்துவந்து பந்தலுக்கு முன்னால் கம்பள விரிப்பில் கம்பீரமாக நின்ற அரியாசனத்தில் அமர வைத்தார்கள். ராசாவின் சகோதரர் இடப்புறம் அமர்ந்தார். அவர்களுக்கெதிரே அரைவட்டமாகப் போடப்பட்ட நாற்காலிகளில் அதிகாரிகள் அமர்ந்தார்கள்.

ரெம்ப நேரம் ஒரு உறுத்தலான அமைதி நிலவியது. ஒரு ஊழியர் எழுந்து சர்க்காரின் பிரகடனத்தை உரக்கப் படித்தார். அதாவது பெரிய உடையத் தேவரை சிவகங்கை ராசாவாக நியமித்த சாசனத்தை வாசித்து அக்னியூவிடம் கொடுத்தார். அவர் அதை வாங்கி மடித்து வாழ்த்திப் பேசிவிட்டு ராசாவிடம் கொடுத்தார். ராசா உணர்ச்சி பொங்க நன்றி தெரிவித்து நயமாகப் பேசினார்.

பதினோரு சுடுவெடிகள் வெடித்தன. இரு கர்னல்களும் ராசாவை யானை அம்பாரிமீது ஏற்றினார்கள். அதிகாரிகள் அணிவகுத்து நிற்க குதிரைப் படை வீரர்கள் உருவிய வாளுடன் பின்னால் சூழ்ந்திருக்க நடுவில் யானை நடக்க மேல் வாக்கில் வளைந்த குழல்கள் வாழ்த்த ஊர்வலம் புறப்பட்டது. குழலோசையைத் தொடர்ந்து பல குரலோசை வாழ்த்தியது. ஊர்வலம் கோயிலையும் கூடாரத்தையும் சுற்றிவிட்டுப் பழைய இடத்துக்கே வந்தது. கர்னல்கள் ராசாவைப் பந்தலுக் கடியில் அழைத்துச் சென்றார்கள். அவர் முகத்தில் நன்றி பொங்கியது. கன்னத்தில் கண்ணீர் வடிந்தது. உணர்ச்சியை அடக்க முடியவில்லை. திடீரென எழுந்து அக்னியூவுக்கு முன்னால் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கணுக்காலைத் தழுவிக் கொண்டார். அவரது சகோதரர் இன்னசின் காலில் விழுந்தார்.

வெல்ஷுக்கு ஆச்சரியம். பதவிக்காக இப்படியெல்லாம் நடப்பதுண்டா. எல்லாவற்றையும் அமைதியாகக் கவனித்துக்கொண்டிருந்தார்.

விழா முடிந்து அதிகாரிகள் விடைபெற்று வந்து ஓய்வெடுத்தார்கள். வெல்ஷின் மனசு ஓயவில்லை. இனம் புரியாத வருத்தம். அன்று மாலை ராசா மரியாதை நிமித்தம் கர்னல்களின் பாசறைக்கு வந்து சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பினார்.

கஷ்டப்பட்டுக் கட்டிக் காத்த பாளையத்தை கும்பினியார் அநியாயமாகப் பறித்து இன்னொருவரிடம் கொடுத்துவிட்டார்களே என்று பெரிய மருது ரெம்ப வருந்தினார். அப்போது அவர் மனைவியுடன் அரசனேந்தலில் தங்கியிருந்தார். ஊமைத்துரையுடன் சேராமல் சற்று ஒதுங்கியிருந்ததால் கும்பினியார் அவருக்கு அல்லல் கொடுக்கவில்லை.

வேலு நாச்சியாருக்குப் பிறகு அவருக்கு அஞ்சு மனைவிகள். வேட்டை விளையாட்டு என்று உல்லாசமாக வாழ்ந்தவர். சின்ன மருதைத் தேடிப் பிடித்துக் கொல்வதற்காகக் கும்பினி வீரர்கள் வேட்டை நாய்களாக அலைந்தார்கள். இந்தக் கலக்கம் வேறு. அல்லல் தாளாமல் பெரிய மருது மனசுடைந்து நிலை குலைந்துபோயிருந்தார்.

சின்ன மருது எதுக்கும் கலங்கவில்லை. நம்பி வந்த ஊமைத்துரையைக் கைவிட விரும்பவில்லை. போரில் வென்றால் அந்த வீரருடன் சேர்ந்து கொண் டாடலாம். தோற்றால் அவருடன் சேர்ந்து உயிர் துறக்கலாம். இதுதான் முடிவு. இந்த முடிவை அண்ணனிடம் தெளிவாகத் தெரிவித்துவிட்டார். இதில் அண்ண னுக்குக் கொஞ்சம் வருத்தந்தான்.

பெரிய உடையத் தேவரை அரியணை ஏற்றியதால் கும்பினிக்குப் பெரிய ஆதாயம் கிடைத்தது உண்மைதான். மருது சகோதரர்களை ஆதரித்துவந்தவர் களில் பலர் இப்போது அணிமாறி உடையத் தேவர் பக்கம் சாய்ந்தார்கள் அல்லது மருதுக்களித்த ஆதரவை விலக்கிக்கொண்டு வாளாவிருந்தார்கள். விடுதலைப் படைகள் நாளுக்கு நாள் வலுவிழக்கத் தொடங்கின.

கும்பினிப் படைகளில் பலர் போரில் மடிந்தார்கள். இன்னும் பலரைக் கொள்ளைநோய் கொண்டுபோய்விட்டது. இருப்பினும் எங்கிருந்தாவது படை களைக் கொண்டுவந்து இழப்பை ஈடுகட்டிக் களத்தில் போரிட்டுக்கொண்டே யிருந்தார்கள்.

சின்ன மருதின் சிறுவயல் கைவசமாகும்போது அங்கே குடியிருந்த மக்களே ஊருக்கு நெருப்பு வைத்துவிட்டு ஓடிவிட்டார்கள். சிறுவயலிலிருந்து காளையார் கோயில்வரை அடர்ந்திருந்த காடுகளுக்குள் விடுதலைப் படைகள் ஒளிந் திருந்தன. காடுகளை வெட்டி வெட்டவெளியாக்கிவிட்டால் அவர்களை அழிப்பது எளிது. கும்பினிப் படைகள் அந்த முயற்சியில் இறங்கின. சிவகங்கைப் பாளையம் இப்போது கும்பினி கையில் இருந்ததால் சனங்கள் அச்சமின்றி உதவி னார்கள். காட்டை மூணு திசையிலிருந்தும் முற்றுகையிட்டார்கள். ரெண்டு மாசம் முற்றுகை தொடர்ந்தது. தேடியலைந்து மனுசருக்கும் மாடு குதிரைகளுக்கும் தீவனம் கொண்டுவருவதற்கு வேறு போராடவேண்டியிருந்தது.

விடுதலைப் படையினர் காடுகளுக்குள் அங்குமிங்கும் போக்குக்காட்டிப் போரிட்டார்கள். கடைசியாகச் சின்ன மருதும் ஊமைத்துரையும் சொற்ப வீரர் களுடன் பதுங்கியிருக்கும் இடத்தைச் சரியாக கும்பினிப் படையினர் ஒரு துலுக்கர் மூலம் ஒற்றறிந்து சூழ்ந்துகொண்டார்கள். சின்ன மருதைப் பிடித்துக் கொடுத்தால் பத்தாயிரம் வராகன் சன்மானம் கிடைக்குமே. எல்லாருமே சன் மானத்தின்மீது கண்ணாக இருந்தார்கள். வெளியிலிருந்து காட்டுக்குள் எப்பண்ட மும் சென்று விடாமல் கும்பினியார் ராவெல்லாம் கண்காணித்தார்கள்.

பேசிய கைகள் பிணைத்துக்கொண்டு கெஞ்சின. ஊமைத்துரை வென்று விட்டார். பிரியும்போது இருவரும் தழுவிக்கொண்டது நிழலாகத் தெரிந்தது. அழுதது தெரியவில்லை. ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் கொட்டக்கொட்ட முழித்திருக்கும் கும்பினியார் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டுத் தப்பிச் சென்று விட்டார்கள்.

மறுநாள் காலை காட்டுக்குள் வழியமைத்துக்கொண்டு புகுந்தபோது எந்த எதிர்ப்புமில்லாமல் சின்ன மருது உட்பட அங்கிருந்த அறுபத்துநாலு பேரும் பிடிபட்டார்கள். சின்ன மருது துணைச் சேவகர்களால் சுட்டுக் காயப்படுத்தப் பட்டுக் கிடந்தார். பிடிபட்டவர்களில் இருபத்திநாலு பேர் பாஞ்சையர். நாற்பது பேர் சின்ன மருதைச் சார்ந்தவர்கள். பாஞ்சையர் கமுதிக் கோட்டையிலும் மற்ற நாற்பது பேர் திருப்பத்தூர் கோட்டையிலும் சிறைவைக்கப்பட்டார்கள்.

அக்னியூவுக்கு ஊமைத்துரையை அடையாளம் தெரியாது. அதனால் ஊமைத் துரையும் பிடிபட்டுவிட்டதாக நினைத்து எக்காளமிட்டார். பிறகுதான் தெரிந்தது அவர் தப்பிவிட்ட சங்கதி. ஏமாற்றத்தில் கையைப் பிசைந்தார்.

சாமத்துக்கு மேலிருக்கும். தவிப்புக்குத் தீர்வு கண்டிருந்த ஊமைத்துரை சின்ன மருதைத் தனியாக அழைத்துப் போனார். இருவரும் சைகையால் பேசிக் கொண்டார்கள். ஊமைத்துரை உருக்கமாகச் சொன்னார்.

''என்னாலதான ஒங்களுக்கு இவ்வளவு தொந்தரவு. ஒங்களோட நானும் புடிபட்டா கும்பினிக்காரன் ஒங்களச் சும்மா வுட மாட்டான். நான் இல்லன்னா ஒங்கள வுட்ருவான். சமாதானமாகிப் பழையபடி பாளையத்த வாங்கிக்கிட்டுச் சந்தோசமா இருங்க. நான் என் வழியப் பாத்துப் போறென்''.

மருது துடித்துப்போனார்.

''ஒங்கள மட்டும் எப்படித் தனியா வுடுறது. அது துரோகமில்லையா. எல்லாரும் சேந்தே செத்துமடிவொம்.''

''என்னால நீங்க ஏன் சாகணும். நான் போயிட்டா எல்லாம் சரியாயிரும். என்னப் பத்திக் கவல வேணாம். நான் போறதுக்கு அனுமதி குடுங்க.''

சில நாளில் சின்ன மருதையும் பல வீரர்களையும் திருப்பத்தூர்க் கோட்டையில் பகிரங்கமான இடத்தில் தூக்கிலிட்டார்கள். மருதின் தலையைத் துண்டித்து காளையார்கோயிலில் நட்டிவைத்தார்கள்.

## 11. காளேசுரா

பெரிய மருதைக் குறிவைத்து வேட்டையாடினார்கள். தப்பித்துவிடுவார் என்பதால் ஓட முடியாமல் தொடையில் சுட்டு முடக்கினார்கள். விசாரணை நடத்திய அக்னியூ அவருக்குத் தூக்குச் சொன்னார். கடைசியாக அவர் மரண வாக்குமூலம் கொடுத்தார்:

ஈஸ்டு இந்தியா கம்பெனி கவர்ண்மெண்டின் சேனாதிபதியாகிய கர்னல் அக்னியூ துரை அவர்கள் முன்பாக, சிவகங்கை ஜமீன்தார் வெள்ளை மருது சேர்வைக்காரர் அவர்கள் சொன்ன மரண வாக்குமூலம் :

(1) என்னுடைய ஜமீன் வேலு நாச்சியாருக்குப் பாத்தியமாக இருந்தது. மேற்படியாளை நான் கலியாணம் செய்து கொண்டு அவள் மூலமாக மேற்படி சிவகங்கை ஜமீனை அனுபவித்துவருகிறேன். என்னைத் தவிர வேறு யாதொருவருக்கும் இதில் பாத்தியமில்லை.

(2) 1773-ல் உயில் சாஸனம் பெற்று மத்தூர் நவாப் அவர்களால் மேற்படி ஜமீனை ஜப்தி செய்து ஏலமாக்கிய பணத்தை நான் கட்டி ஏலத்தை நீக்கி அனுபவித்துவருகிறேன். என்னைத் தவிர வேறு யாரொருவருக்கும் இதில் பாத்தியமில்லை.

| | | |
|---|---|---|
| (3) | தேவஸ்தானம் | (க) |
| | பண்ணை | (உ) |
| | கொள் கிரயம் | (ரு) |
| | சேறுதட்டு | (சு) |
| | ஆயம் | (ரு) |
| | சுங்கம் | (சு) |
| | சாயவேல் | (எ) |
| | உப்பளம் | (அ) |
| | சத்திரங்கள் | (கூ) |
| | மடம் | (ய) |

இவைகள் எல்லாம் என்னால் கிரயத்துக்கு வாங்கப்பட்டன. நானே அனுபவித்துவருகிறேன். சொத்துக்கள் எல்லாம் யாருக்கும் எவ்விதமான பாத்திய மும் கிடையாது. நானும் என் வாரிசுகளுமே என்றும் உரிமையான பாத்திய முடையவர்கள்.

(4) மேலே கண்ட சொத்துக்களை என் சுயார்ஜிதமாய்க் கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருக்கிறேன். என் வாரிசுகளுக்கே கொடுக்க வேண்டியது. நான் பாஞ் சாலங்குறிச்சி கட்டபொம்முதுரைக்கும் ஊமைத்துரைக்கும் உதவி செய்ய வில்லை, இடம் கொடுக்கவும் இல்லை.

(5) என்னால் கட்டப்பட்டிருக்கிற சத்திரங்களுக்கும் கோவில்களுக்கும் ஆலயங்களுக்கும் விடப்பட்டிருந்த தருமாஸனங்களும், மற்றவர்களுக்கும் கொடுத்திருக்கிற தஸ்தாவேசுகளில் கண்ட சொத்துக்கள் யாவும் அவரவர்களே அனுபவிக்கும்படி செய்ய வேண்டியது.

(6) என் தம்பி சின்ன மருது சேர்வைக்காரருக்கும் எனக்கும் தாய் ஒன்று தகப்பன் இரண்டு. மேற்படியாருக்கு ஜமீனில் யாதொரு பாத்தியமும் இல்லை. மேற்படியானை மானேஜராக வைத்திருந்தேன். அவன் பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மு ஊமைத்துரைகளுக்கு அடைக்கலம் கொடுத்துக் காத்ததாகச் சொல்லுகிறதைத் தவிர எனக்கு யாதொன்றும் தெரியாது.

(7) நான் கிஸ்தி பாக்கியை நிறுத்தாமல் செலுத்திவந்திருக்கிறேன். என் தம்பி சின்ன மருது சேருவைக்காரனை மூன்று நாளைக்குமுன் தாங்கள் தூக்கி விட்டதாலும் என்னைத் தூக்காமல் நிறுத்தி வைக்கக் கூடாது. நான் யாதொரு பாவமும் தெரியாதவனாயிருந்தும் கம்பெனியாருக்கு யாதொரு பொல் லாங்கும் செய்யாதவனாயிருந்தும் என்னை வலது தொடையில் துப்பாக்கியால் சுட்டுவிட்டதினால் என்னையும் தூக்கிலிடவேண்டியது அவசியமாயிருக்கிறது.

(8) அப்படிச் செய்யாத பட்சத்தில் தர்மசாஸ்திரத்திற்கு ஏற்காது நான் கழுத்தில் கயிறு போட்டுக்கொள்ளுகிறேன் சிவபெருமானே! கேள்க்கவும். கம்பெனி யாரவர்கள் என்னை அனியாயமாய்த் தூக்குகிறபடியால் என்னுடைய ஜமீன் பூராச் சொத்துக்களை வேறே யாருக்காவது கொடுத்தாலும் ஜமீனை ஆளுகிற எவர்களும் விருத்தியடையாமல் போவார்களாகவும் சிவபெருமானே நீ வரம் கொடுக்கவேண்டியது.

(9) என்னுடைய வாரிசுகளைத் தருவித்து என் ஜமீனைக் கொடுக்கவேண்டும். என்னுடைய ஜமீன் சொத்துக்கள் யாவும் என் சந்ததிகளுக்குக் கொடுத்துவிடுவ தாகவும், நான் செய்திருக்கிற தரும நிலையங்களுக்கு நான் ஏற்படுத்தி யிருக்கிற பிரகாரம் யாவும் ஒழுங்காக நடத்தி வருவதாகவும் நீங்கள் இப் பொழுது எனக்கு உறுதிமொழி தரவேண்டும். அதற்கு அத்தாட்சியாகக் கவர் மெண்டு கத்தியைப் போட்டுத் தாண்டித் தாங்கள் சத்தியம் செய்து தரவேண் டியது. இது சத்தியம்.

(10) என் வாரிசுகளின் விவரம்: எனக்கு முதலாவது பெண்சாதி பெயர் ராக்காத்தாள். அவள்தான் பட்டஸ்திரி. அவளுக்கு ஒரு மகள் உண்டு. அவளுடைய பெயர் மருதாத்தாள்.

(11) நானும் என் மூத்த சம்சாரமும் சிறுவயலில் இருந்தோம். அவள் பிரசவத் திற்காக அவளுடைய தகப்பனார் ஊராகிய அரசனேந்தல் அரண்மனையில் போயிருக்கிறாள். போய் மூன்று மாத காலம் ஆகிறது.

(12) இரண்டாவது பெண்சாதி பெயர் கருப்பாயி ஆத்தாள். மேற்படியாளுக்குக் கருத்தையா என்று ஒரு மகனும், கண்ணாத்தாள் என்று ஒரு பெண்ணும்

உண்டு. இரண்டுபேருக்கும் சந்ததி இல்லை. அவள் முத்தூர் அரண்மனையில் இருக்கிறாள்.

(13) மூன்றாவது பெண்சாதி பெயர் பொன்னாத்தாள். அவளுக்குச் சந்ததி இல்லை.

(14) நாலாவது பெண்சாதி பெயர் ஆனந்திபாய். அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு.

(15) ஐந்தாவது பெண்சாதி பெயர் மீனாக்ஷியாத்தாள் அவள் அன்னிய ஜாதி. அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு. அவள் இப்பொழுது கவுண்டன் பேட்டை அரண்மனையில் இருக்கிறாள்.

(16) எனக்கு சிவகங்கை ஜமீனை உயில்சாசனம் செய்து கொடுத்த முதல் பெண்சாதி வேலு நாச்சியார் இறந்து ஒரு வருஷம் ஆகிறது. அவளுக்குச் சந்ததி இல்லை.

(17) என்னுடைய வாரிசுகளை கம்பெனியார்களாவது எனக்கு விரோதிக ளாவது யாதொரு இம்சையும் செய்யாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். முருகன் துணையாகவும் ஆகாசவாணி பூமிதேவி சாட்சியாகவும் நான் என் கழுத்தில் கயிறு போட்டுக்கொள்கிறேன்.

மேலே சொன்னபடி தாங்கள் கத்தியைப் போட்டுச் சத்தியம் செய்துகொடுத் ததை நான் நேரில் பார்த்துக்கொண்டேன்.

(இப்படிக்கு ஒப்பம் மருது சேர்வை)

அவர் காளையார்கோயிலில் தூக்கிலிடப்பட்டார். ‘‘காளேசுரா’’ என கடவுளைத் துணைக்கழைத்தபடி உயிர் பிரிந்தது.

## 12. பிராயச்சித்தம்

மருது சகோதரர்களின் பரிதாப முடிவு கண்டு வெல்ஷின் மனசு அழுதது. அடடா எப்பேர்ப்பட்ட மனுசர்கள். அன்புச் சினேகிதர்கள். பெரிய மருது பெரிய விளையாட்டு வீரர். வேட்டைப் பிரியர். மலைக்க வைக்கும் உடல்கட்டு. ஆர்க் காட்டு ரூபாய் நாணயத்தை விரல்களாலேயே வளைத்துவிடும் வல்லமை கொண்டவர். ராச்சிய பரிபாலனத்தில் பிடிப்பில்லாத யாத்ரீகர். எப்போதாவது தஞ்சாவூர் திருச்சினாப்பள்ளியிலுள்ள வெள்ளைக்காரச் சினேகிதர்களைச் சந்திக்கச் செல்வார். அவர்கள் அவர்மீது மிகுந்த மரியாதை வைத்திருந்தார்கள். வீரவிளையாட்டுக்கள் எங்கு நடந்தாலும் முதல் ஆளாகக் கலந்துகொண்டு வெற்றிவாகை சூடுவார். வேங்கைப்புலி தென்பட்டாலோ விருந்தாளிக்கு ஆபத்து வந்தாலோ துணிந்து முன்னின்று எதிர்ப்பார்.

உண்மையில் சின்ன மருது கையில்தான் சிவகங்கைச் சீமை இருந்தது. கரிய நிறமானாலும் கட்டுக்கோப்பான உடல். அழகானவர். அன்பானவர். யாரும் அவரை எளிதில் அணுகலாம். அவர் தலையசைத்தால் மக்களுக்கு அது சட்டம்.

அப்படியிருந்தும் திறந்தவெளி அரண்மனையில் வசித்தார். ஒரு மெய்க்காப்பாளன் கூடக் கிடையாது.

முன்பு ஒரு முறை சிறுவயலுக்குப் போயிருந்தபோது அன்புடன் உபசரித்தார். பார்த்த மாத்திரத்திலேயே சினேகிதராகிவிட்டார். மதுரையில் தங்கியிருந்தபோது அருமையான அரிசியும் பழங்களும் அனுப்புவார். வேறெங்கும் பார்த்திராத அந்தச் சுவையான ஆரஞ்சுப் பழத்தை மறக்க முடியுமா. ஈட்டியும் களரியும் எறியக் கற்றுத்தந்த வீரர்.

அப்பேர்ப்பட்ட மகாமனுசனைப் போர் என்ற கொடிய விதியால் விலங்கு போல் துரத்த வேண்டிய நிலை. படுகாயப்பட்ட கோலத்தில் சேவகர்களிடம் பிடிபட்டார். தொடை முறிந்து நொண்டியபடி சிறைக்குள் நடமாடினார். கடைசியில் பல வீரர்களுடன் தூக்குமரத்தில் தொங்குவதைப் பார்க்க வேண்டிய பரிதாபம். அவருக்கு முன்னால் ஒரு எதிரியாக நின்றதை நினைத்தாலே வெட்கமாக இருந்தது. அழுகையை அடக்க முடியவில்லை.

காளையார்கோயில் காடுகளிலிருந்து தப்பிச் சென்ற ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் கன்னிவாடிப் பகுதியில் பதுங்கியிருப்பதாகச் சேதியறிந்த கும்பினிப் படைகள் விரைந்தோடித் துரத்தின. விடுதலைப் படைகள் வெறிகொண்டு எதிர்த்தன. மூணு நாளாக நெடுந்தூர ஓட்டம். மூர்க்கமான சண்டை. ஓய்வு உணவின்றி ஓடிய விடுதலை வீரர்களில் பலர் பட்டினியால் சுருண்டு மாய்ந்தார்கள். பலர் சண்டையில் மாய்ந்தார்கள். இறுதியில் வத்தலக்குண்டருகே ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் மிஞ்சியிருந்த வீரர்களுடன் பிடிபட்டார்கள். இருபத்திநாலு முழம்வரை சுழன்று தாக்கி பல தலைகளைக் கொய்த ஊமைத்துரையின் சுருள் வாளால் அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை.

அடுத்து ஸ்ரீவில்லிப்புத்தூரருகே சிவத்தையாவைப் பிடித்தார்கள். பாளையங்கோட்டைச் சிறைமீட்பிலிருந்து இறுதிவரை உடனிருந்து போரிட்ட உறுதியான வீரர்.

இந்த மூவருடன் பல வீரர்களைப் பாஞ்சைக்குக் கொண்டுவந்தார்கள். சனங்கள் இன்னொரு கொடுமைக்குச் சாட்சியாகக் கூடியிருந்தார்கள். பீரங்கி மேட்டில் வரிசையாகத் தூக்குமரங்கள் நின்றன. மரங்களினடியில் மனந்தளராது நின்ற வீரர்கள் கடைசியாக முழங்கினார்கள்.

''வேலும் மயிலும் துணை''.

ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் அஞ்சா நெஞ்சராக அதே கம்பீரத்துடன் தூக்குக் கயிற்றைத் தழுவினார்கள். கொஞ்ச நேரத்தில் எல்லா வீரர்களும் துடிதுடித்து நாக்குத் தள்ளிப் பிணங்களாகத் தொங்கினார்கள். சனங்களின் அழுகையையும் புலம்பலையும் ஆற்றும் முயற்சியாகப் பிணங்கள் மெல்ல அசைந்துகொண்டிருந்தன.

வெல்ஷ் பாழ்நிலத்தை விரக்தியுடன் வெறித்துப் பார்த்தார். ஒரு காலத்தில் சிம்மசொப்பனமாக நின்றிருந்த அந்தக் கோட்டையைக் காணவில்லை. கண்ணுக்கெட்டியமட்டும் தோழர்களின் கல்லறைகள் மட்டுமே எஞ்சியிருந்தன.

சிவகங்கைச் சீமையில் சிதறுண்ட கும்பினிப் படைகள் பாளையங்கோட்டைக்குத் திரும்பின. தூத்துக்குடியைப் பாதுகாக்க வெல்ஷ் அனுப்பப்பட்டார். தீவாந்திரம் போக வேண்டிய வீரர்களைத் தூத்துக்குடியிலிருந்து கப்பலேற்றி அனுப்புவது அவருக்கு முதல் வேலையாக இருந்தது.

வெள்ளையரை எதிர்த்த விடுதலை வீரர்களில் எழுபத்திமூணு பேரை பினாங்கிலுள்ள வேல்ஸ் தீவுக்கு அனுப்ப ஆணையிடப்பட்டிருந்தது. எதுக்குந் தளராத வீரர்கள். அவர்களில் சின்ன மருதின் இளைய மகன் துரைச்சாமியும் ஒருவன். மருது வம்சத்தில் மிஞ்சியிருக்கும் ஒரே கொழுந்து. பதினஞ்சு வயசு. வெல்ஷின் தனிப்பட்ட பொறுப்பில் விடப்பட்டிருந்தான்.

தன் சிநேகிதரின் மகனைக் கவனித்துக்கொள்வதில் அவருக்கு ஆத்ம திருப்தி. அவனைப் பிணைத்திருக்கும் விலங்குகளை அகற்றி நல்ல உணவளித்தார். அரண்மனை உடையணிந்து இளவரசனாக மாறியிருந்தான். இருந்தாலும் அவன் முகத்தில் ஒரு இனம்புரியாத சோகம் படர்ந்திருந்தது. அவனுக்கு எல்லா உதவி யும் அளித்து அவர் பிராயச்சித்தம் தேடிக்கொண்டார்.

கைதிகளைக் கடத்திச் செல்ல கப்பல் வந்தது. அவர்கள் கப்பலை அடைவதற் காகப் படகில் ஏறிக்கொண்டார்கள். வெல்ஷ் துரைச்சாமியை வாஞ்சையுடன் அழைத்துவந்து படகுக்குள் பத்திரமாக இறக்கிவிட்டார். அவன் முகத்தில் பாச மும் அவநம்பிக்கையும் கலந்த உணர்வு. வீரர்களிடையே அமைதியான சோகம் நிலவியது. தாய்மண்ணைப் பிரியும் தாளாத சோகம்.

உறவு அறுந்துபோகும் தருணத்தில் வெல்ஷுக்குள் துக்கம் பொங்கியது. அலைகளைக் கிழித்துக்கொண்டு விடுதலை வீரர்களைச் சுமந்து செல்லும் கப்பல் அவரது நீர்ப்படலமிட்ட பார்வையில் கொஞ்சங்கொஞ்சமாக மங்கி மறைந்தது.

## படலம் 10

### 1. தகர்ந்தது பாளையம்

எட்டயாபுரத்தாரின் விசுவாசத்துக்கு ஏராளம் சன்மானம் கிடைத்தது. பாஞ்சைப் பாளையத்தின் ஆறு வணிதங்களைச் சேர்ந்த கிராமங்கள் எட்டயா புரத்துக்கு மாற்றப்பட்டன. இது தவிர தொட்டில் பல்லாக்கு தங்கக் கலசம் வைத்த கூடாரம் யுத்த பேரிகை பாவட்டா இன்னும் பல பொருட்கள் துருப்புக் குதிரைகள்... எட்டயாபுரம் மேலும் செழித்தது.

பேரூருணி வணிதம் மணியாச்சிப் பாளையத்துக்குக் கிடைத்தது. அந்தப் பாளையம் போரில் எப்பக்கமும் சேராமல் இருந்ததுக்கு வெகுமதி. தூத்துக் குடியிலிருந்து தெற்கே உள்ள உப்பளம் முதலிய சீமைகள் அனைத்தும் கும்பினிக்குச் சொந்தமாகின.

வீரம் விளையாடிய பாஞ்சைக் கோட்டை இருந்த இடத்தில் எழுபது ஏர்கள் உழவாடின. மானம்பாரி நிலமாக்கி ஆமணக்கு விதைத்தார்கள். அப்படியும் கோட்டைச் சுவடு அறவே அழியவில்லை. வரைபடத்திலிருந்தும் பிற தஸ்தா வேஜுகளிலிருந்தும் பாஞ்சாலங்குறிச்சி என்ற பேர் அகற்றப்பட்டது. கட்ட பொம்மு வம்சத்தையே கருவறுத்துவிட்டதாக கும்பினியார் மார்தட்டினார்கள்.

சனங்கள் பாஞ்சையரை வாஞ்சையுடன் மனசில் குடியமர்த்தி வழிபட் டார்கள். காடுகரையில் பாடுபடும்போது அவர்களின் வீர வரலாறு பாட்டாக

ஓங்கியொலித்தது. அந்தப் பாட்டில் கயத்தாறு கட்டைப் புளியமரத்தில் கட்ட பொம்மு தொங்கினார். ஊமைத்துரை வெள்ளையரை உள்ளங்கையில் வைத்துக் கசக்கி ஊதினார். வெள்ளையம்மா தான் கண்ட பொல்லாத சொப்பனத்தைச் சொல்லியழுதாள். பாதர்வெள்ளை வெள்ளையரை வெட்டிச் சாய்த்துக் குலவை யிட்டார். காலாடிக் கருப்பனும் கந்தன் பகடையும் வாளேந்தி வெள்ளைய ருடன் போராடி விழுந்து மடிந்தார்கள். சுந்தரலிங்கத்தின் பேய்க்குதிரை ஓட்ட ரங்காடு ஒடங்காடு தாண்டி ஓடி கும்பினியாருடன் போரிட்டது. முத்தன் பகடையும் பொட்டிப் பகடையும் வீரவிளையாட்டு விளையாடினார்கள். முத்திருளி தன் வயிற்றில் பிறக்காத மகனைக் காப்பாற்ற ஒப்பாரி வைத்தாள்.

எங்கோ ஒரு மூலையிலிருந்து கொடுமைக்கு விடிவு தேடி தெய்வத்தை மன்றாடும் குரல் வறண்ட கரிசல் பூமியெங்கும் எதிரொலித்தது.

''எலந்த முள்ளால கோட்டக்காரி
ஏறிட்டுப் பாரம்மா சக்கதேவி - தாயே
ஏறிட்டுப் பாரம்மா சக்கதேவி.''

கும்பினியார் பாளையங்களுக்குப் பதிலாகச் சமீன்களை உண்டாக்கினார்கள். எட்டப்ப ராசா சமீன்தாராகிவிட்டார். சமீனுக்கு வருமானம் பெருகி வளமாகியது. என்னதான் செல்வச் செழிப்பிருந்தாலும் ராசாவுக்கு மனசில் நிம்மதியில்லை. இந்த ஏற்றத்தைப் பெற எத்தனை உயிர்கள் பலியாகியிருக்கின்றன. எட்டயா புரத்துப் படைகளில் வலிமை மிக்க தளபதிகளெல்லாம் மாண்டுபோனார்கள். முத்துப் பிள்ளை சுப்பையா பிள்ளை சொக்கர் பெத்தணன் முத்துக்குமாரு மாப் பிள்ளை குமாரசாமி நாய்க்கர் சின்னச்சாமி நாய்க்கர் ராமனூத்து பெத்தணன் தவசி ராமநாதன் செகவீரெட்டு. இப்படி முன்னூறுக்கும் மேற்பட்டவர்கள்.

ஒரு வீரனைப் பாஞ்சையர் பிடித்து வைத்துக்கொண்டு ஊமைத்துரையின் பேரைச் சொல்லி வணங்க வற்புறுத்தினார்கள். அவன் மறுத்துவிட்டான். அவனுக்குத் தண்டனை கொடுக்கப்பட்டது. அவனைக் குப்புறப் படுக்க வைத்து முதுகில் வாய்ச்சியாடி சதையைச் சீவியும் சீவாமலும் இருக்கும்போது கேட்டார்கள்.

''எங்க தொரைய வணங்க மாட்டயா.''

அந்த நிலையிலும் அவன் மனசு மாறவில்லை.

''எட்டனத் தொழுத கை கட்டனத் தொழாது.''

வாய்ச்சியாடியே அந்தத் தோக்கலவார் வீரனைக் கொன்றுபோட்டார்கள்.

பாஞ்சையில் போர் மும்முரமாக நடந்துகொண்டிருந்தபோது ஒரு தளபதி படுகாயமடைந்தார். வயசானவர். அந்த நிலையிலும் தன்னை கும்பினித் தளபதி மெக்காலேயிடம் கொண்டுசெல்லுமாறு கூறினார். நாற்காலியில் அமர்த்தித் தூக்கிச் சென்றார்கள். அவர் விறைப்பாக உட்கார்ந்துகொண்டு மெக்காலேயிடம் கொஞ்சமும் தளராத குரலில் சொன்னார்.

''ஒரு பாளையக்காரன் எப்படிச் சாவாங்கிறதத் தொரமாருக்குக் காட்டவே இங்க வந்தென்.''

கன்னம்வரை படர்ந்திருந்த மீசையை இரு கைகளாலும் முறுக்கிக்கொண்டே பேசியபடி ஆனந்தமாக உயிரை விட்டார்.

இதெல்லாம் ரத்த மானியம் கொடுத்து ஈடுசெய்யக்கூடிய இழப்பா. எட்டப்ப ராசாவுக்குள் குற்றவுணர்வு குத்தியது. மன நிம்மதிக்காகப் பல தரும காரியங் களைச் செய்தார். யாகம் நடத்தினார்.

கொஞ்ச காலத்திலேயே அவர் இறந்துவிட்டார். அவர் குமாரர் வெங்கடேசுர எட்டப்ப நாய்க்கர் அய்யன் முப்பத்திரெண்டாம் பட்டத்துக்கு வந்தார். தகப்ப னாரைப் போலவே அவரும் பல நல்ல காரியங்களைச் செய்தார். கோயில் குளம் கிணறு சத்திரம் என சகலத்திலும் அக்கறை காட்டினார்.

ராசாவுக்கு அஞ்சு குமாரர்கள். செகவீரராம குமார எட்டப்ப நாய்க்கர் அய்யன் வெங்கடேசுரெட்டு நாய்க்கர் முத்துச்சாமிப் பாண்டியன் குமாரமுத்துப் பாண்டியன் ராமசாமிப் பாண்டியன். மூத்தவர் முப்பத்திமூணாம் பட்டத்து ராசாவானார். அவர் தம்பிமார்களை அனுசரித்து அரவணைத்துக்கொண்டு நிரு வாகம் செய்தார்.

அவர் காலத்தில் பல முக்கியமான வேலைகள் நடந்தன. கங்கைகொண் டானுக்கருகில் சித்திரா நதிக்குக் குறுக்கே பாலம் கட்டப்பட்டது. அது நாலா ஊர்ச் சனங்களுக்கும் ரெம்ப உதவியாக இருந்தது. அதுபோல் கயத்தாறுக்குச் சமீபத்தில் உப்பாறு ஓடையில் பெரிய பாலம் கட்டப்பட்டது. ராசா செய்யும் நல்ல காரியங்களுக்காக வெள்ளைக்காரத் துரை பாராட்டுக் கடிதம் அனுப்பினார்.

கழுகுமலைக் கோயிலுக்கு நிரந்தர வருமானம் கிடைக்க ராசா ஏற்பாடு செய்தார். பதினஞ்சு கிராமங்களைக் கோயிலுக்குப் பட்டா எழுதிக்கொடுத்து விட்டார். அது தவிர அயன் கிராமங்களில் பங்குவளி நிலங்களிலும் அனேகம் வாங்கிக்கொடுத்தார்.

கோயிலுக்குத் தென்பரப்பில் நாலு திசைகளிலும் ரத வீதிகள் உண்டாயின. தைப் பூசத்துக்கும் பங்குனி உத்திரத்துக்கும் அழகிய தேர்கள் ஓடின. சட்டத்தேர் ரெம்பச் சிறியது. சப்பரம் என்று சொல்வார்கள். சிறுதேர் நடுத்தரமானது. பெருந் தேர் எல்லாவற்றுக்கும் பெரிசு. அது வைரத்தேர். தைப் பூசத்துக்குச் சட்டத் தேரும் சிறுதேரும் ஓடும். சப்பரத்தில் கணபதி முன்செல்ல சிறுதேரில் தம்பி வலம் வரு வார். பங்குனி உத்திரத்துக்குச் சிறுதேரும் பெருந்தேரும் ஓடும். அப்போது கணபதி சிறுதேரில் வீற்றிருப்பார். உற்சவமூர்த்தி பெருந்தேரில் காட்சி தருவார்.

ரத வீதிகளைச் சுற்றியுள்ள வீட்டு மனைகளை ராசா கோயில் சேவகர் களுக்குக் கொடுத்தார். அவரவர் பாட்டுக்கு வீடுகட்டிக் குடியேறினார்கள். படிப் படியாகக் குடியிருப்புக்கள் பெருகின.

தேர் புறப்பட்ட வேகத்தில் எங்கும் நிற்காமல் சுற்றிவர முடியாது. அங்கங்கே நின்று சனங்களுக்கு உற்சவர் தரிசனந் தரணும். அந்த ஏற்பாடாக நாலு ரத வீதி களிலும் ஒன்பது பலிபீடங்களை அமைத்தார்கள்.

பிராமணர் குடியிருக்கும் நடுத்தெருவில் ஒண்ணாம் பீடம். அது பிரமன். நடுத்தெருவும் மேல ரத வீதியும் சந்திக்குமிடத்தில் ரெண்டாவது. அது வருணன். மேல ரத வீதி வடக்கு ரத வீதிக்குத் திரும்புமிடத்தில் வாயு. கோயிலோரம் குபேரன். அப்படியே போய்க் கீழ ரத வீதியில் திரும்பினால் ஈசான மூலையில் அஞ்சாவதாக ஈசான பீடம். கீழ ரத வீதியும் நடுத்தெருவும் சந்திக்குமிடத்தில் இந்திரன். தெற்கு ரத வீதிக்குத் திரும்பும் முனையில் அக்னி. திரும்பிப் போனால் நடுவீதியில் எமன். அதுக்கடுத்து ஒன்பதாவதாக நிருத்தி.

ரத வீதிகள் வந்ததிலிருந்தே ஊருக்குள் தகராறுதான். நாடார்கள் புழுங்கித் தவித்தார்கள். மேல்சாதிக்காரர்கள் தங்களைத் தலையெடுக்க விடாமல் ஒடுக்குவதாக நினைத்தார்கள். முருகன் கோயிலுக்குள் சென்று சந்தோசமாகச் சாமி கும்பிடணுமென்று ஒருகாலத்தில் ஆசையிருந்தது. அதெல்லாம் மனசுக்குள் அமுங்கிவிட்டது. அது இப்போதைக்கு நடக்காது.

தங்கள் தெருவிலுள்ள அனந்தம்மாளைக் கும்பிட்டு ஆறுதலடைந்தார்கள். அஞ்சு வீட்டுக்காரி அனந்தம்மா துடியான தெய்வம். பக்கத்தில் அய்யப்பசாமியும் ஆத்தியப்பசாமியும் குடியிருப்பு. சுத்துப்பட்டிச் சனங்கள் கூட்டங்கூட்டமாக வந்து கிடாய் வெட்டிப் பொங்கல் வைத்துக் கோலாகலமாகக் கொண்டாடுவார்கள். சில நாடார் குடும்பங்கள் கீழ கிரிப்பிராகார வீதியிலுள்ள பிள்ளையாரையும் வணங்கின.

அவர்களுக்குப் பெரிய ஆசையெல்லாம் கிடையாது. குடும்பத்தில் கலியாணம் நடந்தால் பெண் மாப்பிள்ளையைப் பல்லாக்கில் வைத்துத் தெருவீதிகளில் பட்டணப் பிரவேசம் போகணும். மேல்சாதிக்காரர்கள் மாதிரி. ரத வீதிகளில்தான் வர விடாமல் தடுக்கிறார்கள். பக்கத்திலுள்ள கீழ கிரிப்பிராகார வீதியிலாவது விடலாமில்லையா. எத்தனை காலத்துக்கு ஒடுக்கமான சொந்தத் தெருக்களையே சுற்றிவருவது.

எத்தனையோ வழிகளில் முயற்சி செய்துபார்த்தார்கள். மேல்சாதிக்காரர்கள் ஒண்ணுசேர்ந்து முறியடித்துவிட்டார்கள். இதனால் அப்பப்பச் சச்சரவு வந்தது. நாடார்கள் சளைக்கவில்லை. அதே குறியாக இருந்தார்கள்.

கடுங்கோடையில் தண்ணீர்ப் பஞ்சம் ஊரையே வாட்டியெடுக்கும். குடி தண்ணீருக்காகச் சனங்கள் அலைமோதுவார்கள். மேல்சாதிக்காரர்களுக்கு ஈடு கொடுக்க கோயில் தெப்பம் உண்டு. நாடார்கள் பாடு திண்டாட்டம். அவர்கள் தெப்பத்துப் படியை மிதிக்க முடியாது. பெண்கள் அங்கலாய்த்தார்கள்.

''தவிச்ச வாய்க்குத் தண்ணி குடுக்காற பாவிக. வெளங்காமப்போயிருவான்.''

பல்லாக்கைப் போலவே தண்ணீர்த் தகராறும் புகைந்துகொண்டிருந்தது. நாடார்கள் கீழக்குளக் கிணறு அப்படி இப்படி அலைந்து சமாளித்தார்கள்.

ஒரு சமயம் சில நாடார்கள் முருகன் கோயிலுக்கு மேற்கே வடக்கு மூலையில் கிரிவலப் பாதையை ஒட்டி சின்னச்சின்ன வீடு உண்டாக்கினார்கள். மேல்சாதிக்காரர்கள் அதைப் பிரித்தெறிந்துவிட்டார்கள். அதோடு நிற்கவில்லை. எட்டப்ப ராசாவிடம் அடிக்கடி ஆவலாதி சொன்னார்கள்.

ஒரு தை மாசம். நாடார் தெருவில் கலியாணம். என்ன ஆனாலும் சரியென்று பல்லாக்கில் பட்டணப் பிரவேசம் கிளம்பிவிட்டார்கள். ஏகப்பட்ட கூட்டம். ஆட்டம்பாட்டம். பல்லாக்கு கீழ ரத வீதியை நோக்கி வருவதைப் பார்த்து மேல்சாதிக்காரர்கள் கொதித்துப்போனார்கள். திரண்டு வந்து கூச்சல் போட்டு மிரட்டினார்கள். நாடார்கள் நிலைமையை அனுசரித்துப் பின்வாங்கிவிட்டார்கள்.

சேதியறிந்த ராசாவுக்குக் கவலை. நிலைமை இப்படியே போனால் என்னாவது. ஒருநாள் வெடித்துவிடுமே. அரண்மனைக்குத்தானே கேவலம். இரு தரப்பையும் கூப்பிட்டு விசாரித்து ஒரு உத்தரவு போட்டார்.

''நாடார் வீட்டுப் பெண்ணும் மாப்பிள்ளையும் நாடார் தெருவிலிருந்து பிள்ளையார் கோயில்வரை பல்லாக்குல போகலாம். கோயில்ல சாமி கும்புட்டுட்டுத் திரும்பீறணும். அதத் தாண்டி வரக்கூடாது.''

நாடார்களுக்குச் சின்ன சந்தோசம்.

''இந்த அளவுக்காவது வர வுட்டானே.''

மேல்சாதிக்காரர்கள் இன்னொரு விதத்தில் சமாதானமடைந்தார்கள்.

''கிரிப்பிராகார வீதியைத் தாண்டிக் கீழ ரத வீதியில கால்வைக்க முடியாது. சாதிகெட்ட பயகளுக்குப் பல்லாக்கு கேக்குதோ பல்லாக்கு.''

''மீறி வந்தால்ல இருக்கு சங்கதி.''

நாடார்களும் பொருமிக்கொண்டிருந்தார்கள்.

''நம்ம துணி உடுத்தித் திரிஞ்சு எதுக்கு.''

''உசிரு போனாலும் சரி ஒருநா ஒருபொழுதாச்சும் ஊரச் சுத்திப் பட்ணப் பருசம் வராம ஓயப்போறதில்ல.''

வீராப்பிலேயே காலம் போனது. எட்டப்ப ராசா மன உளைச்சலில் கண்ணை மூடிவிட்டார்.

ராசாவுக்கு ரெண்டு தாரம். மூத்தவள் எரம்மா. சின்னம்மா இளையவள். இருவருக்கும் குழந்தைப் பாக்கியமில்லை. வாரிசு இல்லாத ஏக்கம் ராசாவைக் குடைந்தெடுத்தது. அள்ளிக் கொஞ்ச அழகான குழந்தையில்லாமல் அரண்மனை களையிழந்துவிட்டது.

கழுகுமலையில் கோயில் நாட்டியக்காரி ஒருத்தி இருந்தாள். அவளுக்கு ஒரு பெண். பேர் ஆவுடைத்தங்கம். அவளும் நாட்டியக்காரிதான். பதினேழு பதினெட்டு வயசு. சொக்க வைக்கும் வனப்பு. அவளுக்கும் எட்டப்ப ராசாவுக்கும் தொடுப்பு இருந்தது. அப்பப்ப வந்து போவார்.

அந்தச் சமயத்தில் அவளுக்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. அதைப் பார்த்து ராசாவுக்குக் கவலையெல்லாம் பறந்துவிட்டது. அந்தச் சந்தோசம் நிலைத்திருக்கணும்.

குழந்தைக்கு ஒரு வயசாகி குறுகுறுவென நடந்து திரிந்தான். ராசா ஆவுடைத் தங்கத்தை எட்டயாபுரம் அந்தப்புரத்துக்கே கொண்டுபோய்க் குடியமர்த்தினார். அவள் நிரந்தர வப்பாட்டியானாள்.

அவளுக்கென்று தனியாக மேலரண்மனை கட்டித்தந்தார். புதுப்பட்டி கிராமத்தை பொறுப்பு மானியமாக எழுதிவைத்தார். கைவசம் ஒரு லட்சம் ரூபாய் பணமும் கொடுத்தார். விதவிதமான நகைகள் பூட்டி அழகுபார்த்தார். குழந்தைக்குப் பேர்சூட்டும் வைபவம் ஆடம்பரமாக நடந்தது. வெங்கடேசுர எட்டையா என்று பேர்வைத்து அதைத் தன் குழந்தையாக அறிவித்தார்.

அரண்மனைக் குடும்பத்தில் குமைச்சலுக்கிடையில் ஆவுடைத்தங்கம் ராணிக்குச் சமானமாக இருந்தாள். எல்லாம் ராசா உள்ளவரைதான். அவர் இறந்ததும் பிழைப்பில் இடி விழுந்துவிட்டது.

ராசாவுக்கு நேரடி வாரிசு கிடையாது. ஆகவே அவர் தம்பி வெங்கடேசுர எட்டப்ப நாய்க்கர் அய்யன் முப்பத்திநாலாம் பட்டத்துக்கு வந்தார். வந்ததே சரியென்று ஆவுடைத்தங்கத்துக்கு விடப்பட்டிருந்த பொறுப்பு மானியத்தைச் சமீனுடன் சேர்த்துக்கொண்டார். அரண்மனையையும் நகைகளையும் பிடுங்கிக் கொண்டார்.

ஆவுடைத்தங்கத்தின் தாய் விவரமானவள். இவ்வளவுக்கான பிறகு சும்மா விடக் கூடாது. இல்லையென்றால் மகளும் குழந்தையும் தெருவில் நிற்க வேண்டியதுதான். சொத்துகளை அபகரித்துக்கொண்டதாக மகளை விட்டு ராசாமேல் கிரிமினல் வழக்குப் போட வைத்தாள். பிறகும் சும்மா இருக்கவில்லை. தங்களுக்குரிய சொத்துகளைத் திருப்பித் தருமாறு ஆவுடைத்தங்கமும் மகனும் சிவில் வழக்குப் போட்டார்கள். அந்த வழக்கில் அவர்களுக்குச் சாதகமான தீர்ப்புக் கிடைக்கவில்லை. ஆவுடைத்தங்கத்துக்குப் பொறுப்பு மானியமாக எழுதிக் கொடுத்த பத்திரம் முறையாகப் பதிவு செய்யப்படாததால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

சீவனாம்சம் கேட்டு மறுபடியும் வழக்குப் போட்டார்கள். வருசம் எட்டாயிரத்து நானூறு ரூபாய் வெங்கடேசுர எட்டையாவுக்குக் கொடுக்கணுமென்று தீர்ப்பாகியது. ஆவுடைத்தங்கத்துக்கு அரண்மனையில் பிடிமானம் கிடைத்தது.

இதுக்கிடையில் அவள் போட்டிருந்த கிரிமினல் வழக்கை வளர விடாமல் நிறுத்த நினைத்த ராசா அவளுடன் ராசியாகி ஒப்பந்தம் எழுதிக்கொடுத்தார். அதில் தன்னை வெங்கடேசுர எட்டையாவின் சிறிய தகப்பனார் என்று குறிப்பிட்டிருந்தார். அதோடு அவர் கதை முடிந்தது.

அவருக்கும் வாரிசு இல்லாததால் அவர் தம்பி முத்துச்சாமி செகவீர ராம எட்டப்ப நாய்க்கர் அய்யன் அடுத்த பட்டம் சூடினார். அவரும் ஆவுடைத் தங்கத்தின் வழக்கைக் கிண்ட ஆரம்பித்தார். எட்டயாவுக்குச் சீவனாம்சம் கொடுக்க முடியாதென்று அப்பீல் செய்தார். கீழ்க்கோர்ட் உத்தரவை உறுதி செய்து வழக்கு தள்ளுபடியானது. ரெண்டாவது அப்பீல் செய்தும் பலனில்லை.

கடைசிவரை ஒருகை பார்த்துவிடணுமென்று வழக்கை லண்டன் பிரிவி கவுன்சிலுக்குக் கொண்டுபோனார். நல்ல முடிவை அரண்மனையே எதிர்பார்த்திருந்தது. ஆவுடைத்தங்கமும் மகனும் நம்பிக்கையிழக்கவில்லை.

## 2. தடுமாறும் உறவுகள்

முந்தியிருந்த ராசா போட்ட உத்தரவுப்படி நாடார் வீட்டுக் கலியாணத்தின் போது பெண்ணும் மாப்பிள்ளையும் பிள்ளையார் கோயில்வரை பல்லாக்கில் வந்து தேங்காய் உடைக்கலாம். இந்த ஏற்பாடு பத்துப் பதினஞ்சு வருசமாக தகராறில்லாமல் நடந்துவந்தது. அதுக்குமேல் நாடார்களுக்குப் பொறுமையில்லை. கோயில் எல்லையைத் தாண்டி கீழ ரத வீதியிலும் பல்லாக்கில் போகணும். அப்படிப் போக முயற்சித்தபோது மேல்சாதிக்காரர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். தகராறு வலுத்து கலெக்டர்வரை போய்விட்டது. கலெக்டர் தலையிட்டு வழக்கை அப்போதைக்குத் தீர்த்துவைத்தார். அதன்படி நாடார் வீட்டுப் பெண்ணும் மாப்பிள்ளையும் பிள்ளையார் கோயிலோடு பல்லாக்கை நிறுத்திக்கொண்டு கீழ ரத வீதியில் ஈசான பீடத்துக்கு நடந்து போய்த் தேங்காய் உடைக்கலாம்.

நாடார்கள் துள்ளினார்கள்.

''இனியென்ன அப்படியே நெருங்கிப் போக வேண்டியதுதான்.''

''நாலு ரத வீதியிலயும் காலு வைக்கிற காலமும் வரத்தான் போகுது.''

''அதுக்குப் பெறகு கோயிலுக்குள்ள போகணும்.''

மேல்சாதிக்காரர்களிடமிருந்து ஏகப்பட்ட எதிர்ப்பு இருந்தது. கிரிப்பிராகார வீதியில்கூடப் பல்லாக்கில் போகவிடக் கூடாது என்ற வெறியில் இருந்தார்கள்.

எட்டயாபுரம் அரண்மனையிலும் சரி வெளியூரிலும் சரி ராசாவின் கடைசித் தம்பி ராமசாமிப் பாண்டியன் தாட்டிக்கமாக இருந்தார். அவர்தான் சமீன் மேனேஜர். சமீன் நிருவாகத்தையும் கணக்குகளையும் கவனித்துக்கொண்டார். சொல்லப்போனால் அவர் கையில்தான் சமீன் பொறுப்பே இருந்தது. ராசா சுபாவமானவர். எல்லாம் தம்பியே பார்த்துக்கொள்ளட்டுமென்று விட்டுவிட்டார்.

அவருக்கு நோய்நொடி வந்துவிட்டதால் தன் குமாரர்களைப் பற்றி ரெம்பக் கவலைப்பட்டார். செகவீர ராம குமார எட்டப்ப அய்யன் வெங்கடேசுரெட்டுப் பாண்டியன் என்று இரு குமாரர்கள். சின்னஞ்சிறிசுகள். கண்ணும் கருத்துமாக வளர்த்துக் கரையேற்றணுமே. ராணிக்கும் அந்தக் கவலையிருந்தது.

ஒரு தடவை ராசா படுத்தபடுக்கையாகிவிட்டார். எழுந்திருப்பது நிச்சய மில்லை. அவருக்கும் நம்பிக்கை போய்விட்டது. பிள்ளைகளைப் பற்றியே பேசி னார். தம்பி தைரியம் சொல்லித் தேற்றினார்.

ராசா யோசித்துப்பார்த்து முடிவுக்கு வந்தார். தன் கண்ணுக்குப் பின்னால் தம்பியே சமீன் மேனேஜராகவும் பிள்ளைகளுக்குக் கார்டியனாகவும் இருக்கணு மென்று மனு எழுதி வைத்துவிட்டு ஒரு விடியக்காலம் நாலுமணிக்கு இறந்து போனார். பட்டத்துக்கு வந்த கொஞ்ச காலத்திலேயே போய்ச்சேர்ந்துவிட்டார். அப்போது பெரிய மைனருக்குப் பதினோரு வயசு. சின்னவருக்கு ஒன்பது. ஓரள வுக்கு விவரம் தெரிந்தவர்களாக இருந்தார்கள்.

ராசா காலமாகிவிட்ட சேதி திருநெல்வேலிக் கலெக்டருக்குத் தெரிவிக்கப் பட்டது. அண்ணன் மனு எழுதி வைத்துவிட்டுப் போயிருப்பதைப் பற்றி ராமசாமிப் பாண்டியனும் எழுதினார். தானே மேனேஜராகவும் கார்டியனாகவும் இருக்கணு மென்று அவருக்கு உள்ளுக்குள் ஆசை.

எட்டயாபுரத்துக்குப் போய் நிலவரத்தை விசாரித்து அறிந்துவிட்டு வருமாறு கலெக்டர் அசிஸ்டெண்ட் கலெக்டருக்கு உத்தரவு போட்டார். அசிஸ்டெண்ட் கலெக்டர் வெள்ளைக்காரர். அதனால் அரண்மனைக்காரர்களை விசாரிப்பதில் சிரமம் இருந்தது. ராசா எழுதிவைத்த மனுவை உயில் என்று சொல்ல முடியாது. அதாவது அதை ஆதாரமாகக் கொண்டு சட்டப்படி உரிமை கொண்டாட முடி யாது. அதனால் மனுவைப் பற்றி ராணியை நேரில் விசாரிக்க விரும்பினார். ராணியின் விருப்பமும் தெரிந்துவிடுமே.

அரண்மனையில் குடும்ப வழக்கம் வித்தியாசமானது. பரம்பரைபரம்பரை யாகப் பங்கு பாகம் பிரிக்காமல் கூட்டுக் குடும்பமாகவே இருந்தார்கள். பெரும் பாலும் மாமன் மகள் அத்தை மகன் என்று பெண் எடுத்து பெண் கொடுத்துக் கொடிவழி சிதறாமல் ஒண்ணுக்குள் ஒண்ணாகப் பிணைந்து குடியிருந்தார்கள். ஒவ்வொரு குடும்பத்துக்கும் தனித்தனியாக மானியம் கொடுக்கப்பட்டது. அரண்மனைக் குடும்பத்தில் பெண்ணெடுத்த அயலூர்க்காரரை மாப்பிள்ளைச் சாமி என்று சொல்வார்கள். அவர்களும் மானியத்தை அனுபவித்துவந்தார்கள்.

அரண்மனைப் பெண்கள் சாதாரணமாக வெளியே நடமாட முடியாது. கோயில் குளத்துக்குப் போகணுமென்றால் பல்லாக்கில்தான் போகணும். எப்போதும் முகந் தெரியாமல் முக்காடுதான். அவர்களை வெளியாட்கள் பார்க்க முடியாது. அப்படியிருக்கும்போது நேரில் பேசுவதாவது விசாரிப்பதாவது. அசிஸ்டெண்ட் கலெக்டரின் வார்த்தைக்கு அரண்மனையில் கடும் எதிர்ப்பு இருந்தது. அவர் சோர்ந்துவிடவில்லை. ஓட்டப்பிடாரம் தாசில்தாரையாவது அனுமதிக்கலாமே என்று கேட்டுப்பார்த்தார். தாசில்தார் பிராமணர் என்பதால் ஒத்துக்கொண்டார்கள்.

தாசில்தாரை அரண்மனைக்குள் ஒரு அறைக்குக் கூட்டிப்போனார்கள். அந்த அறைக்கு ராணியம்மா அடப்பக்காரப் பெண்களுடன் வந்தாள். முகத்தைப் பார்க்க முடியாதபடி முக்காடு போட்டிருந்தாள். தாசில்தார் இந்த ஓரத்தில் நின்றுகொண்டு தயங்கித்தயங்கி வார்த்தைகளை அனுப்பினார்.

''ராசா எழுதியிருக்கறபடி ஒங்களுக்குச் சம்மதமா.''

அந்த ஓரத்திலிருந்து ராணி சொன்ன பதில் அரிச்சலாகக் காதில் விழுந்தது. அவர் சங்கடத்தில் நெளிந்தார்.

''என்ன சொல்றேள்.''

அடப்பக்காரி வந்து சொன்னாள்.

''ராணியம்மாளுக்குச் சம்மதந்தான்.''

அவர் சந்தேகங்கேட்டார்.

''ஒருத்தரே மேனேஜராவும் கார்டியனாவும் இருக்கறது சிரமமாருக்குமே.''

அடப்பக்காரி ராணியிடம் போய்விட்டு வந்தாள்.

''அப்படின்னா ராசாவோட தம்பி மேனேசராவும் மேலரமனச்சாமி கார்டியனாவும் இருக்கலாம்னு சொல்றாக.''

ராணியின் மனசை அறிந்ததில் அசிஸ்டெண்ட் கலெக்டருக்கு நிம்மதி. பிறகு பெரிய மைனரிடம் பக்குவமாகப் பேச்சுக்கொடுத்தார். அவரும் அதுக்கு ஒத்துக்கொள்ளவே அப்படியே எழுதி வாங்கிக்கொண்டார்.

கலெக்டர் சிபாரிசுப்படி ராமசாமிப் பாண்டியனைச் சமீன் மேனேஜராகவும் மேலரண்மனைச்சாமி என்ற முத்துச்சாமிப் பாண்டியனை கார்டியனாகவும் சர்க்கார் நியமித்தது. பெரிய மைனர் சமீன் வாரிசு என்று அறிவிக்கப்பட்டது. அவர்கள் நிருவாகத்தை கலெக்டர் மேல்பார்க்கணும்.

ராமசாமிப் பாண்டியன் சமீனுக்குச் சொத்து வாங்குவதில் ஆர்வங் காட்டினார். மணியாச்சி சமீனைச் சேர்ந்த ஏழாயிரம்பண்ணை மிட்டாவில் முள்ளிச்செவல் கிராமத்தை ஐயாயிரம் ரூபாய்க்கு ஏலத்தில் எடுத்தார். ஊமத்தம்பட்டி முதலான கிராமங்களை அடமானம் வாங்கினார். அப்படி இப்படி என்று திகிடுமுகிடாகச் செலவுசெய்தார்.

மூணு வருசத்துக்குள் ராமசாமிப் பாண்டியனின் நிருவாகம் கலெக்டருக்குப் பிடிக்கவில்லை. அவர்மேல் நாலா பக்கமிருந்தும் ஆவலாதி கேட்டு முடியவில்லை. கலெக்டர் எட்டயாபுரத்துக்கு வந்து கணக்குவழக்குகளைப் பார்த்தார்.

தோண்டத்தோண்டத் தலை கிறுகிறுத்தது. சமீன் நிருவாகம் அவ்வளவும் தாறு மாறாகக் கிடந்தது. ஒரே குழப்பம். ஊதாரிச் செலவுகளைப் பார்த்தால் புல் லரித்தது. அடடா ராமசாமிப் பாண்டியன் மேனேஜர் உத்தியோகத்துக்குப் பொருத்தமானவர் என்று முந்தி சர்க்காருக்குச் சிபாரிசு செய்தது எவ்வளவு தப்பாகப் போயிற்று. நிலைமை இப்படியே போனால் மைனர் ராசா பட்டத் துக்கு வருமுன் சமீன் ஓட்டாண்டியாகிவிடும்.

குழப்பமென்ன கொஞ்சநஞ்சமா. பக்கத்துச் சமீன்களுடன் ஏகப்பட்ட எல்லைத் தகராறுகள் தீர்க்கப்படாமல் கிடப்பில் போடப்பட்டிருந்தன. நிலங்கள் ஏறுக்குமாறாகத் தரம் பிரிக்கப்பட்டுக் கண்டமானக்கிக் குத்தகைக்கு விடப் பட்டிருந்தன. இதனால் சமீனுக்கும் பயிர் செய்கிறவனுக்கும் நட்டம். சில நஞ்சை நிலங்கள் சமீன் சேவகர்களுக்கு நீண்ட காலக் குத்தகைக்கு விடப்பட் டிருந்தன. சல்லிக்காசுகூட வசூலிக்க முடியாத அளவுக்கு அதிகமான குத்தகை. கலெக்டருக்குத் தெரியாமல் ஏராளமான வழக்குகளைப் போட்டு சமீன் பணம் அநியாயத்துக்கு விரயமாகியிருந்தது. சிரைக்காடுகளைக் குத்தகைக்கு எடுத் தவர்கள்மேல் அனாவசியமான வழக்குகள்.

சிரைக்காடுகளில் மேய்ச்சல் நிலங்கள் நிறைய உண்டு. அவற்றைச் சமீன் காவல்காரர்கள் காத்துவந்தார்கள். பொதுவாக அந்த நிலங்களை முக்கியமான ஒருவர் ரெண்டாயிரம் ரூபாய்வரை மொத்தக் குத்தகைக்கு எடுப்பார். பிறகு அதைப் பிரித்துப்பிரித்து உள்குத்தகைக்கு விட்டுவிடுவார். அதில் ஆடுமாடு மேய்க் கிறவர்கள் உருப்படிக்கு அரை ரூபாய் உள்குத்தகைக்காரருக்குக் கொடுத்து விடணும்.

மேய்ச்சலை முன்னிட்டு ஒட்டப்பிடாரத்துக்குப் பக்கத்தில் பெரிய சண்டையே வந்துவிட்டது. மேனேஜர் உருப்படிக்கு ரெண்டு ரூபாய் வசூலிக்கச் சொன்னார். சுத்துப்பட்டிச் சனங்களெல்லாம் திரண்டு சல்லிக் காசு கொடுக்க முடியாது என்று கட்டோடு சொல்லிவிட்டார்கள். இதனால் ஒண்ணுக்கொண்ணு மோதிக்கொண்டு கலவரம் ஏற்பட்டது. மாறிமாறி கோர்ட்டில் பிராது கொடுத்து மாளவில்லை. வருசம் பத்தாயிரம் வீதம் ரெண்டு வருசப் பாக்கி கேட்டு மேனேஜர் சனங்கள்மேல் வழக்குப் போட்டார்.

கோலார்பட்டி விவசாயிகள் வருசக் கணக்கில் குத்தகைப் பாக்கி வைத் திருந்தார்கள். மொத்த வெள்ளாமையையும் வீட்டுக்குக் கொண்டுபோய்விடு வார்கள். சமீனுக்குச் சேர வேண்டியதைக் கொடுப்பதில்லை. அவர்களை ஒருவர் தூண்டிவிட்டார் என்று பேச்சு. அவர் முந்தி உபதேசியராக இருந்தவர்.

விவசாயிகளுக்கு நிறைய சலுகை செய்யுமாறு கலெக்டர் சமீனுக்குச் சொன்னார். செய்யவில்லை. சமீன் ஆட்கள் பொறுப்புப் பங்கு கேட்க விவ சாயிகள் மறுக்க கடைசிக்குக் கலவரத்தில் கொண்டுபோய்விட்டது. உபதேசியார் தான் முன்னின்று நடத்தியதாகப் புகார் சொன்னார்கள். ஒருவழியாக அவர் அந்தச் சீமையை விட்டே வெளியேற வேண்டிய நிலைமை.

பிறகு எல்லாம் சரியாகி விவசாயிகள் வழிக்கு வந்துவிட்டார்கள். அப்படி யும் அவர்கள் உள்ளபடி பொறுப்பைக் கொடுத்தார்களா என்பது சந்தேகமே. ஏனென்றால் இது ஒண்ணும் தண்டனைக்குரிய குற்றமில்லை என்று செசன்ஸ் கோர்ட்டில் தீர்ப்புச் சொல்லிவிட்டார்கள்.

ஆவுடைத்தங்கத்தின் மகன் வெங்கடேசுர எட்டையாவுக்குச் சீவனாம்சம் கொடுப்பது சம்பந்தமாக லண்டனுக்குப் போயிருந்த வழக்கில் ஏற்கெனவே தீர்ப்பு வந்துவிட்டது. அவனுக்குச் சாதகமான தீர்ப்பு. அவன் ராசாவுக்குப் பிறந்த பையன்தான். இதை ராசாவே ஒப்புக்கொண்டுள்ளார். ஆவுடைத்தங்கம் சூத்திர குலத்தில் பிறந்தவள். அடிமைப் பெண்ணில்லை. அவள் அந்தப்புரத்துக்கு வந்து ராசாவுக்கு மட்டும் நிரந்தர வப்பாட்டியாகிவிட்டாள். அவளுக்குப் பிறந்த பையன் சமீன் வாரிசாக முடியாது. சொத்தில் பங்கு கேட்க முடியாது. அதே சமயம் அவனுடைய சீவனத்துக்கு வழிசெய்தாகணும். ஹைகோர்ட் அவனைத் தப்பாகப் பிறந்தவனாக அறிவித்து அவனுக்கு மானியம் கொடுக்கணுமா என்பதை முடிவு செய்யணும்.

ஆவுடைத்தங்கம் அடிமைப் பெண்ணாக இருந்திருந்தால் தீர்ப்பு எப்படி வந்திருக்கும். ராசா அவளை அந்தப்புரத்தில் குடியமர்த்தியிருப்பாரா. பொன்னகை பூட்டி சின்ன ராணியாக அழகுபார்த்திருப்பாரா. சந்தேகந்தான். ராசாவுக்கு முந்தி விரித்து பிள்ளையும் பெற்றுக்கொடுத்துவிட்ட பெண்ணைச் சாதி காப்பாற்றி விட்டது.

லண்டன் உத்தரவைத் தொடர்ந்து வெங்கடேசுர எட்டையாவுக்கு ரெண்டா யிரத்தி ஐநூறு ரூபாய் மானியம் கொடுக்கணுமென்று ஹைகோர்ட் சொல்லி விட்டது. தாவா அதோடு முடிந்தது. ஆவுடைத்தங்கமும் மகனும் சீவனத்துக்கு வழிகிடைத்த நிம்மதியில் இருந்தார்கள். ராமசாமிப் பாண்டியன் இந்த வழக்கைப் பழையபடி கிளறி அப்பீல் போட்டிருந்தார்.

ஓட்டப்பிடாரம் சாத்தூர் ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆகிய மூணு தாலுகாவுக்கான கள் சாராயக் குத்தகை ரெண்டும் சங்கரலிங்க நாய்க்கர் என்பவருக்கு விடப்பட் டிருந்தது. பொதுவாக ரெண்டும் தனித்தனி ஆளுக்கு விடுவதுதான் வழக்கம். சங்கரலிங்க நாய்க்கரிடமிருந்து குத்தகை பாக்கி கொஞ்சங்கூட வசூலாகவில்லை. நடந்த கதையைத் தோண்டிப்பார்த்தால் குட்டு வெளியே வந்துவிட்டது. பேருக்கு ஒருவர்மேல் குத்தகைக் கணக்கு எழுதிவிட்டு வருமானத்தையெல்லாம் ராமசாமிப் பாண்டியனே அனுபவித்துவந்திருக்கிறார்.

கணக்குப்பிள்ளைகளுக்கும் அம்பலகாரர்களுக்கும் கொடுக்கப்பட்டிருந்த மானிய நிலங்களை இருபது வருசத்துக்கு முந்தியே ராசா குடும்பமாருக்குப் பட்டா போட்டுத் தந்துவிட்டார். அவர்கள் அஞ்சு வருசமாகப் பாடுபட்டு வெள்ளாமை எடுத்து அனுபவித்து வந்தார்கள். அஞ்சு வருசம் முடிந்ததும் ராசா பட்டாவை ரத்தாக்கிவிட்டார். இதனால் பாதிக்கப்பட்ட குடும்பமார் நிறைய பேர் கோர்ட்டுக்குப் போய்விட்டார்கள். அந்த வழக்குகள் வேறு இழுபறியில் கிடந்தன.

அரண்மனை விவகாரம் அதுக்கு மேல். சேவகர்களுக்காக ஆன செலவு சொல்ல முடியாது. ராசா பேரைச் சொல்லி சகல சவுகரியங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். விவசாயத்தைப் பற்றி யாருமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. குளங்குட்டைகள் மராமத்தில்லாமல் தூர்ந்துகிடந்தன. கோயில் கொண்டாட்டங்கள் தானதருமம் என்று சமீன் பணம் தண்ணீராக வாரி இறைக் கப்பட்டிருந்தது. சமீனுக்கு வந்த சில லாபம் கணக்கில் காட்டப்படவில்லை.

சனங்களுக்கு நிலப்பட்டா கொடுப்பதில் தகராறு. எல்லாவற்றுக்கும் மேலாக கோயில் கணக்குகள் யாராலும் சரிபார்க்கப்படவில்லை. எழுதினதுதான் கணக்கு. அதில் முக்கியமானதும் ரெம்பப் பணப்புழக்கம் உடையதும் கழுகுமலைக் கோயிலாகும்.

கலெக்டர் யோசித்தார். உள்ளதை உள்ளபடி சர்க்காருக்குத் தெரிவித்துவிட்டார். ராமசாமிப் பாண்டியனைப் பற்றி முந்திச் சொன்ன அபிப்பிராயம் தப்பு என்பதை ஒப்புக்கொண்டு இனிமேல் அவர் மேனேஜராக நீடிப்பது நல்லதில்லை என்று கறாராகச் சொல்லிவிட்டார். சர்க்காருக்கு இக்கட்டான நிலைமை. ராமசாமிப் பாண்டியன் இனிமேலும் மேனேஜராக இருந்தால் எல்லாருக்கும் கெட்ட பேர் வந்துவிடும். அதே சமயம் கெடுபிடியாகவும் நடந்துகொள்ள முடியாது. பிறகு அரண்மனைக்குள் பூசல் வெடித்துவிடும். ரெம்ப யோசனைக்குப் பிறகு அவரைச் சமீன் மேனேஜர் பொறுப்பிலிருந்து நீக்கி உத்தரவு போட்டுவிட்டது. அரண்மனை நிருவாகம் கோயில் சத்திரங்களின் பொறுப்பு களஞ்சியங்கள் வைபவங்கள் இவற்றை மட்டும் கவனித்துக்கொண்டு அரண்மனை மேனேஜராக மட்டும் இருந்தால் போதுமென்று சொல்லிவிட்டது. சமீன் நிருவாகத்தைச் சர்க்கார் பொறுப்பில் விட்டுவிடணும்.

சமீன் நிருவாகத்தைக் கவனித்துக்கொள்ள வெங்கட்ட ராவ் என்ற டெபுடி கலெக்டர் சமீன் மேனேஜராக வந்தார். அவர் ஓடியாடி வேலை பார்த்துவிட்டு மூணு வருசத்தில் கண்ணை மூடிவிட்டார். பிறகு சுப்பராயர் வந்து மூணு வருசத்துக்கு மேலாக நிருவாகம் செய்தார்.

## 3. மைனர் ராசா

சும்மா சொல்லக் கூடாது ரெண்டு மேனேஜரும் உருப்படியான காரியங்களைச் செய்தார்கள். சமீன் நிருவாகத்திலிருந்த ஓட்டை உடைசல்களை அடைத்து வரவாசியைப் பெருக்கி ஒரு வழிக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.

சமீனைச் சேர்ந்த குருமலைக் காடு ரெம்ப அடர்த்தியானது. அதில் பன்றி மிளா புள்ளிமான் கெலா மாடு என்று ஏராளமான மிருகங்கள் உண்டு. சுற்றியுள்ள வெள்ளாமைகளை மேய்ந்து அவை ஏற்படுத்திய நாசம் சொல்ல முடியாது. சம்சாரிகளுக்குப் பெரிய தொந்தரவாக இருந்தது. மிருகங்களை வேட்டையாடி ஒழிக்க அரண்மனையிலிருந்து எல்லா ஏற்பாடும் செய்யப்பட்டது. மைனர் ராசாகூட அப்பப்ப வேட்டைக்குப் போவதில் ஆர்வமாக இருந்தார். மிருகங்களின் தொல்லை ஒழிந்ததில் சம்சாரிகளுக்கு நிம்மதி.

சமீனுக்குச் சேர வேண்டிய வாரம் பொறுப்பை வசூலிக்க மணியக்காரர்களும் அம்பலகாரர்களும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் அந்த வேலையில் மந்தமாக இருந்ததால் மேனேஜர்கள் அவர்களை விரட்டி வேலைவாங்கினார்கள். சமீனுக்கு வசூல் கூடியது. அரண்மனைச் சேவகர்களின் செலவு மட்டுப்பட்டது.

அங்கங்கே நடந்த தவறுகள் ரெம்பவும் குறைந்துவிட்டன. சாத்தூர் விளாத்திகுளம் ஓட்டப்பிடாரம் தூத்துக்குடி போன்ற இடங்களில் வேலைபார்த்த

சர்க்கார் சிப்பந்திகளுக்குச் சமீன் கணக்கிலிருந்து காரண காரியமில்லாமல் மானியம் கொடுக்கப்பட்டுவந்தது. இந்த அநியாயச் செலவு உடனே நிறுத்தப் பட்டது.

பட்டத்துக்கு வர வேண்டிய மைனர் ராசா நன்றாகப் படித்து உலக நடப்பைத் தெரிந்துகொண்டால்தான் சொந்தக் காலில் நின்று சமீன் நிருவாகத்தைத் திறமை யாக நடத்த முடியும் என்பதால் அவருக்கு முறையாகப் பாடம் கற்றுத்தர வாத்தியார் களை நியமித்தார்கள். பட்டணத்திலிருந்துகூட வாத்தியாரை வரவழைத்தார்கள்.

ராணியம்மாளுக்கு ஒரே விசாரம். தன் குமாரர்களுக்குக் காலாகாலத்தில் கலியாணஞ்செய்துவைத்து கண்குளிரப் பார்க்கணும். குல வழக்கப்படி பட்டத்து ராசா ரெண்டு பெண்களைக் கலியாணஞ்செய்துகொள்ளணும். ரெம்பச் சின்ன வயசிலேயே இதுதான் பெண் என்று முடிவுசெய்து அவளை அரண்மனைக்குக் கொண்டுவந்து வளர்ப்பார்கள். பெற்றவர்கள் குழந்தை ராணிகளின் காலில் விழுந்து வணங்கி வழியனுப்பணும். குழந்தைகள் வயசுக்கு வந்ததும் கலியாணம் நடக்கும்.

மைனர் ராசாவுக்கும் அப்படித்தான். நெருங்கிய சொந்தத்தில் இரு பெண் குழந்தைகளைக் கொண்டுவந்து வளர்த்தார்கள். சின்ன ராசாவுக்கும் ஒரு குழந்தை வளர்ந்துவந்தது.

மூத்தவருக்குரிய ஒரு பெண் வயசுக்குவந்தது. உடனே கலியாணம் நடத் தணுமென்று ராணியம்மா ராமசாமிப் பாண்டியன் முத்துச்சாமிப் பாண்டியன் எல்லாருமே அவசரப்படுத்தினார்கள். இப்படிப்பட்ட வைபவங்கள் ரெம்ப ஆடம்பரமாக நடக்கும். ஏகப்பட்ட செலவாகும். கலியாணச் செலவு பாதியென் றால் மீதியை தாயாதிக்காரர்கள் அனுபவிப்பார்கள். இதுக்காகவே சமீனில் அடிக்கடி ஆடம்பரமான கொண்டாட்டங்கள் நடப்பதில் அவர்களுக்கு ஆர்வமுண்டு.

மேனேஜர் வெங்கட்ட ராவ் பார்த்தார். ரெண்டு கலியாணத்தையும் ஒரே சமயத்தில் நடத்திவிட்டால் செலவு குறையும். வேலையும் கம்மி. மொத்தம் ஐம்ப தாயிரம் ரூபாய்க்கு அனுமதி வாங்கி ரெண்டு மைனர்களுக்கும் சீருஞ்சிறப்பு மாகக் கலியாணம் நடத்திவைத்தார். ராணியம்மா முதல்கொண்டு எல்லா ருக்கும் நிம்மதி.

ஒருசமயம் வெள்ளைக்கார மகாராணியின் குமாரரும் வேல்ஸ் சின்னத் துரையுமான எட்வர்டு தூத்துக்குடி வரவிருக்கும் சேதி தெரிந்தது. மைனர் ராசா அவரைச் சந்திக்க ஆர்வப்பட்டார். அவர் கேட்டுக்கொண்டபடி சந்திப்புச் செலவுக்காகச் சர்க்கார் ஐயாயிரம் ரூபாய் அனுமதித்தது. அதோடு திருநெல் வேலிச் சீமையிலுள்ள மற்ற பிரபுக்களிடமிருந்தும் பணம் வசூலிக்கப்பட்டது.

சின்னத் துரை கப்பல் மார்க்கமாகக் கொழும்பிலிருந்து தூத்துக்குடி வந்து சேர்ந்தார். அங்கே ரமணியமான பந்தலமைத்துக் காத்திருந்த மைனர் ராசா அவரை எதிர்கொண்டு மரியாதை செய்தார். சேத்தூர் சமீன்தார் யானைத் தந்தம் முதலான காணிக்கைகளைக் கொடுத்தார்.

சகல மரியாதைகளும் முடிந்து சின்னத் துரை ராணியுடன் தனி ரயிலில் புறப்பட்டார். மைனர் ராசாவும் அதே ரயிலில் பந்துக்களுடன் பிரயாணம்

செய்தார். வண்டி மணியாச்சி வந்துசேர்ந்தது. ரயில் கெடியில் ஏகப்பட்ட கூட்டம். ஏழாயிரம் பேருக்கு மேல் துரையைப் பார்க்கக் கூடியிருந்தார்கள். புதுசாக வேதத்துக்கு மாறியவர்கள் சாமியார்கள் உபதேசியார்கள் என்று பலர். ஆணும் பெண்ணுமாகப் பள்ளிக்கூடப் பிள்ளைகள் ஆயிரம் இருக்கும். ஒரு பூந்தோட்டத்தையே பேர்த்துவந்து நிறுத்திய மாதிரி. எல்லாரும் வேதப் பள்ளிக் கூடத்தில் படிப்பவர்கள்.

கூட்டத்துக்கு முன்னால் கால்டுவெல் சாமியாரும் சார்ஜெண்ட் சாமியாரும் நின்றிருந்தார்கள். அவர்களைச் சுற்றிப் பல வெள்ளைக்காரச் சாமியார்களும் ஊழியர்களும் சூழ்ந்திருந்தார்கள். கூட்டத்தைப் பார்த்து சின்னத் துரை சந்தோ சத்தில் திணறிப்போனார். ராணியும் அப்படித்தான்.

கால்டுவெல் சாமியார் துரையை வாழ்த்திப் பேசினார். பேச்சு முடிந்ததும் பள்ளிக் குழந்தைகள் விதவிதமான பண்டங்களைத் துரைக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்கள். அழகான வேதப் புஸ்தகம் பாட்டுப் புஸ்தகம் இன்னும் வேலைப் பாடு நிறைந்த சின்னச்சின்னப் பொருட்கள். அவர்கள் கைப்படச் செய்தது.

துரையின் பெருமைகளைச் சொல்லிக் குழந்தைகள் தமிழில் சொகமாகப் பாடினார்கள். கொழுந்துக் குரல்கள் ரயில் கெடியைத் தாண்டி எதிரொலித்தன. தான் வந்ததுக்கு ஞாபகமாகப் பள்ளிக்கூடங்களில் நட்டச் சொல்லி துரை மாங் கண்ணுகளையும் மற்ற மரக் கண்ணுகளையும் கொடுத்தார். இனிமேல் எல்லாக் கிராமத்துப் பள்ளிக்கூடங்களிலும் புதுப்புது மரங்கள் துரையின் பேரைச் சொல்லிக் கொண்டிருக்கும்.

வண்டி மணியாச்சியிலிருந்து கோயில்பட்டிக்கு வந்தது. ரயில் கெடியோரம் மைனர் ராசா ஏற்பாடு செய்திருந்தபடி மதியச் சாப்பாடு முடிந்தது. எல்லாரும் சந்தோசமாக வழியனுப்ப துரை நிறைந்த மனசுடன் அதே ரயிலில் பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

மைனர் ராசா செய்த உபசாரத்துக்கு அடையாளமாக கொஞ்ச நாளில் வேல்ஸ் துரையிடமிருந்து வெள்ளி மெடல் கலெக்டர் மூலம் எட்டயாபுரத்துக்கு வந்தது. அதைப் பெரும்பேறாக நினைத்துக் கொண்டாடினார்கள். ஒரு நல்ல நாளில் மெடலைப் பல்லாக்கில் வைத்துச் சகல விருதுகளுடன் உத்தியோகஸ் தர்கள் சூழ பட்டணப் பிரவேசமாக எடுத்துவந்தார்கள். அதிர்ஷ்டவசமாக மெடல் கிடைத்திருக்கும் பெருமைகளைப் பற்றித் தாசில்தார் கணபதியா பிள்ளை பத்திரிகை வாசித்து சின்ன ராசாவுக்குச் சாத்தினார்.

டெல்லியில் நடந்த வைபவத்துக்கு மைனர் போக வேண்டியிருந்தது. இந்தச் செலவுக்காக சர்க்கார் முப்பதாயிரம் ரூபாய் அனுமதித்தது. அவரைப் பத்திரமாகக் கூட்டிப்போய்க் கொண்டுவந்து சேர்க்க வேண்டியது மேனேஜர் பொறுப்பு. பந்துக்கள் பரிவாரங்களுடன் ராசா முன்கூட்டியே புறப்பட்டுப் போனார். வட நாட்டில் பல இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு டெல்லிக்குப் போய்த் தங்கி னார்கள். அங்கே நாட்டின் பல இடங்களிலிருந்தும் ராசாக்கள் சமீன்தார்கள் பிரபுக்கள் என்று நிறைய பேர் வந்திருந்தார்கள். முக்கியமானவர்களை மைனர் ராசா சந்தித்துப் பேசினார். கூட்டத்தில் மகாராணிக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

தர்பார் நல்லபடியாக முடிந்தது. மைனர் ராசா மேலும் பல இடங்களைப் பார்த்துவிட்டுச் சந்தோசமாக ஊர் திரும்பினார். ரெண்டு மாசப் பிரயாணம்.

மைனர் ராசாவின் தம்பி சின்ன ராசாவின் நடவடிக்கைகள் வரவர வித்தியாச மாக இருந்தன. காரணம் பிடிபடவில்லை. பிறகுபிறகு தெரியவந்தது. அவர் கட்டு மஸ்தான வாலிபராக வளர்ந்திருந்தார். சின்ன ராணி அவர் வயசுக்குப் பொருத்த மானபடி வளர்ச்சியடைந்திருக்கவில்லை. அவருக்குத் தாம்பத்தியமே வெறுத்து விட்டது. சன்னியாசியாகி தேசாந்திரம் போகணும் என்கிற அளவுக்கு வந்து விட்டது. எல்லாரும் பதறிப்போனார்கள். உடனே அவருக்குப் பொருத்தமான உறவுக்காரப் பெண்ணைப் பார்த்துச் சொற்பச் செலவில் ரெண்டாம் கலியாணஞ் செய்துவைத்தார்கள். அதோடு சரி. அவருக்குச் சன்னியாசம்பற்றிய நினைப்பே அற்றுப்போய்விட்டது.

திருநெல்வேலிச் சீமையை வாட்டியெடுத்த கடும் பஞ்சம் எட்டயாபுரம் சமீனையும் விட்டுவைக்கவில்லை. கூலிக்காரர்முதல் சம்சாரிவரை எல்லாச் சனங்களும் பிழைக்க வழியில்லாமல் தவித்தார்கள். கிராமங்களில் ஏழை எளியவர் களுக்காக ராசா கஞ்சித்தொட்டி ஆரம்பித்தார். கொஞ்சம் திடமாக இருப்பவர் களுக்குக் கம்மாயில் மராமத்து வேலை கொடுத்தார்.

ராசா கேட்டுக்கொண்டபடி தரும காரியங்களுக்காக ஐயாயிரம் ரூபாய் செலவு செய்ய சர்க்கார் உத்தரவு கொடுத்தது. அதைக் கொண்டு அவர் அரண்மனைச் சிப்பந்திகளுக்குச் சாப்பாடு கொடுத்தார். வேறு நல்ல காரியங்களும் செய்தார்.

சிப்பந்திகளைப் பற்றி மேனேஜருக்கு நல்ல அபிப்பிராயம் கிடையாது. அரண்மனைச் சோற்றைச் சாப்பிட்டுவிட்டு அவர்கள் சோம்பேறிகளாகிவிடக் கூடாது. அவர்களிடம் நன்றாக வேலைவாங்கணும். கறாராக நடந்துகொண்டார்.

ராசாவுக்குத் தாயாதிக்காரர்களான கம்பளத்தார் குடும்பங்கள் நிறைய உண்டு. விவசாயத்தையே நம்பிச் சீவனம் நடத்துகிறவர்கள். பஞ்சத்தில் கஞ்சிக்குக் கூட வழியில்லாமல் பரிதவித்தார்கள். மரியாதையாக வாழ்ந்தவர்கள். அடுத்தவ ரிடம் கையேந்தி நிற்கவும் கஞ்சித் தொட்டிக்குப் போய்க் காத்துக்கிடக்கவும் கூச்சம். அவர்களை நினைத்து ராசாவுக்கு ரெம்பக் கவலை. ஏதாவது உதவி செய்யணுமென்று தாவங்கப்பட்டார். நிலைமையைச் சொல்லிச் சர்க்காருக்கு எழுதினார். எட்டாயிரம் ரூபாய்க்கு மேல் செலவு செய்ய உத்தரவு கிடைத்தது. அந்தப் பணத்தை ஏதுமற்ற கம்பளத்தாருக்குக் கொடுத்து உதவினார். செலவுக் கணக்குகளை கார்டியன் துணையுடன் தானே கவனித்துக்கொண்டார்.

சம்சாரிகள் விதைவித்து வாங்கவும் வீடில்லாதவர்கள் புதுசாகக் கட்டிக் கொள்ளவும் சர்க்கார் பணம் கொடுத்தது. அந்தப் பொறுப்பையும் மேனேஜர் ராசாவிடம் ஒப்படைத்தார். ராசா தனது வாத்தியாரைத் துணைக்கு வைத்துக் கொண்டு நல்லபடியாகச் செய்து முடித்தார். அவர் நிருவாகத்தில் தேறிவருவதைப் பார்த்து மேனேஜருக்குச் சந்தோசம்.

மேனேஜர் வந்து தன் அதிகாரத்தையெல்லாம் பறித்துக்கொண்டதாக ராமசாமிப் பாண்டியன் பொருமிக்கொண்டிருந்தார். தன்னையறியாமல் அவர் மீது வெறுப்பும் பகையும் வளர்ந்தது. தன் சொல் எடுபடாததால் நாலஞ்சு வருசத் துக்கு முந்தியே அரண்மனை மேனேஜர் பொறுப்பிலிருந்து விலகிக்கொண்டார். அந்தப் பொறுப்பை முத்துச்சாமிப் பாண்டியனே கவனித்துவந்தார்.

மேனேஜர் பாடு திண்டாட்டம். அரண்மனைக்காரர்களைப் பகைத்துக் கொள்ளவும் முடியாது. அதே சமயம் சொத்துசொகங்களைத் தாராளமாக அனுபவிக்கத் துடிக்கும் பந்துக்களிடமிருந்து ராசாவைக் காப்பாற்றிக் கரை சேர்க்கணும்.

ஒவ்வொரு குடும்பத்துக்கும் தனித்தனியாகக் கிராமங்கள் இனாமாக ஒதுக்கப் பட்டிருந்தன. அந்த வருமானம் போதாதென்று நினைத்தார்கள். குடும்பங்களில் சிறுசிறு புழுக்கம் இருந்தது. மொத்தத்தில் அரண்மனை நிலவரம் சரியில்லை. ராமசாமிப் பாண்டியனின் நடவடிக்கைகளை நினைத்தால் பயமாக இருந்தது.

அப்போதெல்லாம் கரிசக்காடு நிறைந்த கிராமங்களுக்குப் போக்குவருத்து வசதி குறைவு. மழை நேரங்களில் பாதை சேறாகி மாட்டு வண்டிகள் போக முடி யாது. ஒரு ஊரிலிருந்து மற்ற ஊருக்கோ சந்தைக்கோ போய்த் தானியந் தவசம் வாங்கிவந்து சீவனம் நடத்தச் சனங்கள் சங்கடப்பட்டார்கள். மேனேஜருக்கு மனசு கேட்கவில்லை. முக்கியமான ஊர்களுக்காவது சாலை போட்டுச் சனங் களின் குறையைத் தீர்க்கணும். பஞ்சத்தின் பாதிப்பால் சமீனுக்குப் பணத் தட்டுப் பாடு இருந்தது. அதனால் அவரது ஆசை முழுசாக நிறைவேறவில்லை.

சமீனில் கழுகுமலை பெரிய ஊர். எல்லாவற்றுக்கும் பெரிய கோயில் அங்கே தான் உண்டு. நாலா ஊர்ச்சனங்களும் கூடும் இடம். அரண்மனைப் பெண்கள் சாமி கும்பிட வருவார்கள். அப்பேர்ப்பட்ட ஊருக்குப் போக்குவருத்து வசதி இல்லாதது பெருங்குறையாகவே இருந்துவந்தது. சாலை போடணுமென்று ராசா வியாபாரிகள் கிராமத்துச் சனங்கள் எல்லாருமே விரும்பினார்கள். மேனேஜர் அதில் முழுமூச்சாக இறங்கினார். எவ்வளவோ கஷ்டத்துக்கிடையிலும் நாலாட்டின் புத்தூரிலிருந்து கழுகுமலைவரை நல்ல சாலை போட ஏற்பாடுசெய்தார். அந்த அளவுக்காவது செய்ய முடிந்ததில் அவருக்குச் சந்தோசம்.

மைனர் ராசாவுக்கு இருபத்தோரு வயசு பூர்த்தியானதும் சமீன் பொறுப்பை அவரிடம் ஒப்படைக்கும்படி சர்க்கார் சொல்லிவிட்டது. பட்டாபிசேகத்தைச் சிறப்பாக நடத்த ஆசைப்பட்டார் மேனேஜர். பத்திரிகை அச்சடித்து முக்கிய மானவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. எட்டயாபுரம் நகரமே அலங்காரத்தில் களைகட்டியது. துரைமார்கள் அதிகாரிகள் சமீன்தாரர்கள் என்று கூட்டம் நிரம்பி வழிந்தது. அனேக இடங்களிலிருந்து வேதசாஸ்திர சங்கீத வித்துவான்கள் வந் திருந்தார்கள்.

கலியாண மகாலில் வாத்தியங்கள் முழங்க செகவீரராம குமார எட்டப்ப நாய்க்கர் அய்யனிடம் சமீனை ஒப்படைக்கும் பிரகடனத்தை கலெக்டர் படித்தார். உடனே வெடிகள் வெடித்தன. சபையில் இருந்தவர்களுக்கு வாசனைத் திரவி யங்கள் கொடுத்து உபசாரஞ் செய்தார்கள். ராசா கலெக்டருக்கு வந்தனஞ் செய்து பேசினார்.

சாயங்காலம் கலெக்டரின் ஞாபகமாக ஊருக்கும் மேற்கே பள்ளிக்கூடத் துக்கும் வைத்தியசாலைக்கும் ராசா அஸ்திவாரமிட்டார். ராத்திரி வாண வேடிக்கை நடந்தது. பட்டாபிசேகத்துக்கு வந்தவர்களை ராசா சந்தோசமாக வழியனுப்பினார்.

மறுநாள் சுந்தர விலாசத்தில் உட்கார்ந்து பந்துக்களையும் சொந்த அதிகாரி களையும் சந்தித்தார். தனக்கு இங்கிலீஷ் வாத்தியாராக இருந்த குப்புசாமி

சாஸ்திரிகளை சமஸ்தான மேனேஜராக நியமித்திருப்பதை அறிவித்தார். பிறகு யானைமேல் அம்பாரி வைத்து சகல ஆடம்பரத்துடன் பட்டணப் பிரவேசம் வந்து தேவப் பிரசாதங்களையும் பிராமணர்களின் ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொண்டு அரண்மனைக்குள் அடியெடுத்து வைத்தார். உற்சவத்துக்காக வந்திருந்த வித்துவான்களுக்குத் தாரதம்மியப்படி சன்மானம் கொடுத்தனுப்பினார். எல்லா வற்றுக்கும் சின்ன ராசா வெங்கடேசுரெட்டுப் பாண்டியன் கூடவே இருந்தார்.

சுப்பராயர் பழைய மேனேஜராகிவிட்டார். அதில் அவருக்குப் பூரண சந் தோசம். தோளில் தூக்கிவளர்த்த குழந்தையை இறக்கி நடக்க விட்டு அழகு பார்க்கும் பூரிப்பு. பொத்திப்பொத்தி வைத்திருந்த பொறுப்பை நல்ல முறையில் ஒப்படைத்துவிட்ட நிம்மதி. இப்போது அவர் மனசு சாவகாசமாகத் தவிப்பாறிக் கொண்டிருந்தது.

ராமசாமிப் பாண்டியனுக்கு மேலும் வெறுப்புக் கூடியது. எல்லாமே கையை விட்டுப் போய்விட்ட ஆத்திரம். பழையபடி மேனேஜராகி அதிகாரம் பண்ண லாம் என்ற ஆசையெல்லாம் நொறுங்கிவிட்டது. தன் கண்ணுக்கு முன்னால் வளர்ந்து ஆளாகிப் பட்டமேறிய அண்ணன் மகன் தன்னை ஒதுக்கித் தள்ளிவிட் டானே. சமீனுக்கு இவ்வளவு சொத்து இருந்தும் எதுக்காக மானியத்தை நம்பிப் பிழைக்கணும். தனக்கென்று சொத்துப்பத்து இருந்தால் தனி மரியாதைதான். ஏன் பொதுவில் கிடந்து அல்லாடணும். இந்த எண்ணம் வளரவளர அவர் குடும்பம் அரண்மனையைச் சேர்ந்த மற்ற குடும்பங்களை விட்டுச் சன்னஞ்சன்னமாக விலகிக்கொண்டிருந்தது. தாயாதிக்காரர்களுடன் அவ்வளவாகப் பேச்சில்லை.

## 4. அரண்மனை விவகாரம்

கழுகாசலமூர்த்தி கோயில் சேவகர் ஆதிநாராயண சேர்வை அலறியடித்து ஓடி வந்தார். கோயில் சிப்பந்திகள் அவசரமாக விசாரித்தார்கள்.

''என்னாச்சு.''

சேர்வைக்குப் படபடப்பு அடங்கவில்லை.

''சாணாங்க கூட்டமாச் சேர்ந்து புள்ளையாரு கோயிலத் தாண்டி கீழ ரத வீதியில பட்ணப் பருசம் வாறதுக்குக் கோப்புக் கெட்னாங்க. நான் தடுத்து நிறுத்துனென். என்னப் புடிச்சு மொத்துமொத்துன்னு மொத்தி வெரட்டீட்டாங்க.''

''இப்ப நேரஞ்சரியில்ல. மொதல்ல பெராது குடுப்பொம். அதுக்குப் பெறகு என்ன நடக்குதுன்னு பாத்துச் செய்வொம்.''

நடந்த சம்பவத்தைச் சொல்லி போலீசில் பிராது கொடுத்தார்கள். விசாரணை நடந்தது. இது வெறும் அடிதடி விவகாரம் மட்டுமில்லை. இதுக்கு அடிப்படை யான காரணம் பல்லாக்குப் பட்டணப் பிரவேசமாக்கும். இதை சிவில் கோர்ட் தான் விசாரித்து முடிவுசெய்யணுமென்று போலீஸ் கைகாட்டிவிட்டது.

சரி இனிமேல் தனியாளாக வழக்குப் போடக் கூடாதென்று முடிவுசெய்து எட்டப்ப ராசாவிடம் முறையிட்டார்கள்.

''ராசா நெலம இப்படியே போனா சனங்க நிம்மதியாச் சாமி கும்பிட முடியாது. ஏன் திருழாகூட நடத்த முடியாமப் போயிரும்.''

ராசாவுக்கு எரிச்சலாக இருந்தது. இதுக்கு ஒரு முடிவுகட்டியாகணும். இல்லையென்றால் இருபக்கமும் சும்மா இருக்க மாட்டார்கள். நாடார்களுக்கும் இது ஆகாது. ரத வீதியே குறியாக இருந்தால் எப்படி. அனுசரித்துப் போகணும். கோர்ட்டுக்குப் போகாமல் தகராறு தீராது.

கோயில் தருமகர்த்தா என்ற முறையில் தூத்துக்குடி முன்சீப் கோர்ட்டில் வழக்குப் போட்டார். பதினெட்டு முக்கியமான நாடார்களும் தூத்துக்குடி ஸ்ரீவில்லிப்புத்தூர் தாலுகா போர்டுகளும் பிரதிவாதிகள். நாடார்கள் வழக்கை எதிர்த்து வாதாடத் தயாராக இருந்தார்கள்.

நாலு ரத வீதியும் கோயிலுக்குப் பாத்தியப்பட்டது. ஆகவே அதில் கோயில் உற்சவம் கொண்டாட்டம் எது நடந்தாலும் அதை ஒழுங்குபடுத்த கோயிலுக்குத் தான் உரிமையுண்டு. நாடார்களின் நிலைமை அப்படியில்லை. காலங்காலமாக அவர்கள் கோயிலுக்குள் பிரவேசிக்க அனுமதிக்கப்பட்டதில்லை. அப்படியிருக்க ரத வீதிகளில் எப்படிப் பட்டணப் பிரவேசம் போக முடியும். எப்போதாவது போக அனுமதிக்கப்பட்டதில்லை. இதை மீறி அவர்கள் நடந்துகொண்டால் கோயிலுக்குத் தீட்டு ஏற்படும். ஆகவே அவர்களுக்கு நிரந்தரத் தடை விதிக் கணும். இதுதான் வழக்கு.

கோர்ட் விசாரணையில் வாதப் பிரதிவாதங்கள் சூடாக இருந்தன. ரத வீதிகளுக்கும் தனக்கும் சம்பந்தமில்லையென்று ஸ்ரீவில்லிப்புத்தூர் தாலுகா போர்டு விலகிக்கொண்டது. ரத வீதிகள் பொதுச்சாலைகளாகும். அவற்றில் பட்டணப் பிரவேசம் செல்ல நாடார்களுக்கு உரிமை உண்டு. வீதிகளைத் தீட்டுப்படுத்துமளவுக்கு அவர்கள் கீழ்ச்சாதியில்லை. ரத வீதிகளில் அவர்கள் கடைகள் வைத்திருக்கிறார்கள். கீழ ரத வீதியில் காளிமுத்து நாடாருக்கு ஒரு சொந்த வீடும் மனையும் உண்டு. இது பிரதிவாதிகளின் வாதம்.

ரத வீதிகளில் நாடார்கள் நடத்தும் கடைகளுக்கு தேவஸ்தானம் வரி வசூலிக்கிறது. காளிமுத்து நாடார் வாங்கியுள்ள வீட்டை கிட்டங்கியாக மட்டுமே பயன்படுத்தணுமென்று தேவஸ்தானம் அனுமதித்துள்ளது. நாடார்கள் கீழ்ச் சாதிக்காரர்களே. இந்து ஆகமங்களும் புராணங்களும் கீழ்ச்சாதிக்காரர்களைக் கோயிலுக்குள் அனுமதிப்பதில்லை. இப்படி வாதித் தரப்பில் மறுத்தார்கள்.

வழக்கு மூணு வருசம் நடந்தது. ஒரு நாள் முழித்துப்பார்த்து இது தூத்துக் குடி கோர்ட் எல்லைக்குள் வராதாக்கும் என்று சாக்குச் சொல்லி ஸ்ரீவில்லிபுத்தூர் கோர்ட்டுக்கு மாற்றிவிட்டார்கள். அந்தக் கோர்ட்டார் இழுத்தடிக்கவில்லை. விரைவிலேயே தெளிவாகத் தீர்ப்புச் சொல்லிவிட்டார்.

ரத வீதி கோயிலுக்குச் சொந்தமானது. தீட்டு உண்டாக்கும் எந்தக் காரியத் தையும் தடுக்கக் கோயிலுக்கு உரிமையுண்டு. ஆகவே நாடார்கள் ரத வீதியில் பட்டணப் பிரவேசம் போகக் கூடாது. அப்படிப் போவதால் கோயிலுக்குத் தீட்டு ஏற்படும் என்று சொல்வது சரியானதே. அந்த நம்பிக்கைக்குச் சட்டம் அனு சரணையாக இருக்கணும். இதுதான் தீர்ப்பு. அதோடு நிற்கவில்லை. நாடார்கள் ரத வீதியில் பட்டணப் பிரவேசம் போக நிரந்தரத் தடையும் விதித்து தாவாவைத் தீர்த்துவைத்தார்.

எட்டப்ப ராசா நோய்வாய்ப்பட்டு ரெம்பக் கொணங்கிவிட்டார். சின்ன வயசு. இன்னும் அனேக நாள் பட்டத்திலிருக்க வேண்டியவர். சமீன் நிலவரம் வேறு பிச்சுக்கோ பிடுங்கிக்கோ என்று ஏறுக்குமாறாக இருந்தது. இதுக்குக் காரணம் ராமசாமிப் பாண்டியன் என்று பேசிக்கொண்டார்கள்.

அது ஒருவிதத்தில் உண்மைதான். அரண்மனையிலேயே இருந்துகொண்டு அவர் என்னென்னமோ விவகாரம் பண்ணிக்கொண்டிருந்தார். அவருக்கு ஏழு கிராமம் பம்பக மானியமாகக் கொடுக்கப்பட்டிருந்தது. சமீன் வழக்கப்படி இந்த மானியம் பெறுகிறவருக்கு ஆண் வாரிசு இல்லையென்றால் அவர் கண்ணுக்குப் பின்னால் அந்தச் சொத்து அரண்மனைக்குச் சேர்ந்துவிடும். ராமசாமிப் பாண்டிய னுக்கோ வாரிசு கிடையாது. அதனால் தான் இருக்கும்வரை சொத்தை அனுபவிக் கலாம். அவ்வளவுதான்.

தன் குடும்பத்துக்கென்று சொத்து வேணும். அதுக்கு என்ன வழியென்று யோசித்தார். சமீன் சொத்துகளைப் பாகம் பிரித்துவிட்டால் தனக்குரிய பங்கு கிடைத்துவிடும். பிறகு கவலையில்லை. அதே குறியாக இருந்தார். அவருக்கு வெளிச் சேகாரமும் சரியில்லை என்றுதான் சொல்லணும். பாகம் பிரித்து விட்டால் சமீன்தாராகிவிடலாம் என்று ஆசைகாட்டிக்கொண்டிருந்தார்கள்.

அவர் பாகப்பிரிவினை கேட்டு திருநெல்வேலி கோர்ட்டில் வழக்குப்போட் டார். எட்டயாபுரம் சமீனுக்குப் பெரிய அதிர்ச்சி. எத்தனையோ உள்விவகாரங் கள் இருந்ததுண்டு. ஆனால் யாரும் இந்த அளவுக்குத் துணிந்ததில்லை. சமீன்தார் நொந்துபோனார். பரம்பரை பரம்பரையாகக் கட்டிக் காத்துவந்த சமீன் சிதறப் போகும் நினைப்பு அவரை வாட்டியெடுத்தது.

ரெம்பநாள் வழக்கு விசாரணை நடந்தது. சமீன் என்பது பிரிக்க முடியாத கூட்டுச் சொத்து. ஆகவே ராமசாமிப் பாண்டியனுக்குப் பங்கு கிடையாது என்று கோர்ட் கையை விரித்துவிட்டது. ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தால் செயித்து விடலாம் என்று சிலர் ஆசை காட்டினார்கள். அவரும் அப்படியே முடிவுசெய்தார்.

அப்பீலுக்கு நிறைய பணம் வேணுமே. கைவசம் அவ்வளவுக்கு இல்லை. வெளியே புரட்டித்தான் போடணும். ஏழாயிரம்பண்ணையில் சிதம்பரம் என்று நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவர் உண்டு. வட்டிக்குப் பணம் கொடுத்து வாங்கித் தொழில் நடத்திவந்தார். ராமசாமிப் பாண்டியன் அவரிடம் போய் விழுந்தார். சிதம்பரம் வசமாக நோட்டு எழுதி வாங்கிக்கொண்டு பதினை யாயிரம் ரூபாய் கொடுத்தார். வழக்குப் போட்டுக் கிடைக்கும் சொத்திலிருந்து வட்டியும் முதலுமாகத் திருப்பிக் கொடுத்துவிடணும். ஒண்ணு வட்டி.

அந்தப் பணத்தைக் கொண்டு தெம்பாக ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தார். வருசம் ஒண்ணாச்சு. வழக்கு முடிந்த பாடில்லை. வாங்கிய கடன் வட்டியோடு பதினாறாயிரமாக ஏறிவிட்டது. செட்டியார் நெருக்கிப் பிடித்து முப்பத்தி மூவாயிரம் ரூபாய்க்கு மறுநோட்டு எழுதி வாங்கிக்கொண்டார். அதன்படி ஏற் கெனவே இருக்கும் கடனுக்குமேல் பதினேழாயிரத்தை செட்டியார் கொடுக் கணும். அதும் மொத்தமாகக் கிடைக்காது. முதலில் மூவாயிரத்தி முன்னூற்றைம்பது ரூபாய் கையில் கிடைக்கும். மீதியை ஒரு வருசத்துக்குள் ஆறு தவணையில் அடைக்கணும்.

வழக்கு இன்னும் இழுத்துக்கொண்டே போனது. இதுக்கிடையில் ராமசாமிப் பாண்டியனுக்கு இன்னொரு யோசனை தோன்றியது. ஆண் வாரிசு இருந்தால் பம்பக மானியத்தைத் தக்கவைத்துக்கொள்ளலாம். சொந்த வாரிசு இல்லையென்றால் என்ன. ஒரு பையனைத் தத்தெடுத்து வாரிசாக்கிவிட்டால் போயிற்று. நெருங்கிய தாயாதிக்காரப் பையனைத் தத்தெடுத்துக்கொண்டதாக அறிவித்துவிட்டார். அவன் பேர் வெங்கடேசுரெட்டுப் பாண்டியன். இதை உறுதிப்படுத்துவதற்காக திருநெல்வேலி கோர்ட்டில் வழக்குப்போட்டார்.

ரெண்டு வழக்கிலும் விசாரணை நடந்துகொண்டிருந்தது. ராமசாமிப் பாண்டியனுக்கு உளைச்சல். என்னாகுமோ ஏதாகுமோ. அவர் குடும்பத்துக்கும் அரண்மனைக்கும் பேச்சுவார்த்தை கிடையாது. கவலையிலேயே கண்ணை மூடிவிட்டார்.

அவர் சம்சாரம் சக்கரக்கண்ணம்மாளின் நிலைமை ரெம்ப மோசமாகிவிட்டது. ஆதரவுக்கு ஆளில்லாமல் தத்துப்பிள்ளையை வைத்துக்கொண்டு தத்தளித்தாள். வழக்குகளில் நல்ல முடிவு கிடைத்துவிடாதா என்று தவித்தாள். சமீனுக்கெதிராக இருந்துகொண்டு அரண்மனையிலேயே குடியிருப்பது பெரிய கொடுமைதான். இத்தனைக்கும் அவள் ராமசாமிப் பாண்டியனுக்கு நெருங்கிய சொந்தம். தகப்பனாருடன் பிறந்த அத்தை பெத்தம்மாளின் மகன் முத்து நாய்க்கருக்கு மகள்.

தத்தெடுப்பு வழக்கில் எதிர்பார்த்தபடி தீர்ப்பு கிடைக்கவில்லை. வெங்கடேசுரெட்டுப் பாண்டியனைத் தத்தெடுத்தது சட்டப்படி செல்லாதென்று கோர்ட்டார் சொல்லிவிட்டார். வெங்கடேசுரெட்டுக்கு விவரம் பிடிபடுகிற வயசு. வாழ்வா சாவா என்கிற அளவுக்கு நிலைமை முற்றிவிட்டது. வழக்கைத் தன் கையிலெடுத்துக்கொண்டான். சக்கரக்கண்ணம்மா அவனுக்குத் தைரியமூட்டினாள். ஏழாயிரம்பண்ணை சிதம்பரம் செட்டியாரிடம் தன் கணவர் முந்தி எழுதிக்கொடுத்த நோட்டுப்படி வர வேண்டிய கடனை அப்பப்ப ஆள்மூலமாக வாங்கிக்கொடுத்தாள். வெங்கடேசுரெட்டு ஹைகோர்ட்டில் அப்பீல் பண்ணினான். இருவரும் ஏற்கெனவே முடியாமலிருந்த பங்குபாக வழக்கையும் சேர்த்து வைராக்கியமாக எடுத்து நடத்தினார்கள்.

சனங்கள் பலமாதிரியாகப் பேசிக்கொண்டார்கள்.

''அங்க என்ன நடக்குதுன்னு ஆருக்குத் தெரியும்.''

''ஒரு பொண்ணு கோர்ட்டுக்குப் போற அளவுக்கு என்ன வெறுப்போ.''

''ராசாக்களுக்கென்னப்பா ஆளுக்குப் பத்துப் பொண்டாட்டிகூட வச்சுக்கிருவாக. காணாக் கொறைக்கு லச்சணமான பொண்ணுகள வப்பாட்டியாக்கிக்கிருவாக. அவுகளுக்கும் இவுகளுக்கும் புள்ளீக பெறக்கும். ராசா பேரச் சொல்லிக்கிட்டு சொத்துசொகத்துக்காகப் புள்ளீகளுக்குள்ள புழுக்கம் வரும். இதெல்லாம் நடக்கிறதுதான.''

''சொந்த வகையறாவ விட தொடுப்பு வகையறாதான் அனயம்னு பேசிக்கிறாக.''

உண்மைதான். தொடுப்பு வகையில் ஒரு கூட்டமே இருந்தது. வப்பாட்டிகள் ராசாக்களுக்குக் குழந்தைகள் பெற்றுக்கொண்டு குடும்பங்களாக அரண்மனைக்

கோட்டைக்குள்ளேயே குடியிருந்தார்கள். அய்யாக்கமார் குடும்பங்கள் என்று சொல்வார்கள். ஆண்பிள்ளைகளுக்கு எட்டையா குமரய்யா காளய்யா கந்தையா என்று பேர்வைப்பதால் குடும்பங்களின் பேரும் அப்படியாகிவிட்டது. அவர்களுக்குள்ளேயே பெண் கொடுத்து எடுத்துக்கொள்வதுண்டு. வெளியிடத்து உறவும் உண்டு. வப்பாட்டிகள் அந்தப்புரத்துக்கு வந்துவிட்டால் வெளியே போவதில்லை. ராசாக்கள் இறந்துவிட்டால் வப்பாட்டிகளைக் கவனிக்கவேண்டியது அரண்மனையின் பொறுப்பு. அப்படிக் குடியேறியவர்களில் லட்சுமி என்ற கிழவி எண்பது வயசுக்கு மேலும் அனுபவங்களை அசைபோட்டுக்கொண்டிருந்தாள்.

ராமசாமிப் பாண்டியன் இறந்ததும் அவர் அனுபவித்து வந்த பம்பகமானியச் சொத்து அவ்வளவும் சமீன் கணக்கில் சேர்ந்துவிட்டது. அரண்மனையிலிருந்தும் ஹைகோர்ட் வழக்குகளை எதிர்த்து நடத்த ஏற்பாடானது. இதனால் சமீனுக்கு அவப்பேர் ஏற்பட்டதென்னமோ உண்மைதான்.

இப்படிக் கொந்தளிப்பான நேரத்தில் எட்டப்ப ராசாவுக்கு ரெம்ப முடியாமல் போய்விட்டது. இப்பவோ பிறகோ என்று உயிர் ஊசலாடிக்கொண்டிருந்தது. முப்பத்தஞ்சாம் பட்டம் ஆண்ட முத்துச்சாமி செகவீரராம எட்டப்ப நாய்க்கர் அய்யன் இருபத்திரெண்டு வருசத்துக்கு முந்தி இறந்தபோது இருந்த நிலைமைதான் இப்போதும். தனக்குப் பின்னால் தம்பி வெங்கடேசுரெட்டுப் பாண்டியன் மேனேஜராகவும் முந்தி கார்டியனாக இருந்த முத்துச்சாமிப் பாண்டியன் மகன் வெங்கடேசுரெட்டுப் பாண்டியன் தன் குழந்தைகளுக்கு கார்டியனாகவும் இருக்கணுமென்று மனு எழுதிவைத்த பிறகுதான் ராசாவுக்கு உயிர் பிரிந்தது.

ராசா பேரைச் சொல்ல ஆணும் பெண்ணுமாக ரெண்டு குழந்தைகள். குமாரர் செகவீர ராம வெங்கடேசுர எட்டப்ப நாய்க்கர் அய்யனுக்கு பன்னிரெண்டு வயசு தொடங்கியிருந்தது. மகள் விசாலாட்சிக்கு ரெண்டரை வயசு. மயில்குஞ்சுமாதிரி ஓடித் திரிந்தாள். தாய் சின்னம்மா இருபத்தாறு வயசிலேயே விதவையாகி விட்டது பெரிய கொடுமை. இன்னும் வாழ வேண்டிய காலத்தை நினைத்து அழுது குமுறினாள். ராசாவின் தாயார் ராமம்மா மருமகளுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றினாள்.

ராசா இறந்தவுடனேயே சமீன் பொறுப்பைத் தம்பி வெங்கடேசுரெட்டுப் பாண்டியன் கையிலெடுத்துக்கொண்டார். அதிகாரிகளிடம் கலந்து பேசாமலேயே நகைநட்டு விலையுயர்ந்த பொருட்கள் அத்தனையும் அவர் வசம் வந்தது. அவரை எல்லாரும் சின்ன மகாராசா என்று சொல்வார்கள்.

ராசா மனுவே எழுதிக் கொடுக்கவில்லை. இவர்களாகவே பொய்க் கையெழுத்துப் போட்டு எழுதிக்கொண்டார்கள் என்று யாரோ ஒருவர் பேரில் கலெக்டருக்குப் பிராது போனது. அதை எடுத்துக்கொண்டு சப்கலெக்டர் விசாரணைக்கு வந்தார். விவரமாக விசாரித்ததில் புகார் ருசுவாகவில்லை. ராசா எழுதி வைத்தது உண்மைதான் என்பது தெரியவந்தது.

பிறகு சின்ன மகாராசாவிடம் பேசினார். அவர் தன் விருப்பத்தைத் தெளிவு படுத்திவிட்டார்.

''நான் மேனேஜரா இருக்கிறாப்புலருந்தா சமீன் பொறுப்ப சர்க்கார் எடுத்துக்கிறதுல எனக்குச் சம்மதந்தான்.''

சப்கலெக்டர் மைனர் ராசாவிடம் பேச்சுக்கொடுத்தார். தகப்பனார் எழுதி வைத்தபடி நடக்கட்டுமென்று அவர் சொன்னார். சப்கலெக்டர் அரண்மனையில் பணத்தையும் நகைகளையும் சரிபார்த்து சீல்வைத்துப் பூட்டிவிட்டுப் போய் விட்டார்.

சின்ன மகாராசாவுக்கு சப்கலெக்டர்மேல் நம்பிக்கை போய்விட்டது. மனுசன் பிடிகொடுக்கவில்லையே. வருத்தப்பட்டுக்கொண்டார். விசாரணை சரியாக நடத்தவில்லை. தான் மேனேஜராக இருந்தால்தான் வழக்குகளை முறையாக நடத்த முடியும். தன் சகோதரர் எழுதிவைத்தபடி செய்யுங்கள் என்று சர்க்காருக்கு மனுமேல் மனுவாக எழுதினார். கூடவே சிலரைச் சேர்த்துக் கொண்டார்.

பழையபடி ராமசாமிப் பாண்டியனின் கதையாகிவிடக் கூடாது என்பதில் கலெக்டர் எச்சரிக்கையாக இருந்தார். நெருக்கடியான நேரத்தில் அரண்மனைக் குடும்பத்தில் ஒருவரை மேனேஜராக்குவது உசிதமாகப் படவில்லை. சொத்து நிறைய உள்ள சமீன். பல வழக்குகள் விசாரணையில் இருந்தன. வெளியாள் மேனேஜராக இருப்பதுதான் சரி. சுப்பராயரை பழையபடி கொண்டுவரலா மென்றால் அவர் தஞ்சாவூர்ப் பக்கம் போய்விட்டார். நிறைய சம்பளம் வாங்கு கிறவர். சமீனுக்கு அதிகம் செலவாகும். செங்கல்பட்டில் டெபுடி கலெக்டராக இருக்கும் வெங்கட்ட ராயரைக் கொண்டுவரலாம். அவருக்குச் சம்பளம் சொற் பந்தான். அவரை மேனேஜராக நியமித்து சின்ன மகாராசாவை கார்டியனாக்கி விடலாம் என்று சர்க்காருக்குச் சிபாரிசு செய்தார்.

சர்க்கார் சின்ன மகாராசாவின் மனுக்களைக் கண்டுகொள்ளவில்லை. கலெக்டரின் சிபாரிசுப்படியே உத்தரவு போட்டது. சின்ன மகாராசாவுக்குச் சப் பென்று போயிற்று. சப்கலெக்டர் கலெக்டர்மேல் ஆத்திரம். மோதிக்கொள்ளவும் முடியாது. இந்த மட்டுக்காவது சந்தர்ப்பமும் மரியாதையும் கிடைத்ததே என்று திருப்திப்பட்டுக்கொண்டார். சமீன் நிருவாகம் முழுக்க கலெக்டர் மேற்பார்வை யில் சர்க்கார் பொறுப்புக்கு வந்துவிட்டது.

## 5. வந்தாரய்யா வெங்கட்ட ராயர்

வெங்கட்ட ராயர் சமீன் மேனேஜராகிவிட்டார். அவருக்குத் தலைக்கு மேல் வேலையிருந்தது. சமீன் நிலைமை சொல்லிக்கொள்ளும்படியாக இல்லை. நிறை குளத்தில் அங்கங்கே கரையில் கசிவெடுத்த மாதிரி விவகாரங்கள் பயமுறுத்திக் கொண்டிருந்தன. உடைந்துவிடாமல் ஓடிஓடி அடைக்க வேண்டிய அவசரம்.

அவர் கறாரான மனுசன். எல்லாரிடமும் கண்டிப்பாக நடந்துகொண்டார். பிரச்சினைகளைத் தோண்டித் துருவி நடவடிக்கை எடுத்தார்.

முதல் காரியமாகச் சின்ன மகாராசாவுடன் பேசி சர்க்காருக்கு எழுதி கார்டி யனுக்குரிய மானியத்தை முடிவுசெய்தார். அதை வைத்துக்கொண்டுதான்

அரண்மனை யானைமுதல் மைனர் ராசாவரை பராமரிக்கணும். சின்ன மகா ராசாவுக்கு கையைக் கட்டிப்போட்ட மாதிரி இருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு சமாளித்துவந்தார்.

திடீரென்று யானை செத்துப்போயிற்று. மேனேஜர் சும்மா இருக்கவில்லை. உடனே மேலாவுக்கு எழுதி யானைக்குரிய மானியத்தைக் குறைத்தார். இதெல் லாம் சின்ன மகாராசாவுக்கு உறுத்தியது.

மேனேஜர் ஒவ்வொரு செலவாகக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தார். சின்ன மகாராசாவைத் துணைக்கு வைத்துக்கொண்டு அரண்மனைக் குடும்பத் திலுள்ள அத்தனை பேர் பட்டியலையும் தயாரித்து அவரவர் உறவுக்குத் தகுந்த படி மானியம் கொடுக்க ஏற்பாடுசெய்தார். அவர்களில் அய்யாக்கமார் குடும்பத் தாரும் உண்டு.

முப்பத்திநாலாம் பட்டத்து ராணி ராமம்மாளின் பேர் வம்சாவளிப் பட்டியலில் இல்லை. எப்படியோ விடுபட்டுப்போயிற்று. இத்தனைக்கும் அவள் மைனர் ராசாவின் பாட்டி தாயாருடன்தான் குடியிருந்தாள். தனது நிலைமையை நினைத்து நொந்துபோய் அவள் சர்க்காருக்கு முறையிட்டாள். நானும் ஒரு காலத்தில் ராணியாக இருந்தவள்தான். அப்போது நான் அணிந்திருந்த அத்தனை நகைகளையும் அடுத்த பட்டத்து ராணியிடம் கொடுத்துவிட்டுத் தனிமரமாக நிற்கிறேன். என் காலக்கிரகத்துக்கு வயிற்றில் பிள்ளையில்லாமல் போயிற்று. மைனர் ராசாவின் பாட்டியும் தாயாரும் ஆளுக்கு மாசம் நூறு ரூபாய் கைச் செலவுக்கு வாங்கும்போது என்னை மட்டும் விட்டுவிட்டது நியாயமில்லை. ஏனக்கும் அவ்வளவு கொடுக்கணும். இப்படி அழாக்குறையாக மனுவில் சொல்லி யிருந்தாள்.

மேனேஜருக்குச் சந்தேகம். சின்ன மகாராசாவைக் கேட்டால் மழுப்பினார். இதில் ஏதோ புழுக்கம் இருக்கிறதென்று நினைத்துக்கொண்ட மேனேஜர் ராமம் மாளின் நிலைமையை எடுத்துச்சொல்லி அவள் மைனர் ராசாவுக்கு கொஞ்சம் தூரத்து உறவு என்பதால் மாசம் ஐம்பது ரூபாய் பெற்றுத்தந்தார். அவள் மேலும் ஐம்பது ரூபாய் கூட்டிக் கேட்டும் சர்க்கார் ஒத்துக்கொள்ளவில்லை.

மைனரின் தாயாரும் பாட்டியுங்கூட தங்களுக்குக் கிடைக்கும் பணம் போதாதென்று முணுமுணுத்தார்கள். மேனேஜர் கண்டுகொள்ளவில்லை. இதில் அவர்களுக்குக் கொஞ்சம் வருத்தம்.

மைனர் ராசாவுக்கு சின்னச்சாமி என்று தாய்மாமனார் உண்டு. அவரை சக்கரைச்சாமி என்றும் சொல்வார்கள். சின்ன மகாராசா செய்த ஏற்பாட்டின் படி அரண்மனை நகைகள் அவர் பொறுப்பில் இருந்தன. நல்ல காரியங்களுக்கு ஆபரணங்களை எடுத்துக் கொடுக்க வேண்டியது. எல்லாம் முடிந்த பிறகு வாங்கிப் பூட்டி வைக்க வேண்டியது. இதுதான் அவர் வேலை. இந்த வேலைக்காக அவருக்கு ஏதாவது உபகாரஞ்செய்யணுமென்று சின்ன மகாராசா விரும்பினார். நூற்றி இருபத்தஞ்சு ஏக்கருக்கும் அதிகமான பண்ணை நிலத்தை மானியமாகக் கொடுக்கலாம் என்று சிபாரிசு செய்தார். மேனேஜருக்கும் கலெக்டருக்கும் இது ஒப்பவில்லை. சுளுவான வேலைக்கு இவ்வளவு மானியம் அதிகமென்று நினைத் தார்கள். மாசம் முப்பது ரூபாய் கொடுத்தால் போதுமென்று கலெக்டர்

சர்க்காருக்கு எழுத அப்படியே உத்தரவானது. சின்ன மகாராசாவுக்கும் சின்னச் சாமிக்கும் வருத்தம் ரெம்ப. எல்லாவற்றுக்கும் மேனேஜர் குறுக்கே நிற்பதாக நினைத்தார்கள்.

அரண்மனைச் சேவகர்கள் என்று சொல்லிக்கொண்டு பெரிய கூட்டமே இருந்தது. காவக்காரர்கள் தோட்டக்காரர்கள் சாவல் மயில் பூனை குதிரை மாடு வளர்ப்பவர்கள் சங்கு வாங்கா ஊதுகிறவர்கள் முரசடிப்பவர்கள் வேட்டைக் காரர்கள் அடப்பக்காரர்கள் பல்லாக்குச் சுமப்பவர்கள் வண்டிக்காரர்கள்... இவ்வளவு பேர் தேவையில்லை என்று மேனேஜர் நினைத்தார். எண்ணிக்கையைக் குறைத்து அதிகப்படியானவர்களை வீட்டுக்கு அனுப்பினார். தவறு செய்தவர் களைத் தயவு தாட்சணியமில்லாமல் தண்டித்தார்.

அனுபவசாலிகளையெல்லாம் அவர் தூக்கியெறிவதாக பாதிக்கப்பட்டவர் கள் அவர்மேல் மனுப்போட்டார்கள். நிருவாகத்தைக் குறைசொன்னார்கள். சர்க்கார் அவர்மேல் நல்ல அபிப்பிராயம் வைத்திருந்ததால் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

சனங்களிடமும் மேனேஜருக்கு நல்ல பேர் இருந்தது. மழை தண்ணீரில் லாமல் கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி வாங்கிக் கொடுத்தார். ஒரு ஊர் முழுக்க தற்செயலாகத் தீப்பிடித்து எரிந்துவிட்டது. புதுவீடு கட்டிக்கொள்ள எல்லா ருக்கும் பணம் வாங்கித் தந்தார். மனசாரப் பாராட்டினார்கள்.

''ஏழபாழைக்கு எரங்குற மகராசன் நல்லாருக்கணும்.''

''அந்த வரி இந்த வரின்னு வசூலிக்கத் தெரியிதுல்ல. நம்ம நல்லாருந்தாத் தான வரி குடுக்க முடியும்.''

''புண்ணியவாளன் வந்தாரு நெறைய வரி எடுபட்டுப்போச்சு.''

சமீன் அதிகாரிகளும் சேவகர்களும் அந்தச் செலவு இந்தச் செலவு என்று சனங்களிடம் அரித்துப் பறித்தார்கள். ஆடிக் கடைசியிலும் தை முடிவிலும் சம் சாரிகள் ராசாவைச் சந்தித்து மரியாதை செய்வது வழக்கம். அதுக்கு சந்திப்பு என்று பேர். ராசா சம்சாரிகளுக்குச் சன்மானம் கொடுப்பார். சந்திப்புக்காக அவர்களிடம் வரி வசூலிப்பார்கள். நூறு ரூபாய்க்கு பன்னிரெண்டணா. ஒரு சந்திப்புக்கு அரண்மனையில் நானூறு ரூபாய் செலவாகும். ஆயிரம் ரூபாய்க்கு மேல் வசூலாகும்.

வட்டம் என்றொரு வரி உண்டு. கிராமத்துச் சனங்கள் பணங்கட்டும்போது அது செல்லாது இது செல்லாது என்று சாக்குப்போக்குச் சொல்லாமல் பணத்தை வாங்கிக்கொள்வதற்காக அதிகாரிகள் வரி வசூலிப்பார்கள். நூற்றுக்கு ரெண்டணா. இதனால் சமீனுக்கு நல்ல வருமானம். பிறகு இந்த வரியைக் கிராம அதிகாரிகள் அதிகாரமாக வசூலிக்க ஆரம்பித்தார்கள்.

கிராம அதிகாரிகள் பொதுச் செலவுக்காகச் செலவு வரி வசூலித்தார்கள். ஒரு ஏக்கருக்கு ரெண்டணா. இது கிராமத்துக்குக் கிராமம் வேறுபடும். அடுத்து மனு வரி. மனுவில் வில்லை ஒட்டுவதற்குப் பதிலாக ஒவ்வொரு மனுவுக்கும் ஒரணா கொடுக்கணும். இந்தப் பணம் எட்டயாபுரம் முழுக்க ராசா பேரில் விளக்குப்போடச் செலவு செய்யப்பட்டது.

ஒரு காலத்தில் சாவல்வரிகூட இருந்தது. சமீனில் நிறையச் சாவல்கள் உண்டு. அதுகளுக்கு இரைபோட்டு வளர்ப்பதற்காக ஊருக்கு எட்டணா கொடுக்கணும். இது கொஞ்ச நாளுக்கு முந்தியே நிறுத்தப்பட்டுவிட்டது.

முக்கந்தன் துப்பட்டிக் கழிவு என்று ஒண்ணு. எலவாணியர்கள்தான் வெற் றிலைக் கொடிக்கால் பயிரிடுவார்கள். அவர்கள் நேரடியாக மனுப்போட்டு நிலம் பெற்றுவிட முடியாது. அதுக்கென்று ஒருவர் இருப்பார். அந்தப் பெரிய மனுசன் மூலந்தான் மனுக்கொடுக்கணும். அவரே நிலத்துக்குண்டான வரியை வசூலித்துக் கொடுப்பார். இதுக்காக அவருக்கு வருசத்துக்கு ஒரு ஏக்கருக்கு ஒண்ணே காலேரைக்கால் ரூபாயோ ரெண்டு வருசத்துக்கு ரெண்டே முக்கால் ரூபாயோ கழிவுத் தொகையாகக் கொடுக்கணும்.

மேனேஜருக்கு இதெல்லாம் சரியாகப் படவில்லை. அதிகாரிகள் அநியாய வரி வசூலிப்பதை வள்ளிசாக நிறுத்திவிட்டார். பார்வை பற்றாமலும் கைகால் விளங்காமலும் சில கணக்குப்பிள்ளைகள் வேலைசெய்யாமல் காலம் கடத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள்மேல் வழக்குப்போட்டுக் கணக்கை முடித்தார்.

ஹைகோர்ட்டில் நடந்துவந்த பங்குபாக வழக்கும் ராமசாமிப் பாண்டியன் தத்தெடுத்த வழக்கும் சமீனுக்குச் சாதகமாக முடிந்தன. மேனேஜர் முயற்சி எடுத் திருக்காவிட்டால் இப்படித் தீர்ப்பாகியிருக்குமா என்பது சந்தேகம்.

இன்னொரு முக்கியமான வழக்கு வந்துசேர்ந்தது. ஏழாயிரம்பண்ணை செட்டியாரிடம் ராமசாமிப் பாண்டியன் வாங்கிய கடனை வசூலிக்கச் செட்டியார் மகன் வழக்குப் போட்டுவிட்டார். ராமசாமிப் பாண்டியன் அனுபவித்துவந்து அவர் கண்ணுக்குப் பின்னால் சமீனில் சேர்ந்துவிட்ட பம்பக மானியச் சொத்துக் களை ஜப்தி செய்யும்படி கோர்ட் உத்தரவு போட்டுவிட்டது. இப்படியாகிவிட் டதே என்று அரண்மனையில் எல்லாரும் கவலைப்பட்டார்கள். மேனேஜர் மனந் தளரவில்லை. நம்பிக்கையுடன் வழக்கை எதிர்த்து நடத்த நடவடிக்கையெடுத்தார்.

கோயில்களில் களவு சாதாரணமாக நடந்தது. கோலார்பட்டி கோயில் நகைகள் மாயமாக மறைந்துவிட்டன. அவ்வளவு தூரம் எதுக்கு. எட்டயாபுரம் எட்டீசுர மூர்த்தி கோயிலிலேயே கைவரிசையைக் காட்டிவிட்டார்கள்.

அன்றைக்கு விடிந்தும் விடியாமல் ஒருவன் வந்து மேனேஜரிடம் தகவல் சொன்னான்.

''என்னத்தச் சொல்லட்டும் சாமி. வடக்குக் கோயில்ல நகையெல்லாம் களவுபோயிருச்சு. தெய்வத்த மூளியாக்கீட்டுப் போயிட்டாகளே பாவிக.''

அவருக்கு உடம்பு வேர்த்துவிட்டது. அரண்மனையருகிலுள்ள கோயிலுக்கே இக்கதியா. வேணுமென்றுதான் செய்திருக்கணும். யார் தூண்டிவிட்டார்களோ. கடவுளே இதென்ன சோதனை. உடனே கோயிலுக்கு ஓடினார்.

கோயில் இருந்த கோலம் சொல்ல முடியாது. பெரிய கதவில் தாழ்ப்பாளைக் காணவில்லை. சற்றுத் தள்ளியிருக்கும் விக்ரகங்களுக்குப் பின்னால் கிடப்பதாகச் சொன்னார்கள். கதவில் சிறுசிறு மணிகள் பூத்துக் குலுங்கும். கதவைத் திறந்தால்

மணிகளின் சிரிப்பைக் கேட்கச் சொகமாக இருக்கும். அத்தனை மணிகளையும் துண்டுத் துணிகளால் சுற்றி முடிந்து நாவைக் கட்டிவிட்டார்கள். உள்கை உடந்தையில்லாமல் இவ்வளவு மெனக்கிட்டுச் செய்ய முடியாது. மணிக்கதவுச் சாவி அர்ச்சகர் குப்பப் பட்டரிடம் இருந்தது.

வெளிப்பிராகாரத் தூண்களில் யாளித் தோரணம் வேதனையில் தலை குனிந்திருந்தது. கொடிமரத்தருகே உயரமான நந்தி காது விடைத்து முகம் சினந் திருந்தது. வலப்புறம் நவக்கிரகங்கள் உள்ளே நடந்திருக்கும் அநியாயத்தைப் பார் என்று ஒவ்வொண்ணும் சொல்வது மாதிரி உம்மென்றிருந்தன.

உள்பிராகாரத் தூண்களில் சாய்ந்திருக்கும் காவல் தெய்வங்களின் முகத்தில் களையில்லை. கருவறை வாசலில் சிறு நந்தி பரிதாபமாகப் பார்த்தபடி படுத் திருந்தது. கருவறைக்குள் எட்டீசுரமூர்த்தி லிங்கமாகச் சலனமற்று தவநிலையில் இருந்தார். வலப்புறம் சோதிநாயகி சன்னதி. அந்த மலைமகளின் மொட்டவிழாத சிரிப்பில் ஏளனம் தொனித்தது.

கருவறையருகே ஒரு அறைக்குள் வைக்கப்பட்டிருந்த மூணு மரப்பெட்டி களும் பூட்டுடைந்து கிடந்தன. அதில்தான் கோயில் நகைகள் அத்தனையும் இருந் தன. எல்லாம் களவுபோய்விட்டன. மரப்பெட்டிச் சாவிகளில் ஒண்ணு சுந்தரக் குருக்களிடம் இருந்தது. ரெண்டு சாவியைக் காவக்கார சிவசங்கரன் பிள்ளை வைத்திருந்தார்.

களவுபோன நகைகளைக் கணக்கெடுத்தார்கள். நூற்றிப் பதினாறு உருப்படி. இதில் ஆச்சரியம் என்னவென்றால் அதே அறையிலிருந்த வெள்ளிச் சாமான்கள் அப்படியே இருந்தன.

மேனேஜருக்குக் கோயில் சேவகர்கள்மேல் சந்தேகம் வலுத்துக்கொண்டே வந்தது. கோயில் மணியக்காரர் சங்கரநாராயண பிள்ளையை விசாரித்தார்.

''ஓய் நோக்குத் தெரியாம நடந்துருக்காது.''

அவர் கையை விரித்தார்.

''எனக்கு எதுமே தெரியாது சாமி.''

''உண்மையச் சொல்லு.''

''என்ன நம்புங்க சாமி.''

அவர் முந்தி கழுகுமலைக் கோயிலில் வேலை பார்த்தவர். அப்போது ஆயிரத்தி ஐநூறு ரூபாய் பெறுமான கோயில் நகைகள் களவுபோனதில் அவர்மேல் சந்தேகம் வந்ததால் ஒரு மாசம் உள்ளே இருந்தார். குற்றம் ருசுவாகாததால் விடு தலையாகிவிட்டார்.

மேனேஜர் காவக்கார சிவசங்கரன் பிள்ளையை விரட்டினார்.

''திருடன உள்ள விட்டுண்டு காவலிருந்தயா இல்ல அவனோட சேந்து திருடுனயா.''

காவக்காரர் மென்றுமென்று விழுங்கினார்.

''நான் பாக்கல சாமி. பாத்தா வுடுவனா. புடிச்சுக் கெட்டிவச்சிருப்பென்.''

காவக்காரருக்கு ஏற்கெனவே ஒரு அனுபவம் உண்டு. கோயிலுக்குள் ஒரு அறையில் வைக்கப்பட்டிருந்த முப்பத்தி மூணே கால் ரூபாய் களவுபோய்விட்ட தாக அவரே பிராது சொன்னார். பணத்தை அவர்தான் கையாடியிருக்கக்கூடும் என்ற சந்தேகம் இருந்தது. அந்தத் தொகையை மாசாமாசம் தன் சம்பளத்திலிருந்து

பிடித்துக்கொள்ளச் சம்மதித்தார். அதனால் மைனர் ராசாவின் தகப்பனார் அவரை வேலையில் வைத்துக்கொண்டார்.

மேனேஜர் சுந்தரக் குருக்களையும் குப்பப் பட்டரையும் விசாரித்தார். ஒரு துப்பும் கிடைக்கவில்லை. அவருக்குக் கோவம். நாலு பேரையும் வேலையி லிருந்து நிறுத்தி உத்தரவு போட்டார். அதே கையோடு போலீசுக்கும் பிராதும் கொடுத்தார்.

அவருக்கு ரெம்ப வேதனை. கோயில் சொத்துக்களைப் பற்றிக் கவலை யில்லாமல் இருக்கிறார்களே. கடவுளுக்கே இது அடுக்காது. இவர்களைத் திருத்தவே முடியாதா.

கழுகுமலைக் கோயிலில் ஒரு அர்ச்சகர் உண்டு. அங்கே பொருள் களவு போனது சம்பந்தமாக ஆறு மாசம் தண்டனை வாங்கி உள்ளே இருந்தார். அதுக்குப் பிறகு மறுபடியும் வேலைக்கு வந்துவிட்டார். எல்லாம் சமீன்தார் உபயம். அவருக்கு இளகிய மனசு. எல்லாரையும் அரவணைத்துக்கொண்டு போனார்.

கோயில் சேவகர் என்றால் பயபக்தி நாணயம் இருக்கணும். அவர்களை வேலைக்குச் சேர்க்கும்போது இதையெல்லாம் பார்த்திருக்கணும். ஒருவேளை சேரும்போது யோக்கியமாகத்தான் இருந்திருப்பார்கள். பிறகுபிறகு சபலப் புத்தி வந்து குளிர்விட்டுப் போயிருக்கும். மேனேஜர் மனசு நொந்து கலெக்டருக்கு எழுதினார்.

கழுகுமலைக்காரர்கள் அடிக்கடி அவரிடம் புகார் சொன்னார்கள்.

''சாமி மாட்டுத்தாவணிக் கூட்டமும் கோயில் திருழாக் கூட்டமும் களவு சோலிக்குத் தோதான எடமாப் போச்சு.''

''இருட்டுக்குள்ள அனயம் மாடுகளக் கடத்தீட்டுப் போயிறாங்க. துப்புக் கூலி குடுத்தாத்தான் மாடுக திரும்பக் கெடைக்கும். இல்லன்னா வித்துத் தின்னுருவாங்க.''

''வழிப்பறிக் கொள்ள சாதாரணமா நடக்குது. சம்சாரிகளும் யேவாரிகளும் பணத்தப் பறிகுடுத்துட்டுப் பரிதவிக்கிறதப் பாக்கப் பாவமாருக்கு.''

''நீங்கதான் இதுக்கு ஒரு வழி பண்ணணும் சாமி.''

மேனேஜர் யோசித்துப்பார்த்தார். இருட்டுதானே களவுக்கு வசதியாக இருக்கிறது. அதுக்கு ஒரு வழி பண்ணியாகணும். ஊருக்குள்ளும் தாவணி வீதி யிலும் அங்கங்கே லாந்தர் விளக்குகள் பொருத்த ஏற்பாடு செய்தார். களவு ரெம்பக் குறைந்தது. களவாணிகளுக்குப் பிழைப்பு கெட்டது. கறுவினார்கள்.

''நம்ம பெழப்புல மண்ணள்ளிப் போட்டுட்டானே.''

''இவன் இருக்கிறவரைக்குத் தொறட்டுத்தான்.''

## 6. புது வழி

கழுகுமலை நாடார்கள் ஓய்ந்துவிடவில்லை. ஸ்ரீவில்லிப்புத்தூர் கோர்ட்டாரின் தீர்ப்பை எதிர்த்து திருநெல்வேலி கோர்ட்டில் அப்பீல் செய்தார்கள். கலெக்டர் மைனர் ராசா சமீன் மேனேஜர் முதலானவர்கள் முக்கியமான பிரதிவாதிகள். கோயில் உற்சவங்கள் சம்பந்தமான விவகாரங்களை விசாரிக்கக் கீழ்க்கோர்ட்

டுக்கு அதிகாரமில்லை. இதில் கோர்ட்டார் தவறான முடிவெடுத்துவிட்டார். ரத வீதிகள் கோயிலுக்குத்தான் சொந்தம் என்று சொல்லும் ஆதாரங்கள் அத்தனையும் பொய். இதுதான் அவர்கள் அப்பீலில் சொல்லியிருந்தது.

அப்பீல் கோர்ட்டார் இதை ஏற்கவில்லை. ஆதாரங்களின்படி ரத வீதிகள் முழுக்கமுழுக்கத் தனியார் சொத்துத்தான். பொதுக் காரியங்களுக்குப் பாத்தியப் பட்டதில்லை. வீதியில் கதவு போட்டிருக்கிறார்கள். வியாபாரிகளிடம் கடை களுக்கு வாடகை வசூலிக்கிறார்கள். கீழ ரத வீதியில் காளிமுத்து நாடார் வீடு வைத்திருக்கிறார் என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது. அதும் கிட்டங்கிதான். அவர் எழுதிக்கொடுத்த பத்திரப்படி அந்த இடத்தின்மீது கோயிலுக்குத்தான் பாத்தியம் உண்டு. இப்படியெல்லாம் காரணங்களைச் சொல்லி கோர்ட்டார் அப்பீலைத் தள்ளுபடி செய்துவிட்டார். கோயிலுக்கு நாடார்களால் தீட்டு ஏற்படும் என்பதைப் பற்றி எதும் சொல்லாமல் சாதுரியமாகத் தவிர்த்துவிட்டார்.

நாடார்களுக்கு வைராக்கியம் கூடியது. வழக்கை ஹைகோர்ட்டுக்கு எடுத்துப்போனார்கள். கீழ்க்கோர்ட்டில் சொல்லாமல் விடுபட்டதை இந்த அப்பீலில் சொன்னார்கள். கிட்டத்தட்ட ஒரு வருசத்தில் தீர்ப்பு வந்துவிட்டது. சுருக்கமான ஆனால் அழுத்தமான தீர்ப்பு.

நாடார்கள் ரத வீதிகளில் ஊர்வலம் போக எப்போதுமே எதிர்ப்பு இருந் துள்ளது. ரத வீதிகள் பொதுக் காரியங்களுக்குப் பாத்தியப்பட்டதில்லை என்று கீழ்க்கோர்ட்டார் சொன்னது நியாயமானதே. ஆகவே நாடார்கள் ஊர்வலம் போவதைத் தடுக்கக் கோயிலுக்கு உரிமையுண்டு. இதுதான் ஹைகோர்ட் வாயி லிருந்து வந்தது. பிறகென்ன வழக்கு தள்ளுபடிதான். அதோடு விட்டார்களா. வழக்குச் செலவுக்காக நாடார்கள் ஆயிரம் ரூபாய் கொடுக்கணுமென்றும் உத்தரவு.

நாடார்கள் ஹைகோர்ட்மீது ரெம்ப நம்பிக்கை வைத்திருந்தார்கள். கடைசி நம்பிக்கையும் தகர்ந்துவிட்டது. எல்லா வழிகளும் அடைபட்டுவிட்ட நிலையில் மூச்சு முட்டித் தவித்தார்கள்.

''சாச்சிக்காரங்க எல்லாரும் சமீந்தாரோட வேலக்காரங்க. நமக்கு வேண்டா தவங்க. நமக்குச் சாதகமாத் தீர்ப்பு வரும்னு எப்படி எதிர்பாக்க முடியும்.''

''இனிமே மேச்சாதிக்காரங்களோட மல்லுக்கெட்டிப் புண்ணியமில்ல.''

''அதானப்பா. எங்க போனாலும் கல்லுல முட்ன மாதிரில்ல இருக்கு.''

''அதுக்காக மானம் மருவாதி கெட்டு ஈனப்பெழப்பு பெழைக்கச் சொல்றயா. எப்படியும் பல்லாக்குல பட்டணப்பருசம் போகணும். அதுக்கு வழியச் சொல்லு.''

''அவங்களுக்குப் பயந்து வால மடக்கீட்டுப் போற பேச்சே இல்ல.''

''இந்துக்காரனா இருக்கிறதாலதான எண்ணைக்கும்போல காலுக்குள்ள போட்டு மிதிச்சுக்கிட்டே இருக்கணும்னு நெனைக்கான்.''

''வேற வழியென்ன.''

''வழியா இல்ல. எல்லாரும் வேதத்துக்கு மாறியிருவொம். அப்பயாச்சும் அவனுக்கு அறிவு வருதான்னு பாப்பொம்.''

''இப்படி ரெம்ப நாளாச் சொல்லீட்டுத்தான் இருக்கொம். ஒரு வேதச் சாமியாருட்டச் சொன்னொம். தலக்குடுக்க மாட்டன்னுட்டாரு.''

''இந்தத் தடவ பின்வாங்கப்போறதில்ல.''

"அங்க போனா அவமானப்பட வேணாம். மருவாதியா இருக்கலாம்."

"நம்ம போயிட்டா சனியன் ஒழிஞ்சதுன்னு சந்தோசப்படுவான்."

"அங்க போயி சும்மா கெடக்கிறதுக்கா. போன பெறகு என்ன நடக்குதுன்னு பாரு."

"நல்லா யோசிச்சு முடிவெடுங்க."

"இதுல யோசனையென்ன வேண்டிக்கெடக்கு. ஒரே முடிவுதான்."

"திடுதும்னு உள்ளூருச் சாமிய வுட்டுட்டு வேற சாமியக் கும்புட ஆரம்பிச்சா எப்படி. எல்லாரும் ஒத்துவரணுமே."

"இவன் ஒருத்தன். பல்லாக்குல போறதுக்கு எந்தச் சாமி ஒத்தாசனை யாருக்கோ அதக் கும்புட்டுக்கிற வேண்டியதுதான். ஒத்துவாறவுக வரட்டும். வராதவுக மிதிபட்டுச் சாகட்டும்."

"ஏதொண்ணுக்கும் எட்டப்ப ராசாட்ட ஒரு வார்த்த பேசிப் பாப்பமே."

"நாடாங்க கீச்சாதிக்காரங்க. அவங்க ரத வீதியில பட்ணப்பருசம் போனாத் தீட்டுன்னு சொன்னவராச்சே. அவருட்ட ஞாயம் கெடைக்கும்னு நெனைக்கயா."

"நம்ம என்ன செய்றொம் தெரியுமா. நாளைக்கே எல்லாரும் காமயநாய்க்கன் பட்டிக்குப் போறொம். சாமியாரப் பாத்து இப்படியிப்படின்னு வெசயத்தச் சொல்றொம். அவரு என்ன சொல்றாரோ அந்தப்படி நடந்துக்கிருவொம்."

"எல்லாரும் தெரண்டு போனா மத்தவுகளுக்குத் தெரிஞ்சுபோகும். கொஞ்சப் பேருதான் போகணும். அதும் சாதாரண நாள்ல போகப்புடாது. மாதா கோயிலுத் திருவிழாவுக்குக் கொஞ்ச நாளுதான் இருக்குது. அதுக்குப் போறதுபோலச் சாமி யாரப் பாத்து கமுக்கமாப் பேசி முடிப்பொம். அதுவரைக்கு இதப்பத்தி மூச்சுவுட வேணாம்."

"இதுதான் முடிவு."

பேச்சிமுத்து நாடார் சொன்னார்.

"சாமியாரப் பாத்துப் பேசிமுடிக்க வேண்டியது எம் பொறுப்பு."

அவர் கொஞ்சம் விவரமான மனுசன். நாலு இடத்தில் பழக்கமுண்டு. மற்ற வேலைகளை பருத்திமண்டி அருணாசல நாடார் கருத்தண நாடார் மகாலிங்க நாடார் காண்ட்ராக்டர் ராமசாமி நாடார் என்று முக்கியமானவர்கள் கவனித்துக் கொண்டார்கள். அவர்கள் எல்லாரும் வியாபாரிகள். சொந்தத்தில் விவசாயமும் நடந்தது.

அருணாசல நாடார் தாட்டிக்கமானவர். அவரை முதலாளி என்று சொல் வார்கள். அவர் திட்டப்படிதான் எல்லாக் காரியங்களும் நடக்கும். அவர் வார்த்தைக்குக் கட்டுப்படுவார்கள்.

## 7. பரலோக மாதாவே

காமயநாய்க்கன்பட்டி பரலோக மாதா கோயில் அந்தச் சீமையில் பிரசித்த மானது. வருசாவருசம் மாதாவுக்குத் திருவிழா விமரிசையாக நடக்கும். இந்துக் காரர்கள் வேதக்காரர்கள் என்று வித்தியாசமில்லாமல் சுத்துப்பட்டிச் சனங்கள்

கணக்கில்லாமல் கூடுவார்கள். கழுகுமலை பங்குனி உத்திரத்துக்கு ஈடான கூட்டம் வரும்.

மாதாவுக்குக் காணிக்கை குமிந்துவிடும். குழந்தைகளுக்கு மொட்டையடிப் பார்கள். நேர்ச்சை இருந்தால் பெரியவர்களும் போட்டுக்கொள்வதுண்டு. மாதா தேரில் ஊர் சுற்றிப் பவனி வருவதை கண்குளிரப் பார்த்துப் பரவசமடையும் வரை சனங்களுக்கு மனசு நிலைகொள்ளாது.

கழுகுமலையிலிருந்தும் நிறைய பேர் திருவிழாவுக்குப் போவதுண்டு. அதில் நாடார்கள்தான் அதிகம். பேச்சிமுத்து நாடார் வருசம் தவறாமல் போவார். சப்பரத்தில் மாதாவைப் பார்த்ததும் நாடார்கள் ஏங்குவார்கள்.

''தாயே எங்களுக்கு இப்படியொரு சந்தர்ப்பம் எப்ப வருமோ. இந்த ஊரு நாடாருகளப்போல நாங்களும் சந்தோசமா இருக்கணும். அதுக்கு வரங்குடு மாதா.''

திருவிழா நெருங்கநெருங்கக் கழுகுமலை நாடார் தெருக்களில் சனங்கள் ஒரு நிலையில் இல்லை. எந்நேரமும் அதே பேச்சுத்தான். பலவேச நாடாரும் பெரிய நாடாரும் உறக்கம் கெட்டுப் பேசினார்கள்.

''என்ன செய்ய. நாலு பேருக்கத்தது நமக்கும். அவுக ஆசைய ஏன் கெடுக் கணும். அப்படியொரு நல்ல காலம் வந்தா எல்லாருக்கும் சந்தோசந்தான.''

''அதச் சொல்லும். ஊரப் பகச்சுக்கிட முடியுமா. எந்தச் சாமின்னா என்ன. எல்லாம் மனசுதான் காரணம். அனந்தம்மா தாயேன்னு கும்புடதுக்குப் பதிலா மாதாவேன்னு கும்புட வேண்டியதுதான்.''

''அப்ப முருகன மறந்துடணுமா.''

''எஞ் சன்னதிக்கு வாடான்னு முருகன் எப்பக் கூப்புடுதானோ அப்ப நெனச்சுக்கிடுவொம். என்ன சொல்லுதீரு.''

''அதுவரைக்கும் நம்ம பொழச்சுக் கெடக்கணும்.''

''எல்லாம் நம்ம கையில இல்ல. அண்ணைக்குக் குமர கோயில்ல அத்தன உசிரக் காவு குடுத்தொம். இங்க என்ன நடக்கப்போவுதோ.''

மாதா திருவிழாவும் வந்துவிட்டது. கழுகுமலையிலிருந்து ஒரு கூட்டமே காமயநாய்க்கன்பட்டிக்கு முந்தின நாள் மதியத்துக்கெல்லாம் கிளம்பிவிட்டது. பேச்சிமுத்து நாடார் முதல் ஆளாக நடந்தார். சாமியாரிடம் என்னென்ன பேசணு மென்று முதலாளி அவரிடம் விவரமாகச் சொல்லியிருந்தார்.

கட்டுச்சோற்றைச் சுமந்துகொண்டு குறுக்குப் பாதையில் கயத்தாறு வழி யாக நடந்தார்கள். மதிய வெயில் உறைக்கவில்லை. உச்சிப் பொழுது கிழக்கே யிருந்து எழும்பி வருவதுபோல் சொகம். பேச்சிமுத்து நாடார் வழிநெடுகத் திட்டத்தைப் பற்றிச் சொல்லிக்கொண்டே போனார்.

''முடிஞ்சா ராத்திரியே சாமியாரப் பாத்துப் பேசீருவொம். அந்த அவசரத்துல பாக்க முடியுமான்னு தெரியல. முடியலன்னா காத்திருந்து நாளைக்குக் காலை யில பாப்பொம். அவருகிட்ட எல்லாருஞ் சேந்து கசகசன்னு பேசப்புடாது. நான் எடுத்துச்சொல்றென். நீங்க கூட நில்லுங்க.''

சாய்ந்தரத்துக்கெல்லாம் காமயநாய்க்கன்பட்டி போய்ச் சேர்ந்துவிட்டார்கள். பரலோக மாதா கோயில் உச்சியில் சிலுவையைப் பார்த்ததும் நடந்து வந்த

அலுப்பு பறந்துவிட்டது. கோயிலைச் சுற்றியும் தெருக்களிலும் கூட்டம் அலை மோதியது. கழுகுமலை மாட்டுத்தாவணிபோல் ஊரைச் சுற்றி வண்டி மாடுகள். கூட்டத்துக்குள் முண்டியடித்துக் கோயிலை நெருங்கும்போது மனசுக்குள் சிலுவை பெரிசாகி நிழலாடியது.

''எல்லாம் நல்லபடியா நடக்கணும் தாயே.''

பேச்சிமுத்து நாடார் கைகூப்பி மாதாவை வேண்டிக்கொண்டார்.

கோயிலுக்கு மேற்கே பெரும்பாதையோரம் உட்கார்ந்து தவிப்பாறினார்கள். அங்கே ஏற்கெனவே உட்கார்ந்திருந்த பெரியவர் குத்துக்காலிட்ட முட்டிக்குள் திணித்திருந்த தலையை ஏறிட்டுப் பார்த்தார். சுற்றிலும் சனங்களைப் பார்த்ததும் கந்தூக்கம் கலைந்துவிட்டது. அவ்வளவு ஆள் நடமாட்டத்துக்கிடையிலும் மனுசன் எப்படித்தான் உறங்கினாரோ. அவர் பேச்சிமுத்து நாடாரை ஒருமாதிரியாகப் பார்த்தார்.

''நமக்கு எந்தூருய்யா.''

''கழுகுமலய்யா.''

''அப்படியா. தொலவட்லருந்து வந்துருக்கீக.''

''சாமி கும்புடுறதுக்குத் தூரந்தொலவட்டாப் பாத்தா முடியுமா.''

''அது சரிதான். இனியும் தூரத்திலிருந்தெல்லாம் சனங்க வருதுக.''

''அதுக்குக் குடுத்துவைக்கணுமே.''

''நமக்கு வர்ணமென்ன.''

''நாடாக்கமாரு.''

பெரியவர் முகத்தில் களை அரும்பியது.

''நம்மாளுகதானா. மாதாவக் கண்குளிரப் பாருங்க. கவல போன எடம் தெரியாது.''

''அப்படியே சாமியாரவும் பாத்துப் பேசணும்.''

''இந்தக் கூட்டத்துலயா. முடியிற காரியமா. நாளைக்குப் பாக்க முடிஞ்சாப் பெரிசு.''

''வந்ததே வந்துட்டொம். இருந்து பாத்துட்டுப் போக வேண்டியதுதான்.''

''எனக்கு வயசு எம்பதுக்கு மேலாச்சு. அப்படின்னா எத்தன திருழாவப் பாத்துருப்பன்னு எண்ணிக்கங்க. அண்ணைக்கிலருந்து இண்ணைக்குவரைக்கும் வருசத்துக்கு வருசம் கூட்டம் கூடீட்டுத்தான் போகுது. எல்லாம் அந்த மாதாவோட மகிம.''

''ஒங்களுக்கு இந்தூருதானா.''

''பரம்பரையா இங்கதான் குடியிருக்கொம். மாதா கிருபையால மண்டையில பத்தரச்சுப் போடாம சொகமாருக்கென். பனைய நம்புன சீவனம். மனசில ஒரு கஸ்டம்னா நேர மாதாகிட்ட வந்து மண்டியிட்டு மொறையிடுவென். எல்லாம் போயிடும்.''

''ஒங்க பேரு என்னய்யா.''

''அருளப்பன்.''

பெரியவர் யோசனையில் வெறும் வாயை அசைபோட்டுவிட்டுப் பேச்சைத் தொடர்ந்தார்.

‘‘இந்த ஊரவும் கோயிலவும் உண்டாக்குததுக்கு என்னென்ன கஸ்ட மெல்லாம் அனுபவிச்சாகன்னு எங்க பாட்டையா கதகதயாச் சொல்லுவாரு. அத இப்ப நெனச்சாலும் புல்லரிக்குது.’’

எல்லாரும் அவரையே கவனிக்கத் தொடங்கினார்கள்.

‘‘ரெம்பக் கஸ்டப்பட்டாகளோ.’’

அவர் சம்மணமிட்டுத் தோதாக உட்கார்ந்துகொண்டார். அவரது வெண் புருவங்களுக்குக் கீழே பெரிய கண்ணுமுழி திரண்டு சுற்றிலும் நோட்டம் விட்டது. கழுகுமலைக்காரர்கள் காதைக் கூர்மைப்படுத்திக்கொண்டார்கள். அவர் பழைய நினைவுகளையெல்லாம் அள்ளிவைத்துக்கொண்டு விதைக்க ஆரம்பித்தார்.

‘‘கஸ்டம்னா கொஞ்சமா நஞ்சமா. ஒருகாலத்துல தெக்கத்திச் சீமையில மருந்துக்குக்கூட வேதக்காரங்க இல்லாமத்தான் இருந்துருக்கு. வெள்ளக்காரங்க காலெடுத்து வச்சாங்களோ இல்லையோ வேதமும் கூடவே வந்துடுச்சு. கடல்ல மீன்புடிச்சும் முத்துக்குளிச்சும் பொழைக்கிற சனங்களத் தேடிப்புடிச்சு சன்னஞ் சன்னமா வேதத்தப் பத்தி எடுத்துச்சொல்லி மனச மாத்தி வேதத்துக்குக் கொண்டு வந்தாக. வெயிலுன்னும் பாக்காம மழையின்னும் பாக்காம சாமிமாருக அதே சோலியா அலஞ்சாக.’’

‘‘மொரட்டுச் சனங்களாச்சே. பக்குவமாத்தான் மாத்தணும்.’’

‘‘இது மருதைய ஆண்ட வடுக ராசாவுக்குப் புடிக்கல. நம்ம ராச்சியத்துக் குள்ள எப்படி வேண்டாத காரியத்தச் செய்யப் போச்சுன்னு கோவத்துல வெள்ளக்காரங்கமேல தன்னோட ஆளுகள ஏவிவுட்டாரு. ஏவிவுட்டாரோ இல்லையோ அவரு பேரச் சொல்லி அந்தாளுக செஞ்ச அக்கிரமத்துக்குக் கணக்கில்ல.’’

‘‘கொடுமையால்ல இருக்கு.’’

‘‘வெள்ளக்காரங்களுக்கும் ராசாவோட ஆளுகளுக்கும் அடிக்கடி சண்ட நடந்துச்சு. அதனால நம்ம சனங்க ரெம்ப அழுந்துனாக. ராசாவோட ஆளுக சின்னச்சின்ன ஊருகளுக்குள்ள மொழஞ்சு தீவச்சுக் கொளுத்துனாக. எதுத்து நின்னவங்கள வெட்டிக் கொன்னாக. அப்பாவிச் சனங்க தீவாந்தரத்துக்குத் தப்பி ஓடி பசி பட்னியால வாடுனாக. ஒரு வேதச் சாமியாரு அவுகளுக்குச் சோறு தண்ணி குடுத்துக் காப்பாத்துனாரு. ஒரு சமயம் தூத்துக்குடி புன்னக்காயலுக்குப் பக்கத்துல சண்ட நடந்து வடுக ராசாவோட ஆளுக ஒரு வேதச் சாமியாரவும் சீசப்புள்ளையவும் துண்டுதுண்டா வெட்டிப்போட்டுட்டாக.’’

‘‘என்ன அக்கிரமம்.’’

‘‘அப்படியெல்லாம் உசிரக் குடுத்து அந்தச் சனங்கள வேதத்துக்கு மாத்தி அங்கங்க கோயிலும் கெட்டிக்குடுத்தாக. இதப்போல துலுக்க ராசாக்களும் வேதக்காரங்களப் புடிச்சுப் பட்னிபோட்டு துலுக்கனா மாறுமாறுன்னு கொடுமப் படுத்துனதும் உண்டு.’’

‘‘அது வேறயா.’’

‘‘கப்பல்ல கூட்டீட்டுப் போறது. நடுக்கடல்ல வச்சு துலுக்கனாகப் போறீகளா இல்ல அத்தன பேரவும் தண்ணிக்குள்ள கொட்டவான்னு பயமுறுத்துறது. வேற

வழியில்லாம அவுக ஒத்துக்கிடவும் கரைக்குக் கொண்டுவந்துடட்து. இந்துக்காரங் களவும் வுட்டுவைக்கல.''

''வெறி வந்துட்டா ஆருன்னுருக்கு.''

''துலுக்க ராசாக்களோட கொடும தாங்காம இந்துக்காரங்க வெள்ளக் காரங்ககிட்டப் போயி வழி கேட்டாங்க.''

''அவுக என்ன சொன்னாகளாம்.''

''ஒங்களக் காப்பாத்தணும்னா நீங்க எல்லாரும் வேதத்துக்கு மாறணும்னு சொன்னாக. அதுக்கு இது தாவலன்னு ஒத்துக்கிட்டாக. பெறகென்ன வெள்ளக் காரங்க கப்பலு நெறையா வந்து துலுக்க ராசாவோட சண்டபோட்டு நெலமை யச் சரிப்படுத்துனாக. கப்பல்ல கையோட வேதச் சாமியாருகளவும் கூட்டிவந்து அங்கங்க எறக்கிவுட்டு வேல நடந்துருக்கு.''

''வந்த நோக்கமே அதுதான.''

''நாடாக்கமாரும் முத்துக்குளிக்கிததுண்டு. ஆனா அவுக இந்துக்காரங்க ளாவே இருந்தாக. மீனு புடிக்கிதவங்களுக்கு நாடாருக அடங்கிப்போனதால ரெம்ப நாளா அவுகளுக்குள்ள தகராறு இல்லாம இருந்துச்சு. எண்ணைக்கு நாடாருக தங்களுக்கும் மரியாத வேணும்னு முண்டிப் பேச ஆரம்பிச்சாகளோ அண்ணைக்குக் கெளம்புனது பொகச்சலு. ரெண்டு சாதிக்கும் ஒத்துப்போகாம தீராத பக வளந்துடுச்சு. ஒருநா பெரிய சண்ட வந்து நாடாக்கமாரு போயி பத்துப் பனிரெண்டு வேதக்கோயிலக் கொளுத்தீட்டாக. பதிலுக்கு அவுக இவுக கோயிலு ஒண்ண அழிச்சிட்டாக.''

''இவுக சண்டைக்குக் கோயிலு என்ன செய்யும்.''

''அப்படியே கொஞ்சங்கொஞ்சமா நாடாக்கமாரவும் வழிக்குக் கொண்டு வந்து வேதத்துல சேத்துட்டாக.''

''இவுக மொரட்டுத்தனத்துல அவுகளவிடக் கூடுனவுகளாச்சே.''

''ஒருவழியா தூத்துக்குடி புன்னக்காயலு திருச்செந்தூரு மணப்பாடு வேம் பாருன்னு கடலோரச் சனங்கள மாத்தீட்டு அப்படியே வடக்க பனங்காடு தேரிக் காடுன்னு அலஞ்சு பனையேறிகளத் தேடிப்புடிச்சுப் பேசுனாக. அவுகளோடயே தங்கி கொறைகளக் கேட்டு ஒதவிசெஞ்சாக.''

''மனசில ஒரு நம்பிக்க வரணுமில்ல.''

''நெறைய பேரு வேதத்துக்கு மாறீட்டாக. அவுகளப் போல புள்ளமாரு ரெட்டியாரு செட்டியாரு நாய்க்கரு இப்படி ஒவ்வொரு சாதியா உள்ள வந்துட்டாக. கும்புடதுக்குக் கோயிலும் கெட்டிக்கிட்டாக.''

''அப்படித்தான் இந்த ஊருக்கும் வேதம் வந்துருக்கும்.''

''இந்த ஊருக்கு முந்தியே கயத்தாறுல வேதம் காலூணியிடுச்சு. சாமிமாரு அங்க குடியிருந்துக்கிட்டு ஒவதேசம் பண்ணியிருக்காக. கயத்தாறுச் சீமையில வேதக்காரங்க பட்ட கஸ்டம் ஏராளம்.''

''அதும் அப்படியா.''

''ஒரு கதையக் கேளுங்க. இந்துக்காரப் பொம்பள ஒருத்தி. ஒரு புள்ளமாரோட சேந்து பொழப்பு நடத்தியிருக்கா. அவரும் இந்துக்காரருதான். வசதியான புள்ளி.''

''பசையிருக்கிற எடத்துல ஒட்டிக்கிட்டா. பெழைக்கத் தெரிஞ்சவ.''

‘‘அதென்ன ஈனப்பொழப்பு... ஆச்சா. ஒரு வேதக்கார ஒவதேசியாருக்கு அவளோட நடத்த புடிக்கல. அவரு மொதலிமாரு. நேர அவகிட்டப் போயி அம்மா தாயே நீ நடந்துக்கிடது நல்லால்ல. பெரிய பாவமாக்கும். எங்க கர்த்த ருட்ட வந்து மொறையிட்டா பாவமன்னிப்புக் கெடைக்கும். அப்படி இப் படின்னு சொல்லி அவ மனச மாத்தி வேதத்துல சேரவச்சிட்டாரு.’’

‘‘புது மனுசியாயிட்டா.’’

‘‘வங்கணகாரனச் சுத்தமா ஒதுக்கிவச்சிட்டா. அவருக்குக் கடுமையான கோவம். வேதக்காரங்கள ஒரு கையி பாத்துட்டுத்தான் வேற வேலன்னு கறுவிக் கிட்டே கவர்னருட்டப் போனாரு. கவர்னரு பேராச புடிச்ச மனுசன்.’’

‘‘வளச்சுப் போடுறதுக்கு அது போதுமே.’’

‘‘அதத் தாறென் இதத் தாறன்னு ஆசகாட்டி வேதக்காரங்களப் பத்தி இல்லாதது பொல்லாததச் சொல்லி மசிய வச்சு ஒரு உத்தரவு வாங்கிக் கைவசம் வச்சுக்கிட்டாரு.’’

‘‘என்ன உத்தரவோ.’’

‘‘அதப் பத்தி மூச்சுக்காட்டல.’’

‘‘அழுத்தமான மனுசன்.’’

‘‘பெரிய வெள்ளிக்கெழம வந்தது. அதக் கொண்டாடதுக்காக வேதத்துல புதுசாச் சேந்த சனங்க சந்தோசமாக் கூடியிருந்தாக.’’

‘‘சரி.’’

‘‘அப்பப் பாத்து அங்க ஒரு சண்டாளன் வந்தான். அவனச் சுத்தித் தடியங்க கூட்டம். ஒவ்வொருத்தன் கையிலயும் ஆயுதம்.’’

‘‘சரியாப் போச்சு.’’

‘‘உள்ள மொழஞ்சு வேதக்காரங்கள அரட்டி மெரட்டி முக்கியமான ஆளப் புடிச்சுக்கிட்டாங்க.’’

‘‘ஒவதேசியாரப் புடிக்கலயா.’’

‘‘அவர ஆருக்கும் அடையாளம் தெரியாதே.’’

‘‘அப்படிச் சொல்லுங்க.’’

‘‘தப்பிச்சுப் போயிருங்கன்னு மத்தவங்க சொல்லியிருக்காங்க. அவரு கேக்கல. தைரியமா தடியங்களுக்கு முன்னால போயி நின்னாரு. அவங்க சும்மா வுடுவாங்களா. அவர அடிஅடின்னு அடிச்சுக் கொடுமப்படுத்துனாங்க. இன்ன மாதிரின்னு இல்ல. ரெண்டு பேரு முடியப் புடிச்சு அவர ஒசரத் தூக்கி நிறுத்த மத்தவங்க தடியால சவட்டியெடுத்துட்டாங்க.’’

‘‘அதிகாரி உத்தரவு அந்த ஆட்டம்போடுது.’’

‘‘அத்தோட வுட்டாங்களா. இழுத்துவந்து கவர்னருக்கு முன்னால நிறுத்து னாங்க. அவருக்குக் காட்டம் சொல்ல முடியாது. மீன்புடிக்கிற பயகளும் பரங்கிப்பயகளும் கொண்டாடுத வேதத்துலயா சேந்த. அதனால எனக்கு மானக் கேடு. என்னோட மதிப்பும் மரியாதையும் என்னாகிததுன்னு வாய்க்கு வந்தபடி பேசினாரு.’’

‘‘பெறகு.’’

‘‘இவனக் கொண்டுபோயி கழுவேத்துங்கடான்னு உத்தரவு போட்டாரு.’’

‘‘ஈவெரக்கமில்லாற மனுசன்.’’

''ஓவதேசியாரோட மத்த நாப்பது பேரவும் புடிச்சு வச்சிருந்தாங்க.''

''அதான பாத்தென்.''

ஓவதேசியாரக் கழுவேத்துததுக்காகக் கொண்டுபோனாங்க. போற வழியில ஒரு மணியக்காரரு எதுக்க வந்தாரு. கவர்னருக்கு வேண்டியவரு. நல்ல மனுசன். என்ன நடந்ததுன்னு கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டாரு. மனசுகேக்கல. நான் கவர்ன ருட்டப் பேசிக்கிடுதென் தண்டனைய நிறுத்திவையிங்கன்னு சொல்லீட்டாரு.''

''ஒரு உசிரு பெழச்சது.''

''ஓவதேசியார பழையபடி செயில்ல அடச்சிட்டாக. அப்படியும் அவரச் சும்மா வுடல.''

''என்ன செஞ்சாக.''

''வெளிய கொண்டுவந்து அடிச்சு ஒதச்சாங்க. அவரு நெனவு தப்பிச் சுருண்டு வுழுந்துட்டாரு. இழுத்துட்டுப் போயிச் செயில்ல போட்டுப் பூட்னாங்க.''

''கொடுமைக்கு அளவே இல்லையா.''

''இருவது நாளாச்சு. அவுரு மொகத்துல முத்திர குத்தி நாடுகடத்தீட்டாக.''

''அந்தமட்டுக்காச்சும் வுட்டுவச்சாங்களே.''

''இதுல வேடிக்க என்னன்னா கவர்னரோட வண்டவாளம் வடுக ராசா வுக்குத் தெரிஞ்சுபோச்சு. கடுமையான தண்டன குடுத்து செயில் இருட்டுக்குள்ள தள்ளீட்டாரு.''

''இப்ப மதிப்பும் மரியாதையும் என்னாச்சு.''

''கம்பீரமா இருந்த மனுசன் கசையடி வாங்கியே செத்துப்போனாரு. பாவத்தின் சம்பளம் மரணம்னு கர்த்தரு சொன்னது சரியாப்போச்சு.''

''ஓவதேசியாரு பாடு என்னாச்சு.''

''கயத்தாறுச் சீமைக்குத் திரும்பி வந்துட்டாரு. வந்து சும்மாருக்கல. நெறைய சனங்கள வேதத்துக்கு மாத்துததுக்குண்டான ஏற்பாடுகளச் செஞ்சுக் கிட்டே இருந்தாரு.''

''உசிரப்பத்திக் கவலப்படாற மனுசன்.''

''இனியொரு கூத்து என்ன தெரியுமா. அவரோட புடிச்சுச் செயில்ல அடச்சு வச்சிருந்த நாப்பது பேரும் விடுதலையாயிட்டாக. அவுககிட்ட எப்படியாச்சும் பலிச்சமட்டும் பணம் கறந்துடலாம்னு வச்சுப்பாத்தாங்க. நடக்கல. போங்கடா வக்கத்த பயகளான்னு வெரட்டிப் பத்தீட்டாங்க.''

பெரியவர் கண்ணை மூடிக்கொண்டு சிரித்தார். கழுகுமலைக்காரர்களாலும் சிரிப்பையடக்க முடியவில்லை.

## 8. வேதபே(ா)தம்

பெரியவர் கொஞ்சநேரம் தவிப்பாறி முடிந்ததும் பேச்சிமுத்து நாடார் பேச்சுக்கொடுத்தார்.

''இந்த ஊருக்கு வேதம் எப்படி வந்ததாம்.''

பெரியவர் சம்மணத்தை மாற்றிப் போட்டுக்கொண்டு மாதா கோயிலை வெறித்தவாறு கண்ணைக் கசக்கினார்.

‘‘ரெம்பச் சங்கடப்பட்ருக்காக.’’

‘‘வேதம்னாலே வெவகாரந்தான் போலருக்கு.’’

‘‘பூர்வீகத்துல இந்த ஊரு இப்ப இருக்கிற எடத்துல இல்ல. கொஞ்சந்தள்ளி மாரிமூலையில எட்டயாவரத்துக்குப் போற பெரும் பாத உண்டு. அதுக்கும் மேக்க கெழமேலோடைக்கும் தெக்கதான் பழைய ஊரு இருந்துச்சு. அதுல குடியிருந்தவுக எல்லாரும் கம்பளத்து நாய்க்கமாரு. அங்க காமய நாய்க்கருன்னு ஒரு தாட்டிக்கமான மனுசன் இருந்தாரு. அவரு பேருல ஊருப் பேரும் தொலங்குச்சு.’’

‘‘ஒருவேள தஞ்சாதிக்காரச் சனங்களக் குடியமத்துறதுக்கு அவரே ஊர உண்டுபண்ணுனாரோ என்னமோ.’’

‘‘இருக்கும். அதுக்குப் பக்கத்துல எட்டுநாய்க்கன்பட்டின்னு ஒரு ஊரு. அங்க காமய நாய்க்கரு கூடப் பெறந்தவரு குடியிருந்தாரு. பேரு எட்டு நாய்க்கரு.’’

‘‘சரிதான்.’’

‘‘குடியிருந்தாகளா... காமய நாய்க்கரோட வீட்டுக்கும் பெரும் பாதைக்கும் கெழக்க அவருக்குத் தோப்பு உண்டு. ஒருநா தோப்பச் சுத்திப்பாக்கப் போயிருக் காரு. அங்க ஒரு வேதக்காரச் சாமியாரும் சீசப்புள்ளையும் மரத்து எணல்ல தவிப் பாறிக்கிட்ருந்தாக.’’

‘‘நல்ல வெயிலாருக்கும்.’’

‘‘அவரு ஓடிப்போயி வெசாரிச்சாரு. சோறு தண்ணி வேணுமான்னு கேட்டாரு. சாமி சிரிச்சுக்கிட்டாரு. தெக்க போயிக்கிட்ருக்கொம். எணலுக்கு ஒதுங்குனம்னு சொன்னாரு. அவரு பேசின தோரணையும் சிரிப்பும் நாய்க் கருக்குப் புடிச்சுப்போச்சு. அதுக்கென்ன ராத்திரிக்கு எங்க வீட்லகூடத் தங் கீட்டுப் போங்கன்னு சொல்லி தோப்புல பழவர்க்கங்களப் பறிச்சுக் குடுத்தாரு. குருவும் சீசரும் பசியாறுனாக.’’

‘‘நாய்க்கரு நல்ல மனுசன்.’’

‘‘பேயி பிசாசுன்னு எதுக்குக் கும்புடுதீக. அதுகளுக்கு உசிரப் பலிகுடுக்கிதது பாவமில்லையான்னு பேச்ச ஆரம்பிச்ச குருசாமி வேதத்தப் பத்தி ரெம்பரெம்பச் சொன்னாரு. நாய்க்கருக்கு யோசன. அதான. மொரட்டுத்தனமால்ல சாமியக் கும்புட்டுக்கிட்ருக்கொம். அவுக சொன்னதெல்லாம் சரிதான்னு ஒத்துக்கிட்டாரு.’’

‘‘வேதம் புடிச்சுப்போச்சு.’’

‘‘ஒடனே வேதக்காரரா மாறுததுக்குச் சம்மதிச்சிட்டாரு. குருசாமிக்குச் சந்தோசம். அவர அந்த எடத்துலயே வேதத்துக்கு மாத்தி ஞானஸ்நானம் செஞ்சு வச்சிட்டு தம் போக்குல தெக்காமப் போயிட்டாரு.’’

‘‘ஊருக்குப் பெரிய மனுசனவே மாத்தியாச்சு.’’

‘‘கொஞ்ச காலமாச்சு. நாய்க்கரு தோப்புல வேற ஒரு சாமியாரப் பாத்தாரு. அவரு பேரு அருளானந்தரு. அவர ஊருக்குள்ள கூட்டீட்டுப் போயி வீடுவீடா கம்பளத்துக்காரங்களோட பேசி அவுகள வேதத்துக்கு மாத்தி ஞானஸ்நானமும் குடுத்தாரு.’’

‘‘ஊரு முழுக்க வேதக்காரங்களாயிட்டாக.’’

''குருசாமி அவுகளுக்கின்னு ஒரு கோயிலு கெட்டிக்குடுத்து ஞானேந்திர சாமின்னு ஒருத்தர வருத்தி அங்க இருக்கவச்சிட்டு வடக்க மறவ நாட்டுக்குப் போயிட்டாரு. அங்க போயும் சும்மாருக்கல.''

''என்ன செஞ்சாரு.''

''ஏற்கெனவே அஞ்சாறு வருசத்துக்கு முந்தி அவரு அந்த நாட்டுக்குப் போயிக் கஸ்டப்பட்ட அனுபவம் உண்டு.''

''அதென்ன.''

''சனங்ககிட்ட அவரு வேதத்தப் பத்திச் சொகமா எடுத்துச்சொன்னாரு. அந்தப் பேச்சக் கேட்டு ஏராளமா மொலுமொலுன்னு வேதத்துக்கு மாறீட்டாக.''

''அப்படிப் பேசணுமே.''

''இத எப்படியும் தடுத்தாகணும்னு மறவ நாட்டு மந்திரி திட்டம்போட் டாரு. அவரு பேரு குமார புள்ள.''

''என்ன திட்டம்.''

''சாமியாரு கையில வெலங்கு மாட்டி இழுத்துவந்து சந்தியில வச்சு இம்சப்படுத்துனாரு. என்னென்னமோ கொடுமப்படுத்திக் கடைசியா அவரக் கொன்னுபோட்ருங்கன்னு உத்தரவு போட்டாரு.''

''அடடா ஆடுமாடுன்னு நெனச்சுக்கிட்டாரரா.''

''அவரக் கொல்லுததுக்கு முந்தி எங்கிட்டக் கொஞ்சம் அனுப்பி வைங்கன்னு ராசாட்டருந்து தாக்கலு வந்துச்சு. அப்படியே செஞ்சாக. ராசா தீர வெசாரிச் சாரு. சாமியாரு பதட்டப்படாம சிரிச்சுக்கிட்டே பேசினாரு. ராசா சந்தோசப் பட்டுக்கிட்டாரு. உசிரக் கொல்லுத அளவுக்கு இந்த மனுசன் தப்பொண்ணும் பண்ணலயேன்னு அவர விடுதல செஞ்சிட்டாரு.''

''நல்லதாப் போச்சு.''

''அத்தோட நிக்காம சாமியாரு ரெண்டாந் தடவையும் அங்க போனாரு.''

''தைரியம் ரெம்பத்தான்.''

''பேச்சில மன்னனாச்சே. அவரோட பிரசங்கத்தக் கேட்டு கணக்கில்லாம சனங்க வேதத்துக்கு வந்துட்டாக. அப்ப மறவ நாட்ட சேதுபதி ராசா ஆண்டு வந்தாரு. அவருக்கு ஒறவுக்காரரு ஒருத்தரு. தடியத் தேவருன்னு பேரு. சாமியாரு தேவருட்டப் பேசிப்பழகி வேதத்துக்கு மாத்தீட்டாரு.''

''அரமனைக்குள்ளயே வேதம் போயிருச்சு.''

''தேவருக்கு அஞ்சு சம்சாரம். அஞ்சாவது கடலாயி. சேதுபதி ராசாவுக்கு மருமக.''

''சரியாப் போச்சு.''

''வேதக்காரங்கன்னா சம்சாரம் ஒண்ணுதான் இருக்கணும்.''

''பெரிய சிக்கலுதான்.''

''தேவரு மொதச் சம்சாரத்த மட்டும் கூட வச்சுக்கிட்டு மத்த நாலு பேரவும் தள்ளிவச்சிட்டாரு. கடலாயி சும்மாருக்குமா. ஓடிப்போயி ராசாட்ட அழுது மொறயிட்ருக்கு. அவருக்கு வந்ததே கோவம். சாமியார வெட்டிக் கொல்லுங் கன்னு சொல்லீட்டாரு.''

''ரெண்டாவது கண்டமா.''

''ராசா தந்தரக்காரராக்கும். ஒடனே சாமியாரக் கொல்லல. அந்த நாட்ட வுட்டே ஓடிப்போயிருன்னு வெரட்டி அனுப்பீட்டாரு.''

''தல தப்பிச்சது.''

''அந்த நேரத்துக்குத் தப்பிச்சாலும் தலைக்கு மேல கத்தி தொங்கிக்கிட்டுத் தான் இருந்தது. அந்த நெலமையிலயும் அவரு பிரசங்கத்த வுடலயே. அவருக்கு வேண்டாதவங்க அவரப் புடிச்சுக் கொண்டுபோயி ஒறையூரு ராசாட்ட நிறுத் துனாங்க. அந்த ராசா வேற ஆருமில்ல. சேதுபதிக்குத் தம்பி.''

''காரியம் கெட்டுப்போச்சே.''

''சின்ன ராசா பாத்தாரு. இனியும் அவர வுட்டுவைக்கிதது நல்லதில்லன்னு முடிவுசெஞ்சு இவரு தலையத் துண்டிச்சிடுங்கன்னு கண்டிப்பாச் சொல்லீட் டாரு. அந்தப்படி அவர அநியாயமா வெட்டிக் கொன்னுட்டாக.''

''ஆகமான உசிரப் பலிவாங்கீட்டாகளே பாவிக.''

''அங்க நெலம அப்படி. இங்க ஞானேந்திரசாமி ரெம்பக் கஸ்டப்பட்டாரு. குடியிருந்த சனங்களுக்குத் தொணையா கொஞ்சம் புள்ளமாரவும் நாடாக்க மாரவும் கூட்டிவந்து குடியமத்துனாரு. ஞானேந்திரம்புள்ளன்னு ஒருத்தர ஒவதேசியாராக்குனாரு. அதுக்குள்ள அகிலாண்டபுரம் பன்னீர்க்கொளம் எட்டுநாய்க்கன்பட்டி செவல்பட்டி குருவிநத்தம் குருக்கள்பட்டி தீத்தாம் பட்டின்னு சுத்துப்பட்டியில வேதக்காரங்க பெருகீட்டாங்க.''

''சாமியாரு சந்தோசப்பட்ருப்பாரு.''

''அப்ப காலம் கெட்டுக் கெடந்துச்சு. மழதண்ணியில்லாம அப்பப்பப் பஞ்சம் வந்து சனங்கள பாடாப் படுத்துச்சு. இவுக வம்பாடுபட்டு வேதத்துக்கு மாத்தவேண்டியது. அதுல பாதிப் பேருக்குமேல சாகவேண்டியது. பெத்த புள்ளையக்கூட வித்துப் பொழைக்கவேண்டிய கொடும. அப்படின்னா எப்பேர்ப் பட்ட பஞ்சம்னு நெனச்சுப் பாருங்க. நெறைய பேரு வேற வழியில்லாம வசதி யானவுகளுக்கு அடிமையாகி வயித்தக் கழுவுனாக.''

''பாவப்பட்ட பெழப்புத்தான்.''

''இந்த லச்சணத்துல அடிக்கடி கலகம் நடக்கும். கொல கொள்ளன்னு அழிம்பு தாங்காது. காமயநாய்க்கன்பட்டியிலயும் கலகம் நடந்தது. இனிமே இங்கருந்தா உசிருக்கே ஆவத்துன்னு ஞானேந்தரசாமி தீத்தாம்பட்டிப் பக்கம் போயி அங்க கோயிலுக் கெட்டி அந்த எடத்துக்கு ஞானேந்திரபுரம்னு பேரு வச்சு அங்கயே தங்கி யிருந்தாரு. அஞ்சாறு வருசம் கழிச்சு கலகம் ஒஞ்சப் பெறகுதான் திரும்பிவந்தாரு.''

''அதுக்குப் பெறகாச்சும் நிம்மதியா இருக்கமுடிஞ்சதா.''

''சாமியாரு நேர எட்டப்ப ராசாட்டப் போயி நெலமையச் சொன்னாரு. நீங்க எதுக்கும் கவலப்பட வேணாம். எங்க தகப்பனாரு காலத்துலருந்தே கோயிலு எந்தத் தகராறுமில்லாம நடந்துட்டு வருது. அந்தப்படியே எப்பயும் நடக்கும். சந் தோசமாப் போங்கன்னு ராசா சொன்னாரு. அத்தோட நிக்கல. அவரே கோயிலுக்கு வந்து சாமி கும்புட்டு கல்லுல பட்டயமே எழுதிக் குடுத்துட்டுப் போனாரு.''

''அதென்ன பட்டயம்.''

''கோயிலுக்கும் சாமியாருக்கும் அவரோட சீசப்புள்ளீகளுக்கும் எந்த விக் கினமும் பண்ணுதவன் ராசாவுக்குத் துரோகியாகிப் போறதுமில்லாம கங்கை

யாத்துக் கரையில காராம்பசுவவும் பெராமணரவும் கொன்ன பாவத்துல போவான். இப்படி. அதுக்குப் பெறகு வருசாவருசம் ராசா திருவிழாவுக்கு வந்து மாதாவக் கும்புடுதது வழக்கமாச்சு.''

''வேதச் சாமின்னுகூடப் பாக்காம வந்து கையெடுத்துக் கும்புட்ருக்காரே அதச் சொல்லணும்.''

''ஞானேந்திரசாமிக்குத் தொணையா வடக்கங்கொளத்துலருந்து ஒரு சாமியாரு வந்தாரு. அங்க இந்துக்காரங்க அவரக் கொடுமப்படுத்துனாங்க. அவரு நோய்நொடி வந்து படுத்துட்டாரு. இங்க வந்தாச்சும் சொகமாருக் கட்டும்னு அனுப்பிவச்சாக. இங்க வந்தும் லொம்பலப்பட்டாரு. ராணி மங்கம்மாளோட ஆளுக அவரப் புடிச்சு இம்சப்படுத்துனாக. அவரு தங்கியிருந்த வீட்டக் கொள்ளையடிச்சாக. அவரு அத்தனையும் தாங்கீட்டுத்தான் இருந்தாரு.''

''பொறுமசாலி.''

''வடக்கங்கொளத்துல இந்துக்காரங்க கொடும ஒரு பக்கமிருக்க வேதக்காரங் களுக்குள்ளயே தகராறு பொகஞ்சுக்கிட்ருந்தது.''

''பங்காளிச் சண்டையா.''

''ஒரு வெதத்துல அப்படித்தான். அங்க நாடாக்கமாரு குடும்பம் நெறைய இருந்தும் கோயிலுக்குள்ள ஒண்ணா சமதையா உக்காந்து சாமி கும்புடப் புடாதுன்னு மேச்சாதிக்காரங்க மல்லுக்கு நின்னாக.''

''எங்க போனாலும் சாதி வந்து குறுக்க நிக்கிது.''

''இந்தச் சீமையில வேதத்துக்கு மாறுன சனங்களப் படுத்துன பாடு கொஞ்சமா. ஏசுநாதரு பேரச் சொன்னாலே அடிதான் ஒததான். கொலகூடச் செஞ்சாக. எங்கயாச்சும் ஒதுக்கமான எடத்துக்குப் போயி செபஞ் சொல்லு தாகளா. சனிக்கெழம நோம்பு இருக்காகளா. ஞாயித்துக்கெழமண்ணைக்கும் திருழாச் சமயத்துலயும் வேதச் சாமியக் கும்புடுதாகளான்னு நோட்டம் பாத்து இம்சப்படுத்துனாக. இந்தக் கொடும ஒரு வருசம் நடந்துச்சு. ஞானேந்திரசாமி மருதையில ஒரு பெரியாளப் பாத்துப் பேசி அடாவடியத் தடுத்து நிறுத்துனாரு. அந்தக் கஸ்டத்துலயும் நெறைய பேரு வேதத்துல சேரத்தான் செஞ்சாக.''

''வேதத்துல சேர்றதும் சேராறதும் அவரவரு விருப்பம். அதக் கேக்கிறதுக்கு இவுக ஆரு.''

''ராணியோட ஆளுகளே அக்கிரமம் பண்ணயில ஆராலதான் தட்டிக்கேக்க முடியும்.''

''அதச் சொல்லுங்க. மேலருக்கிறவுக ஒண்ணு சொன்னா கீழருக்கிறவுக ஒம்பது செய்வாக.''

''தைரியநாதருன்னு ஒரு சாமியாரு குருக்கள்பட்டியிலருந்து காமய நாய்க்கன்பட்டிக்கு வந்து தங்கியிருந்தாரு. மெத்தப் படிச்சவரு. எதவும் தைரிய மாப் பேசக்கூடியவரு.''

''சரி.''

''ஒரு சமயம் திருழாவுக்கு ஏற்பாடு செய்யிததுக்காக குருக்கள்பட்டிக்குப் போயிருந்தாரு. அப்ப மருத ராசாவோட அதிகாரி அந்த ஊருப் பக்கம் வந்தாரு. சாமியாரப் பத்தி அவரு ஏற்கெனவே கேள்விப்பட்ருந்தாரு. சாமியாரு வந்துருக்

கிதது தெரிஞ்சதும் சரியான சந்தர்ப்பம்னு நெனச்சு தன்னோட ஆளுகள அனுப்பி அவரக் கையில வெலங்குபோட்டு இழுத்துட்டு வாங்கன்னு சொன்னாரு. அந்தப்படியே சாமியாரவும் அங்கருந்த சீசப்புள்ளீகளவும் கொண்டுவந்து நிறுத்துனாக.''

''என்ன அநியாயம்.''

''சாமியாரு கொஞ்சங்கூடப் பயப்படல. காவி வேட்டி காதுல கடுக்கன் பாதக் கொறடு. இந்துச் சாமியாரு மாதிரியே தோரணையா நின்னாரு. அவரப் பாத்ததும் அதிகாரிக்குக் கோவம் வந்துடுச்சு. தொளச்சுத்தொளச்சுக் கேள்வி கேட்டாரு. சாமியாரும் பொறுமையாப் பதிலுச் சொன்னாரு. அதிகாரிக்குக் கோவம் அடங்கல. கண்டபடி பேசினாரு. ரெண்டு ஒவதேசியாரப் போட்டு அடிச்சாரு. சாமியாருக்குப் பொறுக்க முடியல. அவுக என்ன தப்புச் செஞ்சாக. வேணும்னா எனக்குத் தண்டன குடுங்கன்னு தைரியமாச் சொன்னாரு.''

''பெறகு என்னாச்சு.''

''உள்ளூருப் பெரியமனுசன் ஒருத்தரு. ஒவதேசியாருக்குப் பழக்கமானவரு. வேதக்காரங்ககிட்ட நல்லாப் பேசிப்பழகி இருந்துக்கிடுவாரு. பேரு சங்கரப்ப நாய்க்கரு. அவரு வந்து சொன்னதும் அடிய நிறுத்தீட்டாக. சாமியாருமேல இனியும் கடுப்புத் தீரல. அதிகாரிக்குக் கீழ உள்ளவன் ஒருத்தன் சாமியாருக்கு இன்ன தண்டன குடுக்கணும்னு வாய்கூசாமச் சொல்லிப்புட்டான்.''

''என்ன தண்டன.''

''அவரோட தலைய வெட்டிக் கழுவில ஏத்தி ஈட்டியால குத்தணும். நாளைக்கோ மறுநாளோ தண்டன குடுத்தாகணும். எண்ணைக்கின்னு அவரே முடிவு செஞ்சுக்கிடணும்.''

''பாவி கெடுத்தானே.''

''அப்படியும் சாமியாரு பயப்படல. ஏன் அவ்வளவுக்குத் தள்ளிப்போடணும். ஒங்க விருப்பப்படி இப்பவே தண்டன குடுங்க. நான் தயாரா இருக்கன்னு நெஞ்ச நிமித்திச் சொன்னாரு. அவரோட தைரியத்தப் பாத்து அதிகாரி அடங்கிப் போனாரு. அவரக் கொண்டுபோயி சின்ன எடத்துல அடச்சு வச்சாக. மறுநா தண்டன குடுக்கணும்னு அதிகாரி உத்தரவு.''

''குடி முழுகிப்போச்சே.''

''அடுத்த நாளு ஒரு அய்யருக்கும் சாமியாருக்கும் கடுமையான வாக்கு வாதம் நடந்தது. சாமியாரு சளைக்காம வாதம்பண்ணுனாரு. அவருக்குத் தண்டன குடுக்கப்போற சேதி உள்ளூரு நாய்க்கருக்குத் தெரிஞ்சது. வுழுந்தடிச்சு ஓடிவந்து அவரப் பத்தி எடுத்துச்சொல்லி தண்டனைய நிறுத்துனாரு. வேதக்காரங்களுக்குச் சந்தோசம். ஆனா சாமியாருக்கு மட்டும் வருத்தம்.''

''வருத்தமா.''

''ஆமா. நமக்குக் கெடைக்க வேண்டிய பெரும் பாக்கியம் கெடைக்காமப் போச்சேன்னுதான்.''

''பேருக்கேத்த சாமியாரு.''

''இனியொரு கதையக் கேளுங்க. வேதத்தப் புடிக்காதவுக போயி அவரப் பத்தி இல்லாதது பொல்லாததச் சொல்லித் தூண்டிவுட்டுருக்காக.''

''அப்படி என்ன செஞ்சாராம்.''

''மாட்டுக்கறி திம்பாரு. சாராயம் குடிப்பாரு. துணிமணிகள மட்டும் மாத்திக்கிருவாரு. குளிச்சுச் சுத்தமா இருக்க மாட்டாரு. இப்படி.''

''அடடா.''

''ஒருவேள அப்படி இருக்குமோன்னு ராசாவுக்குச் சந்தேகம். தன்னோட ஆளுகள்ல ஒரு வேதக்காரனக் கூப்பிட்டு சாமியாரு எப்படிப்பட்டவருன்னு வெசாரிச்சாரு. அவன் நல்லபடியாச் சொன்னான். அப்படியும் நம்பிக்க வரல. கொஞ்சப் பேர அனுப்பி பாத்துட்டு வரச் சொன்னாரு.''

''அதுக்குன்னு மெனக்கிட்டு வாறாகளா.''

''ஒருத்தரா ரெண்டு பேரா. பன்னிரெண்டு பேரு. சாமியாரு தீத்தாம் பட்டிக்குப் போன சமயம் பாத்து காமயநாய்க்கன்பட்டிக்கு வந்தாக. வந்து பாத்தா சாமியாரு குடியிருந்த வீடும் கோயிலும் கழுவித் தொடச்ச மாதிரி அவ்வளவு சுத்தமா இருந்தது. செம்பு பித்தளப் பாத்தரமெல்லாம் மினுங்குச்சு. அடடா சாமியாருமேல அநியாயமால்ல பழிபோட்ருக்காகன்னு நல்லாத் தெரிஞ்சுபோச்சு. போயி ராசாட்ட என்ன சொன்னாகளோ தெரியாது. அதுலருந்து சாமியாருக்கு எந்தத் தொந்தரவும் கெடையாது. அவருதான் பிராமண சன்னியாசியாச்சே. சுத்தத்துக்குச் சொல்லணுமா.''

''அதென்ன சன்னியாசி.''

''ரெண்டு வெதமான சாமியாரு உண்டு. ஒண்ணு பிராமணச் சன்னியாசி. மேச்சாதிக்காரங்களுக்குப் பிரசங்கம் பண்ணுதவரு. இனியொண்ணு பண்டாரசாமி. அவரு கீச்சாதிக்காரங்களுக்கு. ரெண்டு பேரும் வெவ்வேற நெறத்துல அங்கி போட்டுக்கிடுவாக. பண்டாரசாமி பிராமண சன்னியாசியப் பாத்தா மரியாத குடுத்து தோத்திரம் சொல்லணும்.''

''சாமியாருகளுக்குள்ளயே சாதியா.''

''எங்களுக்குத் தனியாச் சாமியாரு வேணும்னு மேச்சாதிக்காரங்க அடம் புடிச்சா என்ன செய்யிதது. அவுகள நயந்துக்கிடணுமில்ல.''

''எங்க பாத்தாலும் அவங்க வச்சதுதான சட்டமாருக்கு.''

''கொஞ்ச காலம் எல்லாம் நல்லபடியா நடந்துச்சு. பெறகு ஒரு மோசமான பஞ்சம் வந்து ரெம்ப ஊருக அழிஞ்சுபோச்சு. வேதக்காரங்க ஏராளம் செத்துப் போனாங்க. கொள்ளக்காரங்களுக்கு நல்ல சந்தர்ப்பம். நெறைய வேதக் கோயிலக் கொள்ளயடிச்சாங்க. காமயநாய்க்கன்பட்டிக் கோயில்லயும் அடிக்கடி கொள்ள நடந்துச்சு.''

''கோயில்ல என்ன தங்கமா குமிச்சுக் கெடக்கும். அறிவு கெட்ட பயக.''

''நாளாவட்டத்துல மத்த சாதிகளப் போல பள்ளுப் பற ரெண்டு சாதிக்காரங் களும் காமயநாய்க்கன்பட்டிக்கு வந்து குடியேறுனாக. பஞ்ச நேரத்துல அவுக ளால தாங்க முடியல. செத்தது போக மிஞ்சினவுக வெளியேறிப் போயிட்டாக. அங்க போயும் உருண்டு பெரண்டு பஞ்சத்துக்குத் தப்பிச்சவுக ஒரு வருசத்துல மறுபடியும் ஊருக்கே வந்து சேந்தாக. ஒருவழியா பஞ்சம் போயிடுச்சு. ஆனா அது போன வழியிலயே கொள்ளநோயி வந்துருச்சு. சனங்களக் காப்பாத்துதத்துக் காகச் சாமியாரு ஒறங்காமப் பாடுபட்டாரு.''

''நோஞ்ச மாட்ல ஈ ஒட்ன மாதிரி.''

''இப்பயும் வேதக்காரங்கள இந்துக்காரங்க கொடுப்படுத்துறது நின்ன பாடில்ல. மாதா கிருபையால அதத் தடுத்து நிறுத்ததுக்குன்னு ஒரு காரியம் நடந்துச்சு.''

''அதென்ன.''

''ஒரு குடும்பத்துல ஒருத்தனுக்குக் கலியாணம் முடிக்கணும்னா சாமியாரு சம்மதம் வேணும். அவனுக்குக் கலியாண வயசு வந்தாத்தான் சாமியாரு சம்மதிப் பாரு. ஒருத்தரு தன்னோட மகனுக்கு அப்படிச் சம்மதம் வாங்காமயே கலியாணம் செஞ்சு வச்சிட்டாரு. அது பாருங்க கலியாணம் முடிஞ்சதும் அவனக் காட்டுப் புலி கொன்னுபோட்டுடுச்சு. அது ஆண்டவரு இட்ட சாபம்னு எல்லாரும் பதறிப் போனாக. அதுலருந்து இந்துக்காரங்க வேதக்காரங்க பக்கமே வாறதில்ல.''

''எட்டிப்பாப்பாகளா.''

''ரெம்ப நாளைக்குப் பெறகு ரெண்டு ராசாக்கமாரு போட்டுக்கிட்ட சண்டையில காமயநாய்க்கன்பட்டிக் கோயிலும் தற்செயலா எரிஞ்சுபோச்சு. வேதக்காரங்க அதப் பழையபடி கெட்டி முடிச்சாங்க.''

''அடேயப்பா கோயிலும் சனங்களும் பட்ட பாட்டுக்கு அளவே இல்ல.''

''அத்தோட முடிஞ்சதுன்னு நெனைக்கீகளா. இனியும் புது ஊரு புதுக் கோயிலுக்கு வரலயே.''

பெரியவர் கொட்டாவி விட்டார். அவர் முகம் சற்று வாட்டமாக இருந்தது. சாயங்கால வெயில் சன்னமான இருட்டில் நமர்ந்துகொண்டிருந்தது.

## 9. ஊர் புதுசு கோயில் புதுசு

பேச்சிமுத்து நாடார் கிட்ட நகர்ந்துகொண்டார். இப்போது பெரியவர் முகம் தெளிவாகத் தெரிந்தது.

''புது ஊரும் புதுக் கோயிலும் எப்படி மொளச்சது.''

''இந்தா உக்காந்துருக்கமே இதுதான் புது ஊரு. எதுக்க நிக்கிதே அதுதான் புதுக் கோயிலு.''

கழுகுமலைக்காரர்கள் கோயிலைப் புதுசாகப் பார்த்தார்கள். பெரியவர் நெஞ்சில் சிலுவையிட்டுக்கொண்டார். பேச்சிமுத்து நாடார் தலையாட்டினார்.

''மாதாவுக்கு இங்க வந்து குடியேறணும்னு விருப்பம்.''

''பழைய ஊருல குடியிருக்கச் சொகப்படல. அப்பச் சாமியாரா இருந்த சத்தியநாதரு கௌம்பி இங்க வந்து இந்தக் கோயிலோரம் இருக்கிற நந்தவனக் கெணத்துக்குக் கெழக்க ஒரு கூரக் கோயிலு கெட்னாரு. பழைய ஊருச் சனங் களும் படிப்படியா இங்க வந்து குடியேறுனாக. அஞ்சாறு வருசத்துல கோயிலு கரையான் அரிச்சுப்போச்சு. சாமியாரு வடக்குப் பக்கம் ஒரு சின்னக் கோயிலு கெட்டி அதுக்குள்ள சாமாங்களவும் சுருவங்களவும் வச்சுக் கும்பிட்டாரு.''

''சரி''.

‘‘பெறகு பாக்கியநாதசாமி வந்தாரு. கோயிலுக்கு நல்ல கெட்டடம் வேணும்னு அவருக்கு நெனப்பு ஓடுச்சு. துலுக்க ராசாட்ட வேலபாத்த திருன வேலி மருதநாயகம் புள்ள வடக்குச் சீமைக்குப் போற வழியில காமயநாய்க்கன் பட்டிக்கு வெலகி சாமியாரப் பாத்து கோயில நல்ல மொறையில கெட்டிக் கிடதுக்கு எரநூறு பொன்னு குடுத்தாரு. சாமியாருக்குத் தெம்பு வந்துடுச்சு. கைப்பணம் கொஞ்சம் வச்சிருந்தாரு. உள்ளூருல சவரிமுத்துச் செட்டியாரு நூறு பணம் குடுத்தாரு. அத வச்சுக்கிட்டு கோயிலு கெட்ட ஆரம்பிச்சாரு.’’

‘‘மளமளன்னு வேல நடந்துருக்கும்.’’

‘‘காரக் கெட்டடத்துக்கு வாணக்காலு தோண்டி கெட்டுமானம் கம்பிக் கெட்டுவரைக்கு வந்துடுச்சு. அதுக்கு மேல தாக்கு வளைக்கிததுக்குத் தோதில் லாம முன்கோயில மட்டும் கெட்னாக.’’

‘‘அடடா ஓத்தாசனைக்கு ஆளில்லாமப் போச்சோ.’’

‘‘எல்லா வேலைகளவும் பொறுப்பாக் கவனிச்சுக்கிட்ட ஓவதேசியாரு ஞானேந்திரம் புள்ளைக்கு வயசாகிப்போச்சு. ஓடியாடி அலைய முடியல. அவருக்குக் கொழந்தைக கெடையாது. எடுத்து வளத்த தத்துப்புள்ளையும் ஓவ தேசத்துக்கு லாயக்கில்ல. மன ஒளச்சல்ல வேல வேணாம்னு எழுதிக்குடுத் துட்டாரு. சாமியாரு அவருக்குப் பதிலா ஞானப்பிரகாசம் புள்ளைய நேமிச்சாரு. அவராலயும் நிம்மதியா வேலபாக்க முடியல. ‘‘

‘‘எதுக்கு.’’

‘‘ஞானேந்திரம் புள்ளையோட தத்துப்புள்ள தொந்தரவு தாங்க முடியல. இருக்கப் புடிக்காம ஊருக்குப் போயிட்டாரு.’’

‘‘சாமியாரு பாடு திண்டாட்டமாச்சே.’’

‘‘சுத்துப்பட்டியிலிருக்கித புள்ளமாரும் ரெட்டிமாரும் அவுகவுக சாதியில தான் ஓவதேசத்துக்கு ஆளு வைக்கணும்னு அடம்புடிச்சாக. இதனால அவுகளுக் குள்ள மனக்கசப்பு வந்துருச்சு. சாமியாருக்கு ஒண்ணும் ஓடல. யோசிச்சுப்பாத்து ரெண்டு சாதியிலயும் இல்லாம வியாகப்ப மொதலியாருன்னு ஒருத்தர வெளியி லருந்து கொண்டுவந்து வச்சு கைப்பணத்துலருந்து சம்பளம் குடுத்துவந்தாரு. அவருக்குப் பின்னால வேற சாமியாரு வந்து படிப்படியாக் கோயிலக் கெட்டி முடிச்சாக. சாமியாருக்குச் சீமையிலருந்து வருமானம் இல்லாததால ஓவதேசி யாருக்குச் சம்பளம் குடுக்க முடியல. அதனால வேதக்காரங்க தலக்கெட்டுப் பணம் குடுக்கணும்னு முடிவு செஞ்சாக.’’

‘‘எப்படியும் அவருக்குச் சீவனம் நடக்கணுமே.’’

‘‘கோயில்ல வழக்கப்படி அளிப்பாச்சினாக. தலவாசலு மட்டுமில்லாம வடக்குப் பக்கத்துல நாடாக்கமாருக்குத் தனிவாசலும் தெக்குப் பக்கத்துல புள்ளமாருக்கு ஒரு வாசலும் வச்சாக.’’

‘‘ஏற்கெனவே அவுகளுக்குள்ள கசப்பு இருந்ததால தனித்தனி வாசலு வச்சாகளோ.’’

‘‘வேதக்காரங்க எந்தெந்த ஒறவுமொறையில கலியாணம் செஞ்சுக்கிட ணும்னு சாமியாரு ஒரு கட்டுத்திட்டம் கொண்டுவந்தாரு. செட்டிமாரும் புள்ள மாரும் அதுக்கு ஒத்துக்கிட்டாக. நாடாக்கமாரு மட்டும் மொரண்டுபுடிச்சாக.

அந்தச் சமயம் பாத்து ஓவதேசியாரு செத்துப்போனாரு. அவரு இருந்தவரைக்கு நாடாக்கமாரக் கைக்குள்ள வச்சிருந்தாரு.''

''சோதனதான்.''

''அவருக்கு அஞ்சு புள்ளீக. சிறு பெராயமா இருந்ததால அவுகளால நாடாக்கமாரத் தட்டிக்கேக்க முடியல. அஞ்சுபேருல மூணுபேரு சீவனத்துக்கு வழியில்லாம மறவ நாட்டுக்குப் போயிட்டாக. ரெண்டு பேரு மட்டும் தங்கி யிருந்தாக. அவுகளுக்கும் ஓவதேசம் பாக்கச் சாமர்த்தியமில்ல. அதனால சாமி யாரு பாளையங்கோட்டையிலருந்து சவரிமுத்துப்புள்ளைய ஓவதேசியாரா வச்சாரு. அவர நாடாக்கமாரு ஏத்துக்கிடல.''

''அதுக்கும் தகராறுதானா.''

''வெவகாரம் எட்டப்ப ராசாவரைக்கும் போயி அங்கருந்து ஆளு வந்து கோயிலப் பூட்டி வியாகப்ப மொதலியாரு மகங்கிட்ட இருந்த சாவிய வாங்கி சவரிமுத்துப் புள்ளையிட்டக் குடுத்தாக. மொதலியாரு மக்க ரெண்டு பேரும் சீவனத்துக்குக் கஸ்டப்பட்டாக. சாமியாருட்டப் போயி எங்களுக்கு ஓவதேச வேல குடுங்கன்னு கேட்டாக. மேலாவுலருந்து உத்தரவில்லாமக் குடுக்க முடியாதுன்னு அவரு சொல்லீட்டாரு. அவுக பெரியசாமியாருட்டப் போயி மொறையிட்டு ஒருத்தருக்கு வேல கெடச்சது. அதுலருந்து ரெம்பக் காலமா சண்ட சச்சரவில்லாம சாமியக் கும்புட்டுவந்தாக.''

''தகராறு ஓஞ்சது.''

''சனங்க கோயில்ல காணிக்க போடுதது வழக்கம். கர்த்தரு பொறந்த நாளண்ணைக்குக் கொழந்த ஏசுவோட சுருவத்தவும் பெரிய வெள்ளிக் கெழ மண்ணைக்கு ஏசு பாடுபட்ட சுருவத்தவும் கொண்டுவந்து மொதல்ல அளிக்கு மேல்புறம் வப்பாக. அப்ப ஓவதேசியாரு மொதக்கொண்டு எல்லாப் புள்ள மாரும் அகிலாண்டபுரம் ரெட்டிமாரும் மறவரு எடையரு இப்படிச் சாதிக் காரங்களும் சாமியக் கும்புட்டுக் காணிக்க போடுவாக. அதுக்குப் பெறகு சுருவத்த அளிக்குக் கீழ்ப்புறம் வப்பாக. அங்க நாடாக்கமாரு காணிக்க போடு வாக. கடைசியா கோயிலு வாசல்ல வச்சா பள்ளுப் பறச் சனங்க போடுவாக.''

''சாதிக்குத் தக்க ஏற்பாடு.''

''கூரக்கோயிலக் காரக்கோயிலாக் கெட்டணும்னு முடிவுசெஞ்சு அதுக்காகப் பணந்தெரட்னாக. தலக்கெட்டு வரி வாங்குனாக. வெள்ளாளச் சாதியில அதியமாப் பணங்குடுத்தவுகளும் உண்டு. கோயிலு வேல முடிஞ்சதும் மாதா வுக்குத் திருழா நடந்துச்சு. முக்கியமான வேலைகள புள்ளமாரே எடுத்துச் செஞ் சாக. கோயில்ல வெளக்கெரிக்கவும் தீவட்டி கொளுத்தவும் வீட்டுக்கு ஓழக்கு எண்ண வாங்குவாக. மிச்ச எண்ணெய ஓவதேசியாருக்குக் குடுத்துடுவாக.''

''அவரவும் கொண்டணச்சுப் போகணுமில்ல.''

''பெறகுபெறகெல்லாம் சாமியாருக்கும் வேதக்காரச் சனங்களுக்கும் அவ்வளவா ஒத்துப்போகல. புள்ளமாருக்கும் நாடாக்கமாருக்கும் பூசலு நின்ன பாடில்ல. கோயிலு வரி வசூலிக்கிதது கணக்குவழக்கு வச்சுக்கிடது இப்படிப் பல காரியங்கள்ல நானா நீயான்னு போட்டி. மறவநாட்லருந்து தைரியநாதசாமி வந்து திருழாவ நடத்தீட்டுப் போனாரு. ஓவதேசியாருக்குத் தானியம் குடுக்கவா

எண்ண குடுக்கவான்னு தகராறு. சாமியாரு அப்பப்பப் பேசித் தீத்துவப்பாரு. ரெண்டு சாதியிலயும் முக்கியமான ஆளுகளக் கட்டளக்காரங்களா நேமிச்சு ஆளுக்கொரு சாவியக் குடுத்துக் கோயிலுக் காரியங்களக் கவனிக்கச் சொன்னாரு. நாடாக்கமாரு எதுக்கும் ஒத்துவரல.''

''என்ன காரணம்.''

''கோயிலோட முழுப் பொறுப்பவும் அவுகளே வச்சுக்கிடணும்னு திட்டம்.''

''ஓகோ கத அப்படிப் போகுதோ.''

''இவுக ரெம்ப. அவுக கொஞ்சம். கோயிலு கொஞ்சப் பேரு கையில இருக்கிதது புடிக்கல.''

''எங்கயும் நடக்கிறதுதான்.''

''தகராற வளர வுடப்புடாதுங்கிததுக்காக சாமியாரு கோயிலுக்குள்ள கெழமேலா அளிப்போட்டு வடக்குப் பக்கம் நாடாக்கமாரும் தெக்குப் பக்கம் புள்ளமாரும் மத்த சாதிக்காரங்களும் இருக்க ஏற்பாடு செஞ்சாரு. இத ரெண்டு பக்கமும் ஒத்துக்கிடல. சாதிச் சண்டையில வேதக்காரங்க ரெண்டாப் பிரிஞ்சுப் பகையாளியாயிட்டாங்க.''

''எத்தன நாளைக்குப் பூசிப்பூசி மொழுகிறது.''

''பாளையங்கோட்ட பெரியசாமியாரு பாத்தாரு. இவுக சண்ட லேசுக்குள்ள தீந்துக்கிடாது போலருக்கு. எப்படியும் இதுக்கு ஒரு வழி பண்ணியாகணும்னு நெனச்சு ரெண்டு சாதிக்காரங்களவும் கூப்பிட்டுப் பேசினாரு. நீங்க இப்படிப் போங்க நீங்க அப்படிப் போங்கன்னு வழியச் சொன்னாரு. ரெண்டு பக்கமும் அதுக்குச் சம்மதிச்சு அவருக்கு முன்னால ஒப்பந்தம் எழுதிக்குடுத்தாக.''

''என்ன ஒப்பந்தம்.''

''நாடாக்கமாரு ஆயிரத்தி அறநூத்தி முப்பத்தி மூணு ரூவா புள்ளமாருக்குக் குடுத்துடவேண்டியது. அந்தப் பணத்த வச்சு புள்ளமாரு குருவிநத்தத்துல புதுசாக் கோயிலு கெட்டிக்கிட வேண்டியது. காமயநாய்க்கன்பட்டிக் கோயில்ல எந்தப் பாத்தியமும் கொண்டாடப்புடாது.''

''ஒரேயடியாக் கணக்க முடிச்சிட்டாக.''

''புள்ளமாரு எல்லாரும் குருவிநத்தத்துக்குப் போயி அங்க ஒரு கோயிலக் கெட்டிச் சந்தோசமா இருக்காக. ஏற்கெனவே மத்த சாதிக்காரங்களும் அப்பப்பக் குடிகெளம்பிப் போயிட்டாக. காமயநாய்க்கன்பட்டியே நாடாக்கமாரு கைக்குள்ள வந்துருச்சு. பள்ளுப் பறச் சனங்க கீழோரமாக் கொஞ்சம் இருக்காக. இதெல்லாம் கண்ணால பாத்துட்டு கல்லுக்குத்தி மாதிரி நானும் இருக்கென்... இனியும் என்ன நடக்கப்போகுதோ. அதுவரைக்கு நான் இருக்கப்புடாது தாயே.''

பெரியவர் கோயிலை நோக்கி இரு கையேந்தி மன்றாடிவிட்டு அமைதியானார். பேச்சிமுத்து நாடார் பெருமூச்சு விட்டார்.

''நீங்க நூறு ஆயுசுக்குப் பெழச்சுக் கெடக்கணும்.''

''மாதா திருழாவப் போல ஏசு பொறந்த நாளவும் பெரிசாக் கொண்டாடுவொம். எல்லாரும் கோடியுடுத்திக் குதூகலமா இருப்பாக. பொண்ணுக மொளப்பாரி எடுத்து வாற அழகப் பாக்கணுமே. பெலாப் பொட்டி ஓலக் கொட்டான்னு சொமந்துக்கிட்டு சின்னச்சின்னப் பொண்ணுகளா வருவாக. ஒவ்வொண்ணு

லயும் மொளப்பாரி வளந்து சிந்தும். ஏசுவோட பெருமையச் சொல்லிச் சொக மாக் கும்மியடிப்பாக. கைதட்டுத தாளத்துக்கும் அதுக்கும் பாடுததக் கேட்டுக் கிட்டே இருக்கலாம். கடைசி நாள்ல மொளப்பாரிய தீத்தக்கொளத்துல போடு வாக. கொஞ்சம் எடுத்து வச்சிருந்து நெலத்துலயும் போடுவாக. அப்பத்தான் வெள்ளாம நல்லா வெளையும்.''

''அதெல்லாம் பாக்கணும்போல ஆசையாருக்கு.''

''பெரிய வெள்ளிக் கெழமைய வேற மாதிரி கொண்டாடுவொம். ஏசு நாதரச் சிலுவையில அறஞ்ச நாளாச்சே. அதுக்கு முந்தின நாளு பெரிய வேழக் கெழம. அண்ணைக்கு வீடு தவறாம அசனம் குடுப்பாக.''

''அப்படின்னா.''

''கொறஞ்சது ஆறு பேருக்குப் பாதங்கழுவி மரியாத செஞ்சு நல்ல சாப்பாடு தருவாக. வெள்ளிக் கெழம சாய்ந்தரம் பாசிப்பயறு அவிச்சுத் திம்பாக. பொம் பளைக முத்தம் தொளிக்க மாட்டாக. ஒலவைக்க மாட்டாக. கடகண்ணியெல் லாம் அடச்சுக் கெடக்கும். வேலவெட்டிக்குப் போக மாட்டாக. வாற சனம் போற சனத்துக்குத் தருமப் பயினி தாராளமாக் கெடைக்கும். ராத்திரி ஆசந்தி யில ஏசுவோட சுருவத்த வச்சு தெருத்தெருவாச் சுத்தி வருவாக. பெரிய சனிக் கெழம ராத்திரி கல்லற வாசாப்பு நாடகம் நடக்கும். சனங்க விடியவிடிய ஒறங் காமப் பாப்பாக. நாடகத்துல என்னமாப் பாடுவாக தெரியுமா.''

பெரியவர் பழைய நினைவுகளுக்குப் போய் வந்தார். கண்ணை மூடிக் கொண்டு தலையாட்டினார். உதட்டில் குறுஞ்சிரிப்பு பிதுங்கிக்கொண்டிருந்தது. பேச்சிமுத்து நாடாருக்கு ஆவல் குளிராட்டியது.

''அடுத்த வருசம் கண்டிப்பா வந்துருவொம்.''

''எங்க அண்ணன் பாடுததக் கேக்கணுமே. அந்தச் சொகத்துல எல்லாம் மறந்துடும். ஒரு நா ராத்திரி அவன் தெலா எறைக்கான். நான் தண்ணி பாச்சு தென். தவிப்ப மறக்க வாசாப்பு பாடிக்கிட்டே எறைக்கான். பாட்டு வாய்க்காத் தண்ணியக் கூட்டிக்கிட்டே வருது. நான் நின்ன வாக்குல காலால தாளம் போட் டவன் மெய்மறந்து அப்படியே வரப்புல உக்காந்து தலையாட்ட ஆரம்பிச்சென். தண்ணி பாச்சுத நெனப்பே இல்ல. ரெம்ப நேரங்கழிச்சு ஆரோ எந் தலையத் தொட்டு எழுப்புனாக. பாத்தா அண்ணன் நிக்கான். எனக்குன்னா வெக்கமாப் போச்சு. தண்ணி தோட்டத்தத் தாண்டி தரிசுக்காடெல்லாம் பாஞ்சு கெடக்கு. அண்ணன் ஒண்ணுமே சொல்லல. கவனமாத் தண்ணி பாச்சுடா கந்தூங்கிப் பயலேன்னு சிரிச்சுக்கிட்டே போயிட்டான். அதுக்குப் பெறகு அவன் பாடல. தண்ணி பாச்சும்போது எதவோ பறிகுடுத்தமாதிரி வருத்தமா இருந்துச்சு. அவனும் போய்ச் சேந்துட்டான். வாசாப்பும் மறந்துபோச்சு.''

''மாதா திருழாவப் பத்திச் சொல்லவே வேணாம்.''

''நீங்கதான் பாக்கீகளே. பத்து நாளும் ஊருக்குள்ள கொண்டாட்டம் சொல்ல முடியாது. திருழாக் கொடியேத்துனதுலருந்து ஒறங்க மாட்டாக. ஒவ் வொரு நாளு சாய்ந்தரமும் ஒவதேசியாரு சிலுவைய ஏந்திப் புடிச்சபடி தெரு வெல்லாம் சுத்தி வருவாரு. அவருக்குப் பின்னால சனங்க தெரண்டு வருவாக. இப்படி ஒம்பது நாளும் நடக்கும். பத்தாம் நாளு திருழா. மாதாவுக்கு எட்டப்ப

ராசா குடுத்த இருபத்தெட்டு ஏக்கரு நெலமிருக்கு. அதுல வாற வரும்படியே போதும். அதுக்கு மேல தலக்கெட்டு வரிப்பணமிருக்கு. மாதாவுக்கு ஒரு கொறையு மில்லாம எல்லாம் நல்லபடியா நடந்து வருது.''

''மாதாவோட கருணையிருக்கயில ஒரு கொறையும் வராது.''

''வீட்டுக்குப் போறென். ராத்திரியிலருந்து தேரு ஓடும். தள்ளாத வயசில கும்புடு சேவதான் செய்ய முடியலன்னாலும் மாதா மொகத்தக் கண் குளிரப் பாக்கணும். அடுத்த வருசம் பாக்க முடியுமோ என்னமோ.''

பெரியவர் அருகில் கிடந்த கம்பைத் துழாவியெடுத்துச் சிரமப்பட்டு எழுந்து கம்புத் துணையில் தள்ளாடி நடந்து கூட்டத்துக்குள் மறைந்துவிட்டார். பேச்சி முத்து நாடார் மாதா கோயிலை நோக்கி அண்ணாந்தார். சன வெள்ளத்தின் நடு வில் ஓங்கி வளர்ந்த கோபுரத் தண்டில் பரலோகத்தைப் பார்த்துப் பூத்திருக்கும் சிலுவை. பூமரத்தில் கூடுகட்டிக் குடியிருக்கும் குருவியாக ஆலய மணி. மணியின் நாவு அசையாமலேயே மனசுக்குள் நாதம் அதிர்ந்துகொண்டிருந்தது.

## 10. சோறு வேணாம் துணி வேணாம்

கழுகுமலைக்காரர்கள் தேரோட்டம் பார்ப்பதற்காக நேரமிருக்கவே கட்டுச் சோற்றைக் காலிபண்ணினார்கள். தெம்பாக இருந்தது. விடியவிடியப் பார்க்க லாம். ஆறாகப் போய்க்கொண்டிருந்த கூட்டம் அங்கங்கே அணைகட்டிப் பெருகி நிலைகொண்டது. அத்தனை முகத்திலும் மாதாவைக் காணப்போகும் ஆவல்.

கோயிலில் பூசை முடிந்து தேர் கிளம்ப நடுராத்திக்கு மேலாகிவிட்டது. அலங்காரத் தேருக்குள் பட்டாடையுடுத்தி வகைவகையான நகையணிந்து பூச்சரத்துக்கு நடுவில் சாந்தமாக நிற்கும் பரலோக மாதாவின் அழகு மனசை மயக்கியது. தலைமுதல் கால்வரை அணிந்த அழகிய பட்டு மாந்தை. சோதி மயமான முகத்திலிருந்து புன்னகை அரும்பரும்பாக உதிர்ந்துகொண்டிருந்தது. மாதாவை மன்றாடும் கைகள் அரும்புகளை ஏந்தி அள்ளிக்கொண்டன.

தட்டில் எலுமிச்சம்பழம் வெற்றிலை பணம் வைத்து நேர்ச்சைக் காணிக்கை செலுத்தினார்கள். மாதாவை நோக்கித் தொடர்ந்து உப்புமாரி பொழிந்துகொண் டிருந்தது. கைதட்டி கண்ணீர் மல்க மன்றாடினார்கள்.

''பரலோகத்திலிருந்து எங்களை ரட்சிக்க வந்த தாயே எங்களை என்னாளும் காத்தருளும்.''

''ஏசுவைத் தந்த அன்னையே எங்களுக்காகப் பரலோகத்தில் வேண்டிக் கொள்ளும்.''

தேருக்குப் பின்னால் தெரு நெடுகிலும் பாவைக்கொடி விரிப்பாகத் தரையில் படர்ந்தும் எழும்பியும் சனங்களின் கும்பிடுசேவை நடந்துகொண்டிருந்தது. மாதா பேரை உச்சரிக்காத வாய் கிடையாது. எட்டுவைத்துப் பழகும் குழந்தை யாகத் தேர் மெல்லமெல்ல நகர கும்பிடுசேவைக் கொடி வளர்ந்துகொண்டே போனது. தெருத் திருப்ப முனையில் ஒரு முறை எதிர்சேவை செய்துவிட்டு மறு

படியும் தேரை நோக்கிப் படர்ந்தது. நிலம் வெளுக்க விடியும்போது தேர் பாதித்தூரங்கூட நடந்திருக்கவில்லை.

கழுகுமலைக்காரர்கள் ஓடிஓடித் தேரோட்டம் பார்த்தார்கள். ஆசைதீர மாதாவைக் கும்பிட்டார்கள். உறக்கம் போன இடந் தெரியவில்லை. பேச்சிமுத்து நாடார் ஏக்கப் பெருமூச்சு விட்டார்.

''நம்ம எண்ணைக்கு இப்படித் தெருவெல்லாம் தேரோட்டம் நடத்தப் போறமோ.''

வெயிலேறுமுன் தெலாக்கிணற்றில் அலுப்புத்தீரக் குளித்தார்கள். ரெம்ப நேரம் காத்திருந்துதான் சாமியாரைப் பார்க்க முடிந்தது. கூட்டமாகப் போக வில்லை. பேச்சிமுத்து நாடார் அருள்சாமி நாடார் இருவர் மட்டுமே போனார் கள். மற்றவர்கள் வெளியே காத்திருந்தார்கள்.

சாமியார் நல்லவர். எல்லாரும் நீதிநாதசாமி என்று சொல்வார்கள். அவரைப் பார்த்ததும் பேச்சிமுத்து நாடாருக்கு மனசில் பாதிச் சுமை இறங்கிவிட்டது. அவர் சிரித்த முகத்துடன் கேட்டார்.

''ஒங்களுக்கு என்ன வேணும்.''

பேச்சிமுத்து நாடார் பக்குவமாகச் சொன்னார்.

''சாமி நாங்க கழுகுமலையிலருந்து வாறொம். நாடாக்கமாரு. நூறு குடும் பத்துக்கு மேல இருக்கொம். எல்லாரும் இந்துக்காரங்க. ஒங்க புண்ணியத்துல மூணு வேளையும் பசியாமச் சாப்புடுறொம். மேச்சாதிக்காரங்க எங்கள எந் நாளும் தள்ளியே வச்சிருக்காக. முருகன் கோயிலுக்குள்ள மொழைய வுட மாட் டாங்காக. அதப் பத்தி மறந்துட்டொம். ஒரு கலியாணங்காச்சின்னா ரதவீதி வழியா பல்லாக்குல பட்ணப்பருசமாச்சும் போக வுடலாமில்லையா. வெரட்டி வெரட்டி அடிக்காக. நாங்களும் கோடு நாடுன்னு அலஞ்சு தவிச்சிட்டொம். எல்லாரும் அவுகளுக்குத்தான் அனுசரண. எங்க கஸ்டத்த நீங்கதான் தீத்து வைக்கணும்னு ஓடிவந்துருக்கொம்.''

''நான் என்ன செய்யணும்.''

''சாமி எங்களுக்குச் சோறு வேணாம் துணி வேணாம். எந்த எடஞ்சலு மில்லாம நாங்களும் மத்தவுகளப் போல பல்லாக்குல போகணும். அதுக்கு மட்டும் ஏற்பாடு செஞ்சாப் போதும். நூறு குடும்பமும் வேதத்துல எறங்கீருவொம்.''

நீதிநாதர் அமைதியாகத் திரும்பிக் குரல்கொடுத்தார்.

''சீசப்பிள்ள ஏணி கொண்டுவா. இவங்க வேதத்துல எறங்கணுமாம்.''

பேச்சிமுத்து நாடார் குறுஞ்சிரிப்பில் சாமியாரைப் பார்த்தார்.

''நீங்கதான் எங்களுக்கு எல்லாம் சாமி. முழுமூச்சா எறங்கீருவொம்.''

''அப்படியா.''

சாமியாருக்கு ஆச்சரியம். இதென்ன புதுசாக இருக்கிறதே. இவர்கள் கேட்பது நியாயந்தான். வேதத்துக்கு மாறிவிட்டால் மட்டும் கஷ்டம் தீர்ந்துவிடுமா. ஏசுவின்மீது முழுநம்பிக்கை வைத்து மதம் மாறினால்தானே அது உண்மையான தாக இருக்கும். இவர்களுக்கு எப்படி உதவுவது. அவசரப்பட்டு வாக்குக் கொடுத்து விடக் கூடாது. நன்றாக யோசித்து முடிவெடுத்துச் செய்ய வேண்டிய காரியம். நிதானமாகச் சொன்னார்.

''நல்லது. ஒங்க ஊருக்கு வந்து வெவரமாப் பேசிக்கிறென். நீங்க அது வரைக்கும் கர்த்தர்மேல பாரத்தப் போட்டுட்டு நம்பிக்கையா இருக்கணும். சந்தோசமா ஊருக்குப் போங்க.''

அவர்களை ஆசீர்வதித்து அனுப்பினார்.

பேச்சிமுத்து நாடார் மற்றவர்களிடம் இதைச் சொன்னதும் அவர்கள் சுதாரிப்பானார்கள். வீடு திரும்பும்போது அவருக்குப் பல்லாக்கில் போவதுபோல் நடை அவ்வளவு லேசாக இருந்தது. பசியே தெரியவில்லை.

## *11. அல்லேலூயா*

நீதிநாதருக்கு நீண்ட யோசனை. பல்லாக்கை முன்வைத்து இந்தக் காரியத்தில் இறங்குவது சரிதானா. எல்லாம் நல்லபடியாக முடியுமா இல்லை சிக்கல் வருமா. பாளையங்கோட்டை பெரிய சாமியாரைக் கலந்து பேசினார். அவர் பேர் சௌசானல். அவருக்கும் முதலில் தயக்கமாகத்தான் இருந்தது. மற்ற பெரிய சாமியார்களிடம் பேசிப்பார்த்தார். அவர்கள் நமக்கேன் வம்பு என்று ஒதுங்கிக் கொண்டார்கள். அவர் பின்வாங்கவில்லை.

அவர் வித்தியாசமான மனுசன். இப்படிப்பட்ட சிக்கலான காரியங்களைத் தைரியமாகக் கையிலெடுத்துச் செய்யக்கூடியவர். எதிலும் லேசுக்குள் இறங்க மாட்டார். பல தடவை யோசிப்பார். இறங்கிவிட்டால் பின்னடிக்க மாட்டார்.

எல்லாச் சட்டங்களையும் கரைத்துக் குடித்தவர். நெளிவுசுளிவு வெட்டு விலக்குத் தெரியும். இம்மி இடம் கிடைத்தாலும் புகுந்து விளாசி வெளியே வந்துவிடுவார். அவரது எழுத்துக்கும் பேச்சுக்கும் வக்கீல்கள் மட்டுமில்லை கோர்ட்டாரே பயப்படுவார்கள். கீழ்க்கோர்ட் மேல்கோர்ட் என்று இழுத்துக் கிறங்கடித்துவிடுவார். அவரே கோர்ட்டில் வாதாடுவார். சமீன்தாரர்கள் அவரைப் பகைத்துக்கொள்ள மாட்டார்கள். அவருடன் நல்ல உறவு வைத்துக்கொண்டால் சுமுகமாக இருக்கலாம்.

அவர் மனக்கணக்குப் போட்டுப்பார்த்தார். இந்தக் காரியத்தில் மட்டும் செயித்துவிட்டால் நாடார் சனங்கள் அத்தனை பேரும் நம்பிக்கை வைத்து வேதத்துக்கு வந்துவிடுவார்கள். எல்லா இடத்திலும் ஏசுவின் பெருமையைப் பாடுவார்கள். பிறகு அவர்களைவிடக் கீழ்ச்சாதிகாரர்களையும் மாற்றிவிடலாம். நீதிநாதரிடம் தெளிவாகச் சொன்னார்.

''நீங்க கழுகுமலைக்குப் போகலாம். போயி அந்த மக்களோட கொறைகளக் கேளுங்க. மொதல்ல அவங்களுக்கு கர்த்தர்மேல அசைக்க முடியாத நம்பிக்க வரணும். பெறகு நம்மமேல நம்பிக்க வைக்கணும். அதுக்கு என்னென்ன செய்யணுமோ செய்யிங்க. பாவப்பட்ட மக்களுக்கு கர்த்தர் பேரால நன்மையும் ஒதவியும் செய்ய வேண்டியது நம்ம கடம.''

நீதிநாதர் உடனே கழுகுமலைக்குப் புறப்பட்டுப் போனார். நாடார் தெருக்களில் சந்தோசம் பெருக்கெடுத்தது. சாமியார் ஊர் தேடி வந்ததைப் பெருமையாக நினைத்தார்கள். ஒரு வெள்ளைக்காரச் சாமியாரை அவ்வளவு கிட்டத்தில்

பார்த்தது கடவுளையே பார்த்த மாதிரி. அவர் எல்லாருடனும் அன்பாகப் பழகி னார். குறைகளை விசாரித்தார். ஒருவர் பாக்கியில்லாமல் பல்லாக்கைப் பற்றிச் சொன்னார்கள். அவர் நம்பிக்கையூட்டினார்.

''ஆண்டவர் கிருபையால எல்லாம் ஒங்க விருப்பப்படி நடக்கும். நீங்க கர்த்தரோட பிள்ளைகளாகணும்னா அவரப் பத்தித் தெரிஞ்சுக்கிறணும். வேதப் பாடங்களக் கத்துக்கிறணும். செபமால சொல்லணும். எல்லாம் நல்லபடியா முடிஞ்ச பெறகு ஒங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பொம்.''

பெரிய சாமியார் குருவிநத்தத்திலிருந்து ஒரு உபதேசியாரை கழுகு மலைக்கு அனுப்பிவைத்தார். பேர் மிக்கேல் பிள்ளை. வாலிப வயசு. அமைதி யானவர். பாளையங்கோட்டையில் படித்தவர். சனங்களுக்கு நம்பிக்கை மேலும் திடப்பட்டது. அருகில் உபதேசியார் இருக்கும்போது என்ன கவலை. விரைவி லேயே வேதப் பாடங்களைக் கற்றுக்கொண்டு ஞானஸ்நானம் வாங்கிவிடலாம். பிறகென்ன வீதியல்லாம் பல்லாக்கில் பட்டணப் பிரவேசந்தான். கும்மாளந் தான். கொண்டாட்டந்தான்.

மிக்கேல் பிள்ளை அங்கேயே தங்குவதற்குப் பேச்சிமுத்து நாடாரும் முதலாளி யும் வீடு ஏற்பாடு செய்தார்கள். வேதப் பாடம் சொல்லிக்கொடுக்கவும் செபம் படிக்கவும் ஒரு இடம் வேணுமே. முதலாளி தன்னுடைய கிட்டங்கியை ஒதுக்கித் தந்தார். அங்கே நிதமும் நிறைய பேர் கூடினார்கள். குழந்தைகள் துள்ளிக் கொண்டு ஓடினார்கள்.

உபதேசியார் உற்சாகமாக வேதப் பாடங்களை ஆரம்பித்தார். மாட்டுத் தொழுவில் மரியாளுக்கு மகனாகப் பிறந்து வளர்ந்து சீசர்களுடன் ஊர்ஊராகப் போய் சனங்களுக்குப் பிரசங்கஞ் செய்து சதிகாரர்களால் சிலுவையில் அறையப் பட்டு மரித்துப்போய் மீண்டும் உயிர்த்தெழுந்ததுவரை ஏசுவின் பாடுகளைச் சொன்னார். வேத வசனங்களை வாசித்துக் காட்டினார். செபங்களைச் சொல்லிக் கொடுத்தார். எல்லாரும் அக்கறையாகக் கற்றுக்கொண்டார்கள். கூச்சம் விட்டு ஏசுவைத் துதித்துப் பாடினார்கள். அந்த மொத்தக் குரல் தெருக்களில் பரவியது.

குழந்தைகள் விளையாடும்போதும் வேதப்பாட்டுத்தான்.

''எல்லாரும் பாடுவோம்
அல்லேலுயா அல்லேலுயா
ஒண்ணாகப் பாடுவோம்
அல்லேலுயா அல்லேலுயா.''

சின்ன வயசிலும் உபதேசியாரின் திறமையைக் கண்டு ஆச்சரியப்பட்டு அவரை மரியாதையாக நடத்தினார்கள். அவர் முக்கியமாகக் குழந்தைகளுக்கு ஞானோபதேசங்களைக் கற்பித்தார். அவர் கேட்கும் கேள்விகளுக்கு குழந்தைகள் நான் முந்தி நீ முந்தி என்று பதில் சொன்னார்கள்.

''தோத்திரம் சொல்லு.''

''பிதாவுக்கும்
சுதனுக்கும்
பரிசுத்த ஆவிக்கும் மகிமை உண்டாவதாக
ஆதியில் இருந்ததுபோல் இப்பொழுதும் எப்பொழுதும்
என்றென்றும் இருப்பதாக.''

''ஆறு லட்சணங்கள் என்ன.''

''சர்வேசுரன் தாமாயிருக்கிறார்.
துவக்கமும் முடிவும் இல்லாமல் இருக்கிறார்.
சரீரமில்லாமல் இருக்கிறார்.
அளவில்லாத சகல நன்மையும் சுரூபியாயிருக்கிறார்.
எங்கும் வியாபித்திருக்கிறார்.
எல்லாவற்றுக்கும் ஆதி காரணமாயிருக்கிறார்.''

''கட்டளைகள் எத்தனை.''

''சர்வேசுரன் நமக்கு அருளிச் செய்த வேத கற்பனைகள் பத்து.
உனக்குக் கர்த்தாவான சர்வேசுரன் நாமே. நம்மைத் தவிர
வேறே சர்வேசுரன் உனக்கு இல்லாமல் போவதாக.
சர்வேசுரனுடைய திருநாமத்தை வீணாகச்
சொல்லாதிருப்பாயாக.
சர்வேசுரனுடைய திருநாட்களை அனுசரிக்க
மறவாதிருப்பாயாக.
பிதாவையும் மாதாவையும் சங்கித்திருப்பாயாக.
கொலை செய்யாதிருப்பாயாக.
மோக பாவஞ் செய்யாதிருப்பாயாக.
களவு செய்யாதிருப்பாயாக.
பொய் சாட்சி சொல்லாதிருப்பாயாக.
பிறர் தாரத்தை விரும்பாதிருப்பாயாக.
பிறர் உடமையை விரும்பாதிருப்பாயாக.''

''அனைத்திற்கும் ஆண்டவர் யார்.''

''சர்வேசுரன்''.

''சர்வேசுரன் என்பவர் யார்''.

''எல்லாவற்றையும் படைத்துக் காப்பாற்றும் எல்லா நற்குணங்களும் நிறைந்த சுத்த அரூபியே சர்வேசுரன்.''

''எத்தனை சர்வேசுரன்.''

''ஒரே சர்வேசுரன்.''

''அவர் தேவ சுபாவத்தில் ஒருவராயிருந்தாலும் ஆள்வகையில் எப்படி இருக்கிறார்.''

''திரித்துவமாயிருக்கிறார்.''

''திரித்துவமாயிருக்கிறார் என்பதற்கு அர்த்தமென்ன.''

''ஆள்வகையிலே மூவராயிருக்கிறாரென்று அர்த்தமாகும்.''

''இந்த மூன்றாட்களுக்கும் பெயரென்ன.''

''பிதா சுதன் பரிசுத்த ஆவி.''

''பிதா சர்வேசுரனா.''

''சர்வேசுரன்''

''சுதன் சர்வேசுரனா.''

''சர்வேசுரன்.''

''பரிசுத்த ஆவி சர்வேசுரனா.''

''சர்வேசுரன்.''

''மூவரும் மூன்று சர்வேசுரனா.''

''இல்லை. ஒரே சர்வேசுரன்.''

''எப்படி ஒரே சர்வேசுரன்.''

''இந்த மூன்று ஆட்களுக்கும் ஒரே ஞானம் ஒரே சித்தம் ஒரே வல்லமை ஒரே தேவ சுபாவம் இருப்பதால் மூவரும் ஒரே சர்வேசுரன்தான்.''

''சர்வேசுரன் எல்லாவற்றுக்கும் ஆதி காரணமாயிருப்பதெப்படி.''

''பரலோகத்தையும் பூலோகத்தையும் அவைகளடங்கிய சகலத்தையும் படைத்துக் காப்பாற்றுகிறதினாலே எல்லாவற்றுக்கும் ஆதி காரணாமாயிருக் கிறார்.''

''சர்வேசுரன் மனிதர்களை எதற்காகப் படைத்தார்.''

''தம்மை அறியவும் நேசிக்கவும் சேவிக்கவும் அதனால் மோட்சத்தை அடையவும் உண்டாக்கினார்.''

''இயேசு என்ற பெயருக்கு அர்த்தமென்ன.''

''நம்மை இரட்சிக்கிறவர்.''

''ஆகையால் இயேசு கிறிஸ்துநாதர் யார்.''

''நம்மை இரட்சிப்பதற்காக மனிதனாய்ப் பிறந்த சுதனாகிய சர்வேசுரன்.''

''இப்பொழுது இயேசுநாதர் எங்கே இருக்கிறார்.''

''எங்கும் இருக்கிறார். சர்வேசுரனும் மனிதனும் என்ற நிலையில் திவ்விய நற்கருணையிலும் இருக்கிறார்.''

''சிலுவை அடையாளஞ் சொல்லு.''

''பிதா
சுதன்
பரிசுத்த ஆவியின் பெயராலே
ஆமென்.''

இருகை கூப்பித் தெய்வத்தை வணங்கும் பழக்கம் போய் ஒருகை மட்டும் ஆண்டவரைத் துதித்து நெஞ்சில் சிலுவை அடையாளமிட்டது.

நீதிநாதர் அப்பப்ப வந்து பருத்திக் கிட்டங்கியில் தங்கி நிலவரங்களைக் கேட் டறிந்தார். குழந்தைகள் அவரிடம் செபங்களை ஒப்பித்தார்கள். மூச்சுமுட்டப் பாடினார்கள். அவருக்குப் பூரண திருப்தி. இந்துப் பேர்களை மாற்றி வேதப் பேர் சொல்லிக் கூப்பிட்டார். பேச்சிமுத்து நாடார் வேதமுத்தாக மாறினார். வேத மாணிக்கம் ராயம்மா ஞானமுத்து சூசைமுத்து இப்படி எத்தனையோ பேர். கூடிய விரைவில் கோயில் கட்ட ஏற்பாடு செய்வதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

மேல்சாதிக்காரர்கள் கூடிக்கூடிக் குசுகுசுத்தார்கள். முருகன் கோயில் அர்ச்சகர் முதல் காவக்காரன்வரை பேசித் தீரவில்லை.

''சாணாங்க என்னமோ கமுக்கமாச் செய்றாங்க.''

''வேதத்துக்கு மாறுனா மாறீட்டுப் போகட்டுமே. நமக்குத் தொந்தரவு வுட்டது.''

''என்ன திட்டம் போட்ருக்காங்களோ.''

''மரியாதையும் கவுரதையும் வேணும்னா மாட்டுத்தாவணியில வாங்கிக்கிற வேண்டியதுதான்.''

''அவங்க திட்டமே வேறப்பா.''

''அதென்ன.''

''நம்மளோட கோயிலுக்குள்ள வர முடியல. வீதிக்குள்ள போகாதன்னு பெரிய கோர்ட்டே சொல்லீருச்சு. ஆப்படிச்ச கொரங்கு மாதிரி முழிச்சுக்கிட்ருக்கான். கோர்ட் உத்தரவ மீற முடியாது. பொல்லாப்பு வந்துசேரும். வேற வழி என்னன்னு யோசிச்சுப் பாத்தான். வேதத்துப் பக்கம் சாஞ்சிட்டான். இப்பப் புரியிதா அவன் நோக்கம்.''

''அப்படிச் சொல்லு. வேதத்துல சேந்து என்ன செய்யப்போறாங்களாம்.''

''சும்மாருக்க மாட்டான். பொறுத்துப் பாப்பொம்.''

நீதிநாதர் பெரிய சாமியாரிடம் பேசினார்.

''அந்தச் சனங்க வேதத்துக்கு மாற ஆர்வமா இருக்காங்க. அவங்களுக்குக் கோயில் கட்டித் தாறதா வாக்குக் கொடுத்திருக்கென்.''

''அதுக்கென்ன கட்டிக்கொடுத்துருவொம். ஆனா ஒடனே ஞானஸ்நானம் கொடுக்க வேண்டாம்னு தோணுது. கொஞ்ச நாள் பொறுத்துச் செய்வொம். அதுவரைக்குக் கோயில் கட்டாம இருக்கக் கூடாது.''

''தங்களுக்கின்னு ஒரு கோயில் இருந்தாத்தான் உற்சாகமா வருவாங்க.''

''கோயிலும் வேணும். அதே சமயம் அவங்க மரியாதையாவும் இருக்கணும்.''

''ஆமா அது முக்கியம்.''

''அதுக்கொரு திட்டம் வச்சிருக்கென். எந்தத் தெருவீதியில வரக் கூடாதுன்னு தடுக்கிறாங்களோ அங்கயே கோயில் கட்டிக்கொடுத்திட்டா என்ன செய் வாங்களாம்.''

''தங்களோட கோயிலுக்கு வாறத யாராலயும் தடுக்க முடியாது. தலநிமிந்து வரலாம். இது முடியுமா.''

''எல்லாம் முடியும். மொதல்ல கீழரத வீதியில கோயில் கட்றதுக்கு ஒரு எடம் பாருங்க. வெலைக்கு வாங்கிக் கெரையம் முடிச்சு சட்டப்படி நம்ம சொத் தாக்கிக்கிருவொம். ஒடனே அதுல கோயில் கட்டி முடிச்சிறலாம்.''

நீதிநாதருக்கு இது நல்லதாகப் பட்டது. கழுகுமலைக்குப் போய் கலந்து பேசினார். எல்லாரும் சந்தோசமாக ஒத்துக்கொண்டார்கள். வேதமுத்து சுதாரிப் பாகச் சொன்னார்.

''இருக்கவே இருக்கு நம்ம காளிமுத்து நாடாரு எடம்.''

உபதேசியார் கேட்டார்.

''நம்ம சாமியாரு தங்குறதுக்கு வீடு வேணுமே. எத்தன நாளைக்குக் கிட்டங்கியில தங்குறது.''

முதலாளி சொன்னார்.

''காலிமனைய ஒட்டியிருக்கிற கிட்டங்கியவும் சேத்து வாங்கீட்டாப் போச்சு.''

மளமளவென்று காரியங்கள் நடந்தன. காலிமனையும் அதுக்கு வடக்கே யுள்ள கிட்டங்கியும் கார்த்திகை மாசம் பெரிய சாமியார் பேரில் கிரையமானது.

ஈசான பலிபீடத்தின் அருகில் கிழக்காமல் செல்லும் முத்தையா சேர்வை தெருவுக்கும் அதுக்கும் தெற்கே கிழமேலாகச் செல்லும் குஞ்சரம் செட்டியார் தெருவுக்கும் இடைப்பட்ட பகுதியில் கிட்டங்கி இருந்தது. அது சீனி நாடாத்தி வகையறாக்களின் அதாவது சீனி என்ற குப்பம்மாள் சண்முகசுந்தரம் என்ற ஞானசவுந்தரி ஆகியோரின் பேரில் இருந்தது. கீழ ரத வீதிக்கும் கிழக்கு. முத்து முதலியார் வீட்டுக்கும் மேற்கு. கிழமேலாக ஓடிய நாரா சந்துக்கும் வடக்கு. ஈசுவரமூர்த்தி செட்டியார் மனைக்கும் கிட்டங்கிக்கும் தெற்கு. இதுதான் காலிமனையின் நாலு மால்.

மனை வாங்கிய மறுநாளே லூர்து மாதா கோயில் கட்டுமான வேலை ஆரம்பமானது. நீதிநாதர் பூசை செய்து சிலுவையை மந்திரித்து ஏந்திக்கொண்டு முன்செல்ல நாடார் சனங்கள் ஆரவாரத்தில் பின்தொடர்ந்தார்கள். அவர் சிலு வையை மனையில் நட்டிக்கொடுக்க வாணக்கால் தோண்டி நிரப்பி எல்லாம் அடிதொடியாக நடந்தது. ராப்பகலாகப் பாடுபட்டுக் கோயிலை விரைவில் கட்டி முடிக்கணுமென்ற வெறி ஒவ்வொரு முகத்திலும் குடியேறியிருந்தது.

புதுக் கோயிலுக்குள் மாதாவையும் ஆண்டவரையும் துதித்து குதூகலமாகப் பாடணும். அது கீழ ரத வீதியெல்லாம் கேட்கணும். அரண்மனைக்கும் கேட் கணும். கோயில் வாசலில் கால்மேல் கால்போட்டு கம்பீரமாக உட்கார்ந்திருக் கணும். அதை மேல்சாதிக்காரர்கள் பார்த்துத் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு போகணும். ஆடிப்பாடிக் கும்மாளமிட்டுக்கொண்டு வீதியெல்லாம் பல்லாக்கில் பட்டணப் பிரவேசம் போகணும். ஏகப்பட்ட ஆசைகள்.

நாடார்களுக்குள்ளேயே சிலர் முகஞ்சுளித்து முணுமுணுத்தார்கள்.

''ரெம்பத்தான் துள்ளுறாங்க.''

''அதான. வெனைய வெலைக்கு வாங்குற மாதிரில்ல தெரியிது.''

''எதுல கொண்டுபோயி முடியப்போகுதோ.''

மேல்சாதிக்காரர்களால் சகித்துக்கொள்ளமுடியவில்லை. பல மாதிரி புழுங் கினார்கள்.

''காரியங்கெட்டுப்போச்சே. திட்டம் போட்டுல்ல செஞ்சிருக்கான்.''

''நெலத்த வாங்க வுட்டது தப்பு.''

''எம்புட்டுக் கொழுப்பிருந்தா அரமனையோரம் அதும் நம்ம சாமி திரும்பி வாற எடத்துல கெட்டுவான். இதக்காட்டி சாமிக்குத் தீட்டு என்ன வேணும்.''

''எல்லாம் வேதச் சாமியாரு குடுக்கிற தெம்பு.''

''அவுகளவும் ஒருகையி பாத்துற வேண்டியதுதான்.''

ஆயுதங்களுடன் பெரிய கூட்டமாகத் திரண்டு கீழ ரத வீதிக்கு ஓடிப்போய் வேதக் கோயில் கட்டுவதைத் தடுத்தார்கள்.

''எங்க வந்து வெரலு வைக்கிகலே. வெரலத் தறிச்சு நாய்க்குப் போட்ருவொம்.''

''ஒங்களுக்கு ரத வீதியில கோயிலு கேக்குதோ. சீத்தக்குருவி கொழுத்தா செடியில நிக்காதாம். செறக ஒடிச்சுச் சூட்டாங்கறி போட்டாத்தான் சரிப்படும்.''

''அரமனையோட மோதுனா இருக்கிற எடந் தெரியாம அழிஞ்சுபோயிரு வீகன்னு தெரியுமில்ல.''

நாடார்கள் முண்டினார்கள்.

''ஒங்கப்பன் எடத்துலயா கெட்றொம். எங்க சாமியாரு வாங்கிக் குடுத்த எடம். அதக் கேக்கிறதுக்கு நீ ஆரு. எங்களுக்குப் பெறந்துருக்கயா. இங்க வந்து வாலாட்னா ஒட்ட நறுக்கீருவொம்.''

கூட்டம் கொதித்தெழுந்தது.

''ஒப்பாரி வச்சு அழுகிறதுக்குக் கோயிலு ஒரு கேடா. தட்டி நெரத்துங்கடா.''

நாடார்கள் எதிர்த்தார்கள்.

''ஒருத்தனுக்குப் பெறந்திருந்தா கோயிலத் தொடு பாப்பொம்.''

கைகலக்குமளவுக்கு நிலைமை முற்றிவிட்டது. கிராம முன்சீப்பும் போலீஸ் காரர்களும் வந்து உள்ளே புகுந்து கூட்டத்தைக் கலைத்தார்கள். சாமியார் எல்லாவற்றையும் அமைதியாகக் கவனித்துக்கொண்டிருந்தார்.

தகராறு ஓய்ந்த பிறகும் கட்டுமானம் நிற்கவில்லை. சாமியார் யோசனைப் படி கோயில்மனையைக் கம்பு வேலி நட்டிப் பிறத்தியார் நுழையாதபடி பாதுகாத்துக்கொண்டார்கள்.

## படலம் 11

### 1. அருமுறுக்கு

**ஊ**ருக்குள் இருபக்கமும் அருமுறுக்கிக்கொண்டு திரிந்தார்கள். எந்த நேரம் முட்டிக்கொள்ளுமோ என்ற பயம். போலீஸ்காரர்கள் பேமுழி முழித்தார்கள். இந்தச் சமயத்தில் நாடார்களைத் தொந்தரவு செய்தால் பெரிய சாமியார் சும்மா இருக்க மாட்டார். தொறட்டு வந்துசேரும். அதே சமயம் மேல்சாதிக்காரர்களுக்கும் நல்ல பிள்ளையாக நடந்துகொள்ளணும். அரண்மனை விவகாரம்.

ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளைக்கு ஆரம்பத்திலிருந்தே நாடார்கள்மேல் காட்டமிருந்தது. அதுக்குக் காரணம் வைத்திருந்தார். அடிக்கடி சலித்துக்கொள்வார்.

''இவங்களால என்னாளும் மூக்குச்சளிதான். மனுசன் நிம்மதியா ஒறங்கி எந்திரிக்க முடியிதா. எடஞ்சலு குடுத்துக்கிட்டே இருந்தா கச்சேரிய எப்படி நடத்துறது. எண்ணைக்குமில்லாற பழக்கத்தத் தூக்கிவச்சுக் கொண்டாடுனா சள்ளதான. இது ஒண்ணுதானா நமக்கு வேல. எங்க போனாலும் இதே பேச்சாத் தான் கெடக்கு. கையில நாலு துட்டு வந்துருச்சுன்னா இப்படியா தல காலு தெரி யாமத் துள்ளுறது. பரம்பரையா அனுபவிச்சிட்டு வாறவன் மடியில கைய வச்சாச் சும்மாருப்பானா. இவங்களும் தாந்துபோற மாதிரி தெரியல. கொஞ்சம் சகிச்சுப் போங்கப்பான்னு சொன்னா வீணா பொல்லாப்பு வந்துசேரும். எனத் தொரோகம் செஞ்ச பயலேன்னு ஏரீட்டு வருவான். தெருவில குடியிருக்க முடியாது. அர மனைக்கு என்ன சொல்றது. துள்ளுற மாடு பொதி சொமக்கும். அதக் கண்ணால பாக்கத்தான் போறென்.''

அவர் பாடு அவருக்கு. போலீஸ் கச்சேரிக்கு அவர்தானே அதிகாரி. மேலாவில் என்ன கேள்வி கேட்டாலும் பதில் சொல்லியாகணும். சின்னத் தப்பு நடந்தால்

கூட போலீஸ்காரர்களைத்தான் கைகாட்டுவார்கள். இண்டஞ்செடிக்குள் தலையை விட்டுக்கொண்டு முழிக்கிற பிழைப்பு.

நாடார்களுக்கு அவரைக் கண்டால் பிடிக்காது.

''அவரும் மேச்சாதிக்காரராச்சே. நமக்கெப்படி அனுசரணையா இருப்பாரு.''

''இன்னதுக் கின்னதுன்னு சொல்லிக்குடுத்து அவங்களத் தூண்டிவுடுறதே அவருதானப்பா.''

கீழ ரத வீதியில் வேதக் கோயில் கட்டுவதை இந்துக்காரர்கள் தடுப்பதாகவும் கலவரஞ் செய்வதாகவும் சாமியார் பிராது கொடுத்தார். அப்படியெல்லாம் ஒண்ணும் நடக்கவில்லையென்று சொல்லி சங்கரன்கோயில் சப் மாஜிஸ்திரேட் வேலாயுதம் பிள்ளை அதைத் தள்ளுபடிசெய்தார். சுப்பிரமணியசாமி கோயில் நிலத்தை கௌசானல் சாமியார் ஆக்கிரமித்திருப்பதாகக் கோயில் பேஷ்கார் சுப்பா ராவ் போலீசில் புகார் செய்தார். இது சம்பந்தமாக சிவில் கோர்ட்டில் முறை யிடச் சொல்லி போலீஸ் விலகிக்கொண்டது.

சுப்பா ராவ் சமீன் மேனேஜருக்கு அறிக்கை அனுப்பியிருந்தார். அதைப் படித்துப் பார்த்த மேனேஜர் இந்தத் தகராறு சம்பந்தமாக தானே வழக்குப் போட விருப்பதாகவும் இதில் அவர் தலையிடத் தேவையில்லை என்றும் உத்தரவு போட்டார். அந்த உத்தரவை டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கும் கலெக்டருக்கும் அனுப்பிவைத்தார்.

மேனேஜருக்கு கழுகுமலைக் கோயில் சேவகர்கள்மேல் நல்ல அபிப்பிராயம் கிடையாது. வீண்வம்பை விலைக்கு வாங்குகிறவர்கள். சண்டை மூட்டிக் குளிர் காய்கிறவர்கள். வாக்குச் சுத்தம் கிடையாது. விசுவாசமாக உழைப்பதில்லை. பொதுச் சொத்தைப் பற்றிக் கவலையில்லை. இப்பேர்ப்பட்டவர்களை இந்த விவகாரத்தில் தலையிட விட்டால் விபரீதமாகிவிடும். ஏற்கெனவே சமீன் நிலைமை சரியில்லை. இதும் சேர்ந்துகொண்டால் குழப்பத்துக்குச் சொல்லவே வேணாம். வேதச் சாமியார்களையும் பகைத்துக்கொள்ள முடியாது. அப்புறம் சர்க்காருக்குப் பதில் சொல்லியாகணும். ஆகவே இதில் தானே நடவடிக்கை யெடுத்துத் தகராறைத் தீர்த்துவைத்துவிடலாம்.

அவரது நிருவாகம் அரண்மனையில் சின்ன மகாராசாவுக்கும் சக்கரைச் சாமிக்கும் சுத்தமாகப் பிடிக்கவில்லை. சொல்லப்போனால் அரண்மனையைச் சேர்ந்த பலருக்கு ஆத்திரமாக இருந்தது.

''இவருக்கென்ன சாணாங்கமேல அவ்வளவு அக்கறன்னு கேக்கென். ஆரம்பத்துலருந்து பாத்துட்டுத்தான் வாறென். அவங்க செய்றதக் கண்டுக்கிறதே இல்ல.''

''ஆரம்பத்துலயே வளர வுடாமத் தடுத்திருக்கணும். இப்பப் போயி வரிஞ்சு கெட்டிக்கிட்டு அலையிறாரு.''

''வேதச் சாமியாரத் தட்டிக்கேக்கலாமில்ல. அதும் கெடையாது.''

''எதுலயும் ஒரு கட்டுத்திட்டமில்லாமப் போச்சு.''

''இவரால அரமனைக்குத்தான் மரியாதக் கொறச்சல்.''

''இப்படிப்பட்ட மனுசன் இருந்தும் ஒண்ணுதான் இல்லாறதும் ஒண்ணு தான்.''

## 2. கண்டமானக்கி ஓடும் காலம்

காதில் கட்டெறும்பு கடித்த கழுதைக்குட்டியாகக் காலம் கண்டமானக்கி ஓடிக்கொண்டிருந்தது. மருதனுக்கு முடிநரைத்து முதுகு இன்னும் வளைந்து விட்டது. இடுப்பு தாக்குப்பிடிக்கவில்லை. நடை தளர்ந்துபோனது. மைக் கத்தியைச் சாணைதீட்டும்போது கை நடுங்கியது. ஏகதேசம் வெளுப்புத் துறைக்குப் போனான். கண்பார்வை மட்டும் மங்கவில்லை.

வீட்டிலிருந்துகொண்டு ஏதாச்சும் வேலைசெய்தான். வெள்ளைபிரிப்பது அவன் பொறுப்பு. ஊருக்குள் குடும்பங்கள் கூடிவிட்டதால் அடையாள நினைவு தப்பியது. மாடத்தி உதவினாள்.

அவன் கம்பளிக் கயிறு திரித்துச் சங்கு கோர்த்து கழுதைகளுக்குக் கழுத்தில் கட்டி அழகுபார்ப்பான். உருவிவிட்டதுபோல் மயிர் பறிப்பான். புழுதியில் புரள விட்டு மெனக்கிட்டுத் தேய்த்துக் குளிப்பாட்டுவான். கழுதைக்குட்டிகளை நாய் அண்ட விடாமல் காவல்காத்து நேரத்துக்குக் கஞ்சி ஊற்றிக் கண்ணுங் கருத்துமாக வளர்ப்பான்.

இப்போதெல்லாம் நாய்கள் கழுதைகளை அண்டுவதில்லை. ரெண்டுமூணு தடவை அதுகளுக்குக் கொடுத்த வைத்தியத்துக்குப் பிறகு அவனைக் கண்டால் தருக்குவிட்டை போட்டுக்கொண்டு பரிந்துவிடும். ஒருநாள் வடக்கு வீட்டுக் கருப்பு நாய் அவனைக் கண்டு ரெம்ப மும்முரமாகக் குலைத்தது. அவன் அமைதி யாக இருக்கஇருக்க அதுக்கு எளக்காரம். வாயைப் பிளந்துகொண்டு கடிக்க வந்தது. அவன் ரெண்டு கைகளையும் பின்புறம் ஒளித்துக்கொண்டு அது நெருங்கும்வரை காத்திருந்தான். கைக்கெட்டும் தூரத்தில் வந்துவிட்டது. ஒரு கையில் அள்ளி வைத்திருந்த புழுதி மண்ணைக் குறிதவறாமல் அதன் வாய்க்குள் போட்டு அடுத்த கையில் பிடித்திருந்த கட்டைக்கம்பினால் மண்ணைக் கிட்டித் தான். அது குரல் விக்கிக் குழறியது. அதே கம்பை ஓங்கிச் சப்பையில் வசமான அடி கொடுத்தான். அலறக்கூடச் சீத்துவமில்லாமல் ஓட்டம்பிடித்தது.

இன்னொரு நாள் தெற்கு வீட்டுச் செவலை நாய் மாட்டிக்கொண்டது. ஒருமூச்சு குலைத்துவிட்டுத் தவிப்பாறும் நேரம்பார்த்துக் கொக்குக்கறியும் மிளகாய்ப் பொடியும் குழைத்துத் தயாராக வைத்திருந்த சோற்றுருண்டையைப் பக்குவமாகப் போட்டான். கறி வாசனையில் அவக்கென்று கவ்வி மென்றது. உறைப்பு தாங்காமல் தலையை உதறிச் சோற்றைத் துப்பியது. வாணீர் வடிய ஆரம்பிக்கவே பயத்தில் கிண்ணிவிட்டது.

மாடத்தி பாடும் அவனைப் போல்தான் இருந்தது. நடக்கத் தெம்பில்லாமல் தவங்கி உட்கார்ந்துவிட்டாள். கால்முட்டிக்குள் கம்மாயைக் கட்டிவைத்த மாதிரி நீர் கடுத்தது. வெள்ளாவி அடுப்பில் சூடு காட்டினால் வலி குறைந்து கொஞ்சம் லேசாக இருக்கும். இதுக்காகவே அழுக்கவிக்கும் வேலைகளை எடுத்துப்போட்டுச் செய்வாள். நகலியாக வீட்டுக்கும் கம்மாய்க்கும் நடக்கச் சளைக்காத மனுசிக்கு இப்போது எல்லாமே தூரமாகத் தெரிந்தது. இடைவழியில் உட்கார்ந்து தவிப் பாறாமல் ஒரு இடத்துக்குப் போக முடியாது. காய்ந்த துணிகளை எடுக்கக் குனிந்தால் முட்டியில் கை வைக்காமல் நிமிர முடியாது.

மருதனிடம் முனங்குவாள்.

''பேத்திமாரு பேச்சுத்தொணைக்கிருந்தா வலியெல்லாம் மறந்துரும். அதுக சமஞ்ச கொமருகளாயிருச்சா. கிட்ட வர மாட்டங்குதுக. உள்ளூருக்காரியவே கையில புடிக்க முடியல. அசலூருக்காரிக ஆப்புடுவாகளா. வம்பாடு பட்டுத் தொறைக்குப் போனாலும் பேச முடியிறதில்ல.''

''அதுகளுக்கு வேல சரியாருக்குதில்ல.''

''அதச் சொல்லு. என்னாளும் நம்ம கூடயே இருந்து முடியுமா. ஒரு எடத்துக்குப் போயிட்டா என்ன செய்ய முடியும். செறகு முத்திக் குருவியானா பெறகு அதது வாயி வகுத்தத்தான் கவனிக்கும்.''

''அதுகள நல்ல எடத்துல குடுத்தாப் போதும்.''

''நானும் அதப் பத்தி நெனைக்காற நாளில்ல.''

## 3. உன்னைக் கழுவுகிறேன்

கழுகுமலை நிலவரம் கடுமையாகிக்கொண்டு வந்தது. தகராறுகளைக் கட்டுப் படுத்த முடியாமல் அடிக்கடி கலவரம் வெடித்தது. மாறிமாறி வீடுகளைக் கொளுத்தினார்கள். கிராம முன்சீப் சுப்பா நாய்க்கர் வீடும் ஒரு செட்டியார் வீடும் சாம்பலாகின. நாடார் தெருவில் ஏழு வீடு எரிந்துபோயிற்று. அதில் ஒரு போலீஸ் காரர் வீடும் உண்டு. மேற்கொண்டு கலவரம் வராமல் போலீஸ்காரர்கள் ஓடிஓடி அணைபோட்டார்கள்.

சங்கரன்கோயில் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய பிள்ளை சப்மாஜிஸ்திரேட் வேலாயுதம் பிள்ளையுடன் கழுகுமலைக்கு வந்து இடங்களைப் பார்வை யிட்டார். நிலைமை கட்டுக்கடங்கி ஊரே அமைதியாக இருந்தது. சனங்கள் ஒருவர்மேல் ஒருவர் ஆவலாதி சொல்லி அவர்களிடம் முறையிட்டார்கள்.

எல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்ட இன்ஸ்பெக்டர் நடந்த சம்பவங் களைப் பற்றி விவரமான அறிக்கை எழுதி டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு அனுப் பினார். நாடார்களுக்கும் இந்துக்காரர்களுக்கும் உறவு அப்படியொண்ணும் சுமுகமாக இல்லை. கீழ ரத வீதியை நோக்கி மேற்காமல் வாசல் வைத்துக் கட்டிக் கொண்டிருக்கும் வேதக் கோயிலை முன்னிட்டுத் தகராறு வரச் சந்தர்ப்பம் உண்டு. ஹைகோர்ட்டின் தீர்ப்பை உடைத்துக்கொண்டு ரதவீதியில் பட்டணப் பிரவேசம் போகும் நோக்கத்திலேயே கோயில் கட்டுகிறார்கள். இப்படி அவர் தனது அபிப்பிராயத்தைச் சொல்லியிருந்தார். ஊருக்கு வந்து இது சம்பந்தமாக விசாரணை நடத்தி உத்தரவு போடும்படியும் கேட்டிருந்தார்.

இதே மாதிரி சப்மாஜிஸ்திரேட்டும் டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு அறிக்கை தாக்கல்செய்திருந்தார். நிலைமை சொல்லிக்கொள்ளும்படியாக இல்லையென்றும் வேதக் கோயிலுக்கு முன்புறமுள்ள காலியிடத்தையும் அவர்கள் அனுபவித்துக் கொண்டால் தேரோட்டத்துக்கு இடைஞ்சலாக இருக்குமென்றும் அதில் தெரி வித்திருந்தார். தீவைப்புச் சம்பவங்களைப் பற்றிச் சொல்ல மறக்கவில்லை.

இருக்கிற நிலைமையை இன்ஸ்பெக்டர் மேலதிகாரிகளுக்கும் தெரிவித்திருந் தார். அவரது கடிதம் அங்குமிங்குமாகச் சுற்றிக் கடைசியாக கலெக்டர் கைக்குக் கிடைத்தது. உடனே விசாரணை நடத்தி அதுக்குத் தக்க நடவடிக்கையெடுத்து விவரம் தெரிவிக்குமாறு கலெக்டர் டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு எழுதினார். மாஜிஸ்திரேட் நரசிம்மலு நாயுடு திறமையான அதிகாரிதான். ரெண்டு வருசத் துக்கு மேலாக அந்த வேலையில் இருப்பதால் விவகாரங்கள் அவருக்கு நன்றாகவே தெரியும். இருந்தாலும் எக்குத்தப்பாக மாட்டிக்கொள்ளக் கூடாதே. முழித்துக் கொண்டிருந்தார். சும்மாவும் இருக்க முடியாது. ஏதாவது நடவடிக்கை எடுத் தாகணும். தகராறு பண்ணக்கூடியவர்கள்மேல் வழக்குப் பதிவுசெய்து குற்றப் பத்திரிக்கை தாக்கல்செய்யுமாறு இன்ஸ்பெக்டருக்குச் சொன்னார்.

அந்தப்படி இன்ஸ்பெக்டர் ஏழு நாடார்கள் ஏழு இந்துக்காரர்கள்மேல் வழக்குப்போட்டார். அந்த வழக்கை எடுத்துவந்து டெபுடி மாஜிஸ்திரேட் விசாரணை நடத்தினார். கழுகுமலையில் வைத்து நடத்தவில்லை. வெளியே தூரமான இடத்தில் இருந்துகொண்டு வழக்கு சம்பந்தமான சாட்சிகளை மட்டும் விசாரித்தார். வேறு முக்கிய விசயங்களில் அக்கறை காட்டவில்லை.

கலகம் செய்தது இந்துக்காரர்கள்தான் என்று அவர் முடிவுக்கு வந்தார். இந்துக்காரர்களிடம் ஆறு மாசத்துக்கு நன்னடத்தைச் சாமீன் எழுதிவாங்கினார். மற்ற எல்லாரும் விடுதலையானார்கள்.

இதுக்கிடையில் ஊருக்குள் சண்டைக்குக் குறைச்சலில்லை. தொடர்ந்து பல தடவை தீவைப்பு நடந்தது. மேல்சாதிக்காரர்களுக்கு மிக்கேல் பிள்ளை உப தேசியார்மேல் ரெம்பக் கோவம் இருந்தது.

''அவன் ஒரு சாதிகெட்ட பய. வெள்ளாளனாப் பெறந்துக்கிட்டு நாடாங் களுக்கு ஊழியஞ் செஞ்சு கேவலப்படுத்துறானே.''

''காமயநாய்க்கன்பட்டியிலருந்து வெள்ளாளங்கள நாடாங்க வெரட்டி யடிச்ச கத தெரியாதா.''

''வேதக்காரப் பயலுக்குத் தெரியாம எங்க போகும்.''

''சாமியாரு அனுப்பியிருப்பாரு. சவங்கத்தனமா இங்க வந்து கெடக்கான்.''

''அவன வெரட்டியாகணும்.''

உபதேசியார் குடியிருந்த வீடு நெருப்பில் வெந்து நீந்துவிட்டது. அவர் எதும் பேசாமல் ஆண்டவரிடம் முறையிட்டுவிட்டு வேதனையை விழுங்கிக்கொண் டார். குடியிருக்க இன்னொரு வீடு கிடைத்தது. ஒவ்வொரு நாளும் நெருப்புக்கு நடுவில் படுத்திருக்கும் வலி. வேதமுத்திடம் பேசி மனசாறினார்.

அடுத்து சில இந்துக்கார வீடுகள் மொட்டையாகின. வேதக் கோயிலுக்குள் இந்துக்காரர்கள் நுழைந்து தாக்கியதாக பெரிய சாமியார் பிராது கொடுத்தார். இந்த இழுபறியில்தான் தைப்பூசத் திருவிழா ஒருவழியாக நடந்து முடிந்தது. பயந்தபடி எதும் நடக்கவில்லை.

நாடார்கள் வேதக் கோயில் கட்டுவதுபற்றி மேல்சாதிக்காரர்கள் ஏற்கெனவே கலெக்டருக்கு மனுபோட்டிருந்தார்கள். அதை கலெக்டர் சப்கலெக்டருக்கு அனுப்பினார். அங்கிருந்து தாசில்தார் விசாரணைக்குப் போனது. விசாரணை நடத்திய தாசில்தார் இன்ஸ்பெக்டரைப் போலவே நிலைமையைச் சொல்லி

அறிக்கை கொடுத்தார். சப்கலெக்டர் அந்த அறிக்கை விவரங்களைச் சமீன் மேனேஜருக்குத் தெரிவித்தார். வேதக் கோயிலை அகற்றுவதற்குத் தனதளவில் நடவடிக்கை எடுத்துவருவதாகவும் இது சம்பந்தமாக சப்கலெக்டரே சாமியார் களிடம் கேட்டுக்கொள்ளலாமே என்றும் மேனேஜர் சொல்லிவிட்டார். இது சிவில் விவகாரம் என்பதால் மேனேஜர்தான் சாமியாரைக் கேட்கணும் என்று சப்கலெக்டர் மடக்கி எழுதினார். இதைப் பார்த்த மேனேஜர் சரி வழக்குப்போடு வதற்கான வக்காலத்து வரட்டுமே என்று சும்மா இருந்துவிட்டார்.

இதெல்லாம் போலீசுக்கோ கோர்ட்டுக்கோ தெரியாது. கலெக்டரும் இதில் அக்கறை காட்டவில்லை. மேற்கொண்டு செய்வதுபற்றி யோசிக்காமல் விட்டு விட்டார். அவருக்கு ஆயிரம் வேலைகள். ஒருவேளை இந்தச் சள்ளை நமக்கெதுக்கு என்று கண்டுகொள்ளாமல் இருந்தாரோ என்னமோ.

இதுக்குள் நாடார்கள் வேலைகளை முடுக்கிவிட்டு வேதக் கோயிலைக் கட்டி முடித்துவிட்டார்கள். சுண்ணாம்புக்காரைச் சுவர் கட்டுவதற்குப் பலவேச நாடார் கருப்பட்டி கொடுத்து உதவினார். பெரிய நாடார் கொடுத்த பனையோலையால் கூரை மேய்ந்தார்கள். தேரோடும் வீதியில் தங்களுக்கென்று தனிக் கோயில் கிடைத்ததில் நாடார்களுக்குப் பெருமை. நிதமும் கோயிலுக்கு வந்து செபித்தார் கள். மாதாவைத் துதித்துப் பாடினார்கள். உபதேசியாரும் வேதமுத்தும் பாடங் களையும் பாடல்களையும் கண்ணும் கருத்துமாகச் சொல்லிக் கொடுத்தார்கள்.

நாடார்கள் இவ்வளவுக்கு மாறிவிட்டதை அறிந்து பெரிய சாமியார் சந் தோசப் பட்டார். உபதேசியாரை மெச்சிக்கொண்டார். இனிமேலும் தாமதப் படுத்தக் கூடாது. ஆண்டவரால் ரட்சிக்கப்பட்ட விசுவாசிகளுக்கு ஞானஸ் நானம் கொடுத்துவிடணும். நீதிநாதரிடம் சொல்லிவிட்டார்.

''எவ்வளவோ வேதனைகளத் தாங்கிக்கிட்டு மனந்தளராம கர்த்தரத் துதிக்கிற சனங்கள அரவணச்சு அவரோட கொழந்தைகளாக்கீறணும்.''

உபதேசியாரும் வேதமுத்தும் தங்கள் உழைப்புக்குப் பலன் கிடைத்து விட்ட பூரிப்பில் செபக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். வேதக் கோயில் பிடிக்காமல் சனக்கூட்டம். நீதிநாதர் அருள் வடிவாக ஆசீர்வதித்து ஒவ்வொரு நாளும் கொஞ்சங்கொஞ்சமாக ஞானஸ்நானம் கொடுத்தார். தலையில் தண்ணீர் வார்த்து முழுக்காட்டி ஆசிர்வதித்தார்.

''பிதாவுடையவும் சுதனுடையவும் பரிசுத்த ஆவியுடையவும் நாமத்தி னாலே நான் உன்னைக் கழுவுகிறேன்.''

ஒவ்வொருவரும் ஞானத்தகப்பன் சாட்சியாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டார்கள்.

''பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த எல்லாம் வல்ல பிதாவாகிய சர்வேசுரனை விசுவசிக்கிறேன்.

அவருடைய ஏக சுதனாகிய நம்முடைய நாதர் இயேசு கிறிஸ்துவையும் விசுவசிக்கிறேன்.

பரிசுத்த ஆவியை விசுவசிக்கிறேன்.''

முதலாளி கருத்தண நாடார் மகாலிங்க நாடார் உட்பட கிட்டத்தட்ட முன்னூறு பேர் கர்த்தரின் விசுவாசிகளாக மாறினார்கள். மிஞ்சிய இருநூறு பேருக்கு ஞானஸ்நானம் கிடைக்கவில்லை. அவர்கள் முகத்தில் ஏமாற்றத்தைக் கவனித்த நீதிநாதர் சிரித்துக்கொண்டார்.

''கவலப்படாதங்க. நான் அடுத்த தடவ வரும்போது நிச்சயம் எல்லா ருக்கும் கெடைக்கும்.''

ரெம்ப ஆர்வமாக இருந்த வேதமுத்துக்கும் கிடைக்கவில்லை. உபதேசியா ரிடம் வருத்தப்பட்டார்.

''இப்படித் தள்ளிப்போயிருச்சே. எதுக்குன்னு தெரியலயே.''

''மீதியிருக்கிற சனங்கள அடுத்த கூட்டத்துக்குள்ள தயார்ப்படுத்த வேண்டி யது நம்ம பொறுப்பு. அத மனசில வச்சுத்தான் சாமி தள்ளிப் போட்ருக்காரு. எவ்வளவுக்கெவ்வளவு தாமதமாகுதோ அவ்வளவுக்கு ஆண்டவருமேல விசுவாசம் கூடும்.''

''அது சரிதான். ஆண்டவரோட விருப்பம் எப்படியோ அப்படியே நடக் கும். அதுவரைக்கும் பொறுத்திருக்கணும்.''

நீதிநாதர் ஆண்டவரால் கிடைக்கப்போகும் நன்மைகளைச் சொல்லிவிட்டு வரவிருக்கும் திருவிழாவை ஞாபகப்படுத்தினார்.

''கர்த்தரோட விசுவாசிகளான பெறகு நீங்க கொண்டாடப்போற மொதல் பண்டிக குருத்தோல ஞாயிறு. ஆண்டவர் கிருபையால ஒங்களுக்கு விடிவுகாலம் பொறந்தாச்சு. எல்லாரும் ஒத்துமையாருந்து சந்தோசமாக் கொண்டாடணும்.''

கோயிலுக்குள் குதூகலமான பாட்டு கேட்கத் தொடங்கியது.

''ஏசுநாதர் உயிர்த்தெழுந்தார்
ஏகசுதன் மரித்தெழுந்தார்
பாவிகளை ரட்சிக்கவே
ஆவியாக அவதரித்தார்
ஏசுஇனி மரிப்பதில்லை
எந்தநாளும் மரணமில்லை
பரமபிதா பாரிசத்தில்
கருணைபொங்க வீற்றிருப்பார்.''

ஆரவாரம் அடங்கியதும் மாதாவுக்கு முன்னால் மண்டியிட்டுச் செபித் தார்கள்.

''பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே
உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக
உம்முடைய ராஜ்யம் வருவதாக. உம்முடைய
சித்தம் பரமண்டலத்தில் செய்யப்படுகிறது'போல
பூமியிலேயும் செய்யப்படுவதாக.
எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்.
எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல
எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்
எங்களை சோதனைக்குட்படப் பண்ணாமல்
தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும்

ராஜ்யமும் வல்லமையும் மகிமையும்
என்றென்றைக்கும் உம்முடையவைகளே.
ஆமென்.''

மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றி நீதிநாதர் உபதேசியாரிடமும் வேதமுத்திடமும் விவரமாகப் பேசிவிட்டு காமயநாய்க்கன்பட்டிக்குப் புறப் பட்டார்.

## 4. தேரும் குருத்தும்

மாதா கோயிலில் நிதமும் பண்டிகைக் கூட்டந்தான். கீழ ரத வீதியில் விலக இடமில்லை. கோயில் வாசலில் சிரிப்பு கேட்டுக்கொண்டேயிருந்தது. ஊர் முழுக்க இதே பேச்சுத்தான்.

''எல்லாம் செஞ்சுப்புட்டு சாணாங்க சந்தோசமா இருக்க முடியும்னு நெனைக்கயா.''

''ஒருநாளைக்கு வட்டிவாசியெல்லாம் சேத்துத் தண்டன கெடைக்கத்தான் போகுது.''

பெரிய நாடார் பலவேச நாடார் குடும்பங்களைப்போல் சில குடும்பங்கள் வேதத்துக்கு மாறவில்லை. வழக்கமாக இந்துச் சாமியையே கும்பிட்டுக்கொள்ள லாம் என்று இருந்துகொண்டார்கள். அதுகூட வேதக்காரர்களுக்கு வருத்தம். ஆனாலும் பெரிசுபடுத்தவில்லை.

அடுத்த ஞாயிறு குருத்தோலைத் திருநாள். அதை முன்னிட்டு மாதா கோயிலுக்கு முன்னால் கீழ ரத வீதியை ஒட்டிப் பந்தல் போட்டார்கள். பெரிய சாமியார் ஏற்பாடு. இது மேல்சாதிக்காரர்களுக்குத் தெரிந்துவிட்டது. கோவத்தில் குதித்தார்கள்.

''தேரோட்டத்தத் தடுக்கணுமிங்கிற திட்டத்தோடதான் போட்ருக்கான்.''

''இதுக்குள்ள எல்லாப் பயகளவும் பொசுக்கிச் சாம்பலாக்கியிருக்கணும். வுட்டுட்டொம்.''

''தேரோட்டத்துக்கு என்னமும் ஏதும் தடங்கலு வந்துச்சுன்னு வையி. அண்ணைக்குத்தான் இருக்கு கத. அத்தன பேரவும் அங்கயே கெடாவெட்டிக் காவு குடுத்துறணும்.''

பங்குனி இருபத்தாறு. ஞாயிற்றுக்கிழமை. குருத்தோலைத் திருநாளும் பங்குனி உத்திரத் தேரோட்டமும் சொல்லிவைத்த மாதிரி ஒரே நாளில் வந்தது. முதல் பண்டிகை என்பதால் வேதக்காரர்கள் கோலாகலமாகக் கொண்டாடு வார்கள். மேல்சாதிக்காரர்களின் திட்டம் வேறு மாதிரி. வேதக் கோயில் முளைத் துள்ள நிலையில் தேரோட்டத்தை எப்படியும் நடத்திக் காட்டியாகணும்.

''இந்தச் சாக்குல சாணாங்கள அடக்கி ஒடுக்கியாகணும்.''

''எண்ணைக்கும் தலையெடுக்கப்புடாது.''

''அவங்க கையி ஓங்கீட்டா அதவிடக் கேவலம் வேற வேணாம்.''

ஆதிநாராயண சேர்வை கோயில் பேஷ்காரிடம் ஓதினார்.

‘‘இது நல்லதுக்கில்ல சாமி. நம்ம கோயிலு நெலத்துல பந்தலுப் போட்டுக்கிட்டுத் தெந்தனம் பேசுனா எப்படி. சும்மா பாத்துட்ருக்க முடியுமா. அதனால தேரு ஓடாம நின்னுபோயிருச்சுன்னா அசிங்கம். அரமனைக்கு என்ன சொல்ல முடியும். நம்மெல்லாம் இருந்து புண்ணியமில்ல.’’

சேர்வை முந்தி கோயில் சேவகராக இருந்தவர். அந்த வேலையிலிருந்து நீக்கிவிட்டதால் ஊர்க் காவக்காரராகிவிட்டார். பேஷ்கார் உடனே சமீன் மேனேஜருக்கு எழுதினார். மேனேஜர் அதை வக்கீலுக்கு அனுப்பி இனிமேல் போடவிருக்கும் வழக்கில் சேர்த்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டார்.

சமாச்சாரம் அரண்மனையை எட்டியது. சின்ன மகாராசாவும் சக்கரைச் சாமியும் காட்டமானார்கள். நாடார்களை அடக்கிவைக்கணுமென்று கறுவினார்கள். மேனேஜர்மேல் கோவங்கோவமாக வந்தது.

மேனேஜர் கழுகுமலைக்கு வந்தார். மாதா கோயிலைப் பார்வையிட்டுவிட்டு பேஷ்காரிடம் சொன்னார்.

‘‘நீர் இதப் பெரிசுபடுத்த வேண்டாம். நான் அவாட்டப் பேசிக்கறென்.’’

போலீஸ்காரர்கள் கண்டும் காணாததுபோல் இருந்தார்கள். மேலாவுக்கு எழுதியதாகத் தெரியவில்லை. நிச்சயம் அதுக்குக் காரணம் இருக்கும்.

இந்த நெருக்கடியிலும் மேனேஜர் பழைய கதையைக் கிண்ட ஆரம்பித்தார். முந்திய வழக்கில் ஹைகோர்ட் சொன்ன தீர்ப்புப்படி நாடார்களிடம் செலவுத் தொகை ஆயிரம் ரூபாயை வசூலிக்க நடவடிக்கை எடுத்தார். நாடார்களுக்கு வருத்தம்.

‘‘இவரு செய்றது கொஞ்சங்கூட நல்லால்ல.’’

‘‘கோர்ட்ல தோக்கடிச்சதுமில்லாம இதுவேற தண்டனையா.’’

‘‘இத வாங்கித்தான் எட்டப்ப ராசாவக் காப்பாத்தப் போறாராக்கும்.’’

‘‘ஆரம்பத்துலருந்தே இவரு போக்கு ஒருமாதிரியாத்தான் இருக்கு.’’

‘‘நமக்கு அனுசரணையா நடந்துக்கிட்டா மேகலப்பயக கோவிச்சுக் கிருவாகளே.’’

‘‘அதான நம்மளப் பத்தி என்ன கவல.’’

‘‘கோர்ட்டு உத்தரவாச்சே. அதுப்படி நடந்துதான ஆகணும்.’’

‘‘அது சரி. எவ்வளவோ செலவழிச்சிட்டொம். இது ஒரு தொகையா. மூஞ்சியில வுட்டெறிஞ்சிருங்க. அந்தக் கொறையெதுக்கு.’’

‘‘அதனால நம்ம திருழாவுக்கு எடஞ்சலு வந்துறப்புடாது.’’

முதலாளி சொன்னார்.

‘‘நான் போயிக் கெட்டுட்டு வந்துறென்.’’

பிறகு முக்கியமானவர்களிடம் தனியாக நிறையப் பேசினார். கடைசியில் எச்சரிக்கைப்படுத்தினார்.

‘‘எல்லாரும் எதம்பத்தரமா இருக்கணும். என்ன வந்தாலும் ஒத்துமையா நில்லுங்க.’’

தூத்துக்குடிக்குப் புறப்பட்டுப் போனார். பண்டிகைக்கு முந்தினநாள் சனிக்கிழமையன்று பேங்கில் ஆயிரம் ரூபாய் கட்டிவிட்டு கழுகுமலையிலிருந்து தகவலுக்காகக் காத்திருந்தார்.

# 5. நிக்கிரகம் பண்ணுவேன்

பூமியில் மனுசன் பண்ணும் அக்கிரமும் அழிம்பும் ஆண்டவருக்கு அறவே பிடிக்கவில்லை. ஏன்தான் அவனைப் படைத்தோம் என்றிருக்கிறது. மனம் நொந்து விசனப்படுகிறார்.

''நான் படைத்த மனுசன் பூமியில் இருக்கலாகாது. அவன் முதல்கொண்டு ஆகாயப் பறவை பரியந்தம் அனைத்து உயிர்களையும் நிக்கிரகம் பண்ணுவேன்.''

பூமியையும் உயிர்களையும் உண்டுபண்ண அவர் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமா.

ஆதியில் எல்லாமே ஒழுங்கற்று வெறிச்சோடிக் கிடந்தது. எங்கும் ஒரே இருட்டு. மகா ஆழத்துக்கு நீர் சூழ்ந்திருந்தது. ஆண்டவர் நீரின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார்.

நெருக்கும் இருட்டு உறுத்தியது. இதை விரட்டி ஒளிபரவச் செய்யணும். கட்டளையிட்டார்.

''வெளிச்சம் உண்டாகக் கடவது.''

அவ்வாறே வெளிச்சம் உண்டாகியது. அது நல்லதென்று கண்டார். வெளிச் சத்தையும் இருளையும் வெவ்வேறாகப் பிரித்தார். வெளிச்சத்துக்குப் பகல் என்றும் இருளுக்கு இரவு என்றும் பேரிட்டார். சாயங்காலமும் விடியக்காலமு மாக முதலாம் நாளாயிற்று.

நீருக்கு மத்தியில் ஆகாய விரிவை உண்டுபண்ணினார். அது வானம். வானத்துக்கு மேலேயும் கீழேயும் இரு கூறாகப் பிரிந்தது. ரெண்டாம் நாளாயிற்று.

வானத்துக்குக் கீழே பரந்து கிடக்கும் நீர் ஓரிடத்தில் திரண்டு வற்றிய இடம் வெட்டாந்தரையானது. அந்தத் தரைக்குப் பேர் பூமி. நீருக்கு சமுத்திரம் என்று பேர்.

பூமியிலிருந்து எழும்பிய மூடுபனியில் தரையெல்லாம் நனைந்தது. அந்தப் பூரிப்பில் புல்பூண்டுகளும் செடிகொடிகளும் கனிதரும் விருட்சங்களும் முளைத் தன. மூணாம் நாள் முடிந்தது.

பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசம் வேணுமே. வானத்தில் சுடர்கள் தோன்றிப் பிரகாசித்தன. பகலை ஆளப் பெரிய சுடர். இரவை ஆளச் சிறிய சுடர். இன்னும் பல நட்சத்திரங்களும் முளைத்தன. நாலாம் நாளாயிற்று.

அஞ்சாம் நாள். நீர்வாழ் உயிரினங்கள் உண்டாகி சமுத்திரத்தை நிரப்பின. ஆகாயத்தில் பறக்கும் பறவைகள் பிறந்து பூமியில் நிறைந்தன.

ஆறாம் நாள். காட்டு மிருகங்கள் நாட்டு மிருகங்கள் ஊரும் பிராணிகள் என்று ஒவ்வொரு இனத்திலும் பிறந்தன. அவை பூமியில் ஓடித்திரிவதைப் பார்க்க அழகாக இருந்தது.

பூமியையும் விருட்சங்களையும் மச்சங்களையும் மிருகங்களையும் பறவை களையும் பட்சிகளையும் ஆண்டு காக்கணுமே. ஆண்டவர் தன் சாயலில் மண் ணுருவம் செய்து அதன் நாசியில் மூச்சுக்காற்றை ஊதி உயிர்ப்பித்தார். அதுக்கு மனுசன் என்று பேரிட்டார்.

இப்படியாக வானமும் பூமியும் அவற்றின் சர்வ சேனைகளும் ஆண்டவரின் கட்டளையால் உருவாக்கப்பட்டன. கிரியைகளை முடித்து அவர் ஏழாம் நாள் ஓய்வாக இருந்தார்.

பிறகு கிழக்கே பெரிய தோட்டத்தை உண்டாக்கி அதில் மனுசனை வைத்தார்.

''நீ தோட்டத்தைப் பண்படுத்திக் காக்கக் கடவது.''

அங்கே பல விருட்சங்கள் முளைத்தன. சுற்றிலும் அழகிய கனிவிருட்சங்கள். நடுவில் ஒரு ஜீவ விருட்சமும் நன்மை தீமை அறியச் செய்யும் விருட்சமும் தனித்து நின்றன.

தோட்டத்தில் ஒரு நதி பிறந்து விருட்சங்களுக்கு நீர் கொடுத்தது. அங்கிருந்து நாலு பெரிய ஆறுகளாகப் பிரிந்து தேசங்களைச் சுற்றிப் பாய்ந்தோடி வளங்கொழிக்கச் செய்தது.

ஆண்டவர் மனுசனுக்குக் கட்டளையிட்டார்.

''நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனிகளையும் புசிக்கலாம். ஆனால் நன்மை தீமை அறியத் தக்க விருட்சத்தின் கனியை மட்டும் புசிக்க வேண்டாம். புசித்தால் சாவாய்.''

பறவைகளையும் மிருகங்களையும் மண்ணால் உருவாக்கி மனுசனிடம் கொடுத்தார். அவற்றுக்கு அவன் இட்டதே பேராயிற்று. ஆனாலும் அவனுக்கேற்ற துணை கிடைக்கவில்லை. நல்ல துணையை உண்டாக்கணுமென்று ஆண்டவர் நினைத்தார்.

அவனுக்கு நல்ல நித்திரை வரச் செய்து அவன் விலாவில் ஒரு எலும்பை எடுத்து அந்த இடத்தைச் சதையால் மூடினார். எலும்பை மனுசியாக உண்டாக்கி அவனிடம் ஒப்படைத்தார். அவர்கள் புருசனும் மனைவியுமாக நிர்வாணிகளாத் திரிந்தார்கள். வெட்கம் அவர்களை அண்டவில்லை.

எல்லா மிருகங்களையும்விடத் தந்திரமான சர்ப்பம் ஒருநாள் மனுசியிடம் மெல்ல வந்து கேட்டது.

''தோட்டத்தில் சகல விருட்சங்களின் கனிகளையும் புசிக்க வேண்டாமென்று ஆண்டவர் சொன்னதுண்டோ.''

மனுசி உண்மையைச் சொன்னாள்.

''மற்ற கனிகளைப் புசிக்கலாம். நாங்கள் சாகாதபடிக்கு தோட்டத்தின் நடுவிலிருக்கும் விருட்சக் கனியைப் புசிக்கவும் தொடவும் வேண்டாமென்று சொல்லியிருக்கிறார்.''

''நீங்கள் சாக மாட்டீர்கள். அந்தக் கனியைப் புசித்தால் உங்கள் கண்கள் திறக்கும். நன்மை தீமைகளை அறிந்து தேவர்களைப் போல் இருப்பீர்கள். இதை ஆண்டவர் நன்கறிவார்.''

மனுசியின் மனசில் ஆசையை விதைத்துவிட்டு சர்ப்பம் ஊர்ந்துவிட்டது.

மனுசி நடுத்தோட்ட விருட்சத்தை ஆவலுடன் பார்த்தாள். புதுசாகத் தெரிந்தது. என்ன அழகு. பழுத்துக் குலுங்கும் கனிகள். இதைப் புசித்தால் எப்படி இருக்கும். அவளுக்கு இச்சையான இச்சை. கனிகளை எட்டிஎட்டிப் பறித்துப் புசித்தாள். புருசனுக்கும் கொடுத்தாள்.

கனிச்சுவை அவர்கள் கண்ணைத் திறந்தது. முகத்தில் அப்படியொரு வெட்கம். நிர்வாணக் கூச்சத்தில் நெளிந்தார்கள். அங்குமிங்கும் ஓடி அத்தியிலைகளைத் தைத்து அரைக்கச்சையாக்கி அணிந்துகொண்டார்கள்.

குளிர்ச்சியான பகல் வேளை. வழக்கம்போல் தோட்டத்தில் உலவிய ஆண்டவர் அவர்களைக் குரலால் தேடினார். அவர்கள் அச்சத்தில் விருட்சங்களுக்குள் ஒளிந்துகொண்டார்கள். அவர் மனுசனைக் கூப்பிட்டார்.

''மனுசனே நீ எங்கிருக்கிறாய்.''

அவன் ஒளிந்தபடியே சொன்னான்.

''தோட்டத்தில் ஆண்டவர் சத்தம் கேட்டது. நான் நிர்வாணியாயிருப்பதால் பயந்து ஒளிந்துகொண்டேன்.''

''நீ நிர்வாணியென்று சொன்னவன் யார். புசிக்கக் கூடாத கனியைப் புசித்தாயா.''

''என் மனைவி கொடுத்தாள் புசித்தேன்.''

அவர் மனுசியிடம் கேட்டார்.

''மனுசியே ஏன் இப்படிச் செய்தாய்.''

அவள் நடுங்கும் வார்த்தைகளில் சொன்னாள்.

''ஆண்டவரே சர்ப்பம் என்னை வஞ்சித்துவிட்டது. கனியைப் புசித்தேன்.''

அவர் சர்ப்பத்தைச் சபித்தார்.

''உன் வயிற்றினால் நகர்ந்து உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்.''

தோட்டத்திலிருந்து அவர்களைத் துரத்திவிட்டார்.

மண்ணுக்குத் திரும்பிய மனுசன் மனுசியை அறிந்தான். அவள் இரு குமாரர்களைப் பெற்றாள். அவர்களில் ஒருவன் ஆடு மேய்த்தான். மற்றவன் நிலத்தைப் பயிரிட்டான்.

ஆடு மேய்ப்பவன் மந்தையின் தலையீற்றுக்களையும் கொழுமையானவற்றையும் ஆண்டவருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தான். மற்றவன் தன் நிலத்தில் விளைந்த கனிகளைக் கொண்டுவந்தான். ஆண்டவர் ஆட்டுக் காணிக்கையை மட்டும் அங்கீகரித்தார். தம்பியின் முகநாடி எரிச்சலில் மாறியது. அதைக் கவனித்த ஆண்டவர் சொன்னார்.

''நீ நன்மை செய்தால் மேன்மையில்லையோ. நன்மை செய்யாதிருந்தால் பாவம் உன் வாசற்படியில் படுத்திருக்கும்.''

சகோதரர்கள் வயல்வெளியில் பேசிக்கொண்டிருக்கும்போது இளையவன் விரோதங்கொண்டு ஆட்டுக்கார அண்ணனைக் கொலை செய்துவிட்டான். ரத்தத்தின் சத்தம் கூப்பிடவே ஆண்டவர் இளையவனைச் சபித்தார்.

''நிலம் உனக்குப் பலன் தராது. நீ பூமியில் நிலையற்று அலையக் கடவது.''

அவன் கிழக்குத் தேசத்துக்குப் போய்க் குடியிருந்தான்.

அவனுக்கு அடுக்கடுக்காக வம்சங்கள் தோன்றின. ஒருவன் இரு பெண்களை விவாகம் செய்துகொண்டு சந்ததிகளை விருத்தி பண்ணினான். தொழில்கள் பெருகின. கொலைகளும் நடந்தன.

ஆண்டவர் பூமியை நோக்குகிறார். அது சீர்கெட்டுக் கிடக்கிறது. எங்கும் கொடுமை நிறைந்திருக்கிறது. மனுசர்கள் யாவரும் தங்கள் வழியைக் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் இருதயம் நித்தமும் பொல்லாததையே நினைக்கிறது.

ஐசுவரியவான் தரித்திரனை ஆளுகிறான். கடன் வாங்கியவன் கடன் கொடுத்தவனுக்கு அடிமையாகிறான்.

சாதிகள் கொந்தளித்து சனங்கள் விருதாக் காரியத்தைச் சிந்திக்கிறார்கள்.

அவர்கள் வாயில் உண்மையில்லை. அவர்கள் உள்ளம் கேடுபாடுடையதாக உள்ளது. அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதக் குழியாகிறது. நாவினால் இச்சகம் பேசுகிறார்கள்.

தங்கள் தோழரோடே பொய் பேசுகிறார்கள். இச்சக உதடுகளால் இருமன சாகப் பேசுகிறார்கள்.

எல்லாரும் வழிவிலகி ஏகமாகக் கெட்டுப்போகிறார்கள். நன்மை செய்கிற வன் இல்லை. ஒருவனாகிலும் இல்லை.

ஆண்டவருக்கு வெறுப்பு. தான் ஆக்கிவிட்ட உயிர்களைப் பூமியோடு அழித்து விட முடிவு செய்கிறார். ஆனாலும் ஒரே ஒரு மனுசனுக்கு மட்டும் அவர் கிருபை கிடைக்கிறது. அவன் ஆண்டவரோடு சஞ்சரித்துக்கொண்டிருக்கும் நீதிமான் உத்தமன். அவனுக்கு மூணு குமாரர்கள். அவர்களுக்கு ஒவ்வொரு மனைவி.

ஆண்டவர் உத்தமனிடம் சொல்கிறார்.

''ஒரு மரப்பேழையை உண்டாக்கு. அது முன்னூறு முழ நீளமும் ஐம்பது முழ அகலமும் முப்பது முழ உயரமும் இருக்கவேண்டும். பேழைக்குள் மூன்று தட்டுகளாக அறைகள் உண்டுபண்ணி உள்ளும் புறமும் கீல் பூசு. ஒரு சன்னலை யும் உண்டாக்கு. நீயும் உன் வீட்டாரும் பேழைக்குள் பிரிவேசியுங்கள். பூமி மீதெங்கும் வித்து அழியாமல் உயிரோடு காக்கும் பொருட்டுச் சுத்தமான பல மிருகங்களில் ஆணும் பெண்ணுமாக எவ்வேழு ஜோடு சுத்தமற்ற மிருகங்களில் ஒவ்வொரு ஜோடு ஆகாயப் பறவைகளில் சேவலும் பேடுமாக எவ்வேழு ஜோடு இன்னும் ஊரும் பிராணிகள் என்று உன்னுடன் சேர்த்துக்கொள். எல்லாருக்கும் தேவையான ஆகாரங்களையும் சேர்த்து வைத்துக்கொள். ஏழு நாள் சென்ற பின்பு நாற்பது நாள் இரவும் பகலும் பூமியின் மேல் மழைபொழியச் செய்து பிரள யத்தை உண்டுபண்ணி நான் உண்டாக்கிய உயிர்கள் அனைத்தையும் அழித்து விடுவேன். நீங்கள் பேழையில் தப்பிவிடுங்கள்.''

ஆண்டவர் கட்டளைப்படி அவன் எல்லா ஏற்பாடுகளும் செய்து தயாராக இருக்கிறான். ஏழு நாளாகிறது. மகா ஆழத்திலிருந்து சமுத்திரத்தின் ஊற்றுக் கண்களும் வானத்தின் மதகுகளும் திறந்துகொள்கின்றன. பெருமழை பெய்து பிரளயம் உண்டாகிறது.

உத்தமன் தன் வீட்டாருடன் பேழைக்குள் பிரவேசிக்கிறான். அவர்களுடன் மிருகங்களும் பறவைகளும் சேர்ந்துகொள்கின்றன. ஆண்டவர் பேழையின் கதவை அடைக்கிறார்.

நீர்ப்பெருக்கில் பேழை எழும்பி மிதக்கிறது. உயர்ந்த மலைகள் யாவும் மூழ்கிவிடுகின்றன. மலைகளுக்குமேல் பதினஞ்சு முழ உயரத்தில் வெள்ளம் நிறைந்திருக்கிறது.

நாற்பது நாள் இரவும் பகலும் பெய்த மழையில் பூமியில் சஞ்சரிக்கும் மனுசர்களும் மற்ற உயிர்களும் மாண்டு மடிகிறார்கள். பூமி மறுபடியும் வெறிச்சோடுகிறது. பேழைக்குள் இருப்பவர்கள் மட்டும் பிழைத்துக்கொள்கிறார்கள். நூற்றைம்பது நாளாக வெள்ளம் பிரவகித்துக்கொண்டிருக்கிறது.

பேழை நினைவுக்கு வரவே ஆண்டவர் காற்று வீசச் செய்கிறார். மழை நிற்கிறது. நீர் அமர்ந்து நாளுக்கு நாள் வற்றிக்கொண்டேவருகிறது. நூற்றைம்பது நாளுக்குப் பிறகே வடிய ஆரம்பிக்கிறது.

வெள்ளத்தில் மிதக்கும் பேழை வடக்கு மலைகளைத் தாண்டி மேல மலைத்தொடரைக் கடந்து கழுகுமலை உச்சியில் நிலைகொள்கிறது. இப்போது சுற்றிலும் மலைச்சிகரங்கள் மெல்லத் தலைகாட்ட ஆரம்பிக்கின்றன. பேழை அசையாமல் அமர்ந்துகொள்கிறது.

உத்தமன் பேழையின் சன்னலைத் திறந்து ஒரு காகத்தை வெளியே அனுப்புகிறான். அது பூமியில் நீர் வற்றும்வரை போவதும் வருவதுமாக இருக்கிறது. அடுத்து ஒரு புறாவை அனுப்புகிறான். அது காலூன்றி இளைப்பாற இடங் காணாமல் பேழைக்குத் திரும்புகிறது.

ஏழு நாளுக்குப் பிறகு மறுபடியும் புறாவை வெளியே அனுப்புகிறான். அது சாயங்காலம் வந்து சேருகிறது. அதன் வாயில் ஒரு இலை இருப்பதைப் பார்க்கிறான். நீர் குறைந்துவிட்டது.

கொஞ்ச நாளில் நீர் முற்றிலும் வடிந்து பூமி காய்ந்துபோகிறது. ஆண்டவர் கட்டளையிடுகிறார்.

''எல்லாரும் பேழையை விட்டுப் புறப்படுங்கள்.''

அவ்வாறே இறங்கி வருகிறார்கள். உத்தமன் மலைமேல் ஆண்டவருக்குப் பலிபீடம் கட்டி சுத்தமான மிருகங்களிலும் பறவைகளிலும் சிலவற்றைத் தகனபலி கொடுக்கிறான்.

''ஆண்டவரே இந்த ஏழையின் காணிக்கையை ஏற்றுக்கொள்ளும்.''

ஆண்டவர் சுகந்த வாசனையை முகர்ந்தபடி மனசுக்குள் சொல்லிக் கொள்கிறார்.

''மனுசனின் நினைவுகள் சிறுவயசு தொடங்கிப் பொல்லாததாக இருக்கிறது. இதுபோல இனிமேல் உயிர்களைச் சங்கரிப்பதில்லை. பூமியுள்ள நாளளவும் விதைப்பும் அறுப்பும் சீதளமும் சூடும் கோடைகாலமும் மாரிகாலமும் இரவும் பகலும் ஒழிவதில்லை.''

உத்தமனை ஆசிர்வதிக்கிறார்.

''பூமியில் பல்கிப் பெருகி திரளாய் வர்த்தித்து விருத்தியாகுங்கள்.''

உத்தமன் தலை வணங்குகிறான்.

''ஆண்டவருக்கு அடியேனின் விண்ணப்பம்.''

''சொல் மகனே.''

''பிரளயத்தால் பெரிதும் அழுந்திவிட்டோம். பூமி வெறிச்சோடிவிட்டது. இனியொரு பிரளயம் வந்தால் எங்களால் தாங்க முடியாது ஆண்டவரே.''

ஆண்டவர் உறுதியளிக்கிறார்.

''மனுசர்களே பின்வரும் சந்ததிகளே மிருகங்களே பறவைகளே உங்கள் அனைவருடனும் உடன்படிக்கை செய்துகொள்கிறேன். இனிமேல் பூமியை

அழிக்கப் பிரளயம் உண்டாக்குவதில்லை. உடன்படிக்கைக்கு அடையாளமாக இதோ என் வில்லை மேகத்தில் வைக்கிறேன். நான் பூமிக்கு மேலாக மேகத்தை வருவிக்கும்போது இந்த வில் மேகத்தில் தோன்றும். அப்போது எனது நித்திய உடன்படிக்கை நினைவுக்கு வரும்.''

''எங்களை ரட்சித்த பிதாவுக்கு நன்றி.''

பேழை மனுசர்கள் ஆண்டவரைத் துதித்துவிட்டு அடிவாரத்துக்கு இறங்கு கிறார்கள். மற்ற உயிரினங்கள் பின்தொடர்கின்றன. மனுசர்கள் ஆம்பலூருணி யில் சோம்பல் நீங்க நீராடுகிறார்கள். உத்தமன் சந்ததிகளுக்குச் சொல்கிறான்.

''குடும்பம்குடும்பமாக வெவ்வேறு திசைக்குப் பிரிந்து சென்று குடி யேறுங்கள்.''

நாலு குடும்பங்களும் நாலு திசை நோக்கி நடந்து மறைகின்றன. மிருகங்கள் தாகந்தீர நீர் அருந்துகின்றன. ஊருணிக்குள் நீந்தி அக்கரை சேர்ந்து துள்ளி யோடிச் சிதறுகின்றன. ஓய்ந்திருந்த சிறகுகளால் ஊருணியை வட்டமிடும் பறவைகளும் இனக் கூட்டங்களாகப் பிரிந்து பறந்துவிடுகின்றன. உயிர்களின் அசைவில் உயிர்த்தெழும் ஊருணி மெல்ல அசைவாடுகிறது.

வானத்தில் ஆண்டவர் வைத்த அடையாளச் சுடர்கள் சாட்சியாக வரு சங்கள் மறைகின்றன. காலங்கள் கரைகின்றன.

ஆதித் தகப்பன் ஆதித் தாயை அறிந்ததுபோல் ஆண் பெண்ணை அறிகிறான். பெண் சந்ததியைப் பெறுகிறாள். மனுசர்கள் குடும்பமாகிறார்கள். குடும்பங்கள் குழுவாகின்றன. குழுக்கள் இனமாகின்றன. இனங்கள் ஊராகின்றன. ஊர்கள் தேசமாகின்றன.

மரம் கன்று மரம் என்று தலைமுறைகள் தழைக்கின்றன. அவை தங்களுக் குள் எல்லைகளை வகுத்துக்கொள்கின்றன.

பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் மனுச எல்லைகள் கிடையாது. அடக்கி யாளுவதும் அழித்தொழிப்பதுமான சண்டை எல்லா உயிர்களுக்கும் பொது வானதாக இருக்கிறது. அதிகார வெறி சிரசில் ஏறிக்கொள்கிறது. தட்டிக்கேட் பவர்கள் தண்டிக்கப்படுகிறார்கள். குறைகூறுபவர்கள் கொடுமைக்குள்ளாகி றார்கள். கொலைசெய்யப்படுகிறார்கள்.

பிறப்பதும் மரிப்பதும் பிறப்பதுமான சுழற்சி ஆண்டவர் சாட்சியாகத் தொடர்ந்துகொண்டேயிருக்கிறது...

## 6. பாவத்தின் சம்பளம்

வீரநாராயணன் ஏரிக்கரையில் அடர முளைத்த வேலியாகச் சனங்கள் திரண் டிருக்கிறார்கள். அனைவரது முகத்திலும் இன்ப எதிர்பார்ப்பு.

''இதோ வரப்போகிறார்.''

இளம்பொழுதின் ஒளிக்கு மின்னும் நீரில் அவர்கள் பார்வை மிதக்கிறது.

இப்போது மேகம் கருத்து இடி முழங்குகிறது. வானவில் கோலம் வரைகிறது. மின்னலுடன் இறங்கும் குரல் ஏரியெங்கும் எதிரொலிக்கிறது.

''கேளுங்கள் கொடுக்கப்படும். தேடுங்கள் கண்டடைவீர். தட்டுங்கள் திறக்கப்படும்.''

ஏரிக்குள் நிற்கும் மரங்கள் வளைந்து விலகி வழிவிடுகின்றன. வடக்கி லிருந்து நீர்ப்பாதை நீண்டுகொண்டே வருகிறது. தொலைவில் சலனமாக ஒரு உருவம் அசைவது தெரிகிறது. சனங்கள் துடிக்கிறார்கள்.

''வருகிறார் வருகிறார்.''

மேகங்கள் கலைந்தோடி வானம் பிரகாசிக்கிறது. சலன உருவம் தெளிந்து நீர்ப்பாதையில் நிதானமாக நடந்துவருகிறது. எட்டு வைக்கும்போது கால்கள் நீருக்குள் பதியவில்லை. நீரும் அசையவில்லை. மலர் விரிப்பில் மிதித்துவரும் மெல்லிய நடை. தலைக்குப் பின்னால் சுழலும் ஒளிவட்டம் வழிகாட்டத் தென்கரை சமீபிக்கிறது.

நெடிய சரீரம். தொடை தாண்டிய கைகள். கண்களின் ஒளியை இமைகள் கட்டுப்படுத்தத் திணறுகின்றன. முகமெங்கும் அடர்ந்து வளர்ந்த மயிர்ப்புல். தோளைத் தொட்டுத் தழுவும் தலைமுடி. வஸ்திரங்கள் அணிந்திருக்கிறார். உடம்பை மூடியிருக்கும் அங்கி தையலில்லாமல் மேலே தொடங்கி முழுவதும் நெய்யப்பட்டிருக்கிறது.

''இவர்தான் முடிநாதர்.''

கரையேறிய நாதரை சனங்கள் பரவசத்தில் சூழ்ந்துகொள்கிறார்கள். முகத்தில் புன்னகை மின்னலிட அவர் வடக்கே நோக்குகிறார். கரைநெடுகத் திரளான கூட்டம் வந்துகொண்டிக்கிறது. பன்னிரு பெருஞ்சீசர்கள். எழுபதுக்கும் மேல் சிறு சீசர்கள். ஊழியப் பெண்கள் கன்னிகள். கூடவே இரு ஆட்டு மறிகளும் ஓடி வருகின்றன.

மறிகள் வந்து சேரும்வரை காத்திருக்கும் நாதர் அவற்றை அணைத்து ஆறுதல் கூறுகிறார்.

''நான் உங்கள் மேய்ப்பராயிருக்கிறேன். உங்களுக்குத் தாழ்ச்சியில்லை.''

கவனமாகக் கரையிறங்குகிறார். சீசர்கள் பின்தொடர்கிறார்கள். அவர் களுக்குப் பின்னால் சனங்கள். பெருஞ்சீசர்கள் மாறிமாறி முழங்குகிறார்கள்.

''மனந்திரும்புங்கள். பரலோக ராஜ்யம் சமீபித்திருக்கிறது.''

கிழக்கே கரையோரம் பன்றிக் கூட்டம் முண்டிமுண்டி மேய்ந்துகொண் டிருக்கிறது. ஏராளமான பன்றிகள். கம்புத் துணையில் குனிந்திருக்கும் மேய்ப்பர் கள் மிதந்து வரும் முழக்கத்துக்குக் காதுகொடுக்கிறார்கள்.

வயல்வெளியில் வளர்ந்து முற்றிய நெல்மணிகள் முடிநாதருக்குத் தலை வணங்குகின்றன. மேல மூலையில் சிலர் கருதறுக்கிறார்கள். அவர் சீசர்களைத் திரும்பிப் பார்க்கிறார்.

''அறுப்பு மிகுதி வேலையாட்களோ கொஞ்சம்.''

நாலெட்டு நடந்திருக்க மாட்டார். தொலைவிலிருக்கும் கல்லறையிலிருந்து இரு பிசாசுகள் வயல்களைத் தாண்டிக் குதித்தோடி எதிரில் வந்து நிற்கின்றன. அவற்றின் மூச்சு பெருங்காற்றாக இரைகிறது. ஒரு பிசாசு கேட்கிறது.

''எங்களை வேதனைப்படுத்தவே வந்தீரா.''

அவர் புன்னகைக்கிறார். மற்ற பிசாசு சொல்கிறது.

''எங்கள் வழியில் எவரும் வருவதில்லை. நீர் வர வேண்டாம். எங்களைத் துரத்த முடியுமானால் அந்தப் பன்றிக் கூட்டத்துக்குள்ளே துரத்தும்.''

அவர் முகத்தில் மெல்லிய சினமேறுகிறது.

''தானியத்தைச் சுளகினால் புடைப்பதுபோல சரீரத்தைப் புடைக்கும் சாத்தான்களே ஓடிவிடுங்கள்.''

பன்றிக் கூட்டத்தை நோக்கிக் கைகாட்டுகிறார். பிசாசுகள் அலறிக்கொண்டு பன்றிகளுக்கு நடுவில் போய் விழுகின்றன. மிரண்டு கலையும் பன்றிகள் ஏரிக்குள் குதித்து உயிர்விடுகின்றன. ஈராயிரம் பன்றிகள் மண்பாண்டங்களாக நீரில் மிதப்பதைக் கண்டு நடுங்கும் மேய்ப்பர்கள் அச்சத்தில் பிதற்றியவாறு ஊருக்கு ஓடுகிறார்கள்.

''பிசாசுகள் பறந்தன.''

''பன்றிகள் இறந்தன.''

நாதர் நடையைத் தொடர்கிறார். வழி நெடுகிலும் வலி முனகத்தில் பிணியாளிகள் காத்திருக்கிறார்கள். உடம்பெங்கும் புண்ணில் நீர்வடியும் குஷ்டரோகி அவரை வணங்குகிறான்.

''நாதரே உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் முடியும்.''

அவர் அவனைத் தொடுகிறார்.

''எனக்குச் சித்தமுண்டு. நீ சுத்தமாகு.''

அவன் புண் மறைந்து புது மனுசனாகிக் குதூகலிக்கிறான்.

''நாதருக்கு நன்றி. முடிநாதருக்கு நன்றி.''

ஒரு மர நிழலில் இரு குருடர்கள் புலம்பிக்கொண்டிருக்கிறார்கள்.

''ஆண்டவரே எங்களுக்கு இரங்கும்.''

அவர் குருட்டுக் கண்களை வாஞ்சையாகத் தடவுகிறார். பார்வை கிடைக்கிறது. அவரைக் கண்டுகொண்ட களிப்பில் அவர்கள் அவரது கைகளைக் கண்ணீரால் நனைக்கிறார்கள்.

பிசாசு பிடித்த ஊமையன் எதிர்ப்படுகிறான். அவனிடமிருக்கும் அசுத்த ஆவியைத் துரத்திப் பேச வைக்கிறார். திமிர்வாதக்காரனைத் தீண்டி நடக்க வைக்கிறார். செவிடனைக் கேட்க வைக்கிறார். காய்ச்சலில் கிடக்கும் பெண் குணமடைகிறாள்.

இன்னொரு பெண் பின்னாலிருந்து தன் வஸ்திரத்தின் ஓரத்தைத் தொடுவதை உணரும் அவர் திரும்பி அவளை ஆசிர்வதிக்கிறார்.

''மகளே உன் விசுவாசம் உன்னை ரட்சித்தது.''

பன்னிரு வருசமாக அவளை அவதிப்படுத்தும் பெரும்பாடு நீங்குகிறது. அவள் மனசில் நாதர் நிறைகிறார்.

''பெரும்பாடு நீக்கிய பிதாவுக்கு நன்றி.''

ஒரு தலைவன் வந்து அவரைப் பணிகிறான்.

''இப்போதுதான் என் மகள் மரித்துப்போனாள். நீர் வந்தால் பிழைப்பாள்.''

அவர் அவனது வீட்டுக்குப் போகிறார். முற்றத்தில் தாரைச் சத்தமும் சனங்களின் இரைச்சலும் கலந்தொலிக்கிறது. அவர் அவர்களை நோக்குகிறார்.

''விலகுங்கள். இந்தச் சிறு பெண் மரிக்கவில்லை. நித்திரையிலிருக்கிறாள்.''

கூடியிருப்பவர்கள் நகைக்கிறார்கள்.

“நித்திரையாம் நித்திரை. வழிவிடுங்கள் துயிலெழுப்பட்டும்.”

அவர் அமைதியாக வீட்டுக்குள் பிரவேசித்துப் படுத்திருக்கும் சிறு பெண்ணின் கையைப் பிடிக்கிறார். உடனே அவள் உயிர்த்தெழுகிறாள். அவர் சிரித்துக் கொண்டே வெளியேறுகிறார். சனங்கள் வாயடைத்துப்போய் அவரையே பார்க்கிறார்கள்.

ஊருக்குள் இதே பேச்சு.

“குருடர்கள் பார்வையடைகிறார்கள்.”

“சப்பாணிகள் நடக்கிறார்கள்.”

“குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்.”

“செவிடர்கள் கேட்கிறார்கள்.”

“மரித்தோர் எழுந்திருக்கிறார்கள்.”

“அற்புதம் நடக்கிறது.”

“தரித்திரருக்குப் பிரசங்கிக்கப்படுகிறது.”

வெயில் சற்று உக்கிரமடைந்திருக்கிறது. நாதர் களைப்பாகக் காணப்படுகிறார். ஒரு சீசன் சொல்கிறான்.

“எங்காவது இளைப்பாறிச் செல்லலாமே.”

அவர் கண்களை மூடித் திறக்கிறார்.

“நரிகளுக்குக் குழிகளும் ஆகாயப் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு. மனுச குமாரனுக்கோ தலைசாய்க்க இடமில்லை.”

ஆம்பலூருணியில் நீரள்ளி அருந்தி முகங்கழுவுகிறார்கள். களைப்பு நீங்குகிறது.

ஊருணிக் கரையில் நாலு கழுதைகள் மேய்கின்றன. ஒரு மறி ஊருணியில் தண்ணீர் குடித்துவிட்டுக் கழுதைகளைச் சுற்றி விளையாடுகிறது. அதன் துள்ளலும் துருதுருப்பும் நாதருக்குள் இளம்பருவத்தைத் தட்டியெழுப்புகின்றன. அதைத் தொட்டுப் பிடித்து விளையாடவும் அதன் மீதேறிச் செல்லவும் ஆசையாக இருக்கிறது. குழந்தையாகி சீசர்களைப் பார்க்கிறார்.

“அந்தச் சின்ன மறியைக் கொண்டுவர முடியுமா.”

சீசர்கள் தயக்கத்தில் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறார்கள். கண்கள் பேசிக்கொள்கின்றன.

“நாதருக்கு இப்படியொரு ஆசையா.”

“எனக்கும் உனக்கும் உள்ள ஆசைதான்.”

“போகலாமா.”

“நாதருக்காகப் போய்த்தான் ஆகணும்.”

“நாலு பேர் மட்டும் போவோம்.”

“வாருங்கள்.”

அவர்கள் மறியைச் சுற்றி வளைத்துப் பிடித்து மலைப்பாறைக்குக் கொண்டு வருகிறார்கள். கழுதைகள் திகைத்து நிற்கின்றன. நாதரின் முகம் ஆம்பலாக மலர்கிறது. மறியை அன்புடன் அணைத்துத் தடவுகிறார்.

சீசர்கள் மறியின் முதுகில் வஸ்திரங்களை விரித்து அவரை அமரச் செய்கிறார்கள். கூடவே திரண்டுவரும் சனக் கூட்டம் முன்னால் வஸ்திரப் பாதையமைத்து மரக் கிளைகளையும் பரப்புகிறது. பெண்களின் குலவையொலி வாழ்த்த நாதரின் மறிவலம் மலைக்குகை நோக்கித் தொடங்குகிறது. வழியில் இருபுறமும் குழந்தைகள் குருத்தோலைகளைப் பிடித்துக்கொண்டு ஆர்ப்பரிக்கிறார்கள். முன்னும் பின்னுமாக நடக்கும் சனங்கள் ஓங்கிய குரலில் ஒருசேரப் பாடுகிறார்கள்.

''சின்னமறி மீதிலேறி எங்கள்
தேவதூதர் பவனி வருகிறார்...''

மக்களின் குரல் உயரே மலைக்குகை மண்டபத்தை எட்டுகிறது. பெரிய குகையே சிறிய அரண்மனை போன்ற மண்டபமாக மாறியிருக்கிறது. மண்டபத்துக்கு முன்னால் அரசமரத்தைச் சுற்றிக் குதிரைகள் நிற்கின்றன. வாசலில் வாளேந்திய வீரர்கள் காவலிருக்கிறார்கள்.

உள்ளே அதிகாரிகளுடன் ஆலோசனையில் ஈடுபட்டிருக்கும் மந்திரி மக்களின் ஆரவாரங் கேட்டு அதிர்ந்துபோகிறார். இதென்ன புதுத் தலைவலி. வளர விட்டால் ஆபத்தாயிற்றே. பதவி பறிபோய்விடும்.

''எவனோ முடிநாதனாம். அவன் பிரசங்கத்தைக் கேட்க மக்கள் கூட்டம் மொய்க்கிறதாம்.''

''அவன் அனேக அற்புதங்கள் செய்வதாக அங்கங்கே பேசிக்கொள்கிறார்கள்.''

''உண்மையாகவா.''

''அப்படித்தான் சொல்கிறார்கள்.''

''மக்கள் மனசைக் கெடுத்துவிடுவானே.''

''முழுக்கக் கெடுக்குமுன் நாம் முந்திக்கொள்ளணும்.''

''அவன் வாழ்ந்தால் நாம் வீழ்ந்தோம். மக்கள் மதிகெட்டு நம்மை மறந்துவிடுவார்கள்.''

''அது நிச்சயம் அமைச்சரே.''

''என்ன செய்யலாம்.''

''களையை வேரோடு பிடுங்கியெறிவதைத் தவிர வேறு வழியில்லை.''

''கொலைசெய்தால் மக்கள் கொதித்தெழுவார்களே.''

''தந்திரமாகப் பிடித்துவந்து சங்கரிப்போம்.''

''நம்மில் யாரேனும் அவனைப் பாத்ததுண்டா. தவறானவனைப் பிடித்துத் தண்டித்துவிடக் கூடாது. அவன் தப்பிவிடுவான்.''

''அருகிலிருந்து பார்த்ததில்லையே. நன்கு அடையாளம் தெரிந்து செயல்படுவோம். அதுக்கொரு வழியிருக்கிறது.''

''என்ன வழி.''

''பொறுத்திருங்கள்.''

அதிகாரி சேவகனை அழைத்துக் கமுக்கமாகப் பேசுகிறார். சேவகன் கீழிறங்கி மக்கள் கூட்டத்துக்குள் நுழைந்து ஒரு பெருஞ்சீசனைச் சந்திக்கிறான்.

''அய்யா இவர் யார்.''

''இவரைத் தெரியாதவரும் உண்டோ. இவர்தான் முடிநாதர். எங்கள் குரு வானவர்.''

''நீங்கள் யாரோ.''

''நான் ஒரு பெருஞ்சீசன்.''

''எவ்வளவு காலம் சீசனாகவே இருக்கப்போகிறீர். குருவாகும் விருப்ப மில்லையா.''

''குருவானவரா. அதெப்படி.''

''விருப்பம் உண்டா இல்லையா.''

''ஆசையில்லாமலா.''

''அப்படியானால் என்னுடன் வாரும். அவரைவிட நீர் எவ்விதத்தில் தாழ்ந்தவர்.''

''உயர்ந்தவராக முடியுமா.''

''நிச்சயமாக முடியும். நான் யார் தெரியுமா. ராசாவின் தூதன். அவர்தான் உம்மை அழைத்துவரச் சொன்னார்.''

''ராசாவிடமிருந்து அழைப்பா. என்ன காரணம்.''

''ராசகுருவாக உம்மை நியமிக்கத்தான்.''

''அப்படியா. இதோ வருகிறேன்.''

சீசனும் சேவகனும் கூட்டத்திலிருந்து நழுவிக் குகை மண்டபத்துக்கு நடக்கி றார்கள். நாதரின் பிரசங்கத்தில் மூழ்கியிருக்கும் சனங்கள் அவர்களைக் கவனிக்க வில்லை. சேவகன் சீசனை ஒரு அதிகாரியிடம் கொண்டுவந்து சேர்க்கிறான். அதிகாரி பக்குவமாகப் பேசுகிறார்.

''சேவகன் எல்லாம் சொல்லியிருப்பானே.''

''சொன்னார்.''

''உன்னை ராசகுருவாக நியமிக்கணுமென்றால் உன்னுடைய குரு வெளியே இருக்கக் கூடாது. நாட்டில் இரு குருக்கள் இருக்க முடியாது.''

''அதுக்கு நான் என்ன செய்ய முடியும்.''

''நீ ஏதும் செய்ய வேண்டாம். உன் குருவை அடையாளம் காட்டினால் போதும். அதுக்காகப் பணமும் தருகிறேன்.''

''பணமா. எவ்வளவு.''

''முப்பது வெள்ளிக் காசுகள். அவரைப் பிடித்துச் சிறையில் தள்ளிவிட்டால் நீ குருவாவதற்குத் தடையிருக்காது.''

''உடன்படுகிறேன்.''

''அடையாளம் என்ன.''

''நான் யாரை முத்தஞ்செய்கிறேனோ அவரைப் பிடித்துக்கொள்ளுங்கள்.''

''நல்லது.''

சீசனுடன் மந்திரியின் ஆட்கள் பட்டயம் தடிகளுடன் இறங்குகிறார்கள். நாதர் பிரசங்கத்தை முடித்துவிட்டு மக்களுடன் களித்திருக்கிறார். சீசன் விரைவாக வந்து அவரை முத்தஞ்செய்கிறான்.

''என் தேவன் வாழ்க.''

உடனே மந்திரியின் ஆட்கள் அவரைப் பிடித்துக்கொள்கிறார்கள். இது பொறுக்காமல் மக்களில் ஒருவன் பட்டயத்தை உருவி அதிகாரியின் வேலை யாளை காதற வெட்டுகிறான். அவர் தடுக்கிறார்.

''உன் பட்டயத்தைத் திரும்ப உறையில் போடு. பட்டயத்தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிந்துபோவார்கள்.''

அவர் பார்வை தன்னைப் பிடித்தவர்களுக்குத் திரும்புகிறது.

''கள்ளனைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல பட்டயங்களையும் தடிகளை யும் எடுத்துக்கொண்டு என்னைப் பிடிக்க வந்தீர்கள். நான் தினந்தோறும் உங்கள் நடுவில் உட்கார்ந்து உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தேன். அப்போது பிடிக்க வில்லையே.''

அவர்கள் ஏதும் பேசவில்லை. அவர்களைக் கண்டு அஞ்சி மக்கள் விரண் டோடுகிறார்கள். சீசர்களும் நாதரை விட்டுப் போய்விடுகிறார்கள். ஊழியப் பெண்களும் கன்னிகளும் ஒளிந்துகொண்டு அழுகிறார்கள்.

மந்திரியின் ஆட்கள் நாதரை மண்டபத்துக்கு அழைத்துப்போகிறார்கள். மக்கள் திரளில் எஞ்சியிருக்கும் ஒரு வாலிபன் மட்டும் துப்பட்டியை மேனியில் போர்த்திக்கொண்டு அவருக்குப் பின்னால் போகிறான். அவனைப் பிடிக்கி றார்கள். அவன் துப்பட்டியைப் போட்டுவிட்டு நிர்வாணமாகத் தப்பி ஓடுகிறான்.

மந்திரியும் அதிகாரிகளும் தீவிரமாக ஆலோசிக்கிறார்கள்.

''கொலைசெய்வதாக முடிவு செய்துவிட்டோம். அதுக்குப் பொருத்தமான சாட்சி வேண்டுமல்லவா.''

''தேடிப் பிடிப்போம். கிடைப்பார்கள்.''

அனேகர் வந்து வெவ்வேறு விதமாகச் சொல்கிறார்கள். அதெல்லாம் மந்திரிக்கு ஒப்பவில்லை. இருவர் இன்னொரு விதமாகச் சொல்கிறார்கள்.

''தேவாலயத்தை இடித்துப் போட்டுவிட்டு மூன்று நாளில் அதைக் கட்ட என்னால் முடியுமென்று இவன் சொன்னான்.''

இதுகூட கொலை செய்ய வலுவான சாட்சியாகத் தெரியவில்லை. விரைவில் சாட்சி தேடியாகணுமே. மந்திரி நாதரிடம் கேட்கிறார்.

''உண்மையில் நீ தேவகுமாரன்தானா.''

நாதர் தீர்க்கமாகச் சொல்கிறார்.

''உண்மைதான். மனுச குமாரன் சர்வ வல்லமையுள்ளவரின் வலது பாரிசத் தில் வீற்றிருப்பதையும் மேகங்கள் மீதேறி வலம்வருவதையும் பார்க்கத்தான் போகிறீர்கள்.''

மந்திரிக்குக் காரணம் கிடைத்துவிட்டது.

''இவன் தேவதூஷணம் செய்தான். இனி நமக்குச் சாட்சிகள் தேவையில்லை. இது ஒன்றே போதும். இப்போதுதான் கேட்டீர்களே.''

அதிகாரிகளிடம் கேட்கிறார்.

''உங்களுக்கு என்ன தோன்றுகிறது.''

அவர்கள் ஒருமித்துச் சொல்கிறார்கள்.

''மரணத்துக்குப் பாத்தியமாயிருக்கிறான்.''

சிலர் நாதரின் கண்களைக் கட்டி முகத்தில் துப்புகிறார்கள். இன்னுஞ் சிலர் கன்னத்தில் அறைந்து பரியாசம் பண்ணுகிறார்கள்.

''உன்னை அடித்தவன் யார். ஞானதிருஷ்டியால் கூறு பார்க்கலாம்.''

நாதரை தேசத்து ராசாவிடம் ஒப்படைக்கிறார்கள். அவரைக் காட்டிக் கொடுத்த சீசனுக்கு இது தெரியவருகிறது. அடடா அவருக்கு மரணதண்டனை யல்லவா விதிக்கப்போகிறார்கள். சிறையில் அடைக்கப்போவதாகத்தானே சொன்னார்கள். என்னை வஞ்சித்துவிட்டார்களே. காசுக்காகப் பதவிக்காக மோசம்போய்விட்டேனே. முப்பது வெள்ளிக்காசுகளை மந்திரியிடம் கொண்டு வந்து நீட்டியபடி புலம்புகிறான்.

''குற்றமில்லாத ரத்தத்தைக் காட்டிக்கொடுத்ததால் நான் பாவஞ்செய்தேன்.''

மந்திரி கையை விரிக்கிறார்.

''அது உன் பாடு.''

அவன் வெள்ளிக் காசுகளைப் பாறைகளுக்கிடையில் அடர்ந்திருக்கும் புதரில் வீசியெறிந்துவிட்டு வெறுப்பில் செல்கிறான். செய்த பாவத்தை நினைத்து இரவு முழுக்க உழல்கிறான். ஆறுதல் கிடைக்கவில்லை. மனசு மீண்டும்மீண்டும் உச்சரிக்கிறது.

''பாவத்தின் சம்பளம் மரணம்.''

மலையின் கீழ்ப்புறம் பெரும்பாறையை அடைகிறான். பாறையிறக்கத்தில் சுனைக்குளம் இருளில் மங்கலாகத் தெரிகிறது. வடபுறம் தனித்து நிற்கும் நாவல் மரம். மரத்தை நோக்கி இறங்குகிறான். தாழ்வாகப் படர்ந்திருக்கும் சில கிளை களைப் பார்த்துச் சமாதானமடைகிறான்.

மேல்வஸ்திரத்தைக் கிழித்து முடிந்து கயிறாக்குகிறான். கஷ்டப்பட்டு மரத் தில் ஏறிக் கயிற்றை ஒரு கிளையில் கட்டுகிறான். மறுநுனியைக் கழுத்தில் சுருக்குப் போடுகிறான். மனசு கடைசியாக ஒருமுறை சொல்கிறது.

''பாவத்தின் சம்பளம் மரணம்.''

கிளையில் நாண்டுகொண்டு துடிதுடித்து மரித்துப்போகிறான்.

## 7. சிலுவைப் பாடு

தன் முன்னால் நிற்கும் நாதரிடம் ராசா கேட்கிறார்.

''நீ மக்களின் ராசாவா.''

நாதரின் முகத்தில் சலனமில்லை.

''அப்படித்தான் என்று சொன்னால் நம்ப மாட்டீர்கள். என்னை விடுதலை பண்ண மாட்டீர்கள்.''

''நீ தேவதூஷணம் செய்தாயா. மக்கள் மதியைக் கெடுத்தாயா.''

நாதர் குற்றச்சாட்டுகளுக்கு மாற்றுத்தரம் ஏதும் சொல்லவில்லை. அவரது அமைதி ராசாவை ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது. அதிகாரிகளை நோக்குகிறார்.

''இந்த மனுசனிடம் நான் ஒரு குற்றத்தையும் காணவில்லையே.''

மந்திரியின் ஆட்கள் சொல்கிறார்கள்.

''இவன் தேசமெங்கும் உபதேசம் பண்ணி சனங்களைக் கலகப்படுத்து கிறான்.''

வரவிருக்கும் பண்டிகையை முன்னிட்டு ராசா காவலில் இருக்கும் ஒருவனை விடுதலை பண்ணுவது வழக்கம். இதைப் பற்றி ஆட்களிடம் கேட்கிறார்.

''நான் யாரை விடுதலை செய்யணும்.''

கலகம் உண்டுபண்ணி கொலையும் செய்த குற்றத்துக்காகக் காவலில் இருக்கும் ஒரு கொடியவனை விடுதலை பண்ணச் சொல்லிக் குரலெழுப்புகிறார்கள். நாதரைத் தண்டிக்க ராசாவுக்கு விருப்பமில்லை.

''அப்படியானால் இவனை என்ன செய்வது.''

அதிகாரிகளால் ஏவிவிடப்பட்ட ஆட்கள் கூவுகிறார்கள்.

''சிலுவையில் அறையணும்.''

''ஏன். என்ன பொல்லாப்பு செய்தான்.''

ஆட்கள் கூக்குரலிடுகிறார்கள்.

''சிலுவையில் அறையணும்.''

கலகம் அதிகமாகவே ராசா நீரள்ளிக் கை கழுவுகிறார்.

''இந்த நீதிமானுடைய ரத்தப் பழிக்கு நான் குற்றமற்றவன். நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்.''

''எங்களிடம் விட்டுவிடுங்கள்.''

ராசா ஒப்புக்கொடுக்கிறார்.

''காவலில் இருக்கும் குற்றவாளியை விடுதலை செய்கிறேன். இவனை வாரினால் அடிப்பித்துச் சிலுவையில் அறையுங்கள்.''

போர்ச் சேவகர்கள் நாதரின் வஸ்திரங்களைக் கழற்றிச் சிவப்பு மேலங்கியை உடுத்துகிறார்கள். முள்ளுகளால் முடிபின்னி அவரது சிரசின் மேல் வைத்து வலது கையில் ஒரு கோலைக் கொடுத்து அவருக்கு முன்னால் முழங்காலிட்டுப் பரியாசம் பண்ணுகிறார்கள்.

''மக்களின் ராசாவே வாழ்க.''

அவர்மீது துப்புகிறார்கள். கோலைப் பிடுங்கி சிரசில் அடிக்கிறார்கள்.

ஆம்பலூருணிக்குக் கிழக்கே பள்ளத்தாக்கில் நிற்கும் வேப்பமரத்தை அறுத்து மூன்று சிலுவைகள் தயாராகின்றன. ஒன்று நாதருக்கு. மற்றவை குற்றஞ் செய்த கள்ளர்களுக்கு.

நாதர் அணிந்திருக்கும் சிவப்பங்கியைக் கழற்றி மறுபடியும் அவருடைய வஸ்திரங்களை உடுத்துகிறார்கள். அவர் முதுகில் சிலுவையைச் சுமந்து செல்கிறார். சிலுவைப் பாரம் அழுத்தஅழுத்த உடம்பு குனிகிறது. சோர்ந்து நிற்கும்போதெல்லாம் வாரினால் அடிக்கிறார்கள். அவருக்குப் பின்னால் கள்ளர்கள் இருவரும் கவலையில்லாமல் சுமந்து போகிறார்கள்.

இதுக்குள் நாதருக்குப் பின்னால் சனங்கள் திரளாகக் கூடிவிடுகிறார்கள். முன்பு குதூகலத்தில் குலவையிட்ட பெண்கள் குலுங்கியழுதுகொண்டு செல்கிறார்கள். அவர்களில் ஊழியப் பெண்களும் கன்னிகளும் உண்டு. ஒரு அழகிய கன்னி மார்பில் அறைந்துகொண்டு அழுது அரற்றுகிறாள்.

''நேசரே உம்மை இக்கோலத்தில் காணவா நிழலாகத் தொடர்ந்து வந்தேன்.''

அவள் நாதரின் பிரசங்கத்தில் மனசைப் பறிகொடுத்து தொலைவிலிருந்து வந்த மகதக் கன்னி. அவருக்கு ஊழியம் செய்வதில் தன்னை அர்ப்பணித்துக்

கொண்டவள். அவரை உயிருக்குயிராக நேசிப்பவள். அவர் செல்லும் இடமெல் லாம் பின்தொடர்பவள்.

அவர் பெண்கள் முகமாகத் திரும்புகிறார்.

''நீங்கள் எனக்காக அழாமல் உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக் காகவும் அழுங்கள்.''

''எங்கள் பிள்ளை இன்னல்படுவதைப் பார்த்துக்கொண்டு வாளாவிருக்க முடியவில்லையே.''

அவர் அடியாட்களை நோக்குகிறார்.

''தாகமாயிருக்கிறது.''

கசப்புக் கூழைக் கொடுக்கிறார்கள். அவர் குடிக்கவில்லை.

குகை மண்டபத்துக்கும் உயரே அகன்ற பாறைக்கு அவரைக் கொண்டு போகிறார்கள். அங்கே பலிபீடம் கட்டப்படுகிறது. மூணு சிலுவைகளையும் கிடத்தி நடுவில் நாதரையும் இருபுறமும் கள்ளர்களையும் மல்லாக்கப் படுக்க வைக்கிறார்கள்.

நாதரின் ஒரு பாதத்தை மற்றதன் மேல் வைத்துச் சிலுவையில் அழுந்தும்படி ஆணியறைகிறார்கள். கைகளைப் பக்கவாட்டில் இழுத்துப் பிடித்து சிலுவைச் சிறகில் வைத்து அறையும்போது அவர் ஆண்டவரை வேண்டுகிறார்.

''பிதாவே இவர்களை மன்னியும். தாங்கள் செய்வது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே.''

சிலுவைகளைத் தூக்கிப் பீடத்தில் நிலைநிறுத்துகிறார்கள். மூவரது கைகால் களிலிருந்தும் ரத்தம் கொட்டிப் பீடத்தில் பெருகி உறைகிறது. ஒருபுறம் தலை சாய்ந்தவாறு நாதர் ஓய்வாக நிற்கிறார். மனுச குமாரன் தலைசாய்க்க இறுதியாக இடம் கிடைத்துவிட்டது.

நாலு சேவகர்களைக் காவலுக்கு வைத்துவிட்டு அனைவரும் அகல்கிறார்கள். சிலுவைப் பீடத்தை மரண அமைதி சூழ்கிறது.

சேவகர்கள் சீட்டுப்போட்டு நாதரின் வஸ்திரங்களைப் பங்குபோட்டுக் கொள்கிறார்கள். அந்த வழியாகப் பீடத்தைக் கடந்து போகிறவர்கள் அவரை அண்ணாந்து பார்த்துத் தூஷிக்கிறார்கள்.

''தேவாலயத்தை இடித்து மூன்று நாளுக்குள் கட்டுகிறவனே உன்னை நீயே ரட்சித்துக்கொள். நீ தேவகுமாரனானால் சிலுவையிலிருந்து இறங்கி வா.''

மந்திரி ஏளனம் பேசுகிறார்.

''மற்றவர்களை ரட்சித்தான். தன்னைத் தான் ரட்சித்துக்கொள்ளத் திராணி யில்லை. இவன் மக்களின் ராசாவானால் இப்போது சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும். அப்போது இவனை விசுவாசிப்போம்.''

அதிகாரிகள் நகைக்கிறார்கள்.

''தன்னை தேவகுமாரனென்று சொல்லி தேவன்மேல் நம்பிக்கையாயிருந் தானே. அப்படிப் பிரியமாயிருந்தால் இப்போது இவனை ரட்சிக்கட்டும்.''

சிலுவைகளிலிருக்கும் கள்ளர்களும் நிந்திக்கிறார்கள்.

''நீ தேவகுமாரனென்றால் உன்னையும் எங்களையும் ரட்சித்துக்கொள்.''

பூமியை அந்தகாரம் சூழ்கிறது. ஒன்பது மணியிருக்கும். நாதர் மரண வேதனையை உணர்கிறார். மரணம் சமீபித்துக்கொண்டிருக்கிறது. மக்களை மரணத்திலிருந்து காப்பாற்றிய என்னைக் காப்பாற்ற யாருமில்லையே. எல் லாரும் கைவிட்டுவிட்டார்களே. தேவனும் வரவில்லையே. வேதனைத் துடிப்பு அதிகரித்து மனசில் அச்சம் அரும்புகிறது. அந்தக் கணத்தில் தன்னை மனுசனாக உணர்ந்து மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிடுகிறார்.

''என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்.''

வலி நின்று அவயங்கள் அடங்குகின்றன. தலை சாய்ந்து ஆவி பிரிகிறது.

மகதக் கன்னியும் மற்ற ஊழியப் பெண்களும் தொலைவில் நின்று அழுது புலம்புகிறார்கள்.

''பாவிக்குப் புகலிடம் தந்த பரிசுத்த நாதரே பாரம் சுமந்து ஆவி துறந்து எங்களைப் பரிதவிக்க விடலாமா.''

''கள்ளர் மத்தியில் ஒரு கள்ளனைப் போல் பரிகாசமும் பசிதாகமும் படு காயமும் அடையலாமா.''

''காலிலும் கையிலும் ஆணி பாய்ந்திட தலையில் முள்முடி தரித்து ரத்தக் கோலத்தில் நீர் தொங்கலாமா. நாங்கள் சித்தம் கலங்கிக் கண்ணீர் சிந்தலாமா.''

ஓய்வு நாளன்று சிலுவைகளில் உடல்கள் இருக்கக் கூடாது. அதுக்கு முந்தியே சிலுவையிலுள்ளவர்களின் கால்களை முறிக்கவும் உடல்களை எடுத்துப் போடவும் சேவகர்கள் ராசாவிடம் உத்தரவு வாங்கிவருகிறார்கள்.

வந்து பார்த்தால் கள்ளர்கள் இன்னும் மரிக்கவில்லை. அவர்களது எலும்பு களை முறிக்கிறார்கள். நாதர் மரித்திருக்கவே அவ்வாறு முறிக்கவில்லை. ஆனாலும் ஒருவன் அவரது விலாவில் ஈட்டியால் குத்துகிறான். உடனே ரத்தமும் நீரும் கொப்புளிக்கிறது.

நாதரின் அந்தரங்க சீசன் ஒருவன் ராசாவைப் பார்த்து விண்ணப்பிக்கிறான்.

''எங்கள் நாதர் மரித்துவிட்டார். ஆகவே அவரது உடலை எடுத்துச் செல்ல உத்தரவு கொடுங்கள ராசாவே.''

''எடுத்துச் செல்லலாம்.''

சீசன் நாதரின் உடலை எடுத்துக் கொண்டுபோய் மெல்லிய வெள்ளைத் துப்பட்டியில் சுற்றி மலைக்குக் கீழ்ப்புறம் புதிதாகக் கட்டிய கல்லறைக்குள் வைத்து பெரிய கல்லைப் புரட்டி வாசலை மூடிவிட்டுப் போகிறான். நாதர் பத்திரமாக இருக்கிறார். ஊழியப் பெண்கள் கல்லறைக்கெதிரே கவலையுடன் அமர்ந்திருக்கிறார்கள்.

வாரத்தின் முதல் நாள் அதிகாலை. சூரிய உதயத்தில் மலையிருள் அகன்று நாதரின் கல்லறை தெளிவாகத் தெரிகிறது. அவருக்கு இடுவதற்காகச் சுகந்த வர்க்கங்களை வாங்கிக்கொண்டு ஊழியப் பெண்களும் கன்னிகளும் ஆவலாக வருகிறார்கள். அவர்களுக்குள் பேசிக்கொண்டே நடக்கிறார்கள்.

''நம் நாதரை எப்படியும் பார்த்தாகணும்.''

''வாசல் கல்லை நமக்காக எவன் புரட்டித் தள்ளுவான்.''

கல்லறையை அடைகிறார்கள். ஏறிட்டுப் பார்த்தால் பெரிய கல் தள்ளப் பட்டு வாசல் திறந்திருக்கிறது. அவசரமாக உள்ளே நுழைகிறார்கள். நாதரைக்

காணவில்லை. அவரது உடலைச் சுற்றியிருந்த துப்பட்டி மூலையில் சுருண்டு கிடக்கிறது. வெளியே வந்து தேடுகிறார்கள். பாறையில் ரத்தம் தோய்ந்த காலடிச் சுவடுகள் தெரிகின்றன. பாறைக்கப்பாலும் பதிவு தொடர்கிறது. மகதக் கன்னி மலையதிர அழுது கதறுகிறாள்.

''என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்.''

அந்தக் கதறலைக் கேட்க நாதர் அருகில் இல்லை.

மாதா கோயிலுக்குள் கண்ணயர்ந்து படுத்திருந்த வேதமுத்து பதறியடித்து எழுந்து பக்கத்தில் கிடந்த உபதேசியாரைத் தட்டியெழுப்பினார்.

''கண்ண மூடுனா கெனாவா வருது.''

உபதேசியார் முகந்துடைத்துக் கொட்டாவி விட்டார்.

''என்ன கெனா.''

''ஒண்ணா ரெண்டா. படுக்கவே பயமாருக்கு.''

''எனக்கும் சரியா ஒறக்கங் குடுக்கல.''

''மனசு நெறையாப் பாரத்த வச்சுக்கிட்டு ஒறக்கமெங்க வரும். நாளைக்குக் குருத்தோலத் திருநாளு நல்லபடியா நடந்து முடிஞ்சிட்டாப் போதும்.''

''சந்தோசமா நடக்கும்.''

''அவங்க தேரோட்டத்துல சண்ட சச்சரவு வந்துறப்புடாது. அதுதான் பெரிய வாதிப்பாருக்கு.''

''ஒண்ணும் ஆகாது. தேரு ஓடுறதுக்கு ரெம்ப எடங்கெடக்குது. நம்ம என்ன குறுக்க நின்னு தடுக்கவா போறோம்.''

''அதில்ல. வலியச் சண்டைக்கு வந்தா என்ன செய்றது.''

''அவுகளுக்கு அக்கறையிருக்காதா என்ன. தேர இழுத்து நெலைக்குக் கொண்டுபோயி நிறுத்தணுமே.''

''நடக்கிறபடி நடக்கட்டும். நம்மள மீறி வாறதத் தாக்காட்ட முடியுமா.''

வேதமுத்தின் கண்கள் பலிபீடத்தைத் தேடின. பாவிகளை ரட்சிக்கும் தேவனின் திருவுருவாக ஆழ்ந்த அமைதியுடன் நிற்கும் சிலுவையின் காலடியில் சிறு விளக்கு பிரயாசைப்பட்டு எரிந்துகொண்டிருந்தது. சிலுவையை மூடும் இருட்டை விளக்கு வெளிச்சம் விலக்கும்போது இருகரம் நீட்டி அருள் பொங்கச் சிரிக்கும் அன்னையாக மாறியிருந்தது.

கோயிலுக்குள்ளேயும் முற்றத்தில் பந்தலடி மேடையிலும் பலர் கால்மாடு தலைமாடாகப் படுத்திருந்தார்கள். சிலர் வீதியில் அங்குமிங்குமாக நடமாடி னார்கள். கோயிலுக்கு வாணக்கால் தோண்டும்போதே தடுத்து மறித்துத் தகராறு வந்தது. அதிலிருந்து பாதுகாப்புக்காக ஆட்கள் முறைபோட்டுக் காவலிருந்தார் கள். கட்டிமுடித்து மாதாவைக் குடியமர்த்திய பிறகு காவல் கெடுபிடியானது.

கோயில் மூலையில் குருத்தோலைகள் குமிந்து கிடந்தன. அவற்றைக் குழந்தைகள் கையிலேந்தி குதூகலிக்கும் கோலத்தை நினைக்கநினைக்க சந் தோசம் மழைக்கு நனையும் குருத்தாக வளர்ந்தது. மங்கள வார்த்தைகளில் செபித்தார்கள்.

''அருள் நிறைந்த மரியே வாழ்க
கர்த்தர் உம்முடனே
பெண்களுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர் நீரே
உம்முடைய திருவயிற்றின் கனியாகிய ஏசுவும்
ஆசீர்வதிக்கப்பட்டவரே
அர்ச்சியஷ்ட மரியாயே
சர்வேசுரனுடைய மாதாவே பாவிகளாயிருக்கிற எங்களுக்காக
இப்பொழுதும் எங்கள் மரண நேரத்திலும் வேண்டிக்கொள்ளும்.
ஆமென்.''

மாதாவின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு இருவரும் சுவரில் சாய்ந்தபடி விடியலுக்காகக் காத்திருந்தார்கள்.

## 8. தேரோட்டம்

ஞாயிற்றுக்கிழமைப் பொழுது வேலாயி வாயில் விடிந்தது.

''தேரோட்டம் பாக்கணுமாம் தோரோட்டம். இவுக வடம் புடிச்சுத்தான தேரு ஓடப்போகுது. ஓடிஓடி வேலைய முடிக்கும்போதே நெனச்சென்.''

பொய்யாளிக்குச் சுருத்து வந்தது.

''பெத்து வச்சிருக்கயே ரெண்டு எளவட்டம் அவுககிட்டச் சொல்ல வேண்டியதுதான. நேத்துலருந்து கால்ல கெச்சங் கெட்டீட்டுத் திரியிறவன் நிப்பானா. தனியா அனுப்புறதுக்கும் மனசு கேக்க மாட்டங்குது.''

''அப்பனுக்கே குளுராட்டுது. புள்ளீகளெங்க நிறுத்துறது.''

''அம்புட்டுத் தூரம் நடக்கிறதுக்கு ரெம்ப ஆச பாரு. ஏன் நீ போறதுதான.''

''இதெல்லாம் ஆத்த மாட்டாற பேச்சு.''

ஆண்டி குறுக்கே வந்தான்.

''வுட்டுப் புடித்தா. புள்ளீகள மேச்சிட்டு வரட்டும்.''

''பத்தரமா வந்துசேந்தாச் சரி.''

''அப்படிச் சொல்லு.''

''வெறுங்கைய வீசீட்டுப் போகாமக் கெட்டுச்சோத்த எடுத்துட்டுப் போங்க. புள்ளீக ஆசப்படுற பண்டங்கள வாங்கிக் குடுத்து பொறுமையா இருந்து கூட்டீட்டு வரணும்.''

ஆண்டி பயல்களைப் பார்த்தான்.

''அஞ்ஞு சொல்றத நல்லாக் கேட்டுக்கங்க.''

நல்லப்பனும் ராமனும் முதல் ஆளாகக் கிளம்பினார்கள். ஊரில் நிறைய பேர் தொடுத்துக்கொண்டார்கள்.

வெயில் கடிக்குமுன் கரிசக்காட்டுப் பாதை வழியாகக் கழுகுமலை போய்ச் சேர்ந்துவிட்டார்கள். சுத்துப்பட்டிச் சனங்கள் ஏற்கெனவே கொட்டிக் கிடந்தார்கள். முன்னெப்போதுமில்லாத கூட்டம். தொலைவிலிருந்தும் வந்திருந்தார்கள். சகல சாதிக்காரர்களும் கலந்திருந்தார்கள். விலக இடமில்லை.

கலிங்கல்காரர்கள் திணறித் திண்டாடி உள்ளே நுழைந்தார்கள். பொய்யாளி ஏற்கெனவே சொல்லியிருந்தான்.

‘‘எங்க போனாலும் செதறாம ஒண்ணா நில்லுங்க.’’

அவன் ராமனைக் கைக்குள்ளேயே வைத்துக்கொண்டான். எங்கும் ஒரே பேச்சாக இருந்தது.

‘‘வேதக்காரங்களா இந்துக்காரங்களான்னு இண்ணைக்கு ஒருகையி பாத்துறணும்.’’

‘‘நேத்துவரைக்கு நம்ம சாமியக் கும்புட்டவுக வேதத்துக்கு மாறிக்கிட்டா ஒரு ஓரமா கோயிலக் கெட்டி அருவமில்லாமக் கும்புட்டுக்கிற வேண்டியது தான. வீம்புக்கு வழிய மறிச்சுக் கெட்னா எப்படி.’’

‘‘அதானப்பா. நாடாங்க வீடெங்க கெடக்குது கோயிலெங்க கெடக்குது. எம்புட்டுத் தூரத்துக்கு வந்து வெரலு வச்சிருக்கான் பாரு. பூளக் கொழுப்பாக்கும்.’’

‘‘தலமொறதலமெறையா ஓடுற தேரு. இண்ணைக்கின்னாப்புல நிறுத்த முடியுமா. நாலு வீதியும் சுத்தியாகணுமில்ல.’’

‘‘ஓடலன்னா சாமிக்குத்தமாயிருமே.’’

‘‘அத நெனச்சாத்தான் கெதக்கலாருக்கு.’’

‘‘அம்புட்டுக்கு அறிவில்லாமயா செஞ்சிருப்பாக. தேரு ஓடுறதுக்கு எடம் வுட்டுத்தான பந்தலு போட்ருப்பாக.’’

‘‘அந்தப் பேச்ச அப்படிப் பேசாத. தேரு ஓடப்போறது தெரியுமில்ல. பெற கெப்படி தெருவில பந்தலுப் போடலாம். அது வம்புதானன்னு இவங்க கேக்காங்க. அது நாயந்தான.’’

‘‘சண்டைய வெலைக்கு வாங்கி வீணால சங்கடப்படப்போறான்.’’

‘‘அவுக கோயில்லயும் என்னமோ திருழாவாம். அப்படின்னா பந்தலுப் போடணுமில்ல.’’

‘‘அதுக்காக இப்படியா. நெலமையறிஞ்சு வுட்டுக்குடுத்துப் போகணும்.’’

‘‘சாமியாருட்ட ஒருவார்த்த கேக்காமயா போட்ருப்பாங்க.’’

‘‘போடச் சொன்னதே அவருதான்னு பேசிக்கிறாக. ஆரு கண்டது.’’

‘‘அவரு முன்ன நின்னுதான் எல்லா வேலையும் நடந்ததாம்.’’

‘‘அவரு சொன்னா இவங்களுக்கு அறிவெங்க போச்சு. ஒரு முட்டு வந்து லாவ நட்டமாச்சுன்னா அவரா தாங்குவாரு.’’

‘‘கோயிலே அவரு பேருக்குத்தான் இருக்குதாம்.’’

‘‘அப்படிச் சொல்லு.’’

‘‘என்னதான் நடக்கப்போகுதோ. அந்த முருகந்தான் காப்பாத்தணும்.’’

சுத்துப்பட்டிகளில் நாடார்கள் கம்மிதான். கழுகுமலையை விட்டால் கிழக்கே வானரமுட்டி. மேற்கே குருவிகுளம். இப்படிக் கொஞ்ச ஊர்களில்தான் கலக்கமாகக் குடியிருந்தார்கள். சொந்தச் சாதிக்காரர்களுக்கு என்னாகுமோ என்ற பதைப்பில் அனேகம் பேர் கழுகுமலைக்கு வந்திருந்தார்கள்.

எட்டயாபுரம் சமீன் அரண்மனையே கழுகுமலையில் இருந்தது. விடிந்த பிறகும் பாதையில் பல்லாக்கு குதித்தோடுவது நிற்கவில்லை. சுமப்பவர்களின் மேனி வெயில் படாமலேயே வேர்த்துக்கொட்டியது. தோள் மாற்ற நேரமில்லாமல்

சுமந்தார்கள். வில்வண்டிகளின் சலங்கைக் கலகலப்பு சதா ஒலித்துக்கொண் டிருந்தது. மைனர் மகாராசா அவரது சிறிய தகப்பனார் சின்ன மகாராசா தாய் மாமனார் சக்கரைச்சாமி பெரிய ராணி எல்லாருமே வந்துவிட்டார்கள்.

சின்ன மகாராசாவும் சக்கரைச்சாமியும் நேரமிருக்கவே குதிரையில் புறப் பட்டார்கள். பாதை நெடுக பெண்களின் குலவை அவர்களை வழியனுப்பியது. மகாராசா காசுகளை வீசியெறிந்தார். பெண்கள் ஓடிஓடிப் பொறுக்கினார்கள். மகாராசா வருகிறார் என்றால் முன்கூட்டியே தமுக்கடித்துத் தெரிவிப்பார்கள். எல்லா ஊர்களும் சுதாரிப்பாகிவிடும். அப்பேர்ப்பட்ட மரியாதையில் சின்ன மகாராசாவுக்குப் பிரியம்.

சமீன் மேனேஜர் குடும்பத்துடன் வந்திருந்தார். கூடவே சமீன் தாசில்தார் ராமசாமிப் பிள்ளை குமாஸ்தா சுந்தரமய்யர் அட்டெண்டர் பஞ்சநாதய்யர் கழுகுமலை ரெவினியூ இன்ஸ்பெக்டர் அழகியநம்பியா பிள்ளை கிராம முன்சீப் சுப்பா நாயுடு துரைசாமிபுரம் கிராம முன்சீப் ஆழ்வார்சாமி நாய்க்கர் என்று ஒரு கூட்டமே சேர்ந்திருந்தது. ஆழ்வார்சாமி தாட்டிக்கமான மனுசன். நல்ல வளர்த்தி உடல்கட்டு.

சங்கரன்கோயில் போலீஸ் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய பிள்ளை கழுகு மலைப் பக்கம் எட்டிப்பார்க்கவில்லை. சப்மாஜிஸ்திரேட் வேலாயுதம் பிள்ளை யும் வரவில்லை. அன்றைக்குப் பார்த்து செசன்ஸ் கோர்ட் வழக்கு சம்பந்தமாக வடக்கு அச்சம்பட்டிப் பக்கம் ஒரு ஊரில் தீவைக்கப்பட்ட வீட்டைப் பார்வை யிடப் போய்விட்டார். டெபுடி மாஜிஸ்திரேட் நரசிம்மலு நாயுடும் தட்டுப்பட வில்லை.

திருவிழா பந்தோபஸ்துக்கு வெளியூரிலிருந்து சொற்ப போலீஸ்காரர்களே வந்திருந்தார்கள். அவர்கள் தங்க இடந்தேடி உள்ளூர் ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை வெளியே போயிருந்தார். அவர்தான் கச்சேரிக்குப் பொறுப்பு. எல்லா ஏற்பாடுகளையும் அவரே செய்யணும். மனுசன் முழிபிதுங்க அல்லாடிக்கொண் டிருந்தார்.

கச்சேரியில் அவரைச் சேர்த்து மொத்தம் ஆறு பேர். வெளியிலிருந்து வந் தவர்கள் பத்துப் பேர். இந்த பதினாறு பேரை வைத்துக்கொண்டுதான் சமாளிக் கணும். தேரிழுக்கும் கூட்டத்தை ஒழுங்குபடுத்த நாலு பேர். பீட்டில் நாலு பேர். கோயில் காவலுக்கு ரெண்டு பேர். மிச்ச ஆட்களை வைத்து மற்ற வேலைகளைக் கவனிக்கணும். சனக் கூட்டத்துக்கு நடுவில் போலீஸ்காரர்கள் கடுகுதான்.

தாவணி ஏற்கெனவே களைகட்டிவிட்டது. வெளியூர்களிலிருந்து மாடுகள் சாலை நெடுகக் கூட்டங்கூட்டமாக வந்துகொண்டிருந்தன. ஓயாத குளம்புச் சத்தம். பெரிய கம்மா பெருகுவதுபோல் தாவணியில் மாடும் மனுசரும் நிறைந் தார்கள்.

தெற்கு ரத வீதியில் கூட்டம் அலைமோதியது. அங்கிட்டும் இங்கிட்டும் திரும்ப முடியாமல் திணறினார்கள். ஆனாலும் தேரடிக்குப் போய்த் தேரைக் கண்குளிரப் பார்க்கணும். முண்டியடித்து முன்னேறினார்கள். கலிங்கல்காரர்கள் தேர் தெளிவாகத் தெரியும்படி நின்றுகொண்டார்கள். பொய்யாளி பயல்களை அப்பப்ப அரட்டினான்.

''ஏலே பரக்கப் பாத்துக்கிட்டு எங்கயும் போயிறாதங்க. இங்கயே இருக்கணும்.''

சனக் கூட்டத்தில் தேரடி தேன்கூடாக மாறியிருந்தது. ஆதிநாராயண சேர்வை அழகிரித் தேவர் சுப்பைய மணியக்காரன் உசேன் ராவுத்தர் என்று தாட்டிக்க மானவர்கள் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தார்கள். அவர்களின் அரட்டல் தொடர்ந்து கேட்டது.

''வழி வுடு.''

''தேருக்கிட்ட நிக்காத.''

''தள்ளி நில்லு.''

காவக்கம்பும் கையுமாகத் திரியும் ஆதிநாராயண சேர்வை பழைய கோயில் சேவகர் என்ற முறையில் அந்தத் தொந்தத்தை விட்டுவிடாமல் திருவிழாக் காலங்களில் முன்னின்று ஏற்பாடுகளைச் செய்வார். உசேன் ராவுத்தர் முந்தி சமீன் சேவகராக இருந்தவர். பிறகு கோயில் காவக்காரராகிவிட்டார். அருகிலுள்ள துலுக்கபட்டிக்காரர். வயசாளி. துலுக்கராக இருந்தாலும் முருகன் கோயில் திருவிழாக்களில் சகடாலடித்துக்கொண்டு திரிவதைப் பார்க்கலாம். ஊரிலிருந்து ஆளுக்கு முந்தி வந்து நிற்பார். சுப்பைய மணியக்காரன் கோயில் காவக்காரர். அழகிரித் தேவர் கெத்தான மனுசன். ரெண்டு பேரும் உள்ளூர்க்காரர்கள்.

வெயிலேறு முன்பே சிறுதேர் ஓடி தெற்குரத வீதியின் தென்புறம் நிலை கொண்டிருந்தது. கீழ ரத வீதியில் வேதக் கோயிலுக்கு முன்னால் அது சுளுவாகக் கடந்துவிட்டது. சண்டை சச்சரவில்லை. கூட்டமும் கம்மி. அந்த மாதிரியே பெருந்தேரும் அமைதியாகச் சுற்றிவரணும். அந்தக் கவலைதான் சனங்களுக்கு.

மாதா கோயிலை வேதக்காரர்கள் மொய்த்திருந்தார்கள். சிறிசுகளின் கூட்டம் ரெம்ப. குருத்தோலைத் திருவிழாவுக்கு வந்திருந்த நீதிநாதர் மந்திரித்துக் கொடுத்த குருத்தோலைச் சிலுவைகளை ஏந்திக்கொண்டு குழந்தைகள் குரலெடுத்துப் பாடினார்கள்.

''ஓசன்னா ஓசன்னா
தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா
ஓசன்னா ஓசன்னா
மாதாவின் மைந்தனுக்கு ஓசன்னா

பாவங்களைப் போக்கவும்
பாவிகளைக் காக்கவும்
பாசமுள்ள ஏசையா
பவனியாகப் போகிறார்
ஓசன்னா ஓசன்னா.''

குழந்தைக் குரல்களின் சந்தோச ராகத்தைக் கேட்டு வேதமுத்து நெகிழ்ந்து போனார்.

''எங்களுக்குச் சந்தோசத்தைக் கொடுத்த மாதாவுக்குத் தோத்திரம்.''

உபதேசியார் வேத வசனங்களை வாசித்தார். எல்லாரும் செபித்தார்கள்.

''சர்வ சக்தியுடையவருமாய் நித்தியருமாயிருக்கிற சர்வேசுரா. முத்திப் பேறு பெற்ற கன்னித் தாயான மரியாயினுடைய ஆத்துமமும் சரீரமும் பரிசுத்த ஆவியின் அனுக்கிரகத்தினாலேயே தேவரீருடைய திருக்குமாரனுக்கு யோக்கிய மான பீடமாயிருக்க ஏற்கெனவே நியமித்தருளினீரே. அந்த திவ்விய தாயை நினைத்து மகிழ்கிற நாங்கள் அவளுடைய இரக்கமுள்ள மன்றாட்டினாலே இவ்வுலகில் சகல பொல்லாப்புகளிலேயும் நித்திய மரணத்திலேயும் நின்று இரட்சிக்கப்படும்படிக்குக் கிருபை கூர்ந்தருளும். இந்த மன்றாட்டுக்களை யெல்லாம் எங்கள் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் திருமுகத்தைப் பார்த்து எங்களுக்குத் தந்தருளும்.

அர்ச்சியஷ்ட சிலுவை அடையாளத்தினாலே
எங்கள் எதிரிகளிடமிருந்து எங்களைக் காப்பாற்றும்.
எங்கள் சர்வேசுரா
பிதா
சுதன்
பரிசுத்த ஆவியின் பெயராலே
ஆமென்.''

கூட்டம் எழுந்தது. பெண்களும் குழந்தைகளும் மாதாவை வணங்கிவிட்டு வீட்டுக்கு நடந்தார்கள். நீதிநாதர் எல்லாரையும் ஆசிர்வதித்துவிட்டு பருத்திக் கிட்டங்கிக்குப் போய்விட்டார். கோயிலுக்குள்ளேயும் வெளியேயும் இருந்த ஆண்கள் பந்தலடியில் கூடினார்கள். அவர்களுக்கு ரெட்டிப்பு மனசு. பக்கத்து ஊரில் துட்டி. காலையிலேயே தகவல் வந்துவிட்டது.

''போக வேண்டிய எழவாச்சே.''

''முட்டிப்பான நேரத்துல கோயில்லயும் ஆளு இருந்தாகணும்.''

''என்ன செய்றதுன்னே தெரியல.''

''இப்படிச் செய்வொம். முக்கியமானவுக கோயில்ல இருக்கட்டும். மத்தவுக துட்டிக்குப் போகட்டும்.''

''அதான் சரி.''

இந்துக்காரர்களும் வேதக்காரர்களுமாகப் பெரும்பாலானவர்கள் துட்டிக்குப் போனார்கள். நாடார் தெருக்கள் வெறிச்சோடிவிட்டன. வேதக் கோயிலில் இருந் தவர்கள் முகத்தில் களையில்லை. முருகன் கோயில் பெருந்தேரை எதிர்பார்த்து அவர்களுக்குள் பதட்டம் துடிக்க ஆரம்பித்தது.

தெற்கு ரத வீதியில் சிறுதேருக்கு எதிரில் பெருந்தேர் ஓடக் காத்திருந்தது. அதன் அலங்காரத்தில் சனங்கள் சொக்கிப்போய் அண்ணாந்து நின்றார்கள். எல்லாரது முகத்திலும் பக்திப் பரவசம். கூடவே பயம்.

''யப்பா முருகா நல்ல மொறையில தேரு ஓடணும். அதப் பாக்கத்தான் ஓடிவந்துருக்கொம்.''

தலைக்கு மேலே கையெடுத்துக் கும்பிட்டார்கள்.

தேரைச் சுற்றி வரிசையாக மரச்சிலைகள். எண்ணெய்க்காப்பில் குளிர்ந்த ஈரக் கோலம். அழகு சிந்தும் சிலை வரிசைக்கு மேலே துணிப்புடைப்பில் மகரத்

தோரணங்கள் தும்பிக்கைகளாக அசைந்தாடின. மண்டபத் தூண்களுடன் பிணைத்து நட்டிய குலைவாழைகள் குலுங்கின. வாழைக்கு மேலே அடுக்குத் தோரணங்கள். உச்சியில் மின்னும் ஒற்றைக் கும்பம். அதுக்கும் உயரே நிழல் தரும் முக்குடை. மண்டபத்துக்குள் வள்ளி தெய்வானை சமேதராகத் தங்கக் கழுகாசல மூர்த்தி. அவர்களுக்கு வகைவகையான அலங்காரம்.

தேர்வடங்கள் தரையில் நீண்டு துவண்டு கிடந்தன. பின்புறம் இரு பெருந் தடிகளுடன் ஆட்கள் தயாராக நின்றார்கள். தேருக்குத் தடிபோடுவது குடும்ப மாரின் பரம்பரைப் பாத்தியம். கெச்சிலாபுரம் சங்கரலிங்கபுரம் ரெண்டு ஊருக்கும் ஒரு தடி. ஆலங்குளத்துக்கும் உள்ளூர்ப் பள்ளக் குடிக்கும் ஒரு தடி. நேரமிருக் கவே பாத்தியப்பட்ட குடும்பமாரை மேளதாளம் மாலை மரியாதையுடன் அழைத்து வந்தார்கள். அவர்கள் தேரைத் தொட்டுக் கும்பிட்டுத் தடிகளை எடுத்துக்கொடுத்தார்கள். இனி தேர் ஓடலாம்.

தெய்வத்துக்குத் தீபாராதனை நடந்தது. தேர் மண்டபத்துக்குள்ளிருக்கும் பட்டர் ஆட்டும் மணியொலி மெல்லிசாகக் கேட்டது. தேருக்கு முன்னால் தேங்காய் விடலையெறிந்தார்கள். வளைந்திருக்கும் வாங்கா வானத்தை நோக்கிப் பிளிறி முழங்கியது. தேருக்குப் பின்னால் கீழத் தெருக் குடும்பமார் சுதாரிப்பாக மேளம் வாசித்தார்கள். சனங்கள் தேர்ச் சக்கரத்தைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக்கொண்டார்கள்.

சமீன் மேனேஜர் வந்து கும்பிட்டு வடம் தொட்டுக் கொடுத்தார். மற்ற முக்கியமானவர்கள் மரியாதைக்கு வடம்பிடித்தார்கள். கூட்டம் ஆரவாரித்தது.

''முருகா முருகா.''

மேனேஜர் அரண்மனைக்குத் திரும்பினார். சனங்கள் வடம்பிடிக்கத் தயாரானார்கள்.

இப்போது தேர்வடங்கள் நெல் கருதுகளாகின. சனங்கள் நெல்மணிகளாகக் கோர்த்திருந்தார்கள். கூட்டம் மறுபடியும் முழங்கியது.

''முருகா முருகா.''

நெல் கருதுகள் நெளிந்து நகர தேர் குலுங்கி நிலை கடந்து ஒய்யாரமாக அசைந்து புறப்பட்டது. ஏறெடுத்துக் கும்பிடாதவர்கள் இல்லை. ஆதிநாராயண சேர்வையும் உசேன் ராவுத்தரும் கூட்டத்தைக் கட்டுப்படுத்தும் குரல் தெளி வாகக் கேட்டது.

''பையாப் போ.''

''நிறுத்து.''

''தடியப் போடு.''

வீதியெங்கும் ஆயிரக் கணக்கில் தலைகள் விதைத்துக் கிடந்தன. பலர் வீதியோர மரங்களில் குலைகுலையாகக் காய்த்திருந்தார்கள். சனக் கூட்டமே தாங்கிச் செல்வதுபோல் தேர் செல்லமாக அசைந்தது. கலிங்கல்காரர்கள் முண்டி யடித்துப் பின்தொடர்ந்தார்கள்.

ஒவ்வொரு பலிபீடத்திலும் பூசை நடந்தது. அந்தந்தச் சாதிக்காரர்கள் பொங்கல் வைத்துக் குலவையிட்டார்கள். மூர்த்தியின் தோளில் மாலைகள் மலையாகக் குமிந்துவிட்டன. மூடிய பூக்களை விலக்கி முகத்தைக் கண்டுபிடிக்க பட்டர் பிரயாசைப்பட்டார்.

வீதி நெடுக குடும்பமார் தடிகளைப் போட்டுத் தேரைத் தாக்காட்டித்தாக் காட்டி ஓட வைத்தார்கள். அங்கங்கே தண்ணீர்ப்பந்தல்களில் தண்ணீருடன் மோர் பானகம் பதினி கிடைத்தது. மாமன் மச்சான்மார் பானங்களை வாங்கிக் கொடுத்துக் கட்டை போடுபவர்களுக்குத் தெம்பூட்டினார்கள்.

''தடியப் பாத்துப் போடு மச்சான். வகுறு இழுபடுறதப் பாரு.''

''கண்டதக் குடிச்சு மோத்தரக் குடுக்க வெடிச்சிரும் போலருக்கு.''

''பயமாத்தான் இருக்கு.''

''கவலப்படாத மாப்பிள. ஒன் அக்காளக் கைவுட மாட்டென்.''

''வக்காளி தேருக்குப் பின்னால இழுபடுறதுக்கே இப்படித் துள்ளூற. முன்னால இழுக்கச் சொன்னா ஒன்னயக் கையில புடிக்க முடியாது.''

''தேர நிறுத்துறதும் ஓட வைக்கிறதும் எங் கையிலதான் இருக்கு. அது தெரியுமா.''

''தெரியும் தெரியும்.''

சன வெள்ளத்தில் மிதக்கும் தேர் மேல ரத வீதியில் திரும்பி வடக்கு ரத வீதிக்குள் நுழைந்து கோயிலின் தெற்கு வாசலைக் கடந்து அரண்மனையை நெருங்கும்போது நல்ல வெயில் கட்டிவிட்டது. சமீனைச் சேர்ந்தவர்கள் ஆசைதீர முருகனைத் தரிசித்தார்கள். தேர் அங்கிருந்து கீழ ரத வீதி முனையில் திரும்பி ஈசான பீடத்துக்கு முன்னால் நின்றது. அங்கேயும் பூசை நடந்தது.

தேரை எதிர்பார்த்துக் கீழ கிரிப்பிராகார வீதி அத்தத்தில் சில நாடார் குடும் பங்களுக்கும் மூர்த்தி காட்சி தந்தார். இப்படிச் சந்தர்ப்பத்தில் உற்சவ மூர்த்தி யின் முகம் பார்த்து உருகிக்கொண்டால்தான் உண்டு. கோயிலுக்குள்ளிருக்கும் மூலவரை எட்டிப்பார்க்கக்கூட விட மாட்டார்கள்.

பெரிய நாடாருக்கும் பலவேச நாடாருக்கும் பெருந்தேரில் பவனிவரும் முருகன் முகத்தைப் பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை. அடுத்த ஊர்த் துட்டிக்குப் போய்விட்டார்கள். பலவேச நாடாருக்குத் தயக்கந்தான்.

''சாமி கும்புட்டுட்டுப் போவமே. துட்டி எப்பன்னாலும் கேட்டுக்கிடலா மில்ல.''

பெரிய நாடார் சொல்லிவிட்டார்.

''சாமிய அடுத்த வருசம் ஆசதீரப் பாத்துக்கிடலாம். செத்தவன் மொகத்தப் பாக்க முடியுமா. மனச அடக்கீட்டு வாரும்.''

''அது சரிதான்.''

''எனக்கு மனக்கொற ஒண்ணு உண்டு.''

''அப்படியென்ன கொற.''

''திப்பனம்பட்டியிலருந்து தேவான வரல. வருசா வருசம் தைப்பூசத்துக்கும் பங்குனி உத்தரத்துக்கும் தவறாம வந்துடுவா. இந்த வருசம் ரெண்டு தேரோட் டத்துக்குமே வரல. ஊருக்குள்ள நெலம சரியில்லாதப்ப அதுக வந்து ஏன் சங் கடப்படணும். அம்மமுத்துக்குக் கூட்டிவர நெனப்புத்தான். நான் தடுத்துட்டென்.''

''அது சரிதான். ஊருக்குள்ள நெலம சொல்லிக்கிறாப்புலயா இருக்கு.''

''எங்க பாத்தாலும் சண்ட சச்சரவுதான்.''

''செவகாசியில இதவிட மோசம்போலருக்கு.''

''ஆமாமா. நாடாருகளுக்கும் மத்த சாதிக்காரங்களுக்கும் பக பொகஞ்சுக் கிட்டே இரிக்குது. ஆனா ஒண்ணு நம்மூரப் போல மொத்தமா வேதத்துக்கு மாறாம இந்துக்காரனா இரிந்துக்கிட்டே எதுத்து நிக்கான். உள்ளூரு செவன் கோயிலுக்குள்ள மொழையிறதே குறியா இரிக்கானுவ.''

''லேசுக்குள்ள மொழைய வுடுவானாக்கும்.''

''இந்தக் கொந்தளிப்பான நெலமையிலதான் தேவானையவும் தங்கையாவ வும் செவகாசிப் பக்கம் அனுப்பி வச்செென். பெரிசுக ரெண்டும் இவியளக் கண் ணுங்கருத்துமாக் கவனிச்சுக்கிறாவ. தங்கையா அந்தப் பாட்டையாவோட வேலையக் கைமாத்தீட்டான். அம்மத்தாளும் தேவானையும் வீட்லரிந்துக்கிட்டு கருப்பட்டி காச்சுறது ஓலக்கொட்டான் மொடையிறதுன்னு வேலைகளச் செய்தாவ.''

''நல்லாருந்தாப் போதும். நமக்கு வேறென்ன வேணும்.''

''சின்ன வயசில குடும்பம் நடத்தி வெளையாடுன புள்ளீக நெசமாவே குடும்பம் நடத்தி ரெண்டு கொழந்தையும் பெத்துக்கிட்டாவ. காலம் எப்படிப் போவுதுன்னு பாரும். மூத்தவனத்தாந் தெரியுமே. இங்க வெசாகத்தண்ணைக்கு முருகனக் கும்பிட்டு மொட்டையடிச்சு வேலையான்னு பேருவச்சொம். எளையது பொண்ணு. இப்பத்தான் எட்டுவைக்காளாம். இனியும் முடியயெறக்கல. அங்கயே மாரியம்மாளுக்கு முடியக் குடுப்பம்னு நேமிக்கம் போட்ருக்காவ.''

''எல்லாம் நல்லபடியா நடக்கும்.''

துட்டிக்குப் போகிற வழியில் பெரிய நாடார் கேட்டார்.

''தேரு இன்னேரம் வேதக் கோயிலத் தாண்டியிருக்குமா.''

''நானும் அதத்தான் நெனச்சுக்கிட்ருந்தென். இதுக்குள்ள கடந்திரிக்கணும்.''

''கடந்துட்டாத் தாவல. நிம்மதியாரிக்கும்.''

கழுகுமலையில் நிலைமை அப்படியில்லை. தேர் இன்னும் வேதக் கோயிலை நெருங்கவில்லை. ஈசான பீடத்திலிருந்து தயக்கத்துடனேயே புறப்பட்டது.

கொஞ்ச நேரத்தில் தேருக்குப் பின்னாலிருந்த கூட்டம் நெருக்கித் தள்ளிக் கொண்டு முன்பக்கம் ஓடியது. தேர் வேதக் கோயிலோரம் தாமதித்தது. சனங்கள் மறுகிமறுகிக் குழம்பினார்கள். அவர்களின் பேச்சு தெளிவாகக் கேட்கவில்லை. ஆனால் ஏதோ வாக்குவாதம் நடந்தது. அது நிச்சயம்.

குழப்பத்துக்கிடையில் சமீன் மேனேஜரைக் கூட்டிவந்தார்கள். அவருக்குப் பின்னால் இலையுங்குலையுமாகச் சமீன் அதிகாரிகள். அவர்களைச் சூழ்ந்துகொண்டு பெரிய கூட்டம். கூச்சலும் குழப்பமும் அதிகமாகியது. உரக்கப் பேசினார்கள்.

''பந்தலப் பிரி.''

''பந்தலு வழியாத் தேர இழு.''

''சாணானச் சும்மா வுடப்புடாது.''

உடனே வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் மாறிமாறிக் கல்லெறி விழ ஆரம்பித்தது. குமுறிக் கொந்தளித்த கூட்டம் சண்டையில் இறங்கிவிட்டது. சனங்கள் அலறிக்கொண்டு கலைந்து ஓடினார்கள். இதுக்கு மேலும் இந்த

இடத்தில் இருப்பது நல்லதில்லை என்று நினைத்த பொய்யாளி கலிங்கல்காரர்களுக்குக் குரல்கொடுத்தான்.

''தப்பிச்சு ஓடுங்கலே. தேரோட்டம் பாக்க வந்தமா சண்டையப் பாக்க வந்தமா.''

கலிங்கல்காரர்கள் வடக்கு ரத வீதியோரம் கிழ மேல் தெருவில் ஓடித் தப்பித்தார்கள். நல்லப்பனையும் ராமனையும் பார்த்த பிறகுதான் பொய்யாளிக்கு உயிர் வந்தது.

தேருக்குள்ளிருக்கும் முருகனும் வேதக் கோயிலில் இருக்கும் மாதாவும் சாட்சியாக மூர்க்கமாகச் சண்டை நடந்தது. இடையிடையே கூக்குரல்.

''அய்யோ மேனேஜரக் குத்திக் கொன்னுட்டாங்க.''

''ஆழ்வார்சாமி நாய்க்கரவும் குத்தீட்டாங்க.''

கலகம் இன்னும் உக்கிரமடைந்தது. அரண்மனையிலிருந்து நடந்து வந்த மேனேஜரை அஞ்சாறு பேர் ரத்தக் கோலத்தில் சுமந்து போனார்கள். வலதுபுறம் கடவயிற்றில் குத்திக் கிழித்து குடல் சரிந்து தொங்கியது. சம்பவ இடத்திலேயே உயிர் பிரிந்துவிட்டது.

பின்னாலேயே பஞ்சநாதய்யரையும் சுந்தரமய்யரையும் கைத்தாங்கலாகக் கூட்டிப் போனார்கள். பஞ்சநாதய்யருக்கு வலது கையில் வெட்டு. சதை கிழிந்து தொங்கியது. சுந்தரமய்யருக்குக் கண்ணோரம் கல்லெறிக் காயம்.

அடுத்து ஆழ்வார்சாமி நாய்க்கர் தோள்சுமையாகப் போனார். இடது புறம் அடிவயிற்றில் வசமான குத்து. குத்தி வகுந்ததில் பிதுங்கிய குடலை உள்ளே தள்ளித் துண்டினால் வரிந்துகட்டியிருந்தார்கள்.

''இவரும் செத்துட்டாராம்.''

''இல்ல. இப்பயோ பெறகோன்னு அத்தாகுத்தியாக் கெடக்காராம்.''

''அப்படின்னா பெழைக்கிறது கஸ்டந்தான்.''

''இனியும் எத்தன உசிரக் காவு குடுக்கப்போறாங்களோ.''

கொலைச் சேதி பரவியதோ இல்லையோ வேதக் கோயிலுக்கு முன்னால் கூட்டம் பெருகி வெறிபிடித்து ஆடியது.

''நாடானுக்கு நடுத்தெருவில கோயிலு வேணுமோ.''

பந்தலுக்கும் கோயிலுக்கும் தீவைத்தார்கள். தீக்கொழுந்து ராவிப் படர்ந்து விடாதபடி முருகனின் தேர் சற்று எட்டத்திலேயே நின்றது. தேர் மண்டபத்துக்குள்ளிருந்த பட்டர் வேர்த்து விருவிருத்து உயிரைக் கையிலேந்தியபடி நடுங்கிக் கொண்டு ஒளிந்திருந்தார்.

அப்போது துப்பாக்கிச் சத்தம் கேட்டது. நாலஞ்சு போலீஸ்காரர்கள் கோயிலை நோக்கி ஓடிவந்தார்கள். கூட்டம் பயத்தில் கலைந்து சிதறியது. போலீஸ்காரர்கள் கைக்கு அகப்பட்டவர்களைப் பிடித்துத் தெருவில் இழுத்துப் போனார்கள்.

கீழ ரத வீதியில் அப்படியொரு அமைதி. மாதா கோயில் கூரையும் பந்தலும் சாவகாசமாக எரிந்துகொண்டிருந்தன. திகைத்து நின்றிருந்த அலங்காரத் தேர் நெருப்பு வெக்கைக்கு முகம் வாடிப்போயிருந்தது.

மற்ற வீதிகள் பீதியில் அரண்டு கிடந்தன. உரக்கப் பேசப் பயந்தார்கள். நெட்டோட்டமுங்குட்டோட்டமுமாகச் சேதிகளைப் பரிமாறிக்கொண்டு திரிந்தார்கள்.

''இப்படியாகிப் போச்சே.''

''தேருக்கு முன்னால நாலஞ்சு பேரக் காவு குடுத்துருக்கணும்.''

மரத்திலிருந்து கலைந்தெழும்பும் பட்சிகளாகத் திடீரென்று பெரிய கூட்டம் கத்திக்கொண்டு கீழ கிரிப்பிராகார வீதியை நோக்கி ஓடியது.

''குடியிருந்தாத்தான கோயிலுக் கெட்டுவான்.''

''கருவறுக்கணும்.''

இதுக்குள் தகவலறிந்த நீதிநாதர் சால்வையைத் தலையில் மூடிக்கொண்டு தப்பிவிட்டார். ஊரைக் கடக்கும்வரை சிலர் துணைக்குப் போனார்கள்.

கூட்டம் நாடார் தெருமுனையை அடையும்போது ஆங்காரக் கூச்சல் ஓங்கியொலித்தது. பெண்களும் குழந்தைகளும் எழுப்பிய கூக்குரல் காதைப் பிளந்தது. நெஞ்சையறுக்கும் அபய அலறல் அங்கே என்ன நடக்கிறதென்று தெளிவாகச் சொல்லியது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நாடார் வீடுகள் வரிசையாக எரிய ஆரம்பித்தன. கருமேகங்களாக மலைநோக்கிப் புறப்படும் புகைமண்டலம். படரும் நெருப்பு துணை தேடிப் பக்கத்து வீடுகளில் பற்றிக்கொண்டது. அனலில் வெடிக்கும் மூங்கில் சில்லுகள் மலையுயரத்துக்கு ஆகாயத்தில் பறந்து விழுந்தன.

## 9. அவ்வளவுக்காயிப் போச்சா

சப்மாஜிஸ்திரேட் வேலாயுதம் பிள்ளை வடக்கு அச்சம்பட்டிப் பக்கம் வேலைகளை முடித்துவிட்டு வெயிலோடு சங்கரன்கோயிலுக்குத் திரும்பிக்கொண்டிருந்தார். எதிரே குதிரைமேல் ஒரு உருவம் குதித்துக்குதித்து வருவது தெரிந்தது. இந்த நேரத்தில் யாராக இருக்கும். யோசித்து முடிக்குமுன் குதிரை கிட்டத்தில் வந்துவிட்டது. சமீன் குமாஸ்தா ராமசாமி அய்யர் இறங்கி ஓடிவந்தார். மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கியது. வார்த்தைகள் நடுங்கின.

''கீழ ரத வீதியில தேர் போறச்சே பெரிய கலகமாகி மேனேஜரக் கொல பண்ணிட்டா. சண்ட இன்னும் நடக்கறது.''

''அடப் பாவமே அவ்வளவுக்காயிப் போச்சா. நான் கொஞ்ச நேரத்துல கழுகுமலைக்கு வாறென்.''

ராமசாமி அய்யர் வந்த வேகத்திலேயே ஓடி மறைந்துவிட்டார்.

சப்மாஜிஸ்திரேட் சங்கரன்கோயில் போய்ச் சேரவே மதியத்துக்கு மேலாகி விட்டது. அங்கே மாட்டு வண்டி பிடித்து போலீஸ் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய பிள்ளையையும் ஆஸ்பத்திரி சிப்பந்தி பீட்டர் சைமனையும் கூட்டிக்கொண்டு உடனடியாகக் கழுகுமலைக்குப் புறப்பட்டார்.

இடையில் ஆலங்குளத்தோரம் சமீன் தாசில்தார் ராமசாமி பிள்ளை வந்து ரெண்டு ரிப்போர்ட்டைக் கொடுத்தார். ஒண்ணு கழுகுமலை கிராம முன்சீப்

சுப்பா நாயுடு எழுதிய யதாஸ்து. மற்றது போலீஸ் கச்சேரி ஆபீசர் குழந்தை வேலுப் பிள்ளையின் ரிப்போர்ட். கிராம முன்சீப் இப்படி எழுதியிருந்தார்:

> தேர் கீழ ரத வீதியில் திரும்பியபோது மாதா கோயிலுக்கு முன்னால் ஆயுதங்களுடன் தயாராக இருந்த அருணாசல நாடாரும் மற்றவர்களும் கூட்டமாக வந்து தேர்வடமும் சங்கிலியும் திரும்புவதைத் தடுத்து மேனேஜரையும் அவரது தலைமைக் குமாஸ்தா பஞ்சநாதய்யரையும் துரைசாமிபுரம் ஆழ்வார்சாமியையும் கத்தியால் வெட்டினார்கள். கல்லெறிந்தார்கள். வேல்கத்தியால் குத்தினார்கள். அவர்களே கோயிலுக்குத் தீவைத்தார்கள்.
>
> சங்கரநாராயண நாடார் மகன் அருணாசல நாடாரும் மற்றும் பத்தொன்பது பேரும் கலகம் உண்டாக்கியதாக எட்டயாபுரம் தாசில்தார் தகவல் கொடுத்தார். இந்த விவரங்களைத் தெரிவித்து போலீஸ் கச்சேரிக்கு மெமோ அனுப்பிவிட்டு விசாரணை நடத்தப் போய்க் கொண்டிருக்கிறேன்.

குழந்தைவேலுப் பிள்ளையும் இதே மாதிரிதான் எழுதியிருந்தார். அடித்துப் பிடித்து கழுகுமலை வந்துசேர சாயங்காலம் நாலரை மணியைத் தாண்டி விட்டது. கொசக்குடித் தெரு முக்குக்கு வடக்கே ஊருக்குள் நுழையும்போது சனங்கள் தலையிலடித்துக்கொண்டு ஓடினார்கள்.

''அய்யோ எம் புள்ளையக் காணுமே.''

''எம் புருசன எங்க போயித் தேடுவென்.''

''குடும்பமே கொலஞ்சுபோச்சே.''

எதிர்ப்பட்டவர்கள் பயத்தில் என்னென்னமோ குழறினார்கள்.

''என்னத்தச் சொல்லட்டும் சாமி. ஊரே தீயில கருகிப்போச்சு. வெந்து நீந்த உசிருக்குக் கணக்கில்ல.''

''கொலையும் கொள்ளையும் ஒஞ்சபாடில்ல.''

''தேரோட்டம் பாக்க வந்த சனங்களவும் வுட்டுவைக்கல. கொன்னு குமிக்காக.''

''வீடுகளுக்குள்ள அனயம் பேரு மாட்டிக்கிட்டாக. அவுகள வெளிய வர வுடாமப் பூட்டிவச்சுக் கொளுத்துறாக.''

''கொள்ளிக்கட்டையாக் கருகிப்போன சனங்க கொஞ்சமா.''

''தப்பிச்சொம் பெழச்சம்னு கூட்டங்கூட்டமா ஓடுறாக.''

''சண்டையில ஆப்புட்டவுகள வெட்டிவெட்டி நெருப்புக்குள்ள எறியிறாக.''

''ஊருக்குள்ள மொழைய முடியாது.''

''நாடாருகளும் சும்மா இருக்கல. பதிலடி குடுக்கத்தான் செய்றாக.''

''அவுக வீடுகள்ல ஒரு சாமான் கெடையாது. பண்டம் பாத்தரம் மொதக் கொண்டு கையில கெடச்சத அள்ளீட்டுப் போறாக.''

''திருழாவுக்கு வந்த சனங்களும் ரெண்டு பக்கமும் சேந்துக்கிட்டுச் சண்டபோடுறாக.''

''அய்யா சாமி நல்லதுக்குச் சொல்றென். இந்தச் சமயத்துல ஊருக்குள்ள போக வேணாம். நெலம சரியில்ல.''

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்ட சப்மாஜிஸ்திரேட் வண்டிக்காரனிடம் சொன்னார்.

''வண்டி கச்சேரிக்குப் போகட்டும்.''

வண்டி கடந்து போனதும் சிலர் முணுமுணுத்தார்கள்.

''பேலுற பெடக்கால்ல இருக்கு சங்கரங்கோயிலு. கோர்ட்டாரு ரெண்டு பேரும் வெள்ளங்காட்டியே வந்துருக்கலாமில்ல.''

''இன்ஸ்பெக்டருகூட வரல.''

''என்னமோ நடக்கப்போகுதுன்னு எல்லாருக்கும் முன்கூட்டியே தெரிஞ்சிருக்கு. அதான் கூடிப் பேசின மாதிரி இருந்துக்கிட்டாக.''

''அப்பாவி மேனேசருக்கு இது தெரியாமப்போச்சே.''

''அய்யரு அனியாயமாப் போயிட்டாரே.''

கச்சேரி துக்கிரியடைந்து கிடந்தது. போலீஸ்காரர்கள் முகத்தில் களையில்லை. கூடிக்கூடிப் பேசிக்கொண்டார்கள். ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை வண்டிச் சத்தம் கேட்டதும் ஓடிவந்து சலாம் போட்டார். மனுசன் ரெம்பப் பதறிப்போயிருந்தார். இன்ஸ்பெக்டர் கேட்டார்.

''எப்படி இவ்வளவுக்காச்சு. பாத்துட்டுச் சும்மாவா இருந்தீக.''

ஏட்டுக்கென்றால் கடுப்பு.

'ஏன் பேச மாட்டீக. நீங்க ஆருமே எட்டிப்பாக்கல. நாங்க மட்டும் இங்க கெடந்து சாகணுமா. கூடுதலா ஆளு வேணும்னு தலையால அடிச்சுக்கிட்டென். கேட்டீகளா.'

''தாங்காற கூட்டம். பத்தாயிரம் பேருக்கு நடுவில பதினாறு பேரு இருந்துக்கிட்டு என்ன செய்ய முடியும். வெளியூரு போலீஸ்காரங்க தங்க எடம் பாக்கிறதுக்காக வெளிய போயிட்டென். மத்தவங்க அங்கங்க காவலுக்கு நின்னாங்க.''

''தேரோடுற நேரம் பாத்துத்தான் வெளிய போனீராக்கும். நமக்கெதுக்கு வம்புன்னு அதச் சாக்குவச்சுத் தப்பிச்சுப் போயிட்டீரு.''

''சம்பவ எடத்துல யாரும் இல்லையா.''

''ரெண்டு பேரத் தேரோட அனுப்பி வச்சென்.''

சப்மாஜிஸ்திரேட் கேட்டார்.

''என்னதான் நடந்தது.''

ஆஸ்பத்திரி சிப்பந்தி சைமன் எல்லாவற்றையும் அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தார். ஏட்டு படபடத்தார்.

''தேரு அரமனையச் சுத்தி வேதக் கோயிலோரம் வரயில தகராறு ஆரம்பிச்சிருக்கு.''

''எந்தத் தேரு.''

''பெரிய தேரு.''

''சின்னத் தேரு ஓடலயா.''

''அது காலையிலேயே சுத்தி வந்துருச்சு.''

''அப்பத் தகராறு இல்லையா.''

''சிறிசுதான. எடஞ்சலில்லாமப் போயிருச்சு.''

''பெரிசுக்குத்தான் எடஞ்சலாக்கும்.''

''அகலமானதாச்சே. கோயிலோரம் போனதும் சனங்க வடத்தக் கீழ போட்டுட்டாக.''

''எதுக்கு''

''தேரு போறதுக்குப் பந்தலு எடஞ்சலாருக்கு. அதப் பிரிச்சாத்தான் வடம் புடிப்பம்னு சத்தம்போட்ருக்காக. பந்தலடியில கூடியிருந்த நாடாருக அதுக்கு ஒத்துக்கிறல. ஒடனே ஓடிப்போயி மேனேஜரக் கூட்டி வந்துருக்காக. அவரோட சமீன் சிப்பந்திகளும் தொரச்சாமிபுரம் கிராம முன்சீப் ஆழ்வார்சாமி நாய்க்கரும் வந்துருக்காக. நாடாருகளோட பேசித் தீத்துக்கிறலாம்னு திட்டம்.''

''சரி.''

''தேரு ஓடுற அளவுக்கு பந்தலப் பிரிச்சு எடம் வுடுங்க. போனதும் போட்டுக் கிறலாம்னு மேனேஜரு நாடாருககிட்ட நல்ல வார்த்த சொல்லீருக்காரு. அவுக கேக்கல. எங்க சாமியாருட்ட ஒரு வார்த்த கேக்காமப் பிரிக்க மாட்டொம். வேணும்னா நீங்களே பிரிச்சுக்கங்கன்னு சொல்லீட்டாக. சனங்க கொந்தளிச்சுப் போயி இவங்கள என்ன கேக்க வேண்டிக் கெடக்கு. பந்தலப் பிரிங்கடான்னு கூச்சலு போட்ருக்காக. வாக்குவாதம் தடிச்சு ரெண்டு பக்கமும் கல்லெறிய ஆரம்பிச் சிட்டாக. மேனேஜரு சமாதானப்படுத்திப் பாத்துருக்காரு. முடியல. நாடாருக எதுக்கும் தயாரா இருந்துருக்காக.''

''முத்திக்கிருச்சு.''

''ஒருத்தன் ஓடிவந்து பஞ்சநாதய்யர வலது கையில வெட்டீருக்கான். இன் னொருத்தன் மேனேஜரு கடவயித்துல கொடலு வரக் குத்திக் கிழிச்சு அந்த எடத் துலயே செத்துட்டாரு. அவரத் தாங்கிப் புடிக்கப் போன ஆழ்வார்சாமிக்கு அடி வயித்துல குத்து. இப்பயோ பெறகோன்னு கெடக்காரு. சுந்தரமய்யருக்குக் கண் ணோரம் சரியான எறி.''

''வேற யாருக்குக் காயம்.''

''துலுக்கபட்டி உசேன் ராவுத்தருக்கு வெட்டு. செவக்கொளம் கருப்பன் செட்டிக்கு எறி. மருதக் கோனாருக்குக் குத்து. அவரும் வெளியூருக்காரருதான்.''

''பெறகென்ன நடந்தது.''

''கிராம முன்சீப் ரிப்போர்ட் எங் கைக்குக் கெடச்சதும் ஒங்களுக்கு மெமோ குடுத்தனுப்புனென். ஒடனே துப்பாக்கிய எடுத்துக்கிட்டு சம்பவ எடத்துக்கு ஓடுனென். சண்ட நிக்கல. ஆகாயத்தப் பாத்து ஒரு ரவுண்டு சுட்டென். கூட்டம் கலஞ்சு ஓடுச்சு. வேதக் கோயிலு எரிஞ்சுக்கிட்ருந்தது. கோயிலுப் பக்கமிருந்த கட் டடத்துக்குள்ள ஒளிஞ்சிருந்த ஏழு நாடாருகளவும் ஒவதேசியாரு மிக்கேல் பிள்ளையவும் கைது செஞ்சொம். கோயிலுக்கு மேக்கயும் தெக்கயும் கூடியிருந்த நாடாருக கோயில ஒட்டி வடபுறச் சந்து வழியாத் தப்பிச்சு ஓடுனாக. அவுகளப் புடிச்சு முப்பது பேரக் கைது செஞ்சொம். மொத்தம் முப்பத்தெட்டுப் பேரவும் அடச்சு வச்சிருக்கு.''

''நீங்க எத்தன பேரு.''

''ஆறு பேரு. உள்ளூருக்காரங்க தொணைக்கு வந்தாங்க.''

‘‘அப்படியா.’’

‘‘கைதிகள்ல ரெண்டு மூணு பேரத் தவிர எல்லாருக்கும் காயம்.’’

‘‘கோயிலோரம் அவ்வளவுக்கா சண்ட நடந்தது.’’

‘‘அப்படித்தான் தெரியிது.’’

‘‘போலீசுக்குக் காயமா.’’

‘‘இல்ல.’’

‘‘ஒருத்தருக்குக் கூடவா.’’

‘‘இல்ல.’’

‘‘குத்துனது வெட்னது யாருன்னு தெரியுமா.’’

‘‘ரெண்டு நாடாரு பேரச் சொல்லிக்கிறாக.’’

‘‘பிடிபட்டவங்ககிட்டருந்து கம்பு கத்தி அருவான்னு எதையும் கைப்பத்து னீகளா.’’

‘‘இல்ல.’’

‘‘ஒருத்தங்கூட ஆயுதம் வச்சிருக்கலயா.’’

‘‘இல்ல.’’

‘‘கீழ எதாச்சும் கெடந்ததா.’’

‘‘இல்ல.’’

‘‘எந்த ஆயுதத்தக் கொண்டு கொல செஞ்சாங்கன்னு தெரியலயே. வேற எங்க சண்ட நடந்தது.’’

‘‘திருவிழாவுக்கு வந்த கூட்டம் கோவத்துல ஓடி நாடாரு வீடுகளுக்குத் தீவச்சுச் சூறையாடீருச்சு.’’

‘‘ஒங்களால கட்டுப்படுத்த முடியலயா.’’

‘‘பத்துப் பதினஞ்சு பேரு இருந்துக்கிட்டு அத்தன கூட்டத்தச் சமாளிக்க முடியல.’’

‘‘சரி.’’

‘‘வெசாரண நடத்திக்கிட்ருக்கென். அய்யா எந்த நேரம் என்ன நடக்கும்னு தெரியாது. இங்கருக்கிறது பாதுகாப்பில்ல.’’

சப்மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டரைப் பார்த்தார்.

‘‘அதுக்காக இப்படியே விட்டுட்டுப் போயிற முடியுமா. மொத வேலையா ஊரச் சுத்திப்பாத்து என்னதான் நடந்தது. ஊரு என்ன நெலமையில இருக்குன்னு தெரிஞ்சாகணும்.’’

‘‘எனக்கும் அப்படித்தான் தோணுது. காயம்பட்டவங்களுக்கு ஒதவிசெய்ய ணும். சனங்களோட பயத்தப் போக்கணும்.’’

‘‘மேற்கொண்டு கலகம் வராம முன்னெச்சரிக்கையா நடவடிக்கை எடுக் கணுமே.’’

கச்சேரியிலிருந்து கிளம்பினார்கள். அவர்களுடன் கோயில் சிப்பந்திகள் கிராம முன்சீப் ஏட்டு ஆதிநாராயண சேர்வை சைமன் என்று சிறு கூட்டமே போனது. மேல ரத வீதியில் கடைகளும் வீடுகளும் பூட்டிக் கிடந்தன. அங்கங்கே சனங்கள் கூட்டங்கூட்டமாக நின்று குசுகுசுத்துக்கொண்டிருந்தார்கள். இன்ஸ் பெக்டர் சிலரைக் கூப்பிட்டு விசாரித்தார்.

''இங்க என்ன நடந்ததுன்னு தெரியுமா.''

அவர்கள் முகத்தில் அப்படியொரு பயம் அப்பியிருந்தது.

''நாங்க ஊருக்குப் புதுசு. எங்களுக்கு எதும் தெரியாது.''

மெல்ல நழுவிவிட்டார்கள்.

வடக்கு ரத வீதியிலுள்ள செட்டிமார் சத்திரத்துக்குப் போனார்கள். அங்கே தான் மேனேஜர் குத்தப்பட்ட கோலத்தில் மாண்டு கிடந்தார். பாதி உடம்புக்கு ரத்தம் படர்ந்திருந்தது. அங்கே வேறு யாருமில்லை. அவரது அக்காளும் சம்சார மும் மட்டுமே அழுது புலம்பிக்கொண்டிருந்தார்கள்.

''எங்கயோ நிம்மதியா இருந்தொம். இங்க வரவழச்சு மோசம் பண்ணிட் டாளே.''

''எங்கள இக்கதியாக்கிண்டு போயிட்டேளே.''

இன்ஸ்பெக்டர் குனிந்து மேனேஜரின் அக்காளிடம் கேட்டார்.

''எப்படி நடந்ததுன்னு தெரியுமா.''

அவள் உரக்க அழுதாள்.

''சண்டையத் தீத்துவைக்க வாங்கோன்னு கூட்டிண்டு போனா. அந்தச் சண்டையே இவனத் தீத்துடுச்சு. எப்படி நடந்ததுன்னு தெரியலயே.''

வேதக் கோயிலுக்கு நடந்தார்கள். கீழ ரத வீதியிலும் கடைகள் வீடுகள் மூடி யிருந்தன. அவர்களைப் பார்த்ததும் மிச்ச சொச்சத்தையும் அவசரமாகப் பூட்டி னார்கள். ஓரஞ்சாரமாகப் பதட்டத்தில் நின்றிருந்தவர்கள் ஓட ஆரம்பித்தார்கள். கூப்பிடாமல் யாரும் கிட்ட வருவதாக இல்லை.

மாதா கோயில் இன்னும் எரிந்துகொண்டிருந்தது. கூரை முழுக்க வெந்து குப்புற விழுந்துவிட்டது. முடிந்த அளவுக்கு அதுக்குள் நுழைந்து தேடினார்கள். யாரும் சிக்கியிருக்கவில்லை.

கோயிலுக்கு வடக்கே தேர் நின்றிருந்தது. தேர் மண்டபத்துக்குள் கழுகாசல மூர்த்தி அமைதியாகக் கொலுவிருந்தார். பட்டரும் அவருக்குத் துணையாக மூணு பேரும் காவலிருந்தார்கள். சப்மாஜிஸ்திரேட் பட்டருக்கருகில் போனார்.

''இங்க என்ன நடந்தது.''

பட்டர் அழுதுகொண்டே சொன்னார்.

''நான் மேல சாமிக்குப் பணிவிட செஞ்சிண்டுருந்தென். கீழ என்ன நடந்த துன்னு தெரியாது.''

சப்மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டரிடம் கேட்டார்.

''நாடார் தெருவுக்குப் போகலாமா.''

''பாத்தாகணும்.''

இதுவரை கூட வந்த கோயில் சிப்பந்திகளும் கிராம முன்சீப்பும் தயங்கி னார்கள்.

''நாங்க அங்க வரலய்யா.''

இன்ஸ்பெக்டருக்கு எரிச்சல்.

''ஏன்.''

''எங்களக் கொலசெஞ்சிருவாகளோன்னு பயமாருக்கு.''

ஏட்டும் தலையைச் சொறிந்தார்.

''ஆழ்வார்சாமி தனியாக் கெடக்காரு. போய்க் கவனிச்சுக்கிறனே.''

''அவங்களச் சொல்லும் ஒரு காரணமிருக்கு. ஒமக்கென்ன சட்டக்காரருக்கு.''

''அதுக்கில்ல...''

''எப்படியும் போங்க.''

ஆதிநாராயண சேர்வையும் அருவமில்லாமல் ஏட்டுடன் கழண்டுகொண்டார்.

கொஞ்ச தூரம் வடக்காமல் நடந்தால் நாடார் வீடுகள். நாலு தெரு. நூறு வீட்டுக்குக் குறையாது. எழுபது வீட்டுக்குமேல் எரிந்து கருகி பெரிய மயானமாகக் கிடந்தது. கார வீடுகளில் வாசல் நிலைகள் வெந்து கங்காக நின்றன. ஆண்கள் யாரும் தட்டுப்படவில்லை. சில பெண்கள் மட்டும் அழுதுகொண்டிருந்தார்கள். தயங்கித்தயங்கி வந்து முறையிட்டார்கள்.

''எல்லாம் தொலச்சிட்டு அனாதையா நிக்கிறமே சாமி. நாங்க என்ன பாவஞ் செஞ்சொம்.''

''எங்கள ஆதரிக்க ஆருமில்லையே.''

''காப்பாத்த வேண்டிய அதிகாரிகளே கழுத்த நெரிச்சா நாங்க எங்க போவொம்.''

''நீங்களாச்சும் காப்பாத்துங்க சாமி. எங்க புருசன் புள்ளீகள ஒப்படைக் கணும்.''

இன்ஸ்பெக்டர் ஆறுதல் சொன்னார்.

''வெசாரிச்சு நடவடிக்க எடுக்கத்தான் வந்துருக்கொம். அமைதியாருங்க.''

எரிந்த வீடுகளுக்குள் திருநீறாகச் சொரிந்திருந்த சாம்பலை மிதித்துக் கொண்டு மாடு மனுசர்களைத் தேடிப்பார்த்தார்கள். தெருவில் கூரை வீட்டுக்கு முன்னால் ஒரு உடல் அமைதியாக எரிந்துகொண்டிருந்தது. அந்த மனுசனின் இடுப்பில் சூரிக்கத்தி சொருகியிருந்தது. முகம் முழுசாக வெந்துவிட்டது. கால் களும் கைகளும் குட்டையாக இருந்தன. நன்றாக வெந்து நீந்துவிட்டாலுங்கூட அவ்வளவு குறுகாது. ஒருவேளை காலும் கையும் தறிக்கப்பட்டிருக்கலாம்.

இன்னொரு உடல் வீட்டுக்குள் விளக்காக எரிந்தது. சின்ன உருவம். குழந்தையாகத்தான் இருக்கும்.

விசாரணை நடத்தினார்கள். அடையாளம் சொல்ல யாரும் தயாராக இல்லை. அங்கே ரெண்டு போலீஸ்காரர்களை நிறுத்தினார்கள். அப்போது ஓடி வந்த ஒருவன் சொன்னான்.

''மேனேஜரு சடலத்தப் பாக்கச் சகிக்கல. கோரமா வீங்கீட்டே போகுது. வெசாரணைக்காக இனியும் வச்சிருக்க வேணாம். எங்களுக்கும் பொணத்துக்கும் பாதுகாப்பில்ல.''

செட்டிமார் சத்திரத்துக்கு விரைந்தார்கள். அங்கே ஏட்டு தாசில்தார் ராமசாமி பிள்ளை கிராம முன்சீப் இன்னும் சிலர் கூடியிருந்தார்கள். எல்லாரிடமும் விசாரணை நடந்தது. அங்கிருந்தவர்களும் சரி வெளியே இருந்தவர்களும் சரி மேனேஜரைக் கொலைசெய்தது யாரென்று ஒருவர்கூட வாய் திறக்கவில்லை. பல நாடார்களைக் கைதுசெய்த ஏட்டும் உடனிருந்த கிராம முன்சீப்பும் சொல்லவில்லை.

பிரேத விசாரணை தொடங்கியது. சைமன் சடலத்தை நெருங்கினார். கூடியிருந்தவர்கள் தடுத்தார்கள்.

''அதெப்படி இவரு பொணத்தத் தொடப்போச்சு.''

சப்மாஜிஸ்திரேட் எதார்த்தமாகக் கேட்டார்.

''இவருதானய்யா பரிசோதன நடத்த வேண்டியவரு. தடுத்தா எப்படி.''

''இவரு தொடப்புடாது.''

ஏட்டு சப்மாஜிஸ்திரேட் காதில் சொன்னார்.

''இவரு நாடாக்கமாரு. அதனாலதான்.''

''அப்படியா சங்கதி. பொணத்துக்கென்ன சாதி வேண்டிக் கெடக்குது. மேல் சாதிக்காரன் தொட்டா மட்டும் போன உயிரு திரும்பி வந்துருமா. ஒங்க சண்டையப் பெறகு வச்சுக்கங்க. இப்ப வேல நடக்கட்டும்.''

அவர்களைச் சம்மதிக்க வைப்பதற்குள் பெரும்பாடாகப் போயிற்று. முணுமுணுப்புடன் ஒத்துக்கொண்டார்கள். சைமன் முகத்தில் கோவமோ வருத்தமோ இல்லை. பெரிய துக்கம் மட்டும் நெஞ்சை அடைத்திருந்தது. அமைதியாகப் பிணத்தைப் புரட்டினார். பரிசோதனை முடியும்போது எங்கும் இருட்டு மெல்லமெல்லப் பரவிக்கொண்டிருந்தது.

## 10. வாக்குமூலம்

ஆக வேண்டிய வேலைகள் தலைக்கு மேல் இருந்தன. சப்மாஜிஸ்திரேட் மலைத்துப்போயிருந்தார். ராத்திரி என்ன நடக்குமென்று சொல்ல முடியாது. எதும் நடக்கலாம். ரோந்துக்கு ஏற்பாடு செய்துவிட்டால் கொஞ்சம் நிம்மதியாக இருக்கும். கைவசமிருக்கும் போலீஸ்காரர்களைக் கொண்டு ஒப்பேற்றணும்.

அடுத்து ஆழ்வார்சாமி நாய்க்கரைப் பார்க்கணும். கைதிகள் எப்படி இருக்கிறார்களோ. காயம்பட்டவர்களை விசாரிக்கணும். நிலைமை மேற்கொண்டு முற்றாமல் பார்த்துக்கொள்ளணும். அதுதான் முக்கியம். ஊரை அமுக்கியிருந்த அமைதி ரெம்ப உறுத்தியது. பயமுறுத்தவும் செய்தது.

மேலச் சத்திரத்துக்குப் போனார்கள். அங்கே ஆழ்வார்சாமி திக்கித் திணறிப் பேசினார். புரியவில்லை. என்னென்னமோ பக்குவம் செய்து அவரைத் தன்னு சாருக்குக் கொண்டுவர ரெம்ப நேரமானது. எல்லாவற்றுக்கும் ஆதிநாராயண சேர்வை கூட இருந்து ஒத்தாசனை செய்தார். ஆழ்வார்சாமி சிரமப்பட்டு வாக்கு மூலம் கொடுத்தார்:

> ''... அருணாசல நாடார் மேல்கோட்டு மறைவில் ஆயுதம் வைத்திருந்தார். அதைக் கொண்டு ஒருமுறை குத்தினார். அவர் பேர் அருணாசல நாடாரில்லை மகாலிங்க நாடார். அது இரும்பு மாதிரி தெரிந்தது. அவர் கத்தியால் மேனேஜரைக் குத்தினார்...''

கொஞ்ச நேரத்தில் ஒரு பேச்சு சப்மாஜிஸ்திரேட் காதில் விழுந்தது.

''கலகத்துக்குத் தப்பி ஓடுன நாடாங்க வானரம்பட்டியிலருந்தும் வேற ஊருகள்லருந்தும் ஆளுகளத் தெரட்டிக்கிட்டுப் பதிலடி குடுக்க வாறாங்களாம்.''

சப்மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டரிடம் சொன்னார்.

''அப்படின்னா நெலம ரெம்ப மோசமாயிருமே.''

''ஊரு முழுக்கச் சண்ட பரவீரும்.''

''மத்த ஊருகளையும் தொத்திக்கிரும்.''

''எத்தன கொல விழுமோ.''

''ஊர எப்படியும் காப்பாத்தியாகணும்.''

''அதுக்குச் சண்ட வராமப் பாத்துக்கிறணும்.''

மூலைக்கு மூலை ஆளனுப்பி கலகம் நடக்கிறதா நாடார்கள் வருகிறார்களா என்று பார்த்து வரச் சொன்னார்கள். நல்ல வேளை அப்படி எதும் நடக்கவில்லை.

முசாபுரி பங்களாவுக்குப் போனார்கள். அங்கே தெருவோரம் மருதக் கோனார் மயங்கிக் கிடந்தார். ஆபத்தான நிலைமை. முதுகில் வசமான கத்திக் குத்து. காயம் ஆழமாக இருந்தது. சைமன் மருந்து வைத்துக் கட்டுப்போட்டார். கோனார் பேசும் நிலையில் இல்லை. சுடுதண்ணீர் காபி பால் என்று கொடுத்தார்கள். ஒரு வழியாக நினைவு திரும்பியது. வாக்குமூலம் தந்தார்:

> ''...ஒரு நாடார் வாலிபன் வெட்டரிவாளால் என் வலது தோளுக்குப் பின்புறம் இருமுறை வெட்டினான். கடைசியாக இடது கையில் ஒருமுறை வெட்டினான். இப்போது அவன் அந்தச் சனங்களுடன்தான் இருக்கிறான்.''

அவருக்குப் பாதுகாப்பாக ஒரு போலீஸ்காரரை நிறுத்திவிட்டுக் கச்சேரிக்குப் போனார்கள். அங்கே குறுகலான இடத்தில் கைதிகள் நொறுங்கிச் சிதறிப்போய்ப் படுத்திருந்தார்கள். பெரும்பாலானவர்களுக்குக் காயம் இருந்தது. இன்ன இடம் என்றில்லை. சைமன் எல்லாருக்கும் மருந்து தடவினார். அப்போதுங்கூட அவர் ஒரு வார்த்தை பேசவில்லை.

ரெம்பப் பிரயாசைப்பட்டுச் சாப்பாட்டுக் கடைக்காரரைப் பிடித்துவந்து கைதிகளுக்குச் சாப்பாடு பண்ணச் சொன்னார்கள். வேதமுத்தை நினைத்து மிக்கேல் பிள்ளை விக்கிவிக்கி அழுதுகொண்டிருந்தார்.

''கூடவே இருந்த மனுசன் கலகத்துல மாண்டுபோயிட்டாரே. ஆண்டவரே இதென்ன சோதன.''

அவருக்குச் சாப்பாடு செல்லவில்லை. உறக்கம் பிடிக்கவில்லை.

சப்மாஜிஸ்திரேட் வெளியே நின்றிருந்த ஆதிநாராயண சேர்வையை ஏவினார்.

''ஆழ்வார்சாமி எப்படியிருக்காருன்னு பாத்துட்டு வாயேன்.''

கைதிகளை அவரிடம் காட்டலாமே. அடையாளம் சொன்னால் தோதாக இருக்கும்.

சேர்வை மேலச் சத்திரத்துக்கு ஓடித் திரும்பினார்.

''நெலம ரெம்ப மோசமாருக்கு. பேச்சு வுழுந்துருச்சு.''

''அடடா.''

''இனியொரு சேதியும் கேள்விப்பட்டென். அவரோட தாயாரு ஆளுகளத் தெரட்டிக்கிட்டு வந்துருக்குதாம். நாடாக்கமாரப் பழிக்குப் பழி வாங்கப் போறதாப் பேசிக்கிறாக.''

''அப்படியா. நம்ம ஒடனே அங்க போயாகணும்.''

மேலச் சத்திரத்தைச் சுற்றி ஏகப்பட்ட கூட்டம். நெரிசலைக் கலைத்துக் கஷ்டப்பட்டு உள்ளே போக வேண்டியிருந்தது. ஆழ்வார்சாமி சகலமும்

அடங்கிச் சட்டடியாகக் கிடந்தார். மூச்சு மட்டும் இருக்கும் அறிகுறி தெரிந்தது. அவரது தாயார் ஆவேசமாக அழுது அரற்றினாள்.

''நான் பெத்த மகனே நீ போன பெறகு நான் இருந்து என்ன செய்ய. பொட்டத்தனமாக் குத்துனவனச் சும்மா வுட மாட்டென். அவன் உசிர எடுத்தாத்தான் மனசாறும். இருடா வாறென்.''

தாயாரின் அழுகையை லேசுக்குள் கட்டுப்படுத்த முடியவில்லை. சன்னஞ் சன்னமாகக் கோவம் தணியும்வரை காத்திருக்க வேண்டியிருந்தது.

அரண்மனைச் சத்திரத்தில் பஞ்சநாதய்யர் படுத்திருந்தார். கையில் பெரிய கட்டு. வலியில் முனங்கினார். ஆனாலும் தெம்பாகவே இருந்தார். அவரது உயிரைப் பற்றிக் கவலையில்லை. தனக்கு நேர்ந்த கதையைச் சொன்னார். அது வாக்குமூலமாகப் பதிவு செய்யப்பட்டது:

> ''...நான் மேனேஜருக்கருகில் போனேன். அவரை நிறுத்துவதற்காகக் கைநீட்டினேன். அப்போது பந்தலுக்கு வடபுறமிருந்து என்னை நோக்கிப் பாய்ந்துவந்த ஒரு நாடார் நீட்டியிருக்கும் என் வலது கையில் பாளை யரிவாளால் ஒரு வெட்டு வெட்டினார். மேனேஜர் திரும்பிப் பார்த்தார். அப்போது ஒருவர் அவரை ஆயுதத்தால் குத்தினார்...''

உசேன் ராவுத்தர் கோயிலருகே கட்டிலில் பேச்சற்றுக் கிடந்தார். ரெண்டு தோளிலும் குத்துக் காயம். அவரைக் கவனிக்க யாருமில்லை. கஞ்சி தயார் பண்ணச் செய்து கொடுத்தார்கள். எவ்வளவோ பக்குவம் பார்த்துத் தயார்படுத்தி யும் அவரை விசாரிக்க முடியவில்லை. முனக்கம் மட்டுமே கேட்டுக்கொண் டிருந்தது.

கல்லெறிக் காயத்தில் அரண்டுபோயிருந்த சுந்தரமய்யரை விசாரித்தார்கள். அவர் முகத்தில் பயம் குடியிருந்தது. அந்தப் பயத்திலேயே பேசினார். அவர் சொன்னது வாக்குமூலமானது:

> ''...மேனேஜர் பந்தலுக்குப் போய்ச் சண்டை போட வேண்டாம் என்று சனங்களைக் கேட்டுக்கொண்டார். அவர் இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும்போது அவருக்கு வலது பக்கமாக வந்த ஒரு நாடார் அவரது அடிவயிற்றில் கத்தியால் குத்தினார். கிழக்குப் புறமாக அவர் மேனேஜரைச் சுற்றி வந்தார். இந்தச் சம்பவம் நடப்பதற்கு அரை நாழிகைக்கு முன்னால் கொலையாளி கத்தி வைத்திருந்ததைப் பார்த்தேன். மேனேஜர் கீழே சாய்ந்தார். அவருக்குப் பக்கத்தில் நின்றிருந்த நான் அவரைத் தாங்கிப் பிடித்தேன். என் வலது கண்ணுக்குக் கீழே ஒரு வெட்டு விழுந்தது...''

சப்மாஜிஸ்திரேட்டும் இன்ஸ்பெக்டரும் சாப்பாட்டை முடிக்கச் சாமத்துக்கு மேலாகிவிட்டது. மறுபடியும் வேலைகளைத் தொடர்ந்தார்கள். ராத்திரி ரோந்துக்கு ஏற்பாடு செய்வதுதான் முக்கியமான வேலை. மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டரிடம் சொன்னார்.

''ஒவ்வொரு எடத்துலயும் ஒவ்வொரு கான்ஸ்டபிள் நிக்கிற மாதிரி பாத்துக்கங்க.''

''சரி''.

''எல்லா ஏற்பாடுகளையும் நீங்க அப்பப்பக் கவனிச்சுக்கிறணும். அசம்பா விதம் எதும் நடந்துறக் கூடாது.''

''நான் பாத்துக்கிறென்.''

அவ்வளவு அலுப்புக்கிடையிலும் சப்மாஜிஸ்திரேட் மேலதிகாரிகளான டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கும் கலெக்டருக்கும் ரிப்போர்ட் எழுத ஆரம்பித்தார். மருந்தும் மற்ற பொருட்களும் வாங்குவதற்காக சைமன் ராவோடு ராவாக சங்கரன்கோயிலுக்குப் புறப்பட்டுப் போனார்.

அரண்மனை ஏற்கெனவே அவசர கதியில் காலியாகிவிட்டது. வில்வண்டி களும் பல்லாக்குகளும் குதிரைகளும் வேகமாக எட்டயாபுரத்துக்குத் திரும்பின. வரும்போதிருந்த சந்தோசம் போகிற வழியில் தொலைந்துவிட்டது.

ஆழ்வார்சாமியின் நிலைமை இன்னும் மோசமாகிவிட்டதாகத் தகவல் வந்தது. எல்லாம் கைமீறிப் போய்விட்டது. இனி ஒண்ணும் செய்ய முடியாது. நடக்கிறபடி நடக்கட்டும். சப்மாஜிஸ்திரேட்டுக்கு உள்ளேயும் இருட்டிக்கிடந்தது. சற்றுக் கண்ணயர்ந்தார்.

**அ**தே ராத்திரி. பெரிய சாமியார் கௌசானல் காமயநாய்க்கன்பட்டியை அடுத்துள்ள குருவிநத்தத்தில் தங்கியிருந்தார். கழுகுமலைச் சம்பவம் பற்றி நேரமிருக்கவே தகவல் கிடைத்துவிட்டது. கோயில்பட்டி உபதேசியார் ஆரோக்கியசாமி இருட்டில் ஓடிவந்து விவரம் சொன்னார்.

''சாமி கழுகுமலையில பெரிய சண்டையாகிப்போச்சு. எட்டயாபுரம் சமீன் மேனேசரக் குத்திக் கொன்னுட்டாங்க. இந்துக்காரங்க தெரண்டு வந்து நம்ம வேதக்காரங்க வீடுகளக் கொளுத்தீட்டாங்க. அதுல அஞ்சாறு உசிரு போச்சு.''

சாமியார் அதிர்ந்துபோனார். கொஞ்ச நேரம் வாயெழும்பவில்லை. திகைப்பை விழுங்கிவிட்டுக் கண்ணை மூடினார்.

''ஆண்டவரே உம்முடைய விசுவாசிகளுக்கு இப்படியொரு சோதனையா.''

ஆரோக்கியசாமி முகத்தைத் துடைத்துக்கொண்டார்.

''கோர்ட்ல பணங்கெட்றதுக்காக மொதலாளி தூத்துக்குடிக்குப் போயிட் டாரு.''

''திரும்பி வரலயா.''

''இண்ணைக்குத் திரும்ப வேண்டியவரு. வாற வழியில அவரத் தீத்துக் கெட்டத் திட்டம்போட்டுக் கழுகுமலையிலருந்து கொஞ்சம் மறவருக பெறப் புட்டுப் போயிருக்கிறதாத் தெரிஞ்சது. ஒடனே நம்மாளுக ரெண்டு பேர அனுப்பி அவர தூத்துக்குடியிலயே தாக்காட்டி வைக்கிறதுக்கு ஏற்பாடு செஞ்சாச்சு.''

''அப்படியா. அவர் முக்கியமானவராச்சே. பங்குச் சாமியார் என்ன ஆனார்.''

''அவர பாதுகாப்பா ஊர வுட்டுக் கடத்தி அனுப்பி வச்சாச்சு. இதுக்குள்ள தூத்துக்குடி போயிச் சேந்துருப்பாரு.''

''நல்லது.''

கழுகுமலையில் நடந்திருக்கக்கூடிய சம்பவங்கள் பெரிய சாமியாரின் நினைவில் நிழலாடின. ராத்திரி முழுக்க செபித்துக்கொண்டே உட்கார்ந்திருந்தார்.

## 11. என் அஞ்ஞையில்ல...

பொழுது இருட்டிய பிறகும் பள்ளக்குடியில் பதட்டம் தணியவில்லை. பெண்கள் அங்குமிங்குமாக அலைமோதினார்கள்.

''கொட்டடிக்கென் கொழலூதுறென் தேருக்குக் கட்ட போடுறன்னு விடியாம வீட்ட வுட்டுக் கௌம்புன ஆம்பளைக ஒருத்தங்கூட வரலயே. என்னாச்சு இவுகளுக்கு.''

''வேனா வெயில்ல நாடாக்கமாரு வீடுக வேகுதே. அது நம்ம வீடுகளப் பத்திக்கிட்டா என்ன செய்றதுங்கிற பயம் நெஞ்சில இல்ல பாரு.''

''பொண்டாட்டி புள்ளீக திண்டாடுவாகளேன்னு அறிவு வேணாமா.''

''உசிரக் கையில ஏந்திக்கிட்டு நம்ம அலஞ்சது அவுகளுக்கெங்க தெரியும்.''

''நம்ம வீடுகளும் எரிஞ்சிருந்தா என்ன கெதியாயிருக்கும்.''

''எடுத்தேறி மறுபடியும் கூர மேயிறதுக்கு வக்கிருக்குதா.''

''எல்லாரும் பஞ்சம் பெழைக்கப் போக வேண்டியதுதான்.''

''அப்படியென்ன தேரோட்டம் வேண்டிக்கெடக்கு.''

''தேரத்தான் இழுத்து நடுத்தெருவுல நிறுத்தீட்டாகளே.''

''என்னதான் கோவமிருந்தாலும் கோயிலக் கொளுத்தலாமா. அந்தச் சாமி என்ன செஞ்சது.''

''அது பெரிய பாவம். சும்மா வுடாது.''

''எத்தன உசிருதான் மாண்டதோ.''

''இதுல நம்ம குடும்பருக நெலம என்னன்னு தெரியலயே.''

''அவுகளுக்குள்ள சண்ட போட்டுக்கிட்டா இவுகளுக்கென்ன. பேசாம வீட்டுக்கு வர வேண்டியதுதான.''

''இவுக கையி சும்மாருக்குமாக்கும். குடும்பான்னா கொத்து வேணாமிங்கிற சாதியாச்சே. ஒனக்காகுமாடான்னா உசிர வுடுவானே.''

''மேகலக் குடியாளுக இவுகளக் கூப்புட்டுத் தனியாப் பேசிக்கிட்ருந்ததப் பாத்தனே. அப்பயே ஒரு பயம் தட்டுச்சு ஊருக்குள்ள என்னமோ நடக்கப் போகுதுன்னு. அதே மாதிரி நடந்துபோச்சே.''

''இனியும் என்னென்ன நடக்கப்போகுதோ.''

''அரமனைய அண்டிப் பெழைக்கொம். அவுக சொல்லத் தட்ட முடியுமா. இல்ல மேகலக் குடிச் சனங்க பேச்சத்தான் மீற முடியுமா.''

''மீறி நடந்தா நமக்கு இங்க குடியிருப்பில்ல.''

மூக்காயிக்கு வேதனை சொல்ல முடியாது. பதறித் தவித்தாள். குடும்பத்தில் ரெண்டே பெண்கள். அடுத்தடுத்து சமைந்து உட்கார வேண்டிய பருவம். புருசன் குமராண்டியை நம்பின பிழைப்பு. அரண்மனை நிலத்தில் கொஞ்சம் குத்தகைக்குப் பிடித்து வெள்ளாமை செய்தார்கள். அவள் கூலி வேலைக்குப் போவாள். மாட்டுத் தாவணி நடக்கும் சமயங்களில் புல்லறுத்து விற்பாள்.

அவள் குடும்பத்தைப் போலவே பள்ளக்குடியில் மற்ற குடும்பங்களுக்கும் அரண்மனைக்கும் ஏதாவது ஒரு விதத்தில் தொந்தம் உண்டு. நிலங்களைக்

குத்தகைக்குப் பார்ப்பார்கள். இல்லை அங்கே பதிவாகக் கூலிவேலை செய்வார்கள். சிலர் அரண்மனைத் தானியங்களை அளக்கிற வேலையும் செய்தார்கள்.

அரண்மனைத் தெம்பு இருப்பதால் பள்ளக்குடியில் யாரும் கைவைக்க முடியாது. ஆனாலும் கூட்டத்தில் எக்குத்தப்பாகச் சிக்கிக்கொண்டால் என்ன செய்ய முடியும்.

அவள் பிள்ளைகளைப் படுக்க வைத்துவிட்டுச் சாமம்வரை வாசலில் உட்கார்ந்திருந்தாள். புருசன் எப்படியும் வந்துவிடுவான். அவனுக்கு ஒண்ணும் ஆகாது. கண்ணைக் கட்டிக் கிறக்கமாக இருந்தது. காலையில் ஒரு வாய்க் கஞ்சி குடித்தது. வாசல் நிலையைப் பற்றி எழுந்து திருணையில் முடக்கினாள். உறக்கம் கண்ணைச் சாத்தும்போது ரெம்ப நேரம் ஆகிவிட்டிருந்தது.

சொற்ப உறக்கத்திலும் சொகமான கனா வந்தது.

மேலவெயில் முற்றத்தில் படர்ந்திருக்கிறது. அவள் வெளித் திண்டில் தலைகவுந்து விசாரமாக உட்கார்ந்திருக்கிறாள். கூரை எரவார நிழல் குடைபிடித்திருக்கிறது. கருவாட்டுப் பேட்டையிலிருந்து வரும் கருகல் வாடை இன்னும் குறையவில்லை.

''ஒரு கருவாட்டுத் துண்டுகூட மினுங்கப் போட்டுக் குடுக்க மாட்டாக. தங்கமா நிறுத்துத் தருவாக. துட்டுச் சேத்துப் பெழைக்கணும்னா அப்படித்தான் இருக்கணும். தூத்தெறிச்சுப் பெழைக்கணும்னா எப்படியும் இருக்கலாம். எப்பேர்ப்பட்ட பேட்ட. சிப்பஞ்சிப்பமா கருவாடு குமிஞ்சு கெடக்கும். எத்தன வகதான்னு இல்ல. அதப் போயிக் கொளுத்தியிருக்காகளே.''

முற்றத்தில் காலடியருவம் கேட்கிறது. ஏறிட்டுப் பார்த்தால் ஒரு முக்காட்டுப் பெண் அமைதியாக நிற்கிறாள். கிட்ட வந்து உற்றுப் பார்த்தும் அடையாளம் தெரியவில்லை.

''ஆரு தாயி.''

பெண்ணின் அரளிப்பூ முகத்தில் குறுஞ்சிரிப்பு கோடிடுகிறது.

''தாகமாருக்கு. தண்ணி கெடைக்குமா.''

''ஆருன்னு சொல்லலயே தாயி.''

''மாதா.''

மூக்காயி திகைக்கிறாள்.

''மாதாவா. எந்த மாதா. கொஞ்ச நாளைக்கு முந்தி நாடாக்கமாரு கோயிலுக் கெட்டிக் குடியமத்துன மாதாவா.''

''ஆமா.''

''அஞ்ஞாடி ஒருச் சாயலுக்கு எங்க காளியம்மா மாதிரியே இருக்கயே. உள்ள வந்து உக்காரு தாயி. எனக்குக் கையும் ஓடல காலும் ஓடலயே... அடியே வள்ளியம்மா இல்லிக்கண்ணி கருப்பாயி தேவான... இங்க வந்துருக்கிறது ஆருன்னு பாருங்களேன்.''

கூடிக் குசுகுசுத்துக்கொண்டிருக்கும் பெண்களைக் கூப்பிடுகிறாள். மாதா வாசலுக்கு நடக்கிறாள்.

''நெலையில தட்டாம குனிஞ்சு வாம்மா. எங்க வீடுக இப்படித்தான் இருக்கும்.''

மூக்காயி அவசரமாகத் திருணையில் பாய் போடுகிறாள். மாதா அதில் உட்கார்ந்து முக்காட்டு முந்தானையை எடுத்து முகந் துடைத்துக்கொள்கிறாள். மூக்காயி தகரப் போகணியை நன்றாகக் கழுவி மண்பானையில் தண்ணீர் கோலி வந்து கொடுக்கிறாள். மாதா மிச்சம் வைக்காமல் குடித்துவிட்டுப் பெருமூச்சு விடுகிறாள்.

''இனியுங் கொஞ்சம் குடிச்சுக்கிறயாத்தா. கெறங்கிப்போயிருக்கயே. கம்மங் கஞ்சி கரச்சுத் தரட்டுமா. கடிச்சுக்கிறதுக்குப் பக்குவமா கருவாடு மொளகா வதக்கியிருக்கென்.''

''வயிறு நெறஞ்சிருச்சு.''

''தண்ணி குடிச்சு வகுறு நெறஞ்சிருச்சாக்கும்.''

இதுக்குள் பல பெண்கள் வாசலை மொய்த்துவிடுகிறார்கள். இல்லிக்கண்ணி மாதாவைப் பார்த்துவிட்டு மூக்காயிடம் திரும்புகிறாள்.

''விருந்தாளு ஆருக்கா.''

''வேதக் கோயிலு மாதா.''

எல்லாரும் ஆச்சரியத்தில் முழிக்கிறார்கள். வள்ளியம்மா வருத்தப்படுகிறாள்.

''மாதாவப் பாக்கணும்னு எங்களுக்கு அப்படி ஆச. என்ன செய்றது வுடமாட்டாகளே.''

மூக்காயிக்குச் சந்தோசம் தாங்கவில்லை.

''என்னப் பெத்த அஞ்ஞு. அதனால எங்களத் தேடி வந்துட்டயாக்கும்.''

மாதாவின் முகம் வாடுகிறது.

''கோயிலுக்கு முன்னால பெரிய சண்ட போலருக்கு. நெறைய பேரு கோயிலுக்குள்ள வந்து கதவப் பூட்டிக்கிட்டாங்க. வெளியருந்து கதவ இடிக்க உள்ளருந்து தடுத்துப்பாத்தாங்க. முடியல. தொறந்து எல்லாரும் வெளிய ஓடீட்டாங்க. நான் தனியா இருந்தென். கோயில் பந்தலும் கூரையும் தீயில எரிய ஆரம்பிச்சிருச்சு. உள்ள அனல் தாங்க முடியல. கஸ்டப்பட்டு வெளிய வந்து பாத்தென். வீதி வெறிச்னு கெடந்துச்சு. கோயிலுக்குப் பக்கத்துல பெரிய தேர் நின்னது. இந்தப் பக்கம் வந்தா நெறைய வீடுக எரிஞ்சுக்கிட்ருந்தது. இங்க வந்துட்டென்.''

''கோயிலக் கொளுத்துனவன் வெளங்காமப்போயிருவான்.''

கூடியிருந்தவர்களை ஒரு கவலை பிடித்துக்கொள்கிறது. கமுக்கமாகப் பேசுகிறார்கள்.

''மாதா இங்கருக்கிறது நல்லதில்ல. இதென்ன வெளையாட்டுக் காரியமா.''

''ஏக்கி அறிவு கெட்டவளே. குடியிருந்த எடத்த வேகக் குடுத்துட்டு இந்த நெலமையில எங்கடி போகும்.''

''நாடாக்கமாரு தெருவுக்கும் போக முடியாது. மேகலக் குடிக்கும் போக முடியாது.''

''பெறகு எங்கதான் போறது.''

''இந்த ஊர வுட்டுப் பத்தரமா எங்கயாச்சும் அனுப்பிவச்சிருவொம். இங்க மட்டும் இருக்கப்புடாது.''

''ஒண்ணு செய்வொம். எல்லாருமாச் சேந்து மலைக்கு வடக்குப் பக்கமாக் கூட்டீட்டுப் போயி கம்மாக் கரையில வுட்ருவொம். ஆருக்கும் தெரியாமப் போயிறட்டும்.''

''அங்கருந்து எங்க போகும்.''

''எங்கயாச்சும் வேதக் கோயிலு இருக்குமில்ல.''

''அப்படிச் சொல்றயா.''

''இந்நேரம் பாத்து ஒரு ஆம்பளகூட இல்லையே.''

''இல்லாறது நல்லதுன்னு சொல்லு.''

வள்ளியம்மா மூக்காயிடம் இந்த யோசனையைச் சொல்கிறாள். மூக்காயிக்கு மனசில்லை.

''வீட்ட வுட்டுக் கெளம்புன்னு எப்படித்தா சொல்றது. அதோட மனசு என்ன பாடுபடும்.''

''நல்லதுக்குத்தான சொல்றொம்.''

''நீ வந்து சொல்லு.''

''வீட்டுக்காரி இருக்கயில நான் சொன்னா நல்லாவா இருக்கும்.''

மூக்காயி தயங்கித் தயங்கி மாதாவை நெருங்குகிறாள்.

''தாயி...''

மாதா சிரிக்கிறாள்.

''அப்ப நான் கெளம்பட்டுமா.''

எல்லாரும் முகத்தைமுகத்தைப் பார்த்துக்கொள்கிறார்கள். மூக்காயிக்குத் தயக்கம் போகவில்லை.

''எங்க தாயி...''

''இந்த ஊர விட்டுத்தான். எனக்கு எத்தனையோ வீடிருக்கு தங்குறதுக்கு.''

''நாங்க எல்லாரும் வந்து பத்தரமா அனுப்பிவைக்கம்மா.''

''யாராவது ஒரு பெண் வந்து வழிகாட்னாப் போதும்.''

மாதா மறுபடியும் முக்காடு போட்டுக்கொண்டு புறப்படுகிறாள். வள்ளியம்மாளும் மூக்காயும் துணைக்குப் போகிறார்கள். மற்றவர்கள் வாயடைத்துப் போய் நிற்கிறார்கள்.

முன்னால் வள்ளியம்மா நடுவில் மாதா பின்னால் மூக்காயி. மலைக்கு வடபுறப் பாதையில் அமைதியாக நடக்கிறார்கள். ஆம்பலூருணியில் ஆள் நடமாட்டமில்லை. ஊருணியின் வடகரையோரம் தினைப்புன மண்டபம் தெரிகிறது. மண்டபத்து மேடையில் ஏகக் கூட்டம். ஒரு வார்த்தைகூடப் புரியாத பேச்சுச் சத்தம் மரத்தை மொய்க்கும் குருவிக் கூச்சலாகக் கேட்கிறது.

நின்று கவனிக்கிறார்கள். அத்தனையும் குறவர் கூட்டம். மூக்காயி அவசரப் படுத்துகிறாள்.

''அவுக கண்ணுல படாமப் போயிருவொம்.''

வயல் வரப்பில் விலகி நடக்கிறார்கள். தடுமாறும் மாதாவை வள்ளியம்மா பிடித்துக்கொள்கிறாள். அப்போது மண்டபத்திலிருந்து ஒரு ஆண் குரல் கேட்கிறது.

''நல்ல வழியிருக்க ஏன் விலகிப் போகிறீர்களம்மா.''

அவர்கள் நிற்கிறார்கள். மூக்காயிக்குச் சந்தேகம்.

''இது கொறவரு பேச்சு மாதிரி இல்லையே.''

''வேற ஆராருக்கும்.''

குறவர்கள் களிப்பில் கலைந்து போகிறார்கள். மண்டபத்திலிருந்து இறங்கி ஒருவர் மாதாவை நோக்கி வருகிறார்.

''நில்லுங்களம்மா. நான் துணைக்கு வருகிறேன்.''

மண்டபத்தில் ஒரு பெண் மட்டும் அமர்ந்திருப்பது தெரிகிறது. மூணு பேரும் வரப்பிலிருந்து பாதைக்குத் திரும்புகிறார்கள். எல்லாரும் பாதையில் சந்திக் கிறார்கள். அவர் மாதாவைப் பார்க்கிறார்.

''நீங்கள் மாதாதானே.''

''ஆமா. நீங்க...''

''நான் முருகன். இவ்வூர் குடவரைக்குள் குடியிருப்பவன். வாருங்கள். மண்டபத்துக்குப் போய்ச் சற்று இளைப்பாறலாம்.''

''அப்படியா. ரெம்பச் சந்தோசம்.''

மூக்காயிக்கும் வள்ளியம்மாளுக்கும் நாவெழும்பவில்லை. முருகனுக்குப் பின்னால் நடக்கிறார்கள். முருகன் அவர்களைக் கடிந்துகொள்கிறார்.

''ஏனம்மா நீங்கள் மாதாவை இப்படி வருத்தி அழைத்து வரலாமா.''

அப்போதும் அவர்களுக்குப் பேச்சு வரவில்லை. மண்டபத்தை அடை கிறார்கள். அங்கே அமர்ந்திருக்கும் பெண்ணை முருகன் மாதாவுக்கு அறிமுகப் படுத்துகிறார்.

''இவள் என் துணைவி வள்ளி.''

வள்ளி எழுந்து வணங்கிவிட்டு மாதாவினருகில் உட்கார்ந்துகொள்கிறாள். வள்ளிக்குச் சொல்கிறார்.

''அவர் தேவமாதா. அவர்கள் துணைக்கு வந்த பெண்கள்... உங்கள் பெயர் களைத் தெரிந்துகொள்ளலாமா.''

''எம் பேரு வள்ளியம்மா.''

வள்ளிக் குடும்பச்சியும் வள்ளிக் குறத்தியும் பார்த்துச் சிரித்துக்கொள் கிறார்கள். இருவரையும் மாதா அர்த்தத்துடன் பார்க்கிறாள்.

''எம் பேரு மூக்காயி. வீட்டுக்காரன் பேரு கொமராண்டி.''

முருகன் சிரிக்கிறார்.

''என் பெயரும் துலங்குகிறதென்று சொல்லுங்கள்.''

''அதுக்கொண்ணும் கொறச்சலில்ல சாமி. வீட்டுக்கு வீடு முருகாண்டி வேலாண்டி கழுகாசலம் கந்தன் சுப்பன் வள்ளியம்மா தேவானன்னு எல்லாப் பேரும் உண்டு. ஒங்களக் கும்புடாற கையி கெடையாது. ஒங்க சன்னதிக்குத்தான் வர முடியல. அதொண்ணும் பெரிய கொறையில்லய்யா. நீங்க எங்க மனசுக் குள்ள குடியிருக்கயில சன்னதியென்ன பெரிய சன்னதி. நாங்க சன்னதியில நிக்கிற காலம் வராமயா போயிரும். இந்த மாதாவப் பாக்கணும்னு ஆசப்பட் டொம். புண்ணியவாட்டி எங்களத் தேடி வந்துருச்சு. ஒங்கள நேருல பாப்பம்னு நெனச்சுக்கூடப் பாத்துருப்பமா. இந்தா கண்குளூரப் பாத்துக்கிட்டொம். யாத்தா வள்ளி ஒன் அழகுக்கு நகநட்டு எம்மாத்தரம். எதுமே போட்டுக்கிறாம ரெண்டு பேரும் இப்படியே இருங்க.''

மூக்காயின் கண்கள் பனிக்கின்றன. அவள் கை முந்தானையைத் தேடுகிறது. முருகன் மாதாவைப் பரிவுடன் நோக்குகிறார்.

''நடந்ததெல்லாம் எனக்குத் தெரியும். வெறுப்பாக இருக்கிறது.''

''எம் மகனப் பறிகொடுத்த வேதனையிலருந்தே நான் இன்னும் மீளல.''

''கண்ணுக்கு முன்னால் உங்கள் கோயில் கொழுந்துவிட்டு எரிவதைப் பார்க்கச் சகிக்கவில்லை. தேரிலிருந்து இறங்கி வந்துவிட்டோம். தெய்வானையை எங்கள் கோயிலில் இருக்கச் சொல்லிவிட்டு வள்ளியுடன் வந்தேன்.''

''அந்த மருமகளவும் கூட்டி வந்துருக்கலாமில்ல.''

''அவள் வரத்தான் விரும்பினாள். கோயிலில் ஒருவராவது இருக்கட்டுமே என்று நான்தான் சமாதானப்படுத்திவிட்டு வந்தேன்.''

''நீங்க இங்க எதுக்காக வந்தீக.''

''தேரோடும் நாட்களில் குறவர்கள் எங்களைப் பார்க்க இங்கே வருவது வழக்கம். எங்கள் உறவினர்களாயிற்றே.''

''எப்படி.''

''வள்ளி அவர்கள் வீட்டுப் பெண்ணாக்கும்.''

''சரியாப்போச்சு.''

மாதா வள்ளியைக் குறும்புடன் பார்க்கிறாள். வள்ளி வெட்கத்தில் தலை குனிகிறாள். முருகனுக்குக்கூட வெட்கம்.

''திருவிழாச் சமயத்தில் ஒரு நாள் அவர்கள் திரளாகத் தினைப்புன மண்டபத்துக்கு வந்து வள்ளியைப் பெண்பேசி எனக்குக் கைப்பிடித்துக் கொடுப்பதும் அதை அவர்கள் கொண்டாடுவதும் களிப்பான அனுபவம். கருவறைக்குள் புழுங்கிக் கிடப்பதைவிட இப்படி விசாலமான இடத்தில் காற்றோட்டமாக மக்களுடன் கலந்து அளவளாவும் சுகத்துக்கு ஈடிணை கிடையாது. தேரோட்டமும் அது மாதிரிதானே... இல்லையா வள்ளி.''

வள்ளியின் முகம் பெருமிதத்தில் மலர்கிறது. மாதா முருகனைப் பாசத்துடன் பார்க்கிறாள். முருகனுக்குள் தன் மகனைக் கண்டுகொண்ட ஆனந்தம். மூக்காயிக்கும் வள்ளியம்மாளுக்கும் அழணும் போலிருக்கிறது.

முருகன் மாதாவைக் கேட்கிறார்.

''நீங்கள் இப்போது எங்கே போவதாக உத்தேசம்.''

''இன்னொரு கோயிலுக்குப் போகலாம்னு நெனச்சிருந்தென். அங்கயும் இப்படி நடந்துட்டா மனசு தாங்காது. அதனால கர்த்தரோட எடத்துக்கே போயிறென்.''

''சற்றுப் பொறுத்துக்கொள்ளுங்கள். நான் பாதுகாப்பாக அனுப்பிவைக்கிறேன்.''

முருகன் மலையை நோக்கிக் குரல் கொடுக்கிறார்.

''மயில்வாகனா...''

மலையிலிருந்து நீண்ட கூவல் கேட்கிறது. கொஞ்ச நேரத்தில் மண்டபத்தை வட்டமிட்டு மயில் வந்து நிற்கிறது. முருகன் அதைத் தட்டிக்கொடுத்து வருடுகிறார்.

''நமது மாதாவை அழைத்துச் செல்ல வேண்டும்.''

அது கழுத்தைத் திருப்பி கண்ணால் கேட்கிறது.

''எங்கே.''

''அவர்கள் விரும்பும் இடத்துக்கு.''

மாதா தயங்குகிறாள்.

''நானா. இதுலயா.''

மயில் சிறகுகளை மேல் வாக்கில் வளைத்தும் தோகைகளை விரித்தும் மாதா அமர்வதற்கு ஆசனம் அமைத்துக்கொடுக்கிறது. முருகன் அதன் நீலக் கழுத்தை நீவுகிறார்.

''ஆசனம் தயாராகிவிட்டது. தயக்கமில்லாமல் அமருங்கள் தாயே.''

மூக்காயி வற்புறுத்துகிறாள்.

''ஏறி உக்காந்துக்கோ தாயி. என் அஞ்ஞையில்ல.''

வள்ளியின் உதவியுடன் மாதா கூச்சத்தில் மயில் மீதேறி அமர்கிறாள். அவள் கைகள் சிறகுகளைப் பிடித்திருக்கத் தோகை விரிப்பில் வசதியாகச் சாய்ந்துகொள் கிறாள். முருகனுக்குப் பெருமையாக இருக்கிறது.

''சென்று வாருங்கள் தாயே. பயணம் இனிதாகட்டும்.''

இன்னொரு கூவல். மயில் மண்டபத்தின் விளிம்புக்கு நடந்து மாதாவையும் முருகனையும் திரும்பிப் பார்த்துவிட்டு உயரப் பறந்து அந்தரத்தில் நீந்த ஆரம்பிக் கிறது. ஊருக்குள் இன்னும் எரிந்துகொண்டிருக்கும் நெருப்பின் பெருமூச்சாகக் கிளம்பும் புகை மண்டலம் வானத்தை மறைத்து விரித்திருக்கும் கருப்புத் திரையைக் கிழித்துக்கொண்டு செல்லும் மயிலின் உருவம் மறையும்வரை அண்ணாந்து பார்த்தபடி முருகனும் வள்ளியும் அசையாமல் நிற்கிறார்கள். மூக்காயிக்கும் வள்ளியம்மாளுக்கும் அவ்வளவு தொலைவுவரை பார்க்கக் கொடுத்துவைக்க வில்லை. விரைவிலேயே கண்ணீர் மறைத்துவிடுகிறது.

முருகன் அவர்களிடம் விடைபெறுகிறார்.

''நாங்கள் போய்வருகிறோம் அம்மா. தெய்வானை அங்கே தனியாக இருப்பாள். அம்மையும் அப்பனும் இல்லை. ஒரு முக்கிய வேலையாக பெரிய மலைக்குப் போயிருக்கிறார்கள்.''

அவர்கள் கைகூப்பி வழியனுப்ப ஆம்பலூருணிக் கரையில் முருகன் துணை யுடன் இணையாகக் கோயிலை நோக்கி நடக்கிறார். இப்போது குடும்பச்சிகளின் கண்கள் ஊருணியாகப் பெருக்கெடுக்கின்றன.

விடியக்காலம் கதவைத் தட்டும் சத்தம் கேட்டு மூக்காயி பதறியெழுந்து திறந்தாள். வேர்த்து விருவிருத்து குமராண்டி நின்றிருந்தான்.

''பத்தரமாப் போயிச் சேந்துட்டீகளா.''

அவன் மூச்சு வாங்கினான்.

''நான் வந்து நிக்கென். நீயென்னமோ போயிட்டீகளான்னு கேக்கயே. ஒனக்குக் கோட்டிகீட்டி புடிச்சிருச்சா.''

அவள் தன் நினைவுக்கு வந்தாள்.

''வந்துட்டயா. இவ்வளவு நேரமா எங்க போயித் தொலஞ்சயாம். நான் பட்ட பாடு அந்த முருகனுக்குத்தான் தெரியும்.''

''நாந்தான் வந்துட்டன்ல. மத்ததப் பெறகு பேசிக்கிறலாம். மொதல்ல கதவச் சாத்து. ஆரும் வந்து தேடுனா இல்லன்னு சொல்லீரு.''

அவள் ஆத்திரத்தில் கதவைச் சாத்தித் தாழிட்டாள்.

## 12. பிரேத விசாரணை

மறுநாள் விடிந்தும் விடியாமலும் வந்த சேதி சப்மாஜிஸ்திரேட்டை உசுப்பியது.

''ஆழ்வார்சாமி நாய்க்கரு எறந்துட்டாரு சாமி.''

அவர் கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தார். சேதி சொன்னவனைக் காணவில்லை. குரல்மட்டும் கேட்டது.

''இனியும் எத்தன உசிரு போகப்போகுதோ.''

அவர் தவித்தார். அடடா முக்கியமான சாட்சி போய்விட்டாரே. இனி அவரது மரண வாக்குமூலந்தான் பெரிய ஆதாரம். மிஞ்சியிருக்கும் உயிர்களை யாவது சிந்தாமல் காப்பாற்றணும். இல்லையென்றால் வழக்கு வலுவிழந்து விடும்.

உசேன் ராவுத்தரைப் பார்க்க விரைந்தார். அவர் இன்னும் பேச முடியாத நிலையில்தான் கிடந்தார். காபி கொடுத்துத் தயார்படுத்திப் பேசவைத்தார்கள்.

''மேனேஜரையும் ஆழ்வார்சாமி நாய்க்கரையும் கொல செஞ்சது யாருன்னு தெரியுமா.''

அவர் வலியில் முக்கி முனங்கினார்.

''தெரியும். ஆனா அவங்க பேரு தெரியாது. நேரப் பாத்தா அடையாளம் காட்ட முடியும்.''

அந்த நேரம் நாடார் தெருவில் காவலிருந்த ஒரு போலீஸ்காரர் வந்து சொன்னார்.

''அய்யா நாடாக்கமாரு தெருவிலயும் ஊருணிக் கரையிலயும் எரிஞ்சு போயி ஏழு பொணம் கெடக்குது. வந்து பாருங்க.''

அதுக்கு மேல் பேசினால் அழுதுவிடுவார் போலிருந்தது. அவரும் நாடார் தான்.

நாடார் தெருவுக்குப் போனார்கள். நேற்றுச் சாயங்காலம் பார்த்த ரெண்டு பிணங்கள் தவிர ஒரு கார வீட்டின் பின்னறைக்குள் ஒரு குடும்பமே மூச்சுமுட்டிச் செத்துக்கிடந்தது. தாய் தகப்பன் சின்ன வயசில் மகன் மகள் ஆக நாலு பேர். துணிமணிகூட வேகவில்லை. பெண்கள் போட்டிருந்த நகைகள் பத்திரமாக இருந்தன. உறங்கிய மாதிரி படுத்திருந்தார்கள். வீட்டு வாசல் நிலையும் கதவும் எரிந்து கரிந்திருந்தன. கம்பியிட்ட சின்னச் சன்னலும் நெருப்புக்குத் தப்பவில்லை. வீட்டுக்குள் ஒரு பாய் கிடந்தது.

எரிந்து நின்ற வீடுகளை மறுபடியும் பார்வையிட்ட பிறகு ஊருணிக்குப் போனார்கள். வற்றி வறண்டு கிடந்தது. கரையில் கருகிப்போன கோலத்தில் ஒரு ஆண் சடலம். அடையாளம் தெரியவில்லை. நெருப்புக்குத் தப்பி ஓடிவந்திருக் கலாம். இல்லை இழுத்து வந்து போட்டிருக்கலாம்.

சப்மாஜிஸ்திரேட் பிரேத விசாரணை நடத்தினார். தெருவில் கூரை வீட்டுக்கு முன்னால் கிடந்த பிணத்தைப் பற்றி விசாரித்தார்.

''இது யாருன்னு தெரியுமா.''

சில பெண்கள் அழுதுகொண்டே சொன்னார்கள்.

‘‘இவருதான் பேச்சிமுத்து நாடாரு.’’

‘‘வேதப் பேரு வேதமுத்து நாடாரு.’’

‘‘எல்லாக் காரியங்களவும் எடுத்துப்போட்டுச் செய்வாரு.’’

‘‘வேதக் கோயில்லருந்து தப்பி வீட்டுக்கு ஓடிவந்தவரப் புடிச்சுக் குத்திக் கொன்னு நடுத்தெருவில போட்டுக் கொளுத்துனாகளோ இல்ல வீட்டுக்குள்ள இருந்த மனுசன வெளிய இழுத்துப்போட்டுக் கொன்னாகளோ. பாவிக அநியாயமாக் காவுவாங்கீட்டாகளே.’’

‘‘அவரு இடுப்புலருந்த சூரிக்கத்திய உருவியிருந்தா நடந்திருக்கிற கதையே வேற.’’

‘‘அதுக்கு முன்னாலயே கதைய முடிச்சிட்டாகளே.’’

‘‘அந்தா அழுதுகிட்ருக்காளே அவதான் பெரியசெல்லி. அவரோட சம்சாரம். அவருக்கு சங்கரலிங்க நாடாருன்னு ஒரு தம்பி. அவரோட சம்சாரம் சின்னச் செல்லி. ரெண்டு குடும்பமும் ஒரே வீட்லதான் குடியிருந்துச்சு.’’

‘‘தம்பி எப்படியோ தப்பிச்சிட்டான்.’’

‘‘ஒருவேள துட்டிக்குப் போயிருந்தானோ என்னமோ.’’

சப்மாஜிஸ்திரேட் ரெண்டு செல்லியையும் விசாரித்தார். பெரியவள் கண்ணைத் துடைத்துக்கொண்டு சொன்னாள்.

‘‘அவுகளக் கொன்னது கொளுத்துனது ஆருன்னு எங்களுக்குத் தெரியாது. நாலஞ்சு சாம்பாக்கமாரும் குடும்பமாரும் சொல்லித்தான் தெரியும்.’’

‘‘என்ன சொன்னாங்க.’’

‘‘அவுக வேதக் கோயில்லருந்து வந்தாகளா வேற எங்கயும் இருந்தாகளான்னு தெரியல. எங்கயோ வச்சு வளச்சுப் புடிச்சிருக்காக. அத்தன கூட்டத்த ஒரு மனுசனால சமாளிக்க முடியல. எங்கெங்கயோ ஓடி ஒளிஞ்சும் வுடல. தப்பி வந்து கடைசியா எங்க தெருவில வீட்டுக்குள்ள மொழஞ்சிருக்காக. வீட்டுக்குத் தீவச்சுக் கொளுத்தவும் உள்ள இருக்க முடியாம கதவத் தொறந்து வெளிய வந்துருக்காக. தெரு முக்குல வச்சுப் புடிச்சு ஆளாளுக்கு வெட்டிக் குத்திக் கொதறித் தெருவுல போட்டுக் கொளுத்தியிருக்காக.’’

சின்னவள் கர்ப்ப வயிற்றுடன் பேசத் திணறினாள்.

‘‘குத்திக் கொல செஞ்சதோட வுடல. காலு கையத் தறிச்சு வெறகுக்கட்டைகள எடுத்து வந்து மயானத்துல மாதிரி அடுக்கி அதுமேல அவுக பொணத்தப் போட்டுத் தீ மூட்டிக் கூத்தாடியிருக்காக. அவ்வளவு கோவம்.’’

சப்மாஜிஸ்திரேட் வயசான சுந்தர நாடாரை விசாரித்தார். அவர் நாலு வார்த்தையுடன் முடித்துக்கொண்டார்.

‘‘ஊருணிக் கரையில கருகிக் கெடக்கிறது குருசாமி பொணம்.’’

பேச்சிமுத்து நாடாரைப் பற்றி அவர் பேச்செடுக்கவில்லை. குருசாமி சின்னப் பையன் என்றும் அவனுக்கு வேதப் பேர் சூசைமுத்து என்றும் தெரிந்தது.

இன்னொரு வீட்டுக்குள் கிடந்த சின்னப் பிணம் உருக்குலைந்து கரிக்கட்டையாகிவிட்டது. அது குழந்தை என்பதுமட்டும் தெரிந்தது. தாயிடமிருந்து பிடுங்கி எறிந்திருக்கணும். அதை அடையாளம் சொல்ல யாருமில்லை.

அடுத்து கார வீட்டுக்குள் மூச்சுமுட்டிக் கிடந்த குடும்பம் பற்றி விசாரணை நடந்தது. நிறையவே சொன்னார்கள். அது கூடலிங்க நாடாரின் குடும்பம். அவர் அவரது சம்சாரம் சீனி மகன் தவசிமுத்து மகள் அண்ணாமலை. வேதத்துக்கு மாறியவர்கள். இன்னும் ஞானஸ்நானம் வாங்கவில்லை. வேதமாணிக்கம் ராயம்மா ஞானமுத்து அனந்தம்மா என்று அவர்களுக்கு வேதப் பேர்கள் உண்டு. அவர்களைக் கொன்றது யாரென்று தெரியவில்லை. எப்படியோ வீட்டுக்குள் மாட்டிக்கொண்டு திக்குமுக்காடி மாண்டுபோனதாக மாஜிஸ்திரேட் ரிப்போர்ட் எழுதி முடித்து அதில் ரெண்டு நாடார்களிடம் கையெழுத்து வாங்கினார்.

கூடலிங்க நாடாருக்கு ஆதிநாராயணன் சோலையப்பன் என்று வேறு இரு மகன்களும் செல்லி என்று ஒரு மகளும் உண்டு. அவர்கள் எப்படியோ தப்பிவிட்டார்கள். செல்லிக்குக் காதோலை பறிபோனதுடன் சரி.

பிறகு மாஜிஸ்திரேட் மேலச் சத்திரத்துக்குப் போய் ஆழ்வார்சாமியின் பிரேத விசாரணை நடத்தினார். அப்போது மதியமிருக்கும். சங்கரன்கோயிலுக்குப் போயிருந்த சைமன் இன்னும் திரும்பவில்லை. அதனால் ஆழ்வார்சாமி உட்பட ஆறு பிணங்களை பிரேதப் பரிசோதனைக்காக ஒரு போலீஸ்காரர் சங்கரன்கோயிலுக்குக் கொண்டுபோனார்.

அன்றைக்கும் பெரிய சாமியார் குருவிநத்தத்தில்தான் இருந்தார். அவருக்குத் தகவல் வந்த வண்ணமிருந்தது. நேற்று இடைசெவலில் இருந்த மிக்கேல் ரெட்டியார் உபதேசியாரும் அகிலாண்டபுரத்திலிருந்த ஞானப்பிரகாச ரெட்டியார் உபதேசியாரும் காலையிலேயே வந்து அவரைச் சந்தித்துப் பேசினார்கள்.

''தகராறு இப்படித்தான் ஆரம்பிச்சிருக்கு சாமி. தேரு நம்ம கோயில நெருங்கும்போது கோயிலுக்கு முன்னால உள்ள பந்தலப் பிரிக்காம தேர இழுக்க முடியாதுன்னு அவங்காளுக சொல்லீருக்காங்க. தேரு போறதுக்கு எடங்கெடக்குதேன்னு மேனேசரு சொல்லிப்பாத்துருக்காரு. அவங்க கேக்கல. பந்தலப் பிரிக்கிறதுலயே குறியா இருந்துருக்காங்க. அதனால அதுக்கு மேல நகர முடியாதுன்னு சொல்லீட்டாங்க. மேனேசரு பாத்தாரு. சண்டக் கோப்புல இருக்கிறவங்களச் சரிப்படுத்த முடியாது. தேரு எப்படியாவது ஓடியாகணும். நம்மாளுககிட்டப் போயி பந்தலப் பிரிக்கச் சொல்லீருக்காரு. இவங்க கேக்கல. ஒடனே கசபுசலாகி கலகம் மூண்டுருச்சு. மேனேசரக் குத்தீட்டாங்க.''

''நம்ம கோயிலுக்குத் தீவைக்கணும்னு அவங்க சொல்ல தீவட்டியில சீமெண்ணெய ஊத்திக் கோயில் கூரமேல எறிஞ்சிருக்காங்க.''

''தீப்புடிச்சு எரியிற கோயிலுக்குள்ளருந்து இவங்க வெளியேற வுடாம போலீஸ்காரங்க தடுத்திருக்காங்க.''

சாமியார் புருவங்களை விரித்து தாடியை உயர்த்தினார்.

''இதென்ன கொடும.''

கொஞ்ச நேரத்தில் வானரமுட்டி ஞானப்பிரகாச நாடார் கிறங்கிப்போய் வந்துசேர்ந்தார். அவர் கையில் தீக்காயம் இருந்தது. தோளில் அடிபட்ட காயம்.

''சாமி நடந்தத நெனச்சாக் கொலையப் புடுங்குது. நான் கோயிலுக்குள்ள மாட்டிக்கிட்டென். வெளிய வாறதுக்குள்ள பெரும்பாடாப் போச்சு. எப்படியோ முட்டி மோதித் தப்பிச்சொம்.''

''எல்லாம் ஆண்டவர் கிருபை.''

''பாவம் அந்த ஒவதேசியாரு என்ன செய்வாரு. அவர ஒரு போலீஸ்காரரு இங்க வாரும்னு கூப்புட்ருக்காரு. அவரும் கிட்டப் போக புடிச்சு அடியடின்னு அடிச்சு அடச்சுப் போட்டுட்டாக.''

''அநியாயம்.''

''பெறகு அவங்காளுக கூட்டமாத் தெரண்டு இவங்க தெருவுக்கு ஓடி நடத்துன கூத்து இன்னதுதான்னு இல்ல. போலீஸ்காரங்களுக்கு இந்த ஓரவஞ் சகம் ஆகாது. இவங்களப் புடிக்கிறதுல காட்ன அக்கற அவங்க ஓடிஓடி வீடு களுக்குத் தீவைக்கிறதையும் கொள்ளையடிக்கிறதையும் தடுக்கிறதுல கொஞ்சங் கூட இல்லையே.''

''கொலைக்கும் கொள்ளைக்கும் போலீஸ்காரர்களே தொணையாருக்கிறது மன்னிக்க முடியாத பாவம்.''

உடனே கழுகுமலைக்குப் போகணுமென்று சாமியார் துடித்தார். இந்தச் சமயத்தில் போய் நிலைமை விபரீதமாகிவிட்டால் என்ன செய்வது. இப் போதைக்கு வேணாமென்று தோன்றியது.

## 13. அடுத்த கட்டம்

கழுகுமலையில் கெடுபிடி இன்னும் கூடியது. மதியத்துக்கு மேல் ரெண்டு மணியிருக்கும். அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு லெக்காட் அஸிஸ்டெண்ட் சர்ஜன் அமிர்தசாமிப் பிள்ளை ஆகியோருடன் டெபுடி மாஜிஸ்திரேட் நரசிம்மலு நாயுடு வந்து இறங்கினார். திருநெல்வேலி செசன்ஸ் கோர்ட் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய அய்யர் திருநெல்வேலி பேட்டை போலீஸ்காரர் ராமசாமிக் கோனார் தூத்துக்குடி ஏட்டு ராமசாமிப் பிள்ளை இவர்களெல்லாம் துணைக்கு வந்தார்கள். சங்கரன்கோயில் ஏட்டு ஏற்கெனவே வந்துவிட்டார். அவர் கழுகுமலை ஏட்டுக்கு வேண்டியவராயிற்றே. இதுபோக சமீனில் வேலைபார்த்த ஏட்டு சுப்பிரமணிய பிள்ளையும் இருந்தார்.

சப்மாஜிஸ்திரேட் கழுகுமலைக்கு வந்ததிலிருந்து இதுவரை செய்த காரியங் களை டெபுடி மாஜிஸ்திரேட்டிடம் வரிசையாக ஒப்பித்தார். கைவசமிருந்த விவரங்கள் தஸ்தாவேஜூகள் எல்லாவற்றையும் ஒப்படைத்தார். சாயங்காலம் மூணு மணிக்குக் காலைச் சாப்பாட்டுக்கு உட்காரும்போது மனசு லேசாக இருந்தது.

அடுத்த கட்ட நடவடிக்கைகளை மேலதிகாரிகள் கையிலெடுத்துக்கொண் டார்கள். விசாரணை துரித கதியில் நடந்தது. ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை இன்னும் சுறுசுறுப்பானார்.

இதுக்கிடையில் மிக்கேல் பிள்ளை உபதேசியாரும் மற்ற மூணு கைதிகளும் தனித்தனியாக எதிர்ப் பிராது கொடுத்திருந்தார்கள். பெரும்பாலும் போலீஸ்

காரர்களின் அடாவடிபற்றித்தான். கலகத்தைக் கட்டுப்படுத்த வேண்டியவர்களே கலகஞ்செய்யத் தூண்டிவிட்டு வீடுகளுக்குத் தீவைப்பதையும் கொள்ளையடிப் பதையும் வேடிக்கை பார்த்ததாகவும் நாடார்களைக் கண்டகண்ட இடத்தில் பிடித்து அடித்து உதைத்து இழுத்து வந்து அடைத்தாகவும் குற்றஞ்சாட்டியிருந் தார்கள். பிராது கொடுக்க வந்த இடத்தில் பிடித்து வைத்துக்கொண்டதாக காண்ட்ராக்டர் ராமாசாமி நாடாரும் அவர் மகனும் சொன்னார்கள்.

சப்மாஜிஸ்திரேட் பார்த்தார். நமக்கெதுக்கு வம்பு என்று பிராதுகளை போலீஸ் விசாரணைக்கு அனுப்பிவிட்டார். போலீஸ் மீதான குற்றச்சாட்டுக்களை அவர்களே விசாரிக்கணும். மேலதிகாரிகள் இதைக் கண்டுகொள்ளவில்லையா இல்லை அவர்களுக்குத் தெரியாமல் மூடி மறைக்கப்பட்டதா என்பது தெரிய வில்லை.

போலீஸ் அலட்டிக்கொள்ளவில்லை. புகார்களுக்குப் போதிய ஆதாரமில்லை என்று கண்டுபிடித்து எல்லாவற்றையும் தள்ளுபடி செய்துவிட்டது. பேருக்குக் கூட வழக்குப் பதிவு செய்யவில்லை.

நடந்த அட்டூழியங்களைப் பற்றி நாடார்கள் மேலும் பல பிராதுகள் கொடுக்க நினைத்திருந்தார்கள். அவற்றுக்கும் இந்தக் கதிதான் ஆகும் என்று அஞ்சிக் கொடுக்கவில்லை.

டெபுடி மாஜிஸ்திரேட்டின் மேற்பார்வையில் சப்மாஜிஸ்திரேட் எட்டுப் பேரை விசாரித்தார். நாடார் தெருவில் அஞ்சு பேர். அந்தப் பக்கம் மூணு பேர்.

கூடலிங்க நாடார் குடும்பத்தைச் சேர்ந்த ரெண்டு செல்லியும் காலையில் சொன்னதையே மறுபடியும் வாக்குமூலம் கொடுத்தார்கள். சுந்தர நாடார் சண்முக நாடார் மகாலிங்க நாடார் மூணு பேருமே கூடுதலாக எதும் சொல்லவில்லை.

முருகன் கோயில் பேஷ்கார் சுப்பா ராவ் பந்தலைப் பற்றிச் சொன்னார்.

''வேதக் கோயிலுக்கு முன்னால பந்தல் போட்டது வாஸ்தவந்தான். பத்துக் கெஜ நீளம் ரெண்டு கெஜ அகலமிருக்கும். சில வாரங்களுக்கு முந்தியே போட் ருந்தது.''

சமீன் தாசில்தார் ராமசாமிப் பிள்ளை நடந்த சம்பவங்களை விவரித்தார்.

''என்னோட வந்த முத்துச்சாமிப் பிள்ளைங்கிறவரு மேனேஜர யாரோ குத்தீட்டதா புரளி அடிபடுதுன்னு சொன்னாரு. என்னக் காப்பாத்திக்கிறதுக் காகவும் அவங்களப் பாக்கிறதுக்கும் தெக்குப் பக்கம் திரும்பி கோயிலுக்குப் போனென்.''

''சரி.''

''ரெண்டு மூணு பேரு மேனேஜர அரமனையப் பாத்துச் சொமந்துட்டுப் போனதப் பாத்தென். கொடலு சரிஞ்சு வெளிய தொங்குச்சு. துணிமணியெல்லாம் ரத்தத்துல நனஞ்சிருச்சு. மூச்சுப்பேச்சில்ல. அவரோட ஹெட் கிளார்க் தன்மேல கல்லெறி விழுந்ததச் சொல்லி மொகத்துலருந்த காயத்தக் காட்னாரு.''

''சரி.''

''நான் என் ரூமுக்குப் போயி கலெக்டருக்கு ஒரு ரிப்போர்ட்டும் சேதியும் எழுதுனென்.''

''இந்த யதாஸ்து நீங்க எழுதுனதுதான.''

''ஏழாந் தேதி நான் ஆபீசுக்கு அனுப்புனதுதான். அத நான்தான் எழுதுனென். அதுல பதினோரு பேரு சொல்லீருக்குது. கழுகுமல இந்துக் கோயில் சேவகர் ஆதி சேர்வதான் அந்தப் பதினோரு பேரையும் சொன்னாரு. அதத்தான் யதாஸ்தில குறிப்பிட்ருக்கென்.''

தாசில்தார் சொன்னது வாக்குமூலமாகப் பதியப்பட்டது.

கடைசியில் ஏழு மைலுக்கப்பாலுள்ள செவக்குளத்திலிருந்து கருப்பன் செட்டியைக் கூட்டிவரச் சொன்னார்கள். அவருக்கு வலது காதுக்குப் பின்புறம் கல்லெறிக் காயம் இருந்தது. காயத்துடன் ஊருக்குப் போய்விட்டிருக்கிறார். தனக்குத் தெரிந்ததை வாக்குமூலமாகச் சொன்னார்.

''மேனேஜரக் குத்துனது யாருன்னு தெரியுமா.''

''கலகம் செஞ்சவங்க நெறையப் பேர அடையாளம் சொல்லீருவென். பேரு தெரியாது.''

ஓரளவுக்கு முக்கியமான சாட்சிகளை விசாரித்துவிட்டதாகத் தோன்றியது. இருந்தாலும் நிலைமை இன்னும் பிடிபடாமலேயே இருந்தது. மேனேஜரைக் குத்தியது மகாலிங்க நாடார் என்று ஆழ்வார்சாமி மட்டுமே சொல்லியிருந்தார். மற்றவர்கள் யாரும் சொல்லவில்லை. ஆழ்வார்சாமியைக் குத்தியது யாரென்று அவரே சொல்லவில்லை. தாசில்தார் ஒரேயடியாக ஆதிநாராயண சேர்வைமீது பொறுப்பைத் தூக்கிப்போட்டுவிட்டார். சிக்கலான வழக்குதான். அடையாளப் பேரேடு நடத்தினால் சிக்கல் குறையும்.

நாடார் தெருவில் நடந்த கொலைகளுக்கு வலுவான சாட்சிகள் இல்லை. இப்போதைக்கு அது சம்பந்தமாகப் பிராதுகள் கிடையாது. வந்ததையும் போலீஸ் தள்ளுபடிசெய்துவிட்டது. இனிமேல் பிராது கொடுத்து வழக்குப் பதிவானால் பார்த்துக்கொள்ளலாம்.

ராத்திரி நேரமிருக்கவே வேலைகளை முடித்துக்கொண்டார்கள்.

## 14. அடையாளப் பேரேடு

அன்றைக்குத்தான் ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை ரிமாண்ட் ரிப்போர்ட் தயார்பண்ணினார். மொத்தம் முப்பத்தெட்டுக் கைதிகள். மிக்கேல் பிள்ளை உப தேசியாரைத் தவிர மற்ற எல்லாரும் நாடார்கள். அதில் ஒருவருக்கு வானர முட்டி. ரெண்டு பேருக்கு பழங்கோட்டை. மிச்சம் முப்பத்தி நாலு பேரும் கழுகு மலைக்காரார்கள். அஞ்சு பேர் அறுபதைத் தாண்டிய வயசாளிகள். பதினோரு பேர் இருபதுக்கும் உட்பட்ட வாலிபர்களும் பையன்களும். மற்றவர்களுக்கு நடு வயசு. நாடார்களில் பதினேழு பேர் மட்டுமே வேதக்காரார்கள். எல்லாரையும் ஞாயிற்றுக் கிழமை மதியத்துக்கு மேல் ஒண்ணரை மணிக்குள் கைது செய்ததாக ரிப்போர்ட்டில் குறிப்பிட்டிருந்தது.

முதல் பேர் அருணாசல நாடார். அடுத்து கருத்தண நாடார் மகாலிங்க நாடார் ராமசாமி நாடார் செந்தூர் நாடார் என்று முக்கியமானவர்கள். இவர்

களில் சிலர் முந்தி சமீன்தார் போட்டிருந்த சிவில் வழக்கில் எதிரிகளாகச் சேர்க்கப் பட்டவர்கள். ரிப்போர்ட்டில் அருணாசல நாடார் என்ற பெயரில் மேலும் மூணு பேர் இருந்தார்கள்.

ஏற்கெனவே தூத்துக்குடிக்குப் போயிருந்த முதலாளி திரும்பி வரவில்லை. போலீஸ் முழித்துக்கொண்டது. அடடா முக்கியமான புள்ளியை விட்டுவிட் டோமே. அவர் வெளியே இருந்தால் சங்கடம். அவரைப் பிடிக்க திங்கட்கிழமை வாரண்டு பிறப்பிக்கப்பட்டது. இதைப் பற்றி என்னென்னமோ பேச்சு வந்தது.

''பருத்திமண்டி அருணாசல நாடான் தப்பிச்சிட்டானே.''

''திட்டம் போட்டுக் கெளம்பியிருக்கான்.''

''எப்படி.''

''அவன் சொல்படிதான மத்த நாடாங்க ஆடுவான்.''

''அது நெசந்தான்.''

''கோர்ட் சொன்ன பணத்தக் கெட்டறதுக்கு முன்னாலயே போயிருக்கலா மில்ல. இந்த நேரம் பாத்துத்தான் போகணுமாக்கும்.''

''அதான.''

''தேர நிறுத்தி மேனேசரு கதைய முடிச்சிருங்க. ஆரு கொல செஞ்சதுன்னு தெரியாமப் போகட்டும். நான் இல்லாறதால நம்ம மேல சந்தேகம் வராது. அப்படின்னு கமுக்கமாச் சொல்லிக்குடுத்துட்டுப் போயிட்டான். இவங்க கூட்டத்தோட கூட்டமா சோலிய முடிச்சிட்டாங்க.''

''இருக்கும்.''

''ஒடனே ரெண்டு பேர அனுப்பி அவனத் தூத்துக்குடியிலயே நிப்பாட் டீட்டான்.''

''போனவங்ககிட்ட என்னமோ கடுதாசி குடுத்துவுட்ருக்காகளாமில்ல.''

''ஆமாமா. அதுலதான் எல்லா வெசயமும் இருக்குதாம். எடவழியில அதப் பறிக்கிறதுக்கு போலீசு போயிருக்குதாம். அது கெடச்சதுன்னு வச்சுக்கோ. நாடாங்க செஞ்சதெல்லாம் அம்பலமாயிரும்.''

''அவனப் புடிக்கிறதுக்கும் ஆளு போயிருக்குதாமே.''

''அவன் ஆப்புட்டா ரெம்ப நல்லது.''

''இனியொரு கத சொல்லிக்கிறாக.''

''என்னது.''

''மேனேசரு கோவத்துல ஒரு நாடானப் பெரம்புட்டு அடிச்சிட்டாராம். அவன் அந்த அவமானம் தாங்காமக் குத்தீட்டானாம்.''

''அதென்னமோ நமக்குத் தெரியாதுப்பா. அத்தன கூட்டத்துல வச்சு எப்படி அடிப்பாரு. நீயே சொல்லு.''

''அதுக்குக் கொலசெய்யணுமாக்கும். அப்படின்னா ஆயுதங்களோட எதுக்கும் தயாராத்தான இருந்துருக்கான்.''

''அப்படித்தான்.''

முதலாளி தூத்துக்குடியிலிருந்து தப்பித் தலைமறைவாகிவிட்டார். பழக்க மானவர்கள் அவருக்கு அடைக்கலம் கொடுத்தார்கள். அவரைச் சந்திக்கப் போன

ஆட்களையும் போலீசால் பிடிக்க முடியவில்லை. கடித விவகாரம் அதோடு அமுங்கிவிட்டது.

கைதிகளுக்கு ஏற்பட்ட காயங்களின் விவரத்தை அஸிஸ்டெண்ட் சர்ஜன் அமிர்தசாமிப் பிள்ளை தயாரித்திருந்தார். ரெண்டு பேரைத் தவிர மற்ற எல்லா ருக்கும் காயம் இருந்தது. பலருக்குப் பலத்த காயம். தீப்புண்ணும் சிராய்ப்புமாக இன்ன இடம் என்றில்லை. சண்முகம் என்று பன்னிரெண்டு வயசுப் பையன். அவனுக்கு வலது தோள்பட்டையில் துப்பாக்கிக் கத்தி குத்திய காயம். ஈரக்குலை வரை ஆழமாகப் பாய்ந்திருந்தது. கவலைக்கிடமாகக் கிடந்தான். போலீஸ்காரர் களைத் தவிர வேறு யாரும் துப்பாக்கி வைத்திருக்கச் சந்தர்ப்பமில்லை.

மறுநாள் அடையாளப் பேரேடு நடத்தத் திட்டமிட்டார்கள். முப்பத் தெட்டுக் கைதிகளை மட்டும் காட்ட முடியாது. அப்படி இப்படி என்று பேசி முடித்தார்கள். கூடுதலாக பதினாறு சூத்திரர்களைச் சேர்த்துக்கொள்ளணும். கொஞ்ச நேரத்தில் அதிகாரிகள் அவர்களைப் பிடித்து வந்துவிட்டார்கள். மொத்தம் ஐம்பத்திநாலு பேரை முக்கியமான சாட்சிகளுக்குக் காட்டினார்கள். அவர்களில் கருப்பன் செட்டி பஞ்சநாதய்யர் சுந்தரமய்யர் மூணு பேருமே அடையாளம் சொன்னதில் மகாலிங்க நாடாரின் பேர் கடைசியாக இருந்தது.

பஞ்சநாதய்யரை வெட்டியதும் ஆழ்வார்சாமியைக் குத்தியதும் கருத்தண நாடார்தான் என்று ஒரு புரளி பரவியது. அப்படியே போலீசும் முடிவு செய்து விட்டது. ஆக ரெண்டு கொலையாளியின் பேரையும் தீர்மானித்துவிட்டார்கள். மற்றவர்கள் தேரை மறித்துக் கலகம் செய்தார்கள். காயப்படுத்தினார்கள் என்று சொல்லிவிட வேண்டியதுதான். எப்படியோ வழக்கு ஒரு வழிக்கு வந்துவிட்டது.

திடீரென்று ஊருக்குள் ஒரு பதட்டம்.

"வானரம்பட்டியிலருந்து நாடாருக கழுகுமலைய நொறுக்க வாறாகளாம்."

"நம்மளும் தயாரா இருக்க வேண்டியதுதான்."

கடைகள் அடைக்கப்பட்டன. போலீஸ் அங்கங்கே காவலிருந்தது. நல்ல வேளை அப்படியெதும் நடக்கவில்லை.

வேதக் கோயிலுக்கு முன்னால் கொலை நடந்தது நாடார் தெரு நாசமானது பற்றி முழுக்கமுழுக்க வேறு விதமான கதையொண்ணு கசிந்து வந்தது. நேரில் பார்த்ததாக இந்துக்காரர்களே முணுமுணுத்தார்கள். பெரிய இடம் சம்பந்தப்பட் டிருப்பதால் வெளிப்படையாகப் பேச முடியவில்லை. அவர்கள் தந்த தகவலின் பேரில் உள்ளூர் முத்தையா என்ற வேதக்காரர் பெரிய சாமியாருக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதன்படி பார்த்தால் நாடார்கள் கொலை செய்யவில்லை. சமீனைச் சேர்ந்த சின்ன மகாராசாவும் சக்கரைச்சாமியும் கூட்டத்தைத் திரட்டிக் கொண்டு போய் நாடார் வீடுகளுக்குத் தீவைத்துக் கொள்ளையடிக்கச் சொன் னார்கள். போலீஸ் இதுக்கு உடந்தையாக இருந்தது. கதையைக் கேட்டு சாமி யாருக்கு ஒரே குழப்பம்.

## 15. விசாரணையும் விசாரமும்

திருநெல்வேலியிலிருந்து போலீஸ் சூப்பிரண்டு ஸ்டீவன்சன் புதன்கிழமை யன்று கழுகுமலைக்கு வந்தார். அதிகாரிகள் ஆட்டிவிட்ட பம்பரமானார்கள். ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளையின் முகத்தில் அப்படியொரு பதட்டம்.

சூப்பிரண்டு வேதக் கோயிலைப் பார்வையிட்டார். அது கிடந்த கோலம் சொல்ல முடியாது. ஓலைக்கூரை முழுக்க வெந்துவிட்டது. சுவர்கள்கூட இடிந்து போய் நின்றன. உள்ளே ஆபரணங்களும் மரச் சாமான்களும் படங்களும் விளக்குகளும் உடைந்து நொறுங்கிச் சிதறிக் கிடந்தன. பலிபீடத்தில் நிற்கும் சிலுவையைத் தவிர எதும் மிஞ்சவில்லை. பட்டாளம் முற்றுகையிட்டுத் தகர்த்த மாதிரி அவ்வளவு நாசம்.

அவர் நாடார் தெருவுக்கு நடந்தார். அங்கே வீடுகள் எரிந்து நின்ற பரிதாபத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. கருவாட்டுப் பேட்டை கந்தரிகோலத்தில் கிடந்தது. அவர் அதிகாரிகளிடம் கேட்டார்.

''எத்தன கேஸ் போட்ருக்கீங்க.''

அதிகாரிகள் சமாளித்தார்கள்.

''மேனேஜர் கொல சம்பந்தப்பட்ட கேஸ் ஒண்ணுதான்.''

''அதெப்படி. நாடாருகளும் எறந்திருக்காங்களே. இத்தன வீடும் கோயிலும் எரிஞ்சுபோச்சே.''

''நாடாருக யாரும் பிராது கொடுக்கல.''

''ஏன்.''

''தெரியல.''

''ஒங்களுக்குப் பயந்துக்கிட்டு வரலயா.''

''தெரியல.''

''அவங்களப் பாத்துப் பேசுங்க.''

அதிகாரிகள் நாடார் தெருக்களில் அடிக்கடி பட்டணப் பிரவேசம் போனார்கள். நின்று கூவினார்கள்.

''யாராவது பிராது கொடுக்கிறதா இருந்தா வந்து கொடுக்கலாம்.''

கட்டமண்ணுக்குள்ளும் வெட்டவெளியிலும் கஞ்சி காய்ச்சிக்கொண்டு ஒண்டியிருந்த கொஞ்சநஞ்ச சனங்களும் அவர்களுக்குப் பயந்து ஓடி ஒளிந்து கொண்டார்கள். யாரும் பிராது கொடுக்க முன்வரவில்லை. எப்படிக் கொடுக்க முடியும். கொடுத்தால் மாஜிஸ்திரேட்களைப் பற்றியும் போலீஸ்காரர்களைப் பற்றியுந்தான் புகார் சொல்லணும். அப்போது கதி என்னாகியிருக்கும். உடனே அவர்களைப் பிடித்து மேனேஜர் கொலை வழக்கில் சேர்த்திருப்பார்கள்.

பிராது கொடுப்பதற்கு விவரம் தெரிந்த ஆட்களும் இல்லை. பெரும்பாலானவர்கள் உடுத்திய துணியுடன் தப்பியோடிவிட்டார்கள். திரும்பி வரவில்லை. வானரமுட்டி வலசை சின்னக்காமன்பட்டி என்று அங்கங்கே தங்கிவிட்டார்கள்.

ஆக நாடார்களிடமிருந்து பிராதுகளே இல்லையென்ற நிலைமையாகிவிட்டது. சூப்பிரண்டிடம் இதையே சொன்னார்கள்.

''நாங்க நேரப் போய்க் கேட்டுப்பாத்தொம். யாரும் வரல.''

அதிகாரிகள் முணுமுணுத்தார்கள்.

"நம்மகிட்டக் கொடுக்கிறதுக்குப் பயம்னா அமிர்தசாமிப் பிள்ளையிட்டயோ சைமன்கிட்டயோ கொடுத்துருக்கலாமே. அவங்க வேதக்காரங்கதான."

"அதான. அவுககிட்டக் கொடுத்து ஒப்படைக்கச் சொல்லியிருக்கலாமில்ல."

"வேற என்னமோ காரணமிருக்கு."

"பொறுத்துப் பாப்பொம்."

அதிகாரிகள் கூட்டமாகக் கழுகுமலையில் தங்கியிருப்பது நாடார்களுக்குப் பிடிக்கவில்லை.

"இவங்கள நம்ப முடியாது."

"நமக்கு ஞாயம் கெடைக்கப்போறதில்ல."

"கூடிக்கூடிப் பேசி நம்மளக் கழுத்தறுத்துருவாங்க."

போகப்போகப் புகைச்சல் குறைந்துவிட்டது.

கொலை வழக்கில் குற்றப்பத்திரிகை தயாரிப்பதில் அதிகாரிகள் மும்முரமாக இருந்தார்கள். சூப்பிரண்டு இருக்கும்போதே அந்த வேலையை முடித்துவிட்டால் நல்லது. ஒருவழியாக வெள்ளிக் கிழமையன்று தயாராகியது. அதன்படி குற்றம் நடந்த நேரம் காலை பதினொரு மணி. கச்சேரிக்குத் தகவல் கிடைத்த நேரம் பதினொண்ணரை. தூரம் கிழக்கே ஒரு பார்லாங். குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் நாற்பத்திரெண்டு பேர். கைதுசெய்யப்பட்டவர்கள் முப்பத்தெட்டுப் பேர். கைதுசெய்த நேரம் பதினொண்ணரை மணி.

ரிமாண்ட் ரிப்போர்ட்படி கைதுசெய்யப்பட்ட நேரம் மதியத்துக்கு மேல் ஒண்ணரை மணி. ஒருவேளை தெரிந்தேதான் நேரத்தை மாற்றி எழுதினார்களோ. ஏனென்றால் முப்பத்தெட்டுப் பேரும் கோயிலோரம் கைதுசெய்யப்பட்டதாக இருக்கும்போது உடனுக்குடன் கைதுசெய்ததாகக் காட்டினால்தானே பொருத்தமாக இருக்கும். சந்தேகம் வராது. இல்லை ரிமாண்ட் ரிப்போர்ட் நேரத்தைக் கவனிக்காமல்கூட எழுதியிருக்கலாம்.

இதெல்லாம் சூப்பிரண்டுக்குத் தெரிந்துதான் நடந்ததா. குற்றப்பத்திரிகையில் சொல்லியிருப்பதெல்லாம் உண்மைதானா என்று அவர் அறிந்துகொள்ள நினைக்கவில்லையா. எல்லாருக்கும் மேலான அதிகாரி கூட இருக்கும்போது அவருக்குத் தெரியாமலா நடந்திருக்கும்.

கட்டமண்ணாகிவிட்ட வேதக் கோயிலின் கரிக்கோலத்தை வெறித்தபடி ஆறு நாளாக அரண்டுபோய் அதே இடத்தில் நின்றிருந்த முருகன் தேரை இழுத்து வந்து நிலைநிறுத்தினார்கள். நிறைய பேருக்குக் கண்ணீரை அடக்க முடியவில்லை.

"தலமொற தலமொறையா இப்படியொரு சம்பவம் நடந்ததில்லையே."

"ஆரு செஞ்ச குத்தமோ."

"இதுக்கு என்ன பரிகாரம்னு தெரியலயே."

சூப்பிரண்டு அஞ்சு நாள் தங்கிவிட்டுத் திருநெல்வேலிக்குப் புறப்பட்டார். அதிகாரிகளும் அப்படியப்படியே கலைந்துவிட்டார்கள். கைதிகளும் செயிலுக்குப் போய்விட்டார்கள். போலீஸ் கச்சேரி வெறிச்சோடிவிட்டது. ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை மேனேஜர் கொலை வழக்கில் எப்படியும் செயித்தாகணுமென்ற வைராக்கியத்தில் கோர்ட் வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தார்.

எல்லாச் சங்கதியும் கலெக்டருக்குத் தெரியும். மேனேஜர் கொலைபற்றி சர்க்காருக்குத் தந்தி கொடுத்ததே அவர்தான். என்ன நினைத்தாரோ தெரிய வில்லை கடைசிவரை கழுகுமலைக்கு எட்டிப்பார்க்கவேயில்லை.

பெரிய சாமியார் எங்கிருந்தாலும் கழுகுமலை நடவடிக்கைகள் பற்றி விசாரித்துக் கொண்டுதானிருந்தார். நாடார்களின் சந்தோசத்துக்காகச் செய்த ஏற்பாடுகள் இப்படியொரு பெரிய துக்கத்தில் கொண்டுபோய்விட்டதே. சம்பவங்களைப் பற்றிக் கேள்விப்பட கேள்விப்பட மனசு ரெம்பக் கனத்தது. இந்தக் கொடுமை நடந்திருக்கக் கூடாது.

ஒரு நாள் செகநாதன் என்ற நாடார் வாலிபனை அள்ளிப்போட்டுக் கொண்டு அவரிடம் போய்க் காட்டினார்கள். காலெல்லாம் வெந்து கோரமாக இருந்தான். எந்த நேரத்திலும் உயிர் போகிற நிலைமை. உள்ளூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோயிருக்கிறார்கள். போலீசுக்குப் பயந்து அங்கே சேர்க்க மறுத்துவிட் டார்கள். அவனை ஏற்றிப் போக ஒரு மாட்டு வண்டி கிடைக்கவில்லை. அலைந்து திரிந்து தூரத்து ஊரில் தேடிப் பிடித்தார்கள். இத்தனை நாளாக அவன் நாதியற்றுக் கிடந்தும் கூட்டில் உயிர் தங்கியது மாயந்தான்.

சாமியார் அவனுக்கு உடனடியாக வைத்தியம் செய்ய ஏற்பாடு பண்ணி னார். போன உயிரை இழுத்துப் பிடித்துக் காப்பாற்றிவிட்டார்கள். அவன் கண் ணீர் பொங்கச் சொன்னான்.

''ரெண்டு தேவமாரு என்னயப் புடிச்சு ஒரு வீட்டுக்குள்ள தள்ளிப் பூட்னாக. பூட்டித் தீய வச்சுக் கொளுத்துவாகன்னு தெரிஞ்சுக்கிட்டென். கஸ்டப்பட்டுக் கதவத் தொறந்து உசிரக் கையில ஏந்திக்கிட்டுத் தப்பி ஓடுனென். வெரட்டிப் புடிச்சுக் கீழ வீசியெறிஞ்சாக. பெறகு மல்லாக்கப் படுக்கவச்சு எம் மேல தீ வச்சாக. அதுல காலு அம்புட்டும் எரிஞ்சுபோச்சு. அதோட எந்திரிச்சு ஓடித் தப்பிச்சிட்டென். இல்லன்னா சொக்கப்பான் கொளுத்துன மாதிரி அந்த எடத்துலயே வெந்து செத் துருப்பென். எங்காத்தா கையிலிருந்த சின்னத் தம்பியப் புடுங்கித் தீக்குள்ள போட்டுட்டாக.''

அவன் வயசில் இன்னொரு பையனையும் கொண்டுபோயிருந்தார்கள். பக்கத்தூர் இந்துக்காரன். போலீஸ் கொடுத்த அடியில் உடம்பு நொறுங்கிக் கிடந்தான். சரியாகி எழுந்திருப்பது சந்தேகந்தான்.

கழுகுமலையில் நாடார் சனங்கள் வீடு வாசலில்லாமல் சோறு தண்ணீரில் லாமல் உடுத்த மறுதுணியில்லாமல் அவதிப்படுவதைப் பற்றிச் சாமியாருக்குத் தந்தி வந்திருந்தது. இனிமேலும் தாமதிக்கக் கூடாதென்று உடனே கழுகுமலைக்குப் புறப்பட்டார். வந்து பார்த்தால் வேதக் கோயிலும் நாடார் வீடுகளும் அலங் கோலமாகக் கிடந்தன. பெரும்பாலும் ஆண்களைக் காணவில்லை. வயசாளிகளே தட்டுப்பட்டார்கள். பெண்டு பிள்ளைகள் ஓடி வந்து அவரிடம் கதறியழுது முறை யிட்டார்கள்.

''சாமி நாங்க ஒரு குத்தமும் செய்யலயே. எல்லாருமாச் சேந்து எங்கள நடுத் தெருவில நிறுத்தீட்டாகளே.''

''எங்க பெழப்பு கட்டமண்ணாகிப்போச்சே.''

''இந்த அநியாயத்தக் கேக்கிறதுக்கு ஆரும் இல்லையா.''

சனங்களின் பரிதாபத்தைப் பார்த்து அவர் கண்கலங்கிவிட்டார். அவர்களுக்கு அரிசி பருப்பு துணிமணி மருந்து என்று சகலமும் கிடைக்க ஏற்பாடு செய்தார். எல்லாருக்கும் தைரியம் சொன்னார். நிராதரவாக நிற்கும் பெண்களையும் வயசாளிகளையும் திருநெல்வேலிக்குக் கூட்டிப் போய் வியாகுல மாதா ஆலய கன்னியாஸ்திரீகளின் பொறுப்பில் ஒப்படைத்தார். அங்கே கிடைத்த அரவணைப்பு அவர்களின் காயங்களுக்கு இதமாக இருந்தது.

நாடார்கள்மேல் கொலைப்பழி சுமத்தி நிறைய பேரை உள்ளே தள்ளியது பற்றிப் பரவலாகக் கொந்தளிப்பு இருந்தது. மனசு பொறுக்காமல் சில இந்துக்காரர்கள்கூடப் பொருமினார்கள்.

''நாடாருக பக்கம் காயும் பிஞ்சுமா ஏழு பேரு செத்து மடிஞ்சாகளே அது கொலையில்லையா. ஆடாற ஆட்டமாடி வீடுகளக் கொளுத்திச் சூறையாடுனாகளே அது கொள்ளையில்லையா.''

''ரத்தஞ் சொட்டச்சொட்ட பொட்டப்புள்ளீக காத அறுத்தாகளே. அது என்னது.''

''கயத்தாறுச் சண்டீரு ரெண்டு பேரு கழுகுமலைக்கு வந்து நாடாரு தெருவில ரெண்டு செம்மறியாட்டக் களவாண்டுட்டுப் போகயில போலீசிட்ட மாட்டிக்கிட்டாங்களாம்.''

''ஒப்புக்கு வெசாரண நடத்தி அவுத்து வுட்ருப்பான்.''

''அதச் சொல்லு. இங்கருக்கிறவங்க காணாதுன்னு கெச்சிலாவரத்துலருந்து குடும்பமாரு வந்து பாத்தரம் பண்டங்கள அள்ளீட்டுப் போயிட்டாங்களாம்.''

''அவங்களப் புடிக்கத் துப்பில்ல.''

''சூத்தாகொளத்துப்பட்டிக் கொறவனுக்கு வந்த துணிச்சலப் பாரு. தங்க நகையக் கொள்ளையடிச்சு வீட்டுக்குள்ளயே பெதச்சு வச்சிருக்கானாம்.''

''இது போலீசுக்குத் தெரியாதாக்கும்.''

''அவங்க கண்ணுக்கு முன்னாலதான எல்லாம் நடந்துச்சாம்.''

''போலீசு எல்லாருக்கும் பொதுவானதுங்கிறதெல்லாம் வெறும் பேச்சு.''

''சாதி வெறி சட்டக்காரனவும் வுட்டுவைக்கலயே.''

''திட்டம் போட்டுத்தான் மேனேசரப் போட்டுத்தள்ளீருக்காங்க.''

''ஆழ்வார்சாமி அநியாயமா மாட்டிக்கிட்டாரு.''

''குறுக்க வந்தா ஆருன்னு கெடக்கு. வீட்லருந்த அய்யர வெவகாரம் பேசுறதுக்குக் கூட்டி வந்து வீதியில வச்சு முடிச்சிருக்கான் பாரு.''

''எல்லாம் அப்பாவுத் தேவன் சுப்பையாத் தேவனோட கைவரிசதானாம்.''

''அவங்க தைரியத்துலதான் நடந்ததா.''

''அப்பாவுத் தேவனுக்கும் மேனேசருக்கும் ஆகாதாம். அவனப் புடிச்சு உள்ள போடணும்னு இவரு கலெக்டருக்கு எழுதுனாராம். அந்தக் காட்டத்த

மனசில வச்சுக்கிட்டேயிருந்து சமயம் பாத்து ஆளுகள ஏவிக் காரியத்த முடிச்சிருக்கான்.''

''அரமனக்காரங்க தூண்டிவுட்டதாவும் சொல்லிக்கிறாகளே.''

''கண்ணாரப் பாத்தவுக அப்படித்தான் சொல்றாக. ஒருவேள அரமனையிலருந்து அப்பாவுத் தேவனுக்குச் சொல்லிக் கதைய முடிச்சிருப்பாகளோ.''

''அப்படியும் இருக்கும்.''

''சண்டையில மீன்துள்ளி நாய்க்கமாருதான் முன்னால நின்னு நடத்துனாகளாம்.''

''அவுகளுக்கென்ன கோவமோ.''

''நாடாருகமேல ஆருக்குத்தான் கோவமில்ல.''

## படலம் 12

### 1. விசாரிக்கப்படாத கதை

பெரிய சாமியார் மூணாவது முறையாக அந்தக் கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார். முத்துஆறுமுகம் பிள்ளை ஆவுடையப்பப் பிள்ளை முத்தையா பிள்ளை சுப்பிரமணிய பிள்ளை ஆகிய நாலு வெள்ளாளர்களும் முத்துராக்குத் தேவர் தளவாய்த் தேவர் அய்யம்பெருமாள் தேவர் ஆகிய மூணு மறவர்களும் கூட்டாக எழுதியது. எல்லாரும் வெளியூர்க்காரர்கள். வேறொரு கதையைத் தெளிவாகச் சொல்லியிருந்தார்கள்:

> பங்குனி உத்திரத் திருவிழாவைப் பார்த்துவிட்டு அப்படியே காளைமாடுகள் வாங்கி வரலாமென்று நாங்கள் கழுகுமலைக்குப் போனோம். வெள்ளிக்கிழமையன்றே போய்விட்டோம். ஞாயிறு காலை பத்து மணியிருக்கும். கழுகுமலைக்காரர்களும் மற்றவர்களும் வேதக் கோயிலை நோக்கித் தேரை இழுத்துக்கொண்டு போனார்கள். தேர் கோயிலுக்கு முன்னால் போட்டிருந்த பந்தலை அடைந்துவிட்டது. தேர் கடந்து செல்ல வேண்டிய வீதியில் கடைக்கு முன்னால் நாங்கள் நின்றிருந்தோம்.
>
> வேதக் கோயிலுக்குள் ஏழெட்டு நாடார்கள் இருந்தார்கள். தேரிழுத்தவர்களில் சிலர் பந்தல் தேர் போவதற்கு இடைஞ்சலாக இருப்பதாக நினைத்துக் கோயிலுக்குப் போய் உள்ளே இருந்தவர்களைக் கூப்பிட்டார்கள்.
>
> ''உள்ள இருக்கிறதாரு. இந்தப் பந்தலு தேரு போறதுக்கு எடஞ்சலாருக்கு. இதப் பிரிச்சிருங்க.''
>
> நாடார்கள் வெளியே வந்து சொன்னார்கள்.
>
> ''எங்க சாமியாரோட உத்தரவில்லாமப் பிரிக்க முடியாது.''
>
> தேரிழுத்தவர்கள் வடங்களைப் போட்டுவிட்டுக் கோவமாகப் பேசிக்கொண்டு சமீன் மேனேஜரைத் தேடிப் போனார்கள். மேனேஜர் தனது வீட்டிலிருந்து

வந்தார். அவரைப் பின்தொடர்ந்து சனங்கள் வந்தார்கள். அவர் கோயிலுக்கு முன்னால் வந்து நின்று நாடார்களிடம் சொன்னார்.

''பந்தலப் பிரிச்சிடுங்கோ. தேர் போனதும் மறுபடியும் போட்டுத்தரச் சொல்றென்.''

நாடார்கள் தன்மையாகப் பதில் சொன்னார்கள்.

''எங்க சாமியாரோட உத்தரவில்லாமப் பிரிச்சா நல்லாருக்காது சாமி. நீங்க விரும்புனா ஒங்க கையாலயே பிரிச்சுக்கங்க.''

தேரிழுக்கத் தயாராக இருந்த சனங்கள் பக்கம் அவர் திரும்பினார். பந்தல் தூணை ஒரு கையால் பிடித்தபடி கோவத்தில் உரக்கச் சொன்னார்.

''இந்தப் பந்தலால என்ன சிரமம். நேர வீதிவழியா இழுக்கலாமே.''

பந்தல் மீதும் பந்தலடியில் நின்றிருந்த நாடார்கள் மீதும் பந்தலுக்கு வடக்கி லிருந்து கல்லெறி விழுந்தது. மேனேஜர் சொன்னார்.

''சண்டபோடாதீங்கோ.''

பந்தலிலிருந்து மேற்கே திரும்பினார். நாடார்கள் கோயிலுக்குள் ஓடி கதவடைத்துக்கொண்டார்கள்.

கொஞ்ச நேரத்தில் தேருக்கு முன்னும் பின்னுமாக நின்றிருந்த சனங்களில் ஒருவன் முன்னேறி வந்து மேனேஜரைக் குத்தினான். கோயிலின் தென்மூலையில் தீ வைக்கப்பட்டது. மேனேஜரைக் குத்தியவனை ஒரு நாய்க்கர் மடக்கிப் பிடித்தார். அவரும் குத்தப்பட்டார். குத்தியவன் கூட்டத் தில் தப்பிவிட்டான். அங்கே நின்றிருந்தவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

''வலச அப்பாவுத் தேவனோட கையாளு ஒருத்தன் குத்தீட்டுப் போறான்.''

வீட்டுக்குத் தூக்கிப் போகும் வழியில் மேனேஜரின் உயிர் பிரிந்தது.

கோயில் பற்றி எரிந்துகொண்டிருந்தது. போலீஸ்காரர்கள் ஓடிவந்தார்கள். அவர்களும் மற்ற சனங்களும் கோயிலைச் சுற்றி வளைத்துக்கொண்டு நெருப்புக்குத் தப்பிய நாடார்களைக் கைதுசெய்தார்கள்.

ரெண்டு மணி நேரம் கழிந்திருக்கும். எட்டயாபுரம் சின்ன மகாராசாவும் போலீஸ்காரர்களும் கூட்டமாக நாடார் தெருவுக்குப் போனார்கள். நாடார் வீடுகளைக் கொள்ளையடிக்குமாறு சனங்களிடம் சொன்னார்கள். வழியில் சும்மா நின்றவர்களை வற்புறுத்தினார்கள். பெண்களையும் குழந்தைகளையும் சகட்டுமேனிக்கு ஈவிரக்கமில்லாமல் அடித்தார்கள். நகைகளைப் பறித்தார்கள். பெண்களைத் துகிலுரித்து மானபங்கப்படுத்தினார்கள். அகப்பட்ட நாடார்களையெல்லாம் கைதுசெய்தார்கள்.

ஓட்டு வீடு தீப்பிடிக்காதென்பதால் கடைக்குப் போய் சீமெண்ணெய் வாங்கி வந்து தெளித்து வாசலில் வைக்கோல் பருத்தி மற்ற தீப்பிடிக்கும் பொருட் களைக் குமித்துத் தீ வைத்தார்கள். போலீஸ்காரர்களும் அரண்மனைக்காரர்கள் இருவரும் சனங்களைச் சும்மா இருக்க விடவில்லை. அந்த வீடு இந்த வீடு என்று காட்டி தீ வைத்துக் கொள்ளையடிக்கச் சொன்னார்கள்.

> அவர்கள் இருக்கும் தைரியத்தில் பள்ளர் மறவர் நாய்க்கர் மற்றவர்கள் சில வீடுகளுக்குத் தீ வைத்தார்கள். மற்ற வீடுகளைக் கொள்ளையடித்தார்கள். கைக்குச் சிக்கியதையெல்லாம் சுருட்டிக்கொண்டு ஓடினார்கள். எல்லாம் போலீஸ்காரர்களின் கண்ணுக்கு முன்னால் நடந்தது.
>
> நெருப்புக்குத் தப்பி ஊரை விட்டு ஓடிய நாடார்களை போலீஸ்காரர்கள் வேட்டையாடினார்கள். அடித்தார்கள். எரியும் கொள்ளிக்கட்டையால் சூடு வைத்தார்கள். கைதுசெய்து உள்ளே தள்ளினார்கள்.
>
> மறவர்கள் வேதக் கோயிலுக்குத் தீ வைக்காததால் சின்ன மகாராசாவே அவர்களை அடித்தார். அவரது தூண்டுதலின் பேரிலேயே கோயிலுக்குத் தீ வைக்கப்பட்டது.

இந்தக் கடிதம் மிக்கேல்பிள்ளை உபதேசியார் பார்த்து சாமியாரின் கைக்குப் போயிருந்தது. கடிதத்துடன் உபதேசியார் மேலும் சில விவரங்கள் எழுதியிருந்தார்:

> எட்டயாபுரம் மைனர் மகாராசாவின் சிறிய தகப்பனாருக்கும் மேனேஜருக்கும் இடையே விரோதம் உண்டு.
>
> எட்டயாபுரத்தைச் சேர்ந்த சுப்பைய மணியக்காரன் எட்டு மணியக்காரன் உஸ்மா சாயபு இவர்கள் எல்லாருக்கும் மேனேஜரைப் பிடிக்காது.
>
> கழுகுமலைக் கோயில் பொறுப்பிலிருந்த தேவஸ்தானத்தை மேனேஜர் நீக்கிவிட்டார்.
>
> இவர்கள் மேனேஜரைக் கூட்டிவந்து நாடார்களுடன் தகராறு பண்ணவைக்கும் நோக்கத்தில் நாடார்களின் கூட்டத்துக்குள் போகச் சொன்னார்கள்.
>
> வேதக் கோயிலை அழித்துவிடுமாறு மேல்சாதிக்காரர்கள் மேனேஜரிடம் சொன்னார்கள். மேனேஜர் இடைஞ்சலாக இருப்பதாக மைனர் மகாராசாவின் சிறிய தகப்பனார் சொன்னதாகத் தெரிகிறது.
>
> கூட்டத்தில் வைத்து மேனேஜரைக் கொன்றுவிடணுமென்று அவர்கள் விரும்பியதைத் தெரிந்துகொண்ட தாசில்தார் அந்தப் பக்கம் போவதைத் தவிர்க்க முயன்றார். கூட்டத்துக்குள் போக மறுத்துவிட்டார்.

இப்படியெல்லாம் நடந்திருக்குமோ என்று சாமியாரின் மனசு மறுகியது. உண்மையாகவே இருந்தாலும் என்ன செய்ய முடியும். கொலை வழக்கை கோர்ட்வரை கொண்டுபோய்விட்டார்கள். கோர்ட்டில் வாதாடி வழக்கை உடைத்தாகணும். செயிலில் இருக்கும் நாடார்களை வெளியே கொண்டுவந்தாகணும். இது முக்கியம். இந்தச் சமயத்தில் சமீன் விவகாரத்தைக் கிளறினால் வம்பு. அரண்மனைக்குள் ஆயிரம் இருக்கும். அது சம்பந்தமில்லாதது. அதுக்கு அப்பாவி நாடார்கள் என்ன செய்வார்கள். அவர்களை ஏன் அடித்து நொறுக்கணும். கொன்று குமிக்கணும். சமீன் என்றால் எல்லாருக்கும் பொதுவாக இருக்கணும். அதுதான் நியாயம்.

கொலை வழக்கை எடுத்து நடத்துவதுபற்றி சாமியார் யோசித்து காரியத்தில் இறங்கினார். நடந்த சம்பவம் வெளியே பலருக்கும் தெரியும்படி ஏற்பாடு செய்தார். நாலா பக்கமிருந்தும் கழுகுமலை நாடார்கள்மீது இரக்கமும் பச்சாதாபமும்

கவிந்தது. வேதக்காரர்கள் இந்துக்காரர்கள் என்ற வித்தியாசமில்லாமல் நெல்லைச் சீமையிலிருந்தும் வேறு இடங்களிலிருந்தும் பண உதவி குமிந்தது. சாமியார் தெம்பானார்.

கொலை நடந்த பதிமூணாம் நாளில் மருதக் கோனார் மண்டையைப் போட்டுவிட்டார். முதுகில் விழுந்த குத்து நுரையீரலைப் பாதித்துவிட்டதால் பிழைக்க முடியவில்லை. அவர் போய்விட்டதில் போலீசுக்குக் கவலைதான்.

அங்கங்கே சிதறிக் கிடந்த நாடார்களில் சிலர் கஷ்டப்பட்டுத் திருநெல்வேலிக்குப் போய்த் தங்கள் தெருக்களில் நடந்த கொலை கொள்ளைபற்றி மற்ற சாதிக்காரர்கள்மீது பிராது கொடுத்தார்கள். அப்படிப் பன்னிரெண்டு வழக்குகள் பதிவாயின. அமுக்கிவைக்க வழியில்லாமல் பதிவுசெய்தார்கள். ஏட்டு குழந்தை வேலுப் பிள்ளையும் சமீனைச் சேர்ந்த சக்கரைச்சாமியும் முக்கிய எதிரிகள். மற்றவர்களில் சிலர் மேனேஜர் கொலை வழக்கில் போலீஸ் தரப்புச் சாட்சிகள். ஒரு எதிரிகூடக் கைதுசெய்யப்படவில்லை. ஏட்டையும் சக்கரைச்சாமியையும் கைதுசெய்வது நடக்கிற காரியமா.

நாடார் தெருக்களில் எரிந்துபோன வீடுகள் மறுபடியும் தலையெடுக்க ஆரம்பித்தன. அங்கங்கே பயந்து போய்ப் பதுங்கிக் கிடந்தவர்கள் திரும்பி வந்து வீட்டுச் சுவர்களைப் பூசிக் கூரை மேய்ந்தார்கள். முதலாளிக்குப் பெருத்த சேதம். அவரது கிட்டங்கி வெளிப்பார்வைக்குப் பாதிப்பில்லாமல் தெரிந்தாலும் உள்ளே அவ்வளவு பருத்தி மருகையும் வெந்துவிட்டது. ஓட்டுக் கூரையைப் பிரித்து உள்ளே இறங்கித் தீ வைத்திருக்கிறார்கள். கலகத்தன்று அவர் இருந்திருந்தால் முதலில் அவரைத்தான் காவு போட்டிருப்பார்கள். அந்த அளவுக்கு அவர்மேல் கண்வைத்துக் கறுவிக்கொண்டிருந்தார்கள். அவரைத் தேடிக் கிடைக்காமல் அவரது ரெண்டு பெண்களின் காதை அறுத்துவிட்டார்கள். அம்மாவுக்கு நல்ல அடி. காய வலி தாங்காமல் முனங்கிக்கொண்டிருந்தாள். முக்கியமானவர்களில் வேதமுத்துதான் அநியாயத்துக்கு மாட்டிக்கொண்டார்.

வானரமுட்டியில் தங்கியிருந்த பலவேச நாடாரும் மகன்களும் வந்துசேர்ந்தார்கள். கருப்பட்டி மண்டி குதறிக் கிடந்தது. சிப்பமெல்லாம் எரிந்து கருப்பட்டி இளகித் தரையில் பாகு படர்ந்திருந்தது. கும்பிய வாடை குமட்டியது. எல்லாருமாகச் சேர்ந்து சேதாரங்களை அகற்றி அலசிச் சுத்தப்படுத்தினார்கள். அப்படியும் வாடை மிஞ்சியிருந்தது. மூளியாகிப்போன கடையைப் பார்த்து பலவேச நாடாருக்குக் கண்ணீர் முட்டியது. தழுதழுத்தார்.

''மலையாள தேசத்துலரிந்து இங்க ஓடி வந்து ஒளிஞ்சொம். இங்கரிந்து எங்க போறது. வாழ்வோ சாவோ நமக்குக் குடுத்துவச்சது கழுகுமலதான்.''

பொன்னுமாடனுக்கு உடம்பு துடித்தது.

''ஏன் ஓடி ஒளியணும். ஒரு கையி பாத்துட வேண்டியதுதான்.''

''அதெப்படி முடியும். எல்லாரும் ஒண்ணு சேந்துக்கிட்டானே.''

நெருப்புக்குத் தப்பிய சில கூரை வீடுகளில் பெரிய நாடார் வீடும் ஒண்ணு. வயசுப் பெண் பஞ்சவர்ணத்துடன் வீட்டுக்குள் அடைத்துக் கிடந்த சுப்பம்மாளுக்கு

ஆச்சரியமான ஆச்சரியம். குடும்பத்தைக் காப்பாற்றிய முருகனை மனசார நினைத்துக் கும்பிட்டாள்.

பெரிய நாடாரும் அம்மமுத்தும் கொஞ்ச நாள் கலிங்கலூருணியில் ஒதுங்கி யிருந்தார்கள். ஆண்டியின் பூசரமரத் தோட்டத்தில் மாமரத்தடிதான் தங்கல். புழக்கத்துக்குக் கிணறும் தெற்கே கோணிகுளமும் தோதாக இருந்தன. ஆண்டி எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொடுத்தான். அங்கேயே சமைத்துச் சாப்பிட் டார்கள். அதுக்கான சாமான்களை வேலாயி அட்டியில்லாமல் கொடுத்தனுப் பினாள்.

பகல் முழுக்க ஆண்டி மாமரத்தடியில் பெரிய நாடாருடன் பேச்சுப்பழக்கம் போட்டான்.

''வயசான காலத்துல காட்டுக்குள்ள கெடந்து அழுந்துறத நெனச்சா வருத்த மாருக்கு.''

''உசிரு பொழச்சமேன்னு சந்தோசப்படணும். இங்க வரப்போயித் தப்பிச் சொம். அங்கரிந்தா செத்து மடிஞ்சிரிப்பொம். எழவு சொல்லி வுடுததுக்கு ஆளி ரிக்காது.''

நாடார் ஆண்டியை நன்றியுடன் பார்த்தார். அவன் தேற்றினான்.

''அப்படிச் சொல்லாதங்க. நீங்க ரெம்ப நாளைக்குப் பெழச்சுக்கெடக் கணும். நல்லது பெல்லது அனுபவிக்கணும்.''

ராத்திரி வேளை பொய்யாளி துணைக்கிருந்தான். ஊருக்குள் பெண்க ளிடையே இதே பேச்சாக இருந்தது.

''அஞ்ஞாடி இந்த அநியாயத்தக் கேட்டயாம்மா. கழுகுமலையில ஒரே சண்டக்காடாக் கெடக்குதாம். எல்லாச் சாதிச் சனங்களும் ஒண்ணுசேந்துக்கிட்டு நாடாக்கமார வெரட்டியடிச்சிட்டாகளாம். அவுக வீடெல்லாம் கொளுத் தீட்டாகளாம்.''

''எத்தன கொல வுழுந்ததுன்னு கணக்கில்லையாம்.''

''நம்முருலருந்து தேரோட்டம் பாக்கப் போனவுக தப்பிச்சொம் பெழச்சம்னு ஓடி வந்துட்டாக. எம் புருசனுக்கு இனியும் அந்தப் பயம் போகல. ராத்தரி முழுக்க ஒரே பொலப்பம்.''

''பாவம் பனையேறிப் பெழைக்கிற நாடாரு என்ன குத்தம் செஞ்சாரு. இங்க வந்து கெடக்காரு.''

''அதானம்மா. தட நாருல உசிரு தொங்குற மனுசருக்கு இப்படியொரு சோதனையா.''

''ஒரு கணக்குக்கு அவரும் நாடாருதான. உசிரு தட நாருல தொங்குதோ தெராசுல தொங்குதோ அதப் பத்தி ஆரு நெனைக்கப்போறாக.''

''அதுக்காக இப்படியா வெறிபுடிச்சு அலையிறது.''

''இவுக என்ன செஞ்சாகளோ.''

''என்னதான் செஞ்சிருக்கட்டுமே. செஞ்சவனப் புடிச்சு என்னமும் செய்யி. பாவம் பொம்பள புள்ளீகள இம்சப்படுத்துறது அநியாயமில்லையா.''

''அந்த அறிவு வேணும்.''

கழுகுமலையில் நிலைமை கொஞ்சம் சரியானதும் பெரிய நாடாரும் அம்மமுத்தும் கலிங்கலிலிருந்து திரும்பினார்கள். வீடு பத்திரமாக இருப்பதைப் பார்த்து நிம்மதி. வீட்டை விட்டுவைத்ததுக்குக் காரணம் உண்டு. அதுக்கும் மேற்கே பிச்சாண்டி நாடாரின் வீடு இருந்தது. அவர் சமீனில் வேலை பார்க்கும் பனையேறி. அவரையும் அவர் வீட்டையும் ஊருக்குள் எல்லாருக்கும் தெரியும். அதனால் அவர் வீட்டை யாரும் தொடவில்லை. பெரிய நாடார் வீட்டில் தீ வைத்தால் அந்த வீடும் பற்றிக்கொள்ளும். அதனால் இதும் பிழைத்தது.

கலகம் நடக்கும்போது பிச்சாண்டி நாடார் வீட்டில் பெண்களும் பிள்ளைகளும் நிறைய பேர் தஞ்சமடைந்து பிழைத்துக்கொண்டார்கள். அதுக்குப் பிறகும் அங்கே ராத்திரி வேளைகூடத் தங்கினார்கள். போலீஸ் அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை.

ஒருவழியாக ஆட்டம் அடங்கி ஊர் அமைதியாகிவிட்டதாகத் தோன்றினாலும் ஆறெல்லாம் தண்ணீர் அடியெல்லாம் செங்குருதியாகக் குமுறிக் கொண்டுதானிருந்தது. இவ்வளவு அழிம்புக்குப் பிறகும் கட்டுச்சோறு சுமந்து கோர்ட்டுக்கு நடக்க இரு பக்கமும் தயாராகிக்கொண்டிருந்தார்கள்.

## 2. அமைய மாட்டங்காளே

வேப்பங்காட்டில் சாலமுத்து மகள் பூவாயி ஊரையே கிறங்கடித்துக் கொண்டிருந்தாள். அப்படியொரு அழகு. நாளுக்கொரு சீலை உடுத்துவாள். கழுவித் துடைத்த மாதிரி இருக்கும். அவள் உடுத்திக் கழித்ததுதான் பறைக் குடிப் பெண்களுக்கு. அவளைப் பார்க்கப்பார்க்கப் பொறாமை பற்றி எரியும். வைது தீர்ப்பார்கள்.

''வண்ணாக் கழுத சிமிட்றதப் பாரு. ஒரு தரையில காலு தருகுதா. கண்ண உருட்டிஉருட்டி எத்தன புருசனத்தான் தேடப்போறாளோ.''

''நம்ம சீல இவளுக்கு மட்டும் எப்படிப் பொருத்தமாருக்குது. நம்ம கெட்னா ஒரு நாயிகூட அதப் பத்திக் கேக்க மாட்டங்குது.''

''புருசக்காரனச் சொல்லணும். மண்டிபோட்டு ரெண்டு சட்டி சோறு திங்கத் தெரியிது. பொண்டாட்டிக்கேத்த சீல வாங்கத் தெரியல. துப்புக்கெட்ட மனுசன். வரட்டும் வச்சுக்கிறென்.''

என்னதான் கடுப்பிருந்தாலும் அவள் அழகு முணுமுணுக்க வைக்கும்.

''மேகலக் குடியில பெறந்திருக்க வேண்டிய கழுத.''

மேகலக் குடிக்காரார்களுக்கு வண்ணார்களைக் கண்டாலே ஆகாது. ''சீ தோ'' என்று ஒதுங்கி ஓடுவார்கள். பூவாயி கதை அப்படியில்லை. எளவட்டங்கள் அவளிடம் பேசத் தட்டுக்கொட்டுவார்கள். அவள் கம்மாய்க்குக் கஞ்சி கொண்டு போகும் சமயம் பார்த்து புள்ளாண்டன்மார் ஓடைக் கரையிலும் வாய்க்கால் வரப்பிலும் வேலை செய்யும் சாக்கில் காத்துக்கிடந்து அண்டம்போடுவார்கள்.

''நான் தொணைக்கு வரட்டுமா புள்ள.''

அவள் பக்குவமாகப் பேசுவாள்.

''எனக்கொண்ணும் பயமில்ல சாமி. தனியாப் போயிக்கிருவென்.''

''கம்மாக் கரப் பக்கம் கருத்தையன் திரியிறதாச் சொல்லிக்கிட்டாக.''

''என்னய ஒண்ணும் செய்ய மாட்டாக.''

''பேயி புடிச்சாத் தெரியும்.''

''எங்கமேல சாமிக்கு இம்புட்டு அக்கறையா. அக்கறப்படுறதுக்கு வேற தொண கெடைக்கலயா.''

அவளது சிணுக்கு நடையில் கொசுவம் கும்மாளம்போடும். புள்ளாண்டன் மார் பார்வை ரெம்பத் தூரம் கூடவே ஓடும். ஏமாற்றத்தில் கையைப் பிசைவார்கள்.

''சே அமைய மாட்டங்காளே.''

அவளைக் கலியாணம் செய்துகொள்ளப் பறைக் குடியில் பலர் தயாராக இருந்தார்கள். வீட்டுக்குப் பெண்கேட்டுப் போகாததுதான் குறை. சாலமுத்துக்கும் மருதனுக்கும் சம்மதமில்லை. மருதன் சொல்லிவிட்டான்.

''அவ அந்தச் சனங்க வீட்டுக்குப் போயிட்டா நம்ம ஆருட்டச் சோறு கேக் கிறது. அவளே வந்து போடுவாளா.''

''நம்ம புள்ளையிட்டயே எப்படிப் பானையேந்த முடியும்.''

''அது நம்ம தொழிலுக்கு ஒத்துவராதுப்பா.''

சக்கம்மாளுக்கு விசாரம்.

''அவள ஒருத்தன் கையில புடிச்சுக் குடுத்துட்டா இந்தக் கவலையெதுக்கு.''

## 3. நீதியின் தேவனே

நெல்லை கீழ்க்கோர்ட்டில் எட்டயாபுரம் சமீன் மேனேஜர் கொலை வழக்கு விசாரணை அடிதொடியாக ஆரம்பமானது. ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் கம்மிங் கிட்டத்தட்ட ஒரு மாசம் விசாரணை நடத்தினார். முப்பத்தெட்டுக் கைதிகள். போலீஸ் தரப்பில் இருபத்திரெண்டு பேரும் எதிர்த் தரப்பில் இருபத்திநாலு பேரும் சாட்சிகள். எல்லாரையும் விசாரித்தார்.

கைதிகள் குற்றத்தை மறுத்தார்கள். சாட்சிகள் சாதகமாகவும் பாதகமாகவும் சொன்னார்கள். வழக்கை அலசிய மாஜிஸ்திரேட் கைதிகளில் நாலு பையன்கள் குற்றமற்றவர்கள் எனத் தீர்மானித்தார். அவர்கள் பந்தலடியில் நின்றிருந்தார்கள் என்பதைத் தவிர கலகம் செய்ததாக யாரும் சொல்லவில்லை. நாலு பேரையும் விடுதலைசெய்தார்.

மீதி முப்பத்திநாலு பேரும் குற்றவாளிகள் எனக் கருதினார். நாடார்கள் வேதக் கோயிலில் கூட்டமாகக் கூடினார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. அந்த வழியாக இந்துக்காரர்கள் தேரிழுத்து வருவதைத் தடுக்கவே கூடியிருந்தார்கள். கலகம் செய்வது படுகாயப்படுத்துவது கொலை செய்வது அவர்களது நோக்கம். அவர்கள்மீது இந்தக் குற்றங்களைச் சுமத்தி மேல்விசாரணைக்காக செசன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பிவிட்டார்.

முப்பத்திநாலு பேரும் சட்டத்துக்குப் புறம்பாகக் கூட்டங்கூடிக் கலகம் செய்தார்கள். மேனேஜரையும் கொலைசெய்யும் நோக்கத்தில் படுகாயப்படுத்தி னார்கள். இது பொதுவான குற்றச்சாட்டு.

மகாலிங்க நாடார் மேனேஜரைக் கொலைசெய்தார். கருத்தண நாடார் ஆழ்வார்சாமியைக் கொலைசெய்தார். பஞ்சநாதய்யரைப் படுகாயப்படுத்தினார். இது தனிப்பட்ட குற்றச்சாட்டு.

செசன்ஸ் கோர்ட்டில் விசாரணை தொடர்ந்தது. கோர்ட்டார் மக்ளியாட் வெள்ளைக்காரர். முப்பத்திநாலு கைதிகளுக்கெதிராக போலீஸ் தரப்பில் இருபது சாட்சிகளை நிறுத்தினார்கள். கோர்ட்டார் சம்பந்தப்பட்டவர்களைக் கூண்டி லேற்றி நிதானமாக விசாரித்தார்.

எப்படியும் வழக்கை உடைத்துவிடலாம் என்று பெரிய சாமியார் திடமாக நம்பினார். முக்கியமான சாட்சிகள் கொடுத்த வாக்குமூலங்கள் அதிகாரிகளின் யதாஸ்துகள் அவருக்குக் கைகொடுத்தன. அவற்றை ஆராய்ந்து வக்கீல்கள் வாதாடுவதற்காகக் குறிப்பெடுத்துக்கொண்டார்.

மூணு வக்கீல்களை நியமித்திருந்தார். ஒருவர் தாம்சன் என்ற வெள்ளைக் காரர். இன்னொருவர் ஆரோக்கியசாமி. அவர் வேதக்காரர். மற்றவர் குப்புசாமி அய்யர்.

வழக்கில் கோர்ட்டாருக்கு உதவியாக இரு அசஸ்ஸர்கள் இருந்தார்கள். ஒரு வெள்ளாளர் ஒரு பிராமணர். அவர்கள் விசாரணையைப் பொறுமையாகக் கேட் டார்கள்.

நாடார்களை மட்டும் கைதுசெய்து கோர்ட்டில் நிறுத்தியதை நினைத்து பெரிய சாமியாருக்கு ஆத்திரம். கொதித்துப்போய் கலெக்டருக்குக் கடிதம் எழுதினார்:

> கழுகுமலையில் அந்தக் கோரமான துயரச் சம்பவம் நடந்து முடிந்தவுடன் அதைப் பற்றி எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்தன. எல்லாம் மேல்சாதி இந்துக்காரர்கள் எழுதியவை. எல்லாக் கடிதங்களும் ஒரே கருத்தைத்தான் சொல்கின்றன. அதாவது நாடார்கள் அப்பாவிகள். மேனேஜரைக் குத்தியவன் ஓடிவிட்டான். அதனால் இப்போது செயிலில் இருக்கும் நாடார்களைப் பிடித்து அடைத்தார்கள். அதுக்கு ஒரே காரணம் அவர்கள் நாடார் சாதிக்காரர்கள். கழுகுமலைச் சம்பவம் மதம் சம்பந்தப்பட்டதல்ல. சாதி சம்பந்தப்பட்ட விசயம். அதனாலேயே நான் இதில் நேரடியாகத் தலையிடவில்லை. இருந் தாலும் இப்போது நாடார்களுக்கு உண்மையில் அநீதி இழைக்கப்பட்டுவிட்ட காரணத்தால் என்னால் இனிமேலும் ஒதுங்கியிருக்க முடியாது... குற்றமிழைத்த நாடார்களையோ கிறிஸ்தவர்களையோ நான் பாதுகாக்க விரும்பினால் அது கிறிஸ்துவ மதத்துக்கு இழுக்காகும்... எனது உபதேசியார் கேவலமான முறையில் நடத்தப்பட்டிருக்கிறார். இது தனிப்பட்ட முறையில் என்னையும் என்னுடனிருக்கும் கிறிஸ்தவர்களையும் பாதித்துவிட்டது. அந்த இளைஞரை போலீஸ் காட்டுமிராண்டித்தனமாக நடத்தியதாக அவருடன் பழகியவர்கள் சொல்கிறார்கள். நாடார்கள் குற்றவாளிகள் அல்ல. போலீசும் பிற சாதிக்காரர் களுந்தான் குற்றவாளிகள் என்பதை நிரூபிக்க இன்னும் செயிலுக்குள் ளிருக்கும் உபதேசியாரை போலீஸ் கேவலமாக நடத்திய விதமே போது மான முகாந்திரமாகும். நீங்கள் எல்லாருக்கும் நீதி வழங்குவீர்கள் என்பதை நன்கறிவேன்.

நாடார்களின் சொத்துகளைச் சேதப்படுத்தியவர்களைப் பற்றித் தகுந்த ஆதாரம் இருந்திருந்தால் கோர்ட் அவர்கள்மீது தக்க நடவடிக்கை எடுத்திருக்கும் என்று கலெக்டர் மழுப்பலாகப் பதிலளித்துவிட்டார்.

மேனேஜர் கொலை வழக்கை செசன்ஸ் கோர்ட் முடிவுக்குக் கொண்டுவர மூணு மாசத்துக்கு மேலாகிவிட்டது. எதிர்த் தரப்பு முற்றிலும் வேறான ஒரு கதையை முன்வைத்தது. அதாவது வேதக் கோயிலுக்கு முன்னால் நாடார்களே இல்லை. மேனேஜர் தேரருகில் ஒரு எதிரியால் கொலைசெய்யப்பட்டார். பிறகு ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளை கூட்டத்தை நாடார் தெருவுக்குக் கூட்டிக் கொண்டு போய்ச் சூறையாடச் செய்தார். அந்தச் சமயத்தில்தான் நாடார்களை அநியாயமாக அடித்து நொறுக்கிக் கைதுசெய்தார்கள்.

பல நாடார்கள் பந்தலடியில் இருந்தார்கள். அங்கேயே முப்பது பேர் கைது செய்யப்பட்டார்கள். இது போலீஸ் தரப்பு சொன்ன கதை.

எதிர்த் தரப்பு வக்கீல் பிரயாசைப்பட்டு வாதாடியும் பயனில்லை. கோர்ட்டார் போலீஸ் தரப்பின் கதையை முழுக்கமுழுக்க நம்பிவிட்டார். ஒரு விசயத்தில் அவர் தெளிவாக இருந்தார். மலபார் சூரிக்கத்தியினால் மேனேஜரைக் குத்திக் கொன்றதன் மூலம் பந்தலடியில் சண்டையை ஆரம்பித்து வைத்தவர் மகாலிங்க நாடார்தான். கத்தியின் மாதிரி வடிவம் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டுள் ளது. கருத்தண நாடார் ஆழ்வார்சாமியைக் கொலைசெய்தார். இது ஆழ்வார் சாமியின் மரண வாக்குமூலத்திலிருந்தும் சப்மாஜிஸ்திரேட்டின் வாக்குமூலத்தி லிருந்தும் உறுதியாகிறது. மரணவாக்குமூலத்தில் கருத்தண நாடாரின் பேர் சொல்லப்படவில்லையென்றாலும் அவர் எப்படியிருப்பார் என்று விவரிக்கப் பட்டுள்ளது. ஆக கொலைசெய்தது அவர்தான்.

கலகம் நடந்ததுக்கான காரணங்களை கோர்ட்டார் ஆராய்ந்தார். முன் விரோதம் நெருப்பாகக் கனன்று நாடார்கள் மேனேஜரையும் ஆழ்வார்சாமியை யும் மற்றவர்களையும் வெட்டிக் குத்தியதன் மூலம் இந்துக்காரர்களை ஆவேசப் படுத்திவிட்டார்கள். கலகம் கொழுந்துவிட்டு எரிந்தது. அதுக்குப் பிறகு நடந்த சண்டையும் தீவைப்பும் இயல்பானதே. ஹைகோர்ட்டின் தீர்ப்புக்கெதிராகப் பல் லாக்கில் பட்டணப் பிரவேசம் போகத்தான் நாடார்கள் வேதத்துக்கு மாறினார் கள். சில நாடார்கள் கோயிலில் படுத்துறங்கிக் காவலிருந்ததுக்கு ஆதாரம் உள்ளது. எனவே எதிரிகள் கோயிலுக்கு முன்னால் தேரிழுத்து வரும்போது அவர்கள் கோயி லுக்கு முன்னால் கூடியிருக்கச் சாத்தியமுண்டு. இந்துக்காரர்கள் பந்தலுக்குள் நுழைந்தால் எப்படியும் தடுத்தாகணும். இதுதான் அவர்களது நோக்கம். தேரி ழுக்கும்போது கல்லெறிந்து சண்டை மூட்டினார்கள்.

கொலைக்கு ரெண்டு பேர் பொறுப்பு. மற்றவர்கள் பந்தலடியில் நாடார்கள் செய்த கலகத்தில் பங்கெடுத்துக்கொண்டார்கள். இதுதான் அவரது முடிவு.

மூணு வாரமாகப் பொறுமையுடன் விசாரணையைக் கவனித்துக்கொண் டிருந்த அசஸ்ஸர்கள் தங்கள் கருத்துகளைச் சொன்னார்கள். கருத்தண நாடார் மகாலிங்க நாடார் இருவருமே கொலைக் குற்றவாளிகள் என்பது அவர்களது அபிப்பிராயம். கருத்தண நாடார் படுகாயப்படுத்திய குற்றவாளி மற்றவர்கள்

கலகம் செய்த குற்றவாளிகள் என்று முதல் அசஸ்ஸர் மேலும் சொன்னார். மற்றவர்கள் குற்றவாளிகளில்லை என்பது ரெண்டாவது அசஸ்ஸரின் கருத்து.

கருத்தண நாடார் மகாலிங்க நாடாரைப் பொறுத்தமட்டில் கோர்ட்டார் இரு அசஸ்ஸர்களின் கருத்தை ஏற்றுக்கொண்டு அவர்கள் கொலைக் குற்ற வாளிகள் எனத் தீர்மானித்து இருவருக்கும் ஹைகோர்ட் ஊர்ஜிதம் செய்வதற் குட்பட்டுத் தூக்குத் தண்டனை சொன்னார். முதலாவது அசஸ்ஸரின் கருத்தை ஏற்று மற்ற முப்பத்திரெண்டு எதிரிகளும் கலகம் செய்த குற்றவாளிகள் என முடிவு செய்தார். அவர்கள் கூட்டத்தினால் நையப் புடைக்கப்பட்டதாலும் அவர்களது வீடுகள் சூறையாடப்பட்டுக் கொளுத்தப்பட்டதாலும் நாலு மாசம் ரிமாண்டில் இருந்துள்ளதாலும் அவர்களுக்குக் கடுமையான தண்டனை தேவை யில்லை எனக் கருணை காட்டி பையன்களும் வயசாளிகளுமான பதினோரு பேருக்கு மூணு மாசம் கடுங்காவல் தண்டனையும் முழுவயசுள்ளவர்களும் தெம் பானவர்களுமான மற்ற இருபத்தியோரு பேருக்கு ஆறு மாசம் கடுங்காவல் தண் டனையும் சொன்னார். கொலைக் குற்றவாளிகளை அப்பீல் செய்ய அனுமதித்தார்.

தீர்ப்பைக் கேட்டு நாடார்கள் மட்டுமில்லை பெரிய சாமியாரும் இடிந்து போனார்கள். திக்குத் தெரியாமல் இருட்டுக்குள் நிற்கிற திகைப்பு. நாடார் தெருக்களில் துயரம் கவிந்தது. அழுதார்கள். புலம்பினார்கள்.

''சூசுவான்னு அனந்தம்மா சாமியக் கும்புட்டுட்டுக் கெடக்கிறதுக்கில்லாம எடுக்காற எடுப்பெடுத்து இக்கதியாயிட்டமே.''

''சாமியாருகள நம்பி மோசம்போயிட்டமே.''

''எல்லாப் பயகளும் சேந்து செஞ்ச அநியாயத்துக்குச் சாமிதான் என்ன செய்யும். சாமியாருதான் என்ன செய்வாரு.''

''அனந்தம்மாளக் கும்புடுறவுகளுக்குந்தான் தொந்தரவு.''

''வேதக்காரன் இந்துக்காரன்னு பாத்தா வெட்னான் குத்துனான் வீடுகளக் கொளுத்துனான்.''

''ஏற்கெனவே ஏழு உசிரப் பலிகுடுத்தாச்சு. இனியும் ரெண்ட எடுக்கப் போறாங்களே பாவிக.''

அநியாயம் நடந்துவிட்டது என்பதில் பெரிய சாமியார் தெளிவாக இருந் தார். நியாயம் கிடைத்தாகணும். பல வக்கீல்களைக் கலந்தார். மற்ற சாமியார் களுடன் பேசினார். எல்லாரும் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்யலாமென்று ஆலோசனை சொன்னார்கள். நம்பிக்கை வந்தது. தைரியமாக அப்பீல் செய்தார். செசன்ஸ் கோர்ட் சொன்ன தண்டனையை ஹைகோர்ட்டில் ஊர்ஜிதப்படுத்த சர்க்கார் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. ஹைகோர்ட்டில் அப்பீல் உடனே விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை.

என்னாகுமோ ஏதாகுமோ என்று நாடார்கள் தவித்துக்கொண்டிருந்தார்கள். செயித்துவிடலாம் என்று சாமியார் உறுதியாக இருந்தார். வழக்கில் வாதாட வெட்டர்பர்ன் என்ற வெள்ளைக்கார வக்கீலை அமர்த்தினார். அவருக்கு உதவியாக வக்கீல் ஆரோக்கியசாமி இருந்தார். ஹைகோர்ட்டில் நடப்பதை அப்பப்ப அறிந்துகொள்ளவும் சாமியார் ஏற்பாடு செய்திருந்தார்.

இந்துக்காரர்களுக்கும் போலீசுக்கும் எதிராக நாடார்கள் பன்னிரெண்டு பிராதுகள் கொடுத்திருந்தார்கள். அவற்றைப் பதிவுசெய்ததுடன் சரி. அப்படியே கிடப்பில் போட்டுவிட்டார்கள். மேனேஜர் கொலை வழக்கைச் சூட்டோடு சூடாக விசாரணை நடத்தி மேல்கோர்ட்டுக்கு அனுப்பிவைத்த ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் அந்த வழக்குகளை எடுத்துக்கொள்வதில் ஆர்வம் காட்டவில்லை. தன் போக்கில் ஊர்களுக்கு முகாம் கிளம்பிவிட்டார். அவரைப் பற்றி ஹைகோர்ட்டிலும் கலெக்டரிடமும் புகார் கொடுத்த பிறகுதான் அவற்றைத் தொட்டுப் பார்த்தார்.

ஒரு மாசம் கழித்தே விசாரணையை ஆரம்பித்தார். ஜில்லாவின் வெவ்வேறு இடங்களில் விசாரணை நடந்தது. பிராது கொடுத்தவர்களும் சாட்சிகளும் அவர் போகும் இடத்துக்கெல்லாம் போகணும். அல்லாடிப்போய் அங்கலாய்த்தார்கள்.

''இந்த மனுசன் இப்படி இழுத்தடிக்காரே.''

''இவரோட பெரிய தும்பமாப் போச்சு. வாய்தாவப் பத்திக் கொஞ்சம் முன்கூட்டியே தெரிவிக்கலாமில்ல. ஒடனைக்கொடன வான்னா முடியிற காரியமா. இவரு பண்றது அநியாயம்.''

''நம்ம குடுத்திருக்கிறது சாதாரணப் பெராதா என்ன. கொல செஞ்சது கொள்ளையடிச்சது தீவச்சது காதறுத்தது... இது போதாதா.''

''கொலையென்ன ஒண்ணா ரெண்டா. ஏழு உசிரு.''

''இதெல்லாம் இவருக்கு முக்கியமாத் தெரியல.''

''அப்படித் தோணியிருந்தா குத்தம் செஞ்சவன் ஒருத்தனுக்காச்சும் புடிவாரண்டு அனுப்பியிருப்பாரே.''

''மேனேசரு கொலைக்காக முப்பத்தெட்டுப் பேரப் புடிச்சு அடச்சவங்க நம்மளோட பன்னிரெண்டு வழக்குல ஒருத்தனக்கூடப் புடிக்கல பாரு. அத நெனச்சாத்தான் கோவங்கோவமா வருது.''

''காலக் கொடும.''

ஹைகோர்ட்டுக்குப் புகார் கொடுத்தார்கள். வழக்குகளை அனுபவமிக்க ஒரு மாஜிஸ்திரேட்டிடம் ஒப்படைக்குமாறு ஹைகோர்ட் உத்தரவிட்டது. ஒரே இடத்தில் தொடர்ந்து விசாரணை நடத்தணும். தூத்துக்குடியில் விசாரணை நடத்துமாறு கலெக்டர் உத்தரவு போட்டார். அதுக்குப் பிறகும் சாவகாசமாகத் தான் விசாரணை தொடங்கியது. கடைசி வழக்கு முடிவதற்குள் மூணு மாசம் தாண்டிவிட்டது. அதாவது செசன்ஸ் கோர்ட்டில் மேனேஜர் கொலை வழக்கு முடிந்த பிறகும் இழுத்துக்கொண்டுபோனது.

ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் அஞ்சு வழக்குகளைத் தள்ளுபடிசெய்தார். அஞ்சு வழக்குகளை செசன்ஸ் கோர்ட்டுக்குத் தள்ளிவிட்டார். கைவசம் மிஞ்சியிருந்தது ரெண்டு. அதும் தொறட்டுப் பிடித்தது. அவற்றில் ஏட்டு குழந்தைவேலுப் பிள்ளையும் சக்கரைச்சாமியும் பிரதான எதிரிகள். விவகாரத்துக்குச் சொல் லணுமா. மாஜிஸ்திரேட் ரெண்டையுமே விசாரிக்காமல் ஒரு மாசம் லீவில் போய்விட்டார்.

ரெண்டு வழக்கையும் அஸிஸ்டெண்ட் மாஜிஸ்திரேட் விபர்ட் விசாரிக்க வேண்டிய நிலைமை. அவர் ஒரு வருச அனுபவமே உள்ளவர். அலட்சியமாகப்

பொறுப்பில்லாமல் விசாரணை நடத்தினார். எதிரிகள் எல்லாரும் வந்திருக் கிறார்களா என்றுகூடக் கண்டுகொள்ளவில்லை. பிறகென்ன ரெண்டு வழக்கும் தள்ளுபடிதான்.

செசன்ஸ் கோர்ட்டார் தனக்கு வந்த அஞ்சு வழக்குகளையும் விசாரணைக்கு எடுத்துக்கொண்டார்.

முதலாவது பேச்சிமுத்து நாடார் கொலை வழக்கு. உசேன் ராவுத்தர் கருப்பன்செட்டி உட்பட அஞ்சு பிரதிவாதிகள். அவர்கள் பேச்சிமுத்து நாடா ருடன் சண்டையிட்டுக் குத்திக் கொன்று அவரைத் தீயில் எறிந்துவிட்டு வீட்டுக் குள் புகுந்து பித்தளைப் பாத்திரங்களைக் கொள்ளையடித்ததாகக் குற்றச் சாட்டுக்கள்.

பேச்சிமுத்து நாடாரைக் கொலைசெய்தது இன்னாரென்று ருசுவாகாததால் ஜாயிண்ட் மாஜிஸ்திரேட்டு ஆரம்பக் கட்டத்திலேயே கொலைக் குற்றச்சாட்டை ஒதுக்கித் தள்ளிவிட்டுத்தான் வழக்கை மேல்கோர்ட்டுக்கு அனுப்பியிருந்தார். ஆகையால் செசன்ஸ் கோர்ட்டார் அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவே யில்லை. மற்ற குற்றச்சாட்டுகளை மட்டுமே விசாரித்தார்.

ரெண்டாவதும் கொலை வழக்குத்தான். எட்டு எதிரிகள். அஞ்சு மறவர் ஒரு செட்டியார் ஒரு வெள்ளாளர் ஒரு முதலியார். செகநாதன் வீட்டுக்குத் தீ வைத் தார்கள். அவன் தம்பி குருசாமி என்ற பையனை எரியும் வீட்டுக்குள் எறிந்து நகைகளையும் பாத்திரங்களையும் கொள்ளையடித்தார்கள். இவை குற்றச் சாட்டுக்கள்.

கொலைசெய்து கொள்ளையடித்தது ருசுவாகததால் கீழ்க்கோர்ட்டில் விடுதலை செய்யப்பட்டுத் தீவைத்த குற்றத்துக்காக ரெண்டு பேர் மட்டும் மேல் விசாரணைக்கு அனுப்பப்பட்டிருந்தார்கள்.

மூணாவது வழக்கு கூடலிங்க நாடார் குடும்பத்தைக் கொலைசெய்தது சம்பந்தமானது. ஆறு எதிரிகள். அஞ்சு பேர் விசாரணைக்கு ஆஜரானார்கள். ஒருவர் தலைமறைவாகிவிட்டார்.

பொன்னுச்சாமி நாடாரது சம்சாரத்தின் நகைகளையும் வீட்டில் பித்தளைப் பாத்திரங்களையும் ஒரு சோடிக் காளைகளையும் ஏழு எதிரிகள் கொள்ளை யடித்தது நாலாவது வழக்கு. ஏழு பேரில் நாலு குடும்பமார் ரெண்டு மறவர் ஒரு முதலியார்.

தட்சிணமாற நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட சந்தைப்பேட்டையில் அழிமாண்டம் செய்தது அஞ்சாவது வழக்கு. மொத்தம் பதிமூணு எதிரிகள். கீழ்க்கோர்ட்டில் எட்டுப் பேர் விடுதலை செய்யப்பட்டு அஞ்சு பேர் மேல் விசாரணைக்கு அனுப்பப்பட்டார்கள்.

சந்தைப்பேட்டையில் அறுபது சிப்பம் கருவாடும் ரெண்டு மருகைப் பருத்தியும் கொள்ளையடிக்கப்பட்டன. கல்லாப்பெட்டி உடைக்கப்பட்டது. பேட்டைக்குத் தீவைக்கப்பட்டது. இதெல்லாம் குற்றச்சாட்டுகள்.

வெள்ளாளர் பிராமணர் செட்டியார் சாயபு என பலர் அசஸ்ஸர்களாகவும் ஜூரிகளாகவும் இருந்தார்கள்.

சம்பவம் நடந்த சமயத்தில் தாங்கள் வேறு ஊர்களிலோ இடங்களிலோ இருந்ததாக எதிரிகள் சொன்னார்கள். அதுக்குச் சாட்சியங்களும் இருந்தன. போலீஸ் தரப்புச் சாட்சியங்கள் அவ்வளவாக எடுபடவில்லை.

அஞ்சு வழக்குகளுமே வலுவிழந்துபோனதுக்கு கோர்ட்டார் முக்கியமான காரணத்தைக் கண்டுபிடித்தார். அதாவது கொலையோ கொள்ளையோ நடந்திருந்தால் அதை உடனே அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டியது சட்டப்படி ஒவ்வொருவரின் கடமையாகும். வாதிகள் யாரும் அப்படிச் செய்யவில்லை. தாமதமாகவே பிராது கொடுத்திருக்கிறார்கள். அதிகாரிகள் அருகிலிருந்தும் உடனே கொடுக்க முன்வரவில்லை.

அதுக்குத் தோதாக அசஸ்ஸர்களும் ஜூரிகளும் எதிரிகள் எல்லாருமே குற்றவாளிகளில்லை என்று அபிப்பிராயம் சொன்னார்கள். கோர்ட்டார் அதை ஏற்றுக்கொண்டு எல்லாரையும் விடுதலை செய்தார்.

ஆக நாடார்கள் கொடுத்த பன்னிரெண்டு வழக்குகளும் ஒருவழியாக முடிந்துவிட்டன. இந்துக்காரர்களும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள்.

''அப்பாடா செசன்ஸ் கோர்ட்டத் தாண்டியாச்சு.''

''நாடாங்க வாய அடச்சாச்சு.''

''இனிமே சும்மா கெடப்பான்.''

நாடார்கள் ஆத்திரப்பட்டார்கள்.

''இந்த அநியாயத்த எங்க போயிச் சொல்றது.''

இருந்தாலும் ஹைகோர்ட் அப்பீலில் என்ன முடிவாகுமோ என்ற பதட்டம் எல்லாருக்கும் இருக்கத்தான் செய்தது.

## 4. சிறைவாசம்

கருத்தண நாடாருக்கும் மகாலிங்க நாடாருக்கும் சிறைவாசம் பழகிவிட்டது. ஒருவிதத்தில் சந்தோசமாகக்கூட இருந்தது. சக கைதிகளுடன் சகஜமாகப் பழகினார்கள். தங்கள் கதையைச் சொன்னார்கள். அவர்களின் கதையைக் கேட்டார்கள். ஆறுதல் கிடைத்தது.

கோர்ட்டார் தூக்குத் தண்டனை சொன்னதும் துடிதுடித்து உறக்கமில்லாமல் உழன்று புரண்ட காலமும் உண்டு. முட்டி வலிக்க மண்டியிட்டு ஆண்டவரைச் செபிப்பார்கள். அழுது முறையிட்டு மன்றாடுவார்கள்.

''என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர். எனக்கு உதவி செய்யாமலும் நான் சொல்லும் வார்த்தைகளைக் கேளாமலும் ஏன் தூரமாயிருக்கிறீர்.''

''என்னை விட்டுத் தூரமாகாதேயும். ஆபத்து கிட்டியிருக்கிறது. சகாயரும் இல்லை.''

''துயரத்தினால் என் கண்கள் குழிவிழுந்து போயிற்று. என் சத்துருக்கள் அனைவர் நிமித்தமும் மங்கிப்போயிற்று.''

''என் நீதியின் தேவனே நான் கூப்பிடுகையில் எனக்குச் செவிகொடும். நெருக்கத்தில் இருந்த எனக்கு விசாலமுண்டாக்கினீர். எனக்கு இரங்கி என் விண் ணப்பத்தைக் கேட்டருளும்.''

''என்மேல் இரக்கமாயிரும் கர்த்தாவே. நான் பெலனற்றுப்போனேன். என்னைக் குணமாக்கும் கர்த்தாவே. என் எலும்புகள் நடுங்குகிறது.''

நேரம் கிடைக்கும்போதெல்லாம் அவர்கள் கைதிகளுக்குக் கர்த்தரின் மகி மையைச் சொன்னார்கள். சர்வேசுரனின் ஏகசுதனாகக் கன்னி மரியாளின் வயிற்றில் பிறந்த ஏசுநாதர் இவ்வுலகத்தில் செய்த புண்ணியங்களையும் அற்புதங் களையும் சொன்னார்கள். மனித சுபாவத்தில் மிகுந்த பாடுபட்டுச் சிலுவையில் அறையுண்டு கடினமான மரணத்தையடைந்து கல்லறையில் அடக்கம்செய்யப் பட்டு அவர் மரித்த மூணாம் நாள் உயிர்த்தெழுந்தருளிய கதையை எடுத்துரைத் தார்கள். எல்லாருடைய சுபிட்சத்துக்காகவும் செபித்தார்கள்.

''இறைவா தேவதூதர் அறிவித்தபடியே உம்முடைய திருமகன் ஏசுகிறிஸ்து மனிதனானதை அறிந்துள்ளோம். அவருடைய பாடுகளினாலேயும் சிலுவையி னாலேயும் அவருடைய உயிர்ப்பின் மேன்மையை நாங்கள் அடையும் பொருட்டு எங்கள் உள்ளங்களில் உமது அருளைப் பொழிய வேண்டுமென்று ஆண்டவ ராகிய ஏசுகிறிஸ்து வழியாக மன்றாடுகிறோம். ஆமென்.''

பலருக்கு இறுகிக்கிடந்த மனசு நெகிழ்ந்து கர்த்தர்மேல் விசுவாசம் பிறந்தது. படிப்படியாக வேத வசனங்களை உச்சரிக்க ஆரம்பித்தார்கள். சேர்ந்து செபம் பண்ணினார்கள். விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டார்கள். தூக்குக் கைதி களில் எட்டுப் பேர் ஞானஸ்நானம் வாங்காமல் சாகப்போவதில்லை என உறுதி யாக இருந்தார்கள்.

இன்னொரு கொலைக் கைதி. அவன் தம்பியும் கொலைக்கு உடந்தையாக இருந்ததாகக் கைதுசெய்யப்பட்டிருந்தான். வேதப் பிரசங்கத்தினால் மனசு மாறிய அண்ணன் வேதக்காரனாகி ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டான். பாளையங் கோட்டைச் சிறையில் வேதத்துக்கு மாறிய முதல் கைதி அவன். குற்றவுணர்வு அவன் நெஞ்சில் முள்ளாகக் குத்த ஆரம்பித்தது. தான் செய்த குற்றத்துக்குத் தம்பி ஏன் தண்டிக்கப்படணும். அவனுக்கும் கொலைக்கும் சம்பந்தமில்லை. குற்றத் துக்குத் தானே முழுப் பெறுப்பேற்றான். தம்பி விடுதலையானான்.

அண்ணன் கர்த்தரிடம் பாவமன்னிப்புக் கேட்டுச் செபித்தான்.

''என் சர்வேசுரா சுவாமி. தேவரீர். அளவில்லாத நன்மையும் அன்பும் நிறைந் தவராய் இருப்பதினால் என் பாவங்களால் உமக்கு செய்த துரோகத்திற்காக உத்தம மனஸ்தாபப்படுகிறேன். இனி உமது வரப்பிரசாதத்தின் உதவியால் இப்பேர்ப்பட்ட பாவங்களைச் செய்வதில்லை என்று உறுதியான பிரதிக்கினை செய்கிறேன். ஆமென்.''

அவன் மனசுக்கு அமைதி கிட்டியது.

கருத்தண நாடாரும் மகாலிங்க நாடாரும் தெம்பாக இருந்தார்கள். அவர் களுக்கு மரண பயமில்லை. கர்த்தருக்குச் சேவைசெய்கிற பாக்கியம் போதும்.

ஆண்டவரின் சித்தம் அதுதானென்றால் மரணத்தைச் சந்தோசமாக ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். இப்போது அவர்கள் நிம்மதியாக உறங்கினார்கள்.

ஒரு நாள் ராத்திரி ஏசுநாதர் கருத்தண நாடாரின் கனாவில் தோன்றினார்.

படுத்திருக்கும் இடமெங்கும் ஒளி பிரகாசிக்கிறது. படபடவென்று சிறகடிக்கும் சத்தம். வானத்திலிருந்து நீண்ட கால்கள் இறங்குகின்றன. அடுத்து அகண்ட சிறகுகள். திண்ணிய மார்பு. குறுங்கழுத்து. செம்பழுப்பு நிறத்தில் பெரிய பறவை அவரருகில் நிற்கிறது. அதன்மேல் அமர்ந்திருக்கும் நாதர் புன்னகை பொங்க மெல்ல இறங்குகிறார்.

நாடார் சந்தோசத்தில் சிரந்தாழ்த்தி நாதரை வணங்குகிறார்.

''என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்ட கர்த்தருக்குத் தோத்திரம்.''

பறவை குனிந்து பார்க்கிறது. அதன் கழுத்தில் அங்கங்கே நீலநிறம் தெளித் திருக்கிறது. மூடிய சிறகில் கொஞ்சம் கருப்புத் தடவியிருக்கிறது. அளவான வால். மயிலைப் போல் தோகைக் கொத்தில்லை. அப்பப்பச் சிறகை விரித்து விக்கி முனங்குகிறது. அது நிற்கும் தோரணையைப் பார்த்தால் நட்டிவைத்த சிலுவை யின் சாயல். இன்னொரு சாயலுக்குப் பெரிய செம்போத்து. ஒருவேளை சிவப்பு மயிலோ. நாதர் நெருங்கி வருகிறார்.

''எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவதில்லை. சிறுமைப்பட்டுப்போனவர் களுடைய நம்பிக்கை ஒருபோதும் கெட்டுப்போவதில்லை.''

''பரமபிதாவே நாங்கள் பாவம் செய்யவில்லை.''

''நீங்கள் கோபங்கொண்டாலும் பாவம் செய்யாதிருங்கள். உங்கள் படுக்கை யிலே இருதயத்தில் பேசிக்கொண்டு அமர்ந்திருங்கள்.''

''கொடுமைகளை மறந்து கோவத்தை அவித்துவிட்டோம். தேவனின் மகிமையைப் பாவம் செய்தவர்களுக்குச் சொல்கிறோம்.''

''எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டதோ எவனுடைய பாவம் மூடப் பட்டதோ அவன் பாக்கியவான்.''

''ஆண்டவரே அவர்களுடைய பாவங்களை மன்னித்து ரட்சித்தருளும்''.

''அவர்கள் மன்னிக்கப்படுவார்கள்.''

''கர்த்தாவே என் சத்துருக்கள் எவ்வளவாய்ப் பெருகியிருக்கிறார்கள். எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள் அனேகர்.''

''அவன் அக்கிரமத்தைப் பெற கர்ப்ப வேதனைப்படுகிறான். தீவினையைக் கர்ப்பந்தரித்து பொய்யைப் பெறுகிறான். அவன் வாய் சபிப்பினாலும் கபடத்தி னாலும் கொடுமையினாலும் நிறைந்திருக்கிறது. அவன் நாவின்கீழ் தீவினையும் அக்கிரமும் உண்டு.''

''தீவினை தீயாகப் பரவுகிறதே பிதாவே.''

நாதர் நெற்றியில் சிந்தும் தலைமுடியைக் கோதிக்கொள்கிறார்.

''அவன் தீவினை அவன் சிரசின்மேல் திரும்பும். அவன் கொடுமை அவன் உச்சந்தலைமேல் இறங்கும்.''

''அநியாயம் அழியணும் ஆண்டவரே.''

''அநியாயத்தை விதைத்தவன் வருத்தத்தை அறுப்பான். அவன் உக்கிரத்தின் மிலாறு ஒழியும்.''

நாடார் முழங்காலிட்டு வேண்டுகிறார்.

''ஆசீர்வதியும் பிதாவே.''

நாதர் கையை உயர்த்தி ஆசீர்வதிக்கிறார்.

''நீதியினிமித்தம் துன்பப்படுபவர்கள் பாக்கியவான்கள். பரலோக ராஜ்யம் அவர்களுடையது.''

நாதர் பறவைமேல் அமர்ந்துகொள்கிறார். உயர்த்திய கை இன்னும் இறங்கவில்லை. மறுபடியும் சிறகடிப்பு. பறவை உயரே எழும்பிப் பறக்கிறது. கால்கள் மறைந்ததும் ஒளி மங்கி இருள் சூழ்கிறது.

கருத்தண நாடார் துள்ளியெழுந்து உட்கார்ந்தார். நாதரைக் கண்ட ஆனந்தத்தில் நெஞ்சு விம்மியது. அதுக்கு மேல் உறக்கம் பிடிக்கவில்லை. ஆனந்தத்தை அசைபோட்டபடி செபித்துக்கொண்டிருந்தார்.

''எனக்கு விரோதமாக ஒரு பாளயமிறங்கினாலும் என் இருதயம் பயப்படாது. என்மேல் யுத்தம் எழும்பினாலும் இதிலே நான் நம்பிக்கையாயிருப்பேன்.''

மறுநாள் சர்வேசுரனின் விசுவாசிகளுக்குச் சொல்ல அவரிடம் நிறையவே இருந்தது. அவர்கள் இந்த அதிசயத்தைக் கேட்டு அசந்துபோனார்கள். தங்களுக்கும் ஆண்டவர் காட்சிதர மாட்டாரா என்று ஏங்கினார்கள். நிதமும் மன்றாடினார்கள்.

''கர்த்தாவே எதுவரைக்கும் என்னை மறந்திருப்பீர். எதுவரைக்கும் உம்முடைய முகத்தை எனக்கு மறைப்பீர்.''

''என் சினேகிதரும் என் தோழரும் என் வாதையைக் கண்டு விலகுகிறார்கள். என் இனத்தாரும் தூரத்தில் நிற்கிறார்கள்.''

''என் குடல்கள் எரிபந்தமாய் எரிகிறது. என் மாம்சத்தில் ஆரோக்கியமில்லை.''

''நான் பெலனற்றுப்போய் மிகவும் நொறுக்கப்பட்டேன். என் இருதயத்தின் கொந்தளிப்பினால் கதறுகிறேன்.''

''மானானது நீரோடைகளை வாஞ்சித்துக் கதறுவதுபோல தேவனே என் ஆத்துமா உம்மை வாஞ்சித்துக் கதறுகிறது.''

''கர்த்தாவே என் அக்கிரமம் பெரிது. உம்முடைய நாமத்தினிமித்தம் அதை மன்னித்தருளும்.''

''என் தகப்பனும் என் தாயும் என்னைக் கைவிட்டாலும் கர்த்தர் என்னைச் சேர்த்துக்கொள்ளுவார்.''

''கர்த்தாவே எழுந்தருளும். தேவனே உம்முடைய கையை உயர்த்தும். ஏழைகளை மறவாதேயும்.''

நம்பிக்கை அவர்களுக்குள் நாளுக்கு நாள் திரண்டுகொண்டிருந்தது.

கழுகுமலையில் எரிந்துபோன மாதா கோயில் கலகத்தின் நினைவுச்சின்னமாக அப்படியே நின்றிருந்தது. செசன்ஸ் கோர்ட் தீர்ப்பு மேல்சாதி இந்துக்காரர்களுக்குத் தெம்பு கொடுத்திருந்தது. நாடார்களை மிதித்து நசுக்கிவிட்டதாகக் கெம்பீரியம் பேசினார்கள்.

‘‘இனிமே தலமொறைக்கும் தலையெடுப்பானா.’’

‘‘இனியும் கொஞ்சப் பயக முண்டூட்டுத் திரியிறானே.’’

‘‘நாக்கத் துருத்தித் தூக்குல தொங்குனப் பெறகாச்சும் அடங்குவானா பாப்பொம்.’’

பாளையங்கோட்டைக்குக் கைதிகளைப் பார்க்கப் போனவர்கள் கழுகு மலையில் நடக்கும் சங்கதிகளைச் சொன்னார்கள்.

‘‘ஒருநா பாரு அம்பது பேருக்கு இருக்கும். கூட்டமாத் தெரண்டு கோயிலுக்கு வந்தாங்க.’’

கருத்தண நாடார் கேட்டார்.

‘‘அதத்தான் எரிச்சுப்புட்டாங்களே. பெறகெதுக்கு வாறாங்க. சாம்பல அள்ளிப் பூசிக்கிறவா.’’

‘‘வந்ததே சரின்னு எரிஞ்சுகெடந்த பனங்கட்ட வரிச்சிச் சட்டம் குப்ப கூளம் அத்தனையும் கூட்டி அள்ளுனாங்க.’’

‘‘அது எதுக்காம்.’’

‘‘பத்துப் பேரு கோயில ஒட்டி சாமியாரு தங்கின வீட்டுக்குள்ள மொழஞ்சு வாசக்காலு கூர மொகட்டுக் கம்பு எல்லாம் உருவி சொவர இடிச்சாங்க. கைக்கு அம்புட்டத எடுத்துட்டுப் போயிட்டாங்க.’’

‘‘இது போலீசுக்குத் தெரியுமா.’’

‘‘அந்த ஏட்டுக்குத் தெரிஞ்சுதான் எல்லாம் நடந்துருக்கு.’’

‘‘அவன் இருக்கிறவரைக்கும் எல்லாம் நடக்கும்.’’

‘‘நம்ம சனங்க கடகண்ணிக்குப் போயிச் சாமான் வாங்கிவர முடியல.’’

‘‘ஏன்.’’

‘‘தெருவில கூட்டங்கூட்டமா நின்னுக்கிட்டுத் தெந்தனம் பேசுறது. ஏடாசி எக்கண்டம் பேசுறது’’

‘‘நம்மள வேணும்னே சீண்டிப்பாக்கான்.’’

‘‘கலெக்டருக்குப் பெராது குடுத்துருக்கு. என்னாகுமோ.’’

‘‘குடுத்த பெராதுக்கெல்லாம் நடவடிக்க எடுத்து ரெண்டாக் கிழிஞ்சு போச்சு. இது ஒண்ணுதான் பாக்கி. இந்தச் சமயத்துல நம்ம பொறுமையா ருக்கணும். ஆண்டவரு கிருபையால எல்லாம் நல்லபடியா நடக்கும். எங்களப் பத்திக் கவலப்படாதங்க.’’

கருத்தண நாடார் கொடுத்த பொறுமையைச் சுமந்துகொண்டு கழுகு மலைக்குத் திரும்பினார்கள்.

## 5. ரெட்ட வெள்ளாவி

சத்திரப்பட்டியில் சின்னனந்தி மகள் அழகி சிறகு முளைத்து பறக்கத் தயாராக இருந்தாள். சின்னனந்தி ஆத்தாளைப் பார்க்கும்போதெல்லாம் இதைப் பற்றிப் பேச மறப்பதில்லை. மாடத்தி தெம்பாகச் சொல்வாள்.

''அதுகளுக்கென்ன வயசா போச்சு. ஒரு கொறையும் இல்லாம நடக்கும்.''

கலிங்கலில் சின்னமாரி மகள் அய்யம்மாளுக்குக் கலியாணம் கூடிவிட்டது. கீகாட்டுப் பெருநாழியில் பூலானுக்குக் கொடுத்தார்கள். அவ்வளவு தொலவட்டுக்கு அனுப்ப மருதிக்கு மனசில்லை. புருசனிடம் யோசனை சொன்னாள்.

''ரெண்டு பேரவும் நம்மளோடயே வச்சுக்கிருவமே. தொணைக்குத் தொணையாவும் இருக்கும் புள்ளையப் பாத்த மாதிரியும் இருக்கும்.''

''ஒத்தாசனைக்கு ஒரு ஆளு வேணுந்தான். ஊரும் பெருகீட்டே போகுதுல்ல. சமாளிக்கிறது சங்கடமாத்தான் இருக்கு. மாடன் பெய தலையெடுத்துட்டாக் கவலையில்ல.''

சின்னமாரி ஒரு நடை வேப்பங்காட்டுக்குப் போய் தம்பியிடம் பேசினான். சாலமுத்து மறுத்துச் சொல்லவில்லை.

''அதப் பத்தி எனக்கொண்ணுமில்ல. எல்லாரும் கிட்டருந்தா நல்லதுதான. நான் இங்கயே காலந்தள்ளீருவென்.''

பூலான் கலிங்கலுக்கு வந்துவிட்டான். மருதன் ஆண்டியிடம் போனான்.

''அப்பாவுகளுக்குத் தெரியாறதில்ல. ஊருல தலக்கெட்டு பெருகிப்போச்சு.''

ஆண்டி சிரித்துக்கொண்டான்.

''அதானடா. போற போக்கப் பாத்தா தெருவில வெலக எடமிருக்காது போலருக்கு. காட்டு வேல நடக்குதோ இல்லையோ வீட்டு வேல மட்டும் ஒழுங்கா நடக்குது. எத்தன பஞ்சம் வந்தாலும் ஒண்ணும் செய்ய முடியாது.''

''மகன் ஒத்தப் பேருவழியா இருந்துக்கிட்டு ஊருக்குத் தொழிலு செய்யக் கஸ்டமாருக்கு. மலைக்கான்.''

''குறுக்கு ஒடிஞ்சுபோகுமா சும்மாவா. அவனுங்காட்டித்தான் சமாளிக்கான். ஒனக்கும் ஏலல.''

''தொணைக்கு ஒராளு இருந்தாத்தான் கொண்டுசெலுத்த முடியும்.''

''தொண வேணுந்தான்.''

''பேத்தியா புருசன் கீகாட்லருந்து வந்துருக்கான்.''

''பெறகென்ன அவன இங்கயே வச்சுக்கிற வேண்டியதுதான.''

''அப்படித்தான் நெனச்சிருக்கொம்.''

''நல்ல முடிவுதான்.''

''அப்பாவுகளுக்குத் தெரியாறதில்ல...''

''அப்பாவுகளுக்கு மயிருதான் தெரியும். சொல்லித் தொலடா கூனப்பெயலே.''

''ரெண்டு குடும்பம் இருக்கிறதுக்கு ஒரு வீடு எடஞ்சலாருக்கும்.''

''அப்படின்னா கார வீடு ஒண்ணு கெட்டிக் குடுத்துற வேண்டியதுதான.''

''சின்னக் கூர வீடு போதும்.''

''மகராசனாக் கெட்டிக்கோ.''

''ஊரு கைகுடுத்தா ஒடனே கெட்டிக்கிருவென்.''

''அதான பாத்தென். வக்காளி தலையச் சொறிஞ்சு மண்டிபோடுறப்பயே நெனச்சென். சரியாப்போச்சு. ஓட்டப்பல்லன் மகனாச்சே.''

''ஓங்கள வுட்டா எங்களுக்கு ஆருருக்காக.''

''சந்தோசமாப் போ. எல்லாம் நல்லபடி நடக்கும்.''

ஊர் செய்த உதவியால் வண்ணாக்குடியில் ஏற்கெனவே இருந்த வீட்டுக்குக் கிழக்கே தனி வீடு எழும்பியது. பழைய வெள்ளாவியை இடித்துப் புது வீட்டுக்கு முற்றமாக்கிவிட்டார்கள். எல்லாப் புழக்கத்துக்கும் தோதாகிவிட்டது. கட்டுத்துறை அப்படியே இருந்தது. கழுதைகள் பெருகினாலும் இடத்துக்குப் பஞ்சமில்லை.

தெற்கு மந்தையில் சுடுகாட்டுப் பாதையோரம் ரெட்டை வெள்ளாவி முளைத்தது. வண்ணாக்குடியில் தலைமுறைதலைமுறையாக ரெண்டு வீடு ரெண்டு வெள்ளாவி இருந்தது கிடையாது. ஒரே வீட்டில் ரெண்டு வாசல்தான் உண்டு. மருதன் கலியாணம் முடித்த பிறகுதான் குறுக்குச் சுவர் வைத்தார்கள்.

அந்தப் பக்கம் வந்த ஆண்டி மருதனைப் பார்த்தான்.

''நீ கில்லாடியாச்சே. பள்ளக் குடியளவுக்கு வண்ணாக் குடியவும் பெருக் கீருவ போலருக்கே.''

''குடும்பாவுக ஒதவலன்னா நாங்க குடியிருக்க முடியுமா.''

''எப்படியோ பேத்தியாள நிப்பாட்டீட்ட.''

''நம்ம காலமும் ஓடியடஞ்சிருச்சு. புள்ளீக நல்லாருந்தாப் போதும்.''

''நானே பாவத்துக்குப் போல இழுபட்டுட்டுக் கெடக்கயில ஒனக்கென் னடா மகராசனுக்கு.''

''ஒங்களுக்கென்ன கொறச்சலு.''

''ஒரு கொறையும் கெடையாது.''

ஆண்டிக்கு என்னமோ நெஞ்சில் அடைத்த மாதிரி இருந்தது. பேச்சடங்கி விட்டது. நடந்துவிட்டான்.

## 6. ஆத்தும விடுதலை

ஹைகோர்ட்டில் எட்டயாபுரம் சமீன் மேனேஜர் கொலை வழக்கு அப்பீல் விசாரணைக்கு வந்தது. ஷெப்பர்டு டேவிஸ் என்று இரு கோர்ட்டார்கள். எதிர்த் தரப்பு வக்கீல் வெட்டர்பர்ன். சர்க்கார் வக்கீல் பவல். எல்லாரும் வெள்ளைக் காரர்கள். பவலுக்கு உதவுவதற்காக வக்கீல் ராமானுஜய்யங்காரை கலெக்டர் அனுப்பியிருந்தார்.

கோர்ட்டார்கள் வெள்ளைக்காரர்கள் என்பதால் கழுகுமலை நாடார் களுக்கு நம்பிக்கையிருந்தது. இருந்தாலும் கீழ்க்கோர்ட் அனுபவங்கள் குமட்டின. அவர்களும் வெள்ளைக்காரர்கள்தான். நடந்தது என்ன.

தண்டனையை ஹைகோர்ட் உறுதிசெய்துவிட்டால் பிறகு நாடார்கள் தலையெடுக்க முடியாது. எல்லாரும் சேர்ந்து மிதித்து நசுக்கிவிடுவார்கள். நம்பி வந்தவர்களுக்கு என்ன பதில் சொல்வது. வேதத்தில் அவர்கள் நீடிப்பது சந்தேகம். பெரிய சாமியார் ரெம்பக் கவலைப்பட்டார். எப்படியும் வழக்கில் செயித் தாகணும். வைராக்கியத்தில் வக்கீலைத் தயார்படுத்தினார்.

கோர்ட்டார்கள் ஆரம்பத்திலிருந்து ரிக்கார்டுகளைத் துருவித்துருவி ஆராய்ந் தார்கள். என்ன நடந்தது எங்கே தப்பு நடந்தது என்று தெரிந்துவிட்டது. அமைதி யாக வாதப் பிரதிவாதங்களைக் கேட்டார்கள்.

சர்க்கார் தரப்பைவிட எதிர்த் தரப்பு வாதங்களே சூடாக இருந்தன. வக்கீல் வெட்டர்பர்ன் ஒவ்வொரு விசயத்தையும் பிட்டுப்பிட்டு வைத்தார். கேள்விமேல் கேள்வி கேட்டுத் திணறடித்தார். வழக்கின் மூலைமூடுக்கெல்லாம் புகுந்து துழாவிக் கொண்டுவந்தார்.

''கனம் கோர்ட்டார் அவர்களே. இந்த வழக்கு முழுவதுமே போலீசால் சோடிக்கப்பட்டது. மாஜிஸ்திரேட்டுகள் உண்மையை ஆராய்ந்தறியாமல் கழுகுமலை ஏட்டு கொடுத்த தகவலின் அடிப்படையிலேயே நடவடிக்கை எடுத்தார்கள். கலகத்தின்போது நாடார்களுக்கு எதிர்ப் பக்கம் சேர்ந்துகொண்டு போலீஸ் உடந்தையாக இருந்தது. வழக்கு விசாரணை சுதேசி போலீஸ்காரர்கள் மாஜிஸ்திரேட்களின் பொறுப்பிலேயே விடப்பட்டது. ஆரம்பக் கட்ட ரிப்போர்ட்களில் கருத்தண நாடாரின் பேர் குறிப்பிடப்படவில்லை. போலீஸ் தரப்பில் முதல் சாட்சியான ஆதி சேர்வை 30.04.1895வரை விசாரிக்கப்படவில்லை. சுந்தரமய்யர் முதலில் விசாரிக்கப்பட்டபோது கருத்தண நாடார் அல்லது மகாலிங்க நாடாரின் பேரைச் சொல்லவில்லை. பஞ்சநாதய்யரும் கருப்பன் செட்டியும் முதலில் விசாரிக்கப்பட்டபோது கருத்தண நாடார் அல்லது மகாலிங்க நாடாரை அவர்களால் அடையாளம் சொல்ல முடியவில்லை. பின்னர் தான் அடையாளம் காட்டினார்கள். அழகிரித் தேவரும் சுப்பைய மணியக் காரனும் 30.04.95 வரை விசாரிக்கப்படவில்லை. ஏட்டை விசாரிக்கவேயில்லை. போலீஸ் சூப்பிரண்டு ஏட்டு கொடுத்த தகவல்படியே நடந்தார். யதாஸ்தும் போலீஸ் ரிப்போர்ட்களும் ஆரம்பக் கட்ட விசாரணையின்போது தாக்கல் செய்யப்படவில்லை. சமீன் தாசில்தாரும் ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் சாட்சி களாக விசாரிக்கப்பட்டிருக்கணும். குற்றஞ்சாட்டப்பட்டவர்களை சப்மாஜிஸ் திரேட் காயம்பட்டவர்களுக்கோ போலீஸ் தரப்புச் சாட்சிகளுக்கோ உடனடி யாக அடையாளம் சொல்வதற்காகக் காட்டவில்லை. கிராம முன்சீப்பின் சாட் சியம் முழுக்கமுழுக்க நம்பத்தக்கதாக இல்லை. ஆழ்வார்சாமி சுயநினைவில் இருந்தபோதும் மரணத்துக்கு முன் கருத்தண நாடாரைப் பற்றிச் சொல்ல வில்லை.''

வக்கீலின் பிரதிவாதம் மூணு நாளாக நடந்தது. வழக்கை மூணு பகுதியாகப் பிரித்துக்கொண்டு விளாசினார். முதலில் கருத்தண நாடாரைப் பற்றி.

''கருப்புக் கோட்டுக் கருத்தண நாடார் பெரிய கத்தியால் பஞ்சநாதய்யரை வெட்டியதாகவும் ஆழ்வார்சாமியைக் குத்தியதாகவும் சொல்லப்படுகிறது. அவர் உடனே வேதக் கோயிலருகில் கைது செய்யப்பட்டதாகவும் சொல்லப்படு கிறது. அப்படியென்றால் அவர் வைத்திருந்த கத்தியை போலீஸ் கைப்பற்றியிருக் கணுமல்லவா. அது அந்தப் பகுதியிலாவது கிடந்திருக்கணும். மாயமாக மறைந்து விட்டதா.''

அடுத்து மகாலிங்க நாடார் கொலை செய்ததுபற்றிக் கேட்டார்.

''மகாலிங்க நாடார் மலபார் சூரியால் மேனேஜரைக் குத்தினார் என்று சொல்லப்படுகிறது. அவர் ஆயுதம் வைத்திருந்ததாக ஆழ்வார்சாமி மரணவாக்கு

மூலத்தில் தெரிவித்துள்ளார். அவரும் சம்பவ இடத்திலேயே கைதுசெய்யப் பட்டதாகத் தெரிகிறது. அதுக்குள் மலபார் சூரி எங்கே போயிற்று. அதைப் படம்போட்டுக் காட்டி கோர்ட்டில் தாக்கல் செய்ததன் மர்மம் என்ன. இதில் வேடிக்கை என்னவென்றால் கோர்ட்டில் ஒரு ஆயுதங்கூடத் தாக்கல் செய்யப்பட வில்லை. இதை கனம் கோர்ட்டார் அவர்கள் கவனத்தில் கொள்ளணும்.''

மூணாவதாக மற்றவர்களைப் பற்றிப் பேசும்போது ஒவ்வொரு சாட்சியாக எடுத்துக்கொண்டு அது எவ்வளவு பொய்யானது என்று ஆணித்தரமாக விவாதித் தார். போலீஸ்காரர்களைப் பற்றியும் சப்மாஜிஸ்திரேட்டைப் பற்றியும் அவர் பண்ணிய கேலியும் கிண்டலும் சொல்ல முடியாது. கோர்ட்டார்கள் அவர் பேச்சைப் பொறுமையாகக் கேட்டுக் குறிப்பெடுத்துக்கொண்டார்கள். முத்தாய்ப் பாக அவர் கோர்ட்டாரிடம் ஒரு வித்தியாசமான சிபாரிசுடன் பிரதிவாதத்தை முடித்துக் கொண்டார்.

''கனம் கோர்ட்டார் அவர்களே. போலீஸ்காரர்களின் புகழ்பெற்ற கைது நடவடிக்கைக்காக ஏட்டுக்குத் தங்க வளையலும் மற்ற ஆறு போலீஸ்காரர்களுக்கு வெள்ளி வளையல்களும் போடணும். ஆனால் அவை இரும்பு வளையல்களாக மாறிவிடும் என நம்புகிறேன்.''

கிரிமினல் வழக்கென்றால் இப்படித்தான் நடத்தணும் என்று கோர்ட்டில் பரவலாகப் பேசிக்கொண்டார்கள்.

இப்போது சர்க்கார் வக்கீல் பவலின் முறை. பிரதிவாதத்துக்குப் பதில் சொல்லியாகணும். சுரத்தில்லாமல் எழுந்து சுருக்கமாகப் பேசினார்.

''கனம் கோர்ட்டார் அவர்களே. இந்த வழக்கு தீர்க்க முடியாத குழப்பமாக உள்ளது. எதிர்த் தரப்புச் சாட்சிகள் சரியாக விசாரிக்கப்படவில்லை. பலரை விடுதலை செய்திருக்கணும் என்பதை ஒப்புக்கொள்கிறேன்.''

தனது பதிலை அவரால் கோர்வையாகத் தொகுத்துத் தர முடியவில்லை. விசயங்கள் சரிவரப் பிடிபடாமல் அங்குமிங்குமாகத் தாவிக்கொண்டிருந்தார். பிரயாசைப்பட்டு ஒரு முடிவுக்கு வந்தார்.

''கனம் கோர்ட்டார் அவர்களே. இந்த வழக்கில் மறுவிசாரணை நடத்த லாம் என்பது என் யோசனை.''

பல கைதிகள் தண்டனைக் காலத்தைக் கழித்துவிட்டதால் இந்த யோசனையை கோர்ட் ஏற்றுக்கொள்ளவில்லை. பவலுக்கு இந்த வழக்கு ஆரம்பத்தி லிருந்தே மண்டையடிதான். இந்த நாற்றமெடுத்த வழக்கு பெரிய தொறட்டாகப் போயிற்று என்று அலுத்துக்கொள்வார்.

வெட்டர்பர்னுக்கு ஒத்தாசனையாயிருந்த வக்கீல் ஆரோக்கியசாமி ராமானுஜய்யங்காரை அர்த்தத்துடன் பார்த்தார். அய்யங்கார் முகத்தில் களை யில்லை. ஆரோக்கியசாமி தனக்குள் சொல்லிக்கொண்டார்.

''இவங்க இட்டுக்கட்ன கததான் சுக்குநூறா நொறுங்கிப்போச்சே. எந்த மூஞ்சியோட ஏறிட்டுப் பாக்க முடியும். பாவம் ஓட்ட ஒடசலக் கஸ்டப்பட்டுத் தேடுறாரு போலருக்கு.''

இனி தீர்ப்பு சொல்லவேண்டியதுதான் பாக்கி. ரெண்டு உயிர்கள் கோர்ட்டார்கள் கையில் ஊசலாடிக்கொண்டிருந்தன. மற்றவர்களைப் பற்றிக் கவலையில்லை. எப்படியானாலும் ஒண்ணுதான். ஏற்கெனவே எட்டு மாசம் செயிலில் இருந்துவிட்டார்கள். எல்லாருடைய கவனமும் ஹைகோர்ட் பக்கம் திரும்பியிருந்தது.

கோர்ட்டார்கள் தெளிவாகவும் தீர்மானமாகவும் இருந்ததால் தாமதப்படுத்தவில்லை. நறுக்கென்றும் சுருக்கென்றும் சொல்லிவிட்டார்கள். தீர்ப்பு இதுதான்:

...போலீஸ் தரப்பு வழக்கு என்னவென்றால் தேர் வடக்கு ரத வீதியிலிருந்து கீழ ரத வீதிக்குத் திரும்பும்போது வேதக் கோயிலருகில் கூடியிருந்த நாடார்கள் கல்லெறிந்தார்கள். அதுக்குப் பிறகு மேனேஜர் அவர்களைச் சமாதானப்படுத்தித் தேர் பந்தல் வழியாகப் போக அனுமதிக்குமாறு கேட்டுக் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. கருத்தண நாடார் முக்கியப் பங்கு வகித்ததாகச் சொல்லப் படுகிறது.

பஞ்சநாதய்யர் ரெம்ப நம்பிக்கையான சாட்சி. அவரது கூற்றுப்படி கருத்தண நாடார் அவரது வலது கையில் வெட்டினார். உடனே மகாலிங்க நாடார் மேனேஜரைக் குத்தினார்.

அதே சமயம் ஆழ்வார்சாமியைக் குத்தியதாகவும் சொல்லப்படுகிறது. மேனேஜர் சம்பவ இடத்திலோ மேற்கே சத்திரத்துக்குத் தூக்கிக்கொண்டு போகும் வழியிலோ இறந்துவிட்டார். ஆழ்வார்சாமி மறுநாள் காலையில் இறந்தார்.

கொலையாளிகள் உட்பட எல்லாக் கைதிகளையும் ஏட்டும் மற்றவர்களும் ரெம்பச் சொற்ப நேரத்திலேயே அதாவது பதினொண்ணரை மணிக்குள் கோயிலிலும் அதையொட்டியுள்ள இடத்திலும் கைதுசெய்து அடைத்து விட்டதாக வழக்கு சொல்கிறது.

எல்லாரும் கலகம் செய்தார்கள். இருவர் கொலை செய்தார்கள். பஞ்சநாதய்யரைப் படுகாயப்படுத்தினார்கள். இது குற்றச்சாட்டு.

செசன்ஸ் கோர்ட்டார் போலீஸ் தரப்புச் சாட்சியங்களைச் சகட்டுமேனிக்கு ஏற்றுக்கொண்டுள்ளார். சாட்சிகள் சொன்னதைப் பாகுபடுத்திப் பார்க்கவில்லை. உதாரணத்துக்கு அவர்களது முதல் தகவல் வாக்குமூலங்கள் பதிவு செய்யப்பட்ட தேதிகளை அவர் கவனிக்கவில்லை.

ஆதி சேர்வை அழகிரித் தேவர் சுப்பைய மணியக்காரன் வெங்கட்ட ராம ராஜு முத்துச்சாமி நாயுடு ஆகிய சாட்சிகள் முப்பதாம் தேதிவரை வாக்குமூலம் கொடுக்கவில்லை. கடைசி இருவரும் போலீஸ்காரர்கள். இரு கொலைகளையும் கண்ணால் பார்த்ததாக அவர்கள் சொல்லவில்லை. ஆனாலும் மேனேஜரை மகாலிங்க நாடார் குத்தியதாகக் கூச்சல் கேட்டதாகச் சொன்னார்கள். கருத்தண நாடார் மற்றவர்களைக் குத்தியதாகப் பேசிக்கொண்ட

தாகவும் முத்துச்சாமி நாயுடு சொன்னார். இது ஜாயிண்ட் மாஜிஸ்திரேட்டுக்கு முன்னால் சொன்னதைவிடக் கூடுதலாகச் சொன்னது. இப்பேர்ப்பட்ட சாட்சி களை நாங்கள் நம்பத் தயாராக இல்லை.

உசேன் ராவுத்தர் அப்பட்டமான பொய்ச் சாட்சி. எட்டாம் தேதி முதலில் விசாரிக்கும்போது மேனேஜரைக் குத்திய மனுசனைப் பார்த்தால் தெரியும். அவர் பேர் தெரியாது என்று சொன்னார். ஆனால் ஒன்பதாம் தேதி மகாலிங்க நாடார் உட்பட கைதிகளை அடையாளப் பேரேடு நடத்தியபோது மேனே ஜரைக் குத்தியது இவர்தான் என்று அடையாளம் காட்ட முடியவில்லை.

அவர் செசன்ஸ் கோர்ட்டாருக்கு முன்னால் கதையையே மாற்றிவிட்டார். மேனேஜரைக் குத்தியதைப் பார்க்கவில்லை என்று சொல்லிவிட்டார். தான் முந்தி சொன்ன வார்த்தைகளால் மகாலிங்க நாடார் அனுகூலம் அடைந்து விடக் கூடாது என்ற நோக்கத்திலேயே இப்படிப் பல்டியடித்துவிட்டார்.

ஒதுக்கித்தள்ள வேண்டிய இன்னொரு முக்கியமான சாட்சி சுப்பா நாயுடு. அவர் பதிமூணாம் தேதி டெபுடி மாஜிஸ்திரேட்டினால் விசாரிக்கப்பட்டார். மற்ற சாட்சிகளை விசாரித்த சப்மாஜிஸ்திரேட் அவரை விசாரிக்கவில்லை. மேனேஜரோ ஆழ்வார்சாமியோ கொலைசெய்யப்பட்டதைத் தான் பார்க்க வில்லை என்றும் தான் வரும்போது இருவரும் குத்தப்பட்டுக் கீழே கிடந் தார்கள் என்றும் அவர் சொன்னார்.

கொலை நடந்ததை அவர் பார்க்கவில்லை என்பது அவர் ஏழாம் தேதி கொடுத்த யதாஸ்திலிருந்து தெளிவாகிறது. ஆனால் இரு கொலைகளும் நடந்ததைப் பற்றி செசன்ஸ் கோர்ட்டில் விவரமாகச் சொன்னார். கிராம முன்சீப் போன்ற முக்கியமான சாட்சிகள் பொய் சொன்னதால் முழு வழக்கு மீதுமே சந்தேகம் வருகிறது.

கோவதாபங்கள் கொந்தளிக்கும் ஒரு வழக்கில் கொலை கொள்ளை தீவைப்பு என்று நாடார்கள் எதிர்ப் பிராதுகள் கொடுத்திருக்கும் நிலையில் உடனடியாக வாக்குமூலம் கொடுக்காத சாட்சியங்களை நாங்கள் நம்பத் தயாராக இல்லை.

போலீஸ் தரப்பில் ரெம்ப முக்கியமான சாட்சியாகக் கருதப்படுகிறவர் ஆதிநாராயணத் தேவர். இவர் சம்பவத்தன்று நடந்தையெல்லாம் விவரமாகச் சொல்கிறார். சாயங்காலம் சப்மாஜிஸ்திரேட்டுடனேயே சுற்றினாலும் மற்றவர்களிடம் வாக்குமூலம் வாங்குவதைக் கேட்டாலும் தான் வாக்குமூலம் கொடுக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்கிறார். மற்ற சில சாட்சிகளைப் போல் கலகம் செய்ததாக நாடார்களால் குற்றஞ்சாட்டப்பட்டவர்களில் இவரும் ஒருவர்.

ஆக கருப்பன் செட்டி சுந்தரமய்யர் பஞ்சநாதய்யர் ஆகியோரது சாட்சி யங்களை மட்டுமே பரிசீலிக்க வேண்டியுள்ளது. கருப்பன் செட்டி எட்டாம் தேதி சப்மாஜிஸ்திரேட்டிடம் வாக்குமூலம் கொடுத்தார். மறுபடியும் ஒன்பதாம் தேதி விசாரிக்கப்பட்டார். மேனேஜர் கொலைசெய்யப்பட்டது

பற்றியும் கொலைசெய்தது மகாலிங்க நாடார் என்பது பற்றியும் மட்டுமே அவர் சொன்னார். எட்டாம் தேதி அடையாளப் பேரேடு நடத்தப்படவில்லை. அவர் சொல்கிறார்.

''எனக்கு அந்த மனுசனத் தெரியும். பேர் தெரியாது. நடுத்தரமான மனுசன்.''

ஒன்பதாம் தேதி ஐம்பத்திநாலு பேரைக் கொண்டு அடையாளப் பேரேடு நடந்தது. மேனேஜரைக் கொலைசெய்ததாக மகாலிங்க நாடாரை அடையாளம் காட்டினார். பந்தலடியில் இருந்ததாக அவரால் அடையாளம் காட்டப்பட்டவர்களில் மகாலிங்க நாடாரின் பேர் கடைசியில் உள்ளது. எட்டாம் தேதி மகாலிங்க நாடார் ஏன் காட்டப்படவில்லை என்பதற்கு முகாந்திரமில்லை.

சம்பவங்களின் வரிசைக் கிரமப்படி பஞ்சநாதய்யர் சொல்லும் கதை உண்மையென்றால் கருப்பன் செட்டி கூறுவது சரியல்ல. ஏனென்றால் கூட்டத்தில் பஞ்சநாதய்யர் இருந்ததைக் கவனிக்கவில்லை என்று கருப்பன் செட்டி சொல்கிறார். தான் தாக்கப்பட்டது பற்றியோ ஆழ்வார்சாமி தாக்கப் பட்டதுபற்றியோ அவருக்கு ஏதும் தெரியாது. ஆனால் இந்தச் சம்பவங்களெல்லாம் ஒரே சமயத்தில் நடந்ததாகப் பஞ்சநாதய்யர் சொல்கிறார்.

சுந்தரமய்யர் மேனேஜரின் ஆபீசில் தலைமைக் குமாஸ்தா. ஆகவே சந்தேகமில்லாமல் அவர் தன் அதிகாரியுடன் இருந்திருப்பார். பஞ்சநாதய்யரோ ஆழ்வார்சாமியோ காயப்பட்டதைப் பார்க்கவில்லை என்று அவர் சொன்னார். ஏற்கெனவே கைதுசெய்யப்பட்டுக் கச்சேரியில் இருந்த மகாலிங்க நாடாரைச் சொல்ல முடியாத சில காரணங்களால் அடையாளம் காட்டச் செய்யவில்லை. அதுக்குப் பிறகு ரெண்டு நாளாக அவர் மகாலிங்க நாடாரைப் பார்க்கவில்லை. கருப்பன் செட்டியைப் போலவே அவர் அடையாளம் காட்டியதில் மகாலிங்க நாடாரின் பேர் கடைசியில் வருகிறது.

கடைசிச் சாட்சி பஞ்சநாதய்யர். தாசில்தார் ராமசாமிப் பிள்ளையின் ஆபீசில் அட்டெண்டர். ஏற்கெனவே சொன்னபடி அவர்தான் முதலில் நாடார்களால் காயப்படுத்தப்பட்டவர். ஏழாம் தேதி மற்ற சாட்சிகளைப் போலவே சப்மாஜிஸ்திரேட் அவரையும் நடத்தினார். எட்டாம் தேதியும் அவர் விசாரிக்கப்பட்டார். தன்னை வெட்டியவரை அடையாளம் சொல்ல முடியும் என்றும் மேனேஜரைக் குத்தியவரைச் சரியாகப் பார்க்கவில்லை என்றும் கூறினார். அன்றைக்கே மகாலிங்க நாடார் அவருக்குக் காட்டப்படவில்லை. மறுநாள் மற்ற சாட்சிகளைப் போலவே அவரும் மகாலிங்க நாடாரைக் கடைசியாக அடையாளம் சொன்னார். அவர் சம்பவத்தைப் பற்றிச் சொல்வதை ஏற்றுக்கொண்டால் மற்றவர்கள் சொல்வதை நம்புவது கஷ்டம். அதே சமயம் ஒரு விசயத்தைக் கவனத்தில் கொள்ளணும். சுந்தரமய்யரைப் போலவே அவரும் பயந்து போயிருந்தார். அவருக்கும் காயம் ஏற்பட்டது. அது ஆபத்தான காயமென்று நினைத்தார். இதையும் கலகத்தில் நிலவிய குழப்பத்தையும் நோக்கும்போது இவரால் நிலைமையைச் சரியாக விளக்க முடியவில்லை. மேனேஜரைக் கொன்றவரது அடையாளத்தைச் சொல்வது சந்தேகந்தான் என்று எட்டாம் தேதி ஒப்புக்கொண்டார்.

சுந்தரமய்யரும் கருப்பன் செட்டியும் வேண்டுமென்றே பொய்ச் சாட்சி சொன்னவர்கள். இந்த மூணு பேர் சொன்னதன் அடிப்படையில் ஏதும் செய்ய முடியாது. நெரிசலான கூட்டம் உச்சக்கட்டக் குழப்பம் பதட்டம் இத்தனையும் இருந்தது தெளிவாகிறது. மூணு பேரில் யாரும் ஆழ்வார்சாமியின் கொலை பற்றிப் பேசவில்லை.

கருத்தண நாடாரும் மகாலிங்க நாடாரும் மேனேஜரையும் ஆழ்வார் சாமியையும் கொலைசெய்யும்போது பார்த்திருந்தால் ஒருவரையோ இருவரையுமோ சம்பவ இடத்திலேயே கையில் கத்திகளுடன் கைதுசெய் திருக்க முடியும். நாடார்களுடன் ஒப்பிடும்போது இந்துக்காரர்களின் கூட்டம் கட்டுக்கடங்காமல் இருந்தது. இருவரும் கோயிலோரம் உடனே கைது செய்யப்பட்டதாகச் சொல்லப்பட்டாலும் கத்திகளைக் காணவில்லை. மேலும் இருவரும் கொலையாளிகள் எனத் தெரியவந்தால் அவர்களைத் தனியே அடைத்துவைத்திருந்து சாட்சிகள் விசாரிக்கப்பட்டதும் அடை யாளப் பேரேடு நடத்தியிருக்கணும். சைமனும் சப்மாஜிஸ்திரேட்டும் சொல் வதுபோல் சாட்சிகள் கைவசமிருந்தும் ஒருவருக்குக்கூடக் காட்டப்பட வில்லை.

கைதிகள் கைதுசெய்யப்பட்ட விதம்பற்றி நாங்கள் நம்பத் தயாராக இல்லை. ஏழாம் தேதி அனுப்பியதாகச் சொல்லப்படும் யதாஸ்தில் மகாலிங்க நாடாரின் பேர் குறிப்பிடப்பட்டுள்ளது. சம்பவம்பற்றித் தெரிந்தவர் யாரென்று அதில் சொல்லப்படவில்லை. அப்படிச் சொல்லியிருந்து அவர் சாட்சியாக விசாரிக்கப்பட்டிருந்தால் யதாஸ்தை உறுதிப்படுத்தும் ஆதாரமாகக் கொள்ள முடியும். அதில் தாசில்தாரின் பேர் சொல்லப்பட்டுள்ளது. கலகத்தின்போது அவர் இருந்தபோதும் அவர் விசாரிக்கப்படவில்லை. கலகத்தின்போது இருந்த மற்றவர்களும் விசாரிக்கப்படவில்லை. உதாரணத்துக்கு ரெவின்யூ இன்ஸ் பெக்டர் அழகியநம்பி பிள்ளை.

யதாஸ்து ஒண்ணரை மணிவரை ஊரை விட்டுக் கிளம்பியதாகத் தெரிய வில்லை. கைதுக்குப் பிறகே இந்த ரிப்போர்ட் எழுதப்பட்டிருக்கணும். அதனால் கைதியின் பேரைக் குறிப்பிடச் சந்தர்ப்பம் இருந்தது.

ஏழாம் தேதி மாலை இறக்கும் தருவாயிலிருந்த ஆழ்வார்சாமி விசாரிக்கப் பட்டார். மேனேஜரைக் கொன்றது யாரென்று முதலில் ஒரு பேரைச் சொல்லிவிட்டு பிறகு மகாலிங்க நாடார் என்று சொன்னார். தன்னைக் குத்தியவரின் பேரைச் சொல்ல முடியவில்லை. அவரைப் பற்றி அடை யாளமும் சொல்ல முடியவில்லை.

ஆழ்வார்சாமியால் கருத்தண நாடாரின் பேரைச் சொல்ல முடியவில்லை. என்றாலும் அவரைப் பற்றி விவரித்ததாக செசன்ஸ் கோர்ட்டார் சொல்கிறார். இது பெரிய தவறு. சப்மாஜிஸ்திரேட்டின் அலட்சியத்தால் ஆழ்வார்சாமியின் வாக்குமூலத்தை மகாலிங்க நாடாருக்கெதிராகக் கொள்ள முடியாது. ஏனென்றால் வாக்குமூலம் அவர் முன்னிலையில் பதிவுசெய்யப்பட வில்லை. சாட்சி செத்துக்கொண்டிருக்கும்போது சப்மாஜிஸ்திரேட் செய்த தவறு சாதாரணமானதல்ல.

மேனேஜரின் பிரேத விசாரணை அறிக்கையில் மகாலிங்க நாடாரின் பேர் இல்லை. அஞ்சரை மணிக்கு அறிக்கை தயாரிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஒரு விவரமும் இல்லாமல் அது மேம்போக்காகத் தயாரிக்கப்பட்டுள்ளது. ஒருவர் எந்தச் சூழ்நிலையில் குத்தப்பட்டு இறந்தார் என்பதைப் பற்றி விசாரிக்காமல் பிரேத விசாரணை நடத்தி என்ன பிரயோசனம்.

கைதிகளை ஒரே சமயத்தில் மொத்தமாகக் கைதுசெய்திருக்க முடியாது. ஆழ்வார்சாமிக்கு முன்னால் கைதிகளின் அடையாளப் பேரேடு நடத்தவில்லை. கூடிய விரைவில் மற்றவர்களுக்கும் பேரேடு நடத்தவில்லை. மேனேஜரின் பிரேத விசாரணையில் வாக்குமூலம் பெறவில்லை. இதெல்லாம் கோர்ட்டார் கவனிக்கத் தவறிய விசயங்களாகும். இன்னார்தான் இந்தக் குற்றத்தைச் செய்தாரென்று புரளி கிளம்பியபின் இன்னார்இன்னார் செய்தாரென்று கலகத்தைப் பார்த்தவர்களால் எப்படிக் குறிப்பிட்டுச் சொல்ல முடியும் என்று ஏனோ கோர்ட்டாருக்குத் தோன்றவில்லை.

எல்லாச் சூழ்நிலைகளையும் கருத்தில் கொண்டு பார்த்தால் மகாலிங்க நாடாரைத் தண்டித்ததை ஆதாரங்கள் நியாயப்படுத்துவதாக நாங்கள் கருதவில்லை.

கருத்தண நாடாரைப் பொறுத்தமட்டில் ஒன்பதாம் தேதிதான் அவரது பேர் சொல்லப்பட்டது. எனவே அவருக்கெதிரான ஆதாரங்கள் திருப்தியளிப்பதாக இல்லை. நாங்கள் நம்பத் தகுந்ததாகக் கருதும் மூணு சாட்சிகளுமே அவரைப் பற்றிச் சொல்லவில்லை.

அடுத்து கருத்தண நாடார் பஞ்சநாதய்யரைப் படுகாயப்படுத்திய குற்றச்சாட்டு. பஞ்சநாதய்யரைத் தவிர வேறு சாட்சிகளும் கருத்தண நாடாரைப் பற்றிச் சொல்கிறார்கள். அவர்கள் சொன்னதை ஏற்கெனவே ஒதுக்கித்தள்ளிவிட்டோம். அது பஞ்சநாதய்யர் சொன்னதிலிருந்து வேறுபடுகிறது. ஆக இந்தக் குற்றச்சாட்டு பஞ்சநாதய்யரின் கூற்றையே சார்ந்திருக்கிறது. கைதி மறுக்கிறார். பஞ்சநாதய்யர் சொன்னதை மட்டுமே வைத்துக்கொண்டு கைதியைத் தண்டிக்க நாங்கள் தயாராக இல்லை. ஏனென்றால் அவர் சொன்னது தவறாகக்கூட இருக்கலாம்.

மற்ற கைதிகளைப் பொறுத்தமட்டில் எல்லாரும் ஒரு அசஸ்ஸரால் விடுவிக்கப்படுகிறார்கள். அவர்கள் மீதான வழக்கு எதுவாக இருந்தாலும் அதை கோர்ட்டார் ஒவ்வொருவராகப் பரிசீலிக்கவில்லை. பந்தலடியில் நின்று தேரோட்டத்தைத் தடுத்தார்கள் என்று பொதுவாகச் சாட்சிகள் சொன்னதைத் தவிர ரிக்கார்டுகளில் வேறெதையும் பார்க்க முடியவில்லை. பந்தலடியில் நின்று வெறும் வார்த்தைகளால் சச்சரவு செய்ததைக் குற்றத்துக்கான ஆதாரமாகக் கொள்ள முடியாது. கல்லெறிந்ததற்கு ஆதாரமுண்டு. குறிப்பாக யார் எறிந்தது என்பதற்கு ஆதாரமில்லை.

கோயிலில் வைத்துக் கைதிகள் மொத்தமாகக் கைதுசெய்யப்பட்டதை நாங்கள் நம்பவில்லை. பல இடங்களில் பல சந்தர்ப்பங்களில் கைதுசெய்யப்பட்ட

தாகப் பல சாட்சிகள் சொல்வதையே நம்ப வேண்டியுள்ளது. இருவரைத் தவிர மற்றவர்களுக்கு ஏற்பட்ட காயங்கள்பற்றி போலீஸ் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. சிலருக்குப் படுகாயங்கள் உண்டு. பலரை வீடுகளில் கைதுசெய்திருக்கச் சாத்தியமுண்டு.

கைதான நேரம் பதினொண்ணரை மணி என்று சொல்லியிருந்தாலும் போலீஸின் முதல் தகவல் ரிப்போர்ட்டில் பிற்பகல் ஒண்ணரை மணி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இது கைதிகளுக்குச் சாதகமாக உள்ளது.

எதிர்த் தரப்புச் சாட்சியங்களை விரிவாகப் பரிசீலிக்கத் தேவையில்லை எனக் கருதுகிறோம். ஏனென்றால் போலீஸ் தரப்புச் சாட்சியங்கள் ஒரு கைதியின் தண்டனையைக்கூட நியாயப்படுத்தவில்லை. எல்லாக் கைதிகளையும் விடுதலை செய்து உத்தரவிடுகிறோம்.

## 7. ஏககூதன் உயிர்த்தெழுந்தார்

களையிழந்து கிடந்த நாடார் தெருக்கள் ஹைகோர்ட் தீர்ப்பைக் கேட்டுச் களியாட்டம் போட்டன. மேல்சாதிக்காரர்களைத் தோற்கடித்துவிட்டதாகக் கொண்டாடினார்கள். விடுதலையானவர்கள் வீதிகளைச் சுற்றி வந்தார்கள். அது அவர்களுக்குத் தேரோட்டத் திருவிழா. பல்லாக்குப் பவனி. இப்போது இந்துக் காரர்களுக்கும் வேதம் நல்லதென்று தோன்றியது. போலீஸ்காரர்களும் அதிகாரி களும் வெலவெலத்து வாயடைத்துப்போயிருந்தார்கள்.

ஆனாலும் விசயம் தெரிந்தவர்கள் ஆத்திரத்தில் புழுங்கினார்கள்.

''அரமனக்காரங்க பண்ணுன அக்கிரமத்தக் கடசிவரைக்கும் ஆருமே கண்டுக்கிறலயே. இது ஞாயமா.''

''அதக் கிண்டுனா வண்டவாளமெல்லாம் வெளிய வந்துருமே.''

''அந்தத் தாசில்தாரக் கூண்டுல ஏத்தியிருந்தா அம்புட்டும் கக்கீருப்பாரு.''

''கோயிலுக்கு முன்னால நடந்தத அவரு கண்ணால பாக்காறதால வெசாரிக் காம வுட்ருப்பாகளோ.''

''அப்படியிருக்காது. குறுக்கு வெசாரணையில குட்டு தெரிஞ்சுபோகும்னு அவரக் கூப்புடல. கோயிலுக்காரங்க காவக்காரங்கன்னு அத்தன பேரவும் சேத்துப் புடிக்குமே. அதுக்குச் சம்மதிப்பாங்களா சண்டாளங்க.''

''சரி நாடாருக கொல செய்யல. விடுதல செஞ்சிட்டாக. அப்ப கொல செஞ்சது ஆரு. அது தெரிஞ்சாகணுமில்ல. கண்டுபுடிக்கச் சொல்லி பெரிய கோர்ட்டு உத்தரவு போட்ருக்கணும்.''

''அப்படின்னா நாடாரு தெருவில ஆடுன ஆட்டத்தப் பத்தியும் வெசாரிக்கணு மில்ல. எப்படியோ அழிவு கொளத்துல மீனு புடிச்ச மாதிரி எல்லாருமாச் சேந்து ஒழப்பீட்டாக.''

''ஞாயமாப் பாக்கப்போனா ரெண்டு பக்கமும் நல்லா வெசாரிக்கணும்.''

''இவன் ஒருத்தன். போலீஸ்காரங்கள ஆராச்சும் காட்டிக்குடுப்பாகளா. இல்ல காட்டிக்குடுக்கத்தான் அவுக வுடுவாகளா. கெணறு வெட்ட பூதம் கெளம்புன கதையாப் போயிரும்.''

''அதச் சொல்லு. எங்க பாத்தாலும் லஞ்சம் அவுத்துப் போட்டு ஆடுது. நிருவாகமா நடக்குது. எத்தன நாளைக்குத்தான் மூடிமூடி மறைக்க முடியும். ஒருநா ஒருபொழுது வெடிக்கத்தான் போகுது.''

விடுதலை வாங்கித் தந்த ஆண்டவருக்கும் பெரிய சாமியாருக்கும் நாடார்கள் தோத்திரம் சொன்னார்கள். ஆண்டவர் சாமியார் உருவத்தில் அவதரித்திருப்பதாக நினைத்து அவரை ஆராதித்தார்கள். கூட்டமாகச் சூழ்ந்துகொண்டு கும்மாளமிட்டார்கள். தெற்குச் சீமையெல்லாம் இதே பேச்சு. வேதத்துக்கு மாறவும் இந்துக் கோயில்களை வேதக் கோயில்களாக மாற்றவும் துடித்தார்கள்.

இதைக் கேட்டு சாமியார் புளகாங்கிதத்தில் மிதந்தார்.

நாலா பக்கமிருந்தும் சனக் கூட்டம் அவரை நோக்கித் திரண்டு வருகிறது. ஒவ்வொரு கையிலும் உயரமான குருத்தோலைச் சிலுவை. ஊர் ஊராகத் தாமதித்து உச்சக் குரலில் பாடுகிறார்கள்.

''அல்லேலுயா அல்லேலுயா.''

கூட்டம் பெருகுகிறது. பனைமரங்கள் தரைக்கு வளைந்து தலைவணங்கி வெறுங்கைகளில் குருத்துக்களைக் கொடுத்துவிட்டு நிமிர்கின்றன. கூட்டத்தில் பாட்டுடன் கலகலப்பும் சிரிப்பும் கலந்து களைகட்டுகிறது.

இந்துக் கோயில்கள் மாவாக நெகிழ்ந்து மளமளவென உயர்ந்து குருத்தோலைச் சிலுவைகளைப் பூவாகச் சூடிக்கொள்கின்றன. துணை கிடைத்த பரவசத்தில் பனைமரங்கள் கூட்டத்தை வழியனுப்புகின்றன. ஆர்ப்பரித்து வரும் கூட்டத்தை ஆதரித்து வழிநடத்தப் போதிய வேதச் சாமியார்கள் இல்லை. பேய் பிசாசுகளுக்குப் பயந்து விக்கிரகங்களுக்கு முன்னால் விழுந்து கிடக்கும் சனங்கள் ஏராளம். இந்த அடிமைத்தனத்திலிருந்து அவர்களை விடுவித்து ஆண்டவரின் விசுவாசிகளாக மாற்றியாகணும். அதுக்கு அனேகக் குருமார்கள் வேணும். வேதத்துக்கு இப்படியொரு நெருக்கடியா. சோதனையிலும் துவளாத பெரிய சாமியார் புதியவர்களை அரவணைக்கக் காத்திருக்கிறார்.

அவரை மண்ணுக்கு வந்த மனுசகுமாரனாக மதிக்கும் சனங்கள் சகல மரியாதைகளுடன் ஸ்ரீவில்லிபுத்தூருக்குக் கூட்டிப்போனார்கள். வழி நெடுகிலும் வரவேற்பு சொல்ல முடியாது. பெரும்பாலும் இந்துக்காரர்கள். சில இடங்களில் உற்சாகப் பாட்டு ஒலித்தது.

''ஓசன்னா ஓசன்னா
தாவீது மைந்தனுக்கு ஓசன்னா.''

சிவகாசி வாசலில் ஊரே திரண்டிருந்தது. அவர் பூரித்துப்போனார். கூட்டம் நிறைந்து வழிந்த பெரிய மண்டபத்தின் மேடையில் மேளதாளம் முழங்க நாயகனாக அமர்ந்தார். சன்மானங்கள் குமிந்தன. சந்தடியற்று அவர் பேச்சைச் சந்தோசமாகக் கேட்டார்கள்.

''... அடிமைப்பட்டுக் கிடக்கும் ஆதரவற்ற சனங்களே. மூட நம்பிக்கைகளிலிருந்து மீண்டு வாருங்கள். கர்த்தரை விசுவாசியுங்கள். அவர் உங்களை ஆசீர்

வதிப்பார். அவர் சமூகம் உங்கள்முன் வழிநடத்திச் செல்லும். அவர் உங்களைப் புல்லுள்ள இடங்களில் மேய்த்து அமர்ந்த தண்ணீர்கள் அண்மையில் கொண்டு போய் விடுவார். கர்த்தர் நல்லவர் என்பதை ருசித்துப்பாருங்கள். அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற மனுசன் பாக்கியவான்.''

அவர் வீதியெங்கும் ஊரைச் சுற்றிப் பவனி வந்தார். உற்சாகம் கரைபுரண் டோடியது. இப்படியெல்லாம் நடக்குமென்று அவர் நினைத்துக்கூடப் பார்த்த தில்லை. முக்கியமான ஒருவர் சொன்னார்.

''சாமி ஒங்களப் பாக்கிறதுக்கு இனியும் இருவதாயிரம் பேரு காத்திருக் காங்க. ஒங்க வாயிலருந்து நம்பிக்கையா நாலு வார்த்த சொல்லுங்க. அது போதும் அவுகளுக்கு. இங்க நாங்க ரெண்டாயிரம் பேருக்கு வந்துருக்கொம். வேதத்துக்கு மாறியாகணும். அதத் தவிர எங்க மனசில வேற நெனப்பே இல்ல. இதப் போல இனியும் ஒரு ஊருக்குக் கூட்டிப் போறதுக்கு ஏற்பாடு நடந்துக்கிட்ருக்கு. அங்க நீங்க போகணும். சனங்களுக்கு ஆறுதலாருக்கும்.''

கழுகுமலையில் கருத்தண நாடாரும் மகாலிங்க நாடாரும் பிரசங்கிக ளாகவே மாறிவிட்டார்கள். உலகத்தையே துறந்து ஊழியத்துக்கு அர்ப்பணித்துக் கொண்ட புதிய தூதர்கள். ஊர்ஊராகப் போய் நாடார்களுக்கு உபதேசம் பண்ணி னார்கள். அவர்கள் நாடார்களுக்கு கொலைப் பழியிலிருந்து மறுபிறவி எடுத்து வந்த சுயசாதிக்காரர்கள் மட்டுமில்லை. மேல்சாதிக்காரர்களை மண்ணைக் கவ்வ வைத்த மாவீரர்கள். அவர்களது பிரசங்கத்தை ஆர்வமுடன் கேட்டார்கள்.

''சிலர் ரதங்களைக் குறித்தும் சிலர் குதிரைகளைக் குறித்தும் மேன்மை பாராட்டுகிறார்கள். நாங்களோ எங்கள் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தைக் குறித்தே மேன்மை பாராட்டுகிறோம்.''

ஹைகோர்ட் தீர்ப்பு பலரது மனசைத் திறந்துவிட்டிருந்தது.

கழுகுமலை வேதக்கார நாடார்கள் இன்னொரு கட்டடத்தில் கூடி மாதாவை யும் கர்த்தரையும் செபித்தார்கள். மனுசகுமாரன் புத்துயிர் பெற்றதைப் போற்றிப் பாடினார்கள்.

''ஏசுநாதர் உயிர்த்தெழுந்தார்
ஏகசுதன் மரித்தெழுந்தார்.''

மனசில் பற்றி எரிந்துகொண்டிருந்த பழைய கோயிலின் உக்கிரம் மெல்ல மெல்லத் தணிந்தது. வெற்றிக் களிப்பில் முழங்கினார்கள்.

''அவர்கள் முறிந்து விழுந்தார்கள். நாங்களோ எழுந்து நிமிர்ந்து நிற்கிறோம்.''

''இச்சகம் பேசுகிற எல்லா உதடுகளையும் பெருமைகளைப் பேசுகிற நாவை யும் கர்த்தர் அறுத்துப்போடுவார்.''

வேதப் பாட்டை அடியெடுத்துக் கொடுக்க வேதமுத்து இல்லை. வெள் ளாட்டங் குட்டியாகத் துள்ளிக் குதித்து ஓடிவரும் அனந்தம்மா இல்லை. காமய நாயக்கன்பட்டியிலிருந்து நீதிநாதர் வரும்போதெல்லாம் அவருக்குத் தோத்திரம் சொல்லும் முதல் ஆள் அவள்தான். வேத வசனங்களையும் செபங்களையும் தெளிவாகச் சொல்லும் பெரிய மனுசி. சின்ன வயசிலேயே ஞானோபதேசங் களைக் கற்றுத் தேர்ந்தவள். என்ன கேள்வி கேட்டாலும் உடனே அவள் உதடுகள் பதிலை உதிர்க்கும்.

''உலகம் எப்படி முடியும்.''

''உலகமெல்லாம் நெருப்பினாலே வேக மனிதர்கள் எல்லாரும் செத்துப் போவார்கள்.''

நெருப்பு சுட்டெரிக்காமலேயே அந்த மொட்டு பட்டுப்போனது.

அவள் அண்ணன் ஞானமுத்து பாடுவதைக் கேட்டுக்கொண்டேயிருக்கலாம். அப்பேர்ப்பட்ட குரல். வார்த்தைச் சுத்தம். அவனும் இல்லை. எல்லாரும் பர லோகத்துக்குப் போய்விட்டார்கள்.

தெருக் கோடியில் கருஞ்சுவர்களுக்குள் முடிச்சாகக் கிடக்கும் கம்புக்காரக் கிழவியின் பொக்கை வாய்ப் புலம்பல் யார் காதிலும் விழவில்லை.

''எம் பேரன் கலியாணம் முடிச்சு பல்லாக்குல பட்ணப் பருசம் போறதக் கண்குளிரப் பாத்துட்டுச் சாகணும்னு தவங்கெடந்தனே. அதுக்குக் குடுத்துவைக் கலயே சாமி. இங்கருந்து அங்க போயி என்னத்தக் கண்டீக. வீடெரிஞ்சு கோயி லெரிஞ்சு ஆகமான உசுருகளப் பறிகுடுத்ததுதான் மிச்சம். ஒண்ணா ரெண்டா. ஏழு உசிரு. எரிஞ்சு சாம்பலான வீடுகளுக்குக் கணக்கு உண்டுமா. சாமி பேரச் சொல்லியா இத்தனையும் நடந்தது. சாதியச் சொல்லித்தான வெட்னான் குத்து னான் கொளுத்துனான். மனசு ஆறமாட்டங்குதே. கடவுளே நான் பூமிக்குப் பாரமாருக்கப்புடாது. என்னயக் கூட்டிக்கப்பா...''

## 8. அடியே மாடத்தி...

கலிங்கல் வண்ணாக்குடி புது வீட்டில் பூலானும் அய்யம்மாளும் குடியேறினார் கள். தெருக்களில் ரெண்டு வேளையும் அய்யம்மாளின் கொஞ்சலான குரல் கேட்டது.

''சோறு போடுங்க தாயி... அஞ்ஞா அய்யம்மா வந்துருக்கென்...''

சின்னனந்தி சத்திரப்பட்டிக்குப் போனபின் அய்யம்மாதான் வேலாயிக்குப் பேச்சுத் துணை. அவள் கலிங்கலில் குடியேறியதுக்கு வேலாயும் ஒரு காரணம். கண்ட நேரமெல்லாம் பொரிந்துதள்ளுவாள்.

''கீகாட்ல போயி பண்ணபோடப் போறயாக்கும். புருசக்காரன் வந்ததும் எங்க மொகற மறந்துருச்சாக்கும். பேசாம இங்கயே கெடடி லொங்காறவளே.''

அந்தப்படியே நடந்துவிட்டது. பேச்சுப்பழக்கத்துக்குக் கேட்கணுமா.

வள்ளியும் அய்யம்மாளிடம் வாந்தக்கமாக இருப்பாள். ஆண்டி தனக்குள் சொல்லிக்கொள்வான்.

''எத்தன தலமொறையானாலும் வண்ணாக்குடித் தொந்தம் வுடாது போல ருக்கே.''

வெள்ளாவியில் அடிக்கடி அடுப்பெரிந்தது. பூலானின் பாட்டில் வெளுப்புத் துறை களைகட்டியது.

''அன்னம் போடுங்கம்மா
அழுக்கெடுக்க நேரமாச்சு
அன்னம் போடுங்கம்மா
தண்ணியில குடியிருந்து

தளந்துவாற மனுசருக்கு
அன்னம் போடுங்கம்மா.

கஞ்சி போடுங்கம்மா
கழுதபத்த நேரமாச்சு
கஞ்சி போடுங்கம்மா
நெஞ்சுவலிக்கத் துணிவெளுத்து
நீலம்புழியத் தெம்புவேணும்
கஞ்சி போடுங்கம்மா.

சோறு போடுங்கம்மா
தொறைக்குப்போக நேரமாச்சு
சோறு போடுங்கம்மா
விடிஞ்சுபோயி வேலசெஞ்சு
அடஞ்சுவாற சீவனுக்கு
சோறு போடுங்கம்மா.''

மருமகன் பாட்டைக் கேட்டுச் சின்னமாரிக்கு வெட்கமாக இருந்தது. மருதி குத்திக் காட்டினாள்.

''கழுதைய மிஞ்சிக் கஞ்சி குடிச்சா பாட்டெங்க வரும்.''

மச்சினன் குரலில் சொக்கிப்போன மாடனுக்கு வாய் குறுகுறுத்தது. தன்னை யறியாமல் முனங்க ஆரம்பித்தான்.

சாய்ந்தரம் மாடத்தி மருதனிடம் சொல்லித்தீரவில்லை.

''நம்ம அய்யம்மா புருசன் என்னமாப் பாடுது தெரியுமா. கேட்டுக்கிட்டே இருக்கணும் போலருக்கு.''

மருதன் முக்கித்தக்கி கம்மாய்க்குப் போனான். மாடத்தி சொன்னது நெசந் தான். தொலைந்துபோன பண்டம் ரெம்ப நாளுக்குப் பிறகு கிடைத்துவிட்ட சந்தோசம் அவனுக்கு. முதல் வேலையாக ஆண்டியிடம் இதைச் சொல்லியாகணும்.

பூலான் வெள்ளைபிரித்தான். சில நேரம் கஞ்சிக்குப் போனான். துணிகளின் அடையாளம் பிடிபட்டது. எளவட்டங்கள் காத்துக்கிடந்து அவனிடம் சவரம் செய்துகொண்டார்கள். விரைவிலேயே அவன் கலிங்கல்காரனாகிவிட்டான்.

எல்லாம் கூடிவரும் நேரத்தில் மருதன் தலையில் இடி விழுந்தது. மாடத்தி மண்ணுக்கிரையாகிவிட்டாள். யாருக்கும் நல்லதுகெட்டது சொல்லவில்லை. அய்யம்மா வயிற்றுப் பிள்ளையைப் பார்க்கவில்லை. மாடனுக்குக் கலியாணம் முடித்துப் பார்க்கவில்லை. வேனாவெயிலில் வெளுப்புத்துறையிலிருந்து வந்தவள் தலை கிறுகிறுக்க முற்றத்தில் விழுந்துவிட்டாள். பிறகு எழுந்திருக்கவில்லை. சாய்ந்தரம் வந்துதான் பார்த்தார்கள். அழுக்குப் பொதிகளுக்கிடையில் அலுங் காமல் கிடந்தாள்.

பெரியனந்திபோல் தாப்பான மனுசி. எல்லாருக்கும் யோசனை சொல்வாள். ஊருக்குள் பழகாத பொம்பளை கிடையாது. சிறிசு முதல் பெரிசுவரை ''குடும் பச்சி அஞ்ஞாவுக'' என்று மரியாதையாகப் பேசுவாள். அவள் வெள்ளை பிரிக்கும் போது பெண்களின் நச்சரிப்பு கேட்டு முடியாது.

''அடியே மாடத்தி...''

''இந்தாம்மா தாயே ஒன்னயத்தான்...''

அவள் சிரித்த முகத்துடன் சொல்வாள்.

''அஞ்ஞாக்கமாரு கொஞ்ச நேரம் பொறுத்துக்கங்க. எல்லாருக்கும் குடுத்து றென்.''

அவளுக்காக வண்ணார்களைவிடப் பள்ளக்குடிச் சனங்கள்தான் ரெம்ப அழுதார்கள்.

## 9. மாதாவுக்கு மாற்றுமனை

கலகத்தில் கொலையுண்ட வெங்கட்ட ராயருக்குப் பதிலாக சிவராமய்யர் எட்டயாபுரம் சமீன் மேனேஜரானார். கழுகுமலையில் வேதக்கார நாடார்கள் தங்களுக்கெனக் கோயில் கட்டிக்கொள்ளும்வரை அவர்களுக்கும் பிற சாதிக்காரர் களுக்குமிடையே சச்சரவு தீராது என்று அவர் நினைத்தார். அரண்மனையிலும் அப்படித்தான் பேச்சு. நிம்மதியாக முருகனைக் கும்பிட்டு வரணும். நாடார்கள் கீழ ரத வீதியை விட்டு வெளியேறிவிட்டால் எல்லாம் சரியாகிவிடும். அதுக்கு வழி தேடணும்.

பெரிய சாமியார் கௌசானலுக்குக் கவலையிருந்தது. நாடார்கள் மடத்தி லேயே எத்தனை நாள் ஆராதனை நடத்துவது. பங்குச் சாமியார் வந்தால் தங்க இடம் வேணும். கோயில் கட்டித் தரவில்லையென்றால் நாடார்களை வேதத்தில் தக்கவைப்பது சிரமம். பல்லாக்கு விசயத்தில் ஏற்கெனவே வருத்தத்தில் இருக்கி றார்கள். இவ்வளவுக்கான பிறகு பழைய இடத்திலேயே கோயில் கட்டுவது உசித மல்ல. மறுபடியும் வம்பு வந்து சேரும். வேதக்காரர்கள் அனுபவித்த கொடுமைகள் போதும். இனிமேலாவது அவர்கள் சந்தோசமாக இருக்கணும்.

ஊருக்குள் நிலைமை அப்படியொண்ணும் மோசமாக இல்லை. உள்ளுக்குள் புழுங்கினாலும் வெளியே காட்டிக்கொள்ளாமல் நடமாடினார்கள். முந்திய கலகம் மீண்டும் வெடித்துவிடக் கூடாதென்ற எச்சரிக்கையில் சர்க்கார் கழுகு மலையையும் அதைச் சுற்றியுள்ள சில ஊர்களையும் பாதிக்கப்பட்ட பகுதியாக அறிவித்து தண்ட வரி போலீஸ் படையை இறக்கிவிட்டது. ரெண்டு ஏட்டு இருபது போலீஸ்காரர்கள். அவர்களுக்காகும் செலவுத் தொகை அனைத்தையும் அப் பகுதி மக்களே ஏற்கணும். வரி வசூலுக்கு அதிகாரியும் ஊழியர்களும் வந்தார்கள்.

போலீஸ் கச்சேரியில் ஏற்கெனவே ஒரு ஏட்டும் அஞ்சு போலீஸ்காரர்களும் இருந்தார்கள். புதுப் படை வந்த பிறகு மக்கள் மனசில் பயம் கூடியது. தெருக்க ளில் நடமாட்டம் குறைந்தது. சச்சரவு மட்டுப்பட்டது.

இதைப் பார்க்கக் கருப்பட்டி மண்டி பலவேச நாடார் இல்லை. பெரிய நாடாரின் ஒரே பேச்சுத் துணையும் போய்விட்டது. எப்போதாவது கலிங்கலுக்குப் போய் ஆண்டியைப் பார்த்துப் பேசினால் மனசு அமைதியாகும். ஆண்டியால் கழுகுமலைக்கு நடக்க முடியாது.

ஒரு நாள் கீழ ரத வீதியில் வேதக் கோயில் எரிந்துபோன இடத்தை நாடார் கள் தூர்த்துச் சுத்தப்படுத்திக்கொண்டிருந்தார்கள். அது மேல்சாதிக்காரர்களின் கண்ணில் பட்டுவிட்டது. கொதித்துக் குதித்தார்கள்.

''அந்தா பாரு நாடாங்க பழையபடி வேதக் கோயிலு கெட்ட ஆரம்பிச்சிட்டான்.''

''அப்படியொண்ணும் தெரியலயே.''

''பெறகெதுக்குத் துப்பரவு பண்றான்.''

''அது அவங்க எடம்.''

''அவங்க அப்பன் எடமா. நம்ம கோயிலு நெலத்தத் தந்தரமா வாங்கீட்டுத் தெந்தனம் பேசுறான். எனக்கு வாற வெளத்துக்கு அடிச்சு நொறுக்கீறலாமான்னுருக்கு.''

''பட்டதெல்லாம் நெனச்சுப்பாத்தாக் கெட்ட மாட்டான்.''

''கெட்னா அம்புட்டுத்தான் அவங்க தெருவே தந்தரையாகிப் பில்லு மொளச்சிரும்.''

நாடார்களிடம் நேரில் கேட்கத் தைரியமில்லை. அங்கங்கே புரளியைக் கிளப்பிவிட்டார்கள். ஊர் வாய்க்குச் சொல்லணுமா. விசயம் சமீன் காதுக்கு எட்டியது. அந்த இடத்தில் என்ன செய்யப்போவதாக உத்தேசம் எனக் கேட்டு மேனேஜர் பெரிய சாமியாருக்கு எழுதி ஆழம்பார்த்தார்.

அந்த இடத்தில் நாடார்கள் வேலைபார்த்தால் இவர்களுக்கென்ன வந்துவிட்டது. ஏன் பதறணும். அங்கே கட்டடம் கட்டவோ பயிரிடவோ தயார்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். நிச்சயமாக கோயில் கட்டப்போவதில்லை. பழையபடி கோயில் கட்டப்போவதாக இந்துக்காரர்கள் பேசிக்கொண்டு திரிவது அநியாயம். அவதூறானது. அங்கே கட்டடம் கட்டுவதைத் தடுக்க அவர்களுக்கு என்ன உரிமையிருக்கிறது. எது எப்படியிருந்தாலும் மக்களின் அமைதி கருதி அந்த இடத்தில் எந்தக் கட்டடமும் கட்டப்போவதில்லை. ஆனால் மக்கள் வழிபடுவதற்கு ஒரு கட்டடமும் பங்குச் சாமியார் தங்க வீடும் பள்ளிக்கூடமும் கட்டிக் கொள்ளப் போதுமான வேறொரு இடத்தை சமீன் விலைக்கோ இப்போதைய இடத்துக்கு மாற்றாகவோ கொடுக்கணும். இப்படித் தெரிவித்து சாமியார் சமீனுக்கு எழுதினார்.

மாற்று இடம் தந்தால் ஒத்துக்கொள்வீர்களா என்று சமீன் தரப்பில் கேட்கப்பட்டது. வேதக் கோயில் கட்டுவதற்குப் பொருத்தமானதாகவும் நாடார் தெருவுக்குத் தொலைவில் இல்லாத இடமாகவும் இருந்தால் மாற்றிக்கொள்ளத் தயார் என்று அவர் தெரிவித்தார்.

சிவராமய்யர் அரண்மனையிலும் கலெக்டரிடமும் பேசினார். மலையின் கிழக்கு அடிவாரத்தில் கீழ கிரிப்பிராகார வீதிக்கு மேற்கேயுள்ள நிலத்தில் ஒரு பகுதியைக் கொடுக்க முடிவானது. அது நாடார் தெருவுக்கு அருகாமையிலிருந்ததாலும் எல்லா வசதிகளும் செய்துகொள்ளப் போதுமானதாக இருந்ததாலும் சாமியார் ஒத்துக்கொண்டார். சிவராமய்யர் கலெக்டருக்கு எழுதி கலெக்டர் சர்க்காருக்குச் சிபாரிசுசெய்து அனுமதியும் கிடைத்துவிட்டது.

பல மாசங்களாக வாரண்டுக்குத் தப்பி ஒளிந்திருந்த முதலாளி கழுகுமலைக்குத் திரும்பிவிட்டார். கொலை வழக்கை ஹைகோர்ட் தள்ளுபடி செய்துவிட்ட பிறகு பயமெதுக்கு. அவரது முயற்சியில் பலரும் சேர்ந்து சர்க்காருக்கும் லண்டனுக்கும் மனு அனுப்பினார்கள். நாடார்கள் இந்துக்காரர்களுக்கு எதிராகத்

தொடுத்த அத்தனை வழக்குகளும் கீழ்க்கோர்ட்டில் தள்ளுபடி செய்யப்பட்டன. அந்த உத்தரவுகளுக்கு எதிராக ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யணும். சொத்துக் களை இழந்தவர்களுக்கு நஷ்ட ஈடு தரணும். நாடார்களிடம் தண்ட வரி வசூ லிக்கக் கூடாது. இதுதான் அவர்கள் கேட்ட நிவாரணம்.

அவர்களுக்கு எந்த நிவாரணமும் கிடைக்கவில்லை. பெரிய சாமியாராலும் நஷ்ட ஈடு வாங்கித் தர முடியவில்லை.

மூணு வருசத்துக்கு மேலாக சனங்கள் தலையில் உட்கார்ந்திருந்த தண்ட வரி போலீஸ் படை போய்விட்டது. அதுக்கு மேலும் கஷ்டப்படுத்த சர்க்கார் விரும்பவில்லை.

வேதக் கோயில் கட்டுவதற்கான புது நிலம் பெரிய சாமியார் பேரிலும் பழைய நிலம் சமீன்தார் சார்பில் சிவராமய்யர் பேரிலும் கிரையமானது. பதிவான பத்திரப்படி சாமியாருக்குச் சேர வேண்டியது ரெண்டு ஏக்கர் பத்து செண்டு விஸ் தீரணமுள்ள சமீன் கோயில் பண்ணை நிலத்தின் கிழக்குப் பகுதியில் ஒண்ணரை ஏக்கர்.

எழுதிக்கொடுத்த ஒப்பந்தப்படி நிலத்தின் கிழக்கெல்லை நெடுக வேதச் சபை ஏழடி உயரத்துக்குக் கோட்டைச் சுவர் கட்டி அங்கே வேதக் கோயில் உள்ள வரை பராமரித்து வரணும். முருகன் கோயில் திருவிழாக்களையும் வழக்கமான உள்ளூர்க் கொண்டாட்டங்களையும் முன்னிட்டு இந்துக்காரர்கள் மேளதாளத் துடன் ஆட்டம்பாட்டமாக நிலத்துக்குக் கிழக்கேயுள்ள சாலை வழியாகச் செல்வதைத் தடுக்கக் கூடாது.

ஒப்பந்தம் போட்டு முடிந்ததும் கழுகுமலையில் தலோன் சாமியார் பொறுப் பேற்றுக்கொண்டார். புது இடத்தில் வேலை விரைவாக நடந்தது. கோட்டைச் சுவரும் கட்டி முடித்தாயிற்று. இனி பள்ளிக்கூடமும் வேதக் கோயிலுந்தான் பாக்கி.

கீழ ரத வீதியிலிருந்து வேதக்கார நாடார்களை விரட்டியாயிற்று. அதில் இந்துக்காரர்களுக்குச் சந்தோசந்தான். ஆனாலும் அவர்களுக்குப் பண்ணைத் தோட்டத்தில் எப்படி இடம் கொடுக்க முடியும். கிரிப்பிராகாரப் பாதைக்குள் அமைந்திருக்கும் இடத்தில் வேதக் கோயில் கட்டுவதா. அதெப்படி அனுமதிக்கப் போயிற்று. புகைச்சல் கிளம்பியது.

இந்தச் சந்தர்ப்பத்தைச் சாதகமாக்கிக்கொண்டு கணபதிப் பட்டரும் மற்ற எட்டுப் பேரும் சேர்ந்து கோர்ட்டுக்குப் போய்விட்டார்கள். அவர்களில் ஆறு பேர் பிராமணர்கள். ஒரு செட்டியார் ஒரு முதலியார் ஒரு வெள்ளாளர். பிராமணர் களில் நாலு பேர் முருகன் கோயில் ஊழியர்கள். மற்றவர்கள் முருக பக்தர்கள். பெரிய சாமியார் கௌசானலும் சமீன்தாருக்காக சிவராமய்யரும் பிரதிவாதிகள்.

வாதிகள் முக்கியமாக நாலு காரணங்களை முன்வைத்தார்கள். அதாவது பண்ணைத் தோட்டம் கோயில் தேவஸ்தானத்துக்குச் சொந்தமானது. அதை விற்க சமீன் மேனேஜருக்கு அதிகாரமில்லை. பண்ணைத் தோட்ட நிலம் கீழ ரத வீதியிலுள்ள பழைய கோயில் இடத்தைவிட அதிக மதிப்புள்ளது. பண்ணைத்

தோட்டத்தருகில் கிரிப்பிராகார வீதி உள்ளது. தோட்டத்தில் வேதக் கோயில் கட்டினால் முருகன் கோயில் திருவிழாக்களில் மலையைச் சுற்றிவரும் சப்பரம் காவடி பால்குடம் போன்றவை வேதக் கோயிலையும் சுற்றிவர வேண்டியிருக்கும். இது இந்துமத சாத்திரத்துக்கும் ஆசாரத்துக்கும் எதிரானது. கிரிப்பிராகார வீதி யில் வேதக்காரர்களும் இந்துக்காரர்களும் திருவிழா நடத்துவார்கள். அப்போது அவர்களுக்குள் தகராறு ஏற்படச் சந்தர்ப்பமுண்டு. ஆகவே பண்ணைத் தோட் டத்தில் வேதக் கோயில் கட்டுவதற்குத் தடை விதிக்கணும்.

வாதிகளின் மனுவை விசாரணைக்கு ஏற்றுக்கொண்ட கோர்ட் பண்ணைத் தோட்ட நிலத்தில் மேற்கொண்டு கட்டுமான வேலையை நிறுத்திவைக்குமாறு இடைக்கால உத்தரவு பிறப்பித்தது. உத்தரவு போட்ட நாளில் கட்டுமான வேலை நடந்திருக்கிறதா என்பதை அறிந்துவர அண்ணாசாமி அய்யரை அனுப்பிவைத்தது.

அய்யர் கழுகுமலைக்கு வந்து கட்டட வேலையைப் பார்வையிட்டார். மேற்கே மலைப் பக்கம் தவிர மற்ற மூணு பக்கமும் கோட்டைச் சுவர் எழும்பி யிருந்தது. தென்புறம் மட்டும் உயரம் கம்மி. ஒரு ஓட்டுக் கட்டடமும் ஒரு கூரைக் கட்டடமும் இருந்தன. கட்டுமான வேலை நிறுத்தப்பட்டுவிட்டது. இதை அவர் கோர்ட்டுக்குத் தெரிவித்தார்.

சமீன் மேனேஜர் நிலைமையை உத்தேசித்து யோசித்தார். கீழ ரத வீதியில் வேதக் கோயில் இருக்கக் கூடாது. அப்படியானால் பண்ணைத் தோட்ட நிலத்தை மாற்றிக் கொள்வதுதான் ஒரே வழி. வழக்கில் இப்படி வாதாட அனுமதி கேட்டார்.

பண்ணைத் தோட்டம் தேவஸ்தானத்துக்குச் சொந்தமானதல்ல. சமீன் தாரின் சொந்தப் பண்ணை. ஆகவே அந்த நிலத்தை மாற்றிக்கொள்ள மேனே ஜருக்கு அதிகாரமுண்டு. வாதிகள் முழுக்க முழுக்க மத அடிப்படையில் வழக்குத் தொடர்ந்திருந்திருக்கிறார்கள். மத ஒழுங்குமுறைகள் கோர்ட் வரம்புக்குள் வராது. கழுகுமலையானது இந்துக்காரர்களுக்குப் புனிதமானதல்ல. கோயில் தான் புனிதமானது. கோயிலின் கர்ப்பக்கிரகம் மலைக் குடவரைக்குள் அமைந் துள்ளது. அதனால் கோயிலைப் பிரதட்சணம் செய்கிறவர்கள் மலையையும் சுற்றிவர வேண்டியுள்ளது. அப்படிச் சுற்றி வந்தவர்கள் மலைப்பாறைகளிலுள்ள சமணச் சிற்பங்களையும் சுற்றியிருக்கிறார்கள். நாடார்கள் சில வருசமாக ஆராதனை நடத்தும் மடத்தையும் சுற்றியிருக்கிறார்கள். இதோடு இன்னுமொரு வேதக் கோயிலையும் சுற்றுவதால் அவர்களது புனிதம் எந்த விதத்திலும் கெட்டு விடாது. இவ்வாறு நிலங்களை மாற்றிக்கொள்வதால் இந்துக்காரர்களுக்கும் வேதக்காரர்களுக்குமிடையே அடிக்கடி தலைதூக்கும் தகராறுக்கு நிரந்தரமாக ஒரு முடிவு கிடைக்கும். இதனால் தேவஸ்தானத்துக்குத்தான் அதிக நன்மை.

மைனர் சமீன்தாருக்கு ஒரு விதத்தில் வருத்தம். அடடா மேனேஜரும் வேதக்காரர்களுக்கு ஆதரவாகவல்லவா யோசிக்கிறார். இந்துக்காரர்களின் மனசு புண்படக் கூடாதே. இதில் இவ்வளவு தொறட்டு இருக்குமென்று தெரிந்திருந் தால் ஆரம்பத்திலேயே மறுத்திருக்கலாமே.

அவருக்கு உள்ளுக்குள் ஒரு அச்சம் இருந்தது. மேனேஜரிடம் பேச்சுக் கொடுத்தார்.

''பண்ணத் தோட்டம் தேவஸ்தானத்தோட சொத்துன்னு வழக்குல சொல்லப்பட்ருக்குது. ரத வீதிகள்ல நாடாருக பல்லாக்குல போகக் கூடாதுன்னு ஏற்கெனவே தடையுத்தரவு இருக்குது. இல்லையா.''

''அப்படித்தான்.''

''அப்படியிருக்க தேவஸ்தான நெலத்துல வேதக் கோயில் கட்டக் கூடாதுன்னு கோர்ட்டார் தீர்ப்புச் சொல்லீட்டா என்ன செய்றது.''

''அப்படிச் சொல்றதுக்குச் சந்தர்ப்பமில்ல.''

''சரி. நெலங்கள மாத்திக்கிட்டது தப்புன்னு கோர்ட் சொல்லீட்டா என்னாகும். பெரிய சாமியார் பழைய எடத்தத் திரும்பக் கேப்பாரே.''

''கேக்கத்தான் செய்வார்.''

''மறுபடியும் சிக்கல்தான். அதனால நான் என்ன சொல்றன்னா பண்ணத் தோட்டம் யாரோட சொத்துன்னு நம்ம பெரிசுபடுத்த வேணாம். நெலங்கள மாத்திக்கிறதால ரெண்டு பக்கமும் அடிக்கடி ஏற்படுற தகராறு கொறையுங்கிறத மட்டும் அழுத்திச் சொல்லுவொம்.''

''அப்படியே வாதாடலாம்.''

விசாரணை நடக்கும்போதே ஒருவர் ஓங்கிக் குரல்கொடுத்தார்.

''பெலாத் தோட்ட நெலத்தத் தரலன்னா காளிமுத்து நாடாரோட எடத்தத் திரும்பக் குடுத்துருங்க.''

சமீன் தரப்பில் எதிர்ப்புக் கிளம்பியது.

''அது மட்டும் நடக்கவே நடக்காது.''

கொஞ்ச நேரத்துக்குப் பிறகே அமைதி திரும்பியது.

பெரிய சாமியார் ஆணித்தரமாக வாதாடினார்.

''இந்த நிலங்களை மாற்றிக்கொள்வதால் தேவஸ்தானத்துக்குத்தான் லாவம். பண்ணைத் தோட்டத்தில் சுவரும் வீடுகளும் கட்டுவதற்காக ஏற்கெனவே மூவாயிரத்து முன்னூறு ரூபாய் செலவு செய்துவிட்டேன். சமீன் தரப்பில் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதால்தான் நிலங்களை மாற்றிக்கொள்ளச் சம்மதித்தேன். இந்துக்காரர்கள் ஊர்வலம் போகும் வீதிகளில் பிற மதக்காரர்களின் வழிபாட்டுத் தலங்கள் இருக்கக் கூடாதென்று சொல்வதில் அர்த்தமில்லை. ஏற்கெனவே நாடார்கள் குடியிருக்கும் பகுதியில் கிரிப்பிரகார வீதியில் நாங்கள் ஆராதனை நடத்திக்கொண்டிருக்கிறோம். அதுக்கு இதுவரை எதிர்ப்புமில்லை. இந்த வழக்கு வேதக்காரர்களுக்கு இடைஞ்சல் கொடுக்கணுமென்ற உள்நோக்கத் துடன் தொடரப்பட்டுள்ளது. வேறு காரணமில்லை.''

விசாரணை தொடர்ந்தது.

## 10. வாறென் இவனே

வேலாயி குரல் திருணையில் அசந்துகிடந்த ஆண்டியை உசுப்பியது.

''அப்பச்சி நாங்க திருணாமலைக்குப் போயிட்டுவாறொம்.''

அவன் சாவகாசமாக எழுந்து மலங்கமலங்கப் பார்த்தான். உருவம் பிடிபட்டது. வேலாயும் பொய்யாளியும் தலைச்சுமையுடன் நின்றிருந்தார்கள்.

''பத்தரமாப் போயிச் சாமியக் கும்புட்டுட்டு வாங்க. தலையில சொம பெரிசாருக்கு.''

''ஒண்ணு கெட்டுச்சோறு. ஒண்ணு பயறுபச்ச.''

''தொணையாளு இருக்குதா.''

''நெறைய பேரு வாறாக.''

''அப்பச் சரி. பெயக வரலயாக்கும்.''

பொய்யாளி சொன்னான்.

''அவங்க இருக்கட்டும். மின்னுக்குப் பாத்துக்கிறலாம். அப்பனும் அஞ்ஞையும் இருக்காகல்ல. கவனிச்சுக்கிருவாக.''

''ஆமாமா. அவங்கள மேய்க்கிறதுக்கே ஒராளு வேணும். சங்கடந்தான்.''

வேலாயி அக்கறைப்பட்டாள்.

''சோறு பொங்கிக் கொழம்பு வச்சிருக்கென். ராத்திரிக்கு நல்லாச் சாப்பிடணும். அத்த போட்டுத்தருவா. அயந்து மறந்து படுத்துறாத. மதியம் வேற பட்னி. வகுறு என்னத்துக்காகும்.''

''அதப் பத்தி என்னத்தா. மகராசியாப் போயிட்டு வா தாயி.''

''நாளைக்கு ஒரு பொழுது சமாளிச்சுக்கோ. என்னப்பச்சி.''

அவர்கள் வாசலைத் தாண்டும்போது அவன் ஞாபகப்படுத்தினான்.

''யாத்தா வேலாயி ஒம் புருசனக் கிட்டத்துலயே வச்சுக்கோ. கூட்டம் ரெம்ப இருக்கும்.''

''பேரன் கூட்டத்துல தொலஞ்சுபோயிருவான்னு பயமா. முந்தியில முடிஞ்சுவச்சுக்கிறட்டுமா.''

அவர்கள் போனதும் அவன் மறுபடியும் முடக்கிக்கொண்டான். நினைவு கருப்பியைச் சுற்றி மண்டியது.

சின்ன வயசில் அவளுக்கு ரெம்ப நாளாக ஒரு ஆசை. திருவண்ணாமலைக்குப் போய் பெருமாளப்பனைக் கும்பிட்டு வரணும். போய் வந்தவர்கள் சொல்லத்தான் கேள்வி. ஆண்டியிடம் கேட்டாள்.

''ஏ இவனே இந்த வருசம் திருணாமலைக்குப் போயி வெள்ளாம வெளச்சலச் செல்லக்கெட்டீட்டு வருவமே. காலுகையி தெடனாருக்கும்போதே அந்த மாயகிட்ணனப் பாத்துக்கிறணும். பின்னால எப்படியெப்படியோ.''

''தொலவட்டாச்சே. நடந்துருவயா வண்டி கெட்டுவமா.''

''சனங்களோட நடந்தே போகணும்.''

புரட்டாசி ரெண்டாம் சனியிலிருந்தே ஊரில் திருவிழாதான். கீழத் தெருகார வீட்டுக் கருப்பன் பெருமாளுக்குத் திரியெடுப்பதாக நேமிக்கம். ரெண்டாம் சனிக்கு முத்திரி தெளித்து மூணாம் சனியில் செல்லக்கட்டணும். ஏழு நாள் ஊர் விளையாட்டு. ஏழு நாளும் மேளந்தான் ஆட்டந்தான் பாட்டுத்தான்.

கருப்பியும் ஆண்டியும் பத்து நாள் விரதம் பிடித்தார்கள். மூணாம் சனியன்று பெரிய கூட்டமே திரண்டு கோயிலுக்குப் புறப்பட்டது. கட்டுச்சோற்றுத் தெம்பிலும் பேச்சுத் துணையிலும் நடைக் களைப்பே தெரியவில்லை. துலுக்கங்குறிச்சி செவல்பட்டி சீலத்தூர் தாண்டிக் கோயில் மலையடிவாரம் போய்ச் சேர்ந்துவிட்டார்கள்.

அடிவாரத்தைச் சுற்றிக் கால்வைக்க இடமில்லை. கண்ணுக்கெட்டிய மட்டும் சனங்கள். மலைமேலும் நெருக்க முளைத்துக் கிடந்தார்கள். சன்னதித் தெருவிலும் சந்துகளிலும் சாதிக்கொரு சத்திரம் இருந்தது. அந்தந்தச் சாதிக் காரர்கள் அங்கே மொய்த்திருந்தார்கள்.

கீழ்ச்சாதிக்காரர்களைச் சன்னதித் தெரு முனைக்கு முந்தியே தடுத்து நிறுத்திவிட்டார்கள். நாடார் பள்ளுப் பறை சக்கிலியர் வண்ணார் இப்படி தீட்டுச் சாதிகள் தெரு வழியாகக்கூடப் போக முடியாது. கிழக்குப் பாதையில் பிரிந்து கீழத் தெருப் பக்கம் ஒதுங்கிக்கொள்ளணும். அதுதான் அவர்கள் கொண்டாடிப் புழங்கும் இடம்.

முதலில் எதிரெதிரே ரெண்டு மடம். குடும்பமாருக்குரியது. அதுக்கு வடக்கே சக்கிலியர் மடம். பொட்டிப்பகடை வகையறா சட்டிப்பகடை வகை யறா என்று ரெண்டு பிரிவாகத் தங்குவார்கள். இன்னும் வடக்கே நாடார்கள் தங்குமிடம். எதிர்ப்புறம் பறையர் மடம். குறுக்கு வழியாகக்கூட கோயில் மலைக்குப் போக முடியாது. சுற்றிலும் தடுப்புச் சுவராகக் கோணகிரிக்கரை.

கீழ்ச்சாதிக்காரர்கள் அங்கிருந்துகொண்டுதான் மலைமேல் குடியிருக்கும் பெருமாளைக் கும்பிடணும். ஒவ்வொரு சாதிக்கும் கொத்துக்கொத்தாக விளக்குக் கம்பங்கள் உண்டு. அவற்றில் விளக்கேற்றிப் பூசைசெய்து சாமியாடி நேமிக்கம் செல்லக்கட்டி வெள்ளாமைகளைச் சூறைபோட்டு ஆடு கோழி வெட்டி சோறு சமைத்து எல்லாம் தடபுடலாக நடக்கும். கோணகிரியின் கீழ்ப்புறம் தலை முழுகிக் குளித்துவிட்டு வந்து விரதம் விடுவார்கள். விளக்குக் கம்பங்களில் எரியும் நெருப்பு வழியே பெருமாள் கோயில் உச்சியைத் தெளிவாகத் தரிசிக்கலாம். அவர்களுக்குள்ளேயே பூசாரிகள் உண்டு.

மூணாஞ்சனியென்றால் சக்கிலியர் கூட்டந்தான் ரெம்ப இருக்கும். தூரந் தொலவட்டிலிருந்தெல்லாம் வருவார்கள். திரியெடுத்தாடுவதும் தப்பு சேகண்டி யடித்துக் கிறுவாணம் சுற்றிப் பாடுவதுமாகக் கொண்டாட்டம் சொல்ல முடி யாது. அவர்கள் விரதம் விடும் முறை வித்தியாசமானது. மொத்தமாகச் சோறு பொங்கித் தட்டி வேட்டியால் மூடிவைத்துவிடுவார்கள். கோயிந்தன் இறங்கி வந்து சோற்றில் தடம் பதித்துவிட்டுப் போகணும். தடம்பார்த்த சந்தோசத்தில் "ஏழைக்கு எரங்கிய கோயிந்தா மாயாவுதாரா" என்று கண்ணீர் பிதுங்க மலையை நோக்கிக் கும்பிட்டுச் சாப்பிட உட்காருவார்கள்.

மேல்சாதிக்காரர்கள் கோணகிரியின் மேல்புறம் குளித்துவிட்டுத் தவிப் பாறித் தவிப்பாறிப் படியேறிப் பெருமாளைக் கும்பிடுவார்கள். இறங்கும் வழி யில் மேற்குப் பக்கம் குடியிருக்கும் அலமேலுமங்கையை வணங்கி ஆர அமர உட்கார்ந்துவிட்டு வருவார்கள்.

கலிங்கல்காரர்கள் குடும்பமார் மடத்தோரம் கூடிக் கொண்டாட்டங்களை முடித்து விரதம் விடும்போது பொழுது சாய்ந்துவிட்டது. இனி சன்னதித் தெரு வழியாகச் சப்பரத்தில் வரும் சாமியை எட்டத்தில் நின்று பார்த்துவிட்டு அந்தச் சந்தோசத்திலேயே ஊருக்குக் கிளம்ப வேண்டியதுதான். தாங்காத கூட்டம். அதுக்குள் முண்டியடித்துக்கொண்டு போய்த்தான் சாமியைப் பார்க்கணும். கருப்பி மலைத்துப் போய் ஆண்டியைப் பார்த்தாள்.

''ஏ இவனே இந்தக் கூட்டத்துக்குள்ள எப்படிப் போறது. அஞ்ஞாடி நசுங்கிப் போயிருவொம்.''

''அட அறிவுகெட்டவளே இம்புட்டுத் தூரம் நடையா நடந்து கோயிந்தன் சன்னதிக்கு வந்துட்டு சாமியப் பாக்காமப் போனா அதுல என்ன மொகச்சியம். அவன்மேல பாரத்தப் போட்டுட்டு எம் பின்னாலயே வா. இத்தன கோடிச் சனமும் பாக்கணும்னுதான போகுது.''

''அதான. எத்தன பொம்பளைக போறாக. அவுகளுக்கு நான் கொறஞ் சவளா. நீ நட இவனே.''

அவள் புருசனை இறுகப் பிடித்துக்கொண்டாள். கூட்டம் சன்னஞ்சன்னமாக நகர்ந்தது. அடிக்கடி ''கோயிந்தா கோயிந்தா'' என்று உரக்கக் கூப்பிடும் சத்தம் கேட்டது. இன்னொரு பக்கம் ''பெருமாளே மாயாவுதாரா.''

கருப்பியும் ''பெருமாளப்பா பெருமாளப்பா'' என்று துணைக்குக் கூப் பிட்டுக்கொண்டாள்.

ஆண்டி நின்றுநின்று அவளைக் கூட்டிக்கொண்டு போனான். ஆனாலும் கூட்ட நெரிசல் அவர்களை அப்பப்பப் பிரித்தது. அவன் அவளைக் காணாமல் தவித்தான். அவளைக் கண்டுபிடிக்கச் சந்தங்கொடுத்தான்.

''ஏம்பிளி கருப்பி.''

பின்னாலிருந்து அவள் குரல் வந்தது.

''இந்தா வாறென் இவனே.''

ஒரு ''கோயிந்தா''வுக்கடுத்து ''ஏம்பிளி கருப்பி'' கேட்கும். வழி நெடுகச் சனங்களின் சிரிப்பு வெடித்துக்கொண்டேயிருந்தது.

கோணகிரியில் குளிக்கும்போதும் இதே கூத்துத்தான். அவன் ஒரு முங்கு முங்கி எழுந்து பார்ப்பான். அவள் தட்டுப்பட மாட்டாள். உடனே ''ஏம்பிளி கருப்பி'' நடுக்கத்தில் தேடும். ''இங்கருக்கென் இவனே'' என்று அவள் அடை யாளம் சொல்வாள்.

பெண்கள் வேடிக்கை பார்த்தார்கள்.

''இதென்னம்மா நேத்துக் கலியாணம் முடிச்சவுக மாதிரி பேசிக்கிறாக.''

''அதான. கொமரனும் கொமரியும் குளிச்சுக் கும்மரிச்சம் போடுறாகளே.''

கால்கடுக்க நின்று சப்பரத்தில் சகல அலங்காரத்துடன் வந்த சாமியைத் தரி சித்தார்கள்.

''சாமி பச்சப்பட்டுடுத்தி வந்துருக்கு.''

''இந்த வருசம் பயறுபச்ச நல்லா வெளையும்.''

''கோயிந்தன் புண்ணியத்துல வெளையட்டும்.''

ஊர் திரும்பும்போது எளவட்டங்கள் குமுறித் தீரவில்லை.

''மலமேல வழுக்கப் பாறையிடுக்கில எவ்வளவு பெரிய மரம் மொளச் சிருக்கு பாத்தயா. பாறைக்கிருக்கிற எளகின மனசுகூட மேகலக் குடிப் பெய களுக்கு இல்லையே.''

''அதானப்பா. கோயிலுப் பக்கம் எட்டிப்பாக்க வுட மாட்டங்கானே.''

''கோணகிரியில குளிக்கிற மாதிரி முங்கிமுங்கிப் போயி மலையேறிச் சாமி கும்புட்டுட்டு வரலாமான்னு நெனப்பு ஓடுச்சு.''

''அந்தப் பக்கம் அடிவாரத்துல அவங்க இருப்பாங்களே கழுகு மாதிரி.''

''தடுத்தான்னா புடிச்சுத் தண்ணிக்குள்ள அமுக்கிற வேண்டியதுதான்.''

''மாட்டிக்கிட்டா வம்பு.''

''இப்படிச் செய்யணும். பாதையெதுப்பிலயே வர்ணமென்னன்னு கேக்கான் பாரு. இதாண்டா என் வர்ணம்னு காதோட சேத்து ஓங்கி அறஞ்சிட்டுக் கூட்டத்துக்குள்ள ஓடி மறஞ்சிறணும். பெறகு ஆளோட ஆளாப் போயிச் சாமி கும்புட்டா ஆருக்குத் தெரியப்போகுது.''

''அடிக்கப்புடாது. தடுக்கிற கையத் துண்டா வெட்டணும்.''

பேச்சைக் கவனித்துக்கொண்டு வந்த ஆண்டி குறுக்கிட்டான்.

''அடே எஞ் சிங்கக் குட்டிகளா. ஒங்க வீராப்பக் கொஞ்சம் பொட்டணம் கெட்டி வச்சிட்டு மருதையில நடந்த ஒரு கதையக் கேளுங்க.''

''மருதையில குருத சாணிபோட்டதா.''

''குருதையில்லடா விருதாப் பெயலே. குடும்பன் சாணிபோட்ட கத.''

''அன்னச்சாணிய அள்ளுனதாரு.''

''வேற ஆரு ஒங்கப்பந்தான். இந்தக் கிருத்திரியத்துனால தானடா நாசமாப் போறொம். வக்காளி கேட்டாக் கேளு கேக்கலன்னாப் போ.''

''சரி சொல்லு சாமி.''

''மருதைக்கு வடக்க ஒரு ஊருல ரெண்டு மச்சினன்மாரு இருந்தாங்க. ஒருத்தன் பேரு செல்லக் குடும்பன். இனியொருத்தன் சுப்பக் குடும்பன். அந்த ஊருல நாலாசாதியும் உண்டு. மருதையில திருழாப் பாக்க நடந்தே போவாக.''

''நம்ம இம்புட்டுத் தூரம் வரலயா.''

''மீனாச்சி கோயிலுக்குள்ள போயி சாமி கும்புட்டுட்டு வாற மேகலக் குடிச் சனங்க காடு கரையில கோயிலுச் செலைகளப்பத்தியும் வரஞ்சிருக்கிற சித்தரத்தப் பத்தியும் சாமியலங்காரத்தப்பத்தியும் வாயி வலிக்கப் பேசுறதக் கேட்டுக்கேட்டு ரெண்டு குடும்பனுக்கும் ஆச மூக்க முட்டீருச்சு. பெழச்சுப்பெழச்சு என்னத்தக் கண்டொம். எப்படியும் கோயிலுக்குள்ள மொழஞ்சு ஒண்ணு வுடாமப் பாத்துற ணுண்டா மச்சான்னு கமுக்கமாப் பேசிக்கிட்டாங்க.''

''வாசல்ல நிக்கிற மயிராண்டி வுட்டாத்தான.''

''அவன எப்படிச் சமாளிக்கிறதுன்னு விடியவிடியத் திட்டம்போட்டாங்க.''

''அப்படியென்ன பெரிய திட்டம்.''

''சொல்றென். அடுத்த திருழா வந்துருச்சு. ஆளுக்கொரு ஆட்டுக்குட்டிய வித்து புதுசா வேட்டிதுண்டு வாங்கி உடுத்திக்கிட்டாங்க. தலையில எண்ண தேச்சு நல்லாக் கொண்ட போட்டுக்கிட்டாங்க. முறுக்கு மீச. ஒடம்பெல்லாம் எண்ண மினுமினுப்பு. துண்ட ஏத்தாப்புப் போட்டு வேட்டியச் சன்னமாத் தூக்கித் தோரணையா நடந்து போனாங்க. பேச்சுத் தினுசே மாறிப்போச்சு. இன்னாருன்னு லேசுக்குள்ள கண்டுபுடிக்க முடியாது.''

''சண்டீருக போறாக.''

''கோயிலு வாசல்ல நின்னவனக் கண்டுக்கிறவேயில்ல. வர்ணமென்னன்னு கேட்டான். கொண்டையங்கோட்ட மறவன்னு சுப்பக் குடும்பன் துடுக்காச் சொன்னான். மறுபேச்சில்ல. சொதாரிப்பா உள்ள மொழஞ்சிட்டாங்க.''

''மொழஞ்சாச்சு.''

''உள்ள போயிப் பாத்தா தொறந்த கண்ணு விரிஞ்சுக்கிட்டே போச்சு. எதப் பாக்கிறது எத வுடுறதுன்னு தெரியல. தூணுலருக்கிற செலைகளத் தொட்டுத் தொட்டுக் கும்புட்டாங்க. தூணே இப்படியிருந்தா சாமி எப்படியிருக்கும். சாமியப் பாக்கப்போற சந்தோசம் தாங்க முடியல.''

''பாத்தாகளா.''

''ரெண்டு பேரும் தூணுதூணாச் சுத்தி வரயில சுப்பக் குடும்பன் தற்செயலா அண்ணாந்து பாத்தான். மண்டபத்துக் கூரையெல்லாம் அழகழகாப் படம் வரஞ்சுகெடந்துச்சு. அப்படியே தரையில மல்லாக்கப் படுத்துப் பாத்துக்கிட்டே இருக்கணும்போல மனசு குறுகுறுத்துச்சு. அவனால வாயக் கட்டுப்படுத்த முடியல. சித்தரத்தப் பாருடா செல்லக் குடும்பான்னு சத்தம்போட்டுக் கூப்புட்டான். செல்லக் குடும்பனும் கிட்ட வந்து மேல பாத்தான். அடடா என்னமா வரஞ்சிருக்கு. எப்படின்னு சொல்லட்டும் சுப்பக் குடும்பான்னு குதிச்சான்.''

''அம்புட்டுக்கிட்டான்.''

''அவங்க பேசிக்கிட்டது கோயிலுச் சேவகரு காதுல வுழுந்துருச்சு. அது எவம்லே ஈனச் சாதிப் பெயலேன்னு ஓடிவந்து ஆளக் கண்டுபுடிச்சிட்டான். எல்லாரும் சுத்தி வளச்சுக்கிட்டாக.''

''சாமி கும்புட்டாப்புலதான்.''

''பெறகென்ன ரெண்டு பேரவும் வெளிய இழுத்துட்டுப் போயித் தூணுல கெட்டிவச்சு ஆளாளுக்கு கைக்குக் கெடச்சத எடுத்துக்கிட்டுக் கண்டமானக்கி அடி குடுத்துருக்கான்.''

''அர்ச்சன மும்மரமா நடக்குது.''

''ஓடம்புல தடிப்புக்குக் கணக்கே இல்ல. கெறங்குறவரைக்கு வுடல. அதுக்குப் பெறகுதான் அவுத்து வெரட்டீருக்கான்.''

''ஙோத்தா ஈனச் சாதிப் பெய ஆரு.''

''ரெண்டு குடும்பனும் தப்பி ஓடி வையாத்துக்குள்ள எறங்கித் தவிப்பாறுனாங்க. மொன்ன மொகறையெல்லாம் வீங்கி பாக்கச் சகிக்கல. ஓடம்புல பெரம்படிக் காயந்தான் ரெம்ப. சுப்பக் குடும்பன் முதுகத் திருப்பிக் காட்டி வேதனையோட சொன்னான். வரிஞ்சிருக்கிற சித்தரத்தப் பாருடா செல்லக் குடும்பா. அவன் வகுத்தக் காட்டி மொனங்குனான். என்னத்தச் சொல்லட்டும் சுப்பக் குடும்பா.''

''தலமொறைக்கும் மறக்காது.''

''நல்ல வெயிலு. வலி தாங்காமச் சுடுமணல்ல உருண்டு பெரண்டாங்க.''

''மணலு ஒத்தணம் குடுக்காகளாக்கும். ஓடம்பெல்லாம் புண்ணான கழுத உப்புக்களத்துல பெரண்டதாம். சுடுமணலு தோல உரிச்சிருமே.''

''ஆத்துல தண்ணி சிலுசிலுன்னு ஓடுச்சு. அங்கங்க சனங்க குளிச்சுக்கிட்ருந்தாக. இவங்க மேற்க தள்ளிப் போயி வகுறுமுட்டத் தண்ணி குடிச்சாங்க. ஓரமா உக்காந்து பாரத்த எறக்குனாங்க.

''அடிச்ச அடியில சாணி தள்ளீருச்சு.''

''இந்தத் தண்ணியக் குடிங்கடாகுடிங்கடான்னு மெனக்கிட்டுக் குண்டி கழுவுனாங்க. அப்படியும் கோவந்தீரல. பேண்ட பிய்ய மணலோட சேத்து அள்ளித் தண்ணியில வுட்டாங்க. மெதந்துபோற சித்தரத்தப் பாருடா செல்லக் குடும் பான்னு சுப்பக் குடும்பன் சொல்ல குதியாளம் போடுதுடா சுப்பக் குடும்பான்னு அவன் சொல்ல அத்தன வலியும் மறந்துருச்சு.''

''மருதப் பக்கம் தலவச்சுக்கூடப் படுக்க மாட்டான்.''

''நல்லாத் தலமுழுகிக் குளிச்சு துணிய நனச்சு ஈரத்தோட ஊருக்கு நடைய வுட்டாங்க. போற வழியில சுப்பக் குடும்பன் கேட்டான். 'மச்சான் ஆத்துல குளிக்கிறவங்க கொப்புளிக்கிறதுக்காக வாயத் தொறந்து ஓடிவாற தண்ணிய வாங்கும்போது நம்ம சாணி சிக்காமயா போகும்.' அதுக்குச் செல்லக் குடும்பன் சொல்லுவான். 'கண்டிப்பா ஆரு வாயிலயாச்சும் மாட்டும்.' ஊரு போயிச் சேர்ற வரைக்கும் சிரிப்புத்தான்.''

எளவட்டங்கள் ஓடிப்பிடித்து மல்லுக்கட்டினார்கள்.

''ஆண்டிக் குடும்பன் சாணிபோட்ட கதையக் கேட்டயாடா மச்சான்.''

பெண்கள் கருப்பியைப் பிடித்துக்கொண்டார்கள்.

''ஏம்பிளி கருப்பி.'' ஒருத்தி குரல்கொடுத்தாள்.

அதே ராகத்தில் இன்னொருத்தியிடமிருந்து பதில் வந்தது.

''இங்கருக்கென் இவனே.''

கருப்பியும் அசராமல் வசவை அள்ளி வீசிக்கொண்டே வந்தாள்.

''எம் புருசன் என்னயக் கூப்புட்டா ஒங்களுக்கு வலிக்குதாடி. நீங்க திருழா வில தொலஞ்சுபோனாக்கூட நல்லதாப்போச்சுன்னு ஒங்க புருசன்மாரு தேட மாட்டாக. பேச வந்துருச்சுக சீந்தாற கழுதைக. பள்ளனோளி வீட்டுக்கு வாங்கடி வச்சுக்கிறென். அடங்காற முண்டைகள அம்மியில அரச்சுக் கிண்ணியில வழிச் சிருவென்.''

ஆண்டி சிரிப்பு மாறாமல் சண்டையை வேடிக்கை பார்த்தான்.

படுத்துக்கிடந்த ஆண்டியின் முகத்தில் சொல்ல முடியாத வேதனை. ''போயிட்டயேம்பிளி போயிட்டயேம்பிளி'' என்று முனங்கிக்கொண்டே புரண்டு சுருண்டுவிட்டான்.

அவனால் முன்னைப்போல் தெம்பாக நடமாட முடியவில்லை. காலோய்ந்து கையோய்ந்து கிடந்தது. அடிக்கடி மர நிழல் கூப்பிட்டது. உழவுச் சாலில் வெயில்நீர் உருண்டோடி நெளிந்தது.

இருந்தாலும் விதைப்பு நேரத்தில் தவங்கித்தவங்கிப் போய்ச் சாத்திரத்துக்கு ஒருகை விதையள்ளி எறிந்துவிட்டுப் பொய்யாளியிடம் கொடுத்துவிடுவான். பேரன் விதைக்கும் அழகை வரப்பில் உட்கார்ந்து பார்க்கச் சந்தோசமாக இருக்கும். ஒயிலான கைவீச்சில் துள்ளிச் சிதறும் தானிய மணிகள் கண்ணுக்குத் தட்டுப் படாத ஏக்கத்தில் நெஞ்சுக்குள் என்னென்னமோ பயிர்கள் முளைக்கும்.

வேலாயி பயத்தாம்பட்டம் போடும் தோரணையே தனி. தளுக்கு நடையும் சன்னமாகத் தலைசாய்த்த குனிவும் பயறுகளை நமட்டும் விரல்களின் துரு துருப்பும் சீலைக் கொசுவத்தின் செல்ல அசைவும்... அசல் கருப்பியேதான். ஈரத்தில் ஊறிய கயிறாக அவன் மனசு நைந்துபோகும்.

''இதப் பாக்கிறதுக்கு அந்தக் கோட்டிக் கழுத இருக்கணும்.''

பொய்யாளியும் வேலாயும் அடுத்த நிலங்களுக்கும் விதைக்கப் போனார்கள். அவர்களை சின்னாண்டி சித்துக்கருப்பி என்று பட்டப் பேர் வைத்துக் கூப்பிட் டார்கள். ஆண்டிக்குப் பெருமை. அந்தப் பூரிப்பிலேயே கண்ணை மூடிவிடணும் போலிருந்தது.

## படலம் 13

### 1. கூடை தொடேன்

பூலோகத்தில் வளங்கொழிக்கும் அமிர்த வனம். பூவாடை அணிந்த புண்ணிய ஆறு பாகாக ஓடுகிறது. தேவலோகக் கன்னியர் எழுவர் குளிர் குடையும் நீரில் குதூகலித்துக் குளிக்கிறார்கள். அன்றாட விளையாட்டு.

கன்னியரின் பொன்னிற மேனியில் கார்வண்ணனின் கடைக்கண் பார்வை விழுகிறது. மனசுக்குள் குறுகுறுப்பு. நீராடும் படித்துறை அருகில் நெருப்புச் சுடராக எரிகிறார். அரம்பையர் உடம்பு அனலின் கதகதப்பை நாடுகிறது. சுடரைத் தழுவிச் சொகமாகக் குளிர்காய்கிறார்கள். நீரும் நெருப்பும் கலந்து கருத்துளியாகி வயிற்றில் மின்னலென இறங்குகிறது.

கரு உருவாகி உரு பெரிசாகி அறைக்குள் நாளுமொரு திருவிளையாடல் அரங்கேறுகிறது. கர்ப்பம் தரித்த கன்னியருக்கு வெட்கமான வெட்கம். கால் கடுக்கச் சுமந்த மால்வண்ணனின் குழந்தைகளைக் கானகத்தில் பெற்றுப் போட்டு விட்டுப் பால் கொடுக்காமல் பறந்துவிடுகிறார்கள். அத்தனையும் முத்தான ஆண் குழந்தைகள்.

அமிர்த வனம் அல்லோலகல்லோலப்படுகிறது. தரையில் நீந்தும் தன் குழந்தை களைப் பார்த்து அரங்கன் திகைக்கிறார். ஆசையுடன் அள்ளியணைத்துக் காளி யிடம் ஒப்படைக்கிறார்.

''தங்கையே இவையனைத்தும் என் குழந்தைகள். சந்தர்ப்ப சூழ்நிலையால் அரம்பையர் சூல்கொண்டு பெற்றவை. உனது அரவணைப்பில் அவை வளர விரும்புகிறேன்.''

''சோதரன் குழந்தைகளுக்கு ஆதரவளிப்பதில் மட்டிலா மகிழ்ச்சி.''

ஏழு தொட்டிலாட்டி இந்திரப் பசுவின் பாலூட்டி மாலனின் குழந்தைகளை ஆலவாயில் வளர்த்துவருகிறாள் காளி. குறுநடைக் குமாரர்கள் மரமென வளர்ந்து கட்டறுந்த காளைகளாகிறார்கள்.

ஆலவாய் ஒரு சமயம் அடைமழையில் குளிக்கிறது. வெள்ளப் பெருக்கில் வைகைக் கரை உடைகிறது. தொய்வுறும் மன்னன் உய்வுக்கு உத்தரவிடுகிறான்.

''அனைவரும் திரண்டு உடைப்பை அடைத்திடுக.''

மாலவன் மைந்தர் மறுக்கிறார்கள்.

''மகுடம் அணியப் பிறந்த எங்கள் தலை கூடை சுமக்காது.''

சினமுறும் மன்னன் சீறுகிறான்.

''மன்னவன் ஆணைக்கு மறுபேச்சா. சொன்னதைச் செய்க.''

சின்னவர்கள் பணியவில்லை.

''மன்னவனைப் படைத்தவனே சொன்னாலும் பணிவதில்லை.''

கொற்றவனின் கோவம் கொலையில் முடிகிறது. ஒரு குமாரனின் தலையைக் கொய்து ஆற்றில் எறிகிறார்கள். அது எக்காளமிட்டு வெள்ளத்தில் எதிரேறிச் செல்கிறது.

''ஏழு தலை இடறினும் கூடை தொடேன். கூடை தொடேன்.''

இன்னொரு தலையை வெட்டி வீசுகிறார்கள். அது இன்னும் வீரத்துடன் ஏறுகிறது.

''அத்தலைக்கு இத்தலை பொய்த்தலையோ. எத்தனை தலை இடறினும் கூடை தொடேன்.''

இரு தலைகளும் இண்டு இடுக்கெல்லாம் நுழைந்து நதிமூலம் அடைந்து நீர் மழித்த கற்களுடன் கலந்து நிலைகொள்கின்றன. திரும்பி வரவேயில்லை.

அரசன் கதிகலங்கிப்போகிறான். எஞ்சிய ஐவரும் விடுதலையாகிறார்கள்.

இருவரை இழந்த சோகம் காளிக்கு. இருப்பினும் ஐவர் தங்கிவிட்ட ஆறுதல். அவர்களை ஆரத் தழுவி அன்புக் கட்டளையிடுகிறாள்.

''உங்களை ஊரும் உலகும் அறியவே இருவர் மடிந்தார்கள். நீங்கள் இனி ஆலவாயில் இருக்கலாகாது. அவரவர் விரும்பும் நிலங்களை அடைந்து அங்கே வேரூன்றிக் கொடிபடர்ந்து பல்கிப் பெருகுங்கள்.''

சேய்களுக்கோ தாயைப் பிரிய மனசில்லை.

''எங்களை அரவணைத்து அன்பூட்டி வளர்த்த அன்னை தனிமையில் தவிப்பதா. என்ன இடர் வரினும் உன்னுடனேயே இருப்போம்.''

''என் கவலை விடுங்கள் கண்மணிகளே. மாண்டவர் இருவரும் மீண்டு வந்து என் வாசலில் துவாரபாலகர்களாக என்றும் காவலிருப்பார்கள். அந்தத் துணை போதும் எனக்கு. நீங்களோ வாழ வேண்டியவர்கள். சென்று செழித் திருங்கள். செல்லுமிடமெல்லாம் என்னைத் தெய்வமாகச் சேவித்துக் கொண் டாடுங்கள். என் துணை உங்களுக்கு என்றும் உண்டு.''

தாயின் ஆணையைத் தலைமேல் சுமந்து தனயர் ஐவரும் தனி வழியே பிரிகிறார்கள். திசைக்கொரு நிலம் தேடி நால்வர் செல்ல எஞ்சியவன் நடுப்புலம் நாடுகிறான். அயராத பயணம்.

## 2. நெய்தல் மகன்

ஐவருள் தலைமகன் கடிது நடந்து நெய்தலை அடைகிறான். எதிரே கண்ணுக் குள் அடங்காத கடல் விரிப்பு. குறுமணல் கொட்டிய அலைவாய்க் கரை. கரை நெடுகக் காவலிருக்கும் பசும் வேலி. அடிக்கடி அலை நீர் வந்து வேலியின் அடி தொட்டுச் செல்கிறது. சில சமயம் அத்துமீறித் தோளைத் தழுவிவிட்டு ஓடுகிறது.

வேலி வரிசையில் அன்னம்போல் அழகு மடல் விரித்தாடும் தாழைப் பூவின் மணத்தைக் கடலுக்கு அனுப்புகிறது. தாழை அழகில் மயங்கும் அலை துள்ளி வந்து விளையாட அழைக்கிறது. தாழை வெட்கத்தில் மறுக்கிறது. அழைப்பும் மறுப்பும் அலுக்காத விளையாட்டு.

பொன்னோ என மருட்டும் செருந்தி மலர் இதமான தென்றல் வீசும் இள வேனிலின் வரவை இயம்புகிறது. நீர்முள்ளிப் பூக்கள் நீலமணிகளாக ஒளிர் கின்றன. முத்துமுத்தாக மொட்டலர்ந்த நெடும்புன்னை அலைக்கு எட்டாத இறு மாப்பில் அசைந்தாடுகிறது.

நீர் கழுவிய வெண்மணல் பரப்பைக் கடந்து நெடுவழியில் நடந்தால் கரை தாண்டி கடலைப் பிரிந்து தனித்து வாழும் கழிமுகங்கள் சூழ்ந்த ஊர்கள். அதோ அருகில் ஒரு பட்டினம் தெரிகிறது.

பட்டினத்து முகப்பில் படுத்திருக்கும் ஒட்டகம்போல் குமிந்து கிடக்கும் மர மேடு. கடல் ஒதுக்கிய அகில் மரங்கள். அவற்றை விறகாக்கிப் பெண்கள் கள் காய்ச்சுகிறார்கள். புகை மண்டலம் வரவேற்கிறது. நெருங்கநெருங்கக் கள் மணம் சொக்குகிறது. பெண்கள் தூசு நீக்கி வடிகட்டித் தரும் பழைய கள் தெளிவைப் பரதவர் கொணர்ந்து பரிவுடன் கொடுக்கிறார்கள்.

''கள்ளுண்டு களைப்பாறும் பிள்ளாய்.''

தாகம் தீர்ந்த கணத்தில் சோர்வு நீங்கிப் பயணம் தொடர்கிறது.

சற்றுத் தொலைவு நடந்தால் குலவையும் கும்மாளமும் கலவையாகக் கேட் கின்றன. நெய்தல் நில மன்னன் புகழ் பாடி நிரைநிரையாகப் பெண்கள் குழ லிசைக்கேற்ப இடை அசைய நடமிடுகிறார்கள்.

''ஆழியின் மகளே
ஆடுக மகளே
தோழியர் சூழ
ஆடுக மகளே

பெய்யும்மழை யாக
பேணிநமைக் காக்கும்
நெய்தல்நில மன்னன்
நீதிபரி பாலன்
வில்லேந்தும் வீரன்
வீங்குபெருந் தோளன்
பல்லாண்டு வாழ
பாடுக மகளே.''

இன்னொரு புறம் மழைக் காலத்தில் களித்துக் கூத்தாடும் மயில்களாக மேன் மாடத்தில் மங்கையர் வரிப்பந்தாடுகிறார்கள்.

''கனங்குழைகள் விளங்க
கைவளைகள் குலுங்க
அணங்கனைய பெண்ணே
ஆடுகழங் காடு

மனங்கவர்ந்த கள்வன்
மணமுடிக்க வருவான்

சினந்தணிந்து நெஞ்சம்
தெளிந்துகழங் காடு.''

பட்டினத் தெருக்களில் விருந்தோம்பல் கரைபுரண்டோடுகிறது. வீடுதோறும் வறுத்த மீனைச் சிரிப்புடன் வழங்குகிறார்கள். உண்டு மாளவில்லை. கடல் மனசு.

உண்ட மயக்கத்தில் ஓய்வெடுத்த பின் அண்டை நிலம் தேடிக் கால்கள் அழைத்துச் செல்கின்றன. அது வேறான விளைநிலம். கடலின் களர் நீங்கிக் கனியின் சுவையோங்கி நிலவெனத் தெளிந்த நீர்நிலைகள். மண்கடலாக விரிந்த வயல் வெளிகள். பொன் விளையும் மண்ணின் புது மணத்தில் நெஞ்சம் பூரிக்கிறது.

வயல்களுக்கு அப்பால் ஒரு பூங்குன்றம் தெரிகிறது. அதை நோக்கி வரப்புகள் வழிகாட்டுகின்றன. போகப்போகக் குன்றம் மறைந்து குளிர்ந்த சோலையாகிறது. வளைந்த கரையில் வட்டமிட்டு மொய்த்திருக்கும் வகைவகையான மரங்கள். நடுவில் வீற்றிருக்கும் நறுமலர்ப் பொய்கை.

பொய்கையில் பொழிந்த வருணனின் கருணையால் ஓங்கியுயர்ந்த கடம்ப மரங்கள் கொத்துக்கொத்தாக மாலைபோல் பூத்துக் குலுங்குகின்றன. இலை தெரி யாமல் பூக்கோலம் பூண்ட புன்னை மரங்கள். மெல்லிய காற்றில் ஒருசேரச் சிந்தும் பூந்தாதுகள் பொய்கையில் நீரோவியம் வரைந்துள்ளன. ஓவியத்துக்கிடையில் விரிந்து ஒளிமுகம் காட்டும் இளமுலைத் தாமரை மொட்டுக்கள். செவ்வரக்குத் தோய்ந்த கையிதழ்களுக்கு நடுவில் அமைந்த பொன் பீடத்தில் ஒரு ஆண் வண்டு தன் பேடையைத் தழுவியபடி மென்சிறகசைத்துப் பண்ணிசைக்கிறது.

இன்னிசையில் தன்னை மறந்து கண்மூடும் சொகம். நா உலர்ந்தாலும் பொய்கையில் நீருண்ணத் தோன்றவில்லை. ஓவியம் கலைந்துவிடும். வண்டிசை நின்றுவிடும்.

ஈர மண்ணில் காலூன்றும் எண்ணம் மேலோங்குகிறது. பொய்கையருகே பொருத்தமான இடம் தேடி மனசு வண்டாக வட்டமிடுகிறது. வளமான புலம் வாய்க்கவே மழையில் நனையும் குழந்தையென மகிழ்ந்து சுழன்றாடுகிறான்.

''நெய்தல் மகனானேன் - வருணா
நெய்தல் மகனானேன்.''

## 3. பாலையின் தோழன்

அடுத்த மகன் இரு திங்களாக அலைந்தும் வளமற்ற பாலை நிலமே வாய்க் கிறது. இளவேனில் முடிந்து எங்கும் முதுவேனிலின் முற்றுகை. வற்றி வறண்ட நீர்நிலைகள். முகம் வாடிக் களையிழந்த நிலமகள் சோர்ந்துகிடக்கிறாள்.

நிலமகளின் தலையெனத் தொலைவில் ஒரு மலை. தோளென இரு மருங்கும் மூங்கில் பண்ணைகள். தோளுக்குக் கீழே பெரு முலைகளாகச் சிறு மலைகள். மலைகளுக்கிடையே மணியாரமாக ஓடும் காட்டாறு வறண்டு கிடக்கிறது.

ஆற்றின் இரு புறமும் நீர் அரித்து உள்ளுடைந்த இடிகரைகள். ஓரத்தில் பூத்து முடிந்து பொலிவிழந்து நிற்கும் சோலை. உட்கரையில் ஒட்டியிருக்கும்

பூக்கருகல். ஓரிரு குயில்களின் ஏக்கக் கூவல் சோலைக்குள் எப்போதாவது இசைக்கிறது.

வற்றிய ஆறு நெடுகிலும் கூந்தல் விரித்த கோலத்தில் கருகருவென நிரவிய குறுமணல். வெயிலில் வெப்பமுற்ற மணல் கரும்பொன்னாக மின்னுகிறது. அதன்மீது அவதியில் நடந்து அக்கரையேறி வறண்ட வெளியை வெறிக்கிறான்.

மழை பொழிந்தால் எங்கும் வளங் கொழிக்கும். மணிமாலைக் காட்டாறு மலை மகளின் மார்பிடையே துள்ளி வரும். நெரித்தோடும் நீரை வழிநடத்த நெடுங்கரைகள் திணறும். பொலிவிழந்த சோலை பூச்சூடி ஆடும். குயில்கள் கூடிக் குலாவி மலர்களைக் குடைந்து உதிர்க்கும். உதிரும் பூ வாடல் ஆற்று நீரில் ஆடை விரித்து அசைந்தோடும்.

குளிர்ந்த எண்ணங்களுடன் கரைவழியே நடக்கிறான். அவனுக்கு முன்னால் பார்வைத் தொலைவில் ஆண்களும் பெண்களுமாக ஒரு குடும்பம் செல்வது வெயில் படலத்தில் மங்கித் தெரிகிறது. ஆண்களின் தோளில் சிறிய யாழ் தொங்குகிறது. அவன் விரைந்து அவர்களை நெருங்குகிறான். எதிரே கடம்ப மர வரி நிழலில் அமர்ந்து ஒருவர் இளைப்பாறிக்கொண்டிருக்கிறார். அவரது மடியில் படுத்திருக்கும் பெரிய யாழின் நரம்புகளை விரல்கள் வருடுகின்றன. வருபவர்களை வரவேற்கிறார்.

''வாரும் சிறு பாணரே வாரும். வேனா வெயிலில் வாடி வதங்கி வந்திருக் கிறீர்களே. இதோ மர நிழலில் அமருங்கள்.''

சிறு பாணரின் பெருங்குடும்பம் நிழலுக்கு ஒதுங்கி அமர்ந்து ஓய்வெடுக்கிறது.

''அடடா என்ன வெயில் என்ன வெயில். நிழலின் அருமை வெயிலில் தெரியுமென்று சொன்னது சரிதான்''.

''குடும்பமே கிளம்பி வந்திருக்கிறதே.''

''என்ன செய்வது. எல்லோரும் இருந்து விருந்துண்ண வீட்டில் ஏதுமில்லையே. எந்நாளும் அலையும் வாழ்க்கை. வள்ளல்களின் கருணையால் வயிறு நிறைகிறது.''

சிறு பாணர் குடும்பத்தினரை வெறித்துப் பார்க்கிறார். பசியில் வாடிய முகங்கள். மூத்த பாணி முடக்கிப் படுத்திருக்கிறாள். அழகிழந்த இளம் விறலியர் அசையாது அமர்ந்திருக்கிறார்கள். கோதி முடிந்த வாழைப்பூக் கொண்டையில் அன்றலர்ந்த வேங்கை மலரில்லை. தண்டையும் சிலம்பும் அணியாத கால்கள். ஆற்றைக் கடக்கும்போது பருங்கற்கள் கிழித்த அவர்களது மெல்லிய பாதங்கள் ஓடி இளைத்த நாயின் நாவாகக் கன்றிச் சிவந்திருக்கின்றன. இளைஞர்கள் அவற்றை இதமாகத் தடவி வலி தணிக்க முயல்கிறார்கள்.

பெரும் பாணர் பேச்சிலும் சலிப்பு.

''என் பாடும் அப்படித்தான். நீர் சிறு யாழை ஏந்தி இரக்கிறீர். நான் பெரிய யாழ் சுமந்து யாசிக்கிறேன். பெரும் பாணர். பெயர்தான் பெரியது. குடும்பமோ வறியது.''

''வறுமை தீயினும் கொடியது.''

ஓர நிழலில் ஒதுங்கி நிற்கும் காளியின் மகனைப் பெரும் பாணர் பார்க்கிறார்.

''அய்யா தாங்கள் யாரோ.''

அவன் நாவை நனைத்துக்கொள்கிறான்.

''வழிப்போக்கன். நிழலில் ஒதுங்கினேன்.''

''அப்படியா. அமர்ந்து இளைப்பாறிச் செல்லலாமே.''

அவனும் அமர்ந்துகொள்கிறான். பெரும் பாணர் பிதற்றுகிறார்.

''என் வீட்டு வறுமை இன்னும் கொடியது. நாயொன்று வளர்க்கிறோம். அது இப்போதுதான் தாயாகியிருக்கிறது. குட்டிக்கு இன்னும் கண் திறக்கவில்லை. மடிகாதுகள். மயக்கும் அழகு. தாய் மடியில் பால் குடிக்கத் தவிக்கும்போது குட்டி வாயின் வெற்றுச் சுவைப்பில் வலி தாளாமல் தாய் விட்டு விட்டுக் குரைக்கும். நாயின் பசியைக்கூடப் போக்க முடியாத ஏழ்மை.''

''என்ன கொடுமை.''

''அடுப்பில் நெருப்பெரிந்து நெடுநாளாயிற்று. அடுப்படி களையிழந்து கிடக்கிறது. கூரை வேய்ந்த கழிகள் இற்றுப்போயின. எப்போது ஒடிந்து விழுமோ. கரையான் பிடித்த சுவர். புழுதி மண்டிய வீடு. அங்கங்கே காளான்கள் பூத்திருக்கும். பசியால் மெலிந்து ஒடுங்கி வயிறு ஒட்டிய என் மனைவி குப்பைக் கீரையைக் கிள்ளி வந்து உப்பின்றி வேகவைப்பாள். அயலார் பார்த்தால் கேவலமென்று வெளிக் கதவடைத்துச் சுற்றமுடன் சேர்ந்துண்போம். இதுதான் எங்கள் நிலைமை.''

''அழிக்கும் பசியை அறவே ஒழிக்க வழியில்லையே.''

''வழி தேடியலைந்தோம். குடபுலக் கோமான் வடதிசை வென்ற சேரன் செங்குட்டுவனின் வஞ்சிக்குச் சென்றோம். இந்நாளில் அது வாரி வழங்கும் நிலையில் இல்லை. வறிதாகிவிட்டது. சங்கம் வைத்துத் தமிழ் நிலைபெறச் செய்த பாண்டியன் நெடுஞ்செழியனின் மதுரையம்பதி சென்றோம். அங்கும் வளமில்லை. வறிய நிலைதான். குணபுலக் காவலன் சோழனின் உறையூரும் வறிதே.''

''சோர்ந்துவிட்டீர்களா.''

''உடல் சோர்ந்தாலும் மனம் சோரவில்லை.''

''என்ன செய்தீர்கள்.''

''இறுதி முயற்சியாக விண்ணை முட்டும் மலைவளம் கொண்ட ஓய்மா நாட்டு மன்னன் நல்லியக்கோடனை நாடினோம். அவன் கடையெழு வள்ளல் களையும் கொடையில் மிஞ்சியவன். தகுதிக்கேற்ப யானையும் தேரும் பரிசி லாகத் தந்தான். இன்ப மிகுதியில் அந்த இனிய பண்பினனின் ஈகையைப் பாடித் தெம்புடன் வீடு வந்தோம்.''

''பசியகன்றது.''

''ஆமாம். பசியகன்றதும் யாழில் புது இசை பிறந்தது. நீங்களும் அந்தக் குறிஞ்சித் தலைவனிடம் செல்லுங்கள். அமுதும் தேனும் அள்ளித் தெளிப்பது போல் அழகிய யாழின் நரம்புகள் மீட்டும் இன்னிசையுடன் செம்பாலைப் பண்ணைச் சேர்த்துப் பாடுங்கள். அவன் அகமகிழ்வான். பொன் கலத்திலிட்டு நெய்யடிசில் தருவான். பல்வேறு பரிசில் தந்து அன்புடன் அனுப்பிவைப்பான். உடனே புறப்படுங்கள்.''

''இதோ இப்போதே செல்கிறோம்.''

சிறு பாணரின் குடும்பம் நல்லியக்கோடனை நெஞ்சில் நிறைத்தவாறு பயணத்தைத் தொடர்கிறது. பெரும் பாணர் பெருமூச்சில் தலைசாய்கிறார்.

காளியின் மைந்தனும் எழுந்து காட்டு வழியே பிரிகிறான். நீர் தேடி யலையும் மான்களின் குளம்புத் தடங்கள் வழி நெடுக அழுந்தப் பதிந்துள்ளன. மழை பொய்த்த காலத்தில் நீர் பெறத் தோண்டிய குளத்தில் அந்த வழி முடி கிறது. குளத்துக்குள் நீர் மொள்ளப் பறித்த சிறு குழிகள். அவற்றுள் கானவர் பதுங்கியிருக்கிறார்கள்.

சிறிது நேரத்தில் அத்திப்பூக் கொம்புக் காட்டுப் பன்றி குளத்தில் நீருண்ண வருகிறது. எதிர்பார்த்துக் காத்திருக்கும் கானவர் அதன்மீது அம்பெய்து வேல் பாய்ச்சிக் கொன்று சாய்க்கிறார்கள். வேட்டை கிடைத்த களிப்பில் அவர்கள் முகம் வெயிலிலும் மலர்கிறது.

பொழுது சாய்கிறது. அவர்கள் வேட்டைக் களத்தை வேறிடத்துக்கு மாற்றிக் கொள்கிறார்கள். நெருக்கமான வேலிகளுக்கிடையில் வலை கட்டி வைத்து விட்டு வாய் திறந்த வேட்டை நாய்களுடன் சென்று முயல்கள் பதுங்கியிருக்கும் பசும்புல் செடிப் புதர்களை அலைத்துக் கலைக்கிறார்கள். நாய்களிடம் சில சிக்குகின்றன. தப்பியவை வலையில் அகப்படுகின்றன. அத்தனையும் தாமரை மலரின் புற இதழ்போன்று காது விரிந்த பெரு விழிக் குறு முயல்கள்.

காடுகளைக் கடந்தால் எயினர் குடியிருப்பு. அவர்கள் பாலையின் மக்கள். ஈச்ச ஓலைக் கூரைகள் முள்ளம்பன்றி முதுகாகச் சிலிர்த்து நிற்கின்றன. கூர்முள் நிறைந்த கூரையில் அணிலோ எலியோ விளையாடவில்லை. முற்றத்தில் விளா மர நிழல் கவிந்திருக்கிறது. மரத்தில் கட்டியிருக்கும் மான் துள்ளலை மறந்து படுத்திருக்கிறது. வேட்டைக்குப் பழக்கிய வீட்டு மான்.

வீட்டுக்கு முன்புறம் கிடுகுப் பலகையில் கூர் மழுங்கிய வேல்கள் அணி வகுத்து நிற்கின்றன. முன்பகுதியில் ஒரு பக்கம் தலைசாய்த்தபடி நாண் முடிந்த வில்கள். தேன்கூடாக அம்புக் கட்டுகள். கட்டித் தொங்கும் துடிப்பறை. பந்தல் காலில் சங்கிலி பிணைத்த நாய். வீட்டைச் சுற்றி முள்வேலி. எளிதில் நெருங்க முடியாது.

வீட்டுக்குள் மான் தோல் படுக்கையில் இளம் பெண் ஈன்ற குழவியுடன் படுத்திருக்கிறாள். குழவி அழவும் அமுதூட்டித் துயிலவைக்கிறாள். நாயின் உறு மலும் அடங்குகிறது.

தரையில் தோண்டிய உரலில் எயினப் பெண் உலக்கை கொண்டு ஓயிலாகக் குத்துகிறாள். காட்டில் அலைந்து உளியொத்த கருவியால் மண்ணைக் கிளறி அள்ளி வந்த புல்லரிசி. குத்தியதைக் கொழிக்க நேரமில்லை. அப்படியே பழம் பானையி லிட்டுக் கிணற்றில் மொண்ட உப்பு நீரில் வேகவைத்துச் சோறாக்குகிறாள். தேக்கிலை விரித்துச் சோறு படைத்து உலர்ந்து காய்ந்த இறைச்சியுடன் அனை வரும் சேர்ந்துண்கிறார்கள். அவனுக்கும் ஒரு பங்கு கிடைக்கிறது.

மழையில்லாக் காலத்திலும் பாலை மக்களால் எப்படி மகிழ்வுடன் வாழ முடிகிறது. நம்பிக்கை வற்றவில்லையே. போராடியே வாழும் இவர்களின் துணை யிருந்தால் போதும். ஈடேறிவிடலாம். அவனும் பாலையின் தோழனாகிறான். கொற்றவைத் தெய்வம் அவனைப் பற்றி அணைத்துக்கொள்கிறது.

## 4. முல்லையின் பிள்ளை

இன்னொரு மகன் நாலு திங்கள் தேடியும் நல்ல இருப்பிடம் அமையவில்லை. இருப்பினும் தென்திசைக் காடுகளை அடைந்து தெம்புடன் திரிகிறான். மரமும் செடியும் புதரும் அடர்ந்த கானாங் காடு. இடைவெளியில் சிறு குன்றும் பாறையுமாக இணைந்தும் தனித்தும் நிற்கின்றன.

வேனிலுக்கு வெம்பிக் கருகிப்போன இலை தழைகளும் புல் பூண்டுகளும் தளிர்விட்டுக் கூத்தாடுகின்றன. காடெங்கும் கடைவிரித்த பசுமை. முல்லைக் கொடி பூத்துப் படர்ந்திருக்கிறது. கார்காலம் வந்துவிட்டது.

ஒரு புறம் அடர்ந்திருக்கும் அவரைக் கொடி. அதன் பச்சை அரும்புகளும் பவள மலர்களும் பரவசமூட்டுகின்றன. அருகில் கருநிறக் காயா அரும்புகள். மயக்கும் மயில் கழுத்து மலர்கள். மயில் கூட்டம் மருண்டு பார்க்கும் சாயல். முசுண்டைச் செடிகள் ஓலைக்கொட்டான் பூக்களைச் சுமந்து நிற்கின்றன. பெண்ணின் விரல்களன்ன காந்தள் மலர்க் கொத்து காற்றிலாடி வழியனுப்புகிறது. கொல்லையில் பட்டுப் பூச்சிகள் கூட்டமாக ஊர்ந்து செல்கின்றன.

அங்கங்கே பூத்திருக்கும் நுணா மரங்களின் வாசம் காடெல்லாம் கமழ்கிறது. மணத்தின் ஈர்ப்பில் தேனீக்கள் திரளாக மொய்த்துத் தேன் குடிக்கின்றன. மண்ணில் உதிர்ந்த மலர்களை எறும்புகள் முற்றுகையிடுகின்றன. இரு படைகளுக்குமிடையே இடையறாது எல்லைப் போர் நடக்கிறது.

காடுகளுக்கூடே மலைப்பாம்பாக நெளியும் பாதையில் எருதுகள் பூட்டிய உப்பு வண்டிகள் வரிசையாக நகர்கின்றன. நல்மரத்தில் செதுக்கிய ஆரக்கால்கள். மத்தளம்போல் குடைந்த முழுமரக் குடம். சட்டத்துடன் சேர்ந்த சக்கரங்கள். வண்டிமீது மழை மேகம் சூழ்ந்த குன்றுபோல் பனையோலைப் பாய்கள் மூடிய கூடு பரண்மீது தினைப்புனம் காப்பவர் அமைத்த குடிலாக அசைகிறது.

வண்டிக் கூட்டுக்கு முன்புறம் கட்டித் தொங்கும் கோழிக் கூடு. யானைக் காலாகச் சிறு உரல். நெருக்கிக் கட்டிய கயிற்றில் ஊறுகாய்ப் பானை ஊஞ்சலாடுகிறது.

வண்டியில் உமணர். வழித்துணைக்கு உமட்டியர். கூடவே பொன்னணி பூண்ட பிள்ளைகள். பிள்ளைகளுக்கொப்ப பேணி வளர்க்கும் செல்ல மந்திகள். முற்றிய நுணாவில் வெட்டிய மரத் துண்டுகளின் நெட்டியைக் கூருளிகொண்டு குடைந்து கடைந்த மணி மாலைகள் மந்திகளின் மார்பில் துவளுகின்றன. காதுவரை சுற்றிய நெற்றி மாலைகள் துள்ளிக் குதிக்கின்றன. வண்டியில் வாழும் வணிகக் குடும்பங்களின் பயணம் வழி தேடி பொருளுக்கு விலை தேடித் தொடர்கிறது.

பயணக் களைப்பை மறக்கவும் கள்வர் பயம் போக்கவும் உமணர் உச்சத்தில் பாடுகிறார்கள். ஒருவன் ஓங்கிப் பாட மற்றவர்கள் வாங்கிப் பாட அந்த ராகச் சேர்க்கை குன்றுகளில் பாய்கிறது.

''காட்டு வழிநெடுக
கள்ளர் பயமிருக்கும்.''

''கள்ளர் பயமிருக்கும்.''

''கடலில் குடியிருக்கும்
கடவுள் துணையிருக்க.''

''கடவுள் துணையிருக்க.''

''கள்ளர் பயமெதுக்கு
கவலை இனியெதுக்கு.''

''கவலை இனியெதுக்கு.''

ஒருமித்த ராகம் தேயும்போது உமட்டியரின் குலவை தொடுத்துக்கொள்கிறது. இரு வாள் இணைந்த சிறு வாய்க் கிளிஞ்சலுக்குள் இட்ட முத்துக்கள் குலுங்க மந்திகள் பிள்ளைகளுடன் கிலுகிலுப்பையாடும் தாளம் கேட்டுக் கொண்டேயிருக்கிறது.

குட திசையிலிருந்து இன்னொரு வழி வருகிறது. அம்பெய்யும் கள்வரை எதிர்கொள்ளத் தயாராக இடையின் இரு புறமும் உடைவாள் சொருவிய வணிகர் தடம் பார்த்து நடந்து வருகிறார்கள். அவர்களுக்கு முன்னால் தழும்பேறிய முதுகில் மிளகுப் பொதிகளைச் சுமந்துகொண்டு நிமிர்ந்த செவிக் கழுதைக் கூட்டம் மண்ணில் குளம்பழுந்த மிதித்துச் செல்கிறது. இரு வழியும் ஓரிடத்தில் இணைந்து சுங்கப் பெருவழியாக விரிகிறது.

தொலைவில் மலைகளுக்கிடையில் வழுக்கி வரும் அருவியை அடையாளம் வைத்து நடந்தால் இடையில் முல்லைக் காடும் நீர்க் கேணிகளும் நிறைந்த ஊர் தோன்றுகிறது. காளியின் மகன் சற்று நேரத்தில் ஊரை எட்டிவிடுகிறான்.

வெறிச்சோடிய தெருக்கள். வெயிலுக்கு அஞ்சி வீட்டுக்குள் அடங்கி யிருக்கும் எயினர் குலப் பெண்கள் விருந்தினரைப் பார்த்ததும் வெளியே வந்து மலர்கிறார்கள். புளிக்கறியிட்டுச் சமைத்த சோற்றை ஆமான் சூட்டிறைச்சியுடன் வளைகள் கலகலக்க அவனுக்குப் படைக்கிறார்கள். பசியடங்குகிறது.

அன்றிரவு அங்கே தங்கிவிட்டுப் புலர்காலைப் பொழுதில் புறப்படுகிறான். இரு காதம் நடந்தால் இடையர் குடியிருப்பு எதிர்ப்படுகிறது. முட்புதர்க் காடு களுக்கருகே மாட்டுத் தொழு. தொழுவில் யானைபோல் நிற்கும் வரகு தினைக் குதிர்கள். பந்தலடியில் வரகு குத்தும் உரல்கள். வீட்டுச் சுவர்களில் வண்டிச் சக்கரங்களும் ஏர்க் கலப்பைகளும் சாத்தி நிற்கின்றன. வீட்டையொட்டி புகை மண்டிய கொட்டகைகள்.

வரகு வைக்கோல் பொதிந்த கூரை வீடுகளுக்கு முன்னால் ஆட்டுக்குட்டி கள் குழை கடிக்கத் தோதாகக் கட்டிவைத்திருக்கும் குட்டைக்கால் தாவாரம். மூங்கில் படல் கதவு திறந்திருக்கிறது. அங்கங்கே ஆடு மாடு கட்ட நீண்ட கயிறு பிணைத்த சிறு முளைகள் அறைந்திருக்கின்றன. இடப்புறம் வெள்ளாடுகளும் செம்மறிகளும் படுத்திருக்கின்றன. வீட்டைச் சுற்றி முள் வேலி. வலப்புறம் எருமைக் குப்பை மேடு. முற்றத்தில் தோல் படுக்கையில் அமர்ந்து இடையர் முதுமகன் காவலிருக்கிறான்.

வீட்டுக்குள் ஆய்ச்சியர் கட்டித் தயிரைக் கலைத்துக் கடையும் கலகலப்பு கேட்கிறது. மத்து சுழலச்சுழல வெள்ளிய மொட்டுக் காளான் குமிழ்கள்

பூக்கின்றன. திரளும் வெண்ணெய்யை வழித்தெடுத்துச் சிறுகச்சிறுகச் சேமிக் கிறார்கள்.

வாய் வளையத்தில் மோர்த் துளிகள் தெறித்த பானையை வடிவான சும்மாட்டில் சுமந்து சென்று கூவிக்கூவி விற்பார்கள். பண்டமாற்றாக நெல் கிடைக்கும். வெண்ணெய்யை உருக்கிய நெய் விற்றுப் பால் தரும் எருமை களையும் கன்றுகளையும் வாங்கி வருவார்கள். அவர்கள் வீடு திரும்பினால்தான் அனைவருக்கும் உணவு.

வெயிலேறிய வேளை. காடுகளில் இடையர் ஆடு மாடு மேய்க்கிறார்கள். பல்வகை அரிசிக் கலவையாக வெள்ளாடு செம்மறி பசு எருமை எல்லாம் விரவி மேய்கின்றன. செருப்பு வார் அழுந்திய தழும்புக் கால்கள் வளர்ப்புச் செல்வங் களை அயராது பின்தொடர்கின்றன. மேய்ச்சலில் வழிநடத்தவும் தழை ஒடித்துப் போடவும் கையில் தொறட்டிக் கத்தி கட்டிய கம்பு. கம்பு பிடித்தே கைகள் காய்த்துவிட்டன. தோளில் இன்னொரு நீண்ட கம்பு. இரு புறமும் கட்டிய தயிர் பால் பானைகள் காவடியாகத் தொங்குகின்றன. துணைக்கு ஒரு கூழ்ப் பானை. காவடி சுமந்து தோளும் காய்த்துவிட்டது. பல்வகைத் தழைகளால் தொடுத்த கதம்ப மாலை மார்பில் தவழ்கிறது.

களைத்து வரும் வழிப்போக்கர்களுக்குப் பாலும் தயிரும் அள்ளித் தரும் கையில் பால் பிசுக்கேறியிருக்கிறது. அதை உடம்பிலும் ஒற்றையாடையிலும் துடைத்துக்கொள்வதால் அவர்கள்மீது பால் மணம் வீசுகிறது.

ஒரு இடையன் நாக்கை மடித்து எழுப்பும் சீட்டியொலியை ஆடு மாடு களுக்கு அனுப்புகிறான். அவை அதுக்கு அடங்கிப் பணிந்து அமைதியாக மேய் கின்றன. தானே செய்த புல்லாங்குழலில் அவன் மண்ணின் பண்ணை இசைக் கிறான். இன்னொருவனின் வில் யாழிலிருந்து வரும் வேற்றுப் பண் இணைந்து கொள்கிறது. இசையில் மயங்கும் வண்டினங்கள் சூழ்ந்து பாடிப் பறந்தாடுகின்றன.

உச்சி வேளையில் ஊர்களைக் கடக்கும்போது ஒவ்வொரு ஊரிலும் ஆய் மகள் எதிர்கொண்டு விருந்தளிக்கிறாள். நண்டுக் குஞ்சுக் கூட்டம்போல் தினைச் சோறும் பாலும் கிடைக்கிறது. அவரைப் பருப்பு கலந்த வரகுச் சோறு காத் திருக்கிறது.

அருகில் சில இடங்களில் தினைப்புல் கூரை வீடுகளை வெயில் தெளிவாகக் காட்டுகிறது. அது குறவர் குடியிருப்பு. அங்கே தினை மாவுக்கும் நெய்க்கும் பஞ்ச மில்லை. தெவிட்டும் தேனும் கிடைக்கிறது.

அன்றுமுதல் காளியின் மகனுக்கு ஆய்மக்களும் குறவர்களும் சொந்த மாகிறார்கள். அவன் முல்லையின் பிள்ளையாகிறான்.

## 5. மனசெல்லாம் மருதம்

மற்றொரு மகன் பகலிரவாக நடந்து பல இடங்கள் கடந்து மருத நிலத்தில் கால்வைக்கிறான். கார்காலம் கழிந்து கூதிர்காலத்துக்கு வழிவிடுகிறது. இளங் காலைப் பொழுதில் ஒரு குளமேகிக் கரையேறித் தளர்வுக்குத் தலைசாய்கிறான்.

கரையில் குறுங்கால் நெடுங்கிளைக் காஞ்சி மரம் அடர்ந்து படர்ந்து நிற்கிறது. உயரக் கிளையில் அமர்ந்திருக்கும் பொன்வாய் மணிச்சிரல் உறுமீன் வருமளவும் உற்றுநோக்கிக் காத்திருக்கிறது. குளமெங்கும் நிலவும் மீன் வாடை.

கயலைக் கண்ட கணத்தில் சிரல் புயலெனப் பாய்ந்து அம்பலகால் குத்தி விரல் பற்றித் தூக்கிக் கிளையேறுகிறது. இரை கிடைத்த களிப்பில் எக்காளக் கூவல். பாய்ந்த வேகத்தில் கூர்நகம் பட்டுக் கிழித்த தாமரை இலைகள் வலியில் துடிக்கின்றன.

முள்தண்டில் மலர்ந்த வெண்தாமரையை மொய்த்திருக்கும் நீலச் சேவல் வண்டுகள் செங்கண் சுழலத் தேன் குடிக்கின்றன. வெண்மதியைக் கருநாகம் கவ்வும் வேதனைக் கோலம். அவனால் கண்ணயர முடியவில்லை.

குளத்துக்கு வடபுறம் வளமான பேரூர். சுற்றி அரணமைத்த அகழிகள். சூழ்ந்திருக்கும் வயல்கள் அனுப்பும் வாடைக் காற்று மெல்ல வருடிச் செல்கிறது. கழுத்து காய்த்து வலிமரத்த வலிய எருதுகள் ஈரப் பதத்தில் ஏரிழுத்து வயலை வலம் வருகின்றன. பின்தொடரும் உழவர்கள் அன்புடன் ஆணையிடும் பேச்சொலி கேட்கிறது.

யானை வாயாக வளைந்த கலப்பை. உடும்பு முகப் பெருங்கொழு. கோரைப் புல் நாரில் தொடுத்த முள்ளிப்பூ மாலையைத் தலையில் சூடிய மடிவாய் குறுங்கால் உழவர்கள் ஆழ உழுகிறார்கள். சம்புக் காயின் பூந்தாது படிந்ததால் அவர்களின் மார்பு பொன்போல் பளபளக்கிறது. அடித்துத் தட்டிய இரும்புத் தகடாகச் சுருக்கமற்ற மேனி. சில வயல்களில் பரம்படித்துச் சேற்றைச் சீராக்குகிறார்கள். ஏற்ற இறக்கத்தில் அவர்கள் மங்கலப் பாட்டு இசைக்கிறார்கள்.

''காற்றோடும் மழையோடும்
காய்கின்ற வெயிலோடும்
சேற்றோடும் உறவாடி
செழிக்கின்ற மருதநிலம்
நீரோடும் நெடுவெயலில்
வேரோடும் இளம்பயிர்கள்
தாராடும் தடமார்பன்
தங்கநிலப் பெருந்தெய்வம்
பேராலே நெல்விளைந்து
பெருகிவரும் மங்கலமே.''

நனைந்து கிடக்கும் நாற்றுக் கட்டுகள் மகிழ்ந்து சிரிக்கின்றன. வரப்புகளில் முட்டித் தினவு தணித்து கொம்புகளில் புல் திரடுகளைச் சூடியிருக்கும் எருதுகள் சொகமாகத் தலையசைக்கின்றன. அசைவில் புல் திரடுகள் வயல் நீரில் குதித்து விழும் ஓசைகூட இசைதான்.

பரம்படிப்பு முடிந்ததும் கொண்டையில் குறிஞ்சி மலர் பூத்த செடிகளாகப் பெண்கள் குலவையிட்டு நாற்று நடுவார்கள். பயிர் வளர்ந்து களையெடுப்பு நடக்கும். குளவிக் கூட்டம்போல் நெல் மணிகள் கொத்தாக விளையும். அடுத்து அறுவடை ஆரவாரம் தொடங்கும். ஆரவாரத்துக்கு அஞ்சிக் குறுங்கால் கருங் கழுத்துக் காடை சிறகு முளைக்காத வெண்கடம்பப் பூக்குஞ்சுகளைத் தழுவிக் கொண்டு பதுங்கிக் கிடக்கும்.

களத்தில் உழவு மாடுகளின் போரடிப்பு முடியும். பதர் நீக்கி நெல்லை மலை போல் குமிப்பார்கள். மூடி திறக்காமல் நிற்கும் பழைய குதிர்களுக்கிடையில் புதுநெல்லுக்காகப் புதிய குதிர்கள் முளைக்கும்.

மருதநிலக் கடவுளாம் இந்திரனுக்குப் பொங்கலிட்டு மங்கல விழா எடுப் பார்கள். ஆடல் பாடலுக்கு அளவிருக்காது. வலைவீசிப் பிடித்த வாளைமீனும் தூண்டிலில் கிடைத்த வராலும் வளையில் சிக்கிய நண்டும் நல்லரிசிச் சோறும் உண்டு கள்ளில் நனைவார்கள்.

மேட்டு நிலங்களில் வைக்கோல் கூரை வீடுகள் உயர்ந்து நிற்கின்றன. முற்றத்து உரலில் பெண்கள் அவலிடிக்கிறார்கள். உலக்கையோசை கேட்டு அஞ்சி நடுங்கும் கிளிகள் மரத்திலிருந்து கலைந்தோடுகின்றன. தச்சுப் பிள்ளைகள் செய்து கொடுத்த சிறு தேரை வீட்டருகே சிறுவர் இழுத்து விளையாடுகிறார்கள். ஓடிய களைப்புத் தீர செவிலித் தாயரை நாடிப் பால் குடித்துப் பைய நடந்து படுக்கையில் விழுந்து மயங்கிப்போகிறார்கள்.

பசியறியாத ஊர்கள். செல்லும் இடமெல்லாம் இரும்புப் பூண் தேய உரலில் குத்திச் சமைத்த அரிசி வெண்சோறும் மணக்கும் மனைக்கோழிப் பொரியலும் கால் விரித்த நண்டுக் கறியும் தந்து திணறவைக்கிறார்கள்.

கரும்பாலைகளின் ஓயாத பேரிரைச்சல் கேட்கிறது. விரும்பும் இடத்தில் இனிய சாறு குடித்து மேலும் நடந்தால் ஊர் திரண்டு குளமடைந்து வலை வீசி மீன் பிடிக்கும் வலைஞர் குடியிருப்பு வருகிறது. புன்னைமரக் குச்சுக்கள் பரப்பி அவற்றைத் தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்லால் மூடிய சிறு கூரைக் குடில்கள். வெண்மணல் பரப்பிய பந்தலின் கீழ் சின்னவரும் பெரியவரும் சேர்ந்தமர்ந்து சுட்ட மீன் சுவையில் நொய்யரிசிக் கள்ளை உண்டு களிக்கிறார்கள்.

வேத நூல் ஓதும் அந்தணர்களின் சுந்தரக் குடியிருப்பு பாதையோரம் படர்ந்திருக்கிறது. பந்தல்களில் வளமான இளங் கன்றுகள் கட்டியிருக்கின்றன. சாணமிட்டு மெழுகிய தூய வீடுகள். அருகில் தெய்வங்கள் உறையும் வழிபாட் டிடங்கள். தனித்தனியே திரியும் நாய்கள் கோழிகள். அந்தணர் ஓதும் வேதங் களை அப்படியே சொல்லும் வீட்டுக் கிளிகளின் மழலை மொழி விட்டு விட்டுக் கேட்கிறது.

அருந்ததி நட்சத்திரம்போல் அந்தணப் பெண் தோன்றுகிறாள். அழகிய சிறு நெற்றி. வளைக் கரங்கள். உயர்ந்த நெல்லரிசி உணவை உவகையுடன் தருகிறாள். தொட்டுக்கொள்ள மிளகுப் பொடி கலந்து கறிவேப்பிலையைக் கிள்ளிப் போட்டுப் பசுவெண்ணையில் வதக்கிய மாதுளங்காய்த் துண்டுகள். மாசற்ற மாவடு ஊறுகாய். அந்தண அமுதின் சுவை நாவை விட்டு அகலவேயில்லை.

கடந்து சென்றால் கள்ளுண்ணுமிடம் கண்ணில் படுகிறது. பசுங்கொடிகள் அசைந்தாடும் பெருவாசல். செம்பூக்கள் சிந்திய முற்றம். உண்ணும் வட்டில் களைக் கள் சமைக்கும் பெண்கள் ஓயாது கழுவுகிறார்கள். அதனால் வடியும் நீர் குழம்பாகப் படிந்து சேறாகிறது. ஈரச் சேற்றில் கருமயிரடர்ந்த ஆண் பன்றி கிடந்து புரள்கிறது. பெண் வாடை அண்டாமல் பல நாள் பாதுகாத்துக் கொழுக்க வளர்த்த அதனை அடித்துக் கறி சமைத்து மயக்கும் கள்ளுடன் புசிக்கத் தரு கிறார்கள். புதிய சுவை.

அதையும் கடந்து மதகுகள் நிறைந்த ஆற்றங்கரையை அடைகிறான். கரையோரம் நீர் ததும்பும் குளம். குளத்துக்குள் பூத்திருக்கும் அழகிதழ்ச் செங்கழு நீர்ப் பூக்களை அகன்ற வாயினால் அமைதியாக மேயும் எருமை. அதன் குளம்பு மிதியில் துண்டான கொழுமீன்கள் நீரில் மிதக்கின்றன.

வயிறு நிறைய மேய்ந்துவிட்டு அது பசிய மிளகுக் கொடி படர்ந்த பலா மர நிழலில் காட்டுமல்லிப் படுக்கையில் பள்ளிகொண்டு துயில்கிறது. அருகில் படர்ந்திருக்கும் மஞ்சள் இலைகள் மயிரடர்ந்த முதுகை மெல்லத் தடவ தேன் மணக்கும் மொட்டுகளைச் சொகமாக அசைபோட ஆரம்பிக்கிறது.

அதுக்கு மேலும் அலைந்து புகலிடம் தேட அவனுக்கு விருப்பமில்லை. மருதநிலமே அவன் மனசெல்லாம் நிறைந்திருக்கிறது.

## 6. குறிஞ்சி மணம்

கூடபுலம் செல்லும் கடைமகன் இடர் நிறைந்த தொடர் மலைக் காடுகளில் வழி மயங்கித் தவிக்கிறான். மலையும் மலை சார்ந்த இடங்களும் மருட்டி நெருக்கும் மலைப்பு. முன்பனிக் காலம் தொடங்கிவிட்டது.

மழை மேக முழக்கமென மலையதிரும் பாடல் கேட்கிறது. வில்லும் கையு மாக வாழும் வேடுவர் பெருமலையின் சிறு வழியில் களிப்புடன் பாடிக்கொண்டு வருகிறார்கள். அவர்களின் இரு தோள்களிலும் பலவிதமான இசைக் கருவிகள் பலாக் காய்களாகத் தொங்குகின்றன. அவற்றைக் காவடி சுமந்தபடி காலடிக் கவனத்தில் நடக்கிறார்கள்.

ஓங்கி உயர்ந்த மலையிலிருந்து ஓடி வரும் அருவி நீர் திரட்டிய மணல் மேட்டில் சுடுபாதம் குளிர இளைப்பாறுகிறார்கள். நடை தொடரும்போது மீண்டும் பாடல் ஒலிக்கிறது. மத்தளம் சிறு பறை கஞ்சதாளம் தூம்பு குழல் சல்லி எனப் பல கருவிகள் இசைக்கின்றன. இடையிடையே மயிலிறகு சூடிய வங்கியம் யானை மூச்சாக ஓங்கியடங்குகிறது. சற்று நேரத்தில் அடர்ந்த காடு அவர்களை உள்வாங்கிக்கொள்கிறது.

இடப்புறம் திரும்பினால் விளைந்து வளைந்து நிற்கும் தினைப் புனம். முற்றிய கருதுகள் யானைத் துதிக்கைகளாகப் பின்னியிருக்கின்றன. அங்கங்கே தயிர்த் துளி சிந்தியதுபோல் கொட்டிக் கிடக்கும் அவரைப் பூக்கள்.

அடுத்த நிலத்தில் கரும்புகள் படை வீரர்களைப் போல் தலைசாய்ந்து படுத் திருக்கின்றன. சாறு பிழிய ஆலைக்குச் செல்ல வேண்டியவை.

அதைக் கடந்தால் அவலிடிக்கும் பருவத்தில் மூங்கில் நெல்லடர்த்தி. நீர் பாயாத மேட்டு நிலங்களில் சிறு வெண் கடுகு பெருமளவில் அறுவடைக்குத் தயாராக இருக்கிறது.

இறங்கினால் சமவெளி. கருநிற நெய்தல் பூக்கள் நிறையப் பூத்த நெடு வயல்கள். ஒரு பகுதியில் வளர்ந்து முதிர்ந்த இஞ்சி. மாப்பருவத்தில் முற்றிப் பருத்த கவலைக் கிழங்கு. அங்குச முனை வாழைப்பூக்கள் அருகிலுள்ள பாறை யில் மோதித் தொங்குகின்றன.

பாறை நிலங்களில் பெருமூங்கில் குலைகள் காற்றில் அசைகின்றன. கரு நாவல் கனிகள் உதிர்ந்து களம் விரித்திருக்கின்றன. வழியில் உயவைக் கொடியும் கூவைக் கிழங்கும் தம்மை உண்ணச் சொல்லித் தடுக்கின்றன. வழியோரம் கனிந்து தொங்கும் மாம்பழங்கள் வலிந்து அழைக்கின்றன. முற்றிப் பழுத்து வெடித்த பலாக் கனிகளும் கனிகளை விட்டுச் சிதறிய சுளைகளும் சுற்றிலும் மணம் பரப்பியுள்ளன.

எங்கோ எட்டாத உயரத்தில் பேராந்தைகள் அலறுகின்றன. நெருப்புச் சுடராக மின்னும் செங்காந்தள் மலர்களை ஊனிரை என்று பறித்துச் செல்லும் பருந்துகள் ஏமாந்து விட்டெறிகின்றன. எறிந்த மலர்கள் சொரிந்து சிதறிய பாறை வெறியாட்டுக் களமாகக் காட்சியளிக்கிறது.

காயும் கனியும் பூவும் கிழங்கும் நிறைந்து மணவீடாக மாறிவிட்ட மலைச் சாரலில் வேடுவர் வீடுகள் இடைவெளியில் புள்ளிவைத்துள்ளன. தேனெடுப்பது கிழங்கு தோண்டுவது விலங்கு வேட்டை தவிர அவர்களுக்கு வேறு தொழில் இல்லை.

அவர்கள் வேட்டையாடிக் கொண்டுவந்த யானைத் தந்தங்கள் வீட்டுக்கு முன்னால் வெற்றிச் சின்னமாக நிற்கின்றன. ஆணும் பெண்ணும் ஓடி வந்து வர வேற்கிறார்கள். பன்றிக் கறியும் வேறு உணவு வகையும் கொடுக்கிறார்கள். அவர் களின் அன்பில் திளைத்தபடி அன்று இரவை இனிதே கழிக்கிறான்.

மறுநாள் காலை காட்டுவழி ஒரு சிற்றூருக்குக் கூட்டிச் செல்கிறது. ஊரை யடையும்போது உக்கிரமான வெயில் காய்கிறது. அங்கே உணவுக்குக் குறை வில்லை. நெய்யில் பொரித்த கறியுடன் தினைச் சோறு. மூங்கில் குழாயில் ஊற்றிப் புளிக்க வைத்த நெடுநாள் கள். இன்னும் நெல்லரிசிக் கள். அருவி நீர் அடித்து வந்த பலாக் கொட்டைகளை மாவாக்கிப் புளியம்பழக் குழம்புடன் மோர் சேர்த்த கலவை. மூங்கிலரிசியுடன் கடமான் கறி. ஏவிய நாய் கவ்விக் கொணர்ந்த உடும்புக் கறி. மலைவாழ் குறமகள் வகைவகையாகத் தருகிறாள்.

மலைத் தெய்வங்களையும் அவை சூடும் குவளை மலர்களையும் அச்சத் துடன் வணங்கிவிட்டு மலைநாட்டிலிருந்து நிலத்துக்கு இறங்குகிறான். தினைப் புனத்தைப் பன்றிகள் அழித்துவிடாமல் தடுக்கப் பாதையெங்கும் கருங்கல் பொறி வைக்கப்பட்டுள்ளது. அதில் சிக்கிவிடாமல் விலகிச் செல்கிறான். புது வழியில் சென்றால் பாறைப் பிளவுகளில் ஒளிந்திருக்கும் பாம்புகள் இரைகின்றன. பழைய பாதையே பாதுகாப்பானது.

வலப்புறம் போகிறான். தினைப் புனம் காக்கும் குறவர்கள் உயர்ந்த பரண் மீதிருந்து யானைகளை விரட்டக் கவண் கொண்டு கல் வீசுகிறார்கள். அதுக்கஞ்சிக் குரங்குகள் குட்டிகளுடன் மரங்களுக்குத் தாவுகின்றன. கவண் கல் தன்மீது பாய்ந்து விடாமல் மரங்களிடையே ஒளிந்துகொள்கிறான். யானைகளைக்கூட விழுங்கும் காவுகளும் இருள் மண்டிய மடுக்களும் தென்படுகின்றன. நீரோடிய காட்டாற்றுப் பாதைகள் வழுக்குகின்றன. மரங்களைச் சுற்றியிருக்கும் கொடிகளைப் பற்றிச் செல்ல வேண்டியுள்ளது. மூங்கில் கோல் ஊன்று துணையாகிறது.

அழகிய சித்திரக் கோபுரம் சூடிய கோயில் தெரிகிறது. குறிஞ்சிக் கடவுளாம் குமரனின் கோயிலாக இருக்கும். தொலைவிலிருந்து வணங்குகிறான். மரங்களில் கழைக்கூத்தாடும் குரங்குக் குட்டிகளும் மலையுச்சியில் தேர் உருள்வதுபோல்

தொங்கும் தேனடைகளும் மனசை ஈர்க்கின்றன. கண்கொட்டாமல் பார்க்கிறான். காலம் கழிவது தெரியவில்லை. பயணத் தொலைவு பல காதம் இருக்குமே. விட் டெறிந்த பார்வையைக் கட்டுக்குள் கொணர்ந்து நடக்கிறான்.

இனி காட்டுப் பகுதியைக் கடந்தாகணும். பரண் மீதிருந்து வேடன் எய்த அம்பு குத்தி வழி தவறி மயங்கி விழுந்து கிடக்கிறது ஒரு பன்றி. அதன் மயிர் நீக்கிக் கறியறுத்து மூங்கில் உராய்ந்து மூளும் தீயில் பதமாக வாட்டி உண்கிறான். தெளிந்த சுனை நீரைப் பருகி இளைப்பாறுகிறான். வாட்டிய கறியில் சிறிது எடுத்து முடிந்து கொண்டு வழியைத் தேடுகிறான். பறவைகள் கூடி இசைக்கும் ஆலமரங்களுக்கு அப்பால் வழி தெரியவில்லை.

பாறையில் கல்லால் தட்டி ஒலியெழுப்புகிறான். வேடுவர் ஓடி வந்து வழி காட்டுகிறார்கள். குன்றுகளைக் கடந்து மர நிழலில் ஒதுங்குகிறான். திசையெங்கும் பலாப்பழ மணம் தெவிட்டுகிறது. பழுத்த பழங்களில் தோண்டி வந்த சுளைகளைக் குரங்குகள் கிளைகளில் அமர்ந்து சுவைக்கும் மணம்.

மர நிழலில் பல்வேறு ஒலிகள் செவியில் அதிர்கின்றன. களிப்பும் துயரும் கலந்த கதம்பம். அமைதி குலையவே எழுந்து நடக்கிறான்.

தினைப் புனத்தில் புகுந்து மேயும் ஒற்றை யானையை விரட்டப் பரணி லிருந்து கானவர் எழுப்பும் கடுங்குரல் கேட்கிறது. இன்னொரு புறம் கூரிரும்பு முள் தைத்த காட்டுப் பன்றியால் காயமுற்றவனின் அழுகை. வரிப்புலி மார்பில் பாய்ந்த ஒருவன் புண் ஆறப் புலம்பிப் பாடுகிறான்.

''வயிற்றுக்கு வழிதேடி
வனத்துக்குப் போனேனே
வனத்துக்குள் இரைதேடும்
வரிப்புலியைக் காணேனே
கணத்துக்குள் வரிப்புலியின்
சினத்துக்கு ஆளானேன்
இடம்மாறித் தடுமாறும்
மடமானைப் போலானேன்.''

மற்றொரு இடத்தில் வேங்கை மலர் சூடிய பெண்கள் புலி புலி என்று விரட்டும் விளையாட்டு கலகலக்கிறது. ஒரு குறுகலான வழியில் ஆண் யானை கருவுற்ற பெண் யானைக்குக் கவளம் தந்து கவனமாக அழைத்துச் செல்கிறது. ஒரு புலி பெண் யானைமீது பாய அது கதறிக் கூட்டத்தை அழைக்கும் பிளிறல் நெஞ்சையறுக்கிறது. ஒரு மரத்தில் துயரமே உருவாக அமர்ந்திருக்கும் கருங்கைத் தாய்க் குரங்கு கைப்பிடி தவறி விழுந்த விவரமறியாக் குட்டியை நினைத்து அரற்றிக்கொண்டிருக்கிறது.

எட்டாத இடத்திலிருக்கும் தேனடையை எடுக்கக் குறவர் கும்மாளமிடுகி றார்கள். இன்னும் பல குறவர் மலைவளப் பொருட்களை மன்னவனுக்குக் கொடுக்க மான் தோல் போர்த்திய சிறு பறை கொட்டி மனைவியருடன் குரவைக் கூத்தாடுகிறார்கள்.

தேரோடும் அருவிகள் பாறைகளில் மோதும் முழக்கம் இடையறாது ஒலிக் கிறது. குழிக்குள் விழுந்த யானையைப் பிடிக்கத் திட்டமிடும் பாகரின் பேச்சு செவியில் விழுகிறது. தினைப் புனங்களில் கிளி விரட்டும் ஆலோலம் கேட்கிறது.

கூட்டம் விட்டுத் தப்பிய காளையும் மலையாடும் முட்டி மோதுவது கண்டு இடையரும் குறவரும் இரு பிரிவாக நின்று பணயம் வைத்துக் கூவி ஆரவாரிக்கிறார்கள்.

''எங்கள் காளை வெல்லும். உங்கள் பணயம் எங்களுக்கே.''

"எங்கள் ஆடுதான் வெல்லும். ஆடுங்கள் ஆட்டம். பணயம் துறந்து ஓடுங்கள்."

அடர்ந்த புதரருகே மல்லிகை குறிஞ்சி மலர்கள் சிதையும் நொறுங்கல் சரசரக்கிறது. உற்றுப் பார்த்தால் காட்டெருதுகள் மூர்க்கமாகச் சண்டையிடுவது தெரிகிறது.

வழியில் ஒரு களம் வருகிறது. சுளை தின்ற பலாக் கொட்டைகளைச் சிறுவர் களத்தில் போட்டுக் கன்றுகளை மிதிக்க விட்டு வலம்வருகிறார்கள். அண்மையில் கார்மேகப் புகையுமிழும் கரும்பாலைகளில் சாறு பிழியும் சலசலப்புக் கேட்கிறது. வயலில் தினையறுக்கும் பெண்கள் வள்ளைப் பாட்டுப் பாடுகிறார்கள்.

''அரும்பெடுத்துப் பூத்திருக்கும்
குறிஞ்சிமலர் கொய்துவா.
குன்றுதோறும் குடியிருக்கும்
குமரனுக்குச் சூடுவோம்.''

''குமரனுக்குச் சூடினால்
குறத்திமுகம் வாடுமே.''

''இன்னுங்கொஞ்சம் கொய்துவா
இருவருக்கும் சூடுவோம்.''

''கொய்தமலர் சூடினால்
குறத்திமுகம் மலருமே.''

''தினையறுத்து மாவிடித்து
தேன்கலந்து கொண்டுவா.
வினையறுக்கும் வேலனுக்கு
விருந்தளித்து வேண்டுவோம்.''

''வேலனுக்கு விருந்தளித்தால்
வேடன்மகள் நோகுவாள்.''

''இன்னுங்கொஞ்சம் கொண்டுவா
இருவரையும் வேண்டுவோம்.''

''விருந்தளித்து வணங்கினால்
வினையறுந்து போகுமே.''

கொல்லையில் வளர்ந்த சேம்பையும் மஞ்சளையும் காட்டுப் பன்றி தோண்டித் தின்றுவிடாமல் காவலிருப்போர் கொட்டும் பறையொலி பாட்டுடன் கலக்கிறது.

திருவிழாக் கோலம் பூண்ட திருநகராக விளங்கும் மலைகளில் படிந்திருக்கும் கருமுகில்கள் கைக்கெட்டும் தொலைவில் மிதந்தவாறு சில்லெனத் தூறுகின்றன. அவன் எழுந்தோடிக் குகையில் தங்குகிறான்.

தூறல் வற்றியதும் காடுகளில் நுழைகிறான். துணைமானைப் புலி கவர்ந்த துயரத்தில் கலைமான் கதறும் அவலம் நிறைந்த காடு. வழியில் நெருக்கி நட்ட நடுகற்கள் குறுக்கிடுகின்றன. போரில் வீர மரணமெய்திய வீரர்களின் பேர் பொறித்த புகழ்க் கற்கள். அவற்றைத் தெய்வங்களாக வணங்கி வழியைத் தொடர்கிறான்.

ஆயினும் வழி தடுமாறுகிறது. முன்னவர்களைப் போல் ஊகம்புல்லை முடிந்து அடையாளம் வைத்துத் தெளிகிறான்.

அடிவாரத்தில் அமைந்த அழகிய ஊர் ஆறுதல் தருகிறது. ஆவல் மிக்கோங்க அவ்வூரை அடைகிறான். பழமையான வீடுகள் கோர்த்த சிறு தெருக்களில் ஆர வாரம் கேட்டவண்ணமிருக்கிறது. சில வீடுகளில் உயர்ந்த மேன்மாடங்கள் தெரிகின்றன.

ஊர் நடுவே பெரிய முற்றம் விரிந்த அரண்மனை போன்ற வீடு. முற்றத்தில் மாமரங்கள் நெருப்புச் சுடராகப் பூத்திருக்கின்றன. அவற்றின் நிழலில் வளைகால் மான் குட்டியும் தலையாடும் யானைக் கன்றும் மயிர் மூடிய கரடிக் குட்டியும் மலையாடும் சிறு கண் கீரியும் வால் நீண்ட உடும்பும் மயிலும் கானாங்கோழியும் விளையாடித் திரிகின்றன. முன்பகுதியில் என்னென்னமோ பொருட்கள் கொட்டிக் கிடக்கின்றன. இன்சுவை தரும் மாங்கனி பலாக்கனி கிழங்கு வகைகள் பளிங்கு போன்ற மணிகள் யானைத் தந்தங்கள் கற்பூரம் சந்தனம் மிளகு...

ஊர் நெருக்கமாகிக் குறிஞ்சி நிலம் அவனுக்குக் குடியிருப்பாகிறது.

## 7. வணிக உழவன்

காளித்தாய் அனுப்பிய காளையர் ஐவரும் சொந்தமாகும் நிலங்களில் பந்தங் களை உருவாக்கிக் கண்கவர் பெண்களைக் கடிமணம் புரிந்து மண்ணின் மைந்த ராகிறார்கள். காலூன்றிக் குடும்பமாகிறார்கள். குடும்பங்கள் கூட்டங்களாகின்றன. கூட்டங்கள் ஊர்களாகின்றன. ஊர்தோறும் காளிக்குக் கோயிலெழுப்பி விழா வெடுத்துக் களிக்கிறார்கள்.

காலத்துக்கேற்பத் தொழில்களைக் கற்றுக் கரையேறுகிறார்கள். புதிய தொழில்களை உருவாக்குகிறார்கள். தேவையான கருவிகளைச் செய்கிறார்கள். ஆடு மாடு வளர்க்கிறார்கள். தொழிலில் மாடுகள் தோள்கொடுக்கின்றன. இயற்கை ஒத்துழைக்கிறது. உழைப்புதான் அவர்களின் ஒரே மந்திரம்.

அலைகடலில் பரதவர் வலை வீசிப் பிடித்து உலர்த்தும் மீன்களையும் அளங் களில் விளையும் உப்பையும் விலைக்கு வாங்கி வெளியிடம் கொண்டுசென்று விற்றுப் பணமும் மாற்றுப்பண்டமும் பெறுகிறார்கள். வாரி வழங்கும் கடல் அவர்களுக்கும் தெய்வமாகிறது.

மலைச்சாரலிலும் சமவெளிகளிலும் பயிர்களை வளர்க்கிறார்கள். மிஞ்சும் விளைபொருட்களை அங்காடியில் விற்கிறார்கள். மற்றவர்களிடம் வாங்கி வணிகம் செய்கிறார்கள். தேவையை முன்னிட்டு அங்காடிகள் தோன்றுகின்றன. உழவனும் வணிகனும் ஒருருவாக இணைந்த உழைப்பாளிகளாக மாறுகிறார்கள்.

ஆற்றோர வெளிகளில் தானாக வளரும் வெற்றிலைக் கொடிகளுக்கு வேலி யிட்டுப் படர விடுகிறார்கள். பின்னர் அதையே பயிரிடுகிறார்கள். துணைக்குக் கமுகு நடுகிறார்கள். வாட விடாமல் நீர் பாய்ச்சுகிறார்கள். அசைபோடும் வாய்கள் அவற்றுக்கு நல்ல விலை தருகின்றன.

## 8. நெடும்பயணம்

பொதிகையெழில் கொஞ்சும் தென்காசியில் புகழ்மிக்க பாண்டிய ராசா ஆண்டுவந்தார். பக்தியில் பழுத்த சிவனர். ஆட்சியைவிடக் கோயில்தோறும் ஈசன் தரும் காட்சியே பேறாகக் கருதும் பெருமான்.

வடகாசியில் விசுவநாதராக எழுந்தருளியிருக்கும் சடைமுடியான் ஒரு நாள் ராசாவின் கனாவில் தோன்றிக் கட்டளையிட்டார்.

''தென்பாண்டியனே வடகாசிக் கோயில் அழியப்போகிறது. நின் தலை நகராம் தென்காசியில் புதிய கோயிலெழுப்பி எம்மைக் குடியமர்த்தி வழி படுவாயாக.''

ஆதிசிவனுக்காகத் தென்காசியில் அர்த்த மண்டபமும் மகா மண்டபமும் எழுந்தன. அங்கே எழுந்தருள வடகாசியில் சிவலிங்கம் உருவானது. கொண்டுவந்து குடியமர்த்த நாளும் கோளும் குறித்தாயிற்று.

ராசா பரிவாரங்களுடன் வடகாசிக்குப் புறப்பட்டார். பட்டத்து ராணியும் உடன் சென்றாள். பரமனடி தொழுதுவர அவளுக்கும் ஆவல். மலரக் காத்திருக்கும் மொட்டு. மங்கைப் பருவம்.

நீண்ட பயணம். அகண்ட கங்கையின் கரையில் அமர்ந்திருக்கும் காசியை அடைந்தார்கள். கங்கையாடி சில நாள் தங்கியிருந்து ஓய்வெடுத்தார்கள். சிவ லிங்கம் தயாரானதும் விசுவநாதரை வணங்கி விடைபெற்றார்கள்.

சிற்பி வடித்த சிவலிங்கம் புனித நீராடி வேதங்கள் முழங்கப் படைகள் புடை சூழ தென்திசை நோக்கிப் பயணமாகியது. பல நாள் நடந்து வடபுலம் கடந்து தென்புலம் அடைந்து ஞாலம் போற்றும் ஆலவாயழகனின் காலடி தொழுதார் கள். வேதியரின் வாழ்த்தொலி நாதமாகப் பிரவகித்து நாடி நரம்பெல்லாம் பரவிப் பரவசமூட்டியது.

''ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி.''

தென்திசைப் பயணத்தில் வடமலாபுரத்தருகே அர்ச்சுனா நதி குறுக்கிட்டது. நீராடப் பயன் தரும் புண்ணிய நதி. வனவாசம் செய்த பாண்டவர்கள் சில காலம் சதுரகிரியில் தங்கியிருந்தபோது பூசைக்குப் புனலின்றித் தவித்தார்கள். வில்லேந்திய விசயன் கங்கையை வணங்கி மண்ணில் அம்பைப் பாய்ச்ச பூமி பிளந்து புனித நீர் கொப்புளித்து ஆறாகப் பெருக்கெடுத்தது. அதுதான் அர்ச்சுனா நதி.

நடந்த களைப்புத் தீர நதியில் குளித்தார்கள். அருகில் நிற்கும் திருத்தங்கல் குன்றில் உறையும் கருநெல்லிநாதரைக் கைதொழச் சென்றார்கள். குன்றினடியில் தென்புறம் தீர்த்தக் குளம். அதுக்கு மேலே மண்புலத்தில் அடர்ந்த கருநெல்லிச் சோலை. சிற்றிலைகளால் நெய்த பட்டுக் கம்பளம்போல் நிழல் விரித்திருந்தது. குன்றத்துப் படியேறினால் கிழக்கு நோக்கி இரு வாயில்கள். பிரதான வாயிலில் மீனாட்சி குடியிருப்பு. இன்னொரு வாயில் ஈசனுக்குரியது. அவர்தான் கரு

நெல்லிநாதர். இணையரை சொக்கன் சொக்கியென்றும் சொல்வார்கள். பாண்டிய ராசா அவர்களைப் பரவசத்தில் தொழுதார்.

திருத்தங்கல் கடந்து வரும் வழியில் மரங்கள் நிறைந்த வில்வ வனம். எங்கும் நீக்கமற நிழல் படர்ந்திருந்தது. அனைவரும் நிழலை நாடினார்கள். பரிவாரங் களின் எண்ணம் ராசாவுக்குப் புரிந்தது. அங்கே ஒரு நாள் தங்க ஆவன செய்தார்.

மறுநாள் பயணத்துக்கு ஆயத்தமாகும்போது மந்திரி சேதி கொணர்ந்தார்.

''மன்னா பயணம் தடைப்படும் போலிருக்கிறதே.''

''என்ன காரணம்.''

''அரசியார்...''

''அரசியாருக்கென்ன. உடல் நலமில்லையா.''

''பூப்பெய்திவிட்டார்கள்.''

ராசா முகம் மலர்ந்தார். அகமகிழ்வு அவ்வளவாக இல்லை. இனிக்கும் சேதி தான். என்றாலும் இடைவழியிலா இப்படியாகணும். சிரித்துக்கொண்டார்.

''நல்ல காரணம்.''

''இன்னொரு காரணமும் உண்டு மன்னா...''

''அதென்ன.''

''சிவலிங்கத்தைச் சுமந்து வந்த காராம்பசு அவ்விடத்தை விட்டு அகல மறுக் கிறது.''

''இதென்ன சோதனை. எல்லாம் சீராகும்வரை இங்கேயே தங்க வேண் டியதுதான்.''

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன் மன்னா.''

தென்காசியில் சிவலிங்கத்தை எழுந்தருளச் செய்யும் நாளும் வந்தாயிற்று. ராசா தவித்தார். மந்திரியுடன் ஆலோசித்தார்.

''என்ன செய்வது மந்திரியாரே.''

''ஒரே குழப்பமாக இருக்கிறது மன்னா.''

ராசா ஒருவாறு மனசைத் தேற்றிக்கொண்டார்.

''இதுதான் சிவனின் சித்தம் போலும். இனிமேலும் தாமதிக்கலாகாது. குறித்த காலத்தில் லிங்கத்தை இங்கேயே நிலைநிறுத்திவிடுவோம். உடனே ஏற்பாடு செய்க.''

''தங்கள் சித்தம் அரசே.''

பரிவாரங்கள் விரைவாகச் செயலில் இறங்கினார்கள். வனத்தின் மையத்தில் காடுகளை அழித்து முட்புதர்களைச் செதுக்கித் தூய வெளியாக்கினார்கள். நடுவில் சிறிய கோயில் உருவானது. சுப வேளையில் சிவலிங்கம் முறைப்படி குடியேறி யது. வைகாசி மாசம் ரோகிணி நட்சத்திரம். ராசா கண்கள் பனிக்க விளம்பினார்.

''இன்றிலிருந்து இதன் பேர் காசிலிங்கம்.''

காட்டுக்குள் காசிலிங்கம் தோன்றிய சேதி ஊரெங்கும் பரவியது. வில்வ வனத்தை வண்டாக மொய்க்க ஆரம்பித்தார்கள். வருகிற திசையெல்லாம் வழி யமைத்து வந்து வணங்கினார்கள். அடர்வனம் பல வழி திறந்து சுடரொளி வீசியது.

வழிப்போக்கர்களுக்கும் வணிகர்களுக்கும் கோயில் தங்குமிடமானது. கோயிலைச் சுற்றி எப்போதும் வண்டிகள் நின்றன. அங்காடிகள் முளைத்தன.

மக்கள் படிப்படியாக அருகில் குடியேறினார்கள். வனக் காடுகள் மேலும் அழிந்து கோயில் வெளி விரிந்தது.

பின்னாளில் ராசா இன்னொரு லிங்கம் கொணர்ந்து தென்காசியில் வைத்து விசுவநாதராக வணங்கினார். அவருக்கு ஆட்சியில் நாட்டமில்லை. முற்றும் துறந்த முனிவரானார். தவ வலிமையால் வான் மார்க்கமாகப் பறந்து செல்லும் ஆற்றல் கிட்டியது. அவர் நாள்தோறும் வடகாசி சென்று தென்காசி திரும்புவது வழக்கம். வரும் வழியில் வில்வ வனத்தில் இறங்கிக் காசிலிங்கத்தை வழிபடத் தவறுவதில்லை.

காசிலிங்கத்தின் மகிமையைச் சனங்கள் பேசித் தீரவில்லை. வனம் தேய்ந்து ஊரானது. பல தரப்பினரும் குடியிருக்கும் ஊர். வடக்கே வடகாசி. தெற்கே தென்காசி. இடையில் சிவகாசி. ஊரின் பேரும் அதுதான்.

பின்னர் ஆண்ட ராசாக்கள் சிவகாசியைச் சீரமைத்தார்கள். வடுக ராசாக்கள் மனமுவந்து உதவினார்கள். கோயிலைச் சுற்றிப் பிராகாரமும் முன்மண்டபங்களும் இணைந்தன. கோயிலை மையமாகக் கொண்டு நாலு ரதவீதிகள் உண்டாயின. திருவிழாக்களைக் கொண்டாடினார்கள். வீதிகளில் தேரோடியது. விசுவநாதரின் திருவுருவச் சிலை இல்லாதது ஒரு குறையாகவே உறுத்தியது.

திருச்சியருகே உறையூரில் சோழ ராசா இருந்தார். அவ்வூரில் ஒரு முனிவருக்குப் பெரிய பூந்தோட்டம் உண்டு. அதில் பூப்பறித்துத் திருச்சி மலையுறையும் தாயு மானவப் பெருமானுக்கும் உறையூர் விசுவநாதருக்கும் சாத்தி மகிழ்ந்தார்.

ராசாவோ அத்தோட்டத்தில் மலர் பறிக்கச் செய்து தன் காமக்கிழத்திக்குச் சூட்டிக் களித்தார். அது கண்டு முனிவர் முகம் வாடினார். எவ்வளவோ எடுத்துக் கூறியும் ராசா செவிமடுக்கவில்லை. விசுவநாதரிடம் முறையிட்டார். நாதர் வெகுண்டார். முன்கூட்டியே சனங்களை வெளியேறச் செய்து மண்மாரி பொழிய வைத்தார். எங்கும் மண் மூடி ஊரே அழிந்தது.

ஒரு சமயம் வடநாடு சென்றிருந்த மலையாள வணிகர் வரும் வழியில் உறையூர் மண் மேட்டில் தங்கினார்கள். அங்கே இரு திருவுருவங்களைக் கண்டெடுத்தார்கள். விசுவநாதரும் விசாலாட்சியும். சிலைகளைப் பொதிமாடுகளில் ஏற்றிவந்தார்கள்.

சிவகாசிக்கு வடபுறம் வாழைக் கிணற்றோரம் வரும்போது பொதிமாடுகள் சுமை தாங்கமால் திணறின. அவர்களுக்கு அச்சம்.

''மாடுக ரெம்பச் சங்கடப்படுதே. சொமந்துக்கிறாது போலருக்கே.''

''அது காலு நடுங்கிறதப் பாத்தா அப்படித்தான் தோணுது.''

''இப்ப என்ன செய்றது.''

''இது நல்ல சகுனமில்லையே. மாடும் மனுசரும் பத்தரமா வீடு போயிச் சேரணுமே.''

''இந்தக் கெணத்துக்குள்ள போட்ருவொம்.''

அப்படியே போட்டுவிட்டு விரைந்தார்கள்.

அடுத்த நாள் வெற்றிலைக் கொடிக்காலுக்குக் கிணற்றில் நீரிறைத்துக் கொண்டிருந்த இலைவணிகன் கீழே எட்டிப்பார்த்துவிட்டுக் கூச்சலிட்டான்.

''ஓடி வாங்களேன். கெணத்துக்குள்ள ரெண்டு செல கெடக்குது.''

நீர் பாய்ச்சுவோரும் இறைப்போரும் கூடிவந்து பார்த்தார்கள். கிணற்றுக்குள் விசுவநாதரும் விசாலாட்சியும் ஒளி சிந்தியபடி சயனித்திருந்தார்கள்.

''சாமியக் காலுக்கடியில போட்டுக்கிட்டு எப்படித் தண்ணி எறைக்கிறது.''

''அது பெரிய குத்தம்.''

''என்ன செய்யலாம்.''

''வெளிய எடுத்துக் கோயிலுக்குக் கொண்டுபோயிருவொம்.''

சிலைகளைத் தெலாவில் கட்டி வெளியிலெடுத்துச் சும்மாட்டுச் சுமையாகக் காசிலிங்கம் கோயிலுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

ஒரு நல்ல நாளில் விசுவநாதரும் விசாலாட்சியும் கோயிலுக்குள் கோலாகலமாகக் குடியேறினார்கள்.

## 9. பாண்டியக் காலடிகள்

மதுரை வடுக ராசாவின் வசமாகிறது. வஞ்சிக்கப்பட்ட பாண்டிய ராசா மதுரையைப் பிரிந்து பரிவாரங்களுடன் தெற்குச் சீமை நோக்கிப் புறப்படுகிறார்.

ஒரு வீரன். பாண்டிய ராசாவுக்கு நெருக்கமானவன். ஒரு விதத்தில் உறவுங்கூட. பேர் செண்பகப் பாண்டியன். தெளிவற்ற பயணத்தைத் தொடர அவனுக்கு விருப்பமில்லை. வழியில் புகலிடம் தேடி ஒரு செட்டியார் வீட்டில் தஞ்சமடைகிறான். துரத்தி வரும் வடுகப் படைகள் வீட்டை முற்றுகையிட்டுத் தேடுகின்றன.

''ஒளிந்திருப்பவனை வெளியிலனுப்பும்.''

செட்டியார் சமாளிக்கிறார்.

''இங்கு யாருமில்லையே அய்யா.''

''எவனும் வந்தால் தகவலனுப்பும்.''

படைகள் பறந்தோடுகின்றன. செட்டியார் வீரனிடம் செல்கிறார்.

''நீ இங்கிருந்தால் ஆபத்து.''

''எங்கு செல்வேன்.''

''ஒன்று செய்யலாம். என் தோட்டத்தில் வாழைக்குக் காவலனாக இரு.''

''நன்றி அய்யா.''

''ஒரு குலை போனாலும் உன் தலை போய்விடும்.''

''உடன்படுகிறேன் அய்யா.''

தோட்டத்தில் காவலிருக்கும் வீரன் சோர்வு மிகுதியால் தூங்கிவிடுகிறான். தேடும் வடுகப் படைகள் வாழைத் தோட்டத்து மூலையில் அயர்ந்திருக்கும் வீரனைக் கண்டுகொள்கிறார்கள்.

''இவன் காவலாளி மாதிரி தெரியவில்லையே.''

''இவனது உடைவாளில் பாண்டிய நாட்டு முத்திரை உள்ளது.''

''அப்படியென்றால் பாண்டிய வீரனேதான்.''

''சிறைபிடிப்போமா இல்லை தலையைக் கொய்துவிடலாமா.''

''துயில்பவனைத் துன்புறுத்துவது தவறு.''

''துயிலெழும்வரை காத்திருக்கச் சொல்கிறாயா.''

''துயிலும்போதே ஒரு தண்டனை கொடுப்போம்.''

''என்ன தண்டனை.''

''வாழைக் குலையெல்லாம் வெட்டிச் சாய்த்துவிடுவோம். செட்டியாரே இவனைத் தண்டிக்கட்டும்.''

''நம்மிடம் பொய்யுரைத்த செட்டியாருக்கும் அது தண்டனையாக அமையும்.''

வடுகப் படைகள் வாழைக் குலைகளை வெட்டிப்போட்டுவிட்டுச் செட்டியாரிடம் சென்று சேதி சொல்கின்றன.

''வாழைத் தோட்டம் உம்முடையதுதானே.''

''ஆமாம்.''

''காவலிருப்பவன் கண்ணயர்ந்துவிட்டான். கள்வர் குலைகளை வெட்டியெறிந்துவிட்டனர்.''

''அய்யகோ என் செய்வேன்.''

''காவலனுக்குத் தக்க தண்டனை கொடும். என்ன தண்டனை கொடுப்பீர்.''

''ஒரு குலை போனாலும் அவன் தலையைக் கொய்வதாக ஒப்பந்தம்.''

''அவ்வாறே செய்யும்.''

துயிலெழும் வீரனுக்குத் துன்ப அதிர்ச்சி. துடித்துப்போகிறான். மற்ற பாண்டிய வீரர்களைப்போல் ராசாவைப் பின்தொடர்ந்திருக்கலாம். இடையில் தங்கியது தவறு. செட்டியார் கையால் மாள்வதைவிடத் தப்பியோடிவிடலாம். தென்திசையில் விரைகிறான்.

வழியில் காளி கோயில் எதிர்ப்படுகிறது. கவலையைச் சொல்லி முறையிடுகிறான்.

''தாயே வாழ வழி தெரியவில்லை. திக்கற்றுத் தவிப்பதைவிட உயிர் விடுவதே மேல்.''

அருகிலுள்ள மரக்கிளையில் தலைத் துண்டைக் கட்டித் தூக்குப்போட்டுக் கொள்ள முயல்கிறான். ஒரு அசரீரி கேட்கிறது.

''அவசரம் கொள்ளாதே மகனே. செட்டியார் வீடு செல். எல்லாம் நல்லபடி நடக்கும்.''

அவன் செட்டியாரிடம் செல்கிறான். அவர் ஏதுமறியாதவர்போல் கேட்கிறார்.

''வாழைகள் எப்படியிருக்கின்றன காவலனே.''

அவன் தயங்கவில்லை.

''நன்றாக உள்ளன.''

''சென்று பார்க்கலாமா.''

அவன் காளியை நினைக்கிறான். தாயே நீதான் காப்பாற்றணும்.

''வாருங்கள்.''

இருவரும் தோட்டத்துக்குச் செல்கிறார்கள். வாழைக் குலைகளை வெட்டிய சுவடே தெரியவில்லை. வாழைகள் அனைத்தும் மீண்டும் குலைகளுடன் நிற்கின்றன. செட்டியார் மகிழ்கிறார்.

''உன் காவலில் பழுதில்லை.''

செட்டியார் கொடுக்கப்போகும் தண்டனையைக் காண வரும் வடுகப் படைகள் திகைப்புத்து நிற்கின்றன.

''இதென்ன விந்தை.''

''ஒன்றும் புரியவில்லையே.''

''எது மெய் எது பொய்.''

''இவனிடம் ஏதோ சக்தி இருக்கிறது.''

''தெய்வ சக்தி.''

''வாழைக்கு இரு குலை கண்ட பாண்டியனை அழிக்க முடியாது. வாருங் கள் ஓடிவிடுவோம்.''

படைகள் அலறிக்கொண்டு ஓடுகின்றன. செட்டியாருக்கு உண்மை தெரிகிறது. பாண்டியனுக்கு விருந்தளித்துப் பரிசுகள் பல கொடுத்து வழியனுப்பிவைக்கிறார்.

அவன் தெற்குச் சீமையை அடைகிறான். காளி துணைக்கு வருகிறாள். எங்கும் மணல் மூடிய தேரிக் காடு. எதிரில் ஒற்றைப் பிராமணர் வருகிறார். அவன் காளியை நோக்குகிறான்.

''சகுனத் தடையாகிவிட்டதே தாயே.''

''தடை நீங்கச் செய்வேன்.''

பிராமணர் பனைமரமாக மாறுகிறார். அவன் பிரமிப்பில் கேட்கிறான்.

''தேரிக் காடுகளில் எதைத் தேடுவேன் தாயே.''

''தாகமாக இருக்கிறது. மரத்திலேறி பனம்பால் கறந்துவா மகனே. முதலில் தாகம் தணிப்போம்.''

அவன் அவசரமாகப் பனை மீதேறிப் பாளையை வாளால் சீவி ஓலையைப் பட்டையாக்கி அதில் பாலைப் பிடித்துக்கொண்டு வருகிறான். காளியைக் காண வில்லை. தொலைவில் அவள் குரல் மட்டும் கேட்கிறது.

''மகனே இனி பனைதான் உனக்குத் துணை.''

அவனுக்குத் தாகமெடுக்கிறது. பனம்பாலைக் குடிக்கிறான். துவர்ப்பும் இனிப்பும் கலந்த புதிய சுவை. தெம்பு பிறக்கிறது. பனை நிழலில் தலைசாய்கிறான்.

எழுந்து பார்த்தால் மணல்வெளியெங்கும் பனைகள் முளைத்திருக்கின்றன. ஓங்கி வளர்ந்தவை. வளரத் துடிக்கும் கன்றுகள். குலைகுலையாகக் காய்கள் தொங்குகின்றன. அவன் தென்திசை நாடி வரும் மற்ற வீரர்களைக் களிப்பில் கூவியழைக்கிறான்.

''வாருங்கள் வாருங்கள். வாழ இடமுண்டு.''

வட திசையிலிருந்து வரிசையாகக் கால்கள் ஓடிவருகின்றன. பாண்டியக் காலடிகள் பதியாத இடமில்லை. திக்கற்றுத் தவிக்கும் பனைகளும் படை வீரர்களும் துணையாகிறார்கள். ஓலை வீடுகள் முளைக்கின்றன. வாசலை மூடப் படல் கதவுகள். பனைத் தூண்கள். போர் வாள் வளைந்து சுருங்கி பாளையரிவா ளாகிறது.

கருக்கு மட்டைகளைக் களைந்து நெடும்பனையில் நெஞ்சமுழுந்தக் காலும் கையும் பற்றி ஏறி உச்சியில் புதையலெடுக்கிறார்கள். வழுக்கலைத் தடுக்கவும் இடையில் இளைப்பாறவும் தடை நார் தேவைப்படுகிறது. நாரைவாய்க்

கிழங்குமுதல் கூரையாகும் ஓலைவரை எல்லாமும் கொடுக்கும் கற்பக விருட்ச மாகப் பனையை வணங்குகிறார்கள்.

அந்த நிம்மதி பல நாள் நீடிக்கவில்லை. வடுக இன்னல்கள் மணலை வாரி யிறைக்கின்றன. தப்பித்துத் தட்டுத்தடுமாறிப் பனைமக்கள் வடக்கு நோக்கிக் கூட்டம்கூட்டமாக நகர்கிறார்கள். அங்கங்கே ஊர்களில் தங்கிச் சமைத்து உண்டு பசியாறி நடையைத் தொடர்கிறார்கள். அவரவருக்கு உகந்த ஊர்களில் தங்கி விடுகிறார்கள். புதிய ஊர்களை உருவாக்குகிறார்கள். பனைகள் குறைவான இடங்களில் நிலங்களைப் பண்படுத்திப் பயிர்செய்கிறார்கள். கடைகளில் அமர்ந்து தராசு பிடிக்கிறார்கள். புதுப்புதுத் தொழில்களைத் தொடங்குகிறார்கள். காலம் அவர்களை அரவணைத்து வளர்க்கிறது.

சில கூட்டங்களைச் செண்பகப் பாண்டியன் சிவகாசிக்கு அழைத்து வரு கிறான். கொஞ்சமும் துவளாத நடை. கூட்டங்களை ஊருக்குள் விதைத்துவிட்டு எதையோ தேடி எங்கோ நடக்கிறான். அந்தி சிந்தும் மஞ்சள் வெயிலில் அவன் உருவம் பொன்னாக உருகி மறைகிறது.

## 10. சிறுக்குளம் பெருகி...

சிவகாசிக்கு வடக்கே சிறுக்குளம் உண்டாகியது. குளப்பெருக்கை மிஞ்சும் தண்ணீர் ஓடையாக உள்வளைந்து ஊருக்குள் ஓடி கிழக்குமுகமாக வடிந்தது. அங்கங்கே திரளும் மழைநீர் வாய்க்காலிட்டு அதில் கிளைகளாகக் கலந்தது.

தெற்கு ரத வீதியை அடுத்த பகுதிகளில் பெருமளவு நாடார்கள் குடியேறி னார்கள். கோயிலுக்கு வடகிழக்கிலும் அவர்கள் குடியிருப்புத்தான். வணிகத்துக்கு வாய்ப்பான இடங்கள். அவர்கள் பல திசைகளிலிருந்தும் கூட்டங்களாக வந்து சேர்ந்தவர்கள். பூர்வீகக் குடியின் பேரே ஒவ்வொரு கூட்டத்துக்கும் துலங்கியது. இப்படி ஏராளமான கூட்டங்கள்.

சிறுக்குளம் ஓடைக்கு வட பகுதியில் துலுக்கர்கள் பரவினார்கள். துலுக்கக் குடி தெருக்களாகக் கிளைத்தது. அவர்களுக்கென்று பள்ளிவாசல் முளைத்தது. அங்கே பகல் தொழுகை நடந்தது. அல்லாவை அழைக்கும் உருக்கமான பாட்டுக்கு அர்த்தம் புரியவில்லை.

துலுக்கக் குடியைத் தொடுத்து மறவர் குடியிருப்பு. சிறு கொத்தாகச் சில வீடுகள்.

கைக்கோளரும் ஈழவரும் வந்து கலந்தார்கள். மேலும் பல இலை வணிகரும் பூப்பண்டாரங்களும் சேர்ந்துகொண்டார்கள். வெள்ளாளருக்கும் பிராமணருக் கும் விசுவநாதர் கோயிலோரம் இடம் கிடைத்தது. பல சாதிப் பறவைகள் கூடும் பசுமரமாக சிவகாசி படர்ந்து வளர்ந்தது.

துலுக்கக் குடியில் தறியோட்டம் கேட்டவண்ணமிருந்தது. அவர்கள் விவ சாயமும் செய்தார்கள். பெரும்பாலும் வெற்றிலையும் புகையிலையும் பயிரிட் டார்கள். ஈழவரும் கைக்கோளரும் துணி நெய்தார்கள். சாராயம் காய்ச்சுவது ஈழவருக்கு இன்னொரு தொழில்.

அங்கங்கே வேறு தெய்வங்களும் அவதரித்தன. கீழ ரத வீதியின் மேல்சிறகில் அழகிய அம்மன். அதே வரிசையில் கருப்பசாமி. அதுக்கும் வடக்கே வெங்கடா சலப் பெருமாள். கருப்பசாமி கோயிலுக்கு முன்புறம் தேர் நின்றது. அந்த முக்கி லிருந்து மேற்கு நோக்கித் திரும்பும் சன்னதி உயர்ந்த மதிலும் கிழக்குத் தலை வாசலுமாகக் கம்பீரக் காட்சியளிக்கும் விசுவநாதர் கோயிலுக்கு அழைத்துச் சென்றது. மதிலைச் சுற்றி முப்புறமும் அமைதியான மாட வீதிகள்.

சிறுக்குளத்துக்குத் தென்புறம் காட்டுக் காளியும் ஊருக்கு மாரிமூலையில் மாரியம்மனும் வாசம். முக்கியமாக நாடார்கள் வணங்கும் தெய்வங்கள். மற்ற சாதிக்காரர்களும் வழிபட்டார்கள். முருகனையும் ஊர் வரவேற்றது.

செல்வந்தர்கள் சத்திரங்கள் கட்டித் தான தருமம் செய்தார்கள். தெப்பங்கள் வெட்டினார்கள். ஒரு சத்திரத்தில் பதினஞ்சு பிராமணர்களுக்கு அன்றாடம் அன்ன தானம் நடந்தது. வணிகர்களும் வழிப்போக்கர்களும் தங்கிக்கொள்ளச் சத்திரங் கள் வசதியாக இருந்தன.

சிறுக்குளம் ஓடைக்கு வடக்கே உள்ள பகுதி மாதாங்கோயில்பட்டி என்று அழைக்கப்பட்டது. அந்தப் புறமும் இந்தப் புறமும் வண்டிப் பேட்டைகளும் சந்தைப் பேட்டைகளும் வந்தன. விசுவநாதர் சன்னதியிலும் மாட வீதிகளிலும் கடைகள் நிறைந்தன. அந்தந்தப் பகுதியில் விற்கப்படும் பண்டங்களுக்கேற்ப தேங்காய்க் கடை முக்கு நெல்லுக் கடை முக்கு அரிசிக்குளம் தெரு என்று பேர் விளங்கியது. விசுவநாதர் கோயிலைச் சூழந்திருந்த அமைதி சிறிதுசிறிதாகக் குலைய ஆரம்பித்தது. பலவாறு கலக்கும் கழிவுகளால் சிறுக்குளம் ஓடை கருப்பாக மாறிக் கொண்டுவந்தது. நாறவும் செய்தது.

தோளில் தவழும் பூணூலாகச் சாத்தூர் சாலை சிவகாசியைத் தழுவி ஆண்டாள் பதியை அடைந்தது. நிறைய வணிகர்கள் கூடினார்கள். பண்டங்கள் வந்து குமிந்தன. வெளியேறின.

தெருக்களில் வணிகக் கூவல் ஓங்கி ஒலித்தது. செவ்வாய்க் கிழமை வாரச் சந்தையில் மழைக்காலப் பூக்களாகக் கடைகள் விரியும். விற்காத பண்டமில்லை. ஒரு புறம் துலுக்கர்கள் நெய்த மோட்டாத் துணிகள். துலுக்கப் பெண்கள் குழறிக் குழறி விற்கும் வகைவகையான வாசனைத் திரவியங்கள் வசியம் செய்து அருகில் அழைக்கும்.

இன்னொரு புறம் ஈழவரும் கைக்கோளரும் துணி விற்பார்கள். அடுத்தடுத்து மண்பானை சட்டி மூங்கில் தட்டி நவதானியம் கருப்பட்டி கருவாடு பாய் சுளகு பெட்டி கொட்டான் காய்கறி நெய் வெற்றிலைக் கட்டு என்று கணக்கில்லாமல் பரந்திருக்கும். தின்பண்டங்களுக்குக் குறைவிருக்காது. புல்லுக் கட்டும் பருத்தி மார்க் கட்டுங்கூட கைமாறக் காத்திருக்கும்.

மொத்தமாகவும் சில்லறையாகவும் தரகு முறையிலும் வணிகம் முழுவதும் நாடார்கள் வசமிருந்தது. விலைகளை அவர்களே நிர்ணயித்தார்கள். அவர்க ளிடம் பணம் தாராளமாகப் புழங்கியது. சுத்துப்பட்டி வெள்ளாமைகள் பண்டங் கள் எவையும் அவர்களைத் தாண்டிப் போவதில்லை. பலர் முதலாளிகளாக இருந்தார்கள். மேல்சாதிக்காரர்கள் அவர்களிடம் கூலிக்கு வேலை செய்தார்கள்.

முதலாளிமார் வீட்டுப் பெண்கள் வீட்டை விட்டு வெளியேறத் தேவையில்லாத அளவுக்கு அந்தஸ்து உயர்ந்துவிட்டது.

நாய்க்கர் வெள்ளாளர் மறவர் என்று சில மேல்சாதிக்காரர்களும் வணிகத்தில் ஈடுபட்டிருந்தார்கள். துலுக்கர்களும் உண்டு. அவர்களால் நாடார்களுக்கு ஈடுகொடுத்து வளர முடியவில்லை. போட்டி பொறாமையாக மாறியிருந்தது. சில சமயம் அது பகையாகவும் உருவெடுத்தது.

மாட்டு வண்டிகளுடன் குதிரை வண்டிகளும் ஓடின. கூலித் தொழிலாளிகள் எந்த நேரமும் குறுக்கும் நெடுக்குமாக எதையாவது சுமந்துகொண்டு திரிந்தார்கள். அவர்கள் மடியில் கணிசமாகக் கூலிப் பணம் புடைத்திருந்தது. எப்படியாவது பிழைத்துக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையில் எங்கிருந்தெல்லாமோ சனங்கள் வந்து தங்கிக் குடும்பம் நடத்தினார்கள்.

முக்கால்வாசிக்கு மேல் நாடார்கள் நிறைந்த சிவகாசி விரைவிலேயே பணக்கார நகரமாக மாறியது.

## படலம் 14

### 1. மேலைக் கூவல்

சிவன் சன்னதித் தெரு சிறகை விரித்துவிட்டது. கோயில் நடை திறந்து சன்னதித் தெருவில் கடை திறந்து வணிகம் களைகட்டியது. கொத்துகொத்தாகச் சனங்கள் குடவரை வாசலைக் கடந்து மூலவரைத் தரிசிக்க விரைந்தார்கள்.

சன்னதி வீதியில் நின்றுகொண்டு வெள்ளுடை அணிந்த வேத போதகர் தெள்ளிய தமிழில் சேதி சொன்னார்.

''உயிருள்ள ஒரு தேவனுண்டு. கல்லை வணங்காதீர். என் சொல்லைக் கேளீர்.''

அவர் ரெய்னீசய்யர். தென் நெல்லையிலிருந்து வட நெல்லைப் பகுதிக்கு ஊழியம் செய்ய வந்த போதகர். கால்வரை நீண்ட மேலங்கியைக் கண்டு சனங்கள் நெருங்கவே அஞ்சினார்கள். பகலில் வந்த பேயெனப் பயந்து மிரண்டார்கள். அவர் அன்புடன் அழைத்தார்.

''கர்த்தரண்டை வாருங்கள். கவலைகளைக் கூறுங்கள்.''

அச்சம் தணிந்தது. அருகில் சென்று கவனித்தார்கள்.

''நமது பாவங்களுக்காக வருந்தி கர்த்தர்மேல் விசுவாசம் வைத்துப் பாவங்களை அறிக்கைசெய்து அவரை உள்ளத்தில் ஏற்றிக்கொண்டு அவர் அருளும் பாவ மன்னிப்பையும் ரட்சிப்பையும் நித்திய ஜீவனையும் பெற்றுக்கொள்வோம்.''

அவர் சொன்னது புரியவில்லை. அலுத்துக்கொண்டு போனார்கள்.

''என்னமோ கல்லுங்காரு புல்லுங்காரு.''

''கர்த்தருன்னு சொல்றாரு. ஆருக்குத் தெரியிது.''

''சின்னப் புள்ள மாதிரி கொஞ்சிக்கொஞ்சிப் பேசுறது நல்லாத்தான் இருக்கு.''

''அவரு என்ன சொல்ல வாறாரு தெரியுமா. நம்ம கல்லத் தெய்வமாக் கும்புடுறமாம். அவுக கடவுளுக்கு உசிரு இருக்குதாம்.''

''எங்கருக்குதாம்.''

''எங்ககிட்ட வாங்க காட்றன்னு சொல்றாரு.''

''ஒகோ அப்படி வாறாரா. வேதத்துக்கு மாறி வாங்கன்னு கூப்புடுறாராக்கும்.''.

''அதேதான்.''

''அதுக்கு நம்ம தெய்வத்த ஏன் கொறச்சுப் பேசணும். கல்லுன்னு சொல்ற மனுசன் அவுக கடவுளக் கையோட கூட்டீட்டு வந்துருக்கலாமில்ல.''

''ஒரே தேவனுண்டுன்னு சொல்றாரே. அவுகளுக்கு வேற சாமிகளே கெடையாதா.''

''அதானப்பா. காலம் பூரா ஒரே சாமிய எப்படிக் கும்புடுறதாம்.''

''வேற சாமிகளும் இருக்கும். ஒரு பேச்சுக்குச் சொல்லுவாராக்கும்.''

''அப்ப அதுகளுக்கெல்லாம் உசிரில்லையா.''

''ஆரு கண்டது.''

கடை விரித்தும் கொள்வாரில்லாமல் ரெய்னீசய்யர் நடையைக் கட்டிவிட்டார்.

அறியாச் சனங்களுக்கு ஏசுவை அறிவிக்க வேண்டிய ஆத்தும பாரம் அவரை அழுத்தியது. பல இடங்களுக்குப் போதகர்களையும் உபதேசியார்களையும் அனுப்பினார். அவர்களுடன் சென்று ஆண்டவரின் மகிமையைப் பரப்பினார். பல வேத சபைகளை ஏற்படுத்தினார். சில இடங்களில் சிறுசிறு கோயில்களைக் கட்டினார். ராஜபாளையம் ஸ்ரீவில்லிப்புத்தூர் சிவகாசி ஆகிய ஊர்களில் பள்ளிக் கூடங்களை ஆரம்பித்தார். சிவகாசிப் பள்ளிக்கூடம் விரைவிலேயே மூடப்பட்டது.

தென் நெல்லைப் பகுதியில் வேதம் செழித்திருந்தது. வட நெல்லை வறண்டு கிடந்தது. சொற்பமாகவே வேதக்காரர்கள் இருந்தார்கள். மேய்ப்பனில்லாத ஆடுகளாக ஆத்துமாவிலும் சரீரத்திலும் தொய்ந்துபோனவர்களாகத் துன்பங்களில் உழன்றுகொண்டிருந்தார்கள். பூமியையும் ஆவியையும் வளப்படுத்தியாகணும். மக்கள் விடுதலை பெற்றாகணும். அதை நிறைவேற்றப் போதகர்கள் உறுதிபூண்டார்கள். அந்த அரிய சேவைக்கு நெஞ்சுறுதியும் விசுவாசமும் கொண்ட ஊழியர்கள் தேவை. ஆமாம் வைரப் பனைகள்தான் தேவை. சோற்று மரங்களல்ல. வைரப் பனைகளைத் தேடிக்கொண்டிருந்தார்கள்.

இந்தச் சமயத்தில் கடலுக்கப்பால் எட்டாத் தொலைவிலிருக்கும் இங்கிலாந்திலிருந்து ஒரு தீர்க்கமான குரல் வந்தது.

''ஏசுவைப் பற்றி அறியாத மக்களுக்கு நான் அவரைச் சுமந்துகொண்டு வருகிறேன்.''

அவர்தான் செபவீரன் ராக்லாந்து. அன்னையின் வயிற்றிலிருக்கும்போதே தந்தையையும் வெளியே வந்த சில மாதங்களில் அன்னையையும் இழந்தவர். மாமன் அரவணைப்பில் வளர்ந்தவர். படிப்பாளி. ஏசுவின் ஊழியத்துக்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டவர்.

சென்னபட்டணத்துக்கு வந்த முதல் வேலையாக தமிழ் கற்றார். பின்னர் பாளையங்கோட்டை சென்றார். அப்பகுதியில் பல நிலங்கள் பண்படுத்தப்பட்டு ஏசுவின் வசனம் விதைக்கப்பட்டு நன்கு வளர்ந்திருந்தது. வேதக்காரர்களுக் கென்று சாயர்புரம் நாசரேத் எனத் தனிக் குடியிருப்புக்கள் இருந்தன. பெரிய அறிஞர்கள் இருந்தார்கள். இடையன்குடியில் கால்டுவெல். சாயர்புரத்தில் போப்.

ராக்லாந்தின் பயணம் வடக்கு நோக்கித் திரும்பியது. வழியில் ஆலங்குளம் சபையைச் சந்தித்தார். பதினாலு வருசத்துக்கு முன் இந்துக்காரர்களால் ஏற்பட்ட கலகத்தில் பெருத்த சேதமடைந்து மீண்டெழுந்த வைராக்கியச் சபை. சிறிய கோயில். விசுவாசிகளை ஆராதனைக்கு அழைக்க வெண்கல நாக்கு மணியில்லை. அடிப்பனையைக் குடைந்து மேல்வட்டத்தில் தோல் கட்டிய நகராதான் மணி. நகரா ஒலி கேட்டு சனங்கள் கூடிவந்து கோயிலுக்குள் மண்டியிட்டுச் செபிப்பதைப் பார்த்து நெகிழ்ந்துபோனார்.

அடுத்தடுத்துப் பல சபைகளைப் பார்வையிட்டார். அதில் ஒண்ணு கோட் டயம். அங்கே ஊழியம் செய்த இளம் போதகர் ஜான்சன் இறந்துவிட்டார். இறந்தபின் மனைவி குழந்தை பெற்றாள். விதவைத் தாயின் வேதனை கண்டு கலங்கினார் ராக்லாந்து. சொந்தத் தாயின் நினைவு நெஞ்சைச் சுட்டது. குழந்தைக்கு ஞானத்தகப்பனாகத் தன்னை அறிவித்துவிட்டு நடந்தார்.

இன்னொரு ஊர். வேத சபையில் தொண்ணூறு குடும்பங்கள்வரை விசுவாசம் கொண்டிருந்தன. இது உள்ளூர்ப் பெரியவரின் கண்களை உறுத்தியது. பெரிய கலகத்தை மூட்டிவிட்டார். உயிருக்குப் பயந்து நாற்பது குடும்பங்கள் சபையி லிருந்து விலகின. ஐம்பது வீட்டார் மிரட்டலுக்கு அஞ்சாமல் நிலைத்துநின் றார்கள். அவர்களது விசுவாசம் கண்டு ராக்லாந்து வியந்து மகிழ்ந்தார். அவர்கள் தங்கள் விருப்பத்தைச் சொன்னார்கள்.

''எங்களுக்கு நல்ல கோயிலு வேணும். அது போதும்.''

''பாதுகாப்பா மண்டியிட்டு ஆண்டவர ஆராதிக்கணும்.''

''கவலை வேண்டாம். புதுக்கோயில் கட்டுவதற்கான செலவில் பாதியை நான் ஏற்றுக்கொள்கிறேன்.''

''இந்த ஒதவிய ஆயுசுக்கும் மறக்க மாட்டொம் சாமி.''

பட்டணத்தில் பெரிய வேத சபைக்கு அவரது சேவை தேவையாக இருந்தது. தலைமைப் பதவி தந்து அழைத்துக்கொண்டது. அவரால் மறுக்க முடியவில்லை.

பதவியிலிருந்துகொண்டு தெற்குச் சீமையனைத்தையும் பார்வையிட்டார். சனங்களின் நிலை கண்டு மனசு சஞ்சலப்பட்டது. மற்ற பகுதிகளைவிட வறண்டு போயிருந்த வட நெல்லையே அவரை மிகவும் வாட்டியது.

வட நெல்லையில் பிராமணர் ஆதிக்கம் கோலோச்சியது. பிற சாதிக்காரர் களுக்கு அவர்கள் பரிசுத்தவான்கள் நிலப்பிரபுக்கள். பெரும்பகுதி நிலங்கள் அவர்கள் வசமிருந்தன. தீட்டுச் சாதியார் அவர்களுக்கு அடிமைகள். ஆயுசுக்கும் அவர்களது நிலங்களில் உழைக்கணும். ராக்லாந்து ஒரு அடிமையை அணுகிய போது நிலைமையைச் சொன்னார்.

''சாமி நாங்க பெராமணருக்கு அடிமைக. அவுகளக் கும்புடுறத வுட்டுட்டு ஒங்க சாமியக் கும்புட வந்தா அவுக எங்களுக்குக் குடுத்த கடனக் கேப்பாகளே.''

சாலையோரப் பகுதிகளில் பிராமணர்களும் மேல்சாதிக்காரர்களும் குடியிருந்தார்கள். தீட்டுச் சாதிக்காரர்கள் சாலைகளில் செருப்புப் போட்டுக் கொண்டோ குடை பிடித்துக்கொண்டோ தலைப்பாவுடனோ நடந்து போக முடியாது. ஊர்க் கிணற்றில் தண்ணீரெடுக்கக் கூடாது. தண்ணீருக்காகத் தொலைவுக்கு நடந்து அலைந்து திரிந்தார்கள்.

பிராமணர்களுக்கடுத்து சமீன்தார்கள். வெள்ளைக்காரச் சர்க்காருக்கு வரி வசூலித்துக் கப்பம் கட்டுகிறவர்கள். வசூலில் ஒரு பகுதி அவர்களுக்கு. ஆனால் இஷ்டம்போல் அதிக வரி வசூலித்து அபகரித்துக்கொண்டார்கள். தீட்டுச் சாதிக்காரர்களை அவர்களும் அடிமைகளாக நடத்தினார்கள். வரிப்பணம் கேட்டு அவர்கள் கொடுமைப்படுத்தும்போது தீட்டுச் சாதிக்காரர்கள் வேறு வழியில்லாமல் பிராமணர்களின் காலடியில் போய் விழுந்தார்கள். அவர்களிடம் கடன் வாங்கி வரி செலுத்தினார்கள். கடனுக்கீடாக அவர்களுக்கு அடிமையாக வேண்டிய கொடுமை.

மக்கள் பல தெய்வங்களை வணங்கினார்கள். சிவன் விஷ்ணு பிள்ளையார் முருகன் காளி மாரி பார்வதி... தங்களது கோயில்கள் ஆதி காலந்தொட்டே முளைத்தவை எனப் பெருமைப்பட்டார்கள். பிராமணர்கள் சிவனர்களாகவும் வைணவர்களாகவும் இருந்தார்கள். நெற்றித் திருநீறும் நாமமும் அவர்களை அடையாளம் காட்டின.

மற்ற சாதி மக்கள் பேயையும் முனியையும் பெண் தெய்வங்களையும் வழிபட்டார்கள். பெண் தெய்வங்கள் அவர்களுக்குக் காளியின் அவதாரங்கள். அவற்றைக் கும்பிடுவதில் தெளிவாக இருந்தார்கள்.

''எங்க சாமிகளக் கும்புடலன்னா ஊருல மழ பேயாது.''

''சாமிக அம்மையவும் கொள்ளநோயவும் அனுப்பிப் பழிதீத்துருமாக்கும்.''

''ஊரே அழிஞ்சுபோயிரும்.''

இந்தப் பயம் அவர்களைச் சிக்கெனப் பிடித்திருந்தது.

ஊருணி கம்மாக் கரைகளிலும் சாமி சிலைகளை நட்டி எண்ணெய்க் காப்பு சாத்தி பயபக்தியுடன் கும்பிட்டார்கள். உருவமற்ற சிலைகளும் உண்டு. மண் குதிரைகளை நிறுத்தியும் தெருவோரம் மண்பீடம் எழுப்பியும் வணங்கினார்கள்.

இதையெல்லாம் கண்கூடாகப் பார்த்த ராக்லாந்து நொந்துபோனார். அறியாமையிலும் பயத்திலும் அல்லல்படும் படிப்பறிவில்லாத அடித்தட்டு மக்களை எப்படியாவது மீட்டு நல்ல வழி காட்டணும். அதுக்கு ஒரு தீர்க்கமான திட்டம் வேணும். அப்போதுதான் தேவனின் நற்சேதியை எல்லாரிடமும் கொண்டு செல்ல முடியும். மக்களை நம்மிடத்துக்கு அழைத்து வசனத்தை வாசித்துக் காட்டுவதில் அர்த்தமில்லை. அவர்களிடம் சென்று ரெண்டறக் கலந்து அவர்களது மனசைத் தாக்கணும். அதுக்கு நிறைய ஊழியர்கள் வேணும்.

உறங்காமல் யோசித்தார். மனசுக்குள் நல்ல திட்டம் உருவானது. அது வடநெல்லைத் திட்டம். ஊர் சுற்றிப் போர் தொடுக்கும் விந்தையான திட்டம். அதை நிறைவேற்ற அர்ப்பணிப்பும் விசுவாசமும் கொண்ட இளம் போதகர்கள் தேவை. ஊர்ஊராக அலைந்து திரிய ஆயத்தமாக இருக்கணும். போதகர்களுக்கு உதவி

யாக உபதேசியார்கள் வேணும். அவர்களைத் தென் நெல்லையிலிருந்து வர வழைத்துக்கொள்ளலாம். முதல் ஊழியராக அவரே முன்வந்தார்.

இத்திட்டத்தை உடனே செயல்படுத்த முடியவில்லை. உடல்நிலை ஒத் துழைக்க மறுத்தது. இருமல் அதிகரித்து ரத்த வாந்தியெடுக்க ஆரம்பித்தார். நுரை யீரல் கெட்டுவிட்டது. ரத்தத்தைக் குறைக்கணும். மருத்துவர் அட்டையைக் கடிக்க விட்டு உறிஞ்சியெடுத்தார். சிகிச்சை தொடர்ந்தது. வாந்தி குறைந்தது. மேல் படிப்புக்காக அரைமனசுடன் தாய்நாடு சென்றார். போய்ச் சேர நாலு மாசமானது. உடல்நலம் மேலும் கெட்டுப்போயிற்று.

விரைவில் மேல்படிப்பு முடிந்தது. உடல் நிலை முழுசாகத் தேறவில்லை. அதையும் பொருட்படுத்தாமல் இந்தியா திரும்பினார். அவர் கேட்டுக்கொண்ட படி பெரிய சபையின் தலைமைப் பதவியிலிருந்து விடுவிக்கப்பட்டார். இனி சுதந்திரமாக ஊழியம் செய்யலாம்.

இச்சமயத்தில் இங்கிலாந்திலிருந்து இரு இளம் போதகர்கள் சென்ன பட்டணம் வந்தார்கள். தமிழ் கற்றார்கள். ராக்லாந்துடன் இணைந்தார்கள். ஒருவர் டேவிட் பென். மற்றவர் மெடோஸ். நாலாவதாக மாயவரம் ஜோசப் கொர்னேலியும் சேர்ந்துகொண்டார். சிறந்த அறிவாளி. பல மொழிகள் கற்றவர்.

தைமாசம் முதல் வாரம் புதன்கிழமை அதிகாலை அஞ்சு மணிக்கு நால்வர் படை தேவ வசனத்தைத் தெளிவாகப் பிரகடனப்படுத்தியது.

''இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்க ளுடனே கூட இருக்கிறேன்.''

மாட்டு வண்டி அவர்களை ஏற்றிக்கொண்டு சென்னபட்டணத்திலிருந்து தெற்கு நோக்கிப் புனிதப் பயணத்தைத் தொடங்கியது. வேதாகம நூலும் வெள்ளை மனசும் போதிக்கும் நாவுந்தான் அவர்களுக்குப் பேராயுதங்கள்.

ஆர்க்காடு சேலம் கரூர் திண்டுக்கல் மதுரை விருதுபட்டி வழியாக ஸ்ரீவில்லிப் புத்தூர் சென்று கூடாரமடித்துத் தங்குவதாகத் திட்டம். பணத் தட்டுப்பாடு பசி மயக்கம் உடல் களைப்பில் பயணம் சுணங்கியது. வழியில் மழப்பாடியில் பிரசங்கம் செய்தார்கள். அதைக் கேட்டு மகிழ்ந்த சனங்கள் நீண்ட சுருட்டைப் பரிசாகக் கொடுத்தார்கள்.

''இதென்ன தின்பதற்காகவா.''

''இல்ல. பொகைய இழுத்து வெளிய வுடணும். தெம்பாருக்கும்.''

அந்த ஊரில் உபசரிக்கும் வழக்கம் அது. அவர்களது நிலைமையைப் பார்த்து ஒரு கிழவிக்கு அழுகையே வந்துவிட்டது.

''ஆரு பெத்த புள்ளீகளோ. கொலபட்னியா கெடக்குதுகளே. அய்யா ராசா என்னால முடிஞ்சது இவ்வளவுதான்.''

முந்தியில் முடிந்து வைத்திருந்த துட்டை எடுத்துக் கொடுத்தாள்.

''ஒரு துட்டு பாலுக்கு. ஒரு துட்டு அவுலுக்கு. பசியாறுங்க சாமி.''

அவர்கள் பசி தணிந்து தெம்பாகிப் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

வண்டியிலும் குதிரையிலும் கால்நடையுமாக விருதுபட்டி போய்ச் சேர நாற்பது நாளுக்கு மேலாகிவிட்டது. ஸ்ரீவில்லிப்புத்தூர் செல்ல முடியவில்லை. விருதுபட்டியருகே வெள்ளூரில் கூடராமடித்துத் தங்கினார்கள். அங்கிருந்து

கொண்டு விருதுபட்டி சிவகாசி ஸ்ரீவில்லிப்புத்தூர்ப் பகுதிகளில் சுற்றித் திரிந்து பிரசங்கம் பண்ணினார்கள்.

## 2. வெயிலும் மழையும்

வெயிலின் வெக்கை தாங்காமல் மெடோஸ் உதகமண்டலம் சென்று தங்கி யிருந்தார். கொஞ்ச நாளில் டேவிட் பென்னுக்குக் காய்ச்சல் வந்து படுத்து விட்டார். மதுரைக்குக் கொண்டுபோனார்கள். வெயில் ஒத்துக்கொள்ளவில்லை. இலங்கையிலிருக்கும் தன் சகோதரரிடம் போய்விட்டார். ராக்லாந்து சிவ காசிக்குத் தெற்கே கொஞ்சம் இடம் வாங்கிச் சிறு வீடு குதிரை லாயம் வேலை யாட்கள் தங்கும் அறை கட்டிக்கொண்டார். அங்கிருந்தபடி வெளியூர்களில் பிரசங்கம் செய்துவந்தார். ஒரு வருசத்துக்குப் பின் டேவிட் பென் இலங்கையி லிருந்து திரும்பி வந்தார்.

தேவ ஊழியம் செய்தவர்கள் எந்த இடத்திலும் நிரந்தரமாகத் தங்குவ தில்லை. வட நெல்லையை நாலஞ்சு பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொரு பகுதியின் மையத்திலும் கூடாரமிட்டுச் சுத்துப்பட்டிகளுக்குச் செல்வார்கள். பிரசங்கத்துக்கு முன்னும் பின்னும் ஆண்டவரைச் செபிப்பார்கள். ஏசுவை அறி யாத மக்களிடம் மட்டுமே ஊழியம் செய்வார்கள். அவர்களிடம் பிரசங்கிப்பது உரையாடுவது அன்றாட வழக்கம். மதியம் தங்கள் கூடாரம் தேடி வருகிறவர் களுடன் உரையாடுவார்கள். வராதபோது மக்களைத் தேடிச் சென்று அங்குள்ள சத்திரம் சாவடியில் அவர்களுடன் ஒருவராக அமர்ந்து சேதியைப் பகிர்ந்து கொள்வார்கள். சுவிசேஷங்களின் பிரதிகளை விநியோகிப்பார்கள்.

வட நெல்லை கரிசல் நிலம் நிறைந்த பூமி. மழையின் கருணையில் விளை யும் மானம்பார்த்த சீமை. பருத்தி அதிகம் விளையும். கோடையில் கரிசல் மண் முறுகிக் கருகி வெப்பம் கொப்புளிக்கும். வெறுங்காலில் நடந்தால் வெந்துவிடும். மழை நேரங்களில் சேறாகி நடை தடுமாறும். செருப்பு கைக்கு வந்தால்தான் நடக்க முடியும். போதகர்களுக்கு இது பழகிவிட்டது.

அவர்களுக்குப் பெரிசாகச் சாப்பாடு தேவையில்லை. ரொட்டித் துண்டும் வாழைப் பழமும் போதும். சாப்பிடுமுன் செபிப்பார்கள்.

‘‘பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே அன்றன்றைய அப்பத்தை எங் களுக்குத் தாரும்.’’

அந்த உணவுகூடக் கிடைக்காதபோது ராக்லாந்து கவலைப்பட மாட்டார். தயங்கி நிற்கும் பெண்களிடம் தொப்பியைப் பாத்திரமாக நீட்டி அதில் கூழை வாங்கிக் குடித்துப் பசியாறுவார். கந்தை உடை கல்லடி சொல்லடிக்கு இடையில் தான் ஆத்தும பலத்தில் போராடினார்கள்.

மக்களுடன் உரையாடுவதில் ராக்லாந்து விற்பன்னர். பிரசங்கம் முடிந்ததும் உரையாடல் தொடங்கும். மக்கள் எந்தக் கேள்வி கேட்டாலும் தயங்காமல் பதில் சொல்வார். சில சமயம் அவரே கேள்வி கேட்பார்.

‘‘கல் சிலைகளை ஏன் வணங்குகிறீர்கள்.’’

ஒரு சந்தர்ப்பத்தில் உரையாடலைத் தூண்டுகிற மாதிரி வேதாகம வசனங்களை உரக்க வாசித்துக்காட்டுவார். பிரசங்கம் முடிந்ததும் மக்களே அவரைச் சாவடிக்கு அழைத்துச் சென்று பாவம் நற்குணம் பற்றிக் கேள்விகளைத் தொடுப்பதும் உண்டு. அவர் மக்களின் விக்கிரக வழிபாட்டை வெகுவாகக் கண்டித்தார். பரவலாக எதிர்ப்புக் கிளம்பியது. இந்துக் கடவுள்களையே பாவிகள் என்று சொன்னால் சும்மா இருப்பார்களா. அதிலும் பிராமணர்களுக்குக் கேட்கணுமா. கொதித்துப்போனார்கள்.

ராக்லாந்தின் நோக்கம் வேறு மாதிரி. முதலில் பிராமணர்களை வேதக்காரர்களாக்கிவிட்டால் பிறகு மற்றவர்களை மாற்றுவது சுலபம். அதனால் பிராமணர்களுடன் ஆழமாக வாதாடினார். ஒரு ஊரில் சில பிராமணர்கள் அவரைப் பிடித்துக்கொண்டார்கள்.

''ஓய் விக்ரக வழிபாடு தப்புன்னு வாய்கிழியப் பேசறீரே. அதப் பத்தி ஓமக்கென்ன தெரியும்னு கேக்கறேன். அது இண்ணைக்கு நேத்து வழக்கமில்ல. காலங் காலமா பரம்பரையா இருந்து வர்ற வழக்கமாக்கும். மூத்தவா செஞ்சத நாங்களும் செய்யறோம். இது தப்பான்னேன்.''

''எங்க தெய்வங்கள வணங்கிறதால எங்களோட பாவமெல்லாம் தீந்துடும். அது தெரியுமோ ஓமக்கு.''

''இன்னொண்ணும் சொல்றேன். நன்னாக் கேளும். விஷ்ணு பரமாத்மா கிருஷ்ணரா அவதாரமெடுத்தார். ஏசுவா அவதாரமெடுத்து பூமிக்கு வந்தார். அதனால கிருஷ்ணரும் ஏசும் ஒண்ணுதான்.''

ராக்லாந்து அதை ஏற்கவில்லை. சிவன் விஷ்ணு போன்றவர்களின் அவதாரத்தைப் பற்றியும் அவர்களது தெய்வீகத்தைப் பற்றியும் பல கேள்விகள் கேட்டார். அவர்களது தீய செயல்களையும் பாவங்களையும் இந்து மத நூல்களிலிருந்தே சுட்டிக்காட்டி முடிவாகச் சொன்னார்.

''அவர்கள் கடவுளின் அவதாரங்கள் அல்ல. சாதாரண மனிதர்களே.''

பிராமணர்கள் விடவில்லை.

''இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ஒண்ணுதான். ஏன்னா ரெண்டும் மரணத்துக்குப் பின்னால மோட்சத்தப் பத்தித்தான் சொல்றது.''

''நன்னாச் சொன்னேள். இவாளுக்குத்தான் மோட்சம் பரம்பரச் சொத்து மாதிரி பேசறாளே.''

ராக்லாந்து மறுத்தார்.

''கிறிஸ்தவ மதம் இந்து மதத்திலிருந்து பல விதத்தில் வேறுபட்டது.''

வாக்குவாதம் முற்றிவிட்டது.

''நீர் விதண்டாவாதம் பேசறீர்.''

''பாவிகளுக்கு அப்படித்தான் தோன்றும்.''

''நாங்க பாவிகளா.''

''பிராமணர்கள் பாவிகள்தான். அவர்கள் ஏசுவை ஏற்றுக்கொண்டு அவரது பிள்ளைகளாக மாறவில்லையென்றால் நரகத்துக்குப் போவார்கள்.''

ராக்லாந்து எழுந்து போய்விட்டார். பிராமணர்கள் கோவத்தில் கறுவினார்கள்.

''இவனச் சும்மா விடப்படாது. எங்க பிரசங்கம் பண்ணினாலும் வெரட்டி யடிக்கணும்.''

அதிலிருந்து அவருக்குப் பிராமணர்கள் உபத்திரவம் கொடுக்க ஆரம்பித் தார்கள். ஒரு நாள் பிராமணக்குடிக்குப் போய் ரெண்டு பேரிடம் பேசிக்கொண் டிருந்தார். அவர் வந்த நோக்கத்தை அறிந்த மற்ற பிராமணர்கள் அவரை நெருங்கி வசைபாடினார்கள்.

''ஓடனே எடத்தக் காலிபண்ணும் ஓய்.''

''வந்து வம்பு பண்றதே வழக்கமாப் போயிடுத்து. வந்த வழியப் பாத்துப் போரும்.''

''நீதான் பாவி. நாங்க இல்ல. நோக்கு ஒரு மதமும் ரட்சகரும் தேவை. எங்களுக்கு ரெண்டும் தேவையில்ல.''

அவர் கிளம்பும்வரை வசையர்ச்சனை நிற்கவில்லை.

வெள்ளைக்கார ஆட்சியாலும் வேத போதகர்களின் பேச்சாலும் பிராமணர் கள் கடும் கோவத்திலிருந்தார்கள். பலவாறு அங்கலாய்த்தார்கள்.

எங்கள் பாரம்பரியமான சடங்கு சாத்திரங்களிலும் ஆசாரங்களிலும் அன் னியர் ஏன் குறுக்கிடணும். அமைதியை ஏன் குலைக்கணும். எங்கள் மதமும் சுதந் திரமும் பறிக்கப்பட்டுவிடுமோ என்று கவலையாக இருக்கிறது. இவர்கள் துலுக் கர்களிடம் பேசி அவர்களைக் கிறிஸ்தவர்களாக மாற்ற வேண்டியதுதானே... எப்போதுதான் நாட்டை விட்டு ஓடப்போகிறார்களோ. துலுக்கர் ஆட்சியில் எவ்வளவு பாதுகாப்பாக இருந்தோம். ஹைதராபாத்தில் ஒரு கிறிஸ்தவராவது உண்டா. எத்தனை அரசர்கள் வந்து போயிருக்கிறார்கள். எத்தனை ராஜ்யங்கள் வந்திருக்கின்றன. யாராலும் எங்களை ஏதும் செய்ய முடியவில்லையே. அவர் களுடன் இவர்களை ஒப்பிட்டால் ஒண்ணுமே இல்லை. மிக விரைவிலேயே இவர்கள் சொந்த நாட்டுக்கு ஓடிவிடுவார்கள்... விக்ரக வழிபாடு பற்றிக் கிண்டல் பேசுகிறார்கள். இவர்கள் ஏன் இந்துக் கோயில்களுக்கு மானியம் கொடுக்கிறார் களாம். அந்தத் தெய்வங்கள் பொய்யென்றால் கோயில்களை இழுத்துப் பூட்டி விட வேண்டியதுதானே. கத்தோலிக்கர்கள் மட்டும் ஏசுவுக்கும் மேரிக்கும் சிலை வைத்து வழிபடலாமோ. கிறிஸ்தவ மதம் உண்மையென்றால் அற்புதங்கள் செய்து காட்டி நிரூபிக்கட்டுமே. பெரிசாகப் பேச வந்துவிட்டார்கள்...

## 3. ஊடுபட்டம்

சிவகாசியருகே ஈஞ்சார் கிராமம். அங்கே பிராமணர்கள் அதிகம் வசித்தார்கள். ஒரு சமயம் ராக்லாந்து தேவ சேதி சொல்வதற்காக அக்ரஹாரத்துக்குள் நுழைந் தார். அங்கிருந்தவர்கள் அவர்மீது மண்ணை வாரியிறைப்பதும் கல்லெறிவதுமாக இருந்தார்கள். ஒருவர் திடீரென அவரைக் கம்பால் ஓங்கி அடித்தார். அவர் எதிர் பார்க்கவில்லை. மற்றவர்களும் அவரை அடிக்க ஆரம்பித்தார்கள். அவர் அங்கிருந்து கிளம்பியபோதும் மண்ணெறியும் கல்லெறியும் விழுந்தன. நடைபழகும் சின்னஞ்சிறு பாலகன்கூட தன் பங்குக்கு மண்ணை வாரிப் போட்டான்.

வல்லம்பட்டிக்குப் போயிருந்தார். அங்கே ஒரு பிராமணரிடம் ஏசுவின் பாடுகள் அற்புதங்களை விளக்கிச் சொன்னார். பிராமணர் கேட்டார்.

''நேக்குத் தெரியும் நான் நிச்சயமா நரகத்துக்குப் போக மாட்டன். இது ஓமக்குத் தெரியுமோல்லியோ.''

அவர் நிதானமாகச் சொன்னார்.

''யார் ஏசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறார்களோ அவர்களே நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்வார்கள்.''

''நீர்தான் கொதிக்கற நரகத்துக்குப் போவீர்.''

பிராமணர் சபித்துக்கொண்டு போனார். இதைக் கண்டு ராக்லாந்தின் குதிரைக்காரன் வேதனைப்பட்டான். கூடாரத்துக்குத் திரும்பும்போது அவரிடம் பேசினான்.

''அய்யா நீங்க பெராமணருககிட்ட ஏசுவப் பத்திப் பேச வேணாம். அவுக ஆரும் காதுகுடுத்துக் கேக்கிறதாத் தெரியலயே.''

அவர் முகத்தில் விரக்தி தெரிந்தது.

''பிறகு யாரிடம் சொல்லணும். பிராமணரல்லாத நீயே கிறிஸ்தவனாக மாற மாட்டங்கற.''

அவன் சற்று யோசித்துவிட்டுச் சொன்னான்.

''நான் ஏசுவ நம்புறென். ஆனா என்னப் பெத்தவங்களக் கண்டு பயமாருக்கு. அதனாலதான்...''

பிராமணர்களைப் போல் நாய்க்கர்களும் தொந்தரவு கொடுத்தார்கள். ராக்லாந்திடம் தெளிவாகச் சொல்லிவிட்டார்கள்.

''நாங்க பரமசெவனக் கும்புடுறத வுட்டம்னா அவ்வளவுதான். எங்க கொதவளைய நெரிச்சுக் கொன்னுருவாரு.''

''எங்களுக்கு எல்லாமே பெருமாளுதான். சொத்துசொகம் சோறுன்னு எங்களுக்குத் தேவையான அத்தனையும் குடுத்துப் படியளக்கிற பகவான்.''

நாடார்கள் அமைதியான சுபாவம் கொண்டவர்கள். தேவ சேதியை ஆர்வத்துடன் கேட்டார்கள். வேத போதகர்களை தங்கள் வீட்டுக்கு அழைத்துச் சென்று தங்கவைத்தார்கள். ராத்திரி தங்க வேண்டியிருந்தால் ராக்லாந்து அவர் களது வீட்டில்தான் தங்குவார். அவர்கள் ஏசுவை ஏற்றுக்கொண்டாலும் மற்ற சாதிக்காரர்கள் மீதிருந்த பயம் தடுத்தது. மறவர்களும் அவ்வளவாக வம்புதும்பு பண்ணவில்லை. பிரசங்கத்தைப் பொறுமையாகக் கேட்டார்கள்.

தீட்டுச் சாதிக்காரர்களுக்கு இந்து மதமா வேதமா என்ற கவலையெல்லாம் பெரிசாக் கிடையாது. தங்களது பிரச்சனைகளையே முன்னிறுத்தினார்கள். ஒரு பெண் ராக்லாந்தின் குதிரையைக் காட்டிச் சொன்னாள்.

''அய்யா இந்தக் குருதைக்கும் எங்களுக்கும் என்ன வித்தியாசம் இருக்குது. இதப் போல நாங்களும் செத்துப்போனா எங்க ஒடம்பு மண்ணுக்குள்ள போகும். உசிரு ஒசக்கப் போகும்.''

அவளைச் சமாதானப்படுத்த அவர் நிறையப் பேச வேண்டியிருந்தது. இன் னொருவர் ஆதங்கமாகச் சொன்னார்.

‘‘நாங்க கீச்சாதிக்காரங்க. எங்களுக்கு என்ன தெரியும். எங்க கட்டைய வுட்டு ஆவி எப்பப் பிரியும் எங்க போகும்னு சொல்ல முடியாது. கள்ளுதான் எங்களுக்குப் புடிச்சது. இந்தப் பழக்கத்த மறக்க முடியாது. கள்ளு குடிக்கிற மனுசருக்கு என்ன தெரியப்போகுது.’’

ஆளாளுக்கு முறையிட்டார்கள்.

‘‘தலைக்கு மேல வரியப் போட்டு எங்களச் சாகடிக்காக.’’

‘‘மேச்சாதிக்காருக எங்களுக்கு வேல குடுக்க மாட்டங்காக.’’

‘‘கடையில தானியம் தவசம் குடுக்கிறதில்ல. பட்னி கெடக்க வேண்டி யிருக்கு.’’

‘‘இந்த நெலமையில நாங்க எப்படி வேதத்துக்கு வர முடியும்.’’

‘‘வேதத்துக்கு மாறுனா எங்களுக்கு அரிசி கெடைக்குமா. வரித் தொந்தரவு நீங்குமா. எங்களுக்கும் புள்ளீகளுக்கும் பொண்ணு கெடைக்குமா.’’

‘‘ஆயிரம் ரூவா குடுங்க. நீங்க சொல்றதக் கேப்பொம்.’’

‘‘வேதத்துக்கு வாறதுல ஒரு தொறட்டு இருக்குது பாருங்க. சனிக்கெழம மழ பேஞ்சா ஞாயித்துக்கெழமதான் நெலத்துக்குள்ள எறங்கி வெதைக்க முடியும். ஆனா அண்ணைக்கு வேலையே செய்யப்புடாதுங்கீக. அதனால எங்களுக்கு நட்டந்தான.’’

எல்லாவற்றுக்கும் போதகர்கள் பதில் சொன்னார்கள். ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் ராக்லாந்தினால் பதில் சொல்ல முடியவில்லை.

‘‘வேதக்காரனா மாறுனா எங்களுக்கு என்ன கெடைக்கும். துலுக்கனா மாறுனா நாங்க மூணு சாதிக்காரங்களும் அவுகளோட சரிசமமா உக்காந்து சாப்பிட முடியும். ஒங்க வேதத்துல அது முடியுமா.’’

முடியாதுதான். வடநெல்லைப் பகுதியில் கிறிஸ்தவர்களிடையிலும் சாதி பேதம் இருந்தது. மதம் மாறிய பிறகும் சாதி அவர்களுடன் கழட்டியெறிய முடியாத தோலாக ஒட்டிக்கொண்டுதான் இருந்தது. மக்களிடம் தேவ சேதியைக் கொண்டுசெல்ல இது பெரிய தடையாக இருப்பதை நினைத்து ராக்லாந்து வருந்தினார். அவர் இந்துக்காரர்களிடம் சாதிபேதத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அடிக்கடி சொல்வதுண்டு.

‘‘கடவுள் மனிதனை தன்னுடைய சாயலில் படைத்தார். அவருடைய சாயலில் படைக்கப்பட்ட மனிதனை நீங்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கிற காரியம் உங்களையே மறுக்கிறதாய்க் காணப்படுகிறது.’’

இதையே கிறிஸ்தவர்களுக்கும் போதித்தாகணும். அப்போதாவது நிலைமை மாறுமா. நம்பிக்கையுடன் சுற்றித் திரிந்தார்.

ஆண்டாள்பதியில் ஆடிப்பூரத் தேரோட்டம் விமரிசையாக நடந்தது. அலை மோதும் கூட்டத்துக்கு ராக்லாந்து நற்சேதி சொன்னார்.

‘‘உயிருள்ள ஒரே தேவனுண்டு.’’

ஒருவர் கேட்டார்.

‘‘கடவுள எனக்குக் காட்டு.’’

ஆண்களும் பெண்களும் பரிகாசம் செய்து ஏசினார்கள்.

''ஒங்க சாமி ஒசத்தின்னா நீயே சொமந்துக்கிட்டுத் திரி. எங்க தலையில எறக்க வேணாம்.''

''ஆண்டாளம்மா சன்னதிக்கு வந்து அடாவடியாப் பேசுனா அம்புட்டுத் தான். நாக்க அறுத்துருவொம்.''

பாணாங்குளத்தில் ஒருவர் கூச்சமில்லாமல் கேட்டார்.

''எனக்கு எம்புட்டுப் பணம் தருவ. நீ பணம் வாங்கீட்டுத்தான இப்படி அலையிற. ஆதாயமில்லாம ஆரும் அலைவாகளா.''

அவர் பொறுமையிழக்கவில்லை.

''தகப்பனிடம் பணம் கேட்பாயா.''

பணம் கேட்டவரைக் காணவில்லை.

இப்படி எத்தனையோ சம்பவங்கள். வடுகபட்டியில் சொக்கத் தேவர் ஒரு பந்தயம் வைத்தார்.

''மோச்சம் நரகமிங்கிறது உண்மையாருந்தா இப்படிச் செய்யலாம். இது மோச்சம் இது நரகம்னு அடையாளம் வச்சு ரெண்டு கல்ல தண்ணிக்குள்ள போடுவொம். மோச்சக் கல்லு தண்ணிக்கு மேல மெதந்தா நான் மட்டுமில்ல என்னோட நூறு பேரும் சேந்து வேதத்துக்கு வந்துருவொம்.''

மக்களிடையே ஒரு வித்தியாசமான கதை நடமாடியது.

''கேட்டயா சங்கதிய. வெள்ளக்கார ராணியம்மா அவசரமா ஆலோசன சபையக் கூட்னாளாம்.''

''அப்படியென்ன அவசரம்.''

''இந்தியாவிலருக்கிற சனங்களையெல்லாம் ஒரே சாதியாக்கிறதுக்கு வழியென்னன்னு கேட்ருக்கா.''

''நடக்கிற காரியமா.''

''என்ன சொல்றதுன்னே ஒருத்தருக்கும் தெரியல.''

''இங்க வந்து எறங்கீருக்காகளே மூணு சாமியாருக அவுக போயி அந்தக் காரியத்த நாங்க பாத்துக்கிறம்னு வாக்குக் குடுத்தாகளாம்.''

''சரி.''

''ராணி அவுகளுக்குச் சகல அதிகாரமும் குடுத்து நம்ம தேசத்துக்கு அனுப்பி வச்சாளாம்.''

''இருக்கும்.''

''அதனாலதான் அவுக கீச்சாதிக்காரங்க இருக்கிற எடத்துக்குக்கூடப் போயி வேதத்தப் பத்தி எடுத்துச் சொல்றாகளாம்.''

''எல்லாச் சாதியவும் ஒண்டிக்கிறதுக்கு வேல நடக்குது.''

''வேதத்துல என்னமோ பத்துக் கற்பனன்னு இருக்குதாமே.''

''அதென்ன.''

''ஆருக்குத் தெரியும். அந்தக் கற்பனைய முக்கியமா சின்னப் புள்ளீகளுக்குச் சொல்லிக்குடுக்காகளாம்.''

''அஞ்சிலயே வளச்சிட்டா அம்பதுல நிமிர முடியாதே.''

''சிறிசுக கத்துக்கிற மாட்டம்னா போலீசுக்குத் தகவலு குடுத்துப் புடிச்சிட்டுப் போயிருவாகளாம். அதனாலதான் கீச்சாதிக்காரங்க பயந்துபோயி அவுக சொல்றதெல்லாம் சரின்னு ஏத்துக்கிறாங்களாம்.''

''எல்லாம் திட்டம்போட்டு நடக்குதுன்னு சொல்லு.''

''நம்மதான் எச்சரிக்கையா இருந்துக்கிறணும்.''

வேத போதகர்கள் பல மாசமாகப் பசி பட்டினியுடன் அலைந்து திரிந்தும் ஒருவர்கூட ஏசுவை ஏற்று மனந்திரும்பவில்லை. கடைசியில் ஆறுதலாக ஒரு கனி ஏசுவின் ரா்ச்சியத்துக்குள் விழுந்தது. அது மெடோஸின் வேலையாள் பொன்னப்பன். ஏற்கெனவே வட நெல்லைக்குத் திரும்பியிருந்த மெடோஸ் அவரிடம் இடைவிடாமல் ஏசுவின் சேதியைச் சொன்னதன் பலனாக அவர் மனந்திரும்பி விட்டார். மெடோஸ் அவருக்கு யோவான் எனப் பேரிட்டு வடுகபட்டியில் ஞானஸ்நானம் செய்துவைத்தார். அந்தக் கனி எல்லாருக்கும் உற்சாகத்தையும் உத்வேகத்தையும் கொடுத்தது. சளைக்காமல் அலைந்தார்கள்.

உபத்திரவங்கள் வருமெனத் தெரிந்தும் ராக்லாந்து மீண்டும்மீண்டும் ஈஞ்சார் கிராமத்துக்குப் போனார். ஒரு முறை தெருமுனைப் பிரசங்கத்தின்போது சிலரது தூண்டுதலின் பேரில் ஊர்க் காவக்காரர் உலக்கையால் அவரைத் தலையில் அடித்துவிட்டார். அவர் துவண்டு விழுந்தார். பெரியவர்களும் சிறுவர்களும் அவர்மீது கல்மாரியும் மண்மாரியும் பொழிந்தார்கள். அவர் கஷ்டப்பட்டு எழுந்து தள்ளாடி நடக்கும்போது சிறுவர்களின் பரிகாசப்பாட்டு கேட்டது.

''பரதேசியத் தொடாதே
பாவம் ஒன்ன வுடாதே
தீட்டுவந்து சேருமே
தெருமுழுக்க நாறுமே.

பரங்கித்தொர வச்சிருக்கும்
பாத்தரத்தத் தொடாதே
கறகறையா ஒட்டிக்கிரும்
கழுவினாலும் வுடாதே.''

புதூர் ராமையத்தேவன்பட்டிக்குப் போயிருந்தபோது ரெம்பத் தாகமெடுத்தது. ஊர்க் கிணற்றுக்குப் போனார். யாரும் தட்டுப்படவில்லை. தற்செயலாகக் கிடந்த கயிற்று வாளியை எடுத்து தண்ணீர் இறைப்பதற்காகக் கிணற்றுக்குள் நழுவ விடப் போனார். ஒரு அரட்டல் வந்தது.

''வாளியத் தொடாத. ஒனக்கு ஊர்க் கெணத்துத் தண்ணி கேக்குதோ. கொளங்குட்டையில குடிக்க வேண்டியதுதான.''

வாளியை வைத்துவிட்டு ஊருணிக்குப் போனார். அங்கே வற்றிக்கிடந்த தண்ணீரைக் குடித்துவிட்டு வெள்ளாட்டுக் கூட்டம் கரையேறிக்கொண்டிருந்தது. அவர் சற்று விலகி ஊருணிக்குள் இறங்கினார். ஆட்டுக்காரப் பையன் அவரை ஒரு மாதிரியாகப் பார்த்தான்.

''குளிக்கப்போறீகளா. தண்ணி மண்டியாக் கெடக்குதே.''

அவர் சிரிக்க முயன்றார்.

''தாகமாக இருக்கிறது. தண்ணீர் குடிக்கணும்.''

''சே சே இந்தத் தண்ணியக் குடிக்கவா. செத்த நேரம் கரையில இருங்க வந்துறென்.''

அவன் வீட்டுக்கு ஓடி பெரிய தகரப் போகணியுடன் வந்தான். வெறும் போகணி. அவசரமாக ஒரு ஆட்டைப் பிடித்து போகணி ததும்பப் பால் பீச்சி அவரிடம் கொடுத்தான். அவர் ஆவலாகக் குடித்துவிட்டு நன்றியுடன் பார்த்தார்.

''உனக்கு ஆண்டவருடைய கிருபை என்றைக்கும் உண்டு.''

அன்றைக்கு ராத்திரிகூட அவருக்கு அவ்வளவாகப் பசியில்லை.

சிவலார்பட்டியில் ஒரு கிழவர் ராக்லாந்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். மரத்தடியில் பிரசங்கம் பண்ணும்போது வந்து குறுக்கிட்டார்.

''அட நிறுத்துப்பா பேச்ச. மனுசன் படுற பாடு ஒனக்கெங்க தெரியிது. நீ ஊருஊராப் போயி ஏசுநாதரப் பத்திப் பேசுறதாலதான் இந்தப் பக்கம் மழையே பேய மாட்டங்குது. ஒன்னக் கண்டு ஓடி ஒளிஞ்சுக்கிருச்சு போலருக்கு. நீ பட்ணத் துக்குப் போயி வீட்ல மூடிப் படுத்து மொடக்கு. ஒடனே இங்க மழ பேயும். நீ ஏசுஏசுன்னு சொல்லி எங்க தெய்வங்களுக்குச் சத்தியே கொறஞ்சு போச்சு. மழ பேயாறதுக்கு நீதான் காரணம். மூச்சுக்காட்டாமப் போயிரு. இல்லன்னா மொட்டை யடிச்சுக் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக் கழுதமேல ஏத்தி அனுப்பீருவொம். ஆமா சொல்லிப்புட்டென்.''

அவர் சிரித்துக்கொண்டே கேட்டார்.

''அப்படியென்றால் உங்கள் தெய்வங்களைவிட நாங்கள் மேலானவர்க ளென்று ஒத்துக்கொள்கிறீர்களா.''

''நீயில்ல. ஒங் கையிலருக்கிற வேதந்தான் காரணம்.''

''நீங்கள் ஏன் எங்கள் வேதத்துக்கு மாறக் கூடாது.''

''அட போப்பா. எங்க பாரம்பரியமே வேற.''

இதே மாதிரி இன்னொரு ஊரிலும் நடந்தது. அவர் செபிக்கும்போது ஒரு வயசாளி வந்து சிரித்தார்.

''நீ போற எடத்துலயெல்லாம் எங்க சனங்களப் பாத்து நீங்க பாவிக நிச்சயமா நரகத்துக்குத்தான் போவீக. நான் மட்டும் மோச்சத்துக்குப் போவன்னு சொல்லீட்டுத் திரியிற. அதனாலதான் நீ கஞ்சி தண்ணி கெடைக்காம இப்படி இழுபடுற.''

மனசுக்கு ஆறுதல் தரும் அனுபவங்களை நினைத்தால் அவரடைந்த துன்பங் களும் வீசியெறிந்த கத்தியிலிருந்தும் ஏவிவிட்ட கடிநாயிடமிருந்தும் தப்பிவந்த சோதனைகளும் மறந்துவிடும். தெம்பு கூடும். வைராக்கியம் இறுகும். ஒவ்வொரு சம்பவமாக நினைக்கநினைக்க ஆனந்தம் பொங்கும்.

எல்லிங்கநாய்க்கன்பட்டியில் பிரசங்கம் முடிய இருட்டிவிட்டது. இடியும் மின்னலுமாக மழை வேறு பிடித்துக்கொண்டது. கூடாரத்துக்குத் திரும்ப முடி யாது. இந்த மழைக்குக் கூடாரம் என்ன கதியானதோ. இங்கேயே தங்கிவிட்டுக்

காலையில் போக வேண்டியதுதான். ஒரு கடையில் ஒதுங்கிக் கடைக்காரரிடம் கேட்டார்.

''இரவு இங்கே ஓரத்தில் தங்கிக்கொள்ள அனுமதிப்பீர்களா.''

கடைக்காரர் பரிவுடன் பார்த்தார்.

''இந்த எடத்துலயா. வேணாம். மழ வெறிக்கட்டும். வேற எடத்துக்குக் கூட்டிட்டுப் போறென்.''

''நன்றி அய்யா. ஆண்டவர் உங்களை ஆசீர்வதிப்பார்.''

மழை விட்டதும் கடைக்காரர் இன்னொருவருடன் கலந்து பேசினார். இருவரும் அவரை ஒரு வீட்டுக்குக் கூட்டிப் போனார்கள். நாடாரின் புது வீடு. அழகாக சுத்தமாக வசதியாக இருந்தது. நாடார் நல்ல மனுசன். ஊருக்குள் மரியாதையானவர்.

ராக்லாந்து உள்ளே நுழைந்ததுமே வீடு நிறையச் சனங்கள் கூடிவிட்டார்கள். ஒருவர் அவரது குதிரையைப் பிடித்து தாவாரத் தூணில் கட்டினார். இன்னொருவர் அழகான போர்வை கொண்டுவந்து விரித்தார். மற்றொருவர் குதிரைக்குப் புல் வாங்கி வந்தார். அடுத்து ஒருவர் அவலும் வெல்லமும் வாங்கப் போனார். நாடார் அன்புடன் கேட்டார்.

''எங்க வீட்ல சாப்பிடுங்களேன். பசியோட இருப்பீக.''

ராக்லாந்து நேசத்துடன் மறுத்தார்.

''மிக்க நன்றி அய்யா. என் வயிற்றுக்கு இந்திய உணவு ஒத்துக்கொள்வதில்லை.''

கூட்டத்திலிருந்த ஒருவர் எழுந்திருக்க முற்பட்டார்.

''அப்படின்னா பாலாச்சும் குடிங்க. வாங்கீட்டு வாறென்.''

ராக்லாந்து அவரைத் தடுத்தார்.

''என்னிடம் பணமில்லை. பணம் கொடுக்காமல் நான் எந்தப் பொருளையும் வாங்கிக்கொள்வதில்லை.''

கூடியிருந்த மக்கள் வேதனைப்பட்டார்கள்.

''இப்படியும் ஒரு மனுசனா.''

''பசியோட ராத்திரி ஒறங்க முடியாதே.''

அவர் அவர்களிடம் நிறைய விசயங்களைப் பேசினார். பிறகு அவர்கள் கலைந்து செல்லத் தொடங்கினார்கள். அவரைப் பட்டினிக் கோலத்தில் விட்டுப் போக மனசில்லாமல் வருத்தப்பட்டுக்கொண்டே நடந்தார்கள்.

''இந்த மனுசனப் பசியோட வுட்டுட்டுப் போறது பெரிய பாவம்.''

''அதானப்பா. என்னால பொறுக்க முடியலயே.''

இது அவர் காதில் தெளிவாக விழுந்தது. ஜீவ அப்பமுண்ட நிம்மதியில் செபித்துவிட்டு நித்திரைக்குப் போனார்.

கிருஷ்ணப்பேரியில் ஒரு நாள் மாடனையும் அவரது மனைவியையும் சந்தித்தார். ஏற்கெனவே பரிச்சயமானவர்கள். இன்னும் சிலரும் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள். இடையில் மாடனும் மனைவியும் எழுந்து போய் ஒரு பொட்டணத்துடன் திரும்பினார்கள். அதைப் பிரித்து ராக்லாந்திடம் கொடுத்தார்கள். வெல்லம் பழங்கள் வெற்றிலை பாக்கு. அவர் அன்புடன் வாங்கி மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தார்.

அவர் கிளம்பும்போது மாடனும் மனைவியும் அவருடன் கொஞ்ச தூரம் நடந்து வந்தார்கள். மாடன் கிட்ட வந்து கேட்டார்.

''நீங்க தங்கியிருக்கிற ஊருக்குப் போற வழிய இந்த நாய்க்குக் காட்டப் புடாதா சாமி.''

''நிச்சயமாகக் காட்டுகிறேன்.''

''மறுபடியும் எங்க ஊருக்கு வாங்க. ஏசுநாதரப் பத்தி எடுத்துச் சொல்லுங்க. ஒங்களுக்கு ஆடு வேணுமா கோழி வேணுமா. என்னென்ன தேவையோ கேளுங்க. அத்தனையும் வாங்கித் தாறென்.''

''மிக்க நன்றி அய்யா.''

அவர் விடைபெறும்போது மாடன் உரிமையுடன் சொன்னார்.

''என்னக் கண்டிப்பா மோச்சத்துக்குக் கூட்டீட்டுப் போயி என் அப்பனக் காட்டுங்க. அவரப் பாக்க ரெம்ப ஆசையாருக்கு.''

ஊர் போய்ச் சேரும்வரை அவர் மனசு சிரித்துக்கொண்டிருந்தது.

இன்னொரு ஊரில் மறவர்கள் பெருந்திரளாகக் கூடி அவரது பிரசங்கத்தைக் கேட்டார்கள். அவர் நினைவூட்டினார்.

''உங்கள் ஆத்துமாக்கள் விலைமதிப்பற்றவை. விக்கிரக ஆராதனையாலும் பாவச் செயல்களாலும் விலைமதிப்பற்ற ஆத்துமாக்கள் அழிந்துவிடும்.''

உடனே ஒருவர் கூட்டத்திலிருந்தவர்களைக் காட்டி உரக்கப் பேசினார்.

''எங்க ஊருல ஏசுநாதரப் பத்திச் சேதி சொன்னதுலருந்து திருநீறு பூசுறத வுட்டுட்டொம். எங்க நெத்தியப் பாருங்க திருநீறு பூசின அடையாளம் இருக்குதான்னு.''

அவர் இந்த வார்த்தைகளை அசைபோட்டுக்கொண்டே வயல்வெளியில் நடந்து போனார். ஒரு வயலில் நாலு ஏர்கள் உழுதுகொண்டிருந்தன. அவரைப் பார்த்ததும் முன்னத்தி ஏர்க்காரர் பின்னால் திரும்பி மற்றவர்களுக்குச் சொன்னார்.

''விக்கிரகங்களை வணங்காதே. அது பாவம். நீ ஏசுநாதரை நினைத்தால் ரட்சிக்கப்படுவாய். இல்லையென்றால் நரகத்துக்குச் செல்வாய்.''

அவர் கண்ணை மூடியபடி கொஞ்ச நேரம் நின்றிருந்தார்.

வட நெல்லை நிலங்களனைத்தும் உழுது பண்படுத்தப்படுகின்றன. எங்கும் ஏர்களின் நடமாட்டம். ஆலய மணியோசையாக மாடுகளின் கழுத்து மணிகள் அழைக்கின்றன. போதகர்கள் வேதாகம நூலை விதைப் பெட்டியாக ஏந்திக் கொண்டு அதிலிருந்து வசனங்களை அள்ளிஅள்ளி விதைக்கிறார்கள். உபதேசியார்கள் கீர்த்தனைகளை ஊடுபட்டம் போடுகிறார்கள். எல்லாம் முடிந்தபின் மூலையில் மண்டியிட்டுச் செபிக்கிறார்கள். கொஞ்ச நேரத்தில் நிலங்களில் பயிர்களும் செடிகளும் செழித்து வளர்கின்றன. வானத்திலிருந்து இறங்கி தாழப் பறந்துவரும் மேலைக் காற்று பாடிக்கொண்டே அவற்றை நீவிச் செல்கிறது.

''அல்லேலுயா... அல்லேலுயா...''

அவர் வயல் வரப்பில் கவனமாக எட்டுவைத்தார். முன்னத்தி ஏர்க்காரர் விடுத்த நற்சேதி எங்கும் எதிரொலித்து அவர் செவியில் இனித்தது.

''விக்கிரகங்களை வணங்காதே...''

## 4. கர்த்தரின் பந்தியில் வா

தாமிரவருணியில் சலனமற்று ஓடிய தண்ணீர் காலைப் பொழுதின் கதிர் வீச்சுக்கு மேனி சுளித்து மெல்ல நெளிந்தது. இருமருங்கும் விரிந்து கிடக்கும் மணல் படித்துறை. நீள வேலியிட்ட பசுங்கரைகள். கரை மரங்களில் கதிரொளியை வரவேற்றுத் துதிக்கும் பறவைகளின் கூட்டிசை ஒலித்துக்கொண்டேயிருந்தது.

மேற்கே தொலைவில் கோலப் புள்ளிகளாகக் குளிக்கும் பெண்கள். அவர்கள் கும்மரிச்சம் அரிச்சலாகக் கேட்டது.

அவர் ஆளற்ற படித்துறையில் கால்பதித்து ஆற்றுக்குள் நடந்தார். குஷ்டக் கசிவில் நனைந்த துணிகளைக் களைந்தார். அவற்றை நீரில் கழுவிப் பிழிந்தார். மணல் மேட்டில் காய வைத்தார். கோவணத்துடன் நடுநீருக்குள் இறங்கி முங்கி முங்கிக் குளித்தார். மிதமான குளிர்ச்சி இதமாக இருந்தது.

குளித்து முடித்து வெளியேறிப் பொழுதுக்கு முகங்காட்டிச் சுடுமணலில் மண்டியிட்டு வெயில் காய்ந்தார். உடல் வலி தணியும் சொகத்தில் நெஞ்சிலிருந்து ரம்மியமான பாடல் பிரவகித்தது.

''தோத்திரம் புகழ் கீர்த்தனம் ஜெய சோபனம் உமக்கையா - துதி
சொல்லவும் தீதை வெல்லவும் அருள் சூட்டுவீர் கிறிஸ்தையா

சுத்த சுவிசேஷ சத்திய மொழியை வித்தரிக்க வரந்தாரும் - நேய
சூரிய கிரண வீரியத்தால் எனக்காரோக்யம் அருள்கூரும்
நித்தம் எனைத் தேவபக்தியில் நடத்திச் சித்தம் இரங்கிக் கண்பாரும் - கரம்
நீட்டிக் கிருபையைச் சூட்டிக் கவலையை ஓட்டி என் துயரைத் தீரும்
நில்லும் ஐயா என் பக்கத்தில் நில்லும் ஐயா
தினம் நலம் சொல்லும் ஐயா தீயோன்தனை வெல்லும் ஐயா தீதைக்
கொல்லும் ஐயா துய்யா.''

குஷ்டம் கொறித்து மழுங்கிய விரல்கள் இணைந்து நெஞ்சில் பதிந்து ஏசுவைத் தொழும்போது தடித்த உதடுகள் துடித்தன. புளியங்காய்க் காதுகள் அசைந்தன. உள்ளிடிந்து கரையும் மூக்கு சிவந்தது. காய்த்துப்போன கன்னங்கள் கன்றிப்போயின. மூடிய இமைகள் ஏசுவுடன் ஏதேதோ பேசின. நோய்ச் சரீரம். மாயச் சாரீரம். கனிவான ஆனந்த பைரவி ராகம் காற்றோடும் ஆற்றோடும் கலந்து ஆலாபித்தது.

காய்ந்த துணிகளை அணிந்துகொண்டு கரையேறினார். கரையடியில் தொடங்கி விரிந்து கிடக்கும் பச்சை வயல்வெளியைப் பார்வையால் அளக்க முயன்றார். முடியவில்லை. வறண்டுகிடக்கும் வட நெல்லை மனசில் படர்ந்தது. வட திசை நோக்கி நடந்தார். தோளில் தொங்கும் துணிப்பைக்குள் வேதாகம நூல் ஓய்வெடுத்தது. நூலில் குஷ்ட ரேகைகள் பதியாத பக்கம் கிடையாது.

மேசையாபுரம் இம்மானுவேல் மரியான் உபதேசியாரை அறியாத வேதக் காரர் இருக்க முடியாது. ஏசுவின் புகழ் பாடும் எழுச்சிக் கவிஞன். ராகங்களில் சஞ்சரிக்கும் ராகதேவன். தானே முளைத்த இசைச் சுயம்பு. அவரைத் தீட்டுச் சாதிக்காரன் என்று தூற்றினார்கள். குஷ்டரோகி என்று அருவருத்தார்கள்.

அவரோ நான் தீண்டத் தகாதவனல்ல எவராலும் தீண்ட முடியாத தெய்வசாதிக் கிறிஸ்தவன் என இறுமாந்தார்.

உற்ற மனைவியும் பெற்ற மக்களும் சுற்றமும் ஒதுக்கிவிட்ட வெறுப்பில் சுந்தரப் பரமதேவ மைந்தனைப் பற்றிக்கொண்டார். எளிய மக்களின் ஆத்தும விடுதலைக்காக வலியச் சென்று வலியையும் பொருட்படுத்தாமல் தன்னை வருத்தி உழைத்தார். வட நெல்லைப் பகுதியில் வேதப் பயிர் செழித்து வளர இசைமழை பொழிந்தார். அனுதினமும் வேத வசனங்களை மக்களுக்கு ஓதினார். அவர்களின் ஆத்துமா அடிமைப்பட்டுக் கிடக்கும் அவலத்தை விளக்கினார். வேதாகம நூலை விரித்துப் புரட்ட அவரது மொட்டை விரல்கள் தட்டுத்தடு மாறித் தவிப்பதைப் பார்த்து இரங்கும் நெஞ்சங்கள் ஏராளம். வளமான குரலில் மயங்கும் விசுவாசிகளுக்குள் குஷ்ட மரியானின் கோர உருவம் மறைந்து குரு வானவராகக் காட்சி தருவார்.

குழந்தை ஏசுவின் பாடுகளை உபதேசிக்கும்போது தன்னையறியாமல் குடும்ப நினைவு வரும். குழம்பித் தெளிவார். தாமிரவருணி அழைக்கும். கால்கள் தென் நெல்லைக்குத் திரும்பும். எட்ட நின்று குடும்பத்தைப் பார்த்ததும் ஒரு ஆறுதல். அவருக்குள் மழைக்காலம் சூழ்ந்து பாசம் நதி வெள்ளமாகப் பெருக் கெடுத்து அடங்கிக் கோடையில் வடிந்து வற்றிவிடும்.

கடமை வட நெல்லைக்கு வழிகாட்டும். மனசுக்குள் அல்லும் பகலும் அயராது உச்சரிக்கும் வேத வார்த்தைகள் செவியில் அதிரும்.

''குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்.''

தனிமையில் ஏசுவுடன் பேசிக்கொண்டே தளராது நடப்பார்.

''நம்பினேன் உனதடிமை நான் ஐயா
திடப்படுத்தி என்றனை
நடத்திக் காப்பதுன் கடமைதான் ஐயா.

ஆதாரம் எனக்கார் உனையன்றி
அம்புவியில் யான் நம்ப வேறுண்டோ - உன்
பாதா தாரத்தில் ஒதுங்கினேன் எனைப்
பாரும் கிருபை தாரும் ஐயனே.''

அவர் செபவீரன் ராக்லாந்துடன் இணைந்து சிவகாசியில் வேத ஒளியேற்றி வைக்க உழைத்தார். அவருக்கும் ராக்லாந்துக்கும் பல விசயங்களில் கருத்து ஒத்துப் போனது. அடித்தட்டு மக்களின் ஆத்தும விடுதலைபற்றி அடிக்கடி பேசினார்கள். உபதேசியார் அந்தப் பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டு ஊர் சுற்றி உபதேசப் போர் தொடுத்து வேத சபைகளைக் கட்டினார். ஏழாயிரம்பண்ணை பனையடிப்பட்டியில் தங்கிப் பக்கத்து ஊர்களில் பாவப்பட்ட மக்களை மீட்கப் பாடுபட்டார்.

## 5. முதல் கனி

சிவகாசியில் முதலில் விழுந்த வேதக் கனி அருணாசல நாடார். அவருக்குப் பூர்வீகம் சுரண்டை. குடும்பத்துடன் சிவகாசியில் குடியிருந்தார். சரவண நாடாருக்கு அருணகிரி நாடார் அருணாசல நாடார் என்று இரு குமாரர்கள். அருணகிரி நாடார் மதுரைப் பக்கம் போயிருந்தபோது பசுமலை வேதக்காரர்கள் அவரிடம் லூக்கா எழுதின சுவிசேஷத்தைக் கொடுத்தார்கள். அவருக்கு அதைப் படிக்க மனசில்லை.

''இவங்களுக்கு வேலையே இல்ல.''

ஆனாலும் அதைப் பத்திரமாக வைத்திருந்து தம்பி அருணாசல நாடாரிடம் கொடுத்தார். அருணாசல நாடார் அதை உன்னிப்பாகப் படித்தார். ஏசுவின் பாடுகள் மனசுக்குள் ஏறஏறக் கண்கலங்கிவிட்டார். அந்தக் கணத்தில் ஏசுவை ஏற்றுக்கொண்டார்.

அவரது புதிய வெளிப்பாடு குடும்பத்தில் மனைவி தாய் தகப்பன் அண்ணன் அனைவருக்கும் உடன்பாடில்லை. வீட்டை விட்டுத் துரத்திவிட்டார்கள். அவருக்குரிய சொத்துகளை அபகரித்துக்கொண்டார்கள். அவர் மனைவி மக்களைப் பிரிந்து கர்த்தரை நாடிப் போனார்.

அவருக்கு நெருங்கிய சினேகிதர்கள் நாலு பேர் உண்டு. புண்ணிய நாடார் அய்ய நாடார் கட்டக்குமார நாடார் ராம நாடார். அவர்களுக்கு ஏசுவின் அற்புதங்களைச் சொன்னார். அவர்களும் ஏசுவை ஏற்றுக்கொண்டார்கள்.

சிவகாசி வண்டிப் பேட்டையில் வியாபாரிகள் கூட்டம் நிறைந்திருக்கும். அவர்களில் வேதக்காரர்களும் உண்டு. பெரும்பாலும் தெற்குச் சீமையிலிருந்து வரும் கருப்பட்டி வியாபாரிகள். அவர்கள் ஓய்வு நாட்களில் பேட்டைக்குள்ளேயே ஒதுங்கலான இடத்தில் ஆராதனை நடத்துவார்கள். அருணாசல நாடாரும் சினேகிதர்களும் ஆராதனையில் கலந்துகொள்வார்கள்.

சில சமயம் ராக்லாந்தின் வீடு தேடிச் சென்று அவருடன் நிறையப் பேசிவிட்டு வருவார்கள். மனசுக்குத் தெம்பாக இருக்கும்.

அவர்கள் உடனடியாக ஏசுவின் விசுவாசிகளாக மாற விரும்பினார்கள். உள்ளூர்ச் சாமியாரைச் சந்தித்து தங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். ஆறு மாசம் அதாவது கர்த்தரைக் கற்றுத் தெளியும் வரை காத்திருக்கணுமென்று சாமியார் சொல்லிவிட்டார். அவர்களுக்குப் பொறுமையில்லை. வத்ராப்புச் சாமியார் அருளப்பரிடம் சென்று தங்கள் விருப்பத்தைச் சொன்னார்கள். அவர் சந்தோசப்பட்டார். அருணாசல நாடாருக்கு மட்டும் ஞானஸ்நானம் கொடுத்து வேதநாயகம் என்று பேர் வைத்தார். அப்போது அருணாசல நாடாருக்கு நாற்பது வயசு.

அஞ்சு சினேகிதர்களும் சேர்ந்து சிவகாசியை அடுத்த மாதாங்கோயில்பட்டியில் ஊர்ச் சபை அமைத்தார்கள். அதன் பேர் ஞானத் திருச்சபை. பிறகு வேதநாயகத்தின் சொந்தப் பணத்திலிருந்து நூறு ரூபாய்க்கு நிலம் வாங்கி இருநூறு ரூபாயில் சிறிய வேதக் கோயில் கட்டினார்கள். அதன் பேர் எருசலேம்.

கோயிலைப் பிரதிஷ்டைசெய்ய யாரை அழைப்பது. பெரிய கோயிலென்றால் சாமியாரை அழைக்கலாம். யோசித்து மரியான் உபதேசியாரை அழைக்க முடிவுசெய்தார்கள். உபதேசியார் பனையடிப்பட்டியிலிருந்து பல மைல் நடந்து வந்து பிரதிஷ்டை செய்துவைத்தார். அப்போது அவர் பாடிய கீர்த்தனத்தில் எல்லாரும் கட்டுண்டார்கள்.

''சுந்தரப் பரமதேவ மைந்தன் யேசு கிறிஸ்துவுக்குத்
தோத்திரம் புகழ்ச்சி நித்திய கீர்த்தனம்.

சத்தியத் தலைவர்களும் வித்தகப் பெரியார்களும்
சங்கத்தோர்களும் கிருபை தங்கி வாழவே
எத்திசை மனிதர்களும் பக்தர் விசுவாசிகளும்
ஏக மிகுந்த சமாதானமாக வாழவே
உத்தம போதகர்களும் சத்தியத் திருச்சபைகளும்
உயர்ந்து - வாழ தீயோன்
பயந்து - தாழ மிக
நயந்து கிறிஸ்துவுக்கு ஜெயந்தான் நயந்தான் என்றும்.''

வேதநாயகத்துக்கும் சினேகிதர்களுக்கும் சோர்வெல்லாம் பறந்தோடிவிட்டது. சாரீர சுத்தமான சங்கராபரண ராகம் அவர்களை எங்கோ சஞ்சரிக்கச் செய்தது.

பிறகு கட்டக்குமார நாடாரும் அய்ய நாடாரும் வெளிப்படையாகவே ஞானத் திருச்சபையில் சேர்ந்தார்கள். வேதநாயகத்தின் பேர் வேதபோதகம் என்றாகிவிட்டது. அவர் ஒரு விதவையின் மூத்த மகளைக் கலியாணம் செய்துகொண்டு சந்தோசமாகக் குடும்பம் நடத்தினார்.

ஊர் சுற்றிப் போர் தொடுக்கும் ஊழியத்தின் பலனாக ராக்லாந்து பல சிரமங்களுக்கிடையில் கல்போது என்ற சமீன் கிராமத்தில் முதலாவதாக வேத சபையைக் கட்டியிருந்தார். இருபது பேருக்கு மேல் ஞானஸ்நானம் கொடுத்திருந்தார். இந்த ஊழியத்தின் மூலம் ஞானஸ்நானம் பெற்றவர்களை வழிநடத்துவதற்கென்று சார்லஸ் எவ்ரி சாமியாராக வந்தார். இருபத்தஞ்சு வயசு வாலிபர். சிவகாசியில் தங்கி ஊழியம் செய்தார்.

## 6. வேதச் சாதி

வேதக்காரர்கள் சகல காரியங்களிலும் சாதிப்படி பிரிந்தே ஈடுபட்டார்கள். மேல்சாதி மேல்சாதியாகவே இருந்தது. வேதத்துக்கு மாற விரும்புகிறவர்கள்கூட சாதியைக் காரணம்காட்டித் தயங்கினார்கள். மேல்சாதிக்காரர்கள் சொன்னார்கள்.

''ஏசுவ ஏத்துக்கிட்டு நாங்க வேதத்துக்கு வரத் தயாரா இருக்கொம். ஆனா அங்கருக்கிற பள்ளுப் பறச் சனங்களோட சமதையா உக்காந்து எப்படிச் சாமியக் கும்புட முடியும். நீங்களே சொல்லுங்க.''

''பறச் சனங்களுக்காகத்தான வேதமே இருக்குது.''

பறையர்கள் சொன்னார்கள்.

''நாங்க சக்கிலியரோட நெரப்புக் கலப்பா இருக்க முடியாது.''

சில வேதக்காரர்கள் வேதத்துக்குப் புறம்பானவர்களாக இருந்தார்கள். விக்கிரகங்களை வைத்துத் தேரிழுக்க இந்துக்காரர்களுக்கு உதவி செய்தார்கள். குடித்தார்கள். திருடினார்கள். பொய் சொன்னார்கள்.

தடம் மாறித் தடுமாறும் வேதக்காரர்களை நினைத்து மரியான் உபதேசியார் மனசு வெதும்பினார். அடடா இது நம்மைப் பீடித்த குஷ்ட ரோகத்தைவிடக் கடுமையான நோயாக இருக்கிறதே. இதை ஒழிக்காமல் வேதத்தை வளர்த்தெடுக்க முடியாது. சபைகளைச் சீர்திருத்தியாகணும். விசுவாசிகளுக்கு உண்மையான வேதத்தை உணர்த்தியாகணும். அப்போதுதான் அல்லவை தேய்ந்து நல்லவை பெருகும். பாடி ஆற்றுப்படுத்த முயன்றார்.

''ஜாதிபேதம் கொள்வார் அல்லவோ - கிறிஸ்தவர்கள்
தாமே தெய்வ ஜாதி அல்லவோ
நீதி பரிசுத்தர் அல்லவோ மகிமையுள்ள
நேசமிகு இராஜா அல்லவோ
வேதனையை உண்டாக்கும் ஜாதி வேற்றுமையை விட்டு மறை
ஓதியபடி எல்லாரும் உத்தம கிறிஸ்தோராகப்
புத்தியாய் நடந்து வாருங்கள்.''

இது கண்டு மேல்சாதிச் சபையோர்கள் முகம் வாடி ஊடினார்கள். உபதேசியார் பாடினார்.

''புத்தியாய் நடந்து வாருங்கள் - திருவசனப்
பூட்டைத் திறந்து பாருங்கள்
சத்தியத்தைப் பற்றிக்கொண்டு
தன்னைச்சுத்தி பண்ணிக்கொண்டு
நித்தமும் ஜெபம் தருமம்
நீதிசெய்து பாடிக்கொண்டு.''

அவருக்கும் ஒரு சபை மூப்பருக்குமிடையே கருத்து வேறுபாடு இருந்தது. ஒரு ஞாயிற்றுக்கிழமை ஏற்பாடு செய்திருந்த திருவிருந்தின்போது இது வெளிப்படையானது. ராப்போசனத்தைத் திருப்பலியில் நினைவுகூர்ந்து ஏசுவின் திருவுடலையும் ரத்தத்தையும் அடையாளப்படுத்தும் விதமாக நற்கருணை வழங்கும் நல்லதோர் வைபவம். வேதக்காரர்கள் யாவரும் வேறுபாடுகளை மறந்தும் துறந்தும் ஒருங்கே இணைந்து வேதநாயகனைத் துதிக்கும் பொன்னாள்.

சபை மூப்பர் விருந்தில் கலந்துகொள்ள மறுத்தார். உபதேசியார் உளைந்தார். ஒப்புரவில்லாமல் தானும் எப்படி விருந்தில் கலந்துகொள்வது. இருவரும் இணைந்து சென்றால்தானே சபையோர் சந்தோசமடைவார்கள். விருந்து சிறப்பாக நடக்கும். அதுதானே தேவனுக்கு உகந்தது. மூப்பரின் வீடு தேடிப் போய் முற்றத்தில் நின்றுகொண்டு உணர்ச்சி பொங்க அழைத்தார்.

''கர்த்தரின் பந்தியில் வா - சகோதரா
கர்த்தரின் பந்தியில் வா

கர்த்தர் அன்பாய்ச் சொந்த ரத்தத்தைச் சிந்தின
காரணத்தை மனப்பூர்வமாக எண்ணி
(கர்த்தரின்...)

ஜீவ அப்பம் அல்லோ - கிறிஸ்துவின்
திருச்சரீரம் அல்லோ
பாவமனம் கல்லோ - உனக்காய்ப்
பகிரப்பட்ட தல்லோ
தேவகுமாரனாம் ஜீவ அப்பத்தை நீ
தின்று அவருடன் என்றும் பிழைத்திட

*(கர்த்தரின்...)*

வேத அன்பைப் பாரு - கிறிஸ்துவின்
சீஷர் குறை தீரு
பாவக் கேட்டைக் கூறு
பந்திதனில் சேரு
சாவுக்குரிய மாபாவமுள்ள லோகம்
தன்னில் மனம்வைத்து அன்னியன் ஆகாதே

*(கர்த்தரின்...)*

அன்பின் விருந்தாமே - கர்த்தரின்
ஐக்யப் பந்தியாமே
துன்பம் துயர் போமே - இருதயம்
சுத்த திடனாமே
இன்பம்மிகும் தேவ அன்பின் விருந்துக்கு
ஏது தாமதமும் இல்லாது இப்போதே வா.

*(கர்த்தரின்...)*''

மூப்பர் கண்கலங்கினார். தவறை உணர்ந்தார். தலைகுனிந்தார். வெளியே வந்து உபதேசியாரிடம் மன்னிப்பு வேண்டினார். இருவரும் ஒருவராகக் கர்த்தரின் பந்தியில் கலந்துகொள்ளக் களிப்புடன் நடந்தார்கள்.

மரியான் உபதேசியார் ஏழாயிரம்பண்ணையில் தங்கியிருந்தார். அதுக்கும் மேற்கே குளக்கட்டாகுறிச்சி. பெரிய ஊர். மேல்சாதியினரின் ஆதிக்கத்திலிருந்த பறைக்குடிச் சனங்களை மனந்திரும்ப வைத்து ஏசுவின் விசுவாசிகளாக்கினார். அவர்களுக்காகப் பரிசுத்த பவுலின் பேரால் சிறிய கோயில் கட்டித்தந்தார். கூரைக் கட்டடம். இது மேல்சாதி இந்துக்காரர்களுக்குப் பொறுக்கவில்லை. நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டார்கள். கூட்டம் உபதேசியாரைத் தேடியது.

''அது எவண்டா ஒவதேசியாரு. புடிச்சுத் தீயில போட்டுப் பொசுக்குங்க.''

''குட்டம் வந்த பய கோயிலு கெட்டித்தாரானாம். சாதிகெட்ட பயக கும்புடுறானாம்.''

''அவன் கண்ணத் தோண்டிக் காத அறுத்து மொட்டக் கைய வெட்டி யெறியணும்.''

''மொதல்ல நாக்க அறுக்கணும்.''

ஆயுதங்களுடன் தேடிவிட்டுப் போய்விட்டார்கள்.

''எண்ணைக்கிருந்தாலும் சிக்காமயா போயிருவ.''

இத்தனைக்கும் உபதேசியார் சினேகிதர் வீட்டுப் பரண்மீது ஒளிந்துகொண்டிருந்தார். நல்ல வேளை கோயில் நெருப்பு வீடுகளைத் தீண்டவில்லை.

கொஞ்ச நேரத்தில் கோயில் எரிந்து முடிந்துவிட்டது. கட்டமண்ணைப் பார்த்துச் சனங்கள் மிரண்டுபோய் நின்றிருந்தார்கள். ஒளிந்திருந்த உபதேசியார் இறங்கி வந்தார். கோயிலின் கோலத்தைப் பார்த்ததும் நெஞ்சம் குமுறியது. நிரா தரவான நிலையில் கண்ணீர் மல்க ஆண்டவரிடம் மன்றாடினார்.

''என் ஐயா தினம் உனை நம்பி நான்
இருப்பதறியாயோ - மன
தெங்கும் என் கலி நீங்கும்படி நல்
பாங்கு புரியாயோ.

உன்னையல்லாமல் பின்னை வேறெனக்
குதவி இல்லையே - என
துற்ற ஜனமும் சுற்றத்தோர்களும்
உரிமை இல்லையே
பின் எவரிடம் போவேன் சொல் அது
பெரிய தொல்லையே
பேசும் விசுவாசம் வளர்
நேசக் கதிர்வீச அருள்.''

குஷ்ட வாய் தொடுத்த முகாரியில் கரைந்து அழாதவர் இல்லை.

ஏசுவின் விசுவாசிகளை அவர் கைவிட்டுவிடவில்லை. பணம் திரட்டிப் புதுக் கோயில் கட்டிப் பிரதிஷ்டைசெய்தார். கருகிப்போயிருந்த முகங்கள் களையில் மலர்ந்தன. அவர்களை விட்டுப் பிரியும்போது உடம்பிலும் மனசிலும் இருந்த வலி பிரிந்துவிட்டது.

## 7. காட்டு வழி நெடுக...

மரத்தடியில் இளைப்பாறிக்கொண்டிருந்த ராக்லாந்து பெரும்பாதையைத் திரும்பிப் பார்த்தார். மக்கள் கூட்டமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். தோளில் கலப்பைகளுடன் உழவர்கள். கோணிச் சாக்கைத் தூக்கிக்கொண்டு வியாபாரி கள். ஆட்டு மந்தைகளை ஓட்டிக்கொண்டு மேய்ப்பர்கள். தலையில் கஞ்சிக் கலயத்துடன் பெண்கள். அவரவர் பாட்டுக்கு வேலைகளுக்குக் கிளம்பிவிட் டார்கள்.

இத்தனை வருசமாக ஊணுறக்கமின்றி வேத போதகர்கள் எடுத்துரைத்த தெல்லாம் மறந்துவிட்டார்கள் கடவுள் என்ற ஒரே வார்த்தையைத் தவிர. தங்களைப் பற்றிக் கொஞ்ச நேரமாவது சிந்தித்துப்பார்ப்பதாகத் தெரியவில்லை. இவர்களை எப்படிக் கரையேற்றுவது. அவருக்கு மலைப்பாகக்கூட இருந்தது. ஆண்டவரைத் துணைக்கு அழைத்துக்கொண்டு நடந்தார்.

சாலையோரம் ஒரு கல் தூண்மீது ஏற்றிவைக்கப்பட்ட விளக்கு கவலை யற்று எரிந்துகொண்டிருந்தது. அவர் அதனருகில் சென்றார். சுற்றிச் சூழ்ந்திருக்கும் தெய்வச் சிலைகளைப் பார்த்துவிட்டுப் பூசாரியிடம் கேட்டார்.

''யார் இந்தத் தெய்வங்கள். இவர்களுக்கு விளக்கேற்றி வைப்பதால் என்ன பயன்.''

பூசாரி பெருமையாகச் சொன்னார்.

''வெளக்கேத்துனா எங்களோட நானூத்தி நாப்பத்தெட்டு நோயும் கொண மாயிரும்.''

''அப்படியென்றால் சுற்றுக் கிராம மக்களுக்கு நோயே வர வேண்டிய அவசியமில்லை என்று சொல்லுங்கள்.''

ஒரு நாள் கல்போது கிராமத்தருகே நடந்து சென்றபோது தொலைவில் ஒரு காட்சியைக் கண்டார். வயல் வரப்பு மரத்தடியில் ஒரு பீடம். அதில் சிலர் வழி பட்டுக்கொண்டிருந்தார்கள். அவர் அங்கே மூச்சுவாங்க ஓடினார். மூணு ஆண் களும் நாலு பெண்களும் கையில் வேப்பிலைக் கொத்தை உயர்த்திப் பிடித்து வணங்கியபடி முன்னும் பின்னுமாகப் பீடத்தைச் சுற்றி வந்தார்கள். பீடத்தருகே கல்சிலைகள் நின்றிருந்தன. அவற்றுக்கு முன்னால் இருபதுக்கும் மேற்பட்ட மண் குதிரைகள்.

அவர் அவர்களிடம் கெஞ்சினார்.

''கல் சிலைகளை வணங்காதீர்கள். சூரியனைப் படைத்தவரும் நமக்கு ஆகாரமும் உடையும் தருகிறவருமான பரலோகத்தின் கடவுளை வழிபடுங்கள்.''

அவர்கள் சொன்னார்கள்.

''மழ ஒண்ணுதான் எங்களுக்கு இப்போதைக்குத் தேவையாருக்கு. இதுதான் எங்க தெய்வம். நீங்க இந்த எடத்த வுட்டுப் போயிருங்க.''

மறுபடியும் சுற்ற ஆரம்பித்தார்கள். அவர் மன்றாடினார்.

''வழிபடுவதை நிறுத்துங்கள்.''

''நீங்க போக வேணாம். நாங்களே போறொம்.''

அவர்கள் வீடு திரும்பினார்கள்.

கல்போது கம்மாயில் மராமத்து வேலை நடந்துகொண்டிருந்தது. வேலை செய்த ஏழைச் சனங்கள் அவரைக் கண்டதும் ஓடிவந்து முறையிட்டார்கள்.

''சமீன்தாரு எங்களுக்கு வேல குடுக்க மாட்டங்காரு சாமி.''

''பொம்பளைக புஞ்சைக்குப் பருத்தியெடுக்கப் போக முடியல.''

''எங்க சோளக் காடெல்லாம் அழிச்சுப்புட்டாக.''

''எங்களப் பயமுறுத்தி அடிக்க வாறாக.''

''எங்க கழுத்தப் புடிச்சு நெறிக்கிற மாதிரி இருக்கு. ஆருட்டப் போயிச் சொல்றதுன்னு தவிச்சுக்கிட்டுருக்கொம்.''

''நீங்க அடிக்கடி எங்களுக்கு வேதத்தக் கத்துக்குடுக்க வாறீக. ஆனா நாங்க சொல்றதக் கவனிக்காமப் போயிறீக.''

அவர் எல்லாவற்றையும் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு ஒரு கேள்வி கேட்டார்.

''வியாதி பீடித்த உங்கள் குழந்தைகளுக்கு இனிப்புக் கொடுக்க விரும்புவீர் களா இல்லை மருந்தா.''

''மருந்து.''

இன்னொரு குரல் வந்தது.

''இப்ப எங்களுக்குப் புரிஞ்சுபோச்சு. எங்களப் பாவ வியாதி பீடிச்சிருக்கு. எங்களுக்கு வந்திருக்கிற எடஞ்சல்கள மருந்துபோல எடுத்துக்கிறணும்.''

அவர் தேற்றினார்.

''வளமான வாழ்க்கை நாம் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக ஒத்துக்கொள்ளக் கூடியதாக இருந்தாலும் அது நம்மை அழித்துவிடும். ஆனால் துன்பம் நமக்கு வெறுப்பூட்டுவதாக இருந்தாலும் அது நன்மை பயக்கும்.''

கொஞ்ச நாள் கழித்து அதே சனங்கள் சந்தோசமாகச் சொன்னார்கள்.

''கடவுள் கிருபையால சமீந்தாரு இப்ப எங்களுக்கு வேல குடுக்காரு சாமி.''

அவர் ஊக்குவித்தார்.

''தொடர்ந்து நீங்கள் ஏசுவை நம்பி அவரை நோக்கி ஜெபித்தால் அவர் உங்களை ஆசிர்வதிப்பார்.''

''அப்படியே செய்றொம் சாமி.''

''கர்த்தர்மேல் நம்பிக்கை வைக்கிறவன் பாக்கியவான்.''

அவர்களும் அதே வசனத்தை மாறிமாறி முழங்கினார்கள்.

சமீன்தார்கூட ரெண்டு மூணு முறை அவரிடம் பேச்சுவாக்கில் கூறியதுண்டு.

''நானும் வேதத்துல சேந்துறலாம்னு இருக்கென். சனங்களப் போல மாறிக்கிற வேண்டியதுதான்.''

''ஒரு ஜமீன்தார் ஏசுவின் ராஜ்யத்துக்குள் வருவதை வரவேற்கிறோம்.''

ஆனால் அவர் மேற்கொண்டு பேசியதிலிருந்து அவரது விருப்பத்துக்கு ஒரு உள்நோக்கம் இருப்பது தெரியவந்தது. அடடா நம்மை வைத்து இவர் சில ஆதாயங்களை அடையத் திட்டம்போடுகிறார். மேலும் பல சொத்துகள் கிடைக்கணும். கோர்ட்டிலிருந்து வழக்குகளில் சாதகமான தீர்ப்புக்கள் வரணும். வெள்ளைக்காரச் சர்க்காருடன் நெருக்கம் ஏற்படுத்திக்கொள்ளணும். சலுகை களைப் பெறணும். பக்குவமாகத் தவிர்த்துவிட்டார்.

ஒரு நாள் அவரது கூடாரம் நிறையச் சனங்கள் கூடிவிட்டார்கள். அவர் களிடமிருந்து கேள்விமேல் கேள்விகள் வந்துகொண்டேயிருந்தன.

''நாங்க எப்பயுமே வேதத்துக்கு மாற முடியாது. அது எங்களுக்குப் பெரிய சொமையாப் போயிரும். நாங்க எங்க தெய்வத்தக் கும்பிடும்போது ரெண்டு கையவும் கூப்பி முன்னால ஒசத்துறதோட சரி. அதோட வேல முடிஞ்சது. வேதத் துக்கு வந்தா ரெம்ப நேரம் மொழங்காலு போட்டுச் செபம் பண்ண முடியாது. காலு வலிக்குமில்லையா.''

''வேதத்துக்கு வந்தா கலியாணம் முடிக்கப்புடாது. வெத்தல பாக்குப் போடப் புடாது. ஒங்களப்போல ஊருஊரா அலஞ்சு திரியணும். மத்தவுகளுக்கு ஒதவி செய்ய முடியாது. படிக்கத் தெரியணும். அப்படித்தான சாமி.''

''எங்களுக்கு முந்தின தலைமொறைக செலைய வச்சுக் கும்புட்டாக. அத நாங்க கும்புடுறது தப்பா.''

''கடவுளப் பாத்தது ஆரு. கடவுள் ஏன் கல்லப் படச்சாரு. செல செய்றதுக் காகக்கூட இருக்கலாமில்லையா.''

''கடவுள் எங்க இருக்காரு. நான் பாக்க முடியாற ஒண்ண எப்படிக் கும் புடுறது.''

''கடவுள் ஏசு இந்த ரெண்டுக்கும் அர்த்தமென்ன.''

''ஏசுநாதருக்கு வாகனம் எது.''

‘‘பரலோகம் இங்கருந்து எவ்வளவு தூரமிருக்கும்.’’

‘‘தன்னையே காப்பத்திக்கிற முடியாற ஏசுவால மத்தவுகள எப்படி ரட்சிக்க முடியும்.’’

‘‘ஒலகத்துச் சனங்க செஞ்ச பாவத்துக்காக ஏசுவத் தண்டிக்கிறது என்ன ஞாயம்.’’

‘‘பாவம்னா என்ன. அதோட உருவம் என்ன.’’

‘‘மோட்சம் நரகத்த ஆரு பாத்தது.’’

அவர் எல்லாக் கேள்விகளுக்கும் பொறுமையாகப் பதில் சொன்னார்.

கேள்விகளைப் போலவே சாப்பாடும் அவருக்குப் பழகிவிட்டது. வயிறு ஒரு பொருட்டே அல்ல. காலணாவுக்குப் பொரிகடலை. காலணாவுக்கு அவல். காலணாவுக்குப் பழம். அதுக்கு மேல் நாக்கு கேட்காது. ஒரு குடிசையில் தண்ணீர் கேட்டால் கிடைக்கும். சில சமயம் சிரட்டையில் உப்புப் போட்ட வடிதண்ணீர் கிடைக்கும். அதுவும் ருசியாக இருக்கும்.

## 8. இதோ வெட்டுங்கள்

புளியங்குடியில் ஒரு கலியாணத்துக்குப் போக வேண்டியிருந்தது. ராக்லாந்து முதல் நாள் சாயங்காலமே சிவகாசியிலிருந்து வில்வண்டியில் கிளம்பிவிட்டார். இடைவழியில் வண்டிச் சக்கரம் கழண்டுவிட்டது. வண்டியைப் பழுதுபார்க்க முடியவில்லை. இருட்டிவிட்டது.

கும்மிருட்டில் துழாவிக்கொண்டு நடக்கத் தொடங்கினார். வாய் செபித்துக் கொண்டேயிருந்தது. ரெம்பத் தூரம் கடந்தாயிற்று. கண்ணைக் கசக்கிக்கொண்டு ஏறிட்டுப் பார்த்தார். பெரிய தேர் தெரிந்தது. சிவகாசித் தேரேதான்.

அவர் தளரவில்லை. முன்னே நடந்தார். புதர்களுக்குள் விழுந்து கல் இடறி முள் குத்திச் சேற்றுக்குள் காலை விட்டுத் திணறும்போது விடியக்காலமாகிவிட்டது. காட்டுக்குள்ளேயே சுருண்டு விழுந்து கண்ணயர்ந்துவிட்டார்.

காலையில் எழுந்து நடையைத் தொடர்ந்தார். புளியங்குடி கண்ணுக்குத் தெரியவில்லை. மழை பிடித்துக்கொண்டது. பொதியப் பிள்ளை கோட்டூரை யடைந்து மழைக்கு ஒதுங்கி ஒருவரிடம் கேட்டார்.

‘‘புளியங்குடி எவ்வளவு தூரமய்யா.’’

‘‘கிட்டத்தான். இப்படியே போனா அரியூரு வரும். அங்க வண்டியிருக்குது. வண்டிக்காரங்கிட்ட ஒங்களப் பத்திச் சொல்லீருக்கென். அவன் கூட்டீட்டுப் போவான்.’’

அவன் நக்கலாகச் சொன்னதை நம்பி நடந்து ஏமாந்துபோனார். நல்ல வேளை மலையடிக்குறிச்சிப் பெரியவர் ஒருவர் உபசரித்துத் தனது வண்டியில் புளியங்குடிக்கு அனுப்பிவைத்தார். சரியான நேரத்தில் கலியாணத்துக்குப் போக முடிந்தது.

சிவகாசியிலேயே ஒரு சோதனை வந்தது. அன்றைக்குத் தேர்த் திருவிழா. ஒருவர் வந்து அவரை அழைத்தார்.

''சாமி நீங்க அவசியம் வந்து தேர்வடம் புடிக்கணும்.''

''என்னால் வர முடியாதய்யா.''

''வரலன்னா இந்த அருவாளால வெட்டி அம்மனுக்குப் பலிகுடுத்துருவொம்.''

வந்தவர் அரிவாளை ஓங்கிப் பயமுறுத்தினார். அவர் அசையவில்லை.

''அய்யா குடிப்பவனுக்கும் வெறிப்பவனுக்கும் வேசித்தனம் செய்பவனுக்குங்கூட இங்கே எந்த எதிர்ப்புமில்லை தடையுமில்லை. ஜீவனுள்ள ஆண்டவரை வழிபடும் என்னை வெட்ட வந்துவிட்டீர்களே. இதோ வெட்டுங்கள்.''

தைரியமாகத் தலை தாழ்த்தி நீட்டினார். வந்தவர் தலைகுனிந்தபடி போய்விட்டார்.

சிவகாசியில் அவரை அன்புடன் நேசித்தவர்களும் உண்டு. அவர்களில் முக்கியமானவர் அய்ய நாடார். செல்வாக்குள்ள முதலாளி. அவரது தெரு முனைப் பிரசங்கத்தைக் கேட்டு ஏசுவை ஏற்றுக்கொண்டவர். அதுக்கு முந்தி இந்துச் சாமியை முழுமூச்சாக ஆராதித்தார். மாரியம்மன் கோயில் தேர் எப்படியிருக்கணுமென்று யோசனை சொன்னவர். தேர் செய்யத் தாராளமாக உதவியவர்.

ஏசுவை ஏற்றுக்கொண்டபின் விக்கிரக வழிபாட்டை அறவே விட்டுவிட்டார். சிவகாசியில் நடக்கும் தேவ ஆராதனைகளில் கலந்துகொள்வார். ஆனாலும் உறவினரிடமும் சினேகிதரிடமும் ஒரு பயமிருந்தது. யாருக்கும் தெரியாமல் தனிமையில் வேதாகமத்தைப் படித்துச் செபித்தார். வீட்டில் வாசிக்க முடியாது. சினேகிதரின் கடைகளுக்குச் சென்று வாசிப்பார்.

ஒரு முறை ராக்லாந்து வழிபாட்டை நடத்தினார். அது முடிந்ததும் அய்ய நாடார் அவரிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தார்.

''சாமி நான் ஒங்களோட சேந்து தனியாச் செபம் பண்ணணும்.''

''அதுக்கென்ன. என்னுடன் வாருங்கள்.''

இருவரும் அவரது வீட்டுக்குச் சென்று கூட்டாகச் செபித்தார்கள்.

சக போதகர்கள் தாங்கள் சந்தித்த அனுபவங்களை ராக்லாந்துடன் பரிமாறிக்கொள்வதுண்டு. ஒருவர் சொன்னார்.

''ஒரு கிராமத்துக்குப் போகும்போது வயலில் வேலை செய்துகொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்தேன். அவரிடம் நற்செய்தியை அறிவிப்பதற்காக அருகில் சென்றேன்.''

''என்ன செய்தி சொன்னீர்கள்.''

''நான் உங்களுக்கு ஒரு நல்ல சாமியைப் பற்றிச் சொல்ல வந்திருக்கிறேன். நீங்கள் அவரை நம்பி வழிபட்டால் உங்கள் சாமிகளால் எந்த விதமான தீமைகளும் உங்களுக்கு வராதபடி காப்பாற்றுவார் என்று சொன்னேன்.''

''அவர் அதை ஏற்றுக்கொண்டாரா.''

''இல்லையே.''

''என்ன சொன்னார்.''

''அப்படியானால் அந்த நல்ல சாமியை ஒரு சாக்கில் போட்டுக் கட்டி என் கையில் கொடுக்க முடியுமா என்று கேட்டாரே பார்க்கலாம்.''

ராக்லாந்து துலுக்கர்களுடனும் வாதம் புரிந்தார். சில துலுக்கர்கள் வேதத்தைப் பற்றி நன்றாக அறிந்திருந்தார்கள். அவர்கள் சொன்னார்கள்.

''எங்கள் நபியைவிட உங்கள் ஏசு பெரிய அற்புதங்கள் நிகழ்த்திவிடவில்லை.''

ராக்லாந்து தன்னிடமிருக்கும் குரான் நூலை எடுத்துப் படித்துக் காட்டினார்.

''தன்னிடம் அற்புதங்கள் செய்யும் சக்தி இல்லையென்று நபியே கூறி யுள்ளாரே.''

''ஏசு செய்த அற்புதங்களுக்கு என்ன ஆதாரம்.''

''தனக்கு மன்னிப்பு அவசியம் என்று கூறியுள்ள நபி எப்படிக் கடவுளுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தராக இருக்க முடியும். ஏசுவின் வாழ்க்கை குற்றமற்றது.''

''நீங்கள் நபியின் பரிசுத்த குணநலன்களைக் குறைத்து மதிப்பிடுகிறீர்கள். நாங்களோ ஏசுவை தீர்க்கதரிசியாக மதிக்கிறோம். வேத நூல்கள் ஏசுவின் மரணத் துக்குப்பின் எழுதப்பட்டன. ஆனால் குரான் அப்படியில்லை. நபிக்கு காபிரியேல் தூதன் சொல்லச்சொல்ல எழுதப்பட்டது. யூதர்களின் கொடூரமான அநீதியான செயல்தான் ஏசு சிலுவையில் மரித்தது. ஏசு சிலுவை மரணத்தை வலிய ஏற்றுக் கொண்டார் என்பதை ஏற்க முடியாது.''

''எப்படிச் சொல்கிறீர்கள்.''

''ஏசு சிலுவையில் மரிக்கவில்லை என்று குரானில் சொல்லப்பட்டிருக்கிறது. சிலுவையில் மரிக்காமல் பத்திரமாக நாலாம் வானத்துக்கு ஏறிச் சென்றார். அவருக்குப் பதிலாக அவரது பகைவர் ஒருவர் சிலுவையில் அறையப்பட்டார்.''

''இதை என்னால் ஒத்துக்கொள்ள முடியாது.''

''ஏசுவின் பலியைவிட ஈசாக்கின் பலியே சிறந்தது.''

''ரத்தம் சிந்தாமல் பாவமன்னிப்பு இல்லை.''

''கடவுள் எல்லாச் சட்டங்களுக்கும் மேலானவர். சட்டங்கள் கடவுளுக்குப் பொருந்தாது.''

ஒருவர் கருத்தை மற்றவர் ஏற்றுக்கொள்ளலாமலேயே வாதம் தொடர்ந்தது.

## 9. ஆறுதல் அடை மனமே

சிவகாசிச் சாமியார் சார்லஸ் எவ்ரிக்கு காலரா எனக் கேள்விப்பட்டதும் ராக் லாந்து பதைபதைக்க ஓடினார். அதைப் பார்த்த சனங்கள் பரியாசம் பண்ணி னார்கள்.

''உசிருக்குப் பயந்து தொர ஓடுறான் பாரு.''

''எங்கருந்தோ வந்து நம்ம உசிர வாங்குறான்.''

''இவங்கள வெரட்டியடிக்கணும்.''

அவர் போய்ச் சேரும்வரை எவ்ரி காத்திருந்தார். அவரது கைகள் தூக்கி யணைக்கும்போது கர்த்தருக்குள் மரித்துவிட்டார். சின்ன வயசு. இன்னும் எவ் வளவு காலம் ஆண்டவருக்கு ஊழியம் செய்ய வேண்டியவர். வந்த பதினஞ்சே மாசத்தில் பரலோகம் போய்விட்டாரே. சரீரத்தைப் பனையடிப்பட்டிக்குக் கொண்டுபோய்க் கோயிலுக்கருகே அடக்கம்செய்தார்கள்.

எவ்ரிக்குப் பின்னர் பேரன் பிரக் சிவகாசிக்கு வந்தார். சுரண்டையில் போதக ராக இருந்தபோது மனைவியை இழந்தார். குழந்தைகளை இங்கிலாந்தில் படிக்க

வைத்துவிட்டு மறுபடியும் சுரண்டைக்கே வந்துவிட்டார். கொஞ்ச நாள்தான் சிவகாசியில் இருந்தார். காலரா நோய் அவரையும் விட்டுவைக்கவில்லை. பனை யடிப்பட்டியிலேயே எவ்ரிக்குப் பக்கத்தில் ஓய்வெடுக்கச் சென்றுவிட்டார்.

நால்வர் படையில் ராக்லாந்துடன் டேவிட் பென்னும் மெடோசும் அருகி லிருந்தார்கள். கொர்னேலியு ஸ்ரீவில்லிப்புத்தூரில் தங்கியிருந்தார். அல்லும் பகலும் ஓய்வு ஒளிவில்லாமல் சுற்றித் திரிந்ததால் ராக்லாந்தின் உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டுவிட்டது. தன்னையும் ஆண்டவர் அழைத்துக்கொண்டால் வட நெல்லைப் பகுதி என்னாகும் என்று கவலைப்பட்டார். உடல் தளர்ந்த பின்னும் தேவனின் சேதியைச் சுமந்துகொண்டு ஊர்களில் சுற்றித் திரிந்தார். எதிர்ப்பு களைச் சந்தித்தார்.

எதிர்கோட்டையில் பிரசங்கம் செய்தபோது ஒரு பிராமணர் வசைபாடிக் கொண்டே தன் செருப்பைக் கழற்றி அவரை அடிக்க வந்தார்.

''இந்தக் கிராமத்துல கால்வாசி நெலம் நேக்குண்டு. நீ என்ன நெனச்சிண்டு இங்க வந்து ஏசுவப் பத்திப் பேசற. அவ்ளோ தைரியமோ நோக்கு.''

சிலர் அவரைச் சமாதானப்படுத்தினார்கள். ராக்லாந்து ஊரை விட்டுக் கிளம்பும்வரை அவரது வாய் ஓயவில்லை.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் குளத்துப் படியில் அமர்ந்திருந்த இந்துக்காரச் சாமி யாருடன் உரையாடும்போது மக்கள் மோசமாக நடந்துகொண்டார்கள். அவரைச் சூழ்ந்துகொண்டு கல்லெறிந்தார்கள். மண்ணை வாரியிறைத்தார்கள். அவருக்கு இது புதுசில்லை. இதுக்கு முன் அதே இடத்தில் இதே மாதிரி நடந்திருக்கிறது.

ஒரு நாள் காலையுணவு முடித்துவிட்டு ராக்லாந்து வழக்கமான வேலைகளில் ஈடுபட்டிருந்தார். ஸ்ரீவில்லிப்புத்தூருக்குக் கடிதம் எழுதுமுன் அங்குள்ள கொர் னேலியுக்காகவும் மக்களுக்காகவும் ஊழியர்களுக்காகவும் செபித்தார். மிகவும் சோர்வாக இருந்தது. கட்டிலில் சாய்ந்தார். அப்போது டேவிட் பென் உடனிருந்தார்.

பிறகு எழுந்து வேலையாட்களுடன் சேர்ந்து வட நெல்லை ஊழியர்களுக் காகச் செபித்துவிட்டுக் குளிக்கச் சென்றார். போகும்போதே குமட்டியது. அடக்கிக் கொண்டு குளியலறைக்குள் நுழைந்துவிட்டார். அதுக்கு மேலும் அடக்க முடிய வில்லை. வாந்தியெடுத்து முடித்து டேவிட் பென்னை அழைத்தார்.

''டேவிட் இங்கே வாருங்களேன்.''

டேவிட் அவசரமாக ஓடினார். ராக்லாந்து இருந்த கோலத்தைப் பார்த்துப் பதறிப்போனார். ராக்லாந்து பதட்டமில்லாமல் தரையில் கொட்டிக் கிடந்த வாந்தியைக் காட்டினார்.

''இது நான் வாந்தியெடுத்த ரத்தம். பார்த்துப் பயந்துவிட வேண்டாம்.''

அவரது வாயிலிருந்து ரத்தம் வடிந்துகொண்டேயிருந்தது. டேவிட் பென் அவரைத் தாங்கிப் பிடித்து அழைத்துவந்தார்.

''அய்யா உங்களுக்கு இப்படியாகிவிட்டதே.''

அவர் முகத்தில் சிரிப்பு மறையவில்லை.

''நான் ஏசுவின் கரத்தில் இருக்கிறேன்.''

கூடவே செபங்களையும் வேத வசனங்களையும் சொல்லிக்கொண்டே யிருந்தார். வாயிலிருந்து வடிந்த ரத்தம் சட்டையை நனைத்துவிட்டது. ஏசுவின் நாமத்தைத் தொடர்ந்து உச்சரித்தபடி கட்டிலில் சாய்ந்தார். ஆவி பிரிந்தது. நாற்பத்துமூணு வயசுச் செபவீரன் மரித்துவிட்டார்.

மறுநாள் காலை அவரைப் பனையடிப்பட்டிக்குக் கொண்டுபோக நினைத் தார்கள். மழைக் காலம் ஒத்துழைக்கவில்லை. அவர் குடியிருந்த வீட்டுக்குப் பின்புறம் நல்லடக்கம் செய்ய முடிவுசெய்தார்கள். வீட்டைச் சுற்றித் தேர்த் திரு விழாக் கூட்டம். வட நெல்லை வேதக்காரர்களுக்குச் சமமாக இந்துக்காரர்களும் வந்திருந்தார்கள். சொந்தச் சகோதரனைப் பறிகொடுத்த துக்கத்தில் அய்ய நாடார் தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருந்தார். வேதக்காரர்களின் புலம்பலை யாராலும் தேற்ற முடியாது. எல்லாருக்கும் நிழல் தந்த கூடாரம் சாய்ந்துவிட்டது.

அடக்க ஆராதனை முடியும்வரை காத்திருந்த மேகங்கள் பொழுதை மூடி பூமி அந்தகாரமானது. மேகங்களை மின்னல் கீறிக் கிழித்த வலியில் இடி ஓல மிட்டது.

''என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்.''

வானம் வாந்தியெடுத்து மழை கொட்டியது. ராக்லாந்தின் மண்ணறை யருகே அமர்ந்து மழையில் நனைந்தபடி மரியான் உபதேசியார் இசைக்கும் மரண கீதம் மழையிரைச்சலையும் மீறிக் கேட்டுக்கொண்டேயிருந்தது.

''ஆறுதல் அடை மனமே - கிறிஸ்துவுக்குள்
ஆறுதல் அடை மனமே.

பாருள் பாவத்தால் வந்த பலனாம் மரணமதின்
கூரை யழித்த யேசு கொற்றவன் தனைநோக்கி
(ஆறுதல்...)

எண்ணம் கவலைகள் உண்டாம் - மரித்தோர்க்காக
ஏக்கம் பெருமூச்சும் உண்டாம்
கண்ணீர் சொரிவதும் உண்டாம் - துயரம் மிஞ்சிக்
கலங்கி அழுவதும் உண்டாம்
அண்ணல் கிறிஸ்துவும் முன் எண்ணிக் கண்ணீர் விட்டார்
நண்ணி அவரை ஜெபம்பண்ணித் துயரைவிட்டு
(ஆறுதல்...)

யேசுவைப் பற்றின பேர்கள் - மரித்தும் உயிர்த்
தெழுந்து புறப்படுவார்கள்
மாசற்ற தேவன் அவர்கள் - உடனிருக்க
மகிமை பெற்றிருப்பார்கள்
பேசவேண்டுமோ
நேசமுடன் என்றைக்கும் வாசம் செய்வார்கள் அல்லோ.
(ஆறுதல்...)''.

## 10. வேத வெள்ளாமை

ஊர் சுற்றிப் போர் தொடுக்கும் நால்வர் படை ஒப்பற்ற தலைவனை இழந்து தவித்தது. உடல்நலம் குன்றியதால் மெடோஸ் இங்கிலாந்து சென்றுவிட்டார். டேவிட் பென் மூணு உபதேசியார்களுடன் இணைந்து வட நெல்லையில் ஊழியம் செய்தார். அவர்கள் சத்தியநாதன் வேதநாயகம் கொர்னேலியு.

பேரன் பிரக்குக்குப் பிறகு வில்லியம் கிரே துணைவியாருடன் வந்தார். ராக்லாந்தின் வீட்டில் தங்கினார். அடுத்து மெக்டொனால்டு வந்து ஊழியத்தில் இணைந்தார். வட நெல்லை மூணு பகுதிகளாகப் பிரிந்தது. வாகைக்குளத்துக்கு வேதநாயகமும் பனையடிப்பட்டிக்கு கொர்னேலியும் ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு சத்தியநாதனும் பொறுப்பேற்றார்கள். ராக்லாந்தின் கனவுத் திட்டம் தொடர்ந்தது.

ராக்லாந்தின் வீடு சர்க்கார் வசமானது. வில்லியம் கிரே வெளியேற வேண்டிய நிலை. சிவகாசிக்கு வடக்கே திருத்தங்கல்லில் அழகான புளியந்தோப்பில் கூடாரமிட்டுத் தங்கினார். வெயிலைத் தாங்கக் கூடாரத்துக்கு மேலே பந்தலும் போட்டுக்கொண்டார். அங்கிருந்துகொண்டு வட நெல்லைப் பகுதி ஊழியர்களை மேல்பார்த்துவந்தார். பல வேத சபைகளைப் பார்வையிட்டு வளர்த்தார். வேதம் புத்துயிர் பெற்றுக் கிளை விரித்தது.

திருத்தங்கல்லில் இடம் வாங்கி நிரந்தரமாக வீடு கட்டும் எண்ணமிருந்தது அவருக்கு. அது ஈடேறவில்லை. சிவகாசிக்கு மேற்கே ரெண்டு மைல் தொலைவில் இடம் வாங்கி சாமியார் பங்களா ஊழியர் குடியிருப்பு சிறு கோயில் கட்டினார். வேதக்காரர்களை இணைக்கும் முயற்சியாக வட நெல்லைக்காரர்களின் வருசாந்திரக் கூட்டத்தைத் திருத்தங்கல்லில் நடத்தினார். நிறைய பேர் கூடினார்கள். இணைந்து வாழும் வழிமுறைகளைத் தேடினார்கள். திட்டங்களை வகுத்தார்கள்.

தாய்நாடு சென்றிருந்த மெடோஸ் திரும்பி வந்தார். வட நெல்லை ஊழியப் பொறுப்பு அவர் கைக்கு மாறியது. வில்லியம் கிரே பட்டணத்துக்குப் போய்விட்டார். அவர் கட்டிய புதுக் குடியிருப்புக்கு சாட்சியாபுரம் என்று பேரிட்டார் மெடோஸ். அதிலேயே தங்கிக்கொண்டார். பின்னர் அவரது முயற்சியால் பெரிய பங்களா கட்டப்பட்டது. சாட்சியாபுரத்தைச் சுற்றி வீடுகள் முளைத்தன. அது தனி ஊராக வளர்ந்துகொண்டிருந்தது.

வருசாந்திரக் கூட்டம் தொடர்ந்து சாட்சியாபுரத்தில் நடந்தது. மெடோஸ் மக்களுக்கான ஊழியத்தில் அதிகம் ஈடுபட்டார். அவர்களுக்கு மருத்துவ உதவி செய்தார். பிராமணர்களுடன் சுமுக உறவு ஏற்படுத்திக்கொண்டார். ஒரு நாள் மதியம் அவர் படித்துக்கொண்டிருக்கும்போது அவரை நோக்கி ஒரு கூட்டம் வந்தது. ஒருவர் கையில் மாலை. அவருக்கு ஆச்சரியம். நெருங்கி வந்து நின்றார்கள். அவர் கேட்டார்.

''என்ன விசயமாக வந்தீர்கள்.''

''உங்களுக்கு நன்றி சொல்லத்தான்.''

அவருக்கு மாலையிட்டு எலுமிச்சம்பழம் கொடுத்தார்கள்.

''எனக்கு எதுக்காக நன்றி சொல்லணும்.''

''இதோ இவருக்கு நீங்க கொடுத்த மருந்தால நன்னாயிடுத்து.''

''அப்படியா. ஆண்டவருக்கு நன்றி.''

அன்புடன் வழியனுப்பினார்.

சாட்சியாபுரத்தில் அவர் ஆண்களுக்கான பள்ளிக்கூடம் தொடங்கினார். பிறகு பெண்கள் தங்கிப் படிக்கும் பள்ளிக்கூடம் ஒன்றை உண்டாக்கினார். பரிசுத்த மாற்கு பேரில் பெரிய கோயில் கட்டினார். புல்கூரை கொண்டது. அறு நூறு ரூபாய் செலவு. சிவகாசியில் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்தார்.

டேவிட் பென் இங்கிலாந்து சென்றுவிட்டார். மெக்டொனால்டு பட்டணத் துக்கு மாறிப் போய்விட்டார். மெடோசுக்குப் பொறுப்பு அதிகரித்தது. சபைகளைப் பார்வையிட்டுக் கோயில் இல்லாமல் கூடாரங்களில் ஆராதனை நடத்தும் இடங் களில் புதிய கோயில்கள் கட்டவும் சிறிய கோயில் உள்ள இடங்களில் பெரிய தாகக் கட்டவும் பழுதடைந்தவற்றைப் புதுப்பிக்கவும் ஏற்பாடு செய்தார்.

**ச**பைகள் சொல்லும்படியாக இல்லை. கொர்னேலியு பனையடிப்பட்டியில் தங்கி சுற்றியுள்ள பகுதிகளில் ஊழியம் செய்துவந்தார். அங்கே கட்டப்பட்ட குளிர்கால வீடு என்ற பங்களாவில் போதகர்கள் தங்கினார்கள். பிள்ளைகளைப் பகலில் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப் பெற்றவர்கள் மறுத்ததால் அங்கே ராப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டது. அங்கே ஒரு உண்மையான வேதக்காரரைக் கூடப் பார்க்க முடியவில்லை. அந்த அளவுக்குச் சீரழிந்துபோயிருந்தார்கள். குடிப் பழக்கத்தை விடவில்லை. அவர்களுக்குள் சண்டை ஓயவில்லை. இந்துக்கார வீடுகளில் கலியாணம் செய்துகொண்டார்கள். உப்புச்சப்பில்லாத காரணத்துக்காகக் கூட மனைவியைக் கைவிட்டார்கள். கொஞ்ச நாளில் இருவரும் வெவ்வேறு துணையைத் தேடிக்கொண்டார்கள்.

ஏழாயிரம்பண்ணையில் சிறு செப வீட்டில் ஆராதனை நடந்தது. பள்ளிக் கூடமும் இருந்தது. சபை மக்கள் ரெம்பக் குறைவு. ஆண்கள் ஒழுங்காக ஆரா தனைக்கு வருவதில்லை. ஒழுங்காக வரும் பெண்களுக்கோ அக்கறையில்லை. மக்களே சிறு கோயிலைக் கட்டிக்கொண்டார்கள். ஊர்த் தலைவரின் தூண்டுத லால் அது தீக்கிரையாகியது. மக்கள் மறுபடியும் கட்ட முயன்றார்கள். ஊர்த் தலைவர் சும்மா இருக்கவில்லை. உபதேசியாரும் முப்பது வேதக்காரர்களும் மூணு ரூபாய் ஆறணா பெறுமான துணியைத் திருடிவிட்டதாகப் புகார் கொடுத் தார். காலரா நோய் நிறைய உயிர்களைப் பலிகொண்டது. வேதக் குடும்பங்கள் ரெண்டாகச் சுருங்கியது.

உருளைகுடியில் சிறு கோயிலும் பள்ளிக்கூடமும் இருந்தன. கருப்பு மண் சுவர் விரிசல் விட்டிருந்தது. துவாரந்தான் சன்னல். படித்த குழந்தைகள் பத்துப் பேர். அதில் ரெண்டு பேர்தான் வேதக்காரர்கள். நாகரிகமில்லாத மக்கள். பெண்கள் கோயிலுக்கு வருவதில்லை.

பாறைப்பட்டியில் சிறு கோயில் உண்டு. மக்களே கட்டியது. எளவந்தூர் சமீன்தார் வேதக்காரர்களை இடைஞ்சல்படுத்தினார். அவர்களது நிலங்களை எடுத்துக்கொண்டார். அடிக்கடி அவர்கள்மீது பொய்ப் பிராது கொடுத்தார். அவர் அனுப்பிய மூணு பேர் அவர்களது வீடுகளில் புகுந்து தானியத்தைத் திருடிச் சென் றார்கள். சனங்கள் ஒரு திருடனைப் பிடித்துத் தலையிலடித்துக் காயப்படுத்

தினார்கள். சமீன்தார் கதையை மாற்றிவிட்டார். வேதக்காரர்கள்தான் அவனது வீடு புகுந்து தலையில் அரிவாளால் வெட்டித் தானியத்தைத் திருடிச் சென்றதாக தாசில்தாரிடம் பொய்ப் பிராது கொடுத்தார். இதைக் கேள்விப்பட்ட மெடோஸ் தலையிட்டு வேதக்காரர்களுக்கு நியாயம் கிடைக்கச் செய்தார்.

எளவந்தூரிலும் ஒரு கோயில் இருந்தது. மக்களால் கட்டப்பட்டது. வேதக் காரர்களின் வீட்டையும் உபதேசியாரின் கோயிலையும் இந்துக்காரர்கள் இடித்துப் போட்டுவிட்டார்கள். இந்துக்காரர்கள் எவ்வளவோ ஆசைகாட்டியும் அவர்கள் மனசு மாறவில்லை.

மாதாங்கோயில்பட்டி ஒழுக்கக்கேடான ஊராக மாறிவிட்டது. மக்கள் சிற்றின்பத்திலும் சண்டை சச்சரவிலும் ஊறிக்கிடந்தார்கள். வேண்டாவெறுப்பாக ஆராதனைக்கு வந்தார்கள். உபதேசியார் ஒரு கால் ஊனமான வேதக்காரப் பையனுக்கு பஜாரில் கடை வைத்துக்கொடுத்தார். அந்தக் கடையில் நிறுவையும் அளவையும் சரியாக இருந்ததால் மக்கள் விரும்பி வந்தார்கள். இது இந்துக்கடைக் காரர்களுக்கும் பொறுக்கவில்லை. வேதக் கோயிலில் ஆராதனை நடத்த வேதக் காரர்களுக்குத் தடைபோட்டுவிட்டார்கள்.

கல்போது ஒருகாலத்தில் ராக்லாந்துக்குப் பிரியமான ஊர். சிரமப்பட்டு அங்கே முதலாவது சபையைக் கட்டினார். மக்களின் பாவச் செயல்களால் அது கலைந்துபோயிற்று. மெடோஸ் நல்ல கோயிலை ரெம்ப வருத்தத்துடன் இடித்து விட்டார். ராக்லாந்தின் நினைவுச்சின்னமாக நின்ற சுவர்கள் மெல்ல இடிந்து மண் மேடாகிவிட்டன.

பொதுவாக மக்கள் படிப்பில் ஆர்வம் காட்டவில்லை. பள்ளிக்கூடப் பிள்ளைகள் காலையில் பருத்தியெடுக்கவும் விறகு பொறுக்கவும் ஆடு மாடு மேய்க்கவும் காடுகரைக்குப் போய்விடுவார்கள். எப்போது வீடு திரும்புவார்கள் என்று வாத்தியார்கள் காத்திருந்து கூட்டிப் போகணும். பிள்ளைகள் தனியாக வருவதில்லை. உடன் பிறந்த சின்னஞ்சிறிசுகளையும் தூக்கிக்கொண்டு வரு வார்கள். அவற்றின் அழுகைக்கிடையில்தான் பாடம் நடத்தணும்.

மெடோஸ் யோசித்து ஒரு வழி கண்டுபிடித்தார். ஆண் பெண் சிறியவர் பெரியவர் எல்லாரும் சேர்ந்து படிக்கத் தோதாக ராப்பள்ளிக்கூடங்களை ஆரம் பித்தார். விரைவில் வாசிக்கக் கற்றுக்கொள்ளும் பெரியவர்களுக்கு ஒரு சோடி உடுப்பு பரிசு. பெரியவர்களின் உற்சாகத்துக்கும் வேகத்துக்கும் சொல்லணுமா.

மருத்துவ உதவிக்காகத் தினமும் ஐம்பது பேருக்கு மேல் அவரைத் தேடி வருவார்கள். ஒருகாலத்தில் போதகர்கள் வந்தால் விரட்டியடித்த பிராமணர்கள் இப்போது அவரைப் பார்க்கப் பழங்களோடு சாட்சியாபுரத்துக்கே வருவார்கள்.

''நாங்க வண்டி கொண்டுவந்துருக்கறோம். எங்க ஊருல ஒரு பெரிய மனுசருக்குச் சொகமில்ல. நீங்க அவசியம் வந்து பாக்கணும்.''

அவர் மறுக்காமல் போவார். பால் பழம் கொடுத்து உபசரிப்பார்கள். அங்கேயே ராத்தங்கி மறுநாள் வண்டியிலேயே வீடு திரும்புவார்.

சாட்சியாபுரத்தில் சங்கக் காணிக்கை முறை வந்தது. விசுவாசிகள் அளிக்கும் காணிக்கையில் சபைக்கு வருமானம் கூடியது. அது பல நல்ல காரியங்களுக்கு உதவியது.

சிவகாசியில் ஏற்கெனவே இருந்த ஆஸ்பத்திரியை மெடோஸ் விஸ்தரித்துக் கட்டினார். சாட்சியாபுரத்தில் நிரந்தரமாக ஒரு ஆஸ்பத்திரி கட்டப்பட்டது. அது மக்களுக்கு மிகவும் உதவியாக இருந்தது. பலரது மனசு வேதத்தை நாடியது. விருதுபட்டி சிவகாசி போன்ற ஊர்களில் பிரசங்கத்தைக் கேட்கச் சனங்கள் திரளாகக் கூடினார்கள். சிவகாசி திருச்சபைக் கவுன்சிலாக மாறியது. அதன் முதல் சேர்மனாக மெடோஸ் பொறுப்பேற்றார். சில மாசங்களிலேயே உடல்நலம் குன்றி மீண்டும் தாய்நாடு சென்றுவிட்டார். மூணு வருசத்துக்குப் பிறகே சாட்சியாபுரம் திரும்பி அதே பதவியில் அமர்ந்தார்.

மாதாங்கோயில்பட்டியில் வேதபோதகம் கட்டிய சிறு கோயில் தீக்கிரையாகிவிட்டது. அவர் வெள்ளையப்ப நாடாருடன் சேர்ந்து சிவகாசியில் கோயில் கட்ட முயற்சித்தார். வெள்ளையப்ப நாடார் ஜவுளிக் கடைத் தெருவிலுள்ள தனது இடத்தைக் கொடுத்தார். பரிசுத்த பவுலின் கோயிலுக்கு அஸ்திவாரமிட்டு விசுவாசிகள் தேவனைத் துதித்துப் பாடினார்கள்.

''தேவனே யேசுநாதனே இத்
தேவ ஆலயம் வந்திடும்
தேவ ஆலயம் வந்தவர்க் கருள்
திவ்விய ஆவியை ஈந்திடும்.

தேவனே உமக்கான ஆலயம்
பாவியின் சிறு நெஞ்சமே
பாவம் யாவையும் நீக்கியே சிறு
தேவ ஆலயமாக்கிடும்.''

வேதபோதகம் வெள்ளையப்ப நாடார் ஆகியோரின் கடும் உழைப்பினால் கோயில் கட்டி முடிக்கப்பட்டது. சிவகாசியிலுள்ள எல்லாக் கட்டடங்களையும்விட உயரமான கோயில். வேதக்காரர்கள் குதூகலத்தில் கீர்த்தனம் பாடிக் கொண்டே தெருக்களில் பவனி வந்தார்கள்.

''யேசு கிறிஸ்து நாதர்
எல்லாருக்கும் ரட்சகர்

அந்தர வானத்திலும்
அகிலாண்ட கோடியிலும்
எந்தெந்த லோகத்திலும்
இவரிவரே ரட்சகர்.

வம்பு நிறைந்த இந்த
வையக மாந்தர்கள் மேல்
அன்பு நிறைந்த கர்த்தர்
அதிக உருக்க முள்ளோர்.''

சிவகாசியிலும் சாட்சியாபுரத்திலும் வேதம் செழித்து வளர ஆரம்பித்தது. இந்துக்கார நாடார்கள் பலர் கடும் எதிர்ப்புக்கிடையே வேதத்துக்கு மாறினார்கள். பெரிய முதலாளிகள் காளியம்மனையும் மாரியம்மனையும் விட்டு வருவதாக இல்லை.

## 11. அந்தரங்கம்

சாட்சியாரத்துக்கு வெள்ளைக்கார மிசியம்மாக்கள் வந்து தங்கி ஊழியம் செய்தார்கள். அவர்களில் எல்வின் சகோதரிகள் முக்கியமானவர்கள். தமிழில் எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டபின் அவர்கள் ஊழியம் தொடங்கியது. பெண்களிடம் வேதத்தைக் கொண்டுசெல்லணும். இதுதான் அவர்கள் நோக்கம்.

சிவகாசி முதலாளிமார் வீட்டுப் பெண்கள் சுதந்திரமாக வெளியே வந்து நடமாடுவதில்லை. அதுக்கு அனுமதியும் கிடையாது. நாலு சுவருக்குள் குடியிருப்பவர்களை எப்படி அணுகுவது. எப்படி நற்சேதி சொல்வது. அவர்களைச் சந்தித்தாகணும். ஏசுவை அறியச் செய்யணும்.

எல்வின் சகோதரிகள் அந்தரங்க முயற்சிகளில் இறங்கினார்கள். சிவகாசியில் சந்தோசநாடார் சீரங்கம்மா தம்பதிகள் உதவிசெய்ய முன்வந்தார்கள். சீரங்கம்மா பெண்களைச் சந்தித்துப் பேசினாள்.

''கிட்டங்கிக்குள்ள கெடக்கிற மூட மாதிரி எத்தன நாளைக்கு வீட்டுக்குள்ளயே கெடந்து புழுங்கிறது. வெளிய வந்து நாலு வெசயத்தத் தெரிஞ்சுக்கிறலாமே. காசக் கேக்குதா பணத்தக் கேக்குதா. அந்தப் பொண்ணுக என்ன சொல்லுதுகன்னுதான் கேப்பமே.''

''வீட்ல சொல்லிக்கிறாமயா.''

''சொன்னா வுடுவாகளாக்கும்.''

''வசவுதான் கெடைக்கும்.''

''சொல்லாம வந்துற வேண்டியதுதான். கொலக்குத்தமா செய்யப் போறொம்.''

''எங்க வாறது.''

''அதுக்கு நான் ஏற்பாடு செய்றென்.''

பொழுதடையக் கூட்டுவண்டி எல்வின் சகோதரிகளை ஏற்றிக்கொண்டு சாட்சியாபுரத்திலிருந்து சிவகாசி போய்ச் சேரும். குறிப்பிட்ட நேரத்தில் சந்தோச நாடார் வீட்டில் பெண்கள் கூடுவார்கள். சகல ஏற்பாடுகளையும் சீரங்கம்மா கவனித்துக்கொள்வாள்.

அந்தரங்கக் கூட்டம் நடக்கும். மிசியம்மாக்கள் கர்த்தரின் மகிமை அன்னை மரியாளின் அன்பைப் பற்றிப் பிரசங்கம் செய்வார்கள். மனுச குமாரனாக அவதரித்த ஏசுவின் அற்புதங்களைப் பேசுவார்கள்.

பெண்களில் பலர் படிக்காதவர்கள். சிலர் கொஞ்சம் படித்தவர்கள். அவர்களுக்குப் புரியும்படி மிசியம்மாக்கள் எளிய வசனங்களைச் சொல்லித்தருவார்கள்.

''தேவனே ஏசுகிறிஸ்துவினிமித்தம் பரிசுத்த ஆவியை எனக்குத் தந்தருளும்.''

''முந்தினவரும் நானே பிந்தினவரும் நானே.''

''என்னைத் தவிர தேவன் இல்லை.''

''தேவன் அன்பாகவே இருக்கிறார்.''

பாட்டு நற்சேதி செபம் எனக் கூட்டம் முறையாக நடக்கும். பெண்களின் கையில் வேதவசனங்களைக் கொண்ட சுவிசேசங்கள் இருக்கும். கூட்டம் முடிந்து

கூட்டுவண்டி புறப்பட்டுப் போனபின் பெண்கள் அருவமில்லாமல் வீடுதிரும்பு வார்கள்.

சில முதலாளி வீட்டுப் பெண்கள் மிசியம்மாக்களின் பாடங்களைக் கேட்டு மனந்திரும்பி ஏசுவை ஏற்றுக்கொண்டார்கள். அவர்களால் குரலுயர்த்திப் பாட முடிந்தது. வேத நூல்களை வைத்துக்கொண்டு அந்தரங்கமாகப் படித்தார்கள். செபித்தார்கள். வீட்டுக்குள் பாட முடியவில்லை.

தப்பித்தவறி அவர்கள் கையில் வேதநூல்களைப் பார்த்துவிட்டால் கணவர் களுக்குப் பொறுக்காது. பறித்துக் கிழித்தெறிவார்கள். கண்டபடி திட்டுவார்கள். அவர்கள் பெரும்பாலும் வீட்டில் இருப்பதில்லை. கடைக்குப் போய்விடுவார் கள். அதனால் பெண்களைக் கண்காணிக்க ஆட்களை நியமித்திருப்பார்கள். பெண்கள் அதையும் தாண்டி கூட்டத்துக்கு வந்துவிடுவார்கள்.

சில சமயம் பெண்களுக்கு அடியும் உதையும் கிடைப்பதுண்டு. சில கண வன்மார் கொடுமைப்படுத்தி வீட்டை விட்டே விரட்டிவிடுவார்கள்.

''ஒன்ன வேதப் பேயி புடிச்சு ஆட்டுது. பொட்டச்சிகளாச் சேந்துட்டு இந்தக் கூத்தா பண்றீக. எல்லாம் அந்த வெள்ளத்தோலுப் பொம்பளைகளச் சொல்லணும். நீயும் போயி அவுகளோட சேந்து ஆடு பாடு. இங்கருந்தா குடும்பத்துல சாமிக் குத்தம் வந்துரும்.''

பெண்கள் மிசியம்மாக்களிடம் தஞ்சமடைவார்கள். கொஞ்சநாள்தான் கணவர்களால் தாக்குப்பிடிக்க முடியும். குழந்தைகள் தேட குடல் பசியால் வாட தொழிலில் கவனம் குறைந்து குழப்பமாக இருக்கும். செய்தது தவறென்று உணர்ந்து சாட்சியாபுரத்துக்குப் போய் நிற்பார்கள்.

''இனிமே இப்படி நடக்காதும்மா. அவள அனுப்பிவையிங்க.''

மிசியம்மாக்களின் முகத்தில் சிரிப்பு குறையாது.

''அவர்களுக்கென்று ஒரு மனசு இருக்கிறதில்லையா. முதலில் அதைப் புரிந்துகொள்ளுங்கள். விக்கிரகங்களை வணங்குவது தப்பென்று அவர்கள் உணர்ந்துவிட்டார்கள். மனந்திரும்பிக் கர்த்தரை ஏற்றுக்கொண்டார்கள். அதைத் தடுப்பது பாவம். சந்தோசமாக இருங்கள். ஆண்டவர் உங்களை ஆசீர்வதிப்பாராக.''

வீடு திரும்பும்போது கோவங்கோவமாக வரும்.

''பொட்டச்சிகளுக்குப் புதுசா மனசு மொளச்சு வந்துருச்சோ. எல்லாம் இவுக சொல்லிக்குடுத்த பாடம். கோயிலு கெட்டி விக்கிரகத்த வச்சுக் கும்புடுறவு கெல்லாம் கோட்டிக்காரங்கன்னு நெனப்போ. நீ ஆடுவயோ பாடுவயோ அது ஒன்னோடயே வச்சுக்கோ. எங்க வீட்டுப் பொம்பளைகளக் கலச்சா எப்படி. இது சரியில்ல.''

அதோடு சரி. பிறகு பாடு சோலியைப் பார்க்கப் போய்விடுவார்கள்.

ஆண்களின் அடக்குமுறைக்கு அஞ்சாமல் தேவ விசுவாசத்தில் நிலைத்து நின்ற பெண்கள் அந்தரங்க விசுவாசிகளாகிவிட்டார்கள். அவர்களது மனஉறுதி கண்டு ஆண்கள் தொந்தரவைக் குறைத்துக்கொண்டார்கள். இருந்துவிட்டுப் போகட்டுமே என்று சமாதானமடைந்தார்கள்.

மிசியம்மாக்கள் விதவைப் பெண்களின் நிலை கண்டு வருத்தப்பட்டார்கள். புழங்காத பண்டங்களாக அவர்கள் பரிதவிப்பது சகிக்கவில்லை.

''என்ன கொடுமை இது. கணவரை இழந்த பெண்களுக்கு மறுவாழ்வே கிடையாதா. வாழ வேண்டியவர்கள் கசங்கிய பூக்களாக வாடிக்கிடக்கலாமா.''

அவர்களை ஆதரித்து அரவணைத்து வேதப் பாடம் கற்றுத்தந்து வேதாகமப் பெண்களாக உருவாக்கி வெளியிடங்களில் சுவிசேசம் சொல்ல அனுப்பினார்கள். வேதாகமப் பெண்களால் வீட்டுப் பெண்களை எளிதில் அணுக முடிந்தது.

வேதத்தைப் பிடிக்காத ஒருவர் இந்துக்காரர்களைப் பலவிதத்தில் கட்டுப் படுத்திவந்தார்.

''வேதத்துல சேந்து நாசமாப்போயிட்டாங்க. அவங்கள நம்ம சாமி சும்மா வுடாது. எந்தக் காரியத்துலயும் அவங்கள நம்ம சேத்துக்கிறப்புடாது. ஊர விட்டே தள்ளிவச்சிறணும். அவங்களுக்கு நம்ம வண்ணான் துணி வெளுக்கப்புடாது. நம்ம கடையில சாமாங்க குடுக்கப்புடாது. நம்ம கெணத்துல தண்ணியெடுக்க வுடப்புடாது.''

அப்படிக் கெடுபிடியான மனுசனின் கனவில் ஒரு தேவதூதர் தோன்றினார். பயத்துடன் பார்த்துக்கொண்டிருந்த அவரை ஒரு பட்டயம் விடாமல் துரத்தியது. அவர் தப்பிக்க இடம் தேடித் தவித்தார். பட்டயம் கழுத்தை நெருங்கும்போது அலறிக்கொண்டு எழுந்தார். நடந்த கதையை அடுத்தவர்களுக்குச் சொன்னார்.

''இது நல்ல சகுனமாத் தெரியல.''

''நம்ம கொஞ்சம் ஒதுங்கிக்கிறதுதான் நல்லதுன்னு தோணுது.''

''நானும் அப்படித்தான் நெனைக்கென்.''

''நல்ல வேளைக்கு எந்திரிச்ச. இல்லன்னா சோலிய முடிச்சிருக்கும்.''

அதிலிருந்து வேதப் பெண்களுக்கு அடியும் உதையும் குறைந்தன.

பிறகு அந்தரங்க விசுவாசிகள் வாரம் ஒரு நாள் வேதக் கோயிலில் கமுக்கமாகக் கூடிச் செபித்து ஆண்டவருக்கு ஆராதனை நடத்துவது வழக்கமாகி விட்டது. ஒரே வீட்டில் கணவன் மாரியம்மனை நினைத்துக் கைகூப்புவதும் மனைவி ஏசுவைத் தொழுது நெஞ்சில் சிலுவையிட்டுக்கொள்வதும் நடக்கத்தான் செய்தது. கணவன் கேட்டால் மனைவியிடம் சரியான பதில் தயாராக இருக்கும்.

''அண்ணைக்கு வெள்ளக்காரங்க ஒத்தாசனையில்லன்னா நாடாரு பொம்பளைக தோளுல மாராப்பு ஏறியிருக்குமா. ஆடுமாடு மாதிரி தொறந்து போட்டுக் கிட்டுத் திரிய வேண்டியதுதான். அத மறந்துறாதங்க.''

சில பெண்கள் வீதிக்கே வந்துவிட்டார்கள். கலெக்டரிடம் முறையிட்டு நிலம் பெற்று அதில் வேதக் கிணறு வெட்டினார்கள். சகலரும் அதில் தண்ணீரெடுக்க அனுமதித்தார்கள்.

இருந்தாலும் வேதக் குடும்பங்களுக்கும் இந்துக் குடும்பங்களுக்குமிடையே இணக்கமான உறவில்லை. ஒருவரையொருவர் அன்னியமாகவே பாவித்து வந்தார்கள்.

சகல சனங்களையும் அரவணைத்து வந்த மெடோஸ் சாட்சியாபுரத்திலிருந்து தாய்நாட்டுக்குப் போய்விட்டார். திரும்பி வரவில்லை.

## படலம் 15

### 1. ஆம கெணத்துலதான்

சிவகாசி தேங்காய்க் கடை முக்கில் நிறைய பேர் கூடியிருந்தார்கள். செம்புக்குட்டி நாடார் போய்ச் சேரத் தாமதமாகிவிட்டது. ஒருவர் கிண்டலாகக் கேட்டார்.

''யோவ் பனையேறி வாரும். ஒமக்காக எம்புட்டு நேரம் காத்துக்கெடக்கிறது.''

பட்டப் பேர் சொல்லிக் கூப்பிடுவதில் அவருக்குச் சந்தோசந்தான். வைராக்கியத்தில் மார்தட்டினார்.

''இவன் பனையேறியில்லடா. படியேறி. செவங் கோயில் படியேறாம ஓய மாட்டான்.''

''இந்த வீரத்துக்கொண்ணும் கொறச்சலில்ல.''

''இது சாதாரணச் செம்புக்குட்டி நாடான்னு நெனச்சயா. செம்பகப் பாண்டியண்டா.''

''பகல்ல கெனாக் கண்டீரா.''

''கெனாதான். பெரிய கெனா.''

''கெனாக் கண்டுக்கிட்டே இருக்க வேண்டியதுதான். செவங் கோயிலச் சுத்தி நாடான் குடியிருக்கான். கட வச்சிருக்கான். கைநெறையப் பணம் சொத்துச் சொகம். மொதலாளிப் பட்டம். எல்லாம் இருந்து என்ன செய்ய. அந்தக் கோயிலுக்குள்ள போயி ஆசதீரக் கும்புட முடியிதா. ஒரெட்டு வைக்கவுட மாட்டம்னு மேச் சாதிக்காரன் மல்லுக்கு நிக்கான்.''

இன்னொருவர் சேர்ந்துகொண்டார்.

''நம்ம காலடி பட்டாத் தீட்டுன்னு கத சொல்றான்.''

மற்றவர்களும் பேச ஆரம்பித்தார்கள். எளவட்டங்களின் குரல்தான் தூக்கலாக இருந்தது.

''நம்மகிட்டக் கையேந்திக் கூலி வாங்குறவனெல்லாம் அந்தக் கோயிலுக்குள்ள போறான். நம்ம மட்டும் ஏன் போகப்புடாதுன்னு கேக்கென்.''

''ஏன்னா அவன் ஒசந்த சாதியாம்.''

''இது அக்கிரமமால்ல இருக்கு.''

''தட்டிக்கேட்டாகணும்.''

''நம்ம எப்பாடு பட்டும் கோயிலுக்குள்ள மொழஞ்சாகணும்.''

அய்ய நாடார் சமாதானப்படுத்தினார்.

''எண்ணைக்கிருந்தாலும் மொழையத்தான் போறொம். அததுக்கு நேரங் காலம் வரணுமில்ல. பொறுங்க. சரியான வழி கெடைக்காமயா போயிரும்.''

''கெடைக்கிறவரைக்கும் மூலையில முக்காடு போட்டு உக்காந்துருக்கச் சொல்றீகளா. வழிய நம்மதான் உண்டாக்கிக்கிறணும்.''

செம்புக்குட்டி நாடார் சொன்னார்.

''கெடா பின்வாங்குறது பாய்ச்சலுக்குத்தாம்ப்பா. பயந்து ஓடுறதுக்கில்ல. அதத் தெரிஞ்சுக்கோ.''

திருநெல்வேலிச் சீமையெங்கும் அனல் வீசிய கோவமும் கொந்தளிப்பும் சிவகாசியிலும் பரவியிருந்தது. சொல்லப்போனால் அங்கேதான் அதிகம். நாடார்கள் எல்லா விதத்திலும் வலுவாக இருந்தார்கள். தருணம் வரும்போதெல்லாம் பொறுமையிழந்தார்கள். எப்போதும் அதே சிந்தனை.

நாடார்களில் அய்ய நாடாரும் செம்புக்குட்டி நாடாரும் தாட்டிக்கமானவர்கள். அவர்கள் சொல்லுக்கு எல்லாரும் கட்டுப்படுவார்கள். ஆனாலும் எளவட்டங்களின் போக்கு அவர்களையும் மீறிவிடுமோ என்ற பயம் இருக்கத்தான் செய்தது.

மேல்சாதிக்காரர்கள் நாடார்களைக் கோயிலுக்குள் நுழையவிடக் கூடாது என்பதில் தீர்மானமாக இருந்தார்கள்.

''புடிக்கலன்னா வேதத்துக்கு ஓடிப் போயி ஒதுங்கிக்கோ. இங்கருந்தா இப்படித்தான். காலங்காலமா இருந்து வாற வழக்கத்த ஒதறித்தள்ளீட்டு ஒன்னோட கூடிக் கொலாவ முடியாது. அணிலு கொப்புலதான் ஆம கெணத்துல தான். மத்த கீச்சாதிக்காரனெல்லாம் இப்படியா முண்டிக்கிட்டுத் தோரிணி பண்றான். பொச்சப் பொத்திக்கிட்டுக் கெடக்க வேண்டியதுதான.''

''மொத்தமா வேதத்துக்குப் போற நெனப்பும் இருந்திருக்கு. திருனவேலி பெரிய சாமியாருட்டப் பேசிப் பாத்தாங்களாம்.''

''போனாலும் போயிருப்பாங்க. அவரு என்ன சொன்னாராம்.''

''கழுகுமலையில நடந்த கதைய நெனச்சுக்கிட்டுத் தலகுடுக்க மாட்டன்னுட்டாராம்.''

''அப்படிச் சொல்லு. அங்க முட்டிப் பாத்துட்டுத்தான் இங்க வந்து நோண்டுறானா.''

''நோண்டிப்பாக்கட்டுமே.''

மேல்சாதியில் வெள்ளாளர் கை ஓங்கியிருந்தது. அதிலும் வெண்டர் ஆறுமுகம் பிள்ளை முக்கியமானவர். ஸ்டாம்பு வெண்டர் தொழில். யூனியன் பஞ்சாயத்தாராக இருந்தவர். எந்தப் பிரச்சினைக்கும் யோசனை சொல்லக்கூடிய விவரமான மனுசன். ஒரு காலத்தில் கோர்ட் விவகாரங்களில் நாடார்களுக்கு அவர்தான் ஏஜெண்ட். மேல்சாதிக்காரர்களுக்கும் நாடார்களுக்குமிடையே கசப்பு ஏற்பட்ட பிறகு அவரால் நாடார்கள் பக்கம் நிற்க முடியவில்லை. கட்சி மாறிவிட்டார்.

சிவன் கோயிலில் அன்றாட வேலைகளைக் கவனிக்க சூப்பிரண்டு இருந்தார். மொத்த நிருவாகம் தருமகர்த்தாக்கள் கையிலிருந்தது. எல்லாரும் மேல்சாதிக்காரர்கள். அதுக்கு மேல் திருநெல்வேலியில் தேவஸ்தானக் கமிட்டி உண்டு.

ஒரு சமயம் தருமகர்த்தா ஒருவர் ராஜினாமா செய்தார். பேர் சங்கரமூர்த்தி முதலியார். இந்தச் சந்தர்ப்பம் நாடார்களை உசுப்பிவிட்டது.

''இத நழுவ வுட்றப்புடாது. எப்படியும் நம்மாளு ஒருத்தர உள்ள மொழச்சிறணும்.''

''இதுல செயிச்சிட்டா பெறகு கோயிலுக்குள்ள போயிறலாம்.''

''பெறகென்ன. கண்ணுக்குக் கண்ணாம்பட்ட காத தூரமா.''

''அப்பத்தான் அவங்க கொட்டம் அடங்கும்.''

தருமகர்த்தா பதவிக்கு சங்கரலிங்க நாடாரும் சண்முக நாடாரும் மனுப் போட்டார்கள். தேவஸ்தான கமிட்டி ஒத்துக்கொள்ளவில்லை. மனுக்களைத் தள்ளுபடி செய்துவிட்டது.

இது நடந்த கொஞ்ச நாளிலேயே ரெண்டு நாடார்களும் இறந்துவிட்டார்கள். எதிராளிகள் குதித்தார்கள்.

''இவன் கோயிலுக்குள்ள மொழஞ்சாலே தீட்டு. இந்த லச்சணத்துல தரும கர்த்தாவாகணுமோ.''

''தெய்வக் குத்தம் செஞ்சா இந்தக் கதிதான். நம்ம சாமிய எளக்காரமா நெனச்சுக்கிட்டானா.''

''அவன் நோக்கமே வேறப்பா. ஊரு முழுக்க அவங்களே இருந்து ஆளணும். செவகாசி அம்புட்டும் நாடாங்க ஊராகணும். நம்மள வள்ளிசா வெரட்டியாக ணும். இந்த ஆச அவங்களுக்கு ரெம்ப நாளா உண்டு.''

''ஒகோ அதுக்குத் திட்டம் போட்டுத்தான் கதைய இப்படி ஆரம்பிச்சானா.''

''பெறகெப்படின்னு நெனச்ச.''

''இனியென்ன செய்வானாம்.''

''வெறிபுடிச்சு அலையிறான். சும்மாருப்பானாக்கும்.''

''நம்மளும் சும்மாருக்கப்புடாது.''

பிராமணர் வெள்ளாளர் நாய்க்கர் செட்டி ஆசாரி என்று நிறைய பேர் கையெழுத்திட்டு தேவஸ்தான கமிட்டிக்கு முறையிட்டார்கள். சாதிப்படி முதல் கையெழுத்து பிராமணர். அடுத்தது வெண்டர் ஆறுமுகம் பிள்ளை. எக்காரணத் தைக் கொண்டும் நாடாரைத் தருமகர்த்தாவாக நியமிக்கக் கூடாது. மறுபடியும் கழுகுமலைக் கதையாகிவிடும் என்று அதில் எச்சரித்திருந்தார்கள்.

கொஞ்ச காலம் ஊர் அமைதியாக இருந்தது. கார்த்திகை உற்சவத்தில் நிலைமை முறுக்கிக்கொண்டது. அந்த உற்சவம் விசுவநாதருக்கு உகந்த திருவிழா. மேல்சாதிக்காரர்கள் பெரிசாகக் கொண்டாடுவார்கள். அவர்களுக்கு ஏற்கெனவே ஒரு சந்தேகம் இருந்தது. எப்படியும் வம்பு வரும். நாடார்கள் சும்மா இருக்க மாட்டார்கள். முன்கூட்டியே அதிகாரிகளுக்குப் பிராது கொடுத்திருந்தார்கள்.

திங்கட்கிழமை உற்சவம். வெள்ளாளரும் மற்ற சாதிக்காரர்களும் சாமியை அலங்கரித்து வாகனத்தில் ஏந்தி வீதிகளில் வலம்வந்தார்கள். நல்ல கூட்டம். அதே சமயம் பத்திரகாளிக்கு உற்சவமென்று நாடார் கூட்டம் சாமியைத் தாங்கி வந்து மேல்சாதிக்காரர்களை முந்திவிட்டது. கூச்சலுக்கிடையில் கல்லெறி விழுந்தது. கலகம் மூண்டுவிடுமோ என்று சனங்கள் பயந்தார்கள்.

நல்ல வேளை சப்கலெக்டர் உடனிருந்ததால் சச்சரவு முற்றவில்லை. ஒரு வழியாகச் சாமி இருப்பிடம் போய்ச் சேர்ந்தது.

அதிலிருந்து நாடார்கள் இன்னும் மூர்க்கமாகிக் கோயிலுக்குள் நுழைவதே குறியாக இருந்தார்கள். அவர்கள் நுழைய முயற்சிப்பதும் மற்றவர்கள் தடுப்பது மாகத் தள்ளுமுள்ளு தொடர்ந்தது.

## 2. தீவட்டிக் கொளுத்தி...

அஞ்சாறு மாசமிருக்கும். கோயில் விவகாரம் கமுதியில் பற்றிக்கொண்டது. சிவகாசியில் விசுவநாதர் கோயிலென்றால் அங்கே சுந்தரேசுவரர். அந்தக் கோயிலுக்குள் நுழைந்தாகணுமென்று நாடார்கள் ரெம்ப நாளாகப் பிரயத்தனப் பட்டும் முடியாமல் கொதித்துக்கொண்டிருந்தார்கள்.

நிலைமை இப்படியே நீடித்தால் சரிப்படாது. இதுக்கு ஒரு முடிவுகட்டி யாகணுமென்று தீர்மானித்தார்கள். ஒருநாள் ராத்திரி கடைத்தெருவில் பெருந் திரளாகக் கூட்டம் கூடியது. ஒவ்வொருவர் கையிலும் தீவட்டி கொழுந்துவிட்டு எரிந்தது. மேளதாளம் முழங்க இருளப்ப நாடார் காவடியெடுத்து ஆட சிலர் துணைக்குத் துடியாகச் சாமியாட கூட்டம் சுந்தரேசுவரர் கோயிலை நோக்கிக் கிளம்பியது.

கோயில் வாசலில் நின்றிருந்த ஊழியர்கள் தடுத்துப்பார்த்தார்கள்.

''யாரும் உள்ள வரக் கூடாது. சாமிக்குத் தீட்டு.''

''ஒன்னாலதாண்டா தீட்டு. வழியில நின்னா சாமிக்குப் பொலிபோட் ருவொம்.''

கூட்டத்தை யாராலும் கட்டுப்படுத்த முடியவில்லை. திமுதிமு என்று கோயிலுக்குள் நுழைந்துவிட்டது. இருளப்ப நாடார் அருள்வந்த சிலிர்ப்பில் ஆங்காரமாக ஆடினார். மேளதாளம் பிராகாரங்களில் கனத்து எதிரொலித்தது. பல பரவசக் குரல்கள் சுவர்களில் மோதின.

''அரோகரா... அரோகரா...''

தீவட்டி ஒளியில் கோயில் பிரகாசமாகத் தெரிந்தது. அந்த வெளிச்சத்தில் தெய்வச் சிலைகளைத் தொட்டுக் கும்பிட்டுக்கொண்டே உள்பிராகாரத்துக்குள் புகுந்தார்கள். தெய்வத்துக்கு மாலையிட்டுத் தூபங்காட்டினார்கள். தேங்காய் விடலைச் சத்தம் தொடர்ந்து கேட்டது.

பிறகு கருவறைக்குள் நுழைந்து சுந்தரேசுவரரைத் தரிசித்தார்கள். அணைந்து விட்ட தீவட்டிகளை உற்சவருக்கருகில் எரியும் தீபத்தில் கொளுத்தி வெளிச்ச மூட்டினார்கள். பிரகாசமான மூலவரைத் தொட்டு வணங்கினார்கள். மீண்டும் ஒரு முறை பிராகாரம் அதிர்ந்தது.

''அரோகரா... அரோகரா...''

நாடார்கள் செய்தது குற்றமென்று மேல்சாதிக்காரர்கள் வழக்குப்போட் டார்கள். முதுகுளத்தூர் சப்மாஜிஸ்திரேட் அதைத் தள்ளுபடி செய்துவிட்டார். அதுக்குக் காரணங்கள் சொன்னார். அதாவது நாடார்கள் அந்தக் கோயிலுக்குள் போகும் வழக்கம் கிடையாது என்பது ருசுவாகவில்லை. அவர்கள் சாமி சிலை யருகே போனார்களா என்பது தெளிவாக இல்லை.

ராமநாதபுரம் ராசா பார்த்தார். இது நல்லதுக்கில்லை. கதை இப்படியே போனால் மோசமாகிவிடும். நாடார்களால் பெரிய தொறட்டு வந்து சேரும். இதுக்கு முடிவு கட்டியாகணும். மறவர்களுக்குப் பதில் சொல்ல முடியாது. அவரும் மறவராயிற்றே.

நாடார்களுக்கு எதிராக சிவில் வழக்குப் போட்டார். சாணார் சாதிக்காரர்கள் வழக்கப்படியும் சாத்திரப்படியும் கோயிலுக்குள் பிரவேசிக்க முடியாது. ஒரு நாள் அவர்கள் கோயிலுக்குள் நுழைந்து சாமி கும்பிட்டுக் கோயிலைத் தீட்டுப் படுத்தியதோடல்லாமல் பாத்தியப்பட்ட பக்தர்களைத் தடுக்கவும் செய்தார்கள். அதனால் சாணார்கள் கோயிலுக்குள் நுழைய உரிமையில்லை என்று உத்தரவு போடணும். எப்போதுமே அவர்கள் நுழைவதற்கு நிரந்தரத் தடைவிதிக்கணும். கோயிலுக்கு ஏற்பட்ட தீட்டைக் கழிக்க ரெண்டாயிரத்தைநூறு ரூபாய் நஷ்டஈடு தரணும். இதுதான் வழக்கு.

நாடார்கள் விடுவதாக இல்லை. இந்த வழக்கில் எப்படியும் தங்களுக்குச் சாதகமாக உத்தரவு வாங்கிவிடணுமென்று காரியத்தில் இறங்கினார்கள். நாங்கள் ஒண்ணும் குறைந்த சாதியில்லை. எங்களுக்கும் மரியாதை பரம்பரை உண்டு என்று எங்கிருந்தெல்லாமோ ஆதாரங்களைத் தேடித் திரட்ட ஆரம்பித்தார்கள்.

வழக்கு விரைவில் முடிவதாக இல்லை. விசாரணை இழுத்துக்கொண்டே போனது. கோர்ட்டார் ரெம்ப எச்சரிக்கையாக இருந்தார். எந்தப் பக்கம் சாதகமாகத் தீர்ப்புச் சொன்னாலும் வம்பு. தகராறு பெரிசாகிவிடும். எல்லா விவரங்களையும் அலசி ஆராய்ந்து நிதானமாகத் தீர்ப்புச் சொல்லலாம். வழக்கைக் கொஞ்சம் ஆறப்போட்டால் கடுமை தணியும். இப்படியும் அவர் நினைத்திருக்கலாம்.

ஒண்ணு மட்டும் நிச்சயம். அவர் வாயிலிருந்து வரப்போகும் தீர்ப்பை எல்லாரும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்.

## 3. கொலையுண்ட நந்தவனம்

சிவகாசி நாடார்கள் வணங்கும் காளியம்மன் மாரியம்மன் கோயில்களில் காலங்காலமாகப் பூப்பண்டாரங்களே பூசாரிகளாக இருந்தார்கள். இதுகூட நாடார்களுக்கு உறுத்தியது.

''இனிமே இந்தப் பூசாரிக நமக்கு வேணாம்.''

''ஏம்ப்பா திடீர்னு இப்படிச் சொல்ற.''

''செவங்கோயிலப் போல நம்மளும் பெராமணர வச்சுக்கிருவொம்.''

''தலமொறதலமொறயா இருக்கிறவங்க எங்க போவாங்க.''

''உண்டான தொழில வச்சுப் பெழச்சுக்கிற வேண்டியதுதான். இதனாலகூட நம்மள எளக்காரமா நெனைக்காங்களோன்னு தோணுது.''

''எல்லாரும் என்ன சொல்றீக.''

''அவன் சொல்றதும் சரிதான். அவுகளவிட நம்ம எந்த வெதத்துல கொறஞ்சு போயிட்டொம்.''

பழைய பூசாரிகளை நீக்கிவிட்டு சிதம்பரத்திலிருந்து ஒரு பிராமணரைக் கொண்டுவந்து கோயில் பொறுப்பை ஒப்படைத்தார்கள். அவருக்குச் சொந்த ஊர் கோயமுத்தூர்ப் பக்கம் பாசூர். கோயில் தவிர வீட்டு வைபவங்களையும் சடங்கு சாத்திரங்களுடன் நடத்தினார்.

பண்டாரங்களுக்குக் கடுப்பு. ஆத்திரத்தில் பொருமினார்கள்.

''இதெப்படி நம்ம வயித்துல அடிக்கப்போச்சு.''

''அவுக கோயிலு அவுகளாச்சு. எப்படியும் போகட்டுமே.''

''நல்லாருக்கட்டும்.''

இதனால் மேல்சாதிக்காரர்களும் எரிச்சலடைந்தார்கள். அவர்களில் வியா பாரிகளுக்கு ஏற்கெனவே தொழில் போட்டியால் பகையும் உண்டு.

புதுப் பிராமணர் ஒண்டிக்கட்டை. சாப்பாட்டுக்கு வழி வேணுமே. சிவன் கோயில் பட்டரைச் சினேகம் பிடித்துக்கொண்டார். அவர் வீட்டில் சாப்பாட்டு முறை கழிந்தது. இது இன்னொரு பட்டருக்குப் பிடிக்கவில்லை. அவர் வாலிபர். துடுக்காகக் கேட்டுவிட்டார்.

''சாணாங்களோட கோயில் பூசாரிக்கு நம்மாத்துல சோறு போடலாமோ.''

சிதம்பரத்துப் பிராமணருக்கென்றால் கோவம்.

''ஓய் நானும் பிராமணன்தான்.''

''சாதிப் பிராமணன் சாணாங்க ஆத்துப் படியேற மாட்டான். அவாளோட கோயில்ல மணியாட்ட மாட்டான்.''

இது நாடார்களில் சில பெரிய மனுசர் காதுக்கு எட்டியது. குமுறினார்கள்.

''நம்ம பூசாரியப் பத்திப் பேசுறதுக்கு அவன் ஆரு. அவனா தாங்குறான்.''

''எந்தச் சாமின்னுருக்கு. நம்ம சாமிக்குப் பூச செஞ்சா இவரு பெராமண ருல்லன்னு ஆயிருமா.''

''அவனுக்குச் சாமி முக்கியமில்ல. சாதிதான் முக்கியம்.''

சிதம்பரத்துப் பிராமணர் பட்டர் வீட்டில் சாப்பிடும் சமாச்சாரம் சிவன் கோயில் தருமகர்த்தாவுக்குத் தெரியவந்தது. அவர் வெள்ளாளர். நாலு பேர் காதில் பொருத்தமாக ஓதினார்.

''கேட்டீரா சங்கதிய. சாணாங்க புதுசா ஒரு அய்யரக் கொண்டுவந்து வச்சிருக்காகல்ல...''

''அவருக்கென்ன.''

''அவரு நம்ம கோயிலு பட்டரு வீட்டுக்குச் சோறு கொண்டுவந்தாராம்.''

''தான் பொங்குனதக் கொண்டுவந்துருப்பாரு.''

''அதான் இல்ல.''

''ஒருவேள பத்திரகாளி கோயிலுத் தளுவையாருக்கும்.''

''அதுமில்ல.''

''பெறகு எங்கருந்து வந்ததாம்.''

''நாடான் குடுத்தனுப்பியிருக்கான்.''

''இதென்ன புதுக் கதையாருக்கு.''

''தொறந்து பாத்தா சோறு நெறம் மாறி ஒரு மாதிரி வாடையடிச்சிருக்கு.''

''கெட்டுப்போயிருக்கும்.''

''கெடல. வெசம் கலந்த சோறு.''

''அடப் பாவி. எதுக்கு அப்படிச் செஞ்சானாம்.''

''நம்ம கோயிலுப் பட்டரக் கொல்றதுக்கோ என்னமோ.''

இந்தப் பேச்சு சந்திக்கு வந்து தகராறில் கொண்டுபோய் விட்டது. சிவன் கோயில் சமையல்காரருக்கு நல்ல அடி. அதிலிருந்து சிதம்பரத்துப் பிராமண ருக்கு பட்டர் வீட்டில் சாப்பாடு கிடையாது.

திடீரென்று ஒரு நாள் சிவன் கோயில் நாட்டியக்காரி சொர்ணத்தின் கூரை வீடு எரிந்துபோயிற்று. மேல்சாதிக்காரர்கள் தெளிவாகச் சொன்னார்கள்.

''இது சாணாங்க வேலையேதான்.''

''நம்மள மாட்டி வுடுறதுக்கு எதுடா சந்தர்ப்பம்னு பாத்துட்ருக்கான்.''

''என்னதான் நடக்குதுன்னு பாப்பொம்.''

நாடார் தெருக்களில் வாலிபப் பையன்கள் துருதுருவென்றிருந்தார்கள். ஏதாச்சும் செய்யணுமென்ற துடிப்பு. கூடிப் பேசி அருவமில்லாமல் சிவன் கோயி லுக்குள் போக முயற்சித்தார்கள். முழிப்பாக இருந்த காவக்காரர்கள் விரட்டி யடித்தார்கள்.

''ஒங்களுக்குக் கொழுப்பாலே. உள்ள வந்தீக கையக் கால ஒடிச்சுப் புருவென்.''

''ஓங்கப்பன்மாருக்குக் கொள்ளிவைக்கணுமா வேணாமா.''

''சின்னப் பயகள ஏவி வுட்டு வேடிக்க பாக்கானே. சரியான ஆம்பளன்னா பெரியவன் வரணும்.''

இந்தக் கிளித்தட்டு ரெண்டு நாளாக நடந்தது. மூணாம் நாளும் பயல்கள் நெருங்கியபோது காவக்காரர்கள் குருவி பத்தியதுபோல் துரத்திக் கோயில் கதவைப் பூட்டிவிட்டார்கள். தீட்டுக் கழித்துவிட்டு பூட்டியபடியே பூசை நடந்தது.

அன்றைக்கு ராத்திரி காளி கோயில் நந்தவனம் கண்டபடி சேதமாகி விட்டது. சிவன் கோயில் வெளிக்கதவுக்கும் காயம். எல்லாம் கமுக்கமாக நடந்து விட்டது.

மறுநாள் காலை சேதியறிந்த கிராம முன்சீப் சங்கரப்ப நாயுடுவும் போலீஸ் கச்சேரி அதிகாரி ஏட்டு சிதம்பரம் பிள்ளையும் ஊர்க்காரர்களுடன் நந்தவனத்தை யும் கோயிலையும் பார்வையிட்டார்கள். இரு பக்கச் சேதாரம் பற்றி யாரும் சொல்லத் தயாராக இல்லை. கொந்தளிப்பில் கூடிக்கூடிப் பேசிக்கொண்டிருந் தார்கள்.

அதிகாரிகள் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் நடையைக் கட்டிவிட் டார்கள். போனதே சரியென்று ஸ்ரீவில்லிப்புத்தூர் டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கும் சாத்தூர் சப்மாஜிஸ்திரேட்டுக்கும் ரிப்போர்ட்டும் தந்தியும் அனுப்பியதுடன் அவர்கள் வேலை முடிந்தது.

டெபுடி மாஜிஸ்திரேட் சையது முஸ்தபா உசேனுக்கு ராத்திரிதான் தந்தி கிடைத்தது. அந்தச் சமயம் ஆண்டாள் கோயில் ஆடித் திருவிழா நடந்துகொண் டிருந்தது. எங்கும் ஒரே பதட்டம். வைணவர்களுக்கிடையே வடகலை தென் கலைச் சச்சரவு உச்சத்தில் இருந்தது. அது கிட்டத்தட்ட நூறு வருச மண்டையடி. வேதாந்த தேசிகரின் உருவச் சிலையை தென்கலை நாமம் போட்டுத்தான் எடுத்துப் போகணும். அப்போது தென்கலை மந்திரந்தான் ஓதணும் என்று

தென்கலைக்காரர்கள் கட்டாயப்படுத்தினார்கள். அதெப்படி. தேசிகர் வடகலைக் காரராயிற்றே. வடகலை நாமமிட்டு வடகலை மந்திரம் ஓதித்தான் கொண்டு போகணும் என்று வடகலைக்காரர்கள் சொன்னார்கள்.

கோயிலுக்குள்ளேயும் சரி வெளியேயும் சரி தென்கலைக்காரர்கள் கூட்டம் கொஞ்சம் அதிகம். அப்படியானால் தேசிகரை எடுத்துப் போகவே வேணாம். வடகலை நாமமிட்டால் கோயிலுக்குத் தீட்டு என்று சொன்னார்கள். ஒரு முறை வடகலைக்காரர்களைக் கோயிலுக்குள் நுழைய விடாமலேயே விரட்டியடித் தார்கள். போலீஸ் தடியடி துப்பாக்கிச் சூடுவரை நிலைமை முற்றிவிட்டது. ஹைகோர்ட்வரை அலைந்தார்கள். உருப்படியான தீர்வு கிடைத்த பாடில்லை. வருசமெல்லாம் இழுபறிதான்.

அந்த வருசமும் அப்படித்தான். எந்த நேரத்திலும் மோதல் வரலாமென்ற நிலைமை. தாலுகா மாஜிஸ்திரேட்டை சிவகாசிக்கு அனுப்பலாமென்றால் அதுக்கும் தோதில்லை. உள்ளூரில் அவர் இருந்தாகணும். அசம்பாவிதம் எதும் நடந்துவிடக் கூடாதே. டெபுடி மாஜிஸ்திரேட்டே சிவகாசிக்குப் புறப்பட்டார்.

போய்ச் சேரும்போது நன்றாக விடியவில்லை. சம்பவ இடங்களைப் பார்வை யிட்டார். விசாரணை நடத்தினார். ரிக்கார்டுகளைப் புரட்டினார். நிலைமை அவ்வளவு மோசமாக இல்லையெனத் தோன்றியது. ஒரு விசயம் தெளிவாகத் தெரிந்தது. போலீஸ் கச்சேரி அதிகாரி உருப்படியாக எந்த நடவடிக்கையும் எடுக்க வில்லை.

சாத்தூர் சப்மாஜிஸ்திரேட் வாசுதேவ ராவ் சம்பவ நாளன்று முத்தலா புரத்தில் இருந்தார். அங்கே நடந்த மாட்டுத் தாவணியை முன்னிட்டுப் பத்து நாள் தங்கிவிட்டுச் சம்பவத்துக்கு அடுத்த நாள் சாயங்காலம் சாத்தூருக்குத் திரும்பியிருந்தார். சிவகாசி கிராம முன்சீப்பும் கச்சேரி அதிகாரியும் அனுப்பிய ரிப்போர்ட்டும் தந்தியும் ராத்திரி கிடைத்தன. பெரிய கலகம் நடக்கப்போகிறது. உடனே வரவும் என்று கூப்பிட்டிருந்தார்கள்.

அவர் மறுநாள் காலை சிவகாசிக்கு வந்தார். டெபுடி மாஜிஸ்திரேட் அவரிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு ஸ்ரீவில்லிப்புத்தூருக்குப் போய் விட்டார். சப்மாஜிஸ்திரேட்டின் பங்குக்கு விசாரணை நடந்தது. கிராம முன்சீப் கச்சேரி அதிகாரி நாட்டியக்காரி செம்புக்குட்டி நாடார் என்று பலரை விசாரித் தார். கச்சேரி அதிகாரி சொன்னார்.

“நேத்து எரநூறு நாடாருக்கு மேல சிவங்கோயிலுக்கு முன்னால தெரண்டு வந்து உள்ள போனாலே போவம்னு மொரண்டு புடிச்சாங்க. கட்டுப்படுத்துறதுக் குள்ள பெரும்பாடாப் போச்சு.”

கிராம முன்சீப் ஒத்துப்பாடினார்.

“உள்ள போனா வம்பு வந்து சேரும்னு எவ்வளவோ எச்சரிச்சும் கேக்கல. ஒருவழியா அரட்டிக் கலச்சுவுட்டொம்.”

இன்னொருவர் சொன்னார்.

“நாடாக்கமாரு பண்டாரங்களுக்குப் பதிலா பெராமணரப் பூசாரியாக்கு னாங்க. அண்ணைக்குப் புடிச்சது வென. இது எதுல போயி நிக்கப்போகுதோ.”

சப்மாஜிஸ்திரேட் நந்தவனத்துக்குப் போனார். நடந்த அநியாயத்தை வந்து பாருங்கடா என்பதுபோல் காளி தெய்வம் கோவத்தில் உட்கார்ந்திருந்தது. அழிம்பைப் பார்க்கச் சகிக்கவில்லை. பூவும் பிஞ்சும் காயும் பழமுமாக ஏராள மான மரங்கள் அடியோடு சாய்ந்து கிடந்தன. அரிவாள் வெட்டிலும் கோடாலிக் கொத்திலும் கொலையுண்டவை. தறிக்க முடியாத மாமரங்கள் ரம்ப அறுப்பில் மாண்டுவிட்டன. எந்த முகத்திலும் சவக்களை படியவில்லை. வடக்குக் கிணற்றில் ரெண்டு தெலாக் கல் உடைந்திருந்தது.

எப்படியிருந்த நந்தவனம். காட்டுக் காளிக்கு வெக்கையாக இருக்கிற தென்று கொஞ்ச காலத்துக்கு முந்திதான் அதை உண்டாக்கினார்கள். விரைவி லேயே பச்சை ஊராகிவிட்டது. அதுக்குள் காளி பத்திரமாகக் குடியிருந்தாள். அவள் காலடியில் பிடிமண் எடுத்துத் தென்புறம் தனிக் கோயில் கட்டி பத்திர காளியாக வணங்கினார்கள். திருவிழா கொண்டாடினார்கள். காளியின் மகிமை யைப் பாடிக் குமரிப் பெண்கள் கும்மியடித்தார்கள்.

நந்தவனக் குளுமை கொஞ்ச நேரத்தில் ஆளைக் கிறக்கிவிடும். பூஞ்செடி களும் புங்கமரங்களும் காளிக்குக் காவலிருக்கும். வெளிவரிசையில் சடைமுடிக் குலைகள் அசையும் பாக்கு மரங்கள். கொழுந்துக் குஞ்சம் சூடிய வாதுமை மரங்கள். இலைத் தோரணமிட்ட மாமரங்கள். வளமான மண்ணில் குலை தாங்கிய வாழைக் கூட்டம். மயிலும் குயிலும் ஒயிலான குருவிகளும் ஆடிப் பாடும் ஆனந்தத் தோட்டம்.

காளிக்கு அருகே பெரிய கிணறு. வடபுறமும் தென்புறமும் ரெண்டு ரெண்டு தெலா. நீரிறைக்கத் தோதாக நீளமான மிதிகல். கிழக்கே சிறு மொட்டைக் கோபுரமாக விளக்கு மாடம். அதையொட்டி நீளும் கல் பதித்த சந்தன மேடை. அடுக்கடுக்காக நீர்த் தொட்டிகள். மயில்கள் தாகம் தணிக்கத் தனியாகப் பதித்த கல் கிண்ணங்கள்.

எந்த நேரமும் தெலா முனக்கம் கேட்டுக்கொண்டேயிருக்கும். இருக்கங்குடி ஆற்றைப் போல் இரு புறமும் குளிப்பு நடக்கும். துணி துவைப்பு எதிரொலிக்கும். பிராமணர்களைப் போல் நாடார்கள் தினமும் குளித்துத் தங்கள் துணிகளைத் துவைக்கணும். பெண்களுக்கு அனுமதியில்லை.

குளித்து முடித்துக் கல்லில் உரசிய சந்தனத்தை நெற்றியில் பூசி விளக்கு மாடத்துக்குள் நெளிந்தசையும் நெருப்புத் தளிரைத் தரிசித்துவிட்டுத் தாயாக அமர்ந்திருக்கும் காளியை வணங்கினால் மனசும் குளிரும். நந்தவனப் பாதைக்குக் கிழக்கே இன்னொரு தெலாக் கிணறும் உண்டு. ஆட்கள் அதிகமானால் அதும் குளிப்புத் துறையாகிவிடும்.

நாடார்களுக்கு மனசு ஆறவில்லை.

''எப்பேர்ப்பட்ட நந்தவனம். ராவோட ராவா மூளியாக்கீட்டாங்களே.''

''சந்தேகமே இல்ல. இது அவங்க வேலதான்.''

சப்மாஜிஸ்திரேட் சிவன் கோயிலுக்குப் போனார். பெரிய கதவுக்குள் அடங்கிய திட்டிவாசல் கதவுக்குத்தான் ரெம்பச் சேதம். அதிலிருந்த பூட்டைக் கழட்டிவிட்டார்கள். தடி உளி கொண்டுதான் தெண்டியிருக்கணும். பூட்டு

பொருத்திய இடம் புண்ணாகிவிட்டது. மேல்சாதிக்காரர்கள் அழுத்தமாகச் சொன்னார்கள்.

''இது நாடாங்க கைவரிசதான்.''

மாஜிஸ்திரேட்டுக்கு ஒரே குழப்பம். இரு புறமும் ஒருவர்மீது ஒருவர் பழிசுமத்திக்கொண்டிருக்கிறார்களே ஒழிய இன்னார்தான் செய்தது என்று குறிப்பாகச் சொல்ல முடியவில்லையே. ஒருவேளை இடையில் நாலு பேர் ஊடு சால் ஓட்டித் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கிறார்களோ. அப்படியும் இருக்கலாம்.

ரெண்டு நாளில் ஆசாரி வீடு மூணும் இன்னொருவர் வீடும் எரிந்துவிட்டன. செய்தது யாரென்று தெரியவில்லை.

நாடார்கள் கூடிப் பேசினார்கள். பொன்னுச்சாமி நாடார் பதிமூணு பேர் மீது பிராது கொடுத்தார். பத்து மறவர்கள் மூணு பண்டாரங்கள். எதிர்த் தரப்பில் யாரும் கொடுக்கவில்லை. அவர்களுக்குப் பதிலாகக் கோயில் சூப்பிரண்டு வீரப்ப முதலியார் முக்கியமான நாடார்கள் ஒன்பது பேர்மீது பிராது கொடுத்தார். வழக்குகளை முறையாக விசாரித்து சப்மாஜிஸ்திரேட் தீர்ப்புச் சொல்லியாக ணும். இக்கட்டான நிலை.

யோசித்துப்பார்த்தார். ஒரு வழி பிடிபட்டது. தன் அபிப்பிராயத்தை டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு எழுதினார் :

> நிலைமை இன்னும் சீராகவில்லை. கோவம் தணியவில்லை. மாறிமாறிக் குற்றம் செய்கிறார்கள். இதைத் தடுக்க நடவடிக்கை எடுத்தாகணும். நாடார்கள் கோயிலுக்குள் போகும் உரிமை கேட்கிறார்கள். மேல்சாதிக்காரர்கள் அதை எதிர்க்கிறார்கள். நாடார்களின் எண்ணிக்கையோ அதிகம். எப்படியும் நுழைந் தாகணுமென்று தீர்மானமாக இருக்கிறார்கள். ஒண்ணு செய்யலாம். இரு பக்க மும் முக்கியப் புள்ளிகளிடம் ரெண்டு வருசத்துக்கு நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்கலாம். இதில் நான் ஒரு முன்கூட்டிய அபிப்பிரயத்துக்கு வந்து விட்டேன். ஆகவே இந்த வழக்கை வேறொரு மாஜிஸ்திரேட் நடத்துவதுதான் நியாயமாக இருக்கும்.

டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு இது சரியென்று பட்டது. வழக்கைத் தாலுகா மாஜிஸ்திரேட்டுக்கு மாற்றிவிட்டார். அதே கையோடு சிவகாசிக்கு மேலும் போலீஸ்காரர்களை அனுப்பக் கேட்டு சூப்பிரண்டுக்கு எழுதினார். சூப்பிரண்டு ஸ்டீவன்சன் ஒரு ரிசர்வ் ஏட்டு பத்து போலீஸ்காரர்களை அனுப்பி கூடவே ரெண்டு யோசனையும் சொல்லியிருந்தார். டெபுடி மாஜிஸ்திரேட் இரு தரப்பிலும் முக்கியமானவர்களைக் கூப்பிட்டு நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்கணும். அமைதியாக இல்லையென்றால் தண்ட வரி போலீஸ் வந்து இறங்குமென்றும் தகராறை சிவில் கோர்ட்டில் தீர்த்துக்கொள்ளணுமென்றும் எச்சரிக்கணும்.

டெபுடி மாஜிஸ்திரேட் சிவகாசிக்கு வந்து விசயங்களை எடுத்துச் சொன்னார். அவர் சொல்படி நடப்பதாக வாக்களித்தார்கள். அவர் கொஞ்ச நாள் அங்கேயே தங்கினார்.

இதுக்கிடையில் நாடார்கள் சிவன் கோயிலுக்குள் நுழையத் தடையுத்தரவு போடச் சொல்லி மேல்சாதிக்காரர்கள் அவரிடம் மனுக் கொடுத்தார்கள். அதில்

அவர் உடனடியாக உத்தரவு ஏதும் போடவில்லை. அதெப்படித் தடுக்க முடியும் என்று நாடார்கள் முண்டினார்கள். அந்த வேகத்திலேயே நாலஞ்சு நாள் கழித்து கோயிலுக்குள் நுழையவும் செய்தார்கள். அத்துமீறி நுழைந்ததாகக் கோயில் மூடப்பட்டது. நாடார்கள்மீது பிராதும் கொடுக்கப்பட்டது. தகராறு விரைவில் தீருமென்ற நம்பிக்கை இல்லை.

## 4. எங்கே வைப்பது

போலீஸ் கச்சேரி அதிகாரி சிதம்பரம் பிள்ளைக்குப் பதிலாக ஏட்டு சட்ட நாத பிள்ளை வந்தார். நல்ல வேலைக்காரர். கூடுதலாக போலீஸ் வந்துவிட்டதால் கச்சேரி கொஞ்சம் தெம்படைந்தது.

அப்படியும் சச்சரவு ஓய்ந்த பாடில்லை. கசப்பு அதிகமானது. அதுக்குக் காரணம் திருநெல்வேலி தேவஸ்தான கமிட்டி சிவகாசிக் கோயிலுக்குக் கூடுத லாக ரெண்டு தருமகர்த்தாக்களை நியமித்ததுதான். அவர்களில் ஒருவர் மான சேரி நாகப்பத் தலைவன். ஊர் நாட்டாமைக்காரர். மறவர்களில் முக்கியமானவர். இது நாடார்களுக்குப் பிடிக்கவில்லை.

ஒரு நாள் மறவர் தெரு வழியாக ரெண்டு நாடார்கள் கொல்லைப்புறத் துக்குப் போயிருக்கிறார்கள். அதே சமயம் ஒரு மறப்பெண்ணின் வீடு தீப்பற்றிக் கொண்டது. ரெண்டு நாடார்கள் கைவரிசைதான் என்று மறவர்கள் அவர்களைப் பிடித்துக்கொண்டார்கள். இதை அறிந்த நாடார்கள் திரண்டு வர கலகமாகி விட்டது.

உடனே போலீஸ் வந்தது. ஆகாயத்தை நோக்கிச் சுடும்படி இன்ஸ்பெக்டர் உத்தரவு போட்டார். கூட்டம் கலைந்து சண்டை அடங்கியது. தீ பெரிசாகப் பரவவில்லையென்றும் விரைவிலேயே அணைத்துவிட்டதாகவும் போலீஸ் சமாளித்தது. வீட்டுக்காரி யாரையும் சந்தேகப்படவில்லை. இருந்தாலும் மறவர் களையும் நாடார்களையும் சேர்த்து வழக்குப் பதிவுசெய்யப்பட்டது.

கலெக்டர் ஒரு உத்தரவு போட்டார். அதன்படி டெபுடி மாஜிஸ்திரேட் சிவகாசியில் தங்கிப் பிராதுகளை வாங்கணும். அங்கேயே வழக்குகளை நடத்தணும்.

டெபுடி மாஜிஸ்திரேட் சிவகாசிக்கு வந்து தங்கினார். சங்கதிகளைக் கிட்ட இருந்து பார்த்ததில் அவருக்குள் ஒரு அபிப்பிராயம் திரண்டது. அமைதிக்குப் பங்கம் ஏற்படும் வகையில் குறிப்பாக நடவடிக்கைகள் இருந்தாலொழிய யாரிடமும் நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்க முடியாது. இங்கே இருக்கும் சூழ்நிலை வினோதமானது. நாடார் வாலிபர்களுக்கும் மற்ற சாதிக்காரர்களுக் கும் அப்பப்பச் சிறுசிறு தகராறு நடக்கிறது. பெரும்புள்ளிகள் ஒதுங்கிக்கொள்கி றார்கள். நாடார்களில் பெரியவர்கள் தட்டிச்சொல்லியும் வாலிபர்கள் கேட்ப தாக இல்லை. சிவகாசியைப் பொறுத்த மட்டில் பிற சாதிக்காரர்களில் தலைவர் என்று யாரும் கிடையாது. ஒண்ணு ரெண்டு குசும்புக்காரர்கள் எரிச்சலூட்டும்படி தந்திகளை அனுப்பிச் சுத்துப்பட்டி மறவர்களைத் தூண்டிவிடுவதாகத் தெரிகிறது.

சிவகாசியில் நாடார்களை எதிர்த்துச் சண்டையிடுமளவுக்கு பிற சாதிக்காரர் களுக்குப் பலம் கிடையாது. ஏனென்றால் அவர்கள் பரம ஏழைகள். பெரும்பாலும் நாடார்களிடம் சம்பளத்துக்கு வேலை செய்கிறவர்கள். ஏதாவது சண்டை நடக்கிற தென்றால் அது பிரதானமாக நாடார்களுக்கும் மறவர்களுக்குந்தான் இருக்க முடியும். இதையெல்லாம் சொல்லி கலெக்டருக்கு எழுதினார்.

நாடார்கள் கோயிலுக்குள் நுழையத் தடைவிதிக்கச் சொல்லி தருமகர்த்தாக் களும் மனுக் கொடுத்தார்கள். மாஜிஸ்திரேட் அதையும் வாங்கி வைத்துக்கொண் டார். இதில் அவர்களுக்கு வருத்தம்.

அசம்பாவிதம் எதுமில்லாமல் கொஞ்ச நாள் ஓடியது. கோயிலில் பூசை இடைஞ்சலின்றி நடந்தது. கூடுதலாக நியமிக்கப்பட்ட தருமகர்த்தாக்களில் நாகப்பத் தலைவன் இன்னும் பொறுப்பேற்கவில்லை. பொறுப்பேற்பதாக இல்லை யென்றும் நிலைமை சரியாகும்வரை காத்திருப்பாரென்றும் ரெண்டு விதமாகப் பேசிக்கொண்டார்கள். அந்த மட்டுக்கு நிம்மதி.

போலீஸ் கச்சேரிக்கு மேலும் பல போலீஸ்காரர்கள் வந்தார்கள். அதனால் தகராறு வரச் சந்தர்ப்பமில்லையென்ற நம்பிக்கை. வந்தாலும் சமாளித்து விடலாம்.

கமுதி வழக்கில் இன்னும் தீர்ப்பாகவில்லை. விசாரணை தீவிரமாக நடந்தது. சாதகமான தீர்ப்பு வருமென்று நாடார்கள் நம்பினார்கள். அதுவரை அவர்கள் அமைதியாக இருப்பார்களென்றே தோன்றியது.

ஒரு முடிவும் தெரியாமல் இரு பக்கமும் தவித்துக்கொண்டிருந்தார்கள். அவரவருக்கான நியாயம் பேசினார்கள். அதிகாரிகளைக் குறைகூறினார்கள். பதட்டத்திலேயே ஈசனுக்குப் பூசை நடந்தது.

ஒரு மாசங்கூட ஆகியிருக்காது. ரெண்டு நாடார்கள் கோயிலுக்குள் நுழைந்து சாமி கும்பிட்டதைச் சாக்காக வைத்துக் கதவை இழுத்துப் பூட்டிவிட்டார்கள்.

டெபுடி மாஜிஸ்திரேட் நாடார்கள் பக்கம் சாய்வதாக மற்ற சாதிக்காரர்களுக்கு ஆரம்பத்திலிருந்தே சந்தேகம் உண்டு. அவர்கள் கேட்டபடி தடையுத்தரவு போட வில்லையே. அவரை வைதுதீர்த்தார்கள்.

''ஒரு உத்தரவு போட்டாப் போதும். நாடான் கிட்ட வர மாட்டான்.''

''அதச் செய்றதுக்கென்ன.''

''அவங்க மேல அப்படியென்ன பாசமோ.''

''ஒரு முக்கியமான கோயிலு பூட்டிக்கெடக்குதே. அதனால என்னதுக் கென்னது வருமோன்னு யோசிக்காமச் சும்மாருந்தா எப்படி. ஒரு வழியச் சொல்லணுமில்ல.''

''எக்கேடும் கெட்டுப்போகட்டும்னு கண்ண மூடிக்கிட்டாராக்கும்.''

''ஒரு துலுக்கரா இருந்துக்கிட்டு எல்லாருக்கும் பொதுவா நடந்துக்கிறணும்.''

''பூசையில்லாமச் சாமி பட்னியா கெடக்குதே.''

''அதானப்பா பயமாருக்கு. கோவம் கௌம்பீட்டா என்ன நடக்கும்னே தெரியாது.''

''ஊரே எரிஞ்சாலும் எரிஞ்சுபோகும்.''

தருமகர்த்தாக்கள் கலெக்டருக்கு விவரமாக மனு எழுதினார்கள்:

> கோயிலுக்குள் நுழைய நாடார்களுக்கு உரிமையில்லை. சிவகாசி நாடார்கள் ஆக்கிரமிக்கும் நோக்கத்துடன் நடந்துகொள்கிறார்கள். தருமகர்த்தா ஆக முயற்சி செய்தார்கள். சிருங்கேரி மடாதிபதியின் உத்தரவால் அது தடுக்கப் பட்டது. அத்துமீறிக் கோயிலுக்குள் நுழைய முயற்சித்தார்கள். இரு முறை தடையுத்தரவு கேட்டு மனுக் கொடுத்தும் டெபுடி மாஜிஸ்திரேட் நடவடிக்கை எடுக்கவில்லை. அவர் வழக்குகளை ரெம்ப நாளாக இழுத்தடிக்கிறார். இதனால் ஊருக்குள் அதிகக் கூட்டம் சேர்ந்தது. பதட்டம் கூடியது. தகராறு ஏற்பட்டது. வழக்குகளின் எண்ணிக்கை அதிகரித்தது. நாடார்கள் நிறைய பணம் செலவழித்ததால் போலீஸ் பாரபட்சமாக நடந்துகொண்டது. ஒரு வழக்கில் மறவர்களுக்குத் தண்டனை கிடைக்காததால் நாடார்களுக்குக் கோவம். இரு தரப்பிலும் முக்கியமானவர்களிடம் நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்கணு மென்று போலீஸ் நினைத்தது. டெபுடி மாஜிஸ்திரேட் நடவடிக்கை எடுக்க வில்லை. திருவிழா நெருங்கிக்கொண்டிருக்கிறது. அதில் களேபரம் நடக்கப் போவது நிச்சயம்.

அந்த மனுவுக்கு டெபுடி மாஜிஸ்திரேட் பதிலெழுதினார்:

> நாடார்கள் தருமகர்த்தா ஆவதை சிருங்கேரி மடாதிபதி தடுத்ததற்கு ஆதார மில்லை. வழக்குகள் இன்னும் விசாரணையில் உள்ளன. சிவகாசி இதுவரை அமைதியாகவே இருக்கிறது. அமைதிக்குப் பங்கமில்லாத காரணத்தால் தடையுத்தரவு போடவில்லை. நாடார்களின் தலையீடு கிடையாது. ஓரிரு போக்கிரிகளின் தூண்டுதலே காரணம். இனிமேல் அவ்வித நிலைமை வரா தென நம்புகிறேன். நியாயமான முகாந்திரமில்லாமல் தடையுத்தரவு போட முடியாது. வழக்கு முடியும்வரை கோயில் விவகாரத்தில் தலையிடுவ தில்லையென நாடார்கள் உறுதியளித்திருக்கிறார்கள். நான் சொல்லியும் கேட்காமல் அதிகாரிகள் கோயிலை அடைத்துவிட்டார்கள்.

பிறகு அவர் கைவசமிருந்த வழக்குகளில் விசாரணையைச் சடுதியில் முடித்துத் தீர்ப்புச் சொல்லிவிட்டார். தகுந்த முகாந்திரமில்லாததால் சம்பந்தப் பட்ட நாடார்களையும் பிற சாதிக்காரர்களையும் விடுதலைசெய்தார். அதில் ஒரு வழக்கு முக்கியமானது. நாடார்கள் சிவன் கோயிலுக்குள் நுழையலாமா கூடாதா என்பதைத் தீர்மானிக்க வேண்டியது. அத்துமீறி நுழைந்ததாகவும் கோயிலுக்குத் தீட்டு உண்டாக்கியதாகவும் நாலு நாடார்கள்மீது கோயில் பட்டர் போட்ட வழக்கு.

கோயில் அதிகாரிகள் சிப்பந்திகள் தருமகர்த்தாக்கள் தாசில்தார் கிராம முன்சீப் பஞ்சாங்கப் பிராமணர் தீட்சிதர் என்று பல தரப்பிலிருந்தும் பத்தொன்பது சாட்சிகளை விசாரித்தார். தீட்சிதர்தான் முக்கியமான சாட்சி.

ஆகம சாத்திரப்படி பறையர் பள்ளர் பொதர்வண்ணார் போன்ற கீழ்சாதிக் காரர்கள் கோயிலுக்குள் நுழைய முடியாது. நாடான் அல்லது சாணார் என்ற வார்த்தை ஆகம சாத்திரத்தில் கிடையாது. பொதுமக்களுக்காக உள்ள கோயில்கள்

எல்லா இந்துக்காரர்களுக்கும் பொதுவானவை. ஆனால் அவரவருக்கென்று தனி யாக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களில் இருந்துகொண்டுதான் சாமி கும்பிடணும். பிராமணர்கள் மட்டுமே மாட வீதிகளிலும் சன்னதித் தெருக்களிலும் குடி யிருக்கணும். பிற சாதிக்காரர்கள் வெளியே மூணு சுற்றுத் தெருக்களில் வசிக் கணும். கோயிலுக்குள் போகக் கூடாதவர்கள் அதுக்கும் வெளியே ஏழாவது சுற்றில் சாதிப்படி ஒதுக்கப்பட்ட வரிசையில் இருக்கணும். சிவகாசிக் கோயிலுக்குள் நாடார்கள் நுழையலாமா கூடாதா என்ற வழக்கம்பற்றித் தனக்குத் தெரியாது. இப்படிச் சொன்னார் தீட்சிதர்.

மற்ற பிரதான சாட்சிகள் நாடார்கள் கோயிலுக்குள் செல்வதுபற்றி நடைமுறையில் உள்ள வழக்கத்தைச் சொன்னார்கள்.

''நாடாருக கொடவர வாசலத் தாண்டிக் கோயிலுக்குள்ள போறதில்ல. போறது வழக்கமுமில்ல.''

''நான் கோயிலுக்குப் போன சமயத்துல நாடாருகள உள்ள வச்சுப் பாத்துக்கிட்டதில்ல.''

நாடார்களைப் பிற சாதிக்காரர்களிடமிருந்து எப்படிப் பிரித்துப் பார்ப்ப தென்று அவர்களால் சொல்ல முடியவில்லை.

குறுக்கு விசாரணையில் மாஜிஸ்திரேட் சாட்சிகளிடம் பல கேள்விகளைக் கேட்டார்.

''கோயிலுக்கு நாடார்களை தருமகர்த்தாக்களாக நியமிக்கச் சொல்லி வெள்ளாளர்கள் மகஜர் கொடுத்ததுண்டா.''

''தேரோட்டத் திருவிழாவில் நாடார்கள் தேங்காய் உடைத்துச் சாமி கும்பிடும்போது அவர்களுக்குப் பட்டர் நேரடியாகவோ ஓதுவார் மூலமாகவோ பிரசாதம் கொடுப்பதுண்டா.''

''மாட வீதிகள் சன்னதித் தெருக்கள் ரத வீதிகளில் நாடார்கள் குடியிருப்பது தெரியுமா.''

''கோயில் வாசல் முகப்பில் விழுதுப்பெருமாள் நாடான் பேரில் ஒரு கல்வெட்டு இருப்பது உண்மையா.''

''நாடார்கள் சிவன் கோயில் பக்தர்களா.''

''கோயிலுக்கு ஏதேனும் தலபுராணம் உண்டா.''

''இப்போது நடந்த சம்பவத்துக்கு முந்தி எப்போதாவது தீட்டுக்கழிப்பு நடந்ததா.''

''குற்றம் சாட்டப்பட்டவர்கள் சாமி கும்பிடுவதற்குத் தயாராகக் கோயிலுக்கு வரவில்லையா.''

சிலர் முழுமையாகவும் சிலர் அரைகுறையாகவும் ஒத்துக்கொண்டார்கள். இன்னும் சிலர் ஒட்டுமொத்தமாக மறுத்தார்கள்.

மாஜிஸ்திரேட் பல அம்சங்களை யோசித்துப்பார்த்தார். குற்றத்தை ருசுப் பிக்கப் போதிய சாட்சியங்கள் அவசியம். நாடார்கள் கீழ்ச்சாதிக்காரர்கள்தானா. அதனால் அவர்கள் கோயிலுக்குள் நுழையத் தடையுள்ளதா. அவர்கள் நுழைவதால் கோயில் பக்தர்களின் மதத்துக்கு அவமானம் ஏற்படுமா. இதுக்கெல்லாம் நம்பக

மான சட்டபூர்வமான ஆதாரம் ஏதுமில்லை. நாடார்கள் கோயிலுக்குள் செல்வது கிடையாது என்பதைத் தவிர சாட்சிகளால் வேறெதையும் கூற முடியவில்லை.

நடைமுறை வழக்கத்தை மட்டும் ஆதாரமாகக் கொண்டு இந்த வழக்கை கிரிமினல் கோர்ட் தீர்மானிக்க முடியாது. நாடார்கள் கோயிலுக்குள் நுழைய முடியாததுக்குச் சட்டபூர்வ ஆதாரம் இருப்பதற்கான அடிப்படையாக தீட்சிதரின் சாட்சியத்தை எடுத்துக்கொள்ள முடியாது. ஆகம சாத்திரங்களில் நாடான் அல்லது சாணார் என்ற வார்த்தை கிடையாதென அவரே ஒத்துக்கொள்கிறார். கோயில்களில் ஒவ்வொரு சாதியையும் எந்தெந்த நிலைகளில் வைக்கணும் என்பதை சிவில் கோர்ட்தான் தீர்மானிக்கணும்.

நாடார்களைப் பஞ்சமர்களின் நிலையில் வைத்துப் பார்க்கணுமென்றால் அதுக்குச் சட்டரீதியான ஆதாரம் இருக்கணும். அதுக்கு மாறாக எதும் இருப்பதாக யூகிக்கவோ அனுமானிக்கவோ முடியாது. இந்த வழக்கைப் பொறுத்தமட்டில் சாட்சியங்களிலிருந்து இப்படித் தீர்மானிக்கலாம். மொத்தமாக நாடார்களைக் கோயிலுக்குள் நுழைய விடாமல் தடுப்பது ஒரு நடைமுறை வழக்கமாகவே உள்ளது. அதுகூட ருசுப்பிக்கப்படணும். மற்றப்படி அவர்கள் நுழைவதைக் கட்டுப் படுத்தும் விதிமுறைகள் ஏதும் கிடையாது. ஒரு நாடார் இந்துக்காரர் அல்லாதவர் எனக் கருதப்படாதவரை இந்துக்காரர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பொதுக் கோயில்களில் வழிபட அவருக்கு இயல்பாகவே உரிமையுண்டு.

ஆக நாடார்களை விலக்கிவைக்கும் வழக்கமோ உரிமையோ ருசுவாக வில்லை. சாதி வேறுபாடுகள் அல்லது சாத்திரங்களின் அடிப்படையிலான எந்த உரிமையையும் சிவில் கோர்ட்தான் தீர்மானிக்கணும். சாத்திரங்களையோ ஆகமங்களையோ அலசுவதற்கு கிரிமினல் கோர்ட் ஏற்ற இடமல்ல.

சட்டப்படி குற்றம் ருசுவாகாததால் வழக்கைத் தள்ளுபடிசெய்து இரு தரப்பும் அவரவர் உரிமையைத் தீர்மானிக்க சிவில் கோர்ட்டை அணுகுமாறு உத்தரவிட்டார். நாடார்கள் விடுதலையானார்கள்.

மேல்சாதிக்காரர்களுக்குக் கோவம்.

''செஞ்ச தப்புக்கு அவனக் கொட்னாத்தான அடங்குவான்.''

''இவரே வாலுருவி வுடுற மாதிரில்ல இருக்கு.''

''இத்தோட வுடப்புடாது. அப்பீலுக்குப் போவொம்.''

## 5. முன்னோட்டம்

மூணு வருசத்துக்கு முந்தி தருமகர்த்தா பதவியை ராஜினாமா செய்த சங்கர மூர்த்தி முதலியார் அப்போதே ஊரை விட்டுப் போய்விட்டார். நாடார்களுக் கும் அவருக்கும் ஆரம்பத்திலிருந்தே ஆகாது. நாடார்கள் சிவன் கோயிலைக் கொள்ளையடிக்கப் போவதாகவும் தன்னைக் கொலைசெய்யத் திட்டமிட்டிருப்ப தாகவும் சிவகாசிக்குத் திரும்பினால் தன் உயிருக்கு ஆபத்து என்றும் புகார் கூறி

வெளியிலிருந்துகொண்டே அதிகாரிகளுக்கு மனுவும் தந்தியுமாக அனுப்பிக் கொண்டிருந்தார்.

தேவஸ்தான கமிட்டி அவரை மறுபடியும் கோயில் தருமகர்த்தாவாக நியமித்துவிட்டது. ரெம்ப நாளுக்குப் பிறகு ஊர் திரும்பினார். அவரை நீக்கணு மென்று நாடார்கள் ஜில்லா கோர்ட்டில் மனுப்போட்டார்கள். இதில் கமிட்டி தான் முடிவெடுக்கணுமென்று சொல்லி கோர்ட் அதைத் தள்ளுபடிசெய்து விட்டது.

இந்தச் சமயத்தில் திருநெல்வேலி கலெக்டர் ஹிக்கன்ஸ் மாறிப் போய்விட் டார். புதிதாக ஸ்காட் வந்தார். இனிமேல்தான் அவர் சிவகாசி நிலவரத்தைத் தெரிந்துகொள்ளணும். விவரம் பிடிபடும்வரை மற்ற அதிகாரிகளை நம்பியிருக்க வேண்டியிருந்தது.

போலீஸ் சூப்பிரண்டுக்கு அடுத்தபடியாக ரெம்ப நாள் அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு இல்லாமலே நிருவாகம் நடந்தது. இதனால் உடனுக்குடன் தகவல் பெறுவதில் சூப்பிரண்டுக்குச் சிரமமிருந்தது. இன்ஸ்பெக்டரிடமிருந்துதான் பெற்றாகணும். இந்தச் சிரமத்தைக் குறைக்க கார்டோஸோ அஸிஸ்டெண்ட சூப்பிரண்டாகப் பொறுப்பேற்றார்.

நாடார்கள் கோயிலுக்குள் நுழைவதுபற்றி டெபுடி மாஜிஸ்திரேட் அவர்களுக்குச் சாதகமாக அளித்த தீர்ப்புக்கெதிராக மேல்சாதிக்காரர்கள் செசன்ஸ் கோர்ட்டில் அப்பீல் செய்திருந்தார்கள். அது தள்ளுபடியாகவே நொந்து போனார்கள்.

சிவகாசியில் பெரிசாகச் சண்டையேதும் நடக்கவில்லை. அடுத்தடுத்து அஞ்சாறு தீவைப்புடன் சரி. வீடுகள் எரிந்தன. நாடார்கள்மீது வலுவான சந்தேகம் இருந்தது.

கொஞ்ச நாளாக விருதுபட்டி டிவிஷனுக்கு முறையான இன்ஸ்பெக்டர் இல்லை. ஏட்டுக்கள் பொறுப்பிலேயே இருந்தது. இப்போதுதான் இன்ஸ்பெக்டர் வந்து சேர்ந்தார். பேர் பார்த்தசாரதி அய்யங்கார். ஓடியாடி வேலை செய்யக் கூடியவர். சிவகாசி அவர் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. ஸ்ரீவில்லிப்புத்தூரிலும் சாத்தூரிலும் தனித் தனி இன்ஸ்பெக்டர்கள் இருந்தார்கள்.

திருநெல்வேலியில் போலீஸ் சூப்பிரண்டாக டேன் என்ற வெள்ளைக் காரர் இருந்தார். அவர் அந்த ஜில்லாவில் அனுபவப்பட்டவர். சிவகாசி நில வரங்கள் அவருக்குத் தெரியும். கலெக்டர் ஸ்காட் அவரை அடிக்கடி கலந் தாலோசிப்பார்.

விருதுபட்டி இன்ஸ்பெக்டருக்கு சிவகாசி விவகாரங்கள் விரைவிலேயே பிடிபட்டுவிட்டன. அதனால் எச்சரிக்கையாகவே இருந்தார். அப்பப்ப அஸிஸ் டெண்ட் சூப்பிரண்டுக்கு ரிப்போர்ட் எழுதினார்:

> நாடார்கள் தங்கத்தில் பூணூல் போட்டுக்கொண்டு திரிகிறார்கள். இதனால் மற்றவர்களுக்குக் கடுப்பாக உள்ளது. சிவகாசிக்கு அருகிலுள்ள மறவர்கள் சக்கிலியர்களை வரவழைத்துப் பூணூல் போட்டுக்கொண்டு நாடார்களின் கோயிலுக்குள் நுழைந்து தீட்டுப்படுத்த வற்புறுத்துகிறார்கள்.

அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு இதைப் பெரிசுபடுத்தவில்லை. இன்ஸ்பெக்டர் பொறுப்பற்ற முறையில் ரிப்போர்ட் எழுதுவதாகக் கண்டித்தார். இன்ஸ்பெக்டர் மேலும் எழுதினார் :

சிவகாசியைக் கொள்ளையடிக்கக் கூட்டம் திரண்டுகொண்டிருக்கிறது.

அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு இதையும் கண்டுகொள்ளவில்லை. என்னமோ நடக்கப்போகிறது என்பது மட்டும் இன்ஸ்பெக்டர் மனசில் உறுத்திக்கொண்டே யிருந்தது.

அந்த உறுத்தல் மறுநாளே பலித்துவிட்டது. அன்றைக்கு புதன்கிழமை. சித்திரை மாசம் மாரியம்மன் கோயில் திருவிழா நடந்துகொண்டிருந்தது. நாடார்கள் தடபுடலாகக் கொண்டாடினார்கள். அதுக்காகச் சில போலீஸ் காரர்கள் காவலுக்கு இருந்தார்கள். இன்ஸ்பெக்டர் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக் கெண்டிருந்தார். சின்னச் சப்பரத்தில் சாமி எழுந்தருளி நகர்ந்துகொண்டிருந்தது.

மதியம் ரெண்டு மணியிருக்கும். சில போலீஸ்காரர்கள் ஓடிவந்து தகவல் சொன்னார்கள்.

‘‘ஊருக்கு வடக்க மறவரு வீடுக தீப்புடிச்சு எரியிது.’’

‘‘வீடுகளுக்கு முன்னால மறவருக்கும் நாடாருக்கும் கடுமையா சண்ட நடக்குது.’’

இன்ஸ்பெக்டர் பதறியது போலவே நடந்துவிட்டது. கச்சேரியைச் சேர்ந்த வர்கள் பந்தோபஸ்தில் இருந்தவர்கள் என்று எவ்வளவு முடியுமோ அவ்வளவு போலீஸ்காரர்களைத் திரட்டிக்கொண்டு சம்பவ இடத்துக்கு விரைந்தார். ஏகப்பட்ட மறவர் வீடுகள் எரிந்துகொண்டிருந்தன. சண்டை உச்சக்கட்டத்தில் இருந்தது. கம்பும் கத்தியும் தாராளமாக நடமாடின. பெரியபெரிய கல்லும் செங்கலும் விர்ரென்று பறந்தன. நானூறு நாடார்கள் இருக்கும். மறவர்கள் அதில் பாதி. இன்ஸ்பெக்டர் கூட்டத்தை நோக்கிச் சொன்னார்.

‘‘சண்ட போடாமக் கலஞ்சு போயிடுங்கோ.’’

கூட்டம் அவரைக் குறிவைத்தது. கடுமையாக எச்சரித்தார்.

‘‘கலஞ்சு போகலன்னா என்ன நடக்கும் தெரியுமோ.’’

கூட்டம் ஏளனமாகச் சிரித்தது. அவர் தவித்தார். கூப்பிடு தூரத்திலுள்ள சத்திரத்தில் விசாரணை நடத்திக்கொண்டிருந்த டெபுடி மாஜிஸ்திரேட்டுக்குத் தகவலனுப்பினார். அப்போது மணி மூணு. மாஜிஸ்திரேட்டிடமிருந்து பதி லில்லை.

இன்னும் கூட்டம் கலைந்த பாடில்லை. இதுக்குள் நாடார்களின் வண்டிப் பேட்டையில் கூரைச் சாய்ப்புக்கள் தீப்பற்றிக்கொண்டன. கலகம் ஊர் முழுக்கப் பரவிவிடுமே. ரெம்பச் சேதமாகும். நெருப்பை அணைக்க வழியில்லையே.

சண்டை கொஞ்சம் மட்டுப்பட்ட மாதிரி தெரிந்தது. இன்ஸ்பெக்டர் மாஜிஸ்திரேட்டிடம் ஓடிப்போய்க் கெஞ்சினார்.

‘‘நெலம ரொம்ப மோசமாயிடுத்து. நீங்க வந்து கூட்டத்தக் கலைக்க உத்தரவு போடணும்.’’

மாஜிஸ்திரேட் அமைதியாகச் சொன்னார்.

''நெலவரத்தப் பத்தி எனக்கு அப்பப்ப ரிப்போர்ட் பண்ணுங்க.''

''எத்தன கொல நடக்கும்னு சொல்ல முடியாது. ஒடனே வரணும்.''

மாஜிஸ்திரேட் கிளம்புவதாக இல்லை. அப்போது துப்பாக்கிச் சத்தம் கேட்டது. இன்ஸ்பெக்டர் தாமதிக்காமல் திரும்பி ஓடினார். போலீஸ்காரர்கள் பதட்டத்தில் நிலைகுலைந்து நின்றிருந்தார்கள். ஒருவர் சொன்னார்.

''துப்பாக்கிச் சூடு நடத்துனாத்தான் கூட்டம் கலையும்.''

இன்ஸ்பெக்டர் தயங்கினார்.

''மாஜிஸ்திரேட் உத்தரவில்லாம எப்படி...''

''அவரு வாற மாதிரி தெரியல. சண்ட நடக்கிற கோதாவப் பாத்தா நம்ம தப்பிக்கிறது கஸ்டம். சுடுறதுதான் ஒரே வழி.''

''ஆனது ஆகட்டும். அப்புறம் பாத்துக்கிடலாம். ஆகாயத்தப் பாத்துச் சுடுங்கோ.''

போலீஸ்காரர்கள் பதினஞ்சு ரவுண்டு சுட்டார்கள். கூட்டம் கலைந்து ஓடியது. யாரையும் விரட்டிப் பிடிக்கவில்லை. பதட்டம் சற்றுத் தணிந்து பெரு மூச்சு விட்டார்கள். இப்போது மறவர் தெரு முழுக்க எரிந்துகொண்டிருந்தது.

போலீஸ்காரர்கள் கைதவறிக் கூட்டத்தின்மீது சுட்டிருந்தால் கதி என்னாகி யிருக்கும். கலகம் பெரிசாக வெடித்திருக்கும். நல்ல வேளை அப்படி எதும் நடக்க வில்லை.

கச்சேரி அதிகாரி சொன்னார்.

''ஒரு வீட்டு மேலருந்து மூணு நாடாருக துப்பாக்கியால சுட்டதக் கண் ணால பாத்தென்.''

ஒரு போலீஸ்காரர் தலையாட்டினார்.

''இருக்கும். நான் ஆரவும் பாக்கல. ஆனா துப்பாக்கிச் சத்தம் கேட்டுச்சு. அது மட்டும் நிச்சயம்.''

இன்ஸ்பெக்டர் ஆமோதித்தார்.

''நானும் கேட்டென். ஏன் சண்டபோட்டாளாம்.''

வெவ்வேறு காரணங்கள் சென்னார்கள்.

''காலையில தண்ணிப் பான சொமந்துட்டுப் போன ஒரு பொண்ணுகிட்ட நாடாரு பையன் தகாத வார்த்த பேசுனானாம். அதுக்கு அந்தப் பொண்ணு வாய்க்கு வந்தபடி திட்டீட்டுப் போச்சாம்.''

''சரி.''

''அந்தப் பொண்ணு போயி வீட்ல சொல்லீருக்கும் போலருக்கு. அதனால சில நாடாருகளுக்கும் மறவருக்கும் வாக்குவாதம் நடந்துருக்கு.''

''தகராறு காலையிலயே ஆரம்பிச்சிருச்சு.''

''இனியொரு காரணமும் சொல்லிக்கிறாக.''

''அதென்ன.''

''மத்த சாதிக்காரங்க ஆரும் நாடாருக கடையில எந்தப் பண்டமும் வாங்கப்புடாதுன்னு முடிவெடுத்துட்டாங்களாம்.''

''அப்புறம்.''

''நமக்கின்னே ஒரு சத்தரமும் கடைகளும் கட்டி நடத்துவம்னு திட்டம் போட்ருக்காங்க. வேலைய இண்ணைக்கு ஆரம்பிக்கிறதா இருந்தாங்களாம்.''

''இது நாடாருகளுக்குப் புடிக்கல போலருக்கு. எப்படியும் தடுத்தாகணும்னு காரியத்துல எறங்கீட்டாங்களாம்.''

''அவங்க யேவாரம் படுத்துறப்புடாதில்ல.''

''என்ன எழவு போட்டியோ.''

டெபுடி மாஜிஸ்திரேட் அஞ்சு மணிவாக்கில் வந்துசேர்ந்தார். மிஞ்சியிருந்த கூட்டமும் சன்னஞ்சன்னமாகக் கலைய ஆரம்பித்தது. மேகம் இருண்டு மழை பிடித்துக்கொண்டது. நெருப்பின் தாகம் தணிந்து ஏழு மணிக்கெல்லாம் அணைந்து விட்டது. தெருவில் சாம்பல் தண்ணீர் புரண்டோடியது.

இன்னொரு இடத்தில் சாமியைச் சுமந்துகொண்டு தனிமையில் நிற்கும் ஈரச் சப்பரம். அலங்காரம் நனைந்து குலைந்துவிட்ட கோலம்.

மறவர் வீடுகள் நாற்பத்தஞ்சு தரைமட்டமாகிவிட்டன. பல குடும்பங்கள் திக்கற்றுத் தவித்தன. நிதமும் சாயங்காலம் மழை பெய்ததால் அவர்கள் பாடு பரிதாபமாக இருந்தது. அவர்களுக்கு உதவி செய்ய மாஜிஸ்திரேட் எந்த நட வடிக்கையும் எடுக்கவில்லை.

நாடார்களுக்குச் சேதம் அவ்வளவாக இல்லை. வண்டிப் பேட்டைக்குள் ஒரு வரிசை கூரைச் சாய்ப்புக்கள் எரிந்துவிட்டன. ஒரு வீட்டோரத் தாவாரம் சாம்பலாகிவிட்டது.

அஞ்சு பேருக்குக் காயம். மூணு மறவர் ரெண்டு நாடார். மறவரில் ரெண்டு பேருக்குப் பலத்த காயம். அதில் ஒருவருக்குத் தோட்டா துளைத்தது. இன்ஸ் பெக்டர் சம்பவம் பற்றி திருநெல்வேலிக்குத் தந்தியும் ரிப்போர்ட்டும் அனுப் பினார்.

மூணு நாடார்கள் கச்சேரிக்கு வந்து சில மறவர்மீது பிராது சொன்னார்கள்.

''அவங்க எங்க பேட்டைக்குள்ள வந்து கொட்டகைக்குத் தீவச்சாங்க.''

''மூணு கிட்டங்கியக் கொள்ளையடிச்சாங்க.''

போலீஸ்காரர்கள் முணுமுணுத்தார்கள்

''இவங்க சொல்ற ஆளுக பேட்டைக்கு வெளியல்ல சண்டபோட்டுட் ருந்தாங்க.''

''நானும் பாத்தென்.''

''வேணும்னே பொய்யாப் பிராது குடுக்காங்க.''

இன்னார்இன்னாரை இங்கே பார்த்தேன் அங்கே பார்த்தேன் என்று சொன்ன வர்கள் வீடுகளும் பேட்டையும் எரிந்ததுபற்றி வாய் திறக்கவில்லை.

போலீஸ்காரர்கள் அஞ்சு மணி நேரம் சம்பவ இடத்தில் இருந்திருக்கிறார்கள். ரெண்டு மணி நேரத்துக்குமேல் கடுஞ்சண்டை நடந்திருக்கிறது. கண்டபடி கல் லெறி விழுந்திருக்கிறது. இத்தனைக்கும் ஒரு போலீசுக்குக்கூடக் காயமில்லை. ஒருவரது தலைப்பாவைத் தட்டிவிட்டது ஒண்ணு ரெண்டு பேரை இடித்துத் தள்ளியதுடன் சரி. அவர்களைத் தாக்கும் எண்ணம் கலகக்காரர்களுக்கு இருந்த

தாகத் தெரியவில்லை. ஒருவேளை கூட்டத்தை நெருங்கிக் கைதுசெய்ய முற்பட்டிருந்தால் என்ன நடந்திருக்குமோ.

கலகம் முடிந்ததுமே மாஜிஸ்திரேட் ஒரு உத்தரவு போட்டு அறிவிக்கச் சொன்னார். அதன்படி ஒரு இடத்தில் அஞ்சுபேர் கூடினால் சட்ட விரோதம். ராத்திரி ரோந்து வந்த போலீஸ்காரர்கள் கூட்டம் கூடாமல் பார்த்துக்கொண்டார்கள்.

சாமமிருக்கும். கலகம் நடந்த இடத்தருகே வண்டிப் பேட்டைக்குத் தெற்கில் பெரிய கூட்டம் நிற்பதை எட்டி நடந்த ஒரு போலீஸ்காரர் பார்த்துவிட்டார். முப்பது நாடார்களிருக்கும். அவர்களிடம் கேட்டார்.

''இங்க என்ன செய்றீங்க. கூட்டம் கூடுறது குத்தம்னு தெரியுமில்ல.''

ஒருவர் சொன்னார்.

''மறுபடியும் அவங்க சண்டைக்கு வாறதாத் தெரிஞ்சது. எதிர்பாத்துட்ருக்கொம்.''

இன்னொருவர் கறுவினார்.

''அத என்னன்னு பாத்துறணுமில்ல.''

அதுக்குள் இன்ஸ்பெக்டர் மற்ற போலீஸ்காரர்களுடன் வந்துவிட்டார். அப்போதும் கூட்டம் கலைவதாக இல்லை. எல்லா போலீஸ்காரர்களும் சேர்ந்து கூடியிருந்தவர்களை விரட்டினார்கள். ஒன்பது பேரைத்தான் மடக்கிப் பிடிக்க முடிந்தது. மற்றவர்கள் தப்பிவிட்டார்கள்.

அன்று இன்ஸ்பெக்டர் சூப்பிரண்டுக்குக் கொடுத்த தந்தி மறுநாள் திருநெல்வேலி போய்ச் சேர்ந்தது. அப்போது சூப்பிரண்டு குலசேகரபட்டினத்தில் இருந்தார். ஆபீஸ் இன்ஸ்பெக்டர் உடனே அங்கே தந்தி கொடுத்தார். சூப்பிரண்டின் உத்தரவை எதிர்பாராமல் ரெண்டு ஏட்டு இருபது ரிசர்வ் போலீஸ்காரர்களை சிவகாசிக்கு அனுப்பிவைத்தார்.

சூப்பிரண்டு அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டுக்குத் தந்தி கொடுத்தார்.

> நிலைமை மோசமாக இருப்பதாக விருதுபட்டி இன்ஸ்பெக்டர் தெரிவித்துள்ளார். உடனே சிவகாசிக்குப் போய் விசாரித்து அறிக்கை அனுப்பவும்.

தந்தியைக் கொண்டுபோன போலீஸ்காரர் வெள்ளிக்கிழமை அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு வைப்பாறிலிருந்து விளாத்திகுளத்துக்குப் போகும் வழியில் பிடித்துவிட்டார்.

அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு கொஞ்ச நேரம் விளாத்திகுளத்தில் தங்கிப் பக்கத்து ஊரில் நடந்த கொலை சம்பந்தமாக விசாரணை நடத்தினார். சம்பவ இடத்துக்குப் போக முடியவில்லை. சிவகாசிக்குப் போயாக வேண்டிய அவசரம். சாயங்காலம் ஒரு வண்டி ஏற்பாடு செய்து கோயில்பட்டிக்குக் கிளம்பினார்.

சேறும் சகதியும் குண்டும் குழியுமாக மோசமான பாதை. அவரது குதிரை நடக்கத் திணறி வாயில் நுரைதள்ளிவிட்டது. ராத்திரி முழுக்கப் பிரயாணம். எட்டயாபுரம் வந்து சேரும்போது விடிந்துவிட்டது. மைனர் சமீன்தாரிடம் குதிரை வண்டி வாங்கிக்கொண்டு கோயில்பட்டிக்கு வந்தார். அங்கிருந்து ரயிலில்

சாத்தூர் போய் பிறகு மாட்டு வண்டியில் சிவகாசிக்குப் புறப்பட்டார். சனிக் கிழமை சாயங்காலந்தான் சிவகாசியை மிதிக்க முடிந்தது.

சிவகாசித் தெருக்களில் ராப்பகலாக போலீஸ் ரோந்து கெடுபிடியாக இருந்தது. அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு எல்லாச் சமாச்சாரங்களையும் விசாரித் தார். விருதுபட்டி இன்ஸ்பெக்டர் விவரமாகச் சொன்னார். ஒருவழியாக நாடார்களின் மாரியம்மன் கோயில் திருவிழா அன்றோடு முடிந்தது.

## 6. பதட்டமும் ஆவலாதியும்

அதிகாரிகள் அருகிலிருந்தும் சிவகாசியில் அமைதிக்கு உத்திரவாதமில்லை. நாடார்கள் அவர்களிடம் நிறைய புகார் சொன்னார்கள்.

''அவங்க தொந்தரவு தாங்க முடியல. வெளிய யேவாரத்துக்குப் போகாமக் கெடக்கொம்.''

''எங்க தலையக் கண்டா கண்டிப்பா வம்புக்கிழுப்பாங்க.''

''பணம் பொருளப் பறிச்சா நாங்க சும்மாருப்பமா.''

''சண்டதான் வரும்.''

''இப்படி எத்தன நாளைக்குப் பெழப்பு நடத்துறது.''

அன்றைக்குச் சாய்ந்தரம் மறவர் தெருவோரம் ஒரு நாடார் வீடு எரிந்து போனது. இது நாடார்கள் வேலையாக இருக்குமோ என்று அதிகாரிகளுக்குச் சந்தேகம். கண்டுபிடிக்க முடியவில்லை.

மணியம் சங்கரலிங்க நாடார் அப்பப்ப மேலாவுக்குத் தந்தி கொடுத்துக் கொண்டே இருந்தார். இந்தத் தடவை கவர்னருக்கு அனுப்பினார் :

> சிவகாசியில் நாடார்களுக்கும் பிற சாதிக்காரர்களுக்கும் கலகம் நடந்தது. பேட்டையும் வீடுகளும் கொளுத்தப்பட்டன. கொள்ளையும் கொடுமையும் நடந்தது. இதுக்கிடையில் நடுவப்பட்டி வெள்ளையத் தேவரும் வெண்டர் ஆறுமுகம் பிள்ளையும் ரெண்டாயிரம் மறவர்களையும் பிற சாதிக்காரர் களையும் திரட்டி நாடார்களைக் கொலை செய்யவும் சொத்துக்களைக் கொள்ளையடிக்கவும் வீடுகளைக் கொளுத்தவும் இடிக்கவும் திட்டமிடு கிறார்கள். அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு இங்கே இருந்தும் இது நடக்கிறது. அவர்கள் எப்படியும் காரியத்தைச் செய்து முடிப்பார்கள். நாடார்களையும் சொத்துக்களையும் காப்பாற்றுங்கள்.

நடந்த கலகத்தை எட்டிப் பார்க்காத டெபுடி மாஜிஸ்திரேட் ஸ்ரீவில்லிப் புத்தூரில் இருந்துகொண்டே முக்கியமான நாடார்களுக்கும் மேல்சாதிக்காரர் களுக்கும் நோட்டீஸ் அனுப்பினார். அவர்களை மடக்கி நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்கி நிலைமையைக் கட்டுக்குள் கொண்டுவந்துவிடலாம் என்பது அவர் திட்டம்.

காணாக்குறைக்கு திருநெல்வேலியிருந்து சூப்பிரண்டும் சிவகாசிக்கு வந்தார். அன்றைக்குத்தான் வேலுச் செட்டியின் வீடு சாம்பலானது. நாடார்கள் சூப்பிரண் டைச் சந்தித்துப் பிராது கொடுத்துப் புலம்பினார்கள்.

''ஏழெட்டு நாளா அவங்க எங்களப் படுத்துற பாடு சொல்ல முடியாது.''

''கெணத்துல மிதிகல்ல ஒடச்சுப்போட்டுட்டாங்க.''

''ஆடுகள மேய வுட்டு அநியாயமா வெள்ளாமைய அழிச்சிட்டாங்க.''

சூப்பிரண்டு கேட்டார்.

''ஏன் அப்பயே பிராது கொடுக்கல''

''உள்ளூரு அதிகாரிக உருப்படியா நடவடிக்க எடுக்கிற மாதிரி தெரியல. எல்லாரும் அவங்களுக்கு ஒத்தாசனையா இருக்காங்க.''

சூப்பிரண்டு கோவப்பட்டார்.

''பிராது கொடுக்கணும்னா பணக்கார நாடாருக வந்து கொடுக்கணும். கூலிக்காரங்கள ஏவிவிட்டுப் பின்னாலருந்து வேடிக்க பாக்கக் கூடாது. கூலிக்காரங் களுக்கு என்ன தெரியும். பாவம் நீட்ன எடத்துல கையெழுத்துப் போடுவாங்க.''

செம்மறியாடு காணாமல் போனதைத் தவிர மற்றவற்றைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நாடார்கள் இன்னொரு விசயம் சொன்னார்கள்.

''நாளைக்கு வடபட்டியில சல்லிக்கெட்டு நடக்கப்போகுது. அந்தச் சாக்குல அவங்க ஏராளமாக் கூடுவாங்க. எங்களுக்கு எல்லாத் தொந்தரவும் குடுப்பாங்க.''

சூப்பிரண்டு சுத்துப்பட்டிகளிலிருந்து ஒன்பது கிராம முன்சீப்புகளை வரச் சொல்லி விசாரித்தார். அவர்கள் நல்லபடியாகவே சொன்னார்கள்.

''எங்க ஊருல தேவமாரு அமைதியா இருக்காங்க.''

''ஆரும் செவகாசியில கூடிப்பேசுறதாத் தகவலில்ல.''

சூப்பிரண்டு எச்சரித்தார்.

''எதும் கேள்விப்பட்டா ஒளிக்காமச் சொல்லணும். தெரிஞ்சதா.''

வடபட்டி ஈஞ்சார் கிராம முன்சீப் ரெண்டு பேரும் வந்து பார்த்தார்கள். நிறைய மறவர்கள் குடியிருக்கும் ஊர்கள். வடபட்டிக்காரர் சொன்னார்.

''எங்க ஊருல சல்லிக்கெட்டு நடத்துறதா உத்தேசமில்ல. தேவமாரு அவரவரு பாட்டுக்குச் சும்மாருக்காங்க.''

ஈஞ்சார்க்காரரர் வித்தியாசமாக எதும் சொல்லவில்லை.

''தேவமாரு அவரவரு வேலையப் பாத்துட்ருக்காங்க. நாடாருகளப் பழி வாங்கப்போறதா எந்தப் பேச்சுமில்ல.''

சூப்பிரண்டு அதிகாரிகளுடன் கலந்து பேசினார். ஊரைச் சுற்றிப்பார்த்தார். சிவகாசி அமைதியாகவே இருந்தது.

கொஞ்ச நாளில் சிவகாசி கச்சேரி அதிகாரி சட்டநாத பிள்ளை வெளியூருக்கு மாற்றிப் போய்விட்டார். புதுசாக ஏட்டு பூவலிங்கம் பிள்ளை வந்தார். கச்சேரி யில் முன்கையெடுத்துச் செய்ய ஆளில்லை.

ரெண்டே நாளில் சிவகாசிப் பக்கம் ஒரு மோசமான சம்பவம் நடந்தது. சிலர் நாய்க்கமார் பெண்ணை வழிமறித்துக் கண்டபடி அடித்து நகையைப் பறித்துக் கொண்டார்கள். அவள் பேர் அக்கம்மா. பேராபட்டி சோலை நாய்க்கர் சம்சாரத் துக்குச் சொந்தக்காரி. சுப்பைய நாடாரும் மற்ற மூணு பேரும் கொள்ளையடித்த தாக வழக்கு போடப்பட்டது.

கலெக்டருக்கு மனுமேல் மனுவாகப் போய்க்கொண்டிருந்தது:

> கட்னார்பட்டியிலும் சங்கரலிங்கபுரத்திலும் மறவரும் வெள்ளாளரும் கூடிக் கொள்ளையடிக்கத் தயாராக இருக்கிறார்கள்.
>
> ஊர் வண்ணான் நாடார்களுக்குத் தொழில் செய்ய விடாமல் தடுக்கிறார்கள். வெள்ளாளரும் மறவரும் ரெண்டாயிரம் பேரைக் கொள்ளைக்காகத் திரட்டி யிருக்கிறார்கள்.

கலெக்டர் சட்டத்தை நூல்பிடித்துப்பார்த்தார். அதன்படி மனுவை நேரில் கொடுக்காத பட்சத்தில் ஏற்றுக்கொள்ள முடியாது. ரெண்டுமே தபாலில் வந்தது. விசயத்தைப் பற்றி யோசிக்காமல் தள்ளிவிட்டார்.

சிவகாசியில் பிற சாதிக்காரரர்கள் வீடு மூணு தீக்கிரையாகியது. வழக்குப் பதிவு செய்ததுடன் சரி. தீவைப்பு புதுசில்லையே.

கலெக்டருக்கும் டெபுடி மாஜிஸ்திரேட் முஸ்தபாவுக்கும் அவ்வளவாக ஒத்துப்போகவில்லை. நிலைமை மோசமானதுக்கு முஸ்தபாதான் காரணமென்று கலெக்டர் நினைத்தார். முஸ்தபா நெல்லூரிலிருந்து வந்தவர். தெலுங்குப் பரீட்சை எழுத ஏற்கெனவே மூணு மாசம் லீவு கேட்டிருந்தார். அது இப்போதுதான் கிடைத் தது. ரெண்டு பேருக்கும் வசதியாகப் போயிற்று. இந்தத் தொறட்டிலிருந்து தப்பித்து விடலாம் என்று அவர் நினைத்திருப்பார். இந்தச் சாக்கில் அவரைக் கிளப்பிவிட லாம் என்று கலெக்டர் மனசில் ஓடியிருக்கும்.

எப்படியோ முஸ்தபா லீவில் போய்விட்டார். தங்களுக்கு அனுசரணையாக இருந்த ஒரு மனுசனும் போய்விட்ட வருத்தம் நாடார்களுக்கு. கலெக்டரை நொந்துகொண்டார்கள். முஸ்தபாவுக்கு அடுத்து ராகவய்யா வந்தார். கொஞ்ச வயசுப் பிராமணர். மேல்சாதிக்காரரர்கள் தெம்பானார்கள். இந்தச் சமயத்தில்தான் அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு கார்டோஸோ அவசரமாக மாற்றிப் போய்விட்டார். அவருக்குப் பதிலாக ஆள் வரவில்லை. சூப்பிரண்டு சிரமப்பட்டார்.

## 7. கூடிக் கலையும் மேகங்கள்

ஸ்ரீவில்லிப்புத்தூர் பகுதியில்தான் சண்டை பரவலாகத் தலைதூக்க ஆரம் பித்தது. கலகக்காரர்கள் அங்கங்கே மழைமேகங்களைப்போல் கூடுவதும் கலைந்து ஓடுவதுமாகத் தகவல் வந்தவண்ணமிருந்தது. எங்கே எப்போது என்ன நடக்குமோ என்ற அச்சம் எல்லாரையும் பிடித்தாட்டியது. சனங்களுக்கு நல்ல உறக்கமில்லை.

ஸ்ரீவில்லிப்புத்தூர் இன்ஸ்பெக்டர் சூரியநாராயணய்யர் பேமுழி முழித்தார். எப்படிச் சமாளித்துக் கரையேறுவது. எங்கே போய் எந்தக் கூட்டத்தைப் பிடிப் பது. சுற்றி வளைத்துக்கொண்டால் சோலி முடிந்தது. இண்டஞ்செடிக்குள் தலை யைக் கொடுத்த கதைதான்.

கண்டந்துண்டமாக ரெண்டு கட்சியாகிவிட்டது. ஒரு பக்கம் நாடார்கள். வெளிப்படையாக அவர்களுக்குத் துணை வேறெந்தச் சாதியும் கிடையாது. மற்றது மறவர் கட்சி. பகடைமுதல் பிராமணர்வரை அந்தப் பக்கந்தான். நாடார் களைப் பூண்டோடு ஒழிக்கணுமென்று கறுவிக்கொண்டிருந்தார்கள். அப்படி யொரு வன்மம். ரெண்டும் மோதித்தான் அடங்குமென்ற நிலைமை.

இரு பக்கமும் பண வசூல் நடந்தது. நாடார்கள் கமுதி வழக்குச் செலவுக்காக ஊர்களில் வசூலித்தார்கள். எதிர்க் கட்சி மறவர் பண்டுக்காகக் கேட்டது. பண வசூல் முக்கிய நோக்கமில்லை. அந்தச் சாக்கில் சண்டைக்கு ஆள் திரட்டணும். சண்டையென்றால் சிவகாசிக் கொள்ளை. பண வசூலுக்குப் போவது. சாவல் கட்டுக்குப் போவது என்றால் கொள்ளைக்கு ஆள் சேர்க்கப் போவதாக அர்த்தம். எக்குத்தப்பாக மாட்டிக்கொண்டால் துட்டிக்கு வந்ததாகச் சொல்லியும் தப்பித்துவிடுவார்கள்.

நாடார்கள் அப்படி ஆள் சேர்க்கவில்லை. எல்லாருமே எதிரியாகிவிட்ட பிறகு எடுத்தேறிப் போய் யாரைத் தாக்குவது. அவரவர் ஊரைக் காப்பாற்றுவதே பெரிய காரியம். இதைச் சொல்லியே எச்சரிக்கைப்படுத்தினார்கள்.

திருநெல்வேலிச் சீமையின் பல ஊர்களிலிருந்து பல சாதிக்காரர்கள் படை திரண்டு வந்து ஸ்ரீவில்லிப்புத்தூர் பகுதியில் கூட ஆரம்பித்தார்கள். மதுரைச் சீமை கள்ளர் நாட்டிலிருந்து கள்ளர்கள் ஏராளம் வந்து இறங்கியிருப்பதாகவும் தகவல். எல்லாரும் ஒண்ணுசேர்ந்ததும் சிவகாசியைச் சுற்றிவளைக்கத் திட்டம். எல்லாம் கமுக்கமாக நடந்தது.

ஆட்டுக் கிடைகளாகக் காட்டில் தங்கியவர்கள் சோற்றுக்கு அல்லாடினார் கள். கைவசம் கொண்டுவந்தது அரிவாள் கம்பு என்று ஆயுதங்கள் மட்டுந்தான். அதுகளுக்கு வேலை கொடுத்தால் வேட்டை சாயும். சமாளித்துவிடலாம். அவர் களால் சும்மா இருக்க முடியவில்லை. ஊர்களில் துப்பு வைத்துக்கொண்டு வேட் டைக்குக் கிளம்பினார்கள்.

கீழப்பொட்டல்பட்டியில் மறவரும் குடும்பமாரும் சேர்ந்து நச்சாடலிங்க நாடார் வீட்டையும் கடையையும் கொள்ளையடித்து தானியத்தையும் மற்ற பொருட்களையும் அள்ளிக்கொண்டு போய்விட்டார்கள். போலீஸ் பிராதை வாங்கி வைத்துக்கொண்டது.

அரியநாயகிபுரம் பருத்திகுளம் ரெண்டும் அடுத்தடுத்த ஊர்கள். இருபத் தஞ்சு வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டன. தானியமும் நகைகளும் பறிபோயின. சட்டி பானை கதவு அத்தனையும் உடைந்துகிடந்தன. நாலஞ்சு வருசத்துக்கு முந்தி அங்கே நாடார்களுக்கும் மேல்சாதிக்காரர்களுக்கும் பல்லாக்கு ஊர்வலத் தகராறு உண்டு. அந்தத் தகராறில் சம்பந்தப்பட்டவர்களின் பேரைச் சொல்லிப் பிராது கொடுத்ததால் அதிகாரிகள் கொள்ளையை நம்பவில்லை.

ஆனையூரில் ஒரு சண்டை. சுந்தரக் குடும்பனைக் கொன்றுவிட்டார்கள். சிவகாசி நாடார்கள் மூணு பேரும் பூலாவூருணி நாடார்கள் நாலு பேரும் சேர்ந்து கொலை செய்ததாக வழக்குப் போடப்பட்டது. குடும்பமார் நாடார்கள்மேல் பகையை வளர்த்துக்கொண்டார்கள்.

ஆத்திகுளம் நாடார்களிடம் பணம் கேட்டு அருமுறுக்கியிருக்கிறார்கள். மங்கலம் புதுப்பட்டியில் வீட்டுக் கதவை உடைத்துச் சூறையாடியிருக்கிறார்கள். மறவர் பண்டுக்குப் பணம் கொடுக்க மறுத்த வேதக்காரர் வீட்டையும் விட்டு வைக்கவில்லை.

## 8. வருத்தமே மிஞ்சியது

சிவகாசியில் என்ன நடக்கிறதென்று சாட்சியாபுரம் வேதக்காரர்களுக்கு நன்றாகவே தெரியும். சபைக்குப் பொறுப்பான போதகர்கள் இந்துக்கார நாடார்களைச் சந்தித்துப் பேசினார்கள். ஒண்ணும் சரிப்பட்டுவரவில்லை. நாடார்கள் மடங்கிப்போக மறுத்தார்கள். இத்தனைக்கும் பெரிய போதகர் பவுலய்யர் நாடார் சாதிக்காரர். வேதத்துக்கேற்றபடி எளிய கீர்த்தனைகளை எழுதிப் பாடி நிறைய பேரை வேதத்துக்கு மாற்றியவர். அதில் நாடார்கள் அதிகம். நல்ல முறையில் பள்ளிக்கூடம் நடத்தினார். நாலா சாதிக்காரர்களுக்கும் அவர்மேல் மரியாதை உண்டு.

இந்தத் தகராறில் வேதக்காரர்கள் நாடாராக இருந்தாலும் தலையிடக் கூடாது என்று தீர்மானித்தார்கள். அதே சமயம் சபையில் யாரும் கைவைக்கக் கூடாதென்ற எச்சரிக்கையும் இருந்தது. அப்படி ஏதாவது நடக்காமல் தடுத்தாகணும்.

மறவர் கட்சியில் முக்கியமான புள்ளியின் தம்பி சாட்சியாபுரம் வேதப் பள்ளிக்கூடத்தில் படித்தான். தன் ஊரில் கூடியிருந்த கூட்டம் பேசியதை ஒட்டுக் கேட்டு வந்து நடுக்கத்தில் உளறிவிட்டான்.

''வேதக்காரங்களவும் அடிச்சு நொறுக்கிக் கொள்ளையடிக்கப்போறாகளாம். நேத்துப் பேசிக்கிட்டாக.''

இது பவுலய்யர் காதுக்குப் போனது. சுதாரித்துக்கொண்டார்கள். இதை உறுதிப்படுத்துகிற மாதிரி சுக்கிரவார்பட்டியிலிருந்து வந்திருந்த வேதக்காரர் சின்னச்சாமி நாடார் சொன்னார்.

''செவகாசியச் சுத்திக் கொள்ளையடிச்சது காணாதுன்னு ஒரு கூட்டம் எங்க ஊருக்கு வந்து வேதக்காரங்க வீடுகளக் குறிவச்சுக்கிட்ருக்கு. இப்பயே தடுக்கணும். வளர வுட்டா நம்ம பாடு தும்பமாப் போயிரும்.''

சர்க்கிள் கமிட்டிக் கூட்டத்தில் இதைப் பற்றிக் கமுக்கமாகப் பேசினார்கள். சாத்தூர் உபதேசியார் மதுரநாயகம் ஸ்ரீவில்லிப்புத்தூர் பிரசங்கியார் பொன்னப்பன் ராஜபாளையம் உபதேசியார் ஜோசுவா ஆலம்பட்டி பள்ளிக்கூட வாத்தியார் ஆசீர்வாதம் ஆகிய நாலு பேரையும் நடுவப்பட்டி வெள்ளையத் தேவரைச் சந்தித்துப் பேசுவதற்காகத் தூதனுப்ப முடிவுசெய்யப்பட்டது. அவர்களில் மதுரநாயகம் மட்டும் நாடார்.

நாலு பேரும் நடுவப்பட்டிக்குப் போனார்கள். வெள்ளையத் தேவரைப் பார்க்க முடியவில்லை. அவரது அண்ணன் பொன்னுச்சாமித் தேவரைச் சந்தித்தார்கள். அவர் அவர்கள் பேச்சைப் பொறுமையாகக் கேட்டார்.

''நாடாருகளுக்கும் மத்தவங்களுந்தான் தகராறு. அதுல வேதக்காரங்களுக்குச் சம்பந்தமில்ல. இது ஒங்களுக்கே தெரியும்.''

''வேதக்கார நாடாருக எந்த வம்புதும்புக்கும் போறதில்ல.''

''அதனால எந்தச் சந்தர்ப்பத்துலயும் நீங்க வேதக்காரங்களுக்குத் தொந்தரவு குடுக்கக் கூடாது.''

அவர் தெளிவாகச் சொன்னார்.

''நாங்க வேதக்காரங்களத் தொடுறதில்லையே.''

''இது போதும் எங்களுக்கு.''

அவர் மறவர் பண்டு ரசீதுப் புஸ்தகத்தை அவர்களிடம் நீட்டினார்.

''இதுல வேதக்காரங்க ஆராருன்னு பாத்துச் சொல்லுங்க. தெரிஞ்சுக்கிறலாம்.''

ரசீதுகளைப் புரட்டிப் பேர் சொல்லச்சொல்ல அவர் தலையாட்டிக்கொண்டார். அவர்கள் சந்தோசமாக சாட்சியாபுரம் திரும்பினார்கள்.

இருந்தாலும் அவருக்கு உள்மனசில் உறுத்தல். மற்றவர்களிடம் பட்டும் படாமல் சொல்லிப்பார்த்தார்.

''எனக்கென்னமோ நம்ம எடுத்துக்கிட்ட காரியம் தப்பாத் தெரியிது. சண்ட போட்டுத்தான் ஆகணுமா. ரெண்டு பக்கமும் எத்தன உசிரு பலியாகுமோ.''

யாரும் கேட்பதாக இல்லை. ஆளாளுக்கு ஒண்ணு சொன்னார்கள்.

''நாடானுக்குப் பயந்து தாந்துபோகச் சொல்றீகளா.''

''போடா பொட்டப் பயலேன்னு காறித் துப்புவான்.''

''அவன் நம்ம கோயிலுக்குள்ள மொழஞ்சு ஒண்ணாமண்ணா ஒழப்புறதுக்குச் சம்மதமா.''

அவர் நயந்து பேசினார்.

''அவங்க பண்றதும் வம்புதான். எண்ணைக்கும் இல்லாற பழக்கத்த உண்டு பண்ணித்தான் ஆவம்னு ஒத்தக் கால்ல நிக்காங்க. அவங்களுக்குத்தான் ரெண்டு கோயிலு இருக்குதில்ல. அதுல எப்படின்னாலும் கொண்டாடு ஆட்டம் போடு. வேணும்னா நம்மதப் போல வேற ஒண்ணுகூடக் கெட்டிக்கோ. ஆரு வேணாமிங்கிறது. கோவந்தான் வருது. வெவகாரத்தப் பேசித் தீத்துக்கிறலாமே.''

''பேச வருவானாக்கும். கத்தி கெட்ன சாவலா கொக்கரிச்சுக்கிட்டு நிக்கானே. எத்தன தல உருண்டாலும் சரி மோதிப்பாத்துற வேண்டியதுதான்.''

அப்படியும் அவருக்கு மனசு கேட்கவில்லை. இதுக்கு ஒரு வழி கண்டாகணுமே என்று தாவங்கப்பட்டார். நாலஞ்சு பேரைக் கூட்டிக்கொண்டு சாட்சியாபுரத்துக்குப் போய் பவுலய்யரைப் பார்த்துப் பேசினார்.

''நாடாருகளுக்கும் மத்தவங்களுக்கும் தகராறு முத்திக்கிட்டே வருது. இது எதுல போயி முடியும்னு தெரியல. காலாகாலத்துல நீங்கதான் தலையிட்டுத் தீத்துவைக்கணும்.''

பவுலய்யருடன் இருந்த வாத்தியார் கவலைப்பட்டார்.

''சண்டன்னு வந்தா ஆயிரம் ஐநூறு உசிரக் கேக்குமே.''

''அத நெனச்சாத்தான் வாதிப்பாருக்கு.''

வாத்தியார் கேட்டார்.

''எப்படித் தீத்துக்கிறலாம்னு தோணுது.''

''அவங்க எப்படியும் இருந்துட்டுப் போகட்டும். எங்க கோயிலுக்குள்ள மட்டும் வர மாட்டம்னு எழுதிக்குடுத்துட்டாப் போதும். நாங்க வெலகிக்கிருவொம்.''

''அப்படி எழுதிக்குடுத்துட்டா பிரச்சினையே இல்ல.''

''காலம் பூரா இவங்களோட மல்லுக்கெட்டிக்கிட்டு நின்னா எப்படி. இப்ப நீங்க வேதத்துக்கு மாறி தனியா கோயிலுக் கெட்டிச் சந்தோசமா இருக்கலயா.''

''இது அவரவரு மனந்திரும்பி ஏத்துக்கிறது. கட்டாயப்படுத்த முடியுமா.''

''அதெப்படி முடியும். இப்ப என்னக் கூப்பிட்டா வருவனா. அவங்கவங்க மனசுக்குப் புடிச்ச சாமியத்தான கும்புட முடியும்.''

பவுலய்யர் சொன்னார்.

''நாங்களும் ஒங்க தெய்வத்தத் தொழுறதுக்கு வழிவிடுங்கன்னு அவங்க கேக்கிறாங்க. நீங்க மறுக்கிறீங்க. தகராறுக்கு முக்கியக் காரணமே அதுதான். சகிச்சுப்போனா எல்லாம் சரியாயிரும்.''

தேவர் யோசித்துவிட்டுச் சொன்னார்.

''நான் மட்டும் இதுல முடிவெடுக்க முடியாது. அவங்க இதுக்கு ஒத்துக் கிட்டு எழுதிக்குடுத்தாத்தான் எங்க பக்கம் சரிக்கெட்ட முடியும்.''

''ஒத்துக்கிருவாங்கன்னு தோணல. முந்தியே பேசிப்பாத்தாச்சு.''

''அப்ப நடக்கிறபடி நடக்கட்டும்.''

வருத்தந்தான் மிஞ்சியது. தேவர் முகத்தில் களையே இல்லை. தெம்பில்லாமல் திரும்பினார்.

## படலம் 16

### 1. தனிமரம்

திப்பனம்பட்டியில் தங்கையா பாடு பெரிய திண்டாட்டமாக இருந்தது. மூச்சுத் திணறினான். நிம்மதியாகத் தொழில் செய்ய முடியவில்லை. அஞ்சி யஞ்சிப் பனையேறினால் ஆள் பார்க்கவே சரியாக இருக்கும். தூரத்தில் கூட்டம் தெரிந்தால் விழுந்தடித்து இறங்கி ஓடி ஒளியணும். ஒத்தையாக நின்று எதிர்த்துச் சமாளிக்க முடியாது. தன்னை நம்பி ஒரு குடும்பம் இருக்கிறதே.

தெய்வானை ரெண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டு அழுந்தினாள். வேலையா திடப்பட்டுவிட்டான். கூந்தைத் தின்றாவது பிழைத்துக்கொள்வான். சின்னவள் சந்தனமாரிக்கு நோஞ்ச உடம்பு. ஊட்டம் கொடுத்துத் தேற்ற வேண்டிய வயசு. நுங்கும் பதினியுந்தான் ஊட்டம். அதுக்குக்கூட வழியில்லை.

பெரிசுகள் தவங்கிவிட்டன. காடுகளில் ஆடாக அலையும் ஆத்தியப்ப நாடார் வீடே தஞ்சமானார். பார்வை சுருங்கி நடமாட்டம் குறைந்துவிட்டது. உடை யம்மை காய்ந்த பனைமட்டையாகிப்போனாள்.

எங்கே என்ன நடக்கிறதென்று தெரியாமல் தங்கையா தவித்தான். பேச்சுத் துணைக்கு ஆளில்லை. யாரிடமும் வெளிப்படையாகப் பேசவும் முடியவில்லை. சங்கரலிங்கபுரம் சோலைத் தேவரைச் சந்தித்தால் உண்டு. ஒதுக்குப்புறமாக உட்கார்ந்து சாவகாசமாகப் பேசலாம். அவருடன் அவனுக்கு நெருங்கிய பழக்கம். தகப்பன் மாதிரி.

அவர் நாடார்களுக்குக் குடிகாவக்காரர். அதுக்கேற்றபடி தோரணையான உருவம். அண்ணாந்து பார்க்கும் உயரம். கொத்து மீசை. குஞ்சத் தலைப்பா. கூர்மையான கண். எல்லாம் கோவக்காரராகக் காட்டினாலும் இளகின மனசு. நாலு பேருக்கு நல்லது செய்ய நினைப்பவர். லேசுக்குள் கோவம் வராது. வந்துவிட்டால் தாமரிக்க முடியாது.

அவர் நாடார்களுக்குக் காவல்காப்பது பலருக்குப் பிடிக்காது. நக்கலாகப் பேசுவார்கள்.

''அந்தா மறச் சாணான் போறான் பாருடா.''

கண்டுகொள்ள மாட்டார். இடுப்பில் சொருவிய வேல்கத்தியைச் சரிப் படுத்திக்கொண்டு கம்பை வீசி நிதானமாக நடப்பார். வாய் முணுமுணுக்கும்.

''ஒனக்குச் சாதி பெரிசு. எனக்குப் பெழப்பு பெரிசு. துப்புக்கூலி வாங்கிப் பெழைக்கிறதவிடக் காவக்கூலி வாங்கிப் பெழைக்கிறது எவ்வளவோ மேல். கூலின்னு கையேந்துறதாச்சு. அது நாடான் குடுத்தா என்ன சக்கிலியன் குடுத்தா என்ன. நீயெல்லாம் எனக்கு ஒரு எதிரியா. ஒன்னப் போல எத்தன பேரப் பாத் துருப்பென்.''

கொஞ்ச நாளாக மனுசன் தட்டுப்படவில்லை. என்ன சங்கடமோ. கூட் டத்தில் மாட்டிக்கொண்டாரோ என்னமோ. இருக்காது. வெட்டுவிலக்குத் தெரிந்தவர். பேசிச் சமாளித்துவிடுவார்.

அன்றைக்கு திப்பனம்பட்டிக்கு வடக்கே ரெண்டு பேரும் சந்தித்துக்கொண் டார்கள். அவர் இருந்த கோலத்தைப் பார்த்து அவன் பதறிப்போனான்.

''என்ன இப்படித் தொவண்டுபோயி வாறிய. தலையில கெட்டு. கையி வீங்கியிருக்கு. முதுகெல்லாம் கண்டிப்போய்க்கெடக்கு. என்னதான் நடந்தது.''

அவர் முகத்தில் காய்ந்த சிரிப்பு.

''நெலவாசல்ல குனிஞ்சு போகணும்னு மண்டையில ஒறைக்கல. கண்ண மூடிக்கிட்டு நிமிந்து போனெென். நெலையில முட்டி நெத்தி பழுத்துருச்சு.''

அவன் நம்பவில்லை.

''முதுகுக்கு என்ன கத சொல்லப்போறிய.''

''அதா. ஒரு தோட்டத்துக்குள்ள ஏதோ நெனப்பில நடந்து போனென் பாரு. காஞ்ச பீக்கங்கொடி கால்ல சுத்தித் தடுமாறி பருத்திமார்க் கெட்டுமேல மட்ட மல்லாக்க வுழுந்துட்டென். முதுகப் பதம்பாத்துருச்சு. பெரண்டு எந்திரிச்செென். கையில கீச்சி வாருவாரா இழுத்துருச்சு.''

''அங்கிட்டும் இங்கிட்டுமா உருண்டு பெரண்டதால ரெண்டு கையிலயும் காயமாக்கும்.''

அவர் மறுபடியும் சிரித்து மழுப்பினார்.

''அட போடா வேலையத்த பயலே. நெசமாத்தான் சொல்றென்.''

''நாங்க வேலையில்லாமத்தான கெடக்கொம். ஒங்களுக்கு வேல ரெம்பன்னு பாத்தாலே தெரியிது. அதான் ஒங்களோட பெரிய தும்பம். நடந்ததச் சொல்லாம வுடப்போறதில்ல.''

அமைதியாக நடந்து ஒடமர நிழலில் உட்கார்ந்தார்கள். அவர் அவனை வருத்தத்துடன் பார்த்தார். அவரது வலது கண்ணில் கீழ்ப்பட்டை வீங்கி வெள்ளை முழி கலங்கியிருந்தது.

''பெரிசா என்ன நடந்துபோச்சுன்னு மனுசனத் தொளச்செடுக்க.''

''பெரிசோ சிறிசோ. உள்ளதச் சொன்னாப் போதும்.''

''இது நடந்து மூணு நாளாச்சுடா. அதுக்கு முந்தின நாளு ஒரு கூட்டம் நத்தம்பட்டிப் பக்கம் பாட்டக்கொளம் புதுப்பட்டிக்குப் போயி சனங்கள அரட்டி மெரட்டி அழிம்பு பண்ணீருக்கு. நம்ம காவலாச்சே. எப்படிப் போகாமருக்க முடியும். போகலன்னா வேலிக்குப் போட்ட முள்ளு காலுக்கு வெனையாச்சுன்னு நம்மளத் தப்பாப் பேசுவாங்க.''

''ஆரு ஆரச் சந்தேகப்படுதது. நாக்கு அழுகிப்போகும்.''

''நெலம அப்படியாகிப்போச்சு. அப்பேர்ப்பட்ட சாதியில பெறந்துட்டமே.''

''அதுக்காக வேற சாதியிலயா மாத்திப் பெறக்க முடியும்.''

''மறுநா கெளம்பிப் போனென். அவ்வளவாச் சேதமில்ல. கொஞ்ச நேரத்துல பாத்தா பெரிய கூட்டம் அருவா கம்போட எக்காளம் போட்டு வருது.''

''மறுபடியும் கொள்ளையடிக்கவா. எந்தூருக்காரங்க.''

''பக்கத்தூரு மூஞ்சி ஆரும் தட்டுப்படல. எல்லாம் தொலவட்லருந்து வந்தவங்க. ஒருத்தனக்கூட அடையாளம் தெரியல.''

''சங்கடந்தான்.''

''ஆனது ஆகட்டும்னு தைரியமா அவங்ககிட்டப் போயி கொஞ்சம் நில்லுங்கப்பான்னு தாக்காட்டினென்.''

''கையில ஒண்ணுமில்லாமயா போனிய.''

''கத்திய ஏத்துனமானக்கி வேல்கம்போடதான்.''

''பேச்சக் கேட்டாங்களா.''

''அப்படியே நின்னுட்டாங்க. நீ ஆருடான்னு ஒருத்தன் அதட்டிக் கேட்டான். எம் பேரு சோலத் தேவன். நாடாக்கமாருக்குக் குடிகாவக்காரன்னு சொன்னென்.''

''சரி.''

''ஒடனே ஒரு மொரடனுக்கு வந்ததே கோவம். மறவனாப் பெறந்துக்கிட்டு சாணானுக்கு ஊழியம் செய்றயேன்னு அடிக்க வாற மாதிரி நெருங்கி வந்தான். நான் அசையல.''

''தொட்டுருந்தாத் தெரியும்.''

''இதுல என்ன தப்பு. உண்டான தொழிலச் செய்றொம். அதுக்கு அவங்க கூலி குடுக்காங்கன்னு அடக்கமாச் சொன்னென். அதுக்கு அவன் அடங்கல.''

''என்ன செஞ்சான்.''

''சாணான் வீட்டுச் சோத்தத் தின்ன கொழுப்பு பேசச் சொல்லுது. இவனப் புடிச்சுக் கெட்டிவையிங்கடான்னு உறுமுனான். எல்லாரும் என்னச் சுத்தி வளச்சுக்கிட்டாக.''

''போச்சு.''

''நான் தடுமாறல. நாடாருகளுக்குக் காவக்காரங்கிற மொறையில சொல்றென். சண்ட சச்சரவு வேணாம். போயிருங்கப்பான்னு கெஞ்சினென்.''

''அதுக்கும் மசியலயா.''

''எங்களப் பத்தி எவனோ போலீசுகாரங்கிட்ட இல்லாறது பொல்லாறதச் சொன்னானாம். அவனச் சும்மா வுடப்போறதில்ல. ஊரவே அடிச்சு நொறுக்கு னாத்தான் மனசாறும்னு ஒருத்தன் சத்தம் போட்டானோ இல்லையோ என்னப் போட்டு மொத்த ஆரம்பிச்சிட்டாங்க. அடிக்காற ஆளில்ல.''

''நீங்க ஒத்தியில போனது தப்பு.''

''அப்படியும் நான் மனசு வுடல. ஒதையெல்லாம் வாங்கிக்கிட்டு நீங்க என்ன கேக்கீகளோ அதத் தந்துறென். ஒங்களுக்குப் புண்ணியமாப் போகுது போயிருங் கய்யான்னு கையெடுத்துக் கும்புட்டென்.''

''அதுக்கு என்ன சொன்னாங்க.''

''நிறுத்துங்கடா நான் பேசிக்கிறன்னு ஒருத்தன் கையக் காட்டீட்டு என்ன ஒரு மாதிரியாப் பாத்தான். எங்க மேல போலீசு வழக்குப் போடப்புடாது. நாங்க தூரந் தொலவட்லருந்து வந்துருக்கொம். சாப்பாட்டுக்கு வழியில்ல. கைச் செலவுக்கு அம்பது ரூவா வேணும்னு அதிகாரமாக் கேட்டான்.''

''குடுத்துத் தொலச்சியளா.''

''அடப் பாவிகளா இதுக்குத்தானா இம்புட்டு அடாவடியும் ஆரவார மும்னு நெனச்சுக்கிட்டு கேட்ட பணத்தக் குடுத்தென். கெலிச்சிட்டான்.''

''நல்ல வேளைக்கு அத்தோடயாச்சும் போச்சே. உசிரு தப்பிச்சதே.''

''அவங்களுக்கு என் உசிரு தேவையில்ல. ஒருவேள நான் முண்டிப் பேசி யிருந்தா என்ன நடந்துருக்கும்னு சொல்ல முடியாது. கதைய முடிச்சாலும் முடிச்சிருப்பான்.''

''ஆமாமா. வெறி கண்ண மறச்சிருக்கும்.''

''வந்தவன் அம்புட்டுப் பேரும் தேவன்னு நெனச்சயா. அதான் இல்ல. நாய்க்கன் வெள்ளாளன் செட்டி பணிக்கன் அம்பட்டையன் கொறவன் அத்தனையும் உண்டு.''

''அம்பட்டையனுக்கும் கொறவனுக்கும் நாடானோட அப்படியென்ன தீராப் பகையாம். வாய்க்காத் தகராறா வரப்புச் சண்டையா. இல்ல யேவாரத்துல திகிடுமுகிடான போட்டியா.''

''அத நெனச்சா சிரிப்புத்தான் வருது. இவங்க மட்டுமில்ல பள்ளன் பறையன் சக்கிலியன் எல்லாரும் ஆயுதங்களோட அலையிறான்.''

''கொடுமதான்.''

''பகையென்ன மயிரப் புடுங்கின பக. பஞ்ச நேரத்துல என்னத்தடா சுருட்டு வம்னு நாவறச்சியெடுத்துத் திரியிறாங்க. எப்படியாச்சும் காலந்தள்ளணுமே. இவனே அவனோட கோயில நெருங்க முடியாது. அதுக்குள்ள எவன் மொழஞ்சா இவனுக்கென்ன.''

''அதச் சொல்லுங்க.''

''எங்களால எதுத்து அடிக்க முடியல. நீங்க தொணைக்கு வாங்கன்னு அவங்களக் கூப்பிட முடியாது. தன்மானம் போயிரும். நாடான் தங்கப் பூணூலு போட்டுக்கிட்டுத் தலகாலு தெரியாம ஆடுறான். அவன் வீட்டுக்குள்ள பணம்

பணமாக் குமிச்சுக் கெடக்குது. வாங்கடா அள்ளீட்டு வரலாம்னு ஆச காட்டீ ருப்பான். வாயப் பௌந்துக்கிட்டு வந்துட்டான். என்னத்த அள்ளிக் கெட் டீட்டுப் போகப் போறாங்களோ.''

தங்கையா சிரித்துக்கொண்டான்.

''கனமாக் கெடைக்கும்னு கெனாக் காங்க வேணடியதுதான்.''

''போன மாசம் நடந்த கலகத்துலருந்து பக ரெம்ப முத்திக்கிருச்சு.''

''அதென்ன லேசான கலகமா. தேவமாரு வீடு அம்புட்டும் கட்டமண் ணாகிப் போச்சே.''

''வீடில்லாம அவங்க பட்ட கருமாயம் கொஞ்சமா. ரெம்பப் பேரு குடி கெளம்பிப் போயி சாதிசனத்தோட சேந்துட்டாங்க.''

''பாதுகாப்பு வேணுமில்ல.''

''வெளியேறிப் போக வழியில்லாறவங்க புதுசா கூரைய மேஞ்சு குடும்பம் நடத்துறாங்க.''

''அதாச்சும் தப்பிக்குமா.''

''நாடாருக கடையில ஆரும் பண்டம் வாங்கப்புடாதுன்னு கூடிப் பேசி தங்களுக்குன்னு வைராக்கியமா கட வச்சுப்பாத்தாங்க. ஓடல.''

''அதனாலதான வெனையே வந்துச்சு. கடைய நடத்துததுக்குச் சாமர்த்தியம் வேணுமே.''

''பழிபோடுறதுக்குக் காரணமா இல்ல. பக்கத்தூருப் பொம்பளைக செவ காசியில பருத்திமாரு வித்தாகளாம். அத வாங்குற சாக்குல மாரு என்ன வெலன்னு நாடாருக கேட்டாகளாம். பொம்பளைக அதத் தப்பா எடுத்துக்கிட்டு வீட்ல போயி ஆவலாதி சொல்லி அழுதாகளாம். ஆம்பளைகளுக்குச் சொல்லணுமா. அல்லக்காபுல்லக்கான்னு குதிப்பான்.''

''கிண்டலுக்குக் கேட்ருந்தா கொழுப்புத்தான்.''

''அதானப்பா அரிசி சிந்தினா அள்ளீறலாம். வார்த்த சிந்தினா வார முடியுமா. வம்ப வெலைக்கு வாங்கலாமா.''

''எந்தூருப் பொம்பளைகளாம்.''

''செங்கமலநாச்சியாவரத்து நாய்க்கமாருன்னு சொல்றாக. நடுவப்பட்டி நாய்க்கமாருன்னும் சொல்லிக்கிறாக. நடுவப்பட்டிக்காரிகதான்னு தூண்டிவுட்ட தாவும் பேச்சு அடிபடுது.''

''ஓகோ அப்பத்தான் பத்திக்கிடும்.''

''இது மட்டுமா. நாய்க்கமாரு பொம்பளைய அடிச்சுப்போட்டுட்டாங்க. ஆனையூருக் குடும்பனக் கொன்னுபோட்டுட்டாங்க. செஞ்சது அம்புட்டும் நாடாருகதான்னு அவங்க மேல வழக்கு நடக்குது. ஏற்கெனவே தேவமாருக ளோட வீடுகளக் கொளுத்துனாங்கன்னு கோவத்துல பழிவாங்கக் காத்துட் ருக்காங்க. இப்ப இதும் சேந்தாக் கேக்கணுமா.''

''எல்லாரும் ஒண்ணுசேரத் தோதாப்போச்சு.''

''செவகாசித் தேவமாரால மட்டும் முடியாதுன்னு சுத்துப்பட்டிக்காரங் களவும் சேத்துக்கிட்டாங்க. தூரத்துலருந்தும் கூப்புட்டுக்கிட்டாங்க.''

''கொள்ளையடிக்கிதுக்குக் கூட்டம் சேருது.''

''ரெண்டு மூணு சமீந்தாருகளும் இதுக்கு ஒத்துக்கையாம். செவகிரியிலயோ எங்கயோ கமுக்கமாக் கூடிக்கூடிப் பேசுறாகளாம். அவங்க ஆளுகதான் மும் மரமாத் திரியிறாகளாம்.''

''இருக்கும்.''

''செவகாசித் துலுக்கரும் கூட்டம் போட்டு முடிவுசெஞ்சிட்டாங்களாம்.''

''எப்படி.''

''ரெண்டு பக்கமும் சேராம பொதுவா இருந்துக்கிருவம்னு. ஆனா ரெண்டு மூணு பேரு திரியிறதப் பாத்தா அந்த முடிவுக்குக் கட்டுப்படுற மாதிரி தெரியல.''

''அவுகளுக்கு இவுக மேல என்ன காட்டமோ.''

''இல்லாமயா கறுவீட்டுத் திரிவாங்க.''

''ரெம்ப நாளாவே இந்தத் திட்டம் நடக்குதுன்னு சொல்லுங்க.''

''ஆமாமா நடுவப்பட்டிதான் எல்லாத்துக்கும் தாப்பான எடம். அங்கதான் ராவும் பகலும் கூட்டம் நடக்குதாம். வெளியூருக்காரங்கெல்லாம் அங்க வந்து வெவரம் கேட்டுட்டுப் போகணுமாம். பொன்னுச்சாமித் தேவரு ராமச்சந்திரத் தேவரு வெள்ளையத் தேவருன்னு அண்ணன் தம்பிக சொல்றபடி நடக்கணு மாம். அவங்கதான முக்கியமானவங்க.''

''வெள்ளையத் தேவரு பேருதான் பெலமா அடிபடுது.''

''மானசேரியிலயும் அப்பப்பக் கூட்டம் நடக்குதாம். அங்க தாட்டிக்கமான மனுசன் நாகப்பத் தலவன்.''

''செவகாசியிலயும் இரிப்பாவ.''

''அங்க வெண்டரு ஆறுமொகம் புள்ள சங்கரலிங்கம் புள்ள சங்கரமூர்த்தி மொதலி முத்தரசுப் பண்டாரம். இவங்க ரெண்டு மூணு பேராச் சேந்து மறவரு பண்டுக்குப் பணம் வசூலிக்கிற சாக்குல ஆளு சேக்காங்களாம்.''

''நாடாருக பக்கம் ஆராரு.''

''அய்ய நாடாரு செம்புக்குட்டி நாடாரு சங்கரலிங்க நாடாரு ஆறுமொக நாடாரு இப்படி.''

''அதே வேலையா அலையிதாங்களோ.''

''ரெண்டு பக்கமும் ஒறங்குற மாதிரி தெரியல. கெராமுனுசு தலையாரி வெட்டியான் போலீஸ்காரங்க அத்தன பேரும் தேவமாரு கச்சிக்கு ஒத்தாசன. அதனால உள்ள நடக்கிற சங்கதி எதும் வெளிய வாறதில்ல. அப்படியே அமுக்கீ றாங்க. தலையாரியும் அதிகாரியும் சேந்து விடியவிடியக் களவாண்டாலும் ஆரு பாக்கப்போறது கேக்கப்போறது.''

''அது சரி.''

''எங்க கலகம் நடக்கப்போகுதோ அந்த எடத்துக்குப் பொறுப்பான அதிகாரிக திடீர்னு காணாமப்போயிறது. இல்ல வகுத்து வலின்னு படுத்துக்கிறது. இல்ல துட்டு வாங்கீட்டுக் காரியத்த ஒழப்பிவுட்றது. கொள்ளையடிக்கிறதுல அவங் களுக்கும் பங்குன்னு சனங்க முணுமுணுக்காங்க. அது எவ்வளவுக்கு நெசம்னு கடவுளுக்குத்தான் தெரியும்.''

''ஏன் அப்படிச் செய்தாங்க.''

''தஞ் சாதிக்காரங்களோட ஒத்துப்போகாம எப்படி. குடியிருக்க முடியாதே. நாடாரு சாதியில நாலு அதிகாரிக இருந்தாலே பெரிசு.''

''நல்லா வுட்டுவச்சாங்களே.''

''ஒரு பக்கம் எவ்வளவுதான் அருமுறுக்கினாலும் நாடாருகளுக்கு இனி யொரு பக்கம் வாதிப்புத்தானாம்.''

''அப்படியா.''

''ரெம்பப் பேருக்கு இப்படியொரு முட்டு வாறது புடிக்கலயாம்.''

''அதனால...''

''கடைசியா ஒரு தடவ பேசிப்பாக்கலாமேன்னு யோசன ஓடூருக்கு.''

''நல்லதாப்போச்சு.''

''நாலு பேர மானசேரிக்கு அனுப்பிவச்சிருக்காங்க.''

''அங்கயே போயிட்டாங்களா.''

''போயி மொதல்ல நாகப்பத் தலவனப் பாத்துருக்காங்க. ஊருக்கு வெளிய காத்திருங்கன்னு சொல்லீட்டுப் போனவரு ஆறுமொகம் புள்ளையவும் வெள் ளையத் தேவரவும் கூட்டீட்டு வந்துருக்காரு. கூட ரெண்டு மூணு பேரும் வந்துருக்காங்க.''

''என்னமும் ஏதும் ஆயிடப்புடாதே.''

''நாடாருகளுக்கு அப்படியொரு அச்சந்தான். இருந்தாலும் வெளிய காட் டிக்கிறாமப் பேச்சுக் குடுத்துருக்காங்க.''

''என்ன பேச்சு நடந்ததாம்.''

''செவகாசியக் கொள்ளையடிக்கப்போறதாக் கேள்விப்பட்டோம். அதெல் லாம் வேணாம். தாயாப் புள்ளையா இருந்துக்கிருவம்னு ஒருத்தரு சொல்ல அதுக்கு அவங்க அப்படின்னா ஒரு ஒப்பந்தப் பத்தரம் எழுதிக்குடுங்கன்னு கேட்ருக்காங்க.''

''எப்படி.''

''அதாவது நாடாருக பல்லாக்குல பட்ணப்பருசம் போகப்புடாது. எங்க கோயிலுக்குள்ள மொழையப்புடாது. மறவர் பண்டுக்கு பத்தாயிரம் ரூவா குடுத்துறணும்.''

''கிடுக்கி போடுதாங்க.''

''ஆயிரம் ரூவா குடுக்கிறதா இவங்க சொல்ல அவங்க ஒத்துக்கிறல. அர கொறையாப் பேச்சுவார்த்தைய முடிச்சுக்கிட்டு அவசரமாத் திரும்பீட்டாங்க.''

''அடடா.''

மேற்கே திரும்பிப் பார்த்த சோலைத் தேவர் பதறினார்.

''அங்க பாரு தங்கையா.''

அவனும் பார்த்தான். மழையிறங்கி நெருங்குவதுபோல் ஒரு பெருங் கூட்டம் திரண்டு வருவது மங்கலாகத் தெரிந்தது.

''வாறாங்க. நம்ம இங்கருக்க வேணாம். எந்திரிங்க. பட்டது போதும்.''

''எந்த ஊரக் குறிவச்சு வாறாங்களோ. என்ன நடக்கப்போகுதோ.''

இருவரும் எழுந்து தென்வடலாகப் பிரிந்து விரைவாக மறைந்தார்கள்.

## 2. நெருங்கிநெருங்கி...

கலகக்காரர்கள் நெருங்கிநெருங்கி வருவதாகத் துப்புக் கிடைத்தது. வெள்ளா ளர்களும் பிற சாதிக்காரர்களும் சன்னஞ்சன்னமாக சிவகாசியை விட்டு வெளி யேற ஆரம்பித்தார்கள். வியாபாரம் வள்ளிசாகப் படுத்துவிட்டது. பெரும்பாலான கடைகள் மூடிக்கிடந்தன. முழிபிதுங்க முணுமுணுக்காத வாயில்லை.

''செவகாசிக் கொள்ள நடக்கப்போகுதாம்.''

நாடார்களைப் பீதி பிடித்தாட்டியது. என்ன செய்வது என்ன செய்வது என்ற உளைச்சல். ஆனாலும் அதிகாரிகளிடம் முறையிடுவதை நிறுத்தவில்லை.

மணியம் சங்கரலிங்க நாடார் கவர்னருக்குத் தந்தியனுப்பினார் :

சிவகாசி ஆறுமுகம் பிள்ளை மந்திரமத் தலைவன் மானசேரி நாகப்பத் தலைவன் நடுவப்பட்டி வெள்ளையத் தேவன் சுத்துப்பட்டிக்காரர்கள் எல் லாரும் முன்னூறு கள்ளர்களுடன் சேர்ந்து நாடார்களின் வெள்ளாமைகளை அழிக்கிறார்கள். இது பல நாள் ராத்திரி நடக்கிறது. பட்டப்பகலில் சாலைகளில் போகிறவர்களை வழிமறிக்கிறார்கள்.

ஆறுமுகம் பிள்ளையும் மறவர் கூட்டாளிகளும் திருத்தங்கல் நிலங்களில் வேலை செய்துகொண்டிருந்த மாடுகளைக் கடத்திப்போய்விட்டார்கள். சப்மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டரின் கண்ணுக்கு முன்னாலேயே இது நடந்தது. ஆனைக்குட்டம் புதுப்பட்டி கிருஷ்ணப்பேரி மானசேரியிலும் இதுதான் நடந்தது. மணல் சுமந்து போன சிவகாசி வண்டி மாடுகளைப் பத்திக்கொண்டு போய்விட்டார்கள். தடுத்தால் நாடார்களின் உயிருக்கு ஆபத்து. அதனால் பயத்தில் கதவைப் பூட்டிக்கொண்டு கிடக்கிறார்கள்.

அதிகாரிகளிடம் பிராது கொடுக்க விடாமல் நாடார்களைத் தடுத்துவிடு கிறார்கள். தபாலில் அனுப்பும் மனுக்களுக்கும் இதே கதிதான். சாட்சியாபுரம் வேதக்காரச் சாமியார்கள் எல்லாவற்றுக்கும் சாட்சி.

ஒரு வாரத்தில் சிவகாசியைக் கொள்ளையடித்து சனங்களைக் கொலை செய்வதற்காக ரெண்டாயிரம் பேர் திரண்டிருக்கிறார்கள். சனங்களுக்குப் பாதுகாப்பில்லை. கடைசியாக சிவகாசியை அழிக்க ஆறுமுகம் பிள்ளையும் கூட்டாளிகளும் திட்டமிட்டிருக்கிறார்கள். பாட்டக்குளம் கொள்ளையடிக்கப் பட்டுவிட்டது. கிருஷ்ணப்பேரி மானசேரி சுக்கிரவார்பட்டி பூச்சக்காபட்டியை கலகக்காரர்கள் சுற்றி வளைத்துக்கொண்டார்கள்.

வேதக்கார நாடார்கள் தக்க சமயத்தில் உதவினார்கள். சனங்களைக் கொன்று குமித்து சிவகாசியைத் தரைமட்டமாக்கிவிடுவார்கள். கனம் கவர்னர் அவர்கள் உதவியனுப்பணும். கொள்ளையைத் தடுத்து நிறுத்தி வரப்போகும் அழிவி லிருந்து உயிர்களைக் காப்பாற்றுங்கள். தாமதிக்க வேண்டாம்.

இதே விவரங்களைத் தெரிவித்து அவர் கலெக்டருக்கு மனுவும் அனுப்பினார். புதுப்பட்டி குருசாமி நாடாரிடமிருந்து கலெக்டருக்குத் தந்தி போனது :

...என் வீட்டையும் கிட்டங்கியையும் உடைத்துவிட்டார்கள். ஆறு வீடும் ஒரு தானிய மண்டியும் கொள்ளை...

சிவகாசி சிதம்பர நாடாரும் கலெக்டருக்குத் தந்தி கொடுத்தார் :

> ராத்திரி என் தோட்டத்தில் அஞ்சு கோட்டை கம்பு மறவர்களால் கொள்ளை யடிக்கப்பட்டது. மேலும் ஆறு தோட்டங்களில் நூறு கோட்டை கொள்ளை யடிக்கத் தயாராகிறார்கள். கீழதிகாரிகளுக்குத் தெரிந்தும் நடவடிக்கையில்லை.

கலெக்டருக்குச் சந்தேகம். இவர்கள் உள்ளூர் அதிகாரிகளைத் தவிர்க்கிறார்கள் என்றால் ஏதோ கோளாறு இருக்கிறது. பகையைப் பெரிசாக்கி எதிராளிகளை மாட்டி விட நினைக்கிறார்கள். இதே வேலையாகப்போயிற்று. இவர்களை நம்ப முடியாது.

கலகக்காரர்களின் நடமாட்டத்தைப் பற்றி ஸ்ரீவில்லிப்புத்தூர் இன்ஸ்பெக்டர் அச்சத்துடன் சூப்பிரண்டுக்குத் தெரிவித்தார். சூப்பிரண்டு அதைச் சுத்தமாக நம்பவில்லை. இன்ஸ்பெக்டரைக் கடிந்துகொண்டார்.

ஒரு கூட்டம் சிவகாசிக்கு வரும் வழியில் பண்டிதன்பட்டிக்கு விலகி நாடார் வீடுகளைச் சூறையாடியிருக்கிறது. யாரையும் அடையாளம் தெரியவில்லை. நாடார்கள் பண்டங்களை ஒளித்து வைத்துவிட்டு ஓடிவிட்டார்கள். அதனால் சேதாரம் அதிகமில்லை.

வச்சக்கார்பட்டியோரம் தியாகராஜபுரத்தில் வாரத்துக்கு விட்டிருந்த பசுவை மாரிமுத்து நாடாரும் மற்றவர்களும் பத்திக்கொண்டு வந்திருக்கிறார்கள். வழியில் மாடு தப்பியோடிவிட்டது. தேடியிருக்கிறார்கள். அப்போது ஒரு கோயிலுக்குள்ளிருந்து வந்த பத்துப் பதினஞ்சு பேர் எதிர்த்துக்கொள்ள பெரிய சண்டையாகிவிட்டது. நாடார்களுக்கு வெட்டு. எதிராளிகள் ஓடிவிட்டார்கள்.

நாளுக்கு நாள் மறவர்களுக்கும் நாடார்களுக்குமிடையே பகை பெரிசாவதைப் பார்த்து டெபுடி மாஜிஸ்திரேட் ராகவய்யா வருத்தப்பட்டார். பொறுப்பேற்ற கொஞ்ச நாளிலேயே இந்தக் கதையென்றால் போகப்போக எப்படியாகுமோ. சிவகாசியிலிருந்து முத்து நாடார் வேறு தந்தியில் பயமுறுத்தியிருந்தார். அவரை விசாரித்தபோது தனக்குத் தெரிந்ததைச் சொன்னார்.

''மறவங்களும் மத்த சாதிக்காரங்களும் ஒண்ணுசேந்துக்கிட்டுப் பண்ற அட்டூழியத்துக்குக் கணக்கே இல்ல. கொஞ்ச நாள்ல செவகாசியக் கொள்ளையடிக்கப் போறாங்க. புள்ளமாரும் மத்த சாதிக்காரங்களும் பொம்பளப் புள்ளீகளப் பத்தரமா வெளிய அனுப்புறாங்க. ஆறுமொகம் புள்ள சங்கரலிங்கம் புள்ள ரெண்டு பேரு வீடும் பூட்டிக்கெடக்குது. நேருல வந்து சோதன போட்டீகன்னாத் தெரிஞ்சு போகும். அவுக வெளியூருல கலகத்துக்கு ஆளு சேத்துட்டுத் திரிவாகளாக்கும். எல்லா வெவரத்தவும் சாச்சியாவரம் சாமியாருககிட்டச் சொல்லியிருக்கென்.''

ராகவய்யா இன்ஸ்பெக்டரிடம் பேசினார்.

''நெலம மோசமாயிண்டுருக்கே.''

இன்ஸ்பெக்டருக்கும் அதே கவலை.

''படுமோசமாயிடுத்து. சில பேரு கலகத்துக்கு ஆள் தெரட்றதாக் கேள்விப் பட்டென். அவாளத் தேடிப் பிடிக்க முடியல. ஓடி மறஞ்சிடறா. சீக்கிரத்துலயே கொள்ள நடக்கும்னு நாடாருக நெஜமாவே பயப்படறா. அவா யாரோட பேரை

யும் குறிப்பிட்டுப் பிராது கொடுக்கறதில்ல. பொத்தாம் பொதுவாச் சொல்றா. அதனால நடவடிக்கையெடுக்க முடியல.''

''அது பெரிய சிக்கல்.''

''இப்படிச் செய்யலாம். ரெண்டு பக்கமும் முக்கியமானவங்கள வரவழச்சு நன்னடத்த ஜாமீன் எழுதி வாங்கணும். அப்பத்தான் அடங்குவான்.''

''தேடிப் பிடிக்கணுமே.''

''ஒரு விஷயத்த ஒத்துக்கணும். ஏதோ ஒண்ணு பொகஞ்சிண்டுருக்கு. அது எந்த நேரமும் வெடிக்கலாம். அதச் சமாளிக்கறதுக்குத் தேவையான போலீஸ் தயாரா இருக்கணும்.''

''நேக்கும் அப்படித்தான் தோணறது.''

நிலைமையை எடுத்துச்சொல்லி ராகவய்யா கலெக்டருக்கு விவரமாக எழுதினார். சிவகாசியில் போலீஸ் எண்ணிக்கையை அதிகப்படுத்தணும். நாடார் மறவர் உள்ள ஊர்களில் ஆயுதமேந்திய போலீஸ் ரோந்து வரணுமென்று வலியுறுத்தியிருந்தார்.

கடிதத்தைப் படித்த கலெக்டர் என்ன செய்யலாம் என்று யோசித்துக்கொண்டிருக்கையில் சிவகாசி சுப்ப நாடாரும் மற்றவர்களும் அனுப்பிய தந்தி வந்து சேர்ந்தது. பெரிய தந்தி. நிறைய சங்கதிகளை அடுக்கியிருந்தார்கள். கிட்டத்தட்ட முத்து நாடார் சொன்ன தகவல்கள்தான். கடைசி வரிகள் அவரைக் கலக்கின:

> ...சிவகாசியை அவர்கள் எந்த நேரத்தில் கொள்ளையடிப்பார்கள் என்பது மர்மமாகவே உள்ளது. உள்ளூர் அதிகாரிகள் விசாரணை நடத்தினால் நிச்சயம் எங்களுக்கு நியாயம் கிடைக்காது. உடனே சூப்பிரண்டுடன் புறப்பட்டு வாருங்கள்.

சாயங்காலம் வந்த சூப்பிரண்டிடம் விசயத்தைச் சொன்னார்.

''உடனே சிவகாசிக்கு ஓடியாகணும். நெலம மோசமாருக்கும் போலருக்கு.''

''போவொம்.''

## 3. தன் கையே...

கலெக்டரும் சூப்பிரண்டும் மறு நாள் விடியக்கால ரயிலைப் பிடித்து சாத்தூரில் இறங்கி மாட்டு வண்டிக்கு மாறி சிவகாசிக்குப் போனார்கள். கூட்டமாக அவர்களைச் சூழ்ந்துகொண்ட நாடார்கள் ஆசுவாசப்பட்டார்கள்.

''தொரமாரு தொணையிருக்கையில பயமெதுக்கு.''

''நம்ம அதிகாரிகளுந்தான் இருக்காங்களே. மொள்ளமாறிக. நம்மள ஒழிச்சுக் கெட்னாத்தான் அவங்க கண்ணடைக்கும்.''

கலெக்டர் கைவசமிருக்கும் பிராதுகளை ஒவ்வொண்ணாகப் புரட்டினார். முதலில் மணியம் சங்கரலிங்க நாடார். அவர்மேல் ஆரம்பத்திலிருந்தே நல்ல அபிப்பிராயம் கிடையாது. சண்டை மூட்டிக் குளிர்காயும் மனுசன். அவரது மனுவை நம்ப முடியாது.

அடுத்தது குருசாமி நாடார். விலாசமே கொடுக்காதவரை எப்படி நம்புவது. தந்திமீது ராகவய்யா உடனே நடவடிக்கை எடுத்துவிட்டார். அதுக்குமேல் எதும் தேவையில்லை.

சிதம்பர நாடாரின் தந்தியை நடவடிக்கைக்காக சூப்பிரண்டுக்கு அனுப்பி யாயிற்று. அவர் பார்த்துக்கொள்வார்.

கூடுதலாக போலீஸ் கேட்டு ராகவய்யா ஏன் புலம்புகிறார் என்று தெரிய வில்லை. ஏற்கெனவே உள்ள போலீஸ் போதும். கன்னிசேரி மாட்டுத் தாவணி முடிந்ததும் அங்கிருந்துவேறு போலீஸ் வரும். அதே அதிகந்தான்.

கலெக்டர் சுப்ப நாடாரை மாஜிஸ்திரேட் மூலமாக விசாரித்தார்.

''தந்தி கொடுத்தது நீதானா.''

நாடார் திணறினார்.

''நாந்தான்.''

''தந்திய எழுதுனது யாரு.''

''போஸ்ட் மாஸ்டரு எழுதுனாரு. அவருக்குப் பணம் குடுத்தென்.''

''அவரு பேரென்ன.''

''தெரியாது.''

''நீ சொல்லி எழுதுனாரா அவரா எழுதுனாரா.''

''இந்தந்த வெசயம் இருக்கணும்னு சொன்னென். அந்தப்படி எழுதுனாரு.''

''சொன்ன விஷயத்த நீ நேருல பாத்தயா.''

''இல்ல. சொல்லத்தான் கேள்வி. நான் ரெண்டு மூணு மாசமா ஊர வுட்டு வெளிய போனதில்ல.''

''ஒனக்கு யாரு சொன்னது.''

''நாலஞ்சு நாளைக்கு முந்தி திருத்தங்கல் குருசாமி நாடாரும் புதுப்பட்டி கள்ளப்ப நாடாரும் வந்து சொன்னாங்க.''

''எப்படி.''

''மருதச் சீமையில கள்ளருக கூடுறாக. மறவருக சேந்து எங்க ஊரக் கொள்ளை யடிக்கணும்னு திட்டம்போடுறாக. இப்படிச் சொன்னாக. பாட்டக் கொளத்துல ருந்தும் கொஞ்சப் பேரு வந்து சொன்னாக. அவுக பேரு தெரியாது.''

''எல்லாமே கேள்விப்பட்டதுதான். இல்லையா.''

''ஆமா.''

போஸ்ட் மாஸ்டரை விசாரித்தார்கள். அவர் மறுத்தார்.

''நான் எழுதவுமில்ல அவரு பணம் குடுக்கவுமில்ல.''

மாஜிஸ்திரேட் சுப்ப நாடாரைப் பார்த்தார்.

''தந்திய வேற யாரும் எழுதுனாங்களா.''

நாடார் மென்றுமென்று விழுங்கினார்.

''வெலாசம் மாதிரி பருவட்டான வெவரங்கள போஸ்ட் மாஸ்டரு எழுது னாரு. மத்த வெசயங்கள உள்ளூரு வாத்தியாரு எழுதுனாரு.''

''அவரு பேரென்ன.''

''ஆசீர்வாதம்.''

வாத்தியார் வேதக்காரர். முரடனாகத் தெரிந்தார் ஏறுக்குமாறாகப் பேசினார். சூப்பிரண்டுக்குக் கோவங்கோவமாக வந்தது. இந்த ஆள்தான் தூண்டிவிடுகிற

மாதிரி தெரிகிறது. முதலில் இவரை மடக்கி நன்னடத்தைச் சாமீன் எழுதி வாங்கணும். சுப்ப நாடார் சுத்தப் புளுகிணி.

மேலும் பல நாடார்களைச் சந்தித்துப் பேசினார்கள். கலெக்டர் எதிர் பார்த்த மாதிரி இங்கே இன்ன நடந்தது இன்னார் இன்னார் செய்தார்கள் என்று யாராலும் தெளிவாகச் சொல்ல முடியவில்லை. அவருக்கு எரிச்சலாக இருந்தது. ஊர் அமைதியாகத்தானே இருக்கிறது. பிறகேன் அலறுகிறார்கள். வீணாகப் பயப்படுகிறார்கள்.

அந்தச் சமயத்தில் வெளியூர் நாடார்கள் மூணு பேர் ஓடி வந்து முறையிட் டார்கள்.

''எங்க ஊருல மறவருக நாடாருகள அடிச்சுக் கொடுமப்படுத்துறாக.''

''எங்க ஊருலயும் அப்படித்தான். பெரிய சண்ட நடக்குது.''

''வீடுகளக் கொள்ளையடிக்காக.''

கலெக்டர் பொறுமையிழந்துவிட்டார். கடுமையாக எச்சரித்தார்.

''இப்படிப் பரபரப்பான புரளிகள நம்ப முடியாது. பொய்ப் பிராது கொடுக் கிறவங்கள உள்ள பிடிச்சுப் போட்ருவென். அப்புறம் தண்டவரி போலீசக் கொண்டுவந்து நிறுத்தீருவென்.''

சூப்பிரண்டுடன் திருநெல்வேலிக்குக் கிளம்பிவிட்டார். அப்போது ராத்திரி ஒன்பது மணியிருக்கும். பயத்தில் வாயடைத்துப்போயிருந்த சனங்கள் பலவாறு முணுமுணுத்தார்கள்.

''இப்படிப் பேசீட்டுப் போறாரே. நம்ம என்ன தப்புச் செஞ்சொம்.''

''உள்ளூரு அதிகாரிக நம்மளப் பத்தி இல்லாறதும் பொல்லாறதும் சொல்லீ ருப்பாக. அத நம்பீட்டாரு.''

''கொள்ளையடிக்கிறவங்களக் கையோட புடிச்சுக் கொண்டுவந்து நிறுத் துனாத்தான் நம்மள நம்புவாக போலருக்கு.''

''நடக்கிற அநியாயத்தக் கண்ணால பாத்தே முடியுமா. வெளிய போக முடியாம உசிரக் கையில ஏந்தீட்டுக் கெடக்கயில நேருல பாக்கிறதெங்க.''

''கேள்விப்பட்டத வேற ஆருட்டப் போய்ச் சொல்ல முடியும். இவுகதான் வெசாரிச்சுத் தெரிஞ்சுக்கிறணும்.''

''கலெக்டருத் தொர காப்பாத்துவாருன்னு மலபோல நம்பியிருந்தொம். கடசிக்கு அவரும் கைய விரிச்சிட்டாரே.''

''இனிமே நமக்கு நம்மதான் தொண.''

''மனுசன்னு பெறந்தா எணணைக்கோ ஒரு நாளைக்குச் சாவு நிச்சயம். அது எண்ணைக்கு வந்தா என்ன.''

ஒரு தீர்மானத்துடன் கலைந்து போனார்கள்.

அதே ராத்திரி பதினோரு மணிக்கு அண்ணாமலை நாடாரிடமிருந்து ராகவய்யாவுக்குத் தந்தி வந்தது:

> பண்டாரத் தேவன் நாகப்பத் தேவன் வெள்ளையத் தேவன் மற்ற மறவர்கள் முன்னூறு பேர் கூடி அய்யம்பட்டி மங்கலத்தில் வீடுகளைக் கொள்ளை யடித்துத் தீவைத்து ஆட்களை அடித்துக் காயப்படுத்திவிட்டார்கள்.

ராகவய்யா மலைப்பில் திண்டாடிக்கொண்டிருந்தார்.

## 4. வா மச்சான் வா

சூழன்றுவரும் சூறாவளிபோல் கலகக் கூட்டம் பல ஊர்களைக் கடந்து வந்து கொண்டிருந்தது. அங்கங்கே காத்திருந்த கைகாரர்கள் சேர்ந்துகொள்ள படை இன்னும் பெருகியது. பாதுகாப்பான இடங்களில் சமைத்துப் பசியாறினார்கள். ராத்திரி வேளையில் கிளம்பும் புகையைப் பார்த்து இடத்தை அடையாளம் தெரிந்துகொள்ள முடிந்தது. ரெண்டு மூணு நாளில் சிவகாசிக்கு வரலாம்.

சிவகாசி நாடார்கள் பரபரப்பானார்கள். கொள்ளை நடக்கப்போவது பற்றி அவர்களுக்குச் சந்தேகமே இல்லை. அதைச் சமாளிப்பது பற்றித்தான் யோசனை. வீடு தோட்டம் துரவுகளை விட்டுவிட்டு வெளியேறும் எண்ணமில்லை. கடைசி மூச்சுவரை எதிர்த்து நிற்க வேண்டியதுதான். பயந்து ஓடிவிட்டால் ஊரே அழிந்து நாசமாகிவிடும்.

பெண்டு பிள்ளைகளைப் பாதுகாப்பாக அப்புறப்படுத்திவிட்டால் போதும். ஆண்களுக்கு எப்படியானாலும் சரி. பெண்களை நாடார்கள் வசிக்கும் சென்னப் பட்டணம்வரை தொலவட்டுக்கும் அனுப்பிவைத்தார்கள். பெரும்பாலான பெண்களால் கலகக்காரர்களின் கண்ணுக்குத் தப்ப முடியவில்லை. அடியும் உதையும் வாங்கி நகைநட்டுக்களைப் பறிகொடுத்து அலறியடித்துத் திரும்பிவிட்டார்கள்.

வேறு வழி பார்த்தாகணும். அதும் உடனே செய்யணும். செம்புக்குட்டி நாடார் மற்றவர்களைக் கலந்தார்.

''இனிமே வெளிய அனுப்புறதுல அர்த்தமில்ல.''

''இங்கயே இருக்கட்டும். முடிஞ்ச மட்டும் பாதுகாப்பான எடங்கள்ல தங்க வப்பொம்.''

''கார வீடுகதான் பத்தரமான எடம். எவனும் மொழைய வுடாமப் பாத்துக்கிறணும்.''

''கூர வீட்லருக்கிற பொம்பளைகள என்ன செய்றது.''

''ஆமாமா அதும் யோசிக்க வேண்டியதுதான்''

''ஊருக்குள்ள வந்தாங்கன்னா கூர வீடுகளக் கொளுத்தாம வுட மாட்டான்.''

''நெல்லுக்கட முக்குப் பகுதியிலயும் அம்மன் கோயில் பேட்டையிலயும் இருக்கிற அத்தன வீடும் எரிஞ்சுபோகும்.''

''அந்தப் பொம்பளைகளவும் கார வீட்டுக்குக் கொண்டுவந்து தாமரிக்க வேண்டியதுதான்.''

''வீடுக காணலன்னா கிட்டங்கிக்குள்ள தங்கவப்பொம்.''

''அதும் நெறஞ்சிட்டா உள்ளூரு வேதக்காரச் சாமியாரு வீட்ல இருக்கச் சொல்லலாம்.''

''நல்ல எடந்தான்.''

''நம்மூரு மட்டுமில்ல பக்கத்தூருப் பொம்பளப் புள்ளீகளவும் வரச் சொல்லீருவொம்.''

''பாவம் அதுகளத் தனியா வுடப்புடாது.''

''ஆம்பளைக.''

''அவுகவுக ஊருல நின்னு சமாளிக்கட்டும். கொஞ்சமாருந்தா இங்க வந்து றட்டும்.''

அய்ய நாடார் ஆதங்கப்பட்டார்.

''நம்ம பேரு சொல்றதுக்குப் புள்ளீகளாச்சும் மிஞ்சுவாகளான்னு நெனச்சா வருத்தமாருக்கு''

செம்புக்குட்டி நாடார் தைரியப்படுத்தினார்.

''காளியும் மாரியும் நமக்குத் தொணையிருக்கும்போது கவலையெதுக்கு.''

கைவசம் ஆயுதம் வேணும். அது முக்கியமான வேலை. இருந்த துப்பாக்கிகளையும் இந்த இக்கட்டான நேரத்தில் சர்க்கார் உத்தரவு போட்டுப் பறித்துக் கொண்டது. எதிராளிகளைச் சமாளிக்க எப்படியும் துப்பாக்கி இருக்கணும். கள்ளத்தனமாகத்தான் கடத்தி வரணும். வேறு ஆயுதங்களும் சம்பாரிக்கணும். இந்தப் பக்கம் நாலு கொலை விழுந்தால் அந்தப் பக்கம் ரெண்டாவது சாயணும். அப்போதுதான் மனசாறும்.

ஊர் ஊருக்குச் சொல்லி சகல ஆயுதங்களும் வந்திறங்கின. சந்தேகமில்லாமல் கடத்தி வர வண்ணான் பொதி தோதாக இருந்தது. அப்படி நிறைய துப்பாக்கிகள் கிடைத்தன. பணத்தை விட்டெறிந்தால் ஆயுதங்களுக்கா பஞ்சம்.

கலகக்காரர்களைப் பற்றிய பேச்சு ஓய்ந்த பாடில்லை.

''வெள்ளையத் தேவனும் நாகப்பத் தலவனுந்தான் கூட்டத்துக்கு முன்னால வாறாங்களாம்.''

''மறவரும் குடும்பமாரும் ரெம்பன்னு சொல்லிக்கிறாக.''

''பல சாதியும் கலந்து வாறாங்களாம்''

''இது தெரிஞ்சதுதான.''

வரும் வெள்ளிக்கிழமையன்று சிவகாசியைக் கொள்ளையடிக்க முடிவு செய்திருந்தார்கள். அன்றைக்குப் பூரட்டாதி நட்சத்திரம். கெட்ட காரியங்களுக்குப் பொருத்தமான நட்சத்திரம். பலர் அதுக்கு ஒத்துக்கொள்ளவில்லை.

''வெள்ளிக்கெழம வேணாம். மங்கலமான நாளாச்சே.''

''அதான. லச்சுமிக்கேத்த நாளாக்கும்.''

இன்னொரு நாளுக்குத் தள்ளிப்போட்டார்கள். அதுவரை கூட்டத்தைத் தாமரிப்பது பெரும்பாடு. வெள்ளையத் தேவர் பிரயாசைப்பட்டார்.

ராத்திரி வேளையில் கொள்ளையடிக்க வருவதாக நாடார்களுக்குத் தகவல் கிடைத்தது.

''அதென்ன இருட்டுக்குள்ள முக்காடு போட்டுக்கிட்டு வரப்போறானா.''

''களவாணிதான் அப்படிச் செய்வான்.''

''நல்ல ஆம்பளன்னா வெளிச்சத்துல வந்து வீரத்தக் காட்டணும். அப்பத்தான் நீயா நானான்னு போட்டுப்பாக்கலாம்.''

''ஓலையெழுதி அவன் மூஞ்சியில போயி ஒட்டீட்டு வா.''

வெள்ளையத் தேவருக்குக் கடிதம் எழுதி நம்பிக்கையான ஆள்மூலம் கொடுத்தனுப்பினார்கள். தேவர் அதைப் படிக்கச் சொல்லிக் கேட்டார்:

> உண்மையான மறவனாக இருந்தால் கலகத்துக்கு நாள் குறித்துவிட்டுப் பகலில் வந்து நாடார்களைத் தாக்கு. குறவனாக இருந்தால் ராத்திரியில் வா.

தேவர் கொஞ்ச நேரம் திகைத்துப்போனார். பிறகு சமாளித்துக்கொண்டார்.

''இப்படிச் சொல்லீட்டப் பெறகு இருட்டுக்குள்ள போறது பொட்டத் தனம். பட்டப்பகல்ல போயி அவன் சொட்டைய ஒடிப்பொம். தோதான நாளுப் பாருங்கடா. மறவனா கொறவனான்னு அப்பத் தெரியும்.''

''அடுத்த செவ்வாக்கெழும நல்லாருக்கு. கிருத்திக. அமங்கலமான காரியங் களுக்கு ஆதரவான நச்சத்திரம்.''

''அண்ணைக்கு வாரச் சந்தையுங்கூட. கூட்டம் ரெம்ப வரும்.''

''சந்தைக்கு வந்தம்னு சொல்லித் தப்பிச்சிறலாம்.''

''அண்ணைக்கே வச்சுக்கிருவொம். எழுதுங்கடா.''

தேவர் கையெழுத்திட்டுக் கடிதம் அனுப்பினார். ஒருவன் அதைக் கொண்டுபோய் யாருக்கும் தெரியாமல் சிவகாசி தேர்ச் சக்கரத்தில் ஒட்டிவிட்டு வந்தான். நாடார்கள் கூடிக்கூடி அதைப் படித்தார்கள்:

> நான் உண்மையான மறவன்தான். வைகாசி இருபத்தஞ்சாம் தேதி பகலில் கலகம் நடக்கும். அய்ய நாடானையும் செம்புக்குட்டி நாடானையும் தூக்கில் தொங்க விடுவோம். சாணார் சாதியைக் கருவறுப்போம். சிவகாசி சிவன் தூசியாகிவிடும்.

நாடார் தெருக்களில் இதே பேச்சு.

''இது ஆம்பள. வா மச்சான் வசமா வச்சுக்கிருவொம்.''

''எத்தன சாதி வந்தாலும் எங்கள அசைக்க முடியாது. தூக்குல தொங்கப் போறது ஆருன்னு பாப்பொம்.''

''போலீஸ்காரன் கண்ணுல இது படலயா.''

''பட்டு என்ன செய்ய. அவங்கதான் முழிகண்ணு குருடாயிட்டாங்களே.''

''வெள்ளக்காரங்க சர்க்காருல இப்படி நடக்குதே.''

''நம்ம என்ன சொன்னாலும் நம்ப மாட்டாங்கானே. கல்லுல முட்னது கணக்கால்ல இருக்கு.''

''இங்கருக்கிற அதிகாரிக லேசுப்பட்டவங்களா. வெள்ளக்காரன ஏமாத்துற துக்குச் சொல்லித்தரணுமாக்கும்.''

''எண்ணைக்கு வாறாகளோன்னு எலையுங்கொலையுமா இருந்தொம். இப்பத் தெளிவாத் தெரிஞ்சுபோச்சில்ல.''

''அதுக்குத் தக்க நம்ம தயாராயிக்கிற வேண்டியதுதான்.''

தெருவெங்கும் அவசரம் குடியேறியது. ஒழுகறைப் பெட்டிகள் காலியாகின. பணமும் நகைகளும் விருதுபட்டி நாடார்களுக்குக் கைமாறின. அங்கே கொடுத்து வைக்க முடியாதவர்கள் வீட்டுக்குள் குழி தோண்டிப் புதைத்தார்கள். கடைகளி லிருந்த பொருட்களைக் கிட்டங்கிகளுக்குக் கடத்தினார்கள். ரெண்டையும் கவனமாகப் பூட்டினார்கள்.

துப்பாக்கிகளைத் துடைத்தார்கள். அரிவாளைத் தீட்டினார்கள். என்னென்ன ஏற்பாடு செய்யணுமென்று கமுக்கமாகப் பேசினார்கள். ஒரு வாரத்துக்கு முன்னால் பொங்கல் சாட்டித் தோரணம் கட்டிவிட்ட மாதிரி காரியங்கள் மளமளவென்று நடந்தன.

எல்லாரும் எதுக்கும் தயாராகி எதிராளிகளை எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள்.

## 5. தொடரும் வேட்டை

வியாழக்கிழமை பழுத்த மதியம். விருதுபட்டி இன்ஸ்பெக்டர் கன்னிசேரியிலிருந்து சிவகாசிக்குப் போய்க்கொண்டிருந்தார். கைவசம் ரிவால்வர் இருந்தது. துணைக்கு ரெண்டு போலீஸ்.

வழியில் முதலிபட்டிக்குத் தென்புறம் தென்னந்தோப்பில் ஆயுதங்களுடன் பெரிய கூட்டம் தெரிந்தது. முன்னூறு நானூறு பேர் இருக்கும். அவர் கூட்டத்தை நெருங்கிவிட்டார். கலைந்து ஓடினார்கள். அவர் யாரையும் விரட்டிப் பிடிக்கவில்லை. விசாரிக்கவுமில்லை. அவர் பாட்டுக்கு சிவகாசிக்குப் போய்விட்டார்.

அவர் போனதும் அதே இடத்தில் மறுபடியும் கூட்டம் கூடிவிட்டது. முதலிபட்டியையும் தியாகராஜபுரத்தையும் கொள்ளையடிக்கணும். அதுதான் குறி. ரெண்டும் நாடார்கள் அதிகம் குடியிருக்கும் ஊர்கள்.

நாலு பெரிய மனுசர்கள் வந்து கூட்டத்திடம் கெஞ்சிக் கூத்தாடினார்கள்.

''ஒங்களுக்குப் புண்ணியமாப் போகுது. பேசாமப் போங்கப்பா.''

''ஊருக்கு ஊரு பகையிழுத்து வச்சிட்டாச் சங்கடம்.''

''எல்லாரு நிம்மதியும் போயிரும்.''

''நீங்க இண்ணைக்கு அடிச்சு நொறுக்கீட்டுப் போயிருவீக. காலமெல்லாம் இழுபடப்போறது நாங்கதான. போயிருங்க சாமிகளா.''

கூட்டம் வேண்டாவெறுப்பாக வெறுங்கையுடன் போய்விட்டது.

இன்ஸ்பெக்டர் சிவகாசிக்குப் போனதே சரியென்று சூப்பிரண்டுக்குத் தந்தி கொடுத்தார். அஞ்சு போலீசை பந்தோபஸ்துக்காக முதலிபட்டிப் பக்கம் அனுப்பி வைத்தார். வச்சக்காரப்பட்டி கச்சேரி அதிகாரி உடனே போய் சண்டை சச்சரவில்லாமல் பார்த்துக்கொள்ளும்படி தாக்கீது அனுப்பினார்.

ஸ்ரீவில்லிப்புத்தூருக்குக் கிழக்கே கரிசக்குளத்தோரம் ஒரு சம்பவம் நடந்தது. ஐநூறு பேருக்கு மேல் கூடி நாடார்களைத் தாக்கத் திட்டம் போட்டார்கள். பல ஊர்களிலிருந்து வந்தவர்கள். சிவகாசி போய்ச் சேர வேண்டியவர்கள். கரிசக்குளத்து நாடார்களுக்கு வண்ணான் அம்பட்டையன் ஆசாரி தொழில் செய்யக் கூடாது. கமுதி வழக்குக்கு நாடார்கள் எப்படிப் பணம் கொடுக்கப்போயிற்று. இதுதான் அவர்கள் கோவம்.

கரிசக்குளம் முக்கியமான ஊர். வடபுறம் நாடார்கள் ஏல்க்கையாக இருந்தார்கள். தென்புறம் கோனார் தெருக்கள். ரெண்டு சாதிக்கும் எப்போதும் ஆகாது. கோனார் தெரு வழியாக நாடார் சவம் போகக் கூடாது. பல்லாக்கு சுற்றிவரக் கூடாது. தகராறு வேணாமென்று நாடார்கள் பொதுக் கோயிலிலிருந்து பிடிமண்ணெடுத்துத் தனியாக காளிகோயில் கட்டிக்கொண்டார்கள். அதையொட்டிக் கிழக்கே கிணறு வெட்டி நந்தவனம் உண்டாக்கிப் புழங்கினார்கள்.

கரிசக்குளம் கலகக்காரர்களின் கண்ணை உறுத்தியது. அன்றைக்கு வேட்டை தோதுப்படவில்லை.

வத்ராப்புப் பக்கம் குன்னூரில் நாடார் வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டன. இருபதுக்கு மேலிருக்கும். மறவர் குடும்பமார் வெள்ளாளர் முதலியார் சேர்ந்து

அடித்த கொள்ளை. அங்கே நாடார்களுக்கும் மற்றவர்களுக்கும் முன்விரோதம் உண்டு. கொள்ளையை எதிர்பார்த்து நாடார்கள் பெரும்பாலான பொருட்களை எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். யாருக்கும் காயமில்லை.

மறுநாள் வெள்ளிக்கிழமை. பொழுது கிளம்பிப் பத்துப் பதினஞ்சு நாழிகையிருக்கும். ஆயிரம் பேருக்கு மேல் திரண்டு வடக்கோடை வழியாகச் சந்தடியற்ற வெள்ளம்போல் கரிசக்குளத்துக்கு வந்து நாடார்களின் நந்தவனத்தில் கூடிவிட்டார்கள். இடம் பற்றவில்லை. காளிகோயில் படிகளிலும் மேற்கே ஓடைக்கரை ஆலமரத்தடியிலும் நிரம்பினார்கள்.

ஒரு குரல் உத்தரவு போட்டது.

''நாட்டாம எவண்டா. இழுத்துட்டு வா.''

ஒருவன் நாடார் தெருவுக்கு ஓடினான். சங்கு நாடார் சிலருடன் தயங்கித் தயங்கி வந்தார். கரிமக்கத் தேவர் மிரட்டினார்.

''நூத்தம்பது ரூவா வேணும். குடுக்கலன்னா வீடுகள நொறுக்கீருவொம்.''

நாடார் கெஞ்சினார்.

''அம்பது தந்துறமே.''

''அம்பது எந்த மூலைக்கு. எத்தன பேரு வந்துருக்கொம் பாத்தயா.''

''எழுவதுன்னாத் தாங்கும்.''

''வாய்ப் பேச்சுத்தானா.''

''இருங்க கொண்டுவந்துறென்.''

அதுக்கு ஒத்துக்கொள்வார்கள் என்ற நம்பிக்கையில் நாடார் ஊருக்குள் போய் கொஞ்ச நேரம் கழித்துப் பணம் கொண்டுவந்து கொடுத்தார். பணத்தை வாங்கிக்கொண்ட தேவர் தலையசைத்தார்.

''இது போதாது.''

''நீங்க அப்படிச் சொல்லப்புடாது.''

''பெறகெப்படிச் சொல்றது. நான் கேட்டது வரலயே.''

தேவர் கூட்டத்தை அர்த்தத்துடன் பார்த்தார். எல்லாரும் அவர் உத்தரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். அவர் துண்டை உயர்த்திப் பிடித்துச் செண்டா வீசினார்.

அவ்வளவுதான். நாடார் தெருக்களில் வேட்டை ஆரம்பமானது. வீட்டுக் கதவுகள் உடைந்தன. இருப்பு வைத்திருந்த பருத்தியும் தானியமும் சிதறின. பானைகள் நொறுங்கின. கைக்கு அகப்பட்டதை எடுத்துக்கொண்டார்கள். சங்கு நாடாரின் தரிப்புப் பறிபோனது. மேலும் பலருக்குக் காது கிழிந்தது. நாடார்கள் எதிர்க்கவில்லை. அப்படியே மெய்மறந்து நின்றிருந்தார்கள்.

வந்தவர்கள் அதோடு நிறுத்தவில்லை. பேச்சி பிச்சாரு என்று ரெண்டு பெண்களைத் துகிலுரிந்து அம்மணமாக நடுத்தெருவில் நிறுத்தி வேடிக்கைபார்த்தார்கள். நாடார்களால் பொறுக்க முடியவில்லை.

''நீங்கெல்லாம் தாயி வகுத்துல பெறந்தவங்கதானாடா.''

''ஒங்களுக்கு அக்கா தங்கச்சி பொட்டப்புள்ளீக இல்லையா.''

''பொம்பளைகள மானபங்கப்படுத்துறீகளே பொட்டப்பயகளா.''

ரத்தம் கொதித்து வெறிபிடித்துவிட்டது. அரிவாள் கம்புகளை எடுத்துக் கொண்டு கண்டமானக்கித் தாக்கினார்கள். கூட்டம் இதை எதிர்பார்க்கவில்லை. வேகமாகப் பின்வாங்கியது. நாடார்கள் விரட்டிவிரட்டி வெட்டினார்கள்.

சண்டை ஓய்ந்துவிட்டது. ரத்தம் தெளித்த தெருக்களில் சத்தமில்லை. காயம்பட்ட வீடுகள் ஏராளம். காணச் சகிக்கவில்லை. ஒன்பது வீடுகள் மட்டுமே கொள்ளைக்குப் பலியாகியிருந்தன. நல்ல வேளை நெருப்பு விளையாடவில்லை.

ஒரு தெருவில் இரு பிணங்கள் நாதியற்றுக் கிடந்தன. ஒண்ணு அடையாளம் தெரிந்தது. முத்துச்சாமி பிள்ளை வாத்தியார். கோயில்பட்டியில் இன்ஸ்பெக்டராக இருந்த அரசப்ப பிள்ளைக்குச் சொந்தக்காரர். இன்னொண்ணு யாரென்று தெரியவில்லை.

அழகிரி நாடார் மார்தட்டினார்

''நாந்தான் வாத்தியான வெட்டிக் கொன்னென்.''

அடுத்த பிணத்துக்கு சிவனணைந்த பெருமாள் நாடார் பொறுப்பேற்றார்.

''என் அருவாதான் இவனக் காவுபோட்டது.''

மேலும் நாலு பேரைக் கொன்றதாகக் கணக்குச் சொன்னார்கள்.

''நாலு பொணத்தவும் தூக்கீட்டுப் போயிட்டாங்க.''

''குடுத்த குடுப்புல நூறு எரநூறு பேராச்சும் காயப்பட்ருப்பான். அதுல எத்தன செத்ததோ.''

ஆறு நாடார்களுக்கு ஆழமான காயம். விரைவில் ஆறிவிடும்.

''சூடுபட்ட பய சும்மாருக்க மாட்டான். மறுபடியும் வருவான். நம்ம எச்சரிக்கையாருக்கணும்.''

அன்றைக்கு மேலும் பல ஊர்கள் தாக்கப்பட்டன. வத்ராப்பருகே கோபால புரத்துக்கு வைத்த குறி தப்பிவிட்டது. ஏற்கெனவே போலீஸ் அங்கே காவலிருந்த தால் பாச்சா பலிக்கவில்லை. ஓடிவிட்டார்கள்.

லட்சுமிநாராயணபுரம் கொள்ளையடிக்கப்பட்டது. முப்பத்தாறு வீடுகள் எரிந்தன. பன்னிரெண்டு நாடார்களுக்குக் காயம். சப்மாஜிஸ்திரேட் வந்து பார்த்துவிட்டு ரிப்போர்ட் எழுதியதுடன் சரி.

சிவகாசிக்குக் கிழக்கே சங்கரலிங்கபுரத்திலும் கொள்ளை. நகைகளும் தானி யமும் பறிபோயிற்று. முப்பது பசுக்களையும் அஞ்சு காளைகளையும் கொண்டு போய்விட்டார்கள். பக்கத்திலுள்ள கட்னார்பட்டி கதிகலங்கிப்போனது. ஏராள மான பொருட்களை எடுத்துப் போய்விட்டார்கள். நாற்பத்திமூணு வீடுகள் தீவைப்பு.

**ச**னிக்கிழமையன்று கரிசக்குளம் கலகம்பற்றி ஸ்ரீவில்லிப்புத்தூர் இன்ஸ்பெக்டர் ராகவய்யாவுக்கும் அவர் கலெக்டருக்கும் சூப்பிரண்டுக்குமாக ரிப்போர்ட் எழுதிக் கொண்டிருந்தார்கள். கரிசக்குளம் பெருமாள் நாடார் கலெக்டருக்கும் சூப்பிரண் டுக்கும் தந்தி கொடுத்தார். சூப்பிரண்டுக்கு ஒரு சந்தேகம். அருகிலேயே ஸ்ரீவில்லிப்

புத்தூர் இருக்கும்போது விருதுபட்டியிலிருந்து ஏன் தந்தி கொடுக்கணும். சம்பவம் உண்மைதானா என்று கேட்டு இன்ஸ்பெக்டருக்குத் தந்தியனுப்பினார்.

சங்கரலிங்கபுரம் கட்னார்பட்டியில் நடந்ததைத் தெரிவித்து சன்னாசி நாடாரிடமிருந்தும் சூப்பிரண்டுக்குத் தந்தி வந்திருந்தது. அதையும் நம்பவில்லை. இன்ஸ்பெக்டரிடம் விவரம் கேட்டார். அது பற்றித் தகவலில்லை என்று பதில் தந்தி வந்தது.

அதே சமயம் ராகவய்யாவும் சூப்பிரண்டுக்குத் தந்தியனுப்பியிருந்தார் :

> தொடர்ந்து கடுமையான கொள்ளை நடக்கிறது. நிறைய போலீஸ் தேவை. எல்லா வேலைகளையும் தனியாகக் கவனிக்க முடியாது. உதவிக்கு ஒருவர் தேவை. நாடார்கள் விஷயங்களைப் பெரிசுபடுத்துகிறார்கள். ஆனாலும் ஏதோவொரு சமாச்சாரம் இருக்கத்தான் செய்கிறது.

இதுதான் அதிகாரிகளின் லட்சணம். கிணற்றுக்குள் முங்கித் தொட்டுப் பிடித்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். உண்மையில் என்ன நடக்கிறது நடக்கப்போகிறது என்று கலெக்டருக்கும் சூப்பிரண்டுக்கும் தெளிவில்லாமலேயே இருந்தது.

கலகக்காரர்களுக்கு சின்னையாபுரத்தின்மீது ஒரு கண் இருந்தது. சுற்றிச் சுற்றி வளையமிட்டுத் திரிந்தார்கள். அந்த ஊர் மன்னார்கோட்டை மறவர் சமீனைச் சேர்ந்தது. அதையொட்டியுள்ள கோட்டையூர் எட்டயாபுரம் சமீன் கிராமம். ரெண்டு ஊருக்கும் நடுவில் ஒரு தெருதான் எல்லை. ரெண்டிலும் மொத்தம் முன்னூறு வீடு தேறும். முக்கால்வாசி நாடார்கள். மீதி குடும்பமார் பறையர். ஒவ்வொரு ஊருக்கும் தனித்தனிக் கிராம முன்சீப் உண்டு.

அங்கிருந்து மன்னார்கோட்டை அரை மைல் தூரம். சுத்துப்பட்டிகளில் மறவர் நாய்க்கர் குடும்பமார் குடியிருந்தார்கள். ரெண்டு மூணு மைல் தொலைவில் வச்சக்கார்பட்டி. அங்கேதான் போலீஸ் கச்சேரி.

மன்னார்கோட்டை சமீன் ஏஜெண்ட் திருப்பாற்கடல்நாத பிள்ளையும் கிராம முன்சீப் சண்முகராம பிள்ளையும் மன்னார்கோட்டை சிவன் கோயிலுக்காக நாடார்களிடம் பணம் கேட்டிருக்கிறார்கள். நாடார்கள் தரவில்லை. இருவருக்கும் கோவம்.

அன்று சுந்தர நாடார் கன்னிசேரித் திருவிழாவுக்குப் போய்விட்டு மற்ற நாடார்களுடன் சின்னையாபுரம் திரும்பிக்கொண்டிருந்தார். மன்னார்கோட்டையோரம் ஒரு கூட்டம் அவரை மறித்துக்கொண்டது.

''சாணானக் கொள்ளையடி.''

''ஒங்க ஊரச் சூறையாடப்போறொம்.''

''என்ன நடக்கப்போகுதுன்னு பாரு.''

''நாங்க இங்கயே இருப்பம்னு நெனச்சயா.''

அவர் மிரண்டுபோய் ஓடிவிட்டார்.

## 6. போதகரும் ஆதரவும்

ஞாயிற்றுக்கிழமை ராகவய்யா கரிசக்குளத்துக்குப் புறப்பட்டுப் போனார். அவருக்கு முந்தி ரெண்டு கூட்டம் மறுபடியும் அந்த ஊரைத் தாக்கப் போய்க் கொண்டிருந்தது. ஊருக்கு வெளியே போலீஸ்காரர்கள் தடுத்து நிறுத்தினார்கள். கட்டுப்படுத்த முடியவில்லை. போலீசைத் தாக்க வந்தார்கள். துப்பாக்கிச் சூடு நடத்திக் கலைக்க வேண்டிய நிலைமை. அதில் ரெண்டு பேர் மாண்டதாகவும் சடலத்தைத் தூக்கிப் போய்விட்டதாகவும் பேசிக்கொண்டார்கள். நடந்ததைச் சொல்லி ராகவய்யா கலெக்டருக்குத் தந்தி கொடுத்தார்.

வழக்குப் போடுவதில் நத்தம்பட்டி கச்சேரி அதிகாரி சாமிக்கண்ணு நாடாருக்கும் வத்ராப்பு சப்மாஜிஸ்திரேட் சுப்பிரமணிய அய்யருக்கும் முறுக்கிக் கொண்டது. வாக்குமூலம் வாங்குவதில் இழுபறி. கச்சேரி அதிகாரி நாடார்களுக்குச் சாதகமாக வாங்கிவிட்டதாக ஒரு குறை. ஒருவழியாகச் சமாதானமாகி வழக்கைத் தயாரித்தார்கள்.

அதே நாளில் விருதுபட்டியில் ரெம்பப் பதட்டமாக இருந்தது. சிவகாசிக்குப் போகும் வழியில் எதாச்சும் சிக்குமா என்று ஆட்கள் லாந்தினார்கள். கூரைக்குண்டு சின்ன ஊர். அங்கே நாடார் வீடுகள் அஞ்சே அஞ்சு. அதைக் கொள்ளையடித்துப் பெண்களிடம் நகைகளையும் பணத்தையும் பறித்துக்கொண்டார்கள்.

செங்குந்தாபுரம் பெரிசு. பல சாதிகள் உண்டு. தொலைவிலிருந்து வந்தவர்களுடன் பக்கத்தூர்க்காரர்களும் சேர்ந்து வந்து நாடார்களை மிரட்டினார்கள்.

''மேச்சாதிக்காரங்களப் போல நடந்துக்கிற மாட்டம்னு எழுதிக்குடுங்கடா.''

நாடார்கள் மறுத்தார்கள்.

''நாங்க எதுக்கு எழுதிக்குடுக்கணும். அவங்களுக்கு அடிமையா என்ன.''

சண்டை ஆரம்பித்துவிட்டது. நாடார் எளவட்டங்கள் எதிர்த்து அடித்து விரட்டவே ஓடுகிற வழியில் வீடுகளுக்குத் தீவைத்துவிட்டுத் தப்பிவிட்டார்கள். நூறு வீடுகளுக்கு மேல் நாசம். நாய்க்கர் வெள்ளாளர் மறவர் வீடுகளும் தப்பவில்லை. கலகம்செய்தவர்களில் குடும்பமாரும் நாய்க்கரும் ரெம்ப. துலுக்கரும் உண்டு.

விருதுபட்டியை ஒரு கூட்டம் தாக்கப்போவதாக ஒரு சேதி பரவியது. நாடார்கள் கொந்தளித்துக் கூக்குரலிட்டார்கள். சப்மாஜிஸ்திரேட் சீனிவாசய்யர் போய்ச் சமாதானப்படுத்தினார். நல்ல வேளை எதும் நடக்கவில்லை.

கன்னிசேரியோரம் பூச்சக்காபட்டியில் ஒரு கொள்ளை. பதினஞ்சு வீடு காலி. நாடார்கள் ஓடிவிட்டார்கள். கொள்ளைக்காரர்கள் வண்டி மாடுகளைப் பத்திக்கொண்டு போய்விட்டார்கள்.

நல்ல நேரம் வெள்ளைக்கார போதகர் ஸ்காட் பிரைஸ் தம்மநாய்க்கன்பட்டியில் தங்கியிருந்தார். அவர் சாட்சியாபுரத்தில் இருந்துகொண்டு ஊழியம்செய்கிறவர். அவர் இருந்ததால் ஊர் தப்பித்தது. ஒவ்வொரு சம்பவத்தையும் கேட்டு அவர் ரெம்ப வருத்தப்பட்டார்.

இதென்ன கொடுமை. வேதக் கோயிலையும் எரித்துவிட்டார்கள். எல்லாருமாகச் சேர்ந்து நாடார்களைப் பயமுறுத்துகிறார்கள். கிராம முன்சீப்புகள்

சண்டைகளைப் பற்றி விவரமே தெரிவிப்பதில்லை. அல்லது பூசிமெழுகு கிறார்கள். சண்டைக்குப் பயமா உடந்தையா என்று தெரியவில்லை. கொடுமை என்னவென்றால் மறவர்களுக்கு மற்ற சாதிக்காரர்கள் எல்லாரும் துணைபோகி றார்கள். கொள்ளையடிப்பதில் மறவர்களுக்குத் தனி ருசி. கடும் நடவடிக்கை யெடுத்து அவர்களை ஒடுக்கவில்லையென்றால் கலகம் பெரிசாகி மேலும் பரவும். ஏற்கெனவே பல ஊர்கள் கொள்ளையடிக்கப்பட்டுவிட்டன. இன்னும் சில ஊர்களைக் குறிவைக்கிறார்கள். இதையெல்லாம் கலெக்டருக்கு எழுதிப் போதிய நடவடிக்கையெடுத்து அமைதிகாக்கும்படி கேட்டுக்கொண்டார்.

அன்றைக்கு இன்னொரு வேத போதகர் சின்னையாபுரத்துக்கு வந்துகொண் டிருந்தார். அவரும் வெள்ளைக்காரர். வழியில் மன்னார்கோட்டையோரம் ஒரு மாட்டு வண்டியையும் வண்டியில் பூட்டிய மாடுகளையும் பார்த்தார். வண்டி யைச் சுற்றிக் கம்புகளுடன் ஆட்கள். வண்டிக்காரர் சங்கரநாராயண பிள்ளை அவர்களுக்கு நடுவில் மாட்டிக்கொண்டு முழித்தார். சமீபத்தில்தான் எல்லாச் சாதிக்கும் பொதுவாகச் சின்னையாபுரத்தில் கடை ஆரம்பித்திருந்தார். கொஞ்ச நாளாக ஆள் ஊரில் இல்லை. திரும்பி வரும்போது இப்படியாகிவிட்டது.

ஆளாளுக்கு அவரை அரட்டினார்கள்.

''சாணாங்களுக்கு மத்தியில நீ குடியிருக்கப்புடாது.''

''எங்க ஊருல ஒனக்கு வீடு தாறொம்.''

அவர் பணியவில்லை.

''சின்னையாவரத்த வுட்டு வர மாட்டென்.''

போதகரும் அவருடன் வந்த வாத்தியாரும் நல்ல வார்த்தை சொல்லி அவரை விடுவித்தார்கள். பிறகு சின்னையாபுரத்துக்குப் போனார்கள்.

சின்னையாபுரம் வேதக் கோயிலில் செபம் முடிந்து போதகர் ஊருக்குள் போனார். வேதக்காரர்களும் இந்துக்காரர்களும் பயந்துபோயிருந்தார்கள். வீட்டு மச்சுக் களில் பானையோடுகளும் கற்களும் குமித்துக்கிடந்தன. கலகம் வந்தால் எதிர்க்கத் தயாராகவே இருந்தார்கள்.

வழக்கமாக அவர் ஞாயிறு மதியம் கிளம்பிவிடுவார். சனங்கள் கேட்டுக் கொண்டதால் ராத்திரி தங்கினார்.

சின்னையாபுரத்தில் வேதக்கார வீடுகள் சொற்பந்தான். மிச்சம் நாடார் குடும்பமார் பறையர். ஏகப்பட்ட எதிர்ப்புக்கிடையில் அங்கே வேதம் வேர் விட்டது. தனிக் கோயில் கட்டிக்கொடுக்கப்பட்டது. ஒரு உபதேசியார் இருந் தார். ஞாயிறுதோறும் போதகர் வருவார். ஞாயிறு தவிர நல்ல நாட்களிலும் செபம் பாட்டு எல்லாம் நடக்கும்.

இந்துக்கார நாடார்கள் வேதக்கார நாடார்களை வித்தியாசமாகவே நடத்தி னார்கள். நாடாராகப் பிறந்துவிட்டு பள்ளுப் பறைச் சாதிகளுடன் சேர்ந்து கூத்தடிப்பதாக இகழ்ந்து பேசினார்கள். பொதுக் கிணற்றில் தண்ணீரெடுக்க விடாமல் தடுத்தார்கள். வண்ணானும் அம்பட்டையனும் அவர்களுக்கு ஊழியம் செய்யக் கூடாதென்று கட்டுப்படுத்தினார்கள்.

வேதக்கார நாடார்கள் தனிக் கிணறு வெட்டிப் புழங்கினார்கள். வேதக் காரர்களுக்கு என்னமும் ஏதுமென்றால் வெள்ளைக்காரன் குதிரையில் வந்து நிற்பான் என்ற பயம் இந்துக்காரர்களிடம் இருந்தது.

இரு பக்கமும் உறவுகள்கூட அறுந்துவிட்டன. கொள்வினை கொடுப்பினை குறைந்தது. ஒரு பக்கமிருந்து பெண்ணெடுத்தால் மறு பக்கத்துடனேயே நின்று கொள்ளணும். பெற்ற இடம் பிறந்த இடத்தை மறந்துவிடணும்.

ஒரு இந்துக்கார நாடார் வேதக்கார வீட்டில் பெண்ணெடுத்திருந்தார். சந்தோசமாகவே குடும்பம் நடத்தினார்கள். அந்தப் பெண் அவ்வளவாகப் பிறந்த வீட்டுக்குப் போவதில்லை. கட்டுப்படுத்திவைத்திருந்தார்கள்.

ஒரு நாள் அவளது அண்ணன் இறந்துவிட்டார். அவளுக்கு அண்ணன் முகத்தைப் பார்க்க ஆசை. ஒரே ஊருக்குள் இருந்துகொண்டு எப்படிப் போகா மல் இருக்க முடியும். புருசனிடம் கேட்டால் நிச்சயம் அனுப்ப மாட்டார்.

அவள் சொல்லாமல் கொள்ளாமல் போய் மனசுக்குள் அடக்கிவைத்திருந்த அத்தனை வேதனைகளையும் கொட்டி அழுதுதீர்த்தாள்.

இது பெரிய பிரச்சினையாகிவிட்டது. அவளைப் புருசன் வீட்டில் அனு மதிக்கவில்லை. ரெம்ப நாளாகப் பிறந்த வீட்டிலேயே தங்கியிருந்தாள்.

பிறகு புருசன் மனசுமாறிச் சமாதானமாகி அவளை அழைத்துவந்தார். அதிலிருந்து வேதம் இந்துக்காரர்களை ரெம்ப உறுத்தவில்லை. அவரவர் விருப்பப்படி தெய்வத்தை வணங்கிக்கொண்டார்கள்.

எல்லா நாடார்களும் ஏல்க்கையாக இருந்தார்கள். நல்ல விவசாயம். கடின உழைப்பு. புகையிலைதான் அதிகம் பயிரிடுவார்கள். கையில் பணம் தாராள மாகப் புழங்கியது. பல நாடார்கள் பூணூல் போட்டிருந்தார்கள்.

மன்னார்கோட்டை சமீன்தார் சின்னையாபுரம் வழியாகக் குதிரையில் போவார். பள்ளுப் பறைப் பெண்கள் அவரைக் கண்டதும் ஒதுங்கி நின்று குலவையிடுவார்கள். நாடார் பெண்கள் கண்டுகொள்வதில்லை. இதனால் நாடார்கள்மீது சமீன்தாருக்குக் கோவம். இப்படிப் பல காரணங்கள் உண்டு.

சர்க்கார் அதிகாரிகளைவிட வேத போதகர்கள் நாடார்களிடம் அன்பாக வும் அனுசரணையாகவும் இருந்தார்கள். இதனால் அவர்களுக்கு வேதக்காரர்கள் மீதிருந்த வெறுப்பு மறைந்து நம்பிக்கை பிறந்தது. அங்கியணிந்த போதகர்களைக் கண்டு பேய் பிசாசு என்று பயந்து ஓடிய காலம் மலையேறிவிட்டது. உதவிக்காக அவர்களை உரிமையுடன் நாடினார்கள்.

மறுநாள் காலை போதகர் புறப்படும்போது சனங்களுக்காக செந்தூர் நாடார் ரெண்டு மனு கொடுத்தார். ஒண்ணு போலீஸ் சூப்பிரண்டுக்கு. மற்றது ராகவய்யாவுக்கு.

போதகரின் சுமைகளைக் கொண்டுபோக வண்டி மாடு கிடைக்கவில்லை. கெஞ்சிக் கேட்டு வாங்கி ரெண்டு குடும்பமாருடன் கிளம்பினார். உபதேசி யாரும் கூடப் போனார். மன்னார்கோட்டையருகில் நூறு பேர் கம்புடன் வந்தார்கள். அவர்களுடன் போதகர் ரெம்ப நேரம் பேசினார்.

''இங்க ஏன் வந்தீங்க.''

''பாம்பு நடமாடுறதாக் கேள்விப்பட்டோம். அத அடிச்சுக் கொல்ல வந்தொம்.''

அவர் நம்பவில்லை.

''கலஞ்சு போயிருங்க. இல்லன்னா சங்கடம் வந்து சேரும். மதுரைக்குப் போனதும் சொல்லீருவென்.''

கூட்டம் போக்குக் காட்டிவிட்டு அவர் போன பின் மறுபடியும் கூடியது.

## 7. கடைசி நம்பிக்கை

திங்கட்கிழமை விடியக்காலமே போலீஸ் சூப்பிரண்டு திருநெல்வேலியி லிருந்து சாத்தூருக்குக் கிளம்பிவிட்டார். அங்கிருந்து சிவகாசி வழியாக ஸ்ரீவில்லிப் புத்தூர் போகணும். ஒரு வழக்கையும் நாடார்களின் தந்திகளையும் விசாரிக்கணும்.

கலெக்டருக்குக் காலையிலேயே மண்டைக் குடைச்சல் ஆரம்பித்துவிட் டது. சாட்சியாபுரம் போதகரின் கடிதமும் ராகவய்யாவின் தந்தியும் கையி லிருந்தன. ரெண்டுமே பயமுறுத்தியன. தந்தியில் நிலைமையைத் தெளிவாகச் சொல்லியிருந்தார் ராகவய்யா:

> பல மாதிரி கூட்டம். இருநூறு பேர் இருக்கும். உள்ளூர் மறவர்கள் மதுரைக் கள்ளர்கள் தலைமையில் ஆயுதங்களுடன் இப்போது கரிசக்குளத்துக்குப் போயிருக்கிறார்கள். துப்பாக்கிச் சூடு நடத்தித் தாக்குதலைத் தடுத்தோம். அவர்கள் இன்னும் தாக்க முயற்சிக்கிறார்கள். போலீசும் ஆயுதங்களும் போத வில்லை. இந்தப் பகுதியிலும் சிவகாசியைச் சுற்றியும் கொள்ளைக்காரர்கள் கூடுவதாகக் கேள்விப்படுகிறேன். ஏற்கெனவே நூறு ஊர்கள் கொள்ளை யடிக்கப்பட்டுவிட்டன. உடனே போலீசை அனுப்பவும். சூப்பிரண்டுக்கு ஏற்கெனவே தந்தி கொடுக்கப்பட்டுள்ளது.

அடடா நிலைமை இவ்வளவுக்கு மோசமாகிவிட்டதே. இனிமேலும் இங்கே உட்கார்ந்திருப்பதில் அர்த்தமில்லை. சூப்பிரண்டைக் கலந்துபேசலா மென்றால் அவரும் போய்விட்டார். எப்படியும் கரிசக்குளத்துக்குப் போய் கலகக் காரர்களை மடக்கிப் பிடித்துவிடணும். கலெக்டர் சாட்சியாபுரம் போதகருக்குக் கடிதம் எழுதினார்:

> தங்கள் கடிதத்தின் நகல் ஸ்ரீவில்லிப்புத்தூர் டெபுடி மாஜிஸ்திரேட்டுக்கு அனுப்பப்பட்டுள்ளது.
>
> சமீபத்தில் போலீஸ் சூப்பிரண்டுடன் சிவகாசி போயிருந்தேன். சனங்களின் கொந்தளிப்புக்கு மூல காரணம் ஒரு கிறிஸ்தவ வாத்தியார்தான் என்பது தெரியவந்தது. மறவர்களுக்கும் நாடார்களுக்கும் இடையிலான தகராறில் ஒரு கிறிஸ்தவர் அக்கறை கொள்ளத் தேவையில்லை. தாங்களும் மற்ற குருமார் களும் செல்வாக்கைப் பயன்படுத்தி கிறிஸ்தவர்கள் எந்தப் பக்கமும் சேராமல் தடுத்தால் சந்தோசப்படுவேன். விருதுபட்டி கிறிஸ்தவர்கள் நாடார்களுடன் இணைந்துள்ளதாக சூப்பிரண்டு சொல்கிறார்.

ரெண்டு தந்தியனுப்பினார். ஒண்ணு ராகவய்யாவுக்கு.

> நாளை காலை வந்துசேருவேன். இன்றிரவு என்னை அழைத்துச்செல்ல சாத்தூர்ச் சாலையில் பத்தாவது மைலுக்குக் குதிரை வண்டி அனுப்பவும்.

மற்றது சூப்பிரண்டுக்கு. மதிய ரயிலில் புறப்பட்டுக் கரிசக்குளம் போவ தாகத் தெரிவித்திருந்தார்.

சூப்பிரண்டு சாத்தூரில் இன்ஸ்பெக்டர் மதார் உசேனைச் சந்தித்துப் பேசினார்.

''ஆறாவது மைல்ல இருக்குது சின்னக்காம்பட்டி. அதுவரைக்கு என்னோட வாங்களேன்.''

அவர்கள் சாத்தூரை விட்டுக் கிளம்பும்போது கலெக்டரின் தந்தி வந்தது. சூப்பிரண்டு சொன்னார்.

''கரிசக்கொளத்துல ஐநூறு பேருக்குக் கூடியிருக்காங்களாம். கலெக்டர் மதிய ரயில்ல வாறாராம். நம்மளும் கரிசக்கொளத்துக்குப் போக வேண்டியதுதான்.''

வழியில் பல நாடார்கள் அவர்களை நிறுத்தினார்கள்.

''விருதுபட்டி செவகாசிச் சாலையில நானூறு பேருக்கு மேல கூடியிருக் காங்க.''

''பேராபட்டியக் கொள்ளையடிக்கப்போறதா ஒரு பொம்பள சொல்லுச்சு.''

சூப்பிரண்டு சாத்தூருக்குத் திரும்பிவிட்டார். உசேனும் அஞ்சாறு போலீசும் ரோந்து போனார்கள். மறுபடியும் கரிசக்குளத்துக்குப் புறப்பட்டார்கள்.

சின்னக்காமன்பட்டியில் யாரும் தட்டுப்படவில்லை. சாலையில் வழி மறித்ததாகத் தகவலில்லை. பேராபட்டியும் அமைதியாகவே இருந்தது. சனங்கள் வழக்கம்போல் வேலை செய்துகொண்டிருந்தார்கள். நாட்டாமை சொன்னார்.

''ஏராளமான ஆளுக இங்க வாறதாக் கேள்விப்பட்டென்.''

அவர்கள் சிவகாசி போய்ச் சேரும்போது ராத்திரி ஏழு மணிக்கு மேலாகி விட்டது. அங்கே கலெக்டர் இருந்தார். அவருடன் சாத்தூர் சப்மாஜிஸ்திரேட் சீனிவாசய்யரும் விருதுபட்டி இன்ஸ்பெக்டர் பார்த்தசாரதி அய்யங்காரும் இருந்தார்கள். சீனிவாசய்யர் வரத ராவுக்குப் பதிலாகப் புதுசாக வந்தவர். வந்து ரெண்டு மாசங்கூட ஆகவில்லை. முன்னனுபவம் கிடையாது. உசேனிடம் சூப்பிரண்டு சொன்னார்.

''நீங்க சாத்தூருக்குப் போகலாமே.''

உசேன் உடனே கிளம்பவில்லை. கொஞ்ச நேரம் கழித்து விருதுபட்டி இன்ஸ்பெக்டர் வந்து சொன்னார்.

''நாளைக்கு ஏதோ நடக்கப்போறதாத் தெரியறது. அதனால நீங்க இங்கயே இருக்கணும்னு சூப்பிரண்டு சொல்றார்.''

உசேன் அங்கேயே தங்கிவிட்டார். ஆக ரெண்டு இன்ஸ்பெக்டர் ஒரு சப்மாஜிஸ்திரேட் என மூணு அதிகாரிகள் இருந்தார்கள்.

சிவகாசி சின்னண நாடார் கடைசியாக கலெக்டர் சூப்பிரண்டு ராகவய்யா மூணு பேருக்கும் தந்தி கொடுத்திருந்தார்:

> மனுசருக்கும் சொத்துக்கும் பாதுகாப்பில்லை. எங்கும் கொள்ளை நடக்கிறது. சிவகாசியைக் கொள்ளையடிக்க செவ்வாயன்று நாள் குறித்தாயிற்று. நாங்கள்

> எவ்வளவோ அழுது முறையிட்டும் அதிகாரிகள் நம்பத் தயாராக இல்லை. நீங்கள் சில நாள் இங்கே தங்கியிருந்தால் உண்மை தெரியும். வெள்ளையத் தேவனையும் வெண்டர் ஆறுமுகம் பிள்ளையையும் கைதுசெய்துவிட்டால் கொள்ளை நடக்காது.

பெரிய அதிகாரிகளைக் கண்டதும் நாடார்களுக்குத் தெம்பு. ஒவ்வொரு வரும் கலெக்டரிடம் பேசத் துடித்தார்கள். நாளை நடக்கவிருக்கும் கொள்ளையை எப்படியாவது தடுத்தாகணுமென்ற ஆத்திரம். சீனிவாசய்யரும் பார்த்தசாரதி அய்யங்காரும் கலெக்டரிடம் மெதுவாகச் சொன்னார்கள்.

''நாளைக்குக் கொள்ள நடக்கும்போலத் தெரியறது. சனங்க பேசிக்கறா.''

''எல்லாருக்கும் அதே பயம்.''

கலெக்டர் சனங்களுக்குத் தைரியம் சொன்னார்.

''நீங்க பயப்படுறதுக்கு ஒண்ணுமில்ல. போதுமான போலீஸ் இருக்கு. அவங்க கடமைய ஒழுங்காச் செஞ்சா ஆபத்தில்ல.''

நாடார்கள் சொல்வதை சீனிவாசய்யரும் பார்த்தசாரதி அய்யங்காரும் கேட்டுக்கேட்டு கலெக்டருக்கு விளக்கினார்கள்.

''கலெக்டரோ சூப்பிரண்டோ இங்க தங்கினா நல்லதுன்னு நெனைக்கறா.''

''ரெண்டு பேருமே தங்கினா இன்னும் நல்லதுங்கறா.''

கலெக்டர் புரிந்துகொண்டார். ஆனாலும் தங்கும் எண்ணமில்லை. பிர யாணக் களைப்பு. போய் ஓய்வெடுக்கணும்.

ஊரைச் சுற்றிப்பார்க்கவில்லை. குறிப்பாக யாரையும் விசாரிக்கவில்லை. தந்தி கொடுத்த சின்னண நாடாரை மட்டும் சூப்பிரண்டு விசாரித்தார்.

''நாளைக்கு சிவகாசியக் கொள்ளையடிக்கப்போறது ஒனக்கெப்படித் தெரியும்.''

நாடார் பயத்தில் தடுமாறினார்.

''கேள்விப்பட்டதுதான்.''

சூப்பிரண்டு தந்தியை நம்பவில்லை. கலெக்டர் அவரைப் பார்த்தார்.

''கரிசக்கொளத்துக்குக் கெளம்புறனே.''

''நானும் கூட வாறென்.''

இருவரும் நடுராத்திரியில் சிவகாசியைவிட்டுப் புறப்பட்டார்கள். எல் லாருக்கும் ஏமாற்றம். புலம்பினார்கள்.

''இவ்வளவு சொல்லியும் நம்பாமப் போறாகளே.''

''ஆர நொந்துக்கிறது.''

''இப்படி விதியேன்னு வுட்டுட்டுப் போனா நம்ம கதி என்னாகுமோ.''

''சோதனைய நெனச்சா வேதனையாருக்கு.''

''தெய்வந்தான் காப்பாத்தணும்.''

சாட்சியாபுரம் போதகர் தனக்குக் கிடைத்த தகவல்களைச் சாயங்காலமே சூப்பிரண்டுக்குக் கொடுத்தனுப்பியிருந்தார். நம்பிக்கையான தகவல்கள். அதி காரிகளிடமிருந்தோ வேதக்காரர்களிடமிருந்தோ கிடைத்ததல்ல. வேறு வழியில்

வந்தது. அது சிவகாசிக்கு வந்து சேரத் தாமதமாகிவிட்டது. அதுக்குள் அவரும் கலெக்டரும் கிளம்பிப் போய்விட்டார்கள். கொண்டுபோனவர் திரும்பி வந்து விட்டார். அடடா அது கைக்குக் கிடைத்திருந்தால் கலெக்டரே சிவகாசியில் தங்கியிருப்பார். இல்லை சூப்பிரண்டையாவது தங்கவைத்திருப்பார். நல்ல சந்தர்ப்பம் நழுவிவிட்டது.

கடைசி நம்பிக்கையும் கழன்றுவிட்ட கலக்கம் நாடார்களுக்கு. செம்புக்குட்டி நாடார் வெறுத்துப்போனார்.

''ஆயுதங்கள நம்பித்தான் கரையேறணும்.''

மற்றவர்களும் தீர்மானமாக இருந்தார்கள்.

''வேற வழியே இல்ல.''

''அதிகாரிகள நம்பி மோசம்போனதெல்லாம் போதும்.''

''அவன நம்புனதே தப்பு.''

''அதச் சொல்லு.''

''விடிஞ்சதும் வெள்ளையத் தேவன் வந்து நிப்பான். அவனுக்கு என்ன சொல்லப்போறொம்.''

''மேக்கருந்து ரெம்பப் பேரு வருவாங்க போலருக்கு. ஈஞ்சாரு நடுவப்பட்டி யில எக்கச்சக்கமான கூட்டமாம்.''

''வடக்க வடமலாவரத்து வழியா ஒரு கூட்டம் வருதாம்.''

''கெழக்கருந்தும் தெக்கருந்தும் வாறாங்களாம்.''

''நாலு பக்கமிருந்தும் வந்து நம்மள வளைக்கத் திட்டம்.''

''குண்டிக்குள்ள வெள்ளம் வந்த பெறகு கூப்பாடு போட்டு ஆகப்போற தென்ன. அவன எப்படி எதுத்து நிக்கப்போறொம். அதுக்கு வழியப் பாருங்க.''

''இதுக்குள்ள கௌம்பி வந்துக்கிட்ருப்பாங்க. நம்ம சும்மாருக்கப்புடாது.''

அவசரமாக ஏற்பாடுகள் நடந்தன. கிழக்கிலிருந்து வருகிறவர்கள் சாத்தூர் சாலை வழியாகத்தான் நுழையணும். தெற்கிலிருந்து வரும் கூட்டம் அதே சாலையில் கொழுவணும் இல்லை பெரியகுளம் கம்மாக் கரையில் நடந்து ஊருக்கு மேல்புறம் வரணும். மேற்கிலுள்ள கூட்டத்துக்கு ஸ்ரீவில்லிப்புத்தூர் சாலைதான் தோது. வடக்கிலிருந்து வருகிறவர்களுக்குச் சிரமமிருக்காது. சிறுக் குளம் கரையைத் தாண்டினால் துலுக்கக் குடிக்குள் நுழைந்துவிடலாம்.

ஊருக்குள் நுழையும் அத்தனை சாலைகளிலும் மரங்களை வெட்டி மறித் தார்கள். அங்கங்கே தடுப்பு அமைத்தார்கள். கலகக்காரர்கள் சிதறாமல் சேர்ந்து நுழைகிற மாதிரி குறுகலாகப் பாதை விட்டுவைத்தார்கள். ஏற்கெனவே காலியாக இருந்த ஒழுகறைப் பெட்டிகளைக் கண்ணில் படும்படியாக வைத்தார்கள். சிலவற்றைச் சந்தியில் போட்டார்கள்.

ஒடுக்கமான தெருக்களில் வீட்டுக்கு வீடு தவ்வத் தோதாகப் பலகைக் கம்புகளைக் கட்டி மரப்பாலம் அமைத்தார்கள். வடக்கு ரத வீதியின் வட சிறகில் தென்வடலாகப் பிரியும் அரிசிக்குளம் தெரு ரெம்ப ஒடுக்கமானது. அங்கே நாடார் வீடுகள் அதிகம். தெற்கு ரத வீதிக்குத் தென்புறம் உள்ள தெருக்களும் அப்படித்தான். கார வீடுகள் ரெம்ப.

கார வீட்டு மச்சுக்களில் கற்களைக் குமித்தார்கள். கல்லடுப்புக்களில் எண்ணெய்க் கொப்பரைகள் தயாராக உட்கார்ந்திருந்தன. மேலிருந்துகொண்டு கற்களைக் கலகக்காரர்கள்மேல் தூக்கிப் போடுவது. கொதிக்கும் எண்ணெய்யை ஊற்றுவது. இதுதான் திட்டம்.

ஊருக்கு வெளிப்புறம் குடியிருக்கும் ஏழை எளிய சனங்களை மையப் பகுதிகளிலுள்ள கார வீடுகளில் தங்கவைத்தார்கள். பெண்டு பிள்ளைகளைத் தெற்குத் தெருக்களுக்குக் கொண்டுவந்தார்கள். தெற்கு ரத வீதியில் பெரிய அரண் அமைத்தார்கள். அதைத் தாண்டித்தான் தெற்குத் தெருக்களுக்குள் நுழைய முடியும். அரணோரம் பெண்கள் சந்தடியில்லாமல் மிளகாய்ப் பொடி இடித்தார்கள். அதைக் கலகக்காரர்களின் கண்ணில் தூவிவிட்டால் தட்டுத்தடுமாறுவார்கள். அவர்களை எளிதில் குறிவைக்கலாம்.

ஆயுதமில்லாத பெண்ணில்லை. ஆண்களுக்குத் தைரியமூட்டினார்கள்.

''ஒங்களத் தாண்டி எங்ககிட்ட வந்தா நாங்க பாத்துக்கிறொம்.''

''ஒருவேள நீங்க சண்டையில தோத்துட்டா நாங்க உசிரு வச்சிருந்து எதுக்கு.''

''தீ மூட்டி வெந்து நீந்துருவொம்.''

கிட்டத்திலுள்ள சுத்துப்பட்டிக் குடும்பங்கள் காலையிலிருந்தே சிவகாசிக்கு வர ஆரம்பித்திருந்தன. ஏற்கெனவே ஊர்களுக்குத் தகவல் போயிருந்தது. கலகக்காரர்களின் கண்ணுக்குத் தப்பி ரெம்பக் கஷ்டப்பட்டு வந்துசேர்ந்தார்கள்.

## 8. ஆயுத முளைப்பாரி

தங்கையாவுக்குத் திப்பனம்பட்டியை விட்டுப் போக மனசே இல்லை. தெய்வானையிடம் சொல்லிப் பார்த்தான்.

''இங்கயே இரிந்துக்கிடுவமே தேவான.''

அவள் கேட்கவில்லை. வற்புறுத்தினாள்.

''இங்கரிக்கிதது நல்லதாத் தெரியல. இத்தன நாளா நம்மள வுட்டுவச்சதே பெரிசு. நம்மளப் பத்திக் கவலையில்ல. புள்ளீகளக் காப்பாத்தியாவணும். சாதி சனத்தோட போயிச் சேந்துடுவொம். அவியளுக்கானது நமக்கு.''

அவன் பெரிசுகளைக் கேட்டான்.

''என்ன சொல்லுதிய. போயிடுவமா.''

ஆத்தியப்ப நாடார் சொல்லிவிட்டார்.

''நாங்க எங்கருந்தாலும் ஒண்ணுதான். அவுக கையாலதான் உசிரு போகணும்னு எழுதியிருந்தா அத ஆராலதான் தடுக்க முடியும். எங்களப் பத்திக் கவலப்படாம நீங்க போங்க.''

ஊரை விட்டுக் கிளம்புமுன் சோலைத் தேவரைப் பார்க்கணும் போலிருந்தது அவனுக்கு. ஆள்மூலம் சொல்லிவிட்டிருந்தான். அவரும் சொன்ன இடத்துக்கு வந்துவிட்டார்.

''காயமெல்லாம் ஆறீடுச்சு போலருக்கு.''

‘‘உள்காயம் ஆறலயேடா.’’

‘‘அதுக்கு நாளாகும்.’’

‘‘பாக்கணும்னு சொன்னயாமே. அப்படியென்ன அவசரம்.’’

‘‘நாளாச்சே. பாத்துப் பேசணும்னு தோணுச்சு. என்னாலதான் வர முடியல.’’

‘‘பாத்து மாசக் கணக்கானது போலப் பேசுறயே. என்ன செய்றயோ ஏது செய்றயோன்னு எனக்கும் வாதிப்புத்தான்.’’

‘‘செவகாசிக்குப் போயாவணும்னு வீட்டுக்காரி அவசரப்படுத்துறா. எனக்குச் சரியாத் தோணல.’’

‘‘ஏன் அப்படிச் சொல்ற.’’

‘‘கொள்ள நடக்கப்போற எடத்துல போயிக் குமியிறது நல்லதா.’’

‘‘இங்க செதறிக் கெடக்கிறதவிட ஒரே எடத்துல பாதுகாப்பா இருக்கிறது நல்லதுதான. செவகாசிக்குப் போற வழியில நாடான் வீடு எதுடான்னு தேடிப் பாக்க ஆரம்பிச்சிட்டா சங்கடமாச்சே.’’

‘‘வீட்ல என்ன பொதையலாரிக்கு. ஓலையும் நாருந்தான் கெடக்கு.’’

‘‘ஓலையக் கொளுத்துவான். ஓல வீட்டக் கொளுத்துவான். கெடச்சதச் சுருட்டுவான். கொஞ்ச நேரம் குளிருகாயிவான். அடுத்தவன் உசிரப் பத்தி அவனுக்கென்ன கவல. நாடானாப் பெறந்துட்டயே. இப்ப அதுதான நடந்துக் கிட்டுவருது.’’

‘‘நாளைக்குக் கொள்ள நடக்குமா.’’

‘‘அதுல சந்தேகமென்ன. கொள்ளையடிக்காமக் கூட்டத்துக்கு வெறியடங் காது. அதுதான் நாளுங்கெழமையும் குறிச்சு நடுச்சந்தியில ஒட்டீட்டானே.’’

‘‘தமுக்கடிக்காததுதான் பாக்கி.’’

‘‘கரிசக்கொளத்துல நடந்த கத வேற காட்டத்தக் கௌப்பீருச்சு. அதுக்குப் பழிதீத்தாகணும்.’’

‘‘கண்ணுக்கு முன்னால பொம்பளைகள அம்மணமாக்கிதத ஆராலதான் சகிச்சுக்கிட முடியும்.’’

‘‘என்னக் கேட்டா இனியும் பத்துப் பேரக் கொன்னுருக்கணும்.’’

அவன் அவரை வருத்தமாகப் பார்த்தான்.

‘‘நீங்க பத்தரமா இரிக்கணும்.’’

‘‘நான் என்ன அவங்களோட சேந்து ஆட்டம்போடவா போறென். அங்க எட்டிப் பாக்க மாட்டென். சீமையெல்லாம் சேந்து வந்து ஒரு ஊரக் கொள்ளை யடிக்கப் போறான். அதத் தடுக்க ஆருக்கும் துப்பில்ல. அத நெனச்சாத்தான் வேதனையாருக்கு. ராத்திரி படுத்தா ஒறக்கம் உண்டுமா. அண்ணைக்குப் பட்ட அடி ஒதையில செத்துருந்தா நடக்கிற அநியாயத்தெல்லாம் பாக்க வேண்டிய தில்லையே.’’

தேவருக்கு அதுக்கு மேல் வார்த்தை கிடைக்கவில்லை. பாரத்தைப் பெரு மூச்சால் குறைத்தார்.

‘‘அப்படிச் சொல்லாதங்க.’’

‘‘அது கெடக்கட்டும். பொண்டாட்டி புள்ளீகளக் கூட்டீட்டுப் பத்தரமாப் போயிச் சேரு. போன எடத்துல முண்டீட்டு அலையாத. சண்ட நடந்தா நடந்

துட்டுப்போகட்டும். நமக்கும் அதுக்கும் சம்பந்தமில்ல. தனியாப் போயிருவயா தொணைக்கு வரட்டுமா.''

''போயிடுவென்.''

''நாளைக்கு நெலவரத்த அனுசரிச்சு மறுநாளு ஊருக்கு ஓடியாந்துரு.''

''அப்படித்தான் நெனச்சிரிக்கென்.''

''அப்ப வரட்டுமா.''

''எச்சரிக்கையாப் போங்க.''

அவர் சிரித்துக்கொண்டே எழுந்து நடந்தார்.

''நான் சாக மாட்டண்டா.''

அவன் வீட்டுக்குப் போய் மறுபடியும் பெரிசுகளைக் கூப்பிட்டுப்பார்த்தான். அவர்கள் வருவதாக இல்லை. தெய்வானையுடன் புறப்பட்டான். குழந்தைகள் மிரண்டுபோய் அவர்களுக்குப் பின்னால் ஓடினார்கள். அவன் கைகாவலுக்குப் பாளையரிவாள் வைத்திருந்தான். தெய்வானை முந்தியில் முடிந்த சூரிக்கத்தியை இடுப்பில் சொருகியிருந்தாள்.

பொழுதடைய சிவகாசிக்குப் போய்விட்டார்கள். பெரும்பாலான பெண்களும் குழந்தைகளும் தெற்கு ரத வீதிப் பக்கம் கார வீடுகளில் தங்கியிருந்தார்கள். ஜவுளிக்கடைத் தெருவில் வேதக் கோயிலும் நிரம்பிவிட்டது. உள்ளூர் போதகர் வீட்டிலும் இடமில்லை. மிஷன் ஆஸ்பத்திரியிலும் கூட்டம். அதுக்குத் தெற்கில் குருசாமி நாடார் கிட்டங்கியில்தான் இடம் கிடைத்தது. அங்கே ஏற்கெனவே ஆட்கள் இருந்தார்கள். பாதுகாப்பான காரக் கட்டிடம்.

பிள்ளைகளை அணைத்துப் பிடித்திருக்கும் தெய்வானையை தங்கையா வருத்தத்துடன் பார்த்தான்.

''மதியம் சாப்பிட்டியளா.''

''இப்ப அதுதானா முக்கியம்.''

''இரிந்துக்கிடுவியளா.''

''இரிந்துதான ஆவணும்.''

சனங்கள் வந்து கிட்டங்கிக்குள் அடைந்த வண்ணமிருந்தார்கள்.

எளவட்டங்களும் பையன்களும் உறங்கவில்லை. பெரியவர்களுக்கு எல்லா உதவியும் செய்தார்கள். அவர்களிடமும் ஆயுதம் இருந்தது. செம்புக்குட்டி நாடார் சுதாரிப்பாகச் சொன்னார்.

''இண்ணைக்குத்தான் பத்ரகாளிக்குப் பொங்கலு நடக்கணும்னு இருந்துருக்கு. நாளைக்கு மேளக் கச்சேரி மும்மரமா நடக்கும்.''

அத்தனை ஆயுதங்களையும் முளைப்பாரிபோல் கோயிலுக்குக் கூட்டமாகச் சுமந்து போனார்கள். வீச்சரிவாள் கோழிவாலரிவாள் பாளையரிவாள் கொடுக்கரிவாள் பட்டாக்கத்தி சூரிக்கத்தி வங்கி வேல்கம்பு தரம் தடிக்கம்பு கண்டகோடாலி எல்லாம் இருந்தன. சிலர் கவண் வைத்திருந்தார்கள். ரெம்ப பேர் கையில் துப்பாக்கி ரிவால்வர் இருந்தது.

''நாளைக்கு எத்தன கெடாவெட்டு நடக்கப்போகுதோ. எத்தன கொக்கும் குருவியும் செத்து வுழுகப்போகுதோ.''

ஆயுதங்களைப் போர்த் தெய்வமான கருணனுக்குப் படைத்து வணங்கினார்கள்.

''தெய்வமே இந்த ஆயுதங்களோட எங்க உசிரவும் ஒங்கிட்ட ஒப்படைக்கொம். நீதான் இந்த ஊரக் காப்பத்திக்குடுக்கணும்.''

''பரம்பரையா நாங்க குடியிருக்கிற ஊரு. பாவிக கையால அழியப்புடாது. எங்களப் பரிதவிக்க வுட்றாத தாயி.''

நிறைய பேர் கண்களில் நீர் கோர்த்தது. ஆயுதங்களைக் கண்ணில் ஒற்றி எடுத்துக்கொண்டு இருப்பிடம் திரும்பினார்கள்.

ரெண்டு இன்ஸ்பெக்டர்களும் சப்மாஜிஸ்திரேட்டும் ஊரில் தங்கியிருக்கும் போது இத்தனை ஏற்பாடுகளும் சத்தமில்லாமல் நடந்தன. போலீஸ் ரோந்து வேறு இருந்தது. ரோந்து வந்தார்களா கச்சேரியில் முடக்கிப் படுத்திருந்தார்களா இல்லை நடப்பதையெல்லாம் மூச்சுக்காட்டாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்களா என்பது அவர்களுக்குத்தான் வெளிச்சம்.

உறங்காத ஊரை தலைக்கோழி கூவி எழுப்பியது. விடிந்தால் கொள்ளை. அது நிச்சயம். அப்படித்தான் தகவல். ஒருவேளை வார்த்தையை மீறி ராத்திரியே வந்துவிட்டால் என்ன செய்வது. கொட்டக்கொட்ட முழித்து ஊரைச் சுற்றிக் காவலிருந்தார்கள்.

அப்போது கலெக்டரும் சூப்பிரண்டும் ஸ்ரீவில்லிப்புத்தூரில் இருந்தார்கள். சோறு தண்ணீரில்லாமல் சோர்ந்துபோயிருந்த அவர்களைச் சுமந்துகொண்டு மாட்டு வண்டி நரையிருட்டில் கரிசக்குளம் தேடி விரைந்தது.

## 9. முற்றுகை

விடிந்துவிட்டது. முகங்கள் துல்லியப்பட்டன. இருள் தெளித்த ஈரம் இன்னும் உலரவில்லை.

கார வீட்டு மச்சுக்களில் பையன்கள் முளைத்திருந்தார்கள். கலகக்காரர்கள் அவர்கள் கண்ணுக்குத் தப்ப முடியாது. சாலைகளில் சாய்ந்து கிடந்த மரங்களை வெறித்துவிட்டு ஒருவன் சொன்னான்.

''ஊரே வெறிச்சின்னு போச்சு. மரங்களப் பாத்தாப் பாவமாருக்கு.''

''மரத்த வெட்னாத் தளுத்துரும். மனுசர வெட்னாத் தளுக்க முடியுமா.''

அதெப்படி அதெப்படி என்று சிறகடித்த புறாக்கள் மச்சுச் சுவரில் இறங்கி மறுக்கி ஓடி முணுமுணுப்பில் சிக்கெடுத்தன. லாயத்தில் உறங்கி முழித்திருந்த வண்டிக் குதிரையின் கனைப்பு கேட்டது. ஏகதேசம் சனங்கள் தெருக்களில் ஓட்டமும் நடையுமாக நடமாடிவிட்டு வீட்டுக்குள் அடைந்துகொண்டார்கள்.

சிவன் சன்னதி வெறிச்சோடிக் கிடந்தது. கொஞ்ச நாளாகவே கடைகள் திறக்கவில்லை. விசுவநாதரும் விசாலாட்சியும் அந்தக் கோலத்தைப் பார்க்க முடியாதபடி கோயில் குடவரை வாசல் மூடியிருந்தது. நடை திறந்து நாளாயிற்று.

அலங்காரம் குறையாத பெருந்தேரின் உச்சியில் ஒருவன் பார்வை பறவையாட நிலைகொள்ளாமல் நின்றிருந்தான். தூரத்து நடமாட்டத்தைத் தெளிவாகச்

சொல்லும் பூதக்கண்ணாடி அவன் கையிலிருந்தது. அவன் கொடுக்கும் தகவலைக் கொண்டுபோகத் தயாராகத் தேரைச் சுற்றிச் சிறுவர்கள் காத்திருந்தார்கள்.

தேர் பத்திரகாளி கோயில் திருவிழாவுக்காக அலங்கரிக்கப்பட்டது. கடைசி வரை திருவிழா கொண்டாடவேயில்லை. சச்சரவு வருமென்று நிறுத்திவிட்டார் கள். அந்தக் காளியே தேர் வடிவில் காட்சியளிப்பதுபோல் அப்படியொரு அழகு.

கலகத்தை எதிர்பார்த்து இரு இன்ஸ்பெக்டர்களும் சப்மாஜிஸ்திரேட்டும் நேரமிருக்கவே கச்சேரிக்கு வந்துவிட்டார்கள். வாசலில் ஒரு பாரா மட்டுமே கடமைக்கு நின்றிருந்தார். கச்சேரி காலி. ரெம்ப நேரங் கழித்து ஏனோதானோ வென்று நாலு பேர் வந்தார்கள். பார்த்தசாரதி அய்யங்கார் கடிந்துகொண்டார்.

‘‘இதுதான் டூட்டிக்கு வர்ற லட்சணமோ. கொஞ்சங்கூடப் பொறுப்பில்ல. நெலம தெரியாம நடந்துக்கறேளே. ஒங்களுக்கே நன்னாருக்கா. போங்கோ. எங்கயாச்சும் கூட்டம் கூடறதான்னு பாத்துட்டு வந்து சொல்லுங்கோ.’’

வசவுக்குத் தப்பி அவர்கள் நழுவிவிட்டார்கள். கொஞ்ச நேரத்தில் மேலும் சிலர் வந்துசேர்ந்தார்கள். கச்சேரி அதிகாரி பூவலிங்கம் பிள்ளையை ஆறு மணிக்குப் பார்த்தது. இன்ஸ்பெக்டர் தங்கியிருந்த வீட்டுக்கு வந்து தலையைக் காட்டினார். அப்போது மனுசன் நன்றாகத்தான் இருந்தார். அதுக்குப் பிறகு ஆளைக் காண வில்லை.

மூணு அதிகாரிகளும் சில போலீஸ்காரர்களுடன் ரோந்து போனார்கள். அப்போது மணி ஏழு இருக்கும்.

அந்தச் சமயம் சாட்சியாபுரத்தில் சாமியார் பங்களாவுக்குள் வெள்ளைக்கார போதகர் ஸ்காட் பிரைஸ் தவித்துக்கொண்டிருந்தார். கலகக்காரர்கள் எப்போது வருவார்களோ. எந்த வழியாக வருவார்களோ. ஒருவேளை சாட்சியாபுரம் வழி யாக வந்தால் என்ன நடக்குமோ. பதட்டமாக இருந்தது. அப்போது பவுலய்யரும் அங்கேதான் இருந்தார்.

முதலாவது கூட்டம் அந்த ஊரை நோக்கி வருவதாகத் துப்புக் கிடைத்தது. கலகக்காரர்கள் அடிக்கடி கூடிப் பேசும் மானசேரி ஈஞ்சார் நடுவப்பட்டியிலிருந்து சாத்தூர் சாலையைப் பிடித்து சிவகாசிக்கு வரணுமென்றால் சுற்று. சாட்சியா புரத்தைத் தொட்டுப் போவதுதான் நேர்வழி.

வேதக் கோயிலுக்கும் சாத்தூர் சாலைக்குமிடையே ஒரு சத்திரம். அடுத்து பஞ்சாயத்து யூனியன் ஆபீஸ். அதைச் சுற்றி ஏகட்டுக்குப் பெரிய மைதானம். சாட்சியாபுரத்திலிருந்து சிவகாசி ஒரு மைலுக்கு மேலிருக்கும். இடையில் நிலங்கள் விரிந்து கிடந்தன. சில பகுதிகளில் வெள்ளாமைகள் தெரிந்தன. ஒரு ஊரிலிருந்து மற்றது தெளிவாகத் தெரியும்.

சாட்சியாபுரம் முழுக்க வேதக்கார ஊராயிற்றே. சனங்களுக்குக் கலகத்தைப் பற்றிப் பயமில்லை. வேதக்காரர்களை ஒண்ணும் செய்ய மாட்டார்கள் என்று தெரியும். இருந்தாலும் ஒரு வெறியில் என்னமும் நடக்கலாம். ஆண்டவரை செபித்துவிட்டு நம்பிக்கையுடன் இருந்தார்கள். அந்த நம்பிக்கையில் கூடிக்கூடிப் பேசிக்கொண்டார்கள்.

கலகக்காரர்கள் எல்லாப் பக்கமிருந்தும் ஏராளமாக வர ஆரம்பித்தார்கள். நூற்றுக் கணக்கில் கூட்டங்கூட்டமாக. எல்லாருடைய கையிலும் வேல்கம்பு கத்தி என்று ஆயுதங்கள். பேச்சுச் சத்தமே இல்லை. பங்களாவுக்குள்ளிருந்த

போதகர் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தார். கூட்டம் குறைந்த பாடில்லை. பட்டாளம்பட்டாளமாகப் போய்க்கொண்டிருந்தது. சிவகாசியின் கதி என்னாகுமோ. சிலுவையை இறுகப் பற்றிக்கொண்டார்.

ஒரு கூட்டம் சாட்சியாபுரத்தில் நின்றது. வேடிக்கை பார்க்கும் சனங்களிடம் ஒருவர் அரிவாளைக் காட்டி மிரட்டினார்.

''ஆராச்சும் எங்கள எதுத்தா அம்புட்டுத்தான். அத்தன பேரவும் கொன்னுட்டுச் சொத்துக்களக் கொள்ளையடிச்சிட்டுப் போயிருவொம். வாயப் பொத்தீட்டுப் போங்க.''

சனங்கள் மூச்சுக்காட்டாமல் கலைந்து போனார்கள். பள்ளிக்கூடத்திலும் வேதக் கோயிலிலும் தஞ்சமடைந்திருப்பவர்களை நினைத்து போதகர் பெருமூச்சு விட்டார்.

இடையிடையே தட்டி கட்டிய மாட்டு வண்டிகள் வரிசையாக வந்தன. வண்டிக்கு ரெண்டு பேர் வேல்கம்பு ஏந்தியபடி இருபுறமும் நடந்து வந்தார்கள். தூரத்தில் சுவர்களில் ஒண்டியபடி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்த சனங்கள் குசுகுசுத்தார்கள்.

''இத்தன வண்டியும் எதுக்காம்.''

''கொள்ளையடிச்சத அள்ளீட்டுவரத்தான்.''

''அப்படியா அங்க குமிச்சுக் கெடக்குது.''

''ஆரு கண்டது. அந்த வெறியிலதான் போறாக.''

கூட்டங்கள் யூனியன் ஆபீசுக்கு முன்னால் கலந்து பெருக ஆரம்பித்தன. மிச்ச சொச்சமும் வந்துசேரும்வரை காத்திருந்தார்கள்.

இதெல்லாம் கலெக்டருக்கும் சூப்பிரண்டுக்கும் தெரியாது. அப்போது கரிசக்குளத்துக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். போய்ச் சேர எட்டு மணியாகி விட்டது. ஏமாற்றந்தான் மிஞ்சியது. அவர்களுக்கு முந்தி வந்து காத்திருந்த ராகவய்யா சொன்னார்.

''எல்லாரும் ஏற்கெனவே போயிட்டா.''

கலெக்டருக்கென்றால் எரிச்சல்.

''ஞாயிற்றுக்கிழம வந்தவங்க இங்கயேவா குடியிருப்பாங்க. துப்பாக்கிச் சூடு நடத்துனீங்களே ஒருவனக்கூடக் கைதுசெய்ய முடியலயா. நீங்களும் இன்ஸ்பெக்டரும் என்னதான் செஞ்சீங்க.''

ராகவய்யா மழுப்பினார்.

''எங்களையே தாக்க வந்தா.''

''பயந்துட்டீங்களாக்கும். ஏதும் நடந்தா தந்தி கொடுத்துற வேண்டியது. அப்படித்தான. எப்படியோ போங்க.''

ராகவய்யாவை விட்டுவிட்டு கலெக்டரும் சூப்பிரண்டும் ஒன்பது மணி வாக்கில் திரும்பவும் ஸ்ரீவில்லிப்புத்தூருக்குப் புறப்பட்டார்கள்.

சிவகாசியில் மறவர் தெருவோரம் நாய்க்கமார் சத்திரத்திலிருந்து புகை கிளம்பிய வண்ணமிருந்தது. சமையல் மும்முரமாக நடந்தது. சத்திரம் பிதுங்கும் கூட்டம். நாலஞ்சு பேர் ஓடிஓடி வேலை ஏவிக்கொண்டிருந்தார்கள்.

''சமையலாச்சா.''

''வெருசனா வேலைய முடிங்க. நேரமாச்சில்ல.''

''சாவாசமாப் பொங்கித் திங்கிறதுக்கா வந்தோம்.''

''எல்லாருக்கும் பசியமத்தணுமே.''

''அப்பத்தான் தெம்பாப் போகலாம்.''

அதிகாரிகள் ஊரின் கிழக்குப் பக்கம் பார்வையிட்டார்கள். மணி ஒன்பது இருக்கும். ஒரு போலீஸ்காரர் அவசரமாக வந்து பார்த்தசாரதி அய்யங்காரிடம் சொன்னார்.

''எங் குடும்பம் ஆபத்தான நெலமையில இருக்குது சாமி. நான் அவசியம் போயாகணும்.''

அய்யங்காரின் வார்த்தைக்குக் காத்திராமல் போய்விட்டார்.

வழியில் சில நாடார்களைச் சந்தித்தார்கள். ஒருவர் கவலைப்பட்டார்.

''கொள்ளக்காரங்க கொஞ்ச நேரத்துல வந்துருவாங்க.''

சப்மாஜிஸ்திரேட் தைரியமூட்டினார்.

''அப்படி ஏதும் நடக்காது. நடந்தா எங்களால முடிஞ்சதச் செய்வொம்.''

கீழத் தெருவுக்குப் போனார்கள். அப்போது ஒரு ரிசர்வ் போலீஸ்காரர் ஓடி வந்து தகவல் கொடுத்தார்.

''ஊருக்கு மேற்கருந்து ரெண்டாயிரம் பேருக்குக் கூட்டம் தெரண்டு வந்துக் கிட்ருக்கு.''

எல்லாரும் மேற்காக போலீஸ் கச்சேரிக்குப் போய் அங்கிருந்து யூனியன் ஆபீசை நோக்கி நடந்தார்கள்.

யூனியன் ஆபீசுக்கெதிரில் ஸ்ரீவில்லிப்புத்தூர் சாலைப் பக்கம் பாலத்தோரம் காடுகரைகளிலும் காலி மைதானத்திலும் பெரிய கூட்டம் சமுத்திரமாகக் கூடி யிருந்தது. நாலாயிரம் பேருக்கு மேலிருக்கும். நிறைய பேர் துப்பாக்கி வைத்திருந் தார்கள். மற்றவர்கள் கையில் கம்பு வேல்கத்தி தரம் அரிவாள் கவண் இருந்தன. கண்டகோடாலி கயிறு ஏணியும் வைத்திருந்தார்கள். சிலர் தீவட்டி பிடித்திருந் தார்கள்.

அதிகாரிகள் நின்ற இடத்திலிருந்து ரெண்டு பர்லாங் தொலைவில் ஒரு சத்திரம். அதைச் சுற்றி ஒரு கூட்டம் நிற்பது தெரிந்தது.

கொஞ்ச நேரத்தில் பலத்த சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து சத்திரம் இடிந்து சரிந்தது. புகை அதிகமில்லை. வெடிவைத்துத் தகர்த்திருக்கணும்.

சத்திரத்துக்கு மேற்கே சாலையில் நெருப்பு பற்றி எரிந்தது. அடுத்தடுத்து வெவ்வேறு இடங்களில் நெருப்பும் புகையும் சேர்ந்து கிளம்பியது.

அதிகாரிகள் கிட்ட நெருங்கிவிட்டார்கள். சப்மாஜிஸ்திரேட் கூட்டத்தைப் பார்த்துச் சொன்னார்.

''நீங்க கூடியிருக்கறது சட்டப்படி குற்றம். கலஞ்சு போயிடுங்கோ.''

அய்யங்கார் எச்சரித்தார்.

''கலஞ்சு போகலன்னா துப்பாக்கிச்சூடு நடத்த வேண்டியிருக்கும்.''

மதார் உசேனும் சப்மாஜிஸ்திரேட்டும் இதையே சொன்னார்கள். கூட்டத்தி லிருந்து பல குரல் வந்தது.

''ஆயிரம் பேரக் கொல்லுவீகளா.''

''அப்பயும் எத்தனாயிரம் பேரு மிஞ்சுவொம் தெரியுமா.''

''ஒங்களக் கொன்னு போட்டுட்டு ஊரக் கொள்ளையடிப்பொம்.''

''என்ன ஆனாலும் சரி கொள்ளையடிக்காமப் போறதில்ல.''

மாஜிஸ்திரேட் இன்ஸ்பெக்டர்களைப் பார்த்தார். அய்யங்கார் போலீஸ் காரர்களை நோட்டம் விட்டார். இருபது பேர் ரிசர்வ் போலீஸ். கச்சேரியைச் சேர்ந்தவர்கள் எட்டுப் பேர். பிற இடங்களிலிருந்து வந்திருந்த பத்துப் பேரில் மூணு பேர் மட்டுமே ஆஜர். கைவசம் சொற்பமாகவே துப்பாக்கி இருந்தது. மாஜிஸ் திரேட் கேட்டார்.

''இப்ப என்ன செய்யறது.''

மதார் உசேன் உதட்டைப் பிதுக்கினார்.

''இத்தன கூட்டத்தச் சமாளிக்கிறது கஸ்டம். நம்ம சீண்டுனம்னா நசுக்கிப் புழிஞ்சிருவான்.''

அய்யங்கார் யோசனை சொன்னார்

''துப்பாக்கிச்சூடு நடத்திக் கலச்சுப் பாப்பமே.''

''அவனும் துப்பாக்கி வச்சிருக்கறானே. திருப்பிச் சுடுவான்.''

''நம்ம வச்சிருக்கிற துப்பாக்கியப் பறிச்சு நாடாரச் சுடுவான். நம்ம அத்தன பேரவும் கொன்னுருவான்.''

''ஆமாமா நெலம மோசமாயிடும்.''

சில போலீஸ்காரர்கள் கிட்ட வந்து தயக்கத்தில் சொன்னார்கள்.

''பத்து ரவுண்டு சுட்டுத்தான் பாப்பமே.''

''நம்மமேல திருப்பிச் சுடுற அளவுக்குத் தைரியம் வருமா என்ன.''

''கொஞ்சப் பேரு கலஞ்சு ஓடுனாப் போதும். மத்தவங்க பின்னாலயே போயிருவான்.''

உசேன் கேட்டார்.

''அவங்க சொன்னதக் கேட்டுட்டுத்தான இருந்தீக. கொள்ளையடிக்காமப் போறதில்லங்கிற முடிவோட வந்துருக்கிறவன் எதுக்கும் தயாராருப்பான். நம்ம பேச்சக் கேக்கிற மாதிரி தெரியலயே. யோசனையில்லாம எறங்கீட்டு முழிக்கப் புடாது. பெறகு மேலதிகாரிகளுக்குப் பதில்சொல்ல முடியாது.''

போலீஸ்காரர்கள் அமைதியானார்கள். மாஜிஸ்திரேட் சொன்னார்.

''நம்மால சமாளிக்க முடியாது. கலெக்டருக்குத் தந்தி கொடுப்பொம்.''

மாஜிஸ்திரேட் ஸ்ரீவில்லிப்புத்தூருக்குத் தந்தி கொடுத்தார்:

> சிவகாசிக்கு வெளியே தாங்காத கூட்டம் கூடுகிறது. கச்சேரி அதிகாரியும் டிவிஷன் போலீசும் கம்பிநீட்டிவிட்டார்கள். என்னால் முடிந்ததைச் செய்து கொண்டிருக்கிறேன். புறப்பட்டு வரவும். கூட்டம் நாலாயிரம் இருக்கும்.

பத்து மணியாகிவிட்டது. கூட்டத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. எல்லாப் பக்கமிருந்தும் வந்து அவர்களைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு பல திசைகளிலிருந்தும் ஊருக்குள் புகுந்துவிட்டார்கள்.

துப்பாக்கிச் சத்தம் கேட்டது. கூடவே அங்கங்கே நெருப்பு எழும்பியது. மாஜிஸ்திரேட் கலெக்டருக்கு இன்னொரு தந்தியனுப்பினார்:

எண்ணற்ற கூட்டம். போலீஸ் போதவே போதாது. வீடுகள் கொளுத்தப் படுகின்றன. இரு புறமும் துப்பாக்கிச் சூடு நடக்கிறது. ஆட்களுடன் வரவும்.

அதிகாரிகள் முன்னும் பின்னும் நகர முடியாமல் உயிரைக் கையிலேந்திக் கொண்டு பாலத்திலேயே தங்கிவிட்டார்கள். துப்பாக்கிச் சத்தம் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தது. கட்டடங்கள் இடிந்து விழும் சத்தமும் கூக்குரலும் காதைப் பிளந்தது. ஊர் முழுக்க நெருப்பு பரவ ஆரம்பித்தது.

தெற்குப் புறமாக வந்தவர்கள் பெரியகுளம் கரையிலிருந்து சாத்தூர் சாலைக்கு இறங்கித் தபாலாபீஸ் பாதையில் விலகி ஊருக்குள் நுழைந்துவிட்டார்கள். போனதே சரியென்று போஸ்ட் மாஸ்டரைப் பிடித்து ஒரு வீட்டுக்குள் அடைத்துப் போட்டுவிட்டுக் காரியத்தில் இறங்கினார்கள்.

வடக்கிலிருந்து சிறுக்குளத்தோரமாக வந்தவர்கள் மறவர் தெரு துலுக்கக் குடி வழியாகப் புகுந்துவிட்டார்கள். நாய்க்கமார் சத்திரத்தில் சாப்பாடு முடித்துத் தயாராக இருந்தவர்கள் ஊருக்குள் வருவதில் கஷ்டமில்லை.

மேல்புறம் கூடியிருந்தவர்களை போலீசால் தாமரிக்க முடியவில்லை. மீறிக்கொண்டு தாண்டிவிட்டார்கள்.

கலகக்காரர்களைவிட நாடார்கள் ரெம்பக் குறைவு. எதுப்பிலேயே எதிர்த்துத் தாக்குப்பிடித்து விரட்ட முடியாது. ஊருக்குள் வந்த பிறகு தற்காப்பு நடவடிக்கைதான் சரி.

## 10. படுகளம்

தேர் மீதிருந்த பூதக்கண்ணாடிக்காரன் கூட்டத்தின் நடமாட்டத்தை அப்பப்பத் தெரிவித்துக்கொண்டிருந்தான்.

''நெல்லுக்கட முக்குக்கு வந்துட்டாங்க. அரிசிக்கொளம் தெருவுக்குள்ள ஒரு கூட்டம் போகுது.''

சேதிகளைச் சுமந்துகொண்டு சிறுவர்கள் தலைதெறிக்க ஓடினார்கள். பூதக்கண்ணாடிக்காரன் கூவினான்.

''தேங்காக்கட முக்குலதான் ரெம்பப் பேரு நிக்கிறாங்க.''

அந்தச் சேதியும் உடனே போய்ச் சேர்ந்தது. மச்சுக்களில் இருந்த பையன்களும் ''அந்தா வாறான் இந்தா போறான்'' என்று அடையாளம் காட்டினார்கள். பயமறியாத சிறுவர்களுக்கு அது பெரிய விளையாட்டு.

நாடார்கள் தெருக்களில் நிற்காமல் அங்கங்கே பதுங்கியிருந்தார்கள். நிறைய பேர் மச்சுக்களில் பம்மிக் கிடந்தார்கள். தடுப்புக்கள் கைகொடுத்தன. கலகக்காரர்களால் வேகமாக முன்னேற முடியவில்லை. ஒடுக்கமான தெருக்களில் நுழையவும் கஷ்டப்பட்டார்கள்.

என்ன இது ஆள் நடமாட்டமில்லையே. எதிர்த்து நின்று சண்டையிட யாருமே இல்லையா. ஒருவேளை ராவோடு ராவாக ஊரை விட்டே ஓடிவிட்டார்களோ. இருக்காது.

ஒரு எக்காளம் கேட்டது.

''எலியெல்லாம் பயந்துபோயி ஓடி ஒளிஞ்சிருச்சு. கோமுட்டியடிச்சுக் கொல்லுங்கடா.''

அம்மன் கோயில் பேட்டையில் ஆரம்பித்த சண்டை நெல்லுக்கடை முக்கு அரிசிக்குளம் தெரு தேங்காய்க்கடை முக்கு போதகர் வீட்டுச் சந்தி மிஷன் ஆஸ்பத்திரி போலீஸ் கச்சேரி என்று ஊர் முழுக்கப் பரவியது.

போலீஸ் கச்சேரிக்கு எதிர்ப் புறம் உள்ளூர் வேத போதகர் வீடு. பல பெண் களும் பிள்ளைகளும் அதில் அடைக்கலம் புகுந்திருந்தார்கள். தன்னுயிரையும் பொருட்படுத்தாமல் போதகர் அவர்களைப் பாதுகாப்பதில் கண்ணாக இருந்தார்.

நாடார்கள் மச்சிலிருந்து மிளகாய்ப் பொடியைத் தூவினார்கள். கொதிக்கும் எண்ணெயைக் கொட்டினார்கள். பெண்கள் ஓடிஓடி உதவினார்கள். கலகக் காரர்கள் கண் தெரியாமல் முட்டி மோதி அலறிக்கொண்டு ஓடினார்கள்.

''அத்தன பயகளும் ஒசக்கயில்லடா கெடக்கான்.''

நாடார்கள் வசம் பார்த்துக் காத்திருந்து பெரியபெரிய கற்களைத் தூக்கிப் போட்டார்கள். நிறைய பேருக்கு மண்டை உடைந்து ரத்தக் கோலத்தில் விழுந் தெழுந்து தப்பினார்கள்.

நாடார்களின் துப்பாக்கிகள் நிறைய தோட்டாக்களைத் துப்பின. சில உயிர்கள்தான் சிக்கின. கண்களுக்கும் கைகளுக்கும் குறிவைத்துப் பழக்கமில்லை. பதட்டம் வேறு.

எதிரிகளின் நடமாட்டத்துக்கேற்ப மரப்பாலம் வழியாகத் தெருக்களைத் தாண்டி ஓடித் தாக்கினார்கள். சந்துகளில் விரட்டித் திணறடித்தார்கள்.

அம்மன் கோயில் பேட்டையில் கூட்டம் ஆட்டம்போட்டதைப் பார்த்த அய்ய நாடார் பயந்துபோய் வீட்டு மச்சில் ஏறிப் பதுங்கிக்கொண்டார். எட்டிப் பார்த்தபோது ஒரு குரல் கேட்டது.

''அந்தா மச்சில ஒருத்தன் இருக்கான் பாரு. சுட்டுத் தள்ளுடா.''

உடனே ஒரு தோட்டா பாய்ந்து வந்தது. நல்ல காலத்துக்கு கைப்பிடிச் சுவர் அவரைக் காப்பாற்றிவிட்டது.

தெருவில் நடந்த சண்டையில் தோட்டா துளைத்து அருணகிரி நாடார் சாய்ந்துவிட்டார்.

நெல்லுக்கடை முக்கு கீழ ரத வீதியும் வடக்கு ரத வீதியும் சந்திக்கும் இடம் ரெண்டும் கலகக்காரர்கள் கூடுவதற்குத் தோதாக இருந்தன. அவர்களை வீட்டு மேலிருந்துகொண்டு தாக்கிக் கலைக்க முடியவில்லை. நேரடியாக மோதினால் தான் சரிப்படும்.

முப்பது பேருக்கு மேல் துப்பாக்கி அரிவாளுடன் தேரருகில் மறைவாக நின்று எதிர்பார்த்தார்கள். ஒரு கூட்டம் வடக்கிலிருந்து நெல்லுக்கடை முக்கைத் தாண்டி வந்தது. கடைகளை உடைத்துத் துப்பாக்கியால் சுட்டது. நாடார்கள் பதிலுக்குச் சுட்டார்கள். கலகக்காரர்கள் இதை எதிர்பார்க்கவில்லை. மிரண்டு பின்வாங்கவே நாடார்கள் நெல்லுக்கடை முக்குவரை விரட்டினார்கள். சின்னக் கனி நாடார் அரிவாளால் அஞ்சாறு பேரை வெட்டிச் சாய்த்தார். பிறகும் கோவம் தீராமல் அரிவாளை ஒருவன்மீது வீசியெறிந்தார்.

தேர்மீதிருந்த பூதக்கண்ணாடிக்காரன் குரல் கொடுத்தான்.

''மேக்க மரத்தொட்டிய ஒரு கூட்டம் கொள்ளையடிக்குது.''

நாடார்கள் அந்தக் கூட்டத்தையும் விரட்டியடித்தார்கள்.

கலகக்காரர்கள் கொலையைவிடக் கொள்ளையில்தான் குறியாக இருந்தார்கள். வீடுகளை உடைத்து அகப்பட்டதைச் சுருட்டினார்கள். எதிர்பார்த்தபடி கைநிறைய அள்ளிக்கட்ட முடியவில்லை. எரிச்சலில் எதிர்ப்பட்டதுக்கெல்லாம் தீவைத்தார்கள். வெறியடங்கவில்லை.

நடுத் தெருவில் ஒரு ஒழுகறைப் பெட்டி நாதியற்றுக் கிடந்தது. அதைச் சுற்றி நின்று உடைக்கப் பிரயாசைப்பட்டார்கள். மேலிருந்து குறிவைத்த நாடார்கள் மூணு பேரைச் சுட்டு மலத்திவிட்டார்கள். தந்திர வேலையென்று அதுக்குப் பிறகுதான் தெரிந்தது.

அரிசிக்குளம் தெருவில்தான் கடுமையான சண்டை. கிழமேல் சந்திலும் நடந்தது. பழனியப்பன் வீடு அந்தத் தெருவில் இருந்தது. பதினாறு வயசுப் பையன். அன்னமுத்து அவனுக்கு அண்ணன். பதினெட்டு வயசு. ரெண்டு பேரும் வீட்டுக்குள் இருந்தார்கள். கிழக்கே துப்பாக்கிச் சத்தம் கேட்கவே வெளியே வந்து முற்றத்தில் நின்று பார்த்தார்கள். அன்னமுத்து தம்பியிடம் சொன்னான்.

''வீட்டுக்குள்ள போயிப் பாத்தரங்கள எடுத்துட்டு வா. நான் இங்கருக்கென். தப்பிச்சு ஓடீருவொம்.''

பழனியப்பன் வீட்டுக்குள் ஓடினான். அப்போது மேற்கிலிருந்து ஒரு சந்து வழியாக பத்துப் பதினஞ்சு பேருக்கு வந்துகொண்டிருந்தார்கள். அன்னமுத்து அவர்களைப் பார்த்ததும் கொஞ்சம் தள்ளிப்போய் கீழச்சந்தில் தம்பிக்காகக் காத்திருந்தான்.

பழனியப்பன் வீட்டை விட்டு வெளியே வந்து எட்டிப் பார்த்தான். அவன் கையில் செம்புகளும் தாம்பாளமும் இருந்தன.

''அந்தா ஒரு சாணாப் பய இருக்கான். புடிச்சு வெட்டு.''

ஒருவர் ஓடி வந்து அவன் முடியை வளைத்துப் பிடித்து அரிவாளால் கழுத்தில் வெட்டினார். அவன் சத்தம்போடச் சந்தர்ப்பமில்லாமல் தலை துண்டாகி முற்றத்தில் உருண்டது. முண்டம் துள்ளித் துடித்து ஓய்ந்தது. சிதறிக் கிடந்த பாத்திரங்களில் ரத்தம் பீச்சியடித்துச் சிவந்துவிட்டது.

கொலை செய்தவர் பழனியப்பனின் காலைப் பிடித்து முண்டத்தைத் தரத்தரவென்று இழுத்துக்கொண்டு போனார். பயத்தில் விறைத்துப்போய் நின்றிருந்த அன்னமுத்து அத்தையின் வீடு தேடி கிழக்காமல் ஓடினான்.

அரிசிக்குளம் தெருப் பகுதியில் இன்னொரு கொலையும் விழுந்தது. அருணாசலமும் சங்கிலி நாடாரும் பக்கத்து வீட்டுக்காரர்கள். அருணாசலத்துக்குக் கொஞ்ச வயசு. ரெண்டு பேரும் கலகக்காரர்களுக்குப் பயந்து அருகிலுள்ள சிதம்பர நாடார் வீட்டின் உள்திருணையில் ஒளிந்திருந்தார்கள்.

கூட்டம் கதவை உடைத்துக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்துவிட்டது. சங்கிலி நாடார் இன்னொரு வாசல் வழியாகத் தப்பித்து முற்றத்துக்கு வந்துவிட்டார். அருணாசலம் திருணையிலிருந்து கீழே குதித்தான். தப்பிக்கும் முன் ஒருவர்

அவனை ஓங்கி வெட்டினார். அவன் இடது கையால் தடுத்தான். இன்னொருவர் சூரிக்கத்தியால் குத்தினார். வெட்டியவர் அவனது தரிப்பையும் அரணாக்கொடியையும் பறித்துக்கொண்டார். அவனுக்கு உயிர் பிரியவில்லை. அப்படியே போட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

முற்றத்திலிருந்த சங்கிலி நாடார் இன்னும் வாசல் வழியாகப் பார்த்துக்கொண்டிருந்தார். கூட்டம் அவரைப் பார்த்துவிட்டது.

''அங்க ஒரு சாணான் நிக்கான் பாரு. வுடாத புடி.''

துரத்தினார்கள். அவர் பின்புறமாக ஓடி விறகுக் குமிக்குள் ஒளிந்துகொண்டார். முதலாளியிடம் கூலி வாங்கிப் பிழைக்கும் மனுசன். நல்ல நேரத்துக்குத் தப்பிவிட்டார்.

குருசாமி நாடார் கிட்டங்கியில் நடந்த கொடூரம் சொல்ல முடியாது. கிட்டங்கியை ஒட்டி உத்திரமாட நாடாரின் வீடு. அவர் சம்சாரம் சங்கிலியம்மா. கைக்குழந்தையை வைத்துக்கொண்டு தெற்கு ரத வீதிக்கு நடக்கச் சிரமப்பட்டாள். அதனால் கிட்டங்கியிலேயே தங்கவைத்துவிட்டு மச்சில் ஏறிக்கொண்டார். கிட்டங்கிக்குள் ஏற்கெனவே கிருஷ்ண நாடார் வீட்டுக்காரியுடன் இருந்தார். ரெண்டு பேரும் சம்பந்தி. உத்திரமாட நாடார் மகளை கிருஷ்ண நாடார் மகனுக்குக் கொடுத்திருந்தது.

கிட்டங்கிக்கு மேற்கும் கிழக்குமாக ரெண்டு வாசல். உள்ளே ஆணும் பெண்ணும் மூச்சுமுட்டத் திணித்துக் கிடந்தார்கள். எல்லாரது முகத்திலும் பதட்டம். தங்கையா அடிக்கடி தெய்வானையையும் பிள்ளைகளையும் பார்த்துக்கொண்டான். நேற்று ராத்திரி குழந்தைகள் முதல்கொண்டு யாரும் உறங்கவில்லை. விடியக்காலம் ஒருவர் துணையுடன் ஒருவர் வெளியே போய் வந்தார்கள். பானைத் தண்ணீரால் பசியைக் குறைக்க முடியவில்லை. இருமலையும் செருமலையும் அடக்கத் திணறினார்கள். அழும் குழந்தையை அமர்த்துவது பெரும்பாடாக இருந்தது. கிட்டங்கிக்குள் கிடைத்த பண்டங்களைக் கொறிக்கக் கொடுத்தார்கள்.

வெளியே கூச்சலும் ஓடி வரும் காலடிச் சத்தமும் உரத்துக் கேட்டது. கிட்டங்கியை நெருங்கியதும் நின்றுவிட்டது. கலகக்காரர்களேதான். உள்ளிருந்தவர்கள் பதறினார்கள். என்ன நடக்கப்போகுதோ. ஆண்கள் இரு கதவுகளையும் சரிபார்த்துக்கொண்டார்கள்.

வெளியிலிருந்த கூட்டத்தில் ஒருவன் மேலக் கதவில் காதுவைத்து அருவங் கேட்டான்.

''உள்ள ஆளு இருக்குது.''

''வெளிய இழுத்துப்போட்டு வேட்டையாடுங்கடா.''

கதவைத் தட்டினார்கள். உள்ளிருந்தவர்கள் கதவில் சாய்ந்து தடுத்துப்பார்த்தார்கள். பெண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டு முரட்டுத்தனமாக எதிர்த்துத் தாக்கவும் முடியாது. பெண்கள் மூடைகளுக்கிடையில் ஒளிந்துகொண்டார்கள். தெய்வானை முந்தியில் முடிந்திருந்த கத்தியை எடுத்துத் தயாராக வைத்திருந்தாள். ஒளிந்திருப்பது பாதுகாப்பில்லையென்று தோன்றவே ஒருவர் சொன்னார்.

''பொம்பள புள்ளீக அந்த வாசல் பக்கமாத் தப்பிச்சிருங்க. நாங்க சமாளிச்சுக்கிறொம்.''

தங்கையா தெய்வானையிடம் சொன்னான்.

''நீயும் போயிடு. என்னப் பத்திக் கவலப்படாத.''

பெண்கள் கீழ்ப்புற வாசலைத் திறந்துகொண்டு வெளியேறவும் கலகக்காரர்கள் மேலக் கதவைக் கல்லால் உடைத்துக்கொண்டு உள்ளே நுழையவும் சரியாக இருந்தது. வந்ததே சரியென்று ஒருவர் கிருஷ்ண நாடாரின் முடியைப் பிடித்து சாலைவரை இழுத்துக்கொண்டு போனார். இன்னொருவர் அவர் கழுத்தை அரிவாளால் வெட்டினார். தொங்கில்லாமல் தலை கழன்றது. மச்சிலிருந்து இதைப் பார்த்த உத்திரமாட நாடார் ஒரு பெண்ணின் கூக்குரல் கேட்கவே கிழக்கு வாசல் பக்கம் போய் எட்டிப் பார்த்தார்.

சங்கிலியம்மா குழந்தைச் சுமையுடன் ஒருவரோடு மல்லாடிக்கொண்டிருந்தாள். கொஞ்ச நேரத்தில் அவள் காதிலிருந்த பாம்படமும் பொட்டுப் பொடிசுகளும் கொள்ளைக்காரர் கைக்குப் போய்விட்டன. காதறுந்து ரத்தம் சிந்தியபோதும் அவள் குழந்தையைத் தவற விடவில்லை.

இன்னொருவர் குழந்தையை வலுக்கட்டாயமாகப் பிடுங்கிச் சாலையில் வீசியெறிந்தார்.

''சாணான் தலமொறைக்கும் தலையெடுக்கப்புடாது.''

எறிந்த கையோடு சங்கிலியம்மாளைச் சாலைக்கு இழுத்துக்கொண்டு போய் வசம்பார்த்துக் கிடாய் வெட்டினார். மயிர்க் கொத்துடன் கையில் தொங்கிய தலையைத் தூர எறிந்தார். மச்சிலிருந்த உத்திரமாட நாடார் கதறினார்.

''எம்புள்ளையக் கொன்னுட்டீகளே. பொண்டாட்டிய வெட்டிப் போட்டுட்டீகளே.''

கீழிருந்து குரல் வந்தது.

''அவனவும் கொல்லுங்கடா.''

அவர் பின்பக்கமாக காலியிடத்தில் குதித்துத் தப்பியோடினார். கிழக்கே குப்பையோரம் கட்டைமண் சுவர் தெரிந்தது. அதுக்குமேல் ஓட முடியவில்லை. ஆண்டவன் விட்ட வழியென்று சுவருக்குப் பின்னால் ஒளிந்துகொண்டார்.

நடந்த கொடுமையைப் பார்த்துக்கொண்டு தங்கையாவால் சும்மாருக்க முடியவில்லை. தப்பியோட மனசு மறுத்தது. அரிவாளை ஓங்கியபடி கூட்டத்தை நோக்கிப் பாய்ந்தான்.

''பாவியளா பச்சப் புள்ளையும் தாயும் ஒங்கள என்னடா செஞ்சாவ.''

ஒருவரது தோளில் அவன் அரிவாள் பாய்ந்தது. அடுத்து விலாவில் ஒரு வெட்டு. அலறலுடன் கதை முடிந்தது. இன்னொருவரைக் குறிவைக்கும்போது கூட்டம் அவனைப் பிடித்துக்கொண்டது. அவன் முகத்தில் பயமில்லை. துணிச்சலாகச் சொன்னான்.

''எம் பொடிமசுரப் புடுங்குடா.''

அவன் நெஞ்சில் விழுந்த குத்துக்குக் கணக்கே இல்லை. வேருடன் பிடுங்கிய பனைமரமாகச் சாய்ந்து கடைசியாக முனங்கினான்.

''தேவான.. தேவான...''

உயிர் பிரிந்த உடம்பை அங்கம்அங்கமாக கண்டகோடாலியால் தறித்துச் சிதறினார்கள். அப்போதும் மார்பில் ரெண்டு வேல்கத்தி குத்திக் குதறியது.

ஊர் முழுக்க நெருப்பில் குளித்துக்கொண்டிருந்தது. பாதுகாப்பான இடம் தேடிப் போக முடியாமல் வீட்டுக்குள் கிடந்த கிழடுகளும் முடங்களும் புகையில் மூச்சு முட்டி தட்டுத்தடுமாறி வெளியேறினார்கள். தெருவுக்கு வந்து திகைத்து நின்றபோது கலகக்காரர்களின் கண்ணில் பட்டுவிட்டார்கள்.

''இனியும் வீட்டுக்குள்ள கெடந்துருக்கான் பாருடா.''

இரை கிடைத்த வெறியில் அவர்களை ஈவிரக்கமில்லாமல் வெட்டினார்கள். நெருப்பில் தூக்கியெறிந்தார்கள். அப்போதும் நாடார்களின் ஆயுதங்கள் ஓய வில்லை. துப்பாக்கிகள் தோட்டாக்களைத் தொடுத்துக்கொண்டேயிருந்தன.

இத்தனைக்கும் வேதக்காரர்கள் பத்திரமாக இருந்தார்கள். உயிர்ச் சேதமோ பொருள் சேதமோ இல்லை. ரெண்டு பக்கமும் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி விட்டார்கள். வேதக்கார நாடார்கள் இந்துக்கார நாடார்களுக்கு ஆதரவாக ஆயுதம் தூக்கவில்லை. கலகக்காரர்கள் அவர்களைத் தொடவுமில்லை. முன்கூட்டியே பேசிவைத்த மாதிரி வேதக்காரர்கள் ஒரு காரியம் பண்ணினார்கள். அவரவர் வீட்டுக் கதவுகளில் சிலுவைக் குறியிட்டு 'இது வேதக்கார வீடு' என்று எழுதி வைத்துவிட்டார்கள். அந்த அடையாளம் எல்லாரையும் காப்பாற்றிவிட்டது.

கலகக்காரர்கள் தெற்கு ரத வீதித் தெருக்களுக்குள் நுழைய எவ்வளவோ பிர யாசைப்பட்டார்கள். நாடார்கள் முழுமூச்சாக எதிர்த்து முறியடித்துவிட் டார்கள். கிழக்கு ரத வீதியும் தெற்கு ரத வீதியும் சந்திக்கும் தேங்காய்க்கடை முக்கில் அப்படியொரு சண்டை நடந்தது. ரெண்டு பக்கமும் சேதம் ரெம்ப.

அந்தத் தெருக்களில்தான் பணக்கார வீடுகள் நிறைய உண்டு. ஏகப்பட்ட பெண்களும் பிள்ளைகளும் தங்கியிருந்தார்கள். தெருக்களுக்குள் நுழைந்திருந் தால் சிவகாசியே அழிந்த மாதிரிதான். பல உயிர்கள் பலியாகியிருக்கும். கணக் கில்லாமல் சொத்துக்கள் கொள்ளைபோயிருக்கும். நாடார்களுக்கு வாழ்வா சாவா என்ற சண்டை. நல்ல வேளை காப்பாற்றிவிட்டார்கள்.

கலகக் கூட்டம் நாடார்களின் எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல் பின் வாங்கி சன்னஞ்சன்னமாக ஊரை விட்டு வெளியேற ஆரம்பித்தது. வரும் போதிருந்த சுதாரிப்பு இப்போதில்லை. எல்லா முகத்திலும் வெறுங்கையுடன் திரும்பும் ஏமாற்றமும் வருத்தமும் தெரிந்தது

தேர் மீதிருந்த பூதக்கண்ணாடிக்காரன் தெளிவாகச் சொன்னான்.

''எல்லாரும் போயிட்டாங்க.''

தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு தெருக்களில் ஓடி வந்த சிறுவர்கள் விசுவநாதர் சன்னதியில் கூடிக் குதியாளம்போட்டார்கள். தேர்மீது ஏறிக் கூச்சலிட்டார்கள்.

''போறாண்டா போறாண்டா.''

தேர்முழுக்கத் தீப்பற்றி எரிவதுபோல் சுற்றிலும் தீவட்டிகள் பூத்திருந்தன. திரும்பிப் பார்த்த கூட்டம் காளி கோவங்கொண்டு நெருப்புக் கோலத்தில் துரத்துவதாக நினைத்து விரைந்தது.

மச்சுக்களில் இருந்தவர்கள் இறங்கிவந்து மார்தட்டினார்கள்.

''தூக்குல தொங்கவுட வந்தவன் சாக்குல அள்ளீட்டுப் போறான்.''

''என்னத்த.''

''பொணத்த.''

''பெரிய பெரிய சண்டீரெல்லாம் என்னானான்.''

''ஊருக்கு வெளிய காத்திருந்த குருதமேல தப்பீட்டான்.''

எரிந்துபோன வீடுகளும் பிரிந்துபோன உயிர்களும் அப்போது மறந்து போயின.

## 11. தும்பை விட்டு...

கரிசக்குளத்திலிருந்து ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு வந்த கலெக்டருக்கு சப்மாஜிஸ்திரேட்டின் ரெண்டு தந்திகள் காத்திருந்தன. உடனே பதிலனுப்பினார்:

> விரைவில் வருகிறேன். அமைதி காக்கவும். கூட்டத்துடன் பேசிச் சமாளியுங்கள்.

தந்தி ஒரு மணிக்கு மேல் சப்மாஜிஸ்திரேட் கையில் கிடைத்தது. அதுக்கு முந்தியே வீட்டுக்குள் அடைத்துவைக்கப்பட்டிருந்த போஸ்ட் மாஸ்டரை சனங்கள் விடுவித்துவிட்டார்கள். தந்தி கிடைப்பதற்குள் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. அமைதி காப்பதாவது பேசிச் சமாளிப்பதாவது.

கொள்ளை முடியும்வரை இன்ஸ்பெக்டர்களும் மாஜிஸ்திரேட்டும் போலீஸ்காரர்களுடன் யூனியன் ஆபீசுக்கருகே பாலத்திலேயே இருந்தார்கள். எங்கும் நகர முடியாத நிலைமை. திரும்பி வரும் கூட்டத்தை வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை.

இப்போது கூட்டம் யூனியன் ஆபீசுக்கு முன்னால் மைதானத்தை அடைந்தது. அங்கே நின்று மீதிப் பேரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். இனி என்ன செய்யப் போகிறார்களோ என்ற அச்சம்.

துலுக்கக் குடிக்கு மேற்கே நந்தவனத்திலுள்ள நல்ல தண்ணீர்க் கிணற்றில் பல பெண்கள் மும்முரமாக நீரிறைப்பது தெரிந்தது. முக்காடு போட்ட துலுக்கப் பெண்கள் அவர்களிடம் குடங்களை வாங்கி வேகவேகமாக மைதானத்துக்குச் சுமந்து வந்தார்கள்.

கொஞ்ச நேரத்தில் மைதானக் கூட்டம் குடங்களைக் காலியாக்கிவிட்டு எதிரில் வரும் இன்னொரு வரிசையை எதிர்பார்த்தது.

மதார் உசேன் அய்யங்காரைப் பார்த்தார்.

''கொடங்கொடமாத் தண்ணி குடிச்சும் தாகம் தீரல பாருங்க.''

''தீராது.''

சிலர் மாடுகளைப் பத்திக்கொண்டு வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் முன்னும் பின்னுமாக நின்று பலர் வண்டித் தட்டிகளில் ஆட்களைச் சுமந்து வந்தார்கள். படுத்திருந்தவர்களில் பலருக்கு உயிரில்லை. சிலருக்கு உயிர் ஊசலாடியது. இன்னும் பலர் படுகாயத்தில் துடித்தார்கள்.

அடுத்து மாடுகள் பூட்டிய சில வண்டிகள் வந்தன. அவற்றிலும் நீளக் கிடக்கும் உடல்கள் அசைந்தன.

அய்யங்கார் உசேனிடம் சொன்னார்.

''அங்க பாத்தேளா. வண்டியோட போனவன் மாட்டோட வர்றான்.''

உசேன் சலித்துக்கொண்டார்.

''வண்டியில போனவன் பாடையில வாறான். பொருளச் சொமக்கப் போன வண்டி பொணத்தச் சொமந்து வருது.''

''கெடச்சது அதுதான். பாவம்.''

''எடவழியில எத்தன உசிரு போகுமோ. கொள்ளையடிக்க வந்தவன் கொள்ளி வைக்க நாதியில்லாமப் போறதப் பாத்தா பாவமாத்தான் இருக்கு. சொந்தச் சுடுகாடுகூடக் கெடைக்காம எந்தச் சுடுகாடு சொந்தமாகப் போகுதோ.''

மைதானத்தில் கூடியிருந்தவர்கள் சாட்சியாபுரம் வேதக் கோயில் வழியாகக் குறுக்குப் பாதையில் நடக்க ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு முன்னால் தட்டு முட்டுச் சாமான்களுடன் ஒரு மாட்டு வண்டி போய்க்கொண்டிருந்தது. ஒருவர் எட்டி நடந்து வண்டிக்காரனிடம் கேட்டார்.

''வண்டியில என்னதுடா. எங்க போகுது.''

வண்டிக்காரன் பதட்டத்தில் சொன்னான்.

''சாமியாரு வீட்டுக்குப் போகுது. அவரோட சாமாங்க. கச்சேரியிலருந்து எடுத்துட்டு வாறென்.''

இன்னொருவர் அதட்டினார்.

''அவன்தான் சாமியாரு பொருளுன்னு சொல்றான்ல. வுடுப்பா.''

வண்டி வேகமாக உருண்டது.

ஒரு கூட்டம் வேத போதகர் பங்களாவுக்கருகிலிருந்த கிணற்றில் தாமதித்தது. தண்ணீர் இறைத்துக் குடித்து முகம் கழுவி சற்று உட்கார்ந்து தவிப்பாறினார்கள். பிந்தியவர்களை ஒருவர் அவசரப்படுத்தினார்.

''வெருசனா வந்து சேருங்கப்பா.''

பங்களாவுக்குள்ளிருந்து பார்த்துக்கொண்டிருந்த போதகர் பதறிப்போனார். வேண்டிய மட்டும் கூட்டம் வந்து சேர்ந்ததும் பங்களாவைத் தாக்குவார்களோ. பள்ளிக்கூடத்திலும் கோயிலிலும் தங்கியிருக்கும் சனங்களின் கதி என்னாவது. அவருக்கு வேர்த்துக்கொட்டியது. வாசல் கதவுகளைப் பூட்டித் தாழ்ப்பாள் போட்டார். அதொண்ணும் பெரிய பாதுகாப்பில்லை. அவர் இருந்த அறை மட்டுமே கொஞ்சம் பாதுகாப்பானது. சன்னலையும் பூட்டிக்கொண்டு இருக்க முடியாது. வெளியே என்ன நடக்கிறதென்று தெரியாது.

உள்ளிருந்து கூட்டத்தைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. அவர்களும் அவரைப் பார்த்தார்கள். நேருக்கு நேர் சந்தித்துக் கொண்ட பரபரப்பில் ஒண்ணும் ஓடவில்லை. அவர்கள் எதையும் தொடாமல் அமைதியாகக் கடந்துவிட்டார்கள். அவருக்கு இப்போதுதான் உயிரே வந்தது. பெருமூச்சில் விரிந்து சுருங்கும் நெஞ்சில் சிலுவையிட்டுக்கொண்டார்.

''ஆண்டவரே உமக்கு நன்றி.''

கலெக்டரும் சூப்பிரண்டும் ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து சிவகாசிக்குக் குதிரையில் பாய்ந்து வந்தார்கள். பாதித் தூரம் தாண்டியாகிவிட்டது. எதிரே கூட்டங்

கூட்டமாக ஆட்கள் வந்துகொண்டிருந்தார்கள். ஆயுதமில்லாதவர்கள் குறைவு. சூப்பிரண்டு பலரிடம் விசாரித்துப்பார்த்தார்.

''எங்கருந்து வாறீங்க. என்ன நடந்தது.''

யாரும் நின்று பதில் சொல்வதாக இல்லை. அடுத்து வந்த கூட்டம் அவர்களைப் பார்த்து ஓட்டம் பிடித்தது. விரட்டிப் போய் ஒருவரை ஒரு தோட்டத்தில் விழுத்தாட்டிப் பிடித்தார்கள். அவர் தலையாரி. ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு அனுப்பி வைத்தார்கள்.

சிவகாசியை நெருங்கநெருங்க நிறைய கூட்டங்கள் எதிர்ப்பட்டன. அரிவாள் இல்லாத ஆளில்லை. சாட்சியாபுரத்தைத் தொட்டுவிட்டார்கள். ஒரு தோட்டத்தில் சத்திரம் எரிந்துகொண்டிருந்தது. தோட்டத்திலிருந்து ஒரு கூட்டம் வெளியே வந்தது. துரத்தினார்கள். காடுகரையில் ஓடிய ஒருவரை கலெக்டர் ஒரு புறமும் சூப்பிரண்டு மறு புறமுமாக விரட்டினார்கள். அரிவாள் கம்புடன் பிடிபட்டார். அவரைக் கொண்டுவரும்போது ஏராளமான ஆட்கள் தட்டுப்பட்டார்கள். கலெக்டர் ஒருவரைச் சோளக்காட்டில் வைத்துப் பிடித்தார். பிறகு இன்னொருவர் சிக்கினார். மொத்தம் அகப்பட்டது மூணு பேர். அவர்களில் ஒருவர் லீவில் வந்திருந்த பட்டாளத்துச் சிப்பாய்.

பழைய இடத்திலேயே நின்றிருந்த இன்ஸ்பெக்டர்களும் மாஜிஸ்திரேட்டும் தங்கள் பங்குக்கு மூணு பேரைப் பிடித்து வைத்திருந்தார்கள். கலெக்டரைப் பார்த்ததும் அவர்களுக்குத் தெம்பு. கலெக்டர் மாஜிஸ்திரேட்டைப் பார்த்தார்.

''இன்னும் ஊருக்குள்ள ஆளுக இருக்கிறாங்களா.''

''கலகம் நடந்துண்டுருக்கறதாத்தான் தோணறது.''

சூப்பிரண்டு அய்யங்காரிடம் கேட்டார்.

''துப்பாக்கிச் சூடு நடத்துனீங்களா.''

மாஜிஸ்திரேட்டிடமிருந்து பதில் வந்தது.

''கூட்டம் ஏராளம். அவாளும் துப்பாக்கி வச்சிருந்தா. எங்களக் கொன்னுடுவம்னு மெரட்டினா. அதனால...''

கலெக்டர் எரிந்து விழுந்தார்.

''அதனால வேடிக்க பாத்தீங்களாக்கும்.''

உசேன் முணுமுணுத்தார்.

''சுடச் சொல்லீருந்தாக்கூட சும்மாதான் இருந்துருப்பான் இல்ல ஒப்புக்குச் சுட்ருப்பான்.''

இது யார் காதிலும் விழவில்லை. அவர் சொன்னதுக்கான காரணம் கலெக்டருக்குத் தெரியாது.

இதுக்கிடையில் சாட்சியாபுரம் போதகர் சைக்கிளில் சிவகாசிக்குக் கிளம்பியிருந்தார். சிவகாசி வழியாக ஒரு வெள்ளைக்காரப் பெண் வருவதாக இருந்தது. அவளைப் பத்திரமாகக் கூட்டி வரணும்.

சிவகாசி ஊரே நாய் குதறிய கோலத்தில் இருந்தது. தெருவெங்கும் ரத்தக் களங்கள். துண்டிக்கப்பட்ட தலைகளும் தலையற்ற முண்டங்களும் அங்குமிங்குமாகக் கிடந்தன. ஒரு பெண்ணின் முண்டம் பாதி வெந்தும் வேகாமல் எடுத்துப் போடப்பட்டிருந்தது. சில வீடுகள் இன்னும் எரிந்துகொண்டிருந்தன. நெருங்க

முடியாதபடி அனலடித்தது. தெருக்களில் ஆள் நடமாட்டமில்லை. அவர் ஊருக்குக் கிழக்கே மீனம்பட்டியோரம் வெள்ளைக்காரப் பெண்ணைச் சந்தித்தார். நல்ல வேளை அவள் இருபது போலீஸ்காரரின் பாதுகாப்பில் வந்தாள்.

இருவரும் சிவகாசிக்குள் நடந்து வந்தபோது பலர் வெளியே வந்து பிணங்களைச் சுற்றி அழுதுகொண்டிருந்தார்கள். அவரைப் பார்த்ததும் வந்து சூழ்ந்து கொண்டு முறையிட்டார்கள்.

''எங்களக் காப்பாத்தாம எங்க போயிட்டீக சாமி.''

''அங்க பாருங்க. இங்க பாருங்க. இத்தன பேரு பொணமாயிட்டாகளே.''

''போலீஸ்காரப் பாவிக மோசம் பண்ணீட்டாகளே.''

ஒருவர் அவரது சைக்கிளுக்கு முன்னால் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து விட்டார்.

''இப்படியாகிப் போச்சே சாமி.''

சாமியார் அவரைப் பிடித்து எழுப்பி ஆறுதல்படுத்தினார்.

சனங்களின் புலம்பல் நெஞ்சை உலுக்கியது. அவர் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் ஊரைக் கடந்துவிட்டார். வெள்ளைக்காரப் பெண்ணின் முகமும் ரெம்ப வாடியிருந்தது.

பேசி முடித்துக் கைதிகளை கச்சேரிக்கு அனுப்பிவிட்டு கலெக்டரும் சூப்பிரண்டும் சிவகாசிக்குள் நுழையும்போது சாயங்காலம் நாலு மணியைத் தொட்டு விட்டது. மற்றவர்கள் பின்தொடர்ந்தார்கள். முத்தப்ப நாடாரின் நெல் கிட்டங்கியை நெருங்கியபோது ரெண்டு பேரும் கண்ணுக்குத் தப்பிவிட்டார்கள். அதுக்கு மேல் எட்டிப் பிடிக்க முடியவில்லை.

வீதியில் பல கடைகள் எரிந்து முடிந்திருந்தன. இன்னும் சில எரிந்துகொண்டிருந்தன. சூறையாடிய பொருட்கள் வீதியெங்கும் விதைத்துக் கிடந்தன. கைக்குக் கிடைத்ததை எடுத்து எறிந்ததுக்கு அடையாளமாகக் கல் மண்கட்டி செங்கல் மரத் துண்டு. இன்னதுதான் என்றில்லை.

போலீசைப் பார்த்ததும் ஒரு கூட்டம் வீதியிலிருந்து வடக்காமல் ஓடியது. பின்னால் துரத்தினார்கள். கூட்டம் ஒரு வீட்டுக்குள் புகுந்து அடைத்துக்கொண்டது. கதவைத் திறந்து முப்பத்திமூணு பேரைக் கைதுசெய்தார்கள். சிலர் தப்பி விட்டார்கள். எல்லாரிடமும் ஆயுதம் இருந்தது. கைதானவர்கள் மறவர் குடும்பமார் என பல சாதிக்காரர்கள். ஒருவர் உள்ளூர் மறவர். அய்யங்கார் அவர்களிடம் கேட்டார்.

''இங்க ஏன் வந்தேள்.''

ஒருவன் சொன்னான்.

''சும்மா வேடிக்க பாக்க வந்தொம்.''

''அதுக்கு ஆயுதம் வேணுமோ.''

யாரும் சரியான காரணம் சொல்லவில்லை.

அஞ்சு மணிவாக்கில் ராகவய்யா வந்தார். கலெக்டருடன் சேர்ந்து எல்லாரும் தெருக்களைச் சுற்றிப்பார்க்க ஆரம்பித்தார்கள். நெல்லுக்கடை முக்கிலும் தேங்காய்க் கடை முக்கிலும் குருசாமி நாடாரின் கிட்டங்கியோரமும் பிணங்கள் கிடந்தன. தலை துண்டித்து துப்பாக்கிச் சூடுபட்டுத் தீயில் கருகிக் காயம்பட்டுக் கிடந்தவர்களுக்குக் கணக்கில்லை. சிலருக்கு அத்தாகுத்தியான நிலைமை.

ரெண்டு குதிரைகள் வெந்து வீங்கிக் கிடந்தன. அருகில் கருகி நிற்கும் வண்டிகள். ஏகப்பட்ட ஆடு மாடுகள் தெருக்களிலும் தொழுக்களிலும் கரிந்து கால் விறைத்துப் படுத்திருந்தன. தொழுக்களில் கிடந்த மாடுகளை இரும்புச் சங்கிலி இன்னும் பிணைத்திருந்தது. நெருப்புக்குச் சுருண்ட கோழிகளும் புறாக்களும் ஏராளம். சில இடங்களில் மாட்டு வண்டிகளின் ஆரக்கால்களில் கங்கு கனன்று கொண்டிருந்தது. நெடுகிலும் தானியம் சிந்தியிருந்தது. கருகல் வாடை குமட்டியது. நெருப்பில் மூளியான வீடுகள் ஆயிரம் இருக்கும்.

காயம்பட்டவர்களை உள்ளூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனார்கள். கொஞ்சம் தெம்பாக இருந்தவர்களை அங்கிருந்து சாத்தூருக்கு அனுப்பினார்கள்.

கலெக்டர் வந்திருக்கும் சேதியறிந்து சனங்கள் வெளியே வந்து அழுது கதறினார்கள்.

''நேத்து எல்லாரும் கெஞ்சினமே. கேக்காமப் போயிட்டீகளே. நீங்க ராத்திரி இங்க தங்கியிருந்தா இவ்வளவுக் காகியிருக்குமா. பாழாப் போன போலீஸ்காரங்கள நம்பி நாசமாக்கீட்டீகளே.''

''இங்க நடத்த கூத்தப் பாக்க வந்தீகளாக்கும்.''

''போலீங்காரங்களச் சும்மா வுடப்புடாது. எத்தன பேரக் கொன்னாலும் மனசு ஆறாது.''

''துலுக்கங்களுக்கு நாங்க என்ன பாவம் செஞ்சொம். தண்ணி சொமந்து போயிக் குடுக்காளே முக்காட்டுப் பொட்டச்சி. அவ நல்லாருப்பாளா.''

''காசிம் ராவுத்தன் பட்டாக் கத்தியத் தூக்கீட்டு வாறானே. வெளங்க மாட்டான். அவன் தாடியக் கொளுத்தி நெஞ்சப் பௌக்கணும்.''

''நாளைக்கு துலுக்கக் குடிய ஒரு கையி பாத்துறணும்.''

சூப்பிரண்டு சமாதானப்படுத்தினார்.

''அமைதியா இருங்க. எல்லாம் நாங்க பாத்துக்கிருவொம்.''

கலெக்டர் வாயடைத்துப் போயிருந்தார். சொல்ல முடியாத உறுத்தல் மனசைப் பிறாண்டியது. அதிகாரிகளை நம்பி மோசம் போய்விட்டோமோ. இந்த நேரத்தில் யாரைச் சொல்லி என்ன செய்ய. நாம்தான் தீர விசாரித்து முடிவெடுத்திருக்கணும். சனங்களின் முகத்தில் முழிக்க வெட்கமாகக்கூட இருந்தது.

## 12. பிணக் கணக்கு

பொழுது மங்கி இருள் கவிய ஆரம்பித்திருந்தது. ஊருக்குள் மெலிந்த அழுகுரல்களைத் தவிர வேறு அருவமில்லை.

அத்தை வீட்டில் தங்கியிருந்த அன்னமுத்து அரிசிக்குளம் தெருவுக்கு வந்து தம்பியைத் தேடினான். வீட்டோரம் அவன் தலை மட்டுமே கிடந்தது. முண்டத்தைக் காணவில்லை. அழுகை பீறிட்டது. தலையை எடுத்துக்கொண்டு போலீஸ் கச்சேரிக்குப் போய் ஒப்படைத்தான். போலீஸ்காரர்கள் அவனைக் கண்டு மிரண்டு போனார்கள். வெட்கமாக இருந்தது.

கட்டமண் சுவருக்குப் பின்னால் ஒளிந்திருந்த உத்திரமாட நாடார் குரு சாமி நாடாரின் கிட்டங்கிக்கு ஓடினார். பெண்டாட்டி பிள்ளை முகத்தைப் பார்க்க ஆவலாக இருந்தது. சங்கிலியம்மாளின் உடலையோ தலையையோ கண்டுபிடிக்க முடியவில்லை. சாலைக்குக் கிழக்கே வேப்ப மரத்தடியில் குழந்தை கிடந்தது. அவசரமாகத் தூக்கினார். உயிர் இருந்தது. மண்டை உடைந்து இரு காதிலும் ரத்தம் வடிந்தது. கொண்டுவந்து கலெக்டரிடம் காட்டி அழுதார்.

''எம் புள்ளையிருக்கிற கோலத்தப் பாருங்களேன். எம் பொண்டாட்டி எங்க கெடக்கான்னு தெரியலயே.''

சூப்பிரண்டு சொன்னார்.

''உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோ.''

நாடார் ஆஸ்பத்திரிக்குப் போனார். மூடியிருந்தது. திறக்கும்வரை காத்திருந் தார். அங்கே மேலும் பலர் வந்தார்கள். ஆஸ்பத்திரிக்காரர்கள் அவரைக் கவனிக்க முடியாதபடி அவசர வேலையாக இருந்தார்கள். சங்கிலியம்மாளைத் தேடுவதற் காகத் திரும்பி வந்தார்.

அங்கங்கே சிதறிக்கிடக்கும் சடலங்களை அள்ளிச் சேர்க்குமாறு கலெக்டர் சொன்னார். சூப்பிரண்டும் மற்றவர்களும் அந்த வேலையைக் கவனித்தார்கள். சனங்கள் பிணங்களை அடையாளம் பார்த்து அழுதார்கள். அடையாளம் தெரிந் ததும் தெரியாததும் கச்சேரிக்கும் ஆஸ்பத்திரிக்கும் போய்க்கொண்டிருந்தன.

ஆஸ்பத்திரியில் அடைக்கலம் புகுந்திருந்த தெய்வானை குழந்தைகளுடன் தங்கையாவைத் தேடியலைந்தாள். சண்டையில் தப்பியிருந்தால் எப்படியும் கண்டு பிடித்துவிடலாம். திப்பனம்பட்டிக்குப் போயிருப்பானோ. இருக்காது. தனியாகப் போக மாட்டான். தானாக வரட்டுமென்று காத்திருக்கவும் மனசு கேட்கவில்லை. ஒருவேளை கூட்டத்தில் சிக்கி என்னமும் ஏதும் ஆகியிருக்குமோ. சந்தேகம் வலுக்கவே கிட்டங்கிப் பக்கம் ஓடினாள். ரத்தக் கறையுடன் ஒரு பாளையரிவாள் தரையில் கிடந்தது. தங்கையாவின் அரிவாளேதான். கைப்பிடி சொல்லியது. சுற்றிலும் தேடினாள். இடுப்புக்குமேல் தறித்த ஒரு முண்டம் மல்லாக்கப் படுத் திருந்தது. தலையில்லை. ரெண்டு கையில்லை. தாறுமாறான கத்திக் குத்துக்கிடை யில் மிஞ்சியிருந்த நெஞ்சுக் காய்ப்பு தங்கையாவை அடையாளம் காட்டியது. அலறித் துடித்தாள்.

''எங்கள வுட்டுட்டுப் போயிட்டியளே.''

அழுதுகொண்டே முண்டத்துக்குப் பின்னால் ஆஸ்பத்திரிக்குப் போனாள். குழந்தைகள் அரண்டுபோய் அவளைப் பின்தொடர்ந்தார்கள்.

கிட்டங்கிக்கு மூணு வீடு தள்ளிக் கிடந்த ஒரு பெண்ணின் சடலத்தைத் தூக்கிக்கொண்டு போனார்கள். உத்திரமாடன் நாடார் அதை நிறுத்தி அடை யாளம் பார்த்தார். அதே துணிமணி நரம்புச் சிலந்தித் தழும்பு கையில் குத்திய பச்சை. அழுது அரற்றினார்.

''எந் தாயி சங்கிலியம்மா...''

குழந்தையைத் தன் தாயிடம் கொடுத்துவிட்டு ஆஸ்பத்திரிக்குப் போனார். திரும்பி வந்து அதை வாங்கி அணைக்கும்போது கடைசியாகத் துடித்தது. பேர் அணைந்தபெருமாள். மூணு மாசம். உடனே கவனித்திருந்தால் பிழைத்திருப்பான்.

அள்ளி வந்த பிணங்கள் ஆஸ்பத்திரியிலும் கச்சேரியிலும் குமிந்துக் கிடந்தன. காயம்பட்டவர்களில் ஆறு பேர் நிலைமை மோசமாக இருந்தது. எந்த நேரமும் கண்ணை மூடலாம். அரிசிக்குளம் தெருப் பகுதியில் வெட்டுப்பட்ட அருணாசலம். அடுத்து அவனது தாய் மாரியம்மா. நெருப்புக்குள் வெந்தும் வேகாமல் கிடந்தவளை முனக்கக் குரல் கேட்டுக் கிண்டியெடுத்தார்கள். அதேபோல் சங்கரலிங்கத்தையும் தீக்குள்ளிருந்து மீட்டார்கள். கொஞ்ச வயசு.

சிவசங்கரன் பதினஞ்சு வயசுப் பையன். தோட்டா துளைத்துக் கிடந்தான். ஆழமான காயம். அருணகிரி நாடாருக்கும் தோட்டாக் காயந்தான். கடைசியாக ஒரு பெண். உடம்பெல்லாம் பலத்த காயம். பேரும் ஊரும் தெரியவில்லை.

சம்பவ இடத்திலேயே மாண்டது இருபத்தி நாலு பேர். அருணாசலத்தின் தகப்பன் சங்கரலிங்க நாடார். தலையைத் துண்டித்து தீயில் எறிந்துவிட்டார்கள். உத்திரமாடன் நாடாரின் சம்சாரம் சங்கிலியம்மா. கிட்டங்கியோரம் கொலையானவள். அவ்ள் குழந்தை அணைந்தபெருமாள். தரையில் எறிந்து கிடந்தவன். அரிசிக்குளம் தெருவில் பலியான பழனியப்பன். அவனது மூத்தண்ணன் செந்தியப்பன். வேறு இடத்தில் கழுத்தறுந்து கிடந்தான். அவனைப் போல் தலைசீவப் பட்ட பாலப்பன் கிருஷ்ண நாடார் சுந்தரம்மா வைரவ நாடாரின் மகன் செந்தியப்பன் செந்திக்குமாரு நாடார் மாரியப்பன். இவர்களில் மாரியப்பன் கோட்டி. உண்ணாமலை மீனாட்சியம்மா கருப்பண நாடார் மூணு பேரும் கழுத்தறுந்து தீயில் கிடந்த மூப்பான உருப்படிகள். இதில் கருப்பண நாடார் குருடு. நாடாரல்லாத அங்கையன் செட்டி. வெட்டுக் காயத்தில் உயிரிழந்தவர். இந்தப் பதினஞ்சும் அடையாளம் தெரிந்த சடலங்கள்.

தெய்வானை வந்து சொல்லாததால் தங்கையாவையும் அடையாளம் தெரியாத பிணமாகவே தள்ளிவிட்டார்கள். ஆக அடையாளம் தெரியாதது மொத்தம் ஒன்பது. அதில் எட்டுக்கு ஊர் பேர் தெரியாது. சாதி தெரியாது. மறவரா நாய்க்கரா வெள்ளாளரா செட்டியாரா துலுக்கரா அம்பட்டையரா வண்ணாரா கைக்கோளரா முதலியாரா ஈழவரா பண்டாரமா கோனாரா குடும்பமாரா பறையரா சங்கிலியரா. தெரிந்தவர்கள் சொன்னால் உண்டு.

சூப்பிரண்டு போலீஸ்காரர்களைத் திரட்டி அங்கங்கே பந்தோபஸ்துக்கு நிறுத்தினார். மேலதிகாரிகளுக்குத் தந்தி கொடுத்தார். விருதுபட்டியையும் கொள்ளையடிக்கப் போவதாகத் தகவல் வந்தது. அங்கே பாதுகாப்புக்குப் போதிய போலீஸ் இல்லை. ஐம்பது சிப்பாய்களை அனுப்புமாறு கலெக்டர் திருச்சினாப் பள்ளி ராணுவ அதிகாரிக்குத் தந்தியனுப்பினார்.

அவர் பிரயாணக் களைப்பில் ரெம்பச் சோர்ந்துபோயிருந்தார். வந்ததிலிருந்து நல்ல சாப்பாடு கிடையாது. சிவகாசியில் தங்க என்னமோ போலிருந்தது. சூப்பிரண்டையும் ராகவய்யாவையும் இருக்கச் சொல்லிவிட்டுத் திருநெல்வேலிக்குப் புறப்பட்டார்.

## 13. சுட்டாலும் சும்மா இருந்தாலும்...

கச்சேரி அதிகாரி பூவலிங்கம் பிள்ளை இருட்டுக்குள் பூனைபோல் வந்து எட்டிப்பார்த்தார். பார்த்தசாரதி அய்யங்காருக்குக் கோவம்.

''எங்க போயிருந்தீர். காத்தால பாத்தது.''

ஏட்டு தலையைச் சொறிந்தார்

''கண்ணு வலி.''

''நன்னாத்தானே இருந்தீர்.''

''திடீர்னுதான்.''

''இப்பச் சரியாயிருக்குமே.''

''கொஞ்சம் தாவல.''

உசேன் சொன்னார்.

''எல்லா வலியும் வரும்.''

சில போலீஸ்காரர்கள் விலகிப் போய்க் கமுக்கமாகப் பேசிக்கொண்டார்கள்.

''இவுக பாஞ்சு சுட்டுத் தள்ளீட்டாகளாக்கும். பேச வந்துட்டாக நெருப் பாத்துல மயிர்ப்பாலம் கெட்ற மகராசங்க.''

''அதச் சொல்லு. திருழாக் கூட்டமாத் தெரண்டு வாறவன எதுத்தா அம் புட்டுத்தான். நம்ம ஓடாம நின்னதே பெரிய காரியம்.''

''கலெக்டரும் சூப்பிரண்டும் நேருல பாத்துருந்தாத் தெரியும்.''

''நேத்து ராத்திரி தங்காமத் தப்பிச்சுப் போயிட்டு சண்ட முடிஞ்சப் பெறகு வந்து முறுக்குறாக.''

''அதிகாரிகன்னா அப்படித்தான். கீழருக்கிறவன்மேல சவாரிவச்சு சாட்டையச் சொழட்றதே வேலையாப்போச்சு.''

''என்ன வந்தாலும் சரி சுட்டுத் தள்ளீறலாமான்னு கையி கொடுகொடுக்கத் தான் செஞ்சது. அதிகாரி வாயிலருந்து ஒரு வார்த்த வராம என்ன செய்ய முடியும்.''

''ஒனக்கென்ன குடும்பம் குட்டின்னு கெடையாதா. பெரிய சண்டீரு மாதிரி பேசுறயே. நம்மளும் மனுசங்கதானப்பா. தனி லோகத்துலயா பெழப்பு நடத்துற.''

''பெறகு சம்பளம் எதுக்கு வாங்குறொம்.''

''பொண்டாட்டி புள்ளீக மொகத்தப் பாக்காம ராப்பகலா நாயாப் பேயா அலையிறமே அதுக்குத்தான். கெணத்துல வுழுந்து சாகிறதுக்கில்ல. நல்லாத் தெரிஞ்சுக்கோ. நீ செத்தா ஒரு நாதி நாத்தங்காலு இல்லாம அந்தா குமிச்சுக் கெடக்குதே பொணங்க அதுகளோடதான் வாயத் தொறந்துக்கிட்டுக் கெடப்ப.''

''இவங்களுக்கெல்லாம் அந்த ஏட்டு மாதிரி ஆளுகதான் சரி. விடிஞ்சதும் தலையக் காட்ன மனுசன் அடஞ்சுதான் வாறாரு. அவரும் கச்சேரி அதிகாரியா இருக்கத்தான் போறாரு. நம்மள மாதிரியா சாவு இப்பயோ பெறகோன்னு உசிரக் கையில ஏந்திக்கிட்டு சவத்துக்கெட்ட பெழப்பு.''

''அதிகாரிக வார்த்தையக் கேட்டு ஓடிஓடிச் சுட்டவன் கதையெல்லாம் தெரியாதா.''

''அட்டமத்துச் சனியன் புடிச்சு புட்டத்துத் துணியவும் உறிஞ்சீருச்சு.''

''சுடாமருந்தா ஆறு மாசம் செயிலு.''

''சுட்டா கெட்ட காலத்துக்குப் பத்து வருசம்.''

''அப்ப சுடாமருக்கிறதுதான் நல்லதுன்னு சொல்லு.''

''ஆறு மாசத்தோடயாவது போகுமே.''

''அப்பயும் செயிலுதான்.''

''தலவிதி.''

முனங்கிக்கொண்டே நடந்து மற்றவர்களுடன் கலந்துவிட்டார்கள்.

இதே கதைதான் ரெண்டு இன்ஸ்பெக்டர்களுக்கிடையிலும் ஓடிக்கொண்டிருந்தது. அய்யங்கார் ஞாபகப்படுத்திப்பார்த்து உசேனிடம் கேட்டார்.

''கலெக்டர் துப்பாக்கிச் சூட்டப்பத்திக் கேக்கறச்சே ஏதோ முணுமுணுத்தேளே என்ன சமாச்சாரம்.''

''சுடச் சொல்லி அதிகாரி உத்தரவு போட்ருந்தாக்கூட சும்மாருந்துருப்பான் இல்ல ஒப்புக்குச் சுட்ருப்பான்னு சொன்னெனன்.''

''ஏன் அப்படிச் சொன்னேள்.''

''அவங்க நெலம அப்படியாகிப்போச்சு. ஏட்டு மாதிரி காணாமப் போகாம நம்மளோடயே இருந்தாங்களே.''

''ஏட்டு செஞ்சது நியாயமில்ல. கச்சேரி அதிகாரியா இருந்துக்கிட்டு காணாமப் போகலாமோ.''

''நியாயமில்லதான். நேத்து கலெக்டரும் சூப்பிரண்டும் கழண்டுக்கிட்டு ஓடுனது நியாயமிங்கிறீகளா. கலெக்டர்தான் போனாரு. சூப்பிரண்டாவது இருந்திருக்கலாமில்லையா. பெரிய அதிகாரிகளே பொறுப்பத் தட்டிக்கழிக்கும் போது சின்னவங்க எம்மாத்தரம். ஒனக்கென்ன வந்தது எனக்கென்ன வந்ததுன்னு எல்லாரும் ஒதுங்கி ஓடுற காலம் இது.''

''அதுதான் நடக்கறது.''

''பொதுவாகவே போலீஸ்காரங்களுக்கு ஒரு தயக்கம் வந்துருச்சு. கூட்டத்தக் கண்டாலே பின்னடிக்கத்தான் செய்றாங்க. துப்பாக்கி தூக்கிக் கூட்டத்தக் குறிவைக்க ரெம்ப யோசிக்கிறாங்க. உத்தரவு போட்டாக்கூட ஏனோதானோன்னு கடமைக்குச் சுடுறாங்க. இந்தப் போக்கு நம்ம சீம முழுக்க வேரோடிக் கெடக்கு.''

''ஏன் அப்படி நடந்துக்கறா.''

''அதுக்கொரு பெரிய கத உண்டு.''

''அப்படியா.''

''ரெண்டு வருசத்துக்கு முந்தி நடந்தது. ஓட்டப்பிடாரம் தாலுகா வண்டானமிங்கிற ஊருல வேதநாயகம் புள்ளன்னு ஒருத்தரு இருந்தாரு. ரெண்டு பொண்டாட்டிக்கார மனுசன்.''

''சரி.''

''ரெண்டு பேரவும் வுட்டுட்டு ஒரு நா பொடுக்னு போயிட்டாரு.''

''பொம்மனாட்டிக பாடு சிரமமாச்சே.''

''அவருக்குக் கொஞ்சம் நெலம் உண்டு. அத முன்னிட்டு மூத்த குடியாளுக்கும் எளையவளுக்கும் சதா தகராறு. சண்ட சச்சரவு செய்றதும் பிராது குடுக்கிறதுமா இருந்தாக.''

''அப்புறம்.''

''மாஜிஸ்திரேட்டுக்கும் இன்ஸ்பெக்டருக்கும் பெரிய மண்டையடியாப் போச்சு. சச்சரவில்லாமப் பாத்துக்கிறச் சொல்லி கொப்பம்பட்டி கச்சேரி ஆபீசருக்கு உத்தரவு போட்டாக.''

''அவா கடம முடிஞ்சது.''

''வேதநாயகம் புள்ள புஞ்சையில கம்மம்புல்லு நல்ல வெளச்சல். ஒருநா எளைய குடியா கருதறுக்கிறதுக்கு ஆள் புடிச்சு அனுப்பீட்டா. மூத்தவ சும்மா ருப்பாளா.''

''சண்டக்காரியாச்சே.''

''அடி எஞ் சக்களத்தி ஒனக்கு மட்டுந்தானா ஆள் கெடைக்கும்னு கறுவிக் கிட்டே கச்சேரியில பிராது கொடுத்து மூணு போலீஸ்காரங்களத் தன்னோட ஆளுகளோட அனுப்பீட்டா. சக்களத்திச் சண்டையில குளிர்காயிறதுக்கு ஆளா இல்ல.''

''நெறையவே இருக்கா.''

''இவங்க போய்ப் பாத்தா புஞ்சையில பத்துப் பதினஞ்சு பேருக்கு மும் மரமா கருதறுத்துக்கிட்ருந்தாங்க.''

''இவா சும்மாருப்பாளா.''

''போலீஸ் மூணு பேர். சுப்பா நாய்க்கர் கச்சேரி ஆபீசர். ரெண்டு போலீஸ் நமச்சிவாயம் புள்ள சப்ஜாமய்யா சாயபு.''

''அங்கயும் ஒரு சாயபு மாட்டிண்டாரா.''

''என்னப் போல.''

''என்ன நடந்தது.''

''சுப்பா நாய்க்கர் கூட்டத்தப் பாத்து ஏம்ப்பா வம்பு பண்றீக. தாவாவில இருக்கிற நெலத்துல எறங்குறது தப்பு. பேசாமப் போயிருங்க இல்ல தொறட்டு வந்து சேரும்னு நல்ல வார்த்த சொன்னாரு.''

''வார்த்தைக்குக் கட்டுப்பட்டாளா.''

''கேக்கிற மாதிரி தெரியல. ரெண்டு பக்கமும் மோதிக்கிட்டா வெவகாரம் பெரிசாயிருமே. போகப்போறீகளா இல்லையான்னு கொஞ்சம் வெரட்னாரு. அவங்க போலீசவே அடிக்கிற மாதிரி மொறச்சுக்கிட்டு நின்னாங்க. நாய்க்கர் பாத்தாரு. அவங்கள எப்படியும் வெரட்டியாகணுமே. வேற வழியில்லாம ஆகாயத்தப் பாத்துச் சுடச் சொல்லி உத்தரவு போட்டாரு.''

''அந்தளவுக்கு ஆயிடுத்தா.''

''ரெண்டு போலீசும் அப்படியே சுட்டாங்க. கூட்டம் நகர்ற மாதிரி தெரியல.''

''சிக்கல்தான்.''

''இன்னொரு தடவ ஆகாயத்துல சுடுங்கன்னு நாய்க்கர் சொல்ல சாயபு காதுல என்ன மாதிரி விழுந்ததோ தெரியல கூட்டத்தப் பாத்துச் சுட்டுட்டாரு.''

''தப்பு நடந்துபோச்சு.''

''தோட்டா சங்கரலிங்கத் தேவரு தொடையைத் தொளச்சு கீழ விழுந் துட்டாரு. ஒடனே கைகலப்பாயிருச்சு. முனியசாமி நாய்க்கருக்கு அடி ஒத.''

''வேற ஏதும் ஆகலயே.''

''கிராம முன்சீப்புக்குத் தகவல் போகவே அவரு ஓடி வந்தாரு. விழுந்து கெடந்த தேவரு தன்னுசாராத்தான் இருந்தாரு. ஏட்டு உத்தரவுப்படியும் மத்தவங்க சொல்படியும் ஒரு போலீஸ் என்னச் சுட்டாருன்னு வாக்குமூலம் குடுத்தாரு. காயம் பெரிசா இருந்ததால அவரு அண்ணைக்கே மண்டையப் போட்டுட்டாரு.''

''இன்னும் சிக்கலாயிடுத்து.''

''மூணு போலீஸ் மேலயும் அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு வழக்குப் போட்டாரு. மாஜிஸ்திரேட் நமக்கெதுக்கு வம்புன்னு வழக்க செசன்ஸ் கோர்ட்டுக்குத் தள்ளீட்டாரு.''

''அவர் என்ன செஞ்சார்.''

''போலீஸ்காரங்க மேல வழக்குப் போடணும்னா இந்திய சர்க்கார் அனுமதி வேணும்னு கோர்ட்ல வாதாடுனாங்க. நமச்சிவாயம் புள்ளையும் சங்கரலிங்கத் தேவரும் கட்டிப் பெரண்டு சண்டபோடும்போது துப்பாக்கி தானா வெடிச்சுத் தொடையில பாஞ்சிருச்சுன்னு வேற ஒரு கதையும் சொன்னாங்க.''

''கோர்ட்டார் தீர்ப்புச் சொன்னாரா.''

''வழக்கத் தனக்கு அனுப்புனது தப்புன்னு சொல்லி மேல்விசாரணைக்காக கலெக்டருக்கு நகத்தீட்டாரு.''

''கலெக்டராவது முடிவெடுத்தாரா.''

''அவரு மாகாண சர்க்கார் மூலமா இந்திய சர்க்காருக்கு எழுதுனாரு. போலீஸ்மேல வழக்குப் போட அனுமதி கெடச்சது. செசன்ஸ் கோர்ட்ல மறுபடியும் வழக்கு வெசாரண நடந்தது. எல்லா நெலமைகளையும் சீர்தூக்கிப் பாத்த கோர்ட்டார் சுப்பா நாய்க்கருக்கும் சாயபுக்கும் ஒரு வருசம் தண்டன சொன்னாரு. ரெண்டு பேரவும் செயில்ல அடச்சாச்சு.''

''சக்களத்திச் சண்ட இப்படி முடிஞ்சது.''

''அதோட முடிஞ்சதுன்னு நெனைக்கிறீங்களா. அதுதான் இல்ல. செஞ்ச குற்றத்துக்குத் தண்டன கம்மின்னு சர்க்கார் வக்கீலுக்குத் தோணியிருக்கு.''

''அது வேறயா.''

''தானாகவே ஹைகோர்ட்டுக்கு அப்பீல் போட்டாரு. கோர்ட்டுக்கும் அப்படித்தான் தோணுச்சு. சுப்பா நாய்க்கருக்கு ஏழு வருசமும் சாயபுக்குப் பத்து வருசமும் தீட்டீருச்சு. ரெண்டு பேரும் நொந்துபோனாங்க.''

''விதி வெளையாடுறதப் பாருங்கோ.''

''ஆச்சு. பதினாலு மாசம் கழிச்சு சுப்பா நாய்க்கர் சர்க்காருக்குக் கருண மனுப் போட்டாரு.''

''எந்த மாதிரி.''

''நியாய விரோதமாகக் கருதறுக்கிறதத் தடுக்க இன்ஸ்பெக்டரும் மாஜிஸ் திரேட்டும் உத்தரவு போட்டதன் பேருல நான் அந்த எடத்துக்குப் போயி அறுவடைய நிறுத்தச் சொன்னென். அது விருதாவாப் போச்சு. கருதறுக்கிறவங்க எதுத்து நின்னாங்க. கூட்டத்தக் கலைக்க ஆகாயத்துல சுடும்படி கூட வந்த போலீஸ் காரங்ககிட்டச் சொன்னென். அதும் பிரயோசனமில்ல. மறுபடியும் சுடும்படி சொன்னென். வாஸ்தவமாகச் சுட உத்தரவு போட்டதா நெனச்சு ஒரு

போலீஸ்காரன் கூட்டத்துமேல சுட்டுட்டான். தோட்டா பாஞ்சு ஒருவன் எறந்துட்டான். அறுக்கிறவங்கமேல சுடணுமிங்கிற எண்ணம் எனக்குக் கெடையாது. அவங்க யாரையுமே எனக்குத் தெரியாது. நான் கெட்ட எண்ணத் தோட செய்யல. மேலிடத்து உத்தரவ நெறவேத்தணும். சட்டவிரோதமான காரியத்தத் தடுத்து நிறுத்தணும். நான் தப்பிக்கிறதுக்கு வழி தேடி வேற கத கெட்டல. நான் ஒரு சாதாரண கான்ஸ்டபிள். சொற்பமான சர்வீஸ். கச்சேரி அதிகாரி பொறுப்புல இருந்தென். பதினாலு மாசம் தண்டன அனுபவிச் சிட்டென். பாக்கித் தண்டனைய ரத்துப் பண்ணி விடுதல செய்யணும். இப்படி.''

''உண்மையத்தான் சொல்லியிருக்கறார்.''

''சர்க்கார் பெரிய போலீஸ் அதிகாரியிட்ட ஆலோசன கேட்டது. தண்டன ரெம்பக் கடுமையாருக்கு கொறைக்கணும்னு அவரு சொன்னாரு.''

''சர்க்கார் கருண காட்டுச்சா இல்லையா''

''மனசு எரங்கி தண்டனையக் கொறச்சிருச்சு.''

''எவ்வளவு.''

''சாயபு இதுவரைக்கும் அனுபவிச்ச தண்டனக் காலம் போக மீதி தள்ளுபடி. சுப்பா நாய்க்கருக்கு மூணு வருசம். உத்தரவு போட்டு மூணு மாசந்தான் ஆச்சு.''

''கச்சேரி ஆபீசர் கதி இப்படியா ஆகணும்.''

''இந்த நெலம நமக்கும் ஆயிறப்புடாதுன்னுதான் நம்ம ஏட்டு தப்பிச்சுப் போயிட்டாரோ.''

''என்ன கருமமோ.''

''இந்தச் சம்பவத்துக்குப் பெறகு போலீஸ்காரங்க கிண்டலாப் பேசிக்கிறது வழக்கமாப் போச்சு.''

''எப்படி.''

''சுடாமருந்தா ஆறு மாசம். சுட்டா கெட்ட காலத்துக்குப் பத்து வருசம்.''

''அப்ப நமக்கு ஆறு மாசம் உறுதிங்கறேள்.''

விளக்கு வெளிச்சத்தில் மறுபடியும் வேலைகளைத் தொடர்ந்தார்கள்.

## 14. மரண ஓலம்

தெய்வானை அன்றைக்கு ராத்திரி ஆஸ்பத்திரியில் தங்கியிருந்தாள். ரெண்டு நாளாக உறக்கமில்லை. ஒரு பக்கம் மூடிக் கிடக்கும் பிணங்கள். இன்னொரு பக்கம் காய வேதனையில் முனங்கி அலறித் துடிக்கும் சனங்கள். தீயில் வெந்த வர்கள் வெள்ளரிப் பழங்களாகப் பிறந்த மேனியுடன் படுத்திருந்தார்கள். இன்னும் எத்தனை பேர் பிணமாகப் போகிறார்களோ.

அவள் ஈரக்குலையைக் கையிலேந்திக்கொண்டு குழந்தைகளுடன் முடக்கிக் கிடந்தாள். தங்கையாவுக்காக உரக்க அழ முடியவில்லை. மூச்சுக்கொருக்க ''தேவான... தேவான...'' என்று குழையும் அவனது முகம் அடிக்கடி நினைவுக்கு வந்தது. குழந்தைப் பருவத்திலிருந்து துணைக்கு வந்தவன் ரெண்டு குழந்தை களைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டானே.

சந்தனமாரிக்குத் தீக்காயம் பட்ட வலது கால் வீங்கியிருந்தது. கிட்டங்கியி லிருந்து தப்பி வரும்போது ஒரு வீட்டில் எரிந்த கூரை காலில் விழுந்து மாட்டிக் கொண்டாள். கூப்பாடு கேட்டு உடனே தூக்கிவிட்டதால் ஒரு காயத்துடன் போயிற்று. தாமதித்திருந்தால் இடுப்புவரை வெந்துபோயிருக்கும். அழத் தெம் பற்றுக் கிறங்கிப்போயிருந்தாள். வலியை மறக்க தெய்வானை சீலை முந்தியால் காயத்தை நீவினாள்.

வெந்துபோன மாரியம்மா ஒரு புறமும் வெட்டுப்பட்ட மகன் அருணாசலம் மறு புறமுமாகக் கிடந்தார்கள். அந்த வேதனையிலும் அவளுக்கு மகன் நினைவு தான். புலம்பிக்கொண்டேயிருந்தாள்.

''மகனே அருணாசலம். எம்புள்ள எப்படி இருக்கான். அவனக் காப்பாத் துங்களேன்.''

அவளைக் காப்பாற்ற முடியவில்லை. மகனைப் பிரிந்து கண்ணை மூடி விட்டாள். இது மகனுக்குத் தெரியாது.

தீக்காயம் சங்கரலிங்கத்தை விட்டுவைக்கவில்லை. கொஞ்ச நேரத்தில் அவனது முனங்கலும் நின்றுவிட்டது. தோட்டா துளைத்த சிவசங்கரனும் அருண கிரி நாடாரும் ஒப்பேறவில்லை.

கட்டில்கள் காலியாகக் காலியாக தெய்வானையைச் சாவு ரெம்பப் பய முறுத்தியது. உழன்று புரண்டாள். உறக்கம் அண்டவேயில்லை.

மனசில் குழப்பம் மண்டியது. விடிந்தால் என்ன செய்வது. எங்கே போவது. திப்பனம்பட்டிக்குப் போக முடியாது. பெரிசுகள் என்ன ஆனார்களோ. அங்கே நிலைமை எப்படியோ. இந்தக் கொந்தளிப்பில் பத்திரமாகப் போய்ச் சேரவும் முடியாது. கஷ்டப்பட்டு கழுகுமலைக்குப் போய்விட வேண்டியதுதான். எப்பாடு பட்டும் குழந்தைகளைக் காப்பாற்றியாகணும். இவர்களைப் பெரிய நாடாரிடம் ஒப்படைத்துவிட்டால் போதும். தனக்கு எப்படியானாலும் சரி.

விடியக்கருக்கலில் அருவமில்லாமல் குழந்தைகளை எழுப்பினாள். சந்தன மாரிக்குக் கால் மேலும் வீங்கியிருந்தது. ஒரெட்டு நடக்க முடியவில்லை. கொடுங் கையில் அவள். காலடியில் வேலையா. ஆஸ்பத்தியில் படுத்திருந்தவர்களை ஒரு முறை பார்த்துவிட்டு அமைதியாகக் கிளம்பினாள். தங்கையாவின் உடலை யாவது கடைசியாகப் பார்க்கணும்போல் மனசு துடித்தது. அவனுக்காக ஒரு சொட்டுக் கண்ணீரை உகுத்துவிட்டு நடந்தாள்.

தென்புறம் வளைந்து நீளும் பெரியகுளக் கரை அவர்களை அடர்ந்த ஓடங் காட்டுக்குள் இறக்கிவிட்டது. காட்டுக்குள் ஊடுருவும் ஒற்றையடிப்பாதை தெற காமல் கூட்டிக்கொண்டு போனது. அவள் இடுப்பில் சொருவியிருந்த சூரிக் கத்தியைத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள்.

வேலையா காலில் முள் தைத்து நொண்ட ஆரம்பித்தான்.

''ஆத்தா காலு வலிக்குது. நடக்க முடியல.''

காத்திருந்து கூட்டிப் போனாள்.

''நின்னுநின்னு போவொம்.''

சந்தனமாரியைத் தோள் மாற்றி அணைத்துச் சுமக்க வேண்டியிருந்தது. பேச்சு உள்வாங்கி ரெம்பத் துவண்டுவிட்டாள். அங்கங்கே உட்கார்ந்து தவிப்பாறி நடந்தார்கள்.

ஒரு ஓடைக் கரையேறும்போது பேச்சரவம் கேட்டது. நின்று கவனித்தாள். வேலையா அவளுக்குப் பின்னால் ஒண்டியபடி எட்டிப்பார்த்தான். கொஞ்சத் தூரத்தில் ஆட்கள் ஆயுதங்களுடன் துண்டந்துண்டமாகப் போய்க்கொண்டிருந் தார்கள். பேச்சு தெளிவாகக் காதில் விழுந்தது.

''என்னமோ பெரிசாக் கெடைக்கும்னு வந்து சோறு தண்ணியில்லாமக் கெடந்ததுதான் மிச்சம்.''

''அதானப்பா. ஏமாந்துட்டமே.''

''வெறுங்கையோட வீட்டுக்குப் போகவா. போற வழியில கெடைக்கிறத வேட்டையாடீட்டுத்தான் போகணும்.''

''ஆமாமா.''

''எட்டி நடங்கப்பா. நமக்கு முந்தி ஆரும் வந்துறப்புடாது.''

ஆட்கள் கடந்துபோகும்வரை காத்திருந்து நடந்தார்கள்.

மர அடர்த்தி குறைந்து தரிசுவெளி விரிந்து கிடந்தது. கீழ்ப்புறம் எருமைகள் மேய்ந்துகொண்டிருந்தன. மாட்டுக்காரன் மல்லாக்கப் படுத்திருந்தான். அவன் கண்ணில் படாமல் ஒதுங்கி மறுபடியும் பாதையில் கொழுவிக்கொண்டார்கள்.

எதிரில் ஒரு ஊர் தெரிந்தது. வேலையா நாவறட்சியில் திக்கினான்.

''ஆத்தா தண்ணி தவிக்குது.''

ஊருக்குள் போகப் பயமாக இருந்தது. மேல்புறம் சுற்றிப் போனார்கள். ஒதுங்கலில் கொல்லுப் பட்டறைக்குள் வேலை நடந்துகொண்டிருந்தது. ஒருவர் துருத்தி ஊத ஒருவர் கம்பி பிடிக்க ரெண்டு பேர் சம்மட்டியடித்தார்கள். தாவாரத் தோரம் வரிசையாக மூணு தண்ணீர்ப் பானைகள் உட்கார்ந்திருந்தன. தெய்வானை தாவார நிழலில் தாமதித்தாள். எல்லா வேலையும் நின்றுவிட்டது. அவள் துருத்திக் காரரைப் பார்த்தாள்.

''இது எந்தூருய்யா.''

அவர் முகத்தில் சூடு குறைந்தது.

''துலுக்கங்குறிச்சி.''

''குடிக்கத் தண்ணி வேணும்.''

ஒரு சம்மட்டிக்காரர் கலயத்தில் மோந்து கொடுத்தார். வேலையா அவசர மாக வாங்கிக் குடித்தான். அவளும் தாகம் தணித்துக்கொண்டாள். சந்தன மாரிக்கு இன்னும் கிறக்கம் தெளியவில்லை. அப்படியே உறங்கிவிட்டாள் போலிருக்கிறது. துருத்திக்காரர் ஏறிட்டுப் பார்த்தார். அவளுக்குப் புரிந்துவிட்டது.

''அய்யா நாங்க பனையேறி நாடாரு. செவகாசிப் பக்கம் திப்பனம்பட்டி. பனைக்குப் போன எம் புருசன் திரும்பவேயில்ல. ரெண்டு நாளாச்சு. ஒருவேள கழுகுமலைக்குப் போயிருப்பாரோன்னு தேடிப் போறென். அதான் நான் பொறந்த ஊரு. கையெடுத்துக் கும்புடுதென். எம் புள்ளீகள ஒண்ணும் செஞ்சிடாதங்க.''

தங்கையா செத்துப்போனதை மறைத்துவிட்டாள். துருத்திக்காரர் எழுந்து கொண்டார்.

''தாயி நீங்களும் தொள்ளாளி. நாங்களும் தொள்ளாளி. இரும்புக்கும் பனைக்கும் என்ன பகையிருக்கு. நீ எத்தன நாளைக்கின்னாலும் எங்களோட பயமில்லாம இருக்கலாம்.''

‘‘இல்லய்யா. கெளம்புதென். நீங்க சொன்னதே போதும்.’’

ஊரைக் கடக்கும்வரை அவர் துணைக்கு வந்து வழி சொல்லி அனுப்பி வைத்தார்.

‘‘பத்தரமாப் போ தாயி.’’

அவள் ரெண்டு மூணு ஊர் கடந்து மதியம் வாக்கில் சத்திரம் சிவன்கோயில் சன்னதி போய்ச்சேர்ந்தாள். பழமையான கோயில். முற்றத்தில் பொங்கல் வைத்ததற்கான அறிகுறி தெரிந்தது. பூசாரி வெளிப்பிரகாரத் திண்டில் தலை சாய்ந்திருந்தார். மார்பில் பூணூல் அயர்ந்து கிடந்தது. கோயிலுக்குத் தென்புறம் உயரமான கல் மண்டபம். அருகில் சிறு குளம். பாதிக்கு நீர் கிடந்தது. குளக்கரை யில் புளிய மரங்கள்.

அவளைப் பார்த்ததும் பூசாரி முற்றத்துக்கு வந்துவிட்டார்.

‘‘என்ன வேணும்.’’

அவள் ஈனக்குரலில் சொன்னாள்.

‘‘புள்ளீக ரெண்டும் சாப்பிட்டு ரெண்டு நாளாச்சு சாமி.’’

‘‘அடப் பாவமே. சித்த பொறுங்கோ வந்துடறென்.’’

அவர் அவசரமாகப் போய்ப் பொங்கல் பானையை எடுத்து வந்தார். வேலையா ஆவலாகப் பார்த்தான். அவர் தளுவையை அகப்பையில் தோண்டி தள்ளி நின்று தொடாமல் கையில் உதறினார். அவர்கள் ஏந்திக்கொண்டார்கள்.

‘‘ஒங்க புள்ளீக நல்லாரிக்கணும் சாமி.’’

‘‘வர்ணமென்ன.’’

‘‘பனையேறி.’’

‘‘பனையேறியா. ஆபத்துக்குப் பாவமில்ல. நன்னாச் சாப்பிடுங்கோ. எலை யிருந்தா வசதியாருக்கும். இல்லையே.’’

அவர்கள் குளக்கரையில் உட்கார்ந்து தளுவையைச் சாப்பிட்டு நீர் குடித்துக் குடலைக் குளிர வைத்தார்கள். அப்போதும் சந்தனமாரி முழிக்கவில்லை. தெய்வானை ஆதங்கப்பட்டாள்.

‘‘புள்ள பட்னியா ஒறங்குதே.’’

மர நிழலில் சற்றுத் தவிப்பாறிவிட்டுத் தெம்பாகப் புறப்பட்டார்கள். வழியில் மொட்டைப் பாறை மலை குறுக்கிட்டது. மலைக்கு மேற்கே ஊர். கீழ்ப்புறமாகச் சுற்றி ஊரைக் கடந்தார்கள். அங்கிருந்து ஏகட்டுக்குக் கரிசக்காடு. அங்கங்கே எல்லைக் காவலிருக்கும் கருவ மரங்கள். குறுக்குப் பாதையொண்ணு தெரிந்தது. அந்தத் துணை கம்மாக் கரையில் கொண்டுபோய் விட்டது.

கரைச் சரிவில் செம்மறியாடுகள் சொகமாக மேய்ந்துகொண்டிருந்தன. சாயங்கால வெயிலில் கம்மாய்க்குள் கூடியிருக்கும் கருவ மரங்களில் பூக்கள் மின்னின. நிதானமாக வந்த ஆட்டுக்காரனிடம் அவள் கேட்டாள்.

‘‘கழுகுமல எங்கரிக்குய்யா.’’

‘‘மேக்க தொலவட்டாச்சே. போறதுக்குள்ள இருட்டீருமே.’’

‘‘தெக்க என்ன ஊரு இரிக்குது.’’

''கலிங்கலூருணி.''

''தூரமா.''

''எட்டிப் போனா செத்த நேரத்துல போயிறலாம்.''

கலிங்கலூருணியா. அது ஆண்டியின் ஊராயிற்றே. முதலில் அங்கே போக லாம். பிறகு துணையாளுடன் கழுகுமலைக்குப் போய்விடலாம்.

கலிங்கலுக்கு நடையை விட்டாள். ஒருவழியாகத் தப்பித்து வந்துவிட்ட நிம்மதி. சந்தனமாரி இன்னும் உசும்பவில்லை. மூடிய முந்திச் சீலைக்குள் அமைதி யாகத் தோளில் படுத்திருந்தாள்.

ஊர் மந்தையில் குட்டையன் பெண்டாட்டி கொசுவக்கா தட்டுப்பட்டாள். தெய்வானை அவளிடம் கேட்டாள்.

''இது கலிங்கலுதான.''

''ஆமா.''

''ஆண்டிப் பாட்டையா வீடு எங்கரிக்கு.''

''ஒங்களுக்கு எந்தூரு.''

''செவகாசிப் பக்கம்.''

''செவகாசியா. என்னாளுக.''

''கழுகுமல பெரிய நாடாரு பேத்தியா.''

''அஞ்ஞாடி அந்தக் குடும்பத்துப் பொண்ணா. ஆண்டிக்கு ஒறவாச்சே. எங்கூட வாங்க தாயி.''

கொசுவக்கா ஆண்டியின் வீட்டுக்குக் கூட்டிப் போனாள். வேற்றாளைப் பார்த்து வேலாயி முழித்தாள்.

''வந்துருக்கிறது ஆருன்னு பாத்த.''

''தெரியலயே.''

''பெரிய நாடாரு பேத்தியா.''

''அட கொடுமையே.''

வேலாயி ஓடிப் போய் தெய்வானையிடம் சந்தனமாரியை வாங்கினாள். செவனம்மா திருணையில் பாய் போட்டாள். பாயில் படுக்க வைத்தார்கள். இதுக்குள் ராக்கன் சொக்கம்மா பொய்யாளி நல்லப்பன் ராமன் வள்ளி எல் லாரும் கூடிவிட்டார்கள்.

சந்தனமாரி அப்போதும் அலுங்கவில்லை. வேலாயி உற்றுப் பார்த்தாள்.

''புள்ள அசந்து ஒறங்குது. காலு வீங்கியிருக்குதே. அந்தக் கெறக்கம் வேற இருக்கும்.''

வேலையா ஆத்தாளைப் பிடித்தபடி எந்த முகமும் அடையாளம் தெரி யாமல் முழித்தான். சொக்கம்மா அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''நம்ம தங்கையா மாதிரியே இருக்குது.''

தெய்வானை வேலையாவை அணைத்துக்கொண்டாள்.

பேச்சுச் சத்தம் கேட்டு வீட்டு மூலையில் சாய்ந்திருந்த ஆண்டி தட்டுத் தடுமாறி எழுந்து வந்தான். பார்வை பற்றவில்லை. அடையாளம் தெரியாமல் திணறினான்.

''ஆரும்மா.''

வேலாயி சொன்னாள்.

''பெரிய நாடாரு பேத்தியா தேவான.''

''ஆரு நம்ம தங்கையாவுக்குக் குடுத்து வடக்க போனாகளே.''

''அதான்.''

''தங்கையா வரலயா.''

''வரல.''

''ஏன்.''

''தெரியல.''

அவன் குத்துமதிப்பாகத் தெய்வானையைப் பார்த்தான்.

''ஏந் தாயி தங்கையா வரல.''

தெய்வானை சமாளித்துப்பார்த்தாள்.

''பொறவு வருவாவ.''

''ஓங்களத் தனியா அனுப்பிவச்சிட்டு அங்க என்ன செய்றாரு.''

''கொஞ்சம் வேலையிரிக்கு.''

''அப்படியென்ன பெரிய வேல.''

அவளால் அழுகையை அடக்க முடியவில்லை. குலுங்கிக் கதறினாள்.

''அவியளக் கந்துகந்தா வெட்டிப் போட்டுட்டாவ.''

வீடே அழுதது. ஆண்டி தலையிலடித்தான்.

''நாங்க காப்பாத்திக் குடுத்த புள்ளையும் போயிருச்சா. அண்ணைக்குக் கலியாணம் முடிஞ்ச கையோட இங்க கூட்டீட்டு வந்து குடியமத்தியிருந்தா இம்புட்டுக்காயிருக்குமா. சம்முக நாடாரு குடும்பம் இப்படியா ஆகணும். பெரிய நாடாரு தாங்க மாட்டாரே.''

குழண்டு கிடந்த சந்தனமாரியைக் குனிந்து பார்த்த செவனம்மாளுக்குச் சந்தேகம். கையைக் காலை அசைத்துப் பார்த்தாள். போட்டது போட்டவாக்கில் கிடந்தது. மூச்சுப் புழக்கமில்லை. உடம்பெல்லாம் நீலம் பூத்திருந்தது. வேலாயிடம் அவசரமாக வந்தாள்.

''புள்ளைக்கு மூச்சுப் பேச்சே இல்ல. மேலு குளுந்துருச்சு.''

சந்தனமாரியைத் தடவிப் பார்த்து உறுதிசெய்த வேலாயி தடுமாறினாள்.

''பச்சமண்ணு அனியாயமாப் பறிபோயிருச்சே.''

வீட்டுக்குள் தணிந்திருந்த அழுகை மறுபடியும் ஓங்கியது. விடியவிடியப் புலம்பல் ஓயவில்லை.

மறுநாள் பொய்யாளி கழுகுமலைக்கு ஓடினான். பெரிய நாடார் அம்மமுத்து சுப்பம்மா மூணு பேரும் வந்தார்கள். மருதன் பாடை கட்டினான். சுப்பம்மா உள்ளூர்ப் பெண்களுடன் உட்கார்ந்து அழுதாள். அம்மமுத்து ஆட்களுடன் சேர்ந்து தோள் கொடுத்தான். ஆண்டியும் பெரிய நாடாரும் பேசத் திராணியற்று தவங்கித்தவங்கி மயானத்துக்கு நடந்தார்கள். சந்தனமாரி சண்முகத்தின் குடும்பத்தில் குடியேறினாள். வேலையா அக்காளுக்குக் கொள்ளிவைத்தான்.

சகல சடங்குகளும் ஆண்டி வீட்டு முற்றத்தில் நடந்தன. தெய்வானை வெள்ளைச் சீலை உடுத்தினாள். பேத்தியின் கோலத்தைக் காணச் சகிக்காத பெரிய நாடார் அழுகையை அடக்கிக்கொண்டு கேட்டார்.

''கழுகுமலைக்கு வா தாயி.''

தெய்வானை கொதுகொதுத்தாள்.

''அங்க வந்தா எம்புள்ளையக் கொன்னுடுவாவ. இங்கயே இரிந்துக் கிடுதென்.''

பெரிய நாடார் ஆண்டியைப் பார்த்தார். அவனுக்கு அது சரியென்று பட்டது.

''எங்களோடயே இருக்கட்டும்.''

சுப்பம்மா சொன்னாள்.

''சின்னவள வெளியூருல குடுத்துட்டு நானும் தனியாத்தான் கெடக்கென். தேவான வந்தாத் தொணையாரிக்கும்னு நெனச்செென். அவ இப்படிச் சொல்லுதா. அதப் பத்தி ஒண்ணுமில்ல. அவ நிம்மதிதான் பெரிசு.''

தெய்வானையை விட்டுவிட்டுப் பெரிய நாடார் குடும்பம் இருட்டிலேயே கழுகுமலைக்குப் புறப்பட்டது.

## 15. பம்மாத்து

மூணாம் நாள் வடக்குத் தெரு சல்லிமாடன் வீட்டில் ஒரே கூட்டமாக இருந்தது. தெருவெல்லாம் சனங்கள் பேசித் தீரவில்லை. சங்கதி ஆண்டி காதுக்கு எட்டியது. தற்செயலாகப் போன ஊர்க் குடும்பனை நிறுத்திக் கேட்டான்.

''என்னடா ஊரடைக்க ஒரே கசபுசலாருக்கு.''

குட்டையன் சொன்னான்.

''சல்லிமாடன் வீட்டுச் சங்கதி சந்தியில இழுபடுது.''

''அவனுக்கு என்ன நோக்காடு.''

''ஒரு கையில ஆக்காட்டி வெரலக் காணுமாம்.''

''அதென்ன ஒத்த வெரலு. எலி கொறிச்சிருச்சா இல்ல ஆடு கரும்பீருச்சா.''

''அருவமில்லாம ஆளுகளத் தெரட்டிக்கிட்டு செவகாசிக் கொள்ளைக்குப் போயிருக்கான்.''

''அடி செருப்பால. களவாணி நாயி. சரி.''

''அங்க போயிப் பாத்தா கூட்டம் திருழா மாதிரி தெரண்டு நிக்கிது. மெரண்டுபோயிட்டாங்க. உள்ள எறங்குனா கத முடிஞ்சிருமோன்னு பயம்.''

''பெறகு என்ன மயித்துக்கு நானும் சண்டூருன்னு போகணும்.''

''ஒரு பம்மாத்துத்தான்.''

''இங்க பண்ற பம்மாத்து அங்க செல்லுமா.''

''சும்மாவும் நிக்க முடியாது. வேல்கத்திய உருவிக் கம்புல ஏத்தியிருக்காக. அப்பப் பாத்து வசமா ஒரு கல்லெறி அதே கையில வுழுந்துருக்கு.''

''கவணெறியாருக்கும்.''

''அது பாரு ஆக்காட்டி வெரலு கத்தியில பட்டு துண்டாத் தறிச்சிருச்சு. சோளத் தட்ட மாதிரி.''

''சொந்தக் கத்தியே பதம்பாத்துருச்சு. பெறகு.''

''பெறகென்ன கொள்ளையாவது மயிராவது. தோட்டாச் சத்தம் வேற வுடாமக் கேட்டுருக்கு. அய்யாவுக்கு ஆட்டங்கண்டுருச்சு. தப்பிச்சொம் பெழச்சம்னு ஓடி வந்துட்டாங்க.''

''அதோடயா போச்சு. வக்காளி வேல்கத்தியிட்டுக் குண்டியில குத்திக் கழு வேத்தி நிறுத்தியிருக்கணும்.''

''மொட்ட வெரலக் காட்டிக்காட்டி பொட்டச்சிககிட்டச் சகடாலடிச்சுக் கிட்ருக்கான்.''

''அதுல ஒண்ணும் கொறச்சலில்ல. தாந்தான் கலகத்தவே நடத்துன மாதிரி.''

''கூடப் போனவன் ஒருத்தன் நடந்த கதையப் போட்டு ஒடச்சிட்டான்.''

''இவன் வார்த்தைய நம்பி எவண்டா கூடப் போனான். பொகலத்த பெயக.''

''எல்லாரும் வெளியூருக்காரன்.''

''அப்படிச் சொல்லு. பெரிய நாடாரு பேரன வெறகு மாதிரி தறிச்சுப் போட்ருக்கான். பாவம் அந்தப் பொண்ணு தப்பிச்சு வந்து இங்க கெடக்குது. அப்பேர்ப்பட்ட கலகத்துல இவன் எறங்கி மீண்டு வந்துருவானாக்கும்.''

''முடியிற காரியமா.''

''ஆமா தெரியாமத்தான் கேக்கென். நீதான ஊர்க் குடும்பன்.''

''சூசுவான்னு இருந்த மனுசனக் குடும்பனாக்கி வுட்டதுமில்லாமக் கிண்டலு வேறயா.''

''ஊருக்கட்ட மீறி இவன் எப்படிடா செவகாசிக்குப் போனான். அண்ணைக்கு வாயி கிழியப் பேசுனதெல்லாம் என்னாச்சு.''

''ஆமாமா பேசுனாக. நமக்கும் நாடாக்கமாருக்கும் பகையில்ல. ஊருல ருந்து ஆரும் போகப்புடாதுன்னு முடிவு செஞ்சாக.''

''ஆளாளுக்கு வந்து ஆச காட்டிக் கூப்புடப் போயித்தானடா ஊரே கூடி முடிவெடுத்துச்சு. அத மதிக்காமப் போயிருக்கான்னா பூளக் கொழுப்புத்தான. என்னயக் கேட்டா இந்தப் பெயல ஊர வுட்டுத் தள்ளி வைக்கணுண்டா.''

''போனதுக்குக் கனமாக் கெடச்சிருக்கு. நம்ம வேற தண்டன குடுக்கணு மாக்கும்.''

''ஒங்கப்பன் புத்திதான ஒனக்கிருக்கும். பொருத்திக் கெட்றதே வேலையாப் போச்சு. இப்படியே வுட்டுப் புடிச்சா எல்லாரும் ஊர மீற ஆரம்பிச்சிருவான். ஒரு கட்டுத்திட்டம் இல்லாமப் போயிரும். எப்படியோ போங்க. நாங்க எவ்வளவு காலத்துக்குக் கண்ணால பாத்துட்ருக்கப் போறொம். ஊரோட ஒத்துமையா எங்களக் கொண்டுபோயிச் சேத்தாச் சரி.''

''அப்பச்சிக்கு அந்தக் கவலையே வேணாம். காளியம்மா கோயிலுப் பொங்கலு மாதிரி காரியம் கச்சிதமா நடக்கும்.''

''கருத்தையக் குடும்பன் போனதுலருந்தே அந்தச் சல்லிப் பெயலுக்குக் குளுரு வுட்டுப்போச்சு. அடிங்கிற மந்திரியுமில்லாம புடிங்கிற ராசாவுமில்லாம பெரிய சண்டீருங்கிற மெதப்புல துமுராத் திரிய ஆரம்பிச்சிட்டான். அங்கங்க சில்றத்தனம் பண்றதும் சிலுவ இழுக்கிறதும் ஆவலாதி கேட்டு முடியல.''

''ஆனா ஊருக்குள்ள மட்டும் எந்தச் சங்காத்தமும் வச்சுக்கிறதில்ல. அந்த மட்டுக்கு நிம்மதி. பெறகு எப்படியும் போயித் தொலையட்டும்.''

''அதனாலதான் இதுவரைக்கு அவன் கத ஓடுது. எவங்கிட்ட வசமாச் சிக்கப் போறானோ.''

ஆண்டி முனங்கிக்கொண்டே போய்விட்டான்

## 16. கழுகுமலைக்குப் போவலய்யா

திப்பனம்பட்டியில் ஆத்தியப்ப நாடாரும் உடையம்மையும் சிவகாசிக் கொள்ளையன்று உயிர் தப்பியது பெரும்பாடு. பனங்காட்டுக்குள் ஓடி ஒளிந் திருந்து ராத்திரி திரும்பினார்கள். ரெண்டு விடிலியும் சாம்பலாகிப்போயிருந்தன. கட்டமண்ணைப் பழுதுபார்த்து கம்பு தேடி ஓலை வெட்டிச் சிறகு மிதித்துக் காய வைத்துக் கூரைமேயக் கொஞ்ச நாளாகும். தங்கையா இல்லாமல் முடியாது.

நாலஞ்சு நாளாகத் தங்கையா திரும்பவில்லை. குடும்பத்துடன் சிவகாசிக்குப் போனவன் என்ன ஆனான். ஒருவேளை அங்கிருந்து கழுகுமலைக்குப் போயி ருப்பானோ. வேறு போக்கிடமில்லை. சிறிசுகளை இழுத்தடித்தால் கசங்கிப் போவார்களே.

பெரிசுகள் கஷ்டப்பட்டு கழுகுமலைக்குப் போய் தகவலறிந்து கலிங்கலுக்கு வந்தார்கள். தெய்வானையைக் கட்டிப்பிடித்துக்கொண்டு உடையம்மை அழுதாள்.

‘‘இதுக்குத்தானா ஒங்கள செவகாசிக்குக் கூட்டீட்டுப் போனான்.’’

அவளுக்கு சந்தனமாரிமேல் அவ்வளவு பிரியம். கஷ்டப்பட்டு வளர்த்தாள். ஆண்டி வந்து ஆத்தியப்ப நாடாருக்குத் தெம்பு சொன்னான்.

‘‘பேத்தியாளோட இங்கயே இருந்து காலந்தள்ளீருங்களேன்.’’

நாடார் கண்ணீர் முட்ட தலையைக் குலுக்கினார்.

‘‘இந்தக் கருமாயத்தப் பாத்துட்டு எங்களால இரிக்க முடியாது.’’

சூகாடியபடி திப்பனம்பட்டிக்குப் புறப்பட்டுவிட்டார்கள்.

அதுக்குள் சோலைத் தேவர் மூணு முறை தங்கையாவைத் தேடி வந்து விட்டார். எரிந்துபோன விடிலிகளைப் பார்த்ததும் என்னென்னமோ நினைப்பு ஓடியது. தங்கையா குடும்பத்துடன் சிவகாசிக்குப் போனது நல்லதுக்குத்தான். இல்லையென்றால் எல்லாரும் அழிந்துபோயிருப்பார்களே.

பெரிசுகளைப் பார்த்ததும் ஆறுதல். ஆவலாக விசாரித்தார்.

‘‘தங்கையா செவகாசியிலருந்து அப்படியே கழுகுமலைக்குப் போயிட் டானா. அதும் ஒரு வெதத்துல நல்லதுதான். கொந்தளிப்பெல்லாம் அடங்குனப் பெறகு வரட்டும்.’’

ரெண்டு பேரும் அழுது கதறினார்கள்.

‘‘அவன் கழுகுமலைக்குப் போவலய்யா. ஒரேயடியா மேல போயிட்டானே. பாவிப் பயலுவ கொன்னுட்டானுவளே.’’

‘‘எம்புள்ள தனியாத் தவிக்குதே.’’

தெய்வானை சொன்ன கதையைத் தேவருக்குச் சொன்னார்கள். அவரால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. உடம்பு முழுக்கக் குலுங்கியது.

‘‘இதுக்குத்தானாடா அண்ணைக்கு எங்கிட்டச் சொல்லீட்டுப் போன.’’

உட்கார்ந்து அழுவதற்காக மரம் தேடிக் காட்டுக்கு நடந்தார்.

## படலம் 17

### 1. பிண வாடை

வெறுப்பில் திருநெல்வேலிக்குக் கிளம்பிப் போன கலெக்டர் ஸ்காட் மறு நாள் காலை சர்க்காருக்கு விவரமாக எழுதினார். பட்டாளத்தை அனுப்பச் சொல்லி திருச்சினாப்பள்ளிக்குத் தந்திகொடுத்தார். வெள்ளைக்கார அதிகாரி பெட்போர் டிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுத் தூத்துக்குடி போய் வெளிநாட்டுக்குக் கப்பலேறிவிட்டார். ஏற்கெனவே வாங்கி வைத்திருந்த லீவு கைவசமிருந்தது.

கலகக்காரர்களுக்கு சிவகாசியைப் போலவே விருதுபட்டி மீதும் குறி இருந் தது. நாடார்கள் பெருத்த செழிப்பான ஊர். அதை நோண்டுவதும் தடுப்பதுமாக நிலைமை இருந்தது. நல்ல வேளை தக்க சமயத்தில் பட்டாளம் வந்ததால் ஊர் தப்பியது.

புது கலெக்டர் பெட்போர்டு துடிப்பானவர். பொறுப்பேற்ற கையோடு சிவகாசிக்குப் புறப்பட்டார். அங்கே நடந்ததைப் பார்த்து அசந்துபோனார். அதி காரிகளிடமும் சனங்களிடமும் விசாரித்தார். நிறைய பொறுப்பு இருப்பதை உணர்ந்தார்.

சிவகாசிக் கொள்ளையில் ஏமாற்றமடைந்தவர்கள் வெறியில் அலைந்தார் கள். அடுத்து ஏதாவது செய்தால்தான் வெறியடங்கும். மேற்கே சிவகிரியில் கூடிப் பேசினார்கள்.

''இப்படியே வுட்டம்னா எளக்காரமாப் போயிரும். நாடான் நம்ம தலையில மோண்டுருவான்.''

''அவன் இருக்கிற எடமெல்லாம் போயி ஒரு கையி பாத்துற வேண்டியது தான்.''

''செவகாசி நாடானுக்கும் தெங்காசி நாடானுக்கும் யேவாரத்துல கூட்டு உண்டு. கொழுத்த பயக. அவங்கமேல போவொம்.''

ஒரு கூட்டம் மேலச்சீமைக்குப் புறப்பட்டது. எல்லாம் கமுக்கமாக நடந்தது. இது சிவகிரி சமீன் மேனேஜர் வேலாயுதம் பிள்ளைக்குத் தெரிந்திருந்தும் அதிகாரி களுக்குத் தெரிவிக்கவில்லை. அவர் கலகத்துக்கு உடந்தையாக இருக்கணும் இல்லை நமக்கெதுக்கு வம்பென்று நழுவியிருக்கணும்.

கலகக்காரர்கள் வேறு திசைகளிலும் பரவினார்கள். ராத்திரியில் பிணம் எரியும் வாடை வந்தது. கலகம் திருநெல்வேலிச் சீமையெங்கும் காட்டுத் தீயாகப் பற்றிக் கொண்டது.

சிவகாசியில் பதட்டம் தணிந்த பாடில்லை. நாடார்கள் துலுக்கக் குடியைத் தாக்கணுமென்று பேசிக்கொண்டார்கள். சூப்பிரண்டு தவித்தார். இதை எப்படி யும் தடுத்தாகணும். ஆட்களைத் திரட்டிக்கொண்டு தயாராக இருந்தார். எதும் நடக்கவில்லை.

ஒரு போலீஸ்காரர் தகவல் சொன்னார்.

''வெள்ளையத் தேவன் நடுவப்பட்டியிலதான் இருக்கானாம். மறுபடியும் செவகாசியத் தாக்கத் திட்டம் போடுறானாம்.''

சூப்பிரண்டு ஆட்களை அனுப்பித் தகவலறிந்து வரச் சொன்னார். சிப்பாய்களை அனுப்பும்படி விருதுபட்டிக்குத் தந்தி கொடுத்தார். சாயங்காலம் கேப்டன் பர்ட்டன் சிப்பாய்களுடன் வந்தார். நடுவப்பட்டிக்குப் போனவர்கள் தகவலேதும் கொண்டுவரவில்லை.

அடுத்த நாள் விடியக்கருக்கலில் சூப்பிரண்டும் கேப்டனும் ஆட்களுடன் புறப்பட்டுப் போய் நடுவப்பட்டியை வளைத்துக்கொண்டார்கள். விடியும் வெளிச்சத்தில் வெள்ளையத் தேவரைத் தேடினார்கள். காணவில்லை. ராமச்சந்திரத் தேவரும் பொன்னுச்சாமித் தேவரும் தட்டுப்படவில்லை. ஒரு வயசாளி கிண்டலாகச் சொன்னார்.

''ஆனையக் காணும்னு அகப்பைக்குள்ள தேடுறான் பாரு ஆக்கங்கெட்ட பய. அவ்வளவு பெரிய கலகத்த நடத்துனவன் இம்புட்டுச் சின்ன ஊருக்குள்ள இருப்பானா.''

போனதுக்கு வெறுங்கையோடு திரும்பாமல் சோளத் தட்டைச் சூந்துக்குள் ஒளிந்திருந்த ஒன்பது பேரைப் பிடித்தார்கள். ஒருவனுக்கு மார்பில் லோசான தோட்டாக் காயம் இருந்தது. சிவகாசிக் கலகம்பற்றி யாரும் வாய் திறக்கவில்லை.

அங்கங்கே கலகம் கொள்ளை நடப்பதாகவும் நடக்கப்போவதாகவும் தகவல் வந்துகொண்டிருந்தது. சூப்பிரண்டு ஆளனுப்பி அணைப் போடப் பிரயாசைப் பட்டார். நிலைமையென்னமோ அதையும் மீறிப் போய்க்கொண்டிருந்தது.

புதுக்கோட்டை வீரபத்திரத் தேவர் கொள்ளையடிக்க வந்துகொண்டிருப்பதாகக் கமுதிக் கச்சேரியிலிருந்து தகவல் வந்தது. நாடார்கள் பரபரப்பானார்கள். போலீஸ் ரோந்து வந்தது. ஒண்ணும் நடக்கவில்லை.

சிவகாசி ஆஸ்பத்திரியில் குற்றுயிராகக் கிடந்த பெண் இறந்துவிட்டாள். அருணாசலம் இப்பவோ பிறகோ என்று கிடந்தான். விசாரணை தொடர்ந்து நடந்தது. நாடார்கள் தயங்கித்தயங்கியே சாட்சி சொன்னார்கள். இது பெரிய இடைஞ்சலாக இருந்தது.

சனிக்கிழமை சாய்ந்தரம் சிவகாசியில் அஞ்சு வெள்ளாளர் வீடுகள் எரிந்தன. போலீஸ்காரர்கள் கஷ்டப்பட்டு நெருப்பை அணைத்தார்கள். நாடார்கள் வேலையாக இருக்குமோ. சந்தேகம் உறுதிப்படவில்லை.

கார்டோஸோவுக்குப் பதிலாக புதுசாக அஸிஸ்டெண்ட சூப்பிரண்டு சீனிவாசாச்சாரி வந்துசேர்ந்தார். அவர் பிராமணர். விசாரணையில் ராகவய்யாவுக்குத் துணை கிடைத்தது. அவர் போக்கு நாடார்களுக்குப் பிடிக்கவில்லை. எதிராளிகளுக்குச் சாதகமாக நடந்துகொள்வதாகப் புகார் கூறினார்கள். விசாரணை தொடர்ந்தது. கலகத்தில் கலந்துகொண்டதாக நூறு பேரைப் பற்றித் தகவல் கிடைத்தது. எல்லாம் சுத்துப்பட்டிக்காரர்கள்.

## 2. கிழக்குச் சீமை

கிழக்குச் சீமையில் அழிம்பு ரெம்ப. சின்னையாபுரத்தைக் குறிவைத்துவிட்டார்கள். அன்றைக்கு மதியமிருக்கும். மேற்கிலிருந்து பெரிய கூட்டம் ஊரை நோக்கி வந்தது. ரெண்டாயிரம் பேர் இருக்கும். கோட்டையூர் திருப்பாற் கடல் நாத பிள்ளையும் சின்னையாபுரம் சண்முகராம பிள்ளையும் கூட்டத்தை நடத்தி வந்தார்கள். செந்தூர் நாடாரும் பெரிய புலமாட நாடாரும் தாக்காட்டிப்பார்த்தார்கள். கேட்பதாக இல்லை. திருப்பாற்கடல்நாத பிள்ளை சொன்னார்.

''சாணாங்களுக்கு அகம்பாவம் கூடிப்போச்சு. மத்தவங்கள மதிக்கிறதில்ல.''

சண்முகராம பிள்ளை சொன்னார்.

''பெரிசாப் பூணூலு போட்டுட்டுத் திரியிறான்.''

திருப்பாற்கடல்நாத பிள்ளை கூட்டத்தைப் பார்த்து உத்தரவு போட்டார்.

''பூந்து வெளையாடுங்க.''

கூட்டம் மொலேரென்று ஊருக்குள் புகுந்தது. கல்லெறியில் ஆரம்பித்த கலகம் கொலையிலும் கொள்ளையிலும் முடிந்தது. மூணு கொலை.

பொன்னணஞ்சி நாடாரும் அவர் சம்சாரம் பார்வதியும் வீட்டைப் பூட்டிக் கொண்டு உள்ளே இருந்தார்கள். வெளியே கூக்குரல் கேட்டது.

''அய்யோ வந்துட்டாங்களே.''

கொஞ்ச நேரத்தில் கூட்டம் கதவை உடைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தது. அங்கிருந்த இருவரும் பயந்துபோய் முற்றத்துக்கு ஓடிவந்தார்கள். மச்சுவீட்டுக்குள் வைத்திருந்த நகைப் பொட்டணம் நினைவுக்கு வரவே நாடார் மறுபடியும் உள்ளே போனார். பொட்டணம் ஏற்கெனவே ஒருவர் கையில் சிக்கியிருந்தது. அதைப் பிடுங்கப் போனார். அந்த நேரத்தில் ஒருவர் அவரை தலையிலும் கழுத்திலும் வெட்டினார். ஒரு காலில் வெட்டினார். ஒருவர் கத்தியால் குத்தினார். அவர் கீழே சாய்ந்தார். உடனே உயிர் பிரிந்துவிட்டது.

அவர் அலறுவதைக் கேட்டு உள்ளே வந்த பார்வதி அதிர்ச்சியில் அவர்மேல் பாய்ந்துவிட்டாள். அவளுடைய காதிலும் கழுத்திலும் இருந்த நகைகளைப் பறித்தார்கள். வீட்டில் ஒரு பொருள் விடாமல் கொள்ளையடித்தார்கள். கடைசியாகத் தீவைத்துவிட்டுக் கிளம்பினார்கள்.

தங்கண நாடாருக்கும் இதே கதிதான். நகைப் பெட்டியைக் கொள்ளையடித்ததைத் தடுக்கப் போனவருக்கு உடம்பெல்லாம் கத்திக் கம்பு துளைத்தது. கழுத்தில் விழுந்த ஆழமான குத்தில் அந்த இடத்திலேயே மண்டையைப் போட்டுவிட்டார்.

ஆறுமுக நாடாருக்கு விடிந்த விதி வேறு மாதிரி. அவரது வீட்டைக் கொள்ளையடித்துத் தீவைத்தார்கள். வெளியே நின்றிருந்தவர் கைநீட்டி அழுது முறையிட்டார்.

''அய்யோ என் வீடு பத்தி எரியிதே. மோசம்போச்சே.''

ஏழெட்டுப் பேர் அவரைப் பிடித்து அலக்காகத் தூக்கித் தீயில் எறிந்துவிட்டார்கள். உருண்டு புரண்டு மீண்டு வந்தார். மறுபடியும் அடித்துச் சவட்டினார்கள். உயிர் கிடந்தது. பிழைக்கிற மாதிரி தெரியவில்லை.

பொறையூர் வேத நாடார் கோட்டையூரில் பெரிய பணக்காரர். அவரது வீட்டை அலங்கோலப்படுத்திவிட்டார்கள். பிள்ளையார் கோயிலில் ஒண்டி யிருந்த செந்தூர் நாடார் வீட்டுக்கு ஓடிப் போய்ப் பூட்டிக்கொண்டார். கூட்டம் சாயங்காலம் அங்கே போனது. அவர் துப்பாக்கி வைத்திருந்தார். அதைக் கொண்டு சுட முடியாது. பழுதானது. அது அவருக்குத்தான் தெரியும். அவர் கூட்டத்தைப் பார்த்துச் சொன்னார்.

''என் வீட்ட வுட்ருங்க.''

ஒருவர் கேட்டார்.

''எங்களுக்கு எவ்வளவு தருவ.''

இன்னொருவர் அரட்டினார்.

''சொல்லுடா.''

அவர் சொன்னார்.

''ஐநூறு தாறென்.''

''சரி. பேச்சு மாறப்புடாது.''

''மாறுனா அம்புட்டுத்தான்.''

அன்றைக்கு அவர் வீடு தப்பியது.

கலகத்தில் பெரும்பாலான வீடுகள் சாம்பலாகிவிட்டன. கார வீடுகளுக்குக் கடுமையான சேதம். வேதக்கார வீடுகளையும் விட்டுவைக்கவில்லை. மொத்தம் பன்னிரெண்டில் எட்டுக் கூரை எரிந்துபோனது. ரெண்டு தகர்ந்து நொறுங்கி விட்டது. மிச்சம் ரெண்டுக்கு மட்டும் சொற்பச் சேதம்.

இருபத்தஞ்சு பேருக்கு மேல் காயம். அஞ்சாறு பேர் நிலைமை மோசமாக இருந்தது. ஆணும் பெண்ணுமாக அனேகம் பேருக்குக் காதறுப்பு. மூணு பெண்களை நிர்வாணமாக்கினார்கள்.

பெரும்பாலான பெண்கள் வேதக் கோயிலில் தஞ்சமடைந்திருந்தார்கள். பலர் காது நகைகளைக் கழற்றித் துணியில் முடிந்துவைத்திருந்தார்கள். ஒரு கூட்டம் அங்கேயும் கைவரிசையைக் காட்டியது. கதவை உடைத்து நகைகளைப் பறித்துக் கொண்டு போனது.

அன்றைக்கு ராத்திரி நாடார்கள் கூடிப் பேசி மூணு பேரை விருதுபட்டிக்கு அனுப்பிவைத்தார்கள். அவர்கள் சுற்றுப்பாதை வழியாகப் போய் அதிகாரி களிடம் முறையிட்டார்கள்.

''அய்யா எங்க ஊரே எரிஞ்சுபோச்சு. எல்லாம் பறிகுடுத்துட்டோம். மறு படியும் வாறதாச் சொல்லீட்டுப் போயிருக்காங்க.''

அடுத்த நாள் காலை அஸிஸ்டெண்ட கலெக்டர் வாலர் சிப்பாய்களுடன் சின்னையாபுரத்துக்குக் கிளம்பினார். சொன்னது போலவே கலகக்காரர்கள் ஊருக்குப் பக்கத்தில் கூடியிருந்தார்கள். நாடார்களை மிரட்டினார்கள்.

''ஒளிச்சு வச்சிருக்கிறதெல்லாம் மூச்சுக்காட்டாம எடுத்துட்டு வந்து குடுத் துருங்க.''

''குடுக்கலன்னா எத்தன கொல வுழுகும்னு சொல்ல முடியாது.''

''நல்லா முடிவு செஞ்சுக்கங்க.''

நாடார்கள் பதறிப்போயிருந்தார்கள்.

''எங்ககிட்ட ஒண்ணுமே இல்லய்யா.''

''பொய் சொல்லாத வாயக் கிழிச்சிருவென்.''

பட்டாளத்தைக் கண்டதும் கூட்டம் கலைந்து ஓடியது. யாரையும் சுடக் கூடாது என்பது வாலர் உத்தரவு. விரட்டி எட்டுப் பேரைப் பிடித்தார்கள். அதில் ஒருவர் முரடர். வாலர்மீது பாய்ந்து கட்டிப் புரண்டார். பிடிக்கப் போன சிப்பாய் களுடனும் மல்லுக்கட்டினார். அப்படியும் அவரைக் காயப்படுத்தாமல் வசப் படுத்தினார்கள்.

பத்து மணி வாக்கில் சின்னையாபுரத்தை அடைந்தார்கள். ஊரில் தீயின் கணகணப்பு அடங்கவில்லை. வெக்கை தகித்தது. அஞ்சாறு மாடுகள் சாவகாச மாக எரிந்துகொண்டிருந்தன. நாற்றம் சகிக்கவில்லை. இடிபாடுகளுக்கிடையில் ஒண்ணும் செய்ய முடியாத நிலை.

வாலர் சனங்களுக்குத் தைரியம் சொன்னார். சில சிப்பாய்களையும் போலீசையும் நிறுத்திவிட்டு விருதுபட்டிக்குப் புறப்பட்டார்.

மூணாம் நாள் மதியம் ரெண்டாயிரம் பேர்வரை வந்து மறுபடியும் சின்னையாபுரத்தைத் தாக்கினார்கள். காவலிருந்த சிப்பாய்களால் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. தோட்டாக்களை ஏவினார்கள். ஆறு பேர் விழுந்துவிட்டார்கள். அஞ்சு பிணங்களைத் தூக்கிக்கொண்டு போய்விட் டார்கள். ஒருவர் மட்டும் படுகாயத்துடன் கிடந்தார். அடையாளம் தெரியாத அவரும் கொஞ்ச நேரத்தில் செத்துப்போனார். மறுபடியும் தாக்க வருவார்கள் என்ற எதிர்பார்ப்பில் பட்டாளம் தயாராகவே இருந்தது.

சேதியறிந்த வாலர் நிறைய சிப்பாய்களுடன் வந்தார். துலுக்கபட்டி ரயில் கெடியில் இறங்கிச் சின்னையாபுரத்துக்கு நடந்தார்கள். நாடார்களின் பொறுமை யான உழைப்புக்குச் சாட்சியாகக் கரிசல் நிலமெங்கும் வெள்ளாமைகள் அஞ்சும் பிஞ்சுமாக அடர்ந்திருந்தன. அந்தி சாயும்போது சின்னையாபுரத்தை அடைந் தார்கள்.

அப்போதைக்கு ஊர்களில் அமைதி குடியேறியிருந்தது. ஆனாலும் கலகக் காரர்கள் அந்தப் பக்கம் சுற்றிக்கொண்டுதான் திரிந்தார்கள். அதில் சந்தேகமே இல்லை. அவர்கள் சிப்பாய்களைக் கண்டு அஞ்சுவதாகத் தெரியவில்லை.

சின்னையாபுரத்தில் ஒரே ஒரு கட்டிடம் மட்டும் மிஞ்சியிருந்தது. அது வேதக் கோயில். சிப்பாய்கள் அங்கே தங்கினார்கள்.

மூணாவது முறையாக அந்த ஊரைத் தாக்க முடியாத கலகக் கூட்டம் அன்று ராத்திரி அருகிலுள்ள நாலு கிராமங்களைக் கொளுத்திவிட்டது. சிப்பாய் களால் எதும் செய்ய முடியவில்லை.

மறுநாள் காலை நாலு மைல் தொலைவிலுள்ள வதுவார்பட்டிக்கு ஆபத்து என்று சேதி வந்தது. பட்டாளம் அங்கே போனது. ஆயிரம் பேருக்கு மேல் வந்து மிரட்டியிருக்கிறார்கள்.

''ஐநூறு ரூவா வேணும். தரலன்னா ராத்திரிக்கு வந்து வச்சுக்கிருவொம்.''

சிப்பாய்கள் தெருக்களில் அணிவகுத்து நடந்தார்கள். ஆணும் பெண்ணு மாக ஊர்ச் சனங்கள் அத்தனை பேரும் அதிகாரிகளின் காலில் விழுந்து மன்றாடி னார்கள்.

''எங்களக் காப்பாத்துங்க சாமி.''

அங்கேயும் சிப்பாய்களை நிறுத்திவிட்டு வாலர் சின்னையாபுரம் திரும்பி னார். மதியத்துக்கு மேல் கலெக்டர் வந்தார். பட்டாளத்தில் கொஞ்சப் பேர் சிவகாசிக்குப் புறப்பட்டார்கள். ஊத்துமலை சமீன் கிராமங்களில் கலகம் நடக்கப்போவதாகத் தகவல் கிடைத்தது. இருபது சிப்பாய்களைக் கூட்டிக் கொண்டு கலெக்டர் தென்காசிப் பக்கம் விரைந்தார்.

உப்பத்தூர்ப் பக்கம் அய்யம்பட்டியில் நாடார் வீடுகள் நிறைய உண்டு. பல சாதிக்காரர்களும் சேர்ந்து அவற்றைக் கொள்ளையடித்து நகை தானியம் என்று அள்ளிக்கொண்டு போய்விட்டார்கள். சில வீடுகளுக்குத் தீயும் வைத்தார்கள். இதுபற்றி உப்பத்தூர் அருணாசல நாடார் மாசார்பட்டி கச்சேரியில் பிராது கொடுத்தார். உப்பத்தூரில் அவரது சொத்துக்களுக்கு ஒரு ஏட்டும் பத்துப் போலீசும் காவலிருந்தார்கள்.

நாலஞ்சு நாள் கழித்து கச்சேரி அதிகாரி பிராதை விசாரிப்பதற்காக உப்பத் தூருக்குப் போய்க்கொண்டிருந்தார். அப்போது பீக்கிலிபட்டி குடும்பமார் இரு நூறு பேருக்கு மேல் உப்பத்தூரை நோக்கித் திரண்டு போவதைப் பார்த்தார். ஆற்றுக்குத் தென்புறம் பீக்கிலிபட்டி. வடகரையில் உப்பத்தூர். அவர் உப்பத் தூருக்கு எட்டி நடந்து போய் அங்கே காவலிருந்த போலீஸ் எட்டுப் பேரைக் கூட்டிக்கொண்டு பீக்கிலிபட்டிக்காரர்களைச் சந்திப்பதற்காகத் திரும்பி வந்தார். அவருடன் நிறைய நாடார்களும் வந்தார்கள்.

ஆற்றைக் கடந்தால் மானம்பாரி நிலங்கள். பீக்கிலிபட்டிக் கூட்டமும் நெருங்கிவிட்டது. கச்சேரி அதிகாரி அவர்களிடம் சொன்னார்.

''கலஞ்சு போயிருங்க.''

கூட்டம் இன்னும் நெருங்கியது.

''போக முடியாது.''

போலீஸ்மீது கல்லெறிந்தார்கள். அதிகாரி சுடச் சொல்லி உத்தரவு போட் டார். உடனே துப்பாக்கிச் சத்தம் தொடர்ந்து கேட்டது. ஒருவருக்கு மார்பில் தோட்டா பாய்ந்து விழுந்துவிட்டார். அவர் பேர் சாத்தன். ரெண்டு பேருக்கு லேசான காயம். போலீசும் நாடார்களும் திரும்பிவிட்டார்கள்.

ரெண்டு நாள் கழித்து பெரிய போலீஸ் அதிகாரியும் தாசில்தாரும் பீக்கிலி பட்டிக்கு வந்தார்கள். அதுவரை சாத்தனின் சடலம் ஊருக்கு வெளியே கட்டிலில் நாதியற்றுக் கிடந்தது. இடது மார்பிலிருந்து ஈரக்குலையைத் துளைத்து வலது முதுகுச் சதையில் தங்கியிருந்த தோட்டாவை ஒரு அதிகாரி வெளியேற்றினார். நாலா சாதிக்காரர்கள் நாற்பத்தெட்டுப் பேர் கைதுசெய்யப்பட்டார்கள்.

பீக்கிலிபட்டிக்காரர்கள் சாத்தன் சாவுக்கு வேறு கதை சொன்னார்கள்.

''அய்யம்பட்டியில கொள்ளையடிச்ச சாமாங்கள எடுக்கிறதுக்காக உப்பத் தூரு நாடாருக எங்க ஊருக்குள்ள மொழைய வந்தாக. அதத் தடுத்து நிறுத்துறதுக் காக நாங்க போனொம்.''

''நாடாருகதான் எங்களச் சுட்டாக.''

சாத்தனின் தாயார் சொன்னாள்.

"முத்தரசுவேத நாடாருதான் எம்மகனக் கொன்னது."

அப்படியே பிராதும் கொடுத்தாள்.

பிறகொரு நாள் உப்பத்தூரில் ஐம்பது வீடுகள் எரிந்துவிட்டன. நாடார்கள் மற்ற சாதிக்காரர்களின் வீடுகள். ஒரு கோட்டிக்காரப் பெண் வெந்து மடிந்து விட்டாள்.

அக்ரஹாரப்பட்டி துலுக்கபட்டி கரிசக்குளம் மாதலப்புரத்தில் கொள்ளை. முத்தலாபுரத்தில் ஒரு வீடு மட்டும் சூறை. ஏழை நாடார்களின் வீடுகளைத் தொடவில்லை. போலீஸ் தடுத்துவிட்டதால் நாகலாபுரம் தப்பியது.

## 3. தெற்குச் சீமை

தெற்குச் சீமையில் அனேக ஊர்களில் அடாவடிக்குக் குறைச்சலில்லை. கோயில்பட்டியருகே சிவனணைந்தபுரத்தில் நகை பருத்தி தானியம் துணிமணி பாத்திரம் எதையும் விட்டுவைக்கவில்லை. மூணு பேருக்கு மோசமான காயம். ஒருவருக்குக் கை ஒடிந்துவிட்டது. ஒரு நாடார் அரிவாளை எறிந்ததில் சுப்பன் சேர்வைக்கு முதுகில் வெட்டு.

கயத்தாறுப் பக்கம் இலந்தைக்குளத்தில் மறவரும் சக்கிலியரும் சேர்ந்து நாடார் வீடுகளைக் கொள்ளையடித்தார்கள். ஆவடையின் காது அறுந்தது. அவமானத்தில் தற்கொலை செய்துகொண்டாள். கிராம முன்சீப் நாய்க்கர். பத்து நாளுக்குப் பிறகுதான் ரிப்போர்ட் எழுதினார். ஆவடை தற்செயலாகச் செத்தாள் என்று சொல்லிவிட்டார்.

மானூர்ப் பக்கம் கட்டாலங்குளம் வாகைக்குளம் அழகிய பாண்டியாபுரம் உக்கிரன்கோட்டை செட்டிகுறிச்சி ஒட்டடப்பிடாரத்தருகே தளவாய்புரம் கழுகு மலையோரம் நைனாம்பட்டி என்று பல ஊர்களில் சகட்டுமேனிக்குக் கொள்ளை நடந்தது. சிவகாசிப் பக்கம் கன்னிசேரி கல்போது தியாகராஜபுரம் ஏழாயிரம் பண்ணையருகே ரெட்டியபட்டி இன்னும் தெற்கே ஈராச்சி சிவந்திபட்டி கழுகு மலை அகிலாண்டபுரம் அச்சம்பட்டி மாவிலோடை ஐராம்பட்டி புதுப்பட்டி சீவலப்பேரி ஆகிய ஊர்களில் போலீசும் சனங்களும் கொள்ளை நடக்க விடாமல் தடுத்துவிட்டார்கள்.

எட்டயாபுரத்துக்குத் தெற்கே புங்கவர்நத்தம் பெரிய ஊர். சமீனில் பெண்ணெடுத்த மாப்பிள்ளைச்சாமி குடும்பங்கள் உண்டு. நாடார் குடும்பங்கள் அதிகம் இருந்தன. அங்கே நாடார்களது கடைகளைச் சூறையாடிவிட்டார்கள். ஒருவருக்குக் காயம்.

அன்றைக்கு ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் ஈராலில் இருந்தார். புங்கவர்நத்தம் நாடார்கள் அவரிடம் போய் பிராது சொன்னார்கள்.

"தொரையே எங்க ஊரக் கொள்ளையடிக்கிறதுக்கு தேவமாரு வாறாக."

"நீங்க எங்க ஊருக்கு வந்து எங்களக் காப்பாத்துங்க."

அவர் போனார். கடையில் ஒருவரைக் கட்டிவைத்திருந்தார்கள். உடம் பெங்கும் வெட்டுக்காயம். நாடார்கள் சொன்னார்கள்.

''கொள்ளையடிக்க வந்தவன். நத்தம்பட்டி முத்தையத் தேவன்.''

தெருவில் அரிசிமுதல்கொண்டு பண்டங்கள் சிதறிக் கிடந்தன. நாலு காவக் கார மணியக்காரர்களையும் கட்டிவைத்திருந்தார்கள். மாஜிஸ்திரேட் முத்தையத் தேவரை விசாரித்தார்.

''கொள்ளையடிக்க வந்தயா.''

''இல்லய்யா. எங்க ஊரு சீனி நாய்க்கரு காடல்குடி புள்ளமாருக்கு ஒரு கடு தாசி குடுத்தனுப்புனாரு. அதக் குடுத்துட்டு இந்த ஊரு வழியா வரயில நாடாக்க மாரு புடிச்சு கத்தி கம்பால வெட்டி அடிச்சு வண்டிப் பைதாவில கெட்டிப் போட் டாக. பெறகு புளியமரத்துல கெட்டி வச்சாக. ஒரு பெரிய மனுசன் இங்க வரப் போறதாக் கேள்விப்பட்டு என்னைய மரத்துலருந்து அவுத்துக் கொண்டுவந்து கடையில கெட்டீட்டாக. கொள்ளையடிச்சதுக்கு அத்தாச்சியா பண்டங்களச் செதறி வச்சிட்டாக.''

மாஜிஸ்திரேட் முத்தையத் தேவரிடம் வாக்குமூலம் வாங்கிக்கொண்டார். நாடார்கள் மீது வழக்கு போடப்பட்டது.

முத்தையத் தேவரை அடித்ததுக்குப் பழிதீர்க்க மறவர்கள் வரப்போவதாக ஊருக்குள் பேச்சு அடிபட்டது. மூணு நாள் கழித்து ஆயுதங்களுடன் வந்தேவிட் டார்கள். நூறு பேர் இருக்கும். மறவரும் குடும்பமாரும் அதிகம். ஊரைக் கொளுத்தத் திட்டம்.

சமயத்தில் போலீஸ் வந்து தடுத்துவிட்டது. ஓடிவிட்டார்கள். பசுவந்தனை பெரியசாமிப் பண்டாரம் அகப்பட்டார். வந்தவர்கள் நாகம்பட்டி பசுவந்தனை சீவலப்பேரி தீத்தாம்பட்டிக்காரர்களென்று அவர் பேச்சிலிருந்து தெரிந்தது.

திருச்செந்தூர் அம்மன்புரம் ஸ்ரீவைகுண்டம் பகுதியிலும் கொலை கொள்ளை நடந்தன. ஆழ்வார் திருநகரிப் பக்கம் பெரிய சாலையில் ஒருவர் கொலை செய்யப்பட்டுக் கிடந்தார். அவர் பெண்டாட்டிக்கும் பலத்த காயம். பல இடங் களில் போலீஸ் விசாரணை ஏனோதானோவென்று நடந்தது. சனங்களுக்கு அவர்கள்மீது நம்பிக்கை போய்விட்டது. பலர் பாதுகாப்புக்காகத் துப்பாக்கி வாங்கி வைத்துக்கொண்டார்கள். எனக்கும் ஒண்ணு வாங்கிக் கொடுங்கள் என்று கைம்பெண்ணொருத்தி நாசரேத் வேதச் சாமியாரிடம் பணம் கொடுத்தாள்.

## 4. கோழிக் கொள்ளை

சிவகாசி ஆஸ்பத்திரியில் அத்தாகுத்தியாகக் கிடந்த அருணாசலம் இறந்து விட்டான். தாய் மாரியம்மா அவனை முந்திக்கொண்டது கடைசிவரை அவனுக்குத் தெரியாது. ஆக கலகத்தில் மொத்தச் சாவு இருபத்தொண்ணு.

சிவகாசிப் பக்கம் கோணம்பட்டியில் ஒரு கொள்ளை நடந்தது. ரெண்டு பேர் சேர்ந்து துணிந்து செய்த கொள்ளை. கைக்குச் சிக்கிய பண்டத்தைத் துண்டி னால் முழுக்க மூடி கக்கத்தில் இடுக்கிக்கொண்டு அவர்கள் தப்பித்துப் போகும்

வேளையில் பாழாய்ப்போன போலீஸ்காரர்கள் பார்த்துவிட்டார்கள். ஒரு அரட்டு வந்தது.

''அந்தா கனமாக் கொள்ளையடிச்சிட்டுப் போறான். வுடாத புடி.''

''ஏலே நில்லுலே. ஓடுனாச் சுட்டு மலத்தீருவென்.''

அவர்கள் நிற்கவில்லை. இன்னும் வேகமாக ஓடினார்கள். போலீஸ்காரர்களுக்குச் சந்தேகம் வலுத்தது.

''நல்ல வேட்ட போலருக்கு. அதான் இந்த ஓட்டம் ஓடுறான். இவங்களப் புடிக்கிறதுக்குள்ள நாக்குத் தள்ளீரும். எளவட்டப்புள்ளீக வெரட்டிப் புடிங்கப்பா.''

கொழுத்த பங்கு கிடைக்கும் ஆசையில் தொடர்ந்து விரட்டினார்கள். கிட்ட நெருங்கும்போது வித்தியாசமான சத்தம் கேட்டது.

''ஏலே கார்கார்னு என்னமோ புதுசாச் சத்தம் கேக்குது.''

''அவன் எளைக்கிற சத்தமாருக்கும்.''

''மயிராண்டிக்கு அம்புட்டும் தெரியும். இப்படி எளச்சா அவனால இந்த ஓட்டம் ஓட முடியாது. இது வேற சத்தம்.''

ஒரு ஓடைக்குள் இறங்கி ஏறும்போது வளைத்துப் பிடித்துவிட்டார்கள். எல்லா போலீஸ் முகங்களிலும் வேர்வையை மேதிய சிரிப்பு.

கள்ளர்களின் கக்கத்திலிருந்த பொட்டணங்களை வெடுக்கென்று பிடுங்கினார்கள். இப்போது கார்கார் சத்தம் பலமாகக் கேட்டது. மூடியிருந்த துண்டுகளை உதறிக்கொண்டு ஒரு கனத்த சாவலும் கோழியும் கீழே குதித்து வேனாவெயிலில் ஓட ஆரம்பித்தன. அவற்றின் கெக்கரிப்பு எக்காளமிட்டது.

ஒரு வயசான போலீஸ்காரர் கோவத்தில் கத்தினார்.

''போயும்போயும் கோழியக் களவாண்டுருக்கான் பாரு பொகலத்த தாயிளி. அவன் குண்டியில ரெண்டு பூச குடுப்பா.''

கள்ளர்களுக்குக் கிடைத்த அடி சொல்ல முடியாது.

''இப்ப கோழியப் புடிச்சிட்டு வந்து குடுக்கலன்னா நோணி பிதுங்கீரும். ஓடுங்கலே.''

அவர்கள் தலைதெறிக்க ஓடினார்கள். ஓடும்போதே ஒருவன் கேட்டான்.

''இந்தச் சாக்கிலயே பிச்சுப் புடுங்கித் தப்பிச்சிருவமா.''

''அம்புட்டுத்தான். நம்மள நொங்கீருவான். பேசாம இரு. நகநட்டவா களவாண்டுருக்கொம்.''

நல்ல வேளை கோழியும் சாவலும் மஞ்சணத்தி நிழலில் தவிப்பாறிக்கொண்டிருந்தன. அதுக்குமேல் ஓட முடியாமல் அகப்பட்டுக்கொண்டன.

''வக்காளி இதுகளப் புடிக்கப்போயி முதுகு பழுத்துருச்சு.''

உருப்படிகளைத் தலைகீழாகப் பிடித்துச் சுமந்து வந்தார்கள்.

''அதுக கால வசமாக் கெட்டுங்கலே.''

துண்டில் துணி கிழித்து கோழிக்கும் சாவலுக்கும் கால்கட்டுப் போட்டார்கள்.

''கீழ போடுங்கலே.''

தரையில் இறக்கிவைத்தார்கள்.

''புடிச்சதுதான் புடிச்சானே. ஈரத்துணியால மூடியிருக்கப்புடாதா. பேசாமக் கெடந்துருக்கும்.''

''சாராயத்துக்கு வறட்டித் திங்கப்போற வெறியில எல்லாம் மறந்துருக்கும்.''

‘‘நாக்குத்தள்ள வெரட்டியும் கோழிய வுட்ருக்கானா பாரு.’’

‘‘கோழிமேல அம்புட்டு ஆச.’’

வயசாளிப் போலீஸ்காரர் கேட்டார்.

‘‘கோழிய வித்துக் காசாக்கிறதுக்கா களவாண்டீக.’’

ரெண்டு பேரும் பக்கவாட்டில் பலமாகத் தலையாட்டினார்கள்.

‘‘சாராயம் குடிக்கிறதுக்கா.’’

அதுக்கும் ‘இல்லை’தான். அவர்கள் முகம் சிறுத்துக்கொண்டேவந்தது.

‘‘பெறகெதுக்காம்.’’

ஒருவன் மெல்ல வாய்திறந்தான்.

‘‘சாப்பிட்டு மூணு நாளாச்சு.’’

‘‘அதனால...’’

‘‘பசியால கொடலுப் பத்தி எரியிது. இதச் சுட்டுத் தின்னாவது பசியக் கொஞ்சம் அமத்தலாம்னு கஸ்டப்பட்டுப் புடிச்சொம்.’’

‘‘அறுதப் பயலே. ஒனக்குக் கொஞ்சமாச்சும் அறிவிருக்கா. ஒங்களால தானடா நாங்களும் பட்னி கெடக்கொம். நாங்க வயிறாரச் சாப்பிட்டு எத்தன நாளாச்சு தெரியுமா. ஆமா ஒங்களுக்கு எந்தூரு.

‘‘அருப்புக்கோட்டப் பக்கம்.’’

‘‘நீங்க கெழக்கருந்து வந்துருக்கீக. நாங்க மேக்கருந்து வந்துருக்கொம் வர்ணமென்ன.’’

‘‘நான் தேவமாரு. அவன் கோனாரு.’’

‘‘கொள்ளைக்காகப் பங்காளியாயிட்டீகளாக்கும். ஊருல ஒத்துமையா இருப்பீகளா.’’

‘‘இருப்பொம்.’’

‘‘நல்லா இருந்தீகளே. அது சரியே ஒங்களுக்கும் செவகாசி நாடாக்கமாருக் கும் அப்படியென்ன தீராத பகையாம். ஒங்க வீட்ல கொள்ளையடிச்சாங்களா.’’

‘‘இல்ல.’’

‘‘பெறகெதுக்கு அவங்க வீட்டக் கொள்ளையடிக்கணும்னு நாக்கத் தொங்கப் போட்டுட்டு வந்தீக. இல்ல தெரியாமத்தான் கேக்கென்.’’

‘‘ரெம்பப் பணமும் பொருளும் கெடைக்கும்னு சொல்லிக் கூப்புட்டாக...’’

‘‘இப்ப என்ன கெடச்சது. அடியும் ஒதையுந்தான். மூணு நாளாப் பட்னிங்க. இதெல்லாம் வேணுமா.’’

‘‘இல்ல.’’

‘‘மூச்சுக்காட்டாம வீட்டுக்கு ஓடி பொண்டாட்டி புள்ளையோட சேந் துக்கோ. அழிச்சாட்டியம் பண்ணுனா அம்புட்டுத்தான். கையக்கால ஒடிச்சுக் கட்டையில கெடத்திக் காணாமப் பொணமாக்கீருவென். வந்துட்டான் பெரிசா வாரிக் கெட்டீட்டுப் போறதுக்கு. மந்தக் காட்ல மனுசச் சாணி கெடந்துருக்கு மில்ல. பொட்ணங்கெட்டிக் சொமந்துட்டுப் போக வேண்டியதுதான. கண்ணுல முழிக்காம ஓடுங்கலே களவாணிப் பயகளா.’’

ரெண்டு பேரும் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓட்டம்பிடித்தார்கள். அவர்களையே பார்த்துக்கொண்டிருந்த பெரியவர் மற்றவர்களையும் வெறித்து விட்டுச் சிரமப்பட்டு எழுந்தார்.

''கோழியக் கொண்டுவாங்கப்பா. எடவழியில வறட்டித் தின்னுட்டு நடையப் புடிப்பொம். கொஞ்சம் தெம்பாருக்கும்.''

சிவகாசியில் ஒரு நாட்டியக்காரி வீடு. ஆள் குடியிருப்பில்லை. நாடார்கள் அதைக் கொள்ளையடிக்கப் போனார்கள். போன காரியம் பலிக்கவில்லை. சிப்பாய் களிடமும் போலீசிடமும் மாட்டிக்கொண்டதுதான் மிச்சம்.

இன்னொரு நாள் ஆறு நாடார்கள் தெருவில் நின்று சகடாலடித்துக்கொண் டிருந்தார்கள்.

''அண்ணைக்குக் கலகத்துல மறவங்க வாங்கிக்கெட்னது லேசுக்குள்ள மறக்குமா.''

''காலத்துக்கும் மறக்க மாட்டான்.''

''அஞ்சாறு துப்பாக்கிய வச்சுக்கிட்டு எரநூறு முன்னூறு பேரச் சுட்டுத் தள்ளுனமா சும்மாவா.''

''கொதிக்கிற எண்ணெய ஊத்தி அவிஞ்சுபோனது எத்தனையோ.''

''மொளகாப்பொடி தூவி குருடானது எத்தனையோ.''

''நானே ரெண்டு பேரு மண்டையில கல்லத் தூக்கிப் போட்டென். பெழச்சுக் கிருவான்னு நெனைக்கயா. மூளக்குழி செதறிப்போயிருக்கும்.''

''அத்தன பேரவும் தூக்கீட்டுப் போயிட்டானே. அதான் சாமர்த்தியம்.''

''அது நல்லதுதான். இங்க கெடந்து நாறவா.''

''செவங்கோயில மட்டும் தொறக்கட்டும். அப்ப என்ன நடக்கப்போகு துன்னு பாரு.''

''எதிரியெல்லாம் ஓடிப்புட்டான். நம்மள எந்தப் பய தடுக்கப்போறான்.''

''பட்டாளத்தானும் போலீசுந்தான் காவலுக்கு நிப்பான்.''

''அவனவும் சுட்டுத்தள்ளீற வேண்டியதுதான்.''

''ரெண்டுமூணு பேரப் போட்டுத்தள்ளுனாப் போதும். எல்லாம் ஓட்டம் புடிச்சிருவான்.''

''நம்ம சாதிக்காரங்க எடஞ்சலில்லாமச் சாமி கும்புடணும்.''

ஆறு பேரையும் போலீஸ் அப்படியே கோழியைப்போல் அமுக்கிவிட்டது.

## 5. மேலச்சீமை

மேலச்சீமை பற்றியெரிந்தது.

சிவகாசிக் கொள்ளை நடந்த சூட்டோடு கூனங்குளம் தேசிகாபுரம் சுப்பிர மணியபுரம் சிந்தாமணி செந்தட்டியாபுரம் ஆகிய ஊர்களில் கலகக்காரர்கள் ஏற் கெனவே கைவரிசையைக் காட்டியிருந்தார்கள். இப்போது சூப்பிரண்டும் கலெக் டரும் பட்டாளத்துடன் போய்ச் சேருமுன் ஏராளமான ஊர்களை அவர்கள் நொறுக்கி நாசம்பண்ணிவிட்டிருந்தார்கள். சேதத்துக்கு அளவில்லை.

ஊத்துமலையைச் சுற்றிப் பல சமீன் கிராமங்கள் அடிவாங்கின. கீழக்கலங் கலில் நாடார் வீடுகளைக் கொள்ளையடித்துக் கொளுத்தப் போக ஊரே

வெந்துவிட்டது. கோனார்களுக்கும் சேதம் ரெம்ப. காதறுப்புக்குக் கணக்கில்லை. கொள்ளையில் மறவர்களுடன் வண்ணார்களும் சேர்ந்துகொண்டார்கள். சோலை சேரியில் வீடுகளுடன் வேதக் கோயிலும் கொள்ளையடிக்கப்பட்டது. இதில் மறவர் களுடன் துலுக்கரும் கூட்டு.

ரெட்டியபட்டியில் இருநூறு வீடுகள் எரிந்தன. வேதக் கோயிலும் கொள்ளை. காதறுந்த பெண்கள் கதறியழுதார்கள். கருவந்தாவிலும் இதே கதைதான். கொள்ளைக்காரர்களில் பறையரும் உண்டு.

கழுகுமலையில் ஒரு கொள்ளை முயற்சி நடந்தது. போலீஸ் தலையிட்டுத் தடுத்துவிட்டது. கழுகுமலையிலிருந்து போய்க்கொண்டிருந்த அச்சங்குன்றத்து நாடாரின் காதுகளை அறுத்துத் தரிப்பைப் பிடுங்கிக்கொண்டார்கள். கொடுத்த பிராதை ஏட்டு குண்டிக்கடியில் போட்டுக்கொண்டார்.

ஊத்துமலையிலேயே கூத்து நடந்தது. வேதக் கோயில் கதவை உடைத்துப் பொருட்களை எடுத்துப் போனார்கள். நாடார் வீடுகள் எரிந்து நாசமாயின. கொள்ளையடித்தவர்களில் குடும்பமார் பறையர் சக்கிலியர்களுக்குக் குறை வில்லை.

நாச்சியாபுரத்தில் நடந்த கொள்ளைக்குச் சமீன் ராணியின் உறவினர் வெள்ளப்பாண்டித் தேவர் வந்திருந்ததாக நாடார்கள் சொன்னார்கள். எல்லாமே சமீனுக்குத் தெரிந்துதான் நடந்திருக்கிறது என்ற புகார் இருந்தது. சமீன்தார் இறந்துவிட்டதால் நிருவாகம் ராணியின் பொறுப்பில் இருந்தது.

சேந்தமரத்துப் பக்கம் கடையநல்லூர் தன்னூத்து வேலப்பநாடானூர் திருமலாபுரம் ஆகிய நாலு ஊர்களும் கொள்ளையடிக்கப்பட்டன. பல வீடுகள் கொளுத்தப்பட்டன. தன்னூத்துக் கொள்ளையில் பெரிய மகாலிங்கசாமித் தேவர் கைதானார். அவர் ஊத்துமலை ராணிக்கு உறவினர். வேலப்பநாடானூர் கொள்ளைக்கு நாலு வேதக்காரர்களும் வந்திருந்தார்கள்.

கடையநல்லூர் பகுதியில் அவ்வளவாகச் சேதமில்லை. இடைகாலில் ஒரு நாடார் வீடு கொள்ளை. ரெண்டு வண்டிக்குப் பயறுதான் கிடைத்தது. ஒரு செட்டி யார் கடையில் ஒரு வண்டி நெல் தேறியது.

நைனாகரம் அருணகிரிபுரம் துரைச்சாமிபுரம் இந்த மூணு ஊரிலும் இருபது வீடுகளுக்கு மேல் தீவைத்தார்கள். கலகத்துக்கு பிராமணரும் வந்திருந்தார்கள்.

தென்காசிப் பக்கம் வல்லத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட வீடுகள் வெந்து நீந்தன. நிறைய பொருட்கள் கொள்ளைபோயின. வேதக் கோயிலிலும் கை வரிசையைக் காட்டினார்கள். காசிமேஜர்புரத்தில் கொள்ளை.

ஆலங்குளம் பகுதியில் அய்யனார்புரத்திலும் பத்தமடையாபுரத்திலும் நூறு வீடுகளுக்கு மேல் எரிந்தன. நாடார்கள் எதிர்த்துத் தாக்கினார்கள். வந்தவர் கள் ஐநூறு பேருக்கு மேலிருந்ததால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அப்படியும் ரெண்டு பேரைக் கொன்றுவிட்டார்கள். மேலும் சில ஊர்களிலும் தீவைப்பு நடந்தது.

பாவூருக்கு அருகில் முத்துக்கிருஷ்ணப்பேரி. அதையொட்டி ராஜகோபாலப் பேரி. நூறு வீடுகளைக் கொளுத்திவிட்டார்கள். நாடார்கள் சும்மா இருக்க வில்லை. விரட்டியடித்து ரெண்டு பேரைக் கொன்றார்கள். ஒருவர் மறவர். மற்றவர் வேளாளர். கலிங்கப்பட்டி உடையத் தேவருக்குப் பலத்த காயம்.

சுப்பிரமணிய பிள்ளைக்கும் காயம். அவர் கிராம முன்சீப். ஊத்துமலை சமீன் ராணி குடியிருக்கும் வீரகேரளம்புதூரைச் சேர்ந்தவர்.

சுரண்டையைச் சுற்றிக் கலகம் மும்முரமாக நடந்தது. அருணாசலபுரம் திருக்குன்றாபுரத்தில் கொள்ளை. பரங்குன்றாபுரத்தில் வேதக் கோயிலையும் எரித்துவிட்டார்கள். கலிங்கப்பட்டி மருதப்புரம் அச்சங்குன்றம் அதிசயபுரம் சுப்பையாபுரம் ரெட்டைக்குளம் இப்படிச் சகட்டுமேனிக்கு மேய்ந்தார்கள். அதிசய புரத்தில் வேதக் கோயில் சேதமானது. ஊத்துமலை ராணியின் சகோதரரும் வந்திருந்ததாகப் பிராது கொடுக்கப்பட்டது.

பண்பொழி பாவப்பட்ட பகுதி. பெரியபிள்ளைவலசை திருமலாபுரம் கணக்குப்பிள்ளைவலசை குத்துக்கல்வலசை அய்யாபுரம் வடம்புதூர் இத்தனை கிராமங்களிலும் ஒரே கூட்டம் ஓடி விளையாடியது. உயிர்ச் சேதமில்லை. பல நாடார் குடும்பங்கள் பாதுகாப்புத் தேடித் துலுக்கர் வீடுகளில் தஞ்சமடைந் தார்கள். அங்கே துலுக்கர்கள் வசதியாகவும் தாட்டிக்கமாகவும் இருந்தார்கள்.

தென்காசியில் அண்ணன் தம்பி மூணு பேர். அவர்களுக்கு பண்பொழியில் நிலபுலம் உண்டு. அவர்களில் பாவா ராவுத்தர் முக்கியமானவர். இந்தச் சந்தர்ப் பத்தைக் கையிலெடுத்துக்கொண்டு இந்துக்காரர்களைத் துலுக்கராக மாற்றுவதில் மும்முரமாக இருந்தார். நாடார்களிடம் ஆறுதலாகப் பேசினார்.

''நீங்க எதுக்கும் கவலப்பட வேணாம். நாங்க கூட இருக்கொம். எங்கள மீறி எவனும் உள்ள மொழைய முடியாது. ஓங்கள அல்லா காப்பாத்துவாரு. ஓங்களுக் காக அவரத் தொழுது மன்றாடி ஓங்க கஸ்டத்தத் தீத்துவப்பொம். நீங்க எங்க மதத்துக்கு மாறி அல்லாவோட புள்ளீகளாகணும்.''

நாடார்களுக்கு இக்கட்டான நிலைமை. மறவர்களிடம் போய் மண்டியிட முடியாது. அழித்தொழித்துவிடுவார்கள். எந்தக் காலத்திலும் அவர்களுடன் இணக்க மாக வாழ முடியாது. எண்ணெயும் தண்ணீரும் எப்படிச் சேரும். இந்தப் பக்கம் பாதுகாப்பு இருக்கிறது. ஆதரவு கொடுக்கிறார்கள். இவர்களுடன் கலந்து தாய் பிள்ளையாக இருக்கலாமே.

''அப்படியே மாறிக்கிறொம். எங்களக் காப்பாத்திக் கஸ்டத்தத் தீத்துவைக் கிற சாமியக் கும்புட்டாத் தப்பில்ல.''

''இனிமே நீங்க எங்களுக்குச் சொந்தம். ஓங்கமேல ஒரு துரும்புகூட வுழுகாமப் பாத்துக்கிற வேண்டியது எங்க பொறுப்பு.''

நாடார்களுக்காகத் துலுக்கர்கள் ஆயுதமேந்தினார்கள். கலகக்காரர்களை எதிர்த்து விரட்டவும் செய்தார்கள்.

பெரியபிள்ளைவலசை குத்துக்கல்வலசை திருமலாபுரம் கணக்குபிள்ளை வலசையில் ராவோடு ராவாகச் சிறிசுமுதல் பெரிசுவரை நாடார்கள் துலுக்கராக மாறினார்கள். ஆண்கள் தலையை மழித்துத் தாடி வளர்க்க ஆரம்பித்தார்கள். பெண்கள் வேறு மாதிரி துணிமணி உடுத்தினார்கள். காதில் சின்னச்சின்னத் துளை போட்டுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். சுன்னத் கலியாணத்துக்குப் பெரியவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. பையன்களுக்கு முறைப்படி நடந்தது.

இந்துக் கோயில்களில் சாமிகளைக் காணவில்லை. கிழக்காமல் வாசல் வைத்துப் பள்ளிவாசல்களாக மாறிவிட்டன. அதுக்குச் சாட்சியாக வெள்ளைக் கொடி பறந்தது.

## 6. கோயில்கள் எரிந்தன

இதே சமயத்தில் திருவிதாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த செங்கோட்டைப் பகுதியிலும் கடுமையான கலகம் நடந்தது. லாலா குடியிருப்பைத் தாக்கினார்கள். ஏற்கெனவே அங்கே நின்றிருந்த போலீஸ்காரர்கள் அவர்களைப் பார்த்துச் சுட்டார்கள். கூட்டம் அதிகமிருந்ததால் கலைக்க முடியவில்லை. அறுபது வீடுகள்வரை எரிந்துவிட்டன. சனங்கள் ஒண்டக் கூரையில்லாமல் பிழைப்புக்கு வழியில்லாமல் குளிரில் நடுங்கிக்கொண்டிருந்தார்கள்.

மறுநாள் காலை அங்கே வந்த தாசில்தார் எரிந்த வீடுகளைப் பார்த்துவிட்டுப் பக்கத்திலுள்ள பழங்குடியிருப்புக்குப் போனார். அங்கே கலகம் இன்னும் மோசமாக நடந்துகொண்டிருந்தது. தீவைக்கவில்லை. கொள்ளைதான். போலீஸ்காரர்கள் சுட்டார்கள். ஒரு தோட்டாவுக்கு மேல் செலவாகுமுன் கலகக்காரர்கள் போலீசைத் தாக்கி ஒரு துப்பாக்கியைப் பறித்துக்கொண்டார்கள். தாசில்தாரை விரட்ட அவர் ஓடித் தப்பினார். சானிட்டரி இன்ஸ்பெக்டர் அவர்களைத் தடுத்தார். அவருக்கு வசமான அடி உதை. பலத்த காயம்.

கட்டளைக்குடியிருப்புக்குச் சிறு கூட்டம் மட்டுமே வந்து கிடைத்ததைச் சுருட்டிக்கொண்டு போய்விட்டது. அக்கரக்கட்டு வேதக்கார நாடார்கள் குடியிருக்கும் ஊர். அதும் தப்பவில்லை. துணைக்கு குடும்பமார் வீடுகளும் எரிந்தன. வயக்காட்டுப்பச்சேரி மார்த்தாண்டபுரம் ரெண்டும் கொள்ளைக்குப் பலியாகின. பழங்குடியிருப்பிலும் மார்த்தாண்டபுரத்திலும் பல நாடார் வீடுகள் துலுக்கக் குடியாகிவிட்டன.

செங்கோட்டைக்குக் கிழக்கே சாம்பவார்வடகரை பெரிய ஊர். நாடார் வீடுகள் அதிகம். வெள்ளைக்காரச் சர்க்கார் பகுதியிலிருந்து சில நாடார்கள் தப்பி வந்து அங்கே தஞ்சமடைந்தார்கள். கலகக்காரர்கள் வந்து அவர்களை ஒப்படைக்கச் சொல்ல ஊர்க்காரர்கள் மறுக்க சண்டை ஆரம்பித்துவிட்டது. தாரை தப்பட்டைகளுடன் ஆதாளியிட்டு நுழைந்துவிட்டார்கள். நாடார்கள் பிரயாசைப்பட்டு எதிர்த்தும் முடியவில்லை.

முன்னூறு வீடுகளுக்கு மேல் கொளுத்தப்பட்டன. அதில் வேதக்கார வீடுகளும் அடக்கம். கார வீடுகளை இடித்துத் தகர்த்தார்கள். எல்லாச் சொத்துக்களையும் கொள்ளையடித்தார்கள். தெருவெல்லாம் தானியம் விதைத்துக் கிடந்தது. ஒரு வேதக் கோயில் நாலு இந்துக் கோயில்கள் தீயில் கருகிவிட்டன. கொளுத்த முடியாத ஒரு இந்துக்கோயிலில் சாமி சிலைகள் உடைந்து கோரமாக நின்றன. சனங்கள் ஆயிரக் கணக்கில் தெருவில் பட்டினியாக நின்றார்கள்.

ஒருவர் நெருப்புக்குள் வேகும் எலும்புகளைப் பொறுக்கிவந்து காட்டி அழுதார்.

“இது எம் மகளோட எலும்பு. பாவிக அவள வெட்டி நெருப்புக்குள்ள போட்ருந்தாக்கூட மனசாறிப்போகும். கண்ணுக்கு முன்னால ரெண்டு மார்பவும் அறுத்து வீசியெறிஞ்சான். கொடும தாங்காம அவ தீயில பாஞ்சு செத்துட்டாளே.”

இன்னொருவர் சொன்னார்.

''ஒரு பொண்ண வுடாம வெரட்னாங்க. அவ முடிஞ்ச மட்டும் ஓடிப் பாத்தா. சண்டாளங்க கையில ஆப்புடவான்னு கெணத்துல குதிச்சு உசிர மாச்சுக் கிட்டா. இப்படி ஒண்ணா ரெண்டா. அவமானத்துல இனியும் மூணு உசிரு அநியாயமாப் போச்சு.''

இவ்வளவு நடக்கும்வரை கலெக்டரும் சூப்பிரண்டும் வந்துசேரவில்லை. ராப்பகலாக நடந்து வழிநெடுக அழிம்புகளைப் பார்த்து ஆத்திரப்பட்டுக்கொண்டே ஆலங்குளத்தை அடைந்தார்கள். கூடவே போலீசும் பட்டாளமும் வந்தன. ஆயிரக் கணக்கில் கலகக்காரர்கள் ஊரெல்லாம் மேய்ந்துகொண்டிருக்கையில் கலெக்ட ரும் பட்டாளமும் எம்மாத்திரம்.

பக்கத்து ஊர்களில் காயப்பட்ட ரெண்டு பேரை ஆலங்குளத்துக்குக் கொண்டு வந்தார்கள். அவர்களுக்குப் பட்டாளத்துக்காரர் மருத்துவம் செய்தார். ஊரில் எல் லாரும் கலகக்காரர்களை எதிர்பார்த்திருந்தார்கள். நெருப்பிலிருந்து காப்பாற்று வதற்காகப் பல கூரைகள் முன்னெச்சரிக்கையாகப் பிரிக்கப்பட்டுக் கிடந்தன. பெரும்பாலான பொருட்களை நிலத்தடியில் புதைத்திருந்தார்கள்.

பக்கத்து ஊரில் கொள்ளை நடக்கப்போவதாகத் தகவல் கிடைத்தது. உடனே புறப்பட்டார்கள். எதிரில் ஒரு கூட்டம் வந்தது. ஐநூறு பேருக்கு மேலிருக்கும். பட்டாளத்து அதிகாரி குதிரையில் பாய்ந்து விரட்டி அவர்களை கலெக்டரின் பக்கம் திருப்பினார். ஆனால் அவர்கள் எதிரிலுள்ள கிடாரக்குளத்துக்குள் நுழைந்து விட்டார்கள். அதிகாரி ஊருக்குள் போனார். ஆட்கள் வீடுகளுக்குள் ஒளிந்து கொண்டார்கள். ஊருக்கு வெளியே ரெண்டு பேரை விரட்டினார். அவர்கள் கம்மாய்க்குள் குதித்து நீந்தித் தப்பிவிட்டார்கள்.

அதுக்கு முந்தி குரிப்பான்குளத்தில் அதிகாரி சிலரைப் பிடித்து வைத்திருந்தார். ஒருவரிடமிருந்து கம்பையும் கத்தியையும் பிடுங்கும்போது அவருக்கு வலது கையில் ஆழமான வெட்டு. அன்றைக்கு அகப்பட்டவர்கள் முப்பத்தெட்டுப் பேர். ஆலங்குளம் திரும்பும்போது சாமமாகிவிட்டது. நடந்த அலுப்பு இன்னும் கூடி யிருந்தது. அவர்களுக்கு சாமிதாஸ் பிள்ளை உபதேசியார் ரெம்ப உதவியாக இருந்தார். கலெக்டர் அவருக்குப் பத்து ரூபாய் சன்மானம் கொடுத்தார்.

அதே நாளில் சேந்தமரத்துப் பக்கம் கல்லாம்புளி சின்னத்தம்பிநாடானூர் அருணாசலபுரம் அரியநாயகிபுரத்தில் நூற்றுக் கணக்கான வீடுகள் கொள்ளை யடிக்கப்பட்டன. சுரண்டைப் பகுதியில் பூவாண்டிபுரம் அருவாக்குளம் குலைய நேரியில் கொள்ளை. குலையநேரியில் கொள்ளைக்காரர்களுக்குத் தப்பி ஓடிய அருளாச்சி கிணற்றில் விழுந்து மாண்டாள்.

பாளையங்கோட்டையிலிருந்து கூடுதலாகப் பட்டாளம் வந்தது. கலெக் டர் அவர்களுடன் கலகக்காரர்களைத் தேடிப் போனபோது சுப்பையாபுரத்தை வளைத்துக்கொண்டார்கள். அந்த ஊரில் ரெம்பப் பதட்டமாக இருந்தது. கலகக் காரர்கள் இருப்பார்கள் என்று பார்த்தால் கதை வேறு மாதிரி நடந்துகொண் டிருந்தது. நாடார்கள் மற்ற சாதிக்காரர்களை ஈவிரக்கமில்லாமல் போட்டு மொத்திக் கொண்டிருந்தார்கள். பார்க்கப் பாவமாக இருந்தது. கஷ்டப்பட்டுக் கட்டுப்படுத் தினார்கள். இருபது பேர் கைது.

மேலநீலிதநல்லூரில் இன்னொரு சம்பவம் நடந்தது. போலீசும் பட்டாளமும் அங்கே போயிருந்தபோது ஊருக்குள்ளிருந்து ஐம்பது பேருக்கு மேல் வெளியேறி

வந்து அவர்களை ஆயுதங்களால் தாக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் திணறிப் போனார்கள். வேறு வழியில்லாமல் துப்பாக்கிச் சூடு நடந்தது. அதில் ஒருவர் அந்த இடத்திலேயே இறந்துவிட்டார். அவர் பேர் பண்டாரத் தேவர்.

நாடார்களை விரட்டியடிக்கணுமென்று சர்க்காரே உத்தரவு போட்டிருப்ப தாகப் பல ஊர்களில் கலகக்காரர்கள் புரளியைக் கிளப்பிவிட்டிருந்தார்கள். சனங் களிடம் பக்குவமாகப் பேசிப் புரிய வைக்க வேண்டியிருந்தது.

## 7. பாவா பாவா

தென்காசிப் பக்கம் துலுக்கர் விவகாரந்தான் பெரிசாக இருந்தது. பாவா ராவுத் தரின் நடவடிக்கைகளைப் பற்றிப் பல மாதிரியாகப் பேசிக்கொண்டார்கள்.

‘‘அத்தன நாடானவும் துலுக்கனா மாத்தாம அண்ணன் தம்பி மூணு பேரும் ஓய மாட்டாங்க போலருக்கு.’’

‘‘அதானப்பா. ரெம்ப மும்மரமாத் திரியிதாவளாம்.’’

‘‘நாடானுக்கு அல்லாவத் தெரியுமா குல்லாவத் தெரியுமா. ஒரு தெய்வத்தக் கும்புட்டா மனசார நம்பணும். அப்படி மாறாதவனுக்குத் தாடி வளத்து மானிய அறுத்தா சரியாப் போச்சா. இது அநியாயம்.’’

‘‘ஒன்னால அவனோட உசிரக் காப்பத்த முடியுமா.’’

‘‘முடியாது. அவனுக்கு ஒதவுனா நம்ம உசிருவச்சு இருக்க முடியாது.’’

‘‘அப்ப வாயப் பொத்தீட்டுக் கெட. வேதக்காரன் பேசிப்பேசி மாத்தலயா. அந்த மாதிரிதான். அல்லாவ நம்புதானோ இல்லையோ பாவாவ நம்புதான்.’’

‘‘அப்பாவிச் சனங்க எதுக்குன்னுதான் ஆவாங்க.’’

‘‘நாடாங்க போலீசுக்கு வாக்குமூலம் குடுக்க மாட்டங்கானாம்.’’

‘‘ஏன். நடந்ததச் சொல்ல வேண்டியதுதான.’’

‘‘மூணு ராவுத்தரோ ஒருத்தரோ கூட இருந்தாத்தான் குடுப்பம்னு சாதிக்கா வளாம்.’’

‘‘பொறவு.’’

‘‘பொறவென்ன. ராவுத்தரக் கூட்டீட்டு வந்து அவங்களுக்கு முன்னால எழுதி வாங்குதாவளாம்.’’

‘‘ராவுத்தருககூட நல்லவங்க இல்லன்னு பேசிக்கிடுதாவ.’’

‘‘நானும் கேள்விப்பட்டென்.’’

‘‘நாடாங்கள வச்சுப் பணம் சம்பாதிக்காவளாம்.’’

‘‘எப்படி.’’

‘‘நாடாங்க மத்த சாதிக்காரன்மேல பெராது குடுக்காம இருக்கணும்னா இவங்களுக்குப் பணம் குடுக்கணும்.’’

‘‘இது நாடாங்களுக்குத் தெரியாதா.’’

‘‘தெரிஞ்சா மட்டும் தட்டிக்கேக்க முடியுமா. எது எப்படி நடந்தா என்ன. நம்ம உசிரக் காப்பாத்துனாப் போதும்னு இருக்க வேண்டியதுதான்.’’

‘‘தென்ன மரத்துல தேளுக் கொட்னா பனமரத்துல பதவள கெட்டுச்சாம்.’’

''அந்தக் கத இப்ப எதுக்கு.''

''செவகாசியில நடந்த கலகத்துக்கு தெங்காசி என்ன செய்யும். எங்கயோ ஒரு கடவோடியில பதினிய நம்பிப் பெழைக்கித பனையேறி நாடானுக்கு அப்பனும் ஆத்தாளும் அவங்களப் பெத்தவுகளும் தலமொறதலமொறையா மண்ணுப் பூடத்துல கும்புடுத சாமிதான் தெரியும். செவகாசியில இருக்கித பெரிய கோயிலப் பத்தியும் அதுல மொழையிததுக்குப் பணக்கார நாடாங்க தார்ப்பாச்சீட்டுத் திரியிதப் பத்தியும் ஒரு மண்ணும் தெரியாது. அந்தக் கவலையும் கெடையாது. அவனப் போயிக் கொல்லுததும் வீடுகளக் கொள்ளையடிச்சுக் கொளுத்துததும் பொம்பளைகள மானபங்கப்படுத்துததும் பெரிய கொடும. கொள்ளையடிக்கிததுக்கு அவங்கிட்ட என்ன இருக்கு.''

''ஓலையெல்லாம் கருகி ஒண்ணுக்கும் ஒதவாத கரிக்கம்பா நிக்கித பனமரங்களப் பாத்தாப் பாவமாருக்கு. அதென்ன இண்ணைக்கு நட்டி நாளைக்கு மொளச்சு வளருத பயிரா. ஒரு தலமொற வளத்து மறுதலமொறைக்குக் குடுத்துட்டுப் போற சீதனம்.''

''அந்தப் பாவம் சும்மா வுடாது.''

''நாடானாப் பொறந்தது பாவம். சக்கிலியனாப் பொறந்திருந்தாக்கூட நிம்மதியா இருக்கலாம்.''

''இனியும் என்னென்னமோ அநியாயம் நடக்குதாம். போலீஸ்காரங்களுக்குக் கொழுத்த வேட்டையாம்.''

''எப்படி.''

''செங்கோட்டைக்கு இந்தப் பக்கம் தெங்காசி. அந்தப் பக்கத்து ஊருக மலையாள மகாராசாவுக்கு. இங்கிட்டுள்ள ஊருக வெள்ளக்காரனுக்கு.''

''சரி.''

''இங்க கொள்ளையடிச்சிட்டு அங்க ஓடி ஒளிஞ்சுக்கிடது. அங்க இருக்கிதவன் எல்லையத் தாண்டி இங்க வந்துடது. அந்தப் போலீசு இங்க வர முடியாது. இவன் அங்க போவ முடியாது.''

''களவாங்கத் தோதாப்போச்சு.''

''கதையக் கேளு. ரெண்டு போலீசும் அங்கிட்டும் இங்கிட்டும் அத்துமீறி மொழஞ்சு அடாவடி பண்ணியிருக்கான். என் எல்லைக்குள்ள நீ எப்படி வரப் போச்சுன்னு மாறிமாறிச் சண்டபோட்டுக்கிட்டாங்க.''

''கொள்ளக்காரனப் புடிக்கிததுல சண்டையெதுக்கு. ஆரு புடிச்சா என்ன.''

''சண்டைக்குக் காரணம் என்ன தெரியுமா. கொள்ளக்காரன ஆரு கொள்ளையடிக்கிததுன்னுதான்.''

''நாசமாப்போச்சு.''

''இந்தப் பக்கத்துப் போலீசு இனியும் மோசம். அநியாயத்தப் பத்திச் சனங்க பெராது குடுக்க வந்தா அதச் சொன்னபடி பதியிததில்ல. தனக்கு வேண்டியவங்களச் சேத்தா ஏத்துக்கிட மாட்டன்னு மெரட்டி அனுப்பீதது.''

''வேண்டியவன்னா ஆரு. மாமனா மச்சானா.''

''அடிச்ச கொள்ளையில பங்கு குடுக்கித மவராசனெல்லாம் வேண்டியவந்தான்.''

''கூட்டுக் களவாணிப் பயலுவ.''

''ஒரு நா கலகத்த அடக்கப்போறன்னு சொல்லி ஒரு ஊரச் சுத்தி வளச்சு கைக்கு ஆப்புட்ட ஆளுகளப் புடிச்சிருக்காங்க. கூத்து என்னன்னா ஒருத்தங்கூடக் கச்சேரிப் படிய மிதிக்கல.''

''அட கொடுமையே.''

''ஒவ்வொருத்தங்கிட்டயும் ஏண்டபடி பணத்தக் கறந்துட்டு வுட்டுப் பத்தீட்டான். கொறச்சலாக் குடுத்தவனுக்கு அடி. எம்புட்டுக் கொறச்சலோ அதுக் குத் தக்க.''

''சரியான தண்டனதான்.''

''பெராது குடுக்க வந்தவன தெருவில நடக்க வுட்டு அடி குடுத்துருக்கான். அவன் எங்க போவான்.''

''கொடும கொடுமன்னு போயிலுக்குப் போன கதையால்ல இருக்கு.''

## 8. நடை திறப்பு

எப்படியோ ஓடியாடி உழப்பித் திருநெல்வேலிச் சீமையில் கலகத்தை அடக்கிவிட்டார்கள். ஒருவேளை கலகக்காரர்கள் வேட்டையாட ஊர்கள் பாக்கியில்லாததுகூட ஒரு காரணமாக இருக்கலாம். போலீஸ் புண்ணியத்தில் நிறைய பேர் தப்பிவிட்டார்கள். அப்படியும் ஆயிரம் பேருக்கு மேல் கைது செய்யப்பட்டார்கள். சின்னச் செயில்கள் நிரம்பி வழிந்தன. பாளையங் கோட்டை பெரிய செயிலுக்கு அனுப்பினார்கள். அங்கும் மூச்சுத் திணறியது. கைதிகளை மேய்க்க ஆள் தட்டுப்பாடு. சிரமப்பட்டுச் சமாளித்தார்கள்.

சிவகாசிக் கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்டவர்களைப் பிடிப்பதில் கலெக்டர் முனைப்பாக இருந்தார். முக்கால்வாசிப் பேர் அகப்பட்டுவிட்டார் கள். ராமச்சந்திரத் தேவர் பொன்னுச்சாமித் தேவர் வடுகநாதத் தேவர் வெண்டர் ஆறுமுகம் பிள்ளை முகமது காசிம் ராவுத்தர் காதர் மொகைதீன் ராவுத்தர் முத்துக்கருப்பப் பண்டாரம் ராமசாமித் தேவர் என்று முக்கியமானவர்கள் தலைமறைவாகிவிட்டார்கள். அவர்களைப் பிடிக்கத் தனி போலீஸ் படை அமைக்கப்பட்டது. போலீஸ் ஊர் ஊராகச் சலிக்க ஆரம்பித்தது. ஒளிந்து திரிபவர்களைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கோ துப்புச் சொல்கிறவர்களுக்கோ தலைக்கு இருநூறு ரூபாய் சன்மானம் கொடுக்கப்படுமென்று கலெக்டர் பகிரங்கமாக அறிவித்தார்.

வாரண்டுக்குத் தப்பியலைந்ததால் அவர்களது சொத்துக்களை ஜப்திசெய்து ஏலம்விட்டார்கள். சில பொருட்களை நாடார்கள் வாங்கினார்கள். தலைமறை வானவர்கள் யாரும் ஆஜராகவில்லை. போலீசுக்கு மண்டைக் குடைச்சல்.

இதில் ராமசாமித் தேவரின் கதை வேறு மாதிரி. அவருக்கு மந்திரமத் தேவர் என்ற பேரும் உண்டு. முந்தி சிவகாசியில் தலையாரியாக இருந்தவர். அவருக்கும் நாடார்களுக்குமிடையே ரெம்ப நாளாகக் கசப்பு உண்டு. அவரை வழக்கில் சேர்த்தது பற்றிப் பலருக்கு ஆதங்கம்.

''கொள்ள நடந்தண்ணைக்கு செவகாசியிலயே இல்லாற மனுசனப்போயிச் சேத்துருக்காகளே. இது அநியாயம்.''

''மொத நாளே விருதுபட்டிக்குப் போயிட்டாராம். வேற ஒரு வழக்கு சம்பந்தமா கோர்ட்டாருட்ட இருந்துருக்காரு.''

''ராத்திரி அங்கதான் தங்கியிருக்காரு.''

''ஒரு பேச்சுக்குச் சொல்றென். விடியக்காலம் எந்திரிச்சு செவகாசிக்கு வரணும் னாலும் விருதுபட்டி கிட்டயா இருக்கு.''

''விடிஞ்சப் பெறகும் அங்கதான இருந்தாராம். பாத்தவங்க சொல்றாங்களே.''

''சாமி நான் செவகாசிக்குப் போனா என்னய வம்படியா வழக்குல சேத்துரு வாங்க. அதனால இங்கயே தங்கிக்கிறன்னு கோர்ட்டாருட்டச் சொல்லீருக்காரு. அதுக்கு அவரு தடுதல சொல்லல.''

''பெறகென்னப்பா.''

''நீ இங்க இருந்ததாச் சொல்லி ஒன்னயக் காப்பாத்துறன்னு மொதல்ல தைரியங் குடுத்துருக்காரு.''

''அந்தப்படி நடந்துக்கிறலயா''.

''வெசாரணன்னு வரவும் நமக்கெதுக்கு வம்புன்னு நழுவீட்டாரு.''

''என்ன பெரிய மனுசன்.''

''தேவரு கலகத்துல நின்னதக் கண்ணால பாத்தொம். தாயவும் புள்ளைய வும் அவருதான் கொல செஞ்சாருன்னு இந்தப் பக்கம் பத்துப் பேரு அடிச்சுச் சொல்லவும் நம்பீட்டாக.''

''கொலக் குத்தம் தலையில வுழுந்த பெறகு வுட்டுவப்பாங்களா.''

''அடடா நம்மளவும் சேத்துட்டாகளேன்னு தெரிஞ்சு தப்பிச்சிட்டாரு.''

''அதனால சந்தேகம் வலுத்துக்கிருச்சு.''

''அது தப்புத்தான. குத்தம் செய்யலன்னா நேரப் போயி ஆசராக வேண் டியதுதான.''

''நீ லேசாச் சொல்லிப்புட்ட. ஆப்புட்டா என்ன கெடைக்கும்னு ஆருக்குத் தெரியும்.''

''அது சரி.''

பட்டணத்திலிருந்து பெரிய போலீஸ் அதிகாரி வந்தார். அங்கங்கே போய் விசாரணை நடத்தினார். போலீஸ் நடந்துகொண்ட லட்சணத்தை அறிந்து வேதனைப்பட்டார். அவமானமாக இருந்தது. அதை அப்படிச் செய் இதை இப்படிச் செய் என்று வேலை ஏவிவிட்டுப் போய்விட்டார்.

சர்க்கார் தனியாக மேல்மட்டத்தில் ஒரு விசாரணை அதிகாரியை நியமித்தது. அவர் பேர் ஹம்மிக். கலகங்களை அடக்கி ஒடுக்கவும் மறுபடியும் சகஜ நிலைக்குத் திரும்பவும் பொருத்தமான வழிகளைக் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டியது அவர் பொறுப்பு.

அவர் விசாரணையில் பலரையும் புரட்டியெடுத்தார். கிட்டத்தட்ட ரெண்டு மாசம் கிண்டிக் கிளைந்தார். பிரச்சினையை ஆதியோடு அந்தமாக அலசினார். சகல சாதிக்காரர்களும் வெறுத்து ஒதுக்கி எதிரியாக நினைக்குமளவுக்கு நாடார்கள் அப்படி என்னதான் செய்துவிட்டார்கள் என்ற கேள்வி அவர் மனசைக் குடைந்து கொண்டேயிருந்தது.

சிவகாசியில் சிவன் கோயில் ரெம்ப நாளாகவே மூடிக் கிடந்தது. மேல் சாதிக்காரர்கள் பொருமிக்கொண்டிருந்தார்கள்.

''உள்ள போயிச் சாமி கும்புட முடியலயே.''

''சிவசிவா இதுக்கு ஒரு வழி பெறக்காதா.''

ஹம்மிக் மனசில் யோசனை ஓடியது. கோயில் மூடிக்கிடப்பது நல்லதில்லை. திறந்துவிட்டால் கடுமை தணியக்கூடும். கோயிலுக்குள் புழங்குகிறவர்கள் வழக்கம் போல் சாமி கும்பிடுவார்கள். ஆனால் மறுபடியும் நாடார்கள் முரண்டு பண்ணி னால் என்ன செய்வது.

நிலைமைக்குத் தக்க உத்தரவு போட்டார். அதாவது கோயில் தொடர்ந்து மூடியிருப்பது பெருத்த அவமானமாகும். கோயிலில் சாமி கும்பிட உரிமையுள்ள வர்களின் நிம்மதிக் குறைவுக்கும் மனவேதனைக்கும் இது முக்கியக் காரணமாக இருக்கிறது. ஆகவே கோயிலை உடனடியாகத் திறக்கணும். நாடார்கள் கோயிலுக் குள் நுழையக் கூடாது. அவர்கள் நுழையலாம் என்று கோர்ட்டில் சாதகமான தீர்ப்பைப் பெறும்வரை இந்த உத்தரவு அமுலில் இருக்கும்.

ஹம்மிக் செய்தது சமயோசிதமான நடவடிக்கை என்று பல தரப்பிலும் பாராட்டினார்கள். மேல்சாதிக்காரர்களுக்குக் கொண்டாட்டம். வெள்ளிக் கிழமை கோயில் திறக்கப்பட்டது. தீட்டுக்கழிப்பு நடந்தது. காலையும் மாலையும் கோயிலுக்குள் பூசை மணி கலகலத்தது. தீப ஒளியில் விசுவநாதரும் விசாலாட்சி யும் பூரித்துப்போனார்கள். பூசை வேளையில் துப்பாக்கியுடன் கோயில் வாசலில் காவலிருக்கும் சிப்பாய்களின் முகத்தில் சந்தோசக் களையில்லை.

## 9. தடையும் தண்டமும்

அப்போது மதுரை கோர்ட்டில் நடந்துகொண்டிருந்த கமுதி வழக்கைத்தான் ஹம்மிக் மறைமுகமாகக் குறிப்பிட்டிருந்தார். நாடார்கள் கோயிலுக்குள் நுழைய லாமா கூடாதா என்பதைத் தீர்மானிக்கும் பிரபலமான வழக்கு அது. ராமநாத புரம் ராசா வேறு அதில் முக்கியமாகச் சம்பந்தப்பட்டிருந்தார். நாடார்களுக்குச் சாதகமாகத் தீர்ப்புச் சொல்லக் கூடாது என்று எச்சரிப்பதற்காகவே சிவகாசிக் கலகம் நடத்தப்பட்டதாக ஒரு பேச்சு உண்டு. அந்த வழக்குக்குப் பணம் கொடுத்த தாகச் சொல்லி நாடார்களை இம்சைப்படுத்திய சம்பவங்கள் நிறைய உண்டு. தங்களுக்குச் சாதகமான தீர்ப்பு கிடைத்துவிடும் என்று நாடார்கள் நம்பிக்கை யுடன் இருந்தார்கள். ரெண்டு பக்கமும் பணத்தை வாரியிறைத்துத் தீர்ப்புக்காகப் பரபரப்புடன் காத்திருந்தார்கள்.

கோர்ட்டார் வரத ராவ் முன்னெச்சரிக்கையான பிராமணர். சமயம் பார்த்து அதாவது சிவகாசிக் கலகம் முடிந்து ஒரு மாசம் கழித்துத் தீர்ப்பை வெளியிட்டார். ஆதியிலிருந்து நாடார் சாதி எந்த நிலையில் இருந்துவந்துள்ளது என்பதைப் பல ஆதாரங்களைக் கொண்டு ஆராய்ந்து இப்போது எந்த இடத்தில் வைக்கணும் என்பதில் தெளிவாக இருந்தார்.

முக்கியமாக மூணு விசயங்களை எடுத்துக்கொண்டார். முதலாவது நாடார்கள் கமுதி கோயிலுக்குள் நுழைந்து சாமி கும்பிடுவதைத் தடுக்கிற மாதிரி சாத்திரங்கள் உண்டா. அடுத்தது நாடார்கள் கோயிலுக்குள் புழங்கக் கூடாதென்ற வழக்கம் உண்டா. அப்படியானால் அது செல்லுபடியாகுமா. அவர்களைக் கட்டுப்படுத்துமா. மூணாவது மற்ற சாதிக்காரர்களுக்குச் சரிசமமாக நாடார்கள் கோயிலுக்குள் புழங்குகிறார்களா. நாடார்கள் மற்ற சாதிக்காரர்களைவிடத் தாழ்ந்தவர்களா.

நாடார்கள் தங்கள் உரிமையை நியாயப்படுத்தி நிறைய சாட்சிகளை நிறுத்தினார்கள். ஆதாரங்களைக் காட்டினார்கள். சாட்சிகளில் பலர் மறவர்கள்.

வழக்கப்படியும் சாத்திரப்படியும் கமுதியிலுள்ள பிராமணர்கள் தவிர்த்த மற்ற சாதிக்காரர்களைப் போல் கோயிலுக்குள் பிரவேசிக்கவும் பூசைசெய்து சாமி கும்பிடவும் எங்களுக்கு உரிமையுண்டு. இந்த உரிமையைக் காலங்காலமாக அனுபவித்துவருகிறோம். இந்தக் கோயில் எங்கள் சாதி உட்பட எல்லாச் சாதிக்காரர்களுக்கும் உண்டானது. எங்கள் உரிமையையும் பாத்தியதையையும் மறுக்க முடியாது. இது நாடார்களின் வாதம்.

நாங்கள் ஆரிய சத்திரியர்கள். பாண்டிய சோழ பரம்பரையில் வந்தவர்கள். தட்சிண ரிஷி கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். பிராமணர்களைப் போல் உயர்ந்த ஆசாரங்களை அனுஷ்டிப்பவர்கள். நாங்கள் மற்ற சாதிகளுடன் கலந்தே வசிக்கிறோம். எங்கள் சாதியில் விவாகரத்து விதவை மறுவிவாகம் கிடையாது. மறவர்கள் நாடார்களுக்குப் பல்லாக்குச் சுமந்திருக்கிறார்கள். அதனால் நாடார்கள் மறவர்களைவிட மேல்சாதிக்காரர்கள். இப்படியெல்லாம் எடுத்துச் சொன்னார்கள்.

அவர்கள் சார்பாக வக்கீல் இன்னொரு விதமாக வாதாடினார்.

''இந்த வழக்கின் பிரச்சினையே நாடார்களுக்கும் மறவர்களுக்கும் இடையில்தான். வினோதமான பிரச்சனை. கோயிலுக்கு டிரஸ்டி ஒரு மறவர். கோயிலுக்குள் நுழையும் உரிமையும் மரியாதையும் அவருக்கும் அவரது சாதிக்காரர்களுக்கும் அனுமதிக்கப்பட்டன. அந்த உரிமை இப்போது நாடார்களுக்கு மறுக்கப்படுகிறது. இதைக் கருத்தில் கொண்டுதான் நாடார்கள் மறவர்களைச் சாட்சிகளாகக் கொண்டுவந்து தங்கள் சாதியைவிட நாடார் சாதி மேலானது என்று சொல்ல வைத்திருக்கிறார்கள். இதை மறவர்களே ஒப்புக்கொண்டுள்ளார்கள். நாடார்கள் மறவர்களைவிட உயர்வான ஆசாரங்களையும் சடங்கு சாத்திரங்களையும் அனுஷ்டிக்கிறார்கள். மறவர்கள் நாடார்களுக்கு வழக்கமான பல்லாக்குத் தூக்கிகளாக இருந்திருக்கிறார்கள். ஆகவே நாடார்கள் மறவர்களைவிட மேலானவர்கள்.''

ஒரு மறவர் சாட்சி சொன்னார்.

''மறவரு நாடாருகளுக்குப் பல்லாக்குச் சொமந்தது வாஸ்தவம். அதுக்கு வறுமதான் காரணம்.''

வக்கீல் நாடார்களைப் பற்றி விளக்கம் தந்தார்.

''நாடார்கள் தனிப்பட்ட சாதியாகும். சில சமயங்களில் அவர்களைச் சாணார்கள் என்று சொல்வதுண்டு. ஆனால் எப்போதுமே பனையேறிகள்தான் சாணார்கள். நாடார்களில்லை. வெள்ளாளர் நாய்க்கர் அகமுடையார் முதலியார் மறவர் சாதிக்காரர்களும் பனையேறியிருக்கிறார்கள். அதைக் காரணம் காட்டி அவர்கள் இந்துக் கோயில்களுக்குள் பிரவேசிப்பதைத் தடுப்பதில்லை.''

வாதி தரப்பில் கோர்ட்டார் ஏகப்பட்ட சாட்சிகளை விசாரித்தார். மேல் சாதிக்காரர்கள் அதிகாரிகள் பண்டிதர்கள் இப்படி. பெரும்பாலும் பிராமணர்கள். ஒரு பிராமணர் சொன்னார்.

‘‘சாணாங்க எங்களோட கோயிலுக்குள்ள போறதில்ல. போகவும் கூடாது. வழக்கப்படி அவா போறதுக்கு அனுமதியில்ல. ஏன்னா அவா தாழ்ந்த ஜாதி. அவாளுக்கின்னு தனியா கோயில் இருக்கறது. நாங்க அங்க போறதில்ல.’’

இன்னொரு பிராமணர் சொன்னார்.

‘‘கொடவர வாசலத் தாண்டி சாணாங்க கோயிலுக்குள்ள வரப்புடாது. அவா எம் பக்கத்துல வந்தாத் தீட்டு. நேக்குத் தெரிஞ்சவரைக்கும் அவா சாமிக்குத் தேங்கா பழம் படச்சதில்ல.’’

ஒரு செட்டியார் சொன்னார்.

‘‘கமுதிச் சாணாங்கள எனக்குத் தெரியும். அவங்க தீட்டுச் சாதி. பள்ளர் பறையர் சக்கிலியரும் தீட்டுச் சாதிதான். எங்களத் தொட்டாத் தீட்டுப்படுற எந்தச் சாதிக்காரனும் எங்க கோயிலுக்குள்ள போகப்புடாது.’’

அதிகாரி ஒருவர் சொன்னார்.

‘‘நாடாங்க எட்டத்துல தள்ளி நிக்க வேண்டிய ஜாதி. அப்படிப்பட்டவா கோயிலுக்குள்ள நொழஞ்சா சாந்தி சம்ப்ரோட்சணம் நடத்தித் தீட்டுக்கழிக்கணும். அந்தச் சடங்கச் செய்யாம மேல்ஜாதிக்காரங்க பூசைபண்ண முடியாது.’’

நாடார்கள் பள்ளுப் பறைச் சாதிகளுக்குக் கீழானவர்கள் என்றும் குடியானவர்களுக்கும் பள்ளுப் பறைக்கும் இடைப்பட்ட சாதி என்றும் சில சாட்சிகள் சொன்னார்கள். நாடார்கள் பிராமணர்களையும் தயார்படுத்தி வைத்திருந்தார்கள். நாடார்கள் கோயிலுக்குள் வந்து சாமி கும்பிடுவது வழக்கம் என்று அந்தப் பிராமணர்கள் சொன்னார்கள். அவர்கள் பணத்துக்காக இப்படிச் செய்தார்கள் என்றும் நாடார்களிடம் வேலைபார்க்கும் கோயில் ஊழியர்கள் என்றும் கருதி கோர்ட்டார் அவர்களைக் கணக்கிலெடுத்துக்கொள்ளவில்லை.

அவர் ஒவ்வொரு விசயமாகக் கண்டுகழித்தார். நாடார்கள் ஆரிய சத்திரியர் என்பதற்கோ பாண்டிய சோழ பரம்பரையினர் என்பதற்கோ வலுவான ஆதாரமில்லை. ஆகவே அந்த வாதம் அடிபட்டது.

சாணார் சாதியின் உட்பிரிவாக நாடார் சாதி இருந்ததா. பனைத் தொழிலில்லாமல் வியாபாரமும் லேவாதேவியுந்தான் அதன் தொழிலா. நாடார் சாதி என்பது பாரம்பரியமாக ஏற்றுக்கொள்ளப்பட்டதா. இப்படி யோசித்துப் பார்த்துத் தெளிவடைந்தார். நாடார் என்பது சாணார் என்பதன் மறு பேராகவே தெரிகிறது. வெள்ளாளரைப் பிள்ளை என்றும் பிராமணரை அய்யர் அய்யங்கார் என்றும் மறவரைத் தேவன் என்றும் அகமுடையார் கள்ளரை சேர்வைக்காரன் என்றும் வடுகரை நாய்க்கர் என்றும் சொல்கிறார்களே அப்படி. சாணார் பெண்ணை சாணாத்தி என்கிறார்கள். அதேபோல் நாடாத்தி என்று இருக்கணுமே. பிராமணர் வெள்ளாளர் மறவர் வடுகர் சாதிகளில் அந்தந்தப் பேர் உண்டல்லவா. ஆக சாணார் என்ற பொதுவான சாதிக்குள் அடங்காமல் நாடார் என்றொரு தனிப்பட்ட சாதி இருந்தது என்பது ருசுவாகவில்லை. பனையும் தென்னையும் பயிரிட்டு அதில் கள் இறக்குவது சாணார்களின் பரம்பரைத்

தொழில் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் உள்ளன. உள்ளூர் வழக்கமும் அப்படித்தான் இருக்கிறது.

தீர்ப்பை நெருங்கிவிட்டார்:

> இந்துக்களைப் பொறுத்த மட்டில் சாதி என்பது வெறும் சமூக ஸ்தாபனமில்லை. அது மதச் சித்தாந்தம். தெய்வம் மனுசர்களை உயர்ந்தவர் தாழ்ந்தவராகப் பிரித்துப் பாவிக்கிறது. பிறவியிலேயே பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் என்று வந்தவர்கள் ஒவ்வொரு வர்ணத்திலிருந்தும் விலகியே இருக்கணும். இப்படி ஒரு இந்து நம்புகிறான். சாதி விதிகளை மீறும்படி ஒரு இந்துவைக் கட்டாயப்படுத்தினால் அது கடவுளுக்கும் இயற்கைக்கும் எதிராகப் பாவஞ்செய்யக் கட்டாயப்படுத்துவதாகும். ஒரு சாதிக்காரன் தன் பரம்பரைத் தொழிலைக் கைவிட்டிருக்கலாம். ஆனால் அவன் பிறந்த சாதி அவனுடன் ஒட்டிக்கொண்டேயிருக்கிறது. ஒருவன் உயர்ந்த தொழிலுக்கு முன்னேறியிருக்கலாம். ஆனால் அவன் உயர்ந்த சாதிக்காரனாக முடியாது. சாதி விதிகளை தெய்வீக விதியின் பிரிக்க முடியாத அங்கமாகவே இந்துக்கள் நம்புகிறார்கள். பக்தர்கள் உள்ளே போய் சாமி கும்பிடுவது சம்பந்தமாக இந்தக் கோயிலில் என்ன வழக்கம் நடைமுறையில் உள்ளது. அது எப்போது ஏற்பட்டது என்பதை விசாரித்தறிந்து அந்த வழக்கத்தை ஏற்றுக்கொள்வதே இந்தக் கோர்ட்டின் கடமையாகும். பனையும் தென்னையும் பயிரிட்டுக் கள் இறக்குவது சாணார்களின் பரம்பரைத் தொழிலாகும். அந்தத் தொழிலைச் செய்பவர்கள் இந்தக் கோயிலுக்குள் பிரவேசிக்க ஆகம விதிகள் அனுமதிக்கவில்லை.

தீர்ப்பையும் சொல்லிவிட்டார் :

> கமுதி நாடார்கள் சுந்தரேசுவரர் கோயிலுக்குள் பிரவேசிக்கப் பாத்தியதை கிடையாது. அவர்கள் என்றைக்குமே கோயிலுக்குள் நுழைய நிரந்தரத் தடை விதிக்கப்படுகிறது. கோயிலில் தீட்டுக்கழிப்பதற்காக அவர்கள் ஐநூறு ரூபாய் செலவுத் தொகை கொடுக்கணும்.

நாடார்கள் இடிந்துபோனார்கள். ஆனாலும் நம்பிக்கையிழக்கவில்லை.

''இந்த கோர்ட் இல்லன்னா மேக்கோர்ட் இருக்குது.''

''அங்க ஞாயம் கெடைக்காமயா போயிரும்.''

''கடசிவரைக்கு உண்டில்லன்னு பாத்துறணும்.''

இந்தத் தீர்ப்பினால் மோதல் வருமென்று எதிர்பார்த்து சர்க்கார் தயாராகவே இருந்தது. பெரிசாக எதும் நடக்கவில்லை.

## 10. குற்றப்பத்திரிகை

மேற்கொண்டு கலகம் வராமல் தடுக்கணுமென்றால் முக்கியமான இடங்களில் தண்ட வரி போலீஸ் படையை நிறுத்தணுமென்று விசாரணை அதிகாரி ஹம்மிக் ஏற்கெனவே சர்க்காருக்கு விளக்கமாக எழுதியிருந்தார். சர்க்காரும் அதுக்கு ஒத்துக்கொண்டு பல இடங்களைக் கலகப் பகுதிகளாக அறிவித்து சிவகாசி

கோயில்பட்டி சுரண்டை ஆகிய ஊர்களில் தனிப் போலீஸ் படையை நிறுத்த உத்தரவு போட்டது. அதுக்காகும் செலவுத் தொகையைக் கலகப் பகுதிகளில் குடியிருக்கும் சகல சாதிச் சனங்களும் தண்ட வரியாகக் கொடுத்து ஈடுசெய்யணும்.

இது ஏழை எளிய சனங்களுக்குப் பெரிய சுமையாக இருந்தது.

''என்னப்பா இது அநியாயமாருக்கு. ஒரு வம்தும்புக்கும் போகாம சூசு வான்னு கெடக்கிற மனுசரப் போயி மென்னியப் புடிச்சா எப்படி.''

''சண்டபோட்டவனப் புடிச்சு அடக்கத் துப்பில்ல. எச்சௌந்தவந்தானா கெடச்சான்.''

''ஏற்கெனவே போலீசு கலகத்த அடக்கி ரெண்டாக் கிழிஞ்சுபோச்சு. இவங்க என்னத்தக் கிழிக்கப்போறாங்களோ.''

''எல்லாத்தவும் பறிகுடுத்துட்டு நடுத்தெருவில நிக்கிற நாடான் என்னத்த வச்சு வரி குடுப்பான்.''

''கோவணத்த உருவுனாலும் உருவுவான்.''

''சண்டக்காரன் கண்ணுக்குத் தப்புன ஆடு குட்டி கோழி குஞ்சிகள சட்டக் காரன் தின்னு ஏப்பம் போடுவான்.''

''அது செவகாசிக் கொள்ள. இது சர்க்காருக் கொள்ள.''

''ரெம்பக் கெடுபுடி பண்றாங்களாம்.''

சனங்கள் வரி கொடுக்க மறுத்தார்கள். கொடுக்காதவர்களின் ஆடு மாடுகள் தட்டுமுட்டுச் சாமான்கள் ஜப்தி செய்யப்பட்டன. சச்சரவுகளை அடக்கி வரி வசூலிக்க வேண்டிய நிலைமை. எது எப்படியோ இந்த ஏற்பாட்டினால் நல்ல பலன் கிடைத்தது.

விசாரணை அதிகாரி ஹம்மிக் சர்க்காருக்கு ரெம்ப விரிவான ரிப்போர்ட் கொடுத்தார். சிவகாசிக் கலகத்துக்கு முந்திய சம்பவங்கள் சிவகாசியில் நடந்த கொள்ளை அதுக்குப் பிறகு வெடித்த கலகங்கள் எல்லாவற்றையும் அதில் தொகுத்துச் சொல்லியிருந்தார். கலெக்டர்முதல் தலையாரிவரை எல்லா மட்டத் திலும் இருந்த சீர்கேடுகளையும் அதிகாரிகளின் கையாலாகாத்தனத்தையும் பொதுவாக போலீசின் அக்கறையற்ற போக்கையும் சாடியிருந்தார். மறவர் கட்சியில் கமுக்கமாக நடந்த அத்தனை நடவடிக்கைகளும் வேதக்காரர்களுக்குத் தெரிந்திருந்தும் மூச்சுக்காட்டாமல் இருந்துகொண்டார்களே. கலெக்டரும் சூப்பிரண்டும் கலகத்துக்கு முந்திய நாளன்று சிவகாசியில் தங்கியிருந்தால் கதையே மாறியிருக்குமே. அவர் ரெம்ப ஆதங்கப்பட்டார். மேற்கொண்டு எடுக்க வேண்டிய நடவடிக்கைகளையும் சிபாரிசுசெய்தார். இன்னொரு அபிப்ராயத்தைச் சொல்லவும் மறக்கவில்லை:

> சிவகாசி நாடார்கள் மறவர்களை எதிர்த்து அவர்களது பழக்கவழக்கங்களைப் பரிகாசஞ்செய்து கர்வத்துடன் நடந்துகொண்டதால் தாங்களே வம்பை விலைக்கு வாங்கிக்கொண்டார்கள்.

சிவாகாசிக் கலக வழக்கை நடத்தச் சர்க்கார் தரப்பு வக்கீலாக சங்கரன் நாயரை நாளொண்ணுக்கு நூற்றெழுபத்தஞ்சு ரூபாய் சம்பளத்தில் அமர்த்திப் பட்டணத்திலிருந்து அனுப்பிவைத்தார்கள். அவரது ஆலோசனைப்படி குற்றப் பத்திரிகை தயாரானது. சிலர் யோசனை சொன்னார்கள்.

''இதுதான் சரியான சந்தர்ப்பம். முக்கியமான புள்ளிக்காரங்க அத்தன பேரவும் மாட்டிவுட்றணும். அப்பத்தான் எல்லாம் அடங்குவான்.''

இன்னும் சிலர் கறுவினார்கள்.

''சமீந்தாருக பண்ணுன குசும்புக்கு அவங்களச் சும்மா வுடப்புடாது. அவங்க தைரியத்துலதான அம்புட்டும் நடந்தது. அத்தன பேரவும் வழக்குல சேத்து ஆப்பு வைக்கணும்.''

சங்கரன் நாயர் அதுக்கெல்லாம் ஒத்துக்கொள்ளவில்லை. கலகம் நடந்த நாளன்று பலர் வேறு இடங்களில் இருந்ததாக இட்டுக்கட்டி அவர்களுக்குப் பதிலாகக் கிழடுகட்டைகளை போலீஸ்காரர்கள் சேர்த்திருந்தார்கள். அதுக்காக அவர்கள் லஞ்சம் வாங்கியதாகப் பேச்சு இருந்தது. அவர் அவர்களையும் நீக்கிவிட்டார்.

தலைமறைவானவர்கள் இன்னும் பிடிபடவில்ல. வடுகநாதத் தேவரும் ராம சாமித் தேவரும் ராமநாதபுரம் சமீனைச் சேர்ந்த கிழவனேரியில் தங்கியிருப்ப தாகத் துப்புக் கிடைத்தது. அஸிஸ்டெண்ட் சூப்பிரண்டு சீனிவாசாச்சாரியும் இன்ஸ்பெக்டர் சுப்பையரும் சிவகாசியிலிருந்து விருதுபட்டிக்குப் போய் இருபது துப்பாக்கி போலீசுடன் புறப்பட்டார்கள்.

விடியக்காலம் கிழவனேரியைச் சுற்றிவளைத்துக்கொண்டார்கள். அங்கே ரெண்டு பேருக்கும் உறவுக்காரர்கள் உண்டு. அவர்களது துணையுடன் தப்பித்து விட்டார்கள்.

இன்ஸ்பெக்டர் விசாரித்துவிசாரித்துத் துப்புவெட்டினார். மறு வாரம் சிவகங்கைச் சமீனில் அடுத்தடுத்துள்ள சொறிக்குளத்தையும் ஆலத்தூரையும் ஆட்களுடன் சூழ்ந்தார். அடுத்த நாள் விடியக்காலம் வடுகநாதத் தேவர் பிடி பட்டார். அவர் ஒரு இடத்தில் அஞ்சாறு நாழிகைக்கு மேல் தங்காமல் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்ததாகத் தெரியவந்தது.

பழனி வத்ராப்புப் பகுதிகளில் தேடியும் கிடைக்காமல் எப்படியோ துப்புத் தெரிந்து பொள்ளாச்சிப் பக்கம் போனார்கள். கப்பலாங்கரையில் வெண்டர் ஆறுமுகம் பிள்ளை அகப்பட்டார்.

முத்துக்கருப்பப் பண்டாரத்தையும் ராமசாமித் தேவரையும் பிடிப்பது கஷ்டமாக இருந்தது. ரெண்டு பேரும் ஒரு வக்கீலை ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர் பேர் மால்கொழுந்து பிள்ளை. அவர் சொன்னபடி ராமசாமித் தேவர் ஒரு நாள் ஆஜராவதாக இருந்தது. இன்னொரு வக்கீல் குறுக்கிட்டதால் நடக்க வில்லை. முத்துக்கருப்பப் பண்டாரத்தின் வப்பாட்டி குழந்தையம்மா. அவள் தப்புத்தப்பாகத் தகவல் கொடுத்துக்கொண்டிருந்தாள். எல்லாம் பணத்துக்காகத் தான். கடைசியில் அவர் திருப்புவனம் பகுதியில் ஒளிந்திருப்பதாகத் தெரிய வந்தது. ரெண்டு பேரும் கைக்குச் சிக்கவில்லை. சரி இனிமேலும் தாக்குப்பிடிக்க முடியாதென்று முன்னும் பின்னுமாக ஆஜராகிவிட்டார்கள்.

மீதிப் பேரைப் பற்றி முணுமுணுப்பு பெரிசாகவே இருந்தது.

''நடுவப்பட்டி வெள்ளையத் தேவரு மலங்காட்டுக்குப் போன மனுசன் திரும்பவேயில்லையாம்.''

''இத்தனைக்கும் அவருதானப்பா காரணம். முக்கியமானவர வுட்டா எப்படி.''

''இனியொரு கொள்ள நடக்கும்.''

''அவரு சாமியராகி சமாதியாயிட்டாருன்னும் பேசிக்கிறாக.''

''புடிக்க முடியாறதுக்கு எல்லாக் காரணமும் சொல்லுவாக.''

''ராமச்சந்திரத் தேவரும் பொன்னுச்சாமித் தேவரும் கிட்டத்துலதான் சுத்தித் திரியிறாகளாம்.''

''எங்க ஒளிஞ்சிருக்காங்கன்னு எல்லாருக்கும் தெரியும். ஆரும் வாயத் தொறக்க மாட்டாகளே.''

''போலீசுக்கு நல்லாவே தெரியும்.''

''பெறகென்ன. போயிப் புடிக்க வேண்டியதுதான.''

''போறதுக்குப் பயம்.''

''இவுகளுக்குத் துப்பாக்கி ஒரு கேடு.''

''அது நம்மளச் சுடுறதுக்கு.''

''கலகத்துல சுட்ட லச்சணம் தெரியுமில்ல. கவுட்டுக்குள்ள சொருவிக்கிட்டு கண்ண மூடிக்கிட்டான்.''

''பகல்லயே பசுமாடு தெரியாது. இருட்ல எங்க எரும மாடு தெரியப் போகுது.''

''அதச் சொல்லு. உள்ளூரு ராவுத்தரவே புடிக்க முடியல. அசலூருக்காரங் களுக்குப் போயிட்டான்.''

எல்லாரையும் பிடித்து என்றைக்குக் குற்றப்பத்திரிகை தாக்கல்செய்ய. கைவசம் இருக்கிறவர்களை வைத்து வழக்கை ஆரம்பிக்கலாம். மற்றதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம். சங்கரன் நாயர் அப்படியே முடிவுசெய்தார். கூட்டிக் கழித்து தொண்ணூற்று நாலு பேர் தேறினார்கள். அவர்களில் ஒருவர் பூர்வாங்க விசாரணையில் விடுதலை செய்யப்பட்டார். இன்னொருவர் கோட்டியாகி விட்டார். மீதி தொண்ணூற்றிரண்டு பேர்மீது குற்றப்பத்திரிகை தாக்கல்செய்யப் பட்டது. அதும் மூணு தவணையாக. முக்கால்வாசிப் பேருக்கு மேல் சுத்துப் பட்டிக்காரர்கள். தேவர்களும் குடும்பமாரும் ரெம்ப. இதில் முக்கியமானவர்கள் வடுகநாதத் தேவர் முத்துக்கருப்பப் பண்டாரம் வேலாயுதப் பண்டாரம் முத்தரசுப் பண்டாரம் ராமசாமித் தேவர் மாரிமுத்துத் தேவர் மானசேரி நாகப்பத் தலைவன் வெண்டர் ஆறுமுகம் பிள்ளை.

கலக வழக்குகளை விசாரிக்க சாத்தூர் சங்கரநயினார்கோயில் தென்காசியில் மூணு தனிக்கோர்ட்களையும் திருநெல்வேலியில் கூடுதலாக மூணு செசன்ஸ் கோர்ட்களையும் சர்க்கார் ஏற்படுத்தியது. சங்கரன் நாயரைத் தவிர மேலும் சில வக்கீல்களும் சர்க்கார் தரப்பில் நியமிக்கப்பட்டார்கள். கீழ்க்கோர்ட்களில் விசாரணை விரைவாக நடந்தது. பிரதிவாதிகள் பிரபலமான வக்கீல்களைத் தேடிப் பிடித்தார்கள். சங்கரன் நாயர் வாதங்களை எடுத்துவைக்கத் தயாராகிக் கொண்டிருந்தார்.

## 11. குற்றமும் தண்டனையும்

சாத்தூர் கீழ்க் கோர்ட்டிலிருந்து மேல்விசாரணைக்காக அனுப்பப்பட்ட சிவகாசிக் கொள்ளை வழக்கு திருநெல்வேலி கூடுதல் செசன்ஸ் கோர்ட்டில் விசாரணைக்கு வர நாலு மாசத்துக்கு மேலாகிவிட்டது. கோர்ட்டார் ஒல்டுபீல்டு விவரமான வெள்ளைக்காரர். தொண்ணூற்றிரண்டு கைதிகளை விசாரிப்பதற்குக் கொஞ்சங்கூட மலைக்கவில்லை. சர்க்கார் வக்கீல் சங்கரன் நாயர் துணைக்கிருந்தார்.

எதிர்த் தரப்பில் ஆறு வக்கீல்கள். ரெண்டு அய்யர் ரெண்டு அய்யங்கார் ஒரு முதலியார் ஒரு வெள்ளாளர். கோர்ட்டாருக்கு உதவியாக ரெண்டு அசஸ்ஸர்கள். ஒரு சுதேசிக் கிறிஸ்தவர் ஒரு வெள்ளாளர்.

விசாரணை நடக்கும் நாளெல்லாம் திருவிழாக் கூட்டந்தான். கைதிகள் சாட்சிகள் உறவுக்காரர்கள் அதிகாரிகள் என்று கோர்ட் நிரம்பி வழிந்தது. கைதிகளை வரிசையாக நிறுத்தி அடையாளம் கண்டுபிடிப்பது பெரும்பாடாக இருந்தது. எல்லாரையும் தனித்தனியாகச் சரிபார்க்க முடியாது. குறுக்குத்தட்டில் யாரையாவது சோதிக்கலாம். அதுதான் சாத்தியம். அப்போது வரிசைப்படி நிற்கிறார்களா என்று தெரிந்துவிடும்.

கைதிகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அடையாள அட்டைகளை நம்பர் தெரியாமல் குப்புறப் போட்டுக்கொள்ளுமாறு கோர்ட்டார் சொல்லிவிட்டார். முந்தி ஒரு வழக்கில் கைதி ஒருவர் சாட்சியைப் பார்த்து தன்னை அடையாளம் காட்டக் கூடாது என்று சைகையில் மிரட்டியதை அவரே நேரில் பார்த்த சம்பவமும் உண்டு. அந்த மாதிரி இதிலும் நடந்துவிடாமல் கவனமாக இருந்தார். விசாரணை சூடுபிடிக்க ஆரம்பித்ததும் சங்கரன் நாயரின் வாதங்களைக் கேட்பதற்காகவே ஒரு கூட்டம் கூடியது.

குற்றங்களை ரெண்டு வகையாகப் பிரித்துக் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டிருந்தது. ஒண்ணு பொதுப்படையான குற்றங்கள். மற்றது தனிப்பட்ட குற்றங்கள். பயங்கர ஆயுதங்களுடன் கலகம்செய்தது பல குற்றங்கள் நடக்கும் வகையில் சட்ட விரோதமாகக் கூட்டம் கூடியது. இதெல்லாம் பொதுக் குற்றங்கள். மானசேரி நாகப்பத் தலைவனைத் தவிர மற்ற அனைவர் மீதும் இவை சுமத்தப்பட்டிருந்தன. கொலைக்கு உடந்தை கொலை கொலை முயற்சி பயங்கர ஆயுதத்தால் படுகாயப்படுத்தியது காயப்படுத்தியது குற்றச் சதித் திட்டத்துக்கு உடந்தை ஆகியவை தனிக் குற்றங்கள். பத்துப் பேர்மீது இவை சுமத்தப்பட்டன.

விசாரணை மூணு மாசம் நடந்தது. இந்தக் காலத்தில் மூணு பேர் இறந்துவிட்டார்கள். கருப்பண மணியக்காரனுக்குப் புத்தி பேதலித்துவிட்டது. கூண்டிலேறி கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை. இதை கோர்ட்டாரும் அசஸ்ஸர்களும் உறுதிசெய்தார்கள். இதுபற்றி கோர்ட்டார் சர்க்காருக்கு எழுதிவிட்டார். ஒருவர் கீழ்க்கோர்ட்டினால் ஏற்கெனவே விடுதலை செய்யப்பட்டுவிட்டார்.

மொத்தம் இருநூற்று எழுபத்தாறு சாட்சிகள். சர்க்கார் தரப்பில் தொண்ணூற்று ஒன்பது பேர். எதிர்த் தரப்பில் நூற்று எழுபத்தேழு பேர். இரு தரப்பிலும்

இருநூற்று நாற்பத்திமூணு தஸ்தாவேஜுகளை கோர்ட்டார் பரிசீலித்தார். சங்கரன் நாயர் முன்வைத்த ஆணித்தரமான வாதங்களை எதிர்த் தரப்பு வக்கீல்களால் எதிர்கொள்ள முடியவில்லை. சிவகாசிக் கொள்ளையானது திடீரென்று நடந்த சம்பவமல்ல. நாடார்களுக்கு எதிராக மறவர்கள் தலைமையில் பிற சாதியினர் சேர்ந்து நெடுநாட்களாகவே திட்டமிட்டு நடத்திய சதி என்பதை ஆதாரங்களுடன் எடுத்துவைத்தார்.

கைதிகளில் ஒருவருக்கெதிராக யாரும் சாட்சி சொல்லவில்லை. நாலு பேருக்கெதிராக ஒவ்வொரு சாட்சி மட்டுமே இருந்தார்கள். அவர்கள் சொன்னதை உறுதிப்படுத்த பிறிதொரு சாட்சி இல்லை. இன்னொருவர் கலகத்தன்று கரிசக்குளத்திலிருந்து கலெக்டர் வரும் வழியில் பிடிபட்டவர். லீவில் வந்திருந்த பட்டாளத்துக்காரர். அவர் கையில் குடை மட்டுமே இருந்தது. அவருக்கெதிராகச் சாட்சியில்லை. ஆக இந்த ஆறு பேரும் விடுதலையானார்கள்.

மீதி எண்பத்திமூணு பேரும் சாட்சியங்களின் அடிப்படையில் குற்றவாளிகள் என கோர்ட்டார் தீர்மானித்துவிட்டார். அவரது முடிவு அசஸ்ஸர்களின் கருத்துக்கு உடன்பட்டோ முரண்பட்டோ இருந்தது. குற்றங்களின் தன்மைக்கேற்பத் தண்டனைகளை நிர்ணயித்தார்.

பதினோரு பேர் சம்பவத்தன்று சிவகாசிக்கு வந்ததுக்கும் கைது செய்யப்பட்டதுக்கும் ஆதாரமிருந்தது. ஆனால் அவர்கள் கலகத்தில் பங்கெடுத்ததாக யாரும் சாட்சி சொல்லவில்லை. அவர்களில் மூணு பேர் அறுபது வயசுக்கு மேற்பட்டவர்கள். எட்டுப் பேர் கொஞ்ச வயசுப் பையன்கள். விறகு விற்கவும் வெற்றிலை வாழையிலை வாங்கவும் சிவகாசிக்கு வந்ததாகச் சிலர் சொன்னார்கள். கோர்ட்டார் அதை நம்பவில்லை.

பையன்கள் பின்விளைவுகளைப் பற்றி யோசிக்காமல் விளையாட்டுப் போக்கில் வந்திருக்கணும். அவர்களுக்குத் தகுந்த பாடம் கற்பித்தாகணும். கொஞ்சக் காலமாவது செயிலில் இருந்தால்தான் பொறுப்பு வரும். வயசாளிகளும் செயிலுக்குப் போயாகணும். விடுதலையாகி வந்தபின் பெரிசாக எதும் தொந்தரவு கொடுக்க அவர்களுக்குச் சீத்துவம் இருக்காது. ஆகவே அவர்களுக்குக் குறைந்த தண்டனையே போதுமானது. சிறிசும் பெரிசுமாக பதினோரு பேருக்கும் கோர்ட்டார் அஞ்சு வருசம் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

பொதுக் குற்றங்களில் அறுபத்து நாலு பேரின் பங்குபற்றிப் பரிசீலித்தார். அவர்கள் கலகத்தில் தீவிரமாக ஈடுபட்டதுக்குப் போதிய ஆதாரங்கள் இருந்தன. கலகத்தில் கொலை கொள்ளை தீவைப்பு எல்லாம் நடந்தன. அந்தக் கடுங்குற்றங்களுக்கு அவர்களும் பொறுப்பு. குற்றங்களின் கடுமைக்கேற்ப தண்டனை வழங்கணும். அது ஒரு எச்சரிக்கையாக அமையணும். கோயில் பிரவேசம் பற்றிய தகராறு ஓயும்வரை அல்லது அதில் இறுதி முடிவெடுக்கப்படும்வரை அவர்கள் இந்த ஜில்லாவுக்கு வெளியே இருக்கணும். நேரடியாக இல்லையென்றாலும் இந்தச் சம்பவத்தில் அவர்களுக்கு நிறையவே பங்கு உண்டு.

எல்லாவற்றையும் கருத்தில் கொண்டு அறுபத்து நாலு பேருக்கும் பன்னிரெண்டு வருசம் கடுங்காவல் தண்டனை விதித்து உத்தரவிட்டார். கொலை கொள்ளை ஆகிய குற்றங்களுக்காக பத்து வருசம். மற்றவற்றுக்கு ரெண்டு

வருசம். இரு தண்டனைகளையும் தொடர்ச்சியாக அனுபவிக்கணும். அவர்களில் முத்தரசுப் பண்டாரம் நாடார்களுக்கெதிரான முக்கியப் புள்ளிகளில் ஒருவர். குருசாமி நாடார் கிட்டங்கியில் சங்கிலியம்மாளும் அவளுடைய குழந்தையும் கொலைசெய்யப்பட்டதில் அவருக்கு நெருங்கிய சம்பந்தமிருப்பது உறுதி யானது. அதுக்காகத் தனிப்பட்ட தண்டனை வழங்கியாகணும். அவரை ஆயுள் பரியந்தம் தீவாந்திரம் அனுப்ப உத்தரவிட்டார்

தனிப்பட்ட குற்றங்கள் சுமத்தப்பட்ட பத்துப் பேரில் சுப்பையாத் தேவர் விடுதலை செய்யப்பட்டுவிட்டார். செந்தட்டித் தேவருக்கு ஏற்கெனவே அஞ்சு வருசம் தண்டனை சொல்லியாயிற்று. இன்னும் தண்டிக்கப்பட வேண்டிய வர்கள் எட்டுப் பேர். வடுகநாதத் தேவர் முத்துக்கருப்பப் பண்டாரம் மாரி முத்துத் தேவர் வேலாயுதப் பண்டாரம் மாசானத் தேவர் ராமசாமித் தேவர் மானசேரி நாகப்பத் தலைவன் வெண்டர் ஆறுமுகம் பிள்ளை. அவர்களில் நாகப்பத் தலைவனைத் தவிர மற்ற ஏழு பேர்மீது பொதுக் குற்றச்சாட்டுக்களும் உண்டு.

வடுகநாதத் தேவர் பல இடங்களில் கலகக் கூட்டத்துடன் கலந்திருந்த தாகப் பலர் சாட்சி சொன்னார்கள். சம்பவத்தன்று தான் சிவகாசியில் இல்லை என்று அவர் சொன்ன கதையை கோர்ட்டார் நம்பவில்லை. ஆக பொதுக் குற்றச்சாட்டுபற்றிச் சந்தேகமே இல்லை.

அருணகிரி நாடாரை முகமது காசிம் சுட்டுக் கொலைசெய்வதற்கு வடுகநாதத் தேவர் உடந்தையாயிருந்தாரா. கொலைசெய்யும்போது உடனிருந் தாரா. கந்தசாமி நாடாரைச் சுட்டுப் படுகாயப்படுத்தினாரா. இது தனிப்பட்ட குற்றச்சாட்டு. அருணகிரி நாடார் தனது வாக்குமூலத்தில் தேவரைப் பற்றிச் சொல்லாததாலும் கந்தசாமி நாடாரின் சாட்சியத்தைப் பிறிதொருவர் உறுதிப் படுத்தாததாலும் குற்றச்சாட்டு ருசுவாகவில்லை.

கோர்ட்டார் தேவரைத் தனிப்பட்ட குற்றச்சாட்டிலிருந்து விடுவித்துப் பொதுக் குற்றங்களுக்காகத் தண்டித்தார். பன்னிரெண்டு வருசம் கடுங்காவல்.

முத்துக்கருப்பப் பண்டாரம் கலகத்தில் கலந்துகொண்டது உறுதியானது. அரிசிக்குளம் தெருவில் அவர் பழனியப்பனை வெட்டி முண்டத்தை இழுத்துக் கொண்டு போனதுக்கும் இன்னொரு இடத்தில் அருணாசலத்தை வெட்டிய துக்கும் வலுவான சாட்சிகள் இருந்தன. அவற்றை ஏற்றுக்கொண்ட கோர்ட்டார் உச்சபட்சத் தண்டனையாகத் தூக்குச் சொன்னார்.

குருசாமிநாடார் கிட்டங்கியில் சங்கிலியம்மாளையும் குழந்தையையும் ராமசாமித் தேவர் கொலைசெய்ததில் மாரிமுத்துத் தேவருக்கும் பங்குண்டு என கோர்ட்டார் தீர்மானித்தார். தூக்குச் சொல்லிவிட்டார்.

குருசாமி நாடார் கிட்டங்கியில் காதர் மொகைதீன் ராவுத்தருடன் சேர்ந்து வேலாயுதப் பண்டாரம் கிருஷ்ண நாடாரைக் கொலைசெய்தது ருசுவானது. அவருக்கும் தூக்குத் தண்டனை.

மாசானத் தேவர் மீதான தனிப்பட்ட குற்றச்சாட்டு ருசுவாகவில்லை. அவர் கலகத்தில் கலந்துகொண்டது உறுதியானது. கோர்ட்டார் பன்னிரெண்டு வருசம் கடுங்காவல் தண்டனை சொன்னார்.

ராமசாமித் தேவர் கலகத்தில் ஈடுபட்டதுக்கும் சங்கிலியம்மாளையும் குழந்தையையும் கொலைசெய்ததுக்கும் இருபதுக்கும் மேற்பட்ட சாட்சியங்கள் இருந்தன. எதிர்த் தரப்புச் சாட்சியங்கள் வலுவாக இல்லை. தேவரைக் கலகம் நடந்த நாளன்று விருதுபட்டியில் பார்த்ததாகச் சிலர் சொன்னார்கள். அவரை விருதுபட்டியில் பார்த்ததாகவும் பார்க்கவில்லையென்றும் விருதுபட்டி சப் மாஜிஸ்திரேட் சீனிவாசய்யங்கார் முன்னுக்குப் பின் முரணாகச் சாட்சி சொன்னார். எல்லாவற்றையும் சீர்தூக்கிப் பார்த்த கோர்ட்டார் கொலைக்குற்றம் ருசுவானதாக முடிவுசெய்து தூக்குத் தண்டனை விதித்தார்.

வெண்டர் ஆறுமுகம் பிள்ளையுடன் சேர்ந்து குற்றச் சதித் திட்டத்துக்கு உடந்தையாக இருந்தார் என்பது மட்டுமே மானசேரி நாகப்பத் தலைவன்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு. அவர் கலகத்தில் ஈடுபட்டதுபற்றிப் புகாரில்லை.

கலகத்துக்கு முந்தி மே மாசம் இருபத்தாறாம் தேதி மானசேரியில் பேச்சு வார்த்தை நடந்து முறிந்துவிட்டதைப் பற்றி நாடார்கள் சொன்னார்கள். அன்று மானசேரியில் தான் இல்லையென நாகப்பத் தலைவன் மறுத்தார். பொன்னுச் சாமித் தேவர் வேதச் சாமியாரைத் தேடி சாட்சியாபுரத்துக்குப் போனதுபோல் நாடார்கள் மானசேரிக்குப் போயிருக்க வாய்ப்புண்டு என கோர்ட்டார் கருதினார். நாகப்பத் தலைவன் குற்றவாளி எனத் தீர்மானித்து பத்து வருசம் கடுங் காவல் சொல்லிவிட்டார்.

வெண்டர் ஆறுமுகம் பிள்ளை பெரிய கதை வைத்திருந்தார். ஏப்ரல் மாசத் தொடக்கத்திலிருந்தே சேத்ராடனம் கிளம்பிவிட்டதாகவும் சென்னை திருப்பதி திருவண்ணாமலை சிதம்பரம் சீர்காழி ஸ்ரீரங்கம் என பல புண்ணியத் தலங் களைப் பார்த்துவிட்டு கப்பலாங்கரைக்குப் போயிருந்தபோது ஆகஸ்ட் மூணாம் தேதி கைதானதாகவும் தெரிவித்தார். ஜூன் மாசம் அஞ்சாம் தேதியே அதாவது சிவகாசிக் கலகத்துக்கு முந்தின நாளே தான் சென்னையில் இருந்ததுக்கு ஆதாரங் களைக் காட்டினார். இந்தச் சம்பவங்கள எல்லாமே மானசேரியில் நடந்ததாகச் சொல்லப்பட்ட பேச்சுவார்த்தையின்போதும் ஜூன் ஆறாம் தேதி நடந்த சிவ காசிக் கலகத்தின்போதும் அவர் அங்கே இல்லை என்பதை ருசுப்படுத்த இட்டுக் கட்டப்பட்டவை என கோர்ட்டார் கருதினார். அவர் குற்றச் சதித் திட்டத் துக்கும் குற்றங்களுக்கும் உடந்தையாக இருந்ததுக்காக அவரை ஆயுள் பரியந்தம் தீவாந்திரம் அனுப்ப உத்தரவிட்டார்.

செசன்ஸ் கோர்ட்டார் சூட்டோடு சூடாக சின்னையாபுரம் வழக்கையும் விசா ரணைக்கு எடுத்துக்கொண்டார். மொத்தம் மூணு கொலைகள். தங்கண நாடார் ஆறுமுக நாடார் பொன்னணஞ்சி நாடார். எண்பத்தேழு எதிரிகள். பூர்வாங்க விசாரணையை திருநெல்வேலி ஸ்பெஷல் மாஜிஸ்திரேட் வாலஸ் நடத்தினார். அவர் தன்னளவில் ஒன்பது பேரை விடுவித்து எழுபத்தெட்டுப் பேரை செசன் சுக்கு அனுப்பினார். விசாரணையின்போது நாலு பேர் இறந்துவிட்டார்கள். செசன்ஸ் கோர்ட்டார் எழுபத்து நாலு பேரை விசாரித்து முப்பத்தியோரு பேரை விடுதலை செய்தார்.

கொலைக் குற்றத்துக்காக வாழவந்தான் மணியக்காரன் சின்னச்சாமி நாய்க்கர் சங்கராண்டி சுப்பைய மணியக்காரன் ஆகிய நாலு பேருக்குத் தூக்கு. மூணு பேருக்குப் பதினோரு வருசமும் முப்பத்திரெண்டு பேருக்கு ஒன்பது வருசமும் நாலு பேருக்கு ரெண்டு வருசமும் கடுங்காவல்.

சிவகாசி வழக்கைப் போலவே இதிலும் எதிரிகள் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தார்கள்.

## படலம் 18

### 1. முளைக்கீரை

''அடே பொய்யாளி பெரிய நாடாரு பேத்தியாள நெனச்சாப் பாவமாருக்கு. கலிங்கல்லதான் குடியிருப்பன்னு சாதன பண்ணுது. எவ்வளவோ சொல்லியும் கேக்கல. கழுகுமலைக்குப் போயி தாயா புள்ளையாச் சேந்துக்கிட்டா நல்லது. கவலைய மறந்த மாதிரியும் இருக்கும். என்னடா செய்றதுன்னு ஒரே ரோசனை யாருக்கு.''

பொய்யாளிக்கு அப்பச்சியின் வருத்தம் புரிந்துவிட்டது.

''நம்மளே தஞ்சம்னு வந்த பொண்ண ஆதரிக்கிறதுதான மருவாதி. கழுகு மலையில நடந்தத நெனச்சுப் பயப்புடுது போலருக்கு.''

''அதென்ன லேசுக்குள்ள மறக்கிற சங்கதியா.''

''நம்மளோட எவ்வளவு காலத்துக்கு இருக்குமோ இருக்கட்டும்.''

''அது பிரியப்படி வுட்ற வேண்டியதுதான். வேலவெட்டிக்குக் கவலை யில்ல. நம்ம காடுகரையில நின்னாப் போதும். குடியிருக்க வீடுபாத்துக் குடுத் துறணும்.''

''இப்பக் காச்சிக் குடிக்கிற களத்து வீட்லயே இருந்துட்டுப் போகட்டுமே.''

''வேணாம்ப்பா. சம்முக நாடாரக் குடியமத்தி விருத்தியாகல. பஞ்சம் குடும் பத்தவே விழுங்கீருச்சு. தப்பிப் பெழச்ச தங்கையாவும் தங்கல.''

''பெறகென்ன செய்றது.''

''புதுசாத்தான் ஒண்ணு போட்டுக்குடுக்கணும்.''

''செஞ்சாப்போச்சு.''

பொய்யாளியும் பயல்களுமாகச் சேர்ந்து களத்துக்கு மேற்கே சின்ன வீடு எழுப்பினார்கள். சோளத் தட்டை கம்மந்தட்டை கொண்டு அழகாகக் கூரை வேய்ந்தான் பொய்யாளி. ஆண்டிக்குச் சந்தோசம்.

''வெதப்புலதான் சின்னாண்டி. கூர மேயிறதுல பெரியாண்டியாருக்கானே.''

புது வீடு புழக்கத்துக்குத் தோதாக இருந்தது. கிழக்கு வாசல். களத்து வீட்டில் குடியிருக்கும் பொய்யாளியின் குடும்பத்துடன் நிரப்புக் கலப்பாக இருந்து கொள்ளலாம். தெய்வானை தெம்பானாள். வீட்டுக்கு வடபுறம் வேப்பங் கண்ணு நட்டிவைத்தாள். வேலையா தண்ணீரூற்றி வளர்த்தான்.

புது வீட்டைப் பார்க்கும்போதெல்லாம் ஆண்டிக்குப் பழைய நினைவு மனசைக் குடைந்தது. கூரைக்கு ஓலை வெட்டிப் பக்குவமாகச் சிறகுமிதித்துக் காயவைத்துக் கொடுத்த சண்முக நாடார் இல்லை. குறுக்கும் மறுக்குமாகத் திரிந்த மாலையம்மாளும் இல்லை. சிரட்டையில் தண்ணீர் சுமந்த தங்கையா வைக் காணும். இந்தக் குடும்பமாவது விருத்தியாகட்டும். இருளப்பசாமிதான் இதுகளைக் காப்பாற்றணும்.

தெய்வானைக்கு வைராக்கியம் ரெம்ப. வேலாயுடன் காட்டு வேலை செய் தாள். கூலித் தவசம் சோற்றுக் கவலையைப் போக்கியது. ரெண்டு சீவனுக்கு அது அதிகந்தான். மிச்சத்தை அடுக்குப்பானையில் சேர்த்துவைத்தாள். உண்டான கூலிக்கு மேல் ஒரு சிரங்கைகூட வாங்குவதில்லை. ஆண்டிக்குப் பெருமையாக இருந்தது.

''அத்த கொணம் அப்படியே இருக்கு.''

வேலையாவை செவனம்மா கவனித்துக்கொண்டாள். அவன் கலிங்கல் பயல்களுடன் பழகி விளையாடினான். ஊர் புதுசாக இல்லை. ஆண்டியுடன் சரி பேச்சுப் போடுவான். அதுக்காகவே ஆண்டி களத்துப் பக்கம் வருவான். சின்னவனும் பூட்டையாவும் பேச்சுப்பழக்கம் போடுவதைப் பார்த்து தெய்வானை மகிழ்ந்து போவாள்.

தெய்வானைக்கும் வேலாயிக்கும் நல்ல பழக்கம். விடிந்ததும் தண்ணீ ரெடுக்கப் போவதுமுதல் வேலைத்தனத்திலிருந்து அடைந்தே திரும்பும்வரை சேர்ந்தே திரிவார்கள். புது வீட்டுக்கு முன்னால் வேலாயி குரல் கொடுப்பாள்.

''தேவானத்தா தண்ணிக்குப் போவமா.''

அடுத்தது தெய்வானையின் முறை. களத்து வீட்டுக்கு முன்னால் அவள் குரல் கேட்கும்.

''வேலீ வேலைக்குக் கெளம்பலயா.''

ஆண்டிக்கு தெய்வானை எப்போதும் 'சின்னத் தாயி'. பொய்யாளிக்கு 'தங்கையாத்தா'. சொக்கம்மாளுக்கு 'சின்னாத்தா'. ராக்கன் கூப்பிடுவதே இல்லை. எப்போதாவது நாலு வார்த்தையை மென்று விழுங்குவதுடன் சரி. நல்லப்பன் செவனம்மா ராமனுக்கு 'வேலையாத்தா'. தெய்வானை கவலைகளை மறக்க ஆரம்பித்தாள்.

அவளுக்கு அடிக்கடி ஒரு நினைப்பு ஓடியது. எவ்வளவு காலம் கொத்துக் கூலிக்கு உழைப்பது. சொந்தத்தில் வெள்ளாமை செய்துபார்க்கணும். கை நிறைய வரவாசி எடுக்கணும். மாடு கண்ணு தோட்டந்துரவு வைத்துப் பிழைக்கணும். அதுக்குக் கையகல நிலமாவது வேணுமே. ஆண்டியிடம் ஆசையைத் தெரியப் படுத்தினாள்.

''பாட்டையா...''

''என்ன தாயி.''

''சொந்தமா வெள்ளாம செய்யலாம்னு நெனைக்கென்.''

''மகராசியாச் செய்யிங்க.''

''ஒரு மடக்கு நெலங் கெடச்சாப் போதும்.''

''சரி.''

''வெள்ளாமையெடுத்து வரவாசியில வாரம் தந்துடுதென்.''

''அப்படியா.''

''என்னால கேப்ப கம்புன்னு போட்டுப் பாக்க முடியாது. காய்கறி வச்சுப் பொழச்சுக்கிடுதென்.''

''சரி.''

''என்ன சொல்லுதிய பாட்டையா.''

''சின்னத் தாயி என்ன சொன்னாலும் சரியாத்தான் இருக்கும். காக்குறுக்கம் போதுமா.''

''அதே ரெம்பத்தான்.''

''தாயி ஏண்ட மட்டும் வெவசாயம் பாக்கலாம். அதுக்கு நானாச்சு.''

பூசரமரத் தோட்டத்துக்கு மேற்கே கலிங்கலுக்கு வடபுறம் கிடந்த தரிசு நிலத்தைச் சவள உழவடித்துப் போடச் சொன்னான் ஆண்டி. எப்பேர்ப்பட்ட நிலம் அது. சொன்னா சொன்னபடிக்கு வெள்ளாமை விளையும். தனிக் கிணறு உண்டு. ஆடையுங் கோடையும் வற்றாது. கொஞ்சக் காலமாகக் கவனிக்காமல் செய்யாலாகப் போட்டுவிட்டதால் புல் பூண்டு முளைத்துத் தரிசாகிவிட்டது. கிணறு தூர்ந்து மண் மேதி மஞ்சணத்தி முளைத்துவிட்டது.

ஆண்டி கேட்டான்.

''பூசரமரத்துக் கெணத்துலருந்து தண்ணி கொண்டு வந்துருவமா தாயி. தலகீழாப் பாயும்.''

தெய்வானை வேறு திட்டம் வைத்திருந்தாள்.

''கெணத்துல தூர்வையெடுத்துச் சின்னதா தெலாப் போட்டுக்கிடுதனே.''

''ஒங்க பிரியம்.''

அவளே ஆள் பிடித்துக் கிணற்றில் தூர்வை தோண்டினாள். மிச்சம் வைத்திருந்த தவசத்தில் கூலி கொடுத்தாள். சொற்ப ஆழத்திலேயே தண்ணீர் வந்துவிட்டது. பூசர மரத் தோட்டத்துப் பனை வரிசையில் இடி விழுந்து கருகி நின்ற மொட்டைப் பனையைக் கேட்டு வாங்கித் தெலாப் போட்டுக்கொண்டாள். குறுக்கு வசத்தில் கிணறு முழுக்க தெலாக்கல் பதித்தாள். அது நடமாட்டத்துக்குத் தோதாக இருந்தது.

அவள் அகலக் கால் வைக்கவில்லை. கால் குறுக்கம் நிலத்தை மட்டும் பக்குவப் படுத்தினாள். அதுக்கு நல்ல உரம் போட்டாள். மக்கிப்போன ஆட்டுச் சாணி. அங்கங்கே ஆடு படுத்த இடங்களில் கூட்டிச் சேர்த்தது. இன்னொண்ணு கோழிக் காரம். கோழி மடங்களில் நெடுங்கணை அகப்பையால் வறண்டிச் சேர்த்த சாரமான உரம்.

தெலா இறவைக்குக் கொத்தாள் கூப்பிட்டுப் பாதி நிலத்தில் கீரையும் மீதியில் காய்கறியும் பாவினாள். சிறுகீரை தண்டாங்கீரை கத்தரி வெண்டை. அவள் தண்ணீர் பாய்ச்சினாள். வேலையா உடைப்பு அடைத்து ஒத்தாசனை செய்தான். செடிகள் உரம் தின்று எக்குப்போட்டு வளர்ந்தன.

கட்டாந்தரிசு கண்ணுக்குக் குளிர்ந்த பசுமையாக மாறிவிட்டதைப் பார்த்து ஆண்டிக்கு மனசு குளிர்ந்தது.

''மிச்ச நெலத்துக்கும் நல்ல காலம் பெறக்கட்டும் தாயி. நீங்க தொட்ட தெல்லாம் தொலங்கும். ஆமா எங்களுக்குச் சேர வேண்டிய வாரத்த எப்படிக் கணக்குப் பாக்கப்போறீக. பாதி குடுத்துறணும்.''

அவன் கண்களில் குறும்பு.

''எப்படி வேணுமோ அப்படியே குடுத்துடுதென்.''

''நான் பெரிய நாடாருக்குக் குடுக்க வேண்டிய வாரம் எவ்வளவோ பாக்கியிருக்கு. ஒங்ககிட்ட வாங்குனா அதப்போல பாவம் வேற இல்ல. அது வந்துதானா எங்க வீட்ல ஒலையேறப்போகுது. எங்கள அன்னியப்படுத்திப் பேச வேணாம் தாயி. ஆண்டவன் புண்ணியத்துல நீங்க நல்லாருந்தாப் போதும்.''

அதுக்குப் பிறகு அவள் அந்தப் பேச்செடுக்கவில்லை. கீரையும் காய்கறியும் வளரவளர மனசில் நம்பிக்கையும் வளர்ந்தது. ரெண்டு பலாப் பெட்டி பின்னி வைத்துக்கொண்டாள். ஓலைப் பின்னல் வேலை மறந்துபோன மாதிரி இருந்தது.

அப்பப்ப ரெண்டு பெட்டிகளும் நிறைந்தன. கீரைப் பெட்டியை வேலையா சுமந்தான். கலிங்கல் தெருக்களில் அவள் குரல் ராகமெடுத்தது.

''சிறுகீர தண்டாங்கீர வெண்டக்கா கத்தரிக்கா...''

பெண்கள் சுளகில் தானியம் கொண்டுவந்து கொடுத்துப் பண்டம் வாங்கினார்கள். அவள் கைக்கணிசத்தில் அள்ளிக் கொடுத்தாள். வேலாயி தவசம் கொண்டு வரும்போதெல்லாம் ரெண்டு பேருக்கும் ஒரு மூச்சு சண்டை நடக்கும்.

''தேவானத்தா யேவாரம்னா ஒரு கணக்கு வழக்கு இருக்கணும். இப்ப தவசத்த வாங்கப்போறீகளா நான் வீட்டுக்குள்ள போகட்டுமா.''

''வேலி என்னம்மா இது. ஒனக்கே நல்லாருக்கா. கணக்கு வழக்குப் பாத்துத் தான் நெலத்த வுட்டீகளாக்கும்.''

''அது அப்பச்சி பாடு ஒங்க பாடு. நாங்க ஓசியில வாங்கித் தின்னா ஒடம்புல தான் ஒட்டுமா.''

''ஓசியில்லம்மா. ஒங்க வீட்டுப் பண்டம்.''

''நீங்க ஒழைக்காமச் சும்மாவா வந்தது.''

''எப்படியோ போ. ஒனக்கு நான் அன்னிசக்காரியாயிட்டென்.''

வீட்டுக்குள்ளிருந்தபடி விவகாரங்களைக் கவனிக்கும் ஆண்டி ஒருமாதிரி முழிப்பான்.

''ரெண்டும் ஒண்ணுக்கொண்ணு கொறஞ்சதில்ல.''

தெய்வானைக்குப் பொட்டணமாகத் தவசம் சேர்ந்தது. வீட்டில் இன்னொரு அடுக்குப் பானை ஏறியது. பெண்களுக்கு அவள்மேல் பிரியம்.

''அஞ்ஞாடி காட்டுக் கீரையே தின்ன நாக்குக்கு தோட்டத்துக் கீர தேனாருக்கு. கீரக்காராத்தா கைராசியாக்கும்.''

ஊருக்கெல்லாம் அவள் 'கீரக்காராத்தா'. உள்ளூரில் விற்றது போக மிஞ்சுவதைச் சுத்துப்பட்டிகளுக்கும் கொண்டுபோனாள். வேலையா அவளுடனேயே திரிந்தான். வெளியூர்களில் தானியமும் துட்டும் கிடைத்தன. துட்டு வைக்கச் சுருக்குப்பை தேவைப்பட்டது. ஒரு கணக்குக்காகத் தராசு படி வைத்துக் கொண்டாள்.

கொஞ்ச நாளில் கிணற்றோரம் முருங்கைமரம் வளர்ந்தது. வாய்க்கால் வரப்புகளில் அகத்தியும் புளிச்சியும் முளைத்தன. வெவ்வேறு காய்கறிச் செடிகள் தலைகாட்டின. அவளது வியாபாரக் கூவல் மூச்சுமுட்ட நீண்டுகொண்டே போனது.

''சீறுகீர அரக்கீர மொளக்கீர தண்டாங்கீர அகத்திக்கீர முருங்கக்கீர புளிச்சிக் கீர கத்திரிக்கா வெண்டக்கா பீக்கங்கா சொரக்கா முருங்கக்கா பூசணிக்கா சீனி யவரக்கா...''

திப்பனம்பட்டியிலிருந்து கொண்டுவந்த சூரிக்கத்தி பூசணிக்காய் வெட்ட உதவியது. இடையிடையே வேலையாவின் முற்றாத குரலும் கேட்கும்.

''கீர கீரே...''

அவள் சும்மா இருக்கும் நேரங்களில் கூலி வேலைக்குப் போவாள். திரும்பும் போது ஒரு கட்டு புல் பிடுங்கி வருவாள். வடக்கூர் அரண்மனைக் குதிரைக்கு வாங்குவார்கள்.

அவளுக்கு மகனைப் பற்றி நிறைய ஆசையிருந்தது. அவன் பனையேறக் கூடாது. பாளையரிவாளும் தடைநாரும் கடிப்பும் குடுவையும் தேவையில்லை. நெஞ்சு காய்க்கும் தொழில் அப்பனுடன் போகட்டும். மகன் பெரிய வியாபாரி யாகணும். கையில் என்னேரமும் பணம் புரளணும். கார வீடு கட்டணும். கலி யாணம் முடித்துப் பிள்ளைகுட்டி பெறணும்.

வேலையாவுக்குச் சின்ன வயசிலேயே வியாபாரம் கை பழகிவிட்டது. கணக்கு வழக்கு பிடிபட்டது. சில சமயம் உள்ளூருக்குள் தனியாகக்கூட பெட்டி தூக்கிப் போவான். ஆத்தாளுக்குச் சந்தோசம் தாங்காது.

ஆண்டிக்குப் பெரிய கவலை விட்டது. தெய்வானை பாடு கஷ்டமில்லை. மகன் துணையிருக்கும்போது மலைக்க வேணாம். பொய்யாளியிடம் சொன்னான்.

''அந்தப் பொண்ணு அரும்பாடு பட்டுக் கரையேறிக்கிருச்சு. தாயும் புள்ளையும் பெழச்சுக்கிருவாக. எக்காரணத்தக் கொண்டும் அதுகளத் தவிக்க வுட்றப்புடாது.''

''ஏன் தவிக்கணும்.''

''கரடு தட்டிக் கெடந்த தரிசு இண்ணைக்கு கண்ணுக்குக் குளிச்சியா இருக்கு தேன்னு மனசில ஆச வரத்தான் செய்யும். அப்படி நெனைக்கப்புடாது. அது அவுக நெலம்னு பெருந்தன்மையா இருந்துறணும்.''

''எனக்கு அப்படி நெனப்பெல்லாம் கெடையாது. அத அவுகளே வச்சுக் கிறட்டும்.''

''அப்படிச் சொல்லு.''

ஆண்டியின் மனசு நிறைகுளமாகத் ததும்பியது.

## 2. ஆப்பு

சிவகாசிக் கலக வழக்கில் தூக்குத் தண்டனை பெற்ற முத்துக்கருப்பப் பண்டாரம் மாரிமுத்துத் தேவர் வேலாயுதப் பண்டாரம் ராமசாமித் தேவர் ஆகியோரது ஊர் ஜித வழக்கையும் அப்பீல்களையும் ஹைகோர்ட் விசாரணைக்கு எடுத்துக்கொண் டது. மாரிமுத்துத் தேவரை கொலைக் குற்றத்திலிருந்து விடுவித்து தூக்குத் தண் டனையை ரத்துசெய்து பொதுக் குற்றங்களுக்காக வழங்கப்பட்ட பன்னிரெண்டு

வருசம் கடுங்காவலை ஊர்ஜிதப்படுத்தியது. மற்ற மூணு பேருக்கும் தூக்கு ஊர்ஜிதமானது.

இடிந்துபோன மூணு பேரும் அந்த உத்தரவை மறுபரிசீலனை செய்யுமாறு பாளையங்கோட்டை செயிலிலிருந்து ஹைகோர்ட்டுக்கு மனு அனுப்பினார்கள். அது தள்ளுபடிசெய்யப்பட்டது. பிறகு மகாராணிக்கும் கவர்னருக்கும் கருணை மனு கொடுத்தார்கள். மனுவை மகாராணிக்கு அனுப்ப முடியாது என சர்க்கார் கைவிரித்துவிட்டது.

மகாராணிக்கு எழுதிய மனு சம்பந்தமாக உத்தரவு வரும்வரை மூணு பேரது தூக்குத் தண்டனையையும் நிறுத்திவைக்குமாறு ராமசாமித் தேவரின் உறவினர் கோபாலத் தேவரும் மற்ற இருவரின் ஏஜெண்ட் வெங்கடாசலமய்யரும் கவர்னருக்குத் தந்தியனுப்பினார்கள். சர்க்கார் அதையும் ஏற்க மறுத்துவிட்டது. ஆக எந்த விதத்திலும் தூக்குத் தண்டனையைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

இதுக்கிடையில் செசன்ஸ் கோர்ட்டில் தண்டனை பெற்ற மற்ற கைதிகள் தனியாகவும் கூட்டாகவும் ஹைகோர்ட்டில் அப்பீல்செய்து அது நிலுவையில் இருந்தது. அந்த வழக்கில் சங்கரன் நாயரே சர்க்கார் வக்கீலாக இருக்கணுமென்று நாடார்கள் விரும்பினார்கள். அவருக்கான செலவை ஏற்றுக்கொள்ளவும் தயாராக இருந்தார்கள். தான் லண்டன் செல்ல வேண்டியிருப்பதால் வழக்கில் ஆஜராக இயலாதென்று அவர் தெரிவித்துவிட்டார். வேறொருவரை வைத்துத்தான் வழக்கை நடத்த வேண்டியிருந்தது.

கோர்ட்டார்கள் ரெண்டு பேர். பென்சன் மூர். ஏழு நாள் விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்கினார்கள். செசன்ஸ் கோர்ட்டில் தூக்குத் தண்டனை பெற்ற நாலு பேர் நீங்கலாக மற்ற தண்டனைகள் பெற்ற எழுபத்தொன்பது பேரில் ஒருவரைத் தவிர மீதி எழுபத்தெட்டுப் பேர் அப்பீல்செய்திருந்தார்கள். அவர்களுக்காக வக்கீல் கூட்டமே ஆஜரானது.

செசன்ஸ் கோர்ட்டார் சொன்ன தீர்ப்பில் அப்படியொண்ணும் பெரிய மாற்றமில்லை. ஹைகோர்ட் அஞ்சு பேரை விடுதலைசெய்தது. அவர்களில் முக்கியமானவர் மானசேரி நாகப்பத் தலைவன். மே மாசம் இருபத்தாறாம் தேதி மானசேரியில் நாடார்களுக்கும் மறவர் கட்சிக்குமிடையே பேச்சுவார்த்தை நடந்ததாகக் கூறப்பட்டதை கோர்ட்டார்கள் நம்பவில்லை. நாகப்பத் தலைவனின் பேர் ரெண்டாவது குற்றப்பத்திரிகையில்தான் சேர்க்கப்பட்டுள்ளது. அதில் குறிப்பிடப்பட்ட எதிர்த் தரப்புச் சாட்சிகளுக்குப் பதிலாக புதுசாக நாலு பேர் செசன்ஸ் கோர்ட்டில் நிறுத்தப்பட்டார்கள். சாத்தூர் ஸ்பெஷல் மாஜிஸ்திரேட் வழக்கை செசன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பும்வரை பழைய சாட்சிகள் விசாரிக்கப் படவேயில்லை. சிவகாசிக் கலகத்துக்கான ஏற்பாடுகளில் பங்கேற்காத கலகத்தில் ஈடுபடாத ஒருவருக்கு வழங்கப்பட்ட தண்டனையை ஊர்ஜிதம்செய்வது அபாயகரமானதாகும். பேச்சுவார்த்தை நடந்ததாகக் கூறும் சாட்சியங்களைக் கொண்டு மட்டுமே வழங்கப்பட்ட தண்டனையை கோர்ட் ஊர்ஜிதம்செய்யத் தயாராக இல்லை. அதனால் நாகப்பத் தலைவன் விடுதலையானார்.

மற்ற எழுபத்துமூணு பேரின் தண்டனைகளைக் குறைப்பதற்கோ ரத்து செய்வதற்கோ எந்த முகாந்திரமும் இல்லை. ஹைகோர்ட் அவர்களது அப்பீல்

களைத் தள்ளுபடிசெய்து அவர்களுக்கு செசன்ஸ் கோர்ட் வழங்கிய தண்டனை களை ஊர்ஜிதப்படுத்தியது. ஹைகோர்ட்டார்கள் செசன்ஸ் கோர்ட்டார் ஒல்டு பீல்டின் தீர்ப்பை வெகுவாகப் பாராட்டினார்கள்:

> இந்த வழக்கில் ஏராளமான சாட்சியங்களை செசன்ஸ் கோர்ட்டார் கவன மாகவும் கச்சிதமாகவும் அலசி ஆராய்ந்துள்ளார். அதனால் எங்களது பணி சுளுவாகிவிட்டது.

இதேபோல் சின்னையாபுரம் கலக வழக்கிலும் ஹைகோர்ட் கடுமையாக நடந்துகொண்டது. சிவகாசி வழக்கை விசாரித்த இரு கோர்ட்டார்கள்தான் அதையும் விசாரித்தார்கள். செசன்ஸ் கோர்ட் தண்டித்த நாற்பத்திமூணு பேரில் இருபத்தெட்டுப் பேர் மட்டுமே அப்பீல் செய்திருந்தார்கள். அவர்களில் ஒருவர் விடுதலைசெய்யப்பட்டார். தூக்குத் தண்டனை பெற்ற நாலு பேரில் சின்னச் சாமி நாய்க்கர் சுப்பைய மணியக்காரன் இருவருக்கும் தண்டனையைக் குறைத்து ஆயுள் பரியந்தம் தீவாந்திரம் அனுப்ப உத்தரவிடப்பட்டது. வாழவந்தான் மணியக்காரன் சங்கராண்டி ஆகிய மற்ற இருவருக்கும் தூக்கு ஊர்ஜிதம்செய்யப் பட்டது. மீதி இருபத்திமூணு பேரின் தண்டனைகளும் ஊர்ஜிதமாயின.

ஊரெங்கும் இதே பேச்சாகக் கிடந்தது.

‘‘அவுக அப்பன் வசமா ஆப்பு வச்சதும் அத்தன பேரும் ஆடிப்போயிட்டான் பாரு.’’

‘‘போலீசவும் அதிகாரிகளவும் கைக்குள்ள போட்டுக்கிட்டு என்னமா ஆட்டம் போட்டான்.’’

‘‘தகப்பன் வெட்ன கெணறுனாப்புல தலகீழாப் பாயலாமா. வக்காளி தலையே நொறுங்கிப்போச்சு.’’

‘‘கொள்ளையடிச்சு அள்ளிக் கெட்டீறலாம்னு வாயப் பௌந்துக்கிட்டுப் போன அப்பாவிக பாடுதானப்பா நாசமாப் போச்சு. ஆச காட்டி மோசம் பண் ணீட்டாங்களே.’’

‘‘இவனுக்கு அறிவெங்க போச்சு. இவுக அப்பன் வீட்டுச் சொத்தா கொள்ளை யடிக்கிறதுக்கு.’’

‘‘வாய்தாவுக்கு அலஞ்சலஞ்சு அர உசிரு போச்சு. வருசக் கணக்கா செயிலுக் குள்ள இருந்துட்டு வெளிய வாறதுக்குள்ள கொற உசிரும் போயிரும். அது வரைக்குக் குடும்பம் என்னத்துக்காகும். அத நெனச்சாத்தான் வேதனையாருக்கு.’’

‘‘பின்னால வாறதப் பத்தி அவன் நெனச்சுப்பாக்கலயே. அப்ப அனுபவிக்க வேண்டியதுதான்.’’

‘‘கூட்டீட்டுப் போன பெரிய மனுசங்கெல்லாம் தப்பிச்சிட்டானே.’’

‘‘அவனுக்குப் புத்தியிருக்கு.’’

‘‘ஊருக்கு வெளிய ஒவ்வொருத்தனும் குருதையத் தயாரா நிறுத்திவச்சிட் டுத்தான் காரியத்துல எறங்கீருக்கான். கூட்டத்துக்கு முன்னால அப்படி இப்படிப் பம்மாத்துக் காட்டீட்டு அருவமில்லாம ஒதுங்கிக்கிட்டான்.’’

‘‘சண்டையில செயிச்சிட்டா ஆளுக்கு முந்திப் பீத்தீட்டு வாறது. இல்லன்னா ஆளுக்கு முந்திக் குருதமேல தப்பிச்சிறது. நல்ல தந்தரந்தான்.’’

‘‘அதென்ன மயிரு வீரம். ஏறங்குனா கடசிவரைக்கும் நின்னு சமாளிக்கணும்.’’

## 3. அரவக் கருடனார் உலா

கைலாய மலையில் காலமெல்லாம் தவமிருக்கும் பனிச்சடையனின் கழுத்தைச் சுற்றிப் படமெடுத்து நிற்கும் நீல நாகத்துக்குக் குறுக்கு வலி குடைந்தது. இறுக்கம் தளர்ந்து வெயில் காய்ந்தால் வலி தணியும்.

பரமசிவனின் மோனம் கலைந்துவிடாமல் பக்குவமாக இறங்கிப் பனிச்சரிவில் சறுக்கி பூமிக்கு வந்து நீள நாகமாக ஊர்ந்தது. உடம்பில் ஒளிக்கதிர் பாய்ந்து நீலம் வெளுத்துக் காவிநாகமாக மாறிவிட்டது. மின்னலிடும் ரெட்டை நாக்கு மட்டுமே இப்போது முகத்துக்கு அடையாளம். அகலப் படம் விரித்தாலும் சினத்தின் சின்னமான தலைச்சக்கரம் காவிக்குள் சுருங்கி சாதுவாகக் காட்சியளித்தது.

தரைப் பயணத்தில் வெயில் உறைக்கவே குருதிச் சிவப்பங்கி அணிந்து காவியை மறைத்துக்கொண்டது. புழுங்கும் சமயம் சட்டையைக் கழற்றிக் காற்று வாங்கியது.

கடல்வண்ணனை விடாது சுமந்து கருடனுக்குக் கழுத்து சுளுக்கிக்கொண்டது. சற்றே சுமையை இறக்கி வைக்கணும்போல் ஒரு சோர்வு. திருவரங்கன் தேவியருடன் பள்ளிகொண்டு பையத் துயிலும் சமயம் கழுத்துவலி முறித்துக் குனிந்து பார்க்கையில் பூமி மீது ஒரு நெடுங்கங்கு நெளிந்து செல்வது தெளிவாகத் தெரிந்தது. அடடா செம்பாம்பு. வித்தியாசமாக இருக்கிறதே. விடக் கூடாது.

குப்புறப் பாய்ந்து பாம்பின்மீது இறங்கி கூர்நகத்தால் பற்றிப் பிடித்துக் கொண்டது. மூச்சுத் திணறிய பாம்பு முனங்கியது.

''அய்யா கருடனாரே என்னைத் தெரியவில்லையா.''

''அடடா அரவனாரா. இதென்ன புதுக் கோலம். அடையாளமே தெரியவில்லையே.''

''நீர் எங்கே இப்படி.''

சொந்தக் கதைகளை நொந்த குரலில் பரிமாறிக்கொண்டன.

''என்ன செய்யலாம் அரவனாரே.''

''ஓய்வு தேடி வந்தாயிற்று. அதைச் செய்வோம்.''

''எப்படி.''

''சில சீமைகளைச் சுற்றிப்பார்ப்போமே.''

''அதெப்படி.''

''நான் உமது வலது காலைச் சுற்றிக்கொள்கிறேன். நீர் என்னைப் பாதுகாப்பாகப் பற்றிக்கொள்ளும். நீர் பறக்க நான் மிதக்க பயணம் இனிதாக இருக்கும்.''

''சொல்லாமல் கொள்ளாமல் வந்துவிட்டோமே. அதை நினைத்தால்தான் வருத்தமாக இருக்கிறது.''

''இதையறியாதவர்களா பரமசிவனும் பரந்தாமனும். போய்த்தான் வரட்டுமே என்று காத்திருப்பார்கள்.''

''அப்படிச் சொல்கிறீரா. சரி என்னால் தாழப் பறக்க முடியாது. கீழே நடப்பவற்றைத் தெளிவாகப் பார்ப்பது சிரமமாயிற்றே.''

''அதனாலென்ன. உயரத்துக்கேற்ப நான் நீளமாகிக் கொள்கிறேன். தேவையில்லாதபோது சுருண்டுகொள்ளலாம்.''

''அப்படியென்றால் சரி.''

ஊருலா தொடங்கியது. அங்கங்கே நடப்பதைப் பற்றிப் பாம்பு நாக்கை உயரே அனுப்பிக் கருடனுக்குச் சொல்லிக்கொண்டே வந்தது.

சிவகாசியை எட்டும்போது நன்றாக இருட்டிவிட்டது. பாம்பு கேட்டது.

''இந்த ஊரில் தங்கிவிட்டுப் பயணத்தைத் தொடரலாமே.''

''நானும் அதைத்தான் நினைத்தேன். களைப்பாக இருக்கிறது.''

இருட்டில் ஊரைச் சுற்றியதில் அடர்ந்த மரம் கிடைக்கவில்லை. கோயில் தேர் தோதுப்படவில்லை. ஓங்கியுயர்ந்த வேதக் கோயில் கோபுரச் சிலுவை கருடன் பற்றி உட்காரவும் பாம்பு சுற்றிக்கொள்ளவும் வாகாக இருந்தது.

ஊரடங்கிவிட்டது. மேற்கே சற்றுத் தொலைவில் கொத்தாகக் குலவைச் சத்தம் சுதியேறி இறங்கியது. அந்த இறக்கத்தை வாங்கி வடபுறத்தில் மீண்டும் ஏற்றம். அது கிழக்கே தொடுத்துத் தென்புறம் கடந்தது. அங்கேயிருந்து மேல் திசைக்குச் சென்றது. ஆணுக்கும் பெண்ணுக்கும் இடைப்பட்ட குரல்கள். சோகமான குலவை. இப்படியே மும்முறை ஒலித்தபின் நாலு புறமும் ஒருசேரக் கலகலத்தன. நாலும் நெருங்கி வந்து ஒரே இடத்தில் இணைந்தன.

குலவையடங்கி கூடிக் கும்மியடிக்கும் கைத்தாளமும் பாட்டும் கேட்டது.

''எங்களக் கொன்னது ஆருங்கடா
என்னென்ன தண்டன கூறுங்கடா
பொங்குது கோவம் தீயாக
பொசுக்கிக் கொளுத்துவோம் ஒண்ணாக
தன்னன னாதினம் தன்னான
தானன னாதினம் தன்னான...''

ஆரவாரம் தணியும்போது ஒற்றைக் குரலின் ராகம் வந்தது.

''தூக்குக் கயத்துல தொங்கவச்சான்
துடிக்கத் துடிக்கச் சாகவச்சான்...''

உறக்கம் கலைந்த கருடன் ஆர்வத்தில் கேட்டது.

''புதுசாக இருக்கிறதே. அங்கே என்ன நடக்கிறதென்று போய்ப் பார்க்கலாமே.''

பாம்பு சொன்னது.

''வேண்டாம். இங்கிருந்தபடியே நீண்டு போய் நானே பார்த்து வருகிறேன்.''

''செய்யும்.''

பாம்பு படமெடுத்தபடி மெல்லப் பறந்து சென்று கும்மிக் குரல்கள் சங்கமிக்கும் இடத்தைக் கண்டுபிடித்துவிட்டது. கொட்டம் இன்னும் அடங்கவில்லை. கிட்ட இறங்கிப் பார்த்தது. ஆளுருவங்களைக் காணவில்லை. கூடிக் கும்மியடிப்பது அத்தனையும் ஆளுயரத் தீவட்டிகள். பருத்த தலையும் குச்சுக் கால்களும் ஒல்லிக் கைகளுமாக நெருப்புக் கோலத்தில் அசைந்து பாடுவதைப் பார்க்கச் சோகமாக இருந்தது.

பாம்பு நாக்கு வழியாகக் கருடனுக்குச் சேதியனுப்பியது.

''மானுடர்களல்ல. அத்தனையும் ஆவிகள் கொள்ளிவாய்ப் பிசாசுகள். ஒரே ஒரு சம்மனசு. ஒற்றைக் குரல் கேட்கிறதே அதுதான்.''

''என்னவாம்.''

''இங்கே ஒரு பாரதப் போரே நடந்திருக்கும் போலிருக்கிறது. பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை நமக்கு. சற்றுத் தாமதமாக வந்துவிட்டோம். அஞ்சு பேர் நூறு பேரை எதிர்த்துப் போரிட்ட கதைதான். அங்கே பங்காளிச் சண்டை. இங்கே சாதிச் சண்டை.''

''இவர்கள் யாராம். ஏன் கொதிக்கிறார்கள்.''

''சில கொலைகளுக்குச் சிலரைப் பொறுப்பாக்கி கோர்ட் தண்டனை கொடுத்துவிட்டது. பாண்டவர் பக்கம் கூன் குருடு நொண்டி முடம் என்று இன்னும் பலரைக் கொன்று குமித்தார்களே அவர்கள் நியாயம் கேட்கிறார்கள்.''

''ஓகோ...''

''செய்யாத குற்றத்துக்கு ஒருவரைத் தூக்கிலிட்டுவிட்டார்களாம். ஒரு விதத்தில் அதுவும் கொலைதானே.''

''நிச்சயமாக. அவர் யார் பக்கம்.''

''துரியோதனாதிகள் பக்கம்.''

''சரி.''

''சண்டையன்று மாண்டவர்களில் பலரை அடையாளம் தெரியவில்லை. அள்ளிப்போட்டு எரித்திருக்கிறார்கள். அவர்களும் இருக்கிறார்கள்.''

''சரிதான். அவர்கள் எந்தப் பக்கம்.''

''யாருக்குத் தெரியும். அப்புறம் கோர்ட் விசாரணையின்போதே துரியோத னாதிகள் பக்கம் சிலர் இறந்துவிட்டார்கள். அவர்கள் அதைக் கொலையென் கிறார்கள்.''

''வெட்டாமல் குத்தாமல் நடந்த கொலை... அது சரியே சண்டையென்றால் இரு பக்கமும் சேதமிருக்கும். துரியோதனாதிகள் பக்கம் சேதமே கிடையாதா.''

''ஏராளமாம். கணக்குக்கு வரவில்லையே.''

''அது சரி.''

கூட்டுக்கும்மி ஒய்ந்த பின்னும் ஒற்றைக் குரலின் ஓலம் மட்டும் கேட்டுக் கொண்டேயிருந்தது.

பாம்பு போலீஸ் ஸ்டேசனை மெல்ல எட்டிப் பார்த்தது. இன்னும் வெளிச்ச மிருந்தது. காவலிருந்த போலீஸ்காரர்கள் பின்புறம் போய் மூத்திரம் மோண்டு கொண்டே முணுமுணுத்தார்கள்.

''கொள்ள நடந்தண்ணைக்குச் செவகாசியில இல்லாற ராமசாமித் தேவர அநியாயமாத் தூக்குல தொங்க வச்சிட்டாங்களே பாவிக. ''

''அண்ணைக்கு அவரு விருதுபட்டியில இருந்தது நெசந்தானாம்.''

''பெறகெப்படி அவரச் சேக்கலாம்.''

''நாடாருகளுக்கு அவருமேல அவ்வளவு காட்டம் இருந்துருக்கு. ஒண்ணுக்கு ரெண்டு கொல செஞ்சதாச் சாச்சி சொல்லி ஒழிச்சுக்கெட்டீட்டான்.''

கடைசிச் சொட்டையும் உலுக்கி உதிர்த்துவிட்டு கால்சட்டைக்குள் பத்திரப் படுத்திக்கொண்டார்கள்.

''கோர்ட்டாரு யோசிச்சுப்பாத்துருக்கணும்.''

‘‘அவரென்ன செய்வாரு. கொல செஞ்சதக் கண்ணால பாத்ததா சாச்சிக சொல்லும்போது நம்பித்தான ஆகணும். தேவரு உள்ளூருல தாட்டிக்கமான மனுசன். ஏற்கெனவே அவருமேல வேற வழக்கு உண்டு. எல்லாத்தவும் யோசிச்சுப் பாத்தாரு. நம்பீட்டாரு.’’

‘‘அந்த சப்மாஜிஸ்திரேட்டு மனசுவச்சிருந்தாக் காப்பாத்தியிருக்கலாம். கடசி நேரத்துல கழுத்தறுத்துட்டாரு.’’

‘‘அவரு தன்னோட பெழப்பத்தான் பாப்பாரு.’’

‘‘அடுத்தவன் உசிரக் காவு குடுத்துத்தான் தன்னக் காப்பாத்திக்கிறணு மாக்கும். அதென்ன ஈனப் பெழப்பு.’’

‘‘ராமசாமித் தேவரு வெறுத்துப்போயி போங்கடா நீங்களுமாச்சு ஒங்க கோயிலுமாச்சுன்னு சொல்லிப் பொண்டாட்டி புள்ளீகளோட வேதத்துக்கு மாறிப் போயிட்டாரு.’’

‘‘அம்புட்டு வெறுப்பு.’’

‘‘ஒரு பெராமணன நம்பவே கூடாதுன்னு சொல்லீட்டே தூக்குக் கயத்தக் கழுத்துல மாட்டிக்கிட்டாராம்.’’

‘‘தன்னாலதான் ராமசாமித் தேவரு தூக்குல தொங்குனாருன்னு சப்மாஜிஸ் திரேட்டுக்கு ரெம்ப வருத்தமாம்.’’

‘‘செஞ்ச குத்தம் இப்பத்தான் மனசில உறுத்துதாக்கும்.’’

‘‘அதுக்குப் பிராயச்சித்தமா தெனமும் ராமாயணம் படிக்காராம்.’’

‘‘பெருமாளு கோயில இடிக்காமருந்தாச் சரி.’’

‘‘அவருக்கென்ன ராசா மாதிரி இருக்காரு. மேலதிகாரிகளச் சட்டசெய்றதே யில்ல. கலெக்டருக்கு அவரச் சுத்தமாப் புடிக்கல. சஸ்பெண்டு பண்ணுனாரு. அதெல்லாம் வேணாம்னு சர்க்கார் சொல்லீருச்சு. செவகாசி வழக்குல தண்டன வாங்குன ஒரு கைதியோட சொந்தக்காரப் பொண்ண வச்சுக்கிட்டுச் சந்தோசமா இருக்காராம்.’’

‘‘அப்படி ஒரு கூத்து நடக்குதா.’’

‘‘வேற ஜில்லாவுக்கு மாத்தியாவது தொலங்கன்னு கலெக்டரு சர்க்காருக்கு எழுதுனாராம். கடசிக்கு அவரக் கடலூருப் பக்கம் மாத்திப் போட்ருக்கு போலருக்கு.’’

‘‘மேலாவில அவருக்கு அப்படி என்னதாம் செல்வாக்கோ தெரியல. நீயும் நானுந்தான் இருக்கமே தெனந்தெனம் செத்துப் பெழச்சுக்கிட்டு.’’

‘‘இனியொரு சங்கதி தெரியுமா. செவகாசி வழக்க நடத்துன சங்கரன் நாயருக்கு எக்கச்சக்க வருமானமாம். அம்பதாயிரத்துக்கு மேல இருக்குமாம்.’’

‘‘ஆயுசு முழுக்க நம்ம வாங்குற சம்பளங்கூட அவ்வளவு தேறாது.’’

‘‘குத்தம் செய்யாற மனுசனத் தூக்குல தொங்க வச்ச வெசயம் அவரோட சம்சாரம் காதுக்கு எட்டியிருக்குது. அடடா இந்தப் பாவத்துக்கு தம் புருசனும் ஒரு வெதத்துல காரணந்தானன்னு அந்தம்மாளுக்கு வெசாரமான வெசாரம்.’’

‘‘அநியாயமா ஒரு பொம்பளைக்குத் தாலியறுத்தத நெனச்சுப்பாத்துருக்கும்.’’

‘‘தவறான மொறையில வந்த வருமானத்தத் தானதருமம் செஞ்சிறலா மேன்னு புருசங்கிட்டச் சொல்லிப்பாத்துருக்கு. அவரு கேக்கிற மாதிரி தெரியல.’’

‘‘கை நெறையாக் கெடச்சதக் கைகழுவுறதுக்கு மனசுவருமா.’’

‘‘அவரு அந்தப் பணத்த ஒரு பேங்கில போட்டு வச்சிருந்துருக்காரு. போதாற காலத்துக்கு அந்த பேங்கு நொடிச்சுப்போயிருச்சு. தொண்டத் தண்ணியக் குடுத்துச் சம்பாரிச்ச பணம் போயிருச்சேன்னு அவருக்கு வருத்தம். பாவத்துல வந்த பணம் போனதுல வீட்டம்மாளுக்குச் சந்தோசம்.’’

‘‘புருசன வுட்டுப் போனது பொண்டாட்டிகிட்ட வந்துருச்சு.’’

‘‘பொண்டாட்டிகிட்ட இருந்தது புருசங்கிட்டப் போயிருச்சு.’’

‘‘நம்மகிட்ட என்ன வரப்போகுதோ என்ன போகப்போகுதோ.’’

‘‘அந்தக் கருப்பண மணியக்காரன் மாதிரி கோட்டிபுடிச்சு தெருத்தெருவா அலையப் போறொம்.’’

‘‘அவனப் பாத்தாப் பாவமாருக்கு. என்னென்னமோ சொல்லிப் பொலம்புறான். அப்படியெல்லாம் நடந்துருக்குமோன்னு நெனச்சா பயமாருக்கு.’’

‘‘என்னேரமும் கம்பும் கையுமால்ல திரியிறான். ஆருக்குக் கெடைக்கப் போகுதுன்னு தெரியல.’’

‘‘மொத அடி நமக்குத்தான்.’’

‘‘இப்ப வந்தாலும் வருவான். உள்ள போயிருவொம்.’’

நடந்த கதையைப் பாம்பு சொன்னபோது கருடனுக்கு ரெம்ப வருத்தமாக இருந்தது.

‘‘இப்போதே இந்த இடத்தை விட்டுக் கிளம்பியாகணும். மனசுக்கு என்னமோ போலிருக்கிறது.’’

‘‘எங்கே போவது.’’

கோயில் சிலுவைப் பிடியைத் தளர்த்திப் பாம்பை இறுகப் பற்றிக்கொண்டு கருடன் உயரஉயரப் பறக்க ஆரம்பித்தது. பறக்கும் வேகமே பாம்பின் கேள்விக்குப் பதிலாக இருந்தது.

## 4. இறக்கம்

திருநெல்வேலிச் சீமையில் சர்க்கார் அதிகாரிகள் அத்தனை பேரையும் ஒரு பயம் பிடித்தாட்டியது. கலகத்தைக் கட்டுப்படுத்தத் தவறியதற்காக கலெக்டர் ஸ்காட்டை சப்கலெக்டராகப் பதவியிறக்கித் தஞ்சாவூருக்கு அனுப்பிவிட்டார்கள். கீழதிகாரிகளின் பேச்சை நம்பி மோசம் போய்விட்ட அவர் தன்னைத் தானே நொந்துகொண்டு போனார். சர்க்கார் அதிகாரிகள் ஊழியர்கள் போலீஸ்காரர்கள் என சகல மட்டங்களிலும் ஊறிப்போயிருக்கும் லஞ்சம் நிருவாகச் சீர்கேடுகளைப் பற்றி அவர் போட்ட கூக்குரலை சர்க்கார் கண்டுகொள்ளவில்லை.

அவருக்குத் துணையாகக் கூடவே இருந்த போலீஸ் சூப்பிரண்டு டேன் தப்பித்துவிட்டார். எந்தக் குழப்பம் நடந்தாலும் நடவடிக்கை எடுப்பதில்லை என்பதில் தெளிவாக இருந்த அதிகாரி.

முன்பு ஸ்ரீவில்லிப்புத்தூர் டெபுடி மாஜிஸ்திரேட்டாக இருந்த சையது முஸ்தபா உசேனை கோழைத்தனத்துக்காகப் பதவியிறக்கி பழையபடி நெல்லூ

ருக்கே அனுப்பிவிட்டார்கள். மீண்டும் அவரை டெபுடி மாஜிஸ்திரேட்டாக நியமிக்கக் கூடாது என்பது உத்தரவு. அவர் சர்க்காரிடம் மன்றாடிப்பார்த்தார். பயனில்லை.

சாத்தூர் சப்மாஜிஸ்திரேட்டாக இருந்த வாசுதேவ ராவுக்கும் அதே கதி தான். நூறு ரூபாய் வாங்கிவந்த அவர் பழைய இலாகாவுக்குப் போய் நாற்பது ரூபாய் சம்பளத்தில் கிளார்க்காகச் சேர்ந்துவிட்டார்.

சிவகாசிக் கலகத்தன்று கூட்டத்துக்கு நடுவில் சிக்கித் தவித்த சாத்தூர் சப்மாஜிஸ்திரேட் சீனிவாசய்யருக்கு பத்திரப் பதிவு இலாகாவே சாசுவதமானது. பதவியிறக்கத்தில் அங்கே தஞ்சமடைந்தார். கருணை காட்டுமாறு கெஞ்சிப் பார்த்தார். சர்க்கார் இரங்கவில்லை.

சிவகிரி சமீன் மேனேஜராக இருந்து சஸ்பெண்டான டெபுடி கலெக்டர் வேலாயுதம் பிள்ளையையும் விட்டுவைக்கவில்லை. ஆறு மாசம் சஸ்பென்ஷன் அடுத்து பதவியிறக்கம் என்று தண்டித்துவிட்டார்கள்.

பட்டணத்திலிருந்து பெரிய போலீஸ் அதிகாரி வந்து திருநெல்வேலியில் சின்ன அதிகாரி ஸ்டீவன்சனுடன் கலந்து பேசி போலீஸ்கார்கள் மீது எடுக்க வேண்டிய நடவக்கைகளை முடிவுசெய்தார். தண்டனைகளைக் கலக வழக்குகள் முடிந்த பிறகு நிறைவேற்றலாம் இல்லையென்றால் பிரச்சினைகள் வரும் என்று ஸ்டீவன்சன் சொன்னார். அது சரியாகப் பட்டது. அதனால் தாமதமானது.

சிவகாசிக் கலகத்துக்கு முந்திய நிலைமையைச் சரியாகத் தெரிந்துகொள்ளத் தவறியதற்காகவும் கலகத்தில் ஈடுபட்ட முக்கியப் புள்ளிகளைப் பிடிக்கத் தவறியதற்காகவும் ஸ்ரீவில்லிப்புத்தூர் இன்ஸ்பெக்டர் சூரியநாராயண அய்யரை வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள். கலகத்தன்று சிவகாசியில் இருந்த சாத்தூர் இன்ஸ்பெக்டர் மதார் உசேன் வேறு ஜில்லாவுக்கு மாற்றப்பட்டார். விருதுபட்டி இன்ஸ்பெக்டர் பார்த்தசாரதி அய்யங்கார் பதவியிறக்கப்பட்டார். சிவகாசி கச்சேரி அதிகாரி ஏட்டு பூவலிங்கம் பிள்ளையும் மதார் உசேனுடன் வந்த சாத்தூர் கச்சேரி அதிகாரி பொய்யாளிமுத்துத் தேவரும் பத்து போலீஸ்காரர்களும் வீட்டுக்கு அனுப்பபப்பட்டார்கள்.

மேலும் ஏழு கச்சேரி அதிகாரிகளும் டிஸ்மிஸ்செய்யப்பட்டார்கள். ஸ்ரீ வில்லிப்புத்தூர் ஆறுமுகம் பிள்ளை விருதுபட்டி ரங்கக் கோனார் வச்சக்கார்பட்டி நெல்லையப்ப பிள்ளை வத்ராப்பு பிச்சாண்டி பிள்ளை மாசார்பட்டி சுப்பையா பிள்ளை ஊத்துமலை சுடலைமுத்துக் கோனார் ஆமத்தூர் முனிசாமி நாயுடு. திருநெல்வேலி ரிசர்வ் போலீஸ் படையைச் சேர்ந்த சேக் அப்துல்லாவுக்கும் அதே கதிதான்.

கீழ்மட்டத்தில் கிராம முன்சீப் கர்ணம் போன்ற கிராம அதிகாரிகளும் தலை யாரி வெட்டியான் போன்ற ஊழியர்களும் கலகக்காரர்களுக்கு எப்படியெல்லாம் உடந்தையாக இருந்தார்கள் என்பது எல்லாருக்கும் தெரிந்த ரகசியம். அவர்களது ஊரிலோ பக்கத்துக் கிராமங்களிலோ கலகமும் கொள்ளையும் நடக்கப்போவதை அறிந்திருந்தும் மேலதிகாரிகளுக்கு முன்கூட்டியே தகவல் கொடுக்காதது நடந்து முடிந்த பிறகு அதை மூடி மறைத்துவிட்டது இல்லை அரைகுறையாகத் தகவல்

களைக் கொடுத்தது கொள்ளை நடக்கும் நாளில் லீவு போட்டது இல்லை எங்காவது ஒளிந்துகொண்டது கலகக்காரர்களைப் பிடிக்க போலீசுக்கு உதவாதது கலகக்காரர்களை ஒளித்துவைத்துக் காப்பாற்றியது இதெல்லாமே அவர்கள் செய்த காரியங்கள். நேரடியாகவே கலகத்திலும் கொள்ளையிலும் கலந்துகொண்ட சிலர் பிடிபடாமல் ஒளிந்து திரிந்தார்கள்.

இப்படிப்பட்ட நடவடிக்கைளில் ஈடுபட்ட கிட்டத்தட்ட நூறு பேரைக் கண்டறிந்து ஸ்ரீவில்லிப்புத்தூர் டெபுடி மாஜிஸ்திரேட் ராகவய்யா அவர்கள்மீது கடும் நடவடிக்கை எடுத்தார். இதை கலெக்டர் பெட்போர்டு சர்க்காருக்குத் தெரிவித்தார். இதனால் சனங்களிடமிருந்த அச்சம் படிப்படியாகக் குறைய ஆரம்பித்தது.

ஒரு தடவை கவர்னர் வேலூர் செயிலுக்குப் போனார். அங்கே சிவகாசிக் கலக வழக்கில் தண்டனை பெற்ற கைதிகள் இருந்தார்கள். அவர்களில் வெண்டர் ஆறுமுகம் பிள்ளையும் ஒருவர். கவர்னர் அவர்களைச் சந்தித்தார். அப்போது ஆறுமுகம் பிள்ளை அவரிடம் முறையிட்டார். குறைகளை மனுவாக எழுதியனுப்புமாறு அவர் சொல்லிவிட்டுப் போனார்.

ரெம்ப நாள் கழித்து ஆறுமுகம் பிள்ளை கவர்னருக்குக் கருணை மனு அனுப்பினார். சர்க்கார் ஏற்றுக்கொள்ளவில்லை. தீவாந்தரந்தான் அவருக்குக் கொடுத்துவைத்தது.

## 5. ஆலமரம் சாஞ்சது

ஆண்டி மருதனைப் பார்த்து ரெம்ப நாளாயிற்று. கஞ்சிக்கு வந்த அய்யம்மாளிடம் சொல்லியனுப்பினான்.

''ஒங்க அப்பச்சிக்காரன் வகுத்தச் சொமக்க முடியாம மலந்து கெடக்கானா. கீழத் தோட்டத்துப் பக்கம் வரச் சொல்லு.''

ரெண்டு பேரும் தவங்கித்தவங்கிப் பூசரமரக் கிணற்றுக்குப் போய் மாமரத்தடியில் உட்கார்ந்துகொண்டார்கள். ஆண்டி அண்ணாந்து பார்த்தான். கொப்புக்கள் கண்டமானக்கி விரிந்து இலை தடித்து மரம் களையிழந்து தெரிந்தது.

''எப்பேர்ப்பட்ட மரம். கெழடுதட்டிப்போச்சே.''

''மனுசரப் போலதான் மரமும்.''

''இந்த மரத்து மேலருந்தும் கீழருந்தும் ஒங்கப்பனும் நானும் என்னமெல்லாம் பேச்சுப்பழக்கம் போட்ருக்கொம் தெரியுமா. அவன் கம்மாக் கரையில புங்கமரமா நிக்கான். நான் நட்டிவச்சதுடா.''

''அல்லாத்தி தண்ணி ஊத்தி வளத்தா.''

''ஒங்காத்தாளும் அவனுக்குத் தொணையாப் போயிட்டா. நான் இப்படி இழுபட்டுட்டுக் கெடக்கென். கருப்பி கூப்பிட மாட்டங்காளே.''

''எனக்கும் அப்படித்தான் நெனப்பு ஓடுது. மாடத்தி முந்திக்கிட்டா.''

''பெண்டாட்டி இல்லாற பெழப்பு என்ன பெழப்புடா. எத்தனதான் மனுசமக்க இருந்தும் வீட்டுக்காரிக்காகுமா.''

''தனக்குன்னு ஒருத்தி இருந்தா தலமாட்டலருந்து அழுவா.''

''ஏல கூனத்தாயிளி நீயாச்சும் அப்பப்ப வந்து பேசீட்டுப் போனா மனசுக்கு லேசாருக்குமில்ல. ஒன்னயப் பாக்கிறதே அருசுகமாருக்கு.''

''நானும் நெனைக்கிறதுதான். முன்னப் போல ஓடியாடித் திரிய முடியல.''

''ஏலலயா வேல தீரலயா.''

''வேலைய வுட்டு ரெம்ப நாளாச்சு. சும்மா அத்தகுத்தம் பாக்கிறதோட சரி.''

''மக்க மருமக்கமாரு பேரன் பேத்தி எல்லாரும் நல்லாருக்காகளா. இப்ப எந்தக் கொளத்து மீனு எந்தக் கொளத்துல இருக்குதுன்னு தெரியல.''

''அவுகளுக்கென்ன நல்லாத்தான் இருக்காக. ஒரு கொளம் நெறஞ்சதும் மறுகா ஓடி அடுத்த கொளத்துக்கு மீனு கெலிக்கிறதில்லையா. அப்படித்தான். போயிக்கிற வேண்டியதுதான் வந்துக்கிற வேண்டியதுதான்.''

''சத்தரப்பட்டியில இருக்காளே ஓங்காத்தா பேருக்காரி அவ தட்டுப்படலயே. ஓம் பேரன் கலியாணத்துக்குப் பாத்தது. அண்ணன் மகனுக்குத் தன்னோட மகளக் குடுத்து அங்கயே கூட்டி வச்சுக்கிட்டா. ஒன்னயப் போல.''

''பொட்டப்புள்ளீகளக் கிட்ட வச்சுக்கிறணும்னு ஆசதான்.''

''பொட்டப்புள்ளீகன்னா தனிப் பிரியந்தான். அதுகளுக்கு என்னமும் ஆச்சுன்னா மனசு ஒடஞ்சுபோகுதே. நானும் ஒண்ணு வச்சிருந்தென்... சரி வேப்பங்காட்ல இருக்கானே சாலமுத்துப் பெய. அவன் என்ன செய்றான். பொறுமசாலிடா. அப்பச்சி பேரக் காப்பாத்தீட்டானே. அவனுக்கு ஒரு பொம்பளதான.''

''ஒருத்திதான். அவள சத்தரப்பட்டிக்காரி மகனுக்குக் குடுத்து வேப்பங்காட்ல வச்சுக்கிறலாம்னு நெனப்பிருக்கு.''

''செய்யட்டும். ஓங்களப் போல அவளுக்கும் பாசம் இருக்குமில்ல. ஓட்டப்பல்லன் குடும்பம் உத்திஉத்தியாக் கிளித்தட்டு வெளையாடுது. ஓம் பேத்தியா அய்யம்மா சும்மாதான் இருக்காளா.''

''முனியசாமி அவளுக்கு இனியும் கொழந்தையக் குடுக்கல.''

''குடுக்கும்குடுக்கும். கொஞ்ச நாள்ல நீயும் என்னயப் போல பூட்டனாயிருவ.''

''அதுக்குக் குடுத்துவைக்கணும்.''

''அல்லாத்தி அப்படியே ஒதுங்கிக்கிட்டா.''

''போன எடத்துல பொறுமையாருந்து காலந்தள்ளீட்டா.''

''வடக்க போனாகளே ஒன் அத்தமாரு. அவுக போக்குவருத்து உண்டா.''

''ரெம்பத் தவங்கீட்டாக. அவுக மக்கமாரு நல்லது பெல்லதுக்கு வந்துபோறதோட சரி.''

''எளையவ முத்துக்காளியப் பாத்து ரெம்ப நாளாச்சு. அவ கலியாணம் முடிச்சு எங்கிட்டச் சொல்லீட்டுப் போகயில அழுதாஅழுதா அப்படி அழுதா. எனக்குங் கூடக் கண்ணீரு வந்துருச்சு. அத நெனச்சா இண்ணைக்குப் போலருக்கு. பாசக்காரியாக்கும்.''

''தொழிலப் போட்டுட்டு எடுத்தேறி வரணுமே.''

''எல்லாம் அதது போன எடம் பூந்த எடந்தான்.''

''அப்படித்தான் ஆயிப்போச்சு.''

''எல்லாரவும் ஒரே கூட்டமாப் பாக்கணும்னு ஆசையாருக்குடா.''

''ஒங்க பேரன் மகன் எளையவுகளுக்குக் கலியாணம் முடிங்க. கூட்டத்தத் தெரட்டிக் கொண்டுவந்துறென். ஒரு குலுக்க நெல்லக் காலிபண்ணாமத் திரும்பிப் போறதில்ல.''

''கருப்பிக்கு வாக்குக் குடுத்தபடி மூத்த பெய நல்லப்பனுக்குத் தூங்கன் மக செவனம்மாள முடிச்சுவச்சிட்டென். ஓம் பேத்தியாளப் போல அவளும் ரெண்டு மூணு வருசமா உண்டாகாமத்தான் இருக்கா. அது நம்ம கையிலயா இருக்கு. அடுத்து ராமன் பெயலுக்கு முடிக்கணும். கடக்குட்டி வள்ளி இருக்கா. ரெண்டு பேருக்கும் வழியத் தேடிக் குடுத்துட்டா இந்தக் கட்ட நிம்மதியாப் போயிச் சேரும்.''

''எல்லாம் நெனச்சபடி நடக்கும்.''

மனசு லேசாகிவிட்ட சந்தோசத்தில் தெம்பாகவே வீட்டுக்கு நடந்தார்கள்.

ராத்திரி ஆண்டி வயிறு நிறையச் சாப்பிட்டான். கம்மஞ்சோறும் கருவாட்டுக் குழம்பும். அவனுக்கு எது பிடிக்குமென்று வேலாயிக்குத் தெரியும். வாய்க்கு ருசியாகச் செய்துகொடுப்பாள். அவனும் ஆசைப்பட்டதைக் கூசாமல் கேட்பான்.

''யாத்தா கேப்பக்களிக்கு ஆசையாருக்கு.''

குட்டியில்லாமல் இளங்களியாகக் கிண்டி கோழிக்கறிச் சாறு ஊற்றிக் கொடுப்பாள். மூணு உருண்டை காலியாகிவிடும்.

வெள்ளாங்காட்டி நேரம் ஒரு கலயம் புளிச்ச தண்ணீர் கொடுக்கணும். ஒரே மூச்சில் குடிப்பான். ஒரு உருண்டை உளுந்துக்களியை உள்ளே தள்ளினால் வயிறு கம்மென்றிருக்கும். காடுகரைக்குப் போய் பகல் முழுக்க ஏதாவது நோண்டிக் கொண்டிருப்பான். அடுத்து ராத்திரிச் சாப்பாடுதான்.

அன்றைக்கென்னமோ மறுசோறு வாங்கிச் சாப்பிட்டான்.

''கொஞ்சம் வெஞ்சனம் ஊத்து தாயி. தோட்டத்துக்கு நடந்தென் பாரு. நல்ல பசி.''

''மதியம் ஒரு வாயி சாப்புட்டுக்கிட்டாத் தெம்பாருக்குமில்ல. கேட்டாத்தான.''

நேரமிருக்கவே திருணையில் முடக்கிவிட்டான். வாய் மெல்ல முனங்கியது.

''கருப்பி சாகல.''

மாடுகளின் கூளக்கடிப்புச் சொகத்தில் உறக்கம் சொக்கியது.

வீட்டுக்குள் நுழைந்த பொய்யாளி திருணைக்குத் திரும்பிவிட்டு வேலாயிடம் கேட்டான்.

''அப்பச்சிக்குச் சொகமில்லையா.''

''அதெல்லாமில்ல. சாப்பாடு முடிஞ்சது. மொடக்கியாச்சு.''

நல்லப்பனும் செவனம்மாளும் வந்து சாப்பிட்டுவிட்டுப் போனார்கள். அடுத்து ராமன் வந்து சட்டிபானையை உருட்டினான். ராக்கன் சொக்கம்மா வள்ளி மூணு பேரும் உட்கார்ந்து முடித்தார்கள். கடைசியாகப் பொய்யாளியும் வேலாயும் கைநனைக்கும்போது ரெம்ப நேரமாகிவிட்டது.

விடிந்ததும் வேலாயி நீச்சுத்தண்ணீருடன் ஆண்டியை எழுப்பினாள்.

''அப்பச்சி தண்ணி இந்தா.''

அதை வாங்க அவன் உயிருடன் இல்லை. உறக்கத்திலேயே சீவன் பிரிந்து விட்டது. வேலாயி அழுதாள்.

''அப்பச்சி எனக்கு அப்பனப் போல ஆதரவா இருந்தயே...''

சனங்களின் அழுகையும் கண்ணீரும் விரைவிலேயே சந்தோசமாக மாறி விட்டது.

''ஊருக்கே மூப்பான மனுசன். நல்லது கெட்டது சொல்றதுக்கு ஆளில்ல.''

''எல்லாம் அனுபவிச்சு இப்படி நெறகொடமாப் போயிச் சேரணும்.''

''காலாகாலத்துல ஆக வேண்டிய வேலைகளப் பாருங்கப்பா.''

''ஆண்டிக் குடும்பனுக்கு இண்ணைக்குக் கலியாணம். மாப்பிளையாப் போகப் போறான்.''

''கம்மாயில தண்ணி கழுத்துவரைக்கும் கெடக்குது. அத நெனச்சாத்தான் வாதிப்பாருக்கு.''

''வண்ணாக்குடிச் சுடுகாட்ல அடக்கம் செஞ்சிருவமா.''

''கறி ஒழத்துன தாயிளி பேசுறதப் பாரு. தலைக்கு மேல தண்ணி கெடந் தாலும் தாண்டிப் போயாகணும்.''

''இவரு போட்டாளி. சொமக்கிறதப் பாக்கத்தான போறென்.''

''இண்ணைக்கே எடுத்துறணும். வச்சுப் பாக்க முடியாது.''

''ஆமாமா. வச்சிருந்தா பாட்டுக்காரனக் கூட்டிவரணும்.''

''தொலவட்லருந்து வந்தாக வேண்டிய ஆளு ஆருமில்லையே. பெற கெதுக்கு வச்சிருக்கணும்.''

ஏற்பாடுகள் மளமளவென்று நடந்தன. மேலூரிலிருந்து காணிப் பகடை சிலருடன் வந்தான். ஊர்க் குடும்பன் அவர்களை அயலூர்களுக்குத் துட்டி சொல்ல அனுப்பினான். வீட்டுக்கு முன்னால் வாரி கட்டி வண்டித்தட்டி கவுத்திப் பந்தல் போட்டார்கள். கத்தாழம்பட்டியிலிருந்து பகடைகளின் கொட்டு வந்தது. சாவுத் தாளத்தில் ஊரே அதிர்ந்தது. நாலு பேர் குழிவெட்டப் போனார்கள். வெளிக் காடி வாகை மரத்திலிருந்து பச்சைக்கம்பு வெட்டிவந்தார்கள்.

பெண்கள் வந்து சொக்கம்மா வேலாயி செவனம்மா வள்ளியைக் கட்டிப் பிடித்து ஒப்பாரிவைத்தார்கள். ஆண்கள் தோள்துண்டை இறக்கி முழம்போட்டு ராக்கனிடமும் பொய்யாளியிடமும் துட்டிகேட்டார்கள். பொய்யாளி அப்பப்பக் கண்ணைத் துடைத்துக்கொண்டான். தெய்வானை ஒரு ஓரமாக உட்கார்ந்து நினைத்துநினைத்து அழுதுகொண்டிருந்தாள்.

சத்திரப்பட்டி வேப்பங்காட்டிலிருந்து அத்தனை வண்ணாரும் வந்துவிட் டார்கள். தேர்கட்ட நீளமான வாரி தேடிப்பிடித்து குறுக்குக் கம்பு சம்பாரித்து வேலை ஆரம்பமானது. மருதன் கோளாறு சொல்லச்சொல்ல கட்டுமானம் அட்டியில்லாமல் நடந்தது.

மேளதாளத்துடன் தண்ணீரெடுக்கப் போனார்கள். அக்கா தங்கச்சிக்கு எங்கே போவது. சொக்கம்மா வேலாயுடன் சில பெண்கள் குடமேந்தினார்கள். தெரு வழியாக மேற்காமல் நடந்து மேலக்களத்தில் தெற்கு முகமாகத் திரும்பிக்

கிழக்காமல் போய்க் களத்து வீட்டோரம் ஊர்க் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தார்கள். ஆண்டியைக் குளிப்பாட்டிக் கோடியுடுத்தி வாய்க்கட்டு போட்டு நெற்றியில் செந்துருக்கம் பொட்டு வைத்து அதன்மேல் துட்டுப் பதித்து பச்சை வாகங் கம்புச் சார்மானத்தில் வடக்காமல் சாத்தினார்கள்.

ஒரு பாட்டம் ஒப்பாரி கொட்டுக் கும்மாளத்துக்குப் பிறகு நீர்மாலைக்குப் புறப்பட்டார்கள். நீர்மாலைத் தாளமே தனி. குழலும் உறுமியும் குழைந்து பேசும் சொகமான வாசிப்பு. ராக்கன் தலைக்கொள்ளியாக வட்டிலெடுத்தான். ஒட்டுக் கொள்ளி வைக்க ஆளில்லை. துணைக்குப் பொய்யாளியே செம்பு தூக்கினான். மாத்துக் குடைவிரிப்பில் மறுபடியும் ஊர்க் கிணற்றுக்குப் போனார்கள். சாத்திரங் களைச் சின்னமாரியே கவனித்துக்கொண்டான்.

கொள்ளி வைக்கிறவர்கள் குளித்துத் துணிமாற்றினார்கள். மாரி அவர் களுக்கு நெற்றியிலும் உடம்பிலும் சாம்பல் திருநீறு பூசி பூணூல் போட்டான். தேங்காய் பழம் வைத்து நெருப்பு வளர்த்து சாமி கும்பிட்டார்கள். செம்பில் நீரெடுத்துத் திரும்பும்போது நேரமாகிவிட்டது.

இதுக்குள் வெளியூர்ச் சனங்கள் பெரும்பாலும் வந்துவிட்டார்கள். கழுகு மலையிலிருந்து பெரிய நாடாரும் அம்மமுத்தும் வந்திருந்தார்கள். பெரிய நாடார் நடக்கக் கஷ்டப்பட்டார். அம்மமுத்து சொல்லியும் கேட்காமல் புறப் பட்டுவிட்டார். சகல சாதிக்காரர்களின் கூட்டம் ஆண்டியின் விதைப்பில் அடர வளர்ந்த வெள்ளாமைபோல் அவனை வழியனுப்பக் காத்திருந்தது.

கொள்ளிச் செம்புநீரை ஆண்டிமீது தெளித்துத் தூக்கிவந்து முற்றத்தில் கவுத்திய உரலில் உட்கார வைத்தார்கள். மருமகள் சொக்கம்மா நிறைமரக்கால் தவசம் ஏந்திச் சுற்றிவந்து அவனிடம் மூணுகை முந்தியில் சீதேவி வாங்கினாள். செவனம்மா நெய்ப் பந்தம் ஏந்தினாள்.

தேரெடுக்கும் நேரம். தெருப் பிடிக்காமல் கூட்டம். மருதன் ஏழு முகத் தேர் கட்டியிருந்தான். அதை மூச்சுப் பிடித்துத் தூக்கிவந்து பந்தல் முகப்பில் நிறுத்தி னார்கள். சனங்கள் அதை அப்படிப் பார்த்தார்கள்.

''அஞ்ஞாடி இது தேரா அரமனையா.''

''ரெங்குரெங்கா வச்சுக் கெட்டியிருக்கானே.''

''ஊரு மொளச்ச நாளையிலருந்து ஆருக்கும் ஏழு மொகத் தேரு கெட்ன தில்லையாம்.''

''ஆண்டிக் குடும்பனுக்குக் குடுத்துவச்சிருக்கு. மருதனுக்கு ஓரவஞ்சகந்தான்.''

''ஆண்டியும் நீயும் ஒண்ணா. அவுகளுக்குள்ள இண்ணைக்கு நேத்துப் பழக்கமா.''

கோயிலுக்குள்ளிருக்கும் தெய்வமாக ஆண்டி தேருக்குள் கைப்பெருவிரல் ரெண்டும் மேலே கட்டித் தொங்க தோரணையாக உட்கார்ந்திருந்தான். சனிக் கிழமை செத்ததால் கோழிக்குஞ்சைக் கட்டித் தொங்க விட்டிருந்தார்கள். அவ னுக்குப் பிடித்தமான கருவாட்டுப் பொட்டணமும் தொங்கியது.

சாயங்காலம். நீளமான வாரிகளில் நிறைய பேர் தோள்கொடுக்க தேர் தெம் பாகக் கிளம்பியது. தேரெடுப்புத் தாளம் தெருவில் உருண்டது. முக்கம்புத் தாங்கி யில் தீச்சட்டியை ஏந்திக்கொண்டு பகடை முன்னால் ஓடினான். அப்பப்பச்

சட்டியை ஆட்டி நெருப்பைப் புகைய வைத்தான். பெண்வழிப் பேத்தி இல்லாத தால் வள்ளி கட்டையச்சோறு சுமந்து போனாள். சொக்கம்மா சாணியைக் கரைத்து மதமை தெளித்தாள்.

முன்னத்தியந் தேரில் நின்றிருந்த ராமன் வாழைப்பழம் சர்க்கரைக்கட்டி தேங்காய்ச்சில்லை மேலக்களத்தில் சிதறிவிட்டுக் கீழே குதித்தான். பின் தேரேறி செண்டா வீச பெண்வழிப் பேரனில்லை. சிதறிய பண்டங்களைச் சிறிசுகளும் பெரிசுகளும் ஓடிஓடிப் பொறுக்கி மண்ணைத் துடைத்துத் தின்றார்கள்.

தேர் வளையமிட்டுத் தெற்கே திரும்பிக் கலிங்கலுக்கு வடபுறம் இறங்கி நின்றது. வழக்கமாகக் கலிங்கலுக்குத் தெற்கே கம்மா மேட்டில் வைத்துத்தான் குடம் உடைப்பு நடக்கும். தண்ணீர் மேதிவிட்டதால் இந்தப் பக்கமே செய்ய வேண்டிய நிலைமை. குடம் உடைக்கப் பெண்டாட்டியும் இல்லை மகளும் கிடையாது. சொக்கம்மாளும் வேலாயும் உடைத்தார்கள்.

தேர் மறுபடியும் தோளேறியது. கம்மாக் கரையேறியதும் தாமதித்தார்கள்.

''தண்ணி சமுத்தரமாக் கெடக்குதே. எப்படிப்பா போறது.''

''வெறுவாக்கலங்கெட்ட பெயகளா. போற தேர நிறுத்தலாமாடா. ஒரே மூச்சில ஓட்டமும் நடையுமாக் கொண்டுபோயிச் சேத்துறணும்.''

''எனக்கு வாயில நல்லாநல்லா வந்துட்டுப் போகுது. கழுத்துக்கு மேல கெடக்கிற தண்ணிக்குள்ள ஓடுறதெங்க நடக்கிறதெங்க.''

''தண்ணிக்குள்ள நனஞ்சா மொளச்சாபோயிருவொம். எறங்குங்கடா. அடே கொட்டுக்காரங்களா நீங்க கொட்ற சத்தம் கேட்டுக்கிட்டே இருக்கணும். என்ன செய்வீகளோ தெரியாது. எடையில நிறுத்துன வக்காளி அம்புட்டுத்தான். தண்ணிக் குள்ள அமுக்கிப் பெதச்சிருவென்.''

தேர் கம்மாய்க்குள் இறங்கியது. கொட்டுக்காரர்களுக்கு ஒண்ணும் ஓட வில்லை. கொட்டு நனையாமல் தூக்கிப் பிடித்து நடப்பதே பெரிய காரியம். இதில் எப்படிக் கொட்டுவது. வேறு வழியில்லாமல் தவில் நாயனம் முரசு மூணு பேரும் இறங்கிவிட்டார்கள். ஆழம் கூடிக்கொண்டே போனது. தண்ணீர் தோளை முங்கும்போது ஒருவன் சத்தம் போட்டான்.

''தேரத் தோளுக்கு மேல அலக்காத் தூக்குங்கடா. நனஞ்சிறப்புடாது.''

''கால்ல முள்ளுத் தச்சிருச்சே.''

''அதக் குனிஞ்சு புடுங்குவயோ இல்ல முங்கிப் புடுங்குவயோ. கூறுகெட்ட பெயலே. நொண்டி நடடா. கொஞ்சத் தூரந்தான.''

தேருக்குள் தொங்கிய கோழிக்குஞ்சின் சத்தம் விட்டுவிட்டுக் கேட்டது. ஒருவன் ஆத்திரத்தில் வைதான்.

''எங்களப் பாத்தாக் கேலியாருக்குதா. வாய மூடீட்டுச் சும்மா கெட. இல்ல சூட்டாங்கறி போட்ருவென்.''

நாயனக்காரன் அண்ணாந்து ஊதிஊதிக் கைகடுத்தது. தன்னையறியாமல் நாயனம் தணியவே தண்ணீர் கோலிக் குழறியது.

''கொழலு ஊதுற லச்சண மயிரப் பாரு. தொண்டையறுத்த ஆடு மாதிரி. நல்லா ஊதுடா நாறப்பெயலே.''

முரசுக்காரனும் மேளக்காரனும் கொட்டுக்களைத் தலையில் வைத்து ஒரு கையால் பிடித்தபடி மறுகையால் அடித்துக்கொண்டே நடந்தார்கள். ஒரு கிடங்கான இடத்தில் ரெண்டு பேருக்கு கால் இடறிவிட்டது. முரசு தண்ணீரில் குதித்து மிதந்தது. முரசுக்காரன் நீஞ்சு போய்ப் பிடித்தான். ஒரு தட்டில் தண்ணீர் கோலியதுடன் தவில் தப்பித்தது.

தேர் மெல்ல இறங்கித் தோளுக்கு வந்தது. மேடேறிவிட்டார்கள். முரசுக்காரன் வருத்தத்தில் அடித்துப்பார்த்தான். மொத்துமொத்தென்று சத்தம் கேட்டது.

''மொரச நீய வுட்டுத் தண்ணி காட்னதுல வகுறு ஊதிப்போச்சு. பெற கெங்க தாளம் பிரிக்கிறது.''

நாயனக்காரன் கரகரப்பைப் போக்க முக்கி ஊதினான். கொளகொளவென்று நீர் வடிந்தது.

''அடடா கொழலுக்கு நல்லாத் தடுமம் புடிச்சுக்கிருச்சே. மூக்கு ஒழுகிறதப் பாரு.''

இதுக்கெல்லாம் தப்பி நாணல் கும்மலுக்கு மேற்கே ஓடையில் இறங்கிப் பத்திரமாகக் கரையேறிய ஒத்துக்காரனும் உறுமிக்காரனும் வயல் வரப்பில் நின்றுகொண்டு சுதாரிப்பாக வாசித்தார்கள். நாயனக்காரன் அவர்களை முறைத்தானே ஒரு முறைப்பு.

ஈரம் சொட்டச்சொட்ட தேரை மயானத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

''பெரிசு நம்மள இப்படித் தண்ணிகாட்டீருச்சே.''

கருப்பியோரம் ஆண்டிக்குக் குழி தென்வடலாக ஆறிக்கிடந்தது. நல்ல ஆழம். வழக்கமாகக் காலைச் சம்மணமிட்டு மடக்கி முட்டியைத் திணிக்கிற மாதிரி இருபுறமும் பொந்து குடைவார்கள். இது அப்படியில்லை. காலளவு நீளம். நீட்டி நிமிர்ந்து கட்டையைக் கிடத்தலாம். தலைக்கு மட்டும் பாதுகாப்பாகக் குழிவான பொந்து.

ராக்கன் மொட்டையடித்துக்கொண்டான்.

''ஏ பொய்யாளி நீ வந்து முன்கையச் செறச்சுக்கோ.''

''இல்ல நானும் மொட்டையடிச்சுக்கிறென்.''

அப்போதும் அவன் அழுதான்.

''என்னப்பா நீ எளவட்டத்தப் பறிகுடுத்த மாதிரி ஏங்கியேங்கி அழுகிற.''

ஆண்டியை அலக்காகத் தூக்கிவந்து குழிக்குள் இறக்கினார்கள். உள்ளே இருந்து வாங்கி வசமாகக் கிடத்தியவன் கோடித் துணியில் ரெண்டு கொள்ளி மடத் துண்டு கிழித்துக் கொடுத்தான். ஒண்ணு வண்ணானுக்கு. மற்றது வீட்டுக்கு. மீதித் துணியால் முகத்தை மறைத்து மூடினான்.

பெரியவர்கள் வாய்க்கரிசி போட்டார்கள். கோழிக்குஞ்சையும் ஆசைப் பண்டத்தையும் குழிக்குள் போட்டு மண்ணை மேதி மிதித்துக் கிட்டித்தார்கள். குச்சுத் தறித்து காக்காய்க்குக் கட்டையச்சோறு வைத்துவிட்டுக் கிளம்பி செங்கக் கிடங்கு மேட்டில் ஆனைப்பந்திக்கு உட்காரும்போது பொழுதடைந்துவிட்டது. வண்ணார்கள் தேர்ச் சாமான்களை அவுத்து முக்கிமுனங்கிச் சுமந்து போனார்கள்.

ஆனைப்பந்தியில் கட்டைச் செலவுகளைக் கணக்குத் தீர்த்தார்கள். ஊர்க் குடும்பன் சொல்லச்சொல்ல மருதன் பொய்யாளியிடம் பணம் வாங்கிக் கொடுப்பதற்குள் தவித்துப்போனான். கொட்டுக்காரர்கள் கொறம்பாடினார்கள்.

''ரெம்பச் சங்கடப்பட்டுப் போனொம் சாமி. பாத்துப் போட்டுக்குடுங்க.''

''கண்ணுக்குட்டி மாதிரி மொரச நீய வுட்டுத் தண்ணிகாட்னாலும் அடிய வுடலயே. அவன் மனசு நோகாமக் குடுத்தனுப்புங்கப்பா.''

கடைசியில் ஊர்க் குடும்பன் விளம்பினான்.

''பதினாறாம் நாளு காரியம்.''

எல்லாரும் கிணற்றில் தலைமுழுகி வீடு திரும்பும்போது நல்ல இருட்டு.

மறுநாள் பால் பலவித்துக் கட்டையச் சோறுடன் மயானத்துக்குக் குழி மெழுகப் போனார்கள். ஆண்டியின் குழியை அழகிய மண்வீடாக மெழுகித் தலைமாடு தவிர மற்ற மூணு புறமும் படிவைத்தார்கள். அவன் எழுந்து வந்து எந்தப் புறமும் படியேறி மேலோகம் போகத் தோதாக. தலைக்கு நேராகக் கலயம் பதித்துப் பாலூற்றி உள்வாங்கும்படி குத்திவிட்டார்கள்.

''பெரிசு பாலு குடிச்சுப் பசியாறட்டும்.''

கருப்பியின் குழியிலிருந்து பிரண்டையும் துளசியும் பிடுங்கி ஆண்டிக்குத் தலைமாட்டில் நட்டிவைத்தார்கள். கிளியஞ்சிட்டியில் தீபமேற்றி எருக்கலையில் காக்காய்க்குச் சோறுவைத்துக் கிளம்பினார்கள். ஓடை மணலில் ஏழுகோடு கீச்சி பல வித்துக்களை விதைத்து அதில் மிதிக்காமல் தாண்டி வந்து காக்காய் சோறெடுக்கும்வரை காத்திருந்து குளித்துவிட்டு ஆண்டியைச் சாத்திவைத்த இடத்தில் பால்முகத்தில் முழித்து விளக்கைக் கும்பிட்டார்கள். பந்தலடியில் சின்னஞ்சிறிசுகளுக்குக் கம்மங்கஞ்சியும் அகத்திக் கீரையும் கிடைத்தது. சொக் கம்மா மதமை தெளித்தாள். குழிமெழுகப் போனவர்களுக்கு நல்ல சாப்பாடு. ஒருவன் பொய்யாளியிடம் சொன்னான்.

''மதம தொளிச்சவளுக்குப் பண்டம் பாத்தரம் எடுத்துக் குடுக்கணும். அத மறந்துறாத.''

ஊர்க் குடும்பன் கிண்டலடித்தான்.

''ஊராருக்கா எடுத்துக் குடுக்கப்போறான். அஞ்ஞைக்கும் மகளுக்கும். மச்சான் கையிலருந்து துட்டுப் பிதுங்கி வெளிய போயிறப்புடாதே.''

''ஓகோ. அப்படியொரு கதையிருக்கோ.''

இழவுக்கு முந்தி எட்டு நாள் வீட்டில் விளக்கேற்றிப் பெண்கள் கூடி அழுது ஒப்பாரிவைத்தார்கள். பதினாறாம் நாள் பெரிசாக இழவெடுத்தார்கள். பகடை கள் இழவு சொல்லிப் போனார்கள். இழவுக்கும் கத்தாழம்பட்டிக் கொட்டு தான். ஒருவனுக்கு வேண்டாத சந்தேகம்.

''காஞ்ச கொட்டா நனஞ்ச கொட்டா. சத்தத்தக் கேட்டா காஞ்ச கொட்டு மாதிரித்தான் தெரியிது.''

கல்பிடித்து வைத்தார்கள். ஊர்க் குடும்பன் கம்மந்தட்டைச் சூந்தில் வேட்டி சுற்றி வட்டிலில் பாலூற்றிக் களிமண்ணால் குதிரை உருவம் செய்து நிப்பாட்டி னான். பெண்கள் கூடி அழுதார்கள்.

வேலாயும் சொக்கம்மாளும் ஊர்ச் சனங்களிடமிருந்து முறுக்கும் பழமும் வாங்கி முடியவில்லை. ஊர் முழுக்க வேலைக்குப் போகவில்லை. சோறு பொங்க வேண்டியது தெற்குத் தெருக்காரர்களின் முறை.

சாயங்காலம் மேளதாளத்துடன் கல்லெழுப்பினார்கள். முற்றத்தில் தாலி யறுத்துப் பிறந்த கோடி புகுந்த கோடி வாங்கக் கருப்பியில்லை. ஊர்க்கிணற்றுக் கிடங்கில் பாத்தி கட்டி குச்சு நட்டி எரிய வைத்தார்கள். அதைப் பொய்யாளியும் ராக்கனும் அழித்தார்கள். பிறகு வட்டிலில் கல்கரைத்தார்கள். சுற்றிலும் எள வட்டங்கள் தீவட்டி பிடித்து நின்றார்கள்.

கொள்ளிக்காரர்கள் குளித்துத் துணிமாற்றினார்கள். ஏகாளி சின்னமாரி அவர்களைக் கூட்டிக்கொண்டு மந்திரம் சொன்னபடி வட்டிலைச் சுற்றினான்.

''நம்ம கண்டொம் தும்ம கண்டொம்...''

வலப்புறமாக ரெண்டு முறையும் இடப்புறமாக ஒரு முறையும் சுற்றினார் கள். ஒவ்வொரு தடவையும் ஏகாளி வெற்றிலையை வட்டிலில் போட்டான்.

தென்புறம் மந்தைத் தரிசில் வெள்ளை கட்டு நடந்தது. ஏகாளி விரித்த மாத்தில் ராக்கனும் பொய்யாளியும் வரிசையாக உட்கார்ந்தார்கள். ஊர்க் குடும்பன் கூவினான்.

''மொறகாரங்க கோடி கெட்டுங்கப்பா.''

மாமன் மச்சான் முறைகாரர்கள் கோடிபோட்டார்கள். கூவுவதைக் கொஞ்சம் நிறுத்திவிட்டுக் குட்டையன் ரெண்டு பேருக்கும் கோடி போட்டான். கூட்டத் திலிருந்து ஒரு குரல் வந்தது.

''குட்டப் பெய கோடிய உருவுறாண்டோய்.''

''சம்பந்தகாரனாச்சே.''

மற்றவர்கள் பணஞ்செய்தார்கள். குடும்பன் கடைசியாகக் கத்தினான்.

''பாக்கியிருக்கிறவுக செய்மொற செஞ்சிருங்க.''

''ஆமா கொடவாங்கலுதான பாக்கியிருக்குது. கெளம்புங்கப்பா. பசி கொடலப் புடுங்குது.''

''ஒரு கடகம் சோறு திங்கிற வகுறா சும்மாவா.''

கொள்ளி வைத்தவர்கள் கோடியுடுத்திக்கொண்டார்கள். மிச்சத்தைத் தனிப் பொட்டணங்களாகக் கட்டிச் சுமந்துகொண்டு கூட்டம் கிளம்பியது. தவிப்பாறிய மேளம் சுதாரித்தது. தீவட்டிகளின் ஆதாளிக்கிடையில் தெரு நெடுக ஆட்டம் பாட்டந்தான் சிலம்பு வரிசைதான். வீடு நெருங்கநெருங்க சின்னமாரி ஓடிஓடித் தெருவில் மாத்து விரித்தான். ராக்கனும் பொய்யாளியும் அதன்மேல் நடந்து வந்தார்கள்.

''தாயிளி காசலையா மாத்து விரிக்கிறதப் பாரு. எதுக்குப் பம்மலு போடு றான்னு தெரியாதாக்கும்.''

வீட்டோரம் வந்ததும் மாரி காலில் விழுந்து வணங்கினான். ரெண்டு வேட்டி துண்டு கிடைத்தது. குமருகள் ஆரத்தி எடுத்தார்கள். கொஞ்ச நேரத்தில் ஊர்க் குடும்பன் சனங்களை உசுப்பினான். ஊர்ப் பந்தி நடந்தது. பெண்களின் ஆவலாதி கேட்டு முடியவில்லை.

''சோறு கொண்டுவா.''

''பருப்பாணம் எங்க.''

''புளிக்கொழம்பு ஊத்து.''

''பொட்டச்சி முத்தம் தொளிச்ச மாதிரி தொளிக்கானே. பந்தி பலுமாறுற லச்சணத்தப் பாரு.''

ஒரு வழியாக ஆண்டி எல்லா வயிறுகளையும் நிரப்பிவிட்டான்.

## 6. நாடார் தோட்டம்

பெரிய நாடார் தெய்வானையை மறுபடியும் கழுகுமலைக்குக் கூப்பிட்டுப் பார்த்தார். அவள் வருவதாக இல்லை. வேலாயி சொன்னாள்.

''அப்பச்சி போன பெறகு ஆதரவுக்கு ஆளில்லன்னு கவலப்படுறீகளா. நாங்க இருக்கொம் பக்கத்துல. மலைக்க வுடாமப் பாத்துக்கிருவொம்.''

அதுக்குப் பிறகு அவர் கலிங்கலுக்கு வருவதில்லை. ஆண்டியில்லாத ஊருக்கு வர மனசுமில்லை. அம்மமுத்தும் சுப்பம்மாளும் அப்பப்ப வந்துபோனார்கள். சுப்பம்மாளுக்கு மகளைப் பார்த்ததும் மாலையம்மாளின் நினைவு நெஞ்சில் மோதும். அழுகையை அடக்க முடியாது.

''இதெல்லாம் பாக்கப்புடாதுன்னுதான் பஞ்சத்துல போயிட்டயோ மயினி.''

பஞ்சவர்ணம் எப்போதாவது அக்காளைத் தேடி வருவாள். நாலஞ்சு நாள் இருப்புப் போட்டால்தான் ரெண்டு பேருக்கும் நிம்மதி.

ஆண்டியை நினைத்துப் பெரிய நாடார் அல்லாடினார். பலவேச நாடார் போன பிறகு அவன்தான் ஆறுதலாக இருந்தான். அவனும் போய்ச்சேர்ந்து விட்டான். துவண்டு படுத்தவர் அடுத்த வருசமே கண்ணை மூடிவிட்டார்.

அம்மமுத்து தவங்க ஆரம்பித்தான். ஓடியாடித் தொழில் செய்ய முடியவில்லை. அடிக்கடி தங்கையா நினைவு தட்டியது. இந்தச் சமயத்தில் அவன் துணையில் லாமல்போனதே. உயரமான பனைகளை மலைப்பில் அண்ணாந்து பார்த்தான்.

சுப்பம்மா திப்பனம்பட்டிக்குப் போய் பெரிசுகளைக் கழுகுமலைக்குக் கிளப்பிக்கொண்டு வரப் பிரயாசைப்பட்டாள். ஆத்தியப்ப நாடார் சொல்லி விட்டார்.

''செவகாசிக் கொள்ளைக்கே தப்பிச்சிட்டொம். இனி எப்படியானாலும் சரி. இங்கயே கெடந்து மடிஞ்சிருவொம்.''

அவர்கள் ஒரு வருசம் சூகாடித் திரிந்தார்கள். முதலில் உடையம்மை போனாள். ஆறு மாசம் வெற்றிலையையே சோறாக மென்று காலங்கழித்த நாடா ரும் மண்ணைத் தேடிக்கொண்டார். சோலைத் தேவர் சகல மரியாதையும் செய்து அனுப்பிவைத்தார். அம்மமுத்துக்கு திப்பனம்பட்டி நினைப்பே அற்றுப்போனது.

தெய்வானையும் வேலையாவும் கலிங்கல் உவர்த் தரிசில் கரடு திரடு வெட்டி நிரத்தி அருகு சலித்துக் கல் பொறுக்கி ஒரு குறுக்கத்தையும் கண்ணாடியாக்கி விட்டார்கள். கீரை காய்கறி பயிர்செய்தது போக மிச்ச நிலத்தில் வரகு தினை குருதவாலி என்று தானிய வெள்ளாமையும் விளைந்தது. கிணற்றில் இன்னொரு

தெலாவும் இரைந்தது. கிணற்றடியில் வளர்ந்து படர்ந்திருக்கும் வாகை மர நிழல் தெலா இறைப்பவர்களுக்குத் தெம்பு கொடுத்தது.

வேலையா திடப்பட்டு ஒவட்டமாகிவிட்டான். வியாபாரத்தில் சுத்துப் பட்டியெல்லாம் அவனுக்கு அத்துபடி. தெய்வானை அவனைத் தனியாக அனுப்பிப் பழக்கினாள். இனிமேல் அவன் கீரை சுமக்கக் கூடாது. தாட்டிக்கமான வியாபாரியாகணும். அதுக்காக எடுத்த எடுப்பிலேயே அவனைத் திணற வைத்தால் மலைத்துவிடுவான். வெள்ளோட்டமாக லேசான வியாபாரத்தில் இறக்கலாம். கருவாடு விற்பனையில் ஆரம்பிக்கலாம். அவனும் அதுக்கு ஒத்துக்கொண்டான்.

அவள் முத்துநகருக்குப் போய்த் தனியாக இரும்புத் தராசு படி அரிவாள் மணை ஒரு சரம் வாளைக் கருவாடு வாங்கி வந்தாள். அதுக்காகவே கொஞ்சம் விசாலமான ஓலைப்பெட்டி பின்னினாள். தராசுப்படியில் சந்தனம் தடவிச் செந்துருக்கு வைத்துக் கட்டுச்சோறு கட்டிக்கொடுத்து மகனை வியாபாரத்துக்கு அனுப்பும்போது அவள் கண்கள் அப்படி அழுதன.

ஆத்தா கொஞ்சம் துட்டுப் போட்டுக் கொடுத்த சுருக்குப் பையை அரணாக் கயிற்றில் பத்திரமாக முடிந்துகொண்டு அவன் ஊர்ஊராகக் கருவாடு விற்க ஆரம்பித்தான். குரல் தெளிவாகக் கேட்டது.

''கருவாடு வாளக் கருவாடு...''

பெண்களிடம் சாமர்த்தியமாகப் பேசிச் சரக்கைத் தள்ளிவிடுவான்.

''அலுத்து வாற புருசனுக்கு ஒரு கண்டம் வதக்கி வச்சாப் போதும் தாயி. வகுறு கொண்டாகொண்டான்னு சோறு கேக்கும். வாளக் கருவாட்டப் போல வசிய மருந்து உண்டுமா.''

பெண்கள் பொய்யாகக் கோவித்துக்கொள்வார்கள்.

''நாடாருக்கு நாக்கு நீளம்.''

''வாளக் கருவாடு மாதிரி.''

''கண்டங்கண்டமா நறுக்குனாத்தான் அடங்கும்.''

அவன் சுருண்டு கிடக்கும் கருவாட்டை எடுத்துத் தொங்க விட்டு உப்பைத் தட்டுவான். முதுகுக் கீறலைப் பிளந்து மூக்கருகே காட்டிக் கண்ணைச் சிமிட்டுவான்.

''சந்தனமாக்கும்.''

அரிவாள்மணையில் கருவாட்டைக் குறுக்காக ரோசித் துப்புரவாக்கி அழகழகுக் கண்டமாக அறுப்பான். அவர்களை மறுபடியும் நோட்டம் விடுவான்.

''பெலாச் சொள தோத்துரும்.''

கொஞ்ச நேரத்தில் துட்டும் தானியமுமாகக் குமிந்து கருவாட்டுப் பெட்டி காலியாகிவிடும்.

சில ஊர்களில் அவனிடம் வழக்கமாக வாங்க ஆரம்பித்தார்கள். வெஞ்சனப் பாட்டுக்குத் திண்டாட வேண்டியதில்லையே. நாக்கு வேறு விதமான ருசிக்கு நோங்கினால் தெய்வானை காய்கறி கீரை கொடுத்துவிடுவாள். வேலையாவைக் காணவில்லையென்றால் அங்கலாய்ப்பார்கள்.

''நாடாரு கருவாடில்லாமச் சோறு எறங்க மாட்டங்குதும்மா.''

அவன் தனியாக முத்துநகருக்குப் போய் நாடார் சம்பைப் பேட்டையில் நயங்கருவாடு வாங்கி வரப் பழகிக்கொண்டான். சனங்களுக்கு விதவிதமான கருவாட்டு ருசியைக் காட்டினான்.

''வாளக் கருவாடு வார்க் கருவாடு குதிப்பு நெத்திலி சூட மஞ்சப்பாற...''

கூடிய விரைவிலேயே அவன் கைநிறையக் காசும் கருவாட்டு வேலையா என்ற பட்டப்பேரும் சம்பாரித்துக்கொண்டான். தெய்வானைக்குப் பெருமை.

''எப்படியும் பொழச்சுக்கிடுவான்.''

மகனுக்கு அவள் நிதமும் மதியத்துக்குக் கட்டுச்சோறு கொடுத்தனுப்பத் தவறுவதில்லை. கடித்துக்கொள்ள நாலு வெங்காயம். வெஞ்சனம் வைத்துக் கொடுக்க நேரமிருக்காது. அவன் பசிக்கிற இடத்தில் உட்கார்ந்து சாப்பிடுவான். ரெண்டு கருவாட்டை ஒரு வீட்டில் கொடுத்துச் சுட்டுத்தரச் சொல்வான். அது போதும். தோதுப்படாத இடத்தில் அவனே சுட்டுக்கொள்வதும் உண்டு.

இப்படித்தான் ஒரு நாள் தோட்டக்குடியில் பத்திரகாளியைப் பார்த்தான். சத்திரப்பட்டி தாண்டினால் தோட்டக்குடி. செருக்கான ஊர். நாலா சாதியும் உண்டு. நாடார் வீடுகள் கம்மி. பத்திரகாளிக்கு ஒரு அண்ணன். பேர் செந்தியப்பன். வீட்டையொட்டிக் கடை வைத்திருந்தான். சகல பண்டமும் கிடைக்கும். நல்ல வியாபாரம். அவித்த மொச்சைப் பயறு அடிபிடியாக விற்றுவிடும். எல்லாச் சாதிக்காரர்களும் வாங்குவதற்காக ஒரு பிள்ளைமார் பொம்பளையை அதுக்காக வைத்திருந்தார்கள். மொச்சை வியாபாரம் பத்திரகாளி பொறுப்பு.

அவளது தாய் தகப்பன் எருமை பசுக்களைக் கவனித்துக்கொண்டார்கள். ரெண்டு காளங்கண்ணுகள் வளர்ந்தன. கடையில் விற்பதற்கேற்ற காய்கறிகளை யும் பயிரிட்டார்கள். செந்தியப்பன் கலியாணத்துக்குக் காத்திருந்தான். அதுக்குப் பிறகு பத்திரகாளியைக் கரையேற்றணும். முந்தியே நல்ல இடம் வாய்த்தாலும் சரி.

அன்றைக்கு மதியம் வேலையா தோட்டக்குடி போய்ச் சேரும்போது கடுமையாகப் பசித்தது. கடையோரம் உட்கார்ந்து பெட்டியில் ரெண்டு சூடைக் கருவாடு எடுத்து பத்திரகாளியிடம் நீட்டினான்.

''இதக் கொஞ்சம் சுட்டுக் குடுத்துரு தாயி. அகோரப் பசி. இதுக்கு மேல ஒரெட்டு நகர முடியாது.''

அவள் அவனை வாஞ்சையாகப் பார்த்துச் சிரித்தாள்.

''கூட ரெண்டு குடுத்தாக் கொறஞ்சாபோகுது. இல்ல யேவாரம் நட்ட மாயிருமா.''

''வகுத்துக்குப் பெறகுதான் யேவாரம் லாவம் எல்லாம். அதுக்காகத்தான இந்த அலச்சலு. இந்தா எவ்வளவு வேணம்னாலும் எடுத்துக்கோ.''

கை நிறைய அள்ளி நீட்டினான். அவள் ரெண்டு மட்டும் எடுத்துக்கொண் டாள். அவன் அவளைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தான். இப்படியும் பெண்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்.

அவள் கொஞ்ச நேரத்தில் திரும்பிவிட்டாள். கையில் வெங்காயம் மிளகாய் போட்டு வதக்கிய கருவாடு மணத்தது. அவன் ஏற்கெனவே கட்டுச்சோற்றை அவுத்துத் தயாராக இருந்தான். அவள் அவன் சாப்பிடுவதையே பார்த்துக்கொண் டிருந்தாள். அவன் தண்ணீர் வாங்கிக் குடித்தான். வயிறும் மனசும் நிறைந் திருந்தது. பேச்சை மிச்சம் வைத்துவிட்டுப் பிரிந்து போனான்.

பிறகு மதிய வேளைகளில் அடிக்கடி கால்கள் தோட்டக்குடிக்கு நோங்கின. பத்திரகாளியைப் பார்க்கணும்போல் ஆவல். அவளும் எதிர்பார்த்திருந்தாள். அவன் சாப்பிட வட்டிலோ கும்பாவோ கொடுத்தாள். சில சமயம் சீனியவரை

வத்தலோ மிதுக்க வத்தலோ வறுத்துத் தந்தாள். கரிசக்காட்டில் பிடுங்கிய அதலக்காய்ப் பொரியல் கிடைத்தது. கையில் மோர் தயிர் மணம் கமகமத்தது. ஒவ்வொரு நாள் அவன் ஆத்தாளிடம் சாக்குப்போக்குச் சொல்லித் தப்பிப்பான்.

''ஆத்தா இண்ணைக்குச் சோறு வேணாம். வகுறு என்னமோ போலருக்கு.''

ஆத்தா மடக்கிப் பிடிக்கப்பார்ப்பாள்.

''ஏம்ல அப்படியென்ன செமிக்காமத் தின்னுட்ட. நடுக்காட்ல பசிச்சா என்ன செய்வயாம். கைவசம் கொண்டுபோனாத் தெம்பாரிக்குமில்ல.''

''சமாளிச்சுக்கிடுவென்.''

அவன் கிளம்பிப் போன பிறகும் அவள் மனசு கிடந்து அடித்துக்கொள்ளும்.

''பய இப்படிச் சொல்லீட்டுப் போறானே. பசி தாங்க மாட்டானே.''

அன்றைக்கு மதியச் சாப்பாடு பத்திரகாளி கையால் கிடைக்கும். சோறும் வெஞ்சனமும் பக்குவமாகச் செய்துவைத்துக் காத்திருப்பாள். இருவரும் பொழுது சாயும்வரை பேச்சுப்பழக்கம் போடுவார்கள். அவள் பத்திரப்படுத்தி வைத்திருக்கும் மொச்சைப் பயறு காலியாகிவிடும்.

அவர்களது போக்கை செந்தியப்பன் கவனிக்காமலில்லை. வீட்டில் எல் லாரும் பேசிக்கொண்டார்கள். வேலையா அவர்களுடன் பழகும் விதம் பிடித்துப் போயிற்று. நல்ல முடிவுடன்தான் இருந்தார்கள்.

அவன் செந்தியப்பனின் கடைக்குப் பதிவாகக் கருவாடு கொடுத்தான். அதனால் தோட்டக்குடியில் அவன் கருவாடு விற்கும் கூவல் கேட்காது. அவனைப் பார்த்துச் சிலர் கிண்டலடிப்பார்கள்.

''இந்த ஊருல கருவாடு விக்க வந்தயா வாங்க வந்தயா.''

''இங்க நெதமும் கருவாடு வாங்கிப் பொரிக்கிற மகராசி ஆருன்னு தெரியலயே.''

அவன் பக்குவமாகப் பேசிச் சமாளிப்பான்.

''அது தெரியாதா ஒங்களுக்கு. செந்தியப்பன் கடையில விக்கிற கருவாடு அம்புட்டும் நம்ம சரக்குதான். நான் இவுகளுக்கு விக்கென். இவுக வாங்கி ஒங்களுக்கு விக்காக.''

''அப்படியா சங்கதி. ஒங்களுக்குள்ள குடுக்கலுவாங்கலு நடக்குதா. நடக் கட்டும்நடக்கட்டும். இவன் ஏதாச்சும் குடுத்து நீ வாங்குறதில்லையா.''

''குடுத்தா வாங்கிக்கிற வேண்டியதுதான்.''

''வாங்குங்கவாங்குங்க.''

வேலையா பத்திரகாளியைக் குறும்புடன் பார்ப்பான். அவளை வெட்கம் பிடுங்கித் திங்கும்.

கொஞ்ச நாளாகவே அவன் ஆத்தாளிடம் முணுமுணுக்க ஆரம்பித்தான்.

''ஆத்தா ஒண்டியா இரிந்துக்கிட்டு ரெம்பக் கஸ்டப்படுத. ஒரு தொணை யிரிந்தா நல்லது.''

அவள் புரிந்துகொண்டாள்.

''ஆமாமா. நமக்குத் தொண கண்டிப்பா வேணும்.''

பேச்சுவாக்கில் அவனது மனசிலிருப்பதைத் தெரிந்துகொண்டு அவனுக்குத் தெரியாமல் தோட்டக்குடிக்குப் போய் பத்திரகாளியைப் பார்த்துப் பேசினாள்.

இன்னொரு நாள் அம்மமுத்து பொய்யாளி குட்டையன் மூணு பேரும் போய் பெண்பேசி முடித்தார்கள்.

வேலையாவுக்கும் பத்திரகாளிக்கும் கலிங்கலில் கலியாணம் நடந்தது. அம்மமுத்து நாடார் குடும்பமும் பஞ்சவர்ணம் குடும்பமும் வந்திருந்தன. தங்கையா இல்லாத வேதனையை தெய்வானை உள்ளுக்குள் அழுது தீர்த்தாள். பலவேச நாடார் இருந்தால் கண்டிப்பாக வருவார். அவர் மகன் பொன்னுமாட நாடாரும் போன வருசந்தான் தவறிப்போனார். அவர் மகன் செல்லப்ப நாடார் வந்திருந்தார். கலியாண வேலைகளைப் பொய்யாளியும் வேலாயும் குறையில்லாமல் கவனித்துக்கொண்டார்கள். பத்திரகாளி ஒரு பசுவையும் ரெண்டு காளங்கண்ணுகளையும் சீதனமாகக் கொண்டுவந்தாள்.

## 7. பணமும் கோயிலும்

கமுதிக் கோயில் வழக்கில் விழுந்துவிட்ட நாடார்கள் எழுந்துகொண்டார்கள். பல இடங்களில் பணம் திரட்டி ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தார்கள். பிரதான வாதி சங்கரலிங்க நாடார். பிரதிவாதி ராமநாதபுரம் சமீன் ராசா ராஜேஸ்வர துரை. கோடைக் கால லீவு முடிந்துதான் வழக்கு விசாரணைக்கு வருமென்று தெரிந்தது. அதுக்கு இன்னும் ரெண்டு மாசத்துக்கு மேலாகும்.

அதுக்குள் இன்னொரு யோசனை தோன்றியது.

''இப்படிச் செஞ்சா என்ன.''

''எப்படி.''

''பணத்தக் குடுத்து ராசாவச் சரிக்கெட்டி அவரு பக்கம் வாதாடாமச் செஞ்சிட்டா என்ன.''

''அப்படின்னா நமக்குச் சாதகமாத் தீர்ப்பு வந்துருமே. கோயில் தாவா தீந்துரும்.''

''நல்ல யோசனையாத்தான் தெரியிது.''

''இதுக்கு வழியென்ன.''

''வழி இருக்கு.''

சமீன் ஊழியர் ஒருவரை அணுகினார்கள். அவர் தைரியம் கொடுத்தார்.

''கைவசம் பணமிருந்தா ராசாவோட பேசி முடிக்கலாம்.''

''பணம் குடுத்துருவொம்.''

அப்போது ராசா இலங்கையில் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். நல்ல சந்தர்ப்பம்.

அங்கங்கே காதைக் கடித்து கண்டுபேசி ஏழாயிரம் ரூபாய்வரை வசூலித்தார்கள். வெவ்வேறு ஊர்களிலிருந்து முக்கியமான நாடார்கள் கூடினார்கள். தஞ்சாவூர் அப்காரி காண்ட்ராக்டர் ரத்தினசாமி நாடார் வந்தார். தஞ்சாவூர் ஜில்லாவில் நாடார்களைக் கோயிலுக்குள் அனுமதிக்கும் வழக்கம் இருந்தது. அவர்களுடன் வக்கீல் சத்திய நாடாரும் இருந்தார். அவர்களைச் சமீன் ஊழியர் இலங்கைக்கு ராசாவிடம் அழைத்துப் போனார்.

பேச்சுவார்த்தையில் ஒரு முடிவு ஏற்பட்டது. பணம் ராசாவுக்குக் கைமாறியது. ஒப்பந்தம் கையெழுத்தானது. நாடார்கள் கமுதிக் கோயிலுக்குள் நுழையலாம் என்பது முக்கியமான ஷரத்து. அது நடந்துவிட்டால் ராசாவுக்கு மேலும் இருபது முப்பதாயிரம் ரூபாய் கொடுத்துவிடணும். கூடவே ஹைகோர்ட்டில் தாக்கல் செய்வதற்காக ராசி மனுவும் தயாரானது. அதில் ராசாவும் நாடார்கள் தரப்பில் சத்திய நாடாரும் கையெழுத்திட்டார்கள். காரியம் முடிந்ததும் மூச்சுக்காட்டாமல் திரும்பிவிட்டார்கள்.

கமுக்கமாக நடந்த இந்தத் திட்டம் மதுரை கலெக்டருக்குத் தெரியவந்தது. துடித்துப்போனார். சமீபத்தில்தான் சிவகாசியில் பெரிய கலகம் வெடித்து ஓய்ந்திருக்கிறது. அதுக்குள் இன்னொரு தொறட்டா. கமுதியைக் காப்பாற்றியாகணும். சிவில் கோர்ட் நாடார்களுக்குத் தடை விதித்திருக்கும்போது அதுக்கு கோர்ட் மூலந்தான் தீர்வு தேடணும். அதில்லாமல் இப்படியொரு காரியத்தைச் செய்தது சரியில்லை. கோர்ட் உத்தரவை மீறி முடிவெடுக்கக் கோயில் டிரஸ்டிக்கு அதிகாரமில்லை. கோர்ட்மீது நம்பிக்கையில்லையென்றால் நாடார்கள் தனிக் கோயில் கட்டிக்கொள்ளட்டும். இல்லை வேதத்துக்கு மாறிக்கொள்ளட்டும். பின்விளைவுகளைப் பற்றி எடுத்துச்சொல்லி கலெக்டர் ராசாவுக்கு இலங்கை விலாசத்துக்குக் கடிதம் அனுப்பினார்.

ராசா முழித்துக்கொண்டார். அமைதிக்குப் பங்கம் ஏற்படுத்தும் வகையில் எதும் செய்ய மாட்டேன் என்று உறுதியளித்து கலெக்டருக்குத் தந்தியனுப்பிய கையோடு விவரமாகக் கடிதமும் எழுதினார். நாடார்களுடன் நடத்திய பேரத்தை அவர் மறுக்கவில்லை. ரெண்டாயிரம் ரூபாய் பணம் வாங்கியதாக ஒப்புக்கொண்டார். கோர்ட் உத்தரவு வாங்காமல் கோயிலுக்குள் நுழைய மாட்டோம் என நாடார்கள் உறுதியளித்துள்ளதாகவும் ராசி மனுவையும் வக்காலத்தையும் கோர்ட்டில் தாக்கல் செய்ய வேணாமென்று அவர்களுக்குத் தந்தி கொடுத்திருப்பதாகவும் தெரிவித்தார்.

இவ்வளவுக்குப் பிறகும் நாடார்கள் ராசி மனுவை அருவமில்லாமல் கோர்ட்டில் தாக்கல்செய்துவிட்டார்கள். அதைத் திரும்பப் பெறவில்லையென்றால் அதனால் உருவாகும் விளைவுகளுக்கு ராசாவே பொறுப்பு என கலெக்டர் எச்சரித்தார். ராசா நாடார்களுக்கு நோட்டீஸ் அனுப்ப ஒருவழியாக மனு திரும்பப் பெறப்பட்டது.

நாடார்கள் எதிர்பார்த்தபடி ஹைகோர்ட்டில் சாதகமான தீர்ப்புக் கிடைக்கவில்லை. மதுரை கோர்ட்டார் விதித்த தடையை ஹைகோர்ட் ஊர்ஜிதப்படுத்தியது. ஏராளமான சாட்சியங்களையும் ஆதாரங்களையும் அலசி ஆராய்ந்த பிறகு கோர்ட்டார்கள் தெளிவாகச் சொல்லிவிட்டார்கள்:

> நாடார்களில் பலர் பனையேறிக் கள்ளிறக்கும் பரம்பரைத் தொழிலைத் துறந்துவிட்டுக் கல்வி தொழில் சிக்கனம் ஆகியவற்றால் வியாபாரிகளாக ஏன் வக்கீல்களாக குமாஸ்தாக்களாக கவுரமான நிலைக்கு உயர்ந்திருக்கிறார்கள். அதில் சந்தேகமே இல்லை. அதனால் அவர்கள் சமூகத்தில் அங்கீகாரம் பெறவும் உயர்வான வழிபாட்டு முறையை அனுஷ்டிக்கவும் முன்னெடுக்கும் முயற்சிகள் மீது இரக்கங்கொள்வது இயல்பானதே. ஆனால் அந்த மாதிரியான

இரக்கம் காரணமற்ற ஆதாரமற்ற பொய்யான உரிமைகளைக் கேட்பதால் அதிகரிக்கக் கூடாது. தங்களை உயர்த்திக்கொள்ளும் முயற்சிகளில் நாடார்கள் பிற சாதியினரின் சாசுவதமான உரிமைகளை அபகரிக்கக் கூடாது. அவர்களுக் கென்று சொந்தக் கோயில்கள் உள்ளன. அவர்கள் எண்ணிக்கையில் அதிக மாகவும் சொத்திலும் கல்வியிலும் வலுவானவர்களாகவும் இருக்கிறார்கள். அதன் மூலம் மற்றவர்களின் ஸ்தாபனங்களை சுவீகரித்துக்கொள்ளாமல் அல்லது உரிமைகளை அவமதிக்காமல் தங்கள் வழியில் தங்களை உயர்த் திக்கொள்ளலாம். அவ்வாறு செய்தால் அவர்கள்மீது நியாயஸ்தர்கள் இரக்கங் கொள்வார்கள். தேவையென்றால் கோர்ட்டின் பாதுகாப்பு கிடைக்கும்.

சப்கோர்ட்டார் நிர்ணயித்த செலவுத் தொகை ஐநூறு ரூபாய் அதிகமென்று நாங்கள் கருதவில்லை. மீண்டும் அத்துமீறிக் கோயிலுக்குள் நுழைவதைத் தடுக்கும் பொருட்டு சப்கோர்ட்டார் விதித்த தடை செல்லுபடியாகும்.

நாடார்கள் நம்பிக்கை இழக்கவில்லை. கஷ்டப்பட்டு அலைந்து லண்டன் பிரிவி கவுன்சிலுக்கு அப்பீல் செய்தார்கள். அதில் உடனடியாக உத்தரவு வருமென்று தோன்றவில்லை. நல்ல உத்தரவு வரும்போது சுந்தரேசுவரரைத் தரிசித்துக்கொள்ளலாம் என்று அமைதியானார்கள்.

## 8. தப்பித் திரிந்தவர்கள்

சிவகாசிக் கலக வழக்கில் வாரண்டுக்குத் தப்பித் திரிந்தவர்களில் பொன்னுச் சாமித் தேவரும் ராமச்சந்திரத் தேவரும் நாலு வருசத்துக்குப் பின்னர் பிடிபட் டார்கள். அவர்கள்மீது தொடரப்பட்ட வழக்கில் பூர்வாங்க விசாரணை நடத்திய சாத்தூர் மாஜிஸ்திரேட் ஜாக்சன் அதை மேல்விசாரணைக்கு செசன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பினார்.

செசன்ஸ் கோர்ட்டார் பிலிப்ஸ். ரெண்டு அசஸ்ஸர்கள். பிராமணரும் வெள்ளாளரும். எதிர்த் தரப்பில் நாலு வக்கீல்கள் ஆஜரானார்கள்.

அஞ்சு வருசத்துக்கு முன் நடந்த சிவகாசிக் கலகத்தின் நினைவுச் சுவடுகள் தேய்ந்துபோன நிலையில் விசாரணை நடந்தது. சர்க்கார் தரப்பில் மொத்தம் எட்டு சாட்சிகள். நாலு நாடார்கள் வேதக்கார வாத்தியார் சுவிசேஷமுத்து முன்பு சாத்தூர் சப்மாஜிஸ்திரேட்டாக இருந்த சீனிவாசய்யர் ரெண்டு போலீஸ்காரர்கள்.

ராமச்சந்திரத் தேவர் கலகக்காரர்களுடன் கையில் துப்பாக்கியுடன் சென்ற தைப் பார்த்ததாக மாரியப்ப நாடார் சொன்னார். அய்ய நாடாரின் வீட்டு மச்சி லிருந்து கொள்ளையைப் பார்க்கும்போது கூட்டத்துக்கு முன்னால் தேவர் போன தாக குருசாமி நாடார் சொன்னார். அரிசிக்குளம் தெருவில் பழனியப்பனைக் கொலைசெய்யும்போது ''வெட்டு வெட்டு'' என்று கத்திக்கொண்டு கையில் ரத்தக் கறை படிந்த பட்டாக்கத்தியுடன் பொன்னுச்சாமித் தேவர் நின்றதாகச் சின்னையா நாடார் சொன்னார். ரெண்டு பேரும் கலகத்தில் கலந்துகொண்ட தாக சண்முக நாடார் சொன்னார். இரு பக்கமும் சமரசம் செய்துவைக்கும்

நோக்கத்தில் கலகத்துக்கு முந்தி பொன்னுச்சாமித் தேவர் சாட்சியாபுரத்துக்கு வந்து பவுலய்யருடன் பேசியதைப் பற்றி சுவிசேஷமுத்து சொன்னார்.

தனது சமரச முயற்சி பயனற்றுப் போகவே மதுரைப் பக்கம் அறுபது மைலுக் கப்பால் தன் உறவினர் வசிக்கும் ஊருக்குப் போய்விட்டதாகப் பொன்னுச்சாமித் தேவர் கூறினார். போன காரணத்தைச் சொல்லவில்லை. அவர் தரப்பில் சொல்லப் பட்ட சாட்சியங்களும் நம்பும்படியாக இல்லை. அவர் அங்கே போய் தன் வப்பாட்டியுடன் தங்கி வியாபாரம் செய்ததாகச் சொல்லப்பட்டது. திடீரென்று பெண்டாட்டி பிள்ளைகளை விட்டுப் போக வேண்டிய அவசியமென்ன. அதுக்குப் போதிய முகாந்திரமில்லை. கோர்ட்டார் இந்தக் கதையை நம்பவில்லை.

கலகத்துக்கு ரெண்டு மாசத்துக்கு முந்தியே தான் ரங்கூன் சென்றுவிட்டதாக ராமச்சந்திரத் தேவர் சொன்னார். இதை உறுதிப்படுத்துவதற்காக ரங்கூனி லிருந்து நாலு சாட்சிகள் வரணும். அவர்கள் வராமல் இழுத்தடித்தார்கள். கடைசிக் கட்டத்தில் வாய்தா மறுக்கப்பட்டது. ரங்கூன் கதை ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

பொன்னுச்சாமித் தேவர் குற்றமற்றவர். ராமச்சந்திரத் தேவர் குற்றவாளி என்பது முதல் அசஸ்ஸரின் கருத்து. சர்க்கார் தரப்புச் சாட்சிகள் பொன்னுச்சாமித் தேவருக்கெதிராக எதும் சொல்லாததாலும் அவர் நல்லெண்ணத்தில் சமரசம் செய்ய முயன்றதாலும் குற்றமற்றவர் எனக் கருதினார். இருவருமே குற்றவாளிகள் என்பது மற்ற அசஸ்ஸரின் கருத்து.

ரெண்டு பேரும் கலகத்தில் ஈடுபட்டதாகச் சாட்சியங்களை ஆதாரமாகக் கொண்டு கோர்ட்டார் தீர்மானித்தார். இருவருமே ஆயுதம் வைத்திருந்தார்கள். பொன்னுச்சாமித் தேவர் சமரசம் பேசச் சாட்சியாபுரம் சென்றதன் மூலம் அவர் முக்கியப் புள்ளி என்பது புலனாகியது. அவர்கள் குறிப்பாக எந்தக் குற்றமும் செய் ததாகத் தெரியவில்லை. ஆனாலும் கலகக்காரர்களிடையே அவர்கள் முக்கியத் தலைவர்களாக இருந்திருக்கிறார்கள். அவர்களை லேசான தண்டனையுடன் விட்டு விட முடியாது. ஆகவே கோர்ட்டார் அவர்களுக்குப் பன்னிரெண்டு வருசம் தீவாந் தரம் சொன்னார்.

எதிரிகள் ஹைகோர்ட்டுக்குப் போனார்கள். கோர்ட்டார்கள் விரைவி லேயே சுருக்கமாகத் தீர்ப்புச் சொல்லிவிட்டார்கள்:

> எதிரிகளுக்கெதிராகச் சாட்சி சொன்ன நாலு பேருமே நாடார்கள். எனவே அது எதிரிகளுக்குப் பாதகமானது. முன்னபிப்பிராயம் கொண்டது. மேலும் எதிரி கள் குறிப்பாக இன்ன குற்றம் புரிந்தார்கள் என்று யாருமே சொல்லவில்லை. சாத்தூர் சப்மாஜிஸ்திரேட் கலகத்தன்று சிவகாசியில் இருந்தபோது எதிரிகளின் பேர் அடிபடவில்லை. அவர்கள் உண்மையாகவே கலகத்தில் கலந்துகொண்ட தைப் பார்த்திருந்தால் அன்றே அவரிடம் சொல்லியிருப்பார்கள். எனவே சந் தேகத்தின் பலனை எதிரிகளுக்களித்து அவர்களை விடுதலை செய்கிறோம்.

தீர்ப்பளித்தது ரெண்டு கோர்ட்டார்கள். ஒருவர் டேவிஸ். மற்றவர் சங்கரன் நாயர். முந்தி சிவகாசி வழக்கில் சர்க்கார் வக்கீலாக இருந்து திறமையாக வாதாடிப் பலருக்குத் தண்டனை வாங்கிக்கொடுத்த அதே சங்கரன் நாயர்தான்.

## 9. பல்லாக்குச் சுமை

கழுகுமலையில் பெரிய சாமியார் கௌசானலுக்கு பலாத் தோட்ட நிலத்தை எட்டயாபுரம் சமீன்தார் மாற்றிக் கொடுத்தது சம்பந்தமான சிவில் வழக்கில் விசாரணை நடக்கும்போது சிவகாசிக் கொள்ளைக்கு முன்னும் பின்னுமாக நடந்த கலகங்கள் சம்பந்தமான கிரிமினல் வழக்குகளும் ஏராளம் கோர்ட்களில் குமிந்து கிடந்தன. அவற்றில் கழுகுமலையில் நடந்த கொள்ளை முயற்சி வழக்கும் உண்டு. இதையெல்லாம் நினைத்துப்பார்க்கும்போது பலாத் தோட்ட வழக்கை விசாரித்த கோர்ட்டாரின் மனசில் ஒரு விசயம் தெளிவாகியது. நாடார்களும் பிற சாதியினரும் இனிமேல் அருகருகே குடியிருப்பது சிரமம். எவ்வளவுக் கெவ்வளவு விலகியிருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. இதை மனசில் கொண்டே தீர்ப்பெழுதினார்:

> மத ஆசாரங்களை சகலரையும் கட்டுப்படுத்தும் விதிமுறைகளாகக் கொள்ள முடியாது. ஆகவே கிரிப்பிராகார வீதியில் வேதக் கோயிலுக்கு இடங்கொடுத்ததில் தவறில்லை. திருப்பரங்குன்றம் மலையில் முருகன் கோயிலுக்கு மேலே முகமதியர்களின் மசூதி உள்ளது. அங்கே இந்துக்காரர்கள் கிரிப் பிரதட்சணம் வரத்தான் செய்கிறார்கள்.
>
> பல ஊர்களில் வேதக் கோயில்களுக்கு முன்னால் இந்துக்காரர்களின் ஊர் வலம் நடக்கத்தான் செய்கிறது...

சரி வேதக்காரர்களுக்குச் சாதகமான தீர்ப்புத்தான் சொல்லப்போகிறார் என்று பார்த்தால் எதிர்பாராதபடி திசைமாறிவிட்டது:

> இந்த நிலப் பரிவர்த்தனையால் தேவஸ்தானத்துக்கு நஷ்டம். வேதக்காரர்களுக்கு இன்னும் கடுமையான நிபந்தனைகள் விதிக்கணும். பெரிய சாமியார் பண்ணைத் தோட்ட நிலத்துக்காக வருசம் இருபது ரூபாய் வாடகை கொடுக்கணும். இந்துக்காரர்களின் ஊர்வலங்களுக்கு எந்த விதத்திலும் இடைஞ்சல் தர மாட்டேன் என்று அவர் எழுதிக் கொடுக்கணும். அதுவரை நிலப் பரிவர்த்தனை தடுத்து நிறுத்தப்படுகிறது.

தீர்ப்பு இரு தரப்புக்கும் ஒப்பவில்லை.

''கோர்ட்டாரு சொன்னதெல்லாம் சாமியாரு ஒத்துக்கிட்டாருன்னா அவரு பலாத் தோட்டத்துல கோயிலுக் கெட்றத ஆராலயும் தடுக்க முடியாதே.''

''அப்படி நடந்தா நமக்கும் ராசாவுக்கும் வீணா பக வந்து சேருமே.''

''சாமியாரு பலாத் தோட்டத்த வேணாம்னு சொல்லீட்டா என்னாகும்.''

''கீழ ரத வீதியில கோயிலிருந்த எடம் அவரோட சொத்தாவே இருக்கும்.''

''ஆமாமா. அதுக்குண்டான பத்தரம் வச்சிருக்காரே.''

''பெறகு சொல்றயே.''

பெரிய சாமியாருக்கும் வருத்தமாக இருந்தது. நாடார்களுக்காக எவ்வளவு காலந்தான் கோர்ட் படியேறி இறங்குவது. பண நஷ்டம். கால விரயம்.

சமீன் மேனேஜரும் அப்பீல் செய்து தெளிவான தீர்ப்பு வாங்கலாமே என்று ஆதங்கப்பட்டார். கலெக்டர் வேறு மாதிரி நினைத்தார். சாமியார் நிச்சயமாகப் பழைய இடத்துக்குப் போக மாட்டார். அதனால் இந்த நேரத்துக்கு இந்தத் தீர்ப்பே போதுமானது. மைனர் சமீன்தாருக்கும் இப்படித்தான் தோன்றியது. அப்பீலுக்குப் போக வேணாமென்று மேனேஜரிடம் சொல்லிவிட்டார்கள்.

பெரிய சாமியார் மற்ற சாமியார்களைக் கலந்தார். பலாத் தோட்டத்தில் கோயில் கட்டினால் வேதக்காரர்களுக்கும் இந்துக்காரர்களுக்குமிடையே தகராறு கூடுமேயொழிய குறையாது என்று அவர்கள் கருதினார்கள். பெரிய சாமியார் அதை ஏற்றுக்கொண்டார்.

இந்தச் சமயத்தில் மைனராக இருந்த சமீன்தாருக்கு இருபத்தோரு வயசு பூர்த்தியானது. சமீன் பொறுப்பை மேனேஜரிடமிருந்து பெற்றுக்கொண்டார். மேனேஜர் போய் திவான் வந்தார்.

இந்துக்காரர்களைப் பகைத்துக்கொள்ளக் கூடாது என்பதில் சமீன்தார் தெளிவாக இருந்தார். பலவாறு யோசித்தார். கடைசியில் ஒரு யோசனை சிக்கியது. நாடார்களின் குடியிருப்புக்குக் கிழக்கே பள்ளக் குடி உள்ளது. அதைக் காலி செய்து கோயிலுக்காகக் கொடுக்கலாமே. அதை ஏற்கச் சம்மதமா என்று பெரிய சாமியாரிடம் கேட்டார்.

திருநெல்வேலியிலிருந்து பதில் வந்தது:

> கழுகுமலையிலுள்ள மனைநிலத்தில் வேதக் கோயில் கட்டுவதில்லை எனவும் அதைக் குறிப்பிட்ட காலத்துக்குள் தங்களிடம் ஒப்படைத்துவிடுவதாகவும் நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். மனைக்கு மனை மாற்றிக்கொள்வது சம்பந்தமாக ஏற்கெனவே பள்ளர்களிடம் பேசி அவர்களது குடியிருப்பை விட்டுத்தரச் சம்மதிக்க வைத்துவிட்டீர்களா என்பதைத் தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன். பள்ளக் குடியை எடுத்துக்கொள்ள முடியுமென்றால் அதுக்கான நிபந்தனைகளைத் தெரிவியுங்கள். பள்ளக் குடி காலியானவுடன் வேதக் கோயில் கட்டுவதற்காக சபைக்கு விற்றுவிட நாடார்கள் உறுதியளித்துள்ள வீடுகளை வாங்குவது பற்றிய நடவடிக்கைகளை நான் முடித்துவிடுகிறேன்.
>
> நான் நேரில் பார்வையிட்ட அளவில் தற்போதைய சூழ்நிலையில் பள்ளர்கள் தங்கள் குடியிருப்பை விட்டுக்கொடுத்தாலொழிய கழுகுமலையில் பொருத்தமான மனைநிலம் வாங்க முடியுமென்று தோன்றவில்லை. வேதக்காரர்கள் குடியிருக்கும் இடத்தில்தான் வேதக் கோயில் கட்ட முடியும். நாடார்களின் பகுதிகூட வீடுகள் கட்ட முடியாத அளவுக்கு நெரிசலாக உள்ளது.

சமீனிலிருந்து சின்னச்சாமி பெரிய சாமியாருக்கு எழுதினார்:

> பள்ளக் குடியைக் காலிபண்ணுவது பற்றி சின்ன மகாராசாவிடம் பேசினேன். நான் எதிர்பார்த்தபடியே இதில் பல சிக்கல்கள் இருப்பதாகச் சொன்னார்.

திவான் சின்ன மகாராசாவின் மனசை மாற்றிவிட்டார். இதுபற்றிப் பேச்சு வார்த்தை நடத்த சின்னச் சாமியையே அனுப்பினார்கள். பேசி முடிக்கப்பட்டது.

திவான் சண்முகம் பிள்ளை பெரிய சாமியாருக்கு எழுதிய கடிதம்:

> பள்ளர்கள் தங்கள் வீடுகளை விட்டுவிட்டுப் புது இடத்தில் குடியேறிக் கொள்ளச் சம்மதித்துவிட்டார்கள். ஆனால் ஒரு நிபந்தனை. பழைய வீடுகளி லுள்ள சாமான்களை எடுத்துச்செல்ல அவர்களை அனுமதிக்கணும். தொளா யிரத்து அறுபத்தஞ்சு ரூபாய் நஷ்ட ஈடு கொடுக்கணும். இதில் நூற்றைம்பது ரூபாய் வீட்டு மனைக் கிரையம். மீதி புது வீடு கட்ட ஆகும் செலவு. அவர்கள் கேட்கும் நஷ்ட ஈடு நியாயமானதே. இத்தொகையைக் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள்.

செலவு அதிகமாக இருந்தாலுங்கூட கோயில் கட்டுவதற்குப் புது மனை போதுமானதாக இல்லைதான். நாடார்களுக்கு வேறு நானூறு ரூபாய் மனைக் கிரையம் கொடுக்கணும். என்ன செய்தாவது பத்திரம் முடித்துவிட வேண்டியது தான். பெரிய சாமியார் சர்வேயரை அனுப்பினார்.

பழைய இடத்திலிருந்த வீட்டில் சின்னச் சாமியார் இனிமேல் தங்கக் கூடாது. அதுக்குப் பதிலாக மாட்டுத் தாவணி வீதியிலுள்ள மடத்தைப் புதுப்பித்துத் தரலாம். இப்படிச் சமீன் தரப்பில் சொல்லப்பட்டது. கூடுதலாக ஒரு மனை ஒதுக் கினால் அதுக்காக முப்பத்தொன்பது ரூபாய் தந்துவிடுவதாகவும் சாமியாருக்குத் தற்காலிகமாகத் தங்குமிடம் ஏற்படுத்தித் தரப்படும் என்றும் பெரிய சாமியார் தெரிவித்தார்.

பள்ளக் குடி நிலத்துக்காகப் பெரிய சாமியார் கொடுக்க வேண்டியது ஆயிரத்து நாலு ரூபாய். அவர் ஒப்படைக்கப்போகும் பழைய நிலத்துக்காக வர வேண்டியது ரெண்டாயிரத்து எழுநூறு ரூபாய். மீதித் தொகையைச் சமீன் அவருக்குக் கொடுத்துவிடணும். இப்படி ஒத்துக்கொண்டார்கள்.

ஊர் வாயை மூடணும் என்பதற்காக விரைவில் கிரையம் முடிக்க அவசரப் பட்டார் பெரிய சாமியார். இனிமேல் நாடார்கள் கோயில்பட்டிச் சாலை வழி யாகக் கலியாண வைபவங்களில் ஊருக்குள் பட்டணப் பிரவேசம் போகலாமா. தடையேதும் இல்லாமல் அவர்கள் போக வேண்டிய சுற்றுப்பாதைதான் என்ன என்றும் கேட்டுவைத்தார்.

பள்ளக் குடி ரத வீதிகளுக்குப் பக்கத்தில் இல்லாததால் பிரச்சினை வரச் சந்தர்ப்பமில்லை என்று சமீன்தார் தெரிவித்தார். நாடார்கள் பட்டணப் பிர வேசம் போவதைப் பொறுத்த மட்டில் இப்போதைக்கு எதும் சொல்ல முடியாது. அந்த இடத்தைப் பார்வையிட்டு உள்ளூர்ச் சனங்களைக் கலந்த பிறகுதான் சொல்ல முடியும். நாமிருவரும் கழுகுமலைக்குப் போகும் சந்தர்ப்பத்தில் இதைப் பார்த்துக்கொள்ளலாமே என்று சமீன்தார் பிடிகொடுக்காமல் சொல்லி விட்டார்.

சமீன்தார் பள்ளக் குடியை அயன் நிலமாக வாங்கிப் பெரிய சாமியாருக்குக் கிரையம் எழுதிக்கொடுத்தார். சாமியார் பலாத் தோட்ட நிலத்தைச் சமீன் தாரிடம் ஒப்படைத்தார்.

வேதக்கார நாடார்கள் குடியிருந்த ரெண்டு ஏக்கர் நிலத்தையும் பெரிய சாமியார் வாங்கிக்கொண்டார். கோயில் கட்டுமான வேலைகள் அவசரமாக நடந்தன. முதலில் கோயில் கட்டி லூர்து மாதாவைக் குடியமர்த்தினார்கள். பிறகு

பங்குச் சாமியார் தங்கும் வீடு கன்னியாஸ்திரி மடம் பள்ளிக்கூடம் என முளைத்தன. மாதாவைத் துதித்துப் பாடினார்கள்.

''கர்த்தரின் சுதனைத் தந்த
கன்னி மரியாளுக்குத் தோத்திரம்
நித்தமுன் புகழைப் போற்றி
நினைந்து நினைந்துருகிப் பாடுவோம்.''

அவர்கள் முகத்தில் பழைய சந்தோசமும் உற்சாகமும் இல்லை. சோகமும் துயரமும் படர்ந்திருந்தது. உபதேசியார் வேத வசனத்தை வாசித்தார்.

''உன் துக்கம் ஒரு நாள் சந்தோசமாக மாறும்.''

அவர்கள் மன்றாடிப் புலம்பினார்கள்.

''மாறலயே.''

''எப்ப மாறுமோ.''

ஈரக் கண்களுடன் வீடு திரும்பும்போது என்னென்னமோ முணுமுணுத்தார்கள்.

''பல்லாக்குல போறதுக்கு வழி கேட்டொம். ரத வீதியிலயே கோயிலு கெட்டி வழிகாட்னாக. அந்தச் சந்தோசத்தவும் பாவிக அநியாயமாப் பறிச்சுக்கிட்டாக. கோயிலக் கொளுத்திக் குடியிருப்பச் சூறையாடி கொலையும் செஞ்சு ஆடுன ஆட்டம் கொஞ்சமா.''

''பெலாத் தோட்டத்துல கோயிலு உண்டாக்கச் சொல்லி அதவும் பாதியிலயே பறிச்சுக்கிட்டாக.''

''இப்ப இங்க வெரட்டியடிச்சிருக்காக.''

''என்னருந்தாலும் பெரிய சாமியாரு பெலாத் தோட்டத்து எடத்த வுட்டுக் குடுத்துருக்கப்புடாது.''

''அவரு எதத்தான் வுட்டுக் குடுக்கல.''

''அங்கருந்து மிச்ச மணலு கல்ல இங்க அள்ளிச் சொமந்துட்டு வரும்போது எவ்வளவு வேதனையாருந்துச்சு தெரியுமா.''

''அதவிடக் கேவலம் வேறென்ன வேணும்.''

''தொறட்டு வரும்னு தெரிஞ்சுதான ரத வீதியில காலுவச்சொம். அப்படின்னா என்ன வந்தாலும் எதுத்து நிக்கணும். பின்வாங்கப்புடாது.''

''எதுத்து நின்னு என்னாச்சு. பட்டது போதாதா.''

''அப்ப முன்யோசனையில்லாம எறங்கீருக்கப்புடாது.''

''சாமியாரு நல்லவருதான். அவரச் சுத்தியிருக்கிற ஆளுகதான் சரியில்ல. அவுக பேச்சக் கேட்டதாலதான் இம்புட்டும்.''

''அதனால கொஞ்சப் பேரு வேதத்துக்கு வராமப் பின்னடிச்சிட்டாங்க.''

''அதும் பொய்யா.''

''வேதத்துக்கு மாறி என்னத்தக் கண்டொம். பல்லாக்குல போக முடியல. அது நொண்டிக் குருதையாப் படுத்துக்கெடக்குது மடத்துக்குள்ள.''

''மாதா கருணையில அது நடந்தாச் சரி.''

''எத்தன வருசம் காத்திருக்கப்போறமோ.''

அவர்கள் மனசிலிருந்து பல்லாக்குச் சுமையை இறக்கவேயில்லை.

## 10. தீட்டுச் சிலுவை

ஏழாயிரம்பண்ணையில் தங்கியிருந்த மரியான் உபதேசியார் ஏழைகளுக்கு ஊழியம் செய்துவந்தார். உடல் தளர்ந்துவிட்டது. குஷ்டம் குதறி அங்கங்கள் அடையாளமிழந்துவிட்டன. குரல் மட்டும் அப்படியே இருந்தது. காலம் அதை இன்னும் மெருகேற்றியிருந்தது.

ஆனாலும் அன்னியப்பட்டுவிட்ட தனிமை அலைக்கழித்தது. மேய்ப்பரின் மந்தையிலிருந்து காணாமல் போய்விட்ட ஆடாக உணர்ந்தார். அடிக்கடி பரலோகம் நினைவில் நிழலாடியது. மேய்ப்பருக்குக் குரல் கொடுத்தார்.

''என்னையும் உமதாட்டினோடு
ஏற்றுக்கொள்ளும் யேசுவே
மேய்ப்பராகவே இருக்கின்றீர் எந்தம்
மேய்ச்சலும் நீர்தாமலோ - ஞான
வாய்ப்புள்ள சத்யமறையில் மேய்ந்து நான்
வளர்ந்திட அருள்புரியும்.''

உள்ளூர் வேதக்கார நாடார்கள் ஆரம்பத்தில் கீழ ஏழாயிரம்பண்ணையிலுள்ள பரிசுத்த யோவான் ஆலயத்தில் கீழ்ச்சாதியினருடன் சேர்ந்து ஆராதனை நடத்தினார்கள். திருப்பந்தியில் விருப்பமுடன் அமர்ந்து விருந்துண்டார்கள். அவர்களை மேல ஏழாயிரம்பண்ணையைச் சேர்ந்த இந்துக்கார நாடார்கள் அறவே வெறுத்தார்கள். வேதத்துக்கு மாறிப் போய்விட்டது மட்டும் காரணமில்லை. தீட்டுச் சாதியினருடன் கலந்துவிட்டார்களே. இது அவமானமில்லையா.

இந்துக்கார நாடார்கள் வசதியானவர்கள். பெரியபெரிய வியாபாரிகள். மாரியம்மனுக்கு அழகான கோயில் கட்டி விமரிசையாக விழா கொண்டாடினார்கள். அவர்களது கடைகளில் வேதக்கார நாடார்கள் காய்கறிகூட வாங்காமல் தடுத்தார்கள். கிணற்றில் தண்ணீரெடுக்க அனுமதி கிடையாது. பரியாசஞ் செய்தார்கள்.

''இங்க ஏன் வாற. பறையன் கெணத்துக்குப் போக வேண்டியதுதான.''

வேதக்கார நாடார்கள் பல வழிகளில் அவமானப்பட்டார்கள். கிட்டத்தட்ட சாதியிலிருந்து தள்ளிவைக்கப்பட்ட நிலைமை. புழுங்கினார்கள்.

''நம்ம எந்த வெதத்துல அவங்களவிடக் கொறஞ்சுபோயிட்டொம். எல்லா வசதியும் நம்மகிட்டயும் இருக்கு.''

''நமக்காக ஒரு சபைய ஆரம்பிச்சு தனிக் கோயில் கெட்டி அவங்களப்போல கவுரவமா இருப்பொம்.''

''அப்படித்தான் செய்யணும். அதும்போக மழ நேரத்துல ஓடத் தண்ணியக் கடந்து கீழூருக்குப் போய் வாறதுக்குச் சங்கடமாத்தான இருக்குது. பாத சரியில்ல. எல்லாரும் உக்காந்து செபம்பண்றதுக்கு எட வசதியில்ல.''

''அது நெசந்தான்.''

மேலூரில் புதிய சபை ஏற்படுத்தித் தனியிடத்தில் ஆராதனை நடத்தினார்கள். ஏசுவின் ராச்சியத்தை அறிவித்துப் பவனி வந்தார்கள். ஆனந்தமாகப் பாடினார்கள்.

இருட்டுக்குள் கிடந்தபடி மரியான் உபதேசியார் அடிக்கடி வேதனையுடன் அறைகூவினார்.

"வேதனையை உண்டாக்கும் ஜாதி வேற்றுமையை விட்டு
மறை ஓதியபடி எல்லாரும் உத்தம கிறிஸ்தோராக
புத்தியாய் நடந்து வாருங்கள்."

அந்த அறைகூவல் ஒரு நாள் ஈனக்குரலாகி கர்த்தருக்குள் மரித்துப்போனது.

உள்ளூர்க் கல்லறைத் தோட்டத்தில் அவருக்கு இடம் கிடைக்கவில்லை. பரலோகத்தில் கர்த்தரின் பாரிசத்தில் வீற்றிருக்கும் சுந்தரப் பரமதேவனைத் துதித்துச் செபித்தபடி மீளாத் துயிலில் தீண்டாப் பொருளாக நீளப் படுத்திருந் தார். காலமெல்லாம் உடலில் குடியிருந்த குஷ்டத்தின் நீர்க்கசிவில் உடுப்பு நனைந்துகொண்டிருந்தது. அருகில் ஆதரவற்றுக் கிடக்கும் தோள்பைக்குள் குஷ்டத்தடம் பதிந்த வேதாகம நூல் ஒய்ந்து முடங்கிவிட்டது.

எட்ட நின்று பார்த்த சனங்கள் இரக்கத்தைப் பொழிந்தார்கள். எட்ட முடியாத அவரது வீரியக் குரல் தொட்டுத் தீண்டாத மனசு உண்டா. மயக்கும் இசைக்கு உருகாதவர்தான் உண்டா.

வட நெல்லை தேடிவந்து தேவ வசனங்களையும் பாடல்களையும் ஆத்து மாக்களில் விதைத்து வளப்படுத்திய மனுசனைத் தூக்கிச் சுமந்து தேவனிடம் ஒப்புவிக்க ஆளில்லை. தவித்துத் திண்டாடிய கோயில்குட்டி அருகிலுள்ள சிவ சங்குப்பட்டிக்கு ஓடிச் சேதியை அறிவித்தார்.

வேதக்காரச் சக்கிலியர்கள் தேடி வந்தார்கள். உபதேசியாரை வாரியணைத்து அழுதார்கள். தேவனைத் தொழுதார்கள். வேதம் முழங்க கீதம் இசைக்க சக்கிலி யத் தோள்களில் நாதநாயகனின் பவனி சிவசங்குப்பட்டி கல்லறைத் தோட் டத்தை நோக்கி நகர்ந்தது.

மேசையாபுரம் இமானுவேல் மரியான் உபதேசியார் தீட்டுச் சாதியின ருடன் சங்கமித்துவிட்டார். அவரது கல்லறையில் முளைத்திருந்த சிலுவையில் துளிர்த்த துஜாவந்தி ராகம் காற்றில் கலந்து கர்த்தரை நோக்கிப் பறந்துகொண் டிருந்தது.

"ஆறுதல் அடை மனமே - கிறிஸ்துவுக்குள்
ஆறுதல் அடை மனமே
பாருள் பாவத்தால் வந்த பலனாம் மரணமதின்
கூரை அழித்த யேசு கொற்றவன் தனைநோக்கி.

(ஆறுதல்...)"

## 11. சீமையிலிருந்து சேதி

பனைவடலி வளர்ந்து பாளை தள்ளியதுபோல் பல வருசங்களுக்குப் பிறகு கமுதி கோயில் வழக்கில் பிரிவி கவுன்சில் தீர்ப்பளித்தது:

> நாடார்கள் தங்கள் சொந்தக் கோயிலில் வழிபடுகிறார்கள். அவர்கள் கமுதிக் கோயிலுக்குள் பிரவேசித்ததை சாட்சியங்கள் உறுதிப்படுத்தத் தவறிவிட்டன. நடைமுறை வழக்கப்படி கமுதிக் கோயிலுக்குள் சென்று வழிபடுவோரில் நாடார்கள் இல்லை என்பதை பிற சாதிக்காரர்கள் நிரூபித்திருக்கிறார்கள்.
>
> ராசி என்ற பெயரில் கோயில் டிரஸ்டியான ராமநாதபுரம் ராசா செய்த நம்பிக் கைத் துரோகம் பற்றி ஹைகோர்ட் சரியாகவே குறிப்பிட்டுள்ளது. இக்காரணங் களால் அப்பீல் தள்ளுபடி செய்யப்படுகிறது.

எல்லா வழிகளும் அடைபட்ட மாதிரி நாடார்கள் திணறினார்கள்.

''என்னப்பா இது. எந்தப் பக்கமும் திரும்ப முடியாமச் செஞ்சிட்டாங்களே.''

''கழுகுமலையில ரத வீதிகளச் சுத்திப் பட்ணப் பருசம் போக முடியாது.''

''செவகாசிக் கோயிலுக்குள்ள மொழைய முடியாது.''

''அதே கதிதான் நமக்கும்.''

''சர்க்காரு கோர்ட்டாரு எல்லாம் சேந்துக்கிட்டுல்ல கொட்டமடிக்காங்க.''

''ஆரு செத்தா அவனுக்கென்ன கவல. வரி ஒழுங்கா வந்தாப் போதும்.''

தொழிலில் கவனங்கொண்டு சொந்தக் கோயில்களுக்குப் பெரிய அளவில் திருவிழா நடத்திச் சந்தோசப்பட்டார்கள். கோயில் இல்லாத இடங்களில் புதுசாகக் கட்டினார்கள். அவர்கள் நுழைய முடியாத கோயில்கள் மனசுக்குள் சாத்தியே கிடந்தன.

கோயிலுக்குள் நுழையும் முயற்சிகளும் கொந்தளிப்பில் நடந்த கலகங்களும் நாடார்களின் ஒற்றுமையைக் குலைத்துவிடவில்லை. மென்மேலும் முன்னேறணும் என்ற உத்வேகத்தையே கொடுத்தன.

சடங்கு சாத்திர அனுஷ்டானங்கள் பூணூல் உச்சிக் குடுமி பஞ்சகச்சம் மேல் குடிப் போக்கு என்று எதுமே கைகொடுக்கவில்லை. வேறு வழிகளைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தார்கள். முதலில் எல்லா நாடார்களையும் ஒண்ணுசேர்க் கணும். அதுக்குப் பொதுவான ஒரு ஸ்தாபனம் வேணும்.

முந்தியே இந்த எண்ணம் இருந்ததுதான். திருமங்கலத்து நாடார் வியாபாரி கள் மதுரையில் கூடி சத்திரிய மகாஜன சங்கம் என்று ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தத் தீர்மானித்தார்கள். அதென்னமோ பல காரணங்களால் கைகூடாமலேயே போயிற்று.

பதினஞ்சு வருசம் கழித்துத்தான் அது சாத்தியமானது. தஞ்சாவூர் ஜில்லா வில் பொறையார் ரத்தினசாமி நாடார் பெருந்தனக்காரர். செல்வாக்குள்ள அப்காரி காண்ட்ராக்டர். அவருக்கு அரசியலில் நுழைய ஆசை. செட்டியார் சாதிக்குப் பிரதிநிதியாக ஒரு நாட்டுக்கோட்டைச் செட்டியாரை மாகாண மேல் சபைக்கு நியமித்திருப்பதைப் போல் நாடார் சாதிக்குத் தன்னை நியமிக்குமாறு அவர் சர்க்காருக்கு எழுதினார். செட்டியார் அவரது சாதிச் சங்கத்தின் பிரதிநிதியாக்கும். அதுபோல் நாடார்களுக்கென்று சங்கம் கிடையாதே என்று சர்க்கார் சொல்லி விட்டது.

உடனே அவர் சகல இடங்களிலிருந்தும் நாடார்களைப் பொறையாருக்கு வரும்படி கூப்பிட்டார். நானூறுக்கும் மேற்பட்டவர்கள் கூடினார்கள். அவர்

களுக்கான செலவை அந்தந்த உறவின்முறைகளும் ரத்தினசாமி நாடாரும் ஏற்றுக்கொண்டார்கள்.

அந்த மாநாட்டில் நாடார் மகாஜன சங்கம் என்ற ஸ்தாபனம் பிறந்தது. ரத்தினசாமி நாடாரின் உறவினர் பொன்னுச்சாமி நாடார் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். வெள்ளைக்கார சர்க்காருக்கு விசுவாசமாக இருக்கும் நாடார்கள் மட்டுமே சங்கத்தில் அங்கத்தினராகலாம். சாதியின் கிளை குலம் கோத்திரம் மத பேதம் கிடையாது. சர்க்காருக்கு எதிரானவர்கள் சங்கத்திலிருந்து நீக்கப்படுவார்கள். நாடார்களின் மேம்பாடுதான் சங்கத்தின் நோக்கம். நாடார் சாதியிலிருந்து ஒருவரை மாகாண மேல்சபைக்கு நியமிக்கணும். இப்படியெல் லாம் தீர்மானம் போட்டார்கள்.

அதே வருசம் கடைசி மாசத்தில் அடுத்த மாநாடு சென்னப் பட்டணத்தில் நடந்தது. எழுநாறு பேருக்கு மேல் கலந்துகொண்டார்கள். அது நடந்து முடிந்த கொஞ்ச நாளில் ரத்தினசாமி நாடார் இறந்துவிட்டார். சங்கம் தொய்ந்து போனது. எடுத்து நடத்த ஆளில்லை. நெடுநாளாகச் செயலற்றுக்கிடந்தது. ஈடேற ஏழு வருசமாயிற்று.

## 12. சம்சாரி வேலையா

வேலையா கலியாணத்தோடு கருவாட்டு வியாபாரத்தைக் கைவிட்டு சம் சாரித்தனத்தில் இறங்கினான். உவர்க்காட்டு நிலம்பற்றிப் பொய்யாளியிடம் பேசினான்.

''அந்த நெலத்துக்கு ஒரு வெலபோட்டுக் குடுத்துடுதனே.''

பொய்யாளி இதை எதிர்பார்க்கவில்லை.

''ஆரும் கேக்கலயே.''

''கேக்கலன்னாலும்...''

''அப்படின்னா அப்பச்சியிட்டதான் குடுக்கணும். அவன் வுட்ட நெலந்தான.''

வேலையா பேச்சடைத்துப்போனான். நிலம் சொந்தமாகிவிட்ட சந்தோ சத்தில் வேலைகள் வேகமாக நடந்தன. கிணற்றை இன்னும் ஆழப்படுத்தினான். தெலாவை ஒட்டிக் கமலை போட்டான். கமலைச் சாமான்கள் செய்தான். மாட்டு வண்டியும் செய்துகொண்டான். தனிப் படப்பு குப்பை ஆட்டுரல் ஊறத்தாழி மாட்டுக்காடி எல்லாம் முளைத்தன. காளங்கண்ணுகளுக்குக் காயடித்து மூக்குப் பீறி வசக்கி விவசாயத்துக்குத் தயார்படுத்தினான். சகல வெள்ளாமையும் வைத்து நல்ல மகசூல் எடுத்தான். உவர்க் காட்டுத் தரிசு நாடார் தோட்டமாகிவிட்டது.

பிறத்தியார் நிலங்களில் கூலிக்கு உழைத்த தெய்வானை நாலு பேரை வேலைக்குக் கூப்பிட்டுக் கூலி கொடுக்கும் அளவுக்குக் குடும்பம் வளர்ந்துவிட் டது. அவளுக்கும் மருமகளுக்கும் மாடு கண்ணுகளைப் பார்க்கவே சரியாக இருந்தது.

கொஞ்ச நாளில் கழுகுமலையில் சுப்பம்மா இறந்துவிட்டாள். அம்மமுத்து நாடார் இன்னும் தனிமைப்பட்டுத் தவித்தார். தெய்வானை அவரைக் கலிங்கலுக்குக் கூப்பிட்டாள். அவர் ஒண்டியாகச் சமாளித்துப்பார்த்தார். முடியவில்லை. பஞ்ச வர்ணத்திடம் போய்விட்டார். பனைத் தொழிலை வேறொருவருக்குக் கைமாற்றி நாளாயிற்று.

பத்திரகாளி ஆண் குழந்தை பெற்றாள். சிவகாசிக் கொள்ளையில் இறந்து போன சந்தனமாரியின் நினைவாகக் குழந்தைக்கு சந்தனம் என்று பேர்வைத்தாள் தெய்வானை. அடுத்தடுத்து பத்திரகாளி மூணு குழந்தைகளைக் கொடுத்துவிட் டாள். ரெண்டாவது பையன் சக்கரை. மூணாவது பையன் செல்லக்கனி. நாலாவது பெண் சண்முகத்தாய்.

பஞ்சவர்ணத்துக்கும் ரெண்டு பயல்கள் இருந்தார்கள். அவர்கள் அந்தப் பக்கமே கலியாணம் முடித்துப் பிள்ளைக்காரர்களாகிவிட்டார்கள். பூட்டன் பூட்டியைப் பார்த்துவிட்ட சந்தோசத்திலேயே அம்மமுத்து நாடார் கண்ணை மூடிவிட்டார். தெய்வானைக்கு வேலையாதான் எல்லாம்.

குடும்பம் பெருகிவிடவே எல்லாப் புழக்கத்துக்கும் தோதாக விசாலமான வீடும் கொட்டாரமும் தேவைப்பட்டன. வேலையா மூணு பயல்களையும் மனசில் வைத்துக்கொண்டு யோசித்தான். இப்போது குடியிருக்கும் இடம் தோதுப் படாது. வீடு கட்டிக்கொடுத்து நிலமும் விட்டிருப்பவர்களிடம் மேற்கொண்டு இடம் கேட்பது சரியில்லை. ஊருக்கு ஒதுக்குப்புறமாக மனையிடம் வாங்கி வீடெடுத்துக்கொள்ள வேண்டியதுதான்.

தெய்வானைக்கு இதில் விருப்பமில்லை. இருந்தாலும் மகன் சொல்கிற காரணமும் சரியாகத்தான் தெரிந்தது. வேலாயிக்கு ஒருவிதத்தில் கோவங்கூட.

''தேவானத்தா ஒங்க புள்ள செய்றது கொஞ்சங்கூட நல்லால்ல. கெடக்கிற எடத்துல எத்தன வீடுன்னாலும் போட்டுக்கிற வேண்டியதுதான. வேணாம்னா சொல்லப்போறொம். அத வுட்டுட்டு நாதியத்தவுக மாதிரி ஒதுங்கிப் போகணு மிங்கீகளே. இது ஒங்களுக்கே ஞாயமாருந்தாச் சரி.''

''ஒங்களுக்கும் குடும்பம் பெருகிப்போச்சில்லம்மா. அதுகளுக்கும் தனியா வீடு வாசலு வேணுமில்ல. நாங்க எத்தன நாளைக்கு எடஞ்சலாரிக்கிதது. அத மனசில வச்சுத்தான் ஒதுங்கிக்கிடலாம்னு வேலையா நெனைக்கான் போலரிக்கு. நானும் சொல்லிப்பாத்தென். கேக்க மாட்டங்கானே.''

''போகணும்னு முடிவு செஞ்சிட்டீக. அதுக்கு இது ஒரு காரணமாக்கும்.''

பொய்யாளி சொல்லிவிட்டான்.

''அவுக பிரியப்படி செய்யட்டும்.''

வேலையா குட்டையனிடம் பேசி ஊருக்கும் மேற்கே சற்றுத் தள்ளியிருக்கும் அவனது இடத்தை விலைக்குக் கேட்டான். குட்டையன் வேலாயிடம் யோசனை கேட்டான். அக்காளாயிற்றே. அஞ்ஞை போன பிறகு நல்லது கெட்டது சொல்வதற்கு அவள்தான் துணை. அவள் ஒரு வார்த்தைகூடத் தடுத்துச் சொல்ல வில்லை.

வேலையா நல்ல விலை கொடுத்து நிலம் வாங்கி அதில் வசதியான வீடு ரெண்டும் எதிரில் தொழுவும் கட்டிக்கொண்டான். எல்லாரும் ஒரு நல்ல நாளில்

அங்கே குடியேறினார்கள். வண்டி மாடு கலப்பை கூனை என்று சகல சாமான்களும் இடம் மாறின. நட்டி வளர்த்த வேப்பமரத்தை மட்டும் கொண்டுபோக முடியவில்லை.

ஊர் முளைத்த நாளிலிருந்து மேகலக் குடி கிடையாது. இப்போது நாடார் வீடு மேகலக் குடியாக மாறிவிட்டது. கருவாட்டு வேலையா வேலையா நாடாராகி விட்டார். தெய்வானை பெரியாத்தா. பத்திரகாளி சின்னாத்தா.

குடும்பத்தில் பிள்ளைகள் தலையெடுக்கவே வேலையா நாடாருக்குச் சுமை குறைந்தது. விவசாய வேலைகளை மேல்பார்ப்பதுடன் சரி. சந்தனமும் சக்கரையும் முழு ஈடுபாடில்லாமல் வேலை செய்வதைப் பார்த்துக் கொஞ்சம் வருத்தமாகத்தான் இருந்தது. ஆத்தாளிடம் அடிக்கடி குமைந்துகொள்வார்.

''ஆத்தா நம்ம பயக மாட்டுக்குப் பின்னால திரியிததுக்குச் சங்கடப்படுதாங்களே. இவங்கள நம்பி இனியும் நெலம் வாங்கச் சொல்லுதயே.''

தெய்வானைக்கு அப்படியொரு வருத்தமெல்லாம் கிடையாது.

''கொஞ்ச நாளைக்கு அதது போக்குக்கு வுட்டுப் புடி. பொறவு தன்னால வசங்குவாங்க. மூணு ஆம்பளைகள வச்சுக்கிட்டு ஒரு குறுக்கம் தோட்டந்தான் இரிக்குதுன்னா எப்படி. ஒருமனசா வாங்கிப் போடு. பொறவு பாத்துக்கிடலாம்.''

மேலூர் ஆசாரியின் தோட்டம் அஞ்சு குறுக்கம் கிணற்றுடன் சும்மா கிடந்தது. கலிங்கலுக்குக் கிட்டத்தில்தான். அதை வாங்கித் திருத்தி வெள்ளாமை செய்தார்கள். ஒரே வருசத்தில் போட்ட துட்டு கிடைத்துவிட்டது. மேற்கொண்டு கிடைக்கும் வரும்படியெல்லாம் மிச்சந்தான். பத்திரகாளி வளர்த்த ஆடுகளை விற்ற பணமும் கணிசமாகக் கைசேர்ந்தது. அதைக் கொண்டு தெற்கே தோண்டி குளத்தோரம் பத்துக் குறுக்கம் மானம்பாரிக் கரிசலை வாங்கிப்போட்டார்கள். அதில் பயறு பச்சை மாட்டுக்கு நாத்துக்கூளம் கம்பு தினையென்று பல தினுசாக விதைக்கத் தோதாக இருந்தது.

வேலையா நாடார் கைவசமிருந்த பணத்தை ஊருக்குள் வட்டிக்கு விட்டு வாங்கினார். வெள்ளாமைக்கு வெள்ளாமை வட்டி வந்துவிடும். முதலைப் பற்றிக் கவலையில்லை. நிற்கிற காலத்துக்கு வட்டிதானே. வெளியூர்களிலிருந்து வந்தும் ஒரு இட்டடிமுட்டடிக்குப் பணம் வாங்கிக்கொண்டு போனார்கள். அவரை 'நாடாரே' என்று கூப்பிட்டவர்கள் 'மொதலாளி' என்று மரியாதையாகக் கூப்பிட ஆரம்பித்தார்கள்.

தெய்வானையும் வேலாயும் எப்போதாவது சந்தித்துக்கொண்டால்தான் உண்டு. காடுகரைக்குப் போய்த் திரும்புகிற வழியில் வேலாயி ஒரெட்டு நாடார் வீட்டுக்கு விலகுவாள். இல்லை வேலைக்கு ரெண்டு பேரும் ஆள்கூப்பிடும் சமயங்களில் பார்த்துக்கொள்வார்கள். வேலாயி சொல்வாள்.

''எங்கயோ அசலூருக்குப் போயிட்டதுபோல இருக்கு. தேவானத்தா மொகமே மறந்துரும்.''

தெய்வானை தலையாட்டிக்கொள்வாள்.

''அப்படித்தான் ஆயிப்போச்சும்மா. மருமக வந்த பெறகு வெளிப்போக்கும் கொறஞ்சிருச்சு. பேரன் பேத்தியிட்டப் பேச்சுப்பழக்கம் போட்டுக்கிட்டுக் காலம் ஓடுது.''

இப்போதெல்லாம் பத்திரகாளி ஊர்க் கிணற்றுக்குத் தண்ணீரெடுக்கப் போவதில்லை. எடுத்தேறிப் போகச் சிரமமாக இருந்தது. ஊருணியிலும் கோயில் கிணற்றிலும் தண்ணீரெடுத்துப் புழங்கினார்கள். புதுத் தோட்டக் கிணற்றில் குடி தண்ணீர் கிடைத்தது. தோட்டக்குடியிலிருந்து வண்ணானும் நாவிதனும் வந்து போனார்கள். சில சமயம் கம்மா வெளுப்புத்துறையில் மேகல வண்ணான் துணி துவைப்பான். நாடார் வீட்டுத் துணிகள் தனியாகக் காயும்.

## 13. புகையும் நெருப்பும்

நாடார்களுக்கும் மறவர்களுக்கும் இடையிலான கசப்பு சிவகாசிக் கலகம் நடந்து பத்தொன்பது வருசமாகியும் குமட்டிக்கொண்டுதான் இருந்தது. அதிலும் கமுதிப் பக்கம் ரெம்ப.

கமுதியும் சுத்துப்பட்டிகளும் மறவ நாட்டைச் சேர்ந்தவை. பெரும்பாலும் மறவர்கள் குடியிருக்கும் பகுதிகள். நாடார்கள் கம்மிதான். லாவம் சம்பாரித்து வளமாக இருந்தார்கள். கமுதியில் செவ்வாய்க்கிழமை தோறும் வாரச் சந்தை கூடும். அதில் அவர்கள் கூட்டந்தான் அதிகம். மறவர்களும் வியாபாரம் செய்தார்கள்.

பொருள்களுக்கு நாடார்கள் வைத்ததுதான் விலை. சனங்கள் அங்கலாய்த்தார்கள்.

''பாவிப் பயக கொள்ள லாவமடிச்சுக் கொழுக்கானே. தட்டிக்கேக்க நாதியில்லையா.''

''சோறாக்கித் திங்கற தானியம் தவசத்தக்கூட அநியாய வெலைக்கு விக்கானே. வெளங்குவானா பேதியில போறவன்.''

''நம்ம வேர்வ சிந்திச் சம்பாதிக்கிற துட்ட வெறும் வாய்ப்பேச்சிலயே பறிச்சுக்கிறானே.''

''கள்ளத் தெராசு படி எல்லாமே அவனுக்கு அத்துபடி.''

''தட்டிவச்சாத்தான் அடங்குவான்.''

''நம்மள ஓட்டாண்டியாக்காம ஒறங்க மாட்டான்.''

கொஞ்ச நாளுக்கு முந்தி சந்தையில் ஒரு சம்பவம் நடந்தது. சந்தைக்கு உள்புறம் வியாபாரம் செய்வதற்காக ஒரு நாடார் தயார்படுத்தி வைத்திருந்த இடத்தில் பக்கத்தூர் மறவர் நெல் கொண்டுவந்து இறக்கிவிட்டார். அந்த இடத்தை விட்டுப் போகுமாறு நாடார் சொல்ல மறவர் மறுக்க ரெண்டு பக்கமும் கூட்டம் கூடத் தகராறு முற்றிவிட்டது. கைகலப்பில் மறவர்களுக்குச் செமத்தியான அடி. நாடார்கள் ஒரு மறப் பெண்ணைப் பிடித்திழுத்து மானபங்கப்படுத்தியதாகவும் ஒரு பேச்சு இருந்தது. மறவர்கள் அடிவாங்கியதைப் பற்றி மட்டுமே போலீசில் பிராது கொடுத்தார்கள்.

இரு பக்கமும் முக்கியப் புள்ளிகளை வரவழைத்துப் பஞ்சாயத்து கூட்டப்பட்டது. நாடார்கள் மீதுதான் குற்றம் என்று பஞ்சாயத்து முடிவுசெய்து அவர்களுக்கு அபராதம் விதித்தது. சமாச்சாரம் அதோடு முடிந்துவிட்டதாக நினைத்து போலீஸ் தரப்பில் நடவடிக்கை எடுக்கவில்லை.

ஆனால் கதை வேறுவிதமாகிவிட்டது. பசும்பொன் வெள்ளைச்சாமித் தேவர் மகன் உக்கிரபாண்டியத் தேவரின் தலைமையில் கூடிய மறவர்கள் பஞ்சாயத்தின் தீர்ப்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை. நடந்த சண்டை தங்கள் பாரம் பரியத்துக்கும் கவுரவத்துக்கும் ஏற்பட்ட அவமானம் என்று நினைத்தார்கள். நாடார்கள்மீது இன்னும் கடுமையான நடவடிக்கை எடுக்கச் சொன்னார்கள்.

கங்காகக் கனன்றுகொண்டிருந்த பழைய பகை கொழுந்துவிட்டு எரிய ஆரம் பித்தது. அந்த மாசம் கடைசிச் செவ்வாயன்று நடக்கவிருக்கும் சந்தையில் மறவர் கள் கலகம் செய்து கொள்ளையடிக்கப் போவதாக ஒரு புரளி ஊர்களில் பரவி யது. பழையபடி சிவகாசிக் கலகம்போல் கமுதியிலும் கொள்ளை நடக்குமோ என்று சனங்கள் பயந்தார்கள். கலகத்தை நாடார்கள் எதிர்பார்த்திருப்பதாகவும் அன்றைக்கு நாடார் பெண்கள் சந்தைக்கு வரக் கூடாது என்று எச்சரித்திருப்ப தாகவும் பேச்சு அடிபட்டது.

அதை உறுதிப்படுத்தும் விதத்தில் சம்பவங்களும் நடந்தன. சந்தைக்கு முந்திய நாட்களில் பரமக்குடி மேட்டுப்பட்டி முதுகுளத்தூர் சாயல்குடி வீரசோழன் பெருநாழி போன்ற ஊர்களில் கொள்ளை முயற்சிகள் நடந்தன. வீரசோழன் ராவுத்தர்கள் அதிகம் உள்ள ஊர். அவர்கள் எதிர்த்துத் தாக்கவே கொள்ளைக்காரர் கள் ஓடிவிட்டார்கள். உயிர்ச் சேதமில்லை.

பரவலாக நடந்த கொள்ளைச் சம்பவங்கள் கமுதி மக்களிடம் ஒரு பீதியைக் கிளப்பியிருந்தன. கடைகள் மூடப்பட்டன. பஜாரிலும் அதைச் சுற்றியும் வசிக்கும் சனங்கள் வேறு இடங்களுக்குப் போய்விட்டார்கள். பாதுகாப்புக் கேட்டு ராம நாதபுரம் கலெக்டருக்குத் தந்தி பறந்தது. ஞாயிறன்று சிவகாசியிலிருந்து பதினஞ்சு ரிசர்வ் போலீசாரும் ஒரு ஏட்டும் வந்திறங்கினார்கள்.

செவ்வாய்க் கிழமை காலை பத்து மணி வாக்கில் கிழக்கிலிருந்தும் மேற்கி லிருந்தும் ஏராளமான ஆட்கள் கூட்டங்கூட்டமாக வருவது தெரிந்தது. மூவாயிரம் பேர் இருக்கும். ஊர் முகப்பிலுள்ள பஜார்த் தெரு முழுவதும் வெறிச்சோடிவிட்டது.

உள்ளூர்க் கச்சேரி ஏட்டு சடகோப பிள்ளை தவித்தார். கைவசமிருப்பது சில உள்ளூர்ப் போலீசாரும் ரிசர்வ் போலீசாருந்தான். இவர்களை வைத்துக்கொண்டு தான் கூட்டத்தைச் சமாளிக்கணும். ரிசர்வ் போலீசார் பஜார்த் தெருவருகில் நின்றிருந்தார்கள்.

மதியம் ஒரு மணியிருக்கும். கலகக்காரர்கள் கண்டகோடாலி ஈட்டி கம்பு களுடன் சந்தை நடக்கும் இடத்துக்குப் போனார்கள். அது வெறிச்சோடிக் கிடக்கவே கடைத் தெருவை நோக்கிக் கிளம்பினார்கள். இவ்வளவு கூட்டத்தைச் சமாளிக்க முடியாது என்று தெரிந்திருந்தும் ரிசர்வ் போலீசார் அவர்களுடன் பேசித் தாக்காட்டிப்பார்த்தார்கள். பயனில்லை.

போலீஸ்காரர்கள் கூட்டத்தைக் கலைக்கத் தயாரானார்கள். அதுக்குள் கூட்டம் நெருங்கிவிட்டது. போலீஸ்காரர்கள் மீது கல்லெறியும் கம்படியும் விழத் தொடங்கியது. சுற்றி வளைத்துக்கொண்டு கண்டமானக்கித் தாக்கினார்கள். துப்பாக்கிச் சூடு நடத்த முடியாமல் துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் பறித்துக்கொண்டார்கள்.

ஏட்டும் ஆறு போலீஸ்காரர்களும் படுகாயமுற்று விழுந்துவிட்டார்கள். தலை முகம் எல்லா இடங்களிலும் ஏகப்பட்ட வெட்டுக் காயங்கள். மற்றவர்கள் கச்சேரிக்கு ஓடிவந்துவிட்டார்கள். ஏழு பேரையும் தூக்கி வந்த சற்று நேரத்தில் ஏட்டும் ஒரு போலீஸ்காரரும் இறந்துவிட்டார்கள். மூணு பேர் நிலைமை கவலைக் கிடமாக இருந்தது.

ரிசர்வ் போலீசைச் சமாளித்து முடித்ததும் கலகக்காரர்கள் ஆகாயத்தை நோக்கி வெள்ளைத்துணிகளை உயர்த்திப் பிடித்துச் செண்டா வீசினார்கள். வேலையை ஆரம்பிக்கலாம் என்று அர்த்தம். எல்லாரும் கடைத் தெருவை நோக்கிப் பாய்ந் தார்கள். கண்டகோடாலிகள் கதவுகளை உடைத்தன. கடைகளும் கட்டிடங்களும் திறந்தன. பருத்தி விதை தானியம் எண்ணெய் என்று கைக்குக் கிடைத்ததை எடுத்துக்கொண்டார்கள். காலிக் கடைகளுக்குள் சீமெண்ணெய் ஊற்றி மரச் சாமான்களை எரித்தார்கள். ஒவ்வொரு கட்டடமாகத் தரைமட்டமாகியது. கோழி குஞ்சுகளும் ஆடுமாடுகளும் வெந்து மடிந்தன. கடைத் தெருவே எரிந்தது.

கச்சேரி ஏட்டு சடகோப பிள்ளை இந்தச் சேதியறிந்து கையில் துப்பாக்கியுடன் சில போலீஸ்காரர்களைக் கூட்டிக்கொண்டு சம்பவ இடத்துக்கு விரைந்தார். போய்ச் சேருமுன் இருபத்தஞ்சு கடைகளும் இருபது கட்டடங்களும் நாசமாகி விட்டன. அவர் சமயோசிதமாக ஒரு காரியம் செய்தார். வலது பக்கமாக நெருப் பெரியும் தெருவுக்குள் நுழைந்து கூட்டத்தை நோக்கிச் சுட்டார். ஒண்ணு ரெண்டு பேர்மீது தோட்டா பாயவும் கூட்டம் பயத்தில் பின்வாங்கியது. எல்லாரும் கலைந்து போகும்வரை அவர் சுடுவதை நிறுத்தவில்லை. சாயங்காலம் நாலு மணிக் கெல்லாம் கூட்டம் ஓடி மறைந்துவிட்டது. அதுவரை அவர் அங்கேயே இருந்தார்.

கலகக்காரர்கள் பலரைத் தோட்டா பதம்பார்த்தது. சிலர் இறந்துபோனார்கள். ஐம்பது பேர் இருக்கும். ஒரு பிணத்தைத் தவிர மற்றவர்களைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள். கிடந்த ஒரு பிணமும் அடையாளம் தெரியவில்லை.

இறந்துபோன ரிசர்வ் ஏட்டு பாவம். கொஞ்ச வயசு. சற்றுத் தாமதமாகக் கலியாணமானவர். சமீபத்தில்தான் ஏட்டு பதவிக்கு உயர்ந்திருந்தார். எல்லாருக்கும் தாளாத வேதனை.

அதிகாரிகளுக்குத் தந்திகொடுத்தார்கள். மறுநாள் இன்ஸ்பெக்டர் நாற்பது போலீஸ்காரர்களுடன் வந்துவிட்டார். நிலைமை கட்டுக்குள் வந்தது.

கமுதியில் ஐம்பது ரிசர்வ் போலீஸ்காரர்களைக் கொண்ட தண்ட வரி போலீஸ் படை நிறுத்தப்பட்டது. அதுக்கான செலவு முழுவதும் மறவர்கள் நாடார்கள் தலையில் விழுந்தது.

**அ**ந்தக் காலத்தில் சர்க்கார் தஸ்தவேஜுகளில் நாடார் சாதி சாணான் என்றே குறிப்பிடப்பட்டுவந்தது. நாடார்கள் இதைப் பெரிய அவமானமாக நினைத் தார்கள். கைநிறையக் காசு பணம் சொத்துச் சொகம் இருந்து என்ன செய்ய. மரியாதையும் அந்தஸ்தும் இல்லையே. ஈனச் சாதிக்காரன் என்று எளக்காரமாகப் பேசுகிறார்களே. சர்க்காருக்கு விசுவாசமாக இருப்பவர்களுக்கு இந்தக் கதியா.

இனிமேல் தங்கள் சாதியை நாடார் சத்திரியர் என்று அழைக்க வலியுறுத்தி சர்க்காருக்கு முறையிட்டார்கள். சுளுவாக நாடார் என்றே குறிப்பிடச் சொல்லி

சர்க்கார் உத்தரவு போட்டது. உயரமான படியைத் தாண்டிவிட்ட சந்தோசம் நாடார்களுக்கு.

தண்ட வரிச் சுமையால் ஏழைச் சனங்கள் மூணு வருசத்துக்கு மேல் அல்லாடி னார்கள். பல குடும்பங்கள் நொடித்துப்போயின. தண்டல்காரர்களின் தொந்தரவு தாங்காமல் வீட்டைப் பூட்டிவிட்டுத் தொலைவுக்குப் பஞ்சம் பிழைக்கப் போய் விட்டார்கள்.

தங்களுக்குத் தண்ட வரியிலிருந்து விலக்களிக்கக் கேட்டு ராமநாதபுரம் ராசாவும் சிவகங்கை ராசாவும் சர்க்காருக்கு முறையிட்டார்கள். சர்க்கார் அதுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. கமுதிக் கோயில் வழக்குத் தொடர்ந்த பாஸ்கர சேதுபதி யின் மகன் ராஜேஸ்வர துரை அப்போது பட்டத்திலிருந்தார். அவர் மாகாண மேல்சபை அங்கத்தினருங்கூட.

அந்தச் சமயம் நாடார் சாதியின் முதல் பிரதிநிதியாகச் சவுந்தரபாண்டிய நாடார் மேல்சபைக்கு நியமிக்கப்பட்டிருந்தார். அவர் இந்தப் பிரச்சினையைச் சபையில் எழுப்பினார். நாடார்களுக்கும் மறவர்களுக்கும் இடையே இப்போது பகையேதுமில்லை. அவர்கள் வியாபாரத்தில் சுமுகமாக இருக்கிறார்கள். இரு சாதிகளுக்கும் இடையே ரெம்ப நாளாகவே நல்ல உறவு நிலவுகிறது. இரு தரப்பும் ஒற்றுமையாக இருக்க வேண்டியதன் அவசியத்தை சாதித் தலைவர்கள் உணர்ந்து விட்டார்கள். ஆகவே தண்ட வரியை ரத்து செய்யணுமென்று வாதாடினார். பழைய பகையை முன்னிட்டு இனிமேல் எந்தத் தொந்தரவும் வராது என்று ராம நாதபுரம் ராசா சபைக்கு உறுதியளித்தார். தீர்மானம் நிறைவேறி வரி ரத்தானது.

இரு சாதிகளும் கொண்டாடிய பகையுணர்வைத் தணிக்கும் விதத்தில் நாடார் சங்கம் சிவகாசியில் நடத்தவிருக்கும் மாநாட்டுக்குத் தலைமை தாங்க வருமாறு ராசாவை நாடார்கள் அழைத்தார்கள். அவரும் சந்தோசமாக ஒத்துக் கொண்டு மாநாட்டில் கலந்துகொண்டார். அப்போது சிவகாசிக் கலகத்துக்கு வயசு இருபத்தி மூணு.

## 14. ரெண்டு பங்கு

தெய்வமாக இருக்கும் ஆண்டி கருப்பியின் புண்ணியத்தில் பொய்யாளியும் வேலாயும் மகள் வள்ளியை சின்னக்குடும்பன்பட்டி கோணனுக்குக் கொடுத் தார்கள். மகன் ராமனுக்கு உள்ளூரில் பழனியம்மாளை எடுத்தார்கள். ஏற்கெனவே நல்லப்பனுக்கு வந்த செவனம்மா ஆண் குழந்தை பெற்றாள். பேர் வேலாண்டி. பொய்யாளி புது அப்பச்சி.

வள்ளியின் வயிற்றில் பிள்ளை தங்கியது. ஏழாம் மாசமே கட்டுச்சோறு கட்டிப் பேறுகாலத்துக்குக் கூட்டிவந்து விட்டார்கள். பிறக்கப்போவது ஆண் குழந்தையென்று கட்டுச்சோறு சொன்னது. கோணன் அப்பப்ப வந்துபோனான். சொக்கம்மா பேத்தியை விட்டுப் பிரிவதேயில்லை.

குழந்தை வயிற்றுக்குக் குறுக்கே கிடந்ததால் வள்ளிக்குப் பேறுகாலம் கண்ட மாகிவிட்டது. குழந்தையைக் காப்பாற்றப் பிரயாசைப்பட்டார்கள். முடிய

வில்லை. உள்ளேயே உயிர் போய்விட்டது. பெரிய உயிரையாவது தாக்காட்டணுமே. முரட்டுவாக்கில் குழந்தையை எடுக்கத் திணறும்போது தாயின் உயிரும் போய்விட்டது. தாயை உரித்துக்கொண்டு தங்கமான ஆண் குழந்தை. அழுகைக் கிடையில் பெண்கள் ஆத்திரப்பட்டார்கள்.

‘‘என்னமோ தாயி ஆண்டி குடும்பத்துக்கும் பொட்டப் புள்ளைக்கும் ராசியே இல்ல.’’

‘‘அதானம்மா. வீரம்மா ஒரே பொண்ணு. அநியாயமாப் பறிகுடுத்தாக.’’

‘‘ராக்கனுக்கும் அப்படித்தான். வாழ வேண்டிய வடிவு பஞ்சத்துல போனா.’’

‘‘இப்ப இவ. செல்லமா வளந்த புள்ள.’’

பூசரமரத் தோட்டத்துக்குப் போகும் வழியில் கீழோடையோரம் வள்ளி நினைவாக சுமைதாங்கிக் கல் நிறுத்தினார்கள். தோட்டத்திலிருந்து வரும்போது பொய்யாளி அதில் சுமையை இறக்கிவைத்து மகளை நினைத்துக் கண்ணீர் சிந்துவான். வேலாயி வெள்ளி செவ்வாயில் மகளுக்கு விளக்கேற்றுவாள். நல்ல நாளில் பொங்கல்வைத்துக் கும்பிடுவார்கள். வேலாயி அழுது அடங்க நேரமாகும்.

‘‘நான் பெத்த மகளே. எங்க மடியில வெளையாடுன கொழந்தையாவே இருந்திருந்தா இம்புட்டு ஆயிருக்குமா. வளந்து வகுத்துல சொமந்து மாண்டுபோற துக்கா ஒன்னயப் புடிச்சுக்குடுத்தொம். ஒரு கொழந்த இனியொரு கொழந்தையச் சொமக்க வச்சது தெய்வத்துக்கே பொறுக்கல. ரெண்டு உசிரவும் கூட்டிக்கிருச்சே.’’

வள்ளியும் தெய்வமாகிவிட்டாள். நல்ல நாட்களில் நல்லப்பன் மூணு விளக்கேற்ற வேண்டியிருந்தது. கோணிகுளம் கரையோரம் இருளப்பசாமிக்கு ஒண்ணு. அடுத்து விளாமரக் கிணற்றில் கருத்தையனுக்கு. விளாமரம் வேர்வரை பட்டுப் போய்ப் பங்கரையாக நின்றாலும் அதை விறகுக்கு வெட்டிப் போக யாருக்கும் துணிவில்லை. கருங்கல்லில் குடியிருக்கும் கருத்தையனுக்கு நிரந்தரமாகக் காவலிருந்தது. மூணாவது விளக்கு மூணாவதாகப் பிறந்த வள்ளிக்கு.

செவனம்மா வேலாண்டிக்கடுத்து பெண் குழந்தை பெற்றாள். அதன் முகத்தில் வள்ளியைப் பார்த்து ஆறுதலடைந்தார்கள். அதனால் வள்ளியம்மா என்று கூப்பிட்டார்கள். அவளுக்குப் பிறகு செல்லையா பிறந்தான்.

ராமனுக்கும் பழனியம்மாளுக்கும் ரெண்டு குழந்தைகள். கோயிந்தன் நாகம்மா. ராமன் சீக்காளி. பழனியம்மா பாட்டாளி. அவனுக்கு வீடே தஞ்சம். அவளுக்குக் காடே தஞ்சம். ஊரே ஓய்ந்திருந்தாலும் அவள் காட்டில் காய்ந்து கொண்டிருப்பாள். நிலந்தான் அவளுக்குப் பலம்.

இதுவரை குடும்பத்தில் பங்காளிகள் இல்லாததால் நிலங்களைப் பாகம் பிரிக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. இப்போது நிலைமை வேறு. ரெண்டு பங்காளிகள். தனித்தனியாக உலைவைத்துப் பொங்கினாலும் நிலங்களை ஒண்ணாகவே பார்த்துவந்தார்கள். இருந்தாலும் நல்லப்பன் ஒண்டியாகக் கிடந்து உதைய மலைத்தான். ராமன் துணையுமில்லை. பிள்ளைகளும் வேலைகளைக் கைமாற்றுகிற அளவுக்குத் தலையெடுக்கவில்லை. செவனம்மா முணுமுணுக்க ஆரம்பித்தாள்.

பொய்யாளி இதைக் கவனித்தான். அடடா முணுமுணுப்பு முற்றிச் சந்திக்கு வந்துவிடக் கூடாது. ஆண்டிக் குடும்பன் வீட்டில் அப்படியொரு நிலைமை வந்ததேயில்லை. எல்லாரும் கசப்பில்லாமல் இருக்கணும்.

அத்தனை சொத்துக்களையும் நல்லப்பனுக்கும் ராமனுக்கும் ரெண்டு பங்காகப் பிரித்துக் கொடுத்துவிட்டான். ஆளுக்கு ஒரு சோடி மாடு. வண்டி ஏர் கமலைச் சாமான்கள். படப்புக் கூளங்கூட ரெண்டு பங்குதான். பிரித்தெடுத்து தனித்தனிப் படப்புக்களாக அடுக்கிக்கொண்டார்கள். தொட்டி வீடு நல்லப் பனுக்கு. ராமனுக்குக் களத்து வீடுகள். வெவ்வேறு தொழு. ஆட்டுரல் பொது.

பெரிசுகளுக்கென்று எதும் கிடையாது. ராக்கன் சொக்கம்மா பொய்யாளி வேலாயி நாலு பேரும் தொட்டி வீட்டில் தனியாகப் பொங்கிக்கொள்ளணும். அவர்களுக்குத் தேவையான தவசத்தை ஒவ்வொரு வெள்ளாமையிலும் கொடுத்து விடணும். அடுத்தவர்களை அண்டியிருந்து சோற்றுக்குக் கையேந்தும் பேச்சே கிடையாது.

நல்லப்பன் பாடு கவலையில்லை. சின்ன வயசிலேயே பயல்களை வேலைக்கு வசக்கிவிட்டான். விவசாயம் கதிக்க நடந்தது. ராமன் பிழைப்புதான் திணறியது. விவசாயம் பார்க்கத் தோதான ஆளில்லை. கோயிந்தன் விளையாட்டுப் பிள்ளை. கூட்டாளிகளுடன் காடுகரையெல்லாம் கண்டமானக்கி அலைவான். ஒழுங் காகக் கஞ்சி குடிப்பதில்லை. அஞ்ஞை அவனுக்கு எம்மாத்திரம். அண்டப் புளுகு புளுகிச் சமாளித்துவிடுவான். ஆள் வளரவளரப் புளுகும் அதிகமானது. அவனுக்கு புளுகிணிக் கோயிந்தன் என்றே பட்டப்பேர் வந்துவிட்டது.

பழனியம்மா ஆள்வைத்து விவசாயம் பார்த்தாள். ஏலவில்லை. மாடுகளுக்கு நேரத்தில் தண்ணீர் காட்டிக் கூளம்போட முடியவில்லை. எல்லாரும் சேர்ந்து கோயிந்தனை வைவார்கள். நாலு நாள் நல்ல பிள்ளையாகி வேலைகளைக் கவனிப்பான். அவ்வளவுதான். அஞ்சாம் நாள் கோணக்கலப்பை சாத்திவிடுவான்.

கொஞ்ச காலத்தில் ராக்கனும் சொக்கம்மாளும் போய்ச் சேர்ந்தார்கள். பொய்யாளியும் வேலாயும் தனித்து விடப்பட்டதுபோல் தவித்தார்கள். இப்போ தெல்லாம் அவர்கள் உள்ளூரில் அடுத்தவர் நிலத்துக்குக்கூட விதைக்கப் போவ தில்லை. சொந்த நிலங்களில் விதைத்துக் கொடுப்பதுடன் சரி.

பழனியம்மா பிள்ளைகளை வளர்த்து ஆளாக்கக் கஷ்டப்பட்டாள். நாலஞ்சு வருசம் போனது. இளைத்துக் களைத்த ராமன் போய்விட்டான். பழனியம் மாளுக்குச் சுமை இன்னும் கூடியது. அப்போது கோயிந்தனுக்குப் பதினாலு வயசு. நாகம்மாளுக்கு நாலு வயசு கம்மி.

அப்பன் போனதும் கோயிந்தன் முதல் காரியமாக மாடுகளை விற்றான். நிலங்களைப் பெரியப்பனிடமே பொறுப்புக்கு ஒப்படைத்துவிட்டுத் தன் வேலையைப் பார்க்கப் போய்விட்டான். விவசாயமெல்லாம் அவனுக்கு முக்கிய மில்லை.

பழனியம்மா உருண்டு புரண்டு மகளைக் கரையேற்றிவிட்டாள். உள்ளூர் பாண்டிக்குக் கொடுத்தாள். அடுத்து மகனைக் குடும்பமாக்கிவிடணும். அப்போ தாவது பொறுப்பு வந்து அக்கறையான மனுசனாக மாறிவிட மாட்டானா.

கோயிந்தனுக்கு அதைவிட முக்கியமான வேலைகள் இருந்தன. சேக்காளி களுடன் திட்டங்கள் போடணும். பிறகு எச்சரிக்கையாகக் காரியத்தில் இறங்

கணும். சேக்காளிகள் மூணு பேர். வடக்குத் தெரு வள்ளிமுத்து. சல்லிமாடன் வம்சம். கீழத் தெரு துமுக்கன். கொக்கன் வகையறா. தெற்குத் தெரு நோணியன். நொண்டியன் வீட்டுப் பயல்.

மீன் பிடிப்பது அவர்களுக்கு ரெம்பப் பிடித்தமான தொழில். எப்பேர்ப் பட்ட இடமாக இருந்தாலும் சரி. மீன் கிடக்கிறதென்றால் கைக்கு வந்தாகணும். அதுக்கொரு திட்டமிருக்கும். பெரும்பாலும் தூண்டிதான் தோதுப்படும். எந்த முட்டுவெட்டான இடத்திலும் இருந்துகொண்டு போடலாம். தூண்டி தெல்லி யுடன் தோரணையாக அலைவார்கள். மீனுக்கு இரையாகக் கருவாட்டுப் பசை தேன்தட்டுக் குளவிப் புழு மண்புழு என்று தினுசுதினுசாக இருக்கும். எந்த இடத்து மீனுக்கு எந்த இரையென்று ஒரு கணக்கு உண்டு. கிணற்றில் மூலைக்கொருவராக இருந்து போட்டால் கொஞ்ச நேரத்தில் தெல்லி நிறைந்துவிடும்.

கம்மாயென்றால் உள்ளே இறங்கிச் சேற்றைக் கலக்கிவிட்டு வந்து தூண்டிக் கயிறு வீசுவார்கள். நின்றுகொண்டு உட்கார்ந்துகொண்டு பேண்டுகொண்டு மோண்டுகொண்டு எல்லா வசத்திலும் மீன் கடிக்கும்.

கோயிந்தன் தூண்டிக் கயிற்றைக் கம்புடன் ஒப்பிட்டு அளந்து வில்லாக வளைப்பான்.

''இது கோயிந்தன் வில்லாக்கும்.''

இரைக்காகப் புழுப்பிடிக்கும் முறையை யாருக்கும் சொல்லித்தர மாட் டார்கள். வாய்க்கால் குளத்து நீர் வாகறை என்று புழுப்பிய்யைக் கண்டுபிடித்துத் தோண்டிப் பிடிக்கணும். சிரட்டையில் வண்டல் மண்ணைப் போட்டுப் புழுக் களை மூடணும். சில சமயம் மீனுக்கீடாகப் புழுக்களை விற்பார்கள்.

அவர்களிடம் பல வகையான தூண்டிமுள்ளிருக்கும். நகைக் கடைக் காரனைப் போல் தாளில் சுருட்டிப் பத்திரமாக வைத்திருப்பார்கள். எந்த நேரத்தில் எந்த இடத்தில் என்ன மீன் கிடைக்குமோ அதுக்குத் தக்க முள்ளை மாற்றிக் கொள்ளணும்.

மதிய நேரமானால் மீன் அவ்வளவாகக் கடிக்காது. கோயிந்தன் யோசனைப் படி ரெண்டு தெல்லியுடன் கம்மாய்க்குப் போவார்கள். ரெண்டு பேர் தெல்லி யைத் தலையில் வைத்துக்கொண்டு நீருக்குள் நடந்து வரணும். ரெண்டு பேர் முங்கி மூச்சடக்கித் தரையில் தடவி மீன் பிடிக்கணும். வெயிலுக்குப் பயந்து தடக்குழிகளில் பெரியபெரிய மீன்கள் படுத்திருக்கும். தடவும்போது சிக்கிக் கொள்ளும்.

ஒரே மூச்சில் ரெண்டு கிடைத்தால் ஒண்ணை வாயில் கடித்துக்கொள்ளணும். ஒரு தடவை கோயிந்தன் வயிற்றுக்குள் ஒரு குரவை நழுவிவிட்டது. மெனக்கிட்டு வாந்தியெடுத்து கக்கிக் கழுவி கம்மாக் கரையிலேயே சுட்டுத் தின்றான். தெல்லி சுமந்தவர்கள் அடுத்த தடவை முங்கி மீன் பிடிக்கணுமென்று முறை வைத்துக் கொள்வார்கள்.

தூரி துள்ளுகட்டை சார் போடுவார்கள். சுத்தமான மீன் கிடைக்கும். சில சமயம் சார்க் கலயத்துக்குள்ளும் தூரிக்குள்ளும் தண்ணீர்ப் பாம்பு நுழைந்து விடும். அதுகளைக் கொன்று எறிவது பெரும்பாடு. துள்ளுகட்டையில் மீன்கள் கெலிப்பதைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம்.

வெள்ளம் போன கிடங்குகளில் மீன் கிடந்தால் பானை ஓடு வைத்து ஒரு மூச்சில் இறைத்துப் பிடித்துவிடுவார்கள். அவர்கள் ஓடு தயார்பண்ணுவதைப் பார்க்கணும். உள்ளேயும் வெளியேயும் கல்வைத்து வரிசையாகத் தட்டி அறுத் தெடுத்த மாதிரி ஓடாக்குவார்கள். நாலு பேரும் குனிந்து முன்புறமாகவும் பின் புறமாகவும் இறைத்தால் கமலைத் தண்ணீர் தோற்றுப்போகும். மணல் சருத்தில் அயிரைகள் தலையை நுழைத்துக் கிடக்கும். மணலைக் குத்துக்குத்தாக ரெண்டு பேர் அள்ளி எறிய ரெண்டு பேர் மீனைப் பொறுக்குவார்கள். கசலியும் பருமீனு மாகப் பிரித்துக் கனமாக வீட்டுக்குக் கொண்டுபோவார்கள்.

ஊருணிக்குள் நாருக்காகப் புளிச்சிக் கட்டு நனையும். அதில் சகல மீனும் அடைந்திருக்கும். அதை அலுங்காமல் தூக்கிவந்து வெளியே போடுவார்கள். கெண்டை தப்பித்துவிடும். அயிரையும் குரவையும் அகப்படும். நாழிக்குக் குறையாது.

நிறைய மீனிருக்கும் கிணற்றில் இன்னொரு வேலையைக் காட்டுவார்கள். நாக்கொட்டான் செடியைத் தேடிப் பிடித்துக் கட்டையை வெட்டி அரைத்து அங்கங்கே முங்கிக் கலக்குவார்கள். பெரியபெரிய மீனெல்லாம் கிறங்கி மிதக்கும். அள்ளிக்கொண்டு வருவார்கள். கிணற்றுக்காரனுக்கு ஒரு பங்கு கிடைக்கும். அவன் கேட்பான்.

''எப்படிடா இவ்வளவு மீனு புடிச்சீக.''

கோயிந்தன் புளுகுவான்.

''நாந்தான் முங்கித் தரைக்குப் போயி பெரிய மூச்சு வுட்டென். மீனெல்லாம் அரண்டு அர உசிராயிருச்சு. பெறகு அதுகளப் புடிக்காம என்ன செய்றது. ஓங்க கெணறாச்சே. பங்கு குடுக்கணுமில்ல.''

பாம்புகளைப் பிடித்துவந்து பேர்சொல்லி மார்தட்டுவார்கள். குருவிரிசு கட்டுவிரிசு கண்ணாடிவிரிசு வழலை பில்லுப்பூச்சி குறண்டிப்பூச்சி கருஞ்சாரை மஞ்சள்சாரை மங்கிணி தண்ணி கருநாகம் செந்நாகம் ராசநாகம் கொம்பேறி மூக்கன்... இப்படி. பச்சைப்பாம்பை உயிருடன் கொண்டுவந்து பெண்களிடம் நீட்டுவார்கள்.

''நல்லாத் தடவுங்க. அந்தக் கையால வைக்கிற வெஞ்சனம் ருசியாருக்கும்.''

பெண்கள் தயங்கித்தயங்கித் தடவுவார்கள். அதுக்காக அவர்கள் கூலி கொடுக்கணும்.

பூனை பிடிப்பார்கள். காட்டுப் பூனைதான் ருசி. வீட்டுப் பூனையை விட்டு விடுவார்கள். பிடிப்பது ரெம்பக் கஷ்டம். ஒடுக்கமான இடத்தில் சிக்கினால் நோணியன் சாக்கைத் திறந்து பிடிக்க ஒருவன் கலைக்க ரெண்டு பேர் கையில் கட்டைக் கம்புடன் நோணியனுக்குப் பின்னால் தயாராக இருப்பார்கள். விரண்டு வரும் பூனை சாக்குக்குள் அகப்பட்டால் நோணியன் கருதடித்த மாதிரி அடித்துக் கொன்றுவிடுவான். அவனுக்குத் தப்பினால் கம்புக்குச் சிக்கிவிடும். கோயிந்தன் சுளிவாக அடித்து விழுத்தாட்டிவிடுவான்.

எலி வேட்டை அவர்களுக்கு இன்னும் பிரியமானது. வசப்படாத எலி கிடையாது. நோணியனின் நாய் துணைக்கு வரும். வேட்டையில் கெட்டி.

எலிப்பறியைக் கண்டுபிடித்து செலவில் தண்ணீர் சுமந்து ஊற்றித் திணற வைத்து ஊசிக் கம்பால் அங்கங்கே சொருக்குக் குத்துக் குத்தினால் எலி பெண்

டான் வழியாகப் புடைத்து ஓடும். விரட்டி அடிக்க வேண்டியதுதான். நாய்க்குத் தப்புவது கம்மி. வெள்ளெலியையும் புல்லெலியையும் இப்படிப் பிடிக்கணும்.

வயல் தோட்டக்கால் என்றால் மம்பட்டியால் வெட்டிச் செலவைக் கண்டு பிடித்துப் போகணும். இடையிடையே எலிகள் சேர்த்துவைத்திருக்கும் நெல் கருதுகளும் நிலக்கடலையும் கணிசமாகக் கிடைக்கும். வெட்டித் தோண்டிக் கொண்டே போனால் உறுமிக்கொண்டு முரட்டு இருமானெலி அகப்படும். சில இடங்களில் எலிச்செலவை வெட்டிக் கம்பு விட்டுக் கலைத்து எலிகளைப் புடைக்க வைப்பதும் உண்டு. எல்லா வேட்டையிலும் நோணியனின் நாய்க்குச் சின்னப் பங்கு கொடுக்கணும்.

மழை வெறித்த நேரங்களில் வேட்டை மும்முரமாக நடக்கும். மம்பட்டியும் கம்புமாகக் கிளம்பிவிடுவார்கள். அதுக்கு முந்தியே வேப்பங்காட்டுக் கொசச் செட்டியார்கள் மஞ்சுண்டான் வேட்டைக்கு வந்திருப்பார்கள். அவர்களுடன் கொஞ்ச நேரம் தகராறு நடக்கும். கோயிந்தன் சொல்வான்.

''செட்டியாரே ஒங்க வேட்டைய ஒங்க ஊரு எல்லையோட வச்சுக்கங்க. எங்க எல்லைக்குள்ள காலு வைக்கப்புடாது.''

ஒருவர் முனங்குவார்.

''என்னப்பா இது. வேட்டைக்குப் போயி எல்ல வைக்கீகளே. நீங்க எத்தன நாளு எங்க ஊருப் பக்கம் வந்து வேட்டையாடுறீக.''

''அது எப்படின்னா எலி எங்க ஊருல செலவு தோண்டி ஒங்க ஊருல பெண்டான் வச்சிருக்கும். அப்படின்னா அது எங்க ஊரு எலிதான.''

''எப்படியோ போங்கப்பா. ஒங்களோட மல்லுக்கெட்ட முடியாது.''

புதுப்பறியைக் கண்டுபிடித்து ஈர மண்ணைத் தோண்டினால் மஞ்சுண்டானும் கல்லெலியும் கிடைக்கும். மழைக்கு நனைந்து வரப்போரம் புல்லரித்துக்கொண்டு பம்மியிருக்கும் புல்லெலியும் ஒண்ணு ரெண்டு மாட்டும்.

வீட்டில் கொம்புக் கண்ணி வைத்து வீட்டெலி பிடிப்பார்கள். வளர்ப்புப் பூனை பிடித்துவரும் எலியைப் பிடுங்கிக்கொள்வார்கள். வீட்டுக்குப் பின்புறம் நகலி பல பெண்டான் வைத்துக் குடியிருக்கும். எப்போதும் மாங்குமாங்கென்று மண்ணைப் பறித்து வெளியே தள்ளிக்கொண்டிருக்கும். அதைப் பிடிப்பது ரெம்பக் கஷ்டம். அது உள்ளே போயிருக்கும் சமயம் பார்த்து மேல்வாக்கில் துவாரம் போட்டு ஊசிக் கம்பை வைத்துக்கொண்டு காத்திருக்கணும். அது வரும்போது கம்பைச் சொருவிக் குத்திவிடணும்.

ரா வேட்டைக்கும் போவார்கள். ஊரடங்கிவிட்டால் மந்தையெல்லாம் இரை தேடி வெள்ளெலிகள் கும்மாளம் போடும். நோணியன் கண்டாங்கிச் சீலை கொண்டுவருவான். அதுதான் வேட்டைக்கு முக்கியமான ஆயுதம். தள்ளிப் போய் மண்ணள்ளிப் போட்டு மேயும் எலிகளைக் கலைப்பார்கள். அவை கீச்சிட்டுக்கொண்டு ஓடி படப்புக்கடியில் கோக்காலிக்குள்ளும் முள்வேலிகளுக்குள்ளும் ஒளியும். ரெண்டு பேர் சீலையை நீளவசத்தில் தோதான இடத்தில் வலையாகப் பிடித்துக்கொள்வார்கள். ரெண்டு பேர் நீளக் கம்பால் கோக்காலிக்குள் கலைத்துவிடுவார்கள். சீலையைத் தாண்டித்தான் எலிகள் தப்பிக்க முடியும். அத்தனையும் சீலையில் மோதும். அவ்வளவுதான். சீலையை அப்

படியே கவுத்தி மூடிவிட்டால் சோலி முடிந்தது. தடவித் தடவிப் பிடித்துக் கொல்ல வேண்டியதுதான். வேலியிலும் இப்படித்தான் பிடிப்பார்கள். ரெண்டு வெள்ளாவிகளுக்கிடையில் அமைத்தும் பிடிப்பார்கள்.

ஒவ்வொரு சமயம் மூஞ்சூறு மாட்டிக்கொள்ளும். அது போடும் சத்தம் சொல்ல முடியாது. சீலையில் பட்ட இடமெல்லாம் நாறும். அருவருப்பில் விட்டு விடுவார்கள். சீலைக்காக நோணியனுக்கு மூணு எலி கூடுதலாகக் கொடுக்கணும். மூஞ்சூறு கிடைத்த நாளில் இன்னும் ஒண்ணு போட்டுக் கொடுக்கணும்.

எலிக்கறி ருசியே தனி. வெள்ளெலி எல்லாவற்றுக்கும் மேல். கோழிக் கறி மாதிரி. பிறகு வீட்டெலி. அது ஆட்டுக்கறிக்குச் சமானம். மற்ற கறிகள் பன்றிக் கறிபோல் சதபுதவென்றிருக்கும். எதிலும் அடைபடாதது மஞ்சுண்டான். அப் படியே போட்டு வறட்டணும். அந்த ருசிக்கு எதும் கிட்ட அண்ட முடியாது.

## 15. முடிவெட்டு

வடக்கூர் ரோட்டில் புதுசாக மோட்டார் கார்கள் ஓடின. கோயிந்தனும் சின்னப் பயல்களும் மெனக்கிட்டு முக்கு ரோட்டுக்குப் போய் வேடிக்கை பார்த்தார்கள். அந்தப் பேச்சு நாலஞ்சு நாள் தொடர்ந்தது.

''பெரியபெரிய தவள மாதிரில்ல இருக்குதுப்பா.''

''அடக்கோழி மூக்குல தூவியக் குத்துன மாதிரி காரு மூக்குல கம்பிய வுட்டுச் சுத்துனதும் அது தும்மிக் கனச்சுக்கிட்டு என்னமா ஓடுது.''

''அதுக்குள்ள ஏறிப் போகணும்னு ஆசையாருக்கு.''

''போவொம்.''

காசலையாகத் துட்டுச் சம்பாரித்து காரில் ஏறி முக்கு ரோட்டிலிருந்து வேப் பங்காடுவரை சீட்டு வாங்கிப் பிரயாணம் செய்துவிட்டு வீட்டுக்குத் துள்ளித் துள்ளி ஓடிவந்தார்கள்.

ஒரு வருசம் சித்திரைத் தீர்த்தம் பார்க்க முத்துநகருக்கே காரில் போனார்கள். தீர்த்தம் பெரிய திருவிழா. சுத்துப்பட்டிச் சனங்கள் அத்தனையும் சிவன் கோயில் மேட்டில் கூடும். விடியவிடிய ஆட்டம்பாட்டம் நடக்கும். கூட்டத்தில் கொஞ்சப் பேரைத் தவிர எல்லாப் பையன்களும் முடிவெட்டி லட்சணமாக இருந்தார்கள். கோயிந்தனுக்கு வெட்கமாக இருந்தது. சே பெண்கள் மாதிரி முடிவளர்த்துக் கொண்டை போட்டுக்கொண்டு. எவ்வளவு அச்சலத்தியாக இருக்கிறது. பேன் தொல்லை வேறு. கொண்டையைத் தறித்துவிட வேண்டியதுதான். நாடார் களைப் போல் இதை எப்போதோ செய்திருக்கணும்.

ஊருக்குப் போனதும் பயல்களிடம் பேசிச் சம்மதிக்க வைத்தான். பொதுவில் காசு சேர்த்து ஒரு கத்தரிப்பான் மைக்கத்தி சாணைக்கல் வாங்கிச் சாத்தன் மகன் வெள்ளையனிடம் கொடுத்தார்கள். அவன் முழித்தான்.

''எனக்கு முடிவெட்டத் தெரியாதே.''

கோயிந்தன் விரசினான்.

''ஓங்கப்பனுக்குனாப்புல தெரியுமாக்கும். செரைக்கவும் மழிக்கவுந்தான் தெரியும். சேக்கு வெட்றதுக்குப் புதுசாக் கத்துக்கிறணும்.''

''அதெப்படி. எங்க போயிக் கத்துக்கிறது.''

''ஓங்காத்தா மண்டையில கத்துக்கோ. வக்காளி கழுத கெடக்குதுல்ல. அது மேல வெளையாடு. பெறகு சின்னப் பெயக மண்டையில பழகு. சரியாப் போகும்.''

வெள்ளையனுக்கு மலைப்பு. சிரைப்பதைப் பற்றிக் கவலையில்லை. அப்பன் கத்தியைத் தீட்டுவதையும் தோதாகப் பிடித்துச் சிரைப்பதையும் ரெண்டு நாள் உற்றுக் கவனித்தால் போதும். முடிவெட்டுவதுதான் கஷ்டம். கோயிந்தன் சொன்னதுபோல் கட்டுத்துறையில் நிற்கும் கழுதைக்கு முடிவெட்டிப் பழகினான். ஊருணி இச்சி மரத்தடியில் சின்னப் பயல்களுக்கு நெல்லறுப்பாக முடியை ஒட்ட வெட்டினான். பத்துத் தலைக்குத்தான் பயமெல்லாம். தொழிலில் கை தேர்ந்துவிட்டான். கொஞ்ச நாளில் சிறிசுமுதல் பெரிய பயல்வரை அத்தனை தலையையும் சீராக மேய்ந்துவிட்டான்.

ஊருக்குள் ஏகக் கசபுசல். பெரிசுகள் பயல்களை அடிக்கப்போனார்கள்.

''ஆகமான முடிய ஆடு கரும்பீருச்சா இல்ல மாட்டுக்குக் குடுத்தயா.''

பெண்கள் தடுத்தார்கள்.

''இப்ப என்ன வந்துருச்சு. பாக்கிறதுக்கு நல்லாத்தான இருக்கு. அதுகளுக்கு இப்படித்தான் பிரியம்னா வுட்றணும். வேணும்னா நீயுங்கூடச் சேக்கு வெட்டிக்கோ. முடி வளத்துக்கிட்டு நம்ம படுற பாடு தெரியுமில்ல.''

அதோடு முடிந்தது. பயல்கள் பேன் தொல்லையில்லாமல் நிம்மதியாக உறங்கினார்கள். வெள்ளையனைப் பிடித்துக் கேட்டதில் எல்லாம் கோயிந்தன் ஏற்பாடு என்று தெரியவந்தது. பெண்கள் மெச்சிக்கொண்டார்கள்.

''புளுகிணிப் பெய உருப்படியான காரியம் செஞ்சிட்டான்.''

அதுக்குப் பிறகு ரெண்டு மாசத்துக்கொருக்க பயல்கள் முடிவெட்டிக் கொண்டார்கள். வெள்ளையனுக்கு ரெம்பக் கிராக்கி. காத்துக் கிடந்துதான் தலையைக் கொடுக்க முடியும். கோயிந்தன் பயல்களிடம் பேசினான்.

''ஏல ஓசியில முடிவெட்டிக்கிறது நல்லால்ல.''

''ஏன் அப்படிச் சொல்ற.''

''வெளுப்புக்கும் செரப்புக்குந்தான கூலி குடுக்காக. இது கூடுதலான வேல தான. கத்தரிப்பான வச்சு கிறிச்கிறிச்னு எத்தன தலையிலதான் மயிர வெட்டிக் குமிப்பான். வெரலு வலிக்குமில்ல.''

''கஸ்டந்தான்.''

''அதனால ஆளுக்கு இம்புட்டுன்னு துட்டுக் குடுத்துருவொம்.''

''அடுத்த வருசத்துலருந்து இதுக்கும் சேத்துக் கூலி குடுக்கச் சொல்லீறலாம்.''

''அது வேணாம். பெரிசுக இனியும் கொண்டையோடதான திரியிதுக. நம்ம மட்டுக்குப் பாத்துக்கிருவொம்.''

''சரி.''

வெள்ளையன் கையில் துட்டுப் புழங்க ஆரம்பித்தது. கைதேர்ந்த தொள்ளாளியாயிற்றே. அப்பப்ப வேப்பங்காட்டுக்கும் சத்திரப்பட்டிக்கும் போவான். வருமானம் கனமானது.

ஊருக்குள் பெரிசுகளுக்குக்கூட ஒரு நினைப்பு ஓடத் தொடங்கியது. ஊருணியில் குளிக்கும்போது பேசிக்கொண்டார்கள்.

''சின்னப் பெயகளப் போல நம்மளும் சேக்கு வெட்டிக்கிட்டா என்னன்னு தோணுது.''

''எனக்கும் அந்த நெனப்புத்தான்.''

''வண்ணான் சீலையக் காயவச்ச மாதிரி முடிய முதுகுமேல விரிச்சு ஒணத்த வேண்டியிருக்கு. பெயகளப் பாரு சிக்கெடுத்த மாதிரி திரியிறத.''

''வெள்ளையன் சின்னப் பெய. அவனுக்கு முன்னால போயி அடங்கி ஒடுங்கி உக்காரணுமே. எட்டலன்னா குனிம்பான் திரும்பும்பான். மாட்ட வசக்குற மாதிரி நம்மள வசக்குவானே.''

''அதானப்பா ராஞ்சனையாருக்கு.''

''அப்பங்காரனுக்கு முடிவெட்டத் தெரியாது.''

''தெரிஞ்சா அவங்கிட்டயாச்சும் போகலாம்.''

''ஆராச்சும் வெள்ளையனுக்கு முன்னால உக்காந்து தொடங்கிவச்சாப் போதும். அப்படியே தொடுத்துக்கிறலாம்.''

''பேசாம ஊருணி இச்சி மரத்துக்குக் கூட்டீட்டு வந்து மறவுல வச்சுக் காரியத்த முடிச்சிற வேண்டியதுதான்.''

''அண்ணைக்கு மறக்காம எங்கிட்டயும் சொல்லு.''

கஷ்டப்பட்டு ஈர முடியைச் சுமந்துகொண்டு வெயிலுக்கு வந்தார்கள்.

## 16. அடுப்பு அடுப்பே

கோயிந்தனுக்கு ஒரு சங்கதி மட்டும் உறுத்தலாகவே இருந்தது. சேக்காளிகளைக் கூப்பிட்டுப் பேசினான்.

''ஏல பெரிசுக நடந்துக்கிறது கொஞ்சங்கூடப் புடிக்கல.''

நோணியன் கேட்டான்.

''ஏன் ஒனக்கு வசவு கெடச்சதா.''

''என் வாயி சும்மாருக்குமாக்கும்.''

''பெறகென்ன.''

''நல்ல காரியங்களுக்கு அதுக கூட்டத்துக்கு முன்னால உக்காந்துக்கிறதுல ஒண்ணும் கொறச்சலில்ல.''

துமுக்கன் சொன்னான்.

''பெரிசுகன்னா முன்னாலதான் உக்காருவாக. ஏன் நீ போயி உக்காற வேண்டியதுதான.''

''அதுக்கில்லடா. உக்காரும்போது கொஞ்சமாச்சும் கவனமிருக்குதா. முட்டிக் கலயம் மாதிரி அடிப்பாரம் முன்னால கெடக்கும். அதப் பத்திக் கவலையே இல்லாம பேச்சுப்பழக்கம் மும்மரமா நடக்கும்.''

வள்ளிமுத்து கேட்டான்.

''பாரத்த முன்னால போடாம தோளுலயா தூக்கிப் போட்டுக்கிருவாக.''

‘‘ஒஞ்ஞு. ஒந் தலமேல தொங்கப்போட வேண்டியதுதான். அது எப்ப வேட்டியவுட்டுப் பிதுங்கி வெளிய எட்டிப்பாக்குமோன்னு பயமாருக்குதுல்ல. பொம்பளைக மொகஞ் சுளிச்சு வெக்கத்துல ஒதுங்குறதப் பாத்தா ஒருமாதிரியாருக்குது.’’

‘‘வந்த வேலைய வுட்டுட்டு அத ஏன் பாக்கணும்.’’

‘‘எதுக்கவே பூனக்குட்டி மாதிரி படுத்துக் கெடக்கு. கண்ணுக்கு எப்படித் தப்ப முடியும்.’’

நோணியன் ஒத்துக்கொண்டான்.

‘‘நானும் கவனிச்சிருக்கென். ஒரு நா ரெண்டுமூணு பொம்பளைக எந்திரிச்சு ஓடியே போயிட்டாக.’’

கோயிந்தனுக்கு அந்தக் கவலைதான்.

‘‘இதுக்கு எதாச்சும் வழிபண்ணணுமேடா.’’

‘‘என்ன செய்யச் சொல்ற. போற போக்குல மிதிச்சிறலாமா.’’

‘‘அது பாவம்டா. ஒருநேரம்போல ஒருநேரம் இருக்காது.’’

ரெம்ப நேரப் பேச்சுவார்த்தைக்குப் பின் நல்ல திட்டம் உருவாகியது. அது மற்ற பயல்களுக்கும் தெரிவிக்கப்பட்டது.

ஒரு சாயங்காலம். சனங்கள் காட்டுவேலை முடிந்து திரும்பிவிட்டார்கள். பெரிசு சிறிசு எல்லாரும் தெருக்களில் நடமாடும் சமயம். பயல்கள் அங்கங்கே தெருக்களில் நின்றுகொண்டார்கள். நடுச் சந்தியிலிருந்து ஒரு விசில் சத்தம் கேட்டதும் காரியத்தில் இறங்கிவிட்டார்கள்.

பெரிசுகள் வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு தோரணையாக நடந்து போகும்போது பின்தொடர்ந்து வேட்டியை முழுக் குண்டியும் தெரியும்படி தூக்கிக் காட்டிக் கூவிக்கொண்டே கிண்ணிவிட்டார்கள்.

‘‘அடுப்பு அடுப்பே... ‘‘

இதே கூவல் தெருக்களில் தொடுத்துத்தொடுத்துக் கேட்டது.

‘‘அடுப்பு வேணுமா... அடுப்பு...’’

‘‘அடுப்பு... கருத்த அடுப்பு...’’

திகைத்துப்போன பெரிசுகள் திரும்பிப் பார்க்குமுன் பயல்கள் சூறாவளியாகச் சுழித்தோடிவிட்டார்கள். இதைப் பார்த்த பெண்களின் சிரிப்பு கேட்டுக்கொண்டேயிருந்தது.

‘‘அஞ்ஞாடி பெயக என்ன கூத்துக் கெட்றான் பாரு.’’

‘‘அடுப்பு விக்கானாம். நல்ல அடுப்புத்தான்.’’

‘‘இப்படிச் செஞ்சாத்தான் பெரிசுக அடங்கும்.’’

பெரிசுகளுக்கு வெட்கம் சொல்ல முடியாது. அடையாளம் தெரிந்த பயல்களின் வீட்டுக்குப் போய் ஆவலாதி சொன்னார்கள்.

‘‘என் வேட்டியைத் தூக்கி வேடிக்க காட்றான் ஓம் பேரன். இதெல்லாம் நல்லால்ல. கண்டிச்சு வையி.’’

அங்கிருந்து பதில் கதை வந்தது.

‘‘ஓம் பேரன் மட்டும் யோக்கியமாக்கும். நடுத் தெருவுல என் அடுப்பக் கூவிக்கூவி விக்கான்.’’

அவர்களுக்குச் சிரிப்பு வந்தது.

''இத்தன நாளா இதக் கவனியாம இருந்துட்டமே. புத்தியச் செருப்புட்டுப் போடணும்.''

''அதான் போட்டுட்டானே.''

உடனே பொட்டணத்தில் கட்டிவைத்திருந்த பழைய துணிகள் பெரிசுகளுக்குக் கோவணமாகிவிட்டன. இறுக்கிக் கட்டிய பெரிய கோவணம். அடிப் பாரம் அக்கம்பக்கம் பிதுங்க முடியாது. தைரியமாக நடமாடினார்கள். இருந்தாலும் பயல்களைக் கண்டால் அச்சந்தான்.

எளவட்டங்கள் முழித்துக்கொண்டார்கள். கோவணத்துக்குப் பதிலாக லங்கோடு உடுத்தினார்கள். அது சிறகு முளைத்த கோவணம். சிலர் அண்ட்ராயர் தைத்துக்கொண்டார்கள். அதில் ஒரு சின்னப் பை இருந்தது. துட்டுத் துக்காணி வைத்துக்கொள்ளலாம்.

சின்னப் பெண்கள் காதுவளர்க்கக் கூச்சப்பட்டு அப்படியே விட்டுவிட்டார்கள். குணுக்கும் பாம்படமும் போய்க் கம்மல் வந்தது. காதுவளர்த்த பெண்களில் சிலர் மெனக்கிட்டு மருத்துவரைத் தேடிப்போய் தண்டுகளை அறுத்து ஒட்ட வைத்துத் தழும்பை மறைக்கிற மாதிரி அகலக் கம்மல் போட்டுக்கொண்டார்கள்.

வேலைக்கு அச்சலத்தியாக இருக்கிறதென்று வாலிபர்கள் விதவிதமாக முடிவெட்டிக்கொண்டார்கள். பயல்களுக்குப் பயந்து பெரிசுகளும் சன்னஞ் சன்னமாக குறுக வெட்டிக்கொண்டார்கள். இருந்தாலும் அங்கங்கே ஒண்ணு ரெண்டு உச்சிக்கொண்டைகள் நடமாடத்தான் செய்தன.

பெண்கள் கோயிந்தனை அவ்வளவாக வைவதில்லை. புளுகிணியாக இருந்தாலும் கூறானவனாயிற்றே. பழனியம்மா சந்தோசப்படுவாள். இருந்தாலும் ஒரு வருத்தம்.

''இந்தக் கூறுபாடு சம்சாரித்தனத்துல இருந்தாத்தான் சொல்றயா.''

கோயிந்தன் ஊருக்குள் எளவட்ட வரி வசூலித்து நடுச்சந்தி வேம்பைச் சுற்றி இடுப்பளவுக்கு நச்சதுரமாக சிமிண்ட் மேடையும் அதுக்கு வடக்கே நல்ல மடமும் கட்ட ஏற்பாடு செய்தான். வீட்டுக்கு ஒரு ஆள் ஓசியாக உழைக்கணும். வண்டி மாடு வைத்திருப்பவர்கள் கல்லும் மண்ணும் கொண்டுவந்து சேர்க்கணும். பற்றாக்குறைச் செலவை ஊர்ப் பொதுவில் ஏற்றுக்கொள்ளணும்.

ரெண்டு கட்டுமானத்தால் ஊருக்கு ஒரு அந்துசு வந்துவிட்டது. மேடை நிறைய எளவட்டங்கள் உட்கார்ந்து அரட்டையடிப்பார்கள். மடத்துக்குள் பெரிசுகளின் பேச்சு கேட்கும். அது வாலிபர் மேடை. இது ஊர் மடம்.

ஒரு வீடு தீப்பற்றிக்கொண்டால் தொடுத்து நிறைய வீடுகள் வெந்துபோகும். அதைத் தடுப்பதற்கு கோயிந்தன் ஒரு யோசனை சொன்னான். அதன்படி நீளமான பெரிய கொக்கிக் கம்பி வாங்கி மடத்தோரம் போட்டார்கள். வீடு தீப் பற்றியதும் பத்துப் பேருக்கு மேல் கம்பியைத் தூக்கிக்கொண்டு போய் கூரை முகட்டில் மாட்டி உள் வசத்துக்கு இழுத்துக் கவுத்திவிட்டால் சேதம் ஒரு வீட்டோடு முடிந்துவிடும். எல்லாரும் நொந்துகொண்டார்கள்.

''சே இது தெரியாமக் கெடந்துருக்கமே. முந்தியே தெரிஞ்சிருந்தா எத்தனையோ வீடுகளக் காப்பாத்தியிருக்கலாமே.''

''அதானப்பா.''

''அது சரியே. படப்பு எரிஞ்சா என்ன செய்றது.''

''படப்பு எரிஞ்சா அதுமேல படுத்து உருண்டு தீய அமத்து. வக்காளி கோவணம் எரிஞ்சாக்கூட அமத்துறதுக்குக் கொறட்டுக்கம்பி கேப்ப போலருக்கே.''

கம்பிக்குங்கூட அதிக வேலை வைக்காமல் கூரை வீடுகள் சன்னஞ்சன்னமாக ஓட்டுக்கு மாறின. ஓடு வாங்க வசதியில்லாதவர்கள் நீளத் தகரம் வாங்கிச் சுவர் மேல் கவுத்தினார்கள். வெயில் காலத்தில் அவற்றின் வெக்கை கூரைக் குளிர்ச்சியை அடிக்கடி நினைவுபடுத்தியது.

கோயிந்தனுக்குக் குடும்பப் பொறுப்பு வருமென்று அஞ்னை வீரணாபுரம் முத்துவீரியைக் கலியாணம் செய்துவைத்தாள். கொஞ்ச நாள் குடும்பத்தை அக் கறையாகக் கவனித்துக்கொண்டான். பெண்டாட்டியுடன் பிரியமாக இருந்தான். பழனியம்மாளுக்கு நிம்மதி.

''காளித்தாயி புண்ணியத்துல இப்படியே காலுகூடிக்கிட்டாப் போதும்.''

மனசுக்குத் தோன்றினால் கோயிந்தன் வேலைக்குப் போவான். பெரியப்பன் மகன் வேலாண்டியை வீட்டிலிருக்கச் சொல்லிவிட்டு மாடுகளைப் பத்திக் கொண்டு தோட்டத்துக்குப் போவான். உழவு உழுதால் கச்சிதமாக இருக்கும். மேழிமூட்டில் சுள்ளாணிக் குச்சைப் பிடுங்கி ஓட்டை வழியாக நிலத்தை நேர் பார்ப்பான். அது போதும். உழவு கொஞ்சங்கூடக் கோணாது. ஆழ உழுத சால் களும் அதுக்குள் அமைந்த உழவுச் சரங்களும் பார்க்க அவ்வளவு லட்சணமாக இருக்கும்.

அவன் மாடுகளை அரட்டிப் பத்துவதில்லை. ஆனால் வேலை அது பாட்டுக்கு நடக்கும். ஏதேச்சையாகக் கேட்பார்கள்.

''என்னப்பா கோயிந்தா இம்புட்டுக் காடு உழுது போட்ருக்க. மாடு பத்துன சத்தத்தவே காணுமே.''

''சத்தம்போட்டுப் பத்துனா மாடு கோவிச்சுக்கிருமில்ல.''

''ஆமாமா.''

''அதனால நான் ஏர்க்காலுமேல சொகமாச் சாஞ்சு படுத்துக்கிருவென். மாடுக உழுது குடுத்துரும். வேல முடிஞ்சதும் என்னய உசுப்பிவுட்ரும்.''

''ஒழவடிக்கையில ஒறங்குறவன இந்த ஒலகத்துலயே பாக்க முடியாது.''

''மேழியில சாஞ்சு உக்காந்துக்கிட்டே ஒறங்கவும் செய்யலாம்.''

''காலு தரையில இழுபடுமில்ல.''

''ஒசக்க ஏர்க்காலுமேல போட்டுக்கிறணும்.''

''நீ குடுத்துவச்சவன்.''

அவன் கமலை இறைக்கும்போது மாடுகளுடன் அன்னியோன்னியமாகப் பேசுவான்.

''அடே ஒன்னயத்தான். நல்லாக் கேட்டுக்கோ. பசி வந்துட்டா கூளத்த அவக்அவக்னு திங்கப்புடாது. கல்லுருந்து கடிச்சுப் பல்லுப் போயிட்டா என்ன செய்வ. ஒடஞ்சத ஒட்ட வைக்க முடியுமா இல்ல புதுசு வாங்கி நட்டிவைக்க

முடியுமா. காலம்பூரா பில்லக்கூட நமட்டிநமட்டி விழுங்க வேண்டியதுதான். கூளம் எங்கயும் ஓடிப்போயிறாது. ஆற அமரத் திங்கணும். தெரிஞ்சதா.''

பேச்சு அடுத்த காளைக்குத் திரும்பும்.

''இவன் ஒருத்தன் தின்னிப்பண்டாரம். எத்தன தேரம் சொல்லியிருக்கென். ஊறத் தாழிக்குள்ளயே குடியிருக்காதன்னு. கேட்டாத்தான. வகுறுமுட்டக் காடியக் குடிச்சுப்புட்டு இப்ப காலு வழியாக் கழிஞ்சிட்டுத் திரியிறதாரு. கழிஞ்சாத்தான் தெரியும் கலிங்கலு மூளிக்கு.''

பொதுவாகச் சொல்வான்.

''சரி சரி கவலைய வுடுங்க. இனிமே நல்ல புள்ளையா நடந்துக்கிறணும். கொஞ்சம் நில்லுங்க. செத்த நேரம் தவிப்பாறிக்கிருவொம்.''

ரெம்ப நேரம் கமலைச் சத்தம் கேட்காது. அதுக்கொரு காரணம் வைத் திருப்பான்.

''சத்தமா எறச்சா மனுசன் வடத்துமேல ஒறங்க முடியுமா. சத்தம்போட்டா கழுத்த நெரிச்சிருவன்னு உருளையவும் கமல வண்டியவும் ஆரம்பத்துலயே அரட்டி வச்சிருவனா சும்மாவா. அவுகதான வால் கவுறும் வடமும் அறுக்கிறதத் தாங்காமக் கூப்பாடு போடுவாக.''

சந்தேகத்தில் கேட்பார்கள்.

''எவ்வளவுதான் எறச்சாலும் ஒங்க கெணறு மட்டும் வத்த மாட்டங்குதே. அப்படிப்பட்ட நெல ஊத்தா இருக்குது.''

''நெல ஊத்தாவது மல ஊத்தாவது. தண்ணிய வள்ளிசா எறச்சு ஊத்திப் புட்டா கெணத்துக்குள்ள அத நம்பிப் பெழைக்கிற உசுப்பிராணிக என்ன செய்யும். பாவமில்லையா.''

''ஆமாமா. அதுக வேற எங்க போகும்.''

''பின்ன சொல்றயே.''

குப்பையடிப்பு நேரங்களில் உடனிருந்து சுதாரிப்பாகக் குப்பையை அள்ளி வண்டியில் நிரப்பி அனுப்புவான். மக்கிப்போய்ச் சந்தனமாக மாறிவிட்ட குப் பைக்குள் புதைத்து வைத்திருக்கும் சாராயச் சீசாக்களை உடையதாரி காத்திருந்து எடுத்துப் போவான். கோயிந்தன் கையை உதறுவான்.

''சே இது தெரியாமப்போச்சே.''

கொடிக்காப் பழம்போல் சத்தூறித் தடித்த குப்பைப் புழுக்களைப் பொறுக்கி களத்தில் எறிவான். அதுக்காக அண்டம்போடும் காக்காய்கள் முண்டியடித்துக் கொத்தி முழிபிதுங்க விழுங்கும். புழுக்களை அந்தரத்தில் வீசுவான். காக்காய்கள் அபாரமாகப் பாய்ந்து ஏந்தும். பாரத்துடன் போன வண்டி திரும்பும்வரை இந்த விளையாட்டுத்தான்.

அவன் பார்வை காக்காய்களுக்குப் பின்னால் திரியும். வேலை மெல்ல மெல்ல மறந்துபோகும். அன்றைக்கே ஊர்சுற்றக் கிளம்பிவிடுவான். அஞ்ஞையும் பெண்டாட்டியும் அங்கலாய்ப்பார்கள்.

''இனியும் வெளையாட்டுப் புள்ளையா இருக்கானே. என்னத்தச் சொல்லட்டும்.''

''எனக்கு லவிச்சது அம்புட்டுத்தான்.''

இந்தப் பிழைப்பில்தான் முத்துவீரி அவனுக்கு ரெண்டு குழந்தை பெற்றாள். மகன் ராமசாமி. மகள் ராசமணி. அவன் பிள்ளைகள்மேல் பாசமாக இருப்பான். உள்ளுக்குள் என்னதான் வருத்தமிருந்தாலும் முத்துவீரி புருசனை விட்டுக் கொடுக்க மாட்டாள். புறணி பேசுகிறவர்களை வசமாகப் பிடித்துக்கொள்வாள்.

‘‘எம் புருசனப் பத்திப் பொறணி பேசுற கழுதைக தைரியமிருந்தா நேர வந்து பேசணும். உள்ள ஓட்டி கொள்ளப் புடுங்கீருவென். பள்ளனோளி இதுக பெழப்புத் தெரியாதாக்கும். செல்லிக்குச் செரங்கு. சிறுக்கிக்கு அரையாப்பு. பாக்க வந்த பாதகத்திக்குப் பக்கப் பௌவையாம். எம் புருசன் ரோசனக்கார மந்திரி யாக்கும். கொட்டிக்கொட்டிக் குமிச்சாலும் அவன எட்ட முடியுமா.’’

ஒரு சிலுப்பில் தண்ணீர்ப் பானையைத் தூக்கி இடுப்பில் ணக்கென்று வைத்துக் கிணற்றிலிருந்து கையை லாத்தி நடக்கும்போது அவள் வாய் வார்த்தை களைச் சிந்தும்.

‘‘செல்லச் சிறுக்கி புருசன் செவ்வாக் கெழம செத்தானாம். வீடு வெறிச்னு போகும்னு வெள்ளிக்கெழம எடுத்தாளாம்.’’

பொய்யாளியும் வேலாயும் புலம்பினார்கள்.

‘‘ஆண்டிக் குடும்பன் வீட்ல இப்படியொரு புள்ளையா வேலாயி. அவுக அப்பன் கோவணத்த அவுத்த நேரம் அப்படி.’’

‘‘பாவம் பழனியம்மா பெத்த நேரம்.’’

‘‘முத்துவீரி புள்ளீகள வளக்கப் படுற கஸ்டம் அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும்.’’

‘‘அப்பயும் புருசனப் பத்தி ஆரும் ஒரு சொட்டச் சொல்லுச் சொல்ல வுட மாட்டங்காளே.’’

‘‘அதான் பொம்பள.’’

ஆண்டி குடும்பத்தில் இப்போது பொய்யாளியும் வேலாயுந்தான் மூப்பான உருப்படிகள். அவர்களுக்கு மூத்த மகன் நல்லப்பன் குடும்பத்தைப் பற்றிக் கவலையில்லை. விவசாயம் நல்ல முறையில் நடந்தது. ராமன் குடும்பத்தைப் பற்றித்தான் விசாரம். அவன் சின்ன வயசிலேயே போய்விட்டான். அவனுக்கு வாய்த்த ஒரே மகன் கோயிந்தன் காடோடியாகிவிட்டான். பெண்கள் இருவரும் குடும்பத்தை இழுத்துச் செல்ல வேண்டிய நிலைமை.

புலப்பம் வற்றாமலேயே பொய்யாளி போய்ச்சேர்ந்துவிட்டான். வேலாயி ரெண்டு வருசம் செவனம்மா கையால் சோறு வாங்கிச் சாப்பிட்டு முறை கழிந்தது. அதுக்குமேல் அவள் உயிரை யாராலும் தாக்காட்ட முடியவில்லை.

நாடார் வீட்டிலிருந்து எல்லாரும் அவள் சாவுக்கு வந்திருந்தார்கள். அவளை வழியனுப்பும்வரை தெய்வானை இருந்து அழுதுவிட்டுப் போனாள். ‘‘தேவானத்தா தேவானத்தா’’ என்று கூப்பிட்டு உரிமையுடன் சண்டைபோட ஆளில்லை.

வண்ணாக்குடி அய்யம்மாளுக்கு தாயைப் போல் ஆதரவாக இருந்த மனுசி. வீட்டிலும் வெளுப்புத்துறையிலும் அவள் நினைவுதான்.

## படலம் 19

### 1. கதவு திறந்தது

“நாலு பேருக்குச் சமதையா நம்மளும் இருக்கணும்னு நாடாருக ஆசப் படுறது ஞாயந்தான மாப்பிள.”

“அது ஒனக்கும் எனக்கும் தெரியிது மச்சான். மேச்சாதிக்காரனுக்கு ஒறைக் கலயே. சண்டையான சண்ட போட்டும் அசைய மாட்டாங்கானே. அத்தன உசிரக் காவு குடுத்தும் அவங்களோட கோயிலுக்குள்ள மொழைய முடிஞ்சதா. கோயிலு வாசல்ல அடியெடுத்து வைக்கிறதுக்குள்ள நாடாருக கொலமே அழிஞ்சிருமோன்னு மனசுக்குள்ள வாதிப்பாருக்கு.”

“அந்தச் சண்ட இண்ணைக்குக் கேலிக்கூத்தாப் போச்சேங்கிறத நெனச்சா வேதனையாருக்கு.”

“ஏன் அப்படிச் சொல்ற மச்சான்.”

“நடந்த கத ஒனக்குத் தெரியாதா.”

“எனக்கென்ன தெரியும் பொழுதெல்லாம் மாட்டுக்குப் பின்னால திரிஞ்சு ராவுல மொடக்கிற மனுசனுக்கு. ஊர்க் கத பேசீட்டு வெள்ளையும் சொள்ளையு மாத் திரியிற ஒனக்குச் சரி.”

“நாலா வழியிலயும் முட்டி மோதிப் பாத்த நாடாருக ஒண்ணும் ஆகாம அரசியல்ல எறங்க ஆரம்பிச்சிட்டாக.”

“அந்த வழியிலயாச்சும் நல்லது நடந்துறாதாங்கிற ஆத்தரம்.”

“அப்ப நம்ம மாகாணத்துல ரெண்டு மூணு அரசியலுக் கச்சிகதான் இருந்துச்சு.”

“சரி.”

“ஒவ்வொரு கச்சிக்கும் தனித்தனிக் கொடி உடுப்பு. ஒண்ணு வெள்ளக்கார னுக்கு எதிராப் பேசும். ஒண்ணு அனுசரணையாருக்கும்.”

“அது வேறயா.”

“அதுகளோட முக்கிய நோக்கமே சனங்ககிட்ட நல்ல பேரெடுத்து தேர்தல்ல ஒட்டு வாங்கி ஆட்சியப் புடிச்சு அதிகாரத்துக்கு வரணும். சனங்களோட கஸ்டங் களக் கையில எடுத்துப் பேசினாத்தான அவுககிட்ட நல்ல பேரு வாங்க முடியும்.”

“ஆமாமா.”

“நாடாருகளும் மத்த கீச்சாதிக்காரங்களும் மேச்சாதிக்காரங்களோட கோயிலுக்குள்ள போறதப் பத்தித்தான் அந்தச் சமயத்துல பேச்சாக் கெடந்துச்சு.”

“அதப் புடிச்சுக்கிட்டாகளாக்கும்.”

“எங்ககிட்ட வாங்க எங்க பக்கம் சேருங்கன்னு சனங்களக் கூவிக்கூவிக் கூப்புட்டாக.”

“வந்தாகளா.”

“நாடாருக வெவ்வேற கச்சியில சேந்து அரசியலு பேச ஆரம்பிச்சிட்டாக. ஆனா அந்தக் கச்சிகளுக்குள்ள இருக்கிற மேச்சாதிக்காரங்கள்ல செல பேருக்கு நாடாருக வாறது புடிக்கல.”

''அங்கயும் அந்தக் கததானா.''

''இருந்தாலும் உள்ள பூந்து கலந்துட்டாக.''

''சரி.''

''ஒரு கச்சி ஆரம்பத்துலருந்தே வெள்ளக்காரன எதுத்து வந்தது. அதுக்குப் பேரு விடுதலக் கச்சி. வெள்ளக்காரங்கிட்டருந்து நாட்டுக்கு விடுதல வாங்கீறணும்னு முழு மூச்சாப் பாடுபட்டாக. மத்த பெரச்சனைகளவிட விடுதலதான் முக்கியம்னு அவுக நெனச்சாக. அதுக்காக வெள்ளக்காரனோட ஒத்துழைக்காமப் போராட்டம் நடத்துறது. செயிலுக்குள்ள போறது. வெளிய வந்து மறுபடியும் போராட்டம் நடத்துறது. இப்படி நடந்தது அவுக கத.''

''நல்ல கததான்.''

''நாடாருக நெறைய பேரு அந்தக் கச்சியிலயும் சேந்து செயிலுக்குப் போனாக. அதுல கருத்தராசு நாடாரு முக்கியமான ஆளு.''

''அதாரு மச்சான்.''

''சாதாரணக் குடும்பத்துல பெறந்தவரு. அசல் கருப்பு. மூக்கும் முழியுமா நல்ல மொகவாகு. அஞ்சு வயசில பள்ளிக்கூடத்துல காலெடுத்து வச்சாரு. ஆறு வயசில அவரு தகப்பனாரு மயானத்துல காலு வச்சிட்டாரு. தாயாருதான் வைராக்கியமா அவரப் படிக்க வச்சது. தக்கி முக்கி ஆறாம் வகுப்புக்குப் போறப்ப படிப்ப நிறுத்தி மாமாவோட சவுளிக் கடையில நிறுத்திவச்சாக. அங்கயும் சரிப்பட்டு வரல.''

''எதுக்கு.''

''அப்ப ஒலக மகா யுத்தம் நடந்துக்கிட்ருந்த நேரம். அதுல நடந்த கொடுமைகளப் பத்திக் கேள்விப்பட்டு மனசு கலங்குனாரு. அந்த வயசிலயே அரசியலு மேல நோக்கம் வந்துருச்சு. நாட்ல நாடாருக இப்படி இருக்காகளேன்னு கவல வேற.''

''அந்த வயசில என்ன செய்ய முடியும்.''

''மலையாள தேசத்துல இனியாரு மாமாவோட மரத்தொட்டியில கொண்டு போயி வுட்டாக. அங்கயும் வேலமேல கவனமில்ல.''

''அங்க என்ன செஞ்சாரு.''

''நாடாருகளப் போல அங்க ஈழவருன்னு ஒரு சாதி. பனையேறிகதான். அவுகளுக்கும் இவுக கததான். கோயிலுக்குள்ள வராதன்னு மேச்சாதிக்காரங்க வெரட்டியடிச்சுக்கிட்டே இருந்தாக. இங்க மாதிரி அங்க தகராறு கடுமையா இல்ல. நம்ம நாட்லருந்து தாடிக்காரப் பெரியவரக் கூப்புட்டு அவரு தலமையில கோயிலுக்குள்ள போறதுக்குப் போராட்டம் நடத்தச் சொன்னாக.''

''தாடிக்காரரு ஆரு.''

''அவரு விடுதலக் கச்சியிலதான் இருந்தாரு. கடவுளே இல்ல. கடவுளக் கும்புடுறவங்க முட்டாப் பயகன்னு கடுமையாப் பேசுவாரு. பெராமணருகளச் சுத்தமாப் புடிக்காது. பாம்பவும் பெராமணரவும் பாத்தா மொதல்ல பெராமணரத்தான் அடிக்கணும்னு பேசுவாரு.''

''அப்படிப்பட்டவரு ஏன் கோயிலுக்குள்ள போகணும்.''

''சாமி எல்லாருக்கும் பொதுவானது. அதக் கும்புடுறதுல என்ன சாதி வேண்டிக் கெடக்குதுன்னுதான்.''

''ஓகோ. கீச்சாதிக்காரங்க மேல அக்கற.''

''அந்தப் போராட்டத்துல கருத்தராசும் கலந்துக்கிட்டாரு.''

''அங்கயும் பெழப்பு போச்சு.''

''என்ன செய்றது. மறுபடியும் ஊருக்கே திரும்ப வேண்டிய நெலமை. அரசியலத் தவர வேற எந்தத் தொழில்லயும் நாட்டமில்ல. வயித்துப்பாட்டுக் காக எதாச்சும் வேல செஞ்சுக்கிட்ருக்கும்போது வந்தே மாதரம்னு சத்தம் கேட்டாப் போதும். ஒடனே வேலைய அப்படியப்படியே போட்டுட்டுச் சந்திக்கு வந்து கூட்டத்தோட சேந்து அமயம் போடுவாரு.''

''அவ்வளவுக்கு முத்திக்கிருச்சா.''

''ஒரு வழியா சின்ன வயசிலயே அரசியல்ல மொழஞ்சிட்டாரு. சொந்தத் தெறமையால பல பேருக்கு நம்பிக்கையான மனுசனாயிட்டாரு. படிப்படியா ஒசந்து கச்சிக்குள்ள முக்கியமான தலைவராயிட்டாரு.''

''சாமர்த்தியசாலி.''

''இது மேச்சாதிக்காரங்களுக்குப் புடிக்கல. அவர ஒரு எதிரியாவே நெனச்சாக. சொந்தக் கச்சியிலயே அந்தப் புழுக்கம் இருந்தது.''

''எங்க போனாலும் சாதி வுடாது போலருக்கு.''

''வெள்ளக்காரங்களுக்கு விசுவாசமாருக்கிற நாடாருகளுக்கே அவரப் புடிக்கல.''

''அவுகளுக்கு என்ன கேடு வந்தது.''

''அவரு வெள்ளக்காரனுக்கு எதிரானவராச்சே. அது மட்டுமில்ல. மொதல்ல தாய்நாட்டுக்கு விடுதல வாங்கணும். அதுக்குப் பெறகுதான் நாடாருக கோயிலுக் குள்ள போறதப் பத்திப் பேசணும்னு நெனைக்கிற மனுசன்.''

''அது சரிதான.''

''விடுதலக் கச்சியில தேசம் முழுவதும் ஆளுக இருந்தாக. அதுல வடநாட்டு மகாமனுசன் பெரிய ஆளு. கச்சியிலயும் சரி வெளியிலயும் சரி அவருக்கு ரெம்ப மதிப்பு. நல்ல படிப்பாளி. எண்ணைக்கு வெள்ளக்காரன் நம்ம தேசத்துக்காரங்கள கோவணம் கெட்ன கோமாளிகன்னு கிண்டலடிச்சானோ அண்ணைக்குச் சட்டை யக் கழட்டிப் போட்ட மனுசன் பெறகு தொடவேயில்ல. பெரிய கோவணம் கெட்ன மாதிரி வேட்டியத் தார்ப்பாச்சீட்டு சாதாரணமாத் திரிவாரு. அவரு பேசுறதக் கேக்கிறதுக்கு ஏராளமாக் கூட்டம் வரும்.''

''அம்புட்டு மருவாதி.''

''அடிச்சாலும் ஒதச்சாலும் வெட்னாலும் குத்துனாலும் சுட்டுத்தள்ளு னாலும் செவனேன்னு சகிச்சுக்கிறணும். செயிலுக்குள்ள புடிச்சுப் போடுறயா போடு. வெளியா வுடுறயா வுடு. வந்ததும் போராடுவென். இதுதான் அவரு போக்கு.''

''நல்ல போக்கு மச்சான்.''

''கீச்சாதிக்காரங்க மேலருக்கிற கரிசனத்துல அவுகளுக்கு அரிசனம்னு பேரு வச்சு அதே பேருல பத்திரிகையும் நடத்திவந்தாரு.''

''அதென்ன சனம்.''

''அரியோட சனம். அதாவது கடவுளோட புள்ளீக.''

''அப்பன் இல்லாற புள்ளீக. மத்தவுகெல்லாம் அவுகவுக அப்பனுக்குப் பெறந் தவுக. அப்படித்தான.''

''அரிசனங்களும் கோயிலுக்குள்ள போறதுக்கு அனுமதிக்கணும்னு அவரு சொல்லி வந்தாரு. அவருக்கு எதிராவும் பேச்சு வந்தது. பாட்டுக் கெட்டிக் கூட் டத்துல பாடுனாக.''

''பெறகென்ன புதுப் பேரோட கோயிலுக்குள்ள போயிட்டா மட்டும் அவுக கஸ்டம் அம்புட்டும் தீந்துறப்போகுதாக்கும்.''

''கச்சிக்குள்ளயும் வெளியிலயும் மேச்சாதிக்காரங்க குடுத்த நெருக்கடியால அவரு பேச்ச மாத்திக்கிட்டாரு.''

''நெனச்சென். அவன் எப்படிச் சும்மாருப்பான்.''

''நாடாருகளும் அரிசனங்களும் கோயிலுக்குள்ள போறதுக்கு உரிம வேணும். ஆனா ஒண்ணு. மேச்சாதிக்காரங்க அதுக்கு ஒத்துக்கிட்டா மட்டும் கோயிலத் தொறந்து வுடணும். இதுக்காக மேச்சாதிக்காரங்களக் கட்டாயப்படுத்த முடியாது அப்படின்னு பெரட்டிப் பேச ஆரம்பிச்சிட்டாரு. இதுல ரெம்பச் சனங்களுக்குக் கோவம்.''

''இருக்காதா பின்ன.''

''இந்தக் கூத்தக் கேளு மாப்பிள. விடுதலக் கச்சிக்குள்ளயே மேச்சாதிக் காரங்க நீயா நானான்னு அடிச்சுக்கிட்டாங்க. பெராமணருக ஒரு பக்கம் மத்தவுக ஒரு பக்கம். ஆரு கையி ஓங்குறதுங்கிறதுல தகராறு. எல்லாம் வருணாசிரமப்படி தான் நடக்கணுமிங்கிறது பெராமணருக திட்டம். அதெப்படிங்கிறது மத்தவுக கேள்வி. அப்படின்னா பெராமணருகதான் எல்லாருக்கும் ஒசந்த சாதி. மத்த மேச்சாதிக்காரங்கெல்லாம் அவுகள வுட்டு வெலகியே இருக்கணும்.''

''பெராமணராவது வுட்டுக்குடுக்கிறதாவது. கீச்சாதிக்காரங்கள என்ன செய்றதாம். எண்ணைக்கும்போல கீழயே கெடக்கணுமா. அவுகள நம்பி வந்தவு களக் கைவுடலாமா. ஒய்யாரக் கொண்டையாம் தாழம்பூவாம் உள்ள இருக்கு மாம் ஈரும்பேனும்.''

''கச்சிக் கூட்டம் பெரிசா நடக்கும். நாடாருகளவும் அரிசனங்களவும் கோயிலுக்குள்ள வுட்டாகணும்னு வாயி கிழியப் பேசுவாக. ஆனா உள்ளுக் குள்ள கழுத்துறுப்பு வேல நடக்கும். தீர்மானத்த எதுத்து ஓட்டுப் போட்டுத் தோக்கடிச்சுக் கால வாரி வுட்ருவாக.''

''நம்ப வச்சுக் கழுத்தறுக்கிற வேல.''

''இனிமே இங்கருந்தா நமக்கும் நம்ம பேச்சுக்கும் மரியாதையில்லன்னு தாடிக்காரப் பெரியவரு விடுதலக் கச்சியவுட்டு வெளியேறீட்டாரு. அவரப் போல மேச்சாதிக்காரங்க அனயம் பேரு போயிட்டாக. போனவுக வேற கச்சியில சேந்துட்டாக இல்ல புதுக் கச்சி ஆரம்பிச்சாக. இவுகள நம்பி ஒண்ணும் ஆகா துன்னு கீச்சாதிக்காரங்களும் நெறைய பேரு போயிட்டாங்க.''

''வேற வழியில்லையே.''

''கச்சிக்கு நாதியில்லாமப் போயிருமேன்னு உள்ள இருக்கிறவங்களுக்குக் கவல வந்துருச்சு. ஒன்னால நான் கெட்டென் என்னால நீ கெட்டன்னு ஏச்சும் பேச்சுமா பொகஞ்சுக்கிட்டுருந்தாக. புதுக்கச்சிக்குப் போன நாடாருகளவும்

கொழம்பிப்போன அரிசனங்களவும் நம்ம கச்சிப் பக்கம் இழுக்கணும். கச்சியில மிஞ்சியிருக்கிறவுகளத் தக்க வைக்கணும். ஒரே யோசனையாருந்துச்சு.''

''கருத்தராசு நாடாரு என்ன ஆனாரு.''

''அவரு கில்லாடியாச்சே. உள்ளருந்தே காரியம் சாதிக்கணும்னு கச்சியி லயே நின்னுக்கிட்டாரு.''

''அதான பாத்தென்.''

''இதுக்கு எடையில மாகாண சபைக்கு மொதமொதலா தேர்தலு நடந்துச்சு. விடுதலக் கச்சி அனய எடத்துல செயிச்சு ஆட்சியப் புடிச்சிருச்சு. கோவாலய்யரு பிரதம மந்திரியாயிட்டாரு. எல்லாருக்கும் மேல வெள்ளக்காரக் கவர்னரு.''

''அதிகாரம் பண்ண ஆரம்பிச்சிட்டாக.''

''நாடாருகளும் அரிசனங்களும் கோயிலுக்குள்ள போறதுக்கு ஆதரவா இருந்தாத்தான் பெழப்பு நடத்த முடியும்னு ஒரு பிரிவு சொல்ல அதெப்படி முடியும். வருணாசிரமம் என்னாகிறதுன்னு இனியொரு பிரிவு சொல்ல பெரா மணருக்குள்ளயும் மத்த மேச்சாதிக்காரருகளுக்குள்ளயும் ரெண்டு துண்டமாயிப் போச்சு.''

''ரெண்டு பேருமே ஒரு கச்சியில இருந்துதான் பண்ண போடுறாக. கூத்துத்தான்.''

''மத்த கோயிலுகள்லயே கெடுபுடின்னா மதுர மீனாச்சி கோயிலப் பத்திக் கேக்கணுமா. காக்கா குருவியப்போல கீச்சாதிக்காரங்களக் கிட்ட அண்ட வுடாம வெரட்டிக்கிட்ருந்தாக.''

''கோயிலுக்குள்ள என்ன தானியந்தவசமா குமிச்சுக்கெடக்கு.''

''அப்ப கோயிலுக்கு அதிகாரியா ஒரு நாய்க்கரு இருந்தாரு. விடுதலக் கச்சிக் காரரு. கீச்சாதிக்காரங்களக் கோயிலுக்குள்ள வுடுறது தப்பில்லன்னு நெனைக்கிற மனுசன். அதுக்கு வழி தேடிக்கிட்ருந்தாரு.''

''ஒத்தப் பேருவழியால என்ன செய்ய முடியும்.''

''அவருக்குத் தொணையா ஒரு அய்யரு கெடச்சாரு. பெரிய வக்கீல். விடுதலக் கச்சியில முக்கியப் புள்ளி. அரிசனங்களுக்குச் சேவ செய்றதுக்காக ஒரு சங்கம் நடத்திவந்தாரு. அவருக்கு அரிசனய்யருன்னு பேரு. கொஞ்ச காலத்துக்கு முந்தி நடந்த கச்சி மாநாட்ல நாடாருக கோயிலுக்குள்ள போறதுக்கு உரிம தரணும்னு தாடிக்காரப் பெரியவரு கொண்டு வந்த தீர்மானத்த எதுத்துத் தோக்கடிக்கச் செஞ்சவங்கள்ல அவரும் ஒருத்தரு.''

''பெறகு மனசு மாறி அரிசனங்கமேல அக்கற வந்துருச்சாக்கும்.''

''ரெண்டு பேரும் சேந்து திட்டம் போட்டாக. நாடாருகளவும் அரிசனங் களவும் கூட்டிக்கிட்டுக் கோயிலுக்குள்ள மொழஞ்சாகணும்.''

''நல்ல திட்டந்தான். நடக்கணுமே.''

''அதுக்குச் சனங்களோட ஆதரவு வேணுமே. இதப் பத்தி அய்யரு பொதுக் கூட்டங்கள்ல பேச ஆரம்பிச்சாரு. சனங்க ஆதரவு குடுத்தாக. கோயிலுக்கு முன்னால எப்படி சத்தியாக்கெரகம் பண்ணணும்னு நெறைய பேருக்குச் சொல்லிக் குடுத்தாரு.''

''கோயிலுக்குள்ள போறதுக்குக் கோப்புக் கெட்றாக.''

''இந்தத் திட்டம் எதிராளிகளுக்குத் தெரிஞ்சுபோச்சு. கொதிச்சுப்போயிட் டாக. இத எப்படியும் தடுத்தாகணும்னு தார்ப்பாச்சீட்டுத் திரிஞ்சாக. இதுல

ரெண்டு பேரு முக்கியமானவுக. ஒருத்தரு வருணாசிரமய்யரு. பேர்போன வக்கீல். வருணாசிரம சங்கம்னு ஒரு சங்கத்த நடத்தி வந்தாரு. இனியொருத்தரு தஞ்சாவூரய்யரு. அவரும் பெரிய வக்கீல்தான். அவருட்ட ஒரு காலத்துல அரி சனய்யரு சின்ன வக்கீலா வேலபாத்தாரு.''

''ரெண்டு பக்கமும் அருமுறுக்கிறாக.''

''ஒரு சனிக்கெழமம ராத்திரி அரிசனய்யரு ஆறு பேரக் கூட்டிக்கிட்டுத் தயாரா இருந்தாரு. ஆறு பேருல ஒருத்தரு விருதுபட்டி சம்முக நாடாரு. மத்த அஞ்சு பேரும் அரிசனங்க. பேரு சட்னு யாவுகத்துக்கு வர மாட்டங்குது... தும்பப் பட்டி கக்கன் ஆலம்பட்டி முருகானந்தம் மதிச்சியம் சின்னையா விராட்டிப்பத்து பூவலிங்கம் அப்பறம் முத்து.''

''கோதாவுல எறங்கீட்டாக.''

''கோயில்ல ராக்காலப் பூச முடிஞ்ச பெறகு அரிசனய்யரு ஆறு பேரோட அருவமில்லாமக் கோயிலுக்குள்ள போயி மீனாச்சியக் கும்புட்டாரு. வெளிய வந்துதான் இப்படியிப்படின்னு சங்கதியத் தெரியப்படுத்துனாரு.''

''நெனச்சது நடந்துருச்சு.''

''இது கோயிலு அர்ச்சகருகளுக்கும் வேதம் ஓதுற பட்டருகளுக்கும் தெரிஞ்சு போச்சு. அபச்சாரம்அபச்சாரம். தீட்டுச் சாதிக்காரங்களக் கோயிலுக்குள்ள கூட்டி வரலாமோ. தாயே இது அடுக்குமா. அவங்களக் கூட்டிக்கிட்டு ஒரு பெராமணரு வரலாமோ. இப்படித் திட்டித்தீத்துட்டாக. வாய்ப் பேச்சோட சரி.''

''நல்ல வேள அத்தோட போச்சு.''

''சனிக்கெழமையும் ஞாயிறும் வழக்கம்போல மொறப்படி பூச நடந்தது. தீட்டுக் கழிப்பு நடத்தணும்னு வருணாசிரமய்யரு சொன்னாரு.''

''என்னத்தவும் கழிச்சிட்டுப்போ.''

''திங்கக் கெழமண்ணைக்கு ஏராளமான சனங்களோட கோயிலுக்குள்ள போகப் போறதா அரிசனய்யரு தெரிவிச்சாரு.''

''போச்சுடா.''

''எதிராளிகளுக்குச் சொல்லணுமா. எல்லாரும் வருணாசிரமய்யரு பங் களாவில கூடிப் பேசினாக. தஞ்சாவூரய்யரும் வருணாசிரமய்யரும் கூட இருந்து யோசன சொன்னாக. சனங்க கோயிலுக்குள்ள வர வுடாமத் தடுக்கணும்னா கோயிலப் பூட்றதுதான் சரியான வழின்னு முடிவுசெஞ்சாக.''

''அந்த அளவுக்குப் போயிட்டாகளா.''

''இந்த முடிவு ஒரு அய்யரு மனசுக்கு ஒப்பல. அவரு பேரு காசிநாத சாமி. கோயில் பட்டரு. நீங்க செய்றது நல்லால்லன்னு சொல்லிப்பாத்தாரு. கேக்கிற தாத் தெரியல. அவருதான் திங்கக் கெழம கோயிலுக்கு மொறகாரரு.''

''சங்கடமான நெலம.''

''ஞாயித்துக் கெழம ராத்திரி அர்ச்சகருக கோயிலப் பூட்டிச் சாவிய இடுப்புல சொருவீட்டுப் போயிட்டாக.''

''இந்தப் பக்கம் என்ன செஞ்சாக.''

''கோயிலு அதிகாரி வுடல. பெராமணரோட ஒவ்வொரு நடவடிக்கை யவும் கவனிச்சு அதுக்குத் தக்கபடி காய நகத்துனாரு. நீங்க அப்படி வாறீகளா நான் இப்படி வாறன்னு ஒரு காரியம் செஞ்சாரு.''

''என்னது.''

''திங்கக் கெழம காலையில கோர்ட்டாரவும் மொறகாரப் பட்டரவும் கூட வச்சுக்கிட்டு அவுகளுக்கு முன்னால கோயிலத் தொறந்து வுட்டுட்டாரு.''

''நல்லதாப் போச்சு.''

''அரிசனய்யரு சொதாரிச்சுக்கிட்டாரு. அவரு முன்னால நடக்க பின்னால நாடாருகளும் அரிசனங்களுமா ஏகப்பட்ட கூட்டம் ஆதாளி போட்டுக்கிட்டுக் கோயிலுக்குள்ள போயிருச்சு. பொம்பளைகதான் ரெம்ப.''

''பொம்பளைக மீனாச்சியப் பாக்கிறதுக்கு அம்புட்டு ஆசைய அடக்கி வச்சிருந்திருக்காக.''

''செலைகளத் தடவிப் பாக்கிறதும் கண்ணுல ஒத்திக்கிறதும் வுழுந்து கும்புடுறதும் ஒரே கொண்டாட்டந்தான். தனிச்சிருந்த மீனாச்சிக்குக் கூட்டத்தப் பாத்ததும் சந்தோசம் சொல்ல முடியாது. கோயிலுப் பெரகாரமெல்லாம் சனங்க சுத்தி வந்தாக. அரிசனய்யரு கையத் தூக்கி சத்தமாச் சொல்ல சனங்க அத இனியும் சத்தமாச் சொல்ல அதுல பெரகாரம் முழுவதும் அதிருது. வெளிய வரும்போது அய்யரு மொகத்துல அப்படியொரு கள.''

''அப்படிப் போடு.''

''சேதி தெரிஞ்சு வருணாசிரமய்யரும் மத்தவங்களும் சாமியாடுன மாதிரி ஆவேசத்துல கோயிலுக்குப் போனாக. ஒரு தங்கக் கொடத்த வச்சு ஏராளமான சடங்கு சாத்தரங்களச் செஞ்சு பூச பண்ணுனாக. அதத் தூக்கிக்கிட்டு அய்யரோட பங்களாவுக்கு நடந்தாக. அய்யோ தீட்டுச்சாதிச் சனங்க கோயிலுக்குள்ள போனதால எங்க மீனாச்சி வெளியேறீட்டாளே. அவளக் காணுமே. எங்க போயித் தேடுவன்னு பொலம்பிக்கிட்டே போனாக. மீனாச்சி எங்க வீட்ல குடியேறியிருக்கான்னு அய்யரு வழிகாட்னாரு. பங்களாவுக்குப் போயி தங்கக் கொடத்த எறக்கி வச்சு அங்கயும் பூச செஞ்சாக.''

''கோயிலுக்குள்ளருந்த சாமியக் கௌப்பி பங்களாவுக்குக் கொண்டு வந்துட்டாக.''

''அதுக்குள்ள இந்தச் சமாச்சாரம் எல்லா எடத்துக்கும் பரவீருச்சு. ஏராளமான பெராமணருக அடிச்சுப் புடிச்சு அய்யரு பங்களாவுக்கு ஓடி வந்து மீனாச்சியக் கும்புட்டாக.''

''இப்பக் கோவம் அடங்கீருக்குமே.''

''வருணாசிரமய்யருக்கும் தஞ்சாவூரய்யருக்கும் சரியான அடி. அடடா கத இப்படியாயிருச்சே. இதுக்கு வழியென்னன்னு யோசன பண்ணுனாக. கேவலம் நம்மகிட்ட சின்ன வக்கீலாருந்து கையேந்திக் காசு வாங்கின அரிசனய்யரு இப்படிப் பண்ணிப்புட்டாரே. நானா அவரான்னு ஒரு கையி பாத்துற வேண்டியதுதான்னு தஞ்சாவூரய்யருக்கு ரெம்பக் காட்டம். கோர்ட்டுக்குப் போக முடிவு செஞ்சாக.''

''அங்க போயிட்டாகளா.''

''அண்ணைக்கே கோர்ட்ல வழக்குப் போட்டுட்டாக.''

''ஆரு மேல.''

''மொத்தம் எட்டுப் பேரு. கோயிலுக்குள்ள மொழைய ஆதரவு குடுத்ததுக்காக கோயிலு அதிகாரி மேலயும் அரிசனய்யரு மேலயும் மொழஞ்சதுக்காக மத்த ஆறு பேரு மேலயும்.''

''வசமா மாட்டிவுட்டுட்டாக.''

''கீச்சாதிச் சனங்க கோயிலுக்குள்ள மொழையிறதும் அவுகள மொழைய வைக்கிறதும் அந்தக் காலத்துச் சட்டப்படி குத்தம். அதனால வழக்கு வலுவா இருந்துச்சு. நாய்க்கரும் அய்யரும் எந்த நேரத்துலயும் கைதாகலாமிங்கிற நெருக்கடியான நெலமே.''

''நல்லது செஞ்ச மனுசங்களுக்கு இந்தக் கதியா மச்சான்.''

''அவ்வளவு லேசா புடிச்சு உள்ள போட்ற முடியுமா. அரிசனய்யரு ஆரு. மாகாணப் பிரதம மந்திரி கோவாலய்யருக்கு நெருக்கமானவராச்சே. சொல்லப் போனா தெக்குச் சீமைக்கு அவருதான் வலது கையி. இதுல வுட்டுக்குடுத்தா கச்சியில புடிமானம் போயிருமே. அடுத்த தேர்தல்ல ஓட்டுக் கெடைக்காதே.''

''எந்த மூஞ்சியோட போயி சனங்ககிட்ட ஓட்டுக் கேக்க முடியும்.''

''யோசன பண்ணிப்பாத்து ஒரு வழியக் கண்டுபுடிச்சாரு. ஒரு அவசரச் சட்டத்தத் தயார்பண்ணி அத எடுத்துக்கிட்டு ஊட்டிக்கு ஓடுனாரு. அங்க தவிப் பாறிக்கிட்டுருந்த கவர்னரு தொரையப் பாத்து எப்படியோ கையெழுத்து வாங் கீட்டாரு. ஒடனே சட்டத்த வெளிய வுட்டுட்டாக.''

''என்ன சட்டம்.''

''அரிசனங்க கோயிலுக்குள்ள போறதுக்கு உரிம உண்டு. அது சட்டத்துக்கு எதிரானதில்ல.''

''அப்ப அரிசனங்க செஞ்சது சட்டப்படி சரின்னு ஆயிப்போச்சு.''

''அத்தோட சச்சரவு முடிஞ்சது. எட்டுப் பேரவும் காப்பாத்தியாச்சு. கீச் சாதிக்காரங்களுக்கு நல்ல புள்ளையாவும் ஆகியாச்சே. கூத்து என்னன்னா ஒரு வருசத்துக்கு முந்தி மாகாணச் சட்ட சபையில அரிசன மெம்பரு ஒருத்தரு அரிசனங்க கோயிலுக்குள்ள போக அனுமதிக்கணும்னு கொண்டுவந்த தீர்மானம் நெறவேற வுடமாத் தோக்கடிச்ச புண்ணியவாளன் இதே பிரதம மந்திரிதான்.''

''ஓட்டுக்காகக் கோயிலுக் கதவத் தொறந்துவுட்ட மகராசனும் இவருதான்.''

''பெராமணச் சாதி அர்ச்சகருகளும் பட்டருகளும் திங்கக் கெழமையில ருந்தே கோயில வுட்டு வெளியேறீட்டாக. அண்ணைக்கு மொறகாரரா இருந்த பட்டரு காசிநாத சாமி மட்டும் எண்ணைக்கும்போல கோயிலுக் காரியங்களக் கவனிச்சுக்கிட்டுவந்தாரு. மத்த சாதி ஊழியருகளும் வெளியேறல.''

''போனவுக அப்படியே இருந்துக்கிருவாகளா. பெழப்புக்கு வழி வேணுமே.''

''அவசரச்சட்டம் வெளியான ஒடன செவகாசி செவன் கோயிலு தரும கர்த்தா எல்லாரும் முழிச்சுக்கிட்டாக. கோயிலுக்குள்ள வந்து சாமி கும்புடுங் கன்னு நாடாருகளக் கூப்புட்டாக. அவசரச் சட்டப்படி இன்ன தேதியிலதான் கீச்சாதிக்காரங்க கோயிலுக்கள்ள போகணும்னு நாளுக் குறிச்சிருந்தாக. ஆனா அதுக்கு மூணு நாளைக்கு முந்தியே நாடாருக மட்டும் போறதுன்னு முடிவாச்சு.''

''அதெதுக்கு.''

''நாடாருகளும் அரிசனங்களும் வேறவேறன்னு வித்தியாசப்படுத்திக் காட்றதுக்குத்தான்.''

''ஓகோ...''

''தருமகர்த்தா அத்தன பேரும் அம்மன் கோயிலுக்கே போயிட்டாக. அவுக முன்னால நடக்க நாடாருக கூட்டமா செவன் கோயிக்குப் போனாக. அங்க நாடாருகள எதிர்கொண்டு சகல மரியாதையும் செஞ்சு உள்ள கூட்டீட்டுப் போனாக. இவுக ஆசதீரச் சாமியக் கும்புட்டாக. கொண்டாட்டத்துக்குச் சொல்லணுமா.''

''தீட்டுக் கழிஞ்சு ஒசந்த சாதிக்காரராயிட்டாக.''

''பெறகு அந்தந்த ஊருகள்ல கச்சிக்காரங்க கீச்சாதிக்காரங்களக் கூட்டீட்டு மேச்சாதிக்காரங்களோட கோயிலுக்குள்ள போயி சாமி கும்புட்டாக... அரி சனங்க அதுல அம்புட்டு அக்கற காட்டல.''

''ஏன் மச்சான்.''

''சொத்துசொகம் பணம்னு சேந்தப் பெறகு மருவாதி தானாத் தேடி வரும். அதுவரைக்கு நீங்களுமாச்சு ஒங்க கோயிலுமாச்சு. நீங்க கூடிப் பேசிச் சட்டம் போட்டுத்தான் கோயிலுக்குள்ள போயிச் சாமி கும்புடணுமாக்கும். அப்படிப் பட்ட சாமி எங்களுக்குத் தேவையே இல்ல. எங்களுக்கின்னு எத்தனையோ சாமி இருக்குது. பெழப்பப் பாக்கிறத வுட்டுட்டு வம்புதும்பெல்லாம் எங்களுக்கு வேணாம்னு ஒதுங்கிக்கிட்டாக.''

''அது சரிதான. கோயிலுக்குள்ள போயிட்டதால மட்டும் மேச்சாதிக் காரனாயிறப்போறானா. இல்ல மேச்சாதிக்காரந்தான் இவனச் சேத்துக்கிறப் போறானா. நாட்டுக்கு நல்ல தொர வந்தாலும் தோட்டிக்குச் சொம எறங்காது மச்சான்.''

''வாஸ்தவமான பேச்சு மாப்பிள.''

## 2. புது மீனாட்சி

வருணாசிரம ஸ்வராஜ்ய சங்கத் தலைவர் ஆறுபாதி நடேசய்யரின் மங்கள நிவாசம் பங்களா நிரம்பி வழிந்தது. மீனாட்சியை வணங்குவதற்காக தானப்ப முதலி தெருவில் பிராமணர்கள் காத்துக்கிடந்தார்கள்.

விரைவிலேயே பங்களாவுக்கு முன்னால் கிடந்த காலி மனையில் தனிக் கோயில் எழும்பியது. கோயில் முற்றத்தில் ஓலைப் பந்தல் போட்டு அங்கே பூசை புனஸ்காரங்கள் நடந்தன. கோயிலுக்குப் பக்கத்தில்தான் தஞ்சாவூர் வெங்கட்ட ராமய்யர் வீடு இருந்தது.

தானப்ப முதலி தெருவருகே பேச்சியம்மன் கோயில் ரஸ்தாவில் குடி யிருக்கும் லேட் பத்பனாமய்யரின் பாரி பாகீரதியம்மாள் சாமிக்கடுக்காமல் நடந்துவிட்ட சம்பவத்தை நினைத்து ஆத்திரத்தைக் கொட்டி ஆவேசமாகப் பாடியபடி கும்மிப் பாட்டு எழுதிக்கொண்டிருந்தாள்.

''ஆஸேது ஹிமய மலை வரையில் - அங்கே
எத்தனையோ ராசாக்கள் ஆண்டார்கள்
ஆலயப் பிரவேச மென்ற அநீதிகளைக்

கனவிலும் நினையார் மனந்துணியார்
அந்த நாளில் இந்தச் சண்டாளர்கள் இல்லையோ
அவர்கள் இன்றுதான் பூமியில் குதித்தனரோ.
------------------------------
ஆறுபேர் சண்டாளர்களை
அன்புடன் அழைத்துக்கொண்டு
ஒருவருக்கும் தெரியாமல்
உள் நுழைந்தார் திருடனைப் போல்
------------------------------
என் தாயைப் பறையர் கையில் ஒப்புவித்துப்
பவிஷுடன் மார் தட்டுகிறார் பிரதம மந்திரி.''

மங்கள பங்களாவுக்குப் போவோம் வாருங்கள் என்று பக்தர்களை அழைத்தாள் :

''ஆலய மொன்று இயற்றி
ஆடவர் ஸ்திரீ பலருக்கு
ஆகம வித்தை பயிற்சி
அரும் உபன்யாஸம் இயற்றி
வித்வத் கோஷ்டிகளுடன் கூட
வேகமுடன் தெரிசித்து
பக்தியுடன் ஸத் காலேட்சபம்
செய்துதான் வசித்திடுவோம்.''

புதிய மீனாட்சி கோயில் அஞ்சாறு வருசம் நிலைத்திருந்தது. பிறகு இடிந்து இருந்த இடம் தெரியாமல் தொலைந்துபோய்விட்டது. பழைய கோயிலை விட்டு வெளியேறிப் போன பிராமண ஊழியர்கள் தாக்குப்பிடிக்க முடியாமல் அங்கேயே திரும்பி வந்துவிட்டார்கள். மீனாட்சி சன்னதியில் அவர்களது மணியொலியும் மந்திரமும் ஓங்கியொலிக்கத் தொடங்கின.

## 3. தானான தனனன்னா

இலை குலுங்காத பின்சாமம். தொலைவில் வெள்ளைக் குதிரைகள் விரண்டோடும் குளம்பொலி மெல்ல அதிர்கிறது. வலம்புரியின் எக்காளமும் கோயில் மணியின் குதூகலமும் ஓங்கி ஒலிக்கும்போது குளம்புகளின் வேகம் கூடுகிறது.

கோழிமடத்துக்குள்ளிருந்து கொக்கரிப்பில் வெளியேறும் கொண்டைப்பூச் சாவல் கூரை மீதேறிக் கும்மாளமிட்டுக் கூவுகிறது.

''விடுதல வந்துருச்சு டோய்... விடுதல வந்துருச்சு டோய்...''

வேப்ப மரத்திலிருந்து கரிச்சான் குருவி வேகமாக ஒத்துப்பாடுகிறது.

''வந்துருச்சு... வந்துருச்சு...''

கழுத்தில் சங்கிலி பிணைத்திருந்த பசுமாடு பலமாக ஆமோதிக்கிறது.

''ஆமா... ஆமா...''

கண்ணில் உறக்கத்தை இன்னும் மிச்சம் வைத்திருக்கும் எருமை மேலுதட்டால் கேட்கிறது.

''எங்க... எப்ப...''

ஊர்க்குருவிகள் உருண்டுஉருண்டு சலசலக்கின்றன.

''இங்க... ராத்திரி...''

மாரி மூலையிலிருந்து மடிகாது நாய் கொட்டாவி நெரிப்பில் குழறுகிறது.

''அப்படியா...''

பெண்கள் மண்சட்டியில் சாணிப்பால் கரைத்து முற்றம் தெளிக்கும் குரல் தொடுத்துக்கொண்டே போகிறது.

''நல்லது... நல்லது...''

''ஆருக்கு... ஆருக்கு...''

''நமக்கு... நமக்கு...''

வானத்துக்குள் சிறைப்பட்டுக் கிடக்கும் பொழுது வெயில்கொண்டு சுவரை இடித்துத் தகர்த்து விடுதலையடைந்துவிட்டதை தோப்புக் குயில் சொகமாகக் கூவி அறிவிக்கிறது.

''பொழுது... வருது...''

காடியில் கட்டுண்டு கிடக்கும் காளைகள் தளை களைந்து வயிறு நிறைந்த சுதாரிப்பில் கொட்டாரத்துக்கு நடந்து மோக்காலுடன் கழுத்தைப் பிணைத்துக் கொள்கின்றன.

வயல்வெளியில் நாற்று முடிகளைப் போட்டு விளையாடும் பெண்களின் நடவுப் பாட்டு காதில் குளிர்கிறது.

''இருட்டுக்குள்ளே''
''தானன்னா''
''இருந்ததெல்லாம்''
''தனனன்னா''
''வெளிச்சத்துக்கு''
''தானன்னா''
''வெளிய வரும்''
''தனனன்னா.''

கம்மாக் கரையில் கவுந்த தலை நிமிராமல் கடந்து செல்லும் செம்மறிக் கூட்டத்தின் காதுகள் சீராக அசைந்து பின்பாட்டுப் பாடுகின்றன.

''தானான தனனன்னா
தனனான தானன்னா.''

## 4. நில்லும் பிள்ளாய்

செல்லும் பிள்ளாய் செல்லும் பிள்ளாய் - சற்றே
நில்லும் பிள்ளாய் நில்லும் பிள்ளாய்
காவல் தெய்வம் அனுப்பிவைத்த தூதுவன்நான் - அந்த
தேவலோகச் சேதிசொல்லும் பூதகணம்
உள்ளதை உள்ளபடி சொல்லவந்தேன். - நீர்
உண்மையை நல்லபடி கேட்கவேணும்.

அதொரு காலம்.

தென் கோடியில் முப்பெரும் கடல் சூழ நீருக்குள் ஆழ வேரூன்றி வடக்காக வளர்ந்து விரிந்து கிழக்கு மேற்காகக் கிளைவிரித்துப் படர்ந்துகிடந்தது பெருந் தேசம். வானுயர்ந்த மலைகள். மரங்களடர்ந்த கானகம். வற்றாத நதி நாளங் களால் வளங்கொழிக்கும் சமவெளிகள். கடல்கள் பெற்ற கழிமுகங்கள். மரம் உதிர்த்த கனிகளாக மிதக்கும் கடல்தீவுகள்... பெருந்தேசத்தின் அழகை அருந்தி மாளாது.

ஏற்ற இறக்கங்களிலும் சமவெளிகளிலும் மக்கள் பரந்து வாழ்ந்தார்கள். பல இனத்தவர்கள். பல மதத்தினர். பல மொழியினர்.

ஒரே இனத்தில் பல மதங்கள். ஒரே மதத்தில் பல இனங்கள். ஒரே இனத்தில் பல மொழிகள். ஒரே மொழியில் பல இனங்கள். ஒரே மதத்தில் பல மொழிகள். ஒரே மொழியில் பல மதங்கள்.

இந்துக்காரர்கள் அதிகம். இன்னும் துலுக்கர் தலப்பாக்காரர் அமணர் சாக் கியர் பார்சியர் வேதக்காரர்... சிறுசிறு கும்மல்களாக. சிற்சில இடங்களில் பெரும்பான்மையாக.

இந்துக்காரர்களுக்கு மேலோகத்தின் முப்பத்து முக்கோடி தேவர்களும் தெய் வங்கள்தான். அவரவருக்கு உகந்த வடிவங்களில் வணங்கினார்கள். அவர்களில் ஆரியர் சத்ரியர் வைசியர் சூத்திரர் என நால்வகை வருணம் உண்டு. அனைவரும் படைப்புக் கடவுளின் அங்கங்களிலிருந்து பிறந்தவர்கள். இவையன்றி தீட்டுச் சாதிகளும் உண்டு. அவர்கள் கடவுளிடமிருந்து பிறக்கவில்லை.

துலுக்கர்களுக்கு ஒரே கடவுள்தான். அவர் அல்லா. உருவமோ வடிவமோ கிடையாது. துலுக்க ராசாக்கள் ஆண்டபோது பல லட்சம் இந்துக்காரர்கள் துலுக் கர்களாக மாற்றப்பட்டார்கள். பெரும்பாலோர் தீட்டுச் சாதியினர். சொந்த மதம் புறக்கணித்ததால் அங்கேயாவது மரியாதை கிடைக்குமென்ற நம்பிக்கை.

தலப்பாக்காரர்களுக்குச் சத்தியம் மட்டும்தான் கடவுள். வேதக்காரர் களுக்குக் கர்த்தர். மற்றவர்களுக்கு அவரவர் விருப்பப்படி.

மேல் பகுதியில் அல்லாவூரைச் சுற்றித் துலுக்கச் சீமை. துலுக்கர்கள் பெரும் பான்மை. தொழில் நிமித்தம் வந்து குடியேறிய இந்துக்காரர்களும் தலப்பாக் காரர்களும் சிறுபான்மை. அவர்களின் செழிப்பான வாழ்க்கை துலுக்கர் கண்களை உறுத்தியது.

கிழக்குப் பகுதியில் தலையூர்ச் சீமை. நிறைய இந்துக்காரர்கள். கணிசமாகத் துலுக்கர்களும் தலப்பாக்காரர்களும். தலையூர் பெருந்தேசத்துக்குத் தலைமை யிடம். நிறைய ராசாக்கள் அங்கிருந்துதான் ஆண்டார்கள்.

கீழக் கடலோரம் காளியூர்ச் சீமை. காளியூரிலும் அருகிலும் இந்துக்காரர் களும் துலுக்கர்களும் இருந்தார்கள்.

வடக்குப் பகுதியில் அதாவது துலுக்கச் சீமைக்கும் கிழக்கே பஞ்சநதிகள் கொஞ்சும் கோதுமைச் சீமை. மேல்பகுதியில் துலுக்கர்கள் அதிகம். கீழ்ப் பகுதி யில் தலப்பாக்காரர்களும் இந்துக்காரர்களும். அங்கேதான் தலப்பாக்காரர்களின் தங்கக் கோயில் இருந்தது. ஊரின் பேர் தங்கக்கோயிலூர்.

இந்துக்காரர்களுக்குப் பசு புனிதமானது. பசுவைக் கொன்றால் பெரும் பாவம். துலுக்கர்களுக்குப் பசுக் கறி ருசியான உணவு. பன்றி அருவருப்பான மிருகம்.

கோயில்களிலும் அரண்மனைகளிலும் செல்வங்களைக் கொள்ளையடித்து ருசி கண்டவர்கள் வேறெதுக்கோ வந்தவர்கள் போனவர்கள் என்று யாரெல் லாமோ பெருந்தேசத்தைக் கூறுபோட்டுக்கொண்டு ஆண்டார்கள். கடைசியாக வணிகம் செய்ய வந்த வெள்ளைக்காரர் கையில் தேசம் சிக்கிக்கொண்டது. மக்க ளுக்கு நல்லதும் செய்தார்கள் கெட்டதும் நடந்தது. பஞ்சம் பசி பட்டினி வரிச் சுமை என்று மக்கள் அல்லாடினார்கள்.

வெள்ளையரிடமிருந்து பெருந்தேசத்துக்கு விடுதலை கேட்டு விடுதலைக் கட்சி நீண்ட காலம் போராடிவந்தது. எப்படி வாங்கணும் என்பதில் குழப்பம். அடித்துப்பிடித்துச் சண்டையிடாமல் அமைதியாக வாங்கணும் என்று மகா மனுசன் தீர்மானமாக இருந்தார். சண்டையிட்டு வாங்கணுமென்று பிறர் சொன் னார்கள். எப்படிச் சண்டையிடணும் என்பதில் சிக்கல்.

விடுதலைக் கட்சியில் மேல்சாதி இந்துக்காரர்கள் அதிகம். அதனால் அதை இந்துக் கட்சியென்றே துலுக்கர்கள் நினைத்தார்கள். பிரிந்துபோய் தங்களுக் கென்று தனிக் கட்சி ஆரம்பித்தார்கள். ஒருவரையொருவர் குறைகூறி வெறுப்பை வளர்த்துக்கொண்டார்கள்.

விடுதலை கேட்டு தேசமெங்கும் உரிமைக் குரல்கள் ஒலிக்கத் தொடங்கின. அங்கங்கே கலவரம் தலைதூக்கியது. நிலைமை முற்றுவதற்குள் விடுதலை கொடுத்துவிடணுமென்று வெள்ளையர் முடிவுசெய்தார்கள். அந்தப் பொறுப்பை மகாராணியின் கொள்ளுப்பேரனிடம் ஒப்படைத்துத் தலையூருக்கு அனுப்பி வைத்தார்கள்.

வெள்ளைத்துரைக்கு மிகப் பெரிய பொறுப்பு. எல்லாரிடமும் வெளிப் படையாகப் பேசி சுமுகமான முறையில் தேசத்தை ஒப்படைத்துவிடலாம் என்று நம்பிக்கையுடன் இருந்தார்.விடுதலை வாங்குவதில் விடுதலைக் கட்சியைச் சேர்ந்த மகாமனுசன் பூமனுசன் இரும்பு மனுசன் ஆகியோரும் துலுக்கர் ஆட்சி யில் உயர்ந்த மனுசனும் மும்முரமாக இருந்தார்கள். வெள்ளைத் துரை அவர் களை மரியாதையுடன் நடத்தினார்.

மகாமனுசன் பரம சாது. ஆனால் பிடிவாதக்காரர். முக்கியப் பிரச்சினை யென்றால் மக்களைத் திரட்டி சர்க்காரைக் கலங்கடித்துவிடுவார். பட்டினி கிடந்து முரண்டுபிடிப்பார். அயல்தேசத்தில் படித்து வந்தாலும் அந்த நாகரிக மோகத்தில் திளைக்காமல் சொந்தத் தேசத்தின் ஏழை மனுசனாக வாழ்ந்தார்.

பூமனுசன் மலைச் சீமைப் பிராமணர். அயல்தேசத்தில் மெத்தப் படித்தவர். அவர் சட்டையில் எப்போதும் வாடாத ரோசாப்பூ பூத்திருக்கும். அவருக்கு மகா மனுசன்தான் குரு. இருந்தாலும் இருவர் பார்வையும் வெவ்வேறாக இருந்தது. குரு பழமையிலும் சீடர் புதுமையிலும் ஊறியவர்கள்.

இரும்பு மனுசன் பூமனுசனுக்குத் துணையாக இருந்தார். நினைத்ததைச் செய்து முடிக்கும் வல்லமை கொண்டவர். அவரது வல்லமையும் பூமனுசனின் மென்மையும் ஒத்துப்போனதாகச் சொல்ல முடியாது.

உயர்ந்த மனுசனும் அயல்தேசத்தில் படித்தவர்தான். நாகரிகமானவர். பிற துலுக்கர்களும் அப்படி இருக்கணுமென்று விரும்புகிறவர். எதிலும் வெட்டு

ஒண்ணு துண்டு ரெண்டு என்று கறாராகப் பேசக்கூடியவர். மது அருந்துவார். புகைபிடிப்பார். பன்றிக் கறி தின்பார். நுரையீரலைத் தின்றுகொண்டிருக்கும் காச நோய் அவர் கணக்கை முடிக்கக் கெடுவைத்துவிட்ட பிறகும் அதைப் பொருட் படுத்தாமல் வேலைகளில் ஈடுபடுவார். துலுக்கர்களுக்கு அவர் நேரில் வந்த அல்லா.

பலசுற்றுப் பேச்சுவார்த்தைகளுக்குப் பின் பெருந்தேசத்துக்கு விடுதலை கொடுக்க முடிவாயிற்று. வெள்ளைத் துரை ரெண்டு மாசம் தள்ளி நாளும் குறித்து விட்டார். முழுத் தேசமாக விடுதலைக் கட்சியின் கையில் கொடுப்பதில் உயர்ந்த மனுசனுக்குச் சம்மதமில்லை. விடுதலைக் கட்சியோ இந்துக்காரர் கட்சி. விடு தலைக்குப் பின் அவர்கள் துலுக்கர்களை மிதித்து நசுக்கிவிடுவார்கள் என்ற அச்சம் அவருக்கு.

ஆகவே துலுக்கர்களுக்கென்று தனியாக ஒரு தேசம் வேணும். எல்லாவற்றி லும் வேறுபட்டிருக்கும் இந்துக்காரர்களுடன் இணைந்து வாழ முடியாது. பெருந் தேசத்தைப் பிரிப்போம் இல்லையென்றால் அழிப்போம். உயர்ந்த மனுசன் முடிவை உறுதியாகச் சொல்லிவிட்டார்.

அதெப்படிப் பிரிக்கப்போயிற்று. முழுத் தேசமும் அப்படியே கைமாறணும். இந்து தேசம் நமது தேசம். இது இந்துக்காரர்களின் பிடிவாதம்.

விடுதலைக் கட்சிக்காரர்களுக்கு ஆத்திரம். எக்காரணத்தைக் கொண்டும் விடுதலை இதுக்கு மேல் தள்ளிப்போகக் கூடாது. இவ்வளவு காலம் பட்டு அழுந்தி யாயிற்று. விடுதலையைச் சடுதியில் வாங்கி தேசத்தை நாமே ஆளணும். அதுக்குத் தடங்கல் வரக் கூடாது. வெண்ணெய் திரளும்போது சட்டி உடைந்த கதையாகி விடக் கூடாது. துலுக்கர்கள் பிரிந்துபோக அவர்கள் ஒத்துக்கொண்டார்கள்.

மகாமனுசனுக்கு வேதனை சொல்ல முடியாது. ரெட்டைக் குழந்தையை வெட்டி எறிவதா. அதன் விளைவுகள் விபரீதமாக இருக்குமே. அதை யாரும் எண்ணிப்பார்க்கவில்லையா. இந்துக்காரர்களும் துலுக்கர்களும் கூடி வாழ்வதே நல்லது. அந்தக் கனவைத் தகர்த்தெறிந்துவிட்டார்களே. என் பிணத்தின் மீதுதான் தேசம் துண்டாடப்படணும்.

வெள்ளைத் துரை அழைத்துப் பேசினார். பெருந்தேசத்தைத் துண்டாடக் கூடாது. முழுத் தேசத்தையும் உயர்ந்த மனுசனே ஆளட்டும் அதுக்குப் பூரண சம்மதம். மகாமனுசன் மனசில் உள்ளதைச் சொல்லிவிட்டார்.

இதுக்கு விடுதலைக் கட்சிக்காரர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. ஏன் உயர்ந்த மனுசனே ஏற்கவில்லை. விடுதலையைக் கொடுத்ததும் நடையைக் கட்டுங்கள். மற்றதைப் பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. அவர்களாயிற்று நாங்க ளாயிற்று. இப்படித் தெளிவாகச் சொல்லிவிட்டார்.

இதுக்கு மகாமனுசனை இணங்க வைக்கணுமே. அவர் வாயிலிருந்து வந்தால் தானே மக்கள் ஏற்றுக்கொள்வார்கள். அவரைச் சமாதானப்படுத்தினார்கள். ஆண்டி சொல் அம்பலம் ஏறவில்லை. இதன் விளைவுகளை நீங்களே அனுபவியுங்கள் என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

பிறகென்ன. பெருந்தேசத்தை இந்து தேசமாகவும் துலுக்க தேசமாகவும் பிரித்தே கொடுக்க முடிவாயிற்று. சில இந்துக்காரர்களுக்கு ரத்தம் கொதித்தது. உயர்ந்த மனுசனும் வெள்ளைத் துரையும்தானே இந்தப் பிரிவுக்குக் காரணம்.

அவர்களை விட்டுவைக்கக் கூடாது. இருவரையும் கொலைசெய்யத் திட்டமிட்டார்கள். முயற்சி வெற்றியடைவில்லை.

விடுதலைக்கான வேலைகள் துரித கதியில் நடந்தன. ஏற்கெனவே நாள் குறித்தாயிற்று. ஆவணி மாசம் முதல் தேதி. வெள்ளிக்கிழமை.

சோதிடம்பார்த்தார்கள். வெள்ளிக்கிழமை பொருத்தமாக இல்லை. வியாழன் நள்ளிரவு நல்ல நேரம். அமோகமாக இருக்கும். சோதிடர் வாக்கு விடுதலைக் கட்சிக்கு ஏற்பு.

இந்து தேசத்தின் கொடியை வடிவமைத்தார்கள். மூணு வர்ணம். காவி வெள்ளை பச்சை. மகாமனுசன் நூல் நூற்கும் ராட்டையின் அடையாளமாக நடுவில் ராட்டைச் சக்கரத்தை வைக்கலாமா என்று ஒரு யோசனை. யாரும் ஒத்துக்கொள்ளவில்லை. அசோகச் சக்கரத்தை வைக்கலாமே. சரி அப்படியே செய்யலாம். பெரிய பிரச்சினை தீர்ந்தது.

இந்துக்காரர்களுக்கும் துலுக்கர்களுக்கும் தனித்தனித் தேசங்கள் பிறக்கப் போகும் சேதி எங்கும் பரவியது. இதுவரை அண்டை வீட்டாராக ஊர்க்காரராக அன்னியோன்னியமாக வாழ்ந்தவர்கள் இப்போது வெறுப்புடன் அன்னியமாகப் பார்த்துக்கொண்டார்கள். உனக்குத்தான் தனி தேசம் இருக்கிறதே. இங்கென்ன வேலை. அங்கே போக வேண்டியதுதானே.

வெறுப்பில் நெய்யூற்றினார்கள். இந்துக் கோயில்களில் சாக்கு மூட்டைகள் வீசியெறியப்பட்டன. அவற்றுக்குள் அப்பாவிப் பசுக்களின் தலைகள். அல்லா கோயில்களுக்குள்ளும் மூட்டைகள். பன்றித் தலைகள். வெறி கொழுந்துவிட்டு எரிந்தது.

விரட்டித் துரத்தும் படலம் ஆரம்பமானது. துலுக்கர்கள் இந்துக்காரர்களையும் தலப்பாக்காரர்களையும் துரத்தினார்கள். இந்துக்காரர்களும் தலப்பாக்காரர்களும் கூட்டணி சேர்ந்துகொண்டு துலுக்கர்களை விரட்டினார்கள். கையில் சிக்கியவர்களைக் கொன்று வீசியெறிந்தார்கள்.

இந்துக்காரப் பெண்களைப் பிடித்து நெற்றிப்பொட்டை அழித்தார்கள். ஆடைகளைக் களைந்து பர்தாவை அணிவித்து அல்லாவின் பிள்ளைகளாக்கி அழகுபார்த்தார்கள். மார்பில் பிறையைப் பொறித்தார்கள். நீலகண்டனின் சடைமுடியை அலங்கரித்து ஒளிவீசும் இளம்பிறை மாதிரி.

இன்னொரு புறம் துலுக்கப் பெண்களின் பர்தாக்கள் நெருப்பில் கருகின. வெற்று நெற்றியில் குங்குமம் ஏறியது. கழுத்தில் துளசி மாலை. கை கால் தொடைகளில் பச்சை குத்தினார்கள். திரிசூலம் வேல் அபயக் கரம்...

வெறி அடங்கவில்லை. இருபுறமும் விலங்குகளைப் போல் பெண்களை வெட்டவெளியில் கிடத்தி ''உன் கருவில் என் வாரிசு'' என்று உரக்கக் கூவியபடி கூட்டு வழிபாடாகப் புணர்ந்தார்கள்.

கர்ப்பிணிப் பெண்களை விட்டுவைக்கவில்லை. வயிற்றைப் பிளந்து சிசுவைக் கொன்று ''வருங்கால எதிரி ஒழிந்தான்'' என்று வெற்றிக் களிப்பில் சுற்றிச்சுற்றிக் கூத்தாடினார்கள். அதைக் கேட்டபடி தாயின் உயிர் மெல்லப் பிரிந்தது.

இது மட்டுமா. இன்னும் கேளும் பிள்ளாய்.

கோதுமைச் சீமையில் நடந்த கொடுமைக்கு அளவே இல்லை.

ஒரு துணி ஆலையில் தறியோடும் துலுக்கத் தொழிலாளர்கள் சக தலப்பாத் தொழிலாளர்களைக் கொன்றுகுமித்தார்கள். பாசனக் கால்வாயில் இரு பிரிவுப் பிணங்களும் நூற்றுக் கணக்கில் கலந்து மிதந்தன. பச்சை வயல்வெளிகளில் ரத்தம் பாய்ந்தது.

இன்னொரு ஊர். கடை வீதியில் ஒரு தோல் தொழிலாளி கடை வைத் திருந்தார். அவர் துலுக்கர். ஒரு தலப்பாக்கார வியாபாரி அவருக்கு வழக்கமாகத் தேயிலை கொண்டுவந்து கொடுப்பார். இருவருக்கும் பதினஞ்சு வருசப் பழக்கம். ஒரு நாள் வழக்கம்போல் தேயிலை கொடுப்பதற்காகப் பித்தளைத் தராசை எடுத்துப் பிரித்தார் தலப்பாக்காரர். துலுக்கரின் முகம் மாறி வெறுப்பைக் கொட்டியது.

''இவனைக் கொல்லுங்கள்.''

பத்துப் பனிரெண்டு முரட்டுத் துலுக்கர்கள் ஓடி வந்தார்கள். ஒருவர் தேயிலை வியாபாரியின் முட்டியில் வெட்டினார். அடுத்து அவரது தொண்ணூறு வயசுத் தகப்பனையும் ஒரே மகனையும் கொன்றார்கள். அவர் சுயநினைவை இழந்து கொண்டிருந்தார். அப்போது பதினஞ்சு வருசமாகப் பழக்கமான துலுக்கர் அவரது பதினெட்டு வயசு மகளைத் தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு போவது மங்க லாகத் தெரிந்தது.

அடுத்த ஊர். ஒரு பெரிய தானியக் கிட்டங்கிக்குள் அந்த ஊரின் ஒட்டு மொத்த இந்துக்காரர்களையும் தலப்பாக்காரர்களையம் ஆட்டுமந்தைபோல் அடைத்துவைத்து சகட்டுமேனிக்குச் சுட்டுத்தள்ளினார்கள் துலுக்கர்கள். ஒரு உயிர்கூடத் தப்பவில்லை.

ஒரு சிறு கிராமம். முன்னூறு இந்துக்காரர்களை அல்லா கோயிலுக்கு அழைத்துப்போனார்கள். கோயிலுக்குள் மண்டியிடச் சொல்லி அல்லாவின் வாசகங்களை ஒருவர் வாசித்துவிட்டுக் கேட்டார்.

''நீங்கள் துலுக்கராக மாறினால் வாழ்வு. இல்லையென்றால் சாவு. உங்கள் விருப்பம் எப்படி.''

இந்துக்காரர்கள் வாழவே விரும்பினார்கள். துலுக்கராக மாறிப் புதுப் பேர் களைச் சூடிக்கொண்டு அல்லாவின் வாசகங்களை அரங்கேற்றினார்கள்.

பிறகு கோயில் முற்றத்துக்கு வந்தார்கள். அது பசுவின் மாமிசம் வறுக்கும் இடம். மாட்டுக்கறியை மென்று தின்றார்கள். வெளியேறவிருந்த வாந்தி அச்சத் தில் அமுங்கவிட்டது.

அவர்களில் ஒரு பிராமணர். அவருடன் மனைவி மூணு குழந்தைகள். இந்த வைபவத்தைக் கொண்டாடும் பொருட்டு சில முக்கியப் பண்டங்களை வீட்டி லிருந்து எடுத்து வரணுமென்று அனுமதி கேட்டார். புகழ்ச்சியான வார்த்தை களில் மயங்கிய துலுக்கர் அந்தக் குடும்பத்தை அனுப்பிவைத்தார்கள்.

பிராமணர் போனதே சரியென்று வீட்டில் ஒளித்துவைத்திருந்த கத்தியை எடுத்து மனைவி மக்களின் கழுத்தை அறுத்து தானும் மார்பில் குத்திக்கொண்டு உயிரை மாய்த்துக்கொண்டார். வறுத்த மாட்டுக்கறி அல்லா கோயிலில் அவருக் காகக் காத்திருந்தது.

இந்துக்காரர்களையும் தலப்பாக்காரர்களையும் அழித்தொழிப்பதற்குத் துலுக்கரிடம் வேறு காரணமும் இருந்தது. அவர்களது சொத்துக்களைக் கொள்ளை யடித்து அபகரித்துக்கொள்ளணும். அப்படியொரு வேட்டைக்காக வந்த துலுக் கக் கும்பலிடமிருந்து மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள தலப்பாக்காரர் ஒருவர் தன் மனைவியையும் பெண்களையும் நெருப்பு மூட்டச் செய்து தானும் கருகி மாண்டார்.

இந்துக்காரர்களும் தலப்பாக்காரர்களும் நடத்திய வெறியாட்டம் இன்னும் கொடியது. கண்ணில் பட்ட துலுக்கரையெல்லாம் விரட்டிப் பிடித்து வெட்டிச் சாய்த்தார்கள். குத்திக்குதறினார்கள். கோடாலியால் தறித்தார்கள். தோட்டாக் களால் துளைத்தார்கள். பெண்களைக் கற்பழித்துக் கொன்றார்கள். ஒரே மாதிரி யாக மார்பகங்கள் அறுந்த நிலையில் பல சடலங்கள் கிடந்தன. பெண்களைத் தோளில் போட்டுக்கொண்டு போகும்போது கேட்ட அலறலும் கதறலும் நெஞ்சை அறுத்தன. எத்தனையோ வருசங்களுக்கு முந்தி துலுக்க ராசாக்கள் செய்த கொடுமை களுக்கு இப்போது பழிதீர்த்துக்கொண்டார்கள்.

ஒரு கிராமத்தைச் சூறையாடிய தலப்பாக்காரர்களுக்குப் பசி தணியவில்லை. நாலு துலுக்கக் குழந்தைகளை அள்ளிவந்து வாணலியில் போட்டு பன்றிக் குட்டி களைப் போல் வறுத்து வைத்துவிட்டுப்போனார்கள். அந்த அளவுக்கு வெறுப்பு வேரோடியிருந்தது.

சில இடங்களில் தலப்பாக்காரர்களிடமிருந்து தப்பிப்பதற்காகப் பெண்கள் தற்கொலை செய்துகொண்டார்கள். அல்லது தற்காப்புக்காகக் குடும்பத்தினரால் கொலைசெய்யப்பட்டார்கள். ஒரு துலுக்கரைத் துண்டுதுண்டாக வெட்டி நாய்க்கு உணவாகப் போட்டார்கள்.

மூணு பிரிவிலும் வராத பார்சியர்கள் உயிர்பிழைக்க ஒரு வழி கண்டுபிடித் தார்கள். நாங்கள் துலுக்கரோ இந்துக்காரரோ தலப்பாக்காரரோ அல்ல. பார்சி யர்கள். எங்களைக் காப்பாற்றுங்கள் என்று எழுதி வீட்டுக்கு வெளியே தொங்க வைத்தார்கள். தலை தப்பியது.

இதுபோல் இன்னும் எத்தனையோ சம்பவங்கள். சொல்லட்டுமா.

## 5. தள்ளிப் போட்டிருக்கலாமே

ஓடும் பிள்ளாய் ஓடும் பிள்ளாய் - காரணம்
தேடும் பிள்ளாய் தேடும் பிள்ளாய்
இன்னும் கொஞ்சம் கேளும் - நின்று
இதுக்கு வழி கூறும்.

வியாழக்கிழமை மாலையிலிருந்தே தலையூரில் விடுதலைக் கொண்டாட் டங்கள் களைகட்டத் தொடங்கின. தெருக்களில் சிதறிக்கிடந்த ஆயிரக்கணக்கான பிணங்களைக் குப்பையைப் போல் கூட்டி அள்ளி ரத்தக் கறையைக் கழுவிச் சுத்தப்படுத்தினார்கள். ரத்தம் தோய்ந்த தலப்பாக்கள் வளையல்கள் செருப்புக்கள் எல்லாமே கலந்து கிடந்தன.

தெருக்களில் ரத்தக் கறையை மிதித்துக்கொண்டு லட்சோப லட்ச மக்கள் சோறு தண்ணீரை மறந்து கூடியிருந்தார்கள். ஒரெட்டுக்கூட நகர முடியாத நெரிசல். குழந்தைகளைக் கைமாற்ற முடியாத தாய்மார்கள் உயரே தூக்கிப் போட்டுப் பிடித்துக் களைப்பைப் போக்கிக்கொண்டார்கள். குழந்தை மழையைப் பார்க்க ஆனந்தமாக இருந்தது.

கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு வெள்ளைத் துரையால் அலங்கார மேடைக்கு வர முடியவில்லை. இந்து தேசத்தை ஆளப்போகும் பூமனுசன் மேடையில் காத்திருந்தார். அவர் சட்டையை அலங்கரித்த புது ரோசாப்பூ மெத்தச் சிவந்திருந்தது. ஒருவேளை செடிக்கு ரத்த நீர் பாய்ந்த செழிப்பில் பூத்த தாக இருக்கலாம்.

பிறக்கப்போகும் புதிய தேசத்தின் எல்லைகள்தான் என்ன. கலவரத்தில் கொலையுண்ட மக்கள் யார். பிழைத்தும் பிதற்றிக்கொண்டிருப்பவர்கள் எத்தனை பேர். எதுமே தெரியாத பூப்போன்ற மனுசன் அதிகாரம் கைமாறும் தருணத்தை எதிர்நோக்கி அமைதியாகக் காத்திருந்தார்.

வெள்ளைத் துரை மேடைக்கு வரச் சாத்தியமே இல்லை. நள்ளிரவு. வானு யரப் பறந்த வெள்ளையர் கொடி இறங்கி மூளியாக நின்ற கொடிமரத்தில் இந்து தேசத்தின் மூவர்ணக் கொடி உச்சிக்கு ஏறிப் புதிய தேசத்தின் உதயத்தைப் பறை சாற்றியது. வெள்ளைத் துரை காரில் நின்றபடி கைவிறைக்கக் கடைசி மரியாதை செலுத்தினார்.

அச்சமயம் மப்பும் மந்தாரமுமாக இருந்த வானத்தில் பளிச்சென்று வான வில் தோன்றி மக்களைப் பரவசத்தில் ஆழ்த்தியது. அடடா தேசக் கொடியின் வர்ணங்களை வானவில்லில் வரைந்து அருள்புரியும் ஈசனின் திருவிளையாடலை என்னவென்று சொல்வது. அதுக்குக் கொடுத்துவைத்திருக்கணும். கடவுளே துணையிருக்கும்போது நம்மை யாராலும் எதிர்த்து நிற்க முடியாது.

பல லட்சம் குரல்கள் பரவசத்தில் அதிர்ந்து நகரையே உலுக்கின. அருகில் மிக அருகில் ஒலிக்கும் ஓலங்கள் இடையிடையே மெலிந்து கேட்டன.

பூமனுசன் சற்று நடுங்கிய குரலில் சுருக்கமாகப் பேசினார்.

''உலகம் உறங்கிக்கொண்டிருக்கும் வேளையில் நமது தேசம் முழித்துக் கொண்டிருக்கிறது... நாம் பழைமையிலிருந்து புதுமைக்கு அடியெடுத்து வைக்கிறோம்...''

தேசம் முழித்துக்கொண்ட நள்ளிரவில் பழைமையில் தோய்ந்து பக்கிரி யாகத் திரியும் மகாமனுசன் தொலைவில் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். அவரது கடும் முயற்சியால் காளியூர்ச் சீமையும் கலவரமற்று அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தது.

வெள்ளிக்கிழமை. உயர்ந்த மனுசனுக்கு மற்றுமொரு நாளே. பூமனுசனைப் போல் கோள்களின் இயக்கம் பற்றிச் சோதிடர்களிடம் கேட்டறிந்து விடுதலைக்கு நேரம் குறிக்கவில்லை. வழக்கம்போல் காலை உணவு முடித்துவிட்டு நிதான மாகச் சென்று தேசக் கொடியை ஏற்றிவைத்தார். பகலில் துலுக்க தேசம் பிறந்தது.

தேசத்தை எப்படி ஆளப்போகிறோம் என்ற திட்டம் அவரிடம் இல்லை. சேதாரக் கணக்குத் தெரியாது. உயர்ந்த மனுசன் ரயில் அனுப்புவார் என்று இந்து தேசத்தில் ஒவ்வொரு நாளும் உயிரைக் கையிலேந்திக்கொண்டு காத்திருக்கும் மக்களைப் பற்றித் தெரியாது. அடுப்புமுதல் ஆயுதம்வரை சிறைச்சாலை முதல் தொழிற்சாலைவரை பணம் தங்கம் என்று அனைத்துப் பொதுச் சொத்துக் களையும் பங்குபாகம் பிரிப்பது பற்றியே அவரது சிந்தனை ஓடியது. மதுவைச் சுவைத்துப் பன்றிக் கறியை ருசித்து புகைக்குழாயைச் சப்பியபடி முதலில் பணத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

வெள்ளைத் துரைக்கோ நெருப்புத் துண்டுகளைக் கைமாற்றிவிட்ட ஆசு வாசம். ஊதிஊதி வலியைத் தணித்துக்கொண்டார். இருந்தாலும் எங்கோ சறுக்கிவிட்ட குற்றவுணர்வு நெஞ்சில் குத்தியது. நினைத்தது வேறு. நடந்தது வேறு. ரத்தம் சிந்தாமல் அதிகாரத்தை ஒப்படைத்துவிடலாம் என்ற நம்பிக் கையில் அல்லவா தேசத்துக்குள் எட்டு வைத்தோம். அது பொய்த்துப்போனதே. இங்கே ரத்த ஆறல்லவா ஓடிக்கொண்டிருக்கிறது. இன்னும் என்னென்ன நடக்கப்போகிறதோ. கட்டுப்படுத்த வழி தெரியவில்லையே.

தேசத்தைப் பிரித்தால் விளைவுகள் மோசமாக இருக்கும் என்று மகா மனுசன் சொன்னாரே. அந்தக் கிழவனின் தீர்க்கமான எச்சரிக்கையை உதாசீனப் படுத்திவிட்டோமோ. ஒரு வெள்ளையதிகாரி வரையப்போகும் எல்லைக் கோடுகள் எத்தனை உயிர்களைக் காவுகேட்கப் போகின்றனவோ. இது விடு தலையே அல்ல. மக்களின் மனசில் ஏற்பட்டுவிட்ட ஆழமான காயத்துக்குத் தடவும் களிம்பு. அவ்வளவே. புண் ஆற நீண்ட காலமாகலாம். ஆறாமலேகூடப் போகலாம்.

உயர்ந்த மனுசனுக்குள் நிரந்தரமாகிவிட்ட காச நோய் இன்னும் ஆறு மாசந் தான் விட்டுவைக்கும் என்ற சேதி வெள்ளைத் துரையின் காதில் விழுந்தது. ஆதங்கத்தில் மாய்ந்துமாய்ந்து சொல்லிக்கொண்டார்.

''அடடா விடுதலையை ஆறு மாசம் தள்ளிப்போட்டிருக்கலாமே.''

அன்றைக்குப் பிற்பகலில் வடக்கே பூநகரிலும் ஒரு கொடியேற்று விழா நடந்தது. இந்துக்காரர்களின் காவிக் கொடியேற்றம். ஐநூறு பேருக்குக் கூடியிருந் தார்கள். வெள்ளைத் துரையையும் உயர்ந்த மனுசனையும் கொல்லத் திட்ட மிட்டுத் தோற்றார்களே அவர்கள்தான்.

துடிப்பு மிக்க இளைஞர் ஒருவர் ஆவேசமாக உரையாற்றினார்.

''... நமது இந்து தேசத்தைப் பசுக்கொலை செய்யும் பாதகர்களுக்குப் பகிர்ந்து கொடுக்க இவர்கள் யார். அதென்ன அவர்களது பரம்பரைச் சொத்தா. தேசத்தைத் துண்டாடியவர்களை ஒழித்துக்கட்டணும். இதுக்கெல்லாம் காரணம் அந்த மகா மனுசன்தான். துலுக்கனாகப் பிறந்திருக்க வேண்டியவர். இந்துக்காரர்களின் வீரத்தை மழுங்கடித்தவர்...''

உரை முடிந்ததும் கொடியேற்றினார். அனைவரும் சபதமெடுத்துக்கொண் டார்கள்.

''நாம் நம்மை நம்புவோம். நம் வீரத்தை நம்புவோம்...''

கூட்டம் கலையும்பொது அந்த இளைஞர் வேடிக்கையாகச் சொன்னார்.

''என் பிணத்தின் மீதுதான் தேசம் துண்டாடப்படணும் என்று சொன்ன மகாமனுசன் இன்னும் உயிரோடுதான் இருக்கிறார்.''

அதே நாளில் மகாமனுசன் காளியூரில் இருந்தார். அன்று அவருக்குத் துக்க தினம். அந்தச் சீமையில்தான் அதிகம் கலவரங்கள் மூளக்கூடும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஓராண்டுக்கு முன் துலுக்கர்களின் நேரடி நடவடிக்கையால் பிணக்காடாகிப்போன காளியூர்த் தெருக்களிலும் வீடுகளிலும் மகாமனுசனின் நேரடி நடவடிக்கையால் இப்போது இந்துக்காரர்களும் துலுக்கர்களும் ஓரணியில் ஊர்வலம் போனார்கள். மக்கள் கூட்டம் மகாமனுசனை மனசார வாழ்த்தியது.

''நீங்கள் எங்களைக் காப்பாற்றினீர்கள்.''

மகாமனுசனுக்குத் துக்கத்திலும் சிறு சந்தோசம்.

கோதுமைச் சீமை. தங்கக்கோயிலூர். வெள்ளிக்கிழமை காலையிலேயே ஒரு கோரச் சம்பவம் நடந்து முடிந்திருந்தது. பழைய துலுக்க ராசாக்களின் கோட்டை யில் விடுதலைக் கொண்டாட்ட ஏற்பாடுகள் தடபுடலாக நடந்து கொண்டிருந்தன. அப்போது அருகிலுள்ள ஒரு பகுதியில் தலப்பாக்காரர் கூட்டம் பக்கத்து வீட்டுத் துலுக்கர்களைக் கொன்று சாய்த்தது. பெண்களை நிர்வாணக் கோலத்தில் நிறுத்தி அழகுபார்த்தது. பலமுறை பலவந்தமாகக் கற்பழித்தது. அச்சத்தில் நடுங்கிய பெண்கள் அலறினார்கள். கூக்குரலிட்டார்கள்.

தலப்பாக் கூட்டம் அவர்களை தங்கக் கோயிலுக்கு இழுத்துச் சென்றது. அங்கே பல தலைகள் கடவுளுக்குக் காணிக்கையாகின. ரத்தம் தெளித்த முற்றத்தில் தலப்பாக்கள் கூத்தாடிக் கொண்டாடின.

தங்கக்கோயிலூர் ரயில் நிலையம் அகதி முகாமாக மாறியிருந்தது. எங்கும் மக்கள் கூட்டம். துலுக்க தேசத்துக்குச் சொந்தமாகப்போகும் கோதுமைச் சீமை யின் மேற்குப் பகுதியிலிருந்து ஓடிவந்த இந்துக்காரர்கள். எத்தனை ஆயிரமென்று சொல்ல முடியாது. ஒவ்வொரு முகத்திலும் சோகம் துக்கம் பதட்டம் அச்சம் நிராதரவு... எல்லாமே படிந்திருந்தன.

உண்பது மலம் கழிப்பது அனைத்தும் அங்கேதான். உறங்கினார்களா என்று தெரியவில்லை. பைத்தியம் பிடித்தவர்கள்போல் அழுதுகொண்டிருந்தார்கள்.

துலுக்க தேசத்திலிருந்து வண்டிகள் வரும்போதெல்லாம் ஆவலுடன் ஓடு வார்கள். பிரிந்து வந்த உறவினர்களைத் தேடுவார்கள்.

''அரே ராம்லால்...''

''மேரா பேட்டா...''

முண்டியடித்துக்கொண்டு தேடி முடித்து ஏமாற்றத்தில் திரும்புவார்கள். உட்கார்ந்து தலையிலடித்துக்கொண்டு அழுது புலம்புவார்கள். ஆண்டாண்டு காலமாக வாழ்ந்த சீமை அன்னியமாகிவிட்டது. சொத்துசொகமெல்லாம் பறி போயிற்று. பல உயிர்களைப் பறிகொடுத்தாயிற்று. குடும்பங்கள் சிதறிவிட்டன. இனி எங்கே போவது. என்ன செய்வது. அழுது தீர்த்தாலாவது வேதனை குறையும்.

தப்பியோடி வருமுன்பும் வரும்போதும் பிறந்த குழந்தைகளுக்குத் தாய் மார்கள் அந்த நெரிசலிலும் பாலூட்டிக்கொண்டிருந்தார்கள். அவசரத்தில் அள்ளிப் போட்டுக்கொண்டு வந்த அனாதைக் குழந்தைகளின் ஏக்க அழுகை கேட்டது.

அடுத்த வண்டி வர வேண்டிய நேரம். நிலைய அதிகாரி கையில் சிவப்புக் கொடியுடன் கிளம்பினார். கூட்டத்தில் வழி கீறிக்கொண்டு வெளியேறப் பெரும்பாடு பட்டார். தலை மீதிருந்த நீலத் தொப்பி தப்பியது.

ஓடிவரும் ரயிலின் கூவலும் பெருமூச்சும் அவர் அசைத்த சிவப்புக் கொடிக்கு அடங்கி நின்றது. டிரைவர்கள் விறைத்து விலுவிலுத்து சவமாக உட்கார்ந்திருந் தார்கள். அவர்களுக்குப் பாதுகாப்பாக ஆயுதம் தாங்கிய வீரர்கள் நாலு பேர். நிலைய அதிகாரி பதட்டத்தில் தவித்தார். என்ன நடந்தது. ஏன் இப்படி.

நிலையத்தில் குடியிருக்கும் கூட்டம் பிளாட்பாரத்துக்கு ஓடிவந்த வேகத்தில் அதிர்ந்துபோய் நின்றது. அதிகாரிக்கும் பதட்டம் கூடிக்கொண்டே போனது. வண்டியை நெடுகப் பார்த்தார். உள்ளேயிருந்து யாருமே இறங்கவில்லை. சன்னல் வழியே ஒரு தலைகூட எட்டிப் பார்க்கவில்லை. எட்டுப் பெட்டிகளின் கதவு களும் இறுக மூடியிருந்தன.

அதிகாரிக்குப் புரிந்துவிட்டது. அடடா ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது. முதல் பெட்டிக்கு விரைந்து கதவைத் திறந்து உள்ளே எட்டுவைத்தார். அந்த ராத்திரி ரயிலிலிருந்து ஒருவர்கூட இறங்காதது ஏனென்று இப்போது விளங்கி விட்டது.

பெட்டி நிறையப் பிணங்கள் கொட்டிக்கிடந்தன. வெட்டிச் சாய்த்தவை. குத்திக் கிழித்தவை. கழுத்தறுந்து மண்டை பிளந்து குடல் சரிந்து... ஓரங்களில் அங்கங்கள் சிதறிக் கிடந்தன.

பிணங்களுக்கிடையே எங்கிருந்தோ ஒரு தீனக்குரல் கேட்டது. அதிகாரிக்கு அற்ப நம்பிக்கை. சிலராவது பிழைத்திருக்கக் கூடும். உரக்கக் கத்தினார்.

''நீங்கள் தங்கக் கோயிலூருக்கு வந்துவிட்டீர்கள். இங்கே தலப்பாக்காரர் களும் இந்துக்காரர்களுமே குடியிருக்கிறார்கள். கூடவே போலீஸ்காரர்களும் துணைக்கிருக்கிறார்கள். அஞ்ச வேண்டாம்.''

அவரது குரல் கேட்டு சில உடல்கள் நெளிந்தன. ஒரு பெண் மரண வேதனை யில் எழுந்து அமர்ந்தாள். அருகே ரத்தக் குளத்தில் நனைந்து கிடந்த கணவனின் தலையைத் தேடியெடுத்து முறையிட்டு அழுது புலம்பினாள். உயிர் பிழைத் திருந்த குழந்தைகள் தாய்களின் சிவந்த உடல்களை உலுக்கிஉலுக்கி அழுதன.

''மா... மா...''

குழந்தைகளின் கொத்துக்கறித் துண்டுகளைத் தேடியெடுத்த தந்தைகள் நா வெழாமல் உறைந்துபோய் உட்கார்ந்திருந்தார்கள். வெளியிலிருந்த கூட்டத்துக்கு விசயம் புரிந்துவிட்டது. உன்மத்த நிலையில் ஓலமிட்டுக்கொண்டு ஓடினார்கள்.

எட்டுப் பெட்டிகளிலும் அதே பிணக்கோலந்தான். எட்டாவது பெட்டியி லிருந்து இறங்கிய நிலைய அதிகாரிக்கு உடலும் மனசும் மரத்துப்போயிருந்தன. எந்தக் கணத்திலும் மயங்கி விழக்கூடிய கிறுகிறுப்பு. கட்டுப்படுத்திக்கொண்டார். மனசு அலறியது.

''கடவுளே இப்படியொரு கொடுமையை எப்படி அனுமதித்தாய்.''

நிலையமெங்கும் நிறைந்திருந்த பிணவாடை குமட்டித் திணறடித்தது. எட்டு சவப் பெட்டிகள் கோர்த்த ரயில் வண்டி இறுதி யாத்திரைக்காக இருட்டுக்குள் அமைதியாகக் காத்திருந்தது.

அதிகாரி திரும்பி வண்டியை மீண்டும் ஒருமுறை வெறித்தார். கடைசிப் பெட்டியில் பொறிக்கப்பட்ட சுண்ணாம்பு எழுத்துக்கள் துல்லியமாகத் தெரிந்தன.

'பூமனுசனுக்கும் இரும்பு மனுசனுக்கும் எங்கள் விடுதலைப் பரிசு இந்த ரயில் வண்டி.'

ரயில் நிலையத்தருகே ஒரே இடத்தில் குப்பையாகக் கொட்டிக்கிடந்த வெவ்வேறு சாக்குமூட்டைகளிலிருந்து மூச்சுமுட்டப் பிதுங்கி மேலே அடுக்கியிருந்த பிணங்களை விலக்கிக்கொண்டு வெளியே வந்து எட்டிப் பார்த்த பன்றித் தலையும் பசுத்தலையும் இருட்டுக்குள் ஆத்திரத்தைக் கொட்டித்தீர்த்தன.

''விடுதலையாம் விடுதலை. வெட்கங்கெட்ட விடுதலை.''

''பல உயிர்களை விலையாகக் கொடுத்து வாங்கிய கேடுகெட்ட விடுதலை.''

''நாம் என்ன பாவம் செய்தோம்.''

''அதுதான் தெரியவில்லை.''

இப்படியாகத்தானே பெருந்தேசம் பிளவுண்டு இருதேசங்களானது. இதனால் எத்தனை உயிர்களுக்கு உடல்கூட்டிலிருந்து விடுதலை கிடைத்திருக்கிறது பார்த்தீரா.

ஆக்கும் கடவுளுக்கென்ன பல உயிர்களைப் படைத்துவிட்டுப் பாராமுகமாக இருந்துகொண்டார். விதி முடிந்தவர்களிடம் விளையாடி முடித்துவிட்டார் அழிக்கும் கடவுள். காக்கும் கடவுளுக்குத்தான் பெரும் பொறுப்பு. எண்ணற்ற உயிர்களைக் காப்பாற்றிக்கொடுத்த அவரது அருளை அற்புதமென்பதா பெரும் பேறென்பதா.

என்ன யோசிக்கிறீர். இன்னும் என்னவெல்லாம் நடக்கப்போகிறதோ என்றுதானே. நடந்துமுடிந்ததும் நல்ல சேதியுடன் வருவேன்.

அதோ... அதோ பாரும். ஒரு தலப்பாக்காரர் துலுக்கப் பெண்ணைத் தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு ஓடுகிறார். இன்னும் தொலைவில் ஒரு துலுக்கர் கையில் ஆயுதத்துடன் தலப்பாக்காரரைத் துரத்துகிறார். தலப்பாவின் குஞ்சமும் பர்தாவின் தொங்கலும் இரு தேசங்களின் கொடிகள் காற்றில் சுதந்திரமாக வீசிப் பறப்பதுபோல் தோன்றுகிறதல்லவா. என்ன சொல்கிறீர்.

எல்லாம் அவரவர் விதிப்படிதான் நடக்கும்.

## 6. அடடா...

மந்தைக் காட்டுக் குப்பைமேட்டில் கொண்டைப்பூ தொங்கும் கோலத்தில் நிற்கும் கருப்புச்சாவல் மாரடித்துப் புலம்புகிறது.

''மகாமனுசனக் கொன்னுட்டாகளே... என்னத்தச் சொல்லட்டும்...''

குப்பையை முண்டும் பன்றி ஏறிட்டுப் பார்க்கிறது.

''ஆரு...ஆரு...''

குஞ்சுகளைக் கூப்பிட்டு ஒண்ணுசேர்த்துச் சரிபார்த்துக்கொள்ளும் தாய்க் கோழி அங்கலாய்க்கிறது.

''ஒண்ணுக்குள்ள ஒண்ணு... நமக்குள்ளதான்...''

கட்டிப் போட்டிருக்கும் தூணைச் சுற்றி வரும் வெள்ளாடு துக்கம் தாளாமல் அடித்தொண்டையிலிருந்து அரற்றுகிறது.

''அடடா... அடடா...''

வண்ணாக்குடி கட்டுத்துறையிலிருந்து கழுதை உச்சத்தில் கனைத்து ஓய்கிறது.

''போச்சே...போச்சே...மோசம் போச்சே...எல்லாம் போச்சு... நாசமாப் போச்சு...போச்சு போச்சு.''

முட்டிக்கு மேலே வெள்ளுடையணிந்த கொக்குப் பட்டாளம் வானத்தில் ஒரே வரிசையாகச் சிறகு வீசி முன்னேறுகிறது. ஒரு உத்தரவுக் குரல் மட்டும் தொடர்ந்து கேட்கிறது.

''போகட்டும்...போகட்டும்...''

அடுப்புத் தீத்தாங்கியில் அயர்ந்து கிடக்கும் பூனை அமைதியாக இறங்கி வந்து பசிக் கிறக்கத்தில் பரக்கப்பரக்க முழித்தபடி அழ ஆரம்பிக்கிறது.

''அய்யோ...அய்யோ...மெய்யோ...பொய்யோ...''

## 7. விடிஞ்ச பின்னே...

சிவகாசி விசுவநாதர் கோயில் சன்னதித் தெருவில் நாடார்கள் கூட்டம் அலை மோதியது. அந்தத் தெரு கொள்ளாமல் மாட வீதித் தெருக்களிலும் திணித் திருந்தார்கள். அன்றும் அவர்களுக்குத் திருவிழாதான். அய்ய நாடார் தரும கர்த்தாவாக நியமிக்கப்பட்டதைக் கொண்டாடவே கூடியிருந்தார்கள்.

மூத்தவர்களும் இளையவர்களும் கலந்து முண்டியடிக்கும் கூட்ட நெரிசலில் முழிபிதுங்க நசுங்கும் வயசாளி ஒருவர் கோயில் தூணைப் பற்றிக்கொண்டு பெரு மூச்சு விட்டார். கருவறையை எட்டிப் பார்க்கக்கூட முடியாத சங்கடத்தில் வெளியே வந்தால் போதுமென்றாகிவிட்டது. தெற்கு மாட வீதியோரம் திகைப் பில் உட்கார்ந்திருந்த கிழவருடன் துணைசேர்ந்துகொண்டார்.

''என்ன நல்லா சாமி கும்புட்டீகளா. நான் கூட்டத்தப் பாத்து மலச்சுப் போயி உக்காந்துட்டென்.''

''உள்ள போறதாவது உசிரோட திரும்புறதாவது. ஒருவழியா தப்பிச்சு வந்துட்டென்.''

''இதுக்காக இவுக பட்ட கஸ்டம் கொஞ்சமா நஞ்சமா. எத்தன உசிரப் பலி குடுத்துருக்கு. எம்புட்டுச் சொத்து பறிபோயிருக்கு. ஆண்டவன் புண்ணியத்துல விடிவு காலம் பெறந்துருச்சு. அவந்தான் இவுகளக் காப்பாத்தணும்.''

''எளவட்டங்க கூட்டம்தான் பெரிசாருக்கு.''

''காலம் பெறண்டுக்கிருச்சில்ல. எம் பேரன் அருமுறுக்கீட்டுத் திரியிறதப் பாக்கணுமே. அவனுக்குச் செவகாசிக் கொள்ளையப் பத்தித் தெரியுமா. ஊரே எரிஞ்சு சாம்பலாகிப்போனதப் பத்தித்தான் தெரியுமா.''

''அப்ப நமக்கே எளம் பெராயந்தான. அருவாக் கம்போட தெருவுக்குத் தெரு தாண்டி ஓடுனதுதான் யாவுகமிருக்கு. அம்பது வருசம் தாண்டியிருச்சே.''

''நொண்டி மொடம் கூனு குருடு கோட்டின்னு சகட்டுமேனிக்கு வெட்டிக் கொளுத்துனாங்களே. அதெல்லாம் லேசுக்குள்ள மறக்க முடியுமா.''

''மறக்கப்போயித்தான இம்புட்டுக்கு முன்னேறியிருக்காக.''

''அது நெசந்தான். அம்பது வருசத்துல தொழிலு ஆலமரமாப் பெருகியிருச்சு. மொதலாளிமாருக்குக் கணக்கே இல்ல. தண்ணிபட்ட பாடா துட்டுப் பெரளுது.''

''எந்தெந்தச் சீமைக்கோ போயி கெடையா கெடந்து அச்சடிக்கிற தொழிலக் கத்துக்கிட்டு வந்து இங்க வெதச்சுவச்சாங்க. அது நல்லா வேர்ப்புடிச்சு வெளஞ்சிருச்சு.''

''பெறகு தீப்பெட்டித் தொழிலக் கொண்டுவந்து எறக்குனாங்க. அதும் அப்படித்தான். கைமேல துட்டு. அது காணாதுன்னு தீக்குச்சவே பெரிசாக்கி மருந்துல சாயம் சேத்து மத்தாப்பு செஞ்சாங்க. அடுத்து சூரியகாந்தி. அங்கருந்து வேட்டுக்கு வந்துட்டாங்க. அடேயப்பா ஓல வெடி குருவி வெடின்னு கணக்கு கெடையாது. ஒவ்வொரு வருசமும் புதுசா ஒண்ணு கண்டுபுடிச்சு சந்தையில எறக்கிவுட்டாங்க.''

''புதுசுபுதுசாக் குடுத்தாத்தான சனங்க வாங்குவாக.''

''மானம்பாரிப் பூமியாச்சா. வெயில்ல தீப்பெட்டியும் வேட்டும் குளிச்சுக் கும்மாளம் போடுதுக. கொஞ்ச நேரத்துல கொளுத்தியும் வெடிச்சும் கரியாக்கிற பண்டங்கள சனங்க வருசம் முழுக்க வம்பாடு பட்டுச் செஞ்சு குடுத்துக் கூலி வாங்குதுக.''

''அங்க வெடிக்கிற வேட்டு இங்க மொதலாளி பையில வந்து பணமா வுழுகுது.''

''தெராசு புடிச்சாத்தான் யேவரமா. இது புது யேவாரம்.''

''இந்த மும்மரத்துல செவகாசிக் கொள்ளதானா நெனவுக்கு வரும். அதப் பாத்த வயசாளிகளுக்கு இப்ப அது பழங்கதையாகிப்போச்சு. மனசில வண்டலாப் படிஞ்சிருச்சு. ஏகதேசம் நெனவு தட்டுனாலும் அப்படியே அமுக்கீறது. அத எதுக்குக் கிண்டிக் கௌறிச் சங்கடப்படணும்.''

''அப்படித்தான் ஆகிப்போச்சு.''

''சின்னவுகளுக்கு நாக்கு ஈரத்துல நோட்ட எண்ணிப் பாக்கிறதுக்கே நேரம் சரியாருக்கு. அந்த அவசரத்துல பழசப் பத்தித் தெரிஞ்சுக்கிறதுக்கெங்க நேரமிருக்கும்.''

''அம்புட்டு அவசரம்.''

''செவகாசிக் கொள்ளையில எதிராளிகள எதுத்து நின்னு சரிசண்ட போட்டாரே செம்புக்குட்டி நாடாரு.''

''ஆமா. அவரப் பனையேறின்னு கிண்டலாக் கூப்பிடுவாக.''

''அவரேதான். இந்தப் பனையேறி செவன் கோயிலுப் படியேறாம ஓய மாட்டான்னு சொல்லி மார்தட்டுவாரு.''

''அவரு மொகம் தெரியுமா இவங்களுக்கு.''

''அப்பேர்ப்பட்ட மனுசன் கோயிலுப் படியேறாமயே போய்ச்சேந்துட்டாரு.''

**ஊ**ருக்கு வடக்கே ஏக வறண்டு கிடக்கும் மானம்பாரிக் கரிசல். சில்லோடைக் கரையில் முகம் கொராவி நிற்கும் வடலிப்பனை பாளை தள்ளும் பருவத்தை எதிர்பார்த்துத் தோளில் தடைநார் தொங்க ஏக்கத்துடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தார் ஏழைப் பனையேறி நாடார். அவர் சின்ன வயசில் பனங் கொட்டையைப் புதைத்து முளைக்க வைத்த குட்டி அது.

அவர் பார்வை தென்புறம் திரும்பியது. சற்றுத் தொலைவில் தலையற்ற முண்டங்களாக இரு மொட்டைப் பனைகள் நின்றன. போன கோடை மழைக்கு இடிவிழுந்து கருகிப்போனவை. அவற்றின் அடிப்புறத்தில் உட்கார்ந்து நாலு பேர் ரம்பத்தால் அறுத்துக்கொண்டிருந்தார்கள். களைப்பைப் போக்க அவர்கள் அலுப்புத் தாளத்துக்கேற்ப அசைந்தசைந்து பாடுவது அரிச்சலாகக் கேட்டது.

''விடியுமுன்னே''

''சொல்லய்யா''

''விடுதலையும்''

''ஆமய்யா''

''கெடச்சதுன்னு''

''சொல்லய்யா''

''கேள்விப்பட்டோம்''

''ஆமய்யா''

''விடிஞ்சபின்னே''

''சொல்லய்யா''

''அடஞ்சதென்ன''

''கேளய்யா''

''விடுதலையும்''

''சொல்லய்யா''

''தொலஞ்சதென்ன''

''கேளய்யா.''

அவர் ஓங்கிவளர்ந்த காசிலிங்கமாக கங்கை நீர் ஊறிய கலயங்களைத் தாங்கி நிற்கும் மூத்த பனைக்கு நடந்தார். அதைத் தொட்டுத் தொழுதுவிட்டு தோளில் மாலையிட்டிருந்த தடைநாரைக் காலில் தளைந்துகொண்டு உச்சியில் தவ மிருக்க உன்னிஉன்னி ஏற ஆரம்பித்தார்.

# படலம் 20

## 1. அண்ணைக்குப் பாத்த மொகம்

சத்திரப்பட்டி சுந்தர நாய்க்கர் சாதுவான மனுசன். அதிகம் பேச மாட்டார். ஏதுக்கும் அலட்டிக்கொள்ள மாட்டார். மூக்கும் முழியும் நெடிய உருவமும் நிமிர்ந்த நடையும் சிரித்த முகமும் ஒரு முறை பார்த்தாலே மனசில் பதிந்துவிடும்.

நொடித்து நொண்டியான குடும்பம். அதனால் சொத்து சொகத்தின் மேல் ஆசை கிடையாது. பிழைப்புக்காகச் சின்ன வயசிலேயே சொன்னகூடு சுப்பா நாய்க்கரின் வீட்டுக்கு வந்துவிட்டார். வருசச் சம்பளம். அங்கேயே சாப்பாடு துணிமணி எல்லாம்.

சுப்பா நாய்க்கர் ஈரனேர்ச் சம்சாரி. சம்சாரம் சென்னம்மா அமைதியான வள். அவர்களுக்கு ஒரே பெண் மங்கத்தாய். அவ்வளவு வசதியிருந்தும் நாய்க்கர் நல்ல சோற்றுக்கு அலைய மாட்டார். நிதமும் சோளச் சோறு வேணும். புளிக்க வைத்துக் காய்ச்சினாலும் சரி உடைத்துக் காய்ச்சினாலும் சரி. மூணு வேளையும் அதுதான். கட்டிச் சோறாகவோ கரைத்தோ சாப்பிடும் நிம்மதி வேறெதிலும் கிடைக்காது. காய்ந்த வெள்ளாமைக்குத் தண்ணீர் பாய்ச்சியதுபோல் வயிறு குளிர்ந்துபோகும். சொகமான ஏப்பத்தில் வயிற்றுப் புடைப்பைத் தடவுவார்.

''ஒரி கூடு ஏமிரா பெத்த ஒரி கூடு. அந்த்த சக்க. சொன்னகூடு சொன்ன கூடுதான்.''

அதையே அவருக்குப் பட்டப் பேராக வைத்துவிட்டார்கள்.

அவருக்குத் துணையாக மாடப்பக் குடும்பன் வந்தான். அந்த வீட்டில் அவனுக்குப் பதிவான வேலை. நித்தக் கூலி.

அவன் அப்பன் மகாலிங்கத்துக்கு ஓடியாடி அலைய முடியாத நிலைமை. அஞ்ஞை குப்பு கலிங்கலூருணிக்காரி. நொண்டியன் பேரன் கருத்தமுத்துக்கு ரெண்டாவது மகள். கிடைத்த வேலைக்குப் போவாள். மாடப்பனை நம்பியே பிழைப்பு ஓடியது.

மாடப்பனும் சுந்தர நாய்க்கரும் அன்னியோன்னியமாகப் பேசிக்கொண்டே அத்தனை வேலைகளையும் முடிப்பார்கள். சில சமயம் அவர்களுக்குள் வடுகலும் நடமாடும். அவர் ''ஒரே மாடா'' என்று கூப்பிட்டால் அவன் ''ஏமி சாமி'' என்று காது கொடுப்பான். அவனுக்கு ஓரளவு வடுகல் தெரியும்.

அவர் விளையாட்டாகச் சொல்வார்.

''அடே நீ நெதமும் கூலி வாங்குற வேலக்காரன். நான் வருசத்துக்கொருக்க வாங்குற வேலக்காரன்.''

''அப்படிச் சொல்லாதங்க சாமி. நீங்களும் நாலு பேருக்குக் கூலி குடுக்கிற காலமும் வரத்தான் போகுது.''

''வக்காளி கிண்டலா பண்ணுற. காலம் மானத்துலருந்து குதிக்கப்போகு தாக்கும்.''

''குதிக்கத்தான்போகுது.''

''வருமிங்கிற.''

''கண்டிப்பா.''

காட்டு வேலைக்கு ஆள் தேவையிருந்தால் அவர்தான் போய்க் கூப்பிடணும். உள்ளூரில் அவ்வளவாக ஆள் கிடைக்காது. வந்தாலும் குறுக்கை நிமிர்த்திப் பொழுதைப் பார்த்துச் சுணங்குவார்கள். நேரே கலிங்கலுக்குப் போய்விடுவார். நிறைய பேர் வருவார்கள். வேலை சூட்டிக்கையாக நடக்கும். அதுக்கு அவர் தனியாகக் கூலி கொடுக்கணும். அதாவது மதியச் சாப்பாடு முடிந்ததும் பாட்டுப் படிக்கணும்.

அவர் காடுகரையில் கமலை இறைக்கும்போதோ வண்டியடிக்கும்போதோ இனிமையாகப் பாடுவார். குரல் காதவழிக்கு ஓச்சமிடும். மதியமாகிவிட்டால் என்ன வேலை செய்தாலும் போட்டுவிட்டு மரத்தடிக்கு வந்தாகணும். பெண்கள் அவரைச் சூழ்ந்து வட்டமாக உட்கார்ந்துகொள்வார்கள். மாடப்பன் தனியாக உட்கார்ந்திருப்பான். அவர் கண்ணை மூடி மெல்லத் தலையசைத்துக்கொண்டே பாட்டை எடுத்துவிடுவார்.

''அண்ணைக்குப் பாத்தமொகம் கண்ணம்மா
அழியாம நிக்குதடி பொன்னம்மா
எண்ணைக்குப் பாக்கப்போறென் கண்ணம்மா
ஏக்கம் பெருகுதடி பொன்னம்மா.

நீளநெடும் பாதையில
நீநடந்து போகயில
கோலமிடும் காலடியும்
கொள்ளையிடும் எம்மனச

ஆழத்தில் கோலமிட்டு
அடிமனசக் கொள்ளையிட்ட
காலடியக் காணலயே கண்ணம்மா
கண்ணொறங்கத் தோணலயே பொன்னம்மா - எம்
பொன்னம்மா.

கனவுகொண்டு சொவரெழுப்பி
காரவீடு கட்டிவச்சென்
காரவீட்டு வாசலிலே
கரும்பு ஒண்ணு நட்டிவச்சென்

நெனவுகொண்டு நீர்தொளிச்சு
நெலம்புடிச்சு வளருமுன்னே
கனவும் கலஞ்சதென்ன கண்ணம்மா
காரவீடும் சாஞ்சதென்ன பொன்னம்மா - எம்
பொன்னம்மா.''

மெய்மறந்து கேட்கும் பெண்கள் கண்சொருகிப் படுத்துவிடுவார்கள். மாடப்பனிடமிருந்து வசவு வரும்.

''மசங்கி மலந்து கெடந்தா வேல நடந்தாப்புலதான். வாயில நாயி மோண்டுறப் போகுது. எந்திரிச்சு வேலையப் பாருங்க.''

அவனுக்கும் கலிங்கல் பெண்களுக்கும் ஏகப் பொருத்தம். தேன்குளவி மாதிரி மொய்த்துவிடுவார்கள்.

''இவன் ஒரு லச்சகெட்ட பெய. பொம்பளைக மலந்து கெடக்காகளா கவுந்து கெடக்காகளான்னு மொகந்து பாக்கிறதே வேலையாப்போச்சு. இவனோட அஞ்ஞுக்காரியப் பாத்து ஒடனே ஒரு கட்டையப் போடச் சொல்லணும். அப்பத்தான் வசங்குவான்.''

''கட்டையப் போடுறதா நெட்டையப் போடுறதான்னு எங்களுக்குத் தெரியும்.''

''கட்டையும் நெட்டையும் பாத்துவச்சிருக்கயா. இரு ஒன்னய வச்சுக்கிறொம்.''

''சும்மா பொத்திக்கிட்டுப் போங்க.''

எடக்குக்காரி ஒருத்தி பிடித்துக்கொள்வாள்.

''இங்க என்ன அவுத்துப்போட்டா ஆடுறாக. பொத்த வேண்டியதப் பொத்திக்கிட்டுத்தான் இருக்காக. கிட்ட வந்து பாரேன்.''

''நீ அவுத்துப் போட்டு ஆடுனாலும் ஆடுவ. ஒஞ் சங்காத்தம் வேணாம் தாயி.''

''பெறகு ஆரு சங்காத்தம் வேணுமாம். சாமிவுக இருக்காக. இல்லன்னா நல்லா நல்லாக் கேப்பென். அடுத்த வீட்டுக் கலியாணமே ஏன் அழுகிற கோவணமேன்னு அய்யா தனியா உக்காந்து பொலம்புறதக் கவனிச்சிட்டுத்தான் இருக்கென். ஆசப் பண்டம் ஊசிப்போச்சு. ஊசுறவரைக்கும் வுட்டுவைக்கலாமா.''

''ஆமா இவளுக்கு அம்புட்டும் தெரியும்.''

''அதுக்கு மேலயும் தெரியும்.''

''தெரிஞ்சா வச்சுக்கோ.''

அவன் திரும்பிப் பார்க்காமல் நழுவிவிடுவான்.

''ஏலமாட்டாற உசிரு தப்பிச்சுப் போறதப் பாரு...அந்த மனுசன் பாட்ட இனியும் செத்த கேப்பமான்னுருக்கு. நீயுந்தான் ஒரு ஆம்பளன்னு இருக்கயே. வக்கணைக்கு ஒண்ணும் கொறச்சலில்ல. கோணிகொளம் கம்மா மாதிரி வாய வச்சுக்கிட்டு. ஒனக்கு எந்த மகராசி வந்து முந்தி விரிக்கப்போறாளோ.''

இதுக்குள் சுந்தர நாய்க்கரிடமிருந்து இன்னொரு பாட்டு பொங்கி வரும்.

மங்கத்தாய் வயசுக்கு வந்து உடல் வாளிப்பான பெண்ணாகிவிட்டாள். நாணல் கும்மலாக வீசி வளர்ந்த முடி. கண்கள்தான் ரெம்பச் சிரிக்கும். சுந்தர நாய்க்கருக்கு நேரத்துக்கு நேரம் சோறு தண்ணீர் கொடுத்து அக்கறையாகக் கவனித்துக்கொள் வாள். வாந்தக்கமாகப் பேசுவாள். அவரை என்ன முறை சொல்லிக் கூப்பிடுவது என்று குழம்பிப் போய் கடைசியில் மாமா என்றே கூப்பிட ஆரம்பித்தாள். அவருக்கு அவள் மங்கா.

அவளுக்கு அவரது பாட்டின் மேல் அப்படியொரு கிறுக்கு. அவர் வீட்டில் பாட்டை முனங்கினால்கூட கிட்டப் போய்க் கவனிப்பாள். அவர் வேலைத் தனத்தில் பாடுவதையறிந்து அங்கேயும் போக ஆரம்பித்தாள். அனுபவித்துக் கேட் பதற்காகவே மதிய வெயிலில் மெனக்கிட்டு அவருக்குச் சோறு கொண்டுபோவாள். அவர் கடிந்துகொள்வார்.

''என்ன மங்கா இது. இந்த வெயில்ல அலஞ்சுக்கிட்டு. பசிச்சா ஒரெட்டு வந்து சாப்பிட்டுக்கிற மாட்டனா.''

''நானும் வீட்ல சும்மாதான இருக்கென் மாமா. இங்க வந்தா பொழுது போகுமில்ல.''

அவர் சாப்பிடும் சித்திரத்தைப் பார்த்துக்கொண்டேயிருப்பாள்.

''என்ன மங்கா அப்படிப் பாக்க.''

சும்மா இல்லையென்று இருவருக்குமே தெரியும். சாப்பாடு முடிந்தபின் அவள் கொஞ்சிக்கொஞ்சிக் கேட்பாள்.

''மாமா மாமா அந்தப் பாட்டு வேணும்.''

''எந்தப் பாட்டு மங்கா.''

''அதான் மாமா...''

அவர் அந்தப் பாட்டை நினைவுக்குக் கொண்டுவந்து பாடுவார். கண்களால் பேசியபடி சங்கதிகளை வேடிக்கை பார்க்கும் வேலைக்காரப் பெண்களில் ஒருத்தியாக மங்கத்தாயும் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருப்பாள்.

அவள் போனபின் பெண்கள் முணுமுணுப்பார்கள்.

''சம்சாரி வீட்டுப் பொண்ணுக்கு எதுமேல ஆசன்னு பாரு தாயி.''

''எது மேலன்னு அதுட்டத்தான் கேக்கணும்.''

''அடி போடி இவளே. எடக்கு மொடக்காப் பேசுறதே வேலையாப்போச்சு ஒனக்கு.''

''அடி வாடி இவளே. நம்ம வேலையப் பாக்கப் போவொம்.''

கிணறுகளுக்கு பம்ப்செட் வந்த பிறகு கமலை இறைவை குறைந்தது. அதனால் சுந்தர நாய்க்கரின் பாட்டும் குறைந்துவிட்டது. பம்ப்செட் இரைச்சல் உறுத்தவும் செய்தது.

மங்கத்தாய்க்கு அவரது பாட்டு மேலிருந்த பிரியம் சன்னஞ்சன்னமாக அவர்மேல் கவிந்தது. மனசு அவரை அடிக்கடி தேட ஆரம்பித்தது. அவருக்கு நல்ல நல்ல துணியுடுத்தி முழு எளவட்டமாக அழகுபார்த்தது. ராத்திரி அவர் வண்டிச் சட்டத்தின் மீதோ வெளித் தாவாரத் திருணையிலோ படுத்திருக்கும்போது தன்னையறியாமல் வாய் பாட்டை முனங்கும். அவள் அருவமில்லாமல் கிட்டப் போய்க் கேட்டுக்கொண்டிருப்பாள். பாட்டு முடிந்ததும் பேச்சுப் போடுவாள். அதிலொரு இருட்டுச் சொகம்.

கிட்ட இருந்து சோறு பரிமாறினாள். வீட்டு வேலையில் கூடமாட ஒத்தாசனை செய்தாள். விடியக்காலம் முந்தியே எழுந்து அவரை உசுப்பினாள்.

அவருக்கும் அப்படியொரு நெருக்கம் தேவையாக இருந்தது. வாலிப முறுக்கு. சில சமயம் மனசு அவுத்துக்கொண்டு ஓடியது. வேலைகள்கூடச் சுணங்கின. தன்னைச் சொந்தப் பிள்ளையாகச் சிறிசிலிருந்து வளர்த்த பெரிசுகளின் முகத்தில் எப்படி முழிப்பது. ஆசைகளை அடக்கிக்கொண்டார்.

மகளின் நடவடிக்கைகளைக் கவனித்த சென்னம்மா சுப்பா நாய்க்கரிடம் ஓதினாள்.

''மங்காவுக்குக் கலியாண ஆச வந்துருச்சு. காலாகாலத்துல மரியாதையா அனுப்பிவச்சிறணும். வரவர அவ போக்குப் புடிக்கல.''

''நானும் கவனிச்செென்.''

''ஒடனடியா நல்ல எடம் பாருங்க.''

மாப்பிள்ளை தேட ஆரம்பித்தார்கள். மங்கத்தாய் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டாள்.

''எனக்கு இஸ்டமில்லாற எடத்துக்கு ஏன் போகச் சொல்றீக. இருந்து வாழப் போறது நாந்தான.''

சென்னம்மா அழாத குறையாகக் கேட்டாள்.

''ஏம்மா அப்படிச் சொல்ற.''

''நான் சுந்தர மாமாவத்தான் கலியாணம் செஞ்சுக்கிருவென்.''

அவளது விருப்பத்தைத் தாண்டி எதையும் செய்ய முடியவில்லை. சுந்தர நாய்க்கரை மனசில் வரித்துக்கொண்டிருந்தாள்.

சுந்தர நாய்க்கருக்கு ஒண்ணும் ஓடவில்லை. உடனே மாடப்பனைப் பிடித்தார்.

''என்ன மாடா கத இப்படியாயிக்கிருச்சு. மங்கா என்ன முடிவில இருக்கா தெரியுமா.''

''எதுன்னாலும் நல்ல முடிவாத்தான் இருக்கும். வெவரமான பொண்ணாச்சே.''

''எனக்குத்தான் வாக்கப்படுவாளாம். வீட்லயும் அவ விருப்பப்படியே ஒத்துக்கிட்டாகளாம்.''

''சந்தோசமாச் செய்யிங்க.''

''வேலக்காரன் எப்படிடா வீட்டுக்காரனாக முடியும்.''

''ஆரோ ஒரு பொண்ணுக்கு வீட்டுக்காரரா இருக்கத்தான போறீக. அது இந்தப் பொண்ணா இருக்கட்டுமே.''

''ஒத்துவருமிங்கயா.''

''மனசுதான் காரணம். ஒங்க வீட்ல ஒரே அக்காளவும் புடிச்சுக்குடுத்துட்டாக. பெத்தவுக எப்படியும் ஒதஞ்சு பெழச்சுக்கிருவாக. வேறென்ன பொறுப்பு இருக்குது.''

''அதொண்ணுமில்ல.''

''அவுகமேல பிரியமில்லன்னு மனசாரச் சொல்லுங்க பாப்பொம்.''

''பிரியந்தான்...''

''சந்தோசமா ஒத்துக்கங்க.''

சுந்தர நாய்க்கரை மங்கத்தாய்க்கு மாப்பிள்ளையாக்கி வீட்டடமாக வைத்துக் கொண்டார்கள். மாடப்பன் அவரைக் கிண்டினான்.

''பாத்தீகளா சாமி. நான் அண்ணைக்குச் சொன்னது பலிச்சிருச்சு. இனிமே நீங்கதான் மொதலாளி. நாங்க எட்ட நின்னுதான் கூலி வாங்கணும். பேசணும். எத்தன பேருக்குக் கூலி குடுக்கப்போறீக பாருங்க.''

''எங் கோவத்தக் கௌறாத. தைப்பொங்கலுக்குக் குளிப்பாட்டி அலங்காரஞ் செஞ்ச மாடு மாதிரி முழிச்சுக்கிட்டுருக்கென்.''

''ஏன் முழிக்கணும். வீட்ல கெட்டிப்போட்டாச்சு. காட்டுக்கு வந்து பாட்டுப் படிக்க முடியாது. அந்தக் கவலதான.''

உண்மைதான். அந்தக் கவலை அவருக்கு ரெம்பவே இருந்தது. மழுப்பினார்.

‘‘அதுக்கில்லடா...’’

அவன் கடைசியாகச் சொல்லிக்கொண்டே போனான்.

‘‘நாளெல்லாம் ஒரே மாதிரி இருந்தே முடியுமா சாமி.’’

சுந்தர நாய்க்கர் சுதாரிப்பாகச் சொன்னார்.

‘‘அடே மாடா ஒனக்கு நல்ல பொண்ணு பாத்துவச்சிருக்கென். சத்தங்காட்டாம முடிச்சுக்கோ.’’

மாடப்பன் துள்ளினான்.

‘‘சாமி என்ன சொல்றீக. இப்ப அது ஒண்ணுதான கொறச்சலு எனக்கு.’’

‘‘பெறகென்ன கொறையிருக்கு சொல்லு. வயசாகுதில்ல.’’

‘‘காலம் ஓடும்போது வயசு நிக்கவா செய்யும். வீட்ல ரெண்டு கெழடுக கெடக்குது. அதுகளக் காப்பாத்தணும். வந்த மகராசியக் கவனிக்கணும். கலியாணம்னா வெளையாட்டுக் காரியமா.’’

‘‘பெத்தவுககிட்டப் பேசிப் பாத்துட்டென். அவுகளுக்கு ஆச ரெம்ப. நீதான் தலக்குடுக்க மாட்டங்கயாம். பொம்பளைக பேசுற பேச்சு மண்டையில ஒறைக் கலயா. எல்லாம் உதுத்துட்டு எத்தன நாளைக்குத்தான் திரியப்போற.’’

‘‘எங்க வீட்லயா கேட்டீக...பொண்ணு ஆரு. எந்த ஊரு.’’

‘‘வக்காளி அப்படி வா வழிக்கு. ஒனக்குத் தெரிஞ்ச பொண்ணுதான்.’’

‘‘அதாரு சாமி.’’

‘‘கலிங்கலுக் கலுங்கன் மக. அதாண்டா ஊர்க் குடும்பன் இருக்கான்ல திருவாத்தன் அவன் தங்கச்சி.’’

‘‘அதெல்லாம் ஒங்களுக்குத்தான் தெரியும். அடிக்கடி அங்க போறவுகளாச்சே.’’

‘‘நம்ம தோட்டத்துக்கு வேலைக்கு வருவாளே பாலம்மா அவ மக.’’

‘‘ஆரு முத்தம்மாளா. அப்படிச் சொல்லுங்க.’’

‘‘அவளேதான். இப்ப நல்லா யாவுகமிருக்குமே. ரெண்டு நாளோ என்னமோ ஆத்தாளோட நெல்லு நடவுக்கு வந்தா.’’

‘‘மூணு நாளு.’’

‘‘அந்தக் கணக்கெப்படி மறக்கும்.’’

‘‘பெறகெதுக்கு வரலயாம் சாமி.’’

‘‘ஒன்னோட இம்ச தாங்காமத்தான்.’’

‘‘நான் என்ன செஞ்சென்.’’

‘‘ஓடிஓடி அவளுக்கு அக்கறையா நாத்து முடியெடுத்துப் போட்டதும் அவ குண்டியத் தாங்குற மாதிரி குனிஞ்சுகுனிஞ்சு பேச்சுப்பழக்கம் போட்டதும் பல்லிளிச்சதும்...எல்லாம் கவனிச்சுக்கிட்டுத்தான் இருந்தென். ஆத்தாக்காரி பாத்துப் பயந்துபோயிட்டா.’’

‘‘ஒரு நாளைக்கு நானே கலிங்கலுக்குப் போயி ஆளுக் கூப்புடணும்னுருந்தென்.’’

‘‘நான் கூப்புட்டுப்பாத்தென். மாட்டன்னு தலையக் குலுக்கீட்டா.’’

‘‘கடிச்சுத் தின்னுறவாபோறாக.’’

"நீ அப்படிப்பட்ட நாயிதான்."

"போங்க சாமி."

பாலம்மாளுக்கு மாடப்பனைப் பிடித்துப்போயிற்று. அதுசரி சித்தப்பன் பரமனும் அவன் பொண்டாட்டி பத்தரம்மாளும் சம்மதிக்கணுமே. முத்தம்மா அவர்களுக்கு வளர்ப்பு மகளாயிற்றே. அவர்களுக்குக் குழந்தைப் பாக்கியம் இல்லாததால் சின்ன வயசிலேயே எடுத்து வளர்த்தார்கள். எப்படி அவர்களிடம் வலியப் போய்ச் சொல்வது. அவர்களாகப் பேச்செடுத்தால் ஒரு வார்த்தை சொல்லலாம். இதைப் பற்றி சுந்தர நாய்க்கர் காதில் போட்டுவைத்தாள்.

உத்தண்டு குடும்பத்தில் குட்டையனுக்குப் பதில் மூத்த மகன் கலுங்கன் ஊர்க் குடும்பனானான். அவனுக்கு வந்த பாலம்மா அயலூர்க்காரி. அவர்களுக்கு ரெண்டு பிள்ளைகள். திருவாத்தன் முத்தம்மா. மகள் ரெம்ப நாள் கழித்துப் பிறந்தாள்.

கலுங்கனின் தம்பி பரமன். அவன் பெண்டாட்டி பத்தரம்மாளுக்கு உள்ளூர். முத்தம்மாதான் அவர்களுக்குக் குழந்தை.

சுந்தர நாய்க்கர் ரெண்டு பக்கமும் பேசி முத்தம்மாளை மாடப்பனுக்கு முடிவு செய்தார். தங்கச்சிக்குக்கு கலியாணம் முடிந்த பிறகே தனக்குப் பார்த்துக்கொள்ளலாம் என்று திருவாத்தன் சொல்லிவிட்டான்.

மாடப்பனுக்கும் முத்தம்மாளுக்கும் சிறுத்த அளவில் கலியாணம் நடந்தது. பேத்தியாளின் கலியாணக் கோலத்தைப் பார்க்குமுன் குட்டையனும் கொசுவக்காளும் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். சுந்தர நாய்க்கரும் மங்கத்தாயும் வந்து செய்முறை கொடுத்துவிட்டுப் போனார்கள். பரமனும் பத்தரம்மாளும் முன்னின்று நடத்தினார்கள்.

முத்தம்மா லட்சணமானவள். அனாவசியமாகப் பேச மாட்டாள். அவள் வீட்டில் சும்மா இருக்க விரும்பவில்லை. புருசனுடன் தோட்டத்துக்குப் போய் உண்டான வேலைகளைச் செய்தாள். ரெண்டு கூலி வந்ததால் கஷ்டமில்லாமல் சீவனம் நடந்தது.

அவளுக்கும் மங்கத்தாய்க்கும் நல்ல பழக்கம். மங்கத்தாய் அவளை அப்பப்ப உதவிக்குக் கூப்பிடுவாள்.

"அடியே முத்தி கொஞ்சம் குருதவாலி அவிச்சுக் காயப்போட்ருக்கென். வந்து குத்திக்குடுத்துட்டுப் போ."

"சாய்ந்தரம் போல வாறம்மா."

சாயங்காலம் முத்தம்மா உலக்கை பிடிக்க மங்கத்தாய் உறைப்பெட்டி பிடிக்க என்னென்னமோ பேச்சு நடக்கும்.

## 2. நாடாக்கமார் தெரு

தன் கண்ணுக்கு முன்னால் பேரப்பிள்ளைகளுக்குக் கலியாணம் முடித்துப் பார்க்க தெய்வானைக்கு ஆசை. அது நடந்தது.

மூத்தவன் சந்தனத்துக்குச் சூரங்குளம் எம்பெருமாள் நாடார் மகள் சண்முக வடிவை முடித்தார்கள். அப்போது வடிவுக்குப் பத்து வயசு. பூப்பெய்தும் முன்பே

வந்துவிட்டாள். பிறகு ருதுவாகிப் பிறந்த வீடு போய்ச் சடங்கு சாத்திரங்கள் முடித்துத் திரும்பினாள்.

சந்தனத்துக்குத் தனி வீடு தேவைப்பட்டது. எல்லாரும் சேர்ந்து மூணாவது வீடு கட்டினார்கள். மருமகளாக இருந்த பத்திரகாளி மாமியாராகிவிட்டாள்.

ஆரம்பத்தில் சந்தனம் நிலத்தில் உழைத்தாலும் போகப்போக அக்கறை குறைந்தது. மனசு வியாபாரத்துக்கு நோங்கியது. பெரியபெரிய கோட்டை கட்டிச் சந்தோசப்பட்டது.

சக்கரை அப்படியில்லை. அவனுக்கு விவசாயத்தில் அறவே நாட்டமில்லை. வியாபாரந்தான் குறிக்கோள். வேலையா நாடார் அவர்களை விருப்பப்படி விட்டு விட்டார். செல்லக்கனி ஒருவன்தான் கண்ணும் கருத்துமாக மண்ணைக் கிண்டினான்.

சந்தனம் காய்கறி விற்றான். பிறகு தானியம் பயறு வகைகளுக்குத் தாவிக் கடைசியில் ஆட்டு வியாபாரத்தில் போய் நின்றான். முத்துநகர் கயத்தாறு கழுகு மலை சாத்தூர் எட்டயாபுரம் இப்படி எட்டுமட்டும் வாரச் சந்தைக்குப் போய் விடுவான். ஊரில் சனங்கள் வளர்க்கும் ஆடுகளை விலைக்கு வாங்கிச் சந்தையில் விற்பான். கணிசமாக லாவம் கிடைக்கும். இதுக்காகவே வடிவும் ஆடு வளர்ப்பாள்.

ஊருக்குள் நல்ல நாள் வந்துவிட்டால் ஆடறுத்துக் கறி போடுவான். தேவை யான கறியை முன்கூட்டியே கேட்டறிந்து அதுக்குத் தக்க உருப்படியை அறுப் பான். உடனே துட்டுக் கொடுக்க வேண்டிய கட்டாயமில்லை.

கோயில் கொடை எங்கே நடந்தாலும் ஆட்டுத் தோல் வாங்கக் கிளம்பி விடுவான். தோலுரித்துக் கொடுத்தால் சம்பளத்துக்குச் சம்பளமும் ஆயிற்று சல்லிசு விலைக்குத் தோலும் கிடைக்கும்.

அவன் தோலுரிக்கும் சொகமே தனி. பதமான சூரிக்கத்தி கால் தோலைக் கீறிக் கிழித்துக் கொடுக்க இடுப்பிலும் வயிற்றிலும் கிச்சலங்காட்டியதுபோல் செல்லமாகக் குத்திக்குத்திக் குடைந்து உரிப்பான். வழுவழுப்புக்கு அடிக்கடி தண் ணீரைத் தொட்டுக்கொள்வான். குடைந்துகொண்டே போய் கழுத்து வழியாகச் சட்டை மாதிரி கழற்றிவிடுவான். ஆடு வாழைப்பழமாகத் தொங்கும். பார்த்தவர் நாக்கு கறிக்கு ஏங்கும்.

கிண்டலுக்குப் பஞ்சமிருக்காது.

''பண்ணித் தோலு வேணுமா நாடாரே.''

உடனே பதில் கிடைக்கும்.

''சாமர்த்தியமிருந்தா அந்தத் தோல உரிச்சுக் கொண்டுவந்துரு. நல்ல வெலைக்கு வாங்கிக்கிறென். ஆடு மாடு பண்ணி எல்லாத்துக்கும் சேத்து ஒரு கட வைக்கலாம்னுருக்கென்.''

அவன் ஆட்டு வியாபாரத்தில் கில்லாடி. குறுக்கைப் பிடித்துத் தூக்கிப் பார்த்துக் கறி தலை குடல் எலும்பு இவ்வளவு எடையிருக்குமென்று துல்லிய மாகச் சொல்லிவிடுவான். யாரும் மறுத்துப் பேச மாட்டார்கள்.

''கைத் தெராசு சொன்னாச் சரியாருக்கும்ப்பா.''

அவன் விலை வைத்தால் அதுக்கு மேல் எந்தக் கொம்பனும் கேட்க மாட்டான். அப்படி வாங்கினால் கைநட்டந்தான் வரும். அவன் இருந்தாலே சந்தை

களைகட்டிவிடும். அவன் அடிக்கிற சகடால் சொல்ல முடியாது. வியாபாரி களிடம் வீராப்பாகப் பேசுவான்.

''எம் மடியில மட்டும் வத்தாமப் பணம் பெரண்டுச்சுன்னா ஒங்களக் கிட்ட அண்ட வுடுவனா. அத்தன சந்தையவும் ஒரு கைக்குள்ள புடிச்சு அடக்கீற மாட்டனா.''

''ஒன்னய இம்புட்டுத் தூரம் கஸ்டப்பட்டு ஆரு வரச் சொன்னதாம். எங்க பெழப்பக் கெடுக்கிறதுக்கா.''

''கொத்தன் மோத்தரம் கோவரத்துலயும் இருக்கும். சந்தனம் மோத்தரம் சந்தையெல்லாம் மணக்கும்.''

''கொண்டுவந்துருக்கிற உருப்படிகள ஒரு வெல போட்டுக்குடுத்துட்டுப் போ. மோத்தரத்த நீயே பத்தரமாக் கெட்டிவச்சுக்கோ.''

''ஆராச்சும் நரி கையில கொடலக் கழுவக் குடுப்பாகளா. துட்டு மொங் காந்தான்.''

எந்த வழியிலும் அவன் சிக்க மாட்டான். நாலு துட்டுச் சம்பாரிக்காமல் வீட்டுக்குப் போனதில்லை. வடிவுக்கு அந்த விதத்தில் சந்தோசம். ஊர் ஒச்சம் வீடு பட்டினியானாலும் சந்தன நாடாரென்றால் பெரிய ஆட்டு வியாபாரி யாயிற்றே. சந்தன முதலாளிக்குத் தெரியாமல் எந்த வியாபாரமும் திகையாது.

சக்கரைக்குத் துணையாகச் சங்கிலிப்புதூரிலிருந்து தாயாரம்மா வந்தாள். அவளது தகப்பனார் ஆறுமுக நாடார் தன்மையான மனுசன். அவள் வந்த நேரம் குடும்பத்தில் ஏறுமுகம். வாழைத் தோட்டத்தில் கூலிக்கு இலையும் பொடித் தடையும் அறுத்துக்கொண்டு திரிந்த சக்கரை அவற்றை விலைக்கு வாங்கி வியா பாரம் செய்ய ஆரம்பித்தான். உதிரிக் காய்களுக்குப் பதிலாகத் தார்களை வாங்கி விற்றான். அழிவு தோட்டத்தில் வாழை முண்டுகளை வாங்கி அடுத்தவர்கள் பயி ரிட கண்ணுகளாக்கி விற்றான். பிறகு வாழைத் தோட்டங்களை மொத்தமாகக் காண்ட்ராக்ட்டுக்குப் பிடித்து இலை காய் தடை என்று தனித்தனியாகப் பிரித்துக் கொடுத்தான். வாழை பயிரிட முன்பணம் கொடுத்து வியாபாரம் கைமீறிப் போய்விடாமல் பார்த்துக்கொண்டான்.

சொந்தத்தில் நிலமிருந்தால் இன்னும் நல்ல லாவம் கிடைக்குமே. மேலூர் சத்திரப்பட்டி வேப்பங்காடு வடக்கூர் இப்படி நாலா புறமும் நிலம் வாங்கி வாழை பயிர்செய்தான். அங்கங்கே சம்பளத்துக்கு ஆள் வைத்துக்கொண்டான். வாழைத் தார்களை வீட்டில் வைத்து ஊத்தம்போட்டுப் பழுக்க வைத்துக் கடைகளுக்கு அனுப்பினான். சுத்துப்பட்டிகளில் வாழை வெள்ளாமையின் விலைவாசி அவன் கைக்குள் வந்துவிட்டது. இப்போது அவன் சக்கரையில்லை. சக்கரை நாடார். மொத்த வியாபாரி. கலிங்கல் முதலாளி. பெரிய மரியாதை.

தாயாரம்மா நல்ல உழைப்பாளி. கொஞ்ச நேரம் சும்மா இருக்க மாட்டாள். எதையாவது நோண்டிக்கொண்டிருக்கணும். இவ்வளவு வசதிக்கும் அவள் ராசி தான் காரணமென்று பேசிக்கொண்டார்கள்.

வேப்பங்காடு முப்பிடாதிக் கோனார் ஒத்தைமாட்டு வண்டிக்காரர். சக்கரை நாடாருக்குப் பதிவாக வண்டியடித்தார். வண்டியில் எல்லா வியாபார மும் போகும். அவர் ஏழெட்டு மொய் ஆடு வைத்திருந்து அலுத்து ஓய்ந்தவர்.

நோய்நொடியில் முக்கால்வாசி ஆடுகள் காலியாகிவிட்டன. நொடித்துப்போய் மீதி ஆடுகளை விற்று வண்டி மாடு வாங்கினார். மற்றவர்கள் எளக்காரமாகப் பேசினார்கள்.

''வாழ்ந்து கெட்டவன் வறகோட்டுக்குக்கூட ஆக மாட்டான்.''

அவர் முக்கித்தக்கிக் காலத்தை ஓட்டினார். அப்போதும் கிண்டல் காதில் விழுந்தது.

''கோனாரு கம்பெடுத்தாரு நூறாடு ஆறாச்சு. ஆறும் புழுக்கையாச்சு. தொறட்டிதான் மிச்சம்.''

''ஆடு மாடாச்சு. மாடு எப்பச் சாணியாகப்போகுதோ.''

நல்ல வேளைக்கு சக்கரை நாடாரின் ஒத்தாசனை கிடைத்தது. மாசம் முழுக்க வாடகை வந்தது. மாடும் மனுசரும் தெம்பாகிவிட்டார்கள்.

மாடு ரெம்பச் சூட்டிக்கை. பத்தி விரட்டத் தேவையில்லை. தானாக மேடு தாவு பார்த்துப் போகப் பழகிவிட்டது. வண்டிக் கூடாரத்து முகப்பில் அதுக்குக் கண்ணில் படுமாறு வாழைப்பழத் தாரைக் கட்டித் தொங்க விட்டுவிடுவார். அந்த நினைப்பிலேயே மாடு வேகமாக ஊர் வந்து சேரும். வந்ததும் முழுத்தாரும் அதுக்குத்தான். திகட்டத்திகட்டத் தின்று முடிக்கும். அவர் வண்டிச் சட்டத்தில் படுத்துக் கண்ணயர்ந்தால் ஊர் எல்லையில்தான் முழிப்புத்தட்டும். ஏதாவது சாமான் கொண்டுவந்தால் கலிங்கல்வரை போய்த் திரும்பணும்.

சக்கரை நாடார் தனக்கென்று எதிர்வரிசையில் வசதியாக பெரிய கார வீடு கட்டிக்கொண்டார். அதில் ஓடிவிளையாடத் தாயாரம்மா இன்னும் ஒரு பிள்ளை பெற்றுக்கொடுக்கவில்லை. பத்து வருசமாக வாரிசு இல்லாத குறை எல்லா ருடைய மனசிலும் கருப்பட்டிக் கல்லாக உறுத்தியது.

இந்தக் குறையை வடிவு தீர்த்துவைத்தாள். பூப்பெய்திப் பருவத்துக்கு வந்ததும் அவசரஅவசரமாக ரெண்டு பெண்களைப் பெற்றுக்கொடுத்துவிட் டாள். தெய்வானைக்கும் பத்திரகாளிக்கும் ரெம்பச் சந்தோசம்.

சக்கரை நாடாருக்கு ஏக்கம் நாளுக்கு நாள் அதிகரிப்பதைக் கவனித்த தெய் வானை சந்தன நாடாரிடம் சொன்னாள்.

''சக்கரைக்குக் கையில காசிருந்தும் மனசில நிம்மதியில்லையேப்பா. எனக்கென்னமோ தாயாரு இனிமே கொழந்த பெத்துக்கிருவான்னு தோணல.''

''அதனால...''

''ரெண்டாந் தாரமா ஒருத்தியக் கொண்டுவரலாம்னு நெனப்பு ஓடுது.''

''அவளுக்கும் புள்ளையில்லன்னா...''

''உள்ளதுபோல இரிக்கட்டும். ஆண்டவன் வுட்ட வழின்னு நெனச்சுக்கிட வேண்டியதுதான்.''

விரைவிலேயே தனலட்சுமி சக்கரை நாடாருக்கு ரெண்டாம் தாரமாக இறங்கிவிட்டாள். அவளுக்கு தெற்கே ஆத்தூர்ப் பக்கம் முத்தையாபுரம். தகப்ப னார் சின்னமணி நாடார் உப்பு வியாபாரி. நல்ல வசதி. வியாபாரிக்கு வியாபாரி என்ற கோதாவில் பெண் கொடுத்தார். அவருக்கு முத்துநகர் பேட்டையில்

சம்பைக்கடையும் உப்பு மண்டியும் உண்டு. அருகிலேயே வீடு வாங்கிக் குடி யேறிவிட்டார். தனலட்சுமியின் அண்ணன் சுடலைமுத்து கடையைக் கவனித்துக் கொண்டான்.

இதுக்குள் செல்லக்கனி கலியாண எளவட்டமாகிவிட்டான். அவனுக்கு வெங்கடாபுரம் சோணமுத்து நாடார் மகள் சங்கரம்மாளைக் கொண்டுவந்து தனி வீடு கட்டிக் குடிவைத்தார்கள். தென்வரிசையில் நாலு வீடு. வடபுறம் தொழுவும் சக்கரை நாடார் வீடும். நாடார் வீடாக இருந்த அந்த இடம் நாடாக்கமார் தெருவாக மாறிவிட்டது.

அண்ணனின் கலியாணம்வரை காத்திருந்த சண்முகத்தாய் வயசுக்கு வந்து விட்டாள். அவளை நல்ல இடத்தில் கொடுக்கணுமென்று பத்திரகாளிக்கு எண்ணம். மங்காபுரி பாலையாவுக்குக் கொடுத்தார்கள். சந்தன நாடாரும் செல்லக் கனியும் தகுதிக்குத் தக்க தங்கச்சிக்குச் சீர்செய்தார்கள். சக்கரை நாடாரும் அந்த அள வுக்குத்தான் செய்தார். தனலட்சுமி அதுக்கு மேல் செய்ய விடவில்லை. இதில் பெரிசுகளுக்கு வருத்தம். தெய்வானை சமாதானப்பட்டுக்கொண்டாள்.

''எல்லாம் ஒரு கொழந்தையாகிறவரைக்குத்தான். பொறவு சரியாயிடும்.''

ஆரம்பத்திலிருந்தே தனலட்சுமிக்கும் தாயாரம்மாளுக்கும் ஒத்துப்போக வில்லை. பொங்கியதைச் சாப்பிட்டுக்கொண்டு ஒரு மூலையில் முடக்கினாலும் தாயாரம்மாளை தனலட்சுமி வேலைக்காரி போலவே நடத்தினாள். குழந்தை உண்டானதும் அவள் போக்கு ரெம்ப மாறிவிட்டது. காணாக்குறைக்குச் சங்கரம் மாளும் சேர்ந்துகொண்டாள். தாயாரம்மாளை எளக்காரமாகப் பேசினார்கள். இது வடிவுக்குப் பிடிக்கவில்லை. தாயாரம்மாளுக்கு அவள்தான் ஆறுதல்.

தனலட்சுமிக்கு ஆண் குழந்தை பிறந்தது. தாயாரம்மாளின் வாடையே குழந்தையின் பக்கம் அடிக்க விடாமல் விரட்டினாள். இனிமேலும் அவர்கள் சேர்ந்து வாழும் நம்பிக்கையில்லை. தாயாரம்மா மலடி என்ற அவப்பேரைச் சுமந்துகொண்டு பொறுமையாக இருந்தாள்.

குழந்தைக்கு தங்கையா நினைவாக பேர்வைக்கச் சொன்னாள் தெய்வானை. தனலட்சுமி அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. சுகுமார் என்று தானே வைத்துவிட்டாள்.

அவளுக்குக் கலிங்கலில் குடியிருக்கப் பிடிக்கவில்லை. விரைவிலேயே புருசனைக் கூட்டிக்கொண்டு முத்துநகருக்குப் போய்விட்டாள். சின்னமணி நாடார் தன் பக்கத்திலேயே வாடகை வீடு பார்த்துக்கொடுத்தார். தாயாரம்மா கலிங்கலிலேயே தங்கிவிட்டாள்.

சக்கரை நாடாருக்குப் புது யோசனை தட்டியது. வாழைப் பொருட்களை அடுத்தவருக்கு விற்பதைவிட சொந்தத்தில் கடை வைத்தால் என்ன. ஆட்களை அமர்த்திக்கொண்டு சரக்கைக் கொண்டுவந்துவிடலாம். தனலட்சுமி சந்தோசமாக ஒத்துக்கொண்டாள். அவள் கணக்கு வேறு. புருசன் அடிக்கடி கலிங்கலுக்குப் போக வேண்டியதில்லையே.

சக்கரை நாடார் முத்துநகர் சந்தைக்குள் கடை ஆரம்பித்தார். வகைவகை யாக வாழைத்தார்கள் காயும் பழமுமாக ஊஞ்சலாடின. அது போகத் தரையில் நெருக்கமாக உட்கார்ந்திருக்கும் தார்கள் நிறைய. ஒரு புறம் நீளப் படுத்திருக்கும்

இலைக்கட்டுக்கள். அவர் கல்லாவில் உட்கார்ந்ததும் முதலாளித் தோரணை வந்துவிட்டது. வியாபாரம் பெருகப்பெருக கலிங்கலுக்குப் போய்த் தாயாரம் மாளைப் பார்த்துவர அவருக்கு நேரம் கிடைக்கவில்லை.

அவரது முன்னேற்றம் சந்தோசமாக இருந்தாலும் அவர் அந்நியப்பட்டு விட்டதாகக் குடும்பத்தில் எல்லாரும் நினைத்தார்கள். தனலட்சுமியை மீறி அவரால் எதுஞ் செய்ய முடியாது. தாயாரம்மா பாடு சங்கடம். சண்முகவடிவின் குழந்தைகளைப் பார்த்துச் சந்தோசப்பட்டாள்.

வடிவு வதவதவென்று ஏழு பெண்களைப் பெற்றுத்தள்ளிவிட்டாள். மகா லட்சுமி செல்லம்மா தங்கம்மா பாக்கியலட்சுமி அன்னத்தாய் பொன்னுத்தாய் காளியம்மா. இத்தனைக்குப் பிறகும் பையன் பிறக்கவில்லை. எட்டாவது பெற்றுக் கொள்ள வடிவுக்குத் தெம்பில்லை. சந்தன நாடார் ஏக்கத்தில் சொல்வார்.

''ஒரு ஆம்பளக் கொழந்தைக்காகப் பெராசப்பட்டென். அமையலயே. அதனால என்ன. ஏழும் ஆம்பளைகதான். அத்தனையும் பவுனாக்கும்.''

தனலட்சுமிக்கு ஒரு ஆண் ரெண்டு பெண். சுகுமார் காளீஸ்வரி மாரீஸ்வரி. செல்லக்கனிக்கு ரெண்டு ஆண் நடுவில் ஒரு பெண். செந்திவேல் சொர்ணம் காளி யப்பன். சண்முகத்தாய் அதுக்குள் நாலு குழந்தைக்குத் தாயாகிவிட்டாள். கற்பகம் செல்வமணி பூமாரி தங்கமாரியப்பன்.

சண்முகத்தாய் எப்போதாவது கலிங்கலுக்கு வருவாள். அவளுக்கு வடிவு மதினியைத்தான் பிடிக்கும். மற்ற மதினிமாரிடம் சங்காத்தம் வைத்துக்கொள்வ தில்லை. ''என்ன மதினி எப்படி இருக்கீக'' என்று குசலம் விசாரிப்பதுடன் சரி. வீட்டுக்குப் போய் பேச்சுப்பழக்கம் போட்டு கைநனைப்பதில்லை. அவர்கள் ஒப்புக்காகக்கூட ஒருவார்த்தை கூப்பிடுவதுமில்லை.

## 3. முறிவு

சுந்தர நாய்க்கரும் மங்கத்தாயும் நல்ல முறையில் குடும்பம் நடத்தினார்கள். ஆரம்பத்திலேயே அவள் அவரிடம் சொல்லிவிட்டாள்.

''மாமா இனிமே தெனமும் தோட்டத்துக்குப் போக வேணாம். வேல செய்ய வேணாம். அப்பப்பப் போயிச் சுத்திப்பாத்துட்டு வந்தாப் போதும்.''

அவர் கூளத்துடன் தூர்க்கல்லைக் கடித்துவிட்ட காளைபோல் முழித்தார்.

''ஏன் மங்கா நம்ம தோட்டத்துக்கு...''

''இதுவரைக்கும் சரி. அங்க போயி பாட்டுப் படிச்சுக்கிட்டு வேல செஞ்சுக் கிட்டு மத்தவுக வேடிக்க பாத்துக்கிட்டு. அதெல்லாம் நல்லாவா இருக்கும்.''

''சரி மங்கா.''

மாடப்பனையாவது பார்த்து மனசு விட்டுப் பேச முடியாமல் வீட்டிலேயே அடைந்து கிடப்பது என்னமோ போலிருந்தது. தின்ற சோறு செமிக்காமல் சோம்பிப்போய் எப்படிக் காலத்தைக் கழிப்பது. ஆனாலும் மங்கத்தாயின் மனசு நோகாமல் பொறுமையாக நடந்துகொண்டார். பாட்டெல்லாம் மறந்துபோன மாதிரி இருந்தது.

அவர்களுக்குத் தொடர்ந்து மூணு குழந்தைகள் பிறந்தன. ஆதிலட்சுமி கனகலட்சுமி கணபதி. அவர்களைப் பாசமாக வளர்த்தார்கள். அவரை ''நைனா நைனா'' என்று கூப்பிட்டு வளையவளைய வருவார்கள். அவர் சொக்கிப் போவார். அந்த ஆனந்தத்தில் ஒரு தெம்மாங்கை எடுத்துவிடணுமென்று வாய் குறுகுறுக்கும். உடனே மங்கத்தாய் சொன்னது நினைவுக்கு வரும். பாட்டை விழுங்கிக்கொள்வார்.

என்னதான் அன்னியோன்னியமாக இருந்தாலும் அவருக்கும் மங்கத் தாய்க்கும் இடையே ஒண்ணு ரெண்டு விசயத்தில் உறுத்தல் இருக்கத்தான் செய்தது. அவர் நினைத்தபடி செலவு செய்ய முடியாது. வெற்றிலை பாக்கு வாங்கக்கூட அவளிடந்தான் கையேந்தணும். துணிமணிகளை அவளே வாங்கிக் கொடுப்பாள். என்ன துணி வேணுமென்று ஒரு வார்த்தை கேட்பதில்லை. அவர் நாலு இடத்துக்குப் போய் சனங்களுடன் பழகியதில்லை. எல்லாவற்றையும் விடப் பெரிய மனக்குறை ஒண்ணு உண்டு. ''மாமா அந்தப் பாட்டப் பாடுங்க. இந்தப் பாட்டப் பாடுங்க'' என்று அவள் ஒரு முறைகூடக் கேட்டதில்லை. தப்பித்தவறி வீட்டில் பாட்டை முனங்கினால்கூட அவள் வெடுக்கென்று கேட்பாள்.

''நாளைக்கு பொண்ணுகளப் புடிச்சுக் குடுத்த பெறகும் பாடிக்கிட்டுத் திரிங்க. நல்லா மெச்சிக்கிருவாக.''

மங்கா ஏன் இப்படி மாறிவிட்டாள். அவளை எப்போது பார்ப்போம் என்று ஏங்கி எதிர்பார்த்த காலம் போய் இப்போது பார்க்கவே பயமாக இருந்தது. அதிலும் கணபதி பிறந்த பிறகு அவள் குணம் ரெம்ப மாறிவிட்டது. வீட்டுக்கு வாரிசு வந்துவிட்ட பெருமை. அவரைச் சுத்தமாக மறந்துவிட்டாள். பிள்ளையே தஞ்சமென்று கிடந்தாள். அவரது பசி அவளுக்குப் பெரிசாகத் தெரியவில்லை. அவருக்கோ தானாக அடுப்படிக்குப் போய்ச் சாப்பிட்டுப் பழக்கம் கிடையாது. பல நாள் பட்டினி கிடந்தார்.

ஒரு நாள் பிள்ளைகளுக்குத் துணிமணி வாங்கும்போது அவருக்கும் வேட்டி சட்டை துண்டு வாங்கிவந்தாள். போட்டுப்பார்த்தவர் தற்செயலாகக் கேட்டார்.

''எப்படியிருக்கு மங்கா.''

''இனிமே நமக்கு அழகென்ன வேண்டிக்கெடக்கு.''

''சட்ட வெள்ளையா இல்லாம வேற நெறத்துல எடுத்திருந்தா நல்லாருக்கும். அழுக்குப் பட்டாத் தெரியாது. துண்டு கொஞ்சம் பெரிசா இருக்கணும். கெட்டிக் குளிக்கிறதுக்கு எட்டாது போலருக்கு.''

அவள் கோவத்தில் ஏறிட்டுப் பார்த்தாள்.

''நம்ம பெழச்ச பெழப்புக்கு இது போதும். பெரிசா கொற சொல்ல வந்துட் டாரு. எடுத்துக் குடுக்கிறதே பெரிசு. உடுத்திக்கிட்டு ஒரு மூலையில உக்காரும்.''

அவள் இப்படிக் கோவப்பட்டுப் பார்த்ததே இல்லை. இது பழைய மங்கா தானா. என்ன வந்துவிட்டது இவளுக்கு. பேச்சே ஒரு தினுசாக இருக்கிறதே. இதுவரை ''மாமா வாங்க'' என்று கூப்பிட்டவள் ''உக்காரும்'' என்று உதா சீனமாகப் பேசுகிறாளே. தோட்டக் கரையை மழைநீர் உடைத்து அரித்த மாதிரி மனசில் விரிசல். அன்றைக்கு ராத்திரியும் பட்டினிதான்.

சொன்னகூடு சுப்பா நாய்க்கர் இளைத்து இருமி படுத்து நீட்டி நிமிர்ந்து விட்டார். கடைசிவரை மனுசன் சோளச்சோற்றை மறக்கவில்லை. சென்னம் மாளுக்குத் தனி உலைவைக்கும் வேலை குறைந்தது. இருந்தாலும் மனசில் உலை ஏறிக்கொண்டதுபோல் சூடு.

குடும்ப நிருவாகம் மங்கத்தாய் கைக்கு வந்தது. சுந்தர நாய்க்கர் எல்லாச் செலவுக்கும் அவளிடம் போய் நிற்க வேண்டிய நிலை. ஒரு ஆசைப் பண்டம் வாங்கி அனுபவிக்க முடியாது. ஒரு காலத்தில் என்னென்னமோ பண்டம் வாங்கி வைத்திருந்து கொடுப்பாள். ஏன் அவரையே ஆசைப் பண்டமாகத்தானே வைத் திருந்தாள். வாரந்தவறாமல் எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி தலைதுவட்டி விடுவாளே. இவளால் எப்படி உதறியெறிய முடிந்தது.

பிள்ளைகளிடங்கூடப் பாசம் குறைந்துவிட்டது. ''நைனா இட்ட சூடு... அட்ட சூடு நைனா'' என்று கோழிக்குஞ்சுகளை வேடிக்கை காட்டி விளையாடி யவர்கள் வளர்ந்ததும் விலகிப் போனார்கள். ஒவ்வொருவரையும் அருகிலிருந்து தலைகோதித் தடவி நாலு வார்த்தை பேச ஆசையாக இருக்கும். பிரியமாகக் கூப்பிடுவார்.

''கனகும்மா இட்ட ராம்மா.''

''நான் வெளையாடப் போறென்.''

நைனா மடியில் இடம்பிடிப்பதற்காகச் சரிசண்டை போட்ட கனகலட்சுமி கூட சிலுப்பிக்கொண்டு ஓடுவாள்.

வீட்டில் இதுதான் நடந்தது. காடுகரைக்குப் போனால் பிள்ளைகளைப் பார்ப்பதற்காகவே மதியம் வீட்டுக்கு வரும் மனுசன் இப்போது குடும்பத்தில் தனித்துக் கிடந்தார். மதியம் வருவதைத் தவிர்த்து தோட்டத்து கரண்ட் ரூமில் துண்டு விரித்து யோசனையில் படுத்திருந்தார். மாடப்பன் கேட்டான்.

''சாமிக்குப் பசியில்லையா. நாங்கெல்லாம் சாப்பிட்டாச்சு.''

''பசிக்குதான்னு கேக்கிறதுக்கு நீயாச்சும் இருக்கயே. பசி மரத்துப்போயி நாளாச்சுடா.''

''ஏன் சாமி இப்படிச் சொல்றீக. ஒங்களுக்கென்ன கொறச்சலு.''

''எனக்கென்னமோ வரவர எல்லாமே வெறுத்துக்கெடக்குதுடா. ஏண்டா கலியாணம் முடிச்சுப் புள்ளீகளப் பெத்துக்கிட்டம்னு தோணுது. எண்ணைக்கும் போல பாட்டுப் படிச்சுக்கிட்டு காட்ல வேல செஞ்சுக்கிட்டு கவலையில்லாம இருந்திருக்கலாம்.''

''அப்படியென்ன புதுசாக் கவல வந்துருச்சு.''

''குடும்பமே கவலதாண்டா. எல்லாத்தவும் அத்தெறிஞ்சிட்டுப் பிச்சுப் புடுங்கி ஓடீறலாமான்னுருக்கு.''

''ரெம்ப வெறுத்துப் பேசுறீகளே...''

''மனசில நிம்மதியில்லாற பெழப்பும் ஒரு பெழப்பா.''

''நிம்மதிய நம்மதான் தேடிக்கிறணும் சாமி. போன மாசந்தான் எந் தாயா ரவும் சாகக்குடுத்தென். அப்பன் செத்து ஒரு வருசம் திரும்பல. அதுக்குள்ள தாயும் போயிட்டா. இப்ப நானும் பொண்டாட்டியுந்தான் மிச்சம். இத்தன வருசமா கொழந்த குட்டியில்ல. அத நெனச்சு வருத்தப்பட்டு ஆகப்போறதென்ன.

ஒருத்தருக்கொருத்தரு தொணையா நாங்க சந்தோசமாத்தான் இருக்கொம். எங்களுக்கு வயசா போச்சு. ஒரு கொழந்தையாச்சும் ஆண்டவன் குடுப்பாரு. நீங்க மூணு புள்ளையப் பெத்துக்கிட்டு இப்படிப் பேசலாமா.''

''அடே நான் பொண்டாட்டி வேணும் புள்ள வேணும்னு துடிச்சிட்டா திரிஞ்செண்.''

''அதில்ல.''

''தரிசாக் கெடந்த எம் மனசில ஆசைய வளத்து ஆட்டிப்படச்சது ஆரு.''

''பூச்சம்மாதான் ரெம்ப ஆசப்பட்டது. அதனால என்ன இப்ப. நல்லாத்தான வச்சுக்கிறாக.''

''வெரட்டிப் புடிச்சுக் கழுத்த நீட்டித் தாலி கெட்ட வச்சு இண்ணைக்குப் பிஞ்சுபோன வெளக்கமாரு மாதிரி தூக்கியெறிஞ்சா எப்படி. மனுசனுக்கு எவ்வளவு வேதனையாருக்கும்.''

''அப்படியென்ன நடந்தது.''

''பழைய மங்கா காணாமப்போயிட்டா. அண்ணைக்குத் தேனா இனிச்ச எம் பாட்டு இண்ணைக்குக் கசக்குது. வாய்க்குப் பூட்டுப் போட்டுட்டா.''

''காலமெல்லாம் இனிக்கவா செய்யும். புளிச்சுத்தான் போகும். காலத் துக்குத் தக்க மாறிக்கிறத்தான் செய்யணும். இது ஒரு வருத்தமா. பாட்டுப் படிக்க ணும்னு ஆசையாருந்தா ஓடப் பக்கம் கொல்லைக்குப் போகயில ஓங்கிப் பாடுங் களேன். பின்பாட்டுக்கு நானும் வறட்டுமா.''

''ஒனக்குக் கேலிமயிராருக்குதோ.''

''பெறகென்ன. இதெல்லாம் ஒரு காரணம்னு சொல்லிக்கிட்டு...''

''கணபதி பெறந்தானோ இல்லையோ அவ கொணம் சுத்தமா மாறிப் போச்சு.''

''எப்படிச் சொல்றீக.''

''மூத்த பொண்ணுக்குச் சடங்கு வச்சாளே தகப்பங்கிற மொறையில எங் கிட்ட ஒரு வார்த்த கேட்ருப்பாளா. எல்லாம் அவளே முடிவு செஞ்சுக்கிட்டா.''

''ஒங்ககிட்டச் சொன்னாப்புல பாஞ்சு தள்ளீருப்பீகளாக்கும். ஓடிஓடி எல்லா வேலையவும் முடிச்சிருக்க மாட்டீகளோ. பெத்த புள்ளைக்குச் செய்ற நல்ல காரியத்த நீங்கதான் முன்னால நின்னு நடத்தீருக்கணும். அத வுட்டுட்டு கவுரவம் கொண்டாடுறீகளே. இதுக்குத்தான் அண்ணைக்கு உம்முன்னு வீஞ்சுக்கிட்டுத் திரிஞ்சீகளாக்கும்.''

''மனுசனுக்கு வருத்தமாருக்குமில்லையா.''

''பெரிய வருத்தம். அவுக ஒண்ணும் தப்பான முடிவெடுக்கலயே. பொண் ணுக்குப் பெரிசாச் செஞ்சுபாக்கணும்னு தாய்க்கு ஆச இருக்கத்தான் செய்யும். அதுல போயிக் குத்தம் கண்டுபுடிச்சா எப்படி. இப்படிச் செய்யி அப்படிச் செய் யின்னு யோசன சொன்னாக் கேட்டுட்டுப் போறாக. எல்லாம் நல்லா நடக்குதா சந்தோசம்னு பெருந்தன்மையா நெனச்சுக்கிறணும். நம்ம புள்ளையில்லையா.''

''மரப்பாச்சி மாதிரி மூலையில உக்காந்துட்ருன்னு சொல்றா. எவ்வளவு காலத்துக்கு இருக்க முடியும். ஒரு நா எங்களுக்குள்ள சண்டையே வந்துருச்சு.''

''சண்டையா.''

“எம் பெழப்பப் பத்தி நல்லாத் தெரிஞ்சுக்கிட்டுத்தான கைப்புடிச்ச. இப்ப மட்டும் கசக்குதான்னு வெளிப்படையாவே கேட்டுப்புட்டென். அதுக்கு அவ அழுக்கத் தொடச்சு மடியில வச்சாலும் புழுக்கக் கொணம் போகுமான்னு என் நெஞ்சில குத்தி வாங்கீட்டா. எனக்கு அழுகையா வந்துருச்சு. அப்படியே போய்ப் படுத்துட்டென். அதுலருந்து அவகூட சரியாப் பேச்சுவார்த்த கெடையாது. சோறு போட்டு வச்சா சாப்பிட்டுக்கிருவென். வீட்லருக்கப் புடிக்காமத்தான் இங்க வாறது. நாலு சனங்க மொகத்தப் பாத்துப் பேசினா மனசாறுமில்ல.”

“பூச்சம்மா கொணம் கொஞ்சம் மாறித்தான் போச்சு. நானும் கவனிச்சிருக்கென்.”

“பெறகு சொல்றயே.”

“அண்ணைக்கு என் வீட்டுக்காரியிட்ட என்னடி வகுத்துல புழுப்பூச்சியக் காணும் கடைசிவரைக்கும் கருதுவாங்காற சோளத் தட்டையா இருந்துறா தடின்னு குத்தலாப் பேசீருக்கு. அவ வீட்டுக்கு வந்து குமுறிக்குமுறி அழுதா. அவளத் தேத்துறதுக்குள்ள பெரும்பாடாப் போச்சு. அண்ணைக்கோட சரி. அதச் சுத்தமா மறந்துட்டு அவ நம்ம தோட்டத்துக்கு வரத்தான் செய்றா. ஒங்க வீட்ல கூடமாட இருந்து குத்திக் கொழிச்சுக் குடுத்துட்டுத்தான வாறா.”

“என்னதான் மறந்தாலும் அடிமனசில அந்த வருத்தம் இருக்கத்தான செய்யும்.”

“ஒரு புள்ளையில்லையேன்னு அவளும் பொலம்பாற நாளில்ல. அது நம்ம கையிலயா இருக்கு சாமி... எல்லாம் சரியாயிரும். புள்ளீகளப் பாத்துச் சந்தோசப் படுங்க.”

மாடப்பன் மனசில்லாமல் எழுந்து போனான். முத்தம்மாளிடம் நிறையப் பேச வேண்டியிருந்தது.

**அ**ன்றைக்குச் சாய்ந்தரமே முத்தம்மா மங்கத்தாயைப் பார்த்துச் சத்தம் போட்டாள்.

“என்னம்மா இது. மதியம் சாமிவுக பட்னி கெடந்ததப் பாத்துச் சங்கடமா ருந்துச்சு. அவுகளால வெயிலோட வீட்டுக்கு வர முடியலன்னா ஆருட்டயாச்சும் குடுத்து வுட்ருக்கலாமில்ல.”

மங்கத்தாய்க்குக் கோவம்.

“கொழுப்பெடுத்துப் போயிக் கேவலத்துக்குப் போல படுத்துக் கெடக்காரு. வீட்ல இரும்னாக் கேட்டாத்தான. காடே தஞ்சம்னு கெடந்தா நான் என்ன செய்வென்.”

“சாமிவுகள நல்லாக் கவனிச்சுக்கங்கம்மா.”

“வரட்டும் கவனிச்சுக்கிறென்.”

அடுத்த நாளிலிருந்து வேலைக்காரன் மூலம் மதியச் சாப்பாடு அவரைத் தேடித் தோட்டத்துக்கு வர ஆரம்பித்தது. அவர் பெரும்பாலும் சாப்பிடுவதில்லை. கைகழுவும் சாக்கில் வாய்க்காலில் கரைத்துவிடுவார். இல்லை கிணற்றுக்குள் சிதறிவிடுவார். மீனுக்கு இரையாகும்.

ஒரு நாள் வாய்க்காலில் தண்ணீர் குடிக்க வந்த முத்தம்மா நீரில் சோற்றுப் பருக்கைகள் உருண்டு வருவதைப் பார்த்துவிட்டாள். ரெம்ப வருத்தமாக இருந்தது.

'சோளச் சோத்தக் குடுத்து வுட்ருக்காகளே. வீட்ல ஒண்ணுமே இல்லாற மாதிரி. மனுசன் என்னத்தச் சாப்பிட்ருக்கப்போறாரு. பாவமில்லையா.'

மனசு கேட்காமல் கரண்ட் ரூமுக்குப் போய் உள்ளே எட்டிப் பார்த்தாள். அவர் சோர்ந்து சுவரில் சாய்ந்திருந்தார்.

''சாமியென்ன கவலையாருக்கீக.''

அவர் நிமிர்ந்துகொண்டார்.

''முத்தம்மாளா. வா வா. அசதியாருந்துச்சு. அப்படியே கண்ண மூடுனென்.''

''சாப்பாடாச்சா.''

''அப்பதயே முடிஞ்சது.''

''வாய்க்கால்ல பாத்தென்.''

அவர் சமாளிக்க முயன்றார்.

''கைகழுவுனது...''

''கையில அவ்வளவு சோறா ஒட்டிக்கிருச்சு.''

''மிச்சம் கொஞ்சம் இருந்தது...''

''கொஞ்சமாச்சும் சாப்பிட்டாத்தான மிஞ்சும். வீட்ல குடுத்தனுப்புறத வெள்ளாமைக்கு ஒரமா தண்ணியோட அனுப்புறீகளாக்கும்.''

அவர் முகம் சிறுத்துப்போயிற்று. அவளது அக்கறையில் கரைந்துவிட்டார். குரல் தளுதளுத்தது.

''வெதப்பு நேரம் மாட்டுக்கு நாத்துக் கூளம் போடுவாக. வேலையில்லாற காலத்துல சோளத் தட்டதான் கெடைக்கும். இந்த மாடு இப்ப வேலை செய்யிற தில்லையே.''

''வேல செஞ்சது ஒரு காலம். இப்ப மகராசனா இருந்து மனசுக்குப் புடிச் சதச் சாப்பிட வேண்டிய நேரம். அத வுட்டுட்டு...''

''சும்மா வீட்ல கெட்டிக் கெடந்தாலும் வேலையத்த மாடுதான.''

''இது நல்லாருக்கே. வேலையாளுக்குக் கூலி குடுக்கிற மொதலாளிக்கே இந்தக் கதியா. அநியாயம். எங்க வீடுகள்ல கை நனைக்கிற மனுசராருந்தா சுடச்சுடச் சோறு குடுத்துருவென்.''

அவர் அவளை நிராதரவாகப் பார்த்தார். அந்தப் பார்வை கொழுகொம்பைத் தேடிக் காற்றிலாடும் கொடிக் கொழுந்தாகத் தள்ளாடியது.

''சொறிஞ்சு தேச்சாத்தான் எண்ண. பரிஞ்சு போட்டாத்தான் சாதம். இல் லையா முத்தம்மா.''

''பிரியமில்லாமக் குடுக்கிற சோறு உள்ளதான் எறங்குமா.''

அவள் போய்விட்டாள். புருசனிடம் மனச்சுமையை இறக்கி வைத்த பிறகு தான் அவளுக்கு ராத்திரி உறக்கம் வந்தது.

வேலைத்தனத்தில் பலநாள் சுந்தர நாய்க்கருக்கு அன்பான அக்கறையான பேச்சுத்துணை கிடைத்தது. நிறையப் பேசினார்கள். அவள் ஒரு நாள் வேலைக்கு வரவில்லையென்றால் மாடப்பனிடம் விசாரிப்பார்.

''முத்தம்மா வரலயா மாடா.''

''தெக்கூருக்குத் துட்டி கேக்கப் போயிருக்கா சாமி. நாளைக்கு வந்துருவா.''

''அதான.''

அவர் மனசு சமாதானமடையும். சில சமயம் இருவருமே வரவில்லையென்றால் வீடு தேடிப் போய் உரிமையுடன் கேட்பார்.

''என்னாச்சு ஒங்களுக்கு.''

மாடப்பன் சரியான காரணம் சொல்வான். முத்தம்மா மணைக்கட்டையை எடுத்து வந்து முன்தாவாரத்தில் போடுவாள். அவர் அதில் உட்கார்ந்து ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருப்பார்.

## 4. குடல் கழுவி...

கலிங்கலூருணி காலந்தோறும் வற்றி வறண்டது. முற்றும் பெருகிக் கரைபுரண்டது. பலமுறை பழங்கூரைகள் மக்கி நொறுங்கிப் புதிய குடைகளாயின. சில முறை தலைமுறைகள் மாறின.

பொய்யாளியின் பட்டரைவரை பொய்யாகிப்போனது. வேலாயி பட்டமும் காலாவதியாகிவிட்டது. நல்லப்பன் தலைமுறையும் விதைநெல் நாற்றுக்களும் அப்போதைக்கு மெய்யாக இருந்தன.

சில சமயம் இளம்பயிர்கள் களம் பாராமல் வயலிலேயே வாடி மடிந்து புதைந்துபோவதுமுண்டு. நல்லான் குடும்பத்தில் வள்ளி கதையும் அப்படித்தான். ராமன் காய்த்த மரம். பழுக்குமுன் சாய்ந்துவிட்டான்.

கோயிந்தன் குடும்பத் தளைகளற்ற காடோடி. தகப்பனாகிய பிறகும் அப்படித்தான். சித்தன் போக்கு சிவன் போக்கு. புளுகு அவனுக்கு ருசியான பண்டம். ஊருக்குள் தட்டுப்பட்டால் அதிசயமாகக் கேட்பார்கள்.

''கொஞ்ச நாளா ஆளக் காணுமே. அப்படியென்ன முக்கியமான வேல கோயிந்தா.''

அவன் அலுத்துக்கொள்வான்.

''அத ஏன் கேக்க. அரமனையில விருந்துக்கு வரச் சொல்லி எட்டயாவரம் மகாராசா ரெம்ப நாளா ஆளுமேல ஆளு வுட்டுக் கூப்புட்டுக்கிட்டுருந்தாரு. நானும் இந்தா வாறென் அந்தா வாறன்னு தட்டிக்கழிச்சிட்டே வந்தென். இப்பத்தான் வேல தீந்துச்சு. ஒரெட்டுப் போயிக் கைநனச்சிட்டு வாறென்.''

''ஒனக்கு மட்டும் அப்படியென்ன தனி விருந்தாம்.''

''இந்தச் சீமையில முக்கியமான ஆளுகளத் தேடிப் புடிச்சு விருந்து குடுக்காக.''

''அப்படிச் சொல்லு. விருந்து பெலமாருந்துச்சோ.''

''குடுக்கிறது ஆரு. கொறையாவா இருக்கும். சோத்தவிடக் கறிவகதான் ரெம்ப. காட கதுவாலி கானாங்கோழின்னு வறட்டுக்கறி. மொசக் கறிப் புட்டு. முழுசு முழுசாப் பொறிச்ச மீனு. மௌாக்கறிக் கொழம்பு. குடிக்கிறதுக்கு சீமச் சாராயம். கைகழுவிக் கொப்புளிக்கிறதுக்குப் பன்னீரு. கையகலத்துக்கு எளம் வெத்தல. பச்சப் பாக்கு. வகுத்துல கொஞ்சங்கூட எடமில்ல. தெணறிப்போச்சு.''

''எத்தன நாளைக்கு இருந்த.''

''மூணு நாளு. அதுக்கு மேல இருக்கத்தான் சொன்னாக. வேல கெடக்கு துன்னு வந்துட்டென். மூணு நாளும் பகல் முழுக்க ராசா எங்கூடத்தான் இருந்தாரு. அரமன வெவகாரங்களப் பத்தி ரோசன கேட்டாரு. இப்படியிப்படிச் செய்யிங் கன்னு சொன்னென். குருதைகள வளக்கிறதப் பத்தித்தான் ரெம்பப் பேசுனோம். ஒடனே குருதக்காரங்களக் கூப்புட்டு உத்தரவு போடுவாரு. குருத வண்டியில கொண்டுபோயி வுட்றவான்னு கேட்டாரு. வேணாம்னு சொல்லி லாத்தலா நடந்து வந்தென். தின்ன சோறு செமிக்கணுமில்ல. எடையில வேற ரெண்டு எடத்துல விருந்துக்குப் போக வேண்டியிருந்துச்சு. இதெல்லாம் ராசாட்டச் சொல்ல முடி யுமா. கோவிச்சுக்கிருவாருல்ல.''

''ஆமாமா. பெரிய எடமாச்சே.''

எட்டயாபுரத்துப் பக்கம் ஒரு கோயில் திருவிழாவுக்குப் போய் கண்ட மானக்கிக் கறிபுளி தின்றுவிட்டுக் காடுகளில் கழிந்துகொண்டு காலோய்ந்து வந் திருக்கிறான் என்பதுதான் இந்தக் கதைக்கு அர்த்தம்.

அவன் புளுகுவதை அப்படியே கேட்டுக்கொள்ளணும். மேலும் சந்தோச மாகப் புளுகுவான். யாராவது வாய்தவறிக் கேட்டுவிடுவார்கள்.

''ஏன் கோயிந்தா இதுக்குப்போயி இப்படிப் புளுகுற.''

அவனுக்கு ரெம்பக் கோவம் வரும்.

''நீ பெரிய யோக்கியனாக்கும். பொய்யே சொன்னதில்லன்னு ஒம் புள்ள மேல சத்தியம்பண்ணு. பொய்யி சொல்லாற மனுசன் ஒலகத்துல உண்டுமா. சொல்லு பாக்கலாம். ஆயிரம் பொய்யச் சொல்லி ஒரு கலியாணத்த முடின்னு அந்தக் காலத்துலயே சொல்லிவச்சிருக்கானே அவன் மடையனா. ஓம் பொண் டாட்டியிட்ட நீ பொய்யே சொன்னதில்லையா.''

''அப்பப்பச் சொல்றதுதான்.''

''அது மட்டும் என்ன. நம்ம வச்சுக்கிறதுதான் பொய்யும் மெய்யும். இண் ணைக்கு நீ உசிரோட இருக்கிறது மெய்யி. நாளைக்குச் செத்துப்போனா பொய்யி. நீ மூச்சு வுடுறயில்ல.''

''ஆமா.''

''அது கண்ணுக்குத் தெரியிதா.''

''இல்ல.''

''அப்படின்னா மூச்சு மெய்யா பொய்யா.''

''மூச்சு வுடுறது நெசந்தான.''

''கண்ணுக்குத் தெரியாறது எப்படி மெய்யாருக்க முடியும். மூச்சு இருக்கு துன்னு நம்பிக்கிட்ருக்க. அதப் போலத்தான் எல்லாம்.''

''நீ சொல்றது நெசந்தான்.''

''எது.''

''வேணாம்ப்பா. ஒங்கிட்ட வாயி தொறக்க மாட்டென்.''

''எது மெய்யி எது பொய்யின்னு ராத்திரி மட்டமல்லாக்கப் படுத்துக்கிட்டு நல்லா ரோசனபண்ணிப் பாரு.''

எந்த ஊர்க் கோயிலுக்கு எப்போது திருவிழா என்பது அவனுக்கு அத்துபடி. எட்டுமட்டும் போவான். ரெண்டு மூணு நாள் தங்குவான். சாமியார்களுடன் பேச்சுப்பழக்கம் போடுவான். ராத்திரி வேளை சில சாமியார்கள் மலைமீது கோயில்படியில் கட்டையைக் கிடத்தி ஆகாயச் சாம்பலுக்குள் வெள்ளிக் கங்கு களைத் தேடியபடி மனம் கசியப் பாடுவார்கள்.

‘‘ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச் சடலம் விட்டே - என் கண்ணம்மா
உன்பாதம் சேரேனோ.

மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணையெனக்குக் கனலாக வேகுதடி
மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்
காமன் கணைகளெல்லாம் - என் கண்ணம்மா
கண்விழிக்க வேகாமோ.’’

அந்த ஏக்கக் குரலையும் மிஞ்சித் தானும் பாடணும்போல் அவன் மனசு குறுகுறுக்கும். வானத்தில் திருவோடாக விளையாட்டுக் காட்டும் அரைநிலாவை வெறிப்பான். உறக்கம் பிடிக்காது. கண்ணை மூடினால் அஞ்ஞையும் பெண் டாட்டி பிள்ளைகளும் நடமாடுவார்கள். விடிந்ததும் வீடு தேடிக் கால்கள் நடக்கும்.

கலிங்கலுக்கு வரும்போது செவல் தரிசில் குறண்டிச் செடி மறைவில் நாலு கல்லுக்கு நடுவில் மூணு முட்டையிட்டு அடைகாக்கும் கல்பொறுக்கிக் குருவி அவனைக் கண்டதும் வெண்கலக் கிணுகிணுப்பில் கேட்டுக்கொண்டே தலைக்கு மேல் பறந்து போகும்.

‘‘எங்க போனயாம் எங்க போனயாம்.’’

கண்ணுக் கெட்டாத உயரத்தில் மேகத் தூளாக மிதக்கும் வானம்பாடியின் ஒத்தைச் சலங்கைக் குரல் விட்டு விட்டு ஒலிக்கும்.

‘‘கோயிந்தா வா வா
கலிங்கலுக்கு வா வா.’’

புஞ்சைப் பொந்துக் கூட்டில் குடியிருக்கும் குஞ்சைத் தேடி நூலால் சுண்டி யிழுத்ததுபோல் சரியாகத் தரையிறங்கும் தாய்க் குருவியுடனேயே அவனது அண்ணாந்த பார்வையும் தாழும்.

தொலைவில் ஊமாங்காடையின் சோக முனக்கம் கேட்கும். வண்டிப் பாதைப் புழுதியில் சொகமாகக் குளிக்கும் கழலைக் குருவிகள் கிட்ட நெருங்கிய தும் போய்த்தான் ஆகணுமா என்று வேண்டாவெறுப்பில் எழும்பிக் கொஞ்சம் தள்ளி விழுந்து குளிக்கும். பிறகும் அதே விளையாட்டு.

மேச்சல் தரையில் ஆடுமாடுகளுக்கிடையே திரியும் கரிச்சான் குருவிகளைப் பார்த்தால் கொஞ்ச நேரம் நிழலுக்கு ஒதுங்கி உட்கார்ந்துவிடுவான். ஆடுமாடு களின் தலையிலும் முதுகிலும் அவை உட்கார்ந்து மேய்க்கும் தோரணையே தோரணை. எல்லை தாண்டிப் போனால் முன்னால் பறந்தோடித் தாக்காட்டித்

திருப்பி மேய வைக்கும். ஆடுகள் ஒண்ணுக்கொண்ணு சண்டையிடாமல் அமைதியாக மேயணும். ஆட்டுக்காரன் குருவிகளை நம்பி விட்டுவிட்டு வீடுபோய் மதியக் கஞ்சி குடித்துவிட்டுத் திரும்பலாம்.

ஆடு மேய்ப்பு முடிந்ததும் குருவிகள் கமலைச் சட்டத்தின் மேல் உட்கார்ந்து உழவாடிய நிலங்களில் விட்டிகள் பறப்பதைக் கூர்மையாகக் கவனிக்கும். மூடி முழிக்குமுன் கீழே பாய்ந்து விட்டியைப் பிடித்துக்கொண்டு உயரே வந்து உட்காரும். பெரிய விட்டியென்றால் அதன் ரம்பக் கால் உதை தாங்காமல் ''சீ கழுத. ஒன்னப்போயிப் புடிச்சிட்டு வந்தென் பாரு'' என்று உதறிவிடும்.

கரிச்சான் குருவிகள் பாடுபடும் சனங்களுக்குத் துணையானவை. விடியக் காலம் வாலிபர் மேடை வேம்பிலிருந்துகொண்டு கூவியெழுப்பிச் சனங்களை வேலைக்குத் தயார்படுத்திவிடும். பருத்தியெடுக்கவும் நாற்றறுக்கவும் நேரத்துடன் கிளம்புகிறவர்களுக்குக் கவலையே இல்லை. கோழியைவிடக் குருவிதான் சரியான நேரத்துக்கு உசுப்பிவிடும்.

மழைக் கோப்பு நேரங்களில் பட்டாளம்பட்டாளமாகப் பறக்கும் தட்டான்களை அவை பிடிக்கும் சித்திரத்தைப் பார்க்கணும். மரத்திலிருந்து வீச்சென்று ஒரு பாய்ச்சல். பட்டாள வியூகத்தைத் துளைத்துக்கொண்டு வெற்றிக் களிப்பில் வெளியே வரும். அதன் வாயில் ஒரு தட்டான் சிக்கியிருக்கும். கொத்தித் தின்று கொக்கரைக்குள் திணித்தபின் மீண்டும் சண்டை தொடங்கும்.

இவையெல்லாம் அவனைக் கொஞ்ச நாள் கலிங்கலில் தங்க வைக்கும். அதுக்குள் சில முக்கியமான வேலைகளை முடிக்கணும். ஊரில் நல்ல நாளென்றால் கட்டாயம் கறிபுளி நடமாடணும். பல்தேயக் கறியை அரைத்தாகணும். பெரிசுகளுக்கு அந்தக் குறை மட்டும் வைக்கக் கூடாது. வசவு வாங்கிக் கட்டி முடியாது.

''என்னல மயிரப் புடுங்கிற நல்ல நாளு கொண்டாடுறீக. வாய்க்கு ருசியாக் கறியில்லாம. கறி நாளுன்னு ஏன் பேரு வச்சிருக்கான் தெரியுமா.''

''நாடாரு போடுற நடையங் கறி எந்த மூலைக்கு. கட்டக்காலுக் கறியில்லாம நல்ல நாளு கெடையாது.''

கோயிந்தன் வாயில் குறும்பு துள்ளும்.

''ஒனக்கு ஒரு உருப்படி முழுக்க அறுத்துப் போட்டாலும் காணாதே. ஆன வந்தாலும் அவியக் கறி பூன வந்தாலும் பொரியக் கறின்னு அம்புட்டும் தின்னு கழிஞ்சிருவயே.''

அவன் இதுக்கு நல்ல வழி கண்டுபிடித்தான். வருசம் முழுக்க நல்ல நாளுக்குக் குறைச்சலில்லை. சித்திரைத் தீர்த்தம் வைகாசி விசாகம் ஆடி அதிலும் தலையாடி கடைசியாடி தீபாவளி கார்த்திகை தைப்பொங்கல் மாசிப் படப்பு. காணாக் குறைக்கு சித்திரை ஆடியில் உள்ளூர்க் கோயில் பொங்கல். இத்தனைக்கும் அப்பப்பப் பணம்கொடுத்துக் கறி வாங்கிக் கட்டுபடியாகாது. சமயத்தில் கிடைக்கணும். ஒவ்வொண்ணுக்கும் நாலஞ்சு மாசத்துக்கு முந்தியே குட்டிப் பருவத்தில் பன்றி பிடித்து வளர்த்தால் செலவும் கம்மி. கறியும் அதிகம் கிடைக்கும்.

எட்டுப் பேர் பத்துப் பேருக்குப் பங்கு சேர்ந்துகொள்ளணும். அவன் அவர்களிடம் துட்டு வசூலித்து அலைந்து திரிந்து குளுவன்களிடம் அதட்டிப் பேசி குட்டிகளை வாங்கி வந்துவிடுவான். சலவனோ மட்டமோ எது கிடைத்தாலும்

சரி. அதுகளுக்குப் பங்கு வீடுகளில் சோறெடுத்து ஊற்றச் சிறுபயல்களை நியமிப்பான். தனித்தனி இடங்களில் பனம்பத்தலில் ஊற்றும் கஞ்சியைக் குடித்து அவை கொழுக்க வளரும். பகலெல்லாம் மந்தையில் மேயும். சாய்ந்தரம் கஞ்சி. ''ஊட்டி ஊட்டி'' என்று கூப்பிட்டால் சுதாரிப்பாக உறுமிக்கொண்டு ஓடிவரும். அதுகளை நாய்களிடமிருந்து காப்பாற்ற வேண்டியது பயல்களின் பொறுப்பு.

இடையிடையே அவன் வந்து பார்த்துக் கோளாறு சொல்லிவிட்டுப் போவான். சலவன் குட்டியென்றால் கொஞ்ச நாளிலேயே பீசம் திரண்டு ஒரு தரையில் நிற்காது. பெண் பன்றிகளை முட்டி முகந்துகொண்டே திரியும். கஞ்சியில் தேட்டமிருக்காது. அவன் அவ்வளவுக்கு இடங்கொடுக்க மாட்டான். வளைத்துப் பிடித்துக் கிடத்தி பீசத்தை அறுத்துப் பிதுக்கி பலாச்சுளைபோல் விதையை உரித்து நாய்க்குப் போட்டுவிட்டு ரத்தம் வராமலிருக்க அடுப்புச் சாம்பலை அப்பி அறுத்த இடத்தைக் கருவ முள்ளால் குத்தித் தைத்துவிடுவான். கீறல் சேர்ந்து புண் ஆறி அரிக்கும்போது அது சுவரில் உரசும். அப்போது புண் சிராய் உதிர்ந்து பீசம் அமுங்கியடங்கிவிடும். பிறகு அதுக்கு எல்லாமே கஞ்சிதான்.

வளர்வது மட்டமென்றால் கொஞ்சம் சிரமம். ஆண் பன்றிகள் அண்டாமல் பார்த்துக்கொள்ளணும். சினையாகிக் குட்டிபோட்டுவிட்டால் சள்ளை. கறிக்கு உதவாது. அதனால் அதைப் பெரும்பாலும் மந்தையில் மேய விடுவதில்லை. வீட்டைச் சுற்றியே இரை போட்டு வளர்க்கணும். தப்பித்தவறி மந்தைக்குப் போனால் கூடவே பயலும் திரியணும்.

.

கறிநாள் வந்துவிட்டால் கலிங்கலில் எல்லாருக்கும் கொண்டாட்டந்தான். எங்கிருந்தாலும் அன்றைக்கு கோயிந்தன் ஊருக்கு வந்துவிடுவான். வளர்ப்புப் பன்றியை கஞ்சிப் பத்தலருகில் மடக்கியோ விரட்டியோ பிடித்து மல்லாக்கக் கிடத்துவார்கள். ஒருவன் முன்னத்தியங் கால்களையும் ஒருவன் பின்னத்தியங் கால்களையும் விறைப்பாகப் பிடித்துக்கொள்ள இன்னொருவன் பன்றி சத்தம் போடாமல் வாயைப் பொத்தியிருப்பான். கோயிந்தன் அதன் நெஞ்சுக் குருத்தெலும்பைக் கணக்குவைத்து அதன்மேல் அடையாள ஓடு வைப்பான்.

''ஓட்டு மேலயே அடி வுழுகணும். குறி தவறுனா ஓம் மண்ட செதறிப் போகும்.''

சரியாக ஓட்டுமேல் ஓங்கி உலக்கையடி விழும். ஒரே அடி. நெஞ்சுக்குள் ஈரக்குலை சிதறி ஊமை உறுமல் தேய்ந்து உயிரடங்கிக் குழண்டுவிடும்.

அடுத்தடுத்த வேலைகள் வேகமாக நடக்கும். நெருப்பு மூட்டி முருக வாட்டிக் கால் குளம்புகளைத் திருகியெடுத்து மயிர்க் கருகலைத் தட்டித் துடைத்து தெளிந்த தண்ணீரில் குளிப்பாட்டுவார்கள். பிறகும் நெல்தாளாக மயிர்கள் நீட்டிக்கொண்டிருக்கும். கோயிந்தன் பதமான சூரியால் மழித்து வழுவழுப்பாக்கிவிடுவான். மஞ்சள் தேய்த்துக் கொஞ்சம் உலர வைத்து மறுபடியும் குளிப்பாட்டுவார்கள். பெரிய மஞ்சள் கிழங்குபோல் பார்க்க லட்சணமாக இருக்கும்.

கால்களைப் பிடித்துச் செல்லமாகத் தூக்கிவருவார்கள். கொண்டியிலிருந்து கழற்றிய தொழுக் கதவு குப்புறப் படுத்து தயாராகக் காத்திருக்கும். அதன்மேல் கிடத்துவார்கள். உடனே சுறுசுறுப்பாகக் கறியறுப்பு தொடங்கும்.

முதலில் வயிற்றைப் பிளந்து குடல் குந்தாணியைக் கொத்தாகக் கழட்டிக் கழுவுவதற்குக் கடத்தணும். உள்ளே பெருகிக் கிடக்கும் ரத்தத்தை அள்ளி வைக்கணும். மூலநோய் உள்ளவர்கள் வெதுவெதுப்பான ரத்தத்தை வாங்கிக் கண்ணை மூடிக்கொண்டு குடிப்பார்கள். பன்றியின் நடுமுதுகில் கீறி வார்க் கறியைப் பிளந்து உரித்தெடுத்துவிட்டால் மற்ற வேலைகள் சுளுவாக முடிந்து விடும். எல்லாம் துண்டுகளாக அறுத்துக் குமிக்கணும். அப்போதுதான் கூறு போடத் தோதாக இருக்கும்.

குடல் கழுவுவது கோயிந்தன் பொறுப்பு. பயல்களின் பட்டாளம் கூடை யில் சுமந்துகொண்டு மந்தைக் கிடங்குக்குப் போகும். அங்கே அகலமான சொறிக்கல்லைப் போட்டு அதில் குடலைக் கொட்டி நரம்புக் கொடிகளைப் பிரித்து இரையைப் பிதுக்கிவிட்டு கத்தியால் கிழித்துக் கல்லில் தேய்த்து நன்றாகக் கழுவுவார்கள். அந்த வழியே போகிறவர்கள் கேட்பார்கள்.

''என்ன கோயிந்தா வேல மும்மரமா நடக்குது போலருக்கு.''

''ஆமா. கொடலு வெளுப்பு.''

''நடக்கட்டும்நடக்கட்டும்.''

கோயிந்தன் பயல்களை நோட்டம் விடுவான்.

''ஏன் அக்கறையாக் கேட்டுட்டுப் போறான் தெரியுமா.''

''எதுக்காம்.''

''கொடலு வேகும்போது நாக்கத் தொங்கப் போட்டுக்கிட்டு வந்து நிப்பான் பாரு.''

செம்பிராந்தும் கரும்பிராந்துமாக ஒரு கூட்டம் உயரே கிடங்கைச் சுற்றிக் கிறுவாணமடித்து வட்டமிடும். செம்பிராந்தைப் பார்த்து யாராவது கும்பிட்டுக் கன்னத்தில் போட்டுக்கொள்வதைக் கவனித்துவிட்டால் அவனுக்குக் கெட்ட கோவம் வரும்.

''என்ன செஞ்சல.''

''கிட்ணப் பெராந்தப் பாத்துக் கும்புட்டென்.''

''ஆமா சாமி இவுகளுக்கு வரங்குடுக்க வந்துருக்காக. வாயப் பௌந்துக் கிட்டு அண்ணாந்து நில்லு. கனமாச் சாணி போடும். அது கொடலக் களவாங் குறதுக்கு அண்டம்போடுற கள்ளக் கழுதையாக்கும். எறிஞ்சு வெரட்டுங்கலே.''

பன்றியின் மூத்திரப் பையை ஒரு பயல் மூச்சுமுட்ட ஊத்தாம்பட்டியாக ஊதிப் புடைக்க வைத்து வெடிக்கச் செய்து அதை உயரே வீசி எறிவான். பிராந்துகள் போட்டிபோட்டுக்கொண்டு ஏந்த வரும். அவன் உச்சும் கல் ஏதாவது ஒண்ணைப் பதம்பார்க்கும். பிராந்துகள் அலறிக்கொண்டு கலைந்தோடும். குடல் கழிவுகளை உயரப் போட்டு அதுகளைக் குறிவைக்கும் விளையாட்டு கடைசிவரை நடக்கும்.

கோயிந்தன் வாய் கூசாமல் சாமிகளைக் கிண்டலடிப்பான். அப்படியொரு குணம். ஆனால் காரணமிருக்கும்.

போன வருசம் ஒரு சொட்டு மழையில்லை. கொறிக்கக்கூட வெள்ளாமை விளைச்சல் கிடையாது. கோயில் கொடை நடக்கவில்லை. நையாண்டி மேளம் நரிக்குறத்தியாட்டம் வில்லுப்பாட்டு என்று ஆறு நாள் வேடிக்கையும் எட்டாம்

பொங்கலுமாக ஊரே முழிப்பாக இருக்கும். ஒண்ணுமில்லாமல் சனங்கள் வாடிப் போனார்கள்.

அயலூர்க்காரர் ஒருவர் போகிற போக்கில் கோயிந்தனிடம் விசாரித்தார்.

“என்ன கோயிந்தா இந்த வருசம் கொட நடத்தாமப் போட்டுட்டீகளே. நம்பியாவரத்துக் கொறத்தி வில்லுப்பாட்டக் கேக்கணும்னு ஆசையாருந்தொம்.”

அவன் சாதாரணமாகச் சொன்னான்.

“காளியாத்தா வெயிலு தாங்காம மலைக்குப் போயிட்டா. திரும்பி வந்ததும் எல்லாம் நடக்கும்.”

“அப்படிச் சொல்லப்புடாது கோயிந்தா. சாமியக் கும்புட்டாத்தான மழ பேயும்.”

“அப்ப இத்தன வருசம் கும்புட்டதெல்லாம் பொய்யா. மழ பேயிறதுக்குத் தான சாமியக் கும்புடுறது. மழையக் குடுக்காற சாமிய வச்சுப் பாக்கலாமா. சல்லியாத் தட்டி நொறுக்கிக் கெணத்துல சொவரு கெட்டீற வேணாமா... இருக்கிற சாமி காணாதுன்னு புள்ளையாரக் கொண்டுவந்து வைக்கப்போறாகளாம். அசலூருல சூசுவான்னு உக்காந்துட்டுருந்த புள்ளையாரக் களவாண்டு ராவோட ராவாச் சொமந்துட்டு வந்து கெணத்துக்குள்ள போட்டு வச்சிருக்காகளாம். தண்ணிக்குள்ள கெடந்தாத்தான் சத்தி ஏறுமாம். அசலூருக்காரன் பாத்திருந்தா வெட்டுக் குத்துத்தான நடந்துருக்கும். களவு சோலிக்குப் போகணும்னா சாமி கிட்ட வரங்கேப்பாக. சாமியவே களவாங்கிறதுக்கு ஆருட்ட வரங்கேக்கிறது. கொடுமதான். வெருசனாப் போங்க. ஒங்கூருப் புள்ளையாரு பத்தரமா இருக்குதான்னு பாருங்க.”

அவர் விக்கிப்போய் நடையைக் கட்டிவிட்டார்.

ஒரு நாள் அவன் சத்திரப்படிக் கம்மாக் கரை வழியே போய்க்கொண்டிருந்தான். கரையிறக்கத்தில் சக்கிலியக்குடி முனியசாமி கோயிலைச் சூழ்ந்து கொண்டு கலிங்கல் ஆட்டுக்காரப் பயல்கள் குதியாளம் போட்டு விளையாடுவது கேட்டது.

இதென்ன வித்தியாசமான விளையாட்டாக இருக்கிறதே. கிட்டப் போனான். ஆளுருவமற்று சக்கரைக் கட்டியாகப் பீடத்தில் நிற்கும் மண்சாமி மீது ஒருவன் காலைத் தூக்கி வைத்துக்கொண்டு மூத்திரம் மோண்டு குளிப்பாட்ட மற்றவர்கள் கொட்டுத் தாளமடித்து பாட்டுப் படித்து துடியாகச் சாமியாடினார்கள்.

“மஞ்ச நீர ஊத்துங்க
மாலையத்தான் சாத்துங்க
சக்கிலியன் சாமி வந்து
தங்குதங்குன்னு ஆடுது.”

அவனுக்குக் கோவம் முட்டியது. கல்லெறிந்து விரட்டினான்.

“ஏலே அகராதி புடிச்ச அறுதச் சிறுக்கி புள்ளீகளா. அது சாமியா என்னன்னு நெனச்சீக. மழையின்னும் பாக்காம வெயிலுன்னும் பாக்காம பாவம் அது பாட்டுக்கு ஒத்தியில நிக்கிது. அதப் போயிப் பாடு காங்கீகளே. நாளைக்கு மேச்சாதிக் காரப் பையங்க வந்து ஒங்க சாமிமேல பேண்டுவச்சா என்ன செய்வீக.”

மோண்டவன் அதட்டலாகச் சொன்னான்.

''பேண்ட குண்டிய அறுத்து நாய்க்குப் போட்ருவொம்.''

''ஒன் மானிய அறுக்கிறதுக்கு ஆளில்லங்கிற துமுருல பேசுற. தைரியமான எளவட்டங்கன்னா அங்கயே நில்லுங்க. அத்தன பேரு குஞ்சியவும் அறுத்துக் காக் காய்க்குப் போடுறனா இல்லையான்னு பாரு.''

பயல்கள் பொச்சைப் பொத்தியடி பாடிக்கொண்டே பறந்துவிட்டார்கள்.

''கோவணத்தக் கெட்டிக்கோ
குஞ்சியத்தான் பொத்திக்கோ.''

கோயிந்தன் வாயில் சிரிப்பு ஒரு புறம் பிதுங்கினாலும் கோவம் அடங்க வில்லை.

''இதுகளுக்குச் சாமி ஒரு கேடு.''

அவன் குடல் கழுவித் திரும்பும்வரை கறியறுப்பு நடக்கும். அவன்தான் கூறுபோடணும். வேப்பங்காட்டிலிருந்து வந்திருக்கும் சில மேகலக் குடிக்காரர் களும் ஓலைக் கொட்டான்களுடன் அவனுக்காகக் காத்திருப்பார்கள். அவன் வந்ததே சரியென்று ஆட்களை விரசுவான்.

''ஒங்களுக்குக் கொஞ்சமாச்சும் அறிவிருக்காப்பா. சாமிவுகள இவ்வளவு நேரமாக் காக்க வைக்கலாமா. மொதல்ல அவுகளுக்குக் குடுத்தனுப்புங்கப்பா. காலாகாலத்துல ஊருபோயிச் சேரட்டும்.''

ஒருவர் முனங்குவார்.

''அதப் பத்தி ஒண்ணுமில்ல கோயிந்தா. இதுக்கின்னு மெனக்கிட்டு வந்தாச்சு. பொறுத்திருந்துதான் போகணும். இந்தக் கறியச் சாப்பிட்டா மூலம் கொஞ்ச நாளைக்குக் கட்டுப்படுது. அதனாலதான் ஒன்னயத் தேடி வரவேண்டியிருக்கு.''

''அதுக்கென்ன சாமி. ஒங்களுக் கில்லாற கறியா. எம்புட்டு வேணும்னாலும் வாங்கீட்டுப் போங்க. நோயி அடிபட்டாச் சரி. வேப்பங்காட்ல மாட்டுக்கறிதான் கெடைக்கும். எப்பயாச்சும் ஆடறுத்தா உண்டு.''

கறியில் பங்கு சேர்ந்தவர்களின் எண்ணிக்கைக்குத் தக்க அவன் கூறுபோடு வான். கூடுதலாக அவனுக்கும் பன்றிக்குச் சோறெடுத்து ஊற்றியவனுக்குமாக ரெண்டு கூறு. பன்றி மட்டமென்றால் பயலுக்கு இன்னும் கொஞ்சம் கிடைக்கும். மிச்சமிருப்பது மேகலக் குடிக்காரர்களுக்கு. அவர்கள் வாங்கிய பிறகும் காத்திருப் பார்கள். அவன் அவர்களிடம் காசு வாங்க மாட்டான்.

கறியறுப்பு முடிந்ததும் கழுவிய குடலைப் பானையில் போட்டுச் சலசலக்க வேக வைப்பார்கள். வெந்ததும் இறக்கி நீரை இறுத்துக் குடலைப் பூப்பூவாக அறுத்து வைத்துக்கொள்வார்கள். பயல்கள் பங்கு வீடுகளில் வத்தல் வெங்காயம் என்று வாங்கிவரும் மசால் சாமான்களை உரலில் போட்டுப் பக்குவமாக இடித்து வேக வைத்துக் குடலைப் போட்டுக் கிளறுவார்கள். சொக்கும் மணத்தில் நாக்கு சப்புக் கொட்டும்.

குடலைக் கதவில் தட்டி ஆளாளுக்கு எடுத்து வாயில் போட்டுக்கொண்டே பங்குபோடுவார்கள். மேகலக் குடிக்காரர்களுக்கும் கிடைக்கும். அங்கிருந்தபடியே காலிபண்ணிவிட்டுக் கையையும் வாயையும் துடைத்துக்கொண்டு கிளம்புவார் கள். கோயிந்தன் மறக்காமல் பயல்களிடம் சொல்வான்.

''சாமிவுகளுக்கு அடுப்புக் கரித்துண்டும் ஆவரங்கொழையும் குடுத்துவுடுங் கடா. கொட்டானுக்குள்ள போட்டுக்கிட்டா காத்துக் கருப்பு கிட்ட அண்டாது.''

கருதடித்து முடிந்த களமாகக் கிடக்கும் தொழுக் கதவைக் கழுவிக் கொண்டியில் நிறுத்த ஒரு நாளாகும்.

கறி காலியான பிறகுதான் கோயிந்தன் ஊரை விட்டுக் கிளம்புவான். அதுக்குள் அடுத்த பண்டிகைக்கான பன்றிக்குட்டி தயாராகிவிடும்.

## 5. நெல்லுச் சோறு

முத்தம்மா கைவிளக்கேற்றிச் சுவராணியில் மாட்டினாள். வீட்டுக்குள் சன்னமான வெளிச்சம் பரவியது. வெளியே மெலிந்த குரலில் யாரோ கூப்பிட்டார்கள்.

''முத்து...''

வாசலுக்கு வந்து எட்டிப் பார்த்தாள். தாவாரத்தில் சுந்தர நாய்க்கர் நின்றுகொண்டிருந்தார். அவளுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

'அஞ்ஞாடி இதென்ன நேரங்கெட்ட நேரத்துல சாமிவுக வந்திருக்காகளே. அப்படியென்ன அவசரம். பூச்சம்மாளோட சண்டையா. அதுக்கு இந்த நேரத்துல இங்க ஏன் வரணும்.'

''சாமிவுகளா. வாங்க வாங்க.''

''மாடன் இல்லையா.''

''ஊருக்குள்ள போயிருக்கு. இப்ப வந்துரும்.''

அவர் தாவார இருட்டிலேயே உட்காரத் தோதுபார்த்தார். அவள் மணைப் பலகையை வீட்டுக்குள்ளேயே போட்டாள்.

''இங்கயே இருந்துக்கிறென்.''

''இதுல உக்காருங்க.''

அவர் குனிந்து வாசலைத் தாண்டி வந்து உட்கார்ந்துகொண்டார். அவரது குழந்தைப் பார்வையில் அவள் நனைந்துகொண்டிருந்தாள்.

''சாப்பாடெல்லாம் ஆச்சா.''

''இனிமேத்தான் சாமி. நீங்க சாப்பிட்டாச்சா.''

அவர் 'உச்' கொட்டினார்.

''சாப்பிடணும்.''

பசிக் கிறக்கம் அவர் முகத்தில் படிந்திருந்தது. அவள் கவனித்துவிட்டாள்.

''சாப்பிட்டுட்டு வந்திருக்கலாமில்ல. அப்படியென்ன தலபோற சோலி. பூச்சம்மா அனுப்புனாகளா.''

''இல்ல...''

''பெறகு...''

''சும்மாதான் வந்தென்...''

''காரணமில்லாமயா.''

அவர் தயங்கினார்.

''என்ன சோறு பொங்கீருக்க.''

‘‘இண்ணைக்குக் கடசியாடியாச்சே. நெல்லுச் சோறுதான்.’’

‘‘நெல்லுச் சோறு சாப்பிட்டு நாளாச்சு.’’

‘‘ஏன் சாமி ஒங்களுக்கில்லாற சோறா’’

‘‘குடுக்கலயே. கேக்கவும் மனசில்ல. வேளாவேளைக்கு மாட்டுக்குக் கூளம் போடச் சொல்லி மாட்டுக்காரன அரட்றவுக மனுசரப் பத்திக் கவலப்படலயே.’’

‘‘ஒங்க வீடு.’’

‘‘எல்லாரும் அப்படித்தான் நெனச்சுக்கிட்ருக்காக.’’

‘‘பூச்சம்மா கொஞ்சங்கூட மாறலயா.’’

அவர் கண்களில் நீர்கோர்த்துக் காத்திருந்தது.

‘‘நீ சோறு குடுப்பயா...’’

அவள் எதிர்பார்க்கவேயில்லை. கண்ணைக் கட்டிக்கொண்டு வந்தது.

‘இதும் சோதனையா. வீட்டுக்குள்ளயே வராற மனுசரு சோறு கேக்காரே. பசியோட இருக்கிறவரப் போங்கன்னு சொல்லவா முடியும். அது பெரிய பாவம். மொதல்ல பசியாறட்டும்.’

அவசரமாகக் கும்பா போகணியை விளக்கி அவருக்குச் சாப்பாடு போட்டு வைத்தாள்.

‘‘கூச்சப்படாமச் சாப்பிடுங்க சாமி.’’

அவர் ஆவலாகச் சாப்பிட ஆரம்பித்தார். அவள் கதவை ஒருக்களித்துச் சாத்தி விட்டு வெளியே வந்து வாசலோரம் உட்கார்ந்து பரக்கப்பரக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். படபடப்பு இன்னும் அடங்கவில்லை. அந்த நேரத்தில் மாடப்பன் வந்தான்.

‘‘என்ன வாசல்ல உக்காந்துட்ட....’’

சத்தமாகப் பேச வேணாம் எனச் சைகை செய்துவிட்டு அவள் மெதுவாகச் சொன்னாள்.

‘‘உள்ள சாமிவுக சாப்பிடுறாக.’’

‘‘அப்படியா. நான் இருந்தாச் சங்கடப்படுவாக. போயிட்டுப் பெறகு வாறென்.’’

அவன் திரும்பி நடக்கும்போது வேதனையாக இருந்தது.

‘‘பாவம் அவுகளுக்கென்ன கஸ்டமோ. நம்ம வீட்ல சாப்பிடணும்னா மனசில எவ்வளவு வெறுப்பிருக்கணும். சந்தோசமாத் திரிஞ்ச மனுசன். வீட்டுக் குள்ள அடச்சுச் சஞ்சலப்படுத்தீட்டாகளே. அவரு மொகத்தப் பாக்கிறதுக்கே சங்கடமாருக்கு.’’

ராத்திரி அவர் குடும்பத்தைப் பற்றி ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந் தார்கள். அவளுக்கு இன்னும் மனசாறவில்லை.

‘‘அம்புட்டுப் பெரிய மனுசன் நீ இல்லாற நேரத்துல வந்து கூச்சமில்லாமச் சோறு கேட்டுட்டாரேன்னு எனக்குக் கையும் ஓடல காலும் ஓடல. கண்ணீரு வந்துருச்சு. எல்லாம் மனசுக்குள்ள அடக்கிக்கிட்டு அவருக்குப் பசியமத்துனென். பானையில சோத்த வச்சுக்கிட்டு இல்லன்னு சொல்லவா முடியும்.’’

‘‘சே அது பெரிய பாவம். அந்த மனுசன் மனசில அவ்வளவுக்கு வெறுப்பு.’’

‘‘நானும் எவ்வளவோ பூச்சம்மாட்டச் சொல்லிப்பாத்துட்டென். கேக்கிற மாதிரி தெரியல. எங்கிட்டயே சண்டக்காரி மாதிரி பேசுது.’’

''அவருட்டப் பேசிப்பாத்தென். புடிவாதமா இருக்காரு.''

''குடும்பத்துல ஆம்பளைக்கு ஒரு மருவாதி குடுக்கணுமில்ல. அவரென்ன வீட்ல வளக்கிற நாயா கஞ்சி ஊத்துனதும் குடிச்சிட்டு மூலையில மொடக் கிறதுக்கு.''

''அந்த வருத்தந்தான் அவருக்கு.''

''இருக்காதா பின்ன.''

அதுக்குப் பிறகு முத்தம்மா அடிக்கடி நெல்லுச் சோறு பொங்கினாள். நாய்க் கரும் இருட்டில் வந்துபோனார். அவள் தவறாமல் அவரது தோட்டத்தில் வேலை செய்யப் போனாள். புதுசாக இடுப்பில் ஒரு கடகம் ஏறியிருந்தது. அதுக்குள் கன மான தூக்குவாளி துணியால் மூடி மறைக்கப்பட்டிருந்தது. அது அவருக்கு மதியச் சாப்பாடு. அவளுக்கும் புருசனுக்கும் தனிக் கலயம். சாயங்காலம் வீடு திரும்பும் போது தூக்குவாளியைப் புல் மூடியிருந்தது. சில நாள் அய்யப்ப வண்ணான் பெண்டாட்டி அழகம்மா மூலம் சாப்பாடு போனது. துணிப் பொதியில் தூக்கு வாளியைப் புதைத்துக்கொண்டு போவதும் வருவதும் அவளுக்குக் கஷ்டமாக இல்லை.

நாய்க்கர் முகத்தில் பழைய களை வந்துவிட்டது. கலகலப்பாக இருந்தார். மாடப்பன் சந்தோசப்பட்டான்.

ராத்திரி சற்றுத் தாமதித்து வீட்டுக்கு வரும்போது அவன் பெண்டாட்டி யிடம் கேட்பான்.

''சாமிவுக சாப்பிட்டாச்சா.''

''நல்லாச் சாப்பிட்டாக.''

அதைத் தெரிந்துகொண்ட பிறகுதான் அவன் சோற்றுக்கு முன்னால் உட் காருவான்.

## 6. நெத்திலி

பஞ்சத்தில் மாண்டுபோன மொங்கான் குடும்பத்தில் அவன் பெண்டாட்டி பூச்சி ரெம்ப நாள் இருக்கவில்லை. தம்பி மண்டையன் முந்திக்கொண்டதில் மனசு உடைந்து அடிக்கடி புலம்பினாள்.

''ஏல ஒடப்பெறந்தான் அச்சியத் தவிக்க வுட்டுட்டுப் போயிட்டயே. ஒனக்கே நல்லாருக்கா.''

மூத்த மகள் கொசுவக்காளை ஊர்க் குடும்பன் குட்டையனுக்கும் இளையவள் கருப்பழகை உள்ளூரிலேயே கண்ணையாவுக்கும் பிடித்துக்கொடுத்தாள். கொசு வக்கா பாடு கவலையில்லை. ஆண்டி வீட்டு ஆதரவில் பிழைப்பு சீராக நடந்தது. கருப்பழகு தவங்கினாள். அவளுக்கு ரெண்டு பெண்கள். தவசியம்மா காளித் தாயி. பெரியவள் உள்ளூரில் பரதேசிக்கு வாக்கப்பட்டாள். சின்னவளை வெளி யூரில் மச்சக்காளைக்குக் கொடுத்தார்கள்.

தவசியம்மாளுக்கு வேலம்மா பாஞ்சாலி என்று இரு பெண்கள். அவர்கள் பிறக்கும்வரைதான் பூச்சி தாக்குப்பிடித்தாள். ''ஆம்பள வாரிசு இல்லாற வம்சமாப் போச்சே'' என்று நொந்தபடி உயிரை விட்டாள்.

வேலம்மாளுக்கு உள்ளூரில் சோணையன் துணை கிடைத்தது. பாஞ்சாலி அயலூர்க்காரியாகிவிட்டாள். எப்போதாவது ஊருக்கு வந்து அக்காளுடன் தங்கி விட்டுப் போவாள். வேலம்மாளுக்கு ஒரே பெண் மூக்கி.

ஊருக்குள் கர்ப்பிணிப் பெண்கள் பேறுகாலத்துக்காக அவதிப்படுவதைப் பார்த்து வேலம்மா ரெம்ப வேதனைப்பட்டிருக்கிறாள். மருத்துவச்சியைக் கூப்பிட வடக்கூருக்கு ஓடணும். இல்லை வண்டியில் வைக்கோல் படுக்கையில் போட்டுக் கொண்டு முத்துநகர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகணும்.

மருத்துவச்சி வந்து சேருமுன் தன் போக்கில் குழந்தை பிறந்துவிடுவதும் உண்டு. அதில் பிழைத்துக்கிடப்பது சொற்பந்தான். அதே மாதிரி வண்டிக் கட கடப்பில் வைக்கோல் மீதே பேறுகாலமாகிவிடுவதும் உண்டு. பாவப்பட்ட பிழைப்பு.

முந்தி உச்சாயிக் கிழவிதான் ஆத்திரம் அவசரத்துக்குப் பேறுகாலம் பார்த்துக் கொண்டிருந்தாள். பொறுமையில்லாமல் புழங்குவாள். கொத்தோடு குழந்தையை வெளியே இழுத்துக் கிடத்தி சாமிமேல் பாரத்தைப் போட்டுவிட்டுப் போய் விடுவாள். குழந்தை தங்கினாலும் தவறினாலும் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

கிழவிக்குக் கைகாலுடன் தலையும் ஆட்டங்கண்டுவிட்டது. பேறுகாலம் பார்க்க ஏலவில்லை. அதனால் அயலூருக்கு ஓட வேண்டிய நிலைமை.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்த வேலம்மாளுக்கு யோசனை. இந்தத் தொழிலை நாமே செய்தால் என்ன. அனுபவத்தில் கற்றுக்கொள்ள வேண் டியதுதான். பல உயிர்களைக் காப்பாற்றலாமே. அது பெரிய புண்ணியம். கிழவி யைப் பிடித்தாள்.

''எத்தே கண்ணுக்கு முன்னால எத்தனையோ பச்சமண்ணுக அநியாயமாப் பறிபோகுது. பாத்துட்டுத்தான இருக்க. இத இப்படியே வுட்றப்புடாது.''

கிழவியின் வார்த்தைகளும் நடுங்கின.

''அதுக்கு என்ன செய்றதும்மா. ஆண்டவன் வுட்ட வழி. இந்தக் கட்டை யால முடியலயே.''

''இனிமே நான் பேறுகாலம் பாக்கென். கூட இருந்து நீ கோளாறு சொன்னாப் போதும்.''

''புண்ணியமாப் போகுது. நீ எங்க கூப்பிட்டாலும் நான் வாறென் தாயி.''

வேலம்மா தைரியமாகத் தொழிலில் இறங்கினாள். கிழவியிடம் நிறையச் சங்கதிகளைச் சுளுவாகக் கற்றுக்கொண்டாள். வைராக்கியம் கைகொடுத்தது.

விரைவிலேயே ஊர்ச் சனங்கள் அவள்மீது நம்பிக்கை வைக்க ஆரம்பித் தார்கள். எப்பேர்ப்பட்ட சிக்கலான பேறுகாலத்தையும் வழிக்குக் கொண்டுவந்து குழந்தையை வலியில்லாமல் எடுத்துவிடும் லாவகத்தைப் பார்த்துக் கிழவியே அசந்துபோனாள். வெளியூர்களிலிருந்தும் அவளைத் தேடி வந்தார்கள். சுத்துப் பட்டிகளில் அவள் கைராசியான மருத்துவச்சியாகிவிட்டாள்.

நெத்திலிபோல் வற்றிய உடம்பு. வெளிறிய திரேகம். பேறுகால வீடுகளில் அடிக்கடி நெத்திலிக் குழம்பு சாப்பிடுவாள். அதனால் அவளுக்கு நெத்திலி வேலம்மா என்ற பட்டப்பேர் வந்துவிட்டது.

அவளுக்குச் சொந்தக்காரர் சண்டைக்காரர் என்ற பேதம் கிடையாது. எல்லா வீட்டுக்கும் முகஞ்சுளிக்காமல் போவாள். யாராவது கேட்டால் தயங் காமல் சொல்வாள்.

"பெரிய கழுதைகதான் சண்டக்காருகன்னா வகுத்துக்குள்ள கெடக்கிற பச்ச மண்ணு என்ன செஞ்சது. அந்தப் பாவம் நமக்கு வேணாம்."

கர்ப்ப வயிற்றைத் தடவிப்பார்த்ததுமே இது சுளுவானது கஷ்டமானது என்று கண்டுபிடித்துவிடுவாள். நிலைமைக்குத் தக்க அவள் நடவடிக்கை இருக்கும். குழந்தை சற்று மேலேறிக் கிடந்தால் உயரே கயிற்றைப் பிடித்து லாந்தணும். வேறு விதமானால் உட்காரணும் மண்டியிடணும் படுக்கணும் குனியணும் நிமிரணும். "முக்கு முக்கு" என்று விரட்டுவாள். முக்கக் கஷ்டப்பட்டால் வசவு சொல்ல முடியாது.

"முக்குடி அறிவுகெட்டவளே. செத்த நேர வலி. அதுக்குப் போயி மலச்சா எப்படி. அண்ணைக்குப் புருசனோட முக்குன முக்குக்கு இண்ணைக்கு அனுப விச்சுத்தான் ஆகணும். ஏவ்ளே இப்ப முக்கப்போறயா காலக் கப்பளிச்சு வச்சுக் கிட்டு உள்ள ஓட்டி இழுக்கவா. அடியே இவள ரெண்டு பேரு புடிங்கடி."

வலியில் துடிக்கும் பெண் பயத்தில் அலறிக் கணறி முக்குவாள். காரியம் முடிந்துவிடும். தாயின் அழுகை நின்று குழந்தையின் அழுகை தொடுக்கும்போது எல்லா முகங்களிலும் சந்தோசம் குடிகொண்டிருக்கும். தொப்புள்கொடியை அறுத்துக் குழந்தையின் வயிற்றையொட்டி முடிச்சுப் போட்டுவிட்டு மற்றவர் களைத் தோரணையாகப் பார்ப்பாள். அந்தப் பார்வை "நீங்கெல்லாம் இருந்து எதுக்குடி" என்று கேட்பது போலிருக்கும்.

பிள்ளையைக் குளிப்பாட்டி மூக்கு முழியை எடுத்துவைத்துத் தலையை உருட்டிச் சீராக்கித் தாயருகில் போடும்போது குனிந்து கேட்பாள்.

"இப்பப் புருசனப் பாக்கணும் போலருக்கா."

தாய் தலையைக் குலுக்குவாள்.

"இனிமே புள்ளையே வேணாம் சாமி."

"இந்த வைராக்கியம் எத்தன நாளைக்குன்னு எனக்குத் தெரியும். ஆறு மாசத்துல வகுத்தத் தள்ளீட்டு நிக்காமருந்தாச் சரி. புள்ளைக்குப் பக்கத்துலயே படுத்துக்கெட."

நஞ்சுக்கொடியைப் புதைக்க வேண்டிய இடத்தைக் காட்டிவிட்டுத் தலை முழுகிக் குளித்து மாற்றுச் சீலை உடுத்திக்கொண்டு பசியாறுவாள். மேற்கொண்டு செய்ய வேண்டிய பக்குவங்களைச் சொல்லிவிட்டுக் கிளம்பிவிடுவாள். அடுத்த ஊரென்றால் துணையாள் வந்தாலும் சரி வராவிட்டாலும் சரி கலிங்கலில் வந்து தான் நிற்பாள்.

பிறகொரு நாள் அவளுக்குப் புதுச்சீலையெடுத்துக் கொடுத்து சோறு கொடுப்பார்கள். அவள் ஒரு உடுமாத்துக்குச் சீலைகூடக் கைத்துட்டுப் போட்டு வாங்கியது கிடையாது.

பேறுகாலத்துக்கு முன் வீட்டிலேயே விளக்கெண்ணெய் தயார்பண்ணு வார்கள். உள்ளூரென்றால் அதுக்கும் அவள்தான் வரணும். ஆமணக்கு முத்தை அவித்து வெயிலில் முறுகக் காயவைத்து உரலில் நொறுங்க இடித்து மெடாவில்

போட்டுக் கல்லடுப்பில் காயவைப்பாள். கொதித்தபின் இறக்கிவைத்து மேலே மிதக்கும் எண்ணெய்யைக் கம்மஞ்சக்கையில் நனைத்துத் தனியாகப் பிழிவாள். பிழிந்ததை ஒரு சட்டியில் வேக வைத்து நுரைநீக்கி இறுத்து மண்கலயத்தில் ஊற்றி வெள்ளைத் துணியால் வண்டுகட்டிக் கொடுப்பாள். மெடாத் தண்ணீரைச் சிறிசுகள் கோலிக்கோலி தலையில் ஊற்றிக் குதியாளம் போடுவார்கள். அந்த விளக்கெண்ணெய்க் குளிப்பில் தனிச் சொகம். கலயத்து எண்ணெய் குழந்தையின் மேனியில் சதா மினுங்கும். அப்போதுதான் சூடு குறைந்து குழவி திரண்டு புரண்டு எழுந்து உட்கார்ந்து விரைவில் எட்டு வைக்க முடியும்.

அவள் பேறுகாலம் பார்த்த பிள்ளைகள் தெருவில் ஓடி விளையாடுவதைப் பார்த்தால் பெருமையாக இருக்கும். வாய் சும்மா இருக்காது.

''இந்தக் கையால அள்ளிப்போட்ட அயிரக் குஞ்சுக துள்ளி வெளையாடுறதப் பாரு.''

மூக்கில் சளியொழுகும் பிள்ளைகளைப் பிடித்து வைத்து வசவு உரிப்பாள்.

''தின்னதெல்லாம் சளியா ஒழுகினா ஒடம்பெங்க தேறும். குண்டிதான் தேயும். அப்பனும் அஞ்ஞையும் புள்ள வளக்கிற லச்சண மயிரப் பாரு. இருக்கட்டும் வச்சுக்கிறென். கொண்டா இங்க.''

மூக்கைச் சிந்திப் போட மாட்டாள். வாயால் உறிஞ்சித் துப்புவாள்.

''நாறக் கழுத. இதென்ன மூக்கா அளிக்கெடங்கா. சன்னப் பதவலா கெட்டிக் கெடந்துருக்கு. நாயி உறுமுன மாதிரி மூச்சு வுடுறதுக்கே சரியாருக்கும். பெறகு ஒறக்கமெங்க வரும். புள்ள வட்டக்கண்ணு பாஞ்சு வாடிப்போச்சே.''

அவள் குழந்தைகளுக்கு நிறைய பக்குவஞ்செய்வாள். அவர்கள் சுக்குப் பாலையும் பெருங்காயத்தையும் குடிக்கும்போது போடும் அலறலிலேயே வயிற்றுப் பொருமல் குறைந்துவிடும். குருவிக் குஞ்சாக வாய் திறந்து சிணுங்கும் பொடிசுகள் அவளைக் கண்டால் மூடிக்கொள்ளும்.

எளவட்டங்கள் குமருகளின் வண்டவாளம் அத்தனையும் தெரிந்துவைத்திருப்பாள். அரட்டலும் மிரட்டலுமாக அவர்களை வழிக்குக் கொண்டுவந்து கலியாணத்துக்கு ஏற்பாடு செய்வாள். குழந்தைகளுக்குப் பேறுகாலம் பார்த்து ஒரு நல்ல நாளில் சோறூட்டுவாள்.

''இந்த வீட்ல எண்ணைக்கோ சோறூட்டியிருக்க வேண்டியது.''

அதிகம் பேச மாட்டாள். போகிற போக்கில் சொலவடையை உதிர்த்துவிட்டுப் போவாள். அதுக்கு அர்த்தம் புரிந்துகொள்ளணும். ஒரு பெண்ணுக்கு ஆசைகாட்டிவிட்டு இன்னொரு வசதியான பெண்ணை நோங்குகிறவனுக்கு ஒரு சொலவடை.

''அரிசிப் பல்லுக்காரி அவுசாரி மாட்டுப் பல்லுக்காரி மகராசி.''

அர்த்தம் இதுதான்:

'ஏல எந் தூரம். அந்தப் புள்ளைக்கு என்னல கொறச்சலு. என்னேரமும் சிரிச்ச மொகம். வீட்டுக்கேத்த லச்சிமிடா. அவளுக்கு ஆசகாட்டி மோசம்பண்ணீட்டு ஒரு கருவக்கட்டையக் கையில புடிக்கப்போறயா. சொத்துசொகம்னு நாக்கத் தொங்கப் போட்டுக்கிட்டு அலையாதங்கடா. அந்தப் பாவம் சும்மா வுடாது.'

ஒரு பெண் ஒருவனை விரும்பிப் பழகிவிட்டு அவனுக்குக் கழுத்தை நீட்டுவது பற்றிக் குழப்பத்திலிருந்தால் அவளைப் பார்த்தும் பார்க்காமல் சாடையாகச் சொல்லிக்கொண்டு போவாள்.

''இறுகினாக் களி எளகினாக் கூழு.''

'அடி இவளே ஒன்னய ஒரசிஒரசி மொகந்துபாக்க வுட்டுட்டு இப்ப உக்காந்து ரோசன பண்றயாக்கும். முந்தியே தெரிஞ்சிருக்கணும். இப்பயும் குடிமுழுகிப்போகல. நல்லா ரோசன பண்ணி முடிவுக்கு வா. நல்லவன்னா பின்னால போ. மோசமானவன்னா ஒதறித்தள்ளு. நல்லதும் கெட்டதும் நம்ம மனசப் பொறுத்துத்தாண்டி. எனக்கென்னமோ அவன் நல்ல பெயலாத்தான் தெரியிறான். நீதான் தாயி முடிவு செஞ்சுக்கிறணும்.'

இப்படிப் புரிந்துகொள்ளணும்.

பிள்ளைகுட்டிக்காரன் வழிதவறி நடந்தால் அவனுக்கு எச்சரிக்கை விடுவாள்.

''சூத்துல கெட்டத் துணியில்லாறவனுக்குக் கூத்தியா ரெண்டு பேராம்.''

இதை இப்படி அர்த்தப்படுத்திக்கொள்ளணும் :

'எனக்கு எல்லாம் தெரியுண்டா களவாணிப் பெயலே. பொண்டாட்டி புள்ளையக் காப்பாத்தத் துப்பில்லாற நாயிக்கு வங்கணம் கேக்குதாக்கும் வங்கணம். செருப்படி வாங்கப்போற. குடும்பத்த ஒழுங்கா வச்சுப் பெழைக்கிறதுக்கான வழியப் பாரு. பெரட்டாசி மாச நாயி மாதிரி அலையாத.'

அவள் கிடைத்த வேலைக்குப் போவாள். காடுகரையில் அவள் இருந்தால் கலகலப்புக்குச் சொல்ல வேணாம். எவளும் முண்டிப் பேசக் கூடாது. பேசினால் கிண்டிக்கிளறி வண்டவாளத்தை அவுத்துவிடுவாள்.

வேலைத்தனத்தில் வாய்க்கு வந்தபடி பாடுவாள். சந்தர்ப்பத்துக்குத் தக்க அவளே பாட்டுக் கட்டுவாள். ஒப்பாரி உறக்காட்டு காட்டுப்பாட்டு எல்லாம் தெரியும். பெண்கள் வேலையில் சுணங்கினால் ஒரு ராகத்தை எடுத்துவிட்டுச் சுதாரிக்கச் செய்வாள்.

''வேப்பமரம் பூத்துச் சொரியிது - பூ மரத்தப்போல
வெடலப்பொண்ணு சிரிச்சுக்குலுங்குறா
மாப்பிளையும் பாத்து மசங்குறான் - அவ கழுத்துலதான்
மாலையிடக் காத்துக் கெடக்கிறான்.

பதமாக மழையும் பேயணும் - நல்ல பயிர்வளத்து
பருவத்துல களையெடுக்கணும்
மொதலாளி காடுவெளையணும் - நம்ம ஒழச்சதுக்கு
முழுசாகக் கூலி கெடைக்கணும்.''

இன்னொரு தடவை கொணங்கினால் பாட்டுக்குப் பதிலாக நாற வசவு தான் வரும்.

''அடியே வெளக்கங்கெட்ட சக்களத்திகளா என் வாயப் பாத்தா மயிரா வேல ஓடும். காலாகாலத்துல வேலைய முடிச்சிட்டு வீட்டுக்குப் போகணுமா வேணாமா. சவலப் புள்ள மாதிரி தவங்குனா எப்படி. ஒங்க மொகறக்கட்டைக்குப் பாட்டுக் கேக்குதா பாட்டு.''

பெண்கள் கோவத்தில் முனங்கிக்கொண்டே வேலையில் கவனப்படுவார்கள்.

''ஆமா இவதான் அருசுகமாப் பாட்டுப் படிக்கா. அதக் கேக்கிறதுக்கு நாக்கத் தொங்கப் போட்டுட்டுத்தான அலையிறாக.''

''அதானம்மா. ரெம்பத்தான் பீத்திக்கிறா.''

''ஆனா ஒண்ணும்மா. இவ பாட்டக் கேக்கலன்னா என்னத்தயோ பறிகுடுத்த மாதிரிதான் இருக்கு.''

''அதுக்காகத்தான இவ வையிற வசவெல்லாம் வாங்கிக்கெட்டிக்கிற வேண்டியிருக்கு.''

''மழுங்கின பெழப்பாப்போச்சு.''

வேலை முடியும் நேரத்துக்கென்று வேலம்மா ஒரு பாட்டு வைத்திருப்பாள்.

''நாழிக்கேப்ப நாத்துப்பாவி அல்லேலே லேலோ
நடவுநட்டப் போறதெப்ப தில்லேலே லேலோ
மூடிக்கிட்டு மேகம்வரும் அல்லேலே லேலோ
முணுமுணுன்னு மழவுழுகும் தில்லேலோ லேலோ
ஓடிஓடி நாத்துநடு அல்லேலே லேலோ
ஓரஞ்சாரம் பாத்து நடு தில்லேலே லேலோ
ஓடையில வெள்ளம்வரும் அல்லேலே லேலோ
ஓடுங்கடி வீடுதேடி தில்லேலோ லேலோ.''

அப்போது பெண்களின் முகத்தில் அப்படியொரு களை வந்துவிடும். வீடு திரும்பும்போது அலுப்பே தெரியாது.

## 7. சோளத் தட்டை

அன்றைக்கு மாடப்பன் மட்டும் தோட்டத்துப் போயிருந்தான். சுந்தர நாய்க்கர் கேட்டார்.

''என்னடா ஒண்டிக்கட்டையா வந்து நிக்க. முத்தம்மா வரலயா.''

அவன் சந்தோசமாகச் சொன்னான்.

''கஞ்சி கழிக்கா சாமி.''

''ஏல நெசமாவா சொல்ற.''

''வாந்தின்னா வாந்தி. ஏந்தி முடியல. ரெம்ப நாளைக்குப் பெறகு ஆண்டவன் ஒரு புள்ளையக் குடுத்துருக்கான். அந்தக் கெறக்கத்துலயும் அவ மொகத்துல களையப் பாக்கணுமே.''

''இருக்காதா பின்ன. ஓம் மூஞ்சியே சொல்லுதே.''

''அவ சந்தோசந்தான் பெரிசு சாமி.''

''அவ கொணத்துக்கு நல்லாருப்பாடா.''

சாய்ந்தரம் அவர் பள்ளக்குடிக்கு விலகி முத்தம்மாளைப் பார்த்துவிட்டுப் போனார்.

அவள் மசக்கை தெளிந்து எழுந்தபோது புது மனுசியாக மாறியிருந்தாள். முதல் வேலையாக மங்கத்தாயிடம் போய்ச் சொன்னாள்.

''தாயி இந்தச் சோளத் தட்டையும் கருது வாங்கீருச்சு. நல்லா வெளைய வச்சுக் கைநெறையா அள்ளிப்பாக்கணும்னு ஆசையாருக்கு.''

மங்கத்தாய் சிலுப்பிக்கொண்டாள்.

''இனிமே ஒன்னக் கையில புடிக்க முடியாது.''

''என்னால கனத்த வேல செய்ய முடியாது. ஒலக்க புடிச்சுக் குத்த முடியாது. கோவிச்சுக்கிறாதங்கம்மா.''

''நீயில்லன்னா வேற ஒருத்தி கெடைக்காமயாபோயிருவா.''

''அதில்ல.''

''தோட்டத்துக்காச்சும் போவயா.''

''அங்க குனிஞ்சுக்கிட்டு உக்காந்துக்கிட்டுப் பாக்கிற வேலதானம்மா.''

''ஆமாமா.''

மங்கத்தாய் விசுக்கென்று வீட்டுக்குள் போய்விட்டாள்.

முத்தம்மாளுக்கு இன்னொரு வேலை பாக்கியிருந்தது. மலடிப் பட்டங் கொடுத்து மனசு வலிக்கப் பேசிய நாக்கை ஒட்ட நறுக்கணும். ''இப்ப என்னடி சொல்ற'' என்று வயிற்றை அவுத்துக் காட்டி வாயை அடக்கணும்.

அப்பப்ப அவள் அஞ்ஞை பாலம்மா வந்து பக்குவஞ்செய்துவிட்டுப் போவாள். சின்னஞ்ஞை பத்தரம்மாளும் வந்தாள். எல்லாருக்கும் சந்தோசம்.

கொஞ்ச நாளிலேயே முத்தம்மா புருசனுடன் தோட்டத்துக்குப் போக ஆரம்பித்தாள். அவள் வரப்பில் நடமாடும்போதெல்லாம் சுந்தர நாய்க்கரின் மனசு பதறியது. உரிமையுடன் கடிந்துகொண்டார்.

''ஈருசிருக்காரி எதம்பத்தரமா நடமாடணும்.''

மாடப்பனும் அவருடன் சேர்ந்துகொள்வான்.

''தைக்கும்படியா நல்லா எடுத்துச்சொல்லுங்க சாமி. வீட்ல கெடன்னா கேட்டாத்தான.''

அவள் சிரித்துக்கொள்வாள்.

''வீட்ல கெடந்தா சோறு எங்கருந்து வரும். குடும்பத்துல ஒரு உருப்படி கூடப்போகுது.''

அவள் ஏற்கெனவே மாடப்பனிடம் சொல்லிவிட்டாள்.

''எங்கூரு நெத்திலி வேலம்மாதான் எனக்குப் பேறுகாலம் பாக்கணும்.''

எல்லாரும் அப்படித்தான் நினைத்திருந்தார்கள். மாடப்பன் வேலம்மா ளிடம் ஒருவார்த்தை போட்டுவைத்திருந்தான்.

''என் வீட்டுக்காரி ரெம்ப நாளைக்குப் பெறகு உண்டாயிருக்கா. நீதான் பேறுகாலம் பாக்கணுமாம். அப்பப்ப ஒரெட்டு வந்து பாத்துட்டுப் போக்கா. அப்பத்தான் அவ சந்தோசமாருப்பா.''

''சங்கதி முந்தியே எனக்குத் தெரியும்ப்பா. நீ ஒண்ணும் கவலப்படாத. நான் பாத்துக்கிறென்.''

ஒன்பதாம் மாசம் முத்தம்மாளைக் கலிங்கலுக்குக் கூட்டிவந்துவிட்டார்கள். சுந்தர நாய்க்கர் அடிக்கடி அவளைப் பற்றி மாடப்பனிடம் விசாரிப்பார்.

''கலிங்கலுக்குப் போனயாடா. அவ எப்படி இருக்கா.''

''நாளு நெருங்கநெருங்க கொஞ்சம் பயப்படத்தான் செய்றா. பக்கத்துலயே வேலம்மா இருக்கா. அதனால கவலையில்ல.''

முத்தம்மா சொகமாகப் பெண் குழந்தை பெற்றாள். வேலம்மா குழந்தையைச் சீண்டினாள்.

''பொட்டச் சிறுக்கி முழிக்கிறதப் பாரு. நீதான் வகுத்துக்குள்ள பாடாப் படுத்துனயா.''

வாட்டசாட்டமாக லட்சணமான குழந்தை. முத்தம்மா ஓரக்கண்ணால் பார்த்து மகிழ்ந்துபோனாள். மாடப்பன் முகத்தில் சந்தோசம் விளையாடியது.

குழந்தைக்கு முப்பது நாள் முடிந்ததும் முத்தம்மா சத்திரப்பட்டிக்கு வந்துவிட்டாள். சுந்தர நாய்க்கர் சேர்த்துவைத்திருந்த பணத்தில் குழந்தைக்கு ரெண்டு சட்டையும் தாய்க்கு ஒரு சீலையும் வாங்கிக்கொடுத்தார். மாடப்பன் அவரை வற்புறுத்தினான்.

''சாமி நீங்கதான் புள்ளைக்குப் பேரு வைக்கணும்.''

''நானா...''

''நீங்களேதான்.''

அவர் ரெம்பத் தயக்கத்துக்குப் பிறகு சீனித்தாய் என்று பேர் வைத்தார். மாடப்பனும் முத்தம்மாளும் குழந்தையை ''தாயி தாயி'' என்று கொஞ்சி முடியவில்லை. உறிஞ்சிக் குடித்தார்கள்.

குழந்தையைக் கொண்டுபோய்த் தோட்டத்து மரத்தில் தொட்டில் கட்டி உறங்கப் போட்டுவிட்டு வேலைசெய்வார்கள். அது அழுதால் கரண்ட் ரூமிலிருந்து நாய்க்கர் மெனக்கிட்டு எழுந்து வந்து தொட்டிலாட்டியபடி குனிந்து பார்ப்பார். அதன் சிரிப்பில் மனசு கிறங்கும். அந்தச் சொகத்திலேயே திரும்பிவந்து படுத்துக்கொள்வார்.

குழந்தை பிறந்தபின் முத்தம்மா மங்கத்தாயைத் தேடி அவ்வளவாகப் போவதில்லை. மங்கத்தாயும் அவளைப் பற்றி அக்கறையாக விசாரிப்பதுமில்லை. மாடப்பன்தான் அப்பப்பப் போய்க்கொள்வான். அவளுடன் நாய்க்கரைச் சேர்த்து வைத்துவிடணுமென்று ரெம்பத் தாவங்கப்பட்டான். அவளிடம் பக்குவமாகப் பேசினான்.

''காட்ல ஒருத்தரும் வீட்ல ஒருத்தருமா கொமஞ்சிட்டுக் கெடக்கிறது நல்லால்ல தாயி. ஒண்ணுக்கு மூணு புள்ளீகளானப் பெறகு கோவங்கொண்டாடுனா குடும்பம் என்னாகும்னு நெனச்சுப்பாருங்க.''

அவள் தீர்மானமாக இருந்தாள்.

''காட்ல போயி நானா கெடக்கச் சொன்னெனென். புள்ளைக மேல அக்கறையிருந்தா தானா வரட்டும். நான் போயிக் கூப்பிட மாட்டென்.''

நாய்க்கரிடம் சொல்லிப்பார்த்தான்.

''ஒருத்தருக்கொருத்தரு அனுசரிச்சுப்போகணும் சாமி. ஒரே மனசா வீட்டுக்குப் போங்க.''

அவரும் இறங்கிவருவதாக இல்லை.

''வலியப் போகச் சொல்றயா. என் வீட்டுக்கு ஆரு அழச்சதுன்னு அவ கேட்டா மூஞ்சிய எங்க வச்சுக்கிறது சொல்லு.''

''அப்படியெல்லாம் கேக்க மாட்டாக சாமி.''

‘‘அவளப் பத்தி ஒனக்குத் தெரியாது. சரி கேக்க மாட்டான்னே வச்சுக் கிருவொம். கூப்பிட்டுக் காளமாடு மாதிரி காடியில கெட்டிப் போட்டுக் கஞ்சி ஊத்துவா. அதக் குடிச்சிட்டுக் கெடக்கச் சொல்றயா.’’

‘‘அந்த மாதிரி ஏன் நெனைக்கணும். ஒங்க வீட்டுக்குப் போகப்போறீக.’’

‘‘அப்படி அவ நெனைக்கலயேடா.’’

‘‘என்னத்தச் சொல்றது. இதும் விதியா.’’

இழுபறியிலேயே காலம் போனது.

சீனித்தாய் பெரியவளாகும்வரை மாடப்பனும் முத்தம்மாளும் தோட்டத் தில்தான் வேலை செய்தார்கள். சீனித்தாய் நாய்க்கருடன் சரிபேச்சுப் போட்டுக் கொண்டே விளையாடுவாள். பெரும்பாலும் சமையல்தான் நடக்கும். சாமிக்கு ஒரு பங்கு. காக்காய்க்கு ஒரு பங்கு. மிச்சத்தில் நாய்க்கருக்கும் ஒரு பங்கு கிடைக்கும்.

‘‘இந்தா சோறு. இந்தா பருப்பாணம்.’’

அவர் ஆவலாகச் சாப்பிடுவார். அவள் மறுசோறு வைக்கப்போகும்போது கையைப் பிடித்துத் தடுத்துவிடுவார்.

‘‘போதும் தாயி. வயிறு நெரம்பீருச்சு.’’

அவள் சாப்பிட்டு முடித்ததும் உறக்கம் சொக்கும். அவருக்குப் பக்கத்தி லேயே முடக்கிவிடுவாள். அவர் தடவித்தடவிச் சொகமேற்ற அசந்து உறங்கி விடுவாள்.

அவர் சுவரில் சாய்ந்தபடி கண்ணை மூடுவார். உறக்கம் வராது. ஓங்கிய குரலில் பாடணும்போல் தொண்டை குறுகுறுக்கும். வீட்டுக்குப் போய்ப் பிள்ளை களைப் பார்த்து வரலாம் என்றுகூட மனசில் ஓடும். கொஞ்ச நேரத்தில் எல்லாமே அடங்கி அமுங்கிவிடும்.

## 8. வெலபோயிட்டானே

கடை வியாபாரம் சக்கரை நாடாரைக் கைதூக்கிவிட்டது. நல்ல வருமானம். துட்டை நிலத்திலும் வீட்டிலும் போட்டார். கலிங்கலில் பத்துக் குறுக்கம் நிலம் வாங்கி பண்ணையாக்கினார். அவ்வளவு இடத்திலும் வாழைதான். நாடு கதலி கோழிக்கூடு மோரிசு என்று வகைவகையாக நிற்கும். செல்லக்கனியும் சங்க ரம்மாளும் பண்ணையைக் கவனித்துக்கொண்டார்கள். சங்கரம்மாளுக்கு முதலாளியம்மா தோரணை வந்துவிட்டது. கலிங்கலுக்குள் வேலைக்கு ஆள் கூப் பிடும்போது கழுத்து ஒடிந்துவிடுகிற மாதிரி அப்படிக் கொணட்டுவாள்.

‘‘அடியே இருளாயி ஒன்னத்தாண்டி. பண்ணைக்கு வராமப் பரதேசம் போறயா. நேரத்தோட வந்து சேருடி வேலையத்தவளே.’’

கொஞ்ச நாளில் அவள் காதிலும் கழுத்திலும் புது நகை ஏறிக்கொண்டது. பீத்தலுக்குச் சொல்லணுமா. அவளுக்கும் வடிவுக்கும் ஆகாது. போகிற போக்கில் எளக்காரமாகச் சாடை பேசிக்கொண்டு போவாள்.

‘‘சீல இல்லன்னு சின்னத்தாயி வீட்டுக்குப் போனாளாம். அந்தத் தாயி ஓசிப்பாயக் கெட்டிக்கிட்டு ஓடிவந்தாளாம். நம்ம பெழச்ச பெழப்புக்கு ரோசம் வேற வேண்டிக் கெடக்குதோ.’’

வடிவு கண்டுகொள்ள மாட்டாள். முனங்கிக்கொள்வாள்.

‘‘பழுத்த ஓலையப் பாத்துச் சிரிச்சதாம் குருத்தோல.’’

சக்கரை நாடாரும் தனலட்சுமியும் ஜோசியம் கேட்டார்கள். ஜோசியர் கணித்துச் சொன்னார்.

‘‘எல்லா வசதியும் மூத்த மகராசி இருக்கிறவரைக்குத்தான். அதோட கண் ணுக்குப் பின்னால குடும்பத்துக்கு எறங்கு தெசதான்.’’

அவர்களுக்குத் தாயாரம்மாமீது புது அக்கறை வந்தது. அவளைக் கவனித்துக் கொள்வதற்காக சக்கரை நாடார் செல்லக்கனியிடம் அப்பப்பப் பணம் கொடுத் தார். செல்லக்கனி அதை அப்படியே சங்கரம்மாளிடம் கொடுத்தான். அதுக்குக் கணக்குவழக்குக் கிடையாது. இஷ்டத்துக்குச் செலவுசெய்தார்கள்.

தாயாரம்மா புத்தி பேதலித்து நோயாளியாகிவிட்டாள். தானாகச் சிரிப்பாள். அழுவாள். கோவத்தில் திட்டுவாள்.

‘‘நீ வெளங்குவயா தொலங்குவயா...’’

அவளை வீட்டுக்குள்ளேயே அடைத்துப்போட வேண்டிய நிலைமை. சங்க ரம்மா அவளுக்குச் சோறு பொங்கிவைக்க அலுத்துக்கொள்வாள். உரலில் கம்மம் புல் இடிக்கும்போது தொணதொணப்பாள்.

‘‘பண்ணையில ஒரு நாயி வீட்ல ஒரு நாயி கெடக்குது. ரெண்டுக்கும் கஞ்சி ஊத்தக் கஸ்டமாருக்கு.’’

சக்கரை நாடார் ஒரு நாள் கலிங்கலுக்கு வந்து பூர்வீக நிலங்களை மூணு பங்காகப் பிரித்துக் கொடுத்துவிட்டுப் போனார். பெரிசுகளுக்கு உவர்க் காட்டுத் தோட்டம் அன்ன உத்திரமாகக் கிடைத்தது. வேலையா நாடார் ஒரு வார்த்தை பேசவில்லை. அவர் எப்போதும் தாயாரம்மாளை நினைத்துத்தான் வருத்தப் பட்டார்.

தாயாரம்மாளுக்குச் சங்கரம்மாளைக் கண்டாலே எரிச்சல். சோறு கொடுத் தால் வீசியெறிந்துவிடுவாள். வடிவு வந்து ஆறுதலாக நாலு வார்த்தை பேசினால் சாந்தமாகிக் கொஞ்சம் சாப்பிடுவாள். அவளைப் பார்த்துக்கொள்ளச் சங்கிலிப் புதூரிலிருந்து தாயார் செல்லியம்மா வந்து தங்கினாள். வீடு இப்போது அமைதி யாக இருந்தது.

தனலட்சுமிக்குச் சகல வசதியும் வந்துவிட்டது. முத்துநகரில் சொந்த வீடு வாங்கி கலிங்கலில் யாருக்கும் சொல்லாமல் கொள்ளாமல் குடியேறினார்கள். இருப்பிலேயே இருந்ததால் அவளுக்கு உடம்பு ரெம்பப் பருத்துவிட்டது. வீட்டுக் குள்ளேயே நடக்கக் கஷ்டப்பட்டாள். அவள் நுழையச் சங்கடப்பட்டதால் தலைவாசலை இடித்துப் பெரிசாக்கினார்கள். கைகாலுக்குக்கூடத் தலையணை வைத்துக்கொண்டால்தான் உறக்கம் வரும்.

குடும்பம் போகும் போக்கைப் பார்த்து தெய்வானை குமையாத நாளில்லை. யாரிடம் சொல்லி மனசை ஆற்றிக்கொள்வது. உயிருக்குயிராக இருந்த தங்கையா இல்லையே. அந்த மனுசன் இருந்தால் இவ்வளவுக்காகியிருக்குமா.

சிவகாசிக் கொள்ளையில் மாண்டுபோன தங்கையாவின் நினைவு நெஞ்சில் ஈரந்தட்டும். எழுந்து ஊருணிப் பக்கம் போவாள். ஊருணிக் கரைமீது இச்சிமர நிழலில் எதிரெதிரே ரெண்டு வரிசையாக நின்று துண்டுகளைக் குஞ்சம் வீசியபடி பயல்கள் ஆடிப்பாடும் தெம்மாங்கு கேட்கும்.

''கட்டக்கட்ட வெடியெடுத்து
கருமருந்த உள்ளடச்சு
சுட்டாராம் செவகாசிய
செந்தூளாப் போகும்படி
ஊருபத்தி எரிய - பல
உசிருகளும் மடிய.''

''பாஞ்சாலங் குறிச்சியில
பகடமக்க ரெண்டுபேரு
அந்தரம் அடிச்சுவந்து
தந்தரமா வெட்டுனானே
தலைக உருண்டு ஓட - அத
சனங்க கண்டு வாட.''

அவளுக்குள் கலக நினைவுகள் பொங்கும். குமுறிக்குமுறி அழுவாள். சாப்பாடு செல்லாது. தங்கையாவையும் சந்தனமாரியையும் மனசில் சுமந்துகொண்டு மூடிப் படுத்துவிடுவாள்.

அப்படி ஒரு நாள் படுத்தவள் நினைவுகளிலிருந்து மீளவேயில்லை. நிரந்தரமாக மயங்கிப்போனாள். ஊர்க்காரர்கள் கேட்டார்கள்.

''சம்முக நாடாரும் மாலையம்மாளும் இருக்கிற எடத்துல அடக்கஞ்செஞ் சிருவமா.''

சக்கரை நாடார் அதுக்கு ஒத்துக்கொள்ளவில்லை.

''நாங்க பாத்துக்கிறொம்.''

பாடை கட்டி நாடார்களாகச் சுமந்துபோய் உவர்க்காட்டுத் தோட்டத் துக்குக் கிழக்கே புதைத்தார்கள். ஊருக்கு மூணாவது மயானம் வந்துவிட்டது.

செல்லக்கனிக்குத் தனது நிலங்களில் சொந்தமாகப் பயிர்செய்ய விருப்பமில்லை. பண்ணையை மேல்பார்க்கவே சரியாக இருந்தது.ஒரு மேனத்து வந்துவிட்டது. இனிமேல் கலப்பையும் மம்பட்டியும் பிடிக்க முடியாது. நிலங்களைச் சக்கரை நாடாருக்கே விற்றுவிட்டான். எல்லா நிலமும் சொந்தப் பொறுப்பில் இருக்கும்போது என்ன கவலை. அண்ணனுக்கு அவன் கொடுப்பதுதான் கணக்கு. வந்தவரை லாவம் என்பது அண்ணன் கணக்கு.

சந்தன நாடார் நிலத்துடன் மல்லாடிப் பார்த்தார். ஏலவில்லை. வீடு நிறையப் பெண்களை வைத்துக்கொண்டு என்ன செய்ய. கடைசியில் சக்கரை நாடாரிடம் ஒத்திக்கு விட்டுவிட்டார். அவருக்குச் சொத்துசொகம் வரவு செலவு பற்றிக் கவலை கிடையாது. அன்றாடம் பிழைப்பு ஓடினால் போதும்.

சந்தை நாட்களிலும் பண்டிகை நாட்களிலும் தம்பியின் கடைக்குப் போவார். விலைவைத்து ஒரு கட்டு இலை கடனுக்கு வாங்குவார். அதைப் பூட்டுப்

பூட்டாகப் பிரித்துத் தோதான சைசுக்கு அறுத்துச் சந்தைப்பேட்டை வாசலோரம் கடைவிரித்துவிடுவார். பொழுது இருட்டுமுன் அவ்வளவும் விற்றுவிடும். தம்பிக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு மீதியை மடியில் முடிந்துகொள்வார். ஒவ்வொரு நாளில் வாழைப்பழ விற்பனையும் நடக்கும்.

தம்பியிடம் முகம்கொடுத்துப் பேச மாட்டார். கடையில் சம்பளத்துக்கு வேலைபார்க்கப் பிடிக்கவில்லை. பழக்கப்பட்டவர்கள் கேட்பார்கள்.

''தம்பி கடையிருக்க சந்தியில உக்காரலாமா நாடாரே. கடையில தொணைக்கு நின்னாக் கொறஞ்சாபோகுது.''

அவர் கொஞ்சமும் தயங்க மாட்டார்.

''இங்க வித்துப் பழகுனாத்தான தம்பியப் போல சொந்தக் கட வைக்க முடியும். என்ன சொல்றீக.''

''என்னத்தச் சொல்றது. இப்படியே ஒம்ம பெழப்பும் ஓடியடையிது.''

''காலம் ஓடிப்போச்சு.''

''மீசைய மேல்வாக்கில முறுக்கிவுடும். தோரணையாருக்கும். கீழ கவுந்து கெடக்கலாமா.''

''பெழப்பே கவுந்துகெடக்குது. மீசைய நிமித்தி ஆகப்போறதென்ன.''

''நெஞ்சு நிமிந்திருக்குதில்ல.''

''செத்தாலும் அப்படித்தான் இருக்கும்.''

''நீருதான்யா மனுசன்.''

அவர் முற்றிய இலையின் கிழிசலை உரித்தெடுத்து விற்பனைக்குத் தயார் படுத்துவார்.

கஷ்டத்தை மறக்க அவருக்குச் சாராயம் வேணும். கடைக்குட்டி காளியம்மாளுக்கு ஒரு பொட்டணம் பூந்தி வாங்கி மடியில் கட்டிக்கொண்டு பொடி நடையாகக் கலிங்கலுக்கு நடப்பார். இருட்டில் வழி நெடுகப் பாட்டுத்தான் ஆட்டந்தான்.

ஒரு நாள் மப்பு கொஞ்சம் அதிகம். நடுக்காட்டில் ஆளைச் சாய்த்துவிட்டது. மல்லாக்கப் படுத்து உறங்கிவிட்டார். சாமத்தில் முழிப்புத் தட்டியது. எழுந்து உளறினார்.

''ஏ வடிவு. யாத்தா வடிவு. பொழுது விடிஞ்சிருச்சு. முத்தம் தொளிக்கலயா. எந்திரி தாயி.''

பிறகு தன்னையே நொந்துகொண்டார்.

''நான் ஒரு அறிவுகெட்டவன். காட்டுக்குள்ள கெடந்துக்கிட்டு வீட்டப் பத்திப் பேசுறென் பாரு. அடே சந்தனம் அசராம நடைய வுடுடா. காளியம்மா காளியம்மா கடக்குட்டி காளியம்மா. அய்யா பூந்தி கொண்டுவாறென் அழுகாதடா.''

அவர் வீடுபோய்ச் சேரும்வரை வடிவும் காளியம்மாளும் உறங்கவில்லை.

பூத்தும் பூக்காமலும் வீட்டில் ஏழு பெண்கள். அவர்களை ஒண்ணாகப் பார்க்கும்போதெல்லாம் அவருக்குத் தூக்கிவாரிப்போடும். அவர்கள் உறங்கிய பின் முற்றத்தில் உட்கார்ந்து ஒப்பாரிவைப்பார்.

''ஏழுகடல் தாண்டிநானும்
எடுத்துவந்தென் ஏழுமுத்து
எடுத்துவந்த முத்துக்கள
தொடுத்துவச்சுப் பாக்கலயே.''

வடிவு வந்து தேற்றாமல் அழுகை அடங்காது.

''நான் என்ன செத்தா போயிட்டென். ஏன் அழுது பொலம்பணும். ஏண்ட மட்டும் தொழிலப் பாருங்க. முடியலன்னா போசாம வீட்ல கெடங்க. எல்லா ருக்கும் நான் ஒழச்சுப்போட்டுக் காப்பாத்துவென்.''

''சொமதாங்கியா எத்தன நாளைக்குத்தா எல்லாரவும் சொமந்துக்கிட்ருப்ப.''

''பொட்டப்புள்ளீக காலம்பூரா வீட்லயா இருக்கப்போகுதுக.''

''அதுகளக் கரையேத்தணுமே. அத நெனச்சா கஞ்சிதான் எறங்குதா ஒறக்கந் தான் புடிக்குதா.''

''மலையே வுழுந்தாலும் தலதான் தாங்கணும். மத்தவுகளா வந்து தாங்கு வாக. அததுக்கு ஆண்டவன் ஒரு வழி வச்சிருப்பான்.''

''நீ பூக்காமயே வீட்டுக்கு வந்த புண்ணியவாட்டி. ஒன்னயக் கசக்கிப்போட் டுட்டனே. என்னயக் கெட்டிக்கிட்டு என்ன சொகத்தக் கண்டம்மா. நேத்து வந்த தெக்காட்டுக்காரி நெறத்துக்கொரு சீல கெட்டி லாத்துறா. வெதத்துக்கொரு நக போட்டு ஆட்றா. ஆரவாச்சும் மதிக்காளா. ஒனக்கு வருசத்துக்கொரு சீலகூட எடுத்துக்குடுத்துருப்பனா.''

அவர் மறுபடியும் கண்கலங்குவார். அவள் கடிந்துகொள்வாள்.

''இப்பச் சீலத்துணியில்லாமத் தெருவிலதான நிக்காக. அனத்தாம ஒறங்கு நீகளா இல்லையா. புள்ளீக கண்ணசந்து கெடக்கிறது புடிக்கலயா.''

ரெண்டு பேரும் படுத்து முடக்க ரெம்ப நேரமாகும்.

பல இடங்களுக்கு அலைந்து கணக்குவழக்குப் பார்த்து அவர் நாலெழுத்து படிக்கவும் எழுதவும் தெரிந்துகொண்டார். பெரியபெரிய எழுத்தில் புராணக் கதைகள் வாங்கி வந்து கைவிளக்கு வெளிச்சத்தில் வடிவுக்குச் சொகமாக வாசித்துக் காட்டுவார். சந்திரமதி கதையும் நல்லதங்காள் கதையும் ஓடும் நாட்களில் இரு வருமே அழுவார்கள்.

வடிவு சாமர்த்தியசாலி. நல்ல உழைப்பாளி. புருசனின் வருமானத்தைப் பற்றிக் கவலைப்பட மாட்டாள். கஷ்டப்பட்டு ஏழு பெண்களையும் வளர்த்தாள். மூணு பெண்கள் அவளுக்குக் கைகொடுத்தார்கள். என்ன வேலையானாலும் கொடுக்குப் பிடித்துக்கொண்டு தாயுடன் கிளம்பிவிடுவார்கள். குடும்பம் தெம் பாகிவிட்டது. யாருமே பண்ணைக்குப் போவதில்லை. சம்சாரிகளின் நிலங் களுக்குப் போய்விடுவார்கள்.

தனலட்சுமி கலிங்கலுக்கு வந்தால் சங்கரம்மாளுடன் வடிவு வீட்டுப் பொறணிதான் ஓடும்.

''பள்ளையாடு பண்ணைக்கு வர மாட்டாளா.''

''அது வந்தா என்ன வரலன்னா என்ன. நான் அந்தப் பக்கம் திரும்பிக்கூடப் பாக்கிறதில்ல.''

வடிவுக்குப் பள்ளையாடு என்று பேர் வைத்திருந்தார்கள். அதாவது பலகுட்டி போட்ட வெள்ளாடு. தனலட்சுமிக்கு இறுமாப்பு.

‘‘அவள ஏன் திரும்பிப் பாக்கணும். எம் பாடு இப்படின்னு வந்து எங்கால்ல வுழுகட்டுமே.’’

‘‘காலு ஒடிஞ்சாக்கூட நொண்டீட்டுத் திரிவாளே தவர நம்மகிட்ட அண்ட மாட்டா.’’

‘‘அப்ப கஞ்சிக்கில்லாமக் காஞ்சு நோஞ்சுபோயிக் கெட.’’

யாராவது வடிவைப் பார்த்தால் எதார்த்தமாகக் கேட்பார்கள்.

‘‘என்ன கொழுந்தனாரு சம்சாரம் வந்திருந்தாப்புலருக்கு.’’

அவளும் சாதாரணமாகவே சொல்வாள்.

‘‘அவுக வீடு அவுக பண்ண. வர வேணாம்னு சொல்ல முடியுமா. மகராசியா வர வேண்டியதுதான் போக வேண்டியதுதான்.’’

‘‘அவுக பண்ணையில வேல செய்றதில்லையா.’’

‘‘மதியாறவுக எடத்துல மிதிக்கலாமா. என்ன சொல்றத்தா.’’

‘‘அது சரி.’’

‘‘அப்படிப் பெழப்பு நமக்கு வேணாம்.’’

‘‘அவுக ரெண்டு பேரு பழக்கந்தான் ரெம்ப மும்மரமாருக்கு.’’

‘‘இருக்காதா பின்ன. கனம் கனத்தக் காக்கும் கருவாட்டுப் பானைய நாயி காக்கும். நான் சொல்றது சரிதான.’’

‘‘அப்படித்தான் ஆயிப்போச்சு.’’

‘‘ஆனா ஒண்ணு. நீருள்ள மட்டுந்தான் மீனு துள்ளும். ஒருநா ஒரு பொழுது கொளம் வத்தாமயா போகும். அதுக்காகக் கொளம் வத்திக் கொக்குக்கு எரை யாகிப் போகணும்னு சொல்லல. மீனு தன்னோட நெலம தெரியாமத் துள்ளப் புடாதுன்னு தான் சொல்லவந்தென்.’’

‘‘நெலம தெரிய மாட்டங்குதே.’’

சலித்துக்கொண்டு பிரிந்து போவார்கள்.

நடக்கிற சங்கதிகள் எல்லாவற்றையும் வேலையா நாடாரும் பத்திரகாளி யும் அமைதியாகக் கவனித்துக்கொண்டிருந்தார்கள். நாடார் வெதும்பினார்.

‘‘சக்கர பெரிய யேவாரியாருந்து எதுக்கு. பொண்டாட்டியிட்ட வெல போயிட்டானே.’’

அவளுக்கும் அந்த வேதனை இருந்தது.

‘‘பெத்தது பெறந்ததுகள மறந்து வாயில்லாப் பூச்சியாயிட்டானே.’’

தாயாரம்மா ரெம்ப லொம்பலப்பட்டாள். பேச்சு குறைந்து அழுகை கூடி விட்டது. சாப்பாடு சுருங்கியது. குருவிக் குஞ்சாக முடங்கிக் கிடந்தாள். மகள் படும் அவதியைச் சகிக்க முடியாமல் வெந்துபோன செல்லியம்மா நோய் வராம லேயே போய்விட்டாள். அவளைச் சங்கிலிப்புதூருக்குக் கொண்டுபோகாமல் கலிங்கலிலேயே தெய்வானைக்கு அருகில் அடக்கஞ்செய்தார்கள்.

அவள் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் வடிவின் மனசில் அப்படியே பதிந்திருந்தன.

‘‘தாயாருக்கு நீதான் தாயாரா இருக்கணும் தாயி.’’

# 9. பிடிமானம்

மங்கத்தாய் தோட்டத்துப் பக்கம் போய் ரெம்ப நாளாயிற்று. போகப் பிடிக்க வில்லை. அப்படியொரு வெறுப்பு. சொல்லவும் முடியாத மெல்லவும் முடியாத புழுக்கம். புருசனுடன் சடவு ஏற்பட்டதிலிருந்தே இந்த நிலைமைதான்.

ஏகதேசம் மங்கத்தாயின் வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்த முத்தம்மா சொல்லாமல் கொள்ளாமல் நின்றுவிட்டாள். மங்கத்தாயும் அதைப் பற்றிக் கேட்டுக்கொள்வதில்லை. கூடை மம்பட்டி என்று வேலைக்கு வேண்டிய சாமான்கள் எடுத்து வரவோ கொத்துக் கூலி வாங்கவோ மாடப்பன் போனால் உண்டு. மங்கத்தாயிடம் அதிகம் பேச்சு வைத்துக்கொள்வதில்லை. அவளும் புருசனைப் பற்றி விசாரிப்பதில்லை.

முத்தம்மாளுக்குப் பதிலாக யார்யாரோ போய் வீட்டு வேலையில் மங்கத் தாய்க்கு ஒத்தாசனை செய்தார்கள். வேலையைவிட அவர்கள் பேசுவதுதான் அதிகம். ஊர்ப்புறணியை உரலில் போட்டுத் துவைத்துக் கொழித்துவிட்டுத்தான் மற்ற வேலை.

''ஏன் தாயி தோட்டத்துப் பக்கம் கொஞ்சம் எட்டிப்பாக்க வேண்டியது தான. அங்க என்ன நடக்குதுன்னு தெரிஞ்சுக்கிற வேணாமா. ''

ஒவ்வொண்ணுக்கும் மூக்கும் முழியும் வைத்துப் பேசி அவளை உசுப்பிவிடு வார்கள். அவளுக்குக் கோவம் தலைக்கேறும். தானாக வைதுதீர்ப்பாள். ஆத்திரத் தில் அழுகை வரும். அடக்கிக்கொள்வாள். எல்லாம் பிள்ளைகளுக்குத் தெரியாமல் நடக்கும்.

ராத்திரி புருசன் வந்ததும் சண்டையான சண்டை போடணுமென்று கறுவு வாள். அவர் அமைதியாக வெளித்திருணையில் கூரையிருட்டை வெறித்தபடி மல்லாந்து கிடப்பதைப் பார்த்து எல்லாம் மறந்துவிடும். ''பசிக்குது மங்கா'' என்று உரிமையுடன் கேட்க மாட்டாரா என்று மனசு கிடந்து அல்லாடும். ''சாப்பிட வாங்க மாமா'' என்று அவள் வாந்தக்கமாக எப்போது கூப்பிடுவாள் என்று அவர் ஏங்கித் தவிப்பார்.

கொஞ்ச நேரத்தில் சோற்றுப் பாத்திரம் திருணையில் உரசும் சத்தம் கேட்கும். அவர் பெருமூச்சில் எழுந்து உட்கார்ந்து சாப்பிட்டு முடித்து முற்றத்து வெளிப் பானையில் கைகழுவித் துண்டில் துடைத்துவிட்டு அதையே விரித்து மீண்டும் படுத்துக்கொள்வார். அதுக்குள் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அவள் வீட்டுக்குள் போயிருப்பாள். பிள்ளைகள் ஏற்கெனவே உறங்கியிருப்பார்கள்.

புறணிபேசும் புண்ணியவாட்டிகள் அவள் காதில் ஓதி இன்னும் வெறுப் பேற்றிக்கொண்டிருந்தார்கள்.

''என்ன பூச்சம்மா இப்படி ஒலகம் தெரியாறவுகளா இருக்கீக. மொதலுக்கே மோசம் வந்துறப்புடாதுங்கிற அக்கறையிலதான் சொல்றென். கண்டறிஞ்சு பெழச்சுக்கங்க. ஒங்களுக்கும் மூணு புள்ளீக இருக்குது. நாளைக்கு அவுக தெருவுல நின்னா நமக்குத்தான கேவலம்.''

சில மகராசிகள் முத்தம்மா காதையும் கடித்தார்கள்.

''அந்தம்மா என்னமாப் பேசுதும்மா. என்னமோ அவுக மொதலெல்லாம் அமுகிக்கிட்டதுபோல. எனக்கே வாயி கொடு கொடுக்குது.''

முத்தம்மா அமைதியாகக் கேட்டுக்கொள்வாள்.

மங்கத்தாய் புழுங்கிப் பொறுமையிழந்து ஒரு நாள் தோட்டத்துக்கே போய் விட்டாள். அஞ்சாறு பெண்கள் மிளகாய்ப் பழம் பறித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுடன் முத்தம்மாளும் இருந்தாள். மாடப்பனைக் காணவில்லை. அவசர வேலையாக அயலூர் போயிருந்தான்.

சீனித்தாய் தன் பங்குக்குக் கைநிறைய மிளகாய்ப்பழம் பிடுங்குவதும் ஓடி ஓடி சுந்தர நாய்க்கரிடம் கொடுப்பதுமாகத் திரிந்தாள். கரண்ட் ரூம் வாசலில் உட்கார்ந்திருந்த நாய்க்கர் வாங்கிவாங்கி ஒரு குமிக்குச் சேர்த்திருந்தார். அவள் கொஞ்சிக்கொஞ்சி உதிர்க்கும் வார்த்தைகளைப் பொறுக்க முடியவில்லை.

''இந்தா வச்சுக்கோ. இனியும் கொண்டுவாறென்.''

விளையாட்டை மங்கத்தாய் பார்த்துவிட்டாள். கழுத்து ஒடிந்துவிடுகிற மாதிரி சிலுப்பிக்கொண்டு முத்தம்மாளைத் தேடினாள். முத்தம்மா அவளைப் பார்க்காததுபோல் வேலையில் கவனப்பட்டாள். என்ன நடக்கப்போகிறதோ என்று நாய்க்கருக்குள் பதட்டம். தரையைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

ஒருத்தி வரப்புக்குத் திரும்பினாள்.

''வாங்க தாயி வாங்க. எங்கள மறந்துட்டீக. அப்பப்பத் தோட்டத்துப் பக்கம் வரலாமில்ல. நாங்களும் ஒங்க மொகத்தப் பாத்த மாதிரியும் இருக்கும்.''

மங்கத்தாய்க்கு ஆத்திரம் பொத்துக்கொண்டுவந்தது.

''இங்க நடக்கிற கருமத்தப் பாக்கிறதுக்கு வரணுமாக்கும்.''

கேட்டவள் வாயடைத்துப் போய்விட்டாள். நாய்க்கர் புரிந்துகொண்டார். ஏதேது இவள் சண்டைக் கோப்பில்தான் வந்திருக்கிறாள். ஒரு பாட்டம் மழை கொட்டித்தான் ஓயும்.

''எடங்குடுத்தா மடங்கேக்கிற எடுப்பெடுத்த நாயி. இப்படியொரு பெழப்பு வேணுமாக்கும். இனிமே என் நெலத்துல காலுவச்சாத் தறிச்சுப்போட்ருவென்.''

முத்தம்மா திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அமைதியாக இருந்தாள். மங்கத்தாய் விடவில்லை.

''ஏதேது நாளைக்கு எஞ் சொத்துல பங்கு கேட்டு வந்து நின்னாலும் நிப்ப. ஒஞ் சங்காத்தம் போதும். எல்லாருமாச் சேந்து இப்படியா திட்டம் போடுறீக....''

முத்தம்மா பொறுமையிழக்கவில்லை. மங்கத்தாய் பொரிந்துதள்ளினாள்.

''தொடையிலருக்கிற புண்ணக் கடையில காட்னா அசிங்கமேன்னு நானும் மூடிமூடிப் பாத்தென் சகிக்க முடியல.''

நாய்க்கர் முகம் சிறுத்துக் குறுகிப் போனார். ''அனாவசியமாப் பேசாத மங்கா வாய மூடிக்கிட்டு வீட்டுக்குப் போ'' என்று தொண்டைவரை வந்த வார்த்தை களை விழுங்கிவிட்டு ரூமுக்குள் நழுவி உட்கார்ந்துகொண்டார்.

முத்தம்மாளால் சும்மா இருக்க முடியவில்லை.

''இந்தா பாருங்கம்மா ஒங்க சொத்து ஆருக்கு வேணும். அடுத்தவுக சொத்துக்கு நாங்க ஒண்ணும் அளந்துபோயிக்கெடக்கல. நாங்க ஒழச்சு நாலு குடும்பத்தக் காப் பாத்துவொம். என்னமோ இவுகதான் அருசுகமாச் சொத்து வச்சிருக்கிற மாதிரி.''

“வேற காட்ல போயி மேய வேண்டியதுதானடி. இங்க ஏன் குடியிருக்கணும்.”

“அதான் பெரிய தப்பாப்போச்சு. எங்க போனாலும் ஒழச்சா கூலி கெடைக்கப் போகுது. இங்க அள்ளியா குடுக்கீக.”

“தப்பில்லடி மப்பு. கும்மாளம்போடச் சொல்லுது.”

“பேச்ச வளக்காதங்கம்மா. அந்த மனுசன் மொகத்துக்காகப் பாக்கென். இல்லன்னா நாக்கப் புடுங்கிக்கிறாப்புல குந்தக்காடாப் பேசிப்புருவென்.”

“அந்த மனுசன் தைரியத்துலதானடி இவ்வளவும் நடக்கு. அவரக் கைக்குள்ள போட்டுக்கிட்டு எல்லாத்தவும் அமுக்கலாம்னு பாக்கயா.”

இப்போதாவது நாய்க்கர் ஏதாவது பேசுவார் என்று முத்தம்மா எதிர்பார்த்தாள். அவர் எட்டிக்கூடப் பார்க்கவில்லை. குக்கிப்போய் உட்கார்ந்திருந்தார். முத்தம்மா வெடித்துவிட்டாள்.

“ஒங்க காளைய வெளிய வுடாமக் கெட்டிப்போடுறதுதான. இங்க வந்து தாளிக்க வேணாம்.”

கண்ணைத் துடைத்துக்கொண்டு வேலையைத் தொடர்ந்தாள். மங்கத்தாய்க்கு அழுகை வந்தது.

“அடங்காற காளைய வச்சுக்கிட்டு ஆராருட்டயோ பேச்சு வாங்க வேண்டியிருக்கு. இதும் தலவிதியா.”

முத்தம்மாளுக்கு நெஞ்சு வலித்தது. குமுறினாள்.

“விதியில்ல. பண்ணுன பாவம். அந்த மனுசன எண்ணைக்காச்சும் புருசனா மதிச்சிருப்பீகளா. வேலக்காரனுக்கும் கேடா நடத்துனா எந்த ஆம்பளைக்குத்தான் வெறுப்பு வராது. அந்த மனுசனுக்குப் பழைய சோளக் கஞ்சியக் குடுத்தனுப்புறீகளே. நீங்களும் அதத்தான் குடிச்சிட்டுக் கெடக்கீகளான்னு கேக்கென். அந்தப் பாவம் ஒங்களச் சும்மா வுடாது. குடும்பத்துல ஒரு பொம்பளையா நடந்துக்கிறத் தெரியல. பேச வந்துட்டாக பெரிசா. என்னய ரெம்பப் பேச வச்சிறாதங்க. அது எல்லாருக்கும் நல்லதில்ல. பேசாமப் போயிருங்க.”

மங்கத்தாய் அதுக்கு மேல் பேசவில்லை. கரண்ட் ரூமை வெறித்துவிட்டு வீட்டுக்கு நடந்தாள்.

ஆச்சரியத்தில் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மற்ற பெண்கள் அமைதியாக வேலையைத் தொடர்ந்தார்கள். என்ன நடந்தது என்று தெரியாமல் சீனித்தாய் பரக்கப்பரக்க முழித்துக்கொண்டிருந்தாள். அப்போதும் நாய்க்கர் ரூமுக்குள்தான் உட்கார்ந்திருந்தார்.

**அ**ன்றைக்கோடு மாடப்பன் குடும்பம் தோட்டத்துக் கணக்கை முடித்துக்கொண்டது. சொந்த நிலத்தை விட்டுப் பிரிவதுபோல் முத்தம்மாளுக்கு அவ்வளவு வருத்தம். சுந்தர நாய்க்கரைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லத் தோன்றவில்லை.

மங்கத்தாயின் வீட்டில் நாய்க்கரைத் தள்ளிவைத்த மாதிரிதான் நடவடிக்கைகள் இருந்தன. வேளாவேளைக்குச் சோறு கிடைக்காது. பிள்ளைகள்கூட சரியாகப் பேசுவதில்லை. அவர் எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. ஆடுமாடு மாதிரி நடமாடிவிட்டுத் தோட்டத்துக்குப் போய்விடுவார். சில நாள் ராத்தங்கலும் அங்கேதான்.

சீனித்தாயின் சிரித்த முகம் அடிக்கடி நினைவுக்கு வரும். தின்பண்டம் வாங்கிக்கொண்டு போவார். முத்தம்மா கையால் வயிறாரச் சாப்பிடுவார். அதிகம் பேசாமல் கிளம்பிவிடுவார்.

''தாயப் பாக்கணும்னு தோணுச்சு. அதான் வந்தென்.''

மாடப்பனும் முத்தம்மாளும் அவரை ஏறிட்டுப் பார்ப்பார்கள். ''எங்களப் பாக்கத் தோணலையாக்கும்'' என்று கேட்பது போலிருக்கும்.

அவர்கள் இருவரும் அடுத்தவர் நிலங்களில் அயராது உழைத்தார்கள். மகளை வளர்த்து ஆளாக்கும் அக்கறையில் பணங்கூட மிச்சப்படுத்த ஆரம்பித்தார்கள்.

மங்கத்தாய் நடந்துகொள்வது சென்னம்மாளுக்குப் பிடிக்கவில்லை. அவளிடம் சொல்லாத நாளில்லை.

''ஏம்மா இப்படிப் புடிவாதமா இருக்க. குடும்பம்னா அப்படி இப்படி இருக்கத்தான் செய்யும். நம்மதான் அனுசரிச்சுப்போகணும்.''

மங்கத்தாய்க்கு மூக்குக்குமேல் கோவம் வரும்.

''அப்படிப்பட்ட புருசன் தேவையில்லையே.''

''ஒண்ணுக்கு மூணு புள்ளைகளானப் பெறகு எடுத்தெறிஞ்சு பேசப்புடாது மங்கா.''

''எடுத்தெறிஞ்சது அந்த மனுசனா நானா. நல்லா யோசனபண்ணிப்பாரு.''

''நடந்ததெல்லாம் மறந்துட்டு சேந்து வாழுறதுக்கு வழியப் பாரும்மா. இனிமே புள்ளைக சந்தோசந்தான் முக்கியம்.''

''சேருற மாதிரியா காரியம் பண்ணியிருக்காரு.''

''எல்லாம் நம்ம கையிலதான் இருக்கு.''

''அதான் கைய வுட்டுப் போயிருச்சே.''

''இந்தப் புடிவாதம் நல்லதுக்கில்ல. அம்புட்டுத்தான் சொல்லுவென்.''

''நானா புடிவாதம் புடிக்கென். நல்ல மனுசன்னா புள்ளைகளுக்காகவாவது மனசு மாறி வீட்டுக்கு வந்து எண்ணைக்கும்போல இருக்கட்டும். எனக்குப் புருசனா இல்லன்னாலும் ஒரு தகப்பனா இருந்தாப் போதும்.''

''என்னருந்தாலும் அவரு ஆம்பளம்மா. நம்மதான் ஒருவார்த்த கூப்பிடணும்.''

''நான் என்ன தப்புச் செஞ்சென்.''

''ஒங்கிட்ட ஆரு பேசக் கெடக்கு. நீ தப்பே செய்யல. போதுமா.''

சென்னம்மா பேத்தியைக் கடிந்துகொள்வாள்.

''நைனா எவ்வளவு நேரமா உக்காந்துருக்காக. சாப்பிடக் கூப்பிடும்மா. நீயும் அம்மா மாதிரியே நடந்துக்கிறயே.''

பேத்தி அம்மாவுக்குப் பயந்து நழுவிவிடுவாள். சென்னம்மாளே மருமகனுக்குச் சோறு போட்டுக் கொடுப்பாள்.

பிறகு அதுக்கும் வழியில்லாமல் போய்விட்டது. சென்னம்மா செத்துப் போனாள். சுந்தர நாய்க்கர் குடும்பத்திலிருந்து கிட்டத்தட்ட துண்டிக்கப்பட்ட நிலையில் நடமாடிக்கொண்டிருந்தார். அப்போதும் மங்கத்தாய் பிடிவாதத்தை விடவில்லை.

## 10. வெறிச்சோடிய திருணை

முத்தம்மாளின் மனசிலிருந்து அந்த வருத்தம் மட்டும் அழியவேயில்லை.

''அண்ணைக்கு அந்தம்மா அத்தன பேச்சுப் பேசும்போது சாமிவுக ஒரு வார்த்த தடுத்துச் சொல்லலயே. அவ்வளவுக்கு உறுத்து இல்லாறவளாப் போயிட்டனா. எப்படி ஊமையா இருக்க முடிஞ்சது. ஊருக்குள்ள பொறணி பேசாற வாயி உண்டுமா. அதெல்லாம் மீறித்தான எல்லாம் நடந்தது. எங்களுக்காக ஒரு வார்த்த சொல்லியிருந்தா மனசாறிப்போகுமே. சொல்லலயே... அது சரி. நாங்கென்ன அவுக சாதியா சனமா...''

காடுகரையெல்லாம் புலம்பிக்கொண்டு திரிந்தாள். மங்கத்தாயின் தோட்டத்துக்குப் போய் நாலு வார்த்தை நறுக்கென்று கேட்கலாமா என்றுகூட நினைப்பு ஓடும். கேட்டு என்ன செய்ய. அவர் மனசுதான் வருத்தப்படும். இனி மேல் அந்த இடத்தில் கால் வைக்கக் கூடாது. அது சவங்கத்தனம்.

திடீரென ஒரு நாள் ஈரக்குலையைக் கவ்வுகிறதென்று ஏங்கியவள் மூச்சு நின்று ஒரேயடியாகச் சாய்ந்துவிட்டாள். அப்போது சீனித்தாய்க்கு அஞ்சு வயசு. மாடப்பன் நாய்க்கரிடம் போய் அழுதான்.

''புள்ளையக் குடுத்த ஆண்டவன் தாய எடுத்துக்கிட்டானே சாமி.''

அவரும் கண்கலங்கினார்.

பலரது குத்தலான பார்வையையும் முகச்சுளிப்பையும் பொருட்படுத்தாமல் அவர் மயானத்துக்கு வந்தார். சிலர் சத்தமாகவே முணுமுணுத்தார்கள்.

''இங்க எதுக்கு வாறாரு பெரிய மொதலாளி. செத்துட்டாளா உசிரு கெடக்குதான்னு பாக்கிறதுக்கா.''

''ஒரு மனுசிய அனியாயமாக் கொன்னுட்டு இங்க வாறதுக்கு வெக்கமால்ல.''

''வெக்கத்த உதுத்து ரெம்ப நாளாச்சு.''

''அதச் சொல்லு.''

''நம்ம தெருவுக்கு வந்து வீடு மொழஞ்சு பேச்சுப்பழக்கம் போடும்போதே கதவச் சாத்திக்கிட்டு நாலு வப்பு வச்சிருக்கணும்.''

''தகப்பனவும் புள்ளையவும் அனாதையா வுட்டுட்டுப் போயிட்டாளே.''

எல்லா வார்த்தைகளையும் காதில் வாங்கிக்கொண்டு அவர் அமைதியாக முத்தம்மாளின் முகத்தைப் பார்த்துவிட்டுப் போனார். பிறகு கரண்ட் ரூமுக்குப் போய் கண்கள் வீங்க அழுதார். அனாதையாகிவிட்ட வெறுப்பு.

மங்கத்தாய் வன்மங்கூறினாள்.

''அவுத்துட்டுப் போன காளமாடு தொழுவுக்கு வந்துதான ஆகணும்.''

எப்படியும் வருவார் என்ற எதிர்பார்ப்பு அவளுக்குள் இருக்கத்தான் செய்தது.

நாய்க்கர் மாடப்பனைச் சந்திக்கணுமென்று தாவங்கப்பட்டார். அவனுடன் நிறையப் பேசி மனசை ஆற்றிக்கொள்ளணும். அவன் முகத்தில் எப்படி முழிப்பது. வீட்டுக்குத்தான் போகணும்.

ஒரு நாள் மாடப்பன் சீனித்தாயுடன் தோட்டத்துக்கு வந்தான். அவன் முகத்தில் முழிக்க வெட்கமாயிருந்தது. சீனித்தாய் அவரைப் பார்த்து வெள்ளை

யாகச் சிரித்தாள். அதில் எத்தனையோ அர்த்தங்கள். அவளை அருகில் அமர்த்தித் தலையை வருடினார். பேச்சு திக்கித் திணறியது.

''இப்படி ஆயிருச்சேடா.''

''கொழந்த வேணும்னு ரெம்ப ஆசப்பட்டா. அதப்பாத்துக் காலமெல்லாம் சந்தோசப்படக் குடுத்துவைக்கல.''

''தாய வச்சுக்கிட்டு என்னடா பண்ணுவ.''

''ஆண்டவன் நமக்கு இப்படியொரு சோதனையக் குடுத்துட்டானே. சமாளிச்சுத்தான ஆகணும். அதான் நான் முத்தம்மாளுக்குச் செய்ய வேண்டிய கடம.''

''எல்லாமே வெறுத்துக்கெடக்குது. ராப்பிச்சக்காரன் மாதிரி ஒரு வீட்டுச் சோத்தத் தின்னுட்டு எவ்வளவு காலத்துக்குத் திரியிறது.''

''மூணு புள்ளீகள வச்சுக்கிட்டு அப்படிப் பேசாதங்க. பூச்சம்மா இனியும் அப்படித்தான் இருக்காகளா.''

''அவ எண்ணைக்குமே மாற மாட்டாடா.''

''அவுக முத்தம்மாளப் பேசுனதப் பத்திக் கேள்விப்பட்டென். ரெம்ப வருத்தமா இருந்துச்சு. சரி ஒரு வெறுப்புல பேசியிருப்பாகன்னு அத மறந்துட்டென்.''

''என்னால மறக்க முடியலயேடா.''

''அவளும் மறக்கல. மனசுக்குள்ள வச்சுப் புழுங்கிப்புழுங்கி நொந்து போயிட்டா.''

அவர் இப்போது ஏறிட்டு அவன் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தார்.

''என்னாலதானடா இவ்வளவும்.''

''ஆராலயுமில்ல. விதியத்தான் நொந்துக்கிறணும்.''

அவன் எழுந்துகொண்டான். சீனித்தாயும் எழுந்து அவன் விரலைப் பின்னிக் கொண்டே அவரை நிராதரவாகப் பார்த்தாள். அந்தப் பார்வையை அவரால் தாங்க முடியவில்லை. கடைசியாகச் சொன்னார்.

''தாய மலைக்க வுட்றாத.''

''என்ன கஸ்டப்பட்டும் வளத்துக் கரையேத்திருவென் சாமி.''

சீனித்தாய் அவனிடம் கேட்டாள்.

''சாமி இங்கதான் இருக்குமாய்யா. வீட்டுக்குப் போகாதா.''

அவன் கை அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தது.

''போவாக தாயி.''

மறுபடியும் சீனித்தாயைப் பார்க்க அவருக்குத் திராணியில்லை.

அன்றைக்கு ராத்திரி அவர் உறங்கவில்லை. யோசனை ஓடிக்கொண்டேயிருந்தது. புரண்டுபுரண்டு படுத்தும் வலி குறையவில்லை.

மறுநாள் காலை அவர் வழக்கமாகப் படுத்திருக்கும் தாவாரத் திருணை காலியாக இருந்தது. தோட்டத்தில் கரண்ட் ரூமும் பூட்டிக்கிடந்தது.

## படலம் 21

### 1. ஆகமான சவரிமுடி

சீனிக்கிழங்கு வெட்டுக் காலத்தில் குளுவன் குடும்பம் ஒண்ணு பன்றிக் கூட்டத்துடன் கலிங்கலுக்கு வந்து மந்தையில் குடிசையும் கூடும் போட்டுத் தங்கியிருந்தது. கிழங்கு வெட்டு முடியக் குறைந்தது மூணு மாசமாகும்.

வெட்டி ஆறிக்கிடக்கும் தோட்டங்களில் பன்றிகளை விட்டால் சீவிப் போட்ட சூத்தைக் கிழங்குகளையும் ஒதுக்கித்தள்ளிய வேர்களையும் சொகமாகத் தின்று வயிறு நிரப்பும். வெட்டிப்போட்ட மண்ணில் தப்புக் கிழங்கை முண்டியெடுத்துக் குதப்பும். அப்படியே லாத்தலாக ஊருணித் தண்ணீரில் புரளவிட்டுக் கூட்டுக்குள் அடைக்கும்போது இருட்டிவிடும்.

குடும்பத்தில் எல்லாரும் பன்றி மேய்ப்பார்கள். சாணி பொறுக்கிக் குப்பை சேர்ப்பார்கள்.வீட்டுச் சுவர்ப் பொந்துகளில் பெண்கள் சொருவி வைத்திருக்கும் கழிவுமுடிச் சுருள்களைத் தேடிப்பிடித்துச் சிக்கெடுத்து நீள முடியாக்கி சவரிமுடி கட்டிப் பெரிய குளுவன் கூவிக்கூவி விற்பான்.

''சவரிமுடி. கொண்டைக்கேத்த சவரிமுடி. அள்ளி முடிஞ்சா அழகாருக்கும். ஆ சவரிமுடி சவரிமுடி...''

குளுவப் பெண்கள் ரயில் கற்றாழை நாரிலும் மொச்சி விளார்களிலும் புரிமணை செய்து விற்பார்கள். பாட்டுப் பாடி வீடுகளில் சோறெடுப்பார்கள்.

''ராமாரே...
கிருஷ்ணாரே...''

குளுவன் ஒரு நாள் தற்செயலாக மஞ்சனையின் வீட்டுச் சுவரில் கழிவுமுடி தேடுவதை அந்தச் சமயம் கலிங்கலுக்கு வந்திருந்த கோயிந்தன் பார்த்துவிட்டான். வந்ததே கோவம்.

''அங்கென்ன சொவத்த நொரண்டிக்கிட்டு.''

''ஆ சாமி சவரிக்கு முடி தேடுறென்.''

''என்னது முடியா. ஒன்னால மருந்துக்குக்கூட ஒரு மயிர எடுக்க முடியுமா. எந்த வீட்ல தேடுறதுன்னு அறிவு வேணாமா. வேலையத்த மனுசன்.''

குளுவன் கோயிந்தனை ஒருமாதிரியாகப் பார்த்துவிட்டுப் போனான்.

அவனுக்கென்ன தெரியும் அந்த வீட்டைப் பற்றி. அது மஞ்சனை குடியிருக்கும் வீடாக்கும். அவளுக்கும் கொண்டைக்கும் ரெம்பத் தூரம். கொண்டை முடியுமளவுக்கு முடி வளர்ந்துவிடக் கூடாது. உடனே கோயிலுக்குப் போய் மொட்டை போட்டாகணும். தலையில் சந்தனம் பூசிக் குளிர்ச்சியாக உறங்கணும். தலை முழுகிக் குளிக்கக் கஷ்டமில்லை. பெரும்பாலும் தலையில் வண்டு கட்டிக்கொண்டு நடமாடுவாள். சின்னப் பெண்கள் தலைவிரி கோலத்தில் திரிந்தால் பெரிய பெண்கள் கிண்டல் பேசுவார்கள்.

''ஏக்கி ஒன்னயத்தான். கொண்ட போடத் தெரியலன்னா ஒரெட்டுப் போயி மஞ்சனையிட்டக் கேட்டுட்டு வாயேன்.''

மஞ்சனைக்குக் கொஞ்சம் முடி வளர்ந்துவிட்டால்கூட அச்சலத்தியாக இருக்கும். ஊர்ப்பட்ட பேன்கள் குடியேறிக் குடும்பம் நடத்தும். எந்நேரமும் தோட்டத்தில் ஆடு மாடு மேய்ந்த மாதிரி அரிப்பெடுக்கும். மரச்சீப்பால் மடங்க வளித்து இச்சிப்பழமாக உதிரும் பேன்களை வாசப்படியில் போட்டுக் கோவந்தீரக் கல்லால் தட்டி நசுக்குவாள். ஈர்க்கொல்லி வைத்து உருவி நொடித்து நெரிப்பாள். ராத்திரியில் ரெம்ப நேரம் தடவிப் பிடித்துக் கொறிப்பாள். சில சமயம் அழுகை வந்துவிடும்.

''தலையப் பாத்து வுடுறதுக்கு ஒரு புள்ளையில்லாமப் போச்சே.''

மறுநாள் முடியை ஏதாவதொரு தெய்வத்துக்கு நேர்ந்துவிடும்வரை மனசு ஆறாது.

கோயிந்தன் சிரித்துக்கொண்டே போனான்.

''வக்காளி மஞ்சன வீட்ல போயி மயிரு தேடுறான் பாரு.''

முத்துவீரிக்குப் புதுசாக ஒரு ஆசை வந்திருந்தது. குளுவன் சவரிமுடி விற்கும் சத்தம் கேட்கும்போதெல்லாம் ஓடிவந்து பார்ப்பாள். அவன் சவரியை ஒரு கையில் தொங்க வைத்துக்கொண்டு சீப்பால் அழகாக வளித்துக் காட்டுவான். அஞ்ஞுக்கோ அது அசைந்தாடும் அழகைப் பார்க்கணுமே. புருசன் வந்ததும் ஆசையைக் கொட்டிவிட்டாள்.

''ஏய்...''

''என்னத்தா.''

''எனக்குத் தலமுடி மூட்டுமூட்டாப் புடுங்கி வெளக்கமாத்துக் கட்டையாப் போச்சு. சின்னக் கொண்டகூடப் போட முடியல. கைக்கு எட்ட மாட்டங்குது.''

''அதுக்கென்ன இப்ப. சாத்தங்கிட்ட முடிவெட்டிக்கிறயா. சோக்காருக்கும்.''

''ஒனக்குக் கேலியாருக்குதோ. பொண்டாட்டிமேல அம்புட்டு அக்கற.''

''இப்ப என்ன செய்யச் சொல்ற.''

''குளுவன் வளத்தியான சவரிமுடி வச்சிருக்கான். ஆரும் வாங்குறதுக்குள்ள நீ வாங்கீட்டு வந்துரு.''

அவனுக்கு ஆச்சரியம். அவள் வீட்டுக்கு வந்த நாளிலிருந்து வாய்திறந்து ஒரு பண்டம்கூடப் பிரியமாகக் கேட்டதில்லையே. அவனும் வாங்கிக்கொடுத்ததில்லையே. இதென்ன புதுக் கிறுக்கு.

''ஊர்ப் பொம்பளைக கழிச்சுப்போட்ட முடியெல்லாம் ஒங் கொண்டையில வச்சுக்கிறப்போறயாக்கும். ஒன் ஆசைய ஏன் கெடுக்கணும்... எங்கிட்டத் துட்டு இல்ல தாயி.''

''நான் வச்சிருக்கென்.''

முந்தியில் முடிந்து வைத்திருந்த காசை அவுத்துக் கொடுத்தாள். அவன் குளுவனைத் தேடிப் பிடித்து சவரியை வாங்கிவந்துவிட்டான். அவள் ஆவலுடன் வாங்கி தலைமுடியுடன் சேர்த்து அள்ளிப் பெரிய கொண்டையாகப் போட்டுக் கொண்டாள். அவன் கண்சிமிட்டினான்.

''கொமரி மாதிரி இருக்கு. இனியும் ஒரு புள்ளப் பெத்துக்கோ.''

''ஒனக்கு மப்பு ரெம்பத்தான்.''

அவள் கொண்டைச் சுதாரிப்பிலேயே மகள் ராசாமணிக்கு உள்ளூரில் கடக்கரையைப் பார்த்துக் கலியாணம் முடித்துவைத்துவிட்டாள். பெரிய நிம்மதி.

கலியாணம் முடிந்து ஒரு வாரம் ஆகியிருக்கும். கோயிந்தன் ஒரு சோலி யாகச் சத்திரப்பட்டிக்குப் போய்விட்டுத் திரும்பிக்கொண்டிருந்தான். நன்றாக இருட்டிவிட்டது. கம்மாய்க்குத் தெற்கே மயானத்தில் பிணம் எரிந்துகொண் டிருந்தது.

அருகில் ஒரு உருவம் நடமாடுவது அரிச்சலாகத் தெரிந்தது. வெட்டியானாக இருக்கும். கொஞ்ச நேரத்தில் இன்னொரு உருவம் கம்மாக் கரையிலிருந்து இறங்கி அவசரமாக மயானத்தை நோக்கி நடந்தது. அது யாராக இருக்கும். வெட்டியானுக்குத் துணையென்றால் ஏற்கெனவே கூட நிற்கணும். இந்த நேரத்தில் ஓட்டமும் நடையுமாக ஏன் போகணும். இதில் ஏதோ விவகாரம் இருக்கிறது.

கொஞ்சம் நெருங்கிப் போய்ப் பார்த்தான். கையில் கம்புடன் நிற்கும் வெட்டியான் உருவம் வெளிச்சத்தில் தெளிவாகத் தெரிந்தது. இறங்கிப்போன உருவத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. முழுக்க முக்காடு போட்டிருந்தது.

செடிக்குள்ளிருந்து வெட்டியான் எதையோ எடுத்துக் கொடுக்க இந்த உரு வம் வாங்கிக்கொண்டு அவசரமாகத் திரும்பியது. அவன் கருவச் செடி மறைவில் ஒளிந்துகொண்டான். உருவம் அவனைக் கடந்து கரையேறிக் கலிங்கல் பாதை யில் நடையைப் பிடித்தது. அவன் பின்தொடர்ந்தான். அது இன்னும் வேகமாக எட்டுப் போட்டது. அவனும் எட்டி நடந்தான்.

கோணிகுளம் கரைக்கு வந்துவிட்டார்கள். உருவம் கருத்தையன் கிணற் றோரம் நின்று திரும்பிப் பார்த்தது. கிட்டத்தில் ஆளருவம் கேட்கவே கரை வழியே ஓட்டம் பிடித்தது. அவனால் ஓட முடியவில்லை. அய்யா கலிங்கலுக்குத்தான் போகணும். அதே கிந்தின நடை உடலசைவு. சந்தேகமேயில்லை. அந்தப் புள்ளிக் காரன்தான்.

மறுநாள் காலை முத்துவீரி பத்திரப்படுத்தி வைத்திருந்த சவரிமுடியைச் சுருட்டி மடியில் கட்டிக்கொண்டு குளுவனைத் தேடிப்போனான். சற்றுத் தள்ளி ஒதுங்கினார்கள்.

''ராத்திரி சுடுகாட்டுப் பக்கம் திரிஞ்ச மாதிரி இருந்துச்சே அங்க என்ன சோலி.''

குளுவன் பரக்கப்பரக்க முழித்தான்.

''ஆ சாமி அந்த வெட்டியான் காசு குடுக்க வேண்டியிருந்துச்சு. வாங்கீட்டு வந்தென்.''

''காசு வாங்கீட்டு வந்தயா குடுத்துட்டு வந்தயா. காசு வாங்குறதுக்கு வேற எடமே கெடைக்கலயோ.''

''அந்தாளப் பாக்க முடியிறதேயில்ல.''

''வாங்கீட்டு ஏன் ஓடணும்.''

''பயமா இருந்துச்சு.''

''சுடுகாட்டுக்குப் போறதுக்குப் பயமில்ல. வரயிலதான் பயமாக்கும். எதவும் களவாண்டயா.''

''நம்ம களவெல்லாம் செய்றதில்ல சாமி.''

குளுவன் செவியில் பளீரென்று ஒரு அடி விழுந்தது. ஆடிப்போனான்.

''நடந்ததச் சொல்லு. என்ன பொருள வாங்கீட்டு வந்த.''

''ஒண்ணுமில்ல சாமி...''

''இப்பச் சொல்லலன்னா நொங்கெடுத்துருவென்.''

''சொல்லீறென் சாமி. வயசுப் பொண்ணுக செத்துட்டா வெட்டியான் அதுகளோட தலமுடிய அறுத்துக் குடுப்பான். நான் காசு குடுத்து வாங்கீட்டு வந்து சவரிமுடி செஞ்சு வித்துருவென்.''

குளுவனுக்கு இன்னொரு அடி கிடைத்தது. கோயிந்தன் மடியிலிருந்து சவரிமுடியை எடுத்துக் காட்டினான்.

''அப்ப இது எந்தப் பொணத்தோட முடி.''

''அது வந்து...''

''வீட்டுச் சொவரு முடியத் தேடியெடுக்கிற மாதிரி பம்மாத்துக் காட்றது இந்தக் கூத்த மறைக்கிறதுக்கு. அப்படித்தான.''

கோயிந்தன் சவரிமுடியைக் குளுவன் மூஞ்சியில் வீசியெறிந்தான்.

''இனிமே இப்படிச் செய்ய மாட்டென் சாமி.''

''எக்கேடும் கெட்டுப் போ. தாயிளி இண்ணைக்கு இருட்றதுக்குள்ள ஊர வுட்டுக் கெளம்பிப் போயிருங்க. இல்ல ராத்திரியே ஒங்க குடிச பண்ணிக்கூடு எல்லாத்தவும் கொளுத்தி ஒங்களப் பொணமாக்கீருவென்.''

அவ்வளவுதான் குளுவன் மதியமே கூட்டத்துடன் குடிகிளம்பிப் போய் விட்டான்.

முத்துவீரி சவரிமுடியைத் தேடித் தவித்தாள். கோயிந்தனிடம் கேட்டாள்.

''மாடாக்குழியில முடிமயிரு வச்சிருந்தனே பாத்தயா.''

''மயித்தப் போயி மாடாக்குழியில வைக்கலாமா. ராத்திரி முழுக்க அத எலி கொறிச்சுக் கொதறியிருச்சு போலருக்கு. கொண்டுபோயி குளுவங்கிட்டக் குடுத்துருக்கென். திரும்பக் கெட்டித்தரச் சொல்லி.''

''எப்ப வருவான். ஆகமான முடி போச்சே.''

''மதியத்துக்கு மேல வந்துருவான். அதுவரைக்குப் பொலம்பாம இரு.''

மதியத்துக்கு மேல் ரெம்ப நேரமாகிவிட்டதால் அவள் குளுவனைத் தேடிப் போனாள். யாருமே இல்லாததைக் கண்டு ஓடிவந்தாள்.

''பாவி குடிகெளம்பிப் போயிட்டானே. நான் என்ன செய்யட்டும்.''

அவன் ஆறுதல் சொன்னான்.

''நல்ல முடி கெடச்சிருக்காது. தேடிப் புடிச்சுக் கொண்டுவருவான். வரட்டும்.''

அவள் அழாததுதான் குறை. பத்துப் பதினஞ்சு நாள் முனங்கிக்கொண்டு திரிந்தாள். பிறகு வயக்காட்டில் புல்லறுக்கப் போன இடத்தில் பாம்பு கடித்துச் செத்துப் போனாள். பிணத்தைத்தான் தூக்கிவர முடிந்தது.

கோயிந்தன் தனிமையில் அழுது தேற்றிக்கொண்டான்.

''மழ வுழுந்தாத் தாங்கலாம். மானமே இடிஞ்சு வுழுந்துருச்சே. தாங்க முடியலயே. முத்துவீரி ஒனக்கு உருப்படியா ஒரு முடிமயிருகூட வாங்கித்தரலயே.''

அவனுக்கு எல்லாம் வெறுத்துவிட்டது. முந்திக்கு இப்போது ரெம்ப நாள் ஊருக்கு வெளியே சுற்றித்திரிந்தான். எப்போதாவது ஊருக்குள் தலையைக் காட்டினான். தங்கச்சி வீட்டுக்கோ மகள் வீட்டுக்கோ போவதில்லை. தங்கச்சி மூஞ்சியில் எப்படி முழிப்பது. அவள் மூத்த மகன் தருமருக்கு ராசமணியைக் கேட்டு நச்சரித்தாள். அவன்தான் ஏதேதோ காரணம் சொல்லித் தட்டிக்கழித்து விட்டான்.

ஊரில் தங்கியிருக்கும் நாட்களில் அஞ்ஞைதான் கஞ்சி கொடுப்பாள். ராமசாமிக்கும் அவளே ஆக்கிப்போட்டாள். அவள் படும் பாதரவைப் பார்த்து விரைவிலேயே ராமசாமிக்கு சங்கரலிங்கபுரம் செயக்கொடியைத் துணைசேர்த்து தனியாகக் குடியமர்த்திவிட்டான். அஞ்ஞை அஞ்சு வருசம் அவனுக்குச் சோறு கொடுத்துவிட்டு அமைதியாகப் போய்ச் சேர்ந்துவிட்டாள். அவன் வரும்போதெல் லாம் அவள் ஞாபகப்படுத்துவாள்.

''அடே கோயிந்தா வீடு ஒழுகுதுடா. மேயப்புடாதா.''

மேய்ந்து வைத்தால் முத்துவீரி நினைவு வரும். குடும்பத்தில் ஒரு பிடிப்பு உண்டாகும். ராமசாமி ராசமணியின் குழந்தைகளைப் பார்க்கத் தோன்றும். மழுப்பிவிடுவான்.

''அதுக்கென்ன நீ கொஞ்சம் ஒதுங்கிப் படுத்துக்கோ. வீட்டுக்குக் காத்தோட் டமும் வெளிச்சமும் வேணுமில்ல. மழ வாற நேரத்த நம்ம எப்படித் தெரிஞ் சுக்கிறது.''

''என்னமோப்பா நான் செத்த பெறகாச்சும் மேஞ்சாச் சரி.''

அப்படித்தான் ஆகிவிட்டது.

## 2. தேவமாதா

வேப்பங்காடு பெரிய ஊர். பேருக்கேற்ப ஊரைச் சுற்றி வேப்ப மரங்கள் நிறைந்திருக்கும். அங்கே பல சாதிகள் உண்டு. பெரும்பாலும் நாய்க்கர்கள். பணச்செருக்கானவர்கள். கிழமேலாக ஓடும் பெருந்தெருவின் இருபுறமும் சிறு சிறு தெருக்களில் குடியிருந்தார்கள். வடபுறம் கோனார் செட்டியார் கொசச் செட்டியார் ஆசாரிகள் வாசம். கொஞ்சம் தள்ளி மேகல வண்ணார் வீடு மூணு நாவிதர் வீடு ரெண்டு. வடமேற்கு மூலையில் நாமம் தரித்த கோட்டைச் சுவருக் குள் பெருமாள் கோயில்.

கீழ்ப்புறம் மூணு தெரு பறைக் குடி. அதுக்கும் கிழக்கே புதிரைவண்ணான் வீடு ஒண்ணு. சாலமுத்து வம்சம். கடைசியில் அஞ்சு வீட்டுச் சக்கிலியக் குடி. நாய்க்கமார் தெருவின் கீழ்முனையிலிருந்து விரியும் மைதானத்தில் அடுத்தடுத்து காளி கோயிலும் மாதா கோயிலும். பறைக் குடிக்குப் பாத்தியப்பட்டது.

பறைக் குடிக்கு வேதமும் மாதா கோயிலும் வந்து நாளாயிற்று. கோயிலி லேயே பள்ளிக்கூடம் நடந்தது. அதுவரை அந்த ஊரில் பள்ளிக்கூடம் கிடை யாது. பிள்ளைகள் கரிசக்காட்டு ஒத்தையடிப் பாதை வழியாக வடக்கூர்ப் பள்ளிக்கூடத்துக்கு ஒரு வாங்கல் நடக்கணும்.

காளி கோயில் கொடை நடத்திய வகையில் கணக்குவழக்கு ஊர் மரியாதை என்று கிளம்பியிருந்த கசபுசலில் கோவங்கொண்டிருந்த அஞ்சு குடும்பங்கள் ஆரம்பத்தில் வேதத்துக்கு மாறின. பிறகு ஒண்ணைத் தொட்டு ஒண்ணு மாறி சரிபாதியாகிவிட்டது. காளியைப் போலவே சகாயமாதாவுக்கும் பண்டிகை கொண்டாடினார்கள். அலங்கார மாதாவைச் சப்பரத்தில் வைத்துப் பவனிவந் தார்கள். மாதாவைப் போற்றிப் பெண்கள் கும்மியடித்தார்கள்.

''அச்சியும் குச்சியும் பொன்னால
ஆவரங் குச்சியும் பொன்னால
வேர்த்து வாற தேவமாதாவுக்கு
வெள்ளிக் குஞ்சங் கொண்டு வீசுங்கடி.''

மைதானத்தில் குமருகளின் கும்மிப்பாட்டு கேட்டுக்கொண்டேயிருந்தது.

''நாழியில குருணவச்சு
நான்வளத்த சாவல் - அம்மா
நான்வளத்த சாவல்
நான்வளத்த சாவலுக்கு
நாக்கறுத்த தாரோ
நாக்கறுத்த தாருன்னுதான்
எனக்கொருத்தி சொன்னா - தாயே
எனக்கொருத்தி சொன்னா
தங்கத்தொர ஏசுநாதர்
என்னசொல்லு றாரோ - அவர்
ஏதுசொல்லு றாரோ.

காட்டுலயும் மேஞ்சடையும்
கருவளவிச் சாவல் - அம்மா
கருவளவிச் சாவல்
கருவளவிச் சாவலுக்கு
கொறளிசொன்ன தாரோ
கொறளிசொன்ன தாருன்னுதான்
எனக்கொருத்தி சொன்னா - தாயே
எனக்கொருத்தி சொன்னா
தங்கத்தொர ஏசுநாதர்
என்னசொல்லு றாரோ - அவர்
ஏதுசொல்லு றாரோ.''

முந்தி இருக்கங்குடி திருச்செந்தூர் திருவண்ணாமலைக்குப் போய்க்கொண் டிருந்தவர்கள் வேதத்துக்கு மாறியபின் வேளாங்கண்ணி புளியம்பட்டி காமய நாயக்கன்பட்டிக்குப் போனார்கள். குழந்தைகளுக்கு மொட்டையடித்துக் காது குத்தி வேதப் பேர் வைத்தார்கள். நேர்ச்சை செலுத்தினார்கள்.

கொள்வினை கொடுப்பினை உறவுகளில் உரசல் உண்டாகியது. சடங்கு களில் பிணங்கினார்கள். சாவுகளில் மேம்போக்காக ஒண்ணுசேர்ந்தார்கள். மயா னத்தில் தனியாகச் சிலுவைகள் முளைத்துக் கல்லறைத் தோட்டம் உருவாகியது.

பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளை உட்கார வைப்பது பெரும்பாடாக இருந்தது. வருகிற வாத்தியார்கள் வீடு வீடாகப் போய் பிள்ளைகளைச் சிரமப்பட்டுக்

கூட்டிவர வேண்டியிருந்தது. இந்துக்காரர்கள் குழந்தைகளை அனுப்ப முதலில் தயங்கினார்கள்.

''அங்க போனா புள்ளீகள மண்டிபோடவச்சு அது இதுன்னு சொல்லிக் குடுத்துக் கெடுத்துருவாகளோன்னு பயமாருக்கு.''

''புத்தியே மாறிப்போகும்னு சொல்றாக.''

''பெறகு நமக்குப் புள்ளையில்லாமப் போயிரும்.''

சிலர் வேறு மாதிரி சொன்னார்கள்.

''அடி இவளே ஊரு ஒலகத்துல எத்தன வேதப் பள்ளிக்கொடம் இருக்கு. அங்க எத்தன புள்ளீக படிக்குதுக. அத்தனையும் புத்திகெட்டுப்போயா அலையிதுக. நம்ம புள்ளீக நாலும் தெரிஞ்சுக்கிறட்டுமே.''

''சின்னதுகளத் தனியா வுட்டுட்டுக் காடுகரையில கவலையில்லாம வேல வெட்டி செய்ய முடியிதா. கொளங்குட்டையில எறங்கீருமோ கெணத்த எட்டிப் பாத்துருமோன்னு கெதக்கலாருக்கு. பள்ளிக்கொடத்துக்குப் போனா பத்தரமா இருக்குமில்ல. நம்ம நிம்மதியா வேலையப் பாக்கலாமில்ல.''

''ஆமக்கா. அதுக எணலுவாட்டத்துல இருந்தா தெளுச்சியாவும் இருக்கும்.''

''அதும் சரிதான். அப்ப அனுப்பலாமிங்கயா.''

''அனுப்புறதுதான் நல்லது.''

''வெள்ளங்காட்டி அதுகளக் குளிக்கவச்சு தலையில எண்ண தேச்சுத் துணி மணி போட்டு அனுப்பணும். புது வேல. செலவு வேற.''

அம்மணமாகவும் இடுப்புத் துணியுடனும் திரிந்த பிள்ளைகள் சுத்தமாகி லட்சணமாகிப் பள்ளிக்கூடம் போவதைப் பார்த்துப் பெற்றவர்கள் சந்தோசப் பட்டார்கள். கொஞ்ச நாளில் பள்ளிக்கூடம் பாதிக்கு நிறைந்துவிட்டது.

நெருக்கடியான நேரத்தில் யாக்கோவு வாத்தியார் சம்சாரத்துடன் வந்து சேர்ந்தார். அவர்கள் கோயிலை ஒட்டி ஓட்டுச் சாய்ப்பு வீடெடுத்துத் தங்கிக் கொண்டார்கள். அவர் சம்சாரத்தின் பேர் அன்னபாக்கியம். எல்லாரிடமும் அன்பாகப் பழகுவாள். அவளை 'அம்மாவுக' என்றே சொல்வார்கள்.

வாத்தியாரே உபதேசியாராகவும் இருந்தார். ஞாயிற்றுக்கிழமைகளில் தவறாமல் செபக் கூட்டம் நடத்திப் பிரசங்கம் பண்ணுவார். முக்கியமான பண்டிகை நாட்களில் பங்குச் சாமியார் வருவார். அவர் வந்ததும் கேட்கும் முதல் கேள்வி எத்தனை குடும்பங்கள் வேதத்துக்கு மாறின என்பதுதான்.

பறைக் குடிக் குடும்பங்களின் எண்ணிக்கையைப் பார்க்கும்போது பள்ளிக் கூடத்தில் குழந்தைகளின் எண்ணிக்கை கம்மியாக இருந்தது. நிறைய குழந்தை களைச் சேர்த்து இன்னொரு வாத்தியாரைக் கொண்டுவரணுமென்று யாக்கோவு வாத்தியார் நினைத்தார். மேகலக் குடிக்காரர்கள் குழந்தைகளை அனுப்புவதாக இல்லை. கலிங்கலுக்குப் போய்ப் பேசினார்.

''அய்யா நான் ஒங்க நன்மைக்குத்தான் சொல்றென். கோவணத்தோட ஆடு மாடுகளுக்குப் பின்னால திரியிற பொழப்பு நம்ம தலமொறையோட போகட்டும். நம்ம கொழந்தைகள நாலெழுத்துப் படிக்க வச்சு கண்ணத் தெறந்துவப்பொம். தயங்க வேணாம்.''

''புள்ளீக அம்புட்டுத் தூரம் நடக்கணுமே.''

''காடுகரைக்குப் போறதில்லையா. அப்படி நெனச்சுக்கிற வேண்டியதுதான்.''

''மழதண்ணி நேரம் பெரியோடையக் கடக்கணுமே.''

''அந்தக் கவலைய வுடுங்க. நான் பாத்துக்கிறென்.''

இடையில் அங்கே வந்த ஒருவன் வாத்தியாரைப் பார்த்து வாயெல்லாம் பல்லாகச் சிரித்தான்.

''வாத்தியாரய்யா வாங்கவாங்க. எப்படியிருக்கீக. வீட்ல அம்மாவுக சவுரியமா.''

''ஆண்டவர் கிருபையால நல்லாருக்கொம்.''

''எங்க இம்புட்டுத் தூரம்.''

''பள்ளிக்கூடத்துக்குக் கொழந்தைகளக் கூப்பிடலாம்னு...''

வந்தவன் மற்றவர்களைப் பார்த்தான்.

''இதாரு தெரியுமில்லப்பா. இவுக வீட்டம்மாவும் எஞ் சம்சாரமும் சொந்தம். இவுக பூர்வீகம் மேற்க அச்சங்கொளம்.''

எல்லாரும் சந்தோசப்பட்டார்கள்.

''சரியாப் போச்சு. ஒண்ணுக்குள்ள ஒண்ணுதானா.''

''அடே நாளையிலருந்து ஒரு புள்ள பாக்கியில்லாம அனுப்பீருங்க.''

''நம்மதான் முட்டாக் கழுதைகளாக் கெடக்கொம். சின்னதுகளாச்சும் நாலெழுத்துப் படிக்கட்டும்.''

''வடக்கூருக்கு அனுப்பிவச்சு ரெண்டாக் கிழிஞ்சுபோச்சு. இதுல எத்தனையாக் கிழியப்போகுதோ.''

''இவன் ஆருப்பா. வடக்கூருக்கு இது கிட்டயில்ல. மலைக்காமப் போயி வரலாமில்ல.''

''அது சரிதான்.''

''நீங்க சந்தோசமாப் போங்க வாத்தியாரய்யா. ஏன் நம்மூருலயே குடும்பத்தோட தங்கிக்கிறலாமில்ல.''

அவர் சமாளித்தார்.

''அங்க கோயிலப் பாத்துக்கிறணும்.''

''ஆமாமா. நீங்க வேதக்காரராச்சே.''

பள்ளிக்கூடம் நிரம்பிவிட்டது. குழந்தைகளுக்கு வாத்தியார் ''ஆனா ஆவன்னா...'' என்று ராகம்போட்டுச் சொல்லித்தருவார். அதே ராகத்தைக் குழந்தைகளும் உச்சரிப்பார்கள். மணலைப் பரப்பி எழுதிப் புளியமுத்தை அடுக்கக் கற்றுக்கொடுப்பார். மதியச் சாப்பாட்டுக்குமுன் செபம் சொல்லணும்.

அன்னபாக்கியம் கலிங்கல் குழந்தைகளை அருகில் உட்கார வைத்துச் சாப்பிடச் செய்வாள். சிலருக்குத் தூக்குவாளியில் குழம்பு ஊற்றுவாள். சின்னஞ் சிறிசுகளுக்கு நெல்லுப் பொரியும் பொரிகடலையும் தருவாள். அவளுக்குச் சொந்தக் குழந்தை கிடையாது. ஆண்டவர் இன்னும் அந்தப் பாக்கியத்தைக் கொடுக்கவில்லை. பள்ளிக் குழந்தைகள் எல்லாருமே சொந்தந்தான்.

வேதப் பள்ளிக்கூடத்திலிருந்து வரும் பாட்டுச் சத்தம் மேகலக் குடிக்காரர் களை உசுப்பிவிட்டது. நாய்க்கர்கள் வைராக்கியத்துடன் ஓடியாடிப் பஞ்சாயத்து

யூனியனிலிருந்து தனியாகப் பள்ளிக்கூடத்தைக் கொண்டுவந்துவிட்டார்கள். பெரிய தெருவின் மேல்முனையில் அது ஆரம்பிக்கப்பட்டது. அது மேலப் பள்ளிக்கூடம். அதுக்கு ஒரு ரெட்டியார் வாத்தியாராக வந்தார்.

கொஞ்ச நாளில் அன்னபாக்கியம் நெஞ்சுவலியில் படுத்துவிட்டாள். பாளையங்கோட்டை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோக வேண்டிய நிலைமை. இடது மார்பில் கட்டி பெரிசாக வளர்ந்திருந்தது. அதோடு மார்பையும் சுத்தமாக எடுத்துவிட்டார்கள். அப்படியும் ஒப்பேறவில்லை. நோய் நெஞ்சுக்குள் பரவி ஆறே மாசத்தில் அவளைச் சுருட்டிவிட்டது. வேப்பங்காடு கல்லறைத் தோட்டந் தான் அவளுக்குக் கொடுத்துவைத்தது.

வாத்தியாருக்கோ கொஞ்ச வயசு. சாப்பாட்டுக்குத் திண்டாடினார். தனி யாகச் சமைத்துக் காலத்தைத் தள்ளினார். ரெம்ப நாள் தாக்குப்பிடிக்க முடிய வில்லை. சொந்த ஊர்ப் பக்கமிருந்து எஸ்தர் ரெண்டாம் தாரமாக வந்தாள். அவருக்கும் அவளுக்கும் வயசு வித்தியாசம் அதிகம். அன்னபாக்கியத்தைப் போல் அவளுக்குச் சனங்களுடன் அவ்வளவு நெருங்கிய பழக்கமில்லை. பெண்கள் தவுதாயப்பட்டார்கள்.

''பெரியம்மாவுக கொணம் சின்னவுகளுக்கு இல்லையே.''

''அவுக கொணம் ஆருக்குமே வராது.''

''அதும் பொய்யா.''

## 3. வாழப் பிறந்தவளே

பெத்தபோடு நாரணப்ப நாய்க்கர் வேப்பங்காட்டில் பெரிய சம்சாரி. அஞ்சேர் விவசாயம். ஏகப்பட்ட நிலம். வீட்டிலும் காட்டிலும் நிதமும் பத்துப் பேருக்கு மேல் வேலைசெய்வார்கள். இது போக வேலைக்குத் தக்க பெண்கள் வேறு. சாம்பாக்கமார் கோனார் செட்டியார் என்று சகல சாதிக்காரர்களும் உண்டு.

நாய்க்கர் நல்ல உயரம். அதுக்கேற்ப தாட்டிக்கமான உடம்பு. ஒருப் பூட்டாகப் பருத்து வளர்ந்த வேப்பந்தடி மாதிரி. சர்வசாதாரணமாக வேப்ப மரத்தில் எட்டிக் குச்சொடித்துப் பல்தீத்துவார்.

எதிலும் பெரும்போடு என்பதால் அவருக்கு பெத்தபோடு என்று பட்டப் பேர் வந்தது. அவருக்குச் சாப்பாடு போடும்போது சோற்றுப் பானை குழம்புச் சட்டியை முன்னால் வைத்துவிட்டு வெளியே போய்விடுவார்கள். பெரிய ஏப்பம் கேட்ட பிறகே உள்ளே வரணும். அவருக்கென்று தனியாக வைரம்பாய்ந்த பூசர மரத்தில் கட்டில் சேர்த்தார்கள். தொட்டிலாகிவிடும் கட்டில் கயிற்றை நிதமும் இறுக்கிக் கட்டணும். காடா வேட்டிதான் உடுத்துவார். மற்ற துணிகள் தாங்காது. துண்டுதான் கோவணம். சின்னத் துண்டு காணாது. முழக் கணக்கில் அரணாக் கயிறு வாங்கித் தண்டியாக உருட்டித் திரித்துக் கட்டுவார்.

கொஞ்ச வயசிலேயே கலியாணம் முடித்துக் குறையில்லாமல் வாழ்ந்தார். சம்சாரம் வெங்கிடம்மா நல்ல மனுசி. பிறந்த ஊர் சுப்பையாபுரம். இரக்கக்

குணம். கீழ்ச்சாதிக்காரர்களுடன் வாந்தக்கமாகப் பழகுவாள். அவர்களுக்கு ஆண்டாள் பெருமாள்சாமி என்று ரெண்டு பிள்ளைகள்.

வெங்கிடம்மா நாய்க்கருடன் பதினஞ்சு வருசந்தான் குடும்பம் நடத்தினாள். பிறகு மேலோகம் போய்விட்டாள். நாய்க்கர் நல்ல துணையை இழந்து பிள்ளைகளுடன் அல்லாடினார். குடும்ப வாழ்க்கை நினைவே அற்றுப்போய்விட்டது.

ஆண்டாளுக்கு அரியநாயகிபுரம் சீனி நாய்க்கரை மாப்பிள்ளையாக்கி வீட்டோடு வைத்துக்கொண்டார். சீனி நாய்க்கர் உழைப்பாளி. செத்த நேரம் சும்மா இருக்க மாட்டார். எல்லாப் பொறுப்பையும் அவரே அக்கறையுடன் கவனித்துக்கொண்டார். பெத்தபோடுக்கு பெரிய கவலை விட்டது. ஏனென்றால் பெருமாள்சாமிக்கு அவ்வளவு சாமர்த்தியம் கிடையாது. விளையாட்டுப் பிள்ளை.

ஆண்டாளுக்கு ரெண்டு பெண்கள். சீதாலட்சுமி விசயலட்சுமி. ஆண் வாரிசைப் பார்க்கக் கொடுத்துவைக்காமலேயே சீனி நாய்க்கர் போய்ச் சேர்ந்துவிட்டார். பெருமாள்சாமியிடம் அவ்வளவு பிரியமாக இருப்பார். மாமனாரிடம் அடிக்கடி யோசனை கேட்பதும் வேலையாட்களைத் தட்டிக்கொடுத்து வேலை வாங்குவதும் கிண்டல் பேசிப் பெண்களைச் சிரிக்க வைப்பதும் ஆண்டாளிடம் பிரியத்தைக் கொட்டுவதும்... அவர் இல்லாதது பெரிய வேதனை. ஒரு நாள்கூடப் பிள்ளைகளைப் பார்க்காமல் இருக்க மாட்டார். ஆண்டாள் அவரை ரெம்ப மரியாதையுடன் நடத்தினாள். அவள் வெள்ளைச் சீலைக்குள் சுருங்கிவிட்டதைப் பார்த்து பெத்தபோடு கலங்கினார்.

பெருமாள்சாமியை நம்பி குடும்பத்தைக் கொண்டுசெலுத்த முடியாது. அதுக்கொரு பொறுப்பான ஆள் வேணும். கிட்ட இருந்து மேல்பார்க்கணும். பலத்த யோசனைக்குப் பிறகு குமாரபுரத்திலிருந்து ஆழ்வார்சாமியைக் கொண்டுவந்தார். ஆழ்வார்சாமி கலியாணமாகாதவர். கொஞ்சம் முற்றின வயசு. அவருக்கு மருமகன் முறை. அல்லுண்டு என்று பிரியமாகக் கூப்பிடுவார். அந்த வார்த்தையே ஊருக்குள் பேராகத் துலங்கியது. ஆழ்வார்சாமி தொலைந்துபோனார்.

அல்லுண்டுக்குச் சாப்பாடு தங்கல் எல்லாமே பெத்தபோடு வீட்டில்தான். ஆண்டாளுக்கும் குழந்தைகளுக்கும் அரவணைப்பான துணை கிடைத்தது. மகளின் முகத்தில் புதுக் களை பூத்திருப்பதைப் பார்த்து பெத்தபோடுக்குச் சந்தோசம்.

தோட்டத்தில் பெண்கள் வேலை செய்யும்போதெல்லாம் ஆண்டாள் போய்விடுவாள். பெரும்பாலும் பறைக் குடிப் பெண்களே வருவார்கள். சிலர் கலிங்கலிலிருந்தும் வருவதுண்டு. தோட்டத்தில் நெத்திலி வேலம்மா இருந்தாகணும். போவதே அவளுடன் பேச்சுப் போடத்தான். ரெண்டு பேருக்கும் நல்ல பழக்கம். வேலம்மா செய்ய வேண்டிய முக்கியமான வேலை பொழுதடையும்வரை கூடவே இருக்கணும். தோட்டத்தில் இறங்கி வேலையைத் தொட்டதும் ஆண்டாளின் குரல் வரும்.

''அடியே வேலி நீ வேல வெட்டிமுறிச்சது போதும். இங்க கொஞ்சம் வந்துட்டுப் போ.''

மற்ற பெண்கள் வழியனுப்புவார்கள்.

''போ தாயி. உத்தரவு வந்துருச்சு.''

‘‘கையோட சோத்துக் கலயத்தவும் கொண்டுபோயிரு. பெறகு அதுக்காக மெனக்கிட்டு அலையணும்.’’

‘‘ஆமாமா வந்து போற நேரத்துல பேச்சு கொற கெடந்துபோகுமே. வாய்க் காத் தண்ணி எடவத்திப் போனாச் சங்கடமாச்சே.’’

‘‘கஞ்சி தண்ணிய மறந்து அப்படி என்னதான் பேசுவாகளோ.’’

‘‘ஆம தாயி. அண்ணைக்குச் சாய்ந்தரம் அந்தப் பக்கம் போறென். அப்பத் தான் மதியக் கஞ்சி குடிச்சிட்ருக்காக.’’

‘‘அம்புட்டுச் சங்கதி இருக்கப் போயித்தான பேசுறாக. ஒனக்கேன் வலிக்குது. நீயும் போறயா. வேலையைப் பாத்தமா கூலி வாங்குனமான்னு இல்லாம வெட் டியாப் பேசிக்கிட்டு.’’

வேலம்மா போகிற போக்கில் சொலவடையால் சுட்டுக்கொண்டு போவாள்.

‘‘பூ விரிஞ்சு கெட்டதாம் வாயி இளிஞ்சு கெட்டதாம். மணலுச் சோத்துல கல்லத் தேடுற மகராசிக்கு எணலுக் கேக்குதாக்கும் எணலு. வீட்ல உக்காந்து வாயி வலிக்க ஊருப் பொறணி பேச வேண்டியதுதான.’’

ஆண்டாளும் அவளும் கிடைத்த நிழலில் உட்கார்ந்துகொள்வார்கள். ஆண்டாள் மனசிலிருப்பதையெல்லாம் கொட்டித் தீர்ப்பாள்.

‘‘வேலி எனக்கு ஒன்ன வுட்டா வேற ஆருருக்காக சொல்லு. என் வேதனைய பெத்த புள்ளைககிட்டச் சொல்ல முடியுமா இல்ல மத்த பொம்பளைககிட்டத் தான் சொல்ல முடியுமா. வெதவெதமாத் தங்க நக வாங்கிக்குடுங்கன்னு தகப்பங் கிட்டக் கேக்கிற சங்கதியா இது. அவுக அட்டியலு அட்டியலா வாங்கிக்குடுத்த நகைய அடுக்கி வச்சிருக்கென். ஆனா மனசில நிம்மதியில்லையேடி.’’

‘‘நகைய மக்களுக்குப் போட்டு அழகுபாக்கிறதுல நிம்மதியத் தேடிக்கிற வேண்டியதுதான் தாயி.’’

‘‘முடியலயே. எண்ணைக்கிருந்தாலும் பொண்ணுக அடுத்த வீட்டுக்குப் போறதுக. அய்யா எத்தன நாளைக்கு ஆதரவா இருப்பாரு. எனக்குன்னு ஒரு ஆம் பளப் புள்ள இருந்தாக் கவலப்பட மாட்டென்.’’

‘‘அதுக்குக் குடுத்துவைக்கலயே.’’

‘‘அந்த மனுசன் ஒரு ஆம்பளப் புள்ளையக் குடுத்துட்டுப் போயிருக்கப் புடாதா. அனாதையா நிக்கனே.’’

ஆண்டாளுக்குள் அழுகை பொங்கும்.

‘‘மலைக்காதங்க தாயி. ஒண்ணும் ஆகாது. நல்ல மருமக்கமாரு கெடைப்பாக.’’

‘‘ஒன்னப் போல ஒரு சாதியில பெறந்திருந்தா இந்த வேதனையெதுக்கு. ஊரறிய இனியொரு மனுசனத் தொண தேடிக்கிட்டு ஒரு ஆம்பளப் புள்ளையப் பெத்துக்கிட்டு நிம்மதியாருக்கலாமே. ஒருத்தருட்ட ஏச்சும் பேச்சும் கேக்க வேணாமே. அந்தக் காலத்தப் போல நெருப்புல பாஞ்சு புருசனோடயே போயிச் சேந்திருந்தா இந்த ரெண்டுங்கெட்டான் பெழப்பெதுக்கு.’’

‘‘அப்படியெல்லாம் நெனைக்கப்புடாது தாயி.’’

‘‘பாழாப்போன ஒடம்பு பாடாப் படுத்துதேடி.’’

அழுது ஓய்ந்து முடக்கிப் படுத்துவிடுவாள் அசந்து உறங்கும்வரை வேலம்மா உறக்காட்டணும்.

''சாலை வழியொறங்கும் - எங் கண்ணே
சமுத்தரத்து மீனொறங்கும்
சோலைக் கிளியொறங்கும் - எங் கண்ணே
சுந்தரக் குஞ்சொறங்கும்
நண்டு கண்ணொறங்கும் - எங் கண்ணே
நடுக்களத்து நெல்லொறங்கும்
வண்டு கண்ணொறங்கும் - எங் கண்ணே
மல்லிகையும் சேந்தொறங்கும்
ஆல மரமொறங்கும் - எங் கண்ணே
அதுமேல அணிலொறங்கும்
கோல மயிலொறங்கும் - எங் கண்ணே
கூவாத குயிலொறங்கும்
பாலு பழமொறங்கும் - எங் கண்ணே
பாதிநெலா தானொறங்கும்
வாழப் பெறந்தவளே - எங் கண்ணே
வளர்பெறையே கண்ணொறங்கு.''

அவளுக்கும் கண் சொருகும். அடுத்த பாத்தியில் படுத்துவிடுவாள்.

மதியத்துக்கு மேல் எழுந்து சாப்பிடுவார்கள். ஆண்டாள் தயக்கத்தில் முனங்குவாள்.

''சத்தரப்பட்டிக்குப் போகணுமே.''

வேலம்மா பரிதாபமாகக் கேட்பாள்.

''எத்தன நாளாச்சு.''

''ஆரு கணக்கு வச்சிருக்கிறது. பிரியமா வளத்துப் பெத்தெடுத்துக் கொஞ்சவா போறொம். குப்பைக்குள்ள மக்கப்போறதுக்கு கணக்கென்ன கணக்கு.''

''மூணு மாசமிருக்குமா.''

''அதுக்கு மேலதான் இருக்கும்.''

வேலம்மா சத்திரப்பட்டியிலிருந்து மருத்துவச்சியைக் கூட்டிவருவாள். அவள் ஆண்டாளுக்கு மருந்து கொடுக்கும் சாக்கில் காரியத்தை முடித்துவிடுவாள். ஆண்டாள் நாலஞ்சு நாள் ஒடிந்துபோய் படுத்துக்கிடப்பாள்.

வயிறு வலியில் குமுறும். சத்தம்போட்டுச் சொல்ல முடியாது. பிள்ளைகளைக் கிட்ட வர விட மாட்டாள். அவர்களும் இது வழக்கமான வலிதானென்று நினைத்துக்கொள்வார்கள். அல்லுண்டு அருகிலிருந்து கவனித்துக்கொள்வார்.

வலி வயிற்றைப் புரட்டியெடுத்துக் காய் தரையில் விழுந்த பிறகுதான் போன உயிர் திரும்பிவரும். பொழுது இருட்டிய பிறகு அல்லுண்டு கூடையில் சாணி சகதியுடன் அந்தக் கழிவுகளையும் அள்ளிக் கொண்டுபோய் யாரும் பார்த்துவிடாமல் குப்பையில் ஆழத் தோண்டிப் புதைத்துவிடுவார். மனசு லேசாக இருக்கும். புதைத்ததை நாய் வெளியே கொண்டுவந்துவிடாதபடிக்கு ரெண்டு மூணுநாள் குப்பைப் பக்கம் நடமாடுவார்.

ஆண்டாள் தலைக்குக் குளித்து சாப்பிட்டுத் தெம்பாகி விரைவிலேயே நடமாட ஆரம்பித்துவிடுவாள். அவளைத் தோட்டத்தில் சந்திக்கும்வரை வேலம் மாளுக்கு நிம்மதியிருக்காது. ஆவலாகக் கேட்பாள்.

''தொக்கமில்லாமச் சுத்தமாக் கழிஞ்சிருச்சா தாயி. இத்தினி தங்கிக்கிட் டாலும் சள்ள.''

‘‘அப்படி உசிரு போனாப் போகுது.’’

‘‘ஒங்களுக்கு வேறென்ன கொறச்சலு தாயி.’’

‘‘இதக்காட்டி வேறென்ன வேணும். புள்ளைகளுக்காகத்தான் இருக்கென். இல்லன்னா எப்பயோ ஒரு முடிவத் தேடிக்கிட்ருப்பென்.’’

‘‘புள்ளீகதான் இனிமே எல்லாம்.’’

இருவரும் கண்கலங்குவார்கள். இப்படி எத்தனை முறை நடந்திருக்கிற தென்று நினைவில்லை. ஒருவேளை அல்லுண்டு கணக்கு வைத்திருந்தால் உண்டு.

வெளியூர்களிலிருந்து தாயாதிக்காரரர்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் ஆண்டாளிடம் விசாரிக்க மறப்பதில்லை.

‘‘ஏமி ஆண்டாளு பாகவுஞ்சாம்மா.’’

அவளும் சாதாரணமாகச் சொல்வாள்.

‘‘அவ்வுண்ணா.’’

விருந்தாளிகள் சாப்பிட்டு முடித்து வெளித் திருணையில் சாவகாசமாக உட்கார்ந்து வெற்றிலை மடித்துக்கொண்டே பெத்தபோடுடன் பல சங்கதி களைப் பேசுவார்கள். பெத்தபோடு விசாரப்படுவார்.

‘‘வெயிலடிக்கிற கோப்பப் பாத்தா இந்த வருசமும் மழதண்ணியில்லாமப் போட்டு மலத்தீரும் போலருக்கு.’’

‘‘வெள்ளாம இப்பயே அரண்டு மொகம் வாடிப்போயி நிக்கிது. கெணத்த ரெண்டு கெசம் எறக்குனாத்தான் போட்ட வெள்ளாமைய எடுக்க முடியும்.’’

‘‘செலவப் பாக்காம அதச் செய்யிங்க.’’

‘‘ரெம்ப நாளா ஒரு குறுக்கம் பாந்தரிசாக் கெடக்குது. அதத் திருத்திப் பயிர் செய்யணும். அப்பத்தான் கட்டுபடியாகும்.’’

‘‘அப்படியே வுட்டுட்டா கரடுபத்தி ஒண்ணுக்கும் வெளங்காமப்போயிருமே. அததக் காலாகாலத்துல கைபாத்துறணும்.’’

‘‘ஆமாமா.’’

வந்தவர்கள் சுண்ணாம்புக் கறையைத் தூணில் தடவிய கையோடு அவளிடம் ஒரு செம்பு தண்ணீர் வாங்கிக் குடித்துவிட்டுச் சொல்லிக்கொண்டு போவார்கள்.

‘‘போயிட்டு வாறம்மா.’’

‘‘சரிண்ணா.’’

## 4. உப்புச் சக்கரை

தாயாரம்மா புருசன் முகம் பார்த்து நாளாயிற்று. தவிப்பும் வேதனையும் வெறுப்பாகி அவளுக்குள் தகித்தது. சங்கரம்மாளுக்குப் பெருமை பேசவே நேரம் காணவில்லை. பிறகெங்கே அவளைக் கவனிப்பது. வடிவின் வாஞ்சையான வார்த்தைகளால் அவளைக் காப்பாற்ற முடியவில்லை. விரைவிலேயே கோவமும் கொதிப்பும் அடங்கி நிரந்தரமாகக் குளிர்ந்துபோனாள்.

கௌரவத்துக்காக சக்கரை நாடார் அவளைத் தடபுடலாக எடுத்து அடக்கம் செய்தார். தனலட்சுமி கண்ணில் ஒரு சொட்டுக்கூடப் பிதுங்கவில்லை. தாயா

ரம்மாளின் தம்பி தங்கவேல் சக்கரை நாடாரின் முகத்தில் காறித் துப்பாதது தான் குறை.

''ஒங்களுக்கு இப்பச் சந்தோசந்தானா. நல்லாருங்க.''

அழுதுகொண்டே போய்விட்டான். வடிவும் சந்தன நாடாரும் எவ்வளவோ வற்புறுத்தியும் அவன் கை நனைக்கவில்லை.

கலிங்கலில் சக்கரை நாடாரின் கார வீடு வெறிச்சோடிவிட்டது. ராத்திரி வேளை சங்கரம்மா பயந்துபயந்து விளக்கேற்றினாள். தாயாரம்மாளின் குரல் கேட்பதுபோல் இருக்கும்.

''வெளங்குவீகளா தொலங்குவீகளா...''

தனலட்சுமியைக்கூட பயம் தொற்றிக்கொண்டது. ஜோசியரின் வார்த்தைகள் அடிக்கடி நினைவிலாடின. பிள்ளைகளைக் காலாகாலத்தில் நல்ல இடம் பார்த்துக் கரையேற்றிவிடணும். வியாபாரம் நல்ல முறையில் ஓடணும்.

மங்காபுரியில் பாலையா திடீரென இறந்துவிட்டான். மூச்சுக்குத்தில் சுருண்டவன் எழுந்திருக்கவில்லை. சண்முகத்தாய் குழந்தைகளை வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டாள். கற்பகமும் செல்வமணியும் சமைந்த குமருகள். பூமாரி உட்கார வேண்டியவள். தங்கமாரியப்பன் திடமாக வளர்ந்திருந்தான். அங்கு மிங்குமாக அருப்பம் துளிர்விட்டு குரலில் கரகரப்பேறியிருந்தது.

சண்முகத்தாய்க்குப் மங்காபுரியில் இருக்கச் சரிப்படவில்லை. கலிங் கலுக்குப் போனால் ஆத்தாளுக்குச் சுமை. சங்கரம்மாளுக்கும் அவளுக்கும் ஒத்து வராது. தனலட்சுமி வேறு எளக்காரமாகப் பேசுவாள். தைரியமாகக் குழந்தை களைக் கூட்டிக்கொண்டு முத்துநகரில் ஒதுங்கலான இடத்தில் வாடகைக்கு வீடு பார்த்துக் குடியேறினாள். எல்லாரும் வேலைசெய்தார்கள். பெண்கள் தீப்பெட்டி யாபீசுக்குப் போனார்கள். பையனும் அவளும் வீட்டிலிருந்து தீப்பெட்டி ஒட்டி னார்கள். கைக்கு மெய்க்குக் காசு நடமாடி சிலாக்கியமாக இருந்தது.

எப்போதாவது அவள் மார்க்கெட்டுக்குப் போகும் சமயங்களில் அண்ணனைக் கடையில் பார்த்துப் பேசினால் உண்டு. மற்றபடி வீட்டுக்குப் போவதில்லை. போனால் தனலட்சுமி மதிக்க மாட்டாள். அவளது சொத்துக்களை அள்ளிப்போக வந்திருப்பதுபோல் பேசுவாள். புருசன் பெண்டாட்டிக்குள் புழுக்கம் வந்துவிடக் கூடாது. அவர்கள் நன்றாக இருந்தால் சரி.

தனலட்சுமியின் குழந்தைகளும் திரண்டு பெரியவர்களாகிவிட்டார்கள். மூத்தவன் சுகுமாருக்கு முந்தி தங்கச்சி காளீஸ்வரிக்கு நல்ல இடம் வந்தது. சுக்காம்பாறை செயக்குமாருக்குக் கொடுத்தார்கள். வசதியான குடும்பம். தீப்பெட்டியாபீஸ் வேட்டாபீஸ் என்று வளமான தொழில்.

சுகுமாருக்கு சண்முகத்தாயின் மகள் கற்பகத்தை முடித்தால் உறவு சரியாகி குடும்பங்கள் நிரப்புக் கலப்பாக இருக்கலாமே என்று எல்லாருக்கும் உள்ளுக்குள் ஆசை இருந்தது. தனலட்சுமி அதை அவித்துவிட்டாள். கொளத்தூரில் பணக் காரக் குடும்பத்திலிருந்து விஜயாவைக் கொண்டுவந்து இறக்கினாள்.

சுகுமார் மார்க்கெட் கடையில் சின்ன முதலாளியாக உட்கார ஆரம்பித்தான். சக்கரை நாடாருக்கு அங்கங்கே போய் வியாபாரம் பேசிமுடிக்க நேரம் கிடைத்தது. மாசம் ஒரு முறையாவது கலிங்கலுக்கு வந்து போவார். வேலையா நாடாருக்கும் பத்திரகாளிக்கும் அதிலொரு ஆறுதல்.

கடைசிப் பெண் மாரீஸ்வரியை வெளியே கொடுக்க தனலட்சுமிக்கு மன சில்லை. அண்ணன் மகன் சுயம்புலிங்கத்துக்குக் கொடுத்து உறவை இறுக்கிக் கொண்டாள்.

செல்லக்கனி குடும்பத்தில் செந்திவேலும் காளியப்பனும் எளவட்டமாகி விட்டார்கள். சொர்ணமும் அடுத்த வீடு போகத் தயாராக இருந்தாள். அவளை வெத்தலப்பட்டி ராசபாண்டிக்குக் கொடுத்தார்கள். சங்கரம்மா அவர்களை கலிங்கலிலேயே சக்கரை நாடார் வீட்டில் குடிவைத்துவிட்டாள். ராசபாண்டி மாமனுக்குத் துணையாக பண்ணையைக் கவனித்துக்கொண்டான்.

செந்திவேலுக்காவது சண்முகத்தாய் குடும்பத்தில் சம்பந்தம் பண்ணலாமே என்று எதிர்பார்த்தார்கள். செல்வமணி தயாராகத்தான் இருந்தாள். அதுக்கும் தன லட்சுமி ஒக்கிடவிடவில்லை. அண்ணன் மகள் பூரணத்தின் கழுத்தில் முடிச்சுப் போட வைத்து முத்துநகரிலேயே தங்க ஏற்பாடு செய்துவிட்டாள். செந்திவேல் சுகுமாருக்குத் துணையாகக் கடையில் நின்றான்.

இந்தச் சம்பந்தம் காளியப்பனுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. ஆத்தா அய்யா மேல் ஒரு வெறுப்பு. பெரியம்மா குடும்பத்தில் நுழைந்ததால்தானே அண்ணனுக்கு இந்தக் கவனிப்பு. அத்தை என்ன பாவம் செய்தாள். எல்லாரும் அவளை ஒதுக்கிவிட்டார்களே.

அவன் முத்துநகருக்குப் போனால் தனலட்சுமியின் வீட்டுக்குப் போக மாட்டான். மார்க்கெட்டில் கடைப் பக்கமும் எட்டிப் பார்ப்பதில்லை. அப்படியே போனாலும் சக்கரை நாடாருடன் அதிகம் பேசுவதில்லை. செந்திவேல் சில விசயங்களை விசாரிப்பான். அவனும் ஒப்புக்கு ரெண்டு வார்த்தை பேசுவான். கொஞ்ச நேரம் அமைதியாக இருந்துவிட்டுக் கிளம்புவான்.

''வீட்ல வேல கெடக்குது. போறென்.''

சக்கரை நாடார் சொல்வார்.

''நம்ம வீட்ல சாப்புட்டுட்டுப் போ.''

''வேணாம். சோம்பிப்போகும்.''

அவர் காசு கொடுப்பார்.

''இந்தா கடையில சாப்புட்டுக்கோ.''

''அத்த வீட்ல சாப்புட்டுட்டுத்தான் வாறென்.''

''சாப்புடுறதுக்கு அவ்வளவு தூரம் போகணுமாக்கும்.''

''நீங்க அந்தப் பக்கமே எட்டிப் பாக்காறதால தூரமாத் தெரியிது.''

அவர் வாயடைத்துப்போவார். செந்திவேல் தம்பியின் முகத்தைப் பார்க்கத் துணிவில்லாமல் தலைகவுந்துகொள்வான்.

சண்முகத்தாயின் பெண்கள் இருவர் அவரவர் பாட்டுக்குத் துணை தேடிக் கொண்டார்கள். கற்பகம் தீப்பெட்டியாபீசில் பாலகிருஷ்ணனுடன் பழகிக் கலி யாணம் முடித்துத் தனியாகக் குடும்பம் நடத்தினாள். பிள்ளைமார் பையன். செல்வமணி கதையும் அப்படித்தான். பொன்னுப்பாண்டிக்குத் துணையாகி விட்டாள். அவன் தேவமார் சாதி.

சண்முகத்தாய்க்குப் பெரிய வருத்தமெல்லாம் கிடையாது. சந்தோசமாக அவர்களைப் பக்கத்திலேயே குடியமர்த்திவைத்தாள். அவளுக்குப் பெரிய பாரம்

குறைந்த நிம்மதி. இனி பூமாரியும் தங்கமாரியப்பனுந்தான் பாக்கி. அவர்கள் நிலைமை எப்படியெப்படியோ. நடக்கிறபடி நடக்கட்டும்.

இதுக்கு மேலும் உயிர் வைத்திருக்கக் கூடாதென்று வேலையா நாடார் பத்திரகாளியைப் பிரிந்து போய்விட்டார். காரியம் முடியும்வரை சச்சரவில்லாமல் பார்த்துக்கொண்டார் சந்தன நாடார். இப்போது பத்திரகாளிக்கு வடிவுதான் எல்லாம். தன் ஓலையையும் விரைவில் கிழிக்கச் சொல்லி அவள் தெய்வத்தை வேண்டாத நாளில்லை.

கடையில் பணப்புழக்கம் கூடக்கூட சுகுமாரின் குணம் ரெம்ப மாறிவிட்டது. பொறுப்பில்லாமல் திரிய ஆரம்பித்தான். முன்னைப் போல் கடையில் அக்கறையுடன் உட்கார்ந்து வியாபாரத்தைக் கவனிப்பதில்லை. அக்கறையெல்லாம் கல்லாப்பெட்டி கணிசமாக நிறையும்வரைதான். சேர்ந்ததை அள்ளிச் சட்டைப் பையில் திணித்துக்கொண்டு கிளம்பிவிடுவான். எப்போது வீடு திரும்புவான் என்று சொல்ல முடியாது. குடித்துக் கும்மாளமிட்டுச் சீட்டாடி அவ்வளவு பணத்தையும் தொலைத்துவிட்டு ஓட்டாண்டியாக வருவான். செந்திவேல் பொறுமையாகக் கடையில் உட்கார்ந்திருந்து பூட்டிவிட்டுப் போவான்.

மூணு குழந்தைகளுக்குத் தகப்பனான பிறகும் சுகுமார் சல்லித்தனத்தை விடவில்லை. திருவிழாவுக்கு நாடகம் போட வரும் நடிகைகளுக்குப் பின்னால் சுற்றுவான். திடீரென்று பட்டணத்துக்குப் போய் சினிமா நடிகைகளுக்குப் பணத்தைக் கொட்டிக் காத்துக்கிடப்பான். தகப்பன் சொல்லைக் கேட்பதில்லை. தாய் தட்டிச்சொல்வதில்லை. அவனுக்கும் விஜயாவுக்கும் சண்டை வலுத்து கைகலப்புவரை போய்விட்டது. விஜயா பல தடவை கோவித்துக்கொண்டு பிறந்த வீட்டுக்குப் போனாள். தனலட்சுமிதான் போய்ச் சமாதானப்படுத்திக் கூட்டி வரணும்.

மன உளைச்சலிலேயே தனலட்சுமிக்கு ரத்தக்கொதிப்பும் சக்கரை நோயும் வந்துவிட்டது. எந்நேரமும் படுத்துக் கிடக்கணும்போல் அப்படியொரு அசதி. சுகுமாரின் கடைசிப் பையன் துரைப்பாண்டி அவளுக்கு உதவியாக இருந்தான். பள்ளிக்கூட நேரம் தவிர மற்ற நேரமெல்லாம் பாட்டியுடனேயே இருப்பான். அவள் பேரனிடம் வெளிறிய சிரிப்பில் சொல்வாள்.

''சக்கர நாடாரு பொண்டாட்டிக்குச் சக்கர நோயி வந்துருச்சு.''

மகனின் போக்கையறிந்த சக்கரை நாடார் மறுபடியும் கடையில் உட்கார ஆரம்பித்தார். இது மகனுக்குப் பிடிக்கவில்லை. கல்லாப் பணம் கைக்கு வராதே. அவன் கல்லாவுக்குள் கை விட அவர் தடுக்க கடையிலேயே தகராறு வந்துவிட்டது. அவன் தகப்பனின் பிடரியைப் பிடித்துத் தள்ளி விரட்டினான்.

''கெழட்டு நாயி. வீட்டக் காத்துக்கிட்டுக் கெடக்காம இங்க வந்து லொள்ளு லொள்ளுன்னு கொலைக்கிறது. இனிமே இந்தப் பக்கம் பாத்தென் அம்புட்டுத்தான். அடிச்செடுத்துச் சாக்கடையில போட்ருவென்.''

இதை செந்திவேல் மூலம் கேள்விப்பட்ட தனலட்சுமி மனசு ரெம்ப உடைந்து படுத்துவிட்டாள். ஒருநாள் சாமத்துக்கெல்லாம் ரத்தக் கொதிப்பு அதிகமாகி மூச்சு நின்றுபோனது. அவளைக் கலிங்கலுக்குக் கொண்டுபோய் அடக்கம்செய்தார்கள். சங்கரம்மாளைவிட வடிவும் பத்திரகாளியும் நிறைய அழுதார்கள்.

## 5. வேதப் பள்ளிக்கூடம்

வேப்பங்காடு வேதப் பள்ளிக்கூடத்தில் குழந்தைகளின் எண்ணிக்கை அதிக மாகிவிட்டது. ரெண்டு பேர் அவர்களைச் சமாளிக்கக் கஷ்டமாக இருந்தது. மூணாவது ஒருவர் தேவையென்று யாக்கோவு வாத்தியார் மேலாவுக்கு எழுதி உத்தரவு வாங்கிவிட்டார்.

அந்த இடத்துக்கு சூசைமாணிக்கம் வந்தார். கலியாணமாகாத வாலிபர். நாடார் சாதி. தோட்டக்குடிப் பக்கம் ஊர். வீட்டில் மற்ற எல்லாரும் இந்துக்காரர் கள். படிப்புக்காக அவர் மட்டும் வேதக்காரரானார். அவர் வேப்பங்காட்டில் தங்குவதில்லை. நிதமும் முத்துநகரிலிருந்து வந்து போனார்.

சில சமயம் யாக்கோவு வாத்தியார் ஊழியத்துக்காகத் தனியே வெளியூர் களுக்குப் போய்விடுவார். திரும்பிவர ஒண்ணு ரெண்டு நாள்கூட ஆகும். அந்த நேரம் சூசைமாணிக்கமும் எஸ்தரும் பள்ளிக்கூடத்தைக் கவனித்துக்கொள் வார்கள். அவர் செபக் கூட்டம் நடத்திப் பிரசங்கம் பண்ணுவார். ராத்திரி நேர மாகிவிடும். ஒரு மைல் வெருக்வெருக்கென்று நடந்து முத்துநகர் பஸ்ஸைப் பிடிக்கணும். அது சிரமம். கோயிலில் தங்கிக்கொள்வார். எஸ்தர் சாப்பாடு கொண்டு வந்து கொடுப்பாள். அவரே போய்ச் சாப்பிடுவதும் உண்டு.

ஒரு தடவை யாக்கோவு வாத்தியார் ஊழியம் முடித்துக் காலையில் ஊர் திரும்பும்போது கோயிலும் வீடும் பூட்டியிருந்தன. அன்றைக்குப் பள்ளிக்கூட நாள். பள்ளிக்குழந்தைகள் கோயிலுக்கு முன்னால் விளையாடிக்கொண்டிருந் தார்கள். அவரைப் பார்த்ததும் ''பெரிய வாத்தியாரு வந்தாச்சு'' என்று ஓடி வந்து அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர் கையால் அமைதிப்படுத்தினார்.

''என்னாச்சு.''

''டீச்சரக் காணும் சார்.''

''சின்ன வாத்தியாரும் வரல சார்.''

அவர் பதட்டப்படவில்லை.

''அப்படியா. கொஞ்ச நேரத்துல வந்துருவாங்க. எல்லாரும் வாங்க.''

அவர் பள்ளிக்கூடத்தைத் திறந்து பிள்ளைகளை உட்கார வைத்து எழுதவும் படிக்கவும் பாடம் கொடுத்துவிட்டு வீட்டுக்குப் போனார். கைவசம் எப்போதும் ஒரு சாவி இருக்கும். அவருக்கு யோசனை. ஒருவேளை எஸ்தர் உடம்புக்கு முடியாமல் ஊருக்குப் போயிருப்பாளோ. அப்படியானாலும் சூசைமாணிக்கம் வந்திருக்கணுமே. அவருக்கு என்னாயிற்று. சொல்லாமல் கொள்ளாமல் கோயிலைப் பூட்டிவிட்டுப் போவது நல்லதில்லையே.

ஒரு வாரமாகியும் அவர்கள் வரவில்லை. எஸ்தர் ஊரில் இல்லையென்று தகவல் வந்தது. அவர் தனியாகச் சமைத்துக்கொண்டு பள்ளிக்கூடத்தை நடத்தி வந்தார்.

சூசைமாணிக்கமும் எஸ்தரும் ஓடிப்போன சங்கதி பிறகுதான் தெரிய வந்தது. அவர்கள் கிழக்குச் சீமையில் மாவலிப்பட்டியில் குடியிருப்பதாகச் சொன்னார்கள். யாக்கோவு வாத்தியார் அந்த வருத்தத்தைச் சந்தோசமாக விழுங்கிக்கொண்டார். வழக்கம்போல் வேலைகளைக் கவனித்தார்.

உள்ளூர்ச் சனங்கள் அவர் மனசு வேதனைப்படும்படி எதையும் கேட்டுக் கொள்வதில்லை. தங்களுக்குள் முணுமுணுப்பதுடன் சரி.

இதைப் பற்றிக் கலிங்கலில் ஆணும் பெண்ணும் சூடாகப் பேசிக்கொண் டார்கள்.

''அஞ்ஞாடி இதென்ன கூத்தும்மா. காத்திருந்தவன் பொண்டாட்டிய நேத்து வந்தவன் கூட்டீட்டுப்போன கதையால்லருக்கு.''

''கூட்டீட்டு ஓடுனது நாடாக்கமாராமில்ல. அக்குறும்பப் பாரு.''

''நம்ம கழுதைக்கு அறிவெங்க போச்சு.''

''ரெண்டும் பொருந்திக்கிருச்சுன்னா அறிவாவது ஒண்ணாவது. நம்ம வாத்தியாரு வயசென்ன இவ வயசென்ன. வயசாளியோட எப்படிச் சந்தோச மாக் குடும்பம் நடத்த முடியும் சொல்லு.''

''அது அவருக்குப் பின்னால வாறதுக்கு முந்தியில்ல தெரிஞ்சிருக்கணும்.''

''தண்ணி வென்னி வச்சுக்குடுக்கிறதுக்கு ஆளு வேணும்னா ஒரு கெழடு கட்டையக் கூட்டீட்டு வந்துருக்க வேண்டியதுதான. கொமரிப் பொண்ணு கேக்குதாக்கும்.''

''கேவலப்படுத்தீட்டாகளே.''

ஒருநாள் கலிங்கலிலிருந்து ரெண்டு எளவட்டங்கள் வேப்பங்காட்டுக்குப் போய் வாத்தியாரிடம் அருமுறுக்கினார்கள்.

''வாத்தியாரய்யா ஒரு வார்த்த சொல்லுங்க. அவுக ரெண்டு பேரவும் கொண்டுவந்து நிறுத்துறொம்.''

அவர் இரு கை கூப்பினார்.

''ரெண்டுபேரும் கர்த்தர் கிருபையால நல்லாருக்கணும்.''

அவர்கள் கலிங்கலுக்குத் திரும்பிச் சந்தன நாடாரை மிரட்டினார்கள்.

''ஒங்க நாடாரு வாத்தியாரு செஞ்சிருக்கிற அக்கிரமத்தக் கேட்டீகளா. எங்க வாத்தியாரு பொண்டாட்டியக் கூட்டீட்டுப் போயிட்டாரு. கொழுப்புத்தான. நம்ம இப்பயே போட்டுப் பாத்துருவமா.''

நாடார் அவர்களின் கோவத்தை ஆற்றினார்.

''நொண்டி மாட்டோட சண்ட போட்டும் பாக்கப்போறயாக்கும். ஒனக்கே நல்லாருக்கா. அந்த வாத்தியாரு நாடாருன்னு நீ சொல்லித்தான்யா தெரியும். எங்கயோ எவனோ எடுக்காற எடுப்பு எடுத்துக்கிட்டான்னா நாங்க என்ன செய் யட்டும் சொல்லுய்யா. நம்ம எண்ணைக்கும் தாயாப் புள்ளையா இருக்கொம். அதக் கெடுத்துக்கிற வேணாம்யா.''

''அவரு கையில கெடச்சால்ல இருக்கு சங்கதி.''

கறுவிக்கொண்டு போய்விட்டார்கள்.

யாக்கோவு வாத்தியார் மனசு உடையவில்லை. சமாதானம் தேடிக்கொண்டார்.

'அவளுக்கு ஒடம்பு பெரிசாப் போச்சு. நான் தேடிக்கிட்ட தொண வேற. அவ தேடிக்கிட்டது வேற. கர்த்தர் அவங்கள ஆசீர்வதிக்கட்டும். அவளுக்கும்

கொழந்த வேணுமில்லையா. ஆண்டவரத் துதிக்கச் சந்ததி வேணுமே. நான் செஞ்சம் தப்பு...'

ஒவ்வொரு சமயம் அந்த நினைவு குமட்டும்போது தனக்குள் சொல்லிக் கொள்வார்.

''பள்ளிக் கொழந்தைகளத் தன்னோட கொழந்தைகளா நெனப்பான்னு நம்பியிருந்தென். ஆனா தனக்கின்னு கொழந்த வேணும்னு ஆசப்பட்டுட்டா. அவளும் பெண்தான.''

அவர் இந்துக்காரர்களுக்கும் வேதக்காரர்களுக்குமிடையே உள்ள சச்சரவு களைத் தீர்க்க அரும்பாடு பட்டார். அதனால் பறைக் குடியின் ஒற்றுமை பழுது படவில்லை.

ராத்திரி இருட்டு அவரை வதைக்கும்போது மனசு தளர்ந்து கண்கள் கலங்கும். வேத வசனங்களைப் படித்து ஆறுதலடைவார்.

''குணசாலியான ஸ்திரீ தன் புருசனுக்குக் கிரீடமாயிருக்கிறாள். இச்சை உண்டுபண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கியாயிருக்கிறாள்.''

அன்னபாக்கியத்தின் நினைவுகள் நெஞ்சை நெருடும். அவள் குணம் யாருக்கும் அமையாது. பள்ளிக் குழந்தைகளுக்கெல்லாம் தாயாக இருந்தாள். தனக்கென்று குழந்தையில்லையென்ற வருத்தமே கிடையாது. எந்நேரமும் சிரித்த முகம். குறிப்பறிந்து நடந்துகொள்வாள். ''என்னங்க என்னங்க'' என்று குழைந்துகொண்டு கூடவே இருந்த மனுசி. அனியாயமாகப் போய்விட்டாள்.

அவர் கர்த்தரிடம் மன்றாடுவார். கண்ணீரால் யாசிப்பார்.

''கர்த்தாவே என் வார்த்தைகளுக்குச் செவி கொடும். என் தியானத்தைக் கவனியும்.

என் பெருமூச்சினால் இளைத்துப்போனேன். இரா முழுவதும் என் கண்ணீரால் என் படுக்கையை மிகவும் ஈரமாக்கி என் கட்டிலை நனைக்கிறேன்.

கர்த்தாவே ஏன் தூரத்தில் நிற்கிறீர். ஆபத்து நேரிடுகிற சமயங்களில் நீர் ஏன் மறைந்திருக்கிறீர்.''

ஈரக் கண்கள் எப்போது மூடுமென்று தெரியாது.

சூசைமாணிக்கம் எஸ்தருக்குப் பதிலாக ஒரு வாத்தியார் குடும்பம் வந்தது. அவர்களுக்கு மூணு பெண் குழந்தைகள். சாட்சியாபுரத்துப் பக்கம் ஊர். ஒரே சாதி என்பதால் பறைக் குடிக்கும் அவர்களுக்கும் ஒத்துப்போனது. டீச்சர் அன்ன பாக்கியத்தைப் போல் எல்லாரிடமும் அன்பாகப் பழகினாள். அவளது நட வடிக்கைகளைப் பார்க்கும்போதெல்லாம் யாக்கோவு வாத்தியாருக்கு அன்ன பாக்கியத்தின் நினைவு வந்தது. தானாகச் சமைத்துக்கொண்டு கோயிலில் தங்கி னார். வீட்டைப் புதியவர்களுக்குக் கொடுத்துவிட்டார். குழந்தைகளின் துணை ஆறுதலாக இருந்தது.

வயசு ஆகஆக அவரால் வேப்பங்காட்டில் தங்க முடியவில்லை. மனசு முழு நேர ஊழியத்தில் நாட்டம் கொண்டது. வாத்தியார் வேலையைத் துறந்தார். புதியவர்களிடம் பொறுப்புக்களை ஒப்படைத்துவிட்டு ஊழியத்துக்குக் கிளம்பி விட்டார். புறப்படும்போது வேதக்காரர் இந்துக்காரர் என்று பார்க்காமல் நாலு பெரியவர்களை அழைத்துப் பக்குவமாகப் பேசினார்.

‘‘ஓங்களுக்குச் சேவை செய்ய ஒரு நல்ல குடும்பத்த ஆண்டவரு அனுப்பி வச்சிருக்காரு. அவங்கள ஓங்களோட சகோதர சகோதரியாக நெனச்சு ஒத்துழைப்புக் குடுக்கணும். எல்லாரும் ஒத்துமையாருக்கணும்.’’

ஒருவர் வருத்தத்துடன் கேட்டார்.

‘‘வாத்தியாரய்யா நீங்க எங்க போறீக. எங்களோடதான இருப்பீக.’’

‘‘கர்த்தருக்கு ஊழியம் செய்யப் போறென்.’’

‘‘அந்த ஊழியத்த இங்கருந்தே செய்யலாமில்ல.’’

‘‘பலதரப்பட்ட மக்களச் சந்திக்கணும். கர்த்தரோட மகிமைய எடுத்துச் சொல்லணும்.’’

‘‘எங்கள வுட்டுப் போறதுன்னு முடிவுபண்ணீட்டீக. ஓங்கள நிறுத்த முடியாது.’’

இன்னொருவர் சொன்னார்.

‘‘எங்களப் பத்திக் கவலப்படாதங்க. எண்ணைக்கும் ஓங்க பேரக் காப்பாத்துவொம்.’’

‘‘அது போதும்.’’

‘‘அப்பப்ப வந்து போங்க.’’

‘‘நிச்சயமா.’’

அவர் புறப்படும்போது பல பெண்களுக்குத் தங்களையறியாமல் அழுகை வந்துவிட்டது.

தோளில் துணிப்பை தொங்கத் தலைமுதல் கால்வரை ஏக வெள்ளையாக தெருக்களிலும் ஆஸ்பத்திரிகளிலும் அந்த ஆழாக்கரிசிச் சீவன் கவலைகளை மறந்து ஆசைகளைத் துறந்து கர்த்தரின் நாமத்தைச் செபித்துக்கொண்டு திரிந்தது.

## 6. அலைச்சலும் உளைச்சலும்

விடியக்காலம் மந்தைப் பக்கம் போய்த் திரும்பும் வழியில் சத்திரப்பட்டி மாடப்பன் பள்ளக்குடி மயானத்தை நோட்டம் விட்டான். நடுவில் ஒரு குழி மேடு புதுசாகத் தெரிந்தது. நின்று கவனித்தான். புதுசேதான்.

அதெப்படி. இப்போதைக்குள் சாவில்லையே. கிட்டப் போனான். அடடா முத்தம்மாளின் குழியாயிற்றே. மூலைகளையும் விளிம்புகளையும் நேர்த்தியாக எடுத்துக்கட்டிப் பூசியதுபோல் மண் பரப்பிச் சுற்றிலும் ஒரு பாவான் அகலத்துக்குப் புல்பூண்டு பிடுங்கித் தூர்த்துத் துப்புரவாக்கி நேற்றுப் புதைத்த இடம் போல் மாறியிருந்தது. தலைமாட்டில் தண்ணீர் குடித்த தெளுச்சியில் பிரண்டையும் துளசியும் அசைந்தாடின. அதுக்கடுத்து நட்டிய குச்சில் கோர்த்த பூமாலை பாதிக் குழிவரை படர்ந்திருந்தது. கொஞ்சமும் வாடவில்லை. மாலையின் நடுவில் அகல் விளக்கு சன்னமாக எரிந்துகொண்டிருந்தது.

முத்தம்மா இறந்து வருசக் கணக்காயிற்றே. இதெல்லாம் யார் செய்திருப்பார்கள். அதும் இவ்வளவு காலத்துக்குப் பிறகு. அவன் ஒரு முறைகூட விளக்கேற்றியது கிடையாது. மகளைத் தவிக்கவிட்டுப் போனதால் மனசில் கருக்கறுக்கும்

வெறுப்பு. இருந்தாலும் அவளது அடையாளம் கரைந்துபோய்விடாமல் அப்பப்ப மண்ணெடுத்துப் போட்டுக் காத்துவந்தான்.

ஒருவேளை மகளும் மருமகனும் வந்து கும்பிட்டிருப்பார்களோ. விடிந்தும் விடியாமலா. வீட்டுக்கு வந்திருக்கணுமே. அவளாக இருக்காது. பிறகு யாராக இருக்கும். குழியை வெறித்தான். மாலைக் கோலத்தில் முத்தம்மா குறுஞ்சிரிப்பில் படுத்திருந்தாள். அவளது தொப்புள் குழி விளக்காக எரிந்தது. உடம்புக்குள் வேர்வைச் சிலிர்ப்பு. மனசு படபடத்தது. வேகமாக நடந்தான்.

பொழுதேறச் சத்திரப்பட்டி கம்மாக் கரையோரம் தோளில் அழுக்குச் சுமை தொங்க அய்யப்பன் மகன் சித்திரவேலு கழுதைகளுடன் வெளுப்புத்துறைக்குப் போய்க்கொண்டிருந்தான். சற்று முன்னால் நடந்து போன முக்காட்டுச் சாமியார் கழுதைகளின் குளம்புச் சத்தம் கேட்கவே ஒதுங்கி வழி விட்டார். அவரைக் கடந்து போன சித்திரவேலு திரும்பிப் பார்த்தான். அவரும் பார்த்துச் சிரித்தார்.

''அழுக்கு அதிகம் போலருக்கு சாமி. எந்த ஊரு அழுக்கு.''

அவர் வரும்வரை தாமதித்தான். கழுதைகள் கண்ணில் பட்ட இரையைக் கரும்பி நமட்டிக்கொண்டே அழுக்குப் பொதிகளைச் சுமந்து முன்னால் செல்ல அவர்கள் சேர்ந்து நடந்தார்கள்.

''சத்தரப்பட்டி.''

''ஒங்களுக்கு அந்த ஊருதானா.''

''ஆமா. பள்ளக்குடிக்கு வெளுக்கொம்.''

''அப்படின்னா பொத்தையன் சாமி வம்சமா.''

''ஆமா.''

''அந்தக் கொடிவழிதான் படந்துவருது போலருக்கு. அவுகளுக்குப் பின்னால ஆராரு இருக்கிறது.''

''பொத்தையன் எங்கப்பச்சி தவளையனோட அப்பச்சி. எங்கப்பன் பேரு அய்யப்பன்.''

''அய்யப்பன் சாமி மகனா நீங்க. அவுக நல்லாருக்காகளா.''

''அப்பச்சியும் அப்பத்தாளும் கெதியாருக்காக. அப்பச்சியோட அண்ணன் சாத்தன் கலிங்கல்ல தெடமாருக்குது.''

''ஒங்க பேரென்ன.''

''சித்திரவேலு.''

''கூடப்பெறந்தது எத்தன பேரு.''

''ரெண்டு அக்கா. பாப்பம்மா பூலாத்தி. அவுகள வெளியூருக்குக் குடுத் துருக்கொம்.''

''ஒங்களுக்குக் கலியாணம் ஆயிருச்சா.''

''இல்ல.''

''அத்தமாருட்டப் பொண்ணு இருக்குதா.''

''மூணு பேருட்டயுமே இருக்குது.''

''மனசுக்குப் புடிச்ச பொண்ணச் சந்தோசமாச் செய்யிங்க. அப்ப ஒங்க வம்சத்துல நீங்கதான் கடசி.''

''ஆமா.''

''இவ்வளவு அழுக்கு கொண்டுபோறீகளே. தனியா வெளுத்துருவீகளா.''

''அப்பனும் ஆத்தாளும் கஞ்சி கொண்டுட்டுப் பின்னால வருவாக.''

கழுதைகள் சத்திரப்பட்டிக் கம்மாக் கரை தாண்டி கோணிகுளம் கரையில் ஏறி நடந்தன.

''கலிங்கல் தொறைக்குப் போறீகளா. ஏன் இங்க தண்ணியில்லையா.''

''இல்ல. கொஞ்ச நாளா அங்கதான் வெளுப்பு நடக்குது.''

''நடக்கட்டும்நடக்கட்டும்... சத்தரப்பட்டியில மாடப்பன் சாமியத் தெரியுமா.''

''நல்லாத் தெரியுமே. அவுகளுக்கு நாந்தான் முடிவெட்டி வுடுவென்.''

''அவுகளுக்கு ஒரு பொண்ணு உண்டுமே.''

''ஆமா. அவுகளக் கலிங்கல்லதான் குடுத்துருக்காக.''

''அப்படியா. ஆருக்குக் குடுத்துருக்கு.''

''ஊருக் குடும்பாவுக மகனுக்கு. சொந்த மாமன் மகந்தான்.''

''சரிசரி. மாடப்பன் சாமி எப்படியிருக்காக.''

''எண்ணைக்கும் போல ஏண்ட வேலையச் செஞ்சுக்கிட்டு தங் கையால கஞ்சி காச்சிக் குடிச்சுக்கிட்டு இருக்காக. ஆளு தவங்கீருச்சு... ஒங்களுக்கு எல்லாரப் பத்தியும் தெரிஞ்சிருக்கே. நீங்க எந்த ஊரு.''

''காவி உடுத்துனவனுக்கு எல்லா ஊரும் சொந்தந்தான். அவுகளோட பழக்கம் உண்டு. நீங்க முன்னால போங்க. நான் பின்னால மெதுவா வாறென்.''

''நீங்க எங்க போகணும்.''

''போக்கத்தவனுக்குப் போறதெல்லாம் வழிதான். எங்க போனா என்ன...''

அவர் கரையோரம் கருவமர நிழலில் ஒதுங்கிப் பிந்திக்கொண்டார். அவன் ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டுக் கழுதைகளை நோக்கி விரைந்தான்.

''சாமீ...''

ஊர் மடத்தில் உறங்கிக்கொண்டிருந்த கோயிந்தனுக்கு முழிப்புத்தட்டியது.

'நம்மளப் போயிச் சாமின்னு கூப்புடுறது ஆரு...'

எழுந்து முன்புறம் பார்த்தான். தாவாரக் கல்தூணோரம் ஒரு காவியுருவம் நின்றிருந்தது. முக்காட்டுக்குள் திருநீற்று நெற்றிக்குக் கீழே திரண்ட கண்களும் வெள்ளைச் சிரிப்பும் தெளிவாகத் தெரிந்தது.

''ஆரு.''

''பண்டாரம் வந்துருக்கென் சாமி. உள்ள வரலாமா.''

''வாங்க சாமி. வந்து உக்காருங்க.''

அவன் எழுந்து போய் சாமியாரைக் கிட்டத்தில் பார்த்தான். வரிச்சிபோல் கதிக்க உருவம். நல்ல உயரம். மழுங்கச் சிரைத்த முகம். கையில் சிறு கம்பு. கம்பின்

கைப்பிடியில் நாய்த் தலை உருவம். நெடுக பித்தளைப் பூண். தோளில் துணித் தொட்டில் தொங்கியது. பாதக்குறடு அவரைப் பதமாகத் தாங்கியிருந்தது.

அவர் பாதக்குறட்டைக் கழற்றிவிட்டுத் தாவாரத்தைக் கடந்து மேடைத் தளத்தின் நெடும்படியில் உட்கார்ந்தார். அவன் எதிரில் கல்தூணையண்டி உட்கார்ந்துகொண்டான். அவர் முக்காட்டை விலக்கி மொட்டைத் தலையைத் தடவினார்.

''ஒங்க தூக்கத்தக் கெடுத்துட்டனோ.''

''அதெல்லாமில்ல. பகல்ல என்ன பெரிய ஒறக்கம்.''

அவர் முகத்தில் அதே சிரிப்பு. மனசைச் சுண்டியிழுக்கும் சிரிப்பு.

''சாமி பேரென்ன.''

''கோயிந்தன்.''

''அந்தப் பெருமாளு பேர வச்சிருக்கீக. நல்லாருக்கணும்.''

''சாமி எங்கருந்து வருது.''

''காசியிலருந்து வாறென். ரெண்டு மாசத்துக்கு முந்திப் பெறப்புட்டது. வழியில பல புண்ணியத்தலங்களப் பாத்து ஆண்டவனச் சேவிச்சிட்டு வாறென்.''

''நல்ல வெயில்ல வந்துருக்கீக.''

''வெயிலும் நெழலும் ஒடம்புக்குத்தான். மனசு எப்பயுமே ஈசனோட நெழல்லதான் இருக்கு.''

''இங்க எப்படி.''

''ஆண்டி வேசம் போட்டும் அலச்சல் தீரல. பசிய அடக்க முடியல.''

''பசி வந்தா பத்தும் பறந்துருமிங்கிறது சரியாத்தான் இருக்குது. அது பெரிய கொடும.''

''மனுசன் படுற பிரயாசையெல்லாம் அவனோட வாயிக்காகத்தான. மனசுக்கு நிம்மதியில்லையே.''

''நெசந்தான்.''

''ஒரு ஆண்டி பசியோட படுத்திருந்தா ஒலகமெல்லாம் கிறுகிறுன்னு சுத்துது.''

''காதடச்சு கண்ண மறச்சு ஒரு வேளச் சோறு குடுக்க முடியாற ஒலகத்து மேல வெறுத்துக் கெடக்கும்.''

''அலச்சல நிறுத்துறதுக்காக அலஞ்சு திரிஞ்செென். ஒளச்சலும் பொகச்சலுந் தான் மிச்சம்.''

''அப்படித்தான்.''

''அலச்சல நிறுத்தணும்.''

கோயிந்தன் உதட்டைப் பிதுக்கினான்.

''முடியலயே.''

''நெரந்தரமா ஒரு எடத்துல இருக்கலாம்னு இங்க வந்துட்டென்.''

''இங்கயே இருந்து பாருங்க. அலச்சலு தீருமான்னு தெரியல.''

''அன்னம் போட்டு ஆதரிப்பீகளா.''

அவன் சிரித்துக்கொண்டான்.

'நானே ஒரு காவி உடுத்தாற ஆண்டி. திருவோடு ஏந்திப் பிச்சையெடுக்கல. அவ்வளவுதான். எங்கிட்டப் போயி ஆதரிப்பீகளான்னு கேக்காரே. இந்தக் கூத்த ஆருட்டச் சொல்றது.'

‘‘ஒங்களுக்கில்லாற அன்னமா சாமி. இந்த ஊரே ஒங்கள ஆதரிக்கும்.’’

‘‘அது போதும் சாமி.’’

‘‘கொஞ்சம் இருங்க. ஊருணியில ஒரு முழுக்குப் போட்டுட்டு வந்துறென்.’’

இதுக்குள் பெண்களும் பிள்ளைகளுமாக நிறைய பேர் மடத்தில் கூடிவிட்டார்கள். சாமியார் மடியிலிருந்து பையை எடுத்து எல்லாருக்கும் திருநீறு கொடுத்தார். மடமெங்கும் திருநீறு மணத்தது.

பிள்ளைகளின் கவனமெல்லாம் வெளியே கிடந்த பாதக்குறட்டில் கவிந்திருந்தது.

‘‘ஏல அது செருப்புத்தானா.’’

‘‘செருப்பேதான்.’’

‘‘அப்படின்னா புடிமானமில்லாம எப்படி நடக்கிறது.’’

‘‘முன்னால காளான் மாதிரி ஒண்ணு நீட்டிக்கிட்ருக்கு பாரு. அதான் புடிமானம்.’’

‘‘அதப் போட்டு நடக்கிறதப் பாத்தாகணும்.’’

‘‘பாத்துருவொம்.’’

சாமியாரை வேடிக்கை பார்த்த பெண்களுக்கு வாய் குறுகுறுத்தது. வாலிபர் மேடை விளிம்புக்கு வந்து பேச்சுப் போட்டார்கள்.

‘‘எக்கா இந்த மொகத்த எங்கயோ பாத்த மாதிரி இருக்கு.’’

‘‘ஆமா இவ பாக்காற மொகம் ஊரு நாட்ல உண்டுமா. அட போடி ஆக்கங் கெட்டவளே.’’

‘‘சின்ன வயசில இவர நம்மூருல வச்சே பாத்துருக்கென். நெசமாத்தாங்கா.’’

‘‘அடியே அவ சொல்றது சரிதான். எனக்கு இப்பத்தான் யாவுகத்துக்கு வருது. இது சத்தரப்பட்டி சுந்தர நாய்க்கரு மாதிரி தெரியிது.’’

‘‘ஆரு. இங்க வந்து வேலைக்கு ஆளுக் கூப்புடுவாரே மங்கத்தாயம்மா புருசன் அவரா.’’

‘‘அவரேதான்.’’

‘‘அஞ்ஞாடி. அந்த மனுசனாம்மா. சுத்தமா அடையாளம் தெரியலயே.’’

‘‘மண்டையும் மொகமும் ஏகட்டுக்கு மழுக்னு இருக்குது பாரு அதனாலதான்.’’

‘‘வீட்ல கோவிச்சுக்கிட்டு வெளியேறிப் போயிட்டதால்ல சொன்னாக. அது ரெம்ப வருசமாச்சே.’’

‘‘மனுசன் காயாப் போயிப் பழமாக் கனிஞ்சு வந்துருக்காரே. இப்படியும் நடக்கிறதுண்டுமா.’’

‘‘நம்ம அவுக வயக்காட்ல நடவு நட்டயில அவரு பாடுன பாட்டெல்லாம் இண்ணைக்கும் மனசில அப்படியே இருக்கு.’’

‘‘என்னமாப் பாடுவாரு.’’

‘‘போயி வெவரம் கேப்பமா.’’

‘‘சாவாசமாக் கேக்கலாம். இப்பத்தான் வந்து உக்காந்துருக்கிற மனுசனச் சங்கடப்படுத்த வேணாம்.’’

‘‘கோயிந்தனுக்கு நல்ல தொண வந்து சேந்துருக்கு.’’

வழியில் ரத்தினம் பெண்டாட்டி சீனித்தாய் ஒருத்தியிடம் கேட்டாள்.

''சின்னம்மா கூட்டமாப் போறீகளே என்ன சங்கதி.''

''சங்கதியாத்தா. ஓங்கூரு சுந்தர நாய்க்கரு சாமியாரா வந்து மடத்துல உக்காந்துருக்காரு. போயிப் பாத்து திருநீறு வாங்கீட்டு வாறொம். நீயும் வாங்கிக்கோ தாயி. ரெம்ப நாளைக்குப் பெறகு பாத்த மாதிரியும் இருக்குமில்ல.''

''இங்கதான் இருக்கப்போறாரா.''

''அப்படித்தான் தெரியிது. வேணும்னா நீ கேட்டுத் தெரிஞ்சுக்கோ.''

''இல்லல்ல. இனியொரு நாளைக்குப் பாத்துக்கிறெென்.''

அவள் சின்ன வயசில் அவரைப் பார்த்தது. அந்த முகம் சட்டென்று நினைவுக்கு வரவில்லை. இப்போதே பார்க்க ஆசைதான். அவர் இங்கே தங்கினால்தான் உண்டு. இன்றைக்கே போய்விட்டால் பிறகு பார்க்க முடியாது. தனியாக எப்படிப் போய்ப் பார்ப்பது. தவிப்பை அடக்கிக்கொண்டு வீட்டுக்குப் போய்விட்டாள்.

அந்திக் கருக்கலில் வெளுத்த துணிப் பொதியைத் தலையில் சுமந்துகொண்டு சித்திரவேலு சத்திரப்பட்டிக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் அப்பனும் ஆத்தாளும் நிதானமாக நடந்துவந்தார்கள். கழுதைகளின் முதுகிலும் பொதிகள் சளிந்து கிடந்தன.

வழியில் எதிர்ப்பட்ட மாடப்பன் சித்திரவேலைச் சந்தித்துக்கொண்டான்.

''ஏம்ல நேரங்கெட்ட நேரத்துல பெரிசுகள இழுத்தடிக்க. சூசுவான்னு வீட்ல கெடக்கிறதுக்கில்லாம. அவுகமேல அப்படியென்ன கோவம். கலியாணம் முடிச்சு வைக்க மாட்டங்காகளா.''

சித்திரவேலு சமாளித்தான்.

''நீங்க ஒண்ணு. அலைய வேணாம்னு சொன்னாக் கேட்டாத்தான. எப்படியும் போங்கன்னு வுட்டுட்டென்.''

பெரிசுகள் அவர்களை நெருங்கும்போது அய்யப்பன் மாடப்பனைக் கண்டுகொண்டான்.

''குடும்பாவுக இன்னேரம் எங்க கெளம்பீட்டீக.''

அழகம்மா புருசனைக் கடிந்தாள்.

''ஒரு திக்கம் போற மனுசர குறுக்க மறிச்சுப் பேசப்புடாது. அவுகளப் போக வுடு.''

மாடப்பன் அவர்களை விரசினான்.

''நான் போறது இருக்கட்டும். நீங்கென்ன கலிங்கலுக்கு விருந்தாடி போயிட்டு வாறீகளா. காலு ஒரு தரையில நிக்க மாட்டங்குதோ. சூகாடீட்டுத் திரியிறப்பத் தடுக்கி வுழுந்தா என்னாகும். பாடுபட்டு புள்ளையக் காப்பாத்துறீகளாக்கும். இனிமே ஊரத் தாண்டி ஒங்கள எங்கயாச்சும் பாத்தென் அம்புட்டுத்தான். ஆருக்கு அடி வுழுகும்னு சொல்ல முடியாது. பேசாம பயலுக்குக் கலியாணம் முடிச்சு வையிங்க.''

அழகம்மா அங்கலாய்த்தாள்.

''சாமி நான் சொல்லாற நாளுண்டுமா. கேக்க மாட்டடங்கானே. பொண்ணு குடுக்கிறதுக்கு அத்தமாரு தட்டளியிறாக.''

''ஆராச்சும் ஒருத்தியக் கொண்டுவந்து கால்ல தளஞ்சு வுடுங்க. அப்பத்தான் அடங்குவான்.''

பெரிசுகள் எதையோ முனங்கிக்கொண்டே கடந்துவிட்டார்கள். சித்திர வேலு நின்றுகொண்டான்.

''எப்பா இண்ணைக்கு வெள்ளங்காட்டி தொறைக்குப் போற வழியில ஒரு சாமியாரப் பாத்தென். ஒங்க வயசிருக்கும். ஆனா மூப்பு தெரியல. சின்னப்புள்ள மாதிரி சிரிச்சுக்கிட்டே இருக்காரு.''

''பிச்சையெடுக்கத் தொணைக்கு வாறயான்னு கூப்புட்டாரா.''

''ரெம்ப நேரம் பேசிக்கிட்டே வந்தாரு.''

''பொடிப் பெயலோட அப்படியென்ன பேச்சு.''

''எங்க குடும்பத்தப் பத்தி வெசாரிச்சாரு.''

''அதெப்படி.''

''எல்லாரவும் தெரியுமாம்.''

''அதாருடா.''

''ஒங்களப் பத்தி அக்கறையாக் கேட்டாரு.''

''என்னப் பத்தியா.''

''ஒங்க பொண்ணப் பத்திக்கூடக் கேட்டாரே.''

''அவர நீ முன்னப்பின்னப் பாத்துருக்கயா.''

''இல்லையே. வெசாரிக்கிற தோரணையப் பாத்தா அவரு இந்தப் பக்கத்து ஆளாத்தான் இருக்கணும்.''

காலையில் முத்தம்மாளின் தொப்புள் குழியில் எரிந்த விளக்கு மாடப்பன் கண்ணில் மின்னியது. உள்ளே மழை கருக்கூடும் மந்தாரம். ஆவலாகக் கேட்டான்.

''அவருக்கு எந்த ஊருன்னு கேட்டயா.''

''காவியுடுத்துனவனுக்கு எல்லா ஊரும் சொந்தமாம்.''

''எங்க போறன்னு சொன்னாரா.''

''போக்கத்தவனுக்குப் போறதெல்லாம் வழியாம்.''

''கலிங்கலுக்குத்தான் போயிருப்பாரு. எங்கருந்தாலும் தேடிப்புடிச் சிருவென்.''

மனசுக்குள் மலைபோல் உறைந்து கிடந்த இருபத்தஞ்சு வருச வேதனை உருகித் தெளிந்த ஆறாக ஓடியது. அவசரமாக வீட்டுக்கு நடந்தான். சித்திர வேலுக்கு ஒண்ணுமே புரியவில்லை. பொதிச் சுமையை அழுத்திப் பிடித்துக் கொண்டு இருட்டில் பாதையைத் தேடிப்பிடித்தான்.

## 7. ஒப்புவதாரடி ஞானப்பெண்ணே

கோயிந்தனும் சாமியாரும் ராத்திரி பேசித்தீரவில்லை. மனசு திறக்கத்திறக்க அவர்களுக்குள் அன்னியோன்னியம் திரண்டது. அவனுக்கு அவருடைய பூர் வீகம் தெரிந்தாலும் கேட்டுக்கொள்ளவில்லை. காலையிலேயே கண்டுகொண் டான். வீடு வாசல் பெண்டாட்டி பிள்ளைகளைத் துறந்து பரதேசம் போன வரைக் கிண்டி ஏன் சங்கடப்படுத்தணும். காவியுடுத்தும் துணிவு வந்திருக்கிறதே. அது பெரிய காரியம். மேல்சாதியில் பிறந்துவிட்டுக் கீழ்சாதிக்காரர்களிடம் சோற்றுக்காகக் கையேந்தித் திரிகிறாரே மனுசன். அதுக்குப் பக்குவம் வேணும். அதுக்காக அவரைத் தெய்வமாகக் கும்பிடணும். ஒரு உயரத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவர்களை உறக்கம் பூமிக்கு இழுத்துவந்து முடக்கியது.

மறுநாளே ஊர் மடம் கோயிலாக மாறிவிட்டது. அவன் நேரமிருக்கவே எழுந்து ஊர்க் கிணற்றுக்குப் போய் பெண்களிடம் வாயாடிப் பானையில் தண்ணீர் கொண்டுவந்து கொடுக்கக்கொடுக்க சாமியார் மடத்தைக் கழுவினார். அவன் முற்றத்தைத் தூர்த்துத் தெளித்துத் துப்புரவாக்கினான். இருவரும் ஊருணியில் குளித்துத் துணி துவைத்துத் திருநீறு பூசித் திரும்பினார்கள். மடத்தில் சுவரோரம் வரிசையாக நிறுத்திய சாமி சிலைகளுக்கு முன்னால் உட்கார்ந்து அவர் மெய்யுருகப் பாடினார்.

''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.''

அவன் கண்ணீர் தளும்பக் கைகூப்பித் தன்னை மறந்து நின்றிருந்தான். அவர் பூசை முடித்து திருவோட்டைத் தேடும்போது பொழுது கிளம்பிவிட்டது. அவன் அவரையே பார்த்துக்கொண்டிருந்தான். அவரது கண்களைச் சந்திக்கத் திராணி யில்லை.

''சாமி நீங்க சாப்பிடக் கௌம்பலயா.''

''ஒங்களப் போல திருவோடு ஏந்தணும்னு ஆசதான். முடியலயே.''

அவர் பைக்குள்ளிருந்து திருவோட்டை எடுத்து நிதானமாகத் துடைத்தார். அது கருப்புக் கண்ணாடியாகப் பளபளத்தது.

''எல்லாரும் திருவோடு தூக்கீட்டா சோறு போடுறதுக்கு ஆளிருக்காது சாமி.''

''நீங்க வீட்டுக்கு வீடு கேட்டுச் சோறு வாங்கீட்டு வாறீக. என்னய வீட்டுக்கு வீடு கூப்புட்டுச் சோறு குடுக்காக. இதுதான் வித்தியாசம்.''

''எல்லா வீட்லயும் கூப்புடுறதில்லையே.''

''அதில்ல. மருமக மக தங்கச்சின்னு சொந்தத்துலதான்.''

''அதுக்குக் குடுத்துவச்சிருக்கணும்.''

கொஞ்ச நேரத்தில் கீழத்தெருவில் ஆறாவது வீட்டுக்கு முன்னால் அவரது குரல் சன்னமாகக் கேட்டது.

''தாயீ...''

ஒரு நேரத்துக்கு அஞ்சே அஞ்சு வீடு. அது போதும். துணைக்கம்பின் கைப் பிடியில் நாய்க் கழுத்தைப் பிடித்தபடி நிறைந்துவிட்ட திருவோட்டுடன் மடத் துக்கு நடந்தார். பாதக் குறடு முனங்கக்கூட இல்லை.

மடத்தில் கோயிந்தனைக் காணவில்லை. அவர் சம்மணமிட்டு உட்கார்ந்து திருவோட்டிலேயே சோற்றைப் பக்குவமாகக் கரைத்து பைக்குள்ளிருந்து ரெண்டு வெங்காயத்தை எடுத்துக் கடித்துக்கொண்டு அள்ளியள்ளிக் குடித்தார். அஞ்சு வீட்டில் மூணு வகைச் சோறு. கம்பு கேப்பை சோளம். அந்தக் கலவைக்குத் தனி ருசி.

இனி ராத்திரிக்குத்தான் ஊருக்குள் போகணும். மதியச் சாப்பாட்டை மறந்து வருசக் கணக்காயிற்று. ராத்திரிக்கு அடுத்த அஞ்சு வீடு. அப்படியே போனால் ஊரைச் சுற்றி முடிக்க நாளாகும். ரெண்டு மூணு முறை கமண்டலத்தில் தண்ணீர் நிரப்பிக்கொண்டால் முறை கழிந்துவிடும்.

மடத்து முற்றத்திலிருந்து சாமியாருக்கு ஒரு குரல் வந்தது.

''சாமீ...''

அவர் யோசித்தார். எங்கேயோ கேட்ட குரல் மாதிரி இருக்கிறதே. பதிலுக்குக் கூப்பிட்டார்.

''சாமீ...''

''மாடப்பன்.''

அவன் தன்னை அடையாளம் காட்டியபடி உள்ளே வந்து அருகில் உட் கார்ந்துகொண்டான். அவனுக்குப் பின்னால் வந்த பெண் தூணில் ஒண்டி நின்று எட்டிப் பார்த்தாள். அவர் திக்குமுக்காடி வார்த்தைகளை விட்டார்.

''அடடா மாடப்பன் சாமியா. நல்லாருக்கீகளா. பாத்து எத்தன வருசமாச்சு.''

''என்னமோ இருக்கென். எங்கள யாவுகம் வச்சிருக்கீகளே. அந்த மட்டுக்கும் சந்தோசம்.''

''பரதேசம் போனாலும் பழசெல்லாம் மறக்க முடியலயே.''

''ஏதுமத்த ஆண்டியா இக்கோலத்துல வந்துருக்கீகளே. ஒரு தகவலும் இல் லாம இத்தன வருசமா எங்க இருந்தீக. என்ன செஞ்சீக.''

''எங்கெங்கயோ இருந்தென். என்னென்னமோ செஞ்சென். இண்ணைக் கோட இருபத்தஞ்சு வருசம் மூணு மாசமாச்சு.''

அவர் பார்வை தூணுக்கு ஏறிட்டது.

''தாயி ஆரு.''

''நம்ம சீனித்தாயி.''

அவளது கனத்த முகம் கவுந்துகொண்டது.

''நம்ம தாயா. பெரிய மனுசியாயிருச்சு.''

''இங்கதான் ஊருக் குடும்பன் திருவாத்தனோட மகனுக்குக் குடுத்துருக்குது. அத்த பொண்ணாச்சே. வுடுவானா. அவனுக்குப் பாத்தியப்பட்ட பொருள ஒப் படச்சிட்டு நிம்மதியாருக்கென். அவளும் ரெண்டு புள்ளைக்குத் தாயாயிட்டா. ஆணொண்ணு பொண்ணொண்ணு. கடசிக் காலத்துல இவதான நம்மள ஆதரிக் கணும். முடிஞ்சவரைக்கு ஒத்தியில கெடந்து ஒதைய வேண்டியது. முடியலன்னா இங்க வந்து வுழுந்துற வேண்டியது.''

''தாயி நல்லாக் கவனிச்சுக்கிரும்.''

அவருக்கு சீனித்தாயின் முகத்தை இன்னொரு முறை பார்க்கக் கூச்சமாக இருந்தது. அவன் சடைத்துக்கொண்டான்.

''சத்தரப்பட்டிக்கு வந்தவுக அதுக்கது ஒரு வார்த்த சொல்லிவுட்ருந்தா ஓடிவந்துருப்பனே. என்னைய வுடுங்க. புள்ளீகளவாச்சும் பாத்துருக்கலாமில்ல.''

அவர் முனங்கினார்.

''தோணல...''

''அதான் இங்க வந்துட்டீகளாக்கும்.''

''தோணுச்சு...''

அவர் சீனித்தாயின் முகத்தைப் பார்க்கப் பிரயத்தனப்பட்டார். முடியவில்லை. அவள் திரும்பிக் கண்களைத் துடைத்துக்கொண்டிருந்தாள். அவனுக்கு ஒரு விதத்தில் ஆறுதல்.

''அதாச்சும் தோணுச்சே.''

''தாயி மொகத்தப் பாத்துக்கிட்டென். புள்ளீகளத்தான் பாக்கணும்.''

அவள் மாடப்பனிடம் சொன்னாள்.

''எய்யா சாமிய வீட்டுக்கு வரச்சொல்லு.''

அவர் முந்திக்கொண்டார்.

''இல்ல தாயி. இங்கயே இருந்துக்கிறென். இதுதான் சாசுவதம்.''

அவன் வற்புறுத்தவில்லை.

''ஒங்க பிரியம்.''

''எனக்கு மனசு நெறஞ்சிருக்கு.''

''புள்ளீககிட்டச் சோறு குடுத்து வுடச் சொல்லட்டுமா.''

''நான் மதியச் சாப்பாட்ட மறந்து நாளாச்சு.''

''அப்ப ராத்திரிக்கு.''

''நாலஞ்சு வீடிருக்கு.''

''நான் போயி புள்ளீகளப் பாத்துட்டு வாறென். பள்ளிக்கொடத்துலருந்து வரச் சாய்ந்தரமாகும். வீட்டுக்கு வெலகாம நேர இங்க வந்துட்டென். எடையில தாயப் பாத்தென்.''

அவனும் மகளும் அமைதியாக வெளியேறினார்கள்.

ராத்திரி கோயிந்தனுடன் மாடப்பனும் துணைக்கு வந்தான். மடத்தில் புது சாக சின்ன விளக்கு எரிந்தது. சாமியார் பரதேசம் போன அனுபவங்களைக் கதைகதையாகச் சொன்னார். பார்த்த புண்ணியத் தலங்களைக் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்தினார். கோயிந்தன் எதார்த்தமாகக் கேட்டான்.

''அப்பேர்ப்பட்ட எடத்துலயெல்லாம் இருந்துட்டு ஏன் திரும்பி வந்துட்டீக சாமி.''

அவருக்குச் சட்டென்று ஒரு பாட்டுதான் நினைவுக்கு வந்தது. அனுபவித்துப் பாடினார்.

''இல்லறமே அல்லலாம் என்று ஆடுமயிலே - பத்தி
இல்லவர்க்கு முத்திசித்தி இல்லை மயிலே
நல்லறமே துறவறம் காணுமயிலே - சுத்த
நாதாந்த வெட்டவெளி நாடுமயிலே.''

மாடப்பனுக்குள் பழையபழைய நினைவுகள் கிளர்ந்தன.

''இந்தக் கொரலக் கேட்டு நாளாச்சு. சாமியோட மனசு மாறாம அப்படியே இருக்கு.''

அவர் மறுபடியும் பாடினார்.

''தாடிவளர்த்து சடைவளர்த்து-நல்ல
சன்னியாசி என்றொரு வேடமிட்டே
ஓடித்திரிந்த விளையாட்டை-இங்கே
ஒப்புவதாரடி ஞானப்பெண்ணே.''

கோயிந்தன் செருமிக்கொண்டான்.

''அதனால மொட்டையடிச்சு மொகத்த மழிச்சுக்கிட்டீகளாக்கும்.''

''அப்படியும் நாதாந்த வெட்டவெளி கிட்டலயே.''

''கண்ண மூடிக்கிட்டா இந்த மடங்கூட வெட்டவெளிதான் சாமி.''

''காவியுடுத்தித் தேடியலஞ்சு களச்சுப்போயிட்டேன்.''

''இங்க தவிப்பாறுங்க. தேடுனதெல்லாம் கெடைக்கும்.''

மாடப்பன் ஆறுதலாகச் சொன்னான்.

''காடே மேடேன்னு அலஞ்சதெல்லாம் போதும். கடசிக் காலத்துல சந்தோசமா இருங்க.''

''இனிமே சந்தோசமென்ன சந்தோசம் சாமி.''

''ஊருல புள்ளீகளப் பத்திக் கேக்க மாட்டீகளா.''

''நான் கைகழுவீட்டுப் போன புள்ளைகளைப் பத்தி என்னத்தக் கேக்கிறது. மனசு கூசுது. நான் போகயில மூத்த பொண்ணு மட்டுந்தான் வெவரம் தெரிஞ்சு தெடமாருந்தாக. மத்த ரெண்டு பேரும் சின்னப் புள்ளைக.''

''இண்ணைக்கு எல்லாரும் புள்ளகுட்டியப் பெத்து பெரிய மனுசராயிட்டாக. சும்மா சொல்லப்புடாது. பெரிய பூச்சம்மா வைராக்கியமா இருந்து எல்லாரவும் கரையேத்தீருச்சு. அவுகளும் முன்னப் போல தெடாரிக்கமா இல்ல. வெளிய நடமாட்டம் கொறஞ்சிருச்சு.''

''எல்லாரும் உள்ளூருலதான் இருக்காகளா.''

''மூத்த பொண்ண உள்ளூருல குடுத்துருக்கு.''

''ஆருக்கு.''

''தெக்கு வீட்டுக் கிட்ணசாமி நாய்க்கரு மகன் சங்கரசுப்புக்கு. நல்ல மனுசருக.''

''சரி.''

‘‘ரெண்டாவது மக கெழக்க மலப்பட்டிக்குப் போயிருக்கு. மாப்பிள பேரு வெள்ளச்சாமி நாய்க்கரு. பெருத்த குடும்பம்.’’

‘‘சரி.’’

‘‘சின்னவருக்கு வேப்பங்காடு பரசுராம நாய்க்கரு வீட்ல பொண்ணெடுத்துருக்கு. சின்னப் பூச்சம்மா பேரு நாச்சியாரம்மா. எந்நேரமும் சிரிச்ச மொகமாவே இருக்கும். தங்கக் கொணம்.’’

‘‘சரி.’’

‘‘கொழந்தகுட்டிகளப் பெத்து அவுகவுக பாட்டுக்குச் சந்தோசமா இருக்காக. மூத்தவுகளுக்கு ஒரு ஆம்பளப் புள்ள ஒரு பொண்ணு. நடுவுளவுகளுக்கு ரெண்டு பொண்ணு ஒரு பையன். சின்னவருக்கு ஒரே பொண்ணு. காலு நெறையா கொலுசு போட்டுக்கிட்டு சிலுக்சிலுக்னு நடந்து திரியிது. அந்தக் குடும்பத்தப் பத்தி அப்பப்ப வெசாரிச்சுக்கிருவென்.’’

‘‘எல்லாரும் நல்லாருந்தாச் சரி.’’

‘‘அவுக நல்லாத்தான் இருக்காக. என்ன நீங்க இல்லாறதுதான் கொற.’’

‘‘நான் இருந்தாத்தான் என்ன செஞ்சிருக்கப்போறென். எல்லாம் அவுக அம்மா பாத்துக்கிருவாக.’’

‘‘குடும்பத்துல ஆராச்சும் ஒருத்தரு பொறுப்பா இருந்து கவனிச்சுக்கிறணுமில்ல சாமி. என்ன சொல்றீக.’’

‘‘அது சரிதான்.’’

அவருக்குள் திரண்டு புரண்ட நினைவுகள் பாத்திகட்டின. அவர்களுக்கிடையே பேச்சு அமுங்கி மூச்சு கேட்கத் தொடங்கியது.

## 8. கழுத்துப் புண்

ஆண்டாள் வாதனைக் காலத்தையெல்லாம் தாண்டிவிட்டாள். உடம்பும் மனசும் மக்கிப்போன குப்பையாக இறுகிப்போனது. சீதாலட்சுமியும் விசயலட்சுமியும் வளர்ந்துவிட்டார்கள். அல்லுண்டு கலியாணமாகாமல் அப்படியே இருந்துவிட்டார். பெருமாள்சாமிக்கு வயசாகியிருந்தது. அவனுக்கு ஒரு துணையைத் தேடிக் குடும்பமாக்கிவிடணும். பெத்தபோடுக்கு அது பெரிய கவலை. தன் கண்ணுக்குப் பின்னால் ஆண்டாளுக்கு ஒரு பிடிமானமும் ஆதரவும் வேணுமே. தனக்குப் பிறகு அல்லுண்டு வீட்டிலிருப்பாரா என்று தெரியவில்லை.

அவர் மகளிடம் தன் விருப்பத்தைச் சொன்னபோது அவள் மறுக்கவில்லை. அடுத்த மாசமே பெருமாள்சாமிக்கும் சீதாலட்சுமிக்கும் பெரிய அளவில் கலியாணம் நடந்தது. வேப்பங்காடு பறைக் குடி சக்கிலியக் குடியிலிருந்தும் கலிங்கலிலிருந்தும் நிறைய பேர் வந்து தொழுவில் உட்கார்ந்து வயிறு புடைக்கச் சாப்பிட்டுவிட்டுப் போனார்கள். நெத்திலி வேலம்மாளுக்குப் புதுச் சீலை கிடைத்தது.

ஆண்டிக் குடும்பத்தில் வேலாண்டிக்கும் பெத்தபோடுக்கும் நல்ல பழக்கம். ஆத்திரம் அவசரத்துக்கு அவரிடம் கைமாத்தாகப் பணம் வாங்கிக்கொள்வான். அடுத்த வெள்ளாமையில் கொடுத்துவிடுவான். விதைப்பு நேரங்களில் அவன் வீட்டிலிருந்து சில விதைப் பண்டங்கள் வேப்பங்காட்டுக்குப் போகும். பெத்த

போடு அவனை ஆண்டி என்றுதான் கூப்பிடுவார். தைப்பொங்கலுக்குப் பெரிய வாழைத் தாருடன் சந்திக்க வந்துவிடுவான். புது வேட்டி துண்டு கிடைக்கும்.

கலியாணத்தன்று அல்லுண்டு மட்டும் முகத்தில் களையில்லாமல் இருந்தார். கோடியுடுத்தவில்லை. அவருக்கு வருத்தம். சீதாலட்சுமியைத் தன் அக்கா மகனுக்குக் கொடுக்க நினைத்திருந்தார். அதை அவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் ஆண்டாளிடம் தெரிவித்ததில்லை. கலியாணம்பற்றி அவள் தன்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருந்தால் அந்தச் சந்தர்ப்பத்தில் தன் விருப்பத்தைச் சொல்லியிருப்பார். கேட்கவில்லையே. கைவசம் முறைமாப்பிள்ளை இருக்கும்போது முந்திக்கொண்டு அவளிடம் எப்படிச் சொல்வது. அவளது குழந்தைகள்மேல் சொந்தம் கொண்டாடுவதும் சரியில்லை. சின்னவளுக்கு மாலை பூக்கும்போதாவது கேட்கிறாளா பார்க்கலாம்.

கலியாணம் நடந்தது நேற்று போலிருக்கிறது. அதுக்குள் சீதாலட்சுமி ரெண்டு பிள்ளைக்குத் தாயாகிவிட்டாள். மூத்தவள் தேவகி. ரெண்டாவது ராமலிங்கம். ஆண்டாள் அவர்களைச் சீராட்டி வளர்த்து ஆறுதலடைந்தாள். ராமலிங்கம் அவ்வாவை விட்டுப் பிரிவதேயில்லை. அவள் தோட்டத்துப் பக்கம் போவதைக் குறைத்துக்கொண்டாள்.

வேலம்மாளுக்கும் வயசாகிவிட்டது. பார்வை பத்தவில்லை. புருசன் சோணையன் இறந்து நாளாயிற்று. அவளுக்கு ஒரே பெண் மூக்கி. அவளையும் உள்ளூரில் வெடக்கனுக்குக் கொடுத்து மூணு பயல்களைப் பெற்றுவிட்டாள். வேலம்மா பேரன்மார்களுக்குப் பேறுகாலம் பார்த்ததுடன் சரி. அதோடு நிறுத்திக்கொண்டாள். எப்போதாவது நோய்நொடிக்குக் கைமருந்து கொடுப்பாள்.

பேறுகாலத் தொழில் அவளோடு முடிந்தது. மூக்கி அதைத் தொட மறுத்துவிட்டாள். ஈடுபாடு இல்லாதவளிடம் திணிக்கவா முடியும்.

அவள் மகளிடம் போகாமல் தனியாகவே குடியிருந்தாள். அவளுக்குக் கீரையென்றால் உயிர். சோறே வேணாம். கீரையில்தான் எத்தனை வகை. எத்தனை ருசி. தொயில் சாரணத்தி வெற்றிலைத் துடுப்பு சிறு துடுப்பு கோழிக் கீரை அங்கள வாளக் கீரை முருங்கை பசலி பூசணி வெள்ளைச் சாரணத்தி அரைக்கீரை சிறு கீரை தண்டு அகத்தி புளிச்சி வெங்காயத்தாள் பிரண்டை... எதையெதை அவித்துக் கடையணும் வதக்கணும் பொறிக்கணுமென்று கணக்கு வைத்திருப்பாள். அகத்திக் கீரையை அவித்து நீச்சுத் தண்ணீர் ஊற்றி உப்புப் போட்டு வைத்துக்கொண்டால் ஒரு வாரத்துக்கு வரும்.

எப்போதாவது ஆண்டாளிடமிருந்து தகவல் வந்தால் போவாள். தோட்டத்தில் சந்தித்துக்கொள்வார்கள். பேசித் தீர்த்து லேசாகி வீடு திரும்புவார்கள்.

பெத்தபோடு தவறிவிட்டார். பூவரசுக் கட்டிலைச் சுவரில் சாத்திவிட்டார்கள். பெருமாள்சாமிக்கு இப்போதுதான் நிழலின் அருமை தெரிந்தது. அல்லுண்டு ஆடிப்போனார். பயமாக இருந்தது. ராத்திரி சரியாக உறக்கம் பிடிக்கவில்லை. என்னென்னமோ நினைவுகள். உறங்கினாலும் ஏதேதோ கனா.

ஒரு சோடிக் காளைகள் இருபுறமாக நின்று கோவ மூச்சை அவர்மீது கக்கியபடி முட்டிமுட்டி எழுப்புகின்றன. அவரது உடம்பைக் கொம்பில் மோக்காலாகப் பூட்டி குப்பைக்குச் சுமந்துபோய் பொத்தென்று கீழே போடுகின்றன. அவர் எழுந்து உட்கார்ந்து மிரண்டு முழிக்கிறார். நாவு அண்ணத்தில் ஒட்டிக்கொள்கிறது.

காளைகள் கொம்பினால் குப்பையைக் குத்திக் கிளறி குழிதோண்டுகின்றன. குழிக்குள் எலிகளைப் போல் கீச்சுக் குரல்கள் கேட்கின்றன. திடீரென்று முண்டிக் கொண்டு சின்னச்சின்ன உருவங்கள் வெளியேறுகின்றன. தலைமுதல் கால்வரை ஏக வெள்ளை. தெளிவற்ற முகம். நீண்ட கைகள். தலையில் சாணிக் கூடையும் தோளில் மம்பட்டியுமாகக் குப்பையிலிருந்து விடுதலை கிடைத்த ஆனந்தத்தில் அவை தாண்டவமாடுகின்றன. அவற்றுடன் சேர்ந்து காளைகள் கொஞ்ச நேரம் ஆடிவிட்டு ஓடி மறைகின்றன.

உருவங்கள் அவரைக் குழிக்குள் உட்கார வைத்துச் சுற்றிவந்து மாரடிக்கின்றன.

> ''கத்தரிக்கா எங்களுக்கு எங்களுக்கு
> கைலாசம் ஒங்களுக்கு ஒங்களுக்கு...''

மம்பட்டியால் குப்பையைக் கூடையில் அள்ளி அவரை மூடி மிதிக்கின்றன. அவருக்கு மூச்சு முட்டுகிறது. ஒட்டிய நாவை இன்னும் பிய்த்தெடுக்க முடிய வில்லை. முட்டித் தவிக்கும் மூச்சு தணிந்து அடங்கும்போது தெருக்கோடியில் வெள்ளை உருவங்களின் குரல் தெளிவில்லாமல் கேட்கிறது.

> ''பூலோகம் எங்களுக்கு
> மேலோகம் ஒங்களுக்கு...''

கொட்டக்கொட்ட முழித்திருந்து விடியக் கருக்கலில் குப்பைக்கு விரைந்து குழியைத் தேடினார். காயப்படாமல் மூடியே இருந்தது.

ஆண்டாளுக்கு இப்போது தம்பிதான் எல்லாம். வேறு வழியில்லாமல் விசயலட்சுமியையும் அவனிடமே ஒப்படைத்துவிட்டாள். அல்லுண்டுக்கு வருத்தம் ஆழமாகியது. வீடு வெறுத்துக் கிடந்தது. வேலையில் ஆர்வமில்லை. பெரும்பாலான நேரம் பெருமாள் கோயிலில் கழிந்தது. சிலநாள் ராத்திரிகூட அங்கேயே படுத்துக்கொண்டார்.

விசயலட்சுமிக்கு பெத்தபோடு நாரணப்ப நாய்க்கர் நாராயணசாமியாகப் பிறந்திருந்தார். அவரைப் போலவே வாட்டசாட்டமான கைகால்கள். நீள விரல் கள். திரண்ட கண்கள். கதிப்பான மூக்கு. பெரிய வாய். ஆண்டாள் சீண்டினாள்.

''பெத்தபோடு போயிருச்சு. சித்தபோடு வந்துருச்சு.''

அல்லுண்டுக்கு முன்னைப் போல் ஓடியாடி அலைய முடியவில்லை. இருந்து குடும்பத்தைத் திடமாக மேல்பார்க்க முடியுமென்ற நம்பிக்கை போய்விட்டது. ஆப்பு கழன்ற மம்பட்டியாக மனசுக்குள் அசைவு. ஆண்டாள் தூரத்தில் இருந் தாள். துணிமணிகளைக்கூட எடுக்காமல் யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் உழைத்து ஓய்ந்த மாடாக ஊரை விட்டுக் கிளம்பிவிட்டார். மனசை மீறிக் கால்கள் குமாரபுரத்துக்கு நடந்தன.

ஆண்டாள் அழுது முடித்துத் தம்பியைக் குமாரபுரத்துக்கு அனுப்பினாள். அல்லுண்டு அங்கே இருப்பதை அறிந்த பிறகுதான் நிம்மதி. பெருமாள்சாமி எவ்வளவோ வற்புறுத்திக் கூப்பிட்டும் மறுத்துவிட்டார்.

ஊரடங்கிய ராத்திரியில் அவர் தலையில் குப்பைக் கூடையும் தோளில் மம்பட்டியுமாகப் பாரம் சுமந்து போன கோலம் ஆண்டாள் மனசில் ஆழமாகப் பதிந்திருந்தது.

## 9. கண்டுகொண்டேன்

கலிங்கலில் சாமியார் எல்லாரிடமும் சகஜமாகப் பழகினார். சிறிசுமுதல் பெரிசுவரை ‘சாமி’ ‘தாயி’ என்று வாய்நிறையக் கூப்பிட்டார். சாதி முறைப் படியும் சாமியார் என்ற முறையிலும் அவர் ஊர்ச் சனங்களுக்கு ‘சாமி’.

அவர் சின்னச்சின்னத் தொழில் செய்துகொடுத்துச் சனங்களுக்கு உதவினார். வால் கயிறு முக்குணிக் கயிறு வாளிக் கயிறு திரித்தார். காய்ந்த புல்லை நனைத்து நார்க்கட்டு போட்டு இறுக்கி விளக்கமாறாக்கினார். பனஞ்சில்லாடை வடிமா றானது. கட்டுக்கொடி வடிதட்டாக உருவானது. அதுக்காகக் காசு கொடுத்தார்கள்.

‘‘வேணாந் தாயி. சோறு குடுக்கீகளே அது போதும்.’’

‘‘போடுற ஒரு கையி கஞ்சிக்கு ஊழியம் செய்றீகளாக்கும். துட்ட வாங்க லன்னா இனிமே கிட்ட வர மாட்டொம். கஞ்சிக் கணக்குப் பாக்காராம் கணக்கு.’’

தயக்கத்தில் வாங்கி முடிந்துகொண்டார்.

கம்மாய்க்குப் போகிற வழியில் வெள்ளாவிப் பக்கம் சாத்தன் தட்டுப்பட் டான். நின்று விசாரித்தார்.

‘‘எப்படியிருக்கீக சாமி. வீட்ல எல்லாரும் நல்லாருக்காகளா.’’

‘‘எல்லாரும் நல்லாருக்கொம் சாமி.’’

‘‘நான் திரிச்சுக் குடுத்த கம்பிளிக் கயித்த கழுதைக்குக் கெட்டீருக்கீக போல ருக்கு. லச்சணமாருக்கு.’’

‘‘பொட்டக் கழுதையாச்சே. போட்டாத்தான நல்லாருக்கும். இல்லன்னா கழுத்து வெறிச்னு கெடக்குமே.’’

‘‘பொண்ணுன்னா போட்டு அழகுபாக்க வேண்டியதுதான்.’’

‘‘கொஞ்ச நாளா சாமி இந்தப் பக்கம் தட்டுப்படக் காணுமே.’’

‘‘ஒங்க பேரப்புள்ள ஊருணிக்கு வந்துருவாக. எல்லா வேலையும் மரத் தடியில முடிஞ்சிரும்.’’

‘‘அப்படியா.’’

புறப்படும்போது அவர் கேட்டார்.

‘‘ஒங்களுக்குப் போட்டியா வந்துட்டனோ. மனசில உறுத்திக்கிட்டே இருக்கு.’’

‘‘அப்படியெல்லாம் நெனைக்காதங்க சாமி. நாலஞ்சு வீட்டுச் சோத்தால எங்களுக்கு ஒண்ணும் ஆயிறாது.’’

சாமியாரைப் போல் பாதக்குறடு போட்டு நடக்கணுமென்று பயல்களுக்கு ஆசை. கூடிப் பேசினார்கள்.

‘‘காஞ்ச பன மட்டையச் செதுக்கிச் செருப்பாக்கீருவமா.’’

‘‘அது கடுவலாருக்கும். பச்சப் பன மட்டதான் தோதாருக்கும்.’’

வடலிப் பனையில் மட்டை வெட்டிச் சப்பட்டையாகச் சீவி முன்புறம் துளையிட்டு நார் கோர்த்துப் பெரிய முடிச்சுப் போட்டு அழகுபார்த்தார்கள்.

‘‘பச்சச் செருப்பு நல்லாத்தான் இருக்கு.’’

நார் முடிச்சைப் பெருவிரலிடுக்கில் பற்றிப் பிடித்துக்கொண்டு தோரணை யாக நடந்து பழகினார்கள். தொடர்ந்து நாலெட்டு வைக்க முடியவில்லை.

தடுமாறி விழுந்து கையுங்காலும் புண்ணானதுதான் மிச்சம். வலியை மறந்து சிரித்துக் கூத்தாடினார்கள். சாமியாரிடம் புண்ணுக்கு மருந்து போட்டுக்கொண் டார்கள். அவர் கேட்டார்

"இவ்வளவு பேருக்கும் எப்படி ஒரே சமயத்துல புண்ணாச்சு."

"எல்லாரும் சேந்து ஒரே சமயத்துல வுழுந்துட்டொம்."

"எப்படி."

"அது அப்படித்தான் சாமி."

சிரித்து மழுப்பிக்கொண்டு ஓடிவிட்டார்கள்.

ராத்திரி நேரம் அவரைச் சுற்றி ஒரு கூட்டமே கூடிவிடும். கோயிலுக்குள் போகிறமாதிரி பயபக்தியுடன் மடத்துக்குள் நுழைந்து நின்று நிதானித்து "சாமி சாப்பிட்டாச்சா" என்று கேட்டுக்கொண்டே உட்காருவார்கள். முன்வரிசையில் முண்டியடித்துக்கொண்டு சிறிசுகள். சீனித்தாயின் பிள்ளைகள் இல்லாத கூட்டமா.

அவர் தொண்டைக்குள் குரலை மெருகேற்றிப் பாட்டுக்குத் தயாராவார். தாளத்துக்குத் தனிக் கருவியேதும் கிடையாது. கைக்கம்பின் அடிப்பக்க இரும்புப் பூணை கல் படியில் மெல்லத் தட்டுவார். தாளத்தின் சுதி ஏறி அடியெடுத்துக் கொடுக்க இடது கைவிரல்கள் செம்புக் காசினால் கமண்டலத்தில் எழுப்பும் மணி நாதம் தாளத்துடன் இணைந்திசைக்கக் காவடிச்சிந்து கட்டுடைக்கும்.

"ஆறுக்கு மூணடியாம்
அழகான மண்ணடியாம்
அழகான மண்ணடியாம்
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன - நீ
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன.

அலங்காரத் தேரோடும்
அழுதுவரும் ஊர்கோலம்
கலங்காற மனசெல்லாம்
கண்ணீரில் வழியனுப்பும்
நல்லாரும் பொல்லாரும்
இல்லாரும் உள்ளாரும்
எல்லாரும் ஒண்ணாகும்
ஏகாந்த ஊராகும்
காட்டில் இருந்தபடி
வீட்டுக்கு விடுதலையாம்
நீட்டி நிமிந்தபடி
நெரந்தரமா நித்திரையாம்
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன - அந்த
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன.

ஒருகாணி மண்ணுக்கு
ஓயாற சண்டைகளாம்

அருவாளாம் ஆயுதமாம்
அடங்காற தாண்டவமாம்
கல்லாகி மண்ணாகி
புல்லாகி பூண்டாகி
இல்லாமப் போறதுக்கு
பொல்லாற நாடகமா
நாடி தளந்தபின்னும்
நாடகந்தான் மாறலயே
ஆடி முடிஞ்சபின்னும்
ஆங்காரம் தீரலயே
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன - சொந்த
ஊருக்குப் போறதென்ன - எஞ் சின்னண்ணேன்
ஒன்னோட வாறதென்ன.''

மடத்தின் கனமற்ற எதிரொலி குரலை உச்சத்துக்குக் கொண்டுபோகும். எல்லாரையும் இன்னொரு லோகத்துக்கு ஏற்றிச் செல்லும் சஞ்சாரம்.

அவர் கண்திறந்து தன்னிலைக்குத் திரும்ப நேரமாகும். எதிரில் இருப்பவர்கள் மாண்டு மடிந்து மயக்கம் தெளிந்து மீண்டுவர இன்னும் தாமதமாகும். சிலர் கண்ணீரைத் துடைத்துக்கொள்வார்கள். எழுந்து போகும்போது அவர்களின் பேச்சு கேட்கும்.

''ஆறடிக்குள்ள அடங்குறதுக்குத்தானா வக்காளி இந்த ஆட்டம் போடுறொம்.''

''நமக்குச் சொந்த ஊரு அதுதான்.''

''இப்பயே போயிச் சேந்துறலாம் போலருக்கு.''

ஒவ்வொரு நாளும் தேவாரம் திருப்புகழ் பட்டினத்தார் பாடல்கள் என்று வெவ்வேறு பாடல்களால் சனங்களை நனைப்பார். அதுக்காகவே அவர்கள் வேலை முடித்து நேரமிருக்கவே வீடு திரும்பிவிடுவார்கள்.

அவர் குழந்தைகளுக்குத் திருநீறு கொடுத்து அவர்களின் பேரைத் தெரிந்து கொண்டு மறக்காமல் அடுத்த முறை விசாரிப்பார்.

''முனியாண்டி சாமி எப்படியிருக்கீக... தாயீ பார்வதி நல்லாருக்கீகளா...''

ஒரு நாள் சீனித்தாயின் குழந்தைகளிடம் பேர் கேட்டார்.

''எம் பேரு சுந்தரலிங்கம்.''

''எம் பேரு முத்துலச்சிமி.''

அவர் நெஞ்சில் மாறிமாறிச் சாட்டையடி விழுந்தது. கொஞ்ச நேரம் பேச்சற்றுத் துடித்துப்போனார். கிணற்றுக்குள் தூர்ந்துகிடந்த ஊற்று திடீரெனப் பீச்சியடிக்கும் குளிர்ச்சி. மனசு விம்மியது. மற்ற குழந்தைகளை அனுப்பிவிட்டு அவர்கள் இருவரையும் அருகில் இருத்திக்கொண்டார். அவர்களைக் கண்கொட்டாமல் பார்த்தபடி பேச்சுக்கொடுத்தார்.

''ஒங்கய்யா பேரென்ன.''

சுந்தரலிங்கம் சுதாரிப்பாகச் சொன்னான்.

''ரத்தினம்.''

கேட்கும் முன்னரே முத்துலட்சுமி சொன்னாள்.

‘‘எங்கம்மா பேரு சீனித்தாயி.’’

அவருக்குக் கண்ணீர் திரண்டு உருண்டது. துடைத்துக்கொண்டு அவர்களை வருடினார்.

‘‘அப்படியா தாயி. தாத்தா பேரென்ன.’’

‘‘இங்கருக்கிற தாத்தா பேரு திருவாத்தன். ஊருலருக்கிறது மாடப்பத் தாத்தா.’’

‘‘ஊருத் தாத்தா வருவாகளா.’’

‘‘வரும். திம்பண்டம் வாங்கித் திங்கத் துட்டுக் குடுக்கும்.’’

‘‘கடையில என்ன பண்டம் வாங்குவீக.’’

‘‘சேவு சீனிக்கெழங்கு பெறகு பொரிகடல...’’

‘‘பள்ளிக்கூடம் போறீகளா.’’

‘‘ஆமா. வேப்பங்காடு வேதப் பள்ளிக்கொடத்துல படிக்கொம். அண்ணன் மூணாப்பு. நான் ரெண்டாப்பு.’’

‘‘நல்லாப் படிக்கணும்.’’

தன் கையால் அவர்களுக்குத் திருநீறு பூசி அனுப்பினார்.

‘‘பத்தரமாப் போங்க.’’

அன்றைக்கு உறக்கங்கெட்டு உழத்திக்கொண்டே கிடந்தார். பலப்பல நினைவுகள் கடிவாளத்தைத் துப்பிவிட்டுக் கண்டமானக்கி ஓடின. அவை கிளப்பும் புழுதிக்குப் பயந்து கண்ணை மூடினார்.

புழுதி மெல்லமெல்லக் கலைகிறது. இரு குழந்தைகள் பூனைபோல் பதுங்கி வந்து கண்களை விரித்துத் திறந்து கிட்டக் குனிந்து பயங்காட்டுகிறார்கள்.

‘‘பே...’’

பிறகு அவர்மீது ஏறி இறங்கி மார்பிலும் வயிற்றிலும் சவாரிவைத்துக் குதித்து உடம்பைப் புரட்டியெடுக்கிறார்கள். அவருக்குச் சொகமாக இருக்கிறது. ஒரு கொஞ்ச வயசுப் பெண் குழந்தைகளை அரட்டுகிறாள்.

‘‘இப்ப சும்மாருக்கப்போறீகளா ஓத வேணுமா. அது ஆருன்னு தெரியுமா.’’

அவளைவிட மூத்த பெண் சிரிப்பில் வேடிக்கை பார்க்கிறாள்.

‘‘நீ சும்மாரு. தெரிஞ்சுதான வெளையாடுதுக. பெரிசுக்கும் சிறிசுக்கும் ஆச தீரட்டும்.’’

மூத்தவளுக்கும் மூத்தவள் கோவத்தில் இரைகிறாள்.

‘‘சாதி கெட்ட கழுதைகளுக்கு வெளையாட்டு வேறயா. ஓங்களுக்கு அம்புட்டு எளக்காரமாப் போச்சு.’’

குழந்தைகள் ஓடி மறைகிறார்கள்.

மூணு பெண்களையும் காணவில்லை. ஊசியாகக் குத்தும் தனிமை. முருகனையும் வள்ளியையும் துணைக்கு அழைத்தார். முருகன் மாறுவேசத்தில் வந்து வள்ளியைச் சீண்டினார்.

‘‘கஞ்சிக்கும் காடிக்கும்
கைக்குறி பாத்தது
உண்மையா - வள்ளி
இல்லையா - அந்தக்

கந்தக் கடவுளுக்கு
பொண்டாட்டி யானது
உண்மையா - வள்ளி
இல்லையா.''

வள்ளி ஒப்புக்கொண்டாள்.

''உண்மதான் - சாமி
உண்மதான்.''

முருகன் தெய்வானையைச் சமாதானப்படுத்தினார்.

''உண்டவர் தூற்றினால்
கண்டவர் கேவலம்
தேவியே தெய்வானையே - ஏனம்மா
தேவியே தெய்வானையே
உற்றதோர் அவமானம்
உந்தனுக் கில்லையா
தேவியே தெய்வானையே.''

நாவறட்சியில் கமண்டலத்தைத் தேடினார்.

## 10. வண்ணாக்குடி வம்சாவளி

வண்ணாக்குடி வம்சங்கள் குறுக்கும் நெடுக்குமாக விழுதுவிட்டு வேரூன்றித் தழைத்துத் தனிமரங்களாக வளர்ந்து காய்த்தன. பழுத்துதிர்ந்து முளைத்தன.

கலிங்கலில் பட்டமாண்ட அல்லாத்தனின் வம்ச வரலாறு :

அல்லாத்தன் வட தேசத்தில் மொன்னச்சியை மணந்தான். முனியம்மா முத்துக்காளி என்ற குமாரத்திகளும் மாரி என்ற குமாரனும் பிறந்தார்கள்.

முனியம்மாளும் முத்துக்காளியும் மணமாகி அயல் தேசம் சென்றார்கள்.

மாரி வட தேசத்தில் அனந்தியை மணந்தான். மருதன் என்ற குமாரனும் அல்லாத்தி என்ற குமாரத்தியும் பிறந்தார்கள்.

மருதன் அயல் தேசத்தில் மாடத்தியை மணந்தான். சின்னமாரி சாலமுத்து என்ற குமாரர்களும் சின்னனந்தி என்ற குமாரத்தியும் பிறந்தார்கள்.

சின்னமாரி அயல் தேசத்தில் மருதியை மணந்தான்.

சாலமுத்து அயல் தேசத்தில் சக்கம்மாளை மணந்து கலிங்கலிலிருந்து பிரிந்து வேப்பங்காடு சென்று தனித் தேசம் அமைத்துப் பட்டம் சூடிக்கொண்டான்.

சின்னனந்தி பொத்தையனை மணந்து சத்திரப்பட்டியில் புகுந்தாள்.

சின்னமாரி மருதியை அறிந்தான். அய்யம்மா என்ற குமாரத்தியும் மாடன் என்ற குமாரனும் பிறந்தார்கள்.

அய்யம்மாளைக் கிழக்குச் சீமையின் பூலான் மணந்து சத்திரப்பட்டியில் கலந்தான்.

மாடன் பொத்தையனின் குமாரத்தி அழகியை மணந்து கலிங்கலில் கலந்தான்.

அய்யம்மாளுக்கும் பூலானுக்கும் வாரிசு இல்லை. மாடனின் குமாரன் சாத்தனும் மருதப்பனின் குமாரத்தி பால்குருவும் சத்திரப்பட்டியிலிருந்து பிரிந்து கலிங்கலில் கலந்தார்கள்.

சாத்தன் பால்குருவை அறிந்தான். வெள்ளையன் இருளாண்டி என்ற குமாரர்கள் பிறந்தார்கள்.

வெள்ளையன் வேப்பங்காடு சங்கரனின் குமாரத்தி பொம்மக்காளை மணந்தான்.

இருளாண்டி அயல் தேசத்தில் முத்துராக்கை மணந்தான்.

வெள்ளையன் பொம்மக்காளை அறிந்தான். பூமாடத்தி என்ற குமாரத்தியும் மாரிமுத்து மூக்கன் என்ற குமாரர்களும் பிறந்தார்கள்.

இருளாண்டி முத்துராக்கை அறிந்தான். பழனி செவனாண்டி என்ற குமாரர்களும் தேனாத்தா முருகலட்சுமி என்ற குமாரத்திகளும் பிறந்தார்கள்.

பூமாடத்தி மணமாகி அயல் தேசம் சென்றாள்.

மாரிமுத்து அயல் தேசம் சென்று ராசலட்சுமியை மணந்து அங்கேயே ராச்சியம் அமைத்துக்கொண்டான். அவர்களுக்கு சேகர் என்ற குமாரன் பிறந்தான்.

மூக்கனுக்கு மணமாகவில்லை.

பழனி வேப்பங்காடு சின்னானின் குமாரத்தி சுந்தரியை மணந்தான். முத்தழகி என்ற குமாரத்தி பிறந்தாள்.

செவனாண்டி தேனாத்தா முருகலட்சுமி ஆகியோருக்கு மணமாகவில்லை.

கலிங்கலில் இறப்பு பன்னிருவர். அல்லாத்தன் மொன்னச்சி மாரி அனந்தி மருதன் மாடத்தி சின்னமாரி மருதி அய்யம்மா பூலான் பால்குருவு பொம்மக்கா.

ஆக இருப்பு பதினொருவர். சாத்தன் வெள்ளையம்மா இருளாண்டி முத்துராக்கு மூக்கன் பழனி சுந்தரி முத்தழகி செவனாண்டி தேனாத்தா முருகலட்சுமி.

மூக்கன் பட்டமாண்டு வந்தான்.

## வேப்பங்காட்டில் பட்டமாண்ட சாலமுத்தின் வம்ச வரலாறு :

சாலமுத்து அயல் தேசத்தில் சக்கம்மாளை மணந்தான். பூவாயி என்ற குமாரத்தி பிறந்தாள்.

பூவாயி சத்திரப்பட்டி பொத்தையனின் குமாரன் மருதப்பனை மணந்தாள். சாலமுத்துக்கு ஆண் வாரிசு இல்லாததால் மருதப்பன் சத்திரப்பட்டியிலிருந்து பிரிந்து வேப்பங்காடு வந்து பட்டம் சூடினான். சங்கரன் என்ற குமாரனும் பகட்டி பால்குருவு என்ற குமாரத்திகளும் பிறந்தார்கள்.

சங்கரன் அயல் தேசத்தில் பிராட்டியை மணந்தான்.

பகட்டி மணமாகி அயல் தேசம் சென்றாள்.

பால்குருவு மாடனின் குமாரன் சாத்தனை மணந்து கலிங்கலில் இணைந்தாள்.

சங்கரன் பிராட்டியை அறிந்தான். வெள்ளச்சி பொம்மக்கா என்ற குமாரத்திகளும் சின்னான் என்ற குமாரனும் பிறந்தார்கள்.

வெள்ளச்சி மணமாகி அயல் தேசம் சென்றாள்.

பொம்மக்கா சாத்தனின் குமாரன் வெள்ளையனை மணந்து கலிங்கலில் புகுந்தாள்.

சின்னான் கிழக்குச் சீமையில் கிட்ணியை மணந்தான். முனியசாமி என்ற குமாரனும் சுந்தரி கண்ணம்மா என்ற குமாரத்திகளும் பிறந்தார்கள்.

சுந்தரி இருளாண்டியின் குமாரன் பழனியை மணந்து கலிங்கலில் புகுந்தாள்.

முனியசாமிக்கும் கண்ணம்மாளுக்கும் மணமாகவில்லை.

இறந்தவர்கள் நால்வர். சாலமுத்து சக்கம்மா பூவாயி மருதப்பன்.

ஆக வேப்பங்காட்டில் இருப்பு ஐவர். சங்கரன் சின்னான் கிட்ணி முனிய சாமி கண்ணம்மா.

முனியசாமி கடைசிப் பட்டமாண்டுவந்தான்.

சத்திரப்பட்டியில் பட்டமாண்ட பொத்தையனின் வம்ச வரலாறு:

பொத்தையன் கலிங்கல் மருதனின் குமாரத்தி சின்னனந்தியை மணந்தான். மருதப்பன் என்ற குமாரனும் அழகி என்ற குமாரத்தியும் பிறந்தார்கள்.

மருதப்பன் வேப்பங்காடு சாலமுத்தின் குமாரத்தி பூவாயை மணந்து சத் திரப்பட்டியிலிருந்து பிரிந்து வேப்பங்காடு சாலமுத்து வம்சத்துடன் கலந்தான்.

அழகியை கலிங்கல் சின்னமாரியின் குமாரன் மாடன் மணந்து கலிங்கலி லிருந்து பிரிந்து சத்திரப்பட்டி பொத்தையன் வம்சத்துடன் கலந்தான். சாத்தன் தவளையன் என்ற குருசாமி ஆகிய குமாரர்கள் பிறந்தார்கள்.

சாத்தன் வேப்பங்காடு மருதப்பனின் குமாரத்தி பால்குருவை மணந்து சத் திரப்பட்டியிலிருந்து பிரிந்து கலிங்கல் அல்லாத்தன் வம்சத்தில் கலந்தான்.

தவளையன் அயல் தேசத்தில் பாப்புவை மணந்தான். அய்யப்பன் என்ற குமாரனும் சின்னத்தாய் முனியம்மா சுப்பக்கா என்ற குமாரத்திகளும் பிறந்தார்கள்.

அய்யப்பன் அயல் தேசத்தில் அழகம்மாளை மணந்தான். பாப்பம்மா பூலாத்தி என்ற குமாரத்திகளும் சித்திரவேலு என்ற குமாரனும் பிறந்தார்கள்.

சின்னத்தாய் முனியம்மா சுப்பக்கா ஆகிய மூவரும் மணமாகி அயல் தேசம் சென்றார்கள்.

பாப்பம்மா பூலாத்தி இருவரும் மணமாகித் தெற்குச் சீமைக்குச் சென்றார்கள்.

சித்திரவேலுக்கு மணமாகவில்லை.

இதில் இறப்பு பொத்தையன் சின்னனந்தி மாடன் அழகி தவளையன் ஆகிய ஐவர்.

ஆக சத்திரப்பட்டியில் இருப்பு பாப்பு அய்யப்பன் அழகம்மா சித்திரவேலு ஆகிய நால்வர்.

சித்திரவேலு பட்டமாண்டு வந்தான்.

கலிங்கலில் பொம்மக்காளுக்கு மூக்குமுட்ட ஆசை. மகன் மாரிமுத்தை எப்படி யாவது நாலெழுத்துப் படிக்கவைத்துவிடணும். நல்ல வேலைக்குப் போய்க் கை நிறையச் சம்பாரிக்கணும். மேல்சாதிக்காரர்களைப் போல் துணிமணியுடுத்தித் தோரணையாக நடப்பதைக் கண்குளிரப் பார்க்கணும்.

அதுக்கேற்றபடி பயல் வாட்டசாட்டமாக இருந்தான். நல்ல நிறம். செம் பட்டை விழாத முடி. புருசனிடம் கெஞ்சினாள்.

''ஒனக்குப் புண்ணியமாப்போகுது. வண்ணாக் குடியில ஒரு பெயலாச்சும் படிச்சான்னு இருக்கட்டும். நான் வாயக் கெட்டி வகுத்தக் கெட்டி வளத்துப் படிக்க வச்சிருவென். அவன மட்டும் வேல ஏவாத.''

வெள்ளையனுக்கும் அப்படியொரு ஆசை இருந்தது.

''அனுப்பி வையி. கெதியுள்ள மட்டும் பாப்பொம்.''

வேப்பங்காடு வேதக் கோயில் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிவைத்தார்கள். ஆரம்பத்தில் அவனுடன் நிறைய பிள்ளைகள் போனார்கள். சன்னஞ்சன்னமாக எண்ணிக்கை குறைந்து பெரிய பட்டத்தில் அவனும் ஆண்டிக் குடும்பன் வம் சத்தில் பூங்கோதையின் மகன் ஆண்டியப்பனும் மட்டுமே அஞ்சாம் வகுப்பைத் தாண்டினார்கள். பொம்மக்காளைப் போலவே பூங்கோதைக்கும் வைராக்கியம் இருந்தது.

பள்ளிக்கூடம் போக ஆரம்பித்ததிலிருந்து மாரிமுத்து ஊர்ச் சோறு சாப் பிட்டதில்லை. ஆத்தா தனியாக உலைவைத்துக் கம்மஞ் சோறு சோளச் சோறு காய்ச்சித் தருவாள். ஊருக்குள் பலகாரம் கிடைத்தால் மடியில் பத்திரப்படுத்திக் கொண்டுவந்து கொடுப்பாள். பண்டம் வாங்கித் திங்கக் காசு கொடுப்பாள். நல்ல துணிமணி வாங்கித்தந்து அழகுபார்ப்பாள். துணியில் இத்தினி அழுக்குப் பட்டு விடக் கூடாது. மெனக்கிட்டுத் துவைத்துக்கொடுப்பாள். அவன் தலைமுடியில் எண்ணெய்ப் பதம் வாடாது.

அவனும் ஆண்டியப்பனும் வேப்பங்காட்டில் அஞ்சு முடித்து மேற்கே சுக்காம்பாறையில் ஆறாம் வகுப்பில் சேர்ந்தார்கள். வாத்தியார் சொல்லிக் கொடுத்தபடி அவர்கள் தாய் தகப்பனை அம்மா அய்யா என்று கூப்பிட்டார்கள். ஆண்டியப்பனுக்கு எட்டாம் வகுப்பில் சைக்கிள் வாங்கிக்கொடுத்தார்கள். மாரிமுத்து நடந்து தவித்தான். ரெண்டு பேரும் ஒரே சைக்கிளில் போகப் பாதை சரியில்லை.

மாரிமுத்தை ஒன்பதாம் வகுப்புக்கு சாட்சியாபுரம் வேதப் பள்ளிக்கூடத் தில் சேர்த்துவிட்டார்கள். அங்கேயே தங்கிப் படித்தான். கஷ்டப்பட்டுப் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டான்.

பொம்மக்கா உருண்டு புரண்டு அவனைப் புதுநகர் காலேஜில் சேர்த்தாள். வெள்ளையனுக்கு மூச்சு முட்டினாலும் சமாளித்தான்.

ஆண்டியப்பனும் பள்ளிப் படிப்பை முடித்திருந்தான். அவனையும் புது நகரில்தான் சேர்த்தார்கள்.

ரெண்டு பேரும் நாலு வருசம் போட்டி போட்டுப் படித்துப் பட்டம் வாங்கி விட்டார்கள். பொம்மக்காளின் ஆனந்தக் கண்ணீருக்கு அளவில்லை.

அந்தச் சமயம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வேலைக்கு ஆளெடுத்தார்கள். மாரிமுத்தும் ஆண்டியப்பனும் எழுதிப்போட்டார்கள். மாரிமுத்துக்குக் கிடைத்து விட்டது. பொம்மக்கா ஊருக்குள் சோறு கேட்கும்போது பெண்கள் கிண்டல் பேசுவார்கள்.

''கொஞ்சம் பொறுத்துக்கோ தாயி. இந்தா கொண்டுவந்துறென். இல்லன்னா ஒம் மகங்கிட்டச் சொல்லிப்புருவ.''

''அப்படிச் சொல்லாதங்கம்மா. நான் எண்ணைக்கும் ஒங்க பொம்மக்கா தான்.''

''என்னருந்தாலும் அதிகாரிக்குத் தாயாச்சே. அதுக்குக் குடுத்துவச்சிருக் கணும். எங்களுக்குந்தான் புள்ளீக பெறந்துருக்குதே.''

''ஒங்க ஆதரவில்லன்னா இம்புட்டுக்கு முடிஞ்சிருக்குமா.''

மாரிமுத்துக்கு சென்னையில் வேலை போட்டுக்கொடுத்தார்கள். வாடகை வீடெடுத்துத் தனியாகத் தங்கியிருந்தான். கடையில் சாப்பிட்டுக்கொண்டான். எப்போதாவது வீட்டுக்குக் கடிதம் எழுதுவான். அப்பப்பப் பணம் அனுப்புவான். ஊருக்குப் போவதில்லை.

ஆண்டியப்பன் கொஞ்ச நாள்தான் வீட்டிலிருந்தான். அவனும் பரீட்சை யெழுதி வேலை கிடைத்துப் போய்விட்டான். சென்னையில் சர்க்கார் கணக்கு வழக்குகளைக் கிண்டுகிற ஆபீசில் இன்ஸ்பெக்டர் வேலை. அவன் மூணு நாலு மாசத்துக்கொருக்க ஊருக்குப் போய் வருவான்.

ஒரே ஊரிலிருந்தும் ரெண்டு பேரும் ரெம்ப நாளாகப் பார்த்துக்கொண்ட தில்லை. ஆண்டியப்பன் தற்செயலாக ஒரு நாள் மாரிமுத்தைப் பார்க்க போலீஸ் ஸ்டேசனுக்குப் போனான். மாரிமுத்தின் முகத்தில் அப்படியொரு கலவரம். பேசத் திணறினான்.

''வாங்கய்யா. எப்படி இருக்கீக. நானே ஒங்களப் பாக்க வரணும்னுருந் தென். ஓயாற வேல.''

''அதனாலதான் நானே வந்துட்டென்.''

''வீட்ல எல்லாரும் நல்லாருக்காகளா.''

''ஒங்க வீட்லயா எங்க வீட்லயா.''

''ரெண்டு வீட்லயுந்தான்.''

''நீதான் ஊருப் பக்கம் எட்டிப் பாக்கிறதே இல்லையாமே. பெத்தவுக எப்படியிருக்காகன்னு மத்தவங்ககிட்டக் கேட்டுத் தெரிஞ்சுக்கிற நெலமையாகிப் போச்சு. ஏதேது அவுக மொகமே மறந்துரும் போலருக்கு. நீ அனுப்புற பணமா முக்கியம். அவக செலவு செஞ்ச பணத்தக் கடனா நெனச்சு அடைக்கயாக்கும். ஒங்கம்மா ஒன்னயப் பாக்கணும்னு எவ்வளவு ஆசையக் கெட்டிவச்சிருக்குது தெரியுமா.''

மாரிமுத்து தலைகுனிந்திருந்தான்.

''எந்த மொகத்தோட போய்ப் பாக்கச் சொல்றீக.''

''ஏன் பழைய மொகம் தொலஞ்சுபோச்சா.''

''என்னென்னமோ நடந்துபோச்சு. வீட்டுக்கு வாங்க பேசுவொம்.''

''ஒண்டிக்கட்ட குடியிருக்கிற வீட்டப் பாக்கணுமாக்கும்.''

''வந்து பாருங்களேன்.''

வீட்டுக்குப் போனார்கள். அங்கே பொட்டும் பூவுமாக ஒரு இளம் பெண் கதவைத் திறந்துவிட்டாள். லட்சுமிகரமான முகம். சந்தன நிறம். மாரிமுத்து கழற்றிக் கொடுத்த காக்கிச் சட்டையை வாங்கிக்கொண்டாள். அவன் அவளிடம் சொன்னான்.

"இது ஆண்டியப்பன். எங்கூருக்காரர். என்னோட படிச்சவர்."

ஆண்டியப்பனுக்குச் சொன்னான்.

"இது எம் மனைவி ராசலச்சிமி."

அவள் ஆண்டியப்பனைப் பார்த்துக் கும்பிட்டாள். அவனும் கும்பிட்டான். உள்ளறையிலிருந்து அழகான குழந்தை தூக்கக் கலக்கத்தில் தடுமாறி நடந்து வந்தது. ஒரு வயசுக்கு மேலிருக்கும். மாரிமுத்து ஓடிப் போய் அதை அள்ளிக் கொண்டான்.

"சேகர் குட்டி எஞ் செல்லக்குட்டி. மாமாவப் பாரு."

ஆண்டியப்பன் கையேந்தினான். அது முகத்தைத் திருப்பிக்கொண்டது. அவன் வாசல் சுவரைப் பார்த்தான். வாசலுக்கு மேலே கணவனும் மனைவியும் உரசிக்கொண்டு சிரித்த முகத்துடன் பெரிய போட்டோ. அடுத்து அம்மணக் கோலத்தில் பொக்கை வாய்ச் சிரிப்பு சிந்தியபடி குழந்தை.

ராசலட்சுமி இருவருக்கும் காபி கொண்டுவந்து கொடுத்தாள். குழந்தை அம்மாவிடம் தாவியது. அவள் முகத்தில் முன்பிருந்த சிரிப்பும் களையும் இப் போது இல்லை. அவர்கள் காபியுடன் மொட்டைமாடிக்குப் போனார்கள்.

ஆளுக்கொரு திசையை வெறித்திருந்தார்கள். ஆண்டியப்பன் கேட்டான்.

"இவ்வளவு தூரத்துக்கு ஆயிக்கிருச்சா. அதனாலதான் ஊருக்கு வர மாட் டங்கயா. ஒங்கம்மா என்னடான்னா புள்ளைக்கு நல்ல எடத்துல பொண்ணு பாக்கணும்னு கெடந்து அடிச்சுக்கிருது. அதுக்கு வேலையே இல்லாமப் பண் ணீட்ட. அது சரிதான் சொந்தச் சாதியில படிச்சு நாகரீகமாருக்கிற பொண்ண எங்க போய்த் தேடுறது. ஊர்ச் சோறு எடுத்துக்கிட்டு ஒவரு முறுக்கிக்கிட்டுத் திரியிற புள்ளதான் இருக்கும். ஆமா பொண்ணு யாரு எந்த ஊரு."

"நாடாரு பொண்ணு. பக்கத்துலதான் மளிகக் கட வச்சிருக்காக. மாடியில வீடு. பூர்வீகம் எட்டயாபுரத்துப் பக்கம். அவ காலேஜுல படிச்சுக்கிட்ருந்தப்ப எவனோ கிண்டல் பண்றான்னு எங்கிட்ட வந்து சொன்னாக. நான் அவனக் கண்டிச்சென். அதுலருந்து அவளோட பழக்கம்."

"அந்தப் பழக்கம் நெருக்கமாயிருச்சாக்கும். நீ யாருன்னு தெரிஞ்சுதான் பழகுனாளா."

"எல்லாம் தெரியும்."

"அப்பச் சரி."

"ரெண்டு பேரு பக்கமும் சொல்லாமக் கொள்ளாமக் கலியாணம் செஞ்சுக்கிட்டொம்."

"அப்படியென்ன அவசரம்."

"அவசரந்தான்."

"ஓகோ."

"ஊருக்குக் கூட்டீட்டுப் போகணும்னா நெலம சரியில்ல."

"மொதல்ல அந்தப் பொண்ணு வரணுமே."

"அது வேற."

"அங்க போனா அழுக்குப் பொதிமேலதான் உக்காரணும்."

''என்னடா செய்றதுன்னு யோசனையாருந்துச்சு. அதுக்குள்ள புள்ளையப் பெத்துக் குடுத்துட்டா.''

''அவ்வளவுக்கு யோசன ஓடீருக்கு. இப்பயாவது வீட்டுக்குத் தெரியுமா.''

''சொல்லல.''

''நானாச்சும் சொல்லலாமா.''

''எப்படியோ தெரிஞ்சுதான ஆகணும்.''

ஆண்டியப்பன் அடுத்த தடவை ஊருக்குப் போனபோது முதல் காரியமாக வண்ணாக்குடிக்குப் போய் பொம்மக்காளிடம் பக்குவமாகப் பேச்சுப்போட்டான். அவள் வேதனையிலும் சந்தோசத்திலும் அழுதாள்.

''வேப்பங்காட்ல சின்னான் மக சுந்தரிப் புள்ளைய முடிச்சுவைக்கலாம்னு நெனச்சிருந்தொம். அவன் இப்படியொரு முடிவத் தேடிக்கிட்டான். என்னருந்தாலும் இந்தப் பாவிகிட்ட ஒரு வார்த்த சொல்லீருக்கலாம். அவன் விருப்பத்துக்குக் குறுக்கயா நிக்கப்போறொம். அவன் சந்தோசந்தானய்யா முக்கியம். அவன் நல்லாருக்கணும். அது போதும். எய்யா சாமி பேரப்புள்ள எப்படியிருக்குது.''

''அப்பன் அச்சுத்தான். வீடெல்லாம் ஓடித் திரியிறான்.''

''எப்பத்தான் கண்ணுல காட்டப்போறாகளோ. முனியசாமிக்கு முடியெடுத்துக் காது குத்தணும். அதுக்கு மருமக ஒத்துக்கிறணுமே. புள்ளையப் பாக்கணும்போல ஆசையாருக்கு. என்னயக் கூட்டீட்டுப் போறீகளாய்யா. புள்ள மொகத்தப் பாத்த ஒடன திரும்பீருவென்.''

அவன் மனசு கேட்காமல் ஒத்துக்கொண்டான். அவளுக்குச் சந்தோசம் தாங்கவில்லை. சீலையை நன்றாகத் துவைத்து வைத்துக்கொண்டாள். மகனுக்குப் பிடித்த பண்டங்களைத் தயார்படுத்திக்கொண்டு அவனுடன் கிளம்பிவிட்டாள். வெள்ளையன் வர மறுத்துவிட்டான்.

அடுத்த நாள் காலையில் அவளை மாரிமுத்தின் வீட்டில் விட்டுவிட்டு ஒண்ணும் சொல்லிக்கொள்ளாமல் ஆண்டியப்பன் வந்துவிட்டான். அவள் வந்தது ராசலட்சுமிக்கு அறவே பிடிக்கவில்லை. என்ன இது என்று அருவருப்பில் மாரிமுத்தைப் பார்த்தாள். அவன் முகத்திலும் எரிச்சல். ஒருவிதப் பதட்டங்கூட அவனுக்குள் படபடத்தது. ''வாம்மா'' என்று கேட்கக்கூட வாயில்லை.

அந்த நேரம் பக்கத்து வீட்டுப் பெண் வந்துவிட்டாள். அவள் ராசலட்சுமியைப் பார்த்து வந்திருக்கிறது யாரென்று முகத்தால் கேட்டாள். ராசலட்சுமி தயங்காமல் சொன்னாள்.

''எங்க தோட்டத்துல வேலபாக்கிறவங்க. வேற காரியமா வந்த எடத்துல அப்படியே அவரப் பாத்துட்டுப் போகலாம்னு வந்திருக்காங்க.''

இது பொம்மக்காளின் காதுகளில் தெளிவாக விழுந்தது. மகன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் முகத்தைத் தொங்கப்போட்டபடி கையைப் பிசைந்து கொண்டிருப்பதையும் கவனித்தாள். கஷ்டப்பட்டு அழுகையை அடக்கிக் கொண்டாள்.

கைவசமிருந்த ஆசைப்பண்டங்களைப் பிரிக்காமல் அப்படியே வைத்துக் கொண்டாள்.

''எய்யா மாரிமுத்து நாளைக்கே என்னய ஊருக்கு அனுப்பிவச்சிருய்யா. இங்க கெட்டிப்போட்டது போலருக்குது.''

அவன் மறுநாள் சாயங்காலம் அவளை பஸ்ஸில் ஏற்றி அனுப்பிவிட்டான். ஊர்ப் பக்கம் போகிற ஒருவரிடம் சொல்லி முத்துநகரில் இறக்கிவிடச் சொன்னான். பேரனை மடியில் வைத்து ஒரு தடவைகூடப் பேச்சுப்போட முடியவில்லையே என்று அவளுக்கு ரெம்ப வருத்தம்.

ராத்திரி முழுக்க அவள் உறங்கவில்லை. காலையில் முத்துநகரில் இறங்கி கலிங்கலுக்கு நடந்தாள். முக்காட்டுக் கோலத்தில் ஊர் போய்ச் சேரும்வரை ஒப்பாரி ஓயவில்லை.

அவள் மூணு நாள் ஊருக்குள் கஞ்சிக்குப் போகவில்லை. போனால் எல்லாரும் விசாரிப்பார்கள். அழுகை வரும். வெளுப்புத்துறைக்கும் போகாமல் முடக்கியே கிடந்தாள். வெள்ளையன் எவ்வளவோ சொல்லிப்பார்த்தும் சாப்பிடவில்லை. ''நான் பெத்து பொத்திப்பொத்தி வளத்த புள்ள என்னயக் கேவலப் படுத்தீருச்சே'' என்று புலம்பிப்புலம்பிக் குமுறினாள்.

மூணாம் நாள் ராத்திரி அரளி விதையை அரைத்துக் குடித்துச் சுருண்டு விட்டாள். மாரிமுத்துக்குத் தகவல் கொடுக்காமலேயே அவளை எடுத்துப் பொசுக்கிவிட்டார்கள். கம்மாக் கரைச் சரிவில் பெரிசும் சிறிசுமாக முகம் வாடி நின்ற இரு புங்க மரங்களும் பழையபடி தெளுச்சியாவதற்குக் கொஞ்ச நாளானது.

## 11. அடிவயித்துக் கொடியறுத்து...

அன்றைக்கு வேலையில்லாதபோதும் ஆண்டாள் தோட்டத்துக்குப் போயிருந்தாள். வண்ணாத்தி மூலம் வேலம்மாளுக்குத் தகவல் கிடைத்திருந்தது. ஆண்டாள் மனசில் அவ்வளவு சுமை.

தோட்டம் முழுக்க மிளகாய்ச் செடியடர்த்தி. வரப்புகளில் மழை நீருக்காகக் கையேந்தி நிற்கும் ஆமணக்கஞ் செடிகள். இன்னும் உயரத்தில் அகத்தி மரங்கள்.

அரைகுறை நிழலில் உட்கார்ந்து மிளகாய்ச் செடிகளை வெறித்துப் பார்த்தாள். தொப்புள் கொடிகளில் தொங்கும் சிவப்புப் பழங்கள் தொட்டில் குழந்தைகளாக மெல்ல ஆடின. அவள் தாயானாள். தாய்ச் செடியானாள். குப்பையுரத்தில் வளர்ந்த செடிகளையும் அவை ஈன்ற பழங்களையும் நீவிக்கொண்டே கண்ணீர் சிந்தினாள். அப்படியே மயங்கிப் பெருவாய்க்காலில் படுத்துக் கண்ணயர்ந்தாள்.

வானத்துக்கும் பூமிக்குமாக ஏக இருட்டு மண்டிக்கிடக்கிறது. இருட்டைக் கிழித்துக்கொண்டு ஒரு வெளிச்சம் வானத்திலிருந்து பூமிக்கு இறங்கி வருகிறது. கிட்ட வரவர உருவங்கள் துலாம்பரமாகின்றன. ஒரு பெரிய பொன்னுருண்டை. அதைப் பொன்னீக்களாக மொய்த்துக்கொண்டு ஏராளம் தூளுருண்டைகள். பெரிய உருண்டை வீட்டு முற்றத்தின் நடுவில் தரையிறங்குகிறது. அதிலிருந்து

சிதறும் வெளிச்சம் ஆரக்கால்களாகிச் சக்கரம் அமைக்கிறது. சக்கர விளிம்பில் தூளுருண்டைகள் வரிசையாக நிற்கின்றன. அவற்றைத் தாங்கும் சக்கரக் குடமாக நடுவில் நிற்கும் பெரிய உருண்டை சக்கரத்தைச் சுற்ற வைத்துப் பாட்டெடுத்துக் கொடுக்க தூளுருண்டைகள் சேர்ந்து பாடுகின்றன.

''பூமியக்கா பூமியக்கா..''

''பூமியக்கா பூமியக்கா
புள்ளைகளக் காமியக்கா
தேடிநாங்க ஓடிவாறோம்
சேந்துவெளை யாடவாறோம்.''

சுழலும் சக்கரத்தின் வேகத்தில் சின்னக் குரல்கள் இணைந்து தேனீக்களின் ரீங்காரமாக ஒலிக்கிறது.

தாவாரத் திருணையிலிருந்து வேடிக்கை பார்க்கும் ஆண்டாளுக்கு அடையாளம் தெரிகிறது. அடடா நிலாத் தாய் வெள்ளிக் குழந்தைகளுக்கு விளையாட்டுச் சொல்லித்தருகிறாள்.

''மெதுவாச் சுத்துங்க புள்ளைகளா.''

அவளது குரலைக் கேட்டதும் சக்கரம் நின்று அப்படியே தகதகவென்று உயரே எழும்பிச் செல்கிறது. தொலைவுக்குப் போனதும் இன்னொரு பாட்டுக் கேட்கிறது.

''புள்ளைகளே புள்ளைகளே
போய்வாறோம் புள்ளைகளே
சொல்லிவுட்டா கூடிவாறோம்
துள்ளிவெளை யாடவாறோம்.''

முற்றத்தில் மறுபடியும் இருள் சூழ்ந்து மூளியாகிறது.

குழந்தைகள் போய்விட்ட வெறுமையில் ஆண்டாள் எழுந்து அண்ணாந்து பார்த்தாள். ஆமணக்கஞ் செடியிலையில் ரெண்டு சிட்டுக் குஞ்சுகள் தாவிக் குதித்துச் சிணுங்கின.

''அம்மா அம்மா போதும்மா.''

''காலும் செறகும் வலிக்குது.''

இலைக் காம்பில் நின்ற தாய்க் குருவி சொன்னது.

''சீக்கிரம் பறக்கக் கத்துக்கிறணுமா வேணாமா. இண்ணைக்குச் சங்கடம் நாளைக்குச் சந்தோசம்.''

குஞ்சுகள் காலுதைத்து அடம்பிடித்தன.

''போதும்மா.''

''வேணாம்மா.''

இலை ஒடிந்துவிட்டால் என்னாகும். அவள் பயத்தில் சத்தம்கொடுத்தாள்.

''கீழ வுழுந்துறாதங்க.''

குருவியும் குஞ்சுகளும் போன இடம் தெரியவில்லை. குஞ்சுகளின் குரல் மட்டும் கேட்டது.

''இண்ணைக்குச் சங்கடம்.''

''நாளைக்குச் சந்தோசம்.''

இப்போது வாய்க்காலில் ரெண்டு குட்டியணில்கள் தொட்டுப் பிடித்து விளையாடின.

''ஓடாத அம்மாட்டச் சொல்லீருவென்.''

''அம்மா அம்மா என்ன அடிக்க வாறான்.''

பெருவாய்க்காலில் வெள்ளம் வந்து அடித்துச் செல்வதுபோல் அவள் குலுங்கினாள். அழுகை பொங்கியது. அவளுக்குள் வேலம்மா குடியேறினாள். தன்னையறியாமல் ஒப்பாரி கரையுடைக்கத் தொடங்கியது.

''குப்பையிலே குடியிருக்கும்
குன்னிமுத்துப் புள்ளைகளே
எப்பமொகம் பாத்துருவென்
எஞ்சோகம் தீத்துருவென்.

அடிவயித்துக் கொடியறுத்து
அடிதொடியாப் போனதென்ன
துடிதுடிச்சுக் கூடையிலே
சொமசொமயாப் போனதென்ன.

முடியெடுத்துத் துணியுடுத்தி
முத்துமுத்தாக் காதுகுத்தி
அடியெடுத்து நடந்துவர
அள்ளிவச்சுக் கொஞ்சலயே.''

அடிமனசிலிருந்து பெருக்கெடுக்கும் அழுகையைக் கேட்க அங்கே வேலம்மா இல்லை. அவள் தேடித் தவித்துக் கண்டுபிடித்து நெருங்கி வந்தபோது ஆண்டாளின் மெலிந்த உடல் மட்டுமே வாய்க்காலில் குழண்டு கிடந்தது.

## 12. காக்கா முட்டை

பொம்மக்கா மாண்டுவிட்ட சேதியை ஆண்டியப்பன் மாரிமுத்துக்கு போனில் சொன்னான். பதிலுக்கு ஒரு வார்த்தைகூட இல்லை. மூசுமூசென்று அழுகைமட்டும் கேட்டது.

மறுநாள்தான் மாரிமுத்து பேசினான்.

''ஊருக்குப் போயிட்டு வரலாம்னு நெனக்கென்.''

ஆண்டியப்பன் கேட்டான்.

''போனா குடும்பத்தோட போகணுமில்ல.''

''ஆமா.''

''ஒன் வீட்டுக்காரி வருவாளா.''

''சந்தேகந்தான்.''

''கொழந்தைய வேற அலக்கழிக்கணும்.''

''ஆமா.''

''போயி யாரு மூஞ்சியில முழிப்ப. தாத்தா அய்யா தம்பி எல்லாரும் காறித் துப்புவாக. அவுக மட்டுமில்ல ஊரே ஓம் மேல கோவமாருக்கு. கொஞ்ச நாளைக்கு ஆறப்போடு.''

''அப்படித்தான் செய்யணும்.''

மாரிமுத்து ஊருக்குப் போகவேயில்லை. குடும்பத்துடன் ராமேசுவரம் போய் கருமத்தைத் தீர்த்துக்கொண்டான். எப்போதாவது ஆண்டியப்பனிடம் விசாரித்துக் கொள்வதுடன் சரி.

ஊரிலும் அவனை அடியோடு மறந்துவிட்டார்கள். அவன் நன்றாக இருந்தால் சரி. அது போதும்.

சாத்தனிடம் அவனைப் பற்றி யாராவது ஏகதேசம் விசாரிப்பதுண்டு.

''பட்டணத்துப் பேரன் எப்படியிருக்கான்.''

அவன் முகம் சிறுத்துப்போகும். பேச்சை மாற்றுவான்.

''வீட்ல எல்லாரும் நல்லாருக்காகளா. அப்பாவுக அவசர வேலையா வந்தீகளா.''

கேட்டவர் புரிந்துகொண்டு போய்விடணும் இல்லை வேறு பேச்செடுக்கணும்.

இப்போது வண்ணாக்குடியில் மருதனுக்குப் பிறகு சாத்தன்தான் தாட்டிக்க மான மனுசன். சுத்துப்பட்டி வண்ணார்களுக்குத் தாப்பான ஆளாக இருந்தான். வீட்டுக்கு அடிக்கடி வண்ணார்கள் வந்து விவகாரங்களைப் பேசித் தீர்த்துக் கொண்டு போனார்கள். முன்னைப் போல் சண்டி வழக்கும் சவங்கச் சோறும் அதிகம் கிடையாது. பன்றிக் கறி சாராயத்துக்கு மட்டும் பஞ்சமில்லை. அவன் ஆளுக்குத் தக்க தோதாகப் பேசிச் சமாளித்துவிடுவான். அதனால் அவன்மேல் எல்லாருக்கும் மரியாதை இருந்தது.

அவன் எப்போதாவதுதான் வெளுப்புத்துறைக்குப் போவான். கழுதையில் பொதியேற்றும் லாவகம் நீலம் கலக்கும் நிதானம் துணியைக் காயவைப்பது புரட்டிப் போடுவது பற்றி பேரன்மாருக்குக் கோளாறு சொல்வான். வெயில் சுள் ளாப்பைக் கொண்டு மழை வருவதைக் கணித்துவிடுவான். சின்னச்சின்ன வைத்தியம் செய்வான். தேரில் வாரி புரண்டுவிடாமல் கட்ட வேண்டிய வசம் பற்றிப் பேசுவான். சாவு இழவுச் சடங்குகளை ஞாபகப்படுத்துவான்.

குடும்பத்தில் மாடத்திக்குப் பிறகு மருதன் சின்னமாரி மருதி அய்யப்பன் பூலான் பால்குருவு எல்லாருமே வரிசையாகப் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். கடைசியாகப் போனது பொம்மக்கா.

வீட்டுக்காரி பால்குருவு தன்னை முந்திக்கொண்டதில் அவனுக்கு நிறைய வேதனை. அவள் போன பிறகு அவளைப் பொம்மக்காதான் கவனித்துக்கொண் டாள். அந்த மனுசியும் போய்விட்டாள். ரோசக்காரி. ஆக குடும்பத்தில் ஒரு பெண்கூடக் கிடையாது. பேத்தியாள் பூமாடத்தி ஏற்கெனவே அயலூருக்குப் போய்விட்டாள். சாத்தன் வெள்ளையன் மூக்கன் மூணு பேரும் கிடந்து அல் லாடினார்கள். மூக்கனுக்கு ஒருத்தி வந்தால் சங்கடம் தீரும்.

இருளாண்டி குடும்பம் சிந்தாமல் சிதறாமல் இருந்தது. அவனும் பெண் டாட்டி முத்துராக்கும் திடமாகவே இருந்தார்கள். மூத்த மகன் பழனிக்கு மட் டுமே கலியாணமாகியிருந்தது. வேப்பங்காடு சின்னான் மகள் சுந்தரி வந்ததும் ஒரு பெண் குழந்தை பெற்றாள். அவளைத்தான் மாரிமுத்துக்கு முடிக்கலா மென்று ஆசைப்பட்டார்கள். கதை வேறு மாதிரியாகிவிட்டது. செவனாண்டி தேனாத்தா முருகலட்சுமி மூணுபேரும் கலியாணத்துக்குக் காத்திருந்தார்கள்.

சாத்தனுக்கு இப்போது இருளாண்டி வீட்டில்தான் சாப்பாடு. அன்னிசத்துக் காரியானாலும் முத்துராக்கு உறுத்தாகக் கவனித்துக்கொண்டாள்.

சாத்தன் கிண்டல்கார மனுசன். அவனைத் தேடி வராத எளவட்டம் கிடையாது. அவனைச் சுற்றி ஒரு கூட்டம் இருக்கிறதென்றால் அவன் கிளுகிளுப்பான கதை சொல்கிறான் என்று அர்த்தம். எவனாவது தனியாக வந்து குசுகுசுத்தால் சொந்தக் கதை ஓடுகிறது என்று புரிந்துகொள்ளணும்.

அவனிடம் கமுக்கமாக யோசனை கேட்பார்கள்.

''பெருசு...''

''சொல்லுங்க.''

''ஒங்கிட்ட ஒரு வெசயம் பேசணும்.''

''பேசுங்க.''

''வந்து...''

''பேசுறதுக்கே இந்தப் பாடா.''

''நானும் அந்தப் புள்ளைக்குப் பின்னால நாயா அலையிறென். மசிய மாட்டங்காளே.''

''எந்தப் பொண்ணு.''

''ஆருட்டயும் சொல்ல மாட்டயே.''

''அப்ப எங்கிட்டச் சொல்லாதங்க.''

''அதான் பெருசு மேலக்கடசி வீட்டுப்புள்ள.''

''அவுகளா. சரி.''

''அவள வசப்படுத்துறதுக்கு எதாச்சும் வழியிருக்கா பெருசு.''

''கடசிவரைக்கு வச்சுக் காப்பாத்துவீகளா இல்ல நாயப் போல காரியம் முடிஞ்சதும் கழண்டுக்கிருவீகளா.''

''இது ஒனக்கு வம்புதான. என்னய நாயின்னு நெனச்சுக்கிட்டயா.''

''நீங்கதான நாயா அலையிறன்னு சொன்னீக.''

''சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னென்.''

''அப்ப அவுகமேல நெசமாவே பிரியம் இருக்குதுன்னு சொல்றீக.''

''அதும் கொஞ்சமா.''

''அப்ப நான் சொல்றத நல்லாக் கேட்டுக்கங்க. கஸ்டப்பட்டு ஒரு காக்கா முட்டையத் தேடியெடுத்துக் கைவசம் வச்சுக்கங்க. அந்தப் பொண்ணு மோளுற எடத்தக் கண்டுபுடிச்சு அதுல முட்டைய வெடல எறிஞ்சிருங்க. மோத்தரம் காஞ்சிறப்புடாது. ஈரமாருக்கணும். பெறகு பாருங்க அவுக ஒங்களச் சுத்திச்சுத்தி வருவாக.''

வந்தவன் சுதாரிப்பாகக் காரியத்தில் இறங்குவான். ஒண்ணும் நடக்காது. ஏமாற்றத்தில் சாத்தனிடம் வருவான்.

''வழிக்கு வரலயே பெருசு.''

''ஈரம் காயலையே.''

''அவ மோண்டுட்டுப் போனதும் வெடல எறிஞ்சென்.''

''அப்படின்னா முட்டைக்குள்ள குஞ்சி தெரண்டுருந்துருக்கும்.''

''அத எப்படிப்பா கண்டுபுடிக்கிறது.''

''அங்கதான் இருக்குது ஒங்க சாமர்த்தியம்.''

''அதென்ன மயிரு சாமர்த்தியம்.''

''எப்பா இந்த வசியத்துல காரியம் நடக்கும்னா காக்கா முட்டையிட்டு முடியுமா. பிரியமிங்கிறது முட்டையிலயும் மோத்தரத்துலயும் இல்ல. மனசுக் குள்ள வச்சு அடகாக்கிறதாக்கும். மொதல்ல அந்தப் பொண்ணோட மனசப் புரிஞ்சுக்கங்க. சும்மா தொங்குதொங்குன்னு சுத்தி ஒண்ணும் ஆகாது.''

''இரு ஒனக்குக் குழி வெட்டி ஆறப்போட்டுட்டு வந்து வச்சுக்கிறென்.''

ஆத்திரத்தில் மிரட்டிவிட்டுப் போன எளவட்டம் திரும்பி வரவே மாட்டான்.

வண்ணாக்குடிக் குமருகளைச் சுற்றும் எளவட்டங்களும் உண்டு. அவர் களிடம் சாத்தன் பேசும் விதமே தனி.

''எப்போவ் வீணா எதுக்குக் கஸ்டப்படுறீக. நீங்க அந்தப் புள்ளையக் கெட்டிக்கிறப்போறீகளா. இல்ல நாங்கதான் குடுத்துறப்போறமா. வேலையில் லன்னா உக்காருங்க. சோக்கா முடிவெட்டி வுடுறென். எங்க புள்ளையக் கெட் டீட்டுப் போனா ஒங்களால கஞ்சி ஊத்த முடியுமா. ஒரே சோறு குடுப்பீக. அது பல சோறு தின்னு பழகிப்போன நாக்கு. என்ன சொல்றீக.''

எளவட்டம் இருந்த இடம் தெரியாது.

சாத்தன் அம்மணமாகத் திரியும் சின்னப் பயல்களைக் கூப்பிட்டுப் பழைய துணியைக் கிழித்துக் கோவணம் கட்டிவிடுவான்.

''அவுத்தீகன்னா சக்கரக்கட்டியக் கோழி கொத்தீட்டுப் போயிரும்.''

பயல்கள் குதியாளம் போட்டு ஓடுவார்கள்.

## படலம் 22

### 1. தொலைந்து போனது

கோயில் குளத்துக்குப் போவதுபோல் கலிங்கல் சனங்கள் குடும்பங்குடும்ப மாக வண்டி பூட்டி கட்டுச்சோறு கட்டிக்கொண்டு முத்துநகருக்குச் சினிமா பார்க்கப் போனார்கள். மேற்கே பாய்க்கொட்டகையில் ராமாயணம் நடந்தது. கிழடு கட்டையெல்லாம் போய் விடியவிடிய உறங்காமல் பார்த்தார்கள். மண லில் உட்கார்ந்து பார்க்கச் சொகமாக இருந்தது. காலையில் வீடு திரும்பும்போது வெயிலேறிவிட்டது.

கொட்டகை மணலில் மோண்டு மூடிவைத்த மேட்டில் உட்கார்ந்து தெளி வாகப் படம்பார்த்த கதையை பயல்கள் பெருமையாகச் சொன்னார்கள். காடு கரையில் பெண்கள் சீதைக்காக ரெம்ப இரக்கப்பட்டார்கள்.

''அஞ்ஞாடி சீத என்ன லச்சணமா இருக்காம்மா. ராமருக்கேத்த பொண்ணு தான். பாவம் ரெண்டு பேரும் ஒண்ணா இருந்து சந்தோசமாக வாழுறதுக்குக் குடுத்துவைக்கல. என்னாளும் லொம்பலப்பட்ட பெழப்புத்தான்.''

‘‘கண்டாரரோளி ராமரோட சின்னம்மாக்காரியால காட்டுக்கு வெரட்டி யடிச்சாக. அங்க போயும் சொகமில்ல. அந்தக் கூனி முண்டையச் சொல்லணும். அவளக் கொன்னு குழியத் தோண்டிப் பெதச்சாலும் மனசு ஆறாது.’’

‘‘சூசுவான்னு இருந்த மனுசிய தூரமையக்குடிக்கி அந்த மானு வந்து ஆச காட்டி மசக்குனதுனாலதான அம்புட்டுத் தொறட்டும் வந்தது.’’

‘‘பேதியில போறவன் அந்த ராவணனுக்கு ஆசையப் பாரு. மொகறக் கட்டைக்குச் சீத வேணுமோ. ஆரு சொல்லியும் கேக்கலன்னா அந்தக் கதிதான்.’’

‘‘ஆயிரந்தான் சொல்லு அனுமாரு இல்லன்னா சீதையக் கொண்டுவந் துருக்க முடியுமா.’’

‘‘அந்தப் புண்ணியவாளன் ஒத்தாசனையாலதான எல்லாம் நல்லபடியா முடிஞ்சது.’’

பிறகு சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் சினிமா பார்த்தார்கள். அய லூர்க் கோயில் திருவிழாவுக்குப் போய்த் திரும்பும்போது இருட்டிவிட்டால் பாய்க்கொட்டகையில் ரெண்டாவது ஆட்டம் பார்த்துவிட்டு அங்கேயே படுத்துக் கொள்வார்கள். சந்தைக்கு வந்த சனங்களும் அப்படித்தான். துட்டுத்துக்காணியை மடியில் கட்டிக்கொண்டு பயப்படத் தேவையில்லை. பாதுகாப்பாக உறங்கி யெழுந்து வீட்டுக்குப் போகலாம். கொட்டகைக்கு வருமானமும் ஆயிற்று.

கீழத் தெருவில் ஒருவன் உண்டு. பேர் சின்னக்காளை. நடு வயசு. குழந்தை யில்லை. அவன் பெண்டாட்டி தொணதொணப்பு தாங்காது. எந்நேரமும் பினாத் திக்கொண்டிருப்பாள். மனுசன் அலுத்துக் களைத்து செத்த நேரம் உறங்க முடியாது.

அந்த நச்சரிப்பிலிருந்து தப்பிக்க அவன் ஒரு வழி கண்டுபிடித்தான். வீட்டுக் காரி காட்டுக்குப் போன சமயம் ரெண்டு முட்டைக் கோழிக்குக் கொக்கரை புடைக்க இரை போட்டு வசப்படுத்திப் பிடித்து மடத்துக்குள் அடைத்துவிட் டான். ரெண்டும் முட்டையிடும்வரை அவன் அக்கம்பக்கம் பிதுங்கவில்லை. மடத்துத் திருணையிலேயே உட்கார்ந்திருந்தான்.

ரெண்டு முட்டைகளையும் அடுக்குப் பானைக்குள் பத்திரப்படுத்திக் கொண்டான். மூணு நாளில் ஆறுமுட்டைகள் தேறின. மதியம் சோளக்கஞ்சி யைக் கரைத்து வயிறுபுடைக்கத் தீட்டினான். முட்டைகளைத் துணியில் முடிந்து கொண்டு சத்தங்காட்டாமல் பொடிநடையாக முத்துநகருக்குக் கிளம்பிவிட்டான்.

அங்கே ஆறு முட்டைகளையும் விற்றான். கணிசமாகக் காசு கிடைத்தது. பத்திரமாக மடியில் கட்டிக்கொண்டு பஜாரில் ராத்திரி ரெம்ப நேரம்வரை வேடிக்கை பார்த்தான். அப்படியே லாத்தலாகப் பாய்க்கொட்டைக்கு வந்து பருத்திப்பால் குடித்தான். பசி போன இடம் தெரியவில்லை. ரெண்டாவது ஆட்டத்துக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு உள்ளே போய் ஒரு ஒதுங்கலில் மணலைச் சமதளப்படுத்தித் துண்டுவிரித்துப் படுத்தவன்தான். நன்றாக விடிந்த பிறகே எழுந்தான். சினிமாப் பாட்டு சண்டை பேச்சு அத்தனையும் கேட்கக்கேட்க உறக்கம் சொக்கிக்கொண்டு வந்தது. பிறந்ததிலிருந்து அப்படியொரு உறக்கம் உறங்கியதில்லை.

காலையில் அப்பிராணியாக வீட்டுக்கு வந்து பெண்டாட்டிக்கு நல்லபிள்ளை யாகிவிட்டான். ஊர் மடத்தில் அசந்து உறங்கிவிட்டதாக அளந்து நம்ப வைத் தான். வேலை செய்த அலுப்பு போலிருக்கிறதென்று அவளும் நம்பிவிட்டாள்.

இந்தக் கூத்து கொஞ்ச நாளாகவே நடந்தது. வீட்டில் நிறைய கோழிகளை வளர்த்ததால் முட்டைக்குப் பஞ்சமில்லை. ஒரு நாள் திருணைமேல் அவனைப் பார்த்த ஒருவன் கேட்டான்.

''என்னப்பா வேலைக்குப் போகலயா. திருணையக் காத்துக்கெடக்கயே.''

அவன் சமாளித்தான்.

''இனிமேத்தான் போகணும்.''

''எப்ப. மதியத்துக்கு மேலயா.''

''சொந்த வேலைக்குத்தான.''

இன்னொரு நாள் ராத்திரி அவன் பாய்க்கொட்டகைக்குள் உறங்குவதை ஒருவன் பார்த்துவிட்டான். தட்டி உசுப்பினான்.

''ஏய் சின்னக்காள எந்திரிப்பா. துட்டக் குடுத்துப்புட்டுப் படம் பாக்காம ஒறங்குனா எப்படி.''

அவன் சிரமப்பட்டுத் தலைதூக்கி எரிச்சலில் சொன்னான்.

''என் துட்டக் குடுத்து ஒறங்குறென். ஒனக்கு என்ன வந்துபோச்சு. வேணும்னா நீயும் படுத்துக்கோ.''

''அப்படியா. நல்லா ஒறங்கு. நாளைக்கு வச்சுக்கிறென் மச்சான்.''

மறுநாள் ஊருக்குள் அவன் குட்டு உடைந்துவிட்டது. அவனைக் கிண்டலடிக்காத வாயில்லை. பெண்டாட்டிக்கு ஒரு சந்தேகம். அவ்வளவு தூரம் போய் உறங்குவதற்குத் துட்டு எங்கிருந்து வந்தது.

முட்டையிட்டுக் கொடுத்த கோழி ரெண்டும் அடைச் சத்தம் போட்டு அவனைக் காட்டிக்கொடுத்துவிட்டன. அவள் போட்ட சண்டைக்கு அளவே இல்லை.

அதிலிருந்து அவன் பெண்டாட்டியின் தொணதொணப்பையே சினிமாப் பாட்டாக நினைத்து அந்தச் சொகத்தில் உறங்கப் பழகிவிட்டான்.

பத்து வருசத்துக்கு முந்தி பாவனாசத்துக்குப் பஞ்சம் பிழைக்கப்போன கட்டக்காடையன் குடும்பம் கலிங்கலுக்கு வந்து குடியேறி அஞ்சாறு மாசமிருக்கும். அவன் சினிமாக் கொட்டகையைக் காவல்காத்துப் பெண்டாட்டி கருத்தடையா தூர்த்துத் துப்புரவு செய்து ரெண்டு வருமானத்தில் வயிற்று முறை கழிந்து மூணு பிள்ளைகளையும் வளர்த்து ஆளாக்கிவிட்டார்கள். பெரியவனுக்குக் கலியாண வயசில் திரும்பிவந்து சனங்களுடன் சேர்ந்துகொண்டார்கள்.

பாவநாசத்தில் வருசமெல்லாம் ஓசியில் சினிமா பார்க்கலாம். கருத்தடையா அதில் கிறுக்கு. ஒரு படம் விட மாட்டாள். அதிலும் எம்ஜியார் படமென்றால் சொல்லவே வேணாம். சோறு தண்ணீரை மறந்து தவங்கிடப்பாள். பிள்ளைகள் அதுக்கு மேல். ஒரு படத்தைப் பத்துத் தடவை பார்த்தாலும் அலுக்காது.

அச்சிட்ட எம்ஜியார் படங்களைக் கலிங்கலுக்குக் கொண்டுவந்து வீட்டுச் சுவர்களில் ஒட்டிவைத்தார்கள். அதுக்காகத் தீப்பெட்டிப் பசை மாவு ஓசி வாங்கி தனியே காய்ச்ச வேண்டியிருந்தது. காணாக்குறைக்கு எம்ஜியார் போட்டோவைக் கூரை முகட்டு வளையில் தொங்கவிட்டார்கள். மல்லாக்கப் படுத்துக்கொண்டு மனசை எம்ஜியாருடன் ஊஞ்சலாட விடுவதில் தனி சொகம்.

வீடு காடு கரை ஊருணி ஊர்க் கிணறு என்று எல்லா இடங்களிலும் ஆட்களைக் கூட்டி வைத்துக்கொண்டு அஞ்சு பேர் வாயிலும் தனித்தனியாகப் படம்

ஓடும். கண்ணுக்கு முன்னால் அழுகையும் சிரிப்புமாக ஓட்டிக் காட்டுவதில் கருத் தடையாளை மிஞ்ச முடியாது. அவள் கணக்குப்படி எம்ஜியாருக்கும் பானுமதிக் கும் எப்போதோ கலியாணமாகிவிட்டது. மூணு குழந்தைகள்கூட உண்டு. கூட இருந்து பேறுகாலம் பார்த்த மாதிரி துல்லியமாகச் சொல்வாள்.

ஒரு சமயம் மழையுடன் அடித்த பேய்க் காற்று ஊரையே சவட்டி யெடுத்துச் சொல்லிவைத்த மாதிரி அஞ்சு வீட்டுக் கூரைகளை அப்படியே அலக் காகத் தூக்கிக்கொண்டு போய்விட்டது. அதில் கருத்தடையா வீடும் ஒண்ணு. குப்புற மிதக்கும் கூரையில் தொங்கியபடி எம்ஜியாரும் கூடவே போய்விட்டார். கருத்தடையாளின் கண்கள் மழையாகச் சொரிந்தன. ஒப்பாரி வைத்துக்கொண்டு கூரை கண்ணுக்குத் தெரியும்வரை ஓடினாள்.

''எஞ் சாமி எமிச்சியாரு என்னய வுட்டுட்டுப் போயிட்டயே. நான் என்ன செய்வென்.''

சனியன் பிடித்த காற்று அந்தக் கூரையை மட்டும் கம்மாத் தண்ணீருக்குள் எறிந்து முங்க வைத்து விட்டது. நடுக்கம்மாய்க்குள்ளிருந்து அதை எடுக்க முடிய வில்லை. நீர் குடித்து அழண்டுபோன எம்ஜியார் கழண்டு விழுந்து கரம்பை மண் ணுக்குள் புதைந்துபோனார்.

புதுக்கூரை மேய்ந்து புதிய எம்ஜியாரை இறுகக் கட்டித் தொங்க விடும்வரை அவளுக்குச் சரியான உறக்கமில்லை. பெண்கள் அவளிடம் அக்கறையாக விசாரிப்பார்கள்.

''என்ன எமிச்சியாரு எப்படி இருக்காரு தாயி.''

அவள் அழுத்தமாகச் சொல்வாள்.

''எஞ்சாமி என்னய வுட்டுப் போக மாட்டாரு.''

அவள் கதை அப்படி.

சினிமாப் படங்களின் பேரிலும் அவற்றில் நடித்தவர்களின் பேரிலும் துணி மணி வளையல் என்று கடையில் வந்து குமிந்தன. நிறைய பேர் வாங்கினார்கள். எளவட்டங்கள் லங்கோட்டுத் துணிகூட வாங்கித் தைத்துக்கொண்டார்கள். நல்ல காரியங்களுக்கு நடிகர்களின் படம்போட்ட வாழ்த்து மடல்களை அன் பளிப்பாகக் கொடுத்தார்கள். நடிகர்களின் படம்போட்ட பனியன்களைப் பெருமையாகப் போட்டுக்கொண்டு தோரணையாகத் திரிந்தார்கள். நான் இன்ன நடிகர் கட்சி என்று சகடாலடித்தார்கள்.

பயல்கள் சண்டையிட்டு விளையாடும்போது 'எம்சியார் குத்து' விட்டார்கள். 'வீரப்பா சிரிப்பில்' கொக்கரித்தார்கள். ''அங்கமுத்து போறாடோய்'' என்று குண்டுப் பெண்களைக் கிண்டலடித்தார்கள். பெரிசுகள் நடிகர்களைப் பற்றி அக்கறையாகப் பேசிக்கொண்டார்கள்.

''அந்த நம்பியாரு கெட்ட பெயலாச்சே. நல்லவங்கள நிம்மதியா இருக்க வுட மாட்டானே.''

''அவன அடக்குறதுக்கு எம்சியாருதான் லாயக்கு.''

''சுப்பையா சுப்பையான்னு சொங்கியா ஒருத்தன் வருவானே.''

''ஆமா அவன் நல்ல மனுசனாச்சே.''

''நானும் அப்படித்தான் நெனச்சிருந்தென். ஆனா ஒரு படத்துல கள்ள நோட்டு அடிக்கிறதப் பாத்து அசந்து போயிட்டென்.''

''சீ அப்படிப்பட்ட மனுசன் மூஞ்சியில முழிக்கலாமா.''

ஆடுமாடு மேய்க்கும் பயல்கள் சதா சினிமாப் பாட்டுகளைப் பாடிக்கொண்டு திரிந்தார்கள். உறங்குகிறவனை எழுப்பும்போதுகூட ''தூங்காதே தம்பி தூங்காதே'' தான். வேலைத்தனத்தில் எளவட்டங்கள் குமருகள் வாயிலும் சினிமாப் பாட்டுகள்தான் விளையாடின. தொலைவில் ஒரு முற்றாத குரல் எட்டாத உயரத்தைத் தொட்டுப் பிடிக்க எத்தனித்துக்கொண்டிருந்தது

''யானப் பழத்தப் புழிஞ்சு ரசமுண்டாக்கி...''

வற்றாத ஏசலும் தெம்மாங்கும் கும்மியும் உறக்காட்டும் முற்றாகத் தொலைந்துபோய்விட்டன.

## 2. தங்கையா கூட்டம்

சந்தன நாடாரும் வடிவும் பிறத்தியார் கையை எதிர்பாராமல் வைராக்கியத்துடன் ஏழு பெண்களையும் கரையேற்றிவிட்டார்கள். மகாலட்சுமி அய்யாங்குடிப் பக்கம் கருப்பசாமி வீட்டுக்குப் போனாள். செல்லம்மா வினைதீர்த்தான்பட்டி கனகராசுக்குப் பின்னால் போனாள். தங்கம்மா தோட்டக்குடி பத்திரகாளி வம்சத்தில் ராமச்சந்திரனைக் கைப்பிடித்தாள். பாக்கியலட்சுமியை மருதங்குளம் பால்மணிக்குக் கொடுத்தார்கள். அன்னத்தாய் வெத்தலப்பட்டி சக்திவேலைத் தேடிக்கொண்டாள். பொன்னுத்தாயும் பச்சிகுளம் துரைராசும் சேர்ந்தார்கள். முத்துநகரிலிருந்து சண்முகத்தாய் மகன் தங்கமாரியப்பன் கலிங்கலுக்கு வந்து கடைக்குட்டி காளியம்மாளுக்காக் காத்துக்கிடந்தான்.

தங்கமாரியப்பனுக்கும் செல்லக்கனி மகன் காளியப்பனுக்கும் ரெம்பச் சினேகிதம். அவன் கலிங்கலுக்கு வர இவன் முத்துநகருக்குப் போக மும்முரமாகப் பேசுவார்கள். காளியப்பன் ஒரு நாள் சொன்னான்.

''ஏல மாப்பிள செதறிக் கெடக்கிற குடும்பங்கள இப்படியே வுட்டா நல்லதில்ல. ஆரோ எவரோன்னு போயிரும்.''

''எனக்கும் அப்படித்தான் தோணுது மச்சான்.''

''எப்படியும் எல்லாரவும் ஒண்ணுசேத்தாகணும்.''

''ஆமாமா.''

''அது நம்மாலதான் முடியும்.''

''என்ன செய்யணும். சொல்லு மச்சான்.''

''தடி மம்பட்டி எடுத்துட்டு வந்து வீட்டுக்கு வீடு பாத வெட்டிப் போடணும்.''

''ரோடே போட்ருவொம்.''

''ஒரு மயிரும் வேணாம். வக்காளி நான் சொல்றத நல்லாக் கேட்டுக்கோ. ஒன் அக்கா பூமாரிய எனக்குக் குடுத்துருங்க. சந்தனப் பெரிய்யா மக காளியம்மாள நீ கெட்டிக்கோ. சரியாப்போச்சா.''

‘‘பேச்சு மாற மாட்டயே.’’

‘‘ஏன் அப்படிக் கேக்க மாப்பிள. ஒன் அக்காள வேற எங்கயும் எணலுவாட்ட மான எடத்துல குடுக்கணும்னு நெனப்பிருக்கா. அப்படின்னா இப்பயே சொல்லீரு. வீணா மனசில ஆசைய வளத்து ஏமாத்தமாப் போயிட்டாச் சங்கடந்தான.’’

‘‘அப்படியெல்லாம் கெடையாது மச்சான். அண்ணன்மாரு வீட்ல எறங்க ணும்னு எங்கம்மாளுக்கு மூக்குமுட்ட ஆச. நான் என்ன சொல்லவந்தன்னா சந்தன மாமா புடியே குடுக்க மாட்டங்காரே அதனாலதான்.’’

‘‘மாப்பிள அததுக்கு மொறையிருக்குதுல்ல. எம் புள்ளையக் கெட்டிக் கோன்னு வலியத் தாங்கச் சொல்றயா. இல்லன்னு சொன்னா நீதான் வுட்றப் போறயா. அத வுடு. நான் பாத்துக்கிறென்.’’

‘‘சரி மச்சான்.’’

வார்த்தைப்படி நடந்துகொண்டார்கள். காளியப்பன் சந்தன நாடாரிடமும் வடிவிடமும் பேசினான். நாடார் மீசைக்குள் சிரித்துக்கொண்டார்.

‘‘எல்லாம் நீயே பேசி முடிச்சா எப்படி. ஒன் அத்தக்காரி வர மாட்டாளா.’’

‘‘எல்லாரும் வரிசையா வருவாக. ஒங்க மனச அறியாம வாறது மரியாதை யில்ல பாருங்க.’’

வடிவு கேட்டாள்.

‘‘மருமகப் புள்ள என்ன சொல்லுது.’’

‘‘அவன் அங்கயும் இங்கயும் கமலமாடா அலையிறதுலருந்தே தெரிஞ்சுக்கங்க.’’

‘‘அதப் பத்திப் பேச்சே எடுக்கிறதில்ல.’’

‘‘எல்லாம் ஒரு மரியாததான்.’’

அவர்களுக்குக் காளியப்பனின் தன்மானமும் வைராக்கியமும் பிடிக்கும். சந்தோசமாக ஒத்துக்கொண்டார்கள். பிறகு அவன் முத்துநகர் சென்று சண்முகத் தாயிடம் பேசினான். மறுநாளே அவள் பாலகிருஷ்ணன் பொன்னுப்பாண்டி ஆகியோருடன் கலிங்கலுக்குப் பெண்கேட்டு வந்தாள். எல்லாம் நல்லபடியாக முடிந்தது. காளியம்மா முகத்தில் களையைப் பார்க்கணுமே.

காளியப்பன் விசயத்தில்தான் கொஞ்சம் இழுபறியாக இருந்தது. வீட்டில் செல்லக்கனியும் சங்கரம்மாளும் தாளக்கம்போட்டார்கள். பெரிய நினைப்பி லிருந்தார்கள். நல்ல வேளை தனலட்சுமி இல்லை. இருந்தால் இன்னும் சிக்கல்.

காளியப்பன் பூமாரியை மனசுக்குள் குடியமர்த்திவைத்திருந்தான். அவளும் பிரியமாக இருந்தாள். ஒத்துவராதவர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டுக் கோயிலில் வைத்துத் தாலிகட்டி வீட்டுக்குக் கூட்டிவந்துவிடலாம். அது பெரிய காரிய மில்லை. அதனால் அத்தைக்கு மரியாதைக் குறைச்சல். இந்தச் சந்தர்ப்பத்தை வைத்தாவது பெற்றது பிறந்ததுகளை ஒண்ணுசேர்த்து ஒற்றுமையாக்கணும். அது முக்கியம். சக்கரை நாடாரைப் பிடித்தால் இதுக்கு வழி பிறக்கும். அவரைத் தேடிப் போனான். அவர் குற்றவுணர்வில் சொன்னார்.

‘‘நாங்கதான் வகதொகயில்லாம வழிதவறிப் போயிட்டோம். நீங்களாச்சும் ஒண்ணாமண்ணாருந்து ஒத்துமையாக் குடும்பம் நடத்துங்க. இதுல எனக்கு ரெம்பச் சந்தோசம். நான் என்ன செய்யணும் சொல்லு.’’

''நீங்கதான் இந்தக் கலியாணத்த முன்னால நின்னு நடத்திவைக்கணும். எங்கய்யா ஆத்தாட்டப் பேசிச் சரிப்படுத்துங்க. பெறகு அத்தையிட்ட ஒரு வார்த்த சொல்லுங்க.''

''கலிங்கலுக்கு வாறதப் பத்தி ஒண்ணுமில்ல. அத்த மொகத்துல எப்படி முழிக்கிறதுன்னுதான் யோசனையாருக்கு. மூத்தவரு வீட்ல என்ன சொல்றாக.''

''அவுகளுக்கு முழுச் சம்மதம். இல்லன்னா காளியம்மாள தங்கமாரியப்பனுக்குக் குடுக்க ஒத்துக்கிட்ருப்பாகளா.''

சக்கரை நாடார் மறுநாளே கலிங்கலுக்குப் போனார். செல்லக்கனி சங்கரம்மாளுடன் பேசிச் சம்மதிக்க வைத்தார். சந்தன நாடாரையும் வடிவையும் சந்தித்தார். ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். சொர்ணமும் சங்கரம்மாளும் சாப்பிடக் கூப்பிட்டும் போகவில்லை. வடிவு கையால் மறுசோறு வாங்கிச் சாப்பிட்டார். வாயும் கையும் மணக்க இப்படி வயிறாரக் கோழிக்கறி சாப்பிட்டு ரெம்பக் காலமாயிற்று. ராத்திரி முழுக்க ஆத்தாளுடன் தங்கி ஆசைதீரப் பேசினார்.

ஒரு புதன்கிழமையன்று சக்கரை நாடார் சந்தன நாடார் செல்லக்கனி ராசபாண்டி வடிவு சங்கரம்மா சொர்ணம் இந்த ஏழு பேரும் சண்முகத்தாயின் வீட்டுக்குப் போனார்கள். காளியப்பன் மட்டும் கலிங்கலூருணி இச்சி மரத்தடியில் மல்லாக்கப் படுத்துக் கனாக்கண்டுகொண்டிருந்தான்.

சண்முகத்தாய்க்குத் தாங்க முடியாத சந்தோசம். இப்படியொரு சம்பந்தம் எப்போதோ நடந்திருக்க வேண்டியது. தாமதமாகவாவது நடக்கிறதே. அழுக அழுக ஆனந்தம் பொங்கிக்கொண்டேயிருந்தது. எல்லாருமாகச் சேர்ந்து சாப்பிட்டார்கள். பாலகிருஷ்ணன் பொன்னுப்பாண்டி தங்கமாரியப்பன் மூணு பேரும் ஓடிஓடிப் பரிமாறினார்கள்.

ரெண்டு கலியாணமும் ஒரே முகூர்த்தத்தில் நடந்தன. காளியம்மா முத்து நகரில் பூமாரிக்குப் பதிலாகத் தீப்பெட்டியாபீஸ் போக ஆரம்பித்தாள். பூமாரி கலிங்கலுக்கு வந்து வீட்டு வேலையைக் கவனித்தாள். நகரத்தில் நிழலிலேயே இருந்தவள். பட்டிக்காடு பழகுவதற்குக் கொஞ்ச நாளானது. அவளுக்கு ரெண்டு மாமன் மாமியார். சந்தன நாடார் செல்லக்கனி வடிவு சங்கரம்மா. அவள் கையால் சாப்பிடாமல் பத்திரகாளிக்குச் சோறு இறங்காது. சொர்ணம் நல்ல மதினி. சொர்ணத்துக்கு மூணு குழந்தைகள். ஒரு ஆண் ரெண்டு பெண். மூணு பேரும் பூமாரி காலைச் சுற்றிக்கொண்டே திரிவார்கள். அவர்களுக்குத் துணையாக அவள் ஒரு பையனையும் பெண்ணையும் பெற்றுக்கொடுத்தாள். அவள் இதுவரை காட்டு வேலை செய்ததேயில்லை. காளியப்பனுக்குச் சோறு கொண்டுபோவதுடன் சரி.

காளியப்பனுக்குப் பண்ணையில் வேலைசெய்ய விருப்பமில்லை. அய்யாவுக்குச் சொந்தமான நிலங்கள் அறுதிக் கிரையத்துக்குப் போய்விட்டன. அவற்றைத் திருப்பிக் கேட்பது முறையில்லை. சந்தன நாடாரின் பங்கு இன்னும் ஒத்தியில்தான் இருந்தது. அதுக்குரிய பணத்தைக் கொடுத்துத் திருப்பி விவசாயம்பார்த்தான். சக்கரை நாடார் பணம் வேணாமென்றுதான் சொன்னார். அவன் பிடிவாதமாகத் திணித்துவிட்டான்.

சந்தன நாடாருக்கும் பண்ணைக்குப் போகப் பிடிக்கவில்லை. செல்லக்கனியிடம் சொல்லிவிட்டார்.

''ஆட்டுக் குறுக்கப் புடிச்சுப் பழக்கப்பட்ட கையால மாட்டு வாலப் புடிக்க முடியாது. கெதியுள்ள மட்டும் சுதியிருக்கும். அதுவரைக்கும் வண்டி ஓடட்டும்.''

சந்தன நாடார் பெரிய தாத்தாவாகிவிட்டார். ஏழு பெண்கள் வயிற்றிலும் குழந்தைகள். மூணு பேருக்கு மும்மூணு. ரெண்டு பேருக்கு ரெண்டுரெண்டு. ரெண்டு பேருக்கு ஒவ்வொண்ணு. ஒருத்தி பெற்றுப்போட்டால் இன்னொருத்தி வாந்தியெடுப்பாள். வடிவு போய் ஓவணியம் பார்த்து முடியாது. அவளுங் காட்டித்தான் அசராமல் சமாளித்தாள். அதில் தனி ஆனந்தம்.

சந்தன நாடார் தங்கமாரியப்பனைத் தங்கையா என்றுதான் கூப்பிடுவார். சிவகாசிக் கொள்ளைக்குப் பலியான பாட்டையாவின் நினைவாக அப்படிக் கூப்பிடுவதில் ஒரு ஆறுதல். அடிக்கடி அப்பத்தா சொல்லிச்சொல்லி நெஞ்சில் ஆழப் பதிந்துவிட்ட பாட்டையாவின் உருவத்தை எப்படி மறக்க முடியும்.

இப்போதும் அவர் ராத்திரி வேளையில் பாடுவதுண்டு. சொகமான தெம் மாங்கை எடுத்து விடுவார்.

''கன்னத்துல வெத்தலையாம்
கதகதன்னு போயலையாம் - புள்ள
கதகதன்னு போயலையாம்
ஒன்னக்கண்ட நேரமெல்லாம் - எந் தன்னானக் குயிலே
உள்ளுக்குள்ள சொக்குதடி - எந் தன்னானக் குயிலே

ஓரக்கண்ணுப் பார்வையிலே
ஒறவுசொல்லிப் போறவளே - புள்ள
ஒறவுசொல்லிப் போறவளே
நேரக்கண்டு பேசலன்னு - எந் தன்னானக் குயிலே
நித்திரையும் கூடலயே - எந் தன்னானக் குயிலே''

வடிவு வக்கணை பேசுவாள்.

''ஏன் பாட்டு வராது. கரையேறிக்கிட்டீருல்ல. அழுது பொலம்புன காலமெல்லாம் மறந்துருச்சா. அப்பயும் ஒறக்கமில்ல. இப்பயும் ஒறக்கம் வர மாட்டங்குது. அது வருத்தம். இது கொழுப்பு.''

''யாத்தா வடிவு ஒனக்குத் தெரியுமா. ஏழு பவுனு தங்கம் இருவத்திரெண்டாப் பெருகிப்போச்சு.''

''ஆமாமா. பொண்டாட்டி கழுத்துல சரஞ்சரமாச் செஞ்சுபோட்டு அழகு பாரும்.''

அவர் வடிவுக்கு அல்லி அரசாணி மாலையை அனுபவித்து வாசித்துக்காட்டுவார். இன்னொரு நாள் பவளக்கொடி ஓடும். அவர்கள் அழ மாட்டார்கள். சிரிப்பு பொத்துக்கொண்டு வரும்.

தீபாவளி தைப்பொங்கல் பொட்டல்பட்டி அய்யனார் கோயில் கொடை இந்த மூணு விசேசங்களுக்கும் ஏழு பெண்களும் குடும்பத்துடன் கலிங்கலுக்கு வந்துவிடுவார்கள். மொத்தம் இருபத்தொன்பது உருப்படி. சந்தன நாடார் வீடு பொங்கி வழியும். முத்துநகரிலிருந்து சக்கரை நாடாரும் துரைப்பாண்டியும் வருவார்கள். விஜயா வருவதில்லை. பெண்களையும் அனுப்ப மாட்டாள். ஊதாரிப்

புருசனை வைத்துக்கொண்டு என்ன கொண்டாட்டம் வேண்டிக்கிடக்கிறது என்று வெறுப்பு. செந்திவேல் குடும்பமும் கூட்டத்துடன் சேர்ந்துகொள்ளும்.

நாடாக்கமார் தெரு இன்னொரு கலிங்கலாகவே மாறிவிடும். தெரு முழுக்க சிறிசுகள் கால்மாடு தலைமாடாகப் படுத்து உருள்வார்கள். வேலையா நாடார் காலத்திலிருந்து பொட்டல்பட்டி அய்யனாரைத்தான் குலதெய்வமாகக் கும்பிட்டுவந்தார்கள். தள்ளாத வயசிலும் தெய்வானை அய்யனாரைப் பார்க்க மறந்ததில்லை. அவன் பேரைச் சொல்லிக்கொண்டே உயிரை விட்டாள். வேலையா நாடாரும் பத்திரகாளியும் வருசம் தவறாமல் போவார்கள்.

முன்கூட்டியே சந்தன நாடார் தூங்கல் தொத்தலாக ரெண்டு ஆட்டுக்குட்டி வாங்கிவருவார். வடிவு அவற்றைக் கொழுக்க வளர்த்துவிடுவாள். ரெண்டையும் கசாப்புப் போட்டால் கூட்டத்துக்குச் சரியாக இருக்கும். கொட்டாரத்தில் அண்டாக்களில் சமையல் நடக்கும். கார வீட்டில் ரெண்டு பந்தி சாப்பிட்டு எழும்பும்.

குழந்தைகள் சந்தன நாடாரை மொய்த்துப் பாடாய்ப் படுத்திவிடுவார்கள். பாக்கியலட்சுமி பையன் அடம்பிடிப்பான்.

''தாத்தா எனக்கு அந்த மீச வேணும். எம் மூஞ்சியில ஒட்டிவையி.''

அவர் கவுந்துகிடக்கும் விசிறி மீசையைத் தடவிக்கொண்டு முனங்குவார்.

''எனக்கு மீச ஒரு கேடா.''

அவன் அழுது குதிப்பான்.

''அந்த மீச வேணும்.''

அழுகைக் குரல் கேட்டு வடிவு அவரை முறைத்துப் பார்ப்பாள்.

''புள்ள என்னமோ கேட்டு அழுகுது. நீருபாட்ல ஊமையாருந்தா எப்படி.''

''அவன் என்ன கேக்கான் தெரியுமா.''

''சீமையில இல்லாற பண்டமா கேக்கப்போறான்.''

''என்னோட மீச வேணுமாம்.''

அவள் சிரிப்பாள்.

''அது இருக்கப் போயித்தான கேக்கான். நாளைக்கே ஒட்ட வழிச்சிரும். மீச இல்லன்னு மூஞ்சி அழுதுச்சாக்கும்.''

இப்போதுகூட அவள் ரெம்ப அழகாகத் தெரிவாள். அவர் பேரனை அணைத்து வயிற்றை மீசையால் வருடிக்கொண்டே சமாதானப்படுத்துவார்.

''என் ராசா. ஒனக்கில்லாற மீசையா. ஒனக்காகத்தான ஒரம்போட்டுத் தண்ணிபாச்சி வளத்துவாறென். நாளைக்கு ஆருக்கும் தெரியாம அப்படியே எடுத்து ஒம் மொகத்துல ஒட்டவச்சிறென். பத்தரமாக் கொண்டுபோயிரு.''

ராத்திரி பொடிசுகளுக்குக் கதை சொல்லியாகணும். மொய்த்து முண்டி நச்சரிப்பார்கள்.

''தாத்தா தாத்தா கத சொல்லு.''

''நல்ல கத சொல்லணும்.''

''சத்தம் போடாமருந்தாத்தான் சொல்லுவென்.''

''சரி.''

''நம்ம சனங்க தெக்கருந்து வந்து நாலா பக்கமும் கூட்டங்கூட்டமாக் குடியேறுனாகளா. குடியேறி நல்ல மொறையில பெழப்பு நடக்குது. எங்கருந்து

வந்தாகன்னு அடையாளம் வேணுமில்ல. அதனால ஒவ்வொரு கூட்டத்துக்கும் வேறவேற பேரு வச்சுக்கிட்டாக. தெக்குச் சீமையிலருந்து வந்தவுக தெக்கத்தி யான் கூட்டம். தேரிக்காட்லருந்து வந்தவுக தேரிக்காத்தான் கூட்டம். தரகுத் தொழிலப் பாத்தவுக தரகன் கூட்டம். அவுகவுகளுக்கின்னு வேறவேற கொல தெய்வம் உண்டு. அய்யனாரு இருளப்பசாமி சொடலமாடன் ஒண்டிவீரன் பேச்சியம்மா காளியம்மா... இப்படி. ஒவ்வொரு கூட்டத்துக்கும் பேரு எப்படி வந்தது தெரியுமா.''

''சொல்லு தாத்தா.''

''எப்படி வந்தது.''

''ஒரு ஊருல ஒரு நாடாரு யேவாரி இருந்தாரு. முக்கியமா பருத்தி யேவாரத்துக்குப் போவாரு. ஒரு நா ஒரு சம்சாரி வீட்ல பருத்தி எடபோட்ருக் காரு. மருகமருகயா நிறுத்து மூட்னாக. கடைசி எடையில பருத்தி கொஞ்சம் கொறச்சலாருந்தது. யேவாரிக்கு ஒரு யோசன தோணுச்சு. திருணையில படுத்துக் கெடந்த சின்ன நாக்குட்டியத் தூக்கிவந்து பருத்தியோட வச்சு எடையச் சரிக் கெட்னாரு. அடுத்த வருசம் வரயில நாக்குட்டியோட எடைக்கு ஈடா சம்சாரி பருத்தி குடுத்துறணும்.''

''அடுத்த வருசம் யேவாரி போனாரா.''

''அதே வீட்ல பருத்தி எடபோட்டாக. யேவாரி போன வருசம் பேசிக் கிட்டத மறக்கல. அந்தப்படி நாக்குட்டியோட எடைக்கு ஈடாப் பருத்தி கேட்டாரு.''

''குடுத்தாகளா.''

''நாக்குட்டி ஒரு வருசத்துல பெரிய நாயா வளந்துருச்சு. இப்ப அந்த எடைக்குக் குடுத்தாகணுமே. அடடா எக்குத்தப்பா மாட்டிக்கிட்டமேன்னு சம்சாரிக்கு வெக்கமாப் போச்சு. இருந்தாலும் பேச்சு மாற முடியாதே. பெரிய நாயத் தராசில வச்சு அந்த எடைக்குப் பருத்திய நிறுத்துக் குடுத்தாரு. யேவாரிக்குச் சந்தோசம். ஏமாந்துபோன சம்சாரிக்குக் கோவம். போடா எடமாறிப் பய லேன்னு வெரட்டி அனுப்பீட்டாரு. அதுலருந்து அந்த யேவாரி குடும்பத்தச் சேந் தவுகளுக்கு எடமாறிக் கூட்டம்னு பேரு வந்துருச்சு.''

''எடமாறி எடமாறி...''

''இனியொரு கூட்டத்துக்கு என்ன பேரு தெரியுமா.''

''தெரியாதே.''

''ஒரு வீட்ல புதுமாப்பிளைய விருந்துக்கு அழச்சாக. சோறு பொங்கி வெஞ் சனம் வச்சுக் கோழிமுட்டையவிச்சு மாப்பிளைக்காகக் காத்திருந்தாக. என்ன காரணமோ மாப்பிள வரல. வெலைக்கு வாங்கின முட்டையத் திங்க இவுகளுக்கு மனசு வரல. பக்கத்து வீட்ல வித்துக் காசாக்கீட்டாக. அவுக அத ரெண்டாந் தடவையா அவிக்கப்போக குட்டு வெளிய வந்துருச்சு. ஒரே சண்ட. அதுக்குப் பெறகு அந்த நாடாரு குடும்பத்த அவிச்ச முட்டக் கூட்டம்னு கிண்டலாக் கூப்பிட ஆரம்பிச்சாக.''

சிறிசுகளுக்கிடையே தள்ளுமுள்ளு நடக்கும்.

''போடா அவிச்ச முட்ட.''

''நீதாண்டி அவிச்ச முட்ட. அடுப்புக்குள்ள பொரிச்ச முட்ட.''

''இந்தக் கதையக் கேளுங்க. ஒரு குடும்பத்துல மருமகப் புள்ளைக்கு பெரிசா விருந்து வச்சாக. ஓடிஓடிப் பரிமாறுனா மாமியா. அவசரத்துல நெய்க்குப் பதிலா வெளக்கெண்ணெய எடுத்து வந்து சோத்துல ஊத்துனா. நெய்யின்னு நெனச்சு மருமகனும் நல்லாச் சாப்பிட்டான். வெளக்கெண்ண செஞ்ச வேல விடிஞ்சும் விடியாம அவன எழுப்பீருச்சு. வகுத்தக் கலக்கி எத்தன தடவ கழிஞ்சான்னு சொல்ல முடியாது. வெசயம் வெளிய தெரிஞ்சுபோச்சு. மண்டி வெளக்கெண்ணெயக் குடிச்சுப்புட்டு மந்தையெல்லாம் பேண்டுட்டுத் திரியிறான்னு கேலி பேசுனாக. அண்ணைக்கு வெரண்டு போனவன் பெறகு அந்த ஊருக்கு எட்டிப் பாக்கவே யில்ல. அவுக மண்டிவெளக்கெண்ணக் கூட்டமாயிட்டாக.''

''தாத்தா தாத்தா நம்ம எந்தக் கூட்டம்.''

''நம்மளா...தங்கையா நாடாரு கூட்டம்... இண்ணைக்கு இவ்வளவு போதும். சத்தங்காட்டாம ஒறங்குங்க.''

சந்தோசமெல்லாம் ரெண்டு மூணு நாள்தான். பிறகு தெருவே வெறிச் சோடிக் கிடக்கும்.

எல்லாம் அனுபவித்துவிட்டுக் கொஞ்ச நாளில் பத்திரகாளி காலத்தை முடித்துக்கொண்டாள். மிஞ்சியிருந்த ஒரே மூப்பான உருப்படியும் போய் விட்டது. கடைசிவரை வடிவிடம் வாஞ்சையாக இருந்தாள். இருவரும் ஒரு வார்த்தை கடிந்து பேசியிருப்பார்களா.

## 3. பாவ சங்கீர்த்தனம்

முத்துநகர் பெரியாஸ்பத்திரி மெயின் வார்டு கலங்கலான விளக்கு வெளிச் சத்தில் விரிந்து கிடந்தது. நாலு வரிசையாக நாற்பது கட்டில்கள். ஒண்ணுகூடக் காலியில்லை. அதுபோக கட்டில்களுக்கிடையிலும் நோயாளிகள் தரையில் படுத்திருந்தார்கள். துணையாட்கள் கூட்டம் வேறு. வார்டு திணறியது.

வாசலோரம் ரெண்டு நர்சுகள் நகைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந் தார்கள். அவர்களது கோழிக் கெக்கரிப்பு அடிக்கடி கேட்டது.

யாக்கோவு வாத்தியார் நோயாளிகள் குணமடைவதற்காக கட்டிலுக்குக் கட்டில் குனிந்து செபம் பண்ணிக்கொண்டே வந்தார். மாசந்தோறும் வந்துவிடு வார். இப்படிப் பல ஆஸ்பத்திரிகளுக்குப் போவார். இந்த ஊழியத்தில் ஒரு ஆத்தும திருப்தி.

வடக்கு வரிசையில் ஒரு நோயாளிக்கு குளுகோஸ் அதிகமாக ஏறவே சன்னி வந்துவிட்டது. கொஞ்ச வயசுப் பெண். துணையாட்கள் ஓடிவந்து அவளை அமுக்கிப் பிடித்துக்கொண்டார்கள்.

கூட்டத்தைப் பார்த்து நர்சுகள் எரிச்சலைத் துப்பிக்கொண்டே வந்தார்கள்.

''அங்கென்ன சந்தக் கூட்டம்.''

''தொணையாளுகள உள்ள வுட்டா இந்தக் கூத்துத்தான்.''

எதிர்ப் படுக்கையில் கிடந்தவன் சொன்னான்.

‘‘வேற ஒண்ணுமில்ல. அந்தப் பொண்ணு சமஞ்சிருச்சு. தலைக்குத் தண்ணி ஊத்துறாக.’’

ஒரு நர்சு அவனை முறைத்துப் பார்த்தாள்.

‘‘ஒனக்கு நாக்குல ஊசி போட்டாத்தான் அடங்குவ. டாக்டர் வரட்டும் வச்சுக்கிறென்.’’

அவன் அடங்குவதாயில்லை.

‘‘குளுகோஸ் ஏத்துனா அப்பப்ப வந்து பாத்துக்கிறணும். அதெப்படி முடியும். ஊருக் கத பேசுறதுக்கே நேரம் காணாது. தலைக்கு மேல கத்தியத் தொங்க வுட்ட மாதிரி தலகீழாத் தொங்குற பாட்லப் பாத்தாலே பயமாருக்கு. அந்தப் பயத்துலயே சன்னி வந்துரும்.’’

நர்சுகள் அவசரமாகப் பந்தலைப் பிரித்த மாதிரி குளுகோஸ் பாட்டிலைக் கழட்டிக்கொண்டு போய்விட்டார்கள். நோயாளிப் பெண்ணுக்கு இழுப்பு சீக்கிரத்தில் அடங்கிவிட்டது. எதிர்ப் படுக்கைக்காரனுக்கு இன்னும் ஆத்திரம் அடங்கவில்லை.

‘‘புள்ளையக் கொன்னுபோட இருந்தாகளே.’’

அவன் மில் தொழிலாளி. பஞ்சுத் தூளை விழுங்கிவிழுங்கி இளைப்பு வந்துவிட்டது. கொஞ்ச நாளாகப் படுத்திருந்தான்.

வார்டு வாசலில் தள்ளுவண்டி அவசரமாக நுழைந்தது. ரெண்டு பேர் தள்ளிக்கொண்டு வந்தார்கள். நுழையும்போதே ஒருவன் குரல்கொடுத்தான்.

‘‘நர்சம்மா ஒரு அர்ச்செண்ட் கேஸ் வருது.’’

வண்டியில் ஒருவர் மல்லாக்கக் கிடந்தார். பாரியான உடம்பு. வண்டிக்குப் பின்னால் ஒரு பெண் தலைவிரி கோலத்தில் அழுதுகொண்டு வந்தாள். நர்சு உட்கார்ந்தபடியே கேட்டாள்.

‘‘ஏம்ப்பா கோவாலு என்ன கேஸாம்.’’

‘‘மாரடப்பு.’’

நர்சுகள் விரைந்தார்கள். ஒரு கட்டிலைக் காலியாக்கிப் புதியவரைப் படுக்க வைத்து நாடிபார்த்தார்கள். துடிப்பு இருப்பதை உறுதிசெய்த பிறகுதான் அவர்கள் முகத்தில் களையே வந்தது. டாக்டருடன் போனில் பேசினார்கள். அவர் சொன்ன படி சிகிச்சை நடந்தது. கட்டிலருகில் அழுதபடி நின்றுகொண்டிருந்த பெண் ணிடம் ஒரு நர்சு கேட்டாள்.

‘‘இவரு பேரென்னம்மா.’’

‘‘சூசமாணிக்கம்.’’

‘‘ஒனக்கு என்ன வேணும்.’’

‘‘வீட்டுக்காரரு.’’

‘‘ஒம் பேரென்ன.’’

‘‘எஸ்தர்.’’

தென்புறம் செபம்பண்ணிக்கொண்டிருந்த யாக்கோவு வாத்தியார் காதில் இந்தப் பேர் ஒலிக்கவே முழித்துத் திரும்பிப் பார்த்தார். யாரது இந்தக் கோலத்தில். அடடா எஸ்தரா. எஸ்தரேதான். அப்படியென்றால் கட்டிலில் படுத்திருப்பது யார். சூசைமாணிக்கமா. அருகில் வந்து பார்த்தார். நினைத்தது சரிதான்.

எஸ்தர் அடையாளம் கண்டுகொண்டாள். அவரை நிமிர்ந்து பார்க்கத் திராணியில்லை. தலைகவுந்துகொண்டு அழுதாள். அவர் சலனப்படாமல் விசாரித்தார்.

''இது சூசமாணிக்கந்தான.''

அவள் தலையாட்டினாள்.

''என்னாச்சு.''

''நெஞ்சுவலி வந்து மயங்கி விழுந்துட்டாரு.''

''இண்ணைக்குத்தானா.''

''சாயங்காலம். ஒடனே கொண்டுவந்துட்டென்.''

''கூட யாரும் வரலயா.''

''இல்ல. அப்பாவுக்குச் சொல்லிவுட்ருக்கென்.''

''கொழந்தைக உண்டா.''

''ரெண்டு பொண்ணு. ரெண்டு பையன்.''

''இருக்கும். வருசம் ஆயிப்போச்சே. ஆண்டவர் கிருபையால நல்லாருக் கட்டும். நெஞ்சுவலி வாற அளவுக்கு இவருக்கு அப்படியென்ன நடந்தது.''

''அளவுக்கு மீறுன குடி. கண்டதச் சாப்பிடுறது. எந்தக் கறின்னு கெடையாது. கொழுப்பு அடச்சுக்கிருச்சு.''

''நீ கட்டுப்படுத்தியிருக்கலாமே.''

''சொல்லிப்பாத்தென். கேக்கல.''

''ஆண்டவரே இதென்ன சோதன.''

சூசைமாணிக்கம் அமைதியாக மயங்கிக்கிடந்தார். அப்போது எஸ்தரின் அப்பா வந்துசேர்ந்தார். படியேறி வந்த களைப்பு மூச்சில் தெரிந்தது. வயசாகி விட்டது. யாக்கோவு வாத்தியார் அவருக்குத் தோத்திரம் சொன்னார். அவரும் நெஞ்சில் கைபதித்தார். இருவரும் வெளிப்படுத்த முடியாத மௌனத்தில் சிக்கித் தவித்தார்கள். பெரியவர் சிரமப்பட்டு வெளியே வந்து கண்கலங்கினார்.

''பாவத்தின் சம்பளம் மரணம்.''

வாத்தியார் கலங்கவில்லை.

''அப்படின்னா என்னையும் மரணம் சமீபிக்கிறது.''

இருவரும் சூசைமாணிக்கத்துக்கு முன்னால் மண்டியிட்டுக் கர்த்தரிடம் மன்றாடினார்கள்.

''கர்த்தரே... இந்த ஜீவனை மன்னித்துப் பாவங்களிலிருந்து விடுவித்துக் காப்பாற்றியருளும் பிதாவே... தோத்திரம். உமக்குத் தோத்திரம்.''

''கர்த்தரே இந்த பாவப்பட்ட ஜீவன்களுக்கு நல்வாழ்வைக் கொடுத்தருளும்.''

அவர்கள் கொஞ்ச நேரம் மௌனமாக அழுதார்கள்.

சூசைமாணிக்கம் சுயநினைவு திரும்பிக் கண்முழிக்கப் பதினோரு மணியாகி விட்டது. எதிரில் நிற்பவர்களை அடையாளம் தெரிந்தது. ரெம்ப வருசமாகப் பார்க்காமல் மங்கிப்போன முகங்கள். தன்னையறியாமல் கண்ணோரத்தில் கசிய ஆரம்பித்தது. மனசு யாக்கோவு வாத்தியாரிடம் பாவ சங்கீர்த்தனம் சொல்லிக் கொண்டிருந்தது. எஸ்தரை அருகில் வரச் சொல்லி ஏதோ சொன்னார். ஏங்கிப் பெருமூச்சு விட்டார். அதோடு சரி. துடிப்பு நின்றுவிட்டது.

எஸ்தர் படும் பாட்டைப் பார்க்கச் சகிக்காமல் யாக்கோவு வாத்தியாரும் பெரியவரும் வார்டுக்கு வெளியே வந்துவிட்டார்கள்.

எல்லாம் முடிந்த பிறகு டாக்டர் வந்தார். நர்சுகளிடம் தீவிரமாக விசாரித்தார். சூசைமாணிக்கத்தின் கையில் நாடிபார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினார். செய்ய வேண்டிய சடங்குகளைப் பற்றிச் சொல்லிவிட்டு அமைதியாகப் போய்விட்டார்.

மில் தொழிலாளி பல்லைக் கடித்தான்.

''அநியாயமா ஒரு உசிரச் சாகடிச்சிட்டாகளே. நாசமாப்போக. இவுக கொதவளையத் திருகினாக்கூடக் கோவம் ஆறாது.''

அடுத்து வாச்மேன் முழு போதையில் லம்பிக்கொண்டு வந்தான். அவன் அலம்பல் தாங்கவில்லை.

''வார்டுக்குள்ள பொம்பளைக ஆரும் இருக்கப்புடாது. வெளியேறுங்க. இது மெடிக்கல் ஆபீசர் உத்தரவு.''

பாம்புக்கடிக்கு வைத்தியம் பார்க்க வந்த ஒரு பையனின் தாயார் அவனுக்குக் கமுக்கமாகக் காசு கொடுத்தாள். வாங்கிக் கால்சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டான். பிறகு எஸ்தரிடம் வந்தான்.

''நீ எதுக்கும்மா நிக்கிற. போ போ.''

அவள் அழுதுகொண்டே சொன்னாள்.

''இது என் வீட்டுக்காரரு. உயிரு போயிருச்சு.''

''செத்துப்போனவருக்குத் தொணையெதுக்கு. நாளைக்கு வந்து பொணத்த வாங்கீட்டுப் போ.''

பாடிக்கொண்டே லம்பிலம்பி நடந்தான்.

''இண்ணைக்கு வீட்டுக்காரரு
நாளைக்குக் காட்டுக்காரரு
இருந்தா நோட்டுக்காரரு
இல்லாட்டி பாட்டுக்காரரு...''

மில் தொழிலாளிக்கு வந்ததே கோவம்.

''ஒங்காத்தா புருசன் செத்துக் கெடந்தா என்னடா பண்ணுவ. வக்காளி பாட்டா படிக்க. இட்லி வித்து எச்சுத் தட்டக் கழுவீட்டுத் திரிஞ்சதெல்லாம் மறந்துருச்சா. ஒன்ன இங்க வச்சு ஒண்ணும் செய்யப்புடாது. ஆஸ்பத்திரிக்கு வெளிய வா மச்சான். அடிச்சு வவ்வா மாதிரி மரத்துல கெட்டித் தொங்க வைக்கென். ஒங்க சாதிச் சண்டையில கண்ணு முழுசா மறச்சிருச்சோ. அவங்கதான் தொழிலு செஞ்சு சம்பாரிக்கிறதுக்கு அடிச்சுக்கிறாங்க. ஒனக்கென்ன வந்துருச்சு. வெளிய வருவீல்ல அப்ப வச்சுக்கிறென். மொதல்ல கண்ணு ரெண்டவும் தோண்டி நாய்க்குப் போட்டுட்டுத்தான் மத்ததெல்லாம்.''

வாச்மேனின் சுதி இறங்கிவிட்டது.

''மெடிக்கல் ஆபீசர் சொன்னத நான் சொன்னென். இது தப்பா.''

''மெடிக்கல் ஆபீசரோ பொடிக்கல் ஆபீசரோ. அவர இங்க வரச் சொல்லு பேசிக்கிறென்.''

வாச்மேன் ஏதோ உளறிக்கொண்டு போனான். மில்காரன் ஒரு அரட்டு விட்டான்.

''என்னமும் மொனங்கீட்டுப் போன கழுத்த ஒடிச்சுப்புருவென். எம் படுக்கையில கெடக்கணும்னு ஆசையாருக்கா. இல்ல இந்த மனுசனப் போல போகணுமா. வாயவும் சூத்தவும் பொத்தீட்டுப் போ..... மனுசன் தன்னால மில்லுக்குள்ள பஞ்சக் குடிச்சுச் சளியால அவதிப்படுறான். அதத் தாவலையாக்கிறதுக்குத் துப்பில்ல. சாதிச் சண்ட கேக்குதாக்கும். அவங்க சண்டையில எத்தன உசிரு போகப்போகுதோ. வரட்டும் இங்க. கொவளையில துப்புற சளிய அவங்க மூஞ்சியில துப்புறென்... மில்லுல லீவு கேட்டதுக்கு டாக்டரு தர மாட்டன்னு சொன்னான். அவன் மூஞ்சிக்கு நேர செருப்ப ஓங்கிக் காட்டீட்டு இங்க வந்து படுத்தா இங்கயும் இப்படித்தான். எங்க போனாலும் நம்மளச் சும்மாருக்க வுட மாட்டாங்க போலருக்கே.''

நர்சுகள் இதைக் கண்டுகொள்ளாதவர்கள்போல் வேறெதையோ அக்கறையாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மில்காரன் பக்கத்துக் கட்டிலில் இருந்த பெரிய மனுசனிடம் சொன்னான்.

''மெடிக்கல் ஆபீசரு மெடிக்கல் ஆபீசருன்னு ஏன் சொல்றான் தெரியுமா.''

''அதான. எனக்கும் வெளங்கலயே.''

''மெடிக்கல் ஆபீசரு புதுசா வந்தவரு. எல்லாருக்கும் பெரிய அதிகாரி. கீச்சாதிக்காரரு. அவருக்குக் கீழருக்கிற டாக்டரு மேச்சாதி. எந்தச் சாதியாருந்தா என்ன. பெரிய அதிகாரி சொன்னா இவுக கேக்கிறதில்ல.''

''ஏன் அப்படி.''

''தொழிலுப் பகதான். பஸ் ஸ்டாண்டோரம் மேச்சாதி டாக்டரு ஆஸ்பத்திரி நடத்துறாரு. அதுக்குப் போட்டியா அந்தத் தெருவுலயே பெரிய அதிகாரியும் பெரிய ஆஸ்பத்திரி கெட்டிக்கிட்டாரு. வாற நோயாளிகள நீ அங்க போகாத இங்க போகாதன்னு பாடாப் படுத்துறது. சர்க்காரு ஆஸ்பத்திரியில தெண்டத்துக்குச் சம்பளம். அங்க பணம்பணமாக் கொள்ள. இங்க தோட்டியிலருந்து மேலவரைக்கும் சாதியச் சொல்லித் தூண்டிவுடுறது. அவுகவுகளுக்கு வேண்டிய நோயாளிகள உள்ள சேக்கிறது. இது இவுக ஆளு அது அவுக ஆளுன்னு சொல்லி கட்லு குடுக்கிறதுலருந்து சகலத்துலயும் தகராறு. நோயாளிகளச் சரியாக் கவனிக்கிறதில்ல.''

''இந்த வாச்மேனுக்கு என்ன வந்துச்சாம்.''

''இவன் மேச்சாதி டாக்டருக்கு வேண்டியவனாச்சே. சொந்தக்காரன்னு கூடச் சொல்லீட்டுத் திரிவான்.''

''அப்படிப் போடு.''

''இந்தக் கூத்துத்தான் நடக்குது. எல்லாரவும் கையக் கால ஒடிச்சுப் படுக்கையில மலத்தணும். பொட்டச்சிகள சூப்பநகையப் போல மூக்க அறுத்து மூளியாக்கணும். அப்பத்தான் சரிப்படும்.''

அவன் இளைத்து இருமி முடித்து குவளையைத் தேடினான்.

யாக்கோவு வாத்தியாரும் பெரியவரும் நிறையப் பேசிக்கொண்டிருந்துவிட்டு எஸ்தரிடம் வந்தார்கள். அவள் எழுந்துகொண்டாள். வாத்தியார் முழுக்க

மூடிக்கிடந்த சூசைமாணிக்கத்தின் உருவத்தை வெறித்துவிட்டு அவளைப் பார்த்தார்.

"நான் போயிட்டுக் காலையில வாறம்மா."

இப்போது அவள் அவரை நேராகவே பார்த்துக் கைகூப்பிக் குலுங்கினாள்.

## 4. என்ன எழவு ஒறவோ

"அடியே போறதாரு."

"என்ன நெத்திலிப் பெரிஞ்ஞு."

"ஆரது கருவாச்சியா. கண்ணெழவு பத்த மாட்டங்குது. இங்க வா தாயி. அவசரமாப் போறயா."

"இல்ல பிஞ்சைக்குத்தான். கைக்கள கொஞ்சம் கொற கெடக்குது."

"எங்க மூக்கி வீட்ல எல்லாரும் நல்லாருக்காகளா."

"மக எங்கயோ இருக்கிற மாதிரி பேசுறயே. ஒரெட்டு போயிப் பாத்துட்டு வர வேண்டியதுதான."

"எங்கம்மா முடியிது. ஊரெல்லாம் அலஞ்ச காலு. இப்ப ஒரு தெருவுக்கு நடக்க முடியல. அப்படி ஒளையிது. எடுத்தேறி வடகடேசிக்கு வரணும்."

"அவ வந்துக்கிருவால்ல. வேல தீரலயாக்கும்."

"அப்பப்ப வருவா."

"அவளுக்கென்ன கவல. மூத்தவனுக்கு உள்ளூருலயே கலியாணம் முடிச்சு வேற வச்சிட்டா. நடுவுளவனுக்குக் கொஞ்ச நாள்ல முடிக்கணும்."

"பெறகு எளையவன் வந்து நிப்பான்."

"பொட்டப்புள்ள இல்லாறது நல்லதாப்போச்சு."

"பொட்டச்சிங்கவுந்தான் யாவுகம் வருது. வடக்குத் தெருவு வக்கட்டையன் மக வகுத்தத் தள்ளீட்டு அலஞ்சாளே புள்ளப் பெத்துக்கிட்டாளா."

"பொம்பளப் புள்ள."

"என்ன புள்ளன்னு கெடக்கு. சொகமாப் பெறந்தாப் போதும்."

"ரெம்பச் சொகம். முத்துநகரு ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோயி முக்காம மொனங்காம அடிவகுத்த அறுத்துப் புள்ளைய எடுத்துட்டு வந்துருக்கா."

"இதென்ன கூத்தும்மா. வகுத்து வழியா புள்ளப் பெற வைக்கிறது."

"மோண்டது பேண்டதுக்கெல்லாம் துட்டப் புடுங்கி வெறுங்கையோட அனுப்பி வச்சிட்டாக. உடுத்துன துணிய உரியாறதுதான் குத்தம்."

"நாசமாப் போக."

"கனத்த வேல செய்யப்புடாதாம். கனத்த பண்டம் தூக்கப்புடாதாம். வகுத்துல தையலு மூட்டுவாயி கிழிஞ்சிருமாம்."

"அப்ப தண்ணிப்பானகூடத் தூக்க முடியாதுன்னு சொல்லு. வீட்ல காலாட்டிட்டுக் கெடந்தா மண்ணவா திங்கிறது."

"அதுக்குத் தோதா லேசான வேல வந்து ஊருக்குள்ள எறங்கியிருக்குதில்ல. தீப்பெட்டி வேல. உக்காந்துக்கிட்டே கட்டையடுக்கலாம். தீப்பெட்டி ஒட்டலாம்."

''அதனாம்மா. அந்த வேல வந்ததுலயும் வந்தது ஊருக்குள்ள ஒறக்கங் கெட்டது. சனங்க பங்கட்டம் பறக்கட்டம்னு ராவாப் பகலா அலையிதுக.''

''பொம்பள ஒரு அடுப்புல கஞ்சிகாச்சிக் கவுத்துறா. அடுத்த அடுப்புல தீப்பெட்டிப் பச காச்சுறா.''

''அதுலயும் ஊருக்குக் கரண்டு வேற வந்துருச்சா. தெருவெல்லாம் வெளிச்சமாயிருச்சு. சாமம் வரைக்கும் அந்த வெளிச்சத்துல வேல நடக்குது.''

''அஞ்சாறு கார வீட்ல கரண்டு இழுத்துருக்காக.''

''வெளக்கித் தொடச்ச வெங்கலப் பாத்தரம்போல ஊரே பளிச்னு மாறியிருச்சா சும்மாவா.''

''பள்ளிக்கொடந்தான் வந்த பாடில்ல. புள்ளீக வேப்பங்காட்டுக்கு நடந்து தவிக்குதுக.''

''அதப் பத்தி ஆருக்குக் கவல.''

''வடக்கூரு மேலூரு எங்க பாத்தாலும் தீப்பெட்டியாவுசுகதான் நடக்குதாம். விடியக்காலம் பொட்டப்புள்ளீக கூட்டங்கூட்டமாக் கெளம்பிப் போறதப் பாத்தாப் பாவமாருக்கு. மதியத்துக்குத் தூக்குவாளியில சோறு கொண்டுட்டுப் போகுதுக. இப்ப எல்லாம் வேற சோறு எறங்குறதில்ல. நெல்லுச் சோறுதான்.''

''அதுக்கு வேற தனியா ஒல வைக்கணும்.''

''அந்தக் கரிமருந்து வாடைக்குள்ள எப்படித்தான் உக்காந்து சாப்புடுதுகளோ.''

''அங்க வேல பாத்தது காணாதுன்னு ஊருலயும் கட்ட அட்ட தாளுன்னு கொண்டுவந்து எறக்கீறாக.''

''பெரிய பொம்பளைக வேற வேல பாத்துறப்புடாதுல்ல.''

''போற போக்கப் பாத்தா காட்டு வேலைய மறந்துருவாக போலருக்கு.''

''அதும் பொய்யா.''

''வெவசாயம் படுத்துக்கிரும்.''

''இனியொரு தேரம் படுக்கணுமாக்கும். வேலைக்கு ஆளுக் கெடைக்காமத் திண்டாடுறாக.''

''ஊருக்குள்ள இருந்த மாடுகளுக்குக் கணக்கு உண்டுமா. இப்ப வள்ளிசாக் கொறஞ்சுபோச்சே.''

''நல்லநல்ல நெலமெல்லாம் தரிசாக் கெடக்குது. வேலிக்கருவ மொளச்சு வனமாருக்குது.''

''ஊரச் சுத்தி அந்தச் சனியந்தானம்மா மொளச்சுக் கெடக்குது. ஊரவே மூடூரும் போலருக்கு.''

''வண்ணாக்குடி இருளாண்டி மக்க ரெண்டு புள்ளீகளும் நம்ம புள்ளீகளோட தொடுத்துக்கிருச்சுக. எல்லாம் நல்லநல்ல துணியுடுத்தி பூவும் பொட்டுமா சிலுப்பீட்டுப் போறதப் பாக்கணுமே. தாவணி போடாற பொடிசுக கெடையாது.''

''பெரிய மனுசியாயிட்டாக. மாருல மல போல முண்டியிருக்கிற மாதிரி தாவணிய இறுக்கிச் சொருவுறதும் தளுக்கா நடக்கிறதும் அடியஞ்ஞாடி சமஞ்ச கொமரி தோத்துருவா. மாருல ஒரு சங்கப்பமும் கெடையாது. காலக் கொடும.''

''வெளையாடுற பருவத்துல இப்படி அதுக மனசக் கெடுத்தா வெளங் குனாப்புலதான்.''

‘‘கெடுத்துப்புட்டானே.’’

‘‘எனக்கு தீப்பெட்டியாவுச நெனச்சாலே கொமட்டுது. அண்ணைக்கு வடக் கூருல ஒரு ஆவுசுப் பக்கம் நடந்து போனென் பாரு. ஈத்துமாடு மோண்ட மாதிரி கலங்கலா கருமருந்துத் தண்ணி சொவருக்குப் பின்னால கொழக்கொழன்னு வடியிது. அது ஊருணிக்குள்ள வந்து கலந்தா என்னாகும். கொஞ்சமாச்சும் அறிவிருக்கா.’’

‘‘ஆரச் சொல்றது.’’

‘‘ஊருகள்ல நடக்கிற சங்கதிகள முத்துநகருலருக்கிற பெரிய தீப்பெட்டி யாவுசு மொதலாளி பாத்தாரு. இதென்னடா ஊரு ஊருக்குப் பல சில்லறையாப் புள்ளீக போகுதே இதுகள ஒண்ணுசேத்தா நல்லாருக்குமேன்னு ரோசன பண்ணு னாரு. ஊருக்கே காரனுப்பி அத்தன பேரவும் கூட்டியள்ளிப் போட்டுட்டுப் போயிட்டாரு. சுத்துப்பட்டி மொதலாளிக பாடு திண்டாட்டமாப் போச்சு. பாதிப் பேருக்கு மேல ஆவுச மூடீட்டாக. மிச்சப் பேரு பக்கத்து ஊருகளுக்குப் பொருள அனுப்பி வாங்கி அதுலதான் ஆவுசு ஓடுதாம்.’’

‘‘அப்படிச் சொல்லு.’’

‘‘கொஞ்ச மொதலாளிக முத்துநகருக்குக் குடிபோயி அங்கயே ஆவுசு வச்சு நடத்துறாகளாம்.’’

‘‘நல்லா நடத்தட்டும்.’’

‘‘மேலத் தெரு வெள்ளையம்மா மக காருலருந்து எறங்கயில எதுக்க வந்த லாரியில அடிபட்டு அந்த எடத்துலயே செத்துப்போச்சு.’’

‘‘அநியாயமாப் புள்ளையப் பறிகுடுத்தா.’’

‘‘நாலு நாளைக்கு அழுதாக. ஆவுசு மொதலாளி பணங்குடுத்தாராம். அத வாங்கி அருவமில்லாம கனமா தங்கச் சங்கிலி செஞ்சு மாட்டிகிட்டாளாம் ஆத்தாக்காரி. மக யாவுகமா வாங்குனாளாம்.’’

‘‘அழுததுக்குப் பலன் கெடச்சிருச்சு. செத்த பெறகும் சீதனம் குடுத்துருக் காளே புண்ணியவாட்டி.’’

‘‘பொட்டப்புள்ள இல்லாறவுக நமக்கொண்ணு இல்லையேன்னு அடிச்சுக் கிறாக.’’

‘‘வாரந்தவறாம வருமானம் வருமே... கொமரிக சமஞ்சு உக்காந்தா சீரு செனத்தி செய்றதுக்குத் தாய்மாமனத் தேட மாட்டாக போலருக்கு.’’

‘‘எல்லாக் காரியத்துக்கும் மொதலாளிமாரு வந்து மொத ஆளா நின்னு செய்மொற செஞ்சிட்டுப் போறாகளே. பெறகெப்டித் தாய்மாமனத் தேடுவாக.’’

‘‘அப்படிப் போகுது ஒறவு.’’

‘‘என்ன எழவு ஒறவோ. நான் வாறென்.’’

‘‘நான் ஒரு கிறுக்கி. ஒன் வேலைய மெனக்கிட வச்சிட்டென். காட்டுக்கீர தட்டுப்பட்டா கொஞ்சம் புடுங்கீட்டு வா தாயி.’’

## 5. கழுதைகளக் காணலயே

கலிங்கல் வண்ணாக்குடி அழுக்கடைந்துவிட்டது. அறுவடைக் களம்போல் அடிதொடியாக வேலைகள் நடக்கும் வீட்டுமுற்றம் மூளியாகிப்போயிற்று. ஒரு காலத்தில் அனந்தியும் பேத்தியாளும் சரிமல்லுக்கட்டிய இடம். அழுக்குப் பொதிகளில் மல்லாந்தபடி ஆகாயத்தில் பட்சிக் கூட்டங்களையும் நடசத்திரப் பண்ணைகளையும் வேடிக்கை பார்ப்பார்கள். மாரியும் மருதனும் வெளுத்த துணியம்பாரத்தைக் குமித்துக்கொண்டு அள்ளியள்ளி வெள்ளை பிரிப்பார்கள். எல்லாரும் உட்கார்ந்து கூட்டாங்கஞ்சி குடிப்பார்கள். சுவரொட்டி வரிசையாக உட்கார்ந்திருக்கும் தாழிகளில் மனுசரும் கழுதைகளும் சதா புழங்கிக்கொண்டு திரிவார்கள். வண்ணார்கள் உட்கார்ந்து பேசி முடித்த விவகாரங்கள் கொஞ்சமா.

கழுதைகள் சுருங்கிவிட்டன. பேருக்கு ரெண்டு பீஞ்சாணி உருப்படிகள் முடக்கிக் கிடந்தன. குட்டிகள் தொட்டுப்பிடித்து விளையாடிய கட்டுத்துறை வெறிச்சோடிவிட்டது.

கம்மாயில் புழக்கம் குறைந்த வெளுப்புத்துறை. அஞ்சாறு தலைமுறைக்கு முந்தி அல்லாத்தன் அல்லாடிச் சுமந்துவந்து போட்ட வெளுப்புக் கல் அசந்து கிடந்தது. எப்போதாவது மூக்கனும் பழனியும் வெளுக்கும் சத்தம் கேட்கும். சிறு கிடங்குத் தண்ணீர்போல் துணிகள் காயும். ஒரு கழுதைக்குப் பொதி தேறாது.

கம்மா மண்ணேறி நடுவயிறு பெருத்துச் சவலையாகிவிட்டது. மேட்டுநீர் உள்வாங்கி அடிவயிற்றுக்கு வடிந்து வெயில் அனலுக்கு வற்றி விரைவிலேயே வறண்டுவிடும். வெள்ளாமை கரண்டுவிடும்.

நீர் நிறைந்த காலங்களில் ஞாயிறுதோறும் தீப்பெட்டியாலைக் குமருகளும் பூக்காத பொடிசுகளும் கம்மாய்க்கு வந்து கலிங்கல் சுவரில் வரிசையாக உட்கார்ந்து துணி துவைத்துக் குளித்துக் கும்மரிச்சம் போடுவார்கள். அவர்களுடன் இருளாண்டி மக்கள் தேனாத்தாளும் முருகலட்சுமியும் கலந்திருப்பார்கள். அவர்களுக்கு வெளுப்புத் தொழிலே மறந்துபோயிற்று. சோப்புப் போட்டுத் துணி துவைத்தும் குளித்து முடிந்தும் பெண்கள் வீடு திரும்பும்போது சிரிப்பும் கும்மாளமும் கேட்கும். சலவை சோப்பும் குளிப்பு சோப்பும் கலந்த நுரைக் குமிழ்கள் கலிங்கல் விளிம்பில் ஒதுங்கித் தொணதொணத்து உடையும்.

ஊருக்குள் வெள்ளையனும் முத்துராக்கும் கஞ்சிக்குப் போவார்கள். மேற்கே வெள்ளையன் சத்தம் கேட்கும். கீழ்ப்புறம் முத்துராக்கு திரிவாள். ஊரை ரெண்டு பங்காகப் பிரித்துத் தொழில் செய்தார்கள். சந்திக்கு மேற்கே வெள்ளையனுக்கு. கிழக்கே இருளாண்டிக்கு.

எப்போதாவதுதான் கஞ்சிப் பானை நிறையும். கிடைப்பதை சாத்தன் வெள்ளையன் இருளாண்டி முத்துராக்குதான் குடிக்கணும். மிச்சம் கழுதைகளுக்கு. எளவட்டங்களுக்கும் குமரிகளுக்கும் தொண்டைக்குள் இறங்காது. அவர்களுக்குத் தனியாக நெல்லுச் சோறு வேணும்.

ஏகதேசம் வெள்ளாவிகள் புகையும். உவர்முறுக்குவதும் நீலம் பிழிவதும் குறைந்துவிட்டன. அவசரமானால் சோப்பு வாங்கிக்கொடுத்து துவைக்கச் சொல்வார்கள்.

மூக்கன் தொழிலில் பிடிப்பில்லாமல் இருந்தான். அடிக்கடி வேப்பங்காடு போய்க் கண்ணம்மாளைப் பார்த்து ரெண்டு வார்த்தை பேசாமல் அவனுக்குக் கண்ணடைக்காது. அவள் தன்னைக் கைப்பிடிப்பாளா என்ற சந்தேகம் இருந்தது. தானும் தீப்பெட்டியாலைக்குப் போகலாமா என்று நினைப்பு ஓடும்.

நன்றாக அலங்கரித்து மேனத்தாக இருப்பான். துணிமணியில் இத்தினி அழுக்குப் பட்டுவிடக் கூடாது. அந்த மிதப்பில் ஊருக்குள் வெள்ளை கொடுக்கச் சுணங்கிவிடும். அப்பன் வசவு வாங்கிக்கட்டுவான்.

இருளாண்டி மகன் பழனி தொழிலைக் கவனித்துக்கொண்டான். பெண்டாட்டி சுந்தரி ஒத்தாசனையாக இருந்தாள். பழனியின் தம்பி செவனாண்டி கூலிவேலை செய்தான். முட்டுவெட்டான நேரங்களில் தொழிலில் உதவுவான். லட்சணமாக முடிவெட்டுவான். காது நெற்றி மண்டையின் அளவுக்கேற்ப முடியின் அளவு இருக்கும். முகவாகுக்குத் தக்க குட்டைக் கேரா நெட்டைக் கேரா கலப்பைக் கேரா ஒதுக்கிவிடுவான். எளவட்டங்களுக்குக் கொம்பு முடிவைப்பான். வாய்க்கேற்றபடி மீசையை அமைப்பான். கோழிவால் மீசை கொத்து மீசை நறுக்கு மீசை திருக்கு மீசை தொங்கு மீசை கெளிர் மீசை இப்படிப் பல ரகமுண்டு.

கத்தி கத்திரியை இடுப்பில் சொருவிக்கொண்டு அயலூர்களுக்கும் போவான். மரத்தடியில் அவனுக்காக மெனக்கிட்டுக் காத்துக்கிடப்பார்கள். அவனுக்குக் கணிசமாகக் காசு கிடைக்கும். கால் முத்துநகருக்கு நோங்கும். காரேறிப் போய் தாராளமாகச் செலவழிப்பான். நினைத்த பண்டத்தை வாங்கிச் சாப்பிடுவான். லாத்தலாக வீடு திரும்புவான்.

வேப்பங்காட்டில் சின்னான் மகன் முனியசாமி கலிங்கல் தேனாத்தாளுக் காகக் காத்திருந்தான். தங்கச்சி கண்ணம்மாளிடம் அவளைப் பற்றி விசாரிக்காத நாளிருக்காது. அவனைப் பற்றி கேட்கவில்லையென்றால் தேனாத்தாளுக்கும் வேலை ஓடாது.

''என்ன நாத்துனாரே ஒங்கண்ணக்காரன் எப்படியிருக்காகளாம்.''

கண்ணம்மா சிமிட்டுவாள்.

''ஒரெட்டு வந்து கேட்டுட்டுப் போக வேண்டியதுதான.''

''வாற காலத்துக்கு வராமயா போயிருவொம்.''

''சந்தோசமா வாங்க.''

''ஆமா ஒங்கண்ணன் எத்தன நாளைக்குக் கம்மாயக் கெட்டி அழுகப் போறாகளாம். இங்க வர வேண்டியதுதான.''

''அவனாவது கம்மாய்க்குப் போறதாவது. எல்லாம் அப்பனும் ஆத்தாளுந் தான் கவனிச்சுக்கிறாக. அவனுக்குக் கண்ணாடியப் பாத்து காக்காவலிப்பு வந்த மாதிரி மூஞ்சியக் கோணுறதுக்கே நேரம் காண மாட்டங்குது. அப்படி என்னதான் சொக்குப்பொடி போட்டீகளோ. அம்மா உத்தரவுபோட்டா அய்யா கேக்க மாட்டன்னா சொல்லப்போறாரு. இருக்கிற நெலமையப் பாத்தா அதான் நடக்கப் போகுது.''

''நீங்க போட்ட உத்தரவுதான் எங்க மூக்கண்ணன அந்தப் பாடு படுத்து தாக்கும். நல்லாத் தெரிஞ்சுக்கிட்டென். ஏற்கெனவே அக்காக்காரியக் கொண்டு

வந்து எங்க வீட்ல பழனியண்ணனுக்கு எறக்கீட்டீக. பெரியப்பன் வீட்ல நீங்க வந்து எறங்கிப் பண்ண போடுங்க.''

''வந்து வச்சுக்கிறென்.''

இப்படித்தான் காலம் போய்க்கொண்டிருந்தது.

## 6. அலைச்சல் தீரலயே

இப்போதெல்லாம் மாடப்பனை அடிக்கடி கலிங்கலில் பார்க்கமுடிந்தது. வந்தால் ஒரு வாரம் பத்து நாள் இருப்புப்போட்டுவிட்டுத்தான் போவான். மருமகனுக்குத் துணையாகச் சம்சாரி வேலை செய்வான். மகளுக்கு விறகு வெட்டி உடைத்துக் கொடுப்பான். பிள்ளைகளைக் கவனித்துக்கொள்வான். ராத்திரி சாமியாருடன் தங்கல்.

கோயிந்தன் ஏகதேசந்தான் வெளியூர்களுக்குப் போவான். வயசாகிவிட்டது. கோயில் குளத்துக்கு அலையத் தெம்பில்லை. கலிங்கலில் சாப்பாடு கொடுக்கும் வீட்டுக்காக உழைப்பான். சொந்த வேலை இல்லாத நாட்களில் மாடப்பனுடன் சேர்ந்து வேறு தொழில்களுக்குப் போவான். ஊர் மடத்தில் உறங்கி எழுந்திருப்பான்.

வீட்டுக் கூரை படப்பு மேய்ச்சல்தான் அவர்களுக்கு முக்கியமான தொழில். நொண்டியன் வம்சத்து நோணியனைக் கையாளாகச் சேர்த்துக்கொள்வார்கள். கோயிந்தனுக்குச் சின்னவயசுச் சேக்காளியாயிற்றே. மற்ற சேக்காளிகள் வள்ளிமுத்தும் துமுக்கனும் போய்ச்சேர்ந்துவிட்டார்கள்.

உள்ளூரிலும் வெளியூரிலும் அவர்களுக்கு ஏகக் கிராக்கி. மடத்தில் காத்துக் கிடந்து கூட்டிப்போவார்கள். எந்த ஊருக்குப் போனாலும் ராத்திரி மடத்துக்குத் திரும்பியாகணும்.

நோணியன் சளைக்காமல் கூடவே திரிவான். நொண்டியன் குடும்பத்தில் அவன் பெண்டாட்டி சிலுப்பி மகன் மாரிமுத்து மகள் இருளி மாரிமுத்தின் பெண்டாட்டி மந்தாயி மகன் கருத்தமுத்து மகள் வீராயி மகன் சங்கராண்டி கருத்தமுத்தின் பெண்டாட்டி கப்பக்காலி எல்லாருமே மண்ணாகிவிட்டார்கள். கருத்தமுத்தின் மகன் நோணியனும் விட்டியனும் அவர்களது பிள்ளைகளுமே தங்கியிருந்தார்கள். குடும்பத்தில் நொண்டியனைப் போல் தாட்டிக்கமாக யாரும் தலையெடுக்கவில்லை.

வீட்டுக் கூரையாகட்டும் படப்பாகட்டும் மேய்ச்சலில் மாடப்பன்தான் வாத்தியார். அவன் சொன்ன சொன்னபடிக்குப் பொருட்களை எடுத்துக் கொடுக்கணும். இல்லையென்றால் கெட்ட கோவம் வரும்.

கூரைக்கு ஓலை மேய்ச்சல் தட்டை மேய்ச்சல் என்று ரெண்டு வகை உண்டு. ஓலை மேய்ச்சல் கொஞ்சம் சுளுவான வேலை. சிறகோலைகளை நீர்தெளித்து நனைத்துப் பதப்படுத்தி வீட்டுக்காரன் கொடுப்பான். நீண்ட கம்பில் சூலாயுதம் போல் கட்டிய ஊசிக்குச்சில் ஓலையைக் குத்தி கோயிந்தன் எடுத்துக் கொடுப்பான். கூரைமேலிருக்கும் மாடப்பன் அதை வாங்கித் தோதாகச் சொருகுவான். பிறகு ஓலையின் முதுகுத் தண்டுக்கு இந்தப் புறம் குத்தூசியைப் பாதிக்கு மேல் நுழைத்துச்

சத்தம்கொடுப்பான். வீட்டுக்குள் ஏதாவதொரு தாங்கலில் உட்கார்ந்தபடி தோளில் பனைநார்கள் தொங்க அண்ணாந்திருக்கும் நோணியன் ஊசித் துவாரத்தில் நாரைக் கோர்த்துப் பதிலுக்குச் சத்தம்கொடுப்பான். மாடப்பன் ஊசியை உருவி ஓலைத்தண்டின் மறுபக்கம் குத்தி உள்ளே கொடுப்பான். இப்போது நோணியன் கையில் நாரின் இருமுனையும் இருக்கும். இனி ஆக்கை பிடிக்க வேண்டியது தான். உள்ளிருந்து அவன் சன்னை கொடுக்க மாடப்பன் ஓலைமேல் ''இந்தா இந்தா'' என்று குதித்து இறுக்க அவன் நாரை இழுத்து வரிச்சிக் கம்பில் முடிச்சுப் போடுவான். அடுத்து மாடப்பனின் குரல் கோயிந்தனுக்கு வரும். அதுவரை ஈர ஓலையைச் சொகமாகக் குடைப்பிடித்து நிற்கும் கோயிந்தன் ''இந்தா புடி'' என்று அவசரமாக நீட்டுவான்.

தட்டை மேய்ச்சலுக்கு நிதானம் வேணும். சோளத் தட்டையென்றால் பொடிசாக இருக்கணும். கம்மந்தட்டையென்றால் வளர்த்தியாக இருக்கணும். நீரில் நனைத்த தட்டைகளைச் சிறுசிறு முடிகளாகத் தறித்துக் கொடுத்தால் கோயிந்தன் ராகம் போட்டு உயரே எறிவான்.

''ராம பாணம் வருது... இது ராவணன் பாணம்... இந்தா வீம பாணம்...''

மாடப்பன் கூடக்கொஞ்சம் குதித்தால்தான் கூரை இறுகும். உள்ளே அண்ணாந்திருக்கும் வாயில் வடியும் நீரைத் துப்பிக்கொண்டே நோணியன் கேட்பான்.

''கூரையில மனுசக் கோமிய வாடையடிக்குதே என்ன சங்கதி.''

மாடப்பன் சொல்வான்.

''தட்டையில தண்ணி தொளிக்கிற மகராசனக் கேட்டுச் சொல்றென்.''

ஒரு தடவை அவன் கூரைமேல் குதிக்கும்போது ஈரத்தில் கால் வழுக்கி கைப்பிடி தளர்ந்துவிட்டது. உச்சிக் கூரையிலிருந்து சறுக்கிக்கொண்டே வந்தான். ''அய்யோ புடிங்க'' என்று சத்தம் கேட்டபோதுதான் சங்கதி தெரிந்தது. நோணியன் வீட்டுக்குள் இருந்தான். வீட்டுக்காரன் சற்றுத் தள்ளி உட்கார்ந்திருந்தான். கோயிந்தன் மட்டுமே கிட்டத்தில் நின்றுகொண்டிருந்தான். யோசிக்க நேரமில்லை. ஒரு வெறியில் பாய்ந்து போய் மாடப்பனைத் தோளில் ஏந்திக்கொண்டான். மூடி முழிக்குமுன் இது நடந்துவிட்டது. இல்லையென்றால் மாடப்பன் கதி அவ்வளவுதான். அவன் கோயிந்தனைக் கட்டியணைத்துக்கொண்டான்.

''என் உசிரக் காப்பாத்துன மகராசண்டா.''

கோயிந்தனுக்கு மூச்சுக்குத்து பிடித்துக்கொண்டது. சாமியார் அதுக்கு மருத்துவம் செய்தார். சோளத் தட்டையைப் பிளந்து ரெண்டு பேர் இடுப்பிலும் வைத்துப் பிடிக்கச்சொல்லி மந்திரம்போட்டுத் தட்டையை ஒட்ட வைத்து ஒடித்துப்போட்டார். மூச்சுக்குத்து போய் கோயிந்தன் பழையபடி சுதாரிப்பானான்.

படப்பு மேய்ச்சலில் இந்தத் தொறட்டில்லை. உயரம் கம்மி. வேலையும் அவ்வளவுதான். சோளத் தட்டை கம்மந்தட்டை வைக்கோல் நாத்துக்கூளம் என்று தனித்தனியாகப் பிரித்து வைத்துக்கொண்டு வெயில் விதைப்பு மழைக் காலங்களில் மாட்டுக்கு என்ன மாதிரி கூளம் போடணுமென்று கணக்குவைத்து அதுக்கேற்றபடி தட்டுத்தட்டாகப் பரத்தி அடுக்குவார்கள். படப்பு காற்றோட்டமாக இருக்கவும் தரையில் மழைத் தண்ணீருக்கு நனைந்து மக்கிப்போகாமலிருக்கவும் கல்லினால் கோக்காலி உண்டாக்கி அதன்மேல் அடுக்கணும். காற்றுக்கு அசையாத

படி நீள அகலம் இருக்கணும். ஆட்கள் எட்டிக் கூளம் பிடுங்குமளவுக்கு உயரம் வைக்கணும். அடுக்கிய படப்பில் துருத்தியிருக்கும் கூளத்தை மாடப்பன் தட்டுப்பலகையால் தட்டிச் சேர்த்துப் பூசி மெழுகிய சுவர்போலாக்குவான். உச்சியிலிருந்து இருபுறமும் பின்னிவிட்டால் கச்சிதமாக இருக்கும். அந்த அழகைப் பார்த்துக்கொண்டே இருக்கணும்போல் தோன்றும்.

வேலை முடிந்துவிட்டால் ராத்திரிக்கு நெல்லுச் சோறும் பருப்பாணமும் கிடைக்கும். மூக்குமுட்டச் சாப்பிட்டு முடித்துக் கூலி வாங்கிக்கொண்டு போகும் போது சாமியார் ஞாபகம் வரும். கோயிந்தன் கேட்பான்.

''சாமிக்குக் கொஞ்சம் வாங்கீட்டுப் போவமா.''

மாடப்பன் சொல்வான்.

''அவருக்குத்தான் ஒத்த வீட்டுச் சோறு புடிக்காதே.''

''ஆமாமா.''

சாமியார் அப்படித்தான் சீவனம் நடத்தினார். சீனித்தாய் கட்டாயத்தின் பேரில் ரத்தினம் எப்போதாவது வந்து அவரைச் சாப்பிடக் கூப்பிடுவான். அவர் தவிர்த்துவிடுவார்.

''அப்படிச் சாப்பிட்டா வாயி சொன்னபடி கேக்காது சாமி. சோத்துமேல ஆச வந்துரும். எண்ணைக்கும்போல நாலு வீடு எடுத்துச் சாப்பிடுறதுதான் நல்லது.''

சீனித்தாயைப் பார்க்கணும்போலிருக்கும். தண்ணீர்க் கிணற்றுப் பக்கம் போவார். அவள் தண்ணீர் இறைக்கும்போது கையேந்துவார்.

''குடிக்கத் தண்ணி குடுங்க தாயி.''

''சாமி இது உப்புத் தண்ணி. நல்ல தண்ணி குடுத்து வுடட்டுமா.''

''வேணாம் தாயி. இதே போதும்.''

கையில் வாங்கித் தாகந்தீரக் குடித்துவிட்டு அமைதியாகத் திரும்புவார்.

**அ**ன்றைக்கு கோயிந்தன் மனசு ரெம்பச் சஞ்சலப்பட்டது. மருமகள் கேட்ட வார்த்தை நெஞ்சில் அம்மிக்குழவியாக அரைத்துக்கொண்டிருந்தது.

''சம்பளம் இம்புட்டுத்தானா.''

நான் போடுகிற சோற்றுக்குக் காசு இவ்வளவுதானா என்று கேட்கிறாளா. இல்லை அவன் செய்த வேலைக்கு இவ்வளவுதான் சம்பளம் கிடைத்ததா என்கிறாளா. இல்லை நிறைய சம்பளம் வாங்கிவிட்டுக் குறைவாகக் கொடுப்ப தாகச் சந்தேகப்படுகிறாளா. அனுமானிக்க முடியவில்லை. ஆக அவனுக்குச் சாப்பாடு போடப் பிடிக்கவில்லை என்பது மட்டும் தெரிந்துவிட்டது. சந்தேகமே வேணாம். எதும் பேசாமல் பட்டினியாக வெளியேறிவிட்டான்.

அவன் அடிக்கடி மருமகளின் வீட்டுக்குப் போவதில்லை. மகளும் தங்கச்சி யும் இல்லாத சமயங்களில் போவான். சாமியாரைப் போல் மதியச் சாப் பாட்டை மறந்துவிட்டான். மற்ற ரெண்டு வேளைதான். வெளி வேலைக்குப் போனால் ராத்திரிக்கும் கவலையில்லை. அந்த மனுசி முத்துவீரி இருந்தால் இவ்வளவுக்காகுமா. பரிதவிக்க விட்டுப் போய்விட்டாளே பாதகத்தி.

வேதனையைச் சொல்லி மனசை ஆற்றிக்கொள்ள மாடப்பனும் இல்லை. சத்திரப்பட்டிக்குப் போயிருந்தான். சாமியாரிடம் சொன்னால் சங்கடப்படு வார். அவர் நிம்மதியை ஏன் கெடுக்கணும்.

ராத்திரி படுத்திருக்கும்போது அவன் உழத்துவதைப் பார்த்து அவர் கேட்டார்.

''என்ன சாமி தூக்கம் வரலயா.''

''அதென்னமோ கொஞ்ச நாளாவே ஒறக்கம் புடிக்க மாட்டங்குது.''

''மனசில கவலையும் சஞ்சலமும் பத்திக்கிட்டா அப்படித்தான்.''

''அதுகளக் கழட்டி ஒருபக்கம் வச்சிட்டுத்தான் படுக்கிறது. இப்ப ஒட்டிக் கிட்டு வுட மாட்டங்குது.''

''எனக்குங்கூட எடையில முழிப்புத் தட்டீருது. அதுக்குப் பெறகு எவ்வளவு தான் கண்ண மூடுனாலும் தூக்கம் வாறதில்ல.''

''மனசு ஒறங்குனாத்தான கண்ணு ஒறங்கும்.''

''அந்த நெலமதான். அலச்சல் கொறையலயே.''

எழுந்து உட்கார்ந்துகொண்டார்கள். அவர் பாடத் தொடங்கினார். உச்சம் தொடாத சன்னமான குரல் ஊர் மடத்துக்குள் பரவி மண்டிக்கிடக்கும் இருளின் உறக்கம் கலைத்தது.

''ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்து
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம்.

ஓயாக் கவலையினால் உள்ளுடைந்து வாடாமல்
மாயாப் பிறவி மயக்கறுப்பது எக்காலம்.

தந்தைதாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே
சிந்தையில் கண்டு திருக்கறுப்பது எக்காலம்.

தூரியினின் மீன்போல சுழன்றுமனம் வாடாமல்
ஆரியனைத் தேடி அடிபணிவது எக்காலம்.

மலமும் சலமும் அற்று மானம் அற்று
நலமும் குலமும் அற்று நானிருப்பது எக்காலம்.''

காலத்தைத் தேடியபடி உறங்கிப்போனார்கள். சுற்றிலும் இருள் காவலிருந்தது.

அடுத்த நாள் அவன் அவரிடம் சொல்லிக்கொண்டு கிளம்பினான்.

''சாமி ஊரு சுத்துன காலு ஒரே எடத்துல தருக மாட்டங்குது. இவ்வளவு நாளு இருந்ததே பெரிய காரியம். கொஞ்ச நாளைக்குச் சுத்திக் காட்டீட்டு வாறென். இண்ணைக்கோ நாளைக்கோ மாடப்பன் வந்துருவான்.''

''எனக்குத் தொணையப் பத்திக் கவலப்படாதங்க சாமி. நீங்க சந்தோசமாப் போயிட்டு வாங்க.''

பதினஞ்சு நாள் கழித்து மாடப்பன் வந்தான். அதுவரை கோயிந்தன் திரும்ப வில்லை. மாடப்பனுக்கு என்னமோ மாதிரி இருந்தது.

''இவன் எங்க போனான்னு தெரியலயே. எங்க ஊருல வைக்கப் படப்பு ரெண்டு அடுக்கணும். இவன நம்பிச் சரின்னு சொல்லீட்டு வந்தென். இத்தன நாளா என்ன செய்றான்.''

''தூரந்தொலவட்டுப் போயிருப்பாக. அலஞ்சு திரிஞ்சு வரட்டுமே.''

சத்திரப்பட்டிக் கம்மாக் கரையோரம் மரத்தடியில் கோயிந்தன் செத்துக் கிடப்பதாகச் சித்திரவேலு வண்ணான் வந்து சொன்னான். மாடப்பன் அலறினான்.

''நம்மளயெல்லாம் வுட்டுட்டுத் தூரந்தொலவட்டுக்குப் போயிட்டானே சாமி.''

கலிங்கலிலிருந்து வண்டி கொண்டுபோய் சத்திரப்பட்டி வைக்கோலில் அவனைச் சுருட்டிக் கொண்டுவந்தார்கள். என்ன சாவு என்று தெரியவில்லை. மாடப்பனும் சாமியாரும் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல் ரெண்டு நாள் அழுதார்கள். அவன் அவர்களுடன் மடத்தில் படுத்திருப்பது போலவே இருந்தது. ஊருணிக்குப் போனால் அவன் நினைவு. கம்மாய்க்குப் போனால் அவன் கூடவே வந்தான்.

மாடப்பன் இல்லாத நாட்களில் சாமியார் தவித்துப்போவார். தனிமை அடித்துச் சவட்டும். கோயிந்தனின் குழந்தைச் சிரிப்பு கேட்கும். பழைய கேள்வி வரும்.

''சாமிக்கு இனியும் அலச்சலு தீரலயா.''

சாமியார் உடம்புக்கு முடியாமல் முடக்கிவிட்டார். சுடுதண்ணீர் கொடுக்கக் கூடத் துணையில்லை. சீனித்தாயும் குழந்தைகளும் நினைவுக்கு வந்தார்கள். காவி கமண்டலத்தைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டு ரத்தினத்துக்கு உதவி செய்யலாமா என்று எண்ணம் ஓடியது. அப்படியானால் கடைசிக் காலத்தில் மாடப்பன் நிலைமை என்னாவது. அவன் எங்கே போவான். கைக்கம்பு வேட்டியில் முடிந்த காசு எல்லாமே பாரமாக அழுத்தின.

கூடவே ஒரு சந்தேகமும் வந்தது. பற்றற்று நீரில் படர் தாமரை இலைபோல் சுற்றத்தை நீக்கி மனம் தூரத்தில் நிற்க முடியாத மனுசனுக்கு பரதேசம் ஒரு கேடா. சொந்த உறவுகளில் கட்டுண்டுபோனால் பரதேசத்துக்கு அர்த்தமில்லையே. உடல்நிலை இன்னும் மோசமாகியது.

கொஞ்ச நாளாகவே ஊர்க் கிணற்றுப் பக்கம் சாமியார் தட்டுப்படவில்லை. சீனித்தாயின் மனசில் தன்னையறியாத தவிப்பு. தண்ணீர் இறைக்கும் பெண்கள் தற்செயலாகப் பேசிக்கொண்டார்கள்.

''நம்ம சாமியாரு சட்டடியாப் படுத்துக்கெடக்கிறதப் பாத்தாப் பாவமாருக்கு.''

''அதானக்கா. பூசணிப்பழமா இருந்த மனுசன் சீனியவர வத்தலாச் சொடிஞ்சு உருக்கொலஞ்சுபோயிட்டாரே.''

''உள்ளுக்குள்ள ஓயாற கவல உருக்கியெடுக்குது.''

''இருக்காதா பின்ன. சொத்துசொகம் பொண்டாட்டி புள்ளீக இருக்கயில இப்படி வந்து நாதியத்துக் கெடக்கணும்னு தலையெழுத்தா.''

''அப்படியென்ன வெறுப்போ.''

''அவருட்டப் பேசிப்பாப்பமே.''

''நாதியும் நாத்தங்காலும் நம்மதான்னு இருக்கிற மனுசருட்ட என்னத்தப் பேசுறது.''

''என்னதான் சொல்றாருன்னு பாப்பமே.''

பலர் அவரைத் தேடிப் போனார்கள். சீனித்தாயும் அவர்களுடன் போனாள். சாமியார் முகத்தில் அதே சாந்தம். அவர்களைப் பார்த்ததும் ஒரு தெளுச்சி. கண்கள் கூட்டத்துக்குள் தேடித் துழாவி சீனித்தாயைக் கண்டுகொண்டன. இன்னும் தெம்பானார்.

ஒருத்தி அவரிடம் யோசனை சொன்னாள்.

''சாமி இங்க தனியாக் கஸ்டப்படுறதுக்கு சொந்த ஊருக்குப் போயிச் சாதி சனத்தோட சேந்துக்கிறலாமில்ல...''

அவர் கையெடுத்துக் கும்பிட்டார்.

''நான் இங்க இருக்கிறது புடிக்கலன்னா வேற ஊருக்குப் போயிறட்டுமா தாயி...''

''அப்படிச் சொல்லாதங்க சாமி. நாங்க இருக்கொம். கவனிச்சுக்கிருவொம்.''

தனியாக வந்து வீட்டுக்குக் கூப்பிடலாமா என்று நினைத்தாள் சீனித்தாய். குடிக்க நல்ல தண்ணீர்கூட வாங்க மறுக்கிற மனுசன் கூப்பிட்டவுடன் வந்து வீட்டில் தங்கிச் சாப்பிடப்போகிறாரா என்ன. புருசன் கூப்பிட்டே வரவில்லை. வைராக்கியமாக இருக்கிறவரை என்ன செய்ய முடியும்.

பெண்கள் அவருக்கு எல்லாப் பக்குவமும் பார்த்தார்கள். ஒரு வீட்டுச் சோறு சாப்பிட மாட்டார் என்பதால் நாலஞ்சு வீடுகளில் வாங்கிக் கலவையாகக் கொடுத்தார்கள். சீனித்தாய் சோறும் துவையலும் கொடுத்தாள். தண்ணீரும் வெந்நீருமாகச் சுமந்தார்கள்.

''இருக்கிறவுகளுக்கு எண்ணெயும் சோறும். இல்லாறவுகளுக்குத் தண்ணியும் வெந்நியும். மலைக்காதங்க சாமி. தாவலையாயிரும்.''

அவர் விரைவிலேயே உடம்பு தேறி எழுந்துவிட்டார். ஓடைப் பக்கம் நடமாடினார். ஊருணியில் குளிப்பு நடந்தது. காவித் துண்டுக்குள் மறைந்திருக்கும் திருவோடு வீடுகளுக்கு முன்னால் தாமதித்து சன்னமாகக் குரல் கொடுத்தது.

''தாயீ...''

மடத்துக்குள் அவர் பாடும் குரல் கேட்க இன்னும் கொஞ்ச நாளானது.

ஒருநாள் ஊருணியில் சாமியாரும் செல்லக்கனி நாடாரின் மருமகன் ராசபாண்டியும் தற்செயலாகச் சந்தித்துக்கொண்டார்கள். ராசபாண்டி அவரிடம் திடீரென்று ஒரு கேள்வி கேட்டுவிட்டான்.

''எங்க வீடுகளுக்குச் சோறெடுக்க வாறதில்லையா.''

அவர் இதை எதிர்பார்க்கவில்லை.

''அப்படியெல்லாம் இல்ல சாமி. ஒரு வாயி சோத்துக்காக ஊரத் தாண்டி எடுத்தேறி வரணும். ஊருக்குள்ளயே வயித்துமொற கழிஞ்சிருது. ஒங்களுக்கு ஏன் தொந்தரவு குடுக்கணும்.''

''அப்ப அந்தச் சனங்க போடுற சோறுதான் ருசியாருக்குதாக்கும்.''

''சாமி...''

''பேசாம திருவோட்டத் தூக்கியெறிஞ்சிட்டு எங்க தெருவுக்கு வந்துரும். எங்க பண்ணையில இல்லாற வேலையா. ஏண்ட வேலையச் செய்யும். மூணு வேளையும் சாப்பாடு கெடைக்கும். வீடுவீடாச் சட்டியேந்தி நிக்க வேண்டியதில்ல. என்ன சொல்றீரு.''

''கலிங்கல் மடமே எனக்குப் போதும் சாமி.''

முறைத்துக்கொண்டு நின்றிருந்த ராசபாண்டியின் முகத்தைப் பார்க்காமலேயே அவர் நடந்துவிட்டார்.

## 7. வாழைத் தார்

சுகுமார் இன்னும் திருந்தவில்லை. விஜயா அழுது ஓய்ந்துவிட்டாள். சக்கரை நாடார் கடைக்குப் போவதை நிறுத்திக்கொண்டது ரெம்பத் தோதாகிவிட்டது. அவன் இஷ்டப்படி செலவுசெய்தான். செந்திவேலால் கட்டுப்படுத்த முடியவில்லை. எல்லாம் கேள்விப்பட்ட சக்கரை நாடார் ரெம்ப வேதனைப்பட்டார். ராவும் பகலும் உழைத்து உண்டாக்கிய கடை கண்ணுக்கு முன்னால் சீரழிந்து போவதை எப்படிச் சகித்துக்கொள்ள முடியும். புத்தி சொன்னார். அவன் கேட்பதாக இல்லை.

ஒருநாள் இருவரும் மோதிக்கொண்டார்கள். அவன் அவரை அடித்துவிட்டான். விஜயாவும் துரைப்பாண்டியும் விலக்கிவிட்டார்கள். ரெண்டு பெண்களும் அழுது கூப்பாடு போட்டார்கள். அதோடு சரி. அவர் இனிமேலும் வீட்டில் சவங்கத்தனமாக இருக்கப் பிடிக்காமல் இளைய மகள் மாரீஸ்வரி வீட்டுக்குப் போய் விட்டார்.

எல்லா விவரமும் தெரியுமளவுக்கு துரைப்பாண்டி பெரியவனாக வளர்ந்திருந்தான். வீட்டில் அய்யாவுக்கும் அம்மாவுக்கும் தினமும் சண்டை நடக்கும். தன்னையறியாமல் அய்யாவை வெறுத்தான். அம்மாவை நினைத்து அழுதான். தாத்தாவைப் பார்க்கணும் போலிருந்தது. படிப்பில் கவனம் செல்லவில்லை.

அம்மாவிடம் சொல்லாமல் கொள்ளாமல் மார்க்கெட்டுக்குப் போய் நின்றான். கல்லாவிலிருந்த சுகுமாருக்கு ஆச்சரியம்.

''என்னடா பள்ளிக்கூடத்துக்குப் போகாம இங்க வந்து நிக்க.''

அவன் பதிலேதும் பேசவில்லை. செந்திவேல் வந்து கூப்பிட்டும் போகவில்லை. அய்யாவையே முறைத்தான். பழம் பிய்த்துக் கீழே எறியப்பட்ட வாழைத்தார்க் கம்பை எடுத்துக்கொண்டு போய் அந்தப் பக்கமாகத் திரும்பியிருந்த அய்யாவின் முதுகில் ஓங்கி ரெண்டு முறை அடித்துவிட்டு ஓட்டம்பிடித்தான். நிலைகுலைந்துபோன சுகுமார் சுதாரிக்குமுன் அவன் உருவம் கூட்டத்துக்குள் மறைந்துவிட்டது.

கடைக்கு முன்னால் கூட்டம் கூடிவிட்டது. எல்லாரும் சுகுமாரை ஒருமாதிரியாகப் பார்த்தார்கள். அவரவருக்குத் தோன்றியபடி பேசிக்கொண்டார்கள். செந்திவேல் சத்தம்போட்டான்.

''வேலையப் பாத்துட்டுப் போங்கய்யா. இங்க என்ன வேடிக்கையா நடக்குது.''

கூட்டம் கலைந்து போயிற்று. சுகுமார் சட்டையைத் துடைத்துக்கொண்டு உட்கார்ந்து சமாளித்துப்பார்த்தான். வெட்கமாக இருந்தது. நெளிந்தான். அய்யா மீதும் விஜயா மீதும் கோவங்கோவமாக வந்தது. மகனை அடிக்கவோ அவன்

முகத்தில் முழிக்கவோ தோன்றவில்லை. கல்லாவைத் துடைத்துவிட்டு செந்தி வேலைப் பார்த்தான்.

"செந்தி கடையப் பாத்துக்கோ. நான் கொஞ்சம் வெளிய போறென்."

அவன் பஸ் ஸ்டாண்டுக்கு நடையை விட்டான்.

துரைப்பாண்டி வீட்டுக்குப் போகாமல் தாத்தாவிடம் போய்ச் சேர்ந்திருந் தான். அவர் பதறிப்போனார்.

"என்னய்யா இப்படி மூச்சுவாங்குற. பள்ளிக்கூடம் போகலயா."

"போகல."

"ஏன்யா."

"கடைக்குப் போனெென்."

"அய்யாட்டக் காசு வாங்கப் போனயா. காசு வேணும்னா தாத்தாட்டக் கேக்கலாமில்ல."

"அதுக்கில்ல..."

"பெறகெதுக்குய்யா."

அவன் முகத்தில் கோவம் துடித்தது.

"வாழத் தார எடுத்து அய்யாவ அடிச்சுப்போட்டுட்டு ஓடியாந்துட்டென்."

அவர் பேரனை இறுகப் பிடித்துக்கொண்டார்.

"என்ன காரியம் செஞ்சிட்டய்யா. பெத்த தகப்பன அடிக்கலாமா."

"அவரு மட்டும் ஒங்கள அடிக்கலாமா."

அவர் திகைப்பில் முழித்தார்.

"அவன் ஒரு கோவத்துல கைநீட்டீட்டான்."

"எனக்கும் கோவம் வருமில்ல... வாங்க நம்ம வீட்டுக்குப் போவொம்."

அவருக்கு மறுக்க மனசில்லை. இந்த நிலையில் பையனை எப்படி தனியே அனுப்புவது. சுகுமார் கிருசுகெட்டவன். மகனை அடித்து படாத இடத்தில் பட்டுவிட்டால் வம்பு. விஜயா அழுது செத்துவிடுவாள்.

பேரனை அழைத்துக்கொண்டு விஜயாவைத் தேடிப் போனார். நடந்த கதையைச் சொன்னார். அவள் சாதாரணமாகக் கேட்டுக்கொண்டாள்.

"இப்ப அவரு எங்கருக்காராம்."

"இங்க வரலயா."

"வரலயே."

"அப்ப கடையிலதான் இருக்கணும்."

"இனிமேலயாச்சும் புத்தி வந்தாச் சரி. ராத்திரிக்கு வரட்டும்."

அவர் தடுமாறினார்.

"கொஞ்ச நாளைக்குப் புள்ளைய அவன் கண்ணுல காட்றது நல்லதில்லன்னு தோணுதும்மா. எல்லாருமாப் போயி கொளத்தூருல இருங்க. அவனுக்குக் கோவம் ஆறட்டும்."

"பயந்து ஓடச்சொல்றீகளா."

"பயமில்ல. அவன் அப்படி என்ன செஞ்சு கிழிச்சிறப்போறான். புள்ளைக் காகத்தான் பாக்க வேண்டியிருக்கு. என் வார்த்தையக் கொஞ்சம் கேளு தாயி."

இதுக்குள் ரெண்டு பெண்களும் பள்ளிக்கூடத்திலிருந்து வந்துவிட்டார்கள். அவர் எல்லாரையும் தயார்படுத்தி வீட்டைப் பூட்டிச் சாவியை வைத்துக்

கொண்டார். அவர்களை அழைத்துக்கொண்டு பஸ் ஸ்டாண்டுக்குப் போய் கொளத்தூர் பஸ்ஸில் ஏற்றிவிட்ட பிறகுதான் நிம்மதி வந்தது. கடைசிவரை துரைப் பாண்டி முரண்டுபிடித்தான். பெரும்பாடு பட்டுச் சமாதானப்படுத்தினார்.

''வீணால அய்யாவுக்கும் அம்மாவுக்கும் சண்ட வரும். அது நல்லதா. அம்மாகூடப் போ ராசா. அஞ்சாறு நாள்ல தாத்தா கூட்டீட்டு வந்துருவென்.''

அவர்களை அனுப்பிவிட்டு பழையபடி மாரீஸ்வரி வீட்டுக்குப் போய் விட்டார்.

ராத்திரி செந்திவேல் வந்து அவரிடம் அழாத குறையாகச் சொன்னான்.

''நம்ம தொரப்பாண்டி இப்படிச் செய்வான்னு நெனச்சுக்கூடப் பாக்கல. அவ்வளவு கோவத்தவும் எங்கதான் அடக்கி வச்சிருந்தானோ.''

''நடக்கிறதெல்லாம் கண்ணால பாத்துட்டுத்தான இருக்கான்...அண்ணன எங்க. வீட்டுச் சாவி எங்கிட்டருக்கு.''

''ஒடனே கெளம்பிப் போயிட்டான். எங்க போனான்னு தெரியல. காத்துக்கெடந்து பாத்துட்டு கடையப் பூட்டீட்டு வாறென்.''

''வெளியூருக்குக் கெளம்பிப் போயிட்டானோ.''

''அப்படித்தான் தெரியிது. இல்லன்னா இதுக்குள்ள வந்துருக்கணுமே.''

''அலஞ்சு திரிஞ்சு வருவான்.''

ஒரு வாரமாகியும் சுகுமார் வீடு திரும்பவில்லை. விஜயா குழந்தைகளுடன் கொளத்தூரில்தான் இருந்தாள். போய்க் கூட்டிவர சக்கரை நாடாருக்குத் தயக்கம். சம்பந்தகாரரர் மூஞ்சியில் எப்படி முழிப்பது. குழந்தைகளின் படிப்பு கெட்டு விடக் கூடாது. செந்திவேலை அனுப்பிக் கூட்டிவரச் செய்தார்.

மாசம் மூணாயிற்று. சுகுமார் வரவில்லை. விஜயாவுக்கு எவ்வளவோ வேதனையிருந்தாலும் வெளியே காட்டிக்கொள்ளவில்லை. ஆள்விட்டுத் தேடிப்பார்த்தார்கள். சுகுமார் தட்டுப்படவில்லை.

துரைப்பாண்டி பள்ளிக்கூடம் போக மறுத்துவிட்டான். யார் சொல்லியும் கேட்கவில்லை. கடைக்குப் போய் கல்லாவுக்கு முன்னால் தோரணையாக உட்கார ஆரம்பித்தான். செந்திவேல் துணையுடன் வியாபாரம் நல்லபடியாக நடந்தது.

செந்திவேல் சக்கரை நாடாரைக் கடைக்கு வருமாறு கூப்பிட்டான். அவருக்கு அந்த எண்ணமே இல்லை. அப்பப்ப யோசனை சொல்வதுடன் சரி. கஷ்டப்பட்டு உண்டாக்கிய கடை நொடித்துப்போய்விடக் கூடாதே என்ற ஆதங்கம் எப் போதும் இருந்தது.

அவரைத் துரைப்பாண்டி மறுபடியும் வீட்டுக்குக் கூப்பிட்டுப் பார்த்தான். சமாளித்து அனுப்பினார். தங்கமாரியப்பனை சண்முகத்தாய் அனுப்பியிருந் தாள். அவனுடனும் போகவில்லை. இருந்தாலும் மாரீஸ்வரியின் வீட்டில் தங்கியிருப்பது மனசில் உறுத்தத்தான் செய்தது. உள்ளூரிலேயே மகன் வீடு இருக்கும்போது மகள் வீட்டில் சாப்பிடுவது மரியாதைக் குறைச்சல்தானே. சம்பந்தகாரர்களைப் பார்த்தாலே தன்னையறியாமல் ஒரு கூச்சம். தவித்துக் கொண்டிருந்தார்.

வத்தலக்குண்டு பஸ் ஸ்டாண்டில் கலைந்த முடியும் கிழிந்த துணியுமாக சுகுமார் தானாகப் பேசிக்கொண்டு திரிவதாக ஒரு வியாபாரி மூலம் தகவல் கிடைத்தது. உடனே செந்திவேலும் காளியப்பனும் புறப்பட்டுப் போய்த் தேடினார்கள். கண்டுபிடிக்க முடியவில்லை. அவன்மேல் தாயாரம்மா இறங்கியிருப்பாள் என்று பேசிக்கொண்டார்கள்.

எப்படியும் வந்துவிடுவான் என்ற நம்பிக்கையிலிருந்த சக்கரை நாடாருக்கு இதைக் கேட்டதும் தூக்கிவாரிப்போட்டது. கண்ணீர் சிந்தினார். விஜயாவையும் குழந்தைகளையும் நினைக்கையில் அழுகை பொங்கியது. காளியப்பன் அவரை வற்புறுத்தினான்.

''கலிங்கலுக்கு வந்து எங்களோட இருங்க. உக்காந்து கோளாறு சொல்லிக்கிட்ருங்க போதும்.''

அவர் நிதானமாகச் சொன்னார்.

''கலிங்கலுக்குத்தான் வரணும்.''

சண்முகத்தாயின் வீட்டுக்குப் போய் எல்லாரையும் பார்த்துப் பேசினார். ஒருநாள் சுக்காம்பாறைக்குப் போய் மூத்த மகளைப் பார்த்துவந்தார். விஜயாவுக்கும் துரைப்பாண்டிக்கும் தைரியம் சொன்னார். செந்திவேலிடம் ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

''கலிங்கல் சக்கர நாடாரு கடையோட பேர நீதான் காப்பாத்தணும்ப்பா. தொரப்பாண்டிய மலைக்க வுட்றாத.''

''நீங்க பக்கத்துல இருக்கயில எங்களுக்கென்ன கவல.''

''ஆமாமா பக்கத்துலதான் இருப்பென்.''

ரெண்டு நாளில் கலிங்கலுக்குப் போனார். காளியப்பனுக்குச் சந்தோசம். அண்ணன் தம்பி மூணு பேரும் அன்னியோன்னியமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். வடிவுக்கு ஆச்சரியம். அவர்கள் இப்படிப் பேசிப் பார்த்ததேயில்லை.

மறுநாள் காலை சக்கரை நாடாரைக் காணவில்லை. தோட்டந்துரவு காடுகரையெல்லாம் தேடினார்கள். கிடைக்கவில்லை. முத்துநகருக்கும் வரவில்லையென்று தகவல் வந்தது. அழுகையும் கண்ணீருமாக மூணு நாள் முடிந்தது.

நாலாம் நாள் மதியம் உவர்க்காட்டுத் தோட்டத்துப் பக்கம் போன காளியப்பன் தற்செயலாகக் கிணற்றை எட்டிப் பார்த்தான். வெயில் மின்னும் நீரின் குறுக்கே தெலாக்கல்லின் நிழல் பாவியிருந்தது. கல்நிழலிலிருந்து ஒரு நிழலுருவம் காட்டியும் மறைத்தும் அசைவது மங்கலாகத் தெரிந்தது. தெலாக் கல்லில் குதித்து அடிப்பக்கம் குனிந்துபார்த்தான். யாரும் கண்டுபிடிக்க முடியாமல் வடக்கோரம் கல் மறைவில் அமைதியாகத் தொங்கிக்கொண்டிருந்தார் சக்கரை நாடார்.

''பெரிய்யா பெரிய்யா. இதுக்குத்தானா கலிங்கலுக்கு வரணும்னு சொன்னீக...''

அவன் கதறிக்கொண்டு ஓடினான்.

அவருக்குக் கொள்ளிவைக்க சுகுமாரில்லை. செந்திவேலும் துரைப்பாண்டியும் அந்தக் கடமையைச் செய்தார்கள். நாடாக்கமார் சுடுகாட்டில் அவர் எரிந்து போனார். சந்தன நாடாருக்குக் கண்ணீர் கசியவேயில்லை. சடுதியில் தெளிந்த

சாராய போதைபோல் முடிந்துபோன தம்பியின் பிழைப்பை நினைக்கையில் ஒரு கை நெஞ்சில் அழுந்தப் பதிந்தது. அழுவதற்குச் சரியான காரணத்தை அவர் மனசு இன்னும் தேடிக்கொண்டிருந்தது.

முத்துநகர் மார்க்கெட்டில் ஒரு காலத்தில் கலியாண வீடாகக் காட்சியளித்த கலிங்கல் சக்கரை நாடார் கடை இப்போது களையிழந்து இழவு வீடாகிவிட்டது. சோகமாகத் தொங்கும் வாழைத் தார்கள். கிழிந்து முடக்கிக்கிடக்கும் இலைக் கட்டுக்கள். கல்லாவிலிருக்கும் துரைப்பாண்டி தார்களைப் பரிதாபமாகப் பார்ப்பான். ஒவ்வொரு தாரிலும் தாத்தா தொங்குவார். ஒட்ட மழித்த முகம். பிடிக்கு அகப்படாத குறுமுடி. தொளதொளத்த வெள்ளைச் சட்டை. தும்பைப் பூவாக நாலுமுழ வேட்டி. நெடிய உருவம். மனசுக்கு என்னமோ போலிருக்கும். உடனே எழுந்து செந்திவேலிடம் சொல்லிவிட்டுக் கிளம்பிவிடுவான்.

''சின்னையா நான் வீடுவரைக்குப் போயிட்டு வாறென்.''

சில சமயம் விஜயாவும் கல்லாவில் உட்கார்ந்தாள். நம்பிக்கையைப் பூவும் பொட்டுமாக அணிந்திருந்த அவள் முகத்தில் ஒரு தாயின் அடையாளமே மேலோங்கியிருந்தது.

## 8. தொட்டி வீடு

சாயங்காலம் வள்ளி சுமைதாங்கி வீட்டிலிருந்து கலிங்கல் மயானத்துக்குப் போயிருந்தாள். கருப்பியும் ஆண்டியும் குழிக்கு வெளியே அட்ணக்கால்போட்டு வெயில்காய்ந்துகொண்டிருந்தார்கள். கருப்பி வள்ளியைப் பார்த்துவிட்டாள். வாயில் நமட்டிய பிரண்டைப்பழக் கொட்டையை அவசரமாகத் துப்பிவிட்டு ஆண்டியிடம் சொன்னாள்.

''ஏ இவனே அந்தா வாறது ஆருன்னு பாரு. நம்ம வள்ளியேதான். அஞ்ஞாடி பொழுதடையப்போற நேரத்துல வாறாளே.''

வெற்றிலை நினைப்பில் துளசி இலையைச் சக்குப்போட்டுக்கொண்டிருந்த ஆண்டி அதை விழுங்கி நாக்குக் காரத்தை எச்சில் நனைத்தபடி ஏறிட்டுப் பார்ப்பதற்குள் வள்ளி கிட்ட வந்துவிட்டாள்.

''வா தாயி. ஒம் மொகத்தப் பாத்து எம்புட்டு நாளாச்சு.''

கருப்பி அவள் கையைப் பிடித்துக்கொண்டாள்.

''என்னப் பெத்த அஞ்ஞு. இப்படி உக்காருத்தா.''

அவள் இருவருக்கும் நடுவில் உட்கார்ந்தாள்.

''எல்லாரவும் பாக்கணும்னு தோணுச்சு. வந்தென்.''

''எந்த வழியா வந்தம்மா. கம்மாத் தண்ணி கலுங்கலோடிக் கடலாக் கெடக்குதே. எங்கள எப்ப மேதீருமோன்னு ஒவ்வொரு நாளும் பயந்துபோயிக் கெடக்கொம்.''

''கலுங்கலுப் பாத எறங்க முடியாதுன்னு காளியம்மா கோயிலு ஓடப் பாதைக்குப் போனென்.''

ஆண்டி பதறினான்.

''அந்தப் பக்கம் போக முடியாதே தாயி.''

''தண்ணி கொஞ்சந்தான் கெடக்குது. எறங்கிப் போயிறலாம்னு காலெடுத்து வச்சென். சீ இங்க வராத ஒடுஒடுன்னு கோயில்லருந்து ஒரு அரட்டுக் கேட்டது. ஒடி கலுங்கலுக்கு வந்து கர வழியே கம்மாயச் சுத்தி நடந்து மருகாத் தொறையில எறங்கி மலங்காட்டுப் பாத வழியா வாறென்.''

கருப்பி அவளைத் தடவினாள்.

''அட கொடுமையே. எம்புள்ள இம்புட்டுக் கஸ்டப்பட்ருக்குதே. நாங் கென்ன ஓடியா போயிறொம். இனியொரு நாளைக்கு வரலாமில்ல.''

''கம்மா வத்துறதுக்கு ரெம்ப நாளாகுமில்ல...''

கருப்பி அவளை அணைத்துக்கொண்டாள். பழைய நினைவுகள் படுத்தின. மனசு அவளை மடிமீது கிடத்திக் கொஞ்சியது.

'ஒத்தக்கொடி பிச்சிக்கொடி
முத்தத்துல வச்சகொடி
ஆசக்கொடி வள்ளிக்கொடி
ஆண்டிவீட்டுச் செல்லக்கொடி....'

''புள்ளைய வுட்டுட்டா வந்த தாயி. எப்படியிருக்கான்.''

''நல்லாருக்கான். வளரவேயில்ல. பெறக்கும்போது எப்படி இருந்தானோ அப்படியே இருக்கான். தொட்லுல ஒறங்கப் போட்டுட்டு வந்துருக்கென். கொண்டுவரணும்னு நெனப்புத்தான். ஒரே தண்ணிக்காடாக் கெடக்குதே. அதான் வுட்டுட்டு வந்துட்டென்.''

''முழிச்சா ஒன்னயத் தேடுவானே.''

''தேட மாட்டான். சொமதாங்கிக் கல்லுமேல காக்கா மைனா குருவின்னு வந்து பேச்சுப்பழக்கம் போடுறத வேடிக்க பாத்துட்டே கெடப்பான்.''

''நல்ல வெளையாட்டுச் சாமாங்கதான்.''

ஆண்டி கேட்டான்.

''ஒம் புருசன் வந்துக்கிறதுண்டா.''

''எப்பயாச்சும் வருவான். சின்னக்குடும்பன்பட்டி தொலவட்டாச்சே.''

''வைராக்கியசாலி. கண்ண மூடுறவரைக்கும் இனியொரு கலியாணத்தப் பத்தி நெனைக்கலயே.''

கருப்பி தலையாட்டிக்கொண்டாள்.

''நம்ம வீரம்மா புருசன் மாதிரி.''

ஆண்டி விசாரித்தான்.

''ஊருல எல்லாரும் எப்படியிருக்காக. குடும்பங்க ரெம்பப் பெருகி யிருக்கும். வருசக் கணக்காச்சே. நாங்க தொலவட்ல கெடந்துக்கிட்டு எடுத்தேறிப் போக முடியல. அப்பப்ப இங்க குடியேறுறவுககிட்டக் கேட்டுத் தெரிஞ்சுக்கிறது.''

கருப்பி பெருமையாகச் சொன்னாள்.

''ஆண்டி வம்சம் ஆலமரமாப் படந்துருச்சா சும்மாவா.''

''அது நெசந்தான். நல்லப்பண்ணன் குடும்பந்தான் நாலா பக்கமும் விழுது வுட்ருச்சு. ராமண்ணன் குடும்பம் அப்படியில்ல.''

''ராமன் சின்ன வயசிலயே இங்க வந்துட்டான். பழனியம்மா பாவம் என்ன செய்வா. அவுகளுக்கு வாச்ச ஒரே ஆம்பளப் புள்ள கோயிந்தனும் சொகப்படல. கலியாணம் செஞ்சுவச்சுப் பாத்தா. அப்பயும் வழிக்கு வரல.''

“ரெண்டு புள்ளையப் பெத்த பெறகும் அவன் சின்னப் புள்ளையாவே இருந்தான். அந்த வருத்தத்துலயே பொண்டாட்டியும் அஞ்ஞையும் கண்ணமூடீட்டாக. கடசிக்கு அவனும் வந்து சேந்துட்டான்.”

ஆண்டி வருத்தமாகக் கேட்டான்.

“அவன் மக்கமாரு பெழப்பு எப்படிம்மா.”

“மூத்தவன் ராமசாமி. சங்கரலிங்கவரத்துல செயக்கொடிய முடிச்சு அவளுக்கு மூணு ஆம்பளைக. ஒருத்தனுக்கும் கலியாணம் முடிக்கல. தலப்பனுக்கு முடிக்க வேண்டிய வயசு. தாய்வழியிலயே பாக்காக போலருக்கு. குடும்பத்துல எல்லாரும் சளைக்காமப் பாடுபடுவாக.”

“அப்பக் கவலையில்ல.”

“ராமசாமி தங்கச்சி ராசமணி. உள்ளூருல மொங்கான் குடும்பத்துல கடக்கரைக்கு வாக்கப்பட்டு அவ பாட்டுக்குச் சும்மாருக்கா. அவளுக்கு ஒரு பொண்ணு ஒரு ஆணு. பொட்டச்சிய திப்பனூத்துல குடுத்துருக்கா. எளவட்டம் பொண்ணு தேடீட்டுத் திரியிறான்.”

கருப்பி ஆண்டியைப் பார்த்து அர்த்தத்துடன் சிரித்தாள்.

“ஆண்டிக் குடும்பன் வம்சமாச்சே.”

ஆண்டி மீசையை முறுக்கினான்.

“நம்ம பேரு சொல்றதுக்கு ஆளு வேணுமில்ல.”

“ஆமாமா கண்டிப்பா வேணும்.”

கருப்பி வள்ளியின் முடியைக் கோதினாள்.

“கோயிந்தன் தங்கச்சி நாகம்மா பாடுதான் தாவல போலருக்கு.”

“அவ புருசன் பாண்டி பொறுமசாலி. அவுகளுக்கு ரெண்டும் ஆம்பளப் புள்ளீக. தருமரு அப்பனப்போல அமைதியாருப்பான். சரவணன் கொஞ்சம் வெடிப்பானவன். ஒறவு வுட்டுப்போகப்புடாதுன்னு தருமருக்கு அண்ணன் மக ராசமணியக் கேட்டுத் தவிச்சா. அண்ணக்காரன் என்ன நெனச்சானோ தெரியல குடுக்க மாட்டன்னுட்டான்.”

ஆண்டிக்குக் கோவம்.

“அவன் ஒரு காடோடிப் பெய. தங்கச்சி மகனுக்குக் குடுக்காம உள்ளூருக்குள்ளயே குடுத்துருக்கானே. அவ மனசு என்ன பாடுபடும்.”

“தருமருக்குக் கக்கரம்பட்டியிலருந்து பொண்ணு பாத்து முடிச்சாக. அவளுக்கு ஆணொண்ணு பொண்ணொண்ணு. அதுல மூத்தவனுக்கும் தாயி வழியிலருந்துதான் பொண்ணு வந்து எறங்கீருக்கா.எளையவளுக்கு ரெண்டு மூணு வருசம் ஆகணும்.”

“சரி.”

“சரவணன் எலந்தப்பட்டியில முடிச்சிருக்கான். பேரு சந்திரா.”

கருப்பி புருவத்தை வளைத்தாள்.

“சந்திராவா. பெய புள்ளீக புதுசு புதுசால்ல பேரு வச்சிருக்குதுக. காலம் மாறிப்போச்சு.”

“என்னென்னமோ பேரு இருக்குது. கலிங்கலு முன்னப்போல இல்ல. ரெம்ப மாறியிருச்சு. அஞ்ஞு அப்பங்கிறதெல்லாம் மலையேறீருச்சு. இப்ப அம்மா அய்யாதான்.”

''அஞ்ஞாடி. ஊரு அம்புட்டுக்குக் கெட்டுப்போச்சா.''

ஆண்டி கருப்பியை முறைத்தான்.

''ஏ கழுத. கெட்டுப்போகல. முன்னேறியிருக்கு.''

''என்ன எழவோ.''

வள்ளி பேச்சை மாற்றினாள்.

''ராமண்ணன் வம்சம் அப்படியிருக்கு... நல்லப்பண்ணனுக்கு மூணு புள்ளீக. வேலாண்டி வள்ளியம்மா செல்லையா. செவனம்மா மதினி அண்ணனுக்கு முந்திக்கிட்டா. அண்ணன் கண்ணமூடுறதுக்கு நாளாச்சு.''

ஆண்டி சொன்னான்.

''ஆமாமா. என்னய மாதிரி எல்லாம் பாத்துட்டுத்தான் வந்தான்.''

''வேலாண்டிக்குக் கருத்தையன் தம்பி சங்கனோட மக கன்னியம்மாள முடிச்சாக. அவ நாலு பேரப் பெத்தா. சுப்பிரமணி சமுத்தரபாண்டி மீனாச்சி சம்முகவேலு.''

கருப்பி கேட்டாள்.

''நாலு பேரும் நல்லாப் பெழைக்காகளா.''

''அவுகளுக்கென்ன. சுப்பிரமணி பொண்டாட்டி அன்னபூர்ணம் கீகாட்டுக் காரி. அவுகளுக்கு ரெண்டு பொட்டச்சிக. ரெண்டு பேரவும் கீகாட்லயே குடுத் துட்டாக. சமுத்தரபாண்டிக்கு வந்த அமராவதி தெக்க கொப்பம்பட்டிக்காரி. அவுகளுக்கு ரெண்டு பொண்ணு ஒரு ஆம்பள. மூத்தவள உள்ளூருல காலாடி குடும்பத்துல குடுத்துருக்கு. மத்த ரெண்டு பேரும் சும்மாதான் இருக்காக. மீனாச்சி மேகாட்டுக்குப் போயிட்டா. புருசன்பேரு கருப்பையா. அவுகளுக்கு ரெண்டு ஆம்பள ரெண்டு பொம்பள. ஆருக்கும் கலியாணமாகல. சம்முகவேலுக்கும் சித்திரம்பட்டி சுந்தரவள்ளிக்கும் பெரிசா கலியாணம் நடந்தது. அவுகளுக்கு ரெண்டு எளவட்டங்க இருக்காங்க.''

ஆண்டி சந்தோசப்பட்டான்.

''பெரிய குடும்பம்.''

''வள்ளியம்மா குடும்பமும் பெரிசுதான். அவ சங்கன் மகன் முத்தையா வுக்கு வாக்கப்பட்டா.''

''பொண்ணெடுத்துக் குடுத்துக்கிட்டாக.''

''அப்படித்தான். கலியாணத்துக்கு முந்தி முத்தையா கருத்தையப் பெரிப்பனப் போல கெட்டிக்காரத்தனம் பண்ணீட்டுத் திரிஞ்சான். பொண்டாட்டி வந்ததும் அடங்கீட்டான். நாலு புள்ளக்காரனாயிட்டான். பூங்கோத அருணாசலம் அமிர்த லச்சிமி பவுன்ராசு. எல்லாம் உள்ளூருக்குள்ளயே கலியாணம் முடிச்சு நாலு அஞ்சுன்னு புள்ளீகளப் பெத்துக்கிட்டாக.''

கருப்பி சிரித்துக்கொண்டாள்.

''கோழி குஞ்சி பொரிச்ச மாதிரி.''

''அவுகளோட புள்ளீகளும் வெளியூருக்குப் போகாம உள்ளூருக்குள்ளயே பெணஞ்சுக்கிட்டாக. வதவதன்னு ஒரு பெரிய கூட்டமே கெடக்குது. தொட்டி வீட்டுக் கூட்டம்னே பேராயிப்போச்சு. களத்துப் பக்கம் ஒரு தெருவே உண் டாயிருச்சு.''

கருப்பி காதுத்தண்டைத் தடவினாள். நினைவு வந்தது.

''வள்ளியம்மாளுக்கு நேர எளையவன் செல்லையா பாடு என்னாச்சும்மா.''

''அத மறந்துட்டனெ. அவனுக்கு வடக்கூருல பொட்டம்மாளப் பெண் ணெடுத்தாக. அவளுக்கு ஒரு ஆம்பள ரெண்டு பொம்பள. சின்னச்சாமி பிச்சம்மா தங்கத்தாயி. ரெண்டு பொம்பளயவும் அசலூருக்குப் புடிச்சுக் குடுத்தாக. அதுக பாடு தாவல. சந்தோசமா இருக்காக. சின்னச்சாமிக்கு வந்தவ வடகாட்டுக்காரி. அவளுக்கு ரெண்டு எளவட்டங்க. ஒரு பொட்டச்சி. ஆருக்கும் வயசு வரல.''

கொஞ்ச நேரம் தொட்டி வீட்டு நினைவுகளில் லயித்திருந்த ஆண்டி மெல்லக் கண்திறந்தான்.

''தொட்டி வீட்ட ஒண்ணும் செய்யலயே.''

''அப்படியேதான் இருக்கு. அப்பப்பச் சொவரப் பழுதுபாத்து கூரைய மாத்தி நல்லா வச்சிருக்காக.''

''இருக்கட்டும் இருக்கட்டும்.''

''நெறைய புள்ளீகளப் படிக்கவச்சுப் பாத்தாக. பூங்கோத மகன் ஆண்டியப் பனத் தவர ஒண்ணும் ஒப்பேறல. சொமதாங்கிப் பாத வழியா வேப்பங்காட் டுக்கு நடந்து தவிச்சதுதான் மிச்சம்...''

கருப்பி ஆண்டியின் தொடையை நிமிண்டினாள்.

''பேரக் கேட்டயா இவனே. ஆண்டியப்பனாம். ஆண்டிக் குடும்பன் பேரு எப்படித் தொலங்குது பாரு.''

''நல்லாத் தொலங்கட்டும்.''

•

வள்ளிக்கு ஒரு சங்கதி நினைவுக்கு வந்தது.

''ஆண்டியப்பன வளத்து ஆளாக்கிறதுக்குப் பூங்கோத அரும்பாடு பட்டா. அவன் சின்ன வயசில கெடந்த கெடைக்கு ஒப்பேற மாட்டான்னுதான் நெனச் சிருந்தாக. சவல பாஞ்சு வகுறு வீங்கி வாந்தியும் பேதியுமா கெறங்கிப்போயி... புள்ளையோட கூட்டாவா இருந்தான்.''

கருப்பி ஆண்டியைப் பார்த்தாள்.

''இவளோட அப்பன் பொய்யாளிக் குடும்பன் மாதிரி. அவனுக்குத்தான் சன்ன ஓவணியமா பாத்துருக்கு.''

''மனுசர ஆகமா ஒறங்க வுட்டானா.''

வள்ளி சிரித்தாள்.

''பூங்கோத புள்ளைய சொமதாங்கிக்குக் கொண்டுவந்து கும்புட்டுத் திருநீறு பூசீட்டுப் போவா. புள்ளையப் பாக்கப் பாவமாருக்கும். மாமியாக்காரி மனசு கேக்காம அவளப் புடிச்சு வெரசுனா. புள்ளைக்குக் கண்டது கழியதக் குடுத்துத் தொக்கம் வுழுக வச்சிட்டயே. அவன் சொருகிச்சொருகி முழிக்கிறதும் சொதுக்சொதுக்னு படுக்கிறதும் பாத்தா ஒறக்கம் வர மாட்டங்குதே. இப்பயே புள்ளையத் தூக்கீட்டுக் கெளம்பு. என்னன்னு பாத்துட்டு வந்துருவொம். சூசுவான்னு கெடக்கயில இதும் தும்பமான்னு சொல்லி புளியம்பட்டி மேகல வண்ணாங்கிட்டக் கூட்டீட்டுப் போனா.''

கருப்பி கேட்டாள்.

''தொக்கம் எடுத்தானா.''

''புள்ளையோட தொண்டைக்குள்ள குச்சுப்போல ஒல்லிக் கொழாய வுட்டு பண்ணிக்கறி பணியாரம்னு ஏழெட்டுத் துண்டுகள உறிஞ்சியெடுத்துப் போட்டான்.''

''அத்தன பதவலு கெடந்தா புள்ளையெங்க தேறும்.''

ஆண்டி நக்கலடித்தான்.

''பொய்யாளி தோத்தான்.''

''புள்ளைக்குக் கண்டம் வெலகின சந்தோசத்துல மாமியாளும் மருமகளும் வெயிலோட வீட்டுக்கு நடையப் புடிச்சாக. மாமியா தோளுல புள்ள படுத் திருந்தான். நல்ல ஒறக்கம். பூங்கோதைக்குப் பசி. எடையில ஒரு ஊருக்குள்ள வெலகி கடையில மடிநெறையா அவிச்ச மொச்சையும் கருப்பட்டியும் வாங்கி ஆசையாத் தின்னுக்கிட்டே நடந்தா. மாமியா முன்னால போயிக்கிட்ருந்தா.''

''அப்படிப் பசி.''

''அவ வாயி சொகமா அசப்போடுறத ஊரு மந்தையில மேஞ்ச ரெண்டு வாங்கோழி பாத்துக்கிருச்சு.''

''வாங்கோழியா. அதென்ன கோழிம்மா.''

''புதுசா வந்துருக்குதாம் காலு மொளச்ச குலுக்க மாதிரி. மூக்குச் சளியத் தொங்க வுட்டுத் தொங்க வுட்டு உறிஞ்சிக்கிட்டுத் திரியுமாம். பாக்க அசிங்கமா ருக்குமாம். அதோட கறி சாதிக்கோழிக் கறியவிட ருசியாருக்குமாம்.''

''அதப் போயி மனுசரு திங்கத்தானா.''

''எங்களக் கண்டுக்கிறாமயா போற இரு வாறம்னு ரெண்டு குலுக்கையும் நெட்டோட்டத்தில அவளுக்குப் பின்னாலயே ஓடீருக்கு. அவ கவனிக்கல. அதுக கிட்டப் போயி வசவுல கூடீருச்சு.''

''வசவா. அதெப்படிம்மா.''

''அதுக கத்துனது அவளுக்கு அப்படித்தான் கேட்ருக்கு.''

''எப்படி.''

''ஒண்ணு தாந்தின்னி தாந்தின்னின்னு சொல்ல இனியொண்ணு தவுடு தின்னி தவுடுதின்னின்னு திட்டீருக்கு.''

''பெறகு.''

''அவளோட சீலையக் கொத்தியிழுக்காறதுதான் பாக்கி. திரும்பிப் பாத்து அவ சீ தொலஞ்சு போ செடியேன்னு சொல்லீட்டு ஓடீருக்கா. அதுக வுடுறதா இல்ல. தவுடுதின்னி தாந்தின்னின்னு தொயங்கெட்டீட்டு வந்துருக்கு.''

கருப்பி ஆண்டியை நோட்டம் விட்டாள்.

''கதையக் கேட்டயா இவனே. கொடுமையால்லருக்கு.''

''கேட்டுட்டுத்தான் இருக்கென்.''

வள்ளி கதையைத் தொடர்ந்தாள்.

''ஓடுற ஓட்டத்துல பூங்கோதைக்குக் காலு எடறி தரையில மண்டிபோட்டு வுழுந்து தட்டுத்தடுமாறி எந்திரிச்சுத் தப்பிச்சு மாமியாள எட்டிப் புடிச்சப்பத் தான் உசிரே வந்துச்சு. எந்திரிக்கயில மடியிலருந்த மிச்ச மொச்சையும் கருப்பட்டி

யும் சிந்திச் செதறிப்போச்சு. கோழிக ரெண்டும் ஓட்டத்த நிறுத்தி தொண தொணத்துக்கிட்டே மொச்சையக் கொத்திப் பெறக்க ஆரம்பிச்சிருச்சு.''

''தொணதொணப்பா.''

''அப்படித்தான் காதுல வுழுந்துருக்கு. ஒண்ணு தாந்தின்னி புள்ள வளக்க மாட்டான்னு நொடிக்க மத்தது தவுடுதின்னி கோழி வளக்க மாட்டான்னு பதிலுக் கத போட அவளுக்கின்னா வெக்கமாப் போச்சு.''

''ஊரு ஒலகத்துல இல்லாற கூத்தால்லருக்கு. நடந்ததெல்லாம் மாமி யாளுக்குத் தெரியுமா.''

''பூங்கோத மூச்சுக் காட்டலயே. பெறகு அதுக்கு வேற தனியா வாங்கிக் கெட்டணும்... ஒருநா சொமதாங்கிக்கு முன்னால வச்சு இந்தக் கதையச் சொல் லீட்ருந்தா. அப்பத்தான் எனக்குத் தெரியும். கதையக் கேட்டவ அவள தவுடு தின்னின்னு கிண்டலாக் கூப்பிட அது ஊருக்குள்ள பரவி அதே பட்டப் பேராயிப் போச்சு. பூங்கோதன்னா அனயம் பேருக்குச் சட்னு யாவுகம் வராது.''

ஆண்டி தலையிலடித்துக்கொண்டான்.

''நம்ம வம்சத்துல இப்படியொரு பேரா. தொட்டி வீட்டுத் தவுடுகள கோழி யும் புள்ளீகளும் தின்னு முடியாது.''

''அதான இவனே. தவுடு தின்னதுகளுக்குத் தண்ணி குடுத்துத் தீராது.''

வள்ளி பெருமைப்பட்டுக்கொண்டாள்.

''பூங்கோத அப்படி வளத்த ஆண்டியப்பன வைராக்கியமாப் படிக்கவச்சா. அவனும் அக்கறையாப் படிச்சு மேப்படிப்பும் முடிச்சு பட்டணத்துல வேலையும் கெடச்சிருச்சு. அவனப் போல வண்ணாக்குடியில பொம்மக்கா மகன் மாரிமுத்தும் அவனோட படிச்சு வேல வாங்கீட்டான். அவனும் பட்டணத்துலதான் இருக்கான். பூங்கோதையப் போல பொம்மக்காளுக்கு மகனப் பாத்துச் சந்தோசப்படக் குடுத்துவைக்கல.''

''ஏந் தாயி.''

''மாரிமுத்து ஆருட்டயும் சொல்லாமக்கொள்ளாம ஒரு நாடாரு பொண்ணக் கலியாணம் முடிச்சுக் கொழந்தையும் பெறந்துருச்சு. சங்கதி தெரிஞ்சதும் பேரனப் பாக்கணும்னு பொம்மக்காளுக்கு மூக்குமுட்ட ஆச. பட்ணத்துக்குக் கெளம்பீட்டா. ஆண்டியப்பந்தான் கூட்டீட்டுப் போயிருக்கான். அங்க போனா மருமகக்காரி என்னன்னுகூடக் கேக்கல. இது எங்க தோட்டத்து வேலக்காரின்னு மத்தவுக கிட்டச் சொல்லீருக்கா. மகன் ஒண்ணுமே பேசல. பொம்மக்கா ஒடனே பெறப் புட்டு வந்து சேந்துட்டா. வேதன தாங்காம மருந்தக் குடிச்சு உசிர மாச்சுக்கிட்டா.''

ஆண்டிக்குக் கோவம் கிளம்பியது.

''அடத் தாயிளி. மாரிப் பெய பேர வச்சுக்கிட்டு பெத்த தாய அநியாயமாச் சாகடிச்சிட்டானே... நம்மாளு அப்படி எதும் கூத்துப்பண்ணலயே.''

''அவன் கத வேற மாதிரி...''

கருப்பி ஆவலாகக் கேட்டாள்.

''அதென்ன கதம்மா.''

''இருக்கங்குடி மாரியம்மா கோயில்ல சாமி கும்பிடும்போது தற்செயலா ஒரு பொண்ணப் பாத்துருக்கான். படிச்ச புள்ள. பேரு அறிவழகி. ஒருத்தருக் கொருத்தரப் புடிச்சுப்போச்சு.''

''அவ என்ன சாதியோ.''

''குடும்பமாருதான்.''

''சரி. எந்தூருக்காரியாம்.''

''அந்தப் பக்கந்தான். இவன் காயிதம் எழுத அவ எழுத பழக்கம் முத்திக் கிருச்சு. பொண்ணுகேக்கிற அளவுக்கு வந்துருச்சு.''

''பேசி முடிக்க வேண்டியதுதான.''

''பூங்கோத அந்தச் சம்பந்தமே வேணாம்னு புடிவாதமா இருந்தா. பொண் ணோட அம்மாக்காரி அதுக்கு மேல. நம்ம குடும்பத்துக்குப் பொண்ணு குடுக்க முடியாதுன்னு வீம்பு பண்ணுனா.''

''எதுக்காம்.''

''பொண்ணு அம்மாப்பள்ளராம். மாப்பிள அஞ்ஞாப்பள்ளராம். எஞ்சாதி ஒசத்தி நீ கீச்சாதின்னு பெரும பீத்த ஆரம்பிச்சிட்டாக.''

''அஞ்ஞாடி இப்படியொரு கூத்தா.''

''ரெண்டு பேரும் நேந்துக்கிட்டப் பெறகு இதெல்லாம் பாக்கப்புடாதுன்னு மத்தவுக எடுத்துச்சொல்லியும் கேக்கல. பெரிசுக இல்லாமயே சேந்துக்கிறதுக்குப் பொண்ணும் மாப்பிளையும் தயாரா இருந்தாக.''

''பெறகு.''

''பெறகென்ன. ரெண்டு ஆத்தாக்காரியும் சண்டக்காரிகபோல வந்து நிக்க கோயில்ல ஒருவழியா கலியாணம் நல்ல மொறையில நடந்து முடிஞ்சிருச்சு. அப் பயும் எங்க சாத்தரம் ஒங்க சாத்தரம்னு தொணதொணப்புக்குக் கொறச்சலில்ல.''

''நல்லபடியா முடிஞ்சதே பெரிசு.''

''ஒரு கொழந்த பெறந்த பெறகும் சம்பந்தகாரிகளுக்குள்ள சரியாப் பேச்சு வார்த்த கெடையாது. பேரனுக்குக் கோயில்ல மொட்டையெடுக்கையிலதான் நல்லாப் பேசிக்கிட்டாகளாம்.''

ஆண்டி சொன்னான்.

''பேரன் சேத்துவச்சிட்டான்.''

கருப்பிக்கு ஒரு சந்தேகமிருந்தது.

''ஏ இவனே தெரியாமத்தான் கேக்கென். பேரப்புள்ளைய எந்தக் கணக்குல சேத்துக்கிறது. என்னதான் சொல்லு. அஞ்ஞாப்பள்ளருதான் ஒசத்தி.''

''அவன் அஞ்ஞும்மாப்பள்ளரு. அறிவுகெட்ட கழுத. பெரிசாக் கேக்க வந்துட்டா.''

மூணு பேரும் உரக்கச் சிரித்தார்கள். அந்திக் கருக்கலில் முகங்களின் அடை யாளம் மங்கிக்கொண்டிருந்தது. ஆண்டி வள்ளியிடம் சொன்னான்.

''நேரமாச்சு தாயி. பெறப்புடு. அப்பன் அஞ்ஞையப் பாத்தயா.''

''இல்ல. இனியொரு நாளைக்குப் பாத்துக்கிறென். புள்ள என்ன செய்றானோ.''

கருப்பி வள்ளியைக் கடைசியாக வருடினாள்.

''வெள்ளி செவ்வாயில மறக்காம ஒனக்கு வெளக்கு வைக்காகளாம்மா.''

''வயசான காலத்துலயும் பூங்கோததான் வந்து வெளக்கேத்துறா. அவ கண்ணுக்குப் பின்னால எப்படியெப்படியோ.''

வள்ளி எழுந்து மலங்காட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். கருப்பியின் பார்வை தடுமாறி அவளைப் பின்தொடர்ந்தது. கண்ணைத் துடைத்துக்கொண்டு ஆண்டியைத் தேடினாள்.

''குளுருது இவனே...ஸ்...அஞ்ஞாடி''

அவரவர் குழிக்குள் இறங்கிக்கொண்டார்கள்.

## 9. மறப்பும் நினைப்பும்

நாந்தான் மங்கா. ஒம்ம சம்சாரம். நெனவிருக்கா.

இப்படிச் செஞ்சிட்டீரே மாமா. இது ஒமக்கே நல்லாருக்கா. ஒம்மக் காணாம என்னமாத் துடிச்சுப்போனென் தெரியுமா. எத்தன நாளு கரண்டு ரூமுக்குப் போயி எட்டிப் பாத்து ஏமாந்து அழுதிருப்பென். கண்ணத் தொடச்சிட்டு வீட்டுக்கு வருவென். அழுதுட்டுத் திரிஞ்சா புள்ளைக தொவண்டுபோயிரு வாகளே. அதுகள வளத்து ஆளாக்கி நல்ல வழி தேடிவுடணுமே. அதுக ஒறங்குன பெறகு அருவமில்லாம எந்திரிச்சு வந்து வெளித் திருணையப் பாப்பென். வண்டிக்குப் போயிப் பாப்பென். அழுகைய அடக்கீட்டு உள்ள போயிப் படுப் பென். இப்ப வந்துற மாட்டீரா பெறகு வந்துற மாட்டீரான்னு எத்தன நாளுதான் ஒறக்கமில்லாமப் படுத்துக்கெடக்கிறது. இதெல்லாம் ஒமக்கெங்க தெரியப்போகுது.

ஒண்ணு மட்டும் தெரிஞ்சுக்கரும். நீரு வுட்டுட்டுப் போனாப்புல நான் மனசு ஒடஞ்சு போயி உக்காந்துருவன்னு நெனச்சீரா. வைராக்கியமா இருந்து புள்ளைகள மலைக்க வுடாமக் காப்பாத்துவனாக்கும்.

ஒமக்கு நான் என்ன கொறவச்சென் மாமா. சம்பளத்துக்கு வந்த மனுசன புருசனாக்கிக் கொண்டாடுனனே அது தப்பா. வகவகயாத் துணிமணி எடுத்துக் குடுத்து அழகுபாத்தனே அதான் தப்பா. ஏன் மாமா இப்படி நடந்துக்கிட்டீரு. நாலு பேரு மதிப்பாகளா. நம்ம பையனுக்கு ஆரு பொண்ணு குடுப்பாக சொல்லும். அவனும் தகப்பனப் போல ஒருத்திக்குப் பின்னால போக மாட் டாங்கிறது என்ன நிச்சயம்னு கேட்டா என்ன சொல்றது. பொண்ணுகளுக்குச் சொந்தச் சாதியில எப்படி மாப்பிள பாக்கிறது. இதெல்லாம் நெனச்சுப்பாத்தீரா. அத்தனையும் சமாளிச்சு அதுகளுக்கு வழிதேடி வச்சென். இண்ணைக்கு கொழந்த குட்டிகளோட ஒம்ம புண்ணியத்துல நல்லாருக்காக. பொண்ணெடுத்த மகராசங்களும் வீட்டுக்கு வந்த மருமகளும் ஒம்மப் பத்தி ஒருவார்த்த பேசி யிருப்பாகளா.

ஒமக்குத் தெரியுமா மாமா. நீரு கண்ண மூடீட்டதா ஊருக்குள்ள ஒரே பேச்சாக் கெடந்தது. எம் மனசு என்ன பாடு பட்ருக்கும்னு நெனச்சுப்பாரும். தாலியக் கழட்டிப் போட்டுட்டு வெள்ளச்சீல உடுத்திக்கிறலாமான்னுகூட நெனப்பு ஓடுச்சு. ஆனாலும் நம்பிக்கையோட இருந்தென். நீரு இருக்கிற எடம் தெரிஞ்சிருந்தாக்கூட தேடிவந்து தேத்திக் கூட்டி வந்துருப்பமே.

மாமா நானும் சாதாரண மனுசிதான. எனக்கும் ஒடம்பிருக்கப் போயித் தான ஒமக்கு முந்திவிரிச்சு மூணு புள்ள பெத்துக்கிட்டென். ஒவ்வொரு சமயம்

ஒடம்பு பாடாப்படுத்துறதுண்டு. பழையபழைய நெனப்பு பேயாப் புடிச்சு ஆட்டும். புள்ளைகள நெனச்சு அந்த ஆசைய மறப்பென். ஒம்ம மேல ஆத்தரம் ஆத்தரமா வரும். ஒம்ம நெஞ்சில முட்டிமுட்டி அழுது கோவத்தத் தீத்துக் கிறணும். நெஞ்சு மயித்தப் புடிச்சு இழுத்து ஒம்மக் கோவப்படுத்தி கண்டபடி அடிவாங்கணும் போலருக்கும். அப்படி மொரட்டுத்தனமா அடிவாங்கியிருந்தாக் கூட நான் அடங்கியிருப்பனோன்னு தோணுது. நீருதான் வாயி பேசாற தெப்பப் பசுவா இருந்துட்டீரே. கொஞ்சம் சிந்திச்சுப்பாரும். ஒம்மப் போல நானும் ஒடம்பக் கொண்டாடியிருந்தா குடும்பம் என்ன கதியாயிருக்கும்.

நீரு சாமியாராத் திரும்பி வந்துருக்கிறதா நாலாம் பேரு மூலமாக் கேள்விப் பட்டதும் எப்படிச் சந்தோசப்பட்டென் தெரியுமா. மஞ்சத் தேச்சுக் குளிச்சு நல்ல சீல உடுத்தி காதுல தங்க ஓல போட்டு ஆனந்தமா இருந்தென். ஒரு வேலையும் ஓடல. கலிங்கலுக்குத் தேடிவந்து ஒம்மப் பாத்து நடந்ததெல்லாம் மறந்துட்டு வீட்டுக்கு வாரும்னு கூப்பிட மனசு குளுராட்டுச்சு. பெறகும் யோசன. இவ் வளவு காலம் வைராக்கியமா இருந்துட்டு எப்படிப் போயிக் கூப்பிடுறது. வார்த்தைக்கு மதிப்புக் குடுத்து வந்தாத்தான் போச்சு. வரலன்னாக் கேவலந்தான. மனசு கேக்காம மாறிமாறி நம்ம மகன அனுப்புனென். நீரு புடிவாதமா வர மாட் டன்னுட்டீரு. எதுக்குக் காவியுடுத்தி சோத்துக்குக் கையேந்தணும். வீட்டுக்கு வந்து மரியாதையா இருக்க வேண்டியதுதான. ஒம்ம வீட்டுக்கு வாறதுக்கு என்ன யோசன. எங்கமேல அப்படியென்ன கோவம்.

ஒம்ம நீங்கன்னு கூப்பிட்டா அன்னியமாத் தெரியிதேன்னு நீருன்னு கூப்பிட ஆரம்பிச்சென். மாமா அப்படிக் கூப்பிடுறதுல ஒரு சொகம் இருக்கத் தான் செய்யிது.

ஒவ்வொரு சமயம் மனசு வெறுத்துக்கெடக்கும். போன மனுசன் ஒரேயடி யாப் போயித் தொலஞ்சிருக்கப்புடாதா. திரும்பிவந்து மானத்த வாங்குறா ரேன்னு ஆத்தரமாருக்கும். இப்படியெல்லாம் செய்ற மனுசன் சொந்தச் சாதியில ஏன் பொண்ணெடுக்கணும் கீச்சாதியில எறங்கிச் சந்தோசமா இருந்திருக்கலா மேன்னு தோணும்.

மறுபடியும் கணபதி வந்து கூப்பிடுவான். மூச்சுக்காட்டாம வந்துசேரும்.

அன்றைக்கு கோயிந்தன் சொன்னது சரிதான்.

''இங்கயே இருந்து பாருங்க. அலச்சலு தீருமான்னு தெரியல.''

தீரவில்லையே. உடலை நிசமென்றெண்ணி உலகமெல்லாம் ஓடியாடி கடல்மரக்கலப் பாய்க் கம்பக் காகம்போல் கலங்கும் நெஞ்சில் திடமில்லையே. பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து பெண்ணைத் தாய்போல் நினைத்து தவம் முடிக்கத் திராணியில்லையே. ஆமை வரும் ஆள் கண்டு ஐந்தடக்கம் செய் வதுபோல் ஊமை உருக்கொண்டு ஒடுங்க முடியவில்லையே. நடந்தால் நாடெல் லாம் உறவாக இருந்தது. படுத்தால் பாயும் பகையாகிவிட்டதே.

ஊர் மடத்தில் தனித்துக் கிடந்த சாமியாரைப் பழைய நினைவுகள் குத்திக் குடைந்தன. மேலச் சுவரையொட்டி வரிசையில் நிற்கும் தெய்வங்களைத் தேடி

னார். சிறு விளக்கு வெளிச்சத்தில் முகங்கள் குறுஞ்சிரிப்பில் மின்னின. தஞ்சம் கிடைக்கவில்லை.

தாவாரத்தில் படுத்திருக்கும் நாயின் முனக்கம் விட்டு விட்டுக் கேட்டது. சில சமயம் உறுமலும் வந்தது. அவரிடம் வழக்கமாகப் பிச்சையைப் பங்கு போட்டுக்கொள்ளும் நாய்தான். நல்ல துணை. கோயிந்தன் போன பிறகு கிடைத்தது. திருவோட்டுச் சோற்றை உற்றுப் பார்த்துக்கொண்டு உட்கார்ந் திருக்கும். தீண்டாது. முகந்துகூடப் பார்க்காது. திருவோட்டை அதனிடம் நகர்த்தினால் காதாட்டி மறுத்துவிடும்.

''திருவோட்ட நீயே பத்தரமா வச்சுக்கோ. எனக்குத் தரையில போடு. அதான் பெரிய ஓடு.''

பகிர்ந்து சாப்பிடுவார்கள். அப்போதைக்குப் பசியடங்கும்.

தாழப் படுத்துறங்கும் நாயின் முனங்கலை உற்றுக் கவனித்தார். அது தலையை மட்டும் ஏறிட்டுப் பார்த்துக் காதைச் சடசடத்துக் கேட்டது.

''இனியும் அலச்சலு தீரலயா.''

பேச்சுத் துணை கிடைத்த ஆறுதல். செருமிக்கொண்டார்.

''தீர மாட்டங்குதே.''

அது கீழ்த் தாடையைத் தரையில் பதித்துக் கண்ணை மூடிக்கொண்டது.

''அதெப்படித் தீரும். நீ நீயாயில்லையே. இனியும் சுந்தர நாய்க்கராத்தான இருக்க. மனசத் தொட்டுச் சொல்லு பாப்பொம்.''

''அதத் தொட்டுப் புடிக்க முடியாமத்தான தொழாவீட்ருக்கென் சாமி.''

''பெறகு சொல்றயே. இல்ல தெரியாமத்தான் கேக்கென். முத்தம்மா உசிரோட இருந்திருந்தா பரதேசம் போயிருப்பயா.''

''போயிருக்க மாட்டந்தான்.''

''ஒனக்குள்ளருக்கிற ஆங்காரத்தாலதான ஓங்காரத்தத் தேடி ஓடுன.''

''அப்படித்தான் தோணுது.''

''தோணுறதென்ன அதான் நெசம். பொண்டாட்டி புள்ளீகள வுட்டுட்டுக் காவியுடுத்துறது கையாலாகாத்தனமில்லையா.''

''ஒருவழியில அப்படித்தான்.''

''கஸ்டத்திலருந்து தப்பிக்கிறதுதான் பரதேசமா.''

''மனசுக்கு நிம்மதியத் தேடிப் போனென்.''

''என்ன மயித்தத் தேடிக்கிழிச்ச. இங்க இல்லாற நிம்மதி அங்க கெடச்சிருச் சாக்கும். கெடைக்காமத்தான ஓடிவந்துட்ட.''

''கிட்டலயே.''

''ஆடு கடிக்கும்னு எடையன் உறிமேல ஏறி ஒளிஞ்சானாம். எத்தன நாளைக்கு ஒளிஞ்சிருக்க முடியும்.''

''அப்போதைக்குத் தப்பிக்கலாம்.''

''மொதல்ல தான் வளக்கிற ஆடு கடிக்கும்னு நெனைக்கிறதே தப்பு. அதுமேல நம்பிக்கையில்லாமத்தான அந்தப் பயம் வருது. சரி அப்படியே தப்பித்தவறிக் கடிக்க வந்தாலும் அதச் சமாளிக்க முடியாதா என்ன.''

''முடியும்.''

‘‘இது ஓடி ஒளியிறதுக்கு முந்தியில்ல புத்திக்கு எட்டியிருக்கணும்.’’

‘‘எட்டலயே.’’

‘‘அதனால மொன்னையா முடிவெடுத்துக்கிட்டு மொட்டையடிச்சிட்டுத் திரியிறது வேண்டாற வேலதான. பசியாமருக்க வரம் தாறென் பழைய கஞ்சி யிருந்தா ஊத்து தாயின்னு எத்தன பரதேசிக ஊர ஏமாத்தீட்டுத் திரியிறான். நூத்துல ஒண்ணு உண்மையானவனா இருப்பான். பரதேசம் போனா ஒடம்பு மனசு எல்லாத்தவும் கழுவித் தொடச்சிறணும். எனக்கொரு சந்தேகம். சீனித் தாயிப்புள்ள இல்லன்னா கலிங்கலுக்கு வந்துருப்பயா. அது எங்கருக்குதோ அங்க தான போயிருப்ப.’’

‘‘வாஸ்தவம்.’’

‘‘பேரன் பேத்திக்குப் புடிச்ச பண்டங்கள வாங்கிக் குடுத்து பக்கத்துல இருத்தித் திங்க வச்சுப் பாத்துட்டே இருக்கயே அது ஏன்.’’

‘‘அதுல ஒரு சந்தோசம்.’’

‘‘மத்த புள்ளீகளுக்குக் குடுத்துச் சந்தோசப்படலாமில்ல.’’

‘‘அது வந்து...’’

‘‘எது வந்து. இந்தப் பம்மாத்தெல்லாம் எங்கிட்ட வச்சுக்கிறாத... முத்தம்மா மொகச் சாடையில பொண்ணுக தட்டுப்பட்டா வச்ச கண்ணு வாங்காமப் பாத்துக்கிட்டுருக்கத் தோணுதே அது எதுக்காம். அதச் சொல்லு.’’

‘‘முத்தம்மா மொகத்தப் பாத்த ஆறுதல்தான்.’’

‘‘அதுக்குப் பேரு ஆறுதலா. பொய் சொல்ற. அவதான் செத்துப்போனான்னு தெரியுமில்ல. பெறகெதுக்கு அந்த நெனப்பு வருது.’’

‘‘நெனப்பு போகலயே.’’

‘‘போகாது. ஒனக்குத்தான் ருசியில்லாற சோறு தொண்டைக்குள்ள எறங்கக் கஸ்டப்படுமே. ருசிக்கு அடிமையாகிப்போன சீவனாச்சே.’’

‘‘ருசியக்கூடத் தாண்ட முடியலயே சாமி.’’

‘‘ஆகாசத்துல பறக்கிறதுக்கு வழி சொல்றென் என்னய ஆத்துக்கு அந்தப் பறம் தூக்கிவுடுன்னானாம்... ஒன்னால மத்த பரதேசிக சுத்தமான துணியுடுத்தி யிருந்தா அழகான துண்டு போட்ருந்தா நல்ல கம்பு வச்சிருந்தா ஏன் நல்ல திருவோடு வச்சிருந்தாக்கூடச் சகிச்சுக்கிற முடியலயே. அப்படி நம்மளும் வச்சிருக்கணும்ணு ஆச வருதா இல்லையா.’’

‘‘ஒத்துக்கிறென் சாமி.’’

‘‘நம்மள நாலு பேரு மதிக்கணுமிங்கிறதுக்காகத்தான் இப்படிச் செய்றன்னு நெனைக்கென். மங்கத்தாயி மரியாதையா வச்சிருந்தா வெளியேறியிருப்பயா.’’

‘‘ஒருவேள தங்கியிருப்பனோ என்னமோ.’’

‘‘என்னமோ நொன்னமோ. ராசா மாதிரி இருந்திருப்ப. ஒம் மகன் கணபதி எத்தன தடவ வந்து ஊருக்குக் கூப்பிட்ருக்கான் . ஏன் போகல. குடும்பத்தப் பத்தி அவங்கிட்ட ஒரு தடவையாவது வெசாரிச்சிருப்பயா. அப்படியென்ன வெறுப்பு. அந்தப் புள்ளீக சொந்த ரத்தமில்லையா. ஒனக்கு வறட்டு வைராக்கியம் வேண்டிக் கெடக்குதாக்கும். இப்படியே எத்தன நாளைக்குத் தப்பிச்சுத் திரியப் போற.’’

‘‘தப்பிக்கிறதில்ல சாமி. எல்லாம் தொறந்திருக்குது.’’

''ஆமா மறந்திருக்கவே முடியல. தொறந்திருக்கப் போறாராம். ஒனக்குப் பரதேசம் ஒரு கேடு. வெயில்ல காயாறவன் தீயில வேகப் போறானாம். கொடும தான்.''

பங்காளி நாய் வாந்திச் சிரிப்பை மடத்துக்குள் விட்டுவிட்டு வாலிபர் மேடை யேறிப் படுத்துக்கொண்டது. மேடை வேம்பு அப்பப்ப ஊதக்காற்றை மடத்துக் குள் ஊதிச் செலுத்தியது. அவரது உடம்பெங்கும் ஊறியிருக்கும் வேர்வையை உலர்த்தக் காற்று போதவில்லை. துண்டால் துவட்டிக்கொண்டார்.

என்னருந்தாலும் முத்தம்மாளுக்காகாது. பசியறிந்து பிச்சையிட்ட மகராசி. காசு பணம் கேட்டாளா. நகைநட்டு சொத்துசொகம் கேட்டாளா. ஏதாவது பொருள் வாங்கிக் கொடுத்தால்கூட நிதானமாகச் சொல்வாள்.

''இதான் முக்கியமாப் போச்சாக்கும். ஒங்ககிட்ட வாயி தொறந்து வேறென்ன மும் கேட்டனா. கொண்டுபோயிக் குப்பையில போடுங்க.''

அவள் முகத்தில் முழிக்க வெட்கமாக இருக்கும். அவள்மேல் மரியாதை கூடும். கடைசிவரை பொருளை வாங்க மாட்டாள். அவள் மனுசி.

இத்தனை வருசமாகியும் அவளை மறக்க முடியவில்லையே. மங்கத்தாயின் வார்த்தைகளால் அவள் எப்படியெல்லாம் வேதனைப்பட்டிருப்பாள். அந்த வேதனைதான் உயிரைக் குடித்துவிட்டது. எவ்வளவு காலத்துக்கு இருக்க வேண்டி யவள். மகளை வளர்த்துக் கரையேற்றிப் பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை.

அவர் மல்லாக்கப் படுத்துக்கொண்டார். மனசுக்குள்ளிருந்து பாட்டு வந்தது.

''பறச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா
இறைச்சி தோல் எலும்பிலும் இலக்கமிட்டு இருக்குதோ
பறச்சி போகம் வேறதோ பணத்தி போகம் வேறதோ
பறச்சியும் பணத்தியும் பகுந்துபாரும் உம்முளே.''

பகலில் கணபதி வந்திருந்தான். முகங்கொடுத்துப் பேசவில்லை. எரிச்சலுடன் கூப்பிட்டான்.

''வீட்டுக்கு வாங்க. எங்களுக்கு மரியாதக் கொறச்சலாருக்கு.''

''அதுக்காகத்தான் இங்க வந்தீகளா சாமி.''

''பெறகெதுக்கு வருவாக. ஒங்க சம்பாத்தியத்தப் புடுங்கீட்டுப் போறதுக்கா.''

''இனிமே வர வேணாம் சாமி. ஒங்களுக்கு மரியாதக் கொறச்சல்தான.''

''ஒங்க புள்ளைகன்னு சொல்லிக்கிறதுக்கே வெக்கமாருக்கு.''

''சொல்ல வேணாம் சாமி.''

''எக்கேடும் கெட்டுப் போரும்.''

வெறுப்பில் திரும்பிப் போய்விட்டான். இனி வர மாட்டான்.

மனசில் பாறைச் சுமையை வைத்துக்கொண்டு மங்கத்தாயிடம் எப்படிப் போவது. தகப்பனைத் தொலைத்துவிட்ட பிள்ளைகளை வளர்க்க எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள். மூணு பேருக்கும் கலியாணம் முடித்துவைத்திருக்கிறாளே. அந்த வைராக்கியத்தை என்ன சொல்வது. எல்லாரையும் உதறிவிட்டு ஓடிப் போன மனுசன் கடைசிக் காலத்தில் வேறு வழியில்லாமல் ஏன் திரும்பி வரணும்

என்று பிள்ளைகள் கேட்டால் மூஞ்சியை எங்கே கொண்டுபோய் வைத்துக்கொள் வது. காவி களைந்து வெள்ளையுடுத்தி அவர்களுடன் எப்படிக் கலந்து வாழ்வது. ஊர் ஒப்பணுமே.

சாமத்துக்குப் பிறகும் அவர் பாடும் குரல் கேட்டுக்கொண்டேயிருந்தது.

''ஆசைவலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல்
ஓசைமணித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்.

ஊன்நிறைந்த காயம் உயிரிழந்து போகுமுன்னர்
நான்இறந்து போகஇனி நாள்வருவது எக்காலம்.

மீனை மிகஉண்டு நக்கிவிக்கிநின்ற கொக்கதுபோல்
தேனை மிகஉண்டு தெவிட்டி நிற்பது எக்காலம்.

காமக் கடல்கடந்து கரையேறிப் போவதற்கே
ஓமக் கனல்வளர்த்து உள்ளிருப்பது எக்காலம்.

சோற்றுத் துருத்தியினைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊத்தைச் சடலம்விட்டு உனையடைவது எக்காலம்.

சூதும் களவும் தொடர்வினையும் சுட்டிடக் காற்று
ஊதும் துருத்தியைப் போட்டு உனையடைவது எக்காலம்.

பிறப்பும் இறப்புமற்று பேச்சற்று மூச்சற்று
மறப்பும் நினைப்புமற்று மாண்டிருப்பது எக்காலம்.''

வீட்டு முற்றங்களில் பாட்டைக் கேட்டபடி கண்ணயர்ந்துவிட்ட சனங் களுக்கு ஏக்க ராகம் நின்றபோதுதான் ஊதக்காற்றின் கூதல் உறைத்தது. எழுந்து பாயைச் சுருட்டி முனங்கிக்கொண்டே வீட்டுக்குள் முடக்கப் போனார்கள்.

''இந்த மனுசனுக்குள்ள எங்கருந்துதான் பாட்டு ஊறுதோ.''

''இவருக்கு ஒறக்கமே வராதா.''

சுழன்றடித்த சுழிக்காற்றில் மேடை வேம்பு ''வராது வராது'' என்று பேயாடியது.

## 10. ஆறுக்கு மூணடியாம்

விடிந்த பிறகும் ஊர் மடம் உறங்கிக்கொண்டிருந்தது. அந்த வழியாக வெற்றுக் குடங்களுடன் தண்ணீரெடுக்கப் போன பெண்கள் முற்றத்துக்குத் திரும்பினார்கள்.

''மடத்து முத்தம் தொளிக்காமக் கெடக்குதே. சாமியாரு நமக்கு முந்தித் தொளிக்கிறவராச்சே.''

''ஒருவேள ஊருக்குப் போயிட்டாரோ.''

''இருக்காது. மகன் வந்து கூப்பிட்டே போக மாட்டன்னுட்டாரே.''

''ஆளு உள்ள இருக்குதான்னு எட்டிப்பாரு.''

''மூடிப் படுத்துக் கெடக்காரு.''

''இம்புட்டு நேரம்வரைக்குப் படுத்திருக்க மாட்டாரே.''

''அதான. குளிச்சுத் திருநீறு பூசி வெள்ளரிப்பழமா இருப்பாரே.''

''சாமீ...சாமீ...சாமீ...''

''என்னக்கி இது. அலுங்க மாட்டாங்காரு.''

''ஆம்பளைகளக் கூட்டி வாங்கம்மா. என்னன்னு பாத்துருவொம்.''

நாலு பேர் ஓடிவந்து அவர் மூடியிருந்த காவித்துண்டை விலக்கினார்கள். மூச்சில்லை. புரட்டினார்கள். அசைவில்லை.

''அடப் பாவமே. மண்டையப்போட்டுட்டாரே.''

''தஞ்சாவுதானான்னு தெரியலயே. சந்தேகமாருக்கு.''

''எத வச்சு அப்படிச் சொல்ற.''

''நேத்துவரைக்கு நல்லாத்தான இருந்தாரு. அதுக்குள்ள இப்படின்னா நம்ப முடியலயே.''

''தானா உசிர மாச்சுக்கிட்டாருங்கயா.''

''அப்படியும் இருக்கலாம்.''

''அதுக்குண்டான தடயமே இல்லையே. மொகத்தப் பாரு. எவ்வளவு தெளிவா இருக்குது. எல்லாத்தவும் அறுத்தெறிஞ்சிட்டு ஒடேந்துன மனுசனுக்கு உசிர மாச்சுக்கிற மாதிரி அப்படியென்னடா கவல இருக்க முடியும்.''

''அவரு மனசுக்குள்ள இருந்தது ஆருக்குத் தெரியும்.''

''அந்தப் பேச்ச வுடுடா.''

தெருக்களில் ஊர்க் குடும்பன் திருவாத்தனின் குரல் மந்த கதியில் கேட்டது.

''நம்மூருச் சாமியாரு காலமாயிட்டாரு. ஆரும் வேலைக்குப் போகப்புடாது.''

அவரை எங்கே அடக்கம் செய்வது. முதலில் இந்தச் சிக்கலைத் தீர்க்கணும். அதுக்குப் பிறகுதான் மற்ற காரியங்களில் இறங்க முடியும்.

நேரமிருக்கவே காலாடி அய்யாத்துரை சத்திரப்பட்டிக்கு ஓடினான். சாமியார் குடும்பத்துக்கும் மாடப்பனுக்கும் தகவல் சொல்லியாகணும். மங்கத்தாய் சேதியைக் கேட்டதும் வீட்டுக்குள் போய்விட்டாள். ''மாமா மாமா'' என்று அவள் அழுவது கேட்டது. கணபதி கேட்டான்.

''அவரு என்னமும் சொல்லீட்டுச் செத்தாரா.''

''அவுக சாகும்போது ஆருமே கிட்டத்துல இல்ல. ஆனா க்லிங்கல்லதான் அடக்கம்பண்ணனும்னு அவுகளுக்கு ஆச. நாலு நாளைக்கு முந்திக்கூட அப்படித் தான் பேசீட்ருந்தாரு.''

''அவரு விருப்பப்படியே செய்யிங்க.''

''நீங்க...''

''வந்தாலும் பாத்துக்கங்க வரலன்னாலும் பாத்துக்கங்க.''

மாடப்பன் கூரை மேய்ச்சலுக்காக வெளியூர் போயிருப்பதாகச் சொன்னார்கள். தகவலனுப்பச் சொல்லிவிட்டு வந்தான்.

அவரைக் கலிங்கலில் அடக்கம்செய்ய முடிவாயிற்று. புதுத்துணி மாலை வாங்கிவர ரெண்டு பேர் முத்துநகருக்கு விரைந்தார்கள். வண்ணானுக்குச் சொல்லி யனுப்பினார்கள். இன்னொரு சிக்கல் முளைத்தது.

''அவரப் பெதைக்கிறதா எரிக்கிறதா.''

''சாதி வழக்கப்படி பாத்தா எரிக்கத்தான் செய்யணும்.''

''இவன் ஆருப்பா அறிவில்லாமப் பேசிக்கிட்டு. சாதி பாத்தா நம்மகிட்ட வந்து கஞ்சி வாங்கிக் குடிச்சாரு.''

''தப்பித்தவறி சுந்தர நாய்க்கருன்னு சொல்லீட்டா அவரு மொகம் இம்புட்டாச் சிறுத்துப்போகும். அழுகிற மாதிரி ஆயிருவாரு.''

''நம்மளோட பொணமான பெறகு பெதைக்கிறதுதான் சரி.''

''நாடாருக மயானத்துல பெதச்சிருவமே.''

''நம்ம மயானத்துல நாடாருக குழி இல்லையா என்ன. அப்படி வச்சுக்கிருவொம்.''

''முந்தின தலமொறையில அது நடந்துருக்கு.''

''அதவும் கண்டுகழிச்சிருவம்னு செல்லக்கனி நாடாரு மருமகங்கிட்டக் கேட்டுப்பாத்தென்.''

''ஆரு அந்தத் தெக்காட்டுக்காரரா.''

''அவருதான். முடியாதுன்னு சொல்லீட்டாரு.''

''ஏலே அங்க போயிக் கேக்கலாமா. சாமியாரு எண்ணைக்காச்சும் அவுக தெருவுக்குப் போயிக் கையேந்திப் பாத்துருக்கயா.''

''இருந்தாலும் மனசு கேக்கல. அதான்...''

''மனசு கேக்கல மயிரு கேக்கல... சாமி நம்ம மயானத்துக்கே போகட்டும்ப்பா. அவருக்கு ஒரு கொறையும் வைக்கப்புடாது.''

துணியும் மாலையும் வாங்கப் போனவர்கள் முத்துநகரிலிருந்து திரும்ப நேரமாகிவிட்டது.

பெண்கள் நீரெடுத்துவர குளிப்பாட்டி மடத்தில் சாத்திவைத்தார்கள். நிறைய பேர் அவருக்கு முன்னால் உட்கார்ந்து ஒப்பாரி வைத்து அழுதார்கள். வீட்டுக்கும் ஆடுமாடுகளுக்கும் அவர் செய்துகொடுத்த பொருட்களை நினைத்துநினைத்து அழுதார்கள்.

''ஆடு மாடழுக
ஆயிரம் சனமழுக
காடு கரையழுக - எங்க சாமி
கந்தூங்கும் மாயமென்ன.''

''ஊர் மடத்து மூலையெல்லாம்
ஒம்பாட்டு கேக்குதய்யா
தேர்புடிச்சுத் தோள்சொமக்க - எங்க சாமி
தெருவோட போறதென்ன.''

மடத்துக்கு முன்னால் வண்ணார்கள் கூடியிருந்தார்கள். உள்ளூர் வெள்ளையன் மகன் மூக்கனும் இருளாண்டி மகன் பழனியும் செவனாண்டியும் வேப்பங்காடு சின்னான் மகன் முனியசாமியும் சத்திரப்பட்டி சித்திரவேலும் மும்முரமாகத் தேர் கட்டினார்கள்.

மற்ற பெண்களுடன் சீனித்தாயும் வந்து சாமியார் முகத்தைப் பார்த்து அழுதாள். தேர் புறப்பட்டது. ரத்தினம் ஒரு பக்கம் தோள்கொடுத்தான். ஊரே திரண்டு வழியனுப்பியது.

ஊர் மடம் வெறிச்சோடிவிட்டது. சாமியாரின் திருவோடு கமண்டலம் சிலைகள் பாதக்குறடு எல்லாமே மேலச்சுவரில் தொட்டிலாகத் தொங்கும் துணிப் பைக்குள் பத்திரமாக இருந்தன. கைக்கம்பின் நாய்க்கழுத்து தொட்டில் கயிற்றில் கட்டப்பட்டிருந்தது. அவர் விட்டுச் சென்ற ராகம் தொட்டிலை மெல்லத் தாலாட்டியது.

''ஆறுக்கு மூணடியாம்
அழகான மண்ணடியாம்...''

தேர் தெற்குப் பாதையில் வெள்ளாவியைக் கடக்கும்போது அதிலிருந்து ஆவியாகக் கிளம்பும் அழுக்கு கூட்டத்துக்கு மேல் படர்ந்து பந்தலிட்டுப் பின் தொடர்ந்தது. வெள்ளையனும் இருளாண்டியும் வெள்ளாவி வேலையை மறந்து விட்டுத் தேரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். கூட்டம் சலித்துக்கொண்டது.

''சே இம்புட்டு அழுக்கும் நம்ம ஒடம்புலதான ஒட்டிக்கிட்ருந்துருக்கு. என்னமா நாறுது.''

''என்னாளும் நாறப்பெழப்புத்தான். வக்காளி தலமொறதலமொறயா அவனும் ஒவரு முறுக்கி வெள்ளாவியில வச்சு அவிச்சுத்தான் பாக்கான். அட்டுப் புடிச்ச அழுக்கு ஒட்டிக்கிட்டு வுட மாட்டங்குதே.''

''நம்மளவும் வெள்ளாவியில வச்சு அவிச்சாத்தான் சரிப்படும்.''

நாடார் தோட்டம் தாண்டி கம்மாக் கரையோரம் குடம் உடைப்பு நடந்தது. பாத்தியப்பட்டவர்கள் இல்லாததால் ஊர்க் குடும்பனே தோளில் குடம்தூக்கிச் சுற்றத் தயாரானான்.

''நானே ஒடச்சுச் சாத்தரத்தக் கழிச்சிறட்டுமா.''

பெண்கள் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு வந்த சீனித்தாய் அழுகை பீறிட ஓடிவந்து குடத்தைத் தலையில் ஏந்திக்கொண்டாள்.

''என்னப் பெத்த அய்யா எங்கள வுட்டுட்டுப் போயிட்டீகளே. கிட்டத்துல இருந்தாப் போதும். தெம்பாருக்குமே.''

மூணு முறை சுற்றிவந்து உடைத்துவிட்டுத் தலையிலடித்து சாமியாரிடம் முறையிட்டு அழுதாள். ரத்தினம் கண்ணீர் பொங்க அவளை விலக்கி அனுப்பினான்.

''சாமியத் தூக்குங்கடா.''

தேர் செந்தூக்கில் எழும்பி விரைந்தது. கம்மாக் கரையில் தலைமுறை தாண்டி நிற்கும் புங்க மரங்கள் தேராக அசைந்தன.

வீடு திரும்பும் பெண்களால் ஆச்சரியத்தை விழுங்க முடியவில்லை.

''அஞ்ஞாடி மனசுக்குள்ள இம்புட்டுப் பாசத்தக் கெட்டிவச்சிருந்துருக்காளே.''

''கொடம் ஒடச்சுக் கொட்டித்தீத்துட்டா.''

''கடசிக்கு இந்த மக ஒடச்சுத்தான் கடனத் தீக்கணும்னு இருந்துருக்கு.''

சீனித்தாயை ஒருத்தி கைத்தாங்கலாகக் கூட்டிப்போனாள்.

கரையிறங்கிய ஆட்கள் பேசிக்கொண்டே தேருக்குப் பின்னால் நடந்தார்கள்.

''ஒரு சாத்தரம் முடிஞ்சிருச்சு. இனியொண்ணு பாக்கியிருக்கு. இப்படி நடக்கும்னு தெரிஞ்சிருந்தா ரத்தினம் மகனக் கொள்ளி வைக்கச் சொல்லி யிருக்கலாம். இல்ல தேரேறிச் செண்டா வீச வச்சிருக்கலாம்.''

''அதானப்பா.''

''வடக்க ஆரோ பெரிய பொம்பள மந்திரியாம். கூடவே காவலுக்கிருந்தவன் அத இண்ணைக்கு வெள்ளங்காட்டி சுட்டுக் கொன்னுட்டானாம். ஒடம்புல பத்துப்பதினஞ்சு தொளையாம்.''

''சல்லடையாக்கிப்புட்டான். போயும்போயும் பொம்பளையவா சுட்டான்.''

''அவனுக்கு அப்படியென்ன கோவமோ.''

''மாறிமாறிச் சுடணும்னாப் பாரேன்.''

''அவங்க கும்புடுற கோயிலுக்குள்ள பட்டாளத்தான அனுப்பி எலிக்குக் கோமுட்டியடிச்ச மாதிரி அத்தன பேரவும் கொல்லச் சொல்லுச்சாம் அந்தம்மா.''

''கோயிலுக்குள்ள அனுப்புற அளவுக்கு அப்படியென்ன காட்டமாம்.''

''பட்டாக்கத்தி மாதிரி ஆயுதங்கள வச்சுக்கிட்டு கோயிலுக்குள்ள கும்மாளம் போட்டாங்களாம்.''

''சொந்தக் கோயிலுக்குள்ள அவங்க ஆட்டம்போட்டா இவங்களுக்கேன் வலிக்குது. நம்ம மட்டும் ஆளாளுக்கு அருவாளத் தூக்கீட்டு ஆடுமாடு கோழின்னு துள்ளத்துடிக்க வெட்டி ஆட்டம் போடலாமாக்கும். காணாக்கொறைக்கு சாமிக கையில அருவா கத்தி சூலாயுதம்னு குடுத்துறொம்.''

''எங்கயோ ஒரு கோயில்ல ஒரே சமயத்துல ஆயிரம் மாட்ட வெட்டிக் காவு குடுத்தாகளாம்.''

''அடத் தாயிளி. ஒவ்வொரு தடவையும் ஆயிரம் மாட்டுக்கு எங்க போறது. மாட்டு வம்சமே கருவறுத்துப் போயிருமே.''

''அந்தம்மாளக் கொன்னதப் பாத்துட்டுச் சும்மாருக்க முடியுமா.''

''அதெப்படி. பழிக்குப்பழி வாங்கலன்னாக் கண்ணடைக்காதே. என்ன செஞ்சாகளாம்.''

''இவங்க அந்தக் கோயிலக் கும்புடுறவங்க எல்லாரவும் வீட்டுக்குள்ளருந்து வீதிக்கு இழுத்துட்டு வந்து ஆம்பள பொம்பளன்னு பாக்காம சகட்டுமேனிக்கு வெட்டிப்போட்டு வெறியாட்டம் போடுறாகளாம். பச்சப்புள்ளீகளக்கூட வுட்டுவைக்கலயாம். தெருவெல்லாம் ரத்தக்களமாம். ஆட்டம் இனியும் நடக்குதாம். இது எதுல போயி முடியப்போகுதோ.''

''ஆயிரம் மாட்ட வெட்ன கததான்.''

''இனியும் என்னென்னமோ பேசிக்கிறாக.''

''அந்தம்மாளுக்கு இந்தத் தோரிணி எதுக்கு.''

''அது பாரு ரெம்ப நாளாப் பொகஞ்சுக்கிட்ருந்துருக்கு. இண்ணைக்கு வெடிச்சிருச்சு. இத எதுக்குச் சொல்லவந்தன்னா அதனால முத்துநகரு முழுக்க கடைய அடச்சுப்புட்டான். அடைக்காறவன வெரட்டிவெரட்டி அடிச்சு அடைக்க வச்சிட்டான். நம்ம சாமியாருக்கு மால வாங்க முடியாமப் போச்சு. கோடித் துணிகூட ஒருத்தனக் கெஞ்சிக் கூத்தாடி கடைய லேசாத் தொறக்கச் சொல்லி உள்ள பூந்து வாங்கீட்டு வந்தொம்.''

''இவருக்குக் குடுத்துவச்சது அம்புட்டுத்தான்.''

''வேப்பங்காடு பெத்தபோடு வீட்ல ஒரு பொண்ணுக்குச் சடங்கோ கலியாணமோ தெரியல. அவுகளும் பூவு மாலைக்குத் தவியாத் தவிச்சாக. கெடச்சதோ என்னமோ.''

‘‘அவுக எப்படியும் ஏற்பாடு செஞ்சிருப்பாக.’’

தேர் மயானத்தை அடைந்துவிட்டது.

‘‘ஒருவழியா கொண்டுவந்து சேத்தாச்சு. சாமிக்குக் கொட்டு இல்லாறது ஒண்ணுதான் கொறச்சலு.’’

‘‘எல்லாப் பெயகளும் முன்னக்கூட்டியே அங்கங்க அச்சாரம் வாங்கிப்புட் டானாம். அதனாலதான் கெடைக்கல.’’

‘‘மாடப்பனக் காணுமே. இவரு மொகத்தப் பாக்கக் குடுத்துவைக்கலயே.’’

கம்மாக் கரையிலிருந்து ஒருவன் துண்டைச் செண்டா வீசிக்கொண்டே மயானத்தை நோக்கி ஓடிவந்தான். வரவர அடையாளம் தெரிந்தது.

‘‘அந்தா மாடப்பன் வாறான் பாரு.’’

சண்முக நாடாரின் குடும்பத்தோரம் குழிக்குள் நீட்டிக்கிடந்த சாமியாரின் முகத்தை அவன் கடைசியாகப் பார்த்ததும் துணியால் மூடி மண்ணள்ளிப் போட்டு மேதினார்கள். கொஞ்ச நேரம் அழுது முடித்த பிறகே அவனுக்குப் பேச்சு வந்தது.

‘‘வெளியூருக்குப் போயிட்டு மதியந்தான் வந்தென். தகவலு சொன்னாக. இந்தக் கோலத்துலயா பாக்கணும்... கொடம் ஒடச்சதாரு.’’

‘‘சீனித்தாயி.’’

‘‘அப்படியா. கொள்ளி வச்சதாரு.’’

‘‘ஆரும் வைக்கல. சீனித்தாயி கொடம் ஒடைக்கப்போறது முந்தியே தெரியாதே.’’

‘‘அந்தக் கொறையெதுக்கு வைக்கணும். நான் மொட்டையடிச்சுக்கிறென்.’’

மூக்கனுக்குள் இருந்த உறுத்தல் போய்விட்டது. முன்னெச்சரிக்கையாகக் கொண்டுவந்திருந்த மைக்கத்தியை எடுத்து உள்ளங்கையில் தீட்டினான். மழித்து முடித்த பின் மாடப்பன் ஒருவனிடம் கேட்டான்.

‘‘சாமி வச்சிருந்த சாமாங்கள என்ன செஞ்சீக.’’

‘‘கூடவே போட்டுப் பெதச்சிறலாம்னுதான் நெனச்சொம். பெறகும் இவரு யாவுகமா இருக்கட்டும்னு மடத்துல தூக்கி வச்சிருக்கொம்.’’

‘‘பத்தரமா இருக்கட்டும்.’’

எல்லாம் துறந்த ஏகாந்த மனுசனாகக் கல்லாமேட்டுப் பாதையில் தென் மலையை நோக்கி நடக்கத் தொடங்கினான் மாடப்பன். மொட்டைத்தலையில் மஞ்சள் பொழுது கொட்டிச் சிதறும் நெருப்பு விளார்களை எட்டத்திலிருந்து பார்க்கவே கண் கூசியது. தோளில் அசையும் அழுக்குத் துண்டின் சோர்வுகூடக் காலில் இல்லை.

இவர்களுக்கு ரெம்பரெம்ப நன்றி:

- நாவலுக்கான ஆய்வுப் பணிகளுக்காக நிதியுதவி அளித்த கலைகளுக்கான இந்திய அறக்கட்டளை (India Foundation for the Arts) (பெங்களூரு) குறிப்பாக அன்மோல் வெல்லானி சஞ்சய் அய்யர் மதுபன் மித்ரா
- தேசிய ஆவணக் காப்பகம் (டெல்லி)
- ஜவஹர்லால் நேரு நினைவு நூலகம் (டெல்லி)
- தமிழ்நாடு ஆவணக் காப்பகம் (சென்னை)
- தமிழ்நாடு ஆவணக் காப்பக நூலகம் (சென்னை)
- கன்னிமரா நூலகம் (சென்னை)
- மறைமலையடிகள் நூலகம் (சென்னை)
- சென்னை உயர் நீதிமன்ற நூலகம்
- சென்னைப் பல்கலைக்கழக நூலகம்
- கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (சென்னை)
- உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் (சென்னை)
- கூட்டுறவுச் சங்கப் பதிவாளர் அலுவலக நூலகம் (சென்னை)
- தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றிய நூலகம் (சென்னை)
- வேளாண்மை ஆணையர் அலுவலக நூலகம் (சென்னை)
- ஆவணக் காப்பகம் (மதுரை)
- ஹென்றி ஆல்பார்ட் கிருஷ்ணப் பிள்ளை நினைவு நூலகம் (மதுரை)
- விக்டோரியா எட்வர்டு மன்ற நூலகம் (மதுரை)
- மாவட்ட அமர்வு நீதிமன்றம் (மதுரை)
- ஸ்டீபன் நீல் நூலகம் (நெல்லை)
- வழக்குரைஞர் பேரவை நூலகம் (நெல்லை) குறிப்பாக வழக்குரைஞர் சி. தங்கசுவாமி (நெல்லை)
- ரகுநாதன் நினைவு நூலகம் (எட்டயாபுரம்)
- ஏசு சபை ஆவணக் காப்பகம் (செண்பகனூர் கொடைக்கானல்)
- கழுகுமலை காமயநாய்க்கன்பட்டி தேவாலயங்களின் பங்குத் தந்தையர்
- உணவளித்து உரையாடிய கோட்டூர் தேவாலயத்தின் பங்குத் தந்தை ஸ்டீபன் மாற்கு
- சாட்சியாபுரம் (சிவகாசி) ஏழாயிரம்பண்ணை தேவாலயங்களின் குருமார்கள்
- குளக்கட்டா குறிச்சி பனையடிப்பட்டி குருவித்தம் கயத்தாறு அகிலாண்டபுரம் பன்னீர்க்குளம் தேவாலயங்களின் பணியாளர்கள்
- கழுகுமலை கழுகாசல மூர்த்தி சிவகாசி விசுவாநாதர் மாரியம்மன் பத்திர காளியம்மன் மதுரை மீனாட்சியம்மன் திருத்தங்கல் கருநெல்லி நாதர் இருக்கங்குடி மாரியம்மன் திருவண்ணாமலை (விருதுநகர் மாவட்டம்) சீனிவாசப் பெருமாள் கமுதி மீனாட்சி சுந்தரேசுவர் மாரியம்மன் எட்டயாபுரம் எட்டீசுர மூர்த்தி கரிசக்குளம் (நத்தம்பட்டி) காளியம்மன் ஏழாயிரம் பண்ணை மாரியம்மன் ஆகிய கோயில்களின் பணியாளர்கள்

- எனக்குள் கனன்றுகொண்டிருந்த பொறியில் ஒளியேற்றிய நண்பர் ராஜ் கௌதமன் (புதுச்சேரி) எனது ஆசிரியர் தி.சு. நடராசன் (மதுரை)
- வேண்டுகோளுக்கிணங்க கணினி வழி அரிய தரவுகளை அனுப்பி உதவிய முனைவர் அந்தோணி குட் (எடின்பர்க் பல்கலைக் கழகம்)
- தொலைபேசியில் உரையாடி வாழ்த்திய அருள்தந்தை ஜார்ஜ் ரத்தினசாமி (கழுகுமலை)
- தக்க சமயத்தில் நூல்கள் தந்துதவிய நண்பர்கள் ராஜாராம் (டெல்லி) அலைகள் சிவம் (சென்னை) ரவிச்சந்திரன் (ராசபாளையம்) ரவிசங்கர் (சிவகாசி)
- பழைய புத்தகக் கடை அதிபர் ஆழ்வார் (மைலாப்பூர் – சென்னை)
- கழுகுமலைக் கலகம்பற்றிக் கலந்துரையாடிய லூர்துசாமி (நாலாந்துலா)
- கழுகுமலை வரலாறுபற்றி உரையாடிய எழுத்தாள நண்பர் செ. மா. கணபதி (கழுகுமலை)
- சில தரவுகள் தந்துதவிய பூ.வை. சோமசுந்தரம் (கழுகுமலை)
- கழுகாசல மூர்த்தி கோயில்பற்றி உரையாடிய ஓவியர் முத்து (கழுகுமலை)
- கழுகாசல மூர்த்தி கோயில் நடைமுறைகள் பற்றி விளக்கிய நிருவாக அலுவலர் தமிழானந்தன் (கழுகுமலை)
- நூறாண்டுகளுக்கு மேல் வாழ்ந்து அண்மையில் மறைந்துவிட்ட போத்தி நாடார் (சின்னையாபுரம்)
- வரலாற்று நிகழ்வுகள் பற்றி அப்பப்ப விவாதித்த நண்பர் முனைவர் சண்முக பாரதி (மதுரை) செந்தில் மள்ளர் (கழுகுமலை) பேராசிரியர் ராசமாணிக்கம் (கோவில்பட்டி) ஆல்பர்ட் (திருச்சி)
- ஆவண ஆய்வில் உதவிய நண்பர் ஐ. செயராமன் (மதுரை)
- பிரெஞ்சு மொழியிலிருக்கும் சில ஆவணங்களை ஆங்கிலத்திலும் தமிழிலும் மொழிபெயர்த்து உதவிய முனைவர் டி. கே. கோபாலன் (சென்னை) முனைவர் த. மார்க்ஸ் (புதுச்சேரி)
- கள ஆய்வில் உடனிருந்து உதவிய நண்பர் முனைவர் அ. கிருஷ்ணமூர்த்தி (ஏழாயிரம்பண்ணை) முருகன் (கழுகுமலை)
- எட்டயாபுரம் வரலாறு பற்றி வெளிச்சம் தந்த எழுத்தாள நண்பர் மா. ராசாமணி (எட்டயாபுரம்)
- சில ஊர்கள் பற்றி விளக்கிய நண்பர் அருள் அந்தோணி ராஜ் (ஆவுடையானூர்)
- பல சங்கதிகளை நினைவுக்குக் கொண்டுவந்த என் மனைவி
- நினைவில் வாழும் அம்மா அவள் நினைவில் வாழ்ந்த அப்பா அவர் நினைவில் வாழ்ந்த பெரிய தாத்தா இன்னும் அக்காமார் அண்ணன் இப்படி ஏராளமான மனுசர்கள்.
- மனசில் வரைபடங்களாகப் பதிந்திருக்கும் ஊர்கள் கம்மா ஊருணி மலைகள் ஆறுகள் ஓடைகள் நிலங்கள் வெளுப்புத்தறை வெள்ளாவி...
- எனது கடுகளவு எழுத்துக்களைக் கண்பூத்துப்போகக் கணினியில் வார்த்த க்ரியாவின் ஆஷா (சென்னை) கார்த்திகேயன் துளசி கணினி மையத்தின் லதா கீதா (கோவில்பட்டி)

- சிதறிக்கிடந்த தீக்குச்சிகளை சீராகச் சக்கையில் அடுக்குவதுபோல் நாவல் வழிகளைப் பிதுங்காமல் பக்கங்களுக்குள் அமர்த்திய க்ரியாவின் ஷோபனா
- அச்சாவதற்கு முன் பக்கங்களின் இறுதி அமைப்பை நுணுக்கமாகச் சரிசெய்த எஸ். அம்பிகா (சென்னை)
- நாவல் தயாரிப்பில் உதவிய க்ரியாவின் ஆசைத்தம்பி
- நாவலைப் படித்துக் கருத்துக்களைப் பகிர்ந்துகொண்ட நண்பர்கள் தேவ தச்சன் (கோவில்பட்டி) ஞானி (கோவை) ராமகிருஷ்ணன் (க்ரியா) பாரவி (சென்னை) சிவராமன் (மதுரை)
- எனது உணர்வுகளை உள்வாங்கி ஊக்கமூட்டும் பின்னுரை தந்த சிவராமன் (மதுரை)
- தீவிர அக்கறை அர்ப்பணிப்பில் என்னுடன் வாதாடி போராடி பாராட்டி அல்லும்பகலும் அரும்பாடுபட்டு வைராக்கியத்துடன் நாவலை நேர்த்தியாக வெளிக்கொணர்ந்த நண்பர் ராமகிருஷ்ணன் (க்ரியா)

## பின்னுரை

*The arts are our storehouse of recorded values. - I.A. Richards (1924)*

எல்லாமே உலகமயமாகிக்கொண்டிருக்கும் சூழலில் மரபும் கலாச்சாரமும் பாரம்பரிய ஞானமும் சிதையாமல் அழியாமல் பிற்காலச் சந்ததியினருக்காகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற சவால் உண்மையான கலைஞர்களுக்கானது. எழுத்தாளர்களுக்கானது. இதை நேர்மையாக எதிர்கொண்டு பூமணி வெற்றி பெற்றிருக்கிறார். தமிழும் வெற்றி பெற்றிருக்கிறது. தமிழுக்கு ஒரு major நாவலாக 'அஞ்ஞாடி...' கிடைத்திருக்கிறது, நீண்ட பஞ்சத்திற்குப் பிறகு. சூழலில் சூழலால் மொழிக்கு ஏற்படும் பின்னடைவிலிருந்து அதைக் காப்பாற்ற சுயநலமற்ற காவலர்கள் அவ்வப்போது தோன்றுவார்கள் என்ற நம்பிக்கை வீணாகவில்லை.

எத்தகைய வளமான வாழ்க்கையை இழந்திருக்கிறோம்! நாம் மட்டுல்ல, உலகம் முழுவதும் பல சமூகங்கள் தங்கள் நிலம், மொழி, மரபுகளிலிருந்து அந்நியப்பட்டிருக்கின்றன. வேலையும் வாழ்க்கையும் பொழுதுபோக்கும் வெவ் வேறாக இல்லாமல் எல்லாவற்றிலிருந்தும் சக்தியும் சந்தோஷமும் கிடைத்துக் கொண்டிருந்த காலம் அனேகமாக ஒரு நூற்றாண்டுக்கு முன் நிரந்தரமாக அழிந்தேவிட்டது. இதைச் சொல்வது இழந்ததை மீட்டுக் கொண்டுவருவதற்காக அல்ல. இனி அது சாத்தியமில்லை. இழந்ததை அறிந்துகொள்வதற்கு இருக்கும் ஒரே வழி கலை-இலக்கியம்தான் என்பதற்கு ஒரு நல்ல உதாரணம் கிடைத் திருக்கிறது என்பதற்காகத்தான். இழந்துவிட்ட இந்த வாழ்க்கையை அடைவதற் காக அல்ல. பல நூறு ஆண்டுகளுக்கு முன் செழித்திருந்த துன்பியல் நாடகம் செத்துவிட்டது என்கிறார்கள். காரணம் அது மாமனிதர்களின் வீழ்ச்சியின் கதை. மாமனிதர்கள் இப்போது காணாமல்போய்விட்டார்கள். எனவே துன்பியல் நாடகமும் இல்லை.

பெரிதும் தற்சார்பான சமூகம்—organic community—அழிந்துபோனது சமீப கால வரலாற்றில் மிகவும் முக்கியமான, துயரமான யதார்த்தம். குறுகிய காலத் தில் மிக விரைவாக நேர்ந்த இந்த அழிவும் சரிவும் முன்னேற்றம் என்றழைக்கப் படுகின்றன. முழுமையான, ஒழுங்கமைந்த, வேர்களுடனான, மரபு சார்ந்த, உள்ளுணர்வுள்ள, பயனை மட்டும் நோக்காத கிராமிய வாழ்வு இயற்கையோ டியைந்ததாக—வாழ்க்கை-வேலை, வீடு-வேலை செய்யுமிடம்-வெளி உலகம்,

பொழுதுபோக்கு-கலாச்சாரம், ஆண்-பெண், முதலாளி-தொழிலாளி, தனிநபர்-குடும்பம்-சமூகம் இடையேயான இணக்கம்—தொழில்மயமாவதற்கு முன் இருந்தது. பொழுதுபோக்கு என்ற தனியான எண்ணம் இருந்ததில்லை. பொழுது போக்கு என்று ஒன்று இல்லையென்றாலும் இந்த வாழ்க்கையிலும் இந்த மனிதர் களின் மனங்களிலும் வெறுமையில்லை. ஆனால் 24 மணி நேரமும் காட்சி ஊடகங்கள் ஆக்கிரமித்திருக்கிற நவீன வாழ்கையின் ஒரே யதார்த்தம் வெறுமை.

மரபுரீதியிலான திறன்கள் அறவே அழிந்துவிட்டன. மனிதப் பண்புகள், மனிதத் தேவைகளை ஒதுக்கி விஞ்ஞானம், தொழில்நுட்பம் சார்ந்த எதையும் கொண்டாடுகிற மனோபாவம் வளர்ந்துவிட்டது. ஊர்களின் அழகும் ஒழுங்கும் குலைந்து அலங்கோலம் குடியேறுகிறது. மனிதர்கள் சிந்திக்கும் விதமும் தங்கள் வாழ்வை அமைத்துக்கொள்ளும் விதமுமே முற்றாக மாறிவிட்டன. நாவலி னூடாக மாறுவது நிலப்பரப்பு மட்டுமல்ல. நிலமும் மனமும்தான். இரண்டை யும் பண்படுத்தலாம். மனிதர்களுக்கும் கண்களுக்குத் தெரியாத வேர்கள் இருக் கின்றன. இந்த சமூகத்தில் மனித ஆன்மாவுக்கு உணவோடு அழகும் தேவையாக இருந்திருக்கிறது. எவ்வளவு பாட்டு, எத்தனை விதமான இசைக்கருவிகள்! எவ்வளவு அலங்காரமாகப் பாடை கட்டுகிறார்கள்! பொருட்களின் அமைப்பு, வடிவம், பயன் எல்லாவற்றுக்கும் மேலாக அவற்றின் அழகும் உணரப்பட்ட தேவையாக இருந்திருக்கிறது. பணத்தையும் பொருளையும்பற்றி மிகக் குறை வாகப் பேசிய, அதைவிடக் குறைவாக அதைப் பற்றி யோசித்த சமூகம் இது.

பல நூற்றாண்டுகளாக நிகழ்ந்துகொண்டிருந்தாலும் காலம் மாறிவிட்டது, கலாச்சாரம் பறி போய்விட்டது என்று சொல்வது எளிதானது. புரிந்துகொள்ளக் கடினமானது. குடும்ப அமைப்பு உடைந்துவிடுகிறது. சமூகப் பழக்கவழக்கங்கள் மாறிவிடுகின்றன. ஒரு தலைமுறை அடுத்த தலைமுறையோடு ஒத்துப்போக முடியவில்லை. உணர்வுகள் மேலோட்டமானவையாகிவிடுகின்றன. வாழ்க்கை யின் தரத்துக்குச் சேதம் ஏற்படுத்தாமல் இந்த மாற்றங்கள் நிகழவில்லை. நாவலில் வரும் ஆண்டியும் மாரியும் பெரிய நாடாரும் அவர்களது பிள்ளைகளும் எத் தனையோ தலைமுறை வாழ்க்கையின், ஞாபகங்களின், மரபின் வாரிசுகள். ‘வாரிசு’ என்ற வார்த்தையின் துல்லியமான வரையறைகள். மாரிமுத்துவும் அவனது காதல் மனைவியும் சுகுமாரும் எதன் பிரதிநிதிகள்? இவர்களை உற்பத்தி செய்யும் சக்தி எது?

இது அப்படி ஒன்றும் குறைகளே அற்ற சமூகம் அல்ல. அறியாமையும் மூட நம்பிக்கைகளும் ஏழ்மையும் நிறைந்த சமூகம்தான். ஆனால் விஞ்ஞானம் வளர்ந் திருக்கிற இப்போதும் புதிய கடவுள்கள்—தொழில்நுட்பமும் நுகர்வுக் கலாச் சாரமும்—பெருகியிருக்கின்றன. ‘பக்தி’ கூடியிருக்கிறது. மூடநம்பிக்கைகளும் அதிகம் ஆகித்தான் இருக்கின்றன. கட்டணம், கூடுதல் கட்டணம் செலுத்தினால் விசேஷ தரிசனம் தரும் கடவுள்களைப் பேராசையும் சுயநலமும் உருவாக்கி யிருக்கின்றன.

எளிய விஷயங்களில்—மழையில், பாடுவதில், கண்மாய் நீரில் மல்லாந்து மிதப்பதில், வேலையில்—சந்தோஷமடைகிற மனிதர்கள். இந்த வாழ்க்கையின், நாவலின் தளம் கிராமம் என்றாலும் மாந்தர்களின் பிரக்ஞையும் கற்பனையும்

பிரபஞ்சத்தை உள்ளடக்கியவை. தேயும் நிலாவைக் கழுதையோடு பிணைக்கும் கற்பனையில் நிலா கழுதைப் பால்மீது வாங்கும் சத்தியம் 21ஆம் நூற்றாண்டுச் சிறுவர்களுக்குக் கிடைக்காத செல்வம். நுகர்வுக் கலாச்சாரம் அழித்துவிட்ட கற்பனை. நாம் யாராவது பூமணியின் நாவலில் பாத்திரமாக முடியுமா? இதுதான் இழப்பு. இதுதான் சரிவு. இதிலிருந்து மீள முடியாது. தங்கள் வேலையை அனுபவித்துச் செய்கிறார்கள். வேலையில் இவர்கள் பெறும் நிறைவான சந்தோஷம்—'வெளுப்புத்துறை அவளுக்குக் (அனந்திக்கு) கோயில் மாதிரி'—இப்போது தேடி ஓடும் பொழுதுபோக்கில் கிடைப்பதில்லை. உழைப்பும் முயற்சியும் இல்லாத எதிலும் சந்தோஷம் கிடைக்காது. இத்தனைக்கும் இவர்கள் பயன்படுத்துவது பேச்சு மொழி ஒன்றைத்தான். 'தொடர்புக்கான மொழித்திற'னைப் பெரிதாகப் போற்றும் சமூகத்தில் பேச்சு மொழியை மிகப் பெரிய அளவில் பயன்படுத்தி மொழியையும் கலாச்சாரத்தையும் செழுமைப்படுத்தியிருக்கும் பூமணியின் இந்த முயற்சியை எப்படி மதிப்பிடுவது?

பூமணி இந்த சமூகத்தை அதன் யதார்த்தத்தில், இயற்கையை மறந்த முழு வாழ்க்கைக்கான சாத்தியத்தை மறுக்கிற நவீன சமூகத்தில், எதை இழந்திருக்கிறோம், எதை மறந்துவிடக் கூடாது, ஒரு புதிய ஒழுங்குக்கான முயற்சியில் இந்த அறிவு எப்படிப் பயன்படக்கூடும் என்ற நோக்கில்தான் மதிப்பிட்டிருக்கிறார். இந்த சமூகம்பற்றிய நினைவுகள் மட்டுமே உயிர்ப்பிக்கப்படக்கூடியவை. இந்த சமூகத்தையே மீட்டுவர வேண்டும் என்ற எதிர்மறை ஆசை நாவலாசிரியரிடம் இல்லை. பூமணியின் இந்தச் சித்திரம் முழுமையானதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் பிழையானதல்ல. போதைக்காகவோ நிகழ்கால யதார்த்தத்திலிருந்து தப்பிக்கும் உபாயமாகவோ இல்லாமல் மாற்றங்களுக்கான மூலங்களை அறிந்துகொள்ள சரியான கருவியாகவே கடந்த காலம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. எளிதில் மறைந்துவிடக்கூடிய மரபின் அம்சங்களும் மதிப்பு மிக்க அனுபவங்களும் எது எதைவிட உயர்வானது என்ற தர மதிப்பீடுகளும் உண்மையான கலைஞர்களுக்குத்தான் வாய்க்கும். அதனால்தான் அவர்களின் பெறுமானம் மற்றவர்களுடையதைவிட உயர்வானது. போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டியது. ஒரு கலைஞனின் சிந்தனை **வாழ்வைப் பற்றிய சிந்தனையாக** மற்றவர்களின் சிந்தனையைவிட மேலானது.

பெண்கள், குழந்தைகள், ஆண்கள், வீட்டு விலங்குகள், பறவைகள், மீன்கள், கடவுள்கள், பேய், பிசாசு என்று முழுமையான ஒரு உலகம். இதை சாத்தியமாக்கியிருக்கிற வளமான பேச்சு மொழி. இந்த மொழிதான் இந்தப் பரந்து விரிந்த உலகத்தின் திறவுகோல். ஒருவரது உலகின் எல்லையை வரையறுப்பது அவரது மொழிதான். அனுபவம் என்பது வாழ்வனுபவம் மட்டுமல்ல, படிப்பறிவும்தான். திறந்த மனத்துடன் வாசிக்கிற—அப்படித்தானே இலக்கியத்தைப் படிக்க வேண்டும்—எவருக்கும் ஒரு விசாலமான புதிய உலகைக் காட்டத் தயாராயிருக்கிறது 'அஞ்ஞாடி...'. மொழியை, அறிவைச் செழுமைப்படுத்துவதில் எத்தனையோ ஆராய்ச்சிகள், சமூகநலத் திட்டங்கள் சாதிக்க முடியாததை ஒரு நல்ல நாவல் சாதித்துவிடும். இவரது மொழி இவருக்கு முன்னும் இருந்திருக்கிறது. இவருக்குப் பின்னும் இருக்கும். இடையில் இவர் உருவாக்கியிருக்கும் சாத்தியங்கள்தான்

படைப்பாளியின் ஜாலம். மொழியின் கூர்மையும் துல்லியமும் பல மடங்கு கூடியிருக்கின்றன. இனி இந்தக் கருவியை யார் வேண்டுமானாலும் பயன்படுத்த லாம். எல்லா ஊடகங்களும் வட்டார வழக்குகளின் நுண்ணிய வேறுபாடுகளை யும் சொல்லாடல்களையும் அழுத்தங்களையும் அழித்து இதிகாசங்களையே கூடக் கொச்சைப்படுத்தி மொழியையே வெறும் கேளிக்கைக்கும் ஆவலாதிக்கும் தலைப்புச் செய்திகளுக்கும் மட்டுமேயான, ஆழத்தை முற்றாகத் தவிர்த்துவிடும் ஊடகமாகச் சீரழித்துக்கொண்டிருக்கும்போது ஒரு உயர்வான நோக்கத்துக்காக வும் சாதனைக்காகவும் ஆன ஊடகமாக இந்த நாவல் மொழியை உயிர்ப்பித் திருக்கிறது. இவரது மொழி வார்த்தைகளின் வெறும் சேர்க்கை அல்ல. நம்முடைய வளமான கடந்தகாலத்துடன் நம்மை இணைக்கும் வீரியம் மிக்க சமூக, கலாச் சாரச் சக்தி.

கடந்தகாலத்தில் நிகழ்ந்ததாகக் கூறிக்கொண்டு வாராவாரம் கிளுகிளுப்புக் காக எழுதப்பட்டு வருஷக் கணக்கில் வந்ததெல்லாம் வெறும் சரித்திரக் கதைகள் தான். ‘அஞ்ஞாடி...’ தான் உண்மையில் தமிழின் முதல் வரலாற்று நாவல். எளிய மொழியில் உரிக்கஉரிக்க—உடைத்துப் பிளந்து அர்த்தம் கண்டுபிடிக்க வேண்டிய தேவையைத் தவிர்க்கும் விவரணை—அடுக்கடுக்காக விரியும் அனுபவங்கள். பெருகும் அர்த்தங்கள். கற்பனை வறட்சியையும் உழைப்பின்மையையும் மூடி மறைப்பதற்கென்று எந்த உத்தியும் கையாளப்படவில்லை. தான் எழுதும் காலம், சூழல், வாசகர்கள் எதிர்பார்ப்பு போன்ற மனத்தடைகள் ஏதுமின்றித் தானறிந்த வாழ்வனுபவத்துக்கு விசுவாசமான நேரடி விவரணை, அதற்கேற்ற மொழிக் கட்டுப்பாடு. பூமணிக்குள் ஒரு தேர்ந்த எடிட்டரும் தொடர்ந்து வேலைசெய்து கொண்டிருப்பதால் ‘சொகமாக’—நாவலில் மீண்டும் மீண்டும் வரும் வார்த்தை இது—நாவலை வாசித்துக்கொண்டே போகலாம். இதுதான் மொழிக்கு, பண் பாட்டுக்கு படைப்பாளியின் கொடை. ஒரு படைப்பாளிக்கான சவாலை எதிர் கொண்டு தமிழில் இருந்துவந்த சமீபத்திய இடைவெளியை முழுமையாக நிரப்பி இந்த நாவல் புதிய சவால்களை விமர்சகர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் உருவாக்கியிருக்கிறது.

ஒரு சிறந்த படைப்பு தன்னை மதிப்பிட வேண்டிய அளவுகோல்களையும் தானே புதிதாக உருவாக்குகிறது. தமிழில் சுமார் 80 ஆண்டுகளாக நிலவிவந்த நாவல் வரிசைகளைப் புரட்டிப்போட்டு, சிலரைத் தூக்கிப்பிடிக்கும், சிலருக்குக் குழிபறிக்கும் குழுக்கள், நிறுவனங்களின் இடைவிடாத முயற்சிகளைத் தனி யாகவே முறியடித்து ஒரு புதிய வரிசையை உருவாக்கும் அளவுகோலாகவும் ‘அஞ்ஞாடி...’ இருக்கிறது. நல்ல நாவல்கள் எழுதியிருக்கிற எழுத்தாளர்களை நினைவுக்குக் கொண்டுவருவதன் மூலம் அவர்களை கௌரவப்படுத்தி, அவர் களது சாதனைகளைக் கொண்டாடி, வெறும் அலங்காரங்களை அடையாளம் காட்டியும் விடுகிறது இந்த நாவல். தமிழ் நாவல் வரலாற்றை முக்கியமான நாவலாசிரியர்களுக்கு அஞ்சலியுடன் பின்நோக்கிய பார்வையில் இனி இந்த இடத்திலிருந்துதான் தொடங்க வேண்டும்.

கொக்கு, காடைகளைக் கண்ணி வைத்துப் பிடிப்பது, ஆமை முட்டை சேக ரிப்பது, விதை விதைப்பது, சுரைக்கொடி வளர்ப்பது, மீன், காட்டுப்பூனை

பிடிப்பது, எலி வேட்டையாடுவது என்று வாசிக்கும்போது எளியதுபோல் தோன்றுகிற ஆனால் வார்த்தைகளில் பதிவுசெய்யக் கடினமான பல நுட்பமான தகவல்களுக்கும், சம்பந்தப்பட்ட கருவிகள், உத்திகள், காரியங்கள் ஆகியவற்றின் விவரணைக்கும் மொழி தன் இயல்பில் கூடிவந்திருக்கிறது. வன்முறையும் மரண மும் மிகுந்த பொறுப்புடனும் மிகையுணர்ச்சியின்றிச் சொற்சிக்கனத்துடனும் கையாளப்பட்டுள்ளன.

வறட்சியும் பஞ்சமும் மனிதர்களைப் பாடாய்ப் படுத்துகின்றன. சாணக் கிழங்கை அரைத்துப் பதப்படுத்தும் முன் பசியில் கிழங்கையே தின்றுவிட, நாக்கில் அரிப்பெடுக்கும் சிறுவன். மாட்டுக்குப் பதிலாகக் கமலையிறைக்கும் மனிதர்கள். வாழைக்கு உரமாகும் பிண்ணாக்கைத் திருட்டுத்தனமாகச் சேக ரித்துத் தின்கிறார்கள். எறும்புகள் சேர்த்துவைத்த தானியங்களைத் தங்கள் பசிக்குத் தேடுகிறார்கள். வீட்டு மிருகங்கள் செத்து மடிகின்றன. பிள்ளைகளைப் போல் செல்லமாக வளர்த்த கழுதைகளை விற்றுவிடுகிறார்கள். பராமரிக்க முடியாமல் தாய்க் கழுதையைக் கைவிட்டு விட, கழுதைக்குட்டி தவித்துத் துடிக்கிறது. நாய்களைக்கூடக் கொன்றுவிடுகிறார்கள். கடைசியில் மனிதர்களே வயது, ஜாதி வித்தியாசமில்லாமல் வரிசையாகச் செத்து மடிகிறார்கள். யாரை யார் தூக்கிச் செல்வார்கள் என்பது தெரியாது. ஒருவருக்கு ஒரு குழி, பிறகு ஒரு குடும்பத்துக்கு ஒரு குழி. அதன் பிறகு ஒரு நாளில் சாகிற எல்லோருக்கும் ஒரே குழி என்று ஒன்றாகப் போட்டு மூடுகிறார்கள். இரவில் நரிகள் பிணங்களைத் தோண்டிக் குதறுகின்றன.

ஜாதி துவேஷம் மதமாற்றத்துக்குத் தூண்டி மதக் கலகமாக உருப்பெருகி ஜனங்கள் கொலையுண்டும் தீயிலும் சாகிறார்கள். தீப்பெட்டித் தொழில், அச்சுத் தொழில், பட்டாசுத் தொழில் என்று சிவகாசி பொருளாதார ஏற்றம் பெற்றுக் கலகத்துக்கு ஐம்பது வருஷங்களுக்குப் பிறகும் எந்த மாற்றத்தையும் காண முடியாத பனையேறிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். சாமானிய ஜனங்களின் பொருளாதார நிலையும் கஷ்டமும் அப்படியேதான் இருக்கின்றன.

சிவகாசிக் கலவரத்தில் வீடுகள் கொளுத்தப்பட்டு நாடார்கள் வெட்டிக் கொலை செய்யப்படும்போது தங்கையாவைப் பலிகொடுத்துவிட்டு தேவானை தீக்காயத்துடன் சந்தனமாரியைத் தூக்கிக்கொண்டும்—தீயில் வெந்த குழந்தை எப்போது பிணமானது என்று தெரியாமல் பகல் முழுக்கத் தூக்கிச் சுமக்கிறாள்— இன்னொரு கையில் வேலையாவைப் பிடித்துக்கொண்டும் ஊர் நோக்கித் திரும்பும்போது ஒரு கொல்லன் பட்டறையில் தண்ணீர் கேட்கிறாள். பட்டறை யில் துருத்திக்காரர் அவளைத் தாயென்றழைத்துச் சொல்கிறார் 'தாயி நீங்களும் தொள்ளாளி. நாங்களுந் தொள்ளாளி. இரும்புக்கும் பனைக்கும் என்ன பகை யிருக்கு.' இரண்டு நாள் பட்டினியென்று தெரிந்தும் கைபடாமல் 'தளுவையை அகப்பையில் தோண்டித் தள்ளி நின்று தொடாமல் கையில்' உதறும் பூசாரியும் இருக்கிறார். ஜாதி, மதத்தை மீறி மனித உயிரும் மனிதத் தேவைகளும் மதிக்கப் படுகின்றன. சந்தோஷத்தின், கஷ்டத்தின், தேவையின் பின்னணியிலும் நெருக் கடியிலும் மனிதர்கள் மனிதர்களை மனிதர்களாகத்தான் பார்க்கிறார்கள். தங்களை ஜாதி, மதத்தின் அடிப்படையில் வரையறுத்துக்கொள்ளும்போதுதான் மனித சுபாவம் காணாமல்போய்விடுகிறது. அடிப்படைவாதத்திற்கு முடிவே இல்லை.

பின்னொரு சமயம் பரமசிவன் கழுத்திலிருக்கும் பாம்பும் பரசுராமனின் வாகனமான கருடனும் பூமியைச் சுற்றிப்பார்க்க வந்து சிவகாசியில் ஓய்வெடுக்க வரும்போது ஓங்கியுயர்ந்த வேதக் கோயிலின் கோபுரச் சிலுவைதான் கருடன் உட்காரவும் பாம்பு சுற்றிக்கொள்ளவும் தோதாக இருக்கிறது. மூக்காயியின் குடிசைக்கு முக்காடிட்டு வரும் மாதாவைப் பார்க்கும்போது மூக்காயிக்கு அவர் காளிபோல் தோன்றுகிறார். மாதா தண்ணீர் கேட்க மூக்காயி போணியில் தரும் தண்ணீரை மிச்சம் வைக்காமல் குடித்துவிடுகிறார். மாதாவிடம் தான் துணைக்கு வருவதாகக் கூறுகிறாள் மூக்காயி. அப்போது முருகனே தன் மனைவி வள்ளி யுடன் வந்து மாதாவை மயில்வாகனத்தில் அனுப்பிவைக்கிறார். பக்தர்கள் வைத்த தீயின் வெம்மை தாங்காமல் மாதாவும் முருகனும் கோயில்களை விட்டு வெளியே வந்துவிடுகிறார்கள். மாதா தான் பறிகொடுத்த தன் மகனாக முருகனைப் பார்க்கிறார். தன் மனைவி குறப்பெண் வள்ளியோடு குறவர்களிடம்—இவர்கள் தான் கோயிலுக்குள் வர முடியாதே—வந்துவிடுகிறார் முருகன். வாய்மொழி மரபு, புனைவு, பின்நவீனத்துவ மீட்டுருவாக்கம் எல்லாம் இணையும் இந்த அத்தியாயம் நவீனத் தமிழ் நாவலின் உச்சம்.

பெயர் தெரிந்த, முகமறிந்த ஆட்களைத் தாக்குகிற, வீடுகளைத் தீ வைத்து எரிக்கிற—வீடு கட்டுவதில் இருக்கிற சந்தோஷமும் (உடமையாக அல்ல) ஆசுவாசமும்கூட நாவல் முழுவதும் பதிவாகியிருக்கின்றன—கிடங்குகளை உடைத்துப் பொருட்களைத் தூக்கிச் செல்கிற, ஆடுமாடுகளைக் கொல்கிற, பெண்களை, குழந்தைகளைக்கூடக் கொன்றுவிடுகிற ஜாதிப் பகை பல வருஷங் களுக்குப் பிறகு வேறு வடிவெடுக்க, 'பெரிய பொம்பள மந்திரியை' மெய்க் காவலரே சுட்டுக்கொல்லும்போது முகம் தெரியாத பகைவர்களைக் காரணம் தெரியாமல் கொன்றுவிடுகிறார்கள். பச்சைக்குழந்தைகளையும் விட்டுவைப்ப தில்லை. அழிக்க வேண்டியது ஜாதியைத்தான். மதத்தைத்தான். விலகி நிற்க வேண்டியது அதிகார அரசியலிலிருந்துதான். ஆனால் இவைதான் காலத்தின் போக்கில் வலுப்பெற்றிருக்கின்றன. ஓவியத்தில் ஒரு புள்ளி கண்ணாகிவிடுவது போல் நாவலின் கடைசியில் இரண்டு சிறிய அத்தியாயங்கள் ஜாதியும் மதமும் அரசியலில் விஷமாகக் கலந்து அன்றாட வாழ்க்கையை நிரந்தரமான ஆபத்தாகி விட்டதைச் சுட்டிக்காட்டுகின்றன. நாவலாசிரியர் ஜாதி, மதத்திலிருந்து அதிகார அரசியலிலிருந்து ஒதுங்கி மனிதனின் பக்கம்தான் நிற்கிறார். இந்தக் கவலைதான், இந்த மேலான ஒழுக்க உணர்வுதான் இலக்கியத்தில் மதிப்பீடு என்று கூறப் படுவதன் ஊற்றுக்கண். உத்திகளும் ஜோடனைகளும் அல்ல.

ஆண்டி-மாரி-பெரிய நாடார் குடும்பங்கள் எத்தனை தலைமுறைகளாக அன்புடன் வேறுபாட்டின் தடயமே இல்லாமல் வாழ்கின்றன. மேல்சாதியில் பிறந்து கீழ்ச்சாதிக்காரர்களிடம் சோற்றுக்காகக் கையேந்தும் ஒத்த வீட்டுச்சோறு பிடிக்காத சுந்தர நாய்க்கரும் இருக்கிறார். குடும்பங்களுக்குள்ளேகூட எவ்வளவு சகிப்பு மனநிலை இருந்திருக்கிறது! என்ன விலை கொடுத்தால் இதை மீட்டுக் கொண்டுவர முடியும்? தங்கையா இறந்ததை அறிந்து அழும் அவன் சிநேகிதர் சோலைத் தேவரின் ஜாதி வேறுதானே.

இந்த சமூகத்தில் தனிநபர்களின் குணம் மனோதத்துவரீதியிலானதல்ல. சமூக அமைப்பின் கலாச்சாரச் செயல்பாடு. ஒரு வலுவான பொதுப் பிரக்ஞை யும் மொத்த சமூகமும் பங்குகொள்ளும் பொது அனுபவமும் இந்த குணத்தில் இருந்திருக்கிறது. குழந்தைகள் பெற்றவர்களால் மட்டும் வளர்க்கப்படாமல் கூட்டுக்குடும்பத்தில், ஒன்றிணைந்த சமூகப் பின்னணியில் வளர்கின்றன. இவர் களுக்கு ‘வேண்டாம்’ என்று சொல்கிற, பொது நன்மைக்காகத் தன் தேவைகளை மறுக்கிற தார்மீக ஒழுக்கம் இருக்கிறது. பிற ஜீவன்களோடு மனிதர்களும் இணைந்தே இருப்பதால் தனிமை அறியப்படாமலிருக்கிறது. இப்போது மனிதர்கள் மட்டுமே இருப்பதால் மனிதத்தன்மையே குறைவாக இருக்கிறது.

இது முதலில் ஒரு நல்ல நாவல். பிறகு ஒரு தகவல் களஞ்சியம். சவுரி முடியின் மூலம் தெரியுமா? மூல நோய்க்கு எத்தனை விதமான நாட்டு வைத்திய முறைகள் இருக்கின்றன? அகத்திக் கீரையை ஒரு வாரம் வைத்துக்கொள்வது எப்படி? பெண்ணை வசப்படுத்தும் உபாயம் என்ன? மீசையின் ஆறு வகைகள் என்ன? வீட்டுக்கூரை, படப்பு வேய்வது எப்படி? தேடுங்கள். கிடைக்கும். இழந்துவிட்ட இந்த வாழ்வை இனிக் கற்பனையில்தான் உருவாக்கிக்கொள்ள முடியும் என்ப தால் இதை ஒரு அருங்காட்சியகம் என்றுகூட வைத்துக்கொள்ளலாம். பஞ்சம், ஜாதிச் சண்டை, ஒரு இனமே இடம்பெயர்வது, பல்வேறு ஜாதிகளின் பொறா மைக்கும் எதிர்ப்புக்குமிடையே நாடார்களின் பொருளாதார முன்னேற்றம், தங்கள் சமூக மேம்பாட்டுக்கான அவர்களது முயற்சி, வெள்ளைக்காரர்களுக்கு எதிராக அங்கங்கே நடந்த சண்டைகள், ஆடுமாடுகளை, கோவில் நகைகளைத் திருடுவது, எந்திரமயமாதலின் விளைவுகள் எனப் பல தலைப்புகளிலான சமூக ஆவணம். ஒரு தரமான ஆய்வேடு. பல பரிமாணங்களுடனான அனுபவங்களை கவிஞனுக்குரிய ரசனையுடனும், தகவல்களைப் பயிற்சி பெற்றுத் தேர்ந்த ஆராய்ச்சியாளனுக்குரிய துல்லியத்துடனும் பதிவுசெய்திருக்கிறார் பூமணி. ஆய்வு நெறி முறை அறிவு மட்டுமே ஆராய்ச்சியாகிவிடாது, கடின உழைப்பும் விமர்சன மனோபாவத்துடனான பயிற்சியும் தேவை என்பதை உதாரணம் மூலம் சொல்லித்தருகிறது ‘அஞ்ஞாடி....’.

வாழ்வதற்கான பெரும் சக்தி ஞாபகம். ஞாபகம் விலை மதிப்பற்ற சொத்து. மனித மூளைக்கு வெளியே ஞாபகத்துக்கு வேறு கருவிகள்—இசைத்தட்டிலிருந்து pen drive வரை—இல்லாத காலம் அது. அபாரமான அந்தச் சக்தியை கொஞ்சம் கொஞ்சமாகப் பறிகொடுத்திருக்கிறோம். சமூக நிகழ்வாக இருந்த திருமணம் பொருளாதாரக் கணக்கு சம்பந்தப்பட்ட பேரமாகியிருக்கிறது. மாரிமுத்து, சுகுமார் போன்றவர்களின் தொடக்க காலம் இந்த நூற்றாண்டின் தொடக்கம். முதல் தலைமுறையில் படித்துப் பட்டம் பெற்று உத்தியோகமும் கிடைத்து ‘காதல்’ திருமணம்செய்துகொள்கிற மாரிமுத்துவின் வீட்டில் கணவனும் மனைவியும் உரசிக்கொண்டு சிரித்த முகத்துடனிருக்கும்—எவ்வளவு காதல்? என்ன அன்னி யோன்னியம்?—பெரிய போட்டோ வாசலுக்கு மேலிருக்கிறது. அர்த்தமுள்ள படிமம். இத்தம்பதியின் குழந்தை பிறந்தநாள் கொண்டாடும். பேய்களுடனும் தவளைகளுடனும் பேசிய மாரியின் வாரிசுதானா இந்தக் குழந்தை? கலிங்கல் பாரம்பரியத்தில் தன் புகைப்படத்தைத் தானே பார்த்து வளர்ந்த முதல் குழந்தையும்

மாரிமுத்துவினுடையதுதான். புகைப்படத்தின் மூலம் அகங்காரம் அதன் மனதிற்குள் புகுந்துவிடும். அது ஏற்படுத்தும் விளைவுகள், பக்கவிளைவுகளை நாவல் கோடிகாட்டுகிறது. கலிங்கல் மக்களுக்கு நுட்பமான கேமராவாகக் கண்கள் இருக்கின்றன. இன்று சந்தையில் கிடைக்கக்கூடிய அதிகபட்ச அளவைவிடச் சக்தியுள்ள சேமிப்புச் சாதனமாக மூளை இருக்கிறது. ஊர்களின் பெயர்களில்கூட எவ்வளவு கற்பனை, எவ்வளவு காரணம். வார்த்தைகளில் ஞாபகத்தின் உதவியுடன் இவர்கள் படைக்கும் உலகம் நவீனக் கற்பனைக்கு அப்பாற்பட்டது. பல நூற்றாண்டுக் கால வாழ்வை சாரம் குறையாமல் பதிவுசெய்ததன் மூலம் ஞாபகத்தின் அருமையையும் நாவல் மிக நேர்மையாக சொல்லித்தந்திருக்கிறது.

கூட்டம் சேர்த்து ஒரு படைப்பை வெற்றியடையச் செய்ய முடியும். செய்திருக்கிறார்கள். ஆனால் சாதனையாக்கிவிட முடியாது. பெரும் எண்ணிக்கைக்கான கலாச்சார உற்பத்தியில் முதலில் பலியாவது தரமும் இலக்கிய நேர்மையும் தான். பிறகு படைப்புகளுக்கிடையே தர வேறுபாடு மழுங்கி ஒரு சராசரித் தன்மை பரவலாகிவிடும். நோய்க்குறி பீடித்து, நோய் என்னவென்றே சுட்டிக் காட்ட முடியாத சூழலில் தனிநபர்களைவிட, நிறுவனங்களைவிட முக்கியமானவை, நிரந்தரமானவை இலக்கியமும் மொழியும்தான் என்ற விழுமியத்துடன் வீரியம் மிக்க மருந்தாக உழைப்பு, நேர்மை ஆகியவற்றைத் திரட்டித் தந்திருக்கிறது இந்த நாவல்.

மனம்திறந்த வாசிப்பிலும் உரையாடலிலும் பரிமாற்றத்திலும் எதிர்மறையான உடன்பாட்டிலும்தான் இலக்கியம் ஜீவித்திருக்கிறது. விவாதம் இல்லாமல் வளர்ச்சியில்லை. புதிதாக ஒன்றும் சொல்வதற்கு இல்லாதபோதும் எழுத்தாளர்கள் எழுதும் எந்திரங்களாக மாறி எழுதிக்கொண்டேயிருக்கிறார்கள். எழுத்தாளர்கள் யாருக்காக எழுதுகிறார்களோ அவர்கள் துரதிர்ஷ்டவசமாக பாரபட்சமற்ற விமரிசனம் செய்வதில்லை. பத்திரிகை, புத்தகம் அச்சிட்டு வெளியிடுவது, வலைத்தளம் மூலம் தொடர்புகொள்வது எளிதாகிவிட்டதால் இன்றையத் தமிழ் வாசகர்கள் நிறைய வாசிக்கிறார்கள். வாசிப்பதால் மட்டும் சரியான ரசனை வாய்த்துவிடுவதில்லை. கலைப்படைப்புகளின் சிறந்த மாதிரிகளோடு இடைவிடாத தொடர்புடன் கடுமையான பயிற்சிக்கும் முன்முடிவுகளற்ற தீவிர சிந்தனைக்கும் பிறகுதான் ரசனையைப் பெற முடியும். எந்தச் சார்புமின்றி, பாரபட்சமின்றி மேலோட்டமான ஒற்றுமைகளை நிராகரித்துவிட்டு ஆழமான வேறுபாடுகளைக் கண்டுபிடித்துத் தரத்தை மதிப்பீடுசெய்யும் வாசகர்கள்தான் உண்மையான இலக்கியப் புரவலர்கள். ஒரு வாசகன் படைப்பில் தேடுவதும் காண்பதும் உருவாக்கியவனின் மனம் என்ன தரத்திலானது என்பதைத்தான். '...the deepest quality of a work of art will always be the quality of the mind of the producer... No good novel will ever proceed from a superficial mind.' – Henry James (1884)

பன்மைத்துவம், பல்வேறு கலாச்சாரங்களை, மரபுகளை, மூலங்களை—கிண்டலாக வேடிக்கையாகக்கூட—ஒன்றிணைப்பது, தன் கலாச்சாரம் பற்றிய ஆழமான அறிவுடன் கலாச்சார எல்லைகளைத் தாண்டிச் செல்வதன் மூலம் மேலும்மேலும் எல்லைகளைத் தாண்டிச் செல்வதற்கான அறிவும் தெளிவும் ஊக்கமும் அடைவது எனப் பின்நவீனத்துவப் பண்புகள் இந்த நாவலில் இயல்

பாக அமைந்திருக்கின்றன. இதை இப்படிச் செய்ய வேண்டுமென்பதற்காகவோ புதுமை செய்ய வேண்டுமென்பதற்காவோ நாவலாசிரியர் முயன்றுபார்க்க வில்லை. சொல்லியிருக்கும் விஷயம், அதற்கான மொழி, சொல்லியிருக்கும் முறை எல்லாவற்றிலும் வளமான தமிழ் நாவல் மரபின் தொடர்ச்சியும் அந்த மரபிற்கு வளம் சேர்க்கும் உறுதியான தனித்துவத்துடன் புனைகதையின் உயி ரோட்டமான spontaneityயைப் பறிகொடுத்துவிடாமல் மரபை மீறும் புதுமை யும் இருக்கின்றன. இந்த சுதந்திரமான மீறல் கலாச்சாரப் பிடிவாதங்களைக் கேள்விக்குள்ளாக்கி ஏற்கப்பட்ட வடிவங்களில் வரலாறு, வாசிப்பு இவற்றை நிராகரித்து மதிப்பீடுகளை மறுமதிப்பீடு செய்கிறது. குறிப்பாகத் தனிப்பட்ட நடை என்று ஒன்று இருந்தாலும் கவிதை, பாட்டு, பல்வேறு காலங்களைக் காட்டும் நவீன உரைநடை, கிண்டல், விதவிதமான பேச்சு மொழி—'நெருப்பு நூலாக மின்னல்'; 'கஞ்சியோடு கஷ்டத்தையும் கரைத்துக் குடித்தாள்'; 'குழந்தை களின் கொத்துக்கறித் துண்டங்களைத் தேடியெடுத்த தந்தைகள்'; சுந்தர நாய்க்கருக்குத் துணையாகும் நாய் 'திருவோட்ட நீயே பத்திரமா வச்சுக்கோ, எனக்குத் தரையில போடு, அதுதான் பெரிய ஓடு', என்று சொல்கிறது; 'பசியா மருக்க வரம் தாறென் பழைய கஞ்சியிருந்தா ஊத்து தாயி...'—என்று நாவல் முழுக்க இருக்கிறது. மனிதர்களும் விலங்குகளும் கடவுள்களும் முனிகளும் ஆவிகளும் வாழும் இந்தப் பரந்த உலகம் தனக்கான வடிவத்தைத் தேர்ந் தெடுத்துக்கொண்டு அதன் வெளிப்பாடாக நவீனத் தமிழ் மூளையின் கருத்துலகச் சாத்திய எல்லைகளையும் விரிவுபடுத்தியிருக்கிறது.

பிரதி என்பது முடிந்துவிட்ட புத்தகம் அல்ல. தொடர்ந்துகொண்டிருக்கும் நிகழ்வுகள், பிரதியில் ஊடாடும் சொல்லாடல், குறியீடுகள், படிமங்கள் மூலம் பிரதியினூடாக நாம் அறியும் உலகுடன் உறவுகொள்கிறோம். மாற்றங்களைச் சொல்லி அவற்றுக்கு வியாக்கியானமளித்து உண்மையையும் அறிவையும் தேடுகிற மரபைத் தாண்டி யதார்த்தம் பற்றி உலகம் எது, அது என்ன விதமாக அமைந் திருக்கிறது, உலகங்கள் எவ்வாறு வேறுபடுகின்றன என்று கேள்விகளை எழுப்பு கிறது. வேறுபட்ட உலகங்கள் ஒன்றையொன்று எதிர்கொள்கிறபோது அல்லது அவற்றுக்கிடையேயான எல்லைகள் மீறப்படும்போது என்ன நேர்கிறது என்ற பின்நவீனத்துவ விசாரணையும் நாவலில் இருக்கிறது. இலக்கியத்தின் வழமை யான அர்த்தத்தையும் விமர்சனத்தின் நோக்கத்தையும் இந்த நாவல் கேள்விக் குள்ளாக்குகிறது. வழக்கமாக இலக்கியம் தேடும் உண்மை, மதிப்பீடுகள் ஆகிய வற்றுடன் அரசியல், சமூகவியல், மானுடவியல், தத்துவம் போன்ற துறைகள் சார்ந்த விசாரணையாகவும் சம்பிரதாயமான வடிவம், அமைப்பு இவற்றுக்கு அப்பால் ஆசிரியர், பிரதி, சமூகம் இடையேயான பரஸ்பர மீறல்களுடன் எல்லாமே பிரதிதான் என்ற பின்நவீனத்துவ மையக் கருத்தையும் நாவல் பிரதிபலிக்கிறது. அதே சமயம் விழுமியங்கள், இலக்கியத்தின் முக்கியத்துவம் இவற்றை 'அஞ்ஞாடி....' நிராகரிக்கவில்லை. அப்படி நிராகரித்திருந்தால் இதுவும் கலைப்படைப்பாக இல்லாமல் சந்தைக்கான வணிக, கலாச்சார உற்பத்திப் பொருளாக மாறியிருக்கும்.

நட்பு—ஆண்டிக்கும் மாரிக்குமிடையே, பெரிய நாடாருக்கும் பலவேச நாடாருக்குமிடையே, கருத்தையனுக்கும் நொண்டியனுக்குமிடையே; சுயநல மற்ற வீரம்—ஊமைத்துரை, பெரிய மருது, சின்ன மருது, எண்ணற்ற பெண்கள், இதன் இன்னொரு பக்கமாக கொலை, கொள்ளையில்—முக்கியமாக கொள்ளை யில்—ஈடுபடும் கருத்தையன்; காதல்—வீரம்மாள்-கருத்தையன், வேலாயி-பொய்யாளி, இப்போது கதைகளில் மட்டுமே கிடைக்கக்கூடிய ஆண்டி-கருப்பி, மாரி-அனந்தி இவர்களின் சுயநலத்தின் சாயலே அற்ற அன்பு—இதன் இன்னொரு பக்கமாக அல்லுண்டு-ஆண்டாள்; தொழிலில் திறன், ஈடுபாடு, மாறும் காலங் களுக்கேற்ற, இயற்கையோடிசைந்த, பெரிதும் சுயச்சார்பான வாழ்க்கை ஆகியவை இந்த நாவல் கொண்டாடும் மதிப்பீடுகள்.

ரூபாய் நாணயத்தை விரலால் வளைக்கிறார் பெரிய மருது. ஒரு மெய்க் காப்பாளன்கூட இல்லாமல் திறந்த அரண்மனையில் தூங்கும் சின்ன மருதின் பரிதாப ஆனால் பெருமை மிக்க முடிவு கண்டு நல்ல சினேகிதராகவும் களரி ஏறியக் கற்றுத்தந்த ஆசானாகவும் இருந்த அவருக்கு எதிராக நிற்க வேண்டிய நிலையை நினைத்து வெல்ஷின் மனமே வெட்கி அழுகிறது. பதவிக்காகக் காலில் விழுந்து கணுக்காலைத் தழுவும் அற்பங்களையும் வெள்ளைக்காரர்கள் சந்திக் கிறார்கள். நாவலின் முடிவில் ஜனநாயக இந்தியாவில் தன் மெய்க்காப்பாளரால் நாட்டின் அரசியல் தலைவர் கொல்லப்பட தலைப்பாகைக்காரர்களைப் பெரும் எண்ணிக்கையில் கொல்லும் கலவரம் ஏற்படுகிறது.

முடி வெட்டிக்கொள்வது, உள்ளாடை அணிந்துகொள்வது, பெண்கள் பாம்படத்துக்குப் பதிலாக கம்மல்—வளர்ந்த காதை அறுத்து ஒட்டவைத்துக் கூட—அணிவது, தீப்பிடிக்கும் கூரை ஓடாகவும் தகரக் கூரையாகவும் மாறுவது, பம்ப்செட் வருவது, சினிமா, கரண்ட் வருவது, ஒன்றுமில்லாத இடத்தில் வீடு வருவது, பிறகு மேலும் வீடுகள் வர அந்த இடம் தெருவாவது என மாற்றங்கள் கொஞ்சம்கொஞ்சமாக நுழைகின்றன. மகள் விபத்தில் சாகும்போது கிடைக்கும் நஷ்டஈட்டுப் பணத்தில் கனமான தங்கச் சங்கிலி செய்து போட்டுக்கொள்கிறாள் ஒரு தாய்.

உரிமையிருந்தாலும் தருவதைப் பெறுவதற்குத் தயங்கும் சுபாவம். தேவானை உண்டான கூலிக்கு மேல் ஒரு சிறங்குகூட வாங்குவதில்லை. பஞ்சம் போனதும் கடனைத் திருப்பும் எளிய—‘அவளுக்கு ஊரைத் தாண்டிய ஆசை கிடையாது’ —ஜென்மங்கள். தாத்தா முதல் கொள்ளுப்பேரன் வரை ஒன்றாக வாழ்ந்து சாகி றார்கள். ‘நம்ம வீட்ல எத்தனை குடும்பங்க கொடிவீசிப் படந்தாலும் ஒரே ஒலதான் வேகணும்,’ என்ற கருப்பியின் எளிய வார்த்தைகளின் மிகப் பெரிய ஆசை, இப்போது தேடினால் கிடைக்குமா? எப்போது, எப்படி வந்தது இந்த nuclear family? மொத்த சமூகமும் பங்குபெறும் நிகழ்வாகத்தான் சடங்குகள், விழாக்கள், வாழ்க்கை—ஏன் கலவரங்கள்கூட—இருந்திருக்கின்றன. வேலை வேறு, வாழ்க்கை வேறு, பொழுதுபோக்கு வேறு, தன் பிள்ளைகள் தன் குடும்பம் என்று துண்டுபட்டுவிட்ட வாழ்க்கை mass production வந்ததற்குப் பிறகுதான். இவர்களது கடவுள் நம்பிக்கை, சம்பிரதாயங்கள் எல்லாம் இவர்களது பூகோளம், அன்றாட வாழ்க்கை, காலங்களின் சுழற்சியோடு தொடர்புடையவை. இன்னும்

ஐம்பது வருஷங்கள் கழித்துச் செய்யக்கூடிய—கூடுமாவென்று யாருக்குத் தெரியும்—பூஜைக்கு இப்போது முன்பதிவுசெய்யும் இன்றைய மனிதர்களுக்கு —இவர்கள் யாருடைய, எந்த மரபின் சந்ததிகள்—எதனுடன் தொடர்பிருக்கிறது?

மொத்த வாழ்க்கையில் தண்ணீர் எப்படிப் பிணைந்திருக்கிறது! குடிக்க, குளிக்க, துவைக்க, விளையாட, மீன்பிடிக்க, காதலிக்க, பயிர்வளர்க்க, தற்கொலை செய்துகொள்ள என்று. ஆண்டியின் பிணத்தை நிறைந்த கண்மாயினூடே தூக்கிச் செல்வது வலுவான படிமம். நிலம், தண்ணீர், நிலா, நட்சத்திரங்கள், சூரியன்—வெயில் இவர்களைத் தொந்தரவுசெய்வதேயில்லை—இவற்றுக்கிடையேயான இணைப்பில்தான் இவர்களது அன்றாட வாழ்க்கை இயங்குகிறது. புலன்-மொழி இணைப்பில் இயற்கை அதன் எல்லா வடிவங்களிலும் நாவல் முழுவதும் படர்ந்திருக்கிறது. மனதாலும் கற்பனையாலும் பூமணி இந்த மக்களுடன் இணைந்திருப்பதும் இன்றையத் தமிழ் இலக்கிய வணிகர்களிடமிருந்து விலகியிருப்பதும் தமிழ் மக்களை கௌரவப்படுத்துகின்றன.

ஆலமரம் சாய்வதை வழக்காகக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆண்டி என்ற ஆலமரம் வளர்ந்து அதில் எத்தனையோ ஜீவன்கள் ஒண்டி வாழ்ந்து சரிவது மறக்க முடியாத அனுபவமாகியிருக்கிறது. வேர்பிடித்து வளரத் தோதான சத்தான மண் இப்போது இல்லையென்பதால் இந்த ஆலமரமும் ஒரு அழிக்கப்பட்ட ஆபத்துக்குட்பட்ட இனம்தானா? ஊர்ச் சனங்களுக்கு ஆண்டியின் மரணம் கல்யாணமாகவும் அவனது பிணத்தைச் சுமந்து செல்லும் தேர் அரண்மனையாகவும் ஆகிவிடுகின்றன. “ஒன்னால மத்த பரதேசிக சுத்தமான துணியுடுத்தியிருந்தா அழகான துண்டு போட்ருந்தா நல்ல கம்பு வச்சிருந்தா ஏன் நல்ல திருவோடு வச்சிருந்தாக்கூடச் சகிச்சுக்கிற முடியலயே”, என்று கேட்கிறது சுந்தர நாய்க்கரை அண்டி வரும் நாய். சாமியார்கள் தங்களுக்குள் உள்ளே-வெளியே என்று போராட எந்தச் சலனமும் இல்லாமல் தன் பேருக்கேற்ப வாழ்ந்து சாகிறான் பெரிய சம்சாரியான ஆண்டி. ஆண்டி பாத்திரத்தின் பெயரும் வாழ்க்கையும் மரணமும் எவ்வளவு அர்த்தம் பொதிந்த, அழுத்தமான குறியீடுகள்! நாவலின் கடைசியில் ஆண்டியும் கருப்பியும் ஆவியாகக் கூடச் சேர்ந்தே தோன்றுகிறார்கள். மாறிப்போன காலத்தைப்பற்றி, ‘கெட்டுப்போகல, முன்னேறியிருக்கு’ என்று பேசிக்கொள்கிறார்கள். எல்லாம் மாறும் என்ற விதி ஒன்று மட்டும்தான் மாறாது என்ற இயங்கியல் விதி ஆண்டிக்கும் கருப்பிக்கும் தெரியுமோ. அவர்கள் சந்தோஷமாகத்தான் தங்கள் குழிகளுக்குள் மீண்டும் புகுந்துகொள்கிறார்கள்.

கலவரத்தைக் கட்டுப்படுத்தத் தவறிய அதிகாரிகள்—கலெக்டர் முதல் போலீஸ்காரர்வரை—பதவியிறக்கம் செய்யப்படுகிறார்கள், பதவி நீக்கம் செய்யப்படுகிறார்கள். என்ன ஆச்சரியம்.

செல்லக் குடும்பனும் சுப்பக் குடும்பனும் வைகை ஆற்றில் போடும் சாணி, போலீஸ்காரர்களுக்கு கையில் தங்க வெள்ளி வளையல்தான் போட வேண்டும், ஆனால் அது இரும்பு வளையலாக மாறிவிடுமென்று வெள்ளைக்கார வக்கீல் சொல்லும் வாதம், கொள்ளையில் பங்குபோட்டுக்கொள்ளத் திருடர்களை விரட்டிப்போகும் போலீஸ்காரர்கள் தாங்கள் பிடித்தது கோழித் திருடர்கள்

என்று தெரிந்ததும் அடித்து விரட்டுவது என்று நாவலில் நகைச்சுவையுமிருக்கிறது. இந்த நாவலுக்குள் இடையூடு பிரதியாக (intertext) உச்சகட்ட கோர்ட் சீனுடன் ஒரு விறுவிறுப்பான துப்பறியும் நாவலும் இருக்கிறது.

நெருக்கமானவர்களின் இழப்பும் உடனிருப்போரின் முடிவற்ற துயரமும் பண்படுத்திய மனங்கள்தான் ஆண்டியின், பெரிய நாடாரின் மனங்கள். மகிழ்ச்சியிலும் தொடரும் இழப்பின் வலியின் சாயல். கண்மாய்க் கரையில் தான் நட்டு வைத்த மரமாகத்தான் மாரியை வலியுடன் அடையாளப்படுத்திக்கொள்கிறான் ஆண்டி.

மாரியின் கொள்ளுப்பேரனின் மனைவி மாமியாரை வேலைக்காரி என்று சொல்ல, கொண்டுபோன தின்பண்டங்களை நிராகரிப்பின் துயரத்தில் கொடுக்காமல் ஊர் திரும்பும் பொம்மக்கா அரளி விதையை அரைத்துத் தின்று உயிரை விடுகிறாள். பொம்மக்காவின் தற்கொலை எவ்வளவு உயர்வான உணர்வுகளின் மொத்தமான கலவை. அதுவரை வாழ்ந்த வாழ்க்கையின் அர்த்தம் கேள்விக்குள்ளாக, இழந்த சுயகௌரவத்தை மீட்கும் உன்னதமான செயலாக அது ஆகிவிடுகிறது. எழுத்தாளர்கள், கலைஞர்கள்போல் பொம்மக்காவின் தற்கொலையிலும் தத்துவக் கேள்விகள் இருக்கின்றன. வாழ்வதுதான் துயரமானது, சாவுக்கு அடுத்தபடியாக. இதுதான் கலைஞனின் சோகமும். எவ்வளவு எளிய ஜீவன்! அவள் தனக்கென்று என்ன விரும்பினாள்? தன் குடும்பத்திலிருந்து, பின்னணியிலிருந்து முழுவதும் ஒதுங்கிவிட்ட மாரிமுத்துவின் கீழ்த்தரமான நடத்தையை அவனது மனைவியே எப்படிச் சகித்துக்கொள்ள முடியும்? அது என்ன கணவன்-மனைவி உறவு? தன் நலம் மறுக்கிற, விட்டுக்கொடுத்தலின் அடிப்படையிலான பொம்மக்காவின் அன்புக்கும் அப்பட்டமான சுயநலக் கணக்கிற்குமான இடைவெளியை அறிந்துகொள்ள முடியாத மாரிமுத்து தன் படித்த மனைவியைத் தொடும் கணங்களில் அவன் மனத்தில் படரும் உணர்வு என்ன? வறுமையிலும் தன் மகனைப் படித்துப் பட்டம் பெற வைத்த தாய்க்கும் அந்த மகனுக்கும் இவ்வளவு பெரிய இடைவெளியை உருவாக்கிய சக்தி எது? சகோதரர்கள்-பெற்றோர்கள்-குழந்தைகளுக்கிடையே பிளவு ஏற்பட மொத்த வாழ்க்கையிலேயே மனிதத் தன்மை குறைந்துவிடுவதை ஏற்றுக்கொள்ள முடியாமல் சொந்த ஊர் வந்து தூக்கில் தொங்கும் சக்கரை நாடாரின் முடிவு, பொம்மக்காவின் மரணம் இரண்டும் பெரிய கால இடைவெளியின்றி நடக்கும் சம்பவங்கள். கணக்குகளும் பேரங்களுமற்ற மனித உறவுகள் சாத்தியமில்லையென்றும் மனிதப் பண்புகள் சீரழிந்துவிட்டனவென்றும் குற்றம்சாட்டுகின்றன. இந்த உலகம் சக்கரை நாடார்களுக்கும் பொம்மக்காக்களுமானதல்ல. மாரிமுத்து-சுகுமார்களுக்கானது. மாரிமுத்துவின் பெயரில் மாரி இருக்கிறது. அடுத்த தலைமுறையில் பெயர்களும் மாறிவிடும். மாற்றங்களின் பரிமாணங்களைத் தேடி நாவல் மேலும் போகிறது—அரசாங்க ஆஸ்பத்திரியில் கூட ஜாதிப் போட்டி, சினிமா நடிகைகளைத் தேடிப் போகும் வியாபாரி, மெய்க்காவலரால் சுடப்பட்டு இறக்கும் மந்திரி என்று. உண்மையான நாவலாசிரியன் ஒரு வரலாற்றாசிரியனும் தத்துவஞானியும் ஓவியனும்கூட.

பெயரில்லாத பாத்திரமொன்று பனைமரங்களைப் பற்றிச் சொல்கிறது. ‘அதென்ன இண்ணைக்கு நட்டி நாளைக்கு மொளச்சு வளருத பயிரா. ஒரு தலமொற வளத்து மறுதலமொறைக்குக் குடுத்துட்டுப்போற சீதனம்.’ இந்த நாவலும் அப்படித்தான். இன்பமும் துக்கமும் நிறைவும் ஏக்கமுமான நினைவுகள், பல தலைமுறை வாழ்க்கை—ஒரு நாவலுக்கான நியாயமே அது வாழ்க்கையைப் பிரதிநிதித்துவப்படுத்துவதுதான்—இவற்றை செறிந்த மொழியில் அடுத்த தலை முறைகளுக்கு அளிக்கும் கலாச்சார மூலதனம். தமிழில் நல்ல நாவல்கள் இருக் கின்றன. ஆனால் great நாவல் இல்லை. இன்னும் எழுதப்படாத அந்த great நாவலுக்கு மிக அருகில் வந்திருக்கிறது பூமணியின் ‘அஞ்ஞாடி….’.

**என். சிவராமன்**

# உள்ளே

# பதிப்புரை

“என்னை ‘தலித்’ என்று கூறிக்கொள்ள விரும்பவில்லை. அந்த கடன் வாங்கிய ‘பட்டம்’ எனக்குத் தேவையுமில்லை. எழுத்தாளனை இப்படி சிறு கூண்டுக்குள் அடைத்து நிறுத்திவைப்பது இலக்கியத்திற்குச் செய்யும் பெரிய துரோகமாகும். இதுதான் தொடர்ந்து நடக்கிறது.

‘தலித்’ என்ற வார்த்தை இறக்குமதி செய்யப்படுவதற்கு முன்பே நான் சமூக ரீதியாக, பொருளாதார ரீதியாக ஒடுக்கப்பட்ட மக்களைப்பற்றி எழுதியவன். என்னை இன்ன சாதிக்காரன் என்று சொல்லிக்கொள்வதில் கூச்சமோ தயக்கமோ கிடையாது. அதற்காக நான் வேறு எந்த இனத்தினரைப் பற்றியும் எழுதக்கூடாது என்று தடைவிதிப்பதற்கு எந்தக் கொம்பனுக்கும் உரிமையில்லை. ஏனெனில் அடிப்படையில் நான் ஒரு மனுசன். அழகிரிப் பகடையும் கந்தையா நாயக்கரும் தலையாரித் தேவரும் கருப்பக் கோனாரும் சங்கரலிங்கம் பிள்ளையும் சுப்பையனாசாரியும் எனக்குச் சொந்தக்காரர்கள். அவர்களது வாழ்வியல் அவலங்கள், சந்தோசங்களுடன் எனக்கு அணுக்கமான உறவு உண்டு. அவர்களைப்பற்றி எழுதுவதற்காக நான் ஒவ்வொரு இனத்திலும் உடல்ரீதியாகப் பிறவியெடுக்கமுடியாது.

பிறவியிலேயே நான் ‘தலித்’ என்று கூறுவதற்குப் பின்னால் ஆதிக்கச் சாதி மனப்பான்மை ஒளிந்திருப்பது தெரிகிறது. இலக்கியத்தைச் சாதிபிரித்துப் பார்க்கும் கேவலத்தின் காரணமாகவே இந்த ஆதிக்கமும் ஆணவமும் வெளிப்படுகின்றன.” - என்று கூறும் பூமணி பழகத்தான் பூவைப்போல் மென்மையானவர். படைப்பிலோ தீயைப்போல் உக்கிரமானவர். எந்த சமரசத்திற்கும் உடன் படாதது பூமணியின் பேனா.

புதுமைப்பித்தன், மௌனி, கு. அழகிரிசாமி, கு.ப.ரா. என்பது தமிழ்ச்சிறுகதையின் முதல் தலைமுறை என்றால் வண்ணநிலவன், வண்ணதாசன், நாஞ்சில் நாடன், இராஜேந்திர சோழன் என்று வளரும் தமிழ்ச்சிறுகதையின் இரண்டாம் தலைமுறையில் முக்கியமானவர், நாவல்களுக்காகவே பூமணி அதிகம் பேசப்பட்டாலும். லேபிள் இலக்கியங்கள் வருவதற்கு முன்பே ஆத்மபூர்வமாக தன் படைப்பு முயற்சியில் ஈடுபட்டவர். ஒரு படைப்பாளிக்கே இருக்கவேண்டிய குணமான தன்னை எதிலும் முன்னிலைப்படுத்திக் கொள்ளாத தன்மை பூமணியின் தனித்தன்மை. இலக்கிய ஏடுகளில் தன் நேர்காணல்கள் வருவதைக்கூட நிராகரிக்கும் எளிமை பூமணியின் எளிமை. கி.ரா.வுக்கு நிகராக கரிசல் வாழ்வைக் கலைப்படுத்தியவர். கோமல் சுவாமிநாதன் போன்ற சென்னைவாழ் கலைஞர் 'தண்ணீர் தண்ணீர்' திரைக்கதையில் கரிசல் மொழியை எழுத ஆதாரமாக இருந்தது பூமணியின் 'பிறகு'தான்.பத்மராஜன் என்ற ஒரு அபூர்வமான மலையாளத் திரைப்பட இயக்குனர். அவரின் முதல் திரைப்படம் பெருவழி அம்பலம். கிட்டத்தட்ட பூமணியின் 'வெக்கை'யின் சாயல் கொண்டது.

தொடக்கத்தில் கவிஞர், பிறகு சமூக மாற்றத்திற்காகப் போராடும் அமைப்பில் ஒரு போராளி, அப்புறம் சிறுகதையாளர். அதன்பிறகு, 'பிறகு' நாவலின் மூலம் பேசப்பட்ட படைப்பாளி, பேனா நெப் தயாரிப்பு பற்றிய ஒரு டாக்குமெண்டரி அப்புறம், சில தொலைக்காட்சித் தொடர்கள், 'கருவேலம் பூக்கள்' என்ற திரைப்படத்தின் இயக்குனர் - இப்படி பன்முகத்தன்மைகொண்ட பூமணியின் முதல் கட்டுரைத் தொகுப்பு இது. தொடர்ந்து போலந்துச் சிறுகதைகளைத் தமிழில் தர இருக்கிறார்.

**வண்ணதாசன், வண்ணநிலவன் வரிசையில் பூமணியின் படைப்புகளை வெளியிடுவதில் எமது நிறுவனம் பெருமிதம் கொள்கிறது.**

**- சந்தியா நடராஜன்**

# முடிவும் முதலும்

முதல் கதையென்று எதைச் சொல்லுவது. முதலில் மனசுக்குள் எழுதிப் பார்த்ததையா இல்லை தாளில் எழுதி அச்சில் பார்த்ததையா. மனசுக்குள் வண்டலாகப் பதிந்த கதைகள் ரெம்ப இருந்தாலும் வெளியே கசிந்து வாய்க்காலிட்டதைத்தான் முதலாவது என்று சொல்லணும்.

அப்படி வெளிவந்ததுதான் 'அறுப்பு' என்ற கதை. 'எழுத்து' வில் சி.சு.செல்லப்பா வெளியிட்டார். கதை, கவிதை, நாவல் என்று கண்டதைப் படித்த தாக்கம் கனத்து நிதானம் கனியாத பருவத்தில் எழுதியது. படிமங்களில் சஞ்சரித்து இயல்பு கைகூடாத பருவம்.

வாழ்க்கையில் அவனை ரெம்பவும் பாதித்த, பாதிக்கிற விஷயம் சாவுதான். அதன் அதிர்வில் சிதறும் அழுகையும் கண்ணீரும் பிரமிப்பும் பயமும் கோவமும் தாபமும் வெதும்பலும் வேதனையும்... அந்த ஆழ்மனப் பயணத்திற்கு எதுவுமே இணையாகாது.

அதனால்தான் அவன் பலமுறை செத்துப்போயிருக்கிறான். தன்னைப் பிணமாகச் சாத்திவைத்து, கிணற்றில் குப்புற மிதந்து, நெருப்பில் வெந்து நீந்து, நாலுபேர் தோளில் கிடத்தி, புதைத்து மூடி, பிறகு முண்டிவந்த அனுபவங்கள் எராளம்.

''அவ்வு சாமி."

"ஓகோ மீகுதான் ஊரிக பொதுவுல இண்டி தீசுக வுஞ்சா. நேண்டு வாளு கந்தையா செப்பித்தி. போத்தம் போத்தம்."

அவர் மறுபடியும் உறக்கத்திற்குத் தலையை உருட்டினார்.

சக்கிலியக் குடியில் அழகிரிக்குப் பின்னால் சிறிசுகள் நிறையத் திரண்டு கூச்சலிட்டன. கைத்திருநத காளியிடமிருந்து ஒருத்தி குழந்தையை வாங்கினாள்.

வேற்றாள் முகங்கண்ட நாயொன்று நினைத்து நினைத்து குரைத்துக் கொண்டிருந்தது.

யாரோ வீட்டை அடையாளங் காட்டினார்கள். அழகிரி சுமைகளை இறக்கி வைத்து விடடு வெளியே வந்து முகந் துடைத்தான. இப்போது அவன் பார்வை குப்பைக் கிடங்கில சொகமாய்ப் பாடிக்கொண்டே வெயிலோடு கொல்லைக்கிருந்த சிறுபயல் மீது லயித்திருந்தது.

நாலாம் நாள் கருப்பன் வந்தான். அதுவும் உச்சி மதியந்தான். கிறங்கித் தவித்து வேம்படியில படுத்துவிட்ட பயலைப் பார்கக பாவமாயிருந்தது அழகிரிக்கு. தையல் சாமான்களைப் போடடு விட்டு அருகில் போய் விசாரித்தான்.

"புள்ளாண்டான் ஆரு."

கருப்பன் ஏதோ முனங்கினான். பேச நா எழவில்லை. அழகிரி ஓடிப்போய் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். பையன் தெளிந்து உட்கார்ந்தான்.

"எந்த ஊரு"

"வடமலாபுரம்."

"ரொம்பத் தூரமாச்சே. இங்க ஏன் வந்தீரு"

"தாய்தகப்பன் இல்ல. ஏதாச்சும் வேல செய்யலாம்னு வந்தென்."

"சின்ன வயசுல என்ன வேல செய்ய முடியும்."

"மாடு மேய்ப்பென்."

"என்ன புள்ளீக."

''சக்கிலிப் புள்ளீக.''

அழகிரி பையனையே பார்த்துக் கொண்டிருந்தான். தனக்குள் சிரித்தவனாய் பையனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் கஞ்சி குடிக்கச் சொல்லிவிட்டு நேரே கந்தையா வீட்டிற்கு நடையை விட்டான்.

கருப்பன் வந்தது நல்ல நேரம். ஊருக்குள் நிறையக் கிடாரிகள் சேர்ந்தன. கந்தையா எல்லாவற்றிற்கும் ஏற்பாடு செய்தார். அழகிரி சுள்ளைக்காரச் சம்முகஞ் செட்டியிடமிருந்து நல்ல சட்டியொன்று வாங்கிக் கொடுத்தான்.

கொஞ்சநாளில் கருப்பன் தெளுச்சியானதைப் பார்க்க சந்தோஷமாயிருந்தது அழகிரிக்கு. மாடு மேய்க்கையில் வாய்க்கு வந்தபடி பாடிக் கொண்டு திரிந்தான். காளியம்மன் கோயில் பொங்கலுக்கு சுதாரித்திருந்த சக்கிலியக் குடி ஜனங்களுடன் அவனும் சேர்ந்து கொண்டான்.

பொங்கல் சிறப்பாய் நடந்தது. மேகலக்குடிக்காரர்கள் ஒருநாள் நரிக்குறத்தி ஆட்டமும் இரண்டுநாள் நாடகமும் கொண்டு வந்தார்கள். நாடகத்தில் கோமாளியும் ராஜாவும் செண்டிப்பெடுத்துப் பாடினார்கள்.

> ''வாராண்டா வாராண்டா வெள்ளக்காரன்.
> வரட்டும் வரட்டும் டொப்பிக்காரன்.''
>
> ''பருத்திக் கொட்டையும் புண்ணாக்கும்
> கலந்து திங்கச் சொன்னானய்யா– வெள்ளக்காரன்
> கலந்து திங்கச் சொன்னானய்யா.''

விசிலடிப்பைத் தொடர்ந்து ஜனங்கள் சிரித்தது காரவீட்டுத் தாவாரத் திருணையில் சார்மானத்தில் கிடந்த வில்லிசேரி முதலாளி காதில் மொத்தமாய் விழுந்தபோது சாதாரணமாய்ச் சிரித்தார்.

கடைசிநாள் கந்தல் துணியைக்கட்டிக்கொண்டு கொட்டுக்காரர்களுக்கு முன்னால் கருப்பன் குதித்ததுதான் சோக்காயிருந்தது. அவன் ஆட்டத்தைப் பார்த்துவிட்டு ஒருவர் சொன்னார்.

"எங்கயோ கெடந்து வந்த பெயலுக்கு நாலு நாளு ஊர்ச் சோறு எறங்கவும் குதியாளத்தப் பாரு."

நல்ல இடத்தில் அண்டியிருப்பதாய் அழகிரி நினைத்தான். மனசு மாய்ந்து சொல்லிக் கொண்டான்.

"ஏதுடா ஒத்தியில கெடந்துல்ல இத்தன காலமும் ஒழண்டுருக்கொம்."



சக்கிலியக் குடி முன்பு போலில்லை. ரெம்ப மாறி விட்டிருந்தது. அழகிரிக்கு அடையாளந் தெரியாதவர்கள் பலர் இருந்தனர். எல்லோருடனும் உறவு முறையில் பேசப் பழகிவிட்டான். புதுவீடுகள் அங்கங்கே முளைத்து சக்கிலியக்குடிக்கு அ ந் து சு கூடியிருப்பதை அடிக்கடி உணர்ந்தான்.

பகடைகள் குடும்பம் பெருகிவிட்டதால் பழைய காணி முறையை ஒதுக்கிவிட்டு எல்லோருக்கும் தொழில் இருக்கிற மாதிரி பிரிக்கவேண்டுமென வண்டாரி சொன்னான். அந்த யோசனை எல்லோருக்கும் நல்லதாய்ப் பட்டது.

ஆனால் அன்றைக்குச் சாயந்தரம் சக்கிலியக் கு டி யி ல் நடந்த கூட்டத்தில் மட்டும் சட்டென்று முடிவு செய்ய முடியாமல் சிதறிப் பேசினார்கள்.

"அது ஞாயந்தான, அல்லாருக்கும் காணி கெடச்சா கஞ்சிப் பாட்டுக்குக் கவலயில்ல. வண்டாரி சொல்றபடியே செஞ்சுக்கிருவொம்."

"அல்லாம் சரிதான். காணி வாங்குனதும் மயிரு போச்சுனு அடவுக்கு வுட்டுட்டுப் படுத்துக்கிருகளே அவுகளுக்கு என்ன சொல்லப் போறீக."

"இது வம்புல்ல. அவன் அவன் ஏண்டபடிதான். ஏலமாட்டாறவன் என்ன செய்வான். நீ கஞ்சி ஊத்துவயா."

ஆளாளுக்கு ஒன்றைப் பேசினார்கள். காணியை அடகு வைப்பது அவ்வளவு நல்லதில்லை என்று அழகிரி யோசித்தான். இந்தச் சமயத்தில் அழகிரி விஷயத்தையும் எவனோ தூண்டினான்.

"அதுசரியே மொதலாளிமாரு சொன்னதுக்கு ஒத்துக்கிட்டு அசலூர்க்காரனக் கொண்டுவந்து வச்சிட்டமே அவனுக்குப் பெழப்பு நாயந்தேடி வைக்க வேணுமா. மத்த ஊர்க்காரங்க என்ன பேசமாட்டாக."

பேச்சு மட்டுப்பட்டு எல்லோரும் யோசித்தார்கள். அழகிரி அருவமற்று ஒரு ஓரத்தில் உட்கார்ந்திருந்தான். குப்பாண்டி மட்டும் முணுமுணுத்தான்.

''அதுக்கென்ன செய்யிறது. அசலூர்க்காரன் வந்தா அவன் தொழில வச்சுப் பெழைக்க வேண்டியதுதான்.''

''இவுக பெரிய சம்சாரித்தனந்தான பாக்காக, அவன் தொழிலுக்கு ஒசத்தியா.''

''அதுக்காகர சுட்டி நேத்து வந்தவனுக்குக் காணி பிரிச்சுக்குடுத்து புதுப்பழக்கத்த உண்டு பண்ணச் சொல்றீகளா. பெறகு நாளைக்கு ஒருத்தன் மாமன் மச்சானக் கூட்டி வந்து வச்சுக்கிட்டு அவனுக்கும் ஒருகாணி குடுன்னு கேப்பான். அப்படியே குடுத்துட்டுப் போனா வீட்டுக்கு ஒருவீடு கூட வராது.''

வேலுக்கு மனசு பொறுக்கவில்லை.

''அட நீ சொல்றது சரிதாம்ப்பா. இல்லங்கல. இப்ப ஒன் காணி பூரா அவனுக்குக் குடுத்துருன்னு சொல்லப் போறோம். அதொண்ணுமில்ல. இருந்தாலும் அவனுக்கு வேற வழியில்யாச்சும் ஒரு ஆசு தேடி வுடணுமில்லயா.''

குப்பாண்டி விடுவதாயில்லை.

''அதத் தவுத்து வேற வழி என்ன இருக்குது சொல்லேன். அதெல்லாம் நமக்கு ஒத்துவராது.''

சக்கணக் கிழவனுக்குக் கோவம் அண்டகாரமாக வந்தது.

''ஏலேய் நீயென்ன பெரிய பட்டா வச்சுப் பெழைக்கிறவன் போல பேசுற. நீறைப்புல பழங்காணிக்காரனுக்கும். ஏழெட்டு வருஷத்துக்கு முந்தித்தானலே மூஞ்சியக் காட்டின. ஏதோ ஒரு வழியாப் போங்கன்னு சொன்ன மேக்குருத ஏறுறயே. அந்த மனுசனுக்கு ஒரு பங்கு குடுத்துட்டா குடி முழுகியா போயிறப் போகுது. பெரிய கார வீட்டுக்கு அடிப்போடுறது நின்னு போகுமில்ல. எண்ணக்கிருந்தாலும் வழிச்சு நக்குற உசிருதானலே.''

கூட்டத்தில் கசமுச வென்று பேச்சுக் கிளம்பியது.

''வண்டாரி என்ன சும்மா இருக்க. ஏதாச்சும் ஒரு முடிவச் சொல்லு.''

''முடிவென்ன முடிவு. நம்ம அல்லாரும் அவனுக்கு ஒரு பங்கு குடுக்கத்தான் செய்யணும். அதுதான் மொற...... என்னப்பா குப்பாண்டி, அவன் வேற நம்ம வேற இல்ல.''

வண்டாரி அஞ்சாறு தலைமுடியின் பழைய முடிச்சை அவிழ்த்துக் கோதி புதிய முடிச்சொன்று போட்டான்.

அழகிரி அமைதியாய்ச் சொன்னான்.

''குடுத்தாக் குடுங்க. இல்லன்னா உள்ளது போல இருக்கட்டும். அதுக்காக நீங்க ஏன் சண்ட போட்டுக்கிறணும். எண்ணைக்கும் போல தாயாப் புள்ளையா இருந்துட்டுப் போறதுக்கில்லாம.''

பக்கத்து வீட்டுக் கந்தன் பலமாகப் பேச்சை ஆரம்பித்தான்.

''அப்பிடிச் சொல்லாத அழகிரி. இந்த ஊரத் தேடி வந்தப் பெறகு ஒனக்கு மருவாதி தேடலன்னா அதுல என்ன இருக்கு. இந்தா பாருங்கப்பா, நீங்க ஒருத்தரும் ஒங்க காணிய வுட்டுக் குடுக்க வேணாம். அத நீங்களே கெட்டியாளுங்க. எங்காணிய வேணும்னா குடுத்துக்கிறென். எம் பெழப்புக்கு அவன் வழி செஞ்சாப்போதும். எனக்கென்ன புள்ளையா கொள்ளியா. ரெண்டு கெழடு.''

கந்தன் முகத்தை நன்றியுடன் ஏறிட்டுப் பார்த்தான் அழகிரி.

சக்கணன் மறுபடியும் விரண்டான்.

''அந்த மசுரெல்லாம் பெறகு. நீ குடுப்பயோ வப்பயோ அது ஒங்க பாடு. ஊர்க் கெட்டுனு ஒண்ணு இருக்குதில்ல. மொதல்ல அதப் பேசு. நான்கூட ஒண்டிக்கட்டதான். எங் காணிய அடவுதான் வச்சிருக்கென். அதுக்காக அந்தப் பெயலுக்குக் காணி இல்லன்னு போகுமா. பொதுவுல ருந்து அவனுக்குன்னு ஒரு பங்கு குடுக்காம பேச்ச அழிச்சு அழிச்சுப் பேசப்புடாது.''

வண்டாரி சொன்னான்.

''நானும் அதத்தான் சொல்றென். நமக்குள்ள ஒத்துப் போகணும். இருக்கிற இருபது வீட்ல ஏழு கிழிசலுன்னு தச்சு முடியாது. என்ன குப்பாண்டி நான் சொல்றது...''

குப்பாண்டி தலையை மடக்கி உட்கார்ந்துகொண்டு முனங்கினான்.

''நானும் ஒரு கட்டுக்குத்தான் சொன்னென். எனக்கு மட்டும என்ன அவனத் திண்டாட வுட்டுப் பாக்கப் பிரியமா. நீங்க எல்லாம் ஒத்துப் போகயில நான் எதுக்குத் தடுக்கப போறென். அழகிரி எனக்குச் சண்டைக்காரனா."

எல்லோரும் ஒருமித்துக் கூறினார்கள்.

''சரிப்பா அந்தப்படியே செஞ்சுக்கிருவொம்.''

அன்றிலிருந்து சக்கிலியக் குடியில் பொதுக்காரியம் எது நடந்தாலும் அழகிரியிடமும் தலைக்கட்டு வரி வாங்கப் பட்டது.

சக்கிலியக் குடியில் அழகிரி வந்தபின் ஒரு சுறுசுறுப்பு கிளம்பியிருந்த தென்னமோ வாஸ்தவந்தான். வண்டாரியும் சக்கணனும் அடிக்கடி சொல்லிச் சிரிப்பார்கள். நிறையப்பேர் தொழிலில் அக்கறையெடுத்து இப்போது நறுக்காகவும் சுருக்காகவும் செய்து முடித்தார்கள். துருப்பிடித்துக் கிடந்த சாமான்கள் முற்றத்திற்கு வந்தன.

அழகிரிக்கு தும்புச் செருப்பு நன்றாய்க் கட்டவரும். மற்றவர்கள் கீழ் ரகத்தில் கூனடியும் குரோனடியும் கட்டினார்கள். நறுவேசுக்காரர்கள் தவிர முரட்டு இழுவைக் காரர்களுக்கு அவைதான் பொருத்தம். அனேகம்பேர் வாங்குவார்கள்.

அந்த விதத்தில் அவர்கள் பாடு கெடவில்லை. அதனால் அழகிரியிடம் வேற்றுமை காட்ட அவசியமில்லை தவிரவும் அவர்கள் சதா அதே தொழிலை வைத்திருக்கவுமில்லை. அவ்வப்போது உட்கார்ந்து தொழில் பார்ப்பார்கள். மற்ற நேரம் பெரும்பாலும் கூலி வேலைதான்.

அழகிரி கதை அப்படியில்லை. ஏகதேசந்தான் வேறு வேலைக்குப் போவான். கொத்து வேலைக்கு மம்பட்டி தூக்கினால் ''என்ன புதுசாருக்கு'' என்று கேட்காத ஆளிருக்காது. அவனுக்கு அதிக நாட்கள் வேம்படிதான்.

ஆரம்பத்தில் அவன் உள்ளூரப் பயந்ததுண்டு.

'மொதலாளி மாரு பேச்சக் கேட்டு வந்து இவுகளப் பகச்சுக்கிறக் கூடாதே.'

காணி பிரித்து விட்ட போது பயம் அற்றுப் போனது. அவன் பார்த்த காணியில் முக்கியமானது வில்லி சேரிக்காரர் வீடு ஒன்றுதான். அது பூர்வீகமான வீடு. பழங் காலந் தொட்டே அந்தப் பெயர் நிலைத்து விட்டது. ரெங்க ராமானுஜ நாயக்கர் என்ருல் பலருக்குத் தெரியாது, வில்லி சேரிக்காரர் என்ருல்தான் ஊருக்குள் பெரும் புள்ளி, விஷயந் தெரிந்த ஆள் என்று நினைவுக்கு வரும்.

வீட்டுத் தொழுவில் நாலு ஜோடி மாடுகள் நிற்கும். எருமைக் கிடாரிகள் வேறு. பசுக்களும் உண்டு. நல்ல சம் சாரித்தனம். மந்தையைச் சுற்றிப் புஞ்சை. மேலக் கரிசலில் குறித்த நிலமெல்லாம் அவருக்குத்தான். அந்தக் காலத்தில் குலுக்கைத் தவசத்தை அளந்து கொடுத்து பல பேரிடம் எழுதி வாங்கியதாய்க் கூட கதையுண்டு.

வில்லிசேரிக்காரர் என்னேரமும் சிரித்துக் கொண்டே பேசுவார். நல்ல நாளுக்கெல்லாம் அழகிரியைக் கூப் பிட்டு தொழுவில் உட்காரச் சொல்லிச் சாப்பாடு போடுவார். அவனும் ஈரக் கையுடன் சொல்லி விட்டுக் கிளம்புவான்.

''உத்தரவு வாங்கிக்கிறட்டுமா சாமி,''

இப்படித்தான் அழகிரிக்கு வில்லிசேரி வீட்டில் காணி ஓடியது.



அழகிரி மணலூர்த்துக்கு வரும் போது நல்ல பிராயம். திடாரிக்கமான திரேகம். உருவி விட்டது போல் சதைப்பிடிப்பு. இடுப்பில் கையகலத்துக்கு சிகப்புக் கச்சை எந்நேரமும் போட்டிருப்பான். ஆணியடித்த

செருப்பு சரசரக்க வேட்டியை ஏறத் துடைத்து நடந்தால் பார்த்தவர்கள் ரசனையாய்ப் பேசிக் கொள்வார்கள்.

''அட அவன் என்ன செருப்புத் தைக்கிற பெய மாதிரியா இருக்கான். பெரிய சம்சாரி வீட்டுப் புள்ள தோரத்தது.''

காளி அடிக்கடி இருமி ஒடக்காய்ப் போயிருந்தாள். இரண்டு பேருக்குக் கஞ்சி காய்ச்சிக் கவுத்தவே சங்கடப் பட்டாள். வீட்டு வாசலில் சும்மா உட்கார்ந்திருந்தாலும் கூட ஏதோ வேலை செய்து முறித்தவள் போல் இளைத்துக் கொண்டிருப்பாள்.

முத்துமாரியைத் தூக்கி வைத்திருக்கக் கூட அவளுக்குத் தெம்பிருக்காது.

''ஓசே இது குதிக்கிறதுக்கு நம்மளால தாங்க முடியாது. நீதான் தூக்கீட்டுப் போயி வேப்பமரத்திலே கெட்டிப் போடு.''

அயத்து மறந்து மசாலைக் கீழே வைக்க முடியாது. வத் தலை தடவிப் பார்த்துக் கொறித்துவிட்டு ஒரே கூப்பாடு போடுவாள்.

''ஏமிம்மர நுவ்வு...ஒத்த ஒத்த.''

அழகிரி அவனைச் சமாதானப் படுத்தி கடைக்குத் தூக்கிச் செல்வான். அன்றைக்கு செருப்பு வேலை மெனக்கிட்டுப் போகும்.

அழகிரிக்குப் பல ஜோலிகள் இருந்தன. அறுவடை நேரங் களில் கணிசமாகக் களத்து வேலை செய்தான். களத்தில் கொத்து போக ராசடியும் கிடைக்கும். பொலி எடுக்கையில் எந்தக் களத்தில் போய் முந்தி யேந்தினாலும் அட்டியில் லாமல் நாழி இரண்டுபடி என்று களத்துப் பிச்சை கொடுப் பார்கள். சோளக்கட்டை வெட்டு ஆரம்பித்தால் தடபுட லாயிருக்கும். செருப்புத் தொழிலில் ரெம்ப நேரம் உட் காருவான்.

எவ்வளவு வரவாசி வந்தாலும் பற்றவில்லை. யானைக்குத் தீனி போட்டது போல் காளிக்கு மருத்துவம் பார்ப்பதிலே யே வரவு கரைந்து போனது. செய்யாத பக்குவமில்லை. பார்க்காத வைத்தியமில்லை. எண்ணெய், பச்சிலை

தோலான் துருத்தி யென்று அத்தனை பக்குவமும் பார்த்துச் சலித்தாகி விட்டது.

வைத்தியப் பண்டுவர் காடெல்லாம் திரிந்து பச்சிலை பிடுங்கியே கால் மூளை செத்துவிட்டது. ஒருநாள் சிரித்தபடி சொன்னார்.

''என்னப்பா இது ஒம் பொண்டாட்டிய எழுப்புறதுக் குள்ள நான் சாஞ்சுக்கிருவென் போலருக்கு.''

இருந்தாலும் பண்டுவர் கெட்டிக்காரர்தான். ஒரே வைராக்கியமாய் அவ்வளவுக்கு வைத்தியம் செய்யப் போயாச்சும் காளி இவ்வளவு காலத்துக்குத் தாக்குப் பிடித்தாள். துட்டுக் கொடுப்பது பற்றி அழகிரிக்கு யோசனையில்லை. ஒரு மனுஷன் அசராமல் வீட்டுக்கு வந்து போகிறாரே என்பதில்தான் அவனுக்குச் சந்தோஷமெல்லாம்.

கடைசியில் கோயில்பட்டி ஆஸ்பத்திரிக்குக் கூட கொண்டு போய்ப் பார்த்தான். ஒன்றிலுமே சீக்கு அடைபடவில்லை.

சரி இனி உள்ளதுபோல் இருக்கட்டும் என்று அவளை வீட்டு மூலையிலேயே உட்கார்த்தி விட்டான். அவளும் நாலாம் பேருக்குத் தெரியாமல் கம்மலாய் இருமிக் கொண்டிருந்தாள்.

கிட்டத்தட்ட மணலூத்துக்கு வந்த இரண்டரை வருஷத்தில் அவள் சுடுகாடு போய்ச் சேர்ந்தாள்.

அவள் கண்ணை மூடியபோது அழகிரிக்கு சொல்லமுடியாத திகைப்பு.

''அட பாதகத்தி இத்தன நாளா ஒனக்கு ஓவணியம் பாத்தும் என்ன ஏமாத்தீட்டுப் போயிட்டயே. பச்சமண்ணக் கையில வச்சிட்டு நான் என்ன செய்யட்டும்.''

கண்ணுக்குட்டி மாதிரி கனைத்தழுதான். வண்டாரி அவனைச் சமாதானப்படுத்தக் கஷ்டப்பட்டான்.

''ஏமி அழகிரி, மனசுல தெடம் பெட்டுகப்பா.''

பிள்ளைச்சுமை கைக்கு வந்தபின் அவனுக்கு வெளியூர்ப் போக்கே கிடையாது. பிள்ளையும் உண்டு வேம்படியும் உண்டு.

உறக்கச் சடைவில் பரக்கப்பரக்க முழிக்கும் முத்துமாரிக்கு முகஞ்சுளிக்கும். அடுப்புக் கூடத்தைச் சுற்றி அவளது தேடலுக்குப்பின் அழுகை தொடுப்பாள். கண்கள் தக்கட்டிப் பழமாயிருக்கும்.

''ஏமி, ஏமி. உஞ்சும்மா.''

அவன் கொடுங்கை கடுக்கும் வரை குழந்தையை லாத்துவான்.

பாலாடு ஒன்று வாங்கியிருந்தான். பால்பீச்சி அடைத்தால் இரண்டு வேளைக்கு வரும். ஆட்டிற்குக் குழை வேறு பிடுங்கிப் போட வேண்டும். அதெல்லாம் குழந்தை உறங்கும்போது செய்து முடிக்கணும். கிடைக்கிற நேரத்தில் சமையல் வேலையையும் முடிக்கணும்.

பிள்ளையை துரைச்சாமி புரத்தில் விட்டு வரவும் மனசில்லை. கிழடுகள் ரெம்பத் தவங்கிப் போயிருந்தன. அவர்களும் கூட ஒப்புக்குச் சொல்லத்தான் செய்தார்கள். ஆனால் அவன் அதற்கு இசையவில்லை.

இருட்டு வேளையில் அவனுக்குப் பலவாறுய்ச் சிந்தனை ஓடியது. தாய்க்குத் தாயாகவும் தகப்பனுக்குத் தகப்பனாகவும் எத்தனை நாளைக்குக் குழந்தையைக் காப்பாற்றுவது என நினைக்கையில் மலைத்துப் போனான். அதையும் தாண்டி, இன்னும் ரெம்ப நாளைக்குப் புருஷனாயிருக்கலாமே என்று தன்மீதே ஆதங்கப்பட்டு ஏங்கவும் செய்தான்.

அவனைப் பொறுத்தமட்டில் பெண்டாட்டி என்ற நினைப்பே அற்றுப்போய் ரெம்பக் காலமாயிற்று.

கந்தையா கூட நிலைமையைச் சொன்னார்.

''நீ ஒண்டிக் கட்டன்னுச் சரி, புள்ள ஒண்ணு காலக் கெட்டுக் கெடக்குதே. அதுக்கு என்ன சொல்லப் போற. அவ பெத்துப் போட்டுட்டு மகராசியா கண்ண மூடிட்டா. நம்ம காப்பாத்தணுமேடா. ஆம்பள ஒத்தியில கெடந்து ஒதைய முடியுமா.''

''முடியலயே சாமி. தண்ணியெடுக்கறதுலருந்து புள்ளைய மத்துறது வெரைக்கும் நான் என்ன செய்யட்டும்.''

''அதெப்பிடிடா முடியும். தொழிலப் பாப்பயா, முத்தம் தூத்துட்டு அலேயிவியா. அவ கொஞ்ச நாளேக்கு இருந் திருந்தா இதெல்லாம் எதுக்கு.''

"எம்புள்ள தலேயெடுக்கிற வெரைக்காச்சும் இருந்திருக்க லாமே.''

"நாம என்ன செய்யிறது. போற உசிரப் புடிச்சு வச்சிரவா. என்னக் கேட்டா அவ இன்னேரத்துக்கு தாக்குப் புடிச்சதே பெரிய காரியம். அவ என்ன பொம்பளேயோட கூட்டாவா இருந்தா.''

"புள்ள அலஞ்சு போகுமே சாமி.''

"ஒண்ணும் அலஞ்சு போகாது. சத்தங் காட்டாம இன்னொ ருத்தியத் தேடிக்கோ. அதுதான் நல்லது."

"எந்த மனசோட செய்யச் சொல்றீக சாமி.

"கோட்டிக்காரப் பெயலே, மனசென்னடா மனசு, மொதல்ல வகுத்துப் பாட்டுக்கு வழி வேண்டாமா. புள்ள வேற கெடக்குது ஆதரவில்லாம. மனசுக்குப் போயிட்டான் மன சுக்கு.

கொஞ்ச நாளாகவே அழகிரி மனசில் கந்தையா பேச்சு தொடர்ந்து உறுத்திக் கொண்டிருந்தது.



"ஓரே அழகிரி தோலுகரா கூப்பரப்பிறுண்டு"

ராசு ஒரு அரட்டு விட்டார். அழகிரி கண்களே மெல்லத் திறந்து மலங்க மலங்கப் பார்த்தான். வைக்கோல் கட் டில் படுத்திருந்த சூடு உடலில் கதகதப்பேற்றியிருந்தது.

பக்கத்தில் கடகாப் பெட்டியுடன் அவள் நின்று கொண்டி ருந்தாள்.

''எந்திரிச்சுத்தான் தொலச் சென்னடா. கெழட்டு நாயி மாதிரி வைக்கலக் காத்து மொடக்கீட்டு. அவ சாணி சங்கதியெல்லாம் அள்ளீட்டுப் போகட்டும்.''

"இந்தா எந்திரிச்சிட்டென் சாமி."

தனது நினைவுகளை உதறிக் கொண்டு அவத் தொவக் கென்று எழுந்தான்.

ராசு வண்டி இருப்புச் சட்டத்தில் முகஞ் சுண்டிப்போய் உட்கார்ந்திருந்தார்.

பொழுதடைய இன்னும் கொஞ்ச நேரந்தான் இருந்தது. எலுமிச்சம் பழத்தை மெல்ல விழுங்கியது மாதிரி மலை முகடுகளுக்கிடையில் பொழுது நழுவிக் கொண்டிருந்தது.

தாவணியில் மாடு பார்வை நேரம். அங்கங்கே வியாபாரிகளும் தரகர்களும் கூடியிருந்தார்கள். துண்டுகளின் மறைவில் கைபோட்டு விலைபேசும்போது அடிக்கடி வசவும் தொடர்ந்தது. ஒட்டாங்காளை இரண்டை நடைவிட்டுப் பார்த்த ஒரு வியாபாரி மாட்டு மேனியில் சுழியைத் தேடவும் மாட்டுக்காரனுக்கு வந்ததே கோவம்.

''ஆமடா மேல ஏன் பாக்க. கீழகுனிஞ்சு பாரு தெரியும். மாடு வாங்கற லச்சனத்தப் பாரு மூஞ்சியில"

வியாபாரியும் விடுவதாயில்லை.

''கீழ எல்லாருக்குந்தான் தொங்கும். ஒம்மகிட்ட வந்தன் பாரும். என் புத்தியச் செருப்புட்டுப் போடணும்."

"மொதல்ல அதச் செய்யி."

அவர்களுக்கிடையில் வந்து சிரிப்பை அடக்கியபடி ஒருவன் ''சுக்குமல்லிக் காப்பி" என்று உரக்கக் கத்தினன்.

"எவம்லே அது காப்பிதான் விக்கயா, இல்ல மாட்டு மோத்தரமா.''

மாட்டுக்காரன் கோவம் திசை திரும்பவும் அந்த இடத்தில் ஒரே சிரிப்பு.

ராசு எழுந்து எங்கோ புறப்படத் தயாரானர். அதற்கு மேல் அவருக்குத் தாக்குப் பிடிக்கவில்லை.

''அழகிரி நான் ஆத்து வெரைக்கு போயிட்டு வாறென். யேவாரி எவனுச்சும் வந்தா ரெண்டு வீச்சுக்கு மேல வெலச் சொல்லு. அதுல சூத்த இதுல சொள்ளம்பான். சுழி கெடக்குது அது இதுன்னு மயிராண்டிய வெரட்டிப் பத்தீரு. இந்த யேவாரிகளுக்கெல்லாம் ஒட்டாங்காளக் காரந்தான் வேணும். தாயிளி அந்தா போட்டாம் பாரு ஒரு போடு....மாட்டுக்குக் கொஞ்சம் பருத்தி வெத அள்ளி வச்சுத் தண்ணி வுடு. போத்தமாரா?"

''சாமிக்கு அவசரம் போலருக்கு.''

அழகிரி நமட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

''போடா இவன் ஒருத்தன்.''

தட்டிக் கடையில் மொச்சை வாங்கித் தின்ற வேகம் அவரை ஆற்றுக்கு விரட்டியிருந்தது. வயிற்றைப் பிடித்துக் கொண்டே நடையை விட்டார்.

"வரயில ஒரு வெத்தல வாங்கீட்டு வாங்க சாமியோவ்.'' அழகிரி சத்தம் அவர் காதில் விழுந்ததோ என்னமோ ஐந்தாறு வரிசையைத் தாண்டிச் சென்றுவிட்டார்.

ராசு வில்லிசேரி முதலாளிக்குத் தங்கச்சி மகன். வீட்டு மேற்பார்வையெல்லாம் அவர்தான். தெற்கே வடக்கே எந்தச் சோலிக்கு அனுப்பினாலும் ''ராசு நுவ்வு போத் தம்பா'' என்று பெரியவர் சொல்வார்.

மாட்டுக்குப் பருத்தி விதை வைக்க, தண்ணீர் காட்டிக் கூளம் போட ஒரு ஆள் தேவையென்று அழகிரியைக் கூட்டி வந்திருந்தார் ராசு.

அழகிரி மாடுகளை எழுப்பி பருத்தி விதை வைத்தான். அவனுக்குள் மறுபடியும் நினைவுகள் மண்டின. தொரச்சியாவரத்தில் பிள்ளையை விட்டு வந்திருப்ப தென்னமோ அடிக்கடி உறுத்தியது.

'கோழி அடஞ்ச மாதிரி புள்ள இந்த நேரத்துல மொடக் கீருக்கும். என்னத்தச் சாப்புடுதோ'

மாடு விரைவில் விற்றால்தான் என்ன, ஒரு ஜோடியைப் பிடித்துக் கொண்டு வீடு போய்ச் சேரலாமே என்று சலித்துக் கொண்டான்.

சாணியள்ள வந்திருந்தவள் சுற்றுப்புறமெல்லாம் கூட்டி யள்ளி கழிவு கூளத்துடன் கடகாப்பெட்டிக்குள் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் கழுத்தில் கிடந்த கருகுமணி மாலை அங்குமிங்குமாய் லாந்தியது.

"பேரு என்னம்மா?''

அவள் குனிந்தவாறு அவனை ஓரமாகப் பார்த்தாள்.

''ஒரு பேரு?''

அவன் சிரித்தான்.

''நுவ்வு பேருதான்.

''ஆவட.''

அவள் குத்துக்கால் போட்டு உட்கார்ந்து கொண்டாள். அவன் பேரைக் கேட்க வேண்டுமென்று அவளுக்கு அவ சியமிருக்கவில்லை.

''சாணி கூட்டுறதுக்குச் சம்பளம் எப்புட்டு?''

''முக்கா ரூவா. குத்தகைக்கு எடுத்துருக்காரு. ஒரு மொதலாளி.''

''தாவணி முடியிற வெரைக்குத்தான. அதுக்குப் பெறகு? வீட்ல ஆரு இருக்காக?''

அவன் அவளது வெறுங்கழுத்தை ஒருமுறை நோக்கினான்.

தாவணியில் நெருக்கிக் கட்டியிருந்த கம்புகளில் லைட் ஒன்றுபோல் மின்னின. அவர்கள் இருவரும் கையெடுத் துக் கும்பிட்டார்கள்.

யாரோ ஒரு வியாபாரி விவசாயி ஒருவனைக் கூட்டிக் கொண்டு வீட்டுக் காளையுடன் ஜோடி சேர்க்க ஒத்தக்காளை தேடித் திரிந்தான்.

அவள் இப்படியொரு பரிவை எதிர்பார்க்கவில்லை. 'ஆரு ருந்தா என்ன' என்பதை யெல்லாம் தாண்டி 'ஆரோ இருக்காக' என்ற நிலைக்கு வந்து அவனை ஏறிட்டுப் பார்த் துப் பெருமூச்சு விட்டாள்.

அழகிரிக்கு அந்த மாதிரி அவளைக் கேட்க வேண்டுமென்று கடந்த இரண்டு நாட்களாகவே ஒரு தூண்டுதல். தாவணி யில் ஒவ்வொரு கட்டுத்துறைக்கும் பிய்ந்து போன கட

கத்தை இடுப்பிலிருந்து இறக்கி சாணியள்ளிப் போட்டு மறுபடியும் வயிறு தள்ளிய பிள்ளையைப் போல் தூக்கிச் செல்லும் நிதானத்தை இரண்டு நாட்களாய்க் கவனித்து விட்டு மூன்றும் நாள் சும்மா இருக்க முடியவில்லை.

அவளுக்கும் அந்தமாதிரி உறுத்தாமலில்லை. தூக்கி வைத்த துருத்தியாய் அவன் வைக்கோல் கூளத்தின் மேல் துண்டை விரித்து வெயில் கம்மிய நேரங்களில் எந்தக் காரியமுமில்லாமல் முடங்கிக் கிடப்பதைக் கவனித்திருக்கிருள். 'எதுக்கு இந்த ஆம்பள இப்பிடிச் சொடிஞ்சு போயிக் கெடக்குது' என்று தனக்குள்ளேயே குமைந்த துண்டு. அவள் எதையோ ஞாபகப்படுத்தியது போல் சொன்னுள்.

"தாப்பாத்தியிலதான் வீடுருக்குது. அப்பன் ஒருத்தன் மட்டுந்தான். கெடச்ச வேலைக்குப் போவென். தாவணியில கெட்டுச் சோறு மிச்சம் வச்சவுக குடுப்பாக. ஒண்ணற வாடந்தான் வீட்டுக்குப் போவென். அந்தா சாணியம் பாரத்துக்குப் பக்கத்துல தாவாரமிருக்கே அதுல போயிப் படுத்துக்கிறது. தொணைக்கு ரெண்டு மூணு கெழடு வரும். அப்பன் பெரிய வீடு ரெண்டப் பாத்துட்டு வந்து மொடக் கீருவான். அவனப் பத்திக் கவலையில்ல, ஒனக்கு மேகாடா?''

''மேகாடுதான்''

அழகிரி பார்வையை எங்கோ லயிக்க விட்டான்.

புதுமாடு வாங்கியவன் ஒருவன் மாட்டுக் கொம்பைச் சுற்றி புதுக்கயிறு கட்டினன் மாடு சுதாரிப்பாய்த் தலையாட்டவும் நெற்றி நடுவில் தாலிப்பொட்டு மாதிரி இரும்புப் பிஞ்சு துள்ளியது.

''என்ன மனசு ரெம்ப ஒடஞ்சு போன மாதிரி...

அழகிரி அவளைப் பார்த்தான். அவளுக்கும் வயசாகியிருந்தது. பச்சையில் சேலை உடுத்தியிருந்தாள். காதுகளில் ஓலைச்சுருள் குழாயிட்டிருந்தன. சட்டை போடாத மேனிக்கும் மாராப்பு இறுக்கத்திற்கும் உடல்கட்டு எடுப்பாய்த் தெரிந்தது.

''ப்த்ச, என்னமோ பெழப்பு ஓடுது''

அவனுக்கு சலிப்பு மேலாடியிருந்தது.

''குடும்ப மெல்லாம் எப்பிடி?"

அவள் ஆவலாய்க் கேட்டாள்.

"ம் அதையேன் கேக்க."

அவன் கதைகதையாய்ச் சொல்லி முடித்தான்.

மாடுகளிரண்டும் விற்று வேறு ஒரு ஜோடி வாங்க ஒரு வாரத்திற்கு மேல் ஆகிவிட்டது.

ராசு மாடுகளை அழகிரியிடம் ஒப்படைத்து விட்டு காருக்குப் புறப்பட்டார்.

அழகிரி ஊருக்கு வண்டி போட்டபோது ஆவுடை நிதான மாய் வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தாள்.

ஆற்றங்கரையில் பனைமரச் சலசலப்பினூடே அவர்கள் அந்த முடிவெடுக்கும்போது அவள் தகப்பனைப் பற்றிய நினைவை இருசொட்டுக் கணணீரில் கரைத்து விட்டாள். அவன் துடைத்து விட்டான்.

ஆற்று மணலில் நடந்து அவள் வீட்டுக்குப் போனபோது அப்பன் கஞ்சிக்குப் போயிருந்தான். தனது துணிமணி களைப் பொட்டலங் கட்டிக்கொண்டு திரும்பினாள். அது வரை அவன் காத்திருந்தான் இக்கரையில்.

ஒரு நாள் இரண்டு பேருக்கும் ஆடம்பரமில்லாமல் தாலி கட்டு நடந்தது. பிள்ளையைத் தூக்கிக் கொண்டு போய் ஜக்கம்மா கோயில் எலந்தமுள் வேலிக்குள் நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவந்தார்கள் புருசனும் பெண்டாட்டியும். சங்கதி காதுக் கெட்டியதும் வில்லிசேரிக்காரர் கேட்டார். ''அடே அழகிரி ஒன்ன மாடு புடிக்கத்தான் அனுப்புனுகளா பொண்டாட்டி புடிக்கவாடா. ராசு முந்தி வந்தது நல்லதுக் குத்தாம்னு சொல்லு."

"என்னமோ தொணைக்கு ஒரு ஆளு வேணுமில்ல சாமி. பச்சப் புள்ளைய நெனச்சா பாவமாருக்கு. அவதான் அத வுட்டுட்டு சுடுகாடு போயிச் சேந்துட்டா. காப்பாத்தியாக ணும் சாமி. கஞ்சி காச்சவாச்சும் ஆளு வேணுமே...அவளும் அங்க ஆதரவில்லாமத்தான் இருந்தா."



"ரண்ட சாமி"

வேம்படியில் வாரறுந்த செருப்புக்களுக்கு நடுவே இறைவை வாலுக்கு ஒட்டம் போட்டுக் கொண்டிருந்த அழகிரி கோபால் நாயககரை நிமிர்ந்து பார்த்தான்.

"ஏமிரா தச்சு முடிச்சேசனு?"

அவர் இடுப்பில் கைகளை வைத்தபடி கமலை வாலில் முண்டி முண்டித் தெரியும் வார்த் தையலில் பார்வையோட்டினர்.

"அல்லாம் முடிஞ்சாப்புலதான் சாமி. சுத்துக்காலக் கொஞ் சம் கைபாத்துத் தந்துறென். காதுப் பக்கம் ஒரு தையலு வுட்டாக் கூடத் தாவல.கொஞ்சம் இப்பிடி உட்கார்றீகளா."

''அதெல்லாம் பெறகு பாத்துக் கிறலாம். மொதல்ல ஒட் டத்தப் போட்டு முடி. காடக் கண்ணிப் பயிரு வேறுப் பறக்கிற வெயில்ல சருகாப் பொசுங்குது. உஸ் அப்பாடி"

அவர் வேப்பங்குச்சை எடுத்து களத்தில் பொலிவாளித்தது போல் தூசியைப் பரசிவிட்டு உட்கார்ந்தார்.

"சாய்ந்தர எறவைக்குக் குடுத்துப்புறென். கவலைய வுடுங்க.''

அவன் கமலை வாலில் அவசரமாய்த் தண்ணீர் தெளித்து தொப் தொப்பென்று தட்டினுன்.

"அடே அடே பையாத் தொவட்டு. நீ போடுற போட்டுல வாலே கிழிஞ்சு போகும் போலருக்கு. புது வாலெடுக்க வச்சிருத."

''அதுக்கென்ன சாமி புதுசெடுத்தா பண்ணையில கொறஞ்சா போகுது. அடியேனுக்கு கோயில்பட்டிச் சோறு கெடைக்கும்."

''அது சரி ஏன் சொல்ல மாட்ட. புதுவாலுன்னு சும்மாவா போகுது. முப்பது நாப்பதக் கேக்குமாக்கும். இந்த வாலெடுத்து மூணு வருசமிருக்குமாடா? இதோட அஞ்சு வெள்ளாமையாகப் போகுதே.''

''இருக்குஞ் சாமி. நம்ம ரெண்டு பேருந்தானே போயி ருந்தொம். இது நல்ல வாலுதான்.''

''பின்ன என்ன கோவாலு நாயக்கருன்னு சும்மாவா. கடையில போயி நிண்ணுச்சுனு அவன் கெட்ட சரக்க எடுத் துக் குடுத்துத் தப்பிச்சுப் போயிருவான் பாரு. கிண்ணிய எறக்கிப்புட மாட்டென். இது கூட மிதிகல்லு ரோசியாக் கும் கண்ணுபட்டுப் போச்சு. கூறு கெட்ட ஆசாரிப் பெய உருள செஞ்சு குடுத்த புண்ணியத்துல இப்பிடி. அதென்ன கூனெயில தண்ணி கோலுன ஒடன வாலுக்கவுரு சருஞ்சிட் டேதான் போகுது. சுப்பையான்னு வேல சுத்தமாருக்கும். வேற எவனோ வீட்டுக்கு வந்த பெயலச் செய்யச் சொல்லி யிருக்கான்...சரிசரி வாயப் பாக்காத, வேல மயிரு கூட ஓடாது.''

''இந்தா குடுத்துறென்.''

கமலெவாலெக் காலுக்குள் தோதாக வைத்து அமுக்கினுன். தையலூசியில் பொடிசாய் இழைத்த வாரை விட்டுக் குத்தி யிழுத்து இறுக்கித் தட்டினுன். அடுத்த குத்துக்கு மூங்கில் டப்பாவிலுள்ள மாட்டுக் கொழுப்புக்குள் ஊசியை விட்டுப் பதம் பார்த்துக் கொண்டான். தையல் பச்சரிசி போல் நேர்த்தியாயிருந்தது.

''எலேய் சின்னப் பெயலே. தண்ணிப் பானெயிலயா கல் லக்கொண்டு எறியிற. ஒங்கப்பனுக்குக் கொள்ளி வைக்க நாளுருக்குது. பேசாமப் போறயா காதப் புடிச்சு கெணத் துக்குள்ள போடவா. இவன் ஆருடா அழகிரி."

''மாடசாமி மகன்.''

''அப்பிடியா. அவன் அப்பனுக்குப் பேரு சொல்லிக்கிற மாட்டான் போலருக்கே."

''பள்ளிக் கொடத்துக்குக் கூட அனுப்பாம சும்மாவுட்ருக் கான்.''

கத்தியை எடுத்து மிச்ச வாரைக் கச்சிதமாய் நறுக்கிய அழகிரி மாட்டுத் தோலிலேயே பதம் தீட்டிக்கொண்டான்.

''என்னடா வெயிலு இப்பிடிக் கொளுத்துது. மழ பேஞ் சுக்கிருதோ இந்த வருசம். வெள்ளாம வெளஞ்சு கிழிஞ்சு தான் போகும் பெறகு.''

''பேயாம எங்க போகுஞ் சாமி. மொதலாளிமாருக்கு வெளையலன்னு எங்க பெழப்பு என்னுகிறது. சட்டியெடுக்க வேண்டியதுதான்."

அழகிரிக்குக் குறுக்கில் வலித்தது. உடல் நிமிர்த்தித் தளர்த்தினுன்.

வெயில் சுள்ளாப்பில் துண்டை முக்காடு போட்டுக் கொண்டு யாரோ வருகிருர்கள்.

''சாமி ரண்ட ரண்ட."

"அவ்வுரா."

அழகிரி அவரைப் பரிதாபமாய்ப் பார்த்தான். முக்காட்டை விலக்கி வேர்வையைத் துடைத்துக் கொண்டு சோர்வாய் நிழலில் உட்கார்ந்தார் அவர்.

''இந்த வெயில்ல வந்துருக்கீகளே. வீட்ல பூச்சம்மா புள்ளிக அல்லாஞ் சொகந்தான?''

"ஒம்புண்ணியத்துல நல்ல சொகம். அப்பப்பா காலு என்னமாக் காந்துது.''

சவலைப் பிள்ளையைப் போல் பாதங்களை எடுத்துக் கிட்டத்தில் வைத்து மெல்ல அமுக்க ஆரம்பித்தார்.

''அப்பிடிச் சொல்லாதங்க சாமி. அல்லாம் கடவுளு புண்ணியம்.''

ஏறுவெயிலின் கிறக்கத்தில் ஊதினுற் போல் காற்றடித்ததும் வேர்வைப் பிசுபிசுப்பு உலர்ந்து ஒரு குளிர்ச்சி.

கோபால் நாயக்கர் காய்ந்த வேப்பங்குச்சுக்களை கோடாலித் தறிப்பாய்க் கொறித்துத் துப்பிய சிதறல் முன்னல் கிடந்தது. வேப்பம் பழத்தைப் பிதுக்கி கொட்டை விருட்டென்று தரையில் விழுந்து புழுதி கோர்ப்பதில் லயித்திருந்தார்.

''சாமி வாலக் கொஞ்சம் பாக்கீகளா.''

''காதெல்லாம் சரியாருக்கில்ல. பெறகு எறைக்கையில பெரண்டுக்கிட்டு வரப்புடாது.''

''அதெல்லாம் ஒண்ணுமிருக்காது. கொண்டு போயி எறச்சுப் பாத்துட்டுச் சொல்லுங்க."

''சரி, அத மடிச்சுக்குடு இப்பிடி. வெருசனப் போகட்டும் நான்.''

''அடியேனுக்கு நடுக்கடையில ஏதாச்சும் உத்தரவாகட்டும்."

''அது வேற கேக்குதா. கடையில என்ன ஈர வெங்காயமா வச்சிருக்கப் போறன்.''

''உண்டானது போதும். பொரிகடல வெத்தல பாக்கு அம்புட்டுத்தான். வாயில போட்டுத் தண்ணி குடிச்சுக்கிருவென்... சாமியோவ் ஒரு வார்த்த சொல்லீட்டுப் போயிருங்க.''

கோபால் நாய்க்கர் பலமாய் ஏட்டுப் போட்டார்.

அழகிரி முக்காட்டுக்காரரைப் பார்த்தான். அவர் துண்டைக் கொத்தாய்ப் பிடித்து நெஞ்சுக்கு நேராய் வீசினார்.

''அப்பிடி என்ன அர்ச்செண்டான ஜோலி சாமி இந்த வெயிலுக்குள்ள வந்துருக்கீக."

''அப்பிடியொண்ணுமில்ல பிஞ்சையில ரெண்டு கெட போட வேண்டியிருக்கு. கீதாரியப் பாத்துச் சொல்லீட்டுப் போகலாம்னுதான் வந்தென். அதோட ஒன்னவும் பாத்துட்டு...''

''கீதாரி லேதா?''

''இண்டில ரேது. கெடைக்குப் போடுசராம். பொத்திகுதான் ஒச்சராம்.''

''பொத்திகு ஏமி பொத்திகு. இக்க ராத்திரிதான்.''

''அதுசரி' இட்ட சூடுரா மனகாலுகு கச்சிதமா மஞ்சு மிதியடி காவாலா. ஐதுரூவா சாலுகாரா?''

''ஏமி சாமி. மிதியடி சூடுக வெனகு ரூவா இப்யண்டா. ஐதுரூவா கட்டாது சாமி. தையக் கூலி லேது. ஒகட்ரு ரூவா ஏத்தி...''

''ரேது ரேது ஒக ரூவாதான்.''

''மீகு பிரியம் நான் ஒண்டி மாட்டாட லேது.''

அவர் எழுந்து கொண்டு பழையபடியும் முக்காடு போட்டுக்கொண்டார்.

''அப்ப நான் வரட்டுமாடா ஒரு வாரத்துல கெட்டிக்குடுத் துறனும். இந்தா இப்ப ரெண்டு ரூவா வச்சுக்கோ.''

''உத்தரவு சாமி.''

அவன் தோல்பையின் இன்னொரு தட்டுக்குள் கையை விட்டான்.

கிழக்காமல் பார்த்தால் அடித்துப் போட்ட பாம்பாய் சக்கி லியக்குடி கோணிக் கிடக்கிறது. பெரும்பாலும் ஒற்றை முகடு போட்ட கூரை வீடுகள். கட்டை கட்டையாக. ஒரு இருபது தேறும். வீட்டுக் கொட்டாரங்களில் குளம்புத் தடம்பட்டு உளம்பலாடிய எருமைச் சாணி நசநசப்பு.

தெருவில் அவ்வளவாய் ஆள் நடமாட்டமில்லை. எல்லாம் காடுகரையென்று கிளம்பியிருக்கும். கூரை எரவார நிழ லில் சோறு பொங்கி விளையாடும் நஞ்சாணி குஞ்சாணி களின் புரியாத பேச்சு மட்டும் கேட்டது.

அழகிரிக்குத் தனிமை உறுத்தியது. யாராவது பேச்சுத் துணைக்கிருந்தால் தோதாயிருக்கும் இனி மாடு மேய்த்து விட்டு கருப்பன் திரும்பும் வரை நேரம் இப்படித்தான் போகும். காட்டுக்குப் போன ஜனங்கள் சாயுங்காலந் தான் திரும்பும்.

ஒவ்வொரு நாளைக்கு சக்கணனும் சித்திரனும் வேம் படிக்குத் தலையைக் காட்டினால் உண்டு. அவர்கள் ஜோடியே தனி. எப்போதும் சேர்ந்தே இருப்பார்கள். வெளிக்குப் போவது முதல் உறங்குவது வரை எல்லாமே சேர்ந்துதான்.

அவர்கள் பேசாத ஊர்ப்பேச்சே கிடையாது. கூதல் நேரங் களில் கொட்டாரத்தில் குக்கு நோய் வந்த கோழி மாதிரி இழுத்து மூடிக் கொண்டு ஆதிகாலத்துப் பூடுகள் மாதிரி கீழத்தெருவில் மகாத்மியத்தைக் கதைகதையாய்ப் பேசி மிச்சம் வைப்பார்கள். அவர்கள் இல்லாத பழம் பேச்சா.

வில்லிசேரி வீட்டுத் தொழுவில் நகன்று கொண்டே சாணி யள்ளிப் போட்டு விட்டு தொழு எரவாரத்தில் சொருகிய ஈயப் பாத்திரத்தையும் சிறட்டையையும் எடுத்து நீட்டி னால் சக்கணனுக்குக் கஞ்சியும் வதக்கின மிளகாயும் போடு வார்கள். ஒரு பிடி பிடித்துவிட்டு ஏப்பம் போட்டுக்கிளம்பி

ஞல் வண்டி ஒரேயடியாக ஊருணியில்தான் நிற்கும். மெனக்கிட்டு மேலெல்லாம் சொறட்டை தேய்த்துக் குளித்து முடிக்க ரெம்ப நேரமாகும். சில நேரம் வடம் போல தலைத் துணியை முறுக்கி முதுகில் இழுப்பது காணு தென்று பீர்க்கங் குடுக்கையும் கைவசம் வைத்துக் கொள் வான். எப்போதாவது இடுப்புத் துணியைத் துவைக்கும் போது அக்கம்பக்கம் பொம்பளையாள் பார்த்து விட்டு இரண்டையும் சரிவில் காயப் போட்டு வந்து அருவமில் லாமல் தண்ணீருக்குள் கால் நீட்டி அம்மணத்துடன் உட் கார்ந்து கொள்வான்.

தெருவுக்குக் கொஞ்சம் மூப்பான உருப்படி. நாதிக்கு யாரு மில்லை. நல்ல நாளைக்குச் சித்திரன் வீட்டில் தான் சாப் பாடு. சித்திரன் ஆத்தா நன்கு கவனித்துக் கொள்வாள்.

எதுக்கெடுத்தாலும் எடுத்தெறிந்து பேசும் சுபாவம் சக்க ணனுக்கு.

''ஒனக்கு அனயம் தெரியுமில்ல, நாங்க அந்தக் காலத் துல இருந்த இருப்பு......''

அவனுக்கு எந்த நேரமும் சித்திரன் ஒத்துப்பாடுவான்.

"பெரியவன் சொன்ன கேளுப்பா. நமக்கென்ன தெரியும் இப்ப மொளச்சவுகளுக்கு.''

சித்திரனுக்கு வயசு கொஞ்சந்தான். சிறுசிலேயே பாண்டு வந்து கைகால் வீங்கி வேலைவெட்டிக்குப் போகவிடாமல் முடக்கிவிட்டது. உடம்பெல்லாம் மினுங்க வாதம் வந்த மாடு மாதிரி காலைத் தரையில் பரசிக் கொண்டே மெது வாய் நடப்பான்.

இரண்டு பேரும் கொட்டாரத்தை குத்தகைக்குப் பிடித் தால் சாயந்திரம் வரை எழும்புவதில்லை. முதலில் பதி னைந்தாம் புள்ளியில்தான் காரியத்தைத் துவங்குவார்கள். அலுத்துக் கிடந்தால் கொஞ்ச நேரம் துண்டை விரித்துக் கிடத்துவார்கள். கூரை நிழல் சுருங்கி வெயில் நடு உடம் பில் அறுக்கும் போது சாவகாசமாய் எழுந்து நிழல்பக்கம் நகன்று படுப்பார்கள் அல்லது மறுபடியும பதினைந்தாம் புள்ளி.

அழகிரிக்கு ஆச்சரியமாயிருந்தது. சித்திரனும் சக்கணனும் கொட்டாரத்தை முறித்துக் கொண்டு வேம்படிக்கு வந்து

கொண்டிருந்தார்கள். சித்திரன் கையில் பதினைந்தாம் புள்ளிக்கான நாய்களும் முயல்களும் இருந்தன.

"என்ன பெரியாளு குளிப்புக்குக் கௌம்பியாச்சா.''

''இல்லப்பா கொட்டாரத்துல எணலு முடிஞ்சது. வேம்படிக்கு வந்துட்டொம். ஒனக்கு வேல மெனக்கிடுமோ.''

''அதெல்லாமில்ல. எம்புட்டு நேரம் வேணுமின்னாலும் படுத்துருங்க.''

சித்திரன் இடை மறித்தான்.

"படுக்கவா, இண்ணைக்கி ரெண்டுல ஒண்ணு பாத்துட்டுத்தான் மறு சோலி.''

சக்கணன் சாதாரணமாய்க் கேட்டான்.

''எலே மயிரு என்னத்தலே பாத்துக் கிழிக்கப் போற. வருசம் முழுக்க அடச்சாலும் ஒன்னால முடியுமாலே. பதினஞ்சாம் புள்ளியிலே நம்மள அடிக்க சுத்துப்பட்டியில ஆருமே கெடையாதுடா. பெரியாளுகட்டக் கேட்டுப்பாரு. நீ எம்மாத்தரம். எங்க போடு பாப்பொம்.''

விஷயம் சூடு பிடித்ததில் அழகிரிக்கு. நிம்மதி இனி சாயங்காலந்தான் எழுந்திருப்பார்கள்.

இடையில் அவர்கள் பேச்சைத் தடுக்கக் கூடாது என்பதும் அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அவர்களைச் சுதாரிப்புப்படுத்த எண்ணினான்.

"கொஞ்சம் இருங்க வீட்ல போயி ஒரு கலயம் புளிச்ச தண்ணி கொண்டுட்டு வந்துறென். கள்ளுமாதிரி போட்டாத்தான் தெம்பு கௌம்பும்."

''ஏன் வீட்ல ஆவட இல்லையா?''

''ரெண்டு பேரும் கந்தையா மொதலாளி பிஞ்சைக்கு வேலைக்குப் போயிருக்காக.''

அழகிரி வீட்டுக்கு ஒரெட்டு ஓடித் திரும்பினான். எல்லோரும் நீச்சுத்தண்ணீர் குடித்துச் சுதாரித்தார்கள்.

''கந்தையா ஒனக்கு ஒறவுகார மொதலாளியாச்சே. அவரு பாடுதானப்பா தவங்குது போலருக்கு.''

''முந்திக்கு இப்ப எறக்கந்தான்.''

''எறக்க மென்ன நொடிச்சுப் போச்சு ரெம்ப. ஏலே சித்திரா நீ என்னத்தப் பாக்க. மனையப் போட்டு வையி.''

''பாக்கி ரெம்ப ஏறிப்போச்சு. வெளச்சலும் கண்டு மொதலாகல.''

''அதுலயும் அப்பையாகிட்ட பாக்கி வாங்குனவன் அதோட சரி. குழிக்குள்ள தள்ளீட்டுத்தான் மறு சோலி பாப்பாரு.''

''வட்டி அனியாயம்.''

''ஆருட்டச் சொல்றது. அவருக்குத் தொடைக்குக் கீழ மச்சம்.''

''வட்டியில வில்லிசேரியெல்லாம் தோத்தது.''

''எல்லாம் இப்பதானப்பா. அதுக்கு முந்தி வழிச்சு நக்குனவருதான''

''பொண்டாட்டி வழிச் சம்பாத்தியம்.''

''அதெல்லாமில்ல. ஊருக்குள்ள ஏமாத்துனதுதான். கொஞ்ச நாளக்கு முந்தி பஞ்சம் வந்ததோ இல்லையோ, எல்லாரும் காட்டப் பறி கொடுத்துட்டான்.''

''அப்பிடிச் சொல்லுங்க.''

''நான் என்ன சொன்னென்னு பாரு எண்ணைக்காச்சும் ஒரு நா கந்தையாவும் பறிகொடுக்கத்தான் போராரு.''

''போற போக்கப் பாத்தா அதுலதான் முடியும் போலருக்கு''

''ம். நமக்கெதுக்கு அந்த வம்பெல்லாம். பேசாம சோலியப்பாரு. நாங்க நாயி போடுறெம்.''

கொஞ்ச நேரத்தில் விளையாட்டு சூடு பிடித்தது. அழகிரி தையல் வேலைகளுக்கிடையில் அவர்களையும் கவனித்தான்.

சித்திரனுக்குப் பேசாமல் இருக்க முடியவில்லை. புதுசாய் ஒரு கேள்வி கேட்டான்.

''இந்த ஊருக்கெல்லாம் முந்தினது எந்தத் தெருவாயிருக்கும்?''

"சக்கிலியக்குடிதான். அதுல வேற சந்தேகமா."

''அதெப்பிடி பெரிய பெரிய சம்சாரியெல்லாம் இருக்கையில சக்கிலியக்குடிதான் மொளச்சிருச்சாக்கும்.இவனுக்கு எல்லாம் தெரிஞ்சது போல."

"ஆமலே ஒனக்குத்தான் அம்புட்டும் தெரியும். நேத்து மழைக்கு இண்ணைக்கி மொளச்ச காளான். எங்கிட்ட மட்டும் எதுத்துப் பேசுற பழக்கம் வச்சுக்கிருத. கெட்ட கோவம் வரும்.''

''சரி. சொல்லு பாப்பொம்.''

''அதுல் வந்து பாரு, இந்த ஊருக்கு மொளப் புடிச்சதே சக்கிலியக் குடியிலதானுக்கும்.''

''எப்படியிருக்கு கத.''

''பின்ன என்ன மத்தது எல்லாம் வந்தட்டிக தான. அங்ஙன ஒண்ணு இங்ஙன ஒண்ணுன்னு காடு செதறியா வந்து இங்க வீடு போட்ருக்குதுக. அதென்னடான்னு நாளாசரியா ஊரு பெருகிப் போச்சு.''

''அதும் அப்பிடியா.''

"அந்தக் காலத்து ராசா இந்தப் பக்கம் வேட்டைக்கு வந்துருக்காரு. சங்கதியக் கேளு, ராசான்னு பட்டாளமே பின்னால தெரண்டு வந்திருக்கும். ராணியம்மாளும் கூட வந்துருக்கு. தெக்காடு பூரா வேட்டையாடியிருக்க மாட்டாக? அப்ப காடு எம்புட்டுச் சொரப்பா இருந்துச்சோ. இப்பயே வேட்டைக்குக் கெளம்புனா நாலஞ்சு மொசல அடிச்சுத் தூக்கீட்டு வந்திருகளே லேசா...................... வெட்டக் கெட்டுடா அத நகட்டுனா இருபக்கம் வெட்டுத்தான்.''

''இருக்கும் இருக்கும். ஊருணிக்குத் தெக்க பூரா மலங்காட்டுச் செடியாத்தான கெடக்குது..... நெஞ்சுல கல்லேத் துறகுக்கு வழிய வுடு. செறகுப் பக்கம் போயிட்டு வாயேன். எலும்புக்குக் காத்தது மாதிரி அங்ஙனயே கெடந்துக்கிட்டு. அதுக்கு கொம்பு நாயி ஒண்ணு போதாதா.''

''ஏலே அப்பிடியா நெனச்ச. நான் சுத்திச்சுத்தி வந்தாலும் ஒம் பாச்சா பலிக்குமா......என்ன சொன்னென்?''

''ராசா வேட்டைக்கு வந்தாரு.

"வேட்டைக்கு வந்தாகளா, ராசா ஒத்தாலமரத்துலதான் குருதையக் கெட்டிப் போட்டுட்டுத் தவிப்பாறுவாராம். தண்ணித் தாகத்துக்கு ஊருணிக்குள்ள இருக்குதே அந்தக் கெணறு தோண்டியிருக்காரு. அதுக்குப் பெறகுதான் ஊருணி வெட்டியிருக்காரு. குருதையக்கின்னு குளிப் பாட்றதுக்கோ என்னமோ."

"அப்படித்தான் இருக்கும். இல்லன்னு அம்புட்டு அகல மாத் தோண்டியிருக்க மாட்டாகளே. குருதைய நீய வுட்டுக் குளுப்பாட்டுவாகளோ?"

"பெறகெப்பிடி, காடெல்லாம் அலையிறது. தண்ணியில காலாற நீஞ்சத்தான் நல்லாருக்கும்......அப்ப எல்லாம் நம்ம ஊரே இல்ல. அத்துவானக் காடாத்தான் கெடந் திருக்கு. ஒரு நா தேதியில ராணிக்குச் செருப்பு அந்து போச்சு. கேட்டியா சங்கதிய."

"அப்பிடி எந்தப் பெய செருப்புத் தச்சுக் குடுத்தான். பரம் பரையாத் தைக்கிறவந்தானு."

"இப்ப என்ன வந்து போச்சு. நம்ம பெயக எத்தனபேரு பூஞ்சாணியாத் தச்சுத்தாரான். அததுக்கு வசவும் வாங்கிக் கெட்ருன்."

''அழகிரி மச்சான் கோவிச்சுக்கிறப் போருன்."

"அவனுக்கென்னடா செருப்புக் கெட்றதுல கில்லாடியாக் கும். தும்புச் செருப்பு போட்டு எளவட்டங்க நடந்தா தெலா மாதிரி கிறிச் கிறிச்சுனு சத்தம் போடுமே. நறுக்கா ரெண்டு குரோனடி வச்சு குதிங்காலுக்குச் சில்லும்குடுத்து பின்னுல ஆணியும் ஏத்தி மேல் வார்ல குஞ்சம் வச்சு ஒரு சோடிய எடுத்து வச்சா கேட்ட வெலையக் குடுப்பானே. அவனுக்கென்ன மகராசனுக்கு தொழிலுன்னு எடுத்துக் கிட்டா சுத்தமிருக்கணும்டா"

அழகிரி மெல்ல வார்த்தை விட்டான்.

"என்ன நம்ம கதையப் பாடுருப்புலருக்கு."

''பெறகென்னப்பா இப்ப சக்கிலியக்குடியில தொழிலா செய்யிருன். அதப் பேசுனு வீணுல கோவந்தான் கௌம் பும். எதவோ சொல்ல வந்தேனே......"

அழகிரி மறுபடி பேசவில்லே. சக்கணன் கதையைத் தொடர்ந்தான்.

.ம் ராணிக்குச் செருப்பு அந்துருச்சு. அம்மாவுக்கு நடக்க முடியல. ராசா பேமுழி முழிச்சிட்டாரு. என்னத் துக்கு என்ன வந்துருச்சோன்னு கவலப்பட்டு உத்தரவு போட்டுருக்காரு. சுத்துல எங்கருந்தாச்சும் ஒரு சக்கிலி யனக் கூட்டீட்டு வரணும்னு சொன்ன ஒடன ஆளுக கௌம்பி வடக்க ரெம்பத் தூரத்திலிருந்து ஒருத்தனப் புடிச்சு வந்து நிறுத்தியிருக்காங்க.''

''அவன் எப்பிடித்தான் சமாளிச்சானே.''

"அவன் ஒரு கைகாரன். பின்ன என்ன ஏப்புச் சாப்பான ஆளவா கூட்டீட்டு வந்துருப்பாக. ராணிக்கு வசமான செருப்புத் தச்சுக் குடுத்திருக்கான். ராசா பாத்தாரு. சந்தோசப்பட்டு அவனுக்கு வீடே போட்டுக்குடுத்துட்டாரு ஆலமரத்துக்கு வடக்க. அதுக்குப் பெறகு வருசம் வருசம் ராசா வேட்டைக்கு வருவாராம்.''

''அப்பிடிச் சொல்லு.''

''நீ நாயி போடுறயா. ஒன்னுல சக்கரக் குண்டியத் தலே கீழ வச்சாலும் என்ன அடச்சுக்கிற மாட்ட. ஏழு வெட்டுக் குடுத்து ஒரு வீச்சுல ஒன்ன அடச்சுக் காட்றனு இல்லே யான்னு பாரு.

''எங்க அதவுந்தான் பாப்பமே.''

''நீ லேசாக் கேட்டுப்புட்டயே சக்கிலியக்குடியப் பத்தி. அதென்ன ஒங்கப்பன் எங்கப்பன் மொளப்புடிச்சு எழும்பு னதா. ராசாவாக்கும் கல்லு வச்சுக் குடுத்துருக்காரு. மத்த சாதிக்காரங்க இருக்காகளே அவங்க ஆடு மாடு மேச்சு வந்து தங்குனவங்கதான. அதுகளுக்குத் தண்ணி காட் டணும்னு ஊருணிக்கு வந்து சேந்துருப்பாங்க. மரத்து எணல்ல சொகங்கண்ட ஒடன வீட்டப் போடணும்னு நெனப்பு வந்திருக்கும். ஒண்ணத் தொட்டு ஒண்ணு வீடு கூடி ஊரும் பெருகிப் போச்சு."

''ஆடுமாட்டுக்கு மேச்சலு கெடந்தா எந்த எடம்னு இருக் குது.''

"நம்ம ஊருலருந்து கூட ஒரு வட்டம் ஆட்டுக்காரங்க ஊரு கௌம்பி மலங்காட்டுப் பக்கம் போயி இருந்துட்டு

வந்தாங்க. அது ரெம்ப நாளாச்சு. அப்ப எல்லாம் நீ பீயோ மோத்தரமோ...ம் இந்தா செறகு வெட்டு. அங்க போயி ஒதுங்கு.''

ஒரு வேளை சக்கிலியக்குடி அப்படிக் கூடத் தோன்றியிருக்கும் என்று அழகிரி எண்ணினான். அவனறிய அந்த ஊரில் எத்தனை குடும்பங்கள் வந்து நிரந்தரப்பட்டு விட்டன. ஏன் சக்கிலியக்குடியை எடுத்துக் கொண்டாலுமே அப்படித்தான். எவ்வளவோ தலைக்கட்டு கூடிவிட்டது. மேகலக்குடியில் குடும்பம் பெருகப் பெருக இங்கும் தொழிலுக்கு ஆள் வேண்டியதாயிருக்கிறது. அவனவன் அயலூர்க்காரனை மச்சான் மருமகன் என்று அழைத்து வந்து கால் கூட்டி விட்டான்.

அவன் வந்த புதுசில்தான் சக்கம்மா கோயிலே முளைத்தது. பாஞ்சாலக்குறிச்சியிலிருந்து பிடிமண் எடுத்து வந்து பீடம் போட்டு உருவேற்றினார்கள். அதுக்குப் பிறகு ஒவ்வொரு வருஷமும் பொங்கல் நடக்கிறது. பொங்கலன்றைக்கு ராத்திரி முழுக்க ஒற்றை உறுமிச் சத்தமும் சேகண்டி பொலியும் தொடர்ந்து கேட்கும்.

நாளாவட்டத்தில் மேகலக்குடியில் கூட வருத்தாட்டுக்காரர்களாய் வந்து தங்கின குடும்பங்கள் சில சக்கம்மா கோயில் படிமாத்துக்காரரானார்கள்.

அழகிரி தனக்குள் சொல்லிக் கொண்டான்.

"பெரியாளு சொல்றது சரிதான்.''

கொஞ்ச நேர மௌனத்திற்குப் பின் சக்கணன் மறுபடியும் பேச ஆரம்பித்தான்.

''இண்ணைக்கித் தனத்துல சக்கிலியக்குடிதான் முக்கியம். ஊருக்குள்ள எந்தக் காரியந்தான் இவன் இல்லாம ஒழுங்கா நடக்கும். சாவுலருந்து எழவு வெரைக்கும் இவன் தானடா போயி நிக்கணும். சம்சாரிய நம்பித்தான் சக்கிலியன் பெழைக்கிருன்னு சொன்னாலும், நெசத்துக்கு சக்கிலியன் இல்லன்னா சமசாரி பெழைக்க முடியாது. மொதல்ல களத்து வேல முடியுமா.''

''அது வாஸ்தவந்தான்.''

ஊருணிப் பாலத்தில் எருமைக் கூட்டத்தின் நடுவே ஊரிக் காலி மாட்டுக் கருப்பன் பாட்டுச் சத்தம் கேட்டது.

அழகிரி சொன்னான்.

‘‘கருப்பன் கூட வந்தாச்சு. அவுக வந்தாச்சுனா பெறகு நான் எந்திரிக்க முடியாது. நீங்க சாமானப் பாத்துக்கங்க, நான் நடுக்கடைக்கு ஓடிட்டு வந்துறென்.’’

சித்திரன் அவசரமாய்க் கூறினான்.

‘‘வெருசாப் போயிட்டு வா. நாங்களும் குளிக்கப் போகணும். கருப்பன் வந்தாச்சுனா வெளையாடுனாப்புலதான்.”



ஏண்டா அழகிரி ஒனக்கு சங்கதி தெரியாதா. ஊருக்குள்ள தலைபோற மாதிரி கூடிக் கூடிப் பேசுறாங்க. நீ என்னடான்னா வேம்படியக் காத்துட்டுக் கெடக்கயே.

கந்தையா காவல்கம்பை பலமாய் ஊன்றி அழகிரியை உசுப்பினார்.

அழகிரி நிதானமாய்க் கேட்டான்.

‘‘அப்பிடியென்ன சாமி ஊருக்கு வந்து போச்சு.”

‘‘எனக்குந்தான் தெரியல. பெரிய எடத்துச் சமாச்சாரமோ என்னமோ.”

‘‘பெரிய மொதலாளி வீட்லயா.”

“இண்ணைக்குத் தனத்துக்கு அப்பையாதான் ஊருக்குப் பெரிசு.’’

என்னருந்தாலும் பூர்வீகப் பேரு வில்லிசேரிதான்.”

“எல்லாம் காலம் மாறிப்போச்சு. அப்பையா கைக்குள்ள மாட்டியாச்சு.”

‘‘என்னமோ சாமி.’’

''என்னோட வாரயா கூத்துப் பாக்க. என்னக் கூப்பிட்டாங்க. எனக்கு சோலியிருக்குனு காட்டுப்பக்கம் போயிட்டேன்.''

''கூப்பிட வுட்டது ஆரு.

''வில்லிசேரி.''

''சங்கதி?''

''என்னமோ எலக்சனும்.

''வாங்களேன் என்னன்னுதான் பாத்துட்டு வருவோம்.''

இருவரும் வில்லிசேரி வீட்டுக்கு முன்னால் வந்து நின்ற போது அங்கே பத்துப் பதினைந்து பேர் கூடியிருந்தார்கள். அந்தத் தெருவுக்கு முக்கியமான பெரிய மனிதர்கள். குருசாமி நாயக்கர் வேட்டுச்சத்தம் வண்டாரியை அரட்டிக் கொண்டிருந்தது.

"நான் சொல்றது தெருஞ்சதாடா. ஓட்டுக்கு நிக்கிறது ஆரு நெரியுமில்ல. நம்ம அண்ணாச்சிதான். பெரிய மாமாவுக்கு ரெம்பச் சொந்தம்.

அவர் வில்லிசேரிக்காரரைப் பார்த்தார். வில்லிசேரிக்காரர் தலையாட்டினார்.

கந்தையாவும் அழகிரியும் ஒரு ஓரத்தில் உட்கார்ந்து கொண்டார்கள். குருசாமி நாயக்கர் பேச்சைத் தொடர்ந்தார்.

''அதனால சக்கிலியக்குடி ஓட்டு பூராவும் நமக்குத் தான் போடனும்.''

அவர் வண்டாரியை உற்றுப் பார்த்தார்.

''உத்தரவாயிடுச்சுனா அதுக்கு மறு பேச்சென்ன சாமி. சனமெல்லாம் போடச் சொல்லீருவொம்.''

''அதான கேட்டேன்.

அவர் தன் தொடையைத் தட்டிச் சிரித்தார்.

"சாமிமாரு சொன்னதக் கேக்காம எங்க போகப் போறோம்."

'பெறகு அவன்வந்தான். கீச்சாதிக்காரன் அது இதுன்னு இருக்கப்புடாது. ஏன்னு கேட்டீன்னு பெரியாளுக சொதந் தரம் வாங்கித் தந்ததே நமக்காகத்தாப்பா. நிக்கிறது ஆரு தெரியுமா. நம்ம அண்ணச்சியாக்கும். பேசாமப் போக வேண்டியது. பொட்டியப் பாத்து ஓட்டப் போட வேண்டியது. தெரிஞ்சதா."

"சாமி இதுல அழிச்சுப் பேச எடமே இல்ல.

"வேதமுத்து நீ என்ன சொல்ற."

"ஊருல நல்லது முடிவு பண்ணுனா நாங்க என்ன செய்யப் போறோம்."

அப்பையா, கந்தையாவும் அழகிரியும் பேசிக்கொண்டி ருப்பதைக் கவனித்தார்.

"கந்தையா ஒசர வாரதுதான.

"இல்லண்ணச்சி நான் இங்கயே இருக்கென்.

வில்லிசேரிக்காரர் பேச்சை ஆரம்பித்தார்.

"சங்கரலிங்கம் ஏன் பேசாம இருக்கீரு. ஒம்ம தெருவுக்கு நீருதான் பொறுப்பு. வம்பாடுபட்டு விடுதல வாங்கிக் குடுத்தவுகளுக்கு நம்ம இதவாச்சும் செய்யணுமில்ல."

"பேசாம இருக்கிறதென்ன. ஊருக் கட்டுப்பாட்டுப்படி நடக்க வேண்டியது தான்."

அப்பையா ஓங்கிச் சொன்னார்.

"யோவ் என்னய்யா பெரிய ஊருக்கட்டுப்பாடு. நாம சொல்றதுக்கு எவன் மீறப் போறான்."

"அது சரி. நம்ம ஒத்துப் போறா ஊருல வேண்டாம்னு சொல்லப் போறாக."

வேதமுத்து எதையோ பேச வாயெடுத்தான். அதற்குள் யாரோ தடுத்து விட்டார்கள்.

அப்பையா திட்டவட்டமாய்ச் சொன்னார்.

"எல்லாருட்டயும் போயிச் சொல்லி வையும். ஓட்டு அங்க இங்க செதறக் கூடாது. ரெண்டு நாளையில நம்ம ஊருக்கு ஆளு வாரான்னு சொல்லி வுட்ருக்காக."

கந்தையாவுக்கு ஒரு சந்தேகம் வந்தது.

"எல்லாஞ் சரியே. வடக்கூருல போயித்தான ஓட்டுப் போடணும். மாடு மனுசரெல்லாம் வேல மெனக்கிட்டுப் போகும்மே."

குருசாமி நாயக்கருக்கு கோவம் வந்துவிட்டது.

"வேல மெனக்கிட்டா இப்பஎன்ன. ஒருநாளைக்குத்தான. சொதந்தரம் வாங்குறதுக்கு என்ன பாடு பட்ருக்க மாட்டாக. அதுக்காகன்னாலும் ஒரு நா வேல மெனக்கிட்டா குடியா முழுகிப் போகுது."

"மாமா ஒங்களுக்குச் சரி. விருந்தாளு மாதிரி எப்பயோ காட்டுக்குப் போறவுக. மத்த சனங்களச் சொல்லுங்க. ஏதோ கூடஇருந்து சொயராச்சியத்த வெலப்பேசி முடிச்சு வாங்கீட்டு வந்தவுக மாதிரி பேசுறீகளே. சொயராச்சியம் வாங்கிறதுக்கு என்ன பாடுபட்ருப்பாக? நம்ம மாதிரி காட்லயா போயி மாட்டுக்குப் பின்னால திரிஞ்சிருக்கப் போறாக? அப்பிடிமட்டும் சொல்லாதங்க. இவுக பண்ணின தொந்தரவு பொறுக்கமாட்டாம அவன் பட்டாளத்த ஏவி வுட்ருப்பான். அது அளவுக்கு மீறவும் நம்ம பட்டாளத்துக் காரங்க பாத்துட்டுச் சும்மாவா இருப்பாங்க. இதுக்கு மேல நம்மகிட்ட சச்சரவு வச்சுக்கிருத. பெறகு நம்ம ரெண்டு பேருக்குள்ள பொல்லாப்பு வந்து சேரும்னு சொல்லீருப்பான். இதென்னடா வம்பாய்ப் போச்சுனு அசலூரு நாயி மாதிரி வால மடக்கீட்டுப் போயிட்டான். என்ன இருந்தாலும் ஒண்ணுக்குள்ள ஒண்ணு இம்சப் படுறதப் பாத்துட்டா இருப்பான். இதுதான் ஊரு ஒலகத்துல நடக்கிறது. அதுல்லாம அவன் வாளால குடுத்து வாங்கினன். இவன் பாடுபட்டு வாங்கீட்டு வந்துட்டான்னு பேசிக்கிட்டு இவுக போயி ஓடி ஓடி வெறட்டி வாங்கீட்டு வந்துட்டாகளாக்கும். ஒரு கோழிக் குஞ்சியக் கூட வாயிட்டுச் 'சூ'ன்னு பத்திஉப் போகமாட்டங்குது. கைய ஓங்குறத்தான் ஓடுது."

குருசாமி நாயக்கர் மிரண்டு போனார்.

"அதென்ன கந்தையா அப்பிடிச் சொல்லிப் புட்டெரு. அத்தனபேரும் கஸ்டப்பட்டு செயிலுக்குப் போறதுக்கு வேதாவதியா."

"அப்பிடியில்ல மாமா. கஸ்டப்பட்டுப் போறுகன்னு ஏல மாட்டாமத்தான். அத்தன பேருஞ் சேந்து கண்ட கண்ட எடமெல்லாம் நொறுக்கிக் குமிச்சிருந்தா என்னேக்கோ விடுதல வாங்கியிருக்கலாம். இவுக போ போன்னு சொன்னுகளாம். அவன் போயிட்டானும். இத்தன வருசமா நாட்டக் கெட்டியாண்டு ருசி கண்டவன் லேசுக்குள்ள போவானுக்கும். ஐயோ கூத்து, என்னமோ சொன்னது கணக்கா இருக்கு. நரி வேட்டைக்குப் போற நாயி பின்னுலயே ஓடுனு அது குசுவக் குடிச்சது தான் மிச்சம். பக்கத்துல சுளிவாப் போயி சங்கக் கடிச்சுக் கொதறிப் போட்டுத் திருப்புன நாய்க்கு முன்னுல குசுவக் குடிச்ச நாயும் நாக்க நக்கீட்டு தோரணையா வந்துச்சாம். சரி அது எப்பிடியோ முடிஞ்சு போச்சு. ஓட்டுக்கு நிக்கப் போறது வேண்டிய ஆளுங்கிக. ஒரு மொகத் தாச்சனேக்கு வேணும்னுப் போடுவொம்."

எல்லோரும் அடங்கியிருந்தனர். வில்லிசேரிக்காரர் முகம் இஞ்சிகட்டிப் போனது. அப்பையா வார்த்தைகளே விட்டார்.

"எப்பிடியோ நம்மாளு தோத்துறக் கூடாது. அம்புட்டுத் தான்."

"இத மொதல்லயே சொல்லீருந்தா......

கந்தையா படக்கென்று எழுந்து கொண்டார். அதைத் தொடர்ந்து எல்லோரும் எழுந்தனர்.

குருசாமி நாயக்கர் வேகமாய்ச் சொன்னுர்.

"அண்ணக்கி ஆரும் வேலைக்குப் போக வேண்டாம். ஏலே வண்டாரி நீ கொஞ்சம் நிண்ணு போ."

காத்திருந்த வண்டாரியிடம் அவர் மெல்லச் சொன்னுர்.

"அடே அண்ணக்கி ஒங்களுக் கெல்லாம் இங்க சாப்பாடு, நாலுவகக் கறியோட. வெள்ளங்காட்டி சாப்பாட முடிச்சிட்டுத்தான் ஓட்டுப் போடக் கெளம்பணும்."

வண்டாரி பலமாய்த் தலையாட்டினுன்.

"இப்பயே போயி எங்க தெருவுல எல்லாருட்டயும் சொல்லீறென்."

○

கொட்டாரத்தில் எச்சிலேகளை அள்ளிப் போட்டு பருத்தி மார் வைத்துப் பரசித் துப்புரவாக்கி விட்டுக் கிளம்ப சக்கணனுக்கு நேரமாகி விட்டது. செய்த வேலைக்குக் கொடுத்த மிச்சச் சோற்றைத் தன் பாத்திரத்தில் வாங்கி தொழுக்காடிக்குள் பத்திரமாய் வைத்திருந்தான்.

ஆளோடு ஆளாய்ப் போய்ச் சேரவேண்டுமென்று அவசர மாய் எட்டுப் போட்டான். வயிறு கனத்துக் கிடந்தது.

ஆட்கள் ஒற்றையடிப் பாதையில் வரிசையாய் நடந்து சென்றனர்.

பாதைக்குக் கிழக்கே கருவ மர நிழலில் அழகிரியும் கந்தை யாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''என்ன சக்கணு பிந்திக்கிட்ட. ஒன்னத்தான அங்க தேடிட்ருக்காகளாம். ஊருக்குப் பெரிய மனுசன்தானப்பா மொதல்ல ஓட்டுப் போடனுமாம். காரியங்கெட்டுப்போச்சு போ. ஒனக்காகத்தான் சனங்க காத்துட்ருக்கும்."

கந்தையா சிரிக்கவில்லே.

''சாமிவுகளா, வெயிலுக்குச் சரியா புடிபடல. இந்தா ஒரு எட்டுல போயிச் சேந்துற மாட்டென். பக்கத்துல ஆரு அழகிரியா. ரெண்டு பேரும் பிரிய மாட்டீகளே. நீங்கள் ளாம் போயிப் போட்டுட்டு வந்துட்டீகளா.''

''ஆமா போட்டுட்டு வந்துட்டொம் சாணிய வக்காளி ஒன்னத் தேடுருகன்னு எங்களக் கேக்கான். வெரசனைப் போயித் தொல. விசுக் விசுக்குனு நீ அசஞ்சு போயிச் சேர் றதுக்குள்ள கெழவி சமஞ்சிருவா.''

சக்கணன் இன்னும் வேகமாய் உடலே அசைத்தான்.

கருவமர நிழலில் கிட்டத்தட்ட மதியம் வரை கந்தையா வும் அழகிரியும் குடும்பக் கஷ்டங்களேப் பேசிக் கொண்டி ருந்தனர்.

சாயங்காலம் அழகிரி நடுக்கடைக்கு வெற்றிலே வாங்கப் போனபோது நிறையப் பேர் கடைக்கு முன்னுல் கூடி யிருந்தனர். சங்கரலிங்கம் உறக்கச் சடைவை உதறிவிட்டு தராசுங் கையுமாய் சுறுசுறுப்புடனிருந்தார்.

''ஆழாக்கு மொச்சையும் ரெண்டு முறுக்கும் குடும்யா.''

கோபால் நாயக்கர் கடைச் சுவரில் சார்ந்து கொண்டே கேட்டார்.

வடக்குவீட்டு வைத்தியப் பண்டுவர், சுப்பையஞசாரி, சுள்ளக்காரச் சண்முகஞ் செட்டி இப்படி எல்லாரும் ஆளாளுக்கு கடையில் வாங்கிக் கொறித்து கொண்டிருந்தார்கள்.

இருக்கிற நிலைமையைப் பார்த்தால் சற்று உட்கார்ந்து போகலாமென்று தோன்றியது அழகிரிக்கு.

கோபால் நாயக்கர் சுப்பையஞசாரியை நோண்டினுர்.

''யோவ் ஆளு என்ன ரெம்ப முறுக்கா இருக்கீரு இண்ணக்கி. எவனும் எக்குத் தெப்பா மாட்டிக்கிட்டாஞ ஒம்ம கிட்ட. உருளக் கப்பச் செதுக்குன மாதிரி உருட்டி எடுத்துற மாட்டீரோ."

''ஆமா இவரு ரெம்ப நாணயம். உள்ளதச் சொல்லுங்க. இந்தப் பெயறுக்கும் முறுக்குக்கும் ஆர அசந்தீட்டு வந்தீக. அந்தக் காலத்துல ஒங்க அய்யாவுக்குக் குடுக்க வேண்டிய கடமோ என்னமோ அந்த மகராசி ஒங்க வீட்ல வந்து எறங்கீருச்சு. ஒங்க பாடும் கெட்டியாப் போச்சு.''

பண்டுவர் வாந்தியெடுப்பதுபோல் சிரித்தார். தொங்கு காதில் சிவப்புக் கடுக்கன் வில்லோடு குதித்தது.

''அப்பிடியா நெனச்சுக் கிட்டீரு. இண்ணக்கிக் கூட ஓட்டுக்கு நிண்ணு செயிக்கத் தெடமிருக்கு தெரியுமா."

"வாஸ்தவமான பேச்சு. இவுக பொட்டியத் தொறந்து பணத்த எடுத்து வீசுற வீச்சுல ஊரெல்லாம் நாறிப் போகாது பின்ன. ஏன் செயிக்க மாட்டீக. ஆமா தெரியாமத்தான் கேக்கென். பணப் பொட்டிக்குத் தொறவலு வச்சிருக்கீகளா.''

''என்னப்பத்தி அப்பிடியா நெனச்சுக் கிட்டீரு. என் செலவு ஒமக்கெங்க தெரியப் போகுது.''

''எங்க பாப்பொம், இங்க இருக்கிறவுகளுக்கு ஆழாக்குப் பெயறு வாங்கிக் குடுக்க முடியுமா ஒங்களால.''

சங்கரலிங்கம் ஆமோதித்தார்.

"சுப்பையா சொல்றது ஞாயம்."

''இவரு சொல்ற ஆழாக்குப் பெயத்துல நான் கொறஞ்சு போயிருவனுக்கும். பொடி மசுருதான். இந்தாய்யா பெயறு மட்டுமில்ல ரெண்டு சக்கரையும் குடு.''

கோபால் நாயக்கர் வீம்பில் சங்கரலிங்கத்துக்கு மறுபடியும் சுறுசுறுப்பு வந்தது.

பண்டுவர் பயறை வாங்கி மொக்கினார். அழகிரி முந்தியில் முடிந்து கொண்டான். கோபால் நாயக்கருக்கு விக்கியது.

''எம்மா தண்ணி கோலிட்டு வா.''

சங்கரலிங்கத்தின் மகள் பானைப்பக்கம் ஓடித் திரும்பினாள். வீடும் கடையும் ஒட்டி ஒட்டித்தான்.

''என்னம்மா ஒம்புருசனக் காணும்.''

''இப்பத்தான் கீழூருக்கு முறுக்குக் கொண்டு போயிருக்காக?''

''முறுக்கா அவன் கோழிக்குப் பெயந்தவனுச்சே. நீ தொணைக்கு போயிட்டு வரப்புடாது.''

அவள் உடலைத் திருகிக் கொண்டாள்.

''யோவ் சுப்பையா சங்கதி தெரியுமா ஒமக்கு. சங்கரலிங்கம் மருமகப்புள்ள முறுக்குக் கோர்வையத் தூக்கீட்டுப் போனானும். கோழி கொத்த வந்துருக்கு. அதுக்குப்பயந்து இவன் ஓட கல்லுத் தட்டி வுழுந்து முறுக் கெல்லாஞ் சிந்தி முட்டியில காயத்தோட வாரான்."

வைத்தியர் கிளறி விட்டார்.

''என்னமோ இண்ணக்கிச் செலவாகிப் போச்சு. எங்கிட்டாவது மழை யெறங்குதான்னு பாருங்க. ஓட்டுக்கு நிக்காகளே அவகள்ளாம் ஆயிரக் கணக்குல செலவழிச்சு என்னத்துக்கு.''

''அது கெடக்கட்டும் செலவு. ஓட்டுக்கு நிண்ணுருங்கவும் தான் யாவுகம் வருது. அவரு நம்ம ஊருக்குக் கூட எம்புட்டு ரூவாயோ குடுத்துருக்காரா மில்ல. ஆரோ சொல்லிக் கிட்டாக.''

''அதெல்லாம் நமக்கெங்க தெரியுது."

''அதுக்கில்ல அந்த ரூவாய ஊர்ப் பொதுவுல சேத்தாச் சுனு பின்னால ஒரு மடங் கிடங் கெட்டத் தோதாருக்கும் பாரு அதுக்காகத்தான்.''

''ஆரு போயிக் கேப்பாக.''

அழகிரிக்கு இந்த விஷயம் புதுசாயிருந்தது. காலையில் கூட்டத்தில் பேசியதற்கும் இதற்கும் சம்பந்தம் எதுவும் தென்படவில்லை. ஜனங்கள் சாப்பிட்டது பிறகு தான் நினைவுக்கு வந்தது.

''அந்தா சக்கணன் போறான்...அடேய் சக்கணா இங்க ஒரெட்டு வந்துட்டுப் போயேன்.''

சக்கணன் திரும்பி வந்தான்.

''இப்பிடி உக்காருடா...ஆமா ஓட்டுப் போடப் போனயே எப்பிடிப் போட்ட. என்ன சங்கதி.''

''போயாச்சுனு போடாம சும்மாவா வருவாக சாமி.''

''அதுல்ல போடுறது போடத்தான் போற, எப்பிடிப் போட்டன்னுதான் கேக்கென்.''

''போடுறதென்ன. மொதலாளி சொல்லிக்குடுத்தாக வீட்ல. அந்தப்படி போன ஒடன ஒரு சீட்டுக் குடுத்தாக. வாங்கீட்டு பின்னால கூடிப் போயி தாவாரத்து ஓட்டு மேல போட்டுட்டுச் செவனேன்னு வந்துட்டென்.''

கோபால் நாயக்கர் சண்முகஞ் செட்டியைப் பிடித்துக் கொண்டார்.

''யோவ் சம்முகம் பெலமாச் சிரிக்கீறே நீரு எப்படிப் போட்டீராம்.''

''நான் அப்பிடியில்ல. சீட்ட வாங்குனதும் விருவிருன்னு போயி பொட்டிக்குள்ள போட்டுட்டு வந்துட்டென்."

''இந்தத் தொறட்டெல்லாம் எதுக்குனு சொல்லித்தான் பேசாம சீட்ட வாங்கி மடியில வச்சுக்கிட்டு அருவமில்லாம நடைய வுட்டுட்டென். இந்தா பாரும் சீட்ட.''

மடிக்குள்ளிருந்து ஓட்டுச்சீட்டை எடுத்து மடிப்புக்களை யெல்லாம் விரித்துக் காண்பித்தார் கோபால் நாயக்கர்.

இடைவெளியிலேயே தங்கிப் போனது ரெம்ப நல்லதாய்ப் போயிற்று என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அழகிரி வேம்படிக்குப் புறப்பட்டான்.



கோயில் முக்கில் லாடங்கட்டிய மாடு கயிற்றுக் கட்டை உதறி எழுந்தது. மாட்டுக்காரன் நடைவிட்டுப் பார்த்தான். லாடச்சாமான்களைப் பொறுக்கி தோல் பையில் திணித்துக் கொண்ட சுப்பையனாசாரி பட்டறைக்கு நடந்தார்.

பட்டறையில் அழகிரி காத்திருந்தான்.

''இன்னேரம் எங்க வந்தாப்புல அழகிரி.''

''சும்மா வந்தென் சாமி. குத்தூசிக்கு கூர் மழுங்கிப் போச்சு. தட்டித் தொவச்சுக் கிறலாம்னு.''

''நான் கூட ஒங்கிட்ட வரலாம்னுதான் இருந்தென். பையில ரெண்டு மூணு ஓட்ட வுழுந்தாச்சு. ஆணி குத்திப் பிதுங்குது. ஒட்டுப் போட்டாத் தாவல.''

''அதுக்கென்ன செஞ்சிருவொம். ஏன், புதுப் பையி ஒண்ணு தச்சுக்கிறலாமே.''

"ஊரு இருக்கிற நெலவரத்துல புதுப் பையி தைக்கிருப்புல தான் இருக்கு.''

''அதான சாமி. எனக்குங் கூட கவலையாருக்கு. ஊடைக் கூட நம்ம பெழப்புலதான் கைவைக்கும் போலத் தெரியுது.''

''வைக்கிறதென்ன. நமக்குத்தான் வந்தது வென."

''ஊருக்குள்ள பஞ்சாயத்து போர்டு புதுசா மொளச்சாச்சு.

பெரிய மொதலாளி பெரசண்டாகியாச்சு.''

''அம்புட்டுப் பாடுபட்டதெல்லாம் அதுக்குத்தான்.''

''இப்ப என்னன்னு கரண்டு வருதுன்னு சொல்லி ஊரெல்லாம் பேச்சு தமுக்கடிக்கு.''

''எங்க போயி நில்லு, இந்தத் தெருவுக்கு ரெண்டு அந்தத் தெருவுக்கு மூணுன்னு அதே பேச்சுத்தான்.''

''கோயிலுக்கு பெரிய வெளக்காப் போடணுமாம்.''

''கையோட கெணத்துக்கெல்லாம் கரண்டு கொண்டு வரப் போறாகளாம். வீட்டுக்குப் போடப் போறாகளாம்.''

''அப்பிடின்னு கமல எறவ இருக்காது.''

''நம்ம ரெண்டு பேருக்குத்தான் சங்கடம்.''

''எல்லாக் கெணறுமா போட்றப் போறாக.''

''என்னருந்தாலும் நம்ம தொழிலுக் கொறஞ்சு போகுமே.''

அவர்கள் கோயில் முக்கில் வரிசையாய்ப் படுத்துக் கிடந்த கரண்டுத் தூண்களைப் பார்த்தார்கள். தெருக்களில் அங்கங்கே குழிகள் தோண்டிக்கிடந்தன.

''சக்கிலியக் குடிக்கு லைட்டு இல்லையா.

''வண்டாரி போயி பெரிய மொதலாளிட்ட கேட்டானாம். ஒங்க தெருவுன்னு குறிப்பாவா எழுதியிருக்கான். ஊருக்கு இப்புட்டுன்னு சாங்சன் பண்ணுறான். எங்கெங்க போடணுமோ போடுறாக. ஒங்க தெருவுக்கும் சீக்கிரம் கொண்டு வந்துருவொம். மொதல்ல நம்ம ஊருக்கே வாரது பெரிய காரியம். அதுக்கு மனுசன் என்னென்ன கஷ்டமெல்லாம் பட்ருக்கான்னு சொல்லியனுப்பிச்சிட்டாராம்.''

''ரெம்பப் பொருத்தமாத்தான் சொல்லிருக்காரு.''

கெணத்துல கரண்டு வந்தா வாலுதைக்கிற வேல மட்டுப்படும். அதுக்குத்தக்க வேற வேல பாக்க வேண்டியதுதான்.''

''எனக்கு கமலச்சாமான், கூன இப்பிடித்தான்.''

''ஒரேடியா கெட்டு நொந்தா போவாக.''

''கைகாலு நொண்டியாவா போச்சுப்பா. இல்ல, அதத் தான் மொடக்கீருவாகளா.''

''அதொண்ணுமில்ல. ஒங்களுக்கென்ன சாமி. மம்பட்டிக் காரச் சனங்களுக்கு வேல பாத்துக்குடுத்தாப் போதுமே.''

ஊருணிப் பாலத் தோரம் குண்டுங்குழியுமான கிடங்கு களில் கரம்பையடித்த வண்டிகள் நேர் பாதைக்கு வரும் போது மாடுகளின் முக்கலான இழுவையில் லம்பி பைதாக்கள் கடகடத்தன.

''என்னதான் கரண்டு வந்தென்ன, ஒழவடிக்கிறதையும், வண்டியடிக்கிறதையும் மாத்தீறப் போகுதா.''

''லேசுக்குள்ள முடியுமா சாமி.''

''பெறகு சொல்றயே.''

''கரண்டுத்தூணு அத்தனையும் வடக்கூருலருந்து வண்டி யிலதான் சொமந்து வந்தாகளா.''

''பாத சரியில்லன்னு அங்கயே எறக்கிப் போட்டுட்டாக ளாம்.''

''பாத மாதிரியா கெடக்குது. மயானம் போல இருக்கு.''

''கோயில்பட்டிக்கு வெள்ளாமய விக்கக் கொண்டு போற நேரத்துல மட்டும் செடி செத்தையக் கொத்தி செமார் பண்ணுவாக.''

''அவுக அவுகளுக்கு வலிக்கையிலதான் பண்ணுவாக.''

சில நாட்களில் கரண்டுத் தூண்கள் வேகமாய் நடப்பட் டன. ஆட்கள் பாட்டுக்களினூடே தூண்களைக் கயிறு போட்டு இழுத்து நிறுத்தினர். இழுவையில் சோர்வு வராமலிருக்க அவர்கள் அடிக்கடி பாடினார்கள்.

''ஏ காணுங் கோழி
-ஐலசா
கழுத்தில வெள்ள
-ஐலசா

ஏ செவத்த புள்ள
-ஐலசா
சிரிச்சிட்டுப் போரு
-ஐலசா

சிறிசுகள் ரெம்ப நாள் கரண்டுப் பாட்டுக்களைச் சொல்லித் திரிந்தனர். பாட்டுக்களை மறப்பதற்குள் புஞ்சைக் கிணறுகளில் கரண்டு வந்துவிட்டது.

பம்பு செட்டுக்கு அத்தனை பேரும் இரை போட முடியாத காரணத்தால் கமலை இறைவை இப்போதும் பரவலாய்க் கேட்கத்தான் செய்தது. பம்பு செட்டுப் போட்டவர்கள் கட்டுபிடியாகணும் என்பதற்காக தரிசு நிலங்களையும் வெள்ளாமை செய்யத் தொடங்கினார்கள். இதனால் மாட்டுத் தீவனத்திற்காக நாத்துப் போட்ட புஞ்சையிலெல்லாம் பாத்தி கட்டினார்கள். தண்ணீர் பாய்ச்ச அதிகம் ஆள் தேவைப்பட்டது. கூலி வேலைக்கு முன்பைவிட நிறையப் பேரைக் கூப்பிட்டு வேலையை விரைவில் முடிக்க வேண்டியிருந்தது.

விடியக்கால நேரங்களில் சக்கிலியக் குடியிலும் மம்பட்டி தட்டும் சத்தங்கள் கேட்கத் தொடங்கின. சம்சாரிகளிடத்தில் பகடைகள் தண்ணீர்ப் பங்கு சேர்ந்தார்கள். ஆணும் பெண்ணும் நிலங்களில் கிடந்ததைப் பார்க்க நேரும் அழகிரி வேம்படியில் முனங்கிக் கொள்வான்.

''என்னத்தக் கெட்டி அள்ளப் போருகளோ.''

அவனைக் கூட யாரோ பங்கு சேரக் கூப்பிட்டார்கள். அவனுக்கு இஷ்டமில்லை. திட்டவட்டமாய்க் கூறிவிட்டான்.

''அதுக்காக இந்த ஊர் தேடி வரல சாமி. எனக்கு தந் தொழிலப் பாத்தா வகுத்து மொற கழியும்.''

சக்கணனுக்கு இதெல்லாம் வேடிக்கை. அழகிரியிடம் அடிக்கடி சொல்வான்.

''பங்கென்ன பங்கு தாலியறுத்த பங்கு. வெளையிறதுக்கு முந்தியே தானியம் வாங்கி கடையில குமிச்சிட்டு, வெள்ளாம வீட்டுக்கு வரயில வெரலச் சூம்பீட்டு வருவான். காணுறதுக்கு துட்டு வாங்கி கடன ஏத்துவான். கொத்து வாங்கிற பெழப்புத்தான அதுலயும் இருக்கும்.''

அவன் பேச்சைத் தடுத்துச் சொல்ல அழகிரிக்கு வாயிருக்காது.



முத்துமாரிக்கு உடம்பெல்லாம் குதுகுதுத்தது. சரள் சுமந்த ஈரம் மேனியில் கசிந்திருந்ததும் சேர்ந்து அவ்வப்போது புல்லரித்த உணர்ச்சி புதுசாயிருந்தது. கிணற்றுக்குள் சம்மட்டி சுத்தியல் சத்தம் காதில் பெரிதாய் அதிர்வதை உணர்ந்தாள். சரள் சுமந்த மற்ற பெண்களெல்லாம் தன்னையே பார்ப்பதாய் எண்ணி வெட்கிப் போனாள்.

வேலைத்தனத்திலிருந்து விசுக் விசுக்கென்று போய் மஞ்சனத்தித் தூர் மறைவில் உட்கார்ந்து அவள் பேந்தப் பேந்த முழித்துக் கொண்டு வருவதையும் வந்து தான் நடமாடும் இடங்களில் தரையையே கவனிப்பதையும் கிணறு வெட்டுக் கொத்தன் பெண்டாட்டி கண்டுவிட்டாள்.

''என்னடி சங்கதி. ஒம்பாட்டுக்கு ஓடி ஓடிப் போயி உக்காந்துட்டு வாற?''

அவள் கேள்வியில் அர்த்தம் தொனித்தது.

''மோத்தரம் ஓயாம வருதும்மா."

முத்துமாரி தலை கவிழ்ந்தபடி தயங்கினாள்.

''ஆமா இந்த ஈரத்துக்குள்ள மோத்தரம் நெருக்கத்தானெ செய்யும். அட கழுத என்கிட்ட மறைக்கவா. நான் தண்ணியில தடம் பாப்பனுக்கும். பேசாம மரத்து எணல்ல போயி மொடக்கு. மத்தியானத்துக்கு வீட்டுக்குப் போகலாம். ஆரவாச்சும் கூட வரச்சொல்றென். கோட்டித்தனமா வடிச்சிட்டு அலையாத. அடியே அவகிட்ட ஒரு இரும்புச் சாமான எடுத்துக்குடுடீ.''

கொத்தன் பெண்டாட்டி முகத்தில் எதையோ கண்டு பிடித்துவிட்ட பெருமிதம். முந்திச் சேலையை அவிழ்த்து

லாத்திக் கொண்டிருள். கருத்த முகத்துக்கும் அதுக்கும் வடிந்து பரவிய மண்டித் தண்ணீரினூடே பல்வரிசை பளிச்சிட்டது.

பக்கத்திலுள்ள பெண்கள் வாயைப் பொத்திச் சிரித்தனர். முத்துமாரி முகத்தில் அழுகையின் அறிகுறி படர்ந்தது.

கிணற்றுக்குள் இரும்புத் தடிகளின் இடைவிடாத சத்தத் திற்கிடையில் கொத்தன் கத்தினன்.

“ஏ பொட்டக்கழுதைகளா கூட்டமென்ன போட்டுட்ருக்கீக. சொமையப் பாத்துச் சொமக்காம. ஏன் செத்த நேரம் உக்காந்து வெத்தல பாக்குப் போடுங்களேன். மூஞ்சியும் மொகறைகளும். கலியாண வீட்டுக்கு வந்தது கணக்கால்ல இருக்கு. எங்களுக்கு அவ இருக்காளே...”

மேலிருந்து கொண்டு அவன் பெண்டாட்டி இரைச்சலை இறக்கி விட்டாள்.

''அழகிரி மக பெரிய மனுசியாயிட்டா.''

முத்துமாரி சரேலெனப் போய் மரத்தடியில் முடக்கிக் கொண்டாள். வெயிலின் உக்கிரத்திலும் அவள் அங்க மெல்லாம் குளிர்ந்து கிடந்தது.

ஆவடைக்குப் பெருமை தாங்க முடியவில்லை. வீடுவீடாய் ஏறி “எங்க முத்து சமஞ்சிட்டா'' என்று சொல்லி அலுக்க வில்லை. வேம்படிக்கு ஓடி அழகிரியை எழுப்பினுள்.

''என்ன பேசாம உக்காந்துட்ட, புள்ள பூத்துப் போயி வீட்ல உக்காந்துருக்குது. செருப்புத்தாறு முக்கியம். ஓரெட்டுப் போயி கந்தையா மொதலாளிட்டக் கேட்டு நாலஞ்சு கெட்டுக் கம்மந்தட்ட புடுங்கிட்டு வா படப்புல.''

அழகிரி சுதாரித்து எழுந்து விரைந்தான்.

அதே கையோடு ஆவடை மச்சு வீட்டுக்குள் ஓடி அடுக்குப் பானையைப் பார்த்து எவ்வளவு கம்மம்புல் இருக்கிற தென்று பார்த்துக் கொண்டாள். அதை வைத்து ஒரு உத் தேசக் கணக்கும் போட்டுப் பார்த்தாள். இன்னொருபானைக் குள் அழிவு பருத்தியெடுத்து வாங்கிச் சேர்த்த கருப்பட்டி வட்டுக்கள் கிடந்தன.

பிறகு பெட்டியை எடுத்துக்கொண்டு அரிசி வாங்க நடுக் கடைக்குப் போனாள். இடையில் யாரோ போகிற போக்கில் கேட்டார்கள்.

''ஆவடை யென்ன நட பெலமாருக்கு.''

"ஆமசாமி மக திடுதும்னு உக்காந்துக்கிட்டா."

அதுக்கு மேல் பேச அவளுக்கு நேரமிருக்கவில்லே.

எல்லாம் நடந்து முடிந்த பின் பொழுதடையும் நேரத்துக் கெல்லாம் ஆவடை வீடு வீடாய்ச் சென்று கூப்பிடத் தொடங்கினாள்.

''எல்லாரும் வாங்க. முத்துக்குத் தண்ணி ஊத்தப் போரோம்.''

முத்துமாரி சொடிந்து போய் உட்கார்ந்திருந்தாள். அவள் மனசென்னமோ பலவாறு உளேந்தது. சக்கிலியக்குடியில் எத்தனேயோ விஷயங்களுக்கு அவள் வெற்றிலேயும் பூவும் வாங்கியிருக்கிருள். பக்கத்து வீட்டு வேலு மகள் கூட போனமாசந்தான் சடங்கானாள். அவளுக்கெல்லாம் ஊரிலிருந்து தாய்மாமன் வெற்றிலே, பூ எல்லாம் வாங்கிக் கொண்டு வந்து குச்சில் கட்டி விட்டுச் சென்ருன். சமைந்த மூன்ருவது நாள் பெரிசாய் நடந்தது.

உடனுக்குடன் இப்படி காரியத்தை முடிக்கிருர்களே என எண்ணியபோது மனங் கனத்தது.

அவளேச் சுற்றிலும் குமரிப் பெண்கள் அலுக்காமல் பேசிக் கொண்டிருந்தார்கள். அவள் எதிர்பார்த்தபடியே ஒரு சின்னப்பெண் விளேயாட்டாய்க் கேட்டுவிட்டாள்.

''இண்ணேக்கேவா குச்சிலுக் கட்டப் போருக. தாய் மாமன் வந்து மூணாம் நாளுக் கெட்டணும்.''

ஒருத்தி சின்னப் பெண்ணே அரட்டினாள்.

''ஆமா ஒனக்கு அனயம் தெரியும். பேசாம வாய வச்சிட்டுக் கெடயேன். தாய்மாமன் இல்லன்ன வெலேக்கு வாங்கவா. ஊரு நாட்ல தாய்மாமன் வச்சுப் பெழச்சே முடியுமா."

''முத்துமாரிக்கு என்ன கொறச்சல். அவ சின்னத்தா இருக்கா பெத்த தாய்க்குமேல. பெத்தாத்தான் தாயா.''

"ஆவடையா. அவளும் ஒண்ணு நீயும் ஒண்ணு."

''இந்தப் புள்ளைய வளத்த வளப்பு கடவுளுக்குத்தான் தெரியும்."

''முட்டக் குஞ்ச புட்டு வளத்தது மாதிரிதான்.''

"அவ ஆத்தா இருந்தாக்கூட அப்பிடி வளக்க முடியாது."

"ம் அவள எதுக்கு இப்ப நெனைக்கணும், பாவம் சீக்காளி. சிறுசுலயே வுட்டுட்டுக் கண்ண மூடிட்டா.''

''தெருவுல ஆரோ கேக்காக ஆவடையிட்ட, எந்தத் தாய் மாமன வச்சுக் குச்சிலுக் கெட்டப் போறன்னு. இவ சொல்ரு, சக்கிலியக் குடியில எல்லாருமே என் தம்பிக தாண்டின்னு."

"பெறகென்ன அதும் பொய்யா."

"நேத்துப்புள்ள இண்ணைக்கி உக்காந்துருச்சு.

''அதானம்மா நான் பாக்க துணிய உடுத்தீட்டு அலஞ்சது இண்ணைக் கென்னன்ன பெரிய மனுசியாயிருச்சு."

"பொம்பளப் புள்ளைக்கு வளத்தி அப்பிடித்தான்.''

''நீயேன் சொல்லேன், கண்ணுக்குட்டி மாதிரி முடியலாத் தீட்டுப் பள்ளிக் கொடம் போனது இப்பப் போல இருக்குது.''

"ஆவடையும் மூணு வருசம் அனுப்பிப் பாத்தாளா சும்மா விட்டாளா."

"சாவடிக்கு எதுப்புல தான் பள்ளிக்கொடம் அப்ப. இப்பத்தான வேற கெட்டியாச்சு மேற்க."

''வாத்தியாரு என்னமோ கள்ளிக் கும்மல அழிக்கிறதுக்கு பூச்சி புடிச்சிட்டு வந்தவருதான."

''அவரே தான் நல்ல மகராசன்."

"சக்கிலியக்குடியிலருந்து எந்தப்புள்ள படிச்சுக் கிழிச்சது."

''அதச் சொல்லு.''

"முத்துமாரிய அனுப்பிப் பாத்தான் அழகிரி. அவ்வளவு தான். வில்லிசேரி மொதலாளி வீட்லருந்து வாரத்துக்கு ஒரு எருமக் கண்ணப் பத்தீட்டு வந்துட்டான்.''

"நாலு மூணு வருசம் எருமைக்குப் பின்னால திரிஞ்சது புள்ள. கெடாரி செனையானதும் நல்ல வெலைக்குப் போச்சு."

"என்ன இன்னியும் ஆவடையக் காணும்.

"அழகிரி முன்னால உக்காந்துருக்கான்."

"ஆவட ஓடித் திரிஞ்சு வருவா."

"முத்துமாரியென்ன ஒரு மாதிரியா இருக்க."

இன்னும் தலைகுனிந்தாள் முத்துமாரி.

"அவளுக்கென்ன பெரிய பனுசி. புது வீடு கெட்டிக் குடுக்கப் போறாக."

"நெலாத்தான். அவபாடு கஸ்டமில்ல."

"முத்தத்த ஒட்டிக் கெட்ட வேண்டியதுதான்."

"மொதல்ல மொறகாரன் ரெண்டு பேரக் கூட்டிட்டு வரச் சொல்லுங்க."

"ஆவட வந்தாச்சா."

"ஆமாமா."

ஆவடை அவசரமாக அடுப்புக்குப் போனாள்.

"என்ன சாப்பாடெல்லாம் முடிஞ்சதா."

"முடிஞ்சாப்புலதான்.'

"அப்பன்னா ரெண்டு ஆம்பளையக் கூப்புடுங்க."

ஆவடை வெளியே வந்து அழகிரியிடம் இதைப் பற்றிச் சொல்லும் போது இருவர் மனசும் பொருமியிருந்தது. ஒருவருக்கொருவர் பறிமாறிக் கொள்ளாத உட்குமைச்சல் அழுத்திற்று.

அழகிரி சமாளித்துக் கொண்டு சொன்னான்.

"அதுக்கென்ன, மொறகாரன் ஆரவாச்சும் கூட்டிட்டு வந்து குச்சிலுக்கம்பப் புடிக்கச் சொல்லு. இல்லாறதுக்கு கருமலையில போயி முட்டுறதா."

அந்த நேரம் எதையோ பாடிக்கொண்டே வந்த ஊரிக் காலி மாட்டுக் கருப்பன் கிட்டத்தில் வந்து உட்கார்ந் தான்.

''என்ன மாமோவ், வீட்டுக்குள்ள கூட்டமாக் கெடக்கு. ஆவடையத்த கொழந்த பெத்துருக்கா.''

சிரிப்பு முற்றத்திலிருந்து வீட்டுக்குள் நுழைந்து பெருகியது. அழகிரி குனிந்து கொண்டு சிரித்தான்.

விஷயத்தை யாரோ கருப்பனிடம் சொல்லவும் அவனுக்கு சுதாரிப்பு தாங்கவில்லை.

''அடிச் சக்கன்னானாம். அதான் உள்ளருந்து தாளிச்சம் வாட மூக்கத் தொலைக்குதா. நடக்கட்டும் நடக்கட்டும். அப்ப இண்ணைக்கி மேகலக்குடிக்குச் சட்டி தூக்க வேணும். முத்து புண்ணியத்துல ஏப்பம் பெரிசுதான்.''

ஒருத்தி வெளியே வந்து யோசனை சொன்னாள்.

''ஆரவோ கூப்பிடணுமாக்கும். கருப்பனே போதாதா காரியத்த முடிக்க. எல்லாம் ஒரு சாத்திரத்துக்குத்தான.''

''ஆமாமா. அதுஞ்சரிதான்.''

கருப்பன் அழகிரியிடம் கேட்டான்.

''என்ன மாமா என் பேரு அடிபடுது சாப்பாட்டுக்கா.''

''சும்மா இரும். போயி முத்தத்துல நாலுகம்பு வரிஞ்சு குச்சிலக் கெட்டும்.''

கருப்பன் வெறும் வயிற்றிலும் பூரித்துப் போனான்.

''கொஞ்சம் இருங்க, ஓடிப் போயி தடிவாங்கீட்டு அம்பிடியே சித்திரனையும் கூட்டீட்டு வந்துறென். மச்சு வீடு மாதிரி கச்சுனு கெட்டிப் போடுறென். இதுக்குத்தானா.''

உள்ளே பெண்கள் கசகசத்தனர்.

''புள்ளைக்குத் தலைக்கு ஊத்துங்க வெருசனா. வெத்தலக் கட்டு பூவ எடுத்து வையுங்க.''

கொஞ்ச நேரத்தில் சக்கிலியக்குடியில் மூன்று முறை குரவைச் சத்தம் ஓங்கியொலித்தது.

கருப்பன் இரண்டுதடவை வெற்றிலை போட்டான்.

முகமெல்லாம் மஞ்சளாய் பொட்டும் பூவுடன் கம்மந்தட்டைக்குச்சிலுக்குள் முத்துமாரி ஒன்பது நாள் பண்ணாங்

குழியாட்டத்தை மனசில் போட்டுக்கொண்டே கால் வைத்தாள்.

மகளுக்குத் தண்ணீர் ஊற்றி கையில் பண்ணரிவாளும் கொடுத்து குச்சிலுக்குள் அனுப்பி வைத்தபோது ஆவடை பெரு மூச்சு விட்டுச் சிரித்தாள்.

போகிற போக்கில் ஒருத்தி சொல்லிக் கொண்டு போனாள்.

''இன்னிப் பாரு குச்சிலும் பொசுக்குறமட்டும் விடிஞ்சதுல ருந்து அடையிற வெரைக்கு புள்ளீக சத்தமும் ஆட்டமும் ஓயாது.''

''ஆவட நாளைக்கே வீடெண்ணி கம்புமாவு இடிச்சுக் குடுத்துருவாளே.''

அதிலிருந்து வீட்டுக் கொருநாள் தொடர்ந்து சோறு பொங்கிப் போடுவார்கள். பலகாரம் பட்சணமெல்லாம் முறைப்படி வரும்.



''அய்யா உஞ்சார பூச்சம்மா.''

''அவ்வு''

கந்தையாவின் மூன்றுவது பெண் பாவாடையைத் தரையில் பரசிக்கொண்டே வீட்டிற்குள் வெடுக்கென்று போய் விட்டது.

அழகிரி உள்ளே மெல்ல நுழைந்தான்.

தொழுத்தாழ்வாரத்தை யொட்டிய திருணையில் கந்தையா அசந்து சாய்ந்திருந்தார்.

''ஆரது அழகிரியா வா வா.''

அவன் வெற்றுக் காடியோரம் மாடுகட்டும் கல்லில் தலைத் துண்டை அணைக் கொடுத்து உட்கார்ந்தான்.

“சாமி ரெம்ப அசந்திருக்கீக.''

நீளவசத்துக்கு கிழமேலாய் வெறிச்சோடிக் கிடந்த காடியைப் பார்த்துக் கொண்டிருந்தார் அவர். காடிக்குள் கோழிகள் அடித்தாடையைப் பந்து கட்டிக் கொண்டு சொகமாய்ப் படுத்துக் கிடந்தன. முன்னால் துவாரங்களுடன் பத்துக்கல்கள். தெற்கே ஓராள் இடுப்பளவுக்கு ஆட்டுரல் குழவிப் படுக்கையோடு.

‘‘என்னடா சொன்ன அசந்திருக்கனு.”

‘‘நெசந்தான்.''

“இப்பத்தான் மதியக் கஞ்சி கரச்சு ஊத்துனென். அதான் கொஞ்சம் மக்குப் படிச்சாப்புல இருக்கு. கொஞ்சம் கஞ்சி குடிக்கயாடா. ஊறுகாதான்.''

‘‘கொஞ்சம் முந்தித்தான் நானும் குடிச்சென். எனக்கு பட்ட வத்தலும் மொட்டக் கூழும் இனித் தாங்காது.”

‘‘இண்ணக்கி மரத்த வுட்டு வந்துட்டயே வேல ஜாஸ்தி இல்லையா.''

“வேலையில்லாமயா. மேலத்தெரு மொதலாளி வீட்ல கொத்து பாக்கி நிண்ணுச்சு. கேட்டுட்டு வரலாம்னு கெளம்புனென். இண்ணக்கி வெள்ளிக் கெழம குதுலுக்குள்ள எறங்கப்புடாதுன்னு சொல்லீட்டாரு. அப்பிடியே இங்க வந்துட்டு……”

‘‘அப்பையாவா.”

‘‘ஆமா.''

‘‘அந்தக் காணியும் நீ தான் பாக்கயா.”

“பக்கத்து வீட்டுல கந்தன் ஒருத்தன் இருக்கான்ல. அவனுக்குப் பாத்தியம். நான்தான் பாக்கென்.''

‘‘குதுலுக்குள்ள எறங்கலன்ன வீடு பூரா மூட கெடக்குதே அதுலருந்து குடுக்க வேண்டியது தான. அய்யாவுக்கு வகுத்துல பசிச்சாத் தெரியும். எந்த வருசக் கொத்து.''

“போன வருசத்துக்கு.''

‘‘அப்ப நீ தாவல போலருக்கு. எனக்கு மூணும் வருசப் பாக்கியே நிக்குது. அண்ணைக்குக் கேட்டுப் போறென்.

பெரிய பண்ணையாரு மாதிரி மல்லாந்து கிட்டு நாளைக்கு வந்தாத் தாவலன்னு சொல்ருன். என்னடா சவத்துக் கெட்ட பொழப்பு. கொத்துக்குடுன்னு தொன்னுந்துக் கிட்டு அலையிறதுக்கா இந்தக் கம்பத் தூக்கீட்டு அலைய ணும். அப்பிடி அலையிறதக் காட்டி ஒன்னமாதிரி உக்காந் துறலாம் போலருக்கு.''

"ஆமா நீங்க வேற போட்டிக்கு வரப் போறீகளாக்கும்." அவர் சிரிப்பதற்காகச் சொல்லி வைத்தான் அவன்,

''லெச்சிமி வெத்தல கெடந்தா எடுத்துட்டு வா.''

வீட்டுக்குள்ளிருந்து ஒல்லியாக அவர் சம்சாரம் வெற் றிலைப் பெட்டியுடன் எட்டிப் பார்த்தது.

''அழகிரி எப்ப வந்தாப்புல.''

"இப்பத்தான் தாயி.

கந்தையா வெற்றிலைப் பெட்டியை வாங்கித் திறந்து ஒரு சுருள் எடுத்து அவனிடம் நீட்டிஞர்.

''அதுல எனக்கென்ன ஆத்தரம்ஞ, எங்கிட்ட வந்து தோர ணையக் காட்டுருன் பாரு. சரி ஒரு மனுசன் விடிஞ்சதுல ருந்து அடையிறது வெரைக்கும் நாயா அலேயிருனே அதுக்காக வாச்சும் உண்டான கொத்த வுட்டெறிஞ்சிற வேண்டாமா. அதுல்லாம மப்புப்பண்ணுஞ எரிச்சலா ருக்குதுல்ல.''

''பெரியாளாகியாச்சு. எல்லாம் அப்பிடித்தான் இருக் கும்.''

''ஒண்ணுமட்டும் மனசுல வச்சுக்கோ. கம்பக் கக்கத்துல தூக்கீட்டு அலையிற வெரைக்குத் தான் அவன் கட செல் லும். அதவே அவன் மண்டைக்கு நேர ஓங்கயில என்ன செய்வான். வகுத்துல அடிச்சா அதுதான வழியாத் தெரி யுது."

''ஏன் நீங்க அவரு பிஞ்சைய சத்தங்காட்டாமப் போட்டா தன்னுல வழிக்கு வந்துட்டுப் போருரு.

''நீ சொல்றதுதான் அதுக்கு வழி. ஒரு நா குருசாமி நாய்க்கன் பட்ட பாட்டப் பாக்கணும். என்னய்யா நீ காத் துத்தாஞ எனக்கு வெள்ளாம வரணும், தன்னுல வந்துட்

டுப் போகுதுன்னுன். வரும் வரும்னு மனசுல வச்சுக்கிட்டு பொஙகலண்ணேக்கு கண்ண மூடிக்கிட்டென். ரெண்டு பெய நெற புடிச்சிட்டான். தட்டாஞ் செடியெல்லாம் காளி. ரெண்டாம் பக்கம் விழுந்தடிச்சு ஓடியாருனே.

''அப்பிடிச் செய்யிங்க. ஒரு நாளேக்கு இவரும் தன்னப் போல வழிக்கு வருவாரு.''

''மனசு கேக்க மாட்டங்குதேடா. அந்த எடத்துல போயி நிண்ணுச்சுனு அவன் பிஞ்சங்கிற யாவுகம் கூட அத்துப் போகுது. பூரிவம் பூரிவமா வச்சிருந்த நெலமாச்சே. ரெண்டு கருது சாஞ்சு கெடந்தாலும் எடுத்து முடுஞ்சு வச்சிட்டுப் போகச் சொல்லுது.''

''அதுக்கென்ன செய்யிறது சாமி. நம்ம எடுத்துக்கிட்ட எடுப்புஅப்பிடி. அனுபவிச்சுத் தான ஆகவேண்டியிருக்கு.''

''பிஞ்சையான பிஞ்சையடா. தாயிளி ஒண்ணும் ரெண்டு மாக் குடுத்து கணக்க ஏத்தி பாம்பு தவளேய நமட்டுனது மாதிரில்லடா பிஞ்சைய விழுங்கீட்டான். மனசு என்னமா ருக்கு தெரியுமா.''

வீட்டுக்குள் அவர் சம்சாரம் சட்டி பானேகளுக்கூடே புழங்கும் அருவம் கேட்டது.

ஒரு பெண் தண்ணீரெடுத்து ஊற்றியது. அதற்கு பருவ மடையும் வயசு. இன்னெரு பெண் சுளகில் எதையோ புடைத்துக்கொண்டு உள்ளே போனது. இரண்டு சிறு பெண்கள் வாசல்படியில் புளியமுத்தைக் கல்லால் தட்டிக் கொண்டிருந்தன. நொறுங்கிய முத்தை வாயில் போட்டு அதன் துவர்ப்பில் லயித்து எச்சூறிச் சுவைத்தன.

அவரென்ன சும்மா காமாசோமா பிழைப்பா நடத்தினுர். காடுகரையில் வெயிலுக்கு நின்றிருப்பாரா. கையில் தக்கபடி சம்பாத்தியம் இருந்தது. பிள்ளேகளே விட நிறையத் தீனி தின்பார். கிருதா மீசையை முறுக்கி விட்டு தெருவில் நடந்து வந்தால் நெஞ்சு நிரக்க மயிர்ச் சுருளுடன் உத்தரம் மாதிரி வருவார் கபீரமாய்.

நடுக்கடைக்கு வந்து கை நிறைய ஒரு குத்து வெற்றிலே வாங்கிப் பிடித்து ஒரு ஏந்தில் வேட்டியைத் தூக்கிக் கட்டி கெத்தென்று திரும்பினுல் அந்தத் தோரணே அனேகம் பேர் மனசைக் கவ்வும். விளேயாட்டாய்க் கேட்டார்கள்.

''கந்தையா நேர பட்டறையிலிருந்து வாராப்புலயா. முதுக நல்லாத் தட்டி நீட்டியிருக்கானே.''

கோபப்படாமல் பதில் சொல்வார்.

''நீயும் தாயிளி நெல்லுச் சோத்த மூணு தேரமும் மூக்கு முட்டத் தின்னுட்டு வகுத்தத் த ட வி த் த ா ன் பாக்க. அதென்னடான்னு குண்டிதான் ஒரு நாளைக் கொருக்கா தேஞ்சிட்டுப் போகுது. அதுக்கென்ன செய்யிறது.''

நல்ல முறையில் பிழைத்தவர்தான். போதாத காலத் துக்கோ என்னமோ மலையடிவாரத்தை ஆயிரக் கணக்கில் போட்டு வாங்கி அது காணுமல் உள்ளூருக்குள் வட்டிக்கு நோட்டெழுதி வாங்கிக் கடைசியில் காடுகரையெல்லாம் விற்க வேண்டிய நிலைமை. குடும்பம் ரெம்ப நொடித்து விட்டது.

வீட்டில் நாலும் பெண்கள். லட்சுமிக்குத் தளராத மனசு.

"அதுக்கென்ன அழகிரி. எங்க அய்யா வீட்டவே எடுத் துக்கோ. ஏழு பொம்பளைக நாங்க. எல்லாருக்கும் கலி யாணத்த முடிச்சுக் கரையேத்தலயா.''

அது திடமான நம்பிக்கையுடன் சொல்லும். அழகிரி தலை யாட்டுவான்.

கந்தையா மட்டும் திருணையிலருந்து ராகம் போட்டுச் சொல்வார்.

''நலி ரெண்டெட்டு.''

அவர் ராகத்துக்கு நாலு பெண்களும் எட்டுக் குறுக்கம் நிலத்தை வி ழு ங் கி க் கொண்டிருக்கின்றன என்று அர்த்தம்.

ஆனல் அந்த எட்டுக் குறுக்கத்தையும் மிச்சம் வைக்காமல் சகட்டு மேனிக்கு விற்றுத் தொலைத்து விட்டார்.

மேலக்காட்டில் ஓடையோரம் நாலு குறுக்கம் கரிசல் சதுர மாய்க் கிடந்ததே அதெல்லாம் லேசுப்பட்ட நிலமா. போட்டது போட்ட மானக்கி விளையும். கம்பு விளைந்தால் கருது பொறுக்க ''ஒசந்த பொம்பளைகளா வாங்க'' என்று விளையாட்டாய் ஆள் கூப்பிடுவார். எந்தச் சேரலி கிடந்

தாலும் போட்டுவிட்டு ஆவடை முதல் ஆளாய்க் கிளம்பு வாள்.

அப்பேர்ப்பட்ட நிலமெல்லாம் தங்கவில்லே. கிரையம் எழுதிக் கொடுத்து விட்டு வந்து சொன்னார்.

''ஒறக்கச் சடவுல புளியங் கொம்புனு நெனச்சு முருங்கக் கொப்பப் புடிச்சிட்டென். வெனய அனுபவிச்சுத்தான ஆகனும். இந்த நாலு குறுக்கத்த மட்டும் வச்சு என்ன செஞ்சிறப் போறென். ஆகமான தோட்டக் காடெல்லாம் கையக் காட்டியாச்சு. மூணு ஜோடி மாடு வண்டி கூட கடந்து போச்சு. இதுமட்டும் தாங்கீறப் போகுதா. கொளமே ஒடஞ்சு போகையில கொம்பட்டிக்காயா தாம ரிக்கப் போகுது. அவனுக்குக் குடுக்க வேண்டிய வட்டியே நெலத்த மேஞ்சிரும் போலருக்கு. எங்க பெயகள்ள கெட் டவனக் கை தூக்கி வுடணும்னு எவனுக்காச்சும் மனசு வராது. கூட இருந்தே குழி பறிப்பான்.ஏலே, சொத்துச் சொகம் காசுன்னு மனசுல ஓடயிலதான் மனுசனுக்கு நிம் மதியே கெட்டுப் போகுதுடா. ஆசதான் கொஞ்சமா வருது. அப்பிடியில்லாம மலேயடி வாரத்தக் கெட்டி யழு திருப்பனு. எல்லாம் போயிருச்சுனு அன்னுடு ஒழச்சிட்டு நிம்மதியா இருக்கலாம் போலருக்கு. எனக்கென்னடா ஒடம்புல இருக்கிற தெம்புதான் இப்ப சொத்து."

அழகிரி பழைய பழைய நினேவுகளில் உளேந்து போனுன். கந்தையா காவல் கம்பு தூக்க ஆரம்பித்ததும், லட்சுமி கூலி வேலேக்குக் கிளம்பியதும் அவன் மனசில் குத்தி வாங்கியது. லட்சுமியுடன் வேல செய்துவிட்டு வந்து ஆவடை கதைகதையாய்ச் சொல்லிக் கண்ணீர் விடுவாள்.

அதற்குப் பிறகுதான் ஊர் எவ்வளவு மாறிவிட்டது. பழைய மணலூரத்து மாதிரியா இருக்கிறது.

கந்தையா கண்ணேச் சொருகி பட்டைகளே விடுத்தார். ஊமைக் காயத்துக்குச் சாணி ஒத்தடம் கொடுத்த மாதிரி நிறைய நிறைய ஆறுதல்களே உள்ளே தேடிக்கொண்டி ருந்தார்.

''சரி உண்டான காசக் குடுத்தாக்கூட தானியம் வாங்கிப் போடுவன்ல. அதுங் கெடையாது. கூட்டத்துல மட்டும் பேசுருன். ஊருக்குக் கண்டிப்பா கொண்டிக் காவலு வேணும்னு.''

''என்னமோ சாமி நம்மதான் தாந்து போக வேண்டி யிருக்கு,''

''அது சரிதான் வருசம் பூரா தலேயில ஏறி மோண்டுட்டே இருப்பான். நம்மளும் தலமுழுகிக் குளிச்சிட்டே இருக்க ணும். இவளு தாங்கப் போருன். நம்ம மனுசனுக்குக் கையுங்காலுமா இல்லாமப் போச்சு...லெச்சுமி வெத்தலப் பொட்டிய எடுத்துட்டுப் போ.''

அவர் படக்கென்று எழுந்து உரலோரமிருந்த தண்ணீர்ப் பானேயில் வாய் கொப்பளித்தார்.

''சரி கெளம்புவமாடா. இங்க இருக்கிறதுக்கு அப்பிடியே காட்ல போயித் திரியலாம்.''

மூலேயிலிருந்த கம்பை எடுத்து இடுக்கிக் கொண்டு வாச லோரம் செருப்புக்குள் காலேத் திணித்தவர் படக்கென ஞாபகப் படுத்திக்கொண்டு சொன்னுர்.

''லெச்சுமி அவன் வந்தது மறந்துட்டு கெளம்பியாச்சு. நீயும் நெனேக்கல. அவன் கொத்து வாங்கலேயாம். இண் ணேக்கு ஏலே–நீயும் கூறுகெட்டுப்போயி பின்னுல வாரயே பேசாம கம்மம் புல்லுருந்தா வாங்கீட்டுப் போ."

லட்சுமி தவறு செய்ததுபோல் வீட்டிற்குள் ஓடியது. அழ கிரி குரல் கொடுத்தான்.

''இருக்கட்டுந் தாயீ. ஆவடைய வரச் சொல்றென்.''

லட்சுமி திரும்பி வந்து அவசரமாய்ச் சொன்னது.

''ஆவடைக் கெங்க வேல தீரப் போகுது. கையோட வாங் கீட்டுப் போளு குத்திப் போடலாமே.''

அழகிரி தலேயைச் சொறிந்தான்.

''வீட்ல பான நெறையா கம்பு வச்சிருக்தான் செய்ரு தாயி. அதக் காச்சமாட்டாளாம். மாவிடிக்கணுமாம். முத்துமாரி உக்காந்துக்கிட்டா. அவளுக்கு வேல தீரல. நானும் பேச்சு வாக்கில சொல்ல அயத்துப் போனென்.''

கந்தையா விஷயங் கேட்டுத் திரும்பினுர்.

''ஒனக்கு அறிவிருக்காடா. இதக்காட்டி முக்கியமான காரியம் என்ன. ஒத்தப் புள்ள பெரிய மனுசியாயிருக்க."

அது மறந்து போச்சோ. போயி ஆவடைய ஒடனே வரச் சொல்லு.''

லட்சுமி எதுவும் பேசவில்லே. ஈரத்தில் திரிந்த மூத்த பெண்ணைக் கூர்ந்து கவனித்தது.

அழகிரியும் கந்தையாவும் தெருவில் நடக்கத் தொடங்கினர்.



அன்றைக்கு விடிந்தும் விடியாமல் தூற்றல் விழுந்து வேலையை மெனக்கிட வைத்திருந்தது. யாருமே வேலைக்குப் போக முடியவில்லே. நல்ல பாதையில் வண்டியடித்தவர்களும் மேட்டுக் கிணற்றில் கமலே இறைத்தவர்களும் தவிர மற்றபடி மாடுகளெல்லாம் வீட்டில்தான் கிடந்தன.

அழகிரி கூட வேம்படியில் உட்கார முடியாதபடி சேறு பட்டிருந்தது. அவன் ஆவடையைப் பார்த்துக் கேட்டான்.

''ஒரு பாக்குச் சில்லும் வெத்தலேயும் குடும்மா, இன்னைக்கு வேல மெனக்கிட்டுப் போச்சே.''

''இவன் ஒருத்தன். சம்சாரியெல்லாம் வீட்ல கெடக்காக நமக்கென்ன வந்து போச்சு.''

ஆவடை மடியிலிருந்து வெற்றிலே எடுத்துக் கொடுத்தாள்.

"முத்து எரவாரத்துல போயலப்பட்ட இருக்கும் எடுத்துட்டு வாம்மா."

"ஆமா இவுக வெத்தல போடுறதுக்கு ஊருபட்ட ஆளெல்லாம் வேலே ஏவீட்டு. நீ பேசாம இரும்மா."

ஆவடை மூஞ்சியை நொடித்தாள்.

இதற்குள் பானேசட்டி கழுவிய முத்துமாரி கையைச் சேலேயில் துடைத்துக் கொண்டு போய் புகையிலே எடுத்து வந்து கொடுத்தாள்.

''இதுக்குள்ள ஒம்புள்ள தேஞ்சு போரூளோ.''

அழகிரி முத்துமாரியைப் பார்த்துக் கண்சிமிட்டினான். பிறகு தண்ணீர்க் கிணற்றை நோக்கி நடந்தான்.

கிணற்றை யடுத்த பொட்டலில் அனேகம் பேர் இரண்டு கையாக உட்கார்ந்து மனைபோட்டுத் தாயம் விளையாடினார்கள். இன்னொரு பக்கம் சக்கணனும் சித்திரனும் பதினைந்தாம் புள்ளி போட்டனர் சிறுசுகள் கோடு கீச்சிகுந்தி விளையாடினர்.

தாய விளையாட்டுத்தான் மத்தியானம் வரை நடந்தது, அழகிரி ஒரு ஓரம் உட்கார்ந்து ஊரிக்காலி மாட்டுக் கருப்பனின் தூக்கலான சத்தத்தில் மூழ்கியிருந்தான்.

"ஒருத்தாயம்...... ஒருத்தாயத்தோடயா போற. ஒருத்தாயம் ஓராரு...அடுத்து ஒரு மூணக் கேளுடா கருப்பா... மூணு. ஆறுக்கு மூணு செமிச்சது அசராம எறக்கு நாய."

கருப்பன் சுதாரிப்புக்கு சக்கணன் முனங்கினான்.

''தாயிளி அவன் தொண்டையில் தூரு மொளைக்க என்ன மாக் கத்துருன் பாரு, பீ வாராப்புல.''

சித்திரன் பாண்டு உடம்பைக் குலுக்கிச் சிரித்து பிறகு நினைத்துக் கொண்டான்.

'இது அவன் காதுல வுழுகாறது நல்லதாப் போச்சு. கேட்டுக் கிருச்சோ அம்புட்டுத்தான். ரெண்டு பேரும் ஒஞ்சுக்கிறமாட்டாக.'

தாய விளையாட்டு மனையேறும் தறுவாயில் இருந்தது. அப்போது அய்ந்து வந்து நின்ற ராசு முகம் சுண்டிப்போயிருந்தார்.

அழகிரி இதைக் கவனித்துவிட்டான்.

''சாமி வாங்க. என்ன ஒரு வடியா இருக்கீக.''

''வேற ஒண்ணுமில்ல. மாடு ஒண்ணு தவறிப் போச்சு.''

மனையேறப் போன நாய் தாயக்கட்டத்தில் அப்படியே நிற்க எல்லோரும் மொலாரென்று எழுந்தார்கள்.

''என்னசாமி திடீர்னு இப்படிச் சொல்றீக. எந்தக் காள? எப்பிடித் தவறிப் போச்சு?''

''மாடு சும்மாதான கெடக்குதுனு கம்மாக்காட்ல வண்டிப் பாரத்துக்குப் பத்தீட்டுப் போயிருக்கான் சம்பளகாரன். அந்தச் செவலையும் மயிலையும் கம்மாக்கர ஏத்தத்துல வச்சு மண்டி போட்டு மூஞ்சியத் தரையில ரோசி செவல அப்படியே மண்டையப் போட்ருச்சு.''

ராசு அதற்குமேல் நிற்கவில்லை. மன்னை கட்டிப் போய் நகன்று விட்டார்

''அடடா செவலையா, வலவனுக்கு வலுத்த போக்குப் போகுமே.''

''நானும் பார்த்துட்டுத்தான் வாறென் அவருக்கென்னமோ செவலன்னு தங்கமாட்டாங்குது. அஞ்சாறு வருசத்துக்கு முந்தி இப்பிடித்தான்......''

"ஆமா இவுக சோசியம் சொல்ல வந்துட்டாக சோசியம்... பூளக் கொழுப்பாக்கும் வண்டி பத்துனவருக்கு. பணம் பெத்த மாட்டப் பூட்டிக்கிட்டு வழுக்கத் தரையில பார மேத்தி அடிச்சா எப்பிடி. மாட்டுக்கென்ன எம்புட்டு வேணும். லேசா வழுக்குனாப் போதுமே. ஒத்தைக் கொத்த புடிக்கணும்னாலும் ரூவா அத்துட்டுப் போகுமே."

''வாங்கப்பா அஞ்சாறு பேரு மொதலாளி கிட்டப் போயி மாடு செத்ததக் கேட்டுட்டு வந்துருவொம்.''

''ஏலே சாமான் சட்டுமுட்டப் பொறுக்கி வையிங்கடா.''

ஆளுக்கு முந்திப் புறப்பட்டான் அழகிரி. காணிக்காரனு யிற்றே.

மேற்கே பொழுது திரும்பும் நேரத்துக்கெல்லாம் சாமான் கள் தயாராயின. மூங்கில் கம்பு, தகர டப்பா, இரண்டு மூன்று அரிவாள் மணைகள் எல்லாம் கிளம்பின. எல்லோரும் அறுப்புக் கத்தியையும் எடுத்துக் கொண்டனர்.

''சரி கௌம்புவமா?''

கிணற்று விளிம்பில் அரிவாள் மணையைத் தீட்டிய மாட சாமி கேட்டான்.

''போக வேண்டியதுதான். மாடு எங்க கெடக்குதாம்.''

''அது போகணுமே கம்மாக்கரச் சரிவுக்கு.........ஏலேய் சித்திரா நீ இப்பவே பையாப் பையா நடைய வுடு. அப்

பத்தான் போயிச் சேரமுடியும்.

''நடங்கப்பா அப்பிடியே இருந்தா சோம்பிப் போயிரும்... சக்கணனக் காணும்?''

''அந்தா வாரான் பின்னால.

அழகிரி எல்லோருக்கும் பிந்தி பல யோசனையில் நடந்து கொண்டிருந்தான். அவனுக்கு வில்லிசேரி முதலாளியின் இஞ்சி கட்டிய முகம் அடிக்கடி நினைவுக்கு வந்தது. கடைசியில் அவராகவே ''அத எப்பிடியோ பண்ணுங்கடா'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் வீட்டுக்குள்.

களத்துமுக்கில் அப்பையா உட்பட நிறையப் பேர் சங்கதியைக் கேட்டனர். சிலர் கவலைப்பட்டார்கள். ஆனால் அப்பையா மட்டும் கலகலப்பாய்ச் சொன்னார்.

''ஒங்களுக்கெல்லாம் இண்ணைக்கி வளந்தான். சக்கிலியப் பெய அத்தன பேரும் மாட்லதான் கெடப்பான்.''

அழகிரிக்கு மாடறுக்கப் போகப் பிடிக்கவில்லை. அதை எடுத்து நல்லபடி அடக்கம் செய்யலாம் என்று தோன்றியது. அதை யாரிடம் சொல்வது. எல்லோரும் கேலி செய்வார்கள். முதலில் கருப்பனுக்குச் சொல்லி முடியாது.

கருப்பன் வழியில் எச்சைத்துப்பிக் கொண்டே நடந்தான். எவனோ துடுக்காய்க் கேட்டான்.

''ஏலே என்னலே வாயில எச்சு ஊறுதோ அப்பிடி. கறி தின்னு ரெம்ப நாளாச்சுல்ல. நெனப்பு வராது பின்ன.''

''போப்பா நீ ஒரு பக்கம். தைப் பொங்கலுக்கு முந்தித் தின்னதுக்குள்ளயா. வீட்ல வசமாத் துண்டு கெடைக்காம நீயின்னு எச்சுப் போனயோ என்னமோ.''

கருப்பன் உடனே ஒரு பாட்டும் எடுத்துவிட்டான்.

“காத்துட்டுக்குக் கறியெடுத்து
காலநீட்டித் திங்கயிலே
துண்டு வுழுகலன்னு
தூக்கிப் போட்டு ஒதச்சானே.”

போகிற போக்கில் சக்கணனுக்கு கல் இடறிவிட்டது. தடுமாறிச் சமாளித்து முகஞ் சுண்டினான்.

''ஏலே பொடி மசுருகளா பாதையப் பார்த்து நடந்து போங்கடா. மசுரு மட்டன்னு பேசிக்கிட்டு காலாகாலத்துல போயி ஆகவேண்டிய சோலியப் பாக்கணுமே.''

''கெழடு போடுற போட்டப் பாரு மண்டையில மசுரு ரெம்பத்தானே கெடக்குது. வாயில ஏன் அதே வராது. கெழட்டுப் பெயலுக்கு கறியக் கொண்டு போயி அவிச்சு அர வேக்காட்ல வாயில போட்டாத்தான் கண்ணடைக்கும். இல்லன்னு மொன்ன வீங்கிப் போகாதோ. வழிய வுடுப்பா போயி முறிஞ்சு தள்ளட்டும். நடையப் பாரு காஙிலாடிஞ்ச கழுத போல.''

''அட என் மசுருகளா நடைக் கென்னலே.

''பின்னியும் பாரு மசுரவே வாயில வச்சுக்கிட்டு.''

எல்லோரும் மாடு செத்துக்கிடந்த இடத்தைச் சுற்றி நின்றுர்கள் பிறகு கொண்டு வந்திருந்த கொச்சக் கயிற்ருல் மாட்டுக்கால் நான்கையும் சேர்த்துக் கட்டி ஊடே மூங்கில் கப்பை விட்டுத் தூக்கி முன்னும் பின்னுமாய்த் தோள் கொடுத்து நடக்க ஆரம்பித்தார்கள். மற்றச் சாமான்களையெல்லாம் சிறு பயல்களும் வயசாளிகளும் வைத்திருந்தனர்.

மணத்தவளை மாதிரி மாட்டுக்கு வயறு ஊதிப் புடைத்திருந்தது. நாக்கு பாதிக்கு மேல் நீண்டு வாயைவிட்டு ஓரமாய்த் தொங்கியது. தேன்கூட்டில் போல கண்களில் ஈ மொய்ப்பு. ஆட்களின் நடையசைவில் அதன் தான வாயிலிருந்து சாணி பீச்சியடித்துச் சிதறியது.

மாட்டைச் சுமந்து வந்துவசமாய் புல்தரை யொன்றில் கிடத்திஞர்கள் கால்கட்டை யவிழ்த்து அதை மல்லாக்கப் பிடித்துக் கொண்டனர். பயல்கள் அடுத்த சில நிமிஷங்களில் கத்திகள் கால்களில் குத்திக் கிழிக்கத் தொடங்கி வயிற்றில் விளையாடின. தோலை உரித்து எதம்பத்திரமாய் விரித்து அதிலேயே கறியறுப்பு சூட்டிக்கையாய் நடைபெற்றது.

''சப்பக் கறியத் துண்டு போடு.''

''எல்லாம் ஒண்ணுக் கலந்துருத.

கருங்கறி ஈரல் என்று தனித்தனியாய்ப் பிரித்து அறுத்து பாத்திரங்களில் நிரப்பினார்கள்.

''மொதலாளி வசமா தீவனம் போட்ருக்காரு. கரியப் பாரு கத்தி எறங்கமாட்டங்குது.''

''மனசாற ஒரு கெழட்டு மாடு கெடந்தா சொப்ப வேலைக் குத் தரமாட்டாரு. இப்பப் பாரு இப்படி விடிஞ்சிருச்சு.''

''மொதலாளி மாரு பெழப்பே இப்பிடித்தான்.

''இது வப்புல்ல, அவுக தேடுன சொத்த ஒனக்குச் சும்மா குடுக்கணும்னு சட்டமா என்ன.''

''இப்ப என்ன சொல்ற.

''அது விதி வசம்''

''நல்ல விதி வசம்ப்பா.''

''கொண்டு வந்த ஏனங்க காணுதோ. ஆராச்சும் ஒருத்தன முடுக்கி வுடுங்க. போயித் திரும்பட்டும். வேற ஏனம் எடுத்துட்டு வந்தாத்தான் கறி வீடு போயிச் சேரும். சின்னக் கழுதைக ஒண்ணாச்சும் இருக்கா பாரு.''

"அதெங்க இருப்பான். இன்னேரத்துக்கு அடுப்புக் கூடத்த வளஞ்சிட்டுருப்பான்.''

''அடே மாடசாமி மகனே நீ மட்டும் என்னடா ஒங்க அப்பனக் காத்துட்டுக் கெடக்க. போகலயா.''

மாடசாமி சொன்னான்.

''நானும் வரணுமாம்.''

நேரம் ஒளி மங்கியிருந்ததால் சிறுபயல்கள் சுட்டுத் தின்ன கறித்துண்டுகளை எடுத்துக்கொண்டு கம்பி நீட்டியிருந்தனர்.

''சுருக்காப் போயித் திரும்பணும். மாடசாமி நீ போயித் திரும்புறயாப்பா. ஒம் மகனவும் வுட்டுட்டு வந்துறலாம்.''

''பெறகு எங்கூடவே திரும்பணும்பான். தோதுப்படாது. அழகிரி மச்சான் நீ ஒரெட்டுப் போயித் திரும்பீரு.''

''அழகிரி யென்ன ஆளு சுதாரிப்பில்லாம இருக்க. வீட்ல கோவமா.''

"எனக்கென்ன கோவம். கறியக் கொண்டு போயிக்குமிச்சு வீட்ல என்ன செய்ய. அதுக்குச் சோறு பொங்கணு மேன்னுதான் யோசனையாருக்கு."

அழகிரி கையைத் துடைத்துக் கொண்டு கிளம்பினான்.

'அவன் யோசனையப் பாருங்கப்பா. எங்க போயி முட்டி யிருக்குதுன்னு. பெரிய சோறு. ரெண்டு உருண்ட கேப் பக்கழியப் பிச்சுப் போட்டாக் கெடக்குது.''

'மொதல்ல அதுக்கு வழி வேணுமே. அதச் சொல்லு.''

''ஒன்னப்போல தவசத்தக் கடையில கொட்டுனு வழிச்சு நக்க வேண்டியதுதான். அதுலயும் ஒனக்கு வீட்ல ஒருத்தி வாச்சிருக்காளே அவளுக்குப் பானையில ரெண்டு தவசம் கெடந்துறப்புடாதே. எங்கயோ கெடந்து வந்தவதானடா ஆவட. அவளப்பாரு. கடைக்குப் போகச் சாவாடா.''

கொஞ்சதூரம் போய்விட்ட அழகிரியைக் கூப்பிட்டுச் சொன்னான் மாடசாமி.

''மச்சான் எங்க வீட்ல ஒரு ஏனம் சும்மா புழங்காமக் கெடக்குது. ஒரு எட்டுப் போயி எடுத்துட்டு வந்துரு.''

ஊருணிக்கரையில் அழகிரி நடந்து வரும்போது ஆல்மரத் தில் பறவைகள் சுற்றிச் சுற்றிப் பறந்து ஆரவாரித்தன அவை எல்லாமே கடைசி நேரத்தில் அந்த மரத்தில்தான் அடைந்து ஓயப்போகின்றன என்றாலும் ஒன்றையொன்று கொத்திக்கொண்டு கத்தின.

அவன் கீழத்தெருவில் நுழைந்தான். அனேக வீடுகளில் விளக்கேற்றி விட்டார்கள். அவன் வீட்டுக்கு முன்னால் முத்துமாரி மசாலரைத்துக் கொண்டிருந்தாள். ஆவடை முற்றத்தில் பானை சட்டி கழுவுகிறாற் போலவும் அதே தண் ணீரால் முற்றம் தெளித்தாற் போலவும் காரியத்தில் ஈடு பட்டிருந்தாள்.

''முத்துமாரி கடகாலு இருந்தா எடுத்துக்குடுடா கவுத்தக் கழத்தீட்டு.''

கடகாலை வாங்கிக் காலடியில் வைத்துக் கொண்டான்.

''அந்த மாடசாமிப் பெய பெண்டாட்டி வந்துட்டாளா. ஒங்க கூடத்தானம்மா பில்லுப் புடுங்க வந்தா. அங்கயும் ஒரு ஏனம் வாங்துறைச் சரியாப் போகும். அவங்கூடச் சொல்லி வுட்டான். இந்தாம்மா இந்தப் பீடிய வெளக்குல பத்த வச்சிட்டு வா.''

மகளிடம் பீடியை வாங்கி இழுத்துக்கொண்டு வடக்காமல் சந்தில் நுழைந்தான்.

ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாதபடி இருட்டு படர்ந் திருந்தது. சந்தில் ஒன்றிரண்டு வீட்டைத் தவிர மற்ற வீடு கள் திறந்திருக்கவில்லை.

கீழ்ப்பக்கத்தில் வடகடைசி வீட்டுக்கு முன்னால் போய் நின்றான். அது சந்திலிருந்து ஒளிந்திருப்பது போல் ஒதுங்கியிருந்தது. கதவு சாத்தியிருந்தது. தட்டிப் பார்க்க லாம் என்று கையைக் கிட்டத்தில் கொண்டு போனபோது அவனுக்குத் திடுக்கிட்டது. உள்ளே பேச்சுக்குரல் கேட் டது.

"போயிருங்க சாமி அவன் வந்துருவான்.''

பீடியைச் சுவரில் அமுக்கி அமர்த்தி கட்டையைக் காதில் சொருகி அதே காதைத் திருப்பி கூர்மைப் படுத்தினான். சுற்றும் முற்றும் சுடுகுஞ்சி கூட இல்லை.

வீட்டுக்குள் இரண்டுபேர் பேச்சருவம் கேட்டது.

'இன்னேரம் ஆராயிருக்கும். சோலி யென்ன.'

பக்கத்தில் கிடந்த உரல் மீது ஏறி புகைபோக்கித் துவாரம் வழியாக எட்டிப் பார்த்தான். உள்ளே விளக்கு வெளிச்சங் கூட இருந்தது.

மண்திருணையில் அவன் கண்ட காட்சி...

'சே இதென்ன கூத்து. வெயசுபுள்ளையப் போயி... அவன் ஆரு. கெழடு தட்டிப் போயிருக்கு. சரிதான் சரிதான். அந் தப் புள்ளிக் காரராக்கும். இரு சொல்றென்.'

அவனுக்கு நெஞ்சு படபடத்தது.

''இந்தா புள்ளே ஒம் புருசன் வந்தா என்ன செஞ்சிரு வான். மாடன் பெயலத் தெரியாதாக்கும். பத்தினிவேஷம்

போடுற. அட சரிதாம் புள்ள வாய மூடிக்கிட்டுச் சும்மா இரு. மாடறுக்கப் போன பெய வாரதுக்குள்ள...''

''சாமி அவன் கண்டுக்கிட்டா எம் பொழப்புப் போயிரும். என்னக் கொன்னிருவான். ஒரு காடு கரையினு இல்லாம வீட்டுக்கு வந்து இந்தக் கூத்துப் பண்ணுறீகளே. இது ஒங்களுக்கே நல்லாருக்கா.''

''ஏ கழுத, ஞாயம் பேச வந்துட்டாயாக்கும். ஒம் பெழப்புக்கே வேட்டு வச்சிருவென் பாத்துக்கோ. எம் பிஞ்சையில கால் வச்சு வேல செஞ்சுக்கிற மாட்ட. அட சும்மா கெட. முக்காத்துட்டுக்குச் செறச்சுத் திங்கிற நாயி.''

அவன் சடாரென ஒரு கடவு வழியாகப் பாய்ந்து விறகுச் சிரா யொன்றை எடுத்துவந்து ஒளிந்து கொண்டான். அடுத்த நிமிசம் ''எம்மா வீரி கதவத் தொறம்மா'' என்று தட்டும் சத்தம்.

கதவு படக்கென்று திறந்தது. வாசலோரத்தில் திருதிருக்க முழித்துக்கொண்டிருந்த வீரியைத் தள்ளி வீட்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்தினான்.

உள்ளே வேர்த்து விறுவிறுத்து மேலத்தெரு அப்பையா அசடாய் நின்றிருந்தார். அவர் சமாளித்துக்கொண்டு சிரிக்க முயற்சித்தார்.

''என்...ன...என்ன அழகிரியா. சும்மா மாடனப் பாத்து நாளைக்குத் தண்ணி பாச்ச வரச் சொல்லீட்டுப் போக லாம்னு வந்தென். அவன் இல்லங்கவும் வரட்டும்னுதான் காத்துட்ருக் ... ஏ ஏ அழகிரி வேண்டாப்பா அய்யோ அடிக்காத.''

''சத்தம் போட்டரு. கொன்னு குழியத் தோண்டி வச்சிரு வென். யோவ் நீரு பணக்காரருனு அத ஒம்ம வீட்டுக்குள்ள தான் வச்சுக்கிறனும். இங்க வந்து மப்பக் காட்னு எலும்ப எண்ணிப்புருவென். செருப்புத் தைக்கிற பெயகன்னு எல் லாத்துக்கும் குனிஞ்சு குடுக்கனுமாக்கும். ஒன்னெல்லாம் பல்லக் கழட்டி வுடனும்யா. நீ யெல்லாம் ஒரு பெரிய மனுசன் போல. மூணு புள்ளைக்குத் தகப்பனு வேற ஆயிக் கிட்டரு. ஒம்பொண்டாட்டி புள்ளையிட்ட சக்கிலியப் பெய வந்து நோண்டீட்டா மயிராண்டிக்கு ரோசம் பொத்துக் கிட்டு வரும். இந்தானக்கி கட வகுத்துல குடுத்தம்னு...

ஒன்னச் சொல்லிச் குத்தமில்ல. இந்தக் கேடுகெட்ட சிறுக் கியச் சொல்லணும்."

அவளுக்கும் முதுகில் விறகுச் சிராய் சுளீரென விழுந்தது. சத்தம போடாமல் முக்கி முக்கி அழுதாள்.

''இந்தாய்யா இத அப்பிடியே கமுக்கமா வச்சுக்கோ. வெளிய சொன்னு ஊரு சிரிக்கப் போகுது. சனியனே வெயசுக்கு மீறி அறிவு கெட்டு நடந்துக்கிட்டு. மூஞ்சியில முழிக்காம ஓடிப்போ.''

அவர் பிடரியில் ஒரு குடுப்புக் குடுத்து வெளியே தள்ளினுன். தலையைக் குனிந்தபடி அவர் வெளியேறினுர்.

அவனுக்குக் கோவந் தணியவில்லே. வீரியைப் பார்த்து நறநறத்தான்.

''சீ மானங்கெட்ட கழுத. அடங்காப்பெடாரி. ஒன்னப் போயித் தாலிகட்டி இழுத்துட்டு வந்திருக்கான் பாரு. அவன் ஒரு சாரங்கெட்ட பெய. மூணு நேரமும் தின்னுப் போதும போல. இரு ஒன்ன அவன வுட்டே ரப்பெடுக்கச் சொல்றென் ஒன்னப் பத்தி பெரிய இதால்ல நெனச்சிருந்தென். கடசிக்கு இந்தக் கோலமா பண்ணீட்ட...''

அவனுக்குக் கோவந் தணிந்தமாதிரி யிருந்தது. வந்த வேலேயை ஞாபகப் படுத்திக் கொண்டான். அவனுக்காக அங்கே கறியைக் கூறு போடாமல் காத்துக் கொண்டிருப்பார்கள்.

அவன் மனசில் பலப்பல எண்ணங்கள் ஓடி மறைந்தன. ஒருமுறை வீட்டுத் தீத்தாங்கியிலிருக்கும் வீச்சரிவாள் நினைவுக்கு வந்தது. மறுமுறை தையல் சாமான்கள் ஞாபகப் படுத்தின.

'அங்க என்னடான்னு மாட்டுக் கறியக் கூறு போட்டுட்டுக் கெடக்கான். இங்க பாத்தா அவன் பொண்டாட்டியச் சுத்தி அண்டம் போடுறுன் பெரிய மனுசன்.'

அவனுக்குச் சலித்துக் கிடந்தது. வெளியே வந்தபோது வீரியின் விக்கலும் மூக்கைச் சிந்தும் இரைச்சலும் கேட்டது.

அவன் கடகாலின் கீச்சிடலோடு வேகமாய் நடந்து கறியறுக்கு மிடத்தை யடைந்த போது அவர்கள் இருட்டில்

அவனை எதிர்பார்த்து ரத்தக்கறை உறைந்த கைகளுடன் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

மாடசாமி அவசரமாய்க் கேட்டான்.

''என்ன மச்சான் எங்க வீட்ல ஏனம் எடுத்துட்டு வரலையா?''

''அது தூர்ல துருப்பிடிச்சுக் கெடக்குது. நல்லா கழுவுனாத்தான முடியும்.''

அந்த இருட்டில் சக்கணன் கறித்துண்டுகளை எடுத்து கூறடிக்கும் சத்தம் சுறுசுறுப்பாய்க் கேட்டது.



காளியம்மன் கோயில் தாழ்வாரத் திண்டில் மத்தியான வெயிலுக்கு அசந்து கிடந்தார் கந்தையா. காவல்கம்பை பக்கத்தில் போட்டிருந்தார்.

கட்டை வேம்பு மேடையில் வழக்கம்போல் ஆட்கள் நெரிசலில் படுத்திருந்தனர்.

வீடுகளில் மாடுகளைக் கட்டிவிட்டு வந்த ஊரிக்காலி மாட்டுக் கருப்பன் மேடையணசலுக்கு வந்தான். அந்த வாக்கில் திண்டில் கந்தையாவைப் பார்த்ததும் மெல்லப் போய்க் கம்பை உருவினான்.

''எவம்லே தேவடியா புள்ள கம்ப எடுக்கிறது.''

கந்தையா உதறி எழுந்தார்.

ஒரு பொய்யோட்டம் ஓடிவிட்டுத் திரும்பிய கருப்பன் திண்டுக்குக் கீழ் உட்கார்ந்தான்.

''ஒனக்கென்ன அடிவகுத்துல கொழுப்பு வச்சிருச்சாலே. மனுசன் கால் மூள செத்துக் கெடக்கான்.''

''ஆமசாமி பெழச்ச பெழப்புக்குக் கொழுப்பு வேறயா. பெறகு மாடு சொமந்துக்கிருது என்ன.''

கோயிலின் கீழ்ச்சுவரோரம் குறட்டை விட்டுக் கிடந்த சக்கணன் வெடுக்கென்று முழித்தான்.

''சாமியோவ் எமகாலன் வந்துட்டாரு இனி ஒறங்குனப் புலதான்."

கருப்பனிடமிருந்து பதில் வந்தது.

''தன்னுல விடிய விடிய முறிஞ்சு தள்ளீட்டுத்தான அலுத்துக் கெடக்காக மொதலாளி. தின்ன சோறு செமிக்கிறதுக்குப் படுத்தெந்திரிக்கிறதுமில்லாம பேச்சு வேற கேக்குதோ.''

கோயிலுக்கு மேற்கே நடுக்கடையிலிருந்து வெற்றிலை வாங்கி மென்று கொண்டு வந்த அழகிரி சமாச்சாரம் காதில் விழுந்ததும் வந்து உட்கார்ந்து கொண்டான்.

"என்ன சாமி சங்கதி வேற மாதிரி இருக்கு.

கந்தையா கண்ணைச் சிமிட்டுனர்.

''என்னமோப்பா எனக்கும் புடிபடல.''

சக்கணனுக்குக் கோவம் தணியவில்லை.

''புடிச்சு மோளத் தெரியாத பெயகள்ளாம் இப்ப பேச ஆரம்பிச்சுட்டான். நாங்கல்லாம் அந்தக் காலத்துல இருந்த இருப்புக்கு..."

இடையில் கந்தையா ஒரு வார்த்தை விட்டார்.

''அதெப்பிடிச் சொல்லப் போச்சு. அவன் இண்ணைக்கி கலியாணம் முடிஞ்சிருந்தா ரெண்டு புள்ளத் தகப்பனு இருப்பான்...என்னடா கருப்பா?"

சக்கணனுக்கென்றுல் எரிச்சல்.

"அது வேற கேக்குதா. வேண்டாம் பின்ன. நான் நீன்னு முண்டியடிச்சிட்டுத்தான் பொண்ணு குடுக்க ஓடியாருவான்.''

''இந்த மூஞ்சிக்கே குடுத்துருக்கானே கோட்டிக்காரப் பெய. எனக் கென்ன மகராசனுக்கு. இண்ணைக்கித் தனத்துல அழகிரி மாமாவே பொண்ணு குடுப்பாராக்கும். என்ன மாமா?''

அழகிரி சிரிக்காமல் சொன்னுன்.

"அதுக்கென்ன மருமகனுக்கு இல்லாற பொண்ணு. குடுத் தாப் போச்சு. நீருதான எம்மகளுக்கு மாடு மேய்க்கவே சொல்லிக் குடுத்தீரு.''

''கொறஞ்சது நாலஞ்சு வருஷம் ஒண்ணுத்தான் மாடு மேச்சோம். பெறகு சாணியெடுத்தாளே அது எம்புட்டு. நீங்க பேசாம பொண்ணமட்டும் குடுங்க. நான் மாடு மேய்க்க அவ சாணி யெடுக்க, பெழப்பு எப்பிடி யிருக்குனு பாருங்க. இவன் சொல்றுன் வெளக்கமத்தவன்.''

"ஆமா ரெண்டு பேருக்கும் புடிக்கமாட்டங்குதே எண்ணைக் கும். காரண மென்னடா.''

சக்கணன் சட்டை செய்யாதவன் போல் சொன்னுன்.

''இந்தப் பெய எனக்கு எதிரியாக்குஞ் சாமி.''

"அதெல்லாம் கெடையாது சாமி. அவன் சோறு வாங்குற வீட்ல நான் முந்திக்கிருவென். பொட்டியாருக்கு வகுத் துக்கு அடபடாது. அதான் சமாச்சாரம்."

சக்கணன் எதுவும் பேசவில்லை. அவன் முகத்தில் அதை ஆமோதிப்பதுபோல் சுளிப்பு. அவன் மண்ணைக் கிளறி னுன்.

கந்தையா இதைக் கவனித்து விட்டார்.

''பெறகென்னடா கூறுகெட்ட மூதி. ஏலமாட்டாதவன் வகுத்துலயா அடிக்கிறது. நீயாச்சும் ஓடியாடி ரெண்டு வீடு தாண்டிப் போயி வாங்கிக்கிறலாம் அவனுக்கு முடியு மாடா கண்ணு கெட்ட நேரத்துல. இனிமே சொல்றென் கேட்டுக்கோ. அவன் போற வீட்டுக்கு எட்டிப் பாத்தன்னு தெரிஞ்சது இந்தக் கம்புதான் முதுகுக்கு...ஏ சக்கணு இத எங்கிட்ட எதுக்குச் சொல்லல?''

சக்கணன் அப்போதும் அமைதியாய் இருந்தான். கருப் பன் கூட தவறு செய்துவிட்ட உறுத்தலில் தலை குனிந் தான்.

கந்தையா இந்த மாதிரி சில்லண்டிப் பிரச்சனைகளைத் தீர்த்து வைப்பதில் எத்தனையோ தடவை மனசு நிறைந்து போயிருக்கிருர். சக்கணனைப் பற்றிய நினைப்பில் கொஞ்ச நேரம் ஆழ்ந்தவர் அழகிரியைப் பார்த்துச் சொன்னுர்.

"கேட்டியாடா சங்கதிய. பெரிய மொதலாளி நாலஞ்சேருச் சம்சாரின்னு மட்டுஞ் சொல்லிக்கிறத் தெரியுது. தெனம் சாணியள்ளிப் போடுற கெழடன் வகுத்துக்கு மூணுநேரம் போட முடியல."

அவர் வேப்ப மரத்தை அண்ணாந்து பார்த்தார். வெயிலின் கனம் தாங்காமல் கீழ் வளைந்த இலைகள் சில இடங்களில் வெயிலைச் சிந்த விட்டிருந்தன. மேடையில் படுத்திருந்த உருப்படிகள் அங்கு மிங்கும் கிறுங்க வில்லை.

எதுப்பில் தச்சுப் பட்டறையில் மாறி மாறி சம்மட்டியடிகள் கேட்டன. சுப்பையாசாரி கப்பைப் பிளந்து உட்கார்ந்து பத்துக்குறட்டால் தீயில் பழுத்துக் கனிந்த இரும்புக் கம்பியை மட்டியைக் கடித்தபடி பிடித்திருந்தார். தார்ப் பாய்ச்சல் பெரிசாயிருந்தது.

பேர்தான் தச்சுப் பட்டறையே தவிர கொல்வேலைதான் முக்கியமாய் நடக்கும். மரவேலையோடு இரும்பு வேலையும் அவர் தெரிந்து கொள்ளவேண்டிய அவசிய மிருந்தது. அதற்கென்று இன்னொருவர் வந்து குடியேறிவிட்டால் தனக்கு வருமானம் கட்டாதென்று, அவர் அய்யாவுக்கு முந்தி பாட்டனார் காலத்திலிருந்தே இரண்டு வேலையும் ஒரு பட்டறையில்தான் நடந்து வருகிறது...

''என்னப்பா சுப்பையா வகுறு நெறஞ்சாப் போதும். அடிமானத்த ஆரம்பிச்சிற வேண்டியதுதான். பாரத்த பின்னலை இறுக்கி நல்லாச் சொருவிக்கோ. பெறகு தீத் தெறிச்சது துன்னு பெயகமேல பாஞ்சிருவ.''

கந்தையா சத்தமிட்டுச் சொன்னார்.

பட்டறையிலிருந்து தீப்பொறிகள் மின்னட்டம் பூச்சிகளாய்க் கிளம்பின.

சக்கணனும் கருப்பனும் வாய்விட்டுச் சிரித்தனர். அவர் எதிர்பார்த்ததும் அதுதான்.

''என்ன சக்கண மொதலாளி மாட்டுக்கறி எப்பிடி இருந்துச்சு. நீயாத்தான் கறியவிச்சயா?''

''கறி லாயக்கில்ல சாமி. செத்த மாட்டப் போயி அறுத்துக்கிட்டு சித்திரன் பெய வீட்ல குடுத்தென். அவன் ஆத்தா

வச்சுக் குடுத்தா. வேட்டையாடி கறியவிக்கணும் அதுல தான் ருசி.''

"அட புலே அதுல தனி ருசியா.''

''சந்தேகமென்ன சாமி. நாங்கள்ளாம் அந்தக் காலத்துல வேட்டைக்குக் கௌம்புனம்னு சும்மா வரமாட்டொம். வேட்டன்னு ரா வேட்டதான் ரொம்ப.''

சக்கணன் வசமாய் உட்கார்ந்து உதட்டில் எச்சைத்தடவி நமர்த்திக் கொண்டான்.

கந்தையாவும் கருப்பனும் ஆவலாகவே அவனைப் பார்த்த னர். அழகிரி சுவாரசியமற்றிருப்பதைக் கருப்பையா கவ னித்தார்.

''என்னடா அழகிரி ஒனக்கு வேல மெனக்கிடுதா. நீ போயிச் சேரு. எங்களச் சொல்லு சோம்பேறிகளுக்கு.''

''என்ன வேல சாமி. மூணு நாளைக்கு முந்தி வேல கெட்டுச்சு. மாடறுப்பு முடிஞ்சது. இண்ணைக்கி இவுக வேட்ட. எங்கதான் வேட்ட நடக்காம இருக்குது.''

''அப்ப உக்காரு. சக்கணு நீ சொல்லு.

''சித்திரனக் காணுமே சாமி. ஓடப்பக்கம் போனான்.''

"ஏன் அவுக வந்தாத்தான் சொல்லுவீகளா. அது கழுத மெல்ல வந்து சேரும்.''

''தெக்குக் கம்மாயில கருவக்காடு வனமாக் கெடக்கும். அப்ப நீங்க சின்னப்புள்ள.''

''அந்தக் கம்மாயிலயா.''

''கருவக்காடுன்னு உள்ள ஆளு எறங்க முடியாது. தண்ணி கரமுட்டக் கெடக்கும். அதுலதான் தாராவென்ன செறகி யென்ன வெதத்துக் கொரு பச்சி மெதக்கும். இன்னது தாமின்னு இல்ல.''

அவனுக்கு எச்சூறுவது போலிருந்தது. நாக்கைச் சுழட்டி பூனை வளைப்பு வளைத்தான்.

''என்னது ஆச்சரியமாயிருக்கு.'

''அது மட்டுமின்னு பாத்தீகளா.''

கருப்பன் வாயை மூடவில்லே. முழங்கையை தோதாய் கால் மடக்கில் ஊன்றி நாடிக்கு உள்ளங்கையால் அடைக் கொடுத்தான்.

''ராத்திரி நேரம் படகுருவி அடையிறதப் பாத்தா சொல்ல முடியாது. அடையிறதுக்கு முந்தி பொழுதிருக்கவே அரு வாக் கொண்டு போயி வசமா கொப்புகளச் செதுக்கி வச் சிட்டு வந்துறது. குருவின்ஞ மரம்பூரா அப்பீட்டுக் கெடக் கும். கெடக்குமா, நாங்க பொழுதடையிற நேரம் பாத்து கோவணத்தோட நீஞ்சு போயி ஆளுக்கொரு மரத்துல ஏறி அருவமில்லாம இருந்துக்கிடுவொம. ரெண்டு மூணு பேரு பச்சப் பன மட்டையை வச்சிட்டு மரத்தோரம் தண்ணிக் குள்ள நிப்பான்.''

''கையில சாமான் இல்லாமயா?''

''சாமான் எதுக்கு சாமி. கீழ இருக்கிறவன் பன மட்டை யிட்டு தண்ணிய லேசா தட்டுவான். அடஞ்சது பூராம் கௌம்பிப் பறக்கும். அவன் பெலமாத் தட்டுவான். பறந்துபோன குருவியெல்லாம் மறுபடியும் வந்து கண்ணு மூக்குத் தெரியாம ஒட்ட ஒட்ட ஒண்ணெண்ணப் புடிச்சுக் கழுத்த நெறிச்சு அண்ணக் கவுத்துல சொருக வேண்டி யதுதான் சோலி. கொஞ்ச நேரத்துல இடுப்பச் சுத்திச் சர மாத் தொங்கும். கறி பொறுக்க இருக்கும். ஒரு இப்பிடித் தான் இந்தக் கூத்துக்காரப் பெயலப் போல ஒருத்தன் ஒரு கொக்கப் போயி கழுத்துல புடிச்சிட்டான். அதுன்ஞ காரு காருன்னு கத்துது. குருவியெல்லாம் புடிச்சது பாருங்க ஓட்டம். அண்ணக்கி வேட்ட அம்புட்டுத்தான். வீசுன கையும் வெறுங் கையுமா வந்தொம்.''

''நல்ல வேட்டதாம்ப்பா.''

''இப்ப என்னசாமி, கம்மாயே கள கெட்டுப் போச்சு. கணக்குப் புள்ளேக்கு அஞ்சு பத்து குடுத்துட்டு ஆராரோ மரத்த வெட்டித் துட்டுச்சேக்க ஆரம்பிச்சப் பெறகு அதுல மரத்த வுட்டா வச்சிருப்பாக.''

''அதச் சொல்லு.''

''அந்த நாளுல துட்டுன்ஞ குருதக் கொம்பாருக்கும். நாலணச் சம்பளத்துக்கு கோயில்பட்டிக்கு கெட்டுச் சோறு கெட்டீட்டு வேலேக்குப் போயிருக்கொம். இப்ப என்னன்ஞ

ரூவாயத்தான் பாக்க முடியுது. சோத்துக்குக் தானியத்தக் காணும். ஒவ்வொருத்தருக்கு பிஞ்சையிலயே ரூவாகாச்சுத் தொங்கீட்டாக்கூடத் தாவல. தானிய வெள்ளாமையே அருகிப்போச்சே.''

''குருவி வேட்ட மட்டுந்தானு. வேற உருப்படிகளுக்குப் போறதில்லையா.''

''ஒரு பிடி உத்தரவாகட்டும் சாமி.''

''நல்லாச் சுண்டு இந்தா.''

''மொசலுக்கும் கௌம்புவொம். நான் ஒரு செம்பரநாயி வச்சிருந்தென். வெளார்க் காலு. ஏறு நெஞ்சு. உருவி வுட்டாச்சுனு மொசலெடுக்காமத் திரும்பாது. எத்தனையோ முள்ளெலிய மோப்ப மெடுத்திருக்கு. மொசலு வேட்டன்னு அனயமா காட்டு வேட்டையாத்தான் இருக்கும். வடக்கூரு எசமான் அரமனையிலருந்து தோட்டி வந்து ஊரெல்லாம் சாட்டீட்டுப் போவான். மலையில நாலூரு ஆளும் கூடும். மகராசா வந்து எணல்ல நிப்பாக. தெக்குத் தெருவுல சோல சோலன்னு பெரியாளு ஒண்ணு உண்டு. என் னேரமும் நாயி கையிலருக்கும். கடிச்சாலுஞ்சரி கடிக்கலன்னாலுஞ்சரி நாயி வாயில ரத்தத்தத் தடவி என் நாயி தான் கடிச்சதுன்னு சாதிச்சிருவாக. அடேயப்பா அவுக சகடாலும் பேச்சும் ரொம்பத் தோரணையாயிருக்கும். பெறகு... ராத்திரியில எலி வேட்டைக்குப் போவொம். அப்பிய காத்திய மாசம் மழ புடிச்சா விடியக்காலம் வெளக்கு வச்சு மந்தக் காட்ல ஈசலு புடிப்பொம். புடிச்சுத் தண்ணிக்குள்ள போட்டாச்சுனு செறகெல்லாம் உதுந்துரும். அத அப்பிடியே வறுத்துப் பொரிச்சா கூதலு நேரத்துக்கு நெல்லுப் பொரியாருக்கும்.''

''நிறுத்து ஒன் வேட்டைய. பெரிய வேட்ட. ஈசலுப் புடிச்சுத் தின்னனும்.''

''நெசமாத்தான் சாமி அது எப்பிடி யிருக்கும்னு பாத்தீக.''

''இப்ப நீ அந்தப் பேச்ச வுடுறயா என்ன.''

கருப்பனது கடகடப்பு மேடையில் ஒருவரை எழுப்பி விட்டது.

''ஆருலே அது சளச்சளன்னு ஓலப் பாயில நாயி மோண்

டது கணக்கா. சும்மா பொத்திட்டுக் கெடக்க முடியலயா. மனுசர ஒறக்க வுடாம.''

அவர் மண்டையை மேடையில் உருட்டினார்.

முச்சந்தியில் ஊர்ச்சாட்டும் சத்தம் தெளிவாய்க் கேட்டது.

''அப்பையா மொதலாளி மந்தக் கெணத்துல நேத்துப் போட்ருந்த ஊசிக்காலு கமலச் சட்டம் களவு போயிருக்கு. கேக்காமச் செய்யாம எடுத்தவுக இண்ணைக்கிச் சாய்ந்தரத் துக்குள்ள கொண்டு வந்து போட்றனும். இல்லன்னா நாளைக்கு ராத்திரி ஊர்க் கூட்டத்துல முச்சரிக்க எடுத்துக் குடுக்கணும் சாமியோ...''

கந்தையாவுக்குச் சுருக்கென்றது.

"ஆருடா அவன், மாடசாமிப் பெயலா, அவரு காணிக் காரனாச்சே. அவனக் கூட்டியாடா இங்க.''

கருப்பன் வேகமாய்ப் போனான்.

''இதென்னடா அழகிரி புதுசாருக்கு. கமலச்சாமானவே காணுமிங்கான். ஒரு அவசரத்துக்கு எவனாச்சும் எடுத்துட் டுப் போனா கமல வண்டி உருளன்னு சில்லண்டிச் சாமா னத்தான் எடுத்துருப்பான். கோப்போட பேத்துட்டுப் போகணும்னு இது வேணும்னே செஞ்சதுதான். அப்பிடிப் பெய எவனுமில்லையே. தெக்குத் தெருவுல தாடிக்காரம் பெயதான் சில்லரத்தனம் பண்ணுவான். அவனுங் கூட வெறகு வெட்டு ஆரம்பிச்சப் பெறகு அதுல எறங்கீட் டானே.''

''பெரிய எடத்துச் சங்கதி. என்னதுன்னாலும் நடக்குஞ் சாமி. அவருக்கு ஊருக்குள்ள பகையா இல்ல.''

''அதுக்கு அவன ஒதைக்கணும்டா. நம்ம காவல்ல கை வச்சா எப்பிடி. ஒரு பெயலுக்குத் தெம்பு வந்துருச்சா. அத வுந்தான் பாத்துருவமே எந்த மூஞ்சின்னு. எவனுக்காச் சும் கடன்தரமாட்டன்னு சொல்லியிருப்பாரு. பெய கூத் துக் கெட்டி வுட்டுட்டான். சே இப்பிடி வளர வுடக் கூடாதே. இண்ணைக்கிக் கமலச் சாமான்தான். நாளைக்கு வெள்ளாமதான். அது நமக்கில்ல அசிங்கம். மொதல்ல அப்பையாவ வெசாரிக்கணும். எவன் எவன் வீட்லயோ மொழைய வேண்டியிருக்கு.''

மாடசாமி வந்து நின்றான்.

''சாமி கூப்பிட்டீகளா?''

"என்ன சமாச்சாரம் ஊருச்சாட்ற. கமலச் சாமானக் காணுமா, எண்ணைக்கு?''

''ரெண்டு நாளாச்சு, அதுக்கு மொதநாளு நான் பாத்தென்.''

"கீழக் கெணத்துலயா."

"ஆமா."

"ஒனக்கு நேத்தே தெரியுமா சங்கதி?"

"இண்ணைக்கித்தான் சொன்னுக."

"அவரு வீட்ல இருக்காரா?"

"இருக்காக."

''சரி நீ போ நான் பாத்துக்கிறேன்.''

''களவு போனது ஒனக்கு இண்ணைக்கித்தான தெரியும்.''

"ஆம சாமி.''

"சரி."

கோயில் திண்டோரம் இருந்தவர்கள் பிரிந்து போனார்கள். சக்கணன் அழுக்கு உருட்டிக்கொண்டே ஊருணியை நோக்கி நடந்தான்.

போகிற போக்கில் அழகிரியிடம் சொன்னார் கந்தையா.

''அடே நீயும் துப்புக் கெடச்சாத் தெரிஞ்சு வையி.''

கந்தையா நேரே வீட்டிற்குப் போய் சாப்பாட்டிற்கு கை கால் கழுவும்போது தெற்குத்தெருவில் மாடசாமியின் ஊர்ச்சாட்டல் கடைசி அத்தத்தில் ஓ வென்று இழுத்து இரைந்தது.

சாப்பிட உட்கார்ந்தவர் சொன்னார்,

''அப்பையா கமலச் சாமானப் போயிக் களவாண்டுருக்கான் பாரேன்.''



கந்தையா கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மேலத்தெரு வில் கம்பை வீசி நடந்து தெற்கோர வளேவில் அப் பையா வீட்டு வாசலில் செருப்பைக் கழற்றினர் முதுகில் துண்டை மாராப்பு வசத்துக்குப் போட்டு வேர்வை போக இழுத்துவிட்டு உள்ளே நுழைந்தார்.

மத்தியானக் கஞ்சி குடித்துவிட்டு வாயைக்கொப்புளித்துத் துப்பிய அப்பையா அருச்சலாய்த் தலேவாசல் பக்கம் பார்த்துத் திகைத்தார் கொஞ்ச நேரம்.

''ரண்டய்யா ரண்ட. ஏமி ஈ எண்டல பொய்யி...கெங்கு ஒக செப்பு மோரு உஞ்சா. எத்துரா. காவக்காரரு ஒச் சஞ்சி.''

''ஒத்த ஒத்த. சங்கதி ஒண்டி ரேது. சும்மாதான் ஒச்சி.''

''இல்லேயே காவக்காரரு இந்த மத்தியான வேளேயில நம்ம வீட்டுக்கு வந்துருக்காருன்னு சங்கதி யில்லாமப் போகாதே. இப்பிடி வந்துஉக்காருங்க. மொதல்ல மோர வாங்கிக் குடிங்க. அதெல்லாம் பேசப்புடாது. குடிச்சிட்டுத் தான் மறு சோலி. நம்ம வீட்டு மோரு நல்லாருக்கும்.''

இருவரும் கட்டிலில் உட்கார்ந்து கொண்டார்கள். உள் வாசலில் சார்ந்தபடி லேசாய் எட்டிப்பார்த்துக் கொண்டி ருந்தது கெங்கம்மா. ஒருச்சாய்ப்பில் ஒரு பக்கக் காதோ லேச் சுருளும், கழுத்தில் காசு மாலேயும் தெரிந்தன.

எப்போதாவது அவசியம் ஏற்படும் போதுதான் அவர் அந்த வீட்டுக்கு வருவதுண்டு. மற்றப்படி எந்தத் தொந் தமுமில்லாத ஆனுல் பழைய பழைய தொந்தங்களே ஞாபக மூட்டிக் கொண்டேதான் நாட்கள் ஓடியிருக்கின் றன. கண்ட இடத்தில் ''என்ன காவக்காரரு எப்பிடி யிருக்கிருப்புல'' என்ருல் ''என்னமோ இருக்கொம்'' என்று சொல்வதோடு சரி. தொடர்புகள் மட்டும் அடி மனசில் கசப்பைக்கிளப்பி மூக்கை முட்டும் ஏப்ப அமுக்கத் தில் கம்பைக் கக்கத்தில் இடுக்குவார்.

அப்பையா பேச்சில் 'கந்தையா' போய் 'காவக்காரர்' நடமாடிய பிறகுதான் கசப்பு ரெம்பப் பரவியது.

'நம்ம பெழச்ச கோட்டிப் பெழப்புக்கு அவனச் சொல்லி யெதுக்கு. சம்பளகாரன்னு கூடக் கூப்பிடுவான்.'

கந்தையாவுக்கு மோர்ப்புளிப்பு எதுக்களித்தது.

''சங்கதி யென்ன, கோயில் திண்டுல மொடக்சலாம்னு போனென். சக்கிலியன் ஊர்ச்சாட்டிட்ருந்தான்.''

தெற்குத் தொழுவில் மாடுகள் காடிக்குள் நொரண்டும் சத்தம் பல மாதிரி கேட்டது.

''நான்தான் சாட்டச் சொன்னென். ஒங்கக்கிட்டக் கூடச் சொல்லணுமினு நெனப்புதான். ஆளு தட்டுப் படல.''

''நம்ம கமலச் சாமானுக்கும். வேகாரிக்குப் போட்டுட்டீகளா. அப்பிடித் துணிஞ்சு வந்து எவனும் எடுக்கிறதாத் தெரியலையே இந்த ஊருல. வேணும்னுதான் செஞ்சிருக்கணும்.''

"நெனச்சென், காவக்காரரு காதுல வுழுந்தா அவுகளுக்கு மனசு கேக்காதே. எப்பிடியும் அவுகள வச்சுத்தான் காரியத்தக்கண்டு புடிக்கணும்னு அப்பயே நெனச்சென்.''

''பின்ன என்ன நமக்கு மனசு கேக்குதா. இது எல்லாருக்கும் அசிங்கமில்லையா. இன்னுரு காவல்ல இன்னுரு வீட்டுச் சாமான் களவு போயிருச்சுனு சும்மாவா.''

''வேகாரிக்கு ஒண்ணும் போடல. இத்தன நாளும் கெடந்தது போலத்தான். எறவ தொயந்து இருந்தா எல்லாம் கெடக்கிறதுதான்.''

''அவசரத்துக்கு எடுத்துட்டுப் போனவன் எவனும் அயத்துப் போனுனே.''

''அப்பிடியொண்ணுந் தெரியல. நான் அனயம் பேருட்ட வெசாரிச்சுட்டனே.''

''அப்பச் சரிதான். ஒங்களுக்கு துப்பு ஏதாச்சும் தொலங்குதா.''

''துப்பென்ன எல்லாம் உள்ளூர்ப் புள்ளிக் காரந்தான். கெட்டுச் சோத்துல எலியிருந்த கதையாச்சு போங்க.''

''ஆரு தெக்குத் தெருப் பெயலச் சொல்றீகளா?"

"எல்லாம் சக்கிலியக் குடியிலதான்."

''என்ன சொன்னீக. அங்க எவனுக்குத் துமுரு. பேர மட்டும் சொல்லுங்க. நான் கவனிச்சுக்கிறென்.''

''எனக்கென்னமோ அந்த அழகிரிப் பெய மேலதான் சந்தேகமாயிருக்கு."

"சுருக்காச் சொல்லீட்டீகளே. அவனுக்கும் சில்லரச் சோலிக்கும் தூரமாச்சே. அப்பிராணி. அவனும் உண்டு, அவன் சோலியும் உண்டு.''

''நீங்க அப்பிடிச் சொல்லப்புடாது. கண்டிப்பா அவன் தான் செஞ்சிருப்பான்னு தோணுது.''

''எப்பிடி?''

''மகளுக்குக் கலியாணங் கூடப்போகுது சாமி. ஒரு நூறு குடுத்து ஒதவணும்னு அண்ணக்கி—அண்ணக்கித்தான் வில்லிசேரி அண்ணாச்சி மாடு தவறுச்சே அப்ப எங்கிட்ட வந்து கொலையப் புடுங்குனான். நான் இல்லன்னு சொல்லி ஒரேயடியாக் கண்ண மூடிட்டென். அதுல ரெம்பக்கோவம். ஒரு காலத்துக்கு வருவீகன்னு வீம்பாப் பேசீட்டுப் போனான். அதுக்குப் பெறகு எங்கண்ணுல முழிச்சிருக்கானா. களவாணிப்பெய. அவன் துள்ளீட்டுப்போன மறு நாளே சாமான் போச்சே. நேர்ல கேட்டா சொல்லுவா மிங்கீகளா. அசைவானா. ஊரக்கூட்டி கேக்கிற வெதமாக் கேட்டா கக்கீட்டுப் போரான்."

''எனக்கென்னமோ நீங்க சொல்றது புதுசாத்தான் தெரியுது. நானும் அவங்கூட சிறுசுலருந்தே பழகீட்டுத்தான் வாறென். இப்பிடிக் கொணம் அவங்கிட்ட இல்லையே.''

''அதனாலதான் ஒங்ககிட்டச் சொல்றென்.

''ஏதொண்ணுக்கும் ரெண்டு நாளு பொறுங்க. நான் வெசாரிச்சுத் துப்புக் கண்டு பிடிச்சிறென்.''

''இந்தா பாருங்க அதெல்லாம் வேண்டாம். நீங்க பாட்ல சும்மா இருங்க. நம்ம போயி அவங்கிட்டத் தாங்கனுமாக்கும். கூட்டத்துல வந்து சொல்லீட்டுப் போகட்டுமே. நாளைக்குக் கூட்டம். எல்லாம் ஒரு முடிவு செஞ்சு கெடுக்

கெட்டி வுடுவொம். என்னமும் கீளுன்னு அந்தானக்கி அடிதான்.''

அப்பையா குரல் ஏறியிருந்தது.

''சரி நான் போயிட்டு வரட்டுமா.''

கந்தையா எழுந்தார்.

''நல்லது போயிட்டு வாங்க. கூட்டத்துக்கு வந்துறணும். இத இப்பிடியே வளர விடக்கூடாது பாருங்க.''

அப்பையா வீட்டு வாசல் வரை வந்தார்.

கந்தையாவுக்கு காரியங்களை அசைபோட சிறிது அவகாசம் வேண்டும் போலிருந்தது. ஏதாவது மரத்து நிழலுக்குப் போய் தனிமையில் வெற்றிலை போட வேண்டும். நாளைக்குத்தான் அழகிரிக்கு ஆளனுப்ப வேண்டும்.



வண்டாரி வீட்டுக்குள் நுழையும்போது அழகிரி சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

''அழகிரிக்குத் தகவலு தெரியாதா?''

அழகிரி அவசரமாய்க் கை கழுவினான்.

''என்ன தகவலு.''

வண்டாரி விஷயத்தைச் சொல்லவும் முத்துமாரியும் ஆவுடையும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். அவர்களுக்குக் கூட இதுவரை தெரியாது.

அழகிரி பெருமூச்சு விட்டான்.

''நான் கோயில்பட்டி போயிட்டேன் பெரிய மொதலாளி கூட. என்மேல அவருக்குக் கோவம்.''

"என்னமோப்பா இது அனியாயமாயிருக்குது. ஆரு செஞ்ச குத்தத்துக்கோ ஒன் மேல பழி சொமத்துருக. நீ கூட்டத்துல போயி நெலமையைச் சொல்லு. உள்ளது போல நடக்கட்டும்."

வண்டாரி மனசில் தீர்மானமிருந்தது.

அழகிரிக்கு அந்த நேரத்தில் கந்தையாவைப் பார்க்கத் தோன்றியது. அவன் விரைவாக வந்து பார்த்தபோது அவர் கூட்டத்தில் பெரிய மனுஷர்களுடன் உட்கார்ந்திருந்தார்.

சரி நடந்தபடி நடக்கட்டுமென்று வண்டாரியையும் கந்தையாவையும் ஒருமுறை நோக்கிவிட்டு துண்டை இடுப்பில் வரிந்துகட்டி நெடுஞ்சாண் கிடையாக விழுந்து ஊரை வணங்கினன்,

கூட்டத்தில் கசபுசல் அடங்கி அமைதி நிலவியது. அப்பையா காவல்காரரிடம் சொன்னர்.

''என்ன காவக்காரரே நீங்கதான் பொதுவான ஆளு, வெசாரிங்க.''

கந்தையா கூறினர்.

''எந்திரிச்சு அந்தா அப்பிடி நில்லுடா அழகிரி........... நான் கேக்கிறது பெரியவுகளுக்கெல்லாம் சம்மதந்தான."

வடக்குத் தெரு கோட்டியா பிள்ளை கிழட்டுக்குரலை உயர்த்தினர்.

''ஆரு கேட்டா என்னய்யா சும்மா கேளுங்க.''

அவர் கூட்டம் தவருமல் வந்து விடுவார். முதலில் இரண்டு வார்த்தை பேசுவதோடு சரி. பிறகு ஏதாவது சார்மானத்தைப் பிடித்துக் கொண்டால் அத்தோடு சரி. மூடிய கண்களும் தாழ்வாரமிட்ட மீசைக்குக்கீழ் அசையாத வாயும் எந்தச் சத்தத்திற்கும் சட்டை செய்வதில்லை.

கந்தையா அழகிரியைப் பார்த்தார். தொண்டைக்குழியில் கட்டியிருந்த எச்சை விழுங்கிக் கொண்டார்.

''அழகிரி என்னப்பா......அப்பையா அண்ணச்சி கெணத்துல கமலச் சாமான் களவு போனதுக்கு ஒம் மேல சந்தேகப் படுருக. எடுத்தது வாஸ்தவந்தான.''

அழகிரி ஏறிட்டுப் பார்த்தான். பிறகு அப்பையாவை நோக்கினான். அவர் வேறுபக்கம் திரும்பியிருந்தார்.

"சாமிமாருக்குத் தெரியும், நான் அந்த மாதிரிக் காரியமெல்லாம் பண்ணுவனான்னு. எனக்குப் போதாத காலத்துக்கு இப்பிடி வந்து சேந்துருக்கு. எனக்கும் ஒரு புள்ள இருக்குது. நான் அனியாயமாச் சொன்னா அதும் தழைக்கணும். எம்புள்ள சத்தியமாச் சொல்றென், நான் எடுக்கல. எனக்குத் தெரியவும் தெரியாது. நான் செஞ்சிருந்தா இந்தக் காளித்தாயி கேக்கட்டும். அதுக்கு மேல சாமிமாருக சொல்றதுக்குக் கட்டுப் படுறென். நீங்க பாத்துக் கூட்டிட்டு வந்து வச்ச தொள்ளாழி நான்."

அவன் குரலில் துக்கம் கசிந்தது.

காவல்காரர் சொன்னார்.

"எங்களுக்குத் தெரியும்ப்பா. நீ நல்லவன் தான். ஆனா களவு குடுத்தவரு சொல்றாரே. அவருக்கு வேற ஆரு மேலயும் சந்தேகமில்ல."

"சாமி எம்பெழப்பப் பத்தித் தெரியாதா. வேம்படியும் உண்டு நானும் உண்டு. கெணறு கெட்டைக்கெல்லாம் எங்க போகப் போறென் சாமி."

"அது சரிப்பா. அவரு சந்தேகத்துக்குக் காரணம் சொல்றாரே. அதுக்கென்ன சொல்லப்போற. அப்பையா அண்ணாச்சி நீங்க சந்தேகப் படுறதுக்குண்டான காரணத்தச் சொல்லுங்க."

அப்பையா இருமிக்கொண்டார்.

"மகளுக்குக் கலியாணம்னு சொல்லி எங்கிட்ட நூறு ரூவா கடன் கேட்டானா இல்லையான்னு கேளுங்க."

காவல்காரர் கேட்டார்.

"என்னப்பா அழகிரி?"

"சாமி நான் அவுககிட்ட எண்ணைக்குமே அப்பிடிக் கேட்டுக் கிட்டதில்லையே."

அப்பையாவுக்குக் கோவம் வந்தது.

''அதெப்பிடிச் சொல்லுவான். பெரிய வீட்ல மாடு தவ றுன அண்ணைக்கு பொழுதடைய என் வீட்டுக்கு வந்து கேக்க, நான் சல்லிக்காசு தரமுடியாதுன்னு சொல்ல தக ராறு வந்து ஒரு காலத்துக்கு இருங்கன்னு வீம்பு பேசீட் டுப் போனானா இல்லையான்னு மட்டும் கேளுங்க.''

கூட்டத்தில் முணுமுணுப்பு அதிகரித்தது. காவல்காரர் மௌனமாயிருந்தார். நடுக்கடை சங்கரலிங்கம் ஒரு அரட் டல் விட்டார்.

''கொஞ்சம் சத்தம் போடாதங்கப்பா. என்னடா அழகிரி அவரு சொல்றதெல்லாம் நெசந்தானா?''

அழகிரி காவல்காரரைப் பார்த்தான். திரும்பியபோது மாடசாமி 'என்ன மச்சான்' என்ற தோரணையில் அண்ணாந் தான். வண்டாரி குத்திட்டுப் போய் உட்கார்ந்திருந்தான்.

''அண்ணைக்கி நான் கீழத் தெருவவுட்டு எங்கயும் போகல சாமி. மாடறுத்து முடியவே இருட்டிப் போச்சு. அவுக தான்.........அதெதுக்கு இப்ப. பெரிய மனுசரு பாத்து இப்பிடிச் சொல்லயில நான் என்னத்தச் சொல்லி என் னாகப் போகுது. எனக்கு ஒரு வாரம் தவணை குடுங்க. நான் துப்புக் கண்டு பிடிச்சுத் தாறென். இல்ல அவுக அழச்ச கோவிலுக்கு வந்து சத்தியம் செஞ்சு குடுத்து றென்''

அவன் அதற்குப் பிறகு பேசவில்லை. காவல்காரர் கோவத்தில் மட்டியைக் கடித்தது நன்றாய்த் தெரிந்தது.

சுப்பையனாசாரிக்கு உறுத்தல். வைத்தியரும் அவரும் நிறைய நேரம் பேசி முடிவெடுத்த பிறகு கூட்டத்தில் வைத்தார்.

''அய்யா, பெரியவுகள்ளாம் நான் சொல்றதக் கொஞ்சம் கேக்கணும். இப்ப களவு வழக்குப் பேசுறோம். பேசுற துன்னா ஏதாச்சும் மச்சம் கண்டுபிடிக்காம பேசுறது நல்ல தாத் தெரியல. இண்ணைக்கி அவனுக்குத்தான் நாளைக்கு மேகலக் குடியிலதான். அவுக சண்ட போட்டதாச் சொன் னாகன்னுப்புல களவாண்டான்னு சொன்னா ஊருக்காரரு அதக் கொஞ்சம் மனசுல வச்சுப் பேசணும். சண்ட போட்டவுகள்ளாம் சாமானக் களவாண்டா அவுக வீட்ல சாமான் காணாதே. கொட வாங்கலு செய்யிறவுகளுக்

குள்ள ஆயிரம் சண்ட சச்சரவு இருக்கத்தான் செய்யும். அதக் கணக்குல எடுக்க முடியுமா......அவன்தான் சொல்ருன்ல அந்தப்படி தவண குடுங்க. அதான் சரின்னு படுது.''

நிறையப் பேர் சொன்ஞர்கள்.

''தவண குடுக்கத்தான் செய்யணும்.

வில்லிசேரிக்காரர் முதன்முறையாக வாயைத் திறந்தார்.

''சரி அந்தப்படியே செய்யிங்க.''

வண்டாரி மட்டும் கடைசியில் ஒரு வார்த்தை கேட்டான்.

''மொதலாளி மாருக அடியேன் சொல்றத ஏத்துக்கிறணும். அழகிரி அந்தத் தவணக்குள்ள துப்புக் கண்டு புடிச்சிட்டாப்ல அதுவும் நீங்க கேட்டுக்குடுக்கணும். பெறகு ஈணுங்கிறதுக் கெல்லாம் சக்கிலியக்குடி மேல பழிவந்து வுழுகும். நாங்க ஒங்களண்டி ஊழியஞ் செய்யிறவுக...''

காவல்காரர் நிதானமாய்ச் சொன்ஞர்.

''அவன் சொல்றதுஞ் சரிதான். அப்பிடின்ன அதுவும் நம்மதான் கேட்டுக் குடுக்கணும். அவனுக்கொண்ணு நமக்கொண்ணு ஞாயம். என்ன அப்பையா அண்ணச்சி.''

அப்பையா அவசரமாய்த் தலையாட்டிஞர்.

மறுநாள் காலை சக்கிலியக்குடியில் கசமுசவென்று ஒரே பேச்சாய் இருந்தது. தண்ணீரெடுக்கப் போன பெண்கள் கூடிக் கூடிப் பேசிஞர்கள். மாடசாமி பெண்டாட்டி வீரி அவர்களை ஏறிட்டுப் பார்க்காமல் பானையைச் சுமந்து போஞள். ஆவடையும் முத்துமாரியும் என்னமோ ஏதோ என்று அடித்துக் கொண்டார்கள்.

அவர்களுக்கு விஷயத்தை நேரில் கேட்கமட்டும் தெப்பு வரவில்லை.

மாடசாமி கூட ஓடிவந்து ஆத்திரத்துடன் விசாரித்தான்.

"என்ன மச்சான் எல்லாம் நெசந்தாஞ. ராத்திரியே கேக்கணும்னுருந்தென். நீ என்னமோ மாதிரி இருந்த.''

வெளிப்பானைகளுக்கிடையில் நாற்றமடித்த சேற்றை புழுதிமண்ணள்ளிப் போட்டு மேதிக்கொண்டிருந்த அழகிரி அளவாய்ச் சிரித்தான்.

''அத்தனையும் நெசந்தான். ஒன்ன வுட்டே ஊர்ச்சாட்டச் சொல்லீருக்காரே. காணிக்காரன்.''

மாடசாமி கண்ணில் ஆச்சரியம்.

''நீ என்னமோ எங்கிட்ட மறைக்க.''

''அப்பிடியே வச்சுக்கோயேன்.''

''எவனோ வேணும்னே இழுத்து வுட்ருக்கான் மச்சான்.''

''எப்பிடி?''

''களவாண்டான்னு.''

அழகிரிக்கு அமைதி கலையவில்லை.

"களவாங்கிறதவாவது ஒண்ணுவது. எந்த மகராசனுக்கோ எம்மேல கடுப்பு. தீத்துக்கிறதுக்கு வேற வழியில்ல. களவு வந்துருச்சு.''

அழகிரி புழுதி கிளம்பாதபடி மண்ணைத் தட்டிச் சரிப்படுத்தினான்.

மாடசாமி திகைப்புடன் நடந்து கொண்டிருந்தபோது காரியமெல்லாம் எப்பிடியோ தோன்றியது. ஊர்ச் சாட்டச் சொன்னபோது கூட அப்பையாவிடம் கேட்டதற்கு, அவருக்கு மூக்கு நுனியில் கோவம் குதித்தது.

''ஒஞ்சோலியப் பாத்துட்டு ஊர்ச் சாட்டப் போ. ஆரு களவாண்டதுன்னு எங்களுக்குத் தெரியும்.''

அவனுக்கு பிறகும் ஆச்சரியந்தான். ராத்திரி கொஞ்சம் கோவங்கூட வந்தது.

"என்ன இது அனியாயமாருக்கு. மரத்தக் காத்துட்டுக் கெடக்கிற மனுசனப் போயி களவு சாட்ருகளே."

எப்படியும் துப்புக் கண்டுபிடித்தாக வேண்டும் என்ற ஆத்திரம் அவனுக்கும் ஏற்பட்டிருந்தது.



மூன்றாவது தடவையாக ஆள்விட்டுக் கூப்பிட்டிருந்தார் காவல்காரர்.

தையல் பையைச் சுருட்டி மரத்தூரில் ஒதுங்க வைத்து விட்டு ஊருணிக்கரையைப் பார்த்து நடந்தான் அழகிரி.

கரைச்சரிவில் புளிய மரத்துக்குக் கீழே கரம்பைக் குமியில் சம்மணம் போட்டு உட்கார்ந்து வெற்றிலை மடித்துக் கொண்டிருந்தார்.

அவன் மெதுவாய் பக்கத்தில் வந்து துண்டைப் போட்டு உட்கார்ந்தான். பீடிகுடிப்பது போல் இரண்டு விரலையும் வைத்து எச்சைத்துப்பினார் அவர். பிறகு அதே விரல்களால் மீசையைத் தடவி விட்டுக் கொண்டார்.

''வாடா அழகிரி. ரெண்டு நாளா ஆளக் காணுமே எங்க போயிருந்த? கண்டு பேச முடியல.''

அழகிரிக் கென்னமோ மனசில் ஆறுதல்.

''நேத்து கோயில்பட்டிக்குப் போயிருந்தென். பெரிய வீட்டுக்கு வாலெடுக்கணும்னு கூப்பிட்டாக. வாரதுக்கு நேரமாகிப் போச்சு. வந்தப் பெறகுதான் சங்கதி தெரியும். ஒரு வாயி கஞ்சியக் குடிச்சுப்புட்டு கூட்டத்துக்கு ஓடியாந்தென்.''

''கூட்டங் கெடக்கட்டும் நாரப்பெய கூட்டம். ஒன்ன இம்புட்டுப் பெரிய மனுசனுக்குன புண்ணியவானுட என்ன கசப்பு.''

''நீங்களாச்சும் நம்புறீகளே சாமி.'

அவன் குரல் தழுதழுத்தது.

''பைத்தியக்காரா ஒன்னப் போயி எவனுச்சும் களவாம் பான்னு சொன்னு குருடன் கூட நம்ப மாட்டான். பெரிய பெரிய ஆளெல்லாம் களவாங்கத்தான் செய்யிறான். ஆருக்காச்சும் தெரியுதா. அதுதுக்கு ஒரு கைகாரத்தனம் வேணும். எனக்கு அப்பயே தெரியும். நீ ஊர வணங்குன பாரு அப்ப ஆராச்சும் ரெண்டு வார்த்த பேசுனுகளா.

பேச மனசெங்க வரும். அந்த மனுசன் எங்கிட்டச் சொல் லயிலயே நெனச்சென், எங்கயோ கோளாறு இருக்கு துன்னு. என்ன சமாச்சாரம். நடந்த சங்கதியச் சொல்லு.''

அவன் கொஞ்ச நேரம் நேற்று ராத்திரி நடந்த சம்பவங் களை நினைத்துப் பார்த்தான்.

கரம்பைக் குமியில் உதிர்ந்து கிடந்த புளியம் பூக்களைப் பொறுக்கி வாயில் போட்டு அண்ணுந்தான். பட்டை தடித்துப்போன புளியமரம் பூவும் பிஞ்சுமாய் பசுமை யுடன் குலுங்கியது. இலைக்கும்மலுக்குள் சிறு கொப் பொன்றில் அலகு சாய்த்துப் பார்த்த சிட்டு புழுப்பூச்சிக் காகத் தாவித் திரிந்தது. இன்னொரு கொப்பில் ஜோடி யாய் இரண்டு மைனு ஒன்றுக்கொன்று அலகால் கிளறிக் கொண்டிருந்தன.

அவன் தெற்கில் பார்வையை நீட்டினுன். ஊருணிக் கரைச் சரிவில் அரசமரத்தூர் மறைவில் சவரம் நடந்து கொண்டிருந்தது. சிறைக்கிறவன் கழுத்தோரம் கத்தியை வைத்துக் கொண்டு "கொத்துக் கூலியெல்லாம் குடுக்கலயே" என்று கேட்ட கதை நினைவுக்கு வரவும் அழ கிரிக்குச் சிரிப்பு வந்தது.

காவல்காரருக்கென்ருல் அவன் அமைதியைக்கண்டு கோவம்.

''கிறுக்குப் பெயலே நான் என்ன கேட்டேன். நீ என்ன செய்யிற. கூறுகெட்ட தனமா சிரிச்சுக் கிட்டு. நான் என்னடா கேட்டென்.''

அழகிரி படக்கென்று நிமிர்ந்தான்.

...என்ன கேட்டீக சாமி."

''அதா ஒங்கப்பன் தாலின்னு...சமாச்சாரத்தச் சொல்லு வாறு. பெரியக் கப்பலக் கவுற வுட்ட மாதிரி.''

''சமாச்சார மென்ன சாமி. எல்லாம் பொம்பள வெசயந் தான்.''

''அப்பிடி வாயேன் வழிக்கு."

''மேலத்தெருக்காரரு இருக்காருல்ல..."

''நேத்துக் கூத்துக் கெட்ன அப்பையாதான.''

''ஆமாமா.''

"அவரு?''

''பெரிய மொதலாளி மாடு செத்துப் போச்சுனு சொல்லி எல்லாரும் போயிட்டொம். மெனக்கிட்டு சக்கிலியக் குடிக்கு வந்து வீடு பூந்து மாடன் பெய பொண்டாட்டிய இழுத்துச் சீரழிச்சிட்டாரு. தற்செயலா நான் ஏனம் எடுக்க வந்தவன் பாக்க வேண்டியதாப் போச்சு.''

காவல்காரர் அவசரமாய் வெற்றிலேயைத் துப்பினர்.

"பாத்துட்டுச் சும்மா வுட்ட அந்த மானங்கெட்ட உசிர.''

''எனக்கு மனசு கேக்கல. வெறகுச் செராயி பக்கத்துல கெடந்துச்சு. வீட்டத்தட்டி ரெண்டு வப்பு வச்சென்.''

அவனத் தொலிச் செடுக்கணும்டா. பெரிய மனுசனும் பெரிய மனுசன் கூட்டத்துல வாயி கிழியப் பேசுறதோட சரி. அயோக்கியப் பெயக. சும்மா வுடப்புடாது. அதுக்குத் தான் இந்த வேல பாத்தாராக்கும்.''

''இப்புட்டு வெருசனு செய்வாருன்னு நெனேக்கல. தைரியமா களவுசாட்டி கூட்டத்துக்கு இழுத்துட்டாரு பாருங்க."

நீ ஒரு புத்தி கெட்ட பெய. கூட்டத்துல குட்ட ஓடைச்சிருக்கணும். மத்தத நான் பாத்துக்கிருவமில்ல. பேச்ச மென்னு விழுங்கும்போதே நெனச்செனெ, சங்கதி ஏதோ நடந்து போச்சுனு.''

"நாலு பேருக்கு முன்னுல சொல்றது பெரிய காரியமில்ல. அதனுல சங்கடப்படவேண்டியது எத்தன பேரு பாருங்க.''

''இப்ப அவன் திரும்பிக்கிட்டானே என்ன செய்வ?''

''அவருட்ட பணமிருக்கு என்னமும் செய்வாரு. கூட்டத்துல ஆராச்சும் தடுத்துப் பேசுனுகளா. ஆசாரி என்னமோ மனசு கேக்காம பேசுனுரு. எல்லாம் அவருக்குக் கடன் பட்டிருப்பாக. நம்ம நடந்தத வுட்டுச் சொல்லியிருந்தா ஆரும் நம்ப மாட்டாக. பாருங்களேன் என்னவே கடன் கேட்டான்னு நட்டீட்டாரே கடைசிக்கு. நானும் மாடசாமியுந்தான் அடிச்சுக் கிறணும். இப்பிடியெல்லாம் வரும்னு நெனச்சுத்தான் அண்ணக்கி முதுகுல குடுத்தது. அதான்

ஞாயமாகவும் தெரியுது. கமலச் சாமான் அவரு வீட்டுக் குள்ளதான் கெடக்கப் போகுது. அதக்கண்டு பிடிச்சு ஊருக்குள்ள சொன்னு நம்பப் போருகளா. நீ கொண்டு வந்து போட்டுட்டுச் சொல்றம்பாக.''

''மாடசாமிப் பெயல வுட்டே அவரு தொழுவுக்குள்ள தேடச் சொன்னுப் போச்சு. அதுக்குப் பெறகுல்ல இருக்கு சரக்கு.''

''சாமி அதுல வந்து பாருங்க. அவுகளச் சொல்லியும் குத்தமில்ல. எங்க கழுத மேலயும் குத்தமிருக்கு."

''ஆரு வீரிப்புள்ளேயா.''

''இவ எண்ணேக்காச்சும் அவரக்கண்டு பல்லிளிக்கலன்னு அவரு எதுக்கு சக்கிலியக்குடி தேடிவந்து நாறக் கரு வாட்டப் பூன மொறச்சது மாதிரி காத்துக் கெடக்காரு. கெட்ன தடிமாட்டுப் பெயலுக்காச்சும் தெரியணும். மாட் டுக்கறி தின்ன பெயலுக்கு மனுசப் புத்தி எங்க இருக்கும். மூணுநேரம் தின்னுட்டு மாடா ஒழச்சு வந்து மொடக்கத் தான் தெரியுது. குடும்பத்துல உள்ள நெலவரம் என்னங் கிறதக் கண்டறிஞ்சு பெழைக்க வேண்டாமா. இதெல்லாம் கண்டு நடந்தா மொதலாளி மாருட்டருந்து தெரட்டீட்டு வார சொத்து நின்னு நிக்கட்டுமே. அப்பிடியென்ன பெழப்புன்னு கேக்கஞ்சாமி. காலுங்கையும் இருக்கையில தொங்கீட்டு ஏன் அலேயணும். இவன் தேடீட்டு வந்துகார வீட்டுக்குத்தான அடிப் போடப் போருன். ஆனு இனி யொண்ணு சாமி, அஞ்சாறு குறுக்கம் நெலம் வச்சிருக் கம்னு! இந்த மொதலாளிமாரும் அனியாயம் பண்ணக் கூடாது. நெலத்து வெள்ளாமையில பங்கு சேந்து தண்ணி வெலகுனு ஊரான் பொண்டாட்டியிலயும் பங்கு கேக்கணு மாக்கும்.''

'பணத்துமுரு வந்துருச்சுனு அப்பிடித்தான் செய்யச் சொல்லும். நம்மமாதிரி காடுகரையில அலேயிருனு. ஏன் திரியமாட்டான் ராங்கித்தனமா. இவங்கள அடக்க வேற வழியில்ல செம்மையாக் குடுக்கிறதுதான். சங்கதி மாட னுக்குத் தெரியுமா.''

"சொல்லல. ஒரு புள்ள வேற இருக்கு. அவருகூட தண் ணிப்பங்கு வேற சேந்துருக்கான். நட்டா நடும்புரியில

பிரிச்சு வுட்டா அவன் பாடு சங்கடமாப் போயிரும். குடும்பம் கொலஞ்சிரும்.''

''ஏதொண்ணுக்கும் வில்லிசேரிக்காரரு காதுல போட்டு வையி...இல்ல நான் சொல்லட்டுமா."

''வேண்டாஞ்சாமி. வீணு எல்லாருக்கும் கேவலந்தான. நமக்குள்ளயே இருக்கட்டும். கமலச் சாமான மட்டும் கவனிங்க.''

''என்னமோ ஒம்பிரியம். அதும் ஒரு வகைக்கு நல்லதுதான். அவரு கூட பங்கு சேந்து பண்ண போடுருஞே... நீ போடா எனக்கு நேரமாகுது.''

காவல்காரர் எழுந்து கம்பை வீசினுர். அழகிரி தலையைச் சொறிந்தபடி திரும்பினுன்.



பூத்துமாரிக்கு பருத்தி யெடுப்பில் மனசு ஒவ்வவில்லே. பல நினைப்புக்களில் உளேந்து போனுள். கல்யாணம் முடித்துப் போய்விட்டால் இந்த மாதிரியெல்லாம் கூடி பருத்தியெடுக்க முடியாது. கெங்கம்மா வசவு மறந்துபோகும். ஆவடை கூட தூரத்திலிருப்பாள் அழகிரிக்கு அடிக்கடி புளிச்ச தண்ணீர் கொண்டு போய்க் கொடுக்க முடியாது.

ஏன்தான் கல்யாணம் முடிக்கப் போகிருேம் என்றிருந்தது.

புஞ்சைக்குள் உருத்தெரியாமல் பாதச் சுவடுகள். பருத்திச் சுளேயின் காலிக் கூடுகள் சிதறிக்கிடந்தன. வயசுப் பெண்களுக்கு முன்னுல் எல்லாச் செடிகளும் சுளேச் சிரிப்பில் அசைந்தன. செடி நுனியில் குவிந்து விரிந்த பருத்திப் பூ அசைவதைப் பார்த்தால் பெண்கள் பூச்சூடிப் போவதைப் போன்ற பிரமை.

பெண்கள் மடிகனக்கப் பருத்தி யெடுத்திருந்தார்கள். எலந்த மரத்தடியிலிருந்து கெங்கம்மா எழுந்து வந்து கொண்டிருந்தது.

நடுக்கடை சங்கரலிங்கம் மகள் அடித் தொண்டையைக் கனைத்து ராகம் போட்டுப் பாடினாள். சத்தம் குஞ்சுக்காக் காய் கூப்பிடுவது போலிருந்தது.

"பருத்தி வெடிக்குமின்னு
பதைக்கஞ் செய்யக் குடுத்திருந்தென்
பாவிப் பெய காத்து வந்து
பலத்த எல்லாம் உதுத்திருச்சே."

பாட்டு ஒப்பாரித் தோரணையில் இருந்தது. பாடி முடித்த வுடன் அழுவதைப் போல் முக்கி மூக்கைச் சிந்தினாள். முத்துமாரி சிரிப்புத் திணறலில் தலையைத் தோளில் இடித் தாள்.

"அடி என் சிறுக்கி சிரிக்கிறதப் பாரு. கொமரிப் புள்ளை யுங் காட்டியில்ல குணுகிக் கொணட்ரு. புருசன் தேடிப் போருல்ல. ஏன் சிரிக்கமாட்டா."

தெய்வானை தாலியை ரவிக்கைக்குள் திணித்துக் கொண் டாள், அவளுக்கென்னமோ சிரிக்க முடியவில்லை.

''ஏ வெருசனு எடுங்கம்மா. இனி ஒரு நெறைக்குத்தான் வரும். பகுந்திட்டுப் போயி பாடு சோலியப்பாக்க வேண் டாமா.''

''அடியே முத்துமாரி ஒனக் கெண்ணைக்கிடி கலியாணம். அத மறந்துட்டனே. புருசக்காரன் நல்ல ஆளா.''

சங்கரலிங்கம் மகள் கேட்கும்போதே கண்ணைச் சிமிட்டி னாள். முத்துமாரி காது கேட்காதவள் போல் தலையைக் குனிந்திருந்தாள்.

"ஒன்னத்தாண்டி, அவ கேட்டுட்டே இருக்கா நீ பேசாம இருக்கயே. நாளைக்கு புருசன் முன்னால இப்பிடியா நிப்ப. அட எப்பிடி ஆளுன்னுதான் சொல்லேன் பாங்கி பணி யாரஞ் சுட்டாளாம் வீங்கி வெறச்சுப் போச்சாம்."

இன்னொருத்தி தூண்டிவிட்டாள். முத்துமாரிக்கு வெட்கம் கவ்வியது.

‘‘கடக்கார அம்மாவுகளுக்கு சும்மாருக்க முடியாது. கடசிக்கு எங்கிட்ட வந்துட்டீகளாக்கும்.’’

‘‘கடக்கார அம்மாளுக்கு என்னடி. வெக்கம் புடுங்கித் திங்குதோ.”

‘‘என்னமோடியம்மா, காலங்கெடக்கிற கெடையில பொண்ணுக புருசனுக்குத் தாலிகெட்டுவா போலருக்கு.’’

சங்கரலிங்கம் மகள் உடலை லாத்தினாள். அவள் பெயர் அனேகம் பேருக்குப் பிடிபடுவதில்லை. அங்காளேஸ்வரி என்று நீட்டி வைத்தாலும் வைத்தார்கள் அதை கல்யாணத்தன்று விளம்பினார்களோ என்னமோ ஆளாகும் வரை அவளுக்கு ‘குந்தாணி’ என்று சுருக்கமான பட்டப் பெயர் இருந்தது. அவள் நடையை பின்னாலிலிருந்து ரசித்தவர்கள் திருகை என்றும் கூப்பிட்டார்கள். ஆளான பிறகு கடக்கார அம்மா அல்லது இன்னார் மகள் என்றே பழகிப்போனது. பழைய பேரெல்லாம் மறைந்து இந்த மரியாதை வந்தது பற்றி அவளுக்குப் பெருமையுங் கூட.

கெங்கம்மா தளதளத்து வந்தது. வந்துநின்று இடுப்பில் கைவைத்து மூச்சை நிதானப் படுத்தியது. தலையில் எண்ணெய்ப் பதம் குறையாத மினுக்கம். கழுத்தில் சங்கிலிக் கொத்துத் திரட்சி.

‘‘என்னடி முத்துமாரி அவ வீட்டுக்குப் போயிட்டு வந்தயா.’’

முத்துமாரிக்கு ஞாபகம் வந்தது. கெங்கம்மா அக்கறையாய்க் கேட்கிறதென்றால் அது கந்தையா வீட்டுப் பேச்சாய்த்தான் இருக்கும், அவள் பருத்தி மடியை ஏற்றிச் சொருகினாள்.

‘‘போயிச் சொன்னம்மா.”

அவள் லட்சுமியைக் கூப்பிட்டதாய் நினைவில்லை. இந்த அம்மா ஏன்தான் நம்மைவிட்டு வேடிக்கை பார்க்கிறதோ என்று எரிச்சலாயும் இருந்தது.

‘‘என்ன சொன்னாளாம்.’’

கெங்கம்மா கழுத்துச்சரத்தை மாராப்பிற்குமேல் எடுத்துப் போட்டது.

''எனக்கு வீட்ல வேலருக்குனு சொல்லீட்டாக.''

"அவ எப்பிடி வருவா. பிஞ்ச எம்பிஞ்சையாச்சே. வீட்ல ரெண்டு மூணு பொட்டச்சி திரியிருளே. அதுல ஒன்ன அனுப்பி வச்சா கருவாடு மொளகாய்க்கு பருத்தி வருமே. என்னதான் வகுத்துல புடிச்சாலும் வீம்பு மட்டும் போகாது.''

முத்துமாரிக்கு மீண்டும் எரிச்சலாயிருந்தது. இதெல்லாம் எதுக்குப் பேசுகிறதென நினைத்தாள்.

அவளுக்குத் தெரியும், அந்தப் புஞ்சைக்கும் லட்சுமிக்கும் உள்ள நெருக்கம் எப்படிப்பட்டதென்று. பிரிவு தெரிந்தது முதல் அவள் பருத்தியெடுத்து எலந்த மரத்தடியில் குமித்து லட்சுமி கையால் பகிர்ந்து வாங்கிப் போனதெல் லாம் மறக்கவில்லை. அது பகிர்ந்து கொடுக்கும் விதமே தனி. எத்தனை தடவைக்குக் கூறு வைத்தாலும் கடைசி யில் ஒரு திரளை போடு பருத்தி கொடுக்காமல் மனசு கேட் காது. கூறுப் பருத்தியை மடியில் போட்டு நகர்ந்த பிற கும் கூப்பிட்டுப் பருத்தி கொடுக்கும்.

புஞ்சை கெங்கம்மா பேருக்குக் கிரையம் முடிந்து அது செருப்புக்காலுடன் நுழைந்து ரெம்ப நாளான பிறகும் அந்த நினைவு மங்கவில்லை.

பருத்தியெடுப்புப் பெண்கள் எலந்தமர நிழலில் கூடினர். பருத்தி பகிரும்போது ஒரு சுளைகூட மினுங்க விடாமல் ஜாக்கிரதையா யிருந்தது கெங்கம்மா. சிறிது நேரத்தில் வடித்துத் தட்டிய நெல்லுச் சோருய் பருத்தி யம்பாரம் பெரிதானது.

வரும் வழியில் மீண்டும் கேலி முத்துமாரி மீது திரும்பி யது. ஆவரம் பூவைப் பிடுங்கி காதோரம் சொருகி, புது சாய் நகை போட்டவள் பேச்சுக்கொருக்க தலையைக் கொணட்டிப் பேசியதையும் காது சீக்கிரம் அறுந்து மூளி யானதையும் கதையாச் சொல்லி வந்த சங்கரலிங்கம் மகள் சீண்டினுள்.

"முத்துமாரியும் புதுப் பொண்ணுயிட்டா இப்பிடித்தான்

''அவ நகையா போடப் போரு.''

'சக்கிலியக் குடியில பொண்ணுக எல்லாம் இப்ப கம்மலுக் காது வச்சிருக்குதுக. முந்தியப் போலயா.''

''முத்துமாரி புருசன் செவல்பட்டியாமில்ல. அண்ணைக்கு ஆவட சொன்னு.''

''செல்லி மகனும்.''

'நல்ல சம்மந்தம்.''

''இந்தக் கழுத போறது வெறிச்சினுருக்கும்.''

'எல்லா வேலைக்கும் வந்துருவாளே.''

''இங்கயே மாப்பிள இல்லையா.''

''எந்தப் பெய இருக்கான் எல்லாம் அத்தலஞ்சதுக. இவ அப்பனுக்கு அது புடிக்காது.''

''ஆவடைக்குத்தான் கையொடிஞ்சது போலருக்கும்.''

''கொஞ்ச நாளைக்கு.''

''முத்துமாரி பேச்சக் காணும். புருசன் நெனப்பு வந்துருச்சா.''

செந்தட்டியைப் பிடுங்கி ஒருத்தி மீது போடுவதற்காக சங்கரலிங்கம் மகள் விரட்டினுள்.

"கோவப் பழம் போல
கொமரிப் பொண்ணு நானிருக்க
கேடு கெட்ட அத்த மகன்
கெழடிமேல கையப் போட்டான்.''

மீண்டும் பாட்டெடுப்பு. குமரிப் பெண்களின் கும்மாளம். பின்பாட்டாய் தன்னை இழுவைகள். கலகலப்பு வடக் கோடைக் கரைவரை நீடித்தது. அதிலிருந்து பல சில்லரையாய்ப் பிரிந்தனர்.

பருத்தியம்பாரத்தைக் காத்துக்கொண்டு கெங்கம்மா தனித்து உட்கார்ந்திருப்பது அந்த நேரத்தில் யாருக்கும் நினைவில்லை.

முத்துமாரி கரையேறுகையில் எருமைக் கூட்டம் நெரித்துக் கொண்டு சென்றது. நடுவில் எருமைமேல் சவாரி

செய்த கருப்பன் அவளைப் பார்த்துவிட்டான். உடனே இறங்கி வந்தான்.

''முத்து மடியில பருத்தி ரெம்பருக்குதே. எனக்குக் கொஞ்சம் குடேன் வாங்கித் திங்க.''

முத்துமாரி அவனைப் பார்க்கவில்லை.

''எல்லாங்கூட எடுத்துக்கோ.''

''ஆவுடையத்தையிட்ட நான் வாங்கிக் கெட்டவா. நீ கௌம்பிப் போறன்னு இப்பயே உம்னுருக்கா.''

கருப்பன் அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே நடந்தான். எருமைகள் சற்று முந்தியிருந்தன. முத்துமாரி பதில் பேசவில்லை.

''முத்துட்ட ஒண்ணு கேக்கணும்னுருந்தென்.''

''எங்கிட்ட என்ன கேக்கணும்.''

''ஒண்ணுமில்ல. கலியாணப் பேச்சு வந்து எல்லாம் முடிவாயிருச்சே அது எப்பிடின்னு...''

'எங்கிட்டக் கேட்டா. வீட்ல முடிவு பண்ணீட்டாக.''

''ஒனக்குத் தெரியாமயா.'

''அதில்ல.

''அப்ப இந்தக் கலியாணத்துக்கு ஒனக்கும் சம்மதந்தான்னு சொல்லு.''

''தாய் புள்ளீகதான.''

''அதக் கேக்கல. இந்த ஊர வுட்டுப் போறதுக்கு எப்பிடி மனசு வந்துச்சு. போனா எங்கள எல்லாம் மறந்திருவ. சக்கிலியக்குடியில தண்ணி வாங்கிக் குடிக்கிறதுக்கு ஆளில்ல. ஒங்கய்யாவுக்கு சக்கிலியக் குடியில மாப்பிளேயே கெடைக்கலயா.''

''அவன் என்ன செய்வான், நாலுபேரு பாத்துச் சொல்லயில.''

''நாலுபேர் சொன்னா என்ன சொல்லலன்னா என்ன. மனசிருந்தா எல்லாம் உண்டு. நீ எங்க போனாலும் நல்லாத்தான் இருக்கணும்.''

முத்துமாரி அமைதியாய் நடந்தாள்.

'நீ வீட்டுக்குப் போ முத்து.''

எருமைகள் கிளப்பிய புழுதிக்குள் ஓடிய கருப்பன் உருவம் மெல்ல மங்கிப் போனது. முத்துமாரி இன்னொரு பாதையில் இறங்கினாள்.

அவள் வீட்டுக்கு வரும்போது எதிர்பார்த்தவள்போல் ஆவடை வாசலில் நின்றிருந்தாள்.

'முத்து இண்ணைக்கி எத்தன நேரத்துக்கு எடுத்த. மடி பெடப்பாருக்கே."

ஆவடை முகத்தில் குறும்பு. முத்துமாரி மச்சு வீட்டுக்குள்ளிருந்து மெடாவை எடுத்து வந்து சாய்த்துப் பார்த்தாள்.

'இண்ணைக்கி நல்லா வெடிச்சுக் கெடந்துச்சு.

மடிப்பருத்தியைப் பானைக்குள் திணித்தாள்.

இப்படிச் சேர்த்து வைப்பது அவளுக்கு ரெம்ப நாளாய்ப் பழக்கப்பட்டது. பருத்தி வெடிப்பு ஓய்வதற்குள் நிறையச் சேர்த்து விடுவாள். அவ்வப்போது துட்டு வேலை செய்து சம்பளத்தை வீட்டில் கொடுத்ததுபோக நாலணா எட்டணா என்று முந்தியில் முடிந்து சிறுவாடு சேர்த்தாள். முந்திச் சேலை தோதுப்படாதென்று கொஞ்சநாளைக்கு முந்தித்தான் மேகலக்குடி அம்மாவிடம் கோயில்பட்டியில் சுருக்குப் பை வாங்கிவரச் சொல்லி இடுப்பில் சொருகிக் கொண்டாள்,

கடைக்குக்கூட மெடாப் பருத்தியை ஆவடை தொடுவதில்லை. 'சின்னது மனசுல என்ன நெனச்சுச் சேக்குதோ' என்ற நினைப்பில் மறந்து விடுவாள்.

அழகிரி ஒருநாள் கேட்டான்.

'பருத்தி ரெம்பச் சேந்துருச்சா. யேவாரி வந்துருக்காராம் போட்டுருவமா."

முத்துமாரி பதிலெதுவும் பேசவில்லை.

அழகிரி பருத்தியை நிறுத்துப் போட்டுக் காசாக்கி அதை அப்படியே மகளிடம் கொடுத்தான். இரண்டு நாள்

கழித்து கொடுத்த ரூபாய்க்கு அதிகமாய் அவனிடம் கொடுத்துவிட்டாள்.

அழகிரிக்குப் பெருமையாயிருந்தது.

''ஆவட இங்க வாயேன். ஒம் மக செஞ்சிருக்கிற கூத்தப் பாரேன்.''

''என்னதாம்.''

ஆவடை நாடியில் கை வைத்திருந்தாள்.

''வாயக்கெட்டி சிறுவாடு சேக்குது.''

''பொம்பளப் புள்ளன்ணு கையில இருக்கிறத தூத்தெறிச் சிட்டா இருக்கும்.''

அழகிரி கண்கள் மகளின் மூக்கில் விழுந்தன. நினைவு பல வாறு ஓடியது.

''ரெம்பச் சிக்கனமாப் பெழப்பாளாக்கும்...அவ இருக்க ணும் இன்னேரம். புள்ளயக்கண்டு மகுந்து போவா. அவ ளுக்குக் கொடுத்து வைக்கல. கொஞ்ச வெயசுலயே மங் கரையான் தின்னுருச்சே.''

''தாயீ தண்ணி கொண்டு வாம்மா.''

முத்துமாரியிடம் போகணியை எடுத்து நீட்டினாள் ஆவடை.

அவனுக்குப் பார்வை கனத்தது. வாய்க்குள் கிடந்த மெலிந்த சிரிப்பு உதடுகளைக் கடக்க முடியாமல் தவித்தது. மனசில் மறுபடியும் குடியேறிய மறதி. அவன் பரிவு ஆவடைமேல் பரவியது.

'பெத்தவ இல்லன்ணு என்ன. இவ இருக்கலயா. தாப் பாலு குடுக்காறதுதான் பாக்கி. சிறுசுலதான் சொமந்திருப் பாளே புள்ளய... இடுப்பெல்லாம் காச்சுப் போச்சு...ம் அதுல ஒண்ணும் கொறையில்ல.'

மகளின் செவிப்புற மயிரில் ஓடிய பேனை யெடுத்து நகத் தில் நெறித்தாள் ஆவடை.

அவளைப் பொறுத்தமட்டில் சொந்தமெல்லாம் அழகிரியும் மகளும்தான். தாப்பாத்தியில் தன் தகப்பன் செத்துப் போனது கூட ,தாவணிக்குப் போயிருந்தவர்கள் யாரோ

விசாரித்து வந்து சொல்லித்தான் தெரியும். அப்போதும் அவள் அழுகவில்லை.

அடுத்தவரிடம் எத்தனையோ முறை தீர்மானித்துச் சொல்லியிருக்கிருள்.

''ஒலகத்துல கொள்ளி வைக்கக் கூட புள்ளையில்லாம கோடிச்சனம் கெடக்குது. எனக்கென்ன கொறச்சலு, செத்தண்ணைக்கி எடுத்துப் போடப் புருசன் இருக்கான். கொடம் ஒடைக்கப் புள்ளையிருக்கு. என்னத்த அள்ளக் கெட்டி ஆருக்குக் குடுக்கப் போறென். நான் குடுத்து வச்சவளாக்கும்.''

சொல்லும்போது அவள் முகத்தில் நிறைவு குறைவதே இல்லை. சும்மா கிடந்தவளை துணைக்கு அழைத்து வந்து சொட்டைச் சொல்கூடச் சொல்லாமல் வைத்திருக்கிருனே என்று புருசன் மீது பெருமை கூட அவளுக்கு. எங்கு புறப்பட்டாலும் அழகிரி கேட்பான்.

''ஆவட நா பொய்யவுமா. துட்டுஞ்சுரு எத்துரா.'' அவளுக்கு அந்தஸ்து கொடுத்தேதான் குடும்பம் நடந்து வந்திருக்கிறது.

மறுநாள் அழகிரி கோயில்பட்டிக்குப் புறப்பட்டான். மகள் பணமும் செருப்பு விற்ற பணமும் அழகான பேசிறி மூக்குத்திக்கு இருந்தது.

முத்துமாரிக்கு அது ஒன்றுதான் குறைச்சலாயிருந்தது. மற்றபடி சடங்கிற்குச் செய்த கம்மல் இரண்டும் இருந்தன. ஆவடை கழுத்துக்குள் போட்டிருந்த கடலைக்காய் மணியை அழித்துச் செய்து போட்டாள். காதோலையெல்லாம் அவளுக்குத் தங்கத்தில் கிடையாது.

மூக்குத்தியை அழகு பார்த்துவிட்டு ஆவடை சொன்னுள்.

''இதோட ஒரு சங்கிலி செஞ்சு போட்டா புள்ளைக்கு எப்பிடியிருக்கும் தெரியுமா.''

"சங்கிலிதான செஞ்சாப் போச்சு. நாளைக்கே சுப்பையனு சாரிட்டச் சொல்லி பட்டறையில நாலுதட்டுத் தட்டி கனமாச் செஞ்சிருவொம்."

அழகிரி சிரிக்காமல் சொன்ஞன்.



ஊருணிக் கரை உட்சரிவில் நீர் வாகறை விட்டுச் சென்றிருந்த வரிவளையங்கள் கோடைத் தடங்களாய் சுருங்கிச் சுருங்கித் தெரிந்தன. கிடங்குகளை மட்டும் மேதி தண்ணீர் பரவலாய்க் கிடந்தது. மத்தியான வெயிலுக்கு நாலைந்து பெரு நாரைகள் மீன் சலித்துக் கொண்டிருந்தன. மேலோரம் பழுப்பேறிக் கருகிப் போன புல் திரடுகள். நீர் வற்றிய பரப்பில் வெயிலுக்கு முருகி வெடிப்பேறிய கரம்பைச் சுருள்கள். அதற்குள் சில இடங்களில் கரம்பை கூட்டி வைத்திருந்தார்கள்.

கீழப்பாதையில் மாடு பத்திக் கொண்டு வந்து ஊருணிக் கரையேறப் போன ஊளிக்காலி மாட்டுக் கருப்பனை வடகாட்டு ஓடையோரமிருந்து ஆட்டுக்காரன் ஒருவன் விசிலடித்துக் கூப்பிட்டு துண்டால் செண்டா கொடுத்தான். வடக்கே கிடையாடு திரளாய் வந்து கொண்டிருந்தது.

கருப்பனுக்கு உடனே புரிந்துவிட்டது. தண்ணீர் வற்றும் பாட்டு நேரங்களில் கண்டபடி எருமைகளை ஊருணிக்குள் உழப்ப விட்டால் கிடையாட்டுக்காரர்கள் பாடு திண்டாட்டந்தான். மண்டித் தண்ணீரை ஆடு குடிக்காது.

மாடுகளுக்குத் தண்ணீர் காட்டி வளைந்து திருப்பி கீழோரம் அமர்த்தினன். அவை மரநிழலில் காலாற நின்று அசைபோட ஆரம்பித்தன. சில படுத்துக் கிடந்தன. ஒரு பயல் அவசரமாய் சாணிக் கூடையுடன் ஓடிவந்தான்.

''இந்தாய்யா சாணி நெறையலன்னு மாட்டுக்குள்ள மொழுஞ்சிருதரும்.''

கருப்பன் தவுட்டுச் சிரிப்பு விட்டான்.

கொஞ்சநேரத்தில் தெற்குக் கரையில் கிடையாட்டுக்காரர்கள் ஏகமாய்ப் படுத்துக் கிடந்தனர்.

மதிய நேரங்களில் ஊருணிக் கரையில் பலவித விவகாரங்களும் விளாசப்படும். பேச்சின் சுதி குறையும்போது சிலர் ஆதாளைக் குழலில் கஞ்சா கசக்கி யிழுத்து போதை யேற்றிக் கொள்வார்கள்.

இந்த மாதிரியான விஷயத்தில் வடக்கு வீட்டு வைத்தியப் பண்டுவர் ரெம்பக் கெட்டியான ஆள் மடியில் நொள்ளி நொள்ளி எடுத்தால் கஞ்சாப் பொட்டணத்தில் தூள் குறைவதே இல்லே.

வெயில் கிறக்கத்தில் ஒரு சுண்டு சுண்டினுல் அப்படியே சொக்கிக்கொண்டு வரும்.

கருப்பன் தெற்குக் கரைக்கு நடந்து ஒரு நோட்டம் விட்டான். கீதாரிக் கோனுருக்குத் தலே கவிழ்ந்து கொண்டே போனது. அவரும் தாமரிக்க முயன்று கொண்டே இருந்தார்.

"என்னலே கருப்பா. ஒரு இழுவைக்குப் போட்டுக்கிறயா."

நாலேந்து பேருக்குக் கிறக்கம் கண்டிருந்தது.

''எனக்கு வேணுஞ்சாமி. மாட்டுல சவாரி செய்ய முடியாது.''

''என்ன மப்பாப் பேசுருன் பாரு. சவாரி செய்யாம நடக்க மாட்டீகளோ.''

''அதெப்பிடி முடியுஞ்சாமி. காலு தரையில பட்டாக்கூட ரத்தங் கண்டிப் போகுது.''

''அனெப் புடிடா ஒருவன். கெடாய வுட்டு வாயில மோள வுடுவொம்.''

கீதாரிக் கோனுர் கம்பை ஓங்கிஞர். கருப்பன் ஓடிப்போய் அடுத்த மரத்தடியில் உட்கார்ந்தான்.

"ஏலேய் இங்க வாடா ஒரு வெசயம்.

கீதாரிக்கோனுர் கூப்பிட்டார். அந்த நேரத்தில் மோழைக் கிடா யொன்று நாக்கைத் துருத்தியபடி ஆட்டுக்குப் பின்னுல் விரட்டியது.

"என்ன எதுக்கு கூப்பிடுறீக சாமி. எங்கிட்ட வெசயமென்ன இருக்கும். அந்தா கெடாயப் பாருங்க.''

''அட இங்க வாடான்னு.''

''ஏம்ப்பா நீதான் வந்தென்ன. சுட்டுத் தின்னுறவா போருக."

பண்டுவர் வாய் குழறினர். கருப்பன் நெருங்கி வந்தான். ஆட்டுக்காரர் ஒருவர் சொன்னர்.

''சின்னையா இவன் சுத்தக் காரப் பெயலாக்கும்.''

''மூஞ்சியப் பாத்தாலே தெரியுது.''

''சாமி இப்ப என் மூஞ்சியப் பாக்கவா கூப்பிட்டீக.''

"அண்ணக்கி கெணத்துல குளிச்சிட்டு வெளியேறுனவன் வாய் நெறைய தண்ணி கொப்புளிச்சிட்டு வந்தான். எதுக்குடான்னு பாக்கென். சொவரப் புடிச்சு மேல ஏறி வந்ததும் கையிலருந்த தூசி போறதுக்கு துப்பிக் கழுவுறுன்."

''சுத்தம்ன இதுல்ல சுத்தம்.''

''இருடா நீ ஒண்ணு. ஆமா அழகிரிப் பெய கமலச் சாமானக் களவாண்டான்னு அப்பையா கூட்டம் போட்டாரே. அதென்ன அப்பிடியே கமுக்கமாப் போச்சு. ஒனக்கு ஏதாச்சும் தெரியுமா.''

''சாமான் கெடச்சுக் கிருச்சு போலருக்கு சாமி. இல்லன்ன அவரு சும்மாருப்பாரா.''

"அப்ப களவாண்டது அழகிரிதான.''

''அதெல்லாங் கெடையாது சாமி. அவுக எதுக்குக் களவாங்கணும். சோத்துக்கு வழியில்லாமயா கெடக்காக.''

''பெறகு களவாண்டது ஆராம்.

"ஆராருக்குஞ்சாமி.''

''ஏலே எங்கிட்டயே கேக்கயே. எனக்கென்ன தெரியும் காட்ல திரியிறவனுக்கு.''

''சாமி நான் வீட்லதான் காலாட்டீட்டே படுத்துக் கெடக்கென்."

"ஒனக்கு நெஞ்சுக் கொழுப்பு அடச்சுப் போச்சுலே. சொன்னத வுட்டுச் சொரையப் புடுங்குறயே.''

''அதென்னமோ சாமி அண்ணக்கி மாடசாமி காவக்காரருட்டச் சொல்லிட்டிருந்தான். சாமான் அப்பையா

தொழு மச்சுல கடலப் பொட்டுக்குள்ள கெடந்துச்சாம். இதப்போயி அவருட்டச் சொன்னதுக்கு நீயும் சேந்துட்டுக் களவாண்ருக்கன்னு முழிச்சாராம். அவன் தன்ைல வுழுந் தடிச்சு ஓடியாந்துருக்கான்.''

''சங்கதி இப்பிடித் திரும்பிக் கிருச்சா.''

அதுக்குள்ள வெசயம் அவரு வாயிலருத்து வெளியேறிப் போச்சு, களவாண்டவன் சாமானக் கொண்டாந்து போட் டுட்டான் போட்டுட்டாம்னு.''

''களவாண்டவன் தொழுவு மச்சுல கடலப் பொட்டுக் குள்ள வந்து திணிச்சுருனே.''

''அவுகளுக்குள்ள கோக்குமாக்கு நடந்து போச்சு. அம் புட்டுத்தான் சங்கதி.''

''இன்னி கூட்டம் பத்திப் பேசமாட்டாகளே.''

''அதெப்பிடிப் பேசுவாக. வண்டாரிதான் கண்டிப்பா கூட் டம் போடணும்னு சொல்லிக்கிட்டான்.''

''அதெங்கடா நடக்கும். ஊருக்குள்ள அம்புட்டுக்கு ஞாயம் இருந்தா எதுக்கு இப்பிடி. இப்ப எல்லாம் சொந்தக்கார னுக்கு ஒரு வெவகாரம். சண்டக்காரனுக்கு ஒரு வெவ காரம் பேச ஆரம்பிச்சிட்டான். ஊர்க்கட்டு அடியோட போச்சு. அழகிரி என்ன சொல்ருனும்.''

''அந்தாளு என்ன சொல்லும் சாமி வாயில்லாப் பூச்சி.''

''அதச் சொல்லு. அவன இவங்கதான் வேணும்னு கூட்டி வந்து வச்சாக. இண்ணைக்கு அவுகளே களவு சாட்ருக. எதுலயும் ஒரு சம்சாரி ஒழுங்கு வேணும்.''

''நான் மாடு பத்தீட்டுப் போயி செத்த நேரம் ஒறங்கணும் சாமி.''

''ஏலே எலே நில்லுடா இன்னியொரு சங்கதி.''

''எனக்கொண்ணுந் தெரியாது சாமியோ...''

கருப்பன் துள்ளித் துள்ளி ஓடினன். மாட்டுக் கூட்டத்தில் கலக்கும்வரை அவன் கரிச்சட்டி மண்டை தெரிந்தது.

மாடுகளை அமர்த்திப் போட்டுவிட்டு மரத்தடியிலேயோ உறங்கலாமென்று தோன்றியது. ஊருணிக்குள் எதுவும்

போயிருக்கிறதா என்று எட்டிப்பார்த்தான். அவனுக்கு இப்போதுதான் தண்ணீர் வற்றிப்போனது ரெம்ப உறுத்தியது.

'தண்ணிக்கு ரெம்பச் சங்கடப்படணும் போலருக்கே.

அவன் மரத்தடியில் படுத்தபோதும் மறக்கவில்லை.

கோடைநேரம் எல்லோருக்குமே சங்கடந்தான். சக்கணக் கிழவன் முதல் சகலருக்கும் ஊருணி வற்றினுல் பெரும் பாடு. ஆட்டுக்காரர்கள் கமலைக் கிணறு பார்க்க வேண்டும். கிணறுங்கூட நேரத்திற்குத் தண்ணீர் இருந்தால்தான். இல்லையென்ருல் இறைத்தவன் உச்சிப் பொழுதுக்கு முந்தியே மாடு விட்டுக் கிளம்பி விடுவான். பிறகு ஆட்டுக்காரர்களே மோக்கால் பிடித்து இரண்டு கூனை இறைப்பார்கள்.

இன்னும் கொஞ்ச நாட்களில் ஊருணியின் கடைசி நீரும் வற்றி ஊர்ச் சனங்கள் கலக்கிக்கலக்கி மீன் பிடிப்பார்கள். சகதிக்குள் வலையுங் கையுமாய் வாரிக்கொண்டு திரிவார்கள்.

போன வருசங் கூட வற்றிவிட்டது. சக்கிலியக்குடி ஆட்கள் எல்லாம் ஊருணிக்குள்தான். சிறுபயல்கள் உடம்பெல்லாம் சேருக்கி சப்பை மடியில் அயிரைகளைப் பிடித்துப் போட்டுத் தரை நீச்சடித்தனர். அவர்கள் மண்டி கிளப்பியபோது தாக்குப் பிடிக்காத கெண்டைகள் வாய் திறந்தவண்ணம் விடுவிடு என்று மேற்பரப்புக்கு வந்து நெளிந்தன. உயரே வட்டமிட்ட பருந்துகள் அவற்றைத் தூக்கிச் சென்றன.

கரையில் வலையைத் தட்டியவுடன் அதில் புழுதி மண்ணைப் போட்டுப் புரட்டவும் உதிர்த்த வாழைப் பூக்களாய்த் துள்ளும் அயிரைகளை ஓலைக் கொட்டானில் பொறுக்கிப் போட்டனர் பெண்கள்.

கருப்பனுக்கு முத்துமாரியும் வலைபிடித்து அலைவதைப் பார்க்கச் சிரிப்பாயிருந்தது. சேலையை வரிந்து கட்டி ஒருபுறம் எடுத்துச் சொருகியிருந்தாள். சேறுபட்ட தொடைகள் அவ்வப்போது நீர்படவும் பளிச்சென்று தெரிந்தன. மாராப்பும் சட்டையும் வித்தியாசமில்லாமல் அமுங்கியிருந்தன. ஆவடை கரையிலிருந்தாள். அழகிரி வரவில்லை.

அவன் உள்ளே இறங்கிப் போய் அவளிடம் வலையை வாங்கிக் கொண்டு மும்முரமாய் வாரினான். முத்து மாரியைக் கரைக்குப் போகச் சொன்னான். நாலு வலை வாரி கரையில் தட்டினான். முத்துமாரி ஓடி ஓடிப் பொறுக் கினாள். அடிக்கடி தனக்குச் சிரிப்புச் சிரித்தாள். சிறிது நேரத்தில் கொட்டான் நிரம்பிவிட்டது.

கருப்பன் பாடிக் கொண்டே துவை வேட்டி போட்டுத் திரும்பியபோது ஊருணியில் மண்டி தெளிந்து நீர்த்துணி விரித்திருந்தது. ஒரு ஓரத்தில் சகதிக்குள் இறங்கிவிடாத எச்சரிக்கையில் தெலா இறைப்பது மாதிரி வாலைத் தூக்கி நீருறிஞ்சி அண்ணாந்து விழுங்கிய மைனா ரெம்ப நேரங் கழித்தே கிளம்பியது.

அன்றைக்கு முத்துமாரியே நேரில் வந்து அழைத்துப் போய் அவனுக்கு வயிறுமுட்ட மீன்குழம்பும் சோறும் போட்டுக் கொடுத்தாள்.

இந்த வருசம் மீன் பிடிக்க முத்துமாரி இருக்கமாட்டாள் என்று நினைத்தபோது அவனுக்கு என்னமோ போலிருந் தது மனசு. அழகிரி எதுக்குத்தான் திடீரென்று அவளைக் கலியாணம் முடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்தானோ என்று வருத்தம் வேறு.

"உள்ளூர்ல எவனும் கெடைக்கலயோ. தூரத்துல போயி எறக்கப் போறாக. ஒரு நாளைக்காச்சும் வசமா கேக்கத் தான் போறென்."

கண்ணை மூடிக்கிடந்த கருப்பனுக்குப் பக்கத்தில் ஒரு மாடு வந்து சாணி கழியவும் அவன் மூஞ்சியெல்லாம் சிதறியது.

"சை இதென்னடா வம்பு." என்று சுருட்டி எழுந்தவன் மாட்டுச் சப்பையில் கோபத்தைக் காட்டினான்.



மதியம் வரை படுத்துக் கிடந்த அலுப்பில் சித்திரன் கேட்டான்.

''எங்கிட்டாச்சும் போயி குளிச்சிட்டு வருவமா.'

அவன் உடம்பில் வேர்வைக் கசிவில் வீங்கின மேனி இன்னும் மினுங்கியது.

சக்கணன் புரண்டு படுத்தான். கொட்டாரத்தில் கோழியொன்று சிறகை வளைத்து வெயிலுக்கு அப்படியே படுத்தது.

''குளிச்சாத் தாவலதான்.''

''கெழக்க காரக் கெணத்துக்குப் போவெவாம். அதுதான் எறங்கத் தோதாருக்கும்.''

"ஊருணி வத்திப் போனதுனால மனுசனுக்கு எம்புட்டுச் சங்கடம் பாரு."

"என்ன செய்யிறது சங்கடத்தத் தாங்கிக்கிற வேண்டியதுதான்."

''தாங்காம என்ன. நடதான் கொஞ்சம் தொலவட்டு. தெனமும் குளிக்க முடியுதா. ரெண்டு வீட்ல சோத்தப் பாத்தொம் படுத்துட்டுக் குளிச்சம்னுருக்கா. என்னருந்தாலும் ஊருணி ஊருணிதான்.''

''பின்ன அதாகுமா.''

''சரி கெளம்பு போவெவாம்.''

இருவரும் சாவகாசமாய் எழுந்து நடக்கத் தொடங்கினார்கள். வேம்படியில் அழகிரி வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தான்.

''அழகிரி கஞ்சி குடிச்சாச்சா.''

''எல்லாம் ஆச்சு. ரெண்டு பேரும் எங்க கெளம்பீட்டீக இந்த வெயில்ல.''

''ஆமப்பா வெயிலான வெயிலா அடிக்குது. இவன் என்னமோ குளிக்கணுமிங்கான். போறோம்.''

''நல்லாக் குளிங்க.''

''நீ வாரயா.''

''நான் எதுக்கு. வேலைய முடிச்சிட்டு ஒரேடியா சாய்ந் தரம் குளிச்சுக்கிருவென்.''

''நீ வேலக்காரன்.''

சக்கணனும் சித்திரனும் நடந்து போவதை ரெம்ப நேரம் பார்த்துக் கொண்டிருந்தான் அழகிரி.

ஊருணிப் பாலத்தைத் தாண்டியதும் சித்திரன் முக்காடு போட்டுக் கொண்டான்.

வண்டிப் பாதைக்குத் தெற்கே ஆட்டுக் கூடுகள் கவுத்தியி ருந்தன. அவ்வப்போது உள்ளிருந்து குட்டிகளின் சத்தம் கேட்டது.

''அந்தக் காலத்துல கூடு இப்பிடிச் சின்னதா இருக்காது. ஒராளு சொமக்கிறதுக்கு முக்கி முனங்கணும். கெட கெடந்துச்சுனு...... என்னடா பிந்திக்கிட்டயா.''

''என்ன சொன்ன.''

சித்திரன் வேகமாய் காலிழுத்தான். சக்கணன் அதற்குள் தயார்ப்படுத்தினன்.

"கெட போடுருகளே இப்ப முணுக் முணுக்குனு. ஆடு சரியா மிதிக்கிறதுக்குள்ள அடுத்த பிஞ்சைக்குக் கூடு தூக்கீருக.''

''ஆமாமா.''

''இப்ப வேற மாதிரி ஒரம் மருந்துனு போடுருக.''

''அதும் கொஞ்சமா.''

"அப்ப எல்லாம் கெடைய நம்புன வெள்ளாமதான். ஆடு எத்தன மொய்யி கெடக்கும். பிஞ்சு புடிக்காம நிக்குமே. நிண்ணதுன்னு தொயந்து நாலஞ்சு நாளைக்கு நிக்கும்.''

''வெள்ளாம சக்கப் போடு போடுமே.''

"நல்லா வெளையும்.''

‘‘களத்துப் பிஞ்சைக்குக் கொறச்சலிருக்காது.

‘‘அத ஏன் கேக்க. தெனமும் வாங்கித் திண்ணு முடியாது. நான் என்னத்தவோ சொல்லவந்தேனே.’’

‘‘கெடையா.’’

‘‘அதான், ரெம்ப நாளாச்சு. மலேயோரம் செவல்ல கெட கெடக்குது. சாய்ந்தர நேரம் நான் அங்கருந்து வாறென்.’’

‘‘எங்கருந்து.’’

‘‘கோயில்பட்டிக்கு குறுக்கு வழியில் ஈத்துமாடு பத்தீட்டுப் போயித் திரும்புறென்.’’

‘‘மாடு பத்துனு கண்ணுக் குட்டியச் சொமக்கணுமே.’’

‘‘சம்பளம் சும்மாவா. கதையக் கேளு.’’

‘‘சொல்லு.’’

‘‘கெட கெடக்குதா.’’

‘‘ம்.’’

‘‘வகுத் தோடையத் தாண்டி வாறென். மேகம்ஞ இருட்டி கப்புது. லேசா சாரலு வுழுக ஆரம்பிச்சிருச்சு. பெறகு மழ புடிச்சது. எனக்கு கூதலு தாங்க முடியல. வாட ஒழண்டு ஒழண்டு அடிக்குது.’’

‘‘ஒண்டுறதுக்கு ஒரு எடங் கெடைக்கலயா.’’

‘‘மலங்காட்ல என்னருக்கும். எனக்கொரு நெனப்பு வந்துச்சு.’’

‘‘என்னது.’’

‘‘ஓடிப்போயி ஆட்டுக் கூட்ட லேசாத் தொறந்து உள்ள மொழுஞ்சு உக்காந்துக் கிட்டென்.’’

‘‘அடா குட்டியெல்லாம் கத்தியிருக்குமே.’’

‘‘கொஞ்ச நேரந்தான். பெறகு பேசாம கெடந்துக்கிருச்சு.

‘‘நல்ல கூத்துத்தான்.’’

‘‘இன்னில்ல இருக்கு கூத்து.

''அதும் அப்பிடியா."

''மழபேயுதா சடச் சடன்னு சத்தம் கேக்குது. நான் பேசாமஇருக்கென். கொஞ்ச நேரத்துல கூட்டு வாயோரம் பரட் பரட்னு மண்ணைச் சொரண்டுற சத்தங் கேக்குது.''

''என்னது என்னது.''

சக்கணன் திரும்பினான். சித்திரன் நெருங்கி வந்தான். எதிரே வந்த வண்டிக்கு விலகி பிறகும் பாதையில் கூடினார்கள்.

''நான் பெயப்படல. தண்டியத்த ஆம்பளைக்கு என்ன பெயம். அருவங்குடுத்துக் கேட்டுட்டே இருக்கென். சத்தம் பெலமாக் கேட்டு சன்னஞ்சன்னமா உள்ள ரெண்டு காலு வந்து எட்டிப் பாக்குது.''

"காலா."

''காலுன்னு மயிரும் மட்டையுமா நெகம் நீளமா வளந்துகிட்டு.''

''என்னதாம்.''

''நீ நரியப் பாத்துருக்கயா.''

''இல்ல.

''நரிக்காலுதான் அது. பையா நீட்டி குட்டியத் தொளாவுது.''

''புடிச்சு இழுக்கவா. இழுத்துருமா.

''கெடச்சா சும்மாவா வுடும். இழுத்திட்டே போயிரும். நான் உள்ள போகையில போட்ட குட்டிச் சத்தங்கேட்டு அருவமில்லாம வந்திருக்கு கழுத.''

''பெறகு.''

''குட்டிக்கால மொதல்ல அதுகிட்டக்குடுத்து இழுத்தென். பெறகு சப்பையக் குடுத்தென். மண்டையக் குடுத்தென். அப்பிடியே ஏமாத்துனென். அது பாரு ஆத்திரமா பறிச்சிட்டு உள்ள வருது.''

''உள்ள வருதா.''

"லேசா மண்டைய நீட்டுது. கண்ண பொடுக்பொடுக்குனு முழிக்குது. நான் தட்டுப்படாம ஓரமா ஒதுங்குனென். அது கழுத்து முழுசும் நீட்டினதுதான் தாமுசம், துண்ட மேல போட்டு கவக்னு ஒரே அமுக்குத்தான். ரெண்டு கையவும் சங்குல கோர்த்துப் புடிச்சவன் வுடவே யில்ல.''

''அப்பிடிப் போடு. அத நச்செடுத்திருக்கப்புடாது.''

"கூட்ட வச்சு அமுக்கி சங்கத் திருப்பி கொதவளையத் திரு குனென். அது சண்டீர்த்தனமெல்லாம் போச்சு. உசிரு எம்புட்டு நேரத்துக்குத்தான் இருக்கும்."

''செத்துக் கால வெறச்சிருக்கும்.''

''கெடையில எனக்கு வேட்டி துண்டெல்லாம் எடுத்துக் குடுத்தாக. உள்ள எறங்கு குளிப்பொம். அட அங்க பாருடா அதுல ஒருத்தி நிண்ணுட்டு மோளுறத. வேலத் தனத்துல நாலு ஆம்பள வருவான் போவான். அறிவு வேணுமா. பொம்பளைக ஆருக்கு வேல செய்யிருக.''

''பெரிய மொதலாளி பிஞ்சையில நடக்குது. மோளுறது ஆருன்னு பாத்த. மாடசாமியண்ணன் பொஞ்சாதி.''

''அவளா மோளுவா மோளுவா. அண்ணக்கி புருசங் கிட்ட நெல சண்ட போடுரு.''

''எதுக்காம்.''

''அப்பையா பங்க அவன் வெலகிக் கிட்டானும். தன்னுல கெடந்து மொணங்குரு.''

''நானும் கவனிச்செசன்.

''ஏன் மொனங்க மாட்டா. காடுகரையில நல்லா தின்ன துல்ல. ஆம்பள இருக்கான் பாடுபட மாட்டானு. அவன் தேடிப் போட்டாத் தின்னுட்டுப் போரு. அதுக்கு மொனக் கம் எதுக்கு."

"அதான. அந்தண்ணன் ஒரேடியாச் சொல்லிட்டான். சும்மா கெடக்கயா முதுகுக்கு வேணுமான்னு முறுக்கித் தள்ளிட்டான்."

''தனியாப் பெழச்சா ஏன் வலிக்குது. பங்கு சேந்துருக்க யில கழுத்தக் கொணட்டி ஆளுக்கு முந்தி பிஞ்சையில

நிப்பா. இப்பமுடியுமா. குண்டிக்குப் பின்னால அரு வாளச் சொருவீட்டு ஆளோட ஆளால்ல போகணும்...... மாடசாமிப் பெய மனசுல புழுக்கமில்லாம வெலக மாட் டானே.''

''புழுக்கமென்ன, அப்பையா என்னமோ சொன்னாராம். தடுமாறும உள்ள எறங்கு.''

''எதப்பத்தி.

''அவரு கமலச் சாமான் களவு போயி அழகிரியச் சொன் னாகல்ல.''

''ஆமா.''

''சாமான் தொழுவுக்குள்ள கெடந்தத மாடசாமி பாத்துக் கிட்டானும்.''

''பாத்தா என்ன.''

''அவரு ஒடனே இவன் மேல பழியப் போட்டுட்டாரு.''

''எப்பிடி.''

''அழகிரியும் நீயும் கூட்டாச் சேந்துதான் செஞ்சுருக்கீ கன்னு.''

''அட கூத்தே, பெறகு.

'இவரே போயி எல்லா பெரிய மனுசருட்டயும் சொல் லீட்டாரு சங்கதிய.''

'அப்பத்தான காரியத்த ஓச்சிறலாம்.''

'சங்கதி அப்பிடியே அமுங்கிப் போச்சு.

'இவன் பங்குக் கணக்கவும் தீத்துக் கிட்டானுக்கும்.''

'அதுக்கு மேல அவனால இருக்க முடியுமா.''

'மொதல்ல சூசுவான்னு இருந்த அழகிரி கெடச்சான். இப்ப இவனும் சேந்தாச்சு. இதுல என்னமோ வெசய பிருக்கு. தண்ணிக் கெணத்தோரம் விடியக்காலம் போயி -க்காந்தா ஊர்ப் பொறணி பூரா கௌம்பும்.''

அவர்கள் கஷ்டப்பட்டு தண்ணீருக்குள் காலேவிட்டார்கள். பிறகு படியில் வசமாய் உட்கார்ந்து அழுக்குத் திரட்ட ஆரம்பித்தார்கள்.

''இவன் எப்பிடிடா தைரியமா பங்கு வெலகிக்கிறென்னு சொன்னன்.''

''புடிக்கலன்ன சொல்ல வேண்டியதுதான.''

''அழகிரிகிட்டக் கேட்டான் போலருக்கு. அவன் ஒம் பிரியம்னு சொல்லீட்டானும்.''

''மொதல்ல பொஞ்சாதியிட்டக் கேட்ருப்பானே.

''அவதான் வேண்டான்னு சொல்லீட்டாளே.''

''அவ அப்பிடித்தான் சொல்லுவா.''

''இது கந்தையா காதுக்கு எட்டியிருக்கும் போலருக்கு. அவரு கூப்புட்டுச் சத்தம் போட்டு, பேசாம பங்க வெலகு உண்டான வேலையப் பாக்கச் சொல்லீட்டாராம்.''

''அதான பாத்தென். அவரு போட்ட போடுலதான் வசத்துக்கு வந்திருக்கான்.''

''அப்பையாவே வெலகி வுட்றணும்னு தயாராத்தான் இருந்திருக்காரு.''

''இங்கருந்து எந்தப் பெயலாச்சும் பங்குக்கு அடிப் போட்டாந.''

''எவன் போவான் அவருட்ட. அவரே சொந்தக்காரப் புள்ளாண்டன் ஆரவோ வேலைக்குக் கொண்டு வந்துட்டாராம்.''

''எல்லாம் செய்வாரு.''

''ஊருக்குள்ள நெலவரமே சரியில்ல. அவரும் பெரிய மொதலாளியுந்தான் இப்ப ரெம்ப பழக்கம்.''

''ஆளுக்கொரு காரியமிருக்கும். ஆதாயமில்லாம ரெண்டு பேருஞ் சேரமாட்டாக.''

''ஆருக்குத் தெரியுது. அண்ணாக்கி அழகிரியும் கந்தையாவும் இவுக சேகாரத்தப் பத்திப் பேசிட்டிருந்தாக.''

''இவுக சேகாரம் நல்லதுக்கில்ல. யாருக்கு வென வருதோ.''

"குளிச்சு முடி. போவோம் வெருசனெ."

"போயி வெட்டி முறியவா போற. அந்தக் காலத்துல இப்பிடி கெணத்துல கூட குளிக்க முடியாது. கண்டுக் கிட்டா வெரட்டியடிப்பாக. ஊருக்குள்ள அவதாரங் கூடப் போட்ருக்காக. அதுலயும் குருசாமி நாய்க்கர் அய்யா இருந்தாரே உச்சிக் குடுமிப் போத்தி நாய்க்க ருன்னு பெரிய ஆளு அவரு. கண்ணுல காங்க வுடமாட் டாரு. கொஞ்சநாளைக்கு முந்தித்தான் தவறிப் போனாரு".

"அவரா. வக்கட்டையாக் கெடந்தாரே."

"கொளங்குட்ட பாத்துத்தான் குளிக்கணும். அதனால தான் நான் ஊருணியிலயே குளிக்கிறது."

"அப்ப நல்லா வேல செய்வயோ."

"ஏலுமட்டும் செய்வென். பொஞ்சாதி ஒருத்தியுண்டு. அவளுக்காச்சும் கொண்டு வந்து போடணுமே. களத்து வேல முக்கியம். அவளும் போனா வேலையும் தொடுற தில்ல"

"சீக்கு வந்துதான் போனாளா."

"அம்மா கூட்டிக்கிருச்சு."

"த்சொ, த்சொ."

"முதுகக் கொஞ்சம் சொறிஞ்சு வுடுடா. ஒங்க தகப்பக் காரங்கூட அந்தச் சமயந்தான் ரெம்பச் சொகமில்லாமக் கெடந்தான். ஒங்க ஆத்தாதான் எனக்குக் கஞ்சி ஊத்துவா. அந்த நேரந்தான் நீ பெறந்தது."

"இந்தப் பக்கம் திரும்பிக்கோ. அழுக்கு ரெம்பக் கெடக் குதே."

"இத்தனைக்கும் குளியாமயா கெடக்கென். மண்டையில் முடி வளந்து போச்சு. நாளைக்கு வெட்டி வுட்ருடா,"

"ஆருட்டயாச்சும் நல்ல கத்தரிப்பான் இருந்தா வாங்கிக் குடு. மொட்டையாத் தீட்டிறென்."

"மாடசாமிப் பெய வச்சிருந்தான். வாங்கித் தாறென்... தண்ணிக்குள்ளயே கெடந்தா நேரம் ஓடிப் போயிரும்.

போயித் தலசாயணும். பெறகு தொழுவுக்குப் போகணும். அடே இப்பிடி உன்னி ஏறயில வெலாப்பக்கம் பெலமாக் குத்துடா. நெஞ்சு கப்புனு அடச்சு எளச்சுக் கெடக் குது. பண்டுவரப் பாத்து ஏதாச்சும் பச்சல மருந்து கேக் கணும். நீ ஏறு மொதல்ல.''

கிணற்றைவிட்டு வெளியேறிய அவர்கள் ஈரம் உலரும் வரை தெம்புடன் நடை போட்டார்கள்.



அழகிரி வீட்டுச்சுவர்கள் ஏக வெள்ளையடிக்கப்பட் டிருந்தன. அவற்றில் காவி மண்ணாலும் கோவையிலைச் சாறாலும் வரைந்த வாழைமரங்கள் குவிந்த பூவுடன் குலை தள்ளி நின்றன.

முற்றத்தில் பாய்கள் விரித்து உட்கார்ந்து வெற்றிலை எச்சைத் துப்பிக் கொண்டே பாடுபழமைகள் பேசினார்கள் உறவுக்காரர்கள். வருகிறவர்களுக்கு வெற்றிலை பாக்கு கொடுத்துக் கொண்டிருந்தான் மாடசாமி.

அரிக்கன் விளக்கு வெளிச்சத்தில் எழுதப்படிக்கத் தெரிந்த சிறுவன் சம்மணம் போட்டு உட்கார்ந்து மொய் கொடுப்ப வர்களை ஏறிட்டுப் பார்த்து பிறகு மொய் வாங்கிப் போடும் வண்டாரியை கேள்விக் குறியுடன் பார்த்தான்.

''எழுது. க. ஆண்டி ரெண்டு ரூவா.''

மொய் கொடுத்தவர்கள் கை நிறைய வெற்றிலை வாங்கிச் சென்றனர்.

பக்கத்துத் தொழுவில் புகை மூட்டம் கிளம்பிய வண்ணமி ருந்தது. முன்னால் தண்ணீர்ப் பானைகள்; மெடாக்கள். ஊடே அரிசி யரித்துப் போடும் பெண்கள் நனையப் போட்

டிருந்த புளியை எடுத்து ஒருத்தி கரைக்கும்போது புளிய முத்துக்காக ஆவலுடன் மொய்க்கும் சிறுபயல்கள்.

''சிந்தாமத் தட்டுப்பா. சோறு கீழ சிந்துனா ஒண்ணுக்கும் ஒதவாது.''

கம்பு கட்டிய கூடையில் தட்டிய சோற்றைச் சுமந்துவந்து சிறுதாழியில் வடித்து உள்ளே விரித்த மாத்தில் தட்டுவ தற்காகச் சென்றனர் சிலர். அவர்கள் மார்பு முகமெங் கும் ஒரே வேர்வை. சோறு வெந்த மெடாவில் தண்ணீர் விட்டு லாத்தி கரிப்பத்தலே வறண்டினாள் ஒருத்தி.

''தீய அமச்சுப் போடுடா. சோறு பத்துது.''

கொஞ்ச நேரத்தில் குளம்புத் தாளிச்சம் சுரீரிட்டு மணத் தது. அந்தத் தொழுவில்தான் கலியாணச் சமையல்.

வீட்டிற்கும் தொழுவிற்கும் அடுப்புக் கூட எலிபோல் அவ ரத்தில் ஓடியலேந்து கொண்டிருந்தான் அழகிரி. சமைய லாட்கள் சில சாமான்கள் கேட்கும்போது அழகிரி முத்து முருங்கனைக் கலந்து கொண்டான்.

"இல்லன்னா கேக்கிறத வாங்கிக்குடு. அவங்கிட்டக் கொற வய்க்கிறது நல்லால்ல."

அழகிரி நடுக்கடைக்கு ஓடினான்.

சித்திரை மாச நிலா பகல்போல் காய்ந்தது. கூடவே மூன்று பெட்ரோமாக்ஸ் லைட்டுகள். சக்கிலியக்குடி கூரை கள் தெளிவாய்த் தெரிந்தன.

அவன் காளியம்மன் கோயில் முக்குக்கு வந்தான். பஞ் சாயத்து போர்டு விளக்கு வெளிச்சம் அந்த காம்பவுண்டுக் குள்ளேயே பரவியிருந்தது. புல் முளைத்த இடங்களில் ரேடியோவின் கரகரப்பை அருவங் கொடுத்துக் கேட்ட வாறு சில கழுதைகள் படுத்துக்கிடந்தன.

மேடையில் வேலே மெனக்கிட்டு உட்கார்ந்திருந்த குரு சாமி நாயக்கர் கேட்டார்.

''என்னலே அழகிரி மக கலியாணத்த போடுசா நடத்து ருப்புலருக்கு.''

''என்னமோ சாமி எனக்குத்தக்க செய்யிறென்.''

அவன் நிற்கவில்லை. திரும்பியபோது ஆவுடை வீட்டுமூலை யில் முகக்களையில்லாமல் உட்கார்ந்திருந்தாள்.

"கலியாணமும் பொழுதும் சொடிஞ்சு போயி உக்காந்துட் ருந்தா எப்பிடி."

"ஒண்ணுமில்ல. அடுப்போரம் அலஞ்சதுக்கும் அதுக்கும் ஒரு வடியா வருது."

''நீ அலஞ்சது போதும். பேசாம உள்ளபோயி புள்ளை யோரம் உக்காந்துக்கோ. நாலுபேரு பாத்தா என்ன நெனைப்பாக.''

அவள் ஏலமாட்டாக் குறையாய் எழுந்து உள்ளே போனாள்.

வீட்டிற்குள் குமரிப் பெண்கள் சூழ முத்துமாரி அமைதி யாய் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு ரெம்ப ரெம்ப மனசில் ஓடியது. கேலிப் பேச்சுக்களுக்குக் கூட சிரிக்க முடியவில்லை.

கந்தையா நேரமிருக்கவே வந்து போயிருந்தார். மறு நாள் மாப்பிள்ளையும் பெண்ணும் வீட்டிற்கு வந்துபோக வேண்டுமென்று அவர் சம்சாரம் சொல்லியனுப்பியிருந் தது. அழகிரி அவர் வீட்டிற்கு நடுக்கடையிலிருந்து அரிசியும் பருப்பும் வாங்கியனுப்பியிருந்தான்.

வேம்படியில் என்றைக்குமில்லாத புதுசாய் சக்கணன், சித்திரன், கருப்பன் மூன்று பேரும் சேர்ந்து உட்கார்ந்து மாறி மாறி வெற்றிலை துப்பிக் கொண்டிருந்தார்கள். கருப்பன் மட்டும் மனத்தாங்கலாய்ச் சொல்லிக் கொண் டான்.

''இருந்திருந்து முத்துமாரி அசலூருக்கில்ல போரு.

செவல்பட்டி ஆட்கள் வழியில் வருவதாய் யாரோ சொன் னார்கள்.

சிறிது நேரத்தில் மாப்பிள்ளை உறவுக்காரர் சகிதம் வந் தான். அவன் தங்கச்சிமார்கள் இருவரும் பருசப் பெட்டி யும் கலியாணப் பாயுமாய்ச் சென்றார்கள். அவர்களை வீரி வீட்டுக்கு அழைத்துப் போனாள்.

"ஏ மாப்பிள வந்தாச்சு, மாப்பிள வந்தாச்சு.''

சிறுசுகள் ஆரவாரிக்கும் சத்தம் முத்துமாரி காதிலும் விழுந்தது.

வண்டாரி அதட்டிச் சொன்னான்.

''எல்லாச் சாமானவும் எடுத்து வச்சுத் தயார்ப் பண்ணுங்க.''

வீட்டு முன்பத்தியில் பருசப் பெட்டி நிறைய அரிசி. செப்பு நிறைய மஞ்சணை, ஒரு சிட்டியில் எண்ணெய், வெற்றிலை பாக்கு, தாம்பாளத்தில் சேலை, பருசப்பணம்...எல்லாமே எடுத்து வைக்கப்பட்டன.

மாப்பிள்ளை வீட்டார் வீரி வீட்டிலிருந்து வந்தார்கள். வயிரவன் மட்டும் வரவில்லை.

வண்டாரி ஆவடையைக் கூப்பிட்டு மெதுவாய் எதையோ சொன்னான். அவள் அவசரமாய் வேம்படிக்கு ஓடிவந்து கருப்பனை அழைத்துப் போனாள்.

கருப்பன் பருசப் பெட்டி தூக்கிக் கொடுக்கும் போது சுதாரிப்பில்லாமல் முகத்தைத் தொங்கப்போட்டிருந்தான். ஒருத்தி கேலி பேசினாள்.

''கருப்பன் என்ன கவலையாருக்க.''

அவன் மற்ற விஷயங்களுக்கு அங்கிருக்கவில்லை.

அப்புறம் வண்டாரிகுரல் ஓங்கிக் கேட்டது. அவ்வளவு வயசிலும் அவன் குரலில் தணிவில்லை.

''செவல்பட்டி முத்து முருங்கன் மகன் வயிரவன் தொரச்சி யாவரம் அழகிரி மக முத்துமாரிக்கு இருவத்தொண்ணு பருசம் போடுறான் பருசம் போடுறான்.''

கூடவே கையிலிருந்த துட்டையும் வட்டியில் சலோரெனப் போட்டான்.

''அப்பிடிச் செய்யி அப்பிடிச் செய்யி.''

மற்றவர்கள் சத்தமிட்டு ஆமோதித்தனர்.

பெண்கள் மூன்று முறை குரவையிட்டனர்.

கொத்துச் சரத்தில் உதிரும் பூவாய் கூட்டம் கலைந்தது.

''ஏலேய் கடகத்துல சோத்த அள்ளி வையி. ஒருத்தன் சோத்தக் கிண்டிவுட்டு ஆத்துடா. வெஞ்சணத்த எடுத்து வையி. அடே நீ போயிச் சத்தங்காட்டு. பெரிய எலையெல்லாம் ரெண்டா வெட்டு.''

ஆக்குப்பறையில் எழும் கெடுபிடிச் சத்தத்தையடுத்து ''தெருக்காரங்க எல்லாம் சாப்பிட வாங்க'' என்ற கூவல் வீச்சாய்க் கேட்டது.

பந்திச் சாப்பாடு கழிந்த இரவு.

பெட்ரோமாக்ஸ் லைட்டை எடுத்து காற்றடித்தான் ஒருவன். அது இன்னும் கூடி கிஸ்ஸென்று இரைந்தது.

அழகிரி வீட்டில் மீண்டும் ஆரவாரமான கூட்டம். ஆண்களும் பெண்களுமாய் இடித்துக்கொண்டு ஒருவர் தோளுக்கு மேல் ஒருவர் எட்டிப்பார்த்தபடி நின்றனர். பெரிய மனிதர்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்களுக்கு முன்னால் அடக்கமாய் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள் முத்துமாரி. கலியாணக் கோலத்தில் மழைக்குத் தளிர்த்த செடிபோல் ஒரு குளுமை. பக்கத்தில் மாப்பிள்ளையலங்காரத்தில் வயிரவன். பெண்ணுக்குப் பின்னால் வயிரவன் தங்கச்சி ஆனந்தம்மா நின்று கொண்டிருந்தாள் வீடெங்கும் ஒரே பூமணம்.

"மாப்பிள்ளைக்காச்சும் பொண்ணு லச்சணந்தான். அரச்ச மஞ்சளா இருக்காளே."

''மாப்பிள்ளைக்கென்ன, மூக்கும் முழியும். நெறந்தான் கம்மி."

"நல்ல பொருத்தம்.

''அவனுக்குத் தீப்பெட்டி யாவுசு வேலையாம். இவபாடு சீருதான்.''

''இவ சிக்கன காரியாக்கும்.

''இனியொண்ணும்மா. இவகிட்ட ரெம்ப மருவாதியுண்டு. அண்ணமிங்கிறவன அண்ணமின்னு, தம்பிங்கிறவன தம்பின்னு கூப்புட்டு...அதென்ன சும்மா சொல்லப் புடாது. மொறகார ஆம்பளைய ஏறிட்டுப்பாத்துருப்பாளா. பொம்பளப் புள்ளன்னு பொறந்தா ஒரு எடத்துக்குப்

போறவெரைக்கும் அப்பன் பேரக் காப்பாத்தணும். அது தான் மருவாதி.''

''செவல்பட்டி முத்து முருங்கன் மகன் வயிரவன்...

வண்டாரி குரல் கேட்டதும் அமைதி. எல்லோரும் மாப் பிள்ளை கையையும் பெண்ணின் கழுத்தையும் மாறி மாறிப் பார்த்தனர்.

''தொரச்சியாவரம் அழகிரி மக முத்துமாரிக்கு...

தாம்பாளத்தைத் தொட்டு மாப்பிள்ளை இருகைகளாலும் தாலியை எடுத்து பெண்ணின் கழுத்துப்பக்கம் கொண்டு போனான். அனந்தம்மா தாலிக்கயிற்றைக் கூர்மையாய்ப் பார்த்துக்கொண்டே குனிந்தாள்.

"திருமாங்கலியம் சூட்றான். திருமாங்கலியம் சூட்றான்."

பெண் கழுத்தில் மாப்பிள்ளை ஒரு முடிச்சுப் போட்டதும், அனந்தம்மா இரண்டு முடிச்சுக்களையும் போட்டுச் சரிப் படுத்தி கொண்டைப் பூவை நன்கு சொருகித் தடவினாள்.

"கடல சிறு பெயறு காரா மணிப்பெயறு...

குப்பாண்டி ரெம்ப நேரம் வாழ்த்திப்பாட பெண்கள் குரலை தொடர்ந்து கேட்டது.

அழகிரிக்கு மூச்சுவிடக்கூட மறந்துவிட்டது. தடை யின்றிப் பெருமூச்சு விட்டான்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே மச்சு வீட்டு மூலே யில் அமைதியாய் உட்கார்ந்து கண்ணீர் விட்டு ஆற்றிக் கொண்டிருந்த ஆவடையை யாருமே கவனிக்கவில்லை.

○

கொட்டாரத்து நிறைசலில் கொடிக் கயிற்றில் தொங்கிய மாட்டுக்கறி வார்களை மாற்றிப் போட்டுக் காய வைத்த கந்தன் எட்டிப் பார்த்துக் கேட்டான்.

"அழகிரி மகள அனுப்பப் போறயாக்கும். புள்ள முணுக் முணுக்குனு அலையும். போயிருச்சுனு கொஞ்ச நாளைக்கு வெறிச்சினுதான் இருக்கும்."

பல்தீத்திய வாயைக் கொப்புளித்துத் துப்பினான் அழகிரி.

''பொம்பளப் புள்ள பெத்தாச்சுனா என்ன செய்யிறது.

''ஆம்பளன்னா இங்க கெடப்பான்.''

''கறிகாயலயா இன்னும்.

''காயலயே. பதமிருந்துச்சுனா புழுப்பத்தியிருமில்ல.

''ஆமா அதப் பக்குவமாத்தான் ஒணத்தி எடுக்கணும்.''

''வெயிலடிச்சா வெருசனாக் காயும்.''

''சின்னப் புள்ள நெனப்பு வந்துருச்சு போலருக்கு பெரியாளுக்கு. மழகாலத்துல வறுத்து வாயில போடலாம்.''

"இருக்கிற வெரைக்கு என்னத்தவாச்சும் வாயில போட்டுக்கிற வேண்டியதுதான. இது கண்ணுக்குட்டிக்கறி.... ஆவட கூப்பிடுரு பாரு."

வாசல்படியில் ஆவடை எட்டிப் பார்த்தாள்.

''தாயமாட்டுப் பண்ணுத. சிறுசுகள காலாகாலத்துல வழியனுப்பி வைக்க வேண்டாமா.''

''ஆமா. அதமொதல்ல செய்யணும். காவக்காரரு வீட்டுக்கு அனுப்பணும். பூச்சம்மா நேத்தே சொல்லி வுட்ருச்சு.''

அவன் வாசல்நிலே தட்டாமல் குனிந்து நுழைந்தான்.

எல்லாக் காரியங்களேயும் முடித்துவிட்டு பெண்ணும் மாப்பிள்ளேயும் கந்தையா வீட்டுக்குப் போக நேரம் உயரே வந்துவிட்டது.

வீட்டுக்குள்ளிருந்து லட்சுமி அவசரத்தில் எட்டிப் பார்த்தது.

''அட பயமகனே வா வா. உள்ளவா. மூட்டுப் பெருத்த பொம்பள மாதிரி சீலய வரிஞ்சுகிட்டு.''

அழகிரி தரையைப் பார்த்துச் சொன்னான்.

''சாமிவுக இல்லேயா தாயி.''

''அவுக கடைக்குப் போயிருக்காக வெத்தலே வாங்க. வழி யில ஒங்களப் பாத்துருப்பாக போலருக்கு. ஆவட அப்பிடி உக்காரு.''

''இருக்கம்மா.''

அவள் முத்துமாரியோரம் உட்கார்ந்தாள்.

வெளியே செருப்பு சரசரத்தது.

''அவுக வந்தாச்சு.''

"பொண்ணு மாப்பிள்ளேயெல்லாம் அப்பதையே வந் தாச்சா."

கந்தையா கை நிறைய வெற்றிலேயுடன் நுழைந்தார்.

வீட்டுக்குள் லட்சுமியும் அவரும் எதையோ மெதுவாய்ப் பேசிவிட்டு வெளியே வந்தபோது லட்சுமி முகத்தில் களே கட்டியிருந்தது. கந்தையா திண்டிலிருந்து இறங்கி வந்து கிழக்காமல் திரும்பினுர்.

பெண்ணும் மாப்பிள்ளேயும் அவர் காலில் விழுந்து கும் பிட்டு எழுந்தனர். அவர் இருவர் கையிலும் வெற்றிலேச் சுருளும் ஆளுக்கொரு ரூவாயும் கொடுத்துவிட்டு கொஞ்ச நேரம் மௌனமாயிருந்து எச்சை விழுங்கினுர்.

"என்னலே புள்ளேய ஒழுங்கா வச்சுக் காலந் தள்ளணும். அது இதுன்னு கொணங்கெட்டு அலேயக் கூடாது.''

வயிரவன் பேசவில்லே,

லட்சுமி கூட மன்னே கட்டிப்போய் நின்றது.

''சரி போயிட்டு வாங்க.''

அழகிரி துண்டால் முகத்தைத் துடைத்தான்.

மேலத்தெருவில் வில்லிசேரி வீடு உட்பட நாலேந்து வீடு களுக்குச் சென்று திரும்பினுர்கள்.

மத்தியானத்துக் கெல்லாம் விருந்தாளிகள் ஒருவர் பின் ஒருவராய்க் கிளம்பினர். அழகிரியும் புறப்பட்டான். வடக் கோடை வரை ஆவடை வழியனுப்ப வந்தாள். பிரியுமுன் ஞாபகமாய்ச் சொன்னுள்.

''எம்மா பருசப் பொட்டிக்குள்ள கெடக்கிற செருப்பெடுத்துப் போட்டுக்கங்க.''

இரண்டு பேரும் அழகிரி கைப்படக் கட்டிய பூக்கட்டிச் செருப்புக்களை எடுத்துப் போட்டு நடப்பதை அழகுபார்த்துவிட்டுச் சொன்னாள்.

''அப்பிடியே பையாப் பையா நடங்க.''

கீழக்கரிசல் வேல மர நிழலில் பாளைவாவளையத்தில் மாட்டுச் சவ்வால் கட்டிய தப்பை எவனோ சிறுபயல் வாள்வாள் என்று உறுமிக் கொண்டிருந்தான் மதிய வெயிலில் தப்புச்சத்தம் மாறி மாறி காதில் விழுந்தது தெளிவாய்.

ஆவுடை ஊரோரம் வந்தபிறகு வடக்காமல் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள்.




சித்திரனுக்கு வயிறு தெகரமாயிருந்தது. வேட்டியைத் தளர்த்தித் தடவி விட்டுக் கொண்டான்.

கருவ மரத்தடியில் மல்லாந்தபடி முகஞ்சுளித்த சக்கணன் சொன்னான்.

''அடே எனக்குங்கூட வகுறு வலிக்குது.''

மத்தியானச் சுள்ளாப்பின் பாய்ச்சல் மொத்தென்று தளிர்த்திருந்த கருவக் குழைக்குள் புகமுடியாதவாறு நிழல் கீழே உருண்டையாய் விழுந்திருந்தது. கருவமரம் சுற்றிலும் மஞ்சள் குஞ்சம் சொருகியிருந்தது.

சித்திரன் கம்மந்தோகையைக் கிழித்தபடியே கேட்டான்.

''ஏன் இண்ணைக்கி கம்மங்கஞ்சி சரியில்லையா.''

''ஆமா களைக்கு வரணுமென்னு வெள்ளங்காட்டி சோறெடுக்கல. ராத்திரி எடுத்ததுல மிச்சம். வெள்ளங்

காட்டி நடுக்கடையில பெயறு வாங்கித் தின்னுட்டு வந்தென். அதென்னடான்னு வெறும் வகுத்துக்கும் அதுக்கும் கஞ்சி நெறஞ்சதும் வகுறு வலிக்குது.''

''இப்ப எல்லாம் வர வர கம்மங்கஞ்சி ருசியே இல்லையில்ல.''

''என்ன எழவோ. எதையெதையோ வெள்ளாம செய்யிறாக இப்ப. அந்தக் காலத்துல காட்டுக் கம்மங்கஞ்சியும் இலுமிச்ச ஊறுகாயும் தொட்டுக் குடிச்சா கஞ்சி உள்ள போறது கூடத் தெரியாது. கந்தையா வீட்டுப் பூச்சம்மா இருக்கே ஊறுகா போடுறதுல கைராசி. தோண்டியில ஊறப்போட்டு குப்பைக்கடியில வெட்டிப் பெதச்சிருவாக. ரெம்ப நா கழிச்சு எடுத்துப் பக்குவப்படுத்துனா தேனிருக்கும். அவுக போக்கே தனி. களையெடுப்பு நேரமின்னா அத்தன ஆளுக்கும் மத்தியானக் கஞ்சி ஊத்துவாக. இப்ப ஆரு செய்யிறா. மொதலாளி வீட்லயே அந்தப் பேச்சில்ல. அப்பையா இருக்காரே இவருட்ட தானியத்த எண்ணித்தான் வாங்கணும். வீட்டம்மா அதுக்கு மேல. என்னமோ பெரிய பெழப்பு வந்துருச்சுனு கழுத்தக் கொணட்ற கொணட்டு புடிச்சுக்கிறதுக்கே ஓராளு கேக்கும் போலருக்கு.''

''எனக்கும் அதக்கண்டா புடிக்க மாட்டங்குது.''

''பெறகென்ன. இப்ப நான் தான் இருக்கென். திடீர்னு பெழப்பு வந்துட்டா நான் எடுத்துக் குடிச்சதெல்லாம் மறந்தா போயிரும். ஒலஞ்ச கஞ்சியக் குடிச்சிட்டு வகுத்து வலியோட உருளுறனே இத நீ தான் மறந்துருவயா.''

''அது வாஸ்தவம்.

''சரி. ஒரு காலத்துல கஸ்டப்பட்டதுக்கு இப்ப நல்லா இருக்கம்னு அதக் கண்டறிஞ்சு பெழைக்க வேண்டாமா. அதுல்லாம கழுத்துல கெடக்கிற சங்கிலியக் கொண்டே ஊர வளச்சது மாதிரி நெனப்பு. தாடி நரச்சகெழவன் என்னப்போயி ஏலங்கிறது......''

''இதெல்லாம் வம்புதான.''

''வம்புன்னு ஒரு வெதத்துலயா. என்னமோ கந்தையா பெழச்ச கூறுகெட்ட பெழப்புக்கு இந்தம்மாளுக்கு யோகம் அடிச்சிருக்கு. இதெல்லாம் அவரு பிஞ்சதானப்பா.''

சித்திரன் ரெம்ப நீளத்துக்குப் புஞ்சையில் பார்வையை நீட்டினான். கம்மம பயிர்கள் சிலுசிலுவென்று செண்டா வீசிக் கொண்டிருந்தன. அங்கங்கே கூடிப் பேசும் களை யெடுப்பு ஆட்கள்.

''காவக்காரருக்கும் ரெம்பக்காடு இருந்துச்சோ.''

சக்கணன் சலிப்பில் 'உச்' கொட்டினான்.

''அத ஏன் கேக்க. மனுசன் சன்னக்காடா வச்சிருந்தாரு. அம்புட்டவும் வட்டிக்கும் மொதலுக்குமா சும்மா குடுத்தது மாதிரி தள்ளி வுட்டுட்டாரு.''

''இப்பமாதிரி துட்டு வெள்ளாம அப்ப இல்லையா.''

''இந்த மொளகு செடியும் சீனிக் கெழங்கும் ஏது. எல்லாம் தானிய வெள்ளாமதான். துட்டுக்கு ஏகப்பட்ட கஷ்டம்.''

''அப்பையாவுக்கு மட்டும் துட்டு எப்படி வந்துச்சாம்.''

''பொண்டாட்டி ஊருல இருந்த சொத்த வித்துட்டு வந்து ஊருக்குள்ள வெதச்சிட்டாரு. ஒருசமயம் அவருட்ட கடன் வாங்கின சக்கிலியப் பெய அத்தனபேரும் காணித் தவ சத்த அளந்து குடுத்துப்புட்டு பேசாம வீட்டுக்கு வந்தான். மிச்சமிருந்தா இருக்கவே இருக்கு நடுக்கட. ஏலே, சக்கிலி யன்ல எவனுச்சும் கள்ளுக்குடிக்கத் தானியம் அளக்காற வன் உண்டா. அப்பிடியெல்லாம் திருஞ்சிட்டுத்தான் இண் ணைக்கி நக்குன பெழப்பா இருக்கான். அந்தக் காலத்துல ஆணும் பெண்ணும் வீட்ல கெடந்தே திம்பாக. இண்ணைக் கிப் பாரு காட்டுக்கீரையப் பிடுங்கி கடஞ்சு தின்னுட்டு அலையிரு பொம்பள. எத்தன பேரு ஊரவுட்டுப் போயி பட்ணக் கரையில வழிச்சுத் தின்னுட்டு அலையிருன்னு பாத்த.''

சித்திரனும் தலைசாய்த்தான்.

''நெறையப் பேரு போயிட்டாகளோ.''

''எளவட்டங்க கோயில்பட்டியில போயி ஆட்டம் பாட் டம் பாக்கப் போறான். பேசுற படமோ என்னமோ அதப் போயி மெனக்கிட்டு ஒறக்கங் கெட்டுப் பாத்துட்டு வந்தா வேலையெங்க செய்வான் அதுக்குத்தக்க சொங்கி வேல வேணும். பாத்தான். ஒண்ணும் லாயக்கில்ல. பொட்டியாரு

கௌம்பீட்டாக. அங்க போயி நடுத் தெருவுல வாரவுக போறவுக காலப் பாத்துட்டே செருப்புத் தச்சிட்டும், குப்பையள்ளீட்டும் திரியிருன். அவன் சட்டையென்ன, துணியென்ன, மண்டையில முடி எப்பிடி வெட்டிருக் கான்னு தெரியுமா.''

''அங்க எல்லாம் முடி வெட்டலாம், துணிய வெளுக்கப் போடலாம்னு சொல்ருக. துணிய மடிச்சுப் போடுருகளே. கையில துட்டுத்தான் வேணும்.''

''அங்க இருக்கிற அண்ணன் மாரும் இவங்களப் போல கௌம்பிப் போனவுகதான்."

"இப்பிடியே ஆளுக் கூடுனு பட்ணக் கரையில நெருலுப் பெருத்துப் போகும்."

''காரு ரயிலுன்னு வேற வந்துருச்சா. மோளுறதுக்குக் கூட காருலதான் போவாக போலருக்கு. வில்லிசேரி மொதலாளி ஒரு காருக்குப் போயி மத்தியானக் கஞ்சிக்கு வந்துருரு. எம்புட்டுச் சூச்சியம் நடக்குது."

"அழகிரி கூட ஒண்ணறவாடம் போருனே.''

''அவனுக்குப் போகவேண்டிய சோலி. வாலெடுக்க ஹும்ணு சம்சாரி கூட்டீட்டுப் போருக. செருப்புக்கு வார் வாங்கணும். அவன் ஒருத்தன்தானடா தொழில வுடாமச் செய்யிருன்.''

''சமயத்துல காட்டு வேலைக்கும் கௌம்பீருனே, இண் ணக்கிப் பாரு ஆளுக்கு முந்தி களைக்குக் கௌம்பி வந் துட்டான்.''

''எல்லாம செய்ய வேண்டியது தான. புள்ளையப் புடிச்சுக் குடுத்துட்டான். ரெண்டு பேரும் நிம்மதியாத் திரியிருக."

மத்தியானக் கஞ்சிக்கு உட்கார்ந்திருந்த ஜனங்கள் எழுந்து அவரவர் நிறைகளுக்குச் சென்றனர். கைக்களை யானதால் நிறைக்கு இரண்டுபேர். சக்கணனும் சித்திர னும் ஒரு நிறை.

''எந்திரி போவொம். அவரு சத்தம் போடுவாரு.''

'போவண்டா. குடி முழுகியா போகுது. இவரு குடுக்கிற தவசத்தக் கொண்டு போயி மக்கு வீட்டுக் குலுக்கைக்

குள்ளயா போடப்போறேம். இந்த அப்பையா நேத்து வெரைக்கும் கொத்தப் பருத்தி யேவாரஞ் செஞ்சிட்டு அலஞ்சாரு. கந்தச்சாக்கும் தெராசுமா கஞ்சி கூடக் குடிக்காம எக்கீட்டுத் திரிவாரு. இப்பப் பாரு கையில புடிக்க முடியல. சரி வா போவெோம்.''

இருவரும் பிரயாசப்பட்டு எழுந்தார்கள்.

கரிசலில் கண்ணுக் கெட்டு மட்டும் பச்சை. விட்டு விட்டு வெயில் படலங்கள் அந்தரத்தில் நெளிந்து திரிந்தன.

சக்கணன் முனங்கினன்.

"அழகிரி கோயில்பட்டி போனு ஒரு வேட்டி யெடுத்திட்டு வரச் சொல்லணுண்டா. இது இத்துப் போச்சு."

களையெடுப்பு ஆட்களின் நடுவே களைக்குமிகள் வெயில் வதைப்பில் சுருண்டு கிடந்தன.

சக்கணனுக்கு ஒரு நிறை தள்ளி ஆவுடை எடுத்து வந்தாள். அழகிரி அதற்கடுத்து.

யாராவது முந்தி நிறைகொண்டு போனல் சக்கணன் அவர்கள் முதுகில் மண்கட்டி யெடுத்து எறிவான். அப்படியென்றல் "சும்மா சாதாரணமாவே எடுத்துப்போங்க. மொதலாளிய ஒருத்தரா நில்லுனு நிறுத்த வேண்டாம். பின்னல கெடக்கிற கெழடு கட்டைய அனுசரிச்சு ஒண்ணு போலதான் போகணும்" என்று அர்த்தம்.

இந்தமுறை ஆவுடை முதுகு வந்தது. அவள் திரும்பிப் பார்த்தாள்.

''ஆவுடைக்கென்ன மகராசி. புள்ளையக் கெட்டிக் குடுத்ததுக்குள்ள பேரனப் பாத்துட்டா. பேரன் எப்பிடிக் கெடக்கான். போயிட்டு வந்தயா.''

''நாலஞ்சு நாளைக்கு முந்தித்தான் வந்தென். பெய நல்லா கொளவி தெரண்டு கெடக்கான்.''

ஆவுடை பெருமையுடன் சொன்னள்.

''அதுக்குள்ள பாத்துட்டு வந்தாச்சா. அவதான் ரெண்டு மூணு மாசமா இங்க வந்து வகுத்தத் தள்ளீட்டு அலஞ்சாளே.''

"என்னன்னாலும் கண்ணுக்குள்ளயே இருக்குதுல்ல."

''அழகிரி போனானா?''

''ரெண்டு தேரம்.''

ஆவடை அழகிரியை ஓரக் கண்ணால் பார்த்தாள். அவன் குனிந்த தலை நிமிரவில்லை.

''ஏதேது அவ இங்க வந்து இருந்தாக் கூட ஒங்களுக்கு நல்லது தானே?"

"இருக்கிறதே ஒண்ணு.''

''அவ புருசக்காரன் எப்பிடி.''

''என்னமோ நல்லாத்தான் இருக்காக. தீப்பொட்டி யாவுசுலதான் ரெம்ப நாளைக்கு வேலருக்கும் போலருக்கு.''

''அவ மாமன் கெட்டிக்காரன். குடும்பத்தக் கொண்டணைச்சுப் போவான்."

''அந்தண்ணன் தங்கக் கொணம். பேரன் மேல உசிராக் கெடக்கான். என்னேரமும் சொடலப் பெயலே வாயில மோண்டுருதடாதான்."

''இருக்கட்டும் இருக்கட்டும். நல்லாத்தான் இருக்கணும்."

ஆவடை கொஞ்சநேரம் நிம்மதியை அசைபோட்டுக் கொண்டாள் அவள் கைகள் பல்வேறு களைகளை வேரோடு பிடுங்கி யெறிந்தன.

சக்கணன் தோதாய்க் கேட்டான்.

''ஒரு பாக்குச் சில்லும் வெத்தலையும் இருந்தாப் போடு. தண்ணித்தாகமா இருக்கு."

ஆவடை முந்தியவிழ்த்து எடுத்துக் கொடுத்த வெற்றிலையை ஒரெட்டு நகன்று வாங்கிக் கொண்டவன் வறண்டு போயிருந்த உதடுகளை நமர்த்தி வெற்றிலை போடத் தயார்ப் படுத்தினான்.

''அழகிரி இண்ணைக்கி வேம்படிய வுட்டுட்டு களைக்குக் கௌம்பியாச்சே புதுசா.''

என்ன விஷயம் என்கிற மாதிரி அழகிரி திரும்பினன்.

''எல்லாம் செய்ய வேண்டியதுதான. இவ மனுசனச் சும்மா இருக்க வுடுருளா.''

ஆவடை முனங்கினுள்.

''சும்மாருந்தாப்புல சோறு எங்கருந்து வரும்.

"அழகிரிக்கென்னம்மா. செருப்பு யேவாரி யாச்சே.''

''ஆமா ஊருக்குள்ள மொளச்சிருக்கிறயேவாரிக காணுது, நான் வேறயா."

''அதானப்பா எல்லாம் ஆடுமாடுன்னு யேவாரஞ் செய்ய ஆரம்பிச்சாச்சு.''

''சொத்துச் சேக்கத்தான்.''

''அதுக்குத்தான் தில்லுமுல்லு எல்லாம்.''

''ஊர்த்தரகு மகுமைஎல்லாம் எம்புட்டோ கூடிப்போச்சு."

''எல்லாம் மேலு வலிக்காம சம்பாரிக்கணும்னு இந்தக் கூத்துத்தான் ''

''சம்சாரிக என்ன செய்வாக. வெளஞ்ச வெள்ளாம துட்டாகணும்."

''மின்னப்போல களத்துல பகடைக்குத் தானியம் கெடையாது.''

''கேட்டாச்சுனு ஆழாக்கு இம்புட்டாச்சேன்னு கணக்கு வழக்குப் பாக்காகளே.''

''ஊரே ரெம்ப மாறிப்போச்சு.

வடகடைசியிலிருந்து அப்பையாவின் கண்டிப்பு கேட்டது.

''ஏலே சக்கணு ஒனக்கென்ன இப்பத் தின்னதுக்குள்ள அலுப்பு வந்துருச்சா. மேயிற கழுதையக் கெடுக்குமாம் மெனக்கிட்ட கழுத. களையெடுக்க முடியலன்னு எடுத்துப் போட்டத வாச்சும் அள்ளிப் போடுலே.''

சக்கணன் இங்கிருந்து சத்தம் கொடுத்தான்.

''சாமியோவ் நம்ம நெறைய வந்து பாருங்க. ஆளுக்கு முந்திப் போகுது. தண்ணித் தாகத்துல வாயி ஒட்டிக் கிருச்சு, வம்பாடு பட்டு தொறந்துகிட்ருக்கென்.''

நிறையைச் சேர்த்துக் கொண்டு போன சித்திரனுக்கு முகம் மலர்ந்திருந்தது.

தெற்குத் தெரு வேதமுத்து வடக்கு நிறையிலிருந்து சொன்னான்.

"பாத்தயா சக்கனு. அவரு கண்ணு பெருந்துக் கண் ணுப்பா. ஆட்ட மாதிரி பின்னால பத்தீட்டே வர மாட் டாரோ."

''ஏன் பத்த மாட்டாரு. வீட்டுப் பூச்சம்மா. ஒவ்வொருத் தரு முன்னாலயும் வந்து சங்கிலி சரப்புலியக் காட்டீட்டுப் போறதுக்கே நேரங்காணமாட்டங்குது. பெறகெங்க ஒரு பான தண்ணி கொண்டு வந்து ஊத்தப்போகுது. கரிசக் காட்ல சின்னது சிறுச வச்சிட்டு வேல பாக்குறதுக தண்ணிக் கெங்க போகும்.''

''நீ சொல்றது சரிதான். வெயக்காடா கம்மா ஓடை யின்னு போயி குடிச்சிட்டு வாறதுக்கு.''

''ஓடங்கவும் தான் யாவுகம் வருது. போன வருசம் பாருங்க. மொதலாளிக்கு நெல்லறுப்பும் அடிப்பும் மும் முரமா நடக்குது. சொமைக்குத் தோதுல்லன்னு சொல்லி வெயக்காட்டோரம் ஒரு பொட்டலுல களஞ் செதுக்கி சோலி நடக்குது.''

''நீ எங்க அம்புட்டுத் தூரம் போன.''

''களத்துச் சோலிக்கு மொதலாளி போகச் சொல்லீருந் தாக. போயிருந்தனு, மதியம் ஆச்சு. தண்ணித்தாகம்னு தொண்டைய வறட்டுது. நம்மளால கெணத்துக்குள்ள எறங்கணும்னு மேகலக்குடிச்சனங்க எல்லாம் அதுலதான் பழங்குது. நம்ம எறங்குனு அம்புட்டுத்தான். சண்டைக்கு வந்துருவாக. கம்மாக் கரையேறிப் போகவான்னு நெனச்சு கலிங்கலோரம் ஓடைக்குப் போனென். நாலஞ்சு நாளைக்கு முந்தி மழபேஞ்சு ஒரு சின்னக் கெடங்குல தண்ணி தெளிஞ்சாப்புல கெடந்துச்சு. அள்ளிக் குடிச்சா மண்டி கலங்கும். மண்டி போட்டு சர்ருனு இழுத்தென். தண்ணி வத்தீட்டே வருது. வகுறு நெறஞ்சிட்டே

போகுது. அப்பாடின்னு நிமிந்து பாக்கென், நடுக்கெடங்குக்குள்ள கோவரம் மாதிரி கிணுக் கிணுக்குனு அசஞ்சுக்கிட்டு நிக்கிது நரகலு."

"சே இவன் ஒரு அசிங்கம் புடிச்சவன்."

"பெறகென்ன செய்யிறது. தண்ணிய வாந்தியெடுக்கவா. எந்தப் புண்ணியவாளன் செஞ்ச பாக்கியமோ நம்ம வாய்க்குள்ள போயிருக்கு. நம்ம நல்ல கெணுக் காங்கலன்னு நெனச்சுக்கிட்டு அருவமில்லாமப் போயி சோலியப் பாத்தென்....... அதக் கணக்கா இவுக மனுசருக்குத் தண்ணி கூட ஊத்தாம வேல வாங்குருக."

சக்கணன் வாயிலிருந்து வெற்றிலைச் சக்கையை புறங்கையில் வாங்கி களைக்குமி யொன்றில் வீசியெறிந்தான்.

களையடர்ந்து கிடந்த புஞ்சையில் ஜனவரிசை பதட்டமின்றி முன்னேறிக் கொண்டிருந்தது.



எவ்வளவுதான் அடக்கிப் பார்த்தாலும் முத்துமாரிக்கு அழுகை பீறிட்டது. மனசில் துயரத்தைப் பூசிப்பூசி மெழுக மீண்டும் வெடித்துக் கொள்வதைத் தடுக்க முடியாத தோல்வி. வீட்டு மூலையில் மண்டையைத் தேய்த்துக் குலுங்கினாள்.

அடுப்பில் தீப் போட்டுக்கொண்டிருந்த செல்வி அடிக்கடி மூக்கை உறிஞ்சினாள்.

"ஏம்மா இப்பிடி அழுகிற. கழுதப்பெய செத்தா போயிட்டான்."

சுடலைப் பயலை சுவரோரம் நடைவிட்டுக் கொண்டிருந்த முத்து முருங்கனுக்கு நெஞ்சுப் படபடப்பு ஓயவில்லை. சின்னப் பயலை இறுகப் பிடித்து மட்டியைக் கடித்து உணர்ச்சியை அமுக்கினான்.

சுடலை வாட்ட சாட்டமாய் இருந்தான். அப்பனைப் போல் கால் திரட்சி. பின் சதுரத்தில் சதைப்பிடிப்பு. அம்மா முகத்தை அப்படியே உரித்து வைத்திருந்தது. அடர்த்தியான முடியில் அங்கங்கே அழகு சுருட்டைகள். மெல்ல நடக்கும்போது கால்கள் அழுந்தப் பதிந்திருந்தன.

முத்துமாரிக்கு ஆரம்பகால நினைவுகள் தலைதூக்கின. அவை அழுகையை அதிகரிக்கவே செய்தன.

முத்து முருங்கன் கோபத்தை அடக்கிப் பார்த்தான். முடியவில்லை.

''பட்டாளத்துக்குப் போறுமாம் பட்டாளத்துக்கு. இந்தப் பெயலுக்கு ஏன் தோரிணியெல்லாம். உண்டான வேலையப் பாத்துட்டுத் திரியிறதுக்கில்லாம இப்பிடிச் செஞ்சுட்டானே. வெறுங்கழுதையா போறதுக்கு. நான் அந்த மனுசனுக்கு எந்த மூஞ்சியோட பதில் சொல்லட்டும். ஒரு புள்ளையவும் நம்மள நம்பி வுட்ருக்கான்.''

செல்லி வெறுத்துக்கொண்டாள்.

''மொதலாளி போயி ரூவா ரூவாயா அனுப்புவான்.''

''இத்தன நாளும் தீப்பொட்டி யாவுசுக்கும் போவானே. இண்ணைக்கி மட்டும் ஏன் பாத்தி கெட்டுக்குத் தொலஞ்சு போயிருக்கான்.''

''என்னமோ மப்பட்டியத் தூக்கீட்டுப் போனான். மதியமெல்லாம் கஞ்சி குடுத்துட்டு வந்தாளே. நல்லா குடிச்சிட்டு கெணத்துல தொவ வேட்டி போட்டு கோயில்பட்டி கௌம்பீருக்கான்.''

''இவன் ஒத்தியிலயா.''

''மேகலக்குடியில ரெண்டு புள்ளாண்டங்க போச்சாம். அவுக வீட்லருந்து ஆளுப்போயி கூட்டிட்டு வந்துட்டாக. இவன் அவுகட்ட வீட்ல சொல்லாதங்கன்னு கெஞ்சிக் கெஞ்சிச் சொன்னானாம். வீட்ல வெளக்கேத்துனப் பெறகு வந்து சொல்றாக, இன்னேரம் மருதையத் தாண்டி போயிருப்பாகளேன்னு ''

''இப்பப் போச்சே அந்த வண்டிக்குத்தான் போயிருப்பான்.''

வயிரவன் காட்டில் போட்டுவிட்டுப் போன மம்பட்டியை எடுக்கப் போயிருந்த வெள்ளையன் அமைதியாய் நுழைந் தான்.

சுவரொட்டி விளக்கைத் தூண்டி விட்ட முத்துமுருங்கன் கேட்டான்.

''என்னடா மம்பட்டி எங்க கெடந்துச்சு.''

''மஞ்சணத்தித் தூருல.''

வெள்ளையனுக்குக்கூட வெறுப்புத் தட்டியிருந்தது.

சிறுசுகள் முற்றத்தில் எதையோ பேசிச் சிரித்துக் கொண் டிருந்தன.

அடுப்புக்குள் விறகுக் கட்டையைத் திணித்து ஊதினாள் செல்லி.

முத்துமாரி இன்னும் அழுதுகொண்டுதானிருந்தாள்.

''நீ ஏம்மா அழுகணும். பட்டினியாவா கெடக்கப் போறோம்.''

அதன் பிறகும் குடும்பத்தில் நடவடிக்கைகள் வழக்க மாகவே நடந்து வந்தன. எல்லோரும் அவ்வப்போது கிடைத்த வேலைகளுக்குப் போய் வந்தார்கள்.

முத்து முருங்கனும் செல்லியும் களத்து வேலைக்குப் போனார்கள். முத்துமாரி பிள்ளையை விட்டுவிட்டு காட்டு வேலை செய்தாள். நெல்லறுப்புச் சமயம் கூடையும் பெருக்குமாறுமாய் அலைந்து வயக்காட்டிலும் பாதை யிலும் சிந்திய நெல்தூர்த்துச் சேர்த்தாள். அது நல்ல நாளைக்கு மாவிடிக்கவும் சோற்றுக்கும் பயன்பட்டது.

வெள்ளையன் தலையெடுத்திருந்ததால் தூட்டு வேலைக்குப் போனான். வீட்டில் மனமாத்தச் செலவு ஓடியடைந்தது.

முன்னைவிட அழகிரி அடிக்கடி செவல்பட்டி வந்துபோனான். முத்துமுருங்கனுக்கு அவனை வாவென்று சொல்லக் கூட தொண்டைக்குழி தயாராயிருப்பதில்லை. ''ரண்ட அழகிரி'' தலைகுனிவில் முனங்குவதோடு சரி. அழகிரியும் ஒப்புக்குத் தலையாட்டுவான்.

அவர்களுக்குள் நேருக்கு நேர் வெளியே பிட்டுக்கொள்ள முடியாதவாறு ஒரு புழுக்கம். முத்துமுருங்கன் மருமக ளிடம் கேடபான்.

''அழகிரி சாப்பிட்டாச்சாம்மா."

அழகிரிக்கு அதுபற்றிய எண்ணமே இருக்காது.

'என்ன சாப்பாடு. கொஞ்சம் ஊத்தும்மா மச்சான் வீட்டுக்கு வந்துட்டு கஞ்சி குடிக்கலன்னு ஏன் போகணும்."

முகட்டை வெறித்துக்கொண்டு மகளுக்குப் பின்னால் நடப்பான்.

ஐந்தாறு மாசம் கழித்து முத்துமாரி மாமனிடம் தயங்கிய வாறு கேட்டாள்.

''கொஞ்ச நாளைக்கு எங்க வீட்டுக்குப் போயி இருந்துட்டு வரலாம்னு பாக்கென். இங்க இருந்தென்ன அங்க இருந்தென்ன.''

முத்துமுருங்கனுக் கென்னமோ கவலை நெஞ்சுக்கு மேல் மிதந்தது. இந்த நேரத்தில் அனுப்பி வைக்க மனசில்லை தான். இருந்தாலும் அவள் ஆசையைக் கெடுப்பானேன் என்று யோசனைப் பட்டுக் கொண்டு ''மகராசியா போயி இருந்துட்டு வாம்மா'' என சம்மதம் தெரிவித்ததோடல்லாமல் மறுநாளே கூட்டிவந்து விட்டுப் போனான்.

அழகிரிக்குக் கவலையிருந்தது. பொறுமையுமிருந்தது. என்றைக்கு நல்லவழி கிடைக்கும் என்று யோசனை யிலேயே காலம் ஓடியது.

இடையில் ஏகதேசம் வயிரவனிடமிருந்து செவல்பட்டிக்குக் கடிதம் வரும். முத்துமுருங்கன் கடிதத்தை மடியில் கட்டிக் கொண்டு ஊருக்குள் ஓடுவான். படிக்கத் தெரிந்தவர் யாராவது வாசித்துக் காட்டினால் அப்படியே மனசில் வைத்துக் கொண்டு வந்து வீட்டில் ஒப்பிப்பான். மகனை நேரில் பார்த்ததும் "அப்பிடியெல்லாம் எப்பிடிடா காயிதம் எழுதத் தெரிஞ்சுக்கிட்ட" என்று கேட்கவேண்டுமென ஆவலாயிருந்தது.

சரியாக இரண்டு வருசம் கழித்து வயிரவன் லீவில் வந்தான். முந்திக்கு இப்போது ஆள் வெடிப்பாயிருந்தான். மேனியெல்லாம் வெளுத்துப் பூரித்திருந்தது.

பழைய வயிரவன்தானு என்று ஒரே வியப்பு முத்து மாரிக்கு. முழுக்கைச் சட்டையும் தும்பைப் பூவாய் வேட்டியும், கால் முழுக்கச் செருப்பும், முடிவெட்டி மீசை ஒதுக்கி ஆள் லட்சணமாயிருந்தான் முத்துமாரிக்குப் பெருமையாயிருந்தது. அவன் அடிக்கொரு தடவை சிகரெட் பற்ற வைத்தான்.

தன்னைப் பார்க்க வந்தவர்களிடம் பேசும்போது இடையிடையே 'தஸ்புஸ்' என்று புரியாமல் பேசினுன். அதைக் கேட்ட பெண்கள் வெளியே வந்ததும் மூக்கில் விரல் வைத்தார்கள்.

குடும்பத்தில் எல்லோருக்கும் துணிமணி வாங்கி வந்திருந்தான். கைப் பைக்குள் பழமும் பலகாரமும் நிறைய இருந்தன.

முத்துமாரிக்கு அந்தக் கொஞ்ச நாட்கள் நிம்மதியாயிருந்தன புருசன் சொன்னபடி எண்ணெய் தேய்த்துத் தலை முடிந்து சுத்தமாய் இருந்தாள்.

சுடலைப் பயலுக்கு அவனுடன் பழகிச் சேர சில நாட்கள் பிடித்தன. அதற்கப்புறம் அவன் சொல்லித் தந்ததுபோல் ''அப்பா, அப்பா'' என்று சொல்லித் திரிந்தான்.

வயிரவன் தங்கச்சிமார்கள் இருவரும் வந்து பார்த்து விட்டுப் போனுர்கள். அழகிரியும் ஆவடையும் ஒருநாள் தங்கித் திரும்பினர்.

இரண்டு மாதம் கழித்து வயிரவன் புறப்பட்டான். போகும்போது அப்பனிடம் புதுவீடு கட்ட வேண்டியது பற்றி நிறையச் சொன்னுன். பழைய ஓலைக் குடிசைக்குள் குனிந்து நடமாட அவனுக்கு அறவே பிடிக்கவில்லை. முடிந்தால் சக்கிலியக்குடியை விட்டுத் தாண்டி வீட்டுக்கு இடம் பார்க்கச் சொன்னுன்.

அடுத்த லீவுக்கு வரும்போது முத்துமாரியை அழைத்துப் போவதாகக் கூறினுன்.

'ஒற்றையடிப் பாதை ரயில் ரோட்டில் ஏறுவது வரை எல்லோரும் வந்து வழியனுப்பி வைத்தார்கள் அதுவரை அவன் மகனைக் கொடுங்கையில் வைத்திருந்தான்.

மறுபடியும் முத்துமாரிக்கு ஆசைகள் மணலில் ஊற்றிய நீராயின.

காலையில் கஞ்சிக்கலயம் தூக்கிக்கிளம்பும் போது சின்னப் பத்தரை வண்டி தண்டவாளம் அதிர ஓடியது. மதியம் பெரிய பத்தரை கடந்தபோது கருவமரத்தடியில் கஞ்சிக் கலயத்தோரம உட்காருவாள்.

நடுச்சாமம் கடந்த வேளையில் ஒன்றரை மணி வண்டி கூவும் சத்தம் காதுகளை அதிர்விகும் போது கண் விழிப் பாள் மறந்துபோன காக்காய்க் குளிப்பில் மனம் லயித்து பக்கத்தில் கிடக்கும் பயலை இருட்டில் துழாவி இழுத்து அவன் பலமாக முனங்கும்வரை அணைத்துக் கொள்ளும் முரட்டுத்தனம் கூட போகப்போக மங்கிப்போனது.



தைப்பொங்கல் மும்முரம் சக்கிலியக் குடியில் ரெம்ப. எல்லா முகத்திலும் தனிக் களை. யாருமே வேலைக்குப் போகவில்லை. பெண்கள் காட்டில் நடக்க வேண்டிய நடையை வீட்டிலேயே நடந்து கொண்டிருந்தனர். பானை சட்டி கரண்டி அகப்பை, லொட்டு லொடுக்கு என்று எல்லாச் சாமான்களையும் வெளியே எடுத்து வைத்துக் கழுவவே பிட்டாணி தள்ளியது.

தைப்பிறந்ததோ தரித்திரம் தீர்ந்ததோ என்பார்கள். நாற்றறுப்பு, பருத்தியெடுப்பு, கருது பொறுக்குதல், களத்து வேலையென்று ஆட்களுக்கு வேலை கிடைத்த வண்ணமாகவே இருக்கும. தைப்பிறந்த பிறகு கூலி வேலைக்காரர்களுக்கு சாப்பாட்டுக் கஷ்டம் ஒருவாறு நீங் கவே செய்யும். ஐப்பசி காத்திகை அடை மழையில் வாங்கியிருந்த கடன்களைக்கூட இப்போதுதான் அடைக்க முடியும்.

ஊர்ச்சனங்கள் விடியக்காலமே, ஆடுமாடுகளைக் குளிப் பாட்டி மேய்ச்சலுக்குக் கொண்டு போனார்கள். அன் றைக்கு மட்டும் காடெல்லாம் புல்தரையில் ஆடுமாடு மேய்க்கலாம். காவல்காரர் கம்பைக் கையில் தூக்கமாட் டார்.

அழகிரி நேரமிருக்கவே வீட்டில் பொலி கட்டியபின் கிடா ரியை அவிழ்த்துக் கொண்டு போய் கருப்பனிடம் விட்டு விட்டு புல்லறுக்கப் போனான்.

அவனுக்கு புல்லறுப்பு சொகமாயிருந்தது. வெயில் படாத இடங்களில் அரும்பி நின்ற பனித்துளிகளை அரிவாள் பிடங்கால் தட்டிவிட்டு அறுப்பைத் தொடர்ந்தான்.

வரப்பு நெடுக தங்க நகை மாதிரி பூஞ்சொரிந்த ஆவரஞ் செடிகள். அவற்றை விலக்கிக்கொண்டு திரும்பினால் மூக் கைப் பிய்க்கும் துளசி மணம். அறுத்த புல்லைக் குமி குமி யாய்ப் போட்டு வைத்தான். சில இடங்களில் விசிறிக் கம் மல் பூத்திருந்த தும்பைக் கூட்டம் பனித் தெளிப்பி லிருந்து விடுபட்டு நெளிர் விட்டன.

இன்னேரம் மகளும் மருமகனும் மணலூரத்துக்குப் புறப் பட்டிருப்பார்கள். ஆவடை அவர்களுக்காக எல்லா ஏற் பாடுகளையும் செய்திருந்தாள். வயிரவன் லீவில் வருவதை யறிந்து அவள்தான் முந்தியே போய் பொங்கலுக்கு வரச் சொல்லிவிட்டு வந்திருந்தாள். வந்ததும் கண்டிப்பாய் அனுப்பி வைப்பதாய்க் கூறினான் முத்துமுருங்கன்.

அழகிரி புல்லையள்ளிக்கொண்டு வடக்கோடைக்கு நடந் தான்.

தைக்கோலம் காடெல்லாம் குடிகொண்டிருந்தது. மார் கழியின் இடைவிடாத குளிர் தணிந்து தைப்பிறப்பில் இளம் வெயிலுக்கு வேர்க்கக் கூடச் செய்தது.

பருவமழை தக்க சமயத்தில் பெய்ததால் ஏறுகாலில் விதைப்பு விழுந்து வெள்ளாமை செழித்திருந்தது. கம்மந் தட்டைக்கு ஊடே பயத்தாம் பட்டங்கள் தோரணமிட்டி ருந்தன. தட்டைகளில் பின்னிய தட்டாஞ் செடிக் கொழுந்துகளும், காய்க்கொத்துக்களும் பார்க்க ரம்மிய மாயிருந்தது. சில நிலங்களில் பூவும் காயுமாய் காற்றுக் கசையும் பருத்திச்செடி. ஊடுபட்டங்களில் உளுந்து. மாறி

மாறி நிலக்கடலையும் ஊன்றியிருந்தது. செந்திணைப் பயிர்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாய்த் தள்ளாடின.

குருவிச் சத்தங்களும் பரண்மீதிருந்து விரட்டுவோர் சத்தமும் கலந்த கதம்ப ஒலியைக் கேட்டுக் கொண்டே அழகிரி வடக்கோடைக் கரையில் உட்கார்ந்தான்.

பக்கத்துத் தரிசில் மாட்டு மணியொலிகளும் சலங்கையொலிகளும் மோதிக் கலந்தன.

''கோர சலசலங்க
கொளத்து மீனு கெக்கரிக்க
நார வந்து மீனெடுக்க
நானும் போயிச் சேந்துட்டனே

தானே ஞனே ஞன னன்ஞனே
தனனே ஞன ஞன னன்ஞனே.''

எருமைக்கூட்டத்திற்கு நடுவில் விரிகொம்புக் கிடாரிமேல் உட்கார்ந்துகொண்டு ஏற்றக்குரலில் ஊரிக்காலி மாட்டுக் கருப்பன் எடுத்துவிட்ட தெம்மாங்கு எல்லா பகுதிகளுக்கும் தெளிவாய்க் கேட்டது. மாடுகள் வீடு திரும்புகையில் ஊருணி வரை அவன் வெண்கலக்குரல் தொடர்ந்து கேட்கும். அதுவரைக்கும் அவன் கீழிறங்குவதில்லை. ஆசனமெல்லாம் மாட்டு முதுகுதான்.

சவாரியை குருசாமி நாயக்கர் கண்டால் கொள்ளித் தேளாயிருப்பார்.

'ஏலே கூறு கெட்ட தாயிளி, மாடு வெரண்டு தூக்கிப் போட்டுச்சுனு கிண்ணி கழண்டுல்ல போகும். பெரிய எசமான் போல சார்மானத்துல போற."

'அப்பிடிப் போனாப் போகட்டுஞ்சாமி. நம்ம வீட்ல போடுற கஞ்சி மிச்சந்தான."

'ஒனக்கு எம்புட்டுக் கொழுப்பு.''

'சாமியோவ் நம்ம பெரிய மாடுதான் நல்லாச் சவாரி நடுக்கும்.''

குடுக்கும் குடுக்கும். முதுகுல குடுத்தா தெரியும். ஆக்கங் கெட்ட பெயலே, மாட்ட நல்லா குளிப்பாட்டிக் கெட்டு."

அழகிரி முனங்கிக் கொண்டான்.

''எத்தன மாட்லதான் சவாரிப்பழக்கம் இவருக்கு.

அவன் தரிசுப்பக்கம் நகர்ந்தபோது காளைமாடு மேய்த்தவன் ஒருவன் கருப்பனைப் பார்த்துக் கேட்டான்.

''இண்ணைக்கி கருப்பனுக்கு நல்ல வளந்தான். சாப்பாடு ரெண்டு மூணு நாளைக்கு வச்சுக்கிருவயா.''

''சாமிமாரு போடுற சாப்பாட்ட ரெண்டு நாளைக்கும் வச்சுக்கிறலாம், அதுக்கு மேலயும் வச்சுக்கிறலாம். நல்லா மணக்கும் கமகமன்னு.''

அழகிரி சிரித்துக் கொண்டே கம்மம் புஞ்சைக்குள் உட்கார்ந்திருந்தான்.

வடக்கோடைக் கரையில் ஒரு கையில் வேப்பங்குழை. கண்ணிப்பிள்ளைச் செடியுடன் வம்பாடுபட்டு ஏறிக் கொண்டிருந்தார் நடுக்கடைச் சங்கரலிங்கம். அவருக்கு மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கியது. எரிச்சலில் ஏறிட்டுப் பார்த்தார்.

"அது எவண்டா மாட்டுக்காரப் பெய, பிஞ்சக்கார வுட்டுத் தொலச்சிருத. அதே அஞ்சாறு பூட்ட வாங்கீட்டு நிக்குது.''

அவர் வந்ததும் கருப்பன் நிதானமாய்க் கேட்டான்.

''சாமி இப்பத்தான் விடிஞ்சிருக்கா. நேரத்தோட பொலீ கெட்ட வந்துருக்கீகளே.''

''சும்மா கெடடா கோட்டிப் பெயலே, மனுசன் தன்னால நடக்கமாட்டாமக் கெடக்கான். வீட்ல நாலு வாசலுக்கும் கெட்டி, மரம், வண்டி, படப்பு பெறகு கீழக்கெணத்து ஊசிக்காலு எல்லாம் கெட்டீட்டு இங்க வாரதுக்குள்ள நேரமாகிப் போச்சு.''

''ஒங்க மருமகன் எங்கபோனரு சாமி.''

''அவன் ஒருத்தன் இருக்கான் திங்கிறதுக்கு. என்னமோ வகுத்துக் கோளாறும் படுத்துக்கெடக்கான்.''

சங்கரலிங்கத்தின் பெரிய வயிற்றைப் பார்த்துக் கொண்டான் கருப்பன்.

அவர் புஞ்சையின் மாரிமூலையில் பொலி கட்டிவிட்டு கம் மங் கருதுகளை அண்ணாந்து பார்த்தார். அவை ஒரே சீராய் இல்லாமல் எத்துங் குத்துமாய் நின்றன.

''சாமி நம்மகடத்தவசத்தக் கொண்டு வந்து வெதச்சுப் புட்டீகளோ.''

"போடா பேப்பெயலே கடலமாதிரில்லடா கம்பு வெதச் சென், அது இப்பிடி மொளச்சிருக்கு.''

அவர் மெல்ல நடந்தார்.

கருப்பன் தொண்டையில் இன்னொரு பாட்டு புறப்பட்டு ராகம் ஏறிக்கொண்டிருந்தது.

மதியம் இருக்கும். வடக்குப் பாதையில் தனியாக வந்த பெண் உருவம் சரியாகத் தெரியவில்லை. கருப்பன் பாட்டை நிறுத்திவிட்டு உற்றுப்பார்த்தான். வந்து கொண்டிருந்த பெண் சக்கம்மா கோயிலுக்கு முன் நின்று பிறகு நடந்தது.

கருப்பன் அடையாளம் கண்டுவிட்டான். மாட்டிலிருந்து விழுந்தடித்து இறங்கி உடன் மேய்த்தவர்களிடம் மாட் டைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு ஓடினன் அவன் வடக்குப் பாதையில் நின்றபோது மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்கியது.

அவனைப் பார்த்ததும் முத்துமாரி கண்களைத் துடைத் தாள்.

''இதென்ன முத்து பொங்கலும் பொழுதுமா அழுது கிட்டு வார.''

''பொங்கல் கொண்டாடத்தான்.''

முத்துமாரி சிரிக்க முயன்றாள்.

''நல்லாக் கொண்டாடுனம்மா. புள்ளையெங்க, ஒம் புரு சன் வரலையா. உள்ளதச் சொல்லு.''

''வேற ஒண்ணுமில்ல. சும்மாதான் பாத்துட்டுப் போக லாம்னு வந்தென். மாடு மேப்பெல்லாம் எப்பிடியிருக்கு."

''நீ எங்கிட்ட மறைக்க. வீட்ல கோவிச்சிட்டுத்தான வார மூஞ்சி சொல்லுதே.''

''எனக்கென்ன கோவம்.''

''சொன்னுப்புல சரியாப் போச்சாக்கும். புள்ளைய வுட்டுட்டு வருவயோ சும்மா.''

''எங்கய்யா வீட்ல இருக்காரு.

''இப்பத்தான் வீட்டுக்குப் போருக புல்லறுத்து ட்டு. அவுக கெடாரி கூட நம்மகிட்டத்தான் மேயுது.''

''பெரிய கெடாரியா.''

''சிறுசுதான். இனியும் ரெண்டு மூணு வருசத்துல ஈத்துக்கு வரும்.''

''எங்கம்மா எப்பிடியிருக்கா.''

''அவ இருக்கா பாவம், கெடச்ச வேலயப் பாத்துட்டு. ரெண்டு பேரும் சேந்து பெரிசா கலியாணம் முடிச்சுக் குடுத்தாக அசலூருல போயி. நீ என்னன்னு முக்காடு போட்டுட்டு வார. போயிச்சொல்லு. அப்பத்தான் அவுகளுக்குத் தெரியும். இத்தன சனத்துல உங்கய்யாவுக்கு பக்கத்துல மாப்பிள கெடைக்கல பாரு.''

முத்துமாரி அவனை ஏறிட்டுப் பார்த்தபோது அவன் கைக்கம்பால் பாதையைக் கீறிக் கொண்டே வந்தான் குனிந்தபடி. அதற்குப் பிறகு அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

வீட்டுக்குள் நுழையாமலேயே அவன் சொன்னன்.

''மாமோவ், ஒங்க முத்து பொங்கலுக்கு வந்திருக்கா பாருங்க.''

அவன் வேகமாய் மறைந்து விட்டான்.

நிறைய பெண்கள் கூடிக்கூடி வந்து விசாரித்தார்கள்.

''என்னம்மா ஒம் புருசன் வரலையா. புள்ளைய வுட்டுட்டு தனியா வந்துட்டயே.''

அவள் யாருக்குமே பதில் சொல்லவில்லை. ஆவடையும் அழகிரியும் மூலைக்கொருவராய் நொடித்துப்போய் உட்கார்ந்திருந்தார்கள். வெளியேறிய பெண்கள் "கோவத்துல வந்துருக்கா போலருக்கு'' என்று பேசிக்கொண்டு போனர்கள்.

எல்லோரும் போன பின் அழகிரி ஆத்திரத்தைப் பொத்துக் கொண்டு கேட்டான்.

"என்னதாம்மா நடந்தது.

முத்துமாரி மிரண்டு விழித்தாள். பேச்சை எப்படி ஆரம்பிப்பதென்றே தெரியவில்லை. ஆவடை வேறு கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்.

அழகிரி சாதாரணப்பட்டான்.

''வீட்ல கோவமா வந்துட்டயாம்மா.''

"கோவமில்ல. புருசக்காரன் வெரட்டியடிச்சது.''

மீண்டும் அவளுக்கு அழுகை பொங்கியது. அடக்க முடியவில்லை.

''கை தொட்டு அடிச்சானா.'

''வெறகுக் கட்டையிட்டு அடி அடின்னு.........

அவள் காயம்பட்டிருந்த புறங்கையைத் திருப்பிக் காட்டினாள்.

அழகிரிக்கு நெஞ்சில் சுரீரிட்டது. அவளைப் பார்க்காமலேயே கேட்டான்.

''எதுக்கும்மா.''

இன்னதுதான் காரணமென்று அவளால் குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை. ஒரு நிமிசம் நடந்ததையெல்லாம் நினைவுபடுத்திப் பார்த்தாள். முடிவில் அடுத்த பாட்டம் அழுகைதான் வந்தது.

"நான் அசிங்கமா இருக்கனாம். மொகற லச்சணமில்லையாம்.''

தகப்பனிடம் அதற்கு மேல் என்ன சொல்வதென்று பிடிபடவில்லை. நடுராத்திரியில் புருசன் அருவருப்பில் எட்டி உதைத்து தலைவிரிகோலமாய் சத்தமின்றி அழுத காட்சி மட்டும் நெஞ்சில் அழுத்திக் கொண்டிருந்தது.

ஆவடை படபடத்தாள்.

''இவுக லச்சணத்துக்கும் மூஞ்சிக்கும் எம்புள்ள மொகற சரியில்லேயோ. புதுசா பெழப்பு வந்துருச்சுல்ல. ஏன் பேசமாட்டாக.''

அழகிரிக் கென்னமோ மனசைத் துளைத்துக் கொண்டிருந்த விபரீத நினைப்பு விட்டது.

''இந்தாபாரு முத்து, மொதல்ல கண்ணத் தொடச்சுக்கோ. வீணால எதுக்கு அழுது கண்ணு வீங்கணும். எதுக்காக அப்பிடியெல்லாம் சொன்னும். வெவரமாத் தான் சொல்லேம்மா."

வந்த களைப்புத் தீர பானையில் தண்ணீர் கோலிக் குடித்தாள் முத்துமாரி. முந்திச் சேலையால் முகத்தைத் துடைத்து வாசலோரம் உட்கார்ந்தாள்.

''அது பட்டாளத்துலருந்து வந்தப் பெறகு பாக்கிறதுக்கு நீ வரலன்னு எங்கிட்டக் கோவம் கோவமாப் பேசிச்சு. நீ பிச்சக்காசுக்கு வெளங்காற மனுசனும். நான் ரெண்டு வார்த்த பேசிட்டென். அதுலருந்து எம்மேல கோவம். என் சீல துணியவும் தலையவும் பாத்துத்தான் மொகத்தச் சுளிச்சுது. சுத்தமில்லையாம்.''

''பொண்டாட்டிய அரமனையிலதான் குடியிருத்தி வச்சிட்டுப் போயிருக்காக.''

''இண்ணைக்கி வெள்ளங்காட்டி சோறு போட்டுக் குடுத்தென் சோத்துல ஒரு தலமுடி கெடந்துச்சாம். அந்தக் கழுத இந்தக்கழுதன்னு பேசிவஞ்சுச்சு. அதஎடுக்கணும்னு குனிஞ்செசன். மூஞ்சியில இடிச்சுத் தள்ளீருச்சு. ஊரு ஒலகத்துல இல்லாற சுத்தம் வந்துருச்சாக்கும் இப்ப. நம்ம பெழச்ச பெழப்பு அதுக்குள்ளயா மறந்துபோச்சுனு நான் சொல்லீட்டென். அம்புட்டுத்தான். சோத்துக் கையோட எந்திரிச்சு வெறகுக் கட்டைய எடுத்து அடிச்சது. என்னப் பாத்தா சுத்தம் கித்தம்னு பேசுற அவலச்சனங் கெட்ட கழுத. ஒம் மூஞ்சியப் பாத்தாலே சாப்பிட முடியாது. காலா காலத்துல ஒன் அப்பன் வீட்டுக்குப் போயிச் சேரு. அவன் ஒரு வக்கத்த மனுசன், ஒண்ணுக்கும் வெளங்காற நாயப்போயி என்தலையில கெட்டியிருக்கானேன்னு கண்டபடி பேசி பெடதியப் புடிச்சுத் தள்ளீருச்சு. எல்லாம் அத வசாக. நேருல போயி ஆரும் சொல்லல. நான் அழுதுட்டே பெறப்புட்டு வந்துட்டென்.''

''அப்பிடியா சங்கதி. இதெல்லாம் பாத்துக்கிட்டு ஒன் மாமனும் மாமியும் என்ன செஞ்சாக.''

''மாமியா இல்ல. மக்க ஊருக்குப் போயிட்டா. மாமன் வந்து வெலகினதுக்கு அவனுக்கு முதுகுல அடி. பாவம் ஒரு அடியோட ஒதுங்கிப் போயி உக்காந்துட்டான். நான் வரயில கூட எப்பிடிம்மா ஒங்க அப்பன் மொகத்துல முழிப்பன். நீ போகவேண்டாம் தாயீன்னு அழுகாற கொறையாச் சொன்னான். நான்தான் வந்துடடென்.''

''பெயல எதுக்கு வுட்டுட்டு வந்த.''

''நான் வரயில அவன் இல்ல. சொடல சொடலன்னு கூப்பிட்டுப் பாத்தென். அவன எதுக்குக் கூப்பிடுற நாயி. அவன் எம்புள்ள. அங்க போயி வழிச்சுத் திங்கவா. பேசாமப் போறயா இன்னியும் வேணுமான்னு அடிக்க வந்துச்சு. புள்ள அம்மா அம்மான்னு தேடுவான். ராத்திரி எப்பிடித்தான் ஒறங்குறானோ.''

"நீ கௌம்பயில மாமன் இருந்தானா. சரிசரி நடந்தது நடந்து போச்சு. பானையில கஞ்சியிருந்தா போட்டுக்குடி. ஆரு சொல்லி என்னத்த நடக்க. அவனுக்கு இனி ஆரு சொன்னாலும் ஏருது. மடிகனத்துருச்சுல்ல, மண்டையும் கனக்கத்தான செய்யும்....ம், அவனுக்கு மண்டப்புழு ஒழத்துதோ என்னமோ. நீ எதுக்கும்மா கவலப்படுற. எத்தன வருசமின்னாலும் காப்பாத்த நானிருக்கென். நீ கஞ்சியக்குடி.''

தலைகுனிந்திருந்த மகளையே வெறித்துப் பார்த்தவன் எதையோ நினைத்தவன் போல் எழுந்து வெளியேறினான்.

''புள்ள இன்னியும் எப்புட்டு நாளைக்கு வாழவேண்டியது. இப்பயே வாழாக் குடியாயிட்டா...''

போனதடவை மருமகனைப் பார்க்கப் போய் கிடைத்த மரியாதையே போதுமானது. எங்கோ கருமலையில் பிறந்து குதித்ததைப் போல அவன் பேசியதும், நடந்ததும் அறவே பிடிக்கவில்லை. 'ஏதுடா பெரிய தப்புப் பண்ணீட்டம் போலருக்கே' என்று உள்ளே கணக்குப் போட்டு மனசை அடக்கிக் கொண்டு திரும்பினான்.

'இந்த லச்சணத்துல இப்பயும் போயி மூஞ்சியில முழிக்கணுமாக்கும். பெரிய மதிப்புக் கொறஞ்சு போச்சோ. பிச்

சக்காரப் பெய. நான் தேடாற மதிப்பா மத்தவன் தேடீறப் போருன். ரெண்டு பேருக்கும் துணி யெடுத்துக் குடுத்து ஒரு மாசம் மாப்பிளச் சோறு போடலயா, நல்லது பெல் லதுக்கு நாலு பேரப்போல கணிசமாச் செய்யலயா இண் ணக்கி வந்துருச்சோ புதுசா மதிப்பு. எண்ணக்கிருந்தா லும் ரெண்டு வப்பு வச்சு வுட்டாத்தான் வசத்துக்கு வரு வான். புள்ள பெழப்பு போனதே போச்சு.'

ஆத்திரம் பொங்க மேற்காமல் நடந்து போறன். கோயி லுக்குள் வேலும் சூலாயுதமுமாய் புலிமீதமர்ந்து ருத்திரக் கோலத்தில் காட்சியளித்த காளியம்மனை வெறித்து நோக் கினன். அதன் மடியில் நீண்ட சாட்டையும் வீச்சரிவாளும் வைக்கப்பட்டிருந்தன.

வடக்கே இரும்புப் பட்டறையில் பழுக்கக் காய்ச்சிய இரும் பில் சம்மட்டியடி செவியைத் துளைத்தது. மூங்கில் தட்டி யின் வழியே பார்த்தால் மின்னட்டம் பூச்சிகளாய் தீப் பொறிகள் ஆய்ந்தன.

அவன் நடுக்கடைத் தாழ்வாரத்துக் கீழ் நின்ருன் கந்தூங்கி விழுந்த சங்கரலிங்கம் "அழகிரி என்னப்பா வேணும்" என்று கடைவாயில் வடிடந்த வாணீரை வேட் டியில் வாங்கிக்கொண்டே கேட்டார். அவரைப் போலவே முழித்துக் கொண்டவனாய்,

"ம் சாமி, பத்துப் பைசாவுக்கு வெத்தல பாக்குப் போயல குடுங்க"

என்று மடியிலிருந்த துட்டை யெடுத்து நீட்டினன்.

○

பத்துப் பதினைந்து நாட்களாக புருசன் கூப்பிட வருவான் என்ற ஆவல் முத்துமாரிக்கு இருந்தது. ஆவட கூட சம யத்தில் நினைப்பாள்.

'ஒரு சடவுன்ன கூப்பிட வராமயா போட்ருவாக.'

சரியாக ஒரு மாதம் ஆகியும் அவன் வரவில்லை. ஆவடை கலங்கிப் போய்ச் சொன்னள்.

"பாவி வெளங்குவான தொலங்குவான. எம்புள்ள பாவத் துலயே போயிறணும்.''

முத்துமாரி நினைவில் ஆழ்ந்து விட்டால் கொது கொது வென்று அழுவாள்.

அழகிரிக்கு இப்போதெல்லாம் மனசு மந்தப்பட்டிருந்தது. அதிகமாய் அக்கம் பக்கம் போவதில்லை. உண்டான வேலை யைப் பார்க்க வேண்டியது முடக்க வேண்டியது.

எத்தனையோ பேர் கேட்டுவிட்டார்கள்.

''என்னப்பா ஒம்மக வந்து அனய நாளா இருப்பு வச்சுட் டாளே, ஆரும் கூப்பிட வரல போலருக்கே."

''சும்மா வந்துருக்கா. இங்கருந்தென்ன அங்கருந் தென்ன.''

ஒருநாள் ஓடைக்கரையில் தற்செயலாய்ச் சந்தித்த கந் தையா கேட்டார்.

''ஏண்டா ஒம்மக கோவிச்சிட்டுல்ல வந்துருக்காளாம். இதுவெரைக்கு ஏன் சொல்லல.''

உரிமை கலந்த விசாரிப்பில் கிருதாவைத் தடவினார். அழ கிரி திக்கினான்.

''என்னத்தச் சொல்றது சாமி, தப்புக் கணக்குப் போட்டுக் கிட்டா தன் தலையில கொட்டிக்கிற வேண்டியதுதான்."

''அப்பிடி என்னடா பெயமகனே. தப்புக் கணக்குப் போட்டுட்ட.''

''மருமகனுக்கு வாழ்வு வந்துருச்சு. மடிகனக்கவும் பழசு மறந்து போச்சு. புள்ளைய அடிச்சுப் பத்தீட்டான்.''

"அட கோட்டிப் பெயலே இத எங்கிட்ட முந்தியே சொல்லி யிருந்தா கத வேறயில்லடா. அவன் மப்பக் கழட்டி வழிக்குக் கொண்டாந்துருப்பனே."

கந்தையா கையைப் பிசைந்து கொண்டார். உருப்படி யான காரியத்தைத் தவற விட்டுவிட்ட குறுகுறுப்பு.

அழகிரிக்குத் தெரியும். இப்படிப்பட்ட காரியத்தையெல் லாம் அவர் காதில் போட்டால் அது எப்படி முடியு மென்று.

''அவன அடிச்சாப்புல என்னத்த ஆகப் போகுது சாமி. அடிய வாங்கீட்டு பிச்சுப் புடுங்கி ஓடுவான். எம்புள்ளே யென்ன நிம்மதியா வாழப் போருளா''

''அதுக்காக இப்படிப்பட்ட பெயகள சும்மா வுடுறதா. முதுகுத் தொலிய உரிக்கணும்டா. கையில ரெண்டு காசு பழங்குனு கெட்ன பொண்டாட்டிய மறக்கச்சொல்லுதோ. அடி ஒதவுற மாதிரி அண்ணன் தம்பி ஒதவ மாட்டான். அத மட்டும் யாவுகம் வச்சுக்கோ. புள்ளைய வச்சுப் பெழைக்காளே இல்லையோ அது வேற கத. கதையென்ன அதுதான் முடிஞ்சு போச்சே. வருசம் முழுக்க முதுகத் தடவிப் பாத்துட்ருப்பாமில்லேயா சரி சரி இப்ப என்ன குடியா முழுகிப் போச்சு. இவன் இல்லன்னு இனியொ ருத்தன். தீந்து கெட்டாற சாதியா. எங்களுக்கும் இருக் குதுகளே சனியங்க. சிறுசுலயே கெழடனுககுக் கெட்டிப் பத்துறது. போன கொஞ்ச நாள்ல அவனச் சாகடிச்சிட்டு வீட்டுக்கு வந்து வெள்ளச் சீலயோட பண்ணுற அனியாய மெல்லாம் பண்ணுறது. புள்ளைய வேற பெத்து வச்சி ருப்பா. எல்லாம அவன் சொத்துக்காகத்தான். சொத்தாச ஆர வுட்டது. இவ இங்கு அடிக்கிற கூத்த அண்ணன் தம்பியும் பாத்துச் சகிச்சுக்கிட்டுத்தான் இருப்பான். இல் லன்னு எவங் கூடவாச்சும் ஓடிப் போயிட்டா என்ன செய் யிறது. மயிராண்டிகளுக்குக் குடும்பப் பேரு கெட்டுப் போகுதாம். ஊரே லோ லோன்னு சிரிக்குது. அதிலென்ன குடும்பப் பேறு வெங்காயம். பேசாம தாலியத் தீந்தெறிஞ் சுட்டு புள்ள வாழுறதுக்குண்டான வழியப்பாரு. இந்த மானங்கெட்ட பெயகிட்ட ஒம்புள்ளைய வச்சுச் சீரழியப் போறயா. மொதல்ல ஒன் தெருக் கழுதைகளே கண்டு ஒண்ணு பேசும். காணும ஒண்ணு பேசும்.''

''சின்னப் பெய ஒருத்தன் இருக்கான் சாமி.''

''இருக்கட்டுமே தன் புள்ளன்னு காப்பாத்துனுக்காப்பாத் துருன். இல்லன்னு இங்கிட்டுத் தள்ளீரட்டும். அந்த உசிரத் தாங்குறதுக்கு ஒன்னால முடியாதா. புள்ள வந்து குறுக்க நிக்குதாம். எல்லாரும் புள்ளையில்லாமத்தான் ரெண்டாங் கலியாணம் முடிக்காகளோ.''

அழகிரிக்கு அதுக்கு மேல் பேசமுடியவில்லை. அவர் பேச் சுக்கு சரிப் போடாமலேயே வீடு திரும்பினுன்.

முன்னைப் போலவே இப்போதும் காடுகரைக்குச் சென்று வந்தாள் முத்துமாரி.

சில சமயம் பேச்சுவாக்கில் பெண்கள் பேசிக்கொள்வது நெஞ்சைக் குத்தியது.

''வடக்க எவளவாச்சும் சேத்துருப்பான். பழைய பொண்டாட்டி மறந்துருக்கும்.''

''வடக்க பொம்பளைக ரெம்பயாமில்ல.''

''இருக்கும்.''

''சம்பாரிச்சுப் போட்டா சாதியாவது ஒண்ணாவது.''

''அதச் சொல்லு.

அன்றைக்கு லட்சுமி தண்ணீருக்குப் போகும் போது கதையாய்ப் பேசியிருந்து விட்டு கடைசியில் கேட்டது.

''ஒம்மகனவாச்சும் இங்க கூட்டீட்டு வந்தா என்னடி. அப்பவாச்சும் மனசுக்கு ஆறுதலாருக்குமில்ல.''

''அப்பிடித்தாம்மா செய்யணும். அவனுக்கு வெயசு ஏறுச்சு. என் நெனவு இல்லாம சும்மா திரிவான்.''

''என்னருந்தாலும் பெத்த புள்ளைய வுட்டுட்டு எப்பிடி இருக்கிறது. புள்ள மொகப்பாத்து வகுத்த நெரப்பணுமே.''

''மாமன் இருக்கான். புள்ள மேல உசிராக் கெடப்பான்''

''என்னருந்தாலும் பெத்த தாயாகுமா.''

'அதில்ல.

'பின்ன என்ன. அழுகிறிய அனுப்பி நாளையே கூட்டீட்டு பரச் சொல்லு. நானே கண்டாச் சொல்றென்.''

,த்துமாரிக்கு அந்த நினைப்பு இல்லாமலில்லை. காடுகளைக் ;ாலால் அளந்துவிட்டு மனசைக் காற்றில் அலைய விட்ட பாறே வீடு வந்து மிதித்தால் சாயங்கால வேளை முற்றங் ,ளில் சிறிசுகளை ஆவலுடன் பார்க்கச் சொல்லும். பிறகு ண்ணைத் துடைத்துக்கொண்டு நகர்வாள்.

சாப்பிட்டுக் கைகழுவும் போதெல்லாம் அவள் கூரை முகட்டை வெறிப்பதை அழகிரி பார்க்கத்தான் செய்வான். அவள் மனசை அவன் உணராமலில்லை.

என்ன செய்ய. இனிமேல் எந்த வீட்டில் கால் வைத்து யார் முகத்தில் முழித்து சிறுபயலை அனுப்பக் கேட்பது.

கந்தையாவும் அவ்வப்போது நினைவுபடுத்துவார்.

''ஒம்பாட்ல இருந்துக்கிட்டயே என்னடா. சின்னத் தாயோளி அவன்தான் எடுக்காற எடுப்பு எடுத்துக்கிட்டாம்னு சிறுபெய என்ன செய்வாண்டா. எங்க லச்சுமி சொன்னதுக்கு தலைய ஒட்டீட்டு நிண்ணயாமில்ல. என்ன சங்கதி. மனசுல உள்ளதச் சொல்லு.''

''சொல்றதென்னசாமி, ஒங்களுக்கே தெரியும். நானு சொமந்து கொண்டு போயி பொண்ணைக் குடுத்தென். ஒண்ணுக்கு ரெண்டு தேரம் வலியக் கேட்டு வந்து கெட்டீட்டுப் போனு அந்த மரியாதையைக் காப்பாத்தனும். நான் இனிமே அவன் வீட்ல போயி மிதிக்கவா. வாழாக் குடிய வீட்ல வச்சிட்டு ஆருட்டச் சொல்றது. நீங்க கோவிச்சுக்கிட்டாலும் சரிசாமி. இனிமேப்பட்ட பச்சத்துல அந்த வீட்ல காலெடுத்து வைக்கிறதில்லன்னு எப்பயோ முடிவு பண்ணீட்டென்.''

''ம், நீ இப்பிடி வாரயாக்கும், அதுஞ் சரிதான். ரெண்டுக்கு ரெண்டா தாயும் புள்ளையுமில்லடா அலஞ்சு போகும்.''

''அதுக்கு என்ன செய்ய சாமி. நமக்கு லவிச்சது அம்புட்டுத்தான். எம்புள்ளைக்கு இனியும் கலியாணம் ஆகலன்னு மனசத் தேத்திக்கிற வேண்டியதுதான். சாமி, மனுசனுக்கு வகுறெல்லாம் எரியுது. அந்தப் புள்ள கழுத்துக்குள்ள கவுத்தப் போட்டுட்டு அலையிறதப் பாத்தா மரத்தடியில நிம்மதியா உக்கார முடியல. முள்ளுமேல உக்காந்த மாதிரி...இப்ப என்ன செய்யச் சொல்றீக.''

''ஏலே இதுக்கெல்லாம் போயி மனசு வுடாதடா. வருசம் பூரா எம் பெழப்பப் பாத்துட்டு வந்துமா இப்பிடிக் கலங்குற. ஒரு பொம்பளைக்கே இப்பிடின்னு எனக் கெத்தன தெரியுமா.''

...தெரியும்...''

''பெறகென்ன, சோலியப் பாத்துட்டுப் போ. ஆகுறது தன்னால நடக்கும்.''

பிரிந்த பிறகு அழகிரி நினைப்பான்.

''ம் சாமிவுக சொல்லத் தட்ட வேண்டியிருக்கே."

கந்தையா போகிற போக்கில் முனங்குவார்.

''இந்தப் பெய மனசுல இம்புட்டு வைராக்கியம் கொண் டாடுருனே.''



தேய்ந்த செருப்புக்குக் குதிங்காலடி போட்டுக் கொண்டிருந்தான் அழகிரி. அறுத்துப் பொருத்திய சில்லுவார் எப்படியும் பொருந்தவில்லை. ரெம்ப நேரம் அடைகல்லில் உளியை ரோசி வாரில் நகங் கீச்சி ரவுண்டு பண்ணி ஒருவாருய் வசப்படுத்தி முடித் தான். கொஞ்சம் பொறுத்துத்தான் தைக்கத் தோன்றி யது.

அதற்குள் உளியைப் பதம் வைத்துக் கொள்ளலாமென்று சுப்பையனுசாரி பட்டறைக்கு நடந்தான். அப்போது பட் டறைத் தட்டியில் உரச வந்த எருமையைப் பத்திவிட்டு கிழக்காமல் கைக்கண்ணுடி போட்டுப் பார்த்த சுப்பையனு சாரி கோபத்தில் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். மேடை விளிம்பில் கம்பைத் தட்டியவாறு சாவகாசமாய் வந்தான் கருப்பன்.

''மொதலாளி வார சாவாசத்தப் பாரு. இன்னேரம் எம் பெழப்பக் கெடுக்க இருந்தயே.''

சுப்பையனுசாரிக் கென்றல் கோபம். வசவுத்துணைக்கு ஆள் தேடி நடுக்கடைப்பக்கம் பார்த்தார். கடையோரம் ஆளில்லே. பட்டறைக்குள் சம்மட்டியடி ஒரு ஒழுங்கில் லாமல் கேட்டது.

மந்தை ஓடமரத்தடியில் சித்திரனும் சக்கணனும் காசலே யாய்ப் பேசிக் கொண்டிருந்தனர். சுப்பையனுசாரிக்கு அவர்களைக் கூப்பிட வேண்டும் போலிருந்தது. அதற்குள் கருப்பன் தட்டியில் கம்பை ரோசிக் கொண்டு வந்து நின் ருன்.

''சாமியோ நான் எதுக்கு நம்ம பெழப்பக் கெடுக்கென் ஒங்ககிட்ட கலப்ப கூலேயக் குடுத்து கொத்தளக்கிறது நிண்ணு போகுதில்ல அடுத்த வருசம் கடசல் கொடத் தில ஒரு வண்டி கூடச் செய்யச் சொல்லணும்.''

''ஏலே தேவிடியா புள்ள ஒனக்குக் கொழுப்பு ரெம்பத் தாம்லே. நான் என்ன சொல்றென் நீ என்ன ஒளர்ர. ரோசுனது ஆருமாடு தெரியுமா. குருசாமி நாய்க்கருக்கு ஒண்ணு இருக்கே விரிகொம்பு. தெருவ அடச்சிட்டு வருமே. அது தட்டிக்குள்ள கொம்பக்குடுத்துக் கிருச்சுனு அலக்காத் தூக்கி வீட்ல போயித்தான் நிக்கும்.''

''நல்லாருக்குஞ் சாமி ரதம் போல.''

"ஒனக்கென்ன சொல்றவனுக்கு. எனக்காக்கும் வகுத்துல புடிக்கும்."

இதற்குள் அழகிரியும் பட்டறைக்கு வந்து சேர்ந்தான்.

''என் மாப்பிள்ளேய மடக்கி வச்சிட்டு என்ன பேசுறீக சாமி.''

கருப்பன் சலித்துச் சொன்னுன்.

''அதுல ஒண்ணும் கொறச்சலில்ல.

"மாப்பிள என்னமோ சொல்ருப்புலருக்கு."

''அவன் ஒரு கோட்டிப் பெய நேரத்துக்கு ஒண்ணு பேசு வான்......ஏலே குருசாமி நாயக்கர அப்பதப் பாத்தென். ஒம்மேல பொராது கேட்டு முடியல. என்னேரமும் அவரு மாட்லதான் சவாரியாம். பாத்தாக் கூட எறங்கிறதில்லே யாம். இதெல்லாம் என்னடா அக்குறும்பு.''

''சாமி நீங்க ஒண்ணு. அவரு சொல்ருருன்னு நீங்களும் கேட்டுக்கிட்டீகளாக்கும். எறங்காம என்ன. அண்ணக்கி பெரிய வீட்டுப் பிஞ்சையில நாத்துப் பாரம் ஏத்துனுக.

நான் பின்னால களவாரியில நிண்ணு ''இந்தோல்'' போட்டு பாரக்கவுரு இழுத்தென். கவுரு அந்தது பாருங்க ஒரே முண்டிக்கரணம். கிண்ணி கழண்டு போச்சு. அதுல ருந்து சரியா நடக்க முடியல. பெறகென்ன எனக்குச் சவாரி வாழுது.''

அவன் கிண்ணிப்பக்கம் வேட்டியை ஏறத் துடைத்துக் காட்டினன். தாறுமாருய் அரித்திருந்தது.

"அப்பிடியா சங்கதி, இதுக்குத்தான் அவரு கண்ணு மூக்குத் தெரியாமப் பேசுறராக்கும்."

''என்னமோ சாமி நான் செய்யிறதெல்லாம் அவருக்குப் புடிக்க மாட்டங்குது. கிட்ட அண்டுனு கோவம் பொத் துட்டு வரும்.''

''அதுக்கு மேல பேச்ச வுடு. அவரு கொணமே அப்பிடித் தான். பழைய நெனப்பு இனியும் போகல. பெறந்த பெறப்புக்கு மட்ட வச்சுக் கெட்ட முடியுமா."

சுப்பையனுசாரி அழகிரியைப் பார்த்துச் சொன்னர்.

''அதெதுக்கு, நேர இருந்து ரெண்டு வார்த்த கேட்டுட் டாக்கூட நல்லாருக்கும். அடுத்தவுகளப் பத்தி காணுமப் பேசுறதுல அர்த்தமில்ல.''

அவர் குணம் அப்படி.

கருப்பன் கோயிலுக்கு முன்னல் போய் நின்ருன். அப் போதும் வெறிச் சென்றுதானிருந்தது. முன்னைப் போல் கந்தையா அடிக்கடி கோயில்பக்கம வருவதில்லை. என் றைக்காவது களவுகளைப் பிடித்து வந்தால் மேடையருகில் இருந்து நாலுபேரைக் கூப்பிட்டு ஒப்படைத்து விட்டுப் போவார். மற்றநாட்களில் காட்டிலோ வீட்டிலோதான் பார்க்கலாம்.

ஒடமரத்தைக் குறிவைத்த கருப்பன் மரநிழலில் கலப்பது வரை சக்கணனும் சித்திரனும் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

''என்ன சோலி நடக்குது மும்முரமா.''

கருப்பன் குனிந்தான். பச்சிலை அரைத்துக்கொண்டிருந்த சித்திரன் நிறுத்தினன்.

''இவனுக்கு இடுப்புல நோவெடுக்குதாம். இண்ணைக்கி குளிக்கப் போாக முடியல. கோவ எலய அரச்சுப் போட ணும்னு...''

சக்கணன் கோவைக் கொடியிலிருந்து இலைகளை ஆய்ந்து கொண்டிருந்தான்.

''என்ன செய்யிது திடீர்னு."

சக்கணன் முகஞ்சுண்டி புரண்டு உட்கார்ந்தான்.

"இடுப்புக்குள்ள ஒரே கொடச்சல். வாவிக்குத்து நெஞ்சுல அடச்சுக்கிருது.''

"கோவ எல புடுங்கீட்டு வந்தது ஆரு. எங்கிட்டச் சொல்லி யிருந்தா புடுங்கியாந்துருப்பன்.''

சித்திரன் இளைத்தான்.

''ஒன்னத்தான் தேடுனென். காணுமிங்கவும் பையாப் போயி தெக்குக் கெணத்து மூலையில புடுங்கீட்டு வந் தென்.''

"விடியக் காலமே மாடு பத்தீட்டுப் போயிட்டென், ரெண்டு பிஞ்சையில நாத்தெடுத்தாக. கொண்டா நான் அரைக் கென்.''

கல்லை வாங்கி அவக்கென்று இழுத்தரைத்து இலை நசுங் கலை விரலால் வழித்தான் கருப்பன்.

''இடுப்பக்காட்டு. கோவணம் மட்டும் இருக்கட்டும். சாய்ந் தரத்துக்கு வேலிப்பருத்தி எல புடுங்கீட்டு வாறென். புழிஞ்சு உப்புல ஒரு செரங்க குடிச்சா வாவிக்குத் தாவல.''

சக்கணன் உடம்பைப் புரட்டிக் கொடுத்தான். தாங்காத வலியிருந்தது. கருப்பன் இடுப்பைச் சுற்றிப் பூசி விட் டான்.

''வெள்ளங்காட்டி கஞ்சி எடுத்தயா. கொஞ்சம் வச்சிருக் கென். கரச்சிட்டு வரட்டுமா."

சக்கணன் வேண்டாமென்று தலையாட்டினான்.

''எங்க வீட்ல குடிச்சான்.''

சித்திரன் பார்வை சக்கணன் மீது கனிந்திருந்தது.

''பண்டுவருட்ட மருந்து கேட்டா என்ன. குடுப்பாரே.''

''ஆமா இனிமே ரெட்டக்கறி போட்டு வளர்றதுக்கு அவருட்டப் போயி மருந்து சாப்பிடணும்.''

''அதுக்காக இப்பிடியே கெடக்கணுமாக்கும்.

''போடா போ கோட்டிக்காரா. பெழைக்கற பெழப்பெல்லாம் பெழச்சாச்சு. வெயசாகுதுல்ல. ஒடம்புல தெம்பு கெட்டுப்போச்சு. அந்தக் காலத்துல நான் போட்ட எட்டத் தாண்டிக்கிற மாட்டாக. சக்கிலியக் குடியில சக்கணன்னு தனி மவுசு.''

சக்கணன் தவிப்பாறினான். மூச்சு பலமாய் இழுத்தது.

இதற்குள் பட்டறையிலிருந்து அழகிரியும் வந்து சேர்ந்தான்.

''அழகிரி எப்பிடி இங்க வந்தாப்புல.''

''ஒடமரத்துல என்ன கூட்டம்னு பாத்தென். நயினாருட்ட உளியக் குடுத்துட்டு வாறென். பெரியாளு என்ன ஒரு மாதிரியா இருக்குது.''

''வேற ஒண்ணுமில்ல வாவிக்குத்து.''

“அது பொல்லாற கழுதையில்ல.

“வந்தா அனுபவிச்சுத்தானே ஆகணும். என்னப்பா இது ஒம்' மருமகன் இப்பிடிப் பண்ணிப்புட்டானே. துட்டக் கண்டதும் அவன் அவனுக்குக் கொணம் மாறிப்போகுது. எந்தச் சாதினு என்ன. நேத்து நல்லாருந்த பெய புள்ளையப் பத்தீட்டான்.''

அழகிரி எதுவும் பேசவில்லை. சித்திரன் முனங்கினான். ''அதச்சொல்லு. ஆகமான புள்ள ஒண்ணக் கண்ட பெறகும் அவனுக்கு மனசுல இப்பிடி ஓடீருக்கு.”

''அழகிரி இதுல தாயமாட்டுப் பண்ணி பெரோசனமில்ல. ஆளைப் பாரு, இல்லன்னு தாலிய அத்தெறிஞ்சிரு. காலுக்காகாற செருப்பக் கழட்டி எறிஞ்சிட்டுப் போகாம...''

''எனக்கும் அந்த யோசனதான் ஓடுது பெரியாளு.''

அந்தப் பெய செத்துப் போனுன்னு வச்சுக்கிற வேண்டி யது தான். தீத்துட்டு இன்னொருத்தனப் பாத்துக் குடுத் தாப் போச்சு. நீ ஆவடையக் கூட்டீட்டு வரலயா. அது போலத்தான்.

எல்லோரும் அமைதியானுர்கள். கருப்பன் மூளியான கோவைக்கொடியை இழுத்து இழுத்து அறுத்துப் போட் டான். அவன் பேச்சைத் திசைமாற்ற நினைத்தான்.

''நெஞ்சு வலிக்கே இந்தப் பெயம் பெயப்படுறயே, பொணம் எரிக்கிறதுக்கெல்லாம் எந்த மனசோட போனயோ.''

''அடே நானு பெயந்தவன். இப்ப கத்திய எடுத்து நெஞ் சுல குத்துடா நான் அசங்கினுப்பாரு. பொணம் எரிக்கிற தப் பத்தி நீ பேசுறயாக்கும். கொஞ்ச நேரம் பொண வாடையில நிக்க முடியுமாடா ஒன்னுல. அழகிரியாச்சும் ரெண்டொரு காரியத்துக்குப் போயிருக்கான். இப்ப என் னடா, அந்தந்த வீட்லருந்து தொணைக்கு ஆளு வாராக. தீயப் பொருத்தி வச்சிட்டு ஓடியாந்துருங்க. அப்ப எல்லாம் பகடைக மட்டுந்தான் கெடந்து சமாளிக்கணும்.''

''ஏன் இப்பமட்டும் தொணைக்கு வாராக. இப்ப இருக்கிற பகடைக எல்லாம் குசுவிணிகளா.''

''அந்தப் பழக்கம் எடையில வந்ததுதான். எம்பட்டத்துல ஒருத்தன் இருந்தான். ஒரு கேலிக்காரப் பெய ஒன்னப் போல...''

''அதும் என்னப் போலதானு.''

''ஒன்னப் போலன்னு அவன் கில்லாடி. மேகலக்குடிப் புள் ளீக வழியில கொல்லேக்கிருந்தா போற போக்குலயே தோப்ளபுடிச்சு சப்புனு அமுக்கி வச்சிட்டுப் போயிருவான். நெஞ்சுல பெயமிங்கிறது கெடையாது. ஒரு நா அம்மா செத்துப் போச்சு. அம்மான்னு ஊருக்கெல்லாம் கடுவா. கமலக்குழியில இந்தப் பெய தண்ணியள்ளிக் குடிச்சாம்னு பேசாத பேச்சுப் பேசியிருக்கு. இவன் அத மனசுலயே வச்சிருந்திருக்கான் பாரு, அந்தம்மா செத்தண்ணக்கி எங்கூட எரிக்க வந்தவன் கம்ப வச்சு அதுமேலயே இடிச்

சான். கண்டபடி வையிருன். அதுபாரு கெடையாடு அமத்தீட்டு வந்த புள்ளாண்டன் காதுல வுழுந்து ஊருக்குள்ள சொல்லி அதுலருந்து தொணைக்கு ஆளு வாராக.''

''இது நல்ல கூத்துத்தான்.''

''அடே நெஞ்சு ரெம்ப வலிக்குதுடா. இப்படி வந்து ஏந்திப் புடிடா. வெருசஞ வாடா.'

கருப்பன் ஓடிப்போய் அவனைத் தாங்கிஞன். சித்திரனுக்கு முகத்தில் கலவரம் குழம்பியது. அழகிரி சக்கணன் நெஞ்சைத் தடவிவிட்டான்.

O

சக்கிலியக் குடியிலிருந்து புறப்பட்ட பகடைகள் மேகலக் குடித் தெருக்களுக்குள் நுழைந்து வரூல் பிரித்தார்கள். பிறகு ஒருவன் கோடியெடுக்க வடக்கூருக்கு ஓடிஞன். இன்ஞெருவன் வாகைமரத்துக்கு விரைந்தான்.

சக்கணன் சடலம் கட்டணத்தில் புறப்பட நேரமாகி விட்டது.

''ரெம்ப நாள்ப்பட்ட உசிருப்பா.''

''தெருவுல இப்பிடியொரு கட்ட இருக்கிறது நல்லது.''

''நாலஞ்சு நா கெடந்தொம், லொம்பளப்பட்டம்னு இல்லாம படக்குனு போயிருச்சு நல்ல சாவு.''

''ஒண்டிக் கட்டையாவே காலந்தள்ளீட்டான். கெட்டிக்காரந்தான்.''

''பொண்டாட்டி செத்தபிறகு சித்திரன்பெய வீட்ல அணஞ்சான். அவளும் புருசனில்லாம இருந்ததுஞல கஞ்சி ஊத்திப் பாத்தா, முடியல. பெயலோ சீக்காளி. ஒருத்தியா என்ன செய்வா. சித்திரன் மேல இவனுக்கு ரெம்ப வாந்தக்கம்.''

''இருக்காது பின்ன, ஒரு ரத்தமில்லையா.''

அழகிரி அன்றைக்கு சித்திரனைப்பற்றி ரெம்பநேரம் ஆவடையுடன் பேசிக்கொண்டிருந்தான். மறுநாள் காலை ஒற்றையால மரத்தின்தூர் இடைக்குள் மொட்டைத் தலையை

நுழைத்து அண்ணுந்து சாய்ந்திருந்த சித்திரனைப் பார்த்த போது மனசுக்குச் சங்கடமாயிருந்தது.



ஆவடைக்கு இருப்புக் கொள்ளவில்லை. அழுகையும் கண்ணீருமாய் முணுமுணுத்துக் கொண்டு திரிந்தாள்.

அழகிரி நாலைந்து தடவை ''ஊறிக உஞ்சுமா'' என்று சொல்லியும் அவளுக்கு ஆத்திரம் தீர்ந்தபாடில்லை.

''பெரிய பட்டாளத்துல இருக்காணும். எம் புள்ளைக்கு ஏணி வச்சாலும் எட்டுமா. ஆளு மேல சொல்லிவுட்ருக்கானே எம்புட்டுத் திமிரு. அதும் வந்து காரியத்த ஓச்சிட்டுப் போயிறணுமாம். பேசாம என்னவும் கூட்டீட்டுப் போங்க. நாக்கு அந்து போறாப்புல ரெண்டு கேள்வி கேட்டாத்தான் எனக்கு மனசு கேக்கும்.''

"நீ எதுக்கு இப்பயே கூத்துக் கெட்ற. ஏற்கெனவே நான் ஆளோட போகணும்னுதான் முடிவு செஞ்சிருந்தென். அவனே சொல்லி வுட்டுட்டான். நல்லதாப் போச்சு.''

''அவனுக்கு இனி மரியாதையில்ல.''

''நம்ம என்ன அங்க போயி புள்ளைய வச்சுக்கோன்னு தொப்பாரங் கெட்டவாப் போறோம்.''

ஆவடைக்கு அழுகை பொங்கியது.

''பாவிப் பெயலால எம்புள்ள பெழப்பு போச்சே. நான் ஒரு புள்ளைய வளத்து இக்கோலம் ஆகணுமா. ஏழு கம்பளத்தாளே சக்கம்மா நீ தான் கேக்கணும்.''

''நீ சும்மா கெட. புள்ள தண்ணியெடுத்துட்டு வருவா. அவ முன்னலயும் அழுதுகிட்டிருக்காத. நான் வண்டாரிட்டச் சொல்லீட்டு வரறென்.''

மணலூத்திலிருந்து வண்டாரி, மாடசாமி, வேலு ஆகிய வர்களை மட்டுமே அழைத்துப் போயிருந்தான் அழகிரி. முத்துமாரியும் கூடப் போனாள். ஆவுடை போகவில்லை.

விஷயத்தை கந்தையாவிடம் தெரிவித்து விடுமாறு ஆவுடையிடம் சொல்லிவிட்டுப் போனான்.

அவர்கள் வந்திருந்த கோப்பைப் பார்த்தால் முத்து முருங்கனுக்கு மனசு ஒவ்வவில்லை. இருட்டுக்குள் ஒரு மூலையில் இருந்துகொண்டு தீனக்குரலில் கேட்டான்.

''அவன் ஒரு சின்னப்பெய. நம்ம எல்லாம் பொருத்திக் கெட்டித்தான் போகணும்.''

அழகிரிக்கு கோபம் தாங்க முடியவில்லை.

"ஆமா நீயும் பெரிய மனுசமின்னு இருக்கயில்ல. ஒன் னெல்லாம் நம்பித்தான பொண்ண அனுப்பி வச்சென். இப்ப மூக்கறுத்தப்பெறகு மனசு ஆறிப் போச்சா."

முத்துமுருங்கனுக்கு வரவர முகம் கருகி குக்கிப்போனான். அழகிரி பேச்சின் வெக்கை கூட அதுக்கு மேல் ஏறவில்லை. கோபத்தை முனக்கத்தில் அடக்கினான்.

"சரி நடந்தது நடந்து போச்சு. அவரவரு சோலியப் பாக் கிறதுக்குண்டான வழியச் சொல்லுங்க."

முத்துமுருங்கனுக்கு அவனுடன் பேசத் தெம்பில்லை. வண் டாரியிடம் எதையோ சொன்னான். உடனே வண்டாரி எடுத்துக் கூறினான்.

"என்னப்பா அழகிரி நம்ம அறுத்தெறிஞ்சிட்டுப் போற துக்கா அங்கருந்து வந்திருக்கொம். சேத்து வைக்கிறது தான் நல்லது. இந்த ஒரு தடவையும் வுட்டுப் பாக்க ணும்னு ஒம்மச்சான் சொல்றான். எனக்கும் அப்பிடித் தான் தோணுது. என்னம்மா சொல்ற முத்துமாரி."

கூட்டத்தை விட்டு ஒதுங்கி உட்கார்ந்திருந்த முத்துமாரி பேசத்தயாரில்லை.

எல்லாவற்றையும் அலட்சியமாய்க் கவனித்துக் கொண்டி ருந்த வயிரவன் சிகரெட் புகையை கற்றையாய் ஊதி னான்.

''அதாரு பெரிய மனுஷன் அயலூருலருந்து வெவகாரம் பேச வத்துட்டீக. தாலி கெட்டினது நான். எனக்கு பொண்டாட்டி வேண்டாம்னு சொல்றென். நீங்க என்ன சேத்து வச்சுப்பாக்கிறது.''

வண்டாரிக்குக் கோபம் வந்து விட்டது.

''வெவகாரத்துக்கு என்னப்பா இப்ப. ஒம்பாட்ல தாலி கெட்டிக்கிறதும் வேண்டாமிங்கிறதும்ணு புள்ள தெருவுலயா கெடக்குது. வேண்டாம்ணு காரணஞ் சொல்லு. அவ தப்புத் தவருப் பேசுனளா, நடந்துக்கிட்டாளா. ஊருல நீ ஒருத்தன் தான் மனுசன்னு நெனப்பா.''

''காரணம் ஆயிரமிருக்கும். அதெல்லாம் ஒங்க கிட்டச் சொல்ல வேண்டிய அவசியமில்ல. அவள எனக்குப் புடிக்கல. அவ்வளவுதான். பெறகெதுக்கு அனுவசியமாப் பேசீட்டு. பேசாம உண்டானத வாங்கீட்டு முந்தி நூலக் குடுத்துட்டுப் போக வேண்டியதுதான. இல்ல, செய்மொறையிருந்தாலும் சொல்லட்டும், காச வுட்டெறிஞ்சிறென்.''

மாடசாமி பொறுமையிழந்தான்.

''இந்தாப்பா அதுக்கு மேல பேச்சு வச்சுக்கிருத. துட்டு இருந்துச்சுணு அது ஒன் வீட்டோடுதான். இங்க அதியம் பேச்சு வேண்டாம். வந்த எடத்துல ஊருக்காரனுக்கு மதிப்புக் குடுக்கணும்னு தான் சும்மாருக்கென். எங்க ஊருன்ணு பொடி மசுரப் புடுங்கி ஊதீட்டுப் போயிருவென். என்னமோ பொம்பளப்புள்ள பெழப்பு கெட்டுப் போகும்னு பாத்தா.........எம்மா தாலியக் கழட்டி மூஞ்சியில எறிஞ்சுட்டு வாம்மா.''

வேலு கூட படபடத்தான்.

"தாலிய மூஞ்சியிலயா எறியணும். தெருவுலபோற நாயிக் கழுத்துல கெட்டணும்."

கூட்டத்தில் கசபுசல் கிளம்பியது. முத்துமுருங்கன் அரட்டலாகவே சொன்னுன்.

''அடே இப்ப சும்மா இருக்கயா என்ன. எல்லாம் ஊருக்குள்ள பேசி முடிவு பண்ணிக்கிருவாக. ஒன் சோலியப் பாத்துட்டுப் போ. நீ காணுற தேசத்துக்குத் தொலஞ்சு

போயிருவ. நாங்க இங்க சாவெழவு தள்ளீட்டு அனுதி யாக் கெடக்கவா."

''ஆமா அனுதையாக் கெடந்துட்டாத்தான் என்ன. இது களோட சேந்துருக்கறத விட அப்படியே இருக்கலாம். நீ எதுக்கு வாயத் தொறக்கன்னு கேக்கென். எங்கயாச் சும் போயி மொடக்க வேண்டியது தான.''

பிறகு முத்துமுருங்கன் பேசவே இல்லை. அவன் மனசில் ஊறிக்கிடந்த உணர்ச்சியெல்லாம் தாலி தீரும்போது துண்டை முகத்தில் பொதிந்து மூசுமூசென்று அழுது தீர்ப்பதில் வடிந்து கொண்டது.

கடைசி நேரத்தில் வயிரவனுக்குத் தெரியாமல் கொட்டா ரத்து வழியாக சுடலைப் பயலுடன் வந்து நின்றான். செல்லி வீட்டுச் சுவர் மூலையில் சாய்ந்து அழுது கொண்டி ருந்தாள். முத்துமாரி தாமதித்துக் கொண்டாலும் அழகிரி நடையை நிறுத்தவில்லை.

''இந்தப் பாவியால ஒங்கப்பன் மூஞ்சியில முழிக்க முடி யாமப் போயிட்டனம்மா. அவன் கூட என்னமோ மாதிரி பேசுறன். எனக்கு வருத்தமில்ல. புள்ளையப் பெத்தவனுக் குத்தான் வகுத்தெரிச்சலு தெரியும். இப்ப எம் மகளுக்கும் வந்துருச்சுரு நானும் அப்பிடித்தான்... ம்...சரி சரி...எல் லாருக்குமே குடுத்து வைக்கல. சொடலைய நான் காப்பாத் தீருவென். அந்தப் பெயலோட அனுப்பப் போறதில்ல ... நீ போ தாயி. அழகிரி அங்க காத்துட்டு நிக்கான் பாரு.''

மனம் இற்றுப்போய் முத்துமுருங்கன் பேசிய பேச்சை எட்ட நின்று கேட்டுக் கொண்டிருந்த அழகிரி கொஞ்ச தூரம் நடந்தபிறகுதான் அவனைப் பற்றி நினைத்தான்.

என்ன இருந்தாலும் முத்துமுருங்கனிடம் அப்படிப் பேசியிருக்க வேண்டாம். இத்தனை காலமாய் அன்யோன் யமாக இருந்துவிட்டு இப்போது திடீரென்று முறித்துக் கொள்வதை நினைத்தால் ஏன்தான் பெண் கொடுத்துச் சம்பந்தம் பண்ணினோம் என்றிருந்தது. என்றைக்கும் போல் தாய்பிள்ளையாகவே இருந்திருக்கலாம்.

சிறுபயலைக் காலோரம் நிறுத்தி மௌனமாய் நின்று விட் டுப் பிரிந்து வந்த முத்துமாரியின் உருவம் அவனுள் பெரி தாய் நிழலிட்டது.

இருட்டுக்குள் எல்லோரும் தட்டுத் தடுமாறி முன்னால் செல்ல தகப்பனுக்குப் பின்னால் பாதை பார்த்து நடந்து கொண்டிருந்தாள் முத்துமாரி.



சக்கணன் செத்துப்போனது போல் ஊரில் நிறையச் சங்கதிகள் நடந்துவிட்டன. கந்தையாதான் சொல்வார்.

''ஏலே கோயில் முக்குல கொஞ்ச நேரம் நின்னு பாரு. ஊர்க்கத அத்தனையும் வெளியேறும்.''

அது வாஸ்தவந்தான். கோயில் முக்கில் பேசாத பேச்சில்லை. அதுக்குத் தோதாய் மேடையும் கோயில் திண்டும். காணாததற்கு நடுக்கடை வேறு.

முக்கில் என்னேரமும் ஆள் நடமாட்ட மிருக்கும். மேலத் தெரு, கீழத் தெரு, வடக்குத் தெரு மூன்றும் சந்திக்கும் இடம் அதுதான். தெற்குத் தெரு ஒதுங்கல் தான் என்றாலும் டாணா வசத்தில் மேலத் தெருவில் கொழுவி முச்சந்தியில் கலக்கிறது. வண்டியடிப் பென்ன, தண்ணீரெடுப்பென்ன சகல போக்குவரத்தும் அந்த வழிதான்.

ஊர் அமைப்பு வாகு அப்படி. சுற்றுப்பட்டிகளிலிருந்து கிட்டத்தட்ட பெரும் பாதைகள் எல்லாமே ஊருணிக் கரைச் சரிவில் சேர்ந்து பாலம் வழியாய் ஊருக்குள் நுழையவேண்டும். இந்த வண்டிப் பாதைகளைத் தவிர ரோடு கீடென்று எத் தொடர்பும் கிடையாது. ரோடு வடக்கூர் வரைதான்.

கோயில் முக்கு எதுக்கும் தோதான இடம். பொங்கல் நாட்களில் மேளகாரன் ஒரு சமாப்பு வைப்பது முதல் பிடரி வலித்த கிழவி மொச்சி இலையைப் பொட்டலங் கட்டிப் படுத்து காலையில் சிதறுவது வரை ஜனங்களின் வாழ்க்கை

நடவடிக்கைகளும் அந்த முக்கும் பின்னிப் பிணைந்த தொந்தத்தில்தான் காலங்காலமாய்க் கடந்து விட்டிருக்கிறது.

அந்த விஷயத்தைக் கூட முக்கில் வைத்துத்தான் கேள்விப்பட்டான் அழகிரி. இரண்டு பேர் மம்பட்டியைத் தோளில் வைத்தபடி பேசினார்கள். அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. சக்கிலியக் குடிக்குத் தெற்கே குப்பைகள் கிடக்கும் புறம்போக்கு நிலத்தை அப்பையா வாங்கி விட்டாராம். பஞ்சாயத்து போர்டிலிருந்து வில்லிசேரிக்காரரே எழுதிக் கொடுத்து விட்டாராம்.

அவனுக்கு விஷயம் பிடிபடவில்லை. கட்டாந்தரிசைப் போய் இவர் ஏன் வாங்கவேண்டும். ஒரு ரூபாய்க்கு வட்டிக் கணக்குப் பார்ப்பாரே. இதற்கு எப்படி மனசு வந்தது. காரியம் ஏதாவது இருக்கும். ஒருவேளை அதற்கும் கிழக்கே கிடக்கிறதே கந்தையாவிடம் வாங்கிய நிலம் அதோடு சேர்த்து வெள்ளாமை செய்யவா. அப்படியும் முடியாது. அது பத்து வருஷம் பாடுபட்டாலும் திருந்தாது.

இந்த விஷயமெல்லாம் நமக்கேன். அதுவும் அப்பையா காரியத்தில் அக்கறை வேண்டாமென்று இருந்தவன் தான். அவர் காணியைக் கூட கைவிட்டு ரெம்ப நாளாயிற்று. காசு பெருத காரியத்திற்காக களவு சாட்டி ஊர்க் கூட்டம் போட்டு இழுத்தடித்த பிறகு காணி பார்ப்பதை நிறுத்தி விட்டான் அந்தக் காணியை வேறு யாருக்கோ ஒப்படைத்து விட்டான் கந்தன். அதிலிருந்து அவர் வழிக்கே போவதில்லை.

ஆனல் புறம்போக்கை அவர் வாங்கிவிட்டால் சக்கிலியக் குடி ஜனங்கள் ஒரு கூடை குப்பை கூடப் போட இடமிருக்காது. அவரும் போட விடமாட்டார்.

வில்லிசேரிக்காரர் இதைச் செய்திருக்கக் கூடாது. பஞ்சாயத்திலிருந்து சக்கிலியக்குடிக்கு ஏதாவது செய்வார்கள் என்று நினைத்தால் கடைசிக்கு இப்படியா செய்யணும்.

சமாச்சாரத்தை கந்தையாவிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்றல் வேலை அலுப்பில் சில நாளாய் ஆளையே பார்க்க முடியவில்லை. ஊர் இருக்கும் நிலவரத்தில் இப்

போதெல்லாம் அவர் அதிகம் வெளியில் வருவது கிடையாது. காடுகரையில்தான் பார்க்க முடியும்.

அன்றைக்கு சக்கைப் போடு போட்ட மழைக்கு ஆள் எப்படியும் வீட்டில்தான் இருப்பார் என்று புறப்பட்டான். வழியில் கோயில்களம் சுதாரித்துப் போயிருந்தது. பலத்த மழை வெறிப்பில் தூசி துப்பட்டைகள் அமுங்கி துப்புரவாயிருந்தது. தெற்கோரம் துண்டந் துண்டமாய் ஆடுகள் தும்மிக் கொண்டு கிடந்தன. ஒரு பக்கம் நிரக்க ஆய்ந்த தட்டான்களை சிறுபையன்கள் இலந்தை முள்ளால் அடித்தனர். கோழிக்கு இரைபோட.

ஊர்ப் பெரிசுகள் அனைவரும் ஊருணிக் கரையைப் பார்வையிட்டு வந்து களத்தில் கூடியிருந்தனர். அவர்களுடன் கந்தையா இருப்பதைப் பார்க்கவே அழகிரியும் உட்கார்ந்தான்.

பாலத்தைத் தாண்டி தண்ணீருக்குச் சென்றுவிட்ட பெண்கள் கூட்டத்தைப் பிடித்துவிட வேண்டுமென்று நடுக்கடைச் சங்கரலிங்கம் மகள் செகுட்டி நடந்தாள். அவள் இடுப்பில் வெண்கலக் குடம் சிறு செப்பு போலிருந்தது.

கோபால் நாயக்கருக்கு வாய் சும்மா இருக்கவில்லை.

''எம்மா தாயி பாலத்தோரம் பையா நடந்து போ. ஒனக்குப் புண்ணியமாப் போகுது. அதவும் இடிச்சுப் போட்டுட்டு வண்டி மாடு போக முடியாது."

அவள் வேகமாய் நடக்க முயற்சி செய்தாள்.

சங்கரலிங்கம் சொன்னார்,

"யொவ் சும்மாருக்க முடியாதாய்யா. வளர்ர புள்ளையப் போயி."

''நல்லா வளந்துச்சய்யா. படர்ர புள்ளன்னு சொல்லும். கடத்தீனு, கொஞ்சமாத் திங்கச் சொல்லும். அடுத்த வருசம் பாரும் கடமகுமைய நான் எடுக்கனு இல்லையான்னு."

''ஆருட்ட வந்து பேசுறீரு. சிறுசுலருந்தே கடத் தெராசு புடிச்ச கையி இது.''

''ஊராங்கிட்ட வாங்கிப் போட்ட கையின்னு சொல்லும்."

சித்திரனுடன் கட்டம்போட்டு சேர்க்கை விளையாடிக் கொண்டிருந்த கருப்பன் ஓடி வந்து உட்கார்ந்து சங்கர லிங்கத்துக்குப் பரிந்து பேசினன்.

''சாமியோவ் நீங்க கவலப் படாதங்க. இருக்கவே இருக்கு சக்கிலியக்குடி. அங்க வந்து கடைய ஊணீருங்க. பத்துச் சக்கிலியக் குடி இருந்தா ஒரு கட பெழைக்கலாம்னு சும் மாவா சொல்லீருக்காக. சாமிமாரு குடுக்கிற தானியத்தக் கொண்டாந்து கடையில குமிக்கிறதுக்கு சனமா இல்ல.''

''ஆமலே ஒரு கோவாலு நாய்க்கர் சொல்ருருன்னு கடையப் பெறட்டிப் போட்டா சங்கரலிங்கம் பேரு என்ன கிறது.''

கீதாரிக் கோனரும் வைத்தியப் பண்டுவரும் ஆடுகளுக்கு நடுவில் உட்கார்ந்து புகைவிட்டுக் கொண்டிருந்தார்கள். சம்முகஞ் செட்டி அந்தப்பக்கம் மெல்ல நழுவினர். இதைக் கவனித்த அழகிரி கந்தையாவைப் பார்த்துக் கண்ணடித் தான். அவர் மீசையைத் தடவியவாறு தலையாட்டினர்.

சுப்பையனுசாரி அப்போதுதான் 'நாட்டில் என்ன நடக் கிறது' என்கிற மாதிரி பட்டறையிலிருந்து கண்ணைச் சுளித்துக்கொண்டு வந்தார். வந்து வெற்றிலை குதப்பிக் கொண்டிருந்த குருசாமி நாயக்கர் பக்கத்தில் உட்கார்ந் தார்.

குருசாமி நாயக்கருக்கு இந்தப் பேச்சு வழக்கெல்லாம் பிடிக்கவில்லை.

''என்னத்துக்கு வாய்க்கு வெளங்காறதெல்லாம் பேசிக் கிட்டு. ஆக வேண்டியதப் பேசுங்க. ஊருணிக் கர ஒடஞ்சு கெடக்குது. அத அடைக்குறதுக்கு வழியப் பாக்காம... கருப்பன் பெய இருக்கானே...''

''என்னசாமி என்னக் கூப்பிடுறீக.''

''நல்லா மயித்தப் புடுங்குனலே. பேயாத மழ பேஞ்சு அத் தன தண்ணி வந்து ஊருணி ஒடஞ்சு போச்சே.''

கந்தையாவுக்கு அவரைக் கிண்டிப் பார்க்கத் தோன்றி யது.

''மாமாவுக்கு ஊருணி ஒடஞ்சுதுல வருத்தமில்ல. மந்தத் தண்ணி ஊருணிய வுட்டு வெளியேறுனதுலதான்....''

''எனக்கென்னய்யா வந்து போச்சு. ஊருக்காரனுக்கத்தது எனக்கும்.''

கருப்பன் இடையில் மூச்சு விட்டான்.

"காவக்காரச் சாமிவுக என்ன சொல்றுகன்னு, மழத்தண்ணி மந்தக் களத்துல கெடந்த மொளகா வத்தல அரிச்சிட்டுப் போச்சுல்ல......."

கந்தையா தொடர்ந்தார்.

''மாமாவ், மழத்தண்ணியில செவத்த மீனு புடிச்சீராமில்ல. வலைக்குள்ள மீனு மட்டுந்தான் அம்புட்டுச்சா மத்ததும் வந்துச்சா.''

''மத்ததா மசுரு வந்துச்சு. ஒமக்கும் பங்கு வேணுமா.''

''அஞ்சாறு வத்தலுக்கு இந்தப்பாடா சக்கிலியப் பெய அரிச்சு வச்சுக்கிட்டா என்ன. மெனக்கிட்டு அவங்கிட்டப் போயி வலைய வாங்கிப் போட்ருக்கீரு பாரும். அதுக்கு மசுரும் வரும் மண்ணாங்கட்டியும் வரும். போருமய்யா பேண்ட பிய்யில மொளையரிசி பெறக்குறவுகளா.''

''ஒமக்கென்ன வலிக்குது. எறச்சுப் பாடுபட்டவனுக்கில்ல வலிக்குது.''

''பிஞ்சையில கை காய்க்க எறச்சிட்டு வாராரு. நடுக்கட மொச்சைய வாங்கித் தின்னுட்டு மேடையில குசுவிட்டுக் கெடக்கிறது தெரியாது. எறைக்காகலாம் எறவ.''

சுப்பையனுசாரி பேச்சுக்கு நடுவே குரல் கொடுத்தார்.

''செட்டியாரய்யா இங்க முக்கியமான சங்கதியப் பேசீட்ருக்காக. நீங்க என்னன்னு ஞுருதச் சவாரி போடுறீக. அவுக ரெண்டு பேரவும் கூட்டி வாரீகளா என்ன.''

அழகிரி முனங்கிக் கொண்டான்.

''இல்லன்னு இவுக அங்க வந்துருவாக.''

கோபால் நாயக்கர் அக்கறையாய்க் கேட்டார்.

''பெறகென்னதான் செய்யிறதுய்யா, இனியொரு மழைக்குள்ள ஊருணிக் கரைய அடச்சாகணுமே.''

''ஆமா அடைக்கணும். அவ்வளவும் அடைக்க முன்னூறு நானூறு செல்லுமே.''

இது குருசாமி நாயக்கர்.

பண்டுவர் பழைய வழியைச் சொன்னார்.

''வழக்கமா வரிப் போடுவீகளே அந்த மாதிரி செய்ய வேண்டியதுதான.''

சுப்பையனாசாரிக்கு மூகஞ் சுளித்தது.

''ஆமய்யா எதுக் கெடுத்தாலும் வரித்தான. எச்சௌந்ததுகள விடுறதில்ல. ஊருப்பணம் ரெம்ப இருக்கே அதுல எடுத்துப் போடுங்க. வரிப் பிரிச்சு அடைக்கிறதுக்குள்ள இருக்கிற கரையும் ஒடஞ்சு போயிரும்.''

''ரூவாயெல்லம் பெரிய வீட்லருக்கு. ஒடனே வாங்கிக் காரியத்தப் பாக்கணும்.''

''அவருட்டப் போயிக் கேக்கணுமே.''

''இப்பிடிச் சங்கதிக்கெல்லாம் சாமிவுகதான் லாயக்கு.''

அழகிரி குருசாமி நாயக்கரைப் பார்த்தான்.

''நமக்கு முடியாதுப்பா.''

''பெறகு ஆருதான் கேக்கிறதாம்.''

சங்கரலிங்கம் எல்லோரையும் பார்த்தார். யாரும் அதற்குத் தயாராயில்லே.

அழகிரி அடுத்த வழியைச் சொன்னான்.

''அப்பிடில்லன்னா பஞ்சாயத்து போடுலருந்து அடைக்கச் சொல்லுங்க.''

''ஆமாடா நீ சொன்னதுல கிசுக்குனு நடந்துரும்.''

''நீங்கள்ளாம் மெம்பரா இருக்கப் போயித்தான் மாமா இந்தக் கதி. பஞ்சாயத்துல பணமில்லேயா. இப்பக்கூட சக்கிலியக் குடியோரம் பெறம் போக்க அப்பையாவுக்கு விட்ருக்காகளாம். அது ஒங்களக் கேட்டா நடந்திருக்கு.''

"வித்தாச்சா."

''எழுதிக் குடுத்தாச்சு.''

''அதெதுக்கு அவரு வாங்குறாராம்.''

"இதென்ன பேச்சு. பணக்காரருக்கு எல்லாம் ஒவயோகப் படும்."

''எங்களுக்குத் தெரியாதே.''

ஒங்களுக்கு எதுதான் தெரிஞ்சு நடந்திருக்கு. காட்ற எடத்துல கையெழுத்துப் போடுவீக. வைத்தியரு கூட மெம்பராச்சே.''

வைத்தியர் ஆமோதித்தார்.

"அவுக சொல்றதுதான் சரி. எங்கயாச்சும் காடுகரையில வந்து கூட்டம் நடந்துச்சுனு கையெழுத்து வாங்கீட்டுப் போறான் தோட்டி. அவன் சம்பளம் காணாதுன்னு போடுற கூப்பாடு. என்னடான்னா, மொதலாளி வீட்ல ஓயாம வேல வெட்டி செய்யணுமாம்.''

"அதுதான் சின்னப்பட்டத்துப் பெயக பஞ்சாயத்துக்குள்ள மொழையணும்னு திரியிறான்."

''இதெல்லாம் எதுக்கு, அடுத்த தடவ ஒரு சக்கிலியனைக் கொண்டாந்து பெரசண்டா வைக்க வேண்டியதுதான். அவன் தெருவுக்கு வந்த லேட்டவும் பஞ்சாயத்துப் போ டோரம் போட்டாச்சு. கீச்சாதிக்காரன மெம்பரா ஆக்கி றதும் இல்ல. கொராமுனுசும் கணக்குப் புள்ளையும் போயி அவங்கள அரட்டி மட்டும் பகுதி வாங்கத் தெரியுதுல்ல.''

கந்தையா குரலில் கடுப்பேறியிருந்தது.

கருப்பன் குதூகலித்துச் சொன்னான்.

''அப்ப சாமிமாரெல்லாம் சேந்து என்ன பெரசண்டாக்கீ ருங்க. மாடு மேச்சுட்டே இதவும் கவனிச்சுக்கிறென்.''

"ஏலே சும்மாருக்கப் போறயா குண்டியில ரெண்டு பூச வேணுமா."

''பெறம் போக்கு நெலம்னு சொன்னீரே அது என்ன வெசயம் கந்தையா.''

"ஏன் மாமாவுக்கு அத எடுக்கணும்னு நெனப்பிருந் துச்சா."

''சே, அதெதுக்கு எனக்கு. எப்பிடி அவுகளா பேசி முடிச் சுக்கிட்டாக. ஊருச் சங்கதியாச்சே.''

''ஊருச் சங்கதி எல்லாம் ஒழுங்காத்தான் நடக்குதோ. எல்லாம் அவுக ரெண்டு பேருதான்.''

''அவருக் கெப்படி விடப் போச்சு.''

''விட்டுட்டாரே.''

'அனியாயமாத்தான் இருக்கு.

''இல்லன்னது ஆரு. குடுத்த கடத்துக்கு வட்டி கேட்ருப் பாரு. இப்பிடியொரு சகாயம் பண்ணியாச்சு.''

''நெசமாத்தான் கேக்கென், அந்தக் கெடங்குக் காட்ட வாங்கி என்ன செய்யவாம்.''

''எல்லாம் பெரிய திட்டமிருக்கும். பொறுத்திருந்து பாருங்க.''

அழகிரிக்கு விஷயம் இப்போதுதான் தெளிவாய் விளங்கி யது. இதைப் பற்றி சக்கிலியக்குடியில் பேசி முடிவெடுக்க வேண்டுமென்று நினைத்தான். ஆனாலும் அதன் விளைவு எதுவாயிருக்கும் என்று உணர்ந்ததும் அந்த எண்ணத் தைக் கைவிட்டான்.

கடைசியில், எல்லோருமே போய் ஊருணிக்கரையை அடைக்க பஞ்சாயத்திலிருந்து செலவழிக்கச் சொல்ல வேண்டுமென்று முடிவெடுத்தார்கள்.



"அழகிரி என்ன சொல்றெ?''

"என்னத்தச் சொல்லச் சொல்றீக.''

''என்னத்தவா. சரின்னு ஒரு வார்த்த சொல்லு. அது போதும் மத்ததுக்கு நானுச்சு. நீகவலப்பட வேண்டாம்.''

திருணையில் கைவிளக்கு சலனமற்று எரிந்தது. ஏரவாரத்தில் தொங்கிய தூரி வலையை வெறித்துக் கொண்டிருந்தான் அழகிரி.

வண்டாரி விஷயத்தை விடவில்லை.

''என்ன எம்பாட்டுக்குச் சொல்லீட்டிருக்கென் நீ பேசாம இருக்க. ஒனக்குப் புடிச்சம்னுச் சரி சொல்லு. இருக்கிற நெலமையைச் சொல்லீட்டென். குடும்பத்துல எல்லாரும் நல்ல மனுசராக்கும்.''

அய்யங்குளத்து ஆட்கள் அங்கங்கே அமைதியாய் உட்கார்ந்திருந்தார்கள். மச்சு வீட்டு வாசலில் ஆவடையும் முத்துமாரியும் ஒருவருக்கொருவர் அணைந்து உட்கார்ந்திருப்பது இருட்டில் கட்டையாய்த் தெரிந்தது.

அழகிரிக்கு நினைவுகள் ஓடின. நடந்து முடிந்த அனுபவங்கள் நெஞ்சில் உப்புக்கரித்தன.

முதல் தாலிதீர்ந்து சரியாக ஆறு மாதம் ஆகவில்லை. காணுக் குறைக்கு சின்னப்பயல் வேறு தனித்துக் கிடந்தான். அதற்குள் இன்னொரு கலியாணத்தை நினைக்கும் போது கூச்சமாகக் கூட இருந்தது.

இரண்டு நாளைக்கு முன் வண்டாரி விஷயத்தைச்சொன்ன போது ஆவடைகூட குறிப்பிட்டாள்.

"என்ன செய்யிறது, நம்ம புள்ளைக்கு இப்பிடியெல்லாம் அவக்கேடு வரணும்னு இருந்திருக்கு. அதுதான் அப்பிடிப் போச்சுனு சும்மா கெடக்கவா இன்னியும். புள்ள கழுத்து தழைக்கணும். எத்தன நாளைக்குத்தான் வீட்ல வச்சிருக்க நேத்துப் புள்ளைய.''

முத்துமாரிக் கென்ன வயசா போயிற்று. இன்னும் எவ்வளவோ காலத்துக்கு இருந்து வாழ வேண்டியவள்.

பெண் கேட்க வந்தவர்கள் அவன் வாயை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மச்சு வீட்டில் ஆவடை மேவாயில் கைவைத்துக் கவனிக்கத் தொடங்கினாள். அப்படியாவது நல்லகாலம் பிறக்கட்டுமே என்ற மாதிரியொரு கவனம்.

அழகிரி என்ன சொல்வதென்று தெரியாமல் குமைந்தான். அத்தனை ஜனங்களுக்கு மத்தியில் எதையாவது சொல்லவும் வேண்டும்.

''பையன் கூடப் பெறந்தவுக எத்தன பேரு.''

''ஆம்பள ஒருத்தன்தான். ரெண்டு பொம்பள கெட்டிக் குடுத்தாச்சு.''

வந்திருந்தவர்களில் யாரோ பதில் சொன்னார்கள்.

''தாய் தகப்பனெல்லாம் எப்பிடி.

''அவுக கல்லுப்போல இருக்காக இந்தா.''

''பையனப் பத்தி எனக்குத் தெரியாது.''

மாடசாமி சொன்னான்.

''அண்ணாக்கி எங்கூட நிண்ணானில்ல மச்சான் அவனே தான். நல்ல கொணம். எனக்குத் தெரியும்.

ஒரு நிமிசம் தான் நினைவுபடுத்திய உருவத்தை மகளுடன் இணைத்துக் கற்பனை செய்து பார்த்தான்.

வீட்டுக்கு வெளியே முற்றத்தில் இருட்டு நெருங்கிக் கூடியிருந்தது. வெளி வாசலில் உட்கார்ந்திருந்த கருப்பன் முதுகை மட்டும் வீட்டுக்குள் திருப்பியிருந்தான்.

வண்டாரி பிறகும் செருமலுடன் ஆரம்பித்தான்.

''அழகிரி இதுல ரோசன பண்ணி என்னத்துக்கு. எண்ணாக்கி ஆகாதுன்னு தாலி தீந்துட்டு வந்தாச்சோ அண்ணைக்கே முடிவு செஞ்சிறணும். இனியொரு எடத்துல குடுத்து வழிதேடணும்னு. இப்ப மனசு ஒளஞ்சு எதுக்கு. அவுகளும் ஒரே புடிவாதமா இருக்காக. வந்தவுகளுக்கு வெத்தல பலுமாறி அனுப்பி வையி.

அழகிரி மச்சு வீட்டைப் பார்த்தான்.

''என்னம்மா சொல்ற முத்து.''

தாயும் மகளும் பழைய மௌனத்தைக் கலைக்கவில்லை.

''எல்லாச் சங்கதியும் பையனுக்குத் தெரியுமில்ல. பெறகு அப்பிடி இப்பிடின்னு...''

"சே சே அப்பிடியெல்லாம் நெனைக்க வேண்டாம். பையன் கொணமானவன்.''

அழகிரிக்கு மீண்டும் நினைப்பு மறுகியது.

''முத்து நான் சொல்றேன்னு சரிங்க வேண்டாம். ஒம் மனசுக்குப் புடிச்சாச் சொல்லு.''

இப்போதும் அவளுள் இறுகிக் கிடந்த மௌனம் உடைய வில்லை.

அழகிரி ஆட்கள் பக்கம் திரும்பினான்.

''நீங்க பாத்துச் சொல்லயில நான் தடுதல சொல்லல. எம்புள்ளைய ஒங்க புள்ள மாதிரி நெனச்சுக்கங்க. நான் அம் புட்டுத்தான் சொல்லுவென்."

அன்று வந்திருந்த அனைவருமே கை நிறைய வெற்றிலை யுடன் திரும்பினார்கள்.

O

வெவ்வேறு கிணறுகளிலிருந்து தண்ணீரெடுத்து வந்த லட்சுமியும ஆவடையும் ஊருணிப் பாலத்தோரம் சந்தித் துக்கொண்டார்கள். முகக் களையோடு லட்சுமி கேட்டது.

''என்னடி முத்துமாரிக்கு ஒரு வழியத் தேடிக்குடுத்திட்டீக போலருக்கே.''

"நம்ம பெழப்புக்கு என்னத்தச் செய்யிறதும்மா. இருந்து வாழவேண்டிய புள்ளைய வச்சிட்டிருக்க முடியுமா."

இடுப்பில் நழுவிய பானையை ஏற்றிப் பிடித்தாள் ஆவடை. ''மொதக் கூத்துத்தான் அப்பிடிப் போச்சு. இனியாச்சும் அவ நல்லாருக்கட்டும். கிட்டத்தூரு தான ஏடொருக்கக் கவனிச்சுக்கிறலாம்.''

"அப்பிடித்தான் நெனச்சிட்டிருக்கொம் தாயி."

''அவ நல்லாத்தான் இருப்பா. வீட்ல வச்சுப் பாக்கிறது நல்லா இல்ல. எங்கதுல பாரு பத்துப் பதினஞ்சு வருசமா சீந்தாமக் கெடக்குது. வில்லிசேரி வீட்டவே எடுத்துக்க யேன், மூத்த பொண்ணு சமஞ்சு எத்தன வருசம் ஆச்சு. இனியும் வெளியேத்தல. ஆருமே கேட்டு வரலையாம். இத் தனைக்கும் பெரிய வீடு. இவுகளுக்கும் சொல்லியனுப்பி

வுட மனசில்ல. கேட்டு வாரவன் லோகத்தக் கெட்டியாள ணும்னு நெனச்சா வருவானு. வீட்டுச் சொத்தெல்லாம் வித்துப் படிச்சவன் நகநட்டு சீதனம்னு கேட்டா அடி வகுத்துல புடிக்குது. ஒரு கலப்பக் காரனுக்கு குடுக்க வேண்டியதுதான. மவுசு கொறஞ்சு போயிருமாம். ஆக ஊடைக் கூட புள்ள பெழப்பு கெட்டுப் போச்சு. புள்ளன் னுப் புள்ளையா."

''எல்லாம் காலாகாலத்துல செஞ்சிறனும்.''

''எம் பொண்ணைக் கூட ஒரு கூலிக்காரன் கேட்டு வந்தா லும் புடிச்சுக் குடுத்திருவென்.''

''அவுகளுக்கு நல்ல நேரத்துல மால பூக்கும். எரக்கப்பட்ட மகராசில்ல. புளிச்ச தண்ணி கேட்டா கஞ்சியக் கரச்சு ஊத்துவாகளே.''

''ஒம் மக என்ன சொல்ரு.''

''அவ என்ன சொல்லுவாம்மா. மங்கிணிப் பாம்பு மாதிரி ஊமப் புள்ள. என்ன சொன்னாலும் சரின்னுதான் சொல் லப்போரு.''

''என்னருந்தாலும் அவகிட்ட ஒரு வார்த்த கேக்கணு மில்ல, நீ தனியாக் கேக்கலையா.''

இரண்டு பேரும் கால்மாற்றிச் சணக்கிட்டுக்கொண்டார் கள்.

''கேட்டென். எனக்கு இந்தப் பெழப்பாச்சும் நல்லாயிருக் கட்டும்னு அழுகுரு."

"அட பாவமே. புள்ளைய நல்லமொறையா அனுப்பி வைக் கப் பாரு."

லட்சுமி மெல்ல நகர்ந்தது.



மந்தைப் புஞ்சை நவாமரத்துக் கிணற்றில் கமலைச் சத்தம் கேட்ட வண்ணமிருந்தது.

"கூட்டு வண்டிக்காள போல
கூடுனமே ரெண்டு பேரும்- நம்ம
கூடுனமே ரெண்டு பேரும்.
ஆகாத காலத்துக்கு என் தங்கரத்தினமே—நம்ம
ஆளுக்கொரு தேசமானோம் பொன்னுரத்தினமே."

தெம்மாங்கின் அடிகளை இறவையின் லயத்துக் கேற்ப மாற்றிக்கொண்டு இடையிடையே மாட்டையும் பத்தினான் முனியாண்டி. அவன் குரலில் சீரான ஏற்றமும் இறக்கமும் கலந்திருந்தது. ஒரு அடியின் கடைசி வார்த்தையை இழுத்துக் கொண்டு போய் உச்சத்தில் விடும்போது தொண்டை நரம்புகள் விண்ணென்று புடைத்தன.

கோடுபோட்ட லங்கோடு உடுத்தியிருந்தான். தலையில் கோவணத்திற்கும் பெரிசாய் துண்டு. வடத்தில் ஒருபக்கமே உட்கார்ந்து கன்றிப் போன தொடைப்பாகம். வடத்தில் லாகவமாய்ப் பிரயாணம் செய்தான்.

கமலைக்குழியில் எந்நேரமும் நவாமர நிழல் படர்ந்திருந்தது. கீழ்ப்புற ஒதுங்கலில புல்லுக்கு நடுவே வரிசையாய் முருங்கைப் பதியம். அடுத்து வாடாமல்லிக் கும்மல். பெருவாய்க்காலில் புல்லைச் சீண்டி விட்டுக் கொண்டே ஓடியது தண்ணீர்.

தண்ணீர் வாய்க்கால் வழியே கிழக்காமல் அலுப்புத் தீர ஓடி தெற்கே அடர்ந்து வளர்ந்த மிளகாய்ச் செடித் தோட்டத்துள் நுழைந்தது. பூவும் பிஞ்சுமாய் பூரித்து நிற்கும் செடிகளூடே தண்ணீர் ஓடுவதைப் பார்த்தால் ஒரு கானகத்திற்குள் ஆறு ஓடுவது மாதிரிப் பிரமை.

புஞ்சை வரப்புக்களில் தட்டுக்குத் தட்டு ஆமணக்கு. அங்கங்கே வெண்டைச் செடிகள். இலைகளுக்குள் மினுங்கும் தக்காளிப் பழங்கள். குலுங்கிச் சிரித்த கொத்தமல்லி மணம் ஏகப் பரவியிருந்தது.

தக்காளிப் பழத்தைச் சுவைத்தவாறு மண்வெட்டித் தாங்கலில் நிமிர்ந்த முத்துமாரி இடுப்பில் நழுவிய சேலையைச்

சொருவிக் கொண்டாள். முழுக்கத் திரண்டிருந்த வயிற்றைத் தடவிவிட்டுக் கொண்டபின் தன்னையறியாமலேயே அவள் கைகள் சோர்வுடன் இடுப்பில் பதிந்தன.

காய்ந்து சிறு விருவோடிய நிலத்தில் நீர் நனைக்கவும் ஆவி விட்டு நீர்ந்து பொருமிப் பூரிக்கும் மண்ணிலிருந்து குளுமையான மணம் கிளம்பியது. செடியசைவில் உதிர்ந்து மிதந்த சிறு பூக்களில் நிலைத்திருந்தாள் அவள்.

மறுபடியும் முனியாண்டியின் ராக ஏற்றம். முத்துமாரி சிரித்தாள்.

'பசிநேரத்துல போயி பாட்டுக் கேக்குதாக்கும். அவன் சத்தத்தப் பாரு.'

அவள் அய்யங்குளத்துக்கு வந்த தோதில் முனியாண்டியும் சாத்துரப்ப நாயக்கர் புஞ்சையில் தண்ணீர்ப்பங்கு சேர்ந்தான். அதற்குமுன் அதே வீட்டில்தான் சம்பளத்துக்கிருந்து சம்சாரித்தனம் பார்த்தான்.

அய்யங்குளத்தை எடுத்துக் கொண்டால் செருப்புத் தையல் தொழிலைச் சில பகடைகள்தான் வைத்துக் கொண்டிருந்தனர். மற்றவரெல்லாம் சம்பளத்துக்கும், பங்குக்குமாய் சம்சாரித்தனம்தான் பார்த்தனர். ஊரில் சக்கிலியக்குடியென்று தனியே கிடையாது. ஊரைச் சுற்றிப் புஞ்சை நெருக்கடியானதால் வீடுகளும் சேர்ந்தாற் போலவே இருக்க வேண்டிய நிர்ப்பந்தம். அதைத் தவிர பேச்சு வார்த்தை கிணறு பழக்க வழக்கங்கள் எல்லாமே தனிதான்.

சாத்துரப்ப நாயக்கர் வீடு கொஞ்சம் துட்டுத் துக்காணி பழங்கும் இடம்...ஒற்றைப் பேர் வழி. பெண்டாட்டியைத் தவிர மருந்துக்கு வேறு ஆள் கிடையாது. மனுஷனுக்கு வாதம் உண்டு. சரியாய் நடமாட முடியாது. எப்போதாவதுதான் புஞ்சைக்குப் போவார். காலையில் ஓடைப்பக்கம் போய்த் திரும்பி,

''என்னடா மாட்டுக்குத் தண்ணி காட்னயா'' என்று கேட்பதற்குள் மாடு ஒரு நேரக் கூளங் கடித்து சாணி போட்டிருக்கும்.

வீட்டம்மாவுக்கு அதுகூட முடியாது. நாலு பானை தண்ணீரெடுத்து ஊற்றி வாசலில் உட்கார்ந்து மூச்சு விடவே நேரங் காணுது.

கிட்டத்தட்ட அந்த வீட்டு வேலே முழுக்க முனியாண்டியே பார்க்க வேண்டியதாயிருந்தது.

''ஓசே தெக்குத் தட்டு பாஞ்சிருச்சு. கமலேய வுட்ரு.''

புஞ்சையிலிருந்து முத்துமாரி குரல் மெலிந்து கேட்டது.

“பாஞ்சிருச்சுரு அடுத்த வாய்க்கால்ல வெலகி வுட்டுட்டு வா.''

முனியாண்டி கமலேயை நிறுத்தி கோட்டை வடம் போட்டான்.

இரண்டு பேரும் மத்தியானக் கஞ்சிக்காக வீட்டை நோக்கி நடந்தனர்.

காளேகள் கொம்புக் கயிற்றில் தனியே போய்க் கொண்டிருந்தன.

''சாய்ந்தரம் பாஞ்சிருமா.''

''ம்.''

“தலேய எதுக்கு இப்பிடிக் காயப் போட்ருக்க. எண்ண தான் வீட்ல இருக்குதே.”

''அதுக்கென்ன இப்ப.''

முத்துமாரி பின்னுல் திரும்பி அவனேப் பார்த்தாள்.

''பையப் பைய. வரப்பு வழுகியிரும். வீட்ல கெடக்கச் சொன்னுலும் கெடக்கிறதில்ல.''

அவள் வரப்பில் தடுமாறியபோது அவன் தாங்கிவிட்டான். அவளுக்குப் பேச வார்த்தை கிடைக்கவில்லே.

முனியாண்டியைப் பொறுத்தமட்டில் அவளுக்கு ஒரு குறையும் வைக்கவில்லே. கலியாணம் முடித்த நாளிலிருந்து வெடுக்கென்று பேசியது கிடையாது.

முத்துமாரி குடும்பத்தில் ரெம்ப ஒட்டுதலாயிருந்தாள்.

நினேத்தால் அழகிரியும் ஓரெட்டு வந்து பார்த்து விட்டுச் செல்வான். சாப்பிட்டுக் கழுவிய கை உலருமுன் அய்யங் குளம் போய் விடலாம்.

நல்ல நாட்களுக்குக் கூப்பிட்டுப் போக பெரும்பாலும் ஆவடைதான் வருவாள். குழந்தை பெறுவதற்குக் கூட ஒன்பதாவது மாதத்தில் கூப்பிடத்தான் செய்தாள்.

''எப்பிடி யோசன பண்ணீருக்க. மருமகன் என்ன சொல்லுது.''

ஆவடை கேள்விக்கு முத்துமாரி மூச்சு முட்டலில் சொன்னாள்.

''நான் இங்கயே சொகமாய் பெத்தெடுத்துக்கிருவென். அங்க எதுக்கு அலையணும்.''

ஆவடைக்கு ஒரு மனசில்லை.

''அங்கன்னா நேரத்துக்கு நேரம் இடுப்புல சுடுதண்ணி ஊத்துவென்.''

''அதுக்கென்னம்மா ரெண்டு மூணு நாளைக்குத்தான.''

முத்துமாரி வெளிறிச் சிரித்தாள்.

கொஞ்சநாளில் அவளுக்கு பெண் குழந்தை பிறந்த சேதி கேட்டு அழகிரியும் ஆவடையும் அரிசி கோழியுடன் வந்தார்கள். ஆவடை இரண்டுநாள் தங்கியிருந்தாள்.

முனியாண்டி கழுகுமலை சென்று கருப்பட்டி நெத்திலி என்று பேறுகாலச் சாமான்கள் வாங்கி வந்தான். அவன் தாயார் பிள்ளைக்கு எண்ணெய்தடவி சேனை தொட்டு வைப்பது முதல் சகல காரியங்களையும் கவனித்துக் கொண்டாள்.

குழந்தை காலும் கையும் திரண்டு அழகாயிருந்தது. தலைக் குழந்தை பெண்ணானாலும் பரவாயில்லை, மூக்கும் முழியுமாய் இருக்கிறதே என்று குடும்பத்தில் எல்லோருக்கும் பெருமை.

''தலப்புள்ள பொம்பள தாய்க்குத் தொணையா இருப்பா" என்று வந்து பார்த்தவர்கள் சொன்னபோது முத்துமாரிக்கு "இல்ல ஆம்பள" என்று சொல்லவேண்டும் போல் வேதனை வெதும்பும்.

இத்தனை நாளாய் அவளுக்கு இப்பிடியில்லை. குழந்தை பிறந்த பிறகுதான் அந்த நினைவு அடிக்கடி வாட்டியது.

குழந்தை மார்பில் முண்டும் போது கூட அந்த வேதனையை அமுக்க முடியவில்லை.

வீட்டில் பெரிசுகளிரண்டும் காடுகரைக்கு நடமாட்டம் கிடையாது. கிழவி குழந்தையை மடியில் போட்டு புரியாதபடி பேசிக் கொண்டிருப்பாள்.

குடும்பமே முனியாண்டியை வைத்துத்தான். முத்துமாரி மீது யாருமே சடைத்துக் கொள்வதில்லை. நாலு நாளைக்கு சடைத்துக் கொண்டு அப்பன்வீடு போய் விட்டால் வீட்டில் கஞ்சி காய்ச்ச ஆள் கிடையாதே.

இதில் அழகிரிக்கு ரெம்ப நிம்மதி. அடிக்கடி ஆவடையிடம் இதைப் பற்றிச் சொல்வதுண்டு.

ஆவடைக் கென்றால் கண்ணில் ஆட்டுப்பால் ஊற்றியது போல் குளிர்ந்து போவாள்.



களத்து வேலைக் கொத்துக்காக அழகிரி குருசாமி நாயக்கரைத் தேடிப் போனபோது அவர் நடுக்கடைக்கு முன்னால் சம்மணம் போட்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். அவர் வானத்தை அடிக்கடி அண்ணாந்து பார்த்து முகச் சுளிப்பில் உச் கொட்டிக் கொள்வதைப் பார்த்தால் லேசுக்குள் எழுந்து வருவதாய்த் தெரியவில்லை. இப்படிப்பட்ட இடத்தில் கொத்துக் கேட்பதும் சரியாய்ப்படவில்லை அவனுக்கு. கேட்டால் அவ்வளவுதான். வசவு வாங்கிக் கட்டி முடியாது. சரி அவர் எழுந்துருக்கட்டும் என்று அவனும் தள்ளி உட்கார்ந்து விட்டான்.

எப்போதாவது கடையில் யேவாரம் வாங்கிவிட மாட்டாரா என்று உற்றுப் பார்த்த சங்கரலிங்கத்துக்கு பொறுமை தாண்டியது.

"'என்னய்யா என்னத்தவோ பறிகுடுத்தவரு மாதிரி முழிக்கீரு. இந்த வருசம் வெள்ளாம வெளச்சலு எப்பிடி, என்ன சங்கதிகள்."

"'அத ஏன் கேக்கீரு. விடிய விடிய வெரட்டியும் ஆங் கழுதையாப் போச்சு. பட்டத்துக்கு ஒரு தூத்தலாச்சும் சிந்தலயே நாசமாப் போற மழ. பேஞ்சா ஒரேயடியாப் பேயிறது. இல்லன்னு காயப் போடுறது. தமத்துக்கா சொலவட சொல்றான் பேஞ்சுங் கெட்டது ஒஞ்சுங் கெட்ட துன்னு. அத்தன உளுந்தும் பாழாப் போச்சே."

"'ஏன் கம்பு கிம்பு போடலையா."

"'அதான வம்பாத் தெரியுது இப்ப. ஒமக்கென்ன தப்பிச் சிட்டீரு."

"'இல்லன்னாலும் எனக்குப் பத்துக் குருக்கம் பாரும்."

"பெரிய வீட்லயும் நல்ல வெள்ளாம. அப்பையாவுக்கு ஒரு கொளுத்துக் கொளுத்தீருக்காக்கும். எனக்கு குருத வாலிதான் பொதரா வந்திருக்கு. நேத்துத்தான் அடிச் செடுத்தென்."

"'அப்பையாவக் கையில புடிக்க முடியாதே."

"'பின்ன."

"'துட்டுக்காரனுக்குத் தான் துட்டு ஏறும் போலருக்கு."

"'ஆமாய்யா இவருக்கு அனயந் தெரியும். அவன் என்ன பெரிய துட்டுக்காரனைப்போயிட்டான். இண்ணைக்கி வந்தது எல்லாம் பெரிய வீட்ட எடுத்துக்கரும், தலைக்கு மேல கடம்."

"சரியாப்போச்சு."

"துட்டுக்காரங்களாம்...சம்முகஞ் செட்டியென்ன அசந்து போயி வாராரு."

சுள்ளக்காரச் சம்முகஞ் செட்டி முகம் நிறையக் கவலை சுமந்தபடி 'ஸ்' என்று உட்கார்ந்தார்.

"'ஆளு சுதாரிப்பில்லாம இருக்கீரு. யோவ் சங்கரலிங்கம் ஒரு சக்கரையும் தண்ணியுங் குடும். குடிச்சுத் தவிப்பா றட்டும்."

''சும்மாருங்க. என்ன தண்ணீ என்ன சக்கர. ஊருக்குள்ள பெழப்பு நாயத்தக் கெடுக்கிறதுக்குன்னு ரெண்டு தலே யெடுத்திருக்குதில்ல. என்னத்தச் சொல்றது.''

''நீரு இப்ப என்னதான் சொல்றீரு.''

''என்ன சொல்லி என்ன செய்ய.''

''அதா மயித்தச் சொல்லும். காரியத்தச் சொல்லுவாரா வாதம் வந்த மாடு மாதிரி இழுத்துக்கிட்டே போருரு.''

"நான் மண்ண நம்பிப் பெழைக்கிறது தெரியுமில்ல.''

''ஆரு இல்லன்னது. ஊரு பூராத் தெரியும்.''

''மண்ணெடுத்துச் சுள்ளபோட்டு பானசட்டி வித்து வகுத்தக் காப்பாத்த என்ன கஸ்டம், எம்புட்டு நாளாகும்னு ஒங்களுக்குத் தெரியாதா.''

''கஸ்டந்தான். அந்தவேலேய நீருங்காட்டித்தான் பொறுமையாச் செய்யணும். என் வீட்டாளின்னு வக்காளி அத்தனேயவும் நொறுக்கிக் குமிச்சிட்டு வகுத்துல ஈரத்துணியக்கெட்டிப் படுத்துக் கிருவென்.''

சங்கரலிங்கம் குனிந்த வாக்கில் கவனித்துக் கொண்டிருந்தார். அழகிரி சற்று நெருங்கிக் கொண்டான்.

ஊர்க்கலகலப்பு கரைந்து கம்மென்றிருந்த முச்சந்தியில் சில சமயம் சுழிக் காற்றுக்குத் தூசி துப்பட்டைகள் கிறுவாணஞ்சுற்றி அடங்கின.

சம்முகஞ்செட்டி பேச நாவெழுப்பினர்.

''பெரிய வீட்ல ராசுக்குப் பெறகு ஒண்ணு மேல்பாக்க வந்திருக்குதே.''

''கீகாட்டுப் பெயலா. சொல்லும்."

''வடக்க வண்டிப் பாதையில என் வண்டி பான சட்டினு பாரத்தோட போகுது. அவரு வண்டி அங்கிட்ருந்து வெத்து வண்டியா வருது. சக்கம்மா கோயிலோரம் வந்து சந்திக்குது. அவரு வெலகல. நான் நிறுத்தினென். கெழக்க வெலகியடிக்கச் சொன்னென், அவரு என்ன மேற்க வெலகச் சொன்னரு.''

''மேற்க எப்பிடி வெலக முடியும். எத்துங் குத்துமா மேடு ருக்கிறது தெரியலேயா கூறுகெட்ட பெயலுக்கு. பெறகு."

''அவரு என்ன வசாரு. எங்க மந்த நெலத்துல மண் ணெடுத்தா தொலச்சுப் புடுவென்னு பேசினரு."

''இவுக அய்யா வீட்டு நெலமா. அவனச் சும்மாவா வுட் டேரு."

''நமக்கெதுக்கு வம்புன்னு வண்டிய வெலகிப் பத்து னென். பாரம் இந்தப் பக்கம் சரிஞ்சு கொடவண்டி போட்டு அத்தன பாரேயும் நொறுங்கிப் போச்சு. மாட்டுக்குச் சப் பையில பெலமா அரிச்சிருச்சு.''

சம்முகஞ்செட்டிக்கு அதுக்கு மேல் பேசமுடியவில்லே.

"கொழுப்பப் பாரு முட்டாத் தாயிளிக்கு. ஊருக்குள்ள அத வச்சுப் பெழைக்கிற தொள்ளாளி கிட்டப் போயி மப்பக் காட்டீருக்கான் பாரும்.''

சங்கரலிங்கம் ஆதங்கப்பட்டார்.

''என்னய்யா வம்பாருக்குது. அவனுக்கு இதலை கெடா ரமா கெடைக்குது. சம்பளத்துக்கு வந்தவனுக்கு இம்புட் டுன்ன."

"பெரியவருட்டச் சொன்னீரா.''

"சொன்னென். அவரு சிரிக்காரு. அட கோட்டிக்காரா வண்டியப் புடிச்சுப் பத்தக் கூடாதான்னு புத்தி சொல் ருரு."

"வரவர ஊருக்குள்ள ஒரு வரமொற இல்லாமப் போச்சு. அவனவன் லாவத்துக்குத்தான் புடுங்கித் தவிக்கான். நம் மள அண்டிப் பெழைக்கிற தொள்ளாளிய இம்சப் படுத் துறு அவன் எங்க போவான். வண்ணுக்குடி நாயி வெள் ளாவி மேல ஏறினது கணக்கா வந்தட்டி பெயல்லாம் மணி யம் பண்ருன். ஏன், பெரியவருக்கு இதெல்லாம் மண்டை யில தட்டுப்படாமயா போச்சு. விடிய விடிய பேப்பரப் படிச்சிட்டு பெரிசாப் பேசமட்டும் தெரியிதுல்ல.''

''அவருமேல குத்தமில்ல. இம்புட்டும் அந்தச் செரச்சுத் திங்கிற பெயலுக்குத் தெரியணும். பெரிய வீட்ட நில் லுனு நிறுத்தப் போருளும். இண்ணைக்கி ஒரு நா மாட்டுக்

ருப் பின்னால போகலன்னு கஞ்சிக்கு வழியுண்டுமா. பெரியவரு சின்னவரெல்லாம் அப்பப் பாக்கணும். ஆரு போயிச் சொல்றது. இப்ப குருசாமி நாய்க்கரவே எடுத்துக் கிருவொம். இவரு நேர்ல கேட்ருவாரா."

சங்கரலிங்கம் பார்வையைக் குவித்தார்.

"ஆரு சொல்லுவா கடுவாகிட்டப் போயி."

''பெறகு சொல்றீகளே. எல்லாரும் இப்பிடித்தான். அவ ரப் பகச்சா அப்பையாவப் பகைக்கணும். ஒரு அவசரத் துக்கு ஒதவ மாட்டாரு. ஒண்ணத் தொட்டு ஒண்ணு பக வந்து சேரும் பொதுவா எடுத்துக்கிட்டம்னு. ''

'கொஞ்சம் பொறும் மேற்க என்னமோ கசபுசலு கேக் குது.''

''எவனுச்சும் கத்துவான்.''

''அட நீரு ஒண்ணு. வேத்தாளுச் சத்தம் கேக்குதுன்னு.''

'' அமா கொஞ்சம் பெரிசாத்தான் இருக்குது."

முச்சந்திக்கு மேற்கே கேட்ட சத்தம் வரவர அதிகரித்தது. அதுக்கும் மேற்கே ஒரு சத்தம் சன்னமாய் வந்தது.

பட்டறையிலிருந்து எட்டிப்பார்த்த சுப்பையனுசாரி முகத் தில் பீதி கவ்வியதைக் கவனித்த அழகிரி படக்கென எழுந் தான்.

கொஞ்ச நேரத்தில் கந்தையா மேடையில் கம்பை எறிந்து விட்டு பின்னுக்குச் சாய்ந்தார். அவர் கால்களில் கோபம் துடித்தது. மேற்காமல் செனுய்த்துப் பார்த்தார்.

"என்ன மயிரு போச்சுன்னு கேக்கென். காட்ல ரெண்டு கருது போயிட்டா என்ன. இவரு அடிவகுத்தப் புடிச் சிட்டு மரியாதயில்லாமப் பேசுருரு. பெரிய மனுசன்னு அவுக வீட்டுக்குள்ளதான். இங்க வந்து திமிறக் காட்னு நொக்கெடுத்துப்புருவென்.''

அதுக்குள் வில்லிசேரிக்காரர் சந்திக்கு வந்துவிட்டார். அவர் கையில் கம்மங்கருதுக் கணைகள் இருந்தன.

சங்கரலிங்கம் கடையிலிருந்து இறங்கினர்.

''இந்தாப்பா இப்ப ஒழுங்காப் போகப் போறயா என்ன. ஒனக்கா வலிக்குது. ஊரான் பிஞ்சையில களவாங்கிறதப் பாத்துட்ருக்கவா காவலு.''

''எங்கிட்ட அது இதுன்னு பேசப்புடாது. கெட்ட கோவம் வரும். நான்தான் சொல்றனே, கருது ஒடிச்சதப் பாத்துட்டுத்தான் இருந்தன்னு.''

''இதுதான் காவலுக்கு லச்சணமோ.''

''அனயம் லச்சணத்தக் கண்டாக இவுக. மத்தியானக் கஞ்சி குடிக்கலன்னு அந்தப் பெய ரெண்டு கருத்த ஒடிச்சுக் கசக்கித் தின்னு சொத்தெல்லாம் கொறஞ்சாபோகுது. அவனப் போயி கக்கச் சொல்லவா."

''ஒன் பிஞ்சையில ஒடிச்சுக் குடுக்கணும். என் காட்ல எவன் ஆருக்குப் பெறக்க எறங்குரன்.''

''அதுக்கு மேல பேசாமல் போறயா இல்லையா. எங்க அய்யாமாருக்குப் பெறக்கப் போயித்தான் தோட்டக் காடெல்லாம் வச்சுத் திங்கீகளே. ஒரு சக்கிலியப் பெயலுக்குக் கஞ்சி ஊத்த விதியத்ததெல்லாம் தெருவுல நிக்கிது."

''நான் நெனச்சா ஒன் சட்டி ஒடையும்னு தெரிஞ்சுதான் பேசுறயா.''

''என் மயிரக் கூட அசைக்க முடியாது. ஒன்னமாதிரி ஊர்ப் பணத்த அமுக்கீட்டு வெள்ளச் சட்ட போட்டுட்டு அலையிறனு.''

சங்கரலிங்கம் இடைமறித்தார்.

"கந்தையா அத்தோட பேச்ச வுடும்............பெரியாளு இதுக்காகச் சுட்டி மெனக்கிட்டு தெருவுல நிக்கீகளே. வீட்டுக்குப் போங்க."

கந்தையாவுக்கு ஆத்திரம் தணியவில்லை.

"பின்ன என்ன, இவன் பிஞ்சையில நானும் சேந்து களவாங்கணும். இவன் கண்ணெதுக்க பிஞ்சைய அறுத்துக் குமிக்கென். இவனால என்ன செய்யமுடியும். காடுகர இல்லன்னு களவாங்கத்தான் செய்வானே. ஊருக்குள்ள ஒரு பெரிய மனுசன்னு வச்சா அதக்காப்பாத்த வேணுமா."

''என் பெரிய மனுசத் தனத்துல என்னத்தக் கண்டப்பா இப்ப.''

வில்லிசேரிக்காரர் மடங்கி வந்தார்.

இந்த முறை சங்கரலிங்கம் கடிந்தே சொன்னர்.

"பெரியாளு பேசாமப் போறீகளா என்ன. இது நல்லதாத் தெரியல. நாங்க வெசாரிச்சுக்கிருவொம் எல்லாம். நெலமைக்குத் தக்க அனுசரிச்சுப் போக மாட்டங்கீகளே."

அழகிரி இந்தச் சண்டைக்குரிய காரணகாரியங்களை யோசனை செய்து பார்த்தான். ஒன்றிலும் அடைபடவில்லை.

வில்லிசேரிக்காரர் தலையை மடக்கிக் கொண்டு தள்ளிப் போய்விட்டார். அவர் முதுகில் தொடைவரை தொங்கிய துண்டு எட்டுக்கொருக்க அறைந்த மாதிரி அசைந்தது.

கந்தையா மறுபடியும் பொருமிக் கொண்டிருந்தார்.

''நானும் இம்புட்டு நாளாப் பாத்துட்ருக்கென். சன்ன அனியாயமா பண்ணீட்டு வாரான். ஊருணிக் கரைய அடைக்க ரூவா கௌம்புச்சா. பஞ்சாயத்துப் போடுல தெனமும் கழுதையடையுது. இவுகளுக்கு வெள்ளவேட்டிக்குக் கொறச்சலில்ல. வீதியில வெள்ள வேட்டி, வீட்டச் சுத்தி மொள்ளமாரி. எதுக் கெடுத்தாலும் இப்பிடியா முட்டுக்கட்ட போடுவான். தொணைக்கு அப்பையா மாதிரி ரெண்டு மூணு வாச்சிருக்கு. என்னக் கேட்டா, இவங்கள காலக் கைய ஒடிச்சு வுடணும்.''

குருசாமி நாயக்கருக்கு ஒரு விதத்தில் சந்தோஷமாயிருந்தது. கந்தையா நிறுத்தவில்லை.

''கையில அஞ்சு வெரலும் ஒண்ணுவா இருக்குது. ஒண்ணு வச்சுப் பெழைக்கும். ஒண்ணு கஞ்சிக்கில்லாம இருக்கும். ஒரேடியா மந்தக்காட்டுக் கல்லாப் பேசுனு எப்பிடி. இந்தா நிக்காரே குருசாமி நாய்க்கர் இவரு மகன் கேக்கான் என்ன ஒருநா யோவ், ஒமக்கென்ன மாட்டப்பத்தித் தெரியும்னு. ஆரச் சொல்றது. எல்லாம் தட்டிக் கேக்காம வளத்துட்டொம்.''

குறுகிப் போன குருசாமி நாயக்கர் தயனுத்துப் பண்ணினர்.

''சின்னப் பெய சொன்னதெல்லாம் மனசில வச்சிட்டு. அத் தோட வுடும். அந்தத் தடிமாட்ட கண்டிச்சு வய்க்கென்.''

''அப்பிடியில்ல மாமா, ஒரு இதுக்காகச் சொன்னென். அதப் போயி வைராக்கியமாவா வப்பாக.''

''கந்தையா இப்ப வீட்டுக்குப் போரும்.''

''அதுசரி, இனி என்னதான் நடக்குதுனு பாப்பமே. இந்த ஊருக்குள்ள கலகம் வராமருந்தாச் சரி.''

கந்தையா விரைவாய் எட்டு வைத்தார்.

பட்டறையில் கூனைக்கு ஆணியடிக்கும் சத்த ஆரவாரிப்புக் கிடையில் அழகிரி யோசிக்க முடியாமல் திணறினான்.

இத்தனைக்கும் கோயில் சுவரில் ஒண்டிக் கொண்டிருந்த கருப்பன் தலை நீட்டி அழகிரியிடம் வந்து கேட்டான்.

''என்ன மாமோவ், பாத தெரியாம நிக்கீகளா. எம் பின் னால வாங்க சக்கிலியக் குடிக்கு வழி காட்றென்.''



ஓடை வருத்தின் மண்பொதிந்த நீர் வாகரையில் நண்டுச் செலவுகள் வரிசைக்குத் தெரிந்தன. சித்தி ரனும் கருப்பனும் செலவுக்குள் கைவிட்டு நண்டு பிடித்துக் கொண்டிருந்தார்கள். செலவுக்கொருக்க மண்டி போட்டு எழ சித்திரனுக்கு சங்கடமாயிருந்தாலும் உள்ளிருந்து பெரிய நண்டுகளைப் பிடித்து தூக்கு வாளிக்குள் போடுவ தில் சுதாரித்தான்.

தூக்குவாளிக்குள் பிணைந்து கொண்டு கடுவாய்ச் சண்டை யிட்ட நண்டுகள் அவ்வப்போது வேம்பரும்பாய் கண்களைத் தூக்கி நிறுத்தின.

அன்று அவர்களுக்கு நண்டுவேட்டை. சித்திரனுக்கு ஆசை கிளம்பினல் இப்படி ஏதாவது சில்லண்டி வேட்டை யில் இறங்குவார்கள்.

கருப்பன் சொன்ஞன்.

''இப்பிடி ஒவ்வொரு செலவா மல்லுக் கொட்றதக்காட்டி பேசாம ஒழக்கு மீனு புடிச்சுக் கொதிக்க வைக்கலாம்."

''அதச் சொல்லு...என்னருந்தாலும் இது ருசி தனிதான். அதுலயும் கொளத்து நண்டுருக்கே கொழுப்பு நெறையா இருக்கும். அடேயப்பா இதுக்கெல்லாம் போக்காளி இருக் கணும். நண்டு நெறிச்சாம்னு அக்கக்கா கொழுப்ப எடுத்து வப்பான்.''

''சக்கணன் இதுல மன்னனில்ல."

"அவன் இல்லாறது என்னமோ போலருக்கு. வீட்ல கஞ்சி குடிச்சிட்டு எந்திரிச்சு வந்தா பேச்சுத் தொணைக்கு ஆளுண் டுமா, எல்லாம் மங்கு மங்குனு வேலையப் பாத்துட்டு அலை வாக. எனக்கு சரியா ஒறங்கக் கூட முடியல. என்னமோ நீ ஒருத்தன் இருக்க. ஆனு ஆடுமாடு கெடக்குதே. சரி புடிச்சது போதும் வெருசனுச் சரக்காக்குவொம்."

இருவரும் கரைச்சரிவில் காலகலித்து உட்கார்ந்து நண் டுக் கால்களை இணுங்கி மேல் ஓட்டை அப்பாக எடுத்து மஞ்சள் கொழுப்பை பெருவிரல் நகத்தால் தோண்டி தூக்குவாளியில் போட ஆரம்பித்தார்கள்.

ஊருணியின் மேட்டுப் பரப்பில் கழுத்து வரை நீர் முங்கப் படுத்துக்கிடந்த எருமைகள் வாய்க்குள் நீர் கோலிவிடா மல் கீழ்த்தாடை நனையும்படி சாவகாசமாய் அசைபோட் டன. நெற்றிப் பொட்டில் வெயிலுறைத்தவை தண்ணீருக் குள் முங்கி மூச்சுப்பிடித்து பைய எழுந்து மீண்டும் தாடை யவிழ்க்கும் சொகம்.

மீன் தேவையான நாட்களில் மாடுகளைக் கலக்கப் படுக்க வைத்து ஓரத்தில் வேட்டியை நீருக்குள் தரையொட்டிப் பரத்துவார்கள். அதில் சாணிக் கொதக்கைத் தூவி கொஞ்ச நேரங்கழித்து தூக்கினல் ஒரு எடுப்புக்கு ஆழாக்கு மீன் தேறும். நாலைந்து விரிப்பில் கறிக்குப் பிடித்து விடுவார்கள்.

''இண்ணக்கி நம்ம வீட்டுக்கு வந்துரு கஞ்சிகுடிக்க. கழிக்கிண்டச் சொல்றென்.''

''அதெல்லாம் வேண்டாம். எனக்குக் கொஞ்சம் வெஞ்சணம் குடுத்தாப் போதும்.''

''கழிக்கு மீனு நல்லாருக்குமே.''

''அதெதுக்கு ஒங்க கூடப் பங்குக்கு வந்துட்டு. பெரிய மனுசிக்கு கஸ்டந்தான.''

''ஒம்பிரியம்.''

''இப்பயாச்சும் நண்டு கெடைக்குது. கடல வெள்ளாம போட்ட நேரத்துல இந்தப்பாத போற நரிக சும்மா போறதில்லையாம். போற போக்குலயே நண்டப் புடிச்சுத் தின்னுட்டுப் போறது. வால உள்ளவுட்டு வெளையாட்டுக் காட்டுமாம். அது கோவத்துல நறுக்குனு கடிச்சதும் படார்னு வெளிய இழுத்துப்போட்டு ஒரே கடி...பெரிய மனுசன் கத கதையாச் சொல்லுவான்.''

''அவன் சொல்லுவானே ஆயிரங்கத.''

''நாளைக்கு நான் பெரியோடக்காட்டுக்கு மாடு பத்தீட்டுப் போகணும். நீ அம்புட்டுத் தூரம் வரவேணும்.

''படுத்து உருள வேண்டியது தான்.''

மேய்ச்சல் தரையில் இருவரும் அடிக்கடி பதினைந்தாம் புள்ளி போடுவார்கள். புளியமுத்து வைத்து மதிவான் விளையாடுவார்கள். ஊத்தி பொறுக்கிக் கிடாய் முட்டுப் போடுவார்கள்.

சிலநேரம் இரண்டு கல்லெடுத்து ஜால்ரா தாளம்போட கருப்பன் தெம்மாங்கு ராகத்தளுக்காய் உயரும்.

“கரிசக் காட்டுப் புழுதியில
கதுவாலி ரெண்டு மேய
கதுவாலி ரெண்டு மேய
கதுவாலி வெல பெறுமோ
கருத்தப் புள்ள புருவக் கெட்டு.”

தடித்த உதட்டில் குறுஞ்சிரிப்பு அதிர பின்பாட்டுப் பாடவும் பழகியிருந்தான் சித்திரன்.

"அங்க எல்லாம் போயி மேய்க்கணும்னு சொல்றயே. காவக்காரரு கண்டா கண்ணுமுழியப் புடுங்கிப் புடுவாரே."

''கண்டா சத்தம் போடத்தான் செய்வாரு. முன்னப்போல இப்ப வெரட்றதுல்ல.''

"அவரு ஆரத்தான் சொல்லுவாரு. எல்லாம் காட்ல திரி யிருக.''

"மொதலாளி மாரே பிஞ்சையில அழிமாண்டஞ் செய்ய ஆரம்பிச்சிட்டாக. வீடெல்லாம் ஆடுமாடு வளக்காக கெடையாடு புடிச்சு வுடுருக. பெறகெங்க ஊராளு காட்ல எறங்காம இருக்க முடியும். என்னக்கேட்டா அடுத்த வருசம் அவர காவலு போட மாட்டாக போலருக்கு. ஏற் கெனவே அப்பையாவுக்குப் புடிக்கல. வில்லிசேரி மொத லாளி கூட வேற மனசு வேத்தும, வேருளப் போட்டு ஊருக் குள்ள வம்பு வந்து சேரும் போலருக்கு.''

''அவுக ரெண்டு வேருதான் ஊரா.''

''அதான் எப்பிடின்னு புடிபடல. ஒருநா பெரிய மொத லாளி அழகிரியக் கூப்பிட்டு காவக்காரரோட என்னடா அம்புட்டுப் பழக்கம்னு கேட்டாராம். நடக்கிற கூத்தப் பாரு எங்க வந்து பதவள கெட்டுதுன்னு."

''அதுக்கு அழகிரி என்ன செய்வான் பாவம். அவனே ஒத்தப்புள்ளய மறுபடியும் புடிச்சுக் குடுத்திட்டு இப்பத் தான் மனசாறிப் போயிருக்கான்.''

''அவுக பழக்கம் இண்ணக்கி நேத்துப் பழக்கமா.''

''அவன் அவரு காணிக்காரனுச்சே."

''அதுக்காக...

''பாத்துக்கிட்டே இரு, காணியக் கூட பாக்க வேணும்னு சொல்லப் போருரு.''

''அப்பையா காணிய வுட்டது மாதிரி இதவும் வுட்டுட்டுப் போகும் அந்தாளு.''

"'அப்பையா வந்தா சக்கிலியக்குடி மந்தையில ஒரு செமாப்பு வச்சு வசவு பொரிஞ்சிட்டுத்தான் போராரு.''

''அவரு நெலத்துல குப்ப போட்டா வையவும் செய்வாரு வெரட்டவும் செய்வாரு.''

''சக்கிலியக் குடியில இதக் கேக்கிறதுக்கு ஆளு கெடையாது."

''நீ கேட்டாத்தான் உண்டு.''

''வண்டாரி கேக்க வேண்டியதுதான.''

''அவன் ஒருநா கேட்டதுக்குச் சொன்னாராம் பெரிய மொதலாளி. என்னலே குப்ப செத்து எந்தக் காட்ல போயிப் போடப் போறீக. நம்ம குப்பதான் மேற்க கெடக்குதே அதுல போடச் சொல்லுன்னாராம்.''

''பாவம்,ஒண்ணும் ரெண்டுமா பண்ணிச் சாணியும் மாட்டுச் சாணியும் பெறக்கி விக்கிறதுக நம்ம சுடுகாட்டோரம் போட்டுச் சேக்குதுக."

''மந்த நெலத்தக் கெட்டி என்னதான் ஆளப் போறாரோ."

''ஊருக்குள்ள என்னமோ பெரியவுகளுக்குள்ளயே காடு வீடுன்னு தகராறு வந்துட்ருக்கு. இவுகள்ளாம் பெழச்ச பெழப்பப் பத்தி செத்தவன் சொல்லுவான் பூட்டுப் பூட்டா. அவன் இருக்கணும் இப்ப...''

சித்திரன் யோசனையிலாழ்ந்தவாறே பாதி நிறைந்த தூக்கு வாளியைக் குலுக்கினான்.

"நானும் பாக்கத்தான் செய்றென். ஒரு தேரக் கஞ்சி போடுறதுக்கு என்னமா மொனங்குவாக. சீப்பியா ஒரு கையி எடுத்துட்டு வாரதுக்குள்ள வீட்டுப் பானையெல்லாம் கரிப்பத்தலாப் போனது போல...''

''இதுக்கு முந்தி வீடெல்லாம் நாயி வளப்பாகளாம். இப்பப்பாரு சக்கிலியக்குடியிலதான் அஞ்சாறு அலையிது.''

''எல்லாம் தேடித் தெரட்டத்தான்.''

''பெரிய மொதலாளியும் தேடித் தேடித்தான் பாக்காரு. வருசத்துக்கு வருசம் தேஞ்சிட்டுத்தான் போகுது.''

''அதென்ன அப்பிடிச் சொல்லிப்புட்ட.''

''ஊருக்குள்ளதான் பேசுருகளே. கடம் தலைக்கு மேல ஏறிப் போச்சாம். அப்பையா எப்ப எப்பன்னு காத்துட்ருக்காராம் விழுங்கிறதுக்கு.''

''அவுகளுக்குள்ள ஆயிரம் இருக்கும். ஒண்ணுக்கொண்ணு வுட்டுக் குடுத்துக்கிருவாக.''

''நல்லா வுட்டுக் குடுத்தாகளே. இந்த ஊருணிக் கரைய அடைக்கிறதுக்கு என்ன கூத்து நடந்துச்சு. ஊருக்குள்ள வரிப் போடுறதுக்கு அப்பையா சம்மதிச்சாரா.''

''நீ ஒருத்தன் வெசயந் தெரியாமப் பேசுற. அப்பையா சொல்லியா நடந்துச்சு. ஊருக்குள்ள கூலிக்கார சனங்க எல்லாம் ஒண்ணு கூடிக்கிட்டாக. இதுக்கு எளவட்டங்க வேற அனுசரணை. அப்பையா பாத்தாரு, காரியத்த அப்பிடித் திருப்பீட்டாரு.''

''பஞ்சாயத்துலருந்து போட்டுச் செலவழிக்கிறதுக்கு இவருக் கென்னயாம்.''

''அதுலதான் இருக்கு சூச்சியமே. பஞ்சாயத்துன்னு ஊர்ப் பொது மாதிரியா இருக்கு. அவரு வீடடுக்கு மட்டும் சொந்தம் போலத்தான்.''

''அதுதான் வருசக்கணக்கா அவரு பெரசண்டா இருக்காராக்கும்.''

'ஊருணி வெசயத்துல அழகிரியைக் கூப்பிட்டுக் கேட்டாராம். என்னடா நீயெல்லாம் கரையடைக்கிறதப் பத்தி பெரிசாப் பேசுனயாமே, ஒனக்கு எத்தன சோடி மாடு இருக்குது குளிப்பாட்ட. செரச்சுத் திங்கிற பெய பேசாமக் கெடப்பயா, ஒனக்கு இந்தத் தோரிணி யெதுக்குன்னு பேச்சுப் பேசுனராம்.''

''இவன் சொன்னதுல என்ன தப்பாம்.''

''நீ சொல்றப்பா. அவருக்கு மதிப்புக் கொறையுதே. நான் கூட வெளையாட்டுப் போல சொன்னன். இனிமே நான் பெரசண்டா இருக்கமின்னு. என்னக் கண்டாக் கூட கிண்ணுனு முழிச்சிட்டுத்தான் போவாரு. எண்ணாக் கித்தான் வசமாப் புடிக்கப்போறுரோ.''

''வசா காத்துவாக்குல போகுது.''

''என்ன வசா சும்மா வுடமாட்டென். எனக்குத் தெரிஞ்ச படி பேசிப்புடுவென். இவரு வீட்ல மேய்க்கிற மாடு நின்னு நின்னுட்டுப் போகட்டும்.''

''இதெல்லாம் பெரிய மனுசனுக்கு எதுக்கு.''

''கெட்டிக்காரருன்னு கந்தையாட்ட மோதிப் பார்க்க ணும். அவரு அண்ணாக்கி தெருவுல வச்சு பேசுன பேச்சி லுக்கே, அடேயப்பா ஆளு லொங்கிப் போகலயோ. அவ ருட்டத்தான் ஒளிவு மறவு கெடையாதே.''

''ரெம்பப் பேசிட்டாரோ.''

''மானக்காடாப் பேசுனரு. அந்தக் கோவத்த வச்சிட்டு அழகிரியவும் அடுத்தவனவும் பேசுனு ஆகப் போறது... எல்லாம் தனக்காத் தெரியணும்.''

''தெரிஞ்சு ஒதுங்கிக்கிறதுதான் நல்லது.''

"நல்லா ஒதுங்குனரே."

''அங்க பாரு சனியன் போல அஞ்சாறு காக்கா வந்து நிக்கிறத. நண்டுக் கூட்ட ஓடி ஓடிப் பெறக்கும். நம்ம போவொம் எந்திரி.

அவர்கள் எழுந்து கொண்டார்கள். கருப்பன் கல்லெடுத்து மாடுகளைப் பார்த்து வீசினன். அது நீர்துளைத்த சத்தத் தில் மேல விளிம்பில் வால்தலை தெரியாது குச்சிக்காலில் லாந்தித் திரிந்த உள்ளான் 'கீகீ' என்று பறந்து வடபுறத் தில் உட்கார்ந்து உடல் லம்பியதுதான் மிச்சம். மாடு ஒன்றும் அசைவதாயில்லை.

''இது சனியன் கெளம்பாது. நீ பையாப் போ. நான் எழுப்பீட்டு வாறென்."

பக்கத்தில் கிடந்த கம்பை எடுத்துக் கொண்டு ஊருணித் தண்ணீருக்குள் பாய்ந்தான் கருப்பன்.



பூச்சந்தி வாலிபர் மேடையில் கிழடுகளின் ஆக்கிர மிப்பால் நிறையப் பேர் கோயில் தாழ்வாரத்திலும் களத்துப் பாதை வாகை நிழலிலும், நடுக்கடைக்கு முன் ணுலுமாய்ச் சிதறிக் கிடந்தனர். அழகிரி எங்கு உட் கார்வதென்று சற்று திகைத்துப் போனுன். கடைசியில் பட்டறைக் கூரை நிழலொதுங்கலில் கொஞ்சம் இடம் இருப்பதைப் பார்த்துவிட்டான்.

கூட்டத்திற்கு கிட்டத்தட்ட மேகலக்குடி ஜனங்கள் எல் லோருமே வந்திருந்தனர். தெற்குத் தெருவிலிருந்து வேதமுத்துவுடன் இரண்டு பேரும், சக்கிலியக்குடியில் நாலைந்து பேரும்.

அடேயப்பா, ஊர்க் கூட்டத்தைப் பற்றித்தான் பத்து நாளாய் பேசி ஓயாத வாயேது. "இந்த வட்டம் கடை ஆருக்கு, காவலாரு'' என்று காடுகரையெல்லாம் இதே பேச்சுத்தான்.

அழகிரி பலமுறை நினைப்பதுண்டு. இத்தனை வருஷ கால மாய் கந்தையா பார்த்த காவலை மாற்ற ஊருக்குள் பல பேருக்கு மனசு வராது. இதுவரை அவர் யாருக்கு எந்தக் கொடுமை செய்தார். முதலாளிமார்களுக்குப் பிடிக் காமல் போனுல் அதற்குக் காரணமே வேறு.

பட்டறையோரம் சுப்பையனுசாரியும் கந்தையாவும் தரையைக் கீச்சியபடி பேசிக்கொண்டிருந்ததை அப்பையா கூர்ந்து கவனித்தார். அதே சமயம் நடுக்கடையில் சங்கர லிங்கமும் வேதமுத்தும் அவசரப் பேச்சில் இறங்கியிருந் தனர்.

சங்கரலிங்கம் மகள் வீட்டுக்குள் போவதும் வெளியே எட்டிப் பார்த்து வசவைப் பொரித்துக் கொட்டுவதுமாயி ருந்தாள். இதை ஒரு தினுசாய்ப் பார்த்துக் கொண்டே வந்த ஆட்டுக்காரக் கோனுரும் சம்முகஞ் செட்டியும் பட் டறையோரம் உட்கார்ந்தார்கள். அவர்கள் ஊருணிக்கரையில் சவாரி போட்டு விட்டுத்தான் வந்தி ருக்க வேண்டும் என்பதற்குச் சாட்சியாய் பிந்தி வந்த வைத்தியப் பண்டுவரின் நடை.

வடக்குத் தெரு கோட்டியா பிள்ளை மனத்தாங்கலாகவே சொன்னார்.

''அவரு வார சாவாசத்தப் பாரு. யோவ், வெருசனு வந்து தொலச்சென்ன. கூட்டத்துல வெசயங்கள பேசி முடிக்கணுமா என்ன. சவக் சவக்குனு நடந்துகிட்டு.''

''ஆமா நான் வந்துதான எல்லாத்தவும் பேசி முடிச்சிருக்காக. எல்லாம் நீங்களாச்சு. என்னத்தவாச்சும் முடிங்க. இவுக என்னமோ எனக்குத்தான் காத்துட்ருக்கிறது போல படங் காட்ருக.''

கோயில் மேலச் சுவரில் வசமாய்ச் சாய்ந்திருந்த கருப்பன் படுத்துக் கிடந்த சித்திரனைப் பார்த்தான். இருவர் கண் களும் முழுக்கத் திரண்டிருந்தன.

இப்போதுதான் வில்லிசேரிக்காரர் வந்து மேடையில் உட் கார்ந்தார். அவருடன் வந்த நாலைந்து பேர் பக்கத்தில் இடம் பிடித்தார்கள்.

குருசாமி நாயக்கர் நழுவி கோயில் பக்கம் போனார். யாரோ சொன்னார்கள்,

''இனி ஆரம்பிங்க பேச்ச. வரவேண்டியது ஒருத்தரு மில்லயே.''

மேடைத்திண்டில் இளவட்டங்கள் கூட்டத்தில் முணு முணுப்பு கேட்டது.

கோட்டியாபிள்ளை ஓங்கிக் கேட்டார்.

''மொதல்ல கட மருமைய வுடுவமா, தரகா.''

கோபால் நாயக்கர் செருமினார். அப்பையாவும் வில்லிச் சேரிக்காரரும் எதையோ பேசி முடிவு செய்து தலையாட்டி னார்கள். இது கிராமனுசு நாயக்கருக்கும் பிடித்திருந்த தால் கவனிப்பிலிருந்தார்.

''மொதல்ல என்ன மொதல்ல. எல்லாம் மொதல்லதான் தரக முடிங்க.''

சுப்பையனுசாரிக்கு எல்லாம் கண்டந்துண்டமாய் இருக்க வேண்டும்.

''சரி அவரு சொல்லீட்டாருல்ல. அந்தப்படியே செய் யிங்க.''

அப்பையா வித்தியாசமாய்ச் சொன்னுர்.

''போன வருசம் தரகு ஆரு.

கோட்டியா பிள்ளே சபையைப் பார்த்தார்.

''நல்ல கேள்விய்யா இது. தரகு ஆருன்னு தெரியாம கூட் டத்துக்கு வந்துட்டாரு.''

''அதெனக்குத் தெரியாமயா இருக்கு. கோழிக்குஞ்சி வித்தாலும் பத்துப் பைசா கழட்ற ரெங்கூன் செட்டியத் தெரியாதாக்கும். ஊரு மொறைக்குக் கேக்கணு மில்லேயா.''

குருசாமி நாயக்கர் மகன் இடைமறித்தார்.

''இந்த ஊருல எல்லாம் மொறப்படிதான் நடந்து வருதோ.''

குருசாமி நாயக்கர் அரட்டினுர்.

''ஒரே நுவ்வு பாட்டுகு ஊறிக உஞ்சுரா.''

கோட்டியா பிள்ளே மறுபடியும் காரியத்துக்கு வந்தார். ரெங்கூன் செட்டியைப் பார்த்துக்கேட்டார்.

''போன வருசம் அரநூரு.''

''ஆமா.''

''எல்லாம் ஊருக்குச் செல்லுபடியாயிருச்சா.''

கோபால் நாயக்கர் பேரேட்டைப் புரட்டிப் பார்த்தார். வரவு சரியென்று தலேயாட்டினுர்.

''அப்ப இந்த வருசம் வுடலாம். ஏலே வண்டாரி தரகு வெளம்புடா. எங் கேள்வி ரூவா நூறு.''

வண்டாரி எழுந்து நின்று சத்தம் போட்டான்.

''நூறு ரூவா.''

சங்கரலிங்கம் கடையிலிருந்து வேதமுத்து கேட்டான்.

"முன்னூறு."

வில்லிசேரிக்காரர் வேலையாளை முறைத்தார். அவ்வளவு தான் அவர் ஏற்றினர்,

"ஐநூறு."

அடுத்து குருசாமி நாயக்கர் மகன்.

"அரநூறு."

"அரநூத்தி அஞ்சு."

கோட்டியா பிள்ளைக்கு ஏன்தான் கேட்டோமென்றிருந்தது. இதில் ஏதோ சூச்சியமிருக்கிறதென மண்டையைக் குடைந்து கொண்ட ஆட்டுக்காரக் கோனர் படக்கென வாய்திறந்தார்.

"நம்ம கேள்வி அரநூத்தி அம்பது."

ரெங்கூன் செட்டி தவியாய்த் தவித்தார். சுப்பையனசாரி யும் கந்தையாவும் தலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை.

"அரநூத்தி அம்பது ஒரு தேரம்."

வண்டாரி முடிக்கப் போவதுபோல் பம்மாத்துக் காட்டியது கருப்பனுக்கு வேடிக்கையா யிருந்தது.

"அவுக கையசையாம இவன் முடிப்பானு. புட்டாணி தெறிக்கக் கத்துறன்."

பெரிய வீட்டு வேலையாள் உயர்த்தினர்,

"அரநூத்தி எழுவத்தஞ்சு."

"எழநூறு."

ஆட்டுக்காரக் கோனர் சுதாரித்திருந்தார். ரெங்கூன் செட்டி அவரைப் பரிதாபமாய்ப் பார்த்ததும் பொடுக் கென்று கண்சிமிட்டினர்.

"பின்ன என்ன இவன் விக்கிற வெள்ளாமத் தரகவும் இவனே அனுபவிக்கவா. எச்சௌந்தவன் அதுல பெழச் சிறப்புடாது. இண்ணக்கி எம்புட்டு வந்தாலும் வுடுற தில்ல. எம்புட்டுகெம்புட்டு தரகு ஏறுதோ அத அவன்

தான குடுக்கப் போருன். எனக்கா மிச்சா வடியா வெள்ளாம வெளேயுது.''

"அதுக்கு மேல கேள்வி இல்லேயா.''

கோட்டியா பிள்ளே ஆட்களே பார்வையால் ரவுண்டடித்தார்.

''ஏழநூறு ரெண்டுதேரம்.''

"முடிடா அத்தோட.

''ஆரு கருப்பையாக் கோனுரா எழநூறு.

"ஆமாமா."

ரெங்கூன் செட்டிக்கு சந்தோஷம் பிடிபடவில்லே.

"பெறகென்ன கட மகுமையா. சங்கரலிங்கந்தான. ஊரும் பாக்கியெல்லாம் செண்டுருச்சா.''

"எல்லாம் குடுத்துட்டாரு."

சங்கரலிங்கம் முனங்கிஞர்.

''ஆஞ ஊருக்குள்ளருந்துதான் எனக்குப் பாக்கி குடுக்கல.''

இதே போல சுப்பையஞசாரியும் கோபித்துக் கொண்டார்.

''ஊருக்குச் சேரவேண்டிய பாக்கின்னு முச்சந்தியில வச்சுக் கேக்கீக. ஊருக்காரங்க தர வேண்டிய பாக்கிக்கு எங்க வச்சுக் கேக்க.''

"அத எதுக்குய்யா இப்பத் தூண்டிக்கிட்டு. மொதல்ல இத முடிச்சுக் கிருவொம்.''

கோயில் வாசலிலிருந்து ஒரு வாலிபன் காட்டமாய்ச் சொன்னுன்.

''இந்தத்தடவ கட ரெண்டு வுட்டாகணும்.''

''மூணு இருந்தாக்கூடத் தாவல.''

இதுலென்ன தொசுக்கு வச்சுப் பேசுறீக. காப்பிக்கட ஒண்ணு வேணும்னு சொல்லுங்களேன்.''

''பின்ன என்ன வருசம் பூரா ஒரே கடைய வச்சு மாரடிச்சிட்டு குளுந்த நேரத்துல சுடுதண்ணி குடிக்கக் கூட தோதில்லாம."

"ஆருப்பா புதுசாருக்கு. இட்லி காப்பி வேணும்னு பொடி நடையா கோயில்பட்டிக்குப் போயிட்டு வந்துறதுதான. ஊருக்குள்ள எதுக்கு. ஆளாளுக்கு மடியில துட்டு முடிஞ்சிட்டுத்தான அலையிறெம். வீட்ல உள்ள கஞ்சித் தண்ணியக் குடிச்சிட்டு மாட்டுக்குப் பின்னால போறதுக்கில்லாம. தெனமும் விடியக்காலம் ஒரலுக்கு முன்னால நிப்பீகளா. காப்பி வாங்கிக் குடிப்பீகளா.''

''யோவ் நீருபாட்ல சும்மா கெடக்கணும். ஊருக்குள்ள எண்ணைக்கும் போலயா இப்ப இருக்குது. எங்களுக்குக் காப்பிக் கட வேணும்.''

வில்லிசேரிக் காரர் வாய் திறந்தார்.

''அவங்க பிரியப்படியே விட்ருவமே. ஊருக்குள் ஒரு கட கூடுறது நல்லதுதான."

கோட்டியா பிள்ளை மனசுக்கு அவ்வளவு ஒவ்வவில்லை. "இதுல தொறட்ருக்குது. பல மாதிரி சச்சரவு வந்து சேரும் பாருங்க.''

"சச்சரவென்ன ஒங்க தலையிலயா வரப் போகுது. வந்தா வந்த மாதிரி தீந்துட்டுப் போகுது... பேசாம ரெண்டு கடைக்கு ஏலத்த விடுங்க.''

சங்கரலிங்கம் மகள் விரலை மடக்கிச் சொடக்குப் போட்டு நொடித்தவாறே அடுப்பில் தீத்தள்ளி விட்டு மறுபடியும் வந்து எட்டிப்பார்த்தாள்.

''ஏம்மா நீ ஒம்பாட்ல இரும்மா. நடக்கிறது தன்னால நடக்கட்டும். ஊருக்குள்ள நாலு அவல சவலைக்கு அவிச்சுப் போடுற இட்லியால எம்புட்டு லாவம் வந்திரும் நமக்கு.''

சங்கரலிங்கம் மறுபடியும் கூட்டத்தில் கவனப்பட்டார்.

முதலில் காப்பிக்கடை ஏலம் தொடங்கியது.

நாலைந்து பேர் கேள்விக்குப் பிறகு முத்தையாபிள்ளைக்கு முன்னூறுக்கு முடிவாயிற்று. அவர் தேன்தட்டுத்

தாடியை புறங்கையால் விசிறி ஒரு மொக்கைச் சிரிப்புச் சிரித்தாரே பார்க்கலாம்.

சுப்பையனுசாரிக்கு இப்போதுதான் விஷயம் விளங்கியது.

''அப்பிடிச் சொல்லு. இந்தக் கெத்துனலதான் நாலு நாளைக்கு முந்தியே சாமான் சட்டுமுட்ட ஒக்குட வந்தா களோ.''

அடுத்து கடை மகுமை. ஆளாளுக்குக் கேட்டார்கள். ஆறுல்சங்கரலிங்கம் மட்டும் புகையிலையைக் குதப்பிக் கொண்டு சுறுசுறுப்பில் கம்மென்று உட்கார்ந்திருந்தார். கேள்விஉயரும் போது மட்டும் கண்களை உயர்த்தினுர்.

திடீரென வைத்தியப் பண்டுவர் நானூற்றி ஐம்பதில் கொண்டு விடவும் அனேகருக்குத் திகைப்பு. ''இவருட்ட என்னருக்கு ஊருக்கு வித்துக் குடுக்க'' என ஒரு பக்கம் இளக்காரம் வேறு.

'இவனுக்குக் கஞ்சா போடுறதுக்கே நேரமிருக்காதே. கடையெங்க விக்கப் போருன். வித்தாலும் ஊர்ச்சனம் யேவாரம் வாங்காதே.'

கோபால் நாயக்கருக்கு யோசனையாயிருந்தது.

கூட்டத்தில் முணுமுணுப்பு பிறந்தது.

''இவன எப்பிடி கட வைக்க வுடலாம் கைதொட்டு யேவாரம் வாங்கவா.''

கோபால் நாயக்கர் நினைத்தது சரியாயிருந்தது.

'அதான பாத்தென். இவனுக்குப் பூளக் கொழுப்புல்ல.'

கந்தையா சுப்பையனுசாரியிடம் சொல்லிக் கொண்டார்.

''எல்லாம் கோயில்பட்டியில கண்ட எடத்துல தின்னுட்டு வாரானே அத ஆருட்டச் சொல்லுறது.''

''சரி எங்கேள்வி அம்பத்தஞ்சு.

கேள்வியை மாற்றியடித்துவிட்டு கருப்பையாக் கோனுர் கூட்டத்தில் பார்வை விட்டார்.

அதே கேள்வியில் முடிவானபோது சங்கரலிங்கம் எழுந்து சுதாரித்தார்.

''எம்மா தண்ணி கொண்டுவா.''

கொண்டிக்காவல் பேச்செழும்பியதும் கூட்டம் உசும்பி யது. கந்தையா இன்னும் தலைநிமிரவில்லை. நிலத்தைக் கிண்டிக் கொண்டிருந்தார்.

கோட்டியா பிள்ளை வழக்கம்போல் கேட்டார்,

''ஊருக்காரரு என்ன சொல்றீக. போன வருசத்தப் போல கந்தையாவே சத்தங் காட்டட்டுமா.''

அனேகம் பேர் சலசலத்தனர்.

''இதுலென்ன அவருதான் இருக்கணும்.''

கூட்டத்தில் அமைதி நிலவியதும் அப்பையா இழுத்தார்.

“அதுல வந்து பாருங்க, இந்த வருசம் காவலு வேண் டாம்னு தோணுது.''

''என்ன திடுதும்னு அப்பிடிச் சொல்லீட்டீக.''

''பெறகென்ன காவலு போட்டாலும் காட்ல அழிவுதான், போடலன்னாலும் அழிவுதான்.''

வில்லிசேரி வீட்டு வேலையாள் அதுக்கு இசைந்து பேசினார்.

''இந்த வருசம் காவலு வேணாம். எங்க வீட்டுக் காடெல் லாம் நான் பாத்துக்கிருவென்.''

''நீ சும்மா உக்காருய்யா. பரம்பரையா இந்த ஊருல குடியிருந்தவன் மாதிரி. நேத்து வந்துட்டு நாளைக்குப் போகப்போற. புதுசா ஒரு கதையக் கொண்டு வந்து வுடு ருன். ஆளாளுக்குக் காவலு போட்டுக் காத்துக்கிட்டா ஊருக்குள்ள தரகு மகுமன்னு எதுக்குனு கேக்கென். ஒரு வரமொற வேண்டாமா. இவுக காவலு காத்து பிஞ்சவெள்ளை யப் போகுதாம். காவலுங்கிறது ஒரு ரோசத்துக்குத்தான். எங்க ஊரான் பிஞ்சையில எழங்காற நல்ல குடுமீ ஆராச் சும் இருக்கம்னு மனசத் தொறந்து சொல்லுங்க பாப் பொம். இத அந்த மனுசன் கண்டிச்சா காவலு வேண் டாம்னு சொல்லத்தான் தெரியுது.''

கோபங் கொண்டிருந்த சங்கரலிங்கத்துக்கு உடம்பு நடுங் கியது.

சங்கதி இப்போதுதான் காதுக்கெட்டியது போல் கேட்டார்.

''சங்கரலிங்கம் இப்பிடி ஒதறிப் பேசிப்புட்டீரே."

"எப்பிடிப் பேசுறதாம். என்னைக்கும் போல ஊருக்குள்ள கொண்டணச்சுப் போகவா, ஒண்ணுல வுட்டா ஒண்ணத் தூண்டி வுட்டுட்டு... இப்ப நீங்கதான் இருக்கீக. வருசம் பூரா எச்சளந்தவனத்தான் வெரட்றீக தீர்வைக்கு. அவன் அவன் மூக்கால அழுகுறுன். இந்தா நீங்களும் கொரா முனுசாத்தான் இருக்கீக. அப்பிடிப் போல எல்லாம் இழுத்துப் போட்டுப் போகவா. ஒரு மனுசன் புடிக்கலன்னு மனசுக்குத் தெகஞ்சபடிதானு. அப்பிடின்னு ஆசாரி எதுக்கு பகடை எதுக்கு..."

கூட்டத்தில் சிரிப்புக் கிளம்பியதும் எதுக்குடா இதுவுங் கூட கேட்டோம் என்றிருந்தது கிராமுனுசுக்கு.

கோட்டியாபிள்ளை வில்லிசேரிக்காரரைப் பார்த்தார்.

''என்ன சொல்றீக.

அதுக்குள் கோயில் திண்டிலிருந்து ஒரு கேள்வி துடிப்பாய் வந்தது.

''அவருட்ட மட்டும் என்னகேள்வி. நாங்கள்ளாம் ஊருக்காரரு இல்லையா.''

வில்லிசேரிக்காரர் தடை சொல்லவில்லை.

''சரிசரி ஒங்க பிரியம். ஊருக்குள்ள எப்பிடி முடிவாகுதோ அப்பிடியே செய்யிங்க.''

ஊர்க்கூட்டம் கலைந்த போது நடுக்கடையில் ஏழெட்டுக் கட்டு வெற்றிலை காலியாயிருந்தது.



முத்துமாரிக்கு நெஞ்சு கபாலென எரிந்தது. அப்ப டியே திகைத்துப் போய் நின்ருள்.

பழைய பழைய நினைவுகள். மயிரொட்டிய மண்டை, வெள்ளை மீசை, சிரித்த முகம்—ஒரு நெடிய உருவம் படம் போட்டதுபோல் தெரிந்தது. அதை கண்ணீர் திரையிட்டு மறைத்தது.

முத்துமுருங்கன் செத்துப் போஞன்.

இழவு சொல்லி வந்திருந்த பையன் எதிரில் நின்றுகொண் டிருந்தான்.

முத்துமாரி அவனையே உற்றுப் பார்த்தாள். எங்கோ பார்த்த நினைவு. அவளுக்கு அங்கேயே உட்கார்ந்து ஒரு மூச்சு ஒப்பாரி வைத்து ஓய வேண்டும் போல் நெஞ்சில் சோகம் கவ்வியது.

''செத்தது எண்ணக்கி. எதுக்கு.''

"இண்ணக்கி விடியக்காலந்தான். நாலஞ்சு நாளாப் படுத் திருந்தான். வுடாத நெஞ்சுப் பொகச்சல். ஆள ஒரேயடியா அமுக்கீருச்சு."

கொஞ்சங் கொஞ்சமாய் பையனை அடையாளந் தெரிந் தது.

''பட்டாளத்துக்குத் தந்தி குடுத்திருக்காகளாடா.''

''ஆமக்கா. என்னத்தக் குடுத்தாலும் அவன் வந்து சேரப் போருஞ. அவன் செஞ்ச அனியாயத்துக்கு அப்பனுக்குக் கொள்ளி வைக்கக் குடுத்து வைக்கல. எவளோ ஒருத்தியச் சேத்துக்கிட்டாஞம்."

முத்துமாரி கண்ணீரைத் துடைத்தாள்.

கண்மாய்க்கரை கருவமர வரிசை உள்ளிருந்து கரம்பை யேற்றி வெளியேறும் வண்டிகளை மறைத்திருந்தது. அவ் வப்போது மணிச்சத்தமும் அதட்டலும் தவிர எந்த அரவ மும்இன்றி கூனிப்போன பனைகள் கூட உம்மென்று நின் றன.

கண்மாயில் முனியாண்டியும் தோட்டத்துக்குக் கரம்பை யடித்துக் கொண்டிருந்தான். அவனுக்குத் தண்ணீர் கொடுத்துவிட்டு வருகிற வழியில்தான் இழவு சொன்னது.

"எங்கய்யா வீட்ல சொல்லீட்டயா."

''அங்கிருந்துதான் வாறென். வீட்ல நீ இல்லங்கவும் வழி யில சொல்லீட்டுப் போகலாம்னுதான்..."

"சரி வா. ஒரு வாயி கஞ்சி குடிச்சிட்டுப் போகலாம். அந் தானக்கி ஊருக்குள்ளயும் சொல்லீரு. இங்க ஆருட்டச் சொல்லச் சொன்னுக."

''ஒன்னக் கண்டுதான் முக்கியமாச் சொல்லச் சொன்னுகை. செத்தவனுங்கூட ஒன்னப் பத்திப் பேசிட்டுத்தான் செத்தி ருக்கான்."

''என்ன பேசுனுனே."

அவளுக்கு மறுபடியும் கண்களில் நீர் மேதிப் புரண்டது.

''என்ன சொன்னுனே சொல்லி யத்ததான் சொல்லி யழுதா."

அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். வரும்போதே தெருவில் இரண்டு பெண்களிடம் சொன்னுன் பையன்.

அவனுக்குக் கஞ்சி ஊற்றிக் கொடுத்தாள் முத்துமாரி. வீட்டில் அவள் மாமனைக் காணவில்லே. மாமி மட்டும் உட் கார்ந்திருந்தாள். தொட்டிலில் குழந்தை உறங்கியது.

''ஆரும்மா இது.''

கிழவி விசாரித்தாள்.

''செவல்பட்டியிலருந்து வந்துருக்கான். முத்துமுருங்க மாமன் செத்துப் போச்சாம்.''

"ஆரு, நீ வாக்கப்பட்டிருந்தயே...

''ஆமாமா."

''அடடா என்ன வந்துச்சோ, வெயசாளியா."

''சாகிற வெயசில்ல.''

''பெறகெதுக்கு திடுதும்னு."

"பொகச்சலு ரெம்ப."

"அப்பிடியா. ஊருல அனயம் பேரு எழவுக்குப் போரு களோ."

"போவாக."

"நம்ம வீட்ல முனியாண்டி கூட இல்லையே. நீ பச்சப் புள்ளக்காரி."

"பொம்பளைக போருக போலருக்கு. சாய்ந்தரத்துக்குள்ள திரும்பீருவாக. நானும் ஆளோட ஆளாப் போயி நிண்ணுட்டு வந்துறென்."

"புள்ளய என்ன செய்யறதும்மா."

"இண்ணக்கி ஒரு பொழுதும் கஞ்சியக் கிஞ்சிய ஊட்டித் தாமரிச்சுக்கங்க. மத்தியானம் வகுத்துக்கு ஊட்டித் தொட்டில்ல போட்டா பொழுதடஞ்சுதான் எந்திரிப்பா. மாமங்கிட்டச் சொல்லீரு."

"முனியாண்டி என்ன சொல்றுனே.

"வந்து சத்தம் போட்டாலும் போடுவான். அவன் வாற துக்குள்ள திரும்பீறென். ராத்திரிக்கு கஞ்சி யெல்லாம் இருக்கு."

"என்னமோ ஒம்பிரியம்."

"நாளைக்குப் போகலாம். இல்லனு மச்சானப் போகச் செல்லலாம். ஆனு இண்ணைக்கே எடுத்துட்டா என்ன செய்யிறது. பெரிய மனுசன் மொகத்துல முழிக்க முடியாது. இனி எப்பப் பாக்கப் போறும்."

கிழவி மௌனமானுள். சாப்பிட்ட பையன் கைகழுவி சொல்லிக் கொண்டு புறப்பட்டான்.

○

செவல்பட்டி மூத்துமுருங்கன் வீட்டுக்கு முன்னுல் ஆள் ரெம்பக் கூடியிருந்தது. அய்யங்குளத்துப் பெண்களுடன் மூத்துமாரியும் முக்காடு போட்டவாறு வீட்டுக்குள் அழுத வாக்கில் நுழைந்தாள். ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

"அதென்ன மனசு கேக்குமா."

உள்ளே அழுகைச் சத்தம் பலத்தது. முத்துமாரி சுடலை யைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

''கொளத்துக்கு அந்தப்பறம்
கொளத்துக்கு அந்தப்பறம்
கூடாரத் தந்திமரம்-எனக்குக்
குளுந்த எணலுமில்ல
கொண்டணைப்பார் ஆருமில்ல.''

சுற்றியிருந்த பெண்கள் தம்மையறியாமல் கண்ணீருகுத் தனர்.

''சின்னப் பெயல அப்பிடி வச்சுக்கிருவான்."

முத்துமுருங்கனை வடக்காமல் சாத்தி வைத்து முன்னால் சிறு விளக்கு வைத்திருந்தார்கள்.

ஒரு மூலையில் வாயில் துண்டைப் பொத்திக் கொண்டு அழுதுகுலுங்கினான் வெள்ளையன். செல்லியை யாரோ தலையில் தட்டி ஆறுதல் கூறினார்கள். அவள் தொண்டை கட்டிப் போய் அழச் சத்தியற்று நினைத்து நினைத்துக் குமுறினாள்.

அவள் மக்கள் இருவரும் முத்துமாரியைச் சேர்ந்து கட்டிக் கொண்டு அழுதார்கள்.

''முத்துமாரி ஒயாம அழுகாதம்மா, பச்சப் புள்ளக்காரி. அழுதாப்புல போனவன் திரும்பி வந்து ஒம் பாதரவக் கேக்கப் போறானா.''

அழுகை ஓய்ந்து பெண்கள் வெளியேறும் போது வாச லோரம் உட்கார்ந்திருந்த பெரிய மனுசன் சொல்லிக் கொண்டிருந்தான்.

"அழகிரி வந்தது தெரியாதோ இவளுக்கு. அந்த மனுசன் அழுத அழுகையிருக்கே. அங்கிட்டு எங்கயோ போனான். சோலி முடிஞ்சாத்தான் கௌப்புவான்.''

ஆளோடு ஆளாய் கிணற்றில் சேலை நனைத்துக் குளித்து ஓட்டமும் நடையுமாய் வீடு திரும்பும் போது முத்து மாரிக்குப் பின்னால் சுடலைப் பயலும் நாய்க் குட்டி மாதிரி ஓடிவந்தான்.

அவளுக்கு முதலில் தயக்கந்தான். அந்த நேரம் அழகிரி கூட தட்டுப்படவில்லை. மயானத்திற்குப் போயிருந்தான். வர நேரமாகுமென்று புறப்பட்டு விட்டாள். பழைய நாத்துனமார் கூட சுடலையைக் கூட்டிக் கொண்டு போவதாய்ச் சொன்னார்கள். இவள்தான் கூறிவிட்டாள்,

''இல்ல அவன் எங்கூட வரட்டும். புள்ளே யெடுக்கத் தோதாப் போகும். அப்பிடில்லனா அவுக தாத்தா ஊருல இருந்துட்டுப் போறான்.''

சுடலை பிந்திக் கொண்ட போதெல்லாம் ஓடி அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

''என்னமாச்சும் வேல செய்வயாடா.''

"தாத்தாகூட களத்துக்குப் போயி பெணையலு பத்துவென். மாடு மேப்பென். கடையில தவசம் போட்டு வாங்கித் தருவான்."

''ஒங்கய்யாகூடச் சேந்துக்கிருவயா."

அவன் கூட வரச் சொன்னான். நான் மாடன்னு சொல்லீட்டென். எப்பிடியும் கெடன்னு அடிச்சான். நான் அவன்கூடச் சேரவே யில்ல. தாத்தா கூடத்தான் சேருவென்.''

சுடலையின் பொடிப்பாதங்கள் கரிசலில் புழுதி கிளப்பின.

நாணல் புதரைக்கடந்து கண்மாய் மடையோரம் கரையேறிப் பார்த்தால் அய்யங்குளத்தில் இருள் படர்ந்து கொண்டிருந்தது. கீழ்ப்பாதையில் பிரிந்து வீட்டுக்கு நடந்தாள் முத்துமாரி.

வீட்டுக்குப் பின்னால் வரும்போதே குழந்தையின் அழுகுரல் தெளிவாய்க் கேட்டது. அதைத் தொடர்ந்து கிழவியின் 'ஆராரோ', முனியாண்டி சீறிக்கொண்டிருந்தான்.

''அப்பயும் பச்சப் புள்ளேயப் போட்டுட்டுப் போயிருப்பாளாக்கும். வரட்டும் சொல்றென்."

வாசல்பக்கம் திரும்பியதுமே அவள் ரவிக்கையைத் தளர்த்திக் கொண்டாள்.

''அம்மால்ல என் ராசாத்தி வகுறு பசிச்சிருச்சாக்கும். அழுகாத அழுகாத.

வாரியணைத்து உட்கார்ந்தாள். பிள்ளையின் அழுகை முனங்கலுக்குத் திரும்பி சுவைப்பில் முடிவடைந்தது. அதை லேசாய் ஆட்டினுள்.

முனியாண்டி சுவரொட்டிச் சிம்னியை சாம்பல் வைத்து விளக்கித் துடைத்தான். மாமன் சுவரில் சாய்ந்து யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

மூலையில் விதறுபட்ட ஆட்டுக்குட்டியாய் சுடலை முழித்துக் கொண்டிருந்தான்.

"கீழ உக்காந்துக்கடா."

அவன் சுவரில் நழுவிக்கொண்டான். வீட்டில் பேச்சரவம் இல்லாதது அவனுக்கு வெறிப்பாயிருந்தது. தன்னை உற்றுப் பார்க்கும் முனியாண்டியையோ கிழவியையோ பார்க்கத் தெம்பில்லை.

குழந்தை குடித்து முடித்து உதடுகளில் நாக்கைத் தவள விட்டது. முத்துமாரி சிரிப்பதற்காக புருஷனைப் பார்த்தாள்.

அவன் இதுவரை காத்திருந்தவன் போல் மிரண்டான்.

''இங்கயும் ஒண்ணப் பெத்து வச்சிருக்கிறது யாவுகமிருக்குதில்ல."

அவள் எதிர்பார்க்கவில்லை.

''போக வேண்டிய எளவு...எல்லாரும்......

''சீ வாயமூடு. எங்களுக்குப் போகத் தெரியாதோ. சொல்லாமச் செய்யாம பச்சப் புள்ளையவும் போட்டுட்டு என்ன எளவு. மாமக்காரன்ல. போகச்சொல்லாது பின்ன. புள்ள சன்ன அழுகையா அழுதுருக்கு. சாகுருப்புல துடியாத் துடிச்சிருச்சே.ஒனக்கு அம்புட்டுத் துமுறு ஏறிப்போச்சே."

பிள்ளையை வெடுக்கென்று வாங்கிக்கொண்டு விலாவில் எத்தினுன்.

''பாவீ என்ன கொன்னு போடாத.''

அவளுக்குத் திகைப்புத் தாங்கமுடியவில்லை. நடந்துவந்த களைப்புக்கும் அதற்கும் எத்தின எத்தில் கபகப என்று மயக்கம். சத்தம் போடடு விழுந்தாள்.

''நீ செத்தாத் தாவலேயா பெழச்சாத் தாவலேயா. எம் புள்ளையே பெரிசில்ல. நீ எக்கேடும் கெட்டுப்போ.''

இன்னும் ஒரு உதை. கண்ணில் விண்ணென்று வலி. அவளால் பேச முடியவில்லை.

''ஏலே அடியாதடா. பச்சப்புள்ளக்காரி. படாத எடத்துல பட்டா என்ன செய்ய. புள்ளையினு இருந்தா அழுகாமயா இருக்கும். பெத்தவகிட்ட இருநதே முடியுமா. நீ யெல்லாம் ஒரு மனுசன் போல.''

கிழவிக்கு அவ்வளவு சொல்லத்தான் தெம்பிருந்தது.

''ஆமா நீ ஒருத்தி இருக்கயில்ல, ஒன் எளக்காரம். பச்சப் புள்ளக்காரி மாதிரியா நடந்துருக்கா.''

கிழவன் இத்தனைக்கும் பேசாமலிருந்தான்.

''நம்மளே சோத்துக்கு அவன நப்பீட்டுக் கெடக்கொம். எல்லாம் அவுகபாடு. இண்ணைக்கி அடிச்சுக்கிருவாக. நாளைக்குக் கூடிக்கிருவாக. ரெண்டும் சின்னதுகளா தட்டிச் சொல்ல.'

அவன் மௌனத்தைக் கலைக்க விரும்பவில்லை.

''இண்ணைக்கி இதுதான். நாளைக்குப் புள்ளையப் போட்டுட்டே அப்பன் வீட்டுக்கு ஓடுவா. எவனோ செவல்பட்டியானுக்குப் பெத்தத இழுத்துட்டு வந்துருக்காள்ல. சே, இப்பிடிக் கழுதன்னு தெரிஞ்சிருந்தா கண்ணுல முழிச்சிருப்பனா. நான் எம்புட்டுப் பெருந்தன்மையா இருந்தென். என் வீட்ல இவ அரச்சணம் இருக்கப்புடாது. எங்கயாச்சும் ஓடிப்போகணும். புள்ளைய வச்சு நான் காப்பாத்திக் கிருவென்.''

சாயங்காலம் குழந்தை அழுத அழுகை அவனை இன்னும் உலுக்கியது. அதை அமர்த்தப்பட்ட பாடு. அழமாட்டாமல் விக்கி ஓய்ந்தகாட்சி. தெம்பு வந்ததும் மீண்டும் அழத் தொடங்கிய பரிதாபம். அவனுக்குக் கோபம் ஆறவில்லை.

இத்தனை நாளாய் அவளைக் கைதொட்டு அடித்ததில்லை. இன்றைக் கென்னமோ இப்படி.

அவன் குழந்தையுடன் வெளியே போய்விட்டான்.

சுடலை சட்டையால் கண்களைத் துடைக்கத் துடைக்க ஊறிக்கொண்டிருந்தது. அவன் அழுது ஏங்கியபோது அடிவயிறு வரை வியாபித்து வயிறு நெஞ்சுக்கு ஏறி இறங்கியது.

வாழ்க்கை தனக்கு இப்படியும் வாய்த்ததே என்று இருட்டுக்குள் விடிய விடிய நினைத்து அழுதாள் முத்துமாரி. ராத்திரி சாப்பிடவில்லை. சுடலையும் சாப்பிடாமல் முடங்கி விட்டான். குழந்தையைக்கூட கிழவிதான் கொண்டு வந்து முன்னால் கிடத்தினாள்.

இருபக்கமும் எலந்த முள்ளைப் போட்டது போல் தத்தளித்து அலறிய அவள், தலைமுடியைப் பிய்த்துக் கொண்டாள். அந்த நேரத்தில் கிழவி அடிக்கடி நினைவூட்டிய ''ஒரு வாயி சாப்புட்டுக்கிற வேண்டாமா'' கூட காதில் தங்கவில்லை.

அழகிரியும் ஆவடையுமாய் குழந்தையும் சுடலையுமாய் மனசுக்குள் போட்டுப் போட்டு அழித்து அவளுக்கு ஒரு முடிவு புலப்படும்போது நேரம் விடிந்து கொண்டிருந்தது.



தையலூசி விரலில் பட்டுவிடவே கையைச் சுருக்கென இழுத்துக் கொண்டான் அழகிரி

''சை அதுக்குள்ள கண்ணௌவு பத்தல.''

பழைய செருப்பைக் கீழே வைத்து மடியில் வெற்றிலையைத் தேடினான்.

வேம்பு நிழல் அதன் தூரை மையங்கொண்டிருந்தது. தெருவில் நெட்டோட்டம் குட்டோட்டமாய்த் திரியும் சிறிசுகள். கெக்கரித்துக் கொண்டு சில கோழிகள். வெள்ளை வெயில் ஏகட்டுக்குப் பரவியிருந்தது.

அவன் வீட்டை நோக்கினான். தொடர்ந்தாற் போல் ஒரு செருமல். அவனுக்குக் காதடைத்தது.

''இட்ட சூடு ஆவட, ஒக போணி நீளு காவாலா. உறிக் கலயத்துல பொவ்வாகு உஞ்சி எத்துராம்மா.''

ஆவடை எருமைக் கிடாரிக்குத் தண்ணீர் வைத்துக் கொண்டிருந்தாள்.

''ஏமி நுவ்வு, ஒகதேரம் பொவ்வாகுன்னு ஊறிக அதானு. இண்டில துட்டு மரங்க ஒண்டி லேது.''

இப்படி எத்தனையோ முறை கண்டித்திருக்கிறாள். அவனும் அதற்கு சிரிப்பை நமட்டுவான்.

ஆவடை புளித்த தண்ணீரும் புகையிலையும் கொண்டு வந்தாள். அழகிரி அவளையே உற்றுப் பார்த்தான்.

அவள் ஊதாவில் கடலூர்ச் சேலை உடுத்தியிருந்தாள். தளர்ந்த நடை, கொண்டை லேசாய் நரைத்திருந்தது.

கையிலொட்டிய தண்ணீரைச் சுண்ணும்பில் வடித்து வெற்றிலை தடவி மென்று புகையிலை குதம்பினான். மென்ற வெற்றிலையைக் கடைவாயோரம் உருட்டி வைத்து சுரு சுருக்கும் எச்சைத் துப்பி மறுபடியும் அந்த உருண்டையைத் திருப்பிக் கொள்வதில் எவ்வளவோ சொகம். இரண்டு தடவை வெற்றிலை போட்டு விட்டால் குடல் இருக்கும் ஞாபகமே அற்று விடும்.

''இட்ட கூச்சுண்டுமா.''

''ஏமி சங்கதி.''

''சங்கதி ஒண்டி லேது... முத்துமுருங்கன் இப்பிடி அனியாயமாப் போயிட்டானே.''

"தங்கமான மனுசன். நான் பாத்து ரொம்ப நாளாச்சு. கண்ணுக்குள்ளயே இருக்கு."

''மனுசன்னு மனுசனு. முத்துகலியாணத்துக்கு அவன் ஓடீட்டு அலஞ்சதும் பேசினதும் இண்ணக்கிப் போலருக்கு."

''பொண்ணக் கொண்டு போயிறணும்னு மூக்கு முட்ட ஆச. சாவெழவுக்கு வந்தாக்கூட அந்தப்பேச்சப் பேசாமப்

போறதில்ல. முத்து சடங்காகிறதுக்கு முந்தியே வார்த்த யப் போட்டு வச்சானே. சடங்குக்குத்தான் என்னமெல் லாம் செஞ்சாக."

''ஒருநா கோயில்பட்டியில பாத்துக்கிட்டென். பொரி கடலையக் கொறிச்சுக்கிட்டு கலியாணப் பேச்செடுக்கவும் வாய் நெறையாச் சிரிக்கான். நான் சரின்னு சொல்லவும் மொட்டத் தலையச் சொறிஞ்சுகிட்டு கண்ணமூடுருன்.''

''அவனும் குடும்பத்தக் கொண்டணச்சுப் போயிறணும்னு எம்புட்டோ பாடுபட்டான் அந்த நாசமத்த பெயலால நிண்ண நெலயில தாலிதீந்தாச்சு.''

''அவன் மேல தப்பில்ல.''

''செல்லியும் நல்ல மனுசிதான்.''

''அவுக வீட்ல ஆரவும் கொற சொல்ல முடியாது.''

"என்னமோ குடுத்து வைக்கல.''

''இனியென்ன அந்தக்குடும்பம் கொலஞ்சாப்புலதான்.''

''செல்லிபாடுதான் சங்கடம்.''

''எளியவன் ஒருத்தன் இருக்கான். காப்பாத்திருவான்."

"செத்த நேரத்துக்கு முந்தி ஆளக்காணுமே எங்க போயி ருந்த."

''அத ஏன் கேக்க. காப்பிக்கட அம்மாளும் நடுக்கடக் காரரு மகளும் தெருவுல நிண்ணு போட்ட சண்டையப் பாக்கணும். கடக்காரரு மக இப்பிடி வாயி பேசும்னு நெனைக்கவேயில்ல.''

"இதென்ன வம்பாருக்கு. சம்பாத்தியத்துல கைவச்சா எல்லாம் வந்து சேரும்.''

''அப்பப்பா இண்ணக்கில்ல பாத்தென் அது வாய...... அந்தா ஒரு சிறுசு வருதே ஆரு.''

''ஆரோ சின்னப் புள்ளீக.

„நம்ம சொடல சாயலுக்கு இருந்துச்சு.''

ஆவுடை இப்போதுதான் கூர்ந்து கவனித்தாள்.

''ஒசே நம்ம பெயலேதான். ஐயய்யோ புள்ளே யென்ன ஒத்தியில வருது. நான் என்னத்தச் சொல்லட்டும்.''

ஓடிப்போய் சுடலையைத் தூக்கி வந்தாள். அவன் முகத்தில் அழுத கோலம் மறையாமலிருந்தது.

அழகிரி ரெம்பவும் சரிந்து போனான்.

சுடலை மீண்டும் அழுது ஓய நேரம் பிடித்தது. தூக்கிக் கொண்டு போய் முகங் கழுவித் தண்ணீர் கொடுத்தாள் ஆவடை.

அழகிரி மெல்லக் கேட்டான்.

''எங்கருந்துப்பா வார.''

''அம்மாகூட வந்தென்.''

"அம்மாவா எங்க."

''அம்மாவும் கூட வந்தா. சின்னையாவுக்கும் அவளுக்கும் சண்ட. அவள அடிச்சான்.''

''புள்ளேய அடிச்சானு.''

''நீ சும்மாகெட. அம்மாவும் கூட வந்தான்னு சொல்றன்.... அம்மா வரலையாடா.''

''வெள்ளங்காட்டியில அம்மா சின்னையாவுக்குக் கஞ்சி ஊத்திக்குடுத்தா. அவன் பேசாமப் போயிட்டான். பெறகு எனக்கு ஊத்திக்குடுத்தா. எல்லாரும் வேலைக்குப் போனப் பெறகு வாடா போவம்னு என்னக் கூட்டிட்டுப் பாத வழியே வந்தா. தங்கச்சியவும் இடுப்புல வச்சிருந்தா.

வரயிலயே ஒரு மரத்துக்கடியில உக்காந்து தங்கச்சியவும் என்னவும் பாத்துப் பாத்து அழுதா. பெறகு, நேரே பாத வழிய போ, ஆருட்டயாச்சும் அழகிரித்தாத்தா வீடு எதுன்னு கேளு சொல்லுவாகன்னு என்னப் போகச் சொல்லீட்டா. நான் வரல நீ போ, ஒனக்காச்சும் தாத்தா இருக்கான். எனக்கு ஆரு இருக்கான்னு சொல்லி பெலமா அழுதா. நானும் அழுதென்.''

''எம்மகளே என்ன மோசம் பண்ணீட்டயேம்மா.''

ஆவடை வைத்த ஒப்பாரிக்கு ஆறுதல் சொல்ல அழகிரியைத் தவிர தெருவில் ஆட்களில்லை.

'கோட்டிப்புள்ள என்ன காரியம் செஞ்சிட்ட. இங்க ஒங் கப்பன் ஒருத்தன் கெடக்கிறது தெரியலயா.''

அழகிரி அய்யங்குளத்துக்கு ஓடினன். முனியாண்டி மண லூத்துக்கு விழுந்தடித்து வந்தான். மூன்று நாள் தேடிப் பார்த்தார்கள்

நாலாவது நாள் விருவியத்துப் போய் அழுகையுங் கண் ணீருமாய் ஓடி வந்த கருப்பன அலறினன்.

'முத்து கெணத்துக்குள்ள கெடக்கா. ஓரத்துல மேஞ்ச மாடு மூசுமூசுன்னு வெரண்டது கண்டு போயிப்பாக்கன். அய்யய்யோப்பா நான் என்னத்தச் சொல்லுவென் கெணறு நெறையா மெதக்காளே. நீயெல்லாம் ஒரு மனுசன் போல... அவள வம்பாக் கொண்ணுட்டயே பாவி.''

அழகிரியை அடிக்கப் போவது போல் நெருங்கியவன் அழுகையில் துவண்டு போனன்.

பாதைக்கும் மேற்கே சுவரைச்சுற்றி மஞ்சனத்தி முளைத்து மூடிய இடி கிணற்றுக்குள் கால் முதல் கழுத்துவரை சேலையை வரிந்து கட்டி அதற்குள் குழந்தையையும் சேர்த்து இறுக்கி யாரையுமே பார்க்க விரும்பாதவள் போல் குப்புற மிதந்து கொண்டிருந்தாள் முத்துமாரி.

கட்டில்மாதிரி கம்புகட்டி பிணத்தை மேலெடுத்தார்கள். கட்டியான சதுரத்தில் அங்கம் அங்கமாய் தவளை கொறித்து மேலிட்டாற்போல் அழண்டுபோயிருந்தது. வாயில் நீரொழுக ஒழுக ஊதியிருந்த வயிறு குறைந்தது. அங்கிருந்தே அவசரமாய் சக்கிலியக்குடி சுடுகாட்டை நோக்கி ஓடினர்கள்.

தண்ணீருக்குள் கிடந்ததால் பிணம் எரிய நேரமாகு மென்று பல கோளாறு செய்ய வேண்டியிருந்தது. கடை யில் கிடந்த தேங்காயை எல்லாம் பொறுக்கிக் கொடுத் தார் சங்கரலிங்கம். மெடாவிலிருந்த ஆமணக்கு முத்தை அள்ளிக் கொடுத்தது அவர் மகள். யாருக்கோ வண்டிப் பட்டை போட வைத்திருந்த எரு மூடைகளை எடுத்துக் கொண்டு போகச் சொன்ஞர் சுப்பையஞசாரி.

''ஆருதுன்னு இருக்கு. இப்பிடி அவசரத்துக்கு இல்லா மயா. தூக்கு எல்லாத்தவும்.''

விறகுக் கோக்காலிக்கடியில் தேங்காய் வைத்து ஆமணக்கு முத்து தூவியுங்கூட பிணம் எரியச் சங்கடப்பட்டது. அவ்வளவுக்கு நீர் கொண்டிருந்தது.

பொழுது திரும்பும் நேரத்துக்கெல்லாம் சுடலேத் தலையை மொட்டையாக்கிவிட்டு சாம்பலாகிப் போனுள் முத்துமாரி.

மறுநாள், ரிப்போர்ட் எழுதாமலிருந்ததற்காக ஐந்து ரூபாய் கேட்டுநட்டசாதனே பண்ணினுர் கிராமமுைசு. வில்லிசேரிக்காரர் ஆள் விட்டுக் கூப்பிட்டு இழவு கேட்டார். கந்தையாவும் அவர் சம்சாரமும் ரெம்ப நேரம் வேம்படியில் நின்று ஆறுதல் சொல்லி விட்டுப் போனுர்கள்.

அழகிரி கடைசியில் வெறுப்பு மேலிடச் சொன்னுன்,

"கோட்டித்தனம் பண்ணிக் கேவலப் படுத்திருச்சே சாமி என் வகுத்துல பெறந்தது."



ஏகத் திரண்டிருந்த இருள் வடிந்து நில வெளுப்பில் ஊருணிக் கரை மரங்கள் தலே நீட்டின.

சக்கிலியக் குடியோரம் ஊருணிப் பாதை திரும்பும் முகத்தில் தீமூட்டத்திற்கு முன்னுல் குக்கிப் போய் உட்கார்ந்திருந்த கருப்பனும் சித்திரனும் அடிக்கடி தீயை ராவிப் பிடித்துச் சூடேற்றியபடி மூட்டங் காய்ந்தனர்.

விடியக்கால நேரத்தில்தான் ஊரில் எத்தனே வேலே செய்து முடிக்கிருர்கள். மயிர் குடையும் குளிர்கூட மறந்து போகிறது.

"இப்ப எல்லாம் காப்பிக் கடக்காரருக்கு ரெம்பக் கொண்டாட்டம். புருசனும் பொண்டாட்டியும் எப்ப ஒறங்குருகணும் தெரியல. எந்திரிக்காகணும் தெரியல."

கருப்பன் மூட்டத்தை இன்னும் நெருங்கினான்.

“அதானப்பா.”

‘‘வரவாசி யென்ன கொஞ்சமா வருது. இத்தினிக்காணும் ஊத்தி சர்புர்ருனு ஆத்தி வச்சா கைமேல துட்டு. அதுல யும் ஊருக்குள்ள கசபுசலு வந்தப் பெறகு போட்டி போட் டுத்தான் காப்பி குடிக்காக.’’

‘‘தினம் இட்லி வேற, வெத வெதமா வடதான்.”

பாலத்து வழியாய் பெண்கள் வரிசையாய் தண்ணீர் சுமந்து போனார்கள்.

ஒருவர் சாக்குக் கொங்காணியில் சாணிக் கூடை சுமந்து வந்து குப்பையில் கொட்டி விட்டு மூட்டத்தோரம் வந்து நின்றார்.

‘‘ஏலே சோம்பேறிப் பெய புள்ளீகா இந்தச் சண்டு சருகெல்லாம் எந்தக் குப்பையில அருச்சீகலே.’’

‘‘ஒங்க குப்பையிலதாம்னு வச்சுக்கங்களேன். சாம்பல வேணும்னு பதிலுக்கு அள்ளிப் போட்டுட்டுப் போரும்.’’

கருப்பன் அண்ணாந்து பார்த்தான்.

‘‘அதான கேட்டென்.’’

‘‘சாமி மழையா பேயுது. கொங்காணி போட்ருக்கீக.’’

‘‘மடப் பெயலே மாட்டு மோத்தரம் சாணி பட்ருச்சுனு தலையில கெட்டியிருக்கிற வேட்டி என்னாகும்.’’

அவர் வேட்டியின் ஒரு மூலையைக் கோவணமாய்க் கட்டி மிச்சத்தை முதுகு வழியாய்க் கொண்டு போய் தலைப்பாச் சுற்றியிருந்தார்.

‘‘சாமிவுகளுக்குத் துண்டு எடுக்க வேண்டியதில்ல.’’

‘‘துமுறுப் புடிச்ச பெயலே ஒனக்கென்ன சொல்றவ னுக்கு.’’

கூடையைக் கொண்டு கருப்பன் மண்டையில் பொய்யிடி இடித்துவிட்டுக் கிளம்பினார் அவர்.

''இவருக்குக் கூட இப்பக் காப்பியில்லாம வேல ஓடமாட்டங்குதாம்.''

''முத்தையா புள்ளேக்கு யோகம்.''

''என்னேரமும் ஆளுக் கூட்டந்தான்.''

''அதுலயும் பேப்பரோ என்னமோ வாங்கிப் போடுருராம்.''

''அதனாலதான் ஊருக்குள்ள பெரிய வென வந்து சேரும் போலருக்கு.''

''அதெப்பிடி..''

"பெரிய வீட்ல வாங்குற பேப்பரு மாதிரியே இவரும் வாங்கிப் போடுருராம். வேற கச்சிப் பேப்பரு போடணும்னு புள்ளாண்டங்க சொல்ருக. அதுக்கு இங்க ரெண்டு பேரு தடுதல.''

"புள்ளாண்டங்கதான் இவரவே கட வைக்கச் சொன்னுக. இப்ப அவுகளே தகராரு."

"அதுல நெறைய வெசயமிருக்கும் போல தெரியுது.''

''கொடியெல்லாம் நாட்டணும்னு சொன்னுகளாமே.''

"அத ஏன் கேக்க. அண்ணைக்கி நீ யில்லன்னு நெனேக்கென்.''

''எங்கிட்டோ போயிப் படுத்திட்டென்.''

''அண்ணக்கிப் பாரு கச்சி கொடி அது இதுன்னு பேச்சுக் கெளம்பி கடைசியில சாதியில கொண்டாந்து வுட்டுட்டாக. அதுல வந்து தெக்குத் தெரு வேதமுத்து துள்ளுன துள்ளு.''

''அவுக ஏன் துள்ளணும்."

''கடக்காரரு சாதியெல்லாம் ஒண்ணுன்னு சொன்னரு. அதேகாலா புடிச்சுக்கிட்டாக."

"அங்கபாரு. பொழுது குளிச்சு முழுகின பொண்ணு மாதிரி தகத்தகன்னு குதிச்சிட்டு வாறத. அப்பிடியே அள்ளி வாயில போட்டுக்கிறலாம் போலருக்கு.''

"எப்பிடி குளிச்சு முழுகின பொண்ணு, எங்கயாச்சும் ஒண் டிக் கெடந்து பாத்தயோ.''

''இவனுக்கு லேசாப் புடி குடுத்தாப் போதும். தீய அமச் சுப் போடு. வெயிலு வந்தாச்சு.''

''பேச்ச மறத்தாத. ஆரு குளிக்கையில பாத்த.''

''ஒளிஞ்சிட்ருந்து பாக்கணுமாக்கும், முத்தையா புள்ள சம்சாரந்தான் தெனமும் ஊருணியில அவுத்துப் போட் டுக் குளிக்குதே. இருந்தாலும் ரெம்ப மோசம்.''

"அப்பிடிச் சொல்லு. யேவாரம் மும்முரமா ஓடுதுன்ன சும்மாவா. அதுலபாதி ரெண்டு மூணு பேருக்கு மனக் கசப்பு போலருக்கு."

''அது ஒரு மாதிரிதானே.''

''ஆரு கண்டாக. இப்ப நமக்கெதுக்கு அதெல்லாம். அவுக அவுகளுக்குத் தெகஞ்சபடில்ல அது.''

''அதுசரி.''

''அண்ணக்கி சாதிச் சண்டன்னு சொன்னது...

''வேதமுந்து சண்ட போட்டதுதான. மூட்டத்த அமத்தீரு வமா.''

''அமத்து. கடக்காரரு சொன்னதும் வேதமுத்து குதிக் காக. நான் மேடையோரம் உக்காந்துருக்கென். காவக் காரரு நடுக்கடையில வெத்தல போட்டு இதக்கேட்டுட்டே குறுஞ் சிரிப்பா சிரிக்காக. கடையில கூட்டம் கூடீருச்சு.''

''சாய்ந்தரமா.''

''அதான் ஆளு ரெம்ப.''

''சாதியெல்லாம் ஒண்ணுன்னு சொன்னதுக்கா.''

''ஒண்ணுன்னு சொன்னீகல்ல அப்பிடின்ன எனக்கும் எல்லாரப்போல பீங்கான் கௌாசுல காப்பி குடுங்க. எனக்கு மட்டும் ஈயப்போகணியில ஏன் ஊத்தணும். இது தான் வேதமுத்து புடிச்சபுடி.''

''பெறகு.''

''சும்மா கெடடா. பெறக்கித் தின்னிப் பெயலேன்னு காவக்காரரு படீர்னு கேட்டுட்டாரு.''

"இது கேக்க வேண்டியதா."

''அவுகளுக்கு வந்துச்சே கோவம். யோவ் தாடி, நானு பெறக்கித் திங்கென். கூட்டி வுட்டுப் பெறக்கித் திங்கிறது ஆருன்னு நல்லா நெனச்சுப் பாரும்னு இவுக கேட்டுப்புட்டாக. அவரு தாங்கமாட்டாம நெஞ்சுல கை போட்டுத் தள்ளீட்டாரு. அந்தம்மான்னு வசவப் பொரிஞ்சு தள்ளுது.''

"எல்லாரும் பேசாமயா இருந்தாக."

'ஆரு போவா. எல்லாம் வேதமுத்த இதான் சாக்குனு அடிச்சுப் போட நெனப்பு.''

''அப்பிடியா.''

''இவுக ஆப்புடுவாகளாக்கும். படக்குனு வெளிய வந்து ரெண்டு கல்லெடுத்து கடையில எறி வுட்டாக. ஆளு கலஞ்சு ஓடியிருச்சு. வெளிய வாடா வாடான்னு சொல்ருக. கடைக்குள்ள என்னென்னமோ ஒடஞ்சு போச்சு. நடுக்கடையிலருந்து இப்பத்தான் எந்திரிச்சு வந்தாரு காவக்காரரு.''

''அவரெதுக்கு வந்தாரு.''

''அடே வீணுல எதுக்குடா தகராறுன்னு சத்தம் போட்டாரு. பின்ன என்னசாமி இவன் என்னப் போயி பெறக்கித் தின்னின்னு சொல்ருனே. இவன் ஆதியிலருந்து நக்கித் திங்கிற பெழப்ப எடுத்துவுட்டா என்னாகும். இவன் கொடல உருவி மால போடாம நகளப் போறதுல்லன்னு இடுப்பிலிருந்த கத்திய உருவீட்டு ஓடுருக. காவக்காரரு வுடல. கத்தியப் புடுங்கி தள்ளீட்டாக. அடே பாவம் கடக்காரரப் போயி எதுக்குடா அடிக்க. அவரென்ன செய்வாரு. பேண்டவன வுட்டுட்டு பிய்ய மல்லுக் கெட்றயேன்னு தட்டிச் சொன்னாலும் மடங்கல. அதுக்குள்ள கடக்காரரு கையில பலகையத் தூக்கீட்டு பாஞ்சு வந்தாரு.''

''அவரா.''

''அவரேதான். பக்கத்துல ரெண்டு பேரு இருந்துக்கிட்டு இவன்தான் ஆம்பளையான்னு முள்ளிவுடுருகல்ல.''

''எல்லாம் ஆகாத காலத்துக்குத்தான்.''

''காவக்காரரு அங்க போயி அவரச் சமாதானப் படுத்தித் திரும்புங்குள்ள இவுக முந்திக்கிட்டாக. ஒரே எறி. அவரு லேசா ஒதுங்கீட்டாரு. எறி காவக்காரரு அடப்புல வசமாப் புடிச்சிருச்சு. அப்பிடியே விருமுத்தி புடிச்சு சொவர்ல சாந்துட்டாரு.''

''அடடா காரியங் கெட்டுப் போச்சே.''

"வேதமுத்துக்குத்தான் வேதன தாங்க முடியல. மூஞ்சி இஞ்சி கெட்டிப் போச்சு. ஓடிப் போயி அவரக் கீழ வுடாமப் புடிச்சுக் கிட்டாக. சாமி குறுக்க வந்து வுழுந்திட்டீக ளேன்னு சொல்லி அழுகாறதுதான் குத்தம்."

"மத்தாளுக இவுக மேல திரும்பீருப்பாகளே."

''கசபுசன்னுக. பெரிய வீட்ல வேலைக்கிருக்காரே அவரு தான் ரெம்பத் துள்ளுனாரு. இங்கிட்டும் நாலஞ்சு பேரு தயாராத்தான் இருந்தாக. வேதமுத்து மேல மட்டும் ஆரும் கைவச்சிருந்தாக அவுக இருந்த கோவத்துக்கு நடக்கிற கதையே வேற. காவக்காரரு தான் எனக்காக ஒருத்தரும் ஏசண்டுக்கு வரவேண்டாம்னு சொல்லி கைத் தாங்கல்லயே வீட்டுக்குப் போயிட்டாரு.''

''எப்பிடிப் போனது எப்பிடி வந்து முடிஞ்சிருச்சு பாரு.''

''என்னக் கேட்டா பெரிய வீட்டுச் சம்பளகாரருக்கு கெடச் சிருக்கணும் அந்த எறி.''

''அண்ணைக்கிலருந்து காவக்காரரு சரியா காடு வெளி யேறுறது கெடையாதே.''

''வெளியேற முடியல. ஆளு கூட ரெம்ப ஒடஞ்சு போக லயோ. இன்னேரத்துக்கு அவரு சத்தம் காட்ல எப்பிடிக் கேக்கும். எண்ணைக்கிருந்தாலும் பாரு வேதமுத்துக்கு ஆரவாச்சும் கைவச்சாத்தான் கண்ணடைக்கும். அவுக ளுக்கு இது பெரிய வைராக்கியமாக்கும்.''

''இருக்காது பின்ன.''

அவர்கள் சாம்பலை அள்ளத் தொடங்கினூர்கள்.

O

மேடை வேம்பு உச்சியில் நீண்ட நீண்ட மூங்கில் கப்பு களில் இரண்டு விதமான கொடிகள் படபடத்தன.

செருப்புத் தையலுக்கிடையில் இதைக் கவனிக்கும் போதெல்லாம் அழகிரி தானூகச் சிரித்துக் கொள்வான். இதையெல்லாம் விட காப்பிக்கடையில் ஒரு கூட்டமும் மேடையில் ஒரு கூட்டமுமாய் ஒன்றுக்கொன்று கர்புர் என்று முறைத்தபடி பேசிக் காலம் கழிப்பதுதான பெரிசு.

அழகிரி இப்போது பெரிய வீட்டுக்காணியையும் விட்டு விட்டான். அன்றைக்கு அவர் கூப்பிட்டு ரெம்ப ரெம்பச் சத்தம் போட்டார். கந்தையாவுடன் என்ன சகவாசம் என்று கண்டித்தார் அவன் அதற்கு ஒன்றுமே சொல்ல வில்லை. தலையை மடக்கிக் கொண்டு இருந்துவிட்டுத் திரும்பினூன்.

மறுநாளே வண்டாரியிடம் சொல்லி காணி மாற்ற ஏற் பாடாயிற்று. அப்பையா காணியை விட்டொழித்தது போலவே இதையும் உதறிவிட்டான். முந்திக்கு இப் போது வேம்படியில் பெரும்பான்மை நேரம் உட்காரு வான்.

எல்லாவற்றையும் கந்தையாவிடம் சொன்னபோது அவர் நிதானமாய்க் கூறினூர்,

''ஊருக்குப் புடிச்ச சனியன் ஆரு தலையில விடியிதுன்னு தெரியலடா.''

இருந்தாலும் ஊர்நிலைமை இப்படி ஆகியிருக்க வேண் டாம்.

''சாமியோவ் அங்க பாருங்க. வண்டியடிப்பு எப்பிடி நடக்குதுன்னு. இவுகளுக்குள்ள புழுக்கம்ன மாடு என்ன செய்யும். வெரட்டிக் கெதிபாக்கிருகளே.''

புழுதிப்படலத்தை கண்ணைக் கசக்கியபடி பார்த்த கந் தையா செருமலுடன் முனங்கினூர்.

''இதுகளுக்குள்ளயே சண்ட வந்தாச்சுனூ வெலகி வுடுற துக்கு ஆரு வருவா. நாளைக்கு மாட்டுக்குப் பின்னூல

போகலன்னு கஞ்சி ஊத்துறதுக்கு நாதியுண்டுமா. இவுக வெரட்டி மண்ண வாரிப் போட்டாப்புல ஊருக்குள்ள அனியாய வட்டி வாங்கிறதும், அடுத்தவன் சொத்த அமுக்கிறதும் நிண்ணுறப் போகுதா. கடசி கடசின்னு இப்பிடியா வந்து சேரணும்."

''அவுக கோவத்துக்கு நான் என்ன செய்யட்டுஞ்சாமி. எனக்கு நல்லாத் தச்சுக்குடு அப்பிடின்னு என் உசிர வாங்குருக."

''ஒருநா வண்ணாங்கிட்ட மோதுனாங்களாம். சுப்பையஞசாரி வேற பொராது சொல்றுரு. அண்ணக்கிப்பாரு ரேடியோ போட வந்தவன் கிட்டப்போயி அவன் பாட்டப் போடு இவன் பாட்டப் போடுன்னு சண்டைக்கு நிக்கான். இதெல்லாம் நல்லதுக்கா தெரியல.''

கந்தையா காவல்கம்பை இறுக்கிப் பிடித்தபடி நிதானமாய் நடந்தார்.

சங்கதிகளைக்கண்டு கருப்பையாக் கோனார்தான் மனம் வெதும்பிச் சொல்லுவார்.

''ஊருக்குள்ள பெருஞ் சம்சாரி பெழைக்கணுமின்னு இப்பிடிக் கச்சி கெட்டியா வுடணும். ஊர்ச் சங்கதியப் பத்தி பள்ளிக்கொடத்து வாத்தியாருட்ட போயி கதகதயாச் சொல்றுரு பெரிய வீட்டுக்காரரு. மொதல்ல கோயிலோரம் காப்பிக் கட போடவுட்டதே வம்பு.''

அன்றைக்கு ஆவுடையிடம் சொல்ல நிறையச் சங்கதிகள் இருந்தன அழகிரிக்கு.



எண்ணெய் வற்றிய விளக்கு மாதிரி மேற்கே பொழுது கொராவிக் கொண்டிருந்தது. பருத்திச் செடிகளுக்கு நடுவே அரைகுறை வெளிச்சத்தில் கொக்குகள் வரிசை பிடித்து புழுப்பூச்சி பொறுக்கித் திரிந்தன.

காவல்கம்பை பிடரியில் பாவிக்கொண்ட கந்தையா ஓடையின் உட்பக்கம் நிழல் மூடியிருப்பதை நீளவாக்கில் பார்த்தார். அழகிரி பின்னால் நடந்தான்.

''பொழுதடையிற நேரத்துல என்னடா ஜோலி இந்தப் பக்கம்.''

''மேலப்பிஞ்சையில நாத்துப் பாரம் ஏத்துறாக. மாட்டுக்கு ஒரு கெட்டு கேக்கலாம்னு போனென்.''

''ஆரு குருசாமி நாய்க்கர் பிஞ்சையிலயா.''

''அவுக குடுக்கிறதுக்கு மனசில்லாம ஏழு சாக்குச் சொல்லி மழுப்புறாக. அவுக மகன்தான் கடசிக்கு ஒரு கெட்டு தூக்கி வுட்டாக.''

"குருசாமி நாய்க்கரே ஒரு களவாணி. அந்த மனுசன் லேசுக்குள்ள தருவாரா."

''அவரெதுக்கு களவாங்கணும்.''

''அப்பிடியா நெனச்சுக்கிட்ட. அந்த நாத்து அறுக்கிறதுக்கு முந்தி ஒருநா வேகு வேகுன்னு வந்தாரு. வந்ததே சாக்குன்னு வேதமுத்து பிஞ்ச ஒரு அரக்குறுக்கம் கெடக்கே அதுல போயி பாசிக்கொழைய நெறபுடிச்சுப் புடுங்கிறாரு. பாசிச் செடின்னா பூவும் பிஞ்சுமாக் கெடக்குது. அறிவு வேணாமா. அந்தப் பெய பெயறெடுத்தாச்சும் அஞ்சு பத்துக்குப் போட்டுக்கிருவானே."

''ஒங்களப் பாக்கலயா."

''இத்தனைக்கும் நான் அவரு நாத்துக்குள்ளதான் உக்காந்திருக்கென்.''

''சரியாய்ப் போச்சு."

''ஆளு மொகந் தெரியாறது போல நோத்தா நொம்மான்னு வசவ வுட்டென், சத்தங் கேட்டதும் பூனமாதிரி ஓடுறாரே. அவரு பாரு மறுநா எங்கிட்ட வந்து அவரு பிஞ்சையில அழிப்பு சாட்றாரு,"

அவர் இரண்டு தட்டாங்காயைப் பிடுங்கிக் கொறித்தார். அப்புறம் கம்மந்தட்டையை கம்பால் லாத்தி வளைத்து கருது கசக்கி கொம்மைபோக ஊதி வாயில் போட்டார்.

வரப்புக்களில் வாணவேடிக்கைமாதிரி சிறுசிறு விட்டிகள் சர்ரென்று பறந்து விழுந்தன.

"சாமி ரெம்ப ஒடஞ்சு போயிட்டீகளே.''

"ஏழு கழுத வெயசானப் பெறகு ஒடையாம எப்பிடி யிருப்பாக. நீ மட்டும் கொழுத்துப் போயாருக்க. நெனச்சபடி தின்னது அந்தக் காலம். இப்ப சோத்துக்கே தாளம் போடுது.''

"என்னருந்தாலும் இப்பிடிப் போகக் கூடாது சாமி. ஒடம்பப் பாத்துக்கங்க."

"என்னத்தப் பாக்கச் சொல்றடா. கூறுகெட்ட வேதமுத்துப் பெய நெஞ்சுல எறிஞ்சானே அண்ணக்கிலருந்து ஒடம்பு கெட்டது. அது நடந்து எம்புட்டு நாளாச்சு. அதப் பாக்கிறதுக்கு முடியல. இன்னியும் வலிக்குது. ஒரு கனத்த பண்டம் தூக்க முடியல."

"நீங்க எதுக்கு சாமி குறுக்க போனீக."

''போயித்தான் ஆக வேண்டியிருக்கு. அவன் மொரட்டுத் தனமா காரியத்தச் செஞ்சிட்டா பின்னால வம்பில்லடா வந்து சேரும்.''

''வீணால வம்ப இழுத்தா."

"மனசு கேக்கலயே. இண்ணக்கிக்கூட வேதமுத்துப் பெய சொல்றான். நீங்க சொல்லுங்க சாமி, குறிச்ச கெடாயப் பொலி வச்சிருவொம்னு. அதா பெரிசு. அவன வாலுருவி வுட்டா அம்புட்டுத்தான். பின்னால எல்லோருக்குந்தான கஷ்டம். மொதல்ல கொத்து வேல செய்யிறதுக அலஞ்சு போகுமே. அவன் இருக்கிற கோப்பப் பாத்தா நம்ம சொல்லக்கூடத் தட்டீருவான் போலருக்கு.''

ஊரு நெலவரம் அப்பிடியாகிக் கிருச்சு. நீங்களே சொல் லுங்களேன், சக்கிலியக்குடி மந்தையைப் போயி வளஞ்சு போட்ருக்காரே பெரிய மனுசன். எங்க பாப்பொம். தெக்குத் தெருவுல போயிக் கை வைக்கட்டுமே. எல்லாம் தொக்கறிஞ்சுக் கிட்டாக.

''ஆரு சொல்லுவா. ஒரு கை தட்டுனா ஏறுதா. அதுல என்னமோ தீப்பெட்டி யாவுசு கெட்டப் போறுராம். கோயில்பட்டிக்கு அலையா அலையிருன் மனுசன்.''

''இவரே வா."

''பெரிசும் இவரும் பங்குன்னு சொல்லிக்கிறக. நல்லா பங்கு தந்தாரே. வட்டி வாங்கி முடிச்சாச்சு இனி இதுல எறங்கியாச்சு ''

''எல்லாம் தந்தரந்தான்.''

ஓடைக் கரையில் எருமை முதுகுகள் மினுங்கின. கருவத் தூரில் கல்லாசனத்தில் ரெப்பச் சொகமாய்ச் சாய்ந்து கிடந்த கருப்பன் சன்னக் குரலில் பாடிக் கொண்டிருந் தான்.

"ஒருநா ஒரு பொழுது
ஒம்மொகத்த பாக்கலன்னு-நான்
ஒம்மொகத்த பாக்கலன்னு
ஓடக்காட்டு மண்ணெடுத்து-நான்
உருவஞ் செஞ்சு பாத்துருவென்."

அழகிரி கண் சிமிட்டிக் காட்டினான். அவர்கள் அவனை நெருங்கினார்கள்.

"ஆரது மொதலாளி சார்மானத்துல இருக்கிறது,''

கருப்பன் கண்ணைச் சொருவிக் கொண்டான்.

''மொதலாளின்னு எப்பிடி இருப்பாக.''

''சீ சின்னத் தேவிடியா புள்ள, எப்பிடி யிருப்பாகன்னு காட்டட்டுமா இப்ப.''

கருப்பன் அவர் கய்புக்குத் தப்பித்துக் கொண்டான்.

''சாமியோவ் நான் வெலகலன்னு ஒரேமாட்டா மாட் டீருப்பீக போலருக்கே.''

''சும்மாவா மூளக்குழி செதறிப் போகும்.

''நல்லாருக்கும். எடுத்துக் குடிக்கிற மனுசனப் போயி."

''போலே ஒன்ன அடிச்ச கையக் கொண்டு போயி எங்க கழுவுறது. நீ எடுத்துக் குடிக்கிறதும் ஒழுங்காக் கடசெல் லாது போலருக்கு. ஆவலாதி தாங்க முடியல.''

''பிச்சை யெடுக்கிறதில என்ன சாமி ஆவலாதி. களவாங் கள."

''கீழ வீட்டுப் பெரியம்மா ரெம்ப ரெம்பச் சொல்லுதே."

''ஆரு சீரங்காரத்தம்மாளா.

''ஆமாமா.''

''ஒங்க கிட்டயும் சொல்லீருச்சா. ஊருக்குள்ள ஒராளு பாக்கியில்ல.''

''அதென்னலே கொழுப்பு ஒனக்கு."

கந்தையாவும் அழகிரியும் கரையில் உட்கார்ந்தார்கள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லசாமி. சோறு வாங்கப் போறு சட்டியத் தொடாமப் போட்டுட்டுப் போறதுதான் உண்டு. இந்தம்மா என்னன்னு கையத் தூக்கீட்டு சொத்துனு போடுது. ஒருநா சட்டி கீழ வுழுந்து நொறுங்கிப் போச்சு. சுள்ளக்காரச் செட்டியாருட்ட புதுச்சட்டி கேட்டு வாங்கிறதுக்குள்ள வாயெல்லாம் வலிச்சுப் போச்சு."

''அதுக்காக.''

''நான் என்ன செய்யட்டுஞ்சாமி. சட்டிக்குள்ள தண்ணி கெடந்துருக்கு. மொகத்துக்கு நேர நீட்டிட்டென். வழக்கமா சொத்துனு போட்டது பாருங்க, அது மூஞ்சியெல்லாம் தண்ணி. வச வசவுதான் இருக்கே ஒரு வண்டிக்குக் காணும்.''

''ஆமலே சட்டிக்குள்ள தண்ணி தன்னறியாமக் கெடக்கும்.''

''இப்ப எல்லாம் வசுகிட்டே நல்லா போடுஞ்சாமி. போடலன்னு மாடெங்க அவுப்பென்.''

''பாத்தயாடா அழகிரி இவங் கூத்த.

''மருமகப் புள்ள கோளாருத்தான் செய்வாக சாமி.''

இடையில் கருப்பன் மாட்டைப் பார்த்து ஒரு அரட்டு விட்டான்,

''த்தாய். எங்க போற. பேசாம மேயிறயா காவக்காரச் சாமிவுக இருக்கிறது தெரியல.''

''ஏலே கொதக்குப் பெயலே. முந்தியெல்லாம் கொட்டுக் காரங்க பின்னால போவாயே, இப்பப் போறதில்லையா. அண்ணக்கி கொழலுக்காரச் சுப்புலு சொதையோட மேற்க போனானே.''

''தொரச்சியாவரத்துல எழுவுன்னு போனாக. நான் போகல.''

''ஏண்டா. போனா சோறுக்குச் சோருச்சு. துட்டும் கெடைக்குமில்ல.''

''என்ன போக்கு சாமி. போற போற எடமெல்லாம் ஒத்துக்காரந்தானா கொட்டவும் கொழலவும் சொமக்க னும். சுப்புலு அண்ணாவின்னா கொழலக் கொஞ்ச நேரங் கூடப் புடிக்கமாட்டாக. பெரிய நெனப்பு. அங்கபோயி வழிச்சு நக்குறது தெரியாது.''

''ஒரு தொழிலுன்னா இதெல்லாம் சகிச்சுத்தாண்டா போக னும்.''

''அதுமட்டுமில்ல, ரூவா வாங்குனா கண்ணுல கூடக் காட் டுறதில்ல. அண்ணக்கிப் பாருங்க மேல வீட்டுக் காரியத் துக்கு நீங்கள்ளாம் சண்ட போட்டு ரூவா அதியமா வாங்கிக குடுக்க எனக்கு கால்ரூவா குடுத்தாக. இவன் பிலிலி பிலிலின்னு அரமொழக் கொழலவச்சு தொண்டை யெல்லாம் சுண்டாம் பெடச்சு முக்கீட்டு ஊதுறதுக்கும் அவன் தினங்குனங்குனு அடிக்கிறதுக்கு மட்டும் எல்லா ரூவாயுமின்னா உசிரக குடுத்து இழுக்கானே உறுமிக் காரன் அவன எதுக்கு, மொரசெதுக்கு. இனியொண்ணு சாமி ஓயாம ஒத்தூதுறதுன்னா மனுசனுக்கு சிய்யினு போகுது. கொஞ்சங்கூட தவிப்பாற முடியல. தவிப்பா றலாய்னு செத்தநேரம் பேசாமருந்தா அண்ணாவி வெட் டப் போறது போல முழிப்பான். நான் என்ன செய்யிறது, ஒத்துவயே பாட்டெடுத்து வுட்ருவென்.''

''ஏலே இதெல்லாம் கொழுப்புத்தான.''

''இதுல ஏகப்பட்ட சிக்கலுருக்கும் போல சாமி. ஒவ் வொரு நேரம் கொமஞ்சுக்கிருவாக. மருமகன் கிட்ட கேளுங்க சொல்லுவாக.''

''அப்பிடியாடா.''

''பொதுமாட்டுத் தோல வண்டாரிட்ட வாங்கி மேளத் தட்டும் மொரசுத் தட்டும் செஞ்சிட்டு இன்னியும் பொது வுக்கு ரூவா குடுக்கல. இவங்க தலைய ஆட்டிஆட்டி ஆட் டம் போடுறான்.''

''இதுல இம்புட்டுச் சங்கதி இருக்குதா. எனக்குத் தெரி யாதே இதெல்லாம். சுப்புலு குடுமியப் புடிச்சு லாத்துறைத் தான் வசத்துக்கு வருமோ.''

"இருக்க வேண்டியதுதாஞ்சாமி. வேல வெட்டி இல்லாற சமயத்துல இதுலயாச்சும் வரவாசி வரும், அதுக்காக ஒண்ணுக்குள்ள ஒண்ணு கொமஞ்சிக்கிட்டுக் கெடந்தா கட செல்லுமா. நாலும் அனுசரிச்சுப் போகணும்."

''அமாமா பரம்பரையா இருந்துவார தொழிலக்கொண்டு செலுத்தணும்னு அனுசரிச்சுத்தான் போகணும்.''

''என்னமோ சாமி அவங்க பாடு. தனக்காத் தெரிஞ்சாச் சரிதான்.''

நிலப்பரப்பெங்கும் இருள் தூவிக் கனமேறிக் கொண்டி ருந்தது. கருப்பன் ஓடி சிதறிக்கிடந்த மாடுகளை ஒன்று திரட்டினான்.

இருட்டைத் துழாவிக் கொண்டு அவனைப் பார்த்த கந்தையா பெருமூச்சு விட்டார்.

''அவனுக் கென்னடா புள்ளையா கொள்ளியா. அவ னுந்தான் சந்தோஷமா இருக்கான்.''

அழகிரி கற்களைப் பொறுக்கி ஓடைக்குள் எறிந்து கொண் டிருந்தான்.

கருப்பனுக்குக் கலியாண வயசெல்லாம் தாண்டிவிட்டது. இதைப்பற்றிக் கேட்டால் முன்னத்தியம் பல் உதட்டைத் திமிறத் திமிறச் சொல்லுவான்,

"அதொண்ணுதான கொறச்சலு நமக்கு. சாமியோ, இன் னொருத்தி வந்தாச்சுன்னு எடுத்துக் குடிக்க ரெண்டு சட்டி வேணுமே."

''இவன் எங்கடா தங்கிக்கிறான்.''

''வடக்க ஒரு தொழு கெடக்குதுல்ல அதுலதான். எடுத்திட்டு வந்த கஞ்சிய மறவுல வச்சுக் குடிக்கிறதுக்கும், துணிப் பொட்டணத்த எரவாரத்துல தொங்க வைக்கவுந் தான் தொழுவு. மத்த நேரம் கண்ட கண்ட எடந்தான் படுக்க.''

"மாடு மேய்க்கிறதுக்கு கொத்துக் கெடைக்குமே. அத என்ன செய்யிருன்.''

"கொத்தென்ன நம்மூருக்குள்ள குடுக்கிறது தெரியாதா. குடுக்கிறத என் வீட்லதான் கெட்டிப் போட்ருக்கிருன். நடுக்கடையில அளந்து ரூவாய வாங்கி வேட்டி துண்டு எடுத்துக்கிறது. எண்ண வாங்கிக்கிறது. கோயில்பட்டி போனு நான் தான் வேட்டி துண்டு எடுத்துட்டு வருவென். இந்தத்தடவ இன்னியும் வேட்டி கேக்கல. போன வருசம் ஊருக்குள்ள எடுத்துக்குடுத்தது கிழியாம இருக்கு."

கந்தையாவுக்கு அந்தச் சம்பவம் பளிச்சென்று ஞாபகத்துக்கு வந்தது.

போன வருசம் கோடையில் மழைப்பிறப்பே கிடையாது. கருக்கூடிய மேகமெல்லாம் கால்வாங்கிக் கொண்டே போனது. களமெல்லாம் வறட்டாட்டுப் புழுக்கை. ஊருக்குள் பெரிய மனிதரெல்லாம மேடையோரம் கூடி இதுக்குப் பரிகாரம் யோசித்து கடைசியில் கருப்பன் தான் என்று முடிவுக்கு வந்தார்கள்.

அதையும் கந்தையாதான் போய்ச் சொல்ல வேண்டியிருந்தது. எவ்வளவோ தலையக் கழட்டியும் அவரை விட்டே சொல்ல வைத்து விட்டார்கள்.

கருப்பனே பக்கத்தில் அழைத்து மெல்லப் பேச்சுக் கொடுத்தார்.

''ஊருக்குள்ள மழையக் காணுமாம். எல்லாரும் பெலமாப் பேச்சுப் போடுருக.''

'மேகத்துல ஊத்து தூந்து போச்சோ என்னமோ. எல்லாரும் போயி தூர்வ எடுத்தாச் சரியாப் போகும் சாமி.''

''நீ ஒரு கோட்டிப்பெய. அதுக்கு நீ தான் காரணமாம்."

''நான் என்ன செய்வஞ்சாமி. வார மழையெல்லாம் தாக்காட்டியா வச்சிருக்கென். மாடு குளிப்பாட்டக்கூட முடியலன்னு நான் தன்னுல கஸ்டப்படுறென்.''

"நீ இங்க இருக்கிறதுனுலதான் மழ பேயமாட்டங்குதாம்."

கருப்பன் முகம் படக்கென்று மாறி இஞ்சி கட்டியது.

''இந்த வருசந்தான் இப்பிடி. போன வருசம் ஊருணி தத்தி மறுகா போச்சே, அப்பயும் நான் ஊருலதான இருந் தென்.''

"நம்ம என்ன சொல்றதுடா. ஊருக்குள்ள பெரியவுக இருக்காகளே அவுக முடிவு. நான் சொன்னதுக்கு ஒம்ம சோலியப் பாரும்னு சொல்ருன். மொதல்ல அப்பையா வுக்குச் சொல்லி முடியல. இவங்க வெளியேறுனு மழ கொளுத்தியெடுக்கும்...''

"இதெதுக்கு சாமி, நீங்க போயி வம்ப வாங்கீட்டு. எனக் கென்ன எங்க இருந்தாலும் ஒண்ணுதான். வகுத்துக்குக் கஞ்சிதான வேணும். மாடெல்லாம் அவுத்து வுடாமக் கெடந்து போகும். என்ன செய்யப் போருகளோ...வேட்டி துண்டாச்சும் எடுத்துக் குடுப்பாகளா. உடுத்துறதுக்கு துணியுமில்ல.''

"அதெல்லாம் உண்டு. ஊரு மொதல எவன் எவனே திங் கான். இதுல என்ன வந்து போச்சு.''

"என்னருந்தாலும் அததுக்கு பெறந்த ஊரு பெத்த ஊருன்னு வேணுஞ்சாமி. நான் எங்கயோ கெடந்து வந்த பெயலுங்காட்டித்தான இப்பிடி. எங்கப்பனும் ஆத் தாளும் பேதியில போனதுதான் போனகளே என் மூக்குல சாம்பலப் போட்டுக் கொன்னுக்கப்புடாதா. எனக்கூத் தான் பேதி வராமப் போச்சே.''

''ஏலே நீ என்னலே இதுக்குப் போயி பொலம்புற. இந்த ஊருல எல்லாம் வந்தட்டிப் பெயக தாம்லே. என்னமோ அவனவனுக்குக் காலம். நீ போயிட்டு ரெண்டு நாளயில வந்துரு. ஒம் பெழப்புக் கெட்டுப் போகுமேன்னுதான் பாக்கென். இல்லன்ன இந்நேரம் அவங்கள வெளாசிப் புடுவென்."

மறுநாள் மத்தியானம் சிறுசுகளெல்லாம் மழைக் கஞ்சி யெடுத்து கரைத்துக் குடித்தன. கருப்பனுக்கு வயிறு நிறையக் கிடைத்தது. கொடும்பாவி கட்டி எரித்தார்கள். ஒரு கழுதையைப் பிடித்து வந்து மொட்டையடித்த தலை யுடன் அவனை ஏற்றி கரும்புள்ளி செம்புள்ளி குத்தி தெரு

வெல்லாம் இழுத்து வந்தார்கள் அவன் கோடி வேட்டியும் துண்டும் போட்டு மந்தகாசச் சிரிப்பில் கழுதை மேலிருந்தான்.

நாலைந்து நாள் கீழூரில் போயிருந்தான். கூடிய விரைவில் ஊர்க்காரர்களே அவனைக் கூட்டி வரவேண்டிய நிலை ஏற்பட்டது.

அவன் திரும்பி வந்த இரண்டாம் நாளில் மழை சக்கைப் போடு போட்டது. மழையில் ''ஆகோ அய்யாகோ'' போட்டு சின்னப்பிள்ளை மாதிரி விளையாடி அவன் மாடுகளை வீடுகளுக்குப் பத்தினான்.

ஓடைக்கரையில் முட்டியைக் கட்டியிருந்த கந்தையாவுக்கு கால் சரிந்தது. தலையைத் தூக்கினார். அழகிரி இன்னும் குனிந்து கொண்டுதானிருந்தான்.

''ரெம்ப ரோசனையில கூடீட்டீகளே.''

''பெரிய ரோசன. இந்தப் பெய கழுத மேல பட்ணப் பிரேசம் வந்தானே அத நெனச்சுப் பாத்தென்."

''அந்தக் கூத்தவா. ஏன் இந்த வருசமும் செய்யவா.''

''இனிமே எந்த வருசமினாலும் எவனாச்சும் பேசுனான், செருப்பக் கழட்டி அடிக்காம வுடுறதில்ல. அதனால என்ன வந்தாலும் சரிதான்."

மாட்டுக் கூட்டத்திலிருந்து கருப்பன் கூப்பிட்டான்.

''சாமியோவ் வண்டி பெறப்புட்ருச்சு. வாரீகளா.''

அவன் விரிகொம்புக் கிடாரி முதுகில் உட்கார்ந்து பாட்டெடுக்கத் தொடங்கினான்.

"தாயோளி மகன் இவன் ஒரு தினுசுதாண்டா.''

கந்தையா கம்பை ஊன்றி எழுந்தார்.



அழுகிரி கைகள் களத்தில் இடைவிடாது தாளம் பிரித்துக் கொண்டிருந்தன. முற்றிலும் உதிராத கேப்பைக் கொலுக்கை மாறி மாறி கம்பால் அடிக்கையில் ஒரு சத்தம். கை தளரும் போது சிதறிய கொலுக்கைக் கம்புகள் கூட்டிக் கொடுக்கவும் மீண்டும் லயம் பிசகாத தாளம். அது கோயில் சுவரில் மோதிப் பிறக்கும் எதிரொலி.

களத்து நடுவே கருதுச்சாணை நின்றது. சுற்றிலும் வரிசை வளைந்து கேப்பைத்தாள் முடிகள். சாணைக் கம்பால் கருதைக் குத்தி கோலி வடடம் போட்டுக் கொண்டிருந்தார் கோபால் நாயக்கர் பக்கத்துக் குப்பை மேட்டில் பிணையற்கண்ணியில் மாடுகள் பெரிசாய் மூச்சு விட்டன. ஓரிரு மாடுகளின் அடிவயிற்றில் சுர்ரென்று ஒரு ஒலி. காலடியில் குப்பை மண் நமர்ந்தது.

''அடேய் பத்தீட்டு வாடா.''

கோபால் நாயக்கர் சத்தங் கொடுத்தார்.

இடவனைச் சுண்டிப் பிடித்து வலவனின் தொடையில் சாட்டை வீசிய சுடலை களத்துக்குப் பத்தினன்.

''அப்பிடியே லாயக்காச் சுத்த வுடு.''

கருது வட்டத்தில் பிணையல் மாடுகள் வலம் வரவும், குளம்பு மிதியில் கிளம்பிய கொம்மைப் படலம் பறந்தது.

அடித்து ஒதுக்கிய கொலுக்கு நொறுங்கலை சுளகிலெடுத்து ஆவுடை தூத்தினள். தூத்திய தானியத்தை தூசி துப்பட்டையில்லாமல் புடைத்துக் கல்லைக் கொளித்து ஒதுக்கினள். நல்ல தானியத்தை நாவி எடுக்கையில் கண்கள் மேலுங்கீழுமாய் உருண்டு சுளகின் அசைவுடனேயே இசைந்திருந்தன. இருந்த போதிலும் சேலைத் தலைப்பால் வண்டு கட்டிய தலை இடையிடையே பிணையல் பக்கம் திரும்பாமலில்லை.

சுடலையின் வெடிப்பான சத்தத்துக் கொருக்க மாடுகள் வேகம் சுண்டின.

''ஒம்பேரன் சூட்டிக்கையா வேல செய்யிருண்டா.''

கோபால் நாயக்கருக்கு அவன் சுறுசுறுப்பு கண்ணில் உறுத்தியது.

''அதெல்லாம் செய்வாஞ் சாமி.''

''படிக்கப் போடுற போலருக்கு.''

''என்னமோ அனுப்புறென்.''

''கருக்கடையான பெயலாத்தான் இருக்கான். கடைசி வரைக்கும் படிக்க வச்சிரு.''

''அப்பிடித்தான் நெனச்சிருக்கென் சாமி... அடே மாடு சாணி போடுது பாரு.''

வாலைத் தூக்கிய மாட்டுக்குப் பின்னால் சுடலை அவசர மாய்க் கையேந்தினான் கை நிறைய விழுந்த சாணியைக் குப்பையில் வீசியெறிந்து தரையில் துடைத்து விட்டுக் கயிற்றைப் பிடித்தான்.

''இவன் அப்பன் எங்கடா இருக்கான்.''

அழகிரிக்கு காரல் கத்தரிக்காயைக் கடித்த கமறல். கேள்வியை அத்தோடு நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று விரும்பினான்.

''அவன் எங்கேயோ வடக்க கெடக்கான் சாமி.''

அவன் குரல் இப்போது தணிந்தும் சலித்துமிருந்தது. ஆவடை கூட அவர்களைப் பார்த்தாள்.

"ஏலே பொடியா பள்ளிக்கூடத்துல படிக்கயே இது என்ன துன்னு வாத்தியாரு சொல்லிக் குடுத்தாரா.''

கோபால் நாயக்கர் பிணையல் கம்பால் தரையில் நெளிந்து நெளிந்து கீச்சிய கோட்டை போகிற போக்கில் பார்த்த சுடலை விழித்தான்.

"இதுதாண்டா நடமோத்தரம். தெரிஞ்சுக்கோ.''

"சாமிவுக பெரிய பள்ளிக் கொடத்துல படிச்சதுடா இது.''

கோபால் நாயக்கர் கண்ணை இறுக்கி மூடினார்.

"அழகிரி நீ இப்ப காணி பாக்கலயாடா."

''அதவுட்டு ரொம்ப நாளாச்சு சாமி."

''ஏண்டா.''

''சும்மா தான். ஒங்க வீட்டாளிக்கு இப்பிடி கொத்து வேல செஞ்சுக்கிற வேண்டியதுதான்.''

மத்த நேரம் மரத்துல கெடக்கிறதா.''

''தந்தொழில வுடக் கூடாது சாமி.''

''அப்ப ஒங்காணி என்னுச்சு.''

''மாடசாமிப் பெய பாக்கான். புள்ளகுட்டிக்காரன் பாக் கட்டுமே.''

''பெரிய வீட்டுக்கும் அவனுக்கும் ஒத்துப் போகுதா.''

''போகாம என்னசாமி. எல்லாம் நம்ம வச்சுக்கிறதுதான். மொதலாளிமாரு பாத்து வேணும்னு உண்டு. இல்லன்னு இல்ல.''

"நமக்கு ஒரு கூறுகெட்ட பெய பாக்கான். மனசுக்குப் புடிக்கல. இருக்கிறதே ஒரு கமல. அந்த வாலுக்கு காலுப் பக்கம் வார் தையிடான்னு வாயிப்பக்கம் தச்சுவைக்கான். என்னத்தச் சொல்ல. செலவோட செலவா அதுக்கும் கரண்டப் போட்டுத் தொலைக்கணும். நமக்கு இவனோட மாரடிக்க முடியாது. ஏன் நீ பாக்கயாடா.''

''எதுக்கு சாமி அவன் பெழப்பக் கெடுக்கனும். அவனச் சத்தம் போட்டு வைக்கென். சாமிமாருக கெணத்துக்கெல் லாம் கரண்டு போடப் போயி சக்கிலியக்குடிக்கு பெழப்பு நாயம் கெட்ரும் போலருக்கு. எல்லாம் கூலி வேலைக்குக் கெளம்பீட்டான். அண்ணக்கிப் பாருங்க, ஆருக்கோ பாத்தி கெட்டப் போயி ஏழாளு வேலைய இருவதாளு செஞ்சிட்டு வாராக. சம்பளம் எங்க வரும்.''

வாக்கூட்டு இடுக்கின் வழியாய் நாக்கு நீட்டிக் கருதை எடுத்து மாடொன்று நிமிர்ந்த போது கோபால் நாயக்கர் கத்தினார்.

''ஏலேய் மாடு கருதெடுத்திருச்சு பாரு. புடுங்கிப் போடு.''

சாய்ந்தரம் களம் நிறையக் கிடந்த தானியத்தில் அழகிரி இரண்டாம் வாளிப்புக்குப் பொலிமாரைப் பரசத் தொடங்

கியபோது பட்டறையிலிருந்து வந்த சுப்பையஞசாரி, பொலி நெடுக கோணலாய் பெரிய கோடு விழுந்திருப் பதைப் பார்த்து விட்டுக் கேட்டார்.

"என்னப்பா இது ஆளிருக்கையிலயே பொலியில பெரிய பாம்பு போயிருக்கே."

"சாமிவுக உக்காந்து வாளிச்ச தடம் அது."

ஓரந்தூர்த்துக் கொண்டிருந்த கோபால் நாயக்கர் பொய்க் கோபத்தில் சொன்ஞர்.

"ஒமக்குக் கேலிமயிருல்ல. கோவணத்துணி பட்டிழுத் திருக்கு தெரியாம."

"நல்லா கோவணங் கெட்னீக,"

சுப்பையஞசாரி அதற்கு மேல் அங்கு நிற்கவில்லே.

O

சக்கிலியக்குடி வேம்பு என்றைக்கும் போலத்தான் நின்று கொண்டிருந்தது. காலம் மாற மாற பூத்தது, பிஞ்சாகிக் காய்த்தது, பழுத்தது; பழுத்துதிர்ந்தது. காற்றுக்கு அசைந்தாடி இல்லாத சமயம் ஓய்ந்தது. வெயிலுக்கு நிழல் விரிக்கும் கொப்புக்கள் தளிர்க்கும. சில சமயம் முக்காடிட்ட மொட்டைப் பிராமணத்தியாய் பங்கரைக் கோலத்தில் நிற்கும். மீண்டும் தளிர். மரத்தின் அடிப் பாகம் மட்டும் பட்டை தடித்து அப்படியே இருந்தது.

மரத்தடியில் தையல் சாமான்களுக்கிடையே நிதமும் உட் கார்ந்தெழும் அழகிரியின் கிழட்டு நெஞ்சில்தான் எத் தனே நினேவுகள். பொழுது விடிந்தால் தையலூசியைப் பிடிக்கும் கை வாலேத் தொடும், செருப்பைத் தொடும், மண், கஞ்சி, தண்ணீர்... எதைத்தான் தொடவில்லே.

எப்போதோ சில நேரம் ஊருக்குள் யாராவது தவறிப் போனுல் எருப்புகை மண்டும் தீச்சட்டியை ஏந்திக் கொண்டு தேருக்குப் பின்னுல் தவக் தவக்கென்று மேலப் பொட்டல்வரை ஓடுவான். திரும்புகையில் தேர் கட்டிய வாரிகளிலொன்றைச் சுமந்து வருவான். இடைவழியில் கிடைக்கும் பத்துப் பதினேந்து காசுப் பிச்சை நடுக்கடை யில் வெற்றிலே வாங்க சில நாட்களுக்கு வரும்.

ராத்திரியில் மூங்கில் கம்புடன் மயானம் போய் எரியும் பிணம் எழும்ப விடாமல் அடித்துப் போட்டு, தீ மூட்டத்தில் அங்கங்கள் நெய்யுருகுவதையோ, குழல் மரம் வெடித்தது மாதிரி எலும்புச் சில் சிதறுவதையோ தீயில் இதமாய்க் குளிர்காய்ந்துகொண்டே பார்க்கும் பழைய காலத்தைப் பற்றி இப்போதெல்லாம் அவன் நினைத்துப் பார்ப்பதேயில்லை. அப்படிக் காரியங்களுக்கு யாராவது இரண்டு பேரைத் தயார்ப் படுத்தி அனுப்பிவிட்டு பொழுது இருட்டியும் இருட்டாமலேயே திருணையில் சாக்கு விரித்து முடக்கச் சொல்லும் குதுகுதுப்பு. பெரும்பாலான இரவு நெஞ்சுருக்கிக் கிளம்பும் குத்திருமலுக்கு வாயைக் கொடுப்பதிலேயே கழியும்.

மாடசாமி அடிக்கடி கேட்பான்.

''மச்சான் ஏதாச்சும் கைப்பக்குவம் பாத்தென்ன. இப்பிடியே தொரத்திக்கிட்டிருந்தா ஆளு என்னத்துக்காகும். எக்குத்தெப்பா சாஞ்சுக்கிட்டா என்ன செய்ய. முன்னப் போல அந்தக்காளுக்கும் முடியல.''

''போடா போ. ஊருக்குள்ள தங்கமான உசிரெல்லாம் தூக்கிக் குடுத்துட்டுருக்காக. எனக்கு வந்தா என்ன, எனக்கு ஏகப்பட்ட நாளுக் கெடக்கு.''

அவன் நரையயிருக்குள் விரல்விட்டு சொறிந்து கொண்டே முகஞ்சுண்டிச் சிரிக்கும்போது மாடசாமிக்கு எதுவுமே விளங்காது.

''ஆமா எதுக்கெடுத்தாலும் இப்பிடித்தான்.

''ஏன் உசிர நீ தாக்காட்டீருவயா இல்ல நான்தான் புடிச்சு வச்சுக்கிற முடியுமா.........ஒன் மகன எதுக்குடா காடா வழியா அலைய வுடுற. கொஞ்ச நாளைக்காச்சும் பள்ளிக் கொடத்துக்கு அனுப்புறதுதான. சொடல கூட தொணைக்குத் தொணையா போவாமில்ல. முந்திப் பெத்தது மூணுந்தான் சும்மா கெடக்குதுன்னு கடசிப் பெயல வாச்சும் அனுப்பலாமில்லடா. பண்ணியாத் திரியிருன் மந்தக்காடெல்லாம்.''

''அவன் படிச்சு ரெண்டாக் கிழிச்சான். கழுத என்னமோ திரியுது.''

''அப்பன் புத்திதான புள்ளைக்கிருக்கும்.''

அதுக்குமேல் இருந்தால் வசவுதான் என்று மாடசாமி மெல்ல நழுவி விடுவான்.

வீரிகூட எத்தனையோ நாள் சுடுதண்ணீர் போட்டுக் கொடுத்திருக்கிறாள். அவள் மகள்தான் அவ்வப்போது சில்லண்டி வேலை செய்து கொடுப்பாள். ஆவுடை உலக்கை பிடித்தால் கைமாற்றுவாள். அதுகூடச் சமைந்து நாலைந்து மாசம் ஆயிற்று.

அழகிரி ஆவுடையிடம் அடிக்கடி சொல்லுவான்.

"மாடசாமி மக மூக்கும் முழியுமா நல்ல பொம்பளையாப் போறா. சமஞ்சப் பெறகுதான் புள்ளையப் பாத்தாப்புல ருக்கு. அவள உள்ளூர்லதான் எவனுக்காச்சும் புடிச்சுக் குடுக்கணும். மூத்த பெயலுக்கு ஒரு கட்டையப் போட ணும். மாடசாமி என்னன்னு கவலையத்து அலையிறான்."

ஆவுடையும் முன்னைப்போல் காடுகரை போவதில்லை. எருமைக் கிடாரியை மந்தையில் லாத்திக் கட்டி வீட்டுச் சோலி பார்ப்பதோடு சரி. எப்போதாவதுதான் வீரியுடன் கொத்து வேலைக்குப் போக முடிந்தது.



நல்ல நாளைக்கு வீடெல்லாம் தோசைக்குப் போட்ட முப்புரத்தில் சக்கிலியக்குடிப் பொடிசுகளுக்கு இரவு முழுக்கத் தூக்கம் கிடையாது. மாவாட்டும் நேரம் உரலைச் சுற்றி வந்ததிலிருந்து விடியக்காலம் தோசை சுடும் வரை அவர்களின் கும்மாளம் ஓயவில்லை. அடுப்படியில் பூனையாய் உட்கார்ந்து சுடச்சுட இரண்டு தோசையைப் பிய்த்துப் போட்டால்தான் ஆவல் அடங்கும்.

தலைக்கோழிச் சத்தத்துக்கெல்லாம் எழுந்து புளித்திருந்த தோசை மாவைக் கரைத்து அடுப்பு மூட்டிய ஆவுடைக்கு தீச்சூடு இதமாயிருந்தது. இரண்டு தோசை போட்ட பின் திருணையில் படுத்திருந்த அழகிரியைப் பார்த்தாள்.

சுடலை இன்னும் விளையாடிக் கொண்டுதான் இருந்தான்.

"ஓசே சூடு. ஏமி ஒறக்கம். தோலுக தோலுக தோச பெட்டுக."

அழகிரி நெளிர்விட்டுக் கொண்டே புரண்டான்.

''ஏமி தோசம்மா. உஞ்சுக.

அவன் எழுந்து வாயைக் கொப்புளித்து விட்டு அடுப்போரம் உட்கார்ந்தான்.

''இந்தப் பெய எங்க போயிட்டான். இன்னேரம். ஆளக் காணுமே.''

தோசை மாவை அகலித்து இளுகிக் கொண்டே ஆவடை சொன்னாள்.

''வெளிய கும்மாளம் கேக்குதுல்ல. சின்னதுகளுக்குச் சந்தோசம் சொல்ல முடியல.''

தோசைச் சட்டியின் 'சுர்' ஓசையையெல்லாம் தூக்கியடித்து வேம்போரம் விளையாடிய சிறுசுகளின் சத்தம் கேட்டது.

பாட்டுத் தோரணையைப் பார்த்தால் கொடுக்குப் பிடித்துத் தான் விளையாடவேண்டும். மாடசாமி மகன் குரல் தனியாகவும் மற்ற கோஷ்டியின் குரல் தொகுப்பாயும் வந்தது.

"பல்லே வலிக்குதே "
"நெல்லக் கொறிச்சுக்கோ.''
"பாக்கு வெட்டியக் காணுமே."
"தேடி ஓடிப் புடிச்சுக்கோ "
"கத்தி.''
"என்ன கத்தி."
"மாடறுக்கிற கத்தி."
"சே சே சே.''
"கத்தி ''
"என்ன கத்தி.''
"கோழியறுக்கிற கத்தி.''
"வா வா வா.''

அடுத்து தொட்டுப் பிடிக்கும் ஆரவாரம்.

அழகிரிக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

''பெயகளுக்கு ஆசையப்பாரு. மாட்டுக் கறியே கெடைக்க மாட்டங்குது. கோழிக்கறி வேணுமாம்.''

"சின்னதுக படிச்சுக் கிருச்சுக.''

''பெய வந்தா தோச சூடா திம்பானே.''

''வருவான் பாரு இப்ப. பொட்டியாருக ஆட்டம் போடு றதே அதுக்குத்தான.''

கருப்பன் எங்கிட்டுக் கெடக்கானோ. வந்தாக் கூட தின் னுட்டுப் போவான்.''

''நானும் நெனச்சென். சொடல வரட்டும் உசுப்பீட்டு வரச் சொல்லுவொம். வேலு வீட்டுத் தாவாரத்துலதான் கெடப்பான்.''

''கருப்பன் பண்ணீருக்கிற கூத்தப் பாத்தாயா. தொவுக் தொவுக்குனு ஒரு அய்யரு இந்தப்பாத போவாருல்ல, அய்யங் கொளத்துக்கு.''

"கரையில தொளசி புடுங்கீட்டு அலேயிவாரே.''

''அவரேதான்.''

''அவருக்கென்ன.''

''நேத்து பள்ளிக் கொடத்துப் புள்ளீகளக் கூட்டி அவ ருட்ட வெளேயாட்டுக் காட்டீருக்கான்......வாங்க வாங்க பெரியாளு. வெளேயாட்டிடல்லாம் முடிஞ்சதா. உக்காந்து தோச திங்கிறது."

சுடலே வந்ததே சரியென்று தோசையைக் கவ்வினான்.

"உக்காந்து தின்னுடா.''

''நான் வெளேயாடப் போகணும். ஒளிஞ்சு வெளேயாட ணும்னு சொல்லி எல்லாரவும் வீட்டுக்குப் போயித் தோச திங்கச் சொல்லீட்டு ஒசியன் பெயல தொட்டுப் புடிக்க வச்சிட்டு ஓடியாந்துட்டென். அவன் பாரு கோழி வா குஞ்சி வான்னு கத்துறத."

"அதிருக்கட்டுமே, நேத்து அய்யர என்னத்துக்குப் பாடாப் படுத்துனீக. அது கொளுப்புத்தான. அவரு மூக்கால அழு துட்டுப் போருராமில்ல.''

"நாங்க ஒண்ணுஞ் செய்யல. கருப்பன்தான் அப்பிடிச் செய்யச் சொன்னுன்."

அவருன்னு வையிருரு. அட தும்பத் தேவிடியா மக்கோ வெலகிப் போங்கடேன்னு ஓயாம வசாரு. நாங்க எல்லாரும் பொஸ்தகம் பாக்கிறது போல பாதைய அடச்சிட்டு வந்தொம். அய்யரு மாட்டப்பாத்து வெரண்டு அங்கிட்டு வெலகிஞரு. அம்புட்டுத்தான் தொட வெரைக்கு எறங்கி, அடே கருப்பு கருப்புன்னு கூப்பிட்டாரு. நாங்க ஓட்டமா ஓடியாந்துட்டொம்."

''எம்புட்டுக் கொழுப்புனு பாரு. இவன் அவரப் புடிச்சு மல்லாடித் தூக்கி வுட்டாலும். அவரு நாலு நாளெக்கு கஞ்சி குடிக்கமாட்டாரு.''

இதற்குள் தோசையைக் கால்சட்டைப் பைக்குள் வேண்டிய மட்டும் திணித்த சுடலெ தப்பிக்கத் தயாராஞன்.

"ஏலே வேலு வீட்ல கருப்பன் கெடப்பான் உசுப்பி வுட்ருடா.''

''நான் வெளெயாடப் போறேன்.''

அவன் ரெம்பதூரம் ஓடிவிட்டான்.

அழகிரி திருணெக்கு வந்து மல்லாந்தான். கூரை முகட்டில் ஒரே இருட்டாய்க் கூடியிருந்தது. தோசைச் சத்தம் தவிர அவனுக்கும் ஆவடைக்கும் பேச்சுத் தீர்ந்துவிட்டது.

"இந்தா ஓடுருனே இவன் ஆளு இப்ப எம்புட்டுத் தெரண்டுட்டான். கையில புடிக்க முடியல.''

அவனுக்குப் பலப்பல நினைவுகள். இப்படி எத்தனேயோ நல்லநாளெக்கு முத்துமாரிதான் தோசைசுடுவாள். அவன் கொட்டாவிக் கிடையில் தோசைகளெப் பிட்டு உள்ளே தள்ளுவான். அவளுக்குப் பதில் சொல்லித் தப்பிக்குமுன் போதும் போது மென்ருகி விடும்.

'இப்பிடிப் பண்ணீட்டயேம்மா. ஒன்ன நான் வளக்கப் பட்டபாடு. அந்தச் சக்கம்மாளுக்குத்தான் தெரியும். ஒன்ன நம்பி உசிராக் கெடந்தாளே ஆவட. அவள மோசஞ் செய்யலாமா.'

ஆவடை, முத்துமாரியை ஒரு மூச்சு சுமந்தே இடுப்புக் காய்த்துப் போன காலமும் உண்டு. காலில் கடிவாளப் புண் வந்து ஈக்கடிக்கு ஆற்றாமல் நொய் நொய் யென்று அழுவாள். தூக்கி இடுப்பில் வைத்தால் சனியன் பிடித்த ஈ ஓடி ஓடி மொய்க்கும். முந்திச் சேலையை வாகாய் இழுத்து காலிரண்டையும் மூடிக்கொண்டால்தான் உண்டு. கொஞ்ச நேரத்தில் சேலை புண்ணில் அப்பிக் கொள்ளும். அதைப் பிய்த்தெடுக்கச் சங்கடம். அவளை உட்காரவைத்து துணியில் சுடுசாம்பலை அள்ளி புண்ணெல்லாம் பொதும்ப ஒத்தியெடுக்கணும்.

ஒரு தடவை புண்ணிலேயே கோழி கொத்திவிட்டது. ரத்தம் வடியவும் அழுதாளே பார்க்கணும். அவளை அமர்த்தப் பட்டபாடு.

வீட்டில் என்னேரமும் கஞ்சிப்பானை காலியாயிருக்கக் கூடாது. அவள் கஞ்சி கேட்பது இன்ன நேரந்தான் என்றில்லை. வாசல்படியில் காலாட்டிக் கொண்டே சாப்பிடுவதைப் பார்த்ததும் அவனுக்குச் சும்மா இருக்க முடியாது.

"வகுத்துக்குள்ள இனியெந்த எடத்துல பாக்கியிருக்குது."

உள்ளிருந்து ஆவடை குரல் கேட்கும்.

"பேசாம இருந்தென்ன. குடிக்கிற புள்ளையப் போயி அந்தானக்கி ஏழெட்டு காலக் கெட்டீட்டுத் திரியிறதாக்கும் வீட்ல.''

இதற்குள் வெட்கப்பட்டு கஞ்சிச் சட்டியைத் தூக்கிக் கொண்டு அடுப்படிக்கு ஓடியிருப்பாள் முத்துமாரி.

அவனுக்குக் கஞ்சி போட ஆவடை பானையைத்திறப்பாள். அவன் அக்கறையாய்ச் சொல்வான்.

"புள்ளைக்கு வச்சிட்டு மிச்சத்தப் போடு."

ஒவ்வொரு நாளைக்கு ராத்திரிக் கஞ்சிக்கு நேரமாகி விட்டால் வீட்டு மூலையில் குதிரைவாலிக் கருது மிதித்த மாதிரி காலை உதைந்து அழுவாள்.

கலியாணம் முடித்து வெளியேறும் வரை வளர்த்த பூனை மாதிரி ஆவடை காலுக்குள்ளும் கைக்குள்ளுமாய் வளைய வளைய வருவாள். எதுக்கெடுத்தாலும் ஆவடைக்கு ''முத்து'' தான். அழகிரியைக்கூட தூரத்திலிருந்தால்

''ஓசே முத்து'' என்று கூசாமல் கூப்பிடுவாள். கலியாணத்திற்குப் பிறகு ஆவடைக்குக் கையொடிந்த மாதிரி இருந்தது.

"அவளத் தவிக்க வுட்டுட்டேயம்மா ஆதரவில்லாம. ஒவ்வொரு நாளைக்குக் கோடிக் கண்ணீரு அழுகுருளே.''

கடைக் கண்ணில் குளிர்ந்த நீர்த்துளிகளைத் துடைத்துக் கொண்டு அழகிரி எழுந்த போது ஆவடை முற்றந் தெளிக்கும் சத்தம் கேட்டது.

''ஏ ஆவட, இன்னியும் இந்தப் பெயலக் காணும் பாரு. அப்பிடியா வெளையாட்டு வேண்டிக் கெடக்குது.''

''எங்கேயோ ஓடீறப் போருனுக்கும். வந்து சேருவான் தன்னால. என்னேரமும் கூடயே இருக்கணுமா.''

இன்னொரு பக்கத் தெளிப்புக்கு அவள் சாணி கரைக்க ஆரம்பித்தாள்.



சந்தையா சிதையில் எறிந்து கொண்டிருந்தார். இருட்டில் குலுங்கிகுலுங்கிப் புலம்பிய அழகிரியைத் தேற்றிய மாடசாமிக்குக் கூட அழுகையை அடக்க முடியவில்லை.

''என்ன மச்சான் சின்னப்புள்ள மாதிரி அழுதுகிட்டு. போன உசிரு திரும்பி வரப் போகுதா. பாதையப் பாத்து வீட்டுக்குப் போ. நாங்க இருந்து முடிச்சிட்டு வாரோம்."

''நான் போக மாட்டம்ப்பா போக மாட்டென். ரோசனகாரச் சாமீ ஒங்கள எங்கையாலயா எரிக்கணும். எம்மக சாகயில கூட நான் மனசு வுடலயே. நான் ஆருட்டப் போயி ரோசனைக்கு நிக்கட்டும்.''

கையில் வைத்திருந்த பிரேதக் கம்பில் முட்டி உழன்ருன் அழகிரி.

சிதையில் தீ புகைந்து நாக்கு நீளத் தொடங்கியிருந்தது. தலைமாட்டில் கருப்பன் திகைப்பூண்டில் மிதித்தவன் போல் உட்கார்ந்திருந்தான். சுற்றிலும் மூன்று பேர் இருந்தனர்.

''ஊருக்குள்ள ஒரு தாட்டிக்கமான மனுசன் இருந்தாரு. அவரும் போயாச்சு. இனி எல்லோருக்கும் கொண்டாட்டந் தான்."

"ஏழ பாளைய எப்பிடின்னு கேக்க நாதியில்லயே.''

''மூணு புள்ளையுந் தாயும் அனுசரணையில்லாம இருக்கு. ஒண்ணுக்காச்சும் கலியாணம் முடிச்சுப் பாக்கல."

''அதுதான பெரிய பாதரவா இருக்கு.''

"ரெண்டு நாளைக்கு முந்தி நான் பாத்துட்டு வந்தனே. அப்ப நல்லாருந்தாரே "

அழகிரிக்கு அந்த நிகழ்ச்சி நினைவில் மோதியது.

அவனுக்கு ஆள்விட்டுக் கூப்பிட்டிருந்தார் வழக்கம்போல் வீட்டில் எட்டிப் பார்த்த போது தூக்கி வாரிப்போட்டது.

தாழ்வாரத்தில் நார்க்கட்டிலில் சோர்ந்து கிடந்தார். முகத்தில் களையே இல்லை. காவல்கம்பு மூலையில் சாத்தியிருந்தது. ஒட்டிய உதட்டில் ஈரமில்லை. திருகிவிடாத மீசை கீழ்வாக்கில் தொங்கியது.

அழகிரி வெளிவாசலோரம் நின்றுகொண்டிருந்தான். அவர் மெல்ல கண்திறந்தார். லட்சுமி அவர் முகத்தைத் துடைத்து விட்டது. தலைமாட்டில் பெரிய பெண்கள் இரண்டும் கண்ணீர் பொருமி நின்றனர். அவர் வாசலை நோக்கினார்.

'இட்ட ராரா.''

அவன் தயங்கி வந்து கால்மாட்டில் நின்றான்.

''எங்காலமும் ஒடியடஞ்சிருச்சுடா.''

கட்டில் விளிம்பில் அறுந்த நாரை நெரரண்டிக் கொண்டிருந்தது லட்சுமி.

"அப்பிடிச் சொல்லாதங்க சாமி.''

''இனியென்னடா பெழப்பு. எந்திரிச்சு காவக்கம்பு தூக்குற நாளும் வரப் போகுதாக்கும்.''

''ஒங்களுக்கு இப்ப என்ன சாமி வந்திருச்சு. புள்ளீக அழுகுது பாருங்க, மனசத் தெடப்படுத்திக்கங்க.''

''கோட்டிக்காரா, நான் தெடமத்தான பேசுறென். மனசுல தெம்புதான். ஒடம்புலதான் இல்ல.''

"திடீர்னு சாஞ்சுக்கிருவீகன்னு ஆரு கண்டா.''

''நல்லாத்தான் திரிஞ்செள். அண்ணக்கி பேசிட்டிருந்திட்டு வந்தனே அதோட படுத்தவன்தான். நெஞ்சு பூரா ஒரே வலி. வுடாத காச்சல்.''

''காச்சலென்ன செய்யும்.''

ஒரு நாளும் சட்டடியாப் படுத்தது கெடையாது. அதுக்கு வட்டி வாசியா வந்து இப்ப வந்து அமுக்கீருச்சு. என்னத்த எந்திரிச்சுக்கிற மாட்டென் போலருக்கே. கொஞ்ச நாளைக்குத் தெடமாருந்தா புள்ளைகளக் கரையேத்தீருவென்.''

லட்சுமி சத்தமின்றி பலமாய் அழுதுகொண்டிருந்தது.

''நீ ஏம்மா அழுகணும். எம் புள்ளீக கூனு குருடாவா பெறந்திருக்கு. இல்ல பாடுபடத் தெரியாதா. பணக்காரருக்கு ஒரு கருவக் கொப்புன்னா இதுகளுக்கு ஒரு கிளுவக் கொப்பு கெடைக்காமயா போகும். புள்ளீகளுக்கு நல்ல நாள் பாத்து எண்ணெயுஞ் சோறும் ஊட்டுவான். நான எம்புள்ளீகளுக்கு வண்ணாத்தி கஞ்சிப் பானையிலருந்து எடுத்து ஊட்டுனென். அதுதான் இண்ணக்கி அதுகளுக்குப் பல சோறு கெடைக்குது.''

''மனசு ஒடையாதங்க சாமி.''

"எதுக்கெல்லாமோ கவலப்படல இனியென்னடா. நேத்து வந்து பாத்திட்டுப் போறான் குருசாமி நாயக்கர் மகன். அவனெல்லாங் கூட ஒரு காலத்தில் ஒமக்கென்ன தெரீயும் மாட்டப் பத்தின்னு கேட்டவந்தான். ஆனைப்பட்ட சம்சாரியெல்லாம் மாடு புடிச்சிட்டு வந்தா மெனக்கிட்டு என்னக் கூப்பிட்டு வெல மதிக்கச் சொல்லுவான். போன வெதப்புக்கு கெங்கு ஆளு வுட்டாளாம் லெச்சிமிக்கு, சாலு

வெத போட வரமுடியுமான்னு. இதுக்கெல்லாம் நான் வருத்தப்படலடா.''

அழகிரிக்குப் பேச வாயில்லே. மீண்டும் அவரே பேசத் தொடங்கினர்.

''கொஞ்சம் முந்தி வேதமுத்துப் பெய வந்து பொம்பள மாதிரி அழுதுட்டுப் போருன். அவன் மனசென்ன தெம் பென்ன, அழுகையான அழுக அழுதாண்டா.''

அவருக்கு மூச்சு முட்டியது. இளேத்தார்.

அழகிரி ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுத் திரும் பினன்.

அவர் இறந்து போனதை அவனல் கற்பனே பண்ணிக் கூடப் பார்க்க முடியவில்லே. ஆனல் அவர் சாவு வீட்டுக் குள் அவர் மக்கள் ஓலமிட்ட ''ஓயம்மா'' அழுகையில் நிரூ பணமாகியது.

மதியம் அந்த வீட்டுக்கு முன்னல் கொட்டுச் சத்தத்தின் ஆட்டம் பாட்டம் தவங்கியே கேட்டது. பாட்டின் அடிக் கொருக்க வானம் பார்த்து இரையும் சுப்புலுக்குக் கூட குரல் அடைத்து அடிக்கடி எச்சை விழுங்குவதும் சீவா ளியை நிமிண்டுவதுமாயிருந்தான். சாதாரணமாய் சீவா ளியை வாய்க்குள் திணித்தால் சாமானியத்தில் வெளியே எடுக்கமாட்டான்.

தீயாரவாரம் தணிந்து உள்வெடிப்பில் பிணவாடை அதி கம் மண்டியது. சிதறிய எலும்புகளேக் கூட்டி உள்ளே தள்ளினன் கருப்பன். வெளிச்சத்தில் அவன் அழு தோய்ந்த சுவடு தெளிவாய்த் தெரிந்தது.

மற்றவர்கள் உட்கார்ந்தபடி உறங்கிப் போயிருந்தார்கள்.

கந்தையாவுக்கு கருப்பன் செல்லப்பிள்ளே போல. சில நாட்களில் மெனக்கிட்டு நடுக்கடைக்குக் கூட்டிப் போய் தின்பதற்கு வாங்கிப் போடுவார். காடுகரையில் அவன் மனம் உருகிப்பாடுவதை மரத்தடியில் படுத்தபடி கேட்டுக் கொண்டிருப்பார். குளிர் காலங்களில் பழைய துண்டு வேட்டி தருவார். இனி செல்லமாய் வைவதற்கு யார் இருக்கிருர்கள்.

அழகிரி மறுகி மறுகிக் குமைந்தான்.

சுடலைப் பயலைக் கண்டால் சும்மா போகமாட்டார். அவ னோடு கேலி பேசி அலைக்கழித்துக் கடைசியில் அவன் கை யில் காசு கொடுத்துவிட்டுப் போவார். அழகிரியிடம் அடிக்கடி சொல்வார்,

''ஒம் பேரன் கெட்டிக்காரண்டா. வெடிப்பான பெய. பெழச்சுக்கிருவான். கஸ்டத்தோட கஸ்டமா படிக்க வச்சிரு. அதில்லாம ஒன்னோடயே மரத்தடியக் காக்க வச் சிருத.''

சொல்லி ஒரு வாரங்கூட ஆகவில்லை. அதற்குள் இப்படி யாயிற்று. ஆவடை அதைச் சொல்லிச்சொல்லி அழு தாள்.

மனுஷன் ஒரு வீச்சில் நீந்து விட்டாரே.

சாம்பலைக் கூட்டிக் குமிக்க கருப்பன் பகடைகளை எழுப்பிய போது நன்றாய் விடிந்துவிட்டது.



"சாமியோவ் இப்பிடி ஓரெட்டு வந்துட்டுப் போங்க."

அவசரமாய்க் கடவுக்குள் பாய்ந்த குருசாமி நாயக்கர் மகன் அழகிரியைத் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் சுண்டுதல்.

''வக்காளி இருப்பா வாறென். மனுசனுக்கு முட்டீட்டு வருது. தமத்துக்கா சொல்லீருக்கான், ஆத்தரத்த அடக்கு னாலும் மோத்தரத்த அடக்க முடியாதுன்னு.''

''மோத்தரம் மோளுறதுக்கு சக்கிலியக்குடி கடவுதானா கெடச்சது.''

அதற்குப் பதில் சொல்ல அவருக்கு அவகாசமில்லே. நேரங்கழித்தே திரும்பினர்.

''சக்கிலியக் குடியில இருக்கணும்னுதான பொட்டணங் கெட்டீட்டு வாராக. அந்தச் செருப்பத் தச்சுக் குடுக்கச் சொல்லணும்னு வந்தென். கட்டிக் காட்ல செருப்பில் லாம நடக்க முடியல காலு வலின்னு ஒருநா வீட்ல ருந்தா அய்யா உரிச்ச வாழப் பழமாத்தான் இருக்காரு, மாடு வீட்ல கெடக்க வேண்டியதுதான்."

''இனிமேப் போயி அவர ஏருப் புடிக்கச் சொல்றதுக்கு வெக்கமா இல்ல ஒங்களுக்கு.''

''ரெம்ப ஒத்தாசனதான். ஒன்னப் போல இப்பிடி மரத் தடியிலயே கெடக்கணும்ஞ ஊராளுக்கத்தபடி எங்க வெளேயும்.''

"எங்கத வேற. இது நொண்டிக்கோழி. ஒரக்கடதான் தஞ் சம். பெரிய சாமிவுகளுக்கு வேல செய்யணும்னு என்ன ஆத்தரம். நீங்களும் நாளேக்குப் புள்ள குட்டியப் பெத்து தலேயெடுத்தாச்சுனு அப்பிடித்தான்.''

"உள்ளதுக்கே மோசம். புள்ள குட்டிக்குப் போயிட்டான்."

''நீங்களுந்தான் திரிஞ்சு பாக்கீக. ஒண்ணும் ஆகலயே. நான் குஞ்சம் வச்சு செருப்புத் தச்சுக் குடுக்கென். அதப் போட்டு நடங்க பாப்பொம். அப்பிடியே சொக்க மாட்டா களோ.''

''வழியில உள்ளவுக மசங்கி பொத்துனு வுழுவாக. வக் காளி இவன் செருப்புலயில்ல வசியமிருக்காம். அவனவன் காஞ்ச மாடு கம்புல வுழுந்தாப்புல அலேயிருன்.''

''அப்பிடியா நெனச்சீக. நம்ம செருப்பப் போட்டு நடந்தா தெலா எறவையில மாப்பிலாணிக் குஞ்சு மாதிரி கிரிச்சட்டம் போடாதோ. இதெதுக்கு, ஒங்கய்யாட்டச் சொல்றென். பேசாம கலியாணத்த முடிச்சிருவொம்.''

''சும்மா கெடப்பா. அவரு பொட்டிக்குள்ள பூட்டி வச்ச துட்ட வெளிய எடுப்பாராக்கும் லேசுக்குள்ள. அவருங் குடுப்பாரு நானும் முடிச்சிருவென். அதக்காட்டி, சக்கிலி யக் குடியில ஒரு பொண்ணக் கெட்டி வீட்டுக்குக் கூட்டீட் டுப் போனத்தான் வசத்துக்கு வருவாரு."

''சக்கிலியக் குடியிலதான, குடுப்பாக குடுப்பாக. இன்னொரு மகன்னு ஓடி ஓடித் தருவாக.''

"சரிப்பா குடுக்கலன்னு வச்சுக்கிறட்டும். நான் தம்பட்டக் காளையாவே அலையிறென்.''

''ஒங்களுக்கென்ன பெரிய எடத்துல எறங்கப் போறீக. வெருசனு முடிச்சுச் சோறு போடுங்க. தாடி நரச்சப் பெறகா மாப்பிளையாகப் போறீக.''

''இத எங்கிட்டக் கேட்டா எப்பிடி. எங்கய்யாட்டக் கேக்க வேண்டிய கேள்வி.''

''அவுகட்ட ஏன் கேக்கிறது. நீங்கதான் எல்லாம் தெகச் சுட்டீகளாமே. அந்தா மந்தையில கெட்ருகளே தீப்பெட்டியாவுசு. அதுக்கு நீங்கதான் மொதலாளியாம். கெட்டடம் வேகமா எழும்புவதைப் பாத்தாலே தெரியுதே.''

''இதென்னப்பா புதுசா கரடி வுடுற.''

''ஊருல எல்லாரும் பேசருக. நீங்க ஒண்ணுந் தெரியாறது மாதிரி இருக்கீகளே.''

''அந்த வீட்லயா. மனுசன் காலெடுத்து வப்பானு. கைக்குள்ள வெண்ணெய வச்சிட்டு நெய்யிக்கு அலைவாகளா. தாய்மாமன் தான் தயாரா இருக்கானே.''

''அண்ணாக்கி வந்தாரே அவரா. வெயசு ரெம்ப ஆச்சே.''

"அவளுக்குன்னுப்புல கொஞ்சமா. நேத்துத்தான் சடங்கானாளாக்கும். இந்தப் பேச்ச எங்க அய்யாட்டச் சொல்லிப் பாத்தாத் தெரியும்.''

''அவருட்ட எல்லாம் கேட்டுப் பாத்துட்டென்.''

''கேட்டுட்டுத்தான் என்ன நோட்டம் பாத்தயாக்கும்.

''மேல வீட்டுச் சம்மந்தம் கண்ணுல முழிச்சாலும் ஆகாதுன்னுட்டாக.''

''பெறகு.''

''காவக்காரரு பொண்ணுமேலதான் பிரியமிருக்கு. மூத்தவுக வீட்டுக்குப் பொருத்தமானதுதான். ஒங்க மனசப்

பத்தியும் சொல்லீட்டென். எப்பிடியும் ஒரு கட்டையப் போட்றணும்னு கண்டிப்பாச் சொல்லீட்டாக. அதுல வேற தாட்டோட்டமில்ல. இனி ஒங்க மனசப் பாத்துக்கிற வேண்டியதுதான்.''

''என் மனசென்ன ஒனக்குத் தெரியாததா. இப்ப வேற அளந்து பாக்க.''

''ஒரே மனசாச் செய்யிங்க சாமி. குடும்பம் நல்லாருக்கும. காவக்காரரு வீட்டுப் பூச்சம்மாட்ட வுட்டுச் சொல்லிப்புட்டென். அவுக கண்ணுக்குப் பின்னால அப்பிடியொரு நல்லகாலம் வந்தா எல்லாருக்கும் நல்லதுதான்னு பெருந்தன்மையாச் சொல்றாக.''

"நான் இனியொண்ணு சொன்னனே அதக் கேட்டயா."

''எது கடச் சமாச்சாரமா. அதவுஞ் சொன்னென். இப்பிடியிப்பிடி நடுக்கடக்காரரு இனியொரு கடைக்கு எகஞ்சு வாராக, அத நீங்க வச்சு நடத்துங்க, சாமான் எல்லாம் வாங்கிப் போடுவாகன்னு சொன்னென் அன்னாடு ஒழச்சுனாலும் காச்சிக் குடிச்சிருவென். இனிமேப்பட்ட பச்சத்துல, ஊருத் தொறட்டு நமக்கு வேணும். அதெல்லாம் ஒங்க சாமிவுகளோட போச்சுனு சொல்லீட்டாக.''

"நான் நெனச்சதுதான்."

''நீங்களே வீட்டோட போயிருந்து வீட்டுக்கு ஆம்பளையா நிக்கலாம்.''

''எங்கய்யா வுடுவாராக்கும்.''

"நல்ல காரியத்துக்கு எல்லாம் உண்டு. மொதல்ல வீட்ல மாலபூக்கட்டும். பெறகு பாத்துக்கிறலாம்."

"என்னமோப்பா அப்பிடித்தான் நெனச்சிட்ருக்கென்."

''இனியொண்ணு கேக்கணும்னு இருந்தென் சாமி.

''என்னது.''

''காப்பிக்கட போடுசா ஓடுச்சே. இப்ப கொஞ்ச நாளா தூங்கீட்டுப் போகுதே என்ன சங்கதி.''

''வருசம் பூரா கைத்துட்ட வச்சுப் போடுறதுக்கு அவுக ஆத்தா தாலிய வித்துப் போட்டாலும் காணாது. வாரவ

னுக்கெல்லாம் கடனுக்குக் காப்பி ஊத்துனு மயிரா ஓடும். வாங்கித் தின்னவங்கிட்ட கடந்து கேக்கவும் மு டி ய ல. அய்யா பத்தியத்துக்குள்ள கெடந்தமாதிரி முழிக்காக. வீட்ல இனி செல்லாருக்கு வித்துப் போட.''

''எல்லாரவும் கொண்டணச்சுப் போயிருந்தா இம்புட் டெதுக்கு.''

"அவன் தாடியக் காட்டீட்டு அலஞ்சதுக்கு இதும் வேணும், இனியும் வேணும். கழுத அந்தச் சவத்துக் கெட்ட பேச்ச வுடு.''

''பேச்சோட பேச்சா கெழக்க கொஞ்சம் எட்டிப் பாருங்க. வண்டிப் பாதையில மாட்டுமேல முன்னும் பின்னுமா சவாரிச்சுட்டு வாருக. லாத்தலா ஊருணிக்குள்ள போட்டு வருவாக.''

''ஆருப்பா அது.''

''வேற ஆரு, கருப்பனும் சித்திரனுந்தான், எங்க போனு லும் அவுகதான் சோடி.''

''சக்கணன் ஒருத்தன் கெடந்தான். இப்ப இவுக ரெண்டு பேரும் சேந்திருக்காகளாக்கும்."

"செருப்ப எப்ப தச்சுக் குடுக்கணும்.''

"பையா பேச்ச வுடுறயே. இப்பக் குடுத்தாகணும். சம் புக்கா இம்புட்டு நேரம் உக்காந்தது. வாங்கீட்டுத்தான் குளிக்கப் போகணும்.''

○

சாயங்கால ஒளி தெருவில் தாழ்வாரமிட்டிருந்தது. வேம் பைக் கடந்த ஈயத் தூக்குவாளியின் கீச்சட்டம் கேட்டு அழகிரி நிமிர்ந்தான். வீட்டு வாசலில் ஆவுடையிடம் பைக்கட்டைக் கொடுத்துக் கொண்டிருந்தான் சுடலை.

'என்னமோ படிக்குது புள்ள. சீத்துவம் இருக்கிற வெரைக்கு படிக்க வைக்க வேண்டியதுதான்.'

சுடலைக்கு இரண்டு மூன்று சட்டைகளிருந்தன. பைக் கட்டு நிறைய புஸ்தகமும் நோட்டும் வைத்திருந்தான். தலையில் தினமும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளும்

போது சுருட்டை முடி மடங்கி நெளிவு நெளிவாய்த் தெரி யும். திரட்சியான கால்கள். குறுங்கைகள். உருண்டை முகத்தில் அகன்ற மூக்கு. பெரிய மனிதன் போல் தோர ணையாய் வருவான்.

ஞாயிற்றுக் கிழமைகளில் பெரும்பாலும் வேம்படிதான் அவனுக்கு. புதுவால் தைத்தால் அழகிரிக்குத் துணை யாய் வாலின் மூட்டு வரையை நழுவ விடாமல் பிடித்துக் கொள்வான். சிறு சிறு தையல் வார் கூட அறுத்து இழைப்பான்.

ஒவ்வொரு நாள் எருமைக்குப் பின்னால் ஓடைக் கரையில் திரிவான். களத்திற்குப் போவான். பிணையல் பத்திய கூலியாய் பொலியெடுக்கையில் நாழித் தவசம் கொடுப் பார்கள்.

ஆவுடை சொக்கிச் சொக்கிச் சிரித்தவாறு மரத்தடிக்கு சுடலையுடன் வந்தாள்.

''ஒம் பேரன் என்ன சொல்றான்னு கேளு.''

''என்னதுடா.''

''வார வழியில அய்யங்கொளத்துச் சின்னையா துட்டுக் குடுத்தான்.''

''அவன் எங்கடா அங்க வந்தான்.''

''கள்ளிக் கும்மலுக்குள்ள துண்ட விரிச்சு ஆரோ கெடக்க வும் நாங்க பயந்து போனெம். ரெண்டு பேரு கோட்டிக் காரன் கோட்டிக்காரன்னு கத்தவும் அவன் எந்திரிச்சு வந்து எதுக்காட்டி என்னப் புடிச்சு பைக்குள்ள துட்டப் போட்டுட்டு பேசாமப் போயிட்டான்.''

''அவன் என்னத்தச் சொல்லுவான் பாவம்.''

''தாத்தா தாத்தா, அங்க ஊருல அனயம் பேரு தொப்பி வச்ச போலுசா வந்தாக. நான் பத்துப் படிச்சிட்டு பட் டாளத்துக்குப் போறென். அங்கயும் தொப்பி தருவா கல்ல.''

அழகிரிக்கு சூடு கண்ணை முட்டியது. எச்சைக் கூட்டி விழுங்கினான்.

"அதக்காட்டி பெரிய வேலைக்குப் போகணுண்டா."

ஆவடை கையிலிருந்து திமிறி ஓடிய சுடலை மந்தையில் அருகடைவரை எழும்பியிருந்த தீப்பெட்டியாபீஸ் சுவரில் ஏறி சுற்றி விளையாடத் தொடங்கினான்.

மரத்தடியிலிருந்து அழகிரி சத்தங் கொடுத்தான்.

"அடேய் கீழ வுழுந்திருதடா."





நேற்றுப்போலிருக்கிறது, இடுப்புத்துணியோடு சின்னப் பயலாக வந்தான். பம்பைத்தலையும் சொறட்டை உடம்பும். பேச்சுத்தான் பேசுவானே. அந்தக் குறும்பு இன்றைக்குக் கழுமொரடுமாதிரி வளர்ந்துவிட்டபிறகும் போகவில்லை. கலியாணம் முடிந்திருந் தாலும் ரெண்டு பிள்ளைக்குத் தகப்பனாகியிருப்பான்.

எல்லாம் நடந்தது நேற்றுப்போல. வருசம் ரொம்ப ஆகிப் போனது.

அழகிரிக்கு துரைச்சாமிபுரத்தின் மஞ்சணத்திமரங்கள் நினைவி லாடின. மழைக்காலங்களில் குழல்விரித்த பூமணம் மந்தையெல் லாம் கவிந்திருக்கும். என்ன இருந்தாலும் பூர்வீக ஊராகாது. அவன் அப்பனும் அப்பனுக்கப்பனும் தலைமுறை தலைமுறை யாகக் காலந்தள்ளிய சக்கிலியக்குடியை எப்படி மறக்க முடியும்.

மணலூத்துச்சம்சாரிகள் கூப்பிட வந்திருந்தார்கள். அவனுக்குத் துரைச்சாமிபுரத்திலிருந்து கிளம்ப மனசில்லைதான். ஆனால் கூப்பிட வந்தவர்கள் எல்லாரும் பொறுப்பான சம்சாரிகள். பேச்சைத் தட்டமுடியவில்லை. கந்தையாவேறு வந்திருந்தார். அவர் பேச்சுக்கு மறுபேச்சுப் பேச முடியுமா?

- நாவலிலிருந்து


அட்டைப் புகைப்படம்: யுகன்
அட்டை வடிவமைப்பு: ரேஷ்மா





விலை ரூ. 130


ISBN 978-93-82648-13-0







# ரெண்டு

## வரப்புகள்

ரங்கராஜனுக்குக் காலையில் ரெண்டுபீரியடு கிளாஸ் கிடையாது. ஸ்கூலில் கையெழுத்துப் போட்டுவிட்டு வந்து ரூம் திருணையில் உட்கார்ந்தார்.

கிளாஸ் இல்லையென்றல் டீச்சர்ஸ் ரூமில் அரட்டை யடிக்கமாட்டார். நேரே வரவேண்டியது சட்டையைக் கழற்றிவிட்டு ஸ்கூலைப் பார்த்தபடி உட்காரவேண்டியது. எவ்வளவு நேரமானாலும் அமைதியாக இருக்கலாம். அதுக்கேற்றவாறு அக்ரஹாரமும் சந்தடியற்றிருக்கும்.

எதிர்வரிசையில் சுவர்மண் கரைந்த மேடுகள். அவை மேலும் கரைந்துவிடாமல் குடைப்பிடிக்கும் குப்பைமேனிச் செடிகள். சிறகுவலிக்கப் பறந்தலைந்து செடிக்குச்செடி உட்கார்ந்து ஏமாறும் வண்ணத்துப்பூச்சிகள் விறைப்பாகக் கிளம்பி நீர்வாய்க்கால் பூக்களில் இறங்கும்வரை பார்வை நீளும். தூரத்துச் சத்தங்களின் திவலைத்தூவலில் நேரம் மெல்லக் கரையும்.

ரெண்டாம் மணியடித்து ஓய்ந்திருந்தது. டிராயர் மூடிய மேஜையாக பிதுக்கமில்லாமல் ஸ்கூல். சகாரா பாலைவனத்தைக் கடப்பதுபோல் ஒருவர் கிரவுண்டில் சாவகாசமாக நடந்து போனார்.

எல்லா வாத்தியார்களும் வந்துவிட்டார்கள். வழக்கமாக கடைசிநேரத்தில் உதைந்துஉதைந்து எட்டுவைக்கும் டிராயிங் மாஸ்டரும் உள்ளே சொருவிக்கொண்டார்.

ஹெட்மாஸ்டர் மட்டும் வரவில்லை. அவரை எதிர்பார்த்து ஆபீஸ்வாசலில் பியூனும் வாட்டர்மேனும் காத்திருந்தார்கள். தாவாரத்தில் வாத்தியார்கூட்டம் அடக்கி வாசித்துக் கொண்டிருந்தது. அட்டெண்டரும் ஹெட்கிளார்க்கும் அடிக்கடி எட்டிப்பார்த்துவிட்டு உள்ளே போனார்கள். ஹெட்மாஸ்டர் வந்ததும் பிரேயர் தொடங்கும்.

தமிழய்யா சுவரோரம் நடந்து வெற்றிலையைத் துப்பிவிட்டு வாய்கொப்புளித்தார். இந்த வெறும்வாய் விவகாரம் பிரேயர் முடியும்வரைதான். மனுசன் வாய்திறந்து பாடுவதுமில்லை. பிறகேன் வீண்வேலை. பானைத் தண்ணீருக்குக் கேடா. பிரேயர் முடிந்ததும் வெற்றிலை போடணும். அதில்லாமல் ஒருநிமிசம் பாடம் நடத்த முடியாது. சண்டிக்காளைமாதிரி டீச்சர்ஸ் ரூமில் லாந்துவார்.

பிரேயர்மணி அடித்தாயிற்று. ஸ்கூல் அணைஉடைந்து பையன்களும் பெண்களும் கிரவுண்டில் ரசாயனக் கலவையாகப் பெருக்கிக் கிடந்தார்கள். வகுப்புவாரியான வரிசைகள். எல்லாத் தலைகளிலும் ஒரு ஒட்டுமொத்த எதிர்பார்ப்பு உட்கார்ந்திருந்தது. கொஞ்சநேரத்தில் ஹெட்மாஸ்டர் வந்து விடுவார்.

ரங்கராஜன் இப்போதெல்லாம் பிரேயருக்குப் போவதில்லை. எல்லாரும் சேர்ந்து ஒப்புக்கு ''உலகம் யாவையும்...'' பாடுவதில் பிரியமற்றுப் போயிற்று.

ஆரம்பத்தில் ரெம்ப ஈடுபாடு இருந்ததுண்டு. ஒவ்வொரு நாள் காலையும் மனச்சுமையைக் கொட்டி துணைக் குரல்களுடன் உச்சத்துக்குப் போகிற சஞ்சாரம். மொத்தமாகக் குழையும் ராகம் உள்ளேறி சலனம் விலகும். புதுவெயிலுக்குப் புடம்போட்டமாதிரி இருக்கும். அந்தப் பூரிப்புநிலையில் எத்தனையோ ஜீவநதிகள் பிரவகிக்கும். சிந்துச்சமவெளி ஸ்தெப்பி புல்வெளி ஆல்ப்ஸ் மலைத்தொடர் என்று கற்பனைகள் விரியும் உயரும்.

அதெல்லாம் பழையகதை. வரவர பிரேயர் ஹெட்மாஸ்டரை எதிர்பார்க்கும் நேரக்குடைச்சலில் தளர்ந்து

போனது. சிலருக்குக் கண்மூடி கசியப் பொறுமையற்று வெயில்தீண்டலுக்கு வெறும் முகச்சுளிப்பாகிவிட்டது. பிரேயருக்குப் போக மனசில்லைதான்.

ஆபீஸுக்கு முன்னால் கார் வந்துநின்றது. ஓட்டிவந்த ஹெட்மாஸ்டர் இறங்கினார். வாத்தியார்கள் வந்து வணக்கம் போட்டார்கள். வாட்டர்மேன் ஓடிப்போய் கார்க்கதவைச் சாத்தினான். பியூன் கார் டிக்கிலிருந்து புஸ்தகக்கட்டை எடுத்த பின்னும் துழாவிக் கொண்டிருந்தான்.

ரங்கராஜன் முணுமுணுத்தார்.

''அங்க வேறென்ன இருக்கறது. தேடறான் பாரு.''

ஹெட்மாஸ்டர் பரிவாரத்துடன் கிரவுண்டுக்கு நடந்தார். உயரமான ஷூவில் அவர் எம்பி எம்பி நடப்பதே தனி. முடிவெட்டிய குதிரைமாதிரி இருக்கும். வயசாகியும் உடம்பில் சதைகுறையாத தோற்றம். தலைகுனிந்தால் தாடைக்குக்கீழே ரிங்டென்னிஸ் மடிப்பு. நெருங்கிக் கவனித்தால் லேசான வழுக்கையும் ஊடுநரையும் தெரியும். தேசப்படத்தில் கிளைநதிகளைப்போல் முகத்தில் மெல்லிய சுருக்கங்கள் ஓடியிருக்கும்.

கிரவுண்டில் வாத்தியார்கள் பெரிய பையன் களானார்கள். கூட்டத்தின் 'ப'வடிவம் ஹெட்மாஸ்டரால் புள்ளிவைத்துக்கொண்டது.

பிரேயர் தொடக்கம். டிரில்மாஸ்டர் அட்டென்ஷன் சொன்னார். டிராயிங்மாஸ்டர் கஷ்டப்பட்டு காலைச் சேர்த்து விறைப்பாக்கினார். தயக்கத்தில் சுதியேறிய கடவுள்வாழ்த்து தொய்ந்தும் முறுக்கியும் கிரவுண்டில் பரவியது.

டிரில்மாஸ்டர் எல்லாருடைய விறைப்பையும் தளர்த்தினார். பாட்டு முடிந்தபிறகும் தமிழய்யாவின் வாய் அசைவது நன்றாகத் தெரிந்தது. அய்யாவுக்கு வெற்றிலை ஞாபகம் வந்துவிட்டது.

கூட்டம் கலைந்தபோது ஹிந்தி டீச்சர் ருக்மணி ஆறாம்வகுப்பு ராஜேஸ்வரி டீச்சருடன் அரட்டையடித்துக்

கொண்டு போனாள். வரிசையில் கோர்த்திருந்த பெண்கள் சற்று பிதுங்கி அவர்களைத் திரும்பிப்பார்த்தார்கள்.

ஹெட்மாஸ்டர் சைன்ஸ் அஸிஸ்டென்ட் தங்கச் சாமியுடனும் மேத்ஸ் மனோகரனுடனும் பேசிக்கொண்டு நடந்தார். கிராப்ட் வாத்தியார் மற்றவர்களிடமிருந்து விலகி மூக்கை விசிறிச் சிந்தினார். ஏழாம்வகுப்பு கிருஷ்ணசாமி சட்டைக்குள் கையை நுழைத்து முதுகைச் சொறிந்துகொண்டார். சுப்பையாதாஸூம் குழந்தைச்சாமியும் ரெம்ப அன்னியோன்னியமாக காதைக் கடித்துக்கொண்டு போனார்கள்.

டிரில்மாஸ்டர் கிரவுண்டிலிருந்து ஸ்கூலுக்குப் போகவில்லை. டிராயிங்மாஸ்டரிடம் கிண்டல்பேசிவிட்டு ரூமுக்குத் திரும்பினார். ரங்கராஜன் சம்மணத்தை அவுத்து கால்களைத் தொங்கப்போட்டார்.

''பாண்டியனுக்கு டிரில் கெடையாதா.''

அவர் ரங்கராஜனுக்கருகில் உட்கார்ந்தார்.

''எனக்கா பையங்களுக்கா சார்.''

''ஒங்களுக்கு டிரில்நடத்த வேறஆள் இருக்கறா. நான் பையங்களெச் சொன்னன்.''

''செகண்ட்பீரியடுதான் சார்.''

''ஒங்களுக்கென்ன பாண்டியன் ஆறாம்வகுப்புக்கு அபாரமா டிரில் நடத்தறேளாமே.''

''கேலியா பண்றீக காஞ்சுகெடக்கிற மனுசனப்போயி.''

பாண்டியனிடமிருந்து நல்ல வாசனை வந்தது. நெற்றிகூட வேர்க்கவில்லை.

''பார்த்தாலே தெரியறது காஞ்சுகெடக்கறத.''

''வேற எப்படித் தெரயிது.''

''கொடுத்துவச்சவா.''

''கதைய மாத்திச் சொல்றீக.''

''கதையே இல்லாறச்ச எத மாத்தறது.''

''நீங்கதான் சார் லக்கி. இந்தி படிக்கிறவுகளாச்சே.''

''வாய மூடுங்கோ. நம்ம லட்சணத்துக்கு அதுவேறயா.''

''ஒங்க லச்சணத்துக்கென்ன மாப்பிளமாதிரி.''

ரங்கராஜன் துண்டால் முகந்துடைத்து வயிற்றை மூடி மறைத்தார்.

''ரிடையராறதுக்கு முன்னால மாப்பிள்ளையாயிடுவென் பாண்டியன்.''

''அப்படி நெனக்காதங்க சார்.''

''நெனக்காம இருந்தாமட்டும் சகல லட்சணமும் வந்துடப்போறதா.''

ரங்கராஜன் உதடுகளைச் சிரமப்படுத்தி பல்தெரியாமல் பொருத்தினார். பாண்டியன் சற்று மௌனத்திற்குப்பின் பேச்சின் போக்கை மாற்றினார்.

''ஏன்சார் பிரேயருக்கு வரமாட்டங்கீக. நான் அட்டென்ஷன் சொல்லி கேக்கவான்னுதான.''

''ஒங்கவார்த்தைக்கு அத்தனபேரும் மரியாத கொடுக்கறதா நெனப்போ.''

''நீங்க இங்கருந்து பாத்துட்டுதான இருக்கீக.''

''நன்னா பாக்கறென். பிரேயரா நடக்கறது.''

''வேற என்ன நடக்குது.''

''பாண்டியனுக்குத் தெரியாம கிரவுண்டுல ஒரு ஈ எறும்பு நடக்கமுடியுமா.''

''தெரிஞ்சு என்னசெய்ய சார்.''

''இவாளுக்கு பிரேயர் ஒரு கேடா.''

இமைத்துடிப்பு அடங்கியபின் ரங்கராஜன் பாண்டியனைத் துருவிப்பார்த்தார். பாண்டியன் குனிந்து கொண்டார். ரங்கராஜன் பேசவில்லை. திருணையில் குதிகாலால் உதைக்கத் தொடங்கினார். பாண்டியன் திரும்பிக் கொண்டு சொன்னார்.

''அதுக்காக பிரேயருக்கு வராம்ருக்கிறது நல்லால்ல சார்.''

''மத்தவா செய்யறதுமட்டும் நன்னாருக்கறதோ.''

''இல்ல ஒத்துக்கிறென்.''

''அப்புறம் இங்கமட்டும் பெரிசா பேசவந்துட்டேள்.''

''ஒங்களுக்குத் தெரியாறதில்லை நல்லதும் கெட்டதும்.''

ரங்கராஜன் முகத்தில் லேசான சிரிப்பு.

''என்னசெய்யச் சொல்றேள்.''

''நாளையிலருந்து பிரேயருக்கு வரணும்.''

''அவ்வளவுதான. பாண்டியன் சொன்னா அப்பீல் உண்டா.''

''நம்ம ரங்கராஜன் சாருக்காகுமா.''

பாண்டியன் சுதாரிப்பாக எழுந்து ரூமுக்குள் போனார். சிகரெட் பற்றவைத்து சுவர்க்காலண்டர்மீது வளையம் வளையமாக ஊதினார். வளையத்திற்குள் வளையத்தை நுழைத்து வேடிக்கை பார்த்தார். தலைவாரி பவுடர் போட்டார். சீட்டியடித்தார். பாடிக்கொண்டே மெல்ல ஆடினார். கண்ணாடிக்குமுன்னால் போஸ்கொடுத்து மேலுதட்டை வளைத்து மீசையை நாக்கால் தடவினார். படியாத மயிரை வசக்கினார்.

ஆள் நல்ல சிவப்பு. வலதுபக்க வகிடுக்கு வழிவிடும் நெற்றியமைப்பு. அடர்ந்த முடிக்கும் திரண்ட கண்ணுக்கும் பொருந்திய முகலட்சணம். பேஷனாகச் சட்டைபோடுவார். செலவழிக்கக் கூசமாட்டார். இந்தவயசில் கல்யாணம் பண்ணியாகணும்.

மனுசன் விளையாட்டில் கில்லாடி. வாலிபால் விளையாடினால் நின்று பார்க்கத் தூண்டும். ரெம்ப ஸ்டைலாகக் கட் அடிப்பார். நெட்டுக்குமேல் எவ்விக் குதித்து கொஞ்சநேரம் அந்தரத்தில் நின்று கவர்பண்ணாத இடங்களைக் கருடப்பார்வை பார்த்துவிட்டு ஷாட் அடிப்பார்.

யாராலும் எடுக்கமுடியாது. சுப்பையாதாஸ் பையன்களைக் குட்டுவதுபோல் பந்து தரையில் மோதும். அந்த லாவகம் யாருக்கு வரும். கோதாவில் இறங்கி அவருக்கு ஒருதடவை பந்தை வாகாக சப்ளை பண்ணணும்போல் மனசு குறுகுறுக்கும்.

பந்தைச் சுண்டிவிட்டமாதிரி சர்வீஸ் போடுவார். ஒரு தடவை போட்ட ஸ்டைலை மறுதடவை பார்க்கமுடியாது. கை சொன்னபடி பந்து பறக்கும் உருளும் கரணமடிக்கும். சப்ளையைப் பற்றிச் சொல்லவேவேண்டாம். குருவி குஞ்சுக்கு பறக்கக் கற்றக்கொடுப்பதுபோல் தாங்கித்தாங்கித் தருவார். குப்புறப் பாய்ந்து மல்லாக்க விரிந்து உட்கார்ந்து ஓடிக் குதித்து உள்ளங்கையால் புறங்கையால் மூணுவிரலால் இப்படி எங்கும் வியாபித்து விளையாடும்போது பார்வை அவரைச் சுற்றியே கிறங்கும்.

அவர் கபடியும் கோகோவும் சொல்லித்தரும் அழகைப் பார்க்கணும். சேர்ந்து விளையாடும்போது ரெம்பச் சின்னப் பையனாக மாறிவிடுவார். சும்மா சொல்லக்கூடாது. பாண்டியன் கிரவுண்டிலிருந்தால் தனிக்களைதான்.

அனாவசியமாக வெளியே சுற்றித்திரிய மாட்டார். ரூமை விட்டால் தெப்பக்குளம். குளித்து முடித்தால் குழந்தைச்சாமியின் ஹோட்டல். அப்புறம் ஸ்கூல். சாயங்காலம் ரோட்டில் வாக்கிங்.

மாதம் ரெண்டுமுறை சினிமாவுக்குப் போவார். மகாலிங்கபுரம் போய்த் திரும்பணும். மறுநாள் ராத்திரி ரூமில் பாட்டுக்கச்சேரி நடக்கும். அவரே பாட்டு தாளம் எல்லாம். அனுபவித்துப் பாடுவார்.

**''வாராய் நீ வாராய்**

**நாம் போகுமிடம் வெகுதூரமில்லை**

**நீ வாராய்...''**

கொஞ்சநேரம் எங்கோ அழைத்துச்செல்வது போலிருக்கும். தாளத்தில் ஒரு முத்தாய்ப்புவைத்து நிறுத்துவார்.

''என்ன பாண்டியன் எங்கள அழச்சிண்டு போயி நடுவழியில நிறுத்திட்டேளே.''

தமிழய்யா மயக்கம் தெளிந்து பார்ப்பார்.

''பாண்டியன் நம்மளக் கூப்பிடலயே சாமி.''

''ஓகோ அப்படியா விஷயம். நான் ஒரு மண்டு.''

பாண்டியன் தொண்டையிலிருந்து இன்னொரு பாட்டு துள்ளிவரும். அன்றைக்கெல்லாம் சிவராத்திரிதான். கதையும் பாட்டுமாக முழுச்சினிமாவும் ரூமில் ஓடும்.

பாண்டியன் விசிலை மாட்டிக்கொண்டு ஸ்கூலுக்குக் கிளம்பினார்.

''பாண்டியன் அதுக்குள்ள கெளம்பியாச்சா.''

''ஸ்போர்ட்ஸ் ரூம்ல கொஞ்சம் வேலையிருக்கு சார்.''

''ரூமுக்குள்ளயா வெளியிலயா.''

''ஒங்களுக்கு எப்பவும் கேலிதான்.''

பாண்டியன்நடைக்கு லெப்ட்ரைட் சொல்லவேண்டி யதில்லை. ரூமுக்கு வந்த நாளிலிருந்து இன்றைக்குவரை அப்படியேதான் இருக்கிறார். அதே கலகலப்பு. அதே விளையாட்டுத்தனம்.

அக்ரஹாரத்தில் முதலாவதாக ரங்கராஜன்தான் ரூம் எடுத்தார். ரூமென்ன தனிவீடு. வெளியூருக்குக் குடிபெயர்ந்த பிராமணர் சொற்ப வாடகைக்கு விட்டார். பூட்டிய கதவில் கரையான் குடியிருப்பதைவிட இது நல்லதாயிற்றே. மாதவருமானம் கிடைத்தமாதிரியும் இருக்கும்.

அக்ரஹாரவீடும் திருணையுமாக ரெண்டு வருசமாகிறது. ஆபீஸுக்கு முன்னால் குழைந்து நின்ற வேப்பங்கன்று முள்வேலியை உதறிக்கொண்டு திடப் பட்டிருக்கிறது. வேலிமேல் கால்போட்டு மேய்ந்த வெள்ளாடு அதை அண்ணாந்து பார்க்கிறது. ஸ்கூலின் மேற்குப்பகுதி ஒருமுறை கூரைமாற்றியிருக்கிறது.

முன்பு அவர் ஏரலில் வேலைபார்த்தார். கரைச்சலில்லாத இடம். வாராவாரம் ஸ்ரீவைகுண்டம் வந்துவிடுவார். ரெண்டுநாள் வீட்டுச்சாப்பாடு. அம்மா அப்பா தங்கை என்று சதா பேச்சுத்துணை. குடும்பத்தைக் கவனித்துக்கொள்ள வசதியாக இருந்தது.

அதுக்கு வினையாக ஒருத்தர் வந்துசேர்ந்தார். அவரை ஏரல் ஸ்கூலில் போடவேண்டிய கட்டாயம். மேலதிகாரிக்குச் சொந்தக்காரராயிற்றே. ரங்கராஜன் தலையில் கைவைத்தார்கள். ஓலையைக் கொடுத்து பாறைக்குளத்துக்குப் போடா என்று வழியனுப்பினார்கள்.

முணுமுணுப்பில் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வந்தார். பாறைக்குளத்தை மேப்பில்கூட பார்த்ததில்லை. பஸ்ஸில் வரும்போது கண்ணுக்குள்ளும் நெஞ்சுக்குள்ளும் பாறை பாறையாக ஓடிமறைந்தது. ரோட்டில் போர்டு தெரிகிறமாதிரி பஸ்ஸின் ஓரத்தில் உட்கார்ந்திருக்கலாம். அந்தப் பாக்யம் ரெண்டு தூங்குமூஞ்சிக்கா கிடைக்கணும்.

கண்டக்டரை பரிதாபமாகப் பார்க்கும்போதெல்லாம் மனுசன் விசிலைக் கவ்வியபடி தவநிலையில் இருந்தார். ஆனாலும் அடுத்தஊர் வரும்போது விசிலடிப்பது கூவுவது எல்லாம் அனிச்சைச்செயலைப்போல் நடந்தது. கடைசியாக அவர் பாறைக்குளத்தையும் ஏலம்போட்டபோதுதான் மனசுக்கு நிம்மதி.

ஊருக்குத் திரும்பும் ரோட்டுவளைவில் ஒரு எருமைப் பட்டாளமே வியூகம் அமைத்துக்கொண்டு வந்தது. ஊருக்குப் பேர் பாறைக்குளமா எருமைக்குளமா. பெட்டியைக் கேடயமாக நினைத்துக்கொண்டு சற்றுப் பின்வாங்கி ஒதுங்கினார். பட்டாளம் சரசரவென்று அணிவகுத்துப்போனது.

மறுபடியும் ரோட்டில் கால்வைத்து முன்னேறியபோது ஒரு எருமைப்போத்து செல்லச்சிணுங்கலில் உடம்பை முறுக்கி குதித்துக்குதித்து வந்தது. கழுமரம்போல் கொம்பு. அவசரமாக

அதுக்கு விலகி வழிவிடப்போய் மொட்டைப்பரும்பாக நின்ற சாணியில் அடிபதிந்து செருப்புமுழுக்க முங்கிக் கொண்டது. அதை மீட்பதற்குள் பெரும்பாடாகிவிட்டது. கல்லோரம் பெட்டியை மறைவாக வைத்துக்கொண்டு அக்கம்பக்கம் ஆள்பார்த்தபடி சாணியைத் துடைத்தார்.

அந்தச் சமயத்துக்காகக் காத்திருந்ததுபோல் ஒரு நாய் ஓடிவந்து பெட்டியை வட்டமிட்டு முகர்ந்து முனங்கித் தோது பார்த்தது. அது மூஞ்சியைத் தந்தியடித்து ''ஊருக்குப் புதுசா'' என்று வக்கணைகாட்டும் லட்சணத்தைப் பார்த்தால் காரியத்தை முடிக்காமல் போகாதுபோலிருந்தது. அட கடவுளே இதுக்கு வேறு வஸ்து கிடைக்கவில்லையா. அவசரப்பட்டு முறைத்தால் வம்பு. நயந்த சமாதானப் பார்வையில் மெல்ல பெட்டியைத் தூக்கி வேகமாக நடையை விட்டார். கொஞ்சதூரம்போய் வேர்வையைத் துடைத்துத் திரும்பிப்பார்த்தபோது ''எப்படியும் இந்தப் பக்கந்தான வரணும்'' என்ற தோரணையில் அது விறைத்துக்கொண்டு நின்றது.

இப்படி கண்டம்கண்டமாகத் தாண்டிவந்து ஸ்கூல் ஆபீஸுக்குள் நுழையும்போது பியூன் வையாபுரி ஓடிவந்து பெட்டியை வாங்கிவைத்தான்.

''சாமி இப்படிச் சொமந்துகிட்டு வரலாமா. காக்கடுதாசி போட்ருந்தா காத்திருந்து கூட்டீட்டு வந்துருப்பனே.''

பால்ய சினேகிதன்போல் அன்னியோன்னியமாக நடந்து கொண்டான். ஆச்சரியமாக இருந்தது.

''பஸ் ஊருக்குள்ள வராதோ.''

''அவன் ஒங்கள ரோட்ல எறக்கிவுட்டதே பெரியகாரியம்.''

இதே ஹெட்மாஸ்டர் வில்லியம்ஸ் சிரித்தமுகத்துடன் பேசிக்கொண்டிருந்தார். அடிக்கடி மிஸ்டர் என்று அடைமொழி கொடுத்தார். ரெம்பநாளாகக் காலியாக இருந்த இடத்துக்கு ஆள்வந்த நிம்மதி அவருக்கு.

பையன்கள் வெளியே குதித்தோடினார்கள்.

''சோசியல் பீட்டி வந்தாச்சு.''

வையாபுரி புண்ணியத்தில் குடியிருப்பு ஏற்பாடு சுமுகமாக நடந்தது. குழந்தைச்சாமியின் ஹோட்டலில் அக்கவுண்ட் ஆரம்பித்ததுமுதல் தினமும் தண்ணீர் கொண்டுவந்து வைக்க வாட்டர்மேன் மாணிக்கத்துக்கு உத்தரவுபோட்டதுவரை எல்லாம் அவன்தான். குடியமர்த்தி விட்டுப் போகும்போது சொன்னான்.

''சாமிக்கு பேச்சுத்தொணைக்கு ஒருத்தர் இருந்தா தோதாருக்கும். அதுக்கென்ன பாத்துருவொம்.''

அவர் பணம்கொடுத்தார். அவன் கைநீட்டவில்லை.

''வச்சுக்கங்க. தேவையிருந்தா அப்பப்ப கடன் வாங்கிக்கிறென்.''

அவருக்கு வெட்கமாகப்போயிற்று. பதில்சொல்லத் தயாராவதற்குள் அவன்போய்விட்டான்.

கொஞ்சநாளில் அவருக்குத் துணையாக தமிழய்யா பழனிவேலாயுதம் வெற்றிலைச்செல்லமும் கையுமாக வந்தார். பழுத்த மனுசன். நிதானமென்றால் அப்படி நிதானம். வார்த்தையும் சிரிப்பும் வெற்றிலைச்சிவப்பு. மூத்தபெண்கள் இருவரையும் நல்லமுறையில் பிடித்துக்கொடுத்துவிட்டார். அடுத்து பையன். கல்யாணவயது. கடைசிப்பெண்ணும் வயதுக்குவந்து கரையேறக் காத்திருந்தாள். ரெண்டுபேரும் டீச்சர் ட்ரெயினிங் முடித்துவிட்டு வீட்டிலிருந்தார்கள்.

பையன் எப்போதாவது வருவான். விடியவிடிய குடும்பப்பிரச்னைகளைப்பற்றிப் பேசுவார்கள். தென்காசியில் குடும்பம். சொந்தவீடாகையால் அங்கேயே வாசம். அவர் மாதம் ஒருமுறை போய்த்திரும்புவார். குடும்பத்தைக் கொண்டு வரலாமே என்று கேட்டால் அதுக்கொரு கதை சொல்லுவார்.

''சாமி மேச்சத்தரையில மேயிற மாட்டப் பாத்துருக்கீங்களா. நடுநெலத்துல ஆணியடிச்சு நீளக்கயத்துல கட்டிப்போட்டுட்டு வேலையப் பாக்கப் போயிருவாங்க. அது சுத்திச்சுத்தி மேயும். நம்மகதையும் அப்படித்தான். எனக்குத் தென்காசியில ஆணியடிச்சிருக்கு.''

துணியில் கஞ்சி தடவி இஸ்திரிபோடுவதுபோல் வெற்றிலை மடித்துக்கொண்டே சிவப்பாகச் சிரிப்பார். அவரது அனுபவமென்ன பேச்சென்ன. தகப்பனாருக்குச் சமானம்.

அடுத்து பாண்டியன் வந்தார். அவர் புதுஆளாக இல்லை. பலநாள் பிரிந்திருந்த சொந்தக்காரர் திரும்பி வந்தமாதிரி இருந்தது. வந்தமறுநாளே ரூம் சுவர்களில் விதவிதமான படங்களும் காலண்டர்களும் முளைத்தன. சந்தோசச் சிரிப்பும் பாட்டும் கேட்டது.

பாண்டியனின் அய்யா ஆண்டியாபுரத்திலிருந்து மெனக்கிட்டு வந்து பார்த்து செலவுக்குப் பணம் கொடுத்து விட்டுப் போவார். பாண்டியனும் பணத்துக்காக குழந்தையைப் போல் சிணுங்குவார். தகப்பன்மகன் தோரணையில் பேசிக்கொள்ளமாட்டார்கள்.

பாண்டியனின் அய்யாவை முதல்முறையாகப் பார்த்தபோது ரங்கராஜனுக்குப் பயம். அரையடி உயரச் செருப்பு சரசரக்க வந்து நின்று அணில்வாலைப்போல அடர்த்தியாக ஏந்தியிருந்த மீசையைக் கோதியபடி அதட்டலாகக் கேட்டார்.

''பையன் இருக்கானா.''

ரங்கராஜனுக்கு உதறலெடுத்தது.

''யாரக் கேக்கறேள்.''

''நம்மபையன்தான் பாண்டியன்.''

''உக்காருங்கோ. இப்ப வந்துடுவார்.''

நல்லசமயத்துக்கு தமிழய்யா வந்து காப்பாற்றினார். ரெண்டுபேரும் பேச்சுப்போடுவதைப் பார்த்ததும் பயம்

சுத்தமாகப் போய்விட்டது. இப்படிப்பட்ட உடம்புக்குள் இவ்வளவு நல்லகுணமா.

பாண்டியன் சொந்தஊருக்குப் போவதில்லை. நாற்பதுமைல் பெரியதூரமில்லை. அந்தப் பேச்செடுத்தாலே அவருக்கு முகம் வாடிவிடும். சிரித்துச் சமாளிப்பார்.

''நமக்கு யாதும் ஊரே யாவரும் கேளிர்.''

''வயசான காலத்துல அப்பாவ அலையவிடலாமோ. தமிழய்யாவோட பையனப் பாத்தேளா.''

''பையன் வந்து அப்பாட்டப் பணம் வாங்கீட்டுப் போறான். இங்க அப்பா வந்து பையனுக்குக் குடுத்துட்டுப் போறாரு. ரெண்டும் ஒண்ணுதான் சார்.''

பாண்டியன் விளையாட்டுப்பிள்ளை. அதை யாரால்தான் மாற்றமுடியும்.

அதுக்குமேல் ரூமில் யாரையும் சேர்த்துக் கொள்ளவில்லை. சொல்லப்போனால் வாத்தியார்களில் அவர்கள் மூணுபேர்தான் ஒண்டிக்கட்டை. மற்றவர்கள் குடும்பசகிதம் குடியிருந்தார்கள்.

மேத்ஸ் மனோகரனுக்கு வடக்குத்தெருவில் வீடு. அஞ்சு நிமிசத்தில் ஸ்கூலுக்கு வந்துவிடலாம். மூணுவயசில் ஒரே பையன். இன்னும் புதுமாப்பிள்ளைமாதிரி இருப்பார்.

சைன்ஸ் தங்கச்சாமி பஸ்டாண்டுக்குப் பின்புறம் குடியிருந்தார். ரெண்டு பெண்குழந்தைகளை சின்ன ஸ்கூலுக்கு அனுப்பவும் அவசரத்துக்கு பஸ் பிடிக்கவும் தோதாக இருந்தது. எல்லாம் வீட்டுக்காரம்மா யோசனை.

ஹெட்மாஸ்டர் அருகிலுள்ள மகாலிங்கபுரத்திலிருந்து சொந்தக்காரில் வந்துகொண்டிருந்தார். அவருக்கென்ன குறைச்சல். மனைவி டாக்டர். ஒரே மகனும் இஞ்ஜினீயர். மூணு வருமானம். வசதிக்குச் சொல்லணுமா.

மதியச்சாப்பாடு பஸ்ஸில் வரும். வையாபுரி காத்திருந்து வாங்கிவருவான். கேரியரின் கனத்தை அவன் முகக்களையில்

கண்டுபிடித்துவிடலாம். மிச்சம் இருக்கிற சாப்பாடு அவனுக்குத்தானே. மதியம் பெரும்பாலும் அவன் வீட்டுக்குப் போவதில்லை.

செகண்டரி கிரேடு நாலுபேரும் உள்ளூர்க்காரர்கள். ஆறாம்வகுப்பு அய்யாத்துரை ரிட்டையராகவேண்டியவர். தலைமுதல் கால்வரை வெள்ளையாக வருவார். செக்கில் எண்ணெய் அரைக்கும்போது அவரது சுறுசுறுப்பைப் பார்க்கணும். எள்ளுப்பிண்ணாக்கைத் தள்ளிக்கொடுப்பதும் எண்ணெய்ப்பதம் பார்ப்பதுமாக ஒரே இடத்தில் நிற்க மாட்டார். ஸ்கூலில் அவ்வளவு நிதானமாக இருக்கும் அய்யாத்துரையா என்று ஆச்சரியமாக இருக்கும்.

நல்லெண்ணெய் மொத்தவியாபாரம். கொஞ்சங் கொஞ்சம் சில்லறைவிற்பனையும் உண்டு. சுமாரான வருமானம். வாத்தியார்களுக்கு அவர் சப்ளைதான். மாதம் பிறந்துவிட்டால் ஹெட்மாஸ்டரின் காருக்குள் ஒரு டின் ஏறிவிடும். தமிழய்யாவும் ரங்கராஜனும் வாங்கி ஊருக்குக் கொண்டுபோவார்கள். சுத்தமான சரக்காயிற்றே. விலையும் அதிகமில்லை.

ஏழாம்வகுப்பு கிருஷ்ணசாமிக்கு பெரிய விவசாயம். பார்த்தால் வாத்தியார்தோரணை இருக்காது. எந்நேரமும் ஓட்டமும் நடையுமாகத் திரிவார். அதனால் பாண்டியன் அவருக்கு மராத்தான் கிருஷ்ணசாமி என்று பேர்வைத்து விட்டார். ஸ்கூல்நேரந்தவிர மற்ற நேரங்களில் மம்பட்டியும் கையுமாக தோட்டத்தில் பார்க்கலாம். மனுசன் ராத்திரி சரியாகத் தூங்குவாரோ என்னமோ.

சிலநாள் காலையில் தோட்டத்திலிருந்து நேரே ஸ்கூலுக்கு வந்துவிடுவார். வரும்போதே வேப்பங்குச்சால் பல்விளக்கி முடித்து ஸ்கூலில் முகங்கழுவுவார். வேட்டி சட்டையில் படிந்த மண்ணைச் சுரண்டி துண்டைஉதறி உள்பக்கம் வைத்து மடித்து எத்தாப்புப் போட்டுக்கொள்வார்.

மகன் சாப்பாடு கொண்டுவந்து டீச்சர்ஸ் ரூமில் வைத்துவிட்டு அவரிடம் சேதிசொல்லுவான்.

''நைனா கூடு ஆட உஞ்சு.''

அவர் தலையாட்டிக்கொள்வார்.

''ஒச்சேசனா. அம்மா எந்த்த அடேசனா.''

''லேது.''

அவன் பைக்கட்டுச்சுமையுடன் வகுப்புக்குப் போய் விடுவான். தகப்பனுக்கேற்ற பிள்ளை. அவர் மம்பட்டியைத் தூக்கினால் அவன் கூடையைத் தூக்குவான். விவசாயவேலை அத்துபடி. எங்கே சுற்றினாலும் எட்டாம் வகுப்புக்கு வந்து விடுவான். பாண்டியனின் வார்த்தையில் சொல்லப்போனால் அவன் ஜுனியர் மராத்தான் ரங்கசாமி.

சுப்பையாதாஸுக்குப் பால்வியாபாரம். ஸ்கூல் விட்டால் குளக்கரையில் மாடுகளுக்குப்பின்னால் பார்க்கலாம். அதுகளைக் குளிப்பாட்டித் திரும்ப நேரங்காணாது.

அவர் புஸ்தகத்தை விரித்துக்கொண்டு பாடம் நடத்தினால் ரெண்டுபக்கமும் நனைந்துவிடும். அவ்வளவுக்கு எச்சு மழையாகத் தூறும். கொஞ்சநேரத்தில் புஸ்தகத்தையே குளிப்பாட்டிவிடுவார். இதுக்காகவே பையன்கள் அவரிடம் புஸ்தகம் தராமல் தட்டிக்கழிப்பார்கள்.

அவரை ஸ்கூலில் வெறுங்கையுடன் பார்க்கமுடியாது. எப்போதும் வழுவழுப்பான பிரம்பு இருக்கும். அடி கொடுத்தாலும் குட்டுவைத்தாலும் அசோகர் கல்வெட்டு மாதிரி முத்திரை பதியும். ஸ்கூல் வட்டாரத்திலேயே அவருக்குத் தூறல் சுப்பையாதாஸ் என்ற பேரும் உண்டு. எல்லாம் பாண்டியன் உபயந்தான்.

குழந்தைச்சாமி ஹோட்டல் தஞ்சமென்று கிடப்பார். வாத்தியார்கள் அவரைத்தாண்டி காபி குடிக்கக்கூட வேறுகடைக்குப் போகமுடியாது. கல்லாப்பெட்டியில் காசு புழங்குவதுபோல் அவர் பையன்களுக்குத் தொடையில்

நிமிட்டாம்பழம் கொடுப்பார். அவரைக் கண்டால் பையன்கள் ''ஏய் நிமிட்டாம்பழம் வாறாருடோய்'' என்று கலைந்து ஓடுவார்கள்.

டிராயிங்மாஸ்டர் தீத்தாரப்பன் வெளியூர்காரர் என்றாலும் ரெம்பநாளாகவே மளிகைக்கடை நடத்திவந்தார். காலையும் மாலையும் கடையில் உட்கார்ந்து முடியாது. பாண்டியன் சொல்லுவார்.

''சாயங்காலம் நமக்கு வாக்கிங். தீத்தம்சாருக்கு சிட்டிங்.''

அதனால்தான் அவர் வகுப்பில் உட்காருவதேயில்லை. அங்குமிங்குமாக லாந்துவார். அயலூர்ப் பையன்கள் துட்டு பருத்தி தானியம் என்று கொண்டுவந்து அவரது கடையில் பண்டம் வாங்கித் தின்பார்கள். பருத்திக்கு ரெண்டுஎடை சீனிக்கிழங்கும், மொச்சைப்பயிறும். சேவு எடைக்குஎடை. கணிசமாக இருக்கும். ஆசைதீர அசைப்போடலாம்.

அவர் வகுப்பில் ஒரு தினுசாகப் பேர்வாசிப்பார். குரலுடன் ஒரு கறார்பார்வையையும் அனுப்புவார். ''இண்ணைக்கு என்ன கொண்டுவந்த'' என்றுகேட்பது போலிருக்கும். பையன்களும் ''பருத்திசார்'' ''சோளம்சார்'' என்கிறமாதிரி ஆஜர் சொல்லுவார்கள்.

நாலுபேரும் டீச்சர்ஸ் ரூமில் சந்தித்தால் சொந்தக்கதை பேசித்தீராது. விலைவாசியை அலசுவார்கள். அரசியலையும் தொட்டுக்கொள்வார்கள். குளம் வற்றினால் கிணற்றில் நீர்மட்டம் இறங்குவதை கிருஷ்ணசாமி கவலையாகச் சொல்லுவார். மாட்டுக்குப் பால்வற்றும் கவலை சுப்பையாதாஸுக்கு. இப்படியே வந்து கடைசியில் அவரவர் கணக்கைச் சொல்லிக் கூட்டிக்கழிப்பார்கள். பெருக்கல் வகுத்தல் எல்லாம் உண்டு. கிருஷ்ணசாமி குழந்தைச்சாமியை நயந்து பார்ப்பார்.

''பெரிய கணக்கு ஒருபக்கம் இருக்கட்டும். வாழஎலக் கணக்கவாச்சும் தீத்துறப்புடாதா.''

''ஏன்சார் அதெல்லாம் ஒரு கணக்குன்னு கேக்கீகளே. நம்ம கடையில காபி வடன்னு எதுக்கு இருக்கு.''

''அதுசரி. தின்னே தீத்துட்டா வெவசாயத்துல சட்டியெடுக்க வேண்டியதுதான்.''

''நீங்களே இப்படிச் சொன்னா நாங்க கடைய இழுத்து மூடுறதத்தவர வேற வழியில்லை.''

சுப்பையாதாஸ் இடையில் பால்கணைக்கை அவுத்து விடுவார்.

''கொழந்த சார் அப்படியே நம்மளவும் கொஞ்சம் கவனிச்சிருங்க.''

''சாயந்தரம் கடைக்கு வாங்க. ஸ்பெசலா கவனிச்சுருவொம்.''

தீத்தாரப்பனுக்கு ஏகப்பட்ட சிட்டை உண்டு. அது லேசுக்குள் முடியாது. லீவுநாளில் மண்டையை உடைத்தாலொழிய வசத்துக்கு வராது. மணியடித்ததும் கணக்குகளை மிச்சம்வைத்துவிட்டு வகுப்புக்கு ஓடுவார்கள்.

இவர்கள் கதையெல்லாம் வையாபுரியிடம் கேட்கணும். ஒவ்வொருத்தருக்கும் ஒரு சரித்திரமே வைத்திருப்பான். சமாச்சாரங்களை விவரிக்கும்போது மேப்பை வைத்துக்கொண்டு இடங்களைத் துல்லியமாகக் காட்டிப் பேசுவதுபோலிருக்கும்.

அவனுடைய சரித்திரத்தைத் தெரியணுமென்றால் மாணிக்கத்தைப் பிடிக்கணும். பானையைக் கழுவிமுடிக்குமுன் ஒரு கதையைச் சொல்லிவிடுவான்.

இந்த விவகாரங்களில் அடைபடாதவர் கிராப்ட் வாத்தியார் வீரராகவன் ஒருத்தர்தான். ஒல்லிஉடம்பும் பொடிக்கறை படிந்த கைக்குட்டையுமாக ஆள் ஸ்கூலுக்கு வருவதும் தெரியாது. வீட்டுக்குப் போவதும் தெரியாது. அவரைக் கிண்டினால் சர்வசாதாரணமாகச் சொல்லுவார்.

''சார்வாள் ஸ்கூல்ல பாடம் சொல்லித்தரத்தான் சம்பளம் குடுக்கான் நமக்கு.''

அவர் நின்ற இடத்தில் பொடியின் நெடிமட்டுமே மிஞ்சியிருக்கும்.

மூணாம்பீரியடுக்கு நேரமாகிவிட்டது. ரங்கராஜன் திருணையிலிருந்து எழுந்து உள்ளே போனார். பெட்டியைத் திறந்து வேறு வேட்டிசட்டை எடுத்தார். அப்பாவிடமிருந்து வந்த கடிதமும் மணியார்டர் ரசீதும் உதிர்ந்தன.

அப்பாவுக்கு எழுதிய பதில் நமஸ்காரம் தொடங்கியதுடன் சரி. பிறகு நகரவில்லை. என்ன எழுதுவது. குடும்ப விஷய மென்றால் ஒரு வியாசமே எழுதணும். அப்பா கேட்கிற பணத்துக்கு ரெண்டுபேர் சம்பாதித்தாலும் முடியாது.

அவரைச் சொல்லியும் குற்றமில்லை. ஒவ்வொரு மாதமும் தபால்காரனை எதிர்பார்த்து நடக்கும் ஜீவனத்தில் யாரைக் கேட்பார். மோர்ப்புளிப்பை முகத்தில் ஏந்திக்கொண்டு கொல்லைப்புறத்துக்கும் ரேழிக்குமாகத் திரியும் அம்மாவையும் அவளது முந்தானையைக் கட்டியாகப் பிடித்தபடி இழுபடும் தங்கையையுமா கேட்பார்.

இந்தக் கோலத்தைப் பார்க்க வாரம் ஒருமுறை ஊருக்குப் போகவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு முறையும் அப்பாவின் வார்த்தைகள் மெலிந்து வரும்.

''ரங்கு அடிக்கடி அலஞ்சா செலவுதானே.''

அம்மா வெறித்துப்பார்ப்பாள்.

''வராமலே இருந்துட்டா செலவில்லையே.''

அப்பாவின் தொண்டைக்குள் குரல் உறைந்துபோகும்.

வருஷாந்திர லீவு வந்தால் மனசுக்குக் கஷ்டமாக இருக்கும். வீட்டில் முழுமாசத்துக்குமேல் தள்ளுவது பெரிய சிரமம். வயல்வெளிப்பக்கம் போனால் அப்பா கொஞ்சங் கொஞ்சமாக விற்றுக் கைகழுவிய சொந்தவயல்கள் நினைவுக்கு

வரும். ஆற்றங்கரையில் தங்கையுடன் ஓடி விளையாடிய நாட்கள் மனசுக்குள் குமிழியிடும்.

அப்பா அடிக்கடி நினைவுபடுத்துவார்.

''ரங்கு இந்தமாசத்துக்கும் சம்பளம் வருமோல்லியோ.''

லீவு முடிந்து ஸ்கூலுக்கு வந்து சம்பளம் வாங்கி அனுப்பும்வரை அப்பாவின் வார்த்தைகள் மறக்காது. சம்பளப்பட்டியலில் ஸ்டாம்பின்மேல் கையெழுத்துப் போடும்போது அசோகச்சக்கரத்துக்குள் முழுக்குடும்பமும் நிற்கும் நினைவு அடுத்தமாதம்வரை அமுங்கும்.

எப்படியும் இன்றைக்குக் கடிதம் எழுதிமுடித்தாகணும். எக்காரணத்தைக்கொண்டும் தள்ளிப்போடாமல் தங்கைக்கு வரன் பார்க்கச்சொல்லணும். தோலுரியும் வாழைமரமாக அந்தப் பெண்ணுக்கு வயசாகிக்கொண்டு போகிறது. கடன்வாங்கியாவது அவளைக் கடத்தியாகணும். அப்புறம் தனக்கு ஒரு துணை தேடணும்.

அவர் சட்டைபோட்டுக்கொண்டு கண்ணாடியில் முகம் பார்த்தார். நெற்றிநாமம் இடையில் கரையுடைந்திருந்தது. மறுபடியும் தீட்டிக்கொண்டார்.

கண்ணாடிக்குள் சொந்தஊர்ச் சிறுவர்கள் கிண்டல் தாண்டவமாடினார்கள்.

''காக்காக்குஞ்சி காக்காக்குஞ்சி.''

அவருக்குத் தனதுமுகம் இன்னும் கோரமாகத் தெரிந்தது.

''இந்த மூஞ்சிக்குக் கல்யாணம் ஒரு கேடா.''

சீப்பை எறிந்துவிட்டு சரித்திரப்புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு ஸ்கூலுக்குக் கிளம்பினார்.

ருக்மணி வரும்போது ஸ்கூலில் பெண் டீச்சர் யாருமில்லை. ஹிந்தி சொல்லித்தர அவளைப் போட்டிருந்தார்கள்.

தமிழய்யா பாண்டியனை கேள்விப்பார்வையால் துளைத்தார். பாண்டியன் சொன்னார்.

''அதான நான் வந்து மூணுமாசங்கூட ஆகல. பின்னாலயே இந்தி வந்துருச்சு.''

''இது ஒங்களுக்கே நல்லாருக்கா.''

''என்னசார் அநியாயமாருக்கு. நான்தான் ஆர்டர் போட்டு அனுப்புனமாதிரி சொல்றீக.''

''எப்படி வந்து எறங்கியிருக்குது பாத்தீங்களா.''

''சொல்லாமக் கொள்ளாம சொகுசா மொழஞ்சிருச்சு.''

''திட்டம் போட்டு நடந்துருக்குது.''

''ஒருவேள ரங்கராஜன்சார் வேலையாருக்குமோ.''

தமிழய்யாவின் கண்கள் ரங்கராஜனுக்கு உருண்டன. ரங்கராஜன் ஓங்கிச் சொன்னார்.

''ஆமா நான்தான் செஞ்சென் போறுமா.''

''நாங்க என்னசார் பாவம் செஞ்சொம் இப்படித் துரோகம் பண்ணீட்டீக.''

''பாண்டியன் செய்யாத பாவமா.''

அதுக்குள் வையாபுரி வந்துவிட்டான்.

''சாமி ஆச்சியம்மாவுக்கு அக்ராரத்துல வீடு வேணுமாம். பக்கத்துலயே பாத்துக் குடுத்துருங்க.''

ரங்கராஜனுக்குப் பொத்துக்கொண்டுவந்தது.

''கிண்டலா பண்ணற. எல்லா ஏற்பாடும் பாண்டியன் செய்வார்.''

பாண்டியன் சொன்னார்.

''பரம்பரையா குடியிருக்கிறவுக நீங்க. நாங்க பஞ்சத்துக்கு வந்தவுக. ஒங்களுக்கில்லாற பவரா.''

வையாபுரி பாண்டியனைப் பார்த்துச் சிரித்தான்.

''நான் வந்து கேக்கிறதால சாமிக்குக் கோவம் போலருக்கு. என்னமோ ஒங்களப்பத்தி பெரிசாச் சொல்லீட்டு வந்துருக்கென்.''

''நோக்குத் தெரியாத வீடும் அக்ராரத்துல இருக்கறதோ.''

''பேசி முடிக்கப்போறதென்னமோ நான்தான். இருந்தாலும் சாமிதான் பாத்துக்குடுத்தாகன்னு ஒரு பேரு வரட்டுமே. டீச்சரம்மா சந்தோசப்படுமில்லையா.''

''அப்படியெண்ணும் பேரு வேணாமே.''

தமிழய்யா சமாதானம் சொன்னார்.

''நீங்க நடங்க வையாபுரி. நம்ம சாமி பின்னாலயே வருவாரு.''

''அய்யா சொன்னாச் சரி.''

வையாபுரி சவக்கவக்கென்று நடந்துபோனான். தைத்து வைத்த குல்லாமாதிரி வெள்ளைத்தலைப்பா முன்னும் பின்னும் அசைந்தது. பாண்டியன் ரங்கராஜனை வற்புறுத்தி அவனுடன் அனுப்பிவைத்தார்.

ரெண்டுபேரும் ஒரு ஆச்சியிடம் பேசி எதிர்வரிசையில் ருக்மணிக்கு வீடு ஏற்பாடுசெய்தார்கள். அந்தவாரமே அவள் குடியேறிவிட்டாள். அவளது அம்மாமட்டும் வந்து ஒருநாள் உடனிருந்து குடியமர்த்திவிட்டுப் போனாள். ரூம் திருணையில் இருந்தவாறு எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தார் ரங்கராஜன்.

சாமான்களைச் சுமந்துபோகிற போக்கில் வையாபுரி ஓரப்பார்வையில் சொல்லிக்கொண்டு போனான்.

''நம்ம சாமிக்காகுமா. மனசிருந்தா மார்க்கமுண்டு.''

அவன் திரும்பி வரும்போது கூப்பிட்டுக் கேட்டார்.

''வீடு பிடிச்சிருக்கறதா.''

''சாமி பாத்துக்குடுத்த வீடாச்சே. புடிக்காமருக்குமா.''

''ஊரு எங்க.''

''திருனவேலிப்பக்கம் பேட்ட.''

''அப்படியா.''

''ரெண்டுபேரும் ஒரு பஸ்லதான் போகணும்.''

''அவங்க அப்பா வரலயா.''

''அப்பா சின்னவயசிலயே போயிட்டாராம்.''

ஏன் கேட்டோம் என்றிருந்தது. மனசுக்குள் உச்கொட்டிக் கொண்டார்.

சாயங்காலம் ஹெட்மாஸ்டரின் ரூமுக்குள் நுழையும் போது உள்ளிருந்து வந்த ருக்மணி ரங்கராஜனை நன்றியுடன் பார்த்துச் சிரித்துவிட்டுப் போனாள். ஹெட்மாஸ்டர் கலகலத்தார்.

''மிஸ்டர் ரங்கராஜன் நம்ம டீச்சருக்கு ஒடனே வீடுபாத்துக் குடுத்துட்டீங்களே.''

ரங்கராஜனுக்கு வையாபுரிமேல் கோவங்கோவமாக வந்தது. அதை மறைத்துக்கொண்டு சமாளித்தார்.

''வையாபுரி சொன்னான் சார். அக்ராரத்துல அடச்சுக் கெடக்கிற வீடு வெளிச்சமாகட்டுமே.''

''வெரிகுட். நீங்க வெளக்கேத்தி வச்சிட்டீங்க.''

ஹெட்மாஸ்டர் பந்துவிழிகளை உருட்டிச் சிரித்தார். அவரிடமிருந்த அமைதி கீறிக் கசிந்துகொண்டிருந்தது.

இடைவேளையில் பையன்கள் ஹிந்தி எழுத்துகளை ராகத்துடன் உச்சரித்து உற்சாகப்பட்டார்கள்.

''கக்க ககங...சச்ச சஜஞ.''

வெளியே வெற்றிலை துப்பவந்த தமிழய்யா கூர்மையாகக் கவனித்தார். சுண்ணாம்பை அதிகம் சேர்த்துக் கொண்ட உணர்வு அவருக்கு. பாரதியார் பாட்டுக்கே ஏழு தடவை எச்சு விழுங்கி விக்கிப் பரிதாபப்படும் பையன்கள் நினைவுக்குவந்தார்கள்.

''என்ன இது வம்பாருக்கு.''

அவர் அடிக்கடி புழுங்கினார். இது நல்லதுக்கில்லை என்று பட்டது.

பாண்டியன் வெளிப்படையாகவே சாட ஆரம்பித்தார். எல்லாரிடமும் முறையிட்டார்.

''நம்ம தமிழ்நாட்டுலதான் இருக்கமான்னு சந்தேகமாருக்கு சார். தட்டிக்கேக்கிறதுக்கு நாதியே இல்லையா.''

ஹெட்மாஸ்டர் யாரையும் கலந்துபேசாமல் ஹிந்தி பீரியடுக்கு ஏற்பாடுசெய்தார். இதில் ரெம்பப் பாதிக்கப்பட்டது டிரில் பீரியடுதான். அதுக்கடுத்து கிராப்ட். மற்றவர்களுக்கு அதிகமில்லை. பாண்டியன் கிராப்ட் வாத்தியாரிடம் போனார்.

''சார் நடக்கிற அநியாயத்தப் பாத்தீகளா.''

கிராப்ட் வாத்தியார் சலனப்படவில்லை.

''சார்வாள் இதுல என்ன சொல்ல இருக்குது. நமக்குக் குடுக்கிற துருத்திய ஊதிக்கிறவேண்டியதுதான்.''

அவரது பொடிமூக்கைப் பிடித்துத் திருகலாமா என்றிருந்தது பாண்டியனுக்கு.

''ஒங்களுக்குப் பொடிப்போட நேரங்கெடைக்குது பாருங்க. ஏன் சொல்லமாட்டீக.''

''இங்க பாருங்க சார்வாள். எது கொறையிதோ கூடுதோ அதப்பத்தி நமக்குக் கவலையில்லை. சம்பளம் கொறஞ்சாத்தான் கவல.''

பாண்டியனுக்குக் கோபம் அடங்கவில்லை. ஹெட் மாஸ்டரை நேரில் முறைத்துக்கொள்ளலாமா என்றுகூட நினைத்தார். தமிழய்யா சமாதானப்படுத்திவைத்தார்.

முந்தியெல்லாம் ரூமில் பாட்டுப்பாடிய பாண்டியன் இப்போது சதா வசைபாடினார். அரசாங்கத்தையும் மந்திரி களையும் சாடினார். எல்லாரும் ஒண்ணுமே நடக்காததுபோல் இருப்பதைக்கண்டு பொருமினார். ரங்கராஜனுக்கும்

அவருக்கும் காரசாரமான விவாதம் நடந்தது. சூடுபறக்கப் பேசினார்கள். தமிழய்யாதான் பட்டிமன்றத்துக்கு நடுவர். இடையில் எதையாவது சொல்லி சூட்டைத் தணித்தார்.

என்ன காரணமோ தெரியவில்லை அன்றைக்கு அதி காலையிலேயே பாண்டியனுக்கு ஆத்திரம் கிளம்பிவிட்டது. தூங்கியெழுந்து முகங்கழுவும்போதே முனங்கிக் கொண்டி ருந்தார். ரூம்திருணையில் இருப்புக்கொள்ளவில்லை. எதிரிலிருந்த ரங்கராஜனை விழுங்குவதுபோல் பார்த்தார்.

''பையங்க என்ன பொதிசொமக்கிற கழுதையா சார். இந்தியக் கொண்டுவந்து முதுகுல ஏத்துறாக.''

ரங்கராஜன் சீண்டினார்.

''பாண்டியன் ராத்திரிமுழுக்கத் தூங்கலயா. இதையே நெனச்சிண்டுருந்தேளா.''

''இவுக பண்றதப் பாத்தா தூக்கமா வருது. யாரவாச்சும் புட்பால் வெளையாடுவமான்னு இருக்குது.''

தமிழய்யா பாண்டியன்பக்கம் திருணைமூலையில் உட்கார்ந்து உள்சிரிப்பில் கவனித்துக்கொண்டிருந்தார். ரங்கராஜன் பின்வாங்கவில்லை.

''புதுசுபுதுசா படிச்சுத் தெரிஞ்சிக்கிறணும் பாண்டியன்.''

''சும்மாருங்க சார். உள்ளதுக்கே மோசம் புள்ளகுட்டிக்குப் போயிட்டீக. தமிழய்யாவக் கேளுங்க எத்தன பையங்க தமிழ தப்பில்லாம எழுதுறான்னு.''

''அதுக்கு ஹிந்தி என்னபண்ணும்.''

பாண்டியன் திருணைவிளிம்புக்கு நழுவிவந்தார்.

''நீங்கன்னுதான் சும்மாருக்கென். இல்லன்னா நாக்கறுந்து போகும்படியா கேப்பென். பள்ளிக்கூடம் குட்டிச் சொவராகப் போகுது.''

''ஸ்கூலக் கேவலப்படுத்தறேள்.''

''ஆடுமாடு பத்துறமாதிரி இந்தியப் படிக்கச்சொல்லி யாரு கேவலப்படுத்துறாகன்னு பாருங்க. கிருஷ்ணசாமி சார் வண்டிபத்தும்போது பாத்துருக்கீகளா. அதச் சொல்லித் தாறதுக்கு ஸ்டைலா ஒரு பொம்பளையப் புடிச்சு அனுப்பீட்டான். மானங்கெட்ட பெழப்பு.''

''மத்த பாஷையுந்தான் பொம்மனாட்டி கத்துக் கொடுக்கறா.''

''நம்ம தமிழய்யாவப்போல நூத்துக்கணக்குல ஆம்பளைக சொல்லித்தாறாக சார். இப்படி பொட்டத்தனமா இல்ல.''

தமிழய்யா தெளிவுரை வழங்கினார்.

''கசப்பான சமாச்சரத்த தேன்ல கலந்துதான் கொடுக்க வேண்டியிருக்கு.''

ரங்கராஜனுக்குச் சூடு இறங்கவில்லை.

''ஆத்தக் காத்துண்டு கெடக்கறவாளுக்கு பாண்டியன் வாயால பேச்சு வாங்கிக்கட்டிக்கணும்னு தலையெழுத்து.''

''நம்ம தமிழய்யாவோட பொண்ணுமாதிரி டீச்சர்ஸ் ட்ரெயினிங் முடிச்சிட்டு வெறுங்கழுத்தோட வீடுவீடா கெடக்கிற பொண்ணுகளவும் மனசுலவச்சுப் பேசுங்க சார்.''

''அவாளுக்கு கொடுக்கவேண்டாம்னு சொல்லலயே.''

''குடுக்கலயே.''

''ஒரு பொண்ணுக்கு மாதச்சம்பளம் தர்றான் குடும்பத்தக் காப்பாத்த. ஹிந்தி கத்துக்கொடுத்தா என்ன சங்கீதம் கத்துக் கொடுத்தா என்ன.''

''அதுக்கு அப்பிராணிப் பையங்கதானா கெடச்சாங்க.''

''நீங்க வெளையாட்டு கத்துத்தரலயா.''

''இது உள்ளூர்ச் சமாச்சாரம் சார். ஒவ்வொரு பையனும் வீட்ல கிட்டி வெளையாடுறான். மழவந்தா ஊருக்குத் தலதெறிக்க ஓடுறான். அதே வெளயாட்டத்தான் இங்கவந்து

பேஸ்பால் ரன்னிங்ரேஸ்னு ஆடுறான். என்னசார் கிட்டிவெளையாட்டுக்கும் இந்தி படிக்கிறதுக்கும் முடிச்சுப் போடுறீகளே.''

ரங்கராஜன் ரூமுக்குள் போய் சோப் எடுத்துக்கொண்டு வந்தார். சோப் டப்பாவுக்குள் பல்பொடிப் பொட்டணத்தை வைத்து மூடினார்.

''ஹிந்தி படிக்கறது கஷ்டம்னா தமிழ் ரொம்பக் கஷ்டம் பாண்டியன்.''

அவருக்குப்பின்னால் வந்த பாண்டியன் டூத்பேஸ்டை பிரஷில் படுக்கவைத்தார்.

''தமிழ் படிக்கிறவன் இந்திய பூன்னு ஊதிருவான்.''

''ஊதட்டுமே.''

''அப்படியென்ன ஆத்தரம். இந்தி பேசுறவுகளுக்கு தமிழ் சொல்லிக்குடுப்பாகளா. இங்கமட்டும் இளிச்சவாயங்களா என்ன.''

''கூடுதலா ஒரு பாஷையைத் தெரிஞ்சுக்கிறது தப்பில்ல.''

''அது எல்லாருக்கும் பொதுவாருக்கணும். அதென்ன எழுத்தா சார். வெளவால் தலகீழா தொங்கினமாதிரி. நேரா இருக்கிற தமிழவே படிக்கத் தெணறுறான்.''

''தமிழ் எழுத்துமட்டும் என்னவா இருக்கறதாம். செத்த பாம்பு சுருண்டு கெடக்கற லட்சணமா.''

பாண்டியன் துள்ளினார்.

''செத்தா கெடக்குது. நாகம் படமெடுத்துச் சீறீட்டு நிக்கிற எழுத்துக்கள மறந்துட்டீக. அதக் கலச்சுவுட்டு வேடிக்கபாத்தா நடக்கிற கதையே வேற.''

தமிழய்யாவுக்கு ஒரு சந்தேகம்.

''இங்கிலீஷ் எழுத்துல ஒரு ராஜகம்பீரம் இருக்குதுன்னு சொல்லப்போறீகளா சாமி.''

''நாடு விடுதலையடைஞ்சு இத்தன வருஷமாகியும் அந்த பாஷ நம்மள ஆண்டுக்கிட்டுருக்கறதுன்னா அதுக்கு என்ன அர்த்தம்.''

பாண்டியன் முந்திக்கொண்டார்.

''நம்ம சொந்தமா சிந்திக்கத் தெரியாத மடையங்கன்னு அர்த்தம். இல்ல நமக்கு இன்னியும் உண்மையான விடுதல கெடைக்கலன்னு அர்த்தம்.''

''அன்னிய பாஷையிலருந்து விடுதலையடையணும்னா நமக்குன்னு பொதுவா வேற ஒரு பாஷ வேணுமில்லையா.''

''ஒரு பேச்சுக்காகச் சொல்றென். பொதுவான மொழியா தமிழ் இருக்கட்டும்னா ஒதுக்கிருவானா.''

''அதெப்படி. மெஜாரிட்டி ஜனங்க பேசற பாஷையத்தான பொதுவானதா வச்சுக்கிடணும்.''

''அதென்ன மெஜாரிட்டி. தேர்தலா நடத்துறாக. அப்படின்னா வெள்ளக்காரனுக்கும் இவனுக்கும் என்ன வித்தியாசம். அவன் வெள்ள இவன் கருப்பு.''

''என்னப்போல.''

''நம்மளப்போல.''

''பொதுவான பாஷையில்லன்னா நாட்டுல ஒத்தும கெட்டுப்போகும்.''

''ஒத்துமங்கிறது தீத்தம்சார் கடையில விக்கிற வெண்டக்காயா என்ன. அது தானா வரணும். நாட்டுல நாப்பது மொழி இருக்குதுன்னா அத்தனையும் பொதுவானதுதான். நரிக்கொறத்திகிட்டப்போயி ஒம்புள்ளய இந்தியில கொஞ்சுன்னு சொல்லமுடியுமா. கையில கெடைக்கிறத எடுத்துக்கிட்டு அடிக்கவந்துருவா. பெரிய ஒத்துமையாம் ஒத்தும. வாய்கிழியப் பேசுறதோட சரி.''

''என்னதான் செய்யச்சொல்றேள்.''

''டில்லியில இந்தி பேசுறவன் மட்டுந்தான் இருக்கானா. தமிழன் இல்லையா. கன்னடக்காரன் இல்லையா.''

''எல்லாருந்தான் இருக்கறா.''

''அவனவனுக்கு அந்தந்த மொழியில எழுதீட்டுப் போயேன். அதுதான் ஒருத்தன ஒருத்தன் மதிக்கிறதுக்கு அடையாளம். இதென்னடான்னா ஒருத்தன் மத்தவன மிதிக்கிற கதையால்ல இருக்கு. கொஞ்சநாளைக்கு முந்தி நடந்த ஒரு அனியாயத்தச் சொல்றென் கேளுங்க.''

''அனியாயம் நடந்தது பாண்டியனுக்கா மத்தவாளுக்கா.''

''எனக்கு நடந்துருந்தா அந்த எடத்துலயே ரெண்டுல ஒண்ணு பாக்காம வருவனா. எங்க சொந்தக்காரப்பய ஒருத்தன் வீட்ல கெடந்து வெவசாயத்தக் கவனிக்காம கொழுப்பெடுத்துப்போயி எவனோ ஒரு கான்ட்ராக்டர் பேச்ச நம்பி வடநாட்டுக்கு ஓடிப்போயிட்டான்.''

''அங்க என்ன வேல.''

''பெரிய உத்தியோகம். காதவழிக்குப்போயி கரண்டுத் தூணு நட்டுறதுக்குத்தான். பக்கத்து வீட்டுப்பையன் போயிட்டு வந்து வெள்ளையுஞ்சொள்ளையுமா என்னேரமும் கையில டிரான்சிஸ்டரத் தூக்கீட்டுத் திரியிறதப்பாத்து இவனுக்கு இருப்புக்கொள்ளல. மாடுகண்ண வுட்டுட்டு ராத்திரியே கௌம்பீட்டான். அங்க போனப்பெறகுதான் தெரியிது பெழப்பு மோசம்னு.''

''சரியா மாட்டிண்டான்.''

''கொஞ்சநாளைக்கு வெயில்ல கெடந்து ஒதஞ்சு பாத்துருக்கான் முடியல. கையில காசுமில்ல. கான்ட்ராக்டர் கண்ணுலயே தட்டுப்படல. சரி வேற வழியில்லன்னு முடிவு செஞ்சு யாருட்டயும் சொல்லாமக் கொள்ளாம ஊருக்கு நடைய வுட்டுட்டான்.''

''தனியா வரானா.''

''வரும்போது பட்ட கஸ்டம் கொஞ்சநஞ்சமா. கண்ட எடத்துலயும் மாடுமாதிரி தண்ணியக் குடிச்சிட்டு ஒருநாள் முழுக்க பட்டினியோடயே நடந்துருக்கான். மறுநாள் மதியம்

ஆளு ரெம்பக் கெறங்கிப்போயிட்டான். ஒரு இந்திக்காரன் வீட்ல போயி தண்ணி கேட்ருக்கான். இவன் பேச்சு அவனுக்குப் புரியாம இந்தியில என்னென்னமோ பேசியிருக்கான். அது இவனுக்குப் புரியல. ஆனா அவன் இந்தின்னு சொல்றதப் பாத்தா இந்தி தெரியாதான்னு கேக்கிறாங்கிறதுமட்டும் வெளங்கிப்போச்சு. இவன் தெரியாதுன்னு தலையசைக்கவும் அவனுக்கு வந்ததே கோவம். எதிரியா நெனச்சிக்கிட்டு வாய்க்கு வந்தபடி திட்டித்தீத்து கழுத்தப்புடிச்சுத் தள்ளீட்டான். இவன் என்னென்னமோ சைகையில சொல்லி தண்ணி கேட்டுப்பாத்தும் கெடைக்கல. காலோஞ்சு நாவறண்டு தள்ளாடித்தள்ளாடி நடந்துவந்து கடைசிக்கு ஒரு கொளத்துல தண்ணி குடிச்சிருக்கான்.''

ரங்கராஜனுக்கு முகத்தில் வருத்தம் படர்ந்தது.

''சாப்பாட்டுக்கு என்னசெஞ்சானாம்.''

''என்ன செய்யமுடியும். பிச்சையெடுத்தாத்தான் வழி. அதச் செய்றதுக்கும் மனசு வரல. சரி உள்ளதுபோல இருக்கட்டும்னு கள்ளரயிலேறிப் படுத்துட்டான். விடியக் காலம் வண்டி ஆந்திராவுக்குள்ள மொழையும்போது எக்கச் சக்கமா ஆப்புட்டுக்கிட்டான்.''

''அதெப்படி.''

''போலீஸ்காரன்தான் துயிலெழுப்பியிருக்கான். பெறகென்ன முட்டிக்குமுட்டி தட்டி ஜெயில்ல போட்டுட்டாக. பத்துநாளைக்கு மாமியார் வீட்டுச் சாப்பாடு. பதினோராம்நாள் அவுத்துவுட்டுட்டான். வாறவழியில கெடைக்கிற வேலையைச் செஞ்சு வயிறு கழுவிக்கிட்டே நடந்து நடந்து கடைசியா ஆண்டியாவரத்துக்கு அர உசிரோட வந்து சேந்துட்டான்.''

''சரியான அனுபவம் பாண்டியன்.''

''அதுக்குப்பெறகு அய்யா வடக்க தலவச்சுக்கூடப் படுக்கிறதில்ல. இந்தக் கதைய எதுக்குச் சொல்லவந்தன்னா

ஒரு சாதாரண இந்திக்காரனுக்குக்கூட தான் பேசுற மொழிமேல எவ்வளவு மரியாத இருக்குது பாருங்க. நம்மளுந்தான் இருக்கமே. கோட்டையில உக்காந்துருக்கிற மகராசங்கள எண்ணைக்கு கரும்புள்ளி செம்புள்ளி குத்தி கழுதமேல ஏத்தி ஓட்டுறமோ அண்ணைக்குத்தான் நம்ம தலநிமிந்து நிக்கமுடியும். என்ன செய்றது சலூன்காரனுக்கு இருக்கிற ரோசமும் மானமும் சட்டம் போடுறவனுக்கு இல்லையே.''

இனி பேச்சு வளர்ந்தால் பாண்டியனைக் கட்டுப்படுத்த முடியாது. ஒருவர் பாக்கியில்லாமல் சகட்டுமேனிக்கு ஏக வசனத்தில் பேசுவார். நிலைமையறிந்து தமிழய்யா மெல்ல எழுந்தார். ரங்கராஜன் சொன்னார்.

''என்ன எழவோ சோத்துக்கு வழியில்லாறச்சே இந்த வம்பெதுக்கு. வாங்கோ குளிக்கப் போகலாம்.''

மூணுபேரும் புறப்பட்டார்கள். கதவைப்பூட்டிய பாண்டியன் பேச்சுவாக்கில் சொன்னார்.

ரங்கராஜன்சாருக்கு இந்தி புடிக்குதோ இல்லையோ இந்தி சொல்லித்தாறவுகளப் புடிச்சுப்போச்சு.''

ரங்கராஜன் வேகமாகத் திரும்புமுன் பாண்டியன் முன்னால் ஓடி தமிழய்யாவுக்கு நாயுருவிச்செடியைத் தேட ஆரம்பித்தார். தமிழய்யா ரங்கராஜனின் கோவத்தை ரசித்தபடி பின்தொடர்ந்தார்.

**பா**ண்டியன் கிரவுண்டில் இருந்தார். ஏழாம் வகுப்புக்குக் கபடி நடந்தது.

''மதியச்சோத்து மயக்கம் இன்னியும் போகலயா. சுறுசுறுப்பா இருடா சோதாப்பயலே.''

அவரே கோதாவில் இறங்கி கணீரென்று பாடினார். கோட்டைத் தொட்டு காலைத் தூக்கி தோரணையாகப்

பார்த்தார். வேண்டுமென்றே பிடிபட்டு மூச்சுவிடாமல் தாக்குப்பிடித்து தப்பிவந்து முறைத்தார். அதேபோல் அடுத்தபக்கம் நின்று எதிராளியைப் பிடிக்கும் தந்திரங்களைச் சொல்லிக்கொடுத்தார். இப்போதுதான் பையன்களுக்கு வேகம்வந்தது. அவரது விசிலும் சுதாரிப்படைந்தது.

ஆறாம்வகுப்பு அய்யாத்துரையும் அட்டெண்டர் அடைக்கலமும் கிரவுண்டுக்கு வந்துகொண்டிருந்தார்கள். பாண்டியன் விசிலைத் துப்பிவிட்டு ஆச்சரியமாகப் பார்த்தார்.

அய்யாத்துரையின் முகத்தில் வேட்டிசட்டையைப்போல் அதே வெள்ளைச் சிரிப்பு. அடைக்கலம் கொஞ்சம் வாட்டமாக இருந்தார்.

''என்ன சார் இவ்வளவு தூரம். கபடி வெளையாடணும்னு ஆச வந்துருச்சா.''

அய்யாத்துரை நெருங்கிவந்தார்.

''ஒங்களப் பாக்கத்தான் வந்தொம்.''

''அப்படியென்ன அவசரம் சார். சொல்லிவுட்டுருந்தா நானே வந்துருப்பனே.''

அடைக்கலம் வாய்திறந்தார்.

''ஒங்களுக்கு வெசயம் தெரியாதா. இண்ணைக்கு சார் ரிடையராறாரு.''

பாண்டியன் அய்யாத்துரையைப் பார்த்தார்.

''உண்மையாவா சார். நம்பமுடியலயே.''

''ஆயிப்போச்சு வயசு. ஒங்களத்தான் மொதல்ல பாத்துச் சொல்லணும்னு தோணுச்சு.''

பாண்டியன் அடைக்கலத்திடம் வருத்தப்பட்டார்.

''என்னங்க அடைக்கலம் நேத்து ஒருவார்த்த சொல்லியிருக்கலாமில்ல. அட நேத்த வுடுங்க காலையில கையெழுத்துப்போடும்போதுகூட சொல்லலயே.''

அவர் அடைக்கலத்தை அனுப்பிவிட்டு அய்யாத்துரையை கூட்டிப் போனார். ஒவ்வொரு வகுப்பாகப் போனார்கள். பாண்டியன் எல்லாவகுப்பிலும் அய்யாத் துரையைப்பற்றி பெருமையாகச் சொன்னார்.

டீச்சர்ஸ் ரூமில் வாத்தியார்கள் ஒப்புக்குச் சிரித்தார்கள். யாரும் கலகலப்பாகஇல்லை. அய்யாத்துரைமட்டும் எப்போதும்போல் சந்தோசமாக இருந்தார்.

வழக்கத்துக்கு மாறாக பையன்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர் ஒவ்வொருவரையும் வருடி தட்டிக் கொடுத்தார். அவர்கள் அண்ணாந்துபார்த்துவிட்டு ஏதோ வருத்தத்தில் பிரிந்தார்கள்.

பாண்டியன் அவரை ஹெட்மாஸ்டரிடம் கூட்டிப் போனார். ஹெட்மாஸ்டர் நிறையப் பேசினார். அய்யாத்துரை நிறையச் சிரித்தார். கடைசியில்மட்டும் ரெண்டுவார்த்தை சொல்லிவிடை பெற்றார்.

''சார் ஆறாம் வகுப்புக்குச் சீக்கிரம் வாத்தியார் வாறத்துக்கு ஏற்பாடுசெஞ்சிருங்க. அந்தப் பயிருக வேர்ப்புடிச்சு வளந்தாத் தான் வெளச்சலும் நல்லாருக்கும்.''

பாண்டியன் மனசுக்குள் பேசினார்.

''அதுவரைக்கும் அந்த வகுப்புக்கு இந்தி டீச்சர மட்டும் அனுப்பாம இருந்தாச் சரி.''

ஹெட்கிளார்க் சீனிவாசனிடம்கூட சொல்லிக் கொள்ள மறக்கவில்லை அய்யாத்துரை. பாண்டியன் சீனிவாசனிடம் சொன்னார்.

''நம்ம சாருக்குச் சேரவேண்டிய பணமெல்லாம் வாங்கிக் குடுக்கிறவரைக்கு ஒங்கள உக்காரவுடமாட்டெடன்.''

சாயங்காலம் ஸ்கூல் விட்டதும் வையாபுரி எல்லா வாத்தியார்களையும் பிடித்து நிறுத்திவிட்டான். பாண்டியன் அவனைப் பாராட்டினார்.

''நீ கில்லாடிவே. கொழந்தச்சாமி சாரக்கூட புடிச்சு வச்சிட்டயே.''

''கடைசியில நாலுதடவ வுட்டுட்டு மணியடிச்சது ஆருக்குன்னு நெனச்சீக.''

''அப்படியொரு ஏற்பாடா.''

''கல்லாப்பெட்டி ஞாபகம் வந்துட்டா வண்டி நிக்காதே.''

பாண்டியன் குழந்தைச்சாமியை விடுதலைசெய்தார்.

''நீங்க முன்னால போங்கசார். நாங்க பேசிக்கிட்டே வாறொம். கவலப்படாதங்க. நம்ம கடைக்குத்தான் வருவொம்.''

சீனிவாசன் அடைக்கலம் உட்பட எல்லாரும் அய்யாத்துரையுடன் ஹோட்டலுக்குப் போனார்கள். பாண்டியன் ஒவ்வொரு பண்டமாக ஆர்டர் பண்ணினார். வையாபுரி சர்வராக மாறினான். மாணிக்கம் வையாபுரிக்கு எடுபிடி. கடைசியில் வித்தியாசமான பண்டங்களின் பேரும் கேட்டது.

''தமிழய்யாவுக்கு ஒருகட்டு வெத்தல பாக்குப் பக்கடா தொட்டுக்கிறதுக்கு ஒரு டப்பா சுண்ணாம்பு. நம்ம கிராப்ட்சாருக்கு ஸ்ட்ராங்கா ரெண்டு பொடிமட்ட.''

வையாபுரி வேகமாகப் போனான்.

''இந்தா கொண்டுவாறென் சூடா.''

சட்னிக்காரம் தாங்காமல் தமிழய்யா குருவிக்குஞ்சாக வாயைத் திறந்தாலும் அவர்கண்ணில் ரெண்டுசொட்டுச் சிரிப்பு திரண்டிருந்தது.

அன்றைக்கு குழந்தைச்சாமி சாப்பிட்டது உட்பட செலவெல்லாம் பாண்டியன் பொறுப்பு. வையாபுரி எழுதிவைத்ததுபோல் கணக்கை ஒப்பித்தான்.

வெளியே வந்த தமிழய்யா அய்யாத்துரையை கொஞ்சநேரம் வெறித்துப் பாத்துக்கொண்டிருந்தார். இதைக் கவனித்த ரங்கராஜன் கேட்டார்.

''ஏன்சார் அவரையே பார்த்துண்டுருக்கறேள்.''

தமிழய்யா நினைவை முறித்துக்கொண்டு சிரித்தார்.

''நான் வீட்டுக்குப் போறதுக்கு எத்தன நாளிருக்குன்னு நெனச்சுப்பாத்தென்.''

பாண்டியன் சொன்னார்.

''நீங்க வீட்டுக்குப் போறது இருக்கட்டும். மொதல்ல ரூமுக்குப் போங்க.''

ரங்கராஜன் கேட்டார்.

''நானும் அய்யாத்தொர சார் ஆத்துக்கு வரட்டுமா பாண்டியன்.''

''நீங்க தமிழய்யாவக் கூட்டீட்டுப் போங்க. இல்லன்னா நேர தென்காசிக்கு நடையவுட்டாலும் வுட்ருவாரு.''

பாண்டியனும் வையாபுரியும் அய்யாத்துரையின் வீடுவரை போனார்கள்.

முற்றத்தில் மிதிக்குமுன்பே அவரது சம்சாரத்தின் குரல் வந்தது.

''வெளையாட்டுக்காரத் தம்பி வாங்க.''

பாண்டியன் வையாபுரியைப் பார்த்தார்.

''இந்த வீட்ல எனக்குப் பேரு வச்சிருக்கிறதப் பாத்தயா.''

''பொருத்தமான பேருதான் சார்.''

''அப்படியா. வெளியவா கவனிச்சுக்கிறென்.''

பாண்டியன் கிட்டத்தில் உட்கார்ந்து அந்த அம்மாவிடம் தோதாகப் பேச்சுப் போட்டார்.

''ஈஸ்வரிய எங்க காணும். ஸ்கூல் வுட்டு ரெம்ப நேரமாச்சே.''

''கீழத் தெருவுல ரெண்டு வீட்டுக்கு எண்ண வேணும்னு சொல்லிவுட்டுருந்தாக. கொண்டுட்டுப் போயிருக்கா.''

''அந்த வேலவேறயா. அவள என்ன கஸ்டப்பட்டும் படிக்கவச்சிருங்க. ஏழு தாண்டுனா பெறகு மூணுவருசந்தான். பத்து முடிச்சுட்டா ஏதாவது வேலைக்குப் போயிறலாம்.''

''ஒத்தப் பொண்ணவும் முன்னேற வச்சிறணும்னுதான் அவுக அப்பா தெனமும் செக்கச் சுத்துறாக தம்பி. எப்படியும் உருண்டு பெரண்டு அவளப் படிக்க வச்சிறவேண்டியதுதான். அவுகளுக்குத்தான் கஸ்டம். வீட்ல உஸ்ஸுனு உக்காரக் குடுத்து வைக்கல. வேலையக் கைமாத்துறதுக்கு ஒரு ஆம்புளப்புள்ள இருந்தா மலைக்கவேண்டியதில்ல.''

அய்யாத்துரை இடையில் குரல்கொடுத்தார்.

''என்ன அங்கம்மா வீட்டுக்கு வந்த விருந்தாளுகள சும்மா உக்காத்திவச்சுப் பேசிக்கிட்ருக்க.''

''வெளையாட்டுக்காரத் தம்பியப் பாத்தா எல்லாமே மறந்துருது.''

அங்கம்மா அவசரமாக எழுந்துபோய் கருப்பட்டி கலந்த எள்ளுப்பிண்ணாக்கை பிட்டாகக் கொண்டுவந்து கொடுத்தது. பாண்டியனும் வையாபுரியும் திகட்டத்திகட்டத் தின்றார்கள். பாண்டியன் சொன்னார்.

''இப்படியொரு சமாச்சாரம் இருக்குதுன்னு தெரிஞ்சிருந்தா தமிழய்யாவவும் கூட்டீட்டு வந்துருக்கலாமே.''

அங்கம்மா சிரித்தது.

''அதுக்கென்ன இனியொரு நாளைக்கு எல்லாரும் வாங்க. சாப்பாடு செஞ்சுவைக்கென்.''

''அம்மா இனிமே செக்கச் சுத்துற வேலைய எனக்குக் குடுத்துருங்க. கூலி கேக்கமாட்டென். இந்தமாதிரி புட்டு குடுத்தாப் போதும்.''

வையாபுரி சொன்னான்.

''நான் கேக்கணும்னுருந்தென். நீங்க போட்டிக்கு வந்துட்டீகளா.''

அய்யாத்துரை கலகலத்தார். பாண்டியன் கிளம்பும்போது அங்கம்மாவிடம் மறக்காமல் சொன்னார்.

''சார அப்பப்ப ஸ்கூலுக்கு அனுப்பிவையிங்கம்மா. இல்லன்னா நான் இங்கவந்து ஒங்க சாப்பாட்டப் பங்கு போட்ருவென்.''

''ஒங்க கலியாணத்துக்கு எங்கள மறந்துறாதங்க. எப்பச் சாப்பாடு போடுவீகன்னு எதிர்பாத்துட்ருக்கொம்.''

''நீங்க இல்லாம எனக்குக் கலியாணமே நடக்காது.''

அதுக்கும் அய்யாத்துரையின் முகத்தில் சிரிப்புத்தான். வெளியே வந்ததும் பாண்டியன் வையாபுரியிடம் சொன்னார்.

''சிரிக்கிறதுக்குன்னே பெறந்த மனுசம்பா இவரு.''

''அதனாலதான் ஒரு நோய்நொடியில்லாம இருக்காரு.''

''எங்கம்மாட்டப் பேசீட்டு வந்தமாதிரியே இருக்கு.''

''ஒங்கம்மாவுக்கு இவ்வளவு வயசிருக்குமா.''

பாண்டியன் ஒருநமிஷம் மௌனத்துக்குப்பின் சொன்னார்.

''இருக்கும் இருக்கும். ஏன் அப்படிக் கேக்க.''

''அவுகளப் பாக்கணும்போல இருக்கு. ஒங்கய்யாவத்தான் இங்கயே பாத்துட்டனே. வீட்டுக்குக் கூட்டீட்டுப் போவீகளா சார்.''

''என்னவே அப்படிக் கேட்டுப்புட்ட. கண்டிப்பாக் கூட்டீட்டுப் போறென்.''

''எப்பசார்.''

''நான் போகயில.''

''எப்பப் போவீக சார்.''

''அதுக்கென்ன இப்ப அவசரம். போகலாம் ஒரு நாளைக்கு.''

''ஒருநாளைக்குச் சாப்பாடு போட்டாப் போதும்.''

''பத்துநாளைக்குக்கூட இருந்து சாப்புடு. எங்கய்யா நல்லா கவனிச்சுக்கிருவாரு. ஒருத்தர மனசுக்குப் புடிச்சுப் போச்சுன்னா உயிரவுடுவாரு.''

''அப்படின்னா அம்மா கவனிக்கமாட்டாகளா.''

''ரெண்டுபேருந்தான்.''

பாண்டியனின் யோசனையான நடையைக் கவனித்தான் வையாபுரி.

''போயும்போயும் ஒரு பியூனக் கூட்டீட்டுப் போக வான்னுதான யோசிக்கீக சார்.''

''வே இப்ப எங்கிட்ட ஒத வாங்கப்போறயா. பியூனும் மனுசன்தான. வாத்தியாருன்னா ரெண்டு கொம்பா மொளச்சிருக்கு. பரிச்ச லீவு வரட்டும். ஒன்னக் கழுத்தப்புடிச்சு இழுத்துட்டுப் போறனா இல்லையான்னு பாரு. அதுக்கு ஒன் வீட்டுக்காரி சம்மதிக்கணுமே.''

''ஒங்ககூடன்னா எங்க போறதுக்குன்னாலும் சம்மதிப்பா.''

''அதெப்படி. அது என்மூஞ்சியக்கூட பாத்துக் கிட்டதில்லையே.''

''பாத்துத்தான் ஒருத்தரு கொணத்தப்பத்தித் தெரிஞ்சுக் கிறணுமாக்கும். நான் சொன்னாப் போதாதா.''

''என்னப்பத்தி இல்லாறது பொல்லாறதெல்லாம் சொல்லி வச்சிருக்கயா.''

''அப்படின்னே வச்சுக்கங்களேன்.''

''இதுலருந்து என்ன தெரியிது. வேற யாருகூடயோ நீ சேந்துட்டுத்திரியிறது ஒன்வீட்டுக்காரிக்குப் புடிக்காது. அப்படித்தான. அது யாருவே. ஒழுங்காச் சொல்லீரு. இல்ல பெண்டக் கழட்டீருவென்.''

''அந்தமாதிரி சேர்க்க ஆருமில்ல சார்.''

''எங்கிட்ட மறைக்காத.''

''நம்ம வாச்மேன் வீரணனோட சேந்துக்கிட்டுப் போயி ஒரு கூத்துப் பண்ணீட்டென். அது அவளுக்குத் தெரிஞ்சு போச்சு. வீட்ல சண்டக்காடு தாங்கமுடியல.''

''அப்படி வா வழிக்கு. ரெண்டுபேரும் சேந்து என்ன செஞ்சீக.''

''பெரிசா ஒண்ணுமில்ல.''

''சிறிசா என்ன நடந்தது.''

''ரெண்டுபேரும் ஒருநா பொழுதுசாய பதினி குடிக்கணும்னு பனையடிக்குப் போனொம்.''

''ஓசிப்பதினிதான.''

''இல்ல சார். காசுப்பதினி.''

''அவன் தலையில மொளகா அரச்சயா.''

''ரெண்டுபேருக்கும் என்பொறுப்பு.''

''அப்ப மழவந்துருக்குமே. சரி பனையடிக்குப் போனீக.''

''போனதே சரின்னு அவன் மண்டிபோட்டு நாலஞ்சுபட்டைக்கு உள்ள ஊத்தி அடச்சு ...ரும கனச்சமாதிரி ஒரு ஏப்பம்போட்டான். பெறகு நான் கைய ஏந்துனென். பட்டையில பதினிய ஊத்தும்போது கப்புனு புளிப்புவாடை யடிச்சது. நான் சந்தேகத்துல அண்ணாந்துபாத்தென். சும்மா குடியும்னு பனையேறி கண்ணச் சிமிட்டினாரு.''

''ஏன் நல்ல பதினியில்லையா.''

''கலயத்துல சுண்ணாம்பு தடவ மறந்துட்டாரு. பெறகென்ன செய்றது. அலுப்புக்குப் புளிப்பில்லன்னு நானும் ஒரு கலயத்தக் காலிபண்ணுனென்.''

''வே எனக்குச் சின்னவயசுலயே காதுகுத்தீட்டாக தெரியுமா. சுண்ணாம்பு தடவ மறந்துட்டானா. திருட்டுத் தனமா கள்ளு குடிக்கப்போயிட்டு கதையா வுடுற.''

''அதுக்குப்பேரு கள்ளுல்ல சார். வெள்ளப்பதினி.''

''ஒழுங்கா வீடுவந்து சேந்தீகளா.''

''வீரணன் லம்பி ஒளற ஆரம்பிச்சுட்டான். நான் சமாதானப்படுத்தி கைத்தாங்கலா கூட்டீட்டு வாறென்.''

''ஒங்களுக்கு ஒண்ணுஞ் செய்யலயாக்கும். பெரிய வீரனாச்சே.''

''வரவர எனக்கும் நேர நடக்கமுடியல. நான் அவன்மேல சாய அவன் என்மேல சாய தட்டுத்தடுமாறி நடந்து வாறொம்.''

''பொதியேத்துன கழுதைக்கு முட்டிதட்டுனமாதிரி.''

''நீ முன்னால போ நான் பின்னால வாறன்னு அவன் பின்னாலயே போறான்.''

''அய்யா மறுபடியும் பனைக்குக் கெளம்புறாகளா.''

''இனியும் பனைக்குப் போனா அம்புட்டுத்தான். அந்த எடத்துலயே வுழுந்து கெடக்கவேண்டியதுதான்.''

''ரெண்டுபேருக்கும் போத அப்படி கண்ண மறைக்குதோ.''

''எங்களுக்கு நெகார் தெரியல. எதுப்பாட்டுப் படிச்சுக்கிட்டே வாறொம்.''

''அதுவேற கேக்குதா.''

''எங்க பாத்தாலும் மரஞ்செடியெல்லாம் அலையடிக்குது.''

''நான் இருந்துருக்கணும் அப்ப. புடிச்சுக் கெணத்துல தூக்கிப்போட்டுட்டு வந்துருப்பேன்.''

''எதுக்க தூரத்துல ஒரு உருவம் நடந்துவாறது மங்கலாத் தெரிஞ்சது. கண்ணத் தொடச்சிட்டுப் பாத்தா வாட்டசாட்டமான ஆளு வேகுவேகுன்னு வருது. கையில சின்னக் கம்பு காக்கிச்சட்ட குல்லா. அய்யய்யோ காரியம் கெட்டுப் போச்சேன்னு அவன இழுத்துப் புடிச்சு வெசயத்தச் சொன்னென். ரெம்பத் துள்ளிக்கிட்டு வந்தவன் அந்த ஆள அடையாளம்

பாத்ததும் அடங்கிப் போயிட்டான். ரெண்டுபேரும் ஒசாரா யிட்டொம்.''

''போதையெல்லாம் இருந்த எடம் தெரியாமப் பறந்துருக்குமே.''

''நீ முந்தி நான் முந்தின்னு ஓட்டம்புடிசொம் பாருங்க. சும்மா கரிசகாட்ல புழுதி பறக்குது. திரும்பிப்பாத்தா போலீஸ்காரரு தொபுக்குத் தொபுக்குனு பின்னால ஓடிவாறாரு. ஏலே நில்லுநில்லுன்னு அவரு சத்தம் கிட்டத்துல கேக்கிற மாதிரி இருக்குது.''

''கழுத குதிரையாயிருச்சு. ரன்னிங்ரேஸ்தான்.''

''நாங்க ஏங்கி ஓடி ஒரு ஓடையைத் தாண்டிக் கெலிச்சிட்டொம். அவரு ஓடைக்குள்ள எறங்கி வாறதுக்குள்ள சுளிச்சுத் திரும்பி கிட்ணசாமிசாரோட வாழத்தோட்டத்துக்குள்ள பூந்து ஒளிஞ்சுக்கிட்டொம். அப்பத்தான் எங்களுக்கு போன உசிரு திரும்பி வந்துச்சு.''

''மயிரிழையில் உயிர்தப்பிய மாவீரர்கள் வாழ்க.''

''தோட்டத்துக்குள்ள ஒரு மூலையில மறஞ்சுக்கிட்டு பாக்கொம். அவரு அடுத்த மூலையில நிக்காரு. ரெண்டு நாயில ஒரு மூஞ்சியாச்சும் அடையாளம் தெரியாமப் போச்சே தெரிஞ்சிருந்தா வீட்ல கோழிய அமுக்குனமாதிரி அமுக்கீரு வனேன்னு பொலம்பிக்கிட்டே தேடிப்பாக்காரு.''

''ஒங்களுக்கு நல்லநேரம். கையில கெடச்சா ஆணிவேற அக்குவேற கழட்டிக் காயப்போட்ருப்பான்.''

''நாங்க பம்மிப்பம்மி அந்தக் கடசிக்கு ஓடி ஊருக்குள்ள வந்து சேந்துட்டொம்.''

''ஒருவழியா தப்பிச்சிட்டீக.''

''தப்பிக்கவா. இனிமேத்தான இருக்குது கதையே.''

''அதென்ன கத.''

''அந்த நேரத்துல எங்க தெருச் சாவடியில கூட்டம் நடக்குது. நாங்க கூட்டத்துக்குள்ள ஆளோட ஆளா உக்காந்துக்கிட்டோம்.''

''கூட்டம் எதுக்கு நடக்குது.''

''காளியம்மா கோயிலுக்குப் பொங்கல்சாட்டுறாக. புள்ளிக்காரரு எப்ப வந்துருவாரோன்னு எங்களுக்குக் கையுங்காலும் ஒதறலெடுக்குது. பரக்கப்பரக்கப் பாக்கொம்.''

''காட்டிக்குடுத்துட்டீகளா.''

''இந்த வருசம் காளித்தாயி புண்ணியத்துல நல்ல வெள்ளாமன்னு தலைவரு சொல்றாரு. அதுக்கு வீரணன் ஆமாமா பனையில நல்ல வெளச்சலுன்னு ஒளறுறான். நான் இல்லஇல்ல தென நல்லா வெளஞ்சிருக்குன்னு சொல்றென். கூட்டத்துல எல்லாரும் எங்களவே பாக்காக.''

''சும்மாவா வுட்டாக.''

''வீரணன் பனன்னு சொல்ல நான் தெனன்னு சொல்ல வாய்ச்சண்ட ஆரம்பிச்சிருச்சு. பொங்கல்சாட்டுற கூட்டத்துல புத்திகெட்டுப் பொலம்புறது எவண்டா அவனக் கழுத்தப்புடிச்சு வெளிய தள்ளுடான்னு தலைவரு கோவத்துல ரெண்டுவார்த்த சொன்னதுதான் சாக்கு. எங்கமேல அடியும் ஒதையும் மழையாச் சொரியுது. வெள்ளாம பனையிலயா வெளையிது மச்சான்னு சொல்லிச்சொல்லி தருமஅடி குடுக்காக. எங்கம்மா குடுத்த சேனப்பாலெல்லாம் கலங்கிப் போச்சு. கடசிக்கு செத்த நாயப்போல எங்கள இழுத்துவந்து தெருவுல போட்டுட்டாக.''

''அதோடயாச்சும் வுட்டுத்தொலச்சாகளே.''

''எவனோ ஒருத்தன் பானையில தண்ணி கொண்டுவந்து ஊத்திக் குளிப்பாட்டுறான்.''

''கையால குளிப்பாட்டுனது காணாதுன்னு தண்ணியில வேற குளிப்பாட்டுறாகளா.''

''நான் தலையக் குலுக்கிக்கிட்டு தட்டுத்தடுமாறி எந்திரிச்சு வீட்டுக்குப் போயிப் படுத்தவன்தான். ரெண்டு நாளைக்கு எந்திரிக்கவே முடியல.''

''வேலசெஞ்சு முறிச்ச அலுப்பு இருக்குமில்லையா. அதுவரைக்கு அய்யாவ ஸ்கூல்ல தேடலயா.''

''காச்சலுன்னு சொல்லி லீவு போட்டுட்டென். ரெண்டு நாளும் பொண்டாட்டிக்காரி வசவு தாங்கமுடியல. என்னக் காட்டி வீரணனுக்குத்தான் ரெம்ப. அவன் ராத்திரி தப்பிச்சுப் போயி பள்ளிக்கூடத்துல படுத்துக்கிருவான். இந்தச் சங்கதியால அவன் வீட்டுக்காரிக்கும் இவளுக்கும் சண்ட. அவுகள வெலகிவுடப் போயி நாங்க ரெண்டுபேரும் மொறச்சுக் கிட்டொம். நல்ல வேளைக்கு இத்தன கதையும் பள்ளிக்கூடத்துக்குத் தெரியாது. போலீசுக்கும் எட்டல. அதோட சரி. வுட்டதடி ஆச வெளாம்பழத்து ஓட்டோடன்னு பனமரத்துப்பக்கம் எட்டிப்பாக்கிறதே இல்ல.''

''இப்ப ஒங்க வீட்டுக்காரிக பேசிக்கிருவாகளா.''

''மூணே நாள்தான். இந்தக் கதையக் கேட்டயா மதினின்னு அடுத்தவீட்டுப் பொறணி பேசி கூடிக்கிட்டாக. கோயில் பொங்கலுக்கு ரெண்டுபேரும் சேந்து பொங்கல்வச்சு கொலவபோட்டதப் பாக்கணும்.''

''அடுத்தவீட்டுக் கதையோட மகிமையே மகிம. அந்தப் போலீஸ்காரனப் பாக்கிறதுண்டா.''

''அப்பப்ப தற்செயலா பாப்பென். என்ன சௌக்கி யமான்னு கேப்பாரு. ஏதோ ஒங்க புண்ணியத்துல இருக்கன்னு சொல்லி நழுவீருவென்.''

''எண்ணைக்குக் குட்டு ஒடையப்போகுதோ. வீரணன் ஊமமாதிரி இருந்துக்கிட்டு இவ்வளவு குசும்பு பண்ணுவானா. இருக்கட்டும் ஒருநாளைக்கு வச்சுக்கிறென்.''

''வேணாம்சார். ஏண்டா சொன்னன்னு எம்மேல பாஞ்சுக்கிட்டு வருவான்.''

அவர்கள் ஸ்கூலை அடைந்தபின்பும் அவர்களது நிழல்கள் ரெம்பதூரத்தில் கிடந்தன. பாண்டியன் கேட்டார்.

''அதுசரியே ஒன்வீட்டுக்கு எப்ப என்னக் கூட்டீட்டுப் போகப்போற.''

''சார் நானும் வீட்டுக்காரியும் சந்தோசமாருக்கிறது புடிக்கலயா.''

''அவ்வளவு பயமிருந்தாப் போதும். ஒன்அம்மாவப் பாக்கணும்வே.''

''அவ ஊருக்குப் போயிருக்கா. திரும்பி வந்ததும் சொல்றென்.''

''எந்த ஊருக்கு.''

''பெரிய ஊருக்கு.''

''பெரிய ஊரா. அது எங்கருக்கு.''

''மேல இருக்குது.''

''வேய்...''

பாண்டியன் திகைப்பில் திரும்பினார். அவருக்குள் தடம்பதித்துக்கொண்டு தப்பித்து ஓடத்தொடங்கினான் வையாபுரி.

இப்போதெல்லாம் ரங்கராஜனுக்கு அதிகாலையிலேயே தூக்கம் கலைந்துவிடும். புரண்டுபடுத்து போர்வைக்குள்ளேயே மனோராஜ்யம் நடத்துவார். இதமாக இருக்கும்.

அன்றைக்குப் பாண்டியன் சொன்னதில் தப்பில்லை. ருக்மணியைப் பிடித்துத்தான் போயிற்று. அதென்னமோ அவள் வரும்போதும் போகும்போதும் நின்று பார்க்கத் தோணுகிறது. ஏறிட்டுப் பார்க்கமாட்டாளா என்று ஏக்கம் கவ்வுகிறது. ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு ஆபீஸுக்குப் போகச் சொல்லுகிறது. அடைக்கலத்திடம் நாலுவார்த்தை ஒப்புக்குப் பேசும்சாக்கில் அங்கே உட்கார்ந்தி

ருக்கும் அவளைப் பார்த்துச் சிரிக்கச் சொல்லுகிறது. அவள் ஹெட்மாஸ்டருக்கு முன்னால் உட்கார்ந்து சிரித்துச்சிரித்துப் பேசும்போது ஹெட்மாஸ்டர்மீது கோவம் வருகிறது. அவளுக்காக எந்த இடத்திலும் பாண்டியனிடம் வாதாடும் முனைப்பு வந்திருக்கிறது.

ஒருதடவை பாண்டியன் கொஞ்சம் காட்டமாகச் சொன்னார்.

''பையங்க ஸ்கூல்லருந்து வெளியேறும்போது நொண்டிமொடமாப் போகணும்னு முடிவுபண்ணீட்டாக.''

அப்போதும் ருக்மணிக்குப் பரிந்துபேசாமல் இருக்க முடியவில்லை.

''நம்ம மனசு நொண்டிமொடமா ஆயிட்டதால எல்லாம் அப்படித் தோணறது.''

அடேயப்பா பாண்டியனுக்கு வந்த கோவத்தைப் பார்க்கணுமே. அங்கமெல்லாம் துடித்தது.

''அத்தோட பேச்ச வுடுங்கசார். பெறகு நான் பொல்லாறவனாயிருவென்.''

''நான் ஒண்ணும் தப்பா சொல்லீடலயே.''

''தப்போ சரியோ வார்த்தையச் சுருக்கிக்கிறது ரெண்டுபேருக்குமே நல்லது. அளவுக்கு மீறுச்சுனா நடக்கிற கதையே வேறே.''

படக்கென்று முறித்துக்கொண்டு போய்விட்டார். அவர் அப்படிக் கோவப்பட்டுப் பார்த்ததில்லை. தமிழய்யா இருந்திருந்தால் இவ்வளவுக்கு ஆகியிருக்காது. அவர் ரெண்டுநாள் சேர்த்து லீவுபோட்டுவிட்டு ஊருக்குப் போயிருந்தார்.

பாண்டியனின் மனசுநோகப் பேசியிருக்கக்கூடாது. இப்படி வாய்தடிக்கப் பேசும் புத்தி எப்படி வந்தது. அவர் கஷ்டம் அவருக்கு. டிரில் பீரியடில்லாமல் சரித்திரம் பூகோளத்தில் கைவைத்திருந்தால் எப்படியிருக்கும்.

அதுக்குப்பிறகு பாண்டியனைப் பார்க்கக் கூச்சமாக இருந்தது. ஒரே ரூமுக்குள் இருந்துகொண்டு பார்க்காமலும் இருக்க முடியாது. தர்மசங்கடமான நிலைமை.

ஆனால் பாண்டியன் எதையும் மனசில் வைத்துக் கொள்ளவில்லை. வலியப் பிடித்துக் கிண்டலடித்தார்.

''என்ன சார் ஒங்க இந்தி என்ன சொல்லுது.''

''மத்தவாளுக்கு வேற வேல இல்லையான்னு கேக்கச் சொல்றது.''

''ரங்கராஜன் சாரோட பேசுறதவிட வேற முக்கியமான வேல இல்லன்னு அதுக்குத் தெரியாதா.''

அதுதான் பாண்டியன்.

இதுக்கெல்லாம் அந்த ருக்மணிதான் காரணம். அவள் ரெம்ப அழகாகத் தோணினாள். அக்ரஹாரத்தில் தனித்துத் தெரிந்தாள். அதுவே மற்றவர்களை மறக்கிற அளவுக்குக் கண்ணை மறைத்தது.

காலையில் ஸ்கூலுக்கு வரும்போது அவள்மேனி ஒளி சிதறும். தலைகுனிந்து ஸ்டைலாக நடப்பாள். பூக்கனம் தாங்காமல் முடிப்பின்னல் தொடைக்கு இறங்கி வருவதுபோல் தெரியும். நடைக்குழைவும் பிருஷ்ட அசைவும் மனசுக்குள் லெஸ்ஸிம் விளையாடிக் குலுங்கும். ரூமைக் கடந்து கிரவுண்டு ரோட்டில் திரும்பும்வரை வைத்தகண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருக்கத் தோணும்.

சொல்லப்போனால் அவளை எதிர்பார்த்துத் திருணையில் உட்காருவது வழக்கமாகிவிட்டது. ஆரம்பத்தில் தொற்றியிருந்த கொஞ்சநஞ்ச கூச்சங்கூட போகப்போக உதிர்ந்துபோனது.

அவரைக் கவனித்த தமிழய்யாவுக்கு உள்ளூரச் சந்தோசம். எப்படியோ ஒரு நல்ல வழிபிறந்தால் சரியென்று ஆறுதலடைந்தார். அவரைக் கண்டுகொள்ளாதவர்போல் நடந்துகொண்டார். ருக்மணியைப்பற்றிப் பேசினால் பொறுமையாகக் கேட்டார்.

ரங்கராஜன் சிலநாளாக தனியே குளிக்கப் போனார். எல்லாருக்கும் முந்தி எழுந்து கால் தெப்பக்குளத்துக்கு நடந்தது. அவர் புறப்படும்போது போர்வையை விலக்கிக் கொண்டு பார்ப்பார் தமிழய்யா. சிவப்பு ரப்பர்வளையமாக வாய் விரியும். பிறகு இழுத்துப் போர்த்திக்கொள்வார். பாண்டியனோ விரிப்புடன் கோபித்துக் கொண்ட தோரணையில் உருண்டு கிடப்பார்.

தெப்பக்குளத்தில் ருக்மணி பெண்கள்பக்கம் குளிப்பாள். அவர் இந்தப்பக்கம் முங்கியெழுந்து அவளையே பார்ப்பார். அவள் பார்க்கமாட்டாள். அருகிலுள்ளவர்களைக் கவனித்து விட்டு அவர் மீண்டும் முங்குவார். உள்ளிருந்து ஆசைகளை அள்ளிக்கொண்டு எழுவார்.

அவள் குளித்துமுடித்து ஈரச்சேலையை மார்பிலும் இடுப்பிலும் இறுகக் கட்டி நீரூற்றிய சீசாவாகக் கிளம்புவாள். அவள் போகும்வரை அந்தத் திசைக்குத் திரும்பி உடம்புதேய்ப்பார்.

ஒரே அழுக்குத்துண்டுடன் குளிக்கப் பிடிக்கவில்லை. புதுசாக ரெண்டு வாங்கினார். பாண்டியனுக்குக் குறும்பு.

''சார் புதுத்துண்டு போட்டு ஜம்னு குளிச்சிட்டு வாறீக. எங்களோட தோதுப்படலயா.''

''நீங்க நன்னா தூங்கினேள். தூக்கத்தைக் கலைக்க வேண்டாம்னு போயிட்டென்.''

''நீங்க வுட்டுட்டுப் போயிட்டீகன்னு தமிழய்யாவுக்கு எவ்வளவு வருத்தம் தெரியுமா. ரெண்டுதடவ வெத்தல போடலன்னா பாத்துக்கங்களேன்.''

தமிழய்யா குறுக்கிட்டார்.

''ஒங்களுக்கு நேரத்தோட குளிக்கமுடியலன்னா சாமி என்னசெய்வாரு. தோது இருந்தா நீங்களும் அப்படித்தான். நான் அனாதையா இருப்பென்.''

''ஒங்கள நான் தகவிக்கவுடுவனா. வானமே இடிஞ்சாலும் நான் ஒங்களோடதான் இருப்பென். கவலையே வேணாம். ரங்கராஜன் சாரப்போலன்னு நெனச்சீகளா.''

தமிழய்யா ரங்கராஜனிடம் திரும்பினார்.

''என்[illegible]யன் இப்படிச் சொல்றாரு.''

''நான் மத்தவளப்போல சினிமாவுக்குப் போகலயே.''

பாண்டியன் வழக்குப்பேசினார்.

''நான் யாருட்டயும் சொல்லாமக் கொள்ளாம [illegible]க்கிட்டா போறென். ஒண்ணுக்கு மூணுதடவ தமிழய்யாட்ட அனுமதி வாங்கீட்டுப் போறென். மத்தவங்கள வெளியக் கூப்புட்டும் வரலேன்னா அதுக்கு நானா பொறுப்பு.''

''அங்க நடக்கற சினிமா அத்தனையும் ரூம்ல நடக்கறச்சே அவ்ளோ தூரம் போயிப் பாக்கணுமாக்கும்.''

தமிழய்யா வழக்கில் கொஞ்சம் சுண்ணாம்பு தடவினார்.

''பாண்டியன் செய்ற கலைச்சேவைக்கு இப்படியொரு சோதனையா.''

பாண்டியனுக்குத் தன்மானம் பொங்கியது.

''நான் செய்ற சேவையோட அரும ஒங்களுக்குத் தெரியிது. அதுபோதும் எனக்கு. அடுத்தவங்களப்பத்திக் கவலையில்ல. கலைச்சேவைன்னா என்ன தெரியுமா. நடக்கிறதப்பத்தி நாலுபேருக்கு வெளக்கிச் சொல்லணும். அடுத்தவக மனசுல பதியவைக்கணும்.''

''இவா சொல்ற கதையக் கேக்கறச்சே மனசில பதியவா செய்யறது. பத்திண்டு எரியறது.''

''நல்ல சமாச்சாரம் நமக்கு எப்பத்தான் புடிச்சது.''

''நல்ல சமாச்சாரமா அது. கர்மம்கர்மம். கேக்கறச்சயே சகிக்கல. பாத்தா கேக்கவாவேணும்.''

தமிழய்யா பாண்டியனிடம் கேட்டார்.

''சாமி சொல்றது உண்மதானா பாண்டியன்.''

''உண்மையப்பத்தி யாரு பேசுறதுன்னு ஒரு வெவஸ்தை யில்லாமப் போச்சு.''

ரங்கராஜனுக்குப் பொறுக்கமுடியவில்லை.

''அதத்தான் நானும் சொல்றென்.''

''மகாலிங்கபுரத்துல நடக்கிற கத அவ்வளவையும் மறக்காம வந்து சொல்றனே அதுதான் உண்மையான ரசிகனுக்கு அடையாளம். இங்கெ நடக்கிறத இவுக ஒளிக்காமச் சொல்லுவாகளா. இல்ல சொல்லுவாகளான்னு கேக்கிறென்.''

தமிழய்யா ரங்கராஜனிடம் ஆதங்கப்பட்டார்.

''பாண்டியன் இப்படிக் கேட்டுப்புட்டாரே சாமி.''

ரங்கராஜன் யோசித்தார். கதை இப்படியே போனால் பாண்டியனிடம் தப்பிக்கமுடியாது. ஒரு முடிவுக்குவந்தார்.

''எதுக்கு வம்பு. பாண்டியன் கிட்ட மாட்டிண்டு நம்ம பிராணன் போயிடும்.''

பாண்டியன் கையுயர்த்தி முழங்கினார்.

''ரங்கராஜசிம்மனை வென்று வைகுண்டம் அனுப்பிய பாண்டியமன்னன் வாழ்க. எமது வெற்றியைப் புகழ்ந்து அவைப்புலவர் பரணிபாடட்டும்.''

தமிழய்யா பவ்வியமாகச் சொன்னார்.

''அப்படியே ஆகட்டும் மன்னா.''

ரங்கராஜன் முணுமுணுத்தார்.

''ஜாடிக்கேத்த மூடி.''

தமிழய்யா தங்குதடையின்றி கவிமழை பொழிந்தார்.

**''சாரல்குள நீர்கிழித்து சந்தநடை பயிலும்**
**நாரைக்குழாம் மீனெடுத்து நமட்டுகின்ற வேளை**
**பாறைக்குளம் போர்க்களத்தில் படைகளின்றிப் பொருது**
**வீரத்திலே வைகுண்ட வேந்தனையும் வென்று**

**மங்காத புகழ்படைத்த மன்னவனே உன்னை**
**தென்காசிப் புலவனிங்கே செப்புகிறேன் வாழி.''**

பாண்டியனின் எக்காளச் சிரிப்பு விண்ணைமுட்டியது.

''இதுவல்லவா கவிதை. பொருள்பொதிந்த கவிதை. யாரங்கே கொண்டுவா கும்பகோணம் வெற்றிலையை.''

தமிழய்யாவிடம் என்ன அவையடக்கம். ரங்கராஜன் பொருமினார்.

''ரெண்டுபேரும் என்ன மேலருக்கற வைகுண்டத்துக்கே கொண்டுபோயிச் சேர்த்திருவேள்.''

அதிலிருந்து மூணுபேரும் சேர்ந்தே குளிக்கப் போனார்கள்.

வாரலீவு வந்தால் முதல்நாள் சாயங்காலமே ரங்க ராஜனுக்குக் கால் நிலைகொள்ளாது. சுதாரிப்பாக ஊருக்குக் கிளம்பிவிடுவார். திருநெல்வேலி பஸ்ஸைப் பிடித்தால் ராத்திரிச்சாப்பாட்டுக்கு ஸ்ரீவைகுண்டம் போய் விடலாம்.

ருக்மணியும் வாரந்தோறும் ஊருக்குப் போவாள். ரெண்டுபேரும் ஒரே பஸ்ஸில் புறப்படுவார்கள். பஸ் கிளம்பும்போது ஹோட்டல் வாசலில் கையசைத்தபடி பாண்டியன் நிற்பார். அருகில் தமிழய்யா. கல்லாவில் குழந்தைச்சாமி.

பஸ்ஸில் ருக்மணியைப் பார்ப்பதற்குத் தோதாக உட்கார்ந்துகொண்டு அசைவதில் ரங்கராஜனுக்குச் சந்தோசம். போகிற வழியில் தோட்டத்துக்குள் திரியும் கிருஷ்ணசாமியின் மண்வெட்டி சிலசமயம் ஓங்கி வழியனுப்புவதுமுண்டு.

மகாலிங்கபுரத்தில் பஸ் கொஞ்சநேரம் நிற்கும். ருக்மணியிடம் சென்று ஏதாவது வாங்கிவரணுமா என்று கேட்கணும்போலிருக்கும். அந்த எண்ணம் மனசைக் குடைந்து முடிவுக்கு வருமுன் பஸ் நகர்ந்துவிடும்.

சீக்கிரத்தில் திருநெல்வேலி வந்துவிட்டமாதிரி இருக்கும். ரெண்டுபேரும் இறங்குவார்கள். அவர் தயங்கித்

தயாராகுமுன் அவள் தன் பஸ்ஸுக்கு நடந்துவிடுவாள். அவர் தவிப்பை அடக்கிக்கொண்டு ஸ்ரீவைகுண்டம் பஸ்ஸைத் தேடுவார்.

ஊர்போய்ச் சேரும்வரை உளைச்சலாக இருக்கும். ஸ்கூலில்தான் பேசச் சந்தர்ப்பம் இல்லையென்றால் இங்கேயாவது ஒருவார்த்தை பேசலாமில்லையா. அதுக்கு வெட்கமா. அப்படியும் தெரியவில்லையே. ஹெட்மாஸ்டருக்கு முன்னால்மட்டும் உட்கார்ந்து எப்படிப் பேசமுடிகிறது. அப்படி என்னதான் பேசுவார்களோ. கூப்பிட்டுக் கண்டிக்கணும்போல் உறுத்தும். கண்டிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது. ஏன் இப்படியெல்லாம் அவள்மேல் அக்கறை கூடுகிறது.

அவளை எப்படிப் புரிந்துகொள்வது. யாரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது. மற்றவர்களிடம் பேசக்கூடிய பேச்சா இது. வையாபுரியிடம் கேட்டால் அவ்வளவுதான். ஸ்கூலில் மணியடித்தமாதிரி எல்லாருக்கும் தெரிவித்துவிடுவான். கேவலத்துக்குச் சொல்லவேவேண்டாம்.

வீட்டில் லீவு சதா ருக்மணியின் நினைவிலேயே கழியும். அவளுக்காக பாண்டியனிடம் சண்டையிட்ட கதையைத் தங்கையிடம் சொல்லிச் சந்தோசப்படுவார். அவர்முகத்தில் புதுக்களை ஏறியிருப்பதைக் கவனிக்கும் அம்மாவுக்குக் கற்பனைகள் விரியும். போகிறபோக்கில் சொல்லுவாள்.

''ஏண்டா சண்டையை நிறுத்திண்டு சாப்பிட வரலாமே.''

எல்லாவற்றையும் அம்மாவிடம் கொட்டித் தீர்க்கணும் போலிருக்கும். ருக்மணியிடம் ஒரு சந்தர்ப்பத்திலாவது பேசி அவள் மனசைத் தெரிந்துகொள்ளாமல் எப்படிச் சொல்லுவது. ஆர்வத்தை அடக்கிக்கொள்வார்.

ஸ்கூலுக்குத் திரும்பும்போதுகூட அவரது கண்கள் திருநெல்வேலி பஸ்ஸ்டாண்டில் ருக்மணியைத் தேடும்.

சிலநாள் காத்திருந்தும் பார்ப்பார். ஏமாந்து சோர்வில் பஸ்ஸைப் பிடிப்பார்.

ரூமுக்கு வந்ததும் பாண்டியனிடம் தப்பிக்கமுடியாது.

''அண்ணைக்கிருந்த சுதாரிப்பு இண்ணைக்கில்லையே. தனியா வர கஸ்டமாருந்துச்சா.''

''நான் ஒண்ணும் தனியா வரலயே. நெறைய ஜனங்க ளோடதான் வந்தென்.''

''டிரைவர் கண்டக்டரச் சேத்துக்கிட்டீகளா.''

''அவா இல்லாத பஸ்ஸா.''

''அப்ப ஒரு டிக்கட்மட்டும் கொறஞ்சதாக்கும்.''

''அவாளக் கேக்கலயே.''

''வராதவுகளவா.''

ரங்கராஜன் தலையிலடித்துக் கொள்வார். தமிழய்யாவின் கன்னங்கள் வெற்றிலைக்குதப்பலில் சிரிக்கத் திணறும்.

**ம**தியம் முதல்பீரியடு எட்டாம்வகுப்புக்கு டிரில். பாண்டியன் பரிவாரங்களுடன் ஸ்கூலுக்குப் பின்னால் சிவன்கோயிலுக்கு நடந்தார். தற்செயலாகப் பார்த்த கிராப்ட் வாத்தியார் கேட்டார்.

''பாண்டியன் இண்ணைக்கு டிரில் கோயில் கிரவுண்டுலயா.''

''ஆனானப்பட்ட சிவனே பெரிய டிரில்மாஸ்டர்தான் சார். அவரு செய்யாற எக்சசைஸா நம்ம சொல்லிக்குடுத்தறப் போறொம்.''

''சிவன ஏன் சார் வம்புக்கு இழுக்கீங்க.''

''இதுலென்ன வம்புசார். உண்மையத்தான் சொன்னென்.''

கிராப்டுக்கு சட்டென்று எதுவும் பிடிபடவில்லை. உண்மையா. யோசனையில் அண்ணாந்தார். பாண்டியனுக்குப் புரிந்துவிட்டது.

''சும்மா ஓயரப்பாத்தா எப்படி. ஒரு சிட்டிக பொடிய ஏத்திக்கங்க. கைலாசத்துல நடக்கிற கதையெல்லாம் அப்படியே கண்ணுக்குமுன்னால தெரியும்.''

கிராப்ட் கொஞ்சநேரம் கற்பனையில் லயித்துத்தான் போனார். படக்கென்று தலையை உதறிக்கொண்டு பாண்டியனைப் பார்க்கும்போது ''என்ன டிரில் நல்லாருந்துச்சா.'' என்று பாண்டியன் கண்சிமிட்டினார். கிராப்டுக்கு வெட்கமாகப் போயிற்று.

''நீங்க பேச்சுல பாண்டிய மன்னனாச்சே.''

அப்படியே நழுவிவிட்டார்.

பையன்கள் நெருஞ்சிச்செடிகளை அப்புறப்படுத்திக் கொண்டும் காலில் தைத்த முள்ளைப் பிடுங்கிக்கொண்டும் மெல்லமெல்ல கோயில்மண்டபத்தை அடைந்தனர். ஜுனியர் மராத்தான் மரஸ்டூலை காவடிஎடுத்தபடி கடைசியில் போய்ச் சேர்ந்தான்.

சிவன்கோயில் ஆளரவமற்று எப்போதும் அமைதியாக இருக்கும். நீளவாக்கில் கல்மண்டபம். கோயிலுக்குமுன்னால் சின்ன நந்தி. அடக்கமான கர்ப்பக்கிரஹம். நடுவில் சிவலிங்கம்.

மண்டபத்தில் எல்லாரும் உட்கார்ந்தபின் சுற்றிலும் தோரணையாகப் பார்த்தார் பாண்டியன்.

''அரண்களைத் தகர்த்துக்கொண்டு நமது படைகள் அனைத்தும் வந்து நிலைகொண்டுவிட்டனவா. மந்திரியே பேரேட்டைக் கொண்டுவாரும்.''

தனிக்கூட்டமாக உட்கார்ந்திருந்த பெண்கள் குசுகுசுத்துக் கொண்டு சிரித்தனர். ஜுனியர் மராத்தான் அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரைக்கொண்டு வந்து கொடுத்தான். அவர் பேர்

வாசிக்கத் தொடங்கினார். பையன்கள் மாறிமாறி ஆஜர் சொன்னார்கள்.

''இருக்கிறேன் அய்யா.''

''உள்ளேன் ஐயா.''

அவர் பொய்யாகக் கோபித்துக்கொண்டார்.

''உக்காருடா. மண்டையுந்தலையும் ஒண்ணுதான்.''

மூலையிலிருந்து ஒருவன் முணுமுணுத்தான்.

''எல்லாருக்கும் தெரியுமா எருமமாட்டு முட்ட.''

அவர் மூலைக்கு முறைப்பை எய்தார்.

''என்னடா அங்க சதியாலோசன.''

பையன் அப்பிராணியாகச் சொன்னான்.

''ஒண்ணுமில்ல சார். எறும்பு முட்டையிட்ருக்கு.''

''எறும்பென்ன குட்டியா போடும். பெரிய ஆர்க்கிமிடிசு. புதுசா தத்துவத்தக் கண்டுபுடிச்சிட்டாரு. யுரேகா யுரேகான்னு ஓடுறயா.''

ஒரு பையனுக்குச் சந்தேகம். பக்கத்திலிருந்தவனின் காதைக்கடித்தான்.

''யுரேகான்னா என்ன.''

அவரிடமிருந்து அரட்டல் வந்தது.

''இன்னியும் அங்கென்ன முணுமுணுப்பு குட்டிபோட்ட நாயிமாதிரி.''

''யுரேகான்னா என்னன்னு சந்தேகம் கேக்கான் சார்.''

''அப்படின்னா சொரக்கான்னு அர்த்தம். கூட்டுவச்சா ஒரு[redacted] திங்கத் தெரியுமில்ல.''

''அவரு எப்படி ஓடுனாரு சார்.''

''இப்பச் சந்தர்ப்பம் சரியில்ல. ஒருநாளைக்கு ஒன்ன ஓடவச்சுக் காட்டுறென். அப்பத் தெரியும்.''

இப்படி அன்னியோன்னியமான வேடிக்கைப் பேச்சுக் களில் ஆரம்பித்துத்தான் விஷயத்துக்கு வருவார் பாண்டியன். அது பையன்களுக்கும் தெரியும்.

பீரியடு சிவன் கோயிலில் நடக்கிறதென்றால் சமாச்சாரமே வேறு. டிரில்லைத்தவிர வேறு எதையெதையோ அலசுவார். வெள்ளைக்காரன் ஆட்சி விடுதலைப்போராட்டம் தேர்தல் என்று வண்டி ஓடும். கடைசிக்கு டிரில்லையும் தொட்டுக்கொள்வார்.

சிலநாள் நீதிபோதனை பீரியடைக்கூட கேட்டுவாங்கி அவரே நடத்துவார். எதையாவது ஒளித்துவைத்து தேடச் சொல்லி அப்படியே பையன்களை மாமரத்துக்குக் கடத்திக் கொண்டுபோய்விடுவார். மரத்தடியில் அமைதியான சூழலில் போதனை நடக்கும்.

அண்ணாதுரையின் கடிதங்களடங்கிய புஸ்தகத்தை உரக்கப் படிப்பான் ஒரு பையன். மற்றவர்கள் பொறுமையாகக் கேட்பார்கள். வாசிப்பு முடிந்ததும் அதிலுள்ள கருத்துகளையும் குட்டிக்கதைகளையும் விளக்கிச் சொல்லுவார். அண்ணாதுரை கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கும்போது மூக்குப்பொடியை உறிஞ்சும் விதத்தைச் சிலாகிப்பார்.

சிலசமயம் பெரியாரின் வெங்காயப் பேச்சுகளை எடுத்துவிடுவார். தமிழனை அவர் ஏன் காட்டுமிராண்டி என்று சொன்னார் என்பதற்குப் பல உதாரணங்களைச் சொல்லுவார். ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்...'' என்று ஆரம்பித்து பாரதியாரைப் பாராட்டுவார்.

பீரியடு முடியும்போது பாரதிதாசன் கவிதையை கை உயர்த்தி கணீரென்று முழங்குவார்.

**''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்**
**மங்காத தமிழென்று சங்கே முழங்கு....''**

அதே வேகத்தில் பையன்களும் குரலெழுப்பிச் சொல்லுவார்கள். எல்லாரும் ஸ்கூலுக்குத் திரும்பும்போது மழை வெறித்தது போலிருக்கும்.

கோயில் மண்டபத் தூணோரம் மண்ணைக் கிளறிக் கொண்டிருந்த ஒருவனைப் பிடித்துக்கொண்டார் அவர்.

''எறும்புமுட்டைய எண்ணிமுடிச்சாச்சா. நம்ம அதுக்குத்தாண்டா லாயக்கு. எறும்புக்கிருக்கிற ஒத்துமையும் ரோசமும் நமக்கிருந்தா எப்பயோ முன்னேறியிருப்பொம். வாய்க்குள்ள மொழையாற மொழியெல்லாம் படிச்சுத் தொலைக்கணும்னு தலையெழுத்தா நமக்கு. அது எவண்டா நாய் வாந்தியெடுத்தமாதிரி வெளியவந்து இந்திய ஒளறிக்கிட்டுத் திரியிறது.''

பையன்கள் நானில்லை நீயில்லை என்று கையை விரித்தார்கள். அவர் ஒருவிரலால் எச்சரித்தார்.

''எவனவாச்சும் பாத்தென் அம்புட்டுத்தான். சாய்ந்தர வரைக்கு மேல கம்பியப் புடிச்சுத் தொங்கவச்சிருவென்.''

''இனிமே ஆரும் பேசினா நேர ஒங்ககிட்ட வந்து சொல்லீறொம் சார்.''

''எல்லாம் தனக்கா அறிவுவரணுண்டா. தாய்மொழின்னா என்ன.''

''தாய் சொல்லிக்குடுக்கிற மொழி.''

''தாய்மொழியுஞ்சரி தாய்ப்பாலுஞ்சரி. அப்ப மத்த மொழி என்னது.''

பெண்கள் பக்கமிருந்து குரல் வந்தது.

''மத்த மொழியெல்லாம் புட்டிப்பால்.''

''சரியாச் சொன்ன. தாய்ப்பால் குடிச்சு வளர்ற வீரியமே தனி. புட்டிப்பால் குடிக்கிற புள்ளையப் பாத்துருக்கீகளா.''

இப்போதும் ஒரு பெண்தான் சொன்னாள்.

''வகுறுவச்சு சவலப்புள்ளமாதிரி இருக்கும்.''

''அப்படித்தான் நம்ம எல்லாரவும் சவலையாக்கணும்னு திட்டம்போடுறாக. கண்ணுக்குத் தெரிஞ்சே நடக்கிற அநியாயத்த நம்ம தட்டிக்கேக்கணும். எதுத்து நிக்கணும்.

இப்படியே வுட்டா நம்ம தலையில மொளகாய அரச்சிருவான். கடசிக்கு தாய்தகப்பனவே இந்தி படிக்கணும்னு சொல்லுவான். அவுக ஓட்டுப் போட்டதுக்குப் புண்ணியம் தேடிக்கிற வேணாமா. நம்ம ஊருகள்ல வளந்து கெடக்கிற வேலிக்கருவ மரத்தப் பாத்தீகளா.''

ஒருவன் சொன்னான்.

''பள்ளிக்கூடத்துக்கு வாற வழியிலகூட அடச்சுக்கிட்டு நிக்குதுசார். ஒருநா ஓடும்போது கண்ணுல முள்ளு ராவீருச்சு.''

''சீமக்கருவல சீமக்கருவலன்னு சொல்லி அதோட வெதைய வாங்கி தோட்டத்துல வேலிக்கு நட்டிவச்சாக. தோட்டத்து ஓரத்தையெல்லாம் அது உறிஞ்சிக்கிட்டு கொழுத்துப்போயி வளந்துரும். ஆக வெள்ளாம பல்ல இளிச்சிக்கிட்டு நிக்கும். வேலிக்கருவல பெருகிக்கிட்டு வாறதப் பாத்தா ஊருகளவே மேஞ்சிரும் போலருக்கு.''

''வெளியருந்து பாத்தா எங்க ஊரே தெரியல சார்.''

''அப்படித்தான் ஆகப்போகுது இந்தக் கதையும்.''

ஒருவன் யோசனை கேட்டான்.

''இந்தி டீச்சர் வகுப்புக்கு வந்தா நாங்க எல்லாரும் எந்திரிச்சு வெளிய வந்துறட்டுமா சார்.''

''அதுக்குக் காலம் வரத்தான்போகுது. அவசரப்படக் கூடாது. அத்தன வகுப்பும் வெளியேறி வாற அளவுக்கு நம்ம ஒத்துமையாகணும். எல்லா எடத்துலயும் கொதிச்சுக்கிட்டுத் தான் இருக்காக. எண்ணைக்கு இது பெரிசா வெடிக்கப் போகுதோ தெரியல.''

எல்லாரும் அவரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர் கேட்டார்.

''நம்ம லேபரட்டரியில எலும்புக்கூட்டு மனுசன் இருக்காரே அவருபேரு என்ன தெரியுமா.''

ஒரு பெண் சொன்னாள்.

''வேலாயுதம்.''

''கரெக்ட். எப்படித் தெரியும்.''

''கண்ணாடிக் கூண்டுக்குக்கீழ எழுதி ஒட்டியிருக்கு.''

''கெட்டிக்காரப்பொண்ணு. அவரு பல்லக்காட்டிக் கிட்டு அப்பிராணியா இருக்காரேன்னு பாத்தீகளா. அவரு பெரிய தியாகியாக்கும்.''

எல்லாரும் ஆச்சரியத்தில் முழித்தார்கள்.

''எப்படி சார்.''

''ஒருநா மெட்ராஸ்ல பெரிய கூட்டம் நடந்துருக்கு. டில்லியிலருந்து முக்கியமான மந்திரி பேசப்போற கூட்டம். சனங்க கணக்கில்லாம உக்காந்துருக்காக. நம்ம வேலாயுதமும் முன்னால இருக்காரு.''

''மந்திரி பேச்சக் கேக்கிறதுக்கு முண்டியடிச்சு எடம் புடிச்சிருக்காரு.''

''மந்திரி எந்திரிச்சு தோரணையா கூட்டத்தப் பாக்காரு. என்னமோ பெரிசா அள்ளிக் குடுத்துறப் போறாருன்னு சனங்களுக்கு ஆவல். மந்திரி நாலுவார்த்த இந்தியில பேச அத ஒருத்தன் தமிழ்ல எடுத்துச்சொல்ல பேச்சு ஆம வேகத்துல போகுது. வேலாயுதத்துக்குச் சப்புன்னு போச்சு. என்ன பேசுறாகன்னே சரியா புரிஞ்சுக்கிறமுடியல. அவருக்குக் கோவம்வந்துருச்சு. எந்திரிச்சு டேய் எவண்டா மந்திரின்னு கத்த ஆரம்பிச்சிட்டாரு. கூட்டத்துல சின்னச் சலசலப்பு. பக்கத்துல இருந்தவுக அவரப் புடிச்சு இழுத்து உக்கார வைச்சாக. அப்படியும் அவருக்குக் கோவம் தீரல. வடக்கருந்து பெரிசா பேசவந்துட்டான்னு முணுமுணுத்துக்கிட்டே உக்காருறாரு.''

''பெறகு கூட்டம் நல்லபடியா நடந்திருக்கும்.''

''பேச்சு பழையபடியே தொடங்குது. வேலாயுதத்துக்கு வெறிவந்துருச்சு. ஏண்டா டேய் தமிழ்ல பேசுடான்னு ஒரே

கூச்சல். யாரு தடுத்தும் நிறுத்தல. போலீஸ்காரங்க வந்து இழுத்துக்கிட்டுப் போயி தனியாவச்சு கச்சேரி நடத்துறாக. அடி அடின்னு அடிச்சு நொறுக்குறாக. கூட்டத்துல பேச்சு மும்முரமா நடக்குது. இங்க அடி மும்முரமா நடக்குது.''

''அய்யோ பாவம்.''

''கூட்டம் முடியிறதுக்குள்ள அவரக் கொண்டுபோயி ஆஸ்பத்திரில கெடத்தீட்டாக பாவிக. ஆஸ்பத்திரியில சாப்பிடறதுக்கு என்னென்னமோ குடுத்தும் அவரு வாங்கமாட்டன்னுட்டாரு. வாயிலகூட திணிச்சுப்பாத்தும் முடியல. பட்டினியாகவே கெடந்து ஒடம்புல காயம் ஆறியும் ஆறாம உசிர மாச்சுக்கிட்டாரு. அவருக்குத் தாயிதகப்பன் பொண்டாட்டி புள்ளன்னு யாரும் கெடையாது. சொந்தம்னு இருந்ததெல்லாம் அவரோட ரிக்ஷா ஒண்ணுதான். அப்பேர்ப்பட்ட ரோசக்கார மனுசன் நாதியில்லாம எலும்புக் கூடா நம்ம ஸ்கூலுக்கு வந்துசேந்துட்டாரு.''

எல்லாரும் சோகமாக பாண்டியனையே கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஜுனியர் மராத்தான் சொன்னான்.

''அந்த மனுசன் என்ன சார் தப்புச்செஞ்சாரு.''

''அதத்தான் அவரு போலீஸ்காரங்ககிட்டக் கேட்டாரு. யாரோ தூண்டிவுட்டு கூட்டம் நடக்காமச் செய்றதுக்குச் சதி பண்ணீருக்காக. அது யாருன்னு சொல்லு சொல்லுன்னு அவரப்போட்டு அடிச்சிருக்காக. மந்திரிதான் தூண்டி வுட்டாருன்னு அவரு சொல்ல போலீஸ்காரங்களுக்குக் கோவம் தாங்கல. இன்னியும் மொரட்டுத்தனமா அடிகெடச்சது. அவரு அடியெல்லாம் வாங்கிக்கிட்டு கடைசியா ஒரு கேள்வி கேட்டாரு. நம்ம ஊருக்காரன் வடநாட்டுல போயி தமிழ்ல பேசுனா அத இந்தியில எவனாச்சும் எடுத்துச் சொல்லுவானா. இதுதான் கேள்வி. ஒருத்தன்கூட வாய்தொறக்கலயே.''

பாண்டியனுக்கு இப்போது டிரில் ஞாபகம் வந்தது.

''பொண்ணுக தனியா போயி வெளையாடுங்க. பையங்க வரிசையில நில்லு.''

பையன்களை ஒவ்வொருவராக ஸ்டூல்மேல் ஏற்றி மண்டபத்துக் கம்பியில் புல்லப்ஸ் எடுக்கச் சொல்லிக் கொடுத்தார். திணறுகிறவர்களின் காலைப்பிடித்து தாங்கி உதவினார்.

''தீத்தம் சார் கடையில இண்ணைக்கு மொச்சப்பயறு வாங்கித் திங்கலயா. என்தோளுமேல கொஞ்சநேரம் உக்காந்து தவிப்பாறிக்கிறயா.''

ஸ்கூல் மணியடித்தது. பாக்கியிருந்த பையன்களுக்கு உள்ளூரச் சந்தோசம்.

''வையாபுரி கூப்புட்டுட்டானா. போங்க போங்க. மிச்சத்தப் பெறகு வச்சுக்கிறலாம்.''

படைகள் ஸ்கூலுக்குத் திரும்ப ஆரம்பித்தன.

இவ்வளவு நேரமும் கையைப் பிசைந்தபடி தவித்துக் கொண்டிருந்த கிருஷ்ணசாமி ஓடிவந்து பாண்டியனை வரவேற்றார்.

''சார் வாங்கவாங்க. ஒங்களப் பாக்கிறவரைக்கும் காலும் ஓடல கையும் ஓடல.''

''அப்படியென்ன சங்கடம்சார். அவசரம்னா கோயிலுக்கு வந்திருக்கலாமில்ல.''

''அங்க என்னென்னமோ பாடம் நடத்துவீக. அதவந்து கெடுத்தா மொறையில்ல.''

''என்னாச்சு சார்.''

கிருஷ்ணசாமிக்கு இன்னும் படபடப்பு அடங்கவில்லை.

''தோட்டத்துல பம்ப்செட்டு ஓடல.''

''வயர்மேன் என்ன ஆனான்.''

''அவன் பையத் தூக்கீட்டு எந்த ஊருக்குப் போயிருக்கானோ.''

''கொழந்த சார் கடையில அவன் ஒங்க கணக்குல தின்னதுக்காச்சும் கரண்டு வுடணுமே.''

''தின்னிப்பய வரட்டும் வச்சுக்கிறென். எளம்பயிருக்குக் காலத்துல தண்ணிவுடலன்னா என்னாகும் சார். அறிவு வேணாமா. கரண்டு வரலன்னா கமல எறச்சாவது நெலத்த நனைக்கணும். தண்ணிபாச்சுறதுக்கு ஒருத்தனப் புடிக்கணும்.''

''நான் வரட்டுமா சார்.''

''நீங்களா. மம்பட்டியக் கையில புடிச்சதும் வெளையாட்டு நெனப்பு வந்துருமே. பெறகு எம்பெழப்பு அம்புட்டுத்தான்.''

''சம்பளம் காபிவட காய்கறி எதும் கேக்கமாட்டென்.''

''அப்பயும் கூப்புடமாட்டென்.''

''ஏன் ஜுனியரக் கூட்டிக்கிறவேண்டியதுதான.''

''ஸ்கூல் நேரத்துல அவனக் கெடுக்கிறது தப்பு. அவன கெதி உள்ளமட்டும் படிக்கவைக்கணும்னு ஆச. நம்மதான் இப்படின்னா அவனாச்சும் நல்ல நெலமைக்குப் போகட்டும்.''

''நீங்க பயப்படாமப் போங்கசார். நான் ஒங்க வகுப்பக் கவனிச்சுக்கிறென். ஆளுல்லாமயே ஆறாம் வகுப்பு நடக்கலயா.''

கிருஷ்ணசாமிக்கு நிம்மதி.

''அதுபோதும் சார் எனக்கு.''

''வேலைக்கு ஆளு கெடைக்கலன்னா நான் இருக்கென் மறந்துறாதங்க.''

''ரெண்டு வேலையவும் நான் சேத்துப் பாத்தாலும் பாப்பனேயொழிய ஒங்களத் தேடிவரமாட்டென்.''

கிருஷ்ணசாமி கடகடவென்று தண்ணீரைக் குடித்துவிட்டு மராத்தான் நடையில் மறைந்துவிட்டார்.

ஒருமாதமாயிற்று. ஆறாம்வகுப்புக்கு ராஜேஸ்வரி வந்து சேர்ந்தாள். ஸ்கூலில் ரெண்டு பெண் டீச்சராயிற்று.

பாண்டியன் ரங்கராஜனிடம் சொன்னார்.

''சார் இனிமே கவலைய வுடுங்க. தொணைக்கு ஆளு வந்துருச்சு.''

ரங்கராஜன் வெடுக்கென்று கேட்டார்.

''யாருக்குத் தொணையா.''

''இந்தி டீச்சரு தனியா தவிச்சிக்கிட்ருக்குதுல்ல.''

''அப்படின்னு சொல்றேளா.''

''பேச்சுத் தொணைக்குக்கூட ஒருத்தரு இல்லன்னா மனசுக்கு என்னமோ போலதான இருக்கும்.''

''கஷ்டமாருக்கறதுன்னு யாரும் ஒங்ககிட்டச் சொன்னாளா.''

''சொந்த அனுபவம் பேசுது சார். நீங்களும் தமிழய்யாவும் ஊருக்குப் போயிட்டா நான் என்ன கஸ்டப்படுவென் தெரியுமா.''

''ஒண்ணு செய்யலாம் பாண்டியன். ஆபீஸவே டீச்சர்ஸ் ரூமாக்கிண்டா கவலையே இல்ல.''

''இந்தி டீச்சர அங்கருந்து எப்படா கௌப்பலாம்னு நெனச்சுக்கிட்ருக்கென். நீங்க என்னடான்னா மாத்துக்கத போடுறீக. இந்தச் சாக்குலயாச்சும் கௌப்பியாகணும்.''

''அதுல ஒங்களுக்கென்ன சந்தோஷம்.''

''யாராச்சும் ஒருத்தருக்குச் சந்தோசமில்லாமப் போகாது.''

இவ்வளவு நேரமும் அவர்களது பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்த தமிழய்யா சுருங்கச் சொன்னார்.

''முயற்சி திருவினையாக்கும்.''

பாண்டியன் வையாபுரியைக் கூப்பிட்டு திட்டத்தை விளக்கினார்.

''டீச்சர்ஸ் ரூம்ல தட்டிமறச்சு அங்க ரெண்டு டீச்சருக்கும் எடம் ஒதுக்கீரு. தட்டிக்குக் காசு குடுத்துறென்.''

வையாபுரி திகைத்தான்.

''சார் அது...''

''என்னவே முழிக்க.''

''எட்மாஸ்டருட்ட ஒருவார்த்த கேக்கணும்சார்.''

''வேய் இதுக்கென்ன அவரக் கேக்கவேண்டியிருக்கு. குடியமத்தியா வைக்கப்போற.''

''நீங்க சொல்றதும் சரிதான் சார். ஆனா எந்த வெசயத்துல கேக்கலன்னாலும் இதுல கேட்டுத்தான் ஆகணும். இல்ல நான் குடியிருக்கமுடியாது.

''இதுக்குமுந்தி இங்க பொம்பள டீச்சரே வேல பாத்ததில்லையா.''

''இருந்தாக.''

''அவுக எங்க உக்காந்துருந்தாக.''

''டீச்சர்ஸ் ரூம்ல ஒரு ஓரமா இருப்பாக.''

''இப்பமட்டும் புதுச்சட்டம் போட்ருக்கீகளாக்கும்.''

''அப்ப இருந்தது வேற தலைவராச்சே.''

''ஸ்கூலா நடத்துறீக.''

ரங்கராஜன் சொன்னார்.

''அது அவாளுக்குத்தான் வெளிச்சம்.''

இதுக்குமேல் இருந்தால் வம்பு என்று வையாபுரி கழன்றுவிட்டான்.

மதியம் ஹெட்மாஸ்டருக்கு விவகாரம் போனது. வையாபுரி நைசாக விஷயத்தைச் சொன்னான்.

''அய்யா ரெண்டு டீச்சரம்மாவுக்கும் டீச்சர்ஸ் ரூம்ல எடம் ஒதுக்கிக்குடுத்துறலாமா. தொணைக்குத்தொணையா இருந்துக்கிறட்டும்.''

அவர் நெற்றிக்கண்ணைத் திறந்தார்.

''அங்க மத்தவங்களுக்கே எடம்பத்தாது. இவங்களும் போனா எல்லாருக்கும் கஷ்டமில்லையா. இங்க ஆபீஸுக் குள்ளேயே ஹெட்கிளார்க் டேபிள கொஞ்சம் நகத்திக்கிட்டு ரெண்டுசேர் போட்டுரு போதும்.''

''அப்படியே செஞ்சுருவம்யா.''

அவன் வெளியே வரும்போது ஹெட்கிளார்க் தலையைச் சொறிந்துகொண்டு செருமினார்.

அந்தவாரம் முழுக்க அவன் பாண்டியனிடமும் ரங்கராஜனிடமும் அகப்படாமல் எச்சரிக்கையாக இருந்தான்.

ராஜேஸ்வரி பஸ்ஸ்டாண்டுத் தெருவில் அம்மாவுடன் குடியேறினாள். அவளுடைய அப்பா அருப்புக்கோட்டையில் தம்பி தங்கச்சிக்குத் துணையாக இருந்தார். சொந்தத்தில் தறி ஓடியதால் அதைக் கவனித்துக்கொள்ள வேண்டிய பொறுப்பும் அவருக்கிருந்தது.

ராஜேஸ்வரி ஸ்கூலுக்கு வரும்போது நாலஞ்சுநாள் அம்மாவும் துணைக்கு கிரவுண்டுவரை வந்தது. ராஜேஸ்வரி ரோட்டுத்திருப்பத்தில் அக்ரஹாரமுனைக்கு வராமல் கிரவுண்டில் குறுக்காக நடப்பாள். இதைக் கவனித்த பாண்டியன் ரங்கராஜனிடம் சொன்னார்.

''டீச்சரென்ன சின்னப்பொண்ணா சார். அதோட அம்மா வகுப்புக்குள்ள காத்திருந்து கூட்டீட்டுப்போகும் போலருக்கு.''

''அவாளுக்கு அப்படித் தோணறது. ஒருவேள ஒங்களக் கண்டு பயமோ.''

''என்னப்பாத்தா அப்படியா தெரியிது சார்.''

''நேக்குத் தோணல.''

''அப்படின்னா மத்தவுகளுக்குத் தோணுது.''

''அவாளத்தான் கேக்கணும்.''

''கேக்கத்தான் போறென்.''

''பேஷா கேளுங்கோ. அவா என்னசொல்லுவா தெரியுமோ.''

''உண்மையச் சொல்லுவாக.''

''உண்மையென்ன தெரியுமோ.''

''என்ன.''

''அம்மாவும் பொண்ணும் ஒருநாள் இந்த ரங்கராஜன கிட்டத்துல வச்சுப் பாத்துட்டா.''

ரங்கராஜன் பலமாகச் சிரித்தார். பாண்டியனுக்கு என்னமோ போலாகிவிட்டது.

''நீங்க வில்லனாச்சே.''

''நான் எப்பவுமே வில்லன்தான் பாண்டியன்.''

''மொதல்ல இந்த எடத்தவுட்டுக் கெளம்புங்க.''

ரூமுக்குள் அறிதுயில் கொண்டிருந்த தமிழய்யாவை எழுப்பிக்கொண்டு ஹோட்டலுக்கு நடந்தார்கள்.

ஹெட்மாஸ்டரின் ரூம் இன்னும் கலகலப்பாக இருந்தது. அவர் என்னேரமும் ருக்மணியுடன் பேசிக் கொண்டிருந்தார். இதைப்பற்றி எல்லா வாத்தியார்களும் முணுமுணுத்தார்கள். டீச்சர்ஸ் ரூமில் அவ்வப்போது விவாதம் நடந்தது. சலித்துக்கொண்டார்கள். இந்த மணியை யார் பூனைக்குக் கட்டுவது.

ராஜேஸ்வரிக்குத் தர்மசங்கடமாக இருந்தது. எவ்வளவு நேரந்தான் போட்டோக்களையே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருப்பது. இந்த ஹெட்மாஸ்டர் வகுப்புக்கே போகமாட்டாரா. எரிச்சலாக இருக்கும்.

அட்டெண்டர் அவளைப் பரிதாபமாக பார்ப்பார். ஹெட்கிளார்க் எதையுமே கண்டுகொள்ளாததுபோல் கணக்கு வழக்கில் மூழ்கியிருப்பார்.

ஹெட்மாஸ்டரைச் சந்திக்க வரும் வாத்தியார்கள் வையாபுரியைப் பார்வையால் துளைப்பார்கள். அவன்

உதட்டைப் பிதுக்கி ஊமைபாஷையில் பதில் சொல்லி யனுப்புவான்.

பாண்டியன் வெளிப்படையாகவே கேட்பார்.

''என்னவே அய்யாவப் பாக்கிறதுக்கு யாருட்ட அனுமதி வாங்கணும்.''

வையாபுரி அப்பிராணியாகப் பார்ப்பான்.

''சத்தியமா எங்கிட்ட வாங்கவேணாம் சார்.''

பாண்டியன் கோவத்தை அடக்கிக்கொள்வார்.

''தரிசனம் எப்பத்தான் கெடைக்கும்.''

''கொஞ்சம் இருங்க கேட்டுச் சொல்றென்.''

''வெளிய வா. இண்ணைக்கு வாலிபால் நீதான்.''

அவர் ராஜேஸ்வரியை ஆதங்கத்துடன் பார்த்துவிட்டு நடப்பார். இந்த டீச்சருக்கென்ன இப்படிக் கிடந்து தவிக்கணுமென்று தலையெழுத்தா. தனியாகச் சந்திக்கும் போது இதைக் கேட்கணும். இதுக்காகவாவது ஒருதடவை சந்திக்கணும். சந்தர்ப்பம் கிடைக்காமலா போகும்.

தங்கச்சாமிமேல் ஆத்திரமாக இருக்கும். தமிழய்யாவிடம் கொட்டித் தீர்ப்பார்.

''இவருக்கென்ன சார் ஹெட்மாஸ்டர்மேல அக்கற அவரு பாடத்தவும் சேத்து நடத்தறாரு. இவரு நடத்தலன்னா அவரு கிளாஸுக்குப் போவாருல்ல. ஒருநாளைக்கு வசமா கேக்கத்தான் போறென்.''

தமிழய்யா பக்குவமாகப் பேசிச் சாந்தப்படுத்துவார்.

''அவரச் சொல்லிக் குத்தமில்ல பாண்டியன். ஹெட் மாஸ்டருக்கு அடுத்த பொறுப்புல இருக்கிற மனுசன். பையங்கள அதோகதியா விட்றமுடியுமா.''

''யாரும் வுடச்சொல்லலயே.''

''அதனாலதான் மொகஞ்சுளிக்காம வகுப்புக்குப் போறாரு. நீங்க எந்த வகுப்புல வாத்தியாரு இல்லன்னாலும் சந்தோசமாப் போறீங்கல்ல. அதப்போலதான்.''

''வாத்தியாரு இல்லன்னாத்தான போறென். இப்படியா உக்காத்திவச்சு வேடிக்கபாக்கிறது.''

''அதப்போல இதவும் நெனச்சுக்கிற வேண்டியதுதான். எல்லாரவும் அனுசரிச்சு குடும்பப்பாங்குல சமாளிச்சாத்தான் பள்ளிக்கூடத்த நல்லபடியா நடத்த முடியும். நம்மள நம்பி புள்ளைகள அனுப்புறாங்க. அந்த நம்பிக்கையக் கெடுத்துறக் கூடாது. என்னசொல்றீங்க பாண்டியன்.''

''நீங்கதான் வாய அடச்சிட்டீகளே. இனி சொல்றதுக்கு என்னருக்கு.''

தமிழய்யா ரெண்டு வெற்றிலையை நீட்டுவார். பாண்டியன் அதைக் கோணல்மாணலாக மென்று நாக்கில் சிவப்பைத் தேடுவதில் கவனப்படுவார்.

அப்புறம் பேச்சு ஹிந்தித் திணிப்பு வேலையில்லாத் திண்டாட்டம் என்று விரியும். பாண்டியன் பேச்சாளராக அவதாரமெடுப்பார். சமீபத்தில் மகாலிங்கபுரத்தில் நடந்த அரசியல்கூட்டம் ரூம் திருணையில் நடக்கும். சிறப்புப் பேச்சாளரது கனல்தெறிக்கும் பேச்சை உணர்ச்சி குறையாமல் அதே பாணியில் தோள்குலுக்கி முழங்கையசைத்து ஒலி பரப்புவார். தமிழய்யாவுக்கு ஒருவிதத்தில் சந்தோசமாக இருக்கும்.

''எல்லாப் பேச்சாளரும் பாண்டியனுக்குள்ள இருக்கயில பொதுக்கூட்டங்களுக்கு ஏன் போகணும்.''

''சார் எண்ணைக்கிருந்தாலும் இந்த ஊருல நான் ஒரு பொதுக்கூட்டம் நடத்துறனா இல்லையான்னு பாருங்க. அதுக்கு நீங்கதான் தலமதாங்கப்போறீக.''

''இப்ப நீதிபோதன வகுப்புல அதுதான நடக்குது. அத சந்திக்குக் கொண்டுவரப்போறீங்க. அவ்வளவுதான.

''கலகம் இல்லன்னா ஒலகம் இல்ல. இது பாண்டியனோட பொன்மொழி.''

''கவலைய விடுங்க. ரெண்டுபேரும் சேந்தே ஜெயிலுக்குப் போவொம். ஒங்க புண்ணியத்துல ஓசிச்சோறு கெடைக்கும்.''

''அந்தத் தியாகிப்பட்டம் எனக்குத்தான். ஒங்களுக்குக் கெடைக்கவுடமாட்டென்.''

''நாட்டுல வேல வாங்குறதுக்குத்தான் போட்டின்னா ஜெயிலுக்குப் போறதுக்குமா.''

''போட்டியில்ல சார். இளைய தலைமுறையின் கடமை. காலத்தின் கட்டாயம்.''

தமிழய்யாவுக்கு மனசு குளிர்ந்துபோகும். பாண்டியனைத் தட்டிக்கொடுப்பார்.

அந்தவாரம் தமிழய்யாவின் பையன் வந்திருந்தான். ராவும்பகலும் பேச்சுவார்த்தை நடந்தது. ரங்கராஜன் ஊரில் இல்லை. பாண்டியன் அமைதியாக ஒதுங்கிக்கொண்டார்.

தகப்பன் மகனுக்கிடையே எப்போதுமுள்ள சகஜம் காயப்பட்டு புதுசாக ஒரு விறைப்பும் முறைப்பும் இருந்ததைக் கவனிக்கமுடிந்தது. ஆனாலும் பாண்டியன் எதுவும் கேட்டுக் கொள்ளவில்லை. குளிக்கப்போகும்போதும் சாப்பிடப் போகும்போதும் வாய் குறுகுறுத்தாலுங்கூட அவர் உறுத்தலை வெளிக்காட்டிக்கொள்ளவில்லை.

மறுநாள் சாயங்காலம் பையனை பஸ்ஏற்றி அனுப்பிய பிறகும் தமிழய்யாவின் முகத்தில் விசாரம் இருந்தது. வாக்கிங் போகும்போது பாண்டியன் மெல்ல பேச்சைத் தூண்டினார்.

''என்னசார் ஒருமாதிரி இருக்கீக. ஏதும் பணக்கஸ்டமா.''

''அதுநம்ம கூடப் பெறந்தது. அதுக்காக வருத்தப்பட ஆரம்பிச்சா ஒண்ணு கமண்டலம் ஏந்திக்கிட்டு காசிக்குப் போகணும். இல்ல காலத்த முடிச்சிக்கிட்டு மயானத்துக்குப் போகணும்.''

''பெறகென்னது சார்.''

''கொஞ்சம் மனக்கஸ்டம்.''

''ஆனானப்பட்ட தமிழய்யாவுக்கா. ஆச்சரியமாருக்கே.''

''பையனுக்கு வாத்தியார்வேல கெடச்சிருக்கு.''

''இது நல்ல சேதியாச்சே. குடும்பப்பாரத்த பையன் கைமாத்தீருவான். இனிமே நீங்க தாராளமா வெத்தல போடலாம்.''

''வேல எப்படிக் கெடச்சதுன்னு கேக்கலயே.''

''கெடைக்கிறதே பெரியகாரியம். எப்படி வந்தா என்ன சார்.''

''தன்ன அடகுவச்சு வாங்கீருக்கான். அதுலதான் எனக்கு வருத்தம்.''

''அடகா.''

''ஆமாமா. பஞ்சாயத்து யூனியன் தலைவர் பால் வண்ணம் பிள்ளைக்கு இவன்மேல எண்ணைக்குமில்லாற அக்கற வந்துருச்சு. கூப்புட்டுக் குடுத்துட்டாரு.''

''அவரு சொந்தக்காரரா சார்.''

''என் வீட்டுக்காரிக்கு அண்ணன். ரெண்டுபேரு அம்மாவும் கூடப்பெறந்தவங்க. இனிமே நெருங்குன சொந்தம். பையன் அவருக்கு மருமகனாகப்போறான். அந்த ஒப்பந்தத்துலதான் வேல ஏற்பாடாகியிருக்கு.''

''ஏன் சார் அப்படி நெனைக்கணும். நல்லெண்ணத்துலதான செஞ்சிருக்காரு.''

''ரெம்ப நல்லெண்ணம். அப்படின்னா இந்த மனுசன் என்ன செஞ்சிருக்கணும். எம்பொண்ணுக்கு வேல குடுத்துருக் கணும். தம்புள்ளைக்கு என்குடும்பத்துல பொண்ணெடுத் துருக்கணும். செய்யலயே. ஏன்னா நான் தரித்திரம்பிடிச்சவன். அந்தஸ்தில்லாறவன்.''

''அதெல்லாம் ஒணந்துதான் இப்ப நெருங்கி வந்துருக்காரு. பழசெல்லாம் மறந்துருங்க சார்.''

''எப்படி மறக்கமுடியும் பாண்டியன். அண்ணைக்கு நான் எனக்குப் பொண்ணுகேட்டுப் போகயில என்னசொன்னாரு தெரியுமா. போயும்போயும் தரித்திரம் பிடிச்ச தமிழ் வாத்தியானுக்கா குடுக்கிறதுன்னு எளக்காரமாப் பேசுனாரு. வீட்டுக்காரிமட்டும் பிடிவாதமா இல்லன்னா என்மானம் மரியாதையெல்லாம் காத்துல பறந்துருக்கும்.''

''அகநானூறு பாடி அம்மையார அசத்தீட்டீக போலருக்கு.''

''நான் தரித்திரம் பிடிச்சவன்தான். தரித்திரம்னா அட்டத் தரித்திரம். கொழந்தைகள வளத்து ஆளாக்குறதுக்கு என்ன கஸ்டப்பட்டோம் தெரியுமா. நல்ல துணியுண்டா சோறு தண்ணியுண்டா. அவ்வளவு கஸ்டத்துலயும் எங்களுக்கு வைராக்கியம் கொறையல. நான் போயி அந்த மனுசன்கிட்ட எம்பாடு இப்படின்னு கைநீட்டியிருப்பனா இல்ல என் வீட்டுக்காரிதான் கண்ணக் கசக்கியிருப்பாளா. தன்னோட ஒரே பையனுக்கு அவரு பெரிய எடத்துல சம்பந்தம் பண்ணுறபோது கூட அவ ஒருவார்த்த சொல்லி ஆதங்கப்படலயே. அவ்வளவெதுக்கு. என் கடைசிப் பொண்ணச் சொல்லுங்க. இதுவரைக்கும் ஒதவின்னு கேட்டுப் போயிருப்பாளா. அதுதான் வைராக்கியம். தன்மானம்.''

''தரித்திரத்திலும் சரித்திரம் படைத்த தமிழய்யாவுக்குத் தலைவணங்குகிறேன்.''

''பொம்பளைக்கிருக்கிற சுயமரியாத பையனுக்கில்லை யேங்கிறத நெனச்சாத்தான் வேதனையாருக்குது பாண்டியன். கையாலாகாற அப்பன நம்பிப் புண்ணியமில்லன்னு இந்த முடிவத் தேடிக்கிட்டான் போலருக்குது. அவன் வாங்கப்போற சம்பளத்த அம்மாட்டக் குடுப்பானோ ஆத்துக்காரியிட்டக் குடுப்பனோ அதப்பத்தி எனக்குக் கவலையில்ல. இனி இருக்கிறது ஒரு பொண்ணு. நான் ரிடையராகிறதுக்குள்ள

அதக் கரையேத்திருவென். சாயிபுபையனோ சவரஞ் செய்றவனோ அவ மனசுக்குப் புடிச்சவனோட சந்தோசமா இருக்கணும். பெறகென்ன கவல. கடைசிவரைக்கும் கடையில கணக்கெழுதியாச்சும் அவ அம்மாவக் காப்பாத்துவென்.''

தமிழய்யா ரெம்ப உயரத்தில் நடந்துகொண்டிருந்தார். அவர் இப்படி உடைந்து பார்த்தில்லை. பாண்டியன் ரெண்டுமுறை தேற்றினார்.

''எல்லாம் நல்லபடியா நடக்கும். கவலைய வுடுங்க சார்.''

அங்கங்கே மஞ்சள்குளித்துக்கொண்டிருந்த மரங்கள் மெல்ல மெல்ல முக்காடுபோடத் தொடங்கின. அவர்கள் மௌனத்தைச் சுமந்துகொண்டு ரூமுக்குத் திரும்பினார்கள்.

**கா**லையில் ஜுனியர் மராத்தான் ரூமுக்கு வந்து பாண்டியனிடம் சொன்னான்.

''நைனா வாறதுக்கு கொஞ்சம் நேரமாகும்னு சொல்லச் சொன்னாரு சார்.''

''வேல வீட்டுல நடக்குதா காட்டுலயா.''

''தோட்டத்துல மொளகாச்செடிக்கு மருந்தடிக்காக.''

''நல்ல எக்சசைஸ்தான். நீ போகலயா.''

''நானும் மருந்தடிச்சிட்டுத்தான் வாறென்.''

''பெரியபள்ளிக்கூடத்துல படிப்ப முடிச்சிட்டு வாறயாக்கும்.''

பாண்டியன் ஜுனியரைத் தட்டிக்கொடுத்து அனுப்பி வைத்தார். அவருக்கு முதல் ரெண்டுபீரியடு டிரில் இருந்தது. அதுக்குப் பையன்களை நியமித்துவிட்டு ஏழாம்வகுப்புக்குப் போனார். பிள்ளைகளுக்குக் கொண்டாட்டம். ஆறாம் வகுப்பில் ராஜேஸ்வரி பாடம் நடத்திக்கொண்டிருந்தாள். பாண்டியன் கடந்துபோனதை அவள் கவனிக்கவில்லை.

கொஞ்சநேரம் அமைதியாக இருந்துவிட்டு பாடத்தை ஆரம்பித்தார் பாண்டியன்.

''போனவருசம் குத்தாலத்துல குளிக்கும்போது வழுக்கி வுழுந்து முட்டிய ஒடச்சவன் யாரு.''

ஒரு பையன் எழுந்துநின்றான்.

''இப்ப தாவலயாகிப்போச்சு சார்.''

''பெறகு கொரங்குகிட்டக் கடிபட்டது எவன்.''

''இவன்தான் சார். இவன்தான் சார்.''

எல்லாரும் இன்னொருவனைப் பிடித்து எழுப்பி விட்டார்கள். அவன் வெட்கத்தில் தலைகுனிந் திருந்தான்.

''கொரங்கு ஏன் கடிச்சதாம்.''

கடைசி வரிசையிலிருந்து ஒரு குரல் வந்தது.

''கொரங்குக்குப் போட்ட பொரிகடலைய இவன் பெறக்கித்தின்னான் சார். அதனால அதுக்குக் கோவம் வந்துருச்சு.''

''அப்படின்னா சரி. அடுத்ததடவ போகும்போது அதே கொரங்கத் தேடிக் கண்டுபுடிச்சு பதிலுக்குக் கடிக்கணும் தெரிஞ்சதா.''

எல்லாரும் சிரித்தார்கள்.

''சார் இவன போனவாரம் கழுத கடிச்சிருச்சு.''

''கழுதைக்கு அவன்மேல என்ன கோவம்.''

''சும்மா நின்னுகிட்ருந்ததுக்குப் பின்னாலகூடிப்போயி காதுல கட்டெறும்ப வுட்ருக்கான். அது லவக்குனு இடுப்புல கவ்வி கறியத் தோண்டீருச்சு.''

பிள்ளைகளின் ஆரவாரம் கூரையில் மோதியது.

''சைலன்ஸ்...சைலன்ஸ்...குத்தாலத்தப்பத்தி ஒருத்தரு நல்ல நூல் எழுதியிருக்காரே அவரு பேரு என்ன அந்த நூல் எது தெரியுமா.''

''திரகூடராசப்பக் கவிராயர்.''

''குற்றாலக் குறவஞ்சி.''

''கரெக்ட். அந்தக் காலத்துலயே அவரு வாலிபால் வெளையாட்டப்பத்தி எப்படிப் பாடியிருக்காரு தெரியுமா.''

அவர் வசந்தவல்லி பந்தாடிய காட்சியை வரிவரியாக விளக்கி விளையாட்டையே வார்த்தைகளில் நடத்திக் காட்டினார்.

**''பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை**
**புரண்டு புரண்டாட-குழல்**
**மங்குலில் வண்டு கலைந்தது கண்டு**
**மதன்சிலை வண்டோட-இனி**
**இங்கிது கண்டுல கென்படும் என்படும்**
**என்றிடை திண்டாட-மலர்ப்**
**பங்கய மங்கை வசந்த சவுந்தரி**
**பந்து பயின்றாளே.''**

பந்தாட்டக்குரல் கேட்டதும் ஆறாம் வகுப்பு அமைதிப்பட்டது. கொஞ்சநேரம் கழித்து ஆறில் ராஜேஸ்வரியின் பாடம் கேட்டது. உடனே ஏழு அமைதிப் பட்டது. ரெண்டு பீரியடு போனதே தெரியவில்லை.

கிளாஸ் முடிந்து வெளியேறும்போது ஆறாம்வகுப்பு வாசலில் ராஜேஸ்வரி நின்றுகொண்டிருந்தாள். பிள்ளைகள் இடைவேளைக்காக வெளியே போயிருந்தனர். மிஞ்சியிருந்த பெண்களும் ஒருவரையொருவர் இடித்துக்கொண்டு வெளியே வந்தனர். பாண்டியனைப் பார்த்ததும் ராஜேஸ்வரி சுவரைச் சுரண்ட ஆரம்பித்தாள். அவர் நெருங்கிப்போனார்.

''டீச்சருக்கு சொவரப்பத்திக் கவலவந்துருச்சா. பயப் படாதங்க. ரெம்பநாளைக்குத் தாங்கும்.''

அவள் அழகாகச் சிரித்தாள்.

''ஒங்களப் பாராட்டுறதுக்காகக் காத்துருக்கென்.''

''பாராட்டா. அப்படி நான் என்ன பெரிசா கிழிச்சிட்டென்.''

''நல்லா பாடுறீக சார்.''

''ஓகோ அதச் சொல்றீகளா. பையங்க கழுதையப்பத்திப் பேசுனதும் பாட்டுநெனப்பு வந்துருச்சு.''

அவள் இன்னும் அகலச் சிரித்தாள்.

''ஒங்க கொரலு அருமையாருக்கு.''

''தமிழ்ல வஞ்சப்புகழ்ச்சி அணின்னு ஒண்ணு உண்டு.''

''உண்மையாச் சொல்றென்.''

பாண்டியன் பூரித்துப்போனார்.

''ரெம்ப நன்றி டீச்சர். இது எங்க ரூம்ல இருக்கிறவுகளுக்குத் தெரியலயே. நான் பாட ஆரம்பிச்சா படுக்கைய விரிச்சிறாக. அதுசரியே எவ்வளவு காலத்துக்கு ஆபீஸ்ல அடஞ்சு கெடக்கிறதா உத்தேசம். வெளிய கிரவுண்டுல வெளயாட்டு நடக்குது அதுக்குனு தண்டமா ஒரு டிரில்மாஸ்டர் இருக்காங்கிறதத் தெரிஞ்சிக்கிறவேணாமா.''

''எனக்கு வெளையாட்டுல பிரியமில்ல சார்.''

''ஆபீஸ்ல உக்காந்து நகத்தக் கடிக்கிறதுலதான் பிரியமாக்கும். அதென்ன மிட்டாயா. வேணும்னா தீத்தம் சார் கடையில இருக்கிற அத்தன மிட்டாயவும் வாங்கிக் குடுத்துறென். சாவாசமாத் தின்னுங்க.''

''எனக்கு வெளயாடத் தெரியாதே.''

''டிரில் மாஸ்டருக்கே தெரியாது. கத்துக்கிற வேண்டியதுதான். மொதல்ல ஆபீஸவுட்டு வெளிய வாங்க. வந்து கிரவுண்டுல நடக்கிறதப் பாருங்க. பாக்கிறதுக்கு டிக்கெட்டெல்லாம் கெடையாது. அதுக்குப்பதிலா எப்பயாச்சும் வீட்டுப் பக்கம் வந்தா வாய்க்கு ருசியா ஒருவேளச் சாப்பாடு

கேப்பொம் அவ்வளவுதான். குடுபீகளா இல்ல வெரட்டி யடிப்பீகளா.''

''தாராளமா வாங்க.''

''அப்பாடா. அண்ணைக்குத்தான் இந்த நாக்குக்கு உயிர்வரப்போகுது.''

பாண்டியன் கற்பனைகளை மென்றுகொண்டே போனார். எதிரே எக்ஸ்பிரஸ் வேகத்தில் வந்த கிருஷ்ணசாமி அவரது கற்பனைகளைக் கலைத்தார்.

''பாண்டியன் சாருக்கு நான் ரெம்ப நன்றிக்கடன் பட்ருக்கென்.''

''நான்தான் சார் ஒங்களுக்கு நன்றிசொல்லணும்.''

''அப்படியென்ன ஒங்களுக்கு ஒதவிசெஞ்சிட்டென்.''

''இதே பெரிய ஒதவிதான்சார்.''

''எதச் சொல்றீக.''

பாண்டியன் முழித்துக்கொண்டார்.

''ஒண்ணுமில்ல சார். ரெண்டுபீரியடு நெழல்ல இருக்கிறதுக்கு ஒதவுனீகளே அதச் சொன்னென்.''

கிருஷ்ணசாமி பாண்டியனை வித்தியாசமாகப் பார்த்து விட்டு வகுப்புக்குப் போனார்.

ரெண்டுநாள் கிரவுண்டில் வெயில் நேரம் விளையாட்டு நடக்கையில் ராஜேஸ்வரி வகுப்புவாசலில் நின்று கவனித்தாள். மூணாம்நாள் சாயங்காலம் ருக்மணியிடமிருந்து பிரிந்து கிரவுண்டுக்குப் போனாள். பெரிய பெண்கள் டென்னிக்காய்ட் விளையாடுவதை ஆர்வத்துடன் பார்த்தாள். புதுப்பார்வையாளர் வந்த சந்தோசத்தில் பெண்கள் மும்முரமாக விளையாடினர். பாண்டியன் ஓடியாடி விசிலடித்தார். ரிங் வீசும் முறைகளை ஸ்டைலாகச் சொல்லிக் கொடுத்தார்.

ராஜேஸ்வரிக்கு விளையாட்டில் ஆசைவந்தது. அடிக்கடி பெண்களுடன் விளையாட ஆரம்பித்தாள். பாண்டியனும் பையன்களும் விளையாடுவதை ரசித்தாள்.

ரங்கராஜன் பாண்டியனைப் பாராட்டினார்.

''பாண்டியன் இப்ப ஒங்க வெளையாட்டு ஜோரா இருக்கறது.''

''அப்ப இதுக்குமுந்தி நல்லால்லன்னு சொல்றீக.''

''அப்படியில்ல. நன்னா மெருகேறியிருக்கறது.''

''இதுல ஒரு சங்கதி என்னன்னா வெளையாடுற வனுக்குமட்டும் இன்ட்ரஸ்ட் இருந்தா போதாது சார். பாக்கிறவுகளுக்கும் வேணும். அப்பத்தான் விறுவிறுப்பு இருக்கும்.

''ரசிக்கத் தெரியணுமே. அதச் சொல்லுங்கோ.''

''வெளையாடத் தெரிஞ்சா ரசன தானா வரும்.''

ரங்கராஜன் தமிழய்யாவிடம் ''பாத்தேளா.'' என்று கண் சிமிட்டினார். தமிழய்யா டப்பாவுக்குள் கலர்சுண்ணாம்பைத் தோண்டினார்.

''பாண்டியன் வெளையாடுறதுக்குன்னே படிச்சவர். சாமி இனிமேத்தான் கத்துக்கிறணும்.''

ரங்கராஜனுக்கு உள்ளுக்குள் சந்தோசமிருந்தாலும் சின்ன வருத்தம் உறுத்தாமலில்லை.

இப்படித்தான் பாண்டியனுக்கும் ராஜேஸ்வரிக்கும் பரிச்சயம் ஏற்பட்டது. அதுக்குப்பிறகு அவர்கள் சந்திப்பதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். ராஜேஸ்வரி இப்போதெல்லாம் அக்ரஹாரமுனைவரை வந்து ஸ்கூலுக்குத் திரும்பினாள். பாண்டியன் அவளுடன் பேசிக்கொண்டே பின்தொடர்ந்தார். கொஞ்சநேரத்துக்குள் நிறையப் பேசினார்கள்.

பாண்டியன் அவ்வப்போது தமிழய்யாவுக்கும் ரங்கராஜனுக்கும் டிமிக்கிக்கொடுத்துவிட்டு ராஜேஸ்வரியின்

வீட்டுக்குப் போய்விடுவார். சாயங்காலம் வாக்கிங்போய்த் திரும்பும்போது சிலநாள் குழந்தைச்சாமியின் ஹோட்டல் வந்ததும் தலைமறைவாகிவிடுவார். குழந்தைச்சாமி தமிழய்யாவிடம் அக்கறையாக விசாரிப்பார்.

''பாண்டியன் ஏன் வரல. தமிழய்யாவுக்கு அவரில்லாம சாப்பாடு ருசிக்காதே.''

தமிழய்யா சமாளிப்பார்.

''எளவட்டப்புள்ளைக சினிமா அது இதுன்னு போயிட்டு வருவாங்க.''

''ரங்கராஜன் சாருக்கு அதெல்லாம் புடிக்காதா.''

ரங்கராஜன் சொல்லுவார்.

''நேக்குப் பிடிச்சது ஓங்க ஹோட்டல் பதார்த்தந்தான். போறுமா.''

தமிழய்யாவுக்குப் புரிந்துவிடும். உடனே பேச்சை மாற்றிவிடுவார்.

பாண்டியன் சினிமாவுக்குப் போனால் ஒரு கவுளி இளம்வெற்றிலையும் அதுக்கேற்ற கழிப்பாக்கும் வாங்கிவர மறப்பதில்லை. சிலநேரம் தேடிப்பிடித்து பச்சைப்பாக்குகூட வாங்கிவருவார். தமிழய்யாவின் வாய்க்குச் சந்தோசம் தாங்காது.

ரங்கராஜனையும் பாண்டியன் மறக்கமாட்டார். அவருக்கு அம்பிவிலாஸ் அல்வாவும் பக்கோடாவும் வரும். ரங்கராஜன் சந்தேகத்தில் கேட்பார்.

''நேக்குதான் வாங்கிண்டு வந்தேளா.''

''ஓங்களுக்கேதான் சார்.''

''வெத்தலையும் அல்வாவும் கொடுத்து எங்க வாய அடைக்கறேள்.''

''ஒரு பிரியந்தான்.''

''யாருமேல.''

''எல்லாருமேலயுந்தான்.''

தமிழய்யா ஒரு செய்யுள் பகுதியைச் சொல்லுவார்.

**''நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை.''**

பாண்டியன் தமிழய்யாவை சிக்கலாகப் பார்ப்பார். ''கவலய விடுங்க பாண்டியன்'' என்று அவர் கண்ணால் பேசுவார். அதுபோதும் பாண்டியனுக்கு. உடனே பாட்டுக் கச்சேரிக்குத் தயாராகிவிடுவார்.

ராஜேஸ்வரியுடன் விளையாட்டுத்தனமாக ஆரம்பித்த பேச்சு இவ்வளவு நெருக்கத்தில் கொண்டுவந்து விடுமென்று பாண்டியன் எதிர்பார்க்கவில்லை. நினைத்தால் ஆச்சரியமாக இருந்தது. சிலசமயம் மலைப்பாகக்கூட இருந்தது.

அவளைப் பார்க்கமுடியாத நாட்களில் தவித்துப் போனார். ரூமில் சோகப்பாட்டுப் பாடினார். திண்ணையில் தனியாக உட்கார்ந்து சிந்தனையிலாழ்ந்தார். தமிழய்யா விசாரித்தால் என்னென்னமோ சொல்லி மழுப்பினார்.

லீவு வருவதுகூட அவருக்கு உறுத்தலாக இருந்தது. ரங்கராஜன் இல்லாத சமயத்தில் பேச்சுத்துணையில்லாமல் தமிழய்யாவைத் தனியாக விட்டுவிட்டுப் போகமுடியாது. அப்படியும் அவரிடம் பொய்சொல்லிவிட்டு கொஞ்சநேரம் ராஜேஸ்வரியின் வீட்டுக்குப் போய்த் திரும்புவார். தமிழய்யாவிடம் கூட பொய்சொல்ல வேண்டியிருக்கிறதே என்று பிறகுதான் மனசு கிடந்து அடித்துக்கொள்ளும்.

ஒருநாள் பஸ்டாண்டுப் பக்கம் சைன்ஸ் தங்கச்சாமி பார்த்துவிட்டார். அவர் சகஜமாகக் கேட்டதுகூட வித்தியாசமாகத் தெரிந்தது.

''என்னசார் தனியா இந்தப்பக்கம்.''

ஏதோ சாக்குச் சொல்லிச் சமாளிக்க வேண்டியிருந்தது.

''டெய்லருகிட்ட சட்ட தைக்கிறதுக்குத் துணி குடுத்துட்டு வாறென்.''

''ஒங்க ஸ்டைலுக்கேத்தபடி தைக்கிற டெய்லர்கூட இங்க இருக்கானா. இவ்வளவுநாளா எனக்குத் தெரியாமப் போச்சே. அது யாரு சார். நானும் குடுக்கணும்.''

பாண்டியன் நெளிந்தார்.

''இப்பத்தான் மொதல்ல குடுத்துருக்கென். நல்லாத் தைக்கானான்னு பாத்துட்டுச் சொல்றென். ஏன்னா ஒங்க துணி வீணாகியிறக்கூடாது பாருங்க.''

தங்கச்சாமியிடமிருந்து தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி தமிழய்யாவிடம் தஞ்சம்புகவேண்டிய நிலைமை.

நல்லவேளைக்கு வாட்ச்மேன் வீரணன் தட்டுப் பட்டான். இல்லையென்றால் தமிழய்யாவிடமும் ஏதாவது உளறிச் சமாளிக்க வேண்டியிருந்திருக்கும். பாண்டியன் பெருமூச்சு விட்டபடி அவனைக் கூப்பிட்டார்.

''வேய் திருட்டுத்தனமா ஒளிஞ்சுஒளிஞ்சு ஓடுறயே என்ன சமாச்சாரம். இங்க வா தமிழய்யா கூப்புடுறாரு.''

தமிழய்யா சொன்னார்.

''ஏன்சார் அவர வம்புக்கிழுக்கிறீங்க. முக்கியமான வேலையாப் போறாரோ என்னமோ.''

''பொல்லாற வேல.''

வீரணன் வந்து வாசல்படியில் உட்கார்ந்தான்.

''டிரில்மாஸ்டரய்யா கூப்புட்டு வராம இருக்கமுடியுமா.''

''இதுல ஒண்ணும் கொறச்சலில்ல. ஆமா எங்க அவசரமாப் போனீகளோ.''

''இந்தி டீச்சரம்மாவுக்கு எவ்வளவு எண்ண வேணும்னு அய்யாத்தொரசார் வீட்ல கேட்டுட்டு வரச்சொன்னாக.''

''அப்படின்னா முக்கியமான வேலதான். போயிக் கேட்டுட்டு வந்துறீகளா இல்ல கொஞ்சநேரம் இங்க இருந்துட்டுப் போறீகளா. ஓங்ககிட்ட ஒரு வெசயம் பேச வேண்டியிருக்கு.''

''அய்யா எப்ப அனுப்புறீகளோ அப்ப போயிக்கிறென்.''

பேச்சு போகிற தினுசைப் பார்த்தால் பாண்டியன் அவனை லேசுக்குள் விடமாட்டார் என்று தமிழய்யாவுக்குப் புரிந்துவிட்டது. என்ன விவகாரமோ. மெல்ல எழுந்தார்.

''நீங்க பேசிக்கிட்ருங்க. நான் போயி கட்டையக் கெடத்துறென்.''

தமிழய்யா ரூமுக்குள் போனதும் பாண்டியன் நெருங்கி வந்தார். வீரணனுக்கு உதறலெடுத்தது.

''என்னய்யா...''

''தெரியாமத்தான் கேக்கென். நீ ஸ்கூலுக்குத்தான வாச்மேன்.''

''ஏன்யா அப்படிக் கேக்கீக.''

''இல்ல ஒருநா ராத்திரி மகாலிங்கபுரம் தியேட்டர் வாசல்ல ஒன்னப் பாத்தமாதிரி இருந்துச்சு. ஒருவேளை அங்க வேலைக்குச் சேந்துட்டயோன்னு ஒரு சந்தேகம்.''

அவன் நினைத்தது சரியாக இருந்தது. இனி அவ்வளவுதான். கிண்டிக்கிளறாமல் விடமாட்டார். உண்மையைச் சொல்லிவிடவேண்டியதுதான். அவன் எச்சுக்கூட்டி விழுங்கினான்.

''சினிமாக்கொட்டக வாசல்ல நின்னது வாஸ்தவம்தான்யா. நீங்க உள்ள உக்காந்துருக்கிறதக்கூடப் பாத்தென்.''

''வந்து ஒருவார்த்த பேசியிருக்காலமில்ல. ஒன்னக் கூப்புடுறதுக்குத் திரும்பிப்பாத்தென். அதுக்குள்ள ஓடி ஒளிஞ்சுக்கிட்டயே.''

''ஒங்ககிட்டப் பேசணும்னு நெனப்புத்தான். ஆனா நான் இருந்த அவசரத்துல ஒண்ணுமே ஓடல. பெறகும் ஒங்ககிட்ட வெசயத்த எப்படிச் சொல்றதுன்னு கூச்சம்.''

''கூச்சப்படுற அளவுக்கு அப்படியென்ன வெசயம்.''

''அது வந்துய்யா...''

''எது வந்து. சும்மா சொல்லுவே.''

அவன் தலையைச் சொறிந்தபடி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு மறுபடியும் தயங்கினான்.

''கொமரிப்பொண்ணு மாதிரி அய்யாவுக்கு வெக்கம் புடுங்கித்திங்கிறதப் பாரு.''

''மேலக்கொட்டகையில எம்ஜியார் படம் ஒண்ணு நல்லாருக்குதுன்னு எல்லாரும் சொன்னாக. நானும் வீட்டுக்காரியும் போயி மாட்னி பாத்துட்டு வந்தொம்.''

''ஒனக்கு எம்ஜியார் படந்தான் புடிக்குமா.''

''பொதுவா அவரு படந்தான் பாப்பென். சண்ட பாட்டு எதும் வேறதுல ருசிக்கிறதில்ல.''

''சரி ரெண்டுபேரும் மாட்னி பாத்துட்டு வந்தீக.''

''ஒருகட்டத்துல அவரு காதலிய அப்படியே அலக்காத் தூக்கி கிறுவாணம்சுத்தி கட்லுமெத்தமேல பொத்துனு போடுவாரு. அந்த அம்மா மேலயும் கீழயும் ஆடும். ஒடனே அவரு அழகான பாட்டு ஒண்ண எடுத்துவுடுவுவாரு. கொட்டகையெல்லாம் விசில்சத்தம் கேட்டுமுடியாது. அந்தக் கூட்டம் எனக்கு ரொம்பப் புடிச்சுப்போச்சு.''

''வே நீ பெரிய ரசிகன்தான்.''

''அந்தப் பாட்டும் கும்மாளமும் கொஞ்சநாளா மனசவுட்டுப் போகவேயில்ல. அதுபாருங்க ஒருநா வெளையாட்டுப்போல என் வீட்டுக்காரியத் தூக்கி கயத்துக்கட்லுமேல போட்டுட்டென்.''

''கிழிஞ்சது போ. நீ எம்ஜியாராயிட்டயா. வீட்டுல சினிமாவே நடத்தீட்ட.''

''கட்லு பாரம் தாங்காம ரெண்டா ஒடஞ்சு பல்ல இளிச்சிருச்சு. வீட்டுக்காரி மூச்சுப்பேச்சில்லாம [redacted] கெடக்கா.''

''கதாநாயகிக்கு இப்படியொரு சோதனையா, கதாநாயகன் என்ன செஞ்சாரு. சோகப்பாட்டுப் பாட ஆரம்பிச்சிட்டாரா.''

''அவ மொகத்துல தண்ணியத் தொளிச்சுத் தூக்கி நிறுத்துனா தொவண்டுக்கிட்டே போறா. ஒரு எட்டுக்கூட நடக்கமுடியல.''

''எங்கயும் அடிபட்ருச்சா.''

''ஒரு கிண்ணி கழண்டுபோச்சு.''

''வே அறிவுகெட்ட காரியம் பண்ணீட்டயே.''

''நல்ல வேளைக்கு அப்ப புள்ளீக வீட்டுல இல்ல. ஓடியாடி ஒரு மாட்டுவண்டி சம்பாரிச்சு ராவோட ராவா அவள மகாலிங்கபுரத்துக்குக் கொண்டுபோனென். எலும்பு முறிவுக்கு வைத்தியம் பாக்கிற நாடாரு நடுக்கொட்டகைய ஒட்டி சந்தப்பேட்டையிலதான் இருக்காரு. அங்கபோயிப் பாத்தா அவரு சினிமாவுக்குப் போயிட்டாருன்னு சொல்லீட்டாக. அதனாலதான் கொட்டகைக்கு ஓடிவந்து அவரத் தேடிப்புடிச்சு கையோட கூட்டீட்டுப் போனென். அப்பயே அவரு மாவுப்பச மட்டையெல்லாம் சம்பாரிச்சு வலியோடவலியா கிண்ணிய எடுத்துவச்சுக் கெட்டுனாரு. வீட்டுக்காரி போட்ட கூச்சலு கொட்டகவரைக்குக் கேட்டுருக்கும். ஒருவழியா வீடுவந்து சேருறதுக்கு சாமமாகிப் போச்சு.''

பாண்டியனுக்குக் கோவம் முட்டிக்கொண்டு வந்தது.

''ஒனக்கு கொஞ்சமாச்சும் மூளையிருக்கா. நான் அங்கதான இருக்கென். வெசயத்தச் சொல்லியிருக்கலாமில்ல. தனியாக் கெடந்து தவிச்சிருக்கயே முண்டம்.''

''நான் செஞ்ச தப்புக்கு நான்தானய்யா அனுபவிச்சுத் தீரணும். ஒங்களக் கஸ்டப்படுத்துனா எப்படி.''

''அதுசரி. ஒனக்கு இந்தக் கதியாகியிருக்கணும். அப்பத் தெரியும். ஒன்வீரத்தக் காட்டுறதுக்கு பொம்பளதானா கெடச்சது.

வழியல போற ஆம்பள எவன்கூடயாவது சண்டைபோட வேண்டியதுதான. வீட்டுக்காரிக்கு இப்ப எப்படி இருக்குது.''

''எந்திரிச்சு கம்பூண்டி நடமாடிக்கிருவா. வையாபுரி சம்சாரந்தான் ஓவணியம் பாத்துக் கவனிச்சுக்கிருது.''

''வையாபுரிக்கு உண்மையா நடந்த கத தெரியுமா.''

''ஒங்களத்தவர ஆருக்கும் தெரியாது.''

''அவன் வரட்டும் சொல்றென்.''

''ஒங்களுக்குப் புண்ணியமாப்போகுது. ஆருட்டயும் சொல்லவேணாம்யா. என்வீட்டுக்காரி காதுக்கு எட்டுனா அவ்வளவுதான். ஒருநாளைக்கு ஒரு வெளக்கமாரு காணாது.''

''வீராதி வீரனாச்சே. வாங்கிக் கட்டிக்கயேன்.''

''இப்ப சினிமாப் பாக்கிற பழக்கத்த அடியோட வுட்டுட்டன்யா.''

''ஏன் போகவேண்டியதுதான. வீட்டுக்காரிக்கு இன்னொரு காலு பாக்கியிருக்குதே. அந்தம்மாவ வந்து பாக்கிறதுக்குக்கூட வழியில்லாமப் பண்ணீட்டயே பாவி. வந்து என்னசொல்லி வெசாரிக்கிறது. அதுக்குப் பழம் முட்டன்னு சத்தான பண்டங்கள வாங்கிக் குடுக்கயா. கையில பணமிருக்குதா.''

''எனக்குத் தக்கபடி செய்றன்யா.''

பாண்டியன் ரூமுக்குள் போய் பெட்டியில் பணம் எடுத்து வந்து கொடுத்தார்.

''இந்தா இத வச்சுக்கோ. தேவையிருந்தா அப்பப்ப வந்து கேளு. கூச்சப்பட்டுக்கிட்டு இருக்காம காலகாலத்துல அந்தம்மாவ நல்லா நடக்கவைக்கிறதுக்குண்டான வழியப் பாரு.''

வீரணன் குறுகிப்போனான்.

''வேணாம்யா...''

''இப்ப வாங்கப்போறயா இல்லையா.''

அவன் வாங்கிக்கொண்டான்.

''ஒன்வீட்டம்மா ஒருமாசத்துக்குள்ள பழையபடி நடமாடலன்னா அவ்வளவுதான். ஒனக்கு ஒரு கிண்ணி போயிரும். அதமட்டும் நல்லா ஞாபகத்துல வச்சுக்கோ.''

அவன் பலமகத் தலையாட்டியபடி எழுந்தான்.

''அப்ப நான் போயிட்டு வாறன்யா.''

எட்டுவைக்கப் போனவனை அவர் நிறுத்தினார்.

''கொஞ்சம் நில்லுவே. முக்கியமான சமாச்சாரம் ஒண்ணக் கேக்க மறந்துட்டென்பாரு. ஆமா ஊருக்குக் கெழக்க வரிச வரிசையா பனமரம் நிக்குதே அதுல பதினி எப்ப வரும்.''

''இன்னியும் மூணுமாசம் ஆகணும்யா. கோடையிலதான் எறக்குவாக.''

''வெள்ளப்பதினி கெடைக்குமா.''

அவன் திருதிருவென்று முழித்தான். அவர் குரலை இறக்கிக் கேட்டார்.

''வெள்ளப்பதினி தெரியாதா சுண்ணாம்பு தடவாற பதினி.''

''எனக்கு அதப்பத்தித் தெரியாதுய்யா.''

அவன் வேகமாக நடையை விட்டான். பாண்டியன் குரல்கொடுத்தார்.

''வேய் டீச்சரம்மா வீடு இந்தப்பக்கம் இருக்குது.''

**க**டைக்கு எண்ணெய் சீயக்காய் வாங்கப்போயிருந்த ரங்கராஜனும் தமிழய்யாவும் வந்துசேர்ந்தார்கள். பாண்டியன் ரங்கராஜனிடம் கோவித்துக்கொண்டார்.

''என்னத் தனியா தவிக்கவுட்டுட்டுப் போயிட்டீகளே. இது ஒங்களுக்கே நல்லாருக்கா.''

''கொஞ்சநாள்ல எங்களவிட்டுப் பிரிஞ்சு போறவா இப்படிப் பேசலாமோ. அதுக்கு இப்பவே எங்களப் பழக்கப் படுத்திக்கறொம்.''

''இதுவேறயா. எங்களக் கழுத்தப்புடிச்சு வெளிய தள்ளாமருந்தாப் போதும்.''

தமிழய்யா பஞ்சாயத்துப்பண்ணினார்.

''ரெண்டுபேரும் என்ன விட்டுட்டுப் போகாமருந்தாச் சரி.''

ரங்கராஜனின் கையில் எண்ணெய்ப்பாட்டிலைக் கவனித்தார் பாண்டியன்.

''தீத்தம் சார் எண்ணெய அளந்து ஊத்துனாரா சொட்டுச் சொட்டா எண்ணிக்குடுத்தாரா.''

''கொஞ்சமா தெரியறதா. எங்கதகுதி அவ்வளவுதான்.''

ரங்கராஜன் பாட்டிலைத் தூக்கி எண்ணெய் அளவைப் பார்த்துக்கொண்டார். பாண்டியனுக்கு மனசு சங்கடப்பட்டது.

''நீங்க ஒண்ணுசார். நான் தீத்தம் சாரப்பத்திச் சொன்னென். தப்பா எடுத்துக்கிட்டீக. இனிமே ஒங்ககிட்ட ஒருவார்த்த பேசமாட்டென்.''

''எங்களோட பேசறதுக்கு என்ன இருக்கறது பாண்டியனுக்கு.''

ரங்கராஜன் நைசாக ரூமுக்குள் நுழைந்தார். தமிழய்யா பெட்டியையொட்டி தலையணைபோட்டுச் சாய்ந்தார். இன்னொரு பெட்டியில் பாண்டியனின் விரல்கள் தாளம்பிரிக்க ஆரம்பித்தன. அவர் சிந்தனையில் மூழ்கி ஒரு பாட்டைக் கொண்டுவந்தார்.

**''சமரசம் உலாவும் இடமே**
**நம் வாழ்வில் காணா**
**சமரசம் உலாவும் இடமே...''**

மாணிக்கம் தண்ணீர் கொண்டுவந்து இறக்கினான். ரங்கராஜன் அவனைப் பிடித்துக்கொண்டார்.

''நேத்து ஹெட்மாஸ்டரோட என்ன சமாச்சாரம் தனியா பேசிண்டிருந்த.''

அவன் சங்கடத்தில் முழித்தான்.

''அவருட்டத் தனியா பேசுறதுக்கு என்னருக்குது சாமி.''

''அவருக்கு இருக்குமில்லையா.''

''சும்மா கூப்புட்டுப் பேசுவாக. தண்ணியெடுக்கிறது ஆபீசச் சுத்தப்படுத்துறதுன்னு ஏதாச்சும் சொல்லுவாக.''

''அதுக்கு அவ்ளோ நேரம் பேசணும் பாரு. நான் சிண்டு வைக்கலயே.''

அவன் தயங்கினான்.

''அதெதுக்கு சாமி. அவுக சொன்ன வார்த்தைய ஒங்ககிட்டச் சொல்ல நீங்க சொல்றத அவுககிட்டச் சொல்ல. வீண் பொல்லாப்புத்தான.''

''நான் எதுவும் ஒங்கிட்டச் சொன்னனா.''

''அப்ப அவுகளும் சொல்லன்னு வச்சுக்கங்களேன்.''

பாண்டியன் எழுந்துவந்து வாசலில் ஒற்றைக்காலில் நின்றார்.

''என்னவே வச்சுக்கிறது. அவருதான் ஒங்கிட்ட பொறணி பேசியிருக்காரே.''

''தப்புத்தவறா ஒண்ணும் பேசல சார்.''

''அப்ப சொல்லித்தொலைக்க வேண்டியதுதான. மென்னு மென்னு விழுங்குறயே.''

ரங்கராஜன் புறவாசலில் நின்றிருந்தார். மாணிக்கம் நடுவில் மாட்டிக்கொண்டான். தமிழய்யா எழுந்து பெட்டியில் சாய்ந்தபடி கவனிக்கத்தொடங்கினார்.

''ஆண்டுவிழா நடந்ததுபாருங்க.''

''அது நடந்து ஒருவாரமாயிடுத்தே.''

''சாமி அதுக்கு இல்லாம ஊருக்குப் போயிட்டாரே ஏன்னு கேட்டாரு.''

''நான் இல்லாம ஆண்டுவிழா நின்னுடுத்தா.''

பாண்டியன் முந்தினார்.

''ஜாம்ஜாம்னு நடந்தது. பாக்கக் குடுத்துவைக்கல ஒங்களுக்கு.''

''எதப் பாக்கறதுக்கு.''

''அவரவருக்குப் புடிச்சத.''

''அதனாலதான் ஊருக்குப் போயிட்டென்.''

மாணிக்கம் பாண்டியனிடம் வந்தான்.

''சார் கொஞ்சம் வழிவுடுறீகளா.''

ரங்கராஜன் நெருங்கிவந்தார்.

''நான் ஆண்டுவிழாவுக்கு வராத சமாச்சாரத்தக் கேக்கறதுக்கு அவ்ளோநேரம் பேசணுமா.''

பாண்டியன் மாணிக்கத்துக்கு வழிவிட்டார். அவன் திரும்பிப்பார்க்காமல் நடந்தான்.

தமிழய்யா கண்மூடியிருந்தார். அவரது நினைவுகள் ஆண்டுவிழா நிகழ்ச்சிகளில் கலந்தன.

என்ன இருந்தாலும் ரங்கராஜன் ஊருக்குப் போயிருக்கக் கூடாது. ஆண்டுவிழா பொதுவான காரியம். பையன்களும் வாத்தியார்களும் குடும்பக் குதூகலத்தில் நடத்தக்கூடியது. இதில் வித்தியாசம் பார்க்கக்கூடாது.

பாண்டியனுக்குக்கூட வருத்தந்தான். எவ்வளவோ சொல்லி நிறுத்திப்பார்த்தார்.

''என்னசார் இது. எங்கள அம்போன்னு வுட்டுட்டுப் போறீகளே. எங்க வெளையாட்டு நாடகம் எதவும் பாக்க மனசில்லையா. அப்படி எங்கமேலே என்ன கோவம்.''

''நான் ஊருக்குப் போயாகணும் பாண்டியன்.''

ரங்கராஜன் பிடிவாதமாகக் கிளம்பிவிட்டார். பாண்டிய னுக்கு முகம் சிறுத்துப்போயிற்று. தமிழய்யா தைரியம் சொன்னார்.

''நீங்க கவலப்படாதங்க பாண்டியன். எல்லாம் தன்னால நடக்கும்.''

''ஒரு மனுசனப் புடிக்கலங்கிறதுக்காக எல்லாத்தவும் வெறுத்துட்டுப் போறது நல்லால்ல சார்.''

''அவரு இருந்துதான் என்னசெய்யப் போறாரு.''

''சும்மா ஆள்தொணைக்கு இருந்தாக்கூட தெம்பா ருக்குமே.''

மற்ற வாத்தியார்கள் ஒருமாதிரியாகக் கேட்டார்கள். அவர்களுக்குச் சமாதானம் சொல்லுவதற்குள் போதும்போது மென்றாகிவிட்டது. பாண்டியன் அங்கலாய்த்துக்கொண்டார்.

''இப்படிப் போயிட்டாரே.''

ஆண்டுவிழாவுக்குப் பாண்டியன் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமா. எல்லாவற்றையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தார். ரெண்டுநாள் விளையாட்டுப் போட்டி மும்முமாக நடந்தது.

கிரவுண்டு துப்புரவு கிருஷ்ணசாமி பொறுப்பு. அவ்வளவு கிரவுண்டையும் அவர் ஒருவராகவே பெருக்கி முடித்தார். பாண்டியன் சொன்னபடி ஓடிஓடிக் கயிறுபிடித்து சுண்ணாம்புக்கோடு போட்டார். கம்பு நட்டினார். விவசாய வேலைமாதிரி எல்லாவற்றையும் ஒருமூச்சில் முடித்துவிட்டார்.

''பாண்டியன் சார் இப்ப கிரவுண்டப் பாத்தீகளா. உழுது பரம்படிச்ச நெலம்போல சுத்தமாகிப்போச்சு. இதுக்குப்போயி பெரிசா மலச்சுக்கிட்டுருந்தீகளே.''

இத்தனை வேலைக்கும் ஒருபானை தண்ணீர் அவர் வயிற்றுக்குள் இறங்கியிருக்கும். அது தமிழய்யா சப்ளை. வேலை நடக்கும் இடமெல்லாம் பானையுங்கையுமாக

அலைந்து குளிர்ச்சியேற்றினர். திடஆகாரம்பற்றி பாண்டியன் கேட்கத்தான் செய்தார்.

''கொழந்தசார்ஹோட்டல்வடையஉள்ளதள்ளிக்கிறீகளா.''

''வேணாம். பாரம் ஏறீட்டா வேல ஓடாது.''

கிருஷ்ணசாமிக்கு வேர்வையைத் துடைக்கக்கூட நேரமில்லை. வாய்க்காலில் அங்கங்கே தண்ணீர் உடைந்தது போல் அதுபாட்டுக்கு ஓடிக்கொண்டிருந்தது.

பாண்டியன் கிருஷ்ணசாமியை நன்றியுடன் பார்த்தார்.

''தானியம் காயப்போடுற களமாக்கிட்டீகளே சார். இதுல தேசிய வெளையாட்டுப் போட்டியே நடத்தி முடிச்சிறலாம்.''

ரெண்டுநாளும் தமிழய்யா கிரவுண்டில் வெற்றிலை எச்சைத் துப்பக்கூட அனுமதியில்லை. ஒவ்வொரு தடவையும் ரோடுவரை போய்த் திரும்பவேண்டியிருந்தது.

ஆண்களுக்கான விளையாட்டுக்களை பாண்டியன் கவனித்துக்கொண்டார். போட்டி முடிவுகளைக் குறிக்க வேண்டியது தங்கச்சாமி மனோகரன் பொறுப்பு. தமிழய்யாவும் கிருஷ்ணசாமியும் வாலண்டியர்கள். சகலவேலையும் செய்தார்கள்.

பெண்களுக்கானதை ராஜேஸ்வரி கவனித்துக் கொண்டாள். ருக்மணி ஏனோதானோவென்று உதவி செய்தாள். அவள் ஊருக்குப் போகாமல் இவ்வளவுக்கு வந்ததே பெரியகாரியம். கிராப்ட் வாத்தியார் டிராயிங் மாஸ்டர்கூட இருந்து கவனித்துக்கொண்டார்கள்.

குழந்தைச்சாமி வையாபுரி மாணிக்கம் மூணுபேரும் தனி டிபார்ட்மெண்ட். யாரும் சோர்ந்துவிடாதபடி காபி கொடுத்து கவனித்துக்கொண்டார்கள்.

கடைசியாக வாத்தியார்களுக்கு ரெண்டு அயிட்டம் இருந்தது. ஒண்ணு மியூசிகல் சேர். மற்றது நடை. ரெண்டிலுமே

கிருஷ்ணசாமி கலந்துகொண்டதால் பாண்டியன் அறிவித்து விட்டார்.

''இப்ப நம்ம நடத்தப்போறது ரெண்டாவது மூணாவது பிரைசுக்குத்தான்.

அதில் எந்த மாற்றமுமில்லை. பாண்டியன் கொடுத்த மராத்தான் பட்டத்தைச் சிரமமின்றித் தக்கவைத்துக் கொண்டார் கிருஷ்ணசாமி.

பாண்டியன் வையாபுரியையும் மாணிக்கத்தையுங்கூட விட்டுவைக்கவில்லை. அவர்களுடன் வீரணனையும் சேர்த்துக் கொண்டு மூணுபேரும் கரண்டியில் எலுமிச்சம்பழம் கொண்டு போகிற போட்டிவைத்தார். வீரணன் எல்லாரையும் ஆச்சரியப்படுத்தி முதலாவதாக வந்துவிட்டான். மாணிக்கம் ரெண்டாவது. வையாபுரி கடைசி. தமிழய்யா வையாபுரியிடம் கேட்டார்.

''வையாபுரிதான் மொதல்ல வருவீங்கன்னு பாத்தென். பிந்திக்கிட்டீங்களே.''

அவன் மீசையில் மண்ஒட்டாமல் சொன்னான்.

''பின்னாலருந்து பாத்தா நான்தான் சார் மொதலாவது.''

பாண்டியன் குறுக்கே வந்தார்.

''எலுமிச்சம்பழத்தப் பாத்ததும் ஊறுகா ஞாபகம் வந்துருச்சு அய்யாவுக்கு. ஊமையாருக்கிற வாட்ச்மேன் பிரைசத் தட்டீட்டுப் போயிட்டான். நமக்கு காதுவரைக்கு வாயிருந்து என்னசெய்ய.''

''சார் அப்படியா நெனச்சுக்கிட்டீக. இனியொரு போட்டி வச்சுப்பாருங்க.''

''ஒண்ணு போதுமா.''

''அது நடக்கட்டும். பெறகு சொல்றென்.''

பாண்டியன் உறியடிக்கு ஏற்பாடுசெய்தார். வையாபுரி தோரணையாகப் பம்மாத்துப்பண்ணி தோற்றுப்போனான்.

ஜெயித்தது மாணிக்கம். கண்ணைக் கட்டாததுபோல் நின்று பானையை ஒரே அடியில் அடித்து நொறுக்கிவிட்டு பிரைஸைத் தட்டிக்கொண்டான்.

பிறகும் பாண்டியன் வையாபுரியை விடவில்லை.

''பானையப்பத்தி மாணிக்கத்துக்குத்தான் நல்லாத் தெரியும் இல்லையா. சோத்துப்போட்டி ஒண்ணு வப்பமா.''

''அடுத்த வருசம் கதைய வச்சுக்கிருவொம்.''

அதுக்குமேல் அவன் நிற்பானா. மூடிமுழிக்குமுன் தலைமறைவாகிவிட்டான்.

ஒருவழியாக பாட்டுப்போட்டி முடிந்தது. பையன்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக நடந்தது. பக்திப்பாட்டு சோகப்பாட்டு காதல்பாட்டு என்று ஒரே கலவை. நோஞ்சாணி பீஞ்சாணிப் பையன்களெல்லாம் அனுபவித்து சொகமாகப் பாடினார்கள். கேட்கச் சந்தோசமாக இருந்தது.

அப்புறம் வில்லுப்பாட்டு ஒத்திகை. பாடல்களை பாண்டியனே கஷ்டப்பட்டு எழுதினார். அவ்வப்போது தமிழய்யாவிடம் எதுகைமோனை சந்தம்பற்றி சந்தேகம் கேட்டுக்கொள்வார்.

நாடகத்துக்கும் ஒத்திகை நடந்தது. கதைவசனம் தமிழய்யா. பாண்டியன் டைரக்ஷன். கதையாவது வசனமாவது. எல்லாம் பேருக்குத்தான். சகல ஏற்பாடும் பாண்டியனே. நாடகத்தில் கதாநாயகன் தங்கச்சாமி. நாயகி மனோகரன். துணிமணி உதவி ராஜேஸ்வரி.

பெண்களுக்கு ஆட்டம் பாட்டு எல்லாம் ராஜேஸ்வரியும் ருக்மணியும் சொல்லிக்கொடுத்தார்கள். பயிற்சிமுழுக்க ஹெட்மாஸ்டர் கூடஇருந்தார். ருக்மணியுடன் நிறையப் பேசிக்கொண்டிருந்தார்.

ஆண்டுவிழா ஏற்பாடு சூடுபிடித்தது. அழகான பந்தல். அலங்காரத்துணிகள். சரவிளக்குகள். பாண்டியன் அசத்தி விட்டார்.

விழாநிகழ்ச்சி கோலாகலமாக ஆரம்பித்தது. வாத்தியார் குடும்பங்கள் அத்தனையும் முன்வரிசையில்' ஆஜர். பாண்டியன் அய்யாத்துரையின் குடும்பத்தையும் அழைத்து வந்திருந்தார்.

கிராப்ட் வாத்தியார் கொஞ்சநேரம் பொடியை மறந்து கணீரென்ற குரலில் கடவுள்வாழ்த்துப் பாடினார். எல்லாரும் பிரமித்துப்போனார்கள். குரலில் என்ன சுத்தம் என்ன ஏற்ற இறக்கம். மூக்குக்குள்ளேயே முனங்கும் மனுசன் இப்படிக் குரலை எங்குதான் வைத்திருந்தாரோ. அவரது மனைவியும் குழந்தைகளும் அவரைப் புதுசாகப் பார்த்தார்கள்.

ஹெட்மாஸ்டருக்கு வேண்டிய டாக்டர் ஒருவர் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அவர் உற்சாகமாகப் பரிசுகளை வழங்கினார். கொஞ்சமாகப் பேசினார். அடுத்து கலைநிகழ்ச்சிகள் விறுவிறுப்பாக நடந்தன. இடையில் பையன்கள் லெஸ்ஸிம் டிரில் விளையாடி தூள்கிளப்பினார்கள். வில்லுப்பாட்டும் நாடகமும் கடைசி அயிட்டங்கள்.

வில்லுப்பாட்டில் ஜூனியர் மராத்தான் ரங்கசாமிதான் பிரதானப் பாடகர். உடம்பெங்கும் திருநீறு சந்தனம் பூசி நெற்றியில் பெரிய பொட்டுவைத்து பாகவதர்போல் தோரணையாக இருந்தான். பின்பாட்டுக்கு மூணுபையன்கள். பாண்டியன் கடம். வையாபுரி ஜால்ரா. கிருஷ்ணசாமி உடுக்கு. சுப்பையாதாஸ் கட்டை. நிகழ்ச்சி ஆரம்பத்திலேயே களைகட்டி விட்டது. ஜூனியர் சரளமாகப் பாடினான்.

**''பெரியவரே சிறியவரே**

**பிரியமுள்ள தாய்மாரே**

**அனைவருக்கும் வணக்கம் தந்தோம் வாருங்க- வந்து**

**அமைதியுடன் எங்கபாட்டக் கேளுங்க**

**நேத்து வந்த சின்னப்பய....''**

பாண்டியன் தோதாக எடுத்துக்கொடுத்தார்.

**''போடய்யா போடு**

**அப்படிப்போடு.''**

ஜூனியர் விட்ட இடத்தை அனாயசமாகப் பிடித்தான்.

**''நேத்துவந்த சின்னப்பய**

**நீட்டி மொழக்கிப் பாட்டுப்பாட**

**காத்துவாக்கில் வந்ததத்தான் பாருங்க-நீங்க**

**கணக்கில்லாம இங்கவந்து கூடுங்க.''**

கிருஷ்ணசாமிக்குச் சந்தோசம் பிடிபடவில்லை.

''ஓரே ஓரே ஏமிரா. மன கொடுகுதானா இது.''

மனசுக்குள் மெச்சிக்கொண்டே கிறக்கத்தில் உடுக்கைப் பிடித்தார். பின்பாட்டு உச்சத்துக்கு ஏறஏற அவருக்குத் தோட்டம் துறவு எல்லாமே மறந்துவிட்டது. வையாபுரி பேயாட்டம் போட்டான். அவன் கையிலிருந்து ஜால்ராத் தாளம் துள்ளித்துள்ளி வந்தது. கடமும் உடுக்கும் கொஞ்ச நேரம் ஜனங்களைச் சொக்க வைத்து கதைக்குக் கொண்டு வந்தன.

குடும்பக்கட்டுப்பாடுதான் கதை. ஜூனியரும் பாண்டியனும் அதில் கரைகண்டவர்கள்போல் பாட்டும் வசனமுமாக விளாசினார்கள். அளவில்லாமல் பிள்ளைகளைப் பெற்றுவிட்டு குடும்பத்தில் அவதிப்படும் புருசனின் அங்கலாய்ப்பை ஜூனியர் சொகமான இழுவையில் பாடினான்.

**''சின்ன வயசினிலே**

**சேந்துப்புட்டொம் ரெண்டுபேரும்-நம்ம**

**சேந்துப்புட்டோம் ரெண்டுபேரும்.**

**இந்த வயசினிலே ஆத்தாடியம்மா-நம்ம**

**ஏழுபுள்ளப் பெத்துப்புட்டொம்.''**

பாண்டியன் அடுத்த பாட்டுக்கு அச்சாரம் போட்டார்.

''அதுக்கு பொண்டாட்டிக்காரி என்ன சொன்னாளாம்.''

ஜூனியர் குரலைக் கொஞ்சம் மாற்றிக்கொண்டு ராகமெடுத்தான்.

**''இன்னியும் எத்தனையோ**

**என்ன செய்வென் பாதகத்தி-நான்**

**என்ன செய்வென் பாதகத்தி.**

**சிறுசுலயே வாக்கப்பட்டு ஆத்தாடி புருசா-நான்**

**சீரழிஞ்சென் புள்ளையால ஆத்தாடி புருசா.''**

வில்லின் சலங்கையும் பெண்களின் கலகலப்பும் சேர்ந்து புதுத்தாளமாகக் கேட்டது. தொண்டையை ஏற்றமுடியாமல் திணறிய சுப்பையாதாஸ் கையை ஓங்கிஓங்கிக் கட்டைத் தாளமடித்துச் சமாளித்தார்.

நிகழ்ச்சி ஆரம்பித்ததும் தெரியவில்லை. முடிந்ததும் தெரியவில்லை. அவ்வளவு விறுவிறுப்பு. எல்லாரும் கொஞ்சங்கூட சுதிகுறையாமல் மங்களம்பாடி முத்தாய்ப்பு வைத்தார்கள்.

அடுத்தது நாடகம். நடிகர்கள் அதிகமில்லை. தங்கச்சாமியும் மனோகரனும்தான் மெயின். மனோகரனுக்கு பெண்வேசம் கனகச்சிதமாக இருந்தது. தமிழய்யா ஒளிந்துஒளிந்து வசனம் சொல்லிக்கொடுக்கணும். பாண்டியன் விசிலடித்தால் வையாபுரியும் மாணிக்கமும் திரையை இழுக்கணும்.

சின்னக் காதல்கதை. காதலனும் காதலியும் வெவ்வேறு ஜாதிக்காரர்கள். ரெண்டுபேர் பக்கமும் எதிர்ப்புக் கிளம்பியதால் அவர்களது காதல் கைகூடவில்லை. கடைசியில் ஒரே கத்தியால் குத்திக்கொண்டு மாண்டுபோகிறார்கள்.

தங்கச்சாமியும் மனோகரனும் போட்டி போட்டுக்கொண்டு வசனங்களை வெளுத்துக்கட்டினார்கள். மறந்த பகுதிகளை தமிழய்யா உடனுக்குடன் எடுத்துக் கொடுத்தார்.

வசனமில்லாத நடிப்புக் கட்டங்களில் பாண்டியன் உருக்கமாகப் பின்னணி பாடினார்.

நடிப்பு உச்சக்கட்டத்தை எட்டியது. காதலி அழுது புலம்பி காதலனின் இடுப்பிலிருக்கும் கத்தியை உருவி வயிற்றில் குத்திக்கொண்டு மல்லாக்கச் சாயணும். காதலன் நாலுவார்த்தை சோகமாகப் பேசிவிட்டு அதே கத்தியை எடுத்து தானும் குத்திக்கொண்டு விழணும். ரெண்டுபேர்மீதும் சிவப்புவெளிச்சம் மாறிமாறிப் பாயும். பாண்டியன் சோககீதம் பாடிமுடித்து லேசாக விசிலடிப்பார். உடனே திரையிறங்கும். இதுதான் ஏற்பாடு.

ஆனால் ஒரு சின்னத்தப்பு நடந்துவிட்டது. மனோகரன் வயிற்றில் குத்தியவாக்கில் குப்புறப்படுத்துவிட்டார். கத்தி உள்ளே மாட்டிக்கொண்டது. தங்கச்சாமிபாடு சிக்கல். வசனமெல்லாம் தீர்ந்துவிட்டது. கத்தி கைக்கு வந்தால்தானே கதை முடியும். கடைசி வசனத்தை கத்திக்கத்திச் சொன்னார்.

''கண்ணே உன் உயிரைக் குடித்த கத்தி என்மீதும் பாயட்டும். என் உடலும் சாயட்டும்.''

தமிழய்யா வேறு குசுகுசுத்தார்.

''ஸ்...கத்திசார்...கத்தி...

மனோகரனோ எஞ்செவனே என்று நீட்டிப் படுத்து விட்டார் பாண்டியன் உண்மையிலேயே சோகப் பாட்டுப் பாடினார். வையாபுரிக்கு நிலைமை புரிந்துவிட்டது. திரையை இறக்கி கதையை முடித்துவிடலாமா என்று யோசித்தான். தங்கச்சாமி கீழே விழுந்தாலாவது அப்படிச் செய்யலாம். பாண்டியன் விசிலடிக்காமல் மாணிக்கம் திரையை இறக்கவேமாட்டான்.

தங்கச்சாமிக்கு ஒண்ணுமே ஓடவில்லை. பேந்தப் பேந்த முழித்துக்கொண்டு தமிழய்யாவின் பக்கம் லாந்தியபடி கேட்டார்.

''இப்ப என்னசெய்றது சார்.''

தமிழய்யா அவசரமாக வெற்றிலையை மென்று சுறுசுறுப்பேற்றினார். சட்டென்று ஒரு யோசனை வந்தது.

''அலறிக்கிட்டே அவருமேலே விழுங்கசார்.''

உடனே சுதாரித்துக்கொண்ட தங்கச்சாமி சொந்தத்தில் ஒரு வசனத்தை எடுத்துவிட்டார்.

''என் ஆருயிரே இதோ நீயிருக்கும் இடத்திற்கே நானும் வருகிறேன்.''

பெரிய அலறல். மனோகரன்மீது பொத்தென்று விழுந்து பழிதீர்த்துக்கொண்டார்.

பாண்டியனுக்கு இப்போதுதான் உயிர்வந்தது. அதுக்குப் பிறகு சொல்லணுமா. சிவப்புவிளக்கு சுழல விசில் ஊத திரையிறங்க எல்லாம் மளமளவென்று நடந்தது. திரைமறைவில் பாண்டியன் ஓடிவந்து தமிழய்யாவைக் கட்டிப்பிடித்துக்கொண்டார்.

''நல்ல சமயத்துல மானங் காப்பாத்துனீக சார்.''

அவர் குரல் ஈரத்தில் தளுதளுத்தது. தமிழய்யா அவரைத் தட்டிக்கொடுத்தார்.

இன்னும் எழுந்திருக்கமுடியாமல் அரண்டுபோய்க் கிடந்த மனோகரனை எல்லாரும் எழுப்பினார்கள். அதுக்கப்புறம் நடந்த வாக்குவாதம் கோவதாபங்கள் எல்லாம் திரைமறைவு நாடகம்.

அப்படியெல்லாம் சிரமப்பட்டு நடத்திய ஆண்டு விழாவைப் பார்க்காமல் போய்விட்டாரே ரங்கராஜன். அது நல்ல குணமில்லை.

தமிழய்யா தியானம் முடித்ததுபோல் கண்திறந்தார். இப்போது பாண்டியனும் ரங்கராஜனும் திருணையில் எதிரெதிரே பார்வை சந்திக்காமல் உட்கார்ந்திருந்தார்கள். பாண்டியன் தமிழய்யாவிடம் திரும்பினார்.

''என்னசார் தெப்பக் கொளத்துக்குள்ள மூச்சடறக்குற மாதிரி ஒரேயடியா முங்கிப் போயிட்டீக.''

தமிழய்யா வாய்க்குள் வெற்றிலையை உருட்டினார்.

''ஆண்டுவிழா ஞாபகம் வந்துருச்சு.''

''நானும் அதப்பத்தித்தான் நெனச்சுக்கிட்ருந்தென்.''

ரங்கராஜனிடமிருந்து வார்த்தைகள் வந்தன.

''நானும் யோசிச்சுப்பாத்தென். அப்படிப் போனது தப்புன்னு தோணிச்சு.''

தமிழய்யாவும் பாண்டியனும் ரங்கராஜனை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். அவர் ரூமுக்கு அப்பால் வானத்தில் உதறித்தெளித்த மேகச்சிதறல்களில் தீவுக் கூட்டங்களைத் தேட ஆரம்பித்தார்.

**சா**யங்காலம் வாக்கிங்போகும்போது பாண்டியன் ஜாலியாக இருந்தார். ரோடுநெடுக எக்சைஸ் செய்து கொண்டே நடந்தார். கூட்டுக்குப் போகும் பறவைகளை எறிந்து கரணமடிக்கவைத்து விரட்டினார். கல்லுக்குக் கல் குறிவைத்து உரசினார். ரெண்டுகல்லும் பாய்ந்து அந்தரத்தில் உராயும்போது ரங்ராஜனுக்கு நெஞ்சு கூசிச் சிலிர்த்தது.

''இப்பப் பாருங்க சார் சூரியன எறிஞ்சு சுக்கு நூறாக்குறென்.''

''வேண்டாம் பாண்டியன். அப்புறம் உலகமே இருண்டுபோயிடும்.''

''சூரியன் என்னக் கண்டு ஓடி மலைக்குள்ள ஒளிஞ்சு கொஞ்சநேரத்துல இருட்டாகப் போகுது.''

''பாண்டியனுக்குப் பயப்படாம ஏதும் இருக்கமுடியுமா.''

ரோட்டின் மறுபுறம் தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் பேசிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் சமாச்சாரமே வேறு. குடும்ப விஷயங்களில் முங்கிவிட்டால் லேசுக்குள் வெளியே வரமாட்டார்கள். ஒண்ணுவிடாமல் பேசுவார்கள். பஸ்கனைப்பைக்கூட சட்டை செய்ய மாட்டார்கள்.

ரோட்டுக்கு வடக்கே மிளகாய்த் தோட்டத்தில் ஓடிஓடி தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த ஆளைக் காண்பித்தார் ரங்கராஜன்.

''பாண்டியன் பாண்டியன் அது யாருன்னு பாருங்க.''

''சாட்சாத் நம்ம மராத்தான் கிருஷ்ணசாமிதான் சார்.''

''மனுஷன் அதுக்குள்ள மண்வெட்டியத் தூக்கிண்டு வந்துட்டாரே.''

''அவருக்கு உண்மையான ஸ்கூல் அதுதான் சார். வெவசாயம்னா உயிரவுடுவாரு. அண்ணைக்கு தார்ப்பாய்ச்சி தலப்பாக்கட்டி குப்பவண்டி அடிக்காரு பாருங்க. மாடுபத்துற தோரணையென்ன...''

குப்பையா.''

''என்ன குப்பன்னு நெனச்சீக. அவ்வளவும் பண்ணிச்சாணி.''

''அட கர்மமே.''

''அவருட்டக் கேட்டா அருமையான சந்தனம்னு சொல்லுவாரு.''

''எடுத்துப் பூசிக்கோன்னு நீங்களே சொல்லுவேளோ.''

''வெவசாயம் பாக்கிறவனுக்குத்தான் அதோட அரும தெரியும் சார். எங்கய்யாகிட்ட கொறசொன்னா அடிக்க வந்துருவாரு. அந்தக் கோவந்தான் எங்க குடும்பத்தக் காப்பாத்தீட்டு வருது.''

மீண்டும் தோட்டத்தைப் பார்த்த ரங்கராஜனுக்கு இன்னுமொரு ஆச்சரியம்.

''தோட்டத்துக்குள்ள வேகமா பை சொமந்துண்டு வர்றது வையாபுரிதானே பாண்டியன்.''

அவன்தான். இன்னேரவரைக்கு எங்க ஒளிஞ்சு கெடந்தான் திருடன். கனமா குடுத்தனுப்பியிருக்காரு மராத்தான்.''

பாண்டியன் தமிழய்யாவிடம் சைகைசெய்து வையாபுரியைக் காட்டினார். ரங்கராஜன் பாண்டியனிடம் குனிந்தார்.

''என்ன பண்டம்.''

''காய்கறி.''

''எல்லாம் அவனுக்கா.''

''கூப்பிட்டுக் கேப்பொம்.''

ரோட்டு இறக்கத்து ஒற்றையடிப்பாதையில் இறங்கினான் வையாபுரி. பாண்டியன் கைதட்டிக் கூப்பிட்டார்.

பாலத்துச் சுவரில் ரங்கராஜனும் பாண்டியனும் உட்கார்ந்தார்கள். எதிர்ப்பக்கம் தமிழும் கிராப்டும்.

வையாபுரி பாண்டியனிடம் வந்தான். அவர் அவனது வாயைக் கிண்டினார்.

''சாய்ந்தரம் மணியடிச்சிட்டுத்தான் வந்தயா. ஹெட் மாஸ்டர் கௌம்பீட்டா எல்லாரும் ஸ்கூல மறந்துற வேண்டியது.''

''நான் மணியடிக்கையில நீங்க ஆறாம்வகுப்புக்கு முன்னால நின்னீங்களே சார்.''

''திமிரப்பாரு. காளின்னா மூளிங்கான்... ஆமா காய்கறி இவ்வளவும் ஒனக்குத்தானா.''

''எவ்வளவு சார். ஒரு பூசணிக்காய அடியில போட்ருக்கென். பொடப்பாத் தெரியிது. இதப்போயி எட்மாஸ்டருக்குக் குடுப்பாகளா. நம்ம புள்ளைகளுக்கு அவிச்சு பொறிச்சுப் போட்டா திங்கும்.''

''அப்ப அவருக்கு எதக் குடுப்பாக.''

''தக்காளி வெண்டக்கா வெங்காயம்.''

ரங்கராஜன் கவனித்துக்கொண்டிருந்தார். அந்தப் பக்கமிருந்து கிராப்ட் குரல்கொடுத்தார்.

''சார்வாள் எது எப்படி நடந்தா நமக்கென்ன. அவன விடுங்க போகட்டும்.''

வையாபுரி பைக்குள்ளிருந்து பிஞ்சுக்கத்திரிக்காயை எடுத்து காம்பைத் திருகிவிட்டு வாயில்போட்டுக் கடித்தான். பாண்டியன் கிராப்டைப் பார்த்து உரக்கச் சொன்னார்.

''சும்மா தெரிஞ்சுக்கிறதுக்குத்தான் சார். நமக்குக் காய்கறியா கேக்கப்போறொம்.''

ரங்கராஜன் வையாபுரியடம் கேட்டார்.

''காய்கறிக்கு எவ்வளவு காசு கொடுப்ப.''

''கிட்ணசாமி சாருக்குக் காசு பெரிசில்ல. பையோட போயி நின்னா நீயே நல்லதாப் பறிச்சுக்கோன்னு சொல்லீருவாரு. அந்தக் கொணம் ஆருக்கும் வராது.''

பாண்டியன் ஆமோதித்தார்.

''வாஸ்தவம். ஓசி குடுக்காரே.''

தின்ற கத்திரிக்காய்விதைகளை நாக்கால் துழாவித் தோண்டி முடித்தான் வையாபுரி.

''அவரு மனசுக்குப் புடிச்சாத்தான் சந்தோசமா செய்வாரு. இல்லன்னா மூக்குமுட்டக் கோவம் வரும். எட்மாஸ்டருன்னும் பாக்கமாட்டாரு. ஆருன்னும் பாக்க மாட்டாரு. சாதாரணமா வேட்டியக் கெட்டீட்டு இருக்காருன்னு பாத்தீகளா.''

பாண்டியன் சுதாரிப்படைந்தார்.

''அப்படியா... அவரு கோவத்த நான் பாத்துக்கிட்ட தில்லப்பா. ஒனக்கு நல்லாத் தெரியும்.''

''சார் நீங்க வாக்கிங் வந்தீகளா என்வாயக் கௌற வந்தீகளா.''

வையாபுரி எழுந்திருக்க முயன்றான். பாண்டியன் அவன் தோளைப் பிடித்து இருத்தினார். ரங்கராஜன் சப்போர்ட் பண்ணினார்.''

''பாண்டியன் அக்கறையா கேக்கறாரே.''

வையாபுரி தலையைச் சொறிந்தான்.

''என்னசார் நீங்க. போனதப்பத்தியெல்லாம் கேட்டுக்கிட்டு.''

''பழைய சரித்திரம்தாம்ப்பா நல்லாருக்கும் கேக்கிறதுக்கு.''

''ஏன் புதுக்கத புளிச்சிருச்சா அதுக்குள்ள.''

பாண்டியனுக்கு தர்மசங்கடம். நாக்கை மடித்துக்கொண்டு அவனை அடிக்கப் போனார்.

''இப்ப சொல்லப் போறயா பாலத்துலருந்து ஓடைக்குள்ள தூக்கிப் போடவா.''

''சும்மாருங்க சார். நான் புள்ளகுட்டிக்காரன். நான் சொல்ற கதைய கிட்ணசாமி சாருட்டக் கேக்கப்புடாது.''

''வையாபுரி சொல்லீட்டப் பெறகு மறுபேச்சு உண்டுமா. சத்தியமா கேக்கமாட்டென்.''

அவன் எச்சுக்கூட்டி விழுங்கிவிட்டு செருமிக்கொண்டான். கையை உயர்த்தி நெளிர்விட்டு சோம்பல்முறித்தான். பாண்டியனுக்கென்றால் கடுப்பு. அடக்கிக்கொண்டார்.

''இந்த எட்மாஸ்டருக்குமுந்தி ஒருசாமி வந்துபோனாரு. என்னேரமும் மழைக்கு ஓடனமாதிரி நடப்பாரு. பேருகூட வாயிக்குள்ள மொழையாது.''

ரங்கராஜன் கேட்டார்.

''விஜயராகவாச்சாரியா.''

''அவரேதான். எல்லாருக்கும் எதுமேல கோவம் அவருக்குப் பாலுமேல கோவம். இந்த ஊருல பசும்பாலு நல்லால்லன்னு கோவிச்சுக்கிட்டுப் போயிட்டாரு.''

''நல்லால்லன்னா எப்படி.''

''ருசியா இல்லையாம். தண்ணியா இருக்குன்னா மாட்டுக்காரனக் கேக்கலாம். இதுக்கு மாட்டத்தான் கேக்கணும்.''

பாண்டியன் சொன்னார்.

''அவருக்கு ஒரு ருசி.''

''மனசுக்குப் புடிச்சிக்கிருச்சுனா ருசியாவது ஒண்ணாவது. இப்ப ஒங்களவே எடுத்துக்கங்களேன்...''

''இப்ப கதையச் சொல்லப்போறயா கழுத்துல அடிக்கணுமா.''

''அதுக்குமுந்தி ஒரு சாயிபு இருந்தாரு. ஜின்னா சாயிபு. கரக்டான மனுசன். கரக்ட்னா ரெம்பக் கரக்ட். ஆருக்கும் பயப்படமாட்டாரு. ஒருசமயம் பாருங்க...''

ரங்கராஜன் வசமாக உட்கார்ந்தார். பாண்டியன் கொஞ்சம் நெருங்கிவந்தார்.

''ஆகா சொல்லு சொல்லு.''

''பள்ளிக்கூடம் பூரா ஒரே இன்ஸ்பெக்சன் கெடுபிடி. கிரவுண்டச் சுத்தப்படுத்தி வகுப்புகள அலங்கரிச்சு பத்துநாளா அதே வேலதான். எனக்கும் மாணிக்கத்துக்கும் இடுப்பு கழண்டு போச்சு. எட்மாஸ்டர் இதையெல்லாம் கண்டுக்கிறவே இல்ல. இந்தச் சாக்குலயாச்சும் பள்ளிக்கூடம் சுத்தமாகட்டும்னு இருந்துக்கிட்டாரு.''

''அலட்டிக்கிறாத மனுசன்.''

''இன்ஸ்பெக்சன் நடந்தண்ணைக்குப் பாக்கணுமே. காலையில மணியடிக்கிறதுக்கு முந்தியே எல்லாரும் வெள்ளையுஞ் சொள்ளையுமா வந்துசேர்ந்துட்டாக. எட்மாஸ்டர் எண்ணைக்கும் போலத்தான். இன்ஸ்பெக்டர் இப்ப வந்துருவாரு. பெறகு வந்துருவாருன்னு எல்லாரும் எலையுங்கொலையுமா எதிர்பாத்துட்ருக்கொம். எட்மாஸ்டர் அதப்பத்தி நெனப்பே இல்லாறவருபோல வேலையக் கவனிச்சுக்கிட்ருக்காரு. இன்ஸ்பெக்டருக்கு ஏதாச்சும் வாங்கி வைக்கணுமா வேணாமான்னு எட்கிளார்க் முழிக்காரு. எட்மாஸ்டருட்ட ஆருபோயிக் கேக்கிறது. இன்ஸ்பெக்சனுக்குனு பணம் வசூல் பண்ணுன சங்கதிவேற அவருக்குத் தெரியாது.''

''அதும் அப்படியா.''

''அதுக்குள்ள இன்ஸ்பெக்டர் வந்துசேந்துட்டாரு.''

''போச்சுடா.''

''வாத்திமாரெல்லாம் ஓடிப்போயி அவர தடபுடலா கூட்டிக்கிட்டு வாறாக. அப்பயும் எட்மாஸ்டர் இருந்த எடத்தவுட்டு எந்திரிக்கல. உக்காந்துக்கிட்டே வையாபுரி அய்யாவுக்கு நாற்காலி எடுத்துப்போடுன்னு சத்தங்குடுக்காரு.''

''என்னப்பா சொல்ற.''

''இன்ஸ்பெக்டருக்கு மூஞ்சி சிறுத்துப்போச்சு. ஒரே கடுப்புல கணக்குவழக்கப் பாக்க ஆரம்பிச்சாரு.''

''கவனிப்பிருந்தா கனிவிருக்கும்.''

''ஏதோ ஒரு ரிஜிஸ்தரக் கேட்டாரு. எட்கிளார்க் அத எடுத்துட்டுப்போயி மொதல்ல எட்மாஸ்டருட்டக் குடுத்தாரு. எட்மாஸ்டர் அதத் தொறந்து பாத்தா நடுவுல நூறு ரூவா நோட்டு ஒண்ணு முழிச்சிக்கிட்ருக்குது.''

''ஹெட்கிளார்க் எக்கச்சக்கமா மாட்டிக்கிட்டாரு.''

''எட்மாஸ்டர் வேற ஒண்ணும் சொல்லல. சீனிவாசன் பணத்த இரும்புப்பெட்டியிலயில்ல வைக்கணும். ஏன் சாவியக் கொண்டுவர மறந்துட்டீகளான்னு மட்டும் கேட்டுக்கிட்டே நோட்ட எடுத்துக் குடுத்துட்டு வெறும் ரிஜிஸ்தர இன்ஸ்பெக்டருட்ட நீட்டுனாரு.''

''இது அனியாயம்ப்பா.''

''அத்தோட இன்ஸ்பெக்சன் முடிஞ்சது. இன்ஸ்பெக்டர் தடபுடன்னு எந்திரிச்சுக் கௌம்பீட்டாரு. அப்பக்கூட எட்மாஸ்டர் அலட்டிக்கிறல. வையாபுரி அய்யாவ வழியனுப்பீட்டு வந்துருன்னு எங்கிட்ட ஒப்படச்சிட்டு வேலையப் பாக்க ஆரம்பிச்சிட்டாரு. அப்புறம் எட்கிளார்க்குக் கெடச்ச கொடையப்பத்திச் சொல்லணுமா. பாவம் அழுகாறது தான் குத்தம். வசூலிச்ச பணத்த எல்லாம் அவசரமா திருப்பிக் குடுத்துட்டு ஒஞ்சுபோயி உக்காந்துட்டாரு.''

''ஹெட்மாஸ்டருன்னா அப்படியில்ல இருக்கணும்.''

''எல்லா வாத்தியாருட்டயும் பிரியமா இருந்துக்கிருவாரு. ஆனா கிட்ணசாமிசாருக்கும் அவருக்கும் என்னமோ ஒத்துக்கிறல.''

''அதென்ன சமாச்சாரம்.''

''எந்த வகுப்புல வாத்தியார் இல்லன்னாலும் எட்மாஸ்டர் அங்கபோயி பாடம் நடத்துவாரு. வித்தியாசம் பாக்கமாட்டாரு.''

''இந்த ஹெட்மாஸ்டரப்போலன்னு சொல்லு.''

''நீங்க ஏழாம்வகுப்புக்கு மட்டுந்தான போறீக. கிட்ணசாமி சார் எப்ப லீவுபோடுவாருன்னு காத்துட்ருக்கீகளே.''

''ஒனக்கு இம்மி எடங்கெடச்சாப் போதுமே.''

''ஒரு சமயம் கிட்ணசாமி சார் வயித்தோட்டம்னு லீவு போட்டுட்டாரு. அதே நேரம் ஆறாம் வகுப்பு ராசம்மா டீச்சரும் லீவு. அதுகத வேறமாதிரி.''

''ராசம்மா கதையா. அது என்னதுப்பா.''

''மனசர வுடமாட்டீகளே.''

''அட சொல்லுப்பா. ஒரு சாமாச்சாரத்தத் தொட்டுட்டு விழுங்கினா என்ன அர்த்தம்.''

''அந்தம்மாவுக்கு புருசன் மிலிட்டரியில இருந்தாரு. இது இங்க தனியா கெடந்துச்சு. வயசும் ஆகிப்போச்சு. ஒங்களப் போல ஒரு டிரில்மாஸ்டர் வந்தாரு. வந்தவரு சும்மாதான இருக்கணும்.''

''என்ன செஞ்சாரு.''

''அவருமொகத்த போட்டாபுடிச்சு அந்தம்மாட்டக் குடுத்துட்டாரு.''

''அப்புறம்.''

''அந்தம்மா பொஸ்தகத்துக்குள்ள போட்டாவ வச்சு பாடம்நடத்துற சாக்குல பாத்துக்கிட்ருந்துருக்கு.''

''அடிச்சக்க. அவ்வளவு அழகா அவரு மொகம்.''

வையாபுரி அப்பிராணிபோல் இருந்தான்.

''அத அந்தம்மாட்டத்தான் கேக்கணும்.''

அவன் தோளில் பாண்டியன் பொய்க்குத்துவிட்டார். ரங்கராஜன் கவனம் சிதறாமல் உட்கார்ந்திருந்தார்.

''போட்டோ வச்சிருந்தாங்க.''

''அது எப்படியோ கீழ வுழுந்திருச்சு. அம்மா அதக் கவனிக்கல.''

''சரியாப்போச்சு.''

''ஒரு பையன் கவனிச்சிட்டான். மெல்லப் போயி எடுத்துப் பாக்கான். பாத்தா டிரில்மாஸ்டர் பரிதாபமா முழிக்காரு.''

''காரியம் கெட்டுப்போச்சே.''

''அனயம் பையங்க பாத்துக்கிட்டாங்க.''

''அடடா.''

''டீச்சரம்மாவுக்கு வெக்கம் ஒரு பக்கம். கோவம் ஒருபக்கம். போட்டாவப் புடுங்கி கிழிச்சுப் போட்டுட்டு அந்தப் பையன அடிச்சிருக்கு. அப்புறம் பாத்தா படுகாளிப் பயக படுக்காளிப்பயகன்னு வசவோடவசவா அழுதுகிட்டு வருது.''

''பாவம்.''

''மறுநா பள்ளிக்கூடத்துக்கு வரல. லீவு போட்ருச்சு.''

''இதெல்லாம் ஒனக்கெப்படித் தெரியும்.''

''ஒங்க கதைய நீங்க சொல்லியா தெரியிது. அதப்போல தான்.''

''எங்கிட்ட வம்புக்கு வந்துட்டான் பாரு.''

''அதென்னமோ சார் ஆறாம் வகுப்புக்கும் டிரில்மாஸ் டருக்கும் பொருந்திக்கிருது.''

''ஹெட்மாஸ்டருக்குத் தெரியாதா.''

''எந்த எட்மாஸ்டருக்கு.''

''அதாம்பா ராசம்மா வெவகாரம்.''

''நான் ராசேஸ்வரியம்மா வெவகாரமாக்கும்னு நெனச்சென்.''

ரங்கராஜன் பாண்டியனை அர்த்தத்துடன் பார்த்தார். பாண்டியன் வையாபுரியை முறைத்தார்.

''இந்த எடத்துல ஒனக்குச் சந்தர்ப்பம் சரியில்ல. தனியா மாட்டாமயா போயிருவ.''

''மொதல்ல வெசயம் எட்மாஸ்டருக்குத் தெரியாது. டீச்சர் அனயநாளு லீவுங்கவும் எங்கிட்டக் கேட்டாரு. நான் சொல்லவேண்டியதாப் போச்சு.''

''ஒனக்கெதுக்கு வம்பு.''

''சொல்லலன்னா என்னக் கோவிச்சுக்கிருவாரு. சொன்னதும் பாருங்க ரெம்ப வருத்தப்பட்டாரு. டிரில் மாஸ்டரக் கூப்புட்டு தகப்பன்மாதிரி பேசிக்கிட்ருந்தாரு. கலியாணம்முடிக்காம என்மொகத்துல முழிக்கக்கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லீட்டாரு. ரெண்டே மாசம். டிரில் மாஸ்டருக்குக் கலியாணம் நடந்துபோச்சு.''

''புத்திசாலித்தனமா நடந்துருக்காரு.''

''ஆரச் சொல்றீக.''

''ஒங்க தாத்தாவச் சொன்னென். டீச்சரம்மா என்னாச்சு.''

''அவங்க வெலாசத்தக் கண்டுபுடிச்சு என்னய அனுப்பி கையோட கூட்டீட்டு வரச்சொன்னாரு. அதும் சந்தோசமா வந்துருச்சு. அதுகிட்ட என்ன பொறுமையா பேசுனாரு தெரியுமா.''

ரங்கராஜனுக்கு வெறுப்பு.

''ஒரு குடும்பத்துல இருக்கற பொறுப்பு ஹெட்மாஸ்டருக்கு வேணும்.''

தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் எழுந்து மேற்கொண்டு நடந்தார்கள். பாண்டியன் முணுமுணுத்தார்.

''இப்ப இருக்கிறவர்மாதிரி.''

வையாபுரி நழுவுவதற்காக எழுந்தான். பாண்டியன் விடவில்லை. அவன் பிணங்கினான்.

''வுடுங்கசார். போயி நாலுகொடம் தண்ணியெடுத்து ஊத்தணும். இல்லன்னா பொண்டாட்டிகிட்ட வாங்கிக்கெட்டி முடியாது.''

''புதுசாவா வாங்கிக் கட்டப்போற. இந்த வீரத்துல வாட்டர்மேன அதிகாரம் பண்றதுலமட்டும் கொறச்சலில்ல... அதிருக்கட்டும். சொல்லவந்த சமாச்சாரத்த அம்போன்னு வுட்டுட்டுப் போனா எப்படி. கிருஷ்ணசாமி லீவு போட்டுட்டாரு. அதுக்கப்புறம்...''

''அவர வம்புக்கு இழுத்துட்டீகளா.''

''நீ சொன்னதுனாலதான் கேக்கென்.''

''ஓரேசமயம் ஆறாம்வகுப்பும் ஏழாம் வகுப்பும் லீவு போட்டாச்சு.''

''போட்டாச்சு.''

ரங்கராஜன் குறுக்கிட்டார்.

''இன்னொரு கத்தரிக்காயத் தின்னுக்கறயா.''

''வேணாம் சார். வாயிலயே கொழம்புவச்சு முடிச்சிட்டா சட்டியில என்னத்தப் போடுறது.''

பாண்டியன் கண்களை உருட்டினார்.

''அதெல்லாமில்ல. கொண்டுபோகலன்னா அங்க இவுகசட்டி ஒடையும்.''

''அப்படியா நெனச்சுக்கிட்டீக. நாலு புள்ளைகளானப் பெறகும் நமக்குத் தனிக்கவனிப்பு சார்.''

''அந்த வீராப்பு ஒருபக்கம் இருக்கட்டும். லீவு வெவகாரத்துக்கு வா.''

''ஆறுக்கும் ஏழுக்கும் பாடம்நடத்துறது பெரிய சங்கடமாப் போச்சு. எட்மாஸ்டர் அடிக்கடி பாடம் நடத்துவாரு. மத்த வாத்திமாரவும் போகச் சொல்லுவாரு. அடிப்பட நல்லா இல்லன்னா ஒயர வரவர ஆட்டங்கண்டுரும்னு சொல்லி ரெண்டு வகுப்பவும் நல்லா கவனிச்சக்கிருவாரு.''

''சரி.''

''கிட்ணசாமி சார் ஒருவாரமா லீவுங்கவும் ஒருநா என்னயக் கூப்புட்டு அவரு வீட்டுக்குக் கூட்டீட்டுப் போகச் சொன்னாரு.''

''அங்கயும் சிக்கலுதானா.''

''வயித்தோட்டம்னா கடுமையா இருக்குமோ என்ன மோன்னு பாத்துட்டு வரலாமேன்னு நெனப்பு.''

''நல்ல நெனப்புதான்.''

''நாங்க அவருவீட்டுக்குப் போறொம். போனா அங்க தொழுவுச்சொவருக்கு மண்ணுவச்சிக்கிட்ருக்காக. பழைய சொவருமேல நின்னுக்கிட்டு ஒரு ஆளு மண்ண வாங்கிவாங்கி எறிஞ்சு அடிச்சுச் சேக்குது மும்மரமா.''

''ஆருப்பா அது.''

''வேற ஆரு நம்ம கிட்ணசாமிசாருதான்.''

''மராத்தான் மண்ணாத்தானாயிட்டாரா.''

''அவருபையன் மண்ணக் கொழச்சு உருட்டி எறிய அவரு புடிக்க வேலச்சூட்டிகையில எங்களக் கவனிக்கல. எனக்கு என்னசெய்றதுன்னு தெரியல. ரெண்டு செருமல் வுட்டென். கண்டுக்கிட்டாரு. அவ்வளவுதான். தெகச்சுப் போயி பதினெட்டாம்படி கருப்பசாமிமாதிரி சொவருமேல இருந்துக்கிட்டு முழிச்சாரு.''

''எக்கச்சக்கமா மாட்டிக்கிட்டாரே.''

''எட்மாஸ்டர் வேறஒண்ணும் பேசல. வயித்தோட்டம் எப்படியிருக்கு. ஒடம்ப நல்லா கவனிச்சிக்கிறணும். கடுமையா

வேலசெய்யாம ரெஸ்ட் எடுக்கணும்னு சொல்லீட்டு அப்படியே திரும்பீட்டாரு. கிட்ணசாமிசார் கீழ எறங்கி அங்கஇங்க நகராம பாத்துக்கிட்டே நிக்காரு.''

''அந்தநேரத்துல என்ன செய்யமுடியும்.''

''நாங்க இப்படி வந்துட்டுப் போனது அவருக்குப் புடிக்கல. கொணமே மாறிப்போச்சு.''

''தப்பா நெனச்சுக்கிட்டாரு போலருக்கு.''

''மறுநா வந்ததே சரின்னு என்னோட மோதுனாரு. நான் ஒண்ணும் தெரியாதுன்னு கையவிரிச்சிட்டென். எட்மாஸ்ட ரோட தகராறு. என்வீடு தேடி எப்படி வரப்போச்சு. நான் திருட்டுத்தனமா பண்ணுனென் பெரிய யோக்கியன்போல வீட்டுக்கு வந்துட்டீரேன்னு கண்டபடி பேசீட்டாரு.''

''கிருஷ்ணசாமியா.''

''வெளிய ரெண்டுபேரு முள்ளிவுட்ருக்காக. எப்படி. அவருக்கு அம்புட்டுத் துமுரான்னு. இவருக்கு மண்டைக்கு ஏறிக்கிருச்சு.''

''அவரப்புடிச்ச கெட்டநேரம்.

''எட்மாஸ்டர் எவ்வளவோ நல்லவார்த்த சொல்லிப் பாத்தாரு. கேக்கல. ஆறாம்வகுப்பக் கவனிக்கச்சொன்னா கவனிக்கிறதில்ல. தகராறு முத்திக்கிருச்சு. எட்மாஸ்டர் பொறுத்துப்பாத்தாரு. நெலம சரியாகல. என்னசெய்றது. மேல எழுதி அனுப்பீட்டாரு.''

''வேற வழியில்லயே.''

''எழுதின பதினஞ்சாம்பக்கம் கிட்ணசாமிசாருக்கு உத்தரவு வருது. சங்கரன்கோயிலுக்குப் பக்கம் தூக்கியடிச்சான்.''

''இந்தத் தொந்தரவு எதுக்கு.''

''மறுநா பாருங்க விடிஞ்சும் விடியாம கிட்ணசாமி சார் கெளம்பிவந்து எட்மாஸ்டர் நாற்கலியில உக்காந்துக் கிட்டாரு.''

''அய்யய்யோ இதென்ன கூத்து.''

''அவருமொகத்துல கோவம் துடிக்குது. நான்போயி இது ஒங்களுக்கு நல்லால்லன்னு சொன்னென். ஒஞ்சோலியப் பாத்துட்டுப்போ அந்தப் பய வரட்டும் ரெண்டுல ஒண்ணு பாத்துட்டுத்தான் போவன்னு அருமுறுக்குராரு. எனக்கு மனசு திக்குத்திக்குனு அடிச்சுக்கிருது. பையங்க ஆரும் ஆபீசுக்குள்ள வந்து பாத்துறாம ஆபீஸ் வாசல்ல நிக்கென்.''

''பாவிமனுசன் கெடுத்தாரே.''

''எட்கிளார்க் குட்டிபோட்ட பூனமாதிரி நடமாடுறாரு. அட்டெண்டர் எட்டிஎட்டிப் பாக்கரரு. எட்மாஸ்டர் தளவாய் புரத்துலருந்து எட்டரமணிக்கு வருவாரு. பஸ்ஸ்டாண்டுக்குப் போயி கூட்டீட்டு வரணும். வந்தா என்னாகுமோன்னு பயம்.''

''மத்த டீச்சர்ஸ் என்னசெஞ்சாக.''

''வந்து வந்து பாத்துட்டு குசுகுசுன்னு பேசிக்கிறாக.''

''நல்ல மனுசங்கப்பா.''

''சரி நடந்தபடி நடக்கட்டும்னு மாணிக்கத்த நிக்கச் சொல்லீட்டு பஸ்ஸ்டாண்டுக்குப் போனென். காரு வாற நேரம் ஆகஆக மனசு கெடந்து ஒளையிது... காரு வருது. எண்ணைக் கும்போல அவரு சிரிச்சமொகத்தோட எறங்குறாரு. பைய வாங்கிக்கிறென்.''

''வையாபுரி காலைத் தொங்கப்போட்டான். ரங்கராஜன் கேட்டார்.''

''ஸ்கூலுக்கு வரேளா.''

''வாறொம். கொஞ்சதூரம் வந்ததும் இண்ணைக்கு லீவு போடுங்கய்யா பள்ளிக்கூடத்துல இருக்கிற நெலம சரியில்லன்னு சொல்றென். அவரு பேசல. என்னப் பாக்காரு. நான் வெசயத்தைச் சொல்றென். அதுக்கும் சிரிப்புத்தான். அப்படியா அவருக்கு என்சீட்ல உக்காரணும்னு ஆசபோலருக்கு. சரிவா போவம்னு கெழக்க திரும்பி நடக்காரு.''

பாண்டியன் சிக்கலாகப் பார்த்தார்.

''ஸ்கூல் வடக்கல்ல இருக்கு.''

''போலீஸ்டேசனுக்கு.''

''பெரிய வம்புதான்.''

''அவுட்போஸ்ட்ல ஏட்டு இருந்தாரு. எனக்குப் போலீஸ்டேசன வள்ளிசாப் புடிக்காது. அந்தப் பக்கம் எட்டிக்கூட பாக்கமாட்டென்.''

''ஏன் எண்ணைக்காச்சும் எக்கச்சக்கமா அவுககிட்ட மாட்டிக்கிட்டயா.''

''நான் ஏதுக்கு மாட்டுறென். முன்னால ஒரு மகாராசன் ஏட்டா இருந்தான். அவன் செஞ்ச அட்டகாசத்த நெனச்சா கோவங்கோவமா வரும். பாவிமனுசன் அனியாயமா ஒருத்தனக் கொன்னுட்டான். கடசிக்கு அவன் புழுவரிச்சுத்தான் சாவான்.''

''நீ சொல்றதப் பாத்தா அவருக்கும் ஒரு பெரிய கதையிருக்கும் போலருக்கு.''

வையாபுரி தப்புச்செய்துட்டதுபோல் முழித்தான். இதைப்போய் இந்தநேரத்தில் ஏன்சொன்னோம் என்றிருந்தது.

''ஊருஊருக்கு நடக்கிற கததான். நமக்கெதுக்கு வம்பு.''

பாண்டியன் புரிந்துகொண்டார். இனியும் துளைத்துக் கேட்டால் அவ்வளவுதான். எட்மாஸ்டர் கதையையும் விழுங்கி ஏப்பமிட்டுவிடுவான்.

''அது கெடக்கட்டும் வுடு. பெறகு பாத்துக்கிறலாம். ஒங்க வம்பச் சொல்லு.''

வையாபுரிக்கு பெரிய கண்டத்திலிருந்து தப்பிய நிம்மதி. சகஜத்திற்கு வந்து கதையை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தான்.

''எட்மாஸ்டர் உக்காந்து ஏட்டுகிட்ட சமாச்சாரத்தச் சொல்றாரு. ஏட்டு கம்ப்ளெய்ண்ட் எழுதிக் கேக்காரு.

அதெல்லாம் வேணாம் என்னோட வாங்கன்னு ஏட்டக் கூட்டீட்டு சாதாரணமா பேசிக்கிட்டே வாறாரு.''

ரங்கராஜன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''வந்துட்டேளா.''

''மூணுபேரும் பள்ளிக்கூடத்துக்கு வாறொம். வகுப்பு வாசல்ல வாத்திமாரும் பையங்களுமா வேடிக்கபாக்காக. எட்மாஸ்டரத் தடுத்துநிறுத்தீட்டு ஏட்டு உள்ள போறாரு. நான் ஈரக் கொலையக் கையில ஏந்தீட்டு அவருக்குப் பின்னால ஓடுறென். கிட்ணசாமி சார் காலுமேல் காலுபோட்டு ஜம்முனு உக்காந்துருக்காரு. ஏட்டு கடுமையா ரெண்டுவார்த்த பேசுனாரு. எந்திரிக்கலன்னா சங்கடம் வந்துசேரும்னு சொல்லி வெளிய அனுப்பீட்டாரு. கிட்ணசாமி சார் ஒண்ணும் பேசல. வெளியவந்து எட்மாஸ்டர ஒரு மொறப்பு மொறச்சிட்டு வகுப்புக்குப் போயிட்டாரு.''

பாண்டியன் பெருமூச்சுவிட்டார்.

''நல்லவேளையாப் போச்சு.''

''எட்மாஸ்டர் ஏட்டப் பாத்துச் சிரிச்சு அனுப்பிவச்சிட்டு வாசல்ல ஏறி மொகத்தத் தொடச்சபடி வாட்டர்மேனக் கூப்புட்டாரு மாணிக்கம் ரூமுக்குள்ள தூசியப் பெருக்குன்னு.''

''ஹெட்மாஸ்டரும் கோவப்பட்ருந்தா கத என்னாகி யிருக்கும்.''

''கிட்ணசாமிசார் அத யோசிக்கல.''

''கஸ்டத்த ஏன் வெலைக்கு வாங்கணும்.''

''இங்க மாத்தீட்டு வாறதுக்கு எவ்வளவோ அலஞ்சு பாத்தாரு. முடியல. ரெண்டுமாசம் லீவுபோட்டாரு. ஒண்ணும் ஓடல. தோட்டத்துல வெள்ளாம நேரம். இவருல்லன்னா காஞ்சுபோகும். பாடுபட்டது வீணாயிரும். தோட்டத்தக் கவனிப்பாரா பள்ளிக்கூடத்துக்கு அலைவாரா. ஆளு ரெம்ப ஒடஞ்சுபோயிட்டாரு.''

''அட பாவமே.''

''அவரு தோட்டத்துல தண்ணி பாச்சீட்டு அலையிறத எட்மாஸ்டர் ஒருநா கவனிச்சிருக்காரு. பள்ளிக்கூடத்துக்கு வந்ததும் அவரக் கூட்டீட்டு வரச்சொல்லி என்னைய அனுப்புனாரு.''

''மறுபடியும் மோதிக்கிறவா.''

''நன் போனென். அவரு ஒண்ணும் பேசல. நான் நல்லவார்த்த சொல்லி கொண்டுவந்து சேத்துட்டென். ரெண்டுபேரும் மதியவரைக்கும் பேசிக்கிட்ருந்தாக.''

''ஆச்சரியந்தான்.''

''அதுமட்டுமில்ல. எட்மாஸ்டரே நேருல போயி மேலாவுல சொல்லி ஆடர ரத்து செய்யவச்சாரு. அதுக்குப் பெறகு ரெண்டுபேருக்கும் நல்ல செனேகிதமாப் போச்சு.''

''அடிச்சக்க.''

''அஞ்சாரு மாசம் கழிச்சு வேற ஒரு உத்தரவு வந்துச்சு.''

''அதென்ன புதுசா.''

''எட்மாஸ்டர மாத்தீட்டாக.''

''அடடா.''

''கிட்ணசாமி சாருக்கு ரெம்ப வருத்தம். மனு தயாரிச்சு ஊருக்குள்ள ரெம்பப் பேருட்ட கையெழுத்து வாங்கி மாத்தக்கூடாதுன்னு மேல அனுப்புனாரு.''

''அப்புறம்.''

''ஒண்ணும் ஆகல. எட்மாஸ்டர் தானா கேட்டு வாங்கின உத்தரவாச்சே. அவரு மாத்திப்போன அண்ணைக்கு கிட்ணசாமி சாருக்கு கண்ணீரு வந்துருச்சு. கூடவே போயி வழியனுப்பிவச்சாரு. ராசம்மா டீச்சர் கையெடுத்துக் கும்புடுது. டிரில்மாஸ்டர் கடசிவரைக்கும் இருந்து வழியனுப்பீட்டுத் திரும்பினாரு.''

பாண்டியன் சலித்துக்கொண்டார்.

''அப்படி நல்லமனுசன் இருந்த காலமும் போச்சு.''

''நல்லமனுசன்னா ஒருவெதத்துலயா. ஆடம்பரம் கெடையாது. ஒருவாரத்துக்கு சட்டத்துணி மாத்தமாட்டாரு. இப்ப இருக்கிறவரு என்னன்னா நாளைக்கொண்ணு போடுறாரு. வீடு கிட்டத்துலருந்தா காலையில ஒண்ணு மதியம் ஒண்ணு போட்டாலும் போடுவாரு. துணியில அழுக்கு ஒட்டியிருக்கான்னு பாக்கவே நேரங்காண மாட்டங்குது. கூரப்பள்ளிக் கூடத்துல ஏழாம்வகுப்புல உக்காரமுடியுமா. ஆருட்டச் சொல்றது. பணமிருக்கு எல்லாம் பண்ணச்சொல்லுது... நமக்கெதுக்கு இதெல்லாம். ஆளவுடுங்க சார். காலாகாலத்துல வீடுபோய்ச் சேரணும்.''

வையாபுரி கிளம்பினான். ரங்கராஜன் பாடம்போல் ஒப்பித்தார்.

''சுத்தம் சுகம்தரும்.''

பாண்டியன் விடுவதாக இல்லை.

''அந்த ஏட்ட நடுத்தெருவுல நிறுத்தீட்டு கம்பிய நீட்டுனா எப்படி.''

''என்னயக் கம்பியெண்ணவைக்கிறதுன்னு முடிவு பண்ணீட்டீக.''

''வேய் இரு நாங்களும் கூடவாறொம்.''

''நீங்க பின்னால போறதுக்கு வேற ஆளு இருக்கு சார்.''

ரங்கராஜன் கலகலத்தார்.

''நீ சொன்னது கரெக்ட்''

பாண்டியனுக்கு ஒரு சந்தேகம் பாக்கியிருந்தது.

''அந்த ராசம்மா டீச்சர் என்ன ஆனாங்க.''

''அதப்பத்தி ஒங்களுக்கென்ன கவல.''

''சும்மா தெரிஞ்சிக்கிறத்தான்.''

''புருசன் மிலிட்டரியில வேலைய எழுதிக்குடுத்துட்டு வந்துட்டாரு. அம்மா மேலக்கடசிக்கும் டிரில்மாஸ்டரய்யா கீழக்கடசிக்கும் மாத்திப் போயிட்டாக. போதுமா.''

''அப்ப ஏட்டப்பத்தி வாயி தொறக்கமாட்டாயாக்கும். ஒனக்கும் அவருக்கும் என்னமோ இருக்கு.''

''நீங்க ஒருத்தர்போதும். வேற வெனையே வேணாம்.''

''எண்ணைக்காச்சும் எங்கிட்ட வசமா மாட்டத்தான் போற.''

தப்பித்து ஓடிய வையாபுரி ரோட்டுக்குக் கீழே நின்று திரும்பிப் பார்த்தான்.

''எப்ப சார் கலியாணச்சாப்பாடு போடப்போறீக.''

ரங்கராஜன் முந்திக்கொண்டார்.

''யாரக் கேக்கிற வையாபுரி.''

''ரெண்டுபேரவுந்தான்.''

பாண்டியன் ரங்கராஜனைப் பார்த்தார். ரங்கராஜன் பதிலுக்குப் பார்த்தார். வையாபுரி அதுக்குமேல் நிற்கவில்லை.

இருட்டு முற்ற ஆரம்பித்திருந்தது. ரங்கராஜனும் பாண்டியனும் எழுந்து மங்கிய ரோட்டில் மெல்ல நடந்தார்கள். ரங்கராஜன் சொன்னார்.

''பாண்டியன் தமிழய்யாவக் கைவிட்டுட்டேளே.''

அவர்கள் நின்று திரும்பிப் பார்த்தபோது தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் நிதானமாகத் திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

''**எ**ன்னவே வெறும் பானையத் தூக்கீட்டு விசுக் விசுக்குன்னு போற. நாங்கெல்லாம இருக்கிறது கண்ணு தெரியலயா.''

ரூமைக் கடந்துபோன மாணிக்கத்தைக் கூப்பிட்டார் பாண்டியன். அவன் வந்து தலைப்பாவை அவுத்து

உச்சந்தலையைத் தடவினான். தண்ணீர் சுமக்கத் தோதானது போல் சும்மாட்டுப்பொட்டல் விழுந்திருந்தது.

''தனியா உக்காந்துட்டீகளே அய்யாவும் சாமியும் எங்கபோயிருக்காக.''

''ஒன்னத் தேடித்தான்.''

''என்னத்தேடி எதுக்குப் போனாக.''

''தமிழய்யாவுக்கு வெத்தல போட்டு விக்கிக்கிருச்சு. குடிக்கிறதுக்குத் தண்ணியில்லன்னு தெணறிப்போயிட்டாரு. ஒனக்கு நாங்க முக்கியமா என்ன.''

''ஒங்களுக்குத்தான் ஒருபான தண்ணி கொண்டுவந்து வச்சிறலாம்னு போனெனன்.''

''அம்மாவுக்கு எடுத்துஊத்தி முடிஞ்சதா. அத்தன தண்ணியவும் என்னதான் செய்றாகளாம் டீச்சரம்மா.''

''தண்ணி ரெம்பச் செலவழிப்பாக.''

''ஆமாமா செலவழிக்கவேண்டியதுதான. கஸ்டப் பட்டு தான் சொமந்தாத்தெரியும். ஸ்கூல்ல குடிக்கிறதுக்குத் தண்ணி இருக்குதோ இல்லையோ அங்கமட்டும் கொறஞ் சிறக்கூடாது. இது மேலிடத்து உத்தரவு. அப்படித்தான.''

''ஒங்களுக்குத் தெரியாறதவா சொல்லீறப்போறென்.''

''வேய் வாட்டர்மேன்னா தண்ணியக் குடிச்சிட்டுத்தான் கெடக்கணுமா. சோறு சாப்பிடக்கூடாதா. வயிறு ஏன் எக்கிப் போயிருக்கு. உள்ள கொடலுருந்தா கருவாடா காஞ்சுபோயிரும்.''

அவன் விட்டுக்கொடுக்கவில்லை.

''மூணுநேரமும் ஜம்முனு சாப்புடுவென் சார்.''

''மூஞ்சியப் பாத்தாலே தெரியிது. ஆமா இப்படி ஓடிஓடிச் சொமக்கயே அதுல ஏதாச்சும் ஆதாயம் உண்டா. செலவுக்குக் காசு கெடைக்குமா.''

''நான் சொமக்கிறதோட சரி சார். ஆதாயத்தத்தேடி அள்ளிக்கெட்டீட்டா போகப்போறெம். வாற சம்பளத்துல வயித்துமொற கழிஞ்சாப் போதும்.''

''ஊருக்கு ஒழைக்கிற உத்தமனாச்சே நீ. எத்தன கொழந்தைக ஒனக்கு.''

''ரெண்டுபொண்ணு ஒரு பையன்.''

''படிக்கவச்சிருக்கயா.''

''வேதக்கோயில் பள்ளிக்கூடத்துல படிக்காக மூணு பேரும். அதுகளக் கரையேத்தீறணும்னு வீட்டுக்காரிக்கு ஒரே வைராக்கியம்.''

''தாயில்லாப் புள்ளைகளே தவிச்சுத்தவிச்சு படிச்சு முன்னேறிக்கிறாக. ஒன்கொழந்தைக குடுத்துவச்சுதுக.''

''எங்க சொரணமும் சும்மாருக்கமாட்டா. கெடைக்கிற வேலைக்குப் போயிருவா. ஆடுமாடு கோழின்னு எதவாச்சும் வளத்து கையில காசு பாத்துக்கிட்டே இருப்பா. அவஒத்தாசன இல்லன்னா வண்டி படுத்துக்கிரும். என்னமோ கர்த்தர் கிருபையால நாங்களும் நம்பிக்கையோட இருக்கொம்.''

''நீ வேதக்காரனா.''

''நாலஞ்சு தலைமொறைக்கு முந்தியே எங்ககுடும்பம் வேதத்துக்கு மாறியிருச்சு.''

''கோயிலுக்குப் போவயா.''

''கலியாணத்துக்கு முந்தி வாரம் தவறாமப் போவென். அதுக்குப்பெறகு அவ்வளவாப் போறதில்ல.''

''ஏன் போகவேண்டியதுதான. கொஞ்சநேரம் அமைதியா உக்காந்துட்டு வந்தா மனசுக்கு நிம்மதியாயிருக்குமில்லையா.''

''என்னசார் நிம்மதி. ஊருஒலகத்துல நடக்கிற கொடுமைய நெனச்சா கோயிலுக்குப் போகவா தோணுது.''

''அப்படியன்ன பெரிய கொடுமையப் பாத்துட்ட.''

''அத ஏன் கேக்கீக. ஒரு சமயம் என்வீட்டுக்காரி தாலியறுத்துட்டு ரெண்டு புள்ளீகளோட நடுத்தெருவுல

நிக்கையில நாதிக்கு ஆரு வந்தாக. அவள அறுதலியாக்குன மனுசன எவனாச்சும் தட்டிக்கேட்டானா.''

''வேய் கொஞ்சம் நிறுத்து. என்ன ஔறிக்கொட்ற. வீட்டுக்காரின்னு சொல்ற தாலியறுத்ததுன்னு சொல்ற.''

''இதுல ஔறுறதுக்கு என்னருக்கு சார். நெசத்தத்தான் சொன்னென்.''

பாண்டியன் தலையைப் பிய்த்துக் கொண்டார்.

''நெசமா.''

''அவ ஏற்கெனவே கலியாணமாகி தாலியறுத்துட்டுத்தான் எங்கிட்ட வந்தா.''

''அப்படியா சமாச்சாரம். இப்படி வந்து உக்காரு.''

''இருக்கட்டும்சார். வேலமெனக்கிட்டுப்போகும்.''

''இப்ப உக்காரப்போறயா கழுத்தப்புடிச்சு உக்கார வைக்கணுமா.''

''அப்ப ஒங்களுக்கத் தண்ணிவேணாமா.''

''கொஞ்சநேரம் தண்ணியில்லன்னா செத்தா போவாக.''

அவன் பாண்டியன் அருகில் உட்கார்ந்து கொண்டான். அவர் அவனை மரியாதையாகப் பார்த்தார்.

''ஏன் சார் அப்படிப் பாக்கீக.''

''இண்ணைக்குத்தான் மாணிக்கத்தப் பாத்துருக்கென்.''

''இத்தன நாளா பாத்த மூஞ்சி வேறயா.''

''அது வாட்டர்மேனோட மூஞ்சி.''

''என்னென்னமோ சொல்றீக.''

''ஆமா ஒன்வீட்டுக்காரிய மொதப்புருசன் கை வுட்டுட்டானா.''

''அப்படின்னாகூட மனசு ஆறீருமே.''

''வேற எப்படி.''

''அவன் ஒரு வாயில்லாப் பூச்சி. வெறகுக்கடையில வேல செஞ்சான். காலையில கோடலியுங்கையுமா கெளம்புனா பொழுதடஞ்சுதான் வீடுதிரும்புவான். பகல்முழுக்க மாங்கு மாங்குனு வெறகு ஒடப்பான். அவன் முக்கிமொனங்குற சத்தம் ரோட்டுல போறவுகளுக்குக் கேக்கும். பேரு முத்துவீரன். எங்கவீட்டுக்கு நாலுவீடு தள்ளித்தான் குடியிருந்தாக. சின்னதும் சிறிசுமா ரெண்டு பொட்டப்புள்ளீக. எங்க சொரணம் ஆருட்டயும் வம்புதும்புக்குப் போகமாட்டா.''

''அப்படிப்பட்டவுகளுக்கா வம்பு வந்துச்சு.''

''எங்க தெருவுக்கு அடுத்த தெருவுல மாடசாமின்னு ஒரு களவாணிச் சண்டீரு இருந்தான்.''

''அதென்ன சண்டீருல சண்டீரு களவாணிச் சண்டீரு.''

''பொதுவா களவாணின்னா களவாங்கயில கண்டுக்கிட்டா தப்பிச்சுத்தான ஓடுவான்.''

''ஆமா.''

''அவன் அப்படியில்ல. அப்படித்தான் களவாம்பென் அதுக்கு என்ன செய்யப்போறன்னு எதுத்து அடிக்கவருவான்.''

''அம்புட்டுக் கொழுப்பா.''

''கண்ணுக்குமுன்னால ஒரு கோழிக்குஞ்சி தட்டுப் பட்டுறக்கூடாது. புடிச்சு வறட்டி சாராயம் குடிச்சிருவான். களவாங்காற பொருளில்ல. மகாலிங்கபுரம் சந்தைக்குப் போனா சொமக்க முடியாம சரக்கு வந்து எறங்கும். வீட்ல எல்லாரும் முத்துச்செல்லம் கொழிப்பாக.''

''அவனத் தட்டிக்கேக்கிறதுக்கு யாருமில்லையா.''

''தட்டிக்கேக்கவேண்டிய மகராசங்க அத்தனபேரும் அவனுக்குக் கூட்டாளிக. போலீஸ்காரங்களத்தான் சொல்றென்.''

''அப்பச் சரி.''

''போலீஸ்டேசன் அவனுக்கு மாமியார்வீடு. ஆரும்போயி அவனப்பத்தி பெராது குடுத்தா அப்படியா அவனப் புடிச்சிட்டு

வந்து நொறுக்குறன்பாரு அல்லக்கா புல்லக்கான்னு அருமுறுக்கீட்டுப் போவாக. அவனக் கூட்டீட்டுவந்து ரெண்டுமூணு நாளைக்கு உள்ள வச்சிருப்பாக. பெறகு வுட்ருவாக. அவன் நல்லா தின்னுட்டு கெழங்குமாதிரி வெளிய வருவான். அதுலயும் அந்த நாராயணசாமி ஏட்டு இருக்காரே அவரு அவனோட பேச்சுப் பழக்கம் போடுறதப் பாத்தா மாமன்மச்சான் தோத்துருவான்.''

''யாரு இப்ப இருக்கிறவரா.''

''இவரு நல்லமனுசனாச்சே. அந்தப் புண்ணியவாளன் மாத்திப்போயி நாளாச்சு.''

''அதான பாத்தென்.''

''ஒருநா பாருங்க மாடசாமி காலையிலயே வெறும் வயித்துல சாராயத்தப் போட்டுட்டு அடாவடித்தனம் பண்ணீருக்கான். நெலகொள்ளமுடியல. வாயில போடுறதுக்கு எர கெடைக்கல. கையில காசுமில்ல. வேற எங்கயாச்சும் பறிச்சுப் புடுங்கலாம்னு வெறகுக்கடைக்குள்ள மொழஞ்சிருக்கான்.''

''போயும்போயும் வெறகுக்கடதானா கெடச்சது.''

''அந்தநேரம் பாத்து கடக்காரரு வெளிய போயிருந்துருக்காரு. அவன் ஆய்பூய்னு வெரட்டீருக்கான். வெறகு ஒடச்சுகிட்ருந்த முத்துவீரனுக்கு கையும் ஓடல காலும் ஓடல. கோடாலியச் சாத்திவச்சுட்டு அப்படியே நின்னுட்டான்.''

''பெறகு என்ன நடந்தது.''

''அவன் வல்ருட்டியாப் போயி கல்லாவுல பணம் எடுத்துருக்கான்.''

''அடப்பாவி.''

''இவனுக்கு மனசுகேக்கல. மொதலாளி வரட்டும் வாங்கீட்டுப்போன்னு சொல்லிப்பாத்துருக்கான். அப்படியும் கேக்கல. அவன் வெறகுக்கட்டைய எடுத்துட்டு வந்து

நீயென்னடா கேக்கப்போச்சு கூலிக்கு ஒழைக்கிற நாயேன்னு ஒரு அடி அடிச்சிட்டான்.''

''இவன் சும்மாவா இருந்தான்.''

''அடிய வாங்கீட்டு பெறகும் நல்லவார்த்த சொல்லிப் பாத்துருக்கான். குடிகாரன் மடங்குறமாதிரி தெரியல. மறுபடி மறுபடி அடிச்சிருக்கான். எவ்வளவுதான் பொறுமசாலியா ருந்தாலும் ஒரு மனுசனால அனியாயமா எத்தன அடியத்தான் தாங்கமுடியும்.''

''இவனும் பதிலுக்கு அடிக்க ஆரம்பிச்சிட்டானா.''

''அதெல்லாமில்ல. லேசா கையப் புடிச்சுத் தள்ளி யிருக்கான். குடிபோதையில தாமரிக்கமுடியாம அவன் கீழ வுழுந்துட்டான். பெறகென்ன அவன் இவனத் தள்ள இவன் அவனத் தள்ள ரெண்டுபேரும் கைகலக்க ஆரம்பிச்சிட்டாக. வெலகிவுடுறதுக்கு ஒரு சுடுகுஞ்சிகூட இல்ல.''

''கடக்காரனாச்சும் வந்து தொலச்சிருக்கப்புடாதா.''

''வெறகுக்குள்ள அவுக அடிச்சுப் பெரண்டு உருண்டு கிட்டுக் கெடக்கையில திடீர்னு காட்டுத்தனமா ஒரு அலறல் கேட்டுச்சு.''

''யாரு அலறுனது.''

''குடிகாரன்தான். அலறல் கொஞ்சங்கொஞ்சமா அடங்கி சண்டையும் ஓஞ்சிருச்சு.''

''என்னாச்சு.''

''சாத்தியிருந்த கோடாலிமேல மாடசாமி பெரண்டு வுழுந்து தொண்டயத் தறிச்சிருச்சு. கோயிலுக்கு வெட்டுன கெடாமாதிரி துள்ளித்துடிச்சு அடங்கீட்டான். முத்து வீரனுக்குன்னா மூஞ்சி மொகறையெல்லாம் ரத்தம். பயத்துல என்னென்னமோ ஒளறிக்கிட்டு நேர போலீஸ்டேசனுக்கு ஓடீட்டான்.''

''பாவி கெடுத்தானே.''

''நடந்த கத அம்புட்டும் சொல்லீட்டான். சொல்லி என்னசெய்ய. ஒரு காதுலயும் ஏறல. பெரிய கொலகாரனப் புடிச்சிட்டு வந்தமாதிரி அவனுக்குக் காலுலயும் கையிலயும் சங்கிலிமாட்டி வெசாரணநடத்தி பெரியடேசனுக்குக் கொண்டு போயிட்டாக.''

''அங்க பெரிய வெசாரணையா.''

''ஆளாளுக்கு மொறபோட்டு அடிச்சு ஓதச்சு தண்ணிக்குள்ள முக்கியெடுத்து... அந்தப்பாவிக செஞ்ச கொடும கொஞ்சநஞ்சமா.''

''அவன்தான் உண்மையச் சொல்லீட்டானே. பெறகேன் அவனக் கஸ்டப்படுத்தணும்.''

''கடசிக்கு நாராயணசாமி ஏட்டு அவன்நெத்தயில எத்துன எத்துல மல்லாக்க வுழுந்தவன் எந்திரிக்கவேயில்ல.''

''கொன்னுட்டாகளா.''

''அனியாயமா சாகடிச்சிட்டாக.''

மாணிக்கத்தால் அதற்குமேல் பேசமுடியவில்லை. குமுறிக் குமுறி அழுதான். பாண்டியனுக்குத் திடீரென்று பொறிதட்டியது. அன்றைக்கு வையாபுரி இந்தக் கதையைத்தான் சொல்லாமல் விழுங்கியிருப்பானோ. நிச்சயமாக இதேதான். அவனது தோளைப் பிடித்து உலுக்கித் தேற்றினார்.

''என்னவே இது சின்னப்புள்ளமாதிரி.''

''ஊரறிய நடந்த கொலைய மூடிமறச்சிட்டாக. மேல் வெசாரண அதுஇதுன்னு கண்தொடப்புக்கு நடத்தி கடசிக்கு என்னசெஞ்சாக தெரியுமா. எல்லாரவும் நல்ல எடத்துக்கு மாத்திப்போட்டாக. அம்புட்டுத்தான். ஒருத்தனோட பொண்டாட்டி புள்ளீக ஆதரவில்லாமத் தவிக்கிறதப்பத்தி ஆரு கவலப்பட்டாக.''

''எல்லாம் அயோக்கியப்பயக.''

''சொரணத்துக்கு ரெண்டுபக்கமும் சொந்தக்காரங்க இருக்கத்தான் செஞ்சாக. ஆரும் ஒதவிக்கு வரல. அவ ரெம்பப் பரிதவிச்சா. அவளுக்கு எப்படியும் அனுசரணையாருக் கணும்னு மனசுக்குள்ள நானே முடிவுசெஞ்சிட்டேன்.''

''தைரியமான முடிவு.''

''முத்துவீரனுக்கு எழவெடுத்து முடிஞ்சதும் நேர அவகிட்டப் போயி நெலமைய எடுத்துச் சொல்லி என்னோட வந்துறயான்னு கேட்டேன். அவளும் பலத்த யோசனைக்குப் பெறகு சரின்னு சொல்லீட்டா.''

''ஒங்க வீட்ல என்னசொன்னாக.''

''அந்தச் சங்காத்தமே வேணாம்னு கண்ண மூடிட்டாக. சரி அப்படின்னா ஒங்களுக்கு ஒரு புள்ள இல்லன்னு நெனச்சுக்கங்கன்னு கண்டந்துண்டமாப் பேசீட்டு நேர தாஸ்சார் வீட்டுக்குப் போனேன்.''

''அங்க ஏன் போன.''

''சொரணத்துக்கு அவரு தூரத்து வழியில சொந்தம்.''

''அப்படியா.''

''என்முடிவக் கேட்டதும் ரெம்பச் சந்தோசப்பட்டாரு. நீ எதப் பத்தியும் கவலப்படாத நான் இருக்கன்னு தைரியம் சொன்னாரு. அதுபோதும் சார்னு கையெடுத்துக் கும்புட்டுட்டு அப்படியே எங்க சாமியாருட்டப் போனேன்.''

''அவரு ஒருத்தரு பாக்கியிருக்காரோ.''

''சாமி இப்படி இப்படி வெசயம் நீங்கதான் கோயில்ல கலியாணம் நடத்திவைக்கணும்னு கேட்டுக்கிட்டேன். அவரு தாளக்கம்போட்டாரு.''

''ஏன்.''

''எல்லாம் மொறையோட நடக்கணும். சொரணம் வேதத்துக்கு மாறணும். அப்படி இப்படின்னு இழுத்தாரு. எனக்குன்னா கோவங்கோவமா வந்துச்சு.''

''சாமியாரும் கைவுட்டுட்டாரா.''

''அவரு என்ன பேசீருந்தாலும் கவலப்படமாட்டெடன். முத்துவீரன் ஒரு கொலகாரங்கிறமாதிரி பேச ஆரம்பிச்சிட்டாரு. அதுதான் எனக்குப் புடிக்கல. சரிசாமின்னு சொல்லீட்டு தாஸ்சாருட்டப் போயி யோசன கேட்டென்.''

''அவரு என்ன சொன்னாரு.''

''அப்படியா ஒனக்கு இந்துக் கோயிலுக்கு வாறதுல கஸ்டமில்லையேன்னு கேட்டாரு. ஒங்க இஸ்டப்படி செய்யிங்கன்னு வந்துட்டென்.''

''நல்ல காரியத்துக்கு எந்தக் கோயிலுன்னு கெடக்கு.''

''எல்லாம் அவரே கவனிச்சுக்கிட்டாரு. சொந்தப் பணத்துல கலியாணச் சேல வேட்டி எடுத்தாரு.''

''அவரு மனுசன்.''

''பொட்டப்புள்ளீக ரெண்டவும் அவருவீட்ல இருக்க வச்சிட்டு மூணுபேரும் கழுகுமலைக்கு வண்டியேறுனொம்.''

''கந்தசாமிகோயில்ல கலியாணமா.''

''முத்துவீரனோட தாலிய புது மஞ்சக்கயத்துல முடிஞ்சு சொரணம் கழுத்துல கட்டுனென். ஓட்டல்ல மதியச்சாப்பாடு. சாய்ந்தரத்துக்குள்ள ஊருவந்து சேந்துட்டொம். அவருவீட்டுக்கு மறுவீடு போயி புள்ளீகளக் கூட்டீட்டு சொரணம் குடியிருந்த அதே வீட்ல குடியேறீட்டொம். பெரிய முத்துவீரன் போயி சின்னமுத்துவீரன் வந்துட்டான்.''

மாணிக்கத்தின் முகத்தில் காய்ந்த சிரிப்பு. பாண்டியன் அவனைப் பாசத்துடன் பார்த்தார்.

''ஒங்க குடும்பத்துல பெறகு வந்து கூடிக்கிட்டாகளா இல்ல இனியும் வெறச்சுக்கிட்டுத்தான் இருக்காகளா.''

''எத்தன நாளைக்குத்தான் கோவம் கொண்டாட முடியும். சொரணம் வயித்துல ஒரு ஆம்பளப் புள்ளயப் பாத்ததும் கோவமெல்லாம் பறந்துருச்சு. இப்ப எல்லாம் ஒண்ணு மண்ணாயிட்டோம். பயலுக்கு மொதமொட்ட

கழுகுமலக் கோயில்ல போட்டொம். ரெண்டாவது மொட்ட வேளாங்கண்ணியில.''

''அதுக்குப்பெறகு சாமியாரு ஒண்ணும் கேக்கலயா.''

''இதுல கேக்கிறதுக்கு என்னருக்கு. அப்படியே கேட்டாலும் நானும் பதிலுக்கு நல்லாநல்லாக் கேக்கணும்னுதான் இருந்தென். அவரு அதக் கண்டுக்கிறல.''

''தாஸ் சார் ஒன்வீட்டுக்கு வந்து போயிருக்கிருவாரா.''

''நல்லது பெல்லத்துக்கு நாங்க குடும்பத்தோட அவுக வீட்டுக்குப் போவொம். அவுக இங்க வருவாக.''

''அவ்வளவுக்கு நெருங்கீட்டீகளா.''

''அவரோட வீட்டம்மா நல்ல கொணம். ஒங்களுக்கு நாங்க பட்டுருக்கிற கடன எப்படித்தான் தீக்கப் போறமோன்னு அதுகிட்ட பேச்சோட பேச்சா சொன்னதுக்கு அதுக்கென்ன ஒங்க பொண்ணுகள்ல ஒண்ண எங்க பையனுக்குக் குடுத்து கடனத் தீத்துக்கிற வேண்டியதுதானன்னு மனசு நெறஞ்சு சொல்லுச்சு. சொரணம் அப்படியே கொதுகொதுன்னு அழுதுட்டா. என்னமோ ரெண்டு குடும்பமும் நெரப்புக் கலப்பா இருக்கணுமிங்கிற நெனப்புலதான் ரெண்டு பொண்ணுகளவும் கஸ்டப்பட்டுப் படிக்கவைக்கொம். கடவுளு எப்படி நெனச்சிருக்காரோ.''

''எல்லாம் நல்லபடியா நடக்கும்.''

''எப்பேர்ப்பட்ட மாப்பிள வந்தாலும் அதுகள எங்க சாதியில குடுக்கறமாதிரி இல்ல.''

பாண்டியன் இன்னும் ஆச்சரியாமாகப் பார்த்தார்.

''இதுல இப்படியொரு சங்கதியும் இருக்குதா.''

''ஆமசார். நாங்க நாடாக்கமாரு. அவுக கோனாக்கமாரு.''

''நல்ல மாரு பருத்திமாரு வெளக்கமாரு. உண்மையிலயே நீ வாட்டர்மேன்தான்வே.''

''ஏன்சார் அப்படிச் சொல்றீக.''

''மனசுக்குள்ள பெரிய சமுத்தரத்தவே அடக்கி வச்சிருக்கயா சும்மாவா.''

''மொதல்ல ஒருபான தண்ணிக்கு வழியப் பாப்பொம். ஒங்ககிட்டப் பேச்சுப்போட்டதுல எல்லாம் மறந்துருட்சு. இனிமே தான்தண்ணியெடுத்து வைக்கணும். கிட்ணசாமி சார் பல்தீத்தி மொகங்கழுவுறதுக்குத் தண்ணியில்லன்னா தாட்பூட்னு முறுக்கித் தள்ளீருவாரு. வையாபுரி வாயத் தொறந்தா மூடுறதுக்கு மூணுநாளாகும். ஆராரு என்ன ராமாயணம் பாடப்போறாகளோ இண்ணைக்கு.''

மாணிக்கம் அவசரமாகக் கிளம்பினான். பாண்டியன் உரக்கச் சொன்ன வார்த்தைகளைக்கூட சட்டைசெய்யாத அளவுக்கு அவன் கால்களில் வேகம் சலங்கை கட்டியிருந்தது.

''மொதல்ல எங்களக் கவனிக்கலன்னா அவ்வளவுதான் பள்ளிக்கூடத்துல ஒரு பானகூடப் பாக்கியிருக்காது. அம்புட்டும் நொறுக்கிக் குமிச்சிருவென். தெரிஞ்சுதா.''

முழுப்பரீட்சை நேரம். ஸ்டடிகிளாஸ் தொடங்கி யிருந்தது. எஸ்.எஸ்.எல்.சி. பையன்கள் மெயின்ஹாலில் தங்கிப் படித்தார்கள். சுற்றுக்கிராமத்துப் பையன்களுக்கு அந்தந்த ஊரைச் சேர்ந்த கீழ்வகுப்புப் பையன்கள் சாப்பாடும் துணிமணியும் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

ரங்கராஜனும் தமிழய்யாவும் நைட்ஸ்டடிக்குப் பொறுப்பு. ஹெட்மாஸ்டர் தமிழய்யாவிடம் நம்பிக்கையாகச் சொன்னார்.

''நீங்கதான் ஸ்கூலுக்குப்பக்கமா இருக்கிறீங்க. பையங்கள நல்லா கவனிச்சுக்கிறணும். இந்த வருஷம் நம்மஸ்கூல் நல்லபேர் வாங்கணும்.''

தமிழய்யா அமைதியாக கேட்டுக்கொண்டிருந்தார். ரங்கராஜன் ஹெட்மாஸ்டரைப் பார்க்கவில்லை. ஹெட்மாஸ்டர் போனதும் அவரால் கோவத்தை அடக்கமுடியவில்லை.

''நல்லபேர் வாங்கறதுக்கு நம்ம இருக்கறொம். கெட்டபேர் வாங்கறதுக்கு அவர் இருக்கறார்.''

தமிழய்யாவின் முகத்தில் சலனமில்லை.

''நமக்குப் பிடித்தமானதச் செய்வொம் சாமி.''

ரங்கராஜன் அதுக்குமேல் வாதிடவில்லை. அது தமிழய்யாவுக்கும் தெரியும்.

''ஏன் சார் பாண்டியனவும் சேத்துக்கிடலாமே.''

''அவரக் கட்டிப்போடமுடியாது. வெளையாட்டுக் கென்ன ராத்திரிப்படிப்பு.''

''அனியாயம் சார். பொண்ணுகளும் பையங்களப்போல படிக்கவேண்டாமா.''

''படிக்கணும்.''

''அதுகளுக்கும் தனியா ஏற்பாடு செஞ்சு கவனிக்க லாமில்ல. ரெண்டு பொம்மனாட்டிக இருக்கறாளே அவாட்ட ஒப்படைக்க வேண்டியதுதானே.''

''சாமி அதுல எல்லாருக்கும் சௌரியக் கொறச்சல். ஹெட்மாஸ்டரோட இதப்பத்திப் பேசுனென். ஒத்துக்கிறல.''

''அப்படின்னாச் சரி.''

''ஊருக்குப் போகமுடியாதுன்னு பாக்கறீங்களா. தாராளமாப் போய்வாங்க. நான் இருக்கென் கவனிச்சுக்கற.''

தமிழய்யாவின் கண்களுக்கு வாயைவிட அதிகம் பேசத்தெரியும்.''

இரவு ஏழுமணிக்கு ஸ்டடி தொடங்கும். அதுக்குள் பையன்கள் ஆஜராகணும். இல்லையென்றால் தமிழய்யா தலையாலேயே சொல்லியனுப்பிடுவார். அயலூர் பைய னென்றால் குறைந்தது நாலு செய்யுளை மனப்பாடம் செய்து ஒப்பித்துவிட்டு உள்ளே வரணும். வீட்டுக்குத் திரும்பிப் போன உள்ளூர்ப் பையன் மறுநாள் நேரத்தோடு வந்து நிற்பான். அவனை அருகில் உட்காரவைத்து அவர் படிக்கச் சொல்லுவார்.

நைட்ஸ்டடி அவருக்கு சாதாரண கிளாஸ் மாதிரி. வெற்றிலையைக் குதப்பினால் கம்மென்று உட்கார்ந்து விடுவார். அவர் பார்வைக்கும் வாய்க்குள் உலவும் சிரிப்புக்கும் தனித்தோரணை. உலகத்தையே வாய்க்குள் அடைத்துக்கொண்ட மாதிரி. எப்போதாவது ரெண்டுவார்த்தை வெளியே வரும். மனுஷனுக்கிருக்கும் நிதானம் சுட்டுப்போட்டாலும் மற்றவர்களுக்கு வராது.

பையன்கள் சந்தேகம் கேட்டால் உடனே தெளிவித்துவிடமாட்டார். அவர்களையே பதில்சொல்ல வைத்து அதுக்கு 'ம்' கொட்டி அல்லது தலையசைத்து சிந்திக்கவைத்து தெளிவை வரவழைப்பார். முதுகில் தட்டிக்கொடுத்து அனுப்புவார். கண்கள்மட்டும் திரண்டு சிரிக்கும். கோபத்துக்கும் அவருக்கும் ரெம்பதூரம்.

ரங்கராஜன் அப்படியில்லை. எல்லாப் பையன்களுக்கும் சந்தேகத்தை விளக்கிச் சொல்லிக் கொடுப்பார். சிலசமயம் கோபம்வரும்.

''டேய் மண்டு அறிவிருக்கா. ஒரு தடவ சொன்னா மண்டையில ஏறவேண்டாமோ.''

தலையில் குட்டுவார். லாந்தித் திரிவார். தமிழய்யா இதைக் கவனித்துவிட்டு அவரைப் பார்த்து ''ஊஹூம். அப்படிச் சொல்லித்தந்து பிரயோஜனமில்ல'' என்று தலையசைப்பார்.

சிலநாள் பாண்டியன் வந்தார். மெயின்ஹாலில் விரித்துக் கிடந்த மௌனம் அவருக்குப் பிடிக்கவில்லை.

''இந்த வெவகாரம் நமக்கு ஒத்துவராது சார். நீங்களுமாச்சு தமிழய்யாவுமாச்சு. நான் பையங்கள காலையில குளிக்க வைக்கென். நீங்க நைட்ல படிக்கவையிங்க.''

அவர் சினிமாவுக்குக் கிளம்பிவிட்டார்.

சைன்ஸ் தங்கச்சாமியும் மேத்ஸ் மனோகரனும் அவ்வப்போது வந்துபோனார்கள். ஒருமணிநேரம் இருந்து

தங்கள் பாடங்களைக் கவனித்தார்கள். பேச்சுக்குக்கூட தங்குவதுபற்றிச் சொல்லுவதில்லை. நிலைமையறிந்து தமிழய்யா அவர்களை அனுப்பிவிடுவார்.

''வீட்டுல தேடுவாங்க. எங்களச் சொல்லுங்க தனிக்கட்ட. நீங்க போங்க.''

ரங்கராஜன் ஒருவாரம் ஊருக்குப் போகவில்லை. மறுவாரம் தமிழய்யா வற்புறுத்தி அனுப்பிவைத்தார்.

''கண்டிப்பா ஊருக்குப் போய்வாங்க சாமி. மனசுக்குச் சந்தோசமாருக்கும்.''

ரங்கராஜன் சோர்வாக இருந்தார்.

''போறதுக்குப் பிடிக்கல சார். எல்லாம் நெனக்கறதுக்கு மாறா நடந்துண்டு வர்றது.''

''நடக்கக்கூடிய காரியத்த நெனச்சிட்டுப்போவமே.''

''என்ன சார் நீங்க. மனுஷாளுக்கு ஜென்மத்துக்கும் கல்யாணம் நடக்காத காரியமா.''

''நடக்கும் சாமி. நாம நெனச்சஒடனே எல்லாம் நடந்துட்டா இங்க வந்து சம்பளத்துக்குக் காத்துக் கெடக்க வேண்டிய தில்லையே.''

பின்பக்கம் கைகால் கழுவிக்கொண்டிருந்த பாண்டியன் வந்தார்.

''ரங்கராஜன் சார் இன்னியும் கௌம்பலயா. இந்தி டீச்சர் போயி ரெம்பநேரமாச்சே. என்னசார் ஒருமாதிரியா இருக்கீக. பணம் வேணும்னா என்பெட்டிக்குள்ள இருக்குது எடுத்துட்டுப் போங்க.''

ரங்கராஜன் பாண்டியனை ஏறிட்டார்.

''என்மூஞ்சியே ஒருமாதிரிதான பாண்டியன்.''

தமிழய்யா என்றுமில்லாதபடி கடிந்துகொண்டார்.

''இப்ப கௌம்புறீகளா என்ன சாமி.''

ரங்கராஜன் விரைவாகக் காரியங்களை முடித்துக் கொண்டு புறப்பட்டார். பாண்டியனுக்குச் சற்றுக் குழப்பம். தமிழய்யாவுக்கருகே திண்ணையில் உட்கார்ந்தார்.

''ஏன் சார் சோர்வாப் போறாரு.''

''வயசாயிட்டே போகுது. அது உறுத்த ஆரம்பிச்சிருச்சு.''

''உண்மதான சார்.''

''காலாகாலத்துல வழியத் தேடிக்கிறதுதான் நியாயம்.''

''கண்டிப்பா தேடிக்கிறனும்.''

''நம்ம சாமிக்கு வழி தட்டுப்படல. இந்தப்பக்கம் அடச்சு அந்தப் பக்கம் தெறந்துக்கிருச்சு.''

''அப்படின்னா அத மறந்துதொலச்சிறணும் சார். என்ன சொல்றீக.''

''சாமி ரெம்ப நெனைக்காரு.''

''அது தப்புசார். சும்மாசும்மா கொமஞ்சுக்கிட்டுருந்தா ஆகப்போறதென்ன. தைரியமாப் பேசி ஆகும் அல்லன்னு முடிவுசெஞ்சிறணும்.''

''கதையே தப்பாகிப்போச்சு. இதுல இனிமே பேசுறதுக்கு என்னருக்குது.''

''அது நமக்குத் தெரியிது.''

பாண்டியன் யோசனையிலாழ்ந்தார். தமிழய்யாவுக்கு ஆச்சரியம்.

''என்ன பாண்டியன் சிந்தன பலமாருக்கு.''

''என்னத்தச் சிந்திச்சு எந்தக்' கோட்டையக் கட்டி முடிக்கப்போறென். எப்படிக் கட்டிப்பாத்தாலும் இடிஞ்சுதான் போகுது.''

''ஏன் அடித்தளம் நல்லால்லயா.''

''அதெல்லாம் நல்லாத்தான் இருக்கு.''

''அப்ப கட்டுறதுல என்னமோ கோளாறு.''

''வரவர எல்லாம கோளாறாத்தான் தெரியிது.''

''அது தப்பாச்சே. அப்பப்ப ஊருக்குப் போய்வந்தா சரியாயிரும். வீட்டுச்சாப்பாடும் கெடைக்கும். நீங்கதான் போகாம வைராக்யமா இருக்கீங்க. ஏன் இந்தஊரு ரெம்பப் பிடிச்சுப்போச்சா.''

''போகணும் சார். போனா ஒரு முடிவோட கௌம்பணும். நெரந்தரமா வீட்டுச்சாப்பாடு கெடைக்கிறதுக்கு வழியப் பாக்கணும்.''

''ம்.''

''நம்ம செய்ற காரியம் நமக்கே நல்லதாத் தெரியல சார்.''

''ம்.''

''அந்தப் பொண்ணும் நம்மள நம்பி எத்தன நாளைக்குக் காலங்கடத்துறது.''

''ம்.''

''இப்பெல்லாம் ஸ்கூல்ல சின்னப்பையன் ஏறிட்டுப் பாத்தாக்கூட மனசுக்குக் கஸ்டமாருக்கு. தப்பிச்சுத்தப்பிச்சு சினிமாத் தியேட்டர்ல ஒளிஞ்சு திரும்புனா மறுநா ஸ்கூலுக்குத் தான போகவேண்டியிருக்கு.''

''ம்.''

''ஒவ்வொரு சமயம் ஸ்கூலுக்குப் போகவேண்டாம்னு தோணுது.''

''ம் ஹூஹூம்.''

''அந்தப் பொண்ணு மனசுல பாரத்த வச்சுக்கிட்டு எப்படிப் பாடம்நடத்தும். ஒருநாளைக்கு அதோட வீட்ல போயிச் சாப்பிடணும்னா திருடனப்போல மொழையணும். அவுக அம்மா என்னப்பாக்கிற பரிதாபத்த நெனச்சா சாப்பாடா செல்லுது. நம்ம செய்ற லச்சணத்துல அடுத்தவுகளப்பத்திப் பேசுறதுக்கு என்ன அருகதையிருக்கு.''

தமிழய்யாவின் முகத்தில் ஆச்சரியம் பெருக்கெடுத்தது.

''அதனால என்னசெய்யலாம்.''

பாண்டியன் நெற்றியைக் கசக்கினார்.

''கண்டிப்பா ஊருக்குப் போகணும் சார். எங்கய்யாவக் கூட்டிவந்து ஒங்ககிட்ட நிறுத்துறென். அவர் பட்டாசுமாதிரி. தீப்புடிக்காமப் பாத்துக்கிறணும்.அவருட்டப் பேசுறதுக்கு நீங்கதான் லாயக்கு. வெத்தலயக் குடுத்து எப்படியாவது பேசி முடிங்க.''

''அவருட்டப் பேசினாப் போதுமா.''

''பெறகு நமக்கு யாரு சார் இருக்காக. எனக்கு எல்லாமே அவருதான். அம்மா மூஞ்சியே தெரியாது. சித்திகிட்டச் சொன்னா வீணா தகராறுதான்.''

''ஏன்.''

''அதுக்குச் சொந்தக்காரப் பொண்ணு இருக்குதாம். அதக் கலியாணம்முடிக்கணுமாம். அய்யாவத் தொந்தரவு பண்ணுது.''

''அய்யா சொன்னாரா.''

''பேச்சுவாக்குல சொன்னாரு.''

''நீங்க என்ன பதில் சொன்னீங்க.''

''நான் அமைதியா கேட்டுக்கிருவென். மறுத்துப் பேசுனா அவருக்கு அங்க நிம்மதி கெட்டுப்போகும். சித்திக்கு இப்பமட்டும் எம்மேல ஏன் அக்கற வந்துச்சுனு தெரியல.''

''அத ஏன் தப்பா எடுத்துக்கறீங்க பாண்டியன்.''

''என் கதையக் கேட்டா இப்படிச் சொல்லமாட்டீக. அண்ணைக்கு நான் அம்மாவச் சாகக்குடுத்துட்டு அனாதையா நிக்கயில ஆதரிக்காறவுக மனசுல இண்ணைக்கு பாசம் பொங்கி வழியிதாக்கும்.''

''அம்மா சின்னவயசிலயே எறந்துட்டாங்களா.''

''பால்குடிக்கிற வயசு. ஒருநா ராத்திரி என்ன முன்னால போட்டுப் படுத்துக்கெடந்திருக்காக. பால் குடுத்தாவாக்குல ரெண்டுபேரும் தூங்கீட்டொம். அசந்து தூங்கையில மறுபடியும் நான் பால்குடிச்சமாதிரி அம்மாவுக்கு உறுத்தியிருக்கு. பெரிய தொந்தரவாப் போச்சுனு புடிச்சுத் தள்ளியிருக்காக. அப்பத்தான் தெரியிது பால்குடிச்சது நானில்லன்னு.''

''என்ன சொல்றீங்க பாண்டியன்.''

''பெரிய நல்லபாம்பு சொகமா குடிச்சிக்கிட்ருந்துருக்கு. புடிச்சபுடியில கோவப்பட்டு மார்புலயே ஆழமாக் கொத்தீருச்சு.''

''கெட்டகாலம் எப்படி வருதுன்னு பாருங்க.''

''அம்மா வுழுந்தடிச்சு எந்திரிச்சு மேலத்தெருவுலருந்து அலறிக்கிட்டே கீழத்தெருவுக்கு ஓடுது. ஊரே முழிச்சுக் கிருச்சு. அய்யா என்னத் தூக்கீட்டு பின்னால ஓடுறாரு. மாரியம்மா மாரியம்மான்னு அவரு சத்தந்தான் பலமாக் கேக்குது.''

''அப்புறம்.''

''அம்மா வைத்தியர்வீட்ல போயி கதவ ஒடைக்கிற மாதிரி தட்டுது. அவரு தொறந்துவந்து பாத்ததும் தெகச்சுப் போயிட்டாரு. மூடியிருந்த துண்டக் குடுத்து கெட்டச் சொல்லி யிருக்காரு. அதுக்குள்ள அவரு வீட்டுப் பொம்பளைக வந்து சேலைய உடுத்தி உக்காரவச்சிருக்காக. பாம்பு கடிச்ச எடத்துல சுண்ணாம்புத்தடபோட்டு வேப்பங்கொழவச்சு பார்வ பாத்தும் புண்ணியமில்ல. அம்மாவுக்கு வாயில நொரதள்ளி அப்படியே அய்யாமடியில சாஞ்சு உசிரவுட்ருச்சு. நல்லா விடியிறதுக்குள்ள எரிச்சுச் சாம்பலாக்கீட்டாக.''

பாண்டியன் கண்களைத் துடைத்துக்கொண்டார். தமிழய்யாவின் கண்களும் பனித்திருந்தன. பாண்டியனை பாசத்துடன் தட்டி ஆறுதல்படுத்தினார்.

''கேக்கிறதுக்கே வேதனையாயிருக்கு.''

''எதுக்குமே கலங்காற அய்யா நொந்து இடிஞ்சு போயிட்டாரு. கோவத்துக்குப் பேர்போன ஆனானப்பட்ட ஆண்டியாபுரம் முருகையாத் தேவர் அடங்கிஒடுங்கி தெப்பப் பசுவாயிட்டாரு. அப்புறம் நடந்ததச் சொல்லவே வேணாம். என்ன வளக்கிறதுக்காக ரெண்டாங்கலியாணம் முடிச்சு அதுலயும் சொகமில்ல. வேற வழியில்லாம என்ன பாட்டிகிட்ட ஒப்படச்சிட்டாரு. பாட்டின்னா அய்யாவப் பெத்தது. பாட்டிகிட்டத்தான் கடசிவரைக்கும் வளந்தென்.

அது வளக்கப்பட்ட பாடு கடவுளுக்குத்தான் தெரியும். ஆட்டுப்பால் மாட்டுப்பால் அத்தனையும் குடுத்து வளத்துச்சு. கழுதப்பால் ஒண்ணுதான் பாக்கி.''

ரெண்டுபேர் முகத்திலும் ஒரு சோகையான சிரிப்பு தெரிந்தது.

''பால்பாண்டியனாயிட்டீங்க.''

''பால்பாண்டியன் அஞ்சாறு வருசத்துல பாட்டிக்குப் பால்ஊத்துற பாண்டியனாயிட்டென். அது பொடுக்குனு போயிருச்சு. அதுக்குப்பெறகு நான் அனுபவிச்சது இருக்கே அதுகொடுமையிலயும் கொடும.''

''சித்திகிட்டப் போகலயா.''

''பாட்டி உசிரோட இருந்தப்பயாச்சும் சித்தியப்பத்திக் கொஞ்சம் நெனவிருந்தது. பாட்டி போனப்பெறகு அடியோட மறந்துபோச்சு. ஆயிரந்தான் இருந்தாலும் எங்க பாட்டிக்கு ஈடாகாது சார்.''

''பெத்த தாயிக்குச் சமானமா இருந்து வளத்துருக்கே.''

''கடுகளவு பண்டத்தக்கூட பத்தரப்படுத்தி வச்சிருந்து குடுக்கும். ஒருநா பாருங்க எங்கயோ போன எடத்துல ஐஸ் வித்துருக்கான். அதுல ரெண்ட வாங்கி மெனக்கிட்டு மடியில முடிஞ்சிக்கிட்டு வந்துருக்கு. வந்து அவுத்துப் பாத்தா குச்சுதான் மிச்சம். அது ஐஸ்காரன கண்டபடி வையிது. நாசமாப் போறவன் எம்புள்ளைக்கு ஆசையா வாங்கீட்டு வந்தனே. இப்படிக் கரஞ்சு போறதக் குடுத்துருக்கான் பாரு. தப்பித்தவறி இந்தப்பக்கம் வந்தால்ல இருக்கு. வெளக்கமாரு பிஞ்சுபோகும்னு பொரிஞ்சுதள்ளுது. அதோட ஆசையக் கெடுப்பானேன்னு நான் ரெண்டு குச்சவும் வாங்கி ருசிச்சுச் சூம்புனென்.''

''இன்னும் கொஞ்சநாளைக்கு இருந்து ஒங்கள வளத்து ஆளாக்கிவிடுறதுக்குக் குடுத்துவைக்கல.''

''அய்யா யோசிச்சுப் பாத்தாரு. ஒரு முடிவுக்கு வந்து தூரத்து ஊருல கிறிஸ்தவ ஸ்கூல்ல சேத்துட்டாரு. ஹாஸ்டல்ல

தங்கல். அண்ணைக்குச் சட்டியேந்த ஆரம்பிச்சென். இண்ணைக்கு வரைக்கும் அதே பெழப்புத்தான். வராத செரங்கில்ல. ராத்திரி முழுக்க உறுமி இழுப்புத்தான். அதுல தேய்க்கிறதுக்கு எண்ணெயிருக்காது. விழுப்புண்ணுக்குக் கொறச்சலில்ல. தேகமெல்லாம் செறங்கு வந்ததால தேசிறங்குராஜன். சொறிப்படையைத் தோற்கடித்து வாகை சூடியதால் சொறிப்படை வென்ற சூரவீரபாண்டியன்.''

பாண்டியனிடம் இப்போதுதான் பழைய குறும்பு திரும்பியிருந்தது. தமிழய்யாவுக்கு நிம்மதி.

''உண்மையிலேயே நீங்க வீரன்தான் பாண்டியன்.''

''நானா ஆடிஓடி நாலு வெளையாட்டத் தெரிஞ்சுக்கிட்டு எப்படியோ டிரில்மாஸ்டராயிட்டென். என்வெளையாட்டு எங்க அய்யாவுக்கே புடிச்சுக்கிருச்சுனா பாருங்களேன்.''

''ஒங்க வெளையாட்டுக்கென்ன. பாத்துக்கிட்ருந்தா எனக்குச் சிலசமயம் வெத்தலகூட மறந்துருது.''

''என்னமோஇண்ணைக்கு நானும் ஒரு மனுசனாகி யிருக்கன்னா அதுக்கு எங்கய்யாதான் காரணம். என்னப் பாக்காம அவரால இருக்கமுடியாது. எங்கருந்தாலும் ஓடிவந்து பாத்துட்டுப் போவாரு. அப்பேர்ப்பட்ட மனுசனுக்கு கடைசிக் காலத்துல நல்லபெழப்பு வாய்க்கல.''

''ஒங்களப்பத்திக் கவலையிருக்குமில்ல.''

''எங்கசித்திக்குச் சொத்துதான் குறி. நான் நெலத்துல பங்கு கேக்கக்கூடாது. தன்மகனுக்கே எல்லா நெலமும் சேரணும். நான் நெலம் வேணும்னு தகராறா பண்ணுறென். என்னருந்தாலும் ராசபாண்டி எனக்குத் தம்பிதான சார். ஒரே ரத்தம். அவன் கலியாணம் முடிக்கிறதுக்குப் பணம் குடுத்து ஒதவலயா. துணிமணி எடுத்துக் குடுக்கலயா. நெலத்த வச்ச பெழப்பு அவனுக்கு. நல்லாருக்கட்டும். எனக்குப் பங்கு வேணாம்னு இப்பக்கூட எழுதிக் குடுத்துறென். எனக்கு எங்கய்யா நிம்மதிதான் முக்கியம்.''

''இங்க நடக்கிற சமாச்சாரம் அவருக்குத் தெரியுமா.''

''தெரியாது. சொன்னா வருத்தப்படத்தான் செய்வாரு. வேற ஒருத்தியக் கட்டிக்கிறப்போறன்னு எப்படிசார் சொல்றது. ஒங்களமாதிரி யாராச்சும பக்குவமாச் சொன்னா மொறை யாருக்கும்.''

''அப்படிச் செய்றதுதான் நல்லது.''

''டீச்சரப்பத்தி ஒங்களுக்குத் தெரியாறதில்ல. ரெண்டு பேரும் சம்பாரிக்கப்போறொம். குடும்பம் நடக்கப்போகுது. சாதி கெடக்கட்டும் ஒரு பக்கம். நீங்களும் நானும் அதப்பாத்தா தகப்பன் மகன்மாதிரி பழகுறொம். ரங்கராஜன் சார் பூணூலத் தடவிப்பாத்தா நம்மளச் சேத்துக்கிட்டாரு. எங்க சித்தியும் நானும் ஒருசாதிதான். எப்படியிருக்குது நெலம. எங்கய்யாவுக்கு நீங்கதான் எடுத்துச்சொல்லி சமாதானப்படுத்தணும்.''

காற்றுக்கு இலையுதிர்ந்த மரமாக இருந்தார் பாண்டியன். அவரிடம் குடிகொண்டிருந்த பிள்ளைத் துள்ளல் எங்கே போயிற்று.

தமிழய்யாவுக்கு சந்தோசம் கூடியிருந்தது. புருவத்தை உயர மலர்த்தினார்.

''தகப்பனாருக்கு பெத்த புள்ளையோட நிம்மதியும் முக்கியம். ஒடனே ஊருக்குப் போயி அவர கூட்டீட்டுவாங்க. நான் பேசிக்கிறென்.''

''ரங்கராஜன் சார் வந்துக்கிறட்டும். அவர ஒங்களோட இருக்கவச்சிட்டு அடுத்தவாரம் பேசறென்.''

அன்று இரவு பாண்டியன் தமிழய்யாவின் ஸ்டடியைக் கவனித்துக்கொண்டார். பையன்கள் உறங்கியபின்னும் பாண்டியனின் பேச்சு ரெம்பநேரம் கேட்டுக்கொண்டிருந்தது. தமிழய்யாவும் சளைக்காமல் 'ம்' கொட்டியபடி படுத்துக் கிடந்தார்.

பாண்டியன் விடியக்காலம் பையன்களை எழுப்பி படிக்கவைத்தார். தமிழய்யாவை எழுப்பவில்லை. பையன்கள் பொழுது கிளம்பும்வரை படித்தனர். பிறகு

அவர்களை கொஞ்சநேரம் கிரவுண்டில் விளையாடவிட்டு குளிக்கக் கூட்டிப்போனார்.

ஞாயிறு சாயங்காலமே ரங்கராஜன் திரும்பிவிட்டார். பாண்டியனுக்கு அது புதுசாக இருந்தது.

''ரங்கராஜன் சார் இண்ணைக்கே திரும்பியாச்சு. நாங்க கவனிச்சுக்கிறமாட்டமா.''

''வரணும்னு தோணிச்சு வந்துட்டென் பாண்டியன்.''

தமிழய்யா எதுவும் கேட்கவில்லை. பிறகு பேசிக் கொள்ளலாமென்று இருந்துவிட்டார்.

இருட்டியதும் பாண்டியன் ரூமிலிருந்து ஸ்கூலுக்குக் கிளம்பினார்.

''ரங்கராஜன் சார் ஒங்களுக்கு அலுப்பாருந்தா இங்கயே படுத்துக்கங்க. தமிழய்யா சாவாசமா வரட்டும். நான் போயி பையங்களக் கவனிச்சுக்கிறென்.''

ரங்கராஜன் திகைப்பில் தமிழய்யாவை நோக்கினார்.

''நம்ம பாண்டியன்தானா சார் இது.''

''புதுப்பாண்டியன்.''

தமிழய்யாவின் வார்த்தை பாண்டியனுக்குத் தெளிவாகக் கேட்டது. சிரித்துக்கொண்டே போனார்.

ரங்கராஜனுக்குள் குமைச்சல் குடைய ஆரம்பித்தது. பூச்சுக்கனமேறும் இருளில் செடிக்கும்மல்களை பார்வையால் துழாவிக்கொண்டிருந்தார். எதிரில் தமிழய்யா அமைதியாக உட்கார்ந்திருந்தார்.

''மனசே சரியில்ல சார்.''

''நீங்க வரும்போதே மொகத்துல எழுதி ஒட்டியிருந்தது சாமி.''

''நான் ஊருக்குப் போயிருக்கப்படாது.''

''ஏன் வீட்ல ஏதும் பிரச்சனையா.''

''அங்க புதுசாவா வரப்போறது.''

''அப்புறம் எங்க.''

''நான் ஊருக்குப் போகலன்னா வழியில அந்தக் கண்ணறாவியப் பாத்திருக்கமாட்டென்.''

''புதுசா என்ன கண்றாவி.''

''அத ஏன் கேக்கறேள். சொல்ல நெனைக்கறச்ச வாய் கூசறது.''

''பாக்கிறதுக்குக் கூசலயே.''

''சாயங்காலம் கெளம்பிப் போனென் பாருங்க. பஸ் டாண்டுல ஹிந்தி டீச்சர் நின்னுண்டுருந்தா. பஸ் வர லேட்டாயிடுத்து. பஸ் வரவும் ஏறி வழக்கத்துக்குமாறா பின் சீட்ல ஒக்காந்தா. பஸ் மகாலிங்கபுரம் போறச்ச இருட்டிப் போயிடுத்து. பஸ்டாண்டுல கொஞ்சநேரம் பஸ் நிக்குமோல்லியோ அந்தச் சமயத்துல அவ கீழ எறங்கி நடக்கறா.''

''கடைக்குப் போயிருப்பாங்க.''

''இல்லையே. கடையத் தாண்டின்னா போறா. நேக்கு ஒக்காந்துண்டுருக்க முடியல. கடையோரம் போயி நின்னு பாக்கறென். பாத்தா ரோட்டோரமா நடந்து போயிண்டு ருக்கறா. அங்க ஒரு கார் நிக்கறது. அது ஹெட்மாஸ்டரோட கார்தான். அவ அங்கயே போயிட்டா. கர்மம் கர்மம். நான் பஸ்ல ஏறி கண்ண மூடிண்டென்.''

தமிழய்யாவின் வாயிலிருந்து வார்த்தைகளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் ரங்கராஜன்.

''இதுக்காகவா மனசு சரியில்ல சாமி.''

''இதப் பாத்துண்டு சந்தோஷப்படவா.''

''என்னக்கேட்டா அப்படித்தான் சொல்லுவென்.''

''முடியலயே.''

''அப்ப அது நம்மதப்பு.''

ரங்கராஜனுக்கு பேச வாய்வரவில்லை. தமிழய்யா ஸ்டடிஹாலுக்குக் கூட்டிப் போனார்.

''நாளைக்கு சீயக்கா தேச்சு நல்லா தலமுழுகிக் குளிங்க சாமி.''

ஸ்டடிஹாலில் நிலவிய அமைதியில் இருவரும் கலந்தனர்.

திங்கட்கிழமை ஸ்கூலில் ரங்கராஜனுக்கு நிம்மதியே இல்லை. எந்தப் பாடம் நடத்தினாலும் எரிச்சலாக இருந்தது. போர்டில் எழுதமுடியாமல் அடிக்கடி சாக்பீஸ் ஒடிந்தது. பையன்கள் சின்னச்சந்தேகம் கேட்டால்கூட கடுகடுப்பாகப் பார்த்தார். மற்ற வாத்தியார்களுடன் சகஜமாகப் பேசவில்லை.

சாயங்காலம் கடைசிப்பீரியடு இல்லாததால் வழக்கம்போல் ரூம் திருணைக்கு வந்துவிட்டார். ஸ்கூல் சூழ்நிலையிலிருந்து விடுபட்டிருந்தாலும் பழைய நினைவுகள் மனசைப் பிசைந்து கொண்டிருந்தன.

ருக்மணியைப் பார்ப்பதற்கென்றே தனியாகக் குளிக்கப் போனது அவளுடன் பேசுவதற்காகப் பட்ட பிரயத்தனங்கள் இப்படி ஒவ்வொன்றாகக் கசந்து குமட்டின.

அவளுடன் மானசீகமாக வாழ்ந்த நாட்கள்தான் கொஞ்சமா. அவளது சிரிப்புக்காக வார்த்தைக்காக பார்வைக்காக ஏங்காத நாளுண்டுமா. கடைசி முறையாக அவளிடம் எண்ணங்களையெல்லாம் கொட்டித் தீர்த்து விடணுமென்ற தீர்மானத்துடன் போனதுக்குக் கிடைத்த பதில் இதுதானா. இப்படி உதாசீனப்படுத்திவிட்டாளே.

ஸ்கூல் முடியுமுன்பே ஹெட்மாஸ்டர் கிளம்பிப் போய்விட்டார். அவர் போனதும் ஆபீஸுக்குள்ளிருந்து ருக்மணி வந்தாள். அவள் அக்ரஹாரத்துக்குள் நுழைவதைப் பார்க்காமல் எழுந்து உள்ளே போய்விடலாமா என்றிருந்தது. ஆனாலும் எழுந்திருக்கவில்லை.

அவள் ரூமைக் கடக்கும்போது அவளுக்கு முன்னால் காறித்துப்பினார். செருப்பை திருணையில் தடாலென உதறிவிட்டு உள்ளே போனார். அப்போதும் அவள் ஏறிட்டுப் பார்க்கவில்லை. அவள்கழுத்தில் முளைத்திருந்த மயிர்க்கற்றை

வெள்ளாட்டுத் தாலிபோல் உறுத்தியது. முடிப்பின்னல் உதையும் பிருஷ்ட அசைவின் அலங் கோலமும்...சீச்சீ...

தமிழய்யா ரூமுக்கு வரும்வரை இருப்புக்கொள்ளாமல் தவித்தார். வேட்டியை மடித்துக் கட்டுவதும் அவுத்து உதறுவதுமாக இருந்தார். நிலைக்கம்பத்தில் கைமடக்கிக் குத்தினார். தரையில் அழுத்தி மிதித்துத் தேய்த்தார்.

தமிழய்யா வந்ததும் நடந்த விஷயம் அவ்வளவையும் ஒப்பித்துவிட்டார். தமிழய்யா பதில் பேசவில்லை. பாண்டியனின் விளையாட்டைப் பார்க்க கிரவுண்டுக்குக் கூட்டிப்போனார்.

கிரவுண்டில் பாண்டியன் தங்கச்சாமி மனோகரன் ஒருபுறமும் பெரிய பையன்கள் மறுபுறமுமாக வாலிபால் நடந்துகொண்டிருந்தது. பாண்டியன் ரங்கராஜனிடம் கேட்டார்.

''சார் கொஞ்சநேரம் களத்துல குதிச்சு கைவரிசையக் காட்டுங்களேன்.''

தமிழய்யா சொன்னார்.

''சாமி வெளையாடி முடிச்சாச்சு.''

மூணுபேரும் ரெம்பதூரம் வாக்கிங்போனார்கள். தமிழய்யா ஏதேதோ கதைசொல்ல மற்ற இருவரும் அமைதியாகக் கேட்டுக்கொண்டே பின்தொடர்ந்தார்கள்.

திரும்பும்போது ரெம்ப இருட்டிவிட்டது. அப்படியே குழந்தைச்சாமியின் ஹோட்டலுக்குள் நுழைந்தார்கள். ரூமுக்குப் போய்வரணுமென்றால் நேரமாகிவிடும். நைட்ஸ்டடி பையன்கள் தனியாக இருப்பார்கள்.

குழந்தைச்சாமி கல்லாவிலிருந்து குரல்கொடுத்தார்.

''சாருக்கு சூடா போட்டுக்குடு.''

தமிழய்யா சர்வரிடம் சொன்னார்.

''எங்கள ரெம்பச் சூடேத்த வேண்டாம். இருக்கிறதக் குடுங்க.''

சாப்பிட்டு முடித்ததும் பாண்டியன் நழுவினார்.

''சார் நீங்க நடந்துக்கிட்ருங்க. நான் கடைக்குப் போயிட்டு வாறென்.''

''ஏன் பாண்டியன் ஊதுற தொழில எப்ப நிறுத்தப் போறீங்க.''

பாண்டியன் பேச்சை மென்று விழுங்கினார்.

''இண்ணைக்கோட வுட்டுத்தொலச்சிருவென் சார். அதுக்கொரு முழுக்குப் போட்டுட்டு ஒங்ககிட்டச் சொல்லலாம்னு இருந்தென். அதுக்குள்ள மாட்டிக்கிட்டென்.''

''நாளைக்கும் இதையே சொல்லமாட்டீங்களே.''

''ஒங்கமேல சத்தியமா சொல்லமாட்டென்.''

''அப்படின்னா ஒருபாக்கெட் வாங்கி சாவகாசமா ஊதி முடிச்சிட்டு வாங்க. இந்தவாரம் என்னென்ன காரியம் செய்யணுமிங்கிறது ஞாபகமிருக்குதுல்ல.''

பாண்டியனுக்குப் புரிந்துவிட்டது.

''நல்லா ஞாபகமிருக்குது சார்.''

''அப்படின்னாச் சரி.''

பாண்டியன் அவசரமாக கடைக்குப் போகிறமாதிரி போக்குக்காட்டி பஸ்டாண்டுக்குத் தெருவில் திரும்பினார்.

தமிழய்யா ரங்கராஜனுடன் வரும்போது சாதாரணமாகக் கேட்டார்.

''சாமிக்கு இப்ப கோவம் தீந்துருச்சா.''

ரங்கராஜன் இருட்டுக்குள் நிற்கும் வீடுகளை வெறித்தபடி அமைதியாக நடந்துவந்தார்.

**ஸ்**டடிஹால் ஜேஜே என்றிருந்தது. சொல்லிவைத்தாற் போல் முக்கால்வாசிக்குமேல் வாத்தியார்களின் தலைகள் தெரிந்தன. கிராப்ட்முதல் டிராயிங்வரை ஆஜர். கிருஷ்ணசாமி கூட தட்டுப்பட்டார். சுப்பையாதாஸும் வந்திருந்தார். ரெண்டுபேரும் வந்தபிறகு குழந்தைச்சாமி வராமலிருப்பாரா.

தமிழய்யாவுக்குச் சந்தேகம். பாண்டியனைப் பார்த்தார்.

''பாண்டியன் ஏற்பாடா இது.''

''நமக்குத் தெரியாது சார். வையாபுரி வேல.''

''நீங்க சொல்லாமலா.''

''உண்மையா நான் சொல்லல சார்.''

''எப்படியோ படிப்பு நடந்தாச் சரி.''

பையன்களுக்கு ஒரே குஷி. பாண்டியன் தமிழய்யாவிடம் அனுமதி கேட்டு ஒரு பையனைப் பாடச் சொல்லி மேஜையில் தாளம் போட்டார் . பையன் அனுபவித்துப் பாடினான்.

**''எத்தனை காலந்தான் ஏமாற்றுவார்**

**இந்த நாட்டிலே**

**சொந்த நாட்டிலே.''**

பாண்டியன் துணைக்குப் பாடினார்.

**''சொந்த நாட்டிலே.''**

மேத்ஸ் மனோகரன் தமிழய்யாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். சைன்ஸ் தங்கச்சாமியும் கிராப்ட் வாத்தியாரும் சேர்க்கை. கிருஷ்ணசாமி சுப்பையாதாஸ் டிராயிங்மாஸ்டர் மூணுபேரும் ஒரு கூட்டு. குழந்தைச்சாமி பாண்டியனுக்குத் துணை. ரங்கராஜன் தனிக்கட்டை.

சத்தம் அதிகமாக இருப்பதைக் கேட்டு வாட்ச்மேன் வீரணன் வந்து ஹாலில் எட்டிப் பார்த்தான். கச்சேரி உச்சக் கட்டத்தில் இருந்தது. இதுவும் ஒரு படிப்பாயிருக்கும் என்ற முடிவில் தலையாட்டிக்கொண்டு போய்விட்டான்.

பாட்டு முடிந்தது. பையன்கள் படிக்க உட்கார்ந்தார்கள். பாண்டியன் கிராப்டைக் கிண்டினார்.

''என்னசார் கொழாயில கஞ்சா கிட்டிச்சமாதிரி மூக்குல பொடிய ஏத்துறீக. விசேசம் ஏதும் உண்டா.''

கிராப்டின் மூக்கு சுறுசுறுப்படைந்தது.

''சார்வாளுக்கு வேற ஆள் கெடைக்கலயா.''

''சும்மா தப்பிக்காதங்க. ரெண்டுபையங்கள கிளாஸ்ல வச்சு அடிச்சீகளாம். ஒருத்தனுக்கு லேசான அடியாம். மத்தவனுக்கு கனமா குடுத்தீகளாம். அதென்ன பாரபச்சம். அடிக்கிறதுக்கு முந்தி ரெண்டுபேரவும் கூப்புட்டு ரகசிய வெசாரண நடந்துச்சாம். சமாச்சாரத்தச் சொல்லுங்க.''

எல்லாரும் கிராப்டைப் பார்த்தார்கள். அவருக்கு ஒரு மாதிரியாகப் போய்விட்டது.

''அய்யோ ராமாராமா. அத யாரு ஒங்ககிட்டச் சொல்லித் தொலச்சது.''

''எனக்குத் தெரியாம இந்த ஸ்கூல்ல எதும் நடந்துருமா சார்.''

''பையங்க சொல்லலன்னா சிவன்கோயில் கம்பியில புல்லப்ஸ் எடுக்கச் சொல்லி கீழ ஸ்டுல உருவிவிட்ருவீங்க.''

சிரிப்படங்கியபின் பாண்டியன் தூண்டினார்.

''சமாச்சாரத்தச் சொல்லாம மழுப்புறீகளே.''

''விடமாட்டீங்களே...சார்வாள் நடந்தது இவ்வளவுதான். எட்டாங்கிளாஸ்ல ரெண்டு பையங்களுக்குச் சண்ட. கெட்ட வார்த்த சொல்லித் திட்டீருக்கான். பொண்ணுகெல்லாம் சீச்சீன்னு மொகத்த மறச்சிருக்குது. அந்தநேரம் பாத்து நான் வெளிய போயிட்டென்.''

''மூக்குல பழைய சரக்க வெளியேத்தீட்டு புதுச்சரக் கேத்தப் போயிட்டீகளாக்கும்.''

''நான் உள்ள வரவும் சண்ட நின்னுபோச்சு. என்ன நடந்ததுன்னு கேட்டென். எவனும் சொல்லல.''

''போலீஸ் வெசாரணதான்.''

''ஒரு பொண்ணு எந்திரிச்சு கெட்டவார்த்த பேசுனாங்க சார்னு சொன்னது. சண்டபோட்டவங்களக் கூப்புட்டு என்ன பேசுனாங்கன்னு தெரிஞ்சுக்கிறவேண்டாமா.''

''கண்டிப்பாத் தெரிஞ்சுக்கிறணும்.''

''ஒருத்தன் பேசுனத மத்தவன்கிட்டக் கேட்டு வார்த்தைக்குத்தக்க ஒதகுடுத்தென்.''

டிராயிங்மாஸ்டர் ஆமோதித்தார்.

''நியாயமான தண்டனசார். சண்ட எப்படி ஆரம்பிச்சதாம்.''

''ஒரு பொண்ணு ஒருத்தன்கிட்ட கட்டபொம்மனுக்குக் கொழந்தையிருந்துச்சான்னு சந்தேகம் கேட்டதாம். கட்ட பொம்மனால எப்படி கொழந்த பெறமுடியும்னு இவன் மறுசந்தேகம் கேட்ருக்கான். இது மத்தவனுக்குப் புடிக்கல. சண்ட தொடங்கியிருச்சு.''

கலகலப்புக்கிடையே பாண்டியன் அக்கறையாகக் கேட்டார்.

''என்னவார்த்த பேசிக்கிட்டாகனாம் சார்.''

''சார்வாள் ஒங்களுக்குத் தெரியாத வார்த்தையா பேசப் போறான்.''

பாண்டியன் கிராப்டை விட்டுவிட்டு ரங்கராஜனை நோண்டினார்.

''ரங்கராஜன் சார் கலியாணத்துக்கு நம்ம பாட்டுக் கச்சேரிதான். கிருஷ்ணசாமி சார் காய்கறி வாழஎல குடுத்து றணும். தாஸ்சார் சுத்தமான பால் அனுப்பணும். பலசரக்கு தீத்தம் சார் பொறுப்பு. கொழந்த சாரோட ஹோட்டல் மாஸ்டர் சமையல். வெத்தல ரெம்ப வாங்கிப்போடுங்க. தமிழய்யாவுக்கு வயிறு நெறையணும்.''

ரங்கராஜன் சலனமில்லாமல் உட்கார்ந்திருந்தார். அவரது நினைவுகள் ஹாலில் இல்லை.

அந்தநேரம் கிராப்டிடம் பொடி வாங்கி உறிஞ்சிய கிருஷ்ணசாமி வேட்டுத்தும்மல் போட்டார்.

''நீங்க கணக்குவழக்குப் பேசறதுக்கு எடஞ்சலாருக்கா. பொறுங்க சார் நாங்க வெளிய தப்பிச்சுக்கிறொம்.''

பாண்டியன் ஓடுவதுபோல் பாவனைசெய்தார். கிருஷ்ணசாமி மூக்குச்சுளிப்பை நிமிர்த்தி பொடியை மெச்சினார்.

''நல்ல காரம் பொடிக்கு.''

''காரம் மணம் குணம் நிறைந்த என்.வி.எஸ்.பட்ணம் பொடி...ஒங்க கெணறு தோண்டுறதுக்கு வேட்டு மருந்து தேடி எங்கெங்கயோ அலஞ்சீகளே கைக்குள்ளயே சரக்க வச்சுக்கிட்டு.'

கிராப்ட் மூக்குத்தூர்வையை கர்சீப்பால் வாங்கிக்கொண்டு லேசானார்.

''சார்வாள் மூக்கும் கெணறுமாதிரிதான்.''

''ஆமாமா. கெணறேதான். சார் இதுல எந்தச் சரக்கு நல்லாருக்கும்.''

''என்.வி.எஸ்.தான் காட்டம்.''

''அது கெடைக்காற நேரத்துல என்ன செய்வீக.''

''ஏழாயிரம் பண்ண துரைராஜ் பொடி கூட்டம்புளி ஜோஸ்யர் பொடி எது கெடச்சாலும் போட்டாகணும். மண்ணு போல இருக்கும். சுகந்தம்னு ஒண்ணு உண்டு. கமகமக்கும்.''

''இனிப்பு புளிப்புன்னு எதும் கெடையதா சார்.''

''போட்டுப்பாருங்க தெரியும்.''

''போட்டா அது வெளிய இழுத்துட்டு வாற சங்கதிய வாங்கிக்கிறதுக்கு நீங்கதான் துண்டு நெய்துகுடுக்கணும். அதக் கேக்க மறந்துட்டனே. ஏன் சார் எல்லாருக்கும் துண்டு குடுத்திருக்கீகளே எனக்கு இல்லையா. வேர்வையத் தொடச்சுக்கிறலாமில்ல.''

''நீங்க வாங்களேன் சொந்தமா நெய்துக்கிறலாம். பையங்க அப்படித்தான் நெய்துக்கிட்டாங்க.''

''தமிழய்யாவுக்கும் அப்படித்தான் துண்டு கெடச்சதோ. அவருக்கு வாயால நெய்யிறதுக்கே சரியாருக்கும். பாண்டியனப் புடிக்கலன்னா அதுக்குச் சாக்குச் சொல்றீகளாக்கும்.''

''சார்வாள் நீங்க மைனர். நம்ம துண்ட தோளுமேல போடுவீங்களா.''

''அது சரி.''

தமிழய்யா ஓரப்பார்வையில் கவனித்துக்கொண்டிருந்தார். ரங்கராஜனுக்கு மனசு எதிலும் ஒட்டவில்லை.

ஹாலுக்குள் அரட்டையடங்கி கொஞ்சநேரமாகியிருந்தது. ஓ ஊரென்று ஒருபையன் மூலையில் குமித்துக்கிடந்த பழைய மரச்சாமான்களுக்குள்ளிருந்து கிளம்பிவந்த பெருச்சாளியை விரட்டிக்கொண்டு ஓடினான். எல்லாப் பையன்களும் எழுந்துவிட்டார்கள். நல்ல வேடிக்கை.

சுவரில் சாவகாசமாகச் சாய்ந்திருந்த தமிழய்யா இதென்னடா வம்பாகப்போயிற்று என்று நிமிர்ந்து உட்கார்ந்தார். பையன்கள் கையில் கிடைத்ததை எடுத்துக்கொண்டு கெலித்தார்கள்.

ரங்கராஜன் மேஜைமீது உட்கார்ந்து கொண்டார். பாண்டியன் மரச்சட்டமொன்றைத் தேடிப்பிடித்துப் பாய்ந்தார். தங்கச்சாமிக்கு வயிற்றைக் கலக்கியது. பெருச்சாளி லேபரட்டரிக்குள் நுழைந்துவிட்டால் என்ன செய்வதென்று தவியாய்த் தவித்தார்.

முதலில் காலியாகப்போவது கண்ணாடிக் கூண்டுக்குள்ளிருக்கும் எலும்புக்கூட்டு மனுசன்தான். சுக்குநூறாகிவிடுவான். அப்புறம் ஒவ்வொரு எலும்பாக எடுத்துக் காட்டித்தான் பாடம்நடத்தணும்.

பௌதிகத்தராசு குடுவை டியூப் எல்லாம் என்ன கதியாகுமோ. அமிலம் சிந்தினால்...அதை நினைத்தாலே மயக்கம் வந்தது.

நல்லவேளை பெருச்சாளி பாண்டியனிடம் மாட்டிக் கொண்டது. அடித்துத் தூக்கிவந்து ஹாலில் போட்டுவிட்டு தோரணையாகப் பார்த்தார். தங்கச்சாமிக்கு இன்னும் படபடப்பு அடங்கவில்லை.

''பாண்டியன் சார் நீங்களும் ஸ்டூடன்டாயிட்டீகளே.''

''நம்ம போகலன்னா அடிபடுமா சார். ஒங்க லேப் அரோகராதான்.''

பெருச்சாளியைச் சுற்றிநின்று எல்லாரும் பிரஸ்தாபித்தார்கள். பழையபழைய கதைகளைச் சொல்லிமாளவில்லை. சுண்டெலி கரப்பான் தேள் என்று பேச்சு நீண்டுகொண்டே போனது. முடிவாக பாண்டியன் ஒரு கதையைச் சொல்லி வைத்தார்.

''ஒருநா பாருங்க நான் செகண்ட் ஷோ சினிமா பாத்துட்டு வாறென். ரோடு வெறிச்சுனு கெடக்குது. மார்க்கெட் முக்குல திரும்புனா சாக்கடப் பக்கமிருந்து பண்ணிக்குட்டிமாதிரி ஒண்ணு வந்து நடுரோட்ல மேயிது. கவனிச்சுப் பாத்தா பெரிய பெருச்சாளி. மார்க்கெட் சந்துலருந்து அத ஒரு பூன பாத்துக்கிருச்சு. ஒடனே வேகமா பாஞ்சுவருது. பெருச்சாளி கொஞ்சங்கூட அலட்டிக்கிறல. இப்ப என்ன செய்யப்போறன்னு ரெண்டு காலவும் தூக்கீட்டு எதுத்து நிக்குது. பூன சடன்பிரேக் போட்டு ஏறிட்டுப் பாக்குது. எக்குத்தப்பா மாட்டிக்கிட்டமோன்னு அதுக்குப் பயம். இதெல்லாம் நம்மகிட்ட வச்சுக்கிறாதன்னு பெருச்சாளி மொறைக்குது. சும்மாதான் வந்தன்னு பூன வால மடக்கீட்டு வந்தவழியே திரும்பி நடக்குது. ஒண்ணும் நடக்கறாதுபோல பெருச்சாளி அதுபாட்டுக்கு உருண்டுகிட்டே போகுது. எனக்குக் கோவம் தாங்கல. இருட்டுக்குள்ள கெடச்சத எடுத்துக்கிட்டு பூனமேல ஒரு எறிவுட்டென். அதுபோன எடம் தெரியல.''

சூழ்ந்து கவனித்துக்கொண்டிருந்த பையன்கள் சிறிது நேரத்தில் விரண்டோடி அவரவர் இடத்தில் உட்கார்ந்து அமைதியாக புஸ்தகங்களை முணுமுணுத்தார்கள். மற்ற வாத்தியார்கள் ஓரத்தில் ஒதுங்கி நின்றார்கள். ரங்கராஜன் மட்டும் மேஜையில் உட்கார்ந்தவாறு பாண்டியனையே பார்த்துக்கொண்டிருந்தார்.

நேரங்கெட்ட நேரத்தில் ஹெட்மாஸ்டர் அங்கே வந்து நிற்பாரென்று யாரும் எதிர்பார்க்கவில்லை. தமிழய்யாவின் முகத்தில் கலவரம். வையாபுரி செய்த ஏற்பாடு இப்போது விளங்கியது. ஹெட்மாஸ்டர் வருவதாகச் சொல்லியிருப்பார்.

அவன் மற்றவர்களிடம் இந்த விஷயத்தை வெளியிடாமல் ஸ்கூலுக்கு வரச்சொல்லியிருப்பான். அவன்மேல் குற்றமில்லை. நைட்ஸ்டடியை எல்லா வாத்தியார்களும் அக்கறையாகக் கவனித்துக்கொள்வதாக ஹெட்மாஸ்டர் நினைக்கலாம். ஆனால் காரியம் கெட்டுப்போயிற்றே.

ரங்கராஜன் இறங்கிக்கொண்டார். ஹெட்மாஸ்டரின் அமைதி கலையவில்லை.

''மிஸ்டர் ரங்கராஜன் பாடம் எப்படிச் சொல்லிக் கொடுக்கிறீங்க.''

ரங்கராஜன் பேசவில்லை. பாண்டியன் சொன்னார்.

''ஸ்கூலுக்குள்ள பெருச்சாளி கெடந்துருக்கு சார். அதுபாருங்க இண்ணைக்குச் சாகணும்னு இருந்துருக்கு.''

பாண்டியன் பெருச்சாளியை காலால் தள்ளினார். ஹெட்மாஸ்டர் ரங்கராஜனை நோக்கினார்.

''அப்ப இன்றைக்கு நைட்ஸ்டடி பெருச்சாளிப்பாடம் இல்லையா மிஸ்டர் ரங்கராஜன்.''

கார் வந்த சத்தங்கூட கேட்கவில்லையே என்று யோசித்துக்கொண்டிருந்த ரங்கராஜனிடமிருந்து படக்கென்று பதில்வந்தது.

''சரித்திரமெல்லாம் படிச்சு முடிச்சாச்சு சார்.''

எல்லாரும் ரங்கராஜனைப் பார்த்தார்கள். ஹெட்மாஸ்டர் நிதானமிழக்கவில்லை.

''சரித்திரத்துலதான் நம்ம பையங்க வீக்கா இருக்காங்க. நீங்க என்னன்னா படிச்சு முடிச்சாச்சுன்னு சொல்றீங்களே.''

''நம்ம சரித்திரமே ரொம்ப வீக். அதுல இன்னும் படிக்கிறதுக்கு என்ன இருக்கறது.''

''அதனாலதான் பெருச்சாளியப்பத்திப் படிக்கிறாங்களோ.''

ரங்கராஜன் தயங்கவில்லை.

''பெருச்சாளி அக்கரரரத்துக்குள்ள நொழஞ்சா கவலை யில்ல. ஸ்கூலுக்குள்ள நொழஞ்சு எங்கமேல வந்ததாலதான் இவ்வளவும்.''

''மிஸ்டர் ரங்கராஜன் நீங்க பேசறது சரியால்ல. ஒங்க டியூட்டிய கரெக்டா செஞ்சான நான் ஏன் கேக்கிறென்.''

ஹெட்மாஸ்டர் கழுத்தில் தங்கச்சிலுவையைத் தடவியபடி ஏறிட்டுப்பார்த்தார்.

ரங்கராஜனின் பார்வையும் நிமிர்ந்தது.

''அதக் கேக்கறதுக்கு ஒரு யோக்யத வேணும்.''

ரங்கராஜனுக்கு உடம்பு படபடத்தது. தமிழய்யா ஓடிவந்து அவரைக் கூட்டிக்கொண்டு வெளியே போனார். கொஞ்சநேரத்தில் காரியம் இவ்வளவுக்கு முற்றிவிட்டதே என்று அவருக்கு மனசு அடித்துக்கொண்டது. வெற்றிலையைத் துப்பிவிட்டு சமாதானப்படுத்தினார்.

''உணர்ச்சிவசப்படாதங்க சாமி. தயவுசெஞ்சு அமைதியாருங்க.''

மனோகரன் ஹெட்மாஸ்டருடன் ஆபீஸ்பக்கம் போனார். ஆபீஸ் வாசலில் வையாபுரியும் வீராணனும் காரைக் காத்து நின்றார்கள்.

பாண்டியனுக்குப்பின்னால் மற்ற வாத்தியார்களும் பையன்களும் முகத்தில் ஆச்சரியம் அப்பியபடி எட்டிப் பார்த்தார்கள். கார் புறப்பட்டு மறையும்வரை அவர்களுக்கு வார்த்தை வரவில்லை.

பேச்சு முற்றிச் சூடுபிடிக்கும்போதே ரங்கராஜனைத் தள்ளிக்கொண்டு போய்விடலாமா என்று பாண்டியனுக்குத் தோணத்தான் செய்தது. ஆனாலும் வண்டி மோதியடங்கட்டும் என்று கட்டுப்படுத்திக்கொண்டார். ஒரு விதத்தில் அவருக்கு வெட்கமாகக்கூட இருந்தது.

வராண்டாவில் தமிழய்யா இன்னும் ரங்கராஜனுக்குச் சமாதானம் சொல்லிக்கொண்டிருந்தார்.

''சாமி நீங்க இப்படி கோவப்படுவீங்கன்னு நான் எதிர்பாக்கவேயில்ல. தனிப்பட்ட வெவகாரங்கள பொது எடத்துல வச்சுப் பேசியிருக்கக்கூடாது.''

''நீங்களுந்தான் வயசானவங்க சார். இப்படியா நடந்துக்கறேன்.''

''நீங்க அத மனசுல வச்சுக்கிட்டுப்பேசுறீங்கன்னு நெனைக்கிறென்.''

''எதப்பேசி என்னபண்ணறது. அந்தப் பொம்மானட்டிக்கு ஒரு பிரம்மச்சாரிக் கருப்பன் கெடைக்கல பாருங்க.''

ரங்கராஜனுக்கு குரல்கம்மி கண்ணில் நீர்கோர்த்தது. தமிழய்யா அவரது கையைப் பற்றிக்கொண்டு ஸ்டடி ஹாலுக்குள் நுழைந்தார்.

**அ**துக்குப்பிறகு எவ்வளவோ நடந்துவிட்டது.

அம்மைபோட்ட முகம்போல் ஸ்கூல் களையிழந்து காணப்பட்டது. பையன்கள் ரங்கராஜனைப் பார்த்ததும் காதைக் கடித்தார்கள். பெண்கள் புறாப்பார்வையிலும் பேச்சிலும் பரிமாறிக் கொண்டார்கள்.

அவர் எதையும் கண்டுகொள்ளவில்லை. வழக்கம் போல் பாடம் நடத்தினார். ஒரு வித்தியாசம். பையன்களை இப்போது திட்டுவதில்லை.

டீச்சர்ஸ் ரூமில் ஒரு கட்டாய அமைதி உட்கார்ந் திருந்தது. ரெண்டுபக்கமும் பகைத்துக்கொள்ள முடியாத தர்மசங்கடம் வாத்தியார்களுக்கு. கிராப்ட்கூட பொடிச் சிரிப்பைச் சுருக்கிக் கொண்டார். தங்கச்சாமிக்கும் மனோகரனுக்கும் கிளாஸ்மீது ரெம்பக் கரிசனை வந்திருந்தது. அவசரம்அவசரமாக ஓடிப்போனார்கள். அவர்களுடன் வலியப்பேச பாண்டியனுக்கு மனசு வலித்தது. இதெல்லாம் ஏன்ஏன் என்று தமிழய்யாவுக்கு அடிக்கடி வெற்றிலை விக்கியது.

பேருக்குப் பிரேயர் நடந்தது. பையன்கள் கண்ணை லேசாகத் திறந்து ரங்கராஜனுக்கும் ஹெட்மாஸ்டருக்கும் கோடுபோட்டார்கள். சிலகோடுகள் ருக்மணியையும் சேர்த்து முக்கோணமிட்டன.

''ஒருநாளைக்கு நமக்கும் இந்தக்கதிதான்'' என்று ராஜேஸ்வரி பாண்டியனை வருத்தமாகப் பார்த்துவிட்டுப் போனாள். ''நம்ம கதையே வேறம்மா'' என்று அவர் சிரித்துச் சமாளித்தார்.

ரங்கராஜன் சுரத்தில்லாமல் ஊருக்குப் போய்வந்தார். வாரந்தோறும் அவரை அனுப்பிவைப்பதில் தமிழய்யா கவனமாக இருந்தார். ருக்மணி எப்போதாவதுதான் ஊருக்குப் போனாள். வையாபுரி துணைக்கு வந்து முந்தின பஸ்ஸிலோ பிந்தியோ அனுப்பிவைத்தான். திங்களன்று பஸ்டாண்டில் காத்திருந்து கூட்டிப்போனான். ருக்மணியின் வழக்கமான சிரிப்பில் இப்போது குனிவு கொஞ்சம் கூடியிருந்தது.

அன்றைக்கு மதியம் பாண்டியன் தமிழய்யாவிடம் சொல்லிக்கொண்டு ஹோட்டலிலிருந்து முந்தியே திரும்பிவிட்டார். ஸ்போர்ட்ஸ் ரூமில் கணக்கெடுப்பு பாக்கியிருந்தது. வேம்பு நிழலில் நின்று சற்று வேர்வையைத் துடைத்தவருக்கு தற்செயலாக வையாபுரியைப் பார்த்ததும் திக்கென்றது. அக்ரஹாரத்துக்குள்ளிருந்து கேரியர் சுமையுடன் வந்துகொண்டிருந்தான்.

''வே பஸ்டாண்டுக்கு இப்படியொரு வழியிருக்குதா.''

அவன் நிற்கவில்லை.

''சார் அதுக்குள்ளயா சாப்பிட்டுட்டு வந்துட்டீக.''

''இப்ப நிக்கப்போறயா இல்ல கால ஒடிச்சுக் கையில குடுக்கணுமா.''

அவரது அரட்டலைக் கேட்டு அவன் பயந்துதான் போனான். நெருங்கிவந்து சொன்னான்.

''சார் கோவிச்சுக்கிறாதங்க.

''நான் சீக்கிரமா சாப்பிடுதறப்பத்தி ஒனக்கென்ன கவலன்னு கேக்கென். வெயிலுக்கு நிக்கிறதுகூட ஒங்களுக்கு எடஞ்சலாருக்குதா.''

''நான் கேட்டது தப்புதான் சார். போயும்போயும் ஒங்ககிட்டயா மாட்டணும்.''

''மாட்டிக்கிற அளவுக்கு என்ன நடந்துபோச்சு.''

''பெறகு வெவரமாச் சொல்றென்.''

''போயிட்டுவா கவனிச்சுக்கிறென்.''

''ஒங்களுக்குத் தெரியாதா பஸ் ஸ்டாண்டு அக்ராரத்துக்கு மாறுனது.''

''அது எப்ப.''

''இண்ணைக்குத்தான்.''

அவன் நாலெட்டில் தாவி ஆபீசுக்குள் நுழைந்து விட்டான்.

சாயங்காலம் ரெண்டுபேரும் சிவன்கோயிலில் ஒரு பீரியடு பேச்சுப் போட்டார்கள். அவர் அவனை கிடுக்கிப் பிடியில் விஷயத்தைக் கக்கவைத்துவிட்டார்.

''வே எங்கிட்டச் சொல்லன்னா தூணுல கெட்டிவச்சுத் தோல உரிச்சிருவென்.''

''சாமிக்குத் தெரிஞ்சா வெவகாரம் முத்திக்கிருமோன்னுதான் வாய மூடீட்டு இருந்துக்கிட்டென்.''

''அப்படியும் என்னாச்சு. அண்ணைக்கு ராத்திரி மொத ஷோ நடந்ததப் பாத்துட்டுத்தான இருந்த. ரெண்டாவது ஷோ எண்ணைக்கு நடக்கப்போகுதோன்னு மனசு கெடந்து அடிச்சிக்கிருது.''

''கதையே முடிஞ்சுபோனப்பெறகு அதப்பத்தி பேசுறது நல்லாத் தெரியல சார்.''

''முடிஞ்சே போச்சா.''

''கலியாணமாகி ரெம்பநாளாச்சு.''

''வே நெசந்தானா.''

''ஒங்களப்போலன்னு நெனச்சீகளா. காரியம் கமுக்கமா நடந்துருச்சு.''

''எங்கவச்சு நடந்தது.''

''வேதக்கோயிலா இந்துக்கோயிலான்னு தெரியல.''

''இது அய்யாவோட வீட்டுக்குத் தெரியுமா.''

''தெரியாதுன்னுதான் நெனைக்கென். ஏன்னா வீட்டுல ஆருமே இல்ல.''

''எங்கபோயிட்டாக.''

''பையன் ரெம்பநாளைக்கு முந்தியே வெளிநாட்டுக்குப் போயிட்டாரு. அப்படியே அம்மாவவும் கூப்புட்டுக்கிட்டாரு போலருக்கு.''

''அய்யாவுக்கு உள்நாடுதான் புடிச்சுப்போச்சாக்கும்.''

''ஒங்களப்போல சொந்தநாட்டுமேல ஒரு பத்துதல்தான்.''

''எனக்கு ஒன்முதுகுமேலதான் பத்துதல். அடப்பாவிகளா எல்லாருமாகச் சேந்து சாமியக் கவுத்தீட்டீகளே.''

''அவரா கவுந்துக்கிட்டா அதுக்கு ஆரு பழி. டீச்சரம்மா வோட பூர்வீகம் தெரிஞ்சா இப்படிப் பேசமாட்டீக.''

''பூர்வீகத்துக்கென்ன.''

''கலப்படந்தான். தாயி அய்யமாரு. தகப்பன் மொதலியாரு. பெரிய சவுளிக்கட. சொத்துசொகம் ஏராளம். ரெண்டாந்தாரமானாலும் அவரோட இருக்கிறவரைக்கு மதிப்பு மரியாதைக்குக் கொறச்சலில்ல. டீச்சரம்மா ஒரே பொண்ணு. செல்லமா வளந்தது.''

''அப்பா வுட்டுட்டுப் போயிட்டாரா.''

''மனுசன் திடீர்னு கண்ணமூடீட்டாரு. பெறகு கேக்கணுமா. ஒதுக்கிவச்சு வெரட்டியடிச்சிட்டாக.''

''வெறுங்கையோடயா.''

''போனாப் போகுதுன்னு ஆத்தோரம் கொஞ்சம் வயலு எழுதிவச்சிருக்காக. அப்ப டீச்சருக்குச் சின்னவயசு. பெராமணக்குடியிலயும் ஒட்டமுடியாம இங்கயும் சேர முடியாம தாயும் மகளும் ரெண்டுங்கெட்டானா அலக் கழிஞ்சிருக்காக. அந்தக் கஸ்டத்துலயும் டீச்சரு படிச்சு முன்னுக்கு வந்துருக்குது பாருங்க அது பெரியகாரியந்தான்.''

பாண்டியனுக்கு ருக்மணி மீதிருந்த ஒருவிதமான வெறுப்பு குளிரத் தொடங்கியது.

''அதுக்கு ஒரு வைராக்யம் வேணும்.''

''அதப் பொண்ணுகேட்டு வந்தவுகெல்லாம் சாதி என்னன்னு கௌறி கேட்டுட்டு அவருமில்லாம திரும்பிப் போயிட்டாக. என்ன சாதின்னு சொல்றது. அய்யமொதலி யாருன்னா இல்ல மொதலியாரய்யருன்னா. இதெல்லாம் தெரிஞ்சா நம்ம சாமி ஏத்துகிருவாரா. மத்தவுகளப் போலதான் இவரும் இருப்பாருன்னு நெனச்சு டீச்சரம்மா ஒதுங்கீருச்சு. சாமியும் வுடாம தொயங்கெட்டித்தான் பாத்துருக்காரு. அம்மா எடங்குடுக்கல. அதுக்குப் பயம் என்னன்னா வெசயம் தெரிஞ்சு அக்ராரத்துல குடியிருக்க முடியாமப் போயிருமோன்னு.''

''நம்ம சாமியப்பத்தித் தப்புக் கணக்குப் போட்டுருச்சே. நீ எங்கிட்ட ஒருவார்த்த சொல்லியிருந்தா சரிப்படுத்தி யிருப்பனே.''

''ஆருட்டயும் சொல்ல வேணாம்னு அழுகாற கொறையா கேட்டுக்கிருச்சு. ஒருத்தரோட பெழப்பக் கெடுத்துறப்புடாதே.''

''இது நல்ல பெழப்பாக்கும்.''

''எவ்வளவு காலத்துக்குத்தான் பாதுகாப்பில்லாம இருக்கிறது. காலம்போற போக்கப் பாத்தா இந்தி நெலச்சுக் கிறாதுன்னு தோணுது. அப்ப நடுத்தெருவுலதான் நிக்கணும். அதுக்கிது எவ்வளவோ தாவல.''

''சமாளிக்காதவே.''

''நடக்கிற நடப்பத்தான் சொன்னென். டீச்சரம்மாவ சாமி ஏத்துக்கிருவாருன்னே வச்சுக்கிருவொம். குடும்பத்துல ஒத்துக்கிருவாகளா. ஆயிரம் சாத்தரம் கொலம் கோத்தரம் குடுமி வடக்கயா தெக்கயான்னு பாக்கிற சனங்களாச்சே. அவரோட தங்கச்சியவேற கரையேத்தணுமே.''

வையாபுரிக்கு இவ்வளவு கூறுக்கணக்கு எப்படிவந்தது என்று பாண்டியனுக்கு உள்ளுக்குள் பலத்த யோசனை. வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

''நீ சொல்றது வாஸ்தவந்தான்.''

''நான் ஒண்ணு கேக்கென். தப்பா நெனச்சுக்கிற மாட்டீகளே.''

''சொல்லு.''

''டீச்சரம்மா அக்ராரத்துப் பொண்ணுன்னுதான சாமி இம்புட்டுக் கணக்குப் போட்ருக்காரு. இதே வேதக்கார எட்மாஸ்டர் அய்யராருந்து இல்ல அந்தம்மா வேற ஒரு அய்யரத் தேடிக்கிட்ருந்தா பள்ளிக்கூடத்துக்குள்ள பத்துப் பேருக்கு முன்னால சண்ட நடந்துருக்குமா. என்னக் கேட்டா நடந்துருக்காதுன்னுதான் சொல்லுவென்.''

''வே சாமி டீச்சருமேல வச்சிருக்கிற பிரியத்தக் கேவலப்படுத்துற.''

''வெளிய ஆயிரம் பேசுனாலும் உள்ள இருக்கிறத அழிக்கமுடியாதுசார். அது மூங்கில்பண்ணமாதிரி.''

பாண்டியனுக்கு மூஞ்சியில் பந்துமோதிய அதிர்ச்சி. வையாபுரி அவரைத் துருவினான். அவர் தலைநிமிர்ந்தார்.

''எல்லாரவும் சகட்டுமேனிக்கு எடபோட்டுறாத.''

''நீங்க என்னசெய்றீகன்னு பாக்கத்தான போறென்.''

அவருக்கு பந்து கையில் அகப்பட்டுவிட்டது.

''நான் கஸ்டப்படுறத வேடிக்கபாக்கப் போறயாக்கும். வள்ளுவர் என்ன சொல்லியிருக்காரு தெரியுமா. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு. ஒன்ன நண்பன்னு சொல்லிக்கிறதுக்கே வெக்கமாருக்கு.''

''நம்மளப்பத்தி அப்படியா நெனச்சுக்கிட்டீக. ஒருத்தர மனசுக்குப் புடிச்சுக்கிருச்சுன்னா அவருக்காக உசிர வுடுவனாக்கும்.''

''அப்ப என்னப் புடிக்கலன்னு சொல்லு.''

''ஆமா புடிக்கல.''

''அய்யாவுக்கு புடிக்கணும்னா எப்படி நடந்துக்கிறணும்.''

''மொதல்ல ஒங்க வீட்டுக்குக் கூட்டீட்டுப் போகணும்.''

''அதத்தான் நானும் நெனச்சுக்கிட்ருக்கென். நீ மட்டும் ஒதவிக்கிருந்தாப்போதும். எடுத்த காரியத்த நடத்தி முடிச்சிருவென்.''

''ஒங்களுக்கில்லாற ஒதவியா. சொல்லுங்க சார். காத்துருக்கென்.''

''வாற வியாழக்கெழம சாயங்காலம் பெறப்பட்டு எங்க ஊருக்குப் போறொம். ராத்திரி அங்க தங்கீட்டு மறுநா மதியத்துக்குப்பெறகு அருப்புக்கோட்டைக்குக் கெளம்பி டீச்சரு வீட்டுலபோயி வுழுந்துரு. என்ன பிரயாசப்பட்டும் டீச்சரோட அப்பாவ கையோட கூட்டீட்டு சனிக் கெழமைக் குள்ள பாறக்கொளம் வந்துசேந்துறணும். தெரிஞ்சதா. நான் எப்படியும் எங்கய்யாவ அசத்தித் தள்ளீட்டு வந்துறென்.''

''கத அம்புட்டு வளந்துருச்சா. அப்ப தாமதிக்கப்புடாது. மணியடிக்கிறதுக்கும் சாப்பாடு எடுத்துட்டு வாறதுக்கும் மாணிக்கத்த நேமிச்சிட்டுக் கெளம்பீருவொம்.''

''நீ எங்கூட வாறது ஆருக்கும் தெரியவேணாம்.''

''டீச்சரம்மாட்டக்கூட சொல்லமாட்டென். இப்ப மணியடிக்கிறதுக்கு நேரமாச்சு. நான் வரட்டுமா சார்.''

வையாபுரி போனபிறகும் பாண்டியன் நினைவுக் கனத்தில் உட்கார்ந்திருந்தார்.

மறுநாள் காலை குளித்துத் திரும்பும்போதுதான் தமிழய்யாவுடன் தனியாகப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ருக்மணியின் சமாச்சாரத்தைச் சொன்னபோது அவர்முகத்தில் எப்போதும்போல் நிலைகொண்ட நிதானம். முன்னால் செல்லும் ரங்கராஜனை வெறித்துப்பார்த்தார்.

''சாமிக்குத் தெரியுமா.''

''தெரியாது.''

''அந்தக்காலத்துல காக்கைபாடினியம்னு ஒரு இலக்கிய நூல் இருந்தது. அத கடல்கொண்டுட்டுப் போயிட்டதால அதப்பத்தி நமக்கெல்லாம் தெரியாமப் போச்சு.''

காக்கைபாடினியத்துக்கு என்னவந்துவிட்டது இப்போது. இந்தத் தமிழய்யாவே இப்படித்தான். மலையைக் கூட இலையாக மென்று குதப்பிக்கொள்வார்.

''ஆமாமா கடலுக்கு எரக்கமில்ல. நமக்கும் குடுத்து வைக்கல.''

முன்னால் நடந்த ரங்கராஜன் காத்திருந்தார்.

''பாண்டியன் நான் எவ்வளவு முன்னேறிட்டென் பாத்தேளா. ஒங்கள விட்டிண்டு தனியாப் போயிடுவனோன்னு பயம் வந்துடுச்சு. நின்னுட்டென்.''

பாண்டியன் வருத்தப்பட்டார்.

''இப்பவே தமிழய்யாவுக்குப் பிரிவு தாங்கமுடியல.''

மூணுபேரும் சேர்ந்து நடந்தார்கள்.

சனிக்கிழமை சாயங்காலம் பாண்டியன் துள்ளிக் கொண்டு வருவதைக் கவனித்த தமிழய்யா ''போன காரியம் முடிஞ்சதா'' என்று புருவத்தால் கேட்டார். பாண்டியன் ராகம்பாடிக் கொண்டே ரூமுக்குள் போய் பாயெடுத்துப் போட்டார்.

''யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே.''

''கூட இருந்து கூட்டீட்டு வரக்கூடாதா.''

''ஒன்வேகத்துக்கு நம்மளால ஈடுகுடுக்கமுடியாது. நீ முன்னால போ நான் சாவாசமா வாறன்னு சொல்லீட்டாரு. என்ன சார் தனியா உக்காந்துட்டீக. வாக்கிங் போகலயா. ரங்கராஜன் சார் ஊருக்குப் போயிட்டாரா.''

''கொஞ்சநேரத்துக்கு முந்தித்தான் கெளம்பிப் போறாரு. நான் கிராப்ட் சாருக்குத் தொணையா நடந்துட்டு வரலாம்னு தான் நெனச்சென். எடையில நீங்க வந்து பூட்டிக் கெடக்கிற வீட்டுக்கு முன்னால காத்திருக்கணுமேன்னு ஒங்கள எதிர்பாத்து உக்காந்துட்டென்.''

''ஒருவழியா அய்யாவக் கொண்டுவந்து ஒப்படச் சிட்டென். இனி ஒங்க பொறுப்புத்தான் எல்லாம்.''

''சித்தி தம்பி எல்லாரும் எப்படியிருக்காங்க.''

''நான் போனதுல சித்திக்குச் சந்தோசம். வுழுந்துவுழுந்து கவனிச்சுக்கிருச்சு. ராசபாண்டி என்னவுட்டுப் பிரியல. அவனுக்கு ஒரு பையன் இருக்கான். படுசுட்டி. பெரிப்பா பெரிப்பான்னு வளையவளைய வருவான். நல்லா பேசுறான். ராத்திரி ஒறங்கவுடல. எங்கூடத்தான் படுத்துக்கிட்டான். அவன் பேச்சுக்கெல்லாம் சரிப்பாசரிப்பான்னு தட்டிக்குடுத்து ஒறங்கவச்செென். வீடுதான் அவனுக்குக் கிரவுண்டு. எங்கய்யா கிட்டிக்குச்சும் கம்பும் கடசல்மாதிரி செதுக்கிக் குடுத்துருக் காரு. அவனுக்குப் பயந்துபோயி பானசட்டியெல்லாம் ஒதுங்க வச்சிருக்காக.''

''டிரில்மாஸ்டர் வீட்டு வாரிசாச்சே. நீங்க அவனோட வெளையாடலயா.''

''வெளையாட்டுச் சொல்லிக்குடுத்தென். என் மோதரத்த அவன் பெருவெரல்ல மாட்டிவுட்டுட்டென். பெரிப்பா மோத்தரம் பெரிப்பா மோத்தரம்னு அவன் குதியாளம் போட்டதப் பாத்து எங்கய்யா வீடே இடிஞ்சுபோறாப்புல சிரிக்காரு. அப்படிச் சிரிச்சு நான் பாத்ததில்ல.''

''இந்த வெளையாட்டுல மத்ததெல்லாம் மறந்துருக்குமே.''

''மழைக்குத் தளுத்த மரம்போல என் மனசுக்குள்ள ஒரு சந்தோசம். அதக் கெடுத்துறக்கூடாதுன்னு தோணிச்சு. அதனால சித்தியிட்டயும் அய்யாட்டயும் சொல்லல. தம்பியிட்டமட்டும் ரகசியமாச் சொன்னெனன். அவனுக்குச் சந்தோசம். பின்னால சித்தியச் சரிப்படுத்திக்கிற பொறுப்ப ஏத்துக்கிட்டான்.''

செருப்பு அறிவிப்பில் பாண்டியனின் அய்யா வந்து சேர்ந்தார். வந்து உட்கார்ந்ததும் உட்காராததுமாகக் கேட்டார்.

''சாமியக் காணுமே.''

தமிழய்யா சொன்னார்.

''இப்பத்தான் ஊருக்குப் போறாரு.''

''அடடா வுட்டுட்டனே. அவரத்தான் நெனச்சிக்கிட்டு வந்தென்.''

தமிழய்யாவும் பாண்டியனின் அய்யாவும் ராத்திரி ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். பாண்டியன் அவர்களுக்கு சாப்பாடு வெற்றிலைபாக்கு பழம் வாங்கிக் கொடுத்துவிட்டு ஸ்கூலுக்குப் போய் வீரணனுக்குத் துணையாகப் படுத்துக் கொண்டார். இடையில் வையாபுரி ரூமுக்கு வந்து ஆஜர் கொடுத்துவிட்டுப் போனான். அவன் பாண்டியனை முந்தியே சந்தித்து அருப்புக்கோட்டை யிலிருந்து வெற்றிகரமாகத் திரும்பிவந்த கதையைச் சொல்லிவிட்டான்.

அவனைப் பாத்ததும் தமிழய்யாவுக்குத் தெம்பு கூடியது. பாண்டியனின் அய்யாவிடம் ஆதியிலிருந்து சங்கதிகளைச் சொல்லிவந்து ஒரு தீர்வுக்கு அடிப்போட்டார்.

''எல்லாத்தவும் தாண்டி ரெண்டுபேரும் மனசுவிட்டுப் பழகீட்டாங்க. நீயில்லன்னா நானில்ல நானில்லன்னா நீயில்லங்கிற அளவுக்கு ஆகிப்போச்சு. பழைய நெனப்புல நம்ம கோவப்பட்டு அதுகளப் பிரிச்சுவச்சா வீணா நிம்மதிக்கொறச்சல்தான். அந்தப் பொண்ணால இவர மறந்துட்டு இன்னொருத்தரோட சந்தோசமா வாழமுடியுமா இல்ல இவரு பிரிஞ்சு இருந்துருவாரா. ஒண்ணுசேர முடியலையேங்கிற ஏமாத்தத்துல அவங்க விபரீதமா முடிவெடுத்து ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆகிப்போனா அத நம்மாளதான் தாங்கமுடியுமா. அதப்போல பாவம் வேற ஏதுமில்ல. ஒங்களுக்குத் தெரியாறதில்ல. யோசிச்சு நல்ல முடிவச் சொல்லுங்க. தாயும் தகப்பனுமா இருக்கிற நீங்க நல்லவழியக் காட்டுவீங்கன்னு நம்பித்தான் பாண்டியன் தனியாப் போயிப் படுத்துக்கிட்டாரு.''

பாண்டியன் அய்யா பதட்டப்படவில்லை. ஊமைச் சிரிப்பில் குலுங்கினார்.

''கோட்டிக்காரப்பய இத எங்கிட்டச் சொல்றதுக்கென்ன. இவன் சந்தோசத்தக் கெடுத்துட்டு நான் ஆண்டியாவரத்துல

மீசைய முறுக்கிட்டுத் திரிஞ்சு என்னசெய்ய. இவனுக்கு எளையவன் புள்ளக்காரனாயிட்டான். இவன்மட்டும் ஏன் இப்படியிருக்கான்னு நான் வருத்தப்படாத நாளுண்டுமா. கலியாணம் பண்ணிக்கிட்டு வந்து எங்களோடயா குடியிருக்கப் போறான். ஆர முடிச்சாலும் நல்லாருந்தாப் போதும். இனிமேப் போயி சாதியச் சொல்லு கெளயச் சொல்லுன்னு குருவிக்கூட்டக் கலைக்கிறது முட்டாத்தனம்.''

''அவரோட சித்தி ஒரு பொண்ண மனசுல வச்சிருக்கும் போலருக்கு. அப்படியிருக்கையில இதச் சொல்லி ஒங்களுக்குள்ள மனஸ்தாபம் வந்துறக்கூடாதுன்னு அமைதியா இருந்துட்டாரு.''

''இனிமே புதுசா என்ன மனஸ்தாபம் வரப்போகுது. என் கஸ்டம் என்னோட இருந்துட்டுப்போகட்டும். அவனுக்குச் சீதனம் குடுக்கவேணாம்.''

''தம்பிகிட்ட ஒருவார்த்த சொல்லியிருப்பாருன்னு நெனைக்கிறென்.''

''ராசபாண்டி காதுக்குப் போயிருச்சா. அப்பக் கவலையில்ல. ஆத்தாளச் சரிப்படுத்திருவான். இனியென்ன பொண்ணு வீட்டுக்காரங்களக் கலந்துக்கிட்டு முடிவுபண்ண வேண்டியதுதான்.''

தமிழய்யா பெருமூச்சுவிட்டார்.

''அவங்களப்பத்திக் கவலையில்ல. நம்ம வார்த்தைக்காக குடும்பமே காத்துக்கெடக்குது.''

''அப்படின்னா நாளைக்கே வெத்தலபாக்குப் பரிமாறியிறலாம். நம்ம பையங்கிட்டச் சொல்லி ஏற்பாடு செய்யிங்க.''

''நீங்க சரிசொன்னப்பெறகு கல்யாணமே முடிஞ்ச மாதிரிதான். காலையில எல்லா ஏற்பாடும் தன்னால நடக்கும். பாண்டியனுக்கு அது வெளையாட்டுப்போல.''

அதுக்குப்பிறகுதான் அவர்களுக்கு ஆழமான தூக்கம் வந்தது.

காலையில் தமிழய்யா முடிவைச் சொன்னபோது பாண்டியனுக்கு சின்னத் தயக்கமிருந்தது.

''ரங்கராஜன் சார் இல்லாம நடத்துறது நல்லதாப் படல சார்.''

''எனக்கும் உறுத்தலாத்தான் இருக்குது பாண்டியன். என்னசெய்றது. அய்யா இப்படி முடிவெடுத்துட்டாரே.''

''ஆயிரந்தான் சொல்லுங்க. இது ஒரு கொறதான்.''

''சாமி வந்ததும் பழிய எம்மேல போட்ருங்க. நான் பேசிக்கிறென். அய்யா மனசுப்படி காரியங்கள முடிச்சு அவர சந்தோசமா அனுப்புறதுக்கு வழியப்பாருங்க.''

அவ்வளவுதான். பாண்டியன் பம்பரமாகிவிட்டார். வையாபுரி மாணிக்கம் வீரணன் ஆகிய மூணுபேரைக் கொண்ட பட்டாளம் முடுக்கிவிடப்பட்டது. ஓடியாடி எல்லா ஏற்பாடுகளையும் ஒரேமூச்சில் செய்து முடித்துவிட்டார்கள்.

மாப்பிள்ளைவீட்டுச் சனங்கள் அய்யாத்துரையின் தலைமையில் கிளம்பினார்கள். பாண்டியன் அய்யா தமிழய்யா கிராப்ட் சுப்பையாதாஸ் கிருஷ்ணசாமி பட்டாளத்துக்காரர்கள் என்று ஒரு கூட்டமே திரண்டுவிட்டது. வையாபுரியின் ஏத்தாப்புத் தோரணையைப் பார்த்து கிருஷ்ணசாமியே அசந்துபோனார்.

கையில் பெரிய தாம்பாளத்துடன் அய்யாத்துரையின் சம்சாரம் நடக்க அதுக்குப்பின்னால் சுப்பையாதாஸ் பட்டாளத்துக்காரர்களின் வீட்டம்மாக்கள. ஈஸ்வரி முந்தியே ராஜேஸ்வரியின் வீட்டுக்கு ஓடிவிட்டாள்.

அங்கே போனால் தங்கச்சாமி மனோகரன் குழந்தைச்சாமி தீத்தாரப்பன் எல்லாரும் வரவேற்றார்கள். ஏற்பாடுகளைப் பார்த்து தமிழய்யா வையாபுரியின் சாமர்த்தியத்தை மெச்சிக்கொண்டார். ஆனாலும் ரங்கராஜன் இல்லாதது உறுத்தத்தான் செய்தது. பாண்டியன் அய்யா பெருமையாகச் சொன்னார் தமிழய்யாவிடம்.

''நம்ம பையனுக்கு பாறக்கொளத்துலதான் தாயாதிக ரெம்ப.''

ராஜேஸ்வரியின் அம்மாவுக்கு முகத்தில் பெரிய விளக்கு ஏற்றியிருந்தது. ராஜேஸ்வரிக்குள் இனம்புரியாத படபடப்பு. திக்கித்திக்கிப் பேசினாள்.

பேச்சுவார்த்தை சுமுகமாக நடந்தது. ராஜேஸ்வரியின் அப்பாவும் பாண்டியன் அப்பாவும் அன்னியோன்னியமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். குழந்தைச்சாமியின் ஹோட்டலிலிருந்து மதியம் ஸ்பெஷல் சாப்பாடு வந்தது. சாப்பாட்டைப் பாராட்டாத வாயில்லை. குழந்தைச்சாமி பூரித்துப்போனார்.

இத்தனைக்கும் பாண்டியன் வெளியே தலைகாட்டவில்லை. தனியாக ரூமில் உட்கார்ந்து கற்பனைகளைச் சுதியேற்றி பெட்டியில் சோகமாக மேளம் வாசித்துக் கொண்டிருந்தார்.

அடுத்தவாரம் முழுக்க ரங்கராஜன் ஊரிலிருந்து திரும்பவில்லை. ரூமே வெறிச்சோடிப்போன உணர்வு பாண்டியனுக்கு. அடிக்கடி தமிழய்யாவிடம் அங்கலாய்த்தார்.

''ஒரேயடியா இருப்புப்போட்டுட்டாரே. நம்மள வுட்டுட்டு எப்படி இருக்கமுடியிது. நான் போயிப் பாத்துட்டு வரட்டுமா சார்.''

''காரியமில்லாமத் தங்கமாட்டாரு. தங்கச்சியக் கரையேத்த வேண்டிய பொறுப்பு இருக்குதில்லையா. வீட்டுலயாவது கொஞ்சம் நிம்மதியா இருந்துட்டு வரட்டும். இனிமே அவரு பாறக்கொளத்துல வேலபாக்கிறதவிட சொந்தஊர்ப்பக்கம் போறதுதான் நல்லதுன்னு நெனைக்கிறென்.''

''ஏன் சார் அப்படிச் சொல்றீக.''

''எனக்கென்னமோ அப்படித் தோணுது.''

ஹெட்மாஸ்டர்கூட ரங்கராஜன் வராததைப்பற்றி தமிழய்யாவிடம் பேச்சுவாக்கில் விசாரித்தார். தமிழய்யா ஏதேதோ சொல்லிச் சமாளித்தார்.

முழுப்பரீட்சை வேறு நெருங்கிக்கொண்டிருந்தது. நைட்ஸ்டடியைக் கவனித்துக்கொள்வதில் பாண்டியன் தமிழய்யாவுக்கு உறுதுணையாக இருந்தார். பகலில் ரங்கராஜனின் கிளாஸைக்கூட கவனித்துக்கொண்டார்.

ரங்கராஜன் ரெண்டாவது திங்கள்கிழமைதான் வந்துசேர்ந்தார். ஆள் ரெம்ப உடைந்துபோயிருந்தார். அம்மா இறந்துபோன செய்தியைச் சுமந்துவருவார் என்று யாருக்குத் தெரியும். அம்மா எப்போதாவது உடம்புக்கு முடியாமல் கிடந்ததாகக்கூட அவர் சொன்னதில்லை. அவரை எப்படி ஆறுதல்படுத்துவது என்று தெரியாமல் தமிழய்யா தத்தளித்தார்.

பாண்டியனுக்கு வருத்தம். கோபங்கூட. வெளிப்படை யாகவே காட்டிவிட்டார்.

''ஆயிரந்தான் இருந்தாலும் நம்ம அன்னியந்தான. இதுக்கிது ஒருவார்த்த சொல்லியனுப்பியிருக்கலாமில்ல. ஒரு தந்திக்குமா பஞ்சமாப்போச்சு. கடைசி நேரத்துலயாச்சும் அவுக மொகத்துல முழிச்சிருப்பனே. அடுத்தவுகள அண்ணனா நெனச்சுக்கிட்ருக்கிறது சுத்த பையத்தியாரத்தனம்.''

தமிழய்யா பாண்டியனுக்கருகில் உட்கார்ந்தார்.

''பாண்டியன் என்ன இது.''

''நான்தான் பெறந்து நாலெட்டு வைக்கிறதுக்குள்ள பெத்தவள விழுங்கீட்டென். அடுத்தவுகளுக்காச்சும் குடுத்து வைக்கப்புடாதா.''

பாண்டியனின் கோபம் கண்ணீராக உருகியது. தமிழய்யா தேற்றினார்.

''சாமிமேல தப்பில்ல. ஆத்து வெள்ளத்துல அடிச்சிட்டுப் போயிட்ட அம்மாவ தேடிக் கண்டு பிடிக்கிறதுக்கே மூணு நாளாகியிருக்கு. மூணுமைல் தாண்டி காக்காயும் கழுகும் கொத்திக் கொதறி அடையாளங்கொலஞ்சு கெடந்திருக்காங்க. அவங்களோட முழுமொகத்தப் பாக்க இவருக்கே கொடுத்து வைக்கல. பாலத்துமேல போற தண்ணி ஒண்ணுஞ்செய்யாது கடந்துறலாம்னு எறங்கியிருப்பாங்க. நடுவுல பாலம் ஒடஞ்சிருந்தது தெரியாமப்போச்சு. இவரு அம்மாவத் தகனம் செய்வாரா அடுத்தவங்களுக்குத் தகவலனுப்புவாரா.''

ரங்கராஜன் அமைதியாக அழுதுகொண்டிருந்தார். பாண்டியன் குற்றஉணர்வில் தலைகுனிந்தார்.

எல்லா வாத்தியார்களும் ரூமுக்கு வந்து ரங்கராஜனிடம் துக்கம் விசாரித்தார்கள். சீனிவாசன் அடைக்கலம் ரெண்டு பேரும் வந்தார்கள். அப்புறம் வையாபுரி மாணிக்கம் வீரணன். அய்யாத்துரைகூட வந்துபோனார். ராஜேஸ்வரி முதல் முறையாக டீச்சர்ஸ் ரூமில் சந்தித்துப் பேசிக்கொண் டிருந்தாள். ஹெட்மாஸ்டர் தமிழய்யாவிடமும் ருக்மணி வையாபுரியிடமும் விசாரித்தார்கள்.

தமிழய்யா அடுத்தடுத்து ரெண்டுவாரம் தென்காசிக்குப் போனார். ரெண்டுவாரமும் ஒவ்வொருநாள் கூடுதலாக லீவு போட்டுத் தங்கிவிட்டுத்தான் திரும்பினார். பாண்டியனுக்கு இது புதுசாக இருந்தது. ஆனால் எதுவும் கேட்டுக்கொள்ள வில்லை. சிலநாள் ராத்திரி அய்யாத்துரையும் தமிழய்யாவும் ஸ்கூல் படிக்கட்டில் உட்கார்ந்து தனியாகப் பேசினார்கள். பாண்டியன் அதிலும் கவனம் செலுத்தவில்லை.

மனக்கஷ்டத்துக்கிடையிலும் தமிழய்யா பாண்டியனின் நிச்சயார்த்தம்பற்றி ரங்கராஜனிடம் சொல்லிவிட்டார்.

''நீங்க இல்லாம நிச்சயதார்த்தம் நடக்கவே கூடாதுன்னு பாண்டியன் ஒத்தக்கால்ல நின்னாரு. நான்தான் கட்டாயப் படுத்திச் சம்மதிக்கவச்சென்.''

ரங்கராஜன் களங்கமில்லாமல் சொன்னார்.

''நல்லகாரியம் பண்ணினேள். பாண்டியனோட அப்பா இதுக்குச் சம்மதிச்சாரு பாருங்கோ அவர்தான் மனுஷன். நேக்கு அந்தக் கவலதான் உறுத்திண்டுருந்துச்சு. இனி கஷ்டமில்ல. டீச்சர் பாக்கியசாலி.''

தமிழய்யாவுக்குள் ரங்கராஜன் நிறைந்திருந்தார்.

மூணுநாளாயிற்று. வையாபுரி கிரவுண்டுக்கு ஓடிவந்து பாண்டியனிடம் சொன்னான்.

''நம்ம சாமிய மாத்தி உத்தரவு வந்துருக்கு சார்.''

''என்னவே வெளையாடுறயா.''

''நெசமாச் சொல்றென் சார். ஆழ்வார்திருநகரிக்குப் போட்டுருக்கு. அவுக ஊருக்குப் பக்கத்துலதான்.''

பாண்டியன் தமிழய்யாவிடம் ஓடினார்.

''சார் இது அனியாயம் அக்கிரமம். ரங்கராஜன் சார மாத்தீட்டாக.''

தமிழய்யா சாதாரணமாகக் கேட்டார்.

''அதுக்கென்ன பாண்டியன்.''

''மத்தவுகெல்லாம் இருக்கயில இவருதானா கெடச்சாரு.''

''எல்லாருமே இண்ணைக்கில்லன்னா நாளைக்குப் போறவங்கதான. அப்புறம் நீங்க எங்கயோ நான் எங்கயோ. சாமி கொஞ்சம் முந்திக்கிட்டாரு. அவ்வளவுதான்.''

''இது அந்த ஹெட்மாஸ்டர் வேலையாத்தான் இருக்கும்.''

''நாளைக்கு தமிழ்வாத்தியார மாத்தீட்டா யாருமேல பழிசொல்லுவீங்க. ஏன் சாமியே கேட்டுவாங்கியிருக்கலாமில்ல. கிட்டருந்தா குடும்பத்தக் கவனிச்சுக்கிறலாம்.''

''இருக்காது. அவரு போயிக் கேட்டுருக்கவே மாட்டாரு.''

''அப்ப நீங்க போயிக் கேட்டீங்களா.''

''அதுல எனக்கு ரெம்பச் சந்தோசம் பாருங்க.''

''கடசிக்கு நான்தான் செஞ்சன்னு சொல்லப்போறீங்களா.''

''இருந்தாலும் இருக்கும்.''

''அப்படின்னே வச்சுக்கங்களேன்.''

''சார்...நீங்க....''

''நானேதான் பாண்டியன்.''

''அவருக்குத் தெரியுமா.''

''யாருக்கும் தெரியாது.''

''ஏன்சார் இப்படிச் செஞ்சீக.''

''எல்லாம் அவரோட நன்மைக்குத்தான். இந்த நெலமையில அவரு மாத்திப்போறது நல்லதுன்னு பட்டது.

இங்கயும் நிம்மதியில்லாம குடும்பத்தவும் பாத்துக்கிற முடியாம எப்படி தொழில்ல கவனம் செலுத்த முடியும். இதுக்கு நம்ம செய்யக்கூடியது என்னன்னு யோசிச்சுப் பாத்தென். ஒருவழி தட்டுப்பட்டது. யாரு மொகத்துல முழிக்கக்கூடாது யாருட்ட எந்த ஒதவிக்கும் போகக் கூடாதுன்னு வைராக்கியமா இருந்தனோ அதே பால்வண்ணம் பிள்ளையிட்டப் போயி தலையச் சொறிஞ்சென். சுயமரியாதை யெல்லாம் ஒடப்புல தூக்கிப்போட்டாச்சான்னு அவரோட சிரிப்பு கேக்கிறமாதிரி இருந்தது. நான் விஷயத்த மட்டும் சொன்னென். அப்ப ஒனக்கோ ஒம்பொண்ணுக்கோ ஒதவி வேண்டாமாக்கும்னு ஏளனமாப் பாத்தாரு. நான் தரையப் பாத்தென். கண்டிப்பா ஏற்பாடுசெய்றென் போங்கன்னாரு. அதுபோதும்னு சொல்லீட்டு வந்துட்டென்.''

பாண்டியன் தமிழய்யாவின் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

''என்ன சொல்றதுன்னே தெரியல சார்.''

''இந்த நாடகத்த யாருட்டயும் சொல்லாமருந்தாப் போதும்.''

ரங்கராஜன் இதைப் பெரிசுபடுத்தவில்லை.

பாண்டியன் சொன்னார்.

''தெரிஞ்சோ தெரியாமலோ நல்லது செஞ்சிருக்கறதா. ஒருவெதத்துல நேக்குச் சந்தோஷம். ஒங்கள விட்டிண்டு போறதுதான் வருத்தம்.''

''அடுத்தவருசமே நானும் தமிழய்யாவும் அங்க மாத்தி வந்துருவொம் சார்.''

ரங்கராஜன் முகத்தில் குறும்பு.

''பாத்தேளா. அதுக்குள்ள டீச்சர மறந்துட்டேளே.''

இந்தக் கலகலப்பில் தமிழய்யாவுக்கு எல்லாமே மறந்து விட்டது.

உத்தரவுப்படி முதலில் ரங்கராஜன்தான் நகரணும். அவர் ஆழ்வார்திருநகரிக்காரரைக் கிளப்ப அங்கிருப்பவர்

முக்கூடலுக்குப் போகணும். முக்கூடல்காரர் பாறைக்குளம் வரணும்.

ரங்கராஜன் புதன்கிழமை பாறைக்குளத்தில் கணக்கை முடித்துக்கொண்டார். தங்கச்சாமியிலிருந்து வீரணன்வரை சொல்லிவிட்டு சாயங்காலம் புறப்பட்டார். தமிழய்யா எவ்வளவோ வற்புறுத்தியும் ஹெட்மாஸ்டரைப் பார்க்க மறுத்துவிட்டார். கடைசியில் அய்யாத்துரையின் வீட்டுக்குப் போக மறக்கவில்லை. பாண்டியனும் கூடப் போனார். அய்யாத்துரையின் குடும்பமே தெருவரை வந்து வழியனுப்பியது. அவரது சம்சாரம் கடைசியாகச் சொன்னது.

''வெளையாட்டுக்காரத் தம்பிய தனியா வுட்டுட்டுப் போறீகளே.''

''அவருக்குத்தான் நெரந்தரமா ஒரு தொணையத் தேடிக் கொடுத்துட்டேளே.''

பாண்டியன் குறுக்கிட்டார்.

''சார் நானும் ஊர்வரைக்கு வரட்டுமா.''

ரங்கராஜன் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்.

''இப்ப வந்து கடனக் கழிச்சிடலாம்னு பாக்கறேளா. அப்புறமா குடும்பத்தோட வரேள். ஒருவாரம் எங்களோட தங்கறேள்.''

ரங்கராஜனை பஸ்ஸில் அனுப்பிவைக்க பாண்டியன் தமிழய்யா கிராப்ட் மூணுபேர் வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் பெட்டிபடுக்கையைச் சுமந்துகொண்டு வையாபுரியும் வீரணனும். பஸ்டாண்டில் நிற்காமல் பேசிக்கொண்டே முக்குரோட்டுக்கு வந்தார்கள்.

பாண்டியன் வையாபுரியிடம் கேட்டார்.

''என்னவே சோகமா இருக்க. இண்ணைக்கோட சீட்டுக் கிழிஞ்சிருமேன்னு பயமா.''

''எனக்கென்ன பயம் சார். நான் எத்தனபேரு சீட்டக் கிழிச்சிருப்பென் தெரியுமா.''

''அப்படியா. நீ சொல்லித்தான் தெரியிது.''

பாண்டியன் கிராப்ட்பக்கம் நகர்ந்தார். கிராப்ட் பரிதாபமாகப் பார்த்தார்.

''சார்வாள் நம்மகிட்ட வந்துட்டீங்களா.''

''ரங்கராஜன் சாருக்கு ஒங்க ஞாபகமா பொடிடப்பாவக் குடுத்தனுப்புங்கன்னு சொல்லத்தான் வந்தென். ஒங்களுக்கு நான் புதுசா வெள்ளியில வாங்கித்தாறென்.

''சும்மாருக்க வுடமாட்டீங்களே.''

''ஒங்களுக்குச் சம்பளம் கொறஞ்சாலும் டப்பாவுல பொடி கொறஞ்சிறப்புடாதே.''

தூரத்தில் கனைத்துக்கொண்டு வந்த பஸ் முக்குத் திரும்பி ஊருக்குள் ஓடியது. வையாபுரி கண்டக்டரிடம் குரல் கொடுத்தான்.

''அண்ணேன் திருனவேலி ஒண்ணு.''

எல்லாருடைய முகத்திலும் இனம்புரியாத வருத்தம். ரங்கராஜனையே பார்த்துக்கொண்டிருந்த வையாபுரிக்கு பேச்சுத் திணறியது.

''டிரில்மாஸ்டரய்யா இந்திய வெரட்டுறதுக்கு ஒங்களோட சண்டபோட்டாரு. ஆனா இப்ப ஒங்கள வெரட்டவேண்டிய நெலம.''

அவன் குழந்தையைப்போல் கண்ணைக் கசக்க ஆரம்பித்தான். ரங்கராஜன் அவனது தோளைப் பிடித்து உலுக்கியபடி பாண்டியனைக் கேட்டார்.

''பாண்டியன் கல்யாணத்த சொல்லாமக் கொள்ளாம நடத்தமாட்டேளே.''

''நீங்க வராம கலியாணமே நடக்காது சார்.''

''தென்காசிக்குப் போயி கேட்டுத் தெரிஞ்சிண்டாவது வந்துசேந்துடுவென்.''

தவித்துக்கொண்டிருந்த தமிழய்யாவுக்குக் குரல் தளுதளுத்தது.

''சாமி ஒங்களுக்காக இந்த ஏழத் தமிழ்வாத்தியான் வீடு எப்பவுமே தெறந்திருக்கும்.''

ரங்கராஜன் நன்றியுடன் ஏறிட்டார்.

ஊருக்குள்ளிருந்து பஸ் உறுமிக்கொண்டு வந்தது. வையாபுரி ஓடிப்போய் கைகாட்டி நிறுத்தினான். மாணிக்கம் சாமான்களை ஏற்றினான். ரங்கராஜன் ஏறிக்கொண்டார். அவரால் கீழே நிற்பவர்களைத் தெளிவாகப் பார்க்கமுடியாதபடி கண்ணீர்ப்படலம் மறைத்தது.

பஸ் புறப்பட்டதும் பாண்டியன் தமிழய்யாவின் தோளில் முகம் புதைத்துக்கொண்டு குமுறிக் குமுறி அழ ஆரம்பித்தார். சிட்டிகைப்பொடி நழுவ பஸ்ஸையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார் கிராப்ட். தமிழய்யா மட்டியைக் கடித்தபடி பாண்டியனைச் சமாதானப்படுத்தி முடித்ததும் மூணுபேரும் பஸ்போன திசையில் சோர்வாக நடக்கத்தொடங்கினார்கள்.

சும்மாட்டுத் தலையைச் சொறிந்தபடி சுயநினைவிழந்து நின்றிருந்த மாணிக்கத்தை உசுப்பி வீட்டுக்குக் கூட்டிப் போனான் வையாபுரி. அவர்களுக்கிடையே பேச்சு அறுந்திருந்தது.

பஸ் பாலத்தைக் கடந்தபோது தோட்டத்துக்குள்ளிருந்து ஓடிவந்த கிருஷ்ணசாமியைக் கவனித்துவிட்ட ரங்கராஜன் வெளியே தலைநீட்டி கையசைக்க அவரது மம்பட்டி அந்தரத்தில்ஆடிரெம்பநேரம் வழியனுப்பிக் கொண்டிருந்தது.



# வாய்க்கால்

**தோ**...தோ...தோ...தோ...

உய்...உய்...உய்...

லொள்..லொள்...

சத்தங்கள் சகட்டுமேனிக்குப் பிணைந்து வந்தன. கோபால் கடவுவழியாக எட்டிப் பார்த்தான். கொட்டாரக் களத்தில் ஆயுதங்களுடன் ஆட்கள் கூட்டம். மறுக்கிஓடும் நாய்கள். பயல்கள் அவற்றை மல்லாடிப் பிடித்து வசக்கிக் கொண்டிருந்தார்கள்.

''ஏலே அந்தமானக்கி பொட்டக்குட்டியவும் கூட்டீட்டு வாங்க. அத இப்பயே பழக்கப்படுத்துனாத்தான் வசத்துக்கு வரும்.''

ஒருத்தன் வேல்கம்பை வீசிக்கொண்டு பெரும் பாதையில் நடைபிடித்தான். கூட்டம் அவனுக்குப் பின்னால் வாய்க்காலிட்டது.

மழைக்குருணையின் ஒழுக்கல் நின்று இளம்வெயில் துடைப்பில் மந்தைப்பசுமை தெளிந்திருந்தது. வெயில் வந்து என்னசெய்ய. வெள்ளங்காட்டி மழையால் வேலை மெனக்கிட்டது மெனக்கிட்டதுதான். வீட்டில் சும்மா இருக்க முடியாமல் மனசு வேட்டைக்கு நோங்கியது.

கோபாலுக்கு கால்நரம்பு முணுமுணுத்தது. தெள்ளுமாக் கரிசலில் இளைக்கஇளைக்க ஓடிய பழைய ஞாபகம். கண்ட இடத்தில் தண்ணீர்குடித்துத் தொண்டை நனைத்ததும் தவிப்பாற கருவநிழல் கூப்பிடும். பருத்திப்பிஞ்சைக் கொறித்துக்கொண்டே நிழலில் படுத்தால் இனிப்பில் கண்சொருகும். தொடைக்கடுப்பு தணியத்தணிய இருப்புக் கொள்ளாது. எழுந்து நடக்கணும் ஓடணும் ஆடணும்

பாடணும். காய்ந்தும் நனைந்தும் காடுகளை அளக்கிற சொகமே தனி.

அவனுக்குள் ஊதக்காற்று புல்லும் மண்ணுமாக மணத்துக் கிளர்ந்தது.

''மாப்பிள நீங்களும் வாங்களேன். அப்படியே போயிட்டு வரலாம்.''

வடிவேலு பிரம்பைத் தோளில் சாத்தியபடி நின்றிருந்தான்.

''போவொம்.''

கோபாலின் முகத்தில் சுண்ணாம்புச்சிரிப்பு.

''கம்பு சம்பாரிச்சுத் தாறென் வாங்க.''

வடிவேலு வீட்டுக்குப் பின்புறம் நிறைசலுக்கு ஊன்றியிருந்த வாகங்கம்பை உருவிக் கொடுத்தான். அது எளவட்ட அருப்பமாகத் தளிர்விட்டிருந்தது. கோபால் தளிர்களை அருவிக் கம்பைத் தோதுப்படுத்தினான்.

வடிவேலு நடந்தான். அவன் தலை முண்டாசுக் கட்டுக்குள் அடங்கியிருந்தது. பழைய வடிவேலு இல்லை. உடல் மெலிந்து பீஞ்சாணியாகத் திரிந்தவன் பெரியாளாகி விட்டான். எதிலும் ரெம்ப நிதானம் வந்துவிட்டது.

கோபாலுக்கு பிறந்தமண் மனசுக்கும் காலுக்கும் சொகமாக இருந்தது. எட்டுக்கொருக்க தடுத்து நிறுத்தும் பிசின்பிடிப்பு. பிய்த்துப்பிய்த்து கவனமாக நடந்தான். அஞ்சு வருசத்துக்குப் பிறகு அனுபவிக்கும் சொகம்.

பயல்களுக்கு நாய்கள் கட்டுப்பட்டிருந்தன. நாய்க் கழுத்துக்கும் சிறுகைகளுக்கும் பாலமிட்ட கயிறு விறைப் பேறியிருந்தது. நீர்வடியும் நாக்கு இளைத்து மூச்சை விரட்டும் இரைச்சலில் நாய்கள் திமிறத்திமிற பயல்கள் திணறினார்கள்.

ஓடைக்கரையில் அடர்ந்து பின்னிக்கிடக்கும் செடிக் கும்மல். கொழுந்துகளில் சிலிர்த்த பூக்களைச் சீண்டும் குளவிகள். காற்றசைவில் பூக்கள் உதறித் தள்ளினாலும் குளவிகள் விடுவதாக இல்லை. ஒரு கதம்பமணம் நாசிக்குள்

ஏறியது. புல்லுக்கு நடுவே நீளும் ஒற்றையடிப்பாதையில் அவன் வேகமாக நடந்து வடிவேலை எட்டிப்பிடித்தான்.

''என்ன வடிவேலு இண்ணைக்கு மொயலு கெடைக்குமா சும்மாதான் திரும்பணுமா.''

''நீங்க ஒண்ணு எத்தன அடிபடப் போகுதுன்னு பாருங்க.''

பாலுச்சாமி நடையைத் தாமதித்து விசாரித்தான்.

''விருந்தாளு எப்ப வந்துச்சு.''

''காலையில.''

முருகன் கேட்டான்.

''பாததப்பி வந்துட்டீகளா இந்த ஊருக்கு.''

கோபால் சிரித்து மழுப்பினான். இன்னும் பலர் விசாரித்துவிட்டு நடந்தார்கள்.

''புள்ளீகெல்லாம் சொகந்தான.''

''நல்லாருக்காக.''

''எத்தன புள்ளீக.''

''ரெண்டு.''

''ஆணா பொண்ணா.''

''ஒரு ஆணு ஒரு பொண்ணு.''

''நேத்துவரைக்கும் கரட்டான் அடிச்சிட்டுத் திரிஞ்ச ஆளு ரெண்டு புள்ளைக்குத் தகப்பனாகியாச்சு.''

இருளாண்டித் தாத்தா மெச்சிக்கொண்டார்.

''காதவழிக்குப் போயிட்டாலும் வேட்டப்பிரியம் வுடல பாரு. அதெப்படிப் போகும். நாய்ச்சத்தங் கேட்டா நம்மாளலயே சும்மாருக்க முடியல.''

பாலுச்சாமி அவரை உசுப்பிவிட்டான்.

''சும்மாருக்க முடியாதே. கறிக்கு எச்சுப்போயி ஓடியாறீரு. பொக்கவாயில கறியப்போட்டு பருத்திவெத் ஆட்டுனமாதிரி அரைக்கலன்னா ராத்திரிக்கு ஒறக்கம் வருமா. எங்கவீதம் வேட்டையாடலன்னா பங்கு கெடையாது.''

அவர் தார்ப்பாய்ச்சிக்கொண்டு வேகமாக வந்தார்.

''அடபுலே அந்தப் பேச்சுமட்டும் நம்மகிட்ட வச்சுக்கிறாத. இப்ப வாறயா ரெண்டுபேரும் ஓடிப்பாப்பொம். நான் தோத்துட்டன்னா என் வீசைய எடுத்து நாய்ப்பொச்சுல ஒட்டிவச்சுறென்.''

''பாப்பமா.''

''பாக்கிறதென்ன. சரியான ஆம்பளன்னா எறங்குடா.''

ரெண்டுபேரும் தயாரானார்கள். கோடுகீச்சி நின்று முறைத்துக்கொண்டார்கள். முருகன் செடிபிடுங்கி செண்டா காட்டினான். நாலெட்டுக்குள் தாத்தா பாலுச்சாமியை இடது காலால் தட்டி விழுத்தாட்டிவிட்டு செண்டிப்பெடுத்து ஓடினார். எல்லாரும் சிரித்து வேடிக்கை பார்த்தார்கள்.

நச்சென்று கீழே விழுந்து எழுந்த பாலுச்சாமி பின்புறம் திரும்பிப்பார்த்தான். குண்டிவேட்டியில் தோசைச்சட்டிபோல் ஈரமண் அப்பியிருந்தது. வெட்கத்தில் ஓடைத்தண்ணீரைத் தேடி ஓடினான். அப்படியும் தாத்தா விடவில்லை.

''தின்னிப்பய வேட்டியில கழிஞ்சிட்டாண்டோய்.''

அவர் தோள்தட்டி தொடைதட்டிக் கொக்கரித்தார். கும்மிக்குதிப்பில் கிறுவாணம் சுற்றினார். கோபால் அவரது புளிச்சிநார்மீசை துள்ளுவதை ரசித்துக்கொண்டிருந்தான்.

ஓடையிலிருந்து வந்த பாலுச்சாமி வேட்டிஈரக் கூச்சத்தில் ஒதுங்கிஒதுங்கிப் போனான். அவனை இழுத்துப் பிடித்துத் தட்டிக் கொடுத்தார் தாத்தா.

''பேரப்புள்ளைக்குமா. கீழவுழுந்தாலும் சொதாரிப்புக் கொறையலயே. எம்பேத்தியாளுக்குப் பொருத்தமான மாப்பிள இவுகதான்.''

ஒருத்தன் எளக்காரமாகச் சொன்னான்.

''அப்படின்னா தூக்கிப்போட்டு ஒதச்சாக்கூட சும்மா கெடப்பான் பொசகெட்ட பய.''

பாலுச்சாமி விறைப்பாகப் பார்த்தான்.

''ஏலே எவனாச்சும் இந்தச் சுண்டுவெரல அசைக்க முடியுமா. ஒன்னப்போல மானங்கெட்ட உசிருன்னு நெனச்சுக் கிட்டயா.''

தாத்தா கைச்சிங்கி தட்டி ஆடினார்.

''அப்படிப்போடு. அப்படிப் போடு.''

சிரிப்புத் தேயத்தேய பாதையில் கோர்த்திருந்த ஆட்கள் சிதறி சன்னஞ்சன்னமாக காடுகளில் பரவினார்கள். விளையாட்டும் வேடிக்கையும் மறைந்து கலவையில் கவனப்பட்டார்கள். ஏகதேசம் பேசிக்கொண்டார்கள்.

நாய்கள் கண்மாய்க்கரைச் சரிவை அனுசரித்து வந்தன. இருளாண்டித்தாத்தா பயல்களை வினயப்படுத்தினார்.

''அது எவம்லே சளச்சளன்னு பேசீட்டு வாறது. வாயப் பொத்தீட்டு சும்மா வரமுடியலயா.''

வெயில் சுள்ளிட்டது. கோபால் பனைவரிசையில் நிழல் வரிகளுக்கு நடுவே உட்கார்ந்திருந்தான். காய்ந்த பனை யோலைகள் மட்டையில் உரசிச் சலசலத்தபடி தலைகீழாகத் தொங்கின.

''ஹோய்..ஹோய்..''

''ஒரு செடிகூட வுடாம நல்லா பாத்துக் கலச்சு வா.''

''ஹோய்...''

''நாய முன்னும்பின்னுமா புடிச்சு நட.''

''ஓவ்...''

ஆட்கள் புதரடர்த்திக்குள் ஊடுருவி முன்னேறினார்கள். முயல்வேட்டை மும்முரமாகத் தொடங்கியது.

**கோ**பால் காலையில்தான் வந்தான். அயலூருக்குள் நுழைந்தமாதிரி கூச்சமாக இருந்தது. பொம்பளைகள் முற்றத்துக்கு ஓடிவந்து பார்த்தார்கள். வாயில் விரல்வைத்து ஆச்சரியப்பட்டார்கள்.

''நம்ம வாத்தியாரு மகனாம்மா. அடையாளமே தெரியலயே.''

''நான் ஒரு கோட்டி. ஆரோன்னு நெனச்சு வான்னுகூட கேக்காம இருந்துட்டென். என்ன நெனச்சிருக்கிருதோ.''

''ஆளு இருப்புல இருந்தா அதொருமாதிரிதான்.''

''தெடுக்குத்தெடுக்குனு சில்லாளியா அலஞ்ச பையன் இப்ப எப்படித் திருந்தியிருச்சு பாரு.''

''சுப்புத்தாயிப்புள்ள எப்படித்தான் இருக்காளோ.''

''அவளுக்கென்ன குடுத்துவச்ச மகராசி. இதுக்குமேல இருக்கமாட்டாளோ.''

அவன் தலைகுனிந்துகொண்டு நடந்தான்.

''மெட்ராசுக்காரரு தெருவுல என்னத்தத் தொலச்சிட்டுத் தேடுறீக.''

வெள்ளையம்மா மதினியா அது. இன்னும் குறும்பு போகவில்லை. வார்த்தை கொடுத்தால் வம்பு.

பிறகும் அவள்வாய் சும்மா இருக்கவில்லை.

''பொண்டாட்டி புள்ளீக மொகத்த எப்பக் காட்டப் போறீக. ஆருமேல கோவம். ஊருமேலயா ஒலகத்து மேலயா.''

அவள் முகத்தைப் பார்த்துப் பேசவும் ஆர்வமாக இருந்தது. நெஞ்சுப் பதட்டத்தில் நிற்கமுடியவில்லை. ஓரக் கண்ணால் சிரித்துவிட்டு வேகமாகப் போனான்.

வடிவேலின் வீட்டை நெருங்கநெருங்க பதட்டம் அதிகரித்தது. சமாளித்துக்கொண்டு வாசலில் எட்டுவைத்தான். உள்ளிருந்து சன்னமான குரல் வந்தது.

''வாங்க.''

அவனுக்குத் திடுக்கிட்டது. கண்ணாம்பட்டைகளால் பார்வையைத் துடைத்துக்கொண்டான். மரியாதைச் சிரிப்பில் கல்தூணைப் பற்றியபடி லட்சுமி நின்றிருந்தாள்.

கீழுதட்டில் பதிந்த ஒற்றைரேகை. நெற்றிப்பொட்டில் பொருந்தும் புருவங்கள். காதுகளுக்குச் சரிசொல்லும் செவிமயிர். கன்னம் திரளும் சிரிப்பு. அதே லட்சுமி.

அவனுக்குப் பேச வாயில்லை.

''மாப்பிள வாங்க. மாப்பிள வாங்க.''

வடிவேலு ஆவலாக வந்து பையை வாங்கிக் கொண்டான். அவன் முகத்தில் சந்தோசக்களை. லட்சுமி திருணையில் பாய்விரித்தாள்.

''என்ன மாப்பிள இது. ஒருவரி எழுதியிருந்தாக்கூட ரோட்டுல வந்து எதிர்பாத்துருப்பனே. அங்கருந்து பையச் சொமந்துக்கிட்டு. வருசக்கணக்கா எட்டிப்பாக்காம இருந்து வாறவுக குடும்பத்தோட வரப்புடாதா. தங்கச்சியும் கொழந்தைகளும் சொகமாருக்காகளா.''

அவன் தலையை மட்டும் ஆட்டினான். கண்ணைக் கட்டியமாதிரி இருந்தது. இது எப்படிஎப்படி என்று மனசு கிடந்து அடித்துக்கொண்டது.

லட்சுமி வீட்டுக்குள் போய் ஏதோ பண்டத்தை உருட்டினாள். அந்தச் சத்தம் அவன் நெஞ்சில் அது அப்படித்தான்' என்று மோதி அதிர்ந்தது. வடிவேலைப் பார்த்தான்.

''சொல்லாமக் கொள்ளாம கலியாணம் முடிச்சிட்டாக ளேன்னு பாக்கீகளா மாப்பிள. ஆமா அப்படித்தான். ஆருட்டயும் சொல்லல. ஒங்க கலியாணம் முடிஞ்சது பாருங்க அந்தச் சமயமே எங்க கதையும் நடந்துருச்சு. தாலியில்லாம வெறுங்கலியாணம். ரெண்டுபேரும் சேந்துக்கிட்டொம். அந்த அடுப்புலருந்து இந்த அடுப்புக்கு வந்துட்டா. அம்புட்டுத்தான். இதப்போயி ஆருட்டச் சொல்றது. ஒங்களுக்கே சொல்லல. சேந்து ஆறுமாசங்கழிச்சு தாலி செஞ்சுபோட்டென். தங்கச்சியும் நீங்களும் கோவிச்சுக்கிருவீகன்னுதான் ரெம்ப நாளைக்குப்பெறகு கூசிக்கூசிக் காயிதம் அனுப்புனென். லச்சுமிதான் எழுதுனா.''

வடிவேலு திருணைமூலையில் சிவந்திருந்த மண்காயத்தைத் தடவியபடி பெருமூச்சுவிட்டான்.

''இண்ணைக்குத்தனக்கு அஞ்சுவருசமாகப் போகுது. நீங்க இம்புட்டு நாளா எட்டிக்கூடப் பாக்கல. வீட்லயும் வேற

ஆளு இல்ல. அம்மாவும் தவங்கியாச்சு. என்னசெய்றது. நாலுவயசுல ஒரு பயகூட இருக்கான். கொறமாசத்துல பெறந்தான்னு சொல்லி அவன அவனயம் பேரு நம்பாமத்தான் இருந்தாக. அவன் என்னடான்னா மண்டையில கல்லத் தூக்கிப் போட்டாலும் சாகமாட்டான்போலருக்கு. எங்கிட்டாச்சும் வெளையாடப் போயிருப்பான். நமக்கெதுக்கு ரெம்பப் புள்ளீக. அவன் ஒருத்தன் பெழச்சுக்கெடந்தாப் போதும்.''

கோபால் வடிவேலின் கையையே கவனித்துக் கொண்டிருந்தான். வடிவேலு உள்ளே சத்தங்கொடுத்தான்.

''லச்சிமி அங்க என்னசெய்ற.''

''இந்தா வந்துட்டென்.''

அவள் முன்னுக்கு வந்தாள்.

''விருந்தாளு பசியோட வந்துருப்பாக. சும்மா உக்காரவச்சுப் பேசுனா எப்படி. நான் கடைக்குப் போயி கருப்பட்டி தேயல வாங்கீட்டு வந்துறென்.''

வடிவேலு வாசலோரம் சாய்ந்திருந்த லட்சுமியைத் தாண்டிப்போனான். லட்சுமி தரையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பக்கத்தில் சண்டுஞ்சாம்பலுமாக அள்ளிவைக்கப் பட்டிருந்த குப்பைக்கூடையை கோழி கொத்திக் கிளறுவதப் பார்த்திருக்கணும். கோழியின் காலடியில் நாலுகுஞ்சுகள் ஓடி ஓடிப் பிஞ்சுஅலகால் இரைபொறுக்கிப் பழகின. கொஞ்சநேரம் தாயின் கெக்கெத் முனக்கம் தவிர வேறு அருவமில்லை. லட்சுமி ஏறிட்டாள்.

''மதினி சொகமாருக்குதா.''

யாரைக் கேட்கிறாள். கோபால் அதிர்ச்சியை மறைக்க செருமிக் கொண்டான்.

''எல்லாரும் சொகந்தான்.''

அவன் சிரித்தான். அவள் சிரிக்கவில்லை. புருவங்கள் மட்டும் ஏறியிருந்தன. முகத்தில் எந்த உணர்ச்சியுமில்லை.

''புள்ளீக நல்லா ஓடித்திரியிதா.''

அவள் மூச்சைப் பெரிசாக்கினாள். இடதுகை இடுப்பிலும் வலது கை சுவரிலும் இருந்தது. கால்விரல் எதையோ தரையில் போட்டுப்போட்டு அழித்துக் கொண்டிருந்தது.

''அதுகள மேய்க்கிறதுக்கே ஒரு ஆளு வேணும்.''

''அதுக்குத்தான் மதினி இருக்குதுல்ல.''

அவன் சுவரைப் பார்த்துக்கொண்டு தயக்கத்தில் கேட்டான்.

''நீ சந்தோசமா இருக்கயா.''

''சந்தோசத்துக்கென்ன. வெலைக்கா வாங்கப்போறொம்.''

வடிவேலு கடையிலிருந்து வந்தான்.

''லச்சிமியென்ன அப்படியே நின்னாச்சு. இந்தா மொதல்ல சுடு தண்ணி வச்சுக்குடுத்துட்டு பெறகு சோத்துக்கு வழியப்பாரு.''

அவள் மெதுவாகச் சொன்னாள்.

''சோளச்சோறு இருக்குது. தொவையலு அரச்சுக்கிற வேண்டியதுதான்.''

''மாப்பிள்ளைக்கு சோளக்கஞ்சி புடிக்குமா.''

கோபால் தயங்கவில்லை.

''சோளச்சோறு சாப்பிடாம என்ன.''

வடிவேலு லட்சுமியைக் கேட்டான்.

''அம்மாவக் காணுமே.''

''ஆட்டுக்குப் புல்லறுத்துட்டு வாறன்னு போயிருக்கு.''

''எந்திரிச்சு நடமாடுறதே பெரியகாரியம். அதுலவேற வரப்புக்காட்ல தட்டுத்தடுமாறி அலையணுமாக்கும். சூசுவான்னு வீட்ல கெடக்கிறதுக்கில்லாம.''

''நம்ம சொன்னா கேட்டாத்தான.''

லட்சுமி அடுப்புக்குப் போனாள். வடிவேலு திருணை விளிம்பில் உட்கார்ந்தான்.

வேட்டைக்காரர்கள் ஒருத்தருக்கொருத்தர் பார்வை யிணக்கத்தில் கலைத்துக்கொண்டு போனார்கள். வடிவேலு வரிசைப்பனையோரம் நின்றிருந்தான்.

''மாப்பிள வெயிலாருந்தா வாகமரத்து எணல்ல போயி உக்காருங்க. அந்தப் பக்கந்தான் கலச்சு வருவொம்.''

''அப்படியொண்ணும் வெயிலில்ல. ஒங்ககூடவே வாறென்.''

கோபால் எழுந்தான். போகிறபோக்கில் ரப்பர் செருப்பில் தைத்த முள்ளைப் பிடுங்கி எறிந்துவிட்டு பின்தொடர்ந்தான்.

ஆட்கள் செடிசெத்தைகளில் கல்போட்டு கம்பால் தட்டிப் பார்த்தார்கள். கலைப்பு அருவங்கேட்ட கதுவாலிக் கூட்டம் எட்டத்தில் ஒடமர நிழலுக்கு உருண்டோடி எக்கிப் பார்த்து கெக்கேர் கெக்கேர் என்று கெக்கரித்தது. பாலுச்சாமி சப்புக் கொட்டினான்.

''ஒண்ணொண்ணும் நிக்கிறதப்பாரு குலுக்குமாதிரி. வறட்டுனா ஒரு சட்டியிருக்கும்.''

ஒருத்தன் சொன்னான்.

''கண்ணியில்லன்னா ஆப்புடாது.''

பாலுச்சாமி கல்லெறிந்தான். சலங்கைக்கொத்து சிதறியது போல் கதுவாலிகள் கலகலத்து பறந்து மறைந்தன.

கொஞ்சதூர நடை. அதுக்குள் ஆட்களிடையே திடீர்வேகம் வந்துவிட்டது. மழைக்காலத்தில் களங்கூட்ட ஓடும் அவசரம். நாய்கள் கயிற்றிலிருந்து விடுபடத் துடித்தன.

எல்லாரும் மொச்சிசெடிப் புதரை வளைத்துக் கொண்டார்கள். ஒரே அமைதி. கையாலும் தலையாலும் நிறையப் பேசினார்கள். கோவமுழிப்பு. நாக்குத் துருத்தல். உதட்டுத் துடிப்பு.

'அருவமில்லாம அங்கயே நில்லுல. கிட்டவந்து மயிரப் புடுங்கப்போறயா. மொசலப் பாத்ததே இல்லையா.'

'எல்லாரும் சுத்தி நின்னு மாரடிங்க.'

'கட்டாப்புக் கெட்டலன்னா வாயில மோண்டுட்டு வடக்காமப் போயிரும்.'

புதரே..ரம் நின்றிருந்த முருகன்மட்டும் திரும்பத்திரும்ப கூவிக்கொண்டிருந்தான்.

''வளையோம்...வளையோம்...''

வெள்ளைச்சாமி எல்லாரையும் எச்சரித்துவிட்டு புதரை நெருங்கினான். தரத்துக்கம்பை ஓங்கிப் பிடித்துக்கொண்டு கிட்ட வரவர செருப்புச்சரசரப்பு கூடியது. முயலுக்கு இருப்புக் கொள்ளவில்லை. காது இன்னும் விடைத்தது. கண்களை உருட்டி நோட்டமிட்டது. வசம்பார்த்து முதுகில் குத்தப்போகும் சமயம். பாழாய்ப்போன செருப்பு இடறி உசுப்பிவிட்டது. அந்தச் சத்தம் கேட்டதோ இல்லையோ முயல் டப்பென்று படுக்கையைவிட்டுப் புடைத்தது.

அவ்வளவுதான். இதுவரை அணைப்போட்டிருந்த அமைதி உடைந்து கண்டபடி சத்தங்கள் கிளம்பின.

''வுடாத.''

''புடி.''

''நாய உருவு.''

''மொசலக் குத்துற மூஞ்சியும் மொகறையும் பாரு.''

''பித்துக்காலுப் பய. அவன் செருப்பு ரெண்டவும் கந்துகந்தா அறுத்தெறியணும்.''

''கிட்ட வாயேன். அத எடுத்துக்கிட்டுச் சாத்துறென்.''

''மொசலு வடக்க சுழிக்குது பாரு.''

''பின்னால போறது பொட்டக்குட்டிதான. சுளிவா எட்டி மிதிக்குதே.''

''நல்ல பெராயத்துல எதும் கிட்ட அண்டமுடியயது.''

''கைக்குள்ள இருந்தத வுட்டுட்டு அதத் தொயந்து சாகுங்க.''

வெட்டாவீதியில் முயல் ஓட பின்னால் நாய்கள் ஓட அதுக்கும் பின்னால் ஆட்கள் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தார்கள்.

கோபால் ஓடவில்லை. நின்று கவனித்தான். கீழ ஓடையைத் தாண்டி வடகாட்டு மூலையில் முயல் சுழித்து மறுக்குவது தெரிந்தது. நாய்களும் விட்டபாடில்லை. அவன் அந்தத் திசைக்கு குறுக்காக நடந்தான்.

சிறுபிராயத்தில் கோபால் எத்தனையோ தடவை வேட்டையாடியிருக்கிறான். பெரியவர்கள் கண்ணுக்குத் தப்பி ஒளிந்துவந்து வசவு வாங்கிக்கட்டிய அனுபவம் ரெம்ப.

வசவு ஒருபக்கம் கிடைத்தாலும் முதல் வேட்டை சாய்ந்ததும் அவனைத்தான் தேடுவார்கள்.

''மொசல கோவாலுட்டக் குடுங்க. வெருவாக்கலங் கெட்ட பயக கையில குடுத்துறாதங்க.''

அவன் ராசியானவன் என்று முயல்சுமக்கச் சொல்லுவார்கள். அது பெரிய வேலை. நாய் தாவி வாய்வைத்துவிடாமல் எச்சரிக்கையாகச் சுமக்கணும். மற்றவர்களைப்போல் ஓடமுடியாது. என்னேரமும் முயல்தலை முன்புறம் இருக்கிறமாதிரி பிடித்திருக்கணும். மறந்துபோய் மாறிப் பிடித்துவிட்டால் அடிக்க வந்துவிடுவார்கள்.

''முன்னால பொச்சக் காட்டீட்டுப் போனா மொசலெங்க கெடைக்கும்.''

எத்தனை முயல் அடித்தாலும் கறி சரிபங்குதான். சின்னவன் பெரியவன் தூங்கல் தொத்தல் என்று பார்க்க மாட்டார்கள். அவன் பெருமையாக வீட்டுக்குக் கறி கொண்டு வருவான்.

அப்போது பள்ளிக்கூடத்தில் படித்த காலம். வேட்டைப் பிரியம் வந்துவிட்டால் படிப்பாவது மண்ணாவது. லீவுநாள் முழுக்க வீட்டில் தங்குவதேயில்லை. பயல்களாகச் சேர்ந்து கொண்டு வேட்டைக்குக் கிளம்பினால் பல்லியிலிருந்து பாச்சாவரை சகல உருப்படியும் சிக்கும்.

படப்பில் சோளத்தட்டை உருவி கம்பு தயாரிப்பார்கள். ஆளுக்கொரு பக்கமாக காடிதேடிப்போய் காளைமாட்டு வாலில் ரோமம் பிடுங்கி கண்ணிதிரிப்பார்கள். ரோமம் பிடுங்குவதில் வாணக்கண் சுருளி கெட்டி. கிழக்கே பார்த்தால் தெற்கே பார்த்தமாதிரி பார்வை. மாட்டுவாலைப் பார்ப்பதும் தெரியாது. மரத்தைப் பார்ப்பதும் தெரியாது. சுளிவாகக் காரியத்தை முடித்துவிடுவான்.

கண்ணியில் கருவமுள் சொருவி சோளத்தட்டை நுனியில் இறுக்கி அறைந்து தோரணையாகக் கிளம்புவார்கள். வீட்டு எரவாரச் சுவரில் கெத்தென்று நிற்கும் கரட்டானை கண்ணிபோட்டு இழுப்பார்கள். அது கழுத்தில் மாட்டிக் கொண்டு துள்ளும். ஓடவிட்டு வேடிக்கைபார்த்துக் கொண்டே போய் யாரிடமாச்சும் பொடியோ புகையிலையோ வாங்கி அதன் வாயில் போடுவார்கள். அது போதையில் ஆடும் பேயாட்டத்தைப் பார்த்து கொண்டாட்டத்தில் குதிப்பார்கள்.

பல்லிவேட்டைக்காக காட்டுக்குப் போவதுண்டு. கருவக்கொப்பில் மறைந்துமறைந்து தப்பும் பல்லியைக் குறிவைத்து எறிந்து விழுத்தாட்டுவதற்குள் கை ஓய்ந்துவிடும். அதன் வாலைத் துண்டித்துத் துள்ளவைப்பதில் ரெட்டைச் சந்தோசம்.

மழைநாளில் கல்லைப் புரட்டி தேள் பிடிப்பார்கள். சுருளி கொடுக்கைக் கத்தரித்துவிட்டு தேளைக் கையிலேந்திக் கொண்டு அக்கினிச்சட்டியாடுவான். பிறகு அதை தாளில் பத்திரமாகச் சுருட்டி வைத்திருந்து வீட்டுக்கு வந்து முறைப்பெண்களிடம் கொடுப்பான். அவர்கள் பிரித்துப் பார்த்துவிட்டு அலறி ஓடுவதைப் பார்க்கணும். ''கோணக் கண்ணுப்பயலே வாணக் கண்ணுப்பயலே'' என்று குறுணி வசவு கிடைக்கும்.

என்றைக்காவது நட்டுவாக்காலி கிடைத்தால் கடுவாயையும் கொடுக்கையும் இணுங்கிக்கொண்டு வந்து முத்துக்களைக்காயவைத்து கைக்குழந்தைகளுக்கு அரணாக் கயிற்றில் கோர்த்துப்போடுவார்கள். பார்க்க லட்சணமாக இருக்கும்.

சுருளிக்கு காலுங்கையும் சும்மா இருக்காது. ஏதாவது குசும்புபண்ணிக்கொண்டே இருப்பான். ஒருநாள் ரப்பர்வில் கட்டி தண்ணீர்ப்பானையில் நின்ற காக்காயைத் தெறிக்கப் போய் பானை ஓட்டையாகி தண்ணீர் பீச்சியது. அவன் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை.

''என் குறியப் பாத்தயா. கல்லு வுழுந்த எடத்துல காக்கா இருந்துருந்தா அதுக்கும் அந்தக்கதிதான்.''

உயரப் பறக்கும் குருவியைத் தெறிப்பான். அது பயத்தில் புரண்டு பறந்து பேண்டுவிட்டுப் போகும். அவன் கெத்து விடாமல் சொல்லுவான்.

''குடுத்த குடுப்புல வாலுக்குக் கீழ ஓட்ட வுழுந்துருச்சு.''

வில்லைப் பிடுங்கி தீக்கொளுத்தும்வரை அவன் ஆட்டம் அடங்கவில்லை.

பள்ளிக்கூடத்தில் படித்த காலமே தனி. அந்த வயசில் ஓடிய ஓட்டமும் நடந்த நடையும் கொஞ்சமா. முத்தையாபுரம் பெரிய பள்ளிக்கூடத்துக்கு ரெண்டுமைல் போகணும். சுற்றுக்கிராமங்களுக்கு அதைவிட்டால் கிட்டத்தில் வேறில்லை. நாலா திசையிலிருந்தும் ஒற்றையடிப்பாதைகளும் வண்டிப்பாதைகளும் பிள்ளைகளைக் கொண்டுவந்து சேர்க்கும்.

பெரிய பள்ளிக்கூடத்தில் பத்துவரை வாசிக்கலாம். சின்னவகுப்புகளுக்கு தட்டிக்கட்டிடம். பெரியவகுப்புகளுக்கு காரைக்கட்டிடம். ஒண்ணுக்கு மணியடித்தால் ஓடிப்போய் சுவர்க்காலில் பாய்ச்ச தட்டிமறைவுதான் தோது.

கோபால் உள்ளூரில் அஞ்சுவரை வாசித்தான். அப்பாவும் அம்மாவும் வாத்திமார்கள். ஊருக்குள் வாத்தியார் குடும்பத்துக்கு நல்ல மதிப்பு. சின்னச் சின்னக் காரியத்துக் கெல்லாம் வந்து யோசன கேட்பார்கள். எல்லாருக்கும் 'வாத்தியாரய்யா வாத்தியாரம்மா'தான். வள்ளிமுத்து நல்லமணி என்றால் ரெம்பப் பேருக்கு ஞாபகம் வராது.

அப்பாவுக்கு உள்ளூர்தான் பூர்வீகம். அம்மாவுக்கு வடக்கே அச்சங்குளம். வேலைக்கென்று ரெண்டுபேரும்

தூரத்துக்குப் போனது கிடையாது. மிஞ்சிமிஞ்சிப் போனால் மூணாவது மைலில் வேலம்பட்டிக்கு நாலுமாசம் நடப்பார்கள். சாயங்காலம் வரும்போது அம்மா மடிநிறைய கீரை பிடுங்கி ஆய்ந்துகொண்டு வரும். எண்ணி அஞ்சாவது மாசம் உள்ளூருக்கே வந்துவிடுவார்கள். அப்பாவிடம் சிலர் கேலியாகக் கேட்பதுண்டு.

''வாத்தியாரய்யா விருந்தாடி போயிட்டு வந்துட்டீகளா.''

அப்பாவுக்குச் சொல்லணுமா.

''வள்ளிமுத்துவாத்தியான அதுக்குமேல வச்சிருக்க முடியுமா அவனால.''

மாற்றிவருவதற்கு அவர் படுகிறபாடு யாருக்குத் தெரியும். வீட்டில் மூணாவது அடுப்பாக எரியும் அம்மாவைக் குளிரவைப்பதற்குள் அவருக்கு உயிரே போய்விடும்.

கோபாலை ஆறாம்வகுப்புக்கு மாற்றியபோது துணைக்கு அஞ்சுபையன்கள் வந்தார்கள். வாணக்கண் சுருளி சட்டிமண்டைச் சுந்தரம் சப்பைவாய் சுப்பிரமணி கழுதைக் கால் கணபதி நொட்டக்கை பொன்னுச்சாமி என்று ஒரு குட்டிப் பட்டாளமே திரண்டது. ஒருத்தருக்கொருத்தர் பட்டப்பேர் சொல்லியே கூப்பிட்டுக்கொள்வார்கள். பட்டப்பேரும் சுருங்கி வாணன் சட்டி என்றாகிவிட்டது. அவனுக்குமட்டும் சொந்தப்பேர் துலங்குவதா. அதென்ன நியாயம். யோசித்துப் பார்த்து செம்பட்டையன் என்று பேர் வைத்தார்கள்.

பொம்பளைப்பிள்ளைகளில் லட்சுமி ஒருத்திதான் அஞ்சு முடித்திருந்தாள். அவளை பெரிய பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப வீட்டில் தயங்கினார்கள்.

கோபாலுக்கு வருத்தம். இவ்வளவு நாளாக கூடவே திரிந்தவள். தொட்டுப்பிடித்து விளையாடியவள். ஊருணியில் குளித்தவள். அவள் இல்லாமல் சரிப்படாது. மனசுக்கு என்னமோபோலிருந்தது. அவளிடம் கேட்டான்.

''ஏன் லச்சிமி பெரிய பள்ளிக்கூடத்துக்கு வரல.''

''நான் மாட்டன்னா சொல்றென்.''

''இம்புட்டுநாளா ஒண்ணாப் படிச்சிட்டு இப்ப திடீர்னு நின்னுக்கிட்டா ஒருமாதிரி இருக்குது.''

''எனக்குந்தான்.''

அவன் அம்மாவிடம் முறையிட்டான்.

''லச்சிமி பாவம்மா. பெரியபள்ளிக்கூடத்துக்குப் போக வேணாம்னு அவுகவீட்ல சொல்லீட்டாகளாம்.''

''அதுக்கென்ன இப்ப. அவுக சவுரியமில்ல.''

''அப்பா சொன்னா கேப்பாகம்மா. எம்மா எம்மா...''

''அப்பாட்ட நீ சொல்லவேண்டியதுதான.''

''நீங்க சொன்னாத்தான் அப்பா கேப்பாகம்மா.''

அம்மா அப்பாவை வற்புறுத்தியது.

''ஒரெட்டுப் போயி வந்துருங்க. இல்லன்னா இவன் தொந்தரவு தாங்காது.''

அப்பா குறுக்குக்கேள்வி கேட்டார்.

''அவுகளுக்கில்லாற அக்கற இவுகளுக்கென்ன வந்துருச்சு.''

''ஊருல ஒரு பொட்டச்சியாச்சும் மேல படிச்சதுன்னு இருக்கட்டுமே.''

''நல்லமணி அதுக்குத்தான் நீ ஒருத்தி இருக்கயில்ல.''

''என்னருந்தாலும் நான் அயலூர்காரிதான.''

''ஓகோ அந்தப் பெரும அச்சங்கொளத்துக்கு வேணுமோ.''

''அதும் சும்மாவா. என்னப் படிக்கப்போடுறதுக்கு குலுக்க குலுக்கயா பணம் செலவழிச்சாகளே.''

''அந்தக் கதையப் பெறகு வச்சுக்கிருவொம். நான் போயி ஊதுற சங்க ஊதிப்பாக்கென். நீ சொன்னப்பெறகு சும்மாருக்க முடியுமா.''

**வ**ள்ளிமுத்துவாத்தியார் லட்சுமியின் வீட்டுக்குப் போய் எடுத்துச்சொல்லி அவளையும் ஆறாம் வகுப்பில் சேர்க்க ஏற்பாடுசெய்தார். அவனுக்கு ரெம்ப சந்தோசம்.

எல்லாரும் தூக்குவாளிகளுடன் கிளம்பினால் மந்தைக் கிணற்றில் ஒருமூச்சு தவளை தேடி கல்லெறி நடக்கும். அப்படியே நடந்தால் கல்லுக்கிடங்கில் ஒரு இருப்பு. செவல் மேட்டுச் செடிகளில் மதியம்வரை சில்லான்வேட்டை.

சுருளி பைக்கட்டை கழுத்தில் மாட்டிக்கொண்டு மும்முரமாகக் கொட்டடிப்பான். சுப்பிரமணி முரசும் பொன்னுசாமி உறுமியும் வாசிப்பார்கள். கணபதி வாயிலிருந்து விரல்களால் சாண்தொடுத்து குழல்ஊதுவான். அண்ணாந்து ஊதினால் வெயில்கூச்சத்தில் குழல் வற்றிவிடும்.

சுந்தரம் சாமியாடுவான். ஆவரங்குழைபிடித்து துள்ளிக் குதித்து துடியாக ஆடுவான். கொட்டுக்காரர்கள் சிலசமயம் அவனைப் பிடிக்கணும். இல்லையென்றால் சாமி கீழே தள்ளி விடும். எழுப்புவதற்குள் பெரும்பாடாகிவிடும்.

மேலதாளங்களுக்கிடையில் கரட்டானைக் கயிற்றில் பிடித்தபடி கோபால் தோரணையாக நடந்துவருவான். கரட்டான் சில்லானை குறுக்குவசத்தில் கவ்விக்கொண்டு கோவப்பார்வையில் அங்குமிங்கும் நடக்கும். லட்சுமியின் பாவாடை நாடாவில் உருவித் திரித்த நூல்தான் கிடாய்க்குக் கயிறு.

''லச்சிமி நீ போயி நேரத்தோட பொங்கலு வையி.''

சாமி வந்து சேருவதற்குள் அவள் கல்லுக்கிடங்குப் பாறையில் அழகான கோயில்கட்டி ஆதாளைத் தோரணம் கட்டி கோயிலுக்குமுன்னால் அடுப்புக்கூட்டி தூக்குவாளியில் பொங்கல் வைத்து இறக்கியிருப்பாள். கோயில் சன்னதியில் கிடாய்வெட்டு நடக்கும். கருக்குமட்டை அரிவாள் கிடாய்த் தலையைப் பந்தாடும்.

சுருளி அதில் கைதேர்ந்தவன். பாறையில் அரிவாளைத் தீட்டினால் ஒருமுறை பதம்பார்ப்பான். அதோடு சரி. கல்லில் கதிக்க நிற்கும் கிடாய் ரெண்டு துண்டாகித் துள்ளும். அந்த வேலையைமட்டும் அவன் யாருக்கும் விட்டுக்கொடுக்க மாட்டான்.

கிடாய்வெட்டிய சந்தோசத்தில் கள்ளிச்செடிக்கு ஓடி பழம்பிடுங்கித் தின்பான். வாயெல்லாம் சிவக்க பாடிக்கொண்டு வருவான்.

**''கள்ளிப்பழம் திங்கச்சொல்லி காயிதம் வந்துருக்கு.**
**கருத்தப்பொண்ணக் கெட்டச் சொல்லி ஓல வந்துருக்கு.''**

சுந்தரம் எல்லாரையும் கூப்பிடுவான்.

''பொங்கலுவச்சு ஆறுது. வாங்கப்பா சாப்புடுவொம். பசி கண்ணப் புடுங்குது.''

பொங்கல் சாப்பாடு மும்முரமாக நடக்கும். லட்சுமி தூக்குவாளி மூடிகளில் வரிசையாகப் பரிமாறுவாள். சாப்பிட்டு முடித்து கல்லுக்கிடங்கில் கண்சிவக்க குளித்தால் சொகமாக இருக்கும். லட்சுமி துணிகளுக்குக் காவலிருப்பாள்.

ஈரக் கால்சட்டையுடன் அப்படியே கொடுக்காப்புளி மரத்துக்குப் போய் பழம்பிடுங்கவேண்டியது. லட்சுமி மடிகூட்டிப் பொறுக்குவாள். அதைப் பகிர்ந்து தின்று கொண்டே சாயங்காலம் வீடு திரும்ப சரியாக இருக்கும். துவர்ப்பும் இனிப்புமாக பழருசிதவிர எல்லாம் மறந்துவிடும்.

சிலசமயம் யார்கண்ணிலாவது எக்குத்தப்பாக மாட்டிக்கொண்டால் திண்டாட்டம். குட்டு உடைந்து வீட்டில் வசவும் அடியும் கிடைக்கும். அதைச் சமாளிப்பதற்கு சுருளி ஒரு வழி கண்டுபிடித்தாள். சீனிக்கல்லெடுத்து பொடிதட்ட வேண்டியது. பாறையில் தூவி விரலை மடக்கிக்கொண்டு புறங்கைப்பக்கம் ரோசினால் முட்டிக்குமுட்டி ரத்தம் கசியும்.

வீட்டுக்குப் போனதும் மூஞ்சியைத் தொங்கப்போட்டுக் கொண்டு வாத்தியார் அடித்தாரென்று சொல்லணும். நம்பிவிடுவார்கள். எல்லாரும் ஒரே பொய்யைச் சொல்ல முடியாது. மாறிமாறி முறைபோட்டுக்கொள்ளணும்.

கோபால் வீட்டில் என்ன பொய்சொன்னாலும் எடுபடாது. அம்மாவும் அப்பாவும் நோண்டிநோண்டிக் கேட்பார்கள். வகைவகையான வசவு கிடைக்கும். அகப்பட்டுக்கொண்டு முழிப்பான். அம்மாவின் பார்வை அப்பாவைக் குதறும்.

''வாத்தியாரு மகனாச்சே. பேரு தொலங்கவேணாமா.''

அப்பா அவனை முறைப்பார். அவன் அத்தனை வசவையும் வாங்கி உதிர்த்துவிட்டு வெளியேறுவான்.

அதுக்காக எல்லாரையும் விட்டுவிட்டு தனியாகப் பள்ளிக்கூடம் போகமுடியுமா. போனால் லட்சுமியும் வருவாள். சுருளி கோவித்துக்கொள்வான். அம்மாவின் வசவையாவது தாங்கிக்கொள்ளலாம். கூடப்படிக்கும் பையன்களுடன் முகத்தை முறித்துக்கொண்டு எப்படிப் போவது.

சிலநாள் செவக்காட்டுத் தோட்டத்தில் இருளாண்டித் தாத்தா கமலையடிக்கவும் உழவடிக்கவும் சொல்லித்தருவார். அதுக்காக சாயங்காலம் ஏதாச்சும் பழம் லஞ்சம் கொடுக்கணும். வண்டிபத்துவதற்குத் தனிக்கணக்கு. லஞ்சம் கொஞ்சம் அதிகம். அதிலும் அவருக்குமுன்னால் உட்கார்ந்து மாட்டைத் தொட்டு நாக்குச்சுடக்கில் விரட்டிப் பத்துவதற்கு ரெம்பக் கிராக்கி. அவரை ஏமாற்றமுடியாது. துல்லியமாகக் கணக்கு வைத்திருப்பார்.

இந்த லட்சணத்தில்தான் படிப்பு நடந்தது. பாதிநாள் பள்ளிக்கூடம். மீதிநாள் கல்லுக்கிடங்கு. பள்ளிக்கூடத்தைவிட கிடங்கில் படித்த படிப்புதான் ரெம்ப.

லட்சுமி பெரும்பாலும் கோபாலுடன்தான் பள்ளிக்கூடம் போவாள். சேர்ந்தே போய்வருவார்கள். யார் முந்திப் புறப்பட்டாலும் மந்தைப் பனையோரம் காத்திருக்கணும்.

பள்ளிக்கூடத்துக்குப் பின்னால் தெப்பத்துப்படியில் மதியச்சாப்பாடு. அவர்களுடன் லட்சுமியும் உட்காருவாள். தூக்குவாளியில் எடுத்துவைத்த வெஞ்சனத்தை கூச்சப்படாமல் கோபாலிடம் நீட்டுவாள். சுருளி கோபாலை கோவத்துடன் பார்ப்பான்.

''நாங்கெல்லாம் கண்ணுக்குத் தெரியலயாக்கும்.''

லட்சுமி எதுவும் பேசமாட்டாள். கோபால் வெஞ்சனத்தை வரிசையாகப் பங்குவைப்பான்.

லட்சுமியும் கோபாலும் தின்பண்டத்திலும் மிச்சம் வைத்து பரிமாறிக் கொள்வார்கள். பள்ளிக்கூடத்தில் ஒண்ணுக்கு விடும்போது பையன்கள் எல்லாரும் போனபிறகு பாவாடை மடிக்குள் ஒளித்துவைத்திருக்கும் பண்டத்தை எடுத்து சிரிப்பில் கலந்து தருவாள். அவன் அவளைப் பார்த்துக் கொண்டே தின்பான்.

குளத்தங்கரை ஆலமரத்தைத் தாண்டித்தான் பள்ளிக் கூடத்துக்குப் போகணும். போகும்போது ஆளுக்கொரு இடமாக கல்லில் தட்டிவைத்துவிட்டுப் போவார்கள். அதில் பால் வடிந்து இறுகியிருக்கும். வீடுதிரும்பும்போது அந்த ஆலம் ஒட்டைப் பிய்த்து வாயில் போட்டால் ரப்பராக இழுபடும். வீடுவரை மென்றுகொண்டே வரலாம். கோபால் சுத்தமான ஒட்டாகப் பார்த்து லட்சுமிக்குக் கொடுப்பான். அவள் செல்லமாக அசைபோடுவாள்.

அவளுக்கு கோபால் மீது பிரியம் ரெம்ப. ஒருநாள்கூட அவனைப் பார்த்துப் பேசாமல் இருக்கமுடியாது. வாய்க்கும் கைக்கும் கோவாலு கோவாலுதான். அவனும் அப்படித்தான். வளையவளைய வருவான். வண்டி வண்டியாகப் பேசுவார்கள். அப்படியும் தீராது.

கோபாலுக்கு கைகாலில் சிறு புண்ணிருந்தால்கூட அவளுக்கு உறுத்தும்.

''புண்ணெதுக்கு வந்துச்சு கோவாலு. வுழுந்துட்டயா.''

தொட்டுத்தொட்டுப் பார்ப்பாள். எச்சைத் தடவி பாவாடையால் துடைப்பாள். முகம் கலங்கியிருக்கும். அவன் சொல்லுவான்.

''நீ மருந்து போட்டப்பெறகு ஆறிப்போச்சு.''

அவளுக்கு வருத்தம் பறந்துவிடும்.

எல்லாரும் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போய்க்கொண்டிருக்கையில் கழுதைக்கால் கணபதியும் நொட்டக்கை பொன்னுச்சாமியும் சுணங்கினார்கள். என்னென்னமோ சொல்லிச் சரிப்படுத்தியும் முடியவில்லை. எட்டாம்வகுப்பில் கணக்கை முடித்துக்கொண்டார்கள். சுந்தரம் சொன்னான்.

''அவனுக்கு நடக்கமுடியல. இவனுக்கு எழுத கைவெளங்க மாட்டங்குது.''

சுருளிகூட தாளக்கம்போட்டான்.

''வகுறாரகஞ்சிகுடிச்சால்ல தெம்பா நடக்கலாம். படிப்பு மயிரா மண்டையில ஏறும்...எனக்குங்கூட நின்னுக்கிற லாமான்னு நெ்னப்பு ஓடுது.''

கோபால் வைதான்.

''நின்னு பண்ணிமேய்க்கப்போறயா. ஆளப்பாரு.''

''அப்படின்னாகூட வீட்ல வரவாசியிருக்கும். நேரத்துக்கு நேரம் சாப்பாடு கெடைக்கும்.''

''நீ இனிமே மதியச்சோறு கொண்டுவரவேணாம். நான் கொண்டுவாறத ரெண்டுபேரும் சாப்புடுவொம். சரிதானா.''

''ஆமப்பா லேசா சொல்லிப்புட்ட. இப்பவே ஒங்க அம்மா ஒரு தினுசாப் பாக்குது. சோறு குடுக்குற வெசயம் தெரிஞ்சா அம்புட்டுத்தான். கண்ணத் தோண்டிப்புரும். பச்சத்தண்ணியக் குடிச்சிட்டு பட்டினி கெடந்தாலும் கெடப்பனேயொழிய ஒங்க அம்மா குடுத்துவுடுற சோத்தத் தொடமாட்டென்.''

''அப்படின்னா வாய மூடிக்கிட்டு பள்ளிக்கூடத்துக்கு வரணும்.''

லட்சுமியைச் சேர்த்து அஞ்சுபேர் பள்ளிக்கூடம் போனார்கள். எப்படியோ எட்டாம் வகுப்பு கண்டம்தாண்டியது.

ஒன்பதாம் வகுப்பில் கோபாலுக்கு புதுக்குடை வாங்கித் தந்தார்கள். சுந்தரம் கிண்டலடித்தான்.

''அவனுக்கென்னடா வாத்தியார்வீட்டுப் புள்ள. சைக்கிள்கூட வாங்கித்தருவாக.''

சுப்பிரமணி சொன்னான்.

''சைக்கிள் வாங்கித்தந்தா வேணாம்னு சொல்லீருவான்.''

''எதுக்கு.''

''அவனத்தான் கேக்கணும்.''

கோபாலுக்குக் கடுப்பு.

''ஏலே சைக்கிள் வாங்குறதும் வாங்காறதும் எம்பிரியம். ஒனக்கென்ன வந்துருச்சு.''

சுருளி இழுத்தான்.

''அவன் என்னசொல்ல வந்தான்னா...''

''ஒரு மயிரும் சொல்லவேணாம்.''

''சரிப்பா.''

அவர்கள் வேறுபேச்சுக்குத் திரும்பினார்கள்.

கோபாலுக்குக் குடைசுமக்க ஆனந்தமாக இருந்தது. முன்னும்பின்னும் விதவிதமாகத் தொங்கப்போட்டுக் கொண்டு தோரணையாக நடப்பான். சிலநேரம் லட்சுமி சுமப்பாள்.

மழைநேரத்தில் பள்ளிக்கூடம் விட்டால் சாவகசமாக நடந்துபோகமுடியாது. ஒரே ஓட்டத்தில் ஊர் போய்ச் சேரணும். இல்லையென்றால் மழைபிடித்து ஓடையில் வெள்ளம் மறித்துவிடும்.

ஊரிலிருந்து சாக்குக்கொங்காணி போட்டுக்கொண்டு பெரியவர்கள் வந்து கடத்தும்வரை கரையில் காத்திருக்கணும். சிலசமயம் மே வெள்ளம் புரண்டுவிட்டால் ஆட்கள் அக்கரையிலும் பையன்கள் இக்கரையிலும் மழைச்சிணுங்கலில் நடுங்கியபடி தண்ணீர் சொடிந்து வடியும்வரை நிற்கணும்.

லட்சுமி பயத்தில் பதுங்கிவிடுவாள். வெள்ளத்துக்குள் இறங்கும்போது கோபாலின் கையை பற்றிப் பிடித்துக் கொள்வாள்.

''நின்னு போ கோவாலு. இல்லன்னா நான் வெள்ளத்துல போயிருவென்.''

''நான் இருக்கன்ல. பயப்படாம வா.''

மணலரிக்கும் தரையில் அவனது காலை மிதித்து வழி தெரிந்து நகருவாள் அவள். மெல்லமெல்ல அக்கரை வரும்.

ஒரு திங்கள்கிழமை. பள்ளிக்கூட நேரத்திலேயே மழைபிடித்துக்கொண்டது. சுருளி சுப்பிரமணி சுந்தரம் மூணுபேரும் பைக்கட்டுகளை வகுப்பில் வைத்துவிட்டு ஓட்டம்பிடித்தார்கள். கோபால் அவர்களுடன் ஓடவில்லை. அவனும் லட்சுமியும் குடைக்குக் கீழே வந்தார்கள். ஒருத்தொருக்கொருத்தர் ஒட்டிக்கொண்டு நடந்தார்கள். அவர்களைச் சுற்றிலும் குடைக்கம்பி நுனியில் மழைத்துளிகள் அரும்புகட்டிச் சொரிந்தன.

குறுமணலில் குழம்பிக்கிடந்த தடங்களைக் காட்டினாள் அவள்.

''பையங்க ஓடுன தடத்தப்பாரு கோவாலு.''

அவன் பின்னால் திரும்பிக் காட்டினான்.

''நம்ம தடத்தப்பாரு பின்னால.''

''சோடிசோடியா இருக்குது.''

''சுந்தரம்பய என்ன சொன்னான் தெரியுமா.''

''என்னசொன்னான்.''

''எங்கவீட்ல சைக்கிள் வாங்கிக் குடுத்தாகன்னா வேணாம்னு சொல்லீருவனாம்.''

''எதுக்கு.''

''பெறகு ஒங்கூட சேந்து போகமுடியாதாம்.''

''ஒனக்கு சைக்கிள் வாங்கப்போறாகளா.''

அவள் வருத்தமாக அண்ணாந்தாள். அவன் குறும்பாகப் பார்த்தான்.

''ஆமா.''

''அப்ப நான் ஒத்தியில நடக்கணும்.''

''ஒன்ன பின்னால வச்சுக்கிருவென்.''

''மாட்டென். வெக்கமாருக்கும்.''

''அப்படின்னா சைக்கிள் வேணாம்னு சொல்லீறென்.''

''ம்.''

''நீ சொன்னாச் சரி.''

மழைஎதிர்க்காற்றுக்கு விசிறியது. அவளது தோள் பட்டையும் தொடையும் அவனை உரசியபோது வெது வெதுத்தது. பைக்கட்டை மாராப்பாகப் போட்டிருந்தாள். அதன் கைப்பிடி அவள் உடம்பில் இறுகப் பதிந்திருந்தது.

தூறலுக்குச் சில்லிட்டுச் சிலிர்த்த அவள்முகமும் காற்றுக்குப் பிரிந்து சிலுசிலுத்த தலைமுடியும் குளிரில் அவனுக்குச் சூடேற்றின. அவனையே பார்த்தபடி தடுமாறி நடந்தான். அவள் கேட்டாள்.

''என்ன.''

''ஒண்ணுமில்ல.''

அவளது இடுப்பை வளைத்து இறுக்கிக்கொண்டான். நடைக்குழப்பத்தில் கால்கள் பின்னும்போது நின்று நிதானத்திற்கு வந்து நகர்ந்தார்கள்.

அவன் வீட்டுக்கு வந்த முதல்வேலையாக கண்ணாடியை எடுத்து முகத்தை உற்றுஉற்றுப் பார்த்தான். மேலுதட்டுப் பரப்பில் மையாங்கோரைபோல் பூனைமயிர்கள் கருப்பாகி அடர்ந்துவிட்ட நினைப்பு. தலையை மறுபடியும் வாரினான். கால்சட்டையைக் கழற்றிவிட்டு அப்பாவின் வேட்டியை உடுத்திக்கொண்டான்.

எல்லாவற்றையும் காக்காய்ப் பார்வையில் கவனித்துக் கொண்டிருந்த அம்மாவின் கண்களில் ஆச்சரியம். உதட்டில் குறும்பு விளையாடியது.

''எளவட்டத்துக்கு வேட்டிதான் வேணுமா.''

அவன் ஒண்ணும் பேசாமல் ஓடிவிட்டான்.

பிறகெல்லாம் அவனுக்கு கால்சட்டை கொஞ்சங் கொஞ்சமாக மறந்துவிட்டது. லட்சுமிக்கு முன்னால் கால் சட்டையுடன் நிற்கக் கூச்சமாக இருந்தது. அவளும் பாவாடை சட்டையில் வெட்கப்பட்டாள்.

அரைப்பரீட்சை லீவுநேரத்தில் சுந்தரம் வந்து கோபாலிடம் கேட்டான்.

''லச்சிமி சடங்காயிட்டாளாமில்ல.''

கோபாலுக்கு இது பிடிக்கவில்லை.

''எங்கிட்ட ஏன் கேக்க. ஒனக்கு எளக்காரமா.''

''என்னப்பா கோவிச்சுக்கிற. ஒனக்குத் தெரியுமான்னுதான கேட்டென்.''

''எனக்குத் தெரியாது.''

''இருஇரு பள்ளிக்கூடம் தொறக்கட்டும். அப்பப் பேசிக்கிறென்.''

சுந்தரம் கறுவிக்கொண்டு போனான்.

லீவு முடிந்தது. லட்சுமி பள்ளிக்கூடம் வரவில்லை. கோபால் ஒவ்வொரு நாளாக எதிர்பார்த்தான். மனசில் தாங்கமுடியாத வருத்தம். ஆவலையும் தவிப்பையும் அடக்க முடியவில்லை. அடிக்கடி ஊர்க்கிணற்றுப் பக்கம் லாந்தினான். அவள் தண்ணீர் எடுத்து வரும்போது எட்டத்திலிருந்துதான் பார்க்க முடிந்தது. அவள் முன்னைப்போல கலகலப்பாகப் பேச வெட்கப்பட்டாள். அடிக்கடி தாவணி முந்தானையை இழுத்துச் சொருகினாள். பெரிய மனுசியாகத் தெரிந்தாள். அவன் ஆசையோடு பேச்செடுத்தால் தவிர்த்தாள்.

''போயிரு ஆராச்சும் பாத்துறப் போறாக.''

''பாத்தா என்ன.''

''ஊருவாயி சும்மாருக்காது.''

அவள் அவசரமாகப் பிரிந்துபோனாள்.

முன்பெல்லாம் அவர்கள் தெருவில் நின்று பேசிக் கொள்வதை யாரும் பொருட்படுத்தமாட்டார்கள். இப்போது அப்படியில்லை. அவர்கள் சந்தித்துக்கொண்டாலே ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள்.

''பேச்சு ரெம்ப மும்முரமா நடக்குதே.''

''என்னென்ன திட்டம் வச்சிருக்காகளோ.''

கண்ணைச் சிமிட்டிக்கொண்டு போனார்கள்.

லட்சுமியின் குடும்பம் வசதியில்லாதது. அவளை வீட்டில் இருத்திச் சோறுபோடுமளவுக்கு ஓட்டமில்லை. மூணு அண்ணன்மாரும் கூலிவேலை செய்தார்கள்.

கோபாலின் அப்பா நேரில் சொல்லிப்பார்த்தார்.

''இவ்வளவு காலம் படிக்கவச்சிட்டு கடைசி நேரத்துல நிறுத்திட்டீகளே. இருக்கிறது ஒருபொண்ணு. படிச்சு நல்ல வழியத் தேடிக்கிறட்டுமே.''

லட்சுமியின் அம்மா சாதாரணமாகச் சொன்னாள்.

''ஆமா பொம்பள படிச்சு நமக்குத்தான் தேடிக்குடுக்கப் போறா. பெரிய கழுதையானப் பெறகு அந்தத் தோரிணி

யெல்லாம் எதுக்கு. இருக்கிறவரைக்கும் காட்டுவேல செய்ய வேண்டியது. ஒரு மம்பட்டிக்காரன் கெடச்சா புடிச்சுக் குடுத்துறவேண்டியது.''

''அன்னபூர்ணம் ஆரம்பத்துல கஸ்டமாத்தான் இருக்கும்மா. ஆனா பொண்ணோட பிற்காலத்த நெனச்சுப் பாக்கணும்.''

''வாத்தியாரய்யா நல்லதுக்குத்தான் சொல்றீக. இல்லங்கல. மேல படிக்கவைக்கிறதுன்னாச் சும்மாவா. அண்ணண்ணைக்குச் சோறு வெஞ்சனம் ஆக்கிக் குடுக்கணும். நல்ல சேலத்துணி எடுத்துக் குடுக்கணும். இருக்கிற நெலமையில இதெல்லாம் நம்மாள முடியுமா. ஆசப்பட்டு ஆகப்போறதென்ன.''

லட்சுமிக்கு விதித்தது அவ்வளவுதான். பன்னரிவாளும் களைசுரண்டியும் பிடித்து காட்டுவேலை செய்ய ஆரம்பித்தாள். பள்ளிக்கூடத்துத் தூக்குவாளியில் சோறு சுமந்தாள்.

கோபால் பள்ளிக்கூடம் போகும்போது மந்தைப்பனை வந்ததும் கால் தன்னையறியாமல் தாமதிக்கும். குத்துக்கல்லில் உட்கார்ந்து ஊர்ப்பாதையைப் பார்ப்பான். மனசு தவிக்கும். தன்நிழலை பாதத்தால் அளந்து நேரம் கணக்கிடுவான். எரிச்சலில் நடக்கும்போது மந்தைக் கிணற்றுக்குள் தவளையின் எக்காளம் தடதடக்கும்.

சிலசமயம் லட்சுமி பொம்பளைகளுடன் அவனைக் கடந்து போவாள். பாதையைவிட்டு விலகி தரையைப் பார்த்தபடி அவள் போவதை அவன் வருத்தத்துடன் வெறித்துக்கொண்டிருப்பான். பிந்திவரும் வெள்ளையம்மா மதினிக்குச் சொல்லணுமா.

''கொழுந்தன் என்ன தெகச்சு நின்னுட்டீக. பள்ளிக்கூடம் போறதுக்கு மனசில்லையா... எங்ககூட களைக்கு வாறீகளா. தொணைக்கு லச்சிமி இருக்கா. இருந்திருந்து அவள காட்டுக்கு வெரட்டீட்டீகளே...''

அவன் அவளைப் பரிதாபமாகப் பார்ப்பான்... ஒண்ணும் தெரியாததுபோல் பேசினால் எப்படி மதினி. நான்கிடந்து தவிப்பது யாருக்குத் தெரிகிறது. ஆளைக்

கண்டால் தூர விலகிப்போகும் லட்சுமி நின்று ஒருவார்த்தை பேசினால் மனசாறிவிடுமே. அதைக் கேட்கவேண்டியதுதானே.

பிறகும் அவள் குறும்பால் குத்துவாள்.

''ஏன் அப்படிப் பாக்கீக. மதினிமேல அம்புட்டுப் பிரியமா. ஆரும் கோவிச்சுக்கிறப்போறாக.''

அதுக்குமேல் நிற்கமாட்டாள். பைக்கட்டை வீசியெறிந்துவிட்டு ஓடலாமா என்றிருக்கும் அவனுக்கு. தோட்டத்தில் ஆடும் பயிர்களை அடித்துக்கொண்டு நகர்வான். இதுக்குள் பேச்சுத்துணைக்கு சுருளி வந்துவிடுவான்.

உண்மைதான். கோபாலுக்கு பள்ளிக்கூடம் போக வெறுத்துக்கிடந்தது. தெப்பத்துப்படியும் ஒற்றையடிப் பாதையும் தனிமைப்பட்டுவிட்டன. தெப்பத்தில் உட்கார்ந்தால் சுவர்களில் முண்டித்தெரியும் மரவேர்கள் பாம்பாகப் பயமுறுத்தின.

சாயங்காலம் அம்மா பொரிகடலை தந்தது. அவன் அதைத் தின்னாமல் கிளறியபடி வேப்பமரத்தில் பூப் புல்லரிப்பைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''என்னடா இது. பொரிகடல திங்கிறதுக்கா எண்ணிப் பாக்கிறதுக்கா.''

அவனுக்கு வெட்கமாகிவிட்டது.

''இத நீங்களே தின்னுங்க.''

அவன் துண்டை எடுத்துக்கொண்டு கிணற்றுப்பக்கம் போகும்போது அம்மா அப்பாவிடம் சலித்துக்கொண்டது.

''பய பெரியாளாயிட்டான். ஒரு சொல்லுச் சொல்லவுட மாட்டாங்கானே.''

ரெம்பநாளைக்குப்பிறகு கோயில் பொங்கல் சமயம் கோபால் லட்சுமியைச் சந்தித்தான். பிரயாசைப்பட்டு கூட்டத்திலிருந்து தப்பி படப்புமறைவுக்கு வந்தார்கள்.

''ஒன்னப் பாத்துப் பேசாம எனக்கு மனசு எப்படியோ இருக்கு லச்சிமி.''

''எல்லாருக்கும் அப்படித்தான்.''

''பள்ளிக்கூடம் போகவே புடிக்கல.''

''எங்களுக்குத்தான் குடுத்து வைக்கல. காட்ல அலையி றொம். ஒனக்கென்ன வந்துருச்சு.''

''ஒத்தியில போறதுக்கு எரிச்சலாருக்கு.''

''ஏன் சுருளி இருக்கான். சுந்தரம் இருக்கான் ஆளா இல்ல.''

''நீ இல்லையே.''

''அதுக்கு என்னசெய்றது. ஒங்க அப்பாவை ரெண்டு மாடு புடிச்சுக்குடுக்கச் சொல்லு. நீ கமலையடிச்சா நான் தண்ணிபாச்சுவென்.''

''ஒனக்காகத்தான் படிக்கென்.'

அவள் ஏறிட்டுப் பார்த்தாள். இருட்டில் அவளது கையில் பூச்சரத்தையும் வளையலையும் திணித்தான் அவன். உள்ளங்கையைத் தடவினான். பிஞ்சுக்காய்ப்பு சொர சொரத்தது. அவள் அழுதாள். அவனுக்கும் கண்ணுக்குள் மழைமேகக் கனம். பெருமூச்சுக்கிடையில் பிரிந்தார்கள்.

தெருவில் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் கூட்ட நெரிசலுக்கிடையே அவள் கொண்டடைப்பூ குலுங்க அழகாக இருந்தாள். செவிமயிரைக் கோதும்போது கையில் வளையல் மினுங்கியது. பலதலைகள் மறைத்தாலும் அவர்கள் துல்லியமாக அடையாளம் கண்டுகொண்டார்கள்.

முயலை விரட்டிய ஆட்கள் தொய்ந்தும் வேகமாகவும் ஓடி ஒரு கம்மம் புஞ்சையைச் சுற்றி வளைத்தார்கள். ஒருவழியாக கோபால் அங்கே போய்ச்சேர்ந்தான்.

''ஏலே நாய தண்ணியில போட்டுப்புடி. மேற்க தள்ளி இழுத்துக்கெட்டு.''

''நீ வந்து வளைஞ்சுக்கிட்டயில்ல. அப்ப மொசலு அந்தப்பக்கம் போயிருக்காது.''

''இந்தா பாரு ஈரவாய்க்கால்ல தடங்கெடக்குது.''

''இதவுட்டு எங்கயும் போகல. எல்லாரும் ஆளுக்கொரு தட்டுல நில்லுங்கப்பா.''

பயல்கள் கிணற்றுத்தொட்டியில் நாய்களை நீயவிட்டு இழுத்துவந்து வசமாகப் பிடித்துக்கொண்டார்கள். பெட்டைக் குட்டியின் தலையில் ஒருத்தன் ஈரத்துண்டைப் பிழிந்து வால்வரை உருவிவிட்டான்.

புஞ்சைக்குள் எல்லாரும் வரிசைபிடித்து அமைதியாக முன்னேறினார்கள். அத்தனைபேர் பார்வையும் தரைமீதே கவனப்பட்டிருந்தது. முயல்தடங்களைத் தேடினார்கள். அங்குமிங்கும் கால்மதியின் போக்கைக் கண்டுபிடித்து நடந்தார்கள்.

கோபால் புஞ்சைவரப்பில் கம்பை ஓங்கி நின்றிருந்தான். வடிவேலு அவனை உள்ளே வருமாறு சைகைகாட்டினான். அவன் வேண்டாமென்று கையசைத்தான்.

யார் அந்தக் கம்புக்காரன். அவ்வளவு சுளிவாகக் கம்பு பிடித்திருக்கும் தோரணையை எங்கோ பார்த்தமாதிரி இருக்கிறதே. சின்னவயசில் கிடாய் வெட்டிய அதே சாயல். கோணல் பார்வை. அடடா வாணக்கண் சுருளியா அது.

கோபாலுக்குச் சந்தோசம். இவ்வளவு நேரமும் கண்ணில் தட்டுப்படவில்லையே. அவன் சுருளியையே பார்த்துக்கொண்டிருந்தான். புஞ்சைக்குள் இறங்கி கிட்டத்தில் போகலாமா என்றிருந்தது.

கொஞ்சநேரம். சுருளி திடீரென நின்றான். ஓங்கிய கம்பு தரையில் வேகமாக விழுந்தது. பொத்தென்று சத்தம். மறுநிமிசம் அவன்கையில் முயல்தொங்கியது. கம்பீரமாக நின்றான்.

சாகத் துடித்த முயல் கடைசியில் விலுக்விலுக்கென்று காலுதைத்து விறைத்து நகத்தால் கம்மந்தோகையைக் கிழித்துக்கொண்டு முடித்தது.

எல்லாருடைய முகத்திலும் பெருமிதம். கலகலத் தார்கள். ஒருத்தன் சுருளியைக் கேட்டான்.

''நெசமாவே மொசலப் பாத்துத்தான் அடிச்சயா.''

சுருளிக்குச் சுருத்துவந்தது.

''ஏன் நீ அடிக்கவேண்டியதுதான. குருட்டுக்கழுதமாதிரி தாண்டிக்கிட்டுத்தான போன. சாவாரஞ்செத்த பயலுக் கெல்லாம் பேச்சு வேறயா.''

பாலுச்சாமி சமாதானப்படுத்தினான்.

''அட வுடுப்பா அத்தோட. தெரியாமக் கேட்டுட்டான்.''

முயலின் முகத்தில் மீசைமயிர்கள் தொய்வுற்று துருத்திய கண்களில ஈரப்பசை வறண்டு முன்பற்கள் வெளித்தெரிய நெற்றியுடைசலில் ரத்தம் கசிந்து சாவு நிரந்தரமாகப் படர்ந்திருந்தது.

சுருளி கோபாலைப் பார்த்துவிட்டான்.

''ஆருப்பா அது சமஞ்ச பொண்ணுமாதிரி கொழஞ்சுக் கிட்டு நிக்கிறது. இம்புட்டு நேரமும் நான் பாக்கல பாரு. நம்ம ஊருக்கு வரணும்னுதான் வந்தயா இல்ல...''

கோபால் மழுப்பினான்.

''ஒங்களப் பாக்கத்தான் வந்துருக்கொம்.''

''நல்லாப் பாரு. நாயோட நாயா காட்டுக்குள்ள அலையிறதப்பாரு...நாங்களும் படிச்சிக்கிழிச்ச கிழிப்புக்கு வெவசாயத்துல வாற வரவுசெலவுக் கணக்கு அடபட மாட்டங்குது. பொண்டாட்டிக்காரி எத்தன புள்ளப் பெத்துருக் கான்னு கேட்டா அந்தக் கணக்குமட்டும் நல்லாத் தெரியும்.''

சுருளி மாறவில்லை.

முயலின் கால்களை அகலித்துப் பிடித்து சூரிக்கத்தியால் வயிற்றில் கிழித்தார்கள். ரத்தம் பொங்கி வடிந்தது. தொட்டுத் தொட்டு புருவத்தில் தடவிக்கொண்டார்கள். கோபாலும் ரத்தத்துக்குள் விரல்விட்டான். வெதும்பியது.

குடலை வெளியிலெடுத்து நாய்களுக்கு பங்கிட்டுப் போட்டார்கள். குடலையொட்டிய சதைப்பிண்டத்துக்குள் ஏதோ துடித்தது.

''ஏ குட்டி கெடக்குதுப்பா. கோரப்படாம வெளிய எடுங்க.''

கருப்பையைக் கிழித்துப் பார்த்தார்கள். வெளியே வர சமயம்பார்த்துக் காத்திருந்த குட்டி முடக்கிக் கிடந்தது. ஈரத்துக்கு மடங்கிய காதுகள். கொசுகொசுவென்று மயிர். லேசாக உதறிக்கொண்டது. சுருளி குட்டியை கோபாலிடம் கொடுத்தான்.

''மெட்ராசுக்குக் கொண்டுபோ. வளக்கலாம்.''

அவன் அதை தடவிப்பார்த்துவிட்டு வடிவேலிடம் கொடுத்தான். தடவிய ஈரம் கையில் ஒட்டியிருந்தது. வேனலில் உலருமுன் செடியைப் பிடுங்கித் துடைத்தான்.

வடிவேலு தலைத்துண்டை கொங்காணி முடிந்து குட்டியை பத்திரமாகப் போட்டுக்கொண்டான்.

''நல்ல குட்டி. இத வளக்கப்போறென் மாப்பிள. ரெண்டுமூணு மாசத்துல பெரிசாயிரும். என்னத்தத் திங்கப்போகுது. அருகம்புல்லப் போட்டாப் போதும்.''

முயலின் மாறுகால் ரெண்டைப் பின்னி வால்மயிரை வாயில் திணித்து வடிவேலிடம் ஒப்படைத்தார்கள்.

''இதவும் நான்தான் சொமக்கணுமா.''

வடிவேலு குட்டியிருந்த கொங்காணியைத் தோளில் தொங்கப்போட்டுக்கொண்டு செத்தமுயலை வாங்கினான். சுருளி சொன்னான்.

''குட்டியச் சொமக்கிறவன்தான் தாயவும் சொமக்கணும்.''

''தாயத்தான் கொன்னு கொடல எடுத்துட்டீகளே.''

''இல்லன்னா குட்டி கெடச்சிருக்குமா.''

கோபால் முயலின் கண்களை ஒருதடவை பார்த்துவிட்டு நடந்தான். முருகன் சுதாரித்தான்.

''மொதமொதல்ல பொட்ட அம்புட்ருக்கு. இண்ணைக்கு வேட்ட நல்லாச் சாயும்.''

மறுபடியும் வேட்டை மும்முரம். சூடுபறக்கும் வெயில். மேல்பரப்பு முருகிய ஈரமண் கால்மிதிக்கு நொறுங்கியது. துவண்ட செடிகளைத் தேடி ஆட்கள் சிதற ஆரம்பித்தார்கள்.

சுந்தரம் வந்து கோபாலிடம் சொன்னான்.

''வாணக்கண்ணன் இனிமே பள்ளிக்கூடம் வர மாட்டானாம்.''

''அவனுக்கு என்ன வந்துருச்சு திடீர்னு.''

''நீ போயிக் கேளு.''

சுருளி கோணக்கலப்பை சாத்துவான் என்று எதிர் பார்த்ததுதான். அவன் பேச்சும் போக்கும் கொஞ்சநாளாக அப்படித்தான் இருந்தது. ஒவ்வொருநாளும் அவனைத் தடி வைத்துத் தெண்டி கிளப்பிக்கொண்டு போகணும். சொணங்கிச் சொணங்கி சண்டித்தனம்பண்ணுவான்.

எதுக்கும் ஒருவார்த்தை கேட்டுப்பார்க்கலாமென்று சுருளியிடம் போனான் கோபால்.

''ஒனக்கென்ன நோக்காடு வந்துருச்சா.''

சுருளி சாதாரணமாகவே இருந்தான்.

''லச்சிமி நின்னுக்கிறலயா. அதப்போல நானும் வரல.''

''அவ பெரிய மனுசியாயிட்டா.''

''நானும் பெரியமனுசனாயிட்டென்.''

''அவ பொம்பளப்புள்ளடா.''

''நான் ஆம்பளப்புள்ள.''

''நீ இப்ப வரப்போறயா இல்லையா.''

சுருளி உண்மையைச் சொன்னான்.

''இதெல்லாம் நமக்கு லாயக்குப்படாதுப்பா. பெரிய தொறட்டுப்புடிச்ச வேலையாருக்குது. வெள்ளன எந்திரிச்சுக் குளிக்கணும். துணி தொவைக்கணும். தலையில எண்ண தேச்சு மெனக்கெட்டு உச்சியெடுத்து வளிக்கனும். வெளையாட்டுக் காரியமா. நம்மால முடியாது.''

''தெனமும் ஒருசட்டி திங்கமில்ல.''

''எல்லாருந்தான் திங்காக.''

''அதுக்காக குளிக்காம அழுக்குச் சட்டையோட பள்ளிக் கூடம் போறதா.''

''பெரிய அழுக்கு. அதுபாட்ல இருந்துட்டுப் போகட்டுமே. ஒடம்ப தேய்சுத்தேச்சுக் குளிச்சா பலக்கொறவு தானப்பா. நல்லாருக்கிற துணிய அடிச்சுக் கிழிக்கிறது. பெறகு தைக்கிறது...''

''வரலன்னா எல்லாம் சொல்லுவ. கண்ணமூடிக்கிட்டு பத்துவரைக்குப் படிச்சா ஒரு வேலைக்குப் போயிறலாமில்ல.''

''கண்ண மூடுனா ஒறக்கந்தான் வருது. தாயிதகப்பன வுட்டுட்டு எங்க வேலைக்குப் போறது. இங்க இல்லாற வேலையா. அருவா மம்பட்டி புடிச்சா ஆயிரம் வேல செய்யலாம். இந்தக் காடுகரைய எப்படி மறக்கமுடியும். நான் முழிக்கிற முழியப் பாத்தாலே பயந்துபோயி எவனும் வேலைக்குச் சேத்துக்கிறமாட்டான்... நீங்க போங்கப்பா நான் வரல.''

சுருளியை இத்தனை வருசம் குளிக்கவைத்ததே பெரிய காரியம். இழுத்துக்கொண்டு போய் கிணற்றுக்குள் தள்ளணும். பல்தீத்தச் சொல்லணும். லேசுக்குள் துணி துவைக்க மாட்டான். நனைத்துக்கொடுக்கணும்.

அவன் துணி துவைக்கிற விதமே தனி. மண்ணைக் குழைத்து எடுத்துவந்து கிணற்றுப்படியில் குளம்மாதிரி கரைகட்டி தண்ணீரை இறைத்து ஊற்றிப் பெருக்குவான். அதில்சோப்பை நன்றாகக் கரைத்து அதுக்குள் துணியைப் போட்டு ஊறவைத்துக் கழுவுவான். சுப்பிரமணி சொல்லுவான்.

''கொஞ்சங்கொஞ்சமா சோப்புப் போடணுண்டா.''

''வேற வேலையில்ல. எல்லாம் ஒண்ணுதான்.''

அவன் ரெம்ப நல்லவன். யாரிடமும் சண்டைக்குப் போகமாட்டான். அவனுடன் கோவித்துக்கொண்டு கொஞ்ச நேரம் பேசவில்லையென்றால் அழுதுவிடுவான். வாயில் பொய்புரட்டு கிடையாது. மனசில் உள்ளதை ஒளிவுமறை வில்லாமல் பேசிவிடுவான்.

அவனை கிணற்றுக்கு இழுத்துக்கொண்டு போனது போல் ப்ள்ளிக்கூடத்துக்கு முடியவில்லை. காலையில் ஆளுக்குமுந்தி ராகம்பாடிக்கொண்டு வேலைக்குப் போய் விடுவான். அவன் பிழைப்பு அப்படியாகிவிட்டது.

சரி அவன்தான் அப்படியென்றால் சுப்பிரமணியாச்சும் நிற்கக்கூடாதா. அவனும் தாளக்கம் போட ஆரம்பித்தான். நல்லவார்த்தை சொல்லி வண்டியைத் தள்ளவேண்டியிருந்தது. அப்படியும் முடியவில்லை. ஒன்பதாம்வகுப்பில் படுத்துவிட்டான்.

அவன் வியாபாரத்தை மனசில் வைத்திருந்தான். அதனால் தெம்பாகச் சொன்னான்.

''கமலமாடா அலையிறதக்காட்டி உப்பும் புளியும் வித்துப் பெழச்சுக்கிருவென்.''

அவனுடைய அய்யா பணம்புரட்டி கடைவைத்துக் கொடுத்தார். வியாபாரம் சுமாராக ஓடியது.

ஆக பத்தாம்வகுப்பை எட்டிப்பார்த்தது. கோபாலும் சுந்தரமும்தான். இப்போதெல்லாம் அவர்களுக்கு பழைய சுதாரிப்பு போய்விட்டது. ஆடிப்பாட முடியவில்லை. பெரிய வகுப்புக்கு வந்தபிறகு கொஞ்சம் தோரணையாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது. பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போனார்கள்.

சாயங்கால நேரம் ஓடைமணலில் வீரமாகச் சினிமா வசனம் பேசி நடிக்க சுருளியில்லை. வாணக்கண்ணை உருட்டி உருட்டிப் பேசுவான். அவனுக்கு எதிரியாக நடிக்க கழுதைக் காலன்தான் தோது. அவர்கள் பேச்சில் பொறி பறக்கும்.

''அட பாதகா எமகாதகா. நயவஞ்சகா இப்போது உன்னை என்ன செய்கிறேன் பார்.''

''வாய்பேசிப் பயனில்லை. கைபேசுகிற காலமடா இது. ஹ....ஹ....ஹா...''

''கொக்கரிக்கவா செய்கிறாய் கொடுமைக்காரா. இதோ வருகிறேன் உன் உயிரைக் குடிக்க.''

வசனம் முற்றி சண்டைவரும். மும்முரமாக வாள்சண்டை போடுவார்கள். காய்ந்த குச்சுதான் வாள். தூக்குவாளி கேடயம். வாளை உரசிக்கொண்டு முறைத்துப் பார்த்து பல்லைக் கடித்துப் பின்வாங்கி மோதுவார்கள்.

உருண்டு புரள்வார்கள். சண்டைக்குத் தக்கபடி ஓடியும் நடந்தும் நொட்டக்கையன் விதவிதமாகச் சவுண்டு கொடுப்பான்.

எப்போதும் சுருளிதான் ஜெயிப்பான். அந்தச் சந்தோசத்தில் சொகமாக காதல்பாட்டுப்பாடுவான்.

**''அன்பே சந்தேகங் கொள்ளலாகுமா-கொடி**

**அசைந்தாடப் பந்தலின்றிப் போகுமா.''**

எலந்தைச்செடியை காதலியாக நினைத்து கிட்டத்தில் போய் தடவிக் கொடுப்பான். உள்ளங்கையில் முள்குத்தி ரத்தம் வரும். அப்போதுதான் வலி தெரியும். கத்திக்கொண்டு வீட்டுக்கு ஓட்டம்பிடிப்பான். பொழுது கொஞ்சங்கொஞ்சமாக மங்கிக் கொண்டிருக்கும்.

கோபால் லட்சுமியைப் பார்ப்பான். அவள் பாதையைப் பார்ப்பாள். வீடுவந்து சேரும்வரை மனசு இனிக்கும்.

பத்தாம்வகுப்பு கால்பரீட்சைக்கு முன்னால் சுந்தரம் டிமிக்கி கொடுத்துவிட்டான். கோபாலுக்குக் கடுப்பு. இவனாச்சும் தாக்குப்பிடிப்பானென்று பார்த்தால் ஏமாற்றிவிட்டானே. கூறுகெட்ட பயல். பேச்சுத் துணைக்குக் கூட ஆளில்லாமல் எப்படி வெருக்வெருக்கென்று பள்ளிக்கூடம் போவது. எல்லாம் அந்த நொட்டக்கையன் வைத்தவழி.

சுந்தரத்தைத் தேடிக் கேட்டபோது அவனும் ஒரு காரணம் வைத்திருந்தான்.

''நேத்துத் தின்ன சோறு இண்ணைக்கு மறந்துபோகுது. இந்த லச்சணத்துல எத்தன பாடத்தடா ஞாவுகம் வச்சிருக்க முடியும். மாசக்கணக்குல படிக்கிறத கொஞ்சநேரத்துல மதிப்புக்குக் களவெட்னமாதிரி அவக்அவக்குனு எழுதச் சொல்றாகளே.''

இப்படிப்பட்டவனை என்ன செய்வது.

''எக்கேடும் கெட்டுப்போங்க.''

''இதுல இனியொரு வெசயமிருக்குது.''

''என்னது.''

''என்னேரமும் சட்டைய மாட்டிக்கிட்ருந்தா அச்சலத்தியா இருக்குது. வெயில்நேரத்துல வெத்து ஒடம் போட இருந்தாத்தான் சொகம். அவன்அவன் பிரியம்போல உடுத்திக்கடான்னு வுட்றணும்.''

''ஏலே பள்ளிக்கூடத்துக்கு வரலன்னு சொல்லீட்டுப் போயேன். அதவுட்டுட்டு பெரிய காரணம் சொல்றானாம் மயிரு.''

''நாங்க வரலன்னா ஒனக்கு நல்லதுதானப்பா.''

''என்ன நல்லதக் கண்டுட்ட.''

''நீ மட்டும் படிச்சா சீக்கிரம் வேல கெடச்சிரும்.''

''எனக்குக் கெடைக்கிற வேலைய ஒனக்குக் குடுத்துறென். பள்ளிக்கூடம் வாறயா.''

''ஒங்கப்பா கோவிச்சுக்கிருவாரு.''

சுந்தரம் துள்ளித்துள்ளி ஓடினான்.

தனியாகப் பள்ளிக்கூடம் போக கோபாலுக்கு வெறுப்பு. பைக்கட்டும் தூக்குவாளியும் பாறையாகக் கனத்தது. கல்லுக்கிடங்கில் இறக்கிவைத்து கொஞ்சநேரம் உட்கார நினைப்பான். பழைய விளையாட்டு ஒவ்வொண்ணாக மனசுக்குள் படம்போடும். வாணக்கண்ணனின் வகைவகை யான சிம்மாசனங்கள். சப்பைவாயனின் படுக்கை. லட்சுமி பொங்கல்வைத்த அடுப்பு. தும்பைச்செடியால் அவள் ஒயிலாக முற்றம்பெருக்கும் அழகு. அங்கே நிற்கப் பிடிக்காது. படக்கென்று நடந்துவிடுவான்.

வழியில் இப்போது புதுசுபுதுசாகச் சத்தம் கேட்டது. வண்டுமொய்த்தமாதிரி ஒரே இரைச்சல். காற்று ஊளை யிட்டது. இதெல்லாம் இத்தனை நாளாக இல்லையே. அக்கம் பக்கம் திரும்பாமல் போவான்.

அதுக்குள் அடுத்தஊர்ப் பையன்களின் ஏசல்பாட்டு வரும்.

**''சிட்டியில கஞ்சிகாச்சி**

**திங்கிறது பாறப்பட்டி**

**பானையில சோறுபொங்கி**

**பந்திவைக்கும் வேலம்பட்டி.''**

இதுக்கு சுருளி இருக்கணும். உடனே எதுப்பாட்டு எடுத்துவிடுவான்.

**''பாறப்பட்டி மாடுவந்தா**

**பாதையெல்லாம் பால்சொரியும்**

**வேலம்பட்டி மாடுவந்தா**

**வீதியெல்லாம் மோண்டுவரும்.''**

பிறகு எந்தப்பயலாவது வாய்திறப்பானா. அவன் இல்லாமல் எல்லாருக்கும் எளக்காரமாகப் போய்விட்டது.

வீட்டில் விவசாயம் நடந்தால் இவ்வளவெதுக்கு. மற்ற பையன்களைப்போல் காட்டுவேலைக்குப் போயிருக்கலாம். மாட்டுவாலைப் பிடித்துக்கொண்டு திரியலாம். அப்பாவும் அம்மாவும் வாத்திமாராக இருப்பதால்தானே இந்தக் கஷ்டம். அதுவும் ஒரே பிள்ளையாயிற்றே. படித்துப் பெரிய வேலைக்குப் போகணுமாம். கைநிறையச் சம்பாரிக்கணுமாம். அம்மாவுக்கு உடம்பெல்லாம் ஆசை. காணாத கனா இல்லை. கட்டாத கோட்டையில்லை.

அவன் யாரோடும் அதிகம் பேசிப் பழகக்கூடாது. கண்டுவிட்டால் குளவி தோற்றுப்போகும்.

'எருமமாடு மேய்க்கிற எண்ணம் வந்தாச்சா. கூடுவாரோட கூடுனா எல்லாம் வரும்.''

அவனுக்குக் கோவம் கிளம்பும். அடக்கிக்கொண்டு அம்மாவை முறைப்பான். ''ஆமா எருமைமாடுதான் மேய்க்கப் போறென்'' என்று மனசுக்கள் கத்திவிட்டுப் போவான்.

சுருளி ஒருநாள் குத்தலாகக் கேட்டான்.

''ஏம்ப்பா ஒங்க அம்மாவுக்கு எருமமாட்டுக்கும் காளமாட்டுக்கும் வித்தியாசம் தெரியாதா. நாங்க காளமாடு தான மேய்க்கொம்.''

''அது சொல்லீட்டுக் கெடக்குது.''

''ஆமா தெரியாமத்தான் கேக்கென். நீ ஆம்பளையா பொம்பளையா.''

''என்னப் பாத்தா எப்படித் தெரியிது.''

''ஓங்க அம்மா பேசுறதப் பாத்தா ஆம்பளமாதிரி தெரியல. எங்ககூடப் பேசுறதுக்கே இப்படின்னா பொம்பளப் புள்ளீககூடப் பேசுனா என்னாகுமோ.''

கோபாலுக்கு முகம் சிறுத்துவிட்டது.

''அத ஏன் கேக்க. வசவு தாளிச்சுக் கொட்டீரும்.''

''அதுல அனுபவம் ரெம்பன்னு சொல்லு.''

கோபால் மேற்கொண்டு பேசாமல் கிளம்பிவிட்டான். சுருளி கோணக்கண்ணால் அவனது நடையை அளந்து கொண்டிருந்தான்.

கோபாலுக்கு அடுத்த பிராயத்தில் நாலு பையன்கள் பெரியபள்ளிக்கூடத்தில் படித்தார்கள். ஆறாம்வகுப்பில் ரெண்டு. ஏழில் ரெண்டு. பொட்டைப்பிள்ளை கிடையாது.

அஞ்சு வாசித்த மூணு பொம்பளைகளில் ரெண்டு ஒப்பேறவில்லை. வடிவேலின் தங்கச்சி சுப்புத்தாய்மட்டும் தப்பித்தாள். அவளை பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்க்கவில்லை. முத்தையாபுரம் சாமியார்மூலம் வடமலாபுரம் வேதப்பள்ளிக் கூடத்துக்கு அனுப்பிவிட்டார்கள். அவள் அங்கேயே தங்கிப் படித்தாள். லீவுநேரம் ஊருக்கு வருவதுடன் சரி.

தகப்பன் இல்லாத குடும்பம். வடிவேலுதான் எல்லாப் பொறுப்பும். அவன் பள்ளிக்கூடத்துப் படியேறியதில்லை. சிறுவயசிலிருந்தே விவசாயந்தான். தரத்துப் பையன்களுடன் சரசமாகப் பேசமாட்டான். என்னேரமும் வேலையே கண்ணாக இருப்பான். கோபாலைச் சந்திக்கும் சமயங்களில் மறக்காமல் கேட்பான்.

''படிப்பு நல்லா நடக்குதா.''

கோபால் தனக்குள் சொல்லிக்கொள்வான்.

''போகலன்னா வீட்ல குடியிருக்க முடியுமா.''

வார்த்தை என்னமோ மறுவிசாரிப்பாக வெளியேவரும்.

''சுப்புத்தாயி நல்லா படிக்காளா.''

''படிக்கா அவளுக்குத்தக்க. பத்துவரைக்காச்சும் படிக்கவச்சு கரையேத்தணும்னு எனக்குப் பெரிய ஆச.''

வடிவேலு நிதானம் குறையாமல் போவான்.

கோபால் சின்னப்பையன்களுடன் பள்ளிக்கூடம் போவதில்லை. போனால் அவர்கள் விளையாடுவதைப் பார்த்து ஏங்கணும். பழைய ஞாபகங்கள் மண்டையக் குடையும்.

இருந்தாலும் மழைநேரங்களில்மட்டும் அவன் காத்திருந்து பையன்களைக் கூட்டிவந்து பத்திரமாக ஓடையைக் கடத்தி விடுவான். கரையேறியதும் அவர்கள் குதியாளம்போட்டுக் கெலிப்பார்கள். அவன் வெள்ளத்தைத் திரும்பிப்பார்ப்பான். இரைச்சலுக்கிடையில் தத்தளிப்புச் சத்தம் கேட்கும்.

''கோவாலு என்கையப் புடிச்சுக் கூட்டீட்டுப் போ.''

அவன் தலையை உதறிக்கொண்டு ஈரப்பாதையில் இறங்குவான். பாதைநெடுக மழைத்தண்ணீருக்கு அணை போட்ட சிறுதடங்கள் குளங்குளமாகக் கோர்த்திருக்கும்.

இப்படியே ஏக்கமும் பெருமூச்சுமாக பெரியபள்ளிக் கூடப் படிப்பு முடிந்தது. அவனுக்கு மனவாதை குறைந்த நிம்மதி. பக்கத்திலுள்ள டவுனில் தங்கி பரீட்சை எழுதினான். அம்மா ஏழு கணக்குப்பார்த்துப் பணம் கொடுத்தனுப்பியது. அப்பாவிடம் கண்ணைக் கசக்கி தனியாக வாங்கிக்கொண்டான்.

பரீட்சை முடிந்து திரும்பும்போது மறக்காமல் லட்சுமிக்கு வாடாமல்லி நிறத்தில் ரிப்பனும் மயில்கழுத்து நீலத்தில் ரவிக்கைத்துணியும் வாங்கிவந்தான். அதை அம்மாவுக்குத் தெரியாமல் ஒளித்துவைத்து பத்தரப் படுத்துவதற்குள் உயிரே போய்விட்டது. பூனை குட்டியை இடம் மாற்றிய கதைதான்.

அம்மாவின் அங்கலாய்ப்பு வெள்ளையம்மாமதினியின் கேலி இப்படி ஒவ்வொரு கண்டமாகத் தாண்டித்தான்

லட்சுமியை தனியாகச் சந்திக்கமுடிந்தது. அவளது சிரிப்பைக் கேட்டதும் கஷ்டமெல்லாம் பஞ்சாகிப்போனது.

**ம**தியவெயில் மண்டையைப் பிளந்தது. வேட்டைக் காரர்களிடையே ஒரு கொணக்கம். பயல்கள் நிழலுக்கு ஒதுங்கி சொதுக்சொதுக்கென்று உட்கார்ந்தார்கள். எலந்தப்பழம் பிடுங்கி நமட்டினார்கள். துவரங்காயை மேய்ந்தார்கள். இருளாண்டித் தாத்தா அவர்களைக் கலைத்தார்.

''சொதுவிணிப்பயகளா மொசலு செடிக்குக்கீழ கெடக்குமா மேலயா. குண்டியில ரெண்டு குடுத்து வீட்டுக்கு வெரட்டுனாத்தான் சரிப்படும்.

பயல்கள் தரையில் கவனப்படுவதாகத் தெரியவில்லை. பெரியவர்களும்கூட சுணங்கினார்கள். பசி வயிற்றை நொரண்ட ஆரம்பித்தது. முருகன் சத்தம்போட்டான்.

''என்ன இது மாமியாவீட்டுக்குப் போறதுகணக்கா இருக்குது. நேரம் மதியத்துக்குமேல ஆச்சு. ஒரு மொசலுதான் வேட்டசாஞ்சிருக்கு. இந்த லச்சணத்துல வேட்டையாடுனா அம்புட்டுத்தான். வெறுங்கைய வீசிட்டுப் போகவேண்டியது தான். ஒரு மொசலக் கூறுபோட்டா ஆளுக்கொரு துண்டுவரும். எடுத்து நக்கீட்டுப் போவொம்.''

சின்னமுத்து சொன்னான்.

''பசி வகுத்தப் பெரட்டுதுப்பா. என்னமாச்சும் உள்ள போட்டாத்தான் சொதாரிப்பு வரும்.''

''ஏன் வெள்ளங்காட்டி விழுங்கீட்டுத்தான வந்த. அதுக்குள்ள கொள்ளையா போகுது.''

''ஒனக்குச்சரி குளுதாழிமாதிரி வகுத்த வச்சுக்கிட்டு. மூக்குமுட்ட கொழச்சு அடஞ்சிருப்ப.''

''பந்தியில உக்காந்தா ஒரு கடகம் சோறுதிங்கிற பய நீயெல்லாம் வாயி பேசணுமாக்கும் லவிண்டிக்கொத்த.''

''ஆரு சோத்துமாடன்னு ஊரே சொல்லும் நாடே சொல்லும். அந்த அக்கா மெடாவுல கஞ்சிகாச்சி பானையில வெஞ்சனம் வைக்கிறது தெரியாதா.''

''நீ செரட்டையில காச்சி சிட்டியிலயா திங்க. என் தங்கச்சியிட்டக் கேட்டா சங்கதி தெரியும். பசிச்சா மண்ணத் தின்னு.''

''நீ ிங்கவேண்டியதுதான். பூமிக்குப் பாரமாத்தான இருக்க. செத்தா கையோட எடுத்துப்போட்ருவொம்.''

கோபாலுடன் தனியாகப் போன சுருளி பேச்சுத் தினுசைக் கவனித்துவிட்டு பயல்களிடம் சொன்னான்.

''கொய்யாத் தோட்டத்துப்பக்கம் நடையவுடுங்க. அங்க ஒரு பார்வ பாத்துட்டுப் போவொம்.''

விசயத்தைப் புரிந்துகொண்ட பயல்கள் வேகமாக நடக்க ஆரம்பித்தார்கள்.

இடைவழியில் சுருளி ஒரு கிணற்றில் விழுந்து வேட்டி துண்டைப் பிழியாமல் அப்படியே ஈரத்துடன் வந்தான். தோட்டத்தை ஆட்கள் நெருங்கியவுடன் அவன் திடீரென சத்தங் கொடுத்தான்.

''வுடாத வுடாத...அந்தா போகுது பாரு....''

பயல்கள் ஓடி வேலிமுள்ளைத் தாண்டி கொய்யாத் தோட்டத்துக்குள் நுழைந்தார்கள். பெரியவர்கள் யாரும் இறங்கவில்லை. வரப்புகளில் நடந்துவந்தார்கள். கோபால் ஒதுங்கிப்போய் மரத்தடியில் உட்கார்ந்துகொண்டான்.

சத்தங்கேட்டு தோட்டத்துக்காரர் அவசரமாக வீட்டைவிட்டு வெளியே வந்து பார்த்தார். அவருக்கு வயிற்றைக் கலக்கியது.

அவருக்குப்பின்னால் சம்சாரம் மகள் மகன் எல்லாரும் முகத்தில் எரிச்சலைக் கோலிக்கொண்டு நின்றிருந்தார்கள். குடும்பம் தோட்டத்தில்தான் குடியிருப்பு.

இதுக்குள் சுருளி அங்கே வந்துவிட்டான். தோட்டத்துக் காரர் அவனிடம் வருத்தப்பட்டார்.

''என்னப்பா இது. ஒங்களுக்கே நல்லாருக்கா. மலங்காடு செடிங்காடு பாத்து வேட்டையாடுறதா இப்படி தோட்டத்துக் குள்ள வந்து அழிம்புபண்ணுறதா.''

அவன் பக்குவமாகச் சொன்னான்.

''எங்களுக்கென்ன நம்ம தோட்டத்துக்குள்ள எறங்கணும்னு ஆசையா. மொசலு வந்து மொழுஞ்சுக்கிருச்சு. என்ன செய்றது. கண்ணால பாத்துட்டுச் சும்மா போனா வேட்டைக்கு மரியாதையில்ல. என்ன சொல்றீக.''

''அதுக்காக இப்படியா நெரபுடிச்சமாதிரி எல்லாரும் எறங்கி ஒழப்பணும். ஒண்ணுரெண்டு பேரு பாத்தாப் போதாதா.

''ஒங்களுக்கு மொசலப்பத்தித் தெரியாதா. பத்தாளு கலச்சாலே பம்மிப்பம்மி ஓடி ஏமாந்திப்புரும்... பெரியாளு ஆரும் எறங்கியிருக்காகளா பாருங்க. சின்னப்பயகளத்தான் உள்ள வுட்ருக்கு. கொஞ்ச நேரத்துல வெளிய வந்துருவாக... அடே எல்லா நாயவும் வீட்டச்சுத்தி நிறுத்துங்க. மொசலு இந்தப் பக்கந்தான் வரும்.''

பயல்கள் நாய்களைக் கொண்டுவந்து வீட்டுக்கு முன்னால் வரிசையாக நிறுத்தினார்கள். யாரும் வெளியே வந்து என்ன நடக்கிறதென்று பார்க்க முடியவில்லை. தோட்டத்துக்காரர் தவியாய்த் தவித்தார்.

வீட்டுக்குள் மோர்மதக்கத்தில் எஞ்செவனே என்று படுத்துக் கிடந்த அவரது நாய் வெளியே இருந்த தடபுடலைக் கேட்டு 'யார்ரா அவன் ஒறக்கத்தக் கெடுக்கிறவன்' என்ற தோரணையில் கால்வாசி கண்ணைத்திறந்து பார்த்தது. சங்கதி பிடிபடவே தோசைக்காதை உதறிக்கொண்டு முரட்டு உறுமலில் எழுந்து வந்து எட்டிப்பார்த்தது. நிலைமை சரியில்லாததால் வாலை மடக்கிக்கொணடு வந்தவழியே திரும்பி பழைய இடத்தில் படுத்துக்கொண்டது. இருந்தாலும் வசவு முனக்கத்தை நிறுத்தவில்லை.

சுருளி தோட்டத்துக்குள்ளிருந்து பயல்களுக்குச் சத்தங் கொடுத்தான்.

''ஒரு செடிகூட பாக்கியில்லாம கலச்சு வாங்கடா.''

பழுத்தபழம் ஒண்ணுகூட பாக்கி வைக்கக்கூடாது என்று அதுக்கு அர்த்தம்.

நடக்கிற சங்கதிகளை வீட்டுக்குள்ளிருந்து யாரும் பார்த்துவிடாதபடி அவுன் ஈரவேட்டியை உதறிக் காயவைத்து மறைத்துக்கொண்டான். வடிவேலை வரச்சொல்லி முயலையும் குட்டியையும் வேடிக்கை காட்டினான்.

''செனமொசலு அடிக்கிறதுலமட்டும் ரெம்பச் சுளிவு வேணும். வகுத்துக்குள்ளருக்கிற குட்டி சாகாம மொசலு கைக்கு வரணும். அதுதான் கெட்டிக்காரத்தனம். அதுல நம்மள மிஞ்சுறதுக்கு சுத்துப்பட்டியில ஆளு கெடையாது.''

தோட்டத்துக்காரரின் குடும்பமே முயல்குட்டியை உற்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தது. கோபால் சிரிப்பை அடக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

இதுக்குள் பயல்கள் கலவையை முடித்திருந்தார்கள். காரியம் முடிந்துவிட்டதைக் கவனித்த சுருளி வேட்டியை ஒருதடவை உதறினான். உடனே தோட்டத்தின் மேலமூலையிலிருந்து சத்தம் கிளம்பியது.

''இந்தா ஓடுது...அந்தா ஓடுது...''

மூடிமுழிக்குமுன் எல்லாரும் மேற்காமல் ஓடி கண்மாய்க்கரையேறி மறைந்துவிட்டார்கள். தோட்டத்துக் காரர் வாயைப் பிளந்தபடி பார்த்துக்கொண்டிருந்தார்.

கோபால் கண்மாய்க்குள் போனதும் விழுந்துவிழுந்து சிரித்தான். சுருளியின் முதுகில் பொய்யடி கொடுத்தான்.

''ஒனக்கு இனியும் இந்தப் பழக்கம் போகலயா.''

சுருளி வினயமாகவே சொன்னான்.

''அவருக்கு அந்தப்பழக்கம் போகலயே.''

''இது வம்புல்ல. அவரு தோட்டமாச்சே.''

''ஆமா அவரு தேடித் தெரட்டுன சொத்து. எவனோ ஒரு அப்பிராணியப் புடிச்சு அவுக அய்யா அமுக்கீட்டாரு.''

''அது பழையகத. இண்ணைக்குச் சொல்லு.''

''அப்படியே வச்சுக்கிருவொம். அதனால என்ன இப்ப. வகுத்துப்பசிக்கு ஒரு பழம் கேட்டா எண்ணைக்காச்சும் குடுத்துருக்காரா. மருந்துக்கு ஒரு மாதுளம்பிஞ்சு கேளு.

கண்ண மூடீருவாரு. நானும் சின்ன வயசிலருந்து அவருட்ட ஒண்ணாச்சும் வாங்கீறலாம்னுதான் பாக்கென். முடியலயே. கடைசிவரைக்கும் அவரும் குடுக்கமாட்டாரு நானும் வுடப்போறதில்ல. அவரு மகனும் குடுக்கமாட்டாரு எம்மகனும் வுடமாட்டான்.''

தோட்டத்துக்காரரைப்பற்றி ஆளாளுக்குப் பேசிக் கொண்டார்கள்.

''நம்ம மனசுவச்சா இவரு இங்க வெள்ளாம செய்ய முடியுமா.''

''மேல போட்டா கீழ போற கழுத. இந்தக் கொய்யாப் பழத்துக்காக இம்புட்டுத் தூரம் வேலமெனக்கிட்டுத் தேடிவந்து புடுங்குறாகளாக்கும்.''

''அது தெரியலயே அவருக்கு.''

இருளாண்டித்தாத்தா சொன்னார்.

''அவருக்கா தெரியாது. எல்லாம் தெரியும். அதனாலதான் இப்படிச் சமயத்துலயாச்சும் புடுங்கி நக்கீட்டுப் போகட்டும்னு வுட்டுக்கிட்ருக்காரு. செய்றது களவு. பேச்சுல ஒண்ணும் கொறச்சலில்ல. ஒனக்குப் பசிச்சா அவரா பழி.''

பயல்கள் தோட்டத்தில் வேட்டையாடி வந்த சமாச்சாரங்களை கருவமரத்தடியில் குமித்தார்கள். ஒவ்வொருத்தன் சப்பைமடியிலிருந்தும் கொய்யாப்பழம் மாதுளம்பழம் எலுமிச்சம்பழம் மாங்காய் என்று தினுசு தினுசாக விழுந்தது.

சுருளி எல்லாவற்றையும் சமபங்கு வைத்துக் கொடுத்தான். கோபால் வாங்கவில்லை. அவனுக்குரிய பங்கு பயல்களுக்குக் கிடைத்தது. இருளாண்டித்தாத்தா மாங்காயை மட்டும் எடுத்துக்கொண்டு விடலை எறிந்தார். பயல்கள் முண்டியடித்துக் கொண்டு பொறுக்கினார்கள்.

இனிப்பும் புளிப்புமாகத் தின்று கொஞ்சம் பசியாறி கண்மாயில் தண்ணீர் குடித்து குளிர்ச்சியாகப் புறப்பட்டார்கள்.

அந்தச் சூட்டிக்கையில் கண்மாய்ச் செடிகளுக்கிடையே ரெண்டுமுயல் சிக்கியது. வளையம்கண்டு எழுப்பினால்

போக்குக்காட்டி ஓடித் தப்பிக்கமுடியாதபடி முட்டிப்பாகக் கட்டாப்புக் கட்டியிருந்தார்கள். அதனால் நாய்கள் ஒரே சுளிப்பில் கடிக்கத் தோதாக இருந்தது.

கண்மாயைத் தாண்டி ஒரு கிணற்றோரம் சரள்குமி மலையாகக் கிடந்தது. கல்பொந்தில் பாலுச்சாமியின் வேல்கம்புக்கு ஒண்ணு மாட்டியது. கொழுத்த கிடாய். வளையம் சொல்லாமலேயே குத்தியெடுத்தான்.

அப்படியே நடந்து மொச்சிஓடைக்கு வந்தார்கள். ரெண்டு கரையிலும் நாய்கள். ஓடைக்குள் தகணிதகணியாக ஆட்கள். பனங்குட்டித் தூரிலும் மொச்சி மூட்டிலும் ரெண்டுமுயல் தட்டுப்பட்டது. ரெண்டும் வசமான இடம். கிளம்பி ஒரு ஓட்டம் ஓடுவதற்குள் கம்பெறிக்குச் சுருண்டுவிட்டது. இருளாண்டித் தாத்தாவுக்குக் கொண்டாட்டம்.

''தாயிளி இதுல்லடா வேட்ட.''

நாய்களுக்கு நல்ல இரை. பயல்களின் கையில் முயல் சுமை ஏறியது. வடிவேலு துண்டுக் கொங்காணியிலிருந்து குட்டி நழுவிவிடாமல் அடிக்கடி சரிப்படுத்திக்கொண்டான்.

ஆனைத்தரிசு ராக்காச்சிகோயில் தாவு என்று லாத்தலாக அலைந்து பொழுதுசாய பொட்டக்காட்டுக்கு வந்தார்கள். நாய்கள் காலோய்ந்து தவங்கிவிட்டன. பார்வை பத்தாத நேரத்தில் இதுகளை ஓடவிட்டுப் புண்ணியமில்லை.

'இந்தச் சமயத்துல மொசலு கௌம்புச்சுனா அம்புட்டுத் தான். ஓடுறதுக்குத் தெம்பில்ல.''

கைக்கு ஏதாச்சும் சிக்குகிறதா என்று நோட்டம் பார்த்துக் கொண்டே ஊர்ப்பக்கம் சாய்ந்தார்கள். அப்படியும் ஒண்ணு சின்னப்பயலின் கல்லுக்குச் சாய்ந்துவிட்டது. பார்த்த மாத்திரத்தில் நெற்றிப்பொட்டில் எறிந்து தூக்கி குதியாளம் போட்டுக்கொண்டுவந்தான். ஒருத்தன் பயலைத் தட்டிக் கொடுத்தான்.

''அப்படிப் போடுடா சொட்டவால்குட்டி.''

சுருளி கோபாலைப் பார்த்தான்.

''விருந்தாளு வந்த புண்ணியத்துல இண்ணைக்கு ஏழு மொசலு சாஞ்சிருக்கு.''

முருகன் சொன்னான்.

''சுருளியோட ராசிபாரு கொய்யாப்பழம் எத்தனன்னு கணக்கில்ல. நாளைக்கு மந்தக்காடெல்லாம் செவந்து போகும்.''

எல்லாரும் அசதியை மறந்தார்கள்.

**கோ**பால் பத்தாம்வகுப்போடு நிற்கவில்லை. காலேஜுக்குப் போனான். அதோடு கிணற்றுக்குளிப்பு சரி. சுதந்திரமாகக் காலுதைத்து பல்லிடுக்கில் நீர்பீச்சி நீந்திக் குளிக்கிற சொகம் அடிமனசுக்குள் அமுங்கிவிட்டது. அவ்வப்போது லீவில் வந்தால் குளிக்கலாம். துணைக்கு ஆளில்லாமல் என்ன குளிப்பு.

நாலுவருசம் காலேஜ் வாழ்க்கை. லட்சுமியின் நினைவு அலைக்கழிக்காத நாளிருக்காது. கூடவே அம்மாவின் பயமும் தொற்றும்.

லட்சுமிக்கென்று பக்கம்பக்கமாகக் கடிதங்கள் எழுதுவான். அப்போது சுருளியின் காதல் வசனங்கள் மனசுக்குள் கேட்கும். சினிமாவில் ஆடிப்பாடி அழுகிற பெண் பாதைவழி போகிறவள் பதனீர் விற்கிறவள் இப்படி எல்லா உருவத்திலும் லட்சுமி இருந்தாள். அன்னியோன்னியமாகப் போகும் ஆட்டுக்கூட்டத்திலும் அவள் இருந்தாள்.

அவன் எழுதிய கடிதங்களை அவளிடம் கொடுப்பதற்காக எதிர்பார்த்துத் தவிப்பான். கஷ்டப்பட்டுச் சந்தித்தாலும் ரெண்டுவார்த்தையோடு சரி. சப்பென்று போய்விடும். இருவரும் வளராமல் பள்ளிக்கூடத்திலேயே படித்தால் எவ்வளவு சந்தோசமாக இருக்கும்.

சுருளியிடமோ வெள்ளையம்மாமதினியிடமோ மனசைக் கொட்டிப் பாரத்தை இறக்கணும் போலிருக்கும். பேசத் துணிவிருக்காது. வெள்ளையம்மாமதினி ஆழம்பார்ப்பாள்.

''கொழுந்தன் மதினிக்கு என்ன கொண்டுவந்துருக்கீக.''

''சும்மா வந்தென்.''

''ஏன் சும்மா வந்தீக. சொமந்துட்டு வாறதுதான.''

இந்த மதினியே இப்படித்தான்.

''ஆமா ரெம்பச் சொமந்துட்டு வந்துருக்கென்.''

''கொண்டுபோயி எறக்கவேண்டிய எடத்துல எறக்குங்க.''

அவள் முகத்தில் பொய்க்கோவமும் குறும்பும் குழைத்துப் பூசியிருக்கும். ஒரு சிணுங்கல். ஒரு நொடிப்பு. சண்டைக்காரிபோல் விறைத்துக்கொண்டு போவாள்.

அவனுக்கு நெஞ்சு படபடக்கும். ஓடிப்போய் நல்ல வார்த்தைசொல்லி சமாதனப்படுத்தணும் போலிருக்கும்.

''என்ன மதினி இதுக்கெல்லாம் கோவிச்சிக்கிட்டு. நான் தப்பாவா சொல்லீட்டென்.''

அரண்ட பார்வையில் அப்படியே நிற்பான்.

வெள்ளையம்மாமதினி நல்லமனுசி. அவளிடம் வெடுக்கென்று பேசியிருக்கக்கூடாது. எல்லாம் லட்சுமியால் வந்தது. பார்த்தால் கொஞ்சநேரங்கூட நின்று பேசுவதில்லை. ஏன் ஓடி ஒளியணும்.

மறுநாள் வெள்ளையம்மாமதினியின் வார்த்தைகளைக் கேட்கும்வரை மனசு ஆறாது.

''கொழுந்தன் வரவர சவலையாகிறீகளே என்ன சங்கதி. பக்குவம் பாக்கலன்னா முத்திக்கிருமே.''

அவன் வாயும் சும்மாருக்காது.

''பக்குவம் பாக்கிறதுக்கு நல்ல ஆளு இருந்தாச் சொல்லுங்களேன்.''

''ஊருக்குள்ள தீர வெசாரிச்சுச் சொல்றென். அம்மா கிழிச்ச கோட்டத் தாண்டாறவுகளுக்கு ஆசையெதுக்கு.''

''நீங்க அப்படி நெனச்சுக்கிற வேண்டியதுதான்.''

''நானும் பாக்கத்தான்போறென். அதுக்குள்ள சாகமாட்டென்.''

''பாருங்க.''

''அடியாத்தாடி நான் ஒரு கூறகெட்டவ. இவுககிட்ட வாயி குடுத்துட்டு நிக்கென் பாரு. வீட்ல கொஞ்சமா வேல கெடக்குது. கஞ்சிகாச்சி வைக்கலன்னா ஒங்கண்ணன் கடிச்சுக் கொதறீருவாகளே. இந்தாங்க இந்தப் புள்ளைய நல்லாப் பாத்துக்கங்க.''

அவள் தன் குழந்தையை அவனிடம் தள்ளிவிட்டு விரைவாள். அவனுக்குள் கொஞ்சங்கொஞ்சமாகப் பாரம் ஏறிக்கொண்டிருக்கும்.

காலேஜ் படிப்பு முடிந்தது. அவன் நாலுவருசக் கனவுகளைச் சுமந்துகொண்டு வீட்டுக்கு வந்தான். அப்பா அவனைப் பற்றி அதிகம் யோசிக்கத் தொடங்கினார். அம்மாவின் முணுமுணுப்பு வேறுதினுசாகக் கேட்டது.

கிழக்கே தென்னைமரத்துக் கிணற்றில் குளித்துவிட்டு ஒருநாள் காலை வந்தபோது வழியில் லட்சுமியைச் சந்தித்தான். தனியாக கிட்டத்தில் வந்து நிற்பது லட்சுமிதானா. எப்படி வரமுடிந்தது. எங்கே போகிறாள். அவன் கேட்குமுன்பே சொன்னாள்.

''வெறகுக்குப் போறென்.''

அவன் திணறினான்.

''இன்னேரமா.''

''வேணும்னா என்னேரம்னுருக்கு.''

''வேணாம்னா இருப்பாக.''

''அது அவரவருக்கில்ல தெரியணும்.''

''தெரியாம என்ன.''

''தெரிஞ்சாச் சரிதான்.''

''தொணைக்கு யாரும் வரலயா.''

''ஏன் நீ வாறதுதான.''

அவன் சிரித்தான். ஏறிட்ட முகத்தில் நெற்றி விரிந்திருந்தது. கையைப் பிசைந்தபடி பார்வையைத் தாழ்த்திக்

கொண்டான். அவன் அவளை கழுத்துக்குக் கீழே பார்த்துக் கொண்டிருந்தான். புதுச்சட்டை அவள் உடம்பை எடுத்துக் காட்டியது.

''மனசிருந்தாப்போதும்...எந்தக் காட்டுக்கு.''

''கரும்புத் தோட்டத்தோரம்.''

பிரிந்துகொண்ட இருவரும் சொல்லிவைத்தாற்போல் ரெண்டுதடவை திரும்பிப் பார்த்தார்கள்.

வீட்டில் சாக்குச் சொல்லிவிட்டு அவன் நேரத்துடன் கிளம்பிவிட்டான். வேறுவழியாக நடந்து கரும்புத் தோட்டத் தோரம் வேலிக்கருவலை நிறைந்த தரிசுக்குள் நுழைந்தான். உள்ளே போய்விட்டால் ஆளைப் பார்க்கமுடியாது. அவ்வளவு மர அடர்த்தி. தெற்குவரப்பைத் தாண்டினால் ஆளுயரத்துக்கு மேல் வளர்ந்த கரும்பு.

லட்சுமி வரப்போரம் உட்கார்ந்து விறகு தறித்துக் கொண்டிருந்தாள். அந்த இடத்தில் நிறைந்திருந்த அமைதியை விட்டு விட்டு அரிவாள் தறித்தது. அவன் அண்ணாந்தான்.

''ஆளப் பாக்கவே முடியல. ஒங்க அம்மா வீட்டுக்குள்ளயே அடகாக்கச் சொல்லுதா.''

அவன் அருகில் உட்கார்ந்துகொண்டான்.

''ஒன்னத்தான் பாக்கமுடியல. பெரியமனுசியா யிட்டயில்ல.''

''நானா. நீதான் பெரியமனுசனாயிட்ட.''

''அப்படி நெனச்சிக்கிறவேண்டியதுதான். நாங்க எப்பயும் போலத்தான் இருக்கொம்.''

''சொன்னாப்புல சரியாப்போச்சாக்கும். படிப்பென்ன காரியமென்ன. மொதல்ல ஒங்கம்மாவுக்குச் சொல்லமுடியல. பெருமைய சொளகுவச்சுக் கொழிக்குது. என்னக் கண்டா ஒரு சிமிட்டுச் சிமிட்டுது. ஒங்க அப்பா பேசக்கூட மாட்டங்காரு...''

''அதுக பெரிய நெனப்புல இருக்குதுக.''

''நீயுந்தான்னு சொல்லு.''

அவன் ஒரு முள்ளை எடுத்துக்கொடுக்க அவள் தறித்து அடுக்கினாள்.

''என்னப்பாத்தா அந்தமாதிரியா தெரியிது.''

''என்னமோ நாங்களும் நம்பித்தான் இருக்கொம். எப்படியெப்படி வுட்ருக்கோ.''

''மொதல்ல எங்களுக்கு நம்பிக்ககுடுத்தாப் போதாதா.''

''அப்படியில்லன்னா இங்க எதுக்கு ஓடியாறாக.''

அவள் முகத்தில் களை மாறியது.

''அடேயப்பா கோவந்தானா.''

அவன் மெல்ல எழுந்தான்.

வெட்டரிவாள் கருவமரத்தடியில் ஒளிந்து கிடந்தது. அவர்கள் கரும்பு மூட்டோரம் பெருவாய்க்காலில் உரசிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

அவனுக்கு அவளைவிட ரெண்டுவயசு அதிகம். வெயில்படாத மேனி வெளிறிச் சிவந்திருந்தது. தலைமுடியை ஓர வகிடெடுத்து சேக்கு ஒதுக்கியிருந்தான். நெற்றியோரத்தில் சில பிஞ்சுமயிர்கள் சிந்தியிருந்தன. நிறமான முகத்தில் கருப்பேறிய அருப்பம் லட்சணங்கூட்டியது. மஞ்சள் பட்டுச்சட்டை மினுங்க கிறங்கிப்போயிருந்தான்.

அவள் அவ்வளவு நிறமில்லை. களையான முகம். தெறித்து விழுந்துவிடும்போல் முயல்கண்கள். நெற்றியில் புருவம் ரெண்டும் சேர்ந்து கரைகட்டியிருந்தது. அடித்துச் சேர்த்தாற்போல் முகத்தில் சன்னமான சதைப்பிடிப்பு. கீழுதட்டு நடுரேகையை நாக்கால் பூசி மறைத்தும் முடியவில்லை.

அவள் கண்களில் நீரரும்ப அவனை வருடிக் கொண்டிருந்தாள்.

''ஊருக்கு எப்பப்போற.''

அவளுக்கு மண்ணைக்கட்டியது. பேசமுடியாமல் தவித்தாள். பெருமூச்சாக காற்றை உள்ளிழுத்தபோது அவனது மேனிவாசனை பரவசப்படுத்தியது.

''இனிமே போகமாட்டென். படிப்பு முடிஞ்சது. வேலைக்கு எழுதியிருக்கென். கெடச்சா போகணும்.''

''நீ ஊருக்குப் போயிட்டா நான் எண்ணதேச்சுக் குளிச்சு முடியப் பிரியமில்ல. இந்தச் சட்டையைக்கூட பொங்கலுக்குப் பெறகு இண்ணைக்குத்தான் போட்ருக்கென்.''

அவள் வார்த்தைகளை முடிக்கும்போது கைகளை இறுகப் பற்றினான் அவன். அவளது நல்ல சட்டை கசங்கியிருந்தது.

''நான் ஊருக்குப் போனா நீயும் கூட வந்துறயா.''

அவளுக்கு வெட்கம்.

''பொம்பளைகெல்லாம் என்னக் கேலிபண்றாக.''

''எப்படி.''

''அவளுக்கென்ன மகராசி நம்மளப்போல காட்லயா திரியப்போறா ஒழக்கரிசியக் கொதிக்கவச்சிட்டு உக்காந்துருப் பான்னு பேசுறாக.''

அவளது கன்னங்கள் பளிச்சிட்டன. ஈக்கில் கோர்த்த ஆமணக்குப் பருப்பாகச் சிரித்தாள். அவள் தலையைக் கவுத்திக் கொண்டபோது அவனுடைய தோள் தாங்கியது.

''பேசுனா பேசீட்டுப்போறாக. ஆமா அப்படித்தான்னு சொல்லு.''

இப்போது அவளுடைய தோளில் அவனது முகம் பதிந்திருந்தது. அவள் சிணுங்கினாள்.

''வெள்ளையம்மாக்காட்ட என்ன சொன்னயாம்.''

''நான் ஒண்ணுஞ் சொல்லலயே.''

''நெசமாவா.''

அவன் கண்ணில் கள்ளச்சிரிப்பு. அதை மறைக்கப் பிரயாசைப்பட்டான்.

''அந்த மதினிக்கென்ன வேல. ஒண்ணுன்னா ரெண்டுன்னு எடுத்துக்கட்டிப் பேசுவா.''

''நம்ம பேச்சுப் பேசணும்னு அவளுக்கு ரெம்ப ஆசபாரு.''

''நான் என்ன சொன்னனாம்.''

''என்னப் பாத்துப் பேசலான்னா கோட்டிபுடிச்சிருமோ ஒனக்கு.''

''இனிமே புடிக்கணுமாக்கும்.''

''தலையில தேச்சுத் தெளியவைக்கிறதுக்கு ஒங்க அம்மா இருக்குதுல்ல.''

''அது கெடக்குது வுடு...என்னப் பாக்கலன்னா ஒனக்குச் சோறே எறங்கமாட்டங்குதாக்கும். அடடா பட்டினி கெடந்து ரெம்ப மெலிஞ்சுபோயிட்டயே.''

''நான் ஆருட்டப்போயி அப்படிப் பொலம்புனென்.''

''வேற ஆரு. வெள்ளையம்மாமதினிதான்.''

''அவ இருக்காளே கூத்துக்காரி.''

அவர்கள் பிரியமாக மோதிக்கொண்டார்கள். காற்று ஒருதடவை கரும்புத் தோகைகளைச் சீண்டி சிரிப்பு மூட்டி விட்டுப் போனது.

**வ**ருசம் ஒண்ணு தாண்டிவிட்டது. கோபாலுக்கு வேலை கிடைத்தபாடில்லை. எழுதியிருந்த சர்வீஸ்கமிஷன் பரீட்சை கிணற்றுக்குள் போட்ட கல்லாகக் கிடந்தது. இனிமேலும் வீட்டிலிருந்தால் அம்மாவுடன் பெரிய சண்டையே வந்துவிடும். அது பேசும் பேச்சு கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. நின்றாலும் நடந்தாலும் குற்றம் கண்டு பிடித்து தொணதொணத்தது. காட்டில் வேலை விதைத்துக் கிடக்கிறமாதிரியும் அதைப் பொறுக்குவதற்கு அவன் போகாமலிருப்பது மாதிரியும் அப்பாவிடம் முறையிட்டது. அப்பா வழக்கம்போல் சமாளித்தார்.

''நமக்கில்லாற வேலையா நல்லமணி. பொறுத்திருந் தாலும் கனமான வேலைக்குப் போகணும்பாரு.''

''நீங்களும் மகனுக்குத் தொணயா சொமக்கப் போங்க. வாயில ஒண்ணும் கொறச்சலில்ல.''

அம்மாவின் கடுப்புக்குக் காரணமே வேறு. கோபாலுக்கு வேலை கிடைத்தால் ஊருக்குள் பெருமைகொழிக்கலாம்.

லட்சுமியை இன்னும் எளக்காரமாகப் பேசலாம். பணம் சம்பாரிக்கலாம்.

அவனுக்கு வெறுப்பான வெறுப்பு. சிலசமயம் எங்காவது ஓடிவிடலாமா என்றுகூட நினைப்புபோகும். சுருளிதான் ஆறுதல் சொல்லி தாக்காட்டுவான்.

''மனுசனுக்கு ரெண்டுகாது எதுக்கு இருக்குது தெரியுமா. மனசுக்குப் புடிக்காற பேச்ச அந்தப்பக்கம் வாங்கி இந்தப்பக்கம் வுடுறதுக்குத்தான். அப்படியெல்லாம் வுடலன்னா எனக்கு எப்பயோ எழவெடுத்திருப்பாக.''

கோபாலின் அப்பா மடிநிறைய பணத்தைக் கட்டிக்கொண்டு எங்கெல்லாமோ முட்டிமோதினார். அவனும் கண்டகண்ட பரீட்சைகளை எழுதினான். கடிதங்களை அனுப்பினான். ஒருவழியும் பிறக்கவில்லை.

ரெண்டுபேரும் அசந்துபோய் ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்துக்கொண்டிருந்தபோது சர்வீஸ் கமிஷனி லிருந்து ஆர்டர் வந்தது. அதே ஆபீசில் கிளார்க் வேலை. அப்பாவுக்கு சுதாரிப்பு சொல்லமுடியாது. ஊரெல்லாம் தம்பட்டமடித்தார்.

''என்ன செலவானாலும் பையனுக்கு வேல வாங்காம விடுவனா.''

மற்றவர்கள் ஒத்துப்பாடினார்கள்.

''ஒத்தப்புள்ள செலவழிக்க வேண்டியதுதான.''

''நமக்கு வேலையில்லன்னு சொல்லீட்டு சர்க்காரு நடந்துருமா.''

''அதெப்படிச் சொல்லுவான். நீங்க படிச்சவங்களுங் காட்டி அததுக்குண்டான பாதையக் கிண்டிக்கெளஞ்சு காரியத்த முடிச்சிட்டீக.''

அம்மாவுக்குச் சொல்லணுமா. பள்ளிக்கூடம் முடிந்து வந்தால் அதுதான் வேலை. முற்றத்தில் பத்துப் பொம்பளை களைக் கூட்டிவைத்து பீத்திக்கொண்டிருக்கும். இடையில் யாராவது கல்யாணப் பேச்சைத் தூண்டுவார்கள்.

''இனியென்ன நேரங்காலத்தோட ஒரு கட்டையப் போட்டுட்டாக் கவலையில்ல.''

''அத நெனச்சாத்தானம்மா வெசாரமாருக்கு. புடிக்காத எடத்துல போயி வுழுந்துட்டா சங்கடமாச்சே. பின்னால நம்மதான் லொம்பலப்படணும்.''

''ஒங்களுக்குத் தெரியாற யோசனையா.''

''யோசனையிருந்து என்னசெய்ய. புள்ளீக நம்ம சொல்லக் கேக்கணுமே.''

''கேக்காம எங்க போயிருவாக. நீங்க இல்லாம மானத்துலருந்தா குதிச்சிட்டாக.''

கோபாலுக்குக் கடுப்பேறும். பொம்பளைகளை கடுமையாக விரசி விரட்டணும்போலிருக்கும்.

''போக்கத்ததுக. வந்துட்டாக ஊர்க்கத பேச. ஏன் கலியாணம் முடிச்சுசுவச்சு புள்ள பெறக்கிறவரைக்கும் இருந்து கொஞ்சீட்டுப் போங்களேன். இந்த அம்மாவுக்கு அறிவே இல்ல. ராத்திரிவரைக்கும் பள்ளிக்கூடம் நடந்தாலும் வாய் சும்மாருக்காது.''

விறைப்பில் வீட்டைவிட்டு வெளியேறி அவர்களை முறைத்துக்கொண்டு போவான். அதுக்குப் பிறகுதான் முற்றத்துக்கதைக்கு மூக்கும்முழியும் முளைக்கும். ஊர்ப்புறணி குசுகுசுப்புக்கு வரும்.

வேலைக்குப் போவதில் அவனுக்கு விருப்பந்தான். லட்சுமியை நினைந்தால் வருத்தமாகவும் இருந்தது. என்ன செய்வது போய்த்தானே ஆகணும்.

வீட்டுக்குப் புதுசுபுதுசாக யாரெல்லாமோ வந்து விசாரித்துவிட்டுப் போனார்கள். முந்தி நெருக்கமாகப் பழகியவர்கள் இப்போது அவனை அன்னியமாகப் பார்த்தார்கள். பேச்சில் புது மரியாதை. அவனுக்குச் சங்கடமாக இருந்தது.

சட்டிமண்டைச் சுந்தரம் பெரியமனுசத் தோரணையில் சொல்லிவிட்டுப் போனான்.

''அண்ணைக்கு நான் சொன்னதுபோலயே செஞ்சிட்டென் பாத்தயா. எனக்கு வரவேண்டிய வேலையத்தானப்பா ஒனக்கு வுட்டுக்குடுத்துருக்கென். நம்ம கோவாலுக்குக் குடுக்காம ஆருக்குக் குடுக்கப்போறென்.''

''சட்டிமண்டையன்னா தருமப் புண்ணியவானாச்சே.''

''பேசாம பாதிச்சம்பளத்த எனக்கு அனுப்பீரு.''

''எல்லாங்கூட வச்சுக்கோ.''

''நான் இந்த ஊருல குடியிருக்கணுமா வேணாமா. ஒங்க அம்மா எனக்கு தெனமும் பாடம் நடத்தீரும்.''

சுருளி வந்து வாணக்கண்ணை உருட்டி அலட்சியமாகப் பார்த்தான்.

''இதென்ன கொடுமையாருக்கு. எங்களுக்கெல்லாம் வேல கெடச்சு எத்தன வருசம் ஆச்சு. இப்பத்தான் போற நீ. இதுக்குத்தான் மெத்தப் படிக்கப்புடாதுங்கிறது.''

''நீங்க குடுத்துவச்சவங்க.''

''அதும் பொய்யா. ஒங்களமாதிரி பணத்தச் சொமந்துக்கிட்டு வேல தேடி அலையமாட்டமே. வீடு தேடிவந்து எங்களக் கூட்டீட்டுப் போவாக. எங்க அய்யா வாங்கிக் குடுத்த பெரியபேனாவ தோளுல சொருவீட்டுப் போயி நெலத்துல எழுத ஆரம்பிச்சா வெயிலுமழையின்னு பாராம வேல சூட்டிக்கையா ஓடும். ரெண்டுநேரம் வேகவச்சு சக்கையா சோறு சாப்பிடுற பழக்கமெல்லாம் எங்களுக்குக் கெடையாது. எளவட்டக் கல்லத் தூக்கி வகுத்துக்குள்ள போட்டமாதிரி கட்டிக்கம்மங்கஞ்சி எறங்கணும். அதுல கொஞ்சநேரம் கெறங்கணும். கெறக்கம் தெளிஞ்சதும் முழிச்சு பழையபடி பேனாவப் புடிச்சா பொழுது அடையிறதே தெரியாது. அடமழ பேஞ்சாப் போதும் எங்களுக்கு லீவுதான். குடுத்து வச்சவுகன்னு லேசாச் சொல்லிப்புட்டயே...''

உடன்படித்தவர்கள் எல்லாரையும் பார்த்துப் பேசியாயிற்று. அவர்களுக்கு ரெம்ப சந்தோசம். அவனுக்கு மட்டும் எதையோ இழக்கப்போகிற வருத்தம்.

லட்சுமியைச் சந்தித்து விசயத்தைச் சொல்லணும். அம்மாவுக்குத் தெரியாமல் சந்திக்கணும். கிளம்பிப் போகிற சமயத்தில் ஏன் வீண் சச்சரவு.

எவ்வளவு பிரயாசைப்பட்டும் லட்சுமியைப் பிடிக்க முடியவில்லை. இனி ஒரே வழிதான் உண்டு. கொட்டாரத்துப் பாதைவழியாக தண்ணீருக்குப் போகும்போது பார்க்கலாம். அது ரெம்ப ஆபத்தானது.

சரி ஆனது ஆகட்டுமென்று பின்பக்கம் போய் வீட்டுச் சுவர்மூலையில் கல்லைச் சுரண்டியபடி காத்திருந்தான். ரெம்பநேரங் கடந்து லட்சுமி குடத்தை இடுக்கிக்கொண்டு கிணற்றுக்குப் போனாள். அப்போது பேச சந்தர்ப்பம் சரியில்லாமலிருந்தது. அவள் திரும்பி வரும்வரை கல்லைப் பேர்த்து எறிவதும் கையைப் பிசைவதுமாக தவித்துக் கொண்டிருந்தான்.

அவள் தண்ணீர்ச் சுமையுடன் தனியாகத்தான் வந்தாள். கிட்டத்தில் வந்ததும் அவன் பேச வாயெடுத்தான். அதுக்குள் பின்னாலிருந்து அம்மாவின் சாடைவசவு வந்தது.

''கழுத விடியவிடிய கெனாக் கண்டதாம் பட்டு மெத்தையில படுத்துக்கெடக்கிறமாதிரி. விடிஞ்சப் பெறகு பாத்தா சுத்தி என்ன கெடக்கும்... எம்புத்திய செருப்புட்டுப் போடணும். அண்ணைக்கு அந்த மனுசங்கிட்டச் சொல்லி பெரியபள்ளிக்கூடத்துப் படியேற வச்சென்பாரு அதுதான் தப்பு. அப்பயே காட்ல போட்டுக் கசக்கியிருக்கணும். கிட்ட அண்டுவாளா...''

லட்சுமி மறையும்வரை அம்மா ஓயவில்லை. அவனுக்கு எரிச்சல்.

''ஏம்மா தன்னால கெடந்து பொலம்பறீக. போங்களேன் பேசாம.''

''ஒனக்குப் பொலம்பலாத் தெரியிதோ. ஏன் பேசமாட்ட. இப்பயே இப்படின்னா நாளைக்கு எங்கள எங்க மதிக்கப்போற.''

அம்மா விசுக்கென்று கோவித்துக்கொண்டு போய்விட்டது. அவன் கடைசியாக ஒருகல்லை குறியில்லாமல் எறிந்தான்.

அதுக்குப்பிறகு அவன் ஊரைவிட்டுக் கிளம்பும்வரை லட்சுமியைப் பார்க்கமுடியவில்லை. வெள்ளையம்மா மதினியிடம் நிலைமையைச் சொன்னான். அவள்முகத்தில் அதே நிதானச் சிரிப்பு.

''கல்லுமுள்ளு இல்லாற காடா. நம்மதான் சகிச்சுப் போகணும். நீங்க போனப்பெறகு ஆரப் பேசுவாக.''

''என்னால லச்சிமிக்குத்தான கஸ்டம்.''

''என்ன பெரிய கஸ்டம். ஊரு ஒலகத்துல இல்லாறதா. ரெம்ப அக்கறதான்.''

அவள் குறும்பாகப் பார்த்தாள். அவன் வெட்கத்தில் நெளிந்தான்.

''மதினிக்குக் கிண்டலாருக்கு.''

''மதினி கிண்டல் பேசுறுதுக்கு வேற ஆரு இருக்காக. நீங்க போயிட்டா கண்ணுக்குள்ளயே இருக்கும். மனசுக்கு என்னமோமாதிரி இருக்கு. பாக்கிற நேரமெல்லாம் கொழுந்தன் கொழுந்தன்னு வாய்நெறையா கூப்புடுவென். இனி என்ன செய்றது. மதினிக்காக ஊருல கெட்டிக் கெடக்க முடியுமா. எங்களவும் ஒரு ஓரத்துல யாவுகம் வச்சுக்கங்க...''

கோடைத் தூறலாக அவள் கண்ணிலிருந்து அஞ்சாறு சொட்டு உருண்டுவிட்டது. பேச்சு நனைந்து திக்கியது. அவனும் திணறினான்.

''என்ன மதினி இது...''

அவள் கண்ணைத் துடைத்துக்கொண்டாள்.

''ஒண்ணுமில்ல. சந்தோசமா போயிட்டு வாங்க.''

''அதுக்கு அழுதுகிட்டுத்தான் வழியனுப்பணுமாக்கும்.''

''வாற அழுகைய புடிச்சு நிறுத்தச் சொல்றீகளா.''

பிறகு அவள் அங்கே இருக்கவில்லை. அவன் தூணாக நின்றுகொண்டிருந்தான்.

அவளுக்கு ரெம்ப இளகின மனசு. அடுத்தவர் கஷ்டப்படுவதைப் பார்த்தால் மனசு பொறுக்காது. ஆதங்கத்தில் புலம்பித் தவிப்பாள். ஒரு சின்னக்காயங்கூட அவளை அழவைத்துவிடும்.

காளைக்கு தார்க்குத்திய இடங்களில் மெனக்கிட்டு வென்னீர் ஒத்தடம் கொடுப்பாள். தார்க்கம்பை ஒடித்து அடுப்பில் போடுவாள். வேலுச்சாமியண்ணனுக்கு வசவு கனமாகக் கிடைக்கும்.

தாவாரத்தில் கட்டிக்கிடந்த எருமைக்கிடாரிமேல் மழை ஒழுகியிருக்கிறது. அவள் பதைத்துப்போய் அதன் முதுகில் சாக்குகளைப் போட்டு மூடியிருக்கிறாள். தானியம்தவசம் கட்டுகிற சாக்கை இப்படிப் பாழாக்குகிறாளே என்று வேலுச்சாமியண்ணனுக்குக் கோவம். ஆனாலும் கடிந்து பேசவில்லை. வேறுமாதிரி பயம்.

'கோட்டிக்கழுத நாளைக்கு வேட்டிசீலையைப் போட்டு மூடுனாலும் மூடுவாளே. ஒடனே இதுக்கு வழிபண்ணியாகணும்.'

மறுநாளே ஓலை சம்பாரித்து ஒருசொட்டுக்கூட ஒழுகாமல் தாவரத்தைப் புதுசாக்கிவிட்டான். அவளுக்குச் சந்தோசம்.

அவளை நிறையப்பேர் கோட்டி வெள்ளையம்மா என்றுதான் கூப்பிடுவார்கள். அதைப்பற்றி அவள் கவலைப் படமாட்டாள்.

''சொன்னாச் சொல்லீட்டுப் போறாக. நமக்கா வாயி வலிக்குது. கோட்டியும் கொதக்கும் ஆருன்னு அவுகவு களுக்குத் தெரியணும்.''

ரெம்பக் கவலையுடன் கோழிக்குஞ்சுகளுக்கிடையே நடக்கும் சண்டைய விலகிக்கொண்டிருப்பாள்.

அவளை லேசுக்குள் மறக்கமுடியாது. சொல்லப் போனால் அவள்தான் இதுவரை அவனுக்குப் பெரிய ஆறுதலாக இருந்திருக்கிறாள். தைரியம் சொல்லியிருக்கிறாள். சிரிக்க வைத்திருக்கிறாள்... வெள்ளை யம்மா மதினி வெள்ளையம்மாமதினிதான்.

அவன் ரெம்ப வருத்தத்திலேயே சென்னைக்குப் புறப்பட்டான். உடன் வருவதாக அப்பா சொன்னார். அவனுக்கு விருப்பமில்லை.

''ஒங்க ளுக்கெதுக்கு அலச்சல். நான் சமாளிச்சுக்கிருவென்.''

குடும்பத்தைவிட்டுப் பிரியும்போது அப்பா ஞாபகமாகச் சொன்னார்.

''துட்ட புடிச்சுச் செலவழிக்கணும்ப்பா. நாளப்பின்ன குடும்பம் நடத்துறவன்.''

அவன் தலையாட்டிக்கொண்டு நடந்தான். அம்மா அதிகம் பேசவில்லை.

சென்னைக்குப் போய் வேலையில் சேர்ந்து தங்க இடம் பார்த்து சாப்பாட்டுக்கு ஏற்பாடுசெய்து சாதாரணப்படுவதற்குள் ரெண்டுமாசம் ஓடிவிட்டது. வாயும் வாகனமும் கிளப்பும் ஓயாத இரைச்சலில் அவனுக்கு மனக்கஷ்டம் கொஞ்சம் அமுங்கியிருந்தது.

இப்படியே பத்துமாசம் தாண்டியாயிற்று. பதினோராவது மாசம் உடனே புறப்பட்டு வருமாறு அப்பா எழுதியிருந்தார். என்னமோ ஏதோ என்று மனசு அடித்துக்கொண்டது. இருந்தாலும் எல்லாரையும் பார்க்கப்போகிற சந்தோசம் ஒருபக்கம் முளைவிட்டது. சாமான்களை அள்ளிப்போட்டுக் கொண்டு அவசரத்தில் வண்டியேறினான்.

லட்சுமிக்கு ஏதாவது வாங்கக்கூட நேரமில்லை. அவள் எப்படி இருக்கிறாளோ அம்மா என்ன பாடுபடுத்துகிறதோ... வெள்ளையம்மாமதினி இருக்கும்போது பயமில்லை.

அவன் ஊருக்கு வரும்போது கீழத்தோட்டத்தில் வேலைசெய்துகொண்டிருந்த சுந்தரம் பார்த்துவிட்டான். மம்பட்டியைப் போட்டுவிட்டு பாதைக்கு ஓடிவந்தான்.

வாப்பா வா வேலக்காரன். நீ ஊரவுட்டுட்டுப் போயி வருசக்கணக்கானது போலருக்கு. நல்ல சவுக்கியந்தான.''

''நல்லாருக்கென். நீங்கெல்லாம் எப்படி இருக்கீக.''

''இருக்கொம் மண்ணக் கிண்டிக்கிட்டு.''

அடேயப்பா பழைய சட்டிமண்டையனா இது. பெரிய மனுசத் தோரணை வந்துவிட்டது.

''சந்தோசமா இருந்தாச்சரி.''

''கலியாணம் முடிச்சாச்சு. இனியெங்க சந்தோசமா இருக்கிறது. அப்படியப்படி காலந்தள்ளவேண்டியதுதான்.''

''அது எப்ப நடந்தது. பொண்ணு யாரு.''

''மூணுமாசத்துக்கு முந்தித்தான் கெட்டிப்போட்டென். கீழவீட்டுத் தங்கவேலுமாமா மகமூத்தவ. அந்தா பிஞ்சையில களையெடுக்கால்ல.''

''சுருளி அசலூருல சம்பந்தம் செஞ்சவன். புள்ளை யில்லையா.''

''வகுத்தத் தள்ளீட்டு அலையிறா பொண்டாட்டி. பொட்டப்புள்ள பெறட்டும். அப்பத்தான் வாணக்கண்ணன் அடங்குவான்.''

''மத்தவங்க எப்ப முடிக்கப்போறாங்களாம்.''

''அவங்க கெடக்கெட்டும். நீ எப்ப சாப்பாடு போடப்போற.''

''தெரியாதா நாலஞ்சு வருசம் கழிச்சு.''

''கெழடனானப் பெறகா.. ஒருவேள அதுக்குத்தான் வந்துருக்கயோ என்னமோ. உள்ளதச் சொல்லு.''

''அட நீ ஒருத்தன். எனக்கென்ன தெரியும். ஒடனே வாடான்னு எழுதுனாக.''

''அப்ப ஏதாச்சும் திட்டம் போட்டு வச்சிருப்பாக.''

''என்ன திட்டமோ.''

''ஒங்க அப்பாவும் அம்மாவும் லேசுப்பட்டவுகளா. எல்லாம் கமுக்கமா வச்சிருப்பாக.''

''எனக்குப் பயமாருக்கு.''

சுந்தரம் செருமிக்கொண்டான்.

''ஒனக்கு வெசயம் தெரியுமா. லச்சிமியோட அய்யா தவறிப்போயி ஒருமாசம் ஆச்சு.''

''அடடா சொகமில்லாப் படுத்திருந்தாரா.''

''கெடையாது. எங்கலியாணத்துச் சமயத்துல நல்லாத்தான் இருந்தாரு. சந்தோசமா சாப்பிட்டாரு. என்னமோ கெட்ட நேரத்துக்கு திடீர்னு அமுக்கீருச்சு. இனியும் கொஞ்சநாளைக்கு இருந்திருந்தா அந்தப் புள்ளையக் கரையேத்தியிருக்கலாம். இப்ப அதுபாடுதான் பாவமாருக்கு. அண்ணன்மாரு தனித்தனியா பிச்சிக்கிட்டுப் போயிட்டான். தாயும் மகளும் ஒழச்சுக் காச்சீட்ருக்காக.''

கோபால் துடித்தான். முதல் வேலையாக லட்சுமியைப் பார்க்கணும். நிறையப் பேசணும்.

''அண்ணன்மாருக்கு ஏன் புத்தி அப்படிப் போச்சு.''

''அவுக பொண்டாட்டிகளத்தான் கேக்கணும்.''

சுந்தரம் தலைசாய்ந்த யோசனையில் புஞ்சைக்குத் திரும்பினான். கோபாலுக்குக் கண்ணீர் பிதுங்கிவிட்டது. நேரே லட்சுமியின் வீட்டுக்குப்போய் எழவு கேட்டால்தான் மனசாறும் போலிருந்தது. ஆனாலும் காலென்னமோ சொந்த வீட்டுக்கே கொண்டுபோய்விட்டது. அம்மாமுகத்தைப் பார்த்தமாத்திரத்தில் உள்புலம்பல் அடங்கிப்போனது.

அம்மா அக்கறையாக வென்னீர் போட்டுக்கொடுத்தது. முட்டை பொரித்து கிட்ட இருந்து சோறு சாப்பிடவைத்தது. சொகத்தைப்பற்றி கரிசனையுடன் விசாரித்தது. கடையில் சாப்பிட்டால் உடம்பு ரெம்பக் கெட்டுப்போகுமென்று அழுத்திஅழுத்திச் சொன்னது.

அவன் தப்பித்து வெளியேறப் போன சமயத்தில் அப்பா பிடித்துக்கொண்டார்.

''மெட்ராசுக்காரன் தனியாவே எத்தன நாளைக்குக் காலந்தள்ளுறது.''

அம்மா அப்பிராணியாக உட்கார்ந்திருந்தது. அவன் எங்கோ பார்த்துக்கொண்டிருந்தான்.

''இப்ப என்ன வயசா போச்சு. வேலைக்குப் போயிச் சேந்ததுக்குள்ள.''

''எங்களுக்கு வயசாகுதே.''

''அதுக்கு நான் என்னசெய்யட்டும்.''

''நீ ஒண்ணும் செய்யவேணாம். கலியாணத்த முடிச்சிட்டு மகராசனா இரு.''

''என்னப்பா நீங்க. கலியாணம்னா பொண்ணு பாக்கணும். காசு வேணும். லேசாச் சொல்றீகளே.''

''ஒனக்கு அந்தக் கவலையெதுக்கு. எல்லாம் நாங்க பாத்துக்கிருவொம். நீ மாப்பிள்ளையா உக்காந்தாப்போதும்.''

அவன் அம்மாவைக் கூர்ந்துபார்த்தான். அது ஒண்ணும் தெரியாததுபோல் முழித்துக்கொண்டிருந்தது.

''பொண்ணு பாக்கவேணாமா.''

''நாங்க பாத்தாச்சு.''

அவனுக்கு மனசு சுரீரிட்டது. ஆச்சரியத்துடன் பார்த்தான். உள்ளே கோவம் மெல்ல எழும்பியது.

''அதுக்குத்தான் ஓடிவரச் சொன்னீகளா. நல்லாருக்கு ஒங்க காரியம்.''

''ஏம்ப்பா இப்படிப் பேசுற. நல்லதுக்கில்லாமயா நாங்க கெடந்து அலட்டிக்கிறொம்.''

''நீங்களே சொல்லுங்கப்பா. கலியாணம் முடிக்கிறவன் நான். எங்கிட்ட ஒரு வார்த்தகூடச் சொல்லாம எல்லாம் முடிவு பண்ணியாச்சுனா என்ன அர்த்தம்.''

''ஒங்கிட்டக் கேக்காமயா முடிவுசெய்யப்போறாக.''

இதுவரை உம்மென்றிருந்த அம்மா வாய்திறந்தது.

''ஆமா முடிவுபண்ணியாச்சுடா. அதுக்கென்ன வந்து போச்சு. நாங்க பாத்து முடிச்சுவைக்காம நீயேவா செஞ்சுக்கிறப்போற.''

''நீங்க சும்மாருங்கம்மா. இப்படித்தான் பேசுவீக.''

''ஒனக்கு அப்படித்தான் தெரியும் இப்ப.''

''என்னத்தக் கண்டுட்டீக.''

''ஒன்மனசுல என்னருக்குதுன்னு தெரியும்டா எனக்கு.''

''ரெம்பத்தான் தெரியும் ஒங்களுக்கு.''

''இல்லஇல்ல நீயே தெரிஞ்சுக்கோ.''

அம்மா விசும்ப ஆரம்பித்துவிட்டது. அதைப் பார்த்ததும் அப்பாவுக்குப் பொறுக்கவில்லை. உடம்புத் துடிப்பில் தீர்மானித்துச் சொன்னார்.

''அதென்னமோ எங்களுக்குத் தெரியாது. பேச்ச ஏன் வளத்துக்கிட்டு. நாங்க அந்த வடிவேலுப்பையன் தங்கச்சியப் பேசி முடிவுபண்ணியிருக்கொம். நீ செஞ்சுதான் ஆகணும்.''

அவனுக்கு அங்கமெல்லாம் காந்தியது. எக்கச்சக்கமாக அகப்பட்டுக்கொண்ட திணறல்.

''வடமலாவரத்துல படிச்சவளா.''

''அவளேதான். அவளுக்கென்ன கொறச்சல்.''

''கொறச்சல்னு யாரும் சொல்லலயே.''

அம்மா முனங்கியது.

''அவளோட தாயாரு வச்சிருக்கிற நகநட்டெல்லாம் போடுவா. ஒருகுறுக்கம் குறிச்சநெலம் எழுதிவைக்காக. புள்ள பத்துவரைக்குப் புடிச்சிருக்கு. இதுக்குமேல என்ன வேணும்.''

''எனக்கு இப்பக் கலியாணம் வேணாம்.''

''முடிச்சுத்தான் ஆகணும்.''

''அது எம்பிரியம்.''

அப்பா கோவப்பட்டார்.

''ஒம்பிரியம்னா இத்தோட போ. நாங்க இல்லன்னு நெனச்சுக்கோ.''

அவர் எழுந்துவிட்டார். அம்மா நிதானித்துச் சொன்னது.

''என்னப்பா நீ சின்னப்புள்ளமாதிரி பேசிக்கிட்டு. கலியாணக்காரியம்னா அழிச்சுக்கிழிச்சுக் கூட்டாங்கஞ்சி காச்சுறதா. ஒரு பெரிய மனுசன் பாத்து பேசி முடிவு பண்ணீட்டாரு. இண்ணைக்கு நீ முடியாதுன்னு ஒதறீட்டா

அவரு யாருமூஞ்சியில முழிப்பாரு. அவரு கேவலப்படயில நான் இருந்து எதுக்கு. பெறகு எனக்குத் தெரிஞ்ச முடிவப் பாத்துக்கிருவென்.''

''பெரியமனுசனா பாத்தாரு. அத்தனையும் பெரியமனுசி செஞ்ச வேல.''

''அப்படியே வச்சுக்கோயேன். நீ நெனப்ப வழியில போறத இழுத்துக் கெட்டணும்னு. அதெல்லாம் எங்களுக்கு ஒத்துவராதுப்பா.''

''பேச்சவிடுங்கம்மா. நீங்கெல்லாம் ஒரு மனுசிபோல.''

அவனுக்கு அதுக்குமேலும் கத்திப்பேசணும்போல் ஆத்திரம். அழுக்குத்துணிகளை தோளில் போட்டுக்கொண்டு வெளியேறினான். கடையில் சலவைசோப் வாங்கும்போது சுப்பிரமணி கேட்டான்.

''மெட்ராசுலருந்து ரெம்ப அழுக்கு கொண்டு வந்துட்டயா.''

அவன் கிணற்றடிக்குக் கிளம்பிக்கொண்டே சொன்னான்.

''இங்க வரவுந்தான் ஒட்டிக்கிருச்சு.''

''நல்லா தொவச்சிட்டு வா. பெறகு பேசிக்கிருவொம்.''

கோபால் ரெம்பக் கஷ்டப்பட்டு மறுநாள் சாயங்காலம் தெற்கோடைக்கரையில் லட்சுமியைச் சந்தித்தான். புல்லறுக்கிற சாக்கில் பன்னரிவாளும் கடகமும் வைத்திருந்தாள் அவள்.

ரெண்டுபேரம் மஞ்சணத்திமரத்தடியில் நாணல்புதர் மறைவில் ஒதுங்கினார்கள். அவன் ரெம்பவும் உடைந்து சொன்னான்.

''ஒங்க அய்யா தவறிப்போயிட்டாராமில்ல. சுந்தரம் சொன்னான்.''

அவள் முகமும் கவலையில் கனத்தது.

''கொஞ்சகாலத்துக்கு பாக்கக் குடுத்துவைக்கல.''

அவள் அமைதியாக அழுதாள். அவன் கண்ணீரைத் துடைத்துவிட்டான்.

''ரெம்பநாளைக்கு இருக்கவேண்டிய மனுசன்.''

''நான் நாதியத்த கழுதையாயிட்டென்.''

''அப்படிச் சொல்லாத.''

''அண்ணன்மாரு எங்கள எட்டிக்கூடப் பாக்கிறதில்ல. நானா பாடுபட்டு எத்தன நாளைக்கு. அம்மாவால அலைய முடியல.''

அவன் பேசவில்லை. நாணல்கருதை நீவிவிட்டான்.

மஞ்சணத்திமரத்தில் விரட்டி விளையாடும் அணில்களின் கெச்சட்டம் தூரத்தில் எதிரொலித்தது. அவள் மணலை கைநிறைய அள்ளிக் கணிசம் பார்த்தபடி கேட்டாள்.

''நேத்து வந்தாப்புலயா.''

அவன் உச்சுக்கொட்டினான்.

''எண்ணைக்கோ வந்தென்.''

''ஏன் அப்படிச் சொல்றீக.''

''வந்ததே தப்புன்னு தெரியிது.''

''இங்க வாறதுக்குப் புடிக்கலயா.''

அவள் முகத்தில் ஏக்கம்.

''சே அந்தமாதிரியில்ல... நான்வந்தது ஒனக்கெப்படித் தெரியும்.''

''நேத்துராத்திரி வெள்ளையம்மாக்கா சொன்னா.''

''நீ மெலிஞ்சு போயிருக்கயே.''

''அதுக்குச் சேத்து நீங்க ஊதியிருக்கலயா அது போதும்.''

''ரெம்ப ஊத்தம். மனசுல ஒளையிற ஒளச்சல் யாருக்குத் தெரியிது.''

''எதுக்கு ஒளையணும். மனசுல தெம்பிருந்தா எல்லாம் சரியாப்போகும்.''

''தெம்புக்குக் கொறச்சலில்ல.''

''அந்த மாதிரி தெரியலயே.''

அவள் லேசாகச் சிரித்தாள். அவன் தொற்றிக்கொள்ள இடம் தேடித் தத்தளித்தான். அவளது விரலைப் பிடித்து நகத்தை நிமிண்டினான். அவளுக்கு ஆதங்கம்.

''ஏன் ஒரு மாதிரியா இருக்கீக.''

''எரிச்சலாருக்கு.''

''எம்மேலயா.''

''ஒம்மேல எதுக்கு. வீட்ல ஒரு பெரியமனுசி கெடக்குதுல்ல. ஒரே தொணதொணப்பு.''

''சம்பாரிச்சுக் குடுக்கீகல்ல. பெறகென்ன.''

''அத அழுதுதான ஆகணும்.''

''அதுக்குமேல என்னசெய்யணுமாம்.''

''கலியாணம்முடிக்கணுமாம். அரிச்செடுக்குது.''

''இதென்ன வம்பாருக்கு. பெத்தவுகளுக்கு அந்த ஆச இல்லாமருக்குமா. எங்கம்மாவுக்கே இருக்குது.''

''கட்டாயப்படுத்துறாக.''

''அப்படியெங்கபொண்ணு பாத்துட்டாக.''

அவனுக்கு பலப்பல நினைவுகள்.

''அந்த வடக்குத் தெருப்புள்ளைய முடிக்கணுமாம். எங்க அம்மா அழுகுது.''

அவளிடம் எந்த மாற்றமுமில்லை.

''நான் நெனச்சென். அவுக அம்மா ஒங்க வீட்டுக்கு புதுசா பழக்கம்வச்சு அலையும்போதே நெனச்சென். சரியாப் போச்சு... நீங்க என்னசொன்னீக.''

அவளது பார்வையில் ஏராளம் கேள்விகள் தொங்கின. முதலில் 'நீங்க'வே அவனுக்குள் உறுத்திக்கொண்டிருந்தது. அவளிடம் எதையோ தேடித்தேடித் தோற்றுப்போனான்.

''நான் ஒண்ணும் சொல்லல. கலியாணம் வேணாம் னுட்டென்.''

''என்னமாருக்கு. எந்த ஆம்பளையாச்சும் கலியாணம் வேணாம்னு சொல்லுவாகளா. மனசாரச் சொல்லுங்க. ஒங்களுக்கு நெசமாவே வேணாமா.''

''இப்ப வேணாம்னு சொன்னென்.''

''அவக வுட்ருவாகளாக்கும்.''

''என்னென்னமோ பேசுறாக.''

''எதுக்கு வேணாம்னு சொன்னீக.''

அவன் திணறினான்.

''எதுக்குனு கேட்டா...''

''பின்ன காரணம் வேணுமில்ல.''

''என்ன நீ இப்படிக் கேக்க.''

''கேட்டது தப்பா.''

''பெறகென்ன நான் தன்னால வெந்துட்டுக் கெடக்கென். நீ வேற...''

''வேகவேணமாமே. வுட்டுச் சொல்லீறவேண்டியதுதான.''

''அவுக முடிவுபண்ணியாச்சுனு அழுது பொலம்புறாக. அவள முடிக்கலன்னா நீயுமில்ல நாங்களுமில்லன்னு சொல்றாக. உயிர வுட்ருவன்னு அம்மா பயமுறுத்துது. நான் என்னசொல்லட்டும்.''

''அப்ப பேசாம அந்த எடத்துல எறங்கிக்கிறணும்.''

அவனுக்கு மனசு மேலும் சிக்கலாகிக்கொண்டு வந்தது.

''நான் என்னதான் செய்யட்டும். ஒண்ணு எங்க அம்மா சாகணும். இல்ல நான் சாகணும்.''

அவனது குரல் கரகரத்தது. குலுங்கி அழுதான். அவள் கண்ணிலும் நீர் கோர்த்தது.

''எல்லாம் வரும்னு தெரிஞ்சதுதான். ஒங்க அம்மாவுக்கு கழுத்து நெறையா தூக்கீட்டு வரணும். என்னக் கண்டாலே தூரத்துக்கு வெலகிப்போகும். பேசாத சாடையில்ல. நானும் ஒரு மரியாதைக்கு எதுத்துக் கேக்காம இருந்துக்கிருவென்.

அதுக்கு நான் என்னதான் கெடுதல் செஞ்சனோ...பேசுறதுக்கு ஒரு அளவு வேணாமா... ஒங்களுக்கு நாங்க தரமில்லங்கிறதுக்காக அம்புட்டு எளக்காரமாவா போயிட்டொம். நாங்களும் சோத்துல உப்புப்போட்டுத்தான் சாப்புடுறொம். ஒருநா எங்க அம்மாவப் புடிச்சு நெஞ்சுல குத்தி வாங்குறமாதிரி பேசியிருக்கு. அவ எங்கிட்டச் சொல்லிச்சொல்லி அழுகிறா. பெரிய மனுசின்னா காலுல வுழுந்தா கும்புடுவாக. தன்மரியாதைய தானே தேடிக்கிறணும். நம்மளும் உக்காந்து அதுகிட்ட நாலெழுத்து கத்துக்கிட்டமேன்னு பாக்கென். இல்லன்னா நடக்கிற கதையே வேற. இதனாலபாதி அண்ணன்மாருக்கு எங்கமேல கோவம்...ஒங்க அப்பா இருக்காரே அதுக்குமேல. கட்டெறும்பு சித்தெறும்பப் பாத்தமாதிரி பாப்பாரு. இப்படிப்பட்ட எடத்துல வந்து எறங்கி குடும்பத்தக் கெடுத்தவன்னு பேச்சு வாங்கவா... என்னமோ ரெண்டுபேரும் சின்னவயசிலருந்து பேசுனொம்... தொட்டுப்பழகுனொம். சேந்து படிக்கலன்னா இம்புட்டு வந்திருக்காது. அதுக்காக இப்ப வருத்தப்பட்டு என்னசெய்ய...ஏன் சின்னப்புள்ளமாதிரி கண்ணீர் வுடுறீக... ஒலகத்துல ஒருத்தருக்கொருத்தரு விரும்பிக்கிட்டவுகெல்லாம் ஒண்ணுசேந்துற முடியுமா. அவுகவுகளுக்கு எங்க விதிச்சிருக்கோ அந்தப்படிதான் நடக்கும். மூச்சுக்காட்டாம பெத்தவுக சொல்றதக் கேளுங்க. அந்தப் பொண்ணாச்சும் நிம்மதியா வாழட்டும்.''

அவள் முந்திச்சேலையால் ரெண்டுபேருடைய கண்களையும் துடைத்தாள். அவனது விரல்களைப் பிசைந்து கொண்டிருந்தவள் விடுவித்து எழுந்தாள். வெறுங்கடகத்தை இடுப்பில் இடுக்கிக்கொண்டு வயக்காட்டுக்கு நடந்தாள்.

அவன் வார்த்தை தேடி வெளிக்கொணருமுன் அவள் எட்டத்தில் போய்விட்டாள். எங்கோ ஒற்றையணிலின் விக்கல் விட்டுவிட்டுக் கேட்டது. நாணல்கள் அசைந்து அடிக்க வந்தன. உடனே வீட்டுக்குப் போய் முடக்கிப்படுத்து மிச்சத்தையும் அழுதுதீர்க்கணும் போலிருந்தது. வேகமாகத் திரும்பினான்.

அடுத்தமாசம் அவனுக்குக் கல்யாணம் முடிந்தது. அம்மாவும் அப்பாவும் தடபுடலாகத் திரிந்து நடத்தி வைத்தார்கள்.

சுருளி வேண்டாவெறுப்பாக வந்து கைநனைத்து விட்டுப் போனான். பசியாறச் சாப்பிட்டிருக்கமாட்டான்.

வெள்ளையாம்மாமதினியும் வேலுச்சாமியண்ணனும் வரவில்லை. அம்மா பத்திரிகை வைத்ததோ என்னமோ. நேரில் கூப்பிடலாமென்றால் எந்த முகத்துடன் போவது. ''நான் இனியும் சாகல'' என்று சொல்லுவாள். அதுக்கு என்னபதில் பேசுவது.

கல்யாணத்துக்கு வந்த சனங்கள் என்னென்னமோ பேசிக்கொண்டார்கள். அவர்கள் கிட்ட வந்து அவனிடம் 'ஒனக்கே நல்லாருக்கா இது' என்று பார்வையால் கேட்டுவிட்டுப் போனார்கள்.

மறுவீடு போகும்போது அவன் தெருவில் தலைநிமிரவேயில்லை. ஒரு கிண்டல் காதில் உறைத்தது.

''பொண்ணு ஆருன்னு தெரியலயே.''

பிஞ்சுப்பெண்கள் ஆரத்தியெடுத்தார்கள். முற்றத்தில் ரத்தக்குழம்பாக ஓடிய மஞ்சள்தண்ணீரை உழப்பிக்கொண்டு திரிந்த அவர்களின் கும்மரிச்சம் ஓயவில்லை.

நாலாம்நாள் அவன் சென்னைக்குப் புறப்படத் தயாரானான். அப்பா கேட்டார்.

''அதுக்குள்ள என்ன அவசரம்ப்பா. கொஞ்சநாளைக்கு இருந்துட்டுப் போகலாமில்ல.''

''போயாகணும். லீவில்ல.''

''ஒன்இஸ்டம்.''

அம்மா அங்கமெல்லாம் தங்கச்சுமையுடன் மருமகளிடம் ரெம்பரெம்பப் பேசிக்கொண்டிருந்தது.

''தாயி நீங்க ரெண்டுபேருதான் அங்க. ஒருத்தருக் கொருத்தரு சகிச்சிக்கிட்டு சந்தோசமா இருக்கணும். வீடு

பாத்துட்டதாச் சொன்னான். எப்படியிருக்குதோ. ஒங்களோட மாமா வாறாக. எல்லாம் நல்லபடியா ஏற்பாடு பண்ணீட்டுத்தான் திரும்பச் சொல்லீருக்கென். நானும் வரலாம்னா பள்ளிக் கூடத்தப் பாத்துக்கிறதுக்கு ஆளில்ல. பெறகுதான் சாவாசமா வரணும்.''

சுப்புத்தாய் எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டாள். அவளது தாயாரும் பிசுக்பிசுக்கென்று முழித்துக்கொண்டு தலையாட்டியது.

அம்மா அடிக்கடி அப்பாவை ''இந்தாங்க'' என்று கூப்பிட்டு புத்திமதி சொன்னது. அவரும் சளைக்காமல் ''சரி நல்லமணி'' என்று சொன்னார்.

வடிவேலு சந்தோசமாக இருந்தான். முகத்தில் பெரிய பாரத்தை இறக்கித்தவிப்பாறும் களை.

''ரயில்லயே போனாலும் ஒருநாளாகுமோ மாப்பிள. பத்தரமாப் போகணும். நீங்க போறதுக்கு முந்தி லாரிச் சாமாங்க போயிடும்''

கோபால் அவனிடம் ஒப்புக்குக் கேட்டான்.''

''ஒனக்குக் கலியாணம் எப்ப.''

அவன் வெகுளியாகச் சொன்னான்.

''தெரியாதா பெறகு.''

**வே**ட்டைக்குப் போனவர்கள் வீட்டை நினைக்கும் போது இருட்டிவிட்டது. அப்போதும் சிலர் நோண்டிக் கொண்டிருந்தார்கள். இருளாண்டித்தாத்தா சத்தம்போட்டார்.

''இருட்டுக்குள்ள என்னத்தத் தொழாவுறீகடா ஏலமா' டாற பயகளா. பகல்லயே பத்து எடத்துல உக்காந்து எந்திரிக்கிறவுக ராவேட்டையாடிக் கிழிக்கப் போறீகளாக்கும். கீககாட்டுக்காரங்கன்னு நெனப்போ.''

ஒருபயல் அவர்காதுக்குக் கேட்கிறமாதிரி முனங்கினான்.

''கீகாட்டுக்காரங்க என்ன பெரிய கொம்பா.''

''அது எவம்ல பொட்டநாயிமாதிரி ஊளமொனக்கம் போடுறது. ஆயிரம் சொன்னாலும் அவங்க கால்தூசிக்கு ஆவீகளா நீங்க. அவன் வேட்டையென்ன சாமர்த்தியமென்ன. ஒங்களமாதிரி நோணிதள்ள காச்சாம்பூச்சான்னு கத்திக்கிட்டு ஓடிச் சாவான்னு பாத்தயா. எதுலயும் சுளிவு வேணும்டா.''

ஒருத்தன் கேட்டான்.

''அப்படின்னா தூண்டிபோட்டுப் புடிப்பாகளா.''

''கோட்டிக்காரா கெட்டுச்சோத்தக் கெட்டீட்டு பொழுது சாயக் கெளம்புனாகன்னா விடியிறதுக்குள்ள பத்துப் பதினஞ்சு மொசலப் பெறக்கீருவாக. சொமக்கத்தான் ஆளுவேணும். அவங்களுக்கு என்ன வேல. நாய்க்குப் பின்னாலயே போக வேண்டியது. அது கடிச்சுப் போடப்போட எடுக்க வேண்டியது. ஒவ்வொரு நாயும் காளங்கண்ணுபோல இடுப்புக்குமேல வளந்துருக்கும். அடடா அது நெறமென்ன நெஞ்சுத்தாக்கென்ன. மொசலுவாடையில மோப்பமெடுத்துப் போச்சுன்னா ரெண்டுலஒண்ணு பாக்காமத் திரும்பாது. ஒருத்தனுக்காச்சும் முள்ளுமொடலுத் தச்சதுன்னு பேச்சு உண்டுமா. அவங்களக் கண்டாலே அத்தனையும் வெலகி வழிவுடும். சக்கம்மா வாக்கு அப்படி.''

ரெம்பப்பேர் தாத்தாவுக்குக் காதுகொடுத்தார்கள்.

''அப்படியில்லன்னா ராத்திரி நேரம் பயமில்லாமத் திரியமுடியுமா.''

''குளுவன் இருக்கானே அவன் எம்மாத்தரம். ஆத்தாங்காட்டச் சுத்தி கண்ணிபோட்டு விடியாம அஞ்சாறு மொசல உசிரோட தூக்கீட்டு வந்துறான். அண்ணைக்குச் சந்தையில பாக்கென் ஆய்பூய்னு வெலச்சொல்லி வித்துக்கிட்ருக்கான். ஆடு கோழியப்போல மொசலும் சந்தைக்கு வந்தாச்சு. காலம் பெரண்டுக்கிருச்சு.''

''மொசலுக்கும் கசாப்புக்கட வச்சாலும் வப்பாக.''

''யேவாரஞ்செய்ற பயக என்னமுஞ் செய்வான்.''

சுருளியும் கோபாலும் கூட்டத்திலிருந்து விலகி பேசிக்கொண்டு போனார்கள். ரெண்டுபேரும் மனசுவிட்டுப்

பேசி நாளாயிற்று. அதுக்கு இது நல்ல சந்தர்ப்பமாக இருந்தது. சுருளி கேட்டான்.

''இங்க எத்தன நாளைக்கு இருப்பு.''

கோபாலுக்கு மனசைப் பிசைந்தது.

''எதுக்குக் கேக்க.''

''அட சும்மாதாம்பா கேட்டென். இருந்தா சாவாசமா பேசலாம். ஒருநாளைக்கு என்வீட்டுக்கு சாப்பிடக் கூட்டீட்டுப் போகலாம். எங்களுக்குக் கலியாணச் சாப்பாடு போட்டவனாச்சே.''

''நாளைக்குப் போகணும்.''

''அப்ப இங்க வந்துருக்கவேணாமே. ஊருல சனங்க உசிரோட இருக்காகளான்னு பாத்துட்டுப் போக வந்தயாக்கும்.''

''நானே உசிரோட இருக்கையில மத்தவுகளுக்கென்ன.''

''ஒனக்கு எதுல கொறச்சலு. நாளெண்ணிக் கைமேல சம்பளம். கண்ணுக்குக் குளுந்த பொண்டாட்டி. காலுக்குள்ள புள்ள. மொகத்துல வெயில்படாற பெழப்பு.''

''ஆமாமா ரெம்ப நல்லாருக்கென்.''

''பெறகென்ன சந்தோசமா ஊருக்கு வந்து போகலாமில்ல. கட்டாப்புக்குத் தப்புன மொசலுமாதிரி கலியாணத்தோட வெரண்டு ஓடுனவன் அஞ்சாறு வருசத்துக்குப் பெறகா எட்டிப்பாக்கிறது.''

கோபால் கொஞ்சதூரம் சும்மா வந்தான். நாய்களின் மூச்சும் முனக்கமும் கேட்கவில்லை. எல்லாம் கயிற்றிலிருந்து உருவிக்கொண்டு வீட்டுக்கு ஓடிவிட்டன. இருளாண்டித் தாத்தா ஆட்களைக் கூட்டிக்கொண்டு போனார்.

''இப்பகூட வீட்டுக்காரி நச்சரிப்புத் தாங்காமத்தான் வந்தென்.''

''அப்படியொரு வைராக்கியமா. ஆயிரந்தான் இருந்தாலும் பெறந்துவளந்த ஊர மறக்கப்புடாதுப்பா.''

''ஊருக்கு வாறதுக்கு ஆசதான். வந்து யாரு மொகத்துல முழிக்கிறது.''

''நாங்களெல்லாம் மனுசராத் தெரியலயா.''

''லச்ிமிய நெனச்சா மனசு என்னமாத் தவிக்குது தெரியுமா சுருளி.''

''அவளுக்கு ஒண்ணும் ஆகலயே. மகராசியா இருக்கா.''

''எங்கததான் இப்படியாகிக்கிருச்சு. அவளாச்சும் அயலூருக்குப் போயிருந்தா பழசு மறந்தமாதிரி இருக்கும்.

''எல்லாரு கதையும் நல்லாத்தான் நடந்துருக்கு. அவ ஊரவுட்டுத் தொலஞ்சுபோகாம நீ மொழஞ்ச எடத்துலயே எறங்கீட்டாளேன்னு பாக்கயா.''

''நான் அதுக்குச் சொல்லல சுருளி.''

''பெறகெதுக்குச் சொல்லவந்த. அவமேல ஒனக் கென்னப்பா அக்கற. அண்ணைக்கு அந்தப்புள்ள அழுது அலமோதி நிக்கயில ஆரும் ஒரு வார்த்த கேட்ருப்பாகளா. ஊரே வேடிக்கபாத்துச்சு. ஒங்க அம்மா சிரிச்சுச் சிலுப்பிக்கிட்டு அலஞ்சது. இண்ணைக்கு என்னாச்சு. பொறணி பேசுனது கெல்லாம் அவகிட்டப் போயி உப்புக்குடு மொளகா குடுன்னு கெஞ்சீட்டு நிக்கிதுக. காலத்தப் பாத்தாயா... ஆரவும் எதிரில்லாம நிமிந்து பேசின ஒங்க அம்மா தலகுனிஞ்சு ராவோடராவா ஊரவுட்டுக் கௌம்பிப் போயிருச்சு. வள்ளிமுத்துவாத்தியாருக்கு வாயக் காணும்.''

''எல்லாத்துக்கும் அம்மாதான் காரணம்.''

''பழியத் தூக்கி பாதையில போறவுகமேல போடுறது தான நம்ம பழக்கம். அட போப்பா. பொட்டப் புள்ளைக் கிருக்கிற தைரியமும் துணிச்சலும் நமக்கிருக்கா. அத வுட்டுட்டு அம்மா காரணம் சும்மா காரணம்னு பேசவந்துட்டான். அவ ஆரக்கேட்டு வடிவேல இழுத்துக் கிட்டு ஓடுனா. அம்மா பேச்சக் கேட்டாளா இல்ல அண்ணன் மாரத்தான் மதிச்சாளா. வடிவேலு தாய்க்குப் பயந்து அவள ஒதறித்தள்ளியிருந்தா கெதி என்னாகியிருக்கும்.''

''அத மொறையோட செஞ்சிருந்தா மரியாதை யில்லையா.''

''எது மொறையோட நடக்குதுன்னு கேக்கென். மேளந்தட்டி தாலிகெட்னாத்தான் கலியணமா. அப்படி தடபுடலா செஞ்சதுக எத்தனயோ அத்துக்கோ பறிச்சுக் கோன்னு அலையிதுக. பெரிய மரியாதைக்குப் போயிட்டான். மானம் மரியாதையெல்லாம் தூக்கி ஒடப்புல போடு. அண்ணைக்கு பெரட்டாசிமாத்த நாயிமாதிரி அந்தப் புள்ளைக்குப் பின்னால சுத்துறப்ப அது எங்க போச்சு. என்னசெய்றது. அவ ஏல்க்கையான குடும்பத்துல பெறக்கலயே. அவளப் பெத்தவளுக்கு பேருதான் அன்னபூரணம். வீட்ல அன்னமுமில்ல தண்ணியுமில்ல. தாயும் மகளும் எத்தனநாளைக்கு தன்னால கெடந்து ஒதைவாக. நீ ஒருத்தியைத் தேடிக்கிட்டு ஓடிப்புட்ட. அவ இன்னொருத்தனக் கூட்டீட்டு ஓடிப்புட்டா. அம்புட்டுத் தான். அதுக்காக கெணத்துல வுழுந்து சாகமுடியுமா.''

சுருளிக்கு பேச்சு படபடத்து நின்றுவிட்டது. வற்றிய வாயை நமர்த்தி எச்சுத் துப்பிவிட்டு கோபாலின் முகத்தை இருட்டில் தேடினான். கோபால் குழண்ட தலையை நிமிர்த்தவில்லை. அஞ்சுவருசத்துக்குப் பிறகாவது அவனுக்கு அடி கிடைத்ததில் மனசு லேசுப்பட்டது. ஒருவேளை இது முந்தியே கிடைத்திருந்தால் வேறுவிதமாகக்கூட நடந்திருக்கும்.

''அவமேல தப்பில்ல. நான்தான் அதச் செஞ்சிருக்கணும்.''

''ஒனக்கென்ன கோட்டிபுடிச்சிருச்சா. இதுக்குப் போயி எல்லாரும் உசிர மாச்சுக்கிட்டா ஒலகத்துல சுடுகாடு தாங்குமா... நான் என்னமோ ஆத்தரத்துல பேசீட்டென். மனசுல வச்சுகிறாத.''

''உள்ளதத்தான சொன்ன.''

''ஆரு இல்லன்னது. ரெண்டுபேரும் புள்ளீகளப்பெத்தப் பெறகு அதப்பேசி என்னாகப்போகுது. வேட்டைக்குன்னு போனா மேலு வலிக்காம தொக்குனமொசலு அடிக்கிறவனும் உண்டு. நாயோட நாயா நாக்குத்தள்ள ஓடி வெறுங்கையோட வாறவனும் உண்டு. அதப்போலதான்.''

''ஒண்ணொண்ணவும் மறக்கமுடியலயே சுருளி.''

''நீதான் பழச நெனச்சுக் கொமஞ்சுக்கிட்ருக்கணும். நாங்க மறந்து ரெம்பநாளாச்சு. ஊருல பேசுறதுக்கு வேற கதையா இல்ல. அவுத்து வுடட்டுமா...சரி அது கெடக்கட்டும் ஒரு பக்கம். ஒங்க அப்பா அம்மா எப்படி இருக்காக. அங்க போக்குவரத்து உண்டுமா. அவுக வந்து போயிருக்கிருவாகளா.''

''நான் அந்தப் பக்கம் எட்டிப்பாக்கிறதே இல்ல. அவுகளும் வரமாட்டாக.''

''அவுகளா நின்னுகிட்டாகளா இல்ல நீதான் ஒதுக்கி வச்சிட்டயா.''

''அவுக எதுக்கு என்வீட்டுக்கு வரணும்.''

''என்வீடு ஒன்வீடுன்னு ஆயிக்கிருச்சா. பெத்தவுகள வெறுக்கிற அளவுக்கு அப்படி என்ன நடந்துருச்சுப்பா.''

''இன்னியும் என்னமோ நடக்கணுமாக்கும்.''

''அதச் சொல்றயா. எவன்எவனோ லச்சலச்சமா கொள்ளையடிச்சிட்டுத் தப்பிச்சுக்கிறான். ஒங்க அப்பா என்டான்னா நூறு எரநூறுக்குப் போயி மாட்டிக்கிட்டாரு. பரம்பரையா சேத்திருந்தா சுடுகாடு தெரியும்.''

''கைய வச்சிட்டுச் சும்மாருக்கணும். இந்த வயசுல எதுக்கு இதெல்லாம்.''

''ஆசைக்கு வயசாவது ஒண்ணாவது. துட்டுச் சேக்கிற நெனப்பு வந்தா மனுசனச் சும்மாருக்கவுடாது. பாடாப் படுத்தித்தான் ஓயும்.''

''செஞ்ச குத்தத்துக்குத் தண்ணியில்லாக் காட்ல தூக்கியடிச்சிட்டான் அம்மாவுக்கு இதும் வேணும் இன்னியும் வேணும். நல்லவேளைக்கு ஆளுக்கொரு பக்கம் அனுப்பாமப் போனான்.''

''சின்னக் காரியத்துக்குப்போயி இம்புட்டுத்தூரம் மாத்திப்புட்டாகளே. அவுகளப் புடிச்ச கெட்டநேரம். வந்தவனுக்கு வாய்க்கரிசி போட்ருந்தா இம்புட்டுக்

காகியிருக்கது. வேருலருந்து உச்சிவரைக்கு எல்லாம் களவாணிப்பயக.''

''உண்மையில என்னதான் நடந்துச்சாம்.''

''பள்ளிக்கூடத்துப் புள்ளீகளுக்கு மத்தியசோறு போடுகறாகல்ல. அதுக்காக எண்ணெயும் பருப்பும் எடுத்துட்டு வரப்போயிருக்காரு. அத காருல போட்டுக் கொண்டுவந்து பெறகு முக்குரோட்லருந்து சைக்கிள் புடிக்கணும். அப்படியில்லன்னா ஒத்தமாட்டுவண்டியில போட்டு வுடணும். இந்த அலப்பற எதுக்குனு அங்கயேவச்சு ஒரு கடக்காரனுக்குக் கைகாட்டீட்டாரு. பருப்பு பையில பணமா ஏறிக்கிருச்சு.''

''அதுக்கு முந்தியெல்லாம் எப்படி எடுத்துட்டு வந்தாராம். அண்ணைக்குமட்டும் அறிவு மழுங்கிப் போச்சாக்கும்.

''பள்ளிக்கூடத்தப் பார்வையிட வாறனெல்லாம் அம்பதக்குடு நூறக்குடுன்னு அரிச்செடுக்கிறது. அத வித்தயா இத வித்தயான்னு அரட்டி மெரட்றது. அப்பத்தான கூடக்கொஞ்சம் கறக்கலாம். வாத்தியாரய்யா பாத்தாரு. எத்தனநாளைக்கு கையிலருந்து அழுதுதொலைக்கிறது. குடுக்கலன்னா தூரத்துக்கு மாத்திப் போட்டுவாகளோன்னு பயம். சரி கைத் துட்டச் செலவழிக்கிறதவிட தேவாச்சும் வித்து இவுக எழவுக்கு மொய்யெழுதலாம்னு முடிவுசெஞ்சிட்டாரு. எல்லாம் அம்மா தூண்டுதல்தான்.''

''அவருக்கு எந்தக்காலத்துல சொந்த புத்தி இருந்துச்சு.''

சுருளி பல அர்த்தத்தில் சிரித்தான்.

''அண்ணைக்குப் பாத்து கழுகுக்குமூக்கு வேர்த்தமாதிரி ஒரு எமகாலன் முந்தியே வந்து பள்ளிக்கூடத்துல உக்காந் துருக்கான். வாத்தியாரய்யா வகையா மாட்டிக்கிட்டாரு. பெறகென்ன அவனுக்கு வழக்கமாக் குடுக்கறதக் குடுத்து தன்னக்கெட்டிப் பாத்துருக்காரு. அவன் மசியல. இதுதான் சாக்குன்னு அநியாயமா கேட்ருக்கான். வாக்குவாதத்துல

ரெண்டுபேருக்கும் வார்த்த தடிச்சிருச்சு. காணாக்கொறைக்கு ஒங்க அம்மாவேற வாயி சும்மாருக்காம என்னமோ சொல்லீருச்சு. அவன் வெறச்சுக்கிட்டுப் போயி ஒரேயடியா வேட்டுவச்சிட்டான். இதுதாம்ப்பா நடந்தது.''

''தப்புச் செஞ்சதுமில்லாம வாய் வேறயா. அப்ப அனுபவிக்கவேண்டியதுதான்.''

''ரெண்டுபேரும் நாதியத்தவுகமாதிரி ஊரவுட்டுப் போகயில எனக்கு அழுகையா வந்துருச்சு. சாமாங்களக் கொண்டுபோக ஆராச்சும் ஒத்தாசைக்கு வந்துருப்பாகளா.''

''இவுக கொணத்துக்கு ஓடிஓடி வருவாக.''

''வடிவேலுதான் அத்தன சாமானவும் வண்டியில அள்ளீட்டுப்போயிச் சேத்தான். நான் கூடஇருந்து ஏத்திவுட்டென்...லச்சிமி ஏன் எதுக்குன்னு ஒருவார்த்த கேட்ருப்பாளா. வண்டிபோடச் சொன்னதே அவதான்.''

''அம்மாவுக்கு அப்பக்கூட அறிவு வந்துருக்காதே.''

ஊர் வந்துவிட்டது. தெருவில் கைகோர்த்து வட்டமிட்டு விளையாடும் சிறுசுகளின் கலகலப்பு கேட்டது. பொம்பளைகள் முற்றத்தில் தண்ணீர் தெளித்து ராத்திரிப் படுக்கைக்குத் தோதுப்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

சுருளி கோபாலின் தோளைப் பிடித்து நிறுத்தினான்.

''அப்ப நாளைக்குப் போறயாக்கும்.''

அவர்கள் அதுக்குமேல் பேசாமல் பிரிந்தார்கள். இருளாண்டித்தாத்தா கடைசியாகச் சொல்லிவிட்டுப் போனார்.''

''அடே மொசலெல்லாம் நம்மவீட்டுக்குப் போகட்டும்.''

அவர் வீட்டில்தான் கறியறுப்பு நடக்கும். கைநிறுவையில் கூறுபோட்டுக் கொடுப்பார். தராசு தோற்றுப்போகும்.

**ல**ட்சுமி சோறுகறியாக்கி முடித்ததும் மகனுக்கு சந்தனக் கும்பாவில் போட்டுக்கொடுத்தாள். அவன் மச்சுவீட்டுக்குள் பாட்டியின் மடிக்கு ஓடிவிட்டான்.

வடிவேலும் கோபாலும் அலுப்புத் தீரக் குளித்தார்கள். கோபால் சாப்பாட்டுக்கு உட்கார்ந்தபோது வடிவேலு திருணைக்கு ஒதுங்கினான். லட்சுமி அவனைப் பார்த்தாள்.

''நீங்களும் கூட உக்காருங்க.''

''இல்ல மொதல்ல மாப்பிள்ளைக்குச் சாப்பாடு குடு. நான் பெறகு சாப்பிட்டுக்கிறென்.''

''இனி ஒங்களுக்கொரு நேரமா.''

அவன் கோபாலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். லட்சுமி இலைவிரித்துப் பரிமாறினாள்.

முயல்கறி பக்குவமாக வெந்து ருசியேறியிருந்தது. வடிவேலு கறியை மென்றுகொண்டே சொன்னான்.

''இந்தப்பக்கம் எட்டிக்கூடப் பாக்காம இருந்துக்கீட்டீக. எங்கமேல கோவம்போலருக்கு.''

கோபால் அண்ணாந்து தண்ணீர் குடித்தான்.

''ஒங்கமேல எதுக்குக் கோவம். போனதுலருந்து எங்கயும் கெளம்பமுடியாமப் போச்சு. ஊரு கிட்டயா இருக்கு.''

''என்னமோ காரணம் சொல்றீக. எங்களாலதான் வரமுடியலன்னா நீங்களாச்சும் அப்பப்ப வந்து போகலாமில்லையா. எங்களுக்கு லச்சிமி சொல்லாற நாளில்ல. போயி புள்ளீகளப் பாத்துட்டு வாங்கன்னு அரிச்சுக்கிட்ருக்கா. என்னமோ தங்கச்சி எழுதுற காயிதத்தப் பாத்துத்தான் மனசுக்குக் கொஞ்சம் நிம்மதியாருக்கும். லச்சிமி ஒண்ணுக்கு ரெண்டுநேரம் அம்மாவுக்கு வாசிச்சுக் காட்டணும். அப்பத்தான் ஆச அடங்கும். லச்சிமியும் சும்மாருக்கமாட்டா. பள்ளிக்கூடத்துப் பயககிட்டச் சொல்லிவுட்டு காயிதம் வாங்கி சொணங்காம பதிலுக்கு எழுதீருவா.''

''ஊருக்கு வரணும்னு தாயும் சொல்லீட்டுத்தான் இருக்கா. ஒருநாளைக்கு குடும்பத்தோட வாறொம்.''

''என்னத்த வரப்போறீக. தங்கச்சியப் பாக்கணும்னு அம்மாவுக்கும் லச்சிமிக்கும் ஆச ரெம்ப. புள்ளீக கருப்பா செவப்பான்னுகூடத் தெரியாது... பெத்தவுககிட்டயும் சரியா பேச்சுவார்த்த கெடையாதுபோலருக்கு. அண்ணைக்கு ஒங்க அப்பாவ சந்தையிலவச்சுப் பாத்தென். சடச்சுப் புளிச்சுப் போறாரு...''

கோபாலுக்குச் சோறு விக்கியது. மெதுவாகச் செருமிக்கொண்டான்.

''அவுக எடுத்துக்கிட்ட எடுப்புக்குச் சடவு வேறயா.''

''அங்க போகாம ஒரேமுட்டா நின்னுக்கிட்டா எப்படி. பாவமில்லையா... அவுகளுக்கு வேற ஆருருக்காக...அப்படிப் பாத்தா ஒலகத்துல ஆருதான் மாப்பிள யோக்கியன்.''

லட்சுமி ரெண்டு இலைக்கும் குழம்பு ஊற்றினாள்.

அங்க போயிட்டுத்தான் திரும்பணும். இல்லன்னா தாயி வீட்டுக்குள்ள எட்டுவைக்கவுடமாட்டா.''

''வயசான காலத்துல ஒரேயடியா ஒதுக்கியடிச் சிறப்புடாதுல்ல...ஒங்களுக்காச்சும் கண்ணுக்கு முன்னால தகப்பனப் பாக்கக் குடுத்துவச்சிருக்கு. எங்களுக்கு அப்படியில்ல. நான் சிறிசுலயே பறிகுடுத்துட்டென். லச்சிமிக்கு எடவெளியில போயிட்டாரு.''

''காடுகள யாரு பாத்துக்கிறது.''

''எனக்கு ஒரு நெனப்புத்தான். ஆனா அவுக பெரியசாமிக்கு பொறுப்புக்கு வுட்டுட்டாக. தாயிபேருக்கு எழுதிவச்ச நெலத்தவாச்சும் வுடுவாகன்னு பாத்தென். அதப்பத்தி எங்கிட்டப் பேச்செடுக்கல. நம்மளா வலியப் போயி எப்படிக் கேக்கிறது. சும்மாவா நெலத்த அடிக்கப்போறொம். ஆளுக்கத்தபடி பொறுப்புக் குடுக்கப்போறொம். ஆரு அடிச்சா என்ன. நெலத்துலருந்து வரும்படி இருந்தாப்போதும். அதனால எனக்கொண்ணும் வருத்தங்கெடையாது.''

''வீடு என்னாச்சு.''

''இப்ப வந்துருக்கிற வாத்தியாரு தங்கியிருக்காரு. இன்னியொரு வாத்தியாரு முத்தையாவரத்துலருந்து வாறாரு.''

''எப்படியும் வுட்டுட்டுப் போறாக.''

கோபால் சுவரில் தொங்கிய அகப்பைக்கூட்டைப் பார்த்தான். கூரையின் வரிச்சிக்கம்பிலிருந்து வரும் கம்பியில் அரிக்கன் லாம்பு லாந்திக்கொண்டிருந்தது. அவன் வெள்ளைச் சட்டையில கறைபடாமல் சாப்பிட்டான்.

ரெண்டுபேரும் எழுந்து கைகழுவினார்கள். லட்சுமி கோபாலின் இலையைச் சுருட்டி வெளியே கடவில் எறிந்துவிட்டு வடிவேலின் இலைக்குமுன்னால் சகடை மண்டியிட்டு உட்கார்ந்தாள். சோறு போட்டுக் கொள்ளுமுன் மச்சுவீட்டுக்குள்ளிருந்து மாமியாருக்குக் குரல்கொடுத்தாள்.

''எத்தே ஓரெட்டு வந்து சாப்பிட்டுட்டுப் போயிருங்க.''

அட்ணக்காலில் பேரனைப் படுக்கவைத்து மெல்லத் தட்டி உறக்கச் சொகமேற்றிக்கொண்டிருந்த மாமியாரிடமிருந்து பதில்வந்தது.

''இவன் மடியில ஒறங்குறான். நீ சாப்பிட்டு முடிச்சிட்டு வந்து தூக்கிப் பாயில போடு. மச்சுவீட்டுக்குள்ளதான மொசக்குட்டியக் கவுத்திப்போட்ருக்கான். அது வெளிய ஓடிப்புருமாம். காவலுருக்கான்.''

எல்லாரும் சாப்பிட்டு முடித்தாயிற்று. மாமியார் மறுபடியும் மச்சுவீட்டுக்குள் போய் உட்கார்ந்துகொண்டது. லட்சுமி சட்டிபானைகளைக் கழுவிக் கவுத்திவிட்டு வாசலடியில் உட்கார்ந்தாள். வடிவேலும் கோபாலும் திருணையில் வெற்றிலை மென்றுகொண்டிருந்தார்கள். வடிவேலு வருத்தப்பட்டுச் சொன்னான்.

''ரெண்டுபுள்ள பெறந்தாச்சு. தங்கச்சிக்கு ஒரு சேலத்துணிகூட எடுத்துக்குடுக்கல.''

''அதுக்கென்ன இப்ப.''

''நீங்க லேசாச் சொல்லீட்டீக. ஊருல ஒருமாதிரியாப் பேசுவாகல்ல.''

இதுவரை அமைதியாக இருந்த லட்சுமி குனிந்தபடி சொன்னாள்.

''மதினியப் பாக்க ஆசையாருக்குதுன்னு சொல்லுங்க.''

மச்சுவீட்டுக்குள்ளிருந்து மாமியாரின் பேச்சுக் கேட்டது.

''நானும் ஒருத்தி இருக்கங்கிறத மறந்துறாதங்க. நான் கண்ணமூடுறதுக்குள்ள பேரப்புள்ளீகளவும் மகளவும் பாத்துறணும். நீங்க எங்கள ஒரேயடியா மறந்துருவீக போலருக்கு.''

கோபால் சமாதானம் சொன்னான்.

''நாங்க ஒருநாளும் மறக்கமாட்டொம்.''

மாமியார் திட்டவட்டமாகச் சொன்னது.

''நீங்க என்னதான் பெரியவுகளா இருந்தாலும் எம்பேரனப் படிக்கவச்சு பேத்தியாள இந்த வீட்டுக்குக் கொண்டுவந்துருவொம். அதுலமட்டும் தப்பமுடியாது.''

லட்சுமி பாய்களைத் தேடிப் போனாள்.

மறுநாள் காலையிலேயே கோபால் புறப்பட்டு விட்டான். வெள்ளையம்மாமதினியிடம் பேசமுடியாத குறை அவனுக்குள் உறுத்திக்கொண்டிருந்தது. நேற்று வேட்டைக்குப் போகவில்லையென்றால் பார்த்துப் பேசியிருக்கலாம். அவன் கொடுங்கையில் தூக்கித் திரிந்த அவளது மகனைப் பார்த்திருக்கலாம். பயல் பெரியவனாகி யிருப்பான்.

கோபாலுக்குப்பின்னால் வடிவேலு நடந்துவந்தான். அவனுக்குப் பின்னால் லட்சுமி சாவதானமாக வந்தாள். நேற்றுப் போலவே ஆட்கள் வேடிக்கை பார்த்தார்கள்.

ஊரத் தாண்டியதும் வடிவேலு சொன்னான்.

''மாப்பிள அப்பா அம்மாட்டப் போனா வெருசனாக் கெளம்பீருங்க. ரெண்டுமூணுநா இருப்பு வச்சுக்கிறவேணாம். தங்கச்சி அங்க புள்ளீகளோட தனியாருக்கும்.''

''நாளக்கழிச்சு வீட்ல இருப்பென்.''

''அப்படி முடிவுபண்ணிக்கங்க.''

அந்த வழியாக வேலைக்குப் போனவர்கள் கோபாலிடம் விசாரித்துவிட்டு நகர்ந்தார்கள். கணபதி கிட்டவந்து சொன்னான்.

''நாங்க பாக்கிறதுக்குமுந்தி ஓடியிறலாம்னு நெனச்சயா. மாட்டிக்கிட்டயில்ல.''

வேட்டைக்குப் போயிட்டென். அங்க ஒன்னத் தேடிப் பாத்தென் தட்டுப்படல.''

''நம்மளால அந்த ஓட்டம் ஓட முடியுமாப்பா கொடலு அந்துபோறாப்புல.''

''எல்லாரவும் பாத்துட்டென் பொன்னுச்சாமியத்தவிர.''

''அவன் ஒரு அலஞ்சபய. லேசுக்குள்ள ஆளக்கண்டு புடிக்க முடியாது... ஏன் வந்ததும் கெளம்பியாச்சு. ரெண்டு நாளைக்கு இருந்து விருந்து சாப்பிட்டுட்டுப் போகலாமில்ல. போங்கபோங்கன்னு வடிவேலுமச்சான் வெரட்டுறானா.''

வடிவேலு சொன்னான்.

''நாங்களே சோத்துக்குத் திண்டாடுறொம். இதுலவேற விருந்தாளு வந்தாத் தாங்குமா.''

''கரும்புச்சாறு குடிச்ச பண்ணிமாதிரி இருந்துக்கிட்டு கஞ்சிக்கில்லன்னு சொல்ல வெக்கமால்ல. எங்களப் பாத்தயா எலும்புந்தோலுமா இழுபடுறொம்.''

''இப்பச் சந்தர்ப்பம் சரியில்ல. இல்லன்னா ஒமக்குக் கெடைக்கிறதே வேற.''

கணபதி கோபாலைப் பார்த்தான்.

''அப்ப போயிட்டுவாறயா. நான் டூட்டிக்குப் போகணும். நேரமாச்சு.''

அவன் கையில் பெரிய தூக்குவாளியுடன் கழுதைக் காலை இழுத்துஇழுத்து ஓடி வேலையாட்களுடன் கலந்தான்.

வடிவேலும் லட்சுமியும் மந்தைப்பனையடியில் தாமதித்தார்கள். கோபால் பழைய குத்துக்கல்லை வெறித்துக் கொண்டிருந்தான். லட்சுமி ஞாபகப்படுத்தினாள்.

''மறந்துறாம மதினியிட்டச் சொல்லீருங்க.''

எதைச் சொல்ல... அதுவும் மறந்துவிடாமல். தாயைப் பார்க்க ஆசையாக இருக்கிறதென்று அவள் சொன்னதையா இல்லை பேத்தியாளை வீட்டுக்குக் கொண்டுவந்துவிடுவோம் என்று மாமியார் சொன்னதையா.

அவன் தலையாட்டிக்கொண்டான்.

அவர்கள் பனையடியில் நிற்பதைப் பார்த்து லட்சுமியின் மகன் செல்லமாகக் கூப்பிட்டுக்கொண்டு ஓடிவந்தான்.

''எய்யா...எய்யா...''

அவனது இடுப்பில் சிறுதுண்டு. செம்பட்டைமுடி கண்ணை மறைத்திருந்தது. கையில் பெரிய ஓலைக் கொட்டான். உள்ளே மீசையை விசிறியபடி முயல்குட்டி படுத்திருந்தது.

அவன் வடிவேலின் காலைக் கட்டிக்கொண்டு சிணுங்கினான்.

''நானும் வாறென்.''

வடிவேலு பையை குத்துக்கல்லில் வைத்துவிட்டு அவனைத் தூக்கினான்.

''அய்யா மாமாவ வழியனுப்பிச்சிட்டு வந்துறென். நீ அம்மாட்டப் போ.''

லட்சுமி அவனை வாங்கிக்கொண்டாள்.

''அதுக்குள்ள வெளையாட்டு முடிஞ்சதா. வகுறு ஏன் கொறஞ்சிருக்கு. பாட்டிய சோறுபோட்டுத் தரச்சொல்லி சாப்பிடுறயா.''

அவன் அவளை அடித்து உதைத்தான்.

''நீ தந்தாத்தான் சாப்புடுவென்.''

''இரு இரு. இப்பப் போயிருவொம்.''

கோபால் ஊரைத் திரும்பிப்பார்த்தான். தெருவிலும் கடவுகளிலும் இன்னும் ஆட்கள் நின்றிருந்தார்கள்.

திடீரென்று பலமாதிரி சத்தம் கேட்கிறது.

''தோ...தோ...தோ...''

வாட்டசாட்டமான நாய்களைப் பிடித்தபடி எல்லாரும் அவனையே பார்த்துக்கொண்டு வருகிறார்கள். பலவிதமான நாய்கள். கருப்பு வெள்ளை செவலை செம்பரை...ஈர நாக்குகள் தரைவரை தொங்குகின்றன.

செடியும் புதருமாக சுற்றிலும் அடர்ந்த காடு. காற்று வெறியுடன் கலைத்துக்கொண்டு போகிறது.

''ஹோ...ஹோ...''

நெஞ்சுதுடிக்கும் அமைதி. ஒற்றைராகம் கிட்டத்தில் பயமுறுத்துகிறது.

''வளையோம்...வளையோம்...''

கொஞ்சநேரத்தில் சுற்றிவளைத்துக்கொள்வார்கள் மறுக்கிப்பாய்ந்து ரோடேறினால் பஸ்ஸுக்குள் தாவிக் குதித்துத் தப்பிவிடலாம். பிறகு ரயிலைப் பிடித்து ஓடி வீட்டுக்குப்போய் பத்திரமாக ஒளிந்துகொள்ளலாம்.

சுமையுடன் வடிவேலு பின்தொடர அவன் வேகமாக எட்டுவைத்தான்.

## பூமணியின்
## பிற படைப்புகள்

| | |
|---|---|
| வாய்க்கால் | (நாவல்) |
| வெக்கை | (நாவல்) |
| பிறகு | (நாவல்) (இலக்கியச் சிந்தனைப் பரிசு) |
| நைவேத்யம் | (நாவல்) |
| நல்லநாள் | (சிறுகதைகள்) *(அக்னி பரிசு பெற்றது)* |
| ரீதி | (சிறுகதைகள்) |
| நொறுங்கல் | (சிறுகதைகள்) |

ரங்கராஜனுக்குக் காலையில் ரெண்டுபீரியடு கிளாஸ் கிடையாது. ஸ்கூலில் கையெழுத்துப் போட்டுவிட்டு வந்து ரூம் திண்ணையில் உட்கார்ந்தார்.

கிளாஸ் இல்லையென்றால் டீச்சர்ஸ் ரூமில் அரட்டையடிக்க மாட்டார். நேரே வரவேண்டியது சட்டையைக் கழற்றிவிட்டு ஸ்கூலைப் பார்த்தபடி உட்காரவேண்டியது. எவ்வளவு நேரமானாலும் அமைதியாக இருக்கலாம். அதுக்கேற்றவாறு அக்ரஹாரமும் சந்தடியற்றிருக்கும்.

எதிர்வரிசையில் சுவர்மண் கரைந்த மேடுகள். அவை மேலும் கரைந்துவிடாமல் குடைப்பிடிக்கும் குப்பைமேனிச் செடிகள். சிறகுவலிக்கப் பறந்தலைந்து செடிக்குச்செடி உட்கார்ந்து ஏமாறும் வண்ணத்துப்பூச்சிகள் விறைப்பாகக் கிளம்பி நீர்வாய்க்கால் பூக்களில் இறங்கும்வரை பார்வை நீளும். தூரத்துச் சத்தங்களின் திவலைத்தூவலில் நேரம் மெல்லக் கரையும்.

ரெண்டாம்மணியடித்து ஓய்ந்திருந்தது. டிராயர் மூடிய மேஜையாக பிதுக்கமில்லாமல் ஸ்கூல். சகாரா பாலைவனத்தைக் கடப்பதுபோல் ஒருவர் கிரவுண்டில் சாவகாசமாக நடந்து போனார்.

எல்லா வாத்தியார்களும் வந்துவிட்டார்கள். வழக்கமாக கடைசிநேரத்தில் உதைந்துஉதைந்து எட்டுவைக்கும் டிராயிங் மாஸ்டரும் உள்ளே சொருவிக்கொண்டார்.

ஹெட்மாஸ்டர்மட்டும் வரவில்லை. அவரை எதிர்பார்த்து ஆபீஸ்வாசலில் பியூனும் வாட்டர்மேனும் காத்திருந்தார்கள். தாழ்வாரத்தில் வாத்தியார்கூட்டம் அடக்கிவாசித்துக் கொண்டிருந்தது. அட்டெண்டரும் ஹெட்கிளார்க்கும் அடிக்கடி எட்டிப்பார்த்துவிட்டு உள்ளே போனார்கள். ஹெட்மாஸ்டர் வந்ததும் பிரேயர் தொடங்கும்.

தமிழய்யா சுவரோரம் நடந்து வெற்றிலையைத் துப்பிவிட்டு வாய்கொப்புளித்தார். இந்த வெறும்வாய் விவகாரம் பிரேயர் முடியும்வரைதான். மனுஷன் வாய்திறந்து பாடுவதுமில்லை. பிறகேன் வீண்வேலை. பானைத்தண்ணீருக்குக் கேடா. பிரேயர் முடிந்ததும் வெற்றிலைபோடணும். அதில்லாமல் ஒருநிமிஷம் பாடம்நடத்தமுடியாது. சண்டிக்காளைமாதிரி டீச்சர்ஸ் ரூமில் லாந்துவார்.

பிரேயர்மணி அடித்தாயிற்று. ஸ்கூல் அணைஉடைந்து பையன்களும் பெண்களும் கிரவுண்டில் ராசாயனக்கலவை யாகப் பெருக்கிக்கிடந்தார்கள். வகுப்புவாரியான வரிசைகள். எல்லாத் தலைகளிலும் ஒரு ஒட்டுமொத்த எதிர்பார்ப்பு உட்கார்ந் திருந்தது. கொஞ்சநேரத்தில் ஹெட்மாஸ்டர் வந்துவிடுவார்.

ரங்கராஜன் இப்போதெல்லாம் பிரயேருக்குப் போவ தில்லை. எல்லாரும் சேர்ந்து ஒப்புக்கு ''உலகம் யாவையும்...'' பாடுவதில் பிரியமற்றுப்போயிற்று.

ஆரம்பத்தில் ரெம்ப ஈடுபாடு இருந்ததுண்டு. ஒவ்வொரு நாள் காலையும் மனச்சுமையைக் கொட்டி துணைக்குரல்களுடன் உச்சத்துக்குப் போகிற சஞ்சாரம். மொத்தமாகக் குழையும் ராகம் உள்ளேறி சலனம் விலகும். புதுவெயிலுக்குப் புடம்போட்ட மாதிரி இருக்கும். அந்தப் பூரிப்புநிலையில் எத்தனையோ

ஜீவநதிகள் பிரவகிக்கும். சிந்துச்சமவெளி ஸ்தெப்பிபுல்வெளி ஆல்ப்ஸ்மலைத்தொடர் என்று கற்பனைகள் விரியும் உயரும்.

அதெல்லாம் பழையகதை. வரவர பிரேயர் ஹெட்மாஸ்டரை எதிர்பார்க்கும் நேரக்குடைச்சலில் தளர்ந்துபோனது. சிலருக்குக் கண்மூடி கசியப் பொறுமையற்று வெயில்தீண்டலுக்கு வெறும் முகச்சுளிப்பாகிவிட்டது. பிரேயருக்குப் போக மனசில்லைதான்.

ஆபீசுக்குமுன்னால் கார் வந்து நின்றது. ஓட்டிவந்த ஹெட்மாஸ்டர் இறங்கினார். வாத்தியார்கள் வந்து வணக்கம் போட்டார்கள். வாட்டர்மேன் ஓடிப்போய் கார்கதவைச் சாத்தினான். பியூன் கார் டிக்கிலிருந்து புஸ்தகக்கட்டை எடுத்த பின்னும் துழாவிக்கொண்டிருந்தான்.

ரங்கராஜன் முணுமுணுத்தார்.

''அங்க வேறென்ன இருக்கறது. தேடறான் பாரு.''

ஹெட்மாஸ்டர் பரிவாரத்துடன் கிரவுண்டுக்கு நடந்தார். உயரமான ஷூவில் அவர் எம்பிஎம்பி நடப்பதே தனி. முடி வெட்டிய குதிரைமாதிரி இருக்கும். வயசாகியும் உடம்பில் சதைகுறையாத தோற்றம். தலைகுனிந்தால் தாடைக்குக்கீழே ரிங்டென்னிஸ் மடிப்பு. நெருங்கிக் கவனித்தால் லேசான வழுக்கையும் ஊடுநரையும் தெரியும். தேசப்படத்தில் கிளை நதிகளைப்போல் முகத்தில் மெல்லிய சுருக்கங்கள் ஓடியிருக்கும்.

கிரவுண்டில் வாத்தியார்கள் பெரியபையன்களானார்கள். கூட்டத்தின் 'ப' வடிவம் ஹெட்மாஸ்டரால் புள்ளிவைத்துக் கொண்டது.

பிரேயர் தொடக்கம். டிரில்மாஸ்டர் அட்டென்ஷன் சொன்னார். டிராயிங்மாஸ்டர் கஷ்டப்பட்டு காலைச் சேர்த்து விறைப்பாக்கினார். தயக்கத்தில் சுதியேறிய கடவுள்வாழ்த்து தொய்ந்தும் முறுக்கியும் கிரவுண்டில் பரவியது.

டிரில்மாஸ்டர் எல்லாருடைய விறைப்பையும் தளர்த்தினார். பாட்டு முடிந்தபிறகும் தமிழய்யாவின் வாய் அசைவது நன்றாகத் தெரிந்தது. அய்யாவுக்கு வெற்றிலை ஞாபகம் வந்துவிட்டது.

கூட்டம் கலைந்தபோது ஹிந்தி டீச்சர் ருக்மணி ஆறாம் வகுப்பு ராஜேஸ்வரி டீச்சருடன் அரட்டையடித்துக்கொண்டு போனாள். வரிசையில் கோர்த்திருந்த பெண்கள் சற்று பிதுங்கி அவர்களைத் திரும்பிப்பார்த்தார்கள்.

ஹெட்மாஸ்டர் சைன்ஸ் அஸிஸ்டெண்ட் தங்கச்சாமியுடனும் மேத்ஸ் மனோகரனுடனும் பேசிக்கொண்டு நடந்தார். கிராப்ட் வாத்தியார் மற்றவர்களிடமிருந்து விலகி மூக்கை விசிறிச் சிந்தினார். ஏழாம்வகுப்பு கிருஷ்ணசாமி சட்டைக்குள் கையை நுழைத்து முதுகைச் சொறிந்துகொண்டார். சுப்பையாதாஸும் குழந்தைச்சாமியும் ரெம்ப அன்யோன்யமாக காதைக்கடித்துக் கொண்டு போனார்கள்.

டிரில்மாஸ்டர் கிரவுண்டிலிருந்து ஸ்கூலுக்குப் போக வில்லை. டிராயிங்மாஸ்டரிடம் கிண்டல்பேசிவிட்டு ரூமுக்குத் திரும்பினார். ரங்கராஜன் சம்மணத்தை அவிழ்த்து கால்களைத் தொங்கப்போட்டார்.

''பாண்டியனுக்கு டிரில் கெடையாதா.''

அவர் ரங்கராஜனுக்கருகில் உட்கார்ந்தார்.

''எனக்கா பையங்களுக்கா சார்.''

''ஒங்களுக்கு டிரில்நடத்த வேறஆள் இருக்கறா. நான் பையங்களச் சொன்னென்.''

''செகண்ட்பீரியடுதான் சார்.''

''ஒங்களுக்கென்ன பாண்டியன் ஆறாம்வகுப்புக்கு அபாரமா டிரில்நடத்தறேளாமே.''

''கேலியா பண்றீக காஞ்சுகெடக்கிற மனுசனப்போயி.''

பாண்டியனிடமிருந்து நல்ல வாசனை வந்தது. நெற்றிகூட வேர்க்கவில்லை.

''பார்த்தாலே தெரியறது காஞ்சுகெடக்கறத.''

''வேற எப்படித் தெரியிது.''

''கொடுத்துவச்சவா.''

''கதைய மாத்திச்சொல்றீக.''

''கதையே இல்லாறச்ச எத மாத்தறது..''

''நீங்கதான் சார் லக்கி. இந்தி படிக்கிறவுகளாச்சே.''

''வாய மூடுங்கோ. நம்ம லட்சணத்துக்கு அதுவேறயா.''

''ஓங்க லச்சணத்துக்கென்ன மாப்பிளமாதிரி.''

ரங்கராஜன் துண்டால் முகந்துடைத்து வயிற்றை மூடி மறைத்தார்.

''ரிடையராறதுக்கு முன்னால மாப்பிளையாயிடுவென் பாண்டியன்.''

''அப்படி நெனைக்காதங்க சார்.''

''நெனைக்காம இருந்தாமட்டும் சகல லட்சணமும் வந்துடப்போறதா.''

ரங்கராஜன் உதடுகளைச் சிரமப்படுத்தி பல்தெரியாமல் பொருத்தினார். பாண்டியன் சற்று மௌனத்திற்குப்பின் பேச்சின் போக்கை மாற்றினார்.

''ஏன் சார் பிரேயருக்கு வரமாட்டங்கீக. நான் அட்டென்ஷன் சொல்லி கேக்கவான்னுதான.''

''ஓங்கவார்த்தைக்கு அத்தனபேரும் மரியாதகொடுக்கறத நெனப்போ.''

''நீங்க இங்கருந்து பாத்துட்டுத்தான இருக்கீக.''

''நன்னா பார்க்கறென். பிரேயரா நடக்கறது.''

''வேற என்ன நடக்குது.''

''பாண்டியனுக்குத் தெரியாம கிரவுண்டுல ஒரு ஈ எறும்பு நடக்கமுடியுமா.''

''தெரிஞ்சு என்னசெய்ய சார்.''

''இவாளுக்கு பிரேயர் ஒரு கேடா.''

இமைத்துடிப்பு அடங்கியபின் ரங்கராஜன் பாண்டியனைத் துருவிப்பார்த்தார். பாண்டியன் குனிந்துகொண்டார். ரங்கராஜன் பேசவில்லை. திண்ணையில் குதிகாலால் உதைக்கத்தொடங்கினார். பாண்டியன் திரும்பிக்கொண்டு சொன்னார்.

''அதுக்காக பிரேயருக்கு வராமருக்கிறது நல்லால்ல சார்.''

''மத்தவா செய்யறதுமட்டும் நன்னாருக்கறதோ.''

''இல்ல ஒத்துக்கிறென்.''

''அப்புறம் இங்கமட்டும் பெரிசா பேசவந்துட்டேள்.''

''ஒங்களுக்குத் தெரியாறதில்ல நல்லதும் கெட்டதும்.''

ரங்கராஜன்முகத்தில் லேசான சிரிப்பு.

''என்னசெய்யச் சொல்றேள்.''

''நாளையிலருந்து பிரேயருக்கு வரணும்.''

''அவ்வளவுதான. பாண்டியன் சொன்னா அப்பீல் உண்டா.''

''நம்ம ரங்கராஜன் சாருக்காகுமா.''

பாண்டியன் சுதாரிப்பாக எழுந்து ரூமுக்குள் போனார். சிகரெட் பற்றவைத்து சுவர்க்காலண்டர்மீது வளையம் வளையமாக ஊதினார். வளையத்திற்குள் வளையத்தை நுழைத்து வேடிக்கைபார்த்தார். தலைவாரி பவுடர்போட்டார். சீட்டியடித்தார். பாடிக்கொண்டே மெல்ல ஆடினார். கண்ணாடிக்கு முன்னால் போஸ்கொடுத்து மேலுதட்டை

வளைத்து மீசையை நாக்கால் தடவினார். படியாத மயிரை வசக்கினார்.

ஆள் நல்ல சிவப்பு. வலதுபக்க வகிடுக்கு வழிவிடும் நெற்றி யமைப்பு. அடர்ந்த முடிக்கும் திரண்ட கண்ணுக்கும் பொருந்திய முகலட்சணம். பேஷனாகச் சட்டைபோடுவார். செலவழிக்கக் கூசமாட்டார். இந்தவயசில் கல்யாணம்பண்ணியாகணும்.

மனுஷன் விளையாட்டில் கில்லாடி. வாலிபால் விளை யாடினால் நின்று பார்க்கத் தூண்டும். ரெம்ப ஸ்டைலாகக் கட் அடிப்பார். நெட்டுக்குமேல் எவ்விக்குதித்து கொஞ்சநேரம் அந்தரத்தில் நின்று கவர்பண்ணாத இடங்களை கருடப்பார்வை பார்த்துவிட்டு ஷாட் அடிப்பார். யாராலும் எடுக்கமுடியாது. சுப்பையாதாஸ் பையன்களைக் குட்டுவதுபோல் பந்து தரையில் மோதும். அந்த லாவகம் யாருக்கு வரும். கோதாவில் இறங்கி அவருக்கு ஒருதடவை பந்தை வாகாக சப்ளைபண்ணும் போல் மனசு குறுகுறுக்கும்.

பந்தைச் சுண்டிவிட்டமாதிரி சர்வீஸ்போடுவார். ஒரு தடவை போட்ட ஸ்டைலை மறுதடவை பார்க்கமுடியாது. கை சொன்னபடி பந்து பறக்கும் உருளும் கரணமடிக்கும். சப்ளையைப்பற்றிச் சொல்லவேவேண்டாம். குருவி குஞ்சுக்கு பறக்கக் கற்றுக்கொடுப்பதுபோல் தாங்கித்தாங்கித் தருவார். குப்புறப் பாய்ந்து மல்லாக்க விரிந்து உட்கார்ந்து ஓடிக் குதித்து உள்ளங்கையால் புறங்கையால் மூணுவிரலால் இப்படி எங்கும் வியாபித்து விளையாடும்போது பார்வை அவரைச் சுற்றியே கிறங்கும்.

அவர் கபடியும் கோகோவும் சொல்லித்தரும் அழகைப் பார்க்கணும். சேர்ந்து விளையாடும்போது ரெம்பச் சின்னப் பையனாக மாறிவிடுவார். சும்மா சொல்லக்கூடாது. பாண்டியன் கிரவுண்டிலிருந்தால் தனிக்களைதான்.

அனாவசியமாக வெளியே சுற்றித்திரியமாட்டார். ரூமை

விட்டால் தெப்பக்குளம். குளித்துமுடித்தால் குழந்தைச்சாமியின் ஹோட்டல். அப்புறம் ஸ்கூல். சாயங்காலம் ரோட்டில் வாக்கிங்.

மாதம் ரெண்டுமுறை சினிமாவுக்குப் போவார். மகாலிங்க புரம் போய்த்திரும்பணும். மறுநாள் ராத்திரி ரூமில் பாட்டுக் கச்சேரி நடக்கும். அவரே பாட்டு தாளம் எல்லாம். அனுபவித்துப் பாடுவார்.

**''வாராய் நீ வாராய்**

**நாம் போகுமிடம் வெகு தூரமில்லை**

**நீ வாராய்...''**

கொஞ்சநேரம் எங்கோ அழைத்துச்செல்வது போலிருக்கும். தாளத்தில் ஒரு முத்தாய்ப்புவைத்து நிறுத்துவார்.

''என்ன பாண்டியன் எங்கள அழச்சிண்டு போயி நடுவழியில நிறுத்திட்டேளே.''

தமிழய்யா மயக்கம் தெளிந்து பார்ப்பார்.

''பாண்டியன் நம்மளக் கூப்பிடலயே சாமி.''

''ஒகோ அப்படியா விஷயம். நான் ஒரு மண்டு.''

பாண்டியனின் தொண்டையிலிருந்து இன்னொரு பாட்டு துள்ளிவரும். அன்றைக்கெல்லாம் சிவராத்திரிதான். கதையும் பாட்டுமாக முழுச்சினிமாவும் ரூமில் ஓடும்.

பாண்டியன் விசிலை மாட்டிக்கொண்டு ஸ்கூலுக்குக் கிளம்பினார்.

''பாண்டியன் அதுக்குள்ள கெளம்பியாச்சா.''

''ஸ்போர்ட்ஸ் ரூம்ல கொஞ்சம் வேலையிருக்கு சார்.''

''ரூமுக்குள்ளயா வெளியிலயா.''

''ஒங்களுக்கு எப்பவும் கேலிதான்.''

பாண்டியன்நடைக்கு லெப்ட்ரைட் சொல்லவேண்டிய தில்லை. ரூமுக்கு வந்த நாளிலிருந்து இன்றைக்குவரை

அப்படியேதான் இருக்கிறார். அதே கலகலப்பு. அதே விளை யாட்டுத்தனம்.

அக்ரஹாரத்தில் முதலாவதாக ரங்கராஜன்தான் ரூம் எடுத் தார். ரூமென்ன தனிவீடு. வெளியூருக்குக் குடிபெயர்ந்த பிராமணர் சொற்ப வாடகைக்கு விட்டார். பூட்டிய கதவில் கரை யான் குடியிருப்பதைவிட இது நல்லதாயிற்றே. மாதவருமானம் கிடைத்தமாதிரியும் இருக்கும்.

அக்ரஹார வீடும் திண்ணையுமாக ரெண்டுவருஷமாகிறது. ஆபீஸுக்குமுன்னால் குழைந்துநின்ற வேப்பங்கன்று முள் வேலியை உதறிக்கொண்டு திடப்பட்டிருக்கிறது. வேலிமேல் கால்போட்டு மேய்ந்த வெள்ளாடு அதை அண்ணாந்து பார்க் கிறது. ஸ்கூலின் மேற்குப்பகுதி ஒருமுறை கூரைமாற்றி யிருக்கிறது.

முன்பு அவர் ஏரவில் வேலைபார்த்தார். கரைச்சலில்லாத இடம். வாராவாரம் ஸ்ரீவைகுண்டம் வந்துவிடுவார். ரெண்டு நாள் வீட்டுச்சாப்பாடு. அம்மா அப்பா தங்கை என்று சதா பேச்சுத்துணை. குடும்பத்தைக் கவனித்துக்கொள்ள வசதியாக இருந்தது.

அதுக்கு வினையாக ஒருத்தர் வந்துசேர்ந்தார். அவரை ஏரல் ஸ்கூலில் போடவேண்டிய கட்டாயம். மேலதிகாரிக்குச் சொந்தக் காரராயிற்றே. ரங்கராஜன்தலையில் கைவைத்தார்கள். ஓலையைக் கொடுத்து பாறகைக்குளத்துக்குப் போடா என்று வழியனுப் பினார்கள்.

முணுமுணுப்பில் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வந்தார். பாறைக்குளத்தை மேப்பில்கூட பார்த்ததில்லை. பஸ்ஸில் வரும்போது கண்ணுக்குள்ளும் நெஞ்சுக்குள்ளும் பாறை பாறையாக ஓடி மறைந்தது. ரோட்டில் போர்டு தெரிகிறமாதிரி பஸ்ஸின் ஓரத்தில் உட்கார்ந்திருக்கலாம். அந்தப் பாக்யம் ரெண்டு தூக்குமூஞ்சிக்கா கிடைக்கணும்.

கண்டக்டரை பரிதாபமாகப் பார்க்கும்போதெல்லாம் மனுஷன்

விசிலைக் கவ்வியபடி தவநிலையில் இருந்தார். ஆனாலும் அடுத்தஊர் வரும்போது விசிலடிப்பது கூவுவது எல்லாம் அனிச்சைச்செயலைப்போல் நடந்தது. கடைசியாக அவர் பாறைக் குளத்தையும் ஏலம்போட்டபோதுதான் மனசுக்கு நிம்மதி.

ஊருக்குத் திரும்பும் ரோட்டுவளைவில் ஒரு எருமைப் பட்டாளமே வியூகம் அமைத்துக்கொண்டு வந்தது. ஊருக்குப் பேர் பாறைக்குளமா எருமைக்குளமா. பெட்டியைக் கேடயமாக நினைத்துக்கொண்டு சற்றுப்பின்வாங்கி ஒதுங்கினார். பட்டாளம் சரசரவென்று அணிவகுத்துப்போனது.

மறுபடியும் ரோட்டில் கால்வைத்து முன்னேறியபோது ஒரு எருமைப்போத்து செல்லச்சிணுங்கலில் உடம்பை முறுக்கி குதித்துக்குதித்து வந்தது. கழுமரம்போல் கொம்பு. அவசரமாக அதுக்கு விலகி வழிவிடப்போய் மொட்டைப்பரும்பாக நின்ற சாணியில் அடிபதிந்து செருப்புமுழுக்க முங்கிக்கொண்டது. அதை மீட்பதற்குள் பெரும்பாடாகிவிட்டது. கல்லோரம் பெட்டியை மறைவாக வைத்துக்கொண்டு அக்கம்பக்கம் ஆள்பார்த்தபடி சாணியைத் துடைத்தார்.

அந்தச் சமயத்துக்காகக் காத்திருந்ததுபோல் ஒரு நாய் ஓடி வந்து பெட்டியை வட்டமிட்டு முகந்து முனங்கித் தோது பார்த்தது. அது மூஞ்சியைத் தந்தியடித்து ''ஊருக்குப் புதுசா'' என்று வக்கணைகாட்டும் லட்சணத்தைப் பார்த்தால் காரியத்தை முடிக்காமல் போகாதுபோலிருந்தது. அட கடவுளே இதுக்கு வேறு வஸ்து கிடைக்கவில்லையா. அவசரப்பட்டு முறைத்தால் வம்பு. நயந்த சமாதானப் பார்வையில் மெல்ல பெட்டியைத் தூக்கி வேகமாக நடையை விட்டார். கொஞ்சதூரம் போய் வேர்வையைத் துடைத்துத் திரும்பிப்பார்த்தபோது ''எப்படியும் இந்தப் பக்கந்தான வரணும்'' என்ற தோரணையில் அது விறைத்துக்கொண்டு நின்றது.

இப்படி கண்டம்கண்டமாகத் தாண்டிவந்து ஸ்கூல்

ஆபீஸுக்குள் நுழையும்போது பியூன் வையாபுரி ஓடிவந்து பெட்டியை வாங்கிவைத்தான்.

''சாமி இப்படிச் சொமந்துகிட்டு வரலாமா. காக்கடுதாசி போட்ருந்தா காத்திருந்து கூட்டீட்டு வந்துருப்பனே.''

பால்ய சினேகிதன்போல் அன்யோன்யமாக நடந்து கொண்டான். ஆச்சரியமாக இருந்தது.

''பஸ் ஊருக்குள்ள வராதோ.''

''அவன் ஒங்கள ரோட்ல எறக்கிவுட்டதே பெரியகாரியம்.''

இதே ஹெட்மாஸ்டர் வில்லியம்ஸ் சிரித்தமுகத்துடன் பேசிக்கொண்டிருந்தார். அடிக்கடி மிஸ்டர் என்று அடைமொழி கொடுத்தார். ரெம்பநாளாகக் காலியாக இருந்த இடத்துக்கு ஆள்வந்த நிம்மதி அவருக்கு.

பையன்கள் வெளியே குதித்தோடினார்கள்.

''சோசியல் பீட்டி வந்தாச்சு.''

வையாபுரி புண்ணியத்தில் குடியிருப்பு ஏற்பாடு சுமுகமாக நடந்தது. குழந்தைச்சாமியின் ஹோட்டலில் அக்கவுண்ட் ஆரம்பித்ததுமுதல் தினமும் தண்ணீர் கொண்டுவந்து வைக்க வாட்டர்மேன் மாணிக்கத்துக்கு உத்தரவுபோட்டதுவரை எல்லாம் அவன்தான். குடியமர்த்திவிட்டுப் போகும்போது சொன்னான்.

''சாமிக்கு பேச்சுத்தொணைக்கு ஒருத்தர் இருந்தா தோதா ருக்கும். அதுக்கென்ன பாத்துருவொம்.''

அவர் பணம் கொடுத்தார். அவன் கைநீட்டவில்லை.

''வச்சுக்கங்க. தேவையிருந்தா அப்பப்ப கடன் வாங்கிக் கிறென்.''

அவருக்கு வெட்கமாகப்போயிற்று. பதில்சொல்லத் தயாராவதற்குள் அவன் போய்விட்டான்.

கொஞ்சநாளில் அவருக்குத் துணையாக தமிழய்யா பழனி வேலாயுதம் வெற்றிலைச்செல்லமும் கையுமாக வந்தார். பழுத்த மஷனுன். நிதானமென்றால் அப்படி நிதானம். வார்த்தையும் சிரிப்பும் வெற்றிலைச்சிவப்பு. மூத்தபெண்கள் இருவரையும் நல்லமுறையில் பிடித்துக்கொடுத்துவிட்டார். அடுத்து பையன். கல்யாணவயது. கடைசிப்பெண்ணும் வயதுக்குவந்து கரையேறக் காத்திருந்தாள். ரெண்டுபேரும் டீச்சர் ட்ரெயினிங் முடித்துவிட்டு வீட்டிலிருந்தார்கள்.

பையன் எப்போதாவது வருவான். விடியவிடிய குடும்பப் பிரச்சனைகளைப்பற்றிப் பேசுவார்கள். தென்காசியில் குடும்பம். சொந்தவீடாகையால் அங்கேயே வாசம். அவர் மாதம் ஒருமுறை போய்த் திரும்புவார். குடும்பத்தைக் கொண்டுவரலாமே என்று கேட்டால் அதுக்கொரு கதைசொல்லுவார்.

''சாமி மேச்சத்தரையில மேயிற மாட்டப் பாத்துருக்கீங்களா. நடுநெலத்துல ஆணியடிச்சு நீளக்கயத்துல கட்டிப்போட்டுட்டு வேலையப் பாக்கப்போயிருவாங்க. அது சுத்திச்சுத்தி மேயும். நம்மகதையும் அப்படித்தான். எனக்குத் தென்காசியில ஆணியடிச் சிருக்கு.''

துணியில் கஞ்சிதடவி இஸ்திரிபோடுவதுபோல் வெற்றிலை மடித்துக்கொண்டே சிவப்பாகச் சிரிப்பார். அவரது அனுபவ மென்ன பேச்சென்ன. தகப்பனாருக்குச் சமானம்.

அடுத்து பாண்டியன் வந்தார். அவர் புதுஆளாக இல்லை. பலநாள் பிரிந்திருந்த சொந்தக்காரர் திரும்பிவந்தமாதிரி இருந் தது. வந்த மறுநாளே ரூம் சுவர்களில் விதவிதமான படங்களும் காலண்டர்களும் முளைத்தன. சந்தோஷச் சிரிப்பும் பாட்டும் கேட்டது.

பாண்டியனின் அய்யா ஆண்டியாபுரத்திலிருந்து மெனக் கிட்டு வந்து பார்த்து செலவுக்குப் பணம் கொடுத்துவிட்டுப் போவார். பாண்டியனும் பணத்துக்காக குழந்தையைப்போல் சிணுங்குவார். தகப்பன்மகன் தோரணையில் பேசிக்கொள்ள மாட்டார்கள்.

பாண்டியனின் அய்யாவை முதல்முறையாகப் பார்த்தபோது ரங்கராஜனுக்குப் பயம். அரையடி உயரச் செருப்பு சரசரக்க வந்துநின்று அணில்வாலைப்போல அடர்த்தியாக ஏந்தியிருந்த மீசையைக் கோதியபடி அதட்டலாகக் கேட்டார்.

''பையன் இருக்கானா.''

ரங்கராஜனுக்கு உதறலெடுத்தது.

''யாரக் கேக்கறேள்.''

''நம்மபையன்தான் பாண்டியன்.''

''உக்காருங்கோ. இப்ப வந்துடுவார்.''

நல்லசமயத்துக்கு தமிழய்யா வந்து காப்பாற்றினார். ரெண்டுபேரும் பேச்சுப்போடுவதைப் பார்த்ததும் பயம் சுத்தமாகப் போய்விட்டது. இப்படிப்பட்ட உடம்புக்குள் இவ்வளவு நல்லகுணமா.

பாண்டியன் சொந்தவூருக்குப் போவதில்லை. நாற்பதுமைல் பெரியதூரமில்லை. அந்தப் பேச்செடுத்தாலே அவருக்கு முகம் வாடிவிடும். சிரித்துச் சமாளிப்பார்.

''நமக்கு யாதும் ஊரே யாவரும் கேளிர்.''

''வயசான காலத்துல அப்பாவ அலையவிடலாமோ. தமிழய்யாவோட பையனப் பார்த்தேளா.''

''பையன் வந்து அப்பாட்டப் பணம் வாங்கீட்டுப் போறான். இங்க அப்பா வந்து பையனுக்குக் குடுத்துட்டுப் போறாரு. ரெண்டும் ஒண்ணுதான் சார்.''

பாண்டியன் விளையாட்டுப்பிள்ளை. அதை யாரால்தான் மாற்றமுடியும்.

அதுக்குமேல் ரூமில் யாரையும் சேர்த்துக்கொள்ளவில்லை. சொல்லப்போனால் வாத்தியார்களில் அவர்கள் மூணுபேர்தான் ஒண்டிக்கட்டை. மற்றவர்கள் குடும்பசகிதம் குடியிருந்தார்கள்.

மேத்ஸ் மனோகரனுக்கு வடக்குத்தெருவில் வீடு. அஞ்சு நிமிஷத்தில் ஸ்கூலுக்கு வந்துவிடலாம். மூணுவயசில் ஒரே பையன். இன்னும் புதுமாப்பிள்ளைமாதிரி இருப்பார்.

சைன்ஸ் தங்கச்சாமி பஸ்ஸ்டாண்டுக்குப் பின்புறம் குடியிருந்தார். ரெண்டு பெண்குழந்தைகளை சின்ன ஸ்கூலுக்கு அனுப்பவும் அவசரத்துக்கு பஸ் பிடிக்கவும் தோதாக இருந்தது. எல்லாம் வீட்டுக்கார அம்மா யோசனை.

ஹெட்மாஸ்டர் அருகிலுள்ள மகாலிங்கப்புரத்திலிருந்து சொந்தக்காரில் வந்து கொண்டிருந்தார். அவருக்கென்ன குறைச்சல். மனைவி டாக்டர். ஒரே மகனும் இஞ்ஜினீயர். மூணு வருமானம். வசதிக்குச் சொல்லணுமா.

மதியச்சாப்பாடு பஸ்ஸில் வரும். வையாபுரி காத்திருந்து வாங்கிவருவான். கேரியரின் கனத்தை அவன் முகக்களையில் கண்டுபிடித்துவிடலாம். மிச்சம் இருக்கிற சாப்பாடு அவனுக்குத்தானே. மதியம் பெரும்பாலும் அவன் வீட்டுக்குப் போவதில்லை.

செகண்டரி கிரேடு நாலுபேரும் உள்ளூர்க்காரர்கள். ஆறாம் வகுப்பு அய்யாத்துரை ரிடையராகவேண்டியவர். தலைமுதல் கால்வரை வெள்ளையாக வருவார். செக்கில் எண்ணெய் அரைக்கும்போது அவரது சுறுசுறுப்பைப் பார்க்கணும். எள்ளுப்பிண்ணாக்கைத் தள்ளிக்கொடுப்பதும் எண்ணெய்ப்பதம் பார்ப்பதுமாக ஒரே இடத்தில் நிற்கமாட்டார். ஸ்கூலில் அவ்வளவு நிதானமாக இருக்கும் அய்யாத்துரையா என்று ஆச்சரியமாக இருக்கும்.

நல்லெண்ணெய் மொத்தவியாபாரம். கொஞ்சங்கொஞ்சம் சில்லறைவிற்பனையும் உண்டு. சுமாரான வருமானம். வாத்தியார்களுக்கு அவர் சப்ளைதான். மாதம் பிறந்துவிட்டால் ஹெட்மாஸ்டரின் காருக்குள் ஒரு டின் ஏறிவிடும். தமிழய்யாவும் ரங்கராஜனும் வாங்கி ஊருக்குக் கொண்டுபோவர்கள். சுத்தமான சரக்காயிற்றே. விலையும் அதிகமில்லை.

ஏழாம்வகுப்பு கிருஷ்ணசாமிக்கு பெரிய விவசாயம். பார்த்தால் வாத்தியார்தோரணை இருக்காது. எந்நேரமும் ஓட்டமும்நடையுமாகத் திரிவார். அதனால் பாண்டியன் அவருக்கு மராத்தான் கிருஷ்ணசாமி என்று பேர்வைத்து விட்டார். ஸ்கூல்நேரந்தவிர மற்றநேரங்களில் மம்பட்டியும் கையுமாக தோட்டத்தில் பார்க்கலாம். மனுஷன் ராத்திரி சரியாகத் தூங்குவாரோ என்னமோ.

சிலநாள் காலையில் தோட்டத்திலிருந்து நேரே ஸ்கூலுக்கு வந்துவிடுவார். வரும்போதே வேப்பங்குச்சால் பல்விளக்கி முடித்து ஸ்கூலில் முகங்கழுவுவார். வேட்டிசட்டையில் படிந்த மண்ணைச் சுரண்டி துண்டைஉதறி உள்பக்கம் வைத்து மடித்து எத்தாப்புப் போட்டுக்கொள்வார். மகன் சாப்பாடு கொண்டு வந்து டீச்சர்ஸ் ரூமில் வைத்துவிட்டு அவரிடம் சேதி சொல்லுவான்.

''நைனா கூடு ஆட உஞ்சு.''

அவர் தலையாட்டிக்கொள்வார்.

''ஒச்சேசனா. அம்மா எந்த்த அடேசனா.''

''லேது.''

அவன் பைக்கட்டுச்சுமையுடன் வகுப்புக்குப் போய்விடுவான். தகப்பனுக்கேற்ற பிள்ளை. அவர் மம்பட்டியைத் தூக்கினால் அவன் கூடையைத் தூக்குவான். விவசாயவேலை அத்துபடி. எங்கே சுற்றினாலும் எட்டாம்வகுப்புக்கு வந்துவிடுவான். பாண்டியனின் வார்த்தையில் சொல்லப்போனால் அவன் ஜூனியர் மராத்தான் ரங்கசாமி.

சுப்பையாதாஸுக்குப் பால்வியாபாரம். ஸ்கூல்விட்டால் குளக்கரையில் மாடுகளுக்குப்பின்னால் பார்க்கலாம். அதுகளைக் குளிப்பாட்டித் திரும்ப நேரங்காணாது.

அவர் புஸ்தகத்தை விரித்துக்கொண்டு பாடம்நடத்தினால் ரெண்டுபக்கமும் நனைந்துவிடும். அவ்வளவுக்கு எச்சு மழை

யாகத் தூறும். கொஞ்சநேரத்தில் புஸ்தகத்தையே குளிப்பாட்டி விடுவார். இதுக்காகவே பையன்கள் அவரிடம் புஸ்தகம் தராமல் தட்டிக்கழிப்பார்கள்.

அவரை ஸ்கூலில் வெறுங்கையுடன் பார்க்கமுடியாது. எப்போதும் வழுவழுப்பான பிரம்பு இருக்கும். அடிகொடுத் தாலும் குட்டுவைத்தாலும் அசோகர் கல்வெட்டுமாதிரி முத்திரை பதியும். ஸ்கூல் வட்டாரத்தில் அவருக்கு தூறல் சுப்பையாதாஸ் என்ற பேரும் உண்டு. எல்லாம் பாண்டியன் உபயந்தான்.

குழந்தைச்சாமி ஹோட்டல் தஞ்சமென்று கிடப்பார். வாத்தியார்கள் அவரைத்தாண்டி காபி குடிக்கக்கூட வேறுகடைக் குப் போகமுடியாது. கல்லாப்பெட்டியில் காசுபுழங்குவதுபோல் அவர் பையன்களுக்குத் தொடையில் நிமிட்டாம்பழம் கொடுப் பார். அவரைக்கண்டால் பையன்கள் ''ஏய் நிமிட்டாம்பழம் வாறாருடோய்'' என்று கலைந்து ஓடுவார்கள்.

டிராயிங்மாஸ்டர் தீத்தாரப்பன் வெளியூர்க்காரர் என்றாலும் ரெம்பநாளாகவே மளிகைக்கடை நடத்திவந்தார். காலையும் மாலையும் கடையில் உட்கார்ந்துமுடியாது. பாண்டியன் சொல்லுவார்.

''சாயங்காலம் நமக்கு வாக்கிங். தீத்தம்சாருக்கு சிட்டிங்.''

அதனால்தான் அவர் வகுப்பில் உட்காருவதேயில்லை. அங்குமிங்குமாக லாந்துவார். அயலூர்ப் பையன்கள் துட்டு பருத்தி தானியம் என்று கொண்டுவந்து அவரது கடையில் பண்டம் வாங்கித்தின்பார்கள். பருத்திக்கு ரெண்டுஎடை சீனிக்கிழக்கும் மொச்சைப்பயறும். சேவு எடைக்குஎடை. கணிசமாக இருக்கும். ஆசைதீர அசைப்போடலாம்.

அவர் வகுப்பில் ஒருதினுசாகப் பேர்வாசிப்பார். குரலுடன் ஒரு கறார்பார்வையையும் அனுப்புவார். ''இண்ணைக்கு என்ன கொண்டுவந்த'' என்று கேட்பதுபோலிருக்கும். பையன்களும் ''பருத்தி சார்'' ''சோளம் சார்'' என்கிறமாதிரி ஆஜர் சொல்லு வார்கள்.

நாலுபேரும் டீச்சர்ஸ் ரூமில் சந்தித்தால் சொந்தக்கதை பேசித்தீராது. விலைவாசியை அலசுவார்கள். அரசியலையும் தொட்டுக்கொள்வார்கள். குளம் வற்றினால் கிணற்றில் நீர்மட்டம் இறங்குவதை கிருஷ்ணசாமி கவலையாகச் சொல்லு வார். மாட்டுக்குப் பால்வற்றும் கவலை சுப்பையாதாஸுக்கு. இப்படியே வந்து கடைசில் அவரவர் கணக்கைச் சொல்லி கூட்டிக்கழிப்பார்கள். பெருக்கல் வகுத்தல் எல்லாம் உண்டு. கிருஷ்ணசாமி குழந்தைச்சாமியை நயந்து பார்ப்பார்.

''பெரியகணக்கு ஒருபக்கம் இருக்கட்டும். வாழஎலக் கணக்கவாச்சும் தீத்துறப்புடாதா.''

''ஏன்சார் அதெல்லாம் ஒரு கணக்குன்னு கேக்கீகளே. நம்ம கடையில காபி வடன்னு எதுக்கு இருக்கு.''

''அதுசரி. தின்னே தீத்துட்டா வெவசாயத்துல சட்டியெடுக்க வேண்டியதுதான்.''

''நீங்களே இப்படிச் சொன்னா நாங்க கடைய இழுத்து மூடுறதத்தவர வேற வழியில்ல.''

சுப்பையாதாஸ் இடையில் பால்கணக்கை அவிழ்த்து விடுவார்.

''கொழந்த சார் அப்படியே நம்மளவும் கொஞ்சம் கவனிச்சிருங்க.''

''சாய்ந்தரம் கடைக்கு வாங்க. ஸ்பெசலா கவனிச் சுருவொம்.''

தீத்தாரப்பனுக்கு ஏகப்பட்ட சிட்டை உண்டு. அது லேசுக்குள் முடியாது. லீவுநாளில் மண்டையை உடைத்தா லொழிய வசத்துக்கு வராது. மணியடித்ததும் கணக்குகளை மிச்சம் வைத்து விட்டு வகுப்புக்கு ஓடுவார்கள்.

இவர்கள் கதையெல்லாம் வையாபுரியிடம் கேட்கணும். ஒவ்வொருவருக்கும் ஒரு சரித்திரமே வைத்திருப்பான். சமாச்

சாரங்களை விவரிக்கும்போது மேப்பை வைத்துக்கொண்டு இடங்களை துல்லியமாகக் காட்டிப் பேசுவதுபோலிருக்கும்.

அவனுடைய சரித்திரதைத் தெரியணுமென்றால் மாணிக்கத் தைப் பிடிக்கணும். பானையைக் கழுவிமுடிக்குமுன் ஒரு கதையைச் சொல்லிவிடுவான்.

இந்த விவகாரங்களில் அடைபடாதவர் கிராப்ட் வாத்தியார் வீரராகவன் ஒருத்தர்தான். ஒல்லிஉடம்பும் பொடிக்கறை படிந்த கைக்குட்டையுமாக ஆள் ஸ்கூலுக்கு வருவதும் தெரியாது வீட்டுக்குப் போவதும் தெரியாது. அவரைக் கிண்டினால் சர்வசாதாரணமாகச் சொல்லுவார்.

''சார்வாள் ஸ்கூல்ல பாடம் சொல்லித்தரத்தான் சம்பளம் குடுக்கான் நமக்கு.''

அவர் நின்ற இடத்தில் பொடியின் நெடிமட்டுமே மிஞ்சியிருக்கும்.

மூணாம்பீரியடுக்கு நேரமாகிவிட்டது. ரங்கராஜன் திண்ணை யிலிருந்து எழுந்து உள்ளே போனார். பெட்டியைத் திறந்து வேறு வேஷ்டிசட்டை எடுத்தார். அப்பாவிடமிருந்து வந்த கடிதமும் மணியார்டர் ரசீதும் உதிர்ந்தன.

அப்பாவுக்கு எழுதிய பதில் நமஸ்காரம் தொடங்கியதுடன் சரி. பிறகு நகரவில்லை. என்ன எழுதுவது. குடும்ப விஷய மென்றால் ஒரு வியாசமே எழுதணும். அப்பா கேட்கிற பணத்துக்கு ரெண்டுபேர் சம்பாதித்தாலும் முடியாது.

அவரைச் சொல்லியும் குற்றமில்லை. ஒவ்வொரு மாதமும் தபால்காரனை எதிர்பார்த்து நடக்கும் ஜீவனத்தில் யாரைக் கேட்பார். மோர்ப்புளிப்பை முகத்தில் ஏந்திக்கொண்டு கொல்லைப்புறத்துக்கும் ரேழிக்குமாகத் திரியும் அம்மாவையும் அவளது முந்தானையைக் கட்டியாகப் பிடித்தபடி இழுபடும் தங்கையையுமா கேட்பார்.

இந்தக் கோலத்தைப் பார்க்க வாரம் ஒருமுறை ஊருக்குப் போக வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு முறையும் அப்பாவின் வார்த்தைகள் மெலிந்து வரும்.

''ரங்கு அடிக்கடி அலஞ்சா செலவுதானே.''

அம்மா வெறித்துப்பார்ப்பாள்.

''வராமலே இருந்துட்டா செலவில்லையே.''

அப்பாவின் தொண்டைக்குள் குரல் உறைந்துபோகும்.

வருஷாந்திர லீவு வந்தால் மனசுக்குக் கஷ்டமக இருக்கும். வீட்டில் முழுமாசத்துக்குமேல் தள்ளுவது பெரிய சிரமம். வயல்வெளிப்பக்கம் போனால் அப்பா கொஞ்சங்கொஞ்சமாக விற்றுக் கைகழுவிய சொந்தவயல்கள் நினைவுக்குவரும். ஆற்றங்கரையில் தங்கையுடன் ஓடி விளையாடிய நாட்கள் மனசுக்குள் குமிழியிடும்.

அப்பா அடிக்கடி நினைவுபடுத்துவார்.

''ரங்கு இந்த மாசத்துக்கும் சம்பளம் வருமோல்லியோ.''

லீவு முடிந்து ஸ்கூலுக்கு வந்து சம்பளம் வாங்கி அனுப்பும் வரை அப்பாவின் வார்த்தைகள் மறக்காது. சம்பளப்பட்டியலில் ஸ்டாம்பின்மேல் கையெழுத்துப்போடும்போது அசோகச்சக் கரத்துக்குள் முழுக்குடும்பமும் நிற்கும் நினைவு அடுத்த மாதம்வரை அமுங்கும்.

எப்படியும் இன்றைக்குக் கடிதம் எழுதிமுடித்தாகணும். எக்காரணத்தைக்கொண்டும் தள்ளிப்போடாமல் தங்கைக்கு வரன் பார்க்கச்சொல்லணும். தோலூரியும் வாழைமரமாக அந்தப் பெண்ணுக்கு வயசாகிக்கொண்டு போகிறது. கடன்வாங்கியாவது அவளைக் கடத்தியாகணும். அப்புறம் தனக்கு ஒரு துணை தேடணும்.

அவர் சட்டைபோட்டுக்கொண்டு கண்ணாடியில் முகம்பார்த்தார். நெற்றிநாமம் இடையில் கரையுடைந்திருந்தது. மறுபடியும் தீட்டிக்கொண்டார்.

கண்ணாடிக்குள் சொந்தஊர்ச் சிறுவர்கள் கிண்டல்தாண்டவ மாடினார்கள்.

''காக்காக்குஞ்சி காக்காக்குஞ்சி.''

அவருக்குத் தனதுமுகம் இன்னும் கோரமாகத் தெரிந்தது:

''இந்த மூஞ்சிக்குக் கல்யாணம் ஒரு கேடா.''

சீப்பை எறிந்துவிட்டு சரித்திரப்புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு ஸ்கூலுக்கு கிளம்பினார்.

ருக்மணி வரும்போது ஸ்கூலில் பெண் டீச்சர் யாரு மில்லை. ஹிந்தி சொல்லித்தர அவளைப் போட்டிருந்தார்கள்.

தமிழய்யா பாண்டியனை கேள்விப்பார்வையால் துளைத் தார். பாண்டியன் சொன்னார்.

''அதான நான் வந்து மூணுமாசங்கூட ஆகல. பின்னாலயே இந்தி வந்துருச்சு.''

''இது ஒங்களுக்கே நல்லாருக்கா.''

''என்னசார் அநியாயமாருக்கு. நான்தான் ஆர்டர்போட்டு அனுப்புனமாதிரி சொல்றீக.''

''எப்படி வந்து எறங்கியிருக்குது பாத்தீங்களா.''

''சொல்லாமக் கொள்ளாம சொகுசா மொழஞ்சிருச்சு.''

''திட்டம்போட்டு நடந்துருக்குது.''

''ஒருவேள ரங்கராஜன்சார் வேலையாருக்குமோ.''

தமிழய்யாவின் கண்கள் ரங்கராஜனுக்கு உருண்டன. ரங்க ராஜன் ஒங்கிச் சொன்னார்.

''ஆமா நான்தான் செஞ்சென் போறுமா.''

''நாங்க என்னசார் பாவம் செஞ்சொம் இப்படித் துரோகம் பண்ணீட்டீக.''

''பாண்டியன் செய்யாத பாவமா.''

அதுக்குள் வையாபுரி வந்துவிட்டான்.

''சாமி ஆச்சியம்மாவுக்கு அக்ராரத்துல வீடு வேணுமாம். பக்கத்துலயே பாத்துக் குடுத்துருங்க.''

ரங்கராஜனுக்குப் பொத்துக்கொண்டுவந்தது.

''கிண்டலா பண்ணற. எல்லா ஏற்பாடும் பாண்டியன் செய்வார்.''

பாண்டியன் சொன்னார்.

''பரம்பரையா குடியிருக்கிறவுக நீங்க. நாங்க பஞ்சத்துக்கு வந்தவுக. ஒங்களுக்கில்லாற பவரா.''

வையாபுரி பாண்டியனைப் பார்த்துச் சிரித்தான்.

''நான் வந்து கேக்கிறதால சாமிக்குக் கோவம்போலருக்கு. என்னமோ ஒங்களப்பத்தி பெரிசாச் சொல்லீட்டு வந்துருக் கென்.''

''நோக்குத் தெரியாத வீடும் அக்ராரத்துல இருக்கறதோ.''

''பேசி முடிக்கப்போறதென்னமோ நான்தான். இருந்தாலும் சாமிதான் பாத்துக்குடுத்தாகன்னு ஒரு பேரு வரட்டுமே. டீச்சரம்மா சந்தோசப்படுமில்லையா.''

''அப்படியொண்ணும் பேரு வேணாமே.''

தமிழய்யா சமாதானம் சொன்னார்.

''நீங்க நடங்க வையாபுரி. நம்ம சாமி பின்னாலயே வருவாரு.''

''அய்யா சொன்னாச் சரி.''

வையாபுரி சவக்கவக்கென்று நடந்துபோனான். தைத்து வைத்த குல்லாமாதிரி வெள்ளைத்தலைப்பா முன்னும்பின்னும் அசைந்தது. பாண்டியன் ரங்கராஜனை வற்புறுத்தி அவனுடன் அனுப்பிவைத்தார்.

ரெண்டுபேரும் ஒரு ஆச்சியிடம் பேசி எதிர்வரிசையில் ருக்மணிக்கு வீடு ஏற்பாடுசெய்தார்கள். அந்தவாரமே அவள் குடியேறிவிட்டாள். அவளது அம்மாமட்டும் வந்து ஒருநாள் உடனிருந்து குடியமர்த்திவிட்டுப்போனாள். ரூம் திண்ணையில் இருந்தவாறு எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்தார் ரங்கராஜன்.

சாமான்களைச் சுமந்துபோகிற போக்கில் வையாபுரி ஓரப்பார்வையில் சொல்லிக்கொண்டு போனான்.

''நம்ம சாமிக்காகுமா. மனசிருந்தா மார்க்கமுண்டு.''

அவன் திரும்பி வரும்போது கூப்பிட்டுக் கேட்டார்.

''வீடு பிடிச்சிருக்கறதா.''

''சாமிபாத்துக் குடுத்த வீடாச்சே. புடிக்காமருக்குமா.'

''ஊரு எங்க.''

''திருனவேலிப்பக்கம் பேட்ட.''

''அப்படியா.''

''ரெண்டுபேரும் ஒருபஸ்லதான் போகணும்.''

''அவங்க அப்பா வரலயா.''

''அப்பா சின்னவயசிலயே போயிட்டாராம்.''

ஏன் கேட்டோம் என்றிருந்தது. மனசுக்குள் உச்கொட்டிக் கொண்டார்.

சாயங்காலம் ஹெட்மாஸ்டரின் ரூமுக்குள் நுழையும்போது உள்ளிருந்து வந்த ருக்மணி ரங்கராஜனை நன்றியுடன் பார்த்துச் சிரித்துவிட்டுப் போனாள். ஹெட்மாஸ்டர் கலகலத்தார்.

''மிஸ்டர் ரங்கராஜன் நம்ம டீச்சருக்கு ஒடனே வீடுபாத்துக் குடுத்துட்டீங்களே.''

ரங்கராஜனுக்கு வையாபுரிமேல் கோபங்கோபமாக வந்தது. அதை மறைத்துக்கொண்டு சமாளித்தார்.

''வையாபுரி சொன்னான் சார். அக்ராரத்துல அடச்சுக் கெடக்கிற வீடு வெளிச்சமாகட்டுமே.''

''வெரிகுட. நீங்க வெளக்கேத்தி வச்சிட்டீங்க.''

ஹெட்மாஸ்டர் பந்துவிழிகளை உருட்டிச் சிரித்தார். அவரிடமிருந்த அமைதி கீறிக் கசிந்துகொண்டிருந்தது.

இடைவேளையில் பையன்கள் ஹிந்தி எழுத்துக்களை ராகத்துடன் உச்சரித்து உற்சாகப்பட்டார்கள்.

''கக்க ககங... சச்ச சஜஞ.''

வெளியே வெற்றிலை துப்பவந்த தமிழய்யா கூர்மையாகக் கவனித்தார். சுண்ணாம்பை அதிகம் சேர்த்துக்கொண்ட உணர்வு அவருக்கு. பாரதியார் பாட்டுக்கே ஏழுதடவை எச்சு விழுங்கி விக்கிப் பரிதாபப்படும் பையன்கள் நினைவுக்குவந்தார்கள்.

''என்னஇது வம்பாருக்கு.''

அவர் அடிக்கடி புழுங்கினார். இது நல்லதுக்கில்லை என்று பட்டது.

பாண்டியன் வெளிப்படையாகவே சாட ஆரம்பித்தார். எல்லாரிடமும் முறையிட்டார்.

''நம்ம தமிழ்நாட்டுலதான் இருக்கமான்னு சந்தேகமாருக்கு சார். தட்டிக்கேக்கிறதுக்கு நாதியே இல்லையா.''

ஹெட்மாஸ்டர் யாரையும் கலந்துபேசாமல் ஹிந்தி பீரியடுக்கு ஏற்பாடுசெய்தார். இதில் ரெம்பப் பாதிக்கப்பட்டது டிரில்பீரியடுதான். அதுக்கடுத்து கிராப்ட். மற்றவர்களுக்கு அதிகமில்லை. பாண்டியன் கிராப்ட் வாத்தியாரிடம் போனார்.

''சார் நடக்கிற அனியாயத்தப் பாத்தீகளா.''

கிராப்ட் வாத்தியார் சலனப்படவில்லை.

''சார்வாள் இதுல என்னசொல்ல இருக்குது. நமக்குக் குடுக்கிற துருத்திய ஊதிக்கிறவேண்டியதுதான்.''

அவரது பொடிமூக்கைப் பிடித்துத் திருகலாமா என்றிருந்தது பாண்டியனுக்கு.

''ஒங்களுக்குப் பொடிப்போட நேரங்கெடைக்குது பாருங்க. ஏன் சொல்லமாட்டீக.''

''இங்க பாருங்க சார்வாள். எது கொறையிதோ கூடுதோ அதப்பத்தி நமக்குக் கவலையில்லை. சம்பளம் கொறஞ்சாத்தான் கவல.''

பாண்டியனுக்குக் கோபம் அடங்கவில்லை. ஹெட்மாஸ்டரை நேரில் முறைத்துக்கொள்ளலாமா என்றுகூட நினைத்தார். தமிழய்யா சமாதானப்படுத்திவைத்தார்.

முந்தியெல்லாம் ரூமில் பாட்டுப்பாடிய பாண்டியன் இப்போது சதா வசைபாடினார். அரசாங்கத்தையும் மந்திரிகளையும் சாடினார். எல்லாரும் ஒண்ணுமே நடக்காததுபோல் இருப்பதைக்கண்டு பொருமினார். ரங்கராஜனுக்கும் அவருக்கும் காரசாரமான விவாதம் நடந்தது. சூடுபறக்கப் பேசினார்கள். தமிழய்யாதான் பட்டிமன்றத்துக்கு நடுவர். இடையில் எதையாவது சொல்லி சூட்டைத் தணித்தார்.

என்ன காரணமோ தெரியவில்லை அன்றைக்கு அதிகாலையிலேயே பாண்டியனுக்கு ஆத்திரம் கிளம்பிவிடட்து. தூங்கியெழுந்து முகங்கழுவும்போதே முனங்கிக்கொண்டிருந்தார். ரூம் திண்ணையில் இருப்புக்கொள்ளவில்லை. எதிரிலிருந்த ரங்கராஜனை விழுங்குவதுபோல் பார்த்தார்.

''பையங்க என்ன பொதிசொமக்கிற கழுதையா சார். இந்தியக் கொண்டுவந்து முதுகுல ஏத்துறாக.''

ரங்கராஜன் சீண்டினார்.

''பாண்டியன் ராத்திரிமுழுக்கத் தூங்கலயா. இதையே நெனச்சிண்டுருந்தேளா.''

இவுக பண்றதப் பாத்தா தூக்கமா வருது. யாரவாச்சும் புட்பால் வெளையாடுவமான்னு இருக்குது.''

தமிழய்யா பாண்டியன்பக்கம் திண்ணைமூலையில் உட்கார்ந்து உள்சிரிப்பில் கவனித்துக்கொண்டிருந்தார். ரங்கராஜன் பின்வாங்கவில்லை.

''புதுசுபுதுசா படிச்சுத் தெரிஞ்சிக்கிறனும் பாண்டியன்.''

''சும்மாருங்க சார். உள்ளதுக்கே மோசம் புள்ளகுட்டிக்குப் போயிட்டீக. தமிழய்யாவக் கேளுங்க எத்தன பையங்க தமிழ தப்பில்லாம எழுதுறான்னு.''

''அதுக்கு ஹிந்தி என்னபண்ணும்.''

பாண்டியன் திண்ணைவிளிம்புக்கு நழுவிவந்தார்.

''நீங்கன்னுதான் சும்மாருக்கென். இல்லன்னா நாக்கறுந்து போகும்படியா கேப்பென். பள்ளிக்கூடம் குட்டிச்சொவராகப் போகுது.''

''ஸ்கூலக் கேவலப்படுத்தறேள்.''

''ஆடுமாடு பத்துறமாதிரி இந்தியப் படிக்கச்சொல்லி யாரு கேவலப்படுத்துறாகன்னு பாருங்க. கிருஷ்ணசாமி சார் வண்டி பத்தும்போது பாத்துருக்கீகளா. அதச் சொல்லித்தாறதுக்கு ஸ்டைலா ஒரு பொம்பளையப் புடிச்சு அனுப்பீட்டான். மானங்கெட்ட பெழப்பு.''

''மத்த பாஷையுந்தான் பொம்மனாட்டி கத்துக்கொடுக்கறா.''

''நம்ம தமிழய்யாவப்போல நூத்துக்கணக்குல ஆம்பளைக சொல்லித்தாறாக சார். இப்படி பொட்டத்தனமா இல்ல.''

தமிழய்யா தெளிவுரை வழங்கினார்.

''கசப்பான சமாச்சரத்த தேன்ல கலந்துதான் கொடுக்க வேண்டியிருக்கு.''

ரங்கராஜனுக்குச் சூடு இறங்கவில்லை.

''ஆத்தக் காத்துண்டு கெடக்கறவாளுக்கு பாண்டியன் வாயால பேச்சு வாங்கிக் கட்டிக்கணும்னு தலையெழுத்து.''

''நம்ம தமிழய்யாவோட பொண்ணுமாதிரி டீச்சர்ஸ் ட்ரெயினிங் முடிச்சிட்டு வெறுங்கழுத்தோட வீடுவீடா கெடக்கிற பொண்ணுகளவும் மனசுலவச்சுப் பேசுங்க சார்.''

''அவாளுக்கு கொடுக்கவேண்டாம்னு சொல்லலயே.''

''குடுக்கலயே.''

''ஒரு பொண்ணுக்கு மாதச்சம்பளம் தர்றான் குடும்பத்தக் காப்பாத்த. ஹிந்தி கத்துக்கொடுத்தா என்ன சங்கீதம் கத்துக் கொடுத்தா என்ன.''

''அதுக்கு அப்பிராணிப் பையங்கதானா கெடச்சாங்க.''

''நீங்க வெளையாட்டு கத்துத்தரலயா.''

''இது உள்ளூர்ச் சமாச்சாரம் சார். ஒவ்வொரு பையனும் வீட்ல கிட்டி வெளையாடுறான். மழவந்தா ஊருக்குத் தல தெறிக்க ஓடுறான். அதே வெளயைாட்டத்தான் இங்கவந்து பேஸ்பால் ரன்னிங்ரேஸ்னு ஆடுறான். என்ன சார் கிட்டிவெளை யாட்டுக்கும் இந்தி படிக்கிறதுக்கும் முடிச்சுப்போடுறீகளே.''

ரங்கராஜன் ரூமுக்குள்போய் சோப் எடுத்துக்கொண்டு வந்தார். சோப் டப்பாவுகுள் பல்பொடிப் பொட்டலத்தை வைத்து மூடினார்.

''ஹிந்தி படிக்கறது கஷ்டம்னா தமிழ் ரொம்பக் கஷ்டம் பாண்டியன்.''

அவருக்குப்பின்னால் வந்த பாண்டியன் டூத்பேஸ்டை பிரஷில் படுக்கவைத்தார்.

''தமிழ் படிக்கிறவன் இந்திய பூன்னு ஊதீருவான்.''

''ஊதட்டுமே.''

''அப்படியென்ன ஆத்தரம். இந்தி பேசுறவுக்களுக்கு தமிழ் சொல்லிக்குடுப்பாகளா. இங்கமட்டும் இளிச்சவாயங்களா என்ன.''

''கூடுதலா ஒரு பாஷையத் தெரிஞ்சுக்கறது தப்பில்ல.''

''அது எல்லாருக்கும் பொதுவாருக்கணும். அதென்ன எழுத்தா சார். வெளவால் தலகீழா தொங்கினமாதிரி. நேரா இருக்கிற தமிழவே படிக்கத் தெணறுறான்.''

''தமிழ் எழுத்துமட்டும் என்னவா இருக்கறதாம். செத்த பாம்பு சுருண்டுகெடக்கற லட்சணமா.''

பாண்டியன் துள்ளினார்.

''செத்தா கெடக்குது. நாகம் படமெடுத்துச் சீறீட்டு நிக்கிற எழுத்துக்கள மறந்துட்டீக். அதக் கலச்சுவுட்டு வேடிக்கபாத்தா நடக்கிற கதையே வேற.''

தமிழய்யாவுக்கு ஒரு சந்தேகம்.

''இங்கிலீஷ் எழுத்துல ஒரு ராஜகம்பீரம் இருக்குதுன்னு சொல்லப்போறீகங்களா சாமி.''

''நாடு விடுதலையடஞ்சு இத்தன வருஷமாகியயும் அந்த பாஷ நம்மள ஆண்டுக்கிட்டுருக்கறதுன்னா அதுக்கு என்ன அர்த்தம்.''

பாண்டியன் முந்திக்கொண்டார்.

''நம்ம சொந்தமா சிந்திக்கத் தெரியாத மடையங்கன்னு அர்த்தம். இல்ல நமக்கு இன்னியும் உண்மையான விடுதல கெடைக்கலன்னு அர்த்தம்.''

''அன்னிய பாஷையிலிருந்து விடுதலையடையணும்னா நமக்குன்னு பொதுவா வேற ஒரு பாஷ வேணுமில்லையா.''

''ஒரு பேச்சுக்காகச் சொல்றென். பொதுவான மொழியா தமிழ் இருக்கட்டும்னா ஒதுதுக்கிருவானா.''

''அதெப்படி. மெஜாரிட்டி ஜனங்க பேசுற பாஷையத்தான பொதுவானதா வச்சுக்கிடணும்.''

''அதென்ன மெஜாரிட்டி. தேர்தலா நடத்துறாக. அப்ப டின்னா வெள்ளக்கரனுக்கும் இவனுக்கும் என்ன வித்தியாசம். அவன் வெள்ள இவன் கருப்பு.''

''என்னைப்போல.''

''நம்மளப்போல.''

''பொதுவான பாஷையில்லன்னா நாட்டுல ஒத்தும கெட்டுப்போகும்.''

''ஒத்துமங்கிறது தீத்தம்சார் கடையில விக்கிற வெண்டக் காயா என்ன. அது தானா வரணும். நாட்டுல நாப்பது மொழி இருக்குதுன்னா அத்தனையும் பொதுவானதுதான். நரிக் கொறத்திகிட்டப்போயி ஒம்புள்ளைய இந்தியில கொஞ்சுன்னு சொல்லமுடியுமா. கையில கெடைக்கிற எடுத்துக்கிட்டு அடிக்கவந்துருவா. பெரிய ஒத்துமையாம் ஒத்தும. வாய்கிழியப் பேசுறதோட சரி.''

''என்னதான் செய்யச்சொல்றேள்.''

''டில்லியில இந்தி பேசுறவன்மட்டுந்தான் இருக்கானா. தமிழன் இல்லையா. கன்னடக்காரன் இல்லையா.''

''எல்லாருந்தான் இருக்கறா.''

''அவனவனுக்கு அந்தந்த மொழியில எழுதீட்டுப்போயேன். அதுதான் ஒருத்தனஒருத்தன் மதிக்கிறதுக்கு அடையாளம். இதென்னடான்னா ஒருத்தன் மத்தவன மிதிக்கிற கதையால்ல இருக்கு. கொஞ்சநாளைக்குமுந்தி நடந்த ஒரு அனியாயத்தச் சொல்றென் கேளுங்க.''

''அனியாயம் நடந்தது பாண்டியனுக்கா மத்தவாளுக்கா.''

''எனக்கு நடந்துருந்தா அந்த எடத்துலேயே ரெண்டுல ஒண்ணு பாக்காம வருவனா. எங்க சொந்தக்காரப்பய ஒருத்தன் வீட்ல கெடந்து வெவசாயத்தக் கவனிக்காம கொழுப்பெடுத்துப் போயி எவனோ ஒரு காண்ட்ராக்டர் பேச்ச நம்பி வடநாட்டுக்கு ஓடிப்போயிட்டான்.''

''அங்க என்ன வேல.''

''பெரிய உத்தியோகம். காதவழிக்குப்போயி கரண்டுத்தூணு

நட்டுறதுக்குத்தான். பக்கத்து வீட்டுப்பையன் போயிட்டு வந்து வெள்ளையுஞ்சொள்ளையுமா என்னேரமும் கையில டிரான் சிஸ்டரத் தூக்கீட்டுத் திரியறதப்பாத்து இவனுக்கு இருப்புக் கொள்ளல. மாடுகண்ண வுட்டுட்டு ராத்திரியே கௌம் பிட்டான். அங்க போனப்பெறகுதான் தெரியிது பெழப்பு மோசம்னு.''

''சரியா மாட்டிண்டான்.''

''கொஞ்சநாளைக்கு வெயில்ல கெடந்து ஒதஞ்சுபாத்துருக் கான் முடியல. கையில காசுமில்ல. கான்ட்ராக்டர் கண்ணுலயே தட்டுப்படல. சரி வேற வழியில்லன்னு முடிவுசெஞ்சு யாருட்ட யும் சொல்லாமக்கொள்ளாம ஊருக்கு நடைய வுட்டுட்டான்.''

''தனியா வரானா.''

''வரும்போது பட்ட கஸ்டம் கொஞ்சநஞ்சமா. கண்ட எடத்துலயும் மாடுமாதிரி தண்ணியக் குடிச்சிட்டு ஒருநாள் முழுக்க பட்டினியோடயே நடந்துருக்கான். மறுநாள் மதியம் ஆளு ரெம்பக் கெறங்கிப்போயிட்டான். ஒரு இந்திக்காரன் வீட்ல போயி தண்ணி கேட்ருக்கான். இவன் பேச்சு அவனுக்குப் புரியாம இந்தியில என்னென்னமோ பேசியிருக்கான். அது இவனுக்குப் புரியல. ஆனா அவன் இந்தின்னு சொலற்றதப் பாத்தா இந்தி தெரியாதான்னு கேக்கிறாங்கிறதுமட்டும் வெளங்கிப்போச்சு. இவன் தெரியாதுன்னு தலையசைக்கவும் அவனுக்கு வந்ததே கோவம். எதிரியா நெனச்சுக்கிட்டு வாய்க்கு வந்தபடி திட்டித்தீத்து கழுத்தப்புடிச்சுத் தள்ளீட்டான். இவன் என்னென்னமோ சைகையில சொல்லி தண்ணி கேட்டுப்பாத்தும் கெடைக்கல. காலோஞ்சு நாவறண்டு தள்ளாடித்தள்ளாடி நடந்து வந்து கடைசிக்கு ஒரு கொளத்துல தண்ணி குடிச்சிருக்கான்.''

ரங்கராஜனுக்கு முகத்தில் வருத்தம் படர்ந்தது.

''சாப்பாட்டுக்கு என்னசெஞ்சானாம்.''

''என்னசெய்யமுடியும. பிச்சையெடுத்தாத்தான் வழி.

அதச்செய்றதுக்கும் மனசு வரல. சரி உள்ளதுபோல இருக் கட்டும்னு கள்ளரயிலேறிப் படுத்துட்டான். விடியக்காலம் வண்டி ஆந்திராவுக்குள்ள மொழையும்போது எக்கச்சக்கமா ஆப்புட்டுக்கிட்டான்.''

''அதெப்படி.''

''போலீஸ்காரன்தான் துயிலெழுப்பியிருக்கான். பெற கென்ன முட்டிக்குமுட்டி தட்டி ஜெயில்ல போட்டுட்டாக. பத்துநாளைக்கு மாமியார் வீட்டுச் சாப்பாடு. பதினோராம்நாள் அவுத்துவுட்டுட்டான். வாறவழியில கெடைக்கிற வேலையச் செஞ்சு வயிறு கழுவிக்கிட்டே நடந்துநடந்து கடைசியா ஆண்டி யாவரத்துக்கு அர உசிரோட வந்துசேந்துட்டான்.''

''சரியான அனுபவம் பாண்டியன்.''

''அதுக்குப்பெறகு அய்யா வடக்க தலவச்சுக்கூடப் படுக் கிறதில்ல. இந்தக் கதைய எதுக்குச் சொல்லவந்தன்னா ஒரு சாதாரண இந்திக்காரனுக்குக்கூட தான் பேசுற மொழிமேல எவ் வளவு மரியாத இருக்குது பாருங்க. நம்மளுந்தான் இருக்கமே. கோட்டையில உக்காந்துருக்கிற மகராசங்கள எண்ணைக்கு கரும்புள்ளி செம்புள்ளி குத்தி கழுதமேல ஏத்தி ஓட்டுறமோ அண்ணைக்குத்தான் நம்ம தலநிமிந்து நிக்கமுடியும். என்ன செய்றது சலூன்காரனுக்கு இருக்கிற ரோசமும் மானமும் சட்டம் போடுறவனுக்கு இல்லையே.''

இனி பேச்சு வளர்ந்தால் பாண்டியனைக் கட்டுப்படுத் தமுடியாது. ஒருவர் பாக்கியில்லாமல் சகட்டுமேனிக்கு ஏக வசனத்தில் பேசுவார். நிலைமையறிந்த தமிழய்யா மெல்ல எழுந்தார். ரங்கராஜன் சொன்னார்.

''என்ன எழவோ சோத்துக்கு வழியில்லாறச்சே இந்த வம்பெதுக்கு. வாங்கோ குளிக்கப் போகலாம்.''

மூணுபேரும் புறப்பட்டார்கள். கதவைப்பூட்டிய பாண்டியன் பேச்சுவாக்கில் சொன்னார்.

''ரங்கராஜன்சாருக்கு இந்தி புடிக்குதோ இல்லையோ இந்தி சொல்லித்தாறவுகளப் புடிச்சுப்போச்சு.''

ரங்கராஜன் வேகமாகத் திரும்புமுன் பாண்டியன் முன்னால் ஓடி தமிழய்யாவுக்கு நாயுருவிச்செடியைத் தேட ஆரம்பித்தார். தமிழய்யா ரங்கராஜனின் கோபத்தை ரசித்தபடி பின் தொடர்ந்தார்.

**பா**ண்டியன் கிரவுண்டில் இருந்தார். ஏழாம்வகுப்புக்குக் கபடி நடந்தது.

''மதியச்சோத்து மயக்கம் இன்னியும் போகலயா. சுறு சுறுப்பா இருடா சோதாப்பயலே.''

அவரே கோதாவில் இறங்கி கணீரென்று பாடினார். கோட்டைத்தொட்டு காலைத் தூக்கி தோரணையாகப் பார்த்தார். வேண்டுமென்றே பிடிபட்டு மூச்சுவிடாமல் தாக்குப்பிடித்து தப்பிவந்து முறைத்தார். அதேபோல் அடுத்தபக்கம் நின்று எதிராளியைப் பிடிக்கும் தந்திரங்களைச் சொல்லிக்கொடுத்தார். இப்போதுதான் பையன்களுக்கு வேகம்வந்தது. அவரது விசிலும் சுதாரிப்படைந்தது.

''ஆறாம்வகுப்பு அய்யாத்துரையும் அட்டெண்டர் அடைக் கலமும் கிரவுண்டுக்கு வந்துகொண்டிருந்தார்கள். பாண்டியன் விசிலைத் துப்பிவிட்டு ஆச்சரியமாகப் பார்த்தார்.

அய்யாத்துரையின் முகத்தில் வேட்டிசட்டையைப்போல் அதே வெள்ளைச்சிரிப்பு. அடைக்கலம் கொஞ்சம் வாட்டமாக இருந்தார்.

''என்ன சார் இவ்வளவு தூரம். கபடி வெளையாடணும்னு ஆசை வந்துருச்சா.''

அய்யாத்துரை நெருங்கிவந்தார்.

''ஒங்களப் பாக்கத்தான் வந்தொம்.''

''அப்படியென்ன அவசரம் சார். சொல்லிவுட்ருந்தா நானே வந்துருப்பனே.''

அடைக்கலம் வாய்திறந்தார்.

''ஒங்களுக்கு வெசயம் தெரியாதா. இண்ணைக்கு சார் ரிடையராறாரு.''

பாண்டியன் அய்யாத்துரையைப் பார்த்தார்.

''உண்மையாவா சார். நம்பமுடியலயே.''

''ஆயிப்போச்சு வயது. ஒங்களத்தான் மொதல்ல பாத்துச் சொல்லணும்னு தோணுச்சு.''

பாண்டியன் அடைக்கலத்திடம் வருத்தப்பட்டார்.

''என்னங்க அடைக்கலம் நேத்து ஒருவார்த்த சொல்லியிருக்கலாமில்ல. அட நேத்த வுடுங்க. காலையில கையெழுத்துப்போடும்போதுகூட சொல்லலயே.''

அவர் அடைக்கலத்தை அனுப்பிவிட்டு அய்யாத்துரையை கூட்டிப்போனார். ஒவ்வொரு வகுப்பாகப் போனார்கள். பாண்டியன் எல்லாவகுப்பிலும் அய்யாதுரையைப்பற்றி பெருமையாகச் சொன்னார்.

டீச்சர்ஸ் ரூமில் வாத்தியார்கள் ஒப்புக்குச் சிரித்தார்கள். யாரும் கலகலப்பாயில்லை. அய்யாத் துரைமட்டும் எப்போதும் போல் சந்தோஷமாக இருந்தார்.

வழக்கத்துக்கு மாறாக பையன்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர் ஒவ்வொருவரையும் வருடி தட்டிக் கொடுத்தார். அவர்கள் அண்ணாந்து பார்த்துவிட்டு ஏதோ வருத்தத்தில் பிரிந்தார்கள்.

பாண்டியன் அவரை ஹெட்மாஸ்டரிடம் கூட்டிப்போனார். ஹெட்மாஸ்டர் நிறையப் பேசினார். அய்யாத்துரை நிறையச் சிரித்தார். கடைசியில்மட்டும் ரெண்டுவார்த்தை சொல்லி விடைபெற்றார்.

''சார் ஆறாம் வகுப்புக்குச் சீக்கிரம் வாத்தியார் வாறதுக்கு ஏற்பாடு செஞ்சிருங்க. அந்தப் பயிருக வேர்ப்புடிச்சு வளந் தாத்தான் வெளச்சலும் நல்லாருக்கும்.''

பாண்டியன் மனசுக்குள் பேசினார்.

''அதுவரைக்கும் அந்த் வகுப்புக்கு இந்தி டீச்சர மட்டும அனுப்பாம இருந்தாச் சரி.''

ஹெட்கிளார்க் சீனிவாசனிடம்கூட சொல்லிக்கொள்ள மறக்கவில்லை அய்யாத்துரை. பாண்டியன் சீனிவாசனிடம் சொன்னார்.

''நம்ம சாருக்குச் சேரவேண்டிய பணமெல்லாம் வாங்கிக் குடுக்கிறவரைக்கு ஒங்கள உக்காரவுடமாட்டேன்.''

சாயங்காலம் ஸ்கூல் விட்டதும் வையாபுரி எல்லா வாத்தியார்களையும் பிடித்து நிறுத்திவிட்டான். பாண்டியன் அவனைப் பாராட்டினார்.

''நீ கில்லாடிவே. கொழந்தச்சாமி சாரக்கூட புடிச்சு வச்சிட்டயே.''

''கடைசியில நாலுதடவ வுட்டுட்டு மணியடிச்சது ஆருக்குன்னு நெனச்சீக.''

''அப்படியொரு ஏற்பாடா.''

''கல்லாப்பெட்டி ஞாபம் வந்துட்டா வண்டி நிக்காதே.''

பாண்டியன் குழந்தைச்சாமியை விடுதலைசெய்தார்.

''நீங்க முன்னால போங்கசார். நாங்க பேசிக்கிட்டே வாறொம். கவலப்படாதங்க. நம்ம கடைக்குத்தான் வருவொம்.''

சீனிவாசன் அடைக்கலம் உட்பட எல்லாரும் அய்யாத்துரை யுடன் ஹோட்டலுக்குப் போனார்கள். பாண்டியன் ஒவ்வொரு பண்டமாக ஆர்டர் பண்ணினார். வையாபுரி சர்வராக மாறினான். மாணிக்கம் வையாபுரிக்கு எடுபிடி. கடைசியில் வித்தியசமான பண்டங்களின் பேரும் கேட்டது.

''தமிழய்யாவுக்கு ஒருகட்டு வெத்தல. பாக்குப் பக்கடா. தொட்டுக்கிறதுக்கு ஒரு டப்பா சுண்ணாம்பு. நம்ம கிராப்ட் சாருக்கு ஸ்ராங்கா ரெண்டு பொடிமட்ட.''

வையாபுரி வேகமாகப் போனான்.

''இந்தா கொண்டுவாறென் சூடா.''

சட்னிக்காரம் தாங்காமல் தமிழய்யா குருவிக்குஞ்சாக வாயைத்திறந்தாலும் அவர்கண்ணில் ரெண்டுசொட்டுச் சிரிப்பு திரண்டிருந்தது.

அன்றைக்கு குழந்தைச்சாமி சாப்பிட்டது உட்பட செல வெல்லாம் பாண்டியன் பொறுப்பு. வையாபுரி எழுதிவைத்தது போல் கணக்கை ஒப்பித்தான்.

வெளியே வந்த தமிழய்யா அய்யாத்துரையை கொஞ்சநேரம் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். இதைக் கவனித்த ரங்க ராஜன் கேட்டார்.

''ஏன்சார் அவரையே பார்த்துண்டுருக்கறேள்.''

தமிழய்யா நினைவை முறித்துக்கொண்டு சிரித்தார்.

''நான் வீட்டுக்குப் போறதுக்கு எத்தன நாளிருக்குன்னு நெனச்சுப்பாத்தென்.''

பாண்டியன் சொன்னார்.

''நீங்க வீட்டுக்குப் போறது இருக்கட்டும். மொதல்ல ரூமுக்குப் போங்க.''

ரங்கராஜன் கேட்டார்.

''நானும் அய்யாத்தொர சார் ஆத்துக்கு வரட்டுமா பாண்டியன்.''

''நீங்க தமிழய்யாவக் கூட்டீட்டுப் போங்க. இல்லன்னா நேர தென்காசிக்கு நடையவுட்டாலும் வுட்ருவாரு.''

பாண்டியனும் வையாபுரியும் அய்யாத்துரையின் வீடுவரை போனார்கள்.

முற்றத்தில் மிதிக்குமுன்பே அவரது சம்சாரத்தின் குரல் வந்தது.

''வெளையாட்டுக்காரத் தம்பி வாங்க.''

பாண்டியன் வையாபுரியைப் பார்த்தார்.

''இந்த வீட்ல எனக்குப் பேரு வச்சிருக்கிறதப் பாத்தயா.''

''பொருத்தமான பேருதான் சார்.''

''அப்படியா. வெளியவா கவனிச்சுக்கிறென்.''

பாண்டியன் கிட்டத்தில் உட்கார்ந்து அந்த அம்மாவிடம் தோதாகப் பேச்சுப்போட்டார்.

''ஈஸ்வரிய எங்க காணும். ஸ்கூல் வுட்டு ரெம்ப நேரமாச்சே.''

''கீழத்தெருவுல ரெண்டு வீட்டுக்கு எண்ண வேணும்னு சொல்லி வுட்ருந்தாக. கொண்டுட்டுப் போயிருக்கா.''

''அந்த வேல வேறயா. அவள என்ன கஸ்டப்பட்டும் படிக்க வச்சிருங்க. ஏழு தாண்டுனா பெறகு மூணுவருசந்தான். பத்து முடிச்சுட்டா ஏதாவது வேலைக்குப் போயிறலாம்.''

''ஒத்தப் பொண்ணவும் முன்னேற வச்சிறணும்னுதான் அவுக அப்பா தெனமும் செக்கச் சுத்தறாக தம்பி. எப்படியும் உருண்டு பெரண்டு அவளப் படிக்க வச்சிறவேண்டியதுதான். அவுகளுக்குத்தான் கஸ்டம். வீட்ல உஸ்ஸுனு உக்காரக் குடுத்து வைக்கல. வேலையக் கைமாத்துறதுக்கு ஒரு ஆம்பளப்புள்ள இருந்தா மலைக்கவேண்டியதில்ல.''

அய்யாத்துரை இடையில் குரல்கொடுத்தார்.

''என்ன அங்கம்மா வீட்டுக்கு வந்த விருந்தாளுகள சும்மா உக்காத்திவச்சுப் பேசிக்கிட்ருக்க.''

''வெளையாட்டுக்காரத் தம்பியப் பாத்தா எல்லாமே மறந்துருது.''

அங்கம்மா அவசரமாக எழுந்துபோய் கருப்பட்டி கலந்த எள்ளுப்பிண்ணாக்கை பிட்டாகக் கொண்டுவந்து கொடுத்தது. பாண்டியனும் வையாபுரியும் திகட்டத்திகட்டத் தின்றார்கள். பாண்டியன் சொன்னார்.

''இப்படியொரு சமாச்சாரம் இருக்குதுன்னு தெரிஞ்சிருந்தா தமிழய்யாவவும் கூட்டீட்டு வந்துருக்கலாமே.''

அங்கம்மா சிரித்தது.

''அதுக்கென்ன இனியொரு நாளைக்கு எல்லாரும் வாங்க. சாப்பாடு செஞ்சு வைக்கென்.''

''அம்மா இனிமே செக்கச் சுத்துற வேலைய எனக்குக் குடுத்துருங்க. கூலி கேக்கமாட்டென். இந்தமாதிரி புட்டு குடுத்தாப் போதும்.''

வையாபுரி சொன்னான்.

''நான் கேக்கணும்னுருந்தென். நீங்க போட்டிக்கு வந்துட்டீகளா.''

அய்யாத்துரை கலகலத்தார். பாண்டியன் கிளம்பும்போது அங்கம்மாவிடம் மறக்காமல் சொன்னார்.

''சார அப்பப்ப ஸ்கூலுக்கு அனுப்பி வையிங்கம்மா. இல்லன்னா நான் இங்கவந்து ஒங்க சாப்பாட்டப் பங்கு போட்ருவென்.''

''ஒங்க கலியாணத்துக்கு எங்கள மறந்துறாதங்க. எப்பச் சாப்பாடு போடுவீகன்னு எதிர்பாத்துட்ருக்கொம்.''

''நீங்க இல்லாம எனக்குக் கலியாணமே நடக்காது.''

அதுக்கும் அய்யாத்துரையின் முகத்தில் சிரிப்புத்தான். வெளியே வந்ததும் பாண்டியன் வையாபுரியிடம் சொன்னார்.

''சிரிக்கிறதுக்குன்னே பெறந்த மனுசம்ப்பா இவரு.''

''அதனாலதான் ஒரு நோய்நொடியில்லாம இருக்காரு.''

''எங்கம்மாட்டப் பேசீட்டு வந்தமாதிரியே இருக்கு.''

''ஒங்கம்மாவுக்கு இவ்வளவு வயசிருக்குமா.''

பாண்டியன் ஒரு நிமிஷம் மௌனத்துக்குப்பின் சொன்னார்.

''இருக்கும்இருக்கும். ஏன் அப்படிக் கேக்க.''

''அவுகளப் பாக்கணும்போல இருக்கு. ஒங்கய்யாவத்தான் இங்கயே பாத்துட்டனே. வீட்டுக்குக் கூட்டீட்டுப் போவீகளா சார்.''

''என்னவே அப்படிக் கேட்டுப்புட்ட. கண்டிப்பாக் கூட்டீட்டுப்போறென்.''

''எப்ப சார்.''

''நான் போகயில.''

''எப்பப் போவீக சார்.''

''அதுக்கென்ன இப்ப அவசரம். போகலாம் ஒருநாளைக்கு.''

''ஒருநாளைக்குச் சாப்பாடு போட்டாப் போதும்.''

''பத்துநாளைக்குக்கூட இருந்து சாப்புடு. எங்கய்யா நல்லா கவனிச்சுக்கிருவாரு. ஒருத்தர மனசுக்குப் புடிச்சுப்போச்சுன்னா உயிர வுடுவாரு.''

''அப்படின்னா அம்மா கவனிக்கமாட்டாகளா.''

''ரெண்டுபேருந்தான்.''

பாண்டியனின் யோசனையான நடையைக் கவனித்தான் வையாபுரி.

''போயும்போயும் ஒரு பியூனக் கூட்டீட்டுப் போகவான்னுதான யோசிக்கீக சார்.''

''வே இப்ப எங்கிட்ட ஒத வாங்கப்போறயா. பியூனும் மனுசன்தான. வாத்தியாருன்னா ரெண்டு கொம்பா மொளச் சிருக்கு. பரிச்ச லீவு வரட்டும். ஒன்னக் கழுத்தப்புடிச்சு இழுத்

துட்டுப் போறனா இல்லையான்னு பாரு. அதுக்கு ஒன் வீட்டுக்காரி சம்மதிக்கணுமே.''

''ஒங்ககூடன்னா எங்க போறதுக்குன்னாலும் சம்மதிப்பா.''

''எதெப்படி. அது என்மூஞ்சியக்கூட பாத்துக்கிட்ட தில்லையே.''

''பாத்துத்தான் ஒருத்தரு கொணத்தப்பத்தித் தெரிஞ்சுக்கிறணு மாக்கும். நான் சொன்னாப் போதாதா.''

''என்னப்பத்தி இல்லாறது பொல்லாறதெல்லாம் சொல்லி வச்சிருக்கயா.''

''அப்படின்னே வச்சுக்கங்களேன்.''

''இதுலருந்து என்ன தெரியிது. வேற யாருகூடயோ நீ சேத்துட்டுத்திரியிறது ஒன்வீட்டுக்காரிக்குப் புடிக்காது. அப்படித் தான. அது யாருவே. ஒழுங்காச் சொல்லீரு. இல்ல பெண்டக் கழட்டீருவென்.''

''அந்தமாதிரி சேர்க்க ஆருமில்ல சார்.''

''எங்கிட்ட மறைக்காத.''

''நம்ம வாச்மேன் வீரணனோட சேந்துக்கிட்டுப் போயி ஒரு கூத்துப்பண்ணீட்டென். அது அவளுக்குத் தெரிஞ்சுபோச்சு. வீட்ல சண்டக்காடு தாங்கமுடியல.''

''அப்படி வா வழிக்கு. ரெண்டுபேரும் சேந்து என்னசெஞ்சீக.''

''பெரிசா ஒண்ணுமில்ல.''

''சிறிசா என்ன நடந்தது.''

''ரெண்டுபேரும் ஒருநா பொழுதுசாய பதினி குடிக்கணும்னு பனையடிக்குப் போனோம்.''

''ஓசிப்பதினிதான.''

'இல்ல சார். காசுப்பதினி.''

''அவன் தலையில மொளகா அரச்சயா.''

''ரெண்டுபேருக்கும் என்பொறுப்பு.''

''அப்ப மழவந்துருக்குமே. சரி பனையடிக்குப் போனீக.''

''போனதே சரின்னு அவன் மண்டிபோட்டு நாலஞ்சு பட்டைக்கு உள்ள ஊத்தி அடச்சு எரும கனச்சமாதிரி ஒரு ஏப்பம் போட்டான். பெறகு நான் கைய ஏந்துனென். பட்டையில பதினிய ஊத்தும்போது கப்புனு புளிப்புவாடையடிச்சது. நான் சந்தேகத்துல அண்ணாந்துபாத்தென். சும்மா குடியும்னு பனை யேறி கண்ணச் சிமிட்டுனாரு.''

''ஏன் நல்ல பதினியில்லையா.''

''கலயத்துல சுண்ணாம்பு தடவ மறந்துட்டாரு. பெறகென்ன செய்றது. அலுப்புக்குப் புளிப்பில்லன்னு நானும் ஒரு கலயத்தக் காலிபண்ணுனென்.''

''வே எனக்குச் சின்னவயசுலயே காது குத்தீட்டாக தெரியுமா. சுண்ணாம்பு தடவ மறந்துட்டானா. திருட்டுத்தனமா கள்ளு குடிக்கப்போயிட்டு கதையா வுடுற.''

''அதுக்குப் பேரு கள்ளுல்ல சார். வெள்ளப்பதினி.''

''ஒழுங்கா வீடு வந்துசேந்தீகளா.''

''வீரணன் லம்பி ஒளற ஆரம்பிச்சுட்டான். நான் சமா தானப்படுத்தி கைத்தாங்கலா கூட்டீட்டு வாறென்.''

''ஒங்களுக்கு ஒண்ணுஞ் செய்யலயாக்கும். பெரிய வீரனாச்சே.''

''வரவர எனக்கும் நேர நடக்கமுடியல. நான் அவன்மேல சாய அவன் என்மேல சாய தட்டுத்தடுமாறி நடந்து வாறொம்.''

''பொதியேத்துன கழுதைக்கு முட்டிதட்டுனமாதிரி.''

''நீ முன்னால போ நான் பின்னால வாறன்னு அவன் பின்னாலயே போறான்.''

''அய்யா மறுபடியும் பனைக்குக் கெளம்புறாகளா.''

''இனியும் பனைக்குப் போனா அம்புட்டுத்தான். அந்த எடத்துலயே வுழுந்து கெடக்கவேண்டியதுதான்.''

''ரெண்டுபேருக்கும் போத அப்படி கண்ண மறைக்குதோ.''

''எங்களுக்கு நெகார் தெரியல. எதுப்பாட்டுப் படிச்சுக் கிட்டே வாறொம்.''

''அதுவேற கேக்குதா.''

''எங்க பாத்தாலும் மரஞ்செடியெல்லாம் அலையடிக்குது.''

''நான் இருந்துருக்கணும் அப்ப. புடிச்சுக் கெணத்துல தூக்கிப்போட்டுட்டு வந்துருப்பென்.''

''எதுக்க தூரத்துல ஒரு உருவம் நடந்துவாறது மங்கலாத் தெரிஞ்சது. கண்ணத் தொடச்சிட்டுப் பாத்தா வாட்டசாட்டமான ஆளு வேகுவேகுன்னு வருது. கையில சின்னக் கம்பு. காக்கிச்சட்ட குல்லா. அய்யய்யோ காரியம் கெட்டுப்போச் சேன்னு அவன இழுத்துப் புடிச்சு வெசயத்தச் சொன்னென். ரெம்பத் துள்ளிக்கிட்டு வந்தவன் அந்த ஆள அடையாளம் பாத்ததும் அடங்கிப்போயிட்டான். ரெண்டுபேரும் ஒசா ராயிட்டொம்.''

''போதையெல்லாம் இருந்தஎடம் தெரியாமப் பறந்து ருக்குமே.''

''நீ முந்தி நான் முந்தின்னு ஓட்டம் புடிசொம் பாருங்க. சும்மா கரிச்காட்ல புழுதி பறக்குது. திரும்பிப் பாத்தா போலீஸ் காரரு தொபுக்குத்தொபுக்குனு பின்னால ஓடிவாறாரு. ஏலே நில்லுநில்லுன்னு அவரு சத்தம் கிட்டத்துல கேக்கிறமாதிரி இருக்குது.''

''கழுத குதிரையாயிருச்சு. ரன்னிங்ரேஸ்தான்.''

''நாங்க ஏங்கி ஓடி ஒரு ஓடையத் தாண்டிக் கெலிச்சிட் டொம். அவரு ஓடைக்குள்ள எறங்கி வாறதுக்குள்ள சுளிச்சுத்

திரும்பி கிட்ணசாமி சாரோட வாழத்தோட்டத்துக்குள்ள பூந்து ஒளிஞ்சுக்கிட்டொம். அப்பத்தான் எங்களுக்கு போன உசிரு திரும்பி வந்துச்சு.''

''மயிரிழையில் உயிர்தப்பிய மாவீரர்கள் வாழ்க.''

''தோட்டத்துக்குள்ள ஒரு மூலையில மறஞ்சுக்கிட்டு பாக்கொம். அவரு அடுத்த மூலையில நிக்காரு. ரெண்டு நாயில ஒரு மூஞ்சியாச்சும் அடையாளம் தெரியாமப்போச்சே தெரிஞ் சிருந்தா வீட்ல கோழிய அமுக்குனமாதிரி அமுக்கீருவனேன்னு பொலம்பிக்கிட்டே தேடிப்பாக்காரு.''

''ஒங்களுக்கு நல்லநேரம். கையில கெடச்சா ஆணிவேற அக்குவேற கழட்டிக் காயப்போட்ருப்பான்.''

''நாங்க பம்மிப்பம்மி அந்தக் கடசிக்கு ஓடி ஊருக்குள்ள வந்து சேந்துட்டொம்.''

''ஒருவழியா தப்பிச்சிட்டீக.''

''தப்பிக்கவா. இனிமேத்தான இருக்குது கதையே.''

''அதென்ன கத.''

''அந்த நேரத்துல எங்க தெருச் சாவடியில கூட்டம் நடக்குது. நாங்க கூட்டத்துக்குள்ள ஆளோட ஆளா உக்காந்துக்கிட்டொம்.''

''கூட்டம் எதுக்கு நடக்குது.''

''காளியம்மா கோயிலுக்குப் பொங்கல்சாட்டுறாக. புள்ளிக் காரரு எப்ப வந்துருவாரோன்னு எங்களுக்குக் கையுங்காலும் ஒதறலெடுக்குது. பரக்கப்பரக்கப் பாக்கொம்.''

''காட்டிக்குடுத்துட்டீகளா.''

''இந்தவருசம் காளித்தாயி புண்ணியத்துல நல்ல வெள்ளா மன்னு தலைவரு சொல்றாரு. அதுக்கு வீரணன் ஆமாமா பனையில நல்ல வெளச்சலுன்னு ஒளறுறான். நான் இல்லஇல்ல தென நல்லா வெளஞ்சிருக்குன்னு சொல்றென். கூட்டத்துல எல்லாரும் எங்களவே பாக்காக.''

''சும்மாவா வுட்டாக.''

''வீரணன் பனன்னு சொல்ல நான் தெனன்னு சொல்ல வாய்ச்சண்ட ஆரம்பிச்சிருச்சு. பொங்கல்சாட்டுற கூட்டத்துல புத்திகெட்டுப் பொலம்புறது எவண்டா அவனக் கழுத்தப்புடிச்சு வெளிய தள்ளுடான்னு தலைவரு கோவத்துல ரெண்டுவார்த்த சொன்னதுதான் சாக்கு. எங்கமேல அடியும் ஒதையும் மழையாச் சொரியிது. வெள்ளாம பனையிலயா வெளையிது மச்சான்னு சொல்லிச்சொல்லி தருமஅடி குடுக்காக. எங்கம்மா குடுத்த சேனப்பாலெல்லாம் கலங்கிப்போச்சு. கடசிக்கு செத்த நாயப் போல எங்கள இழுத்துவந்து தெருவுல போட்டுட்டாக.''

''அதோடயாச்சும் வுட்டுத்தொலச்சாகளே.''

''எவனோ ஒருத்தன் பானையில தண்ணி கொண்டுவந்து ஊத்திக் குளிப்பாட்டுறான்.''

''கையால குளிப்பாட்டுனது காணாதுன்னு தண்ணியிலவேற குளிப்பாட்டுறாகளா.''

''நான் தலையக் குலுக்கிக்கிட்டு தட்டுத்தடுமாறி எந்திரிச்சு வீட்டுக்குப் போயிப் படுத்தவன்தான். ரெண்டுநாளைக்கு எந்திரிக்கவே முடியல.''

''வேலசெஞ்சு முறிச்ச அலுப்பு இருக்குமில்லையா. அது வரைக்கு அய்யாவ ஸ்கூல்ல தேடலயா.''

''காச்சலுன்னு சொல்லி லீவு போட்டுட்டென். ரெண்டு நாளும் பொண்டாட்டிக்காரி வசவு தாங்கமுடியல. என்னக்காட்டி வீரணனுக்குத்தான் ரெம்ப. அவன் ராத்திரி தப்பிச்சுப்போயி பள்ளிக்கூடத்துல படுத்துக்கிருவான். இந்தச் சங்கதியால அவன் வீட்டுக்காரிக்கும் இவளுக்கும் சண்ட. அவுகள வெலகிவுடப் போயி நாங்க ரெண்டுபேரும் மொறச்சுக்கிட்டொம். நல்ல வேளைக்கு இத்தன கதையும் பள்ளிக்கூடத்துக்குத் தெரியாது. போலீசுக்கும் எட்டல. அதோட சரி. வுட்டதடி ஆச வெளாம் பழத்து ஓட்டோடன்னு பனமரத்துப்பக்கம் எட்டிப்பாக்கிறதே இல்ல.''

''இப்ப ஒங்க வீட்டுக்காரிக பேசிக்கிருவாகளா.''

''மூணே நாள்தான். இந்தக் கதையக் கேட்டயா மதினின்னு அடுத்தவீட்டுப் பொறணி பேசி கூடிக்கிட்டாக. கோயில் பொங்க லுக்கு ரெண்டுபேரும் சேந்து பொங்கல்வச்சு கொலவ போட்டதப் பாக்கணும்.''

''அடுத்தவீட்டுக் கதையோட மகிமையே மகிம. அந்தப் போலீஸ்காரனப் பாக்கிறதுண்டா.''

''அப்பப்ப தற்செயலா பாப்பென். என்ன சௌக்கியமான்னு கேப்பாரு. ஏதோ ஒங்க புண்ணியத்துல இருக்கன்னு சொல்லி நழுவீருவென்.''

''எண்ணைக்குக் குட்டு ஒடையப்போகுதோ. வீரணன் ஊமமாதிரி இருந்துக்கிட்டு இவ்வளவு குசும்பு பண்ணுவானா. இருக்கட்டும் ஒருநாளைக்கு வச்சுக்கிறென்.''

''வேணாம் சார். ஏண்டா சொன்னன்னு எம்மேல பாஞ்சுக் கிட்டு வருவான்.''

அவர்கள் ஸ்கூலை அடைந்தபின்பும் அவர்களது நிழல்கள் ரெம்ப தூரத்தில் கிடந்தன. பாண்டியன் கேட்டார்.

''அதுசரியே ஒன்வீட்டுக்கு எப்ப என்னக் கூட்டீட்டுப் போகப்போற.''

''சார் நானும் வீட்டுக்காரியும் சந்தோசமாருக்கிறது புடிக்கலயா.''

''அவ்வளவு பயமிருந்தாப் போதும். ஒன்அம்மாவப் பாக்கணும்வே.''

''அவ ஊருக்குப் போயிருக்கா. திரும்பி வந்ததும் சொல்றென்.''

''எந்த ஊருக்கு.''

''பெரிய ஊருக்கு.''

''பெரிய ஊரா. அது எங்கருக்கு.''

''மேல இருக்குது.''

''வேய்...''

பாண்டியன் திகைப்பில் திரும்பினார். அவருக்குள் தடம் பதித்துக்கொண்டு தப்பித்து ஓடத்தொடங்கினான் வையாபுரி.

இப்போதெல்லாம் ரங்கராஜனுக்கு அதிகாலையிலேயே தூக்கம் கலைந்துவிடும். புரண்டுபடுத்து போர்வைக்குள்ளேயே மனோராஜ்யம் நடத்துவார். இதமாக இருக்கும்.

அன்றைக்குப் பாண்டியன் சொன்னதில் தப்பில்லை. ருக்மணியைப் பிடித்துத்தான் போயிற்று. அதென்னமோ அவள் வரும்போதும் போகும்போதும் நின்று பார்க்கத் தோன்றுகிறது. ஏறிட்டுப் பார்க்கமாட்டாளா என்று ஏக்கம் கவ்வுகிறது. ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு ஆபீஸுக்குப் போகச் சொல்லுகிறது. அடைக்கலத்திடம் நாலுவார்த்தை ஒப்புக்குப் பேசும்சாக்கில் அங்கே உட்கார்ந்திருக்கும் அவளைப் பார்த்துச் சிரிக்கச்சொல்கிறது. அவள் ஹெட்மாஸ்டருக்கு முன்னால் உட்கார்ந்து சிரித்துச்சிரித்துப் பேசும்போது ஹெட்மாஸ்டர்மீது கோபம்வருகிறது. அவளுக்காக எந்த இடத்திலும் பாண்டியனிடம் வாதாடும் முனைப்பு வந்திருக்கிறது.

ஒருதடவை பாண்டியன் கொஞ்சம் காட்டமாகச் சொன்னார்.

''பையங்க ஸ்கூல்லருந்து வெளியேறும்போது நொண்டி மொடமாப் போகணும்னு முடிவுபண்ணீட்டாக.''

அப்போதும் ருக்மணிக்குப் பரிந்துபேசாமல் இருக்க முடியவில்லை.

''நம்ம மனசு நொண்டிமொடமா ஆயிட்டதால எல்லாம் அப்படித் தோணறது.''

அடேயப்பா பாண்டியனுக்கு வந்த கோபத்தைப் பார்க் கணுமே. அங்கமெல்லாம் துடித்தது.

''அத்தோட பேச்ச வுடுங்க சார். பெறகு நான் பொல்லாற வனாயிருவென்.''

''நான் ஒண்ணும் தப்பா சொல்லீடலயே.''

''தப்போ சரியோ, வார்த்தையச் சுருக்கிக்கிறது ரெண்டு பேருக்குமே நல்லது. அளவுக்கு மீறுச்சுனா நடக்கிற கதையே வேற.''

படக்கென்று முறித்துக்கொண்டு போய்விட்டார். அவர் அப்படிக் கோபப்பட்டுப் பார்த்ததில்லை. தமிழய்யா இருந் திருந்தால் இவ்வளவுக்கு ஆகியிருக்காது. அவர் ரெண்டுநாள் சேர்த்து லீவுபோட்டுவிட்டு ஊருக்குப் போயிருந்தார்.

பாண்டியனின் மனசுநோகப் பேசியிருக்கக்கூடாது. இப்படி வாய்தடிக்கப் பேசும் புத்தி எப்படி வந்தது. அவர் கஷ்டம் அவருக்கு. டிரில் பீரியடில்லாமல் சரித்திரம் பூகோளத்தில் கைவைத்திருந்தால் எப்படியிருக்கும்.

அதுக்குப்பிறகு பாண்டியனைப் பார்க்கக் கூச்சமாக இருந் தது. ஒரே ரூமுக்குள் இருந்துக்கொண்டு பார்க்காமலும் இருக்க முடியாது. தர்மசங்கடமான நிலைமை.

ஆனால் பாண்டியன் எதையும் மனசில் வைத்துக் கொள்ளவில்லை. வலியப் பிடித்துக் கிண்டலடித்தார்.

''என்ன சார் ஒங்க இந்தி என்னசொல்லுது.''

''மத்தவாளுக்கு வேற வேல இல்லையான்னு கேக்கச் சொல்றது.''

''ரங்கராஜன் சாரோட பேசுறதவிட வேற முக்கியமான வேல இல்லன்னு அதுக்குத் தெரியாதா.''

அதுதான் பாண்டியன்.

இதுக்கெல்லாம் அந்த ருக்மணிதான் காரணம். அவள் ரெம்ப அழகாகத் தோன்றினாள். அக்ரஹாரத்தில் தனித்துத் தெரிந்தாள். அதுவே மற்றவர்களை மறக்கிற அளவுக்குக் கண்ணை மறைத்தது.

காலையில் ஸ்கூலுக்கு வரும்போது அவள்மேனி ஒளி சிதறும். தலைகுனிந்து ஸ்டைலாக நடப்பாள். பூக்கனம் தாங்காமல் முடிப்பின்னல் தொடைக்கு இறங்கி வருவதுபோல் தெரியும். நடைக்குழைவும் பிருஷ்ட அசைவும் மனசுக்குள் லெஸ்ஸிம் விளையாடிக் குலுங்கும். ரூமைக் கடந்து கிரவுண்டு ரோட்டில் திரும்பும்வரை வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண்டே இருக்கத் தோன்றும்.

சொல்லப்போனால் அவளை எதிர்பார்த்து திண்ணையில் உட்காருவது வழக்கமாகிவிட்டது. ஆரம்பத்தில் தொற்றியிருந்த கொஞ்சநஞ்ச கூச்சங்கூட போகப்போக உதிர்ந்துபோனது.

அவரைக் கவனித்த தமிழய்யாவுக்கு உள்ளூரச் சந்தோஷம். எப்படியோ ஒரு நல்ல வழிபிறந்தால் சரியென்று ஆறு தலடைந்தார். அவரைக் கண்டுகொள்ளாதவர்போல் நடந்து கொண்டார். ருக்மணியைப்பற்றிப் பேசினால் பொறுமையாகக் கேட்டார்.

ரங்கராஜன் சிலநாளாக தனியே குளிக்கப்போனார். எல்லாருக்கும் முந்தி எழுந்து கால் தெப்பக் குளத்துக்கு நடந்தது. அவர் புறப்படும்போது போர்வையை விலக்கிக்கொண்டு பார்ப்பார் தமிழய்யா. சிவப்பு ரப்பர்வளையமாக வாய் விரியும். பிறகும் இழுத்துப் போர்த்திக்கொள்வார். பாண்டியனோ விரிப்புடன் கோபித்துக்கொண்ட தோரணையில் உருண்டு கிடப்பார்.

தெப்பக்குளத்தில் ருக்மணி பெண்கள்பக்கம் குளிப்பாள். அவர் இந்தப்பக்கம் முங்கியெழுந்து அவளையே பார்ப்பார். அவள் பார்க்கமாட்டாள். அருகிலுள்ளவர்களைக் கவனித்து

விட்டு அவர் மீண்டும் முங்குவார். உள்ளிருந்து ஆசைகளை அள்ளிக்கொண்டு எழுவார்.

அவள் குளித்துமுடித்து ஈரச்சேலையை மார்பிலும் இடுப்பிலும் இறுகக் கட்டி நீரூற்றிய சீசாவாகக் கிளம்புவாள். அவள் போகும்வரை அந்தத் திசைக்குத் திரும்பி உடம்புதேய்ப்பார்.

ஒரே அழுக்குத்துண்டுடன் குளிக்கப் பிடிக்கவில்லை. புதுசாக ரெண்டு வாங்கினார். பாண்டியனுக்குக் குறும்பு.

''சார் புதுத்துண்டு போட்டு ஜம்முனு குளிச்சிட்டு வாறீக. எங்களோட தோதுப்படலயா.''

''நீங்க நன்னா தூங்கினேள். தூக்கத்தக் கலைக்க வேண்டாம்னு போயிட்டென்.''

''நீங்க வுட்டுட்டுப் போயிட்டீகன்னு தமிழய்யாவுக்கு எவ்வளவு வருத்தம் தெரியுமா. ரெண்டு தடவ வெத்தல போடலன்னா பாத்துக்கங்களேன்.''

தமிழய்யா குறுக்கிட்டார்.

''ஒங்களுக்கு நேரத்தோட குளிக்கமுடியலன்னா சாமி என்னசெய்வாரு. தோது இருந்தா நீங்களும் அப்படித்தான். நான் அனாதையா இருப்பென்.''

''ஒங்கள நான் தவிக்கவுடுவனா. வானமே இடிஞ்சாலும் நான் ஒங்களோடதான் இருப்பென். கவலையே வேணாம். ரங்கராஜன் சாரப்போலன்னு நெனச்சீகளா.''

தமிழய்யா ரங்கராஜனிடம் திரும்பினார்.

''என்னசாமி பாண்டியன் இப்படிச் சொல்றாரு.''

''நான் மத்தவாளப்போல சினிமாவுக்குப் போகலயே.''

பாண்டியன் வழக்குப் பேசினார்.

''நான் யாருட்டயும் சொல்லாமக்கொள்ளாம ஒளிஞ்சுக்

கிட்டா போறென். ஒண்ணுக்கு மூணுதடவ தமிழய்யாட்ட அனுமதி வாங்கீட்டுப் போறென். மத்தவங்கள வலியக் கூப்புட்டும் வரலன்னா அதுக்கு நானா பொறுப்பு.''

''அங்க நடக்கற சினிமா அத்தனையும் ரூம்ல நடக்கறச்சே அவ்ளோ தூரம் போயிப் பார்க்கணுமாக்கும்.''

தமிழய்யா வழக்கில் கொஞ்சம் சுண்ணாம்பு தடவினார்.

''பாண்டியன் செய்ற கலைச்சேவைக்கு இப்படியொரு சோதனையா.''

பாண்டியனுக்குத் தன்மானம் பொங்கியது.

''நான் செய்ற சேவையோட அரும ஒங்களுக்குத் தெரியிது. அதுபோதும் எனக்கு. அடுத்தவங்களப்பத்திக் கவலையில்ல. கலைச்சேவைன்னா என்ன தெரியுமா. நடக்கிறதப்பத்தி நாலுபேருக்கு வெளக்கிச் சொல்லணும். அடுத்தவுக மனசுல பதியவைக்கணும்.''

''இவா சொல்ற கதையக் கேக்கறச்சே மனசில பதியவா செய்யறது. பத்திண்டு எரியறது.''

''நல்ல சமாச்சாரம் நமக்கு எப்பத்தான் புடிச்சது.''

''நல்ல சமாச்சாரமா அது. கர்மம்கர்மம். கேக்கறச்சயே சகிக்கல. பார்த்தா கேக்கவாவேணும்.''

தமிழய்யா பாண்டியனிடம் கேட்டார்.

''சாமி சொல்றது உண்மதானா பாண்டியன்.''

''உண்மையப்பத்தி யாரு பேசுறதுன்னு ஒரு வெவஸ்தை யில்லாமப்போச்சு.''

ரங்கராஜனுக்குப் பொறுக்கமுடியவில்லை.

''அதத்தான் நானும் சொல்றென்.''

''மகாலிங்கபுரத்துல நடக்கிற கத அவ்வளவையும் மறக்காம

வந்து சொல்றனே அதுதான் உண்மையான ரசிகனுக்கு அடையாளம். இங்க நடக்கிறத இவுக ஒளிக்காமச் சொல்லுவாகளா. இல்ல சொல்லுவாகளான்னு கேக்கிறென்.''

தமிழய்யா ரங்கராஜனிடம் ஆதங்கப்பட்டார்.

''பாண்டியன் இப்படிக் கேட்டுப்புட்டாரே சாமி.''

ரங்கராஜன் யோசித்தார். கதை இப்படியே போனால் பாண்டியனிடம் தப்பிக்கமுடியாது. ஒரு முடிவுக்கு வந்தார்.

''எதுக்கு வம்பு. பாண்டியன்கிட்ட மாட்டிண்டு நம்ம பிராணன் போயிடும்.''

பாண்டியன் கையுயர்த்தி முழங்கினார்.

''ரங்கராஜன் சிம்மனை வென்று வைகுண்டம் அனுப்பிய பாண்டியமன்னன் வாழ்க. எமது வெற்றியைப் புகழ்ந்து அவைப்புலவர் பரணிபாடட்டும்.''

தமிழய்யா பவ்வியமாகச் சொன்னார்.

''அப்படியே ஆகட்டும் மன்னா.''

ரங்கராஜன் முணுமுணுத்தார்.

''ஜாடிக்கேத்த மூடி.''

தமிழய்யா தங்குதடையின்றி கவிமழை பொழிந்தார்.

> ''சாரல்குள நீர்கிழித்து சந்தநடை பயிலும்
> நாரைக்குழாம் மீனெடுத்து நமட்டுகின்ற வேளை
> பாறைக்குளம் போர்க்களத்தில் படைகளின்றிப் பொருது
> வீரத்திலே வைகுண்ட வேந்தனையும் வென்று
> மங்காத புகழ்படைத்த மன்னவனே உன்னை
> தென்காசிப் புலவனிங்கு செப்புகிறேன் வாழி.''

பாண்டியினின் எக்காளச் சிரிப்பு விண்ணைமுட்டியது.

''இதுவல்லவா கவிதை. பொருள்பொதிந்த கவிதை. யாரங்கே கொண்டுவா கும்பகோணம் வெற்றிலையை.''

தமிழய்யாவிடம் என்ன அவையடக்கம். ரங்கராஜன் பொருமினார்.

''ரெண்டுபேரும் என்ன மேலருக்கற வைகுண்டத்துக்கே கொண்டுபோயிச் சேர்த்திருவேள்.''

அதிலிருந்து மூணுபேரும் சேர்ந்தே குளிக்கப்போனார்கள்.

வாரலீவு வந்தால் முதல்நாள் சாயங்காலமே ரங்கராஜனுக்குக் கால் நிலைகொள்ளாது. சுதாரிப்பாக ஊருக்குக் கிளம்பிவிடுவார். திருநெல்வேலி பஸ்ஸைப் பிடித்தால் ராத்திரிச்சாப்பாட்டுக்கு ஸ்ரீவைகுண்டம் போய்விடலாம்.

ருக்மணிம் வாரந்தோறும் ஊருக்குப் போவாள். ரெண்டு பேரும் ஒரே பஸ்ஸில் புறப்படுவார்கள். பஸ் கிளம்பும்போது ஹோட்டல் வாசலில் கையசைத்தபடி பாண்டியன் நிற்பார். அருகில் தமிழய்யா. கல்லாவில் குழந்தைச்சாமி.

பஸ்ஸில் ருக்மணியைப் பார்ப்பதற்குத் தோதாக உட் கார்ந்து கொண்டு அசைவதில் ரங்கராஜனுக்குச் சந்தோஷம். போகிற வழியில் தோட்டத்துக்குள் திரியும் கிருஷ்ணசாமியின் மண்வெட்டி சிலசமயம் ஓங்கி வழியனுப்புவதுமுண்டு.

மகாலிங்கப்புரத்தில் பஸ் கொஞ்சநேரம் நிற்கும். ருக்மணியிடம் சென்று ஏதாவது வாங்கிவரணுமா என்று கேட்கணும் போலிருக்கும். அந்த எண்ணம் மனசைக் குடைந்து முடிவுக்கு வருமுன் பஸ் நகர்ந்துவிடும்.

சீக்கிரத்தில் திருநெல்வேலி வந்துவிட்டமாதிரி இருக்கும். ரெண்டுபேரும் இறங்குவார்கள். அவர் தயங்கித் தயாராகுமுன் அவள் தன்பஸ்ஸுக்கு நடந்துவிடுவாள். அவர் தவிப்பை அடக்கிக்கொண்டு ஸ்ரீவைகுண்டம் பஸ்ஸைத் தேடுவார்.

ஊர்போய்ச் சேரும்வரை உளைச்சலாக இருக்கும். ஸ்கூலில் தான் பேசச் சந்தர்ப்பம் இல்லையென்றால் இங்கேயாவது

ஒருவார்த்தை பேசலாமில்லையா. அதுக்கு வெட்கமா. அப்ப டியும் தெரியவில்லையே. ஹெட்மாஸ்டருக்கு முன்னால்மட்டும் உட்கார்ந்து எப்படிப் பேசமுடிகிறது. அப்படி என்னதான் பேசுவார்களோ. கூப்பிட்டுக் கண்டிக்கணும்போல் உறுத்தும். கண்டிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது. ஏன் இப்படி யெல்லாம் அவள்மேல் அக்கறை கூடுகிறது.

அவளை எப்படிப் புரிந்துகொள்வது. யாரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது. மற்றவர்களிடம் பேசக்கூடிய பேச்சா இது. வையாபுரியிடம் கேட்டால் அவ்வளவுதான். ஸ்கூலில் மணி யடித்தமாதிரி எல்லாருக்கும் தெரிவித்துவிடுவான். கேவலத்துக் குச் சொல்லவேவேண்டாம்.

வீட்டில் லீவு சதா ருக்மணியின் நினைவிலேயே கழியும். அவளுக்காக பாண்டியனிடம் சண்டையிட்ட கதையைத் தங்கை யிடம் சொல்லிச் சந்தோஷப்படுவார். அவர்முகத்தில் புதுக்களை ஏறியிருப்பதைக் கவனிக்கும் அம்மாவுக்குக் கற்பனைகள் விரியும். போகிறபோக்கில் சொல்லுவாள்.

''ஏண்டா சண்டைய நிறுத்திண்டு சாப்பிட வரலாமே.''

எல்லாவற்றையும் அம்மாவிடம் கொட்டித் தீர்க்கணும் போலிருக்கும். ருக்மணியிடம் ஒரு சந்தர்ப்பத்திலாவது பேசி அவள் மனசைத் தெரிந்துகொள்ளாமல் எப்படிச் சொல்லுவது. ஆர்வத்தை அடக்கிக்கொள்வார்.

ஸ்கூலுக்குத் திரும்பும்போதுகூட அவரது கண்கள் திரு நெல்வேலி பஸ்ஸ்டாண்டில் ருக்மணியைத் தேடும். சிலநாள் காத்திருந்தும் பார்ப்பார். ஏமாந்து சோர்வில் பஸ்ஸைப் பிடிப்பார்.

ரூமுக்கு வந்ததும் பாண்டியனிடம் தப்பிக்கமுடியாது.

''அண்ணைக்கிருந்த சுதாரிப்பு. இண்ணைக்கில்லையே. தனியா வர கஸ்டமாருந்துச்சா.''

''நான் ஒண்ணும் தனியா வரலயே. நெறைய ஜனங் களோடதான் வந்தென்.''

''டிரைவர் கண்டக்டரச் சேத்துக்கிட்டீகளா.''

''அவா இல்லாத பஸ்ஸா.''

''அப்ப ஒரு டிக்கட் மட்டும் கொறஞ்சதாக்கும்.''

''அவாளக் கேக்கலயே.''

''வராதவுகளவா.''

ரங்கராஜன் தலையிலடித்துக்கொள்வார். தமிழய்யாவின் கன்னங்கள் வெற்றிலைக்குதப்பலில் சிரிக்கத் திணறும்.

மதியம் முதல்பீரியடு எட்டாம்வகுப்புக்கு டிரில். பாண்டியன் பரிவாரங்களுடன் ஸ்கூலுக்குப்பின்னால் சிவன் கோயிலுக்கு நடந்தார். தற்செயலாகப் பார்த்த கிராப்ட் வாத்தியார் கேட்டார்.

''பாண்டியன் இண்ணைக்கு டிரில் கோயில்கிரவுண்டுலயா.''

''ஆனானப்பட்ட சிவனே பெரிய டிரில்மாஸ்டர்தான் சார். அவரு செய்யாற எக்சசைஸா நம்ம சொல்லிக்குடுத்துறப் போறோம்.''

''சிவன ஏன் சார் வம்புக்கு இழுக்கீங்க.''

''இதுலென்ன வம்புசார். உண்மையத்தான் சொன்னென்.''

கிராப்டுக்கு சட்டென்று எதுவும் பிடிபடவில்லை. உண்மையா. யோசனையில் அண்ணாந்தார். பாண்டியனுக்குப் புரிந்துவிட்டது.

''சும்மா ஒயரப்பாத்தா எப்படி. ஒருசிட்டிக பொடிய ஏத்திக்கங்க. கைலாசத்துல நடக்கிற கதையெல்லாம் அப்படியே கண்ணுக்குமுன்னால தெரியும்.''

கிராப்ட் கொஞ்சநேரம் கற்பனையில் லயித்துதான்போனார். படக்கென்று தலையை உதறிக்கொண்டு பாண்டியனைப் பார்க்கும்போது ''என்ன டிரில் நல்லாருந்துச்சா'' என்று பாண்டியன் கண்சிமிட்டினார். கிராப்டுக்கு வெட்கமாகப் போயிற்று.

''நீங்க பேச்சுல பாண்டியமன்னனாச்சே.''

அப்படியே நழுவிவிட்டார்.

பையன்கள் நெருஞ்சிச்செடிகளை அப்புறப்படுத்திக் கொண்டும் காலில் தைத்த முள்ளைப் பிடுங்கிக்கொண்டும் மெல்லமெல்ல கோயில்மண்டபத்தை அடைந்ததனர். ஜுனியர் மராத்தான் மரஸ்டூலை காவடிஎடுத்தபடி கடைசியில் போய்ச் சேர்ந்தான்.

சிவன்கோயில் ஆளரவமற்று எப்போதும் அமைதியாக இருக்கும். நீளவாக்கில் கல்மண்டபம். கோயிலுக்குமுன்னால் சின்ன நந்தி. அடக்கமான கார்ப்பக்கிரஹம். நடுவில் சிவலிங்கம்.

மண்டபத்தில் எல்லாரும் உட்கார்ந்தபின் சுற்றிலும் தோரணையாகப் பார்த்தார் பாண்டியன்.

''அரண்களைத் தகர்த்துக்கொண்டு நமது படைகள் அனைத்தும் வந்து நிலைகொண்டுவிட்டனவா. மந்திரியே பேரேட்டைக் கொண்டுவாரும்.''

தனிக்கூட்டமாக உட்கார்ந்திருந்த பெண்கள் குசுகுசுத்துக் கொண்டு சிரித்தனர். ஜுனியர் மராத்தான் அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரைக்கொண்டுவந்து கொடுத்தான். அவர் பேர் வாசிக்கத் தொடங்கினார். பையன்கள் மாறிமாறி ஆஜர் சொன்னார்கள்.

''இருக்கிறேன் அய்யா.''

''உள்ளேன் ஐயா.''

அவர் பொய்யாகக் கோபித்துக்கொண்டார்.

''உக்காருடா. மண்டையுந்தலையும் ஒண்ணுதான்.''

மூலையிலிருந்து ஒருவன் முணுமுணுத்தான்.

''எல்லாருக்கும் தெரியுமா எருமமாட்டு முட்ட.''

அவர் மூலைக்கு முறைப்பை எய்தார்.

''என்னடா அங்க சதியாலோசன.''

பையன் அப்பிராணியாகச் சொன்னான்.

''ஒண்ணுமில்ல சார். எறும்பு முட்டையிட்ருக்கு.''

''எறும்பென்ன குட்டியா போடும். பெரிய ஆர்க்கிமிடிசு. புதுசா தத்துவத்தக் கண்டுபுடிச்சிட்டாரு. யுரேகா யுரேகான்னு ஓடுறயா.''

ஒரு பையனுக்குச் சந்தேகம். பக்கத்திலிருந்தவனின் காதைக்கடித்தான்.

''யுரேகான்னா என்ன.''

அவரிடமிருந்து அரட்டல் வந்தது.

''இன்னியும் அங்கென்ன முணுமுணுப்பு குட்டிப்போட்ட நாயிமாதிரி.''

''யுரேகான்னா என்னன்னு சந்தேகம் கேக்கான் சார்.''

''அப்படின்னா சொரக்கான்னு அர்த்தம். கூட்டுவச்சா ஒருசட்டி திங்கத் தெரியுமில்ல.''

''அவரு எப்படி ஓடுனாரு சார்.''

''இப்பச் சந்தர்ப்பம் சரியில்ல. ஒருநாளைக்கு ஒன்ன ஓடவச்சுக் காட்டுறென். அப்பத் தெரியும்.''

இப்படி அன்யோன்யமான வேடிக்கைப்பேச்சுக்களில் ஆரம்பித்துத்தான் விஷயத்துக்கு வருவார் பாண்டியன். அது பையன்களுக்கும் தெரியும்.

பீரியடு சிவன்கோயிலில் நடக்கிறதென்றால் சமாச்சாரமே வேறு. டிரில்லைத்தவிர வேறு எதையெதையோ அலசுவார்.

வெள்ளைக்காரன் ஆட்சி விடுதலைப்போராட்டம் தேர்தல் என்று வண்டி ஓடும். கடைசிக்கு டிரில்லையும் தொட்டுக்கொள்வார்.

சிலநாள் நீதிபோதனை பீரியடைக்கூட கேட்டுவாங்கி அவரே நடத்துவார். எதையாவது ஒளித்துவைத்து தேடச் சொல்லி அப்படியே பையன்களை மாமரத்துக்குக் கடத்திக் கொண்டு போய்விடுவார். மரத்தடியில் அமைதியான சூழலில் போதனை நடக்கும்.

அண்ணாதுரையின் கடிதங்களடங்கிய புஸ்தகத்தை உரக்கப் படிப்பான் ஒரு பையன். மற்றவர்கள் பொறுமையாகக் கேட் பார்கள். வாசிப்பு முடிந்ததும் அதிலுள்ள கருத்துகளையும் குட்டிக்கதைகளையும் விளக்கிச்சொல்லுவார். அண்ணாதுரை கூட்டத்தில் பேசிக்கெண்டிருக்கும்போது மூக்குப்பொடியை உறிஞ்சும் விதத்தைச் சிலாகிப்பார்.

சிலசமயம் பெரியாரின் வெங்காயப்பேச்சுகளை எடுத்து விடுவார். தமிழனை அவர் ஏன் காட்டுமிராண்டி என்று சொன்னார் என்பதற்குப் பல உதாரணங்களைச் சொல்லுவார். ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்...'' என்று ஆரம்பித்து பாரதியாரைப் பாராட்டுவார்.

பீரியடு முடியும்போது பாரதிதாசன் கவிதையை கைஉயர்த்தி கணீரென்று முழங்குவார்.

**''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்**
**மங்காத தமிழென்று சங்கே முழங்கு...''**

அதே வேகத்தில் பையன்களும் குரலெழுப்பிச் சொல்லு வார்கள். எல்லாரும் ஸ்கூலுக்குத் திரும்பும்போது மழை வெறித்ததுபோலிருக்கும்.

கோயில்மண்டபத் தூணோரம் மண்ணைக் கிளறிக் கொண்டிருந்த ஒருவனைப் பிடித்துக்கொண்டார் அவர்.

''எறும்புமுட்டைய எண்ணிமுடிச்சாச்சா. நம்ம அதுக்குத் தாண்டா லாயக்கு. எறும்புக்கிருக்கிற ஒத்துமையும் ரோசமும் நமக்கிருந்தா எப்பயோ முன்னேறியிருப்பொம். வாய்க்குள்ள மொழையாற மொழியெல்லாம் படிச்சுத் தொலைக்கணும்னு தலையெழுத்தா நமக்கு. அது எவண்டா நாய் வாந்தியெடுத்த மாதிரி வெளியவந்து இந்திய ஔறிக்கிட்டுத் திரியிறது.''

பையன்கள் நானில்லை நீயில்லை என்று கையை விரித்தார்கள். அவர் ஒருவிரலால் எச்சரித்தார்.

''எவனவாச்சும் பாத்தென் அம்புட்டுத்தான். சாய்ந்தர வரைக்கு மேல கம்பியப் புடிச்சுத் தொங்கவச்சிருவென்.''

''இனிமே ஆரும் பேசுனா நேர ஒங்ககிட்ட வந்து சொல்லீறொம் சார்.''

''எல்லாம் தனக்கா அறிவுவரணுண்டா. தாய்மொழின்னா என்ன.''

''தாய் சொல்லிக்குடுக்கிற மொழி.''

''தாய்மொழியுஞ்சரி தாய்ப்பாலுஞ்சரி. அப்ப மத்தமொழி என்னது.''

பெண்கள்பக்கமிருந்து குரல் வந்தது.

''மத்த மொழியெல்லாம் புட்டிப்பால்.''

''சரியாச் சொன்ன. தாய்ப்பால் குடிச்சு வளர்ற வீரியமே தனி. புட்டிப்பால் குடிக்கிற புள்ளையப் பாத்துருக்கீகளா.''

இப்போதும் ஒரு பெண்தான் சொன்னாள்.

''வகுறுவச்சு சவலப்புள்ளமாதிரி இருக்கும்.''

''அப்படித்தான் நம்ம எல்லாரவும் சவலையாக்கணும்னு திட்டம்போடுறாக. கண்ணுக்குத் தெரிஞ்சே நடக்கிற அனியாயத்த நம்ம தட்டிக்கேக்கணும். எதுத்து நிக்கணும். இப்படியே வுட்டா நம்ம தலையில மொளகாய அரச்சிருவான். கடசிக்கு

தாய்தகப்பனவே இந்தி படிக்கணும்னு சொல்லுவான். அவுக ஓட்டுப் போட்டதுக்கு புண்ணியம் தேடிக்கிறவேணாமா. நம்ம ஊருகள்ல வளந்து கெடக்கிற வேலிக்கருவமரத்தப் பாத்தீகளா.''

ஒருவன் சொன்னான்.

''பள்ளிக்கூடத்துக்கு வாற வழியிலகூட அடச்சுக்கிட்டு நிக்கிது சார். ஒருநா ஓடும்போது கண்ணுல முள்ளு ராவீருச்சு.''

''சீமக்கருவல சீமக்கருவலன்னு சொல்லி அதோட வெதைய வாங்கி தோட்டத்துல வேலிக்கு நட்டிவச்சாக. தோட்டத்து ஒரத்தையெல்லாம் அது உறிஞ்சிக்கிட்டு கொழுத்துப்போயி வளந்துரும். ஆக வெள்ளாம பல்ல இளிச்சுக்கிட்டு நிக்கும். வேலிக்கருவல பெருகிக்கிட்டு வாறதப் பாத்தா ஊருகளவே மேஞ்சிரும்போலருக்கு.''

''வெளியருந்து பாத்தா எங்க ஊரே தெரியல சார்.''

''அப்படித்தான் ஆகப்போகுது இந்தக்கதையும்.''

ஒருவன் யோசனை கேட்டான்.

''இந்தி டீச்சர் வகுப்புக்கு வந்தா நாங்க எல்லாரும் எந்திரிச்சு வெளிய வந்துறட்டுமா சார்.''

''அதுக்குக் காலம் வரத்தான்போகுது. அவசரப்படக்கூடாது. அத்தன வகுப்பும் வெளியேறி வாற அளவுக்கு நம்ம ஒத்துமை யாகணும். எல்லா எடத்துலயும் கொதிச்சுக்கிட்டுத்தான் இருக் காக. எண்ணைக்கு இது பெரிசா வெடிக்கப்போகுதோ தெரியல.''

எல்லாரும் அவரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர் கேட்டார்.

''நம்ம லேபரட்டரியில எலும்புக்கூட்டு மனுசன் இருக்காரே அவருபேரு என்ன தெரியுமா.''

ஒருபெண் சொன்னாள்.

''வேலாயுதம்.''

''கரெக்ட். எப்படித் தெரியும்.''

''கண்ணாடிக் கூண்டுக்குக்கீழே எழுதி ஒட்டியிருக்கு.''

''கெட்டிக்காரப்பொண்ணு. அவரு பல்லக்காட்டிக்கிட்டு அப்பிராணியா இருக்காரேன்னு பாத்தீகளா. அவரு பெரிய தியாகியாக்கும்.''

எல்லாரும் ஆச்சிரியத்தில் முழித்தார்கள்.

''எப்படி சார்.''

''ஒருநா மெட்ராஸ்ல பெரிய கூட்டம் நடந்துருக்கு. டில்லியிலருந்து முக்கியமான மந்திரி பேசப்போற கூட்டம். சனங்க கணக்கில்லாம உக்காந்துருக்காக. நம்ம வேலாயுதமும் முன்னால இருக்காரு.''

''மந்திரி பேச்சக் கேக்கிறதுக்கு முண்டியடிச்சு எடம் புடிச்சிருக்காரு.''

''மந்திரி எந்திரிச்சு தோரணையா கூட்டத்தப் பாக்காரு. என்னமோ பெரிசா அள்ளிக் குடுத்துறப் போறாருன்னு சனங்களுக்கு ஆவல். மந்திரி நாலுவார்த்த இந்தியில பேச அத ஒருத்தன் தமிழ்ல எடுத்துச்சொல்ல பேச்சு ஆம வேகத்துல போகுது. வேலாயுதத்துக்குச் சப்புன்னுபோச்சு. என்ன பேசுறாகன்னே சரியா புரிஞ்சிக்கிறமுடியல. அவருக்குக் கோவம்வந்துருச்சு. எந்திரிச்சு டேய் எவண்டா மந்திரின்னு கத்தஆரம்பிச்சிட்டாரு. கூட்டத்துல சின்னச் சலசலப்பு. பக்கத்துல இருந்தவுக அவரப் புடிச்சு இழுத்து உக்காரவைக்காக. அப்படியும் அவருக்குக் கோவம் தீரல. வடக்கருந்து பெரிசா பேசவந்துட்டான்னு முணு முணுத்துக்கிட்டே உக்காருறாரு.''

''பெறகு கூட்டம் நல்லபடியா நடந்திருக்கும்.''

''பேச்சு பழையபடியே தொடங்குது. வேலாயுதத்துக்கு வெறிவந்துருச்சு. ஏண்டா டேய் தமிழ்ல பேசுடான்னு ஒரே கூச்சல். யாரு தடுத்தும் நிறுத்தல. போலீஸ்காரங்க வந்து இழுத்துக்கிட்டுப் போயி தனியாவச்சு கச்சேரி நடத்துறாக. அடி

அடின்னு அடிச்சு நொறுக்குறாக. கூட்டத்துல பேச்சு மும்மரமா நடக்குது. இங்க அடி மும்மரமா நடக்குது.''

''அய்யோ பாவம்.''

''கூட்டம் முடியிறதுக்குள்ள அவரக் கொண்டுபோயி ஆஸ் பத்திரில கெடத்தீட்டாக பாவிக. ஆஸ்பத்திரியில் சாப்பிடுறதுக்கு என்னென்னமோ குடுத்தும் அவரு வாங்காமாட்டன்னுட்டாரு. வாயிலகூட திணிச்சுப்பாத்தும் முடியல. பட்டினியாவே கெடந்து ஒடம்புல காயம் ஆறியும்ஆறாம உசிர மாச்சுக்கிட்டாரு. அவருக்குத் தாயிதகப்பன் பொண்டாட்டிபுள்ளனு யாரும் கெடையாது. சொந்தம்னு இருந்ததெல்லாம் அவரோட ரிக்ஷா ஒண்ணுதான். அப்பேர்ப்பட்ட ரோசக்கார மனுசன் நாதியில்லாம எலும்புக்கூடா நம்ம ஸ்கூலுக்கு வந்துசேந்துட்டாரு.''

எல்லாரும் சோகமாக பாண்டியனையே கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஜுனியர் மராத்தான் சொன்னான்.

''அந்த மனுசன் என்ன சார் தப்புச்செஞ்சாரு.''

''அதத்தான் அவரு போலீஸ்காரங்ககிட்டக் கேட்டாரு. யாரோ தூண்டிவுட்டு கூட்டம் நடக்காமச் செய்றதுக்குச் சதி பண்ணீருக்காக. அது யாருன்னு சொல்லுசொல்லுன்னு அவரப் போட்டு அடிச்சிருக்காக. மந்திரிதான் தூண்டிவுட்டாருன்னு அவரு சொல்ல போலீஸ்காரங்களுக்குக் கோவம் தாங்கல. இன்னியும் மொரட்டுத்தனமா அடிகெடச்சது. அவரு அடியெல் லாம் வாங்கிக்கிட்டு கடைசியா ஒருகேள்வி கேட்டாரு. நம்ம ஊருக்காரன் வடநாட்டுல போயி தமிழ்ல பேசுனா அத இந்தியில எவனாச்சும் எடுத்துச் சொல்லுவானா. இதுதான் கேள்வி. ஒருத்தன்கூட வாய்தொறக்கலயே.''

பாண்டியனுக்கு இப்போது டிரில் ஞாபகம் வந்தது.

''பொண்ணுக தனியா போயி வெளையாடுங்க. பையங்க வரிசையில நில்லு.''

பையன்களை ஒவ்வொருவரக ஸ்டூல்மேல் ஏற்றி மண்ட

பத்துக் கம்பியில் புல்லப்ஸ் எடுக்கச் சொல்லிக்கொடுத்தார். திணறுகிறவர்களின் காலைப்பிடித்து தாங்கி உதவினார்.

''தீத்தம் சார் கடையில இண்ணைக்கு மொச்சப்பயறு வாங்கித் திங்கலயா. என்தோளுமேல கொஞ்சநேரம் உக்காந்து தவிப்பாறிக்கிறயா.''

ஸ்கூல் மணியடித்தது. பாக்கியிருந்த பையன்களுக்கு உள்ளூரச் சந்தோஷம்.

''வையாபுரி கூப்புட்டுட்டானா. போங்க போங்க. மிச்சத்தப் பெறகு வச்சுக்கிறலாம்.''

படைகள் ஸ்கூலுக்குத் திரும்ப ஆரம்பித்தன.

இவ்வளவு நேரமும் கையைப் பிசைந்தபடி தவித்துக் கொண்டிருந்த கிருஷ்ணசாமி ஓடிவந்து பாண்டியனை வர வேற்றார்.

''சார் வாங்கவாங்க. ஒங்களப் பாக்கிறவரைக்கும் காலும் ஓடல கையும் ஓடல.''

''அப்படியென்ன சங்கடம் சார். அவசரம்னா கோயிலுக்கு வந்துருக்கலாமில்ல.''

''அங்க என்னென்னமோ பாடம் நடத்துவீக. அதவந்து கெடுத்தா மொறையில்ல.

''என்னாச்சு சார்.''

கிருஷ்ணசாமிக்கு இன்னும் படபடப்பு அடங்கவில்லை.

''தோட்டத்துல பம்ப்செட்டு ஓடல.''

''வயர்மேன் என்ன ஆனான்.''

''அவன் பையத் தூக்கீட்டு எந்த ஊருக்குப் போயிருக்கானோ.''

''கொழந்த சார் கடையில அவன் ஒங்ககணக்குல தின்னதுக்காச்சும் கரண்டு வுடணுமே.''

''தின்னிப்பய வரட்டும் வச்சுக்கிறென். எளம்பயிருக்குக் காலத்துல தண்ணி வுடலன்னா என்னாகும் சார். அறிவு வேணாமா. கரண்டு வரலன்னா கமல எறச்சாவது நெலத்த நனைக்கணும். தண்ணிபாச்சுறதுக்கு ஒருத்தனப் புடிக்கணும்.''

''நான் வரட்டுமா சார்.''

''நீங்களா. மம்பட்டியக் கையில புடிச்சதும் வெளையாட்டு நெனப்பு வந்துருமே. பெறகு எம்பெழப்பு அம்புட்டுத்தான்.''

''சம்பளம் காபிவட காய்கறி எதும் கேக்கமாட்டென்.''

''அப்பயும் கூப்புடமாட்டென்.''

''ஏன் ஜூனியரக் கூட்டிக்கிறவேண்டியதுதான.''

''ஸ்கூல் நேரத்துல அவனக் கெடுக்கிறது தப்பு. அவன் கெதி உள்ளமட்டும் படிக்கவைக்கணும்னு ஆச. நம்மதான் இப்படின்னா அவனாச்சும் நல்ல நெலமைக்குப் போகட்டும்.''

''நீங்க பயப்படாமப் போங்க சார். நான் ஒங்க வகுப்பக் கவனிச்சுக்கிறென். ஆளுல்லாமயே ஆறாம்வகுப்பு நடக்கலயா.''

கிருஷ்ணசாமிக்கு நிம்மதி.

''அதுபோதும் சார் எனக்கு.''

''வேலைக்கு ஆளு கெடைக்கலன்னா நான் இருக்கென் மறந்துறாதீங்க.''

''ரெண்டு வேலையவும் நான் சேத்துப் பாத்தாலும் பாப்பனேயொழிய ஒங்களத் தேடிவரமாட்டென்.''

கிருஷ்ணசாமி கடகடவென்று தண்ணீரைக் குடித்துவிட்டு மராத்தான் நடையில் மறைந்துவிட்டார்.

ஒருமாதமாயிற்று. ஆறாம்வகுப்புக்கு ராஜேஸ்வரி வந்து சேர்ந்தாள். ஸ்கூலில் ரெண்டு பெண் டீச்சராயிற்று.

பாண்டியன் ரங்கராஜனிடம் சொன்னார்.

'' சார் இனிமே கவலைய வுடுங்க. தொணைக்கு ஆளு வந்துருச்சு.''

ரங்கராஜன் வெடுக்கென்று கேட்டார்.

''யாருக்குத் தொணையா.''

''இந்தி டீச்சரு தனியா தவிச்சுக்கிட்ருக்குதுல்ல.''

''அப்பட்ன்னு சொல்றேளா.''

''பேச்சுத் தொணைக்குக்கூட ஒருத்தரு இல்லன்னா மனசுக்கு என்னமோ போலதான இருக்கும்.''

''கஷ்டமாருக்கறதுன்னு யாரும் ஒங்ககிட்டச் சொன்னாளா.''

''சொந்த அனுபவம் பேசுது சார். நீங்களும் தமிழய்யாவும் ஊருக்குப் போயிட்டா நரன் என்ன கஸ்டப்படுவென் தெரியுமா.''

''ஒண்ணு செய்யலாம் பாண்டியன். ஆபீஸவே டீச்சர்ஸ் ரூமாக்கிண்டா கவலையே இல்ல.''

''இந்தி டீச்சர அங்கருந்து எப்படா கௌப்பலாம்னு நெனச்சுக்கிட்ருக்கென். நீங்க என்னடான்னா மாத்துக்கத போடுறீக. இந்தச் சாக்குலயாச்சும் கௌப்பியாகணும்.''

''அதுல ஒங்களுக்கென்ன சந்தோஷம்.''

''யாராச்சும் ஒருத்தருக்குச் சந்தோசமில்லாமப் போகாது.''

இவ்வளவு நேரமும் அவர்களது பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்த தமிழய்யா சுருங்கச்சொன்னார்.

''முயற்சி திருவினையாக்கும்.''

பாண்டியன் வையாபுரியைக் கூப்பிட்டு திட்டத்தை விளக்கினார்.

''டீச்சர்ஸ் ரூம்ல தட்டிமறச்சு அங்க ரெண்டு டீச்சருக்கும் எடம் ஒதுக்கீரு. தட்டிக்குக் காசு குடுத்துறென்.''

வையாபுரி திகைத்தான்.

''சார் அது...''

''என்னவே முழிக்க.''

''எட்மாஸ்டருட்ட ஒருவார்த்த கேக்கணும்சார்.''

''வேய் இதுக்கென்ன அவரக் கேக்கவேண்டியிருக்கு. குடியமத்தியா வைக்கப்போற.''

''நீங்க சொல்றதும் சரிதான் சார். ஆனா எந்த வெசயத்துல கேகலன்னாலும் இதுல கேட்டுத்தான் ஆகணும். இல்ல நான் குடியிருக்கமுடியாது.''

''இதுக்குமுந்தி இங்க பொம்பள டீச்சரே வேல பாத்ததில்லையா.''

''இருந்தாக.''

''அவுக எங்க உக்காந்துருந்தாக.''

''டீச்சர்ஸ் ரூம்ல ஒரு ஓரமா இருப்பாக.''

''இப்பமட்டும் புதுச்சட்டம் போட்ருக்கீகளாக்கும்.''

''அப்ப இருந்தது வேற தலைவராச்சே.''

''ஸ்கூலா நடத்துறீக.''

ரங்கராஜன் சொன்னார்.

''அது அவாளுக்குத்தான் வெளிச்சம்.''

இதுக்குமேல் இருந்தால் வம்பு என்று வையாபுரி கழன்று விட்டான்.

மதியம் ஹெட்மாஸ்டருக்கு விவகாரம் போனது. வையாபுரி நைசாக விஷயத்தைச் சொன்னான்.

''அய்யா ரெண்டு டீச்சரம்மாவுக்கும் டீச்சர்ஸ் ரூம்ல எடம் ஒதுக்கிக்குடுத்துறலாமா. தொணைக்குத்தொணையா இருந்துக் கிறட்டும்.''

அவர் நெற்றிக்கண்ணைத் திறந்தார்.

''அங்க மத்தவங்களுக்கே எடம்பத்தாது. இவங்களும் போனா எல்லாருக்கும் கஷ்டமில்லையா. இங்க ஆபீஸுக் குள்ளயே ஹெட்கிளார்க் டேபிள கொஞ்சம் நகத்திக்கிட்டு ரெண்டுசேர் போட்டுரு போதும்.''

''அப்படியே செஞ்சுருவம்யா.''

அவன் வெளியே வரும்போது ஹெட்கிளார்க் தலையைச் சொறிந்துகொண்டு செருமினார்.

அந்தவாரம் முழுக்க அவன் பாண்டியனிடமும் ரங்க ராஜனிடமும் அகப்படாமல் எச்சரிக்கையாக இருந்தான்.

ராஜேஸ்வரி பஸ்ஸ்டாண்டுத் தெருவில் அம்மாவுடன் குடி யேறினாள். அவளுடைய அப்பா அருப்புக்கோட்டையில் தம்பிதங்கச்சிக்குத் துணையாக இருந்தார். சொந்தத்தில் தறி ஓடியதால் அதைக் கவனித்துக்கொள்ளவேண்டிய பொறுப்பும் அவருக்கிருந்தது.

ராஜேஸ்வரி ஸ்கூலுக்கு வரும்போது நாலஞ்சுநாள் அம்மா வும் துணைக்கு கிரவுண்டுவரை வந்தது. ராஜேஸ்வரி ரோட்டுத் திருப்பத்தில் அக்ரஹாரமுனைக்கு வராமல் கிரவுண்டில் குறுக் காக நடப்பாள். இதைக் கவனித்த பாண்டியன் ரங்கராஜனிடம் சொன்னார்.

''டீச்சரென்ன சின்னப்பொண்ணா சார். அதோட அம்மா வகுப்புக்குள்ள காத்திருந்து கூட்டீட்டுப்போகும் போலருக்கு.''

''அவாளுக்கு அப்படித் தோணறது. ஒருவேள ஒங்களக் கண்டு பயமோ.''

''என்னப்பாத்தா அப்படியா தெரியிது சார்.''

''நேக்குத் தோணல.''

''அப்படின்னா மத்தவுகளுக்குத் தோணுது.''

''அவாளத்தான் கேக்கணும்.''

''கேக்கத்தான் போறென்.''

''பேஷா கேளுங்கோ. அவா என்ன சொல்லுவர் தெரியுமோ.''

''உண்மையச் சொல்லுவாக.''

''உண்மையென்ன தெரியுமோ.''

''என்ன.''

''அம்மாவும் பொண்ணும் ஒருநாள் இந்த ரங்கராஜன கிட்டத்துலவச்சுப் பார்த்துட்டா.''

ரங்கராஜன் பலமாகச் சிரித்தார். பாண்டியனுக்கு என்னமோ போலாகிவிட்டது.

''நீங்க வில்லனாச்சே.''

''நான் எப்பவுமே வில்லன்தான் பாண்டியன்.''

''மொதல்ல இந்த எடத்தவுட்டுக் கெளம்புங்க.''

ரூமுக்குள் அறிதுயில் கொண்டியிருந்த தமிழய்யாவை எழுப்பிக்கொண்டு ஹோட்டலுக்கு நடந்தார்கள்.

ஹெட்மாஸ்டரின் ரூம் இன்னும் கலகலப்பாக இருந்தது. அவர் என்னேரமும் ருக்மணியுடன் பேசிக்கொண்டிருந்தார். இதைப்பற்றி எல்லா வாத்தியார்களும் முணுமுணுத்தார்கள். டீச்சர்ஸ் ரூமில் அவ்வப்போது விவாதம் நடந்தது. சலித்துக் கொண்டார்கள். இந்த மணியை யார் பூனைக்குக் கட்டுவது.

ராஜேஸ்வரிக்குத் தர்மசங்கடமாக இருந்தது. எவ்வளவு நேரந்தான் போட்டோக்களையே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருப்பது. இந்த ஹெட்மாஸ்டர் வகுப்புக்கே போக மாட்டாரா. எரிச்சலாக இருக்கும்.

அட்டெண்டர் அவளைப் பரிதாபமாகப் பார்ப்பார். ஹெட் கிளார்க் எதையுமே கண்டுகொள்ளாததுபோல் கணக்குவழக்கில் மூழ்கியிருப்பார்.

ஹெட்மாஸ்டரைச் சந்திக்க வரும் வாத்தியார்கள் வையாபுரியைப் பார்வையால் துளைப்பார்கள். அவன் உதட்டைப் பிதுக்கி ஊமைபாஷையில் பதில்சொல்லியனுப்புவான்.

பாண்டியன் வெளிப்படையாகவே கேட்பார்.

''என்னவே அய்யாவப் பாக்கிறதுக்கு யாருட்ட அனுமதி வாங்கணும்.''

வையாபுரி அப்பிராணியகாகப் பார்ப்பான்.

''சத்தியமா எங்கிட்ட வாங்கவேணாம் சார்.''

பாண்டியன் கோபத்தை அடக்கிக்கொள்வார்.

''தரிசனம் எப்பத்தான் கெடைக்கும்.''

''கொஞ்சம் இருங்க. கேட்டுச் சொல்றென்.''

''வெளிய வா. இண்ணைக்கு வலிபால் நீதான்.''

அவர் ராஜேஸ்வரியை ஆதங்கத்துடன் பார்த்துவிட்டு நடப்பார். இந்த டீச்சருக்கென்ன இப்படிக்கிடந்து தவிக்கணுமென்று தலையெழுத்தா. தனியாகச் சந்திக்கும்போது இதைக் கேட்கணும். இதுக்காகவாவது ஒருதடவை சந்திக்கணும். சந்தர்ப்பம் கிடைக்காமலா போகும்.

தங்கச்சாமிமேல் ஆத்திரமாக இருக்கும். தமிழய்யாவிடம் கொட்டித்தீர்ப்பார்.

''இவருக்கென்ன சார் ஹெட்மாஸ்டர்மேல அக்கற அவரு பாடத்தவும் சேத்து நடத்துறாரு. இவரு நடத்தலன்னா அவரு கிளாஸுக்குப் போவாருல்ல. ஒருநாளைக்கு வசமா கேக்கத்தான் போறென்.''

தமிழய்யா பக்குவமாகப் பேசிச் சாந்தப்படுத்துவார்.

''அவரச் சொல்லிக் குத்தமில்ல பாண்டியன். ஹெட்மாஸ்டருக்கு அடுத்த பொறுப்புல இருக்கிற மனுசன். பையங்கள அதோகதியா விட்றமுடியுமா.''

''யாரும் வுடச்சொல்லலயே.''

''அதனால்தான் மொகஞ்சுளிக்காம வகுப்புக்குப் போறாரு. நீங்க எந்தவகுப்புல வாத்தியாரு இல்லன்னாலும் சந்தோசமாப் போறீங்கல்ல. அதப்போலதான்.''

''வாத்தியாரு இல்லனத்தான போறென். இப்படியா உக்காத்திவச்சு வேடிக்கபாக்கிறது.''

''அதப்போல இதவும் நெனச்சுகக்கிறவேண்டியதுதான். எல்லாரவும் அனுசரிச்சு குடும்பப்போங்குல சமாளிச்சாத்தான் பள்ளிக்கூடத்த நல்லபடியா நடத்தமுடியும். நம்மள நம்பி புள்ளைகள அனுப்புறாங்க. அந்த நம்பிக்கையக் கெடுத்துறக் கூடாது. என்னசொல்றீங்க பாண்டியன்.''

''நீங்தான் வாய அடச்சீட்டீகளே. இனி சொல்றதுக்கு என்னருக்கு.''

தமிழய்யா ரெண்டு வெற்றிலையை நீட்டுவார். பாண்டியன் அதைக் கோணல்மாணலாக மென்று நாக்கில் சிவப்பைத் தேடுவதில் கவனப்படுவார்.

அப்புறம் பேச்சு ஹிந்தித் திணிப்பு வேலையில்லாத் திண்டாட்டம் என்று விரியும். பாண்டியன் பேச்சாளராக அவதாரமெடுப்பார். சமீபத்தில் மகாலிங்கப்புரத்தில் நடந்த அரசியல்கூட்டம் ரூம் திண்ணையில் நடக்கும். சிறப்புப் பேச்சாளரது கனல்தெறிக்கும் பேச்சை உணர்ச்சி குறையாமல் அதே பாணியில் தோள்குலுக்கி முழங்கையசைத்து ஒலிபரப்புவார். தமிழய்யா வுக்கு ஒருவிதத்தில் சந்தோஷமாக இருக்கும்.

''எல்லாப் பேச்சாளரும் பாண்டியனுக்குள்ள இருக்கயில பொதுக்கூட்டங்களுக்கு ஏன் போகணும்.''

''சார் எண்ணைக்கிருந்தாலும் இந்த ஊருல நான் ஒரு பொதுக்கூட்டம் நடத்துறனா இல்லையான்னு பாருங்க. அதுக்கு நீங்தான் தலமதாங்கப்போறீக.

''இப்ப நீதிபோதன வகுப்புல அதுதான நடக்குது. அத சந்திக்குக் கொண்டுவரப்போறீங்க. அவ்வளவுதான.''

''கலகம் இல்லன்னா ஒலகம் இல்ல. இது பாண்டியனோட பொன்மொழி.''

''கவலைய விடுங்க. ரெண்டுபேரும் சேந்தே ஜெயிலுக்குப் போவொம். ஒங்க புண்ணியத்துல ஓசிச்சோறு கெடைக்கும்.''

''அந்தத் தியாகிப்பட்டம் எனக்குத்தான். ஒங்களுக்குக் கெடைக்கவுடமாட்டென்.''

''நாட்டுல வேல வாங்குறத்துக்குதான் போட்டின்னா ஜெயிலுக்குப் போறதுக்குமா.''

''போட்டியில்ல சார். இளைய தலைமுறையின் கடமை. காலத்தின் கட்டாயம்.''

தமிழய்யாவுக்கு மனசு குளிர்ந்துபோகும். பாண்டியனைத் தட்டிக்கொடுப்பார்.

அந்தவாரம் தமிழய்யாவின் பையன் வந்திருந்தான். ராவும் பகலும் பேச்சுவார்த்தை நடந்தது. ரங்கராஜன் ஊரில் இல்லை. பாண்டியன் அமைதியாக ஒதுங்கிக்கொண்டார்.

தகப்பன் மகனுக்கிடையே எப்போதுமுள்ள சகஜம் காயப் பட்டு புதுசாக ஒரு விறைப்பும் முறைப்பும் இருந்ததைக் கவனிக்கமுடிந்தது. ஆனாலும் பாண்டியன் எதுவும் கேட்டுக் கொள்ளவில்லை. குளிக்கப்போகும்போதும் சாப்பிடப் போகும் போதும் வாய் குறுகுறுத்தாலுங்கூட அவர் உறுத்தலை வெளிக் காட்டிக்கொள்ளவில்லை.

மறுநாள் சாயங்காலம் பையனை பஸ்ஏற்றி அனுப்பிய பிறகும் தமிழய்யாவின் முகத்தில் விசாரம் இருந்தது. வாக்கிங் போகும்போது பாண்டியன் மெல்ல பேச்சைத் தூண்டினார்.

''என்ன சார் ஒருமாதிரி இருக்கீக. ஏதும் பணக்கஸ்டமா.''

''அது நம்ம கூடப்பெறந்தது. அதுக்காக வருத்தப்பட ஆரம் பிச்சா ஒண்ணு கமண்டலம் ஏந்திக்கிட்டு காசிக்குப் போகணும். இல்ல காலத்த முடிச்சுக்கிட்டு மயானத்துக்குப் போகணும்.''

''பெறகென்னது சார்.''

''கொஞ்சம் மனக்கஸ்டம்.''

''ஆனானப்பட்ட தமிழய்யாவுக்கா. ஆச்சரியமாருக்கே.''

''பையனுக்கு வாத்தியார்வேல கெடச்சிருக்கு.''

''இது நல்ல சேதியாச்சே. குடும்பப் பாரத்த பையன் கைமாத் தீருவான். இனிமே நீங்க தாராளமா வெத்தலபோடலாம்.''

''வேல எப்படிக் கெடச்சதுன்னு கேக்கலயே.''

''கெடைக்கிறதே பெரிய காரியம். எப்படி வந்தா என்ன சார்.''

''தன்ன அடகுவச்சு வாங்கீருக்கான். அதுலதான் எனக்கு வருத்தம்.''

''அடகா.''

''ஆமாமா. பஞ்சாயத்து யூனியன் தலைவர் பால் வண்ணம் பிள்ளைக்கு இவன்மேல எண்ணைக்குமில்லாற அக்கற வந்துருச்சு. கூப்புட்டுக் குடுத்துட்டாரு.''

''அவரு சொந்தக்காரரா சார்.''

''என்வீட்டுக்காரிக்கு அண்ணன். ரெண்டுபேரு அம்மாவும் கூடப்பெறந்தவங்க. இனிமே நெருங்குன சொந்தம். பையன் அவருக்கு மருமகனாகப்போறான். அந்த ஒப்பந்தத்துலதான் வேல ஏற்பாடாகியிருக்கு.''

''ஏன் சார் அப்படி நெனைக்கணும். நல்லெண்ணத்துலதான செஞ்சிருக்காரு.''

''ரெம்ப நல்லெண்ணம். அப்படின்னா இந்த மனுசன்

என்ன செஞ்சிருக்கணும். எம்பொண்ணுக்கு வேல குடுத்துருக் கணும். தம்புள்ளைக்கு என்குடும்பத்துல பொண்ணெடுத்துருக் கணும். செய்யலயே. ஏன்னா நான் தரித்திரம்பிடிச்சவன். அந்தஸ்தில்லாறவன்.''

''அதெல்லாம் ஒணந்துதான் இப்ப நெருங்கி வந்துருக்காரு. பழசெல்லாம் மறந்துருங்க சார்.''

''எப்படி மறக்கமுடியும் பாண்டியன். அண்ணைக்கு நான் எனக்குப் பொண்ணுகேட்டுப் போகயில என்னசொன்னாரு தெரியுமா. போயும்போயும் தரித்திரம்பிடிச்ச தமிழ்வாத்தி யானுக்கா குடுக்கிறதுன்னு எளக்காரமாப் பேசுனாரு. வீட்டுக் காரிமட்டும் பிடிவாதமா இல்லன்னா என்மானம் மரியாதை யெல்லாம் காத்துல பறந்துருக்கும்.''

''அகநானூறு பாடி அம்மையார அசத்தீட்டீக போலருக்கு.''

''நான் தரித்திரம்பிடிச்சவன்தான். தரித்திரம்னா அட்டத் தரித்திரம். கொழந்தைகள வளத்து ஆளாக்குறதுக்கு என்ன கஸ்டப்பட்டொம் தெரியுமா. நல்ல துணியுண்டா சோறுதண்ணி யுண்டா. அவ்வளவு கஸ்டத்துலயும் எங்களுக்கு வைராக்கியம் கொறையல. நான் போயி அந்த மனுசன்கிட்ட எம்பாடு இப்படின்னு கைநீட்டியிருப்பனா இல்ல என்வீட்டுக்காரிதான் கண்ணக் கசக்கியிருப்பாளா. தன்னோட ஒரே பையனுக்கு அவரு பெரிய எடத்துல சம்பந்தம்பண்ணுறபோதுகூட அவ ஒருவார்த்த சொல்லி ஆதங்கப்படலயே. அவ்வளவெதுக்கு. என் கடைசிப் பொண்ணச் சொல்லுங்க. இதுவரைக்கும் ஒதவின்னு கேட்டுப் போயிருப்பாளா. அதுதான் வைராக்கியம். தன்மானம்.''

''தரித்திரத்திலும் சரித்திரம்படைத்த தமிழய்யாவுக்குத் தலை வணங்குகிறேன்.''

''பொம்பளைக்கிருக்கிற சுயமரியாத பையனுக்கில்லை யேங்கிறத நெனச்சாத்தான் வேதனையாருக்குது பாண்டியன். கையாலாகாற அப்பன நம்பிப் புண்ணியமில்லன்னு இந்த

முடிவத் தேடிக்கிட்டான்போலருக்குது. அவன் வாங்கப்போற சம்பளத்த அம்மாட்டக் குடுப்பானோ ஆத்துக்காரியிட்டக் குடுப்பானோ அதப்பத்தி எனக்குக் கவலையில்ல. இனி இருக்கிறது ஒரு பொண்ணு. நான் ரிடையராகிறதுக்குள்ள அதக் கரையேத்தீருவென். சாயிபுபையனோ சவரஞ்செய்றவனோ அவ மனசுக்குப் புடிச்சவனோட சந்தோசமாக இருக்கணும். பெற கென்ன கவல. கடைசிவரைக்கும் கடையில கணக்கெழுதி யாச்சும் அவஅம்மாவக் காப்பாத்துவென்.''

தமிழய்யா ரெம்ப உயரத்தில் நடந்துகொண்டிருந்தார். அவர் இப்படி உடைந்து பார்த்தில்லை. பாண்டியன் ரெண்டுமுறை தேற்றினார்.

''எல்லாம் நல்லபடியா நடக்கும். கவலைய வுடுங்க சார்.''

அங்கங்கே மஞ்சள்குளித்துக்கொண்டிருந்த மரங்கள் மெல்ல மெல்ல முக்காடுபோடத் தொடங்கின. அவர்கள் மௌனத்தைச் சுமந்துகொண்டு ரூமுக்குத் திரும்பினார்கள்.

காலையில் ஜூனியர் மராத்தான் ரூமுக்கு வந்து பாண்டியனிடம் சொன்னான்.

''நைனா வாறதுக்கு கொஞ்சம் நேரமாகும்னு சொல்லச் சொன்னாரு சார்.''

''வேல வீட்டுல நடக்குதா காட்டுலயா.''

''தோட்டத்துல மொளகாச்செடிக்கு மருந்தடிக்காக.''

''நல்ல எக்சசைஸ்தான். நீ போகலயா.''

''நானும் மருந்தடிச்சிட்டுத்தான் வாறென்.''

''பெரிய பள்ளிக்கூடத்துல படிப்ப முடுச்சிட்டு வாறயாக்கும்.''

பாண்டியன் ஜூனியரைத் தட்டிக்கொடுத்து அனுப்பி வைத்தார். அவருக்கு முதல் ரெண்டுபீரியடு டிரில் இருந்தது. அதுக்குப் பையன்களை நியமித்துவிட்டு ஏழாம்வகுப்புக்குப் போனார். பிள்ளைகளுக்குக் கொண்டாட்டம். ஆறாம்வகுப்பில் ராஜேஸ்வரி பாடம் நடத்திக்கொண்டிருந்தாள். பாண்டியன் கடந்துபோனதை அவள் கவனிக்கவில்லை.

கொஞ்சதூரம் அமைதியாக இருந்துவிட்டு பாடத்தை ஆரம்பித்தார் பாண்டியன்.

''போனவருசம் குத்தாலத்துல குளிக்கும்போது வழுக்கி வுழுந்து முட்டிய ஒடச்சவன் யாரு.''

ஒரு பையன் எழுந்து நின்றான்.

''இப்ப தாவலயாகிப்போச்சு சார்.''

''பெறகு கொரங்குகிட்டக் கடிபட்டது எவன்.''

''இவன்தான் சார். இவன்தான் சார்.''

எல்லாரும் இன்னொருவனைப் பிடித்து எழுப்பிவிட்டார் கள். அவன் வெட்கத்தில் தலைகுனிந்திருந்தான்.

''கொரங்கு ஏன் கடிச்சதாம்.''

கடைசி வரிசையிலிருந்து ஒரு குரல் வந்தது.

''கொரங்குக்குப் போட்ட பொரிகடலைய இவன் பெறக்கித் தின்னான் சார். அதனால அதுக்குக் கோவம் வந்துருச்சு.''

''அப்படின்னாச் சரி. அடுத்ததடவ போகும்போது அதே கொரங்கத் தேடிக் கண்டுபிடிச்சு பதிலுக்குக் கடிக்கணும் தெரிஞ்சதா.''

எல்லாரும் சிரித்தார்கள்.

''சார் இவன போனவாரம் கழுத கடிச்சிருச்சு.''

''கழுதைக்கு அவன்மேல என்ன கோவம்.''

''சும்மா நின்னுகிட்ருந்ததுக்குப் பின்னாலகூடிப்போயி காதுல கட்டெறும்ப வுட்ருக்கான். அது லவக்குனு இடுப்புல கவ்வி கறியத் தோண்டீருச்சு.''

பிள்ளைகளின் ஆரவாரம் கூரையில் மோதியது.

''சைலன்ஸ்... சைலன்ஸ்... குத்தாலத்தப்பத்தி ஒருத்தரு நல்ல நூல் எழுதியிருக்காரே அவரு பேரு என்ன அந்த நூல் எது தெரியுமா.''

''திரகூடராசப்பக் கவிராயர்.''

''குற்றாலக் குறவஞ்சி.''

''கரெக்ட். அந்தக் காலத்துலயே அவரு வாலிபால் வெளையாட்டப்பத்தி எப்படிப் பாடியிருக்காரு தெரியுமா.''

அவர் வசந்தவல்லி பந்தாடிய காட்சியை வரிவரியாக விளக்கி விளையாட்டையே வார்த்தைகளில் நடத்திக்காட்டினார்.

**''பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை**
**புரண்டு புரண்டாட - குழல்**
**மங்குலில் வண்டு கலைந்தது கண்டு**
**மதன்சிலை வண்டோட - இனி**
**இங்கிது கண்டுல கென்படும் என்படும்**
**என்றிடை திண்டாட - மலர்ப்**
**பங்கய மங்கை வசந்த சவுந்தரி**
**பந்து பயின்றாளே.''**

பந்தாட்டக்குரல் கேட்டதும் ஆறாம்வகுப்பு அமைதிப் பட்டது. கொஞ்சநேரம் கழித்து ஆறில் ராஜேஸ்வரியின் பாடம் கேட்டது. உடனே ஏழு அமைதிப்பட்டது. ரெண்டு பீரியடு போனதே தெரியவில்லை.

கிளாஸ் முடிந்து வெளியேறும்போது ஆறாம்வகுப்பு வாசலில் ராஜேஸ்வரி நின்றுகொண்டிருந்தாள். பிள்ளைகள்

இடைவேளைக்காக வெளியே போயிருந்தனர். மிஞ்சியிருந்த பெண்களும் ஒருவரையொருவர் இடித்துக்கொண்டு வெளியே வந்தனர். பாண்டியனைப் பார்த்ததும் ராஜேஸ்வரி சுவரைச் சுரண்ட ஆரம்பித்தாள். அவர் நெருங்கிப் போனார்.

''டீச்சருக்கு சொவரப்பத்திக் கவல வந்துருச்சா. பயப்படாதங்க. ரெம்பநாளைக்குத் தாங்கும்.''

அவள் அழகாகச் சிரித்தாள்.

''ஒங்களப் பாராட்டுறதுக்காகக் காத்துருக்கென்.''

''பாராட்டா. அப்படிநான் என்ன பெரிசா கிழிச்சிட்டென்.''

''நல்லா பாடுறீக சார்.''

''ஒகோ அதச் சொல்றீகளா. பையங்க கழுதையப்பத்திப் பேசுனதும் பாட்டுநெனப்பு வந்துருச்சு.''

அவள் இன்னும் அகலச் சிரித்தாள்.

''ஒங்க கொரலு அருமையாயிருக்கு.''

''தமிழ்ல வஞ்சப்புகழ்ச்சி அணின்னு ஒண்ணு உண்டு.''

''உண்மையாச் சொல்றென்.''

பாண்டியன் பூரித்துப்போனார்.

''ரெம்ப நன்றி டீச்சர். இது எங்க ரூம்ல இருக்கிறவுகளுக்குத் தெரியலயே. நான் பாட ஆரம்பிச்சா படுக்கைய விரிச்சிறாக. அது சரியே எவ்வளவு காலத்துக்கு ஆபீஸ்ல அடஞ்சுகெடக்கிறதா உத்தேசம். வெளிய கிரவுண்டுல வெளையாட்டு நடக்குது அதுக்குனு தண்டமா ஒரு டிரில்மாஸ்டர் இருக்காங்கிறதத் தெரிஞ்சிக்கிறவேணாமா.''

''எனக்கு வெளையாட்டுல பிரியமில்ல சார்.''

''ஆபீஸ்ல உக்காந்து நகத்தக் கடிக்கிறதுலதான் பிரியமாக்கும். அதென்ன மிட்டாயா. வேணும்னா தீத்தம் சார் கடை

யில இருக்கிற அத்தன மிட்டாயவும் வாங்கிக் குடுத்துறென். சாவாசமாத் தின்னுங்க.''

''எனக்கு வெளையாடத் தெரியாதே.''

''டிரில்மாஸ்டருக்கே தெரியாது. கத்துக்கிறவேண்டியது தான். மொதல்ல ஆபீஸவுட்டு வெளிய வாங்க. வந்து கிரவுண்டுல நடக்கிறதப் பாருங்க. பாக்கிறதுக்கு டிக்கெட்டெல்லாம் கெடையாது. அதுக்குப்பதிலா எப்பயாச்சும் வீட்டுப் பக்கம் வந்தா வாய்க்கு ருசியா ஒருவேளச் சாப்பாடு கேப்பொம் அவ்வளவுதான். குடுப்பீகளா இல்ல வெரட்டியடிப்பீகளா.''

''தாரளமா வாங்க.''

''அப்பாடா. அண்ணைக்குத்தான் இந்த நாக்குக்கு உயிர் வரப்போகுது.''

பாண்டியன் கற்பனைகளை மென்றுகொண்டே போனார். எதிரே எக்ஸ்பிரஸ் வேகத்தில் வந்த கிருஷ்ணசாமி அவரது கற்பனைகளைக் கலைத்தார்.

''பாண்டியன் சாருக்கு நான் ரெம்ப நன்றிக்கடன் பட்ருக்கென்.''

''நான்தான் சார் ஒங்களுக்கு நன்றி சொல்லணும்.''

''அப்படியென்ன ஒங்களுக்கு ஒதவிசெஞ்சிட்டென்.''

''இதே பெரிய ஒதவிதான் சார்.''

''எதச் சொல்றீக.''

பாண்டியன் முழித்துக்கொண்டார்.

''ஒண்ணுமில்ல சார். ரெண்டுபீரியடு நெழல்ல இருக்கிறதுக்கு ஒதவுனீகளே அதச் சொன்னென்.''

கிருஷ்ணசாமி பாண்டியனை வித்தியாசமாகப் பார்த்துவிட்டு வகுப்புக்குப் போனார்.

ரெண்டுநாள் கிரவுண்டில் வெயில்நேரம் விளையாட்டு

நடக்கையில் ராஜேஸ்வரி வகுப்புவாசலில் நின்று கவனித்தாள். மூணாம்நாள் சாயங்காலம் ருக்மணியிடமிருந்து பிரிந்து கிரவுண்டுக்குப் போனாள். பெரிய பெண்கள் டென்னிக்காய்ட் விளையாடுவதை ஆர்வத்துடன் பார்த்தாள். புதுப்பார்வையாளர் வந்த சந்தோஷத்தில் பெண்கள் மும்முரமாக விளையாடினர். பாண்டியன் ஓடியாடி விசிலடித்தார். ரிங் வீசும் முறைகளை ஸ்டைலாகச் சொல்லிக்கொடுத்தார்.

ராஜேஸ்வரிக்கு விளையாட்டில் ஆசைவந்தது. அடிக்கடி பெண்களுடன் விளையாட ஆரம்பித்தாள். பாண்டியனும் பையன்களும் விளையாடுவதை ரசித்தாள்.

ரங்கராஜன் பாண்டியனைப் பாராட்டினார்.

''பாண்டியன் இப்ப ஒங்க வெளையாட்டு ஜோரா இருக்கறது.''

''அப்ப இதுக்குமுந்தி நல்லால்லன்னு சொல்றீக.''

''அப்படியில்ல. நன்னா மெருகேறியிருக்கறது.''

''இதுல ஒரு சங்கதி என்னன்னா வெளையாடுற வனுக்குமட்டும் இன்ட்ரஸ்ட் இருந்தா போதாது சார். பாக்கிற வுகளுக்கும் வேணும். அப்பத்தான் விறுவிறுப்பு இருக்கும்.

''ரசிக்கத் தெரியணுமே. அதச் சொல்லுங்கோ.''

''வெளையாடத் தெரிஞ்சா ரசன தானா வரும்.''

ரங்கராஜன் தமிழய்யாவிடம் ''பார்த்தேளா'' என்று கண் சிமிட்டினார். தமிழய்யா டப்பாவுக்குள் கலர்சுண்ணாம்பைத் தோண்டினார்.

''பாண்டியன் வெளையாடுறதுக்குன்னே படிச்சவர். சாமி இனிமேத்தான் கத்துக்கிறணும்.''

ரங்கராஜனுக்கு உள்ளுக்குள் சந்தோஷமிருந்தாலும் சின்ன வருத்தம் உறுத்தாமலில்லை.

இப்படித்தான் பாண்டியனுக்கும் ராஜேஸ்வரிக்கும் பரிச்சயம் ஏற்பட்டது. அதுக்குப்பிறகு அவர்கள் சந்திப்பதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக்கொண்டார்கள். ராஜேஸ்வரி இப்போதெல்லாம் அக்ரஹாரமுனைவரை வந்து ஸ்கூலுக்குத் திரும்பினாள். பாண்டியன் அவளுடன் பேசிக்கொண்டே பின் தொடர்ந்தார். கொஞ்சநேரத்துக்குள் நிறையப் பேசினார்கள்.

பாண்டியன் அவ்வப்போது தமிழய்யாவுக்கும் ரங்கராஜனுக்கும் டிமிக்கிகொடுத்துவிட்டு ராஜேஸ்வரியின் வீட்டுக்குப் போய்விடுவார். சாயங்காலம் வாக்கிங்போய்த் திரும்பும்போது சிலநாள் குழந்தைச்சாமியின் ஹோட்டல் வந்ததும் தலைமறைவாகிவிடுவார். குழந்தைச்சாமி தமிழய்யாவிடம் அக்கறையாக விசாரிப்பார்.

''பாண்டியன் ஏன் வரல. தமிழய்யாவுக்கு அவரில்லாம சாப்பாடு ருசிக்காதே.''

தமிழய்யா சமாளிப்பார்.

''எளவட்டப்புள்ளைக சினிமா அதுஇதுன்னு போயிட்டு வருவாங்க.''

''ரங்கராஜன் சாருக்கு அதெல்லாம் புடிக்காதா.''

ரங்கராஜன் சொல்லுவார்.

''நேக்குப் பிடிச்சது ஒங்க ஹோட்டல் பதார்த்தந்தான். போறுமா.''

தமிழய்யாவுக்குப் புரிந்துவிடும். உடனே பேச்சை மாற்றிவிடுவார்.

பாண்டியன் சினிமாவுக்குப் போனால் ஒரு கவுளி இளம்வெற்றிலையும் அதுக்கேற்ற கழிப்பாகும் வாங்கிவர மறப்பதில்லை. சிலநேரம் தேடிப்பிடித்து பச்சைப்பாக்குகூட வாங்கிவருவார். தமிழய்யாவின் வாய்க்குச் சந்தோஷம் தாங்காது.

ரங்கராஜனையும் பாண்டியன் மறக்கமாட்டார். அவருக்கு அம்பிவிலாஸ் அல்வாவும் பக்கோடாவும் வரும். ரங்கராஜன் சந்தேகத்தில் கேட்பார்.

''நேக்குத்தான் வாங்கிண்டு வந்தேளா.''

''ஒங்களுக்கேதான் சார்.''

''வெத்தலையும் அல்வாவும் கொடுத்து எங்க வாய அடைக்கறேள்.''

''ஒரு பிரியந்தான்.''

''யாருமேல.''

''எல்லாருமேலயுந்தான்.''

தமிழய்யா ஒரு செய்யுள்பகுதியைச் சொல்லுவார்.

"நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை."

பாண்டியன் தமிழய்யாவை சிக்கலாகப் பார்ப்பார். ''கலவைய விடுங்க பாண்டியன் '' என்று அவர் கண்ணால் பேசுவார். அதுபோதும் பாண்டியனுக்கு. உடனே பாட்டுக் கச்சேரிக்குத் தயாராகிவிடுவார்.

ராஜேஸ்வரியுடன் விளையாட்டுத்தனமாக ஆரம்பித்த பேச்சு இவ்வளவு நெருக்கத்தில் கொண்டுவந்து விடுமென்று பாண்டியன் எதிர்பார்க்கவில்லை. நினைத்தால் ஆச்சரியமாக இருந்தது. சிலசமயம் மலைப்பாகக்கூட இருந்தது.

அவளைப் பார்க்கமுடியாத நாட்களில் தவித்துப்போனார். ரூமில் சோகப்பாட்டுப் பாடினார். திண்ணையில் தனியாக உட்கார்ந்து சிந்தனையிலாழ்ந்தார். தமிழய்யா விசாரித்தால் என்னென்னமோ சொல்லி மழுப்பினார்.

லீவு வருவதுகூட அவருக்கு உறுத்தலாக இருந்தது. ரங்கராஜன் இல்லாத சமயத்தில் பேச்சுத்துணையில்லாமல்

தமிழய்யாவைத் தனியாக விட்டுவிட்டுப் போகமுடியாது. அப்படியும் அவரிடம் பொய்சொல்லிவிட்டு கொஞ்சநேரம் ராஜேஸ்வரியின் வீட்டுக்குப்போய்த் திரும்புவார். தமிழய்யா விடம்கூட பொய்சொல்லவேண்டியிருக்கிறதே என்று பிறகுதான் மனசு கிடந்து அடித்துக்கொள்ளும்.

ஒருநாள் பஸ்ஸ்டாண்டுப் பக்கம் சைன்ஸ் தங்கச்சாமி பார்த்து விட்டார். அவர் சகஜமாகக் கேட்டதுகூட வித்தியாசமாகத் தெரிந்தது.

''என்னசார் தனியா இந்தப்பக்கம்.''

ஏதோ சாக்குச்சொல்லிச் சமாளிக்கவேண்டியிருந்தது.

''டெய்லருகிட்ட சட்ட தைக்கிறத்துக்குத் துணி குடுத்துட்டு வாறென்.''

''ஒங்க ஸ்டைலுக்கேத்தபடி தைக்கிற டெய்லர்கூட இங்க இருக்கானா. இவ்வளவுநாளா எனக்குத் தெரியாமப்போச்சே. அது யாரு சார். நானும் குடுக்கணும்.''

பாண்டியன் நெளிந்தார்.

''இப்பத்தான் மொதல்ல குடுத்துருக்கென். நல்லாத் தைக்கானான்னு பாத்துட்டுச் சொல்றென். ஏன்னா ஒங்க துணி வீணாகியிறக்கூடாது பாருங்க.''

தங்கச்சாமியிடமிருந்து தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி தமிழய்யாவிடம் தஞ்சம்புகவேண்டிய நிலைமை.

நல்லவேளைக்கு வாட்ச்மேன் வீரணன் தட்டுப்பட்டான். இல்லையென்றால் தமிழய்யாவிடமும் ஏதாவது உளறிச் சமாளிக்கவேண்டியிருந்திருக்கும். பாண்டியன் பெருமூச்சு விட்டபடி அவனைக் கூப்பிட்டார்.

''வேய் திருட்டுத்தனமா ஒளிஞ்சுஒளிஞ்சு ஓடுறயே என்ன சமாச்சாரம். இங்க வா தமிழய்யா கூப்புடுறாரு.''

தமிழய்யா சொன்னார்.

''ஏன்சார் அவர வம்புக்கிழுக்கிறீங்க. முக்கியமான வேலையாப் போறாரோ என்னமோ.''

''பொல்லாற வேல.''

வீரணன் வந்து வாசல்படியில் உட்கார்ந்தான்.

''டிரில்மாஸ்டரய்யா கூப்புட்டு வராம இருக்கமுடியுமா.''

''இதுல ஒண்ணும் கொறச்சலில்ல. ஆமா எங்க அவசரமாப் போனீகளோ.''

''இந்தி டீச்சரம்மாவுக்கு எவ்வளவு எண்ண வேணும்னு அய்யாத்தொரசார் வீட்ல கேட்டுட்டு வரச்சொன்னாக.''

''அப்படின்னா முக்கியமான வேலதான். போயிக் கேட்டுட்டு வந்துறீகளா இல்ல கொஞ்சநேரம் இங்க இருந்துட்டுப் போறீகளா. ஒங்ககிட்ட ஒரு வெசயம் பேச வேண்டியிருக்கு.''

''அய்யா எப்ப அனுப்புறீகளோ அப்ப போயிக்கிறென்.''

பேச்சு போகிற தினுசைப் பார்த்தால் பாண்டியன் அவனை லேசுக்குள் விடமாட்டார் என்று தமிழய்யாவுக்குப் புரிந்து விட்டது. என்ன விவகாரமோ. மெல்ல எழுந்தார்.

''நீங்க பேசிக்கிட்ருங்க. நான் போயி கட்டையக் கெடத்துறென்.''

தமிழய்யா ரூமுக்குள் போனதும் பாண்டியன் நெருங்கி வந்தார். வீரணனுக்கு உதறலெடுத்தது.

''என்னய்யா...''

''தெரியாமத்தான் கேக்கென். நீ ஸ்கூலுக்குத்தான வாச்மேன்.''

''ஏன்யா அப்படிக் கேக்கீக.''

''இல்ல ஒருநா ராத்திரி மகாலிங்கபுரம் தியேட்டர்வாசல்ல ஒன்னப் பாத்தமாதிரி இருந்துச்சு. ஒருவேள அங்க வேலைக்குச் சேந்துட்டயோன்னு ஒரு சந்தேகம்.''

அவன் நினைத்தது சரியாக இருந்தது. இனி அவ்வளவுதான். கிண்டிக்கிளறாமல் விடமட்டார். உண்மையைச் சொல்லி விடவேண்டியதுதான். அவன் எச்சுக்கூட்டி விழுங்கினான்.

''சினிமாக்கொட்டக வாசல்ல நின்னது வாஸ்தவம்தான்யா. நீங்க உள்ள உக்காந்துருக்கிறதக்கூடப் பாத்தென்.''

''வந்து ஒருவார்த்த பேசியிருக்கலாமில்ல. ஒன்னக் கூப்புடுறதுக்குத் திரும்பிப்பாத்தென். அதுக்குள்ள ஒடி ஒளிஞ்சுக்கிட்டயே.''

''ஒங்ககிட்டப் பேசணும்னு நெனப்புத்தான். ஆனா நான் இருந்த அவசரத்துல ஒண்ணுமே ஓடல. பெறகும் ஒங்ககிட்ட வெசயத்த எப்படிச் சொல்றதுன்னு கூச்சம்.''

''கூச்சப்படுற அளவுக்கு அப்படியென்ன வெசயம்.''

''அது வந்துய்யா...''

''எது வந்து. சும்மா சொல்லுவே.''

அவன் தலையைச் சொறிந்தபடி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு மறுபடியும் தயங்கினான்.

''கொமரிப்பொண்ணு மாதிரி அய்யாவுக்கு வெக்கம் புடுங்கித்திங்கிறதப் பாரு.''

''மேலக்கொட்டகையில எம்ஜியார் படம் ஒண்ணு நல்லாருக்குதுன்னு எல்லாரும் சொன்னாக. நானும் வீட்டுக் காரியும் போயி மாட்னி பாத்துட்டு வந்தொம்.''

''ஒனக்கு எம்ஜியார் படந்தான் புடிக்குமா.''

''பொதுவா அவரு படந்தான் பாப்பென். சண்ட பாட்டு எதும் வேறதுல ருசிக்கிறதில்ல.''

''சரி ரெண்டுபேரும் மாட்னி பாத்துட்டு வந்தீக.''

''ஒரு கட்டத்துல அவரு காதலிய அப்படியே அலக்காத் தூக்கி கிறுவாணம் சுத்தி கட்லுமெத்தமேல பொத்துனு போடு வாரு. அந்த அம்மா மேலயும் கீழயும் ஆடும். ஒடனே அவரு அழகான பாட்டு ஒண்ண எடுத்துடுவுவாரு. கொட்டகை யெல்லாம் விசில் சத்தம் கேட்டு முடியாது. அந்தக் கட்டம் எனக்கு ரெம்பப் புடிச்சுப்போச்சு.''

''வே நீ பெரிய ரசிகன்தான்.''

''அந்தப் பாட்டும் கும்மாளமும் கொஞ்சநாளா மனசவுட்டுப் போகவேயில்ல. அதுபாருங்க ஒருநா வெளையாட்டுப்போல என் வீட்டுக்காரியத் தூக்கி கயத்துக்கட்லுமேல போட்டுட் டென்.''

''கிழிஞ்சது போ. நீ எம்ஜியாராயிட்டயா. வீட்டுல சினிமாவே நடத்தீட்ட.''

''கட்லு பாரம் தாங்காம ரெண்டா ஒடஞ்சு பல்ல இளிச் சிருச்சு. வீட்டுக்காரி மூச்சுப் பேச்சில்லாம மட்டமல்லாக்கக் கெடக்கா.''

''கதாநாயகிக்கு இப்படியொரு சோதனையா. கதாநாயகன் என்ன செஞ்சாரு. சோகப்பாட்டுப் பாட ஆரம்பிச்சிட்டாரா.''

''அவ மொகத்துல தண்ணியத் தொளிச்சுத் தூக்கி நிறுத்துனா தொவண்டுக்கிட்டே போறா. ஒரு எட்டுக்கூட நடக்கமுடியல.''

''எங்கயும் அடிபட்ருச்சா.''

''ஒரு கிண்ணி கழண்டு போச்சு.''

''வே அறிவுகெட்ட காரியம் பண்ணீட்டயே.''

''நல்ல வேளைக்கு அப்ப புள்ளீக வீட்டுல இல்ல. ஓடியாடி ஒரு மாட்டு வண்டி சம்பாரிச்சு ராவோட ராவா அவள மகாலிங்க புரத்துக்குக் கொண்டு போனெ்னென். எலும்பு முறிவுக்கு வைத்தியம்

பாக்கிற நாடாரு நடுக்கொட்டகைய ஒட்டி சந்தப்பேட்டையில தான் இருக்காரு. அங்கபோயிப் பாத்தா அவரு சினிமாவுக்குப் போயிட்டாருன்னு சொல்லீட்டாக. அதனாலதான் கொட்ட கைக்கு ஓடிவந்து அவரத் தேடிப்புடிச்சு கையோட கூட்டீட்டுப் போனென். அப்பயே அவரு மாவுப்பச மட்டையெல்லாம் சம்பாரிச்சு வலியோடவலியா கிண்ணிய எடுத்துவச்சுக் கெட்டுனாரு. வீட்டுக்காரி போட்ட கூச்சலு கொட்டகவரைக்குக் கேட்டுருக்கும். ஒருவழியா வீடுவந்து சேருறதுக்கு சாம மாகிப்போச்சு.''

பாண்டியனுக்குக் கோபம் முட்டிக் கொண்டு வந்தது.

''ஒனக்கு கொஞ்சமாச்சும் மூளையிருக்கா. நான் அங்கதான இருக்கென். வெசயத்தச் சொல்லியிருக்கலாமில்ல. தனியாக் கெடந்து தவிச்சிருக்கயே முண்டம்.''

''நான் செஞ்ச தப்புக்கு நான்தானய்யா அனுபவிச்சுத் தீரணும். ஒங்களக் கஸ்டப்படுத்துனா எப்படி.''

''அதுசரி. ஒனக்கு இந்தக் கதியாகியிருக்கணும். அப்பத் தெரியும். ஒன்வீரத்தக் காட்டுறதுக்கு பொம்பளதானா கெடச்சது. வழியில போற ஆம்பள எவன்கூடயாவது சண்டபோட வேண்டியதுதான. வீட்டுக்காரிக்கு இப்ப எப்படி இருக்குது.''

''எந்திரிச்சு கம்பூண்டி நடமாடிக்கிருவா. வையாபுரி சம்சாரந்தான் ஒவணியம் பாத்துக் கவனிச்சுக்கிருது.''

''வையாபுரிக்கு உண்மையா நடந்த கத தெரியுமா.''

''ஒங்களத்தவர ஆருக்கும் தெரியாது.''

''அவன் வரட்டும் சொல்றென்.''

''ஒங்களுக்குப் புண்ணியமாப்போகுது. ஆருட்டயும் சொல்லவேணாம்யா. என் வீட்டுக்காரி காதுக்கு எட்டுனா அவ்வளவுதான் ஒருநாளைக்கு ஒரு வெளக்கமாறு காணாது.''

''வீராதி வீரனாச்சே. வாங்கிக் கட்டிக்கயேன்.''

''இப்ப சினிமாப் பாக்கிற பழக்கத்த அடியோட வுட்டுட்டன்யா.''

''ஏன் போகவேண்டியதுதான. வீட்டுக்காரிக்கு இன்னொரு காலு பாக்கியிருக்குதே. அந்தம்மாவ வந்து பாக்கிறதுக்குக்கூட வழியில்லாமப் பண்ணீட்டயே பாவி. வந்து என்னசொல்லி வெசாரிக்கிறது. அதுக்குப் பழம் முட்டன்னு சத்தான பண்டங்கள வாங்கிக் குடுக்கயா. கையில பணமிருக்குதா.''

''எனக்குத்தக்கபடி செய்றன்யா.''

பாண்டியன் ரூமுக்குள் போய் பெட்டியில் பணம் எடுத்து வந்து கொடுத்தார்.

''இந்தா இத வச்சுக்கோ. தேவையிருந்தா அப்பப்ப வந்து கேளு. கூச்சப்பட்டுக்கிட்டு இருக்காம காலாகாலத்துல அந்தம் மாவ நல்லா நடக்கவைக்கிறதுக்குண்டான வழியப் பாரு.''

வீரணன் குறுகிப்போனான்.

''வேணாம்யா...''

''இப்ப வாங்கப் போறயா இல்லையா.''

அவன் வாங்கிக்கொண்டான்.

''ஒன்வீட்டம்மா ஒருமாசத்துக்குள்ள பழையபடி நட மாடலன்னா அவ்வளவுதான். ஒனக்கு ஒரு கிண்ணி போயிரும். அதமட்டும் நல்லா ஞாபகத்துல வச்சுக்கோ.''

அவன் பலமாகத் தலையாட்டியபடி எழுந்தான்.

''அப்ப நான் போயிட்டு வாறன்யா.''

எட்டுவைக்கப் போனவனை அவர் நிறுத்தினார்.

''கொஞ்சம் நில்லுவே. முக்கியமான சமாச்சாரம் ஒண்ணக் கேக்க மறந்துட்டென் பாரு. ஆமா ஊருக்குக் கெழக்க வரிச வரிசையா பனமரம் நிக்குதே அதுல பதினி எப்ப வரும்.''

''இன்னியும் மூணுமாசம் ஆகணும்யா. கோடையிலதான் எறக்குவாக.''

''வெள்ளப்பதினி கெடைக்குமா.''

அவன் திருதிருவென்று முழித்தான். அவர் குரலை இறக்கிக் கேட்டார்.

''வெள்ளப்பதினி தெரியாதா சுண்ணாம்பு தடவாற பதினி.''

''எனக்கு அதப்பத்தித் தெரியாதுய்யா.''

அவன் வேகமாக நடையை விட்டான். பாண்டியன் குரல் கொடுத்தார்.

''வேய் டீச்சரம்மா வீடு இந்தப்பக்கம் இருக்குது.''

கடைக்கு எண்ணெய் சீயக்காய் வாங்கப் போயிருந்த ரங்கராஜனும் தமிழய்யாவும் வந்துசேர்ந்தார்கள். பாண்டியன் ரங்கராஜனிடம் கோபித்துக்கொண்டார்.

''என்னத் தனியா தவிக்கவுட்டுட்டுப் போயிட்டீகளே. இது ஒங்களுக்கே நல்லாருக்கா.''

''கொஞ்சநாள்ல எங்களவிட்டுப் பிரிஞ்சு போறவா இப்படிப் பேசலாமோ. அதுக்கு இப்பவே எங்களப் பழக்கப் படுத்திக்கறொம்.''

''இதுவேறயா. எங்கள கழுத்தப்புடிச்சு வெளிய தள்ளா மருந்தாப்போதும்.''

தமிழய்யா பஞ்சாயத்துப்பண்ணினார்.

''ரெண்டுபேரும் என்ன விட்டுட்டுப் போகாமருந்தாச் சரி.''

ரங்கராஜனின் கையில் எண்ணெய்ப் பாட்டிலைக் கவனித்தார் பாண்டியன்.

''தீத்தம் சார் எண்ணெய அளந்து ஊத்துனாரா சொட்டுச் சொட்டா எண்ணிக் குடுத்தாரா.''

''கொஞ்சமா தெரியறதா. எங்கதகுதி அவ்வளவுதான்.''

ரங்கராஜன் பாட்டிலைத் தூக்கி எண்ணெய் அளவைப் பார்த்துக்கொண்டார். பாண்டியனுக்கு மனசு சங்கடப்பட்டது.

''நீங்க ஒண்ணு சார். நான் தீத்தம் சாரப்பத்திச் சொன்னென். தப்பா எடுத்துக்கிட்டீக. இனிமே ஒங்ககிட்ட ஒருவார்த்த பேசமாட்டென்.''

''எங்களோட பேசறதுக்கு என்ன இருக்கறது பாண்டியனுக்கு.''

ரங்கராஜன் நைசாக ரூமுக்குள் நுழைந்தார். தமிழய்யா பெட்டியையொட்டி தலையணைபோட்டுச் சாய்ந்தார். இன்னொரு பெட்டியில் பாண்டியனின் விரல்கள் தாளம்பிரிக்க ஆரம்பித்தன. அவர் சிந்தனையில் மூழ்கி ஒரு பாட்டைக் கொண்டுவந்தார்.

''சமரசம் உலாவும் இடமே
நம் வாழ்வில் காணா
சமரசம் உலாவும் இடமே...''

மாணிக்கம் தண்ணீர் கொண்டுவந்து இறக்கினான். ரங்கராஜன் அவனைப் பிடித்துக்கொண்டார்.

''நேத்து ஹெட்மாஸ்டரோட என்ன சமாச்சாரம் தனியா பேசிண்டிருந்த.''

அவன் சங்கடத்தில் முழித்தான்.

''அவருட்டத் தனியா பேசுறதுக்கு என்னருக்குது சாமி.''

''அவருக்கு இருக்குமில்லையா.''

''சும்மா கூப்புட்டுப் பேசுவாக. தண்ணியெடுக்கிறது ஆபீசச் சுத்தப்படுத்துறதுன்னு ஏதாச்சும் சொல்லுவாக.''

''அதுக்கு அவ்ளோ நேரம் பேசணும் பாரு. நான் சிண்டு வைக்கலயே.''

அவன் தயங்கினான்.

''அதெதுக்கு சாமி. அவுக சொன்ன வார்த்தைய ஒங்ககிட்டச் சொல்ல நீங்க சொல்றத அவுககிட்டச் சொல்ல. வீண் பொல்லாப்புத்தான.''

''நான் எதுவும் ஒங்கிட்டச் சொன்னனா.''

''அப்ப அவுகளும் சொல்லன்னு வச்சுக்கங்களேன்.''

பாண்டியன் எழுந்துவந்து வாசலில் ஒற்றைக்காலில் நின்றார்.

''என்னவே வச்சுக்கிறது. அவருதான் ஒங்கிட்ட பொறணி பேசியிருக்காரே.''

''தப்புத்தவறா ஒண்ணும் பேசலசார்.''

''அப்ப சொல்லித் தொலைக்கவேண்டியதுதான. மென்னு மென்னு விழுங்குறயே.''

ரங்கராஜன் புறவாசலில் நின்றிருந்தார். மாணிக்கம் நடுவில் மாட்டிக்கொண்டான். தமிழய்யா எழுந்து பெட்டியில் சாய்ந்தபடி கவனிக்கத்தொடங்கினார்.

''ஆண்டுவிழா நடந்தது பாருங்க.''

''அது நடந்து ஒரு வாரமாயிடுத்தே.''

''சாமி அதுக்கு இல்லாம ஊருக்குப் போயிட்டாரே ஏன்னு கேட்டாரு.''

''நான் இல்லாம ஆண்டுவிழா நின்னுடுத்தா.''

பாண்டியன் முந்தினார்.

''ஜாம்ஜாம்னு நடந்தது. பாக்கக் குடுத்துவைக்கல ஒங்களுக்கு.''

''எதப் பார்க்கறதுக்கு.''

''அவரவருக்குப் புடிச்சத.''

''அதனாலதான் ஊருக்குப் போயிட்டென்.''

மாணிக்கம் பாண்டியனிடம் வந்தான்.

''சார் கொஞ்சம் வழிவுடுறீகளா.''

ரங்கராஜன் நெருங்கிவந்தார்.

''நான் ஆண்டுவிழாவுக்கு வராத சமாச்சாரத்தக் கேக்கறதுக்கு அவ்ளோ நேரம் பேசணுமா.''

பாண்டியன் மாணிக்கத்துக்கு வழிவிட்டார். அவன் திரும்பிப் பார்க்காமல் நடந்தான்.

தமிழய்யா கண்மூடியிருந்தார். அவரது நினைவுகள் ஆண்டு விழா நிகழ்ச்சிகளில் கலந்தன.

என்ன இருந்தாலும் ரங்கராஜன் ஊருக்குப் போயிருக்கக் கூடாது. ஆண்டுவிழா பொதுவான காரியம். பையன்களும் வாத்தியார்களும் குடும்பக் குதூகலத்தில் நடத்தக்கூடியது. இதில் வித்தியாசம் பார்க்கக்கூடாது.

பாண்டியனுக்குக்கூட வருத்தந்தான். எவ்வளவோ சொல்லி நிறுத்திப்பார்த்தார்.

''என்னசார் இது. எங்கள அம்போன்னு வுட்டுட்டுப் போறீகளே. எங்க வெளையாட்டு நாடகம் எதவும் பாக்க மனசில்லையா. அப்படி எங்கமேல என்ன கோவம்.''

''நான் ஊருக்குப் போயாகணும் பாண்டியன்.''

ரங்கராஜன் பிடிவாதமாகக் கிளம்பிவிட்டார். பாண்டிய னுக்கு முகம் சிறுத்துப்போயிற்று. தமிழய்யா தைரியம் சொன்னார்.

''நீங்க கவலப்படாதங்க பாண்டியன். எல்லாம் தன்னால நடக்கும்.''

''ஒரு மனுசனப் புடிக்கலங்கிறதுக்காக எல்லாத்தவும் வெறுத்துட்டுப் போறது நல்லால்ல சார்.''

''அவரு இருந்துதான் என்னசெய்யப்போறாரு.''

''சும்மா ஆள்தொணைக்கு இருந்தாக்கூட தெம்பாருக் குமே.''

மற்ற வாத்தியார்கள் ஒருமாதிரியாகக் கேட்டார்கள். அவர் களுக்குச் சமாதானம் சொல்லுவதற்குள் போதும்போது மென்றாகிவிட்டது. பாண்டியன் அங்கலாய்த்துக்கொண்டார்.

''இப்படிப் போயிட்டாரே.''

ஆண்டுவிழாவுக்குப் பாண்டியன் பட்டபாடு கொஞ்ச நஞ்சமா. எல்லாவற்றையும் இழுத்துப்போட்டுக்கொண்டு செய்தார். ரெண்டுநாள் விளையாட்டுப்போட்டி மும்முரமாக நடந்தது.

கிரவுண்டு துப்புரவு கிருஷ்ணசாமி பொறுப்பு. அவ்வளவு கிரவுண்டையும் அவர் ஒருவராகவே பெருக்கிமுடித்தார். பாண்டியன் சொன்னபடி ஓடிஓடிக் கயிறுபிடித்து சுண்ணாம்புக் கோடுபோட்டார். கம்பு நட்டினார். விவசாய வேலைமாதிரி எல்லாவற்றையும் ஒருமூச்சில் முடித்துவிட்டார்.

''பாண்டியன் சார் இப்ப கிரவுண்டப் பாத்தீகளா. உழுது பரம்படிச்ச நெலம்போல சுத்தமாகிப்போச்சு. இதுக்குப்போயி பெரிசா மலச்சுக்கிட்ருந்தீகளே.''

இத்தனை வேலைக்கும் ஒருபானை தண்ணீர் அவர் வயிற்

றுக்குள் இறங்கியிருக்கும். அது தமிழய்யா சப்ளை. வேலை நடக்கும் இடமெல்லாம் பானையுங்கையுமாக அலைந்து குளிர்ச்சியேற்றினார். திடஆகாரம்பற்றி பாண்டியன் கேட்கத் தான் செய்தார்.

''கொழந்த சார் ஹோட்டல் வடைய உள்ள தள்ளிக்கிறீகளா.''

''வேணாம். பாரம் ஏறீட்டா வேல ஓடாது.''

கிருஷ்ணசாமிக்கு வேர்வையைத் துடைக்கக்கூட நேரமில்லை. வாய்க்காலில் அங்கங்கே தண்ணீர் உடைந்ததுபோல் அதுபாட்டுக்கு ஓடிக்கொண்டிருந்தது.

பாண்டியன் கிருஷ்ணசாமியை நன்றியுடன் பார்த்தார்.

''தானியம் காயப்போடுற களமாக்கீட்டீகளே சார். இதுல தேசிய வெளையாட்டுப் போட்டியே நடத்திமுடிச்சிறலாம்.''

ரெண்டுநாளும் தமிழய்யா கிரவுண்டில் வெற்றிலை எச்சைத் துப்பக்கூட அனுமதியில்லை. ஒவ்வொரு தடவையும் ரோடு வரை போய்த் திரும்பவேண்டியிருந்தது.

ஆண்களுக்கான விளையாட்டுக்களை பாண்டியன் கவனித்துக்கொண்டார். போட்டி முடிவுகளைக் குறிக்கவேண்டியது தங்கச்சாமி மனோகரன் பொறுப்பு. தமிழய்யாவும் கிருஷ்ணச்சாமியும் வாலண்டியர்கள். சகலவேலையும் செய்தார்கள்.

பெண்களுக்கானதை ராஜேஸ்வரி கவனித்துக்கொண்டாள். ருக்மணி ஏனோதானோவென்று உதவிசெய்தாள். அவள் ஊருக்குப் போகாமல் இவ்வளவுக்கு வந்ததே பெரியகாரியம். கிராப்ட் வாத்தியார் டிராயிங்மாஸ்டர்கூட இருந்து கவனித்துக் கொண்டார்கள்.

குழந்தைச்சாமி வையாபுரி மாணிக்கம் மூணுபேரும் தனி டிபார்ட்மெண்ட். யாரும் சோர்ந்துவிடாதபடி காபி கொடுத்துக் கவனித்துக்கொண்டார்கள்.

கடைசியாக வாத்தியார்களுக்கு ரெண்டு அயிட்டம் இருந்தது. ஒண்ணு மியூசிகல் சேர். மற்றது நடை. ரெண்டிலுமே

கிருஷ்ணசாமி கலந்துகொண்டதால் பாண்டியன் அறிவித்து விட்டார்.

''இப்ப நம்ம நடத்தப்போறது ரெண்டாவது மூணாவது பிரைசுக்குத் தான்.''

அதில் எந்த மாற்றமுமில்லை. பாண்டியன் கொடுத்த மராத்தான் பட்டத்தை சிரமமின்றித் தக்கவைத்துக்கொண்டார் கிருஷ்ணசாமி.

பாண்டியன் வையாபுரியையும் மாணிக்கத்தையுங்கூட விட்டுவைக்கவில்லை. அவர்களுடன் வீரணனையும் சேர்த்துக் கொண்டு மூணுபேரும் கரண்டியில் எலுமிச்சம்பழம் கொண்டு போகிற போட்டிவைத்தார். வீரணன் எல்லாரையும் ஆச்சரியப் படுத்தி முதலாவதாக வந்துவிட்டான். மாணிக்கம் ரெண்டாவது. வையாபுரி கடைசி. தமிழய்யா வையாபுரியிடம் கேட்டார்.

''வையாபுரிதான் மொதல்ல வருவீங்கன்னு பாத்தென். பிந்திக்கிட்டீங்களே.''

அவன் மீசையில் மண்ஒட்டாமல் சொன்னான்.

''பின்னாலருந்து பாத்தா நான்தான் சார் மொதலாவது.''

பாண்டியன் குறுக்கே வந்தார்.

''எலுமிச்சம்பழத்தப் பாத்ததும் ஊறுகா ஞாபகம் வந்துருச்சு அய்யாவுக்கு. ஊமையாருக்கிற வாட்ச்மேன் பிரைசத் தட்டீட்டுப் போயிட்டான். நமக்கு காதுவரைக்கு வாயிருந்து என்னசெய்ய.''

''சார் அப்படியா நெனச்சுக்கிட்டீக. இனியொரு போட்டி வச்சுப்பாருங்க.''

''ஒண்ணு போதுமா.''

''அது நடக்கட்டும். பெறகு சொல்றென்.''

பாண்டியன் உறியடிக்கு ஏற்பாடுசெய்தார். வையாபுரி தோரணையாகப் பம்மாத்துப்பண்ணி தோற்றுப்போனான். ஜெயித்தது மாணிக்கம். கண்ணைக் கட்டாததுபோல் நின்று

பானையை ஒரே அடியில் அடித்து நொறுக்கிவிட்டு பிரைஸைத் தட்டிக்கொண்டான்.

பிறகும் பாண்டியன் வையாபுரியை விடவில்லை.

''பானையைப்பத்தி மாணிக்கத்துக்குத்தான் நல்லாத் தெரியும் இல்லையா. சோத்துப்போட்டி ஒண்ணு வப்பமா.''

''அடுத்த வருசம் கதைய வச்சுக்கிருவொம்.''

அதுக்குமேல் அவன் நிற்பானா. மூடிமுழிக்குமுன் தலை மறைவாகிவிட்டான்.

ஒருவழியாக பாட்டுப்போட்டி முடிந்தது. பையன்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக நடந்தது. பக்திப்பாட்டு சோகப்பாட்டு காதல்பாட்டு என்று ஒரே கலவை. நோஞ்சாணி பீஞ்சாணிப் பையன்களெல்லாம் அனுபவித்து சொகமாகப் பாடினார்கள். கேட்கச் சந்தோஷமாக இருந்தது.

அப்புறம் வில்லுப்பாட்டு ஒத்திகை. பாடல்களை பாண்டியனே கஷ்டப்பட்டு எழுதினார். அவ்வப்போது தமிழய்யாவிடம் எதுகைமோனை சந்தம்பற்றி சந்தேகம் கேட்டுக்கொள்வார்.

நாடகத்துக்கும் ஒத்திகை நடந்தது. கதைவசனம் தமிழய்யா. பாண்டியன் டைரக்‌ஷன். கதையாவது வசனமாவது. எல்லாம் பேருக்குத்தான். சகல ஏற்பாடும் பாண்டியனே. நாடகத்தில் கதாநாயகன் தங்கச்சாமி. நாயகி மனோகரன். துணிமணி உதவி ராஜேஸ்வரி.

பெண்களுக்கு ஆட்டம் பாட்டு எல்லாம் ராஜேஸ்வரியும் ருக்மணியும் சொல்லிக்கொடுத்தார்கள். பயிற்சிமுழுக்க ஹெட்மாஸ்டர் கூடஇருந்தார். ருக்மணியுடன் நிறையப் பேசிக் கொண்டிருந்தார்.

ஆண்டுவிழா ஏற்பாடு சூடுபிடித்தது. அழகான பந்தல். அலங்காரத்துணிகள். சரவிளக்குகள். பாண்டியன் அசத்தி விட்டார்.

விழாநிகழ்ச்சி கோலாகலமாக ஆரம்பித்தது. வாத்தியார் குடும்பங்கள் அத்தனையும் முன்வரிசையில் ஆஜர். பாண்டியன் அய்யாத்துரையின் குடும்பத்தையும் அழைத்துவந்திருந்தார்.

கிராப்ட் வாத்தியார் கொஞ்சநேரம் பொடியை மறந்து கணீரென்ற குரலில் கடவுள் வாழ்த்துப் பாடினார். எல்லாரும் பிரமித்துப்போனார்கள். குரலில் என்ன சுத்தம் என்ன ஏற்ற இறக்கம். மூக்குக்குள்ளேயே முனங்கும் மனுஷன் இப்படிக் குரலை எங்குதான் வைத்திருந்தாரோ. அவரது மனைவியும் குழந்தைகளும் அவரைப் புதுசாகப் பார்த்தார்கள்.

ஹெட்மாஸ்டருக்கு வேண்டிய டாக்டர் ஒருவர் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அவர் உற்சாகமாகப் பரிசுகளை வழங்கினார். கொஞ்சமாகப் பேசினார். அடுத்து கலை நிகழ்ச்சிகள் விறுவிறுப்பாக நடந்தன. இடையில் பையன்கள் லெஸ்ஸிம் டிரில் விளையாடி தூள்கிளப்பினார்கள். வில்லுப் பாட்டும் நாடகமும் கடைசி அயிட்டங்கள்.

வில்லுப்பாட்டில் ஜுனியர் மராத்தான் ரங்கசாமிதான் பிரதானப் பாடகர். உடம்பெங்கும் திருநீறு சந்தனம் பூசி நெற்றியில் பெரிய பொட்டுவைத்து பாகவதர்போல் தோரணையாக இருந்தான். பின்பாட்டுக்கு மூணுபையன்கள். பாண்டியன் கடம். வையாபுரி ஜால்ரா. கிருஷ்ணசாமி உடுக்கு. சுப்பையாதாஸ் கட்டை. நிகழ்ச்சி ஆரம்பத்திலேயே களைகட்டி விட்டது. ஜுனியர் சரளமாகப் பாடினான்.

“பெரியவரே சிறியவரே
பிரியமுள்ள தாய்மாரே
அனைவருக்கும் வணக்கம் தந்தோம் வாருங்க - வந்து
அமைதியுடன் எங்கபாட்டக் கேளுங்க.
நேத்து வந்த சின்னப்பய...”

பாண்டியன் தோதாக எடுத்துக்கொடுத்தார்.

"போடய்யா போடு

அப்படிப்போடு."

ஜூனியர் விட்ட இடத்தை அனாயசமாகப் பிடித்தான்.

"நேத்து வந்த சின்னப்பய

நீட்டி மொழக்கிப் பாட்டுப்பாட

காத்துவாக்கில் வந்ததத்தான் பாருங்க. - நீங்க

கணக்கில்லாம இங்கவந்து கூடுங்க."

கிருஷ்ணசாமிக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை.

"ஓரே ஓரே ஏமிரா. மன கொடுகுதானா இது."

மனசுக்குள் மெச்சிக்கொண்டே கிறக்கத்தில் உடுக்கைப் பிடித்தார். பின்பாட்டு உச்சத்துக்கு ஏறஏற அவருக்குத் தோட்டம் துறவு எல்லாமே மறந்துவிட்டது. வையாபுரி பேயாட்டம் போட்டான். அவன் கையிலிருந்து ஜால்ராத்தாளம் துள்ளித்துள்ளி வந்தது. கடமும் உடுக்கும் கொஞ்சநேரம் ஜனங்களைச் சொக்க வைத்து கதைக்குக் கொண்டுவந்தன.

குடும்பக்கட்டுப்பாடுதான் கதை. ஜூனியரும் பாண்டியனும் அதில் கரைகண்டவர்கள்போல் பாட்டும் வசனமுமாக விளாசினார்கள். அளவில்லாமல் பிள்ளைகளைப் பெற்றுவிட்டு குடும்பத்தில் அவதிப்படும் புருஷனின் அங்கலாய்ப்பை ஜூனியர் சோகமான இழுவையில் பாடினான்.

"சின்ன வயசினிலே

சேந்துப்புட்டொம் ரெண்டுபேரும் - நம்ம

சேந்துப்புட்டொம் ரெண்டுபேரும்.

இந்த வயசினிலே ஆத்தாடியாம்மா - நம்ம

ஏழுபுள்ளம் பெத்துப்புட்டொம்."

பாண்டியன் அடுத்த பாட்டுக்கு அச்சாரம்போட்டார்.

"அதுக்கு பொண்டாட்டிக்காரி என்ன சொன்னாளாம்."

ஜுனியர் குரலைக் கொஞ்சம் மாற்றிக்கொண்டு ராக மெடுத்தான்.

"இன்னியும் எத்தனையோ
என்ன செய்வென் பாதகத்தி - நான்
என்ன செய்வென் பாதகத்தி.
சிறுசுலயே வாக்கப்பட்டு ஆத்தாடி புருசா - நான்
சீரழிஞ்சென் புள்ளையால ஆத்தாடி புருசா."

வில்லின் சலங்கையும் பெண்களின் கலகலப்பும் சேர்ந்து புதுத்தாளமாகக் கேட்டது. தொண்டையை ஏற்றமுடியாமல் திணறிய சுப்பையாதாஸ் கையை ஓங்கிஓங்கிக் கட்டைத் தாளமடித்துச் சமாளித்தார்.

நிகழ்ச்சி ஆரம்பித்ததும் தெரியவில்லை முடிந்ததும் தெரிய வில்லை. அவ்வளவு விறுவிறுப்பு. எல்லாரும் கொஞ்சங்கூட சுதிகுறையாமல் மங்களம்பாடி முத்தாய்ப்புவைத்தார்கள்.

அடுத்தது நாடகம். நடிகர்கள் அதிகமில்லை. தங்கச்சாமியும் மனோகரனும்தான் மெயின். மனோகரனுக்கு பெண்வேஷம் கனகச்சிதமாக இருந்தது. தமிழய்யா ஒளிந்துஒளிந்து வசனம் சொல்லிக்கொடுக்கணும். பாண்டியன் விசிலடித்தால் வையா புரியும் மாணிக்கமும் திரையை இழுக்கணும்.

சின்னக் காதல்கதை. காதலனும் காதலியும் வெவ்வேறு ஜாதிக்காரர்கள். ரெண்டுபேர் பக்கமும் எதிர்ப்புக் கிளம்பியதால் அவர்களது காதல் கைகூடவில்லை. கடைசியில் ஒரே கத்தியால் குத்திக்கொண்டு மாண்டுபோகிறார்கள்.

தங்கச்சாமியும் மனோகரனும் போட்டிபோட்டுக்கொண்டு வசனங்களை வெளுத்துக்கட்டினார்கள். மறந்த பகுதிகளை தமிழய்யா உடனுக்குடன் எடுத்துக்கொடுத்தார். வசனமில்லாத நடிப்புக் கட்டங்களில் பாண்டியன் உருக்கமாகப் பின்னணி பாடினார்.

நடிப்பு உச்சக்கட்டத்தை எட்டியது. காதலி அழுதுபுலம்பி காதலனின் இடுப்பிலிருக்கும் கத்தியை உருவி வயிற்றில் குத்திக் கொண்டு மல்லாக்கச் சாயணும். காதலன் நாலுவார்த்தை சோகமாகப் பேசிவிட்டு அதேகத்தியை எடுத்து தானும் குத்திக் கொண்டு விழணும். ரெண்டுபேர்மீதும் சிவப்புவெளிச்சம் மாறி மாறிப் பாயும். பாண்டியன் சோககீதம்பாடிமுடித்து லேசாக விசிலடிப்பார். உடனே திரையிறங்கும். இதுதான் ஏற்பாடு.

ஆனால் ஒரு சின்னத்தப்பு நடந்துவிட்டது. மனோகரன் வயிற்றில் குத்தியவாக்கில் குப்புறப்படுத்துவிட்டார். கத்தி உள்ளே மாட்டிக்கொண்டது. தங்கச்சாமிபாடு சிக்கல். வசன மெல்லாம் தீர்ந்துவிட்டது. கத்தி கைக்கு வந்தால்தானே கதை முடியும். கடைசி வசனத்தை கத்திக்கத்திச் சொன்னார்.

''கண்ணே உன்உயிரைக் குடித்த கத்தி என்மீதும் பாயட்டும். என்உடலும் சாயட்டும்.''

தமிழய்யாவேறு குசுகுசுத்தார்.

''ஸ்... கத்தி சார்... கத்தி...''

மனோகரனோ எஞ்செவனே என்று நீட்டிப்படுத்துவிட்டார். பாண்டியன் உண்மையிலேயே சோகப்பாட்டுப் பாடினார். வையாபுரிக்கு நிலைமை புரிந்துவிட்டது. திரையை இறக்கி கதையை முடித்துவிடலாமா என்று யோசித்தான். தங்கச்சாமி கீழே விழுந்தாலாவது அப்படிச் செய்யலாம். பாண்டியன் விசிலடிக்காமல் மாணிக்கம் திரையை இறக்கவேமாட்டான்.

தங்கச்சாமிக்கு ஒண்ணுமே ஓடவில்லை. பேந்தப் பேந்த முழித்துக் கொண்டு தமிழய்யாவின் பக்கம் லாந்தியபடி கேட்டார்.

''இப்ப என்ன செய்றது சார்.''

தமிழய்யா அவசரமாக வெற்றிலையை மென்று சுறுசுறுப் பேற்றினார். சட்டென்று ஒரு யோசனை வந்தது.

''அலறிக்கிட்டே அவருமேல விழுங்க சார்.''

உடனே சுதாரித்துக்கொண்ட தங்கச்சாமி சொந்தத்தில் ஒரு வசனத்தை எடுத்துவிட்டார்.

''என் ஆருயிரே. இதோ நீயிருக்கும் இடத்திற்கே நானும் வருகிறேன்.''

பெரிய அலறல். மனோகரன்மீது பொத்தென்று விழுந்து பழிதீர்த்துக்கொண்டார்.

பாண்டியனுக்கு இப்போதுதான் உயிர்வந்தது. அதுக்குப் பிறகு சொல்லணுமா. சிவப்புவிளக்கு சுழல விசில் ஊத திரையிறங்க எல்லாம் மளமளவென்று நடந்தது. திரைமறைவில் பாண்டியன் ஓடிவந்து தமிழய்யாவைக் கட்டிப்பிடித்துக் கொண்டார்.

''நல்லசமயத்துல மானங் காப்பாத்துனீக சார்.''

அவர்குரல் ஈரத்தில் தளுதளுத்தது. தமிழய்யா அவரைத் தட்டிக்கொடுத்தார்.

இன்னும் எழுந்திருக்கமுடியாமல் அரண்டுபோய்க் கிடந்த மனோகரனை எல்லாரும் எழுப்பினார்கள். அதுக்கப்புறம் நடந்த வாக்குவாதம் கோபதாபங்கள் எல்லாம் திரைமறைவு நாடகம்.

அப்படியெல்லாம் சிரமப்பட்டு நடத்திய ஆண்டுவிழாவைப் பார்க்காமல் போய்விட்டாரே ரங்கராஜன். அது நல்ல குண மில்லை.

தமிழய்யா தியானம் முடித்ததுபோல் கண்திறந்தார். இப் போது பாண்டியனும் ரங்கராஜனும் திண்ணையில் எதிரெதிரே பார்வை சந்திக்காமல் உட்கார்ந்திருந்தார்கள். பாண்டியன் தமிழய்யாவிடம் திரும்பினார்.

''என்ன சார் தெப்பக் கொளத்துக்குள்ள மூச்சடறக்குறமாதிரி ஒரேடியா முங்கிப்போயிட்டீக.''

தமிழய்யா வாய்க்குள் வெற்றிலையை உருட்டினார்.

''ஆண்டுவிழா ஞாபகம் வந்துருச்சு.''

''நானும் அதப்பத்தித்தான் நெனச்சுக்கிட்ருந்தென்.''

ரங்கராஜனிடமிருந்து வார்த்தைகள் வந்தன.

''நானும் யோசிச்சுப் பார்த்தென். அப்படிப் போனது தப்புன்னு தோணிச்சு.''

தமிழய்யாவும் பாண்டியனும் ரங்கராஜனை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். அவர் ரூமுக்குஅப்பால் வானத்தில் உதறித் தெளித்த மேகச்சிதறல்களில் தீவுக்கட்டங்களைத் தேட ஆரம்பித்தார்.

**சா**யங்காலம் வாக்கிங்போகும்போது பாண்டியன் ஜாலியாக இருந்தார். ரோடுநெடுக எக்சசைஸ் செய்துகொண்டே நடந்தார். கூட்டுக்குப் போகும் பறவைகளை எறிந்து கரணமடிக்க வைத்து விரட்டினார். கல்லுக்குக்கல் குறிவைத்து உரசினார். ரெண்டுகல்லும் பாய்ந்து அந்தரத்தில் உராயும்போது ரங்க ராஜனுக்கு நெஞ்சு கூசிச் சிலிர்த்தது.

''இப்பப் பாருங்க சார் சூரியன எறிஞ்சு சுக்கு நூறாக்குறென்.''

''வேண்டாம் பாண்டியன். அப்புறம் ஒலகமே இருண்டு போயிடும்.''

''சூரியன் என்னக் கண்டு ஓடி மலைக்குள்ள ஒளிஞ்சு கொஞ்சநேரத்துல இருட்டாகப்போகுது.''

''பாண்டியனுக்குப் பயப்படாம ஏதும் இருக்கமுடியுமா.''

ரோட்டின் மறுபுறம் தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் பேசிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் சமாச்சாரமே வேறு. குடும்ப விஷயங்களில் முங்கிவிட்டால் லேசுக்குள் வெளியே

வரமாட்டார்கள். ஒண்ணுவிடாமல் பேசுவார்கள். பஸ் கனைப்பைக்கூட சட்டைசெய்யமாட்டார்கள்.

ரோட்டுக்கு வடக்கே மிளகாய்த் தோட்டத்தில் ஓடிஓடி தண்ணீர்பாய்ச்சிக்கொண்டிருந்த ஆளைக் காண்பித்தார் ரங்கராஜன்.

''பாண்டியன் பாண்டிய்ன் அது யாருன்னு பாருங்க.''

''சாட்சாத் நம்ம மராத்தான் கிருஷ்ணசாமிதான் சார்.''

''மனுஷன் அதுக்குள்ள மண்வெட்டியத் தூக்கிண்டு வந்துட்டாரே.''

''அவருக்கு உண்மையான ஸ்கூல் அதுதான் சார். வெவசாயம்னா உயிரவுடுவாரு. அண்ணைக்கு தார்ப்பாய்ச்சி தலப்பாக்கட்டி குப்பவண்டி அடிக்காரு பாருங்க. மாடுபத்துற தோரணையென்ன...''

''குப்பையா.''

''என்ன குப்பன்னு நெனச்சீக. அவ்வளவும் பண்ணிச்சாணி.''

''அட கர்மமே.''

''அவருட்டக் கேட்டா அருமையான சந்தனம்னு சொல்லுவாரு.''

''எடுத்துப் பூசிக்கோன்னு நீங்களே சொல்லுவேளோ.''

''வெவசாயம் பாக்கிறவனுக்குத்தான் அதோட அரும தெரியும் சார். எங்கய்யாகிட்ட கொறசொன்னா அடிக்கவந்துருவாரு. அந்தக் கோவந்தான் எங்க குடும்பத்தக் காப்பாத்தீட்டு வருது.''

மீண்டும் தோட்டத்தைப் பார்த்த ரங்கராஜனுக்கு இன்னுமொரு ஆச்சரியம்.

''தோட்டத்துக்குள்ள வேகமாக பை சொமந்துண்டு வர்றது வையாபுரிதானே பாண்டியன்.''

''அவன்தான். இன்னேரவரைக்கு எங்க ஒளிஞ்சு கெடந்தான் திருடன். கனமா குடுத்தனுப்பியிருக்காரு மராத்தான்.''

பாண்டியன் தமிழய்யாவிடம் சைகைசெய்து வையா புரியைக் காட்டினார். ரங்கராஜன் பாண்டியனிடம் குனிந்தார்.

''என்ன பண்டம்.''

''காய்கறி.''

''எல்லாம் அவனுக்கா.''

''கூப்பிட்டுக் கேப்பொம்.''

ரோட்டு இறக்கத்து ஒற்றையடிப்பாதையில் இறங்கினான் வையாபுரி. பாண்டியன் கைதட்டிக் கூப்பிட்டார்.

பாலத்துச் சுவரில் ரங்கராஜனும் பாண்டியனும் உட்கார்ந் தார்கள். எதிர்ப்பக்கம் தமிழும் கிராப்டும்.

வையாபுரி பாண்டியனிடம் வந்தான். அவர் அவனது வாயைக் கிண்டினார்.

''சாய்ந்தரம் மணியடிச்சிட்டுத்தான் வந்தயா. ஹெட்மாஸ்டர் கெளம்பீட்டா எல்லாரும் ஸ்கூல மறந்துறவேண்டியது.''

''நான் மணியடிக்கையில நீங்க ஆறாம்வகுப்புக்குமுன்னால நின்னீகளே சார்.''

''திமிரப்பாரு. காளின்னா மூளிங்கான்... ஆமா காய்கறி இவ்வளவும் ஒனக்குத்தானா.''

''எவ்வளவு சார். ஒரு பூசணிக்காய அடியில பேர்ட்டுருக்கென். பொடப்பாத் தெரியிது. இதப்போயி எட்மாஸ்டருக்குக் குடுப்பாகளா. நம்ம புள்ளைகளுக்கு அவிச்சு பொறிச்சுப் போட்டா திங்கும்.''

''அப்ப அவருக்கு எதக் குடுப்பாக.''

''தக்காளி வெண்டக்கா வெங்காயம்.''

ரங்கராஜன் கவனித்துக்கொண்டிருந்தார். அந்தப்பக்க மிருந்து கிராப்ட் குரல்கொடுத்தார்.

''சார்வாள் எது எப்படி நடந்தா நமக்கென்ன. அவன விடுங்க போகட்டும்.''

வையாபுரி பைக்குள்ளிலிருந்து பிஞ்சுக்கத்திரிக்காயை எடுத்து காம்பைத் திருகிவிட்டு வாயில்போட்டுக் கடித்தான். பாண்டியன் கிராப்டைப் பார்த்து உரக்கச் சொன்னார்.

''சும்மா தெரிஞ்சுக்கிறதுக்குத்தான் சார். நமக்குக் காய்கறியா கேக்கப்போறோம்.''

ரங்கராஜன் வையாபுரியிடம் கேட்டார்.

''காய்கறிக்கு எவ்வளவு காசு கொடுப்ப.''

''கிட்ணசாமி சாருக்குக் காசு பெரிசில்ல. பையோட போயி நின்னா நீயே நல்லதாப் பறிச்சுக்கோன்னு சொல்லீருவாரு. அந்தக் கொணம் ஆருக்கும் வராது.''

பாண்டியன் ஆமோதித்தார்.

''வாஸ்தவம். ஓசி குடுக்காரே.''

தின்ற கத்தரிக்காய்விதைகளை நாக்கால் துழாவித் தோண்டி முடித்தான் வையாபுரி.

''அவரு மனசுக்குப் புடிச்சாத்தான் சந்தோசமா செய்வாரு. இல்லன்னா மூக்குமுட்டக் கோவம் வரும். எட்மாஸ்டருன்னும் பாக்கமாட்டாரு. ஆருன்னும் பாக்கமாட்டாரு. சாதாரணமா வேட்டியக் கெட்டீட்டு இருக்காருன்னு பாத்தீகளா.''

பாண்டியன் சுதாரிப்படைந்தார்.

''அப்படியா... அவரு கோவத்த நான் பாத்துக்கிட்ட தில்லப்பா. ஒனக்கு நல்லாத் தெரியும்.''

''சார் நீங்க வாக்கிங் வந்தீகளா என்வாயக் கௌற வந்தீகளா.''

வையாபுரி எழுந்திருக்க முயன்றான். பாண்டியன் அவன் தோளைப் பிடித்து இருத்தினார். ரங்கராஜன் சப்போர்ட் பண்ணினார்.

''பாண்டியன் அக்கறையா கேக்கறாரே.''

வையாபுரி தலையைச் சொறிந்தான்.

''என்ன சார் நீங்க. போனதப்பத்தியெல்லாம் கேட்டுக் கிட்டு.''

''பழைய சரித்திரம்தாம்ப்பா நல்லாருக்கும் கேக்கிறதுக்கு.''

''ஏன் புதுக்கத புளிச்சிருச்சா அதுக்குள்ள.''

பாண்டியனுக்கு தர்மசங்கடம். நாக்கை மடித்துக் கொண்டு அவனை அடிக்கப்போனார்.

''இப்ப சொல்லப் போறயா பாலத்துலருந்து ஓடைக்குள்ள தூக்கிப் போடவா.''

''சும்மாருங்க சார். நான் புள்ளகுட்டிக்காரன். நான் சொல்ற கதைய கிட்ணசாமி சாருட்டக் கேக்கப்புடாது.''

''வையாபுரி சொல்லீட்டப் பெறகு மறுபேச்சு உண்டுமா. சத்தியமா கேக்க மாட்டென்.''

அவன் எச்சுக்கூட்டி விழுங்கிவிட்டு செருமிக் கொண்டான். கையை உயர்த்தி நெளிர்விட்டு சோம்பல்முறித்தான். பாண்டி யனுக்கென்றால் கடுப்பு. அடக்கிக்கொண்டார்.

''இந்த எட்மாஸ்டருக்குமுந்தி ஒரு சாமி வந்துபோனாரு. என்னேரமும் மழைக்கு ஒடுனமாதிரி நடப்பாரு. பேருகூட வாயிக்குள்ள மொழையாது.''

ரங்கராஜன் கேட்டார்.

''விஜயராகவாச்சாரியா.''

''அவரேதான். எல்லாருக்கும் எதுமேல கோவம் அவருக்குப்

பாலுமேல கோவம். இந்த ஊருல பசும்பாலு நல்லால்லன்னு கோவிச்சுக்கிட்டுப் போயிட்டாரு.''

''நல்லால்லன்னா எப்படி.''

''ருசியா இல்லையாம். தண்ணியா இருக்குன்னா மாட்டுக் காரனக் கேக்கலாம். இதுக்கு மாட்டத்தான் கேக்கணும்.''

பாண்டியன் சொன்னார்.

''அவருக்கு ஒரு ருசி.''

''மனசுக்குப் புடிச்சிக்கிருச்சுனா ருசியாவது ஒண்ணாவது. இப்ப ஒங்களவே எடுத்துக்கங்களேன்...''

''இப்ப கதையச் சொல்லப்போறயா கழுத்துல அடிக்கணுமா.''

''அதுக்குமுந்தி ஒரு சாயிபு இருந்தாரு. ஜின்னா சாயிபு. கரக்டான மனுசன். கரக்ட்னா ரெம்பக் கரக்ட். ஆருக்கும் பயப்படமாட்டாரு. ஒரு சமயம் பாருங்க...''

ரங்கராஜன் வசமாக உட்கார்ந்தார். பாண்டியன் கொஞ்சம் நெருங்கிவந்தார்.

''ஆகா சொல்லு சொல்லு.''

''பள்ளிக்கூடம் பூரா ஒரே இன்ஸ்பெக்சன் கெடுபிடி. கிரவுண்டச் சுத்தப்படுத்தி வகுப்புகள் அலங்கரிச்சு பத்துநாளா அதே வேலதான். எனக்கும் மாணிக்கத்துக்கும் இடுப்பு கழண்டு போச்சு. எட்மாஸ்டர் இதையெல்லாம் கண்டுக்கிறவே இல்ல. இந்தச் சாக்குலயாச்சும் பள்ளிக்கூடம் சுத்தமாகட்டும்னு இருந்துக்கிட்டாரு.''

''அலடக்கிறாத மனுசன்.''

''இன்ஸ்பெக்சன் நடந்தண்ணைக்குப் பாக்கணுமே. காலை யில மணியடிக்கிறதுக்குமுந்தியே எல்லாரும் வெள்ளையுஞ் சொள்ளையுமா வந்துசேர்ந்துட்டாக. எட்மாஸ்டர் எண்ணைக்கும் போலத்தான். இன்ஸ்பெக்டர் இப்ப

வந்துருவாரு பெறகு வந்துருவாருன்னு எல்லாரும் எலையுங்கொலையுமா எதிர் பாத்துட்ருக்கொம். எட்மாஸ்டர் அதப்பத்தி நெனப்பே இல்லாறவருபோல வேலையக் கவனிச்சுக்கிட்ருக்காரு. இன்ஸ்பெக்டருக்கு ஏதாச்சும் வாங்கி வைக்கணுமா வேணாமான்னு எட்கிளார்க் முழிக்காரு. எட்மாஸ்டருட்ட ஆருபோயிக் கேக்கிறது. இன்ஸ்பெக்சனுக்குனு பணம் வசூல்பண்ணுன சங்கதிவேற அவருக்குத் தெரியாது.''

''அதும் அப்படியா.''

''அதுக்குள்ள இன்ஸ்பெக்டர் வந்துசேந்துட்டாரு.''

''போச்சுடா.''

''வாத்திமாரெல்லாம் ஓடிப்போயி அவர தடபுடலா கூட்டிக்கிட்டு வாறாக. அப்பயும் எட்மாஸ்டர் இருந்த எடத்தவுட்டு எந்திரிக்கல. உக்காந்துக்கிட்டே வையாபுரி அய்யாவுக்கு நாற்காலி எடுத்துப்போடுன்னு சத்தங்குடுக்காரு.''

''என்னப்பா சொல்ற.''

''இன்ஸ்பெக்டருக்கு மூஞ்சி சிறுத்துப்போச்சு. ஒரே கடுப்புல கணக்குவழக்கப் பாக்க ஆரம்பிச்சாரு.''

''கவனிப்பிருந்தா கனிவிருக்கும்.''

''ஏதோ ஒரு ரிஜிஸ்தரக் கேட்டாரு. எட்கிளார்க் அத எடுத்துட்டுப்போயி மொதல்ல எட்மாஸ்டருட்டக் குடுத்தாரு. எட்மாஸ்டர் அதத் தொறந்து பாத்தா நடுவுல நூறு ரூவா நோட்டு ஒண்ணு முழிச்சுக்கிட்ருக்குது.''

''ஹெட்கிளார்க் எக்கச்சக்கமா மாட்டிக்கிட்டாரு.''

''எட்மாஸ்டர் வேற ஒண்ணும் சொல்லல. சீனிவாசன் பணத்த இரும்புப்பெட்டியிலயில்ல வைக்கணும். ஏன் சாவியக் கொண்டுவர மறந்துட்டீகளான்னுமட்டும் கேட்டுக்கிட்டே நோட்ட எடுத்துக் குடுத்துட்டு வெறும் ரிஜிஸ்தர இன்ஸ்பெக்டருட்ட நீட்டுனாரு.''

''இது அனியாயம்ப்பா.''

''அத்தோட இன்ஸ்பெக்சன் முடிஞ்சது. இன்ஸ்பெக்டர் தடபுடன்னு எந்திரிச்சுக் கௌம்பீட்டாரு. அப்பக்கூட எட் மாஸ்டர் அலட்டிக்கிறல. வையாபுரி அய்யாவ வழியனுப்பீட்டு வந்துருன்னு எங்கிட்ட ஒப்படச்சிட்டு வேலையப் பாக்க ஆரம்பிச்சிட்டாரு. அப்புறம் எட்கிளார்க்குக் கெடச்ச கொடை யப்பத்திச் சொல்லணுமா. பாவம் அழுகாறதுதான் குத்தம். வசூலிச்ச பணத்த எல்லாம் அவசரமா திருப்பிக் குடுத்துட்டு ஓஞ்சுபோயி உக்காந்துட்டாரு.''

''ஹெட்மாஸ்டருன்னா அப்படியில்ல இருக்கணும்.''

''எல்லா வாத்தியாருட்டயும் பிரியமா இருந்துக்கிருவாரு. ஆனா கிட்ணசாமிசாருக்கும் அவருக்கும் என்னமோ ஒத்துக் கிறல.''

''அதென்ன சமாச்சாரம்.''

''எந்த வகுப்புல வாத்தியார் இல்லன்னாலும் எட்மாஸ்டர் அங்கபோயி பாடம்நடத்துவாரு. வித்தியாசம்பாக்க மாட்டாரு.''

''இந்த ஹெட்மாஸ்டரப்போலன்னு சொல்லு.''

''நீங்க ஏழாம்வகுப்புக்குமட்டுந்தான போறீக. கிட்ணசாமி சார் எப்ப லீவு போடுவாருன்னு காத்துட்ருக்கீகளே.''

''ஒனக்கு இம்மி எடங்கெடச்சாப் போதுமே.''

''ஒரு சமயம் கிட்ணசாமி சார் வயித்தோட்டம்னு லீவு போட்டுட்டாரு. அதே நேரம் ஆறாம்வகுப்பு ராசம்மா டீச்சரும் லீவு. அதுகத வேறமாதிரி.''

''ராசம்மா கதையா. அது என்னதுப்பா.''

''மனசர வுடமாட்டீகளே.''

''அட சொல்லுப்பா. ஒரு சமாச்சாரத்தத் தொட்டுட்டு விழுங்கினா என்ன அர்த்தம்.''

''அந்தம்மாவுக்கு புருசன் மிலிட்டரியில இருந்தாரு. இது இங்க தனியா கெடந்துச்சு. வயசும் ஆகிப்போச்சு. ஒங்களப்போல ஒரு டிரில்மாஸ்டர் வந்தாரு. வந்தவரு சும்மாதான இருக்கணும்.''

''என்ன செஞ்சாரு.''

''அவருமொகத்த போட்டாபுடிச்சு அந்தம்மாட்டக் குடுத்துட்டாரு.''

''அப்புறம்.''

''அந்தம்மா பொஸ்தகத்துக்குள்ள போட்டாவவச்சு பாடம் நடத்துற சாக்குல பாத்துக்கிட்ருந்துருக்கு.''

''அடிச்சக்க. அவ்வளவு அழகா அவரு மொகம்.''

வையாபுரி அப்பிராணிபோல் இருந்தான்.

''அத அந்தம்மாட்டத்தான் கேக்கணும்.''

அவன்தோளில் பாண்டியன் பொய்க்குத்துவிட்டார். ரங்கராஜன் கவனம் சிதறாமல் உட்கார்ந்திருந்தார்.

''போட்டோ வச்சிருந்தாங்க.''

''அது எப்படியோ கீழ வுழுந்துருச்சு. அம்மா அதக் கவனிக்கல.''

''சரியாப்போச்சு.''

''ஒரு பையன் கவனிச்சிட்டான். மெல்லப்போயி எடுத்துப் பாக்கான். பாத்தா டிரில்மாஸ்டர் பரிதாபமா முழிக்காரு.''

''காரியம் கெட்டுப்போச்சே.''

''அனயம் பையங்க பாத்துக்கிட்டாங்க.''

''அடடா.''

''டீச்சரம்மாவுக்கு வெக்கம் ஒருபக்கம் கோவம் ஒருபக்கம். போட்டாவப் புடுங்கி கிழிச்சுப்போட்டுட்டு அந்தப் பையன

அடிச்சிருக்கு. அப்புறம் பாத்தா படுக்காளிப்பயக படுக் காளிப்பயகன்னு வசவோடவசவா அழுதுகிட்டு வருது.''

''பாவம்.''

''மறுநா பள்ளிக்கூடத்துக்கு வரல. லீவு போட்ருச்சு.''

''இதெல்லாம் ஒனக்கெப்படித் தெரியும்.''

''ஒங்க கதைய நீங்க சொல்லியா தெரியிது. அதப் போலதான்.''

''எங்கிட்ட வம்புக்கு வந்துட்டான் பாரு.''

''அதென்னமோ சார் ஆறாம் வகுப்புக்கும் டிரில் மாஸ்டருக்கும் பொருந்திக்கிருது.''

''ஹெட்மாஸ்டருக்குத் தெரியாதா.''

''எந்த எட்மாஸ்டருக்கு.''

''அதாம்ப்பா ராசம்மா வெவகாரம்.''

''நான் ராசேஸ்வரியம்மா வெவகாரமாக்கும்னு நெனச்சென்.''

ரங்கராஜன் பாண்டியனை அர்த்தத்துடன் பார்த்தார். பாண்டியன் வையாபுரியை முறைத்தார்.

''இந்த எடத்துல ஒனக்குச் சந்தர்ப்பம் சரியில்ல. தனியா மாட்டாமயா போயிருவ.''

''மொதல்ல வெசயம் எட்மாஸ்டருக்குத் தெரியாது. டீச்சர் அனயநாளு லீவுங்கவும் எங்கிட்டக் கேட்டாரு. நான் சொல்ல வேண்டியதாப்போச்சு.''

''ஒனக்கெதுக்கு வம்பு.''

''சொல்லலன்னா என்னக் கோவிச்சுக்கிருவாரு. சொன்னதும் பாருங்க ரெம்ப வருத்தப்பட்டாரு. டிரில்மாஸ்டரக் கூப்புட்டு தகப்பன்மாதிரி பேசிக்கிட்ருந்தாரு. கலியாணம்முடிக்காம

என்மொகத்துல முழிக்கக்கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லீட்டாரு. ரெண்டே மாசம். டிரில்மாஸ்டருக்குக் கலியாணம் நடந்துபோச்சு.''

''புத்திசாலித்தனமா நடந்துருக்காரு.''

''ஆரச் சொல்றீக.''

''ஒங்க தாத்தாவச் சொன்னென். டீச்சரம்மா என்னாச்சு.''

''அவங்க வெலாசத்தக் கண்டுபுடிச்சு என்னய அனுப்பி கையோட கூட்டீட்டு வரச்சொன்னாரு. அதும் சந்தோசமா வந்துருச்சு. அதுகிட்ட என்ன பொறுமையா பேசுனாரு தெரியுமா.''

ரங்கராஜனுக்கு வெறுப்பு.

''ஒரு குடும்பத்துல இருக்கற பொறுப்பு ஹெட்மாஸ்டருக்கு வேணும்.''

தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் எழுந்து மேற்கொண்டு நடந்தார்கள். பாண்டியன் முணுமுணுத்தார்.

''இப்ப இருக்கிறவர்மாதிரி.''

வையாபுரி நழுவுவதற்காக எழுந்தான். பாண்டியன் விடவில்லை. அவன் பிணங்கினான்.

''வுடுங்கசார். போயி நாலுகொடம் தண்ணியெடுத்து ஊத்தணும். இல்லன்னா பொண்டாட்டிகிட்ட வாங்கிக்கெட்டி முடியாது.''

''புதுசாவா வாங்கிக் கட்டப்போற. இந்த வீரத்துல வாட்டர் மேன அதிகாரம் பண்றதுலமட்டும் கொறச்சலில்ல... அதிருக்கட்டும். சொல்லவந்த சமாச்சாரத்த அம்போன்னு வுட்டுட்டுப் போனா எப்படி. கிருஷ்ணசாமி லீவு போட்டுட்டாரு. அதுக்கப்புறம்...''

''அவர வம்புக்கு இழுத்துட்டீகளா.''

''நீ சொன்னதுனாலதான கேக்கென்.''

''ஒரேசமயம் ஆறாம்வகுப்பும் ஏழாம்வகுப்பும் லீவு போட்டாச்சு.''

''போட்டாச்சு.''

ரங்கராஜன் குறுக்கிட்டார்.

''இன்னொரு கத்தரிக்காயத் தின்னுக்கறயா.''

''வேணாம் சார். வாயிலயே கொழம்புவச்சு முடிச்சிட்டா சட்டியில என்னத்தப் போடுறது.''

பாண்டியன் கண்களை உருட்டினார்.

''அதெல்லாமில்ல. கொண்டுபோகலன்னா அங்க இவுகசட்டி ஒடையும்.''

''அப்படியா நெனச்சுக்கிட்டீக. நாலு புள்ளைகளானப் பெறகும் நமக்குத் தனிக்கவனிப்பு சார்.''

''அந்த வீராப்பு ஒருபக்கம் இருக்கட்டும். லீவு வெவ காரத்துக்கு வா.''

''ஆறுக்கும் ஏழுக்கும் பாடம்நடத்துறது பெரிய சங்கடமாப் போச்சு. எட்மாஸ்டர் அடிக்கடி பாடம்நடத்துவாரு. மத்த வாத்திமாரவும் போகச்சொல்லுவாரு. அடிப்பட நல்லா இல்லன்னா ஒயர வரவர ஆட்டங்கண்டுரும்னு சொல்லி ரெண்டு வகுப்பவும் நல்லா கவனிச்சுக்கிருவாரு.''

''சரி.''

''கிட்ணசாமி சார் ஒருவாரமா லீவுங்கவும் ஒருநா என்னயக் கூப்புட்டு அவரு வீட்டுக்குக் கூட்டீட்டுப் போகச் சொன்னாரு.'

''அங்கயும் சிக்கலுதானா.''

''வயித்தோட்டம்னா கடுமையா இருக்குமோ என்ன மோன்னு பாத்துட்டு வரலாமேன்னு நெனப்பு.''

''நல்ல நெனப்புதான்.''

''நாங்க அவருவீட்டுக்குப் போறொம். போனா அங்க தொழுவுச்சொவருக்கு மண்ணுவச்சுக்கிட்ருக்காக. பழைய சொவருமேல நின்னுக்கிட்டு ஒரு ஆளு மண்ண வாங்கிவாங்கி எறிஞ்சு அடிச்சுச் சேக்குது மும்மரமா.''

''ஆருப்பா அது.''

''வேற ஆரு நம்ம கிட்ணசாமி சாருதான்.''

''மரத்தான் மண்ணாத்தானாயிட்டாரா.''

''அவருபையன் மண்ணக் கொழச்சு உருட்டி எறிய அவரு புடிக்க வேலச்சூட்டிகையில எங்களக் கவனிக்கல. எனக்கு என்னசெய்றதுன்னு தெரியல. ரெண்டு செருமல் வுட்டென். கண்டுக்கிட்டாரு. அவ்வளவுதான். தெகச்சுப்போயி பதினெட்டாம் படி கருப்பசாமிமாதிரி சொவருமேல இருந்துக்கிட்டுமுழிக்காரு.''

''எக்கச்சக்கமா மாட்டிக்கிட்டாரே.''

''எட்மாஸ்டர் வேறஒண்ணும் பேசல. வயித்தோட்டம் எப்படியிருக்கு ஒடம்ப நல்லா கவனிச்சுக்கிறணும். கடுமையா வேல செய்யாம ரெஸ்ட் எடுக்கணும்னு சொல்லீட்டு அப்படியே திரும்பீட்டாரு. கிட்ணசாமிசார் கீழ எறங்கி அங்கஇங்க நகராம பாத்துக்கிட்டே நிக்காரு.''

''அந்தநேரத்துல என்ன செய்யமுடியும்.''

''நாங்க இப்படி வந்துட்டுப் போனது அவருக்குப் புடிக்கல. கொணமே மாறிப்போச்சு.''

''தப்பா நெனச்சுக்கிட்டாரு போலருக்கு.''

''மறுநா வந்ததே சரின்னு என்னோட மோதுனாரு. நான் ஒண்ணும் தெரியாதுன்னு கையவிரிச்சிட்டென். எட்மாஸ்டரோட தகராறு. என்வீடுதேடி எப்படி வரப்போச்சு நான் திருட்டுத் தனமாபண்ணுனென் பெரிய யோக்கியன்போல வீட்டுக்கு வந்துட்டீரேன்னு கண்டபடி பேசீட்டாரு.''

''கிருஷ்ணசாமியா.''

''வெளிய ரெண்டுபேரு முள்ளிவுட்ருக்காக. எப்படி. அவருக்கு அம்புட்டுத் துமுரான்னு. இவருக்கு மண்டைக்கு ஏறிக்கிருச்சு.''

''அவரப்புடிச்ச கெட்டநேரம்.''

''எட்மாஸ்டர் எவ்வளவோ நல்லவார்த்த சொல்லிப் பாத்தாரு. கேக்கல. ஆறாம்வகுப்பக் கவனிக்கச்சொன்னா கவனிக்கிறதில்ல. தகராறு முத்திக்கிருச்சு. எட்மாஸ்டர் பொறுத்துப்பாத்தாரு. நெலம சரியாகல. என்னசெய்றது. மேல எழுதி அனுப்பீட்டாரு.''

''வேற வழியில்லயே.''

''எழுதின பதினஞ்சாம்பக்கம் கிட்ணசாமிசாருக்கு உத்தரவு வருது. சங்கரன்கோயிலுக்குப்பக்கம் தூக்கியடிச்சான்.''

''இந்தத் தொந்தரவு எதுக்கு.''

''மறுநா பாருங்க விடிஞ்சும்விடியாம கிட்ணசாமி சார் கௌம்பிவந்து எட்மாஸ்டர் நாற்காலியில உக்காந்துக்கிட்டாரு.''

''அய்யய்யோ இதென்ன கூத்து.''

''அவருமொகத்துல கோவம் துடிக்குது. நான்போயி இது ஒங்களுக்கு நல்லால்லன்னு சொன்னென். ஒஞ்சோலியப் பாத்துட்டுப்போ அந்தப்பய வரட்டும் ரெண்டுலஒண்ணு பாத்துட்டுத்தான் போவன்னு அருமுறுக்குறாரு. எனக்கு மனசு திக்குத்திக்குனு அடிச்சுக்கிருது. பையங்க ஆரும் ஆபீசுக்குள்ள வந்து பாத்துறாம ஆபீஸ் வாசல்ல நிக்கென்.''

''பாவிமனுசன் கெடுத்தாரே.''

''எட்கிளார்க் குட்டிபோட்ட பூனேமாதிரி நடமாடுறாரு. அட்டெண்டர் எட்டிஎட்டிப் பாக்காரு. எட்மாஸ்டர் தளவாய் புரத்துலருந்து எட்டரமணிக்கு வருவாரு. பஸ்ஸ்டாண்டுக்குப் போயி கூட்டீட்டு வரணும். வந்தா என்னாகுமோன்னு பயம்.''

''மத்த டீச்சர்ஸ் என்னசெஞ்சாக.''

''வந்துவந்து பாத்துட்டு குசுகுசுன்னு பேசிக்கிறாக.''

''நல்ல மனுசங்கப்பா.''

''சரி நடந்தபடி நடக்கட்டும்னு மாணிக்கத்த நிக்கச் சொல் லீட்டு பஸ்ஸ்டாண்டுக்குப் போனென். காரு வாற நேரம் ஆகஆக மனசு கெடந்து ஒளையிது... காரு வருது. எண்ணைக் கும்பால அவரு சிரிச்சமொகத்தோட எறங்குறாரு. பைய வாங்கிக்கிறென்.''

''வையாபுரி காலைத் தொங்கப்பபோட்டான். ரங்கராஜன் கேட்டார்.

''ஸ்கூலுக்கு வரேளா.''

''வாறொம். கொஞ்சதூரம் வந்ததும் இண்ணைக்கு லீவு போடுங்கய்யா பள்ளிக்கூடத்துல இருக்கிற நெலம சரியில்லன்னு சொல்றென். அவரு பேசல. என்னப் பாக்காரு. நான் வெசயத்தச் சொல்றென். அதுக்கும் சிரிப்புத்தான். அப்படியா அவருக்கு என்சீட்ல உக்காரணும்னு ஆசபோலருக்கு சரிவா போவம்னு கெழக்க திரும்பி நடக்காரு.''

பாண்டியன் சிக்கலாகப் பார்த்தார்.

''ஸ்கூல் வடக்கல்ல இருக்கு.''

''போலீஸ்டேசனுக்கு.''

''பெரிய வம்புதான்.''

''அவுட்போஸ்ட்ல ஏட்டு இருந்தாரு. எனக்கு போலீஸ் டேசன வள்ளிசாப் புடிக்காது. அந்தப்பக்கம் எட்டிக்கூடப் பாக்கமாட்டென்.''

''ஏன் எண்ணைக்காச்சும் எக்கச்சக்கமா அவுககிட்ட மாட்டிக்கிட்டயா.''

''நான் எதுக்கு மாட்டுறென். முன்னால ஒரு மகராசன் ஏட்டா இருந்தான். அவன் செஞ்ச அட்டகாசத்த நெனச்சா

கோவங்கோவமா வரும். பாவிமனுசன் அனியாயமா ஒருத்தனக் கொன்னுட்டான். கடசிக்கு அவன் புழுவரிச்சுத்தான் சாவான்.''

''நீ சொல்றதப் பாத்தா அவருக்கும் ஒரு பெரிய கதையிருக்கும் போலருக்கு.''

வையாபுரி தப்புச்செய்துவிட்டதுபோல் முழித்தான். இதைப்போய் இந்த நேரத்தில் ஏன்சொன்னோம் என்றிருந்தது.

''ஊருஊருக்கு நடக்கிற கததான். நமக்கெதுக்கு வம்பு.''

பாண்டியன் புரிந்துகொண்டார். இனியும் துளைத்துக் கேட்டால் அவ்வளவுதான். எட்மாஸ்டர் கதையையும் விழுங்கி ஏப்பமிட்டுவிடுவான்.

''அது கெடக்கட்டும் வுடு. பெறகு பாத்துக்கிறலாம். ஒங்க வம்பச் சொல்லு.''

வையாபுரிக்கு பெரிய கண்டத்திலிருந்து தப்பிய நிம்மதி. சக ஜத்திற்கு வந்து கதையை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தான்.

''எட்மாஸ்டர் உக்காந்து ஏட்டுகிட்ட சமாச்சாரத்தச் சொல் றாரு. ஏட்டு கம்ப்ளெய்ண்ட் எழுதிக் கேக்காரு. அதெல்லாம் வேணாம் என்னோட வாங்கன்னு ஏட்டக் கூட்டீட்டு சாதார ணமா பேசிக்கிட்டே வாறாரு.''

ரங்கராஜன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''வந்துட்டேளா.''

''மூணுபேரும் பள்ளிக்கூடத்துக்கு வாறொம். வகுப்பு வாசல்ல வாத்திமாரும் பையங்களுமா வேடிக்கபாக்காக. எட் மாஸ்டரத் தடுத்துநிறுத்தீட்டு ஏட்டு உள்ள போறாரு. நான் ஈரக்கொலையக் கையில ஏந்தீட்டு அவருக்குப்பின்னால ஓடுறென். கிட்ணசாமி சார் காலுமேல காலுபோட்டு ஜம்முனு உக்காந்துருக்காரு. ஏட்டு கடுமையா ரெண்டுவார்த்த பேசுனாரு. எந்திரிக்கலன்னா சங்கடம் வந்துசேரும்னு சொல்லி வெளிய அனுப்பீட்டாரு. கிட்ணசாமி சார் ஒண்ணும் பேசல. வெளிய

வந்து எட்மாஸ்டர ஒரு மொறப்பு மொறச்சிட்டு வகுப்புக்குப் போயிட்டாரு.''

பாண்டியன் பெருமூச்சு விட்டார்.

''நல்லவேளையாப் போச்சு.''

''எட்மாஸ்டர் ஏட்டப் பாத்துச் சிரிச்சு அனுப்பிவச்சிட்டு வாசல்ல ஏறி மொகத்தத் தொடச்சபடி வாட்டர்மேனக் கூப்புட்டாரு. மாணிக்கம் ரூமுக்குள்ள தூசியப் பெருக்கு.''

''ஹெட்மாஸ்டரும் கோவப்பட்ருந்தா கத என்னாகியிருக்கும்.''

''கிட்ணசாமிசார் அத யோசிக்கல.''

''கஸ்டத்த ஏன் வெலைக்கு வாங்கணும்.''

''இங்க மாத்தீட்டு வாறதுக்கு எவ்வளவோ அலஞ்சுபாத்தாரு. முடியல. ரெண்டுமாசம் லீவுபோட்டாரு. ஒண்ணும் ஓடல. தோட்டத்துல வெள்ளாம நேரம். இவருல்லன்னா காஞ்சு போகும். பாடுபட்டது வீணாயிரும். தோட்டத்தக் கவனிப்பாரா பள்ளிக்கூடத்துக்கு அலைவாரா. ஆளு ரெம்ப ஒடஞ்சு போயிட்டாரு.''

''அட பாவமே.''

''அவரு தோட்டத்துல தண்ணி பாச்சீட்டு அலையிறத எட்மாஸ்டர் ஒருநா கவனிச்சிருக்காரு. பள்ளிக்கூடத்துக்கு வந்ததும் அவரக் கூட்டீட்டு வரச்சொல்லி என்னைய அனுப்புனாரு.''

''மறுபடியும் மோதிக்கிறவா.''

''நான் போனென். அவரு ஒண்ணும் பேசல. நான் நல்லவார்த்த சொல்லி கொண்டுவந்து சேத்துட்டென். ரெண்டு பேரும் மதியவரைக்கும் பேசிக்கிட்ருந்தாக.''

''ஆச்சரியந்தான்.''

''அதுமட்டுமில்ல. எட்மாஸ்டரே நேருல போயி மேலாவுல

சொல்லி ஆடர ரத்துசெய்யவச்சாரு. அதுக்குப்பெறகு ரெண்டு பேருக்கும் நல்ல செனேகிதமாப் போச்சு.''

''அடிச்சக்க.''

''அஞ்சாறு மாசம் கழிச்சு வேற ஒரு உத்தரவு வந்துச்சு.''

''அதென்ன புதுசா.''

''எட்மாஸ்டரை மாத்தீட்டாக.''

''அடடா.''

''கிட்ணசாமி சாருக்கு ரெம்ப வருத்தம். மனு தயாரிச்சு ஊருக்குள்ள ரெம்பப் பேருட்ட கையெழுத்து வாங்கி மாத்தக்கூடாதுன்னு மேல அனுப்புனாரு.''

''அப்புறம்.''

''ஒண்ணும் ஆகல. எட்மாஸ்டர் தானா கேட்டு வாங்கின உத்தரவாச்சே. அவரு மாத்திப்போன அண்ணைக்கு கிட்ணசாமி சாருக்கு கண்ணீரு வந்துருச்சு. கூடவே போயி வழியனுப்பி வச்சாரு. ராசம்மா டீச்சர் கையெடுத்துக் கும்புடுது. டிரில்மாஸ்டர் கடசிவரைக்கும் இருந்து வழியனுப்பீட்டுத் திரும்புனாரு.''

பாண்டியன் சலித்துக்கொண்டார்.

''அப்படி நல்லமனுசன் இருந்த காலமும் போச்சு.''

''நல்ல மனுசன்னா ஒருவெதத்துலயா. ஆடம்பரம் கெடையாது. ஒருவாரத்துக்கு சட்டத்துணி மாத்தமாட்டாரு. இப்ப இருக்கிறவரு என்னன்னா நாளைக்கொண்ணு போடுறாரு. வீடு கிட்டத்துலருந்தா காலையில ஒண்ணு மதியம் ஒண்ணு போட்டாலும் போடுவாரு. துணியில அழுக்கு ஒட்டியிருக் கான்னு பாக்கவே நேரங்காணமாட்டங்குது. கூரப்பள்ளிக் கூடத்துல ஏழாம்வகுப்புல உக்காரமுடியுமா. ஆருட்டச் சொல்றது. பணமிருக்கு எல்லாம் பண்ணச்சொல்லுது...

நமக்கெதுக்கு இதெல்லாம். ஆள வுடுங்கசார். காலாகாலத்துல வீடுபோய்ச் சேரணும்.''

வையாபுரி கிளம்பினான். ரங்கராஜன் பாடம்போல் ஒபபித்தார்.

''சுத்தம் சுகம்தரும்.''

பாண்டியன் விடுவதாக இல்லை.

''அந்த ஏட்ட நடுத்தெருவுல நிறுத்தீட்டு கம்பிய நீட்டுனா எப்படி.''

''என்னயக் கம்பியெண்ணவைக்கிறதுன்னு முடிவு பண்ணீட்டீக.''

''வேய் இரு நாங்களும் கூடவாறொம்.''

''நீங்க பின்னால போறதுக்கு வேற ஆளு இருக்குசார்.''

ரங்கராஜன் கலகலத்தார்.

''நீ சொன்னது கரெக்ட்.''

பாண்டியனுக்கு ஒரு சந்தேகம் பாக்கியிருந்தது.

''அந்த ராசம்மா டீச்சர் என்ன ஆனாங்க.''

''அதப்பத்தி ஒங்களுக்கென்ன கவல.''

''சும்மா தெரிஞ்சுக்கிறத்தான்.''

''புருசன் மிலிட்டரியில வேலைய எழுதிக்குடுத்துட்டு வந்துட்டாரு. அம்மா மேலக்கடசிக்கும் டிரில்மாஸ்டரய்யா கீழக்கடசிக்கும் மாத்திப்போயிட்டாக. போதுமா.''

''அப்ப ஏட்டப்பத்தி வாயி தொறக்கமாட்டயாக்கும். ஒனக்கும் அவருக்கும் என்னமோ இருக்கு.''

''நீங்க ஒருத்தர் போதும். வேற வெனையே வேணாம்.''

''எண்ணைக்காச்சும் எங்கிட்ட வசமா மாட்டத்தான் போற.''

தப்பித்து ஓடிய வையாபுரி ரோட்டுக்குக் கீழே நின்று திரும்பிப்பார்த்தான்.

''எப்ப சார் கலியாணச்சாப்பாடு போடப்போறீக.''

ரங்கராஜன் முந்திக்கொண்டார்.

''யாரக் கேக்கிற வையாபுரி.''

''ரெண்டுபேரவுந்தான்.''

பாண்டியன் ரங்கராஜனைப் பார்த்தார். ரங்கராஜன் பதிலுக்குப் பார்த்தார். வையாபுரி அதுக்குமேல் நிற்கவில்லை.

இருட்டு முற்ற ஆரம்பித்திருந்தது. ரங்கராஜனும் பாண்டியனும் எழுந்து மங்கிய ரோட்டில் மெல்ல நடந்தார்கள். ரங்கராஜன் சொன்னார்.

''பாண்டியன் தமிழய்யாவக் கைவிட்டுட்டேளே.''

அவர்கள் நின்று திரும்பிப்பார்த்தபோது தமிழய்யாவும் கிராப்ட் வாத்தியாரும் நிதானமாகத் திரும்பிக்கொண்டிருந்தார்கள்.

''என்னவே வெறும் பானையத் தூக்கீட்டு விசுக் விசுக்குன்னு போற. நாங்கெல்லாம இருக்கிறது கண்ணு தெரியலயா.''

ரூமைக் கடந்துபோன மாணிக்கத்தைக் கூப்பிட்டார் பாண்டியன். அவுன் வந்து தலைப்பாவை அவிழ்த்து உச்சந்தலையைத் தடவினான். தண்ணீர் சுமக்கத் தோதானதுபோல் சும்மாட்டுப்பொட்டல் விழுந்திருந்தது.

''தனியா உக்காந்துட்டீகளே அய்யாவும் சாமியும் எங்கபோயிருக்காக.''

''ஒன்னத் தேடித்தான்.''

''என்னத்தேடி எதுக்குப் போனாக.''

''தமிழய்யாவுக்கு வெத்தல போட்டு விக்கிக்கிருச்சு. குடிக்கிறதுக்குத் தண்ணியில்லன்னு தெணறிப்போயிட்டாரு. ஒனக்கு நாங்க முக்கியமா என்ன.''

''ஒங்களுக்குத்தான் ஒருபான தண்ணி கொண்டுவந்து வச்சிறலாம்னு போனெென்.''

''அம்மாவுக்கு எடுத்துஊத்தி முடிஞ்சதா. அத்தன தண்ணியவும் என்னதான் செய்றாகளாம் டீச்சரம்மா.''

''தண்ணி ரெம்பச் செலவழிப்பாக.''

''ஆமாமா செலவழிக்கவேண்டியதுதான. கஸ்டப்பட்டு தான் சொமந்தாத்தெரியும். ஸ்கூல்ல குடிக்கிறதுக்குத் தண்ணி இருக்குதோ இல்லையோ அங்கமட்டும் கொறஞ்சிறக்கூடாது. இது மேலிடத்து உத்தரவு. அப்படித்தான.''

''ஒங்களுக்கு தெரியறதவா சொல்லீறப்போறென்.''

''வேய் வாட்டர் மேன்னா தண்ணியக் குடிச்சிட்டுத்தான் கெடக்கணுமா. சோறு சாப்பிடக்கூடாதா. வயிறு ஏன் எக்கிப்போயிருக்கு. உள்ள கொடலுருந்தா கருவாடா காஞ்சுபோயிரும்.''

அவன் விட்டுக்கொடுக்கவில்லை.

''மூணுநேரமும் ஜம்முனு சாப்புடுவென் சார்.''

''மூஞ்சியப் பாத்தாலே தெரியிது. ஆமா இப்படி ஓடிஓடிச் சொமக்கயே அதுல ஏதாச்சும் ஆதாயம் உண்டா. செலவுக்குக் காசு கெடைக்குமா.''

''நான் சொமக்கிறதோட சரி சார். ஆதாயத்தத்தேடி அள்ளிக்கெட்டீட்டா போகப்போறெம். வாற சம்பளத்துல வயித்துமொற கழிஞ்சாப்போதும்.''

''ஊருக்கு ஒழைக்கிற உத்தமனாச்சே நீ. எத்தன கொழந்தைக ஒனக்கு.''

''ரெண்டுபொண்ணு ஒருபையன்.''

''படிக்கவச்சிருக்கயா.''

''வேதக்கோயில் பள்ளிக்கூடத்துல படிக்காக மூணுபேரும். அதுகளக் கரையேத்தீறணும்னு வீட்டுக்காரிக்கு ஒரே வைராக்கியம்.''

''தாயில்லாப் புள்ளைகளே தவிச்சுச்தத்தளிச்சு படிச்சு முன்னேறிக்கிறாக. ஒன்கொழந்தைக குடுத்துவச்சுதுக.''

''எங்க சொரணமும் சும்மாருக்கமாட்டா. கெடைக்கிற வேலைக்குப் போயிருவா. ஆடுமாடு கோழின்னு எதவாச்சும் வளத்து கையில காசு பாத்துக்கிட்டே இருப்பா. அவஒத்தாசன இல்லன்னா வண்டி படுத்துக்கிரும். என்னமோ கர்த்தர் கிருபையால நாங்களும் நம்பிக்கையோட இருக்கொம்.''

''நீ வேதக்காரனா.''

''நாலஞ்சு தலமொறைக்கு முந்தியே எங்ககுடும்பம் வேதத்துக்கு மாறியிருச்சு.''

''கோயிலுக்குப் போவயா.''

''கலியாணத்துக்குமுந்தி வாரம்தவறாமப் போவென். அதுக்குப்பெறகு அவ்வளவாப் போறதில்ல.''

''ஏன் போகவேண்டியதுதான. கொஞ்சநேரம் அமைதியா உக்காந்துட்டு வந்தா மனசுக்கு நிம்மதியாயிருக்குமில்லையா.''

''என்ன சார் நிம்மதி. ஊருஒலகத்துல நடக்கிற கொடுமைய நெனச்சா கோயிலுக்குப் போகவா தோணுது.''

''அப்படியன்ன பெரிய கொடுமையப் பாத்துட்ட.''

''அத ஏன் கேக்கீக. ஒரு சமயம் என்வீட்டுக்காரி தாலி யறுத்துட்டு ரெண்டு புள்ளீகளோட நடுத்தெருவுல நிக்கையில நாதிக்கு ஆரு வந்தாக. அவள அறுதலியாக்குன மனுசன எவனாச்சும் தட்டிக்கேட்டானா.''

''வேய் கொஞ்சம் நிறுத்து. என்ன ஒளறிக்கொட்ற. வீட்டுக்காரின்னு சொல்ற தாலியறுத்ததுன்னு சொல்ற.''

''இதுல ஒளறுறதுக்கு என்னருக்கு சார். நெசத்தத்தான் சொன்னென்.''

பாண்டியன் தலையைப் பிய்த்துக்கொண்டார்.

''நெசமா.''

''அவ ஏற்கெனவே கலியாணமாகி தாலியறுத்துட்டுத்தான் எங்கிட்ட வந்தா.''

''அப்படியா சமாச்சாரம். இப்படி வந்து உக்காரு.''

''இருக்கட்டும் சார். வேலமெனக்கிட்டுப்போகும்.''

''இப்ப உக்காரப்போறயா கழுத்தப்புடிச்சு உக்கார வைக்கணுமா.''

''அப்ப ஒங்களுக்குத் தண்ணிவேணாமா.''

''கொஞ்சநேரம் தண்ணியில்லன்னா செத்தாபோவாக.''

அவன் பாண்டியன்அருகில் உட்கார்ந்துகொண்டான். அவர் அவனை மரியாதையாகப் பார்த்தார்.

''ஏன் சார் அப்படிப் பாக்கீக.''

''இண்ணைக்குத்தான் மாணிக்கத்தப் பாத்துருக்கென்.''

''இத்தன நாளா பாத்த மூஞ்சி வேறயா.''

''அது வாட்டர்மேனோட மூஞ்சி.''

''என்னென்னமோ சொல்றீக.''

''ஆமா ஒன்வீட்டுக்காரிய மொதப்புருசன் கைவுட்டுட் டானா.''

''அப்படின்னாக்கூட மனசு ஆறீருமே.''

''வேற எப்படி.''

''அவன் ஒரு வாயில்லாப்பூச்சி. வெறகுக்கடையில வேல செஞ்சான். காலையில கோடாலியுங்கையுமா கெளம்புனா பொழுதடஞ்சுதான் வீடுதிரும்புவான். பகல்முழுக்க மாங்கு மாங்குனு வெறகு ஒடப்பான். அவன் முக்கிமொனங்குற சத்தம் ரோட்டுல போறவுகளுக்குக் கேக்கும். பேரு முத்துவீரன். எங்கவீட்டுக்கு நாலுவீடு தள்ளித்தான் குடியிருந்தாக. சின்னதும் சிறிசுமா ரெண்டு பொட்டப்புள்ளீக. எங்க சொரணமும் ஆருட்டயும் வம்புதும்புக்குப் போகமாட்டா.''

''அப்படிப்பட்டுவுகளுக்கா வம்பு வந்துச்சு.''

''எங்க தெருவுக்கு அடுத்த தெருவுல மாடசாமின்னு ஒரு களவாணிச் சண்டீரு இருந்தான்.''

''அதென்ன சண்டீருல சண்டீரு களவாணிச் சண்டீரு.''

''பொதுவா களவாணின்னா களவாங்கயில் கண்டுக்கிட்டா தப்பிச்சுத்தான ஓடுவான்.''

''ஆமா.''

''அவன் அப்படியில்ல. அப்படித்தான் களவாம்பென் அதுக்கு என்னசெய்யப்போறன்னு எதுத்து அடிக்கவருவான்.''

''அம்புட்டுக் கொழுப்பா.''

''கண்ணுக்குமுன்னால ஒரு கோழிக்குஞ்சி தட்டுப்பட்டு றக்கூடாது. புடிச்சு வறட்டி சாராயம் குடிச்சிருவான். கள வாங்காற பொருளில்ல. மகாலிங்கபுரம் சந்தைக்குப் போனா சொமக்கமுடியாம சரக்கு வந்து எறங்கும். வீட்ல எல்லாரும் முத்துச்செல்லம் கொழிப்பாக.''

''அவனத் தட்டிக்கேக்கிறதுக்கு யாருமில்லையா.''

''தட்டிக்கேக்கவேண்டிய மகராசங்க அத்தனபேரும் அவனுக்குக் கூட்டாளிக. போலீஸ்காரங்களத்தான் சொல்றென்.''

''அப்பச் சரி.''

''போலீஸ்டேசன் அவனுக்கு மாமியார்வீடு. ஆரும்போயி அவனப்பத்தி பெராது குடுத்தா அப்படியா அவனப் புடிச்சுட்டு வந்து நொறுக்குறன்பாரு அல்லக்காபுல்லக்கான்னு அருமுறுக் கீட்டுப் போவாக. அவனக் கூட்டீட்டுவந்து ரெண்டுமூணு நாளைக்கு உள்ள வச்சிருப்பாக. பெறகு வுட்ருவாக. அவன் நல்லா தின்னுட்டு கெழங்குமாதிரி வெளிய வருவான். அதுலயும் அந்த நாராயணசாமி ஏட்டு இருக்கார அவரு அவனோட பேச்சுப் பழக்கம் போடுறதப் பாத்தா மாமன்மச்சான் தோத்துருவான்.''

''யாரு இப்ப இருக்கிறவரா.''

''இவரு நல்லமனுசனாச்சே. அந்தப் புண்ணியவாளன் மாத்திப்போயி நாளாச்சு.''

''அதான பாத்தென்.''

''ஒருநா பாருங்க மாடசாமி காலையிலயே வெறும்வயித்துல சாராயத்தப் போட்டுட்டு அடாவடித்தனம் பண்ணீருக்கான். நெலகொள்ளமுடியல. வாயில போடுறதுக்கு எர கெடைக்கல. கையில காசுமில்ல. வேற எங்கயாச்சும் பறிச்சுப் புடுங்கலாம்னு வெறகுக்கடைக்குள்ள மொழுஞ் சிருக்கான்.''

''போயும்போயும் வெறகுக்கடதானா கெடச்சது.''

''அந்தநேரம் பாத்து கடக்காரரு வெளிய போயிருந் துருக்காரு. அவன் ஆய்பூய்னு வெரட்டீருக்கான். வெறகு ஒடச்சுக்கிட்ருந்த முத்துவீரனுக்குக் கையும் ஓடல காலும் ஓடல. கோடாலியச் சாத்திவச்சுட்டு அப்படியே நின்னுட்டான்.''

''பெறகு என்ன நடந்தது.''

''அவன் வல்ரூட்டியாப் போயி கல்லாவுல பணம் எடுத்துருக்கான்.''

''அடப்பாவி.''

''இவனுக்கு மனசுகேக்கல. மொதலாளி வரட்டும்

வாங்கீட்டுப்போன்னு .சொல்லிப்பாத்துருக்கான். அப்படியும் கேக்கல. அவன் வெறகுக்கட்டைய எடுத்துட்டு வந்து நீயென்னடா கேக்கப்போச்சு கூலிக்கு ஒழைக்கிற நாயேன்னு ஒருஅடி அடிச்சிட்டான்.''

''இவன் சும்மாவா இருந்தான்.''

''அடிய வாங்கீட்டு பெறகும் நல்லவார்த்த சொல்லிப் பாத்துருக்கான். குடிகாரன் மடங்குறமாதிரி தெரியல. மறுபடி மறுபடி அடிச்சிருக்கான். எவ்வளவுதான் பொறுமசாலியாருந் தாலும் ஒரு மனுசனால அனியாயமா எத்தன அடியத்தான் தாங்கமுடியும்.''

''இவனும் பதிலுக்கு அடிக்க ஆரம்பிச்சிட்டானா.''

''அதெல்லாமில்ல. லேசா கையப் புடிச்சுத் தள்ளியிருக்கான். குடிபோதையில தாமரிக்கமுடியாம அவன் கீழ வுழுந்துட்டான். பெறகென்ன அவன் இவனத் தள்ள இவன் அவனத் தள்ள ரெண்டுபேரும் கைகலக்க ஆரம்பிச்சிட்டாக. வெலகிவுடுறதுக்கு ஒரு சுடுகுஞ்சிகூட இல்ல.''

''கடக்காரனாச்சும் வந்து தொலச்சிருக்கப்படாதா.''

''வெறகுக்குள்ள அவுக அடிச்சுப் பெரண்டு உருண்டுகிட்டுக் கெடக்கையில திடீர்னு காட்டுத்தனமா ஒரு அலறல் கேட்டுச்சு.''

''யாரு அலறுனது.''

''குடிகாரன்தான். அலறல் கொஞ்சங்கொஞ்சமா அடங்கி சண்டையும் ஓஞ்சிருச்சு.''

''என்னாச்சு.''

''சாத்தியிருந்த கேடாலிமேல மாடசாமி பெரண்டுவுழுந்து தொண்டயத் தறிச்சிருச்சு. கோயிலுக்கு வெட்டுன கெடாமாதிரி துள்ளித்துடிச்சு அடங்கீட்டான். முத்துவீரனுக்குன்னா மூஞ்சி மொகறையெல்லாம் ரத்தம். பயத்துல என்னென்மோ ஒளறிக்கிட்டு நேர போலீஸ்டேசனுக்கு ஓடீட்டான்.''

''பாவி கெடுத்தானே.''

''நடந்த கத அம்புட்டும் சொல்லீட்டான். சொல்லி என்னசெய்ய. ஒரு காதுலயும் ஏறல. பெரிய கொலகாரனப் புடிச்சிட்டு வந்தமாதிரி அவனுக்குக் காலுல்யும்கையிலயும் சங்கிலிமாட்டி வெசாரண நடத்தி பெரியடேசனுக்குக் கொண்டு போயிட்டாக.''

''அங்க பெரிய வெசாரணையா.''

''ஆளாளுக்கு மொறபோட்டு அடிச்சு ஒதச்சு தண்ணிக்குள்ள முக்கியெடுத்து... அந்தப்பாவிக செஞ்ச கொடும கொஞ்சநஞ்சமா.''

''அவன்தான் உண்மையச் சொல்லீட்டானே. பெறகேன் அவனக் கஸ்டப்படுத்தணும்.''

''கடசிக்கு நாராயணசாமி ஏட்டு அவன்நெத்தயில எத்துன எத்துல மல்லாக்க வுழுந்தவன் எந்திரிக்கவேயில்ல.''

''கொன்னுட்டாகளா.''

''அனியாயமா சாகடிச்சிட்டாக.''

மாணிக்கத்தால் அதற்குமேல் பேசமுடியவில்லை. குமுறிக் குமுறி அழுதான். பாண்டியனுக்குத் திடீரென்று பொறி தட்டியது. அன்றைக்கு வையாபுரி இந்தக் கதையைத்தான் சொல்லாமல் விழுங்கியிருப்பானோ. நிச்சயமாக இதேதான். அவனது தோளைப் பிடித்து உலுக்கித் தேற்றினார்.

''என்னவே இது சின்னப்புள்ளமாதிரி.''

''ஊரறிய நடந்த கொலைய மூடிமறச்சிட்டாக. மேல் வெசாரண அதுஇதுன்னு கண்தொடப்புக்கு நடத்தி கடசிக்கு என்னசெஞ்சாக தெரியுமா. எலலாரவும் நல்ல எடத்துக்கு மாத்திப்போட்டாக. அம்புட்டுத்தான். ஒருத்தனோட பொண் டாட்டி புள்ளீக ஆதரவில்லாமத் தவிக்கிறதப்பத்தி ஆரு கவலப்பட்டாக.''

''எல்லாம் அயோக்கியப்பயக.''

''சொரணத்துக்கு ரெண்டுபக்கமும் சொந்தக்காரங்க இருக்கத் தான் செஞ்சாக. ஆரும் ஒதவிக்கு வரல. அவ ரெம்பப் பரி தவிச்சா. அவளுக்கு எப்படியும் அனுசரணையாருக்கணும்னு மனசுக்குள்ள நானே முடிவுசெஞ்சிட்டென்.''

''தைரியமான முடிவு.''

''முத்துவீரனுக்கு எழவெடுத்து முடிஞ்சதும் நேர அவகிட்டப் போயி நெலமைய எடுத்துச் சொல்லி என்னோட வந்துறயான்னு கேட்டென். அவளும் பலத்த யோசனைக்குப் பெறகு சரின்னு சொல்லீட்டா.''

''ஒங்க வீட்ல என்ன சொன்னாக.''

''அந்தச் சங்காத்தமே வேணாம்னு கண்ண மூடீட்டாக. சரி அப்படின்னா ஒங்களுக்கு ஒரு புள்ள இல்லன்னு நெனச்சுக் கங்கன்னு கண்டந்துண்டமாப் பேசீட்டு நேர தாஸ் சார் வீட்டுக்குப் போனென்.''

''அங்க ஏன் போன.''

''சொரணத்துக்கு அவரு தூரத்து வழியில சொந்தம்.''

''அப்படியா.''

''என்முடிவக் கேட்டதும் ரெம்பச் சந்தோசப்பட்டாரு. நீ எதப்பத்தியும் கவலப்படாத நான் இருக்கன்னு தைரியம் சொன்னாரு. அதுபோதும் சார்னு கையெடுத்துக் கும்புட்டுட்டு அப்படியே எங்க சாமியாருட்டப் போனென்.''

''அவரு ஒருத்தரு பாக்கியிருக்காரோ.''

''சாமி இப்படிஇப்படி வெசயம் நீங்கதான் கோயில்ல கலியாணம் நடத்திவைக்கணும்னு கேட்டுக்கிட்டென். அவரு தாளக்கம்போட்டாரு.''

''ஏன்.''

''எல்லாம் மொறையோட நடக்கணும். சொரணம் வேதத்துக்கு மாறணும். அப்படிஇப்படின்னு இழுத்தாரு. எனக்குன்னா கோவங்கோவமா வந்துச்சு.''

''சாமியாரும் கைவுட்டுட்டாரா.''

''அவரு என்ன பேசீருந்தாலும் கவலப்படமாட்டெடன். முத்துவீரன் ஒரு கொலகாரங்கிறமாதிரி பேச ஆரம்பிச்சிட்டாரு. அதுதான் எனக்குப் புடிக்கல. சரிசாமின்னு சொல்லீட்டு தாஸ் சாருட்டப் போயி யோசன கேட்டெடன்.''

''அவரு என்ன சொன்னாரு.''

''அப்படியா ஒனக்கு இந்துக் கோயிலுக்கு வாறதுல கஸ்டமில்லையேன்னு கேட்டாரு. ஒங்க இஸ்டப்படி செய்யிங்கன்னு வந்துட்டெடன்.''

''நல்ல காரியத்துக்கு எந்தக் கோயிலுன்னு கெடக்கு.''

''எல்லாம் அவரே கவனிச்சுக்கிட்டாரு. சொந்தப் பணத்துல கலியாணச் சேல வேட்டி எடுத்தாரு.''

''அவரு மனுசன்.''

''பொட்டப்புள்ளீக ரெண்டவும் அவருவீட்ல இருக்க வச்சிட்டு மூணுபேரும் கழுகுமலைக்கு வண்டியேறுனொம்.''

''கந்தசாமி கோயில்ல கலியாணமா.''

''முத்துவீரனோட தாலிய புது மஞ்சக்கயத்துல முடிஞ்சு சொரணம் கழுத்துல கட்டுனென். ஓட்டல்ல மதியச்சாப்பாடு. சாய்ந்தரத்துக்குள்ள ஊருவந்து சேந்துட்டொம். அவருவீட்டுக்கு மறுவீடு போயி புள்ளீகளக் கூட்டீட்டு சொரணம் குடியிருந்த அதே வீட்ல குடியேறீட்டொம். பெரியமுத்துவீரன் போயி சின்னமுத்துவீரன் வந்துட்டான்.''

மாணிக்கத்தின் முகத்தில் காய்ந்த சிரிப்பு. பாண்டியன் அவனை பாசத்துடன் பார்த்தார்.

''ஒங்க குடும்பத்துல பெறகு வந்து கூடிக்கிட்டாகளா இல்ல இனியும் வெறச்சுக்கிட்டுத்தான் இருக்காகளா.''

''எத்தன நாளைக்குத்தான் கோவம் கொண்டாட முடியும். சொரணம் வயித்துல ஒரு ஆம்பளப்புள்ளையப் பாத்ததும் கோவமெல்லாம் பறந்துருச்சு. இப்ப எல்லாம் ஒண்ணு மண்ணாயிட்டொம். பயலுக்கு மொதமொட்ட கழுகுமலக் கோயில்ல போட்டொம். ரெண்டாவது மொட்ட வேளாங் கண்ணியில.''

''அதுக்குப் பெறகு சாமியாரு ஒண்ணும் கேக்கலயா.''

''இதுல கேக்கிறதுக்கு என்னருக்கு. அப்படியே கேட்டாலும் நானும் பதிலுக்கு நல்லாநல்லாக் கேக்கணும்னுதான் இருந் தென், அவரு அதக் கண்டுக்கிறல.''

''தாஸ் சார் ஒன்வீட்டுக்கு வந்து போயிருக்கிருவாரா.''

''நல்லதுபெல்லத்துக்கு நாங்க குடும்பத்தோட அவுக வீட்டுக்குப் போவொம். அவுக இங்க வருவாக.''

''அவ்வளவுக்கு நெருங்கீட்டீகளா.''

''அவரோட வீட்டம்மா நல்ல கொணம். ஒங்களுக்கு நாங்க பட்டுருக்கிற கடன எப்படித்தான் தீக்கப் போறமோன்னு அதுகிட்ட பேச்சோட பேச்சா சொன்னதுக்கு அதுக்கென்ன ஒங்க பொண்ணுகள்ல ஒண்ண எங்க பையனுக்குக் குடுத்து கடனத் தீத்துக்கிறவேண்டியதுதானன்னு மனசு நெறஞ்சு சொல்லுச்சு. சொரணம் அப்படியே கொதுகொதுன்னு அழுதுட்டா. என்னமோ ரெண்டு குடும்பமும் நெரப்புக்கலப்பா இருக்கணு மிங்கிற நெனப்புலதான் ரெண்டு பொண்ணு களவும் கஸ்டப் பட்டுப் படிக்கவைக்கொம். கடவுளு எப்படி நெனச்சிருக் காரோ.''

''எல்லாம் நல்லபடியா நடக்கும்.''

''எப்பேர்ப்பட்ட மாப்பிள வந்தாலும் அதுகள எங்க சாதியில குடுக்கிறமாதிரி இல்ல.''

பாண்டியன் இன்னும் ஆச்சரியமாகப் பார்த்தார்.

''இதுல இப்படியொரு சங்கதியும் இருக்குதா.''

''ஆம சார். நாங்க நாடாக்கமாரு. அவுக கோனாக்கமாரு.''

''நல்ல மாரு பருத்திமாரு வெளக்கமாரு. உண்மையிலயே நீ வாட்டர்மேன்தான்வே.''

''ஏன் சார் அப்படிச் சொல்றீக.''

''மனசுக்குள்ள பெரிய சமுத்தரத்தவே அடக்கி வச்சிருக்கயா சும்மாவா.''

''மொதல்ல ஒருபான தண்ணிக்கு வழியப் பாப்பொம். ஒங்ககிட்டப் பேச்சுப்போட்டதுல எல்லாம் மறந்துருச்சு. இனிமேத்தான் பள்ளிக்கூடத்துல தண்ணியெடுத்து வைக்கணும். கிட்ணசாமி சார் பல்தீத்தி மொகங்கழுவுறதுக்குத் தண்ணியில்லன்னா தாட்பூட்னு முறுக்கித் தள்ளீருவாரு. வையாபுரி வாயத் தொறந்தா மூடுறதுக்கு மூணுநாளாகும். ஆராரு என்ன ராமாயணம் பாடப்போறாகளோ இண்ணைக்கு.''

மாணிக்கம் அவசரமாகக் கிளம்பினான். பாண்டியன் உரக்கச் சொன்ன வார்த்தைகளைக்கூட சட்டைசெய்யாத அளவுக்கு அவன் கால்களில் வேகம் சலங்கைகட்டியிருந்தது.

''மொதல்ல எங்களக் கவனிக்கலன்னா அவ்வளவுதான். பள்ளிக்கூடத்துல ஒரு பானகூடப் பாக்கியிருக்காது. அம்புட்டும் நொறுக்கிக் குமிச்சிருவென். தெரிஞ்சதா.''

முழுப்பரீட்சை நேரம். ஸ்டடிகிளாஸ் தொடங்கியிருந்தது. எஸ்.எஸ்.எல்.சி. பையன்கள் மெயின்ஹாலில் தங்கிப் படித்

தார்கள். சுற்றுக்கிராமத்துப் பையன்களுக்கு அந்தந்த ஊரைச் சேர்ந்த கீழ்வகுப்புப் பையன்கள் சாப்பாடும் துணிமணியும் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

ரங்கராஜனும் தமிழய்யாவும் நைட்ஸ்டடிக்குப் பொறுப்பு. ஹெட்மாஸ்டர் தமிழய்யாவிடம் நம்பிக்கையாகச் சொன்னார்.

''நீங்கதான் ஸ்கூலுக்குப்பக்கமா இருக்கிறீங்க. பையங்கள நல்லா கவனிச்சுக்கிறணும். இந்தவருஷம் நம்மஸ்கூல் நல்ல பேர் வாங்கணும்.''

தமிழய்யா அமைதியாக கேட்டுக்கொண்டிருந்தார். ரங்கராஜன் ஹெட்மாஸ்டரைப் பார்க்கவில்லை. ஹெட்மாஸ்டர் போனதும் அவரால் கோபத்தை அடக்கமுடியவில்லை.

''நல்லபேர் வாங்கறதுக்கு நம்ம இருக்கறொம். கெட்டபேர் வாங்கறதுக்கு அவர் இருக்கறார்.''

தமிழய்யாவின் முகத்தில் சலனமில்லை.

''நமக்குப் பிடித்தமானதச் செய்வொம் சாமி.''

ரங்கராஜன் அதுக்குமேல் வாதிடவில்லை. அது தமிழய்யா வுக்கும் தெரியும்.

''ஏன் சார் பாண்டியனவும் சேத்துக்கிடலாமே.''

''அவரக் கட்டிப்போடமுடியாது. வெளையாட்டுக்கென்ன ராத்திரிப்படிப்பு.''

''அனியாயம் சார். பொண்ணுகளும் பையங்களப்போல படிக்கவேண்டாமா.''

''படிக்கணும்.''

''அதுகளுக்கும் தனியா ஏற்பாடுசெஞ்சு கவனிக்கலாமில்ல. ரெண்டு பொம்மனாட்டிக இருக்கறாளே அவாட்ட ஒப்படைக்க வேண்டியதுதானே.''

''சாமி அதுல எல்லாருக்கும் சௌரியக் கொறச்சல். ஹெட்மாஸ்டரோட இதப்பத்திப் பேசுனென். ஒத்துக்கிறல.''

''அப்படின்னாச் சரி.''

''ஊருக்குப் போகமுடியாதுன்னு பாக்கிறீங்களா. தாராள மாப் போய்வாங்க. நான் இருக்கென் கவனிச்சுக்கிற.''

தமிழய்யாவின் கண்களுக்கு வாயைவிட அதிகம் பேசத் தெரியும்.

இரவு ஏழுமணிக்கு ஸ்டடி தொடங்கும். அதுக்குள் பையன்கள் ஆஜராகணும். இல்லையென்றால் தமிழய்யா தலையாலேயே சொல்லியனுப்பிவிடுவார். அயலூர்ப் பைய னென்றால் குறைந்தது நாலு செய்யுளை மனப்பாடம் செய்து ஒப்பித்துவிட்டு உள்ளே வரணும். வீட்டுக்குத் திரும்பிப் போன உள்ளூர்ப் பையன் மறுநாள் நேரத்தோடு வந்துநிற்பான். அவனை அருகில் உட்காரவைத்து அவர் படிக்கச்சொல்லுவார்.

நைட்ஸ்டடி அவருக்கு சாதாரண கிளாஸ் மாதிரி. வெற்றிலையைக் குதப்பினால் கம்மென்று உட்கார்ந்துவிடுவார். அவர் பார்வைக்கும் வாய்க்குள் உலவும் சிரிப்புக்கும் தனித் தோரணை. உலகத்தையே வாய்க்குள்அடைத்துக்கொண்ட மாதிரி. எப்போதாவது ரெண்டுவார்த்தை வெளியே வரும். மனுஷனுக்கிருக்கும் நிதானம் சுட்டுப்போட்டாலும் மற்றவர் களுக்கு வராது.

பையன்கள் சந்தேகம் கேட்டால் உடனே தெளிவித்துவிட மாட்டார். அவர்களையே பதில்சொல்லவைத்து அதுக்கு 'ம்' கொட்டி அல்லது தலையசைத்து சிந்திக்கவைத்து தெளிவை வரவழைப்பார். முதுகில் தட்டிக்கொடுத்து அனுப்புவார். கண்கள்மட்டும் திரண்டு சிரிக்கும். கோபத்துக்கும் அவருக்கும் ரெம்பதூரம்.

ரங்கராஜன் அப்படியில்லை. எல்லாப் பையன்களுக்கும்

சந்தேகத்தை விளக்கிச் சொல்லிக்கொடுப்பார். சிலசமயம் கோபம் வரும்.

''டேய் மண்டு அறிவிருக்கா. ஒரு தடவ சொன்னா மண்டையில ஏறவேண்டாமோ.''

தலையில் குட்டுவார். லாந்தித் திரிவார். தமிழய்யா இதைக் கவனித்துவிட்டு அவரைப் பார்த்து ''ஊஹூம். அப்படிச் சொல்லித்தந்து பிரயோஜனமில்ல'' என்று தலையசைப்பார்.

சிலநாள் பாண்டியன் வந்தார். மெயின்ஹாலில் விரித்துக் கிடந்த மௌனம் அவருக்குப் பிடிக்கவில்லை.

''இந்த வெவகாரம் நமக்கு ஒத்துவராது சார். நீங்களுமாச்சு தமிழய்யாவுமாச்சு. நான் பையங்கள காலையில குளிக்க வைக்கென். நீங்க நைட்ல படிக்கவையிங்க.''

அவர் சினிமாவுக்குக் கிளம்பிவிட்டார்.

சைன்ஸ் தங்கச்சாமியும் மேத்ஸ் மனோகரனும் அவ்வப் போது வந்துபோனார்கள். ஒருமணிநேரம் இருந்து தங்கள் பாடங்களைக் கவனித்தார்கள். பேச்சுக்குக்கூட தங்குவதுபற்றிச் சொல்லுவதில்லை. நிலைமையறிந்து தமிழய்யா அவர்களை அனுப்பிவிடுவார்.

''வீட்டுல தேடுவாங்க. எங்களச் சொல்லுங்க தனிக்கட்ட. நீங்க போங்க.''

ரங்கராஜன் ஒருவாரம் ஊருக்குப் போகவில்லை. மறுவாரம் தமிழய்யா வற்புறுத்தி அனுப்பிவைத்தார்.

''கண்டிப்பா ஊருக்குப் போய்வாங்க சாமி. மனசுக்குச் சந்தோசமாருக்கும்.''

ரங்கராஜன் சோர்வாக இருந்தார்.

''போறதுக்குப் பிடிக்கல சார். எல்லாம் நெனைக்கறதுக்கு மாறா நடந்துண்டு வர்றது.''

''நடக்கக்கூடிய காரியத்த நெனச்சிட்டுப் போவமே.''

''என்ன சார் நீங்க. மனுஷாளுக்கு ஜென்மத்துக்கும் கல்யாணம் நடக்காத காரியமா.''

''நடக்கும் சாமி. நாம நெனச்சஒடனே எல்லாம் நடந்துட்டா இங்க வந்து சம்பளத்துக்குக் காத்துக்கெடக்கவேண்டிய தில்லையே.''

பின்பக்கம் கைகால் கழுவிக் கொண்டிருந்த பாண்டியன் வந்தார்

''ரங்கராஜன் சார் இன்னியும் கெளம்பலயா. இந்தி டீச்சர் போயி ரெம்பநேரமாச்சே. என்ன சார் ஒருமாதிரியா இருக்கீக. பணம் வேணும்னா என்பெட்டிக்குள்ள இருக்குது எடுத்துட்டுப் போங்க.''

ரங்கராஜன் பாண்டியனை ஏறிட்டார்.

''என்மூஞ்சியே ஒருமாதிரிதான பாண்டியன்.''

தமிழய்யா என்றுமில்லாதபடி கடிந்துகொண்டார்.

''இப்ப கெளம்புறீகளா என்ன சாமி.''

ரங்கராஜன் விரைவாகக் காரியங்களை முடித்துக்கொண்டு புறப்பட்டார். பாண்டியனுக்குச் சற்றுக் குழப்பம். தமிழய்யா வுக்கருகே திண்ணையில் உட்கார்ந்தார்.

''ஏன் சார் சோர்வாப் போறாரு.''

''வயசாயிட்டே போகுது. அது உறுத்த ஆரம்பிச்சிருச்சு.''

''உண்மதான சார்.''

''காலாகாலத்துல வழியத் தேடிக்கிறதுதான் நியாயம்.''

''கண்டிப்பா தேடிக்கிறணும்.''

''நம்ம சாமிக்கு வழி தட்டுப்படல. இந்தப்பக்கம் அடச்சு அந்தப் பக்கம் தெறந்துக்கிருச்சு.''

''அப்படின்னா அத மறந்துதொலச்சிறணும் சார். என்ன சொல்றீக.''

''சாமி ரெம்ப நெனைக்காரு.''

''அது தப்புசார். சும்மாசும்மா கொமஞ்சுக்கிட்ருந்தா ஆகப் போறதென்ன. தைரியமாப் பேசி ஆகும் அல்லன்னு முடிவு செஞ்சிறணும்.''

''கதையே தப்பாகிப்போச்சு. இதுல இனிமே பேசுறதுக்கு என்னருக்குது.''

''அது நமக்குத் தெரியிது.''

பாண்டியன் யோசனையிலாழ்ந்தார். தமிழய்யாவுக்கு ஆச்சரியம்.

''என்ன பாண்டியன் சிந்தன பலமாருக்கு.''

''என்னத்தச் சிந்திச்சு எந்தக் கோட்டையக் கட்டி முடிக்கப் போறென். எப்படிக் கட்டிப்பாத்தாலும் இடிஞ்சுதான் போகுது.''

''ஏன் அடித்தளம் நல்லால்லயா.''

''அதெல்லாம் நல்லாத்தான் இருக்கு.''

''அப்ப கட்டுறதுல என்னமோ கோளாறு.''

''வரவர எல்லாமே கோளாறாத்தான் தெரியிது.''

''அது தப்பாச்சே. அப்பப்ப ஊருக்குப் போய்வந்தா சரியாயிரும். வீட்டுச்சாப்பாடும் கெடைக்கும். நீங்கதான் போகாம வைராக்யமா இருக்கீங்க. ஏன் இந்தஊரு ரெம்பப் பிடிச்சுப்போச்சா.''

''போகணும் சார். போனா ஒரு முடிவோட கௌம்பணும். நெரந்தரமா வீட்டுச்சாப்பாடு கெடைக்கிறதுக்கு வழியப் பாக்கணும்.''

''ம்.''

''நம்ம செய்ற காரியம் நமக்கே நல்லதாத் தெரியல சார்.''

''ம்.''

''அந்தப் பொண்ணும் நம்மள நம்பி எத்தனை நாளைக்குக் காலங்கடத்துறது.''

''ம்.''

''இப்பெல்லாம் ஸ்கூல்ல சின்னப்பையன் ஏறிட்டுப் பாத்தாக்கூட மனசுக்குக் கஸ்டமாருக்கு. தப்பிச்சுத்தப்பிச்சு சினிமாத்தியேட்டர்ல ஒளிஞ்சு திரும்புனா மறுநா ஸ்கூலுக்குத் தான போகவேண்டியிருக்கு.''

''ம்.''

''ஒவ்வொரு சமயம் ஸ்கூலுக்குப் போகவேண்டாம்னு தோணுது.''

''ம் ஹ¯ஹ¯ம்.''

''அந்தப் பொண்ணு மனசுல பாரத்த வச்சுக்கிட்டு எப்படிப் பாடம்நடத்தும். ஒருநாளைக்கு அதோட வீட்லபோயிச் சாப்பிடணும்னா திருடனப்போல மொழையணும். அவுக அம்மா என்னப்பாக்கிற பரிதாபத்த நெனச்சா சாப்பாடா செல்லுது. நம்ம செய்ற லச்சணத்துல அடுத்தவுகளப்பத்திப் பேசுறதுக்கு என்ன அருகதையிருக்கு.''

தமிழய்யாவின் முகத்தில் ஆச்சரியம் பெருக்கெடுத்தது.

''அதனால என்னசெய்யலாம்.''

பாண்டியன் நெற்றியைக் கசக்கினார்.

''கண்டிப்பா ஊருக்குப் போகணும் சார். எங்கய்யாவக் கூட்டிவந்து ஒங்ககிட்ட நிறுத்துறென். அவர் பட்டாசுமாதிரி. தீப் புடிக்காமப் பாத்துக்கிறணும். அவருட்டப் பேசுறதுக்கு நீங்கதான் லாயக்கு. வெத்தலையக் குடுத்து எப்படியாவது பேசி முடிங்க.''

''அவருட்டப் பேசினாப் போதுமா.''

''பெறகு நமக்கு யாரு சார் இருக்காக. எனக்கு எல்லாமே அவருதான். அம்மா மூஞ்சியே தெரியாது. சித்திகிட்டச் சொன்னா வீணா தகராறுதான்.''

''ஏன்.''

''அதுக்குச் சொந்தக்காரப் பொண்ணு ஒண்ணு இருக்குதாம். அதக் கலியாணம்முடிக்கணுமாம். அய்யாவத் தொந்தரவு பண்ணுது.''

''அய்யா சொன்னாரா.''

''பேச்சுவாக்குல சொன்னாரு.''

''நீங்க என்ன பதில்சொன்னீங்க.''

''நான் அமைதியா கேட்டுக்கிருவென். மறுத்துப் பேசுனா அவருக்கு அங்க நிம்மதி கெட்டுப்போகும். சித்திக்கு இப்ப மட்டும் எம்மேல ஏன் அக்கற வந்துச்சுனு தெரியல.''

''அத ஏன் தப்பா எடுத்துக்கிறீங்க பாண்டியன்.''

''என் கதையக் கேட்டா இப்படிச் சொல்லமாட்டீக. அண்ணைக்கு நான் அம்மாவச் சாகக்குடுத்துட்டு அனாதையா நிக்கயில ஆதரிக்காறவுக மனசுல இண்ணைக்கு பாசம் பொங்கி வழியிதாக்கும்.''

''அம்மா சின்னவயசிலயே எறந்துட்டாங்களா.''

''பால்குடிக்கிற வயசு. ஒருநா ராத்திரி என்ன முன்னால போட்டுப் படுத்துக்கெடந்துருக்காக. பால்குடுத்தவாக்குல ரெண்டுபேரும் தூங்கீட்டொம். அசந்து தூங்கையில மறுபடியும் நான் பால்குடிச்சமாதிரி அம்மாவுக்கு உறுத்தியிருக்கு. பெரிய தொந்தரவாப் போச்சுனு புடிச்சுத் தள்ளியிருக்காக. அப்பத்தான் தெரியிது பால்குடிச்சது நானில்லன்னு.''

''என்ன சொல்றீங்க பாண்டியன்.''

''பெரிய நல்லபாம்பு சொகமா குடிச்சிக்கிட்ருந்துருக்கு. புடிச்சபுடியில கோவப்பட்டு மார்புலயே ஆழமாக் கொத்தீருச்சு.''

''கெட்டகாலம் எப்படி வருதுன்னு பாருங்க.''

''அம்மா வுழுந்தடிச்சு எந்திரிச்சு மேலத்தெருவுலருந்து அலறிக்கிட்டே கீழத்தெருவுக்கு ஓடுது. ஊரே முழிச்சுக்கிருச்சு. அய்யா என்னத் தூக்கீட்டு பின்னால ஓடுறாரு. மாரியம்மா மாரியம்மான்னு அவரு சத்தந்தான் பலமாக் கேக்குது.''

''அப்புறம்.''

''அம்மா வைத்தியர்வீட்ல போயி கதவ ஒடைக்கிறமாதிரி தட்டுது. அவரு தொறந்துவந்து பாத்ததும் தெகச்சுப் போயிட்டாரு. மூடியிருந்த துண்டக் குடுத்து கெட்டச் சொல்லியிருக்காரு. அதுக்குள்ள அவரு வீட்டுப் பொம்பளைக வந்து சேலைய உடுத்தி உக்காரவச்சிருக்காக. பாம்பு க. ச்ச எடத்துல சுண்ணாம்புத்தடபோட்டு வேப்பங்கொழவச்சு பார்வ பாத்தும் புண்ணியமில்ல. அம்மாவுக்கு வாயில நொரதள்ளி அப்படியே அய்யாமடியில சாஞ்சு உசிரவுட்ருச்சு. நல்லா விடியிறதுக்குள்ள எரிச்சுச் சாம்பலாக்கீட்டாக.''

பாண்டியன் கண்களைத் துடைத்துக்கொண்டார். தமிழய்யா வின் கண்களும் பனித்திருந்தன. பாண்டியனை பாசத்துடன் தட்டி ஆறுதல்படுத்தினார்.

''கேக்கிறதுக்கே வேதனையாருக்கு.''

''எதுக்குமே கலங்காற அய்யா நொந்து இடிஞ்சு போயிட்டாரு. கோவத்துக்குப் பேர்போன ஆனானப்பட்ட ஆண்டியாபுரம் முருகையாத் தேவர் அடங்கிஒடுங்கி தெப்பப் பசுவாயிட்டாரு. அப்புறம் நடந்ததச் சொல்லவேவேணாம். என்ன வளக்கிறதுக்காக ரெண்டாங்கலியாணம் முடிச்சு அதுலயும் சொகமில்ல. வேற வழியில்லாம என்ன பாட்டிகிட்ட ஒப்படச்சிட்டாரு. பாட்டின்னா அய்யாவப் பெத்தது. பாட்டிகிட் டத்தான் கடசிவரைக்கும் வளந்தென். அது வளக்கப்பட்ட பாடு கடவுளுக்குத்தான் தெரியும். ஆட்டுப்பால் மாட்டுப்பால் அத் தனையும் குடுத்து வளத்துச்சு. கழுதப்பால் ஒண்ணுதான் பாக்கி.''

ரெண்டுபேர் முகத்திலும் ஒரு சோகையான சிரிப்பு தெரிந்தது.

''பால்பாண்டியனாயிட்டீங்க.''

''பால்பாண்டியன் அஞ்சாறு வருசத்துல பாட்டிக்குப் பால் ஊத்துற பாண்டியனாயிட்டென். அது பொடுக்குனு போயிருச்சு. அதுக்குப்பெறகு நான் அனுபவிச்சது இருக்கே அது கொடுமையிலயும் கொடும.''

''சித்திகிட்டப் போகலயா.''

''பாட்டி உசிரோட இருந்தப்பயாச்சும் சித்தியப்பத்திக் கொஞ்சம் நெனவிருந்தது. பாட்டி போனப்பெறகு அடியோட மறந்துபோச்சு. ஆயிரந்தான் இருந்தாலும் எங்க பாட்டிக்கு ஈடாகாது சார்.''

''பெத்த தாயிக்குச் சமானமா இருந்து வளத்துருக்கே.''

''கடுகளவு பண்டத்தக்கூட பத்தரப்படுத்தி வச்சிருந்து குடுக்கும். ஒருநா பாருங்க எங்கயோ போன எடத்துல ஐஸ்வித்துருக்கான். அதுல ரெண்ட வாங்கி மெனக்கிட்டு மடியில முடிஞ்சிக்கிட்டு வந்துருக்கு. வந்து அவுத்துப் பாத்தா குச்சுதான் மிச்சம். அது ஐஸ்காரன கண்டபடி வையிது. நாசமாப் போறவன் எம்புள்ளைக்கு ஆசையா வாங்கீட்டு வந்தனே. இப்படிக் கரஞ்சு போறதக் குடுத்துருக்கான் பாரு. தப்பித்தவறி இந்தப்பக்கம் வந்தால்ல இருக்கு. வெளக்கமாரு பிஞ்சுபோகும்னு பொரிஞ்சு தள்ளுது. அதோட ஆசையக் கெடுப்பானேன்னு நான் ரெண்டு குச்சவும் வாங்கி ருசிச்சுச் சூம்புனென்.''

''இன்னும் கொஞ்சநாளைக்கு இருந்து ஒங்கள வளத்து ஆளாக்கிவிடுறதுக்குக் குடுத்துவைக்கல.''

''அய்யா யோசிச்சுப் பாத்தாரு. ஒரு முடிவுக்கு வந்து தூரத்து ஊருல கிறிஸ்தவ ஸ்கூல்ல சேத்துட்டாரு. ஹாஸ்டல்ல தங்கல். அண்ணைக்குச் சட்டியேந்த ஆரம்பிச்சென். இண்ணைக்கு

வரைக்கும் அதே பெழப்புத்தான். வராத செரங்கில்ல. ராத்திரி முழுக்க உறுமி இழுப்புத்தான். அதுல தேய்க்கிறதுக்கு எண்ணெயிருக்காது. விழுப்புண்ணுக்குக் கொறச்சலில்ல. தேகமெல்லாம் செறங்கு வந்ததால தேசிறங்குராஜன். சொறிப் படையைத் தோற்கடித்து வாகை சூடியதால சொறிப்படை வென்ற சூரவீரபாண்டியன்.''

பாண்டியனிடம் இப்போதுதான் பழைய குறும்பு திரும்பியிருந்தது. தமிழய்யாவுக்கு நிம்மதி.

''உண்மையிலேயே நீங்க வீரன்தான் பாண்டியன்.''

''நானா ஆடிஓடி நாலு வெளையாட்டத் தெரிஞ்சுக்கிட்டு எப்படியோ டிரில்மாஸ்டராயிட்டென். என்வெளையாட்டு எங்க அய்யாவுக்கே புடிச்சுக்கிருச்சுனா பாருங்களேன்.''

''ஒங்க வெளையாட்டுக்கென்ன. பாத்துக்கிட்ருந்தா எனக்குச் சிலசமயம் வெத்தலகூட மறந்துருது.''

''என்னமோ இண்ணைக்கு நானும் ஒரு மனுசனாகி யிருக்கன்னா அதுக்கு எங்கய்யாதான் காரணம். என்னப் பாக்காம அவரால இருக்கமுடியாது. எங்கருந்தாலும் ஓடிவந்து பாத்துட்டுப் போவாரு. அப்பேர்ப்பட்ட மனுசனுக்கு கடைசிக் காலத்துலகூட நல்லபெழப்பு வாய்க்கல.''

''ஒங்களப் பத்திக் கவலையிருக்குமில்ல.''

''எங்கசித்திக்குச் சொத்துதான் குறி. நான் நெலத்துல பங்கு கேக்கக்கூடாது. தன்மகனுக்கே எல்லா நெலமும் சேரணும். நான் நெலம்வேணும்னு தகராறாபண்ணுறென். என்னருந்தாலும் ராசபாண்டி எனக்குத் தம்பிதான சார். ஒரே ரத்தம். அவன் கலி யாணம்முடிக்கிறதுக்குப் பணம் குடுத்து ஒதவலயா. துணிமணி எடுத்துக் குடுக்கலயா. நெலத்த வச்ச பெழப்பு அவனுக்கு. நல்லா ருக்கட்டும். எனக்குப் பங்கு வேணாம்னு இப்பக்கூட எழுதிக் குடுத்துறென். எனக்கு எங்கய்யா நிம்மதிதான் முக்கியம்.''

''இங்க நடக்கிற விஷயம் அவருக்குத் தெரியுமா.''

''தெரியாது. சொன்னா வருத்தப்படத்தான் செய்வாரு. வேற ஒருத்தியக் கட்டிக்கிறப்போறன்னு எப்படிசார் சொல்றது. ஒங்களமாதிரி யாராச்சும் பக்குவமாச் சொன்னா மொறையாருக்கும்.''

''அப்படிச் செய்றதுதான் நல்லது.''

''டீச்சரப்பத்தி ஒங்களுக்குத் தெரியாறதில்ல. ரெண்டுபேரும் சம்பாரிக்கப்போறொம். குடும்பம் நடக்கப்போகுது. சாதி கெடக்கட்டும் ஒருபக்கம். நீங்களும் நானும் அதப்பாத்தா தகப்பன்மகன்மாதிரி பழகுறொம். ரங்கராஜன் சார் பூணூலத் தடவிப்பாத்தா நம்மளச் சேத்துக்கிட்டாரு. எங்கசித்தியும் நானும் ஒருசாதிதான். எப்படியிருக்குது நெலம. எங்கய்யாவுக்கு நீங்கதான் எடுத்துச்சொல்லி சமாதானப்படுத்தணும்.''

காற்றுக்கு இலையுதிர்ந்த மரமாக இருந்தார் பாண்டியன். அவரிடம் குடிகொண்டிருந்த பிள்ளைத்துள்ளல் எங்கே போயிற்று.

தமிழய்யாவுக்கு சந்தோஷம் கூடியிருந்தது. புருவத்தை உயர மலர்த்தினார்.

''தகப்பனாருக்கு பெத்தபுள்ளையோட நிம்மதியும் முக்கியம். ஒடனே ஊருக்குப் போயி அவர கூட்டீட்டுவாங்க. நான் பேசிக்கிறென்.''

''ரங்கராஜன் சார் வந்துக்கிறட்டும். அவர ஒங்களோட இருக்கவச்சிட்டு அடுத்த வாரம் போறென்.''

அன்று இரவு பாண்டியன் தமிழய்யாவின் ஸ்டடியைக் கவனித்துக்கொண்டார். பையன்கள் உறங்கியபின்னும் பாண்டியனின் பேச்சு ரெம்பநேரம் கேட்டுக்கொண்டிருந்தது. தமிழய்யாவும் சளைக்காமல் 'ம்' கொட்டியபடி படுத்துக் கிடந்தார்.

பாண்டியன் விடியக்காலம் பையன்களை எழுப்பி படிக்க

வைத்தார். தமிழய்யாவை எழுப்பவில்லை. பையன்கள் பொழுது கிளம்பும்வரை படித்தனர். பிறகு அவர்களை கொஞ்ச நேரம் கிரவுண்டில் விளையாடவிட்டு குளிக்கக் கூட்டிப்பேனார்.

ஞாயிறு சாயங்காலமே ரங்கராஜன் திரும்பிவிட்டார். பாண்டியனுக்கு அது புதுசாக இருந்தது.

"ரங்கராஜன் சார் இண்ணைக்கே திரும்பியாச்சு. நாங்க கவனிச்சுக்கிறமாட்டமா.''

''வரணும்னு தோணிச்சு வந்துட்டென் பாண்டியன்.''

தமிழய்யா எதுவும் கேட்கவில்லை. பிறகு பேசிக் கொள்ளலாமென்று இருந்துவிட்டார்.

இருட்டியதும் பாண்டியன் ரூமிலிருந்து ஸ்கூலுக்குக் கிளம்பினார்.

''ரங்கராஜன் சார் ஒங்களுக்கு அலுப்பாருந்தா இங்கயே படுத்துக்கங்க. தமிழய்யா சாவாசமா வரட்டும். நான் போயி பையங்களக் கவனிச்சுக்கிறென்.''

ரங்கராஜன் திகைப்பில் தமிழய்யாவை நோக்கினார்.

''நம்ம பாண்டியன்தானா சார் இது.''

''புதுப்பாண்டியன்.''

தமிழய்யாவின் வார்த்தை பாண்டியனுக்குத் தெளிவாகக் கேட்டது. சிரித்துக்கொண்டு போனார்.

ரங்கராஜனுக்குள் குமைச்சல் குடைய ஆரம்பித்தது. பூச்சுக்கனமேறும் இருளில் செடிக்கும்மல்களை பார்வையால் துழாவிக்கொண்டிருந்தார். எதிரில் தமிழய்யா அமைதியாக உட்கார்ந்திருந்தார்.

''மனசே சரியில்ல சார்.''

''நீங்க வரும்போதே மொகத்துல எழுதி ஒட்டியிருந்தது சாமி.''

''நான் ஊருக்குப் போயிருக்கப்படாது.''

''ஏன் வீட்ல ஏதும் பிரச்சனையா.''

''அங்க புதுசாவா வரப்போறது.''

''அப்புறம் எங்க.''

''நான் ஊருக்குப் போகலன்னா வழியில அந்தக் கண்றாவியப் பார்த்திருக்கமாட்டென்.''

''புதுசா என்ன கண்றாவி.''

''அத ஏன் கேக்கறேள். சொல்ல நெனைக்கறச்ச வாய் கூசறது.''

''பாக்கிறதுக்குக் கூசலயே.''

''சாயங்காலம் கெளம்பிப் போனென் பாருங்க.பஸ் ஸ்டாண்டுல ஹிந்தி டீச்சர் நின்னுண்டுருந்தா. பஸ் வர லேட்டாயிடுத்து. பஸ் வரவும் ஏறி வழக்கத்துக்குமாறா பின் சீட்ல ஒக்காந்தா. பஸ் மகாலிங்கபுரம் போறச்ச இருட்டிப் போயிடுத்து. பஸ்ஸ்டாண்டுல கொஞ்சநேரம் பஸ் நிக்குமோல்லியோ அந்தச் சமயத்துல அவ கீழ எறங்கி நடக்கறா.''

''கடைக்குப் போயிருப்பாங்க.''

''இல்லையே. கடையத் தாண்டின்னா போறா. நேக்கு ஒக்காந்துண்டுருக்க முடியல. கடையோரம் போயி நின்னு பார்க்கறென். பார்த்தா ரோட்டோரமா நடந்து போயிண்டுருக்கறா. அங்க ஒரு கார் நிக்கறது. அது ஹெட்மாஸ்டரோட கார்தான். அவ அங்கயே போயிட்டா. கர்மம் கர்மம். நான் பஸ்ல ஏறி கண்ண மூடிண்டென்.''

தமிழய்யாவின் வாயிலிருந்து வார்த்தைகளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் ரங்கராஜன்.

''இதுக்காகவா மனசு சரியில்ல சாமி.''

''இதப் பார்த்துண்டு சந்தோஷப்படவா.''

''என்னக் கேட்டா அப்படித்தான் சொல்லுவென்.''

''முடியலயே.''

''அப்ப அது நம்மதப்பு.''

ரங்கராஜனுக்கு பேச வாய்வரவில்லை. தமிழய்யா ஸ்டடி ஹாலுக்குக் கூட்டிப்போனார்.

''நாளைக்கு சீயக்கா தேச்சு நல்லா தலமுழுகிக் குளிங்க சாமி.''

ஸ்டடிஹாலில் நிலவிய அமைதியில் இவரும் கலந்தனர்.

திங்கட்கிழமை ஸ்கூலில் ரங்கராஜனுக்கு நிம்மதியே இல்லை. எந்தப் பாடம் நடத்தினாலும் எரிச்சலாக இருந்தது. போர்டில் எழுதமுடியாமல் அடிக்கடி சாக்பீஸ் ஒடிந்தது. பையன்கள் சின்னச்சந்தேகம் கேட்டால்கூட கடுகடுப்பாகப் பார்த்தார். மற்ற வாத்தியார்களுடன் சகஜமாகப் பேசவில்லை.

சாயங்காலம் கடைசிப்பீரியடு இல்லாததால் வழக்கம் போல் ரூம் திண்ணைக்கு வந்துவிட்டார். ஸ்கூல் சூழ்நிலையிலிருந்து விடுபட்டிருந்தாலும் பழைய நினைவுகள் மனசைப் பிசைந்து கொண்டிருந்தன.

ருக்மணியைப் பார்ப்பதற்கென்றே தனியாகக் குளிக்கப் போனது அவளுடன் பேசுவதற்காகப் பட்ட பிரயத்தனங்கள் இப்படி ஒவ்வொன்றாகக் கசந்து குமட்டின.

அவளுடன் மானசீகமாக வாழ்ந்த நாட்கள்தான் கொஞ்சமா. அவளது சிரிப்புக்காக வார்த்தைக்காக பார்வைக்காக ஏங்காத நாளுண்டுமா. கடைசிமுறையாக அவளிடம் எண்ணங்களை யெல்லாம் கொட்டித் தீர்த்துவிடணுமென்ற தீர்மானத்துடன் போனதுக்குக் கிடைத்த பதில் இதுதானா. இப்படி உதாசீனப் படுத்திவிட்டாளே.

ஸ்கூல் முடியுமுன்பே ஹெட்மாஸ்டர் கிளம்பிப் போய்விட்டார். அவர் போனதும் ஆபீஸுக்குள்ளிருந்து ருக்மணி

வந்தாள். அவள் அக்ரஹாரத்துக்குள் நுழைவதைப் பார்க்காமல் எழுந்து உள்ளே போய்விடலாமா என்றிருந்தது. ஆனாலும் எழுந்திருக்கவில்லை.

அவள் ரூமைக் கடக்கும்போது அவளுக்குமுன்னால் காறித்துப்பினார். செருப்பை திணணையில் தடாலென உதறிவிட்டு உள்ளே போனார். அப்போதும் அவள் ஏறிட்டுப் பார்க்கவில்லை. அவள்கழுத்தில் முளைத்திருந்த மயிர்க்கற்றை வெள்ளாட்டுத் தாலிபோல் உறுத்தியது. முடிப்பின்னல் உதையும் பிருஷ்ட அசைவின் அலங்கோலமும்... சீச்சீ...

தமிழய்யா ரூமுக்கு வரும்வரை இருப்புக்கொள்ளாமல் தவித்தார். வேஷ்டியை மடித்துக் கட்டுவதும் அவிழ்த்து உதறுவதுமாக இருந்தார். நிலைக்கம்பத்தில் கைமடக்கிக் குத்தினார். தரையில் அழுத்தி மிதித்துத் தேய்த்தார்.

தமிழய்யா வந்ததும் நடந்த விஷயம் அவ்வளவையும் ஒப் பித்துவிட்டார். தமிழய்யா பதில் பேசவில்லை. பாண்டியனின் விளையாட்டைப் பார்க்க கிரவுண்டுக்குக் கூட்டிப் போனார்.

கிரவுண்டில் பாண்டியன் தங்கச்சாமி மனோகரன் ஒருபுறமும் பெரியபையன்கள் மறுபுறமுமாக வாலிபால் நடந்து கொண்டி ருந்தது. பாண்டியன் ரங்கராஜனிடம் கேட்டார்.

''சார் கொஞ்சநேரம் களத்துல குதிச்சு கைவரிசையக் காட்டுங்களேன்.''

தமிழய்யா சொன்னார்.

''சாமி வெளையாடி முடிச்சாச்சு.''

மூணுபேரும் ரெம்பதூரம் வாக்கிங்போனார்கள். தமிழய்யா ஏதேதோ கதைசொல்ல மற்ற இருவரும் அமைதியாகக் கேட்டுக் கொண்டே பின்தொடர்ந்தார்கள்.

திரும்பும்போது ரெம்ப இருட்டிவிட்டது. அப்படியே குழந்தைச்சாமியின் ஹோட்டலுக்குள் நுழைந்தார்கள். ரூமுக்குப்

போய்வரணுமென்றால் நேரமாகிவிடும். நைட்ஸ்டடி பையன் கள் தனியாக இருப்பார்கள்.

குழந்தைச்சாமி கல்லாவிலிருந்து குரல்கொடுத்தார்.

''சாருக்கு சூடா போட்டுக்குடு.''

தமிழய்யா சர்வரிடம் சொன்னார்.

''எங்கள ரெம்பச் சூடேத்தவேண்டாம். இருக்கிறதக் குடுங்க.''

சாப்பிட்டு முடித்ததும் பாண்டியன் நழுவினார்.

''சார் நீங்க நடந்துக்கிட்ருங்க. நான் கடைக்குப் போயிட்டு வாறென்.''

''ஏன் பாண்டியன் ஊதுற தொழில எப்ப நிறுத்தப் போறீங்க.''

பாண்டியன் பேச்சை மென்று விழுங்கினார்.

''இண்ணைக்கோட வுட்டுத்தொலச்சிருவென் சார். அதுக் கொரு முழுக்குப்போட்டுட்டு ஒங்ககிட்டச் சொல்லலாம்னு இருந்தென். அதுக்குள்ள மாட்டிக்கிட்டென்.''

''நாளைக்கும் இதையே சொல்லமாட்டீங்களே.''

''ஒங்கமேல சத்தியமா சொல்லமாட்டென்.''

''அப்படின்னா ஒருபாக்கெட் வாங்கி சாவகாசமாகி ஊதி முடிச்சிட்டு வாங்க. இந்தவாரம் என்னென்ன காரியம் செய்யணுமிங்கிறது ஞாபகமிருக்குதுல்ல.''

பாண்டியனுக்குப் புரிந்துவிட்டது.

''நல்லா ஞாபகமிருக்குது சார்.''

''அப்படின்னாச் சரி.''

பாண்டியன் அவசரமாக கடைக்குப் போகிறமாதிரி போக்குக் காட்டி பஸ்ஸ்டாண்டுக்குத் தெருவில் திரும்பினார்.

தமிழய்யா ரங்கராஜனுடன் வரும்போது சாதாரணமாகக் கேட்டார்.

''சாமிக்கு இப்ப கோவம் தீந்துருச்சா.''

ரங்கராஜன் இருட்டுக்குள் நிற்கும் வீடுகளை வெறித்தபடி அமைதியாக நடந்துவந்தார்.

ஸ்டடிஹால் ஜேஜே என்றிருந்தது. சொல்லிவைத்தாற் போல் முக்கால்வாசிக்குமேல் வாத்தியார்களின் தலைகள் தெரிந்தன. கிராப்ட்முதல் டிராயிங்வரை ஆஜர். கிருஷ்ணசாமி கூட தட்டுப்பட்டார். சுப்பையாதாஸும் வந்திருந்தார். ரெண்டு பேரும் வந்தபிறகு குழந்தைச்சாமி வராமலிருப்பாரா.

தமிழய்யாவுக்குச் சந்தேகம். பாண்டியனைப் பார்த்தார்.

''பாண்டியன் ஏற்பாடா இது.''

''நமக்குத் தெரியாது சார். வையாபுரி வேல.''

''நீங்க சொல்லாமலா.''

''உண்மையா நான் சொல்லல சார்.''

''எப்படியோ படிப்பு நடந்தாச் சரி.''

பையன்களுக்கு ஒரே குஷி. பாண்டியன் தமிழய்யாவிடம் அனுமதி கேட்டு ஒரு பையனைப் பாடச்சொல்லி மேஜையில் தாளம்போட்டார். பையன் அனுபவித்துப் பாடினான்.

**''எத்தன காலந்தான் ஏமாற்றுவார்**
**இந்த நாட்டிலே**
**சொந்த நாட்டிலே.''**

பாண்டியன் துணைக்குப் பாடினார்.

**''சொந்த நாட்டிலே.''**

மேத்ஸ் மனோகரன் தமிழய்யாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந் திருந்தார். சைன்ஸ் தங்கச்சாமியும் கிராப்ட் வாத்தியாரும் சேர்க்கை. கிருஷ்ணசாமி சுப்பையாதாஸ் டிராயிங்மாஸ்டர்

மூணுபேரும் ஒரு கூட்டு. குழந்தைச்சாமி பாண்டியனுக்குத் துணை. ரங்கராஜன் தனிக்கட்டை.

சத்தம் அதிகமாக இருப்பதைக் கேட்டு வாட்ச்மேன் வீரணன் வந்து ஹாலில் எட்டிப்பார்த்தான். கச்சேரி உச்சக் கட்டத்தில் இருந்தது. இதுவும் ஒரு படிப்பாயிருக்கும் என்ற முடிவில் தலையாட்டிக்கொண்டு போய்விட்டான்.

பாட்டு முடிந்தது. பையன்கள் படிக்க உட்கார்ந்தார்கள். பாண்டியன் கிராப்டைக் கிண்டினார்.

''என்ன சார் கொழாயில கஞ்சா கிட்டிச்சமாதிரி மூக்குல பொடிய ஏத்துறீக. விசேசம் ஏதும் உண்டா.''

கிராப்டின் மூக்கு சுறுசுறுப்படைந்தது.

''சார்வாளுக்கு வேற ஆள் கெடைக்கலயா.''

"சும்மா தப்பிக்காதங்க. ரெண்டுபையங்கள கிளாஸ்லவச்சு அடிச்சீகளாம். ஒருத்தனுக்கு லேசான அடியாம். மத்தவனுக்குக் கனமா குடுத்தீகளாம். அதென்ன பாரபச்சம். அடிக்கிறதுக்கு முந்தி ரெண்டுபேரவும் கூப்புட்டு ரகசியவெசாரண நடந்துச்சாம். சமாச்சாரத்தச் சொல்லுங்க.''

எல்லாரும் கிராப்டைப் பார்த்தார்கள். அவருக்கு ஒரு மாதிரியாகப் போய்விட்டது.

''அய்யோ ராமாராமா. அத யாரு ஒங்ககிட்டச் சொல்லித் தொலச்சது.''

''எனக்குத் தெரியாம இந்த ஸ்கூல்ல எதும் நடந்துருமா சார்.''

''பையங்க சொல்லலன்னா சிவன்கோயில் கம்பியில புல்லப்ஸ் எடுக்கச் சொல்லி கீழ ஸ்டுல உருவிவிட்ருவீங்க.''

சிரிப்படங்கியபின் பாண்டியன் தூண்டினார்.

''சமாச்சாரத்தச் சொல்லாம மழுப்புறீகளே.''

''விடமாட்டீங்களே... சார்வாள் நடந்தது இவ்வளவுதான்.

எட்டாங் கிளாஸ்ல ரெண்டு பையங்களுக்குச் சண்ட. கெட்ட வார்த்த சொல்லித் திட்டீருக்கான். பொண்ணுகெல்லாம் சீச்சீன்னு மொகத்த மறச்சிருக்குது. அந்தநேரம்பாத்து நான் வெளிய போயிட்டென்.''

''மூக்குல பழைய சரக்க வெளியேத்தீட்டு புதுச்சரக்கேத்தப் போயிட்டீகளாக்கும்.''

''நான் உள்ள வரவும் சண்ட நின்னுபோச்சு. என்ன நடந்ததுன்னு கேட்டென். எவனும் சொல்லல.''

''போலீஸ் வெசாரணதான்.''

''ஒருபொண்ணு எந்திரிச்சு கெட்டவார்த்த பேசுனாங்க சார்னு சொன்னது. சண்டபோட்டவங்களக் கூப்புட்டு என்ன பேசுனாங்கன்னு தெரிஞ்சுக்கிறவேண்டாமா.''

''கண்டிப்பாத் தெரிஞ்சுக்கிறணும்.''

''ஒருத்தன் பேசுனத மத்தவன்கிட்டக் கேட்டு வார்த்தைக்குத் தக்க ஒதகுடுத்தென்.''

டிராயிங்மாஸ்டர் ஆமோதித்தார்.

''நியாயமான தண்டன சார். சண்ட எப்படி ஆரம்பிச்சதாம்.''

''ஒருபொண்ணு ஒருத்தன்கிட்ட கட்டபொம்மனுக்குக் கொழந்தையிருந்துச்சான்னு சந்தேகம் கேட்டதாம். கட்ட பொம்மனால எப்படி கொழந்த பெறமுடியும்னு இவன் மறுசந்தேகம் கேட்ருக்கான். இது மத்தவனுக்குப் புடிக்கல. சண்ட தொடங்கியிருச்சு.''

கலகலப்புக்கிடையே பாண்டியன் அக்கறையாகக் கேட்டார்.

''என்ன வார்த்த பேசிக்கிட்டாகளாம் சார்.''

"சார்வாள் ஒங்களுக்குத் தெரியாத வார்த்தையா பேசப் போறான்.''

பாண்டியன் கிராப்டை விட்டுவிட்டு ரங்கராஜனை நோண்டினார்.

''ரங்கராஜன் சார் கலியாணத்துக்கு நம்ம பாட்டுக்கச்சேரி தான். கிருஷ்ணசாமி சார் காய்கறி வாழஎல குடுத்துறணும். தாஸ் சார் சுத்தமான பால் அனுப்பணும். பலசரக்கு தீத்தம் சார் பொறுப்பு. கொழந்த சாரோட ஹோட்டல் மாஸ்டர் சமையல். வெத்தல ரெம்ப வாங்கிப்போடுங்க. தமிழய்யாவுக்கு வயிறு நெறையணும்.''

ரங்கராஜன் சலனமில்லாமல் உட்கார்ந்திருந்தார். அவரது நினைவுகள் ஹாலில் இல்லை.

அந்தநேரம் கிராப்டிடம் பொடி வாங்கி உறிஞ்சிய கிருஷ்ணசாமி வேட்டுத்தும்மல் போட்டார்.

''நீங்க கணக்கு வழக்குப் பேசுறதுக்கு எடஞ்சலாருக்கா. பொறுங்க சார் நாங்க வெளிய தப்பிச்சுக்கிறொம்.''

பாண்டியன் ஓடுவதுபோல் பாவனைசெய்தார். கிருஷ்ண சாமி மூக்குச்சுளிப்பை நிமிர்த்தி பொடியை மெச்சினார்.

''நல்ல காரம் பொடிக்கு.''

''காரம் மணம் குணம் நிறைந்த என்.வி.எஸ்.பட்டணம் பொடி... ஒங்க கெணறு தோண்டுறதுக்கு வேட்டு மருந்து தேடி எங்கெங்கயோ அலஞ்சீகளே கைக்குள்ளயே சரக்க வச்சுக்கிட்டு.''

கிராப்ட் மூக்குத்தூர்வையை கர்சீப்பால் வாங்கிக்கொண்டு லேசானார்.

''சார்வாள் மூக்கும் கெணறுமாதிரிதான்.''

''ஆமாமா. கெணறேதான். சார் இதுல எந்தச் சரக்கு நல்லாருக்கும்.''

''என்.வி.எஸ்.தான் காட்டம்.''

''அது கெடைக்காற நேரத்துல என்ன செய்வீக.''

''ஏழாயிரம்பண்ண துரைராஜ் பொடி கூட்டம்புளி ஜோஸ்யர் பொடி எது கெடச்சாலும் போட்டாகணும்.

மண்ணு போல இருக்கும். சுகந்தம்னு ஒண்ணு உண்டு. கமகமக்கும்.''

''இனிப்பு புளிப்புன்னு எதும் கெடையாதா சார்.''

''போட்டுப்பாருங்க தெரியும்.''

''போட்டா அது வெளிய இழுத்துட்டு வாற சங்கதிய வாங்கிக்கிறதுக்கு நீங்கதான் துண்டு நெய்துகுடுக்கணும். அதக் கேக்க மறந்துட்டனே. ஏன் சார் எல்லாருக்கும் துண்டு குடுத்திருக்கீகளே எனக்கு இல்லையா. வேர்வையத் தொடச்சுக் கிறலாமில்ல.''

''நீங்க வாங்களேன் சொந்தமா நெய்துக்கிறலாம். பையங்க அப்படித்தான் நெய்துக்கிட்டாங்க.''

''தமிழய்யாவுக்கும் அப்படித்தான் துண்டு கெடச்சதோ. அவருக்கு வாயால நெய்யிறதுக்கே சரியாருக்கும். பாண்டியனப் புடிக்கலன்னா அதுக்குச் சாக்குச்சொல்றீகளாக்கும்.''

''சார்வாள் நீங்க மைனர். நம்மதுண்ட தோளுமேல போடுவீங்களா.''

''அது சரி.''

தமிழய்யா ஓரப்பார்வையில் கவனித்துக்கொண்டிருந்தார். ரங்கராஜனுக்கு மனசு எதிலும் ஒட்டவில்லை.

ஹாலுக்குள் அரட்டையடங்கி கொஞ்சநேரமாகியிருந்தது. திடீரென்று ஒரு பையன் மூலையில் குமித்துக்கிடந்த பழைய மரச்சாமான்களுக்குள்ளிருந்து கிளம்பிவந்த பெருச்சாளியை விரட்டிக்கொண்டு ஓடினான். எல்லாப் பையன்களும் எழுந்துவிட்டார்கள். நல்ல வேடிக்கை.

சுவரில் சாவகாசமாகச் சாய்ந்திருந்த தமிழய்யா இதென்னடா வம்பாகப்போயிற்று என்று நிமிர்ந்து உட்கார்ந்தார். பையன்கள் கையில் கிடைத்ததை எடுத்துக்கொண்டு கெலித்தார்கள்.

ரங்கராஜன் மேஜைமீது உட்கார்ந்துகொண்டார். பாண்டியன் மரச்சட்டமொன்றைத் தேடிப்பிடித்துப் பாய்ந்தார். தங்கச்சாமிக்கு வயிற்றைக் கலக்கியது. பெருச்சாளி லேபரட்டரிக்குள் நுழைந்துவிட்டால் என்னசெய்வதென்று தவியாய்த் தவித்தார்.

முதலில் காலியாகப்போவது கண்ணாடிக் கூண்டுக் குள்ளிருக்கும் எலும்புக்கூட்டு மனுசன்தான். சுக்குநூறாகி விடுவான். அப்புறம் ஒவ்வொரு எலும்பாக எடுத்துக் காட்டித்தான் பாடம்நடத்தணும்.

பௌதிகத்தராசு குடுவை டியூப் எல்லாம் என்ன கதியாகுமோ. அமிலம் சிந்தினால்... அதை நினைத்தாலே மயக்கம் வந்தது.

நல்லவேளை பெருச்சாளி பாண்டியனிடம் மாட்டிக் கொண்டது. அடித்துத் தூக்கிவந்து ஹாலில் போட்டுவிட்டு தோரணையாகப் பார்த்தார். தங்கச்சாமிக்கு இன்னும் படபடப்பு அடங்கிவில்லை.

''பாண்டியன் சார் நீங்களும் ஸ்டூடன்டாயிட்டீகளே.''

''நம்ம போகலன்னா அடிபடுமா சார். ஒங்க லேப் அரோகராதான்.''

பெருச்சாளியைச் சுற்றிநின்று எல்லாரும் பிரஸ்தாபித்தார் கள். பழையபழைய கதைகளைச் சொல்லிமாளவில்லை. சுண்டெலி கரப்பான் தேள் என்று பேச்சு நீண்டுகொண்டே போனது. முடிவாக பாண்டியன் ஒரு கதையைச் சொல்லி வைத்தார்.

''ஒருநா பாருங்க நான் செகண்ட் ஷோ சினிமா பாத்துட்டு வாறென். ரோடு வெறிச்சுனு கெடக்குது. மார்க்கெட் முக்குல திரும்புனா சாக்கடப் பக்கமிருந்து பண்ணிக்குட்டிமாதிரி ஒண்ணு வந்து நடுரோட்ல மேயிது. கவனிச்சுப் பாத்தா பெரிய பெருச்சாளி. மார்க்கெட் சந்துலருந்து அத ஒரு பூன பாத்துக்கிருச்சு. ஒடனே வேகமா பாஞ்சுவருது. பெருச்சாளி

கொஞ்சங்கூட அலட்டிக்கிறல. இப்ப என்ன செய்யப்போன்னு ரெண்டு காலவும் தூக்கீட்டு எதுத்து நிக்குது. பூன சடன்பிரேக் போட்டு ஏறிட்டுப் பாக்குது. எக்குத்தப்பா மாட்டிக்கிட்ட மோன்னு அதுக்குப் பயம். இதெல்லாம் நம்மகிட்ட வச்சுக்கிறாதன்னு பெருச்சாளி மொறைக்குது. சும்மாதான் வந்தன்னு பூன வால மடக்கீட்டு வந்தவழியே திரும்பி நடக்குது. ஒண்ணும் நடக்கறாதுபோல பெருச்சாளி அதுபாட்டுக்கு உருண்டுகிட்டே போகுது. எனக்குக் கோவம் தாங்கல. இருட்டுக்குள்ள கெடச்சத எடுத்துக்கிட்டு பூனமேல ஒரு எறிவுட்டென். அது போன எடம் தெரியல.''

சூழ்ந்து கவனித்துக்கொண்டிருந்த பையன்கள் சிறிது நேரத்தில் விரண்டோடி அவரவர் இடத்தில் உட்கார்ந்து அமைதியாக புஸ்தகங்களை முணுமுணுத்தார்கள். மற்ற வாத்தியார்கள் ஓரத்தில் ஒதுங்கி நின்றார்கள். ரங்கராஜன்மட்டும் மேஜையில் உட்கார்ந்தவாறு பாண்டியனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

நேரங்கெட்ட நேரத்தில் ஹெட்மாஸ்டர் அங்கே வந்து நிற்பாரென்று யாரும் எதிர்பார்க்கவில்லை. தமிழய்யாவின் முகத்தில் கலவரம். வையாபுரி செய்த ஏற்பாடு இப்போது விளங்கியது. ஹெட்மாஸ்டர் வருவதாகச் சொல்லியிருப்பார். அவன் மற்றவர்களிடம் இந்த விஷயத்தை வெளியிடாமல் ஸ்கூலுக்கு வரச்சொல்லியிருப்பான். அவன்மேல் குற்றமில்லை. நைட்ஸ்டடியை எல்லா வாத்தியார்களும் அக்கறையாகக் கவனித்துக்கொள்வதாக ஹெட்மாஸ்டர் நினைக்கலாம். ஆனால் காரியம் கெட்டுப்போயிற்றே.

ரங்கராஜன் இறங்கிக்கொண்டார். ஹெட்மாஸ்டரின் அமைதி கலையவில்லை.

''மிஸ்டர் ரங்கராஜன் பாடம் எப்படிச் சொல்லிக் கொடுக்கிறீங்க.''

ரங்கராஜன் பேசவில்லை. பாண்டியன் சொன்னார்.

''ஸ்கூலுக்குள்ள பெருச்சாளி கெடந்துருக்கு சார். அதுபாருங்க இண்ணைக்குச் சாகணும்னு இருந்துருக்கு.''

பாண்டியன் பெருச்சாளியை காலால் தள்ளினார். ஹெட்மாஸ்டர் ரங்கராஜனை நோக்கினார்.

''அப்ப இன்றைக்கு நைட்ஸ்டடி பெருச்சாளிப்பாடம் இல்லையா மிஸ்டர் ரங்கராஜன்.''

கார் வந்த சத்தங்கூட கேட்கவில்லையே என்று யோசித்துக் கொண்டிருந்த ரங்கராஜனிடமிருந்து படக்கென்று பதில்வந்தது.

''சரித்திரமெல்லாம் படிச்சு முடிச்சாச்சு சார்.''

எல்லாரும் ரங்கராஜனைப் பார்த்தார்கள். ஹெட்மாஸ்டர் நிதானமிழக்கவில்லை.

''சரித்திரத்துலதான் நம்ம பையங்க வீக்கா இருக்காங்க. நீங்க என்னன்னா படிச்சு முடிச்சாச்சுன்னு சொல்றீங்களே.''

''நம்ம சரித்திரமே ரொம்ப வீக். அதுல இன்னும் படிக்கிறதுக்கு என்ன இருக்கறது.''

''அதனாலதான் பெருச்சாளியப்பத்திப் படிக்கிறாங்களோ.''

ரங்கராஜன் தயங்கவில்லை.

''பெருச்சாளி அக்ராரத்துக்குள்ள நொழஞ்சா கவலையில்ல. ஸ்கூலுக்குள்ள நொழஞ்சு எங்கமேல வந்ததாலதான் இவ்வளவும்.''

''மிஸ்டர் ரங்கராஜன் நீங்க பேசுறது சரியால்ல. ஒங்க டியூட்டிய கரெக்டா செஞ்சா நான் ஏன் கேக்கிறென்.''

ஹெட்மாஸ்டர் கழுத்தில் தங்கச்சிலுவையைத் தடவியபடி ஏறிட்டுப் பார்த்தார்.

ரங்கராஜனின் பார்வையும் நிமிர்ந்தது.

''அதக் கேக்கறதுக்கு ஒரு யோக்யத வேணும்.''

ரங்க்ராஜனுக்கு உடம்பு படபடத்தது. தமிழய்யா ஓடிவந்து அவரைக் கூட்டிக்கொண்டு வெளியே போனார். கொஞ்ச நேரத்தில் காரியம் இவ்வளவுக்கு முற்றிவிட்டதே என்று அவருக்கு மனசு அடித்துக்கொண்டது. வெற்றிலையைத் துப்பிவிட்டு சமாதானப்படுத்தினார்.

''உணர்ச்சிவசப்படாதங்க சாமி. தயவுசெஞ்சு அமைதி யாருங்க.''

மனோகரன் ஹெட்மாஸ்டருடன் ஆபீஸ்பக்கம் போனார். ஆபீஸ் வாசலில் வையாபுரியும் வீரணனும் காரைக் காத்து நின்றார்கள்.

பாண்டியனுக்குப்பின்னால் மற்ற வாத்தியார்களும் பையன்களும் முகத்தில் ஆச்சரியம் அப்பியபடி எட்டப் பார்த்தார்கள். கார் புறப்பட்டு மறையும்வரை அவர்களுக்கு வார்த்தை வரவில்லை.

பேச்சு முற்றிச் சூடுபிடிக்கும்போதே ரங்கராஜனைத் தள்ளிக் கொண்டு போய்விடலாமா என்று பாண்டியனுக்குத் தோன்றத்தான் செய்தது. ஆனாலும் வண்டி மோதியடங்கட்டும் என்று கட்டுப்படுத்திக்கொண்டார். ஒருவிதத்தில் அவருக்கு வெட்கமாகக்கூட இருந்தது.

வராண்டாவில் தமிழய்யா இன்னும் ரங்கராஜனுக்குச் சமாதானம் சொல்லிக்கொண்டிருந்தார்.

''சாமி நீங்க இப்படி கோவப்படுவீங்கன்னு நான் எதிர் பார்க்கவேயில்ல. தனிப்பட்ட வெவகாரங்கள பொதுஎடத்துல வச்சுப் பேசியிருக்கக்கூடாது.''

''நீங்களுந்தான் வயசானவங்க சார். இப்படியா நடந்துக்கறேள்.''

''நீங்க அத மனசுல வச்சுக்கிட்டுப் பேசுறீங்கன்னு நெனைக்கிறென்.''

''எதப்பேசி என்னபண்ணறது. அந்தப் பொம்மனாட்டிக்கு ஒரு பிரம்மச்சாரிக் கருப்பன் கெடைக்கல பாருங்க.''

ரங்கராஜனுக்கு குரல்கம்மி கண்ணில் நீர்கோர்த்தது. தமிழய்யா அவரது கையைப் பற்றிக்கொண்டு ஸ்டடி ஹாலுக்குள் நுழைந்தார்.

அதுக்குப்பிறகு எவ்வளவோ நடந்துவிட்டது.

அம்மைபோட்ட முகம்போல் ஸ்கூல் களையிழந்து காணப்பட்டது. பையன்கள் ரங்கராஜனைப் பார்த்ததும் காதைக் கடித்தார்கள். பெண்கள் புறாப்பார்வையிலும் பேச்சிலும் பரிமாறிக்கொண்டார்கள்.

அவர் எதையும் கண்டுகொள்ளவில்லை. வழக்கம்போல் பாடம்நடத்தினார். ஒரு வித்தியாசம். பையன்களை இப்போது திட்டுவதில்லை.

டீச்சர்ஸ் ரூமில் ஒரு கட்டாய அமைதி உட்கார்ந்திருந்தது. ரெண்டுபக்கமும் பகைத்துக்கொள்ளமுடியாத தர்மசங்கடம் வாத்தியார்களுக்கு. கிராப்ட்கூட பொடிச் சிரிப்பைச் சுருக்கிக் கொண்டார். தங்கச்சாமிக்கும் மனோகரனுக்கும் கிளாஸ்மீது ரெம்பக் கரிசனை வந்திருந்தது. அவசரம்அவசரமாக ஓடிப் போனார்கள். அவர்களுடன் வலியப்பேச பாண்டியனுக்கு மனசு வலித்தது. இதெல்லாம் ஏன்ஏன் என்று தமிழய்யாவுக்கு அடிக்கடி வெற்றிலை விக்கியது.

பேருக்குப் பிரேயர் நடந்தது. பையன்கள் கண்ணை லேசாகத் திறந்து ரங்கராஜனுக்கும் ஹெட்மாஸ்டருக்கும் கோடு போட்டார்கள். சிலகோடுகள் ருக்மணியையும் சேர்த்து முக்கோணமிட்டன.

''ஒருநாளைக்கு நமக்கும் இந்தக்கதிதான்'' என்று ராஜேஸ்வரி பாண்டியனை வருத்தமாகப் பார்த்துவிட்டுப்

போனாள். ''நம்ம கதையே வேறம்மா'' என்று அவர் சிரித்துச் சமாளித்தார்.

ரங்கராஜன் சுரத்தில்லாமல் ஊருக்குப் போய்வந்தார். வாரந்தோறும் அவரை அனுப்பிவைப்பதில் தமிழய்யா கவனமாக இருந்தார். ருக்மணி எப்போதாவதுதான் ஊருக்குப் போனாள். வையாபுரி துணைக்கு வந்து முந்தின பஸ்ஸிலோ பிந்தியோ அனுப்பிவைத்தான். திங்களன்று பஸ்ஸ்டாண்டில் காத்திருந்து கூட்டிப்போனான். ருக்மணியின் வழக்கமான சிரிப்பில் இப்போது குனிவு கொஞ்சம் கூடியிருந்தது.

அன்றைக்கு மதியம் பாண்டியன் தமிழய்யாவிடம் சொல்லிக் கொண்டு ஹோட்டலிலிருந்து முந்தியே திரும்பிவிட்டார். ஸ்போர்ட்ஸ் ரூமில் கணக்கெடுப்பு பாக்கியிருந்தது. வேம்பு நிழலில் நின்று சற்று வேர்வையைத் துடைத்தவருக்கு தற்செய லாக வையாபுரியைப் பார்த்ததும் திக்கென்றது. அக்ரஹாரத்துக் குள்ளிருந்து கேரியர் சுமையுடன் வந்து கொண்டிருந்தான்.

''வே பஸ்ஸ்டாண்டுக்கு இப்படியொரு வழியிருக்குதா.''

அவன் நிற்கவில்லை.

''சார் அதுக்குள்ளயா சாப்பிட்டுட்டு வந்துட்டீக.''

''இப்ப நிக்கப்போறயா இல்ல கால ஒடிச்சுக் கையில குடுக்கணுமா.''

அவரது அரட்டலைக் கேட்டு அவன் பயந்துதான் போனான். நெருங்கிவந்து சொன்னான்.

''சார் கோவிச்சுக்கிறாதங்க.''

''நான் சீக்கிரமா சாப்பிடுறதப்பத்தி ஒனக்கென்ன கவலன்னு கேக்கென். வெயிலுக்கு நிக்கிறதுகூட ஒங்களுக்கு எடஞ்சலாருக்குதா.''

''நான் கேட்டது தப்புதான் சார். போயும்போயும் ஒங்ககிட்டயா மாட்டணும்.''

''மாட்டிக்கிற அளவுக்கு என்ன நடந்துபோச்சு.''

''பெறகு வெவரமாச் சொல்றென்.''

''போயிட்டுவா கவனிச்சுக்கிறென்.''

''ஒங்களுக்குத் தெரியாதா பஸ்ஸ்டாண்டு அக்ராரத்துக்கு மாறுனது.''

''அது எப்ப.''

''இண்ணைக்குத்தான்.''

அவன் நாலெட்டில் தாவி ஆபீசுக்குள் நுழைந்துவிட்டான்.

சாயங்காலம் ரெண்டுபேரும் சிவன்கோயிலில் ஒருபீரியடு பேச்சுப்போட்டார்கள். அவர் அவனை கிடுக்கிப்பிடியில் விஷயத்தைக் கக்கவைத்துவிட்டார்.

''வே எங்கிட்டச் சொல்லலன்னா தூணுல கெட்டிவச்சுத் தோல உரிச்சிருவென்.''

''சாமிக்குத் தெரிஞ்சா வெவகாரம் முத்திக்கிருமோன்னுதான் வாய மூடீட்டு இருந்துக்கிட்டென்.''

''அப்படியும் என்னாச்சு. அண்ணைக்கு ராத்திரி மொத ஷோ நடந்ததப் பாத்துட்டுத்தான இருந்த. ரெண்டாவது ஷோ எண்ணைக்கு நடக்கப்போகுதோன்னு மனசு கெடந்து அடிச்சுக்கிருது.''

''கதையே முடிஞ்சுபோனப்பெறகு அதப்பத்திப் பேசுறது நல்லாத் தெரியல சார்.''

''முடிஞ்சே போச்சா.''

''கலியாணமாகி ரெம்பநாளாச்சு.''

''வே நெசந்தானா.''

''ஒங்களப்போலன்னு நெனச்சீகளா. காரியம் கமுக்கமா நடந்துருச்சு.''

''எங்கவச்சு நடந்தது.''

''வேதக்கோயிலா இந்துக்கோயிலான்னு தெரியல.''

''இது அய்யாவோட வீட்டுக்குத் தெரியுமா.''

''தெரியாதுன்னுதான் நெனைக்கென். ஏன்னா வீட்டுல ஆருமே இல்ல.''

''எங்க போயிட்டாக.''

''பையன் ரெம்பநாளைக்கு முந்தியே வெளிநாட்டுக்குப் போயிட்டாரு. அப்படியே அம்மாவவும் கூப்புட்டுக்கிட்டாரு போலருக்கு.''

''அய்யாவுக்கு உள்நாடுதான் புடிச்சுப்போச்சாக்கும்.''

''ஒங்களப்போல சொந்தநாட்டுமேல ஒரு பத்துதல்தான்.''

''எனக்கு ஒன்முதுகுமேலதான் பத்துதல். அடப்பாவிகளா எல்லாருமாச் சேந்து சாமியக் கவுத்தீட்டீகளே.''

''அவரா கவுந்துக்கிட்டா அதுக்கு ஆரு பழி. டீச்சரம்மாவோட பூர்வீகம் தெரிஞ்சா இப்படிப் பேசமாட்டீக.''

''பூர்வீகத்துக்கென்ன.''

''கலப்படந்தான். தாயி அய்யமாரு. தகப்பன் மொதலியாரு. பெரிய சவுளிக்கட. சொத்துச்சொகம் ஏராளம். ரெண்டாந்தாரமானாலும் அவரோட இருக்கிறவரைக்கு மதிப்பு மரியாதைக்குக் கொறச்சலில்ல. டீச்சரம்மா ஒரே பொண்ணு. செல்லமா வளந்தது.''

''அப்பா வுட்டுட்டுப் போயிட்டாரா.''

''மனுசன் திடீர்னு கண்ணமூடீட்டாரு. பெறகு கேக்கணுமா. ஒதுக்கிவச்சு வெரட்டியடிச்சிட்டாக.''

''வெறுங்கையோடயா.''

''போனாப் போகுதுன்னு ஆத்தோரம் கொஞ்சம் வயலு

எழுதிவச்சிருக்காக. அப்ப டீச்சருக்குச் சின்னவயசு. பெராமணக் குடியிலயும் ஒட்டமுடியாம இங்கயும் சேர முடியாம தாயும் மகளும் ரெண்டுங்கெட்டானா அலக் கழிஞ்சிருக்காக. அந்தக் கஸ்டத்துலயும் டீச்சரு படிச்சு முன்னுக்கு வந்துருக்குது பாருங்க அது பெரியகாரியந்தான்.''

பாண்டியனுக்கு ருக்மணிமீதிருந்த ஒருவிதமான வெறுப்பு குளிரத்தொடங்கியது.

''அதுக்கு ஒரு வைராக்யம் வேணும்.''

''அதப் பொண்ணுகேட்டு வந்தவுகெல்லாம் சாதி என்னன்னு கௌறிக் கேட்டுட்டு அருவமில்லாம திரும்பிப் போயிட்டாக. என்ன சாதின்னு சொல்றது. அய்யமொதலியா ருன்னா இல்ல மொதலியாரய்யருன்னா. இதெல்லாம் தெரிஞ்சா நம்ம சாமி ஏத்துக்கிருவாரா. மத்தவுகளப் போலதான் இவரும் இருப்பாருன்னு நெனச்சு டீச்சரம்மா ஒதுங்கீருச்சு. சாமியும் வுடாம தொயங்கெட்டித்தான் பாத்துருக்காரு. அம்மா எடங்குடுக்கல. அதுக்குப் பயம் என்னன்னா வெசயம் தெரிஞ்சு அக்ராரத்துல குடியிருக்கமுடியாமப் போயிருமோன்னு.''

''நம்ம சாமியப்பத்தித் தப்புக் கணக்குப் போட்டுருச்சே. நீ எங்கிட்ட ஒருவார்த்த சொல்லியிருந்தா சரிப்படுத்தி யிருப்பனே.''

''ஆருட்டயும் சொல்ல வேணாம்னு அழுகாற கொறையா கேட்டுக்கிருச்சு. ஒருத்தரோட பெழப்பக் கெடுத்துறப்புடாதே.''

''இது நல்ல பெழப்பாக்கும்.''

''எவ்வளவு காலத்துக்குத்தான் பாதுகாப்பில்லாம இருக் கிறது. காலம் போற போக்கப் பாத்தா இந்தி நெலச்சுக் கிறாதுன்னு தோணுது. அப்ப நடுத்தெருவுலதான நிக்கணும். அதுக்கிது எவ்வளவோ தாவல.''

''சமாளிக்காதவே.''

''நடக்கிற நடப்பத்தான் சொன்னென். டீச்சரம்மாவ சாமி ஏத்துக்கிருவாருன்னே வச்சுக்கிருவொம். குடும்பத்துல ஒத்துக் கிருவாகளா. ஆயிரம் சாத்தரம் கொலம் கோத்தரம் குடுமி வடக்கயா தெக்கயான்னு பாக்கிற சனங்களாச்சே. அவரோட தங்கச்சியவேற கரையேத்தணுமே.''

வையாபுரிக்கு இவ்வளவு கூறுகணக்கு எப்படி வந்தது என்று பாண்டியனுக்கு உள்ளுக்குள் பலத்த யோசனை. வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

''நீ சொல்றது வாஸ்தவந்தான்.''

''நான் ஒண்ணு கேக்கென் தப்பா நெனச்சுக்கிற மாட்டீகளே.''

''சொல்லு.''

''டீச்சரம்மா அக்ராரத்துப் பொண்ணுன்னுதான சாமி இம்புட்டுக் கணக்குப்போட்ருக்காரு. இதே வேதக்கார எட்மாஸ்டர் அய்யராருந்து இல்ல அந்தம்மா வேற ஒரு அய்யரத் தேடிக்கிட்ருந்தா பள்ளிக்கூடத்துக்குள்ள பத்துப்பேருக்கு முன்னால சண்ட நடந்துருக்குமா. என்னக் கேட்டா நடந்துருக் காதுன்னுதான் சொல்லுவென்.''

''வே சாமி டீச்சருமேல வச்சிருக்கிற பிரியத்தக் கேவலப்படுத்துற.''

''வெளிய ஆயிரம் பேசுனாலும் உள்ள இருக்கிறத அழிக்க முடியாது சார். அது மூங்கில்பண்ணமாதிரி.''

பாண்டியனுக்கு மூஞ்சியில் பந்து மோதிய அதிர்ச்சி. வையாபுரி அவரைத் துருவினான். அவர் தலைநிமிர்ந்தார்.

''எல்லாரவும் சகட்டுமேனிக்கு எடபோட்டுறாத.''

''நீங்க என்னசெய்றீகன்னு பாக்கத்தான போறென்.''

அவருக்கு பந்து கையில் அகப்பட்டுவிட்டது.

''நான் கஸ்டப்படுறத வேடிக்கபாக்கப் போறயாக்கும்.

வள்ளுவர் என்னசொல்லியிருக்காரு தெரியுமா. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு. ஒன்ன நண்பன்னு சொல்லிக்கிறதுக்கே வெக்கமாருக்கு.''

''நம்மளப்பத்தி அப்படியா நெனச்சுக்கிட்டீக. ஒருத்தர மன சுக்குப் புடிச்சுக்கிருச்சுன்னா அவருக்காக உசிர வுடுவனாக்கும்.''

''அப்ப என்னப் புடிக்கலன்னு சொல்லு.''

''ஆமா புடிக்கல.''

''அய்யாவுக்குப் புடிக்கணும்னா எப்படி நடந்துக்கிறணும்.''

''மொதல்ல ஒங்க வீட்டுக்குக் கூட்டீட்டுப் போகணும்.''

''அதத்தான் நானும் நெனச்சுக்கிட்ருக்கென். நீமட்டும் ஒத விக்கிருந்தாப்போதும். எடுத்த காரியத்த நடத்தி முடிச் சிருவென்.''

''ஒங்களுக்கில்லாற ஒதவியா. சொல்லுங்க சார். காத் துருக்கென்.''

''வாற வியாழக்கெழம சாயங்காலம் பெறப்பட்டு எங்க ஊருக்குப் போறொம். ராத்திரி அங்க தங்கீட்டு மறுநா மதியத்துக்குப்பெறகு அருப்புக்கோட்டைக்குக் கெளம்பி டீச்சரு வீட்டுலபோயி வுழுந்துரு. என்ன பிரயாசப்பட்டும் டீச்சரோட அப்பாவ கையோட கூட்டீட்டு சனிக்கெழமைக்குள்ள பாறக்கொளம் வந்துசேந்துறணும். தெரிஞ்சதா. நான் எப்படியும் எங்கய்யாவ அசத்தித் தள்ளீட்டு வந்துறென்.''

''கத அம்புட்டு வளந்துருச்சா. அப்ப தாமதிக்கப்புடாது. மணியடிக்கிறதுக்கும் சாப்பாடு எடுத்துட்டு வாறதுக்கும் மாணிக்கத்த நேமிச்சிட்டுக் கெளம்பீருவொம்.''

''நீ எங்கூட வாறது ஆருக்கும் தெரியவேணாம்.''

''டீச்சரம்மாட்டக்கூட சொல்லமாட்டென். இப்ப மணியடிக் கிறதுக்கு நேரமாச்சு. நான் வரட்டுமா சார்.''

வையாபுரி போனபிறகும் பாண்டியன் நினைவுக்கனத்தில் உட்கார்ந்திருந்தார்.

மறுநாள் காலை குளித்துத் திரும்பும்போதுதான் தமிழய்யா வுடன் தனியாகப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ருக்மணியின் சமாச்சாரத்தைச் சொன்னபோது அவர்முகத்தில் எப்போதுமபோல் நிலைகொண்ட நிதானம். முன்னால் செல்லும் ரங்கராஜனை வெறித்துப்பார்த்தார்.

''சாமிக்குத் தெரியுமா''

''தெரியாது.''

''அந்தக்காலத்துல காக்கைபாடினியம்னு ஒரு இலக்கிய நூல் இருந்தது. அத கடல்கொண்டுட்டுப் போயிட்டதால அதப்பத்தி நமக்கெல்லாம் தெரியாமப்போச்சு.''

காக்கைபாடிணியத்துக்கு என்னவந்துவிட்டது இப்போது. இந்தத் தமிழய்யாவே இப்படித்தான். மலையைக்கூட இலையாக மென்று குதப்பிக்கொள்வார்.

''ஆமாமா கடலுக்கு எரக்கமில்ல. நமக்கும் குடுத்து வைக்கல.''

முன்னால் நடந்த ரங்கராஜன் காத்திருந்தார்.

''பாண்டியன் நான் எவ்வளவு முன்னேறிட்டென் பார்த்தேளா. ஒங்கள விட்டிண்டு தனியாப் போயிடுவனோன்னு பயம் வந்துடுச்சு. நின்னுட்டென்.''

பாண்டியன் வருத்தப்பட்டார்.

''இப்பவே தமிழய்யாவுக்குப் பிரிவு தாங்கமுடியல.''

மூணுபேரும் சேர்ந்து நடந்தார்கள்.

சனிக்கிழமை சாயங்காலம் பாண்டியன் துள்ளிக்கொண்டு வருவதைக் கவனித்த தமிழய்யா ''போன காரியம் முடிஞ்சதா'' என்று புருவத்தால் கேட்டார். பாண்டியன் ராகம்பாடிக் கொண்டே ரூமுக்குள் போய் பாயெடுத்துப்போட்டார்.

''யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே.''

''கூட இருந்து கூட்டீட்டு வரக்கூடாதா.''

''ஒன்வேகத்துக்கு நம்மளால ஈடுகுடுக்கமுடியாது. நீ முன்னால போ நான் சாவாசமா வாறன்னு சொல்லீட்டாரு. என்ன சார் தனியா உக்காந்துட்டீக. வாக்கிங்போகலயா. ரங்கராஜன் சார் ஊருக்குப் போயிட்டாரா.''

''கொஞ்சநேரத்துக்கு முந்தித்தான் கௌம்பிப் போறாரு. நான் கிராப்ட் சாருக்குத் தொணையா நடந்துட்டு வரலாம்னு தான் நெனச்சென். எடையில நீங்க வந்து பூட்டிக்கெடக்கிற வீட்டுக்குமுன்னால காத்திருக்கணுமேன்னு ஒங்கள எதிர்பார்த்து உக்காந்துட்டென்.''

''ஒருவழியா அய்யாவக் கொண்டுவந்து ஒப்படச்சிட்டென். இனி ஒங்க பொறுப்புத்தான் எல்லாம்.''

''சித்தி தம்பி எல்லாரும் எப்படியிருக்காங்க.''

''நான் போனதுல சித்திக்குச் சந்தோசம். வுழுந்துவுழுந்து கவனிச்சுக்கிருச்சு. ராசபாண்டி என்னவுட்டுப் பிரியல. அவனுக்கு ஒரு பையன் இருக்கான். படுசுட்டி. பெரிப்பாபெரிப்பான்னு வளையவளைய வருவான். நல்லா பேசுறான். ராத்திரி ஒறங்கவுடல. எங்கூடத்தான் படுத்துக்கிட்டான். அவன் பேச்சுக் கெல்லாம் சரிப்பாசரிப்பான்னு தட்டிக்குடுத்து ஒறங்கவச்சென். வீடுதான் அவனுக்குக் கிரவுண்டு. எங்கய்யா கிட்டிக்குச்சும் கம்பும் கடசல்மாதிரி செதுக்கிக் குடுத்துருக்காரு. அவனுக்குப் பயந்துபோயி பானசட்டியெல்லாம் ஒதுங்க வச்சிருக்காக.''

''டிரில்மாஸ்டர் வீட்டுவாரிசாச்சே. நீங்க அவனோட வெளையாடலயே.''

''வெளையாட்டுச் சொல்லிக்குடுத்தென். என் மோதரத்த அவன் பெருவெரல்ல மாட்டிவுட்டுட்டென். பெரிப்பா மோத்தரம் பெரிப்பா மோத்தரம்னு அவன் குதியாளம் போட்டதப் பாத்து எங்கய்யா வீடே இடிஞ்சுபோறாப்புல சிரிக்காரு. அப்படிச் சிரிச்சு நான் பாத்ததில்ல.''

''இந்த வெளையாட்டுல மத்ததெல்லாம் மறந்துருக்குமே.''

''மழைக்குத் தளுத்த மரம்போல என் மனசுக்குள்ள ஒரு சந்தோசம். அதக் கெடுத்துறக்கூடாதுன்னு தோணிச்சு. அதனால சித்தியிட்டயும் அய்யாட்டயும் சொல்லல. தம்பியிட்டமட்டும் ரகசியமாச் சொன்னென். அவனுக்குச் சந்தோசம். பின்னால சித்தியச் சரிப்படுத்திக்கிற பொறுப்ப ஏத்துக்கிட்டான்.''

செருப்பு அறிவிப்பில் பாண்டியனின் அய்யா வந்து சேர்ந்தார். வந்து உட்கார்ந்ததும் உட்காராததுமாகக் கேட்டார்.

''சாமியக் காணுமே.''

தமிழய்யா சொன்னார்.

''இப்பத்தான் ஊருக்குப் போறாரு.''

''அடடா வுட்டுட்டனே. அவரத்தான் நெனச்சுக்கிட்டே வந்தென்.''

தமிழய்யாவும் பாண்டியனின் அய்யாவும் ராத்திரி ரெம்ப நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். பாண்டியன் அவர்களுக்கு சாப்பாடு வெற்றிலைபாக்கு பழம் வாங்கிக்கொடுத்துவிட்டு ஸ்கூலுக்குப் போய் வீரணனுக்கத் துணையாகப் படுத்திக் கொண்டார். இடையில் வையாபுரி ரூமுக்கு வந்து ஆஜர் கொடுத்துவிட்டுப் போனான். அவன் பாண்டியனை முந்தியே சந்தித்து அருப்புக்கோட்டையிலிருந்து வெற்றிகரமாகத் திரும்பி வந்த கதையைச் சொல்லிவிட்டான்.

அவனைப் பார்த்ததும் தமிழய்யாவுக்குத் தெம்பு கூடியது. பாண்டியனின் அய்யாவிடம் ஆதியிலிருந்து சங்கதிகளைச் சொல்லிவந்து ஒரு தீர்வுக்கு அடிப்போட்டார்.

''எல்லாத்தவும் தாண்டி ரெண்டுபேரும் மனசுவிட்டுப் பழகீட்டாங்க. நீயில்லன்னா நானில்ல நானில்லன்னா நீயில்லங்கிற அளவுக்கு ஆகிப்போச்சு. பழைய நெனப்புல நம்ம கோவப்பட்டு அதுகளப் பிரிச்சுவச்சா வீணா நிம்மதிக்

கொறச்சல்தான். அந்தப் பொண்ணால இவர மறந்துட்டு இன்னொருத்தரோட சந்தோசமா வாழமுடியுமா இல்ல இவரு பிரிஞ்சு இருந்துருவாரா. ஒண்ணுசேர முடியலையேங்கிற ஏமாத்தத்துல அவங்க விபரீதமா முடிவெடுத்து ஒண்ணுகெடக்க ஒண்ணு ஆகிப்போனா அத நம்மாளாலதான் தாங்கமுடியுமா. அதப்போல பாவம் வேற ஏதுமில்ல. ஒங்களுக்குத் தெரியாற தில்ல. யோசிச்சு நல்லமுடிவச் சொல்லுங்க. தாயும்தகப்பனுமா இருக்கிற நீங்க நல்லவழியக் காட்டுவீங்கன்னு நம்பித்தான் பாண்டியன் தனியாப் போயிப் படுத்துக்கிட்டாரு.''

பாண்டியனின் அய்யா பதட்டப்படவில்லை. ஊமைச் சிரிப்பில் குலுங்கினார்.

''கோட்டிக்கரப்பய இத எங்கிட்டச் சொல்றதுக்கென்ன. இவன் சந்தோசத்துக் கெடுத்துட்டு நான் ஆண்டியாவரத்துல மீசைய முறுக்கீட்டுத் திரிஞ்சு என்னசெய்ய. இவனுக்கு எளையவன் புள்ளக்காரனாயிட்டான். இவன்மட்டும் ஏன் இப்ப டியிருக்கான்னு நான் வருத்தப்படாத நாளுண்டுமா. கலியாணம்பண்ணிக்கிட்டு வந்து எங்களோடயா குடியிருக் கப்போறான். ஆர முடிச்சாலும் நல்லாருந்தாப் போதும். இனிமேப் போயி சாதியச் சொல்லு கெளயச் சொல்லுன்னு குருவிக்கூட்டக் கலைக்கிறது முட்டாத்தனம்.''

''அவரோட சித்தி ஒரு பொண்ண மனசுல வச்சிருக்கும் போலருக்கு. அப்படியிருக்கையில இதச் சொல்லி ஒங்களுக் குள்ள மனஸ்தாபம் வந்துறக்கூடாதுன்னு அமைதியா இருந்துட்டாரு.''

''இனிமே புதுசா என்ன மனஸ்தாபம் வரப்போகுது. என் கஸ்டம் என்னோட இருந்துட்டுப்போகட்டும். அவனுக்குச் சீதனம் குடுக்கவேணாம்.''

''தம்பிகிட்ட ஒருவார்த்த சொல்லியிருப்பாருன்னு நெனைக்கிறென்.''

''ராசபாண்டி காதுக்குப் போயிருச்சா. அப்பக் கவலையில்ல. ஆத்தாளச் சரிப்படுத்தீருவான். இனியென்ன பொண்ணு வீட்டுக் காரங்களக் கலந்துக்கிட்டு முடிவுபண்ணவேண்டியது தான்.''

தமிழய்யா பெருமூச்சு விட்டார்.

''அவங்களப்பத்திக் கவலையில்ல. நம்ம வார்த்தைக்காக குடும்பமே காத்துக்கெடக்குது.''

''அப்படின்னா நாளைக்கே வெத்தலபாக்குப் பரிமாறி யிறலாம். நம்ம பையங்கிட்டச் சொல்லி ஏற்பாடுசெய்யிங்க.''

''நீங்க சரிசொன்னப்பெறகு கல்யாணமே முடிஞ்ச மாதிரிதான். காலையில எல்லா ஏற்பாடும் தன்னால நடக்கும். பாண்டியனுக்கு அது வெளையாட்டுப்போல.''

அதுக்குப்பிறகுதான் அவர்களுக்கு ஆழமான தூக்கம் வந்தது.

காலையில் தமிழய்யா முடிவைச் சொன்னபோது பாண்டி யனுக்கு சின்னத் தயக்கமிருந்தது.

''ரங்கராஜன் சார் இல்லாம நடத்துறது நல்லதாப் படல சார்.''

''எனக்கும் உறுத்தலாத்தான் இருக்குது பாண்டியன். என்ன செய்றது அய்யா இப்படி முடிவெடுத்துட்டாரே.''

''ஆயிரந்தான் சொல்லுங்க. இது ஒரு கொறதான்.''

''சாமி வந்ததும் பழிய எம்மேல போட்டுருங்க. நான் பேசிக்கிறென். அய்யா மனசுப்படி காரியங்கள முடிச்சு அவர சந்தோசமா அனுப்புறதுக்கு வழியப்பாருங்க.''

அவ்வள்வுதான். பாண்டியன் பம்பரமாகிவிட்டார். வையா புரி மாணிக்கம் வீரணன் ஆகிய மூணுபேரைக் கொண்ட பட்டாளம் முடுக்கிவிடப்பட்டது. ஓடியாடி எல்லா ஏற்பாடு களையும் ஒருமூச்சில் செய்துமுடித்துவிட்டார்கள்.

மாப்பிள்ளைவீட்டுச் சனங்கள் அய்யாத்துரையின் தலைமை

யில் கிளம்பினார்கள். பாண்டியனின் அய்யா தமிழய்யா கிராப்ட் சுப்பையாதாஸ் கிருஷ்ணசாமி பட்டாளத்துக்காரர்கள் என்று ஒரு கூட்டமே திரண்டுவிட்டது. வையாபுரியின் ஏத்தாப் புத் தோரணையைப் பார்த்து கிருஷ்ணசாமியே அசந்துபோனார்.

கையில் பெரிய தாம்பாளத்துடன் அய்யாத்துரையின் சம்சாரம் நடக்க அதுக்குப்பின்னால் சுப்பையாதாஸ் பட்டாளத் துக்காரர்களின் வீட்டம்மாக்கள். ஈஸ்வரி முந்தியே ராஜேஸ்வரி யின் வீட்டுக்கு ஓடிவிட்டாள்.

அங்கே போனால் தங்கச்சாமி மனோகரன் குழந்தைச்சாமி தீத்தாரப்பன் எல்லாரும் வரவேற்றார்கள். ஏற்பாடுகளைப் பார்த்து தமிழய்யா வையாபுரியின் சாமர்த்தியத்தை மெச்சிக் கொண்டார். ஆனாலும் ரங்கராஜன் இல்லாதது உறுத்தத்தான் செய்தது. பாண்டியனின் அய்யா பெருமையாகச் சொன்னார் தமிழய்யாவிடம்.

''நம்ம பையனுக்கு பாறக்கொளத்துலதான் தாயாதிக ரெம்ப.''

ராஜேஸ்வரியின் அம்மாவுக்கு முகத்தில் பெரிய விளக்கு ஏற்றியிருந்தது. ராஜேஸ்வரிக்குள் இனம்புரியாத படபடப்பு. திக்கித்திக்கிப் பேசினாள்.

பேச்சுவார்த்தை சுமுகமாக நடந்தது. ராஜேஸ்வரி யின் அப்பாவும் பாண்டியனின் அய்யாவும் அன்யோன்ய மாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். குழந்தைச்சாமியின் ஹோட்டலிலிருந்து மதியம் ஸ்பெஷல் சாப்பாடு வந்தது. சாப்பாட்டைப் பாராட்டாத வாயில்லை. குழந்தைச்சாமி பூரித்துப்போனார்.

இத்தனைக்கும் பாண்டியன் வெளியே தலைகாட்டவில்லை. தனியாக ரூமில் உட்கார்ந்து கற்பனைகளைச் சுதியேற்றி பெட்டியில் சோகமாக மேளம் வாசித்துக்கொண்டிருந்தார்.

அடுத்தவாரம் முழுக்க ரங்கராஜன் ஊரிலிருந்து திரும்ப

வில்லை. ரூமே வெறிச்சோடிப்போன உணர்வு பாண்டியனுக்கு. அடிக்கடி தமிழய்யாவிடம் அங்கலாய்த்தார்.

''ஒரேயடியா இருப்புப் போட்டுட்டாரே. நம்மள வுட்டுட்டு எப்படி இருக்கமுடியிது. நான் போயிப் பாத்துட்டு வரட்டுமா சார்.''

''காரியமில்லாமத் தங்கமாட்டாரு. தங்கச்சியக் கரையேத்த வேண்டிய பொறுப்பு இருக்குதில்லையா. வீட்டுலயாவது கொஞ்சம் நிம்மதியா இருந்துட்டு வரட்டும். இனிமே அவரு பாறக்கொளத்துல வேலபாக்கிறதவிட சொந்தஊர்ப்பக்கம் போறதுதான் நல்லதுன்னு நெனைக்கிறென்.''

''ஏன் சார் அப்படிச் சொல்றீக.''

''எனக்கென்னமோ அப்படித் தோணுது.''

ஹெட்மாஸ்டர்கூட ரங்கராஜன் வராததைப்பற்றி தமிழய்யாவிடம் பேச்சுவாக்கில் விசாரித்தார். தமிழய்யா ஏதேதோ சொல்லிச் சமாளித்தார்.

முழுப்பரீட்சை வேறு நெருங்கிக்கொண்டிருந்தது. நைட் ஸ்டடியைக் கவனித்துக்கொள்வதில் பாண்டியன் தமிழய்யாவுக்கு உறுதுணையாக இருந்தார். பகலில் ரங்கராஜனின் கிளாஸைக்கூட கவனித்துக்கொண்டார்.

ரங்கராஜன் ரெண்டாவது திங்கள்கிழமைதான் வந்து சேர்ந்தார். ஆள் ரெம்ப உடைந்துபோயிருந்தார். அம்மா இறந்துபோன செய்தியைச் சுமந்துவருவார் என்று யாருக்குத் தெரியும். அம்மா எப்போதாவது உடம்புக்கு முடியாமல் கிடந்ததாகக்கூட அவர் சொன்னதில்லை. அவரை எப்படி ஆறுதல்படுத்துவது என்று தெரியாமல் தமிழய்யா தத்தளித்தார்.

பாண்டியனுக்கு வருத்தம். கோபங்கூட. வெளிப்படையாகவே காட்டிவிட்டார்.

''ஆயிரந்தான் இருந்தாலும் நம்ம அன்னியந்தான. இதுக்கிது

ஒருவார்த்த சொல்லியனுப்பியிருக்கலாமில்ல. ஒரு தந்திக்குமா பஞ்சமாப்போச்சு. கடைசி நேரத்துலயாச்சும் அவுக மொகத்துல முழிச்சிருப்பனே. அடுத்தவுகள அண்ணனா நெனச்சுக்கிட்ருக்கிறது சுத்த பையத்தியாரத்தனம்.''

தமிழய்யா பாண்டியனுக்கருகில் உட்கார்ந்தார்.

''பாண்டியன் என்ன இது.''

''நான்தான் பெறந்து நாலெட்டு வைக்கிறதுக்குள்ள பெத்தவள விழுங்கீட்டென். அடுத்தவுகளுக்காச்சும் குடுத்து வைக்கப்புடாதா.''

பாண்டியனின் கோபம் கண்ணீராக உருகியது. தமிழய்யா தேற்றினார்.

''சாமிமேல தப்பில்ல. ஆத்து வெள்ளத்துல அடிச்சிட்டுப் போயிட்ட அம்மாவ தேடிக்கண்டுபிடிக்கிறதுக்கே மூணு நாளாகியிருக்கு. மூணுமைல் தாண்டி காக்காயும் கழுகும் கொத்திக் கொதறி அடையாளங்கொலஞ்சு கெடந்துருக்காங்க. அவங்களோட முழுமொகத்தப் பாக்க இவருக்கே கொடுத்து வைக்கல. பாலத்துமேல போற தண்ணி ஒண்ணுஞ்செய்யாது கடந்துறலாம்னு எறங்கியிருப்பாங்க. நடுவுல பாலம் ஒடஞ்சிருந்தது தெரியாமப்போச்சு. இவரு அம்மாவத் தகனம் செய்வாரா அடுத்தவங்களுக்குத் தகவலனுப்புவாரா.''

ரங்கராஜன் அமைதியாக அழுதுகொண்டிருந்தார். பாண்டியன் குற்றஉணர்வில் தலைகுனிந்தார்.

எல்லா வாத்தியார்களும் ரூமுக்கு வந்து ரங்கராஜனிடம் துக்கம் விசாரித்தார்கள். சீனிவாசன் அடைக்கலம் ரெண்டுபேரும் வந்தார்கள். அப்புறம் வையாபுரி மாணிக்கம் வீரணன். அய்யாத்துரைகூட வந்துபோனார். ராஜேஸ்வரி முதல் முறையாக டீச்சர்சஸ் ரூமில் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தாள். ஹெட்மாஸ்டர் தமிழய்யாவிடமும் ருக்மணி வையாபுரியிடமும் விசாரித்தார்கள்.

தமிழய்யா அடுத்தடுத்து ரெண்டுவாரம் தென்காசிக்குப் போனார். ரெண்டுவாரமும் ஒவ்வொருநாள் கூடுதலாக லீவு போட்டுத் தங்கிவிட்டுத்தான் திரும்பினார். பாண்டியனுக்கு இது புதுசாக இருந்தது. ஆனால் எதுவும் கேட்டுக்கொள்ளவில்லை. சிலநாள் ராத்திரி அய்யாத்துரையும் தமிழய்யாவும் ஸ்கூல் படிக்கட்டில் உட்கார்ந்து தனியாகப் பேசினார்கள். பாண்டியன் அதிலும் கவனம் செலுத்தவில்லை.

மனக்கஷ்டத்துக் கிடையிலும் தமிழய்யா பாண்டியனின் நிச்சயார்த்தம்பற்றி ரங்கராஜனிடம் சொல்லிவிட்டார்.

''நீங்க இல்லாம நிச்சயார்த்தம் நடக்கவே கூடாதுன்னு பாண்டியன் ஒத்தக்கால்ல நின்னாரு. நான்தான் கட்டாயப் படுத்திச் சம்மதிக்கவச்சென்.''

ரங்கராஜன் களங்கமில்லாமல் சொன்னார்.

''நல்லகாரியம் பண்ணினேள். பாண்டியனோட அப்பா இதுக்குச் சம்மதிச்சாரு பாருங்கோ அவர்தான் மனுஷன். நேக்கு அந்தக் கவலதான் உறுத்திண்டுருந்துச்சு. இனி கஷ்டமில்ல. டீச்சர் பாக்யசாலி.''

தமிழய்யாவுக்குள் ரங்கராஜன் நிறைந்திருந்தார்.

மூணுநாளாயிற்று. வையாபுரி கிரவுண்டுக்கு ஓடிவந்து பாண்டியனிடம் சொன்னான்.

''நம்ம சாமிய மாத்தி உத்தரவு வந்துருக்கு சார்.''

''என்னவே வெளையாடுறயா.''

''நெசமாச் சொல்றென் சார். ஆழ்வார்திருநகரிக்குப் போட்டுருக்கு. அவுக ஊருக்குப் பக்கத்துலதான்.''

பாண்டியன் தமிழய்யாவிடம் ஓடினார்.

''சார் இது அனியாயம் அக்கிரமம். ரங்கராஜன் சார மாத்தீட்டாக.''

தமிழய்யா சாதாரணமாகக் கேட்டார்.

''அதுக்கென்ன பாண்டியன்.''

''மத்தவுகெல்லாம் இருக்கயில இவருதானா கெடச்சாரு.''

''எல்லாருமே இண்ணைக்கில்லன்னா நாளைக்குப் போறவங்கதான. அப்புறம் நீங்க எங்கயோ நான் எங்கயோ. சாமி கொஞ்சம் முந்திக்கிட்டாரு. அவ்வளவுதான்.''

''இது அந்த ஹெட்மாஸ்டர் வேலையாத்தான் இருக்கும்.''

''நாளைக்கு தமிழ்வாத்தியார மாத்தீட்டா யாருமேல பழி சொல்லுவீங்க. ஏன் சாமியே கேட்டுவாங்கியிருக்கலாமில்ல. கிட்டருந்தா குடும்பத்தக் கவனிச்சுக்கிறலாம்.''

''இருக்காது. அவரு போயிக் கேட்டுருக்கவேமாட்டாரு.''

''அப்ப நீங்க போயிக் கேட்டீங்களா.''

''அதுல எனக்கு ரெம்பச் சந்தோசம் பாருங்க.''

''கடசிக்கு நான்தான் செஞ்சன்னு சொல்லப்போறீங்களா.''

''இருந்தாலும் இருக்கும்.''

''அப்படின்னே வச்சுக்கங்களேன்.''

''சார்... நீங்க...''

''நானேதான் பாண்டியன்.''

''அவருக்குத் தெரியுமா.''

''யாருக்கும் தெரியாது.''

''ஏன்சார் இப்படிச் செஞ்சீக.''

''எல்லாம் அவரோட நன்மைக்குத்தான். இந்த நெலமையில அவரு மாத்திப்போறது நல்லதுன்னு பட்டது. இங்கயும் நிம்மதியில்லாம குடும்பத்தவும் பாத்துக்கிறமுடியாம எப்படி தொழில்ல கவனம்செலுத்தமுடியும். இதுக்கு நம்ம செய்யக் கூடியது என்னன்னு யோசிச்சுப்பாத்தென். ஒருவழி தட்டுப்

பட்டது. யாரு மொகத்துல முழிக்கக்கூடாது யாருட்ட எந்த ஒதவிக்கும் போகக் கூடாதுன்னு வைராக்யமா இருந்தனோ அதே பால்வண்ணம்பிள்ளையிட்டப் போயி தலையச் சொறிஞ்சென். சுயமரியாதையெல்லாம் ஓடப்புல தூக்கிப்போட்டாச்சான்னு அவரோட சிரிப்பு கேக்கிறமாதிரி இருந்தது. நான் விஷயத்த மட்டும் சொன்னென். அப்ப ஒனக்கோ ஒம்பொண்ணுக்கோ ஒதவி வேண்டாமாக்கும்னு ஏளனமாப் பாத்தாரு. நான் தரையப் பாத்தென். கண்டிப்பா ஏற்பாடு செய்றென் போங்கன்னாரு. அதுபோதும்னு சொல்லீட்டு வந்துட்டென்.''

பாண்டியன் தமிழய்யாவின் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

''என்ன சொல்றதுன்னே தெரியல சார்.''

''இந்த நாடகத்த யாருட்டயும் சொல்லாமருந்தாப் போதும்.''

ரங்கராஜன் இதைப் பெரிசுபடுத்தவில்லை.

பாண்டியன் சொன்னார்.

''தெரிஞ்சோ தெரியாமலோ நல்லது செஞ்சிருக்கறா. ஒருவெதத்துல நேக்குச் சந்தோஷம். ஒங்கள விட்டிண்டு போறததுதான் வருத்தம்.''

''அடுத்தவருசமே நானும் தமிழய்யாவும் அங்க மாத்தி வந்துருவொம் சார்.''

ரங்கராஜன் முகத்தில் குறும்பு.

''பார்த்தேளா. அதுக்குள்ள டீச்சர மறந்துட்டேளே.''

இந்தக் கலகலப்பில் தமிழய்யாவுக்கு எல்லாமே மறந்து விட்டது.

உத்தரவுப்படி முதலில் ரங்கராஜன்தான் நகரணும். அவர் ஆழ்வார்திருநகரிக்காரரைக் கிளப்ப அங்கிருப்பவர் முக்கூட லுக்குப் போகணும். முக்கூடல்காரர் பாறைக்குளம் வரணும்.

ரங்கராஜன் புதன்கிழமை பாறைக்குளத்தில் கணக்கை முடித்துக்கொண்டார். தங்கச்சாமியிலிருந்து வீரணன்வரை சொல்லிவிட்டு சாயங்காலம் புறப்பட்டார். தமிழய்யா எவ்வளவோ வற்புறுத்தியும் ஹெட்மாஸ்டரைப் பார்க்க மறுத்து விட்டார். கடைசியில் அய்யாத்துரையின் வீட்டுக்குப் போக மறக்கவில்லை. பாண்டியனும் கூடப்போனார். அய்யாத் துரையின் குடும்பமே தெருவரை வந்து வழியனுப்பியது. அவரது சம்சாரம் கடைசியாகச் சொன்னது.

''வெளையாட்டுக்காரத் தம்பிய தனியா வுட்டுட்டுப் போறீகளே.''

''அவருக்குத்தான் நெரந்தரமா ஒரு தொணையத் தேடிக் கொடுத்துட்டேளே.''

பாண்டியன் கேட்டார்.

''சார் நானும் ஊர்வரைக்கு வரட்டுமா.''

ரங்கராஜன் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்.

''இப்ப வந்து கடனக் கழிச்சிடலாம்னு பார்க்கறேளா. அப்பு றமா குடும்பத்தோட வரேள். ஒருவாரம் எங்களோட தங்கறேள்.''

ரங்கராஜனை பஸ்ஸில் அனுப்பிவைக்க பாண்டியன் தமிழய்யா கிராப்ட் மூணுபேர் வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் பெட்டிபடுக்கையைச் சுமந்துகொண்டு வையாபுரியும் வீரணனும். பஸ் ஸ்டாண்டில் நிற்காமல் பேசிக்கொண்டே முக்குரோட்டுக்கு வந்தார்கள்.

பாண்டியன் வையாபுரியிடம் கேட்டார்.

''என்னவே சோகமா இருக்க. இண்ணைக்கோட சீட்டுக் கிழிஞ்சிருமேன்னு பயமா.''

''எனக்கென்ன பயம் சார். நான் எத்தனபேரு சீட்டக் கிழிச்சிருப்பென் தெரியுமா.''

''அப்படியா. நீ சொல்லித்தான் தெரியிது.''

பாண்டியன் கிராப்ட்பக்கம் நகர்ந்தார். கிராப்ட் பரிதாப மாகப் பார்த்தார்.

''சார்வாள் நம்மகிட்ட வந்துட்டீங்களா.''

''ரங்கராஜன் சாருக்கு ஒங்க ஞாபகமா பொடிடப்பாவக் குடுத்தனுப்புங்கன்னு சொல்லத்தான் வந்தென். ஒங்களுக்கு நான் புதுசா வெள்ளியில வாங்கித் தாறென்.''

''சும்மாருக்க வுடமாட்டீங்களே.''

''ஒங்களுக்குச் சம்பளம் கொறஞ்சாலும் டப்பாவுல பொடி கொறஞ்சிறப்புடாதே.''

தூரத்தில் கனைத்துக்கொண்டு வந்த பஸ் முக்குத் திரும்பி ஊருக்குள் ஓடியது. வையாபுரி கண்டக்டரிடம் குரல் கொடுத்தான்.

''அண்ணேன் திருனவேலி ஒண்ணு.''

எல்லாருடைய முகத்திலும் இனம்புரியாத வருத்தம். ரங்கராஜ னையே பார்த்துக்கொண்டிருந்த வையாபுரிக்கு பேச்சு திணறியது.

''டிரில்மாஸ்டரய்யா இந்திய வெரட்டுறதுக்கு ஒங்களோட சண்டபோட்டாரு. ஆனா இப்ப ஒங்கள வெரட்டவேண்டிய நெலம.''

அவன் குழந்தையைப்போல் கண்ணைக் கசக்க ஆரம்பித் தான். ரங்கராஜன் அவனது தோளைப் பிடித்து உலுக்கியபடி பாண்டியனைக் கேட்டார்.

''பாண்டியன் கல்யாணத்த சொல்லாமக் கொள்ளாம நடத்தமாட்டேளே.''

''நீங்க வராம கலியாணமே நடக்காது சார்.''

''தென்காசிக்குப் போயி கேட்டுத் தெரிஞ்சிண்டாவது வந்து சேந்துடுவென்.''

தவித்துக்கொண்டிருந்த தமிழய்யாவுக்குக் குரல் தளுதளுத்தது.

''சாமி ஒங்களுக்காக இந்த ஏழத் தமிழ்வாத்தியான் வீடு எப்பவுமே தெறந்துருக்கும்.''

ரங்கராஜன் நன்றியுடன் ஏறிட்டார்.

ஊருக்குள்ளிருந்து பஸ் உறுமிக்கொண்டு வந்தது. வையாபுரி ஓடிப்போய் கைகாட்டி நிறுத்தினான். மாணிக்கம் சாமான்களை ஏற்றினான். ரங்கராஜன் ஏறிக்கொண்டார். அவரால் கீழே நிற்ப வர்களைத் தெளிவாகப் பார்க்கமுடியாதபடி கண்ணீர்ப் படலம் மறைத்தது.

பஸ் புறப்பட்டதும் பாண்டியன் தமிழய்யாவின் தோளில் முகம்புதைத்துக்கொண்டு குமுறிக்குமுறி அழ ஆரம்பித்தார். சிட்டிகைப்பொடி நழுவ பஸ்ஸையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார் கிராப்ட். தமிழய்யா மட்டியைக் கடித்தபடி பாண்டியனைச் சமாதானப்படுத்தி முடித்ததும் மூணுபேரும் பஸ் போன திசையில் சோர்வாக நடக்கத்தொடங்கினார்கள்.

சும்மாட்டுத் தலையைச் சொறிந்தபடி சுயநினைவிழந்து நின்றிருந்த மாணிக்கத்தை உசுப்பி வீட்டுக்குக் கூட்டிப் போனான். வையாபுரி. அவர்களுக்கிடையே பேச்சு அறுந்திருந்தது.

பஸ் பாலத்தைக் கடந்தபோது தோட்டத்துக்குள்ளிருந்து ஓடிவந்த கிருஷ்ணசாமியைக் கவனித்துவிட்ட ரங்கராஜன் வெளியே தலைநீட்டி கையசைக்க அவரது மம்பட்டி அந்தரத்தில் ஆடி ரெம்பநேரம் வழியனுப்பிக்கொண்டிருந்தது.

□

எனக்குள்
இன்னும் மணியடிக்கும்
பள்ளிக்கூடத்துக்கு



பொதுவாக இன்று வாழ்வின் அடிப்படையாகப் 'பொருள்' அமைந்துவிட்ட நிலையில் மனிதன் அப் பொருள் வேட்டையில் தன்னையிழந்து யந்திரமாய், மிருகமாய் மாறிவரும் சூழல் அதிகரித்துவிட்டது.

இச்சூழலில் முந்தைய தலைமுறையில் தான் கண்ட மனிதர்களில் 'ஆசிரிய வர்க்கம்' என்கிற உண்மையான தந்தைகளைத் தான் கண்டது கண்டபடி இந் நாவலில் நமக்குப் படம் பிடித்துக் காட்டி நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறார் பூமணி.

ஆசிரியப் பணியின் இன்றைய அவல நிலையை நாமெல்லோரும் நன்கறிவோம். என்றாலும் 'அன்று நாம் மனிதர்களுடன் வாழ்ந்தோம்' என்கிற உணர்வைத் தூண்டி அந்த ஆசான்களின் நிறை குறைகளை இயல்பாகச் சொல்லி ஒரு ஆழ்ந்த யோசனைக்கும் தீர்க்கமான மீள்பார்வைக்கும் நம்மை இட்டுச் செல்கிறது இந்த நாவல்.

எந்தப் பணியையும் விட ஆசிரியப்பணி சமூகப் பொறுப்பு வாய்ந்த பணி என்கிற உணர்வை நம்முள் மீண்டும் விதைக்க முயல்கிறது இந் நாவல்.

வழக்கமாய் தன் படைப்புக்கும், வாசகருக்கும் இடையில் எவர் குறுக்கீடையும் ஏற்காதவர். தான் உள்பட.

'தான் கலந்து எழுதுவதை விட தான் என்ன தனியே முன்னுரையில் சொல்ல' எனக் கூறிவிடுவார்.

இப்போது அரிதாய் இந்தக் கடைசிப் பக்கத்தை எனக்குத் தந்தார். ஒரு வாசகனாய் வரப்புகளைப் படித்து முடித்த பின் என்னுள் எழுந்த உணர்வே 'இவர்கள்தானய்யா மனிதர்கள்' என நமக்குச் சுட்டிக்காட்டும் மனித உறவுகளை இசைக்கும் இந்தச் சிறந்த நாவலைத் தந்துள்ள பூமணிக்கு எனது நன்றி.

அகிலன கண்ணன்